உ

ஓம் தத்சத்

மதுரை

ஸ்ரீ பிரஹ்மாநந்த ஸ்வாமிகளவர்களால்

தமிழில் இயற்றப்பட்ட

# பிரஹ்மாநந்த அநுசந்தாந விசார யுக்தி ரத்நாகரம்



இது

மேற்படி சுவாமிகளின் மாணாக்கரும்
மடாதிபதியும் ஆகிய

## ஸ்ரீ அத்வைதாநந்த ஸ்வாமிகளால்



சென்னை

சி. முனிசாமி முதலியார் அண்டு சன்ஸ்

சிவகாமி விலாஸ அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1924



[விலை ரூபா நான்கு



| ஸ்ரீ பாலானந்த சுவாமிகள். | ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள். | ஸ்ரீ சுத்த பிரஹ்மானந்த சுவாமிகள். |
|---|---|---|

சிவமயம்.

ஸ்ரீ கணேசாய நம:

ஸ்ரீ பிரஹ்மானந்தகுரவேநம:

# முகவுரை

अथवायोगिनामेव कुलेभवति धीमताम् ॥
एतद्धि दुर्लभतरंलोके जन्मयदीदृशम् ४२

போக்கியங்கள் மிகவும் பொருந்தியுள்ள அரசர் குலத்திற் பிறவாமல் அத்விதீயப் பிரஹ்மஞானத்தையுடைய யோகிகளாகிய பிராஹ்மணகுலத்தில் அவதரிப்பன், இதுவோ துர்லபத்திலும் துர்லபமாம், இத்தகைய அவதாரத்தைப் பார்ப்பது இவ்வுலகத்தில் அருமையினும் அருமையாம். சுசிகளாய் ஸ்ரீமான்களாய் விளங்கும் அரசர்தம் அரண்மனையிற் பிறப்பதும், முற்பிறப்பில் பிரஹ்மாகாரஞ் செய்துகொண்டிருந்த யோகிக்கு, அநேக சுகிருதத்தாற் சாதிக்கத்தக்கதாதலினாலும் மோக்ஷத்தின்கண் முடிவுறுதலினாலும் துர்லபமேயாகும், அதிபவித்திரமாய்ப் பிரஹ்மவித்தையுடையவர்தங்குலத்தில் அவதரிப்பதோ சுகப்பிரஹ்மாதிகட்குச் சமானமாய்த் துர்லபத்தினும் துர்லபமென்பதிற்றடையேகிடையாது. இப்பிறப்பானது சர்வப்பிரமாத காரண சூனியமாகவன்றோ இருக்கின்றது. போக்கியம் மிகுதியாக இராமையின் போக வாசனை சுருங்கிப் போதலால் சர்வகர்ம சந்யாச போக்கியமாதலின். என்றிவ்வண்ணம் பொருள்வாய்ந்த ஸ்ரீபகவானது உபதேசப்பிரகாரமே, நமது ஸ்ரீ பிரஹ்மானந்த குருநாதன், முனமேயனைத்தும் முடித்து முழுதுமுணர்ந்த நாயகனானதால், உலகத்திற்கு அநுக்கிரகம் செய்வதே ஒருதலையாக ஈசுர ஆஞ்ஞையால் இவ்வுலகத்திலவதரித்தார். என்றியம்புமாறு, ஞானவிநோதராய், வேதாந்தப்பாட்டியெனப் பிரசித்திபெற்ற அம்மையார் திருவுதரத்தை யலங்கரித்துக்கொண்டு வந்த ஸ்ரீராமசுவாமிக்கொப்பெனப் படும் ஸ்ரீ இராமசாஸ்திரிகளது திருக்குமாரராயவதரித்தார். எனவே பரம்பரையாய் ஞானிகளாயிருந்த திவ்யப் பிரஹ்மகுலத்தே யவதரித்தாரென்பது தெற்றெனத்தெரிகின்றது. பின்னர் சிறிது நாளில் சம்ஸ்காரஞ் செய்யப்பெற்றுக் குமரப்பருவத்திலேயே வேதவேதாங்கங்களிலும் அசேஷசாஸ்திரங்களிலும் பூர்ணவிற்பத்தியை யடைந்து, பூர்வஜன்ம சுத்தசமஸ்கார விசேடத்தாற் பிரஹ்மஞானமெளிதிற்றோன்றக் கரதலாமலகம்போலப் பிரஹ்மானந்தத்தை யனுபவித்து அதில் மூழ்கியிருந்தனர். இங்ஙனமிருக்கும் போது, நமது குருநாதனுடைய கனவின்கண்ணே, பிரஹ்மவித்யா சம்பிரதாயத்தை விளக்குவதே தொழிலாக விளங்

கும் ஸ்ரீமீனாக்ஷிசுந்தரேசுரர் குருசிஷ்யபரம்பரையில் இந்தப்பிரஹ்மஞானமான து என்றும் வழங்கி யுலகுபகாரமாக நிலவவேண்டுமென்னுங் கருணையுடையவராய்த் தரிசனந்தந்தருளி,சுந்தரத்தாண்டவர் மகாசந்நிதியில் ஸ்ரீ பரமகுரு அசுவத்தநாதர் நிஷ்டையிலிருப்பது போலக் காண்பித்தருளித் திருவாய்மலர்ந்தருளுவதாவது:— ஹே குழந்தாய்! எமது கருணையினால் உன்னுடைய யதார்த்த சொரூப ஞானமானதுனக்கு எளிதாய்ச் சுயம் கரவில்லவதுல்லியமாய்ப் பிரத்தியக்ஷமாக வுண்டான போதிலும், இதோ! நிஷ்டையிலிருக்கப்பட்ட ஞானவைராக்கியம் நிறைந்த குருபக்தசிகாமணியாகிய அசுவத்த நாதரென்னும் நமது குமரனை ஞானாசிரியராக விகிதகுருவாயடைந்தால் உனது சாக்ஷாத்கார ஞானம் நிஷ்பிரதிபந்தமாகி விசேடமாகப்பிரகாசிப்பதோடும் உலகருக்கும் சீடபரம்பரையாய் அனுகூலமாகும் என்றருளிச்செய்து அந்தர்த்தானமாயினர். அப்போதே நமது குருநாதன் விழித்தெழுந்து ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேசுவரரைத்தியானித்து, நாம் கண்டகனவானது ஒருவேளைவெறுங்கனவாகாமல் லவணமன்னர்க்கும் காதிப் பிராஹ்மணர்க்கும் உற்றது போல ஜாக்கிரசொப்பனமுமாகலாமே, ஆதலாலிதைப் பரீக்ஷித்தறிய வேண்டுமென்று எண்ணிக்கொண்டே அன்றுமாலையில் சுந்தரானந்தத்தாண்டவர் மகாசந்நிதியையடைந்து நோக்கும்போது ஸ்ரீபரமகுரு அசுவத்தநாதரை ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேசுவரர் கனவிற் காட்டியருளியபடியே நிஷ்டையிலிருந்து ஆனந்தித்தம் முனிவரிருப்ப அதைக்கண்ணுற்றுக் காத்திருந்தார், விழித்தபின் திருக்கருணைக் கண்ணோக்கம்பெற்று வீடுசென்றனர், அதுமுதலாக ஸ்ரீ அசுவத்தநாதர் சந்நிதிக்குப் போய் அங்குறைந்து அத்தியாத்ம சாஸ்திரவிடயங்களைச் சம்பாஷிப்பதும் நிஷ்டைவிடயமாய் நிபிட நெறிகளை வினவுவதுமாகக் காலங்கழிக்கலாமென்று நினைந்த போதிலும் பரமகுருநாதராகிய ஸ்ரீ அசுவத்தேசர், வேதாந்தசாஸ்திரார்த்தங்களை இம்மூர்த்தியின்பாற் சொல்லாமல் இல்வாழ்க்கையுடனிருத்தலின் பக்திபரமாருகவென்னுந்திருக்கருத்துடன் திருவாலவாய்ப்பெருமையைப் பெரிதுபுகலும் 64திருவிளையாடற்புராணம் முதலாக மற்றைய புராணங்களை வாசிக்கு மாறுசெய்தல் வழக்கமாக விருந்தது, இவ்வாறிருந்துவரும் போது ஒருநாள் சாயந்திரம் சந்திப்போதிற் பொற்றாமரைக்கரையருகில் இருவரும் அனுஷ்டானம் முடித்துக்கொண்டிருக்கும்போது, அப்பொற்றாமரைக் கரையில் அனுஷ்டானத்திற்கிரங்கிய சிலர் அப்படித்துறையில் ஒரு பழுதைகிடப்ப மந்தாந்தகாரத்தால் அதைப்பாம்பெனப் பயந்து ஓடிப்பின் தீபத்தைக்கொணர்ந்து பார்த்து அதிஷ்டானமான பழுதையாகவே அப்பாம்பைக்கண்டு மயல் அச்சம் நீங்கி ஆனந்தித்ததை ஸ்ரீ பரமகுரு நாதரும் குருநாதரும் பார்த்துப் புன்சிரிப்புடனிருப்ப நமது ஸ்ரீ பிரஹ்மானந்த குருநாதர் இதுநல்லசமயம் நமதுகருத்தை விண்ணப்பிக்கவெனவெண்ணி யுபோற்காதமாய்,

रज्जु सर्पवदात्मानं जीवंज्ञात्वा भयंवहेत् ।
नाहंजीवः परात्मेति ज्ञातश्चेन्निर्भयोभवेत् ॥

என்ற ஸ்ரீ ஆத்மபோதவாக்கியத்தைச் சொன்னார், அச்சுலோகத்தைத் திருச்செவி யுற்ற ஸ்ரீ அசுவத்தேசர் இப்போது சொல்லிய சுலோகத்திற்குப் பொருளென்னெனவினவ நமதுகுருநாதரும் கட்டளையைச் சிரமேல்வகித்துப் பொருளுரைப்பக் கேட்டுண்மகிழ்ச்சியுற்ற ஸ்ரீபரமகுருநாதரும் மறுதினமுதல் புராணாதிகளையெல்லாம் விட்டுவிட்டு ஞானவாசிஷ்டமுதலிய வேதாந்தசாஸ்திரங்களையே நமது குருநாதரைப் படிக்கும்படி செய்வித்துச் சாஸ்திரசம்பாஷணை செய்துகொண்டு வரலாயினர். நமதுகுருநாதரும் இப்போது நமதுபோது நற்போதாயது முன்னெண்ணிய எண்ணமுமுற்றியது, ஸ்ரீ அங்கயற்கண்ணிபங்கரருளியதும் கைகூடியது, இத்தகைய ஞானவைராக்கிய குருபக்தசிகாமணியை அனன்யசரணாகதியாக வடைய எத்துணைக்காலம் தவங்கிடந்தேமோ வெனநினைந்து நினைந்து பெருங்களிப்புற்று ஆனந்தத்தாண்டவம் ஆடிக்கொண்டிருந்தனர். ஸ்ரீபரமகுருநாதரோ, வடகைலைக்கிறைவனெனும் வள்ளலே முன்னர் முத்திராமலிங்க ஞானதேசிகராகிச் சமிவனக்ஷேத்திரத்தில் நமக்குப் பக்குவம்பாராது பெருங்கருணையினாலே திருவருள்புரிந்ததுமல்லாமல் இப்போதும் ஸ்ரீ ஆண்டவரே பெயரைச் சிறிது குறைத்துக்கொண்டு இராமலிங்க சீடனாகிவந்து சத்காலக்ஷேபமாகச் சம்பாஷணைமூலமாயுதவிசெய்ய வந்ததேபோலுமென வுள்ளத்திற் கருதி நிறைந்த அன்பு பூண்டிருந்தனர். இவ்வாறு ஆசிரியரும் சீடரும் அந்நியோந்நியம் வேதாந்தசாஸ்திர சம்பாஷணையில் நெடுங்காலம்கழித்துவந்தபோது பரமபக்தியுடன் வழிபட்ட நமதுகுருநாதன் ஜாதியாதிவிவகாரங்களையும் மறந்து பரமகுருநாதன் சிராத்தாதிகளின் மத்தியிலழைத்துப் பரீக்ஷித்தபோதினும் தேறி மிகுந்த வணக்கத்துடன் பேரானந்த நிலையிற் பெரிதும் மூழ்கியிருந்தனர். நமது ஸ்ரீ பிரஹ்மானந்த குருநாதன் 5 வயதிலேயே பூர்வஞானம் பிரகடமாகப்பெற்று யாதொரு மறைப்புமில்லாதிருந்தபோதினும் சாஸ்திரஞானம் நிறைந்திருந்தபோதினும் ஸ்ரீ தத்துவராய சுவாமிகட்கேபோலக் குருபக்தியும் வளர்ந்தே நிறைந்தோங்கியது, இதைநோக்குமிடத்து உலகஅனுக்கிரகநிமித்தமே முன் விதேகமுக்தியையடையாமல் இந்தத் திருமேனிகொண்டு இங்குயாவற்றையும் அனுஷ்டித்துக் காண்பிக்கவந்ததேபோல நிகழ்ந்ததெனத் தெரிகின்றது. இஃதிவ்வாறாக ஸ்ரீபரமகுருநாதர் அடிக்கடி 'கற்றுணர்ந்தோர் செல்வம் பரோபகாரப்பொருட்டே' யென்னுங் கீதைப்பொருளைக் குறிப்பாலுணர்த்த இதுவும் ஒருகுருபணிவிடையேயென்று, ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகள் ஆணைப்படி ஸ்ரீ தத்துவராயசுவாமிகள் அநேகநூல்கள் மொழிபெயர்த்தருளியதேபோல நமதுகுருநாதன் ஸ்ரீபஞ்சதசிக்குப் பதயோஜினி யென்னும் வியாக்கியானமும், சொரூப இலக்ஷண விருத்தி மூலசுலோகமும், விவேகசூடாமணி, சர்வவேதாந்த சித்தாந்த சாரசங்கிரகம், தக்ஷிணாமூர்த்தி வீக்ஷாவிலாசம் என்னும் கிரந்தங்கட்குத் தமிழ்மொழிபெயர்ப்பும், செய்தருளி பிரஹ்மநிஷ்டையிலெழுந்தருளியிருந்தார்கள். பின்னொருசமயத்தில் அடியார்குழாங்கள் மகாசந்நிதானத்தில் இயற்றியருளப்பட்ட வியாக்கியானமும் மொழிபெயர்ப்பும் கற்றவர்கட்கே பயனாகவுள்ளன சர்வத்திரசாமானியமாய்ப் பயன்பெற்றுதவவில்லை யென

வேண்டத் திருவுள்ளத்திற் கருணைகூர்ந்து பண்டிதபாமர சாமானியமாய் எல்லோருங்கற்று எளிதிற் பரமாத்மபதத்தை யெய்துமாறு; சுத்தப்பிரஹ்மானந்த சுவாமிகள் சங்கரானந்தசுவாமிகள் முதலிய அநேகங்கோடி சிஷ்யர்களுக்குள்ளே பிரதானசிஷ்யரும், அனன்யபக்தரும், உடற்குயிர் போலவும் கட்கிமைபோலவும், ஊசிநூல்போலவும் சந்ததம் புருடன்றன்னைச் சாயையே போலவும் இடைவிடாமலிருந்து ஆத்தம் அங்கம் தானம் சற்பாவம் என்னும் சதுர்விதப் பணிவிடைகளையும் ஆற்றிக்கொண்டிருந்த பரமகுருபக்தரும், அன்பு நிறைந்த மைந்தரும், ஸ்ரீபிரஹ்மானந்தகுருநாதனுக்குப் பின்பு ஞானாசாரியராக அந்தப்பீடத் தெழுந்தருளியிருந்து நம்போலியர் கடைத்தேறும்வண்ணம் அனுக்கிரகம் செய்துகொண்டிருந்தவரும் ஆகிய ஸ்ரீபாலானந்த சுவாமிகள்; நமது ஸ்ரீஞானநாயகனுகிய ஸ்ரீபிரஹ்மானந்தகுருநாதன் சகல சாஸ்திர அர்த்தங்களையும் திரட்டி உபதேச அமிர்தவருஷத்தை அகோராத்ரம் வருஷிக்குங்காலத்தில், அவ்விருஷ்டியில் தாங்கள் மூழ்கிப் பானம்பண்ணிச் சுகித்ததுமட்டும் போதாது என்றுன்னி விசேஷசாஸ்திர ஆராய்ச்சியில்லாத மந்தர்களாகிய நம்போலிகளிடத்திலும் வைத்தபெருங்கருணையினால் தினந்தினமும் வருஷிக்கும் உபதேசாமிருதவருஷங்களில் இங்கும் அங்கும் சிதறியதிவலைகளாகிய அனுசந்தான யுக்திரத்னங்களை ஒன்றுசேர்த்து எழுபுஸ்தகங்களாகின்ற சம்புடங்களில் அடைத்துவைத்தார்கள்; அவ்வாறு அவர்கள் அக்கார்செய்துவைத்ததாற்றான் இக்கால் நமக்கது பெரும்பாக்கியவாழ்வை [illegible] போலிலங்குகின்றது, அத்தகைய பெருங் கருணாமூர்த்திகட்கு அநேகங் கோ வந்தனஞ் செலுத்தினும் கைம்மாறுமோ, ஆகவேயாகாதாம். மேற்கண்ட அவ்வேழுபுஸ்தகங்களுமே ஸ்ரீகுருநாதனுடைய பரமகருணையினாலே அற்புத அமிர்ரசம் வாய்ந்த பிரஹ்மானந்த மயமான ஸ்ரீ ப்ரஹ்மானந்த அனுசந்தான யுக்திரத்னாகரமென ஒரேகிரந்தமாக்கப்பட்டது, லௌகிகர்கட்கும் விளங்கும்படியான அநேக யுக்திகணிறைந்த இந்நூல் இதுகாறும் அடியார்குழாங்கட்குள் சிவானுநந்தபாக்கியத்தை யருளிக்கொண்டிருந்த போதிலும், யாவரும் பெறவசிக்கும் பாக்கியத்தை யருளாததால், அக்குறையை நீக்கும்பொருட்டுச் சாதுக்கள் சிலர் தெரிவித்தஅளவில் பலசாதுக்களின் பேருதவி கொண்டு அச்சுவாகனமேற்றிப் புஸ்கத்துலவுமாறு செய்தோம். யாவரும் ஞானாசிரியர்வாயிலாய் அன்புடன் சிரத்தையுடன் சிரவணித்துச் சகல அநர்த்தநிவிருத்தி பரமானந்தப்பிராப்திவடிவ மோக்ஷத்தையடையுமாறு எல்லாம்வல்ல ஸ்ரீபிரஹ்மானந்த குருநாதனது திவ்ய திருவடித் தாமரைகளைச் சிந்திக்கின்றோம்.

ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள்
மடாலயம்
தெற்கு சுங்க கேட்

இங்ஙனம்

அத்வைதானந்த சுவாமிகள்.

ஸ்ரீ சற்குருநாதன் றுணை.

---

C. Munisawmy Mudaliar & Sons, Printers, Madras.

உ

ஓம் தத்ஸத்

ஸ்ரீ குருப்யோநம:

# பிரஹ்மாநந்த அநுசந்தாந விசாரயுக்தி ரத்நாகரம்.

## பாயிரம்

---

பத்தியாய்ப் பிரமா நந்தநல் வாரி படிவதற் குரியசா தநமாய்
யுத்திக ளிரண்டு புகன்றன ரதன்பே றுறவநு சந்தந* மொன்று
தித்திக மநந்தான் நிலைத்திடற் குரிய திரவிசா ரமதொன் றுமாக
வைத்தனர் பிரமா நந்தநற் குருவாய் வயங்கிடுந் தேசிகோத் தமரே.

வியன்பிர மாநந் தாநுசந் தாந விசாரயுக்தி ரத்திநா கரமென்
பெயர்தனைத் தந்து முதலதிற் றரங்கம் பேசுமெண் பத்தினோ டாறும்
முயல்வுறு விசாரந் தனிற்றரங் கந்தான் மூன்றுநா றுருபதே ழின்றும்
இயல்பதாச் சேர்ந்து தரங்கமுன் னூற்றி யிருமுப்ப தொன்பது மாமே.

இவ்வகை நூலைச் செந்தமிழ் மொழியி லிசைத்தனர் கத்திய மாக
எவ்வகை யோருஞ் செவ்வையாய்க் குருவி னிணையடி தனைத்திநம் பணிந்து
செவ்வையாய்க் கேட்டு மெய்ம்மையாம் பிரமஞ் சேர்ந்துமே பவந்தனைத் துடைத்
மெய்வகை யிருக்க வேண்டுவ மென்னும் விருப்புடன் விளம்பினர் மாதோ. [து

தருணம தாகச் சாதநர் தமக்குச் சாலவே யுக்திகள் நன்றாய்
அருணநன் மநதி லமைவுறும் படியா யறைந்தன ரிதுதனைப் போலத்
தெருணல மீயு மெவ்வகை நூலுந் தெளிவிக்கு மென்பது பொய்யே
இருளினை யீர்க்கு மறைமுடி வதனா லியம்பிய துண்மையே யாகும்.

ஆதலா லிதனி லுலகினல் யுக்தி யருமறை நூலின துக்தி
ஓதலா யுக்தி யாவுமே யொருங்கே யுரைத்தன ரியாவர்க்கு மெளிதாய்ப்
போதமே யாகப் போகுமே யிருளும் பொய்யுட னென்னு மதியும்
ஈதலா தன்றி யிச்சகத் திருந்த விடமது மின்றென வுணர்த்தும்.

செய்யநல் முத்தி ராமலிங் கேச தேசிகன் றிருவடி வாழி
அய்யநல் லாவத் தேசிகோத் தமரி னடியிணை மிகமிக வாழி
வைகைநற் கிருத மாலையின் தடத்தில் வதிந்திடும் பிரமவா நந்த
பொய்யைவெல் குருவின் புணையடி நிதமும் பூரண மாகவா ழியவே.

பாயிரம் முற்றிற்று.

---

* அநுசந்தாநமென்பது அநுசந்தநமெனக் குறுகிற்று.

உ

ஓம் தத்ஸத்

# குருஸ்துதி

---

சித்தியி னோடு முத்தியை யருளுஞ் சித்திமா முகன்றிரு வடியை
பத்தியி லுருகும் பரங்கிரி யிறையைப் பாண்டியன் குமரியாய்ப் பரவுஞ்
சத்தியைக் கயற்கண் ணம்மையைச் சகத்தின் றந்தையாஞ் சுந்தர னடியைச்
சித்துரு வான பிரமவா னந்தத் தேசிகன் றனைத்தினம் பணிவாம்.

அறிவுரு வாகத் திருவிழி விழித்த வழகினைப் போற்றிசெய் திடுவோம்
மறையருள் பொருளை மலர்த்திருள் கடியு மதிமுக நிதியையே தெடுப்பாம்
குறைமிக நிறையுங் கொடியவெந் தமையாட் கொண்டசெஞ் சேவடி பணிவாம்
நிறையுறு பிரம வின்பமா முநியே நின்னையே வணங்கிவாழ்ந் திடுவேம்.

இலக்கண விருத்தி முதலிய நூல்க ளெண்ணிலா யுதங்க ளியற்றி
அலக்கணை யறுத்த பிரமவா னந்த வாரிய வடிவினை போற்றி
மலக்குணோர்ந் திதையே யகமதி புரிந்து மாநாட மாகியே திரிந்த
சலக்கணை யறுத்துப் பிரமவின் பதனைத் தருந்திரு வடிவினை போற்றி.

தருமமெய் யுணர்ந்த தவத்தருஞ் சிவத்திற் றங்கிய மகமுனி வாரும்
விரமம தடைய விரவிவாழ் மதுரை வியன்பதி விளங்கிய குருவே
குருமக ராயன் குளிர்மல ரடிகள் குலவிவாழ் குணகண மிருந்தோய்
பிரமநல் வடிவப் பிரமவா னந்தப் பெருந்தகை நின்பதந் தொழுவேம்.

வினதுசந் ததியி லடைந்தவ ரெவரு நின்மொழி யமுதினை மாந்தித்
தனதுரு வடைத லியமமே யாகத் தமியனேன் றயங்குத லலனே
மனதுரு விடமெய்ஞ் ஞானமே யருளு மாண்பினில் வசிட்டனே யென்றுந்
தினதனும் புகழுந் தேசிகோத் தமநின் றிருவடி தொழுதுவாழ்ந் திடுவேம்.

எந்தைநின் னெழிலுந் திருமுகப் பொலிவு மினியநன் மொழியிசைத் திடலுஞ்
சிந்தையின் கனிவுஞ் சிந்தைசெய் தோறுஞ் சிந்தனைக் கருகுவங் கண்டாய்
மைந்தரா யுமது மலரடி தலையின் மன்னிட வெண்ணநோற் றனமோ
பந்தம தகற்றும் பிரமவா னந்தப் பரம்பொருள் பதமலர் போற்றி.

முற்றிற்று.

ஓம் தத்ஸத்.

# பிரஹ்மானந்தீய அநுசந்தான ரத்னாகரம்.

ஸ்ரீமத் அஸ்வத்தநாயக முத்து ராமலிங்க சிரேஷ்ட தேசிகாய நம:.

ஸ்ரீமத் குரு பிரஹ்மானந்த சுவாமிநே நம:.

## அநுசந்தானம்.

ஸ்ரீமத் அகண்ட பரிபூர்ண சச்சிதானந்த பிரஹ்மானந்த அஸ்வத்த நாத முத்து ராமலிங்க சிரேஷ்ட தேசிக முத்தையாவரையிலுள்ள குரு பரமகுரு பரமேஷ்டிகுரு பராபரகுரு மகாகுரு முதலான பெரியவாளுடைய பாதார விந்தங்களுடைய வந்தனத்தால் எழுதப்போகிற அநுசந்தானம் நிர்விக்ன மாய் நிறைவேறும்பொருட்டும் இந்தக்கிரந்தம் உலகத்தின் கண் விருத்தியாய் முமுக்ஷுக்களெல்லோருங் கிருதார்த்தர்களாய் ஜீவன் முக்தி விதேகமுக்தி வரை அடையும்பொருட்டும் இன்னுஞ் சகலமான பெரியவர்களையும் வந்தனஞ் செய்து இந்தக் கிரந்தத்தை ஆரம்பிக்கிறேன்.

## 1-வது தரங்கம்.

இப்போது அஸ்வத்தநாதருடைய கிருபையினாலே எழுதப்போகிறதாயிருக் கிற இந்த அநுசந்தானங்கள் விவேகிகளுக்காகவே சொல்லப்படுகிறதே தவிர மூடர்களுக்காகவில்லை. அஃதேனென்றால் மூடர்களும் விவேகிகளும் ஒருக்கா லும் மனசோடே சேர்ந்து உறவாயிருக்கமாட்டார்கள். அஃதெப்படிப்போல வென்றால் பச்ச மண்ணுஞ் சுட்ட மண்ணும்போலவும், குலஸ்திரீயுந் தாசியும் போலவும், விதவையும் சுமங்கிலியும்போலவும், ஆசாரமுள்ளவனும் அனாசார முள்ளவனும்போலவுமாம். இவர்கள் எப்படியொன்று சேரமாட்டார்களோ அப்படிச் சேரார்கள். ஆகையால் மேலேசொன்னபடி இந்த அநுசந்தானம் விவேகிகளுக்காகவென்றே சித்தாந்தம்.

## 2-வது தரங்கம்.

ஜீவர்கள் ஈஸ்வரனுக்குப்பண்ணுகிற தப்பிதம் மூன்றும். முதலாவதுதப் பிதம், ஈஸ்வரனாற் சிருஷ்டிக்கப்பட்ட தேகாதி விஷயத்தை அவருக்கே அர்ப்பிதம் பண்ணாமல் தானென்று பாவிப்பதும், அதை மித்தை என்று பாராமல் சத்தியமென்று பார்ப்பதுமாம்; இரண்டாவது தப்பிதம், சகலத்துக் கும் ஈஸ்வராதிகளே கர்த்தாவாயிருக்கத் தாங்கள் தாங்களே கர்த்தாவாகப் பாவிப்பதாம்; மூன்றாவது, ஈஸ்வரனும் தானும் வாஸ்தவமாய்ப் பிரஹ்மமா யிருக்கும்போது தான் பிரஹ்மமென்பதை மறந்து தன்னைவிட அவரை வேறே

யாய் நினைத்ததுமன்றியில் அவருடைய ஆக்ஞைப்படிக்குண்டாயிருக்கிற சுருதி ஸ்மிருதிகளின் வாக்கியப்பிரகாரம் சாதனங்களை அப்பியாசித்துச் சற்குருவைத் தேடி அவரைச் சரணாகதம்பண்ணி அவர் அனுக்கிரகிக்கிற பிரகாரம் சிரவணாதி சாக்ஷாத்காரம்வரைப் பண்ணாமல் பிரஹ்மம் தானென்பதை அவரவர்கள் மறந்திருப்பதுமாம். முதலாவது தப்பிதத்திற்குத் தண்டனை, இகத்தில் ஜீவன் ஸ்தூல சரீரத்தை எடுத்து அதை நானென்று அபிமானித்து அதற்கு வருகிற தாபத்திரய துக்கத்தையும் ஜனனமரண காலங்களிலுண்டாகிற துக்கத்தையும் அனுபவிப்பிவிப்பதும் ஜகத்தின் கட்டுப்பாட்டுக்குட்பட்டுத் தாபப்படுவிப்பதுதாம். இரண்டாவது தப்பிதத்திற்குத் தண்டனை, கர்த்துருத்துவத்திற்குப் பலமான புண்ணிய பாபங்களால் வருகிற நரக சொர்க்கங்களை அனுபவிப்பிவிப்பதுமாம். மூன்றாவது தப்பிதத்திற்குத் தண்டனை, பிரளயத்திலும் அஞ்ஞானம் நிவர்த்தியாகாமல் அதன் காரியமான ஆவரணம் வாசனை கருமம் முதலானவற்றால் கற்பிக்கப்பட்டிருக்கிற சரீராதிகளில் நானென்றபிமானிப்பிவித்துச் சுக துக்கப்படுவிப்பதுதாம். இனி முதலாவது தண்டனை நிவர்த்திக்குச் சாதனம், விஷயத்தில் வைராக்கியமும் தேகாதிகள் தானல்ல ஜகத்துச் சத்தியமல்லவென்கிற விவேகமுமாம். இரண்டாவது தண்டனை நிவர்த்திக்குச் சாதனம், ஈசுவரன் அல்லது நவக்கிரகாதிகள் வாசனை காலம் கர்மம் மாயை அல்லது மனது இந்திரியங்கள் இந்திரியங்களுக்கு அதிதேவதைகள் குருநாதன் இவைகளுக்குள்ளே யேதேனு மொன்றைக் கர்த்தாவாக அறிந்துகொண்டு தான் அகர்த்தாவென்று பாவிப்பதாம். மூன்றாவது தண்டனை நிவர்த்திக்குச் சாதனம், தானே பிரஹ்மமென்று உறுதிபண்ணுவதாம். முதலாவது தப்பித தண்டனை நிவர்த்தியாகிய வைராக்கியமும் விவேகமும் வரச் சாதனமேதெனில், சாதன சதுஷ்டயத்தாலும் குருமுகமாகச் சிரவணத்தைச் செய்வதாலும் வரும். இரண்டாவது தப்பித தண்டனை நிவர்த்தியாகிய அகர்த்துருத்துவம் வரச் சாதனமாவது, சிரவணம் பண்ணின பிரஹ்மம் தான் தானென்னும் அந்த பிரஹ்மமாகிய தான் அகர்த்தா அபோக்தா சாக்ஷி யென்றெண்ணுகிற மனனத்தால் வரும். மூன்றாவது தப்பித தண்டனை நிவர்த்தியாகிய பிரஹ்மம் தானென்பதுவரச் சாதனமாவது, தேகாதிகளே தான் ஜகத்து சத்தியமென்ற விபரீத பாவனையைப் போக்குவதாகிய நிதித்தியாசனம் அல்லது சமாதியினால் வரும். முதலாவது இரண்டாவது மூன்றாவது தப்பித நிவர்த்திக்குச் சாதனமும் அதற்குச் சாதனமாகிய மேற்கண்டவைகளும் அடியிலெழுதுகிற ஸ்ரீமத் குரு பிரஹ்மானந்த சக்ரவர்த்தி அனுக்கிரகம் பண்ணியிருக்கிற அனுபவ யுக்தி ரத்னாகரத்தை இடைவிடாமல் விசாரணைபண்ணினால் வரும். அதனால் ஜீவன்முக்தியைத் தப்பாமலடையலாம். சந்தேகமில்லை, சத்தியம்.

## 3-வது தரங்கம்.

[அவதாரிகை.] முதலில் தன்னிடத்தில் அத்தியாரோபமும் அபவாதமுஞ் சொல்லித் தன்னைக்காண்பிக்கப்படுகிறது:—

அதாவது அறிவாகியதானே ஆகாசமாம். தன்னிடத்திற் சமஷ்டி ஆரோபிதமாயிருக்கிற மாயையே மேகமாம், வியஷ்டி ஆரோபிதமாய் அனேகமாய்ப் பிரிந்த அவித்தையே பூமியிலுள்ள ஜலங்களாம். அனேக கற்பனைமூலமான வாசனையே பூமியாம். அந்த வாசனையி லடங்கியிருக்கிற ஜீவர்களே பூமியி லடங்கியிருக்கிற வித்துக்களாம். இந்த ஜீவர்கள் தம்மைமறந்த அஞ்ஞானத்தினாலுண்டாயிருக்கிற இருபத்தெட்டுதத்துவங்கட்கும் ஆத்மாவுக்குமுள்ள பேதத்தைத் தெரியாமற்செய்த நாஸ்தி நபாதியென்னும் ஆவரணமே, பூமியின் கடினசக்தியானது பூமிக்கும் அதற்குள்ளிருக்கிற விரைக்கும் அவ்விடத்திலுள்ள ஆகாசத்திற்கும் ஒன்றுக்கொன்று பேதந் தெரியாமல் மறைக்கிறதுபோலவாம். அவித்யாவாசனைகளுடைய சம்பந்தத்தினால் நானென்று சிதாபாசரூபமாய் முளைத்த விக்ஷேபமே, பூமியில் ஜல சம்பந்தத்தினால் விரையானது முளைக்கிறதுபோலவாம். அஞ்ஞானத்தினாலும் வாசனையினாலும் அகங்கார ரூபமாய் ராகத்துவேஷங்களோடேவிருத்தியாகிறஜீவர்களே, ஜலத்தினாலும் பூமியினாலும் வளருகிறதாயும் முள்ளுக்களோடேகூடியுமிருக்கிற கருவேலமரங்கள் போலவாம். தினமும் அந்த ஜீவர்கள் சாக்கிர சொப்பனத்தில் தாபத்திரயத்தால் வாடிச் சுழுப்தியிற் சுகத்தை யடைகிறதே, அந்த மரங்கள் வெய்யிலினாலும் காற்றினாலும் வாடிச் சந்திரிகையாற் குளிருகிறது போலவாம். அனந்தகோடி ஜன்மங்களில் அனந்தகோடி வாசனைகளோடே சுழன்று கொண்டிருக்கிறதே, அந்த மரங்கள் அனந்தகோடி விரைகளோடே கூடியிருந்து பெரிய காடாகிறதுபோலவாம். திருஷ்டாந்தத்தையும் தார்ஷ்டாந்தத்தையு மொன்றாகச் சேர்த்து அத்தியாரோபஞ் சொல்லப்பட்டது. திருஷ்டாந்தத்தையும் தார்ஷ்டாந்தத்தையும் சொல்லுகிற அபவாதமாவது :—இந்த ஜீவர்கள் இப்படி வாசனைவசமாயிருந்துகொண்டிருக்கும்போது தெய்வகதியாலும் நிஷ்காம கர்மத்தினாலு முண்டான ஈசன் கிருபையே, திருஷ்டாந்தத்தில் இந்தக் காடானது இப்படிப் பூமியிலுள்ள ஜலத்தினாலும் மழையினாலும் விருத்தியாயிருக்கும்போது தெய்வகதியாலுஞ் க்ஷாமத்தினாலு முண்டான பெரிய காற்றும்; அந்தக் கிருபையாற் பாபம்போய்ச் சித்த சுத்தியுண்டாவதே அந்தக்காற்றினால் மேகம் போய் மரங்கள் காய்ந்து போவதாம். அச்சித்த சுத்தியாற் சாதன சதுஷ்டயமுண்டாவதே அம்மரங்களிலிருக்கிற முள்ளுக்களும் இலைகளுமுதிருகிறதாம்; அச்சாதன சதுஷ்டயத்தாற் குருதரிசனங்கிடைத்து அவர் கிருபையாலும் அவராலனுக்கிரகஞ் செய்யப்பட்ட ஞானக்கினியாலும் இவனுடைய மூலாஞ்ஞானங்களுடன் சஞ்சிதாகாமிய கர்மங்களுடைய நாசமே, திருஷ்டாந்தத்தில் கோடாலி முதலான ஆயுதங்களுடன் கூடினவெட்டுக்காரன் வந்து வெட்டுகிறதினாலும் அவன்வைத்த நெருப்பினாலும் வேர்களுங்கிளைகளுங் கெடுகிறதுபோலவாம். அந்தச்சற்குருவினுடைய அனுக்கிரகத்தாலுண்டான ஞானத்தால் சாதுக்கள் ஒருவருக்கொருவர் ஆத்மானாத்ம விசாரணைசெய்து ஜீவத்துவங்களை அடியோடே நாசம் பண்ணுகிறதே, வெட்டுக்காரன் வைத்த அக்கினி மரங்களிற்

பிடித்துக்காற்றினால் ஒன்றுக்கொன்று உரசிக்கொண்டு மரமே வேரோடே நிச்சேஷமாய் எரிந்துபோகிறது போலவாம். அதின் பிறகு சொரூபத் தியான மாகிற துவாதசாதித்தர்களால் வாசனையாகிற பூமியானது வெந்து சாம்பலாய் நிருவிகற்ப சமாதியிலுண்டாகிற ஆனந்த வருஷங்களாகிற சப்தமேகத்தால் அந்த வாசனையாகிற சாம்பலுங் கரைந்து அகண்டானந்தஜலப்பிரளயமாய்ந்தோன்றிக் கொண்டிருந்த அத்தோற்றமும் அதற்குமேற் செய்யப்பட்ட 5-வது பூமியிலுண்டாகிற சகச சமாதியான வாடவாக்கினியினாற் சோஷிக்கப்பட்டு, அதற்குமேல் ஆறுவது பூமியிலுண்டான சகசானுபவ பரவசமாகிற பிரசண்டமாருதத்தால் சித்சாமானியமான வாடவாக்கினியும் ஆறி, அதன்பிறகு அந்த அநுபூதி பரவசமாகிற பிரசண்டவாயுவும் சத்தா சாமானியக்கோடியாய் 7-வது பூமி யென்று சொல்லப் படுகிற சிதாகாச மாத்திரமாக சேஷித்ததே அபவாதமாம்.

## 4-வது தரங்கம்.

[அ-கை.] சிஷ்யனுக்கு விசாரமில்லாததால் வந்திருக்கிறதிருந்த துக்கத்தைக் குருவானவர் அதை விசாரணைசெய்து போக்கடித்ததுசொல்லப்படுகிறது:—

ஒருசிஷ்யன் குருவைப்பார்த்து எனக்கு நிரம்பத் துக்கம் வந்திருக்கிறது அதைநிவர்த்தி செய்யவேண்டுமென்றுகேட்டான். குருசொல்லுகிறார்:—நீ சத்தா அசத்தா? சத்தானால் மூன்று காலங்களிலுங் கெடாமலிருப்பதால் துக்கப்படத் தேவையில்லை. அசத்தானால் பதார்த்தமே இல்லை. நீ சித்தா ஜடமா? சித்தென்றால் ஆகாரமா? நிராகாரமா? ஆகாரமென்றால் சித்தாகாது. நிராகாரமென்றால் நிராகாரத்தில் ஒரு துக்கமும் சம்பந்தப்படமாட்டாது. ஜடமென்றால் வருத்தமாயிருக்கின்றதென்று அறிவு வரக்கணக்கில்லையே. நீ துக்கம் வந்திருக்கிறதாகச் சொல்லுகிறாயே! அதற்கு நீ. வேறா? அந்தத் துக்கமா? துக்கமே நீயானால் அந்தந்துக்கத்துக்கு துக்கமொன்றறிய அறிவு கிடையாதே. துக்க விலக்ஷணனென்றால் ஆனந்தமாச்சுதே. ஆனந்தத்தில் துக்கமேது. இப்போது வந்திருக்கிற துக்கம் நித்தியமா? அநித்தியமா? நித்தியமென்றால் சுழுப்தியில் நீ சுகமாயிருந்தாயா? துக்கமாயிருந்தாயா? சுகமாயிருந்தே னென்றால் இந்தத் துக்கம் நித்தியமன்றே. அநித்தியமென்றால் யாரிடத்திலுண்டாயிற்று, தன்னிடத்திலுண்டாயிற்றென்றால் உன்னிடத்திலுண்டான சொற்பன மனோராச்சியம் போலே பொய்யாயிற்று. அதைத்தொட்டும் உனக்குச் சம்பந்தமில்லையே. வேறொரு இடத்திலுண்டாயிற்றென்றால் தனக்கன்னியமாய்ச் சத்வஸ்து இல்லையே. சுயமாயுண்டாயிற்றென்றாற் காரணமில்லாமல் தோன்றுகிற இந்தத் துக்கம் கானலில் வருஷமில்லாமல் ஜலந்தோன்றுகிறது போலே பொய்யாயிற்றே. எப்படிப் பார்த்தாலுந் தனக்கு ஒரு துக்கமுங் காணோமே. ஆனால் அனுபவத்தில் எனக்குத் துக்கந் தோன்றுகிறதே என்றால், இப்படி விசாரியாத குறைவே யல்லாமல் வேறொரு குறைவுமில்லை, ஆகையால் நான் யாரென்று சதா விசாரம் பண்ணுகிறவனுக்கு ஒருவிதமான துக்கமும் வாராது.

## 5-வது தரங்கம்.

[அ - கை.] சிஷ்யன் தன்னிடத்திலுதிக்கிறவாசனை எப்படிப்போமென்று குருவைக்கேட்டதற்குத் திருஷ்டாந்தத்துடன் வாசனைபோவதற்குபாயமும் அப்படிப் போனதற்கு அடையாளமுங் குருவாற் சொல்லப்படுகிறது:—

குருவைப் பார்த்து சிஷ்யன் கேட்கிறுன்:—ஹே குரோ சாதுக்களுடன் சேர்ந்திருக்கும்போது என்சித்தத்திலிருக்கிற விஷய வாசனைகள் தெரியாமலிருந்துகொண்டு அந்தர்முகமான போது அந்த வாசனைகளுண்டாய் சித்த சலனத்தைப் பண்ணித் தத்துவக் ஞானத்தைக் கெடுத்துப்போடுகிறதே, இதன் நிவிர்த்திக்கு உபாயமென்ன வென்று கேட்ட சிஷ்யனுக்குக் குரு சொல்லுகிறுர். அதாவது பகலில் ஒரு திருடன் ஒரு வீட்டில் வந்திருந்து கொண்டு அப்போது திருடாமல் அவ்விடத்திலுள்ள வஸ்துக்களை அடையாளம் வைத்துப் பார்த்துக்கொண்டு இராத்திரி வீட்டுக்காரன் தூங்கினபிற்பாடு எப்படி அந்த வஸ்துக்களைத் திருடுவனே அப்படி உன்னுடைய மனசாகிற வீட்டிலிருக்கிற வாசனையாகிற திருடன் உனக்குத் தெரியாமல் நீ சாதுக்களுடன் விசாரஞ் செய்யும்போது மறைந்திருந்து கொண்டு நீ அந்தர்முகமாகிற நித்திரை செய்யும்போது வாசனையாகிற திருடன் உன்னுடைய விவேகங்களாகிற சொத்துக்களை அபகரித்துக்கொண்டு தினந் தினமும் போகிறபடியால் இனிமேல் வீட்டுக்காரனுகிய நீ விழிப்பாகிய அறிவோடு கூடிக்கொண்டு திருடன் போலிருக்கிற அந்தவாசனை வந்த மாத்திரத்தில் கையுங் களவுமாய்ப் பிடிப்பதுபோல வாசனையேநீயார்? இவ்விடத்தில் என்ன காரியமாய் வந்தாய்? இவ்விடத்திலுனக்கு என்னசம்பந்தமிருக்கிறது? சொல்லென்று கேட்டமாத்திரத்தில் பதில்சொல்லாமல் அந்த வாசனை போன இடந்தெரியாமல் போய்விடுகிறது. ஆனுல் அந்தப்படிவாசனை நசித்ததற்கும் ஒளிந்துகொண்டிருப்பதற்கும் அடையாளமேதென்றுல்திரும்பசங்கற்பரூபமாய் முளைப்பதேஇருக்கிறதற்கு அடையாளமாம். அந்தச்சங்கற்பம் திரும்பவராமலிருப்பதே போனதற்கடையாளம். ஆனுல்ஞானிக்கும்சங்கற்பம் வருகிறதேயென்றுல் அந்தச்சங்கற்பம் நிராசிரயமாய் மித்தையாய்த் தோன்றித்தோன்றி மறைகிறதால் அந்த வாசனை நசித்துப்போனதாம். சத்தியமாய் வருகிற சங்கற்பமே வறுபடாதவிரைபோல மறுஜன்மத்துக்கு ஹேதுவாம், பொய்யாய் வருகிற சங்கற்பம் வறுத்தவிரைபோல மறுஜன்மத்துக்கேது வாகாதென் றறியத் தக்கது.

## 6-வது தரங்கம்.

[அ-கை.] நானென்கிறராஜா ஆனந்தஸ்திரீயைவிட்டுக் கெட்டவனுன அஞ்ஞானன் சிநேகத்தால் ஆசைஸ்திரீயோடே சேர்ந்ததால் எழுவகைச் சரீரங்களாகிற வியாதி முதலானவை யடைந்து அதனுல் வந்த துக்கம், ஆனந்த ஸ்திரீயுடன் ரமிக்கிற குரு அனுக்கிரகித்த ஞானுதி விவேகத்தால் நிவர்த்தியானதும், அது உச்சாடன மந்திராதி ஜபத்தால் உறுதிப்பட்டதுஞ் சொல்லப் படுகிறது:—

நானென்கிற ராஜாவுக்கு ஆனந்தமென்கிற ஸ்திரீயுண்டு. இவர் அஞ்ஞானனென்கிற கெட்டவன் சிநேகத்தால் தன் நிஜஸ்திரீயை மறந்துபோகும்போது

வாங்காமல் உனக்கென்னமாய்ச் சேர்ந்ததென்று கேட்க அவன் என்பிதா சம்பாத்தியமென்று சொல்ல உன்பிதா யாரென்று கேட்க அவித்தையென்று சொல்ல இல்லாதவனாயிருக்கிற அவித்தையனுக்கு சொத்தேதென்று கேட்க பெப்பப்பேயென்று முழிக்க உடனே ஜட்ஜியாகிய நாம் யோசித்து இந்த மனசுக்கு யாதொரு ஆஸ்தியில்லாதிருந்தும் ஜட்ஜிகளை மோசம் பண்ணியே இவ்வளவு ஆஸ்திகளையுங் கொள்ளையடித்திருக்கிறனென்று தெரிந்துகொண்டு உடனே சங்கற்பமாகிற உத்தியோகத்தையும் பார்த்துருப்புச் செய்து ராகத்துவேஷாதிகளாகிற அதிகாரங்களையும் நிறுத்தி பொறுமையாகிற கழுதை மேல் வைத்து மைத்திரியாதி குணங்களாகிற வாத்திய கோஷத்தோடே விவேக வைராக்கியங்களாகிற செம்புள்ளி கரும்புள்ளி குத்திச் சமதமங்களாகிற முட்டாக்கைப் போட்டுக் குருபக்தியாகிற குடாவைக்கொண்டு அடிக்கும்போது முமுக்ஷுத்துவமாகிற வேதனை சகிக்கமாட்டாமல் உள்ளத்தைச் சொல்லுகிறேனென்று குருவாகிய நம்முடைய காலில் வந்து விழுந்தான். உடனே அவனை வாக்குமூலம் வாங்கும்போது தான் செய்த தேகவாசனை முதலானமோசத்தையும் ராகத்துவேஷத்தாற் சம்பாதித்தசஞ்சித கருமம்முதலான சொத்துக்களையும் பின்னும் புதைத்து வைத்திருக்கிற பொருளான அஞ்ஞானத்தையுங் காண்பித்து என்னைச் சத்துவகுணமாகிற உயிர் மாத்திரமாய் விட்டால் போதுமென்று கேட்ட பிற்பாடு அவன் பார்த்திருக்கும்போதே அவனுடைய அஞ்ஞானம் வாசனைகளாகிற சொத்துக்களை ஞானாக்கினியினாற் கொளுத்தி ரஜோகுண தமோகுணங்களாகிற மதத்தையு மிறக்கிச் சத்துவகுணமாகிற உயிர்மாத்திரம் மிஞ்சினபிற்பாடு சிரவணமாகிற சட்டத்தைக் குருமுகமாகப் பூராவாய்ப் படித்த பின்னர் ஜீவேசுவர ஜெகத்துக்களெல்லாம் பொய்யென்றும் பிரஹ்மமே மூன்று காலத்திலும் அழியாமலிருக்கிறதென்கிற பரோக்ஷ ஞானமாகிற சட்டக் கருத்தை நன்றாய்த் தெரிந்துகொண்டு பிற்பாடு அப்படியே இந்தத் தேகாதிகள் சத்தியமோ மித்தையோ மித்தையானாலும் நாமா நாமல்லவா நாமல்லவென்றாலும் இவற்றிற்கும் நமக்கும் சம்பந்தமுண்டா இல்லையா சம்பந்தமில்லையென்றாலும் இவற்றாற் செய்யப்பட்ட கருத்துருத்துவ பலங்கள் நமக்கு உண்டா இல்லையா நமக்கில்லாமற்போனாற் சுகதுக்காதி நமக்கெப்படிவந்தன. அவிசாரத்தாலென்றால் இப்போது செய்கிற விசாரத்தால் நமக்குக் கருத்துருத்துவம் போய்ச் சாக்ஷித்துவஞ் சித்திக்குமா சித்திக்காதா அப்படிச் சித்தித்தாலும் அந்தச் சாக்ஷித்துவ ஞானம் நித்தியமாயிருக்குமா இராதா அப்படி நித்தியமாயிருந்தாலும் அந்தச் சாக்ஷித்துவம் இப்போதுதான் நமக்கு வந்ததா எப்போதுஞ்சுபாவமாயிருக்கிறதா சுபாவமாயிருந்தால் இதுவரை ஏன்விளங்கவில்லை அஞ்ஞானத்தினாலென்றால் அதற்குக்காரணமென்ன அநாதியாயிருப்பதால் அதற்குக்காரணமில்லை. அநாதிக்கு அந்தமுண்டா இல்லையா பிராகபாவத்துக்கு அந்தமுண்டாவதுபோல ஞானத்தால் அந்தமுண்டானாலும் திரும்ப முன்போல அஞ்ஞானமுண்டாகுமா உண்டாகாதா வறுத்தவிரைபோல உண்டாகாதென்று

லும் சாக்ஷியாகிய நமக்குச் சச்சிதானந்தலக்ஷணமாகிய பிரஹ்மத்துவமுண்டா இல்லையா, அப்படிப்பிரஹ்மத்துவமிருந்தாலும் ஆகாமியசஞ்சிதகருமங்கள் நிச்சேஷமாய்நிவர்த்தியாய்விட்டனவா இல்லையா, பஞ்சுப்பொதியில்வைத்த தீப்போலும் தாமரையிலையில்ஜலம்போலும் தீர்ந்துபோய்விட்டதென்றாலும், பிராரப்தகருமம் இந்தச்சரீரத்தோடுதீருமா, ஜடபரதர்வாமதேவர்போலவெகுஜன்மப்பிராரப்தமா, அப்படிஇந்த ஜன்மத்தோடுதீருமென்றாலும் வாசனக்ஷயமனோநாச தத்துவஞானங்களுக்குப் பலபூதமான ஜீவன்முக்திச்சுகங்கிடைத்து, ஹிருதயக்கிரந்தி நிச்சேஷமாய்அறுபட்டு அப்பிரதிபந்த அபரோக்ஷ சாக்ஷாத்காரங் கராமலகம்போல் விளங்குமா, வென்றஇவைமுதலானசமுசயங்களை யெல்லாவற்றையுங் குரு சுருதி வாக்கியங்களாகிற சட்டக்கருத்தின்ஆலோசனையினாற் போக்கியபின் வெகுஜன்மப்பழக்கத்தால் அடிக்கடி தேகம்நான், பிரபஞ்சம்சத்தியமென்றுவருகிற விபரீதபாவனையாகிற பழையலஞ்சவாசனையைப் பிரஹ்மாப்பியாசமாகிற ஜட்ஜியின் பழக்கத்தால்போக்கடித்து, விக்ஷேபமாகிற பழையநாள்பழக்கங்களை சமாதியாகிற ஜட்ஜியோடே ஒன்றுசேர்ந்ததால் நிருவிகல்பமாய்ச்செய்தபிறகு, அந்த மனசாகிறசிரஸ்தார் அறிவாகியஜட்ஜியானவர் எப்படி நிருவிகாரியாயிருக்கிறாரோ அப்படியேஆய்விட்டபடியால் இவரும்ஜட்ஜியும் அபேதமாய்விட்டார்கள். ஆகையால் அசத்துக்களுக்கெல்லாம் ஹானியும் சாதுக்களானசத்துக்களுக்கெல்லாஞ் க்ஷேமகாலமுமுண்டாய் விட்டதென்றுசகலமுமுக்ஷுக்களும் அறியும்படி விளம்பரஞ்செய்யப்பட்டது.

## 8-வது தரங்கம்.

[அ-கை.] பாலாதிகளிடத்திலிருக்கிற சுகுணதுர்க்குணங்களை ஞானிஅஞ்ஞானிகளிடத்தில் காண்பிக்கிறார்:—

பாலாதிகளிடத்திலிருக்கிற சுகுணதுர்க்குணங்களை ஞானி அஞ்ஞானிகள் பகுத்துக்கொண்டார்கள். அதில்பாலனிடத்திலிருக்கிற சுகுணங்களாவன:— மானாபிமானமில்லாமையும், பூதபௌஷிய சிந்தையில்லாமையும், காமக்குரோதாதி வாசனை யில்லாமையும், சரீரநிர்வாகசிந்தனை யில்லாமையும், புண்ணியபாப சிந்தனை யில்லாமையும், என்பனமுதலானசுகுணங்கள் ஞானிபாகத்திற்சேர்ந்தன. இனிப்பாலனிடத்திலிருக்கிறதுர்க்குணங்களானவை அஞ்ஞானியாற்கிரகிக்கப்பட்டவை யாவையெனில்:-வீண்காலம்போக்குகிறது, பஞ்சவிஷயத்திற்சுகதுக்கத்தையடைகிறது, அற்பவிஷயத்திற்சந்தோஷவிசனத்தை யடைகிறது, தன் சொரூபந்தனக்குத்தெரியாமலிருக்கிறது, எப்பொழுதும் மூடசகவாசம் பண்ணுகிறது, சாத்வீகத்துக்குஅடங்குகிறதில்லை, ரஜோகுணதமோகுணங்களுக்குக் கட்டுப்படுகிறது, எவ்வளவுவந்தாலும் போதாதென்று மேலுமேலும் ஆசைப்படுகிறது, நூறுநாள் உபகாரஞ்செய்து ஒருநாளுபகாரஞ்செய்யாமற்போனால் உடனே கோபித்துக்கொள்ளுகிறது, காரியமிருந்தாற்கிட்டவருகிறது, காரியமில்லாமற்போனாற் கெஞ்சினாலுங் கிட்டவருகிறதில்லை, கண்ணுக்கெதுதோற்றுகிறதோ அதுவே சத்தியம், இந்திரியத்துக்கு அதீதமான வஸ்து அசத்தியம், தானுந்துக்

கப்படுகிறது, அன்னியர்களுக்குந் துக்கத்தைக்கொடுக்கிறது, பூர்வாபரவிசாரமில்லாமலிருக்கிறது, வர்த்தமானமாத்திரத்தைச் சத்தியமாய்நம்புகிறது, அடிக்கடி அநேக விரோதங்களுடன் கூடிக்கொண்டிருக்கிறது, சுயபுத்தியில்லாமையாயிருக்கிறது, சொல்லிக்கொடுத்ததைச்சொல்லுகிறது, நல்லது பொல்லாததாயும் பொல்லாதது நல்லதாயுந்தோன்றுகிறது, எப்போதும் அந்தர்முகமில்லாமற் பகிர்முகமாயிருக்கிறது, பிரயோஜனமில்லாதவியாபாரஞ்செய்கிறது, மிருத்து, சிலை, தாம்பிராதிகளில்மட்டுந் தெய்வபுத்தி பண்ணுகிறது, தேகத்துக்குவேறாக இந்திரிய முதல் ஆத்மாவரையில் ஒருதத்துவமுந் தெரியாமலிருக்கிறது, தேகமாத்திரம் நானென்றிருக்கிறது, உண்டதேயுறுதி கண்டதேகாட்சி யென்றிருக்கிறது, அநேகயோக்கியமில்லாமலிருக்கிறது, என்பனமுதலான துர்க்குணங்கள் அஞ்ஞானிபாகத்துக்குச் சேர்ந்தன. பின்னும் உன்மத்தனிடத்திலிருக்கிற சுகுணங்களை ஞானிகிரகித்திருக்கிறான், அதாவது:—தானேபுலம்புகிறது, சிஷ்யர்களாகிறகூட்டத்தைக்கண்டால் அதிகமாகயிரைஞ்சுகூத்தாடுகிறது, லோகத்தாரனைவரும் இவனொன்றிலேயுஞ்சேர்ந்தவனல்லவென்று மதியாமலிருக்கிறது, இகலோகபரலோக மோக்ஷசிந்தனைகளொன்றுமற்றிருக்கிறது, எந்தெந்தக் கரணத்தினால் எந்தெந்தத்தொழில்கள் செய்தாலும் நாம் செய்தோமென்கிற கருத்துருத்துவங்களையும் வாசனைகளையும் புண்ணியபாபகருமங்களையும் அதற்குப்பலமானசுவர்க்கநரகங்களையும் வர்த்தமானத்திலுஞ்சுகதுக்கங்களையும் மானாபிமானங்களையுமடையாமை, ஜகத்தை ஒருபொருளாக மதிப்பதில்லாமை, உலகத்தார்கேலிபண்ணும்படியாயும், இவனைப்பிரமாணமாகஒருகாரியத்துக்கும்நம்பாமை, இவன்சொல்லையொருவருமதியாமை, எல்லாராலுங்கிறுக்கனென்று தங்களுக்குவிலக்ஷணனென்னும்படியாயும், விசேஷநித்திரையில்லாமல் சதா விழிப்பாயும் அவஸ்தாநீதனையும், ஓரிடத்திலிருக்கிறதென்றுநியமமில்லாமற் சஞ்சரிப்பவனையும், ஸ்ரீவேஸ்வரஜகத்தைச் சமமாய்ப் பார்ப்பவனையும், கருமம்ஊட்டிவித்தபடியுண்பவனையும், யானெனதென்கிறஅபிமானமற்றவனையும், ஜலத்திலெழுத்துப்போலக்கிரியைசெய்துகொண்டேயிருப்பவனையுமிருக்கிறஇதுமுதலானசுகுணங்கள்ஞானிகிரகித்திருக்கிறானென்றறியத்தக்கது. இனி உன்மத்தனிடத்திலிருக்கிற துர்க்குணங்களை அஞ்ஞானிகள் கிரகித்திருக்கிறார்களென்பது எப்படியெனில்:—தன்னையும் தன்ஸ்திதியையும் உலகத்தையும் உலகத்தின்ஸ்திதியையும் அறியாமலிருப்பது, வியர்த்தமாய்ஒருபிரயோஜனமன்றியில் உலகத்தின்கண் ஜீவித்திருப்பது, தன்னையும் பிறரையுங் காப்பாற்றுவதில்லாமை, ஒருவார்த்தைக்கொருவார்த்தை தகவிலில்லாமை, சுருதி யுக்தி அநுபவத்துக்கு ஒவ்வுதலில்லாமை, ஞானமுள்ளவர்கள் ஒருதிருணமளவும்மதிக்கக்கூடாமை, வாசனாவசத்தால்திரிகிறது, இடைவிடாமல்அறியாமையோடிருக்கிற சுபாவத்தையுடையவனையும், சொன்னதையேசொல்லுகிறவனையும், பார்க்கப்பயங்கரனையும், சுகலேசமில்லாதவனையும், எல்லாராலுஞ்சீசீ என்று சொல்லப்படுகிறவனையும், பார்க்கப்படுகிறவனிடத்திலெல்லாம் பல்லைக்காட்டுகிறவனையும், தச்சனடித்த தலைவாசலெல்லாம் நுழைபவனையும், மகாபாபியாயும், மாயாவசத்தனையும், சகலவி

தத்திலுங் கெட்டுப்போனவனுயுமிருத்தல் முதலான துர்க்குணங்கள் அஞ்ஞானிகளிடத்திலிருக்கிறதாக அறியத்தக்கது. இனிப் பிசாசினிடத்திலிருக்கிற சுகுணத்தை ஞானி கிரகித்திருப்பது எப்படியெனில்:—இவன்சஞ்சரிக்கிறமார்க்கம் ஒருவருக்குந்தெரியாமலிருக்கிறது. பக்குவிகளாகிறபெண்களைப்பிடித்துப்பரிசைக்கொடுத்து ஆட்டிவைக்கிறது. தனக்கென்று ஒருசரீரமில்லாமை, கர்மத்தால்மட்டுஞ் சஞ்சரிக்கிறதாயுமிருக்கிற இது முதலானசுகுணங்கள் ஞானியினிடத்திலிருக்கின்றனவென்று அறியத்தக்கன. இனி இதனிடத்திலிருக்கிற துர்க்குணத்தை அஞ்ஞானி கிரகித்திருப்பது எப்படியெனில்:-பிறரைப்பிடித்துஹிம்சிப்பதும், மரம் முதலானஜடங்களையே ஸ்தானமாக எண்ணுவதும், அசுத்தமானஸ்திரீயைப்போய்ப்பிடிப்பதும் மந்திரவாதியால்விரட்டப்படுகிறதும், மரங்கள்வெட்டுப்படுங்காலத்தில்இன்னொருமரம் எது இருக்கிறதென்றுதேடி பறபறப்பதும், பிடித்தமரத்தின் நிழலிற்போனவனை அரட்டுவதும், பிறரை ஹிம்சித்தே ஜீவிப்பதும்ஆகிய இவைமுதலான தன்மைகளையுடையவனுயும், பாபகிருத்தியத்தாற்செய்கிறதுர்மரணத்தாற்பிறந்தவனுயும், விசாரித்தால்தனக்கென்று ஒருவடிவுமில்லாமற்பொய்யாய்ப்போகிறவனுயும், அக்கிரமத்திற்பிரவேசிப்பவனுயும், தெய்வங்களுக்குள் எறிஞ்சுபேர்டப்பட்டவனுயுமிருப்பதுமுதலான துர்க்குணங்கள் அஞ்ஞானிகளிடமிருக்கின்றனவாக அறியத்தக்கன. குமாரப்பருவத்திலிருக்கிற சுகுணம் ஞானியால்கிரகிக்கப்பட்டதேதெனில்:—சித்தேகாக்கிரியமும், குருசாஸ்திரத்தின் ஒழுங்குப்படிநடப்பதும், குடும்பசிந்தனையில்லாமையும், சதாவித்தியாவிசாரத்தோடு மனனம் பண்ணுகிறதும் ஆகிய இவைமுதலான சுகுணங்கள்தாம் அவனுலே கிரகிக்கப்பட்டிருக்கின்றன. இனிதுர்க்குணமாவது:—சன்மார்க்கத்தை வரப்பயிற்றுவிக்கிறகுருபிதா இவர்களைச்சத்துருவாகநினைக்கிறதும், படிக்கிறவர்களொருவருக்கொருவர்பொறுமையோடுகூடி ராகத்துவேஷத்தாற்சண்டைபிடித்துக்கொள்ளுகிறதும், சதாதாபத்தோடுகூடிக்கொண்டிருக்கிறதும், துஷ்டத்தனத்தால்குரு முதலானவர்களால்உதைக்கப்படுகிறதும், ஒன்றைப்பழகி ஒன்றைமறப்பதுமாகிய இதுமுதலான துர்க்குணங்கள் அஞ்ஞானிகளால்கிரகிக்கப்பட்டிருக்கின்றன. இனி ஞானியாற்கிரகிக்கப்பட்ட எவ்வனத்திலுள்ளசுகுணமாவன:—பள்ளிக்கூடம்விட்டுக் கிருதகிருத்தியனுயிருப்பதும், சகலஞானமுந்தெரிந்திருப்பதும், பூர்ணசக்தியோடேதன்னையும் தன்னைச்சார்ந்தவர்களையுங் காப்பாற்றுகிறதும், அதிகாமியாய்க்கண்டவிடமெல்லாம் ஐக்கியபோகஞ்சதாபண்ணுகிறதும், தீரதையாயொன்றும் லக்ஷியமன்றியிலிருக்கிறதும், ஒன்றுக்கும் பயப்படாமலிருக்கிறதும் ஆகிய இவைமுதலானசுகுணங்கள் கிரகிக்கப்பட்டிருக்கின்றன. இனிதுர்க்குணமாவன:-மிகுந்த அகம்பாவத்தோடுகூடிக் காமக்குரோதபரனுயும், இந்திரியசேஷ்டைகளால் தானுந்துக்கப்பட்டுப் பிறரையுந் துக்கப்படுத்துகிறவனுயும், காமப்பிசாசுபிடித்து அதனுற்புத்திகெட்டுப்போய் மயங்கி ஸ்திரீயாகிற மாயாபாசத்திற் கட்டுப்பட்டு அவளையும் அவளைச்சார்ந்தவர்களையும் தெய்வமாகநம்பி, அவள் திருப்திக்காகப் பஞ்சமகாபாதகங்கள் வரை செய்கிறதும், அசுத்தமான யோனியில் அடிக்

கடிபிரவேசித்து வெளியில்வருகிறதும்,குருசாஸ்திரசன்மார்க்கங்களைக்கடக்கிற தும், விவஸ்தையன்றியிலிருக்கிறதும்,வஞ்சகமாய்ப்பிறர்பொருளை நயம்பயத்தால் கிரகிக்கிறதும், பெரியவர்களை அவமானம்பண்ணித் தன்னைப்புகழ்கிறவருக்கு உறவாயிருக்கிறதும், தானே சகலகர்த்தாவென்று நினைத்திருக்கிறதுமாகிய இவைமுதலான துர்க்குணங்களெல்லாம் அஞ்ஞானியைச் சேர்ந்தனவென்றறியத் தக்கன. விருத்தனிடத்திலிருக்கிற சுகுணங்கள் கிரகிக்கப்பட்டிருக்கிறதாவன:— சகலர்களுடைய சுகதுக்கத்தையுந் தன்னவாகஎண்ணுகிறதும், உள்ளேபோகானுபவம்பண்ண இடமில்லாமல் வாயினால்மட்டுஞ்சொல்லுகிறதும், அஞ்ஞானிகளாகிற குழந்தைகள் எவ்வளவுகோபித்து அலட்சியஞ்செய்தாலும் அதை எண்ணாமல் அவர்களுக்கு க்ஷேமத்தையே சிந்தித்துச்சொல்லுகிறதும் ஆகிய இவைமுதலான சுகுணங்கள் ஞானியால்கிரகிக்கப்பட்டன. இனி துர்க்குணமாவன:— சதா கவலையுடன்கூடியிருக்கிறதும், முடியாதகாரியத்தை முடிக்கலாமென்று எண்ணுகிறதும், ஒருபிரயோசனமன்றியில் மனோராச்சியம் பண்ணிக்கொண்டிருக்கிறதும், பலவந்தமாயெல்லாரையுங்கூப்பிட்டுப் பல்லைக்கெஞ்சுகிறதும், தன்கருவிகரணங்கள் தனக்குச்சுவாதீனமில்லாமலிருக்கிறதும், வியாதிமுதலானதினால் தபிக்கப்பட்டு பராதீனனாயிருக்கிறதும்ஆகிய இவைமுதலான துர்க்குணங்கள் அஞ்ஞானியால் கிரகிக்கப்பட்டனவென்றறியத்தக்கன. இனி பாமரனிடங்கிரகிக்கப்பட்ட சுகுணமாவன:— விதிநிஷேதத்தைக்கடந்திருக்கிறதும், தன்னைவிட வேறே தெய்வமில்லையென்றெண்ணியிருக்கிறதும், தனக்குப்புண்ணிய பாப சிந்தனையற்று எந்தவேளை எதுநேர்ந்ததோ அதைப் புசித்திருப்பதுதான் ஞானிபாகம். இனித்துர்க்குணமாவது:—தேகமேநான் போகமேமோக்ஷமென்றிருப்பதும், காணப்பட்ட விஷயத்தைச் சத்தியமென்று பார்ப்பதும், சுருதிமார்க்கத்தைச் சுத்தமாய்மறந்து ஒருஅதிகாரத்திலுஞ் சேராமலிருப்பதும் ஆகியஇவைமுதலான துர்க்குணங்கள் அஞ்ஞானிபாகமென்றறியத்தக்கன. இனி கருமியினிடத்திலிருக்கிற ஞானியால்கிரகிக்கப்பட்ட சுகுணமாவன:—சுருதிவாக்கியத்தில் சிரத்தையுடன்கூடியிருப்பதும், கருத்துருத்துவமாகிறபாபத்துக்குப் பயப்படுகிறதும், அகர்த்துருத்துவமானசத்கர்மத்தை விடாமல்நடத்திவருவதும் ஆகிய இவைமுதலான சுகுணங்கள் ஞானிபாகமென்றறியத்தக்கன. இனிதுர்க்குணமாவன:—தானேகர்த்தாவென்றுநம்பிஇந்தப்புண்ணியபாவகர்மங்கள் நம்மைவிடாவென்று நடுங்கிப்போகாசையோடுகூடிச் சதா பயந்து சதாகருமங்களைச்செய்து வருகிறதுமுதலான துர்க்குணங்கள் அஞ்ஞானிபாகமென்றறியத்தக்கன. இனிப் பக்தனிடத்தில் ஞானியாற்கிரகிக்கப்பட்ட சுகுணமாவன:— ஈசுவரசாக்ஷியாக நடக்கிறது, தெய்வசிந்தனைமறவாமலிருக்கிறது முதலானவை ஞானிபாகமென்றறியத்தக்கன. இனி துர்க்குணமாவது:-பசுபதிபாசத்தைஅனுதினித்தியமாய்நினைக்கிறதும், ஒருதெய்வத்தைப்பிடித்துக்கொண்டு அதில் ராகத்தைவைத்து மற்றொரு தெய்வத்தைத் துவேஷத்தால் நிந்திக்கிறதுமுதலான துர்க்குணங்கள் அஞ்ஞானிபாகமாம். இனிமுமுக்ஷுவினிடத்திலிருக்கிற சுகுணமாவது :— சகலரையும்

விட்டுக் குருவைப்பிடித்திருப்பதுபோலச் சகலதெய்வமும் பொய்யென்று தள்ளித்தன்னையேதெய்வமாய்நம்பியிருக்கிறது, உடற்பொருளாவிமூன்றுங் குருவுக்குத்தத்தம்பண்ணி யிருப்பதுபோலச் சகல அத்தியாசங்களையும் ஞானாக்கினிக்குத் தத்தம்பண்ணி யிருப்பது முதலான சுகுணங்கள் ஞானியைச்சேர்ந்தன. இனித்துர்க்குணமாவன:—குடும்பத்தைவிட்டுக்குருவாகிற தாசிவீட்டுக்குப் போகிறதும், போகும்போது அகம்பாவமாயும் வரும்போது பல்லைப்பிளந்து அஞ்சிக்கொண்டுவருகிறதும், தன்ஜீவன்முதல்சகலத்தையும்அவர்கள் கிரகித்துத் தன்னையுங்கொன்றுபோடுவார்களென்று தெரியாமல் அகப்பட்டுக்கொண்டு நிர்க்கதியாய்ப் போவதுமுதலான துர்க்குணங்கள் அஞ்ஞானிபாகமென்றறியத்தக்கன. யோகியினிடத்திலிருக்கிற சுகுணமாவது:—சகலத்தையும் விட்டுப் பிராணனைப்பிடிப்பதுபோல அறிவேதானென்று பிடித்திருக்கிறது முதலானதாம். இனித்துர்க்குணமாவது:—சித்ஜடங்களின் பேதந்தெரியாமல் எப்போதும் அத்தியாசத்துடனுங் கருத்துருத்துவாதிகளுடனும் கூடியிருக்கிறது அஞ்ஞானியாற் கிரகிக்கப்பட்ட துர்க்குணமென்றறியத்தக்கது. ஞானி அஞ்ஞானிகளுடைய சுகுணதுர்க்குணங்கள் திருஷ்டாந்தபூர்வகமாக அறிவிக்கப்படுகின்றன. சுகுணங்களுக்குத் திருஷ்டாந்தமாவது:—சந்திரன், அமிர்தம், காமதேனு, கல்பகவிருக்ஷம், சிந்தாமணி, சந்தனக்கட்டை, வசந்தருது, மேகம், சூரியன், ஆகாசம், வாயு, ஈஸ்வரன், தயாளுவாயுள்ளராஜா முதலானவரெல்லாம் ஞானியினுடைய சுகுணத்துக்குத்திருஷ்டாந்தம். துர்க்குண திருஷ்டாந்தமாவது:—காளகூடவிஷம், பிரளயகாலாக்கினி, ஸ்திரீ, சர்ப்பம், வியாக்கிரம், விஷவிருக்ஷம், சமுத்திரஜலம் முதலான துர்க்குணவஸ்துக்கள் அஞ்ஞானியைச்சேர்ந்தன. ஆனாலிப்போது சொன்னது பூர்வபக்ஷமேயல்லாமற் சித்தாந்தமல்ல. மேற்சொன்ன சுகுணங்களும் ஞானியின்சுகுணங்களுடைய கோடியில் ஒருஅம்சத்திற் கூடச் சமமாகமாட்டா; கீழ்ச்சொன்ன துர்க்குணங்களும்அஞ்ஞானிகளுடைய துர்க்குணத்துக்குக் கோடியிலொரு அம்சங்கூடச் சமமாகமாட்டா. அதுஎதனாலென்றால்:—சுகுண துர்க்குணங்களுடன் கூடினபதார்த்தங்கள் அந்தச்சுகுண துர்க்குணங்களைப் புருஷப்பிரயத்தனத்தினாற் சம்பாதியாமல் அவற்றிற்குச் சுபாவமாயிருப்பதால் அவற்றைவிசேஷமாகச் சொல்லக்கூடவில்லை. ஞானிஅஞ்ஞானிகளுக்கோவென்றால் அந்தச்சுகுண துர்க்குணங்கள் புருஷப்பிரயத்தனத்தினாற் சம்பாதிக்கப்பட்டிருப்பதாலும், இதற்குயுக்தி:—கொசுகுமுதலானவற்றிற்குப்பறப்பது இயற்கையானதால் ஆச்சரியமில்லை. மனுஷன் யோகாப்பியாசத்தால் பறப்பது அதிசயமாவதுபோலவாம்; ஒரொருபதார்த்தத்தில் சிலசுகுணம் சிலதுர்க்குண மிருப்பதுபோலவிராமல் ஞானிஅஞ்ஞானிகளிடத்திற் சகலசுகுண துர்க்குணமும் ஒருமித்திருப்பதாலும் சுகுணபலமானசுகமும் துர்க்குணபலமானதுக்கமும் இருவரிடத்திலும் அனுபவமாய்க்காணுகிறபடியாலும், ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் சமானமானதிருஷ்டாந்தமான வஸ்து ஜகத்திற்கிடையாது. அவர்களுக்குச்சமானம் அவர்களே. எப்படி பிரஹ்

மத்துக்குச் சமானம் பிரஹ்மமோ, ஜகத்துக்குச் சமானம் ஜகத்தோ அப்படிப் போலவென்றறிக. இதன் கருத்து :—ஞானிக்கு உபமானமாகச் சொல்லப்பட்டிருக்கிற சந்திரன் முதலான வஸ்துக்களிலிருக்கிற க்ஷயம்முதலான தோஷங்களை அஞ்ஞானிபாகத்திலும், அஞ்ஞானிக்கு உபமானமாகச் சொல்லப்பட்டிருக்கிற சமுத்திரம் முதலானதுகளிலிருக்கிற முத்து ரத்னம் முதலான குணங்களை ஞானிபாகத்திலும் மாற்றிக் கண்டுகொள்ளவேண்டியது.

## 9-வது தரங்கம்.

[அ-கை,] கர்மத்துக்கும் ஞானத்துக்குமிருக்கிற சக்தியும் அந்த ஞானனுபவம்வர யுக்தியுஞ்சொல்லப்படுகிறது :—

கர்மத்துக்கும் ஞானத்துக்குமுள்ள சக்தியேதென்றால், கடாதிகாரியங்களில் மண்ணென்கிற ஞானத்துக்கும் குலாலவியாபாரத்துக்கும் சக்தி எப்படியோ அப்படி ; அதாவது :—கர்மத்துக்குச்சக்தி ஜீவனுக்குச் சுகதுக்கத்துக்கிடமான சரீரத்தைத்தோற்றுவிக்கிறதும், ஞானத்துக்குச்சக்தி சரீரத்துக்கு வருகிற கமனுகமனுதிசுகதுக்காதி துவந்துவங்களெல்லாம் பொய்யென்கிறதாக அறியச்செய்கிறதும் சுபாவமானதால், இப்போது புருஷப்பிரயத்தனத்தினுற் சம்பாதிக்கத்தக்கது ஞானமேதவிர கர்மமன்று. ஏதனுலென்றால், கருமமானது முன்னமே ஈசுவரனுல் நிர்ணயிக்கப்பட்டிருப்பதாலும், அதுஉள்ளபடியே வந்துதீருவதாலும், தனக்கன்னியமானதிரிவிதகரணத்தாற்செய்யவும் அதன்பலத்தைஅவற்றுல் அனுபவிக்கவும்யோக்கியமாயிருப்பதாலும், அகர்த்துருத்துவபுத்தியாகிய ஞானத்துக்கும் கர்த்துருத்துவபுத்தியாற் செய்யக்கூடிய கர்மத்துக்கும் ஸ்நானப்பிராப்தியவ்வளவு உறவுகூட இல்லை. எப்படியென்றால், கர்மத்துக்கதிகாரி காமி; ஞானத்துக்கதிகாரி நிஷ்காமி;கர்மத்துக்கு அர்த்தியாயி சமர்த்தனும் வித்துவானுயுமிருக்கவேண்டும். ஞானத்துக்குச்சாதன சதுஷ்டயம் வேண்டும்.கர்மத்துக்குப் பெண்டாட்டிமுதலான இடம்பொருளேவல் வேண்டும். ஞானத்துக்குக் குருகிருபை ஒன்றுவேண்டுமேயன்றி மற்றொன்றுந்தேவையில்லை. கர்மஞ்செய்யச்செய்ய அஞ்ஞானமும் ஆவரணமும் வாசனையும் ராகத்துவேஷங்களும் பிரவர்த்திகளும் விருத்தியாவதால்,அவ்வளவுக்குத்தக்கபடி அகங்காரம்விருத்தியாகும். ஞானப்பியாசம் பண்ணப்பண்ண அகங்காரமாதி நசித்துவரும். தேரிழுக்கிறதற்கு தடித்தனம்எப்படிவேண்டுமோ, அப்படிக் கருமத்துக்குத்தடித்தனம்வேண்டும். தத்துவஞ்ஞானத்துக்கு ரத்னப்பரீக்ஷை பண்ணுகிறவனுக்குப் பரீக்ஷாஞானத்தோடுகூடியநேத்திரமெப்படி வேண்டுமோ, அப்படிவிசாரணையோடுகூடியிருக்கிற ஞானநேத்திரம்வேண்டும். கர்மத்துக்கு,கை,கால்,முக்கியம். தத்துவஞ்ஞானத்துக்குக் காதுமுக்கியம்.கர்மத்துக்குப்பகிர்முகம் முக்கியம்.ஞானத்துக்குஅந்தர்முகம்முக்கியம். கர்மத்துக்குக்கூட்டத்தைக்காணக்காணவிருத்தியாகும். ஞானத்துக்குஏகாந்தத்தைக்காணக்காணவிருத்தியாகும்.இத்தியாதிபேதங்களிருப்பதால் இவற்றைஅறிந்து சகல கருமங்களையும் கருமத்துக்குக்காரணமான கருத்துருத்துவாதிகளையும் விட்டு

நிரபேக்ஷகனுயிருந்துகொண்டு சாதுக்களோடே சற்குருசந்நிதியிலிருந்து ஞானு ப்பியாசம் செய்துகொண்டு வந்தால் இப்பவே ஜீவன்முக்தி யுண்டாகும். இதற்கென்ன சாக்ஷியென்றால் வால்மீகரே சாக்ஷியென்றறியத்தக்கது.

## 10-வது தரங்கம்.

[அ-கை.] ஆத்மா இந்திரியப்பிரத்தியக்ஷ மாகாவிட்டாலும் நிர்மலமாயிருக்கிற சாத்வீக புத்திக்கு பிரத்தியக்ஷமாவர்.—

அது எதுபோலவென்றால் இராகுவானவன் எக்காலத்திலுமிருந்தபோதிலும் ஒருவருக்கும் காணப்படாமல் அதிர்சியனுயிருந்தாலும் சகலநக்ஷத்திரங்களுடன் சேர்ந்தகாலங்களில் காணப்படாமல் பருவகாலத்தில் நிர்மலாகாசத்திலுதயமாகிற சூரியசந்திராளுடைய மண்டலத்தில் எப்படிக் காணப்படுகிறானோ, அப்படி அதிர்சியமாயிருக்கிற ஆத்மராகுவானவர் எந்தக்காலத்திலும் எங்குமிருந்தாலும், தத்துவங்களாகிற இந்திரியாதி நக்ஷத்திரங்களில் காணப்படாதவராயிருந்தாலும் சித்தபரிபாகமாகிற பருவகாலத்தில் நிராவரணமாயிருக்கிற ஹிருதயாகாசத்திலுண்டாகிற தியானவிசாரங்களாகிற சூரியசந்திராளிடத்தில் திருசியமாகிச் சாக்ஷாத்காரம் பண்ணப்படுகிறார். அதிலும் சூரியனுகிறதியானத்தில் ஆத்ம இராகு வெகு பிரயாசத்தின்பேரில் பிடிக்கிறதும் அதிசீக்கிரத்தில் விடுகிறதுமாக யிருக்கும்; விசாரமாகிற சந்திரனிடத்தில் ஆத்ம இராகு பிடிக்கிறது சீக்கிரம் விடுகிறது பிரயாசம். ஆகையினுல்தான் சூரியகிரகணம் துர்லபமென்பதுபோல தியானத்தால் சாக்ஷாத்காரமாவது துர்லபம். சந்திரகிரகணம் எப்படிச் சுலபமோ அப்படி விசாரத்தால் ஆத்மசாக்ஷாத்காரம் வருவது சுலபம். ஆனுல் தியானத்துக்கும் விசாரத்துக்கும் உள்ள பேதம் நன்றாய்த் தெரியவில்லையே யென்றால், அவலையும் அன்னத்தையும் போலவென் றறியத்தக்கது. அதாவது:—அவலானது எப்படி யுண்டாகிறதென்றால் உமிதவிடு அரிசி எல்லாவற்றையும் ஒன்றாய்ச்சேர்த்து வறுத்திடித்து உண்டாயிருக்கிறது. அப்புறம் வெகுநாழிகை ஊரவேண்டியதாயுமிருக்கிறது. அப்படி ஊரினுலும் மாத்துவக் கைம்பெண்டாட்டிக்கு ஒத்துவருமேதவிர, சுகசாலிதேகத்துக்கு ஒத்துவரமாட்டாது. அப்படிப்போலச் சரீரத்திரயங்களாகிற உமிதவிடுகளுடன் சேர்ந்திருக்கிற ஆத்ம தண்டுலத்தை யோகமாகிறசட்டியிற்போட்டு வறுத்து, ஏகாக்கிரவிருத்தியாகிற உலக்கையால் குத்தி எடுக்கப்பட்டிருக்கிற தியானமாகிற அவலானது ரஜோகுணத்தையுடைய வியாகுலமான முறட்டுப்புத்தியாகிற மாத்துவக்கைம்பெண்டாட்டிக்கே ஒத்துவரும்; சாத்வீகபுத்தியாகிற சுகவாசிக்கு ஒத்துவராததுபோலவும். நெல்லைக்குத்தி உமிதவிடுகளைப் பிரித்துத்தள்ளி அரிசியைமட்டுமெடுத்துக் கழுநீர்போகுமட்டுங்கழுவி அக்கினியில் பக்குவமான அன்னம் சகலருக்கும் நிருபாதிகமாய் ஒத்துவருவதுபோலச் சாதுகோஷ்டியாகிற உரலில் ஆத்மானுத்மவிசாரமாகிற உலக்கையால் ஜீவனென்று பேராயிருக்கிற ஆத்மநெல்லைக்குத்தி ஸ்தூலசரீராத்தியாசமாகிற உமியையும் சூக்ஷமசரீராத்தியாசமாகிற பெருந்தவிட்டையும் காரணசரீராத்தியாசமாகிற தீட்டல்தவிட்டையுந்தள்ளி, ஆத்மாவாகிற

அரிசியைச் சிரவணமாகிற ஜலத்தைவிட்டுக் களைந்து பிரமாணகதசமுசயமாகிற கல்லுகளை அரித்துத்தள்ளி துர்வாசனைகளாகிற கழுநீரையும் வடித்து வைராக்கியமாகிற அடுப்பிற் சாத்வீகவிருத்தியாகிற விறகில் விசாராக்கினியை மூட்டித் திதிக்ஷையாகிற பாத்திரத்திற் சிரத்தையாகிற உலைநீர்வைத்துக் களைந்தெடுத்திருக்கிற ஆத்மதண்டுலத்தை அந்தப்பாத்திரத்திலிருக்கிற உலைநீரிற் போட்டுக் குருவாகிறபரிசாரகன் விசாரமாகிற அக்கினியை மேலும்மேலும் உபதேசமாகிற ஊதுகுழலால் ஊதி ஜ்வலிதம்பண்ணிச் சித்தபரிபாகமாகிற பதம்பார்த்துச் சிரவணாந்தமாகிற வடிச்சலால் அசம்பாவனையாகிற கஞ்சியை வடித்து மனனமாகிற கரண்டியால்கிளரிப் பிரமேயகதசம்சயமாகிற பேதபுத்தியைத்தீர்த்து விபரீதபாவனையாகிற நறுக்கரிசி வேகிறதற்காகச் சொரூபத்தியானமாகிற தணல்மேல் வைத்து விக்ஷேபமாகிறநங்குகஞ்சியையும் சமாதியாகிறமேல்தட்டில் வைத்திருக்கிற தணலினால் நிர்விக்ஷேபமாய்ச்செய்து வைத்தபின், இவன்யாதொரு தோஷரகிதமாயிருக்கிற ஆத்மான்னத்தை மைத்திரியாதியாகிற நெய்பால்தயிர் பழங்கள்பக்ஷியங்கள்முதலான கறிவர்க்கங்களுடன் சேர்த்துச் சாக்ஷாத்காரமாகிற புஜிப்பினுல் புசித்துச் சுகசாநுபவமாகிற திருப்தியைச்சகலருஞ் சுலபமாயடைந்து வாழக்கடவது. இந்த வாழ்வுக்குக்காரணம் சற்குருநாதனுடையபடியினாலே அந்தக்குருநாதன் ஆத்மசொரூபமானதால், முக்கிய அதிகாரிக்கு அந்தக்குருவினுடைய நான்குவிதமான சிசுருஷையிற் சத்பாவசிசுருஷை செய்வதே முக்கியமென்றறியத்தக்கது.

## 11-வது தரங்கம்.

[அ-கை] திருசியநிஷேதத்தோடே திருக்காத்மாவையத்தை அநுசரியாமல் கிருதார்த்தத்தை கிடையாதாகையால் அந்தத்திருசியநிஷேதத்துக்கு அநேகயுக்திகளிருக்கின்றன, அவை சொல்லப்படுகின்றன:—

அதாவது அறிவாகிறசுவரில் மனதாகிறமையினுல் ஜகத்தாகிறசித்திரம் தோற்றுதென்றுவது, அல்லது புருஷனும்நிழலும்போல அறிவுநினைவு இரண்டில் நினைவுகல்பிதமென்றுவது, அல்லது சூரியனுடைய உதயாஸ்தமனத்துக்கு நேத்திரம்போல நினைப்புமறைப்புக்குத் தான்சாக்ஷியென்றுவது, அல்லதுமண்முதலான காரணவஸ்துவைவிட்டுக் கடாதிகாரியம் இராததுபோலக் காரணமில்லாமற்காரியமில்லையென்கிற நியாயத்தால் ஜகத்துக்கு தன்னைவிட இல்லையென்றுவது, அல்லது எதுமுன்னும்பின்னும் இல்லையோ அது மத்தியில் தோன்றினுலுமில்லை. ஒருபுருஷனே ஸ்திரீபோலவேஷத்தால் மத்தியில் தோன்றினும் அந்தத்தோற்றம் பொய்யென்பதுபோல சிருஷ்டிக்குமுன்னும்பின்னுமில்லாமற் பொய்யாய்த் தன்னிடத்தில்மத்தியில்தோன்றுகிற இந்த ஜகத்து இல்லையென்றுவது, அல்லது அறிவினுற் காணப்பட்டதெல்லாம் அறிவைவிட இல்லாதசொப்பனம்போல இஞ்ஜகத்தும் அறிவைவிட இல்லையென்றுவது இப்படித்திருசியநிஷேதப்ரகாரமாய்த் திருக்கே தானென்றறியவேண்டியது. மனசாகிறவிருக்ஷத்துக்கு அகங்காரமே வேராயும், புத்தியே அங்குரமாயும், சங்கற்பமேகிளைகளாயும், சுகதுக்கங்களே

பழங்களாயுமிருக்கிற இந்தவிருக்ஷத்தைக்கெடுக்க இரண்டு உபாயமுண்டு. அதாவது:— அகங்காரநாசம் முக்கியமென்றும் சங்கல்பநாசம் கவுணமென்றும் சொல்லியிருப்பதால் அந்த அகங்காரநாசம்பண்ணுவதற்கு உபாயமாவது:—இப்போது தேகாதிகளில்நானென்றுவருகிறது அகங்காரம்; இது தேகாதிகள்சொல்லத்தக்கதா அல்லது ஆத்மாசொல்லத்தக்கதா வென்றுலோசிக்கும்போது தேகாதிகள் ஜடமாகையாலும் சுழுப்திமரணாதிகளில் நானென்றுசொல்லாமையாலும் அவைகள்நானென்று வரக்கூடா. ஆத்மா சொல்லலாமென்றால் லோகத்தில்மூடன்கூட தன்னைத்தானென்கிறானே தவிர, ஜடமாயிருக்கிறகடபடாதிமுதலான அன்னிய பதார்த்தத்தை நானென்றுசொல்லவில்லையே; ஆகையால் தனக்கன்னியமாயும் ஜடமாயுமிருக்கிற தேகாதிகளை தான் எப்படி நானென்றுசொல்லக்கூடும், ஆகையால் இந்த அகங்காரம் சுத்தமித்தையென்கிற இவ்விதமாயிருக்கிற இடைவிடாத அனுசந்தானத்தால்,மேலேசொன்ன அகங்காரமாகிற வேரோடேகூடிய மனதாகிறவிருக்ஷத்தின்நாசமும், வாசனக்ஷயமும், தத்துவஞானவிர்ப்பாவமும் உண்டாய் சஞ்சிதாகாமிய கர்மநாசம், மூலாஞ்ஞானத்துடன் ஆவரணநிவர்த்தி, கர்த்துருத்துவாதிசம்சாரநாசம், இத்தியாதி அனர்த்தநிவர்த்தியும் தடையற்றஆநந்தமும் கிடைக்கும். இவ்விதவிசாரமார்க்கத்தை விட்டு மற்ற கர்மம்பக்தி யோகம் முதலானவற்றால் தன்னையறிகிறது கண்ணில்லாமல்ரூபத்தைப்பார்ப்பவன்போலவும் நாக்கில்லாமல் ருசிஅறிகிறவன் போலவுமாமென் றறியத்தக்கது.

## 12-வது தரங்கம்.

[அ - கை] சுயமானசுகத்தை மறந்ததால் வந்ததுக்ககாரணங்களைச்சொல்லி அவைநிவர்த்தியாவதற்கு விசாரணையுஞ்சொல்லி,அதனால் வரும்பிரயோசனமுஞ் சொல்லப்படுகிறது :—

எப்போதும் எல்லாருக்கும் சுகம் சுபாவமாயிருந்தும் எப்போதும் எல்லாரும் ஏன் துக்கப்படுகிறார்களென்றால்,ஒருவனய்ச்சுகமாகப் படுக்கையில்படுத்துத் தன்னை மறந்துநித்திரையில் துக்கிக்கிறவன்போல, தான் அத்வைதமற்றசுகசொரூபமென்பதைமறந்ததால் தன்னிடத்தில் கல்பிதமாயிருக்கிற தேகாதிகளை நான் எனதென்கிறவிபரீதத்தால் தேகாதிவிஷயங்களைச்சத்தியமாகக்கருதி, அவற்றில் ராகத்துவேஷ அபிமானத்தைவைத்து அதனாற்சங்கல்பத்தைவிருத்திசெய்து,சங்கல்பத்தால்விஷயத்தில்முயன்று, அதனாற்புண்ணியபாபரூபமான கருமத்தையுஞ் செய்து, அதனால்வருகிறசுகதுக்கத்தையும் அனுபவித்துக் கருமத்தாலும்வாசனையாலும் அநேககோடி ஜனனமரணத்துக்குக் கட்டுப்பட்டுப்பரவசனய் வெறிகொண்டவன் போலச் சதாகாலமுந் திரிந்துகொண்டே யிருக்கிறான். வெறிகொண்டவனுக்குத் தனக்காகத்தெரியாமலும் ஒருவர்சொல்லுகிறநன்மைகளைக் கேளாமலுமிருப்பதைப்பற்றி அவன்பேரில்குற்றஞ்சொல்லக்கூடவில்லை. வெறியின்பேரில் குற்றஞ்சொல்லுவோமென்றால் அதுஜடமானதாலும் அவன்கருமப்படிவந்ததாலும் குற்றஞ்சொல்லக்கூடவில்லை. அப்படிவெறிகொண்டவனுக்காவது புத்திசுவாதீனத்தோடு அநேகரிருப்பவர்களவனை ரக்ஷிப்பார்கள். அஞ்

ஞானவெறியானது சகலத்திராளையும் பிடித்துக்கொண்டிருப்பதால் ஜகத்தில் யாரையார்காப்பாற்றப்போகிறார்கள். ஆகையால் அஞ்ஞானவெறி தீர்ந்தபுருஷனே இந்தஜகத்தில் துர்லபம். அப்படியெவனோஒருவன் தெய்வாதீனமாய் வெறிதீர்ந்து தன்னைத்தெரிந்தவரிருந்தாலும், அவருக்குப்பிறர்களைஈடேற்றவேண்டுமென்று கருணையுண்டாவதே துர்லபம். முதலிற்பெரியோர்களுடைய மனதையறிந்தால் ஜகத்துச்சத்தியமாகுமென்கிற சுருதிப்பிரகாரம் பெரியவாளுடைய மனதை லோகத்தார் அறியவேமாட்டார்கள். ஆகையால் அவர்களை அறிந்து அவர்களுடைய சகவாசங்கிடைப்பதுமரிது. அப்படிச்சகவாசங்கிடைத்தாலும் அவர்களிடத்தில் நம்பிக்கைவருவதுந்துர்லபம். நம்பிக்கைவந்தாலும் அவர்கள் அனுக்கிரகித்தகிரமப்படி அனுஷ்டானம்பண்ணிச் சகலஆசைகளும்விட்டு யதார்த்தமாய்ச் சாக்ஷாத்காரம்பெறுவது மிகவும்அரிதாயிருப்பதால், இனிமேல்கர்ப்பவாசஞ்செய்வதிற்பயந்த முமுக்ஷுவான புருஷன் மேலேசொன்னதுர்க்குணங்களில் எவ்வளவுநம்மிடத்தில்போயிருக்கிறது, நல்லகுணமெவ்வளவுவந்திருக்கிறதென்று பரியாலோசனையாலறிந்துகொண்டு தாக்ஷாவதானமாயிருக்கவேண்டும். ஏனென்றால் சங்கல்பம் ஒவ்வொன்றுகள் ஒவ்வொரு விதமாய்விருத்தியாகும். அதாவது, முதலில் ஒருவிஷயம் எதிர்ப்பட்டால் அதில் சுகமென்கிறபுத்தியும் மேலும்மேலும் அதையடையவேண்டுமென்கிற பௌஷ்ய சங்கல்பத்தையும், துக்கவிஷயம் வந்தால் முன்னடந்ததுக்கங்களெல்லாம் தோன்றுகிறபூதசங்கல்பத்தையும், தேகசம்ரக்ஷணைக்காகவருகிற வர்த்தமானசங்கல்பத்தையுங்கண்டு, இஃதிஃது இன்னதின்னதென்றறிந்து அந்தந்தச் சங்கல்பங்களையும் வரவொட்டாமல் தடுத்து எந்தவிஷயந்தோன்றுகிறதோ அந்தவிஷயத்தை இது சத்தா அசத்தாவென்றுநிரவிசாரித்து, சத்தானால் ஆத்மாவைப்போல மூன்றுகாலத்திலுமிருக்கவேணும். அப்படிக்குஇந்தவிஷயமில்லாமல் ஆத்மாவாகிற கானல்பூமியில் மனதாகிறசூரியோதயத்தால் விஷயமாகிற கானல்ஜலந்தோன்றி மனதாகிறசூரியாஸ்தமனத்தினால் விஷயமாகிற கானல் ஜலம் மறைகிறபடியால், விஷயத்தை அசத்தென்று நிச்சயித்து அதில் ராகத்துவேஷத்தையும்விட்டு ஆவரணத்துவயங்களையும் நிவர்த்திசெய்து தடையற்றஆனந்தரூபமாயும் துக்கநிவர்த்திரூபமாயுமிருக்கிற இருவகைப்பிரயோசனத்தையுங் கொடுக்கிறதாயிருக்கிற தத்துவக்ஞானத்துக்கு அந்தரங்கசாதனமான ஆத்மவிசாரமாகிற அக்கினியாற் சித்தமாகிறவிஷவிருக்ஷத்தை யெரித்துப் பிரஹ்மானந்தமாகிறபூமியில் யதேஷ்டமாய்ச் சஞ்சரிக்கலாம். ஆகையால் இந்தப்படிக்கு அனுஷ்டித்தாற்சித்தமாய் முக்திப்பலன் சித்திக்கும் சந்தேகமில்லை சத்தியம். இதிலெழுதியிருக்கிற சங்கதிகள் கொஞ்சமாகயிருந்தாலும் இந்தவிவேகமாகிறவிரையை மனதாகிறபூமியிலூன்றி ஆத்மவிசாரமாகிற ஜலத்தைப் பாய்ச்சி வைராக்கியமாகிற வேலியைக்கட்டி மூடசங்கமாகிற மாடுகள்வந்து அழிக்காமலிருப்பதற்காகச் சாதுசங்கதியாகிற காவலைப்போட்டுத் துர்வாசனைகளாகிற களைகளை மைத்திரியாதிவாசனைகளாகிற பள்ளிகளைவிட்டுப் பிடுங்கச்சொல்லிக் காமாதியாகிறபக்ஷிகளைக் குருகடாக்ஷமாகிற கவண்கல்லினாற்

சங்கரித்துச்சாவதானமாய் ரக்ஷித்தால் முக்தியாகிறபழமுண்டாகும். அதைச்சா க்ஷாத்காரம் பண்ணுகிறபுத்தியாகிற கையாற் சாப்பிட்டால் ஜனனமரணமாகிற பசிதாகமில்லாமல் நித்தியதிருப்தியாயிருக்கலாம். ஆகையால் சகலமுமுக்ஷுக்க ளும் இதை யோசித்துப்பார்த்து அநுஷ்டிக்கவேண்டியது.

## 13-வது தரங்கம்.

[அ-கை] பிரபஞ்சம் பொய்யென்பதற்கு யுக்தியும், விதேகமுத்திவரையி லுண்டாகிற மானாபிமானம்பொருத்துக்கொள்ள யுக்தியுஞ்சொல்லப்படுகிறது:—

இந்தப்பிரபஞ்சம் பொய்யென்பதற்கு யுக்தியாவது:-சொப்பனம்பொய்யெ ன்று குழந்தைகள்கூடச் சொல்லுகிறது. அதுஎதனாலென்றால் ஜாக்கிரத்துக்குவந்த பிற்பாடு சொப்பனம் இராததினாலேதான். அப்படிஇந்த ஜாக்கிரமும் சொப்ப னத்துக்கு வாராததினாலே இதைப்பொய்யென்று நிச்சயித்து அந்தப்படி தைரிய மாகப்பார்க்கும்படி குருநாதன் ஆக்ஞையாயிருக்கிறது. மானாபிமானம் பொறுத் துக்கொள்ள யுக்தி. காட்டில் ஒருஸ்திரீ போனவிடத்தில் அவளைப்புலிகள் அடிக்க வந்தபயத்தினால்ஓடிப்போய்க்கடைசியில் ஒருபறையன்வீட்டிலே போனாள். அவன் இங்கேவராதேயென்று அநேகநிந்தையானவார்த்தைகளையுஞ் சொல்லி அவளை ஹிம்சை முதலான தெல்லாம்பண்ணியும் அவள்தன்பிராணனைப் புலிவாயிலே கொடுக்கப்படாதென்று அவ்வளவுஅவமானத்தையும் எப்படிப்பொறுத்துக்கொ ண்டு ராத்திரிஅங்கேவசித்து விடிந்தபிற்பாடு எப்படித்தன்வீட்டுக்குப் போனா ளோ! அப்படி ஜீவனாகிறபெண்ணை ஜகத்தாகிறகாட்டில் ஜனனமரணமாகிறபுலி கள் விரட்டிக்கொண்டுவரும்போது அநேக சரீரங்களாகிற செடிசெத்தைக்குள் நுழைந்ததிலும் அவற்றின்பயந்தீராமல் கடைசியாகத் தெய்வகதியாய்முமுக்ஷு த்துவத்தோடே கூடியிருக்கிற இந்தமனுஷசரீரமாகிறபறையவீட்டில் புகுந்தகா லத்தில் பிராரப்தகர்மங்களாகிற பறையருடைய வசவுதிட்டுமுதலான அவமானத் தைப் பொறுத்துக்கொண்டு, ஜனனமரணமாகிறபுலிவாயிற் போகாமல் ஞான தைரியத்தோடே ஜீவன்முக்தனாயிருந்து பிராரப்தாந்தமாகிற ராத்திரி முடிவி லுண்டாகிற சூரியோதயத்தில் விதேக முக்தியாகிற தன்வீடுசேரும்வரை பொறு மை வரும்படி கிருபை செய்யவேண்டியதென்று குருவைப் பிரார்த்திக்க வேண் டியது.

## 14-வது தரங்கம்.

[அ-கை.] சாந்தோக்கியம் ஆறுவது அத்தியாயத்தில் உத்தாலகர் சுவேத கேதுவுக்கு நவவிததிருஷ்டாந்த உபதேசத்தைச் செய்தபிரகாரம் இங்கே உனக் கும் அந்த நவவித திருஷ்டாந்த உபதேசம் நம்மாற்சொல்லப்படுகிறது :—

க-வது சங்கை. ஹே குரோ! பிரஹ்மமே நீயென்றுசொன்னீரே பிரஹ்மா முதலான அநேகங்களுக்கும் பிரஹ்மமென்றுசொல்லப்படுகிறதே அதில்எந்தப் பிரஹ்மம் நானென்றறிகிறதென்றால் உத்தரம்:— சுழுப்தி, உத்கிராந்திமுதலான அவஸ்தைகளில் எந்தச் சொரூபத்துடன் ஜீவன் சேருகிறானோ அந்தச்சொரூப மான பிரஹ்மமே நீ. 2-வது சங்கை. சுழுப்தியில்சத்தாயிருக்கிற பிரஹ்மத்

தோடே சேர்ந்த ஜீவர்கள் அந்த சத்ரூபப்பிரஹ்மமே தானென்று என் அறியவில்லை? உத்தரம்:—வண்டுகள் நாநாவித புஷ்பரசங்களை ஒன்றுசேர்த்த பிற்பாடு அவ்வண்டுகளாலேயே அந்தரசங்களை எப்படிப் பிரித்தறிய முடியாதோ அப்படிப்போலும், ஜலத்துளிகள் சமுத்திரத்தில் விழுந்தமாத்திரத்தில் எப்படி இது இன்னஜலமென்று அறியமுடியாதோ அப்படிப்போலும் இந்த ஜீவனுஞ் சுழுப்தியிற் பிரஹ்மத்தை யடைந்தும் அந்தக்கரணம் லயித்து அநேகவாசனைகளுடன் சேர்ந்திருப்பதால் அறியக்கூடவில்லை. 3-வது. சங்கை:—சுழுப்தியில் அந்தக்கரணமில்லாமையாற் பிரஹ்மத்தையடைந்தோமென்று அறியப்படவில்லை யென்றுசொன்னது யுக்தம். அதில்நின்றும் எழுந்திருந்த பிற்பாடு அந்தக்கரணம் வந்துவிட்டதால் அந்தப்புருஷன் பிரஹ்மத்திலேநின்றும் வந்தோமென்று யேனறியவில்லை? உத்தரம்:—சமுத்திரஜலத்தை மேகம்பானம்பண்ணிப் பூமியில்வருஷித்து நதியில் வந்து விழுந்து ரசாந்திரத்தை யடைந்துவிட்டதினால் சமுத்திரத்திலேயேயிருந்து வந்து சமுத்திரத்திலேயே லயிக்கப்போகிறோமென்று எப்படியறியவில்லையோ ; அப்படிப்பிரஹ்மத்தில் நின்று முண்டான ஜீவர்கள் மாயா சம்பந்தத்தால் அதற்குவிலக்ஷணமான ஜடத்துவாதிவிகாரித்துவத்தை யடைந்தபடியால் பிரஹ்மமாயிருந்தே எழுந்திருந்து வந்தோம் பிரஹ்மத்திலேயே லயிக்கப் போகிறோமென்றறியவில்லை. 4-வது சங்கை:—அப்போது சுழுப்தியில் ஜீவன்காரணபாவத்தை யடையும்பக்ஷத்தில் சமுத்திரத்தில்லயித்த அலைபோலே ஜீவனை நாசத்தையடைய வேண்டும். ஆகையால் ஜீவன் சுழுப்தியிலிருக்கிறனா இல்லையாவென்றால், உத்தரம்:—விருக்ஷத்திலிருக்கிற ஜீவன் பிரஹ்மத்தை யடைந்திருந்தாலும் தமோகுணாபிபூதனாகி அத்தியாசத்தோடே ஐக்கியமாயிருப்பதால் ஜீவத்துவ நாசமில்லாதது போலும். இன்னும் சமுத்திரஜலத்தை ஒரு கடத்திலெடுத்து அதின்வாயை அரக்குமுதலானதால் கெட்டியாய் மூடிக் கங்கையிற்போட்டு ஆயிரம்வருஷம் அமிழ்ந்திக்கிடந்தாலும் மறுபடி அந்தக் கடத்தை வெளியிலெடுத்து வாயைத்திறந்து சோதனை பார்க்கும்போது பழைய உப்பு ஜலமாகவே யிருப்பது போலும். இந்தஜீவனுஞ் சுழுப்தியில்தமோபிபூதனாய் அத்தியாசத்துடன் பிரஹ்மத்தில் லயித்திருப்பதால் பிரஹ்மத்தில் நிருபாதிகனாக ஐக்கியமாகவில்லை. அப்படிலயிக்காமல் சுழுப்தியில் ஜீவனிருப்பதற்கு அடையாளமேதெனில் விருக்ஷத்தைக்கோடாலிமுதலானதினால் வெட்டும்போது அதில்ரசம் பெருகுவதால் இது ஜீவனோடேகூடிய விருக்ஷமென்று அறிவதுபோல சுழுப்தனுடையதேகத்திலேயும் அப்படி ரத்தம் காணப்படுகிறபடியால் ஜீவன் நாசமில்லாமலிருக்கிறனென்று அறியத்தக்கது. 5-வது சங்கை:—அதிசூக்ஷ்மமான பிரஹ்மத்தினிடத்தில் நின்றும் ஸ்தூலமான ஜகத்து எபபடியுண்டாகலாமெனின், உத்தரம்:—அதிசூக்ஷ்மமான ஆலம் விரையிலிருந்து ஸ்தூலமான ஆலமர முண்டாவதுபோலப் பிரஹ்மத்திலிருந்து ஜகத்துண்டாகலாமென் றறியத்தக்கது. 6-வதுசங்கை :—வேதாந்த சாஸ்திரம் படித்திருக்கிற வித்துவாம்சான்கூட ஜகன்மூலகாரணமான பிரஹ்மத்தைச்சாக்ஷாத்காரமாக ஏன் அறியவில்லையெனில், உத்

தரம்:—உப்புரசத்தோடே கூடியிருக்கிறஜலத்தை துவக்கிந்திரியத்தால் பரிசித்தாலும் கண்ணாலேபார்த்தாலும் தட்டிச்சப்தத்தைக்கேட்டாலும் எப்படி உப்புரசமென்று அறிந்துகொள்ளக்கூடாதோ அப்படி இந்தப்பிரஹ்மத்தைப்பிரதிபாதிக்கிற சாஸ்திரங்களைக்கண்ணாற் பார்த்தாலும் காதினாற் சிரவணம்பண்ணினாலும் வாயினால் நெட்டுருவாய்ச் சொன்னாலும் மனதில் தாரணை செய்திருந்தபோதிலும் குருமுகமாக ஆத்மாவை விசாரித்துச்சொரூபானுபவம் பண்ணயோக்கியமான புத்தியாகிற நாவால் அநுபவிக்கப்படாததே காரணமென்றறிக. மற்றெப்படியறிகிறதென்றால் நாமாரென்கிற விசாரத்தாலுண்டாயிருக்கிறஞானமாகிறநாவினால் அறியவேண்டும். அதெப்படியென்றால், ரசத்தையறிகிற ரசனேந்திரியத்தால் ரசத்தையறிவதுபோலவென்றறிக. ஞானத்தால் அறிகிறவித மெவ்விதமெனின், சகல இந்திரியங்களும் அறிவாகியதன்னை யறியமாட்டாதிருந்தாலும் அறிவாகியதாமே சகலத்தையும் அறிகிறோமென்கிறதுணிவே ஞானத்தாலறிகிறது. 7-வது சங்கை:—சாக்ஷாத்காரத்துக்கு முக்கியமான உபாயமேதென்றால் உத்தரம்:—திருடர்கள் காந்தாரதேசத்திலே நின்றும் ஒருபுருஷனை நித்திரைசெய்யும்போது காட்டுக்குத்தூக்கிக்கொண்டுபோய்அவனுடைய ரத்னாதிகளையும் அபகரித்துக்கொண்டு கண்ணைக்கட்டிப்பள்ளத்திற் போட்டுவிட்டுப் போய்விட்டார்கள். பிற்பாடு அவன் வெகுகாலந் தபித்துக்கொண்டிருக்கும்போது அந்தக்காந்தாரதேசத்து இராஜன் வேட்டைக்குவந்தபோது இவனழுகையைக்கேட்டுக் கிட்டவந்து கண் கட்டையும் அவிழ்த்து பள்ளத்திலிருந்து மேட்டில் தூக்கிவிட்டு இவன்பறிகொடுத்த ரத்னாதிகளையும் அந்தத்திருடர்களிடத்திலிருந்து பிடுங்கி இவனிடங் கொடுத்து அந்தக்காந்தாரதேசத்திற் கொண்டுபோய் விட்டதுபோலப் பிரஹ்மாம்சமானஜீவனானபுருஷனை அஞ்ஞானாதிதிருடர்கள் வந்து ஞானரத்னத்தை அபகரிக்க நிமித்தியம் சமுசாரமாகிறகாட்டில் தூக்கிப்போய் ஞானரத்னாதிகளையும் அபகரித்து ஆவரணமாகிற சேலையால் ஞானக்கண்ணைக்கட்டி ஜனனமரணமாகிறபள்ளத்தில் ஹிருதயக்கிரந்தியாகிற பூட்டோடே கூடியிருக்கிற சுகதுக்கமாகிற விலங்கையும்மாட்டித் தள்ளிப்போட்டதால் இவன்வெகுகாலமாய்த் தபித்துக்கொண்டிருக்கும்போது குருவாகிய இராஜன் சம்சாரமாகிற காட்டிலிருக்கிற அகங்காரமாகிற புலிமுதலானதுகளை வேட்டையாட வந்திருக்கும்போது ஜனனமரணமாகிறபள்ளத்தில் கிடக்கிற ஜீவனுடைய தாபத்தைப்பார்த்து இரக்கத்தால் அவனை விவேகமாகிறதன்கையால் ஆவரணக்கட்டைத் திறந்து சிற்சடஞானமாகிற திறவுகோலால் ஹிருதயக்கிரந்தியாகிற விலங்கை அவிழ்த்துவிட்டு அந்த அஞ்ஞானாதிகள்ளர்களையும் ஹதம்பண்ணி ஞானமாகிற ரத்னாபரணங்களை வாங்கி இவனுக்குக்கொடுத்து அத்தியாரோபமென்கிற காட்டை அபவாதவழிமார்க்கமாய்த்தாண்டுவித்து மோக்ஷதேசத்துக்குக் கூட்டிக்கொண்டுவந்து அழிவற்ற ஆனந்தத்தை அடையும்படி செய்கிறார். ஆகையால் ஆசாரியாரால் செய்யப்படுகிற உபதேசத்தினால் அஞ்ஞானநிவர்த்தியும் பிரஹ்மசாக்ஷாத்காரஞானமும் மோக்ஷமுமுண்டாகும். 8-வது சங்கை:—இந்த

வித்துவான் எந்தப்பிரகாரத்தினால் பிரஹ்மத்தை யடைவனென்றால், உத்தரம்:— மனது முதலான சகலதுவைதவாசனைகளும் லயித்த விடத்திலுண்டாகிற ஞான தீபத்தினாற்பிரகாசிக்கப்பட்டே பிரஹ்ம சாக்ஷாத்காரத்தையடைகிறான். இந்த ஆத்மஞானத்தைத் தவிர பிரஹ்மத்தை யடைகிறதற்கு வேறே அர்ச்சிராதி மார்க்கங்களொன்றும் உபகாரமாகமாட்டாது; ஆகையால் முமுக்ஷுவானவன் ஞானதீபத்தைச் சதாகாப்பாற்றிக்கொண்டிருக்கவேண்டியது. 9-வது:சங்கை:— அஞ்ஞானி ஞானி இருவருள் மரணாந்திரம் அஞ்ஞானிமறுதேகத்தை எடுப்பனென்றும், ஞானி அப்படி எடாமல்மோக்ஷத்தையடைவனென்றும் சொன்னீர்களே, இருவரும்பிரஹ்மத்தையேயடைவது சமானமாயிருக்கும்போது ஞானியும் அஞ்ஞானியைப்போல ஏன் திரும்பஜன்மமெடுக்கக்கூடாது, அல்லது அஞ்ஞானியும்ஞானியைப்போல ஏன்மோக்ஷத்தை யடையக்கூடாதென்றால், உத்தரம்:- ஒரு ராஜக்கிரகத்திலிருக்கிற வேலைக்காரிருவர்களில் ஒருவன் அந்தராஜாவின்நகையைத் திருடியிருக்கவும் மற்றொருவன் திருடாமலிருக்கவும் அப்போது அந்த ராஜாவுக்கு இருவர்களிடத்திலுஞ் சந்தேகம்வந்து பரீக்ஷைபண்ணுவதற்காக இரண்டு தப்தாயபிண்டத்தை இரண்டுபேர்கள்கையிலும் சமமாய்வைக்கச்சொல்லும் போது அதில் திருடாதவன்கையில் புஷ்பம்போற் சுடாமலும் திருடினவன்கையைப் பொசுக்கிப்போட்டதுபோல மரணாந்திரம் ஞானிஅஞ்ஞானி இரண்டு பேர்களும் சமானமாகப்பிரஹ்மத்தில் லயித்தபோதிலும் அதில் ஞானிஅகம் பதார்த்தமான அழியாதபிரஹ்மமேநானென்று திடநிச்சயத்துடன் கூடியிருப்பதால் மறுதேகத்தை எடுக்கமாட்டான். அஞ்ஞானி அநிர்தஜடதுக்கமாயிருக்கிற தேகாதிகளேநாம் ஜகத்துச்சத்தியமென்று நிச்சயித்திருப்பதால் திரும்பச்சரீரத்தை யெடுத்துத்துக்கப்படுவன்.

## 15-வது தரங்கம்.

[அ - கை.] நம்மால்தினந்தோறும்அனுபவிக்கப்படுகிறஜாக்கிராதி அவஸ்தைகளின்தாரதம்மியம் திருஷ்டாந்தமூலமாயறிவிக்கப்படுகிறது. அதாவது :—

ஒருகூடாரத்தில் ஒருமனுஷன்விசித்திரமான சித்திரங்களை ஓர்படத்தில் எழுதிவைத்துக்கொண்டு கண்ணாடிவழியாக வைசித்திரங்களைக்காசுக்காக ஜனங்களுக்கு எதுவரையில்காண்பித்துக்கொண்டிருக்கிறானோ, அதுபோல ஆத்மாவாகியதான் சரீரமாகியகூடாரத்திற் புத்தியாகிறகண்ணாடியிற் சித்தமாகிறவஸ்திரத்தில் எழுதப்பட்டிருக்கிற பிரபஞ்சமாகிறசித்திரத்தை இந்திரியங்களாகிற ஜனங்களுக்குக்கருமமாகிய காசுவாங்கிக்கொண்டு எதுவரையில் காண்பித்துக்கொண்டிருக்கிறானோ அதுவரை ஜாக்கிராவஸ்தை யென்றறியத்தக்கது. ஜனங்கள்போன பிற்பாடு முன்வழக்கப்படி ஜனங்களுக்குக் காண்பிப்பதுபோல் தான்மாத்திரங் கண்ணாடியில்தோன்றுகிற அந்தவிசித்திரசித்திரங்களைப் பார்த்துக்கொண்டிருப்பதுபோல இந்திரியங்களாகிறஜனங்கள் போனபிற்பாடு முன்போலவே அவர்களுக்கு அதைக்காண்பிப்பதுபோலத் தான்மாத்திரம்புத்தியாகிற கண்ணாடியில்தோன்றுகிற ஜகத்சித்திரத்தை எதுவரைபார்த்துக்கொண்டிருக்கிறானோ அது வரை

சொப்பனுவஸ்தையாம். கண்ணுடியைத்திரைபோட்டு மூடிப்போட்டு அவன்போஜனம்பண்ணிக்கொண்டிருப்பதுபோல அந்தக்கரணமாகிறகண்ணுடியைத்தெரியவொட்டாமல் அவித்தையாகிற திரையைப்போட்டு மறைத்துப் பிரஹ்மானந்தபோஜனஞ்செய்கிறதுசுழுப்தி அவஸ்தையாம். கண்ணுடிக்குள்ளிருக்கிற சித்திரபடத்தையெடுத்தெறிந்துபோட்டுக் கண்ணுடி புருஷன் கூடாரம்மூன்று மாத்திரமாயிருப்பதுபோலத் தேகாதிவாசனையுடன்கூடிய சித்தபடத்தில் எழுதப்பட்டிருக்கிற ஜகத்தாகிறசித்திரத்தையுடைய சித்தபடத்தை எடுத்துப்போட்டுத் தானுஞ் சத்துவாந்தக்கரணமும் சரீரமுமாத்திரமாய் நிர்வாசனையாயிருக்கிறது துரியாவஸ்தையாம் அந்தக்கூடாரமுங் கண்ணுடியும் நிச்சேஷமாய் நசித்திருக்குங்காலம்போல சரீரமும்விழுந்து அந்தக்கரணமுஞ்சொரூபத்தில் லயிக்கிறது துரியாதீத அவஸ்தையாம். இப்படி அநுசந்தானம் பண்ணிக்கொண்டுவந்தால் அவஸ்தாத்திரயசாக்ஷியான தன்னுடையசொரூபம் சொச்சமாய்விளங்கி அவஸ்தாத்திரயங்களும் பொய்யாய்ப்போய் ஜீவன்முக்தியையும் விதேககைவல்ய சொரூபமான தன்னுடைய சுபாவத்தையும் அடையலாம்.

16-வது தரங்கம்.

[அ - கை.] நெல்லுமுதலானதை அததற்குத்தகுந்த உபாயத்தாற் பிரித்தெடுத்து அதனதன்சாரத்தை அனுபவிப்பதுபோலச் சரீரத்திரய விலக்ஷணமான தன்னை விசாரணையாற் பிரித்துத் தன்னைச்சத்தியாதிலக்ஷணமுடையவனுக அறிந்து அனுபவிக்கும்படி சொல்லப்படுகிறது :—

நெல்லுக்குள் அரிசி இருந்தாலும், பாலுக்குள் வெண்ணெய்யிருந்தாலும் கட்டைக்குள் அக்கினிஇருந்தாலும், எள்ளுக்குள் எண்ணெய்யிருந்தாலும், பூமிக்குள் ஜலமிருந்தாலும், வீட்டிற்குள் புதயலிருந்தாலும், கரும்புக்குள் ரசமிருந்தாலும், தேங்காய்க்குள் பாலிருந்தாலும், சொப்பனங்காணுகிறவன் சுபாவமான படுக்கையில் படுத்துக்கொண்டிருந்தாலும், வேடனுனராஜகுமாரனுக்கு ராஜத்துவமிருந்தாலும், சுராபானம்பண்ணினபிராஹ்மணனுக்கு நிஜமானதன்பிராஹ்மண்ணியமிருந்தாலும், அததற்குத்தகுந்த உபாயங்களைச்செய்து பிரித்தறிந்தாலொழிய அந்தந்தவஸ்துவிலிருக்கிற சாரத்தை எப்படிஅனுபவிக்கமுடியாதோ ; அப்படி ஆத்மாவுக்குப் பூர்ணத்துவமும் நித்திய நிருவிகார சச்சிதானந்த குணங்களும் சுபாவமாயிருந்தாலும் அந்தச்சுபாவத்தை விசாரணைசெய்யாதகாலமெல்லாம் திருஷ்டாந்தத்திலுள்ள சாரத்தைவெளிப்படுத்தாத காலத்தில் அச்சாரமிருந்தும் இல்லாததுபோலவேபோனதுபோல ஆத்மா இல்லாதவராகத்தானே ஆய்விட்டார். விசாரணைசெய்தபிற்பாடு மேலேசொன்னதிருஷ்டாந்தப்பிரகாரம் நூதனமாயுண்டானவர்போலேயுந் தோன்றுகிறுர். ஆகையால் விசாரணையே அவசியஞ்செய்யவேண்டியது. விசாரணையாவது தேகத்திரயங்களையும் சகலத்திராளும் ஒருக்கால் தாமாகவும் தமக்கன்னியமாகவும் விவகரிக்கிறுர்கள். அதாவது, நான் பருத்தேன் இளைத்தேன் நான்கண்டேன் கேட்டேன் தின்றேன் நான்நினைத்தேன் நான்அஞ்ஞானியென்று தானுக விவகரிக்கிறுன். என்தேகம்பருத்திருக்

கிறது இளைத்திருக்கிறது என்மனதானிளைத்தது என்னுஞ்ஞானமென்றும் வேறாகவும் விவகரிக்கிறேன். இதில் சரீரத்திரயங்களுந் தானா, தனக்குஅன்னியமா என்பது தான்விசாரம். இவற்றிற்குநிவர்த்தியும் தனக்குச்சதா அனுவர்த்தியுமிருப்பதாலும் இவைஜடம்முதலான அனாத்மலக்ஷணமாயிருப்பதாலும் தான்சத்தாதிலக்ஷணமாயிருப்பதாலும் இவை தானல்ல. அதாவது:—ஆரோபமாய்ப் பாம்புதோன்றுங்காலத்திலும் அதற்கு முன்னும் பின்னும் அதிஷ்டானமாகத் தானிருந்து அதற்குமிருக்குந்தன்மைகொடுக்கின்ற பழுதையைப்போலப் பஞ்சகோசந்தோன்றுங்காலத்திலும் அதற்குமுன்னும்பின்னும் அதிஷ்டானமாகத்தானிருந்து அவைகளுக்குமிருக்குந்தன்மை கொடுக்கின்றதன்மையான படியினாலே சத்தென்றும், தானும் பிரகாசமாயிருந்துகொண்டு கடம்முதலானவைகளையும் விளக்கிவைக்கிற சூரியனைப்போலத் தானும்பிரகாசமாயிருந்துகொண்டு பஞ்சகோசத்தையும் பிரகாசிப்பிக்கின்ற படியினாலே சித்தென்றும், தான்இன்பவடிவாயிருந்துகொண்டு தன்னைக்கிட்டினவற்றிற்கும் இன்பங்கொடுக்கின்ற தேவாமிர்தத்தைப்போல தானுஞ்சுகசொரூபமாயிருந்துகொண்டு தன்னைக்கிட்டின பஞ்சகோசங்களுக்கும் சுகத்தைக்கொடுக்கின்றபடியால் ஆனந்தமென்றும், சாதுர்பூதங்களில் ஒன்றில்தாழ்ச்சியும் ஒன்றிலுயர்ச்சியுமில்லாமல் ஒருபடித்தாயிருக்கின்ற ஆகாசம்போல ஜாக்கிரசொப்பனத்திலுயர்ச்சியாயும் சுழுத்தியில்தாழ்ச்சியாயும் விளங்காமல் மூன்று அவஸ்தையிலுமொருபடித்தாய் அசங்கமாய்விளங்குகின்றபடியால் சமமென்றும், கானல்ஜலம் தோன்றுங்காலத்திலும் அதற்கு முன்னும் பின்னும் நிஜமாயும் ஸ்திரமாயுமிருக்கிற பூமியைப்போலச் சரீரத்திரயந் தன்னிடத்தில் தோன்றுங்காலத்திலும் அதற்கு முன்னும் பின்னும் தான் மெய்யாயிருக்கின்றபடியால் ஸ்திரமென்றும், சண்டைக்காரர்களுடனே சாக்ஷிக்காரன்கூடநின்றும் அவர்கள்செய்யுந்தொழில்களிற் சேராமல்பக்ஷபாதமன்றியில் அவற்றை அறிந்திருக்கின்ற சாக்ஷிக்காரனைப்போலச் ஜாக்கிரதாதிஅவஸ்தைகளில் விசுவாதி அபிமானிகளோடுங்கூடிநின்று அவர்கள்செய்யும் வியாபாரங்களுக்கு விலக்ஷணமாய்நின்று அவற்றைத் தாரதம்மியமின்றி யறிகிறபடியால் சாக்ஷியென்றும், கடம் கலசம் குதிர்முதலான உபாதிகளினால் அநேகம் ஆகாசமாகத்தோற்றினும் ஆகாசமொன்றேயன்றி வேறில்லாததுபோல அவித்தை அந்தக்கரணாதி உபாதிகளினால் அநேகஅறிவாகத்தோற்றினும்அறிவு பலவாயில்லாமல் ஒன்றாயிருக்கின்றபடியால் ஏகமென்றும், நான்கு அபாவத்தோடுகூடிய கடகலசாதி தோன்றிநின்றழியவும் நாலபாவமின்றி யழியாதிருக்கின்ற மண்போலப் பஞ்சகோசங்கள் தோன்றிநின்றழியவும் அப்படித்தோன்றியழியாதிருக்கின்ற தான் நிலையாயிருப்பதால் நித்தியமென்றும், சாதுர்ப்பூதங்களுக்குள் தான் வியாப்பியமின்றித் தன்னுள் அவற்றை வியாப்பியமாக உடைய ஆகாசம்போல ஸ்தூலாதிதேகம் ஜாக்கிரதாதிஅவஸ்தை விசுவாதிஅபிமானிக்குள் தான் வியாப்பியமின்றித் தன்னுள் அவைகள் வியாப்பியமானபடியினாலே வியாபகமாயிருக்கின்ற தான் விபுவென்றும், இத்தியாதி ஆத்மலக்ஷணமுடைய நாமங்களை விசாரிக்கிறதினாலே இதற்குவிலக்ஷணமான

அனாத்மலக்ஷணங்களையும் விசாரித்துத் தள்ளிப்போட்டுத் தன்னுடைய சுபாவஸ்திதியை விடாமலிருக்கவேண்டியது. இந்தப்படி விசாரிப்பதுதான் ஆத்மானாத்மவிசாரலக்ஷணமானபடியினாலே இத்தியாதிவிசாரணைக்கிரமத்தை அனுசரித்துவரவேண்டியது.

## 17-வது தரங்கம்.

[அ-கை.] அதிஷ்டானமென்கிற பிராஹ்மணனுடைய அறியாமையான போக ஸ்திரீயாலுண்டான அரூபியாதிகளிற் குரூபியான அவித்தையொன்று நசித்தாற் சகலசம்சாரமும் நசிக்குமென்பது சுருதியுக்திஅனுபவங்களால் சொல்லப்படுகிறது:—

அதிஷ்டானமென்கிற பிரஹ்மப்பிராஹ்மணனுக்கு அறியாமையென்கிற ராணியென்றபேரையுடைய ஸ்திரீயினிடத்தில் அரூபியானமாயையென்றுங் குரூபியான அவித்தையென்றுஞ் சரூபியானதாமசியென்றும் மூன்று பெண்களுண்டாயிற்று. இந்தமூன்றுபெண்களுக்குள்ளே மூத்தவளானமாயைக்கு மாயாவியானஈசுவரனென்றும், இளையவளான அவித்தைக்கு மகாமோகியானஜீவனென்றும், ஆண்பெண் இரண்டுவடிவுமற்ற நபுஞ்சகமானதாமசிக்கு மகாமூடனானஜகத்தென்றும் மூன்றுநாயகர்கள் உண்டானார்கள். அந்தமாயாவியான ஈசுவரனென்பவன் அனாதியானபிரஹ்மாம்சமாயிருந்தாலும்இந்தப்பெண்டாட்டிவாழ்வாலேயே இவனுக்கிவ்வளவு வாழ்வுண்டாயிருக்கிறது. அவனுக்கெப்படி இந்தவாழ்வு வந்ததென்றால், தாயாரானஅறியாமையென்ற ராணியானவள் இவளேதன்னுடைய பட்டத்துக்குயோக்கியமான மூத்தபெண்ணென்றும் சகலசற்குணங்களுமுள்ளவளென்றும் இனிமேலுண்டாகப்போகிற குடும்பத்துக்கெல்லாம் ஆதரவாயிருந்து எல்லார்மனதையும் அறிந்துகொண்டு குடும்பத்தைப்பிரியாமல் ஒன்றுசேர்த்துவைக்கவல்லமையும் அழிக்கவும் மறுபடி உற்பத்திபண்ணவும் வல்லமையுமுள்ளவளென்றும் அறிந்துகொண்டு, இவளுக்குத்தன்னுடைய சர்வாபாரவகனமான பட்டத்தையுங்கட்டித் தன் சர்வக்ஞத்துவாதி குணங்களாகிற கயற்றில் தன்னுயகன் சொந்தச்சொத்தான ஆனந்தத்துவாதி லக்ஷணங்களோடேகூடின முத்துக்கள்கோர்க்கப்பட்ட முத்தாஹாரங்கள் முதலானயாவற்றையும், இன்னுந்தான் சம்பாதித்தியம்பண்ணின நல்லமார்க்கமான சொத்துக்கள்யாவற்றையும் இந்தமாயையான அரூபியென்றபெண்ணுக்கு ஸ்ரீதனமாய்க்கொடுத்தாள். அதன்பிற்பாடு அவித்தையான குரூபியினுடைய புருஷனாயிருக்கிற ஜீவனை மகாமோகியென்பவன் பெண்டாட்டிசொற்கேழ்க்கிறவனாயும் அவள்எத்தனைகோடி பேதங்களைக்கல்பித்தாலும் அந்தப்படியே ஒப்புக்கொண்டு ஆடுகிறவனாயுமிருக்கிறான். இவனுக்கு இவ்வளவுபேதபுத்தி எப்படி வந்ததென்றால், அறியாமையான அம்மாளுடைய துவைதவாசனைகளாகிற சிறுதனமுதலான மோசத்தாலும் ஜீவர்களை மோகிப்பித்து அவர்களினது ஞானதனத்தைக் கிரகிக்கிறதான விபசாரத்தாலும்சம்பாதித்தஆஸ்தியென்றறியத்தக்கது. இன்னும் இந்தப்பெண்ணுக்கு என்ன ஸ்ரீதனங் கொடுத்தாளென்றால் கிஞ்சிக்ஞத்துவமாகிற சரட்டில் அநிர்தஜ..துக்

சுரூபமான ராகத்துவேஷாதிகளாகிற காக்காய்ப்பொன்னாற் கட்டப்பட்ட அநேகவிதமான ஆபரணங்களையெல்லாம் கையிலெடுத்துக்கொண்டு புத்திசொல்லிக் கொடுக்கிறாள். அடியேகுழந்தாய்! உன்னாலேதான் நான் வாழவேண்டியதாயிருக்கிறது, நீ தத்துவக்ஞானத்தால் இறந்துபோய்விட்டயேயானால் மாயையான உங்கள் அக்காளும் தாமசியான உன் தங்கையும் ஜீவித்திருந்தாலும் எனக்குப் பிழைப்பில்லை, பிரமாணமாய்ச் சொல்லுகிறேன் நீ எப்போசெத்தாயோ அப்பவே நானுங்கூடவே செத்துப்போய்விடுவேன், இதற்கென்ன சாக்ஷியென்றால்-சுருதி யுக்தி அனுபவங்களிருக்கின்றன. சுருதியாவது:—தேகம்நாசமாகிறதும் மோக்ஷமில்லை. மற்றத் தண்டகமண்டலாதி விஷயங்களுடைய விடுதலும்மோக்ஷமில்லை. அவித்தையாற் செய்யப்பட்டிருக்கிற ஹிருதயக்கிரந்திநசிப்பதே மோக்ஷமென்று சொல்லுகிறதே சுருதி. யுக்தியாவது :—சுழுப்தியில் நீங்கள் மூன்று பெண்களும் ஒன்றாகச்சேர்ந்துவாழும்போது ஜீவனானமகாமோகியென்ற உன்னும்படையான் ஒருவன்மூர்ச்சிதனாய்ப்போக, நீயும் மாயையென்ற அரூபியான உன்னக்காளும், ஈஸ்வரனென்றமகாமாயாவியான அத்திம்பியாரும், தாமசியென்ற சரூபியான தங்கையும், மாப்பிள்ளையானபஞ்சபூதமும், வாசனாபுருஷர்கள்சம்போகமாகிற தட்டுவாணித்தனத்தாற் பிறந்த இந்திரியங்களாகிற குழந்தைகள்முதலான இவையெல்லாம் ஜீவித்திருந்தும் அடியோடே செத்துப்போனதுபோலப் போவதே யுக்தி. அனுபவமாவது:-ஞானிகளானபேர்கள் அவித்தையென்ற குரூபியான உன்னையும் உன்புருஷனையும் தத்துவக்ஞானத்தால் பொய்யென்றுமட்டுந் தள்ளவே நானும் மாயையென்ற அரூபியான உன்னக்காளும் ஈஸ்வரனென்ற மகாமாயாவியானஉன்னத்திம்பியாரும் மூடையானசரூபியென்றஉன் தங்கையும் பின்னும் அவளுடையசோரபுருஷர்களாகிற அதிஷ்டானதேவதைகளும் அவர் புத்திரர்களாகிற இந்திரியங்களும் பவுத்திரர்களாகிற விஷயங்களும் சகலமுமிருந்தும் கழுத்தில்லாத புருஷன்போலவும் உயிர்போன உடல்போலவும் திருமங்கலியம்போன ஸ்திரீபோலவும் ஒருபிரயோஜனமுமில்லாமற் போவதே அனுபவமென்றறியத்தக்கது.

## 18-வது தரங்கம்.

[அ-கை.] விஷயத்தையே நினைத்தவனுக்கு விஷயங்கிடைக்கிறபோது குருநாதனைநினைத்தால் அவனுக்கு அனுக்கிரகிக்கச் சாதுக்களுடன் அவர் அவசியம்வந்து சேருவாரென்பதற்குயுக்தி :—

மாட்டுவண்டியே பணிடயம்படி சீக்கிரம்வருமென்று சொல்லும்போது ரயிலைக்கேட்க வேண்டியதென்ன பிச்சைக்காரனிடத்திற்போய் ஒருவன் ஆசரிக்க அவன் அவனுக்குத் தன்பிச்சைச்சோற்றைக்கொடுப்பானேயானால்,கர்ணனை ஆசரித்தவனுக்குக் கேட்கவேண்டியதென்ன, கானல்ஜலத்தையே ஜலமென்றெண்ணிக் கண்டபடி குடிப்போமென்றுநினைத்துத் திருப்தியடைந்தால் கங்கையிற்கிடப்பவனுக்குக் கேட்கவேண்டியதென்ன,நாட்டுவைத்தியனை அனுசரித்திருக்கிறவனுக்கே வியாதிநிருமானால் சித்தனை ஆசரித்த சிஷ்யனுக்குக் கேட்க

வேண்டியதென்ன,சந்திரப்பிரதிபிம்பமே ஆசரித்தவனுக்குக் குளிர்ச்சியைக் கொடுக்குமானால் அதிஷ்டானபூரணசந்திரன் குளிர்ச்சியைக்கொடுப்பதில் கேட்கவேண்டியதென்ன வென்பதுபோல வறிக.

## 19-வது தரங்கம்.

[அ - கை.] கிருதயுகாதிகளிலே யெத்தனை வருஷம் உபாசித்தாலும் ஈஸ்வரப்பிரசாதம் வெருவது அபிராயாசம். இந்தக்கலியுகத்தில் ஒருமாசம் ஒருவருஷம் உபாசிக்கிறதற்கு முன்னமே ஈஸ்வரன் குருரூபமாய்வந்து கிருபைபண்ணுவாரென்பதற்கு யுக்தி:—

நல்லநாளையிலே க்ஷவரகனிடத்தில் அநேகர்கள் கூடியிருப்பார்கள் அப்போது நம்மைத்திரும்பிப் பார்க்கமாட்டான் சனிக்கிழமைதினத்தில் போனால் முக்கால்துட்டுக்கு க்ஷவரகன் அகப்படுகிறப்போலும், இன்னுந் தாசியையௌவனகாலத்தில் எவ்வளவோ திரவியத்தையுங்கொடுத்து ஆசரித்தாலும் அவள் சமையங்கிடைப்பது அரிதாயிருப்பது போலும். அவளே தாய்க்கிழவியாகித் துணைக்குஆள் தேடும்போது துட்டுத்துக்காணி கொடுத்தவனிடத்தில் சந்துஷ்டியாயிருப்பதுபோலும், மகாராஜாவின்பேட்டி அரண்மனையிலிருக்கும்போது அருமையாயிருந்தாலும் வேட்டைக்குப்போனவிடத்தில் வேடனுக்கு வெகு சுளுவாய்க்கிடைப்பதுபோலும், சுசு-கறியோடே பிக்ஷைபண்ணின ஸ்வாமிகள் அறைக்கீரைக்கட்டையில் அதிசயப்பட்ட கதைபோலும், க்ஷாமகாலத்தில் இரண்டுதூக்கல் போட்டதைக்கண்டு சந்தோஷிப்பதுபோலும் ஈஸ்வரன் சந்தோஷிக்கிறார். அதென்ன காரணமென்றால், கலியுகத்திற் சகலஜீவர்களும் இங்கிலீஷ்வாசிக்கிறதும் வியாபாரம்முதலானதைப் பண்ணுகிறதுமாய் போய்விட்டார்கள். எவனேஒருவன் ஈஸ்வரனை ஸ்தோத்திரம்பண்ணுகிறான், இவனுமிப்படி மோசம் போகுமுன்னமே ஈஸ்வரன் குருரூபமாய்வந்து ஞானத்தைக்கொடுக்கிறாரென்ற அனுபவமானது இப்போது நாம் அல்பதபசை யுடையவராயிருந்தும் நமக்கு நம்முடைய குருநாதன் அவதரித்து வந்து அதிசுலபமாய்க் கரதலாமலகம்போலே நமது சொரூபத்தை நமக்குக்காண்பித்த நம்முடைய அனுபவமே நமக்குச் சாக்ஷியாயிருக்கிற தென்றறியத்தக்கது.

## 20-வது தரங்கம்.

[அ - கை.] ஜீவனாகிய ஒருபெண்ணுக்குப்பிடித்த பேயை ஒருகுருவாகிய மந்திரவாதிவந்துநிவர்த்திப்பித்து அவள் சுபமடைந்தவிபரந்தெரிவிக்கப்படுகிறது:-

ஜீவர்களாகிற பெண்கள் ஜகத்தாகிறகாட்டில் விஷயசுகங்களாகிற இலுப்பை முத்துக்களைப் பொறுக்கிறதற்காக இந்திரியங்களாகிற குட்டிகளையுங் கூட்டிக்கொண்டுபோய்ப் பொறுக்கும்போது, அந்தக்காட்டிலிருக்கிற அஞ்ஞானமான பிசாசுபிடிக்க ஆத்மாக்களாகிற ஜீவர்கள் அலரிவிழ, இந்திரியங்களாகிற குழந்தைகள் சப்தாதிவிஷயங்களாகிற கொல்லங்கோவைப்பழங்களைச் சாப்பிட்டு மயங்கிக் குட்டிகளுந்தாயுமாய்க் குலவையிட்டுத் திரியும்போது, தெய்வகதியாய்க் குருநாதனை மந்திரவாதியின் தரிசனங்கிடைத்த மாத்திரத்தில், இந்தப்பெண்ணானவள் குட்டிகளுடன் அவர்காலில்விழ, அவர்பிரஹ்மோபதேசமாகிற உச்சா

டனமந்திரத்தாலும் பூர்ணானுக்கிரகமென்கிற விபூதியாலும் கோசவிசாரமென்கிற யந்திரத்தாலும் தத்துவஞானமாகிற ஹோமத்தாலும் அந்த அஞ்ஞானப்பேயை விரட்டி, இந்திரியங்களாகிற குழந்தைகளுக்கு வாங்கிருக்கிறவிஷயமாகிற கோவைப் பழமயக்கந்திரச் சிரவணாதிகளாகிற கல்பாக்கினியைக்கொடுத்து மயக்கந்தீர்த்து இனிமேல் இப்படி இந்தச் சம்சாரக்காட்டில் வந்து இந்தவிடாய் சுகமான இலுப் பைப்பூக்களைப் பொறுக்கவேண்டியதில்லை. உன் ஹிருதயமாகிற வீட்டிலேயே ஞானமிர்தமாகிற பஞ்சபக்ஷிய பாயாசத்தோடே புஜித்துக்கொண்டு வெளியில் வராதிருக்கும்படி ஜீவனாகிறபெண்ணுக்கும் இந்திரியங்களாகிற குட்டிகளுக்கும் ஆக்ஞைபண்ணி, மறுபடிகாட்டில் முன்பிடித்தபேய் வீட்டில்வந்து பிடியாமலிருக் கிறதற்காகச் சாதுக்களாகிற மந்திரவாதிகளைக் காவல்போட்டுச் சாக்ஷாத்கார மாகிற ரக்ஷாபந்தனம்பண்ணி, * பிரஹ்மானந்தனாகிற நாயகனோடே ஜீவன்முக் தியாகிற ரதியைச் செய்யும்படி அனுக்கிரகித்த இந்தக்குருநாதனை மந்திரவாதி இன்னமிப்படி அஞ்ஞானமாகிற பேய்பிடித்த பெண்களையெல்லாம் கரையேற்றி விட்டுக்கொண்டு பின்னும் தெரியாத பேர்களுக்கெல்லாம் அநுசந்தானமாகிற விளம்பரமுகமாய் வெளிப்படுத்திக் கொண்டிருப்பதுந் தவிர வெகுதூரத்திலிருக் கிற பேர்களுக்கும் இவர்மகிமை விளங்குகிறதற்காக யந்திரத்தினத்துவஜங்களை யும் அனந்தகோடி கட்டியிருப்பதால், இந்தச்சமயத்தில் குருநாதனை சரணமாக வந்து அடைந்து கரையேறாதபேர்களுக்கு இனிஒருக்காலும் சம்பூர்ண சாதன சாமக்கிரியைகள் சேரப்போகிறதுமில்லை. கரையேறப்போகிறதுமில்லை ஆகை யால் முமுக்ஷுக்கள் அதிசீக்கிரத்தில் அவரைச் சரணமாக அடையத் தக்கது.

## 21-வது தரங்கம்.

[அ-கை.] ஜீவனுக்கே பந்தமென்று சொல்லுவது எப்படியென்றால், ரோமம் முதல் கூடஸ்தன் பரியந்தம் எல்லாத்தத்துவங்களுமிருந்தாலும் கருமத்தினாலுண் டாகிற விஷயத்தை எல்லோரும் அனுபவித்தாலும் பந்தம் ஜீவனுக்கே என் பதற்கு யுக்தி:—

கலியாணவீட்டிலே எவ்வளவுஜனங்கள் கூடியிருந்தாலும் அச்சமயத்திலிரு க்கிற பஞ்ச விஷயங்களை எல்லாரும் அனுபவித்தாலும் புருஷன் இறந்தால் தாலி கட்டக் கழுத்தைக் காட்டினவள் தாலியைத்தானே அறுக்க வேண்டியது போலும், கடன்காரன் அந்த எஜமானனைமட்டும் பிடிப்பது போலும், இந்த ஜீவன் சகலத்துக்கும் நான் கர்த்தாவென்று அபிமானித்ததால் சகலவிதமான பந்தமும் இவனுக்கேயென்று சொன்னது சரியே.

## 22-வது தரங்கம்.

[அ-கை.] குருநாதன் விவேகத்தில் இஷ்டமிருக்கிற மனதைக் கண்டித் தால் இருவருக்குஞ் சுகமுண்டென்பதற்கும் விவேகமில்லாதவனிடத்தில் சொன் னால் இருவருக்குந் துக்கம்வரும் என்பதற்கும் யுக்தி :—

---

* இது ஸ்ரீ பாலானந்தசுவாமிகளின் ஆஜ்ஞை.

..(ஒரு ஸ்திரீயைக் கன்னிகையாய்க் காட்டி அழைத்து அவள் போகத்துக்குச் சம்மதித்து வந்தாற் சுகமுண்டு, அதில்லாமல் அவள்பேரில் ஆசையினால் போகத்துக்கு வாவென்று பற்றியிழுத்தால் அனர்த்தம் வருவதுபோல வருமென்றறிந்து) குருவும் பக்குவியைப் பார்த்துத் தத்துவத்தை உபதேசிக்கக்கடவர்.

23-வது தரங்கம்.

[அ-கை.] சுழுப்திச்சுகம் அப்போது தெரியாது ஜாக்கிரத்துக்கு வந்துதான் தெரியுமென்பதற்கு யுக்தி :—

நிழலருமை வெய்யிலிற் போகும்போது தெரியுமென்று சொல்லி யிருக்கிற சரஸ்வதியின் வசனப்படிக்கும், ஒரு புருஷன் அக்கினியினால் தபித்துப்போய் அவனுக்குத் தலையிலே அமிர்தத்தைக் கொட்டும்போது அந்தச் சுகத்தில் முழுகிப்போன படியால் அப்போது சொல்ல முடியாமல் திருப்ப நெருப்புக் கொட்டடிக்குப் போகச் சொல்லும் போது, ஆ! ஆ!! இதுவரையிற் சுகமாயிருந்தேன். இப்போது இந்தச்சுகத்தை விட்டுக்கஷ்டத்திற் போகவேணுமேயென்று துக்கப்படுகிறவன்போலக் கஷ்டமான ஜாக்கிரத்தில் வந்து சுழுப்திச்சுகம் அறியத்தக்கதுபோலச் சமாதிச் சுகமும் நினைப்புவந்து அறியத்தக்கதென்றறிக. அதன் பின் சிஷ்யன் சங்கிக்கிறான். அதாவது :—அய்யா தாங்கள் சுழுப்தி அவஸ்தையிற் கருவிகரணங்கள் லயித்திருப்பதால் அப்போது அநுபவித்த பிரஹ்மானந்தம் அச்சமயத்தில் இவ்விதமான ஆனந்தத்தை இவ்விதமாக இருந்து கொண்டு இவ்விதமாக அநுபவித்தோமென்ற இதமுதலான யாதொன்றும் தெரியாமலிருந்து ஜாக்கிரத்தில் விழித்த பிற்பாடு துக்கரூபமான சங்கற்பங்கள் நதிப்பிரவாகம்போல மேன்மேலும் வரும்போது இந்தப்புருஷன் அப்போது இதுவரையில் இருந்த ஜகத்துவிஷயமான தோற்றங்களொன்றையு மறியாமற் சுகமாய்ச் சுழுப்திச் சுகத்தை யனுபவித்துக் கொண்டிருந்தோமே இப்போது அந்தச்சுகமும் விக்கினமாய்ப்போனது மன்றியில் துக்கரூபமான பிரபஞ்சத்தில் முயன்று தபித்துச் சிந்தித்துக் கவலையுடன் முழுகிப் போகும்படியாக வந்திருக்கிறதே யென்று சிந்திப்பதைத் திருஷ்டாந்தமாக வைத்து இதுபோல நிர்விகல்ப சமாதியில் தியானம் பண்ணுகிறவனையுந் தியானத்தையுமிழந்து தியானிக்கப்படுகிற ஸ்வஸ்வரூபபூத அகண்ட பரிபூரண சச்சிதானந்த ரசரூபியான வஸ்துமாத்திரமாய்ச் சேஷித்திருக்கிறதே சமாதியென்றும், அக்காலத்தில் யாதொரு விதமான சப்தாதி விஷயத் தோற்றங்களும் அத்விதீய சுகசொரூபமான ஆத்மத் தோற்றமுமில்லாமற் சிலைக்குச்சமானமாயிருந்து கர்மாதீனமாய் எப்போது சித்தவிருத்தி வெளியில் வருகிறதோ அப்போது அந்தப்புருஷன் இதுவரையில் நாம் சுகரூபனையும் ரசரூபனையும் துவைதத்தோற்றமற்றவனுயு மிருந்தோம், இப்போது இந்தச்சராசராத்மகமான ஜகத்தோற்றங்கள் நம்மிடத்தில் மித்தையாய்த் தோற்றுகின்றன. எதுபோலவென்றால் ஒரு புருஷன் வீட்டிற்குள்ளிருக்கும்போது அப்போது இரண்டாவதொன்றுந் தோற்றாமலிருந்து வெளியில் வந்தமாத்திரத்தில் யாதொரு புருஷப்பிரயத்தினமன்றியி

லும் யாதொரு வஸ்துத்தன்மை யன்றியிலும் யாதொரு அவயவங்களிலுந் தனக்குக்குறைவன்றியிலும் சஞ்சார விஷயத்திலுந் தன்கதிக்குங் குறைவன்றியிலும் தான் அதையெதிர்த்து யுத்தம்பண்ண ஆரம்பித்தால், நமக்கு ஒரு ஆயுதத்தை எவ்வளவோ சிரமப்பட்டுத் தேடவேண்டியது போலவன்றி, நாமெடுத்த ஆயுதத்துக்குப் பதிலாயுதங்கள் காலதாமசமன்றியிலும் காலங் கர்மம் ஈஸ்வரன் முதலானவர்கள் சகாயமன்றியிலும் காலதேச வஸ்துக்களுடைய அபேக்ஷையன்றியிலுந் தோற்றுகிற நிழல்போல இருக்குமென்று பார்ப்பார்களென்று சொன்னீர்களே, அப்படிச் சொல்லப்பட்ட சுழுப்திக்கும் சமாதிக்கு மிருக்கிற வேற்றுமையென்ன விருக்கிறது, அப்படி வேற்றுமையில்லாத பக்ஷத்திற் சகலப்பிராணிகளுக்கு ம் சுழுப்தியானந்தானுபவமானது அப்பிரயத்தினமாயும் அனாயாசமாயுமுண்டாகிறதே, அப்படி யுண்டாகிறதினால் யாருக்கும் ஜனனமரணதுக்கங்கள் நிவர்த்தியாய் அத்துவிதானந்தாத்மானுபூதி ரூபமான தடையற்ற ஆனந்தமுண்டாகவில்லையோ, இன்னமிப்படி அப்பிரயத்தினமாய் முத்திசித்திக்கும் பக்ஷத்தில் மண்ணெல்லாம் புடவையாய் விடும் பக்ஷத்திற் குட்டிச்சுவரெல்லாம் நிர்மாணமாய் நிற்கத் தேவையில்லை யென்ற பழமொழிப்பிரகாரம் இவ்வுலகத்தில் ஒருஜீவர்களும் துக்கிகளாயுஞ் சம்சாரிகளாயும் கர்மபந்தத்தை யுடையவர்களாயு மிருக்காமல் இதற்கு எதிர்மறையான ஜீவன்முக்தர்களாகவே யிருக்கவேண்டும். அப்படியிருக்கும் பக்ஷத்தில் இந்த உபநிஷத்துக்களும் அதைப்பிரதிபாதிக்கிற சாஸ்திரங்களும் அதை உபதேசிக்கிற சற்குருநாதர்களும் அவர்கள் கிருபையாற் செய்யப்பட்ட சிரவணமனன நிதித்தியாசன சமாதியனைத்திலுமுள்ள பிரயாசைகளும் வீணாய்ப் போய்விடுமென்று கேட்பாயாகில் அதற்குத்தரஞ் சொல்லுகிறோங்கேள். திருஷ்டாந்தங்களெல்லாம் தார்ஷ்டாந்தங்களுக்கு ஏகதேச சாமியமாயிருக்குமென்று சொல்லியிருக்கும் நீ இப்படிச் சந்தேகித்தது யோக்கியமன்று. அப்படி ஏகதேச சாமியத்தை அங்கீகரியாவிட்டால் வீதகவ்வியர், உத்தாலகர் முதலானவர்கள் சமாதிக்கு ஆரம்பிக்கும்போது நான் சிலைக்குச்சமானமாக எப்போது ஆகப்போகிறேன் பக்ஷிகள் மரத்திற்போல என்றலையில் எப்போது கூடுகட்டப் போகிறதென்று சொன்ன சொல்லானது சுத்தஜடமான மரத்தையுங் கல்லையும் திருஷ்டாந்தமாய் வைத்து சுத்த சைதன்னியமா வஸ்துக்கு ஏகதேச சாமியமில்லாமல் எப்படிச்சொல்லக்கூடும். ஆகையால் சுழுப்தியில் அஞ்ஞானமும் ஆவரணமும் வாசனையுங் கர்மங்களுஞ் சமஸ்காரமாயிருந்து பின்னும் அனந்தகோடி ஜனனமரணத்துக்குக் காரணமான பீஜாவஸ்தையாயும் எழுவகைப்பிறவிக்குள் ஸ்தாவரப்பிறவியில் அந்தக்காரணம் லயித்திருப்பது போல அந்தக்காரணம் லயித்திருக்கிற இந்தச்சுழுப்தியவஸ்தைக்கும் இதற்கு எதிர்மறையாக அஞ்ஞானஆவரண வாசனா கர்மங்களுடைய சமஸ்காரங்கள் வேரோடே நசித்து அந்தக்காரணத்தின் சத்துவவிசேஷமான சமஸ்காரமட்டுஞ் சேஷித்து சுவானுபூதி ரசாவேசத்தாலுண்டா யிருக்கிற பிரஹ்மானந்தப் பிரவாகத்துக்குள் முழுகிப் போயிருக்கிற சமாதிக்கும் வெகுபேதமிருக்கிறது. அது

எதுபோலவென்றால் சுழுப்தியில் அந்தக்கரணமானது வேரறுந்தமரந் தண்ணீரில் விழுந்து சகதியில் மறைந்து கிடப்பதுபோலும், சமாதியில் சித்தமாகிற கல்பகவி த்தானது அமிர்தத்தின் நடுவே அசைவற்றிருந்து கொண்டு அந்த அமிர்தத்தாற் பூரிக்கப்பட்டு அமிர்தமயமாயிருப்பதுபோலச் சொரூபமாகிற அமிர்தத்தில் ஸ்தா பிக்கப்பட்டு அந்த அமிர்தத்தினுலேயே அந்தச்சித்தம்பூரிக்கப்பட்டுச் சித்தமென்ற சுபாவமேயிழந்துபோய்பிரஹ்மானந்த மாத்திரமாயிருக்கிற சமாதிக்கும்திருஷ் டாந்தங்களேதென்றால் அரிச்சந்திர ராஜாவுக்கும் அந்தவேஷம் போட்ட தாதனு க்கும் ரத்தினத்துக்கும் கல்லுக்கும், மலைக்கும் மகாமேருவுக்கும், அரியென்ற மகாவிஷ்ணுவுக்கும் மேற்படி நாமத்தைத் தரித்திருக்கிற தவளைக்கும், ஸ்தாணு வென்ற சிவனுக்கும் மேற்படி நாமத்தைத் தரித்திருக்கிற பட்டகட்டைக்கும் சமானஞ் சொல்லுவதுபோல அத்தியந்தம் அறியாமையோடே கூடியிருக்கிற சுழுப்திக்கும் அத்தியந்தம் பரிசுத்தமான ஞானத்தோடே கூடியிருக்கிற சமா திக்கும் பேதந்தெரியாமல் நீ சங்கித்ததைப் பற்றி விசனத்தையும் சந்தோஷத் தையு மடைகிறேன். அதாவது விசனப்படக் காரணமென்னவென்றால் கன் னிப் பெண்ணுக்குக் கூடச் செத்தவனுடைய சிசுனத்துக்கும் லேபனத்தோடே கூடிய யுவாவினுடைய சிசுனத்துக்கும் பேதந்தெரியக் கூடுமே, பைத்தியக் காரனுக்குக்கூடப்பழையசோற்றின்ருசியும் பஞ்சபக்ஷியபோஜனத்தின் ருசியும் தெரிந்திருக்கவும், இப்போபிறந்தகுழந்தைக்குக்கூட எண்ணெய்யின் அருசியும் தேனின்ருசியுந்தெரிந்து அதைவெளியில்தள்ளுவதும் இதைஉள்ளேதள்ளுவதும் அனுபவமாயிருக்கும்போது விவேகியாயிருக்கிறநீ இந்தப்பேதம் அறியாமற்போ னதைப்பற்றிவிசனிக்கிறோம். இனிச்சந்தோஷித்ததற்குக் காரணமென்னவென் றால், அறியாமையோடேகூடியவிக்ஷேபநாசத்திலேயே இவ்வளவு பிரீதியுள்ளவ னுக்கு அறியாமையைத்தள்ளியிருக்கிறவிக்ஷேபநாசத்தில் எவ்வளவுபிரீதியுண்டா குமென்று நினைப்பதுஎப்படிப்போலவென்றால், முழுக்கரும்பையேபிரியமாய்ச் சாப்பிடுகிறவன் சக்கையைத்தள்ளிச் சாறைமட்டுங் கொடுத்தால் எப்படிப்பிரிய மாய்ச் சாப்பிடுவனே, தேங்காய் மூடியைக் கபிபோலேகடித்துச் சாப்பிடுகிறவன் அதைத் துருவிச்சக்கையைத்தள்ளிப்பாலை எடுத்துக்கொடுத்தால் எப்படிப்பிரிய மாய்ச் சாப்பிடுவனே அப்படி நீயும் இந்தச்சமாதியைப் பிரியமாய்நம்பி அப்பியா சித்துச் சுகிப்பாயென்று நம்பி சந்தோஷித்ததாம்.

## 24-வது தரங்கம்

[அ-கை.] தன்னிடத்தில் அன்னியமொன்றுமில்லாதிருக்க ஏதோ ஒருஅஞ் ஞானம்வந்ததுபோலநினைத்து அதைத்தீர்க்கப்புத்தியெண்ணுவது குறைவென் றும்அந்தமயக்கத்தைப்போக்கவிசாரம்வேண்டுமென்றும் சொப்பனயுக்திவிசா ரத்தாற்போமென்றும் தெரிவிக்கப்படுகிறது:—

தன்னிடத்தில் எந்தவிதத்திலாவதுயாதொருபேதமுங்கிடையாது அப்படி யாதேனுமிருக்கும்பக்ஷத்தில் தன்பூரணத்துக்குக் குறைவுவருவதுந்தவிர அப் படித்தோற்றுகிறபேதமானது சத்தோ அசத்தோவென்றுவிசாரிக்கும் பக்ஷத்

தில்,சத்தாலல்அதுதானாகஆய்விட்டது; அசத்தாலல் அதுஇல்லாததாய்விட்டது. இப்படியிருக்கும்பக்ஷத்தில் அஞ்ஞானம் ஆவரணம் விக்ஷேபம்மூன்றும் பந்தப்படுத்திவைத்துக்கொண்டிருந்ததென்றும் இப்போதுதத்துவஞானத்தால் அதுநிவர்த்தியாய்விட்டதென்றும் வாஸ்தவமாக எண்ணுவது எப்படியென்றால், பழுதையிலேபாம்புவந்துபோனதுபோலவும், கண்ணாடியைப்பார்த்தமாத்திரத்தில்தனக்கு முகமுண்டானதுபோலவும், சொப்பனத்தில் நமக்குவந்த கஷ்டத்தைதிரம்ப ஆப்தன்வந்துதீர்த்துவைத்ததுபோலவும், ஆகாசந்தலையில்விழுஞ்சமயத்தில் இஷ்டன்வந்து தற்காத்ததுபோலவும், தத்துவஞானம்வந்து பந்தநிவர்த்திசெய்ததென்பது இத்தன்மையே யொழிய வேறில்லை. ஆனால்பரமார்த்தம் விவகாரம் இரண்டிருப்பதால் அதில்ஞானாஞ்ஞானங்கள் விவகாரத்தில் கல்பிக்கப்பட்டிருப்பதால் அந்தத்தத்துவஞானமே அஞ்ஞானாதியைப்போக்கவேண்டுமென்றும் அது அஞ்ஞானாதி பிரதிபந்தங்களிருந்தால் பந்தநிவர்த்திசெய்யாதென்றும் வந்தஞானத்தைப்புத்திநிர்மலத்தால் ரக்ஷித்துக்கொள்ளவேண்டுமென்றும் சாஸ்திரங்களினாலும் பெரியவர்களாலுஞ் சொல்லப்பட்டபிரகாரம் எழுதப்பட்டது. ஆனால் கட்டையைக்கடைந்து அக்கினியையெடுத்தவன் அந்த அக்கினியைச்சம்ரக்ஷிப்பதுபோலக் குருநாதனால் அனுக்கிரகிக்கப்பட்டஞானத்தை நிரம்பச்சாவதானமாய்ச்சாதுக்களுடனும் நிராசையுடனும்வைராக்கியத்துடனும் மனனாதி அப்பியாசத்துடனும் சம்ரக்ஷிக்கவேண்டும். இப்படிஇதுவே வேலையாயிருந்தால் சரீரநிர்வாகமெப்படிநடக்குமென்றால், மாடுவாங்கினவன் வித்தவனுடையவார்த்தையைக்கேட்டு இரக்ஷியாமல் சுயமாய் ரக்ஷிப்பதுபோல, விவகாரத்தில் மனதாகிற மாட்டைச்சற்குருவாகிறதெய்வத்துக்கு வித்துவிட்டதால் அதைப்பற்றியகவலை தேவையில்லை. ஆனாற்சொச்சக்காலங்கழியும்வரையில் அந்தக்கல்பனையான மனதுக்குக்குருநாதன் உத்தரவுப்படிவேலையிடவேண்டியது. அதாவது தன்னுடைய சொற்பனம்தனக்கு அபரோக்ஷமாயிருப்பதால் தினந்தோறும் ஜாக்கிரதையாய் அடிக்கடிசொப்பனம்போல இந்தச்ஜாக்கிரமும் பொய்யென்று அனுசந்தானம் பண்ணிக்கொண்டுவரவேண்டியது. அப்படிச்செய்யவேண்டிய அனுசந்தானமானது எவ்வளவுகாலஅளவைப்பற்றியிருக்கிறதென்றால் அதற்குயுக்தி:—நிறுக்கிறவன் தராசுத்தட்டு ரெண்டிற் படிக்கல்லுப் போட்டிருக்கிறதட்டுக்குச்சரியாகும் வரைமற்றொருதட்டிற் சரக்குப்போட்டுவந்து படிக்கல்லுக்குச்சமானமாய் விட்ட பிற்பாடு சரக்குப்போடவேண்டியதில்லாததுபோல, சொப்பனத்துக்குச்சமானமாய்ச்ஜாக்கிரம்பொய்யென்றுதுணிவுவரும்வரைஞானாப்பியாசம் இடைவிடாமற் செய்தாற் பிரபஞ்சவியாபாரத்தில் துக்கம்வராது, கிருதகிருத்தியனாய் நித்தியதிருப்தியாய்ஜீவன்முக்தனாயிருக்கலாம்.

## 25-வது தரங்கம்.

[அ-கை.] முக்கியமானதனம் தானே யென்பதற்குயுக்தி :—

வழிநடக்கிறவன் கையில் ஆயிரம்ரூபாய்கொண்டுபோனால் திருடன்வந்தவேளையில் அதைக்கொடுத்துப்போட்டுத்தேகமாகிய தன்னை ரக்ஷித்துக்கொள்ளுவது

போல,விவேகியும் சரீராதிகளுக்கபாயம்வருங்காலத்தில் அவற்றைக்கைவிட்டு அறிவாகியதன்னைக் காப்பாற்றுவதுதான் புத்திசாலிக் கடையாளமென்றறியத் தக்கது.

26-வது தரங்கம்

[அ-கை.] குருபக்தி பண்ணுகிறவனுக்குத்தான் தத்துவஞானம் பிரகாசிக்கும் மற்றவனுக்குப்பிரகாசிக்காதென்பதற்கு யுக்தி:—

சந்திரனில்லாத இராத்திரி பிரகாசியாததுபோலவும், சூரியனில்லாதபகல் பிரகாசியாததுபோலவும், ஜலமில்லாதகுளம் பிரகாசிக்காததுபோலவும், அன்னமில்லாமல் தேகம் வளர்ந்து பிரகாசியாததுபோலவும், கண்ணில்லாமல்ரூபமும் வெளிச்சமும் பிரகாசியாததுபோலவும், புத்தியில்லாமல் சிதாபாசனும் விஷயஞானமும் பிரகாசியாததுபோலவும், தீபமில்லாதவீடு இராத்திரியிற் பிரகாசியாததுபோலவும், குருபக்தியில்லாதவனுக்கு ஞானமொருக்காலும் பிரகாசியாதென் றறியவேண்டியது.

27-வது தரங்கம்.

[அ - கை.] ஞானிக்குச்சுயதிருஷ்டியில் யாதொருவித பேதமுமில்லையென்பதையும் பரதிருஷ்டியிலேயே பேதமிருக்கிற தென்பதையும் அறிவிக்கப்படுகிறது:-

எவ்விதபேதவாசனையுமில்லாத ஞானி கர்மத்தைப் பண்ணினாலும் பண்ணாதேபோனாலும் பிரயோசனமும் கெடுதலுமில்லை. பிறரால்செய்யப்பட்ட தூஷணைபூஷணையாலுஞ் சந்தோஷமும் விசனமுமில்லையென்பதற்கு யுக்திகள்:— பிணத்துக்கு அலங்காரம்பண்ணினாலும் பண்ணாதேபோனாலும் அது ஒருபடித்தாய் அறியாமலிருப்பதுபோலும்,பாலசுவாமியின் முகமானது க்ஷவரம்பண்ணினாலும் பண்ணாதேபோனாலும் ஒருபடித்தாயிருப்பதுபோலும், ஞானியினுடைய மனசு சமமாயிருக்கும். லோகத்தார் ஞானியைப்பார்த்துப் பூஜிப்பதும் பூஜிக்காமல் தூஷித்துக்கொண்டிருப்பதும் இவர்கள் வழக்கமென்பதற்குயுக்தி:- சூத்திரர்களாகிற முமுக்ஷுக்கள் ஞானியாகிறபிணத்தைப் பூஜிப்பதும் பிராஹ்மணர்களாகிறஅஞ்ஞானிகள் தீண்டல்முதலான தோஷத்தைக்கல்பித்து நிந்திப்பதும் வழக்கமாயிருப்பதுபோல வென்றறியத்தக்கது.

28-வது தரங்கம்.

[அ - கை ] விசாரத்தினாலேயுண்டான பிரஹ்மஞானம் இவனுக்கு வேண்டாமென்றிருந்தாலும் போகாதென்பதற்கு யுக்திகள் :—

வெல்லத்தை வாயிலே போட்டுக்கொண்டவனுக்குத் தித்திப்பு வேண்டாமென்றாலும் தித்திக்கிறுப்போலும், பாலசுவாமிக்குச் சகசமாயுண்டாயிருக்கிறஸ்தன்னியம் தனக்கு வேண்டாமென்றிருந்தாலும் தான் பாராமலிருந்தாலும் தனக்கு மறைந்துபோகவேண்டுமென்று புருஷப்பிரயத்தினம் பண்ணினாலும் ஸ்திரீகளைப்போலே விகாரமாய்ச் சீவடிந்துவிழுந்துபோகவேணுமென்று நினைத்தாலும் அப்படியெல்லாம்போகாமல் ஒருபடித்தாயிருப்பதுபோலு மென்றறிக.

29-வது தரங்கம்.

[அ - கை.] தேகாத்மபுத்தி திடமாய் உள்ளவனுக்குப் பிரஹ்மாத்மஞான முண்டாவது பிரயாசமென்பதற்கும் அது நிவர்த்தியாகிறதற்கு உபாயமும் சொல்லப்படுகிறது :—

ஒருசமாராதனையில் ஒருநோஞ்சல்பாப்பானுக்காகப் பரிமாறியிருக்கிற இலையில் ஒரு குண்டகோளனை தடிப்பயல் அவாந்திரமாய்வந்து உட்கார்ந்திருக்குமவனை இவனிழுத்துவிட்டுத் தானதில் உட்காருகிறதற்குச் சக்தியில்லாத அவன் எஜமானனிடத்தில் தெரிவித்ததின்பேரில் அவரிவனைக்கலீத்தாக்கொடுத்து வெளியில்தள்ளி இவனை அதிலிருத்திப் புஜிக்கச்செய்வதுபோல, இந்த மந்தமுமுக்ஷுவானவன் குருநாதனிடத்தில் தேகாத்மபுத்தியான அகங்காரத்தின்வலியையும்பிரஹ்மாத்மபுத்தியானவலிமையில்லாத தன் அசக்தியையும்தெரிவித்து அவ்விடத்துக் கிருபையாலேயே இது நிவர்த்தியாகவேணுமென்று அனன்னியசரணமாய் ஆதரவுடன் அறிவித்தமாத்திரத்தில் அந்தக்குருநாதனும் புத்தியாகிறஸ்திரீ பிரஹ்மமாகிறபுருஷனிருக்கும்போதே விஷய சோரநாயகனுடன்சேர்ந்து பெறப்பட்டவனும், ஞானபுருஷனில்லாதசமயத்தில் மறதியாகிற அவித்தையால் பெறப்பட்டவனுமிருக்கிற குண்டகோளகனை இந்தஅகங்காரனை ஞானஆக்ஞையாலேவப்பட்டிருக்கிற விவேகாதிபடாளால் தள்ளிச் சர்வரசமும் பொருந்தியிருக்கிற பிரஹ்மஉபதேசமாகிறஇலையில் ஆனந்தமாகிற போஜனத்தைத் தடையன்றியில் பிரஹ்மாகமென்கிறதிருப்தியாகும்வரை புஜிக்கச்செய்வதற்குக் குருநாதனைத்தவிர வேறே உபாயமில்லை யென்றறியத்தக்கது.

30-வது தரங்கம்.

[அ - கை.] மாயையையும் மாயாகாரியத்தையும் குருகிருபையாற்பெற்ற விசாரத்தாற் போக்கடிக்கவேண்டுமென்று சொல்லப்படுகிறது :—

மாயையும்மாயாகாரியமான ஆவரணவிக்ஷேபங்களும் பண்ணுகிறகாரியமேதென்றால், தன்னையும் தன்னதிஷ்டானமான சாக்ஷியையும் மறைத்து நாமரூபத்தைக்காட்டி அதில் அநேகஜீவேஶ்வர ஜகத்துப்பேதங்களைக்கல்பித்து அவற்றிலொருதேகத்தில்மட்டும் நானென்று அபிமானிக்கச்செய்து அதனால் ராகத்துவேஷங்களுண்டாய் அதனால் கருமஜன்மப்பிரவர்த்திமுதலான சகலசமுசாரதுக்கத்தையும் விளைவிப்பதால் முதலிற் குருகிருபையாற்பிரவர்த்தியை நிவர்த்தித்து அதனால் அனந்தஜன்மகர்மங்களையும் நிவர்த்தித்து அதனால் ராகத்துவேஷங்களையும் நிவர்த்தித்து அதனால்தேகாபிமானத்தைநிவர்த்தித்து அதனால்ஜகத்பேதத்தையுஞ்சத்தியபுத்தியையும் நிவர்த்தித்து அதனால்தேகாதிபிரபஞ்சத்தைச்சொப்பனம்போலே பொய்யென்று நிச்சயித்து நானே பிரஹ்மமென்று திடநிச்சயமாய் அனுசந்தித்து வந்தால் அதனால் அப்பிரதிபந்தமாயிருக்கிற பிரஹ்மாத்மஐக்கிய ஞானம் தனக்குத்தானே விளங்கும். அப்படி விளங்கினால் மாயையும் மாயாகாரியமும் நிச்சேஷமாய் நசிக்கும்.

31-வது தரங்கம்

[அ-கை.] நானாவிதக்கற்பிதப் பிரபஞ்சத்திலிருந்து அத்துவைதமான தன் நிஜரூபத்தை மறவாமல் தன் ரூபமாய்ப் பார்ப்பதற்கு முக்கிய உபாயஞ் சொல்லப்படுகிறது:—

முதலாவது பரமார்த்தாத்துவைத ஞானம். இரண்டாவது துவைதோபேக்ஷை. இதில் ஞானத்துக்கு யுக்தி:- காணப்படுகிற கடகலசாதிகள் மண்ணிலிருந்துண்டானதென்றும், காரியாவஸ்தையை யடைந்தும் காரணம் தன் சுபாவத்தை விடாமலிருக்கிறதென்றும், கடாதிகளின் உற்பத்தியும் இருப்பும் நாசமும் குலாலனுடைய இச்சையையும் கர்மத்தையும் ஆசரித்திருக்கின்றனவென்றும், கடாதிகள் உற்பத்தி ஸ்திதி லயம் மூன்று காலத்திலும் காரணமான மண்ணாகவே யிருக்கிறதென்றும் அறிகிறதுபோல, காணப்படுகிற ஜீவேசுவர ஜகத்துப் பிரஹ்மத்திலிருந் துண்டாகிறதென்றும், அப்படிக் காரியாவஸ்தையை யடைந்தும் காரணமான சத்ரூபத்தை விடாமலிருக்கிறதென்றும், இந்த ஜகத்தின் தோற்றம் நாசம் ஈஸ்வர இச்சையையுங் கர்மத்தையும் ஆசரித்திருக்கிறதென்றும், காரியமான ஜகத்து தன்னுற்பத்தி ஸ்திதி லயம் மூன்றிலும் காரணாத்மகமான சத்ரூபமாகவே யிருக்கிறதென்றும் அறிகிறதே பரமார்த்திகாத்துவைதஞானம். இரண்டாவது துவைதோபேக்ஷை யுக்தியுடன் சொல்லப்படுகிறது. மண் உண்மையென்று அறிந்தவன் முன்போலக் கடகலசாதிகள் தோன்றினாலும் அதை உபேக்ஷைபண்ணுகிறதுபோல, சத்தே உண்மையென்று அறிந்தவனுக்கும் முன்போலவே தேகாதிஜகத்துத் தோற்றிக்கொண்டிருந்தாலும் அதில் அவன் உபேக்ஷையாயிருப்பன். எப்பொழுதும் மண்ணேசத்தியம் கடாதிகள் அசத்தியமென்று இவனுக்கு அப்பிரயத்தினமாய் விளங்குவதுபோலச் சர்வோபாதானமாகிற நாமே சத்தியமென்றும் காரியமான ஜீவேசுவரஜகத்து மித்தையென்றும் அப்பிரயத்தினமாய் விளங்கிக்கொண்டிருக்கு மென்றறியத்தக்கது. இந்த ஞானத்துக்குப் பிரயோசனமேதென்றால், அவைகளில் அபிமானமின்மையும் அவைகளால் இன்னகாரியத்தை அவசியம் சாதித்துக்கொள்ளவேணுமென்று எண்ணாமலிருப்பதும், அவைகளைவகையாய்ப்பாராமல் தொகையாய்ப் பார்ப்பதுமாகிய இம்மூன்றும் திருஷ்டாந்ததாஷ்டாந்தத்தில் சொல்லிய உபயஞானிகளுக்கும் கடாதிகளையும் தேகாதிகளையுங்குறித்து சுகதுக்கங்கள் வாராமலிருப்பதற்கு உபாயங்களாக அறியத்தக்கன. இந்தப்படி அநுசந்தானஞ்செய்துக்கொண்டுவந்தால்சகலதுக்கங்களும்போய் நித்தியானந்தத்தைத் தடையின்றியில்அடையலாம்.

32-வது தரங்கம்.

[அ-கை.] வாக்குமனதுக்கு எட்டாமலிருக்கிற சைதன்னியலிங்கம் ஒரு ஆலயத்தில் முன்விளங்காமலிருந்த தன்மையையும் இப்போது விளங்குகிறதன்மையையும்பற்றிக் கொஞ்சந் தெரிவிக்கப்படுகிறது:—

அதாவது அந்த ஆலயத்துக்குப் பிரஹ்மாண்டமென்று பெயருடைய வெளியிற் சமஷ்டிஸ்தூலசூக்ஷ்மகாரணமென்று மூன்று பிராகாரங்களிருக்கின்றன.

அதுபோலப் பிண்டாண்டமென்று உள்ளாக வியஷ்டியில் மூன்று சரீரங்களாகிற பிராகாரங்களுண்டு. அதில் முதற்பிராகாரமென்கிற ஸ்தூலசரீரத்தில் சுவாமிவந்து உற்சவம் நடக்கிறகாலத்துக்குச் சாக்கிராவஸ்தையென்றும் சூட்சுமசரீரமாகிற இரண்டாம்பிராகாரத்தில் சுவாமிவந்து உற்சவம் நடக்கிறகாலத்துக்குச் சொப்பனாவஸ்தையென்றும்,காரணசரீரமாகிற மூன்றாவதுபிராகாரத்தில் சுவாமி போய்த் திருக்காப்பிட்டிருக்கிற சமயத்துக்குச் சுழுப்தியவஸ்தையென்றுஞ் சொல்லப்படுகிறது. ஆனால் இந்த ஆலயத்தில் இதற்குமுன்நடந்த அநியாயத்தையும் இப்போதுநடந்துவருகிற நியாயத்தையுங் கொஞ்சந் தெரிவிக்கப்படுகிறது :—அதேதென்றால் அஞ்ஞானனென்று ஒரு இராஜனுண்டாய் அவனுக்கு ஆவரணம் விக்ஷேபமென்கிற இரண்டுமந்திரிகள் கல்பிக்கப்பட்டார்கள். அவர்களில் இராஜனானவன் தெய்வமென்று ஒன்றிருக்கிறதாக நினையாமலிருப்பதே அவன்சுபாவம். ஆவரணனென்கிற மந்திரியானவன் இராஜன் கருத்துப்படியே இந்த ஆலயத்திலுள்ள ஞானதீபத்தைமறைத்து தெய்வத்துக்கும் ஆலயத்துக்கும் பேதந்தெரியாமல் மூடுவதே அவன்தொழில். விக்ஷேபனென்றமந்திரி தானே தெய்வமென்றும் தன்னாலேயே சகலமும்நடக்கிறதாக அகம்பாவத்தையடைந்து மனோபுத்தி அகங்காரம் சித்தமென்கிற நாலுமெம்பர்களை நியமித்து அவர்கள் கையில்ஆலயத்தைஒப்புவித்தான். அவர்களும்தெய்வசிந்தனையில்லாதபேர்களானதால், மனமென்பவன் சதா சொந்தவிஷயத்தைப்பற்றி ஆலோசனையோடு கூடிக் கொண்டிருக்கின்றான்; புத்தியென்பவன் சொந்தவிஷயத்தையே நிச்சயம்செய்கிறவனாகயிருக்கிறான்; அகங்காரன் அகம்பாவத்துடன்கூட நானேகர்த்தாபோக்தாவென்று கையெழுத்துபோட்டுக்கொண்டிருக்கிறான்; சித்தமென்பவன் அறுதலி தன்பர்த்தாவைநினைத்து அழுதுக்கொண்டிருக்கிறதுபோல நடந்ததைக்குறித்துவியாகுலப்பட்டுக்கொண்டு வெளியில்வராமலிருக்கிறான். இப்படியிருப்பதால் தங்கள்சொந்தக்காரியமான விஷயசிந்தனைக்குச்சுவாமிகாரியம் பார்ப்பதுவிரோதமாயிருக்கிறதென்று இவர்களாலோசித்து நம்மால் கோவில்காரியம் பார்க்க முடியாதென்றெண்ணித் தங்களிஷ்டப்படிநடத்த சாதகர்களாயிருக்கிற சுரோத்திரன் துவக்கு சக்ஷு சிங்குவை ஆக்கிராணமென்கிற ஐந்து தர்மகர்த்தாக்களை நியமித்து அவர்கள்வசம் ஆலயத்தைவிட்டுவிட்டார்கள். அவர்களும்மேற்படியாருடைய அம்சமானதால் அந்தர்முகர்களால் அறியக்கூடிய தெய்வசிந்தனையானது பகிர்முகர்களாகயிருக்கிற இவர்களுக்கில்லாததினால் அந்தக்கோவிற்பூஜை முதலானகாரியத்தையும் வருமானத்தையும் ஐந்துபாகமாய்ப் பிரித்துக்கொண்டார்கள். சுழுப்திச்சுகமாகிறதஸ்திகைத்துகையையும் ஐந்துபாகஞ்செய்து, சுரோத்திரன் தன்னைச்சேர்ந்ததாயிருக்கிற அஷ்டாதசவிதசப்தங்களுக்கும் தன்பாகத்தைக் கொடுத்தான். அப்படியேநாலுபேர்களும் அவரவர்களைச்சேர்ந்த ஸ்பரிச ரூப ரச கந்தவிஷயமாகிறஜனங்களுக்கு உபயோகப்படுத்திக்கொண்டு வருகிறார்கள். பின்னும்பிராணாபானவியான உதானசமானனென்கிறதாசிகளை வாக்குபாணிபாதம் பாயு உபஸ்தமென்கிறபாட்டு துத்திமுகவீணை தாளமத்தளக்காரரை ஆட்டிவைக்

கும்படிசெய்து பின்னும்சதாகாலமும் அந்தவேடிக்கைப் பார்த்துக்கொண்டிருக்கிறதும்தவிர சுவாமியினுடைய பூசைக்காக விடப்பட்டிருக்கிறதும் நிஷ்காமபுண்ணியத்தால் வாங்கப்பட்டதுமான பிரஹ்மானந்தமாகிறபண்ணைக்கிராமங்களையும் மற்றத்தேவஸ்தான சொத்துக்களையும் அவிவேகன் முதலானமடாதிபதிகளாகிற மடையர்களிடத்தில் விஷயசுகமாகிற லஞ்சத்தைப் பெற்றுக்கொண்டு அவர்களிடத்திற் கட்டிக்கொடுத்துப் போட்டபடியால், ஷடாதாரமென்கிற ஆறுகாலத்திலும்சுவாமிக்கு அனுசந்தானபூசை சிரவணக்ஷீராபிஷேக மனனநைவேத்தியங்களுக்குப் பதிலாக சொரூபமறதியாகிறகதவை யடைக்கிற பூஜையையும் விஷயசிந்தனையாகிற கயற்றைச்சுற்றிவைக்கிற நைவேத்தியத்தையும் விஷயவார்த்தையைக் கேட்கிற தானதண்ணீராகிற க்ஷீரத்தையும் வார்த்துக்கொண்டுவந்தார்கள். பின்னும் மேற்படி தர்மகர்த்தாக்கள் ராகாதிகளாகிற 16 நிர்வாகக்காரர்களில் பக்திசிரத்தையென்கிற இரண்டு நிர்வாகக்காரர்களும் இந்தச் சைதன்னியலிங்கத்துக்குப் பூசைமுதலானவற்றைச் செய்துவருவதில் அக்கரையாயிருப்பதைப்பற்றி அவர்களைத்தள்ளிவைத்துமற்றராகத்துவேஷகாமக்குரோதலோபமோகமதமாற்சரியஈரிஷை அசூயை டம்ப தர்ப்ப அகங்கார இச்சையென்கிற 14நிர்வாகக்காரர்களையும் சுவாமிகைங்கரியம் பார்த்துவரும்படி நியமித்தார்கள். அவர்களும் சுவாமிக்கு ஒருவிதமானபூஜையும் செய்யாமற் கோவிலையடைத்துப்போட்டுத் தங்களிஷ்டப்படி நடந்துவந்தார்கள். இப்படிவெகுகாலமாய் அநீதம்நடந்துவந்ததால் இந்தச்சைதன்னியலிங்கமே சகிக்காமல் விவேகனென்கிற ஒரு இராஜனையுண்டு பண்ணிச் சற்குருஎன்கிற புரோகிதரையும் நியமித்து ஞானவைராக்யமென்கிற இரண்டுமந்திரிகளையுங்கல்பித்துப் பாஸவைராக்கியம்ஈஸ்வரபக்தி ஜீவகாருண்யம் பிரமஹ்ஞானமென்கிற நாலு மெம்பர்களையும் நியமித்துக் குருகடாக்ஷத்தாற் கொடுக்கப்பட்ட அழியாத ஞானதீபத்தால் அந்தகாரப்போன்ற அஞ்ஞானராஜனையும் அவன் மந்திரிகளையும் அவனால்நியமிக்கப்பட்ட மெம்பர்களையும் தர்மகர்த்தாக்களையும் நிர்வாகக்காரர்களையும் மூலதோ ஹானியாகவிரட்டித் தெய்வ பூஜைக்குரித்தாயிருக்கிற பக்திசிரத்தையென்கிற இரண்டு நிர்வாகக்காரர்களைப் பூஜைசெய்யும்படிநியமித்துச் சுழுப்திச்சுகமென்கிற தஸ்திகைத்துகையால் சதா பிரஹ்மவிசாரமென்கிற தெய்வபூஜை நடக்கும்படியாகச்செய்து பிரஹ்மானந்தமென்கிற பண்ணைக்கிராமங்களை விவேகராஜனென்கிற கோர்ட்டார் குருநாதனுகிறமகாமந்திராலோசனையையும் மகத்தானஹிதத்தையுஞ் செய்கிறவராயிருக்கிற புரோகிதரின் ஆக்ஞைப்படி மைத்திரிகருணைமுதிதை உபேக்ஷை சாதுசங்கமென்கிறதர்மகர்த்தாக்களைநியமித்து மேற்படிகிராமங்களை மேற்படிமடாதிபதிகளாகிற மடையர்களிடத்திலிருந்து பிடுங்கிப் புதுதர்மகர்த்தாக்கள்வசம் ஜாரிசெய்தார்கள். அதனுற்சிரவணமனனநிதித்தியாசனசமாதி சாக்ஷாத்காரசகசமென்கிற ஆறுகால அபிஷேகநைவேத்தியாதி பூஜையும் ஜீவன்முக்தியாகிற உற்சவங்களும் வெகுவிமரிசையாய் நடந்துவருகின்றன. ஆனல் அந்த விமர்சையைப்பற்றிச் சொல்லவும் எழுதவும்முடியாதானதால் கொஞ்சம்சங்கிரகமாக எழுதப்பட்டது.

ஆனால் அதிலென்னவிசேஷமிருக்கிறதென்றால், நெல்லுக்குள்ளிருக்கிற அரிசியை யும் பாலுக்குள்ளிருக்கிற வெண்ணெயையும் கட்டைக்குள்ளிருக்கிற அக்கினியை யும்மதுபானம்பண்ணினவனுடைய நிஜபோதத்தையும் அததற்குத்தகுந்த உபா யங்களைச்செய்து பிரித்தறிவதுபோலத்தன்னுடைய சொரூபஸ்திதியை மறவாமலி ருக்கும்பொருட்டு ஆத்மவிசாரணைக்கிரமத்தை இடைவிடாமல் அனுசரித்துவர வேணுமென்பதுதான் கருத்து.

## ௫௩-வது தரங்கம்.

[அ-கை.] பிரஹ்மமான பிராஹ்மணப் பிரபுவின் பிள்ளையான ஜீவனானவன் விக்ஷேபாதியான நீசஜாதியிற் சேர்ந்து கெட்டுப்போன பிற்பாடு குருவின் அனுக்கிரகத்தால் அந்தச்சேர்க்கையை விட்டு ஜீவன் முத்தி யடைந்ததை திருஷ் டாந்தத்துடன் சொல்லப்படுகிறது:—

ஒரு பிராஹ்மணப் பிரபுவாகிய பிரஹ்மத்தின் பிள்ளையான ஜீவன் தன் பிர புத்துவமாகிற சச்சிதானந்தத்தை மறந்ததான அஞ்ஞானம்வந்ததும், நான் பிரஹ்மப்பிராஹ்மணனல்லவென்று உறுதிபண்ணுகிறஆவரணமுண்டாய் அதன் பின் விக்ஷேபமென்ற நீச சாதியிற்சேர்ந்து அந்தக்கரண விருத்திகளாகிற நீசப் பெண்களை ஐக்கிய அத்தியாசமாகிற கல்யாணஞ்செய்து அந்த விருத்திகளி லுண்டான ஞானேந்திரிய கர்மேந்திரிய பிராணாதி பதினைந்து தத்துவங்களாகிற பிள்ளைகளை அந்த நீசப்பெண்களிடத்திற் பிறப்பித்ததுந்தவிர ஒரு ஸ்தூல தேகத்தை நானென்றும் ஜகத்தைச் சத்தியமென்றும் எண்ணுகிறதே,அசத்திய மான நீசருடைய வீடுகளில் ஒரு வீடே நாமென்றும் மற்றச்சிரேணிகளெல்லாம் சத்தியமான பிராஹ்மண அக்கிரகார மென்றும் நம்பியிருக்கிறதாம். இன்னு மிவன் இந்திரியங்களாகிற நீசப்பிள்ளைகளுக்குச் சப்தாதி விஷயங்களாகிற படிப் பையேற்றிவைத்து அதினாலுண்டாகிற சிற்குச்சந்தன வநிதாதி விஷய சுகங்க ளாகிற சம்பளத்தை அந்த அனாத்மாக்களாகிற நீசர்களிடத்திற் பெற்று அந்த இந்திரியங்களாகிற நீசப்பிள்ளைகளுடைய துர்நடத்தைகளை யெல்லாம் இவன் நான் கேட்டேன் தொட்டேன் பார்த்தேன் தின்றேன் முகந்தேன் என்பன முத லான வியாபாரங்களைத் தான்செய்ததாக ஒப்புக்கொண்டு அதினால் வரும் புண் ணிய பாப சுக துக்காதிகளாகிற மானாபிமானத்தை யடைந்து குரங்கு குட்டி யோடே தாவுவதுபோல இந்த ஜீவனும் வாசனையுடன்கூட இன்னமொரு சரீர மாகிற பள்ளிக்கூடத்துக்கு அந்த நீசப்பிள்ளைகளுடன் சேர்ந்துபோய் அவ்விடத் திலும் முன்போலவே சகல விதமான துன்பங்களையும் அடைந்தாலும்அந்தந்தத் தேகம் விழும்வரை அந்தந்தத்தேகமே தானென்று நம்பியிருக்கும்போது கர் மத்தால் மரணகாலம் சம்பவித்தமாத்திரத்தில் இப்படித் திடீரென்று போகச் சொன்னால் இந்தத்தேகமாகிற வீட்டிலிருக்கிற எந்தப்பதார்த்தங்களைக்கொண்டு போகிறது எதை வைத்துப்போகிற தென்றும் மலைத்துத் திகைத்துப் பிரமித்து வேதனையால் ஊர்த்துவ சுவாசமாகிற பெருமூச்சை விடுகிறான். அப்போது ஈஸ் வரனாகிய நீசப்பிரபு,இவன் தேகமாகிற வீடே தானென்று இருப்பதைப்பார்த்து

இவன் மரியாதையாய் வெளியிற் போகானென்பதைத் தெரிந்து தன்னுடைய எமதூதாளாகிற படாளை யேவிவிட அவர்களும் நிர்த்தயவோடே இவனைப்பற்றியிழுக்கும்போது சிரசு முதலான ஸ்தானங்களில் வைக்கப்பட்டிருக்கிற இந்திரியங்களையும் பிராணன்களையும் அந்தந்த ஸ்தானங்களிலிருந்து பிடுங்கி வெளியேற்றும்போது உண்டாகிற வேதனையைப் பிராணசங்கட மென்று சொல்லப்படும். இன்னும் அப்படி வெளியேறிப்போன ஜீவனாகிய நீசன் திரும்பக் கர்மமாகிற காசைக் கொடுத்துத் தேகமாகிற வீட்டை வாடகைக்குப் பிடித்து நூதனமாய் ஜாதி வர்ணாசிரம பாஷை வித்தை முதலானதாகிற உரல் உலக்கை முதலான வேண்டிய வஸ்துக்களைத் தேடுகிறதும் மறுபடி விட்டுப்போட்டுப் போகிறதும் மறுபடியுஞ் சம்பாதிக்கிறதும் இந்திரிய சுகங்களுக்காக புழுக்கைப்பயல்போலப் பார்க்கப்பட்டவனிடத்தி லெல்லாம் பல்லைக்கெஞ்சி பறக்க முழிப்பதையே மகா பதவியாக எண்ணிக் கல்பகோடி காலமாய் இப்படியே தன்னுடைய பிரஹ்ம சொரூபமாகிற பிராஹ்மண்யத்தையும் மறந்து விட்டதால் திருகையிலகப்பட்ட வஸ்துப்போலத் திரிகையில் இவனுக்குக் காமியகர்மமாகிற நீச சம்பளத்தைப் பெறுவது துக்கமென்று தோன்றி நிஷ்காமியமாய் ஈஸ்வரார்ப்பணமாகிற பரப்பிரபுவின் தயவுக்காகச் சம்பளமன்றியிற் பிள்ளைகளுக்குப் படிப்புச்சொல்லி வைத்து வந்ததால் அவர் கிருபையுண்டாய் விஷயம் அநித்தியம் துக்கம் அசுத்தம் மித்தை கண்டம் என்பது முதலானதே ரூபமான சித்த சுத்தியுண்டானபின் சித்த ஏகாக்கிர நிமித்தமாய்ச் சகுணோ பாசனையான மூர்த்திகளையுண்டுபண்ணி வைத்துப் பூஜித்து ஆராதித்து அவை நம்மைக் காப்பாற்று மென்கிறதானது, அந்த நீசன் அந்த பிரபுவைப்போற் சில உருவாரங்களைப் பண்ணிவைத்து ஆராதித்ததாம். அப்போது சர்வக்ஞனும் சச்சிதானந்தராயும் அருளே வடிவமாயுமிருக்கிற ஈஸ்வரனும் ஜீவனுக்குத் தெய்வ சிந்தனையுண்டா யிருக்கிறபடியால் மெள்ள மெள்ளத் தம்முடைய அகண்ட சாம்பிராச்சியத்தை யடைவனென்று இவன்பேரில் கிருபாதிருஷ்டி வைத்தாரென்பது. அந்தப்பிராஹ்மணப்பிரபு இவனுக்குப் பிராஹ்மண சிந்தனையுண்டாயிருப்பதால் மெள்ள மெள்ளப்பிராஹ்மணனோடே சேருவனென்று கிருபாதிருஷ்டி வைத்தா ரென்பதாம். அப்போதே இவனுக்கு ஜகத்தும் ஜகத் சுகங்களும் பொய்யென்று அறிவுண்டாய் அதில் வைராக்கியம் பிறந்து சித்த சாந்தி முதலான சமாதிஷட்க புரஸ்ஸரமாகத்தீவிர முமுக்ஷுத்துவத்தினால் தபித்துக்கொண்டிருந்ததானது, அந்த நீசத் தன்மையையடைந்த இவன் நீசசாதியையும் நீச சம்பளத்தையும் நீச சுகத்தையும் வெறுத்து எப்போது நம்முடைய ஸ்வஜாதியிற்போய்ச் சேரப்போகிறோ மென்ற தாபந்தான். அப்போது தெய்வகதியாற் பிரஹ்மமே மனுஷ ரூபத்தோடு இவன் இந்திரியங்களுக்குக் கோசரமாகக் குருரூபமாய்வந்து இவனைப்பார்த்து நீயாரென்று கேட்டாரென்பது, இவன் தகப்பனான பிராஹ்மணப்பிரபு இவனைப்போல நீசவடிவத்துடன் இவனிடம் வந்து நீ யாரென்று கேட்டதாம். இவனும் யோசித்துப் பார்த்து ஒருதரம் நான் சரீராதிகளென்றும் ஒருதரம் என்னை நான் அறியவில்லை

யென்றும் நீரே சொல்லவேணு மென்றும் சொன்னவுடன்குரு இப்போ நீ செய்கிற அனுபவமென்னவென்று கேட்கச் சரீர இந்திரியங்கள் தோற்றிக்கொண்டிருக்கிறதான ஜாக்கிர தசையில் விஷயங்களைப் பார்க்கிறது முதலானதுசெய்கிறதும் அவைகளில்லாதசொப்பனாவஸ்தை வரும்போது நானே சரீரேந்திரியங்களாயும் விஷயங்களாயும் அனுபவிக்கிறவனாயும் கற்பித்துமயங்கிக்கொண்டிருப்பதும் ஜகத்விவகாரகாரணமான சமாயப்பிரஹ்ம சுகத்தில் இச்சைவந்தபோது சுழுப்திச்சுகத்தை அனுபவிக்கிறதும் மறுபடிஜாக்கிரத்தில்வந்து விஷயசுகங்களை அனுபவிக்கிறதுமே எனக்குத் தொழிலென்று சொன்னதானது, அந்த நீசனும் ஒருதடவை பள்ளிக்கூடமென்றும் ஒருதரம் பள்ளிப்பிள்ளைகளென்றும் ஒருதரம் என்னைநானறியேனென்றும் நீரேசொல்லுமென்றும் இவன்சொன்னதும் அதற்கு அவர் நீ இப்போது நானென்று எதை அனுபவிக்கிறாய் சொல்லென்றுகேட்டதற்கு அவன் பிள்ளைகள்வந்தபோது வெளிப்பள்ளிக்கூடத்தையும் பிள்ளைகளையும்சம்பளத்தையும் நானென்று அனுபவித்தபின் பிள்ளைகள் சாப்பிடப்போனதும் உள்ளேயிருந்து பழயவாசனைப்படி பிள்ளைகள் முதலானதுபோல நானே கற்பனைபண்ணித் திரிந்துகொண்டிருந்தபின் சாப்பிட இச்சைவந்தபோது சுழுப்தியாகிறபோஜனத்தையுஞ் செய்கிறதும் மறுபடி இப்படியேவெளியில் பள்ளிக்கூடத்துக்கு வருகிறதுமுதலான தொழிலைச் செய்கிறேனென்றதாம். நல்லது நீ இந்தச்சரீரமா இந்திரியங்களா காற்றைப்போல் அசைகிற பிராணாதிகளா விஷயங்களைப்புஜிக்கிற அந்தக்கரணமா அல்லது இவைகளுக்கெல்லாம் நீ வேறாவென்று கேட்கும்போது இவ்வளவுமொன்றாய் நானென்றுதோன்றுகிறதே ஒழியப் பேதந்தோன்றவில்லையென்று சொன்னது நீ இந்தப்பள்ளிக்கூடமா பள்ளிப்பிள்ளைகளா சட்டமா சட்டாம்பிள்ளையா இவைகளுக்கு வேறாவென்று கேட்டதும் அந்த நீசன் குருடனைப்போலவே ஒன்றுந்தெரியவில்லையென்று விழித்ததாம். தேகமேநீயானால் என்தேகமென்று சொல்லக்கூடாது இப்படியே இந்திரியம் பிராணன் மனதுமுதலானவெல்லாம் என்னதென்று சொல்லப்படுவதால் அவைகளெல்லாம் நீயல்லவென்று சொன்னதானது, அந்தப்பிரபு பள்ளிக்கூடமே நீயானால் என்பள்ளிக்கூடமென்று சொல்லக்கூடாது. இப்படியே பிள்ளைகள்முதலானவரெல்லாம் என்னதென்று சொல்லப்படுவதால் இவைகளெல்லாம் நீயல்லவென்றுபோதித்ததாம். சிஷ்யன் நான் யாரென்று கேட்கும்போது நீ சச்சிதானந்தப்பிரஹ்மமென்று சொன்னதும் இவனும் அப்படியே பஞ்சகோசங்களையும் நானல்லவென்று நியதிபண்ணி நான் கர்த்தாவுமல்ல போக்தாவுமல்ல நான் பிரஹ்மமாயிருந்தும் இப்படிப்பட்டமறதி அஞ்ஞானத்திலுண்டாயிருக்கிறதென்று நிச்சயித்தபிற்பாடும் பழயவாசனைப்படி தேகம் நான் ஜகத்துச்சத்தியமென்று தோற்ற, உடனே சற்குருவினிடத்தில் இதைத் தெரிவிக்கக் குருவும் வாஸ்தவத்திலில்லாமற் பழக்கத்தாற் சத்தியமாக எது தோன்றினாலும் அவை சொப்பனகஜம்போல மித்தையென்று சொன்னது, அந்த நீசன் அந்தப்பிராஹ்மணரைப் பார்த்து நானாரென்று கேட்க அப்போது அவர் நீ பள்ளிக்கூடமுமல்ல பிள்ளைக

னுமல்ல நீசனுமல்ல நீ பிராஹ்மணனென்று சொன்னபடி இவனும் அப்படிப் பிராஹ்மணனென்று தெரிந்த பின்னும் பழையவாடிக்கைப்படி நீசனென்று தோற்றுகிறதே யென்று கேட்கும்போது, அது விசாரணையால் பொய்யென்று தெரிந்த பிற்பாடும் நிஜம்போல வாசனையால் தோற்றுவது, கானல்ஜலம்போல வென்று சொன்னதாம். உன்னைப்போல ஒருவன் விவேகத்தையடைந்தும் பாணிந்திரியம் செய்ததை நான் தெரியாமல் செய்தேனென்று ஒப்புக்கொண்டதால் பிரஹ்மஹத்தியால் விரட்டப்பட்டுப் பயந்தோடி வந்தவனுக்கு நான் உன்சொரூபத்தைப் பாரென்று சொன்னதின்பேரில், அப்படியே அவனும் சொரூபஸ்திதியிலிருந்து பார்த்து பிரஹ்ம ஹத்தியிலிருந்து விலகிக்கொண்டகதைபோலத் தன்னுடைய நிஜ சொரூபானுசந்தானம் பண்ணச் சொன்னபிரகாரம், இவனும்பழகி நிஜஸ்வரூபத்தில் நிலைத்துத் தன்னுடைய ஆனந்தத்தைக் குருவினிடத்தில் விஞ்ஞாபனம்பண்ணிக் குருவைப்போல இவனும் ஜீவன்முக்தனாக இருந்துவருகிறானென்பது, அந்தப்பிராஹ்மணப்பிரபு இவனுக்குவந்திருந்த சகலதோஷங்களையும் பிராயச்சித்தத்தால் நிவர்த்திசெய்து தன்னைப்போலே மகாப்பிராஹ்மணனாய்ச் செய்து முந்திவந்திருந்த கர்த்துருத்துவமாகிற நீசத்துவத்தால் வந்திருந்த துக்கங்களெல்லாம் நிவர்த்தியாகும்படி செய்தபிரகாரம் அந்தப்படி இவனும் அனுஷ்டித்துப் பிரஹ்மப்பிராஹ்மணனாகித் தடையற்ற ஆனந்தத்தை யடைந்திருந்தான்- என்பதாம்.

## 34-வது தரங்கம்.

[அ-கை.] துவிதவிருத்தியே பந்தமென்றும் அந்தவிருத்திக்குச் சாக்ஷியாயிருப்பதே மோக்ஷமென்றும் சொல்லி விருத்திபேதத்தைத் தெரிவிக்கிறார்.

சங்கை: குருவைப்பார்த்துசிஷ்யன் கேட்கிறான். சுவாமி! பந்தமெது மோக்ஷமெது? உத்தரம்:—தன்னிடத்திலுண்டாகிற துவைதவிருத்தியே பந்தம், அந்தத் துவைதவிருத்திக்கெல்லாம் நான்சாக்ஷி யென்றிருப்பதே மோக்ஷம். அந்தச் சாக்ஷித்துவக் ஞானம் எதனால் சித்திக்குமெனில், விருத்தி சோதனையால் சித்திக்கும். அந்தவிருத்தி எத்தனைவிதம்? அதில் எந்த அவஸ்தைகளில் எந்தெந்த விருத்திகளிருக்கின்றன? எந்த அவஸ்தையிலிருந்து சோதனைசெய்ய வேண்டியது? அந்தவிருத்தி சோதனைசெய்வதற்கு எத்தனை சாதனம் வேண்டியதென்கிற சங்கைக்கு:—விருத்தி மூன்றுவிதம்; ஜாக்கிரத்தில் ஸ்திரவிருத்தியென்றும், சொப்பனத்தில் அஸ்திரவிருத்தியென்றும், சுழுப்தியில் அஞ்ஞானவிருத்தி யென்றும் சொல்லப்படும். இதில் ஜாக்கிரத்தில் சுவாதீனப்பிரக்ஞையிருப்பதால் இப்பவே சோதனை செய்யவேண்டும். அதற்குச்சாதனங்கள் 1. சத்துவகுணமும், 2. ஏகாக்கிரமும், 3. தீவிரமோக்ஷ இச்சையும், 4. பாகியேந்திரிய நிக்கிரகமும், 5. சாதுசங்கதியும், 6. ஈசுவரானுக்கிரகமும், 7. குருகடாக்ஷமும், 8. நாமாரென்ற விசாரமும் ஆக இவை எட்டுஞ்சாதனமாயிருக்கின்றன. இதில் இந்த ஸ்திரவிருத்தி எத்தனை விதமாயிருக்குமெனில் 1. சங்கோச 2. விகாச 3. மனோராச்சிய 4. இந்திரிய சம்பந்த, 5. அபரோக்ஷவிஷய, 6. பரோக்ஷவிஷய, 7. வாசனாவசவிருத்திகளென்று

ஏழுவிதமாயிருக்கும். இவற்றிற்பாப மிசிர புண்ணியகர்மத்தாலுண்டாகிற 1. அப்பிரிய, 2. உபேக்ஷா, 3. பிரியமென்ற மூன்றும் 1. அக்கிர, 2. மத்திய, 3. சூக்ஷ்ம விருத்தியென்று ஒவ்வொன்று மூவிதமாயிருக்கும். அந்தஏழில் முதலாவதான சங்கோச விருத்தியாவது:—கடபடவிருத்திகளின் மத்தியகாலமான சாமானியாகங்காரத்தோடே கூடியிருக்கிறதான உதாசீன சுகமாம். இதில் அக்கிரமாவது:- துக்காகாரமாய் வருகிற மறுவிருத்தியால் அந்த மத்தியகாலத்திலிருக்கிற சுகந்தெரியாமல் மறைக்கப்படுகிறது. மத்தியமமாவது சுகதுக்கமில்லாமலிருக்கிறது:—சூக்ஷ்மவிருத்தியாவது:- துக்கமின்றிசுகமாத்திரமாயிருக்கிறது. இதின் அநுபவம் சுழுப்தியிற்போல விருத்தி வெளியில் வந்த பின்பே காணப்படும். இரண்டாவதான விகாச விருத்தியாவது:—விவகார மன்றியில் கடபடாதி விஷயாகாரமாய்த் தோற்றுவதுதான். இதில் அக்கிரமாவது:—ஸ்வப்ரயோசனமன்றியில் பரப்ரயோசனமாய்த் துக்க ரூபமாய்த் தோற்றுகிற விருத்தியேயாம். மத்தியமமாவது:—இரண்டு மன்றியில் தோன்றுகிற விருத்தியேயாம். சூக்ஷ்ம விருத்தியாவது:—ஸ்வப்ரயோசன மாத்திரமாய்ச் சுகமாய்த் தோன்றுகிற விருத்தியேயாம். மூன்றாவது மனோராச்சிய விருத்தி மூவிதம். அதில் பூதவிருத்தியென்றும் பௌஷிய விருத்தி யென்றும் வர்த்தமான விருத்தி யென்றும் மூவிதம். இதில் பூத விருத்தியில் அக்கிர விருத்தியாவது:—தனக்கு விரோதஞ் செய்தவர்களையும் விரோத விஷயங்களையும் அதினால் வரப்பட்டிருக்கிற துக்கங்களையும் பற்றி வருவதாம். மத்தியமமாவது—உபேக்ஷா விஷயங்களையும் விஷயிகளையும் பற்றி வருவது. சூக்ஷ்ம விருத்தியாவது:—தனக்கு இஷ்டஞ் செய்தவர்களையும் இஷ்டங் கொடுத்த விஷயங்களையும் அதினாலுண்டான சுகத்தையும் பற்றி வருவது. பௌஷிய விருத்தியில் அக்கிரமாவது:—தனக்கு துவேஷிகளால் வருங் கெடுதலையும் துவேஷ விஷயத்தால் வரும் ஹானிகளையும் அதினால் வரும் பய துக்காதிகளையும் குறித்து நினைக்கிறது. மத்தியம விருத்தியாவது:—பொதுவான விஷய விஷயிகளைக் குறித்து இப்படியானால் நல்லதென்றும், இப்படியானால் கெடுதலென்றும் நினைக்கிறது. சூக்ஷ்ம விருத்தியாவது—தனக்கு இஷ்ட விஷயி விஷயங்களுடைய க்ஷேமத்தையும், அதினால் தனக்குச் சுகமுண்டாகுமென்றும் நினைக்கிறது. வர்த்தமானவிருத்தியில் அக்கிர விருத்தியாவது:—தனக்குத் துக்கங் கொடுக்கிறவர்களையும் துக்கவிஷயங்களையும் பற்றி துக்கப்படுகிற நினைப்பாம். மத்தியம விருத்தியாவது:—பொதுவாய் அநுபவிக்கிற விஷய விஷயிகளைப்பற்றி வருகிற நினைப்பாம். சூக்ஷ்ம விருத்தியாவது—அடிக்கடி தனக்குச் சுகத்தைக் கொடுக்கிற புத்திராதிகளையும் கிரகாராமங்களையும் பற்றி க்ஷேமமாயிருக்க வேண்டுமென்று நினைக்கிறது. நாலாவதான இந்திரிய சம்பந்த விருத்தியாவது:— சுரோத்திராதி இந்திரியங்களுக்கு வருகிற துக்க உதாசீன சுகங்களைப் பற்றி நினைக்கிறதே அக்கிரமத்தியம சூக்ஷ்மவிருத்திகளாம். ஐந்தாவதான பிரத்தியக்ஷ விஷயசம்பந்த விருத்தியில் அக்கிரமாவது:—துக்க விஷயத்தில் இந்திரிய சம்யோகத்தால் வருகிற துக்கமாம்,

மத்தியம விருத்தியாவது:—விஷய சம்யோகத்திற் சுகதுக்க மன்றியில் மத்தியஸ்தமாய் விவகரிக்கிறதாம்; சூக்ஷ்ம விருத்தியாவது:—மேற்படி சம்யோகத்தால் விஷய சுகத்தை அனுபவிக்கிறது. ஆறுவதான பரோக்ஷ விஷய விருத்தியில் அக்கிரமமாவது :—பாபத்தால் நரகம் வருமென்று சொல்லும் சாஸ்திரத்தைக் கேட்கும்போது நாமிந்தப் பாபஞ் செய்திருப்பதால் இது நமக்கு வருமென்று தோன்றுகிற துக்க விருத்தியாம். மத்தியமமாவது:—தனக்குச் சுக துக்கமன்றியில் பாரதயுத்தத்தையும் தேவ அசுரர்கள் யுத்தத்தையுங் கேட்பதாம். சூக்ஷ்ம விருத்தியாவது:—இன்ன புண்ணியத்தாற் சுவர்க்க சுகம் வருமென்பதைக் கேட்டுத் தான் செய்திருக்கிற புண்ணியம் அந்தச் சுகத்தைக் கொடுக்குமென்று எண்ணிச் சந்தோஷப்படுகிற விருத்தியாம். ஏழாவதான வாசனாவசமாயிருக்கிற விருத்தியில் அக்கிரவிருத்தியாவது:--ஒருவனைக்கண்ட மாத்திரத்தில் அவனுக்கும் நமக்கும் முன்னடந்திருக்கிற சகலசங்கதிகளும் வியத்தமாய்த்தோணுகிறது. மத்தியமவிருத்தியாவது:—ஒருவனைக்கண்டமாத்திரத்தில் அவன்சங்கதி ஞாபகம்வராமல் அவன் இவனுடன் பழகியிருக்கிற சிலசங்கதியைத் தெரிவித்ததின்பேரில் ஞாபகம்வருகிறது. சூக்ஷ்மவிருத்தியாவது :—ஒருவனைக்கண்டமாத்திரத்தில் அவனைத்தெரியாமலும் அவன்சில அனுபவத்தைச் சொன்னதிலுந் தெரியாமல் நிரம்பயோசனையின்பேரிற் சொப்பனங்கண்டதுபோல அவன் அனுபவந்தோன்றுவதுதான்; இந்தவிருத்திகளுடைய பேதங்களையும் இவற்றினுடைய பாவாபாவங்களையுமறிந்துகொண்டு சாக்ஷிமாத்திரமா யிருக்கிறவனே நானென்று இடைவிடாமல் அனுசந்தானஞ் செய்துக்கொண்டு இந்தவிருத்திகள் வருங்காலங்களெல்லாம் அவற்றில்தான் அத்தியாசப்படாமல் இது இன்னவகுப்பு இது இன்னவகுப்பென்று விசாரணையால் தெரிந்துகொண்டு விஷயாத்தியாசத்தையும் தேக இந்திரிய பிராண அந்தக்கரண ஜீவ வாசனா அவித்யா மாயா ஈஸ்வராதி அத்தியாசங்களையும் மூலாக்ஞானத்துடனேதள்ளி இவ்வளவும் அறிவாகிய நம்மிடத்தில் சுவரில் சித்திரம்போலக் கல்பிதமென்று கண்டு முன்போல மயங்காமலிருப்பவனே ஜீவன்முக்தன்.

## 35-வது தரங்கம்

[அ - கை.] ஒரு பிரஹ்மத்தைத்தானே ஈஸ்வராதியாய்ச் சொன்னதற்கு ஏதுவைச் சொல்லுகிறார் :—

ஒரு பிரஹ்மத்தைத்தானே சில இடத்தில் ஈஸ்வரனென்றும் சில இடத்தில் குருவென்றும் சில இடத்தில் தானென்றுஞ் சொல்லுவதால் பேதமென்று சங்கைவர, ஒரு புருஷனுக்குப் பாலியத்தில் அன்னபானாதி கொடுத்து ரக்ஷிப்பதால் அந்தப்பிதாவை ஈஸ்வரனென்றும், குமாரப்பருவத்தில் இவனை சிக்ஷித்து இவனுக்கு வித்தியாப்பியாசம் பண்ணிவைக்குங்காலத்தில் குருவாகவும், பிராப்தனாகவிட்டுப் பிதாவின் கருத்துக்கு இவன்கருத்து அபேதமாய் இருப்பதால் பிதாவே புத்திரனாக ஆவதுபோல; அஞ்ஞானதசையில் இவனுக்குக் கெட்ட நடத்தையைப்போக்கி நல்லநடத்தையைக் கொடுத்து ரக்ஷிப்பதால் ஈஸ்வரனென்றும்,

முமுக்ஷுதசையில் இவனுக்கு ஞானோபதேசம்பண்ணி இவன் அஞ்ஞானத்தைப் போக்குவதால் குருவென்றும், ஞானதசையிற் சொரூப சாக்ஷாத்காரமாயிருப்பதாற் பிரஹ்மமேதானென்றும், இப்படிப் பக்குவபேதத்தால் வந்த நாமமாத்திரமேயல்லாமற் சொபாவமாயிருக்கிற வஸ்துவிற் பேதமில்லை.

36-வது தரங்கம்.

[அ - கை.] குருவைத்தானே ஓரிடத்தில் தாயென்றும், தந்தையென்றும், குலதெய்வமென்றும், பர்த்தாவென்றும், ஸ்திரீயென்றும், புத்திரனென்றும், சகோதரனென்றும், இராஜனென்றும், ரத்னமென்றும், மேருவென்றும், ஈஸ்வரனென்றும், அமிர்தமென்றும், கல்பகவிருக்ஷமென்றும், சந்திரனென்றும், சூரியனென்றும் சமுத்திரமென்றும் மூலதனமென்றும் அந்தரங்கமான சிநேகிதனென்றும், பந்துவென்றும், இவனுக்குள் அந்தரியாமியாயிருந்து ஏவுகிறவனென்றும், இவனுக்குச் சாக்ஷியென்றும், இவனுக்கு அதிஷ்டானமென்றும், இவனே அவனென்றும், பின்னும் அநேக திருஷ்டாந்தமூலமாய்ச் சாஸ்திரங்களில் வர்ணித்திருக்கிறதை ஒவ்வொன்றுக்கும் அபிப்பிராயமென்னவிதமென்று கேட்ட சீடனுக்குக் குருவானவர் சில சாமியங்களுடன் ஏதுக்களைச் சொல்லுகிறார் :—

(1) தாயானவள் தனக்கு ஹிதாஹிதந்தெரிந்து அஹிதத்தைவிலக்கி ஹிதத்தைச் செய்துகொள்ளமாட்டாத சிசுவுக்குக் காலமறிந்து பாலூட்டி அப்பியங்கனஞ் செய்வித்துச் சீதோஷ்ணத்தினாலும் பௌதீகங்களாலும் பாதையுண்டாகாமற் பாதுகாப்பதுபோலக் குருவும் தனக்கு நன்மையின்னது தீமையின்னது என்று அறியாதசிஷ்யனுக்குக் காலம்பார்த்துப்பக்குவத்துக்குத்தக்க ஹிதமான பிரஹ்மரசத்தை உண்ணச்செய்து கெட்ட விஷயசம்சர்க்கத்தால் தீமையைச் சம்பாதித்துக்கொள்ளவொட்டாமல் எப்போதுந் தன்னை அடுத்திருக்கும்படி செய்கிறாராகையால் குரு தாயாவர். (2) பிதா தன் புத்திரனுடைய விளையாட்டு முதலான துஷ்டத்தனத்தைத் தடுத்து வித்தியாப்பியாசஞ் செய்வித்து விவகாரங்களிலுள்ள அறியாமையை நீக்கித் தன்னைப்போலச் சமர்த்தனாக்கித் தன் சொத்தையு மொப்புவிக்கிறான்; அதுபோலக் குருவும் சிஷ்யனுடைய விஷயநாட்டங்களைத் தடுத்து வேதாந்தசாஸ்திரப் பிரக்ஞையை உண்டுபண்ணி மனமயக்கங்களையும் வாசனைகளையுந்தீர்த்து விவேகியாக்கித் தன் ஜீவன்முக்திச் சுகத்தையுங் கொடுக்கிறார். ஆகையால் குரு தந்தைக்கொப்பாம். (3) குலதெய்வம், வியாதி பீடைகளினிவர்த்தியையும் சத்துருபீடை நிவர்த்தியையும் இஷ்டசித்தியுமுண்டாகும்படி செய்து பரம்பரையாகக் காப்பாற்றிக்கொண்டு வருகிற தன்குலதெய்வத்தை ஒருவன்வேண்டி வேண்டியபலனை அடைகிறதுபோல, சிஷ்யனும் அஞ்ஞான விபரீதவாசனைகள் காமக்குரோதாதி விருத்திகள் க்ஷயமடைவதற்கும், மேலான அநுபவங்களுண்டாவதற்கும், தனதுள்ளே நின்றனந்த ஜன்மங்களாண்டு இப்போது வெளியில்வந்து உபதேசித்த குருவை ஸ்மரித்துக் கோரினதையடைகிறானாகையால் குரு குலதெய்வம். (4) பர்த்தாவானவன் ஸ்திரீ (ருதுவானது) கேட்டுவந்து அவளுடன்கலந்து சகலவிஷய சுகத்தையுங் கொடுப்பதுபோ

லக் குருவும் சிஷ்யனுடைய முமுக்ஷுத்துவ பரிபாகந் தெரிந்துவந்து ஐக்கியஞானத்தை உபதேசித்து பிரஹ்மானந்தத்தைக் கொடுக்கிறார்: ஆகையால் குருவுக்கு நாயகபாவமாம். (5) ஒருபுருஷன் பந்துக்களால் கைவிடப்பட்டாலும் தரித்திரனாயிருந்தாலும் அவனுக்குக் கற்புடைய ஸ்திரீமட்டுமிருந்தால் அவள் மூலமாய் அருந்தல் பொருந்தலான இகலோக சுகங்களால் திருப்தியுண்டாகுவதுபோல, முமுக்ஷுவுக்குப் பந்துமித்திராளும் விசேஷ யோக்கியதைகளு மில்லாவிட்டாலும் குருவின் தயவு ஒன்றினால்மட்டுமே பிரமக்ஞானத்தையும் உபசாந்தியையுமடைகிறான். மேலும் காமியகர்மங்களில் அபத்தினிகனுக்கு ஒருகர்மத்திலும் அதிகாரமில்லாததுபோலக் குருவன்றியில் முமுக்ஷு ஞானப்பியாசத்துக்கு அருகனாகான். ஆகையால் இம்மைக்கு ஸ்திரீயைப்போல மோக்ஷத்துக்குக் குரு ஆவசியகமாம். (6) புத்திரன் பிதாவின் ஐகிக சௌக்கியத்துக்கும் பிதிர்மேதத்தால் பிதிர்லோகப் பிராப்திக்கும் ஏதுவாவதுபோல, இந்தக் குருவும் மூலாகங்காரத்தைச் சுட்டுப் பஸ்பம்பண்ணினதால் அதின் ஜீவன் முக்தியையும் மோக்ஷத்தையுமடையக் குரு ஏதுவாதலால், தனக்குப்புத்திரனுமாம். (7) சகோதரர்களுக்குள் ஜாதிகுலாசார வேற்றுமை யில்லாமையும், அன்னியோன்னியப் பிரியமும், பிதாவின் சொத்துக்குச் சமபாத்தியதையு மிருப்பதுபோலக் குருவுஞ்சிஷ்யனும் அறிவுசொரூபமாயும், ஒரேவிதமான நிச்சய அனுபவங்களுடனும், அன்னியோன்னிய அன்புடனும், அழியாதபொருளைச் சமமாயடைகிறவர்களாயு மிருப்பதால் சகோதரர்களாகச் சொல்லலாம். (8)அருமையான ரத்னமொன்று பெற்றால் சகலவிதமான சம்பத்தையுமடைவதுபோலக் குருவை மட்டும் பெற்றவன் சகலஞானசம்பத்துக்களையும் அடைகிறபடியால்,குருவே ரத்னமுமாம். (9)மேருவையடைந்தவன் சம்பன்னனுயும்,நிர்ப்பயனுகவு மாவதுபோலக் குருவையடைந்தவன் சாம்ராச்சியத்தையும், அபயத்தையுமடைகிறு னுகையினாலும், நிச்சலமாயிருப்பதைப்பற்றியும், சகல தேவதைகளுக்கும் ஆசிரியமாயிருப்பதைப்பற்றியும், குரு மேருவுக்குச் சமானம். (10) சக்ரவர்த்தியான மகாராஜாவானவன் தன் குடிகளின் பசி, சத்துருபீடை, சோரபயம் முதலானவைகளைத்தீர்த்து ரக்ஷிப்பதுபோலக் குருவும் சிஷ்யனுடைய சோகமோக காமாதிபயங்களைத் தீர்த்துரக்ஷிக்கிறார், ஆகையால் குரு மகாராஜாவுக்குச் சமானம். (11) சர்வஜகத்துக்கும் ஈஸ்வரன்போலச் சத்சிஷ்யனுக்குக் குரு நிக்கிரானுக்கிரகசக்தராகையாற் குரு ஈஸ்வரராவர். (12) அமிர்தம் தன்னைப்புஜித்தவனை மரணமில்லாமற் செய்வதுபோலக் குருவும் தன்னை உபாசிக்கிறவனை அழியாத சொரூபமாக்குகிறார்;ஆகையால் குரு அமிர்தசமானர். (13) கைம்மாறுவேண்டாமற் கல்பக விருக்ஷம் தன்னையடைந்தவர்கள் நினைத்ததெல்லாம் சுலபமாய்க் கொடுப்பதுபோலக் குருவும் அப்படியே ஆசிரிதாளுக்கு இஷ்டசித்தியைக் கொடுக்கிறார்; ஆகையாற் குரு கல்பகவிருக்ஷம். (14) சூரியனாலுண்டான தாபத்தைப்போக்கிக் குளிர்ச்சியையும் ஆஹ்லாதத்தையும் சந்திரன் கொடுப்பதுபோலத் தாபத்திரய துக்கங்களையும் போக்கிச் சித்தோபசாந்தியையுங் கொடுக்கிறதாற் குரு சந்திரனுக்கொப்பாவர். (15) பூதவிருளை

நிவர்த்திக்க அக்கினியானது சாதனந்தரங்களை அபேக்ஷிப்பதுபோல, யாதொரு சாதனபேக்ஷை யில்லாமலும் யாதொரு பிரதிபந்தங்களாலும் தடைபண்ணப் படாமலும் இருளைச் சூரியன் போக்குவதுபோல, அஞ்ஞானதமசைக் குரு நிவர்த்திக்கிறதற்கு யாதொரு கர்மமுதலான சாதனந்தரத்தை அபேக்ஷியாமலும் தெய்வவிக்னம் முதலான தடைகளால் அசைக்கப்படாமலுமிருக்கிறபடியாற் குரு சூரியனுவர். (16) க்ஷீரசமுத்திரம் பால்மயமாயும், மழையினுலும் சூரியகிரணங்களின் சோஷணத்தினுலும் ஏற்றத்தாழ்ச்சியடையாததாயும், கெம்பீரமாயும், ஆழமறியப்படாததாயும், விலையுயர்ந்த வஸ்துக்களை அடக்கிக்கொண்டு மிருக்கிறதுபோலக் குருவும் கருணமயராயும், சுகதுக்கங்களால் விகாசசங்கோசத்தை அடையாதவராயும், பூரணதிருஷ்டியே எப்பொழுதுமுள்ளவராயும், ஜகத்தாரால் அறியப்படாத இருதயமுள்ளவராயும் மேலான சற்குணங்களை உள்ளடக்கிக் கொண்டவராயும் விளங்குகிருர்; ஆகையால் குரு க்ஷீரசமுத்திர சமானராவர். மற்றதுகளை இதுபோலவே யுக்தியாலுங் குருமுகமாயும் தெரிந்துக்கொள்ளத் தக்கது. மேலேயுஞ் சொல்லப்படுகிறது.

## 37-வது தரங்கம்

[அ-கை.] நானென்கிற அறிவை ஒருபெண்ணுக வர்ணித்து எழுதிய அநுசந்தானத்தின் மகிமை அறியும் விதம்:—

நானென்கிற ஒருபெண், அதின் பர்த்தா பிரஹ்மம். அந்தப்பர்த்தாவின் கூடப்பிறந்தவள் மூலப் பிரகிருதி. அவள் பெண்கள் மனேபுத்தி சித்தமென்று மூன்றுபேர்கள். அவர்களுடைய புத்திரர்கள் ஞானேந்திரிய கர்மேந்திரிய ப்ராணுதிவாயுக்கள்; இவர்களுடைய சொத்துக்கள் சப்தாதி விஷயங்கள்; இந்த நானென்கிற கன்னிகை பிர்ஹ்மமாகிற பர்த்தாவோடேசேர்ந்து ஆனந்தமாகிற பிள்ளையை யடையா திருக்கும்படி மூலப்பிரகிருதி யென்கிறநாத்தனர் முதலானவர்கள் விரோதஞ் செய்துகொண்டு வருகிருர்கள். அப்படிச் செய்வானேனென்ருல்,இந்தக்கன்னிகை பர்த்தாவுடன் சேர்ந்து புத்திரவதியானுளேயானல் மேலே சொன்னவர்கள் யாவரும் போனவிடந் தெரியாமலும்போக வேண்டியிருப்பதால், இந்தப்பெண்ணை இதோ இந்தச் சப்தத்தைக்கேள், இந்த ஸ்பரிசத்தை ஸ்பரிசி, இந்த ரூபத்தைப்பார், இந்தரச பதார்த்தத்தைத்தின்னு, இந்த வாசனையை மோந்துபார், இந்த வார்த்தையைப்பேசு, இந்த வீட்டு வேலையைச்செய்,இன்ன இன்ன இடங்களுக்குப் போய்விட்டுவா, இந்த வீட்டிலுள்ள மலஜலங்களை எடுத்தெரிந்து சுத்தம் பண்ணு, என்று சதாகாலமும் வெளியில் ஜாக்கிரத்தில் வேலை யேவிக்கொண்டு தன் பர்த்தாவை நினைக்கவும் பார்க்கவுங் கூடாதபடிக்கு இடை விடாமல் வேலை யேவிக்கொண்டும், இப்படியே வீட்டுக்குள்ளிருக்கிற சொப்பனுவஸ்தையிலும் வேலையில்லாமல் போனுலும் இருக்கிறதுபோல வழக்கப்படி காண்பித்து அப்பவும் முன்போலவே பர்த்தாவுடன் சேரவொட்டாமல் செய்து விட்டார்கள். அதின் பிறகு இவள் புருஷனேடே கூடச்சேர்ந்து சுழுப்தியாகிற சாப்பிடுகிற சமயத்தில் இவள் ஒரு வேளை பர்த்தாவைப்பார்த்து

அவரோடு சுகத்தை அனுபவிப்பளென்று யோசித்து, அப்பவும் இவளுக்கு நானென்கிற தன்பிரக்ஞை தெரியாமல் போகும்படி அறியாமையாகிற சாராயத்தையும் நிறையக்கொடுத்து மயக்கிப்போட்டமையாலும், அறிவாகிற கண்ணையும் பிரமத்தைச் சாக்ஷாத் காரமாக நானென்றறிகிறதான ஞானதீபமில்லாத ஆவரணமாகிற இருட்டினால் மறைத்து நாயகனைப்பார்க்க வொட்டாமல் பண்ணினபடியாலும், அப்பவும் நிஜபுருஷனுடன் சேர்ந்தும் சேராததுபோலவே பண்ணிவிட்டார்கள். இப்படிக் கல்பகோடிகாலமாய் இந்த நானென்கிற கன்னிகையானவள் தன் பர்த்தாவோடே சேர்ந்து சுகத்தை யடையாமல், தனக்கு விரோதிகளாயிருக்கிற நாத்தனார் முதலானவர்களுடன் சேர்ந்து அவர்களுடைய துர்ப்போதனையால் தனக்கு இப்படி ஒரு பர்த்தாயிருக்கிறாரென்று அறியாமலும், அவருடனே அறிவோடே கூடியிருந்து சேராமலும், அந்தச் சேர்க்கையினால் இப்படிப்பட்ட சுகமுண்டாகு மென்பதையுந் தெரியாமல், தானே எப்பொழுதுந் துக்கிகளாயும் மூடர்களாயும் அசத்துக்களாயும் கூடாத காரியத்தைச் செய்கிறவர்களாயுமிருக்கிற இவர்களுடன் சேர்ந்து, அவர்களுக்குச் சுபாவமான ஜனன மரணங்களையும் ராகத்துவேஷங்களையும் மானாவமானங்களையும் அவற்றாலுண்டாகும் சுகதுக்கங்களையும் தனக்குச் சுபாவமென்று நினைத்து வெகுகாலந் துக்கப்பட்டுக்கொண்டிருக்கும்போது தெய்வ கதியால் இந்தக் கன்னிகைக்குத் தோழியாகப் பிரஹ்மவித்தென்கிற பேரோடே கூடியும், பிரஹ்மமாகிற நாயகனுடன் கூடினவளாயும், ஆனந்தமென்கிற பிள்ளையுடனும், மைத்திரியாதி சற்குணத் தோழிகளுடனும், கூடிச் சுருதியுக்தி அனுபவங்களென்கிற அலங்காராதிகளுடனுங் கூடிய ஒரு கன்னிகை வந்து சேர்ந்தாள். அவள் இவளுடைய சோர்வைப் பார்த்து நீ ஏன் விசனப்படுகிறாய்! உன்னைப்பார்த்தால் வாழாவெட்டி போலேயிருக்கிறதே! உன் பர்த்தாவோடே நீ வாழவில்லையா? உனக்குச் சிரஞ்சீவியான ஆனந்தப்பிள்ளை பிறக்கவில்லையா? உன் கஷ்டம் விடியவில்லையா வென்று இவை முதலான கேள்விகளைக் கேட்கும்போது, இந்தக் கன்னிகையும் அவளுக்குப் பதில் சொல்லுகிறதாவது:—என் பர்த்தாவாவதார்? அவர் எங்கேயிருக்கிறார்? அவர் சொரூபமென்ன? அவரை நான் எப்படிப் பார்க்கிறது? அவருடன் எப்படிச் சேருகிறது? அப்படிச் சேர்ந்தால் அதினாலுண்டாகும் பிரயோசன மென்ன? இந்த வீடு விளங்கும்படியாய்ப் புத்திரனெப்படி யுண்டாவன்? அப்படி யுண்டாகிற புத்திரனுடைய சொரூபமென்ன? அவனால் அடையும் பிரயோசனமென்ன? அந்தப் புத்திரனும் பர்த்தாவும் நானும் அபேதமாயிருக்கும் வழியெப்படி? அந்தப் பர்த்தாவுடன் சேர்ந்திருப்பதற்கு என்ன தடையிருக்கிறது? அந்த தடையை நிவர்த்தி செய்கிறதற்கு உபாயமென்ன? இப்போது அதற்காக நான் செய்ய வேண்டிய காரியமென்ன? என்னாத்தனாரும் அவள் குழந்தை குட்டிகளும் என்னை நிமிஷங்கூட சுகமாயிருக்க வொட்டாமல் சதாகாலமும் என்னை வருத்தப்படுத்தி வருவதால் இவர்களை இந்த உலகத்தில்கூட இருக்கவொட்டாமல் விரட்டி நான் எப்படிப்பர்த்தாவோடே சேர்ந்து சுகத்தை யடைவேன்? பர்த்

தாவை நான் அடையும்வரையில் அவர்களை விட்டால் நான் பிழைப்பதற்கு என்ன மார்க்க மிருக்கிறதென்று இந்தக்கன்னிகையானவள் விசாரமுகமாய்க் கேட்கும்போது, இந்தத்தோழியான கன்னிகை இதற்குச் சமாதானத்தை யோசித்து இந்தக்கன்னியைச் சுகப்படுத்தி வைக்கும் வழியைச் சொல்லுகிறாள்:— சுகப்பிரதையான பிரஹ்மவித்தென்னுந் தோழியைச் சந்தித்ததினாலேயே இந்தப் பெண்ணினுடைய கஷ்டங்கள் தீருகிறகாலமும் வந்து விட்டது; அப்போது தோழி சொல்லுகிறாள். பெண்ணே! பயப்படாதே உனக்கொரு குறைவுமில்லை. என்றுமழியாதவராயும் சொப்பிரகாசராயும் ஆனந்த ரூபராயும் குறிகுண முதலான தோஷங்களொன்று மில்லாதவராயும் அத்வைத சொரூபராயும் பிரஹ்மமென்ற பெயரோடே கூடியிருக்கிற ஒரு பர்த்தாயிருக்கிறார். அவர் உன்னோடே அபேதமாயும் எங்கும் நிறைந்து மிருக்கிறார். அப்படிப்பரிபூர்ணமான பர்த்தாவின் தன்மையை நீ மறந்ததினால் அவரொட்டில் அவருக்குத் தெரியாமல் துச்சமாய்ப் பிழைத்துக் கொண்டிருக்கிற நாத்தனார் உன்னை இளக்கரங்கொள்ள ஆரம்பித்துத் தன்னுடைய மூன்று பெண்கள் பேரன்களுடைய ஏவல்களுக்கு உன்னை அகங்காரி யென்று பேரோடே கூடிய பகிர் முகப் பிரவர்த்தியை யுடையவனாயிருக்கிற ஜீவனாகிய ஆணாக்கி வைத்து, நீ பர்த்தாவை அறிந்து கொள்ளாதபடி உன்உள்பார்வையை மறைத்துப் போட்டாள். நீ இந்த வஞ்சனையையறியாமல் நாத்தனார் பெண்களும் அவர்களுடைய பிள்ளைகளும் உன்னைப் பேய்போல அலைக்க, அதுக்கெல்லாம் உட்பட்டு அவர்கள் கோரின சப்தாதி விஷயங்களான க்ஷணே க்ஷணே யுண்டாய் அழிந்துபோகிற பண்டங்களை யெல்லாம் சிரமப்பட்டு வாங்கிக்கொடுத்து அவர்களுடைய ஓயாத சுகதுக்க சம்சாரத்தைத் தன்னதாகப் பாவித்துத் துக்கப்பட்டாய். மேலும் அந்தப் பெண்களும் குழந்தைகளும் அஸ்திரமானவர்கள். அவர்கள் ஜாக்கிர சொற்பனங்களாகிற ஒரு வீட்டிலிருந்து மற்றொரு வீட்டுக்கும் மறுஜன்மங்களாகிற ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்கும் கடபடாதியான ஒரு விஷயத்திலிருந்து மற்றொரு விஷயத்துக்கும் ஒண்டிக் குடிக்காரன் போலவும், கூத்தாடி குடிசை தூக்குவது போலவும், குரங்கு ஒரு மரத்திலிருந்து மற்றொரு மரத்துக்குத் தாவுவது போலவும், அவர்கள் ஓடும்போதெல்லாம் நீ ஸ்திரமாய்ப் பர்த்தா சன்னிதியிலிருந்தும் அதையெண்ணாமல் அவர்களுக்கு முன்னே அந்தந்த வீடுகளுக்கும் ஊருகளுக்கும் விஷயங்களுக்கும் போகிறதாக எண்ணி மயங்கினாய். ஓ! சாத்வீக புத்தியாகிற நானென்கிற பிரக்யாவதியான பெண்ணே! நீ இந்தவிதமாய் அனாதி காலமாய்த் துக்க சம்சாரத்தில் அகப்பட்டு விழித்துக்கொண்டிருக்கிறாய். மேலே சொன்ன உன் பர்த்தாவை யடைந்து ஞானச் செல்வனைப் பெற்று சுகமடையு முபாயம் சொல்லுகிறேன்; சாவதானமாய்க் கேள். முதலில் நாத்தனாருடைய சந்ததியார்களுக்கும் அவர்கள் கட்டிக்கொண்டிருக்கிற வீட்டுக்கும் உனக்குஞ் சம்பந்தமில்லை. ஏனென்றால், சித்தாகிய உனக்கும் ஜடமான அவர்களுக்கும் அவர்கள் வீட்டுக்கும் என்ன பொருத்தமிருக்கிறது? மேலும் நானாவிதமான சேட்டைகளு

டன் கூடிப் பொய்யான விஷயங்களையே நாடிச் சேகரித்துக் கொண்டிருக்கிற அவர்களுடைய இந்திரியங்களாகிற பிள்ளைகள் தானென்ன, அந்த அல்பபண்டங்களை அந்த இந்திரியங்கள் மூலமாய் வாங்கிச் சாவதானம் பண்ணி அதினால் நானுவித ராகத்துவேஷ சம்சாரத்தைப் பொருந்துகிற மனது முதலான முதிர்ந்த பெண்கள் தானென்ன, இவர்கள் சுபாவம் உன் சுபாவத்துக்கு விலக்ஷணமாயிருப்பதால் அவர்களுக்கும் உனக்கும் சம்மந்தமில்லை. இவர்கள் உன்பர்த்தாவினிடத்தில் தோன்றிப் பழுதைப் பாம்புபோல மித்தையானவர்கள். ஆதலால் இவர்கள் அவர் சொரூபத்தை மறைத்துக் கொண்டிருப்பதால் அவரை நீ கிட்டக் கிட்ட பிரகாசத்தைக் கண்ட இருட்டுப்போல மேல்படியார்கள் போனவிடந் தெரியாமல் மறைந்து போகிறவர்கள். இவர்களிடத்தில் ஒட்டுறவும் அகந்தா மமதாபுத்தியும் வைத்தால் உன் பர்த்தாவுடன் உன்னை ஒருக்காலும் சேரவொட்டாமற் செய்கிற நன்றியற்றவர்கள். அவர்களுடைய ஓட்டங்களிலெல்லாம் செல்லாமல் நீ ஸ்திரமாயிருந்து கொண்டு உன் அதிகாரத்தைச் செலுத்து. நீயே மகாராணி, சர்வத்திராளுக்கும் எஜமானி. மூடவஞ்சகர்களான பழைய பந்துக்கள் செல்லுகிற விஷயங்களிலுள்ள தோஷங்களைப் பார்த்து அவைகளில் கொஞ்சமேனும் ஆசை வைத்து மயங்காதே. அவைகள் பொய்யாயிருப்பதுமன்றியில் உன் பர்த்துரு சம்யோகத்தினாலுண்டாகும் பேரானந்தத்துக்கு முக்கிய விரோதிகள். உனக்கு எப்போதும் பர்த்தாவின் தேஜோமயமான திவ்ய சொரூபமே தியானமாக விருக்கட்டும். பர்த்தாவும் நாமும் கடாகாசம் மகாகாசம் போல எப்போதும் அபேதமாயிருக்கிறோம். அவருக்குள்ளதெல்லாம் நமக்குண்டு, அவருக்கில்லாதது நமக்குமில்லை யென்று நிச்சயம் வந்தவுடன் நாத்தனார் ஒடுங்கிச் செத்துப்போவாள். இப்படித் திருடானுபவமாகிற சிம்மாசனத்திலிருக்கிற ஏகசக்ராதிபதியாகிற உன் பர்த்தாவுக்குப் பட்டமகிஷியாக உட்கார்ந்து அவரோடே ஐக்யானுபோகத்தால் அவருக்கு அனுரூபமான ஞானச்செல்வனைப் பெற்ற மாத்திரத்தில் ஜீவன் முக்தி காந்தையென்று உன்னைச் சர்வலோகமும் துதிக்குமென்பதற்கு வேதமே பிரமாணம். இந்த நிலைமையிற் சுகமாயிருக்கிற என்னைப் போன்ற பெண்களே சாக்ஷிகள். நீ எப்போதும் உன் பர்த்தாவுடன் ரமித்துக்கொண்டிருக்கையில் உன் புத்திரன் முன்னுள்ள மாயா உறவினர்களுடைய சேட்டைகளையும் அவர்களுக்குக்கோசரமான சகல பிரபஞ்சத்தையும் கானல் ஜலம்போலப் பொய்யாகவும் அத்தனையிலுந் தானே யிருப்பதாகவும் கண்டு அவைகளொன்றும் உன்னைப் பாதியாமலிருக்கும்படிக்கும், மேற்படி ஜீவச்சவங்களாய்த் தோன்றிக்கொண்டிருக்கிற சகலர்களும் உன் காலின் கீழ் வந்து விழும்படிக்கும் செய்வன். உன் பர்த்தாவும் நீயும் புத்திரனும் எப்போதும் வாஸ்தவத்தில் ஒரே ரூபமாக இருக்கிறீர்கள். பர்த்தாவென்றும், ஸ்திரீயென்றும், புத்திரனென்றும் சொல்மாத்திரமாயும் சொப்பனத்தில் கண்ட பேதங்களைப்போல நினைப்பு மாத்திரமாயிருக்கிறது. பிருங்ககீடநியாயமாயும், பால் பாலுடனும், ஜலம் ஜலத்துடனுமொன்றுவது

போலவும், நீயும் உன் பர்த்தாவும் உன் புத்திரனும் ஒன்று சேர்ந்து சம்சார திருஷ்டி மறந்து கொஞ்சமேனுஞ் செருக்கில்லாத என்றும் குறைவுபடாத பூரணானந்தமாவாயென்று சுருக்கமாய் அவளுக்குத் துக்கநிவர்த்தி தடையற்ற ஆனந்த முண்டாகும்படி செய்த ஆப்தோபதேசத்தைக் கேட்ட அந்தப்பெண்ணும் தன் பர்த்தா பிரஹ்மமென்றும் அவர் எங்கும் எவ்விடத்திலும் பூரணமாயிருக்கிறாரென்றும் சச்சிதாநந்த சொரூபரென்றும் விசார ஞானதிருஷ்டியாற் கண்டு அவரே தானாகச் சேர்ந்து முன்பட்ட துக்கங்களை யெல்லாம் போக்கி இடைவிடாமல் நானே பிரஹ்மம் பிரஹ்மமே நானென்று கீழுமேலுமாய்த் திரும்பத்திரும்ப அநுசந்தானமாகிற போகத்தால் ஆனந்தமென்கிற புத்திரனைப் பெற்று அழியாத ஆனந்தத்தோடே நான் பிரஹ்மம் ஆனந்தமென்கிற மூன்று பதங்களுக்கும் பேதமில்லாமல் நானே பிரஹ்மானந்தமாய் ஏகாகாரமாயிருக்கிறோமென்று அறிந்து கொண்டு, இதுவரை அஞ்ஞான சம்சய விபரீதங்களென்கிற நாத்தனார் முதலானவர்களே நானிந்தச் சுகத்தை யனுபவிக்கத் தடையாயிருந்தார்களென்று தெரிந்த பின்பு சிரவண மனன நிதித்தியாசனமென்கிற சகிகளால் மேற்படியார்களை விரட்டி, இப்படியே சகசானந்தத்திலிருந்து மேற்படியார்களுடைய சரீரமாகிற வீட்டையும் அவர்களாற் போடப்பட்ட சப்தாதி விஷயங்களாகிற சாப்பாட்டையும் நிவர்த்திக்கிறதற்காகச் சொரூபஸ்திதியாகிற வீட்டில் நானென்று குடிபுகுந்து சாக்ஷாத்காரமாகிற ஆனந்த போஜனத்தையுஞ் செய்துகொண்டு இவர்களெல்லாம் மித்தை யென்கிறபார்வையால் அவர்களைக் காணாமல் போகும்படி விரட்டி, ஜீவன் முக்தியாகிற ஜீவனத்தையுஞ் செய்துக்கொண்டு வாழப்பட்ட இந்த அதிசயத்தைக் கேட்டு மற்ற துக்கப்பட்டுக் கொண்டிருக்கிற நானென்கிற பெண்களெல்லாம் இவளிடத்தில் வந்து இவளுடைய உபதேசத்தால் இவளைப்போல ஆனந்தத்தையடைந்து பரம்பரையாய் வாழ்ந்து கொண்டு வருகிறார்கள். இந்த அதிசயத்தைக் கேட்டு இனிமேல் வருகிற காலத்திலுமுள்ள கன்னிகைகளும் இப்படியே வாழக்கடவார்களென்று குருநாதனுடைய பாதாரவிந்த பக்தியின் மகிமாதிசயத்தால் அனுக்கிரகிக்கப்பட்டது.

## 38-வது தரங்கம்.

[அ-கை.] எந்தப் புருஷன் சதா நாமாரென்று விசாரம் பண்ணுகிறானோ அவனுக்குத் துக்கம் ஒருக்காலும் வராதென்பதைப்பற்றி சொல்லப்படுகிறது:—

ஜலத்திலுள்ள தாமரைப் புஷ்பமானது எப்படி வாடமாட்டாதோ, சிங்கமானது யானையின் சப்தத்துக்கு எப்படிப் பயப்படமாட்டாதோ, நந்தவனத்தில் எட்டிமரம் எப்படி யிருக்கமாட்டாதோ, சொப்பனத்திலிருந்து விழித்தவனுக்குச் சொப்பன துக்கமெப்படி யிருக்கமாட்டாதோ, ஆகாயத்தில் தூளி எப்படி ஒட்டமாட்டாதோ, தீபத்தினிடத்தில் எப்படி இருட்டு வரமாட்டாதோ, ஜலத்திலிருக்கிற மீனினுடைய நேத்திரமானது ஜலத்தோடே எப்படிச் சம்பந்தப்படமாட்டாதோ, சந்திரனிடத்தில் எப்படிச் சூடு வரமாட்டாதோ, தாமரையிலையில்

ஜலமெப்படி ஒட்டாதோ, வைராக்கிய புருஷனிடத்தில் பாவமெப்படி ஒட்டா தோ, அப்படி நாமாரென்று விசாரித்துத் தன்னை பிரஹ்மமென்றறிந்து சகலபிர பஞ்சத்தையும் பொய்யென்று அநுசந்தானம் பண்ணுகிறவனுக்குத் துக்கலேச முமொட்டாது.

39-வது தரங்கம்.

[அ-கை.] ஜீவனைக் காளைமாடாக வர்ணித்தலும் அதைக் கரையேற்ற உபாயமும் சொல்லப்படுகிறது:—

ஒருஜீவனுகியபொதியெடுக்கிற காளை எப்படி யிருக்கிறதென்றால்:—அநேக ஆசாபாசங்களாற் கட்டப்பட்டும், விஷயப்புல்லுகளில் ஆசையோடுங்கூடியும், அநேக ஜன்மத்திற் பழகிய வாசனுவார்த்திகத்தை யடைந்தும், துக்கமாகிற அங்கவைகல்லியத்தையும், மனோரதம் முடியாத பெருமூச்சையும், நான் கர்த் தாவென்கிற பெரிய பாரத்தையும், மாயீகமான மருப்பூமியில் அலைந்து கொண்டும், பஞ்சமாபாதகங்களாகிற சேற்றினுற் பூசப்பட்டும், ஆவரணமாகிற படுகுழியில் விழுந்துகொண்டும், ஈஷணைத்திரயங்களாகிற உண்ணி, கொசு, ஈக்கடி களால் கடிக்கப்பட்டும், அபிமானமாகிற கயிற்றாலிழுக்கப்பட்டும், மனதாகிற செட்டியின் ஆக்ஞையாகிற வீட்டில் வர்ணுச்சிரமமென்கிற கட்டுத்துறையில் கட் டுப்பட்டும், ஸ்தூல சரீர அபிமானமாகிற சாணிச் சேற்றில் பிரண்டு கொண்டும், அன்னியர்களுடைய தோத்திரமாகிற சேணத்தினுலும் கர்வமாகிற மணி யினுலும் வெளிப்பார்வைக்கு அழகு போலும் உள்ளில் பேராசையாகிற தாபத்தால் தபித்துக்கொண்டும், ஆதி ஆத்மீகமாகிற ஜாடராக்கினியினுலும் ஆதி பௌதீகமாகிற காட்டுத் தீயினுலும் ஆதி தெய்வீகமான சூரிய கிரணத்தி னுலும் தபிக்கப்பட்டும், தேகவாசனை முதலான சாட்டையாலடிக்கப்பட்டும், ஜனன மரணமாகிற பாரவண்டியை இழுத்துக்கொண்டும், சுகதுக்கங்களாகிற மேடுபள்ளத்திற் பிரண்டு கொண்டும், கர்மங்களாகிற சுமையைத் தூக்குவதால் தீனபாவமான வணங்கியிருக்கிற தேகத்தை உடைத்தாயும், சங்கற்பமாகிற தார் க்கம்பாற் குத்தப்பட்டும், பின்னும் பலவிதமான ஹிம்சையை ஓயாமல் அடைந்து கொண்டு மிருக்கிற ஜீவனுகிற மாட்டைத் தத்துவக்ஞானமாகிற ரூபாயை மன தாகிற செட்டிக்குக் கொடுத்து மோக்ஷமாகிற கோவிலுக்கு ஜீவன் முக்த னென்ற விருஷபோற்சனஞ் செய்து திரும்ப ஒருவித பந்தங்களுக்குட்படாமற் கரையேற்றி வைக்கவேண்டும்.

40-வது தரங்கம்.

[அ-கை.] குரு முதலான பெரியவர்களுடைய மகிமையும் அவர்களு டைய சங்கதியை மறவாமலிருக்கவும் சொல்லப்படுகிறது:—

அஃதெப்படி என்றால் ஒருபுருஷன் நதியைத் தாண்டுவதற்கு ஓடக்காரனு டைய தயை எப்படி வேண்டியதோ அப்படிச் சம்சார நதியைத் தாண்டுவதற்கு ஞானக்கப்பலையுடைய குருவின் தயை வேண்டியது. இதற்குப் பிரமாணமென்ன வென்றால் வாசிட்டத்தில் எந்தத்தேசத்தில் பிரமக்ஞானிக ளில்லையோ அந்தத்

தேசம் சொர்க்க சுகத்துக்குச் சமானமாயிருந்தாலும் அவ்விடம் விஷவெங் காடான கானல் பூமிக்கொப்பாமென்றும் அவடத்தில் வசிக்கக்கூடாதென்றும், யாதொருவராகிற கல்பக விருக்ஷமானது அத்தியந்தம் அமிர்தம்போலே அழகாயிருக்கிற வாக்காகிற இலேகளேயும் கடாக்ஷமாகிற நிழலேயும் மந்தகாசமாகிற புஷ்பங்களேயும் ஞானமாகிற பழங்களேயும் உடைத்தாயிருக்கிறதோ பெரியவர்களாகிற அக்கல்பகத்தைக்கண்ட அந்தக்ஷணத்தில் கலிகளெல்லாம் போய் விடுகின்றனவென்றுஞ் சொல்லப்பட்டிருப்பதால் குரு சந்நிதியையும் அவர் கிருபையைப் பெற்றுச் சந்தோஷித்திருக்கிற சாது சங்கதியையும் மறவாமலிருக்க வேண்டியது தான் முக்கியமான உபாயம்.

41-வது தரங்கம்.

[அ - கை.] பரமாத்மாவாகிற பூமியிலிருக்கிற அஞ்ஞானுதி ஊஷரத்தை நிவர்த்திக்க உபாயமும் அதன் பேரிற் பயிர் முதலானவை செய்து அந்த விளேவிலுண்டான அன்னத்தைப்புஜித்து ஜீவன் முக்தி விதேக முக்தியாகிற போஜன திருப்தியையடையும் வரையுள்ளதும் விபரமாய்ச் சொல்லப்படுகின்றன:—

பரமாத்மாவாகிற பூமியில் அஞ்ஞானமாகிற ஊஷரமுண்டாய் அதன் காரியமாயிருக்கிற ஆவரணமென்னும் அளரை உடைத்தாயிருப்பதால் மனதாகிற சூரியகிரணத்தால் நாம ரூபங்களாகிற கானல் ஜலந்தோன்ற ஞானஹீன ஜீவர்களாகிற மான்கள் இந்தக்கானல் ஜலத்தைப்பானம் பண்ணவேண்டுமென்று வெகு காலமாய் அலேந்துக்கொண்டு ஒரு பிரயோஜனத்தையுமடையாமல் மயங்கிக் கொண்டிருப்பதால் இப்போது அபூர்வமாய் ஒரு முமுக்ஷுவாகிய புருஷன் அவ்வளறை மாற்றும் நிமித்தம் நிஷ்காமிய கர்ம்மமாகிற உரம்வைத்து அதினுலுண்டான சித்த சுத்தியால் அஞ்ஞான ஊஷரத்தைமாற்றி சாதன சதுஷ்டயமாகிற உழவுசெய்து குருவாகிற இஷ்டரிடத்திற்போய்க் கிருபையினுல் அனுக்கிரகிக்கப்பட்ட பிரஹ்ம உபதேசமாகிற விரைவாங்கி விரைத்துச் சிரவணமாகிற நாத்து நட்டு மனனமாகிற தண்ணீர்பாய்ச்சி சாது சங்கதிகளாகிற வேலி பிடித்து விபரீத பாவனேயாகிற களேகளே நிதித்தியாசனமாகிற பள்ளிகளே விட்டுப்பிடுங்கச் சொல்லிக் காமாதி வாசனேகளாகிற பக்ஷிகள்வந்து அடிக்கும்போது சத்துவகுணமென்கிற பள்ளன் மைத்திரியாதி வாசனேகளென்கிற வேட்டுகளால் அந்தப் பக்ஷிகளேக்கொன்று அதன் பிறகு சமாதியாகிற நெல்லு விளேய ஆரம்பிக்குங் காலத்தில், நித்திரை அந்தகாரம் விக்ஷேபம் வெளிச்சம் சூன்யம் சோம்பல் ரசாசுவாதம் கஷாயம் பயம் முதலான தான நோவினுலுண்டாகிற கெடுதலுக்குப் பரிகார நிமித்தமாக அக்ரோதம் வைராக்கியம் ஜிதேந்திரியம் க்ஷமா தயா சர்வஜனப் பிரியத்துவம் முதலான மந்திர விபூதிகளால் அந்நோவை நிவர்த்தி செய்து மனேலயமாகிற நெல்லு விளேந்து குலேசாய்ந்ததற்குப் பிறகு சாத்வீக விருத்திகளாகிற கதிர் அறுக்கிற பேர்களே விட்டுக்கதிரறுத்துக் குரு சந்நிதானமாகிற களத்திற்கொண்டுவந்து வைத்து அமானித்துவாதி குணங்களாகிற மாடுகளே விட்டுச் சூடடிக்கும்போது விக்ஷேபமாகிற வைக்கல்களேத் தள்

ளிக் குருகடாக்ஷவீக்ஷணமாகிற காற்றுக்குக் காத்திருந்து அந்தக்காற்றடிக்கும் போது மேலே சொல்லப்போகிற ஆபாச சகிதமான ஞானமாகிற நெல்லைத் தூற்றிச் சம்சயபாவனை அசம்பாவனை விபரீதபாவனைகளாகிற பதருகளையும் சண்டுகளையும் அருசி கருக்காய்களையும் தள்ளிச்சுவானுபவ மென்கிற மரக்காலா லளந்து அபரோக்ஷ மென்கிற களஞ்சியத்திற்போட்டுப் பூதப்பிரதி பந்தம் பௌஷியப்பிரதிபந்தம் வர்த்தமானப்பிரதி பந்தங்களாகிற அந்த எலி திருடர் முதலானபேர்களுக்காக வாசனாக்ஷயமாகிற புங்கயிலையும் தத்துவக்ஞானமாகிற பூனையையும் இந்திரிய நிக்கிரக மாகிற காவலையும்போட்டு மனோ நாசமாகிற திருடமான பூட்டைப் பூட்டிப் பந்தோபஸ்துச் செய்து மேலே சொன்ன ஞான நெல்லை ஐந்தாம்பூமியாகிற உரலிற்போட்டுச் சொரூபாகார விருத்தியாகிற உலக்கையைக் கொண்டு புருஷப்பிரயத்தின மென்கிற குத்துக்காரியாற் குத்தி ஆனந்தாவரணமாகிற உமிதவிடு முதலானதுகளைத் தள்ளிச் சொரூபானந்தா விர்ப்பாவமாகிற அருசியை யெடுத்து ஆறும்பூமியாகிற உலையிற்போட்டு அதீதச மாதியாகிற அக்கினியாற் பாகஞ்செய்த அன்னத்தை ஏழாம்பூமியென்று சொல் லப்பட்ட ஜீவன்முக்தியில் விதேக முக்தியாகிற போஜன திருப்தியடைந்து நித் தியானந்தமாய் வாழக்கடவது.

## 42-வது தரங்கம்.

[அ - கை.] மோக்ஷமென்கிற தேசத்தில் ஆனந்தமென்கிற பட்டணத்தி லிருக்கிற சைதன்னிய ராஜனையிருந்து முக்திப்பெண்ணுடன் வாழ உபாயஞ் சொல்லப்படுகிறது:—

மோக்ஷமென்கிற தேசத்தில் ஆனந்தமென்கிற பட்டணமிருக்கிறது. அந்தப் பட்டணத்துக்குட் சைதன்ய னென்கிற இராஜா முக்தியென்கிற கன்னிகையுடன் நித்திய சுகியாய் வாழ்ந்து கொண்டிருக்கிறான். அப்படியிருக்கும் பக்ஷத்தில் சகலஜனங்களும் அந்தப்பட்டணத்துக்குப்போய் அந்த இராஜனைக்கண்டு அவ னுடன் அபேதமாகச் சிநேகஞ்செய்து முக்திப்பெண்ணுடன்கூடி நித்திய சுகி யாய் வாழாமல் என் துக்கப்படுகிறார்களென்றால், முதலில் அந்தப்பட்டணத் துக்குப்போக வொட்டாமற் செய்கிற பாமரதேச மென்கிற ஒரு துலுக்க இராச் சியமிருக்கிறது. அந்த இராச்சியத்தில் போனவர்களைக் குரங்கானது வெள்ளரிக் காய்களை எப்படிக் கடித்துச் சாப்பிடுமோ அப்படி அந்தத்தேசத்திலுள்ள பெண் டாட்டி பிள்ளைகள் முதலானவர்கள் சாப்பிட்டுப் போடுகிறார்கள். இந்தப் பந்துக் கள் தூலதேக சம்பந்தமென்று தெரிந்துகொண்டு மெள்ளத்தப்பி அந்தத்தேசத் தைத் தாண்டினால் அதற்குப்பிறகு கர்மசண்டாளர்கள் வேண்டாதபெண்டாட்டி கால் பட்டாற் குற்றம் கைபட்டாற் குற்றமென்பதுபோல இவனிடத்தில் விதி நிஷேதத்தையும் பாபதோஷ முதலான குற்றங்களையுங் கற்பிவித்து நரகமென் கிற விலங்கைப்போட்டு விடுகிறார்கள். அதையுந் தப்பித்துக்கொண்டுவந்தால் அநேக மதவாத மென்கிற தேசங்களில் சாங்கியன் யோகன் முதலானவர்கள் எங்கே போகிறாயென்று கேட்க மோக்ஷ தேசத்திற்குப் போகிறேனென்று

சொல்லத் தங்கள் தங்கள் தேசமே மோக்ஷதேசமென்றும் இதைத்தவிர மோக்ஷ தேசம் வேறே யில்லையென்றும் சில ஆபாச சுருதி யுக்திகளைச்சொல்லி கிருஸ்து மதக்காரன் ஆள் சேர்ப்பதுபோலத் தங்கள் மதத்திற்சேர்த்துப் போடுகிறார்கள். இப்படி அநேக ஜனங்கள் அப்படி அகப்பட்டுக்கொண்டதில் தெய்வகதியால் எவனோ ஒருபுருஷன் இவ்வளவும் பாகியமென்று தெரிந்து தாண்டிக்கொண்டு மோக்ஷதேசத்துக்குச் சமீபத்தில் வருங்காலத்தில் அவ்விடத்திற் பஞ்சகோச மென்கிற ஐந்து தூர்க்கங்கள் தாண்டக் கூடாமல் தடையாயிருக்கின்றன. அவ ற்றில் முதலாவது அன்னமயமாகிற தூர்க்கத்தில் நாலாயிரத்து நானூற்று நாற் பத்தெட்டு வியாதிகளாகிற சூலாயுதங்கள் நாட்டியிருக்கின்றன. பின்னும் பிரா ஹ்மண்ணியம் குலம் கோத்திரம் நாமம் ஜாதி ஆசிரமம் முதலான பிசாசுகளை யுங் காவல்போட்டு வைத்திருக்கிறது. தெய்வகதியால் அந்தத் தூர்க்கத்தையுந் தாண்டி வரும்போது பிராணமயமென்ற தூர்க்க மிருக்கிறது; அதில் கர்மேந்தி ரியங்களென்கிற ஐந்து காவற்காரர்களிருக்கிறார்கள். பஞ்சவாயுவாகிற ஐந்து யந் திரங்கள் இருக்கின்றன. வசனதானகமன விசர்க்கானந்த மென்கிற ஐந்து அகிள்களில் தள்ளிப்போடுகிறார்கள். தெய்வகதியால் அதையுந்தாண்டிப்போனால் மனோமய கோசமென்கிற ஒரு தூர்க்கமிருக்கிறது. அதில் மனதாகிற மாயைப் பெண்ணும் அவள் பிள்ளைகளாகிற சுரோத்திராதிகளென்கிற ஐந்து மாயாவிகளு மிருக்கிறார்கள். அவர்களுக்குச் சப்தாதி பஞ்சவிஷயங்களென்கிற ஐந்து மோகி னிப் பெண்களிருக்கிறார்கள் ஒவ்வொருத்திகளிடத்திலும் மோகிக்கச் செய்யும் படியாய் இராகாதிகளென்கிற பதின் மூன்று தூதிகள் இவனை இழுத்துக்கொண் டுபோய் அந்தப்பெண்களிடத்தில் தள்ளிப்போடுகிறார்கள். இவன் அவர்களைத் தாண்டி அப்புறம் போகிறது ஒருக்காலுமில்லை தெய்வகிருபையால் அந்தத்தூர்க் கத்தையுந் தாண்டிப்போனால் விஞ்ஞானமய கோசமென்கிற தூர்க்கமிருக்கிறது அவிடத்திற் புத்தியென்கிற மோகினிப்பெண் சிதாபாசனென்கிற வேஷ இராஜ னைக் கல்பித்து வைத்துக்கொண்டு முன்னே சொன்ன சுரோத்திராதிகளாகிற மாயாவிப் பிள்ளைகளையும் அவர்களுடைய பெண்களான சப்தாதி மோகினிப் பெண்களையும் ஆட்டிவைத்துக்கொண்டு கருத்ருத்துவ போக்துருத்துவ பிர மாதுருத்துவங்களாகிற விலங்குகளைக் கால் கழுத்து இடுப்புகளிலே மாட்டி ஜன னமரணங்களென்கிற ஜயில் கொட்டடிக் குட்போட்டுத் தாபத்திரயங்களாகிற அக்கினியால் வறுத்துப்போடுகிறார்கள். தெய்வ கிருபையால் அதையுந் தாண்டிப் போனால் காரண சரீரமென்பவன் ஆனந்த மயமென்கிற பெரிய அந்தகாரமான காட்டிற் கொண்டுபோய் விட்டுச் சுழுப்தியானந்த மாகிற கானல் ஜலத்தைச் சாப்பிடச்செய்து ஒன்றுந் தெரியாமையாகிற கள்ளுச்சாராயத்தைக் கொடுத்துப் போனவனுக்குத் தன்னுடைய பிரக்ஞையே தனக்குத் தெரியாமற்போகும்படி செய்து செத்தவனுக்குச் சமானமாகப் பண்ணிப்போடுகிறான். தெய்வகதியால் அதையுந் தாண்டினால் மோக்ஷபட்டணத்துக்குக் கோட்டை வாசலில் அரிஷட் வர்க்கங்களுடைய வாசனைகளாகிற பட்டாளமிருக்கிறது. அந்தப்பட்டாளத்தார்

கள் உள்ளே ஒருவரும் பிரவேசித்து மோக்ஷசுகத்தை அடையக்கூடாதென்று ஸ்திரீபணமென்கிற இரண்டு கதவுகளைச் சாத்தி அதுகளில் ஆசையென்கிற தாப்பாளையும் போட்டு மோக்ஷத் துவாரத்தில் செல்லவொட்டாமற் செய்து போடுகிறார்கள். தீரனாக உள்ளவன் மைத்திரியாதி படாளால் அந்தப்படாளையுங் கொன்று விவேக வைராக்கியங்களாகிற கத்தி, கோடாலிகளைக் கொண்டு அந்தக் கதவுகளையுந் தாப்பாளையும் பிளந்து ஆத்ம இராஜனைக்கண்டு அவனுடன் ஒன்றாய்ச் சேர்ந்து முக்தியென்கிற பெண்ணிடத்தில் நித்தியானந்த மென்கிற சுகத்தை அனுபவித்துக் கொண்டு திரும்ப வெளியில் வராமல் அவ்விடத்தில் தானே சாசுவதமாய் வாழுகிறான். இன்னொரு பக்ஷம், மேலே சொல்லிய பிரயாசத்தைக் கேட்கும்போது யாராலும் முக்தியடைவது அரிதாய்த் தோன்றுகிறதேயெனில், அதி சுலபமாய் அந்த முக்தியை யடைகிறதற்கு அதிரகசியமாய் ஒரு வழி யிருக்கிறது. அதாவது:—அந்தச் சைதன்னிய இராஜனுக்கு அத்தியந்தம் ஆப்தராயும் அவரோடே அபேதமாயு மிருக்கிற சுய ஞானத்தையுடையவராயும் மகா தயாளுவாயும் மன்னுயிர்களெல்லாம் தன்னுயிராய்ப் பார்க்கிறவராயும் காலில் விழுந்தவனைக் கைம்மாறின்றிக் காப்பாற்றுகிறவராயும் நித்திய பூரண சந்திர மண்டலமாகிற முகத்திலிருந்து பெருகாநின்ற உபதேசாமிர்த வருஷத்தை இராப்பகற் பாராமல் நிஷ்பக்ஷபாதமாய் நிரம்ப வருஷித்துக் கொண்டிருப்பவராயும் தீவிர பக்தாளுடைய குருசரண ஸ்மரணமாகிற மயிற் சப்தத்தைக் கேட்டு ஓடிவருகிற மேகமாயும் அழியாததாயிருக்கிற ஆனந்தத்தை அப்போதே அனுக்கிரகிக்கிறவராயு மிருக்கிற சற்குருநாதனென்கிற ஒரு மந்திரி யிருக்கிறார். மோக்ஷ மாத்திரம் வேணுமென்றவன் அவரை ஸ்மரித்த மாத்திரத்தில் அவர் சர்வக்ஞரானதால் உள்ளக்கருத்து வள்ளலுக்குத் தெரியுமென்கிற பழமொழிப் பிரகாரம் வள்ளல்களுக்குள்ளே சிரோன்மணியான வள்ளலானதால் ககன மார்க்கமாயிவனிடம் வந்து இவனைத் தடுத்தாட்கொண்டு கர்ம மார்க்கமாகிற பூமி வழியாற் கூட்டிப்போனால் பாமர தேச முதலானதுகளிலிருக்கிற துலுக்கர் முதலான சண்டாளப்பயல்கள் வரை இவனைத் தடுப்பார்களென்றும், அதுவுமன்றியில் பஞ்ச கோசமாகிற தூர்க்கங்களில் ஆயுதங்களும் படாளும் மாயாவிகளும் நட்டுவனுடைய தாசிகளும் அந்தகாரக்காடுமிவனைக் கொன்றுபோடுமாகையாலும், இன்னமிவன் விவேகமில்லாத அசக்தனாதலால் நடக்கமாட்டாதவனாய் மாசங்காதவழி மாயமாய்ப் பறப்பனென்ற சொற்போலஇவனை நடத்திக்கூட்டிப் போகலா மென்றெண்ணினாலும் அநேக ஜன்மங்களாகிற வெகுநாட்செல்லுமாகையால் ஆத்மானாத்ம விசாரமார்க்கமாகிற ரயிலிலேற்றி விட்டால் மேலே சொல்லியிருக்கப்பட்ட இடஞ்சல்களொன்றும் இவனைக்கொஞ்சமும் பரிசிக்காதென்றும், ஆயிரங்கோடி ஜன்மத்திலுந் தீராத அஞ்ஞானம் அரை நிமிஷத்தில் ஆறுமாசப்பயணத்தை ஆறுநாளில் ரயில் கொண்டுபோய் விடுவதுபோல இந்த விசாரமார்க்கமும் மோக்ஷமாகிற காசி தேசத்தில் நொடியில் கொண்டுபோய் விடுமென்று நிச்சயித்து நாட்டு மார்க்கத்தையும் அதில்போகவேண்டிய கர்மேந்

திரியங்களாகிற கட்டை வண்டிகளின் சங்கடத்தையும் அந்தமார்க்கத்திலுள்ள காமக்கள்ளர்களுடைய களவையும் ஞானேந்திரிய தாசிகளின் மயக்குதலையும் யோசித்து விசாரணையாகிற ரயிலிலேற்றி மேலே சொன்ன சகலசங்கடத்தையும் நேதி மார்க்கத்தாற் கடப்பித்து மோக்ஷதேசமாகிற வாசலிலிருக்கிற ஸ்திரீபண மென்கிற இரண்டு கதவுகளில் மாட்டப்பட்டிருக்கிற ஆசையாகிற தாப்பாளை நாமாரென்ற விசாரமாகிற திறவுகோலால் அதிசுலபமாய்த் திறந்து உள்ளே இவனைக்கூட்டிப்போய் ராஜாவின் காதில் இவனைப்பற்றித் தெரிவிப்பதுபோல இவருஞ் சிரவணமாகிற தெரிவித்தலை சந்தேகந்தீரும் வரை பூராவாய்த் தெரிவித்து மகாவாக்கிய விசாரமாகிற அரண்மனைக்குட் கூட்டிப்போய் மனனமாகிற ராஜ தரிசனம் பண்ணிவைத்து நிதித்தியாசனமாகிற ராஜ நிலையில் நிறுத்திச் சமாதியாகிற சாப்பாட்டையுஞ் செய்வித்து இவனே போதும் போது மென்று சொல்லும்வரைகூட இருந்து சாக்ஷாத்காரமான திருப்தியானபின், அவன் அந்த மந்திரியை வியந்து துதிக்கிறதாவது:—ஏ பிரபோ! என்ன அதிசயம். தங்கள் கிருபையால் பெற்ற பேற்றை யென்னவென்று சொல்லுவேன். ஆனால் உலகத்தில் முடவனுக்குக் கொம்புத்தேனும், நித்திய தரித்திரனுக்கு நிதியும், பிறவிக்குருடனுக்குக் கண்ணும் கிடைப்பது அரிதென்று சொல்லுவார்கள். என்னளவில் யோசித்துப் பார்க்கும்போது அதுகளெல்லாங் கிடைப்பதையும் நமக்குக்கிடைத்திருப்பதையும் பார்க்கும்போது மலைக்கும் மயிருக்கும், மகாவிஷ்ணுவுக்கும் மனுஷனுக்கும் எப்படிச் சமமாகாதோ அப்படிச் சமமாக மாட்டாதென்று தோன்றுகிறதய்யா வென்று இப்படித் தனக்கு முன்வந்திருந்த துக்கங்களின் நிவர்த்தியையும் இப்போதுண்டாயிருக்கிற தடையற்ற ஆனந்தத்தையும் குருநாதன் சந்நிதியிலிருந்து சதா வாழ்த்திக்கொண்டு வாழ்ந்து கொண்டிருக்கிறான்.

## 43-வது தரங்கம்.

[அ-கை.] இராஜ குமாரன் போலிருக்கிற ஜீவன் தன் பிதாவாகிய ஆத்ம இராஜனையும் தன் பிராணநாயகியான சுமதியையும் மறந்தது மன்றியில் வாசனைத்திரய ஈஷணாத்திரயங்களிற் கட்டுண்டு மயங்கி இராகாதிகளுடைய பீடை சகிக்கமாட்டாமல் விவேகாதிகளுடன் வந்து சேர்ந்து சற்குருவின் அனுக்கிரகம் பெற்ற தன்மை அறியும் விதம்:—

இராஜ குமாரன் போலிருக்கிற ஜீவன் தன் பிதாவாகிய ஆத்ம இராஜனை மறந்தது மன்றியில் தன்பிராண நாயகியான சுமதியையும் தனது சொரூபமான ஆனந்தத்தையும் மறந்து சுமதி குமாரர்களான விவேகம் வைராக்கியம் சமதமம் திதிக்ஷா உபரதி சிரத்தாசமாதானம் முமுக்ஷுத்துவம் மைத்திரி கருணா முதிதா உபேக்ஷா பிரஹ்மக்ஞானம் பாசவைராக்கியம் ஜீவகாருணியம் இயமாதி அஷ்டாங்கங்கள் அமானித்துவாதி இஷ்டர்கள் முதலான தனக்கு ஹிதஞ் செய்யப்பட்டவர்களையும் மறந்து, அதேகாரணமாய் அவித்யா குமாரியான குமதி யென்கிற சண்டாளக் கன்னிகையை விவாகஞ்செய்து அவளுக்குப் புத்திரிகைகளாயிருக்கிற ஆவரணம் விக்ஷேபமென்கிற சுவபச கன்னிகைகளையும் விவாகஞ்

செய்து, அசத்துவ அபானுவானமென்கிற கள்ளையுஞ் சாராயத்தையுங் குடித்து மயங்கி, மகா துர்க்கந்தங்களாயிருக்கிற தேகாதிகளாகிற நாய் மாமிசத்தையும் யதேஷ்டமாய்ப் புஜித்து, அதனால் லாகிரி கொண்டு, சொர்க்க மத்திய பாதாளமென்கிற சண்டாள வீதிகளில் திரிந்துகொண்டு, அங்கங்கே யிருக்கிற சரீர விஷயங்களாகிற கள்ளு மாமிசத்தைப் புஜித்து, ஜனன மரணமாகிற சமுத்திரத்தில் விழுந்தெழுந்திருக்கிற அவஸ்தைகளை அடைந்தும், பின்னும் அநேக ஜனன மரணங்களுக்கு ஏதுவான சஞ்சித கர்மமென்கிற பைக்குள் ஆகாமிய கர்ம ரூபமான மதுமாம்சங்களை மேன்மேலுஞ் சேகரித்துப் போட்டுக்கொண்டு, கைலாசம் முதல் நரகம் வரையிலிருக்கிற பஞ்ச விஷயங்களாகிற பறைக்கூத்தைக்கண்டு மோகித்து, இவ்விதமாய் வாக்கினால் சொல்லி முடியாத தாபத்திர தீயினால் எரிக்க~~யங்களாகிற~~ப்பட்டும் ஸ்திரீகளாகிற மகா மாயா யந்திரங்களில் மன்மதனென்கிற மகா சண்டாளனால் சதாகாலமும் இவன் சத்தி வைக்கப்பட்டும், சண்டாளர்கள்கூடப் புஜிக்காமலிருக்கிற மலம் மூத்திரம் பெருகிக்கொண்டிருக்கிற யோனி முதலான அவயவங்கள் நமக்குக் கொஞ்சந்தரிசனங் கிடைக்கப் போகிறதா வென்று பிரார்த்தித்து அந்த ஆசையினால் இவ்வளவென்று சொல்லி முடியாத துக்கத்தையும் பாபத்தையும், நரகத்தையும், அவமானத்தையும், வியாதிகளையும், பயத்தையும், சிந்தனைகளையும், லோகவிரோதங்களையும், அனேக அநர்த்தங்களையுமடைந்து அந்த அவித்யா குமாரியான குமதியென்கிற ஸ்திரீ பிண்டத்தில் அந்தக்கரணமென்கிற ஒரு பெண் பிறக்க, அந்தப் பெற்ற பெண்ணுடன் இந்த ஜீவன் சம்போகஞ்செய்து அதனிடத்தில் ராகத்துவேஷங்களாகிற பதின்மூன்று பிள்ளைகள் பிறக்க, அந்தச்சந்ததி வழியாகவே தேகவாசனை, லோகவாசனை, சாஸ்திர வாசனைகளாகிற கட்டுக்குள் அகப்பட்டுத் தாரேஷணை வித்தேஷணை புத்திரேஷணைகளாகிற விலங்குகளில் அகப்பட்டுக்கொண்டு, இந்தக் குடும்பத்துக்கு இந்த ஜீவன் எவ்வளவு சம்பாதித்துப் போட்டாலும் திருப்தியாகாமல் வருத்தப்பட்டு, இந்தத் துக்கந்தீரவேண்டுமென்று நினைத்து இந்த மாயைக்குள் சேர்ந்த கர்மகாண்டம் பக்திகாண்டங்களுடைய அனுஷ்டானத்தைக் காமியமாகச் செய்து, அனந்தகாலம் வரையில் அதனாலுந் துக்க நிவர்த்தி வராமல் திரும்பக் கர்மம் பக்திகளை நிஷ்காமியமாகச் செய்ததால் சித்தசுத்தி வந்து, அப்போது இந்தச் சண்டாள சகவாசத்தைச் சுகமென்று தெரியாமல் மயங்கியிருக்கிற நாம் இந்தச் சகவாசத்தை என்னமாய் விட்டுக் கரையேறப்போகிறோமென்று நினைத்த மாத்திரத்தில் இந்த அவித்யா குமாரர்கள் இவன் நம்மைக் கைவிட்டு விடுவானென்று தெரிந்து இவனை நயத்தினாலும் பயத்தினாலும் கஷ்டப்படுத்த, அதைப் பொறுக்கமாட்டாமலிவன் அப்போது தன் பிதாவாகிய ஆத்மாவை நினைத்துத் தெய்வமே சரணமென்று கதற, அதைக்கேட்டு ஆத்மராஜன் மிகவும் இரக்கத்துடன் தன் புத்திரனாகிய ஜீவனுக்கு இப்போதாகிலும் நல்ல புத்தி வந்ததே யென்று சந்தோஷித்துக் குரு ரூபத்தை யெடுத்துக் கொண்டு அவன் நிஜநாயகியான சுமதியையும், அவள் குமாரர்களான விவேகாதி

கலையும், பின்னும் அநேக இஷ்டர்களாகிற சைன்னியத்தையும் சேர்த்துக் கொண்டு பஞ்சகோசமாகிய கோட்டையைத் தானாக மயங்கி அதற்குள் எதிரிகளாற் செய்யப்பட்ட பீடைகளால் அகப்பட்டு வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிற ஜீவனுக்குப் போதிக்கக் குரு ஆரம்பிக்கும்போது, எதிரிகளாகிற இராகாதிகள் தங்களைச் சேர்ந்த பிரபஞ்சமே சத்தியமென்றும், பிரஹ்மமில்லை யென்றும், நீ கர்த்தா, நீ இந்தக் கருமங்களைவிட்டால் கெட்டுப்போவாயென்றும், அதற்காக சில கருமகாண்ட வசனங்களையும் போதித்து மயக்கும்போது இந்த ஜீவன் மயங்கிப்போய்த் திரும்பவும் குருவினிடத்தில் வந்து, இந்தக் கர்ம சண்டாளர்கள் இப்படிப் போதித்து என்னை மயக்குகிறார்களே நானென்ன செய்வேனென்று கதறும்போது சுருதியுக்தி யனுபவங்களால் அந்த மயக்கந் தீரும்படி போதிக்க, இதை அந்த சத்துருக்களிடத்தில் சொல்லவே அவர்கள் மிகவுங் கோபித்து, அந்தக்குரு மிகவும் மாயாவி, வஞ்சகன், உன்னை ஏய்க்கிறான் என்றும், அவன்தான் கெட்டதுமல்லாமல் உன்னையுங் கெடுக்க வந்திருக்கிறானென்றும் சொன்னதைக்கேட்டு மயங்கி, இங்குமங்கும் போக்குவரத்தாயிருக்கும் காலத்தில் ஈஸ்வரானுக்கிரகத்தினால் இவனுக்காகவே ஒரு யுக்தியுண்டாயிற்று. அதாவது:—இப்பொழுது இரண்டு மார்க்கங்களில், எந்த மார்க்கஞ் சுகத்தைக் கொடுக்கும்? எது துக்கத்தைக் கொடுக்குமென்றாலோசித்து, நாம் அனாதி காலமாய் இதுவரையில் இந்த லோக மார்க்கத்திலிருந்ததினால் துக்கமே யொழிய சுகலேசமுமில்லையென்று நிச்சயித்து, இனி யொருக்காலும் இந்த அவித்யா குமாரர்களான இராகாதிகளுடைய உறவு கூடாதென்றும், இவர்களை யெவ்விதமாக விலக்குவோமென்றுமாலோசித்து, வித்தியா குமாரர்களான விவேகாதிகளுடன் வந்துசேர்ந்தான். அவர்களிவன் சங்கதியைக்கேட்டு இவனைத் தங்களுக்கு எஜமானாயிருக்கிற குருவினிடத்தில் கொண்டுபோய் விட்டு, இவன் சங்கதியைத் தெரியப்படுத்தினார்கள். அப்பொழுது, குருவானவர் இவன்பேரில் கடாக்ஷத்தினால் இவனோடே சில கேள்வி உத்தரவின்பேரில் அனுக்கிரகஞ் செய்கிறார். 1-வது, எல்லாருஞ் சுகம் வேண்டுமென்று பிரார்த்திக்கிறதினால் நாம் ஆனந்த சொரூபியென்றறிக; 2-வது, மூடனென்று சொன்னால் சகலருக்குங் கோபமுண்டாகையால் நாம் அறிவென்றறிக; 3-வது, எல்லாம் படித்துச் சகலத்தையும் மறந்தாலும் தன்னை மறக்காதபடியினால் நான் நித்தியனென்றறிக; நீ சிரஞ்சீவி யென்று சொன்னால் சந்தோஷத்தை யடைகிறபடியால் சத்ரூபியென்றும், நீயே பிரஹ்மமென்றும், நீ கர்த்தாவில்லை யென்றும், ஜகத்துமித்தை என்றும் அறியென்று உபதேசித்தவுடன், இவன் குருவைப் பார்த்து என் நிஜ வடிவமான சச்சிதானந்தம் எனக்கு விளங்காமலிருப்பதற்குக் காரணத்தையும், விளங்குகிறதற்கு உபாயங்களையும் அனுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்துக்கேட்ட சிஷ்யனுக்குக் குரு சொல்லுகிறார்; உன்னை நீ மறப்பதற்கு முக்கிய காரணம், நீ இப்போது கலியாணஞ் செய்திருக்கிற அவித்யா குமாரியான குமதி யென்கிற சண்டாளக் கன்னிகையைச் சுமதி யென்கிற நிஜ நாயகியால்

விரட்டி, ஆவரண விக்ஷேபமென்கிற மேற்படி சண்டாளக் கன்னிகைகளையும் விசாரணை சொரூபத் தியானமென்கிற கன்னிகைகளால் விரட்டி, அசத்துவம் அபானமென்கிற கள்ளையும் சாராயத்தையுங் குடித்ததினால் வந்திருக்கிற மயக்கத்தை, பரோக்ஷ அபரோக்ஷ ஞானமாகிற குளிகையால் தீர்த்துத் தேகோகமென்கிற மாம்ச பக்ஷணத்தாலுண்டாயிருக்கிற மதத்தை, பிரஹ்மாகமென்கிற அமிர்தத்தால் நிவர்த்தித்துத் திரிலோக சஞ்சாரம் பண்ணுகிற சங்கல்பமாகிற காலை நிர்விகல்பமென்கிற கத்தியால் வெட்டிப் பிரபஞ்ச விஷயவாசனா ரூபமான சஞ்சித கருமத்தையும், அதினாலுண்டாகிற ஜனன மரண துக்கங்களையும் ஞானாக்கினியாலெரித்துத் தாபத்திரயாக்கினியா லுண்டாயிருக்கிற தாபத்தைப் பிரஹ்மாகார விருத்தியாகிற அமிர்த வருஷத்தாற் போக்கடித்து, ஸ்திரீகளென்கிற மகாமாயா யந்திரத்தில் மன்மதனாலகப்பட்டு வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிற புத்தியைத் தெளிவிப்பதற்கு, அந்த ஸ்திரீகளிடத்திலுள்ள அத்தியந்தா சுத்தங்களையும் அனர்த்தங்களையும் பிரித்தால் அத்தியந்தம் அசத்தாய்ப் போகிற சுபாவத்தையும் காண்பிக்கிறதாயிருக்கிற விவேகமாகிற நேத்திரத்தைக் கொடுத்து, வைராக்கியமாகிற சக்ராயுதத்தால் அந்த யந்திரத்தை யுடையவளான அவளையுஞ் சம்ஹரித்து, இவனைக் கரையேற்றி, ரஜோகுண ரூபமான அந்தக்கரணத்தையும், அதினாலுண்டான இராகாதிகளையும், அதினாலுண்டான வாசனாத்திரயங்களையும், அதினாலுண்டாயிருக்கிற ஈஷணாத்திரயங்களாகிற விலங்குகளையும், சத்துவ குணத்தாலும், மைத்திரியாதிகளாலும், சத்வாசனையினாலும், நிராசையென்கிற கத்தியினாலும் நிவர்த்தித்துப் பஞ்சகோசங்களாகிற கோட்டையை அதத்வியாவிர்த்திலட்சணையாகிற யானைகளாலிடித்து, இவனுக்கு வந்திருக்கிற சகலவிதமான துக்கத்தையும் மயக்கத்தையும் போக்கடித்துச் சுமதியென்கிற பெண்ணோடே பிரஹ்மமே நானென்கிற நிச்சயமான சிங்காசனத்தில் வைத்து, ஐக்கியமான பட்டாபிஷேகஞ் செய்து, அழியாத வாழ்வோடே சுகிக்கும்படிச் செய்தார். ஆகையால் இந்த ஸ்ரீ சற்குரு கடாக்ஷத்தை ஒருக்காலும் மறக்கத் தக்கதன்று.

## 44-வது தரங்கம்.

[அ-கை] குருநாதன் எல்லாருடைய ஹிருதயத்திலும் இவ்விதமாயிருக்கிறாரென்று சொல்லி, அவரை மறக்காமற் சமீபத்திலிருக்கிறதாகவெண்ணி, அசுத்த வாசனையைத்தள்ளி, சுத்த வாசனையுடன் சகஜானுபவம் அடையும்படிக்கு யுக்தியுடன் சொல்லப்படுகிறது:—

அந்தக் குருநாதன் சகல ஹிருதயங்களிலும் எப்படி யிருக்கிறாரென்றால், எல்லாருடைய ஹிருதயமாகிற எள்ளுக்குள் எண்ணெய்போலவும், இருதயமாகிற தயிருக்குள் வெண்ணெய் போலவும், இருதயமாகிற தன்வீட்டுக்குட் புதையற்போலவும், இருதயமாகிற மணலுக்குள் ஜலம்போலவும், இருதயமாகிற கட்டைக்குள் அக்கினிபோலவும், இருதயமாகிற புஷ்பத்துக்குள் வாசனைபோலவும், இருதயமாகிற மணிக்குட் சரடுபோலவும், இருதயமாகிற சிப்பிக்குள் முத்துப்

போலவும், இருதயமாகிற சரீரத்துக்குட் பிராணன்போலவும், இருதயமாகிறஆகாசத்துக்குச் சூரியன்போலவும், இருதயமாகிற தேனுக்கு வண்டுபோலவும், இருதயமாகிற நாட்டுக்குத் தேன்போலவும், இருதயமாகிறவீட்டுக்குத் தீபம்போலவும், இருதயமாகிறவனத்துக்குப் பூங்கொத்துப்போலவும், இருதயமாகிற இராத்திரிக்குப் பூர்ணசந்திரன்போலவும், இருதயமாகிற தாமரைப் புஷ்பத்துக்குச் சூரியன் போலவும், இருதயமாகிற சொர்க்கத்துக்குக் காமதேனு முதலானதுபோலும், இருதயத்திலிருக்கிற தாபத்திரயமாகிற காட்டுத்தீக்கு அமிர்த வருஷம்போலவும், இருதயமாகிற கன்னிகைக்கு நாயகன்போலவும், இருதயமாகிற தாமரைக்கு அம்சம்போலவும், இருதயமாகிற மயிலுக்கு மேகம்போலவும், இருதயமாகிற கோவிலுக்குச் சிவலிங்கம்போலவும், இருதயமாகிற சம்புடத்துக்கு மணிபோலவு மறியத்தக்கது. இனி இருதயமாகிற ஆரோபத்துக்குக் குருவை அதிஷ்டானமாகச் சொல்லுகிற பிரகாரமாவது:—இருதயமாகிற கடங்களுக்கு மண்போலவும், இருதயமாகிற ஆயுதங்களுக்கு இரும்புபோலவும், இருதயமாகிற ஆபரணத்துக்குத் தங்கம்போலவும் அறிக. இனி, துஷ்ட இருதயத்தை நிவர்த்திக்கிற குருவின் மகிமாவிசேட மறியத்தக்கது. அதாவது:—இருதயமாகிற கொசுக்களுக்குத் தவளைபோலவும், இருதயமாகிறதவளைக்குப் பாம்புபோலவும், இருதயமாகிற பாம்புக்குக் கருடன்போலவும், இருதயமாகிற இராவணனுக்கு இராமர் போலவும், இருதயமாகிற சூரபத்மாவுக்குச் சுப்பிரமணியர்போலவும், இருதயமாகிற சமுத்திரத்துக்கு அகஸ்தியர்போலவும், இருதயமாகிற அஞ்ஞான இருட்டுக்கு பிரஹ்மக்ஞான சூரியன்போலவும், இருதயமாகிற கரையானுக்குக் கரடிபோலவு மறிக. இனி, பிராந்தியான சித்தத்துக்குக் காரணமான குருவுக்கு விவர்த்த திருஷ்டாந்தமாவது:—இருதயமாகிற சித்திரங்களுக்குச் சுவராகவும், இருதயமாகிற கானல் ஜலத்துக்குப் பூமியாகவும், இருதயமாகிற பாம்புக்குப் பழுதையைப் போலவும், இருதயமாகிற இந்திரஜாலத்துக்கு ஆகாசம்போலும் விளங்காநின்ற மத்குரு * பிரஹ்மானந்த தேசிகரை நீ நினைத்துச் செய்யவேண்டியதாவது:—அந்தத் தேசிகரை மறக்காமலும், சமீபத்திலேயே யிருக்கிறாரென்று அறிந்து, இருதயமாகிற வீட்டிலிருக்கிற வாசனைகளாகிற குப்பைகளை நம்குருக் கிருபையாகிற விளக்குமாற்றால் கூட்டிச் சாவதான சித்தமாகிற காவற்காரர்களை நேமித்துச் சதா காலமும் ராகத்துவேஷங்களாகிற அக்குழந்தைகளுக்கு இடங்கொடாமற் பண்ணிச் சாதுக்களாகிற ரித்துக்களோடேகூட அறிவாகிற அக்கினியை விசாரமாகிற ஆச்சியசமித்துக்களால் ஜொலிதம்பண்ணி, அஞ்ஞானமாகிற பசுவினுடைய தேகாத்ம புத்தியாகிற வபையெடுத்து மேலேசொன்ன அக்கினியில் ஓமம் பண்ணிச் சர்வாத்மபாவமாகிற அவபிருத ஸ்நானம்பண்ணி, விபரீதபாவனைகளாகிற நாயை விரட்டி, சம்சயங்களாகிற சண்டாளரையும் விரட்டி, விக்ஷேபங்களாகிற வீணதிவீணருடன் பேசாமல் நிருவிகல்பமாகிற மௌனத்திலிருந்து, பூத பௌஷிய வர்த்தமானப் பிரதிபந்தங்களாகிற தேவ ரிஷி பிதுருணங்களை

* இது ஸ்ரீ பாலாநந்த சுவாமிகளது ஆக்ஞை.

வாசனைக்ஷய மனோநாச தத்துவக்ஞானங்களாகிற பிராதஸ்ஸவன மாத்தியான்ன சாயம்சவன கருமங்களால் தீர்த்து, சஞ்சிதங்களாகிற பஞ்சுப்பொதிபோ லிருக் கிறபாவங்களை ஞானக்கினியாற் கொளுத்தி, ஆகாமிய கர்மங்களாகிற அசுரர் களை அகர்த்துருத்துவ புத்தியாகிற ஆயுதத்தினால் விரட்டி, பிராரப்தங்களாகிற குழந்தைகளை போகங்களாகிற அன்னத்தைப் புஜிக்கச் சொல்லி, ஜீவன் முக்தி யாகிற ரம்பையோடேகூட சகஜானுபூதி பரவசமென்கிற சுகத்தை எப்பவும் இடைவிடாமல் அனுபவித்து வரும்படி அனுக்கிரகம்பண்ணின குரு கடாக்ஷத் தையும், எப்பவும் மறவாமலிருக்கும்படி அனுக்கிரகம் பண்ணின மகிமையையும், எல்லாச் சாதுக்களும் பார்த்துக் கொண்டாடிக்கொண்டிருக்க வேண்டியது.

## 45-வது தரங்கம்.

[அ - கை.] தீவிர முமுக்ஷுவின் சித்தலக்ஷணஞ் சொல்லுகிறார் :—

தீவிர முமுக்ஷுவினுடைய சித்தமானது எப்போது குரு மூர்த்தியைத் தரிசனம் பண்ணப் போகிறோமென்று தபித்துக் கொண்டிருக்கும் [எ-தி] கோடைக்காலத்திற் கொண்டாரணியத்து வெய்யலில் தபித்துக்கொண்டிருக்கிற வனுக்கு எப்போது ஜலத்தைக் காணப் போகிறோமென்று இருப்பதுபோலும், இருட்டில் வழிதப்பி முள்ளுக்கல்லு மேடுபள்ளங்களில் தட்டுண்டு, கரடி புலி முத லானவற்றின் சப்தம்கேட்டு, மகா பீதியடைந்து இருக்கிறவன் எப்போது சூரிய தரிசனங்கிடைத்து விடியப்போகிறதென்று எண்ணுவதுபோலும், அத்தியந் தங் காமவிகாரம் வந்தவன் அதிரூபவதியான தன் பிராண நாயகியா யிருக்கிற ஸ்திரீயைப் பார்க்கப்போவது போலும், பரீக்ஷை கொடுத்திருக்கிற ஒவ்வொரு வரும் காலியானவேலை தனக்கே கிடைக்கவேணுமென்று நினைத்து கவர்னர் முத லானவர்கள் பேட்டிக்குக் காப்பதுபோலும், நடராஜாவினுடைய நர்த்தன தரி சனத்துக்காகப் பதஞ்சலி வியாக்கிரபாதர்கள் காத்துக்கொண்டிருந்ததுபோலும், கரையில் போடப்பட்ட மீன்குஞ்சு ஜலத்தில் விழத்துடிப்பதுபோலும், தேளால் கொட்டுப்பட்டவன் மந்திரவாதியைப் பார்க்கத் தவிப்பதுபோலும், திருமங் கலியங் கெட்டுப்போன சுமங்கிலி மறுபடி அதைக் கட்டிக்கொள்ளத் தவிப்பது போலும், வெகுகாலம் பிள்ளையில்லாமலிருக்கிறவள் பிள்ளை பிறக்கத் தவிப்பவள் போலவு மிருக்குமென் றறியத்தக்கது.

## 46-வது தரங்கம்.

[அ - கை.] ஈஶ்வரனாகிய ரயில்வே கம்பேனிக்காரன் சரீரங்களாகிற ரயில் களை யுண்டுபண்ணி யிருக்கிறதைப்பற்றிச் சொல்லப் படுகிறது :—

அப்படி அந்த ஈஶ்வரன் இந்தத்தேக ரயிலை நடத்துகிறவிதமாவது:—சித்த மாகிற பூமியிலிருக்கிற இராகாதிகளாகிற செடி கொடிகளை நிஷ்காம கர்மமாகிற ஆயுதத்தால் வெட்டி, நிரதிசய பக்தியாகிற அக்கினியால் அவற்றைச் சாம்ப லாக்கி, நித்தியா நித்திய விவேகமாகிற மண்வெட்டியால் ரோட்டைச் சமப் படுத்தி, விஷயவாசனைகளாகிற முள்ளுக்கல்லுகளைத் தள்ளி, வைராக்யமாகிற சரளைபோட்டுக் கெட்டித்துச் சமமாகிற ரூற் பிடித்துத் தமமாகிற கட்டைகளைப்

பரப்பி, உபரதியாகிற ஆணியடித்து, அதற்குச் சரியாய் திதிக்ஷையாகிற மண் போட்டு, உரப்பித்து சிரத்தை சமாதானமாகிற இரண்டு தண்டவாளங்களையும் பாகியாந்தரங்களாகிற இருபக்கத்திலும் பொருந்தச் செய்து மோக்ஷ ஆசையாகிற வேகத்தோடே கூடியிருக்கிற ரயில்வண்டியை அந்தத் தண்டவாளத்திலேற்றிச் சிரவணமாகிற கரியைப்போட்டு மனனமாகிற தீமூட்டி நிதித்தியாசனமாகிற தண்ணீரைக் கட்டிச் சமாதியாகிற ஓட்டம் விட்டுக்கொண்டிருப்பதால், முமுக்ஷுக்களாகிற யாத்திரை ஜனங்கள் வாசனாத்திரயங்களாகிற பணத்தைச் சற்குருவாகிற துரையிடத்தில் கொடுத்து, அபரோக்ஷ ஞானமாகிற டிக்கட்டைப் பெற்றுச் சுவானுபூதியாகிற ரயிலேறி, மோக்ஷமாகிற காசிக்குப் போய் பிரஹ்மானந்தமாகிற கங்கையில் முழுகவேண்டியது. இது தானே இன்னொரு விதமாய்ச் சொல்லப்படுகிறது:—ஈஸ்வரன் ரயில்வேக்காரன்; முமுக்ஷுக்கள் யாத்திரைக்காரர். அதிசுலபமாய் மோக்ஷமாகிற காசிக்குப் போவதற்காகக் கிருபையுடன் கர்மம் பக்தி யோகம் முதலான கால் நடை வழியிற் கலியாகிற கள்ளர் பயம் மிகுந்திருப்பதால் ஒருவருங் காசிக்குப் போய்ச்சேராதிருப்பதைப்பற்றி ஆதியிலும் சனகாதிகளாகிற முமுக்ஷுக்களுக்குக் கைலாசமாகிற சீமையில் வேதாந்தமாகிற ரயிலைத் தக்ஷிணாமூர்த்தியாகிற கம்பேனிக்காரருண்டுபண்ணி அவர்களிடத்திலிருந்த கருத்ருத்துவாதி அஞ்ஞானம் வரையிலுள்ள பணத்தை வாங்கிக்கொண்டு அபரோக்ஷ ஞானமாகிற டிக்கட்டைச் சனகாதிகளுக்குக் கொடுத்துக் கரையேற்றியிருப்பதுபோல் அந்தக் குருவாகிய துரையே இந்த லோகமாகிற இந்தியாவில் இவடத்திலுள்ள முமுக்ஷுக்களாகிற இந்துக்கள் கரையேறுவதற்காக இந்த வேதாந்த ரயிலை நடத்திவருகிறாரென்று அறிந்து சகலருங் கடைத்தேறக்கடவர்கள்.

## 47-வது தரங்கம்.

[அ - கை.] குருநாதன் மகிமை சொல்லப்படுகிறது:—

தாபத்திரய துக்கத்துக்குப் பூரண சந்திரனையும், அஞ்ஞானாந்தகாரத்துக்கு ஞான சூரியனையும், அசுத்த வாசனையாகிற வேருக்கு அக்கினியாயும், அகம்பாவமாகிற யானைக்குச் சிங்கமாயும், ஜனனமரண வியாதிக்குச் சித்த குளிகையாயும், மனசாகிற முசலுக்குத் தீரனாகிற வேடனையும், சம்சயங்களாகிற பருவதங்களுக்கு வச்சிராயுதமாயும், அவஸ்தாத்திரயங்களாகிற திரிபுரங்களை எரிக்கிறதில் ஞானேஸ்வரனையும், இந்திரியங்களாகிற திருடர்களுக்கு ஞான சூரனையும், முமுக்ஷுக்களாகிற விட புருஷர்களுக்கு வியாதியில்லாத தாசியாயும் குருநாதனிருக்கிறதுந் தவிர, லோகத்தில் வேதாந்தத்திலிருக்கிற சில பாகங்களைப் பார்த்து அனுபவமில்லாமல் சந்தோஷப்படுகிற உல்லாச ஞானிகளும், பெரியவாளைக் கண்ட வேளையில் இவனும் ஞானிபோல நடிக்கிற சம்மந்த ஞானிகளும், பத்துப்பேர் கூடுகிற காலத்தில் வேதாந்த வார்த்தைகளைச் சொல்லுகிற உற்சவ ஞானிகளும், விவகாரத்தில் மட்டுக்கும் கிரியாத்துவிதம் பண்ணுகிற அசட்டாள ஞானிகளும், சபையில் சன்மானம் வாங்குஞ் சமயத்தில் அத்வைதப்

பிரசங்கம் பண்ணிச் சபை கலைந்தபின் துவைதியாயிருக்கிற வேஷ ஞானிகளும் கிளிப்பிள்ளையைப்போல வாயினால் மட்டும் எல்லாம் பொய்யென்று சொல்லிக்கொண்டிருந்து ஒரு ஆபத்து வந்த வேளையில் அழுகிற வாசாக்ஞானிகளும் போலல்லாமல் தெரிசன மாத்திரத்தாற் சகல சந்தேகங்களையும் வாசனையோடே க்ஷயம்பண்ணித் தன்னை நித்தியானந்தமாய்ப் பண்ணுவிக்கிறபடியால், நம்முடைய குருநாதனுக்குமேல் ஞானனுபவத்தில் நிருடமான குரு எந்தக் காலத்திலுங் கிடையாதென்று அசுவத்தநாதன் நிச்சயம்.

## 48-வது தரங்கம்.

[அ - கை.] அகங்காரத்தோடே கூடின மனது குரு சமீபத்திலேயேயிருக்கவேணுமென்று சொல்லப்படுகிறது:—

இந்த மனதாகிற மகதகங்காரங்கொண்ட மதயானைக்குக் குருநாதனாகிற மாவுத்தனும், சாதுக்களாகிற துறட்டியும், குரு சமீப சிஷ்ருஷைகளாகிற சங்கிலிகளும் இல்லாவிட்டாற் கோரவிருத்தியாகிற மதங்கொண்டு பிரபஞ்ச வியாபாரமாகிற காட்டுக்கு விரைந்தோடிப் போகுமாகையால், மேற்கண்ட யானையைக் கைவசப்படுத்த வல்லமையுள்ள குருநாதனாகிற மாவுத்தனுக்கு மேற்படி யானையை வித்து அவர் ஆக்ஞையாகிற வாளைத்தண்டைப் போட்டுக் கோரவிருத்தியாகிற மதத்தை யிறக்கிப் பிரபஞ்சமாகிற காட்டுக்குப் போகாமல் அவரால் போடுகிற பிரஹ்மானந்த விசாரமாகிற கரும்புகளைத் தின்னும்படிச் செய்து, சுகதுக்கமாகிற பசியை ஆற்றிக்கொண்டு, குரு கிருபையாகிற ஜலின்பேரில் வைக்கப்பட்டிருக்கிற சிரவணார்த்தமாகிற அவுதாவை யேற்றி, மனனமாகிற மணிகட்டி, நிதித்தியாசனமாகிற பட்டணத்தாரைச் சந்தோஷஞ் செய்வதற்காகச் சுருதி யுக்தி அனுபவங்களாகிற ஆபரணங்களை குரு கடாக்ஷமாகிற கையால் அலங்காரம் பண்ணிச் சாக்ஷியாகிற பிரபுவைச் சமாதியாகிற ஏணி வழியாய் அந்த மனதாகிற யானையின் பேரில் வைக்கப்பட்டிருக்கிற சிரவணப்பொருளாகிற அம்பாரியின் பேரிலேற்றி, சுவானுபவமாகிற பட்டணப் பிரவேசஞ் செய்துகொண்டு, சகல ஜனங்களாகிற யானைகளுக்குள் ஜீவன் முக்தனென்கிற பட்டத்தானையென்ற கிதாப்பும் பெற்றுத் துக்கநிவர்த்தி, தடையற்ற ஆனந்தம், நித்திய திருப்தியாகிற அரிசி நெய் சர்க்கரை முதலான சத்பதார்த்தங்களாற் சேர்க்கப்பட்ட கவளத்தை யதேஷ்டமாய் எப்பொழுதும் புஜிக்கும்படி செய்த பிரகாரம் அந்த யானையும் புஜித்து வாழ்ந்துகொண்டிருப்பதைச் சகல முமுக்ஷுக்களாகிற யானைகளுமறிந்து இந்தப்படி பட்டத்தானையாகவாகி வாழக் கடவதென்று குருநாதன் ஆக்ஞையாயிருக்கிறதைச் சகலரும் அறியத்தக்கது.

## 49-வது தரங்கம்.

[அ - கை] ஆனந்த ராச்சியத்துக்கதிபதியான நானென்கிற ஆத்ம ராஜன் அஞ்ஞானமென்கிற சாராயத்தைச் சாப்பிட்டதால் வந்த கெடுதலும், சற்குரு கிருபையால் மயக்கந் தெளிந்து சக்ரவர்த்தியாய் வாழ்ந்துகொண்டிருக்கிறதும் சொல்லப்படுகிறது:—

ஒரு சக்ரவர்த்திபோலிருக்கிற நானென்கிற ஆத்மராஜன் ஆனந்தமென்கிற ராச்சியத்துக்கதிபதியா யிருந்தும், அஞ்ஞானமென்கிற சாராயத்தை நிறையச் சாப்பிட்டு, ஸ்திரீ முதலான துர்வாசனை மாம்சத்தையும் புஜித்து, ஆவரணமென்கிற இருட்டறையில் வசிக்கிற கர்மமென்கிற விபசாரியிடத்திற் சேர்ந்து, எழுவகை ஜன்மங்களாகிற வியாதிகளை யடைந்து, விக்ஷேபமென்கிற ரணங்கண்டு, தேகமென்கிற உடைசல் தேரிலேறிக்கொண்டு, அதில் கர்மேந்திரியங்களாகிற கழுதையைக் கட்டிக்கொண்டு, இவனுக்குமேல் அவிவேக சாராயத்தைக் குடித்து மயங்கிப்போயிருக்கிற புத்தியாகிற சாரதி தேரோட்டப் பிராணாதி வாயுக்களாகிற அறுதக் கடிவாளமும் நழுவிப்போக, விஷய வாசனையோடே கூடிய மனதென்கிற டபேதார் இந்தச் சீவனுடைய அறிவாகிய சிகையில் ஆசையென்கிற கயிற்றைக் கட்டி, மனோராச்சியமென்கிற பின்னாலே யிழுக்க, ஞானேந்திரியங்களாகிற சேவுகர்கள் தங்கள் பெண்களான சப்தாதி விஷயங்களாகிற தாசிகளிடத்தில் இவன் கையைப்பிடித்து முன்னே யிழுத்துப் பாவங்களாகிற குமார்க்கத்திற் கூட்டிக்கொண்டு போகும்போது, யோனிகளாகிற நரகப் பாழ்ங்கிணற்றில் இவன் சபரிவாரத்துடன் வெகுகாலம் விழுந்து தபித்துக்கொண்டு கிடக்கும்போது தெய்வ கதியால் ஸ்தாவர ஜன்மங்களாகிற அறுகம் வேரைப்பிடிக்க, அதுவும் அறுந்துபோன பிறகு, மறுபடி அந்த நரகக்கிணற்றில் விழுந்து தெய்வ கதியாற் கிருமி கீடங்களாகிற புற்றுமண்ணைப் பிடித்து ஏற அதுவும் இடிந்துபோக, ஜலஜந்துக்களாகிற தாமரை நூலைப் பிடித்துக்கொண்டு ஏற அதுவும் மறுபடி அறுந்துவிழ, பக்ஷி ஜன்மங்களாகிற முருங்கைக் கொம்புகளைப் பிடித்து ஏற அதுவும் ஒடிந்து மறுபடிவிழ, மிருக ஜன்மங்களாகிற சப்பாத்துக்கள்ளியைப் பிடித்துக்கொள்ளத் துக்கங்களாகிற முள்ளுக்கள் தைத்து மறுபடியும் விழ, தெய்வ கதியால் தேவ ஜன்மங்களாகிற பனைமரத்திலேற அவிடத்திலுள்ள போகங்களாகிற கள்ளைக் குடித்துக்கொண்டு மயங்கியிருக்கும்போது, புண்ணிய கர்மக்ஷயமாகிற காற்றடிக்கத் தேவர்களாகிற சாணார்கள் குப்புறத்தள்ள, பூலோகத்தில் மனுஷ்ய ஜன்மங்களாகிற கருவேலங்காட்டில் வந்து விழுந்து, முன்போலத் துக்கங்களாகிற முள்ளுக்கள் தைத்து, க்ஷுத்திர சுகங்களாகிற அந்த நிழலுக்காசைப்பட்டுக்கொண்டு, வெகுகாலம் வரை திரிகால சிந்தனைகளாகிற பூதப்பிரேத பிசாசங்களால் அதட்டப்பட்டுக்கொண்டு, அதினால் தேகவாசனை முதலான புண்களையுடையவனைக் காமக்குரோதங்களாகிற கள்ளர்கள் மிச்சமிருக்கிற புண்ணியமாகிற பணத்தைப் பறித்துக்கொண்டு யோனிகளாகிற பழய கிணற்றில் இவனைத் தள்ளிப்போட்டுப்போக, இவனும் அதிலிருக்கிற போக மோகத்தால் அதில் அகப்பட்டுக்கொண்டு, அப்படிக்கிடக்கிறதே அமிர்தமான மோக்ஷமென்று நினைத்து, அதிலும் இந்தக் கிணற்றுக்கு அந்தக் கிணறு மேலென்று போய் விழுந்துகிடந்து வருத்தப்படுங்காலையில் முன்போலவே எழுவகை ஜன்மங்களிலும் மாறி மாறிச் சுற்றிக்கொண்டு ஒருக்காலும் சுகப்படமார்க்கமில்லாமல் தபித்துக்கொண்டிருக்கிறான். இதில் மனுஷ ஜன்மமாகிற

கருவேலங்காடு ஒன்று தவிர, மற்ற இடங்களெல்லாம் இவனுக்குச் சுதந்திர மாக சஞ்சரிப்பதற்கு இடமில்லாததால் இவன் சுயராச்சியம்போய்ச் சேரப் போகிறதில்லை. கருவேலங்காட்டில் தானே தெய்வ கதியால் நிஷ்காமிய புண்ணியமென்கிற ஒரு மார்க்கந் தட்டுப்பட, ஈஸ்வரானுக்கிரகமென்கிற தைரிய முண்டாகச் சித்த சுத்தியாகிற பிரக்ஞைவர, நித்தியாநித்திய விவேகமாகிற கண் திறக்க, விஷய தோஷ திருஷ்டியினாலுண்டாயிருக்கிற வைராக்கியத்தால் தேவ போகம் முதலான அந்தக் கள்ளுச் சாராயம் வேண்டாமென்று தோன்றச் சமாதி ஷட்கமாகிற இஷ்டர்களுடைய போதனையாலுண்டாயிருக்கிற விவேகத் தால் ஞானேந்திரியங்களாகிற சேவுகர்களிடத்திலும், மனதாகிற டபேதாரிடத் திலும், அவர்களாற் கொண்டுவரப்பட்ட பாகியாந்திர ரூபமாயிருக்கிற பஞ்ச விஷயங்களாகிற தாசிகளிடத்திலும், ஸ்திரீ வாசனையான மதுமாம்சத்தினிடத்தி லும் அருசியை பிறக்க, மேலே சொல்லப்பட்டிருக்கிற இஷ்டர்களுடைய சக வாசத்தினாலுண்டாயிருக்கிற முமுக்ஷுத்துவத்தினால், இவன், சம்சார தாப மாகிற காட்டிலிருந்து தப்பித்துக்கொண்டோடும்போது, சாது ஜனங்களாகிற சொந்த ஜனங்கள் தட்டுப்பட அவர்களுறவைப் பிடித்துக்கொண்டு சற்குரு வாகிற பிதாவினிடத்திற் போக, அவர் கிருபையால் ஆத்மானாத்ம விசாரமாகிற விவேக திருஷ்டி யுண்டாக, அதனால் முன் தானாகப் பழகியிருக்கிற பஞ்சகோசா திகளான அனாத்ம ஜனங்களிடத்திலும், மனதாகிற டபேதாரிடத்திலும், நேதி நேதி யென்கிற விவேக ஞானமாகிற பாதாதிருஷ்டியுண்டாகி, அதன்பிறகு அப்படிப் பழகப்பழகத் தூங்கி விழித்தவன் போலத் தன் நிஜ சொரூபத்தில் விழித்துக்கொண்டு, முன் கண்டதெல்லாம் சொப்பனம் போல மித்யா திருஷ்டியிலிருந்து, அப்படி மித்யா திருஷ்டியில் தோன்றினதையும் தன்னைத் தவிர வேறில்லையென்று தன்மய திருஷ்டியாய்ப் பார்த்து, அதன்பிறகு தன்மய மாய்த் தோன்றின நாம ரூபத்தையும் தன்னிடத்தில் லயம் பண்ணுகிறதான பிரவிலாப திருஷ்டியிலிருந்து, அதின்பிறகு தன் சொரூப மாத்திரந் திருஷ்டி யில் தோன்றப் பிராரப்தமுள்ள வரையில் அவ்வநுபூதியிலிருந்து, பிற்பாடு விதேக முக்தியாகிற சக்ரவர்த்திப் பதவிக்குமேல் ஒரு பதவியுமில்லை. ஆன தால், இவனுமந்தப் பதவியை யடைந்து விதேக முக்தனானான். இப்படிக் கிரம மாய் அதை யடையும்பொருட்டு, இந்த அநுசந்தானத்தைக் குருபக்தியுள்ள சகல சாதுக்களும் சதா மறவாமலிருக்கவேண்டியது.

## 50-வது தரங்கம்.

[அ-கை.] ஞானி அஞ்ஞானியினுடைய பிராரப்த போகப் புஜிப்பு ஒரு திருஷ்டாந்தத்துடன் சொல்லப்படுகிறதுந் தவிர, ஞானியினுடைய நிச்சயம் மாறாதென்பதும் திருஷ்டாந்தத்துடன் சொல்லப்படுகிறது.

ஞானிகளுக்கும் அஞ்ஞானிகளுக்கும் திரிகரணங்களாற் செய்யப்பட்ட விவகாரம் சரியாயிருந்தாலும், பிராரப்த போகம் புஜிப்பதில் ஞானி மாவடுவைச் சாப்பிடுவது போலவும், அஞ்ஞானி மாம்பழத்தைச் சாப்பிடுவதுபோலவு

மென்று ஒரு அபிப்பிராயம். அதாவது, ஞானி கருத்தருத்துவமாகிற விரை பெருக்கும்வரை விடாமலே திரிபுடியைத் தன் வடிவமாய்ப் பார்த்து ஒன்றாய்ப் புஜிப்பதால், ஜன்ம காரணமான ஆகாமியமென்கிற கொட்டையும், மறு ஜன்ம மாகிற மரமும், முளைக்கிறதற்கு இடமில்லை. அஞ்ஞானி இதற்கெதிரிடையா யிருப்பதால் கருத்தருத்துவமாகிற கொட்டையும் மறு ஜன்மமாகிற மரமுமுண் டாகுமென்று அறிய வேண்டியது. அஞ்ஞானி வடுப் புஜிப்பதுபோலவும் ஞானி மாம்பழம் புஜிப்பதுபோலவு மென்று ஒரு அபிப்பிராயம். அதாவது:—ஸ்தூல சரீரமாகிற தோலும், சூக்ஷ்ம சரீரமாகிற சதையும், காரண சரீர மாகிற விதையும், ஆத்மாவாகிற ரசமும், ஒன்றாய்ச் சேர்த்துப் புஜிப்பதனால் கூடஸ்தர் முதற் சரீரம் வரையிலுள்ள கூட்டங்களையெல்லாம், பேதந்தெரியாமல் ஒன்றாய்ச் சேர்த்து லோகாயதர்கள் பாமரர்களெல்லாரும் பிரத்தியக்ஷமாய்த் தோற்றப்பட்ட நாம ரூபங்களையே பொருளாகக் கருதிக்கொண்டு, நானென்று சொல்லுகிறார்களென்கிற சுருதிப் பிரகாரம் அஞ்ஞானிகள் எல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்து அநுபவிக்கிறார்கள். ஆகையால், அஞ்ஞானியை வடுப் புஜிப்பவனுக்குச் சமானமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ஞானிகள் மாம்பழஞ் சாப்பிடுவதுபோலவென்பது எப்படியென்றால், ஸ்தூல சரீரமாகிற தோலையும், காரண சரீரமாகிற கொட்டையையுந் தள்ளிவிட்டுச் சூக்ஷ்ம சரீரத்தில் ஞானேந்திரிய, கர்மேந்திரிய, பிராணாதி வாயுக்களாகிற நார்களைத் தள்ளிவிட்டு, மநதாகிற சதையைச் சமாதியாகிற பல்லிற்போட்டுக் கடித்துச் சொரூப சுகமா கிற ரசத்தைமட்டும் தன்னுக்குள்ளிறக்கிக் கொண்டு, விருத்தியாகிற சக்கையை உமிழ்ந்துவிடுகிறார்கள். ஆகையால், ஞானிகள் பழஞ்சாப்பிடுவதாகச் சொல்லப் பட்டது. இதன் அந்தரங்கம் குரு முகத்தாலறிக. இப்பேற்பட்ட சுவாநுபவம் பண்ணவேண்டியதெப்படி யென்றால், சித்சொரூபமாகிற நாம் வாயுவைக் காட்டி லும் அதிவேகமுள்ளவன்போல விருந்தாலும், கல்லைக்காட்டிலும் அசையாம லிருப்பவனும்; ஆகாசத்தைக் காட்டிலும் ஒன்றிலுஞ் சம்பந்தப்படாதவனும், இந்தக் காற்றானது தளிர்களை அசைப்பதுபோல மனசு முதலான கரணங்களைச் சந்நிதான மாத்திரத்தில் அசைப்பித்துக்கொண்டும், சாரதியானவன் குதிரையை எப்படி நடத்துவனோ அப்படி இந்திரியக் கூட்டங்களை நடத்திக்கொண்டும், தேகமாகிற வீட்டில் எப்பொழுதும் மிகவும் கெட்டதான ஆசையையுடையவன் போலேயும், கர்மங்களைப் பண்ணுகிறவன்போலேயுமிருந்தும், தன்னிடத்திற் சுகமாய் ராஜாவானவன்போல அசங்கஸ்திதியிலிருந்து நாம் போகங்களைப் புஜிக்கிறோம். இன்னுமெப்படி யிருக்கிறோமென்றால், தீவிர பக்குவிகளால் எளிதாயடையத்தக்கவனும், இஷ்டமான பந்துவைப்போலச் சுவாதீனனும், எல்லாருடைய தேகத்திலிருக்கிற இருதய கமலத்துக்கு வண்டு போலேயும், எல்லாராலேயுஞ் சேவிக்கப்பட்டாலும் சம்பத்தையுடையவனுக்கு அகங்கார முங் கொர்வமு மெப்படியுண்டாகுமோ அப்படியில்லாமலும், புஷ்பங்களில் வாசனைபோலவும், பழங்களில் மதுரம்போலவும், எள்ளுக்குள் எண்ணெய்போல

வும், சகல தேகங்களிலும் சாக்ஷியாக நாமிருக்கிறோம். நீங்களும் இப்படி அநுசந்தானஞ் செய்துவரவேண்டியது. இந்த இடைவிடாத பழக்கத்தால் அநுபவிக்கப்பட்ட ஆத்ம சொரூபமானது ஒருகாலமும் மறக்கமாட்டாது. அது எதுபோலவென்றால், ஒரு தரம் பந்து வென்றறிந்தால் மறுபடி அவன் பந்து வல்லவென்று எப்படி வரமாட்டாதோ அப்படிப்போலும், பழுதையில் பாம்பு யில்லையென்று அறிந்த பின்பு மறுபடி பாம்புப் பிராந்தி வாராததுபோலும், பருவதத்திலிருந்து தாழ்வரையில் வந்த ஜலமானது மறுபடி பருவதத்தில் ஏறமாட்டாதது போலவும், தங்கமானது சேற்றில் அழுந்தினாலுஞ் சேறாகமாட்டாததுபோலவும், காம்பிலிருந்து விழுந்த பழத்தை மறுபடி எவ்வளவு பிரயாசைப்பட்டும் காம்பில் பொருத்தக்கூடாதது போலவும், பாறையிலிருந்து உடைத்தெடுத்த ரத்ன மணியை மறுபடி பாறையிற் பொருத்தக்கூடாதது போலவும், சண்டாளருடைய உத்சவமென்று தெரிந்த பிராமணன் அந்தக்கூட்டத்திற் சேராதது போலவும், தயிரைக்கடைந்து வெண்ணெயெடுத்த பின் அது அதிற்கிடந்தாலும் அந்த வெண்ணெய் மோரிற் சேராதது போலும், அப்படி ஞானியின் சொரூப நிச்சயம் மாறாமலிருக்கு மென்று அறியவேண்டியது.

## 51-வது தரங்கம்.

[அ-கை.] பிரஹ்மத்தைக்காட்டிலும் குரு அதிக மகிமையுடையவரென்று திருஷ்டாந்தத்துடன் சொல்லுகிறார். அதாவது:—

சகல சக்திகளு முள்ள பிரஹ்மம் பூமிஸ்தானமாகவும், அதிலுண்டாகிற ஜீவேஸ்வர ஜகத்துக்களாகிற வஸ்துக்களுக்குள்ளே ஜீவனாகிய இடையனும் மனமாகிற பசுவுஞ் சேர்ந்துகொண்டு, அவனால் செய்யப்பட்ட பாபபுண்ணிய ரூப காமிய கர்மமாகிற சூரிய கிரணத்தால் தபிக்கப்படுகிறதும், அவனாற் செய்யப்பட்ட நிஷ்காமிய கர்மமாகிற வருஷமானது வருஷித்த காலத்தில், ஈஸ்வர கிருபையாகிற புல்லானது உண்டாகிறது. அந்தப் புல்லை மனதாகிற பசுவானது புஜிக்கச் சித்த சுத்தியாகிற திருப்தியானது உண்டாகிறது. அந்தப் பசுவினிடத்திலிருந்து பாலானது எப்படியுண்டாகுமோ அப்படி யுண்டாகிற பால் ஸ்தானம் நித்தியா நித்திய வஸ்து விவேகம். அந்தப்பாலை இகாமுத்திரார்த்த பலபோக விராகத்தினாற் காய்ச்சிச் சமாதிஷட்கமாகிற உறையூற்றி முமுக்ஷுத்துவமாகிற கடைசல் கடைந்த பிறகு குருவாகிற வெண்ணெயுண்டாகிறது. அந்தக் குருவாகிற வெண்ணெயைச் சிரவணமாகிற சட்டியிற் போட்டு, மனனமாகிற அக்கினியிற்காய்ச்சி, நிதித்தியாசனமாகிற கரண்டியால் கிளரி, பிற்பாடு சமாதியாகிற பருவத்தில் அபரோக்ஷ ஞானமாகிற நெய்யாக ஆகிறது. சகஜ அநுபோக காலமாகிற போஜன காலத்தில் அந்த அபரோக்ஷஞான சொரூபியாயிருக்கிற குருவாகிற அந்த நெய்யை இடையனாகிய ஜீவபுருஷன் புஜித்து அழியாத திருப்தியை யடைகிறான். ஆகையால், மண்ணானது எங்கும் எப்பொழுதுமிருந்தும் ஒருவருக்குந் திருப்தியைக் கொடாமல், அந்த மண்ணே கிரமமாக வெண்ணெயாக ஆகிப் பசியைப் போக்கித் திருப்தியைக் கொடுப்பது போல

பிரஹ்மம் எப்போதும் எவ்விடத்திலு மிருந்தும் ஒருவருக்குந் துக்க நிவர்த்தி தடையற்ற ஆநந்தமாகிற இருவகைப் பிரயோஜநமுங் கொடாமல், அந்தப் பிரஹ்மமே குருவாகி வந்து, தன்னை யடைந்தவர்களுடைய ஜநந மரண துக்கத்தைப் போக்கித் தடையற்ற அழியாத ஆநந்தத்தைக் கொடுப்பதால், அந்தப் பிரஹ்மத்தைக் காட்டிலும் இவரே அதிக மகிமையுடையவரென்று சொல்லப்பட்டது.

52 வது தரங்கம்.

[அ-கை.] இராகாதி ராவணர்கள் வதையடையும் பொருட்டும், சாதுக்களான விபீஷணாதி மகரிஷிகள் ஜீவன் முக்திச் சுகத்தில் தடையின்றி யிருக்கும் பொருட்டும், ஆத்மாராமனான சீதாராமன் அவதாரமாய் மேற்கண்டபடி செய்து ஜீவன்முக்தியாகிற அயோத்தியில் வசிக்கிறது சொல்லப்படுகிறது. அதாவது:—

ஆநந்த மென்கிற தேசத்தில் அறிவென்கிற ராஜன் எப்பொழுதும் அழியாமலிருக்கும்போது, அவித்தை யென்கிற அசுர கன்னிகையுண்டாகி, இந்த ராஜனைத் தன்னுடைய மோக சக்தியால் மயக்கி, இவனைச் சேராமற் சேர்ந்து ரஜோகுணனான அகங்காரனென்கிற ராவணனைப் பெற்றுத் தமோகுணனான கும்பகர்ணனையும் பெற்று, இவர்களுக்கு ஒத்தாசை செய்வதற்காக ஆவரண சக்தி யென்கிற சூர்ப்பநகையையுங்கூடப் பெற்று, அதன் பிற்பாடு சத்துவகுணனென்கிற விபீஷணனையும் பெற்று, இவர்கள் பிரபலமாகி இந்த ராஜனுடைய மூத்தாளான சுத்தமாயையினுடைய பிள்ளையான போதனென்கிற குபேரனையுஞ் ஜயித்து, அவன் வசித்துக்கொண்டிருந்த சுவாநுபூதி யென்கிற லங்கையையும், சொதந்தரத்துவ மென்கிற புஷ்பக விமானத்தையும் பிடுங்கித் தன் சுவாதீனஞ் செய்துகொண்டு, இந்த அகங்கார ராவணன் வெகு காலமாய்க் கர்த்துருத்துவ மென்கிற செங்கோல் செலுத்திக்கொண்டு தேவகன்னிகைகள் முதல் நாக கன்னிகை வரையிலுள்ள சகல ஸ்திரீபோகங்களான கெர்ப்பவாசஞ் செய்து, அநேக தேவகண்டக ரிஷிகண்டகாதி பஞ்சமகாபாதகங்களைச் செய்து, இப்படி வெகு காலம் தூர்த்தனாய்க் காணப்பட்ட விஷயமாகிற சுராபானம் பண்ணிக்கொண்டு, சப்தமாகிற மயக்கத்தை யடைந்து பரிசமாகிற குழியில் விழுந்து ரூபமாகிற பிரமையிற் சுழன்றுகொண்டு, ரசமாகிற மாம்சபட்சணம் பண்ணிக்கொண்டு, கந்தமாகிற புகை குடித்துக்கொண்டு, எப்பொழுதும் துர்வசநங்களைப் பேசிக்கொண்டு, இம்சையாகிற கிரியையைச் செய்து கொண்டு, சரீர போஷணைக்காக அலைந்து கொண்டு, எப்பொழுதும் துர்மலங்களைக் கக்கிக்கொண்டு, இப்படித் துர்வியாபாரங்களைச் செய்து கொண்டு வருங்காலத்தில் இந்திரியாதிஷ்டாந தேவதைகள் இவன் இம்சையைப் பொறுக்க மாட்டாமல் பகவானாயிருக்கிற விஷ்ணுவினிடத்திற் போய் முறையிடும்போது, அப்போது அவர் சொல்லுகிறதாவது:—குருவாகிற ராமாவதாரம் பண்ணித் தன்னுடைய ஞாநசக்தியான சீதையை யுண்டு பண்ணி, உங்களுடைய அம்ச பூதர்களென்னும் சாதுக்களாகிற வாநரர்களையு முண்டு பண்ணிச் சகாயமாய்ச் சேர்த்துக் கொண்டு உங்கள் எதிரியான அகங்கார ராவணனையும் ராகத்துவேஷாதியாகிற

ராக்ஷசர்களையுஞ் சங்காரம் பண்ணி, உங்களுக்கெல்லாம் சுகமுண்டாகும்படி செய்கிறேனென்று சொல்லி, அப்படியே நிஷ்காமிய புண்ணிய மென்கிற அயோத்தியிற் சர்வக்ஞனென்கிற தசரதன் வயிற்றில் குரு வென்கிற பிரஹ்ம ஞானியான ராமனும், பாச வைராக்கிய மென்கிற லக்ஷ்மணனும், ஜீவகாருண் ணிய மென்கிற பரதனும், ஈஸ்வரபக்தி யென்கிற சத்துருக்கனும் அவதரித்தார் கள். மேற்படி இராமன், குரு பரம்பரையாகவே ஞானம் வரவேணு மென்பதை எல்லாருக்குந் தெரிவிக்கும் பொருட்டு, வைராக்கியத்தை யடைந்தவர்போலே காண்பிக்குஞ் சமயத்திற் புண்ணிய ரூபியான விஸ்வாமித்திரர், தான் செய்யும் சமதமங்களாகிற யாகத்துக்கு விக்னஞ் செய்கிற டம்பதர்ப்பாதிகளான மாரீச சுபாகுக்களை சம்ஹரிக்கிறதற்காக இந்த இராமனைக் கூப்பிட வந்த காலத்தில், இராமனுடைய வைராக்கியாதி குணங்களைக் கேட்ட விஸ்வாமித்திரருடைய ஆக் ஞைப்படி ராமன் சாக்ஷாத் பிரஹ்ம சொரூபியான வசிஷ்டரிடத்தில் ஞானத் தைப் புதிதாய் அடைந்தவர்போல அடைந்து, பிற்பாடு விஸ்வாமித்திரர் இரா மனை மேற்படி யாகரக்ஷணைக்காகக் கூட்டிப்போகும் போது எதிர்ப்பட்ட கோபி யாகிற தாடகையைச் சாந்தமாகிற பாணத்தினால் சம்மாரம் பண்ணி, மேலே சொன்ன டம்பமாகிற மாரீசனை ஈஸ்வரசாக்ஷியாகிற வாயு அஸ்திரத்தால் மோக சமுத்திரத்தில் தள்ளியும், தர்ப்பமாகிற சுபாகுவை நிரபிமானமாகிற அக்கினி அஸ்திரத்தாற் கொன்றும், மேற்படி ரிஷியும் யாகத்தைப் பூரணஞ் செய்து பிற் பாடு மேற்படியாருடன் வரும்போது, தேகாத்ம புத்தியான சிலா ரூபங்கொண் டிருந்த அகலியையைத் திருவடி தீக்ஷையாகிற பாத ஸ்பரிசத்தால் சித்தாகிய பெண்ணாக்கி, ஞான ஜனகனுடைய பிரதிக்ஞையான கருத்துருத்துவமாகிய தநுசைப் பங்கம் பண்ணி, சித் பிரஹ்ம ஐக்கியமாகிற சீதா விவாகஞ் செய்து வரும்போது, படாடோபமாகிற பரசுராமனுடைய பராக்கிரமத்தை அவரது தனுசு வழித்தாகவே பரிக்கிரகித்து அயோத்திக்கு வந்து கொஞ்சக்காலம் சமாதியாகிற ஐக்கிய போகஞ் செய்து வரும்போது, பிராரப்த கர்மப்பிரதி பாதக சுருதியாகிற மாதுரு வாக்கிய பரிபாலன நிமித்தியம், சீதாலெட்சுமண னுடன் இராமன் சம்சாரமாகிற தண்டகாரண்ணியத்துக்குப் போகும்போது, விசாரனென்கிற குகனால் ஆதரிக்கப்பட்டு, சந்தோஷமென்கிற பரத்துவாஜனால் பூஜிக்கப்பட்டுத் தேகாபிமானி யென்கிற விராதனை விசாரமாகிற கத்தியால் வெட்டி, அந்தத் தண்டகாரண்ணியத்திலுள்ள சமன் முதலான அத்திரி அகஸ்தி யர் முதலான ரிஷிகளுக்கு அகங்காராதிகளாகிற இராவணாதிகளை சம்ஹாரம் பண்ணுகிறேனென்று அபயப் பிரதானம் பண்ணிப் பஞ்சகோசமாகிற பஞ்ச வடியில் வசிக்கும் போது ஆவரண சக்தியாகிற சூர்ப்பனகை வந்து இந்த ஆத்ம இராமனையுஞ் சித்சக்தியான சீதையையும், பாச வைராக்கியனான லட்சுமணனை யும் கண்டு ஞானசக்தியான சீதையை விலக்கி, இவர்களோடே சம்போகஞ் செய்ய எத்தனிக்கும் போது, இராமன் மேற்படி லட்சுமணனுக்கு உத்தரவு கொடுத்தபடி அவரும் இவளுடைய பிரஹ்ம ஜகத்துக்களை ஒன்றாய்க்காண்பிக்கிற

நாசியையும் கோசாத்மாக்களின் பேதந்தெரிய வொட்டாமற் பண்ணுகிறநாஸ்தி நபாதி யென்கிற ஆவரணங்களாகிற இருஸ்தன்னியங்களையும் விவேக சக்கரத்தால் அறுத்துவிட்ட மாத்திரத்தில், இவள் ஜகத்தாகிற ஜனஸ்தானத்திலிருக்கிற தேகவாசனை லோகவாசனை சாஸ்திர வாசனை முதலான கரதூஷண திருசிர சாதிகளிடத்தில் வந்து அழும்போது, அவர்கள் விட்டிற்பூச்சி விளக்கில் விழவருவதுபோல, ராமாக்கினியிடத்தில் வந்து விழுந்து புகைஞ்சுபோன மாத்திரத்தில், இவள் அகங்கார ராவணன் காலில் அடிச்சு விழுந்து அழுதுகொண்டு சொல்லுகிறாள். மேற்படி தீரத்தில் மேற்படி மூவர்களும் வந்திருக்கிறார்கள், அதிற் கன்னியா ரத்னமான சித் சக்தியாகிற சீதையை உன்னோடே ஐக்கியஞ் செய்யத் தூக்கப் போகும்போது, மேற்படி இராமனது கடாக்ஷ சமிக்ஞையால் மேற்படி லக்ஷ்மணன் என்னை இக்கோலஞ் செய்தானென்று சொன்னதைக்கேட்ட இராவணன், அதிமோகத்தையும் அதிகோபத்தையுமடைந்து, டம்ப ரூப கபடனாகிற மாரீசனிடத்தில் வந்து, நீபோய் அந்தத் தம்பதிகளைப் பிரித்துவிட்டாயேயானால் சித்சக்தியாகிற சீதையைக் கொண்டுபோய் அனுபவிப்பேனென்றதற்கு அவன் ஆதியில் அவரால் அடைந்த வருத்தத்தையும், அந்தச் சீதையை அனுபவிப்பது உன்னாற் சாத்தியமாகாதென்றும் சொன்னதற்கு, இவன் அவனைப் பார்த்து இந்தக் கத்தியால் வெட்டுப்படுகிறாயா அல்லது போகிறாயா வென்று சொன்னதின்பேரில், மாரீசன் மோககரமாயிருக்கிற விஷய ரூபமான பொன்மான்வேஷம் போட்டுக்கொண்டு போய் சீதையை மயக்கினதால் அவள் இந்த மானைப் பிடித்துக்கொடுக்க வேணுமென்று கேட்கும்போது, அவருமிந்த மானைப் பிடிக்க வெளியிற் போகும்போது, வெகுதூரம் ஜாலஞ்செய்து தன்னையு மிழுத்துக் கொண்டு போவதைப் பார்த்து, சொப்பன திருஷ்டாந்த யுக்தியாகிற பாணத்தாற் கொன்றதும், அவன் மரிக்கும்போது ராமனுடைய குரல்போல கத்தி விழுந்த சப்தத்தைச் சீதை கேட்டு லட்சுமணரைப் பார்த்து இராமனைத் தேடி வாருமென்று சொன்னதற்கு, இவர் சூரியனை இருட்டு மறையாததுபோல இராமனை ஒருவரும் ஜயிக்கமாட்டார்களென்று சொன்னதைக் கேட்டுச் சீதை அவைராக்கியமாயிருக்கிற அநர்த்த வார்த்தையைச் சொன்னதைக்கேட்டுச் சகிக்காமல், இலக்ஷ்மணன் அந்த ஆசிரமத்துக்கு வெளியிற் புறப்பட்டுப்போனவுடன், அகங்கார ராவணன் சாதுரூபமான சந்நியாசி வேஷத்தை யெடுத்துக்கொண்டு வந்து ஞான சக்தியான சீதையை யெடுத்துக்கொண்டு போகும்போது, ஆபாச விவேக வைராக்கியமென்கிற பட்சங்களோடே மந்த முமுக்ஷுவான ஜடாயு வந்து இவனை மறித்து யுத்தம் பண்ணக் காமக்குரோதங்களாகிற கத்திகளால் வெட்டித் தள்ளிப்போட்டுச் சீதையை ஆகாச வீதியில் தூக்கிப் போகும்போது, மைத்திரியாதி சாதுகளாகிற சுக்ரீவன் முதலானவர்களைக் கண்டு, சுருதிகளாகிற வஸ்திரத்தில் ஞான சக்தியான சீதையைக் காண்பிக்கிறதான ஆபரணங்களை முடிந்து அவர்களுக்கு முன்னே போட்டாள். அந்த இராவணனும், சீதையை மோக சமுத்திர மத்தியிலிருக்கிற அனுபூதி யென்கிற லங்கா பட்டணத்திலிருக்கிற

நிவர்த்தியென்கிற அசோகவனத்தில், திதிக்ஷையென்கிற சிம்சுபா விருக்ஷத்தின்
கீழே வைத்துச் சத்விருத்தியாகிற திரிசடையுடன்கூட மற்றத் துர்விருத்திகளா
கிற இராக்ஷசிகளையும் இம்சிக்கும்படி செய்தான். அதன்பிறகு லக்ஷ்மணர்
ராமரைக் கண்டு, இரண்டு பேர்களும் தேகமாகிற ஆசிரமத்தில் ஞானசக்தியாகிற
சீதையைக் காணாமற் தேடி வரும்போது, அகங்கார ராவணனால் அடிபட்டுக்
கிடக்கிற மந்த முமுக்ஷுவான ஜடாயுவாற் சங்கதி தெரிந்துகொண்டு, அவருக்
குச் சித்த சுத்தியாகிற சமஸ்காரஞ் செய்துபோட்டுத் துராசையென்கிற கபந்
தனையும் நிராசையாகிற கத்திகளால் சங்காரம் பண்ணிச் சிரத்தை
யென்கிற சபரிக்கு அநுக்கிரகம் பண்ணிப்போட்டுப் போகும் போது,
முதிதையென்கிற அனுமார் வந்து இவர்களைக்கண்டு மைத்திரி யென்கிற
சுக்கிரீவனிடத்திற் சிநேகஞ் செய்துவைத்து, அவனுக்குப் பகைவனான துராக்
கிரகி யென்கிற வாலியை நிரகங்காரமாகிற அம்பால் சங்காரம் பண்ணிச் சுக்ரீவ
னுக்குக் கிஷ்கிந்தை யென்கிற சொர்க்கத்தில் தாரையென்கிற இந்திராணியுடன்
சேர்த்துச் சுகிக்கும்படி செய்து, சாதுக்களாகிற வானரர்களைச் சீதையைத்
தேடிப்போகச் சொல்லும்போது முக்கிய சாதுவான அனுமாரிடத்தில் தன்
சொரூப ஞாபகம் பண்ணுகிறதாகிற மோதிரத்தைக்கொடுத்து அனுப்புவித்தார்.
அந்த வானரர்களும் அனுமாருடன் தேடிக்கொண்டு சமுத்திரம் வரையிலும்
வந்து சேர்ந்து, மேல் போக இடமில்லாமல் விழித்துக்கொண்டிருக்கும்போது,
சூசக குருவான சம்பாதியால் சீதையிருக்கிற இடந்தெரிவிக்கப்பட்டு முதிதனான
அனுமானும் குருபாதஸ்மரணையாகிற கெம்பீரங்கொண்டு, மோக சமுத்திரத்
தைத் தாண்டி லங்கைக்குள் நுழையும்போது விபரீத பாவனை யென்கிற லங்
கணி இவரை மறிக்க, அவளை விவேகமாகிற கையாற் சங்கரித்து லங்கைக்குள்ளே
பிரவேசித்து, அதிலாரோபமாயிருக்கிற தத்துவங்களாகிற இராவணாந்தப்புரம்
முதற் சகலத்தையும் நேதிவாக்கியத்தால் தேடிக்காணாமற் பிற்பாடு மேற்படி
நிவர்த்தியாகிற அசோகவனத்தில் திதிக்ஷையாகிற சிசும்பா விருக்ஷத்தின் கீழி
ருக்கிற ஞான சக்தியாகிற சீதையைக் கண்டு, மேற்படி மோதிரத்தையுங்
கொடுத்து, பிரத்தியபிக்ஞை யென்கிற சூடாமணியை வாங்கிக்கொண்டு அவ்வி
டத்திலுள்ள நாமரூபங்களாகிற காடுகளை மாயா மயமென்று அழித்து, பஞ்சேந்
திரியங்களாகிற பஞ்ச சேனாபதியையும் இந்திரிய நிக்கிரகத்தாற் கொன்று, அஞ்
ஞான பூமிகளாகிற சப்த மந்திரி சுதர்களையும் ஞானபூமிகளாற் கொன்று, பிர
ஜோத் பாதகனான சிசுனனென்கிற அக்ஷய குமாரனைப் பிரஹ்மசரியத்தாற்
கொன்று, பாணிந்திரியனாகிற இந்திரசித்தின் பிரஹ்மாஸ்திரத்தாற் கட்டுப்பட்ட
வர் போல அகங்கார இராவணனிடஞ் சென்று, அவனைத் துச்சமாக நினைத்து
இராம சுக்கிரீவாள் சொன்ன சேதியைச் சொன்னார். அதாவது:—நீ ஞான
சக்தியாகிற சீதையை இராமனிடங்கொண்டுவந்து விட்டு நீயும் அகம்பாவமன்றி
யில் அவரைச் சரணமாக அடைந்தாயேயானாற் கொஞ்சக்காலம் ஜீவச்சவம்
போல ஜீவித்திருக்கலாம். அப்படிச் செய்யாத பக்ஷத்தில், உனக்கும் பலசாலி

யான வாலி எந்த இராம பாணத்துக்கு இரையாய்ப் போனானோ அந்தப்பாணத்துக்கு குடும்பத்தோடே நீயும் இரையாய்ப் போவாய் என்று சொல்லச் சொன்னார்களென்று சொன்னதைக் கேட்ட மாத்திரத்தில், இராவணனும் அதிகோபமாய் இவரை வெட்டச் சொல்லச் சாத்வீகரான விபீஷணர், தூதனை அங்கவைகல்லியஞ் செய்யலாமே தவிரக் கொல்லக்கூடாதென்று சொல்லியிருக்கிற விதியை எடுத்துச் சொன்னார். அதைக்கேட்ட இராவணன் இவனுக்குத் தைரியமாகிற வாலை அதைரியமாகிற அக்கினியால் கொளுத்தச் சொன்னதில், அந்த அக்கினியானது இவரை ஒன்றுஞ் செய்யமாட்டாமல் போனதின்பேரில், இவர் அவர்கள் வைத்த அக்னியினாலேயே சாத்வீகரான விபீஷணர் கிரகத்தைத் தவிர மற்றவர்களுடைய கிரகங்கள் முழுமையும் கொளுத்திச்சுடுகாடாய்ச் செய்துவிட்டதால் அவர்களுக்குக் கெடுதலுண்டாச்சுது. உடனே இவரும் சீதையைக்கண்டு விடைபெற்று இராமரிடம் வந்துசேர்ந்து சகல சங்கதிகளையுந் தெரிவித்ததின் பிற்பாடு, மைத்திரியான சுக்ரீவன் சாதுக்களாகிற சகல வானர சைன்னியங்களுடனும் இராம லக்ஷ்மணருடனும் மோக சமுத்திர தீரம் வந்து சேர்ந்ததை ராவணன் அறிந்து, துர்புத்தி முதலானவர்களாகிற மகோதரன் வகையறா மந்திரிகளுடன் ஆலோசனை செய்யும்போது மேற்படியார்கள் இவன் கருத்துப்படி துராலோசனையே சொல்லும்போது தமோகுணனான கும்பகர்ணனும் விழித்த தினமானதால் சபையிலிருந்து இது ஆகாதென்று சொல்லுஞ் சமயத்தில், சாத்வீகனான விபீஷணன் அண்ணனைப்பார்த்து இராமன் பரப்பிரஹ்ம மென்றும், சீதைஞான சக்தி யென்றும் நீ தெரிந்துகொண்டு இந்தச் சீதையை அந்தஇராமனிடம் கொண்டு போய்ச் சேர்த்தாயேயானால் நீ பிழைப்பாய். இல்லாவிட்டால், கெட்டுப்போவா யென்று சொன்னதைக் கேட்ட இராவணன் வெகு கோபத்துடன் கும்பகர்ணனைத் தூங்கப்போகச் செய்து விபீஷணனை நீ இனிமேல் என் சந்நிதியிலிருக்க யோக்கியனில்லை யென்றும் அந்த ராமனோடேயே போய்ச் சேரென்றும் அடித்து விரட்டினவுடன் சமம் விசாரம் சந்தோஷம் சாது சங்கமென்கிற நாலு மந்திரிகளுடன் இராமனைச் சரணமாக விபீஷணனடைந்தவுடன் இராமரும் சர்வக்ஞரானதால் உடனே சுவானுபூதி யென்கிற லங்காதிபதியாகப் பரோக்ஷக்ஞானமாகிற பட்டாபிஷேகஞ் செய்த பிற்பாடு மோகமென்கிற சமுத்திரத்தை ஸ்திரபுத்தி யென்கிற கல்லுகளைக்கொண்டு ஏகாக்கிரசித்தமென்கிற நளனால் அணைகட்டும்படி செய்து அந்த அணைவழியாய் லங்கைக்குப்போய் மூலாக்ஞானமாகிற மூலபலத்துடன் அகங்கார இராவணாதிகளை நாமா ரென்கிற விசாரத்தாலுண்டாயிருக்கிற அகண்டாகார ஞானாஸ்திரத்தால் சங்காரம் பண்ணிச் சத்துவகுணமாகிற விபீஷணனுக்குத் தான் முந்திப் பரோக்ஷமாய் செய்த பட்டாபிஷேகம் உறுதியாகும்படியாய் அபரோக்ஷக்ஞானமாகிற பட்டாபிஷேகஞ் செய்து ஞான சக்தியாகிற சீதையுடன்கூட ஆத்மராமர் அயோத்தி யென்கிற ஜீவன் முக்திப் புரியில் அத்தியாபி வசித்துக்கொண்டிருக்கிறார். முமுக்ஷுக்களானவர்கள் இந்தச் சற்குருவான ஆத்ம ராமனைக்

கண்டு ஜீவன் முக்திப்புரியில் ஜீவன் முக்தர்களாய் வசிக்கக் கடவர்களென்று குரு ஆக்ஞையாலுண்டான அனுசந்தானமென்று நம்பத்தக்கது.

## 53-வது தரங்கம்.

[அ - கை.] தாபத்திரயாதியாகிற உபாதிகள் சகிக்கமாட்டாமல் அழுது கொண்டிருக்கிற முமுக்ஷுக்களாகிற குழந்தைகள் பிரஹ்மானந்தமாகிற நித்திரை யடையும்பொருட்டு யுக்தியுடன் சொல்லுகிறார்:—

குருவாகிற தாயாரானவள் மந்த முமுக்ஷுக்களாகிற குழந்தைகள் சுகமாய் நித்திரை செய்யும் நிமித்தமாக, அவற்றின் மனதாகிற மெத்தையை விவேகமாகிற தொட்டிலிற் போட்டு பிரஹ்மானந்தமாகிற நித்திரையை யடையும்படி வாக்கியாமிர்தமாகிற தாலாட்டினால் தூங்க வைத்தால், அதிலிருக்கிற ஆவரணமாகிற இருளாலும், விக்ஷேபமாகிற பேயாலும், வாசனைகளாகிற சிலேப்பேனாலும், சங்கல்பமாகிற மூட்டையினாலும், ராகத்துவேஷமாகிற கொசுக்களாலும் கடிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறதினால் அந்த உபாதிகளை நிவர்த்திக்கும்படியான திட விசாரங்களாகிற சக்தி அக்குழந்தைகளுக்கு இல்லாததாற் பிரஹ்மானந்தமாகிற நித்திரை யடையவும், மித்யா திருஷ்டி யில்லாததால் அவற்றைச் சம்மரிக்கவும் முடியாமல், முமுக்ஷுக்களாகிற குழந்தைகள் கதறிக் கொண்டிருக்கும்போது சகஜஞான திருஷ்டியாகிற விழிப்போடே கூடிக்கொண்டிருக்கிற குருவாகிய தாயானவள் தன்னிடத்திலிருக்கிற சாதுக்களாகிற சகிகள் சகிதமாய்வந்து, நான் பிரஹ்மமென்கிற ஞானரத்ன தீபத்தினால் ஆவரணமாகிற இருளையும், நிருவிகல்பமாகிற மந்திரத்தால் விக்ஷேபமாகிற பேயையும், மைத்திரியாதிகளாகிற சத்வாசனையாகிற கையால் வாசனை யென்கிற சிலேப்பேனையும், மித்யா திருஷ்டி யென்கிற நல்லெண்ணெய்யால் சங்கல்பமாகிற மூட்டைப்பூச்சியையும், குருபக்தியாகிற பங்காவினால் ராகத்துவேஷங்களாகிற கொசுக்களையும் போக்கடித்துப் பிரஹ்மானந்தமாகிற நித்திரையையும் சுகமாகச் செய்யும்படி செய்த குருநாதனாகிற தாயையெப்பொழுதும் மறவாமலிருக்கவேண்டியது.

## 54-வது தரங்கம்.

[அ - கை.] உத்தம சாதுக்கள் அன்னியர்களிடத்தில் 1000-ம் தோஷமிருந்தாலும் அதுகளைத்தள்ளி ஒரு சத்குணத்தைக்கண்டே புகழ்ந்து கிரகிப்பார்கள் என்பதற்கு யுக்தி:—

பசுமாட்டிலிருக்கிற பாலையும் கவுரி மானிடத்திலிருக்கிற ரோமத்தையும் கிரகிப்பது போலும், ஈஸ்வரன் சந்திரனைச் சிரசில் வகித்திருப்பதும், பதிவிரதையான சுமங்கலியானவள் திருமங்கலியத்தை மட்டும் கிரகிப்பதும், அம்சமானது குளத்தில் விட்ட பாலைமட்டும் கிரகிப்பதும், எறும்பானது மணலிற் கிடக்கிற சர்க்கரையை மாத்திரங் கிரகிப்பதும், தேங்காயிலிருக்கிற பாலையும், புனுகு பூனையிலிருக்கிற புனுகு சட்டத்தையும், கரும்பிலிருக்கிற ரசத்தையும், தயிரிலிருக்கிற வெண்ணெய்யையும், எள்ளிலிருக்கிற எண்ணெய்யையும், சமுத்திரத்திலிருக்கிற ரத்னங்களையும் முத்துக்களையும், மகரமத்சத்திலிருக்கிற வைரத்தையும்,

புலியின் தோலையும் நகத்தையும், யானையிலிருக்கிற தந்தத்தையும் முத்தையும் புருஷர்கள் கிரகிப்பதுபோலும், நாகத்திலிருக்கிற நாகரத்னத்தை மட்டும், வாக்கிலிருக்கிற சரஸ்வதியை மட்டும், பனைமரத்திலிருக்கிற ஓலையை மட்டும், வில்வ மரத்திலிருக்கிற வில்வத்தை மட்டும், ஆட்டில் மயிரை மட்டுங் கிரகிப்பதுபோலும் சாதுக்கள் நல்ல குணத்தைமட்டுங் கிரகிப்பார்கள். துஷ்டர்கள்சத்புருஷர்களிடத்தில் 1000-சுகுணமிருந்தாலும் துர்க்குணத்தையேகிரகிப்பார்கள். (எ-தி) அட்டையும் உண்ணியும் ஸ்தன்யம் நிரம்பப்பாலிருந்தாலும் ரத்தத்தைச்சாப்பிடுவதும், தினம் ரசமாய் சமயல்பண்ணுகிற ஸ்திரீயிடத்திலும் பரிசாரகனிடத்திலும் ஒருவேளை அந்தச்சமயலில் உப்புப்புளி அதிகமாயிருந்தால் அவர்களை அதிகமாய்க்கோபித்துக்கொள்ளுவதும், அதிக சுந்தரமான ஸ்திரீயினிடத்தில் ஒரு கண்ணில் பூ விழுந்திருந்தால் அவளை இகழ்ச்சியாய்ச் சொல்வதும், பன்றியானது ஜவ்வாது முதலான மணத்தை விட்டு மலத்தைக் கிரகிப்பதும், இராஜ ஸ்திரீயானவள் இராஜ சுகத்தைவிட்டு மூடனைக் கிரகிப்பதும், மோகியானவன் முகத்தைவிட்டு மூத்திரத் துவாரத்தைக் குனிந்து பார்த்து இச்சிப்பதுபோலவும் சாராயானியானவன் பரிசுத்தமாயுஞ் சுத்தமாயுமிருக்கிற பாலைவிட்டு மயக்கிறதாயும் பயங்கரமாயும் நிந்தியமாயும் நாற்றமாயுமிருக்கிற கள்ளுச்சாராயத்தைச் சாப்பிடுவதும், சுத்தமாயும் சுககரமாயுமிருக்கிற குரு வாக்கியத்தைக் கேளாமல் அசுத்தமாயும் அனர்த்தகரமாயுமிருக்கிற ஸ்திரீகள் குழந்தைகள் வார்த்தையை கேட்கிறவன்போலு மென்றறியத்தக்கது.

## 55-வது தரங்கம்.

[அ - கை] குருநாதனிடமிருந்து பிரஹ்மானந்த சம்பத்தை வாங்கிக்கொடுக்கச்சாது சிரேஷ்டர்களான மந்திரிகளுக்கு முடியுமென்று சொல்லப்படுகிறது:—

குருநாதனுகிற சார்வபௌம ராஜன் பிரஹ்மானுபவமாகிற பட்டணத்தில் பிரஹ்மானந்தமாகிற சம்பத்தைச் சதா கொடுத்துக் கொண்டிருக்கிறவராயும், சாது சிரேஷ்டர்களான மந்திரிகளுடனும் சமம் விசாரம் சந்தோஷம் சாதுசங்கமாகிற வாயற்காரர்களான சேவகர்களுடனுங் கூடிக்கொண்டிருக்கும் பொழுது, நாங்களாகிற யாசகர்கள் மூடசங்கங்களாகிற பட்டிக்காட்டில் விபரீத பாவனையாகிற தரித்திரத்தால் தபித்துக்கொண்டிருக்குங் காலத்தில் அந்தக் குருநாதனிடத்தில் எங்களைப்போல தரித்திரர்களாயுள்ள முமுக்ஷுக்களாகிற அநேக யாசகப் பிராஹ்மணுள் போய் பிரஹ்மானந்த சம்பத்தை யடைந்ததைக் கேட்டு நாங்களும் அந்தச் சம்பத்தை வாங்கி அனுபவிக்கவேண்டுமென்று அந்தப் பட்டணத்துக்கு வந்த மாத்திரத்தில் விஷய வைராக்கியம், உபசாந்தி, குருபக்தி, சாதுசங்கத்திற்பிரீதி இதுகளில்லாத துரதிர்ஷ்டத்தினுல மேற்படி வாயற்காரர்களாகிற நாலு சேவகர்கள் உள்ளே விடாமல் தடைபடுத்தினதால் நாங்கள் வாசலில் நின்று தபித்துக்கொண்டிருக்கும்போது குருநாதனுக்கு நிரம்ப அந்தரங்கமாயும், மகா சாதுவாயும், தயாளுவாயும், பரோபகாரத்திற் சதா உத்யுக்தராயும், தன்னைப்போலே சகலரையுஞ் சுகிக்கும்படி செய்கிறவராயுமிருக்கிற

சாது சிரேஷ்டரான முக்கிய மந்திரி வந்து எங்கள் சம்சார வருத்தத்தைக் கேட்டு இரங்கி அந்த வாயற்காரர்களைப் பார்த்து உள்ளே விடும்படி சொல்லிப் பஞ்ச கோசங்களாகிற அஞ்சுகட்டையும் நேதி நேதி மார்க்கத்தாற் கடப்பித்துக் குருராஜாவினிடங் கூட்டிக்கொண்டுபோய் பிரஹ்மானந்த சம்பத்தை வாங்கிக் கொடுத்த மாத்திரத்தில் நாங்கள் சுகித்தோமென்று மற்றவர்களுக்குச் சொன்னார்கள். அதைக்கேட்ட மற்றவர்களும் இப்போது அந்த மந்திரியினிடம் வந்து தெரிவிக்கிறதாவது:—அந்த முமுக்ஷுக்களாகிற யாசகர்கள் எப்படிச் சுகித்தார்களோ அப்படி இப்போது உள்ளவர்களாயிருக்கிற எங்களையும் அந்த மகாராஜனை குருநாதனிடங் கூட்டிக்கொண்டுபோய்ப் பிரஹ்மானந்தமாகிற சம்பத்தையடையச் செய்வது தங்கள் கடமையாயிருக்கிறதென்று தெரிவித்த பிரகாரம் அந்த மந்திரியும் பிரார்த்தனைப்படி நிறைவேற்றி வைத்தார். இப்படியே நாளது வரை நடந்துவருவதை நன்றாயறிந்துகொண்டு பிழைத்துக்கொள்ளக் கடவீர்கள்.

## 56-வது தரங்கம்.

[அ - கை.] எந்த அதிகாரிகள் எவ்விதமாய்ப் பாவித்தாலும் அந்த அதிகாரிகளுக்கு அவ்விதமாகவே விளங்குகிற குருநாதன் மகிமையைக் கொஞ்சம் சொல்லுகிறோம் அதாவது:—

சந்திரன் ஜனங்களுக்கு மேகத்தினுடைய ஓட்டத்தால் ஓடுகிறவர் போல எப்படித் தோற்றுகிறாரோ அப்படிக் குருநாதன் பாமரர்களுக்குத் தங்களைப்போலே பெண்டாட்டி பிள்ளைகளிடத்தில் ஆசையுள்ளவர் போலும், கர்மிகளுக்குக் கர்மானுஷ்டானஞ் செய்கிறவர்போலும், பக்தர்களுக்குப் பூஜை முதலான பக்தி செய்பவர்போலும், முமுக்ஷுக்களுக்கு வைராக்யாதிகள் சம்பாதிப்பவர்போலும், அப்பியாசிகளுக்குத் தேகாதிப் பிரபஞ்சந்தானில்லை இவ்வளவும் சொப்பனம்போலப் பொய்யென்று கண்டு பிரஹ்மைவாஹமென்று சிந்திக்கிறவர்போலும், அனுபவிகளுக்கு எப்போதும் சொரூபத் தியானம் பண்ணுகிறவர்போலும் ஆரூடர்களுக்கு அடையவேண்டியதும் செய்யவேண்டியதும் அற்ற கிருத கிருத்தியர்போலும் தோன்றினாலும் இவர்களுடைய நினைப்பின் தோஷமே தவிரக் குருநாதனிடத்தில் ஒரு கல்பனையுங் கிடையாது. இதற்கனுபவம் சுந்தரத்தாண்டவர் பஞ்ச கிருத்தியாதி தொழிலைச் செய்கிறதாகச் சகலரும் சொன்னாலும் சொல்லுகிறவர்களுடைய புத்தி கல்பனையே யல்லாமல் அவர் சுவாத்மானந்த பரிதராகவே யிருக்கிறாரே தவிர வேறேயொரு கல்பனையுமற்றிருப்பதைச் சமாதியிற் பிரத்தியக்ஷமாய்ப் பார்க்கலாம்.

## 57-வது தரங்கம்.

[அ - கை.] பாமரர் முதல் ஆரூடன் வரையில் விஷயத்திற் பற்றுகிற தாரதம்மியத்தைத் திருஷ்டாந்தத்துடன் சொல்லுகிறார்:—

விஷய சம்பந்தம வந்த காலத்திற் பாமரன், கர்மி, பக்தன், யோகி, முமுக்ஷு,அப்யாசி,அனுபவி,ஆரூடன் இவர்களுக்குச் சித்தத்திலுண்டாகிற அனுபவமெப்படியிருக்குமென்றாற் பாமரனுடைய சித்தத்தில் விஷயமாகிற ஜலசம்பந்தப்

பட்ட மலம்போல ராகத்துவேஷாதி நாற்றம் விசேஷமாக விருத்தியாம்; கர்மிக்கு ஜலசம்பந்தப்பட்ட சாம்பல் கட்டிபோலக் கருத்தருத்துவமாகிற ஈரம் விருத்தியாகும், பக்தனுக்கு ஜலசம்பந்தப்பட்ட வைக்கல் கட்டுப்போல இருதயக் கிரந்தி அதிக பாரமாம், யோகிக்கு உப்பில்லாத பத்தியங்காக்கிற வியாதிக்காரனுக்கு வடை முதலான பக்ஷணஞ் சாப்பிடுவதால் வியாதி விருத்தியாவதுபோல அகங்காரம் விருத்தியாய் உபாதியை யுண்டுபண்ணும், முமுக்ஷுவுக்கு நனைந்த வஸ்திரம்போல அவைராக்யமான ஆசையை யுண்டுபண்ணும், அப்யாசிக்கு மணலில் விழுந்த ஜலம்போல அசுத்தவாசனையை யுண்டுபண்ணும், அனுபவிக்குப் பாறையில் விழுந்த ஜலம்போல தாற்காலிக பிராரப்த துக்கத்தைத் தோற்றுவிக்கும், ஆரூடனுக்குத் தாமரையிலைத் தண்ணீர்போலும் ஆகாசம்போலும் விஷய சுகதுக்கம் சம்பந்தப்படாதென்றறியத்தக்கது. முமுக்ஷுக்களுக்கு அகம் விருத்தி சாதனையாலேயே ஞானமுண்டாவதால் அதற்கு உபாயஞ் சொல்லப்படுகிறது. இப்போது சகலப் பிராணிகளுக்கும் நானென்றும் இதென்றும் இரண்டு விருத்தி காணப்படுகிறது. இதில் இதம் விருத்தியானது பாகிய விஷயத்திலும் அகம் விருத்தி ஆத்மாவினிடத்திலும் பிரசித்தமாய்க் காணப்படுகிறது. இதில் மூடர்களெல்லாம் இதம் விருத்திக்கு விஷயமான தேகாதிகளில் அகம் புத்தி செய்வதுதான் மகா பிராந்தி. இந்தத் தேகத்தில் அகம் புத்தி செய்வதைக் காட்டிலும் மண்ணாங்கட்டியில் அகம்புத்தி பண்ணலாம், அல்லது மலத்தில் அகம் புத்தி பண்ணலாம். இந்திரியாதிகளில் அகம்புத்தி செய்வதிலும் கன்றுபசுக்களில் அகம்புத்தி செய்யலாம். பிராணனில் அகம்புத்தி செய்வதைக்காட்டிலும் ஆடிக்காற்றில் அகம்புத்தி செய்யலாம். மனதினிடத்தில் அகம்புத்தி செய்வதிலும் நீர்க்குமிழியினிடத்தில் அகம்புத்தி செய்யலாம். புத்தியினிடத்தில் அகம் புத்தி செய்வதிலும் மின்னலினிடத்தில் அகம்புத்திசெய்யலாம். அகங்காரத்தினிடத்தில் அகம் புத்தி வைப்பதிலும் கிறுக்கனிடத்தில் அகம் புத்தி வைக்கலாம். சித்தத்தில் அகம் புத்தி செய்வதிலும் காசிக்குத்துணைக்காக சாகப்போகிற கிழவனைத் துணையாகக் கூட்டிப்போகலாம். அஞ்ஞானத்தினிடத்தில் அகம்புத்தி செய்வதைக் காட்டிலும் இருட்டினிடத்தில் அகம்புத்தி செய்யலாம். வாசனையில் அகம்புத்தி செய்வதிலும் உப்பளக்கடலில் அகம் புத்தி செய்யலாம். சந்தேகத்தினிடத்தில் சம்பந்தப்படுவதிலும் பரீக்ஷை நம்பலாம். விபரீத பாவனையை நம்புவதிலும் கானல் ஜலத்தைச் சாப்பிட நம்பலாம். பரோக்ஷமான ஈஸ்வராதிகளை நம்புவதிலும் பிரத்தியக்ஷ லோககேசை அம்பணம் சிலாக்கியம். ஆகையால் அறிவாகிய தன்னிடத்தில் அகம்புத்தி செய்யவேண்டியதும் மற்றயாவையிலும் அகம்புத்தி தவிரவேண்டியதும் சுருதி குரு சுவானுபவத்தில் அந்தரங்க தாற்பரியமென்று முமுக்ஷுக்கள் அறிந்து நடக்கத்தக்கது. இந்த அகம்புத்தியானது சொரூபத்தை விளக்குகிறதால் அகம் விருத்தியைச் சேதனமான ஆத்மாவென்று சொல்லலாமென்றால் அப்படிச் சொல்லக்கூடாது. சோயம்

பிரகாசமான ஆத்மா மற்ற அகமாதிகள் போல விருத்தியால் விளங்கவில்லை. எப்படி யென்றால் நேத்திரமானது உபநேத்திரத்து வழியாய் அக்ஷரத்தை யறிவது போல் அறிவாகிய தான் புத்தி விருத்தியில் பிரதிபலித்து விருத்திக்குச் சாக்ஷியாயிருந்து கொண்டு விருத்தியினாலே நிவர்த்திக்கத்தக்கதா யிருக்கிற அஞ்ஞானத்தையும் அஞ்ஞானம் போனபின் விளங்குகிற விஷயத்தையும் அவ் விஷயாகாரமான விருத்தியையும் தானே விளக்கு விக்கிறான். இந்த விருத்தியானது கடாதி விஷயங்களை விளக்கு விக்கிறபோதும் சைதன்ய சம்பந்தத்தினாலேயே விளக்குவிக்கிறது. இனித் தன்னையறிகிற விஷயத்திலும் அகம் விருத்தியானது உபாதி மாத்திரமே தவிர அதனால் தான் அறியப்படவில்லை. (எ-தி) பலகை யடைத்ததாயும் ரசம் ஏற்றியதாயுமிருக்கிற கண்ணாடியைப் பார்க்கிறவன் தன் முகசௌந்தரியத்தை உள்ளபடியாய்க் கண்ணாடி வழியாய் தன் முகத்தைத் தானறிந்துக் கொள்வது போல இந்திரிய நிக்கிரகத்தோடே கூடியதாயும் சொரூப விசாரமாகிற ரசமேற்றப்பட்டதாயுமிருக்கிறஇந்த அகம் விருத்தியால் சாக்ஷியாகிற தன்னைத்தான் அறிந்துகொள்ளுகிறானென்று அறியத்தக்கது. இப்படி யிருக்க, நீ அகம் விருத்தியால் சாக்ஷி விளங்கப்படுவரென்று சொன்னது சரியில்லை. அது என்னத்தினா லென்றால், அகம் விருத்திக்கு லக்ஷியமான சைதன்யமே தானாயிருப்பதால் அகம் விருத்தியால் தானெப்படி விளங்கப் படுவர். அக்கினியினால் விளங்கப்பட்ட இரும்பானது பார்வைக்கு அக்கினி போலத் தோன்றினாலும் எப்படி அக்கினியாகமாட்டாதோ அப்படி அகம்விருத்தியும் ஆத்மசம்பந்தத்தால் ஆத்மாவைப் போலே தோன்றினாலும் ஆத்மாவாகமாட்டாது. ஆத்மா இந்த அகம்விருத்தியோடே பிராந்தி சித்தா பேத அத்தியாசத்தால் நான் கர்த்தா போக்தா சுகி துக்கி அறிந்தேன் அறியே னென்று பாவம்சகரணும்சங்களை ஒன்றாகச் சேர்த்து விவகரித்தாலும் தனக்கு எதார்த்தமாக பாவாம் சமான அறிவே வடிவமல்லாமல் விகாரமான கரணும்சம் வடிவமல்ல. சொப்பனத்தில் தான் நிருவிகாரனாயிருந்தும் அஞ்ஞானத்தால் போகிறது வருகிறது போலத் தோன்றினாலும் எதார்த்தமாக அந்த அவஸ்தையிற் கற்பனையான வஸ்துக்களுக்குத் தான் விலக்ஷணராயும் சாக்ஷியாயும் அதிஷ்டானமாயுமிருப்பது போல, சர்வ தேகங்களிலேயும் அகம் பதார்த்தனாகவே யிருந்தும் அகம் விருத்தியாகியவிவகாரிபோலத்தோன்றுவது, கோ என்கிற சப்தத்துக்குக் கோத்வ ஜாதியே அர்த்தம் பண்ணாமல் வெளுப்புச் சிவப்பு முதலான ரூபத்தை அர்த்தம் பண்ணுவதுபோலமூட திருஷ்டிக்குத் தோன்றினாலும் எல்லா நிறங்களிலேயும் கோத்வ ஜாதி ஒன்றாயிருப்பது போல இந்த அகம்பதார்த்தமும் உபாதி பேதத்தினாலே பேதம் போலே தோன்றினாலும் சகல விருத்திகளிலும் விளங்குகிற அகம்பத லக்ஷியமான அறிவு ஒன்றென்றே அறியவேண்டியது. அஞ்ஞானிகளுக்கும் ஞானிகளுக்கும் அகம் பதார்த்த சுபாவம் ஒன்றாயிருந்தாலும் அகம்பதார்த்த அனுபவமும் சுபாவமும் ஒன்றாயிருப்பது ஞானிகளுடைய ஸ்திதி யென்றும், சுபாவமும்

அனுபவமும் வேருயிருப்பது அஞ்ஞானிகள் ஸ்திதி யென்றும் அறியத்தக்கது. அஃதெப்படி யென்ருல், இருவர்கள் படுத்திருக்கும் போது ஒருவன் விழித்துக் கொண்டும் ஒருவன் நித்திரை பண்ணிக்கொண்டு மிருக்கிருன்; விழித்துக் கொண்டிருப்பவனுக்குப் படுக்கையிற் படுத்திருக்கிற சுபாவமும் அப்படிப்படுத் திருக்கிறே மென்ற அனுபவமும் ஒத்திருக்கிறது போலும், நித்திரை செய்பவ னுக்குச் சுபாவமாய்ப் படுக்கையிற் படுத்திருப்பதும், அனுபவத்திற்காடு கரைகளிற்போய்க் கஷ்டப்படுகிறதாக அனுபவமிருப்பது போலும், தர்ம புத்திராதிகளேயுங் கர்ணனேயும் போலும், தன்னைத்தசம னென்று அறியாதவன் போலவும் அறிந்தவன் போலவும், சகோதரர்களிருவரில் புதைய லெடாமற் புதையலின் மேற் படுத்திருப்பவன் போலும் எடுத்து வைத்துப்படுத்திருப் பவன் போலும், பக்குவமில்லாத கன்னிகை உபஸ்தம் அனுபவமில்லாமலிருப் பது போலும், பக்குவமானவள் உபஸ்தம் அனுபவத்துடன் சுபாவஞ் சேர்ந் திருப்பது போலும், சிரவணம் பண்ணுகிறவர்களிற் சிலர் தலையால் மட்டும் ஒத் துக்கொண்டு மனசைச் சுழுப்தியிலாவது விஷயத்திலாவது லயித்திருப்பவர்கள் போலும், புத்தியோடே தலையாட்டுதலுஞ் சேர்ந்து சிரவண சாரத்தை அனுப விப்பவர்கள் போலவு மென்றறிக. அப்படி ஆத்மாவானவர் தன்னை அனுப விப்பதற்கு என்ன சாதனம் வேண்டுவ தென்ருல், அதற்குச் சாதனம் யாதொன் றும் வேண்டுவதில்லை. இதற்கு அனுபவத்திலும், சுழுப்தியிலிருந்து எழுந்திருந்த புருஷன் ஒன்றும் தெரியாமல் சுகமாய் நித்திரை செய்தே னென்று அஞ்ஞானத் தையும் அதை அறிந்துகொண்டிருந்த சுகத்தையும் அறிகிற விஷயத்தில் இந்திரி யாதி சகாய மன்றியிலே யறிந்துகொண்டிருந்ததே அனுபவம் போல, இங்கும் நான் பிரஹ்ம மென்று விழித்துக்கொள்ள வேண்டியதே தவிர வேறொரு சாதன பேக்ஷை வேண்டுவதில்லை. இதற்கு யுக்தி, பிரக்ஞையுள்ளவன் இருட்டிற் போய் வேண்டிய காரியத்தைச் சாதனுபேக்ஷை யன்றியில் கிரகித்து முடிக்கும் போது பகலில் அவன் வேண்டிய காரியத்தைச் சாதனுபேக்ஷை யன்றியில் முடிப்பா னென்பதில் அதிசயமில்லாதது போலவறிக. இப்படியே பிரஹ்மா முதலான சகலமான ஞானிகளின் அனுபவமாகையால் சுருதி குரு வாக்கியத்தாற் பிரஹ்ம மமே நானென்று அறியாமலே சம்சாரத்திற் சுழலுகிற சகலபிராணிகளும் விவே கத்தால் தேகாதி அஞ்ஞானம் வரை சாக்ஷிய மென்று தனக்கு வேருகப் பிரித் துத் தள்ளிச் சர்வ சாக்ஷியாயும் சுயஞ்சோதியாயும சச்சிதானந்தமாயுமிருக்கிற பிரஹ்மமே நானென்று சதா சிந்திக்கவேண்டியது.

## 58-வது தரங்கம்.

[அ-க] குருநாதன் மகிமையை யறியாதவரை, ஜீவனென்கிற பெண் அஞ் ஞான ராத்திரியில் அடைந்த அவஸ்தையையும், குருநாதன் அனுக்கிரகத்தால் அது தீர்ந்து மோக்ஷ ராச்சியத்துக்குப் பட்டமஹிஷியானதும், சொல்லப் படுகிறது:—

குருநாதன் தாயைப்போல மனசுக்கு விவேகத்தை ஊட்டிவளர்ப்பதாலும், பிதாவைப்போல ஞான சம்பத்தை சம்பாதித்துக் கொடுப்பதாலும், வைத்தியனைப்போலப் பவ வியாதி தீருகிறதற்கு விசாரஜன்ய ஞானத்தாலுண்டாயிருக்கிற சந்தோஷமென்கிற குளிகையைக் கொடுப்பதாலும், சந்திரனைப்போலப் பார்த்த பேர்களுக்குப் பரமானந்தங் கொடுப்பதாலும், நாயகனைப் போலவே சுவானுபூதிச் சுகத்தைக் கொடுப்பதாலும், குலதெய்வம் போல இருதய குகையிலிருந்து அவ்விடத்திலுள்ள துர்மார்க்கப் பிசாசுகளைத் தூரத்துரத்துவதாலும், புரோகிதப் பிராஹ்மணனைப் போலே மேல் வருகிற க்ஷேமத்தைச் சொல்வதாலும், மகாராஜனைப்போலே ஏழைக்கு இறங்குவதாலும், செட்டியைப் போலே சித்த ரத்னத்தைச் சுத்தம் பண்ணிக்கொடுப்பதாலும், குடியானவனைப் போலே குரு பக்தி சுவானுபவமாகிற தானியத்தை விளைவித்துக் கொடுப்பதாலும், காவற்காரனைப் போலக் காமாதி கள்வர்களைத் துரத்துவதாலும், ஜட்ஜியைப் போலப் பிரஹ்ம ஹத்தி பண்ணினவர்களான அகங்காராதிகளைத் தூக்கிலே போடுவதாலும், வண்ணானைப்போலே சித்த வஸ்திர மலத்தைக் கிருபையாகிற வெள்ளாவியாற் போக்கிச் சுத்த சத்துவமாய் வெளுத்துக் கொடுப்பதாலும், க்ஷவரகனைப் போலச் சங்கற்ப மயிரை க்ஷவரம் செய்வதாலும், சக்கிலியனைப் போலச் சம்சார வனத்திலிருக்கிற ராகாதிகளாகிற முள்ளுக்கள் தைக்காமலிருப்பதற்காக விவேக வைராக்கியங்களாகிற பாதரக்ஷைகளைத் தைத்துக்கொடுப்பதாலும், சிரவுதிகளைப் போலக் கோப்பசுபந்தனம் பண்ணி ஆத்ம தீக்ஷிதராகப் பண்ணி வைப்பதாலும், அஞ்ஞானந்தகாரத்துக்கு ஞானசூரியனாகவும், சித்தமாகிற மயிலுக்கு மேகமாகவும், சம்சார விஷவிருக்ஷத்திற்குக் கண்ட கோடாலியாகவும், தாபத்திரயாக்கினிக்கு அமிர்த வருஷமாகவும், முமுக்ஷுத்துவமாகிற பசிக்குக் காமதேனுவாகவும், அஞ்ஞானமாகிற தரித்திரத்துக்குச் சிந்தாமணியாகவும், ஈஶ்வரபக்தனுக்கு ஈஶ்வரன் தனுகரண புவன போகங்களைக் கொடுப்பது போல இவரும் ஞானதனுவையும் விவேக கரணத்தையும் மோக்ஷபுவனத்தையும் ஜீவன் முக்தி போகத்தையுங் கொடுக்கிறவராயும், துன்மார்க்கத்தை நிவர்த்தி பண்ணிச் சன்மார்க்கத்தைக் கொடுக்கிறவராயுமிருக்கிற குருநாதனிருக்கும் போது, மத்குரு சரணாரவிந்த பக்தாளான சாதுக்களுக்குப் பரிதாபப்படவேண்டிய காரணமில்லை யென்று குருநாதன் அநுக்கிரகம் பண்ணின அனுசந்தானத்திற் கொஞ்சம் எழுதப்படுகிறது. ஆத்ம நாயகனை மறந்து பிரிந்த ஜீவனாகிய பெண், ஆவரணமாகிற இராத்திரியிற் சம்சாரமாகிற காட்டிற் போகும்போது, அகங்காராதி இராக்ஷசர்கள் கையில் ஞானமாகிற நகைகளைப் பறிகொடுத்துக் கருத்துருத்துவ வாசனையாகிற நதியிற் கருமமாகிற மழையினால் வருகிற பிரவாகத்திலுண்டாயிருக்கிற ஜனன மரணமாகிற அலைகளில் அகப்பட்டுப் பிரஹ்மபாவனை யென்கிற வஸ்திரத்தைப் பறிகொடுத்து, விபரீத பாவனையாகிற பிசாசுகளும் பிடித்த மாத்திரத்திற், சங்கல்பமாகிற தலைமயிரை விரித்தாடிக்கொண்டு, தேகாபிமானமாகிற சிங்க கர்ஜிதத்தால் மயங்கிக் கீழே

விழத் துஷ்ட பந்துக்களாகிற நரிகள் பிடுங்கித் தின்னக் கோபங்களாகிற செந்நாய் கடித்துதறத் தாபத்திரயமாகிற காட்டுத் தீயில் தூர் அதிர்ஷ்டமாகிற பேய்க்காற்றுச் சுழற்றித் தள்ளச் சுகதுக்கங்களாகிற மேடு பள்ளங்களில் விழுந்தேற, வியாதிகளாகிற முள்ளுக்கள் தைக்க, இந்திரியங்களாகிற சர்ப்பங்கள் கடிக்க, மோகமாகிற மேகங்கள் மூட, ஆசையாகிற மலை குறுக்கிட, ஸ்திரீ முதலான விஷயங்களாகிற கடிவாய்களின் வாயில் அகப்பட்டுக் கடிபட, மூட புத்திகளாகிற தேள் கொட்டப் பின்னும் அநேக விதமான தேக லோக சாஸ்திர காமாதி அகந்தா மமதா சத்தாதி வாசனைகளாகிற ஜந்துக்களின் உபத்திரவத்தால் துக்கப்பட்டுக்கொண்டு அநாதிகாலமாய் இப்படி அலைந்து கொண்டிருக்கும்போது, தெய்வ கதியால் இவனுக்கே சுயமாக ஒரு விவேகமுண்டாய் நமக்கு அநாதிகாலம் பிடித்து இப்படிப்பட்ட அவதிகளெல்லாம் வந்திருப்பது சகமாய்த் தோன்றவேண்டிய காரண மென்ன? இந்தத் துக்கங்களெல்லாம் எவ்விதமாய் விமோசனமாகப் போகிற தென்று யோசித்துக் கர்ம மார்க்கமாகிற ரஸ்தாவிற் கொஞ்சக் காலம் நடந்து, அதுவும் பழைய காட்டிற் கொண்டு வந்து விட்ட பிற்பாடு அந்தக் கர்ம மார்க்கத்தையும் வெறுத்துப் பக்திமார்க்கத்திற் போகும்போது, சில பக்தர்களாகிற ஜனங்கள் எதிரே வர அவர்களை நீங்கள் எவ்விடத்திலிருந்து வருகிறீர்களென்று கேட்க, அவர்கள் சொன்னதாவது: நாங்கள் காமிய பக்தி பண்ணிக் கைலாசாதி பதத்திற்குப் போய் அவ்விடத்திலுள்ள போகங்களின் புளிப்பால் துக்கம் நீங்காமல் ஈஸ்வராதிகளைக் கண்டு மோக்ஷம் வேணுமென்று கேட்க, அதற்கு அவர்கள், நீங்கள் வந்தவழியே போய்ச் சாதன சதுஷ்டய மென்கிற ஞான மார்க்கத்தின் வழியாக நடந்து போய் மோக்ஷ தேசத்துக்குப் பிரபுவாயிருக்கிற குருவை யடைந்து அவர் கிருபையைப்பெற்றீர்களே யானால் நீங்கள் நினைத்துவந்த மோக்ஷங்கிடைக்குமே தவிர, மற்ற எவ்வித உபாயத்தைச் செய்து எவ்வளவு குட்டிக்கரணம் போட்டாலும் அது கிட்டாதென்று உண்மையாய் ரகசியத்தைச் சொன்னதைக் கேட்டுக்கொண்டு வருகிறோமென்று சொன்னார்கள். அதைக்கேட்ட இவனும் அவர்களுடன் சேர்ந்து நித்தியா நித்திய விவேகமாகிற ஞான மார்க்கத்திற் போகும்போது, வைராக்கியமாகிற நிழலிற் கொஞ்சம் சிரம பரிகாரம் பண்ணிக்கொண்டு, சமமாகிற சத்திரம்போய்ச் சேர்ந்து உபசாந்தியாகிற போஜனமுஞ் செய்து தமமாகிற மோக்ஷ தேசத்துக்குப்போகிற போக்கு வண்டியிலேறிச் சுகதுக்கமாகிற பனிக்காகத் திதிக்ஷையாகிற தாவளியைப் போர்த்திக்கொண்டு, உபரதியாகிற நித்திரை செய்ததாலுண்டாயிருக்கிற சிரத்தையாகிற பலத்தை யடைந்து சமாதானமாகிற விழிப்பையடைந்து மோக்ஷ தேசமென்கிற கோட்டைக்குள் குருநாதனென்கிற பிரபுவை எப்போது நாம் காணப்போகிறோமென்று தாபத்துடன் முமுக்ஷையும் போது, முன்னே செய்த தவங்களெல்லாம் மூர்த்திகரித்திருக்கிற உதய பருவத்திலிருந்து இவர்களினது மோகவிருள் தீர்ப்பதற்காகவே குரு கிருபையாகிற அருணோதயமாகச் சாதுக்களாகிற தானாதிகாரிகள் இப்படி மோக்ஷ தாகத்

துடன் பரிதபித்துக்கொண்டிருக்கிற இவளைக்கண்டு குருநாதனுகிற பிரபுவி னிடத்தில் இவளைப் பக்குவியென்று கொண்டுவந்துவிட்டார்கள். அவரும் தானுதிகாரிகளும் வேண்டியமட்டும் இவளைப் பரீக்ஷைகள் செய்ததில் சாஸ்தி ரோக்தப் பிரகாரம் கொஞ்சமுங் குறைவில்லாமற் சிரவணுதிகாரமாகிற பரீக்ஷை கொடுத்தமையால் அவளைச் சாதுகோஷ்டிக் கணக்கில் தாக்கல் செய்த பிறகு அந்தக் குருநாதனை பிரபு இவளை நேரே வைத்து, இவளுடைய கஷ்டங்களை ஆதிமுதல் விசாரித்து மிகவுந் தயவுடன் கிருபாகடாக்ஷத்தினுல் இவளுக்கு வந்த கஷ்டங்களையெல்லாம் நிவர்த்தித்து ரக்ஷிக்கவேண்டுமென்று திருவடி தீக்ஷை யால் ஆத்மானுத்ம விவேக ஞானத்தைக் கொடுத்து, அகங்காராதி ராக்ஷசர் களைச் சம்ஹரித்து, உபதேசமாகிற சூரியனுல் அஞ்ஞானுந்தகாரத்தைப் போக் கடித்து, ஆத்ம நாயகனுடன் சேர்ப்பித்து, நித்தியானந்தானுபூதி யென்கிற பரவசத்தை அஸ்தமஸ்தக சம்யோகத்தாற் கொடுத்து மோக்ஷ சாம்பிராச்சியத் துக்குப் பட்டமஹிஷியாகவும் செய்த குருநாதனை எப்பொழுதும் மறவாமல் வாழ்ந்து கொண்டிருக்கிறுள். சிஷியன் சங்கை:—இந்தக் குருநாதன் அந்த முமுக்ஷுவாகிய பெண்ணுக்கு வந்திருந்த ஒவ்வொரு விதமான கஷ்டங்களை யும் எங்ஙனந்த உபாயத்தால் நிவர்த்தித்தாரென்பதை வகையுடன் சொல்ல வேண்டு மென்று கேட்டதற்கு, குருநாதன் சொல்லுகிருர். வாராய் குழந் தாய்! அறிவாகிய உன்னுயகனை இனியொருக்காலும் மறவாதே. அந்த மறதி யால் வருகிற ஜீவனுகிய வியபிசாரிப் பெண்ணுக அவரைப்பிரிந்து போகாதே. ஆவரணமாகிற இருட்டுப்போவதற்கு இந்த ஆத்மானுத்ம விசாரமாகிற ரத்னத் தைக் கையில் தவருமல் வைத்துக்கொள். ஜகத்தாகிற காட்டை மித்யாதிருஷ்டி யாகிற தீயால் எரி; அப்போது அகங்காராதி ராக்ஷசர்கள் வரும்போதே நாமா ரென்கிற விவேக அஸ்திரத்தாற்கொன்று, அவர்கள் பறித்துக் கொண்ட ஞான மாகிற நகைகளை நீ தரித்துக்கொண்டு, கருத்தாருத்துவாதியா லுண்டான கர்மப் பிரவாகத்தோடே கூடிய அசுத்தவாசனையாகிற நதியை மைத்திரியாதி சுத்தவாசனையுடன் கூடிய சாக்ஷி ஞானமாகிற கப்பலாற்ருண்டு. அப்படிக் கர்மமாகிற மழைப்பிரவாகத்தால் உண்டாயிருக்கிற ஜனன மரணமாகிற அலை களில் பிரஹ்மபாவனை யாகிற வஸ்திரம் அமிழ்ந்திப்போயிருப்பதா லல்லவா நீ இப்போது நிர்மாணத்துடன் கூடியிருக்கிருய்! அதற்காக இந்த அகண்டாகார விருத்தியாகிற வஸ்திரத்தைக் கட்டிக்கொள், விபரீதபாவனையாகிற பிசாசுகளைத் தத்துவபாவனையாகிற மந்திரத்தால் விரட்டு, சங்கல்பமாகிற விரித்த மயிர்களை நிச்சங்கல்பமாகிற கையாற்கட்டிக்கொள், தேகாபிமானமாகிற சிங்கத்தைப் பிர ஹ்மாக மென்கிற சரபத்தாற்கொல்லு, துஷ்டபந்துக்களாகிற நரிகளைச் சாது சங்கமாகிற வெடியாற் சுடு, கோபங்களாகிற செந்நாய்களை உபசாந்தமாகிற கத் தியால் வெட்டு, தாபத்திரயாக்கினியை சிரவணுமிர்த வருஷத்தால் அணைத்துப் போடு, சுக துக்கங்களாகிற மேடு பள்ளங்களைச் சமபுத்தியாகிய மண்வெட்டி யால் சமம்பண்ணு, வியாதிகளாகிற முள்ளுகளை அசங்கனென்ற முள்ளுவாங்கி

யால் எடுத்தெறி, இந்திரியங்களாகிற சர்ப்பங்களை இந்திரியநிக்கிரகமாகிற கருடனாற் சேஷ்டையன்றிப் பண்ணு, மோகமாகிற மேகத்தைச் சொரூபப் பிரக்ஞையாகிற பிரசண்ட வாயுவால் தள்ளு, ஆசையாகிற மலையை நிராசையாகிற வச்சிராயுதத்தால் தூளாக்கு, ஸ்திரீவிஷயங்களாகிற கடிவாய்களை தோஷ திருஷ்டியாகிற ஆயுதத்தாற் கொல்லு, மூடபுத்திகளாகிற தேட்களைச் சாத்வீக புத்தியாகிற சம்மார்ஜனத்தால் அடித்துத் தள்ளு, இன்னும் தேக வாசனையாகிற ரணத்தை மௌனமாகிற பிளாஸ்திரியால் ஆத்திப்போடு, லோக வாசனையாகிற காட்டெக்கடிகளை நிதித்தியாசனமாகிற கவசத்தாற் போக்கிவிடு. சாஸ்திர வாசனையாகிற கயிற்றின் கட்டைக் குருவாக்கியமாகிற கத்தியால் அறுத்துப்போடு, காமாதி வாசனைகளாகிற உள் ரணத்தை மைத்திரியாதி வாசனையாகிற அமிர்த பானத்தால் ஆத்திப்போடு, அகந்தா வாசனையாகிற மலைப்பாம்பை நிருவிகல்ப சமாதியாகிற பாணத்தாற் கொல்லு, மமதா வாசனையாகிற கொடிகளை விவேகமாகிற அரிவாளால் அறுத்துவிடு, சப்தாதி வாசனைகளாகிற துஷ்ட ஜந்துக்களின் உபத்திரவத்தை பூர்ணானுபூதியாகிற விபூதியாற் போக்கடித்து முன் எப்படி அகண்டபரிபூர்ண சச்சிதானந்தப்பிரஹ்மமாயிருந்தாயோ அப்படியே யிருக்கக் கடவாயென்று குருநாதன் அநுக்கிரகித்த மார்க்கத்தை இப்போதுள்ள சகலமான முமுக்ஷுக்களும் இந்தக்கிரமத்தைத் தெரிந்துகொண்டு, சம்சாரமாகிற காட்டைவிட்டுச் சாதன சதுஷ்டயமாகிறமார்க்கத்து வழியாக நடந்துபோய், பிரஹ்மானந்த மென்கிற பட்டணம் போய்ச் சேர்ந்து, அவ்விடத்திலுள்ள சாதுக்களுடைய சிநேகத்தாற் சற்குருநாதனைச் சரணமாகவடைந்து கரையேறத் தக்கதென் றறிக.

## 59-வது தரங்கம்.

[அ-கை.] குருநாதன் பிரஹ்மானந்த பட்டணத்துக்கு ஆத்மாவை இராஜனாகச் செய்தது சொல்லப்படுகிறது:—

தேகமென்கிற மாயாபுரியில் அஞ்ஞானனென்கிற இராஜா வெகு நாளாய் வாழுகிறான். அவனுக்குப் புத்திரனை அகங்காரிக்குப் பட்டங்கட்டி ராகத்துவேஷம் முதலான மந்திரிகளையும் கல்பித்துப் பின் அவனும் தன் பிதா உத்தரவுப்படி: ஆத்மாவென்கிற இராஜாவையும், அவர் குமாரன் ஞான இராஜனையும், அவன் மந்திரிகளான விவேகன், நிரூபகன், சாந்தன், தைரியன், வைராக்கியன், ஆசக்தியில்லாத சந்தோஷன், சத்தியன், சமாதானனென்னப்பட்ட அஷ்ட மந்திரிகளையும், சமன்தமன் முதலான சேனாதிபதிகளையும், சாதுசங்கங்களென்கிற சைன்னியங்களையும், மேற்சொன்ன அகங்காரி யென்கிற இராஜகுமாரனனவன் மாயை யென்கிற மோகினிப் பெண்ணினுடைய வஞ்சக பலத்தினால் அவர்களை இன்னவிடமென்று காணாமல் அரத்திப்போட்டு, மூன்று லோகங்களினுமுள்ள எழுவகைத் தேகமாகிற கோட்டைகளைக் கட்டி, அதில் நினைத்தபடி சஞ்சரித்துக்கொண்டு நமக்கு எதிரி யொருவருமில்லை யென்று இப்படி வெகு நாளாய் வாழ்ந்துகொண்டிருக்குங் காலத்தில், தெய்வாதீனமாய்ச் சற்

குரு நாதனென்கிற ஒருராஜன் அவதாரஞ்செய்து ஜகத்தில் எவ்விடத்திலுமுள்ள துஷ்டர்களை நிக்கிரகித்தும் சிஷ்டர்களைப் பரிபாலனஞ்செய்தும் வருங்காலத்தில் விவேகன் முதலான பேர்கள் அவரைச் சரணமாக அடைந்து, அஞ்ஞானதிகள் செய்த அனியாயங்களை அந்தச் சற்குரு சன்னிதானத்தில் தெரியப்படுத்தினதின் பேரில், அவருடைய பரிபூர்ணகிருபையாகிற மந்திரானுக்கிரக பலத்தினல் அந்த ஞானன் முதலான பேர்கள் அஞ்ஞானன் அகங்காரன் முதலான துஷ்டசிரோமணிகளைச் சம்ஹாரஞ் செய்துவந்து குருவினிடத்தில் அதைத் தெரிவித்தவுடன் அந்தக்குருவும் சரீரங்களாகிற மாயாபுரிகளை அதத்வியாவிருத்தி லக்ஷணங்களாகிற மதயானைகளாலிடித்து, மாயையென்கிற மோகினிப்பெண்ணையும் ஞானதிருஷ்டியினலெரித்து, ஆத்துமனென்கிற இராஜனை ஞானனென்கிற புத்திரனோடேகூடவும், விவேகன் முதலான மந்திரிகளுடனேகூடவும், பிரஹ்மானந்தமென்கிற பட்டணத்தில் அகண்ட சாம்பிராச்சிய மென்கிற பட்டாபிஷேகஞ் செய்து வைத்ததுந் தவிரத் திரும்ப முன்போல அஞ்ஞானதி பிசாசு வராமலிருக்கும் நிமித்தியம் ஜீவன் முக்தியென்கிற ரக்ஷாபந்தனமுஞ்செய்து, சாதுசங்கமென்கிற கோட்டை கட்டிச் சாதனங்களென்கிற அகிழுமுண்டு பண்ணி அழியாமலிருக்கிற பதவியைக் கொடுத்த சற்குரு நாதனுக்கு நாம் செய்யும்படியான உபகாரமொன்று மில்லாதபடியினலும் எல்லாம் அவருடைய பாக்கியமே யாகும். அதுவே பூர்ணமாயிருக்கிறபடியாலும் அவரை எப்பொழுதும் மறவாமல் அவர் கிருபையாலுண்டான ஆனந்தத்தையும், அந்த ஆனந்தத்தினற் பெற்றிருக்கிற மகாபதவியையும் வியந்து, இப்பதவியானது ஈஸ்வராதிகளுக்குந் துர்லபமாயிருக்கிறபடியால் அந்தக்கிருபையை நாம் யெண்ணி யெண்ணி எப்பொழுதும் மகிழ்ந்து கொண்டிருக்க வேண்டியது.

## 60 - வது தரங்கம்.

[அ - கை.] ஒருசாது பிரக்ஞாமாந்திய மடைந்திருந்தால் மற்றொருசாது கரையேற்ற வேண்டுமென்றும் சாதுக்களால் கிடைக்கும் பிரயோசனமுஞ் சொல்லப்படுகிறது:—

சாதுக்களாகிற வண்டிக்காரர்கள் தேகங்களாகிற வண்டிகளை விட்டுக் கொண்டு போகும்போது, மத்தியிலொரு வண்டிக்காரனகிற சாது பிரக்ஞாமாந்தியமென்கிற நித்திரையை யடைந்ததால், காமாதி கள்வர்கள் அந்த வண்டியைச் சன்மார்க்க ரோட்டிலிருந்து துர்மார்க்க ரோட்டில் திருப்பிவிட்டதால், ஸ்தூல சரீரமாகிற வண்டியிற் கட்டப்பட்டிருக்கிற இந்திரியங்களாகிற மாடுகளுஞ் சுக துக்கங்களாகிற மேடு பள்ளங்களில் இழுத்துப்போவதால், அந்த வண்டி குடங் கவிழ்ந்தசமயத்தில் அதிலுள்ள விவேகமாகிற ரத்னமும் மைத்திரியாதி சற்குணங்களாகிற சரக்குகளும் கீழே விழுந்ததுந் தவிர, விஷயங்களாகிற படுகுழியில் விழுந்து கிடக்கும்போது, சன்மார்க்கமாகிற ரோட்டில் சாதுக்களாகிற வண்டிகளுடன் சேர்ந்து அந்த வண்டி வாராததைப்பற்றித் தயாளுவாயிருக்கிற சாதுவாகிற ஒரு வண்டிக்காரன் தன் வண்டியை நிறுத்திக்கொண்டு நம்மோடு சேர்ந்த

வண்டிகளில் ஒருவண்டியானது மார்க்கத்தில் கூட வராததைப்பற்றி ஆலோசித்துத் தன் வண்டியை விட்டிறங்கி, தவறிப்பள்ளத்தில் கிடக்கிற வண்டியிடம்வந்து சேர்ந்து கீழே விழுந்திருக்கிற ரத்தினத்தையும் சரக்குகளையும் வண்டியிலேற்றி, அப்படி அபகரித்த காமாதி கள்வர்களையும் பிடித்துச் சமதமாதிகளாகிற கயிற்றினால் வண்டியிற் கட்டிப்போட்டுச் சுகதுக்கங்களாகிற மேடு பள்ளத்தில் விழுந்திருக்கிற வண்டியைத் தூக்கிவிட்டுச் சன்மார்க்கமாகிற ரோட்டிற்கொண்டு வந்து விட்டு, வண்டிக்காரனாகிற சாதுவையும் இனிமேல் இப்படி நித்திரை செய்யக் கூடாதென்று கண்டித்துச் சாதுக்கள் வண்டிகளோடே சேர்த்துவிட்டுக் கொண்டு, குரு சன்னிதியாகிற பெரிய ஷகரான தேசத்துக்குப்போய், விசாரணையாகிற வியாபாரஞ்செய்து, ஞானமாகிற லாபத்தையடைந்து, ஜீவன்முக்தியாகிற போகத்தைப்புஜித்து, நித்திய திருப்தியாகிற சந்தோஷத்தை அடையும்படிசெய்விப்பது சாதுக்கள் கடமையா யிருப்பதாலும், இந்த விபரத்தைச் சாதுக்களுக்குத் தெரிவித்தால் இப்போதிருக்கிற மற்றச் சாதுக்களுக்கும் ஒருவருக்கொருவர் ஒத்தாசை செய்வதற்கும், விசாரணையாகிற வியாபாரஞ்செய்கிறதற்கும், தனி வண்டியாகிற ஏகசரீரமாய்ப்போய் துவைதிகளாகிற காமாதி கள்வர்களிடத்தில் மைத்திரியாதி சாமான்களையும் ஞானரத்னதிகளையும் பறிகொடுத்தும் சம்சார துக்கமாகிற தடியாலடிபட்டும் பரிதவியாம லிருப்பதற்கும் சாது சங்கதி முக்திய ஏதுவாயிருப்பதால் சகலரும் சாது சங்கதியே அவசியமென்று அறியவேண்டியது.

## 61-வது தரங்கம்.

அசுத்த சித்தமாகிற ஊஷரபூமியில் அஞ்ஞானமாகிற விஷ விரை விழுந்து, கர்மயாகிற ஜலத்தால் தேகாத்ம புத்தியாகிற எட்டி மரமுண்டாய், அந்த வழியாகவே ஜகத்தாகிற எட்டிக்காடாய், அதில் துக்கமாகிற பழங்களுண்டாயின, அந்தப்பழத்தை ஜீவர்களாகிற பக்ஷிகள் சாப்பிட்டு மயங்கிக்கிடக்கிறார்கள். அப்போது குருவாகிய பிரபு, சத்துவ குணமாகிய பூமியிற் சுபேச்சையாகிற கற்பகவிரையைப் போட்டுக் கிருபையாகிற ஜலத்தால் விசாரமாகிற மரத்தை வளர்த்துத் தனுமானசியாகிற பூகாய்களுடன் சேர்த்துச் சத்துவாபத்தியாகிற பழத்தை அந்தப்பக்ஷிகளிற் சில பக்குவிகளான பக்ஷிகளைச் சாப்பிடும்படியாகச் செய்த பிற்பாடு, அந்தப் பக்ஷிகள் மயக்கந்தீர்ந்து திருப்தியை யடைந்து மறுபடியும் அசம் சக்தியாகிற அந்தப்பழத்தின் ரசத்தைப் புஜித்துப் பதார்த்தா பாவனையாகிற பரவசத்தை யடைந்து விட்டதால் துரியமென்கிற லயத்தையும் அடைந்து திரும்ப எழுந்திராமலே யிருந்துவிட்டன.

## 62-வது தரங்கம்.

[அ-கை.] ஜாக்கிரம் பொய்யிலும் பொய்யென்று சொல்லப்படுகிறது:—

ஜாக்கிரப் பிரபஞ்சமானது சொப்பனப் பிரபஞ்சத்திலும் பொய். எப்படியென்றால், சொப்பனத்தில் அடைகிற ஈஸ்வரமூர்த்திகளுடைய தரிசனத்தாலுண்டாகிற அனுக்கிரகாதிகள் ஒருக்காற் சத்தியமாயும் அந்தப்படி ஒருக்கால் சித்

திப்பதாலும், அதில் பக்தி விசேஷித்திருப்பதாலும், சாத்வீக குணமானதினு லும்,ஜாக்கிரமானது சொப்பனத்தை ஏகதேசமாயாவது ஒப்புக்கொள்வதுபோல சொப்பனமும் இந்தச் சாக்கிரத்தை ஒரு பதார்த்தமாய்ப் பொய்யென்றுகூட ஒப்புக்கொள்ளாததினுலும்; ஜாக்கிரமானது கிஞ்சிக்ஞத்துவ முதலான ஜீவசக்தி யாயிருப்பதால் ஒரு வீடு முதலான காரியத்தை முடிக்கவேண்டுமானுல் வெகு நாள் யோசனையும், வெகு திரவியங்களையும், வெகு சாமான்களையும், வெகு வேலைக்காரர்களையுஞ் சேர்த்து எத்தனித்து வெகு நாளில் முடிந்தாலும் முடியும் முடியாமற் போனுலும் போகும். எண்ணினபடி முடியாமற் போகிறதே முக் காலே மூன்றுவீசம் முக்காணி. சொப்பனத்திலோவென்றுல், ஈஸ்வர சங்கற்பம் போல எண்ணின காரியங்கள் ஒரு க்ஷணத்தில் முடிகிறபடியாலும்; பின்னும் ஜாக்கிரமானது ஸ்தூல சரீரத்தில் வந்தே சகல சகாயத்துடன் செய்யவேண்டி யிருப்பதாலும், சொப்பனமோவென்றுல் ஈஸ்வர சங்கற்பமானது இச்சாமாத்தி ரத்தில் உண்டுபண்ணுவதுபோலச் சூக்ஷ்ம சரீர மாத்திரத்தில் நடப்பது எது போலவென்றுல், வல்லமையில்லாமலிருக்கிறவன் வெகு சகாயத்துடன் சேர்ந்து ஒரு காரியத்தை முடிக்கவேண்டியிருப்பதுபோலவன்றி வல்லவனுக்குப்புல்லுமா யுதமென்பதுபோலச் சொப்பனமானது; ஸ்தூல சரீரத்தையும், ஸ்தூலப் பிரபஞ் சத்தையும், இந்திரியங்களையும், அவற்றின் விஷயங்களையும், அதற்குப் பிரபுவான ஈஸ்வர சகாயத்தையும், கர்த்துரு கர்மக்கிரியைகளையும் அபேக்ஷியாமல் நினைத்த படி ஜாக்கிரத்துக்கும் அதிகமாக க்ஷண நேரத்துக்குள்சகலத்தையும் முடிப்ப தாலும் ஜாக்கிரத்துக்குச் சொப்பனமே அதிகமென்று நிச்சயிக்கப்பட்டது. ஜாக்கிரத்தில் சுதந்தர சக்தியில்லை யென்பதற்கனுபவம்:—செத்துப் போனவன் ஒருவனுகிலும் ஒருக்கால் உயிரோடே மறுபடி வராமலும், மனுஷன் ஆகாச மனுதிகளைச் செய்யாமலும் அஷ்டமாசித்திகளில் ஒன்றையாவது அடையாமலு மிருப்பதுபோலச் சொப்பனத்தில் அப்படியில்லாமல், மேலே சொல்லிய அதி சயங்களை யாதொரு பிரயத்தினங்களும் யாதொரு தெய்வம் முதலான சகாயங்க ளன்றியிலே தானே நடத்துகிற சொப்பன சக்தியினுடைய சித்திர விசித்திர சாமார்த்தியத்துக்கு ஜாக்கிரசக்தி அணுமாத்திரம் உறம்போடக்கூடக் காண மாட்டாது. எதினுலென்றுல், ஜாக்கிரத்தானது நித்திய தரித்திரன் எப்படிப்பிற ரை உபஜீவித்துப் பிழைக்கிறதும், பழையதுணியைக் கட்டிக்கொள்ளுகிறதும், பழைய சோற்றைத் தின்கிறதும், தானுஞ் சுகப்படாமல் பிறரையுஞ் சுகப்படுத்தி வைக்கமுடியாமலுமிருக்கிருனே அப்படி ஜாக்கிரமும் பரனுலேயே ஜீவிக்கிறதும் பழைய தனுகரணபுவனபோகத்தையே புஜிக்கிறதும் தாபத்திரயத்தால் தானும் தபித்துப் பிறரையும் தபிப்பிக்கிறதுபோலன்றிச் சக்கிரவர்த்திபோலச் சொப் பனம் இதற்கெதிர் மறையாக இருப்பதாலும், சொப்பனம் நிவர்த்தியானுலும் ஜாக்கிரத்தில்வந்தும் அது தோற்றுவதாலும், சொப்பனம் ஜீவனுக்குச் சுயகாரிய மாயிருப்பதாலும்; ஜாக்கிரத்தில் தோன்றுகிற தேகாதி ஜகத்து ஈஸ்வரசிருஷ்டி யாயிருப்பதாலும் அவற்றைக் குறித்து இவன கவலைப்பட்டு முயற்சிசெய்வது

எப்படிப்போலவென்றால்; ஒரு உத்தியோகஸ்தன் வேலை நிமித்தமாய் ஒரு ஊருக்குப்போய் இறங்கினஇடத்தை லக்ஷம்ரூபாய்வரைச் செலவுசெய்து கெட்டியாய்க் கட்டின மூன்றாவதுநாள் இன்னொரு ஜில்லாவுக்கு மாற்றிப்போட்டதால் அதை விட்டுப் புறப்பட்டுப் போகும்போது, அடா நாம் இவடத்திலேயே ஸ்திரமாயிருப்போமென்று நினைத்தல்லவோ இந்த இடத்தைக் கெட்டியாய்க்கட்டினோம்; அநியாயமாய் இதை விட்டுப் போகிறோமேயென்று பரிதபித்துப் போவதுபோல இவனும் இந்த ஜாக்கிரத்தில் உழைத்ததெல்லாம் ஊருக்குழைத்து ஊதாரியாய்ப் போவதுபோல ஒரு பிரயோசனத்தையும் அடையாமற்போவதாலும், ஒருக்கால் அப்படிச் சொப்பனத்தில் எவ்வளவு சுகதுக்காகாரமாய் விவகாரஞ் செய்தாலும் ஞானியின் மனசுபோல ஜனனமரணம் முதலான அனர்த்த ஏதுவன்றியில் போவதாலும், ஜாக்கிரத் விவகாரமானது அனந்தகோடி ஜனனமரண அனர்த்தபரம்பரையைக் கொடுப்பதாலும், ஜாக்கிரத்தில் தோன்றுகிற தேகாதி விஷயத்தைக் குறித்து சத்தியமென்று நினைக்கிறவனுக்குமேற் சும்பன் ஒருவருமில்லை. ஆகையால், ஜாக்கிர சொப்பனங்கள் இரண்டும் பொய்யில் சமமாயிருந்தாலும், ஜாக்கிரத்திற் சொப்பனம் பொய்யாயாவது தோற்றுவதும் அவ்வளவு தோற்றமுங்கூடச் சொப்பனத்தில் ஜாக்கிரப்பிரபஞ்சந் தோற்றாமலிருப்பதால், ஜாக்கிரப்பிரபஞ்சம் சொப்பனப்பிரபஞ்சத்திலும் பொய்யென்று தீர்மானிக்கப்பட்டது. ஜாக்கிரத்தை ஜீவசக்தியாகவும்; சொப்பனத்தை ஈஸ்வரசக்தியாகவும் முதலில் சொல்லிப் பிற்பாடு; சொப்பனத்தை ஜீவசிருஷ்டியாகவும், ஜாக்கிரத்தை ஈஸ்வர சிருஷ்டியாகவும், சொன்னதின் கருத்தென்னவென்றால்; முதலில் சொன்னது சக்தியின் ஆதிக்கியத்துக்கும் பிற்பாடு சொன்னது சொந்தக்காரியம் அன்னிய காரியமென்று தெரிவிப்பதற்காகவுஞ் சொல்லப்பட்டதாக ஊகிக்கத் தக்கது.

### 63-வது தரங்கம்.

[அ - கை.] அகம் விருத்திநாசம் ஒன்றினாலேயே தன்னைத் தவிர வேறேயில்லை யென்று அனுபவம் வருமென்று சொல்லப்படுகிறது:—

மோக்ஷார்த்தமாய்ப் புருஷன் செய்யவேண்டிய அநுசந்தானமாவது: முதலில் நானென்று ஒருவிருத்தியுண்டாகிறது, அதன்பேரில் இது வென்று ஒரு விருத்தியுண்டாகிறது. இதில், அகம் விருத்தி, பஞ்சகோசத்தைக் கற்பிக்கிறது; இதம் விருத்தி, பஞ்ச விஷயத்தைக் கல்பிக்கிறது. இதற்குள் கர்த்தாவும் விஷயமும் அடங்கியிருக்கின்றன. இதற்குள்ளேயே திரிபுடியும், சகல வாசனைகளும், சகல அத்தியாசங்களும், சகல சம்சாரங்களும் அடங்கியிருக்கின்றன. ஆகையால் இந்த விருத்தித்துவயங்களையும் விசாரிக்கவேண்டும். எப்படி விசாரிக்கிறதென்றால்; அகம் விருத்தி உதயமாகாமல் இதம்விருத்தி உதயமாக மாட்டாது. அகம் விருத்தியெப்படி யுதயமாகிற தென்றால், சொச்சொரூபாஞ்ஞானத்தினாலும், வாசனையினாலும், கர்மத்தினாலும், ஆவரணசக்தியினாலும், உதயமாகிறது. இந்த அகம்விருத்தி சித்தைக்குறித்துண்டாகிறதா? ஜடத்தைக்குறித்துண்டாகிறதா? என்றால்,

ரித்து ஆத்மா, ஜடம் தேகேந்திரியாதிகள், இவ்விரண்டுக்குள் ஆத்மாவைக்குறித் துண்டாகிற தென்று சொல்லுவோமென்றால், அந்த அகம் விருத்தி ஆத்மாகார மாகவே வந்து கொண்டிருக்கவேண்டும். அப்படி யிருக்கவில்லை. ஆகையால் ஆத்மாவைக்குறித்து அகம் விருத்தியுண்டாகிறதென்று சொல்லக்கூடாது. ஆத் மாவுக்கு அகம் விருத்தி சகஜமென்றால், சுழுப்தியிலும் விருத்தியிருக்கவேண்டும். சுழுப்தியில் ஆத்மா மாத்திரமிருக்கிறார் விருத்தியில்லை. ஆகையால், ஆத்மாவுக்கு அகம் விருத்தி சகஜமென்று சொல்லக்கூடாது. ஜடமாகிய தேகேந்திரியங்களைக் குறித்தே அகம் விருத்தி உதயமாகிறதென்றால், தேகேந்திரியாதிகளுக்குள் ஒவ் வொன்றுக்கும் வேறே வேறே பேர் இருப்பதினாலும், என்னதென்று இதம் விருத்தி யாகாரமான விஷயமாயிருப்பதினாலும், ஒன்றிலொன்றில்லாததினாலும், அவற்றில் ஒன்றுபோனாலும் தான் போகாமல் நான் குருடு செவிடு என்று இருப் பதினாலும், பஞ்சபூதத்தின்குண விகாரமானதினாலும், தேகாதிகளைக் குறித்து அகம் விருத்தியுண்டாகிற தென்று சொல்லக்கூடாது. இப்படி விசாரிக்கும் போது அகம் விருத்தியே காணாமற்போம். அகம் விருத்தியே யில்லாதபோது வேரில்லாமல் மரங்காணப்படாதது போல இதம் என்கிற விருத்தியெங்கே வரப் போகிறது. இந்த இரண்டு விருத்திகளில்லாதபோதே விஷயமுமில்லை கர்த்தாவு மில்லை. கர்த்தாவில்லாதபோது கர்மமும், வாசனையும், அஞ்ஞானமும், ஆவரணமு மில்லை. இப்படியிருக்கும்போது பந்தமும் மோக்ஷமுமில்லை. குருவுஞ் சிஷ்யனு மில்லை. சகலமும் அவிசாரத்தால் தோற்றுகின்றதே யல்லாமல் விசாரத்தால் பரி பூர்ணமாகிய தன்னைத்தவிர வேறே யெள்ளளவு மில்லையென்று அனுக்கிரகஞ் செய்யப்பட்டது.

## 64-வது தரங்கம்.

[அ - கை.] சப்த அவஸ்தைகளிற் சம்பாதிக்கவேண்டாத அவஸ்தைகள் இன்னவென்றும், அப்படி வேண்டாத காரணமும்; சம்பாதிக்கவேண்டிய அவஸ் தைகள் இன்னவென்றும், அவற்றிற்குச் சாதனமுஞ் சொல்லப்படுகிறது:—

எல்லாரும் ஆத்மசொரூபமாயிருந்தாலும் அனாதிகாலமாய் தன் சொரூபத் தை மறந்ததால் ஆவரணமுண்டாய், அதினால் விக்ஷேபமான கருத்துருத்துவத் தால் ஜனன மரணாதி சம்சாரமெல்லாம் வந்திருப்பதால், இப்போது முமுக்ஷு செய்யவேண்டியது ஏதென்றால்; அஞ்ஞானம் முதல் ஏழு அவஸ்தையில் ஆதியி லிருக்கிற மூன்றும் அஞ்ஞானத்தால் சொதேவ சித்தித்திருப்பதாலும், பின்னால் இரண்டும் ஞானபலமானதாலும், மத்தியிலிருக்கிற பரோக்ஷஞானம் அபரோக்ஷ ஞானம் இரண்டுதான் புருஷன் சம்பாதிக்கவேண்டியது. இதில் பரோக்ஷ ஞானத்துக்குப் பிரதிபந்தம் அசிரத்தையானதால் அதைக் குருவினிடத்திலும் பிரஹ்மமே சத்தியமென்ற அவருபதேசத்திலும் பிரமாணபுத்தி யுடையதாயிருக் கிற சிரத்தையால் நிவர்த்திக்கவேண்டியது. அபரோக்ஷ ஞானத்துக்குப் பிரதி பந்தம் அவிசாரமானதால், அந்த அவிசாரத்தை நிவிர்த்திக்கும் நிமித்தமாக குரு சன்னிதியிலிருந்து விசாரம் பண்ணவேண்டும், எதுவரையிலென்றால் வாசனை

க்ஷயம், மனோநாசம், சாக்ஷாத்காரஞானம் இந்த மூன்றும்வருகிறவரையில்தான். இப்படியே ஆத்ம விசாரணையை விடக்கூடாதென்று பெரியவர்களுடைய நிச்சயமானதால், இடைவிடாமற் சாதுசங்கதியுடன் மேற்கண்டபடி விசாரணை செய்து கொண்டு வரவேண்டியது. (இ—தி) தசமதிருஷ்டாந்தமுந் தவிர தீர்க்க பவ வியாதியையுடைய ஒரு புருஷன் ஜன்மாந்திரிய கர்மமாகிற அஞ்ஞானமும், அதினாலுண்டான இந்த ஜன்மமாகிற ஆவரணமும், இந்த ஜன்மத்தில் வந்திருக்கிற வியாதியாகிற விக்ஷேபமும், சதா சொதசித்தமாயிருப்பதால் அவைகள் வருவதைக்குறித்து இப்போது இவன் யத்தினஞ்செய்யவேண்டியதில்லை. பலாவஸ்தையான வியாதி நிவர்த்தியாகிற துக்க நிவர்த்திக்கும், ஆரோக்கியமான தடையற்ற ஆனந்தத்துக்கும், ஏதுவான வைத்தியனிடத்திலும், அவன் மருந்தினிடத்திலும், சிரத்தைவைப்பதான குருவினிடத்திலும், அவருபதேசத்திலும் சிரத்தைவைப்பதாலுண்டாகிற பரோக்ஷஞானமும்; அந்தப்படி பத்தியத்துடன் வியாதி நிச்சேஷமாய்த் தீரும்வரை அவுஷத சேவையாகிறதான மூலாஞ்ஞானந் தீரும்வரை ஆத்ம விசாரத்தாற் சித்திக்கத் தக்கதான அபரோக்ஷ ஞானமும் சம்பாதிக்கத் தக்கது.

65-வது தரங்கம்.

[அ-கை.] ஆத்மஞாந விமர்சையைச் சொல்லி ஆத்மஞாநத்தைச் சம்பாதிக்கச் சொல்லுகிறார்:—

இந்த ஆத்மஞாநத்தை அவசியம் சம்பாதிக்க வேணும். ஏனென்றால், அதின் மகிமையானது பத்துக்கோடி விதமிருக்கிறது. அதில் கொஞ்சஞ் சொல்லுகிறோம். தானாகயிருப்பதாலும், சதாச்சுகமாயிருப்பதாலும், நிஜமாயிருப்பதாலும், ஈஸ்வரனாலும் பூஜிக்கத் தகுந்த தாயும், அகண்டிதமாயுமிருப்பதாலும், தனக்கு ஞாநம்வந்தால் ஜகத்து இல்லாதேபோவதாலும், தனக்கு அந்நியமாய் ஒரு அஞ்ஞாநி யென்று ஒருவனில்லாமல் எல்லாம் பிரஹ்மமாய்ப் போவதாலும், எல்லாரையும் முக்தியைப் பொருந்தச் செய்வதாலும்; ஒருவனுக்குச் சம்பத்து வித்தைமுதலானதுவந்தால் தன்னைமட்டுக்கும் மேலாகத் தோற்றி வைக்கும். மற்றவர்களைக் கீழாகத் தோற்றி வைக்கும். இது எல்லாரையும் பிரஹ்மமாகத் தோற்றச் செய்வதாலும், கணக்கில்லாத அநந்தகோடி ஜநநமரண துக்கத்தை நிவர்த்தி செய்வதாலும், சிந்தையாகிற அக்நியை அணைப்பதாலும், ஈஸ்வராதிகளுக்கும் பயப்படாமற் செய்வதாலும், இடம் பொருள் ஏவலை அபேக்ஷிக்காமலிருப்பதாலும், மற்றை மாயா காரியங்களாயுள்ளவைகள் இவைகளை அபேக்ஷித்திருப்பதாலும்; விஷயசுகங்களை மநதினால் நினைத்தால் திருப்தியுண்டாகாமல் கிரியையை நடத்தியே சுகம்பெற வேண்டியிருப்பதாலும், இந்த ஞாநம் மனதினால் நினைத்தமாத்திரத்தில் ஆநந்தத்தைக் கொடுப்பதாயிருப்பதாலும்; இனி பிறவாமுடிந்த பிறப்பில் லபிக்கத்தக்கதாயிருப்பதாலும், திரவியாதிகள் வந்தால் ஒரு காலத்தில் அழிந்து போவதுபோல இந்த ஞாநம் ஒருகாலும் அழியாத தநமாயிருப்பதாலும், இந்தத் தநத்தை இவனை யறியாமல் இவனிடத்திலிருந்து

அபகரிக்க யத்தனிக்கிறவன் கையில் இது அகப்படாததா யிருப்பதாலும், சதா கவலையற்றிருப்பதாலும் எவ்வளவு பேர்களுக்கு அகோராத்திரம் கொடுத்தாலும் குறையாமல் மேன்மேலும் விருத்தியாவதாலும், பரஅபேக்ஷையன்றிச் சொதந்தரமாயிருப்பதாலும், வேத புருஷன் சிரசில் விளங்குவதாலும், வேத முடியினால் கொண்டாடப்பட்டதாலும், இதை ஒன்றே அறிந்ததனால் அறியப்படாததெல்லாம் அறியப்பட்டதாவதாலும், கேட்கப்படாததெல்லாம் கேட்கப்பட்டதாவதாலும், ஜாதி வர்ணாச்சிரமங்கள் ஆண், பெண், பால்யம், யௌவநம், வித்துவான், மூடன், இவை முதலானவற்றை அபேக்ஷியாமல் வருவதாயிருப்பதாலும், இவைகளினாலே வருகிற பேத புத்தி ராகத் துவேஷங்களை நிவர்த்திப்பதாயிருப்பதாலும், குரு பாரம்பரையாய் வருவதாயிருப்பதாலும், சாது சங்கதியுடன்கூடின சற்குருவை மாத்திரம் அபேக்ஷித்திருப்பதாலும், சகலரிஷிகளினாலேயும் தேடத்தக்கதா யிருப்பதாலும், சகலபுண்ணியங்கள் சகலதெய்வ கிருபை சகல அதிருஷ்டம் சகலவித்தை சகலதநம் இவைமுதலான சகலத்துக்கும் இந்தஞானமே பலமா யிருப்பதாலும், ஈஸ்வரனாலேயும் அசைக்கப்படாததாயிருப்பதாலும், ஈஸ்வரனென்று தன்னைத்தவிர வேறாக இல்லாமற் பண்ணுவதாலும், தான் தானே ஈஸ்வரனாகவிருந்து பஞ்ச கிருத்தியஞ் செய்கிறவனாயாவதாலும், அந்தப் பஞ்ச கிருத்தியமும் பரமார்த்தமாய்த் தன்னிடத்தி லில்லாமல் மாயையினால் கற்பிக்கப்பட்டதென்று தோன்றச் செய்வதாலும், அந்தமாயையும் மாயாகாரியமும் சொல்லுமாத்திரங்கூட நம்மிடத்திலில்லாமற் பண்ணுவதாலும், பின்னும் இந்த ஞானத்தின் மகிமையைச் சொல்லமுடியாம லிருப்பதாலும், இன்னும் அநேக விசேஷங்களோடும் கூடியிருப்பதால் இந்த ஞானத்தை எவ்விதத்திலும் அவசியம் சம்பாதிக்கத்தக்கது.

## 66-வது தரங்கம்.

[அ - கை] அந்தரியாமியாகிற ரயில்வே கம்பெனிக்காரன் ஜீவர்களாகிற ஜநங்களுக்கு மோக்ஷ உபகாரார்த்தமாகவும், தன் பஞ்சகிருத்தியமாகிற பிழைப்பு நடக்க வேண்டியதற்காகவும், ஒரு ரயிலை யுண்டு பண்ணின விதமாவது:—

முதலில் தன் சக்தியால் ஜகத்தாகிற பூமியை யுண்டுபண்ணி, இந்த ஞாந மார்க்கமாகிற ரயிலைப்போட யோசித்ததில் திரியக் ஜந்மங்களாகிற காட்டில் போட்டால் ஒருவரும் ஏற வரமாட்டார்களாகையாலும் தேவ ஜன்மமாகிற கிராமத்தின்மேல் போட்டால் ஜநங்களின் விஷயசுகத்துக்கு விக்நம் வருமென்று ஆலோசித்து அவ்விரண்டையும் விட்டு, மநுஷ ஜந்மமாகிற மத்தியபூமியில் அந்த ரயிலைப் போட்டாற்றான் விசேஷமென்று நிச்சயித்து, வேத மார்க்கமாகிற ரூலைப் பிடித்து பிராஹ்மண ஜந்மமாகிற உத்தம பூமியில் பிரஹ்மசரியமாகிற ஆட்களால் பாபங்களாகிற மேடுபள்ளங்களை வேதாத்தியநமாகிற மண்வெட்டியாற் சமப்பண்ணச் சொல்லிக் கிரகஸ்தாசிரமமாகிற கட்டைகளைப் பரப்பி, வேதோக்த கருமங்களாற் கெட்டிப்படுத்தி, நிஷ்காம கருமமாகிற தண்டவாளத்

தைப்போட்டு, வாநப்பிரஸ்தமாகிற ஆணிபோட்டிறுக்கிச் சந்நியாச ஆசிரமமாகிற ஸ்டேஷனுங் கட்டி மேலே சொல்லிய ரயிலிலேற்றி விடுவதற்காகவும், சாதந சதுஷ்டயமாகிற பணங் கொடுத்த பேருக்குச் சிரவணமாகிற டிக்கட்டுக் கொடுக்கிறதற்காகவும் குருவாகிய ஸ்டேஷன்மாஸ்டரை நியமித்து, அவரிடத்திற் சிரவணமாகிற டிக்கட்டைப் பெற்றவர்களாயும் மோக்ஷமாகிற காசிக்குப் போகவேண்டுமென்கிற முமுக்ஷுக்களாயுமிருக்கிற ஜநங்களை மநநமாகிற ரயில்வண்டியிலேற்றி நிதித்தியாசநமாகிற வேகத்தில்விட்டுச் சமாதியாகிற காசிபோய்ச் சேர்ந்து, சுவாநுபவமாகிற கெங்கையில் ஸ்நாநம் பண்ணி, ஜீவன் முக்தியாகிற காசி வாசம் பண்ணிக்கொண்டு, விதேகமுக்தியாகிற தாரகப் பிரஹ்மப் பிராப்தியாய் நித்திய வாழ்வைப்பெற்றுச் சுகித்திருக்கவேண்டியது. அப்படிச் சாதந சதுஷ்டயமாகிற திரவ்வியமில்லாமல் மோக்ஷமாகிற காசிக்குப் போகவேண்டுமென்று தீவிர இச்சைமட்டும் ஒருவனுக்கு உண்டாயிற்றேயானால், நம் குருநாதனாகிற சித்தனை அந்தரங்க பக்தியோடு பஜித்தவனுக்கு அவர், சித்தன் ஆகாசகமந குளிகைகொடுத்து அரைநிமிஷத்தில் நினைத்த இடத்தில் கொண்டுபோய்ச் சேர்ப்பதுபோல, பஞ்சகோச விவேகமாகிற குளிகையைக் கொடுத்து மோக்ஷ தேசத்துக்கு நிமிஷத்திற்கொண்டு போய் விடுவதாலும், இன்னங் குருவாகிய கெருடன் விவேக வைராக்கியமாகிற சிறகால் அதிசுலபமாய் முக்தி தேசத்திற் கொண்டுபோய்விடுவதாலும், இன்னங் குருவாகிய கணபதியை யுபாசித்தால் ஞானமாகிற துதிக்கையால் மோக்ஷமாகிற கைலாசத்திற் கொண்டுபோய் விடுவதாலும், குருவாகிய சுப்பிரமணியரை உபாசித்தால் கிருபையாகிற மயிலிலேற்றி அங்கே கொண்டுபோய் விடுவதாலும், குருவாகிய தேவியை உபாசித்தால் சிற்சத்தியைக் கொடுத்துக் கரையேற்றுவிப்பதாலும், குருவாகிய சிவனை யுபாசித்தால் வாசநாக்ஷய மநோநாச தத்துவ ஞாநங்களாகிற திரிநேத்திரத்தைக் கொடுப்பதாலும், குருவாகிய விஷ்ணுவை யுபாசித்தவனுக்கு மோக்ஷ லட்சுமி சுவாதீனமாவதாலும், குருவாகிய பிரஹ்மாவை யுபாசித்தவனுக்கு வித்தையாகிற சரஸ்வதி சாக்ஷாத்காரமாவதாலும், முமுக்ஷுவுக்கு மற்ற எவ்வித சக்தி புத்தி சாமர்த்தியங்கள் வித்தைகள் தனங்கள் ஒன்றுமில்லாமற் போனாலும் குருபக்தி ஒன்றிருந்தால் அதினாலேயே முக்தி சம்பத்தானது ரசவாதம் சித்தித்தவனுக்குச் சகல சம்பத்துஞ் சித்திப்பதுபோல சித்திக்குமென்றறியத்தக்கது.

## 67-வது தரங்கம்.

## கோர்ட்டநுசந்தானம்.

[அ-கை.] வேதாந்தமென்கிற கோர்ட்டில் குருவாகிற ஜட்ஜியிடம் தாபத்திரயத்தாற் துக்கமடைந்த முமுக்ஷுவான வாதி தெய்வத்தைச் சேர்ந்த பொதுவான நானென்கிற சொத்தை அஞ்ஞாநாதி எதிரிகளிடமிருந்து பிடுங்கிக் கொடுக்கவேண்டுமென்றும், அவர்களைத் தண்டிக்கவேண்டியதாயும், அந்தப் பொதுவான சொத்தை எல்லாரையும் நிரகங்காரமாய் அநுபவிக்கும்படி செய்ய வேண்டுமென்றும் பிராது முதலானது கொடுத்து பயிண்டீஸ்ப் பெற்று தஸ்த

வேஜு சாக்ஷி விசாரணையாய் ஈரங்கி நடந்து அதன்பேரில் குரு தீர்ப்புச்செய்த விபரம் சொல்லப்படுகிறது:—

குருவாகிய ஜட்ஜியினுடைய பரமார்த்தமான சீமைக்கோர்ட்டிற் பிரகிருதத்தில் ஒரு வியாச்சியம் நடந்துவருகிறது. அந்தக்கேசில் தாபத்திரயத்தால் துக்கமடைந்த முமுக்ஷுவான ஜீவன் வாதி.

வாதி தரப்புச் சாக்ஷிகள்—விவேகாதிகள்.

வாதி தரப்பு தஸ்தவேஜு—உபநிஷத்து முதலான அத்வைத சாஸ்திரங்கள்.

வாதி தரப்பு வக்கீல்—சூட்சுமமாயும் விசாரணையோடு கூடினதாயுமிருக்கிற சாத்வீகமான புத்தி.

எதிரிகள்—அஞ்ஞானன் முதலானவர்கள்.

மேற்படியார்களில் பிரதிவாதிகளும் மேற்படி தரப்புச் சாக்ஷிகளும் மூன்று வகுப்பாயிருக்கிறார்கள். அவைகளில் பிரதிவாதிகள் பாமரன் (1), கர்மி (2), பக்தன் (3) என மூன்று பேர்கள்.

பிரதிவாதிகளின் தஸ்தவேஜு—துவைத சாஸ்த்திரங்கள்.

மேற்படி தரப்புவக்கில்—தான் பிடித்ததையே சாதிக்கிற கோர மூட புத்திகள்.

விவாத சொத்து—நானென்பது.

ஜட்ஜி—குரு.

மேற்படி ஜட்ஜி யெப்படி யிருக்கவேண்டுமென்றால், பிராதுக்காரர்களையும், விவாத சொத்தையும், பிரதிவாதிகளையும், உபய தரப்பு சாக்ஷிகளையும்பற்றி விசாரணை செய்து தீர்மானிப்பதற்கு, நிரம்பச் சத்தியவானாயும், லஞ்சம் வாங்காதவராயும், நிஷ்பக்ஷபாதியாயும், சர்வக்ஞராயும், மகா தயாளுவாயும், துஷ்டநிக்கிரகம் சிஷ்டபரிபாலனம் பண்ணுவதில் நிரம்பச் சதுரராயும், அவர் உலகத்திலொன்றிலும் அபிமானமில்லாதவராயும், உபசாந்தராயும், விசாரணையன்றியும் தஸ்தவேஜு சாக்ஷிகளுடைய ருசுவை யின்றியும் ஒரு தீர்ப்புஞ் செய்யாதவராயுமிருக்க வேண்டும். ஏனென்றால், இவ்வளவு குணங்களில்லாமற் போனால் முமுக்ஷுக்களாகிற ஏழைகளுக்கு நியாயமே கிடைக்கமாட்டாதானதால், இந்தப் பிராதானது மேலே சொல்லிய லக்ஷணங்களையுடைய சற்குருவாகிய ஜட்ஜியினிடத்தில் செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் இந்தக் கேசின் தன்மையைப்பற்றி யெழுதுவதற்கு எழுத்திலுமடங்காது, வாக்கினாலும் சொல்லி முடியாது, மனதினால் எண்ணினாலும் முடியாது. அப்படியிருந்தாலும் பிரகிருதத்தில் சங்கதி தெரியவேண்டியதற்காக சுருக்கமாய்க் கொஞ்சஞ் சொல்லப்படுகிறது.

## இனி பிராதின் சுருக்கம்.

இந்த நானென்கிற ஆத்ம சொத்து ஒருத்தருக்கும் ஒருவிதமான பாத்தியத்துக்கும் சம்பந்தப்படாமல் அசங்கமாயிருக்கவும், எதிரிகள் முன்னில்

லாமலிருந்தும் இப்போது அத்தியாசத்தினு லுண்டானவர்களுக்குள் இந் திரசித்துப் போன்ற முதலாவது எதிரியான அஞ்ஞானனென்பவன் தான் வெளியில் வராமல் தன்னுடைய ஆவரண சத்தியால் ஆத்மாவின் அசங் கத்தன்மையை மறைத்து விக்ஷேப சத்தியை யேவி விட்டு, அதினுற் கற்பிக்கப்பட்ட வாசனைகளுடன் கூடிய பாமரன் முதலான எதிரிகளைக் கொண்டு இந்த நானென்கிற ஆத்ம சொத்தைக் கிரகித்துத் தங்கள் தங்கள் அநாத்ம சொத்தோடு சேர்த்துக் கலந்து போகும்படி ஏவுதல் செய் திருப்பதால், இப்படிப்பட்ட மோசக்காரர்களான அவர்களுக்குள் முதலில் அஞ்ஞானனென்கிற எதிரியையும், அவனைச் சேர்ந்த பேர்களையும் மூலதோ ஹாரியாகச்செய்து, இந்த நானென்கிற சொத்துச் சுபாவமாய் ஒரு கற்பனையிலும் சம்பந்தப்படாமல் அசங்கமாய் எப்படி முன்னிருந்ததோ அப்படி யிருக்கும் படிக்கும், எதிரி முதலானவர்கள் இனி ஒருகாலுமுண்டாகி இப்படித் துர்வ்வி காரஞ் செய்ய இடம் வையாமல் எதிரிகளையும், எதிரிகளால் செய்யப்பட்ட விவ காரங்களையும், பொய்யென்று தீர்மானிப்பதுந் தவிர, எதிரிகளுக்குள் அஞ் ஞானனென்பவன் ஆத்மாவை மறக்கடித்த மோசத்தையும், ஆவரணம் அறிவின் விளக்கத்தைத் திருடினதையும், விக்ஷேபன் மித்தையா ஜகத்தைச் சிருஷ்டனை செய்ததையும் பற்றி அந்த மோசம் திருட்டு போர்ஜேரி முதலான குற்றங்களுக் காக அவர்களைத் தண்டிக்கும்படிக்கும் தீர்மானிக்கக் கோருகிறேன்.

## வாதி தரப்பு சாக்ஷிகள்.

விவேகன் (1) வைராக்கியன் (2) சாந்தியாதிகள் (3) விஸ்வாசம் (4) பின்னும் இவர்களுக்குச் சமானமான அநேக சாக்ஷிகளிருக்கின்றன.

வாதி தரப்புக்கு தஸ்தவேஜு:—அத்வைத உபநிஷத்துக்களும் வாசிஷ்டம் முதலான ஸ்மிருதிகளும் தாக்கல் செய்யப்பட்டிருக்கின்றன.

இனி பிராது வகையரு பயிலானதன் பிற்பாடு எதிரிகளும் சாக்ஷிகளும் தஸ்தவேசு சகிதமாய்ச் சர்வ வல்லமையுள்ள சற்குருவாகிற ஜட்ஜி சந்நிதானத் தில் ஆஜர் செய்யப்பட்டதன்மேல் பிரதிவாதிகள் கொடுத்த ஸ்டேட்மெண்டு :—

(1) வாதி பிராது பொய். விவாதமான நானென்கிற சொத்துப் பொதுவா யிராமல், நாங்கள் முதலான ஒவ்வொருவருக்கும் சொந்தமாய் ஒவ்வொருத்த ருடைய ஆளுகையில் நெடுங்காலமாயிருந்து அநுபவித்து வரப்படுகிறது.

(2) இந்தப் பிராது வாதி கொண்டுவர அருகனுமல்ல.

(3) மேலும் இந்தப்பிராது காலநிர்ணய சட்டத்தடைக்கு உள்பட்டுமிருக் கிறது.

(4) இந்தக் கோர்ட்டாருக்கு இந்த நானென்கிற சொத்தை எங்களிட மிருந்து பிடுங்கிக் கொடுக்க அதிகாரமுமில்லை.

(5) விவாத சொத்தை அக்கிரமமாய் வியாபித்துக் கொள்ளாததனுல் எங்க ளைத் தண்டிக்க. லா. இடங் கொடுக்கவுமில்லை.

ஆகையால் விவாத சொத்தை எப்போதும்போலே எங்கள் ஆளுகையி லேயே யிருக்கும்படிக்கும், வாதி பிராதை நிஷ்காம்மியமான செலவுடனே தள் ளும்படி செய்யும்படிக்கும், எங்களுடைய சகாம்மியமான செலவை வாதி கொ டுக்கும்படிக்கும் தீர்ப்பு செய்யக் கோருகிறோம்.

பாமரனை முதலாவது பிரதிவாதியின் தரப்பு சாக்ஷிகள் :—புத்திராத்ம வாதி (1), பெண்டாட்டி ஆத்மவாதி (2), தநாத்மவாதி (3), தேகாத்மவாதி (4).

கர்மி யென்ற இரண்டாவது பிரதிவாதியின் சாக்ஷிகள் :—பிராணாத்ம வாதி (5), மநோமய ஆத்மவாதி (6), விக்ஞாநமய ஆத்மவாதி (7), ஆநந்தமய ஆத்மவாதி (8), சூனியாத்மவாதி (9), சாங்கியன் (10).

மூன்றாவது பிரதிவாதியான பக்தி காண்டியின் தரப்புச் சாக்ஷிகள் :— சாலோக காமி (11), சாமீப காமி (12), சாரூப காமி (13), சாயுச்சிய காமி(14), எனப் பேர்கள்.

பிரதிவாதிகள் தஸ்தவேசுகள்:—இகலோக காமிகளுடைய பெரியோர்கள் முதலானவர்கள் காலத்தில் நடந்திருக்கிற செய்கைப்படி எழுதி வைக்கப்பட்ட கணக்கும், பரலோக காமிகளைச் சேர்ந்த கர்மகாண்ட வேதமும் ஸ்மிருதிகளும், பக்தி காண்டியின் தஸ்தவேசு ஆகம புராணாதிகளும் தாக்கல் செய்யப்பட் டிருக்கின்றன.

## விசாரணை.

குருவாகிற ஜட்ஜி சந்நிதானத்தில் முமுக்ஷுவால் கொடுக்கப்பட்ட பிராதை யும், பிரதிவாதிகளால் கொடுத்த ஸ்டேட்டுமெண்டையும், வாசிக்கலாயிற்று. கோர் ட்டாரால் கொடுக்கப்பட்ட பயிண்டிஸ்கள்:—விவாத நாமெனன்கிற சொத்து ஒரு வருக்கும் பாத்தியப்படாமற் பொதுவாய் அசங்கயாயிருக்கிறதா, அல்லது ஒரு வருக்குப் பாத்தியப்பட்டு ஒருவர் ஆளுகைக்குள் படக்கூடியதாவென்பது (1)

இந்தப் பிராது கொண்டு வருகிறதற்கு வாதி அருகனா அல்லவா வென்பது. (2)

இந்தப் பிராது காலநிர்ணய சட்டத்தால் பாதிக்கப்படுமா படாதாவென் பது. (3)

இந்தக் கோர்ட்டாருக்கு விவாத சொத்தை எதிரிகளிடமிருந்து திருப்பிக் கொடுக்கக் கூடுமா கூடாதாவென்பது. (4)

அப்படி எதிரிகள் விவாத சொத்தை அக்கிரமமாய் வியாபித்திருந்தால் அவர்களைத் தண்டிக்க "லா" இடங்கொடுக்குமா கொடாதாவென்பது. (5)

அசத்தாகிய லோக விவகாரத்துக்கு வாதி தரப்பு முதலில் விசாரிப்பது வழக்கமாகயிருந்தாலும், அதற்கு இது விலட்சணமாயிருப்பதாலும், கோர்ட்டார் யுக்தமென்று "லா" இருப்பதாலும், முதலில் பிரதிவாதி தரப்பு விசாரிக்கப்படு கிறது.

முதலில் கோர்ட்டார் உத்தரவுப்படி பிரதிவாதி தரப்புச் சாக்ஷிகளில் முத

லாவது சாக்ஷி புத்திரகாமி யென்பவன் சர்வ வல்லமையுள்ள சற்குரு சந்நிதியில் நடத்தப்படுகிற கேசில் பிரமாணஞ் செய்வித்து விசாரிக்கப்படுகிறான்.

பிரதிவாதி தரப்பு வக்கீல் கோர மூடபுத்திகளின் கேள்வி:—

நீ யார்? நான் ராமா சாஸ்த்திரி; பிரகிருத கேசில் நானென்கிற ஆத்மா யாரென்று தெரியுமா? தெரியும்; யார்? புத்திரனே ஆத்மா; எதனால்? ஆநந்த மாயிருப்பதால்; எதனால் ஆநந்தமாயிருக்கிறது? அடுத்தாத்துச் சேஷய்யன் பிள்ளையில்லாததனால் சதா துக்கித்துக்கொண்டிருக்கிறான் எனக்குப் பிள்ளை பிறந்திருப்பதால் சந்தோஷமாயிருக்கிறேன்; நீ பிள்ளையை ஆத்மாவென்பதற்கு சுருதி யுக்தி அநுபவமென்ன? ஆத்மாவை "புத்திரனாமாசி" ஆத்மாவே பிள்ளை யாய்ப் பிறந்தானென்கிறதே சுருதி. தீபத்திலிருந்து மறு தீபமேற்றினதுபோல குண ரூபமெல்லாம் என்னைப்போலிருக்கிறதே யுக்தி. எவ்வளவு விசனம் வந்த போதிலும் பிள்ளையைப் பார்த்த மாத்திரத்தால் அந்தத் துக்கம்போய் ஆநந்த முண்டாவதே அநுபவம்.

இனி வாதி வக்கீல் அதிசூக்ஷமமான விவேக புத்தியின் கிராஸ் கேள்வி:—

நீ நானென்கிற ஆத்மா புத்திரனென்று சொன்னாயே புத்திரன் நானென்று உனக்கு வருகிறதா? என் புத்திரனென்று வருகிறதா? பின்னும் ஆநந்தமென் பதற்கு அடுத்தாத்துக்காரன் சாக்ஷியென்று சொன்னாயே அவன் பிள்ளை யில்லையென்று யேகதேசத்தில் விசனத்தை யடைகிறான் நீ பிள்ளை க்ஷேமமா யிருக்கவேண்டுமென்று சதா விசனத்தை யடைந்துகொண்டிருக்கிறாயா அல்ல வா? பின்னும் புத்திரனே ஆத்மாவென்ற சுருதியானது பூர்வ பக்ஷமாய்க் கௌணமாய்ச் சொன்ன சுருதியல்லவா? அவனுடைய குணங்களும் ரூபங்களும் உன்னைப்போலவே யிருக்குமென்று சொன்னாயே நீ சுகுணனாயிருந்தால் அவன் துர்க்குணனாயிருக்கிறான் நீ துர்க்குணனாயிருந்தால் அவன் சுகுணனாயிருக்கிறான். நீ அழகாயிருந்தால் அவன் அவலக்ஷணமாயிருக்கிறான் பின்னும் புத்திரனைக் கண்டால் துக்கம் போகிறதாகச் சொன்னாயே பசி வியாதி முதலானது வந்தால் அந்நம் ஔஷதம் முதலானது சாப்பிடுகிறாயா? அல்லது பிள்ளையைப்பார்த்தே போக்கடிக்கிறாயா? பின்னும் புத்திரனே ஆத்மாவானால் புத்திரனுண்டாகிற தற்கு முன்னும் அழிந்த பிற்பாடும் அன்னிய இடங்களிற் போன காலத்திலும் நீ இருக்கிறாயா அல்லவா? பின்னும் ஆத்மாவென்பது ஏக லட்சணமாயிருக்க வேண்டுமே. அநேகம் பிள்ளைகளில் அநேக லக்ஷணமுமிருப்பதால் இதில் எந்த லக்ஷணம் ஆத்மாவைச் சேர்ந்ததென்று பின்னுஞ் சில கேள்வி கேட்ட மாத்திரத் தில், ஒன்றும் பதிற் சொல்ல முடியாமல் ஆடு திருடின கள்ளன்போல விழிக்க, அவனுக்கு அப்பிரமாண கேசுக்காக ஜநநமரணமாகிற தண்டனையானது கோர்ட் டாரால் விதிக்கப்பட்டது.

இரண்டாவது சாக்ஷி ஸ்திரீ காமியென்பவன் பிரமாண மூலமாய் விசாரிக் கப் படுகிறான்.

பிரதி வாதி வைக்கீல் கேள்வி:—

உனக்கு நானென்கிற ஆத்மாவைத் தெரியுமா? தெரியும், யார்? என் பெண்டாட்டி, அவள் ஆத்மா என்பதற்கு சுருதி யுக்தி அநுபவமென்ன? பெண்டாட்டியே ஆத்மாவென்று சொல்லுகிற வேதமும், ஜகத்தில் ஆருடைய வார்த்தைக்குப் பயப்படாமற் போனாலும் ராஜாக்கினைக்குப் பயப்படுவதுபோல அவள் வார்த்தைக்கு நான் பயப்படுகிறதே யுக்தி, என்ன கஷ்டம்வந்தாலும் அவள் முகத்தைப்பார்த்த மாத்திரத்தில் ஆநந்தமாய்ப் போவதே அநுபவம்.

வாதி வைக்கீல் கிருஸ் கேள்வி:—

நீ. பெண்டாட்டியே நானென்று சொல்லுகிறாயா? என் பெண்டாட்டியென்று சொல்லுகிறாயா? பெண்டாட்டியை ஆத்மாவென்று சொன்ன வேதமானது உன்னைப்போல மூடனைக் குறித்துப் பரிகாசமாய் சொன்னதல்லவா? அவளுக்கு நீ பயப்படுவது:— உன்னைக் காட்டிலும் பெலத்தினாலா, வித்தையினாலா, சம்பத்தினாலா, சாமர்த்தியத்தினாலா, தைரியத்தினாலா? எதில் அதிகமென்று பயப்படுகிறாய்? பெண்டாட்டியைக் கண்டால் துக்கமெல்லாம் போகிறதென்று சொல்லுகிறாயே அவளைக் கண்டமாத்திரத்தில் காமவிகாரமான துக்கமும், சுக்கில விமோசநமான துக்கமும், வியாதிவருமென்கிற துக்கமும், வஸ்திராபரணம் வாங்கிக் கொடுத்துத் திருப்தி பண்ணி விக்கமுடியவில்லை யென்கிற துக்கமும், பிறர் அபகரித்துப் போவாரென்கிற துக்கமும், விபசாரஞ் செய்திருப்பளா செய்யவில்லையா வென்பதைச் சோதனைசெய்ய முடியாததினால் தீராத சம்சயதுக்கமும், இப்படி அநந்த துக்கமும் உண்டுபண்ணுகிறதான ஸ்திரீயைச் சுகமென எப்படிச் சொல்லுகிறாயென்று கேட்க, முந்தினவன் போலவே விழிக்க அவனைப்போல இவனும் தண்டிக்கப்பட்டான்.

மூன்றாவது சாக்ஷி தனகாமி பிரமாணமூலமாய் விசாரணை செய்யப்படுகிறான்.

பிரதி வாதி வக்கீல் கேள்வி:—

நீ யார்? நான் பெரிய மனுஷியன், எதனால்? பணத்தினால், நானென்கிற ஆத்மாயார்? என் பணந்தான், அதற்கென்ன சுருதி யுக்தி அனுபவம்? நிர்தநபுருஷ ஷவ்பசமான "சர்வே ஜநாகாஞ்சந மாஶ்ரயந்தி" யென்பதே சுருதி. பணமில்லாதவன் பிணமென்று சொல்லிச் சகல ஜநங்களும் ஏழையை அவமதித்துத் தனிகனான என்னைக்கண்டு பயப்பட்டு மரியாதை செய்வதே யுக்தி. நான் சதா இந்தப் பணத்தைப்பார்த்து ஆநந்தப்படுவதே அநுபவம்.

வாதி வக்கீல் கிருஸ் கேள்வி:—

நீ பணமே நானென்று சொல்லுகிறாயா? என்னுடைய பணமென்று சொல்லுகிறாயா? பின்னும் பணமில்லாதவன் ஷவ்பத்துக்குச் சமானமென்கிற சுருதியானது பணமுள்ளவனுக்குத் தன் பிள்ளையினிடத்திற் கூடப்பயம் வருமென்ற சுருதியால் அடிபட்டுப் போயிற்றல்லவா? எல்லாரும் உனக்கு மரியாதை செய்வது உன்பணத்தைப் பிடுங்கிக்கொள்ளுகிற தற்காக வல்லவா?

அநுபவத்தில் பணமில்லாதவன் நிர்ப்பயனாய்க் காட்டிலேயோ கரையிலேயோ எவ்விடத்தாகிலுஞ் சுகமாயிருக்கிறான். நீ பணத்தைப் புதைத்து வைத்தால் பூதங்காத்துப் போமென்றும், கடன் கொடுத்தால் கடன்காரன் மோசம் பண்ணிப் போடுவானென்றும், சும்மாவைத்திருந்தால் கள்ளன்கொண்டு போவானென்றும், அப்படிக் கள்ளன் கொண்டுபோகுங் காலத்தில் நீ, ஆசையினால் விடமாட்டேனென்று சொன்னால் உன் பிராணனுக்கே அபாயம் வருவதானும், இப்படிப் பிராணனுக்கே அபாயம் வருகிறதாயுள்ள பணத்தை நீ என்னமாய் ஆநந்தமென்று சொல்லுகிறாய்? பின்னும் அந்தப் பணத்தினால் அநேகம் பேர்கள் ராகத்துவேஷங்கள் கெர்வங்கள் பெரியவர்களை அவமானம் பண்ணுதல் முதலான அநேக அநர்த்தங்களைப் பண்ணுவது அநுபவசித்தமாயிருக்கும் போது ஆநந்தமான ஆத்மாவாக எப்படியாகும் சொல்லுக. இப்படிக் கேட்கும்போது இவனும் முந்தினவன்போலவே விழிக்க அவனைப்போல இவனும் தண்டிக்கப்பட்டான்.

நாலாவது சாக்ஷி தேககாமி விசாரணை.

பிரதிவாதி வக்கீல் கேள்வி:—

நீ யார் மகன்? ராமா சாஸ்திரி மகன். உன் பேரென்ன? சுந்தர சாஸ்திரி. அவனுக்கு நீ எப்படிப் பிள்ளை? அவன் பிந்துவுக்குப் பிறந்ததால். நானென்கிற ஆத்மா யார்? இந்தத் தேகமே ஆத்மா. அதற்கென்ன சுருதி யுக்தி அநுபவம்? தேகமே ஆத்மாவென்கிறது சுருதி. தேகமுள்ள காலத்தில் சகல போகங்களையும் அநுபவித்தலானும் தேகம்போனால் போகாநுபவம் இல்லாமற் போவதானுமாயிருக்கிறதே யுக்தி. இந்த ஜகத்தில் எது நன்றாயிருந்தாலும் ஆநந்தம் வராமல் தேகம் ஆரோக்கியமாய் அழகாயிருந்தால் ஆநந்தமுண்டாவதே அநுபவம்.

வாதி வக்கீல் கிறாஸ் கேள்வி:—

தேகமே ஆத்மாவானால் என்னுடைய தேகமென்று சொல்லக் கூடாதே. மேலும் ஆத்மா ஒருவனுக்குப் பிள்ளையாயிருக்கவும் மாட்டாது, மேலும் உன் பிதா பிந்துவுக்கு நீ பிறந்ததாய் சொல்லுகிறாயே; அப்போது நீ ஜடமாயிருக்க வேண்டும். நீ சித்தாயிருப்பதற்குக் காரணமென்னை? என் பாட்டன் பிந்துவுக்கு எங்களய்யா பிறந்து அவர் சித்தாயிருப்பது போலவென்றால், அந்த பிந்துவும் சித்தாயிருக்கக் கூடாதே யென்றதற்குப் பதில் சொல்லாமலிருந்த பின், உன் ஜாதி யென்ன? பிராமண ஜாதி, எப்படியென்றால் எங்களய்யா வயிற்றில் பிறந்ததால். அவர் சரீரத்திலுண்டான மல மூத்திரம் சுக்கிலம் ரத்தம் மயிர் முதலானவையெல்லாம் பிராமணனாயிருக்க வேண்டுமே; அப்படிக் காணாததாலும், பின்னும் உன் ஜீவனமென்ன? பஞ்ச விஷயத்தை அநுபவிக்கிறதே ஜீவனம். இந்த பஞ்ச விஷயம் யாரால் அநுபவிக்கப்படுகிறது? தேக ரூபியான என்னால்தான் அனுபவிக்கப்படுகிறது. மரணத்திலுஞ் சுழுத்தியிலும் இந்தத் தேக ரூபியான உன்னால் ஒரு விஷயமாவது அநுபவிக்கப்பட்டதா? பின்னும் தேகமெடுக்கிறதற்கு முன்னும் நீயிருந்தாயா? இல்லையா? தேகமழிந்த பின்னும் நீயிருப்பா

யா? யிருக்காயா? அதொன்றுந் தெரியாதென்றாலும் இத்தேகமிருக்கும்போதே சொப்பனாவஸ்தையில் தேகம் பிணமாய்க் கிடக்குங் காலத்தில் நீ போகிறது வருகிறது முதலான விவகாரஞ் செய்தாயா இல்லையா? பின்னும் தேகம் அறிவா யிருந்தால் தேகத்திலிருந்து வெளிப்புறப்படுகிற மயிர் முதல் மலம் வரையிலு முள்ள வஸ்துக்கள் அறிவாயிருக்க வேண்டுமே; அப்படியுங் காணேமே; தேக மானது ஆநந்தமானால் தேகத்திற் போடப்பட்ட நல்ல அன்னம் ஜலம் வஸ்திரம் சந்தனம் மாலை முதலான வஸ்துக்கள் ஆனந்தமாயல்லவோ இருக்கவேண்டும். அவற்றிற்கு முன்னிருந்த சொரூபமுங்கெட்டு நாறிப்போகிறதே, பின்னும் இந் தத் தேகத்தில் சிரசுமுதற் பாதம் வரையிலுமுள்ள அவயவங்களில் எந்த இடத் திலாவது சுகமிருக்கிறதா? முதலில் ஒரு மயிரை யெடுத்து அன்னம் முதலான பதார்த்தங்களிற் போட்டால் சாப்பிட யோக்கியமாயிருக்கிறதா? அல்லது அந்த மயிரை அக்கினி முதலானதிற் பாகம் பண்ணினால் அப்போதாவது வாசனையா யிருக்கிறதா? காதிலிருக்கிற குறும்பை, கண்ணுப்பூளை, கண்ணீர், மூக்குச்சளி, வாயெச்சில், கோழை, வாதநீர், பித்தநீர், வேர்வை, மலம், மூத்திரம், உதிரம், சீ, நரம்பு, எலும்பு, தோல், நாக்குப்பூச்சி முதலான இவ்வளவில் சரீரத்துக்குள்ளே யாவது வெளியிலேயாவது ஏதேனுங்கடுகத்தனை சுகமிருக்கிறதா? அப்படியிருக்க இதை ஆனந்தமான ஆத்மாவென்று எவ்விதமாய்ச் சொல்லுகிறாய்? இப்படிக் கேட்டமாத்திரத்தில் ஒரு கேள்விக்கும் பதில் சொல்லமுடியாமல் முந்தினவன் போலவே விழிக்க உடனே கோர்ட்டார் இவனையும் ஜனனமரணமாகிற விலங் கிற் போடும்படி உத்தரவு செய்தார்கள். இப்படியே இகலோக காமிகளில் அனேகஞ் சாக்ஷிகள் விசாரணையிற் பதிற் சொல்லமாட்டாமல் உளறித் தண்டனைப்பட்டுப் போனார்கள்.

2-வது பிரதிவாதியான கர்ம காண்டியின் சாக்ஷி விசாரணை.

முதலாவது சாக்ஷி பிராணாத்ம வாதி விசாரணை செய்யப்படுகிறான்.

பிரதிவாதி வக்கீல் கேள்வி:—

நீ யார்? நான் பிராணாத்ம வாதி; நானென்கிற ஆத்மா யார்? பிராணனே ஆத்மா; அதற்குச் சுருதியுக்தி அனுபவமென்ன? அன்னிய அந்தராத்மா பிராணமயனென்கிறதே சுருதி; சகலமும் லயித்த சுழுப்தியில் நான் லயியாம லிருப்பதே யுக்தி; நான் பேசினேன், நான் செய்தேன், நான் போகிறேன், நான் மல மூத்திர விசர்ஜனஞ் செய்கிறேன், நான் ஆனந்தமாய் ரமித்தேன், நான் பசி தாகமாயிருக்கிறேன், நான் பலவானாயிருக்கிறேன், நான் பலஹீனனாயிருக்கி றேன், நான் நன்றாயிருந்து விளங்குகிறேனென்று காணப்படுகிற பிரத்தியக்ஷமே அனுபவம்.

வாதி வக்கீல் கிராஸ் கேள்வி:—

நீயே நானென்கிற ஆத்மாவானால் நான் பிராணனென்றே யிருக்கவேண்டு மே யல்லாமல் என்னுடைய பிராணனென்று சொல்லக் கூடாது. வாக்கு முத லான கர்மேந்திரியங்களும் என்னதென்று சொல்லக்கூடாது. இன்னும் நீ

அறிவாயிருந்தாற் சுழுப்தி முதலான அவஸ்தையில் நீ தோன்றிக்கொண்டிருக்கிற நாசிகாத்துவாரத்திலிருக்கிற ஆபரணத்தை ஒருவன் கழற்றினலும் அந்தக் களவையறியச்சக்தியில்லாமலும், கழுத்தை வெட்டவந்தாலும் கையைப்பிடிக்கச் சக்தியில்லாமலும், இது இஷ்ட மனிஷ்டமென்று அறிய அறிவில்லாமலும், வெளியிலடிக்கிற காற்றுப்போல உள்ளே அடிக்கிற காற்று ஆனதாலும், க்ஷணே க்ஷணே விகாரத்தை யுடைத்தாயிருப்பதாலும், தன்னையும் அன்னியத்தையும் அறிந்துகொள்ள யோக்கியதை யில்லாமலிருப்பதாலும் நீ யெப்படி அறிவாகிய ஆத்மாவாவாயென்று கேட்ட கேள்விக்கு ஊமையைப்போல விழிக்க முன் சாக்ஷியைப்போல அவனுந் தண்டிக்கப்பட்டான்.

இரண்டாவது சாக்ஷி மனோமயனென்பவன் விசாரிக்கப்படுகிறான்.

பிரதிவாதி வக்கீல் கேள்வி:—

நானென்கிற ஆத்மா யார்? மனோமயனான நானே ஆத்மா. இதற்குச் சுருதியுக்தி அனுபவமென்ன? அன்னியனான அந்தராத்மா மனோமயனென்கிற தே சுருதி, ராஜாவைப்போல நானில்லாத சுழுப்தியில் ஜகந்தோற்றாமலும் நானுள்ள ஜாக்கிர சொற்பனத்தில் ஜகந்தோற்றுகிறதே யுக்தி, நான் ராகி, நான் துவேஷி, நான் கேட்டேன், தொட்டேன், பார்த்தேன், தின்றேன், வாசனை யறிந்தேன், என் வீடு, என் மாடென்று இப்படிக் காணப்படுகிறதே அனுபவம்.

வாதி வக்கீல் கிராஸ் கேள்வி:—

நீயே ஆத்மாவானால் என்னுடைய மனசென்று சொல்லக்கூடாது. நீ யார் பிள்ளை? நட்டுவ ஜாதியானதால் தகப்பன் பேர் தெரியாது; உன்னைப் பெற்ற தாய் பெயரென்ன? ஜெகன்மோகனக் கருப்பாயியென்ற அவித்தை; உன் வளர்ப்புத் தாய்ப் பெயரென்ன? ஆளையே மோசம் பண்ணுகிற ஆவரணி; உன் ஜீவனமென்ன? சுரோத்திராதி யிந்திரியங்களாகிற தாசிகளை ஆட்டி வைக்கிறதே ஜீவனம்; இந்த நானென்கிற சொத்து உனக்கெவ்வமாய்க் கிடைத்தது? என் தாய் மூலமாய்க் கிடைத்தது; அவளுக்கெவ்விதமாய்க் கிடைத்தது? தேவடியாளானதால் அவளுக்குக் கிடைத்தவிதத்தைக் கோர்ட்டாரே அறிந்துகொள்ள வேண்டியது; இப்போது அந்தச் சொத்து எவராளுகையிலிருக்கிறது? எங்களுடைய ஆளுகையிலேயே யிருக்கிறது. இப்படிச் சொன்ன மாத்திரத்தில் வாதி வக்கீல் கோர்ட்டாரைப் பார்த்துத் தெரிவித்துக்கொள்ளுகிறார். இந்தச் சாக்ஷி கற்பனைக்கெல்லாங் காரணனானதால் இவனை இன்னஞ் சில கேள்வி கேட்கும்படி உத்தரவாக வேண்டியதென்று கேட்டவுடன், கோர்ட்டாரும் இப்படிப் பொய்யை யுண்டுபண்ணுகிறவனை விசாரணை செய்து தண்டிக்கவேண்டியதே நம்முடைய கடமையாயிருப்பதால் இந்தப் போக்கிரியை உனக்கு வேண்டியமட்டும் கேட்பதில் யாதொரு ஆக்ஷேபமுமில்லை யென்று உத்தரவு கொடுத்தார். திரும்ப மனசைப்பார்த்து கேட்கிறார்:—உன்னுடைய சொரூபம் சித்தா ஜடமா சொல்? சித்தென்றாற் சித்துக்கு விகாரமேது? ஜடமென்றால் மண்போல அசைவற்றிருக்க வேண்டும், சித்துஞ் ஜடமுஞ் சேர்ந்தவனென்றால், இருட்டும் வெளிச்சமுஞ்

சேராததுபோலச் சித்துஞ் ஜடமுமொன்றாய்ச் சேர்ந்த ஒரு பதார்த்தத்தை ஒப்புவி; பின்னும் சதா நீ செய்கிற தொழிலென்ன? சப்தாதி விஷயங்களை நினைக்கிறதே வேலை; அந்தச் சப்தாதிகளே நீயா அதற்கு நீவேறா? சப்தாதிகளே நீயென்றால் அந்தச் சப்தாதிகள் சூனியமாய் அழிவதுபோல நீயும் அப்படிப் போகவேண்டும். பின்னும் சப்தம் ஆகாசத்தின் குணமாயும், ஸ்பரிசம் வாயுவின் குணமாயும், ரூபம் அக்கினியின் குணமாயும், ரசம் ஜலத்தின் குணமாயும், கந்தம் பூமியின் குணமாயுமிருக்கிற பூதத்தின் அம்சமான குணம் உனக்குச் சொரூபமாக எப்படியாகும்? பின்னும் அவைகள் ஜடமாயிற்றே அதற்கு அறியச் சக்தியேதென்று கேட்கும்போது, அந்தக் குணங்கள் நானில்லை அவற்றை அறிகிறவனே நானென்று சொன்னதும், அறிகிறது அறிவாகிய ஆத்மாவைச் சேர்ந்ததேயல்லாமல் உனக்கறிப அறிவேது? எனக்கறிவில்லாமற் போனாலும் ஆத்மா விஷயத்தை யறிவதற்கு நான் சாதகனென்று சொன்னதும், அந்தந்த இந்திரியங்களும் பிராண வாயுவும் அறிவதற்குச் சாதனமேயல்லாமல் உன்னாலே யெந்த விஷயத்தையறியச் சாதனமாயிருக்கிறது சொல்லு? கொத்தன்போலச் சகல இந்திரியங்களுக்கும் நான் மேல் விசாரணையா யிருக்கிறேனென்று சொல்லும்போது, உன்னை மேல் விசாரணையாக நியமித்தது யார்? அப்படி யென்னை யொருவரும் நியமிக்கவில்லை; இப்படி நான் மேல் விசாரணையாயிருக்கிறது வழக்கமென்று சொன்னதும், ஒரு ஆதரவுமில்லாமல் ஒருவன் சொத்தை மற்றொருவன் திருடினதைக் கண்டுபிடித்து ஏன் திருடினாயென்று கேட்கும்போது இப்படித் திருடுவதே யெனக்கு வழக்கமென்று சொன்னால் புதுத் திருடனைக் காட்டிலும் பழயனாட் கள்ளனுக்குப் பலமான தண்டனை கொடுப்பதுபோல இவனுக்கும் கோர்ட்டார் பலமான தண்டனை கொடுக்கவேண்டியது. இன்னம் நீ மேல் விசாரணையாயிருந்து செய்கிற தொழில்தானென்ன சொல்லு? என் ஸ்திரீ, என் பிள்ளை, என் வீடு, என் மாடென்று இப்படி இந்திரியங்களுடனும் விஷயங்களுடனுஞ் சேர்ந்துகொண்டும் சேராமலுமிருந்து நினைப்பதே என் தொழிலென்றவுடன் வக்கீல் கேட்கிறார்: நீ என் பெண்டாட்டி யென்று சொல்லும்போது தங்கத்தைக் கொஞ்சங் கொஞ்சம் வெட்டி யெடுத்தால் தங்கமாகவே வருவதுபோல பெண்டாட்டியையுங் கொஞ்சங் கொஞ்சம் வெட்டி எடுத்தால் பெண்டாட்டியாய்த் தானே வரவேண்டுமல்லாமல் ரக்தமாம்சமாய் எப்படி வரக்கூடும்? பின்னும் என் பெண்டாட்டி யென்று சொல்லுகிறாயே அது, ஸ்தூல பஞ்சபூதத்திலிருந்து உண்டாயிருக்கிறது. நீயோ சரீரத்துக்குள்ளே யிருக்கிறாய். அந்த விஷயங்களோ சரீரத்துக்கு வெளியிலிருக்கின்றன. உள்ளேயிருக்கிற உனக்கும் வெளியிலிருக்கிற அந்த விஷயங்களுக்கும் என்னமாய்ச் சம்பந்தம் வந்தது? அவைகளாய் வந்து உன்னை யென்னதென்று சொல்லச்சொன்னதா? அவைகள் ஜடமாயிற்றே, நீயாய் என்னதென்று சொல்லுகிறதானால் அன்னியனுடைய சொத்தை யென்னதென்று சொல்லுகிறவனுக்குத் தண்டனை கிடைக்குமா கிடையாதா சொல்லு? இதுபோலவே சகல விஷயங்களையும் என்னதென்று

சொல்லுவதற்கு யாதொரு ஆதரவுங் காணப்படவில்லையே. இவ்விதமாகவே நீ சத்தா அசத்தா? நீ துக்கமா ஆனந்தமா? நீ விகாரியா நிருவிகாரியா வென்று இப்படி யநேகங் கேள்வி போடவே பறக்கப்பறக்க விழிக்க, உடனே கோர்ட்டார் பார்த்து இவன் பெரிய திருடனாயிருப்பதால் இவனுக்குச் சொரூபானுசந்தான மாகிற வேலையும் விஷய வைராக்கியமாகிற விலங்குடனும் கடினமான தண்டனையுஞ் செய்யும்படி உத்தரவு கொடுத்தார்.

அதன் பிற்பாடு மூன்றாவது சாக்ஷி விக்ஞான மயனென்பவன் விசாரிக்கப்படுகிறான். விக்ஞான மயனென்பவன் ஆஜரான உடனே பிரதிவாதி வக்கீல் கோர்ட்டாரைப் பார்த்துத் தெரியப்படுத்திக் கொள்ளுகிறார்: இதோ வந்திருக்கிற சாக்ஷி எங்களுக்குள்ளே முக்கியராயும் நிரம்பக் கண்ணியமுள்ளவராயுமிருப்பதால் இவருக்கு மரியாதை கொடுத்து விசாரிக்க வேண்டுமென்று தெரியப்படுத்திக்கொண்ட பிரகாரம் கோர்ட்டாரும் இருதயமாகிற குறிச்சி கொடுக்கும்படி உத்தரவு கொடுத்தார்.

பிரதிவாதி வக்கீல் கேள்வி:—

உம்முடைய பெயரென்ன? விக்ஞானமயன்; உன் தகப்பன் பெயரென்ன? மகா அகங்கார ரிஷி; நான் என்கிற ஆத்மா யார்? நான்தான். நீயே நானென்பதற்குச் சுருதி யுக்தி அனுபவமென்ன? மனோமயனுக்குமுள்ளாக அந்தராத்மா விக்ஞானமயனென்கிற சுருதியும் ராஜாவின் ஆக்ஞைப்படி ஜனங்கள் நடப்பதுபோலச் சகல இந்திரியங்களும் என்னனுமதிப்படி நடந்து வருகிற யுக்தியும் இத்தனை பேர்களுக்குங் குறிச்சி கொடாமல் எனக்கு இருதயமாகிற குறிச்சி கொடுத்து உட்கார வைத்திருக்கிறதே அனுபவம்.

வாதி வக்கீல் கிராஸ் கேள்வி:—

கோர்ட்டார் இந்தச் சாக்ஷியை விசேஷமாக விசாரிக்கும்படி உத்தரவாக வேண்டும். ஏனென்றால், இவர்களுக்குள்ளே முக்கிய சாக்ஷி யென்று அவர்களே சொல்வதால், அந்தப்படியே கோர்ட்டாரும் உத்தரவு கொடுத்த மாத்திரத்தில் நீ யாரென்று கேழ்க்கவே விக்ஞான மயரென்று சொன்னார். நீர் யார் பிள்ளை? மகா அகங்கார ரிஷியினுடைய பிள்ளை: அவர் யார் பிள்ளை? ரிஷி மூலம் நதி மூலம் விசாரிக்கக் கூடாது. அதிருக்கட்டும் உன் தாயார் யார்? அவிவேகி; எப்போதும் உம்முடைய தொழிலென்ன? பார்க்கிறது, கேட்கிறது, ஸ்பரிசிக்கிறது, ருசி யறிகிறது, பேசுகிறது முதலான வியாபாரங்களே யென் தொழில். இப்போது பார்வை முதலான தொழிலைக் கண் முதலான இந்திரியங்கள் ஊனத்தை யடைந்த காலத்தில் உம்மாற் செய்ய முடியுமா சொல்லும்? முடியாதென்றால் இந்தத் தொழிலை நான் செய்கிறதாக எப்படிச் சொன்னீர்? நீரே நானென்ற சொல்லுக் கர்த்தமானால் என் வீடென்பது போல என் புத்தி யென்று சொல்லப்படுகிறீர். எப்படிச் சொல்லப்படலா மென்று கேட்கும்போது கோபமாய்ச் சொல்லுகிறார்: என்னை யிது வரையில் நீ யாரென்று கேட்ட பேரே இந்த ஜகத்தில் கிடையாது. என் குட்டைக் குலைத்து என் கண்ணியத்தையுங்

கெடுக்கிறவனுயிருக்கிருய். நான் எப்பேர்ப்பட்டவன் தெரியுமா? நானே சம்பன்னன். நானே வித்துவான். கர்ம காண்டத்திற் சொன்ன பிரகாரம் பவுண்டரீகம் வரையில் நான் செய்யாத யாகம் பாக்கியில்லை. என்னுடைய யோக்கியதையைப்பற்றி என்னைப்போலொத்த பேர்களுக்குத் தெரியுமே தவிர, இந்தச் சபையிலுள்ள எதிரிகள் முதலான பேர்களுக்குத் தெரியமாட்டாது. எந்த விடத்திற் போனாலும் எனக்கே அக்கிர தாம்பூலம் கொடுக்கவேண்டும். என்னைக் கண்ட மாத்திரத்தில் சகலரும் நமஸ்காரம் பண்ணவேண்டும். அப்படிச் செய்யாமற் போனால் உடனே கோபித்துச் சாபங்கொடுத்து விடுவேன். மேலும் நான் ஏகசந்தக்கிராகி. நானே சர்வக்ஞன். எனக்குமேல் ஈஸ்வரனுங் கிடையாது. குருவுங் கிடையாது. எனக்கு இவ்வளவு யோக்கியதையும் சுயமாகவே யுண்டாயிருக்கிறது. நான் எவ்வளவோ சோமபானம் பண்ணியிருக்கிறேன். நானிந்தப் புண்ணிய கர்மத்தாற் கொஞ்சக் காலத்துக்குப் பிற்பாடு இகத்திலுள்ள சுகங்களை யனுபவித்து அதற்குமேல் திவ்விய விமானத்திலேறிக்கொண்டு தேவலோகத்துக்குப்போய், இந்திராதி சகல தேவதைகளும் என் காலில்விழுந்து என்னைப் பூஜிக்கும்படியாய்ச்செய்து, அவ்வளவு தேவதைகளுக்கும் உன்னத ஸ்தானத்திலிருந்து தேவாமிர்தத்தைக் குடங்குடமாகச் சாப்பிட்டு, ரம்பை முதலான சகல அப்சர ஸ்திரீகளையும் இப்போது இவ்விடத்தில் என் பெண்டாட்டியை எப்படி அதிகாரம் பண்ணி யனுபவிக்கிறேனோ அப்படியே அவ்விடத்திலும் அனுபவிக்கப்போகிறேனென்றும், இதற்கு முன்னும் கணக்கில்லாத சுகத்தை அனுபவித்திருக்கிறேனென்றும், இனிமேலும் இப்படியே கர்மங்களைச்செய்து பின்னும் அதிக சுகத்தை யனுபவிக்கப்போகிறேனென்றும், இப்படி அனந்தவிதமான தன்னுடைய பிரதாபத்தை ஓயாமல் வர்ணிக்கும்போது இதைக்கேட்ட கோர்ட்டாருக்கு நிரம்ப இவன்பேரில் ஆயாசமுண்டாய் அவனுக்குடனே இந்திரிய நிக்கிரகமாகிற விலங்கு போடும்படி செய்து அவனுக்குக் கொடுத்த மரியாதையையும் நிறுத்தி, வாதி வக்கீலுக்கும் இந்த மூடனை வாரும் போமென்ற மரியாதையை விட்டு ஏக வசனமாகக் கேட்கும்படிக்கும் சொல்லி, இந்தக் கோர்ட்டார் முன்பாகவே இவ்வளவு அலக்ஷியமாய்ப் பேசுவதால் இவனெவ்விடத்திலும் அடங்காமலிருப்பவனென்பதற்கு கேட்கவேண்டியதில்லை யென்றும்; ஆகையாலிவனை மற்றச் சாக்ஷிகள் ஒப்பந்தம் தண்டியாமல் இப்பவே கருத்துருத்துவ நாசமாகிற தூக்கில் போடவேண்டுமென்று தோன்றுகிறது. ஆனாலும், விசாரணை செய்து இவன்பேரில் குற்றத்தை நன்றாய் நிரூபித்தே தண்டிக்கிறோமென்று சொல்லிக் கோர்ட்டார் நேரேயே இவனைக் கேட்கிறார். அடே மூடா நீ கேட்ட கேள்விக்கு சரியான பதிற் சொல்லாமல் ஏன் கோபப்படுகிறாய். இதுவரையில் இப்படியுன்பேரில் பிராது வந்து இந்தக் கோர்ட்டார் முன்பாக உன்னை யாரும் விசாரணை செய்யாததினால் உனக்கு இவ்வளவு அகம்பாவ மேறி விட்டது. உன்னுடைய குட்டு இப்போதுதான் வெளியாகிறது. நீ, தானே/குரங்கு தன் குண்டியைத்தான் முத்தமிட்டுக் கொள்வதுபோல, நீயே நான் பெரியவனென்று சொல்

லிக்கொள்ளுகிறாய். உன் வாக்குமூலத்தினாலேயே நீ மகா ராகி குரோதி யென்
றும் துர்க்குண சிரோமணி யென்றும் வெளியாகிறது. நீ கர்மங்களைச் செய்ததற்
காக ஈஸ்வரன் உனக்குச் சுவர்க்காதி போகங்களான பலன்களைக் கொடுத்திரு
க்க அவரை மறந்து, ஈஸ்வரன் குரு ஒன்றுமில்லை யென்று சொல்லுகிறாய். அது
எப்படியென்றால் ஒருத்தன் எஜமானனிடத்தில் கூலி பேசிக்கொண்டு ஒரு வேலை
செய்யாமற் காட்டிலே போய் ஒரு சுவர் வைத்தால் அந்தக் கருமம் அவனுக்கு
என்ன பலத்தைக் கொடுக்கும்? அப்படி ஈஸ்வரனன்றியில் உனக்குச் சொர்க்
காதி பல மெப்படிக் கிடைக்கும்? பின்னுங் குரு வில்லாமலே வித்தை யெல்
லாம் வந்து விட்டதாய்ச் சொல்லுகிறாய். அதெப்படிப்போல வென்றால், ஒரு
ஸ்திரீயானவள் பர்த்தா இல்லாமலே பத்துப்பிள்ளையும் பெற்றேனென்றால்
அவளுக்கு விபசாரி யென்று பேரே யல்லாமல் யோக்கிய ஸ்திரீ யென்கிற
பேரில்லாதது போல உனக்கும் யோக்கிய னென்கிற பேர் வரமாட்டாது. நீ
கர்மமாகிற வேலையைச் செய்து சொர்க்க பலமாகிற கூலியைப் பெற்றுக்
கொண்டு மறுபடியும் அவர்களால் தள்ளப்பட்டு மறுபடியும் பூமியில் வந்து கரு
மஞ் செய்துகொண்டு வருகிறது, விளையாடப்போய் பக்ஷண மாய்ப்போனால்
பெரிய குழந்தைகள் அடித்து வெரட்ட வீட்டுக்கு வந்து அம்மாவிடம் பக்ஷணம்
வாங்கிக்கொண்டு திரும்ப விளையாட ஓடுகிற குழந்தைக்குச் சமானமாயிருக்கி
றாய். பின்னும் உன்னைப்போல அநேகங் கோடி ஜீவர்கள் இப்படி அலைந்து
கொண்டிருக்கிறார்கள். அதில் நீ ஒருவனே தவிர அதிசயமில்லை. மேலும், நான்
கர்த்தாவென்று சொல்லும் போது அந்த ஜடமான கருத்துருத்துவம் அந்தக்
கரணத்தைச் சேர்ந்ததாக இருக்கிறது. அதிலிருக்கிற அசைவு பிராணனைச்
சேர்ந்தது. அதிலிருக்கிற அறிவு ஆத்மாவைச் சேர்ந்ததாக இருக்கிறது. இப்
படிப் பார்க்கும்போது முதலில் உன் சொரூபமே பொய்யாய்ப் போகிறது.
பின்னும் முண்டையுமில்லாமற் சுமங்கலியுமில்லாமலிருப்பது போல நீ சத்து
மில்லாமல் அசத்துமில்லாமல், சித்துமல்லாமல் ஜடமுமல்லாமல் இரண்டுங் கெட்
டவனாய்த் தூலசரீரத்தையும், மேற்படி சரீரத்தில் மாயையினால் கற்பிக்கப்பட்ட
வர்ணாச்சிரமத்தையும், சரீரத்தினுடைய ஷட்பாவ விகாரத்தையும், இந்திரியங்க
ளுடைய விகாரத்தையும், பிராணனுடைய அசைவையும், அந்தக் கரணத்தி
னுடைய கருத்துருத்துவத்தையும், ஆத்மாவினுடைய அறிவையும், ஒன்றாகச்
சேர்த்து நான் கர்த்தா வென்று சொல்லி வந்தாய். இப்போது ஆத்மானாத்மாக்
களை வேறேயாகப் பிரித்ததனால் உனக்கென்று ஒரு சொரூபமில்லாமற்
போகையால் உன்னைத் தூக்கிலே போடும்படி தீர்மானித்திருக்கிறோ மென்று
சொன்னதைக் கேட்ட மாத்திரத்தில் இன்னவிதமாய் இறந்தானென்று தெரியா
மலே இறந்துபோய் விட்டான்.

இந்த ஜீவத்துவமானது மாப்பிள்ளைத் தோழன் போல நாமாரென்கிற
விசாரமன்றியிலிருக்கிற அவிசாரத்தை உப ஜீவித்துக்கொண்டிருந்தமையால்,
இப்போது ஆத்மானாத்மாக்களுடைய சித் ஜட விவேகத்தாலும், குரு கடாக்ஷத்

தாலும் தெய்வ கிருபையாலும், சர்வ சம்சாரானர்த்த மூலமாயிருந்த ஜீவத்துவம் நஷ்டமாய்ப்போனதால், மற்ற மாயா காரியங்களைப்போலே பிராதி பாசிக வியாவகாரிக அசத்துக்கள் போலப் பொய்யாய்த் தோற்றவும் பொய்யாய் விவகாரத்துக்கு வருவது போலவு மன்றியில் விசார மாத்திரத்தில் விஞ்ஞானமயன் அத்தியந்த அசத்தாய்ப் போவதே இறந்துபோனனென்று சொன்ன சொல்லின் கருத்து.

நாலாவது சாக்ஷி ஆனந்தமய னென்பவன் விசாரிக்கப்படுகிறன்.

நிரம்பசாவகாசமாகிற தென்று கோர்ட்டார் நேரே விசாரிக்கிறர்:—

நானென்கிற ஆத்மா யார்? ஆனந்தமயனுகிய நானே ஆத்மா. அதற்கென்ன பிரமாணம்? விக்ஞானமயனைக்காட்டிலும் ஆனந்தமயனே அந்தராத்மா யென்கிற சுருதியும், சகலப் பிராணிகளும் சுழுப்தி சுகத்திற்காகப் பாய் தலையணை முதலான சாதனங்களைத் தேடுகிற யுக்தியும், தினமனுபவிக்கிற சுழுப்தியானந்தமும் அனுபவமென்று சொன்னதைக்கேட்டு, இது அஞ்ஞானவஸ்தையிற் சேர்ந்ததாலும், ஏகதேசமாயுண்டாவதாலும், ஆனந்தவிகாரமானதாலும், நிருபாதிகராயும் நிர்விகாரராயும் அழியாமற் சதாயிருப்பவராயுமிருக்கிற ஆத்மா இவனல்லவென்று தள்ளப்பட்டான்.

ஐந்தாவது சாக்ஷி சூனியவாதி விசாரிக்கப் படுகிறன்.

உனக்கு நானென்கிற ஆத்மாவைத் தெரியுமா? தெரியும். அவருக்குச் சொரூபமென்ன? அசத்தேசொரூபம். அதற்குச் சுருதி யுக்தியனுபவமென்ன? சிருஷ்டிக்குமுன்னே அசத்தே யிருந்ததென்கிற சுருதியும், பிராகபாவமாயிருந்து கடமுண்டாகிற யுக்தியும், சுழுப்தியிலொன்று மில்லாமலிருக்கிற அனுபவமும், பிரமாணமென்று சொன்னதைக்கேட்டு; நீ சொன்ன சுருதி ஜகத்து முன்னேயில்லையென்று சொன்னதே, தவிர ஆத்மாவை யில்லையென்று சொல்லவில்லை. கடம் சூனியத்திலுண்டாகவில்லை மண்ணிலிருந்துண்டாயிருக்கிறது. சுழுப்தியில் ஒன்று மில்லாததை யறிந்த நீ யிருக்கும்போதே ஒன்றுமில்லையென்று சொல்லுகிறய் ஆகையால் நீயுந் தண்டனைக்குள்ளானய்.

6-வது சாக்ஷி சாங்கியன் விசாரிக்கப்படுகிறன்.

நானென்கிற ஆத்மா சித்தாஜடமா? சித்து. சித்தென்றல் ஏகமா அநேகமா? அநேகம், என்னத்தினலென்றல் பந்த மோக்ஷங்கள் விவஸ்தையாகிற நிமித்தம் அநேகமென்று சொன்னதைக்கேட்டு, அந்தப்பந்த முத்தி விவஸ்தையை அங்கங்கே மாயையே பண்ணும். இனி, அறிவு அநேகமென்று சொல்லுகிறயே, ஒரு அறிவுக்கும் மற்றொரு அறிவுக்கும் பேதமுண்டா இல்லையா? பேதமென்றல் அறிவுக்குப் பேதமாயிருப்பது ஜடமாய்விடுமே, அபேதமென்றல் ஒன்றுக்கொன்று லக்ஷண பேதமில்லாமலிருக்கும்போது அறிவு ஒன்றயிற்றே, அறிவு அநேகமென்று எப்படிச் சொல்லுகிறயென்று கேட்க, அவனும் விழிக்கக் கோர்ட்டாரிடிக்க விலக வழியில்லாமல் மூர்ச்சிதனய்ப் போய்விட்டான்.

2-வது பிரதிவாதியான கர்மகாண்டி சாக்ஷி விசாரணை முடிந்தபின் 3-வது பிரதிவாதி பக்தி காண்டிதரப்பு 4-சாக்ஷிகள் விசாரிக்கப்படுகிறர்கள்,

1-வது சாக்ஷி சாலோக காமி விசாரணை.

உன் மதத்தில் பதார்த்தம் எத்தனைவிதம்? ஜீவன் ஜகத்து ஈஸ்வரனென்று மூன்று பதார்த்தம். இதில் நித்தியமாயுள்ள ஆத்மா யார்? ஈஸ்வரன். அவர் எங்கே யிருக்கிறார்? சூரியனைப்போல எங்குமிருப்பர். பக்தர்களுக்காகக் கைலாசாதி லோகங்களிலும் பூமியிலுள்ள ஸ்தலங்களிலுமிருக்கிறார். நீ நித்தியனா அநித்தியனா? நான் கண்போலே நித்தியன். அவர் வாழ்வைக்குறித்து என் வாழ்வு அநித்தியம். அந்த ஈஸ்வரன் கிருபையால் நித்திய வாழ்வை யுடையவனாக அந்த லோகத்திற்போய்ச் சேரப்போகிறேன். அவரும் நீயுஞ் சித்தா ஜடமா? சித்து. அப்போ அவருக்கும் உனக்கும் பேதமேதெனில்? அவர் பேரறிவை யுடையவர் நான் சிற்றறிவையுடையவன். நீ இயற்கையாய்த் துக்கியா சுகியா? இயற்கையாய்த் துக்கி. என்னத்தினால்? பாச பத்தனாயிருப்பதால். அந்தப் பாசங் கற்பனையா வாஸ்தவமா? வாஸ்தவம். வாஸ்தவமானால் அந்தப்பாசம் போகிறதுண்டாயில்லையா? அவர் கிருபையாற் போகும். அவர் கிருபை யெப்படி வரும்? அவரைத் திரிகரணங்களாலும் வழிபட்டால் வரும். கேள்வி:— பாசஞ் சொபாவமானால் ஆனைத்தோலை யெவ்வளவு வெள்ளாவியில் வைத்தாலும் வெளுக்காததுபோல ஜீவனுக்கு இயற்கையாயுள்ள பாசம் போகாதென்று சொன்னதின்பேரிலும் இவன் ஈஸ்வரன் கிருபையால் போகுமென்கிற சாஸ்திரமிருக்கிறதென்று சொன்னதைக் கேட்டு இராத்திரி சுழுப்தியில் ஜீவன் ஜகத்து ஈஸ்வரனென்கிற திரிபதார்த்தங்களையுங் கண்டாயா? காணவில்லை. சுழுப்தியிற் சுகமாயிருந்தாயா துக்கமாயிருந்தாயா? துக்கத்தைக் காணவில்லை யென்றால் திரிபதார்த்த முண்டென்றும், நான் துக்கியென்று மெப்படிச் சொன்னாய்? சாஸ்திரத்தைக் கேட்டுச் சொன்னேனென்று சொல்லும்போது அனுபவமில்லாத சாஸ்திரம் தண்ணியிற் கல்மிதக்கு மென்கிற வசனம் போல உபயோகமில்லை யென்று தள்ளி அதுபோலவே சாமீப்பிய காமி, சாரூப்பிய காமி யோகி, யென்ற சாயுச்சிய காமிவரை கர்மத்தினாலேயே ஐக்கியம் வரையிலுள்ள முக்தி சித்திக்கு மென்கிற வார்த்தையைக் கேட்டு அவர்களுடைய வாதங்கள் முழுவதையும் உபயோகமில்லை யென்று ஒரு யுக்தியால் தள்ளுகிறார்.

அதாவது, சுபாவமாயிராமல் கர்மத்தினால் சாதிக்கப்பட்ட பலனெல்லாம் ஜலத்துக்கு வந்த உஷ்ணம்போலவும், ரசவாதத்தால் இரும்புக்கு வந்த ஸ்வர்ணத்துவம் போலவும், சுவரிலெழுதின சித்திரம்போலவும், கொப்பரையில் விட்ட ஜலம் போலவும், புருஷனுக்குக் கொட்டீங்கச்சியைக் கட்டினாற் போலவும், சிவப்புக்காக அரிதாரம் பூசிக்கொள்வது போலவும், நாடகத்தில் விசுவாமித்திர வேஷம் போலவும், அந்தக் கர்ம சாத்தியமான முக்திகளும் அந்தக் கருமக்ஷயம் வருங்காலத்தில் கருமத்தோடு கூடவே அழிந்து போய் விடுமென்று பக்தி காண்டி சாக்ஷிகளையும் பூர்வபக்ஷ மென்றே தள்ளப்பட்டது.

இனிமேல் வாதிதரப்புச் சாக்ஷிகளையும் விசாரணை செய்து ஈரங்கி பண்ணித் தீர்மானிக்கிறோமென்று கோர்ட்டார் வாதி சாக்ஷிகளை ஆஜர் செய்யும்படி உத்தரவு கொடுத்தார்.

இனி வாதி தரப்பு முதலாவது சாக்ஷி விவேகனென்பவன் ஆஜர் ஆனதின் பேரில் வாதி வக்கீல், என் தரப்புச் சாக்ஷிகளை நான் கேள்வி கேட்கவேண்டுவதில்லை, எதிரி வக்கீலே கேட்கட்டுமென்று சொன்னவுடன் கோரமூடபுத்தியான வக்கீல்களின் கேள்வி:—

நீ யார்? விவேகன். நீ யார் பிள்ளை? விசாரனுடைய பிள்ளை. உனக்கு நானென்கிற ஆத்மாவைத் தெரியுமா? லக்ஷணையால் தெரியும். அவரைத் தெரிந்துகொள்ள லக்ஷணை யேதுக்கெனில்? உங்களைப்போலே மூடமாய் ஜடமாயில்லாமல் சித்தாயிருப்பதால். சித்தை யறிவதில் லக்ஷணைவேண்டு மென்பதற்கு யுக்தியென்ன? சப்தாதி விஷயங்களைப் போலச் சுரோத்திராதி ஞானேந்திரியங்கள் ஜடமாயில்லாமல் சித்தாயிருப்பதால், லக்ஷணை யன்றியில் பிரத்தியக்ஷமாய் அறியப்படுகிற விஷயங்களைப்போல இல்லாமலிருக்கிற மேற்படி இந்திரியங்கள் இவற்றை யறிகிற தென்கிற லக்ஷணையினாலே அவ்விந்திரியங்களை அறிவென்று அறிந்துகொள்ளுகிறது போலும், அக்கினியின் சூட்டை செத்தை முதலானதைத் தகிப்பதினால் அறிவது போலும், நானென்கிற ஆத்மாவினால் பஞ்சகோச பஞ்ச விஷயங்கள் அறியப்படுவதாலும், அவைகளால் இவர் அறியப்படாததாலும் இப்படிப்பட்ட அறிவே நானென்கிற ஆத்மாவென்று லக்ஷணையினால் அறிந்தேன். இவருக்கு கருத்துருத்துவாதி சம்சாரம் உண்டா இல்லையா? இல்லை. எதனால்? அகர்த்தாவாயிருப்பதால். எதனால் இவர் அகர்த்தா? அவஸ்தாத்திரயங்களிலுந் தோன்றித் தோன்றி அழிகிற ஸ்திராஸ்திர அஞ்ஞான விஷயங்களில் ஒன்றோடேயுஞ் சம்பந்தமன்றியில் அறிந்துகொண்டிருப்பதால் ஆத்மாவை அகர்த்தாவென்றறிந்தேன். கேள்வி: ஆத்மா கர்த்தா வென்றும், அவருக்குப் புண்ணிய பாவ கர்மங்களுண்டென்றும், அதற்கேற்ற ஜனனமரண சம்சாரமுண்டென்றும், சுருதியும் அனுபவமுமிருக்கிறதே யெனில்; அந்தச் சுருதி ஸ்தூலாருந்ததி நியாயம் போலப் பூர்வ பக்ஷமாய் உங்களைப்போலே யிருக்கிற அவிவேகிகளுக்காகச் சொன்னதே தவிர, சித்தாந்த சுருதிகள், ஆத்மாவானவர் சாக்ஷி,—சேதா, கேவலோ, நிர்குணச்சவென்று சொல்லுகிறதினாலும், இந்த ஆத்மாவானவர் அனுபவமான சுழுப்தியிலும் பிராந்தியான மனதில்லாததினால் கருத்துருத்துவாதி யாதொரு சம்சாரமன்றியில் சாக்ஷி மாத்திரமாயிருப்பதாலும், நீ சொன்ன சுருதிகளும் அனுபவங்களும் மனோ பிராந்தியென்று தள்ளப்படுகிறது. இன்னமொரு ரகசியம். அதாவது: இந்த ஆத்மாவை முதலாவது அஞ்ஞானனென்கிற எதிரி மறைத்து, ஆவரணி யென்கிற லாகிரிப்பெண்ணால் மயக்கி, விக்ஷேபி யென்கிற குஷ்டம் பிடித்த பெண்ணுடன் இவரைச் சேர்ப்பித்து, கருத்துருத்துவாதிகளாகிற வியாதியையும் உண்டுபண்ணி, பாமரன், கர்மி, பக்தன், முதலான பிள்ளைகளையும் உற்பத்தி செய்து, சதா தாபத்திரய துக்கங்களை அடையும்படி மோசமாய் அசங்கனைச் சங்கன் போலவே செய்து போட்டானென்று சொன்னதைக் கேட்டு எதிரி வக்கீல் கோபமாய்ச் சொல்லுகிறான். சட்டத்தில் சாக்ஷிக்காரன் வக்கீலுடைய கேள்விக்கு மட்டும் மறுமொழி சொல்லும்படி சொல்லி

யிருக்க நீ அதற்கு விரோதமாக உன்னைக்கேளாத சங்கதியைப்பற்றி நீ சொன்னதால் நீ நிரம்ப அதிகப் பிரசங்கி. இனி அப்படிச்சொன்னயேயானால் கோர்ட்டாரால் தண்டிக்கப்படுவாயென்று சொல்லித் திரும்பக் கேட்கிறான். இந்த நானென்கிற ஆத்மா சத்தா அசத்தா? சத்து. எதனால்? சர்வ காரணமாயிருப்பதால். அதற்கென்ன சுருதி? சிருஷ்டிக்கு முன்னே சத்துமாத்திர மிருக்கிறதென்று சொல்லுகிறது. யுக்தி-மண் இரும்பு தங்கம் முதலான காரண வஸ்த்துக்கள் கடாதி காரியங்களைப்போல அழியாமல் நித்தியமாயிருப்பதுபோலவென்றறிக; தான் மூன்று காலத்திலும் கெடாமலிருப்பதே அனுபவம். இவர் சித்தா ஜடமா? சித்து. எதனால்? அவஸ்தாத்திரயங்களையும் அறிந்துகொண்டிருப்பதால். இதற்குச் சுருதி? பிரக்ஞானம் பிரஹ்மமென்பதே சுருதி. யுக்தியென்ன? கண்ணால் அறியப்படுகிற ரூபம் ஜடமாவதுபோல ஆகாமல் கண் அறிவாயிருப்பதே யுக்தி. அனுபவமேதெனில்? தானாக விளங்கின தூல தேகம் சொப்பனத்தில் தோற்றாமற் போவதையும், சுழுப்தியில் சூட்சும தேகம் தோற்றாமற் போவதையும், சமாதியில் காரண தேகந்தோற்றாமற் போவதையும் அனுகூதனாய் அறிந்துகொண்டிருக்கிறதே அனுபவம். கேள்வி: இந்த ஆத்மா துக்க ரூபியா சுக ரூபியா? சுக ரூபி. அதற்குச் சுருதி யுக்தி அனுபவமென்ன? ஆனந்தமே பிரஹ்மமென்று அறியவேண்டியதென்பதே சுருதி. மாப்பிள்ளைக்காக மாப்பிள்ளைத் தோழனுக்கும் உபசாரஞ் செய்வதுபோல ஆத்மாவுக்காகப் பிள்ளை முதலானவர்களிடத்தில் பிரியம் வைப்பதே யுக்தி. பணம்முதல் பிராணன் வரை தன்னுடைய சுகத்துக்கு விக்னம் பண்ணும் வேளையில் அவற்றை வெறுத்துத்தன்னிடத்திலேயே அதிகப் பிரியமாயிருப்பதே அனுபவம். கேள்வி: இந்த நானென்கிற ஆத்மா எவ்வளவு காலமாய் இந்த அஞ்ஞானாதிகளுடன் சேர்ந்து அஞ்ஞானதத் காரியங்களான பஞ்ச கோசாதிகளால் அனுபவிக்கப்படுகிறார்? அதைச் சொல்லென்று கேட்கும்போது விவேகன்சொல்லுகிறான்: இருட்டும் அதிலிருக்கிற கடபடாதிகளும் இந்த வீட்டிலிருக்கிற புருஷனை எவ்வளவு காலமாய் அனுபவிக்கிறதென்று கேட்கிறாப்போலவும், ஆகாசத்தில் தோற்றுகிற நீலாதி வர்ணங்கள் எத்தனை காலமாய் அதை அனுபவிக்கிறதென்று கேட்பது போலவும், ஸ்படிகத்தை எவ்வளவு காலமாய் சிவப்புப்பூ சிவப்பு வர்ணமாய் அனுபவிக்கிறதென்று கேட்பது போலவும், கண் காமாலையால் சங்கில் தோணுகிற மஞ்சள் நிறம் எவ்வளவு காலமாய் சங்கைத் தன்னிறமாக அனுபவிக்கிறதென்று கேட்பது போலவுமிருக்கிறது. இந்த அஞ்ஞானாதிகள் சுத்த அசத்தாயிருப்பதால் இவைகள் ஆத்மாவை எவ்வளவு காலமாய் அனுபவிக்கின்றனவென்று கேட்டது, மலடிபிள்ளை அருந்ததியைப்போலிருக்கிற கற்புடையவர்களை எத்தனை காலமாய் அனுபவித்து அழிக்கிறானென்று சொன்ன சொல்லைக் கேட்பதுபோல உம்முடைய வார்த்தையும் நிரம்பப் பரிகாசத்துக்கிடமாயிருக்கிறதென்று சொன்னதைக் கேட்ட கோர்ட்டாரும் எதிரி வக்கீலைப்பார்த்து நீ கேட்கக் கேட்கத் தீட்

டத் தீட்ட அரிசி வெளுப்பது போல உங்கள் சாயம் வெளுத்துப் போவதால் கேள்வியை நிறுத்தச் சொல்லிப்போட்டு, இவர் மிகவும் யோக்கிய ரென்று இவருக்கு நிரூபகனென்கிற கிதாபான நாமமும் கொடுத்து, கேசு முடியும் வரை வாதிக்கொத்தாசையாய் தன் சமீபத்திலேயே யிருக்கும்படி உத்தரவு செய்தார்.

அதின்பேரில் கோர்ட்டார் உத்தரவுப்படி 2-வது சாக்ஷி வைராக்கியன் வந்ததின்மேல் பிரதிவாதி வக்கீல் கேட்கிறான்.

நீயார்? வைராக்கியன். யார் பிள்ளை? விவேகன் பிள்ளை. நானென்கிற ஆத்மாவைத் தெரியுமா? தெரியும். அவர் எங்கே விளங்குகிறார்? உங்களை யெல்லாம் வெறுத்த விடத்தில் விளங்குகிறா ரென்று சொன்னதைக் கேட்ட அந்த வக்கீல் மிகவும் கோபத்துடன் கோர்ட்டாரைப் பார்த்து இந்தச் சாக்ஷி நிரம்ப மோசக்காரன்; அதைக் கொஞ்சந் தெரிவிக்கிறேன். அதாவது, முதலில் பிர்மசாரிய ஆசிர்மத்தை யெடுத்து, அது பூரணமாகு முன் அதைவிட்டு, மகா யோக்கியன் போலே கிரகஸ்தாசிர்மத்துக்கு வந்து அக்கினி சாக்ஷியாய் ஒரு ஸ்திரீயை விவாகஞ் செய்து, அவளிடத்தில் பிள்ளைகளையும் பெற்று, நிரம்ப ஆசத்தன் போலே அபினயம் பண்ணிக்கொண்டிருந்து திருடனைப்போலே சொல்லிக்கொள்ளாமல் ஓடிப்போனான். அவர்களும் இவனை விரட்டிக்கொண்டுபோய்க் கண்டு பிடித்து யேன் ஓடி வந்தா யென்று கேட்டார்கள். அதற்கவன் வேலைக்கள்ளி பிள்ளையின் பேரில் சாக்குச் சொல்வது போல, உங்களுக்குச் சம்பாதித்துப் போட எனக்குச் சக்தியில்லை அதனால் ஓடி வந்தேனென்று சொன்னான். அவர்கள் நீ சம்பாத்தியம் பண்ணத்தேவையில்லை. வீட்டிலே வந்து கிடந்து கழி யென்று சொன்னதைக்கேட்டு இவன் மோக்ஷ சுகத்தை அதிசுலபமாய்ச் சுறுக்காய் இவ்விடத்திலிருந்து அடையப்போகிறேனென்று சொன்னதை அவர்கள் கேட்டு, பிரத்தியக்ஷமாயும் நிஜமாயுமிருக்கிற விஷய சுகத்தை விட்டுப் பரோக்ஷமாயும் பொய்யாயுமிருக்கிற மோக்ஷசுகத்தை நினைப்பது உள்ளங்கையிலிருக்கிற பாயசத்தைச்சாப்பிடாமல் எட்டக்கூடாத முழங்கையை நக்குகிறவன் போலும், கையிலிருக்கிற பழத்தைவிட்டுத் தூரட்டிப்பழத்துக்குத் தொண்ணூந்திருப்பவன்போலுமிருக்கிறதென்று கேவலமாய் நினைத்து சீ! சீ! யென்று சொல்லும்போது, இவன் நான் உங்களை விடவில்லை உங்களுக்கு வேண்டிய சமயங்களில் வந்து சேருகிறேனென்று ஏமாற்றிக் கிரகத்துக்குப் போகச் சொன்னான். அதின்பிறகு வானப்பிரஸ்தனென்று வேஷம் போட்டுக்கொண்டு ஏகதேசத்தில் கொஞ்சவேளை கிரகத்துக்கு வருகிறவன்போலும் வெளியில் போகிறவன்போலும் வஞ்சனை பண்ணிக்கொண்டிருந்து, கடைசியில் சன்னியாச ஆசிர்மமாகிற இன்சால்மெண்டும் பெற்று, இவர்கள் யாதொரு விதத்திலும் தன்னைத் தொடராமலிருக்கும்படி செய்துகொண்டு, அந்தச் சன்னியாசாசிர்மத்திலும் விதித்த கர்மங்களை ஒன்றுஞ் செய்யாமல், நீக்கும் பெப்பப்பெ நீ தாதாகும் பெப்பப்பேயென்று சொன்ன கோமுட்டி கதைபோல அந்த சன்னியாசாசிரமத்தையும் மோசம்பண்ணி, அதிவர்ணாசிரமியென்று பேர்வைத்துக்கொண்டு இவனைப்போலே காக்கன்போக்கனு

யிருக்கிற சில போக்கிரிகளைச் சேர்த்துக்கொண்டு விதி நிஷேத மன்றியில் எப்போதும் மாயாவாதமான வேதாந்தத்தைப் பாடிப் படித்துகொண்டு லாகிரி கொண்டவன் போலத்திரிவதால் இவனை விதி நிஷேதமாகிற விலங்கில் போட்டுக் குடும்பமாகிற படுகுழியிலிருத்திப் போடவேண்டும். ஏனென்றால், இவன் ஜீவன் முக்தி யாகிற விலங்கையும் விதேக முக்தியாகிற குழியையும் இச்சித்திருப்பதால் அவனெண்ணப்படிக்கும் இப்படிப்பட்ட குற்றஞ் செய்ததால் இப்படித் தண்டிக்கப்பட்டானென்று எல்லாருக்குந் தெரியும்படியாகத் தண்டிக்க வேண்டு மென்று சொன்னவுடன், கோர்ட்டார் வைராக்கியனைப் பார்த்து இதற்கென்ன சமாதானஞ் சொல்லென்று கேட்டவுடன் வைராக்கியன் சொல்லுகிறான்; நான் அதற்குச் சமாதானஞ் சொன்னதின்மேல் கோர்ட்டாரால் நான்தான் தண்டிக்கப்படுவேனோ அல்லது எதிரிகள் தான் தண்டிக்கப்படுவார்களோ அது ஒரு நிமிஷத்துக்குள் வெளியாகும். அதாவது, இந்த அவிவேகனுதி வக்கீல்கள் என்னிடம் வந்து மோசமாய் சம்சாரத்திலுள்ள துக்கங்களையும், ஸ்திரீ புத்திரர்களிடத்திலிருக்கிற அசுத்த அனர்த்தங்களையும் மறைத்து, என்னையும் மாமனார் வீடாகிற விஷயத்தில் ஆசக்தி வைக்கும்படியாக மயக்கி, வெகுகாலமாக வருத்தப்படுத்திக் கொண்டிருக்கும்போது, தெய்வ கதியாய் என் பிதாவாகிய விவேகன் வந்து எனக்கு ஸ்திரீ முதலான விஷயத்தில் சுகமில்லை. உன்னுடைய சுகத்தையே விஷயத்திலிருக்கிறதாக நினைத்து வெறும் எலும்பைக்கடித்த நாய் தன் வாயிலுண்டான ரத்தத்தை எலும்பிலிருந்து ரத்தம் வருகிறதாக நினைப்பதுபோலவே தவிர வேறில்லை. அப்படிப்பட்ட ஸ்திரீயினிடத்தில் என்ன சுகமிருக்கிறது ? அதைக் கொஞ்சந் தெரிவிக்கிறேன்; மயிரில் வாசனையிருந்தால் புஷ்பஞ் சூட்டிக்கொள்ளத் தேவையில்லை, முகத்தில் அழகிருந்தால் மஞ்சள் எண்ணை பூசத் தேவையில்லை, கண்ணில் அழகிருந்தால் மையிட்டுக்கொள்ளத் தேவையில்லை, வாயில் அழகிருந்தால் தாம்பூலம் போட்டுக்கொள்ளத் தேவையில்லை, பல்லில் அழகிருந்தால் காவியேற்றத் தேவையில்லை, சரீரத்தில் அழகிருந்தால் பச்சிலைப்பொட்டுக் குத்திக்கொள்ளவும் யானைக்கு உருக்காங்கல் போட்டுத் தேய்ப்பதுபோல மணல் தண்ணீர் அரப்பு முதலானதால் தேய்த்துக் கழுவவும் தேவையில்லை. பின்னுங் குகியத்தானங்களில் சுவாசனையிருந்தால் அவர்கள் மலமூத்திர விசர்ச்சனம் பண்ணும்போது காக்காய்போல நாலு பக்கத்திலும் பயந்து சாய்த்துப் பார்த்துக்கொண்டு கச்சேரிக்கு அவசரமாகப்போகிற உத்தியோகஸ்தன் பாதி வெந்ததும் வேகாததும் பாராமல் மேல் வாயில் போட்டுக் கொண்டோடுவதுபோல பாதி மல மூத்திரங்கள் போனதும் போகாததும் பாராமல் கீழ்வாயை மூடிக்கொண்டு சொச்சமலமுந் துடைத்தற்காகவே ஒட்டக்கோமணத்தாலும் ஒரு அரசிலையாலும் மூடவேண்டிய ஸ்தானத்தை மூன்று ஏழு முழமுடைய சேலை கட்டிக்கொள்வதென்று ஓடி வந்துவிடுகிறார்கள். பின்னும் இவர்களிடத்தில் சுசப்தமிருந்தால் பாட்டுக் கேட்கத் தேவையில்லை, சுஸ்பரிசமிருந்தால் மெதுவான படுக்கை முதலானது வேண்டத் தேவை

யில்லை, சுரூபமிருந்தால் ஆபரணாதிகளை ஆசைப்பட்டு அணிந்துகொள்ளத் தேவையில்லை, சுரசம் இயற்கையாயிருக்குமானால் மேற்படி ஆறு ரசங்களைப் புசிப்பதற்காக அரிசி முதலானதை இடிச்சுக் கரைச்சுப் புகையிலிருந்து சுட்டுப் பணியாரங்கள் பண்ணித்தின்னத் தேவையில்லை, இயற்கையாய்ச் சுவாசனை யிருக்குமானால் கத்தாழை நாற்றம், வேர்வை நாற்றம், சிக்குநாற்றம், மலமூத்திர நாற்றம், சீ, ரத்த நாற்ற முதலானதோடே கூடிய சாக்கடை நாற்றம்போல அநேக துர்க்கந்தங்கள் சேர்ந்திருப்பதால் இன்ன துர்க்கந்தமென்று பிரிக்கக் கூடாத துர்க்கந்தத்தைப் போக்குவதற்காகப் புனுகு, சவ்வாது, சந்தணம், அத்தர், பன்னீர் முதலான மணத்தால் மறைக்கத் தேவையில்லை யென்றும் இது முதலான ஸ்திரீ விஷயத்திலிருக்கிற தோஷத்தையுஞ் சொல்லி, பிற்பாடு இதுபோலவே திரவியத்திலிருக்கிற தோஷத்தையும் என் பிதா காண்பித்தார். அதாவது:—திரவியமானது மகா விசுவாசி. எதனாலென்றால், மாப்பிள்ளைபோலவென்றறிக. அதாவது ஒரு மாப்பிள்ளை மாமனார் வீட்டுக்குப் போகும்போது தன் சிநேகிதனைக் கூட்டிக்கொண்டு போக மாமியார் பக்ஷியாதிகளைச் சாப்பிட மாப்பிள்ளையை மட்டுஞ் ஜாடைபண்ணிக் கூப்பிட அவன் சிநேகிதன் எழுந்திருந்தால் தான் நான் வருவேனென்று சொன்னதைக் கேட்ட மாமியாரும் மாப்பிள்ளைக்காக அவனையும் உபசரித்துக் கூட்டிப் போனதுபோல, பணம் வைத்துக்கொண்டிருக்கிற புருஷனுடைய வீட்டுக்குக் கள்ளனாகிய மாமியார் வந்து பணமாகிய மாப்பிள்ளையை மட்டுங் கூப்பிடும்போது இந்தப் பணமாகிய மாப்பிள்ளை தன் சிநேகிதனாகிய இவன் பிராணன் வெளியேறினால்தான் நான் வெளியேறுவேனென்று சொல்லிப் பிராணனை முன்னே விட்டுக்கொண்டே பணம் கள்ளனாகிய மாமியாரிடத்திற் போய்ச் சேருவதால் பணத்துக்குமேல் பிராணாபகாரியில்லை யென்று இது முதலான உபதேசத்தைச் செய்த பிறகு நான் இவர்களிடத்திலுள்ள தோஷங்களைத் தெரிந்திருந்தும் அவர்களது பிழைப்புக் கெடுமென்று அவைகளை வெளியிலெடுத்துக் காண்பிக்கவேண்டாமென்று மரியாதையாய் மனதில் மட்டும் வெறுத்து விலக்கியிருக்க, இப்போது இவர்களாலேயே அந்தத் தோஷங்களை யெடுத்து கொஞ்சஞ் சொல்லவேண்டியதாய் வந்தது. அது எது போலவென்றால், ஒரு யோக்கியனிடத்தில் ஒரு விபசாரி போய் போகத்துக்காகச் சருவ அவளை நிராகரித்து அவள் தோஷத்தை வெளியில் சொல்லாமலிருக்கும்போது அவளாக, இவன் என்னைப்பற்றி யிழுத்தானென்று சொன்னதின் பேரில் அவள் செய்த தோஷத்தை யெப்படியெடுத்துச் சொல்லுவனோ அப்படிக் கொஞ்சம் தோஷஞ் சொன்னேனே தவிர, முழுவதுஞ் சொல்லுவதற்கு இரண்டாயிரம் நாக்கையுடைய ஆதிசேஷனாலுமாகாது. ஆகையால், கோர்ட்டார் தயவு செய்து நியாயத்தை யோசித்துக்கொள்ள வேண்டியது. அதைக்கேட்ட கோர்ட்டாரும் இந்தச் சாக்ஷி அதிக யோக்கியனென்றும் சத்தியவானென்றும் டயிரி போட்டு வாதிக்கொத்தாசையாய் இந்தக் கேசு முடியும்வரையில் கூடவே சகாயமாயிருக்கவேண்டுமென்று முந்தின சாக்ஷியைப்போலவே உத்தரவு செய்தார்.

3-வது சாக்ஷி. சமாதிஷட்கர்கள் ஆஜரான உடன் எதிரி வக்கீல் கேள்வி:— உங்கள் பேரென்ன? சமன், தமன், உபரதி, திதிக்ஷை, சிரத்தை, சமாதானன், இப்படிப் பேரையடைந்து புல்லிங்கமான சமன், தமன், சமாதானனென்பதான மூன்று பிள்ளைகளும் உபரதி, திதீக்ஷை, சிரத்தையென்ற ஸ்திரீ லிங்கமான மூன்று பெண்களுஞ் சேர்ந்திருக்கிறோம். நீங்கள் யார் பிள்ளைகள்? வைராக்கியனுடைய பிள்ளைகள். முதலாவது பிள்ளையான சமனைப்பார்த்து கேள்வி: நானென்கிற ஆத்மாவைத் தெரியுமா? தெரியும். என்னமாய்த் தெரியும்? நீங்களெல்லாரும் இறந்த விடத்தில் விளங்குவதால் தெரியும். நாங்களிருக்கிற இடத்தில் அவர் விளங்காமல் நாங்களில்லாத இடத்தில் விளங்குவதற்குக் காரணமென்ன? வென்று கேட்க, சமன் சொல்லுகிறான்; நீங்களிருக்கும்போது உங்களுடைய குழந்தைகளும் உங்கள் ஸ்திரீகளும் உங்கள் அம்மாள் சின்னம்மாள் முதலான கூட்டத்தார்கள் எல்லாருமிருப்பார்கள். அதனால் அவர் விளங்கவில்லை. சங்கை: ஆத்மா விளங்குவதற்கு அவர்களாலென்ன கெடுதலென்றால், இராகமென்றகுழந்தை இராவணனையும், 2 துவேஷமென்பவன் இரணியனையும், 3 காமமென்பவன் நரகாசுரனையும், 4 குரோதமென்பவன் பகாசுரனையும், 5 லோபமென்பவன் துரியோதனனையும், 6 மோகமென்றசேய் தசரதனையும், 7 மதமென்ற மைந்தன் கார்த்தவீரியனையும், 8 மற்சரமென்ற மகன் சிசுபாலனையும், 9 ஈரிஷை யென்ற புத்திரன் அருணனைக்ஷனையும், 10 அசூயை யென்ற அரசு பவுண்டர வாசுதேவனையும், 11 டம்பமென்கிற குழந்தை நபூர்வராஜனையும், 12 தற்பமென்கிற புதல்வன் சதமுகராவணனையும், 13 அகங்காரமென்கிற அருமைப் பாலன் மதுகைடவர்களையும் வலாசுரன் முதலானவர்களையுஞ் செயித்த ஒவ்வொரு குழந்தையும் இப்படிக்கொத்த அதிசூரர்களான அனந்தர்களைக் கொன்றிருப்பதினாலும் இந்த முமுக்ஷுவான ஏழையாயிருக்கிற வாதியை இவர்களனைவரும் ஒன்று சேர்ந்திருக்கும்போது கெடுப்பதில் ஆச்சரியமென்ன? இராஜச தாமச விருத்திகளான உங்கள் ஸ்திரீகள் ஒரு விஷயத்தை விட்டு மற்றொரு விஷயத்தில் விபசாரியைப்போல விபசரிப்பதால் பதிவிரதையானவள் விபசாரிகள் கூட்டத்தில் விளங்காதது போலச் சித்தான ஆத்மா ஜடமான இந்த இராஜசாதி விருத்திகளுள்ள விடத்தில் விளங்கார். எப்படி யிருட்டிருக்கும்போது பதார்த்தம் விளங்காதோ அப்படி அவித்தை முதலான உன் தாய்களிருக்கும் போது ஆத்மா விளங்கமாட்டார். அவருக்குச் சுகம் சொபாவமாயிருந்தால் எல்லாரிடத்திலுமேன் காணப்படவில்லை யென்கிற சங்கைக்கு மறுமொழி:—பூமி ஜலம் முதலான வஸ்துக்களுக்கு குளிர்ச்சி சொபாவமாயிருந்தாலும் மத்தியான காலத்தில் அந்தக் குளிர்ச்சியேன் தோற்றவில்லை சொல்லு? வெய்யிலால் தோற்ற வில்லை யென்றால், ராகாதிகளாயிருக்கிற உங்களால் ஆத்மாவின் சுகம் தோற்றவில்லை யென்றறியத்தக்கது. இந்த ஜீவன் தன்னதிஷ்டானமான ஆத்மாவில் யேன் ரமிக்க வில்லை யென்றால், ஒரு விடப்பயல் ஒரு தாசியைக் கொண்டுவந்து வைத்து யோக்கியனுயுள்ள புருஷனை அவளுடன் சேர்த்தால் அவன் சொந்த

ஸ்திரீயோடே எப்படி ரமிக்கமாட்டானோ அப்படிப்போல நீங்களாகிய விடர்கள் விஷயங்களாகிற தாசியைக் கொண்டுவந்து இந்த ஜீவனை மயக்கி மோசப்படுத்தினதால் இவன் நிஜஸ்வருபத்தில் ரமிக்கவில்லை யென்று சொன்னதைக் கோர்ட்டார் கேட்டு அதைச் சரியென்று அங்கிகரித்து, இவன் முக்திக்கு முக்கிய காரணனென்று பிரசண்டு கொடுத்த பிற்பாடு, அதன் பின் தமன் ஆஜராய்ச் சொல்லுகிறான். என்னை எதிரிவக்கீல் அண்ணாவைக் கேட்டது போல கேட்கட்டு மென்றவுடன் வக்கீல் கோர்ட்டாரைப் பார்த்து தெரிவிக்கிறான். முன்னே வந்த சமன் உள்ளே யிருக்கிற இராகாதி குழந்தைகளை யெப்படிக் கொன்றானோ அப்படி இந்த தமனும் வெளியிலிருக்கிற ஞானேந்திரிய கர்மேந்திரியங் களாகிற குழந்தைகளைக் கொன்ற கொலைபாதகனானதால் அப்படிக் கொல்லுவதற்குக் காரணமென்னவென்று கேழ்க்க வேண்டும் என்னக் கோர்ட்டாரும் அப்படிக் கொலை செய்வதற்குக் காரணமென்ன வென்றுகேட்க, அப்போது தமன் சொல்லுகிறான்: சுரோத்திரமென்கிற பிள்ளை தன்சப்தமாகிற விளையாட்டினால் ஈசுவரன்முதல் எறும்புவரையில் சகல ஜீவர்களையுங் கெடுப்பதும் தவிர புத்துக்குள்ளிருக்கிற பாம்பையும், புதருக்குள்ளிருக்கிற மானையும், ஆகாசத்திலிருக்கிற சப்தபாத பக்ஷியையும் கொல்வதால் அநேகம் பேர்களைக் கொன்றுகொண்டிருக்கிற ஒருவனைக் கொன்றதினால் என்ன தோஷம்? இப்படியே துவக்கிந்திரியனுடைய ஸ்பரிசமாகிற விளையாட்டினால் சிவன் பாதியுடலை யிழந்ததும், மகாவிஷ்ணு மகிமையை யிழந்ததும், பிரஹ்மா தலையை யிழந்ததும் இந்திரன் சகஸ்திர பகனானதும்; பின்னும் யானை கொப்பத்தில் விழுந்து கொள்வதும், திரிலோகத்திலுமுள்ள ஜீவர்களெல்லா மிப்படியே அனந்ததுக்கத்தையும், வியாதிகளையும், அவமானத்தையும், கொலைமுதலான கலகத்தையும், பின்னும் அநேக அனர்த்தங்களையும் அடைவதால், இவனை யேன்கொல்லக் கூடாது? பின்னும் சக்ஷுரிந்திரிய மென்கிற குழந்தையின் ரூபமாகிற விளையாட்டினால் சகலரும், விளக்கில் விட்டில்பூச்சி நசிப்பதுபோல நசிப்பதால், இவனையேன் கொல்லக்கூடாது? ரசனேந்திரியமென்ற குழந்தையின் ரசமென்ற விளையாட்டினால் மீன் தூண்டிலில் ரசத்துக்காக அகப்படுவது போலச் சகலருங் கெட்டுப்போவதாலும் இப்படியே கிராணன் கந்த விளையாட்டினால் கல்லைக்கூடத் துளைக்க வல்லமையுள்ள வண்டை ஒரு புஷ்ப வாசனையிற் கட்டிக் கொன்று போடுகிறான். அப்படியே வாக்கிந்திரியன் உச்சாரணையால் சிசுபாலன் தக்ஷன் முதலானவர்களையும், பாணீந்திரியன் இராஜஸ்திரீ பாணபக்தன், சீஷன் முதலானவர்களையுங் கெடுத்திருப்பதாலும், பாதேந்திரியன் சண்டேசுரன் பிதா பிரகலாதனுடைய பிதா முதலானவர்களைக் கெடுத்திருப்பதினாலும், பாயுருவிந்திரியன் கொக்கு முதலானதுகளைக் கெடுத்திருப்பதினாலும், சிசுனேந்திரியன் இவ்விடத்தில் கெடுப்பது போதாதென்று நினைத்து இந்திரியங்களெல்லாம் ஒழிந்தவிடத்தில் இந்திரிய சேஷ்டை யன்றியில் சுகமாயிருக்க நினைத்துப்போன இடமான சொற்பனத்தி

னுங்கூட வந்து கெடுப்பதாலும் இவர்களைக் கொன்றதினாலென்ன பாதகமிருக்கிறதென்று சொன்னவுடன் கோர்ட்டாரும் சரியென்று அங்கீகரித்து இவனுக்கு இந்திரியதுஷ்ட நிக்கிரக சூரனென்று சபாசுப்பட்டங்கொடுத்த பிற்பாடு, உபரதியென்கிற பெண்ணைப்பார்த்து நீ சகல கர்மங்களையுங் கெடுக்கப்பட்ட பாதகியல்லவா வென்று கேட்கும்போது உபரதி சொல்லுகிறாள்; அடே பாதகா! சகலருக்கும் தொழிலாலேயே துக்கம் வருவதும் தொழிலில்லாத சுழுப்தி தூஷ்ணீம் பூதாவஸ்தை முதலான சமயத்தில் சுகமாயிருப்பதுந் தவிர தொழில் ஆரம்பத்திலும் நடுவிலும் முடிவிலும் துக்கமேயிருப்பது அனுபவமாயிருக்கும்போது, தொழிலை விட்டுச் சும்மா நிற்கிற என்னைப்பாவியென்று சொன்னது கொலை பண்ணுகிறவன் சும்மாயிருக்கிறவனைப் பார்த்து பாபி யென்று சொல்வதுபோல இருக்கிறது. இதைக் கேட்ட கோர்ட்டாரும் இவள் சொல்வது சரியென்று அங்கீகரித்து இவள் ஆத்மாவின் அசங்கத்தன்மைக்கு அடுத்த பட்டமஹிஷியென்று மகிமையைக் கொடுத்த பிற்பாடு, இப்படியே திதிக்ஷையென்கிற பெண்ணைப் பார்த்து எதிரி வக்கீல்—இவள் சண்டி, முண்டை, மானம், ரோசம், சூடு, சுரணை முதலான மரியாதை கெட்டவளென்று வைவதைக்கேட்டு அவள் சொல்லுகிறாள். அடேமூடா! பரமார்த்தத்தில் "தான்" சாக்ஷியானதால் தனக்கொரு சுகதுக்கமுமில்லை, விவகாரத்தில் பிராரத்த கர்மப்படி சுகதுக்கம்வந்தே தீருமென்கிற நிச்சயமன்றியில் உங்களைப்போல சதா அழுதுகொண்டிருப்பதா சிலாக்கியம், அல்லது எங்களுடைய தன்மைப்படி இத்தனையும் மாயாமயமல்லவோ உள்ளபடிமுடியுமென்று தீரமாயிருக்கிறதா சிலாக்கியம்? சொல்லென்று சொன்னதைக் கேட்ட கோர்ட்டார் இவளுக்கு சகல சத்குணத் தலைவி யென்று நாமத்தைக் கொடுத்தபின், அதன்பிறகு சிரத்தையென்கிற பெண்ணை எதிரி வக்கீல் கேள்வி. நீ சகல வேத சாஸ்திரங்களையும் அதை யறிந்த பெரியோர்களையும் விட்டு சோர ஸ்திரீயானவள் சஜ்ஜ பந்துக்களையும் சகல சாஸ்திரம் மானம் முதலானதுகளையும் விட்டு சோர புருஷனையே தெய்வமென்று நம்பிக் கெட்டதுபோல நீயும் சத்குருவையும் வேதாந்த சாஸ்திரத்தையும் பிடித்துக்கொண்டு கெட்டவளன்றோவென்று சொன்னதைக்கேட்டு சிரத்தை சொல்லுகிறாள்: அடே அயோக்கியா! நீ என்ன சொன்னாய்? ஆத்மசாஸ்திரமான வேதாந்தத்தையும் ஆத்ம நாதனான குருவையும் நம்பின நானா கெட்டவள்? நீங்கள் அனாத்ம சாஸ்திரங்களையும் அனாத்ம சாஸ்திரக்ஞா ளையும் பிடித்துக்கொண்டு தட்டுவாணியானவள் நாழிகைக்கொரு நாயகனைக் காசுக்காகப் பிடிப்பதுபோல நீங்களும் ஆசையாகிற காசுக்காக நாழிகைக்கொரு சாஸ்திரம் நாழிகைக்கொரு குருவையும் அடைந்து விவஸ்தை கெட்டுக் குருவுஞ் சிஷியர்களும் தக்ஷணை முதலானதுகளை வாங்குவதையும் கொடுப்பதையுங் குறித்து மனஸ்தாபப்பட்டுக் கொண்டும் அலைந்துகொண்டு மிருக்கிற நீங்கள் என்னைக் கேலி பண்ணுவது சம்போகம் பண்ணி இழுத்துக்கொண்டிருக்கிற சுவானங்களானவை சிம்மாசனத்தில் இராஜாவோடே கூடியிருக்கிற பட்டஸ்திரீயைக் கேலி பண்ணுவது போல யிருக்கிறது, என்று

சொன்னதைக் கேட்ட கோர்ட்டார் இவன் பிரஹ்ம சாக்ஷாத்காரம் பண்ணி வைப்பதற்கு முக்கிய சாதகியாயிருக்கிற சிரோமணிபோல் விளங்குகிறவ னென்று முகர் கொடுத்தார். அதன் பிறகு சமாதானனைப்பார்த்து வக்கீல் கேட்கிறான்:—நீ ஸ்திரீ புருஷர் கோபித்துக் கொண்டிருக்கிறதை ராஜி செய்கிற தூதன்போல ஜீவனையும் நிராகாரமான சித்த விருத்தியையும் ஒன்றாய்ப் போகச் சமாதானஞ் செய்கிற படுவாப்பயலல்லவா வென்று சொன்னதற்கு, இவன் சொல்லுகிறான்:—தாய்களையும் பெண்கள் பெண்டாட்டி சகோதரிகளை யும் கண்ட பேருக்கெல்லாம் கூட்டிவிடுகிறது போல உங்கள் தாய்களான அவித்தை யாவரணங்களை சுழுப்தியிலிருக்கிற பிராக்ஞனிடத்தில் தத் சுகார்த்த மாய்க் கூட்டிவிடுகிறதும், ஜாக்கிரத்தில் பெண்டாட்டிகளான ராகாதிகளையும் பெண்களான இந்திரியங்களையும் சப்தாதி விஷயவிடர்களிடத்தில் தத் சுகார்த்த மாய்க் கூட்டிவிடுகிறதும், சொப்பனத்தில் வாசனு புருஷர்களிடத்தில் உங்கள் சகோதரியான மனோ விருத்தியைக்கூட்டி விடுகிறதும் படுவாத்தனமில்லை. பெண்ணாயிருக்கிற மேற்படி சித்த விருத்தியையும் மாப்பிள்ளையாகிற ஜீவனையும் சொரூபானுபவமாகிற ரதியைச் செய்யச் சமாதானம் பண்ணுவது படுவாத் தனமா கோர்ட்டாரே உத்தரவு கொடுக்கவேணுமென்று சொன்னதும், கோர்ட் டாரும் அதைச்சரியென்று ஒப்புக்கொண்டு இவனுக்குச் சாது சிரேஷ்டனென்ற நாமத்தைக் கொடுத்தார். அதன் பிற்பாடு 4-வது சாக்ஷி விசுவாசன் வந்த வுடன் எதிரி வக்கீல் கேட்கிறான்:—நீ அஞ்ஞான பூமிகளை விட்டு ஞான பூமிகளைக் குறித்து அலைவது ஸ்திரமான தன் வீட்டைவிட்டு இரவல் வீட்டுக்குத் தொண் ணூந்திருக்கிற மூடன்போல நீயும் புத்தி கெட்டவனென்று சொன்னதைக் கேட்டு விசுவாசன் சொல்லுகிறான்:—நரகம்போலிருக்கிற அஞ்ஞான பூமியை விட்டு அமிர்தம்போலிருக்கிற ஞானபூமிக்குப் போவது குறைச்சலாக நினைப்பது வேமூடத்தனம். எதனாலென்றால் பிறந்தது முதல் மரணம்வரையிலுமுள்ள மூடன் அனுபவத்துக்குச் சமானமாயிருக்கிற எழுவகையான அஞ்ஞான பூமிகளுக் குள் பீஜஜாக்கிரமானது பிணம்போல மயங்கிக் கிடக்கிறது. ஜாக்கிரமானது துருத்தி மூச்சுப்போல அகம் விருத்தி மாத்திரமாயும், மகா ஜாக்கிரமானது பிசாசுபோல அகமிதமென்னும் சகல கற்பனை வடிவமாயும், ஜாக்கிரத் சொப்பன மானது பயித்தியங்கொண்டவன்போலத் தன்போக்காய்ப் போவதாயும், சொப் பனமானது பிசாசு பிடித்தவன்போலத் தன்னை வேறு வடிவமாகப் பார்ப்பதா யும், சொப்பன ஜாக்கிரமானது பிசாசின் பாதைவிட்டுப் போனபின் அதைப் பின்னாலே சொல்லுகிறவன்போலவும், சுழுப்தியானது மரணம்போல ஒன்றுந் தெரியாமையாயுமிருக்கிற இந்த அவஸ்தைகளையும் விட்டு அந்த அவஸ்தைகளிற் சேர்ந்த துஷ்டர்களையும் விட்டு சாதுக்களையும் சத்சாஸ்திரத்தையும் விரும்புவ தான சுபேச்சை யென்ற முதற் பூமியை அடைவது நீச சேவையைவிட்டு இராஜ சேவையைச் செய்வதுபோலவும், குருவை யடைந்து அவருடன் சதா ஆத்ம விசாரம் பண்ணுவதான விசாரணை யென்கிற இரண்டாம் பூமியானது அந்த

ராஜாவோடே மந்திரி ஸ்தானத்தில் சமனாயிருந்து வேலை பார்ப்பதுபோலவும், விஷய விரக்தியுடன் யேகாந்தத்திற் பிரஹ்மாப்பியாசம் பண்ணுவதான தனுமானசி யென்ற மூன்றாம் பூமியில் பாஹ்ய ஜனங்களைவிட்டு அந்தப்புரத்தில் யுவராஜ்ஜிய பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு இராஜ காரியத்தையே இடைவிடாமற் பார்த்து வருவதுபோலவும், தன் ஆத்ம சொரூபத்தைச் சாக்ஷாத்காரமாய் அடைந்த தானசத்வாபத்தி யென்கிற நாலாம் பூமியில் சுயம் இராஜாவாய் முக்தி காந்தையோடே கூட சிம்மாசனத்திலிருந்து செங்கோற் செலுத்துவதுபோலவும், சமாதியிலிருந்து பிராரப்தபோக மாத்திரத்துக்கு வெளியில் வருவதான அசம்சக்தி யென்கிற ஐந்தாவது பூமியில் முக்தி காந்தையோடே யேகாந்தத்தில் ரமித்துக்கொண்டிருந்து தீராதிருக்கிற ராஜ காரியத்தைமட்டும் வெளியில் வந்து பார்த்துப்போட்டு மறுபடி யேகாந்தத்தில் ரமித்திருப்பது போலவும், திடசமாதிபால், பிரயத்தனத்தால் வெளியில் வருவதான ஆறாம் பூமியான பதார்த்தாபாவனை ராஜ்ஜியத்தையே மறந்து ஜீவன்முக்தி காந்தையோடே அபேதமாய் ரமித்துக்கொண்டிருக்கும்போது பிறருடைய பலவந்தப் பிரயத்தனத்தினால் வெளியில் வந்து இராஜ காரியம் க்ஷண காலத்துக்குள் பார்த்து மறுபடியும் அந்தச் சுகத்துக்கே போகிறவன்போலவும், மனது பிரஹ்மத்தில் லயித்து வெளியில் வராமலிருப்பதான துரியமென்கிற ஏழாம் பூமியில் அந்த முக்தி காந்தையோடே ஜலத்தில் கலந்த உப்புப்போல லயித்துத் தன்னாலேயாவது பிறர் பிரயத்தினத்தினாலேயாவது வெளியில் வராமலிருக்கிற இராஜாவைப்போலவும் நித்தியானந்த பரிதமாயிருக்கிற வாழ்வை இச்சித்துப் பிரயத்தினஞ்செய்கிற நான் மூடனா? கற்பகோடி காலமானாலும் தீராத சம்சார துக்க சமுத்திரத்தில் முழுகிக்கொண்டிருக்கிற நீங்கள் மூடர்களா? என்பதைச்சர்வக்ஞராய்ச் சர்வ ஜீவ தயாபரராய்ச் சர்வார்த்தி பஞ்சனராய்ச் சர்வலோக சரண்ணியராய்க் கருணைக் கடலாய்த் திரிலோகத்திலுமுள்ள சகலர்களுக்கும் ஞானக்கண்ணைக் கொடுக்கிறவராயிருக்கிற சற்குருநாதனாகிற கோர்ட்டார் சன்னிதியில் நிமிஷத்தில் வெளியாகுமென்று சொன்னபின், கோர்ட்டாரும் அதைக்கேட்டு நிரம்பச் சந்தோஷித்து எவ்வளவு நமக்குத் திருப்தியாக ருசுவாவதற்கு விசாரணை செய்யவேண்டுமோ அதற்கு ஜாஸ்தியாகவே ருசுவானதுந்தவிர வாதிதரப்பு ஒரோரு சாக்ஷிகளுடைய வாக்குமூலமானது சுருதி யுக்தி அனுபவங்களுக்கொத்ததாகவும் இதுவரையிலும் ஒருவராலுங் கேட்கப்படாத ரகசியமாயும் இதைக்கேட்ட மாத்திரத்தில் பரம மூடாள்கூட பரமபதத்தை யடையத் தக்கதாயுமிருக்கிற இந்த அதிசயத்தைக் கோர்ட்டார் கேட்டு இவனே முக்தி அரசுக்கு அரசனாக யோக்கியனென்று விளம்பரஞ் செய்துபோட்டு இனி சாக்ஷி விசாரணை போதுமென்று சொல்லி ஈரங்கி செய்யும்படி உத்தரவு கொடுத்தார்.

அதின்பேரில் பிரதிவாதி வக்கீல் ஈரங்கி செய்கிறான்:— முதலாவது என் தரப்புச் சாக்ஷிகளை வாதி வக்கீல் கிராஸ் கேள்வியாலும் அவர்கள் சாக்ஷிகளாலும் அசித்திப்படுத்தியும் உபபரிக்ஷத்து முதலான தஸ்தாவேசுகளால் எங்கள்

தஸ்தாவேசுகளை அசுத்தப்படுத்தியுமிருந்தாலும் இப்போது வாதி தரப்பிலுள்ள தஸ்தாவேசுகளுடைய வித்தியாசத்தையும் மற்ற அந்தச் சாக்ஷிகளின் பேதங்களையும் பற்றிக் கொஞ்சந் தெரியப்படுத்திக்கொள்ளுகிறேன். அதாவது, வாதி தரப்பிலுள்ள சுருதிகளாகிற தஸ்தாவேசுகளில் முதலில் நிஷ்காம கர்மானுஷ்டானத்தால் ஈஸ்வரகிருபை வருமென்றும், அதனால் சித்த சுத்தி வருமென்றும், அதனால் நித்தியா நித்திய விவேகம் வருமென்றும் அதனால் இகபர போகங்களில் வைராக்கியம் வருமென்றும், அதனால் மனோநிக்கிரகமும் இந்திரிய நிக்கிரகமும் விஷய வியாபாரத்தில்ஒழிவும் பொறுமையும் சிரத்தையுஞ் சமாதானமுமுண்டாகுமென்றும், அதனால் முமுக்ஷுத்துவமும், அதனால் சற்குரு லாபத்தையும் நான்கு விதமான பணிவிடைகளையும் பெற்று அதன் பின் சிரவண மனன நிதித்தியாசன சமாதிமுதலான அநேக சாதனங்கள் சம்பாதிக்கவேண்டுமென்றும், மற்றோரிடத்தில் தன்னையறிவதற்கு ஒரு சாதனமும் வேண்டாமென்றும்; ஓரிடத்தில் ஆத்மா ஏகமென்றும், ஓரிடத்தில் அநேகமென்றும்; ஓரிடத்திற் பந்த மோக்ஷமுண்டென்றும், ஓரிடத்தில் பந்தமோக்ஷமே யில்லையென்றும், இப்படி அனந்த விதமாய்ப் பைத்தியங்கொண்டவன்போல உளறப்படுகிறது. முதலில் ஆத்மாவுக்குப் பந்தமோக்ஷ மில்லை யென்றால் பந்த நிவர்த்தியான மோக்ஷத்தைக் குறித்து இவ்வளவு மேற்சொன்ன பிரயாசங்களொன்றும் பண்ணத்தேவையில்லை. ஆத்மாவுக்குப் பந்த முண்டென்றாற் காக்கைக்குக் கறுப்புப்போல அது ஒரு நாளும் போகத்தக்கதில்லை. இப்படி அனந்த விரோதமிருப்பதால் வாதிபிராதைத்தள்ளி எப்போதும்போலே எங்கள் அனுபவப்படி எங்கள் பக்ஷம் தீர்ப்புச் செய்திருக்கிற பாமர கர்ம பக்திகளென்ற கீழ் கோர்ட்டார் தீர்ப்புப்படி சரியென்று இந்தக் கோர்ட்டாருக்கும் தீர்ப்புச் செய்வது சுலபமாயிருப்பதால் அந்தப்படியே தீர்ப்புச் செய்யக் கோருகிறேனென்று கேட்டுக்கொண்டான்.

அதன் பிற்பாடு கோர்ட்டார் உத்தரவுப்படி வாதி வக்கீல் ஈரங்கி செய்கிறான்:—பிரதிவாதிகளும் பிரதிவாதி வக்கீல்களும் இப்படி நியாயாதிபதியான கோர்ட்டார் முன்பாகவே அவர்களது சாக்ஷிகளும் தஸ்தாவேசுகளும் இவ்வளவு அசுத்தியாய்ப் போயிருக்கவும், எங்கள் சாக்ஷிகள் பூர்ணமாயும் ருசுவாயுமிருக்கவும், இன்னும் பயமில்லாமல் இவ்வளவு தைரியமாய்ப் பேசுவதைப்பற்றி நிரம்ப ஆச்சரியப்படுகிறேன். ஆனால் இவர்களுடைய முட்டாள் தனத்தைப்பற்றியும் இளங்கன்று பயமறியாதது போல இருக்கிற தைரியத்தைப்பார்த்தும் ஆச்சரியப்படுகிறேன். ஆகையால் கோர்ட்டார் தயவு செய்து என்னுடைய ஈரங்கி வசனத்தையும் கேட்டுத் தீர்ப்புச் செய்யும் வரையிலும் எதிரிகள் சுழுப்தி, மூர்ச்சை முதலான காடுகள் குகைகளுக்கு ஓடிப்போகாமலிருக்கும்படி பத்மாசனம் முதலான காற்கட்டையும் சின்முத்திரையாகிற கைவிலங்கையும் நாசாக்கிரக திருஷ்டியான காவலையும் போட்டுப் பந்தோபஸ்தாய் எதிரிகளைக் காவற்படுத்தி வைக்கவேண்டியதாய் உத்தரவாகக் கோருகிறேன்.

1-வது பரமாத்மாவாகிய தன்னிடத்தில் ஒரு அஞ்ஞானமாவது ஆவரண மாவது விக்ஷேபமாவது யாதொன்றும் பரமார்த்தமாய் வரவுமில்லை போகவு மில்லை. ஆனால் விவகாரத்திற் பிராந்தியினாலே யுண்டாயிருக்கிற சொப்பனம் போலே பொய்யாய் ஒரு ஜகத்து இருக்கிறது போலவும், அதில் அநேக ஜீவர்க ளிருக்கிறது போலவும், ஈஸ்வரனொருத்தன் வேறேயாயிருக்கிறதுபோலவும் ஒரு மயக்கம் வந்திருப்பதால் அந்த மயக்கத்தைப் போக்கடிக்கிறதற்காகவே சுருதிக ளானவை முதலில் நிஷ்காம கர்மத்தால் ஈஸ்வர கிருபை வருமென்றும் அதனாற் சாதன சதுஷ்டயம் வருமென்றும் அப்படிச் சாதன சதுஷ்டயமுள்ள அதிகாரி தாபத்திரய துக்கத்தால் தபிக்கப்பட்டவனாய் சற்குருவிடத்திற் போய்ச் சம்சார தாபத்தை குறித்து விண்ணப்பஞ் செய்துகொள்ளவேண்டுமென்றும், குருவான வர் தயையால் உன்னை யறிந்தால் உனக்கு ஜனன மரணாதிகளில்லை யென்று சொல்லி, தன்னை மறந்ததால் ஜனன மரணம் வந்திருக்கிறதென்றும் அதற்கு அத்தியாரோப மென்றும், அதை நிவர்த்திபண்ணுகிற யுக்திக்கு அபவாதமென் றுஞ் சொல்லுகிற நியாயத்தால் முக்தி வரவேண்டுமென்றும், தன்னை மறந்த தாயிருக்கிற அஞ்ஞானம் மூன்று குணமாயிருக்கிற தென்றும், அதில் சத்துவ குணத்திற் சேர்ந்த பிரஹ்மம் ஈசனென்றும், ரஜோகுணத்திற் சேர்ந்த பிரஹ்மம் ஜீவனென்றும், தமோகுணமே ஆவரணம் விக்ஷேபமென்றும், இதில் ஆவரணம் ஆத்மானாத்மாக்களின் பேதந்தெரியாமல் மறைத்ததென்றும், விக்ஷேபம் மூன்று குணத்துடன் பஞ்ச பூதத்தை உற்பத்தி செய்ததென்றும், அச்சூட்சும பூதங்க ளின் சத்துவகுண வியஷ்டி சமஷ்டியிலிருந்து ஞானேந்திரியமும் அந்தக் கரணமு முண்டான தென்றும், ரஜசின் வியஷ்டி சமஷ்டியிலிருந்து கன்மேந்திரியம் பிராணவாயு வுண்டான தென்றும், தமோகுணத்திற் பஞ்சீகரணமான ஸ்தூல பூத முண்டான தென்றும், அதில் நின்றும் உலகங்களும் சரீரங்களும் கற்பனை யாயிற்றே தென்றும், விவேகமாயையினால் அவிவேக மாயையை காலிற் பற்றின சேற்றைச் சுத்த ஜலத்தால் கழுவுவதுபோலப் போக்கடிக்கவேண்டு மென்றும், இந்தச் சுத்தா சுத்தமாயையினாலேயே ஜீவர்களுக்கு ஏழவஸ்தைகளுண்டாயிருக் கிறதென்றும், தசம திருஷ்டாந்தத்தால் தன்னிடத்தில் ஏழவஸ்தைகளுங் கூடுமென்றும், அந்தத் தசமன் தானே தசமனென்றறிந்தது போலத் தொம்பத விசாரத்தாற் பஞ்சகோசங்களை நேதி செய்து சச்சிதானந்தமாகிய சாக்ஷியே நீ நீயே சாக்ஷி யென்றும் அறிவுக்கு வேறே அறிவில்லையென்றும் வாச்சியமான கற்பிதத்தில் பேதமே யல்லாமற் லக்ஷியத்திற் பேதமில்லை யென்றுஞ் சொன்ன பிரகாரம் அவனுங் கூடஸ்தப்பிரஹ்மங்களை ஐக்கியமாய் அனுபவித்தானென் றும், திரும்ப அஞ்ஞான சமுசய விபரீதங்களாகிற பிரதி பந்தங்களால் ஞானம் ஸ்திரப்படாமலிருந்த தென்றும், சிரவண மனன தியானத்தால் பிரதி பந்தம்நிவர்த்தியாய் ஞானம் ஸ்திரப்பட்டதென்றும், அந்த ஞானிகளும் பிரஹ்ம வித்து, வரன், வரியான், வரிஷ்டனென்று கர்மத்தால் நான்கு பேதமாயிருப் பார்களென்றும், பிரஹ்மவித்து அதில் அஞ்ஞானிகள் போல விவகரித்தாலும்

ஆகாசம் போல ஒன்றிலுஞ் சம்பந்தமின்றியிலிருப்பனென்றும், சஞ்சித கர்மம் தீயிலிட்ட பஞ்சுபோல ஞானத்தாற் கெட்டதென்றும், ஆகாமிய கர்மம் அகர்த் துருத்துவ புத்தியால் தாமரையிலையில் ஜலம்போல ஒட்டாதென்றும், பிராரப்த கர்மம் தசமன் புண் நாளிலாறுவதுபோல அநுபவிக்க வேண்டுமென்றும், பிராரப்தாநுபவத்திலுண்டாகிற பாப புண்ணியத்தைத் தூஷணை பூஷணை செய்கிறவர்கள் கொண்டுபோகிறார்களென்றும், தத்துவக்ஞானம் வந்தவுடன் காரண சரீரம் பிரகாசத்தைக்கண்ட இருட்டுப்போல நஷ்டமாகிறதென்றும், ஸ்தூல சரீரம் பிராரப்த நாசத்தில் ஸ்தூல பூதத்தில் உடைந்த கடம்போல லயத்தை யடைகிறதென்றும், சூக்ஷ்ம சரீரம் சொரூபத்தில் காயவைத்த இரும்பில் விழுந்த ஜலம்போல லயத்தை யடைகிறதென்றும், கடாகாசமானது கட முடைந்த உடனே மகா காசமாவதுபோல விதேக முக்தியை யடைவாரென்றுஞ் சொன்ன சமஸ்தமும் ஆகாசந் தெரியாத குழந்தைக்கு கிணறு தோண்டி ஆகாசங் காண்பிவிப்பதுபோலவே தவிர வாஸ்தவத்தில் எதிரிகளும் இந்தக் கற்பனைகளும் கானல்நீர் போலவுங் கிளிஞ்சில் வெள்ளி போலவும், முயற்கொம்பு போலவும், கந்தர்வநகரம் போலவும், சொப்பனப் பிரபஞ்சம்போலவும், பழுதைப் பாம்பு போலவும், மலடி மகன்போலவும், கட்டைக் கள்ளன்போலவும் காலத் திரயத்திலும் உங்கள் பாதத்தின்மேல் ஆணைப்படிக்கு அறிவைத்தவிர வேறில்லை யென்று பிரமாணஞ் செய்தவுடன் கோர்ட்டார் கேட்டு நிரம்பச் சந்தோஷித்து எதிரிகளைக் கூப்பிட்டு நீங்கள் இந்த நானென்கிற சொத்தை யதாப்பிரகாரம் சம்பந்தமன்றியில்விட்டு நீங்களும் போனவிடந்தெரியாமல் இராஜியாய்ப் போகிறீர்களா அல்லது நாம் உங்களிடத்திலிருக்கிற இந்த நானென்கிற சொத்தை உங்களைவிட்டுப் பிரித்து உங்களையும் உயிர் கழுவிற் போடுகிறது உங்களுக்குச் சம்மதமாவென்று கேட்டவுடன் எதிரிகளுங் கோர்ட்டாரைப் பார்த்து நாங்கள் செத்தாலுஞ் சரி நாங்கள் இந்த நானென்கிற சொத்தைக் கொடுக்கவுமாட்டோம் இராஜியாகவும் மாட்டோமென்று கழுவேறத் துணிந்த சமணர்கள்போலச் சொன்னதைக்கேட்டு கோர்ட்டார் இவர்களை நிரம்ப அநியாயக்காரர்களென்று தெரிந்துகொண்டு கீழ்க்கோர்ட்டுகளி லிவர்கள் கர்மோபாசனை யோகங்களென்கிற லஞ்சத்தினால் நியாயமான வாதியினுடைய வழக்கை மோசஞ் செய்திருக்கிறார்களென்று தெரிந்துகொண்டு இது சீமைத் தீர்ப்பானதாலும் இதற்கு மேலின்னொரு கோர்ட்டில்லாததினாலும் சகலத்திராளுக்குந் தெரியும்படியே சகல நியாயங்களையுங் கண்டுபிடித்துச் சகல சித்தாந்த ரகசியமான தீர்ப்புச் செய்யப்படுகிறது.

## ஜட்ஜிமெண்டு.

வேதாந்தமென்கிற சீமைக்கோர்ட்டில் சற்குருவென்கிற ஜட்ஜி முன்பாகத் தாபத்திரயமுள்ள ஜீவனென வாதிக்காகச் சத்துவ குணத்தோடு கூடிய விவேகனென்கிற வக்கீலால் நானென்கிற சொத்து அசங்கமா யிருக்கவேண்டுமென்று பிராது கொடுக்கப்பட்டது.

பிரதிவாதிகள்:—அஞ்ஞான புத்திரர்களான இகலோக காண்டியான பாமரன் (1), பரலோக காண்டியிற் கர்மி (2), பக்திகாண்டியிற் பக்தன் (3). அவர்கள் கோரமூடபுத்தி யென்கிற வக்கீல்களால் ஆன்சர் கொடுக்கப்பட்டுப் பிரதிவாதி தரப்புச் சாக்ஷிகள் முழுமையும் முதலில் விசாரணைகள் செய்ததினாலேயே அவர்களும் அவர்கள் தஸ்தாவேசுகளும் அவர்கள் சாக்ஷிகளும் சுத்தப் பிரட்டென்று வெளியானதும் தவிர, வாதி தரப்புச் சாக்ஷிகளின் யோக்கியதையும் அவர்களின் வாக்குமூலங்கள் சுருதியுக்தி யனுபவங்களுக்கு ஒத்திருந்ததையும் அவர்கள் சொன்ன உபநிஷத்துவாசிஷ்டம் முதலான சுருதி ஸ்மிருதிகளின் பிரமாணத்தினாலும் பூர்வாசாரியர்களாயிருக்கிற வசிஷ்டர்முதல் பகவத்பாதாள் வரை பின்னும் சகல பிரஹ்ம நிஷ்டர்களுடைய அனுபவத்துக்கு ஒத்திருந்த விசேஷத்தைப்பற்றியும் அதற்கேற்ற திருஷ்டாந்தக்கதைகளையும் சொற்சாதுர்யங்களையும் ஒழுக்கங்களையும் ஆத்மாவைக்குறித்துச் சொன்ன நிந்தாஸ்துதிகளையும் அனாத்மாக்களைக் குறித்துச் சொன்ன ஸ்துதி நிந்தைகளையும் கேட்ட சந்தோஷமுந் தவிர ஈரங்கியிலும் வாதி வக்கீல் பேசின ஒவ்வொரு அதிசயமான உண்மையின் சங்கதிகளையுங்கேட்டு வாதி பக்கம் தீர்ப்புச் சொல்லப்படுகிறது.

விவாத நானென்கிற ஆத்ம சொத்து ஒருவருக்கும் பாத்தியப்படாமல் பொதுவாய் அசங்கமாயிருக்கிறதா? அல்லது ஒருவருக்குப் பாத்தியப்பட்டு ஒருவர் ஆளுகையிலிருக்கக்கூடியதா? என்கிற முதலாவது பயிண்டுக்குச்சமாதானம்:—

நானென்கிற ஆத்மா அறிவாயிருப்பதாலும் அவருக்கு அன்னியமான அஞ்ஞானம்முதல் தேகம்வரையிலுள்ள சகலவஸ்துக்களும் ஜடமாயும்அனாத்மாவாயுமிருப்பதால் ஒரு புருஷனாலே கடபடாதி விஷயங்கள் ஆளப்படுகின்றனவே தவிர அந்தப் பதார்த்தங்களால் அந்தப்புருஷன் ஆளப்படாததுபோலவும் வெள்ளரிக்காய்நரியைச் சாப்பிடாதது போலவும் சொப்பனத்திற் காணப்பட்ட சகல விஷயங்களையும் தானே அறிவதாலும் அந்த விஷயங்கள் தன்னை அறியாமலிருப்பது போலவும் இந்த நானென்கிற ஆத்மாவும்ஒருவர் ஆளுகையிலும் பாத்தியப்படாமலும் ஒருவருக்கும் சம்பந்தப்படாமலுமிருப்பதால் இவர் அசங்கரென்றே தீர்மானிக்கலாயிற்று.

இந்தப் பிராது கொண்டுவருகிறதற்கு வாதியருகரா அல்லவா வென்ற 2-வது பயிண்டுக்குச் சமாதானம்:—

வாதியே அருகன். அது எப்படி யென்றால் க்ஷத்திரியன் வைசியன் சூத்திரன் சண்டாளன் வரையிலுள்ள ஜனங்கள் பிராமணத்வத்தைக் குறித்து வழக்குப் பண்ண அதிகாரிகளில்லாவிட்டாலும் பிராஹ்மணன் தன் பிராமண்ணியத்தைக் குறித்து வழக்குப் பண்ண அதிகாரியாயிருப்பது போலவும், ஸ்திரீகள் நான் புருஷனென்று சொல்லுவதற்கு அதிகாரிகளில்லா விட்டாலும் புருஷன் நான் புருஷனென்பதற்கு அதிகாரியாயிருப்பதுபோலவும், நானென்கிற அறிவாயிருக்கிற ஜீவனும் தேகாதி பஞ்சகோசங்களுக்கு நானென்று சொல்ல அதிகாரமில்லாவிட்டாலும் அவைகளைப்போல ஜடமாயில்லாமல் சித்தாயிருப்பதாலும்

இந்த வாதியே இந்த வழக்குக் கொண்டுவர அருகனென்று தீர்மானிக்கப் பட்டது.

இந்தப் பிராது கால நிர்ணயத்தாற் பாதிக்கப்படுமா படாதா வென்ற 3-வது பயிண்டுக்குச் சமாதானம்:—சட்டத்தில் எந்தச் சொத்துக்குக் கால நிர்ணயம் சொல்லப்பட்டிருந்தாலும் தெய்வ சொத்துக்குக் கால நிர்ணய தோஷம் சொல்லப்படாததாலும் பின்னும் வாஸ்தவமாய் நேரே கொடுத்த சொத்துக்குக் கால நிர்ணயமே தவிர ஒரு சொத்தை யுடையவனை யறியாமல் திருடி வெகு நாள் வைத்திருந்தாலும் கண்டு பிடித்தால் கால நிர்ணயமாய் விட்டதாற் கொடுக்கமாட்டே னென்று சொன்னால் அவனுக்குத் தண்டனையுங் கொடுத்துச் சொத்தையும் எப்படிப் பிடுங்கிக் கொடுப்பார்களோ அப்படிப்போல இந்த நானென்கிற சொத்து அறிவாகிய தெய்வத்தினுடைய சொத்தானதினாலும் அஞ்ஞானிகள் அறியாமல் திருடிக்கொண்டதாகையாலும் இந்த நானென்கிற சொத்தைப் பிரதிவாதிகளிடமிருந்து திருப்பிக்கொடுப்பதில் காலநிர்ணய சட்டத்தால் தடையில்லை யென்று தீர்மானிக்கலாயிற்று.

இந்தக் கோர்ட்டாருக்கு விவாதச் சொத்தை எதிரிகளிடமிருந்து திருப்பிக்கொடுக்கக் கூடுமா கூடாதா வென்ற 4-வது பயிண்டுக்குச் சமாதானம்.

இந்தக் கோர்ட்டாருக்கே இந்தச் சொத்தைத் திருப்பிக்கொடுக்க அதிகார மிருக்கிறதே தவிர மற்ற யாருக்குமில்லை. அதெப்படியென்றால் கௌனர் கலக்டர் முதலான ரிவினியு தரப்பாருக்கு ஒருவன் ஆளுகையிலிருக்கிற சொத்தை இன்னொருவனுக்குப் பிடுங்கிக்கொடுக்க அதிகாரமில்லாதது போலக் கர்மி பக்தர்கள் யோகிகள் முதலானவர்களால் உபாசிக்கப்படுகிற மாயா தரப்பாரான ஈஸ்வராதிகளுக்கு இந்த நானென்கிற சொத்தைத் திருப்பிக்கொடுக்கிறதற்கு அதிகாரமில்லை யென்பதற்குப் பிரமாண மென்ன வென்றால் சுருதி ஸ்மிருதி இதிகாச புராணங்களில் பிரதி பாத்தியாளாயிருக்கிற அநேகஞ் ஜீவர்கள் சிவன் முதலான தேவதைகளை உத்கிருஷ்ட கர்மோபாசனைகளாற் சான்னித்தியமாகும்படியாகச் செய்தும் அவர்கள் மாயைக்குட் சேர்ந்ததாயிருக்கிற தங்கள் தங்கள் லோகங்களிலுள்ள பதவிகளையும் அஷ்டமாசித்திகளையும் கொடுத்திருக்கிறதாகச் சொல்லப்படுகிறதேதவிர அஞ்ஞானத்தையும் அஞ்ஞான காரியமான அநாதிகாலமாய் முன்னிருந்த ஜீவத்துவத்தையும் அதினாலுண்டாயிருக்கிற சஞ்சித ஆகாமியகர்மங்களையும் அவைகளாலுண்டாகிற ஜனன மரணாதி சம்சாரங்களையு மாற்றி இவனுக்கு அப்பிரதிபந்த அபரோக்ஷ சாக்ஷாத்காரமாயிருக்கிற பிரஹ்மஞானத்தைக் கொடுக்கவில்லையென்றும் அப்படி யாராவது அந்த ஞானத்தையுபதேசிக்க வேண்டு மென்று கேட்டாற் குருவைப்போய் சரணமாயடைந்து கேட்டுக் கொள்ளென்றும் இன்னமும் முக்கியாதிகாரிகளான சனகாதியர் ஈஸ்வரனை ஞானோபதேசஞ் செய்யப் பிரார்த்தித்த காலத்திலும் ஈஸ்வரவடிவத்தை விட்டுத் தக்ஷிணாமூர்த்தமான குருவடிவத்தை யெடுத்துக்கொண்டே உபதேசித்திருப்பதாயும் சொல்லப்படுகிறதாகையால் கவுனர் முதலானவர்களாகிய மாயா தரப்

பாராயிருக்கிற ஈஸ்வராதிகளுக்குப் பிரஹ்மத்துவமானசொத்தை எப்படித்திருப்பிக்கொடுக்க அதிகாரமில்லையோ, அப்படியில்லாமற் கோர்ட்டாருக்கு எப்படியொருவன் ஆளுகையிலிருக்கிற சொத்தை இன்னொருவனுக்குத் திருப்பிக்கொடுக்க அதிகாரமிருப்பது போல ஞானியாயிருக்கிற மேலான கோர்ட்டாராகிய சற்குருவான ஜட்ஜிக்கு மட்டும் நானென்கிற சொத்தை எதிரிகளிடத்திலிருந்து திருப்பிக்கொடுக்க அதிகாரமுண்டென்று தீர்மானிக்கலாயிற்று.

எதிரிகள் விவாதச் சொத்தை அக்கிரமமாய் வியாபித்திருந்தால் அவர்களைத் தண்டிக்க "லா" இடங்கொடுக்குமா கொடாதா வென்ற 5-வது பாயிண்டுக்குச் சமாதானம்:—

சம்சார காரணமாயிருக்கிற அஞ்ஞானமாகிற இருட்டுக்கு ஞானமாகிற பிரசண்ட சூரியனென்று சுருதி சொல்லியிருப்பதாற் சற்குருவினிடத்திலிருக்கிற ஞான சூரியனானது இருட்டைப் போலிருக்கிற அஞ்ஞானாதி யெதிரிகளைத் தண்டிப்பதில்-லா-வுக்கு விரோதமில்லை யென்று தீர்மானிக்கலாயிற்று.

ஆகையால் நானென்கிற வஸ்துவானது சகல வேதங்களாலும் சத்தென்று சொல்லப்படுகிறது. என்னத்தினாலென்றால் ஜகத்தைப்போல அசத்தில்லை யென்பதற்காகவே. அப்படியே ஜடத்தைத் தள்ளுகிறதற்காகச் சித்தென்றும், அனித்தியத்தைக் குறித்து நித்திய மென்றும், துக்கத்தைத் தள்ளுகிறதற்காக ஆனந்த மென்றும், கண்டத்தைக் குறித்துப் பூர்ணமென்றும், அநேகத்தைக் குறித்து ஏகமென்றும், பொய்யாயிருக்கிற விவகாரத்தைக் குறித்துப் பரமார்த்தமென்றும், அவஸ்தாத்திரியத்தைக் குறித்துத் துரியமென்றும் இப்படியெல்லாம் சொல்லப்பட்ட குணங்கள் யாவும் அந்த நானென்கிற வஸ்துவுக்குச் சொரூபமாயிருப்பதாலும் சகல சுருதி ஸ்மிருதி இதிகாச புராணங்கள் அங்கங்கே மாயா காரிய பலமான துவைதங்களைப் பிரதி பாதித்திருந்தாலும் அவைகளின் கருத்து அத்துவிதத்திலேயே தாற்பரியமாயிருக்கிறது. அதெப்படி வெளியாகிறதென்றாற் கண்ட லட்டுக நியாயம் போல அத்வைதத்தை முடிவில் அங்கங்கே ஸ்தாபித்திருக்கிறதே அடையாளமென்று நிச்சயித்து அகண்ட பரிபூர்ண சச்சிதானந்தப் பிரஹ்ம சொரூபமான அகம்பதார்த்தமாகிற ஆத்மாவை வாதியின் பிரார்த்தனைப் பிரகாரம் தானாய் அசங்கனாய் வாதியையும் வாதியைச் சேர்ந்தவர்களையும் பரம்பரையாய் சாஸ்வதமாய் அனுபவித்து வரும்படிக்கும், ,இனிமேல் இந்த நானென்கிற வஸ்துவை கருத்துருத்துவம் முதலான ஒரு விவகாரத்திலாவது யாவரேனும் சேர்த்து அத்தியாசப்படுத்தி அனுபவிப்பார்களேயானால் அவர்கள் ஒரு நாளும் ஜனன மரணமாகிற நரகத்தை விட்டுக் கரை யேறப் போகிறதில்லை யென்றும் தீர்ப்புச் செய்ததுந்தவிர மறுபடி எதிரிகள் திரும்ப உண்டாய் முன்போல சம்சார துக்கங்களை யுண்டுபண்ணும லிருப்பதற்காக விசாரார்ச்சியத்தால் சுவலித்துக்கொண்டிருக்கிற பரிபூர்ண ஞானாக்கினியினால் எதிரிகளையுங் கொளுத்தி தக்த படம்போலும் பொய்பாகவே எல்லாருக்கும் தெரியும்படி காண்பிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் இந்தத் தீர்ப்பை ஆதியோ

டந்தம் குருமுகமாயும் சாதுக்களுடனும் பூர்வாபர விரோதமன்றியில் நன்றாய்ப் பராமரிசித்து யார்பார்த்து இந்தப்படி நானென்கிற ஆத்மாவைக் கருத்தருத்து வமுதலான ஒரு தொழிலிலும் சேர்க்காமல் நானே சரீரத்திரய விலக்ஷணன், அவஸ்தாத்திரிய சாக்ஷி, சச்சிதானந்த சொரூபனென்றும் தோன்றப்பட்டதேகாதி சகலப்பிரபஞ்சமும் காலத்திரயத்திலும் இல்லவேயில்லை யென்றும், நிச்சயித்த புருஷன் இப்பவே ஜீவன் முக்தனாய் விதேகமுக்தியும் அடைந்திருப்பனென்று சத்தியமாய்க் குருபாதத்தில் ஆணைவைத்துத் தீர்ப்பு எழுதிச் சொல்லப்பட்டது.

## 68-வது தரங்கம்.

[அ-கை] ஜீவனை ஒரு குடும்பியாக வர்ணித்துக் குரு கடாக்ஷத்தால் அவன் கரை யேறின விதம் காண்பிக்கப்படுகிறது:—

நானென்கிறவன் ஒரு புருஷன், அவனுக்கு ஸ்திரீ புத்தி, அவன் பந்துக்கள் மைத்திரியாதிநு சற்குணங்கள். அவள் பந்துக்கள் காமாதி துர்க்குணங்கள். பிராணாதி வாயுக்களே பரிசாரகர்கள். ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள் புத்திரர்கள், சரீரமே வீடு. இந்தப் புத்தி யென்றஸ்திரீ ஜீவனென்ற புருஷனுக்குத் தன் சோணித ரூபமான விஷயாசை யென்ற மருந்தை வைத்து அவனைக் கைவசம் பண்ணி உத்தரவு கொடுக்கிறாள்:—உன் தாய் தகப்பனான பரமசிவன் பரதேவதையைக் கனவிற் கூட நினைக்கக்கூடாது. அவர்களைச் சார்ந்த சாதுக்களையும் சத்குணங்களையும் பார்க்கவும் போற்றவுங் கூடாது. உன்னைக் கொல்லுகிறவராயும் அசுரர்களுக்கு விஷ்ணுவைப்போல நம்முடைய குடும்பத்துக்கே சத்துருவாயுமிருக்கிற சற்குரு இருக்கிற தேசத்துக்குக் கூடப் போகக்கூடாது. பின்னை யென்ன செய்கிற தென்றால் இதோயிருக்கிற யென் தாயான அவித்தையை வந்தனம் பண்ணு. அது எதற்காக வென்றால் அய்யா சம்பந்தமன்றியில் அவிசாரித்தனத்தால் என்னை அருமையாய்ப் பெற்றாள். இந்தக் குடும்பம் யாவும் அவள் பாக்கியமென்றறி, அவள் ஒருத்தி போனால் நித்திராசக்தி ஒன்று போனால் சொப்பனம் முழுமையும் போவது போல இந்தக் குடும்பமும் அதிலுள்ள சமுசார வாழ்வும் எல்லாம் அடியோடே போய்விடும். ஆகையால் அவளைச் சதா போற்றிக்கொண்டிருக்கவேண்டும் என்று உத்தரவு செய்தபடி அவனும் நடந்து வருகிறான். அதன் பிறகு சுரோத்திர னென்ற மூத்த பிள்ளையை இவள் கூப்பிட்டு— நீ காதோட்டையாகிற ஸ்தானத்திலிருந்து உன் அய்யாவைச் சார்ந்த வேதாந்த சப்தங்களை உள்ளே விடாதே. அப்படிவிட்டாயே யானால் நம்முடைய குடும்பத்துக்கே மோசம் வரும். ஆகையால் நம்மைச்சார்ந்த துவைத ரூபமான பாட்டுகளோ கதைகளோ வம்பு வார்த்தைகளோ இவைகளை யெல்லாந் தடையின்றியில் கிரகித்து வருவ யேயானால் நம்முடைய குடும்பத்துக்கு ஒருக்காலுங் குறைவு நேரிட மாட்டாதென்று சொன்னதைக்கேட்டு அவனும் சகல ஜெந்துக்களும் தகப்பன் குணத்தை அனுசரிக்கமாட்டாது தாயின் குணத்தையே அனுசரிக்கு மென்று சொல்லிய சுருதிப் பிரகாரமும், தாயைப்போல பிள்ளை நூலைப்போல சேலை யென்ற யுக்திப் பிரகாரமும், ராவணாதிகள் மகரிஷி

கள் புத்திரர்களாயிருந்தும் தாயின் குணத்தால் லோக கண்டகர்களான இராக்ஷசர்களாயிருந்த அனுபவமும், இப்போது பட்டமார்களுடைய பிள்ளைகள் தவுலடிப்பதும் நட்டுவன் பிள்ளை மணியடிக்கிற அனுபவப் பிரகாரமும் நானும் உன்னுடைய குணத்தையே அனுசரித்து வருகிறேனென்று ஒப்புக்கொண்ட பிறகு தொக்கிந்திரியனைக் கூப்பிட்டு—வாராய் குழந்தாய்! நீ நிரம்பவும் வியாபகனானதால் இச்சரீரம் முழுக்க நகசிகை பரியந்தம் வியாபித்திருந்து கொண்டு உன் அப்பாவைச் சேர்ந்த சாதுக்களுடைய சம்சர்க்கங்களாகிற காற்றுக்கள் இந்த வீட்டுக்குள் அடியாமலிருக்கும்படி ஜாக்கிரதையா யிருக்கவேண்டும். ஏனென்றால் சாதுக்களுடைய காற்று தீய்க்குச் சமானம். அநேகம் வீடுகள் அந்தக் காற்றுப்பட்டு எரிந்து போய்விட்டன. ஆகையால் அந்தச் சாது சம்சர்க்கத்தைத் தள்ளி ஸ்திரீமுதலான எந்த ஸ்பரிசத்தையும் தடையன்றியில் கிரகி யென்று சொன்னவுடன் அண்ணவைப் போல ஆகட்டு மென்று ஒப்புக்கொண்ட பிறகு, நேத்திரனென்ற புத்திரனைப் பார்த்து—வாராய் குழந்தாய்! உன்னாலேயே நான் முதலான சகலரும் பாண்டவர்கள் அருச்சுனனாலே பிழைத்தது போல நீயும் நடுப்பிள்ளையாயும் மகாசூரனாயுமிருப்பதுந் தவிர நீ பிறந்த பிறகே இந்தச் சகலமும் விளங்குவதாலும் நீ கண் கருவிழியிலிருந்து குரு சாதுக்கள் சத் சாஸ்திரம் முதலான ரூபங்களைக் கண்ணாலே கூடப்பாராதே. அப்படி ஒருக்கால் எதிர்ப்பட்டாலும் கண்ணைக் கெட்டியாய்மூடிக்கொண்டுவிடு. அந்தப் பார்வைகள் பட்ட விடமெல்லாம் பஸ்பமாய்ப் போய்விடும். ஆகையால் நீங்கள் உத்தரோத்தரம் விருத்தியா யிருக்கிறதற்காக ஸ்திரீ முதலான ரூபத்தையாவது பிள்ளை குட்டிகள் ரூபத்தையாவது வீடு முதலான ஜடரூபத்தையாவது வேஷமான நாடகத்தையாவது தேர்திருநாளையாவது சித்திரத்தையாவது பார்க்கத்தக்கது. இன்னும் உனக்கிஷ்டமான எந்த ரூபத்தையாவது பார்க்கலாமென்று சொன்னதும் நேத்திரனும் நிரம்ப அகம்பாவத்தை யடைந்து அப்படிச் சம்மதித்த பிறகு, ஜிஹ்வேந்திரிய னென்ற குழந்தையைப்பார்த்து- எனக்கு எல்லாப்பிள்ளைகளைக் காட்டிலும் நீதான் அருமைப்பிள்ளை. உன்னாலேயே இந்த வீடு, பிள்ளைகள், நான், பித்துப்பிடித்திருக்கிற உங்களய்யா, முதலான யாவரும் பிழைத்து வருவதால் நீ நாவாகிற வாயிலிருந்து குருப்பிரசாதம் சாதுக்கள் பிரசாதம் முதலானதை உள்ளே விடாதே. பல வந்தமாய் வந்து விழுந்தாலும் வாந்தி மூலமாயாவது வெளியில் தள்ளிப்போடு. இதைத்தவிர அறுசுவையில் உனக்கு இச்சையான ரசங்கள் எவைகளுண்டோ அவைகளை யெல்லாந் தடையன்றியில் புசி யென்று சொன்னபடி அவனும் சம்மதித்த பிறகு, கிராணனென்ற புத்திரனைப் பார்த்து—நீ கடைக்குட்டியானதால் அண்ண முதலானவர்கள் போய் அனுபவிக்கிற ஸ்திரீ முதலான விஷயத்திலிருக்கிற துர்க்கந்தமான மலம் மூத்திரம் கத்தாளை நாற்றம் முதலான நாற்றங்களை யெல்லாம் தடையன்றியில் கிரகி. குரு சாதுக்களுடைய வாசனையை மாத்திரம் கிரகிக்காதே யென்று சொன்னபடி அவனும் சம்மதித்த பிறகு, வாக்காகிற புத்திர

னைக் கூப்பிட்டு—வேலைசெய்கிற பிள்ளைகளில் நீ மூத்தவனானதால் உன்னாலேயே நாங்கள் யாவரும் ஜீவித்து வருவதால் நீ சாவதானமாய்ச் சச்சிதாநந்தாதி சப் தங்களையும் மகா வாக்கியங்களையும் இவைகளை உபதேசிக்கிற குருவாக்கியத் தையும் அதைப் பரிசீலனம் பண்ணுகிற சாது சம்பாஷணத்தையும் கனவில் கூட உச்சரிக்கிறதில்லை யென்று பிரமாணங் கேட்டபடி இவனும் துவைத சம் பாஷணமே செய்து வருகிறேனென்று சம்மதித்த பிறகு, பாணிந்திரியனைப் பார்த்து—நீ கரதலத்திலிருந்து குருவின் பணிவிடையையும் சாதுக்கள் பணி விடையையும் சத்கிரியைகளையுஞ் செய்யாமலும் சாதுக்களுக்கு ஒரு காசு கூடக் கொடாமல் தாசி பாடகர்கள் முதலானவர்களுக்கு உன் ஆஸ்தி யெல்லாங் கொடுத்தாலும் நம்முடைய குடும்பத்துக்குக் குறைவில்லை. ஸ்திரீ முதலானவர் களுக்குப் பணிவிடை செய்தாலுஞ் செய். குரு பணிவிடை மட்டுஞ் செய்கிற தில்லை யென்று பிரமாணங் கேட்டபடி அவனும் சம்மதித்த பிறகு, பாதேந்திரி யனைப் பார்த்து நீ பாதத்தலத்திலிருந்து குருவின் சமீபத்திற்கும் சாதுக்கள் சமீபத்திற்கும் ஓர் அடி கூட எடுத்து வைக்காதே. யாருங்கூப்பிட்டாலும் அவர் களிடத்திலுஞ் சேராதே. எங்கே நம்முடைய குடும்பத்துக்கு ஜீவனம் நடக் குமோ அவ்விடம் எவ்வளவு தூரமாயிருந்தாலும் அதைப் பாராமல் நாய் போல அலையென்று சொன்னபடி அவனும் சம்மதித்த பிறகு, பாயுவிந்திரி யனைப் பார்த்து—நீயுன் மலஜல விசர்ச்சனம் பண்ணுகிறதான தொழிலால் சாதுக்களை வெரட்டவேண்டும். நீ அப்படிச் செய்தால் அவர்கள் ஓடிப்போய் விடுவார்கள். நம்மைச்சேர்ந்தவர்களாயிருந்தால் எவ்வளவு மல மூத்திரத்தை விடுகிற குழந்தைகளிருந்தாலும் இன்னும் பிள்ளை குட்டிவேண்டு மென்றே இச் சிப்பார்கள் என்று சொன்னபடி அவனும் சம்மதித்த பிறகு, சிசுநேந்திரியனைக் கூப்பிட்டு—வாராய் முலைகுடிக்கிற குழந்தாய்! நீகைப்பிள்ளையானதால்இந்த நன வாகிற புருஷன் வீட்டை விட்டுக் கனவாகிற பிறந்த வீட்டுக்கு நான் போன காலத்திலும் சகல இந்திரியங்களும் கூட வந்து எனக்கு உதவி செய்யாமலிருந் தும் அவைகளின் வேஷத்தைத் தரித்து அத்தொழில்களை நானே செய்தாலும் விழித்த பிறகு அந்தந்த இந்திரியங்கள் பார்வை முதலான அந்தந்தத் தொழில் களைத் தாங்கள் செய்ததாக ஒப்புக்கொள்ளுகிறது மில்லை. நீ ஒருவன் தானே அச்சமயத்திலும் நான் சிதாபாசனுடைய வும் ரூபத்தை யெடுத்துக் கொண்டு எந்த ஸ்திரீ போகத்தைப் பண்ண நினைக்கிறேனோ அப்போதே உன் லேபன ரூபமான ஆயுத சகிதனாய் வந்து எனக்கு ஒத்தாசை செய்ததுந் தவிர விழித்த பிற்பாடும் அந்தப் போகத்தைப் பொய்யாக்காமல் சுக்கிலமாகிற அடையாளத் தையும் கக்கினதை வெளியில் அண்ணா முதலானவர்களுக்குக் காண்பிப்பதால் நீயே அருமைப்பிள்ளை. ஆகையால் எப்போது எப்போது எந்தெந்த ஸ்திரீயை நினைப்பேனோ உடனே யுன் லேபன ரூபமான ஆயுத சகிதமாயிருக்கவேண்டும். சாதுக்களிருக்கிற இடத்துக்கு நீ போனாயே யானால் உனக்கும் எனக்கும் மித் திரபேதம் பண்ணி விடுவார்களென்று சொல்லிக் கட்டியழும்போது அவ

னும் தாயின் கண்ணைத்துடைத்து அம்மா அழாதே நானுள்ளவரையிலும் உனக்கும் உங்கள் அம்மாளுக்கும் மற்ற குடும்பங்களுக்கும் யாதொரு குறைவும் வாராதென்று சொன்ன பிறகு, இவள் மனசாகிற தன் தங்கையான மொட்டச்சியை வெளியில் போய் மோக கராள்ான சப்தாதி விஷயங்களாகிற விட புருஷர்களைக் கூட்டி வரச்சொல்லிப் பித்துப்பிடித்திருக்கிற புருஷனைக் காவல் போட்டு தனக்கும் தன் சோரநாயகர்களுக்கும் வேலை செய்யும்படிக்கும் செய்ததுந் தவிர இதினாலுண்டாகிற கர்மமாகிற கடனுக்கும் நான் கர்த்தா வென்று கையெழுத்துப் போடும்படிக்கும், யாராவது இவர்களிங்கே யென்னத் துக்காக வந்தார்களென்று கேட்டால் இந்தப் புத்தியானஸ்திரீ இவனை ஜாடை பண்ணித்தான் தன் காரியத்துக்காக வரவழைத்தது போல ஒப்புக்கொள்ளச் சொல்லி, அநேக ஜனனமாகிற வீட்டில் கிரகப்பிரவேசஞ் செய்து மரணமாகிற கடனுக்கு விற்றுக்கொடுப்பதும் திரும்பத் திரும்ப அடிக்கடி இப்படியே கல்ப கோடி காலமாய் கனவுக்குச் சமானமான கல்பனா சம்சாரங்களை விசித்திரமாய் நடத்தி வருங்காலையில், தெய்வகதியாய் இவன் நடத்தையைப்பற்றி நிந்திக்கிற சுருதிகளுடையவும் சாதுக்களுடையவும் வசனங்கள் காதில் விழுந்தும் அவளிடத்திலிருக்கிற பயத்தாற் சொல்லவும் வெல்லவும் முடியாமல் வருத்தப்பட்டிருக்குங்காலையில், சத்துவகுணப் பிரதிபிம்பரான ஈசுவரனென்கிற கடைச்செட்டியாரிடத்தில் இவன் காமியச்சரக்குகளாகிற நஞ்சை வாங்கப்போயிருக்கும் போது அந்தக் கடையில் நிஷ்காமச் சரக்குகளாகிற அமிர்தத்தை வாங்க வந்திருக்கிற முமுக்ஷுக்கள் அவரைப் பார்த்து நஞ்சுபோலிருக்கிற காமியத்தை வாங்க வந்திருக்கிற இந்த மூடன் ஆரென்று கேட்க அந்தச் செட்டியாரும் இவன் புத்தியான ஸ்திரீ, மருந்து வைத்து மனதுடன் கூடி இராப்பகல் பாராமல் விஷய சோர நாயகர்களோடே ரமித்ததாலுண்டான கர்மக்கடன்களுக்குஇவனை நானே கர்த்தாவென்று கையெழுத்துப்போடச் சொன்னதுந் தவிர பொம்மையைப் போலே இவனை ஆட்டி வைத்து வருகிறாளென்று சொன்னதைக் கேட்டுக் கொஞ்சம் மயக்கந் தெளிந்து அய்யா நானென்ன செய்வேன். புத்தியாகிற ஸ்திரீயோ துஷ்டை, மனசாகிற சிநேகிதையோ வஞ்சகி,இந்திரியங்களாகிற புத்திரர்களோ அதிகப் பிரசங்கிகள், இவர்களுடைய கர்மக் கடன்களுக்கெல்லாம் நானே கர்த்தா வென்று கையெழுத்தும் போட்டு விட்டேன். அவள் வைத்த மருந்தால் அவர்கள் பேரிலிருக்கிற மயக்கமும் போகவில்லை. வேறே ஜீவனம் பண்ண ஆதரவுமில்லை. கடன் தீர்க்க ஐவேசுமில்லை. நானென்ன செய்வேனென்று அழும்போது ஈசுவரனாகிய செட்டியார் சாதுக்களைப் பார்த்து உங்கள் குரு சன்னிதிக்கு இவனைக் கூட்டிக்கொண்டு போனால் இவனுடைய அஞ்ஞானாதிகள் அடியோடே போகுமென்று சொல்லி இவனையும் பார்த்து அடே! உனக்கு நல்ல காலம் பிறந்திருப்பதால் இந்தச் சாதுக்கள் தரிசனமும் இதனால் மகாப்பிரபுவான சற்குருவின் தரிசனமும் கிடைத்து உன் கடனுந் தீர்த்து உன் மருந்து மயக்கத்தையும் போக்கி இந்தக் கெட்ட ஸ்திரீயைத் தள்ளிவிவேகமென்

கிற ஸ்திரீயைக் கலியாணஞ் செய்து வைத்துப் போத புத்திரனையும் கொடுத்து உன்னைக்கரை யேற்றி வைப்பா ரென்று சொல்லிச் சாதுக்கள் கையிற் பிடித்துக் கொடுத்து நிழலைப்போல இவர்களை விட்டுப் பிரியாமலிருந்தால் உனக்குச் சகல சுகமுங் கிடைக்குமென்று சொன்னதும், இவனும் இவர்களுடன் குரு சன்னிதிக்குப் போய்ச் சரணாகதி பண்ணினதும் சாதுக்கள் இவன் சங்கதிகளைச் சன்னிதியில் தெரிவித்த பிறகு குருவும் இவன் துக்கத்தைப் பார்த்துக் கருணாநிதியானதால் பயப்படாதே யென்று அபயப் பிரதானஞ் செய்தார். இவன் மறுபடி புத்தி முதலான பழைய குடும்பத்தைக் குறித்துப் புலம்புவதைக் கேட்டுச் சாதுக்களைப் பார்த்து இந்த மூடனை யேன் கூட்டிவந்தீர்களென்று கோபித்தவுடன் சாதுக்கள் இவன் பிரக்ஞை சுவாதீனமின்றியி லிருப்பதாலும் சன்னிதானத்திற்கு வந்த மாத்திரத்தில் இவடத்துப் புத்திரனைப் விட்டதாலும் ரக்ஷிக்க வேணுமென்று பிரார்த்திக்கும்போது சற்குருவும்இரங்கி ஸ்பரிச தீக்ஷையென்ற தாது பரீக்ஷை பண்ணிக் குரு சொல்லுகிறதாவது:—ஓ கோ! கோ! என்ன ஆச்சரியம் இவனுக்கு யெவ்வளவு மருந்து வைக்கப்பட்டிருக்கிறது. அதனால் அகங்காரமான பிசாசும், அபிமானமாகிற மயக்கமும், விஷயாசா பைத்தியமும், இந்திரிய சேஷ்டையாகிற கோட்டாலையும், வீண்வார்த்தையாகிற புலப்பமும், வாசனாத்திரியங்களாகிற விலங்குகளும்,கருத்துருத்துவங்களாகிறகடன்காரர் இம்சையும், காமாதி வாசனைகளாகிற கள் நாற்றமும், தேகோக மென்கிற மோகமும், ஈஷணைகளாகிற பாம்புக்கடியும், ஆவரணமாகிற மூர்ச்சையும் விக்ஷேபமாகிற காக்காய் வலிப்பும், சித்த வியாகுலமாகிற க்ஷயவியாதியும், பாபங்களாகிற பிரதிபந்தங்களும், துர்வாசனைகளாகிற துஷ்ட பந்துக்களும் இன்னும் அநேக தோஷங்களுடனுங் கூடிய இவனை இங்கே ஏன் கூட்டி வந்தீர்களென்று கோபிக்கும் போது சாதுக்கள் சொல்லுகிறதாவது:—நாங்களும் இதைக்காட்டிலும் அதிக மயக்கத்துடன் கூடியிருந்தோமல்லவா, எங்களுக்கு அனுக்கிரகித்தது போலே இவனையுங் காக்கவேண்டுமென்று பிரார்த்திக்கும்போது குரு கடாக்ஷத்தாலும் குரு அஸ்தபரிசத்தாலும் இவனுக்கு மயக்கங் கொஞ்சந்தெளிந்து-ஹே பிரபோ! நான் புத்தி சுவாதீன மில்லாமலிருப்பதால் நானென்ன உளறினாலும் அதை க்ஷமிக்கவேண்டுமென்று பிரார்த்திக்கும்போது, குருவும் முதலி லிவனுக்குச்சாதன சதுஷ்டயமாகிற பேதி மாத்திரையைக் கொடுத்து அநேக துர்வாசனாமலங்களைக் கழித்து, மூட சங்கதியான அபத்தியந்தள்ளி சத் சங்கதியான பத்தியம் வைத்து, ஆத்மானாத்ம விசாரமான ரசாயனத்தால் தேகாதிகளே நாம் ஜகம்சத்தியம் விஷயமே ஆனந்தம் இதைஅனுபவிக்கிறதே மோக்ஷமென்று இருந்த மயக்கமான மருந்துகளை யெல்லாம் கொஞ்சங் கொஞ்சமாய் வெளியேற்றி,புத்தியாகிற ஸ்திரீயை மித்தையாகிற கடசிரார்த்தஞ் செய்வித்து,இந்திரியங்களாகிற புத்திரர்களைக் கூப்பிட்டு நீங்கள் தாயோடே சேர்ந்து ஜாதிப்பிரஷ்டர்களாய்ப் போகிறீர்களா? அல்லது பிதாவுடன்சேர்ந்து பிரஹ்மானந்தத்தை யனுபவிக்கிறீர்களா? நீங்கள் தாயோடே சேருகிறதானால் உங்கள் பிதாவுக்கு பிரஹ்மத்தியான யோக

மென்கிறபெண்ணைக் கலியாணம் பண்ணி வைத்துக்கரையேற்ற வேண்டும். பிதாவோடே சேருகிறதாயிருந்தால் உங்கள் பிதாவுக்கு விவேகமென்கிற பெண்ணைக் கலியாணஞ் செய்துவைத்துப் போதனென்கிற புத்திரனையும் உற்பத்தி செய்து உங்கள் முதலானவர்களை யெல்லாம் கரையேற்றிவைக்க வேண்டுமென்று கேட்டவுடன் இந்திரியங்களும் அப்பாவுடன் சேரச் சம்மதித்து நாங்கள் குழந்தைகள் தாயார் தகப்பனார் என்ன வித்தையைப் பழக்கஞ்செய்து வைக்கிறார்களோ அந்த வித்தையை அப்பியாசம் பண்ணத் தெரியுமே தவிர எங்களுக்கு யாதொரு சுதந்தரமுங் கிடையாதென்று சொல்லிச் சகல இந்திரியங்களும் அய்யாவோடே சேரச் சம்மதித்தபிற்பாடு,குருவானவர் விவேகமென்கிற பெண்ணைக் கலியாணம்பண்ணி வைத்துப் போத இராஜனென்ற பிள்ளையையும் உற்பத்தி செய்து, அந்தக் குழந்தையைப் பார்த்து நீ உன் தகப்பன்பட்டிருக்கிற கருத்துருத்துவமாகிற இருணத்தை விமோசனஞ் செய்வித்து இவனுக்கு வந்திருக்கிற உபாதிகளை யெல்லாம் நிவர்த்திசெய்யென்று அநுக்கிரகித்தவுடன் அந்தப் போத குமாரனும் அந்த அகங்காரமான பிசாசை நான் யாரென்கிற விசாரமாகிற மந்திரத்தால் விரட்டி, அபிமானமாகிற மயக்கத்தைச் சித்ஜட விவேகமென்கிற குளிகையால் நிவர்த்திசெய்து, விஷயாசையாகிற பயித்தியத்தை விஷயதோஷ திருஷ்டியென்கிற ரசபஸ்மத்தால் நிவர்த்திசெய்து, இந்திரிய சேஷ்டையாகிற அபஸ்மார வியாதியை இந்திரிய நிக்கிரகமென்கிற சித்த குளிகையால் நிவர்த்தி செய்து,விஷயப்புலப்பத்தைச் சத்வசனங்களாகிற குளிகையால் நிவர்த்திசெய்து, வாசனாத் திரயங்களாகிற விலங்குகளை விவேகவைராக்கியங்களாகிற கத்தியால் வெட்டிப் பிளந்தெரியும்போது கருத்துருத்துவாதிகளாகிற கடன்காரர்கள்வந்து மறித்துக்கொண்டு அநேக கோடிகாலமாய்ச் செய்த புண்ணிய பாவங்கள் முதலான சஞ்சிதங்களாகிற தஸ்தாவேசுகள் நான் கர்த்தாபோக்தாவென்ற இவன் கையெழுத்துடனிருக்கிறதென்று காண்பித்தவுடன், போதகுமாரன் அந்தத் தஸ்தாவேசுகளைப் பார்த்து இவைகள் செல்லாது அதற்குக் காரணமேதென்றால், முதலில் கடன் வாங்குகிறவன் தகுந்த வயசாயிருக்கவேண்டும்,இந்த ஜீவன் அவிவேகமாகிற மைனராயுள்ள பாலியாவஸ்தையிற் கையெழுத்துப் போட்டிருக்கிறதுந் தவிர; கடன் வாங்குகிறவன் புத்தி சுவாதீனமாயிருக்கவேண்டும்: இந்த ஜீவன் விஷயாசையாகிற மருந்து மயக்கத்தால் பைத்தியங்கொண்ட சமயத்தில் எழுதிக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இன்னம் அவன் பிரதிப் பிரயோசனத்தை யடைந்திருக்கவேண்டும், அப்படி யிவனுக்குக் கருவிகரணங்கள் ஒன்றுமில்லாமையால் இவன் புசிக்கவுமில்லை. இன்னுங் கடன் வாங்கினவனுடைய சொத்தைத் தானே கடனென்று யேற்படுத்தியிருக்கிறீர்களே தவிரநீங்கள் யார்? உங்களுக்குச் சுகமாகிற சொத்து ஏது? சுகமாகிற சொத்து ஆத்மாவைச் சேர்ந்ததேதவிர துக்கரூபமான உங்களுக்குச் சுகமாகிறசொத்தேது?இன்னம் உங்களைப் போர்ச்சரிக்காகத் தண்டிக்கப்போகிறோம். அதாவது—மேலே சொன்ன அசந்தர்ப்பமான சமயங்களில் கடன் கொடுக்கிறவன் கெட்ட எண்ணத்தோடே

கூடியவனென்று-லா-வில் தண்டிக்கும்படி ஆதரவுமிருக்கிறது. இன்னும் ஜீவனுக்குக் கையெழுத்துப் போடக் கையுமில்லை, பேச வாயுமில்லை, பார்க்கக் கண்ணுமில்லை, கேட்கக் காதுமில்லை, நினைக்க மனதுமில்லை. அப்படியிருக்க நீங்களே இவன் கையெழுத்துப் போலே சிருஷ்டனைசெய்திருப்பதாலும் இன்னம் துவிசாக்ஷிகம் ஒரு சப்தாதி விஷயங்களுக்கும் இல்லாமல் ஒரு இந்திரியத்தால் கேட்கப்பட்டும், ஒரு இந்திரியத்தால் பார்க்கப்பட்டும் இப்படி ஒன்றுக்கொன்று தகவலில்லாமலிருப்பதாலும் ஒரு பத்திரத்தில் அநேகஞ் சாக்ஷிகள் கையெழுத்துப் போட்டிருந்தாலும் எழுதிக்கொடுத்திருக்கிற ஆள் மாறாட்டமாயிருந்தால் எல்லாருக்குந் தண்டனை கிடைக்குமென்று சொன்னதைக் கேட்டு, இந்திரியங்களும் நாங்கள் பார்க்கவும் கேட்கவுமில்லை பத்திரசங்கதி யாதொன்றுந் தெரியாதென்று சொன்னதைக் கேட்ட கருத்துருத்துவாதிகள் இனி இவ்விடத்தி லிருந்தால் கொடுத்தகடனும் வராது மேற்கொண்டு தண்டனையுங் கிடைக்குமென்று பயந்து காணுமல் போய்விட்டார்கள். அதன் பிறகு காமாதிவாசனையான கள் நாற்றத்துக்கு மைத்திரியாதி வாசனைகளாகிற அமிர்தத்தைக் கொடுத்து அந்த நாற்றத்தை மாற்றித் தேகோகமென்கிற மோகத்தை பிரஹ்மாக மென்கிற குளிகையால் நிவர்த்தித்து, ஈஷணுத்திரயங்களாகிற பாம்புக்கடி விஷத்தை அனுபூதியாகிற சஞ்சீவியாற் போக்கடித்து, ஆவரணமாகிற மூர்ச்சையை ஆனந்தானுபவமாகிற நசியத்தாற் போக்கடித்து, விக்ஷேபமாகிற காக்காய் வலிப்பை நிருவிகல்ப சமாதியாகிற ரசபஸ்மத்தால் நிவர்த்தித்து, சித்தவியாகுலமாகிற க்ஷயவியாதியை நாம் யார் இச்சகத்தெப்படி யுண்டாச்சுதென்ற விசாரமாகிற காயசித்தியாற் கெடுத்து, துர்வாசனைகளாகிற துஷ்டபந்துக்களை அகண்டபாவனையாகிற அஸ்திரத்தால் அடித்து, பாபங்களாகிற பிரதிபந்தகங்களை சாதுசங்கமாகிற பிராயச்சித்தத்தாற் கெடுத்து, இவனுக்கு இந்தத் தோஷங்களால் வந்திருந்த ஜீவத்துவம் எப்படிப் போச்சுதென்றால் புருஷனுக்குக் கைதியென்கிறபேர் குற்றத்திலிருந்து விடுதலையான பிறகு அந்தப்பேர் போய் யோக்கியனென்கிற பேர் வருவது போல இவனுக்கும் ஜீவனென்கிற பேர் போய் பிரஹ்மமென்கிற பேர் வந்தது. எதினலென்றால் குரு கடாக்ஷத்தாலேயே இவ்வளவு தோஷத்தோடுங் கூடின ஜீவத்துவம் போய் பிரஹ்மத்துவம் நமக்குப் பிராப்தியாச்சுதென்று போதகுமாரனுடன் குருநாதன் சன்னதியில் வந்து விண்ணப்பஞ் செய்கிறான். ஏ பிரபோ! என்ன ஆச்சரியத்தைச் சொல்லப்போகிறேன்! நான் முன்னிருந்த இருப்பையும் அப்போது என் சொரூபத்தை மறந்து தேகாதிகளே நானென்று மவுட்டியத்தை யடைந்து சரீராதிகளுக்கு வருகிற ஹானிவிருத்திகளை எனக்கு வந்ததாகவே யெண்ணி துக்கமான போகங்களைச் சுகமென்று நம்பிக் கெட்ட புத்தியாகிற ஸ்திரீயே குலதெய்வமென்று நம்பி, அவளுத்தரவுப்படி வெகு காலமாய்த் தபித்த எனக்கு இவ்வளவு பாக்கியம் தெய்வகதியால் ஈசனுகிற செட்டியார் சிபார்சைப் பண்ணவும் சாதுக்களிந்தச் சன்னிதிக்கு என்னைக் கூட்டிவரவும் சன்னிதி யனுக்கிரகத்தால் ஸ்திரீயின் மருந்து மயக்கந்தீர்ந்து அந்தக்கெட்ட

புத்தியான ஸ்திரீயை மித்தையென்று தள்ளி விரட்டி விவேகியென்கிற ஸ்திரீயை க்கலியாணஞ்செய்து போதனென்கிற பிள்ளை பிறந்து என்னிடத்திலிருந்த சகல அனர்த்தங்களையும் ஞானக்கினியால் எரித்து பிரதி பந்தமன்றி எப்போதும் நான் பிரஹ்மமாகவே யிருக்கிறேனென்கிற அபரோக்ஷஞானம் கரதலா மலகம் போலக் காட்டிவைத்த அதிசயத்துக்குமேல் என்ன அதிசய மிருக்கிறதென்று சொல்லிக்கூத்தாடிப் பரவசத்தை யடைந்து, இப்படிப் பரமோபகாரஞ்செய்த பரம குருவுக்கு பிரதி யுபகாரம் என்னசெய்வோமென்று தவிப்பதைப்பார்த்து அவரும் நீ இந்த ஜீவன் முக்தி ஸ்திதியைவிட்டு நழுவாமலிருப்பதே பிரதியுபகாரமென்று சொன்னதைக்கேட்டு, இவனும் பிராரப்த க்ஷயம்வரை சாதுக்களையும் சற்குருவையும் பிரியாமலும் அவர்கள் செய்த விஸ்வாசத்தை மறவாமலும் ஜீவன்முக்தனயிருந்து, பிராரப்தாந்தத்தில் கடமுடைந்த மாத்திரத்தில் கடாகாசம் மகா காசமாவதுபோல இவனும் நிர்க்குணப் பிரஹ்மத்தில் ஐக்கியமானன். இந்த அநுசந்தானத்தை எந்தப்புருஷன் குருபக்தியோடே கூடிக்கொண்டு சதா பரிசயம் பண்ணிக்கொண்டு வருகிறானே அவன் முக்தனென்று குருபாதத்தில் ஆணைவைத்து பிரதிஞ்ஞைப் பண்ணப்பட்டது.

## 69-வது தரங்கம்.

[அ-கை.] ஆத்மாவாகிற இராஜசன்னிதானத்தில் முமுக்ஷுவாகிய வாதியால் கொடுக்கப்பட்ட பிராதின்பேரில் விசாரணைசெய்து மனதையும் அவஸ்தாத்திரயங்களும் பொய்யென்றும் சாக்ஷியே நித்தியமென்றும் தீர்மானித்ததைச் சொல்லுகிறார்:—

ஆத்மாவாகிற இராஜசன்னிதானத்தில் ஒரு முமுக்ஷுவாகிற வாதி தன்னுடைய நியாயம் வெளியாவதற்காகப் பிராது செய்தான். ஜாக்கிரத்தைக் கல்பிக்கிற மனசினுடைய ரசோ குணமே, 1-வது. பிரதி வாதி; சொற்பனத்தைக் கல்பிக்கிற மனசின் சாத்வீக குணமே, 2-வது. பிரதி வாதி; மனசின் தமோ குணமான சுழுப்தியே, 3-வது. பிரதி வாதி, இந்த 1—2. பிரதிவாதிகள் ஒய்ந்திருக்கிற சுழுப்தியவஸ்தை தமோகுணமானதால் அப்போது ஆத்மா மாத்திர மிருக்கிறார். இருந்தாலும் தமோகுணமான கள்ளைக்குடித்து மயங்கிக் கிடக்கிறார். முதலில் ராஜசனன ஜாக்கிரன் தான்தானே தன்னை நிஜஸ்தனென்று சொல்லிக்கொண்டு அநேகம் பிரட்டுப்பத்திரங்களையும் அநேகம் தப்புச்சாக்ஷிகளையுங் கற்பித்துக்கொண்டு அநேகம் பிரட்டு யுத்திகளையும் கற்பித்து இராஜாவுக்குப்போதித்து மயக்கி தன் கைவசப்படுத்திப் போட்டான். அதன்பேரில் சாத்வீகனன சொப்பனன் தனக்கு இப்படிக்கற்பனை பண்ணச்சக்தி யில்லாவிட்டாலும் ஜாக்கிரன் செய்ததைப் பார்த்துக்கொண்டு இவனும் அதுபோலவே தப்புப் பத்திரங்களையும் சாக்ஷிகளையுங் கற்பித்து இராஜாவை நிஜமென்று நம்பும்படி செய்து போட்டான். இவர்களிருவருமில்லாத சுழுப்தியில் இராஜாவுக்கு நாம் நிஜத்தைப்போதிப்போமென்றால் அப்போது தமோகுணமான கள்ளைக்குடித்து மயங்கிக்கிடப்பதாலும் சுத்த ஜடம்போலே போய்விட்டதாலும்

அப்பவும் போதிக்கக்கூடவில்லை. சொப்பனத்திற் போதிப்போமென்றால் அந்த அவஸ்தையானது அஸ்திரமாயும் மோகமாயுமிருப்பதால் அந்த இராஜாவுக்கு அந்தச்சமயத்திற் காணப்படுகிற நல்லது பொல்லாதது இரண்டும் ஒன்று போலப் போவதாலும், மேலும் அந்தச்சொப்பனனானவன் இந்த ஜாக்கிரனானவன் இந்த ஜகத்தை நிஜமென்றால் அவனும் நிஜமென்கிறான். இவன் பொய்யென்றால் அவனும் பொய்யென்கிறான். ஆகையால் சொன்னதைச் சொல்லுங் கிளிப்பிள்ளை யென்கிற நியாயம்போலே யிருப்பதால் இராஜாவும் அந்தச்சமயத்தில் அதுபோலவே மயங்கியிருப்பதாலும் அந்தச்சமயத்திலும் போதிக்கக்கூடவில்லை. ஆகையால் ஜாக்கிரன் எப்போது வருகிறானோ அப்போதே அவன் பத்திரத்திலுள்ள பிரட்டையும் வாக்குமூல விரோதங்களையும் அவன் சாக்ஷிகள் சொல்லும் பிரட்டுகளையும் அனுபவ விரோதமான குயுத்திகளையும் அவன் செய்த போர் ஜரிகளையும் விஸ்தாரமாய் நிரூபிக்கிறோம். சங்கை - சொப்பனமும் ஜாக்கிரமும் பொய்யென்பதிற் சரியாயிருக்கும்போது அதை விசாரியாமல் இதை மட்டும் விசாரிப்பானேனெனில்; உத்தரம்.—சொப்பனத்தைப் பொய் யென்று அறிவதினால் ஜீவன் முக்தியில்லை, ஜாக்கிரத்தைப் பொய்யென்று அறிவதினாலேயே ஜீவன் முக்தி வரவேண்டும். இதற்கு யுக்தி - புலிபோலிருக்கிற நாயைக்கொன்று அதின்தோலி லுட்கார்ந்து தபசு செய்கிறவனுக்குச் சித்தி வராமற் புலியைக்கொன்று அந்தத் தோலிலிருந்தே தபசின் சித்தியடைவது போல இருக்கிறது. ஆகையால் இந்த ஜாக்கிரத்தையே பொய்யென்று சுருதி யுக்தி அனுபவ மூலமாய்க் குரு சன்னிதியிலிருந்து விசாரித்து உறுதிப்படுத்த வேண்டும். அதனாலேயே ஜீவன் முக்தியும் பெறவேண்டுமென்று நினைத்து அப்படியே பிராதும் வாதியால் கொடுக்கப்பட்டது. அதாவது,ஜாக்கிரன் தஸ்தாவேசுகளில், இகலோகத்தை மட்டுஞ் சத்தியமென்று சொல்லுகிற சிலதஸ்தாவேசுகளும், இகபரங்களிரண்டுஞ் சத்தியமென்று சொல்லுகிற சில தஸ்தாவேசுகளும் இருப்பதாகச் சொல்லப்படுகின்றன. அதில் இகலோக தஸ்தாவேசின் சுருக்கம்:—இத்தேகமே நாம் புத்திராதி விஷயங்களே ஆனந்தம் அவைகளையனுபவிப்பதுவே மோக்ஷமென்பது தான். பரலோக தஸ்தாவேசின் கருத்து:—இகத்திலும் முன் சொன்ன போகங்களை யனுபவித்து யாகாதி தான தர்மங்களைச் செய்து பரலோகத்துக்குப்போய் அமிர்தபானமும் ரம்பா சம்போகமும் அனுபவிப்பதே மோக்ஷமென்றும், ஆத்மா கர்த்தா இவர்செய்த புண்ணிய பாப கருமங்கள் இவர் அனுபவியாமல் இவரை ஒருநாளும் விடாதென்றும் இப்படிப் பரம்பரையாய் அனுபவித்துக்கொண்டே யிருக்க வேண்டுமென்றும் சொல்லப்படுகிறது. இவைகளிலென்ன விரோதமிருக்கிற தென்றால், முதலில் இந்தத்தேகமே தானானால் தானிருக்கும் போதெல்லாம் இந்தத்தேக மிருக்க வேண்டும். மூன்று அவஸ்தைகளிலும் மூன்று காலங்களிலும் தான் இருப்பதாலும் இந்தத்தேகம் சொப்பனாதிகளில் இல்லாமலும் உற்பத்திக்கு முன்னும் மரணத்துக்குப்பின்னு மில்லாமலும் பஞ்சபூதத்திலிருந்து உற்பத்தியாய் ஜடமா

யிருப்பதாலும், என் கடமென்பதுபோல என்தேகமென்று வேறாய்த் தன்னால் பார்க்கப் படுவதாலும், சதா தாபத்திரயத்தோடே கூடியிருப்பதாலும், பரிச்சின்ன மானதாலும், நன்மையைக் கொடுத்தால் தீமையைக் கொடுக்கிற விசுவாச பாதகனானதாலும், இதை நானென் றபிமானித்ததால் முன் அனந்த ஜன்மதுக்கங்களை இதுவரை யடைந்ததுபோல இனிமேலும் அனந்தகோடி ஜனனமரணப் பிரவாகமானது ஒயாமல் வருமென்பது நிச்சயமா யிருப்பதாலும் இத்தேகம் நானென்னக்கூடாது. இனிப்புத்திராதிகளை சுகமென்பதுங்கூடாது. ஏனென்றால், அதுகளுண்டாகிறதற்கு முன்னும் உண்டான காலத்திலும் அழிகிற காலத்திலும் துக்கமே யிருப்பதால் இவைகளை என்னமாய்ச் சுகமென்று சொல்லலாம். ஆகையால் இகத்தைத் குறித்துச் சத்தியமென்று சொல்லுகிற பத்திரங்களும் சாக்ஷிகளும் தாவாக்களும் பிரட்டென்று ரூபிக்கப்பட்டது. இனி, பரலோகத்தைக் குறித்துச் சொல்லப்பட்ட அமிர்தாதி சுகங்களும் பஞ்சபூத விகாரமானதாலும், அந்தச்சுகங்கள் பழையதாக இருப்பதாலும், அந்தஸ்திரீபோகங்கள் கட்டுக்கழுத்தியைக் கலியாணஞ்செய்து அவளோடே அனுபவிப்பது போலவும் அநேகர்கள் கொல்லைக்குப் போயிருக்கிற கக்கூசில் கொல்லைக்குப் போகிறதுபோலவு மிருக்கிறது. எதுபோலவென்றால் அதற் குதாரணங்கேள் — கிளப்பவுஸ் சாப்பாடும் தேவடியாளுடைய சுகமும் காசு செலவாய்ப் போனகாலத்திற் கழுத்தைப்பிடித்து வெளியில் தள்ளுவதுபோலக் கர்மம் க்ஷயமானவுடன் அத்தேவ லோகத்திலிருந்து தலைகீழாய்த் தள்ளுகிறதா யிருப்பதாலும், பின்னும் அவ்விடத்திலுள்ள துக்கங்களைச் சொல்லி முடியாதாகையாலும் பரலோகத்திலும் ஆனந்த முண்டென்பது கூடாது. தான் செய்தகருமம் அனுபவியாமல் தீராதென்று சொன்ன சாஸ்திரத்துக்குச் சமாதானம்—அப்படி அனுபவித்தே தீரவேண்டு மென்றால் லோகத்தில் ஜனங்கள் தாங்கள் செய்த பாபம்போகிறதற்கு தீர்த்த ஸ்நாநம் தானம் தபசு பூசை முதலான புண்ணியங்களை உபாயமாகச் சொல்லப்பட்டிருப்பதாலும், பின்னும் பண்ணினவனைப் பிடிக்குமென்றே சாஸ்திரங்கள் சொல்லி யிருக்கிறதே தவிர பண்ணாதவனைப் பிடிக்குமென்று சொல்லாததினால் இப்போது நாம் கர்மத்தைப் பண்ணினவனா பண்ணாதவனாவென்று விசாரணை செய்யுமிடத்தில், தான் அகர்த்தாவாய் விளங்குவதும் தவிர சகல கருத்தாருத்துவமும் மனசே செய்கிறதாகவும் வெளியானது போலவே காமோகாரீஷீத்து மன்னியுற காரிஷீத்து யென்ற மந்திரமானது ஆத்மா அகர்த்தா வென்றும் காமக்குரோதங்களே சகலத்துக்குங் கர்த்தாவென்றும் சொல்லி யிருப்பதாலும், சுழுப்தியில் மனசில்லாதபோது ஒருகருமமுங் கருத்தாருத்துவமுங் காணாமல் தான் சுகமாயிருப்பதினாலும் அனுபவித்தே தீரவேண்டுமென்ற சாஸ்திரம் தான் கர்த்தாவென்று எவன் எண்ணி யிருக்கிறானோ அவனைக் குறித்துச் சொன்னதே தவிர அகர்த்தாவாகிய விவேகியைக் குறித்துச் சொல்லாதபடியினால் அந்தத் தஸ்தாவேசுகளும் தள்ளுபடியாய்ப் போய்விட்டது.

இனி வாதியாகிய பென்தரப்புத் தஸ்தாவேசுகளும் அதுபோலவென்று சொல்லக் கூடாது. ஏனென்றால்—விசாரணையால் நிஜமென்று சுருதி யுக்தி யனுபவ மூலமாய் நிரூபிக்கிறேன். முதலாவது அந்தத் தஸ்தாவேசுகளுக்கும் இந்தத் தஸ்தாவேசுகளுக்கும் இருக்கிற தாரதம் மியத்தை நிரூபிக்கிறேன். அதாவது:—முதலில் இகலோக காமிகளுடைய தஸ்தாவேசில் தேகத்தையே ஆனந்தமென்று ஓரிடத்திலும், பிள்ளையே ஆனந்தமென்று ஓரிடத்திலும், தனதானியங்களே ஆனந்தமென்று ஓரிடத்திலும்,இப்படிப் பயித்தியம் பிடித்தவன்போல ஒருதரஞ் சொன்னதை யொருதரஞ்சொல்லாமல் உளறுபடியாய்ச் சொல்லியிருப்பதுபோல இல்லாமலும், பின்னும் பரலோக காமிகளுடைய தஸ்தாவேசில் ஒரு அக்கினி கோத்திரம் முதலான கருமத்தைச் சொல்லும்போது இதுவே சாசுவதமான சுகத்தைக் கொடுக்குமென்று அந்தந்தக் கருமத்தைப் பிரதி பாதிப்பதிலும், இதுபோலவே பக்தி காண்டத்திலும் ஒவ்வொரு ஸ்தலங்களையும் மூர்த்திகளையும் தீர்த்தங்களையுங் குறித்து அதற்குமேலின்னுமொன்று இல்லையென்று இப்படி உளறுபடியாய்ச் சொல்லியிருப்பதுபோலவன்றி ஞானகாண்ட தஸ்தாவேசுகள் பிரஹ்மமேயுள்ளது மற்றயாவும் மித்தையென்று ஒருபடித்தாய்ச் சொல்லுவதாலும் சுருதி யுக்தி அனுபவம் மூன்றும் ஒத்திருப்பதாலும் மகாராஜாவான கோரட்டார் உபய தரப்பிலுள்ள நியாயான்னியாயங்களை யோசித்து இந்த ஜாக்கிரனையும் இவனை யேவி விட்டனதென்கிற மகா மாயாவியையும் இனிமேலிப்படிச் சிருஷ்டனை செய்யாமலிருக்கும்படிக்கும் உபயதரப்புச் சாக்ஷிகள் தஸ்தாவேசுகளின் யோக்கியதையையும் நியாயான்னியாயங்கள் முதலானதையும் நன்றாக விசாரித்து அனியாயமாயுண்டு பண்ணப்பட்ட அவஸ்தாத் திரயங்களையும் அவைகளுக்குக் காரணமான திரிகுணாத் மகமான மனதையும் அதற்குக் காரணங்களான அவித்தையாவரணங்களையும் அடியோடே அடித்து அவஸ்தாத்திரய சாக்ஷியே நானென்கிற ஞானத்தை ஸ்திரப்படுத்தித் தீர்ப்புச் செய்யும்படிக்கும் பிரார்த்திக்கிறேனென்று சொன்னதைக்கேட்ட அந்த இராஜாவான கோர்ட்டாரும் நன்றாய் ஆத்மா ஞத்ம விசாரணைசெய்து அவஸ்தாத்திரயங்களையும் அவைகளுக்குக் காரணங்களான அவித்தை ஆவரண விக்ஷேபங்களையும் அடியோடே ஞானக்கினியிற் போட்டுப் பஸ்மம்பண்ணிச் சாக்ஷித்துவ ஞானத்தையே ஒருக்காலும் அழியாமலிருக்கும்படி தீர்ப்புச்செய்தார். இந்த அனுசந்தானத்தைக் குரு பக்தியுடன் பார்த்தவன் இப்போதே அவஸ்தாத்திரய சாக்ஷியாய் விடுவானென்று பிரதிக்ஞை பண்ணப்பட்டது.

## 70-வது தரங்கம்.

சச்சிதானந்தமான ஆத்ம சமுத்திரத்தில் நாமரூப வடிவங்களாயிருக்கிற தேகங்களாகிற தோணிகளில் இந்திரியங்களாகிற ஜனங்களையேத்தி ஜீவர்களாகிற தோணிக்காரர் கர்மக்காசு வாங்கிக்கொண்டு சொர்க்க மத்திய பாதாளங்களாகிற துறைகளுக்குச் சதாகாலமும் போக்குவரத்துடனிருக்

கும்போது, எவனோ ஒரு தோணிக்காரன் கர்மக்காசன்றியில் இந்திரிய ஜனங்களை யேத்திப்போகும்போது பல உத்தேசமாகிற அக்கரையில்லாததினால் மத்தியிற்போகும்போது நிராசையாகிற உபேக்ஷையால் தூங்கி ஆத்ம சமுத்திரத்தில் விழுந்துவிட்டான்.

அந்தச் சமுத்திரத்திலிருக்கிற குருவாகிய முதலையும் எப்போது ஆள் விழப் போகிறானென்று காத்துக்கொண்டிருப்பதால் இவன் சொரூபமே தெரியாமல் விழுங்கிவிட்டதால் சரீரமாகிற தோணியும் இந்திரியங்களாகிற ஜனங்களும் தற்போதமிழந்து இருக்கும் சமயத்தில் கர்மசேஷமான பிராரப்த கர்மக்காற்று எங்கே அடிக்கிறதோ அங்கே ஜீவன் முக்தனுடைய சரீரத் தோணி இந்திரிய ஜனங்களுடன்போய்க் கொண்டிருக்கிறது. கர்த்தாவாகிய தோணிக்காரனில்லாததால் விதி நிஷேதங்களாகிற குற்றஞ்சொல்ல இடமில்லை. மற்ற அஞ்ஞானிகளாகிற தோணிக்காரர்களுக்கோ வென்றால் தமோகுணம் ரஜோகுணங்களைப் போக்கச் சத்கர்மம் செய்வது காத்தில்லாமல் போனாலும் பாய்மரங்களைக் கட்டித் துடுப்புப்போட்டுத் திருப்பிநினைத்த இடங்களுக்குக் கொண்டுபோய்விட்டுக் கர்மங்களாகிற காசுவாங்குவதால் அஞ்ஞானிக்குக் கர்த்தா யிருப்பதால் புருஷப்பிரயத்தினம் வேண்டும். பிராரப்தமென்று சொல்லக்கூடாது. அப்படிச்சொன்னால் புருஷார்த்த சதுஷ்டயங்களையும் இழந்து போவனாகையால் இந்த ஜீவத்துவம் கெடுகிற வரைக்கும் சன்மார்க்கத்தில் நிரம்ப சாவதானமாய் புருஷப்பிரயத்தினஞ் செய்து கொண்டுவரவேண்டியது.

## 71-வது தரங்கம்.

[அ-கை.] நாம் யாரென்றது முதலான ஐந்து வினாக்கட்கு உத்தரஞ் சொல்லுகிறார்:—

முதலில் நாம்யார்? ஜனனமரணம்யாருக்கு? ஜகத்துக்காரணமென்ன? இதையுண்டுபண்ணின கர்த்தா யார்? இவ்வனைத்துக்கும் அதிஷ்டான வஸ்து எது? இவ்வைந்து வினாக்கட்கும் உத்தரம்:—முதலாவது சகலரிடத்திலும் நானென்பது ஒன்று காணப்படுகிறது. அந்த நான் சரியான ஸ்திதியிலிருக்கிறானா அல்லவாவென்பது ஒரு பாயிண்டு. அப்படி சொஸ்திதியிலிருந்து நழுவியிருந்தால் மறுபடி சொஸ்திதிக்குக் கொண்டுவரக்கூடுமா? கூடாதா வென்பது, 2-வது. சொஸ்திதிக்குக் கொண்டுவந்தாலும் அதிலிருந்து நழுவாமலிருக்கக் கூடுமா? கூடாதா வென்பது, 3-வது. நானென்பவனை விசாரிப்பதினால் பிரயோசன மென்ன? விசாரியாமையால் கெடுதலென்ன வென்பது, 4-வது. இவன் சொஸ்திதியைவிட்டு நழுவுவதற்குக் காரணமென்ன வென்பது, 5-வது பாயிண்டு. 1-வதுக்குச் சமாதானம்—சகலரிடத்திலு மிருக்கிற இந்த நான் எப்படியிருக்கிறா னென்றால், பிறந்தவனாயும் புஜிப்பவனாயும் நினைப்பவனாயும் செய்பவனாயும் தூங்குகிறவனாயு மிருப்பதான இது முதலான தர்மத்தையுடையவனாக யிருக்கிறான்; இது சரியான ஸ்திதியா அல்லவா வென்றால் சரியான ஸ்திதியல்ல. எதனாலென்றால் இவைகளுக்குச் சாக்ஷியாயிருக்கிற நானுக்கு விலக்ஷண

மான பஞ்சகோசங்களுடைய தருமங்களல்லவா இவைகள், அதிலும் பிறந்தது புஜிக்குமா புஜிப்பது பிறக்குமா? இப்படியே நினைப்பதும் தூங்குவதுஞ் செய்வதுமான தர்மங்களுடைய பஞ்சகோசங்களே, ஒரு கோசதர்மங்களை மற்றொரு கோசம் நானென்பதே பரஸ்பர விரோதமாயிருக்கிறது. இதுவுமன்றியில் வெல்லத்துக்குத் தித்திப்பு வடிவம்போல நானென்பவனுக்கும் பஞ்சகோசமே வடிவமானால் வெல்லத்தைக் கொஞ்சங்கிள்ளி யெடுத்தால் வெல்லமாயிருப்பதுபோல கோசங்களையும் பிரித்தால் அவைகளில் நானென்பது கொஞ்சமுங் காணாமல் மயிரென்றும் மலமென்றும் பிராணமயனென்றும் மனோமயனென்றும் விஞ்ஞானமய ஆனந்த மயங்களென்றும் அவைகள் வெவ்வேறே நாம ரூபமாகவும் ஜடமாகவும் போகிறபடியாலும் இவைகளை நானென்பதால் முந்தியும் இதுவரையிலும் ஜனன மரண துன்பங்கள் வந்திருப்பதாலும் இப்பவும் இவைகளை நானென்றாற் பின்னும் அனந்த ஜனனமரணம் வருவதாயிருப்பதாலும் இவைகளைச் சகலத்திராளும் நானென்றிருப்பதால் எப்பவும் துன்பப்பட்டுக் கொண்டிருப்பதாலும் அவிசாரத்தோடே கூடியிருக்கிற இந்த நான் சொஸ்திதியை விட்டு நழுவியிருக்கிறானென்று தீர்ப்புச்செய்யப்பட்டது. 2-வது பாயிண்டுக்குச் சமாதானம்—மறுபடியும் சொஸ்திதிக்குக் கொண்டு வரக்கூடுமா கூடாதா? கூடும். அதற்கு சுருதி தன்னைத் தானென்றறியும் அவ்வளவுந்தானே யென்பது. இராஜகுமாரன் தன்னை இராஜாவென்று அறிந்த மாத்திரத்தில் தனக்கு வந்திருந்த வேடத்தனம் போனது யுக்தி, அனுபவமாவது சொப்பனத்தில் அலைந்து கொண்டிருந்தவன் விழித்த மாத்திரத்தில் சொஸ்திதியடைகிறது தான். 3-வது பாயிண்டுக்குச் சமாதானம்—பிரஹ்மத்தை யறிந்தவன் பிரஹ்மமே ஆவனென்று சுருதி சொல்வதால், நழுவமாட்டானென்பதே சுருதி. ராஜகுமாரன் மறுபடி வேடனாக ஆகாததே யுக்தி. தான் அறிவாயிருந்து எல்லாவற்றையும் அறிந்து கொண்டு அறியப்படுகிற பதார்த்தம் போலத்தான் அழியாமலிருப்பதே அனுபவம். 4-வது பாயிண்டுக்குச் சமாதானம்—தன்னை விசாரியாததனாலே ஜனன மரணம் வந்திருக்கிறதென்று சொல்லுகிற சுருதியும் தன்னை அறிந்தால் தான் பிறப்புத் தீருமென்ற சுருதியும்; ஒரு புருஷனுக்குக் கிறுக்குப் பிடித்ததற்கு மேல் அனர்த்தமுமில்லை, அது தெளிவதற்குமேல் லாபமுமில்லை யென்பதே யுக்தி. ஞானி நித்திய திருப்தனும் அஞ்ஞானி நித்திய துக்கியாயிருப்பதுவே அனுபவம். 5-வது பாயிண்டுக்குச்சமாதானம்-தன்னை அறியாததற்கு அஞ்ஞானமே காரணமென்று முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் நானென்கிற தற்கர்த்தம் அநிருத ஜடதுக்கமாயிருக்கிற பஞ்சகோசங்களல்ல. சச்சிதானந்தப் பிரஹ்மமே நானென்று தீர்மானிக்கப்பட்டது. 2-வது கேள்வி—ஜனன மரணம் சித்துக்கா ஜடத்துக்கா? அல்லது சித்ஜடங்கள் சேர்ந்ததற்கா? சித்துக்கென்றால் நேத்திரமானது சித்தாயிருப்பதால் உதயாஸ்தமனத்தை யடையவில்லை. சூரியன் முதலானது ஜடமானதால் உதயாஸ்தமனத்தை யடைகிறதே யுக்தி. அவைகளுக்கெல்லாஞ் சாக்ஷி நீயே யென்பது

சுருதி. அவஸ்தைகள் அழியும்போதுதான் அழியாமற் சாக்ஷியாயிருப்பதே அனுபவம். ஆகையால் ஜனன மரணம் சித்துக்கென்று சொல்லக்கூடாது. ஜடத்துக்கென்றால் அது சுவயமாயுண்டாகிறதற்கும் நசிப்பதற்கும் சேதனமன்றியில் சேஷ்டிக்க யோக்கியதை யற்றதனாலே ஜடத்துக்கும் ஜனன மரணஞ் சொல்லக்கூடாது. இரண்டுஞ் சேர்ந்ததற்குச் சொல்லுவோமென்றால் முதலிற் சித்துஞ் ஜடமும் ஒன்று சேருமா, கண்ணும் ரூபமும் போல ஒன்று சேரமாட்டாதாகையால் அப்போது சித் ஜடங்கள் ஒன்று சேர்ந்து ஜனன மரணம் வந்ததாக எப்படிச் சொல்லக்கூடும். ஆகையால் ஜனன மரணம் யாருக்குமில்லை யென்பது உறுதியாச்சுது. இந்த ஜகமுண்டாவதற்குக் காரணமென்ன வென்ற மூன்றாவது வினவுக்குத்தரம்—முதலாவது ஜகத்தின் சொரூபம் தெரிவித்த பின் அதற்குக் காரணத்தை நிரூபிக்கிறோம். நாமே ரூபமாய்த் தோணுகிறதே ஜகத்தென்றால் அந்த ஜகத்தில் ஏதேனுமொரு நாமரூபத்தைச் சோதிப்போம். அதாவது ஒரு ஸ்திரீ யென்ற நாமமும் கண்ணுக்குத் தோணுகிற ரூபமும் சேர்ந்து தோணுகிறதே ஜகத்தென்றால் முன்னே சொன்ன வெல்லக்கட்டியில் கொஞ்சங் கிள்ளி யெடுக்க யெடுக்க வெல்லமாய் வருவது போல ஸ்திரீயின் சரீரத்தைக் கிள்ளி யெடுக்க ஸ்திரீயாய் வாராமல் ரத்தம் முதலானதாய்ப் போவதால் ஸ்திரீ யென்பது இல்லை. அப்படிப்போலச் சகல ஜகத்தையும் பிரித்துப் பார்க்கும்போது இல்லாமற்போகையால் ஜகத் காரணத்தை யென்ன வென்று கேட்க வேண்டிய தில்லை. இந்த ஜகத்தை யுண்டு பண்ணுகிற கர்த்தா யாரென்று கேட்ட 4-வது சங்கைக்குத்தரம்.—முன்சொன்ன பிரகாரம் ஜகத்தில்லாத போது கர்த்தாவை விசாரிக்கவேண்டியதில்லை. அதெப்படி யென்றால் கானல் ஜலமானது பொய்யாயிருப்பதால் அதை வருஷிக்கிற மேகத்தை விசாரிக்கத் தேவையில்லை. விழித்தவன் தன் சொர்ப்பனத்திற் கண்ட ஜகத்தை சிருஷ்டித்தவன் யாரென்று விசாரியாமலிருப்பதே யனுபவம். இவைகளுக்கெல்லாம் அதிஷ்டான சத்வஸ்து யெது வென்று கேட்ட 5-வது வினக்குத்தரம்.—இவ்வனைத்துக்கும் அதிஷ்டானந் தானே யென்பதற்குச் சுருதி—என்னிடத்திலிருந்து ஜகத்துண்டாய் என்னிடத்திலேயே யிருந்து என்னிடத்திலேயே லயிப்பதென்பதே சுருதி. சொற்பனத்திற் காணப்பட்ட சகல ஜகத்துக்கும் தான் தானே காரணமாயும் சாக்ஷியாயுமிருப்பதே யுக்தி. நினைப்பால் தானுண்டாகாமல் தன்னிடத்திலேயே சகல நினைப்பு முண்டாய் அழிகையால் தானே அதிஷ்டானமாயிருப்பதே அனுபவம். இப்படி ஐந்து சங்கைக்கும் உத்தரஞ் சொல்லப்பட்டது.

## 72-வது தரங்கம்.

[அ - கை.] ஜீவனுக்கு ஆத்மாவை விசாரிக்கச் சாவகாசமில்லை:—ஜீவனுக்குத் தன்னுடைய ஆத்மாவை விசாரிக்கிறதற்குச் சாவகாசமிருக்கிறதா இல்லையா வென்பது ஒரு பாயிண்டு. சாவகாச மில்லை யென்றே சொல்லவேண்டியிருக்கிறது. ஏனென்றால் நதியிலிருந்து ஜலங்கொண்டு வருவதற்குப் பாத்திரமானது

சாதனமாயிருக்கிறது. அது அநேக துவாரங்களுடன் சேர்ந்திருந்தால் எப்படி ஜலங்கொண்டு வரக்கூடாதோ அப்படிப்போல இந்தப் பிரஹ்மானந்தமென்கிற கங்கையை மனதாகிய பாண்டத்தில் எடுத்துப் புஜிக்கவேண்டும். அந்த மனதாகிற பானையில் சுரோத்திராதிதச இந்திரியங்களென்கிற துவாரங்களும் வாசனையென்கிற சுழல் காற்று வழியே சுத்துகிறதும் மூடசங்கதி யென்கிற தடியாலடிப்பட்டு அதனால் துக்கங்களென்கிற துவாரங்களுண்டாகிறதுந் தவிர இதற்குண்டாய்க்கொண்டிருக்கிற மூன்றுவித செய்கைகளிலும் அனுபவிக்கக் கூடவில்லை. அந்த அவஸ்தாத்திரியங்களென்கிற மூன்று விதமான செய்கையாவது யேதென்றால்—பானையைக் கவிழ்க்கிறது போலச் சுழுப்தி. பானையையுருட்டுகிறது போலச் சொப்பனம். பானையை நிமிர்த்துகிறது போல ஜாக்கிரம். இதில் கவிழ்த்தியிருக்கிற காலமான சுழுப்தி யவஸ்தையிலும் ஞானமாகிற ஜலத்தை அனுபவிக்கக்கூடாது. ஆனால் சொப்பனவஸ்தையிலோ வென்றால் பானையை யுருட்டினால் ஜலம் நில்லாமலும் ஒழுங்காகவும் போகாமலுமிருப்பது போல மனசு ஞானத்தையுமடையாமற் சன்மார்க்கத்திலும் போகாமல் வாசனை வசமாகவே தன் போக்காகவே போகிறது. இனி ஜாக்கிரவஸ்தையோ வென்றால் பானையை நிமிர்த்தியிருந்தாலும் கீழே சொல்லியிருக்கிற ஏதுக்களால் எப்படி ஜலம் நிற்க மாட்டாதோ அப்படி இந்த ஜாக்கிரத்திலும் ஞானமடைவது துர்லபம். அது எதனாலென்றால் மனுஷிய ஜன்மம் தவிர இதர ஜன்மங்களில் ஞானமில்லை யென்கிறது, பானையே யில்லாதவன் போல ஞானனுபவம் செய்யும்படியான மனமேயில்லை. மானிட ஜனனத்திலேயோ வென்றால் கர்ப்பத்திலுமில்லை. எதனாலென்றால் ஞான சாதனமான குரு சாஸ்திரம் சாது சங்கம் முதலானவைகளொன்று மில்லாததினால். பாலிய வயதிலுமில்லை, விளையாட்டினால். யவ்வனத்திலுமில்லை, காமாந்தகாரத்தினால். வீர்த்தீகத்திலுமில்லை, சிந்தாபரவசத்தினால். நாள்களிலுமில்லை, ஸ்நானசந்தியாவந்தனக்கிரியை அன்னபானதிக் கிரியைகளு மிருப்பதினால். அப்பியங்கனம் வீடுமெழுகிறது முதலான தொழிலாலும் வாரத்திலுமில்லை. ஏகாதசி முதலான விரதோபவாசத்தினால் பக்ஷங்களிலுமில்லை. அமாவாசியை தர்ப்பணம் முதலான கிரியை யிருப்பதால் மாசத்திலுமில்லை. கலியாண முதலான சுபகாரியஞ் செய்யவேண்டியிருப்பதால் உத்தராயணத்திலுமில்லை. மகாளயம் முதலான பிதிர்காரியமிருப்பதினால் தக்ஷிணாயனத்திலுமில்லை. இன்னும் கேட்கிறபோதும், தொடுகிறபோதும், பார்க்கிறபோதும், தின்கிறபோதும், ஆக்கிராணம் பண்ணுகிற போதும், பேசுகிற போதும், குடுக்கல் வாங்கல் செய்கிறபோதும், நடக்கிற போதும், மலமூத்திர விசர்ச்சனம் பண்ணுகிறபோதும் தத்ததாகாரமாயிருந்து செய்யவேண்டியிருப்பதால் அந்தக் காலங்களிலுமில்லை. பின்னும் யோசிக்கும் பக்ஷத்தில் அநேகம் ஏதுக்களாலும் வியசனம் வரும்போதும் சந்தோஷம் வரும்போதும் அந்தந்த ஆகாரமாய்ப் போய்விடுவதாலும் எப்போதும் ஆத்மவிசாரத்துக்குச் சாவகாசமேயில்லை யென்று நிச்சயிக்கப்பட்டது. ஆனால் இவ்

வளவு பயத்தைக் காண்பித்தால் மனசு பயத்தை யடைந்து கொஞ்ச நேரம் செய்கிற அனுசந்தானத்தையும் விட்டு விடுமேயென்றால் அதற்கு உத்தரம்—இப்போது திருஷ்டாந்தத்திலே பானை யெவ்வளவு ஓட்டையாயிருந்தாலும் அதை விட்டால் தீர்த்தஞ் சாப்பிட வேறே கதியில்லாதவன் அந்தப் பானையிலிருக்கிற ஓட்டைகளைத் துணி மெழுகு முதலான சாதனத்தைக் கொண்டு அடைத்து எப்படி ஜலங்கொண்டு வருவானோ அப்படி இல்லாமல் ஒழுகிப் போய்விடுமே யென்று பயந்து ஜலமெடாமலிருந்தால கொஞ்சங் கூட ஜலமில்லாமல் தாகத்தினு லெப்படி மரணத்தையடைவானோ; அப்படி எள்ளளவும் சாவகாசமில்லாமலிருந்தாலும் சிரத்தை பக்தி முதலான துணிமெழுகுகளைக் கொண்டு மனதாகிறபானையிலிருக்கிற இந்திரியங்களாகிற துவாரத்தையடைத்துபிரஹ்மானந்தமாகிற அமிர்தத்தைப் புஜிக்கவேணும், அப்படிப்புசியாமல் பயந்து இவ்வளவு விக்கினங்களிருக்கின்றனவே யென்று கைவிட்டவனுக்கு இகபரங்களிற் சுகமில்லை யென்று வராக உபநிஷத்திற் சொல்லி இருப்பதாற் கூடுமான சாவகாசத்தில் ஆத்மவிசாரஞ்செய்து வரவேண்டியது.

## 73-வது தரங்கம்.

[அ - கை.] விவேகிகள் மரணவேதனை வருங்காலத்தில் துக்கப்படுவது நியாயமில்லை யென்று சொல்லுகிறார் :—

மேற்படி ஜீவர்கள் மரணகாலத்தில் துக்கப்படுவது நியாயமா அல்லவா வெனில்—முதலாவது அந்த மரணம் தேகத்துக்கா தேகிக்காவென்றால் தேகம் ஜடமானதால் அதற்கென்னவுங் கூடாது. தேகி சித்தானதால் அதற்கென்னவும் கூடாது. ஆனால் தேகிக்குத் தேகம்வந்த காரணமேதெனில் கர்மத்தால். அந்தக்கர்மம் எதனுற் செய்யப்பட்டதென்றால் அந்தக்கரணத்தால், அந்தக் கர்ம பலமான சுகதுக்கானுபவம் யாருக்கென்னில் அதுவும் அதற்கே. அப்படிக்கிருக்க ஆத்மாதான் செய்ததாக அதை ஒப்புக்கொள்வானே னெனில் அஞ்ஞானத்தால். ஜடமாகிய அந்தக்கரணத்துக்குக் கர்மஞ்செய்யவும் சுக துக்கங்களை அனுபவிக்கவும் சக்தியேதெனில்—காந்தத்தின் முன்னிரும்புகள் சேஷ்டிப்பதுபோல ஆத்மசன்னிதியால் சேஷ்டை யுண்டாயிற்று. அப்படி அஞ்ஞானத்தினுலாவது மற்றெப்படியாவது ஆத்மாவில் தோன்றுகிற கருத்துருத்துவாதி குணங்கள் எப்படிப்போ மெனில், செம்பருத்தம் பூவின் சிவப்பு ஸ்படிகத்தில் தோணுவதுபோல ஆத்மாவில் கருத்துருத்து வாதிகள் பொய்யாய்த் தோற்றுவதால் ஒருக்காலும் ஆத்மாவில் வராதபந்தம் எப்படிப்போமென்று கேட்கத் தேவையில்லை. அப்படியிருந்தால் விஷயத்தில் ஆசைவருவானேனெனில், வாசனையினுல். வாசனையின் சொரூபமேதெனில், தேகாதிகளைத்தானென்ற அபிமானமே; அதற்குக் காரணமேதெனில் முன்னே சொன்ன அஞ்ஞானந்தான். சூரியன் போலிருக்கிற ஆத்மாவில் இருட்டுப் போலிருக்கிற அஞ்ஞானம் எப்படி வரக்கூடுமெனில் அப்படி அறிந்தவனுக்கு அஞ்ஞானம் சொல்லப்படவில்லை. இப்படி அறிந்தாலும் தேகாத்ம புத்தி

போய் பிரஹ்மாத்ம புத்திவருமோ வெனில், நீ கேட்பது சாயங்காச்சின மாம்பழத்தைக் கடிக்கிறவனுக்கே அதில் ரசமுண்டானல் கற்பகக்கனியைக் கடிக்கிறவனுக்கு ரசங்கிட்டுமா வென்று கேட்கவேண்டிய தில்லாததுபோ லிருக்கிறது. வாயால் வெகுபேர்கள் சதாபிரஹ்மம் பிரஹ்மமென்று சொல்லு கிறதால் அவர்களுக்கு ஆத்மா விளக்கங் காணுமேயெனில், விளக்கென்று சொன்னதினல் இருட்டுப்போகாமல் தீபத்தைக்கண்ட மாத்திரத்தில் இருட் டுப் போவதுபோல அபரோக்ஷ ஞானத்தால் அஞ்ஞானம்போம். ஞானத் தைத் தவிர வேறே கர்மாதிகளால் அஞ்ஞானம் போகாதோவெனில்; இருட்டை ஆயுதங்களால் நிவர்த்திக்கக் கூடாததுபோலவறி. உலகத்தில் முன் வெள்ளி முதலான வஸ்துக்களைக்கண்ட வாசனையாலல்லவா எதிர்ப்பட்ட கிளிஞ்சில் முதலானதில் அந்த வெள்ளியாதிகளைக் கல்பிக்கக்கூடும். அதுபோல ஜகத்தை முன்னே யெங்கே பார்த்துவந்து பிரஹ்மத்திற் கல்பிக்கிறு னெனில், சொப் பனத்தில் தான் ஆகாசத்தில் பறப்பதுபோலே காணுகிறதற்கு என்ன காரணஞ் சொல்? சொப்பனம் விழித்தமாத்திரத்திற் காணமற் போவதுபோல இச்சகம் காணமற்போகவில்லையே யெனில்,மரத்தின் காரணமான வேர் வெட்டப்பட்டும் இலையில் ஈரமிருப்பதுபோலும், பெருங்காயம் மண்ணெண்ணெய் வெள்ளை வெங்காயம் சாருயம் முதலானவற்றைப் பாத்திரத்தை விட்டெடுத்த பிற் பாடும் அதுகளின் வாசனை தோற்றிக்கொண் டிருக்கிறது போல ஜீவன் முக்த னுக்கும் ஜகத்துப் பொய்யாய்த்தோற்றுவதால் யாதொருகுறைவு மில்லை யென்றறி. இப்படி யறிந்திருக்கிற ஞானி எப்படியிருப்பனென்ருல், அவன் ஜாக்கிரத்தில் (35) தத்துவங்களுடனும், சொப்பனவஸ்தையில் பிராணுதி வாயுக் கள் 5, அந்தக்கரண சதுஷ்டயம் 4, ஜீவன் அவித்தை. 2, ஆக 11 - தத்து வங்களோடேயும்; சுழுப்தியவஸ்தையில் ஜீவன் அவித்தை இரண்டு தத்து வங்களோடேயும்; துரியத்தில் சித்த மாத்திரமான ஒரு தத்துவத்தோடேயும்; துரியாதீத அவஸ்தையில் சித்தமுமில்லாமல் தான் மாத்திரமாயும் விளையாடிக் கொண்டு ஆனந்தமா யிருக்கிருன். இப்படி ஆனந்தசொரூபியாய் விளையாடிக் கொண்டிருக்கிற ஞானியினுடைய மனசு அஞ்ஞானியின் மனது போலே மேற் கண்ட அவஸ்தைகளில் வரப்பட்ட ராகாதிகளால் பீடிக்கப்படுமோ வென்ருல், பீடிக்கப்பட மாட்டாது. அஃதெப்படி யென்ருல் சித்தாதிகளால் கட்டின ரசமானது நெருப்பிலே போட்டாலும் எப்படிக் கறுக்க மாட்டாதோ அப்படி ஞானியினுடைய மனமானது ஞானகுளிகையால் கட்டப்பட்டிருப்பதால் ராகாதிகளாகிற தீயாற்பீடிக்கப்பட மாட்டாது. அதற்கு இன்னமொரு யுக்தி யென்னவென்ருல், வெல்லத்தைக் கத்தியால் வெட்டி ஜலத்தில் கரைத்து அக் கினியில் பாகுகாய்ச்சி வாயுவினல் உலர்த்தினலும் அதன் தித்திப்பை யெப் படித் தடுக்கமுடியாதோ அப்படி ஞானியின் மனதினுடைய ஆனந்தமான தித்திப்பைக் கெடுக்கமுடிய மாட்டாது. அஞ்ஞானம் போய்த் தான் பிரஹ்ம மான பிற்பாடு சரீராதிகளுக்கு வருகிற துக்கம் தோற்ருதோ வென்ருல்

தோற்றுது தசமன்தான் சாகாமல் கண்ட சந்தோஷம் முன்னிடித்துக்கொண்ட புண்வேதனையைத் தோற்ற வொட்டாதது போலவும், பிள்ளைபிறந்த சந்தோஷம் பிரசவ வேதனையைத் தோற்ற வொட்டாதது போலவுமிருக்கும். அப்படிப் பொய்யென்று தெரிந்த விவேகி ஜகத்தைப் பார்ப்பானேனென்றால், கண்ணாடியில் முகமில்லையென்று அறிந்தவனும் தன் முகத்தைப்பார்த்துக் கொள்ளுகிற தற்காகக் கண்ணாடியைப் பார்த்துக் கொள்ளுகிறவன் போலவும், இராஜாவானவன் சத்துருக்களை யெல்லாஞ் ஜயித்த பிற்பாடும் சதுரங்க சேனையை ராஜாங்கத்துக்காக வைத்துக்கொண் டிருப்பது போலவும், சித்திரம் பொய்யென்று அறிந்தாலும் குழந்தைகளுக்காக ஆனையைப்பார் குதிரையைப்பார் என்று காண்பிப்பது போலும், சொப்பனத்திலிருந்து விழித்தவன் சொப்பனத்திற்கண்ட அதிசயங்களை அடிக்கடி சொல்லிக்கொண்டிருப்பது போலவுமிருப்பன். அப்படி ஞானியால் ஏதேதுவிவகாரமோ விசாரணையோ தியானமோ ஏதேது செய்யப்படுகிறதோ அவைகளெல்லாம் அவன் திருஷ்டியிலில்லாமலிருந்தாலும் லோகோபகாரமென்று அறியவேண்டியது. ஆகையால் நான் என்னதென்று வாசனை வருங்காலை யெல்லாம், நாம் யார்? இந்த ஜகத்தெப்படியுண்டாச்சுதென்று விசாரிக்கவேண்டியது உன்கடமையா யிருக்கிறது.

### 74-வது தரங்கம்.

[அ - கை.] அவஸ்தாத்திரயத்தை மித்தையென்று அறியதிருஷ்டாந்தஞ் சொல்லுகிறார்:—

ஆத்மாவாகிய தீக்ஷிதருக்கு மனதாகிற ஸ்திரீ ஜாக்கிரத்தில் பதிவிரதையைப் போல ஒழுங்காகவும், சொப்பனத்தில் யுக்தா யுக்தமில்லாதவிபசாரியைப்போலும், சுழுப்தியில் வைதவ்வியம் வந்தவளைப்போலவும் இருக்கிறயிடந் தெரியாமலிருப்பதால்இவளை யாரென்று நினைக்கலாம்?இப்படி விவஸ்தையில்லாதபடியால் இந்த மனதாகிறஸ்திரீயையும்அவளால் போடப்பட்ட மூன்று வேஷமான அவஸ்தைகளையுங்குருகிருபையால்மித்தையென்று அறிந்துதள்ளினவன்ஜீவன்முக்தன்.

### 75-வது தரங்கம்.

[அ - கை.] ஆத்மாவாகிற புருஷனுக்கு மாயாஸ்திரீ மருந்திட்டதைத் தீர்த்த விபரம்:—

ஆத்மாவாகிற புருஷனுடைய மாயையாகிற ஸ்திரீயானவள் அவரைச் சுவாதீனஞ் செய்வதற்காகச் சொரூப மறதியாகிற மருந்தை விபரீத பாவனையாகிற பக்ஷணத்தில் வைத்துக் கொடுத்ததிலும் இவன் தனக்குப் பூரணமாய்ச் சுவாதீனப்படாததைக்கண்டு, மோகசக்தியாகிற சோணிதத்தில் மறதியாகிற மருந்தைச் சேர்த்துக் கொடுத்ததுமன்றியில் ஆவரணமாகிற பச்சிலையையும் தலையில்தேய்த்து விக்ஷேபமாகிற பைத்தியம் பிடிக்கும்படிசெய்து, தேகமே நானென்கிற மயக்கத்தையும் ஜனன மரணமாகிற வியாதியையும் சுழுப்தியாகிற மூர்ச்சையையுமுண்டுபண்ணிக் குருவாகிற பிதாவையும் சாஸ்திரமாகிற மாதாவையும் சாதுக்களாகிற சொந்த பந்துக்களையும் சன்மார்க்கமான மானத்தையும்

விட்டு மாயையென்ற தாயையும் மாயாகாரியமான ஜகத்தாகிற பெண்ணையும் எப்போதும் சிந்திக்கும்படி பண்ணிப் போட்டதால், கல்பகோடிகாலமானாலும் இந்த மருந்து மயக்கந் தீராமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும்போது தெய்வாதீனமாய்ச் சற்குருவாகிற வைத்தியர் கிடைத்து, அவரும் இவனுக்குத் தயையினால் அநேக விதமான நித்தியாநித்திய விவேகாதிகளாகிற மருந்துகளைக் கொடுத்தும் மோகவியாதி தீராததைக்கண்டு, நமக்கு முன் மாயையாகிற மருந்தீட்டினால் வந்திருந்த வியாதியைத் தீர்ப்பதற்கு நம்முடைய குருவாகிய வைத்தியர் நாம் யாரென்ற சொரூப விசாரணையாகிற பிரதி மருந்தை அனுக்கிரகித்து நமக்கு வந்த வியாதியை நிவர்த்தித்ததுபோல இவனுக்கும் அப்படியே மாயையாகிற பெண் மோகசக்தியாகிற சோணிதத்திற் சேர்த்து மறதியாகிற மருந்தை வைத்திருக்கிறாளென்று அறிந்து, இவனுக்கு நாம் யாரென்ற விசாரமாகிற மருந்தால் அவள் வைத்த மோகரூபமான மருந்துகளையெல்லாந் தீர்த்ததுந் தவிர இனி யிவளைச் சம்ஹரியாமலிருந்தால் இப்படியே மறுபடியும் மருந்து வைப்பாளென்று அறிந்து ஞானக்கினியினால் அவளைக் கொளுத்திச் சிரவண மனனநிதித்தியாசனமாகிற பிரதிமருந்தைக் கொடுத்துச் சமுசயபாவனை, அசம்பாவனை, விபரீதபாவனை முதலான அவள் வைத்திருந்த மருந்தின் சேஷத்தையெல்லாம் வெளியேற்றி சாக்ஷாத்காரமாகிற புலத்தையும் ஜீவன் முக்தியாகிற ஆரோக்கியத்தையும் உண்டுபண்ணினார். ஆகையால் இப்படி அனுக்கிரகம் பண்ணின பிற்பாடு இந்த மாயா ஸ்திரீயுடன் சொற்பனத்திற்கூடச் சேராமலும் சொரூபானுசந்தானமான அவுஷதத்தைச் சொப்பனத்திற்கூட மறவாமலிருக்கும்படிக்கும் சகல முமுக்ஷுக்களுக்கும் தெரிவித்தோம்.

## 76 - வது தரங்கம்.

[அ - கை.] நிற்குண இராஜன் விபரஞ் சொல்லப்படுகிறது:—

பிரஹ்மமாகிற இராஜனுக்கு மாயை அவித்தையென்ற பெரிய பொய்யென்றும் சின்னப் பொய்யென்றும் இரண்டு ஸ்திரீகள். அவர்களில் மேற்படி இராஜன் பெரிய பொய்யினிடத்திற் சேர்ந்தகாலத்தில் பிறந்த பிள்ளையான ஈஸ்வரன் சுதந்தரசக்தியான யுவராச்சியப்பட்டங் கட்டிக்கொண்டார். அந்த இராஜன் சின்னப் பொய்யான அவித்தையுடன் சேர்ந்தகாலத்தில் அவளிடத்திலிருக்கிற ஆவரணமென்கிற வியாதியால் மேற்படி இராஜனுக்குச் சுயம்பிரகாசமாய் நாம் விளங்குகிறோமென்கிற ஞானக்கண்போனதுந் தவிர இவள் அநேகவிதமானதால் இவளிடத்தில் பிறந்த ஜீவர்களான சேய்களுக்கும் மேற்படி கண்கள் அதுபோலவே போய்விட்டன. இவள் பிள்ளையாகிற ஜீவனுக்கு சுதந்திரமாகிற சொத்தில்லாமையால் ஈஸ்வர வச விருத்தியாகிற வேலைக்குப் போய் தனுகரணங்களாதியாகிற சம்பளத்தை வாங்கிப் புஜித்து அந்த ஈசுவராக்ஞைகளான சுருதி ஸ்மிருதிகளில் விதித்தபடி நடக்காததாகிற வேலைத் தவறுதலால் தாபத்திரய துக்கங்களாகிற தண்டனைப்படுகிறான். ஈஸ்வரன் விதித்தபடி நடந்து பரலோக சுகத்தை அனுபவிக்கிறதானது—இராஜன் விதித்த சட்டப்படி நடந்தவனுக்குப் பெரிய உத்தி

யோகம் ஆகிறது. புண்ணிய க்ஷயத்தினால் அடிக்கடி கீழே விழுகிறானென்பது—அந்த உத்தியோகவாயிதா ஆனதின்பேரில் வீட்டுக்கு வருவதாம். இப்படி வேலையன்றியிலிருக்கும்போதுண்டாகிற உதாசீன சுகமானது—உள்ளயோமியா சம்பளம்போலுமாம். சாக்கிரத்தில் விசேஷ சிரமமடைந்திருந்தால் நேரே சுழுப்திக்கு விடுகிறதானது-சிரமப்பட்டு வேலைசெய்தவனுக்கு உடனே சாப்பாடு போடுகிறதுபோலவாம். அப்படி ஜாக்கிரத்தில் சிரமமன்றியிலிருந்தால் சொப்பனத்தில் தாமசித்து சுழுப்திக்கு விடுகிறதானது—கச்சேரியில் சிரமப்பட்டு வேலை பாராதவனை வீட்டுக்குள் வேலை பார்க்கச்சொல்லி சாப்பிட விடுகிறது போலவாம். சுழுப்தியில் சுகமாயிருக்கும்போது கர்மம் வந்து வெளியிலெழுத்து தொழில் ஏவுகிறதானது—அந்த இராஜனுடைய சேவகன் போஜனசாலையிலிருக்கிறவனை வெளியிலெழுத்துப் பாக்கியிருக்கிற பாகியவேலை செய்யச் சொல்வதாம். ஜாக்கிரத்தில் முன் வாசனைப்படி கர்மங்களைச்செய்து சுகதுக்கங்களை அனுபவித்து ஆகாமிய வாசனைகளை யேத்திக்கொண்டு நித்திரையை யடைகிறதானது—மறுபடிவேலைசெய்து மறுநாள் வேலை செய்வதற்காகஅட்வான்சு வாங்கி வீட்டுக்குப் போவதாம். எழுவகை ஜன்மம் எழுவகை உத்தியோகமாம். ஜன்மமே உத்தியோகமாகிறது, மரணமே பர்த்துருப்பார்கிறது. இப்படி அனந்தகோடி காலமாய் அஸ்திரமான ஜன்ம உத்தியோகத்தைப்பண்ணி அலுத்து இந்திராதி பதவிகளைக்குறித்து தபசுசெய்வதானது-ஸ்திரமான வேலைக்காகப் பரீக்ஷை கொடுப்பதாம். அந்த இந்திராதி பதவிக்குக் காத்து அதைப் பெறுவது - கலெக்டர் முதலான உத்தியோகத்துக்குக் காத்து அந்த வேலையைப் பெறுவதாம். அந்தப் பதவிகளிலும் அசுராதி பீடைகளாலும் ராகத்துவேஷங்களாலும் துக்கப்படும் போது அந்தக் காமியங்களான பதவிகளையு வெறுக்கிறதானது—அந்த உத்தியோகத்தில் வருகிற கஷ்டத்தால் உத்தியோகத்தை வெறுத்ததாம். இனி இப்படிக் காமிய கர்மம் பண்ணக்கூடாது; நிஷ்காமியகர்மம் செய்வதால் ஈஸ்வர கிருபையுண்டாகுமென்று எண்ணிஅப்படிச் செய்வதுதான் இராஜனிடத்தில் சம்பள உத்தியோகத்துக்கு ஒப்புக்கொள்ளாமல் அவன் தயவுக்காக வேலைபார்ப்பதாம். நிஷ்காமிய கர்மஞ்செய்வதால் ஈஸ்வர கிருபையுண்டாய்ச் சித்தசுத்தி வந்து நித்தியாநித்திய வஸ்து விவேகம் பண்ணுவது தான் - அந்த இராஜன் கிருபையால், இவனுக்கு வேலையன்றியில் நல்லது பொல்லாததுகளை யோசிக்கும்படி வந்ததாம். அந்த விவேகத்தால் இகாமுத்திரார்த்த பலபோகவிராகமுண்டாவது—முன் தான்பார்த்த உத்தியோகங்களையெல்லாம் வெறுத்ததாம். இந்த ஜகத்தை உள்ளே நினையாமலும், வெளியிற் பாராமலும் இருப்பதுதான்-அந்த உத்தியோகங்களை உள்ளிலும், வெளியிலும் வெறுப்பது. நம்முடைய அஞ்ஞானாந்தத்துவம் போய் ஞானதிருஷ்டியோடே கூடிப் பிரஹ்மத்தோடே எப்போது ஐக்கியமாவோமென்ற முமுக்ஷுத்துவம்-தன் பிதாவுடனே எப்போது சேருவோமென்று தபித்ததாம். அந்தப் பிரஹ்மமே நிராவரணமான ஞானதிருஷ்டியோடே கூடிய குருரூபமாய் வந்து, அந்த ஜீவனைப்பார்த்து நீ பிரஹ்மம் உனக்கு ஒரு

நாளும் ஜனன மரணமில்லை நீ ஜீவனுக அஞ்ஞானுந்த காரத்தாலுண்டாய் ஜனன மரண சுகதுக்க சம்சாரங்களை யடைந்ததாய்த் தோற்றி வருகிறதாயுள்ளதெல் லாம் சொப்பனம்போலவென்று உபதேசித்தது— அந்த இராஜன் வேஷமாறி வந்து இவனுக்கு நீயே இராஜனென்று போதித்ததாம். இப்படிச் சிரவணத்தால் சம்சயபாவனை போன பிறகு இந்தப் பிரஹ்மத்துவம் நமக்கெப்படிச் சம்பவிக் கப்போகிறதென்கிற அசம்பாவனையை மனனத்தால் தீர்ப்பதுதான்—அந்த இராஜன் சொன்னபடி நாம் இராஜாவென்று எண்ணிப் பார்ப்பதாம். அநாதி யவித்தியாவாசனையினுல் தேகமே நான், நான் கர்த்தா, இந்த ஜகம் சத்தியம், ஈஸ்வரனெருவர் சிட்சிக்கிறவரிருக்கிருரென்று வருகிற விபரீதபாவனைகளே முன் பழக்கத்தால் இராஜா ஏவுகிறது தான் உத்தியோகத் தொழில் செய்கிறது முத லானதான பாவனையாம். பிரஹ்மமே நாம், நாம் கர்த்தாவல்ல, தேகாதி ஜகமும் சத்தியமல்ல வென்று பழகுவதான நிதித்தியாசனந்தான்—நான் இராஜா, நான் வேலைக்காரனல்லவென்று பழகுவதாம். பிரஹ்மமே நான் நானே பிரஹ்ம மென்று அனுசந்திருக்கிறதினுல் வந்திருக்கிற திருடமான சமாதியினுல் அஞ் ஞான சந்தேகமன்றியில் திடப்பட்டு ஏகமாத்திரமான பிரஹ்மமாத்திரமாய் மிஞ்சி மறுபடி பிராரத்த கர்மசேஷத்தால் ஜீவஜகத்துக்கள் தோணினுலும் சொப்பனம்போலப் பொய்யென்று தானே தானுயிருக்கிற ஜீவன் முக்தி அவஸ் தை தான் - அந்தப் புருஷன் தகப்பன் வேறே தான் வேறே யென்ற பேதத்தை யிழந்து தானே இராஜனுய்ப் பேதமாய்த் தோணுகிற உத்தியோகமெல்லாம் பொய்யென்று நிச்சயித்துத் தானே நிற்குண இராஜனென்பதை மறவாமற் சுகித் துக்கொண்டிருக்கிருனென்பதாம்.

### 77-வது தரங்கம்.

[அ-கை.] தீவிர முமுக்ஷுவுக்குச் சற்குருவைப் பார்த்தமாத்திரத்தில் உண்டாகும் பேரானந்தஞ் சொல்லப்படுகிறது:—

தாபத்திரய துக்கத்தால் தபித்துக்கொண்டிருக்கிற முமுக்ஷுக்களுக்குச்சற் குரு தரிசனங் கிடைத்தால் என்னமாய்த் தோன்றுமெனில்-முடவனுக்குக்கொம் புத்தேன் அகப்பட்டதுபோலும், பிறவிக்குருடனுக்குக் கண்தெரிந்ததுபோலும், ஏழைக்கு நிதி அகப்பட்டதுபோலும், நடுச் சமுத்திரத்தில் முழுகி மகராதி துஷ்ட ஜந்துக்களாற் கடிக்கப்பட்டுத் தபித்துக்கொண்டிருக்கிறவனுக்குக் கப்பல் அகப் பட்டதுபோலும்,தலையில் தீப்பிடித்தவனுக்குத் தண்ணீர்அகப்பட்டாற்போலும், பதிவிரதைக்குத் தேசாந்தரத்திலிருந்து தன்புருஷன் வந்தாற்போலும், காட்டில் கள்ளர் கையிலகப்பட்டவனுக்கு மகா இராஜாவந்து சேர்ந்ததுபோலவும், கூழுக் குத் தாளம் போடுகிறவனுக்குத் தேவாமிருதம் அகப்பட்டாற்போலும், வெய்யி லில் அலைகிறவனுக்கு அரண்மனை யகப்பட்டாற்போலும், நடக்கமாட்டாதவனு க்கு இரயில்வண்டி அகப்பட்டாற் போலும் சந்தோஷிப்ப னென்றறியத் தக்கது.

### 78-வது தரங்கம்.

[அ-கை.] மனதானது சுருக்கத்தி லொடுங்குவதற்குச் சுருக்க வழி :—

ஆத்மா ஆகாசம், மனசு வாயு, இந்திரியம் அக்கினி, சரீரம் ஜலம், விஷயம் மரம் முதலானவை. மனசாகிறவாயு, இந்திரியமாகிற தீ, விஷயமாகிற செத்தைகள் மூன்றுஞ்சேர்ந்தால் எத்தனைசாஸ்திர விசாரமாகிற ஜலம் விட்டாலும் மனதாகிறவாயுவும் ஓயாது இந்திரியமாகிற தீயும் அணையாது. ஆகையால் இந்த மனதாகிற வாயு, விவேக வைராக்கியத்தினால் இந்திரியவிஷயங்களின் பற்று விட்டுச் சொரூபமாகிற ஆகாசத்திற் பற்றினால்தான் ஓயுமென்று அறிந்து சொரூபாநுசந்தானத்தால் மனஸை சுலபமாய் ஜயிக்கலாம்.

## 79-வது தரங்கம்.

[அ - கை.] சொரூபாநுசந்தானத்துக்கு அநேக யுக்தி:—

முமுக்ஷுவாகிய புருஷன் குருவினிடத்திலிருக்கிற விவேகம் ரத்ன தீபமென்றும் விஷயம் மின்னல் போலவுமென்று தெரிந்து அவரிடத்திற் போய், விவேகமாகிற ரத்ன தீபத்தைப் பெற்று ஞானத்தை யடைந்து தானுங் கரையேறி அன்னியர்களையுங் கரையேற்றி வைப்பான். அப்படிக் குருவிடத்திற் போய் ஞானத்தை அடையாமல் ஈசுவராதிகளிடத்திற் போனாற் கரையேற்ற மாட்டார்களாவென்றால், அதற்குத்திருஷ்டாந்தம்- ஒருவனுக்கு வியாதி வந்தால் தர்ம வைத்தியனிடத்திற் போனால் தன் வியாதியைச் சிரமமன்றியில் நிவர்த்தி பண்ணி வைப்பர். நாம் கடைக்காரனிடத்திற் போனால் காசை வாங்கிக் கொண்டு என்ன சரக்கு நாம் கேட்கிறோமோ அதைமட்டும் நிறுத்துக்கொடுப்பனே தவிர வியாதியை நிவர்த்திக்கமாட்டான். அதுபோலப் பவ வியாதி வந்தவன் நம் குருவாகிய வைத்தியரிடத்திற் போய்ச் சேர்ந்தால் அவர் ஞானோபதேசஞ் செய்து ஆத்தியந்திகமாய்ப் பவவியாதியை நிவர்த்தி பண்ணி வைப்பர். ஈசுவராகிற கடைச் செட்டியாரிடத்திற் போனால் அவர் கர்மமாகிற காசை வாங்கிக் கொண்டு விஷயமாகிற சரக்குகளைக்கொடுப்பரே தவிர பவவியாதியை நிவர்த்திக்கமாட்டார். ஆகையால் இச்சென்மத்திலேயே முக்தி விருப்பமுள்ளவன் சற்குருவையேதேடி அவர் கிருபையைப் பெறக்கடவன். அந்தக்குருவைப்பார்த்து சிஷியன்கேட்கிறான்; அய்யா-யெனக்குத் துவைத சங்கல்பம் அடிக்கடி வந்துகொண்டேயிருக்கிறதே அது நிவர்த்தியாகிறதற்கு உபாயமென்னவென்று கேட்டான். அப்போது குரு சொல்லுகிறார்: நீ அறிவாயிருந்து சங்கல்பம் வருகிறதா? மனசாயிருந்து வருகிறதா? ஜகத்தாயிருந்து வருகிறதா? அறிவாயிருந்து வருகிறதென்றால் அறிவு நிருவிகாரமானதாலும் அப்படிச்சங்கல்பம் வந்தாலும் வெல்லத்தைக் கிள்ளினால் வெல்லமாய் வருவதுபோல அறிவாகவே வரவேண்டும், ஜடத்தைக் குறித்து வரக்கூடாது. நீ மனசென்றால் அந்த மனசு சித்தா ஜடமா சித் ஜட ரூபமா சொல்? சித்தென்றால் அறிவைப்போலச் சாக்ஷி மாத்திரமாயிருக்கவேண்டும். ஜடமென்றால் கடபடாதிகள்போலச் சும்மா கிடக்கவேண்டும். சித் ஜடமென்றால் இருட்டாதித்தன்போலவும், வெள்ளாள தீக்ஷிதர்போலவும் துலுக்கப் பிராமணன்போலவும் விதவா சுமங்கலிபோலவும் சேரமாட்டாது. நீ ஜகத்தென்றால் அப்பவும் ஜடமாச்சுது. எது ஜடமோ அது அநித்திய அசுத்தாதியான

பொய்யாச்சுது. நீயும் ஜகத்தும் பொய்யானால் பொய்யாயிருக்கிற மலடி பிள்ளைகள் இரண்டு பேர்களும் சம்பந்தம் பண்ணிக்கொள்ளமாட்டார்கள்போல அப்பவும் சங்கல்பம் வரக்கூடாது. நீ நிஜம் ஜகத்துப்பொய்யென்றால் அப்பவும்கானல் ஜலங் கிளிஞ்சில் வெள்ளி முதலானதைக் குறித்துச் சங்கல்பம் உலகத்தில் ஒருவருக்கும் வராததுபோல உனக்கும் அப்படிப் பொய்யைக் குறித்து நினைப்பு வரக்கூடாது. நீயும் விஷயமும் நிஜமென்றால் புருஷர்களும் புருஷர்களுஞ் சேர்ந்து பிள்ளை பிறக்காததுபோல அப்பவும் சங்கல்பம் வரக்கூடாது. உனக்கு விஷயம் வேறென்றால் ஊரார் வீட்டுக் காரியத்தைக் குறித்து நீ நினைக்கத் தேவையில்லை. இன்னும் நீ நினைத்தபடி ஒன்றும் வரப்போகிறதில்லை. நீ இப்படி ஆகவேணும் இப்படி ஆகக்கூடாதென்று நினைப்பதே மூடத்தனம். வெய்யிலைப் பார்த்துத் தபிக்கிறதென்று சொல்லுவதாலும்,பனியைப் பார்த்துக் குளிருகிறதென்று சொல்வதினாலும் பிரயோஜனமென்ன சொல்? இன்னும் நீ அப்படி நினைப்பதாலுண்டாகிற கெடுதலையுஞ் சொல்லுகிறேன். நடந்ததை நினைத்தால் துக்கமும், சஞ்சித கருமமும், வாசனையும், அஞ்ஞானமும், ஆவரணமும், காலம் வீணாய்ப்போவதால் வருகிற துக்கமும் விருத்தியாகும். வரப்போகிறதை நினைத்தால் ஆகாமியமும் ஆசையும் விருத்தியாகும். வர்த்தமானத்தை நினைத்தால் பிராரப்தமும் ராகத்துவேஷமும் பிரவர்த்தியும் விருத்தியாகும். ஆகையால் ஒரு சங்கல்பமுஞ் செய்யாமல் சாக்ஷிமாத்திரமாக விருக்கவேணும். பின்னும் உன் தாய்போலிருக்கிற ஈசுவரன் உனக்கு ஆயுளாகிற அன்னத்தைக் கொடுத்தால் அதை விவேகமாகிற வயிற்றிற் போடாமல் ஜலத்திலிருக்கிற மீன் குஞ்சுகளுக்குப்போட்டு வேடிக்கைப் பார்ப்பதுபோல நீயும் உன் ஆயுள் ஆகிற அன்னத்தை ஸ்திரீ புத்திராளாகிற மச்சியங்களுக்குக் கொடுத்து முக்காலேயரைக்கால் ஆயுளாகிற சாதமும் ஆய்விட்டது. இனிமேலாகிலும் மிச்சமிருக்கிற அன்னத்தை விவேகமாகிற வயிற்றிற் போட்டுச் சுகத்தையடை. இன்னும் நீ சிம்மத்துக்குச் சமானமாயிருந்து யானை மஸ்தகம்போலிருக்கிற பிரமக்ஞானத்தை யடையவேண்டுமே யல்லாமல் நரியைப்போலிருக்கிற மாயீக பதங்கள் பல வந்தமாய் வந்தாலும் அதை இச்சிக்கக்கூடாது. உனக்கு அஞ்ஞான மயக்கத்தாற் சொப்பன காலம்போல மெய்யாய் ஜகத்துத் தோணினாலும் உன்னை நீ யாரென்று எழுப்பினால் உன்னைத்தவிர வேறொன்றுங் காணாமற் போம். ஆகையால் நான் பிரஹ்மமென்ற நிச்சயம் ஒன்றுதான் அழியாமலிருந்து மோக்ஷத்தைக் கொடுக்குமே தவிர மற்ற மாயா காரியத்தைக் குறித்து எதுவெது விவரித்தாலும் அதெல்லாம் சொல் மாத்திரமென்று தெளிந்து கொள்ளத்தக்கது. அய்யா, எவ்வளவு விசாரித்தாலும் ஆத்ம சாக்ஷாத்காரமாக வில்லையே யெனில்; ஒரு மைல் தூரமுள்ள குகைக்குள் நாகரத்னமிருக்கிறதென்று சொல்லி ஒரு சித்தர் ஒருவனைக் கூட்டிப்போகும்போது முக்கால் மைல்தூரம் போய் இன்னம் எவ்வளவு தூரமிருக்குமோ இவர்தான் நம்மை யென்ன செய்யக் கூட்டிப்போகிறாரோவென்று பயந்து திரும்பி வந்தவழியே ஓடிவந்ததுபோல வெகு பேர்கள்

சிரவணம் மனனம்வரை செய்து அந்தப் பிரஹ்மத்தைக் காணேமென்று பயந்து பழைய சமுசார சமுத்திரத்தில் ஓடிவந்து விழுகிறார்கள்; நீயும் அப்படித் திரும்பிப்போகாமல் பிரஹ்மாப்பியாசஞ் செய்துவந்தாயேயானால் பிரஹ்மத்தை அதிசீக்கிரத்தில் அடைவாய். ஆகையால் இந்த ஜீவன் முக்திக் கன்னிகையைவிட்டு விஷயத்தில் மோகித்தாயேயானால் புத்தியாகிற வேசி அதிமோகத்தை யுண்டு பண்ணி ஒருநாளுங் கரையேறவொட்டாமல் உன்னைக்கெடுத்துப் போடுவள். ஆனதால் முக்தியாகிற நிஜ ஸ்திரீயை மறவாமலிருக்கவேண்டும். அய்யா, நானெப்போதும் பிரஹ்மமாயிருக்கும்போது நான் பிரஹ்மமென்று என்னத்துக்கு நினைத்து அறிந்து நிச்சயிக்க வேண்டுமெனில்; அடே! நீ கேட்டபடி பிரஹ்மத்தை அறியாததால் வருந்துக்கத்துக்கும் பிரயோசனமின்மைக்கும் யுக்திகளைக் கேள்- கட்டைக்குள் தீ யிருந்தாலும் கடையாதே போனால் தீயுடன் கட்டையைக் கறையான் தின்னுவது போலும், தானிருக்குமிடத்தில் புதையலிருந்தாலும் அதை யறிந்து தோண்டியெடுத்து அனுபவியாதவன் பிக்ஷை வாங்குவதுபோலும், உக்கலில் பிள்ளையிருந்தும் அறியாதவள் ஊரெல்லாம் அலைவதுபோலும், தயிருக்குள் வெண்ணெயிருந்தும் கடையாமற்போனால் நவநீதம் அடையப்படாமல் வீணாய்ப் போவதுபோலும், படுக்கையில் படுத்திருப்பவன் சொப்பனத்தில் காடுகரைகளில் போய் அலைந்து திரிந்து சங்கடப்பட்டுக் கலங்குவதுபோலும், கைவிரலில் போடப்பட்டிருக்கிற மோதிரத்தை மறந்து கடைவீதி யெல்லாம் தேடினவன்போலும், தான் பிரஹ்மமா யிருந்தாலும் நான் பிரஹ்மமென்ற ஞானமில்லாதவன் சம்சாரதுக்கத்தைக் கடந்து ஒருநாளும் பிரஹ்மானந்தத்தை அடையான். அய்யா, ஒருதரம் நான் பிரஹ்மமென்று அறிந்தாற் போதாதோ அடிக்கடி என்னத்துக்கு அனுசந்தானம் பண்ணவேண்டுமெனில்; அதற்கு அநேக காரணமிருக்கிறது. அதாவது—பயங்கரமான விஷயமார்க்கத்தில் நடந்தவன் ஒருதரம் ஞானமாகிற இராஜமார்க்கத்தைப் பார்த்தானே யானால் மறுபடி அந்தக் கெட்டமார்க்கத்துக்கு எப்படிப்போகானோ; நரகத்தைப் புசிக்கிறவனுக்கு அமிர்தம் அகப்பட்டால் மறுபடி அமிர்தத்தையே யெப்படி ஆசைப்படுவனோ, அப்படிப் பிரஹ்மானந்தத்தை ஒருதரங் கண்டவனுக்கு மறுபடியும் விஷயத்தைக் கண்டால் அருசியாகவே தோன்றுவதால் அடிக்கடி பிரஹ்மானுசந்தானமே செய்யவேண்டுமென்றறி. அய்யா ஞானிகள் விவகாரம் பண்ணக்கண்டோம் அவர்களெப்படி விவகாரம் பண்ணுவார்களெனில் ஞானிகள் திருஷ்டியில் பிரஹ்மம் நானென்கிற நிச்சயத்தை மறவாமல் பிராரப்த கர்மத்தால்வரும் போகங்களை யெல்லாம் சொப்பனபோகம் போலப் பொய்யென்று பார்த்து விவகாரஞ் செய்து வருவார்கள். அய்யா, எப்போதும் சொரூபசிந்தனையா யிருந்தால் தேக விவகாரம் எப்படி நடக்குமெனில் பைத்தியங் கொண்டவனையும், கர்ப்பத்தில் வசிப்பவனையும், சொப்பன சுழுப்தி யடைந்தவனையும், சிசுக்களையுங் கல்லுக்குள் தேரையையும் கருப்பைக்குள் முட்டையையும் கர்மப்படிகாக்கும் ஈசனிருக்கும் போது இவன் கவலைப்படத் தேவையில்லை, அப்படிக் கவலைப்பட்டானானால்

கெடுதியும் உண்டாகும் (எ - தி) டிக்கட்டுவாங்கி ரயில் வண்டியிலேறினவன் சுகமாயிராமற் சீக்கிரம் விடென்றும் மெள்ளவிடென்றும் இப்படிவிடென்றும் அப்படிவிடென்றும் இவன்புலம்புவதினால் என்னபிரயோசனம்? இவன் இரைச்சலைக்கேட்டதுரையும் இவன் டிக்கட்டையும் பிடுங்கிக் கீழேயிறக்கிவிட்டுத் தண்டனையு மெப்படிக்கொடுப்பானோ அப்படி ஈஸ்வரன் கர்மமாகிற காசுக்கு ஆயுளாகிற டிக்கட்டைக்கொடுத்து சரீரமாகிற ரயிலில் தூக்கிவைத்துச் சுகமோ துக்கமோ கர்மத்துக் கீடாகத் தவறாமல் கொடுக்கிறார். அப்படியிருக்க இவன் இந்தச் சுகம் வேண்டும் இந்தத் துக்கம் வேண்டாமென்று புலம்புவதால் ஈஸ்வராபராதமுண்டாகி யமனாகிற சேவகனைவிட்டு இவன் சரீரத்திலிருக்கிற ஆயுளாகிற டிக்கட்டையும் பிடுங்கி நரகமாகிற ஜயிலிலும் போடுகிறாரென்று சொன்னதைக்கேட்டுப் பயந்து நான் என்ன செய்யவேண்டுமென்று கேட்பாயாகில் நீ யொன்றுஞ் செய்ய வேண்டுவதில்லை; சரீரரக்ஷணை கர்மப்படி நடக்குமென்று நிர்ச்சிந்தனைய் நானே பிரஹ்மம் தேகாதி ஜகத்தெல்லாம் சொப்பனம்போலே பொய்யென்று நிச்சயித்துச் சுகமாயிருக்க வேண்டியது. அய்யா தன்னைமறந்த ஜீவர்களுக்கு என்ன கெடுதலிருக்கிறதென்று கேட்பாயாகில் சகல ஜீவர்களுக்குந் தெரியும்படியாய் கையைத் தூக்கிக்கொண்டு சொல்லுகிறேன். ஓ ஜீவர்களே! நீங்கள் அநேகம் ஓட்டைகளுடன் கூடிய இந்தச் சரீரபாண்டத்தில் ஆயுள் ஆகிற ஜலம் நிமிஷந்தோறும் ஒழுகிப்போகிறதென்பதை யேன் அறியவில்லை? இது இவ்வளவு காலமிருக்குமென்று நிலையில்லாமலிருக்கிற பதார்த்த மல்லவா? அப்படி ஆயுள் முழுவதும் ஒழுகிப்போகு முன்னமே உங்கள் சொரூபத்தை அறியவேண்டும். அப்படி அறியாமற் போய்விட்டீர்களே யானால் உங்களுக்கு வருகிற கெடுதலை இவ்வளவென்று சொல்லிமுடியாது. அஃதெப்படி யென்றால் லோகத்தில் திருடினவனுக்கு 4 - 5 - வருஷம் மண்சுமக்கிறது விலங்கு போடுகிறது முதலான கடினமான தண்டனைசெய்து அப்புறம் அவனை விடுதலைசெய்து விடுகிறார்கள். இந்த நீங்கள் உங்கள் ஆத்மாவைத் திருடினதற்காக கற்பகோடிகாலமாய் ஜனன மரணமாகிற தண்டனையைப் பெற்றுக்கொண்டு இப்படிப்பட்ட மலமூட்டைகளைத் தூக்கிவந்ததுந் தவிர இப்போது உங்கள் சரீரமாகிற மலமூட்டையை 4-ஜீவர்கள் கூடித் தூக்குகிறதற்கு அசாத்தியமாயிருக்கிறது. இந்தச் சரீரமாகிற மலமூட்டையை ஒருத்தனொருத்தன் தலைமேல் தனித்தனியே வேறுவேறாக வைத்துத் தூக்கும்படிசெய்த பிரகாரத்தை குறைவென்று அறியாமற்றானே நீங்களும் அய்யரவர்களென்றும் அம்மாளவர்களென்றும் சாஸ்திரியவர்களென்றும் தீக்ஷிதரென்றும் ஜோதிடரென்றும் பாகவதர்களென்றும் பேர்வைத்துக் கொண்டு பீமூட்டையை நானென்று வெட்கமில்லாமல் தூக்கித் திரிகிறீர்களே! இப்போதாகிலும் யோசித்துப் பார்த்து இந்த மூட்டையை யெடுக்குமுன்னே ஒரு பீமூட்டையை யெடுத்து அந்தப் பீமூட்டையை நானென்றும் அந்தப் பீமூட்டையைத் தவிர வேறே ஆத்மா இல்லையென்றும் அப்போது நினைத்திருந்ததினால் இப்போது இந்தப் பீமூட்டையை யெடுக்கும்படியாய் வந்து சேர்ந்திருக்

கிறது. இப்பவும் இந்தப் பீமூட்டையை நானென்று பாவித்தால் இனிமேலும் அனந்த பீமூட்டைகள் இப்படி ஓயாமல் எடுக்கவேண்டி வருமென்று நிச்சயித்து இப்பவே இந்தப் பீமூட்டை நாமல்ல நம்முடையதுமல்லவென்று அபிமானத்தைத் தள்ளி நம்முடைய நிஜவடிவமானது நிராகாரமான பிரஹ்மமென்று திடமாயறிந்து ஜனகாதிகளைப்போலே திடஞானத்தை யடைந்துயிருங்களென்று சொன்னார். பிற்பாடு மறுபடியும் சிஷ்யனும் அய்யா! அந்த ஜனகாதிகளெப்படி ராச்சியவிவகாரஞ் செய்துகொண்டு சொரூப நிச்சயத்தோடே யிருந்தார்களென்று கேட்கும்போது குரு சொல்லுகிறார்:—அவர்களுடைய சித்தமானது சந்திரனைப்போலே குளிர்ச்சியாயிருக்கும். ஆகையாற் சந்திரனுக்கு முன்பாக எவ்வளவு விவகாரமாகிற கட்டைகளைப்போட் டெரித்தாலும் சந்திரன் எப்படி உஷ்ணமாகமாட்டாரோ அப்படிப்போலவும்; அஞ்ஞானிகளுடைய மனசானது சூரியன் வெகுஉஷ்ணமாயிருக்கிறதுபோல இருக்கிறபடியால் அவர்கள் முன்பாக விவேகமாகிற ஜலத்தை எவ்வளவு வாரிக்கொட்டினாலும் பழையபடி உஷ்ணமாகவே யிருக்குமென் றறியவேண்டியது. அய்யா! என்ன விவேகஞ்செய்தாலும் மறுபடி பிரபஞ்சவாசனை ஒவ்வொருக்கால் உதிக்கிறதே அதற்கு நானென்ன செய்வேனென்று கேட்பாயாகில், அதற்கொரு திருஷ்டாந்தங் கேள்:-ஒரு புருஷனுக்கு வயிற்றுவலி வந்து 60-நாழிகையும் அவனை இம்சித்துக்கொண்டிருக்கும்போது ஒரு சித்தபுருஷன் தெய்வகதியால் அவனிடம் வந்து சேர்ந்து அவனுடைய உதரோபாதியைப் பார்த்து சகிக்கமாட்டாமல் தயையினால் தன்கையிலிருந்த ரசகுளிகையை மூன்றுவேளை கொடுத்து அந்தக் குளிகையை அவன் சாப்பிட்டவுடன் முன்போல 60-நாழிகையும் வலியாமல் 4-நாழிகையளவு வலித்து மற்றவேளை சுகமாயிருக்கும்போது, அந்த வயிற்றுவலிக்காரன் அந்தச் சித்தனைப்பார்த்து வயிற்றுவலி பூர்ணமாய்ச் சொஸ்தமாகுமென்று சொன்னாயே திரும்பவும் 4-நாழிகை வயிறு வலிக்கிறதே உன் மருந்து ஒன்றுஞ் சுவார்சியமில்லையென்று சொன்னதற்கு அந்தச் சித்தன் சொல்லுகிறான். 60-நாழிகையும் வலித்துக்கொண்டிருந்ததற்கு மூன்றுவேளை அவுஷதத்தால் முக்கால் திட்டந் தீர்ந்துபோனால் இன்னங் கொஞ்சவேளை சாப்பிட்டாயேயானால் வியாதி நிசேஷமாய் நிவர்த்தியாகுமென்று சொன்னதுபோல உனக்கும் 60-நாழிகையும் விஷயவாசனையுண்டாகி அதனால் துக்கப்பட்டு இப்போது விவேகமாகிற குளிகை சாப்பிட்டதால் அப்படி 60-நாழிகையும் விஷயவாசனை யுண்டாகாமல் ஏகதேசத்திலுண்டாவதால் நீ இதுமுதல் சாவதானமாயும் நானே பிரஹ்மம், நானே சாக்ஷி, நானே அகண்டன், நானே சின்மாத்திரனென்று தினம் அப்பியாசித்தாயேயானால், தேகம் நான் பிரபஞ்சம் சத்தியமென்கிற வயிற்றுவலி நிவர்த்தியாய்ப் போய்விடும். எப்படிவருமோவென்று பயப்படத் தேவையில்லையென்று சொன்னபடி அவனும் அப்படியேயறிந்து சுகித்தான். ஒரு இடையன் தோளில் குறுக்காக ஒரு தடியை வைத்துக்கொண்டு வீட்டில் நுழையப்பார்த்தான். நுழையமுடியாமல் அவதிப்பட்டுக்கொண்டிருக்கும்போது, புத்திசாலியான ஒருவன் பார்த்து

குறுக்கே வைத்துக்கொண் டிருக்கிற கம்பை நேரே வைத்துக்கொண்டாயே யானல் சுகமாய் வீட்டுக்குள் போகலாமென்று சொன்னன். அந்தப்படியே தடிக் கம்பை நேரே வைத்துக்கொண்டு வீட்டுக்குள் புகுந்தான். அப்படிப்போல மூட னுயுள்ளவனும் தன் மனசாகிற கம்பை விஷயத்தில் பகிர்முகமாகிற குறுக்காக வைத்துக்கொண்டு மோக்ஷமாகிற வீட்டில் நுழைய எத்தனப்பட்டதில் போக முடியாமல் அவதிப்படும்போது, குருவானவர் பார்த்து பகிர்முகமான மன சினுடைய கோணலை அந்தர் முகமாக ஆத்மாவுக்கு நேரே திருப்பிவைத்தால் மோக்ஷமாகிற வீட்டை அடையலாமென்று சொன்ன மாத்திரத்தில் அவனும் அப்படியேசெய்து மோக்ஷத்தை அடைந்தான். அப்படிப்போலே நீயும் மனதை சொரூபத்தில் வைத்து மோக்ஷமாகிற வீட்டை அடையென்று சொன்னவுடன் அய்யா! நான் நிரம்ப ஏழையாயும் துக்கியாயு மிருக்கிறேன் எனக்கு எப்படி ஞான சம்பத்துண்டாகு மென்று கேட்பாயே யானல் இந்த உலகத்தில் ஒரு ஜீவனும் உண்டாகிறபோதே வித்துவானு யாவது சம்பன்னனு யாவது முண் டாகிறதில்லை. அப்படி நீயும் அஞ்ஞானியா யிருந்தாலும் குரு கடாக்ஷமாகிற நாகரத்னம் உனக்குக் கிடைக்கும் பக்ஷத்தில் நீயும் ஞான சம்பத்தோடு கூடுவா யென்று சொன்ன மாத்திரத்தில், அய்யா அப்படி மகிமையுள்ள குரு கடாக்ஷம் எனக்கு எப்போது தெரியுமென்றல் ஆத்மாவினுடைய சுவானுபவ சாக்ஷாத் காரம் வந்தாலல்லாமல் மற்றக் காலத்தில் தெரியாது. அது எப்படி யென்றல் ஒரு சித்தருடைய குளிகையினுடைய மகிமை சாப்பிட்டுக் காயசித்தியான பிற் பாடு தெரிவதுபோல, இந்த ஞானத்தின் மகிமையும் அனுபவம் வரவரத் தெரி யும். அஃதெப்படி யென்றல்:—ஒரு புருஷனுக்குக்கிழத்தனம்போல அஞ்ஞான காலம், யவ்வனம்போலக் கர்மானுஷ்டானமும் பக்தியும்,குமாரப்பருவம்போலப் பிரஹ்மாப் பியாசம் பண்ணுகிற முமுக்ஷுத்துவம், பள்ளிக் கூடத்தில் வைக் காத குழந்தையைப்போல பிரஹ்மவித்து, நடக்கிறதும் தவழுகிறதுமா யிருக் கிற இரண்டு வயதுக் குழந்தையைப்போல வரன், தவழுகிற ஒரு வயதுக் குழந்தைபோல் வரியான், இப்போது பிறந்த குழந்தையைப்போல வரிஷ்டன், பின்னும் இந்த ஆசையை ஜயிக்கிறதற்கு உபாயமாவது ஆசைப்பட தக்கதா யிருக்கிற விஷயத்தைப் பொய்யென்று பார்ப்பதுதானென்றறி.

## 80-வது தரங்கம்.

[அ - கை.] குருசன்னிதியை நேரே அடையச் சக்தி யில்லாதவனுக்கு விண் ணப்ப மூலமாய்த் தெரிவித்துச் சுகம்பெறலாமென்று சொல்லுகிறர் :—

குரு தரிசனம் சமீபத்தில் இல்லாதபக்ஷத்தில் விண்ணப்ப மூலமாய்த் தெரி யப்படுத்திக்கொண்டு நியாயம் பெற்றுக்கொள்ளுகிற மார்க்கம் காண்பிக்கப் படுகிறது. அதாவது ஒரு முமுக்ஷு வானவன் சற்குரு சமீபத்துக்குப் போகச் சாத்தியமில்லாமற் போனல் சீமைக்கோர்ட்டு முதலான இடங்களில் பிராது செய்கிறவர்கள் விண்ணப்ப மூலமாய்த் தெரிவித்துக் கொள்வதுபோலக் குரு சன்னிதானத்துக்குத் தெரிவித்துக் கொள்வது யாதென்றல் விவேகியாகிறவரதி

அவிவேகிகளாகிற பிரதிவாதிகள் செய்திருக்கிற அனியாயத்தைப் பற்றிக் குருவாகிற கோர்ட்டாருக்குத் தெரிவிக்கிறதாவது :—

பிராதின் சுருக்கம். குருத்தியானத்தா லுண்டாயிருக்கிற விசாரமாகிற விண்ணப்பமாவது கர்மகாண்டமாகிற அசல் கோர்ட்டிலும் பக்தி காண்டமாகிற அப்பீல் கோர்ட்டிலும் ஜீவேஸ்வர ஜகத்தாகிற மூன்று பதார்த்தமும் சத்தியமென்றும்,வேறே ஆத்மா இல்லையென்றுஞ்சொல்லுகிற கர்மகாண்ட தஸ்தாவேசுகளையும் புராணங்களையும் சூதர் ஜைமினிமுதலான ரிஷிகளுடைய சாக்ஷி வாக்குமூலத்தையும் நம்பி மேலேசொல்லிய எதிரிகள் கேட்டுக்கொண்டபடி அவர்கள் பக்ஷம் தீர்ப்புச் செய்தார்கள் நாம் நிரூபிக்கும் வேதமுடிவான உபநிஷத்தாகிற தஸ்தாவேசுகளையும் வாசிஷ்டம் முதலான உபபத்திரங்களையும் ஞானிகளாகிற வசிஷ்டர் முதலான சாக்ஷி ருசுக்களையும் பார்த்து என்தரப்பிலுள்ள சகல நியாயங்களையும் நன்றாய் ஆலோசித்து அத்வைதமான என் ஆத்மதனம் எனக்குக் கிடைக்கும்படிக்கும், திரி பதார்த்தங்களையும் மித்தையென்று தள்ளி அப்படிக் கற்பித்தவர்களுக்குத் தண்டனை கொடுக்கும் படிக்கும் பிரார்த்திக்கிறேன். மேற்படியார்கள் இனிமே லிப்படி ஒருக்காலும் அனியாயஞ் செய்யாமலிருக்கும்படி உடனே யென்பிரார்த்தனைப்படி தீர்ப்புச் செய்யவேண்டும். அப்படி உடனே செய்யாத பக்ஷத்தில் மேற்படி எதிரிகளும் அவர்களைச் சேர்ந்த ராகாதிகளாகிற ஏவற்காரர்களும் என்னைக் கொலைசெய்து போடுவார்கள். ஆகையால் தீர விசாரித்து நியாயங்கொடுக்க வேண்டியதாய்க் கோர்ட்டாரைப் பிரார்த்திக்கிறேனென்று எழுதி யனுப்பித்த பிராதைமேற்படி கோர்ட்டார் நன்றாய்ப் பார்வையிட்டுத் தீர்மானிக்கிறார். அதாவது, நீ கொடுத்த பிராதுக்கு மேலேசொல்லியிருக்கிற கோர்ட்டனுசந்தானத் தீர்ப்பே போதுமானதா யிருப்பதால் அந்தத் தீர்மானப்படிக்கு நானென்கிற ஆத்ம தனத்தை அனாத்மாக்களோடே சங்கப்படுத்திக் கொண்டிருக்கிற எதிரிகளிடத்தி லிருந்தும் எனது அனுக்கிரக வாக்கியத்தால் திருப்பிக் கொடுத்திருப்பதால் யாதொரு தடையுமன்றியில் அசங்கமாயிருக்கிற இந்த ஆத்மாவை நீ யெப்போதும் தானாகவே அனுபவித்து வரும்படி தீர்ப்புச் செய்யலாயிற்று. ஆகையால் சகலரும் இதைப்பார்க்கத்தக்கது.

81-வது தரங்கம்.

[அ-கை.] ஈஸ்வரனாற் கூடாத காரியம் ஞானி முடிப்பனென்று சொல்லுகிறார் :—

அதாவது ஈஸ்வரன் சர்வ சுதந்திரனாயிருக்கும் போது அவரால் முடியாத காரியத்தை ஞானி முடிப்பனென்பதற்கு திருஷ்டாந்த மென்னவென்றால், ஒரு ரிஷியானவர் ஈஸ்வரனைக் குறித்துத் தபசு செய்ததின் பேரில் அவரும் பிரத்தியக்ஷமாய் வந்து உன் வேண்டுதலென்ன வென்று கேட்க இவர் ஜன்ம நிவர்த்தியான மோக்ஷமே வேண்டு மென்று சொல்ல அவர் உனக்கு இன்னம் இந்தப் புளியமரத்திலுள்ள இலைகள் எத்தனையோ அத்தனை ஜன்ம மெடுக்கவேண்டியிருக்கிற தென்று சொல்லிப்போன சொல்லைக்கேட்டு அந்த ரிஷி விசனித்து

இருக்கும்போது, நாரதர் வந்து இவர் சங்கதியைக் கேட்டுத் தன் குருவான சனற்குமார மகரிஷியினிடத்தில் இவரைக் கொண்டுபோய் விட்டவுடன் அவர் இவருக்குத் திவ்விய ஞானத்தைக் கொடுத்து ஜனன மரணமில்லாமற் செய்த கதையையும்; இன்னும் பிரஹ்ம குலத்தில் பிறந்த அதிகோரனென்பவன் மகா பாபியாய்ப் பஞ்சம வர்ணத்திற் சேர்ந்து அவர்கள் செய்யும் கிருத்தியங்களையும் செய்துகொண் டிருக்குங் காலையில், கருணாநிதி யென்ற ஓர் ஞானி ஒரு கிருகஸ்தன் வீட்டுக்கு வந்து பலகையில் உட்கார்ந்த மாத்திரத்தில் அவன் நீசர்களோடே சூதாடினதிற் கலகம் வந்து அந்த நீசர்களால் விரட்டப்பட்டு அக்கிரகாரத்துக்கு ஓடி வந்து இந்த ஞானியைச் சரணமாய் அடைய அவனையும் அவர் சிஷ்யனாய்க் கிரகித்த மாத்திரத்தில் இவனுடைய பாப கிருத்தியக் கணக்கெல்லாம் தீப்பற்றிப் போனதைப் பற்றி யமன் இந்த மகாபாபியின் கணக்கு அநியாயமாய் எரிந்துபோன காரணந்தெரியாமல் சிவனிடத்திற்போய் இது என்ன காரணமா யிப்படி யாயிற்றென்று கேட்கச் சிவன் சொன்னதாவது:—இந்த அதிகோரன் முந்தி ஒரு ஜன்மத்தில் மாமரமாயிருந்தான். அந்த மாமரத்தின் பலகையில் அந்த ஞானி உட்கார்ந்த விசேஷத்தால் அவனுக்குச் சண்டாள சகவாசம் விலகி அவர் தரிசனமுங் கிடைத்தது. அதின் பேரில் அவன் சிஷ்யனாகக் கிரகித்தேனென்று அபயப் பிரதானஞ் செய்ததால் அவருடைய அம்சமாய்ப் போய் விட்டதால் நம்முடைய விசாரணையான பந்தத்திலிருந்து நிவர்த்தியாய் விட்டதால் ஞானியின் மகிமைக்கு ஒப்பாக ஒன்றையும் சரி சொல்லக் கூடாதென்று சொன்னதைக் கேட்டு எமன் வியந்து மகிழ்ந்து கொண்டுபோனானென்று சனற்குமார சம்ஹிதையிற் சொல்லியிருக்கிற கதையையும்; இப்படியே சசிவர்ணனென்பவன் மகா பாபியாயிருந்து மஹாநந்தி பாராயணரென்ற ஞானியின் அனுக்கிரகத்தால் கரை யேறினானென்ற கதையும்; இன்னும் சுபகை யென்ற ஒரு தாசியானவள் அனேகரை மோசமாய்க் கொன்ற பாபத்தால் மகா வியாதி யடைந்து தபித்துக்கொண்டிருக்கும்போது சக்கிரதரனென்ற ஞானியின் கிருபையால் அவளும் ஞானி ஆனாளென்று சூதசங்கிதையில் சொல்லியிருக்கிற இந்த இரண்டு கதைகளுடம் இன்னும் இதுபோலவே அநேகர்கள் கரையேறினார்களென்ற கதைகளும் சுருதி ஸ்மிருதி இதிகாசங்களிற் பிரசித்தமாயிருப்பதால் இவைகளையெல்லாம் பார்த்து ஈஸ்வரனாலும் முடியாதகாரியம் ஞானியால் முடியுமென்பதைச் சித்தாந்தமாய் அறிந்து கொள்ளத்தக்கது. அஃதெப்படி யென்றால் மாயா காரியத்தில் ஈஸ்வரனுக்குப் பிரதான புத்தியும் தத்துவஞான உபதேசத்தில் அப்பிரதான புத்தியுமிருக்கும். ஞானிக்கு ஆத்மஞானோபதேசத்திற் பிரதான புத்தியும் மாயா காரியத்தில் அப்பிரதான புத்தியுமிருக்கு மென்பதற்கு சுருதி யுக்தி அனுபவமென்ன வென்றால்—சுருதியாவது, கறவைப் பசுகளவு போனால் அந்தக் கிரகஸ்தனுக்கு எப்படித் துக்கமுண்டாகுமோ அப்படி ஒரு ஜீவன் ஞானத்தை யடைந்தால் ஈஸ்வராதிகள் துக்கப்படுவார்களென்று சொல்லுகிறது தான். யுக்தியாவது:—அண்ணன் தம்பி இரண்டு பேர்களும் கன

பாடிகளாயிருந்தாலும் தமயன் இராஜாவாயும் தம்பி பாடசாலை உபாத்தியாய ராயுமிருப்பதில் தமயனுக்கு இராச்சிய விவகாரம் பிரதானமாயும் அத்தியயனம் சொல்லி வைக்கிறது ஏகதேசமாயும் தம்பிக்கு வேதாத்தியயனம் ஓதி வைக்கிறது பிரதானமாயும் இராச்சிய விவகாரம் அப்பிரதானமாயுமிருப்பதுபோல. அனுபவமாவது:—ஈஸ்வரன் வந்து ஞானோபதேசஞ் செய்து அந்தர்த்தானம் அரைக்ஷணத்திற் குள்ளே ஆய்விட்டார் யென்கிறதும் நம்முடைய குருநாதன் இராப்பகல் பாராமல் அகோராத்திரம் ஞானத்தைச் சுருதி யுக்தி அனுபவத்துடன் அருமைக் குழந்தையை அமிர்தம் ஊட்டி வளர்ப்பதுபோல நமக்கு அனுக்கிரகித்து ரக்ஷித்துக்கொண்டு வருகிறதே சாக்ஷி. ஆனால் இப்படியிருக்கிறதற்குக் காரணமேதென்றால் ஈஸ்வரனுக்கு வியாவகாரிக சர்வக்ஞத்துவமிருப்பதாலும், அவர் எடுத்தவேஷம் பிரபஞ்சம் விருத்தியாவதற்காகையாலும், பிரகலாதனை விஷ்ணுவானவர் சமாதியிலிருந்து எழுப்பினது பிரபஞ்சம் விருத்தியாக வேண்டுமென்ற எண்ணத்துடன் ஆலோசித்துப் பிரகலாதனை எழுப்ப வந்ததாக வாசிட்டத்தில் சொல்லுவதாலும், அவர் அப்படி யிருப்பது யுக்தந் தான். இந்தக் குருநாதனுக் கப்படி வியாவகாரிக சர்வக்ஞத்துவமில்லாதபடியினாற் குழந்தைக்குக் கொஞ்சம் உபசாரம் பண்ணினால் விலைமதிக்கக் கூடாத ரத்னம் முதல் கேட்டதை யெல்லாங் கொடுப்பது போல ஜீவனுடைய சஞ்சித கர்மங்களின் கணக்கு இவருக்குத் தெரியாததினால் உபசரித்த பேர்களுக்கு ஞானத்தைச் சுலபமாய்க் கொடுத்துக் கொண்டிருக்கிறார். பின்னும் இவரெடுத்த வேஷம் மாயையைக் கொல்லுகிற சதா சிவமான குரு ரூபமாகையாலும் இவரிப்படிப் போதித்துக் கொண்டிருப்பது யுக்தந் தான்.

## 82-வது தரங்கம்

[அ-கை.] மாயா லக்ஷணத்தையும் அதை யுடையவர்களையும் அதன் உற்பத்திக்குக் காரணத்தையும் அந்த மாயா அனுபவம் ஜீவன் பண்ணுகிறதற்குக் காரணத்தையும் சுருதி யுக்தி அனுபவத்தினாற் கூறுகிறார்:—

மாயா லக்ஷணமானது ஒன்பது விதத்திலும் சொல்லப்படாத தென்பதே சுருதி, சொப்பனம் சத்த சத்தென்று நிர்ணயமில்லாதிருப்பது போல வென்பதே யுக்தி, இப்போது உண்டாகிற நம்முடைய சங்கற்பம் அப்படியிருப்பதே அனுபவம். இந்த மாயையை யுடையவர்கள் யாரென்றால் தேகம் நானென்றும் இந்த விஷயம் என்னதென்றும் ஜகத்து சத்திய மென்றும் சொல்லுகிறவர்களே உடையவர்களென்பதே சுருதி, சொப்பனத்திற் கண்ட தேகத்தை நானென்றும் அந்த விஷயத்தை யென்னதென்றும் அதைச் சத்திய மென்றும் அபிமானிப்பதே யுக்தி, நாம் முன் அப்படியிருந்ததே அனுபவம். மாயையின் உற்பத்திக்குக் காரண மென்ன வென்றால் காரணமில்லாத மித்தையான மாயை இன்ன விதமாய் வந்திருப்பதென்பதைக் கண்ட பேர்களில்லை யென்பதே சுருதி நாள்தோறு முண்டாகிற சொப்பனம் இன்ன வழியாய் வருகிற தென்பதை அறியக்கூடாமலிருப்பதே யுக்தி, நிமிஷந்தோறும் தன்னிடத்திலுண்டாகிற சங்கற்

பத்துக்குக் காரணம் தெரியக் கூடாமலிருப்பதே அனுபவம். மாயையை ஜீவன் அனுபவிப்பதற்குக் காரணமென்ன வென்றால் ஜீவனிடத்தில் அந்த மயக்கம் வந்ததற்குக் காரணம் அவிசாரமென்பதே சுருதி, தன்னிடத்திற் காணுகிற சொப்பன வஸ்தைக்குக் காரணம் தான் விழிப்பாய் ஜாக்கிரத்திலிராமலிருப்பதே யுக்தி. இப்போது நமக்கு வந்திருக்கிற அத்தியாசத்தை நாமார் ஜகத்தெப்படி யுண்டானதென்று விசாரியாதபோது இருந்து இப்போது குரு முகமாய் விசாரித்தபோது அந்த அத்தியாசங்காணாமற் போனதே அனுபவம்.

83-வது தரங்கம்.

[அ-கை.] குருவாகிய ஈஸ்வரன் சிஷ்யனிடத்தி லிருக்கிற துர்க்குணங்களை யெல்லாங் கொன்று அவைகளை யெல்லாருக்கும் தெரியும்படியாகத் தன்னிடத்திற் காண்பித்துக்கொண்டு யிருக்கிற சின்னங்களாவது:—

முதலிற் சர்வானர்த்த காரணமான அஞ்ஞான மாகிற விஷத்தைப் பானம் பண்ணி உபதேசமாகிற கண்டத்திற் கட்டிக்கொண்டிருக்கிறதும், சித்தமாகிற புலியைக்கொன்று நிற்சித்தமாகிற தோலைத் தரித்துக்கொண்டிருக்கிறதும், அகங்காரமான யானையைக்கொன்று நிரகங்காரமான தோலைத் தரித்துக்கொண்டிருக்கிறதும், மனசாகிற பாம்பின் இராஜச தாமச குணங்களாகிய பல்லுகளையும் அதிற் பெருகுகின்ற விஷமாகிற சத்திய பாவனையையும் கெடுத்துச் சுத்த சத்துவ மனசாகிற பாம்பைத் தரித்துக்கொண்டிருக்கிறதும், அஸ்வா தீனமான புத்தியாகிற மானை விவேகமாகிற கையிற் சுவாதீனம் பண்ணிக்கொண்டிருக்கிறதும், அசுத்த வாசனைகளோடு கூடியிருக்கிற அந்தக்கரணமாகிற மல்லிகை முதலான மலரை நீக்கி மைத்திரிகருணை முதிதை உபேட்சை அமானித்துவாதி குணங்களான சுத்தவாசனாந்தக் கரணமாகிற வில்வம் தும்பை ஊமத்தை வெள்ளெருக்கு முதலான மலர்களைத் தரித்திருக்கிறதும், ராகத்துவேஷங்களாகிற அசுரர்களையும் மன்மதனையுங் கொன்று அவர்களுக்குட் சாரமாயிருந்த பக்தி சிரத்தையாகிற அஸ்தி பஸ்மங்களைத் தரித்துக்கொண்டிருக்கிறதும், சம்சாரத்திலே தபித்துக்கொண்டிருக்கிற முமுக்ஷுக்களாகிற ஜீவர்களைக் காப்பாற்றுகிறோமென்கிற அபயப் பிரதானமான கரமும் அப்படிக் காப்பாற்றுகிறோமென்பது உறுதி பெறுகிறதற்காக ஞானமென்கிற அக்கினியைக் கையில் வைத்துக்கொண்டிருக்கிறதும், அப்படிச் சரணமாய்வந்த முமுக்ஷுக்களாகிற ஜீவர்களுக்குத் தன்னுடைய அனுக்கிரகமாகிற கரத்தால் காண்பிக்கப்பட்டிருக்கிற இந்தப் பிரஹ்மானந்தமாகிற குஞ்சித பாதமே பரமோக்ஷமென்று நம்புவதற்குக் குரு பாதத்தில் வைக்கப்பட்டிருக்கிற ஆணையாகிற மழுவையேந்திக்கொண்டும், அப்படி வந்திருக்கிறவர்களுடைய அஞ்ஞானம் மனசு வாசனா ரூபமான அத்தியாச துக்கத்தை மனோநாசம் வாசனாக்ஷயம் தத்துவக் ஞானமாகிற சூலாயுதத்தாற் குத்தி விஷயாசையாகிற பாசத்தை வைராக்கியமாகிற கத்தியால் அறுத்து ஜீவப்பிரஹ்ம ஐக்கியமாகிற சின்முத்திரையைத் தரித்துக்கொண்டு, இந்தக் குருநாதனாகிற ஈஸ்வரன் அபஸ்மாரமாகிற அவித்தையை வித்தையாகிற

காலில் மிதித்துக்கொண்டும், பிரசன்ன வதனமான சந்திரனையும் கிருபாகடாக்ஷமாகிற கங்கையையும் பிரஹ்மானுபூதியாகிற சிரசில் தரித்துக்கொண்டும், சதா விசாரணையாகிற நடனஞ் செய்துகொண்டும், சகல முமுக்ஷுக்களாகிற உலகத்தை ரக்ஷித்துக்கொண்டும், இவ்விதமான சின்னங்களோடே கூடியிருக்கிற இந்தப் பிரத்தியக்ஷமாயிருக்கிற ஞானகுருவாகிய ஈஸ்வரனைச் சகல முமுக்ஷுக்களாகிற உலக ஜனங்கள் அடைந்து கடைத்தேறத்தக்கதென்று வெளியாய் விளம்பரஞ் செய்யப்பட்டது. இதை யாவர்களுந் தெரிந்து அடைந்து உச்சீவிக்கத்தக்கது.

## 84-வது தரங்கம்.

[அ - கை.] முமுக்ஷுக்களாய் வந்த சாதுக்களுக்குள் சிலர் அகம்பாவத்தோடும், ஆவரணத்தோடும் கூடியிருக்கிற மனதோடும், வாசனையோடுங் கூடிய சித்தத்தோடும், அபிமானத்தோடுங் கபடத்தோடுங் கூடியிருந்துகொண்டு வெளியில் அதைக்காண்பியாமல் மோக்ஷம் வேணுமென்று இச்சையிருப்பதுபோல அபிநயம் பண்ணிக்கொண்டிருக்கிறார்கள். இப்படியிருக்கிற சாதுக்கள் ஒன்று சேர்ந்து குருவினிடத்தில் சேவைசெய்து கிருதார்த்தர்களாக எப்படி ஆவார்களென்று கேட்டால் அதற்குத் திருஷ்டாந்தம் அறிவிக்கப்படுகிறது:—

அகம்பாவமாகிற தேங்காயை நாம் யாரென்கிற விசாரமாகிற கையால் உடைத்து அதற்குள்ளிருக்கிற உபசாந்தியாகிற ரசத்தையும், ஆவரணத்தோடு கூடிய மனதாகிய வாழைப்பழத்தின் ஆவரணமாகிற தோலை வேதவாக்கியத்தால் நீக்கி நிராவரணமான மனதாகிய சிலாக்கியமான வாழைப்பழத்தையும், வாசனையோடு கூடியிருக்கிற சித்தமாகிற கரும்பிலிருக்கிற துர்வாசனைகளாகிற தோடு சக்கைகளை நீக்கி மைத்திரியாதி வாசனைகளாகிற கருவிகளாற் சுத்த வாசனைகளாகிற சர்க்கரையையும், தேகாபிமானமாகிற கூட்டிலிருக்கிற பிரக்ஞையாகிற தேனையெடுப்பதற்காக அந்தக்கூட்டைச் சித்ஜட விவேகத்தாலுடைத்து அதிலிருந்த பிரக்ஞானமாகிற தேனையும், அபிநயம்பண்ணுகிற கபடமாகிற விரையோடே கூடியிருக்கிற புத்தியாகிற பேரீச்சம் பழத்திலிருக்கிற கபடவிரையை பாரமார்த்திக புத்தியால் எடுத்தெறிந்து அதையும் ஒன்று சேர்க்கப்பட்டிருக்கிற சாதுகோஷ்டியாகிற பஞ்சாமிர்தத்தினாற் பிரஹ்மானந்த குருவாகியலிங்கத்துக்கு ஆப்தம் அங்கம் ஸ்தானம் சத்பாவமுதலான சேவையாகிற அபிஷேகத்தை முமுக்ஷுக்களனைவரும் பக்தி சிரத்தைகளாகிற கைகளாற்செய்தால் அதனால் ஜீவன் முக்தியாகிற மகிமையைப் பெற்று நீடூழி காலம் வாழலாமென்றறியத் தக்கது.

## 85-வது தரங்கம்.

[அ - கை.] துவைதத்தைப் பிடித்திருக்கிறவனுக்குச் சுகமில்லை யென்றும் அத்துவிதத்தைப் பிடித்திருக்கிறவனுக்குச் சுகமுண்டென்பதையும் தெரிவிக்கிறார்:—

துவைதத்தைப் பிடித்திருக்கிறவனுக்குச் சுகமில்லாமல் மேலுமேலும் துக்கம் விருத்தியாகிறதுந் தவிர பிராணஹானிமுதலான அநேக அனர்த்தங்களும் வரு

மென்றும்,அப்படிக்கொத்த துவைதத்தால் யாதொருபிரயோசனமும்யாதொரு காரியசாத்தியமு மில்லையென்றும், தானும் சுகிக்காமல் அன்னியரையும் சுகிப்பிக்கமாட்டாதென்றும், துவைதம் விருத்தியானவிடத்தில் அத்வைதம் சங்கோசப் படுமென்றும், அப்படி விருத்தியாவதால் ஜனனமரண வியாதியுண்டாகிறதென்றும் தெரிந்துகொண்டு துவைதத்தை உபேக்ஷித்து அத்வைதத்தையே தேடிக் கண்டு பிடித்துக்கொண்டு, எவ்வளவுக் கெவ்வளவு அத்வைதபரிசயம் பண்ணுகிறானோ அவ்வளவுக் கவ்வளவு துக்க நிவர்த்தியும் தடையற்ற ஆனந்தமு முண்டாவதுந்தவிர அத்வைதம் எவ்வளவுக் கெவ்வளவு விருத்தியாகிறதோ அவ்வளவுக் கவ்வளவு துவைதம் சங்கோசப்படுமென்றும், அத்வைத பரிசயமானது தானும் சுகித்துப் பிறருக்கும் சுகத்தையுண்டு பண்ணுவதையும் தெரிந்துகொண்டு அத்வைத பரிசயம்பண்ணி அந்தப்பரிசயத்தா லுண்டாகிற ஜீவன் முக்திச் சுகத்தையடைந்து பிற்பாடு அத்வைதத்தையும் மறந்து ஒரு கற்பனையு மில்லாமற் சொயமாயிருக்க வேண்டியதற்கு யுக்தியென்னவென்றால்:—சிசுனத்தையும் விருஷணத்தையும் போல அறியத்தக்கது. அதாவது:—பாகத்தியாக லக்ஷணையினாலேயே மோக்ஷசுகங் கிடைக்குமென்று சுருதிசொல்வதால் ஆரோபமான துவைதவிருஷணத்தை உபேக்ஷித்து அதிஷ்டானத்வைதமான சிசுனத்தைக்கொண்டு நாம் யாரென்ற விசாரரூபபோகத்தாற் பிரஹ்ம யோனியில் சுகிக்கத் தக்கது.

அதாவது:—சிசுனம் அத்வைதம்,விருஷணம்துவைதம்.சிசுனத்தைப்பிடித்தால் சுகம், விருஷணத்தைப் பிடித்தால் துக்கம். விருஷணத்தைப் பலமாய்ப் பிடித்தால் பிராணஹானி, வேதனை, மூர்ச்சை முதலான அனந்ததுக்க முண்டாவது பிரத்தியக்ஷமா யிருப்பதாலும்; இந்த விருஷணம் தொங்குவதால் யாதொரு பிரயோசனமும் காரியசாத்தியமு மில்லாதது போலன்றிச்சிசுனத்தாற்பிரயோசனமும் காரியசாத்திய முள்ளதும் அனுபவமாயிருப்பதாலும்; துவந்துவங்களான ரஜோகுண தமோகுணங்கள் ரூபமாயும் ஆவரண விக்ஷேப ரூபமாயுமிருக்கிறவிருஷணம் இரண்டு விரையாயிருப்பதாலும், கூர்மையில்லாததினாலும்யோனியாகிற பிரஹ்மத்தில் பிரவேசிக்கமாட்டாது. சிசுனமானது சத்துவகுணமாயும் கூர்மையாயும் லேபன சைதன்னியத்தை யுடையதாயும் ஏகாக்கிரமாயு மிருப்பதால், இதுவே பிரஹ்ம யோனியிற் பிரவேசித்துச்சுகிக்கும். விருஷணம் தானும் சுகிக்காமற் பிறரையும் சுகிப்பிக்காம லிருப்பதுபோலவன்றி, சிசுனம் தானும் சுகித்துப் பிறரையும் சுகிப்பிப்பதாலும், பீஜம் விருத்தியானவிடத்திற் சிசுனம் சங்கோசப்படுவதும் சிசுனம் விருத்தியானவிடத்தில் விருஷணம் சங்கோசப்படுவதாலும், அப்படி விருஷணம்விருத்தியானால் மகாரோகத்துக்குமூலமென்று தெரிந்துகொண்டு துவைதமாகிற விருஷண விருத்தியை நிவர்த்திக்கிறதற்காக குருவாகிற வைத்தியரிடத்திற்போய் அவர் அனுக்கிரகமாகிற அவுஷதம் வாங்கிச் சாப்பிட்டுத் துவைத விருத்தியாகிற விருஷண விருத்தியைக் கரைக்க

வேண்டுமென்றும் சொல்லி; இனி இந்தச் சீடனே குருவாகியும் அத்வைதமாகிய சிசுனமாகியும் சிஷ்ய யோனியைத் தேடுதென்றுஞ் சொல்லுகிறார்.

அத்வைதமாகிற சிசுனம் விருத்தியாய்ச் சாக்ஷாத்காரமாகிற லேபனத்தை யடைந்த ஞானியாகிற சிசுனம் யோனியாகிற முமுக்ஷுக்களைத் தேடும். முமுக்ஷுக்களாகிற யோனிகளும் தாபத்திரயங்களாகிற தினவெடுத்து அதினால் வேதனையுண்டாய் அந்த வேதனையைத் தீர்த்துக்கொள்ளக் குருவாகிய சிசுனத்தைத்தேடும். அப்படித்தேடிவந்து அடைந்தவுடன் இரண்டும்சேர்ந்து விசாரணையாகிற போகத்தைச்செய்து ஞானமாகிற புத்திரனையும் பெற்று சதா விசாரமாகிற போகத்தைச்சதா திருப்தியாய்ச்சுகித்து வாழும்பொருட்டு அத்வைத சுவரூபியாகிய குருவாகிற சிசுனத்தை முமுக்ஷுவாகிறயோனி சதா சேர்ந்திருக்குமேதவிர நிமிஷங்கூட என்னமாய்ப் பிரிந்திருக்கும்? ஆகையால் துவைத ரூபமான பிரபஞ்சத்தை மறந்து அத்வைத ஆத்ம சுவரூபத்தையே பரிசயம் பண்ணத்தக்கது. இப்படிக் குரு சிஷ்யர்களாகிற யோனிலிங்கங்கள் விசாரமாகிற போகம் செய்யும்போது துவைதமாகிற விருக்ஷணம் தோன்றிக்கொண்டிருந்தாலும், விசாரபோகத்துக்குத் தடையில்லாமலிருப்பதாலும், அந்த அவசரத்தில் இந்தத் துவைத விருக்ஷணமிருந்தும் இல்லாததுபோலவே தோன்றும். விசாரமாகிற போககாலத்திற் சிஷ்யயோனியா லுண்டாகிற சத்துவ விருத்தியாகிற சோணிதத்திற் குருபதேசமாகிற சிசுனத்தி லிருந்துண்டாகிற கிருபையாகிற சுக்கிலம் சேர்ந்து ஞானமாகிற கருத்தரிக்க வேண்டியிருப்பதால் எப்போதும் குரு சிஷ்யர்களுடைய சங்கமானது நிமிஷங்கூடப் பிரியாமலும், அந்தச் சங்கத்துக்கு யாதொரு மூடசங்கதிகளாகிற விக்கினங்கள் தடையாக யிருக்கின்றனவோ அவைகளை யெல்லாம் திருணம்போல நிவர்த்திக்கிறதற்காகவே உபநிஷத்துக்களில் "சாந்தி! சாந்தி! சாந்தி!" யென்று மங்களாசரணை மூன்றுதரம் முதலிற் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் அத்துவிதமான ஞானக் கண்ணையுடைய ஞானி எப்போதும் தன்னையும் தன்னிடத்தில் ஆரோபமாய் அன்னியம்போலத் தோன்றுகிற ஜகத்தையும் அறிந்துகொண்டிருப்பனென்றறி.

ஏ குரோ! சுழுப்தியில் அஞ்ஞானி தமோகுணத்தால் மூடப்பட்டுப்போனபடியால் தன்னையும் அன்னியங்களையும் அறியவில்லையென்று சொன்னதுபோல ஞானியும் சுழுப்தியில் அப்படித் தன்னையும் அன்னியர்களையும் அறியாமலிருப்பது சரியாயிருப்பதால் ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் பேதமேதென்கிற சங்கைக்குத்தரம்—கண்தெரிந்தவன் தெரியாதவன் இருவரும் இருட்டில் தன்னையும் பிறரையும் அறியாமலிருப்பது சரியானாலும் தீபம் வந்தவுடன் கண்ணுள்ளவன் தன்னையும் தன்னால் அறியப்படுகின்ற விஷயங்களையும் அறிவது போலக் கண்ணில்லாதவன் பிணம்போல இரண்டு காலத்திலும் ஒரு படித்தாய் தெரியாமலிருப்பதுபோலும்; ஞானி அஞ்ஞானி இருவரும் சுழுப்தியில் அறியாமையிற் சரியானாலும் விழித்த பிற்பாடு ஞானி தான் சாக்ஷி தன்னால் அறியப்படு

கிற ஜகத்துப்பொய் யென்று தெரிந்துகொண்டிருப்பதும், அஞ்ஞானி அப்படித் தெரிந்து கொள்ளாமலிருப்பதுமே இருவருக்கும் பேதமென்றறியத் தக்கது.

## 86 - வது தரங்கம்.

[அ - கை] ஒரு ஜீவனாகிய பெண் சாதன சாத்தியங்களாயிருக்கிற ஞானப் பியாசத்தால் அடைந்த ஞானத்தையும் ஜீவன் முக்தி விதேகமுத்தியையடை கிறதையும் கன்னிகையானவள் பசியைப்போக்கச்சமயலேயும்போஜனத்தையுஞ் செய்து நாயகனுடன் சேர்ந்து வாழுகிறதாயிருக்கிற திருஷ்டாந்த மூலமாய் அறிவிக்கப்படுகிறது. அதாவது:—ஜனன மரணமாகிற பசியோடேகூடித் தபித் துக் கொண்டிருக்கிற ஜீவனாகிய கன்னியானவள் தத்துவ ஞானமாகிற அன் னுதிகளைப் புஜித்து, அந்த ஜனனமரணமாகிற பசியைப்போக்கி நித்திய திருப்தி யடைவதற்கு, முதலில் அன்னம் முதலானதைப் பசனம் பண்ணுகிறதற்கு அநேக சாதனங்கள் வேண்டியிருப்பதற்குள்ளே முதலாவதான அடுப்பில்லா ததுபோல அறுவகைப் பிறவிகள் அதில் மனுஷசரீர மொன்றுமே அடுப்புப் போலாம். அப்படி மனுஷசரீரமாகிற அடுப்புக் கிடைத்தபோதிலும் அன்ன தானமில்லாத சத்திரங்களிற் போடப்பட்டிருக்கிற அடுப்புப்போலப் பிரயோ சனமற்றுப் போகுமாகையால்; மேற் சாதனங்கள் சரியாய்க்கிடையாததினாலே யாதொரு ஜீவர்களாகிற கன்னிகைகளும் ஞானத்தை அடையவில்லை. அதில் அபூர்வமாய் ஒரு கன்னி நிஷ்காமிய கர்மமாகிற ஊத்துப் போட்டிறைத்து, அதினால் தெளிந்த சித்த சுத்தியாகிய சுத்த ஜலத்தை ஈசன் கிருபையாகிய கடத் தில் எடுத்துவந்து, சத்துவாந்தக்கரணமாகிற உலைவைக்கிற பாத்திரத்தில் விட்டு, சிஷ்யனுடைய மனதாகிற விறகில் குரு கிருபையாகிற அக்கினியை மூட்டி, அவர் கடாக்ஷத்தினால் கிடைத்திருக்கிற நித்தியாநித்திய வஸ்து விவேகமென்கிற அரிசியை வைராக்கிய மென்கிற களைகளை நிராசை யாகிற கையால் களைந்தெடுத் தத் தண்டுலத்தைச் சித்தபரிபாகமாகிற காய்ந்த உலைநீரோடே கூடிய சமமாகிற அந்த உலையில் போட்டு, அந்தப் பாத்திரத்திலிருக்கிற தசேந்திரியங்களாகிற ஒட்டைகளால் ஒழுகி அக்கினி அணையாமலிருப்பதற்காக தமமாகிற ஒழுக் கடைத்து,கருமங்களாகிறநாய்நரிகள்வராமலிருப்பதற்காகஉபரதியாகிற கதவை மூடி, கர்மங்களாகிற காற்றினால்கொண்டுவந்து தள்ளப்படுகிற சுகதுக்கங்களாகிற செத்தை குப்பைகள்வந்து விழாமலிருப்பதற்காக திதிக்ஷையாகிற மேல்மூடியால் மூடி, சிஷ்யனுடைய மனசாகிற விறகிலிருக்கிற அசிரத்தையாகிற ஈரமிருந்து அக் கினியைச் சுவலிக்கவொட்டாமற் பண்ணுவதால் சிரத்தையாகிற ஓமக்குழலால் குருபக்தியாகிற ஊதல் ஊதி, காமாதி வாசனைகளாகிற காக்காய் முதலானதால் இவன் மனசாகிறவிறகு கலைக்கப்பட்டிருப்பதால்சமாதானமாகிறதடியால் அவை களை அடித்து விரட்டி, மேல்கீழாய்ப் பேதப்பட்டிருக்கிற அந்த மனசாகிற விற கை ஒன்றுசேர்த்து எரிக்கும்போது முமுக்ஷுத்துவமாகிற கொதி கிளம்பின வுடன்; தனக்குப் பக்குவம் பார்த்து வடிக்கச்சக்தி யில்லாததினால் குருவாகிய

தாயைக் கூப்பிட்டுக் கொண்டோடிவந்து அழுது அம்மா ! உலையில் போட்ட விவேகமாகிற அரிசி முமூக்ஷுத்துவமாகிற கொதி கிளம்பிவிட்டதால் தாமத மன்றியில் வந்து பதம்பார்த்து வடித்து சமயல் பண்ணிப்போட்டு என்பசியைத் தீரம்மாவென்று பிரார்த்திக்கும்போது, குருவாகிய தாயும் இரங்கிவந்து உபதேச மாகிற கையிலிருக்கிற ஷட்விதலிங்க தாற்பரியமாகிற கரண்டியால் அந்த அன்னத்தைக்கிளறி, சிரவணமாகிற வடித்தலைச்செய்து பரோக்ஷ ஞானமாகிற பக்குவம்பார்த்து இரக்கி இந்த ஞானன்னத்தை மட்டுஞ் சாப்பிடத் தடையான சமுசய பாவனையாகிற அன்னத்துவேஷம் இந்தப் பெண்ணுக்கு வந்திருப்பதை அறிந்து அதை நிவர்த்தித்து, ஞானனுபவம் பண்ணுவதற்குச் சாதனமான சொப்பனதிருஷ்டாந்தம் முதலான அநேகயுக்திகளாகிற வெஞ்சனங்களுக்கு மைத்திரி கருணை முதிதை உபேக்ஷைகளாகிற உப்புப்புளிப்பு உறைப்பு தித்திப்பு முதலான காரசாரங்களைச்சேர்த்து மனனமாகிற கறி காய் குழம்பு பாயசம் முதலான வெஞ்சனங்களையும் சமயல்பண்ணி யிறக்கி, நிதித்தியாசனமாகிற இலை போட்டு சிரவணமாகிற அன்னத்தையும் மனனமாகிற அவ்வெஞ்சனத்தையும் பரிமாறி, பிரஹ்மாகார விருத்தியாகிற நெய்யைவிட்டு சந்ததத்தியானமாகிற கையால் ஒன்றாய்ப்பிசைந்துச் சமாதியாகிற வாயில் போடும்போது; சுழுப்தியா கிற இருட்டுவந்து மூடவும், விக்ஷேபமாகிற காற்றானது விருத்திச் சலனமாகிற மண் முதலானதைக் கொண்டுவந்து போடவும், கஷாயமான செத்தை குப்பை கள் வந்து விழவும், ரசாசுவாதமாகிற பாட்டுக்கேட்க வெளியிலோடவும், நிரா காரமாய்த் தோணுகிற பயமும், எதிரிட்டறியும்படியான பதார்த்தமில்லாத சூன்னியத்துவமும், தெய்வீக விக்னமாகிற மின்னல் ஒளியும், பௌதீக விக் கினமாகிற ஜனங்கள் கதவை யிடிக்கிறதும், ஆத்தியாத்மீக துக்கமாகிற மென் னியில் முள்ளடைத்துக்கொண் டிருக்கிறதும், ஆலசியமாகிற விளையாட்டாசை யும், துர்வாசனைகளாகிற துட்ட கன்னிகைகள் இவளை விளையாட வெளியில் வரக்கூப்பிடுகிறதும், துவைதப்பேய்வந்து கதவைத்தட்டுகிறது முதலான பிரதி பந்தங்களுக்குக் குரு சரண ஸ்மரணமாகிற விபூதியுந்தரித்துக்கொண்டு, அவர் அனுக்கிரகமாகிற பாதோதகத்தையுஞ் சாப்பிட்டு, மேலேசொன்ன விக்கினங் கள் யாவற்றையும் அரை நிமிஷத்திற்கெடுத்து, தடையன்றியிற்செய்யப்பட்ட நிர்விகல்ப சமாதியாகிய போஜனத்தால் வாசனாக்ஷய மனோநாச சஞ்சித கர்மநா சமாகிற பசிதாக வியாதி முதலானதெல்லாம் போய் அபரோக்ஷ ஞானமாகிய திருப்தியுண்டாய் ஜீவன் முக்தியாகிற பலத்துடனிருந்து பிராரப்தாந்தமாகிற திரளுங்காலத்தில் விதேக முக்தியாகிற நாயகனுடன் ஐக்கியபோகத்தை ஒரு நாளும் விடாமற் செய்து கொண்டுவருகிறாள்.

அனுசந்தானம் முற்றுப்பெற்றது.

பிரஹ்மானந்த சற்குரு சரணாரவிந்தோகம் குரவே நம:

---

ஓம் தத்ஸத்.

ஸ்ரீ மத் குரு பிரஹ்மாநந்தஸ்வாமிநே நம:

# அநுபவாநந்த நவநவ உல்லாச
# பிரஹ்மாநந்த யுக்திரத்நாகரம்.

## முதலாவது தரங்கம்.

ஆரோபத்தில் அதிஷ்டாநம் இருக்கும். அதிஷ்டாநத்தில் ஆரோபமிராது:—

பிரபஞ்சத்தில் ஆத்மாயிருக்கிறார். ஆத்மாவில் பிரபஞ்சம் இல்லை. யென்பதற்கு யுக்தி:— குடத்தில் மண் இருக்கிறது, மண்ணில் குடமில்லை; பழுதைப் பாம்பில் பழுதை இருக்கிறது, பழுதையில் பாம்பில்லை யென்பதுபோல ஆரோபத்தில் அதிஷ்டாநமிருக்கும், அதிஷ்டாநத்தில் ஆரோபமிராது யென்றறிக.

[இதுவுமது] சர்வகாரணமான பிரஹ்மத்தின் சச்சிதாநந்தாதி குணங்கள் ஜகத்தில் காணப்படும், ஜகத்தின் அசத்தாதி குணங்கள் பிரஹ்மத்தில் காணப்படாது. [என்பதற்கு யுக்தி.] ராஜாவின் ஆக்ஞை சேவகர்களிடத்தில் காணப்படுவதும் சேவகர்கள் ஆக்ஞை ராஜாவினிடத்தில் காணப்படாதது போலும்; சுழுத்தியில் அநுபவித்த சுகம் ஜாக்கிர சொப்பனத்தில் காணப்படுவதுபோலும் ஜாக்கிரசொப்பனங்களில் யிருக்கிற துக்கம் சுழுத்தியில் காணப்படாததுபோலு மறிக.

[இ - து.] சச்சிதாநந்தத்தோடே கூடியிருக்கிற நாம ரூபத்துக்குத்தான் யோக்கியதையே தவிர நாமரூபமட்டும் தனித்து ஜீவிக்கிற தில்லை. [எ - தி.] ஜீவனில்லாத சரீரம்போலும், மாணியில்லாத மாப்பிள்ளைபோலும், அரிசியில்லாத நெல்லுப்போலும், யோனியில்லாத ஸ்திரீபோலும், புருஷனையல்லாமல் நிழல் தோன்றாததுபோலும், தித்திப்பில்லாக் கரும்புபோலும், அத்தியயனமில்லாத பிராமண்யம்போலும், சாந்தமில்லாத சந்யாசிபோலும், ஞாநமில்லாத வேதாந்திபோலு மறிக. கானலில் பூமியிருக்கும், பூமியில் கானல் ஜலமிராததுபோலும்; சித்திரத்தில் சுவர்யிருக்கும், சுவரில்

சித்திர மிராததுபோலும்; சொப்பனத்தில் தானிருப்பதும், தன்னிடத்தில் சொப்பனமிராததுபோலும்; சாயவர்ணத்தில் சேலையிருக்கும், சேலையில் சாயமிராததுபோலும்; வீட்டில் மர முதலானவை யிருக்கும், மரம் முதலிய வற்றில் வீடிராததுபோலும், கணபதி முதலிய விக்கிரகங்களிற் சிலையிருக்கும், சிலையில் அந்த விக்கிரகாதிகளிராதனபோலும்; பாத்திரங்களில் பித்தளையிருக்கும், பித்தளையில் பாத்திரங்களிராதனபோலும்; ஆயுதத்திலிரும் பிருக்கும், இரும்பில் ஆயுதமிராததுபோலும்; கந்தர்வ நகரத்திலும் நீலாதிவர்ணத்திலும் ஆகாசமிருக்கும், ஆகாசத்தில் அவையிராதனபோலும்; வஸ்திரத்தில் நூலிருக்கும், நூலில் வஸ்திரமிராததுபோலும்; கம்பளியில் மயிரிருக்கும், மயிரில் கம்பளியிராததுபோலும்; கூடையில் ஓலையிருக்கும் ஓலையில் கூடையிராததுபோலும்; சித்திரத்தில் மையிருக்கும், மையில் சித்திரமிராததுபோலும்; செடி கொடி மண்ணை ஆஶ்ரயித்திருக்கும், மண் செடி கொடியை ஆஶ்ரயித்திராததுபோலும்; சரீரம் அங்கத்தை ஆஸ்ரயித்திருக்கும், அங்கம் அதை ஆஸ்ரயித்திராததுபோலும்; கைகால் முதலிய அவயவங்கள் சரீரத்தை ஆஸ்ரயித்திருக்கும், சரீரம் அவைகளை ஆஸ்ரயித்திராததுபோலும்; சப்தம் வாக்கை ஆஸ்ரயித்திருக்கும், வாக்கு அதை ஆஸ்ரயித்திராததுபோலும்; நினைப்பு அறிவை விட்டிராது, அறிவு நினைப்பைவிட்டிருப்பதுபோலும்; சகல வித்தைகளும் புத்தியிலிருப்பதும், புத்திவித்தைகளை விட்டிருப்பதுபோலும்; இந்திரியஞானம் மநசன்றியிலிராததுபோலும், மநதின்ஞானம் இந்திரியா பேக்ஷையன்றியில் விளங்குவதுபோலும், குருவன்றியில் சிஷ்யன் கிருதார்த்தனாகாததுபோலும், சிஷ்யனன்றியில் குரு கிருதார்த்தரா யிருப்பதுபோலும், மாடு முதலிய மிருகமன்றியில் வாலிராதது போலும், வாலின்றியும் மிருகமிருப்பதுபோலும்; தலையின்றி மயிரிராதது போலும், மயிரின்றியும் தலையிருப்பதுபோலும்; லேபநம் சிசுநமின்றி யிராததுபோலும், லேபநமின்றியும் சிசுன மிருப்பதுபோலும்,—உபஸ்தமின்றி பஹிஷ்டை பிள்ளை முதலியன விராதனபோலும், அவை களின்றியும் உபஸ்தமிருப்பதுபோலும்; பிரஹ்மமின்றி ஜகத்திராது, ஜகத்தின்றியும் பிரஹ்மமிருப்பதுபோலு மென்றறிக.

## 2 - வது, தரங்கம்.

வேதஞ் சொல்லுகிற கௌணமித்தியா முக்கியாத்துமாக்களின் தன்மை:—புத்திரனை ஆத்மாவென்று சொல்லுவது உபசாரம், [எ - தி] மானியான புருஷன் இஷ்டன் தன் வீட்டிற்குவந்தபோது இந்த சொத்தெல்லாம் தங்களது தானே யென்று சொல்வதுபோலவாம். பஞ்சகோசங்களைத்தா னென்று சொல்வது - குழந்தைகளுக்கு கல்யாணத்துக்குப் பதிலாக மரப் பொம்மையையும், பணம் காசுக்குப் பதிலாக பளிங்குக் கல்லுகளையும் கொடுப்பது போல அவிவேகிகளுக்கு அநாத்மாவான தேகாதிகளைத் தானென்று சொல்

னுகிறதாம். முக்கியாதிகாரியான முமுக்ஷுவுக்குச் சாக்ஷியே தானென்று சொல்லுகிறது.— யோக்கியனுயிருக்கிற தகுந்தவயதுள்ள பிள்ளைக்கு நிஜமான பெண்ணையும் கல்யாணம் செய்து நிஜமான ரத்நகநகாதிகளையும் கொடுப்பதுபோல வறிக. இன்னும் கௌணாத்மாவுக்கு யுக்தி:— புருஷனைச் சிங்க மென்பதுபோலும், அத்தியயநம் பண்ணிக்கொண்டிருக்கிற சுத்தமான பிரஹ்மச்சாரியை அக்கினியென்பது போலும்; துஷ்ட ஸ்திரீயை யெமனென்பது போலும், அழகுள்ள முகத்தை சந்திரபிம்ப மென்பதுபோலும், அழகுள்ள புருஷனை மன்மதனென்பது போலும், தண்ணீர் பெருகியிருக்கிற கண்மாயைச் சமுத்திரமென்பது போலும், புத்திசாலியைப் பிரகஸ்பதி யென்பது போலும், பொறுமை யுள்ளவளைப் பூமாதேவி யென்பதுபோலும், நன்றாய்ச் சமயல் பண்ணுகிறவனை நளன் பீமனென்பது போலும், நெய்பால் நிறைந்திருக்கிற போஜநத்தை காமதேநு கொடுக்கிறபோஜந மென்பதுபோலும், கொடை கொடுக்கிற தாதாவை கர்நனென்பது போலும், தென்னை மரத்தை கல்பக விருக்ஷமென்பது போலும், பதிவிரதையை அருந்ததியென்பது போலும், புரோகிதப் பிராஹ்மணரை வசிஷ்டமகாரிஷி யென்பது போலும், பொய் சொல்லாதவனை ராமனென்பதுபோலும், அருமைப் பிள்ளையை அரசனென்று பேர் வைப்பது போலும்; ஒத்தைக்கண்ணில்லாதவனைச் சுக்கிராச்சாரி யென்பது போலும், பணமுள்ளவனை ஸ்ரீமானென்பது போலும், சூரனை அர்ச்சுநனென்பது போலும், குடும்பியை சௌபரிமகரிஷி யென்பதுபோலும், புத்திரனை ஆத்மாவென்று சுருதிசொல்வது கௌணமென்றறிக. இன்னும் மித்தியாத்மாவுக்கு யுக்தி:— மூடஜனங்களுக்காக புருஷன் ஸ்திரீ வேஷம் போட்டு ஆடுவதுபோலும், மேல்படியார் களுக்காக விகடகவியானவன் அநேகஜாதியார் பேசுவதுபோலப் பேசுவதும், நாய் நரி பூனை ஆடு மாடுகள் கத்துவதுபோலக் கத்துவதும், குழந்தைகளுக்காக மிட்டாய்க்கடைக்காரன் சர்க்கரை மாவு நெய் முதலியவற்றோடு சேர்ந்திருக்கிற மிட்டாயை அச்சில் விட்டு ஆனை குதிரை நாய்முதல் நடேசன் வரையிலுள்ள ரூபங்களை உண்டு பண்ணிவைத்து வியாபாரம் பண்ணுவதுபோலும், குசால் காரனுக்காகக் காகிதத்தாலும் நெட்டியினாலும் புஷ்பத்தோடு கூடிய ரோஜாச்செடி மல்லிகைச்செடி முதலியன போல உண்டுபண்ணிக் கொடுத்து மயக்குவதுபோலும், ஸ்திரீகள் புருஷர்களை மயக்குவதற்காக மஞ்சள் எண்ணை நகை சந்தனம் பில்லை புஷ்பம் சேலை முதலியவற்றால் தம்வசம் பண்ணுவதுபோலும், ஈசன் மாயையால் தேகத்திரயத்தை உண்டுபண்ணி யிருப்பதை அவிவேகிகள் நானென்றிருப்பதால் அவைகளை மித்தியாத்துமாவென்று விவேகி அறிக.

சுருதிமுமூக்ஷுவுக்கு சாக்ஷியே நீ மற்றது நீயல்லவென்று அதிரகசியமாய் முக்கியாத்துமாவை சொல்லுவதற்கு யுக்தி:— அரசன் மந்திரியினிடத்தில் அந்தரங்கத்தை யெல்லாம் சொல்லுவது போலும், கற்புள்ளவள் கணவனுடைய போகத்துக்காக குஹ்பஸ்தாநத்தைக் காண்பிப்பது போலும், சாஸ்திரிகள்

படிக்கிற பிள்ளைகளுக்குள்ளே தன் சொந்தப்பிள்ளைக்கு மட்டும் வியுத்பத்தி ஞாநம்வரும் வழியைக் காண்பிப்பது போலும், சித்தன் ரசவாத மார்க்கத்தை நம்பிக்கை யுள்ளவனையும் தன்னைவிட்டுப் பிரியாதவனையும், நிராசை யுள்ளவனையு மிருக்கிற சீடனுக்குக் காண்பிப்பது போலும், துரியோதனன் அரக்கு மாளிகை கட்டி, அதில் பஞ்சபாண்டவர்களைக் கிரகப்பிரவேசம் பண்ணி வைக்கும்போது விதுரர், பீமசேனனுக்கு மட்டும் ''இந்தத் தூணைப்பார்'' ரென்று சொன்ன உளவையறிந்து அதைச் சுற்றித் தீப்பட்டெரியும் போது, பீமன் அந்ததூணைக் கீழேதள்ளி அதற்குக்கீழே வைத்திருந்த சுரங்கத்தின் வழியாகச் சகோதரர்களுடன் வெளியேறிப்போன கதைபோலும், துரோணர் அர்ச்சுனனுக்கு மட்டும் ரகசியாஸ் திரத்தை உபதேசித்தது போலும், ராமர் ஹனுமாரிடத்தில் கணையாளி கொடுத்தது போலும், சுருதிமுமுக்ஷுவுக்குச் சாக்ஷியே ஆத்துமாவென்று சொல்லுகிறதென்று அறியத் தக்கது

### 3 - வது, தரங்கம்.

ஆத்துமாவில் ஞாநாஞ்ஞாநம் இரண்டும் பொய்:—

மனதுக்கு வந்திருக்கிற ஆவரணத்து வயத்தையும் அதின் நிவர்த்தியையும், அறியாமையால் நிரம்ஸவஸ்துவிலே அசத்வாவரணம் அபானுவரணம் இரண்டும் அஞ்ஞாநத்தால் தோற்றுகின்றனவென்றும் ஞாநத்தால் நிவர்த்தியாகின்றனவென்றும் சொல்லுவது வாஸ்தவமில்லை. [எ - தி.] இரவில் இருட்டும் பகலில் பிரகாசமும் கண்ணுக்கென்றறியாமல் ஆகாசத்தில் இராத்திரியால் இருட்டும் மறைப்பும் வந்தனவென்றும் சூரியனால் அவை நிவர்த்தியாயினவென்றும் சொல்லுவதுபோல வறிக.

[இ - து.] ஆத்மாவினிடத்தில் அஞ்ஞாநம் வந்ததாயும், அது ஞாநத்தால் போவதாயும் சொல்லுவது அதிகாரியைப்பற்றிச் சொன்னதே யல்லாமல் உண்மையில்லை. [எ - தி.] ஆகாசத்தில் கருப்பு வந்திருந்ததை கிட்டப்போய்ப் பார்த்து நிவர்த்தித்தானென்பது போலும், இருட்டில் தோன்றின பேயை மந்திரவாதிவந்து விரட்டினானென்பதுபோலும், சொப்பனத்தில் பசி வந்ததும், அதைத்தீர்க்க அந்நம் புஜிப்பதும் பொய்யாவதுபோலு மறிக.

[இ - து.] தன்னிடத்தில் ஆரோபமான அஞ்ஞாநத்தினுடையவும் அபவாதமான ஞானத்தினுடையவும் சம்பந்தம் தனக்கில்லை. [எ - தி.] ஆகாசத்தில் தோன்றுகிற மேகத்தினுடையவும் அதைக்கெடுக்கிற வாயுவினுடையவும் சம்பந்தம் அதற்கில்லாததுபோலும், கண்ணுக்குத் தோன்றுகிற இருட்டினுடையவும் அதைக் கெடுக்கிற வெளிச்சத்தினுடையவும் சம்பந்தம் கண்ணுக்கில்லாததுபோலும், தன்னிடத்தில் தோன்றுகிற சொப்பன சுழுத்திகளுடையவும் அதின் நிவர்த்திகளுடையவும் சம்பந்தம் தனக்கில்லாதது போலும், சூரிய சன்னிதானத்திலிருக்கிற வஸ்துக்களுடைய உற்பத்தி நாசங்களை சூரியன் அடையாததுபோலும், பூமியில் தோன்றுகிற கானல் ஜலத்தி

னுடையவும் அது தோற்றுமையினுடையவும் சம்பந்தம் அப்பூமிக்கில்லாதது போலவும் அறிக.

[இ - து.] ஆத்மாவினிடத்தில் ஜகத்கல்பனையாவதற்கும், அபவாதமாகிற தற்கும் யுக்தி:— சிலேட்டுப் பலகையில் எழுதி அழிப்பது போலவறிக. இன்னும் படிகத்தினிடத்தில் நீலாதிவர்ணமேறியிருப்பதுபோலத் தோற்றுவதும், பிற்பாடு அந்த வர்ணங்கள் அந்த வஸ்துக்களை யெடுத்த பின் அதனிடத்தில் காணுமற்போவது போலும், காமாலை வந்தவனுக்குச் சங்கில் மஞ்சள் வர்ணம் தோற்றுவதும், காமாலை தீர்ந்த பின் அதில் அந்த நிறம் காணுமற்போவது போலும்; சமுத்திர ஜலத்தில் காற்றினுல் அலை நுரை குமிழிகள் தோற்றுவதும் காற்று ஓய்ந்தால் அவை காணுமற்போவதுபோலும்; நித்திராசக்தியால் தன்னிடத்தில் ஜீவேசுவர ஜகத்கல்பனைகள் தோற்றுவதும், அச்சக்தி நிவர்த்தியாகும்போது அந்த கல்பனுவஸ்துக்கள் காணுமற்போவது போலும்; ஏழரைநாட்டுச் சனி பிடித்த பிராமணன் கையிலிருக்கிற புஷ்பக்குடலையையும், தீர்த்தச் செம்பும், ராஜ குமாரர்களுடைய இரண்டு தலைகளை அறுத்துக் கையிற் பிடித்து வருவதுபோலும்; அச்சனி விட்டபின் உள்ளபடியாய்த் தோன்றினகதைபோலும்; தசமனுக்கு தசமன் ஆற்றோடேபோனது போலத்தோற்றினதும், வழியிற்போகிறவன் எண்ணி நீயே பத்தாமவனென்று காண்பித்த பின் தசமனுன தன்னைச் சாகாமற் கண்ட கதை போலும், ராஜகுமாரனுக்கு வேடத்தனம் வந்திருந்ததும், ஜோசியர் மூலமாயது நிவர்த்தியானது போலும், படிக மண்டபத்தில் நுழைந்த நாய்க்கு அநேகம் எதிரி நாய்கள் யிருப்பதுபோலத் தோன்றியும், அந்த மண்டபத்தை விட்டு வெளியில்வந்த பின் அந்த ஒரு நாயைத் தவிர மற்றநாய்கள் தோற்றுமற்போவது போலும், பிராம்மணனுக்குச் சுராபாநத்தாற் சண்டாளத்துவம் வந்ததுபோலத் தோன்றினதும், அந்தச் சாராயத்தின் வெறி தீர்ந்த பின் சண்டாளத்துவம்போய் நான் பிராஹ்மணனென்ற ஞாநம் வருவதுபோலும், வெறி பிடித்தவனுக்குத் தன் சுபாவ ஞாநமில்லாமல் ஈனத் தொழில்களை செய்துகொண்டு அலைந்து திரிந்து சுழன்று மயங்கிக் கொண்டு அப்பிரஸ்து தப்பிரலாபங்களை உளறிக்கொண் டிருக்குங் காலையில், ஒரு சித்தன் கிருபையால் அந்த வெறி தீர்ந்து சுபாவஞாநத்தை யடைந்தது போலும், இருக்கின்றதே தவிர ஆத்மாவினிடத்தில் பரமார்த்தமாய் ஒரு அக்ஞாநமாவது ஆவரணமாவது விக்ஷேபமாவது சம்சார பந்தமாவது யாதொன்றும் வரவுமில்லை போகவுமில்லை. இப்படிப்பட்ட ஞாநமின்மையே சம்சார பந்தமாயிருந்து, இப்படிப்பட்ட ஞானம் வந்த மாத்திரத்தில் சம்சாரபந்தம் நிவர்த்தியானது போலத்தோற்றுகிறதா கையால் இதுவே சித்தாந்த மென்றறியத் தக்கது.

## 4 - வது, தரங்கம்.

பிரஹ்மத்துக்கே ஜீவேசுவர நாமங்கள் வந்திருக்கின்றன:—

பிரஹ்மத்துக்கே மாயையால் ஈசனென்றும், அவித்தையால் ஜீவனென்

றும், நாமங்கள் வந்திருக்கின்றன. [எ - தி.] ஒரு புருஷனுக்கே பெண்சாதியால் நாயகனென்றும், பிள்ளையால் தகப்பனென்றுஞ் சொல்லப்படுவது போலும், ராஜவேஷத்தால் ராஜனென்றும், தோட்டி வேஷத்தால் தோட்டியென்றுஞ் சொல்லப்படுவதுபோல வறிக.

[இ - து] ஒரு வஸ்துவைத்தானே சில இடங்களில் ஈஸ்வரனென்றும், குருவென்றும் தானான பிரஹ்மமென்றுஞ் சொல்லுவதாற் பேதமென்று சங்கைவர, ஒரு புருஷனுக்கு அன்னபானாதி கொடுத்து வாலிபத்தில் ரக்ஷிப்பதால் பிதாவாகிய ஈஸ்வரனென்றும், குமாரப்பருவத்தில் சிக்ஷித்து வித்தியாப்பியாசமாகிற ஞானோபதேசம் செய்யும்போது குருவென்றும், பிராப்தனாய்ச் சகலத்தையும் தானாய் வகிப்பதால் பிதாவாகிய குருவே பிரஹ்மமாவதுபோலுமறிக.

[இ - து] தனக்கே ஜீவத்துவமும், ஈஸ்வரத்துவமும், பிரஹ்மத்துவமும் வந்திருக்கிறது. எப்படியெனில்:—ஜாக்கிர சொப்பனத்தில் மனதோடு சேர்ந்து கர்த்தாவாய் அலைவதால் ஜீவத்துவமும், சுழுத்தியில் மாயையோடு சேர்ந்து சுகத்தை புஜிப்பதால் ஈஸ்வரத்துவமும், துரியத்தில் வித்தையோடு சேர்ந்து அறிவாயிருப்பதால் பிரஹ்மத்துவமும் வருகிறது. [எ - தி.] ராஜகுமாரன் பைத்தியத்தால் உள்ளிலும் வெளியிலும் அலைவது போலவும், ஸ்திரீ மயக்கத்தாற் சுகமாய்க் கிடப்பதுபோலவும், பைத்திய மயக்கங்கள் தீர்ந்து பிரக்ஞையோடு செங்கோல் செலுத்துவதுபோலுமறிக.

[இ - து.] ஒரு புருஷனுக்கு உபநயநஞ்செய்வதாற் பிரஹ்மச்சாரித்துவம் வருவதுபோலத்தான் கர்த்துருத்துவத்தால் ஜீவத்துவத்தையும், அதன் பின் ஒரு ஸ்திரீயை விவாகம் செய்து அவளோடு ஐக்கிய போகம் செய்வதால் கிரகஸ்தத்துவம் வருவதுபோல மாயையோடு சேர்ந்து சுகித்துக்கொண்டு சர்வக்ஞனாய்ச் சகல பிராணிகளுடைய ஹிருதயத்திலிருந்துக்கொண்டு அவரவர்களுடைய கர்மப்படி சுக துக்கங்களை அநுபவிக்கும்படி பிரேரணை செய்வதால் ஈஸ்வரத்துவத்தையும், அதன் பின் ஸ்திரீ முதலான சகல சம்சாரத்தையும் சிகாயக்ஞோபவீதம் தரிப்பதால் சொல்லப்பட்டிருக்கிற சகல கர்மங்களையும் விட்டு சந்நியாசியாவது போல மாயா சம்பந்தங்களையும், அதனாற் செய்யப்பட்ட சிருஷ்டி ஸ்திதி சம்மாரதிரோதான அநுக்கிரக முதலான பஞ்ச கிருத்தியங்களையும் விட்டுத் துரிய பதவியான சாக்ஷித்துவத்தையும் அடைந்து நித்தியாநந்தமாய் வாழுகிறானென்றறிக.

[இ - து.] ஒரு புருஷன் உத்தியோகத்துக்காக வாலிபத்தில் இங்கிலீஷ் முதலான படிப்பைப் பள்ளிக்கூடத்தில் படித்துப் பரீக்ஷைகொடுத்து பாசு பண்ணுவதுபோல தர்மார்த்தகாம மோக்ஷங்களைக் குறித்துச் சரியை கிரியை யோகம் ஞானங்களைப் பழகுவதால் ஜீவத்துவமும், பின்பெரிய உத்தியோகத்தைப் பெற்றுச் சகலவிதமான அதிகாரங்களையும், பிரபுத்துவத்தையும், வரும்

படிகளையு மடைந்து குடிகளை சிக்ஷாரக்ஷைசெய்துவருவதுபோல தானே சுத்தமாயையை யடைந்து சர்வக்ஞத்வம் முதலான சத்குணங்களையும்பெற்று ஜீவர்களை சிக்ஷாரக்ஷை செய்கிற பிரபுத்வத்தையும் பெற்றுச் சகலராலும் பிரார்த்திக்கப்படுகிற ஈஸ்வராநந்தத்தையும் அனுபவித்து வருவதால் ஈஸ்வரத்துவமும், அதன்பின் அந்த உத்தியோகத்தையும் ராஜிநாமா கொடுத்துவிட்டுத் தன்வீட்டிற் சுகமாயிருப்பது போலதானே மாயா சம்பந்தங்களையும் அதிலுள்ள பஞ்ச கிருத்தியத்தையும் விட்டு அசங்கோதாசீனனாய்த் தானே தானாயிருக்கிற பிரஹ்மத்வமும் உண்டாகிறதே தவிர, பரமார்த்தமாக இவ்வளவுகல்பனையும் இல்லவேயில்லை யென்றறியத்தக்கது.

## 5-வது. தரங்கம்.

ஆத்மாவுக்கு விருத்திவியாப்தி யுண்டு, பலவியாப்தியில்லை:—

ஒருவன் சமாதிபண்ணினாலும் விருத்திவியாப்தியுண்டு, பலவியாப்தியில்லை. [எ - தி] காலுள்ளவன் மரத்திலேறினாலும், முடவனாலேயே பழத்தைப் பறிப்பதுபோலும், கையால் ஸ்திரீயைப்பற்றி இழுத்தாலும் சிசுநத்தாலேயே போகம்பண்ணுவது போலுமறிக.

[இ - து.] ஆத்மாவை யறிவதற்கு விருத்தி வியாப்தியுண்டு, பல வியாப்தியில்லை. பல ரூபனான ஜீவனிருந்தாலும் பிரயோஜனமில்லை. [எ - தி.] சுமங்கிலிப் பிரார்த்தனைக்குச் சாப்பிடத் தாய் மட்டும்போதும் முலை குடிக்கிற குழந்தை கூட வந்தாலும் சாப்பிடப் பிரயோஜன மில்லாதது போலவறிக.

[இ - து.] சமாதியில் விருத்தி வியாப்தி மட்டுமே தவிர பல வியாப்தியில்லை. [எ - தி.] தாயானவள் பெண்ணுக்குக் கூடவேயிருந்து சகல அலங்காரமும் பண்ணிப்படுக்கை வீட்டிலிருக்கிற மாப்பிள்ளைகிட்டக்கொண்டு போய்ப் பெண்ணை விட்டுத் தான் பின்னுக்கு வாங்குவதுபோலும், வநதேவதை தன் குமாரனை மரத்தின்மேலிருக்கிற தாரூர ரிஷியினிடத்திற் கொண்டு போய் விட்டு அவள் கீழேயிறங்கிப்போனதுபோலு மறிக.

[இ - து.] சாதந சதுஷ்டயத்தால் ராஜஸதாமஸங்கள் மாற்றப்பட்டிருக்கிற சுத்த சத்துவ அந்தக் கரணத்தினாலேயே பிரம்மாநுபவம் பண்ணவேண்டும். [எ - தி.] கையில் பட்டிருக்கிற சகதி முதலான அசிங்கியத்தைச் சுத்த ஜலத்தால் கழுவப்பட்டபின் அந்தக் கையினாலேயே போஜநம் செய்யவேண்டியது போலவறிக இதன் கருத்து. ரஜோகுண தமோகுணமே ஜீவத்துவம்.

[இ - து.] ஆத்துமாவினிடத்தில் விருத்திவியாப்தி யுண்டு. விருத்திக்கும் ஆதாரமான ஜீவனுக்கு வியாப்தியில்லை. [எ - தி.] யோனியாகிற பிரஹ்மத்திற் சிசுநமாகிற விருத்தி நுழைவதால்போக சுகமாகிற ஜீவன் முக்தியையும் தத்துவக்ஞாநமாகிற புத்திரனையும் பெறக்கூடும். சிசுநத்துக்கு ஆதார

மாயும் சேர்ந்திருப்பதாயுமிருக்கிற விருஷணமாகிற ஜீவன் விருத்தியாகிற சிசுநத்தோடு சேர்ந்திருந்தாலும் பிரஹ்மயோனியில் விருத்தியாகிற சிசுநத்துக்கே வியாப்தி கிடைக்குமே தவிர விருஷணமாகிற ஜீவனுக்கு பிரஹ்ம யோநியில் வியாப்தி கிட்டாதென்றறிக.

[இ - து] பிரஹ்மமாகிற சரீரத்தில் ஜீவனாகிற கம்பிற் சேர்ந்திருக்கிற விருத்தியாகிற ஈட்டிபாயுமே தவிர ஜீவனாகிற கம்புபாயா தென்றறிக. ஒரு புருஷனுடைய மனதில் அந்நியனாற் செய்யப்பட்ட ஸ்துதி நிந்தா ரூபமான சப்தம் மட்டும் பாயுமே தவிர வாக்கிந்திரியம் பாயாததுபோலும், ஒரு சக்கிர வர்த்தியினுடைய ஆக்ஞாரூபமான சட்டம் எங்கும் வியாபிக்குமே தவிர அந்த சக்கிரவர்த்தி யெங்கும் ஒரே காலத்தில் வியாபியாததுபோலு மறிக.

[இ - து.] சிசுநமும் சுக்கிலமும் ஒன்று சேர்ந்து போகித்தாலும் கெர்ப்ப கோளகத்திற் சுக்கிலம் மட்டும் சேர்ந்து சிசுநம் நிர்ஜீவனாய் வெளியில் வருவது போல ஜீவனும் விருத்தியும் ஒன்று சேர்ந்து யிருந்தும் ஜீவனுக்குள் விருத்தி அடங்கியிருந்தும் ஜீவனும் விருத்தியும் சேர்ந்து பிரஹ்மாப்பியாசமாகிற போகத்தைச் செய்தாலும் பிரஹ்மமாகிற கெர்ப்பகோளகத்தில் விருத்தியாகிற சுக்கிலம் விழுந்த மாத்திரத்தில் சிசுநமாகிற ஜீவன் நிர்ஜீவனாகிச் சத்தை யன்றி யிற் கீழே தலை சாய்ந்து விழுகிறானென் றறிக.

[இ - து.] ஒரு ராஜன் யுத்தத்துக்குப் போனாலும் அவனுடைய பாணங் களே சத்துருக்கள் பேரில் விழுந்து அதம் பண்ணுவதுபோல ஜீவனாகிய ராஜா பிரஹ்மாப்பியாசமாகிற யுத்தத்தில் விருத்தியாகிற பாணத்தைக் கொண்டு எதிரியாகிற பிரஹ்மத்தை அடிக்கிறானே தவிர நேரே யிவன் அடிக் காதது போல வறிக. கையில் தீபங்கொண்டு போனாலும் இருட்டைப்போக் கடித்துப் பதார்த்தங்களை விளக்கு விக்கிற சக்தி தீபத்துக்கே தவிரக் கைக்கில் லாததுபோல ஜீவனாகிற கையாற் சம்பாதிக்கப்பட்டிருக்கிற அகண்டாகார விருத்தியாகிற தீபமே அக்ஞானாந்த காரத்தைப் போக்கடித்துச் சச்சிதாநந்த மாகிற பதார்த்தத்தை விளக்கு விக்கிறதே தவிர ஜீவனாகிற கையால் முடியாது. இப்படியே அநுபவத்திலும் சமாதியில் பிரஹ்மத்தில் விருத்தி மாத்திரம் சேரு கிறது. சுருதியும் தியானிக்கிறவன் தியானமிரண்டுமிழந்து தியானிக்கப்படுகிற வஸ்து மாத்திரமாய் மிஞ்சியிருக்கிற விருத்தியே சமாதி யென்று சொல்லி யிருப்பதாலும், சொரூபத்தில் விருத்தி வியாப்தியே யிருக்கிறது. பல வியாப்தி ஒருகாலுமில்லை யென்றறிக.

## 6 - வது, தரங்கம்.

ஆத்மாவியாபகம். அசங்கர்:— ஆகாசம் வியாப்பியம் சத்தான ஆத்மா வியாபகம். என்பதற்கு சுருதியுக்தி அநுபவம் என்னவெனில்:— ஆத்மாவி லிருந்து ஆகாசாதிக ளுண்டாய் ஆத்மாவிலேயே லயிக்குமென்று சொல்லுகிற

சுருதியேயாம். சத்து வாயு முதலியவற்றில் இருக்கிறது இருக்கிறது என்றும் ஆகாசம் அப்படிச் சொல்லப்படவில்லை யென்றும் பஞ்சதசியிற் சொல்லியிருக்கிற யுக்திக்கு இவடத்தில் சொல்லுகிற யுக்தியாவது:— கோபுரம்முதல் அகற்சட்டிவரை மண்ணென்று சொல்லப்படுகிறது போலும். அநுபவத்தில் அவஸ்தாத்திரயத்திலும் தான் அநுஸ்யூதனுயிருப்பதேயாம்.

[இ - து.] ஆத்மாவிடத்தில் மாயை ஏகதேசமாய்த் தோற்றும். [எ - தி.] ஆகாசத்தில் நீலாதிவர்ணங்கள் ஏகதேசமாய்த் தோற்றுவது போலவறிக.

[இ - து] ஆத்மா ஸூக்ஷ்மமாயெங்கு மிருக்கிறர். [எ - தி.] மணலுக்குள்ளே ஜலமும் கட்டையில் அக்கினியும், பாலிலே வெண்ணெய்யும், எள்ளுலே எண்ணெய்யும் கரும்பிலே ரசமும், மிளகாயில் உறைப்பும், தேங்காயிலே பாலும், எப்படி நிறைந்திருக்கிறதோ அப்படிப்போல ஆத்மாசர்வத்திலுமிருக்கிறரென்றறிக.

[இ - து] பஞ்சகோசத்துக்குள் ஆத்மாயிருந்தும் அதிற்சம்பந்தப் படவில்லை. [எ - தி] தாமரைப்பூவிற்குள் ளிருக்கிற காய் அந்த இதழ்களில் சம்பந்தப்படாதது போலவறிக.

[இ - து.] ஆத்மாவுக்குச்சதா அசைவற்ற வியாபகத்தன்மை யிருக்கிறது [எ - தி.] மகாமேருவைப் போலவறிக.

[இ - து] ஜாக்கிரமுதல் மோக்ஷா வஸ்தைவரை ஆத்மாவாகிய தான் அந்த அவஸ்தைகளோடு சம்பந்தப்பட்டவன் போலேதான். [எ - தி.] கக்ஷிக்காரன் பிராதுகொண்டு வந்ததுமுதல் தீர்ப்பாகும் வரை வக்கீல் சம்பந்தப் பட்டது போல் தோற்றுவது போலவறிக.

[இ - து] மனதுக்கும் ஆத்மாவுக்கும் சம்பந்த மில்லாதபோது மனதின் குணங்களான ராகாதிகளோடு ஆத்மாவுக்குச் சம்பந்தம் வரப்பிரசக்தியே யில்லை. [எ - தி.] (லேபநமில்லாத சிசுநம் யோனியோடு சம்பந்தப்படாதபோது சோணிதம்கற்ப உற்பத்தி முதலானதோடு சம்பந்தமில்லை என்பதிற் கேழ்க வேண்டியதில்லாதது போலவறிக.)

[இ - து.] ஆத்மாபரம கிருபாகரர். எதனுலென்றல் ஏழைமுதல் பிரபுவரையிலுள்ள ஜீவர்களுக்குச் சுழுத்திச் சுகத்தைச் சமமாய்க் கொடுப்பதாலும் அந்தச்சுகத்தை ஜாக்கிர சொப்பனத்தில் அழித்துவந்தவனுக்கு மறுபடி தினந்தோறும் வருத்தமன்றியில் சுழுத்தியிற் சுகத்தைக் கொடுப்பதாலும், வெகுநாள் அவரைமறந்து கர்த்தாவென்று சொன்னவன் குரு அநுக்கிரகத்தால் தான் அகர்த்தாவென்று நினைத்தமாத்திரத்தில் சாந்நித்திய மாவதாலும், சிசுப்போல் சம்சார கூபத்தில் கிடந்து தபிக்கிறவர்களைத் தாய்போல் குருரூபமாய் வந்து கரையேற்றி விப்பதாலும் பரம கிருபாகரரென்று சொல்லப்பட்டது: ஒருபிரபுவின் பிள்ளைவீட்டிற்கு வந்தபோது அவனுக்கு வேண்டியமட்டும் சொத்

துக்களையும் சுகத்தையும் அவர் கொடுப்பதும், அவன் அதைவாங்கிப் பட்டணத்துக்குப்போய் தாசிச்செலவுச்செய்து ஆரோக்கியத்தையும் ஐஸ்வரியத்தையுமிழந்து ரோகம் கடன்களுடன் அலறிவந்தவனுக்கு அவற்றினை நிவர்த்தித்து முன்போல அவைகளைக் கொடுப்பதும், வெகுநாள் தன் பிதாவைமறந்து விடுணய்த்திரிந்து கொண்டிருந்தபின் நாம் ராஜாவென்று நினைத்த மாத்திரத்தில் உடனேதன் பட்டத்தை அவரவனுக்குக் கட்டுவது போலுமறிக.

[இ - து.] ஆத்மா இவ்வளவு மகிமையுள்ளவரென்று மதிக்கக்கூடாது. [எ - தி.] மாணிக்கரத்திநத்தை விலைமதிக்கக் கூடாததுபோலும், குபேரனுடைய ஐஸ்வரியத்தை மதிக்கக்கூடாததுபோலும், சமுத்திரஜலத்தை அளவிடக் கூடாததுபோலும், ஜீவர்களையும் அவர்கள் கர்மத்தையும் எண்ணக் கூடாததுபோலு மறிக.

[இ - து.] ஆத்மா சுயம்பிரகாசரா யிருந்து சகலத்திலும் வியாபித்துக் கொண்டிருந்தாலும், ஒன்றிலும் சம்பந்தமன்றிலும் ஒன்றினாலும் விளக்குவிக்கப் படாமலும் அவரை விளக்குவிக்கிற பதார்த்தம் ஜகத்தில் ஒன்றுமில்லை.

[எ - தி.] சூரியன் சொயம்பிரகாசராயும் சகல பதார்த்தங்களிலும் வியாபித்து அவைகளை விளக்கு வித்தபோதிலும் அவைகளின் லாபா லாபம், ஹாநி விருத்தி, உற்பத்தி நாசம் முதலியவற்றிற் சம்பந்தப்படாதவராயும் அவைகளால் விளக்கக்கூடாதவராயும் அவரை விளக்கு விக்கிற பிரகாசம் ஒன்றுமில்லாமலுமிருப்பது போலவறிக.

## 7 - வது, தரங்கம்.

பிரஹ்மசப்தம் பிரஹ்மா முதலானவர்களுக்குச் சொன்னாலும் அது ஆத்மாவுக்குத் தான் வாஸ்தவமே தவிர மற்றவர்களுக்குப் பிரஹ்ம சப்தம் சொல்வது உபசாரம்:—

பிரஹ்மமென்ற சப்தமானது ஜீவனையும், பிரஹ்மாவையும், பிராஹ்மணர்களையும், வேதத்தையும், காயித்திரியையும், வியாஹிருதி பிரணவம் முதலானவற்றையும் சொல்லுவது உபசாரம். [எ - தி.] ராஜபந்துக்களையும் ராஜனென்பது போலும், பெரிய மனுஷன் வீட்டிலிருக்கிறவர்களையும் அய்யரவாளென்று சொல்லுவதுபோலும், சரீராதிகளையும் தத்துவமென்று சொல்லுவதுபோலும், சாஸ்திரிகள், தீக்ஷிதர்களுடைய பிள்ளைகளையும் சாஸ்திரிகள் தீக்ஷிதரென்று சொல்லுவதுபோலச் சொன்னாலும், செங்கோல் செலுத்துவதையும், உத்தியோகம் பண்ணுவதையும், பிரசங்கம் பண்ணுவதையும், அக்நி ஹோத்திரம் பண்ணுவதையும் கண்டு நிச்சயிப்பதுபோல, நீயும் அவஸ்தாத்திரயங்களையும் சோதித்து அவைகளில் அழியாமல் அறிந்துகொண்டிருக்கிற அறிவையேதத்துவமென்றும், மற்றதெல்லாம் அதத்துவமென்றும், அறிந்துகொண்டு அப்படியே சச்சிதாநந்த பூரணமான வஸ்துவே பிரஹ்ம சப்தத்துக்கு அர்த்த

மென்றும், மற்றதெல்லாம் உபசாரமான சொல்லென்றும் அறிந்து கொள்ளத் தக்கது.

[இ - து.] எவ்வளவு மந்தனுயிருந்தாலும் நிர்குணத்தியாநம் பண்ணப் பண்ண அபரோக்ஷஞாநம் வுண்டாகும். [எ - தி.] யோகியானுலும்மைதுநம் பண்ணப் பண்ண சுக்கில மோசநம் தானே யுண்டாவதுபோலும், எவ்வளவு வியாதி வறுமையாதியுள்ளவனு யிருந்தாலும் படுக்கையில் படுத்துக் கண்ணை மூடிக்கொண்டு இருக்க விருக்கத் தூக்கம் தானே வருவதுபோலும், குபேரன்போலப் பணமுள்ளவனானாலும் செலவு செய்யச்செய்ய வெங்களுய்ப்போவது போலு மறிக.

[இ - து] அரூபமான பிரஹ்மமே சர்வ வியாபகமாயும், சூக்ஷ்மமாயும், சகல சக்தியுமுடையதாயுமிருக்கிறது. [எ - தி.] அரூபமான மாயை, விக்ஷேப சக்தி, ஆகாசம், வாயு, சூக்ஷ்மதேக முதலியவற்றிற்கே அதிக சக்திகள் இருக்கிறுப்போல வறிக.

[இ - து.] பிரஹ்ம சப்தம் சச்சிதாநந்த சொரூபியான ஆத்மாவுக்கே அர்த்தமல்லாமல் மற்றைய வேத முதலியவற்றை அர்த்தமாகச்சொல்வது உபசாரம். [எ - தி.] பொன்னென்கிற சப்தம் சுவர்ணத்துக்கே அர்த்தமல்லாமல் மற்றைக் காக்காப்பொன் முதலானதுக்கும், ஆவரம்பூவுக்கும் அர்த்தமில்லாதது போலும், மங்களமென்பதற்கு மோக்ஷமே அர்த்தமல்லாமல் மாவிலையும் மஞ்சளும் மேளமும் தாளமும், தம்பதிகளுடைய கலியாணமும், ருதுசாந்தியும், க்ஷவரகனும், செவ்வாக்கிழமையும், உலகத்தில் மங்களமென்று உச்சரிக்கப் பட்டாலும் அவைகளை விசாரிக்கும்போது மங்களமன்றியில் அமங்களமாய்ப் போவதுபோல வறிக.

[இ - து.] ஆனல் சுருதிஸ் மிருதிகளில் பிரஹ்மசப்தத்தை பிரஹ்மா முதலானவர்களுக்குச் சொல்லியிருப்பதற்குக் காரணமென்ன வென்றால், அறிவில்லாத குழந்தைகளுக்கு மரத்தினாலே கற்பிக்கப்பட்ட யானை முதலியவற்றை வாஸ்தவமான யானையென்று காண்பிப்பது போலும், மாரியம்மன் கோவிலுக்கு மண்ணால் கற்பிக்கப்பட்ட உருவாரங்கள் பண்ணிவிட்டதுகளை குதிரை யானைகளை வாங்கிக் கோவிலுக்கு விட்டேனென்று சொன்னாலும் அந்தயானை குதிரைகள் சண்டைக்காவது சவாரிக்காவது சுமைதூக்குகிறதற்காவது உபயோகப் படாததுபோல வறிக.

[இ - து.] பிரமத்தியாநம் பண்ணப்பண்ணப் பிரஹ்ம ஞானம் சாக்ஷாத்காரமாம். [எ - தி.] பூமியை வெட்டவெட்ட ஜலமுண்டா வதுபோலும் மரத்தைக் கடையக் கடைய அக்கினி உண்டாவதுபோலும், மருந்து சாப்பிடச் சாப்பிட வியாதி தீர்ந்து ஆரோக்கிய மாவதுபோலு மறிக.

[இ - து.] அரூபமான பிரஹ்மமே சகலசக்திகளை யுடைய தாயும், சூக்ஷ்மமாயும், வியாபகமாயும், நித்தியமாயு மிருக்கும். [எ - தி] அரூப

மான நேத்திரமும், சுரோத்திரமும், மனசும், சூக்ஷ்மமாயும், வியாபகமாயும், அறிவாயும், நித்தியமாயும், ஆநந்தமாயும், சகலசக்திகளை யுடையதாயும், அறியப்படுகிற ரூபம் சப்தமுதலான விஷயங்களால் அறியக்கூடாததாயு மிருப்பது போலும், நித்திராசக்தி யானது அரூபமாயும், சூக்ஷ்மமாயும், ஜீவேஸ்வர ஜகத்கற்பனை களுக்காரணமா யிருப்பதுபோலு மறிக.

௬-வது. தரங்கம்.

தன்னாலேயே சகலமும் அறியப்படும்தான் ஒன்றினாலும் அறியப்படான்.

ஆத்மாவாகிய தன்னால் பஞ்சகோசமும் பஞ்சவிஷயமும் அறியப்படும். அவைகளால் தன்னை அறியக்கூடாது. [எ. தி] விழித்திருக்கிறவனால் தூங்குகிறவர்கள் அறியப்படுவது போலும், அவர்களாலிவன் அறியப்படாதது போலும், சுவரில் எழுதிய சித்திரம் புருஷனால் பார்க்கப்படுகிறதேதவிர அது இவனை பார்க்கமாட்டாததுபோலும்; சிஷ்யனுடைய மனதிலிருக்கிற வாசனையைக் குரு கண்டு பிடிப்பதுபோலும், அவன் மனது இவர் மனதை யறியமாட்டாததுபோலு மறிக.

[இ - து.] மநுடன் மனதை மிருகங்களறியாததுபோலும், மிருகங்கள் மனதை மநுட னறிந்து யானைமுதலியவற்றைச் சுவாதீநம் பண்ணுவது போலும்; ராஜன் மனதை ஜனங்களறியாததுபோலும், ஜனங்கள் மனதை ராஜா அறிந்து அவர்களை யாளுவதுபோலும்; ராஜன் ரிஷிகள் மநதையறியாமலும், ரிஷிகள் ராஜன் மனதை யறிந்து நிக்ரகாநுக்கிரகஞ்செய்வதுபோலும்; ரிஷிகள் நவக்கிரகதேவதைகள் இந்திராதிதேவர்களுடைய மனதையறியாமலும், அவர்கள் இவர்களுடைய தசாபுக்த்திச் சித்திரங்களையறிந்து சுக துக்கங்களைக் கொடுப்பதுபோலும்; அத்தேவதைகள் திரிமூர்த்தி ரூபமான ஈஸ்வரனுடைய மனதை யறியாமலும், ஈஸ்வரன் தேவதைகளுடைய மனதை யறிந்து ஆட்டிவைக்கிறாரென்பதற்கு யுத்தி:—ஒருகால் தேவதைகளுக்கும் அசுரர்களுக்கும் யுத்தம் நேரிட்ட காலத்தில் அசுரர்களுடைய கைகள் வலுத்ததையும் தேவதைகளுடைய கைகள் இளைத்ததையும், கிருபா மூர்த்தியான பரமசிவன் கண்டு திருவுளத்தில் தேவதைகளுக்கு ஜயமும், அசுரர்களுக்கு அபஜயமும் உண்டாகட்டு மென்று நினைத்த மாத்திரத்தில், அப்படியே அசுரர்களெல்லாம் மடிந்து தேவதைகளுக்கு ஜயமுண்டான பின், தேவதைகள் அதை அறியாமல் ஒவ்வொருவரும் இந்த ஜயம் ' என்னாலேயே வந்தது யென்னாலேயே வந்தது ' யென்று அகம்பாவத்தை அடைந்தார்கள். அதை பரமசிவன் கண்டு, ஒருயக்ஷசு ரூபமாய் அவர்களுக்கு முன்பாக ஆவிர்ப்பவித்ததைக்கண்டு, தேவதைகள் அக்கினியை "இது யாரென்று நீ பார்த்துவா வென அநுப்புவிக்க, அக்கினியும் அந்த யக்ஷசின் கிட்ட வந்த மாத்திரத்தில் யக்ஷசு பார்த்து 'நீ யார்? உன் சக்தி யென்ன' வென்று கேட்க, நான் அக்கினி சகல ஜகத்

தையு மெரிக்கிற சக்தி யெனக் கிருக்கிறதென்று சொல்லவும், ஒரு காய்ந்த துரும்பை இவர் முன் பாகப்போட்டு இதை யெரி யென்று சொல்லவும், அக்கி யும் அதைத் தன் சக்தி முழுமையினுலு மெரிக்க யத்தனித்ததில் முடியாமல் ஓடி வந்து இந்திராதிகளைப் பார்த்து அவரை அறிய என்னுல் முடியாது வேறே யாரையும் போய் அறிந்துவரச் சொல்லுங்களென்று சொன்னதன் பின் வாயுவை அநுப்ப அவனும் போய் நின்றவுடன் யக்ஷசு முன்போலவே கேட்ட வுடன் நான் வாயு சகலஉலகத்தையும் அசைத்துப்போடுகிற சக்தி யெனக்குண் டென்று சொன்னதைக் கேட்டு யக்ஷசு பழைய துரும்பை அசைப்பா யென்று சொன்னதும், வாயும் தன் வலுவெல்லாம் வைத்துப் பார்த் ததில் அதை அசைக்கமுடியாமல், வந்தவழியே ஓடிப்போய் இந்திர னிடத்தில் சங்கதியைத் தெரிவித்த மாத்திரத்தில், இந்திரன் மிகுந்த அகம்பா வத்தை அடைந்தவனுய், நானேபோய் யக்ஷசை "இன்ன" தென்று அறிந்து வருகிறேனெனப் புரப்பட்ட மாத்திரத்தில், பரமசிவன், இவன் நிரம்ப அகம் பாவத்தை அடைந் திருக்கிறதைக் கண்டு உடனே அந்தர்த்தாநமான தன்பின் இந்திரன் மிகுந்த விசநத்தோடு பரதேவதையைத் திரிகரணங்களாலும் உபா சித்ததால் தேவிபிரசந்ந மானபின், தேவியைப்பார்த்து இப்படி ஒரு யக்ஷசு வந்ததே "அதுயார்" என்று கேட்டவுடன், தேவி "அடேமூடா" உங்களுக்கு முதலில் அபஜயம்வந்ததைப் பரமசிவன் கருணையாற் கண்டு கிருபைசெய்த தால் திரும்ப உங்களுக்கு ஜயம்வந்திருக்க, அதையறியாமல் "நாம் ஜபித் தோம்" என்று அகம்பாவத்தை அடைந்ததைக் கண்டு உங்களுக்கு நிரகங்கார ரூபமான ஞாநத்தை அநுக்கிரகிக்க வந்ததையும். அறியாமற் போனதால் அந்தர்த்தான மாய்விட்டார்- இப்போது "என்பதியான பிரஹ்மத்தை உபாசி யுங்க ளென்று சொன்னபடி, அவர்களும் உபாசித்துக் கரையேறின கதை யை அறிந்து நீயும் கரையேறக்கடவாய்.

## 9-வது. தரங்கம்.

பிரஹ்மம் வாக்குக்கு எட்டும் எட்டாது:—

வாக்குக்குப் பிரஹ்மம் எட்டும் எட்டாது என்று சொன்ன சுருதிக்குயுக் தி:—சித்தனுற் கட்டினரசம் ஜீவிக்கச்செய்வதும் மற்றைய ரசம் கொல்லுவது போலச் சுருதி குருவாக்கியத்தாற் சித்தித்த வாக்குக்குப் பிரஹ்மம் எட்டு மென்றும் மற்றைய பிரத்தியக்ஷ அநுமான உபமான வாக்குக்கு எட்டா தென்றுமறிக.

[இ - து.] வேதம் பிரஹ்மத்தைச் சொல்லாமற் சொல்லுகிறது. [எ - தி.] அடுத்தவீட்டுப் பிள்ளைகளை யெல்லாம் தாய் வெளியிற்போகச் சொன்னதால் தன்பிள்ளையை இருவென்று சொல்லாமற் சொன்னதுபோலும், கூப்பிடாமல் வந்தவர்களை சாப்பாடில்லை போங்களென்று சொன்னதால் கூப்பிட்டுவந்த பிராஹ்மணனை இருவென்று சொல்லாமற் சொன்னதுபோலும், அநாத்மா

வைநேதித்ததே ஆத்மாவைஸ் திரப்படுத்தி வேதம் சொன்னதாயிற் றென் றறிக.

[இ - து.] கெங்காநதிப் பிரவாகத்தில் ஆள் இறங்கக்கூடா தென்றும், மிகுந்த ஆழமென்றும் சொல்லி, திரும்ப ஆள் இந்த ஆறைகடக்கக் கூடு மென்று சொல்லுகிற வார்த்தைக்கு அர்த்தம்—நீச்சுத்தெரியாத சாதாரண ஜநங்களைக் குறித்து ஆற்றைக் கடக்கக் கூடாதென்றும் சுரைக் குடுக்கை தெப்பக்கட்டை முதலான சாதநங்களுடன் கூடியிருக்கிற நீச்சுக்கார னுக்கு ஆற்றைக் கடக்கக் கூடுமென்றும் சொல்லுவதுபோலச் சாதந சதுஷ்டய மில்லாத அவிவேகியா லிந்த சம்சார நதியைக் கடந்து பிரஹ்மமாகிற கரை யைக் காணக்கூடாதென்றும், சாதந சதுஷ்டயத்துடன் கூடிய விவேகியால் இந்த சமுசார நதியைக் கடந்து பிரஹ்மமாகிற கரையைக் காணக்கூடு மென் றறிக.

[இ - து.] பூமியிலிருக்கிற புதையல்களை சாதாரணமான ஜநங்களால் கண்டு பிடித்து, அதை யெடுத்து அநுபவிக்க முடியாமற் போனாலும், அஞ்ச நம் வைத்திருக்கிற புருஷன் அதைக்கண்டெடுத்து அநுபவிக்கக்கூடுவதுபோல, சாதாரணமான அஞ்ஞாநிகளால் பிரஹ்மத்தை யறியக்கூடாமற் போனாலும், குரு கிருபையாகிற அஞ்சநத்தைப் பெற்றிருக்கிற முமுக்ஷு பிரஹ்மத்தைக் கண்டு அனுபவிக்கக்கூடுமென் றறிக.

[இ - து.] பூதப்பிரேதப் பிசாசுகள் சாதாரண மநுஷர்களைப் பிடித்து ஆட்டி வைத்து அவர்களால் அவை அறியக்கூடாமலிருந்தாலும், மந்திரவாதி யால் அவைகளைக் கண்டு பிடிக்கவும் அவற்றைச் சுவாதீநம் பண்ணிக்கொள்ள வும் முடிவதுபோல, ஆசையுள்ளவர்களால் பிரஹ்மம் அறியக்கூடாததாம், நிராசையுள்ளவர்களால் பிரஹ்மம் அறியக்கூடியதாயுமிருக்குமென் றறிக.

[இ - து.] அபக்தனால் யீஸ்வரனைப் பிரத்தியக்ஷமாக அறியக்கூடாமற் போனாலும், திரிகரண சுத்தியோடு பக்தி செய்கிறவனால் ஈஸ்வரன் மான்மழு சதுர்புஜத்தையுடைய வடிவமாக பிரத்தியக்ஷமாக அறியப்படுகிறது போல பகிர்முகனைய் இந்திரியப் பிரீதிபண்ணி வைப்பதில் உத்யுக்தனா யிருக்கிற புரு ஷனால் பிரஹ்மம் அறியக்கூடாமற் போனாலும், இந்திரிய நிக்கிரகமுள்ள அந் தர் முகாநு சந்தாநம் பண்ணுகிற புருஷனால் பிரஹ்மம் அறியக்கூடு மென் றறிக.

[இ - து.] சாதாரண ஜநங்களால் ஆகாச கெங்கையை வரவழைக்கக் கூடாமற்போனாலும் பகீரதனாலிப் பூமியில் அந்த ஆகாச கெங்கையை வர வழைக்க முடிந்ததுபோல, அஞ்ஞாநிகளால் முப்பத்தாறும் தத்துவமான பிரஹ்மம் அறியக்கூடாமற் போனாலும், புருஷப் பிரயத்தந மிகுதியால் சிர வண மநநநிதித்தி யாசந சமாதிகளைப் பழகி, அதனால் தேகவாசனை லோக வாசனை சாஸ்திரவாசனை முதலான சகலவாசனைகளும் க்ஷபித்தவனையும்,

அகம்விருத்தி இதம்விருத்தி முதலியரூபமான மநதின் நாசத்தையுடையவனுயி ருக்கிற புருஷனுல் பிரஹ்மத்தைச்சித்தமாகிற பூமியில்விளங்கும்படி செய்யக் கூடுமென் றறிக.

## 10-வது தரங்கம்.

துவிதமற்று அத்துவித மாத்திரமாயிருப்பதே சுகம்:—

துவிதமற்று அத்துவித மாத்திரமாயிருப்பதே சுகம். [ எ- தி.] வீட்டி லிருக்கிற மருமகளுக்கு மற்றைப்பேர்களெல்லாம் தொலைந்துபோய்த் தான் மாத்திரமாய்ப் பர்த்தாவுடன் ரமிப்பதே சுகமாயிருப்பதுபோலும்; சுழுத்தி யில் இரண்டற்று ஆநந்தமாயிருக்கிறதே அநுபவம்.

[இ - து.] துவிதாநுபவம் கலகமே தவிர அத்துவிதாநுபவம் கலக மில்லை. [எ - தி] தம்பதிகள் ஒன்று சேராத காலத்தில் பஞ்சாயத்துப் பண்ணவேணுமே தவிர ஒன்று சேர்ந்த பிற்பாடு தேவையில்லாததுபோலும்; ஊசித்துவாரத்தில் சரடு நுழையாதிருக்கிற வரையிலும், சிரமமே தவிர நுழைந்த பிற்பாடு ஒருவர் அபேக்ஷையுமில்லாததுபோலும், அசல் வீட்டில் குடியிருக்கும் வரைக் கலகமே தவிரச் சொந்த வீட்டில் போன பிற்பாடு சுகமா யிருப்பது போலும், பிரதம ருது சாந்திக்கு விளக்கெண்ணை போடவேண்டுமே தவிரப் பிற்பாடு வேண்டாததுபோலு மறிக.

[இ - து.] பவதுக்கத்தை யடைந்தவன் அதை நிவர்த்தித்து ஆத்ம சுகத்தையடைந்து சுகிப்பதற்கு யுத்தி;—பசியும் வியாதியுமுள்ளவன் அமிர் தத்தையும் சித்த குளிகையும் சாப்பிட்டுச் சுகிப்பதுபோலும், வெய்யிலால் தாபத்தை யடைந்தவன் அதை நிவர்த்திக்க அருவியில் ஸ்நானம் செய்வது போல வறிக.

[இ - து] ஜாக்கிர சொப்பனத்தில் சுகமில்லாமல் சுழுத்தியிலேயே சுகம் வருவதுபோல, துவித விவகாரத்தில் சுகமில்லாமல் அத்துவித விசாரத்தி லேயே சுகம் வரும். [ எ-தி.] தீப்பற்றியெரிகிற விடத்தில் சுகமில்லாமல் பூர்ண தடாகத்திற்போய் சுகம் பெறுவது போலும், ஜநங்களுடைய சிநேகத் தில் சுகமில்லாமல் ராஜன் சிநேகத்தாற் சுகமடைவதுபோலும், வேடிக்கை முத லியவற்றைப் பார்ப்பதிற் பசிதீராமல் போஜநத்தினுலேயே பசி தீர்வது போலும், சத்துருக்களிருக்கும்போது சுகமில்லாமற் சக்கிரவர்த்தியான பின் சுகம் வருவதுபோலும், தம்பதிகளுக்கு அந்நிய மனுஷாளிருக்கும்போது சுகம் வராமல் தனித்த காலத்தில் சுகம் வருவதுபோலு மறிக.

[இ - து.] எல்லாம் தானென்று ஐக்கியம் பண்ணுகிறவனுக்குப் பார மின்மையும், சுகமும், துக்க நிவர்த்தியும் வருவதும்: அப்படிச் செய்யா திருக்கும் வரை அவை வாரா. [எ - தி ] தோழில் கட்டுச்சாதம் கொண்டு போகிற இருவருக்குள் ஒருவன் அதைச் சாப்பிட அவனுக்கு மட்டும் பசி

நிவர்த்தியும், பிராணனுக்குப் பெலமும், பாரநிவர்த்தியுமுண்டாவதும் ; சாப்பிடாத மற்றொருவனுக்கு அவைகளில்லாமையும் போலு மறிக.

[இ - து] சக்கிரவர்த்தியான ராஜாவுக்கு எதிரியுள்ளவரை யுத்த முதலியனவும், கலசமும் எதிரியற்ற, பின் யாதொரு கவலையும், கலகமு மில்லாதது போல, துவித நினைப்புள்ள விவகாரதசையில், ராகத்து வேஷமும், கவலையு முண்டாவதும், பரமார்த்தமான அத்துவிதாத்மாநு சந்தானத்தால் சுகம்வருவதும், மேடுபள்ளமாயும், முள்ளுக்கல்லுகளோடு கூடினதாயும், செடி செத்தைகளோடு கூடினதாயும், கள்ளர்பயமுள்ளதாயும் புலி கரடி பாம்பு முதலிய துஷ்டஜந்துகளோடு கூடினதாயு மிருக்கிற காட்டு மார்க்கத்திற் போகிறவனுக்கு, அடிக்கடி முள்ளுக்கல்லுகள் தைப்பதும், மேடு பள்ளங்களில் விழுவதும், கள்ளர்கள் கையால் அடிபட்டுச் சொத்தைப்பரி கொடுத்துப் பரிதவிப்பதும், துஷ்டமிருகங்களாற் கடிபட்டு வேதனைப் படுவது போலவன்றியில், மேல்சொன்ன லக்ஷண விலக்ஷணமாயுள்ள ஞாநமார்க்கத்தில் சுகம்வருவது போலவன்றிச் சம்சாரமார்க்கத்தில் மாநாவமான மாகிற பள்ளமேடுகளில் விழுந்தெழுந் திருக்கிறதும், ராகத்து வேஷங்களாகிற முள்ளு கல்லுகள் தைக்கிறதும், வாசனைகளாகிற திருடர்களால் விவேகமாகிற சொத்துக்கள் அபகரிக்கப்படுகிறதும். அரிஷட்வர்க்கங் களாகிற துஷ்டமிருகங்களால் கடிக்கப்படுகிறதும், பிரதிபந்தத் திரயங்களாகிற பேய்பிசாசு பிரஹ்மரக்ஷசுகளால் அரட்டப்படுகிறதும், விஷயசங்கற்பங் களாகிற செடிகொடிகளாற் சுற்றப்பட்டுத் தபிக்கிறதுமான சம்சாரமார்க் கத்தைவிட்டு, அத்தியந்தம் சமமாயும், ராகத்து வேஷமற்றதாயும், அரிஷட்வர்க்க மற்றதாயும், நிர்ப்பயமாயும், நிஷ்பிரதிபந்தமாயு மிருக்கிற அத்துவிதமார்க்கத்தை யடைந்து சுகிப்பீர்களாக.

## 11-வது. தரங்கம்.

சாத்விகாதிவிருத்தி பேதத்தாற் சச்சிதாநந்தம் பேதமாய்த் தோற்றும்:—

ஆத்மா சச்சிதாநந்த சுபாவரானால் எல்லா விருத்திகளிலு மேன்காணப் படவில்லை [எ - தி.] படியாதவனுக்கு ஏட்டிலெழுதி யிருக்கிறதென்று மட்டுந் தோற்றுவதுபோலும், அக்ஷரஞாந முள்ளவனுக்கு எழுதியிருக்கிறதும் படிப்புந் தெரிவதுபோலும், வியுத்பத்தி யுள்ளவனுக்கு எழுத்தும் படிப்பும் அர்த்தமுந் தெரிவதுபோலும், தாமதவிருத்தியில் சத்தும், ராஜசவிருத்தியில் சத்தும் சித்தும், சத்துவவிருத்தியில் சச்சிதாநந்தம் மூன்றும் விளங்குமென் றறிக.

[இ - து.] சத்துவகுணம், ரஜோகுணம், தமோகுணம், இவைகளில் ஆத்மாசரியாயிருந்தாலும் சுகவிசேஷம் தாரதம்மிய மாயிருக்கும், [எ - தி.] ஜட்ஜி முதற் சேவகன்வரைக் கோர்ட்டி லிருப்பது சரியானாலும் சுகமும், சம்பளமும், மகிமையும் தாரதம்மியமாயிருப்பது போலும், சேதுமுதல் நாலுசமுத்திரமும்

உப்பாயிருப்பது சரியானாலும், சேதுவில் ஸ்நான விசேஷமிருப்பது போலு மறிக.

[இ - து.] ஆத்மா எங்கும் ஒருபடித்தா யிருக்கும்போது தமோகுணத் திற் பூதாகாரமாயும், ரஜோகுணத்தில் விபரீதமாயும், சத்துவகுணத்தில் உள்ள படியாயும் தோற்றுவது விருத்திகளின் பேதமேதவிர ஆத்மாவினிடத்தி லில்லை. [எ- தி.] தன்முகம் தானே பூதக்கண்ணாடியில் பூதாகாரமாயும், தண் ணீரில் தலைகீழாய் அலைகிறதாயும், நிர்மலமான கண்ணாடியில் உள்ளபடியாயும் தோற்றுவது போலுமறிக.

[இ - து.] ஆத்மா எப்போதும் எங்குமிருந்தாலும் குணபேதங்களால் தாரதம்மியமாய்ப் பிரகாசிக்கும். [எ - தி.] தமோகுணத்தில் சத்து நெல் லின் முளைபோலும், ரஜோகுணத்தில் சத்தும்சித்தும் நெல்லின் கதிர்போலும், சத்துவகுணத்தில் சச்சிதாநந்தம் தூற்றினநெல்லுப் போலும், சுத்தசத்துவத் தில் சச்சிதாநந்தாநுபவம் குத்தின அரிசிபோலும் பிரகாசிக்குமென்றறிக.

[இ - து] ஆத்மா சச்சிதாநந்த சுபாவரானாலும் ஜகத்தில் சத்தும், ராஜச புத்தியில்சத்தும்சித்தும்,சத்துவவிருத்தியில் சச்சிதாநந்தம்மூன்றும்தோற்றும். [எ - தி.] ஒருவன் பாடுவதில் சத்தமும், அர்த்தமும், ராகஞ்ஞாநமும் மூன்றும் சேர்ந்திருந்தாலும் குழந்தைகளுக்குச் சத்தக் ஞாநமும், வியுத்பத்தியுள்ளவனு க்குச் சத்த அர்த்த ஞாநங்களிரண்டுந் தெரிவதும், வியுத்பத்தியோடு கூடிய சங்கீத வித்வானுக்குச் சத்தம் அர்த்தம் ராகஞ்ஞாநங்கள் மூன்றுந் தெரிவது போலும்; ஒரு ரத்தினமே குருடனுக்கு ஸ்பரிசத்தால் கடின ஞாநமும், கண் தெரிந்தவனுக்கு கடின ஞாநமும் பிரகாச ஞாநமும், ரத்தின பரீக்ஷை தெரிந்த வனுக்கு அந்த ரத்திநத்திலேயிருக்கிற கடின ஞாநமும் பிரகாச ஞாநமும் குண தோஷ ஞாநமுமாகிய மூன்றுந்தெரிவதுபோலும்; ஒரு போஜநத்தில் பித்த முள்ளவனுக்கு நாவில் போடப்பட்ட ஷட்ரஸமும் மண்போல ஒரே ரசமாயும், பசியுள்ளவனுக்கு ருசி அருசிபக்குவம் அபக்குவந் தோன்றாமல் "அவக்கு அவக்"கென்று அள்ளிப் போடும்போது ஷட்ரஸங்களுடைய ஞாநமும் வினி மயமாய்ப் போவதுபோலும், சுகசாலியாய்ச் சாவதாநமாய்ப் புஜிப்பவனுக்கு ஷட்ரசங்களுடைய பதார்த்த ஞாநமும் அதிலுள்ள ருசி அருசி ஞானமும் அதி லுள்ள சுத்தா சுத்தம் குணதோஷம் பத்தியாபத்திய ஞாநங்கள் மூன்றுந் தெரிவதுபோலும்; ஒரு வாசனைத்திரவியமுள்ள விடத்திற் போன மூக்கறை யனுக்கு ரூபஞாநமும், மூக்குள்ள வனுக்கு ரூபஞாநமும் சாமாந்யமாக மணத் தின் ஞாநமும், சுகசாலிக்கு ரூபம் மணம் இரண்டுகளுடன் அந்த மணத்தில் இது அத்தர், இது பன்னீர், இது புனுகு, இது ஜவ்வாது, சந்தனம் முதலிய சகல வாசனா ஞாநமும் தெரிவது போலும்; ஒரு சித்திரத்தைப் பார்க்கிற குழந்தைக்கு யானை குதிரை முதலான ரூபஞாநமும், பெரியவனுக்கு ரூப ஞாநத்துடன் மையினால் எழுதப்பட்டிருக்கிறதென்கிற ஞாநமும், சித்திரம்

எழுதுகிறவனுக்கு ரூபஞானம் மைஞானம் மைசேர்க்கிற விதமானஞானம் மூன்றுந் தெரிவதுபோலுமறிக.

## 12-வது, தரங்கம்.

ஜீவனுக்கே தேகத்திரயஜ்வரம் சம்பந்தமில்லாதபோது ஆத்மாவுக்கு வரப் பிரசக்தி யில்லை:—

ஜீவனுக்கே ஒரு சரீர ஜ்வரங்களுமில்லாதிருக்கும்போது அந்த ஜ்வரங்கள் சாக்ஷிக்குவரப் பிரசக்தியேயில்லை. [எ - தி.] சேற்றிற்கிடக்கிற பிள்ளைப்பூச்சிக்கே அதில் சம்பந்தமில்லாத போது கரையிலிருக்கிற பிள்ளைப்பூச்சிக்குக் கேட்க வேண்டியதில்லாததுபோலும், ஜலத்திலேயிருக்கிற தாமரை இலையிலேயே ஈரமொட்டாதபோது கரையிலிருக்கிற அந்த இலைக்குக் கேட்கவேண்டிய தென்னை? தாசிக்கே போகம்பண்ணப்புருஷன் கிட்டாதபோது குலஸ்திரீக்கு எங்கே புருஷன் கிட்டப்போகிறது? ஸ்தநிய முள்ள பாலஸ்வாமிக்கே யோநியில்லாமலிருக்க, மற்றைப் புருஷர்களுக்குக் கேட்கவேண்டியதில்லாதது போலவறிக.

[இ - து.] விவேகம் வந்த ஜீவன் நான் கர்த்தாவென்று சொல்ல நாணுவனால் சாக்ஷியினிடத்தில் இதைச் சொல்லவேமாட்டான். [எ - தி.] தீக்ஷிதர் பிள்ளை விவேகம்வந்தபின்தானே தாசி போகத்தில் ஒழிவையடைந்தால் அவன் ஐயா விடத்தில் அதை எப்படி சொல்லுவானென்பதுபோலவறிக. விசுவன் சொப்பனவஸ்தையில் தைசதனாய் அநேக விதமான அவஸ்தைகளை அடைந்து விழித்தபின் நாம் இந்த அவஸ்தையில் கண்டனவெல்லாம் சுத்தப்பொய்யென்று தெரிந்திருக்கும்போது, தூங்காமலே விழித்திருக்கிற தன்பிதா சொப்பனவஸ்தையில் தன்னோடே கூடவந்தலைந்ததாக நினையாததுபோலும்; சேற்றிற்கிடக்கிறதங்கமே அந்த சேற்றிற் சம்பந்தப்படாதபோது, பெட்டிக்குள் வஸ்திரத்தில் முடிந்துவைத்திருக்கிற தங்கம் சேற்றிற் சம்பந்தப் பட்டதா படவில்லையாவென்று கேட்கவேண்டாதது போலும்; கண்ணே சகல ரூபத்திலும் வியாபித்தும் சம்பந்தப்படாதபோது, கண்ணையும் அறிந்து கொண்டிருக்கிற சாக்ஷி அதில் எப்படிச் சம்பந்தப்படுமென்பது போலும்; பார்லிமெண்டுச் சபையிலுள்ள மெம்பர்களே நிஷ்பக்ஷபாதமாயிருக்கும்போது, ராணிபக்ஷபாதமன்றியி லிருக்கிறளா இல்லையா வென்று கேட்க வேண்டாததுபோலும்; மனுஷர்களே மலத்தைச் சாப்பிடாதபோது தேவர்கள் மலத்தைச் சாப்பிடுவார்களா சாப்பிடமாட்டார்களா வென்று கேட்க வேண்டாததுபோலும்; அருந்ததி யென்று பேருடையவளே விபசாரம் பண்ணாதபோது, சாக்ஷாத் அருந்ததி விபசாரம் பண்ணுவாளா பண்ணமாட்டாளா வென்று கேட்க வேண்டாததுபோலும்; ராமனென்று பேருடையவனே பொய் சொல்லாதபோது, சாக்ஷாத் ராமர்

பொய் சொல்லுவாரா சொல்லாரா வென்று கேட்கவேண்டாததுபோலும்; குபேரனென்று பேருடையவனுக்கே தரித்திரமில்லாதபோது, சாக்ஷாத் குபேரனுக்குத் தரித்திரமுண்டா யில்லையா வென்று கேட்க வேண்டாதது போலும்; லக்ஷ்மி யென்று பேருடையவளுக்கே அவலக்ஷணமில்லாதபோது, சாக்ஷாத் லக்ஷ்மிக்கு அவலக்ஷண முண்டாவில்லையா வென்று கேட்கவேண் டாததுபோலும்; கர்னனென்று பேருடையவனே கண்டவர்களுக்கெல்லாம் கொடை கொடுப்பானுனல், சாக்ஷாத் கர்னன் கொடை கொடுப்பதிற்கேட்க வேண்டாததுபோலும்; சுபிக்ஷகாலத்தில் உவர்ப்பொட்டல்கூட விளையும் போது, காஸ்மீரகண்டம் விளைந்ததா வென்று கேட்கவேண்டாததுபோலும்; கொஞ்சம் வியுத்பத்தியுள்ளவனுக்கே அர்த்தமாகிற சுலோகங்கள், நாலு சாஸ் திரங்களையும் பூராவாய்ப் படித்திருக்கிறவனுக்கு அந்த சுலோகத்திற்கு அர்த்த மாகுமா வென்று கேட்க வேண்டாததுபோலும்; சம்ஹிதை அத்தியயநம் பண்ணினவனுக்கே பதம்பிரித்துச் சொல்லத்தெரியுமானுல், கனபாடிகளுக்கு வேதத்துக்குப் பதம் பிரிக்கத்தெரியுமா வென்று கேட்கத்தேவையில்லாதது போலும்; பிரசவிக்காத பெண்ணுக்கே பிரசவ வேதனை கஷ்டமென்று தெரியு மானுல், பிரசவித்தவளுக்கு அவ்வேதனை தெரியுமாவென்று கேட்கத் தேவை யில்லாததுபோலும்; ஈஶ்வரானுக்கிரகம் பெற்றவனுக்கே சர்வஞ்ஞத்துவம் சர்வேஶ்வரத்துவ முதலான கல்யாண குணங்களிருக்குமானுல், சாக்ஷாத் ஈஸ் வரனுக்கு அந்தக் கல்யாண குணங்களெல்லாம் இருக்கிறதா வென்று கேட்க வேண்டாததுபோலும்; முமுக்ஷுவுக்கே ஆத்மசுகம் தெரியுமானுல், ஞானிக்கு அது தெரியுமாவென்று கேட்கத் தேவையில்லாததுபோலு மறிக.

## 13 - வது, தரங்கம்.

ஆத்ம சம்பந்தத்தால் தேகாதிகள் சுகம் போலத் தோற்றும்:—

தேகேந்திரியாதிகள் துக்கரூபமானுலும் ஆத்மசம்பந்தத்தால் சுகம் போல த்தோற்றுகிறது. [எ - தி.] செம்பு அப்பிரகாசமானுலும் தங்கக்கிலிட்டினுல் பிரகாசம்போலத் தோற்றுவதுபோலும், மாவு தித்திப்பில்லாதிருந்தாலும் சர்க்கரை சம்பந்தத்தால் தித்திப்புபோலத் தோற்றுவதுபோலும், மூதேவி போலேயிருக்கிற பெண்ணும் ராஜாவின் சம்பந்தத்தால் ஸ்ரீ தேவிபோலத் தோற்றுவதுபோலு மறிக.

[இ - து.] ஜீவன் தனக்கு அந்நியமான தேகாதிகளையே நானென்ற வாசனையால் நான்போலப் போகும்போது, நமக்கு நிஜவடிவமான சாக்ஷியை நானென்று எண்ணினுல் நானுவதிற் கேட்கவேண்டியதில்லை. [எ - தி.] ஊரார் வீட்டையே தன் வீடாக நினைத்து அதிலழுந்துகிறவன் தன் சொந்த வீட்டில் அழுந்துவது ஆச்சர்யமில்லாததுபோலும், ஊரார் பிள்ளையையே தன் இடுப்பிலிடுக்கிக்கொண்டிருப்பவள் தன் பிள்ளையைச் சதா இடுக்கிக்கொண்

டிருப்பதில் அதிசயமில்லாததுபோலும், அந்நியபாஷையையே ஞாபகம் வைத்துப்பேசுகிறவன் தன் சுய பாஷை பேசுவது விசேஷமில்லாததுபோலு மறிக.

[இ - து.] சகலருக்கும் தானே ஆநந்தமென்பதற்கு யுத்தி:—அவனவன் சொந்தப் பாஷையிலும் சொந்தச் சாதியிலும் சொந்தத் தேகத்திலும் சொந்த அவயவங்களிலும் வெறுப்பன்றியிற் சுகிப்பதுபோலு மறிக.

[இ - து.] அவஸ்தாத்திரயங்களில் தோன்றுகிற முப்பத்தைந்து தத்துவங்களும் தன்னைப்போலவே தோன்றினாலும் அவை சத்தியமாக இரா. [எ - தி.] ஹநுமார் லங்கையைக்குறித்துக் கிளம்பும்போது அநேக மரங்கள் கூடக் கிளம்பினதைப்பார்த்து அநுமாருக்கு அநேக வால்களிருப்பதுபோலத் தோன்றினாலும் கொஞ்சத்தூரம் போகப் போக மரங்களெல்லாம் ஒன்றொன்றாய் விழுந்துபோன பிறகு தன் ஒருவாலே நிஜமாக மிஞ்சினதுபோல வறிக.

[இ - து.] சொப்பனத்தில் தன்னைப்போல அநேகமான ஜீவேஸ்வர ஜகத்துகள் சத்தியமாகத் தோற்றினாலும் விழித்த பின் தான் ஒருவனே சத்தியமாய் மிஞ்சுவதுபோலும், கண்ணாடி வீட்டிற்குள் தான் ஒருவனே அநேகர்கள் போலத் தோற்றினாலும் அதை விட்டு வெளியில் வந்தவுடன் தான் ஒருவனே மிச்சமாய் விளங்குவதுபோலும், ரயில் வண்டியிலேறிப்போகிற பிராம்மணனோடு குசவன் தட்டான் முதலானவர்கள் சேர்ந்து உட்கார்ந்திருக்கும்போது அநேகம் பிராஹ்மணர்கள் இருக்கிறதுபோலத் தோற்றினாலும் இறங்கின பின் பரீக்ஷிக்கும்போது மற்றவர்களெல்லாம் பிராஹ்மணர் அன்றென்று தோன்றி, அந்த ஒருவன் மட்டும் பிராஹ்மணனாய் விளங்குவதுபோலு மறிக.

[இ - து.] ஆத்ம சம்பந்தத்தால் அநாத்மாக்களும் சுகம்போலத் தோற்றும். [எ - தி.] மல்லிகை முதலான புஷ்பங்களோடு சேர்ந்த நாரும் வாசனை போலத் தோற்றுவது போலும், மஞ்சள் எண்ணெ அத்தர் பன்னீர் முதலியவற்றோடு சேர்ந்த சரீரமும் மணம்போலத் தோற்றுவது போலும், சீமானோடு போகிற ஏழையும் சீமான்போலத் தோற்றுவதுபோலு மறிக.

[இ - து.] ஜீவன் அறியாமையால் அந்நியமான தேகத்தையே வாசனையால் தானென்று பிரியப்படுவானானல், தானாயிருக்கிற ஆத்மாவைத் தானென்று விசாரத்தால் அறிந்த பின் சாக்ஷியாகிய தன்னிடத்திற் பிரியப்படுவதிற் கேட்கவேண்டியதில்லை. [எ - தி] ராஜகுமாரன் வேடர்களோடு சேர்ந்து பழக்கத்தால் நான் வேடனென்று பிரியப்படுவானானல் விசாரணையால் ராஜாவென்கிற ஞானம் வந்த பின் தன் ராஜத்துவத்தில் பிரியம் வைப்பதிற் கேட்கவேண்டாததுபோலும், சண்டாளர்களோடு சேர்ந்து அவர்கள் சகவாசத்தால் நான் சண்டாளனென்று எண்ணி அதில் பிரியம் வைத்துக்கொண்டிருந்த பிராஹ்மணனுக்கு பின் பிராஹ்மண சகவாசத்தாற் பிராஹ்மணனென்று அறிந்து அதிற் பிரியம் வருவது அதிசயமில்லாததுபோலு மறிக.

## 14-வது, தரங்கம்.

*ஆத்மா பஞ்சகோசங்களுக்குள் புத்தியில்மட்டும் பிரகாசிப்பார்:—*

ஆத்மப்பிரகாசம் பஞ்சகோசங் களுக்குள்ளே விஞ்ஞானமய கோசத்தில் மட்டும் விளங்கும். [எ - தி.] சூரியன் சுவரிலும், சேற்றிலும், ஓடுகிற கலங்கின ஜலத்திலும், ஆவரணத்துக்குள் ளிருக்கிற ஜலத்திலும் நன்றாய் விளங்காமல், தெளிவாயும், அசைவற்றும், பாசியற்றுமிருக்கிற ஜலத்தில் மட்டும் பிரகாசமாய்ப் பிரதி பிம்பிப்பது போலவறிக.

[இ - து.] ஆத்மாவுக்கு வேதாந்தத்தாற் சச்சிதாநந்தாதி குணங்கள் உண்டென்று சொல்லப்படுகிற அபக்கியாதியைக் கேட்டு, ஹிருதயகுகையில் மறைந்து ஒளிந்திருந்தவரைக் குருநாதனுகிற துப்பன் அவரைத்தானுக அநுபவித்து வெளிப்படுத்தினதினுல் தலைவிதி யென்றிருக்கிறதைக்கண்டு, முமூக்ஷுக்கள் தானுக அனுபவிக்கிருர்கள். [எ - தி.] ஒருஸ்திரீ தன்னை வியபிசாரி யென்று ஊரில் சொல்லுகிருளென்று மறைந்திருந்தவளை, அவளோடு அநுபவித்த சோரபுருஷன் வந்து அவளைக் கண்டுபிடித்து வெளிப் படுத்தினபின், அவள் அவனுக்கிஷ்டமான வெளியிலிருக்கிற விடர்கள்வந்த வேளையெல்லாம் நிர்ப்பயமாய் நம்முடைய தலைவிதியென்று பிரகாசமாய் அவர்களால் அநுபவிக்கப்பட்டு விளங்குவது போலவறிக.

[இ - து.] ஆத்மாயெங்கும் பரிபூரணமா யிருந்தாலும் நிர்மலமான புத்தியிலேயே விளங்குகிருர். [எ - தி.] தன்முகம் எப்போதும் தன் கழுத்திலேயே யிருந்தாலும், வெளியிலும், காற்றிலும், தீயிலும், சுவரிலும், மற்றைப் பதார்த்தங்களிலும் விளங்காமல் நிர்மலமான கண்ணுடியில் மட்டும் உள்ளபடியாய் விளங்குவதுபோலும், ரத்திநமானது சுவயம் பிரகாசமாயிருந்தாலும் சேறுமுதலிய வற்ரேடு சேர்ந்தபோது பிரகாசியாமல் தங்கத்திற் பதிப்பிக்கப் பட்டபோது பதக்கமென்று பிரகாசிப்பதுபோலும், ஜயவீர கண்டாமணி கட்டிக் கொண்டிருக்கிற சாஸ்திரிகள் அயோக்கியர்கள் சபையில் விளங்காமல் யோக்கியர்கள் சபையில்மட்டும் விளங்குவதுபோலும், சூரியன் எங்கும் விளங்கிக்கொண்டிருந்தாலும் சூரியக் காந்தக்கல்லிற் சம்பந்தப் பட்டமாத்திரத்தில் சகலத்தையும் எரிக்கப்பட்ட அக்கினியாய் விளங்குவதுபோலும், சரீரத்திலிருக்கிற சுக்கிலம் நித்திரையில் ஸ்திரீபோகம் செய்கிறதுபோலக் கண்டு வெளியேறினுலும் சேதநமான பிள்ளையாகாமலும், பின்னும் எவ்விதமாயாவது வெளியேறினுலும், மலடியினிடத்தில் வெகுகாலம் போகம்செய்து வெகுதடவை சுக்கிலங்கள் வெளியேறினுலும் பிள்ளையுண்டாகாமற் பக்குவமான பெண்ணினுடைய யோநிக்குள்ளே யிருக்கிற கெர்ப்பகோளகத்தில் மட்டும் இந்த சுக்கிலம் சேர்ந்ததால் சேதநமான பிள்ளையாய்ப் பிறந்து விளங்குவது போலும், சகலவிதமான நவதாந்யங்களுடைய விதைகளைக் குதிருகளிற் போட்

டாலும், சேந்திகளிற் போட்டாலும், பாறைகளிற் போட்டாலும், தீயிற் போட்டாலும், தண்ணீரிற் போட்டாலும், ஊஷரபூமியிற் போட்டாலும், அந்தந்தத்தாந்யங்களுடைய பலபரியந்த முண்டாவதான சொரூபங்களொன்றும் விளங்காமல் அந்தந்தத்தாந்யம் விளைவதற்குத் தகுந்த பூமிகளில், தகுந்த உரங்களைப்போட்டு, உழுது விதைத்துத் தண்ணீர்பாய்ச்சி பிரயாசையாற் காப்பாற்றி வருகிறவனுக்கு, அந்தந்தத் தாந்யங்கள் அந்தந்தப் பலன்களை யதேஷ்டமாய்க் கொடுப்பதுபோலும்; பனையோலைகள் பனைமரங்கள் தோறும் யதேஷ்டமாயுண்டானாலும், அதைவெட்டி வீடு மேய்வதாலும், தீயெரிப்பதாலும், பாய் பெட்டி தடுக்கு கொட்டான் முதலானதாய் செய்யப்படுவதாலும், அவைகளுக்குச் சரஸ்வதியென்ற பேரும் பூஜிதையு முண்டாகாமல், அந்த ஓலைகளில் நல்லதாய்யெடுத்து ஏடுசெய்து வேதாக்ஷரத்தை எழுதினமாத்திரத்தில் சரஸ்வதியென்று பூஜிக்கப்படுவது போலுமறிக.

## 15-வது, தரங்கம்.

சச்சிதாநந்தம் முந்தித்தோற்றிப் பிந்தி நாமரூபந் தோற்றுகிறது:—

சச்சிதாநந்தம் முந்தித்தோற்றிப் பிந்தி நாமரூபந் தோற்றுகிறது. [எ - தி.] புருஷன்தோன்றியே நிழல் தோன்றுவது போலும், சுழுப்தியிலிருந்து நான் முந்தித் தோற்றியே பிந்தி இதம்விருத்தி தோற்றுவதுபோலும், சுவர் முந்தித் தோற்றிப் பிந்திச்சித்திரம் தோற்றுவது போலுமறிக. மண்ணினால் செய்யப்பட்ட குடம் குதிர், பானை, சட்டிமுதலானவைகளில் மண்முந்தித் தோற்றியே அந்தந்த நாமரூபங்கள் பிந்தித்தோற்றுவது போலும், சுவர்நத்தினால் செய்யப்பட்ட கடகமகுடாதி ஆபரணங்களில் முந்திச் சுவர்ணம் விளங்கியே அந்தந்த ஆபரணங்கள் பிந்தி விளங்குவதுபோலும், நூலால் நெய்யப்பட்ட சோமன் புடவைகளில் முந்தி நூல்தோற்றியே அந்தந்த நாமரூபங்கள் பிந்தித் தோற்றுவதுபோலும், கல்லிற் கற்பிக்கப்பட்ட கணபதி சுப்பிரமணியர் முதலான மூர்த்திகளில் கல்முன்னேதோற்றியே அந்தந்த மூர்த்திகள் பிந்தித் தோற்றுவதுபோலும், இரும்பினாற் செய்யப்பட்ட கத்தி கேடயம் முதலான ஆயுதங்களில் முந்தி இரும்புதோற்றியே ஆயுதங்கள் பிந்தித்தோற்றுவது போலும், தாம்பிரத்தாற் செய்யப்பட்ட பாத்திரங்களில் முந்திச் செம்புதோன்றியே பிந்தி அப்பாத்திரங்கள் தோன்றுவதுபோலும், மரங்களாற் செய்யப்பட்ட யானை குதிரை முதலானவைகளில் மரம் முந்தித் தோற்றியே பிந்தி அந்தந்த நாமரூபங்கள் தோற்றுவதுபோலும், மயிரினால் நெய்யப்பட்ட கம்பளிகளில் முந்தி மயிர்கள்தோற்றியே பிந்தி கம்பளிதோற்றுவது போலும்; கெங்கை, காவேரி, தாம்பிரபரணி, கோதாவரி, சந்திரபுஷ்கரணி, சூரியபுஷ்கரணி, பொற்றாமரை முதலான தீர்த்தங்களில் முந்திஜலம் தோற்றியே அந்தந்த நாமரூபங்கள் பிந்தித்தோற்றுவது போலும், அக்கினியினா லெரிக்கப்படுகிற விறகு, செங்கல், பிணம் முதலான ஜுவாலையில் முந்தி அக்கிதோற்றியே அந்

தந்த நாமரூபங்கள் பிந்தித்தோற்றுவது போலும், ஒருவன் புதிதாய் ஒரு ஊருக்குப்போன மாத்திரத்தில், இது இன்னார் வீடு, இந்தவீட்டிலுள்ள மனுஷர்களுக்கு இன்னார் பெண்சாதியென்றும், இன்னவன் புருஷனென்றும், இன்னவன் அண்ணனென்றும், இன்னவன் தம்பியென்றும், இன்னவன் பிதாவென்றும், இன்னவன் புத்திரனென்றும், இன்னவள் தாயாரென்றும், இன்னவள் அக்கா தங்கச்சியென்றும், இன்னாரின்னாருக்கு இன்ன இன்ன பேர்வைக்கப்பட்டிருக் கிறதென்றும், இன்னா ரின்னாருடைய குணதோஷங்களான நடத்தைகள் இன்ன இன்ன விதமாயிருக்கிறதென்றும், இன்ன இன்ன குளங்களுக்கு இன்ன இன்ன நாமங்கள் வைக்கப்பட் டிருக்கிறதென்றும், இந்தஊரில் இன்ன இன்ன கோவில்களுக்கு இன்ன இன்ன நாமங்களென்றும், அந்தந்தக்கோவில்களிலிருக்கிற மூர்த்திகளுக்கு இன்ன இன்ன நாமங்களென்றும், முதலில் இந்த விசேஷங்க ளெல்லாம் ஒன்றுந்தெரியாமற் பஞ்சபூதத்தாற் கற்பிக்கப்பட்ட பௌதீகமான சரீராதிகளும், சிலாதிகளும், ஜலாதிகளும், முந்தித் தோற்றியே பிந்திப் பழக்கங்களாலும், கேள்விகளாலும், அந்தந்த விசேஷநாமங்கள் மெள்ளமெள்ளத் தெரிவதுபோலும், அந்நியதேசத்தில் புதிதாய் அந்நியபாஷைகளின் அர்த்தந்தெரியாமல் சத்தம்மட்டும் கேட்கப்பட்டு பிந்திப் பழக்கத்தால் அந்தபாஷைகளின் அர்த்தம் விளங்குவது போலுமறிக.

## 16-வது, தரங்கம்.

சித்துலக்ஷணம் மட்டும் விளங்கினால் சத்தும் ஆநந்தமும் தானேவிளங்கினதாக ஆகும்:— சச்சிதாநந்தத்தில் சித்துலக்ஷணம் ஒன்றுவிளங்கினால் மற்றை இரண்டும் விளங்கினதாகவே ஆகும். [எ - தி.] வேதத்தில் நடுவிற் கேட்டதைத் தப்பாமற் சொல்லிவிட்டாற் பூர்ணமாய்த் தெரிந்தவனென்று தாக்கலாவது போலும், இன்னும் ஒருஸ்திரீ வேஷக்காரனுடைய நடுவிலிருக்கிற மாணியைமட்டும் சோதனையாற் கண்டவனுக்குக் கீழேயும் மேலேயும் புருஷனென்பதை வேறே பரீக்ஷைபண்ணத் தேவையில்லாதது போலவறிக.

[இ - து.] சத்தும் சித்தும் ஒன்று சேர்ந்தவிடத்தில் ஆநந்தம் உண்டாகும். [எ - தி.] யோநியும் சிசுனமும் ஒன்றுசேர்ந்த விடத்தில் சுகமுண்டாவது போலும், நாவும் மிட்டாயும் சேர்ந்தகாலத்திற் சுகம் காணப்படுவது போலுமறிக.

[இ - து.] வாயால்மட்டும் சத்தும் சித்தும் வேறென்று சொல்லலாமே தவிர அப்படி அநுபவத்திலாகாது. [எ - தி.] காளை கன்று போட்டதென்பதும், பெண்ணின் சிசுநம் முழநீளமென்பதும் சொல் மாத்திரம்போலவறிக.

[இ - து.] ஆத்மாவினுடைய சச்சிதாநந்தம் மூன்றுக்கும்யுக்தி:— காந்தமலையின்முன் இரும்புகள் சேஷ்டிப்பன போலும், சூரிய சந்நிதாநத்தில் உல

கத்தார் ஞாநத்தோடு கூடிச் சேஷ்டிப்பது போலும், சந்திரன் சந்நிதாந விசேஷத்தால் உலகம் ஆநந்தமடைவது போலுமறிக.

[இ - து.] ஆத்மாவினுடைய சச்சிதாநந்தங்களிற் சித்துமாத்திரம் விளங்கினல் சத்தும் ஆநந்தமும் தானேவிளங்கும். [எ - தி.] ஒருபுஸ்தகத்தில் எழுதியிருக்கிற கவிகளுக்கு அர்த்தம்மட்டும் விளங்கினல் அதிலிருக்கிற பொருளும் அதனலாநந்தமும் தானே உண்டாவது போலும், ஒரு ரத்திநத்தின் பரீக்ஷையால் அதன் மகிமா விசேஷஞாநம் தெரிந்தால் அதிலிருக்கிற சத்தும் அதைக்கண்டு மகிழ்கிற ஆநந்தமும் சுயமாய் விளங்குவதுபோலும், ராஜாவின் இஷ்டம் கிடைத்தவனுக்குச் சொத்தும் சுகமும் சுயமாய் வருவதுபோலும், ஸ்திரீயின் இஷ்டம் கிடைத்தவனுக்கு ஸ்தநியத்தைப் பிடிப்பதற்கும் யோநியிற் சுகம் அநுபவிப்பதற்கும் ஆக்ஷேபமில்லாதது போலும், சொப்பனத்திலிருந்து விழித்து ஜாக்கிரதாவஸ்தாஞாநம் வந்தவுடன் ஹம்சதூளிகா மெத்தையிற் படுத்திருப்பதும் அதனலுண்டான ஆநந்தமும் சொயமாய் வருவது போலும், பூமிக்குள்ளிருந்த புதையலைக்கண்டு பிடித்தவனுக்குப் புதையல் இருக்கிறதான சத்தும், அதனல் போக போக்கியங்களை அநுபவிக்கிற ஆனந்தமும் சொயமாய் உண்டாவதுபோலும், ஒருவீட்டுக்கு மாப்பிள்ளையானவன் சுத்தமுட்டாளாயிருந்ததால் அவன் மாமனூர் வீட்டுக்குப் போயிருந்த காலத்தில், அந்தஊரில் ஒருயாகம்நடக்கும்போது அந்தயாகசாலையில் சகலஜநங்களும் கூடியிருக்கும்போது, இவன் அதற்குள்ளே போன மாத்திரத்தில் இவன் பெண் சாதியின் சகோதரர்கள் வித்வான்களாய் அந்த யாகத்தை நடத்துவிப்பதால் அவனைப்பார்த்து ஓ மாப்பிள்ளை! சாத்துவாவென்கிற வேதிகை தலையிலிடிக்கப் போகிறதென்று சொன்னதைக்கேட்டு, இவனும் தலையைக்குனியச் சபையிலுள்ளவர்களெல்லாம் சிரித்ததைக்கண்ட இவன் மனைவி இவனைத் தனித்துவைத்து இந்த அவமானத்தை நிவர்த்தித்துக் கொள்ளத் தேசாந்தரம்போய் வித்துவானய் வரவேண்டுமென்று சொன்னபடி, இவனும் ஒரு பெரியோரை அடைந்து பன்னிரண்டுவருஷங் காத்துச் சகலகலாவல்லவனய் வந்து அவன் அவர்களையெல்லாம் ஜயித்து இவனுடைய மவுட்டியமும் போய்ச் சுகமுண்டான கதைபோலுமறிக.

17-வது, தரங்கம்.

இந்தத்தேகத்தில் ஆத்மா அகண்டம். பஞ்சகோசத்திற் கண்ட ஆத்மாவை அகண்டமென்று என்னமாய்ச் சொல்லலாமெனச் சங்கைவந்தால், சமுத்திரத்தில் ஒருமூலையில் துளிஜலத்தை பானம்பண்ணிக் கடல்முழுவதும் உப்பென்று பார்ப்பதுபோலும், இன்னும் ஸ்திரீயாவது புருஷனவது தன்னைப்பரீக்ஷித்து யோநிலிங்கங்களாகிற அடையாளம் கண்டபின், உலகத்திலிருக்கிற ஸ்திரீபுருஷர்களையெல்லாம் போய்ப் பரீக்ஷிக்கத் தேவையில்லாதது போலுமறிக,

[இ -து.] நம்மிடத்திலிருக்கிற அறிவே எங்கும் பரிபூரணம். [எ - தி.] நமக்கு எதிரே விளங்குகிற சூரியனே எங்குமிருக்கிறவ னென்பது போலவறிக.

[இ - து.] இந்தப் பஞ்சகோசத்திற்காணப்பட்ட அறிவு சர்வபரிபூரணம். [எ -தி.] இந்தக்கடத்திலிருக்கிற ஆகாசம் எங்கும் வியாபித்து இதில் அசங்கமாயிருப்பது போல எங்கும் அசங்கமாயிருக்குமென்றறிவதுபோலும் ; இந்தக்கல்லு கடிநமாயிருப்பதுபோல, உலகத்திலுள்ள கல்லுகளெல்லாமிப்படியே கடிநமாயிருக்குமென்றறிவதுபோலும் ; இந்தத்தண்ணீர் குளிர் இளகல் மதுரம் முதலான குணங்களோடு கூடியிருப்பதுபோல, உலகத்திலுள்ள தண்ணீர்களெல்லாம் குளிர் முதலான குணங்களோடு கூடியிருக்கு மென்றறிந்து கொள்ளுவதுபோலும்; இவ்விடத்திலுள்ள அக்கினி லோகிதோஷ்ணப் பிரகாசமாயிருப்பது போல உலகத்திலுள்ள அக்கினி யெல்லாமிப்படியே லோகிதோஷ்ணப்பிரகாசமாயிருக்குமென்றறிவது போலும்; இவ்விடத்திலுள்ள வாயு எப்படிச் சலநகதிகளோடு கூடிக்கொண்டிருக்கிறதோ, அப்படியே உலகத்திலுள்ள வாயுக்களெல்லா மிப்படிச் சலநகதிகளோடு கூடிக்கொண்டிருக்கு மென்று அறிந்து கொள்ளுவதுபோலும் ; இந்தச்சுரோத்திரேந்திரியம் சத்தங்களைக்கிரகிப்பது போலச் சகலசரீரங்களிடத்திலிருக்கிற சுரோத்திரேந்திரியங்களெல்லாம் சத்தத்தை கிரகிக்கும் என்றறிந்து கொள்ளுவதுபோலும் ; இந்தச்சரீரத்திலிருக்கிற துவக்கிந்திரியம் சீதோஷ்ண மிருதுகடிந ஸ்பரிசங்களை அறிவது போலச் சகலர்களுடைய துவக்கிந்திரியமுமிப்படியே ஸ்பரிசங்களை அறியுமென்றறிந்து கொள்ளுவதுபோலும் ; இந்தச்சரீரத்திலிருக்கிற நேத்திரேந்திரியம் எப்படி நீலபீதாதிரூபங்களை அறிகிறதோ, அப்படியே சகலர்களுடைய நேத்திரேந்திரியங்களும் நீலபீதாதிரூபங்களை அறியுமென்றறிவதுபோலும் ; இந்தத் தேகத்திலிருக்கிற ரசநேந்திரியம் மதுராம் லாதி ஷட் ரஸங்களையறிவது போலச் சகலருடைய ரஸநேந்திரியங்களும் ஷட்ரஸங்களை அறியுமென்று அறிந்து கொள்ளுவதுபோலும்;இந்தச் சரீரத்திலிருக்கிற கிராணேந்திரியம் நற்கந்த துற்கந்தங்களை அறிவதுபோலச் சகலருடைய கிராணேந்திரியங்களும் நற்கந்த துற்கந்தங்களை அறியுமென்றறிவதுபோலும் ; இந்த வாக்கிந்திரியம் பேசுவதுபோலச் சகலவாக்கிந்திரியங்களும் பேசுமென்றறிவது போலும் ; இந்தப்பாணீந்திரியம் தொழிற் செய்வதுபோலச் சகல பாணீந்திரியங்களும் தொழிற்செய்யுமென்பது போலும் ; இந்தப்பாதம் நடப்பது போலச் சகலபாதங்களும் நடக்குமென்பது போலும் ; இந்தப் பாயு மலஜல விசர்ச்சநம் செய்வதுபோலக் சகல பாயுக்களும் மலஜல விசர்ச்சநம் செய்யுமென்பது போலும் ; இந்தச் சிசுநம் சுகிப்பதுபோலச் சகல சிசுநங்களும் சுகிக்குமென்பது போலும் ; இத்தேகம் ஷட்பாவ விகாரத்துடன் கூடியிருப்பது போலச் சகல தேகங்களு மிப்படியேயிருக்குமென்பது போலும் ; இந்தமனசுக்கு அவஸ்தாத்திரயங்கள் வருவது போலச் சகலருக்கும் வருமென்றறிவது போலுமறிக.

18 - வது, தரங்கம்.

தானே சகலத்தையும் விழுங்குகிறவன்:—

சாக்ஷிக்குத் தெரியாமல் மனசு ஒரு சங்கற்பமும் செய்யக்கூடாது. சாக்ஷியே அறிந்து சகலத்தையும் விழுங்குகிறர். [எ - தி.] ஆகாசத்தை விட்டு மேகம் முதலிய ஒன்றும் சஞ்சரிக்க முடியாமல் ஆகாசமாத்திரமாய்ப் போவது போல வறிக.

[இ - து.] தானே ஜகத்தை விழுங்குகிறவன் என்பதற்கு சுருதி யுக்தி அநுபவமென்ன வெனில்:— கடவல்லியில் இந்த ஜகத்தை அந்நமாயும் எமனை ஊருகாயாயும் சாப்பிடுகிறேனென்று சொல்லியிருக்கிறதேயாம். உலண்டுப்பூச்சிதானே நூலை உண்டுபண்ணித் தானே கிரகிப்பது போல யுக்தி. சுழுப்தியே அனுபவம்.

[இ - து.] சாக்ஷியாகிய ஆத்மாவுக்குத் தெரியாமல் மனசு சங்கற்பவிகற்பங்களைச் செய்யமுடியாது. [எ - தி.] சுரோத்திரத்துக்குத் தெரியாமற் சத்தம் உள்ளேநுழைய முடியாததுபோலும், துவக்கிந்திரியத்துக்குத் தெரியாமல் ஸ்பரிசஞானம் வரமுடியாதது போலும், நேத்திரத்துக்குத் தெரியாமல் ரூபஞானம் வருவதற்கு இடமில்லாததுபோலும், நாவுக்குத் தெரியாமல் ரஸஞானம் வாராததுபோலும், கிராணேந்திரியத்துக்குத் தெரியாமல் கந்தஞானம் உண்டாகாததுபோலும், வாக்கிந்திரியமன்றியில் அர்த்தஞானத்தோடு கூடிய சப்த உச்சாரணம் பண்ணமுடியாதது போலும், பாணிந்திரிய மில்லாமற் தொழிற் செய்யமுடியாதது போலும், பாத இந்திரிய மில்லாமல் நடக்கமுடியாதது போலும், பாயுஇந்திரிய மில்லாமல் மலஜலவிசர்ச்சநம் பண்ணமுடியாததுபோலும்,உபஸ்த இந்திரிய மில்லாமல் ஆநந்தத்தை அடைய முடியாதது போலும், மண்ணின்றிச் சரீராதிகளும் பானைசட்டிகளும் உற்பத்தியாக முடியாததுபோலும், வித்தின்றி மரம் செடி கொடி புல்லு பூடு நெல்லு கேப்பை கம்பு சோளம் வரகு முதலான தாந்யங்கள் உண்டாக மாட்டாதனபோலும், புருஷர்களுக்குத் தெரியாமல் ஸ்திரீகள் கெர்ப்பமாக முடியாததுபோலும், ராஜாவின்றி ராஜ்யாதிகாரம் நடக்கமுடியாததுபோலும், சூரியனின்றிப் பகல் விளங்கமுடியாததுபோலும், தீபம் சந்திரிகை யின்றி ராத்திரி விளங்கமுடியாததுபோலும், அந்நம் தண்ணீரின்றிச் சரீரப்பிராணிகள் ஜீவிக்க முடியாததுபோலும், சர்வாந்தரியாமியான ஈஸ்வரனுக்குத் தெரியாமல் யாதொரு ஜீவர்களும் யாதொரு காலத்திலும் யாதொரு இடங்களிலும் யாதொரு விதமான செய்கைகளும் செய்ய முடியாததுபோலும், சக்கிரவர்த்திக்கு விரோதமான செய்கைகளைச் செய்தவன் இவ்வுலகத்தில் எவ்விடத்திலும் வசிக்க முடியாததுபோலும், பிரஹ்மாவுக்குத் தெரியாமல் ஜகத் சிருஷ்டியாவதற்கு முடியாததுபோலும், நாராயணனுக்குத் தெரியாமல் ஜெகத்திருப்பதற்கு முடியாததுபோலும், ருத்திரனுக்குத் தெரியாமல் ஜெகத்தை சம்மாரம் பண்ணமுடியாததுபோலும், மகேஸனுக்குத் தெரியா

மல் மாயை யாரையும் தன் சொரூபம் தனக்குத்தெரிய வொட்டாமல் மறைக்க முடியாதது போலும், சதாசிவமென்ற சற்குருநாதனின்றி அஞ்ஞானமும், அஞ்ஞான காரியமான ஆவரணமும், அநாத்மவாசனைகளும், சஞ்சிதாகாமிய கர்மங்களும், அவைகளால் உண்டு பண்ணப்பட்ட ஜநநமரண சம்சாரங்களும், அதனுல் வரப்பட்ட அநந்த கோடி துக்கங்களும் நிவர்த்தியாகி, சாக்ஷாத் காரமான ஆத்ம ஞானமுண்டாகும்படி செய்ய முடியாததுபோலுமறிக. இனி ஆத்மாவே சகலத்தையும் விழுங்குகிருர். [எ - தி.] தப்பளை கொசுகை விழுங்குவது போலும், பாம்பு தப்பளையை விழுங்குவதுபோலும், பாம்பைக் கீறிப் பிள்ளை கொல்லுவது போலும், கீறிப்பிள்ளையைக் கரடிகொல்லுவது போலும், கரடியைச் சிங்கம் கொல்லுவதுபோலும், சிங்கத்தைச் சரபம் கொல்லுவது போலும், சரபத்தை மேகம் கொல்லுவதுபோலும், மேகத்தைக் காற்று கொல்லுவதுபோலும், காற்றை யோகிகள் விழுங்குவதுபோலும், அங்கபானாதிகளைப் பிராணன் விழுங்குவதுபோலும், யோகி சிசுநத்தை விழுங்குவதுபோலும், கெங்கைபாபங்களை விழுங்குவது போலும், சந்திரன் தாபங்களை விழுங்குவது போலும், சூரியன் இருட்டை விழுங்குவது போலும், நம்முடைய குருநாதன் கிருபையினுல் நம்முடைய அஞ்ஞானத்தை விழுங்கி நம்மை ரக்ஷித்தது போலுமறிக.

## 19 - வது, தரங்கம்.

விஷயத்திற் காணுகிறசுகம் தன்சுகம்:—

விஷயத்திற் காணப்படுகிறசுகம் தன் சுகமென்றறிந்து விஷயத்திலாசை விடவேண்டும். அதில்சுகமிருக்கிறதென்று நினைப்பது மயக்கம். [எ - தி.] தன் கையிலிருக்கிற தேனைச் சட்டியில் விட்டு அதில்தித்திப்பு வருகிறதென்று நினைப்பது போலவறிக. அப்படியானுல் விஷயமில்லாத போது அவ்விஷயசுகம் காணப்படவேண்டுமே யென்று சொல்லுவாயாகில், தீபமானது பச்சைமுதலான கண்ணுடி காட்டாதபோது தன் சுபாவமான செம்மை நிறமாயிருப்பது போல, பஞ்சவிஷயம் எதிர்படாதபோது தன் சுபாவாநந்த மாத்திரமாயிருக்கும், விகாரமான விஷயாநந்தத்தின் தோற்றமில்லை. அந்த ஆநந்தம் விஷய சம்பந்தத்தாலேயே காணுகிறது என்பாயாகில், தீக்குச்சியை உரசுவதால் தீப் பிரகாசித்தாலும் குச்சியிலிருக்கிற மருந்தின் பிரகாசமேதவிர உரசப்பட்ட பதார்த்தத்துக்குப் பிரகாசமில்லாததுபோல, விஷயசம்பந்தத்தாற் சிற்றின்பம் தோன்றினுலும் அது தன்னுடையதென்றறிக.

[இ - து.] ஆத்மாதான் அதிகப்பிரியர். [எ - தி.] பதினெட்டுப் பிள்ளைபெற்ற வீரன்கதையும், மண்டபம் விழுமென்றுசொன்னதும் தன்குருசாதுக்கள் முதலானவர்களை ரக்ஷிக்காமல் விட்டுவிட்டுத் தன்தலையை தப்பிவித்துக் கொண்டோடின பாக்ஷாகதை போலுமறிக.

[இ - து.] விஷயத்திற் காணப்படுகிற ஆநந்தம் தன்னுடைய ஆநந்தத்தின் திவலை. [எ - தி.] மழைபெய்ந்து விட்டதன்பேரில் செடியிற் சொட்டுகிற தண்ணீரும் மேகஜலம்சமென்றே அறிவதுபோலவறிக.

[இ - து.] தன்னுடையகாமத்தின் பொருட்டே விஷயத்தைப் பிரியமாகக் கொள்ளுகிறானென்று சொன்னசுருதிக்கு அர்த்தம்:— இந்த ஆத்மாவென்பதற்கு ஜீவன் அர்த்தம். விஷயத்திலிருக்கிற பிரியத்தை முந்தி ஜீவனிடத்தில் வைக்கவேண்டும். [எ - தி.] தாசிவீட்டுக்குப் போகிறவனைப் பெண்சாதிகிட்டப் படுத்துக்கொள்ளென்று சொல்லுவதுபோலும், சுராபானத்தைவிட்டுக் கஞ்சாவைச்சாப்பிட்டுக் கொண்டுவாவென்று சொன்னது அந்த சுராபானத்தை முதலில் விடட்டுமென்று சொன்னதுபோலுமறிக.

[இ - து.] விஷயங்களைக் காட்டிலும்தானே அதிகப்பிரியவஸ்து. [எ-தி.] ஒருபுருஷன் ஒருஸ்திரீயை ஆயிரமிரண்டாயிரம் ரூபாய்கொடுத்துக் கல்யாணம் செய்வதும், பின்பு அவளுக்கு ஆயிரம்பதினாயிரத்துக்கு நகைகள் போட்டு அழகுபார்ப்பதும் தன்பிரியத்துக்காகவே. அவளையாதொரு புருஷர்கள்பார்த்தாலும் அவளோடு பேசினாலும் அவர்களோடு சண்டைக்குநிற்பதும், கொலைபரியந்தம் நடக்கிறதும் தன்பிரியத்துக்காகவே. அவளோடு சேர்ந்து புத்திரனுண்டாகவேண்டுமென்று கவலைப்பட்டு கோவில் குளம் தாநம் தருமம் பட்டினி பசி முதலான கிரிகைகளில் பிரயாசைப்பட்டுப் புத்திரனை அடைவதும் தனக்காகவே. தீவுதீவாந்திரங்களான தொலைகளுக்குப்போய்ப் பொய்புரட்டுகளைச்சொல்லி முதலாளிக்கு மோசநாசங்களைச் செய்து பணங்களைச் சம்பாதிப்பதும் தனக்காகவே. இன்னும் ஐம்பதினாயிரம்ரூபாய் செலவழித்துத் தீவாந்திரங்களிலிருந்து மரம் வரவழைத்துக் கொத்தன் தச்சன்களோடே கத்தி, வேலைசெய்யச்சொல்லி வீடுமேடைமாளிகை கட்டுவதும் தன் சுகத்துக்காகவே. இப்படியே சிற்குச்சந்தந முதலான சகலவிஷயங்களையும் தேடிச்சாவதானம் பண்ணுவதும் தன்சுகத்துக்காகவே. இப்படியே ஸ்திரீகள் புருஷனைத்தேடி அவனுக்குவேண்டிய அந்நபாநாதி வஸ்துக்களைக்கொடுத்து வருந்தி அவனோடு சேருவதும் தன்சுகத்துக்காகவே. இப்படியே மாடு ஆடு முதலானவைகள் வேலியேறி விழுந்து பயிரைத்தின்னப்போகிறதும் தன் சுகத்துக்காகவே, குரங்குகள் மரங்களில்தாவி காய்கனிகளைத் தின்னப்போகிறதும் தன்சுகத்துக்காகவே, இன்னும் ஈ எரும்புகள் தேன் சர்க்கரை கற்கண்டு முதலானவைகளில் மொய்த்து விரட்டவிரட்டத் திரும்பிவருவதும் தன்சுகத்துக்காகவே. ராஜன் மந்திரிமுதலான உத்தியோகஸ்தர்களுக்குச் சம்பளம் ஆயிரம் இரண்டாயிரம் கொடுத்துவருவதும், யானை குதிரைகள் படைபண்டாரங்களை வெகுவிலைகொடுத்துவாங்கி அவைகளுக்குத் தினம்தவறாமல் வைக்கல் புல் பருத்திக்கொட்டை தவிடு காணம் முதலானவைகளைக் கொடுத்து ரக்ஷிப்பதும் தனக்காகவேயென்று அறிந்துகொள்ளத் தக்கதென்றறிக.

## 20 - வது, தரங்கம்.

ஆத்மசந்நிதாந மாத்திரத்திற் சகலமும் சேஷ்டிக்கிறது:—

அந்தரியாமி பிரேரணையாற் சகலமும் சேஷ்டிக்கிறது என்றசுருதிக்கு— ஆத்மசந்நிதாந மாத்திரத்தில் உலகம் சேஷ்டிக்கிறதே தாத்பரியம். [எ - தி.] சூரியன் தாமரைப்பூவை விரியும்படி செய்கிறானென்று உலகத்தார் சொன்னாலும் அவர் சந்நதிமாத்திரத்தில் அப்பூ விகசிதமாகிறது போலவறிக.

[இ - து] ஆத்மாவாகிய தன் சந்நிதாந மாத்திரத்தினாலேயே மூலப் பிரகிருதியிலடங்கியிருந்த அதனுடைய மூன்று குணங்களும் வெவ்வேறாகப் பிறிந்து தோன்றுவதும், அதில் சர்வக்ஞத்வம் பஞ்சகிருத்தியத்துவம் முதலான சக்திகளுடைய மாயை யென்ற சத்துவ குணத்தைக் காண்பித்து, அதில் தோற்றுகிற பிரதி பிம்பமான ஈஸ்வர விவகாரங்களும், அதன் ரஜோகுணமான அவித்தை அநேகப் பிரகாரமாகப் பிறிந்து காம கர்மாதிகளால் கெடுக்கப் பட்டு, அநேக கோடி ஜநந மரணங்[illegible]களுக்குக் காரணமான வாசனைகளை அடக்கி வைத்துக்கொண்டு, அந்த அவித்தைகளிற் பிரதிபிம்பித்த அநந்த கோடி விதமான ஜீவர்கள் அநந்த கோடி ராகத்துவேஷங்களுடன்கூடி அநந்த விதமான சம்சார விவகாரத்தை நிர்வகிப்பதும் ஆத்ம சந்நிதாந மாத்திரமே. பின்னும் மூலப்பிரகிருதியின் தமோகுணம் ஆவரண விக்ஷேபமாய்ப் பிறிவதும், அதில் ஆவரண சக்தி ஈஸ்வரனையும் ஞாநியையும் தவிர மற்றவர்களுக்கெல்லாம் ஞாநக்கண்ணை இருட்போல் மறைத்து ஆத்மாநாத்மாக்களின் பேதம் தெரிய வொட்டாமல் மறைப்பதும் ஆத்ம சந்நிதாந மாத்திரமே. இன்னும் விக்ஷேப சக்தி முக்குணங்களுடன் பஞ்ச பூதங்களை உற்பத்தி செய்வதும், அதிற் சத்துவ குண சமஷ்டியில் அந்தக்கரண முண்டாவதும், அது சங்கற்ப விகற்பவிருத்தியால் மனமாவதும், நிச்சயவிருத்தியாற் புத்தியாவதும், அபிமான விருத்தியால் அகங்காரமாவதும், அவதாநவிருத்தியாற் சித்தமாவதும், சத்துவகுண வியஷ்டியாற் சுரோத்திராதி ஞாநேந்திரியங்களுண்டாவதும், அவைகள் சப்தாதி விஷயங்களை அறிவதும், இன்னும் ரஜோகுண சமஷ்டியால் வாயு உண்டாய், அது உசுவாச நிசுவாச கமனத்தால் பிராணனென்றும், கீழ்த்துவாரத்திற் போகும் போது அபானனென்றும், எழுபத்தீராயிரம் நாடிகளிலும் சஞ்சரிப்பதால் வியானனென்றும், கண்டத்திலிருந்து போடப்பட்ட அந்நபாநாதிகளைக் கடைந்து உள்ளே தள்ளுவதும், கண்டத்திலிருந்து தூங்கும் போது குறட்டை ரூபமாய்க் காத்திருப்பதால் உதாநனென்றும், சாப்பிடப்பட்ட அந்நம் கறிபதார்த்தங்களை சமரஸப்படுத்துவதால் சமாநனென்றும், இன்னும் ரஜோகுண வியஷ்டியால் உண்டு பண்ணப்பட்ட வாக்காதி கர்மேந்திரியங்கள் வசநாதி தொழில்களைச் செய்வதும், இன்னும் அப்பூதத்தின் தமோகுணம் பஞ்சீகரணம் பண்ணப்பட்டு அதிலிருந்து அண்டங்கள் புவநங்கள் நாலுவகைச் சரீரங்கள் அந்நபாநாதி வஸ்துகள் முதலிய சகலமும் ஆத்ம சந்நிதாந மாத்திரத்தாற் சேஷ்

டிப்பது எப்படிப்போல வென்றால்:—தனித்து ஒருவனைப் படுக்கையில் படுத்து நித்திரை செய்யும்போது தன்னிடத்திலிருக்கிற நித்திரா சக்தியால் தன் சந்நிதாநமாத்திரத்தில் ஜீவேஸ்வர ஜகத்துக்கள் தோற்றுவதும், அவைகளுக்கு யோக்கியமான தொழில்களைச் செய்வதும், விழித்த மாத்திரத்தில் பொய்யாய்ப் போவதும், தன் சந்நிதாந மாத்திரத்தில் எப்படி தோன்றுகிறதோ அப்படிப்போல வென்றறிக.

21-வது, தரங்கம்.

அவஸ்தாத்திரயத்தின் தன்மையும், அதற்கு சாக்ஷிதானென்று அறியும் விதமும்:—

ஜாக்கிரம் ஈஸ்வர சிருஷ்டியானதால் சர்க்கார்ச் சம்பளம் போலவும், சொப்பனம் ஜீவசிருஷ்டியானதால் ரகசியமாய் லஞ்சம் வாங்குவதுபோலவும், வேலை செய்வதற்காகச் சாராயம் வாங்கிச் சாப்பிடுவதுபோல ஜாக்கிர சொப்பனத்தில் உழைத்த சிரமம் நிவர்த்தியாவதற்கும், வரப்போகிற காலத்துக்குப் பெலத்துக்கும் சுழுத்தியவஸ்தை அநுபவிக்கப்படுகிறதாகையால், விழுந்து கும்பிட்டதற்கும் புடுக்கடிபட்டதற்கும் சரியாய்ப்போனது போல, ஜீவனுக்கு மிச்சமின்மையால் அவஸ்தாத்திரய சாக்ஷியே நானென்றறிவதே லாபமென்றறிக.

[இ - து.] தேகமே தானாகிச் சுகிக்கும்போது அறிவேதானாகிச் சுகிப்பதிற் கேட்கவேண்டியதில்லை. [எ - தி.] பிணத்தையே கட்டிக்கொண்டு போக சுகத்தைப் பெறுகிறவள், உயிரோடிருக்கிற தன் நாயகனோடு ரமிப்பதிலும், சுகமுண்டாவதிலுஞ் சந்தேகமில்லாதது போலும்; தகடுதத்தத்தில் ரமித்தவள் சர்மதண்டத்தால் அதை வெறுத்த கதை போலுமறிக. ஐயா! தேகாத்ம புத்தி போயல்லவோ சிதாத்ம புத்திவரவேண்டும். அந்த தேகாத்ம புத்தியோ வென்றால் வெகு காலத்து அரசமரத்தினுடைய வேர் எப்படி வெகு ஆழத்திலும் வெகு அகலத்திலும் வியாபித்திருக்குமோ அப்படி யிந்தத் தேகாத்ம புத்தியும் அநேக கற்பகோடி காலமாய்த் திடமாய்ப் பழகியிருப்பதால் அந்தத் தேகாத்ம புத்திபோய்ச் சிதாத்ம புத்திவந்து ஜீவன் முக்திச் சுகம்வருமாவென்றால் வரும். [எ - தி.] கல்லில் நாருறிக்கலாமானால் வாழை மரத்தில் நாருறிக்கலாமாவென்று கேட்க வேண்டாததுபோலும், கானல் ஜலத்தையே சாப்பிட்டுத் தாகம் தீர்ந்து திருப்தியுண்டானால் நிஜமான ஜலத்தைச் சாப்பிட்டவனுக்குத் தாகம் தீர்ந்து திருப்தியுண்டாகுமா வென்று கேட்க வேண்டாதது போலும், நஞ்சைச் சாப்பிட்டுப் பசி தீரு மானால் அமிர்தம் சாப்பிட்டவனுக்குப் பசி தீருமா வென்று கேட்க வேண்டியதில்லாதது போலும், மலத்தைப் பூசிக்கொண்டவனுக்கே சுவாசனை யுண்டாகுமானால் அத்தர் பன்னீர் சவ்வாது முதலியவற்றைப் பூசிக்கொண்டவனுக்கு மணமுண்டாமாவென்று கேட்கத் தேவையில்லாதது போலவும், லோபியினிடத்தில் யாசித்

த தரித்திரனுக்கே மிடிதீருமானல் கர்னனிடத்தில் யாசித்தவனுக்கு மிடிதீருமா வென்று கேட்க வேண்டாததுபோலும், கள்ளிமரத்தில் காத்தவனுக்கு வஸ்திராபரணம் கிட்டுமானல் கற்பகவிருக்ஷத்தைக் காத்தவனுக்குக் கேட்கவேண்டா தது போலும், கன்னியினிடத்தில் சேர்ந்தவனுக்கே போகசுகமுண்டானல் பக்குவமானபெண்ணினிடத்தில் கூடினவனுக்கு அதுகிட்டுமாவென்று கேட்க வேண்டுமா? பிறவிக்குருடனிடத்தில் ரத்தினப்பரீக்ஷை தெரிந்துக்கொண்டால் குபேரனிடத்தில் காத்தவனுக்கு அந்தரத்தினப் பரீக்ஷை தெரிந்து கொள்ளக் கூடுமாவென்று கேட்க வேண்டாததுபோலும், கழுதைமேலேறிச் சவாரிபண்ணுகிறவனுக்கே பெருமையுண்டானல் உச்சைச்சிரவசின் பேரிலேறிச் சவாரி பண்ணுகிறவனுக்குப் பெருமையுண்டாவதில் கேட்கவேண்டுமா? ஜாதி ஊஷரத்தில் விவசாயம் பண்ணுகிறவனுக்கே நெல்விளையுமானல் காஷ்மீரகண்டத்துக்கு கேட்கவேண்டுமா? அநேகமூடனிடத்தில் படித்தவனுக்கே சகலவித்தையும் வருமானல் பிரகஸ்பதியினிடத்தில் படித்தவனுக்குக் கேட்கவேண்டுமா வென்று சொல்வது போலுமறிக.

[இ - து.] அவஸ்தாத்திரயத்தின் தன்மையும், அதற்குசாக்ஷிதானென்று அறிவதற்கு உபாயமுமென்னவென்றல்:— ஆகாசத்திலுண்டாகிற சூரியோதயம்போலே ஜாக்கிராவஸ்தை. சந்திரோதயம்போலே சொப்பனவஸ்தை இருட்டுப்போலே சுழுப்தியவஸ்தை. இந்த மூன்றும் தினந்தோறும் மாறிமாறி வந்துவந்து போவதாலும் ஒன்றிலொன்றில்லாமற் போவதாலும் பொய். ஆகாசம்போலே அசங்கமாய் ஒருபடித்தாய் அவஸ்தாத்திரயத்திலும் சாக்ஷிமாத்திரமா யிருப்பவனே தானென்றறியத்தக்கதென்றறிக.

## 22 - வது, தரங்கம்.

பிரஹ்மத்துக்குத் திருஷ்டாந்தம் ஜகத்திலேயே அறிக:—

பிரஹ்மத்துக்கு மாயைச்சேர்ந்த ஆகாசம் சூரியன் மண்முதலானவைகளே திருஷ்டாந்தமா யெப்படி சுருதிகளிற் சொல்லலாம் என்பதற்கு யுக்தி- அப்பயதீக்ஷதருடைய அய்யாதிவசத்துக்கு அஷ்டாளப் பிராஹ்மணர்களுடைய காலையேகழுவிப் பிராஹ்மணார்த்தம் சொல்ல வேண்டி யிருக்கிறது. அஃது எதனலென்றல் அவருக்குச் சமானனவது மேலானவனவது இல்லாமலிருப்பது போல, பிரஹ்மத்துக்குச் சமானமாவது மேலாவது இல்லாததனலென்றறிக.

[இ - து.] நாகரத்திநம் முதலான நவரத்தினங்களை அரக்கிற் புதைத்து பதக்கம்பண்ணவேண்டி யிருப்பதுபோலும், அந்த ரத்தினங்களைச் சரட்டில் கோர்த்து நவரத்திந கண்டியாக்கிக் கழுத்தில் தரித்துக்கொள்ளுவது போலும், முத்துக்களைத்துளைத்து நூலைக்கோர்த்து முத்துமாலையாக்கிச் சுவாமிக்குச்சாத்துவதுபோலும், மல்லிகை முதலான புஷ்பங்களை நாரில் மாலையாய்க் கட்டி தரித்துக்கொள்ளுவது போலும், சுவர்ணத்தில் நவலோகபொடிகளைச் சேர்த்து

ஆபரணமாக்கி அலங்காரம்பண்ணிக் கொள்ளுவதுபோலும், பூஜாக்கிரஹத்தில் விழுந்திருக்கிற செத்தை குப்பைகளை விளக்குமாற்றுற் கூட்டியே சுத்தம்பண்ண வேண்டி யிருப்பதுபோலும், சேதநமாயுள்ள தன்முகத்தைப் பார்த்துக்கொள்ள ஜடமானகண்ணாடியை அபேக்ஷிப்பதுபோலும், சேதநமாயுள்ள மான் மீன் அசுணப்பக்ஷிகளைப் பிடிப்பதற்கு ஜடமான புல்லாங்குழல் வலை தூண்டிலில் வைக்கப்பட்டிருக்கிற மாம்சாதிகளால் அவைகளைப்பிடிப்பது போலும், சேதநமான சரீரத்தைப் பார்த்துக்கொள்ள ஜடமானதீபம் முதலான பிரகாசம் வேண்டி யிருப்பதாலும், சக்கிரவர்த்தியின் பேட்டிக்குப் போகிறவனுக்கு மூடனும் ஏழையாயுமிருக்கிற வாசற்காரனை சேவகன் தயவு வேண்டியிருப்பதுபோலும், அதிசயமான சொர்க்க சுகத்தையடைய வேண்டியவனுக்கு அற்பமான ஆடுகளைக் கொண்டுவந்து பசுபந்தம் பண்ணி யாகம் செய்யவேண்டி யிருப்பதுபோலும், பரமசிவன் தயவைப் பெற்றுச் சாலோக்ய சாமீப்பிய சாரூப்பிய ரூபமான பத முக்திகளைப் பெறவேண்டியவன் ஜடமாயும் அற்பமாயுமிருக்கிற தும்பை வெள்ளெருக்கு ஊமத்தை வில்வம் முதலானவைகளால் ஆராதித்து அப்பலன்களை அடைவதாலும்; அழிவற்ற சுகத்தைப் பெறுவதற்கும், அடியோடு அஞ்ஞாநம் முதலான சகல அநர்த்தங்களையும் போக்குவதற்கும், சாக்ஷாத்காரமான ஆத்மஞாநத்தைப் பெறுவதற்கும் காரணமானச் சற்குரு நாதன் கிருபையுண்டாவதற்கு, ஆப்தம் ஆங்கம் ஸ்தாநம் சத்பாவமென்ற நாலுவிதமான பணிவிடைகளைப் பண்ணி அழிவற்ற மோக்ஷத்தைப் பெறுவதுபோலும்; விச்சித்தியில்லாமல் வம்சம் விருத்தியாவதற்காகச் சேதநனை புத்திரனைப் பெறவேண்டினவன், ஜடமாயும் மலமூத்திரம் ரத்தம் முதலான அசிங்கியம் முதலானவைகளோடு கூடிய யோநியை அபேக்ஷிக்கவேண்டியிருப்பதுபோலும்; ஜீவித்திருக்கிற ஜடமாயும், முள்ளுக்களோடு கூடினதாயும் இருக்கிறகாட்டை வெட்டுதற்கு அரிவாள் கோடரி முதலான ஜடங்களை அபேக்ஷிக்கிறது போலும்; ஜடமாயுள்ள வேதாந்த சப்தங்களுடைய சிரவணத்தால் சித்தாயிருக்கிற ஆத்மாவை அறியவேண்டி யிருப்பதாலும்; ஜடமாயுள்ள அந்நபாநத்தால் சேதநமாயுள்ள ஜீவன் ஜீவித்திருக்க வேண்டியிருப்பதாலும்; ஜடமான கஞ்சா ஜாதிக்காய் முதலான ஔஷதத்தைச் சாப்பிடுவதால் சிசுநம் சேதநமாய் எழும்பிப் போகம்செய்வதற்கு யோக்கியமாவதுபோலும், அரூபமான சொர்ணாகர்ஷண பைரவமந்திர ஜபத்தாற் பிரத்தியக்ஷமாயும், விலையுயர்ந்ததாயும், சகலராலும் ஆசைபடக்கூடினதாயுமிருக்கிற சொர்ணம் கிடைப்பதுபோலும்; ஜடமான சத்துவவிருத்தியால் சித்தான சுகம் பெறுவதுபோலுமறிக.

## 23-வது, தரங்கம்.

நானென்கிறதற்கு அர்த்தம் கூடஸ்தரே:—

நானென்கிறதற்கு அர்த்தம் கூடஸ்தரேதவிர மற்றைய அந்நமயாதிகோசங்கள் விசாரிக்கும்போது அர்த்தமாகாது. [எ - தி.] ஆயிரம்பேர் பிராஹ்ம

ணார்கள் கூடியிருந்தாலும் கநம் பரீக்ஷிக்கும்போது பரீக்ஷை சரியாய்க் கொடுத் தவனே கநபாடி யென்ற கணக்கில் தாக்கலாவது போல வறிக.

[இ - து.] நானென்கிற சொல்லுக்குக் கூடஸ்தரே அர்த்தம். [எ - தி.] தேங்காய் என்கிற சப்தத்திற்கு மட்டை கொட்டாங்கச்சி முதலானவைகள் அர்த்தமாகாமல் அந்தப் பாலே அர்த்தமாவதுபோலும்; நெல் என்கிற சப் தத்திற்கு உமி தவிடு அர்த்தமாகாமல் அரிசியே அர்த்தமாவதுபோலும்; கரும்பென்கிற சொல்லுக்கு மேற்றோடு சக்கைகள் அர்த்தமாகாமல் சாறே அர்த்தமாவது போலும்; மாம்பழமென்கிற சொல்லுக்கு மேற்றோடு சக்கை கொட்டை அர்த்தமாகால் அதிலிருக்கிற ரசமே அர்த்தமாவதுபோலும்; பிலாப்பழமென்கிற சொல்லுக்கு முள்ளுப்போலிருக்கிறதோடும், ஜடைபோ லிருக்கிற சக்கையும், கல்லுப்போலிருக்கிற கொட்டையும் அர்த்தமாகாமல் அமிர்தம்போலிருக்கிற சுளைமட்டும் அர்த்தமாவதுபோலும்; பெண்ணென் கிற சொல்லுக்குத் தலை, கால், கை, கண், மூக்கு, வாய்கள் அர்த்தமாகாமல் யோநியும் முலையும் அர்த்தமாவதுபோலும்; கோர்ட்டாரென்கிற சொல்லுக் குக் கச்சேரி, சேவகர்கள், உத்தியோகஸ்தர்கள், காகிதம், மை, பேனா முத லானவைகளர்த்தமாகாமல் ஜட்ஜியே அர்த்தமாவது போலும்; கல்யாண மென்கிற சொல்லுக்குப் பந்தல், மேளதாளம், வாழைமரம், மாவிலை, வைதீகர் கள், தாசிகள், பரிசாரகர்கள், மற்றைப் பதார்த்தங்களர்த்தமாகாமல் பெண் ணும் பிள்ளையும் அர்த்தமாவது போலும்; யுத்தத்தில் ஜயாபஜயமென்பது யானை, குதிரை, ஆட்கள், தேர், வில், பாணம், அஸ்திரம், சஸ்திரம், முதலானவைகள் அர்த்தமாகாமல் ராஜாக்களே அர்த்தமாவதுபோலும்; ஜீவனென்கிற சொல்லுக்கு தேகேந்திரியாதிகள் அர்த்தமாகாமல் அவைகளை அபிமானிக்கிறவனே அர்த்தமாவதுபோலும்; கிரகஸ்தனென்கிற சொல்லுக் குக் கிரகம், அதிலிருக்கிற ஆடுமாடு பண்டு பதார்த்தங்களும், வேலை க்காரர்களும், பெண்சாதிபிள்ளைகளும், விருந்தாடிகளும் அர்த்தமாகாமல் லாப நஷ்டத்துக்கும், மாநாவமாநத்துக்கும், பாத்தியஸ்தனாயிருக்கிற புருஷனே அர்த்தமாவதுபோலும்; கோவிலென்கிற சொல்லுக்குப் பட்டர்முதலானவர் களர்த்தமாகாமல் அதிலிருக்கிற மூர்த்தியே அர்த்தமாவது போலும்; புருஷ னென்கிற சொல்லுக்கு மற்றைய அவயவங்க ளர்த்தமாகாமல் மாணியே அர்த்தமாவது போலும்; பாகவதரென்று சொல்லுகிற சொல்லுக்குத் தம் பூரு, வீணை, பிடில், மத்தளம், தாளம் அர்த்தமாகாமல் பாடுகிறவரே அர்த்த மாவதுபோலும்; முத்துச்சிப்பியென்கிற சொல்லுக்கு ஓடு முதலானவை அர்த்தமாகாமல் முத்தே அர்த்தமாவதுபோலும்; தசமனென்கிற சொல் லுக்கு ஒன்பதுபேர்கள் அர்த்தமாகாமல் பத்தாமவனே அர்த்தமாவது போலும்; கெங்கையென்கிற சொல்லுக்குப் படித்துறை மீன்முதலானவை கள் அர்த்தமாகாமல் ஜலமே அர்த்தமாவதுபோலும்; நல்ல ஊர் கெட்ட

ஊர் என்கிற சொல்லுக்கு அதிலிருக்கிற வீடு, ஆடு, மாடுகள் அர்த்தமாகாமல் அதிலிருக்கிற நன்மை தீமை செய்கிற மநுஷர்களே அர்த்தமாவதுபோலும்; ஞானி யென்கிற சொல்லுக்குத் தேகேந்திரியப் பிராண மநசுகள் அர்த்தமாகாமல் இவைகளுக்கெல்லாம் அப்புறப்பட்டதாயும், சாக்ஷியாயு மிருக்கிற பிரஹ்மமே தானென்று அறிந்தவனே அர்த்தமாய் அறிவதுபோலவும் என்றறிக.

24-வது, தரங்கம்.

புத்தி உள்ளிலும், மனது உள்ளிலும் வெளியிலும் அலேயும், ஆத்மா அசங்கருனதால் அந்தக்கரணத்துக்குக்கூட எட்டாதவர். ஏனெனில்:—

புத்தி தேகத்துக்குள்ளிருக்கிறது, மனது உள்ளிலும் வெளியிலும் அலேந்துகொண்டிருக்கிறது. [எ - தி.] ராஜஸ்திரீயும் அவளுடைய வேலேக்காரியும் போலவறிக.

[இ - து.] மனதினலேயே அறியக்கூடாத ஆத்மாவை இந்திரியங்களாலெப்படி அறியக்கூடும்? [எ - தி.] புகைபோகக் கூடயிட மில்லாத கட்டிடத்தில் ஆள் நுழைவது அசாத்தியம்போலும், மந்திரியாற்கூட அறியப்படாத ராஜாவின் மனதை வெளியிலிருக்கிற வேலேக்காரர்கள் அறியக்கூடாததுபோலும், காத்திருக்கிற பூதத்துக்கே அறியக்கூடாத புதையல் சாமாந்ய ஜனங்களுக்கு எப்படி அகப்படு மென்பதுபோலுமறிக.

[இ - து.] வாக்கு முதல் மனதுவரையிலுள்ள ஒருகரணமும் ஆத்மாவை சம்பந்தியாது. [எ - தி.] பழைய கப்பு முதற் பாசுபதாஸ்திரம் வரை ஆகாசத்தை சம்பந்தித்துப் பிளக்கமுடியாததுபோலவறிக.

[இ - து.] புத்திவிருத்தி ரூபமான அகங்காரம் தேகத்திற்குள்ளும், இதம்விருத்தி ரூபமான மனசு தேகத்துக்கு வெளியிலும் உள்ளிலும் சஞ்சரிக்கும். [எ - தி.] சக்கிரவர்த்தியான ராஜன் அரண்மனேக்குள்ளும், மந்திரி முதலான உத்தியோகஸ்தர்கள் அரண்மனேக்குள்ளும் அரண்மனேக்கு வெளியிலும் சஞ்சரிப்பதுபோலும்; கோவிலிலிருக்கிற மூலலிங்கம் ஆலயத்துக்குள்ளும், உற்சவ விக்கிரகம் உள்ளிலும் தேர் திருவிளாவிற்காக வெளியில் வீதிசுத்த வருவதுபோலும்; யோநி சிசுநங்கள் சரீரத்திலும், நேத்திரங்கள் சரீரத்திலும் சரீரத்துக்கு வெளியிலிருக்கிற ரூபங்களிலும் வியாபிப்பதுபோலும்; ஒருமரத்தினுடைய வேர் பூமியில்மட்டும் சம்பந்தப் பட்டிருப்பதும், கொம்பு கிளேகள் பூமியிலும் பூமிக்கு வெளியிலும் வியாபித்திருப்பதுபோலும்; புஷ்பம் செடியிலும், வாசனே புஷ்பத்திலும் வெளியிலும் வியாபித்திருப்பதுபோலும்; தாதாவினுடைய கொடை கையிலும், கீர்த்தி திக்குவிதிக்குகளெல்லாம் வியாபித்திருப்பதுபோலும்; ஸ்திரீபுருஷர்களுடைய வியபிசாரம் உள்ளிலும், அபகீர்த்தி உள்ளிலும் வெளியிலும் வியாபித்

திருப்பதுபோலும்; போகத்திறற் கெர்ப்பகோளகத்தில் விழப்பட்ட சுக்கிலம் உள்ளிலும், பிள்ளை உள்ளிலும் வெளியிலும் உலாவுவதுபோலும்; சாராயங் குடித்தவனுக்குச் சாராயம் உள்ளிலும், அதனாமோதம் உள்ளிலும் வெளியிலும் வியாபித்திருப்பதுபோலும்; தீபத்தின் உஷ்ணம் திரியிலும், அதன் பிரகாசம் திரியிலும் வெளியிலும் வியாபிப்பதுபோலும்; அக்நியின் உஷ்ணமும் பிரகாசமும் விறகிலும், அதன் உஷ்ணம் மட்டும் விறகிலும் தண்ணீரிலும் வியாபிப்பதுபோலும்; அக்நியின் உஷ்ணம் விறகிலும், புகை விறகிலும் வெளியிலும் வியாபிப்பதுபோலும்; சமுத்திரத்திற்குள் ஜலமும், அலைதுரைகள் அதற்குள்ளும் வெளியிலும் வியாபிப்பதுபோலும்; தேகவாசனை லோகவாசனை சாஸ்திரவாசனை முதலானவைகள் அந்தக்கரணத்துக்குள் மட்டு மிருப்பதும், அதைக்குறித்து உண்டாகிற நினைப்புகளும், ராகத்துவேஷங்களும், வசனிக்கிற சப்தங்களும் உள்ளிலும் வெளியிலும் வியாபிப்பதுபோலுமறிக. சத்தம் சுரோத்திரத்தை அறியாததுபோலும், ஸ்பரிசம் துவக்கை அறியாததுபோலும், ரூபம் நேத்திரத்தை அறியாததுபோலும், ரசம் நாவை அறியாததுபோலும், கந்தம் கிராணேந்திரியத்தை அறியாததுபோலும், தேகேந்திரியப் பிராணாதிகள் மனதை அறியாததுபோலும், கருவி கரணங்கள் ஜீவனை யறிய முடியாததுபோலும், அநாத்மாவான மனதும், இந்திரியங்களும், பிராணன்களும், பஞ்சபூதங்களும், அதிலுண்டான பௌதிகங்களும், சிதாபாசர்களான ஜீவேசுவரர்களும், அவர்களுக்கு உபாதியான அவித்தை மாயைகளும், இதற்கெல்லாம் காரணமான அஞ்ஞாநமும், இதற்கெல்லாம், அதிஷ்டாநமாயும், அறிவாயும், ஆநந்தமாயுமிருக்கிற ஆத்மாவை அறியமாட்டாவென்றறிக.

## 25-வது, தரங்கம்.

ஆத்மா மனதுக்கு எட்டும் எட்டாது:—

ஆத்மா மனதுக்கு எட்டாதெட்டு மென்பது:—நான் கர்த்தாவென்ற ஜீவனோடு கூடியிருக்கிற மனதுக்கு எட்டாது. ஜீவனில்லாத மனதுக்கு எட்டும். [எ - தி.] நாயகனில்லாதவளுக்குச் சத்சங்கதி கிட்டுவதுபோலும், நாயகனுக்குள் அகப்பட்டவளுக்கு அது கிட்டாததுபோலும்; விலங்கிலகப்பட்டவனுக்கு அஸ்வதந்திரமும், அதிலகப்படாதவனுக்கு ஸ்வதந்திரமு மிருப்பதுபோலுமறிக.

[இ - து.] கொட்டையோடுகூடின மாம்பழம் வாய்க்குள் நுழையாததுபோலும், கொட்டை தோல்களை யெடுத்து ரஸத்தோடு கூடியிருக்கிற சதை மட்டும் வாய்க்குள் நுழைவதுபோலத் தமோகுண ரஜோகுணங்களோடு கூடியிருக்கிற மனதுக்கு எட்டாதென்றும், அவைகளைத் தள்ளிச் சத்துவகுணமாத்திரமா யிருக்கிற மனதுக்கு எட்டுமென்று மறிக.

[இ - து.] பத்துப்புருஷர்களோடு சேர்ந்திருக்கிற புருஷனுடைய சிசுநத்துக்கு மனைவியின் யோநி கிட்டாததுபோலும், அவர்களையெல்லாம் போகச்சொல்லிவிட்டுத் தனித்துவந்த கணவனுடைய சிசுநம்மட்டும் அவள் யோநியில் பிரவேசிப்பதுபோலத் தசேந்திரியங்களோடு சேர்ந்திருக்கிற துவித விருத்திகளோடு கூடிய மனதுக்குப் பிரஹ்மம் கிட்டாது. அந்தத் துவிதவிருத்திகளையெல்லாம் தள்ளி அத்துவித மாத்திரமாயிருக்கிற மனது பிரஹ்மத்தில் நுழையுமென்றறிக.

[இ - து.] சூத்திரர்களோடுசேர்ந்து வந்திருக்கிற பிராஹ்மணனைப் பிராஹ்மண சமாராதனைக்குள் விடாமல் வெளியே தள்ளுவதுபோலும், அவர்கள் சகவாசங்களையெல்லாம் வெகுதூரத்தில் தள்ளிவிட்டுப் பிராஹ்மணர்களிடத்திற் போய்ச் சரணாகதம்பண்ணி, அவர்களால் விதிக்கப்பட்ட பிராயச்சித்தங்களை ஒழுங்காய்ச்செய்து சுத்தனானபின், அவனை அச்சமாராதனைக்குள் தாராளமாய் விடுவதுபோல, ராகத்துவேஷங்களோடுகூடிய மனதைப் பிரஹ்மாநந்தமாகிற சமாராதனையில் உள்ளே விடாமல் வெளியில் தள்ளப்படும். அந்த மனதே ராகத்துவேஷாதி விருத்திகளாகிற சூத்திரர்களுடைய சகவாசத்தை விட்டுச் சத்குரு சாதுக்களைச் சரணமாய் வந்தடைந்து அவர்களால் விதிக்கப்படுகிற சாதந சதுஷ்டயங்களாகிற பிராயச்சித்தத்தை ஒழுங்காய்ச் செய்துகொண்டபின், அந்த மனசு சிரவணாதி சதுஷ்டயங்களாகிற சமாராதனைக்குள் போய்ப் பிரஹ்மாநந்த போஜநத்தை யதேஷ்டமாய்ச் செய்துகொண்டு இருக்குமென்றறிக.

[இ - து.] அசுத்தம் நாற்றம் மல மூத்திரங்களுடன் கூடியிருக்கிற பள்ளி பறைச்சிகளுடன்கூடி ஐக்கியபோகம் பண்ணுகிற ஒரு ராஜாவின் மாப்பிள்ளையைச் சுத்தமாயும், சுகமாயும், விகாரமன்றியினுமிருக்கிற ராஜகன்னிகை உதைத்து வெளியில்தள்ளுவது போலும், அவனே அந்த நீசஸ்திரீகளுடைய சையோகத்தையும், அதனால் உண்டான அசுத்த அநர்த்தங்களையும் தள்ளிவிட்டு அந்த ராஜகன்னிகை போலச் சுத்தமாயும், சுகமாயும், நிர் விகாரமாயு மிருக்கிற வடிவத்தை அடைந்தபின், அக்கன்னிகை தன்னோடு ஐக்கியபோகத்தை அடையச்செய்வது போல, மனது எதுவரை அசுத்தமான தேகாதிகளில் நானென்றிருக்கிறதோ அதுவரைப் பிரஹ்மமென்ற கன்னிகை இந்தமனதை கிட்டவரவொட்டாமல் தள்ளுவள், பின் அந்தமனது தேகாத்ம புத்தியை நிச்சேஷமாய் விட்டுப் பிரஹ்மமாகிற கன்னிகையைப் போலக் களங்கமற்றதானால், அப்போது தன்னோடு ஐக்கியத்துக்கு இணங்குவளென்றறிக. எந்த ஸ்திரீ பரபுருஷர்களுடைய சையோகத்தை விட்டிருக்கிறளோ, அந்த ராஜஸ்திரீக்கே ராஜசையோகம் கிடைப்பது போலவாம்.

## 26-வது, தரங்கம்.

மாயை எப்படி உண்டாயிற்று ? அது நம்மிடத்தில் வந்ததற்குக் காரணம் யாது:—

மாயையெப்படி உண்டாயிற்று? என்று கேட்பதற்கு யுக்தி:—உலகத்தின் கண் திருடர்கள் எப்படி உண்டானார்கள்? என்று கேட்பது போலும், தாசிகள் எப்படி உண்டானார்களென்று கேட்பதுபோலு மறிக.

[இ - து.] அந்தமாயை தன்னிடத்தில் வருவானேன்? [எ - தி.] திருடர்கள் தன் வீட்டில்வந்து களவு செய்வதற்குத் தன் நித்திரையே காரணமாவது போலும், தாசிதன்னிடத்தில் வந்து சேருவதற்குத் தன்மனோவிகாரமான மயக்கமே காரணமாயிருப்பது போலுமறிக.

[இ - து.] மாயையானது நாமாரென்று விசாரிப்பதற்குமட்டும் இடங்கொடுக்க மாட்டாது, மற்றைய இகலோகம் முதல்சாலோகாதிபதம் வரையிற்பெற யத்தநிப்பவனுக்குத் தடைசெய்யாது. [எ-தி.] அசுரர்கள் தன் உயிர்நிலையைமட்டும் காண்பியாமல் மற்றைய அவயவங்களை வெட்டினாலும் அதற்குத் தடை செய்யாதிருப்பது போலவறிக.

[இ - து.] மாயையெப்படி வந்ததென்று கேட்கவும் இன்னவிதமாய் வந்ததென்று அறியவும் கூடாது. [எ - தி.] புற்றில் எல்லோரையும் கொல்லுகிற பாம்பு எப்படி உண்டாயிற்று? என்று கேட்கக்கூடாததுபோலும், காட்டிற் புலி, கரடி முதலான துஷ்டமிருகங்கள் எப்படி உண்டாயிற்று? என்று கேட்கக்கூடாததுபோலும், வீட்டிற் கறையான் எலி முதலான ஜந்துக்கள் எப்படி வந்தனவென்று கேட்கக் கூடாததுபோலும், வயலிற் போடப்பட்டிருக்கிற நெற்பயிர்களுடன் கோரை களைகள் எப்படிஉண்டாயிற்று?என்று கேட்கக்கூடாததுபோலும், நதியில் நாகரத்தினத்தாற் செய்யப்பட்ட மோதிரத்தை மறந்து வீட்டிற்கு வரக் காரணமென்னவென்று கேட்கக் கூடாததுபோலும், சிசுநத்தில் லேபனம் எப்படிவந்தது? தேஹத்தில் வியாதி எப்படிவந்தது? வஸ்திரத்தில் அழுக்கு எப்படிவந்தது? வீட்டில் நூலாம்படைகள் செத்தை குப்பைகள் எப்படி வந்ததென்று கேழ்க்கக்கூடாததுபோலும்; கெர்ப்பத்தில் விழுந்த சுக்கிலம் ஜடமானதால் எப்படி சேதநமாய்க் கை, கால், தலை, உடல் ரூபமாய் வெளியில் வந்து உண்டுடுத்துக் கண்டு கேட்டுப் போய் வந்துகொண்டு திரிகிறதற்குக் காரணம் என்னவென்று கேட்கக்கூடாததுபோலும், ராத்திரியில் இருட்டு எப்படி வந்தது? அதில் பேய் பிசாசுகள் எப்படி உண்டாயின? என்று கேட்கக்கூடாததுபோலும், ஆகாசத்தில் மேகங்கள் எப்படிவந்தது, அவைகள் மழைபெய்வானேனென்று கேட்கக்கூடாததுபோலும்,கடுகுப்பிரமாணமாயிருக்கிற ஆலம் விதையிலிருந்து விஸ்தாரமான பணைகள், இலைகள், காய்கள், விழுதுகள் முதலானவை எப்படி உண்டாச்சுதென்று கேட்கத் தேவையில்லாததுபோலு மென்றறிக. அந்த மாயை நம்மிடத்தில் வந்ததற்குக் காரணமென்னவென்ற இரண்டாம் சங்கைக்கு யுக்திகள் :—புற்றை யிடித்துத்தள்ளாத குற்றம் ஜீவன்பேரிலேயே, காட்டை வெட்டாதகுற்றமு மப்படியே,கறையானைத் தட்டாதகுற்றமு

மப்படியே, கோரைகளைக் களையெடுத்தெறியாத குற்றமு மப்படியே, மோதிரத்தைச் சிரத்தையையாமல் நதியில் வைத்துவிட்டு மறந்துவந்த அறியாமையான குற்றம் தன்பேரிலேயே, சிசுநத்தில் லேபநமுண்டாவதற்கு விவேக புரஸ்ஸரமான வைராக்கியமில்லாத குற்றம் தன்பேரிலேயே, வியாதி உண்டாவதற்குக் காரணமான அபத்தியங்களைச்செய்கிறகுற்றம் தன்பேரிலேயே, வஸ்திரத்தில் அழுக்கு யேறும்படியான அஜாக்கிரதை தன்பேரிலேயே, வீட்டில் நூலாம்படை, குப்பை செத்தைகளை அடித்து கூட்டாமலிருக்கிறதும், சுக்கிலம் சேதநமாய் விவகரிப்பதற்குத் தன் போகமானகுற்றமும், இரவில் இருட்டு முதலியன வருவதற்குத் தீபம் வையாதகுற்றமும் தன்பேரிற்போல நாமாரென்று விசாரியாதகுற்றமும் நம்மபேரிலேயே யென்றறியத்தக்கது. மூன்றாவது:—மாயை தன்னை விசாரிப்பதற்குமட்டும் இடம் கொடுக்கமாட்டாது. [எ - தி.] மாப்பிள்ளைத்தோழன் மாப்பிள்ளைக்கும் மாமியாருக்கும் வேண்டிய சகல சங்கதிகளுக்கும் ஒத்தாசையா யிருப்பதும், நீயாரென்று கேட்பதற்குமட்டும் சகியாதது போலு மறிக.

27-வது, தரங்கம்.

சகல சக்திகளும் மாயையின் அம்ஸம்:—

எங்கே எங்கே எந்தெந்த சக்திகள் காணப்பட்டாலும் அவைகளெல்லாம் மாயையின் அம்ஸமென்றே அறியவேண்டியதற்கு யுக்தி:— எங்கே எங்கே உப்புக்காணப்பட்டாலும் சமுத்திர ஜலாம்ச மென்றே அறிவது போலும், எங்கே எங்கே வெளிச்சம் கண்டாலும் சூரியனுடைய அம்ஸமென்றே அறிவது போலும், எங்கே எங்கே சரீரத்தைக் கண்டாலும் அது அது சுக்கில சுரோணிதத்தின் அம்ஸமென்று அறிவதுபோலுமறிக.

[இ- து.] அப்படி ஆத்மாவினிடத்தில் வாஸ்தவமாய் இவ்வளவாவது விவகாரமுண்டோவென்றால், அதுவுமில்லை. மாயையினால்தான். [எ - தி.] ராஜாவின்காதில் சுபமஸ்துவென்று சொல்லவேண்டுமென்று கேட்டுக்கொண்ட பிராஹ்மணன் ராஜ்யாதிகாரம் முழுமையும் செய்தது போலவறிக.

[இ - து.] சரீரத்திலிருக்கிற சக்ஷு இந்திரியம் கருவிழியில்மட்டு மிருப்பதும் ரூபக்கிரஹணம்பண்ணுகிற அதன்காரியம் வெகுதூரம் வியாபிக்கும். [எ- தி.] தீபமும், அதன் பிரகாசமும் புகையும் போலும்; மல மூத்திரமும், அதன் நாற்றமும் ; புஷ்பமும் அதன்வாசனையும் போலுமறிக.

[இ - து.] பரமார்த்தத்தில் விவேகி அவிவேகி இருவரும் பிரஹ்மமானாலும் விவேகியை மட்டும் சகவாசத்துக்குச் சேர்க்கவேண்டும், மற்றவர்களைத்தள்ளவேண்டும். [எ - தி.] அரிசியும் கல்லும் பௌதீகமானாலும், அரிசியைமட்டும் கிரகித்துக் கல்லைத்தள்ளுவதுபோலும் ; மரம்முதற் பால்வரை தென்னையானாலும், பாலைமட்டும் கிரகித்து, மற்றவைகளைத்தள்ளுவது போலும்; மரமுதல் ஓலைவ

ரைப்பனையாலும், ஓலையைமட்டும் புஸ்தகத்துக்காகக்கிரகித்து, மற்றகள்ளு முதலானவைகளைத்தள்ளுவது போலும்; மூடிச்சோடு மூன்றுந் தொங்கிலும் சேதநமாய் அத்துவிதமாயிருக்கிறசிசுநத்தை உள்ளே கிரகித்து, அசேதநமாய்த் துவிதமாயிருக்கிறவிருஷணத்துவயங்களை வெளியில் தள்ளுவதுபோலுமறிக.

[இ - து.] எங்கே எங்கே எந்த யெந்த நாமரூபத்தைக் கண்டாலும் அஃது அஃது மாயையின் காரியமென்றறியவேண்டும். [எ - தி] ராஜசந்நதியிலிருக்கிற யந்திரசப்தத்தை மந்திரி கேட்டு மற்றவர்களுக்கு தெரிப்பதுபோல, ஆத்மசந்நதியிலிருக்கிற மாயையிலுண்டாகிற வேதத்தை ஈஸ்வரன் கேட்டு ஜீவாளுக்கு வெளிபண்ணுவதால், வேதம் ஈஸ்வரவாக்கிய மெனப்படும். ஆகையால் சகல சுருதி ஸ்மிருதி முதலானவைகளும் மாயையின் அம்சமென்றறிந்து சாக்ஷிமாத்திரமாயிருக்கத்தக்கது. எங்கே எங்கே ஆகாசத்தில் பட்டண முதலானவைகளைக்கண்டாலும் அவையெல்லாம் இந்திரஜால சக்தியின் காரியமென்றறிவது போலும், எங்கே எங்கே சொப்பனம் கண்டாலும் அது அது வெல்லாம் நித்ராசக்தியின் காரியமென்றறிவது போலும், எங்கே எங்கே மரம்செடிகொடிகளைக்கண்டாலும் அதனதன் வித்தின் காரியமென்றறிவது போலும், எங்கே எங்கே பறவைகளைக் கண்டாலும் அதனதன் முட்டையின் காரியமென்றறிவது போலும், எங்கே எங்கே மனிதர்கள் மிருகங்களைக் கண்டாலும் சுக்கில சுரோணிதங்களின் காரியமென்று அறிவது போலுமறிக. பரமார்த்தத்தில் ஆத்மாவில் அஞ்ஞாநாதிகள் வரவுமில்லை, ஞாநம் வந்து அவைகளை நிவர்த்திக்கவு மில்லை. [எ - தி.] பழுதையினிடத்தில் பாம்புவரவுமில்லை, போகவுமில்லை; கட்டையினிடத்தில் கள்ளன்வரவும் போக்கு மில்லாதது போலும்; இப்பியினிடத்தில் வெள்ளியின்வரவும் அதன் நிவர்த்தியுமில்லாததுபோலும்; மருபூமியில் கானல் ஜலமுண்டாகுதலும் அதன் நாசமுமில்லாதது போலும்; ஆகாசத்தில் நீலாதி நிறத்தின்வரவும் அதன் நிவர்த்தியுமில்லாதது போலும்; படுத்திருக்கிறவனிடத்தில் சொப்பன ஜகத்தின் உற்பத்தியும் அதன் நாசமுமில்லாதது போலுமறிக. அஞ்ஞானிகளும் ஞாநிகளும் பரமார்த்தத்தில் பிரஹ்மமாயிருந்தாலும், ஞானியைக்கிரகித்து அஞ்ஞானியைத்தள்ள வேண்டியது. [எ - தி.] முத்துச் சிப்பியும் முத்தும்கூட உண்டானாலும் சிப்பியைத்தள்ளி முத்தைக் கிரகிப்பது போலும், பழத்தில் தோலைத்தள்ளி ரசத்தைக் கிரகிப்பதுபோலும், முருங்கக்காயில் ரசத்தைக் கிரகித்துச் சக்கையைத் தள்ளுவதுபோலும், ஹம்ஸம் ஜலத்தைத்தள்ளி அதில் கலந்திருக்கிற பாலைக் கிரகிப்பதுபோலும், எறும்பு மணலைத்தள்ளி சர்க்கரையைக் கிரகிப்பதும், மலத்தில் கிடக்கிற ரத்திநத்தைமட்டும் கிரகித்து மலத்தை தள்ளுவதுபோலும், இலவங்காயிலிருக்கிற பஞ்சைக் கிரகித்துத் தோட்டைத் தள்ளுவதுபோலும், சரீரத்திலுண்டாகிற மலமூத்திரங்களை வெளியிலே தள்ளிச் சுக்கிலத்தை மட்டும் யோகிகள் ஆகுஞ்சநத்தால் உள்ளே கிரகிப்பது போலும், இன்னும் யோகிகள் அசுத்த வாயுவை ரேச

க ரூபமாய் விட்டுச் சுத்தவாயுவை பூரகரூபமாய்க் கிரகித்துக்கேவல கும்பகத்தி லடக்குவதுபோலும்,இன்னும் அசுத்தமான சங்கற்பத்தைவிட்டு சுத்த மனதை லட்சியத்தில் அடக்குவது போலுமறிக.

28-வது, தரங்கம்.

மாயையின் குணத்தையே ஜீவர்கள் விசேஷமாக அநுசரிப்பார்கள்:—

ஐயா, பிரஹ்மமும் மாயையும் சேர்ந்தேஜீவர்களாய் வந்திருப்பதால் ஜீவர்களுக்குப் பிரஹ்ம லக்ஷணமான சச்சிதாநந்த ஞாநமில்லாமல் மாயா அம்சமான நாமரூபஞாநமே உண்டாயிருப்பதற்குக் காரணமென்ன வென்றால்; தாயும் தகப்பனும் சேர்ந்து பிள்ளைகள் பிறந்திருந்தாலும், தாயினாலேயே அவைகள் விருத்தியாவதால், தாயின்குணத்தையே அநுசரிப்பதுபோல, மாயையின் குணத்தையே சாமாந்யமாய் அநுசரித்து வருவதில், பரதனைப்போலத் தகப்பன் குணத்தை அநுசரித்து வருகிற ஞாநி உலகத்தில் மிகவும் அரிதென்றறிக.

[இ - து] சுத்தத் தேங்காய்ப்பால் போலப் பிரஹ்மம், வெந்நீர் விட்ட பால் போல ஈஸ்வரன், மூன்றாந்தரம் நாலாந்தரம் ஐந்தாந்தரம் பால் போல ரஜோகுணமான அவித்தையா பிரதிபிம்ப சாத்வீக ராஜஸ தாமசங்களான ஜீவர்களென்று அறிந்து, சுத்தப்பாலான பிரஹ்மத்தையே பிடித்து, மற்றதைத் தள்ளவேண்டு மென்றறிக.

[இ - து.] மாயையும் பிரஹ்மமும் சேர்ந்து ஜீவர்கள் உண்டாயிருந்தாலும், மாயையின் அம்சத்தையே ஜீவர்கள் அதிகமா யநுசரிப்பார்கள். [எ - தி.] பிராஹ்மணஸ்திரீயும் பறையனும் சேர்ந்து பிள்ளையுண்டானாலும் அந்தப்பிள்ளை பிராஹ்மணனா யாவதுபோலும், பிராஹ்மணனும் பறைச்சியும் சேர்ந்து பிள்ளை பிறந்தாலும் அந்தப்பிள்ளை பறையனாவதுபோலும் மழை யெங்கும் பொதுவாய்ப் பெய்ந்தாலும் பூமியின் சம்பந்தத்தால் செவ்வு ஜலம் உவர்ப்புஜலம் சுக்கான் ஜலம் முதலான ரூப ரஸ பேதமாயாவதுபோலும்,காசிபப்பிரஜாபதிக்கும் கத்துரு என்ற பாம்புக்கும் பிறந்த ஆதிசேஷன்,வாசுகி, தக்ஷகன் முதலானவர்கள் பாம்புருபமா யிருப்பதுபோலும், மேற்படியாருக்கும் விநதை யென்கிற பறவைக்கும் பிறந்த கருடன் பக்ஷியாயிருப்பதுபோலும், நாய்த்தோலில் விட்ட பால் நாறிப்போவதுபோலும், பறையன் பானையில் விட்ட கங்காஜலம் அசுத்தமாய்ப் போவதுபோலும், சரீரத்தில்விட்ட அந்நபாநாதிகள் மல மூத்திரமாய்ப் போவதுபோலும், கெட்டவர்களிடத்திற் சேர்ந்த ஐஸ்வரியம் ஜநங்களுக்கு ஹிம்சையும், பஞ்சமகாபாதகத்தையும் உண்டுபண்ணுவதுபோலும், அப்படியே மேற்படியார்களிடத்திலிருக்கிற வித்தை வாதம் பண்ணும்படியாகவும், பிறரை அவமானம் பண்ணும்படியாகவும், தனக்கும் அகம்பாவத்தைக் கொடுத்துக் கெடுப்பதுபோலு மறிக.

[இ - து] ஆத்மாவும் அநாத்மாவான ஜீவேஸ்வர ஜகத்தும் ஒன்றுசேர்ந் திருந்தாலும், அநாத்மாவைத் தள்ளி ஆத்மாவை மட்டும் கிரகிக்கவேண்டும். [எ - தி] அமிர்த மதனஞ்செய்யும்போது காளகூடவிஷமும் அமிர்தமும் உண்டானதில் தேவர்கள் அதிற் காளகூடவிஷத்தைக் கிரஹியாமல் அமிர் தத்தைமட்டும் சாப்பிட்டதுபோலும்; சமுத்திரத்தில் திமிங்கிலாதி துஷ்ட ஜந்துக்களும், ரத்திநங்களு மிருந்தாலும், ரத்திநவியாபாரி அந்தத் துஷ்ட ஜந்துக்களைக் கிரகியாமல் ரத்திநத்தைமட்டும் கிரகிப்பதுபோலும்; வயலில் வைக்கோல் பதரு நெல்லு முதலானவைகள் விளைந்தாலும், மநுஷர்கள் வைக் கோல் முதலானவைகளைச் சாப்பிடாமல் நெல்லைக் குத்தி அரிசியைமட்டும் சாப்பிடுவதுபோலும்; பசுவினிடத்திற் பால் எரு மூத்திரங்கள் உண்டானாலும் பாலைமட்டும் கறந்து சாப்பிடுவதுபோலும்; வில்வமரத்தில் முள் கம்புகளைத் தள்ளி வில்வத்தைமட்டு மெடுத்து அர்ச்சனை பண்ணுவதுபோலும்; ராஜபேட்டி பண்ணிக்கொள்ளப்போகிறவன் எலுமிச்சயிலை முதலானவைகளைக் கொண்டு போகாமல் எலுமிச்சம்பழத்தை மட்டும் கொண்டுபோய் பேட்டி பண்ணிக் கொள்வதுபோலும்; நாயின் தேகத்திலிருக்கிற மயிரைமட்டும் சால்வையாய்ப் பண்ணிச் சபையில்வந்த வித்வானுக்குக் கொடுப்பதுபோலும்; அப்படியே ஆத் மாநாத்மாக்கள் ஒன்றுசேர்ந்திருந்தாலும் அநாத்மாக்களைத் தள்ளி, ஆத்மா வையே கிரகிக்கவேண்டியது. அஃதெப்படியென்றால், தத்பதத்தில் பஞ்சபூத பௌதிக விகாரமான நாமரூபங்களைத் தள்ளி, தொம்பதத்தில் பஞ்சகோசங்க ளையும், அவைகளின் ஷட்பாவ விகாரங்களையும், ஷடூர்மிகளையும், அரிஷட்வர்க் கங்களையும், ஷடாதாரங்களையும், ஷட் சாஸ்திரங்களையும், ஷண் மதங்களையும், அவைகளின் சுபாவமான பேதங்களையும்தள்ளி, தத்பத லக்ஷியமான சச்சிதா நந்தப் பிர்ஹ்மத்தையும், துவம்பத லக்ஷியமான சரீரத்திரய விலக்ஷண, அவ ஸ்தாத்திரய சாக்ஷி, பஞ்சகோச வியதிரிக்தரான கூடஸ்தரையும், ஏகமென்றறி ந்து நானே சச்சிதாநந்தப் பிரஹ்மம் சச்சிதாநந்தப் பிரஹ்மமே நானென்று ஐக்கியாநுபவம் பண்ணிச் சகல முமுக்ஷுக்களும் சுகித்து வாழக்கடவார்கள்.

## 29 - வது, தரங்கம்.

அவிசாரதசையில் அநாத்மாவும் ஆத்மாபோலத் தோற்றும்:—

அவிசாரத்தில் ஆத்மாவில் ஆரோபிதமான அநாத்ம தத்துவங்களும் ஆத் மாவோடு சேர்ந்திருக்கும்போது ஆத்மாப்போலவே தோற்றும். [எ - தி] பாலில்விட்ட ஜலமும் பால்போலத் தோற்றுவதுபோலும், தங்கத்திற்சேர்ந்த செம்பும் தங்கம்போலத் தோற்றுவதுபோலும், வித்வானோடுகூட வந்திருக்கிற அவித்வானும் வித்வான்போலத் தோற்றுவதுபோலு மறிக.

[இ - து] ஆத்மாநாத்ம விவேகம்பண்ணின பிறகு சரீரத்தில் ஆத்மா விருந்தாலும் அதிற் சம்பந்தப்படார். [எ - தி] தேங்காயைத் துருவினபிற்

பாடு அந்தத் துருவலைக் கொட்டாங்கச்சிக்குள் வைத்திருந்தாலும் அது ஒட்டாததுபோலும், கடைந்தபின் மோரில் வெண்ணெய் போடப்பட்டிருந்தாலு மதில் ஒட்டாததுபோலு மறிக.

[இ - து] ஆத்மாவும் அநாத்மாவும் அவிவேக திசையில் ஒன்றுபோலத் தோன்றினாலும் விவேகத்தால் அவைகளைப் பிறித்து ஆத்மாவை யெடுத்து அநாத்மாவைத் தள்ளவேண்டியது. [எ - தி] நெல்லும் பதரும் ஒன்றுசேர்ந்திருந்தாலும் காற்றில் தூற்றினால் அவைகள் பிறிந்துபோவதுபோலும், பிராஹ்மணர்களும் குசவனும் ஒன்றுபோலத் தோன்றினாலும் விசாரணையால் வெளியாவதுபோலு மறிக.

[இ - து] அவிசாரதிசையில் ஆத்மாவும் அநாத்மாவும் ஒன்றுபோலத் தோற்றினாலும் விசாரணையால் அவைகளின் பேதந் தெரிந்து அநாத்மாவை நேதித்து ஆத்மாவை கிரகிக்கவேண்டும். [எ - தி] தயிர் கடைகிறதற்குமுன் மோரும் வெண்ணெயும் ஒன்றாயிருப்பதும், அதைக் கடைந்து வெண்ணெயாயும், மோராயும், பிரிந்தபின் சாரமான வெண்ணெயை மட்டுங் கிரகித்து அசாரமான மோரைத் தள்ளுவதுபோலும்; கரும்பாயிருக்கும்போது தோடு சக்கை ரசங்கள் ஒன்றாய்ச் சேர்ந்திருப்பதும், ஆலையில் ஆட்டினபின் சாரை கிரகித்துச் சக்கையைத் தள்ளுவதுபோலும் ; எள்ளாயிருக்கும்போது எண்ணெயும் பிண்ணாக்கும் ஒன்றாயிருப்பதும், செக்கிற்போட்டு ஆட்டினபின், எண்ணெயைக் கிரகித்துப் புண்ணாக்கைத் தள்ளுவதுபோலும், ஆற்றிற் போடப்பட்டிருக்கிற ஊற்றில் களிமண்ணும் தண்ணீரும் ஒன்றாயிருந்தாலும், இறைக்கும்போது களிமண்ணை யெடுத்தெறிந்துவிட்டுச் சுத்த ஜலத்தைமட்டு மெடுத்து சாப்பிடுவதுபோலும் ; சரீரமும் சுக்கிலமும் ஒன்றாய்ச் சேர்ந்திருந்தாலும், மைதுநம் பண்ணவும் அச்சரீரத்தைவிட்டுச் சுக்கிலம்மட்டும் யோநியிற் கருத்தரிப்பதுபோலும்; கெர்ப்பமாயிருக்கும்போது கருப்பையும் பிள்ளையும் ஒன்றாயிருப்பதும், பெற்றபின் பையைத்தள்ளிப் பிள்ளையைக் கிரகிப்பதுபோலும் ; இரட்டைப் பிள்ளையைக் கற்பமானவளுடைய பிரசவத்துக்குமுன் இது ஆணென்றும் இது பெண்ணென்றும் தெரியாமலிருந்து, பிரசவித்தபின் பெண்ணைத் தானமாயாவது, விலைக்காவது கொடுத்து அசல்வீட்டுக்குத் தள்ளிவிடுவதும், ஆண்பிள்ளையை அரசென்று கொண்டாடிச் சகல சொத்துக்களையும், சுதந்திரங்களையும் கொடுப்பதுபோலு மென்றறிக. இனி ஆத்மாநாத்மாக்களைப் பிறித்தபின் ஆத்மா அநாத்மாவிலேயே சேர்ந்திருந்தாலும் சேரமாட்டாது. [எ - தி] கல்லுக்குள்ளிருக்கிற ரத்திநத்தைக் கல்லை உடைத்து எடுத்தபின் அந்த ரத்திநம் அக்கல்லிலேயே வைக்கப்பட்டிருந்தாலும், அக்கல்லோடு அவ்விரத்திநம் சேராததுபோலும்; பூமிக்குள் தண்ணீர் இருந்தாலும், கிணர்வெட்டினபின் தண்ணீரை இறைத்து மறுபடி அந்ததண்ணீர் மண்ணோடு சேர்ந்திருந்தாலும், அம்மண்ணிற் சம்பந்தப்படாததுபோலும் ; வாழைமரமாயிருக்கும்போது தண்டும்

நாரும் ஒன்றாய்ச் சேர்ந்திருந்ததைக் கிழித்தபின், தண்டை நாரார்க்கட்டினாலும் சேராததுபோல, ஆத்மாநாத்மாக்களைப் பிறித்தறிந்த ஞாநி துக்கமான தேகத்திலிருந்தாலும் ஆனந்தக்கடலாகவே சுகித்துக்கொண்டிருப்பானென்றறிக.

## 30 - வது, தரங்கம்.

அஞ்ஞாந ஆவரணத்தின் தன்மை :—

அஞ்ஞாநம் தன்னை மறைத்தது, ஆவரணம் அதைத் திடப்படுத்துகிறது. [எ - தி] தப்புக்கேசுக்குப் புரட்டுக்காரன் சாக்ஷிசொல்லுவதுபோலும், இருட்டிலகப்பட்டுக்கொண்டவனுக்கு மேகம்வந்து மறைப்பதுபோலு மறிக.

[இ - து] சொப்பிரகாசமாயிருக்கிற ஆத்மாவினிடத்திலே அப்பிரகாசமான அஞ்ஞாநாதிகள் எப்படி வருமென்று கேட்டவனுக்கு, வருமென்று சுருதி சொல்லியிருக்கிறது. [எ - தி.] அராப்பிகள் வியாபாரத்துக்குப் போகும்போது மூன்றுவருஷத்துக்குச் சாமான்களை வைத்து ஸ்திரீயையும் வீட்டிற்குள் வைத்து, முப்பதுபூட்டையும் பூட்டிக்கொண்டுபோய், மூன்றுவருஷம் கழித்து வந்தபின், மூன்றுபிள்ளையுடன்கூடிய பெண்டாட்டியைக்கண்டு எப்படி விபசாரம் பண்ணினாயென்று கேட்கவேண்டாததுபோலும், என்னை நான் அறியேனென்று சொல்லுகிற அநுபவத்தையும் பார்த்துக்கொள்க.

[இ - து] ஆவரணசக்தி அறிவை மறைத்து ஆத்மஹத்தி பண்ணுவதால் மறதிக்கு இடங்கொடாமல் நாம் சாக்ஷி யென்று ஜாக்கிரதையாய் இருக்க வேண்டும். [எ - தி] துஷ்டஸ்திரீயானவள் பீஜமர்த்தனம்செய்து புருஷனை ஹத்தி பண்ணுகிறாள், அவளைக் கிட்ட வரவொட்டாமல் விழிப்பாயிருக்கிறவன் போலவறிக.

[இ - து] ஆநந்தமான ஆத்மாவோடு ஜீவனைச் சேராமல் மாயை பண்ணுவானேனென்றால், மருமகளைப் புருஷனோடு சேர்ந்து சுகிக்கவொட்டாமல் மாமியார் கெடுப்பானேன் சொல் ? தான் பிழைப்பதற்காகவென்றால், இங்குமப்படியென்றறிக.

[இ - து] ஆவரணசக்தி விவேகி அவிவேகி இருவரையும் கெடுக்கும். [எ - தி] ஸ்திரீபுருஷர்களிருவரையும் மன்மதன் கெடுப்பதுபோல வறிக.

[இ - து] நம்மிடத்தில் மாயை யிருப்பதற்கு அடையாள மேதென்றால், என் தேகமென்று விவகரித்தும், அதைத் தானென்று மயங்குவதுதான். அது எதுபோல வென்றால், தனக்கு மருந்து வைத்தவள் விபசாரம் பண்ணுவதைப் பிரத்தியக்ஷமாய்க் கண்டாலும், அவள் பேரில் மறுபடி மயங்குவதுபோல வறிக.

[இ - து] மாயை தன் ஆவரணசக்தியால் மகத்தாகிய தன்னை அற்பமாகிய தேகமாகவும், அற்பமான ஜகத்தை மகத்தாகவும் தோற்றுவிக்கும். [எ - தி] நித்திரா சக்தியானது, மகத்தான தன்னைச் சொப்பனத்தில் கற்பிதமாயும் அற்பமாயுமிருக்கிற ஒருதேகமாயும், அற்பமான சொப்பன ஜகத்தை மகத்தாயும் தோற்றுவிப்பது போலவறிக.

[இ - து] தான் சொயம்பிரகாசனானாலும் அஞ்ஞானத்தோடு கூடியிருக்கும்போது விளங்கான். [எ - தி] சொப்பிரகாசமான கண்ணிருந்தாலும் இருட்டில் விளங்காததுபோல வறிக.

[இ - து] அஞ்ஞானமும், ஆவரணமும், அகங்காரமும், ஆசையும் எவ்வளவு பலத்துடன் மனதை யேவுகிறதுகளோ, அவ்வளவுக்கு மனது இந்திரிய சேஷ்டைகளுடன் கூத்தாடும். [எ - தி] தாய்க்கிழவியும், மத்தளக்காரனும், நட்டுவனும், பார்க்கிறவர்களுடைய பிரியமும் சேர்ந்து தாசியை எவ்வளவு எவ்வளவு ஆட்டிவைக்கிறார்களோ அவ்வளவுக்கு தாசி அபிநயத்துடன் ஆடுவதுபோல வறிக.

[இ - து] அவித்தை சம்பந்தமான ஆத்துமாவில் ஜீவன் முதலான வஸ்துக்கள் உண்டாகின்றன வென்பதற்கு யுக்தி:—சக்திகளோடே கூடிய பூமியிற் சேதநாசேதநங்களான சரீரங்களுண்டாவதுபோல வறிக.

[இ - து] குருசிஷ்ய ரிரண்டுபேர்களும் சேர்ந்து பிரஹ்மசுகத்தை அநுபவிப்பதற்கு அஞ்ஞாநாதிகள்வந்து தடைப்படுத்துகிறதுகள். [எ - தி] சோரஸ்திரீயும் சோரபுருஷனுஞ் சேர்ந்து சுகிக்கவொட்டாமல் ஊரிலுள்ள ஜநங்கள் யாவரும் விக்கிநம் செய்வதுபோலவறிக.

[இ - து] அவித்தை ஜடமானதால் அது எப்படி ஜீவனை துக்கப்படுத்திவைக்கு மென்றால்,—ஜடமான இருட்டு, நஞ்சு, கஞ்சா, சாராயம், கள், ஊமத்தை முதலானவைகள் ஆட்களுக்குப் பயத்தையும், சாவையும், மயக்கத்தையுங் கொடுப்பது போலவறிக.

[இ - து] அஞ்ஞாநம் ஆவரணம் விக்ஷேபம் செய்யும் கெடுதி என்னவென்றால், அஞ்ஞாநம் தன்னைத் தெரியவொட்டாமல் மறைக்கிறது. ஆவரணம் பிரகாசமான நல்ல புத்தியைக் கெடுக்கிறது. விக்ஷேபம் விவேகத்தைப் பறிக்கிறது. [எ - தி.] ஒருபுருஷன் விளக்கு வெளிச்சத்தில் பவுன் ரத்திநங்களைப் பரீக்ஷைப் பண்ணிப் பார்த்துக் கொண்டிருக்கும்போது, ஒரு திருடன் பின்னாலிருந்து இவன் கண்ணைத் தன்கையாலே மூடவும், மற்றொருவன் வந்து விளக்கை அணைத்துப் போடவும், மற்றொருவன்வந்து அந்தச் சொத்துக்களையெல்லாம் திருடிப்போவதுபோலும்; அசுரர்கள் தங்கள் மாயா சக்தியால் மறைத்து, வழியிற்போகிற ஜநங்களை நடக்கிற வழியில் யந்திரம்வைத்

துப் பள்ளத்திலிருக்கிற எண்ணைக் கடாரத்தில் விழும்படி செய்வதும், அதிலிருக்கிற தீயாற் காயவைத்திருக்கிற சூடு இவன் பிராணனை வாங்குவதுபோலு மறிக.

[இ - து] சொயம்பிரகாசமாயிருக்கிற ஆத்துமாவில் அப்பிரகாசமான அஞ்ஞானம் எப்படி வரக்கூடு மென்றால், வரக்கூடும். [எ - தி] பிரக்ஞையோடு படுக்கையில் படுத்திருக்கிறவனிடத்தில் நித்திராசக்தியானது இவனை மறைத்துச் சொப்பனவஸ்தையை உண்டு பண்ணி, அதில் அநேக ஜீவேஸ்வர ஜகத்துக்களையும் தோன்றப்பண்ணி, இவனையும் தாபப்படுத்தி வைக்கிற அநுபவ மிருக்கும்போது, அந்த நித்திராசக்தி பிரக்ஞையோடு கூடியிருக்கிற இவனிடத்தில் எப்படி வரக்கூடுமென்று கேட்கக் கூடாததுபோலும் ; ஜாக்கிரத்திலும் ஜீவன் பண்டம் பதார்த்தங்களையும், கொடுக்கல் வாங்கல்களையும், சாவதாநமாய் ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கும்போதே மறதிவந்து, அப்பதார்த்தங்களை வைத்திருந்த ஞாபகத்தைக் கெடுத்துப் பின்னும் அதைத்தேடும்படியாய் அலைய வைப்பதும்; அப்படியே இந்த நியாயத்தலத்தில் போய் எதிரியை ஜயிப்பதற்காக இன்ன இன்ன சங்கதிகளைப் பேசவேண்டுமென்று ஞாபகத்தோடு அந்த இடத்திற்குப் போனகாலத்தில், இவன் நினைத்திருந்தவை யெல்லாம் ஒன்றும் தோன்றாமல் மறந்துபோய்ப் பின்னை ஒருவிதமாக உளறிப்போட்டு, வீட்டிற்கு வந்த பின் அடா ! நாம் நினைத்துப்போனவை யெல்லாம் மறந்து விட்டதால் இப்படிக் கெடுதி வந்ததென்று பரிதாபப் படுவதுபோலு மறிக. ஆவரணத்தின் கேடு:—ஆவரண சக்தியானது தன்னை மறைப்பது மன்றியில் தத்துவங்கள் ஒன்றுக்கொன்று பேதந்தெரிய வொட்டாமல் பிரக்ஞாபகாரம் பண்ணுகிறது. [எ - தி] திருடன் வழிப்போகிறவனுடைய சொத்துக்களை அபகரிக்கிறதும் தவிரக் கை கால்களையும் முறித்துக் கண்ணிலேயும் மண்ணைவாரிப் போட்டுப் போவதுபோலும் ; ஸ்திரீகள் புருஷர்களை கண்ஜாடைகாட்டி மயக்கி அவர்களிடத்தி லிருக்கிற சொத்துக்களையும் அபகரித்து, அவர்களுடைய பிராணாதாரமான சுக்கிலத்தையும் கழட்டி, வியாதியாகிற சம்மானத்தையும் கொடுத்து, நிர்ச்சீவனாய்ப் போகும்படி செய்வதுபோலு மறிக. இப்படி இந்த அஞ்ஞானாவரணங்கள் ஜீவன் சுகமாய்த் தன்னாத்மாவில் ரமியாமலிருக்கும்படி செய்வானேனென்றால், தான் பிழைப்பதற்காகவே. [எ - தி] ஒரு வீட்டில் தாய் தகப்பன் அண்ணன் தம்பிகள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து சம்பத்துக்களையும் யதேஷ்டமாய்ச் சம்பாதித்து விருத்தியாய் வாழ்ந்து கொண்டிருக்கத் தடையாக, ஊரிலிருக்கிற துஷ்டர்கள் மித்திரபேதம்பண்ணி அவர்களை ஒருவருக்கொருவர் மனஸ்தாபப்படும்படி செய்வித்து, வியாச்சியம் வம்புகளை இழுத்து விடுவது, அந்த துஷ்டர்கள் தாங்கள் பிழைக்கும் பொருட்டு செய்வதுபோல வறிக.

[இ - து] அஞ்ஞானம் ஆத்மாவின் சொரூபத்தை மறைத்து, அநாத்மாவான தேகாதிகளை நானென்று எண்ணும்படிக்கும், என்வீடு என்மாடு

என்பதுபோல என்தேகம் என்பிராணன் என்மனதென்று தோன்றியும், அவைகளைத் தனக்கந்நிய மென்று அறியக்கூடாமற் செய்வதே அஞ்ஞாந மோகம். [எ - தி] பெண்ணைப் பிடித்தபேய் அந்தப்பெண்ணுக்கு நான் பெண்ணென்று தோற்றினும், அதைமறைத்து நான் மதுரைவீரன் மொட்டைக் கறுப்பன் என்று சொல்லப் பண்ணுவதுபோல வறிக.

[இ - து] மனது சதாவிஷய சங்கற்பங்களையும், இந்திரிய சேஷ்டைகளையும், விஷயப்பிரவர்த்திகளையும், செய்வதற்கு அஞ்ஞாநமும், அகங்காரமும் காரணம். [எ - தி] ஒரு புருஷனை பிரபுவை அசலூரிலிருந்து வந்திருக்கிற தாசி மருந்தினால் அவனை மயக்கிக் கைவசப்படுத்தவும், அவனைச்சார்ந்த தூதன் இவனிடத்தில் வந்து இவளைவிடாதேயுங்கள், பதினாயிரம் ரூபாய் கொடுத்தாலும் இவள் கிடைக்கத் தக்கவளன்றென்று சொல்லுவதாலிவனுக்கு அவள் பேரில் மேன்மேலும் ஆசையுண்டாய்த் திரிவதுபோல வென்றறிந்து, தத்துவக் ஞாநத்துக்கு விரோதியான அஞ்ஞாந அகங்காரத்தைக் கெடுத்துச் சதா ஆநந்தமாய் வாழக்கடவாய்! இதற்குச்சாக்ஷி யாரென்றால், சுகோஷனென்கிற ராஜா அஞ்ஞாநத்தால் தன்னைமறந்து, ஆவரணத்தால் மித்தையான பஞ்சகோசங்களை நானென்று அத்தியாசத்தையடைந்து, கருத்துருத்வரூபமான அகங்காரத்தால் வந்தபெரியோர்களை அவமாநம் பண்ணிவரும்போது, சுலோசனரென்ற ரிஷியானவர் இவனுடைய நடத்தையைக் கேள்விப்பட்டு இவனிடம் வந்துசேர்ந்து, யாசகப்பிராஹ்மணர்போல இவனுடைய சபையிற் கத்திக்கொண்டு கீழே விழுந்தார். அதைக்கண்ட அந்தராஜன் அநேக ஜனங்களைவிட்டுத் தூக்கச்சொன்னதி லிவரை அசைக்கமுடியாமலிருந்ததைப் பார்த்து, அவன் சிம்மாசநத்திலிருந்து எழுந்துவந்து நான்தானிவரைத் தூக்கிவிட வேண்டுமென்று சொல்லும்போது, இவரவனைப்பார்த்து "நீ உன்னஞ்ஞாநத்தினாலும், அகம்பாவத்தினாலும் பஞ்சகோச மலத்தில் விழுந்துக்கிடக்கிற உன்னை நீ தூக்கிவிட்டுக் கொண்டாற்போது" மென்று சொன்னதைக்கேட்டு அவன்பயந்து அவரிடத்திலேயே ஞாநாநுக்கிரகத்தைப் பெற்றுக் கரையேறின கதையை அறிக.

## 31 - வது, தரங்கம்.

விஷயாசை யுள்ளவனையே அஞ்ஞாநம் ஜந்மத்தில் சேர்க்கும்:—

விஷயாபிமுகமா யிருக்கிறவனைமட்டும் அஞ்ஞாநம் ஜந்மத்திற் சேர்க்குமேயன்றிச் சொரூபாபிமுகமா யிருக்கிற ஞானியை ஜந்மத்திற் சேர்க்கமாட்டாது. [எ - தி] தாசியானவள் மோகமாய்த் தன்னைப்பார்க்கிறவனை மட்டும் தன்யோநியிற் சேர்ப்பாளே தவிர மற்றவர்களைச் சேர்க்காதிருப்பதுபோலும், சூதில் ஆசையுள்ளவனைமட்டும் சூதாடிகள் கூப்பிடுவார்களே தவிர மற்றவர்களைக் கூப்பிடாதிருப்பதுபோல வறிக.

[இ - து] எல்லாருமானந்த வடிவமானு லெல்லாருக்கும் மோக்ஷகம் ஏன் வரவில்லை? [எ - தி] தன்னுடைய பாலை விஷப்பையில் விட்டுச் சாப்பிடுகிறவர்களுக்குத் திருப்தி வாராமல் துக்கமேன் வருகிறது சொல்?

[இ - து] நிராசையுள்ளவன் எப்பேர்ப்பட்ட விஷயத்தையும் பேதித்து வெளியிற் போவன். ஆசையுள்ளவரையி லதிலவன் அகப்பட்டு மடிவன் [எ - தி] வண்டானது தேக்கு முதலான மரத்தைத் துளைத்து வெளியில் போகிறது. அதுவே தாமரச புஷ்பத்திற்குள் ஆசையால் அகப்பட்டு மறித்துப்போவதைப் பார்த்துக் கொள்.

[இ - து] யோகியில் இருபத்தோராவது விரலைமட்டும் விட இச்சித்தவனுக்கு ஈசன் தேகமுழுமையும் நுழையும்படியான கிருபை செய்கிறுர். [எ - தி] காலவரிஷி கர்னனை ஒருபசு வேண்டுமென்று கேட்க, ஆயிரம் பசுக்களை அவன் கொடுத்ததுபோல வறிக.

[இ - து] மோக்ஷத்தில் ஏற யத்தனிப்பவனுக்கு ஸ்திரீ வாசனை பண வாசனை இரண்டு மிருந்தால் கீழே இழுத்துவிடும். [எ - தி] கற்பகக்கனியைச் சாப்பிடுவதற்கு மரத்திலேறுகிறவனுடைய இரண்டு காலிலும் இரண்டு கயிறைக் கட்டிக் கீழே இழுப்பதுபோல யிருப்பதால், இவ்விரண்டு வாசனைகளையும் விட்டே மோக்ஷத்தில் ஏறவேண்டு மென்றறிக.

[இ - து] மோக்ஷத்தை அடைகிறவனுக்கு ஸ்திரீ ஆசை பணத்தாசை இரண்டும் விரோதிகளென்பது எதினுலென்றுல், முதலில் ஸ்திரீஆசை உண்டானமாத்திரத்தில் கண் குருடாய்ப்போம். என்ன ஐயா, உலகத்திலிருக்கிறவர்களெல்லாம் பெண்ணுசையோடு கூடியிருந்தாலும் கண் பொட்டையாய் யாருக்குப் போயிற்று! என்றுல், எல்லாருக்கும் கண் போய்விட்டது. எப்படியென்றுல், கண்தெரிந்தவன் மயிரையாவது, தோலையாவது, ரத்தத்தையாவது, மாமிசத்தையாவது, எலும்பு நரம்பு மலம் மூத்திரம் கோழை வேர்வை சளி கண்ணீர் பீளை முதலான வஸ்துக்களையாவது விலைகொடுத்து வாங்குவானு? அவைகளைத் தொடுவானு? கடிப்பானு? கண்ணுலேயாவது பார்ப்பானு? அவைகளைக் காதாலேயாவது கேட்பானு? அவைகளிருக்கிற இடத்துக்கு ஓரடி எடுத்துவைப்பானு? அவைகளைக்குறித்து மனதிலாவது அநுபவிக்கவேண்டுமென்ற எண்ணமாவது உண்டாகுமா? அப்படியிருக்க, அதில் ஆசக்தியுள்ளவனுக்கு முன்னே நாம் கண்மாத்திரம் தெரியாதென்று சொன்னது பெரிய பிசகு. ஏனென்றுல், சகல இந்திரியங்களும், மனுேபுத்தி சித்த அகங்காரங்களும், சகல சாஸ்திரங்களுடைய ஒழுங்கும், லோகநிந்தனைகளும், சத்குருநாதனுடைய உபதேசமும், சாதுக்களுடைய வசனமும் தெரியாது, அநேக இஷ்டமித்திரர்களுடைய விரோதங்களையுங்கண்டு, பாபத்துக்காவது, நரகத்துக்காவது, வியாதிக்காவது, இம்சைக்காவது, பெரியவர்களுடைய ஆயாசத்துக்காவது பயப்படாமல் மயங்கி

விழுந்து கிடந்து புரண்டு உருண்டு விடமுடியாமல் இருப்பதால், இந்த விஷயத்துக்குமேல் அநர்த்தமொன்றுமில்லை யென்றறிக. இப்படியே பணமும் அநர்த்தங்கொடுக்கும். எப்படியென்றால், இந்தப்பணம் சம்பாதிப்பதிலும், ரக்ஷிப்பதிலும், அழியும்போதும் கவலையாயிருப்பதால், இதையும் துக்கமென்றறிந்து, விவேகியானவன் இந்த ஸ்திரீஆசையையும், திரவிய ஆசையையும் நஞ்சுக்குச் சமானமாக நினைத்து, வெறுத்துச் சதா நிராசையுடனிருந்து சுகிக்கக்கடவன்.

## 32-வது, தரங்கம்.

அஞ்ஞானம் காரணமாயிருக்கும் போது துக்கங்கொடாமல் காரியமாகியே துக்கந்தரும்.

அஞ்ஞானங் காரணாத்மகமாயிருக்குங் காலை துக்கங்கொடாமல் ஆவரண விக்ஷேபாதிகாரிய ரூபமாய்ப் பரிணமித்தே துக்கந்தரும். [எ - தி] கருவேலம் விரை, பாம்புமுட்டை, சுக்கிலம் முதலானவை காரணமாயிருக்கும் போது துக்கங்கொடாமல் காரிய ரூபமான மரமாயும், பாம்பாயும், பிள்ளையாயும் பரிணமித்துத் துக்கங் கொடுப்பது போலவறிக. [இ - து] அஞ்ஞானம் காரிய ரூபமாய்ப் பரிணமித்தே துக்கங்கொடுக்கும் [எ - தி] தீக்குச்சியிலிருக்கிற மருந்து உறைக்கு முன்னே ஒன்றையும் தகிக்காமல் இருந்து உறைத்த பின் தீயாய்ச் சகலத்தையும் எரிப்பது போலும்; ராஜாக்கள் ஒருவருக்கொருவர் மனஸ்தாபமாயிருக்கும் போது இருபக்கத்துச் சேனைகளுக்கும் துக்கங்கொடாமல், யுத்தம் நேரிட்டபின்பு உபயசேனைகளுக்கும் துக்கங் கொடுப்பது போலும்; இரவில் கண் மூடியிருக்கும் போது துக்க முண்டாகாமல், பகலில் கண்ணுக்கு வெளிச்சம் தெரிந்த பின்பே நாம ரூபங்களைப் பார்த்து சுகதுக்க முண்டாவது போலும்; காது சத்தங்களைக் கிரகியாதபோது சுகதுக்கங்கள் உண்டாகாமல் அந்தச் சத்தங்களை கிரகித்த பின்பே சுகதுக்கங்கள் உண்டாவது போலும், தொக்கிந்திரியம் பரிசத்தைக் கிரகியாத போது சுகதுக்கங் கொடாமலிருந்து, சீதோஷ்ண மிருது கடிந ஸ்பரிசங்களைக் கிரகித்த பின்பே சுகதுக்கங்களைக் கொடுப்பது போலும், ரசநேந்திரியம் சும்மா யிருக்கும்போது சுகதுக்கங்கொடாமல், அறு சுவைகளைக் கிரகித்த பின்பே சுகதுக்கங்களை கொடுப்பது போலும் ; கிராணேந்திரியம் கந்தத்தை கிரகியாத போது சும்மாயிருந்து, நற்கந்த துற்கந்தங்களை கிரகித்த பின்பே சுகதுக்கத்தைக் கொடுப்பதுபோலும், வாக்கும் வசனியாதபோது சுகமாயிருந்து, வசனித்தபின்பே சுகதுக்கங்களைக் கொடுப்பதுபோலும் ; பாணியும் சும்மாயிருக்கும்போது சுகமாயிருந்து, வேலைவெட்டி அடிதடிமுதலானதொழில்களைச் செய்தபின்பே வலியையும் கலகத்தையும் கொடுப்பதுபோலும் ; பாதமும் நடவாதபோது சுகமாயிருந்து, வோட்டம் நடைகளைச் செய்தபின்பே வேதனையுண்டாவது போலும், பாயுவிந்திரியம் சும்மாயிருக்கும்போது சுகமாயிருந்து,

மலஜலவிசர்ஜநத்தொழிலைச் செய்தபின்பே அசிங்கமும், நாற்றமும், சர்க்கார்த் தண்டனைமுதலான துக்கங்களைக்கொடுப்பது போலும்; உபஸ்த இந்திரியம் சும்மாயிருக்கும்போது சுகமாயிருந்து யோநிலிங்கங்கள் லேபன ரூபமாயும் விகார ரூபமாயும் பரிணமித்தபின் ஒன்றையொன்று தேடுவதும், சம்போகத்துக்கு ஏகாந்தமுதலான சாதனங்களைத் தேடுவதும், போககாலத்திலும் பெருமூச்சு நெல்லுக்குத்துகிறவள்போலே விட்டுக்கொண்டு, யாரும் பார்ப்பார்கள் என்கிறபயம் முதலான துக்கங்களைக் கொடுப்பதுபோலும்; மனசு சங்கற்பவிகற்பங்களைப் பண்ணாமலிருக்கும்போது சுகமாயும், அவைகளைப் பண்ணினபின் துக்கத்தை யடைவதுபோலும்; அஞ்ஞானம் மேலேசொன்ன திருஷ்டாந்தங்கள்போல சுஷுப்திப்பிரளயம் மூர்ச்சை முதலான அவஸ்தைகளில் காரணமாயிருந்ததுகொண்டு ஒருவருக்கும் ஒருவிதமான துக்கங்களையுங் கொடாமல், ஜாக்கிர சொப்பன மனோராச்சியங்களில் அதுவே விட்சேபரூபமான காரியமாய்ப் பரிணமித்துத் துக்கங்கொடுப்பது சர்வாநுபவசித்தமா யிருப்பதால், முக்திசுகம் வேண்டியபுருஷன் அந்தக் காரணரூபமான அஞ்ஞானத்தை முதலில் கெடுத்துவிட்டால் அதன் காரியமான விக்ஷேபாதிகள் வேரறுந்துபோன மரம் தானேபடுவதுபோலத் தானே புநர்ஜந்மரகிதமாய் நசித்துப்போமென்றறிக.

## 33 - வது, தரங்கம்.

*நித்திராசக்திக்கே ஈஸ்வராதியை உண்டுபண்ணச் சக்தியிருந்தால் மாயைக்கு கேட்கவேண்டியதில்லை:—*

மாயை ஜடமான ஜகத்தைக்கற்பிக்கலாமேதவிர சேதநர்களான ஜீவேஸ்வரர்களைக்கற்பிக்கக்கூடாது. [எ - தி] அற்பமான நித்திராசக்தியும், இந்திரஜாலசக்தியும் சேதநர்களாயுள்ள ஜீவேஸ்வரர்களைக்கற்பிப்பது அநுபவங்கண்டிருக்கும்போது மகாமாயை அவர்களைக் கற்பிக்கிறதில் அதிசயமில்லாததுபோலும், கடுகத்தனை விஷமே ஆளைக்கொல்லும்போது காளகூடவிஷத்துக்குக்கேட்க வேண்டியதென்ன, நம்முடையசிசுநமே பிள்ளையை யுண்டுபண்ணுமானாற் பிரம்மதேவர் உலகத்தை உண்டுபண்ணுவதில் அதிசயமென்ன, ராஜாவேஷம் போட்டவனுக்கே பூஜிதைநடந்தால் நிஜராஜாவுக்குப்பூஜிதை நடப்பதிற் கேட்கவேண்டியதென்ன, குருவின் ஸ்ரீமுகம் கொண்டுவந்தவனுக்கே பூஜிதை நடந்தால் குருவுக்குக்கேட்கவேண்டியதில்லாதது போலும், அபிமன்னுவுக்கே மகாரதனென்றபேர்வந்தால் அர்ச்சுனனுக்குக் கேட்கவேண்டியதில்லாதது போலும், தீபத்திலிருக்கிற தீயே சுடுமானாற் பிரளயத்தீ எரிப்பதில் கேட்கவேண்டியதில்லாததுபோலுமறிக.

[இ - து] மாயை கிஞ்சிக்ஞத்துவாதி ஜீவகுணங்களைக் கற்பிக்கலாமே தவிர சர்வக்ஞத்துவாதி ஈசகுணங்களை கற்பிக்கமுடியுமா? [எ - தி] ராஜாவுக்கு மந்திரிமுதலான உத்தியோகஸ்தர்களை நியமிக்கச் சக்தியிருக்கும்போது

அவர்களுக்குத் தகுந்தவேலையைக் கற்பிப்பதில் என்னபாரமிருக்கிறது? பிள்ளையைப்பெற்றவளுக்குப் பேரிடுகிறது பிரயாசை இல்லாததுபோலு மறிக.

[இ - து] விவேகத்துக்கு அனுகூலமான வைராக்கியம் பண்ணவேண்டியது. அதாவது:—புத்திர களத்திராதிகளிடத்திலிருக்கிற அபிமானம் விடுகிறது, கிரகக்ஷேத்திரத்திலிருக்கிற அபிமானம் விடுகிறது, புஜிக்கிற விஷயத்திலிருக்கிற தோஷதிருஷ்டிபூர்வகமாய் பார்த்து அதில் அபிமானத்தை விடுகிறது, சரீரத்துக்கு நல்ல வஸ்திராபரணத்தைத்தரிக்கிற அபிமானத்தையும் விடுகிறது. இப்படிப்பண்ணாமல் இதற்கு விபரீதமாய்க் காட்டுக்குப்போகிறதும், குகையில் வசிக்கிறதும், தலைவளர்க்கிறதும், கையில் நகம் வளர்க்கிறதும், வாய்பேசாமலிருக்கிறதும், இது முதலானவைகள் விவேகத்திற்கு விரோதமான வைராக்கியம். [எ - தி] அந்தத்துக்கு அதிகமான சாகங்களும், படிக்கல்லுக்கு மேலே சாமான்கள் போடுகிறதும், புருஷனுக்கு அடங்காத ஸ்திரீயும் போலவறிக.

[இ-து] மாயை ஜீவேஸ்வர ஜகத்துக்களை உண்டுபண்ணுமென்பது எப்படி கூடும்? மாயையோ ஜடமாயிற்று, ஜடத்துக்குச் சேதநாசேதநங்களை உண்டு பண்ணக்கூடுமா வென்றால் கூடும். [எ - தி] ஜடமான சாணி, ஜடமான மலம், ஜடமான மாவு முதலானவைகள் சேதநங்களான புழுக்கள் பூச்சிகளையுண்டு பண்ணுவது போலும்; ஜடமான தலைமயிர்கள் சேதநங்களான ஈர் பேன்களை உண்டுபண்ணுவது போலும்; ஜடமான வயிற்றிற் சேதநங்களான நாக்குப்பூச்சி முதலான ஜந்துக்கள் உண்டாவது போலும் ஜடமான மண்ணிற் கரையான், மண்ணுளிப்பூச்சி முதலான ஜந்துக்கள் உண்டாவது போலும், ஜடமான ஜலத்தில் மீன் முதலான ஜந்துக்கள் உண்டாவது போலும், ஜடமான நினைப்பு சேதநர்களான ஜீவர்களைப் பந்தப்படுத்தும்படியான கர்மங்களை யுண்டுபண்ணுவதுபோலும், ஜடமான மேகம் பயங்கரமான இடிமின்னல் மழை முதலானதை உண்டு பண்ணுவது போலும், ஜடமானஇருட்டு பேய்பிசாசுகளை உண்டு பண்ணிச் சேதநர்களான ஜீவர்களைப் பயப்படுத்துவது போலவறிக.

ஞானமில்லாத சுஷ்க வைராக்கியம் பாபத்தையும், துக்கத்தையுங் கொடுக்கும். [எ - தி] பசுவினிடத்திலுண்டாகிற பால்முதல் ஐந்தும் பஞ்சகவ்வியமாய்ப் பாபத்தைப்போக்கும். ரத்தத்தைச் சேர்த்து ஷட்கவ்வியமாய்ச் சாப்பிட்டால் விசேஷமென்று நினைத்தவன் பாபியாவது போலப் போகாமல், விவேகத்துக்கு அநுகூலமான வைராக்கியமே மோக்ஷ பரியந்தமான சகல சுகத்தையும் கொடுக்குமென்றறிக.

## 34 - வது, தரங்கம்.

அஞ்ஞானம் அநிர்வசநீயம் :—

அஞ்ஞானத்துக்கு வஸ்துத்துவமும், அத்தியந்த அசத்துத்துவமும் சொல்லக்கூடாது. ஏனென்றால், விசாரிக்கும்போது அது பதார்த்தமாய்க் காணப்ப

டாதபடியினாலும், தன்னைமறைத்து ஜநநமரணதுக்கங்களைக் கொடுப்பதாலும். [எ - தி] இருட்டானது தீபம் வந்தமாத்திரத்திற் பதார்த்தமாய்க் காணப்படாமலும், பயாதிதுக்கங்களை உண்டு பண்ணுவதாலும், இருட்டை ஒரு வஸ்துவாகவும், சசவிஷாணம்போல அத்தியந்தாசத்தாகவும் சொல்லக்கூடாததுபோலவறிக.

வாசனையாற் சங்கற்பமும், சங்கற்பத்தால் வாசனையும் விருத்தியாகும். [எ - தி] ஜலத்தால் தாமரையும், தாமரை இலையால் ஜலமும் விருத்தியாவதுபோலும்; ஸ்திரீயால் புருஷனும், புருஷனால் ஸ்திரீயும் மன்மத விருத்தியையடைவது போலும் அறிக.

[இ - து] மாயாகாரியத்துக்கு நாசமேயல்லாமல் மாயைக்கு நாசமில்லை. அது சத்தியமோவென்றால், பொய். இந்திர ஜாலசக்தி எப்படிப் பொய்யோ அப்படிப்பொய். அந்தச்சக்திக்கு நாசமில்லையென்பதற்குச் சாக்ஷி என்னவென்றால், பூர்வத்தில் சுகாதிகள் முக்த்தாளாய்ப் போயிருந்தும் இப்போது ஜகத்துச் சிருஷ்டியாகாமற் போயிற்றோ சொல்?

அஞ்ஞாநம் சத்தா அசத்தாவென்றால், சத்தென்றும், அசத்தென்றும் சொல்லக்கூடாது, அநிர்வசநீய மென்று சொல்லவேண்டும். எதனால் என்றால், சத்தானால் மூன்று காலங்களிலும் கெடாமலிருக்கவேண்டும். நான் பிரஹ்மமென்கிற ஞாநத்தாற் காணாமற் போவதாற் சத்தென்று சொல்லக்கூடாது. அசத்தென்றால், காரிய உற்பத்தியைச் செய்யாமலிருக்கவேண்டும். ஜீவேஸ்வர ஜகத்துக்களான காரியங்களை உண்டு பண்ணுவதாலும், நான் அஞ்ஞாநியென்ற அநுபவம் எல்லாரிடத்திலும் காணப்படுவதாலும் அசத்தென்றும் சொல்லக்கூடாது. நித்திராசக்தியைப்போல அநிர்வசநீய மென்றறிக. ஐயா, நித்திராசக்தியானது எப்படி அநிர்வசநீயமென்றால், அதற்கு உத்தரம் சொல்லுகிறேன் கேள். நித்திரா சக்தியானது சத்தென்றால், இப்போது ஜாக்கிரத்திலும் இருக்கவேண்டும். அப்படியிராமையாற் சத்தென்று சொல்லக்கூடவில்லை. அசத்தென்றால், நாள்தோறும் சொப்பனாவஸ்தையையும், அதில் அநேகவிதமான ஜீவேஸ்வர ஜகத்துக்களையும், அநேகவிதமான சுகதுக்காகாரங்களையும், நாள்தோறும் உண்டுபண்ணுவதால் அசத்தென்றும் சொல்லக்கூடவில்லை யென்றறிக. ஐயா, நித்திராசக்தியானது அநிர்வசநீயமென்று சொன்னது சரியே. ஜாக்கிரதா அவஸ்தையானது சத்தியமாயும், ஈஸ்வரனால் உண்டுபண்ணப்பட்டதாயும், ஜாக்கிரத்திலுள்ள சகல விதமான ஞாநங்களையும் பெரியவர்களிடத்திற் கேட்டே தெரிந்துகொள்ளவேண்டியதாயும், நாம் சுகம் வேண்டுமென்று நினைத்தாலும் சுகம்வராமலும், துக்கம் வேண்டாமென்று நினைத்தாலும் துக்கம் வருவதும், பிள்ளை வேண்டு மென்று நினைத்தாற் பெண்பிறப்பதும், பெண்வேண்டுமென்று நினைத்தாற் பிள்ளைபிறப்பதும், இரண்டும் வேண்டுமென்று நினைத்தால் இரண்டுமில்லாமல் போகிறதும் பிரத்தியக்ஷமாயிருப்பதும் கண்டிருக்க, இதைச்

சொப்பனம்போல அநிர்வசநீய மென்று எப்படி சொன்னீரென்று கேட்பாயாகில், அதற்கு உத்தரம் சொல்லுகிறேன் கேள்:—வாசனைகளோடு கூடின நித்திராசக்தியும் தன்னிடத்திலுள்ள தாலும், நாம் நினைத்தபடி சுகமாவது துக்கமாவது வராமல் தன் சுபாவமாய்ச் சுகதுக்கங்களை உண்டு பண்ணுவதாலும், சொப்பனத்திலும் நமக்குத்தெரியாத சாஸ்திரங்களுக்கு அவ்விடத்திற் கற்பிதர்களாயிருக்கிற சாஸ்திரிகளிடத்திற் போய் அர்த்தம் தெரிந்து கொள்ளுவதும், தனக்குத்தெரியாத பச்சை இலைகளை மலையிற் போய்த் தெரியாமல் அலைந்து திரிந்த பின் அவ்விடத்திலுள்ள சித்தாதிகளை கேட்டுத்தெரிந்து கொள்ளுவதும், தனக்குஸ்திரீநினைப்புவந்து சொப்பனத்தில் ஸ்திரீயோடுசேருவதுபோலக்கண்டு சுக்கிலம் கழியாமலிருக்க வேண்டுமென்று எண்ணமிருந்தாலும் அதற்கு விரோதமான ஸ்திரீயையும் கற்பித்துச் சுக்கிலமும் கழண்டு போகும்படி செய்வதாலும், இன்னம் அநேகவிதமாய்க் கூடாதகாரியங்களையும் கூட்டி வைப்பதாற் சொப்பனமும், ஜாக்கிரமும், அநிர்வசநீய மென்பதிற் சரியாயிருக்கிறது. [எ - தி] ஒரு புருஷன் முமுக்ஷுத்துவத்தினுற் சாதனங்களை அடைந்து குருமுகமாய் சிரவணமநநங்களைச் செய்து நிர்விகற்ப சமாதியை அடையவேண்டுமென்று நினைத்து உட்கார்ந்தவருக்கு விக்ஷேப முதலான அநந்தகோடி சங்கற்ப முண்டாவதும், விசாரித்தாற் காணுமல் போவது போல வறிக. இதற்கு சாக்ஷி என்ன வென்றால், திம்மா பட்டர் என்ற பிராஹ்மணர் சம்சார துக்கம் சகிக்க மாட்டாமல் தபித்து கிரகத்திலிருந்து வெளியேறிப் பெரியவர்களைத் தேடிப் போகும்போது, ஆரியகுரு ஸ்வாமிகளென்ற ஒரு மகானைக் கண்டு, அவரைச் சரணுகதம்பண்ணி அவர் கிருபையைப் பெற்றபின்பு, அவரைப் பார்த்து கேள்க்கிறார்:—ஹே குரோ! நானர்? இந்தச் சரீராதி ஜகத்து எப்படியுண்டாயிற்று? இது எப்போது உண்டாயிற்று? எப்போது நசிக்கும்? நான் எப்போதிந்தச் சம்சாரதுக்கம் நாசமாய் சுகித்துக்கொண்டிருப்பே னென்று கேட்ட சீடனைப்பார்த்து, அந்தக்குருநாதன் சொல்லுகிறார்:—அடே குழந்தாய்! இது வென்று வருகிற பஞ்சபூதங்களென்ன, மாயை என்ன, ஈஸ்வர னென்ன, இதுபோலவே இது வென்று வருகிற ஆறுதத்துவமான ஸ்தூலதேக மென்ன, இருபது தத்துவமான சூக்ஷ்மதேக மென்ன, இரண்டு தத்துவமான காரண சரீரமென்ன, இது முதலானவை போல, இது வென்று அறியப்படாமலும், மூன்று காலங்களிலும் மூன்று சரீரங்களிலும் மூன்று அவஸ்தைகளிலும் சாக்ஷியா யிருக்கிற அறிவே தானென்று அறிந்தால், மற்றைச்சங்கைகளும் மற்றைச் சம்சார துக்கங்களும் போமென்று சொன்னதை அறிந்து, அவரும் அப்படியே துக்கநிவர்த்தி தடையற்றஆனந்தத்தை அடைந்து கிருதகிருத்தியரானரென்றறிக.

## 35-வது, தரங்கம்.

சச்சிதாநந்தமாகிய ஆத்மாவுக்கு அஞ்ஞானம் சூநியவிலக்ஷணம், விக்ஷேபம் துச்ச விலக்ஷணம் :—

சத்ரூபியாயிருக்கிற தனக்கு அஞ்ஞாநம் சூநிய விலக்ஷணம், தேகாதி நாம ரூபம் துச்சவிலக்ஷணம் [எ - தி] சேதநமான புருஷனுக்கு ஜடமான ஆகாசம் போலும், தன்நிழல் போலுமென்றறிக.

[இ - து] விக்ஷேபசக்தி விவேகிக்கு அநுகூலத்தையும், அவிவேகிக்கு துக்கத்தையும் கொடுக்கும். [எ - தி] எமனையும் பணத்தையும் போல வறிக.

[இ - து] சத்தாகிய ஆத்மாவுக்கு அஞ்ஞாநம் சூநிய விலக்ஷண மென்பதும், ஜகத்து துச்சவிலக்ஷண மென்பதும் எதனாலென்றால், சுழுப்தியிலும், பிரளயத்திலும், மூர்ச்சையிலும் அஞ்ஞாநம் ஆத்மாவிடத்தி லிருந்தாலும் தனக்குவேறாகத்தோற்றாமையாலும், அதனால் யாருக்கும் ஒருவிதமான கர்மங்களையும், ராகத்துவேஷங்களையும், இந்திரியப் பிரவர்த்திகளையும் உண்டுபண்ணாமலிருப்பதால் அந்த அஞ்ஞாநம் சூநியவிலக்ஷண மென்று சொல்லப்பட்டது. விக்ஷேபரூபமான ஜகத்துத்தோன்றின பாத்திரத்தில் கருத்துருத்துவங்களையும், வாசனைகளையும், கர்மங்களையும், அகங்கார மமகாரங்களையும், ராகத்துவேஷங்களையும், இந்திரியங்களுக்கு அசைவுகளையும், விஷயப் பிரவர்த்திகளையும், தேகாதி நாமரூபங்களுடைய தோற்றங்களையும், அதில் சத்திய புத்தியையும், அதில்சுக துக்கங்களையும் கொடுப்பதால் விக்ஷேபத்தைத் துச்சவிலக்ஷணமென்று சொல்லப்படும். [எ - தி] மனது சங்கற்பமன்றியில் வாசனுமாத்திரமாயிருக்கும்போது சூநியமாயும், சங்கற்ப ரூபமாய்த் தோற்றுவதாற் துச்சமாயும் இருப்பதுபோலும்; பூமிக்குள் அடங்கியிருக்கிற வித்துக்கள் தோற்றாமையால் சூநியமென்றும், கர்மமாகிற மழையால் முளைத்துத் தோன்றினபின் துச்சமாயும்; புருஷனுடைய நிழல் இருட்டுக்குள் இருக்கும்போது தோற்றாமையால் சூநியமாயும், வெளிச்சத்தில் வந்தபின் தோற்றுவதால் துச்சமாயும்; இந்திரஜாலக்காரனிடத்திலிருக்கிற இந்திரஜால சக்தி வெளிப்படுமுன் தோற்றாமையால் சூந்யமாயும், வெளிப்பட்டபின் அநேகவிதமான பட்டணங்கள், காடுகள், மலைகள், நதிகள், சமுத்திரங்கள், ராஜாக்கள், சதுரங்கசைந்யங்கள், கரடி புலி பாம்புகள் முதலான ரூபமாய்த் தோற்றி அறியாதவர்களுக்கு சுகதுக்கங்களைக் கொடுப்பதாற் துச்சவிலக்ஷணமென்று சொல்லப்படுவதுபோலும்; நித்திராசக்தி சுழுப்தியில் தோற்றாமையால் சூநியமாயும், சொப்பனவஸ்தையில் அநந்தவிதமான நாமரூபங்களைத் தோற்றச்செய்வதால் துச்சவிலக்ஷணமாயு மிருப்பது போலும் அறிக.

விக்ஷேபசக்தி நல்லவர்களுக்கு நன்மையும், கெட்டவர்களுக்குத் தீமையையும் கொடுக்கும். [எ - தி] அரசனானவன் யோக்கியர்களுக்குச் சகல சம்பத்தையும் கொடுத்து ரக்ஷித்துச் சுகப்படுத்துவது போலும், பொய் புரட்டுத் திருட்டு உருட்டுச் செய்கிற துஷ்டர்களுக்கு அடியும் விலங்கும் கொடுப்பது போலும்; ஈஸ்வரன் கொடுத்திருக்கிற தநுகரண புவநபோகங்களைச் சாதுக்கள்

தங்களுக்கும் அந்நியர்களுக்கும் உபகாரப்படுத்துவதும், துஷ்டர்கள் தங்களுக்கும் பிறருக்கும் துக்க முண்டாக்குவதுபோலு மறிக.

36 - வது, தரங்கம்.

சஞ்சித கர்ம முண்டாகுந்தன்மை :—

அழுத்தமான ஒரு கர்மத்திலுண்டான ஜீவனுடைய ஒரு ஜன்மத்திலுண்டாகிற கர்மங்களுக்குள், அழுத்தமான ஒரு கர்மத்தை மட்டும் சஞ்சித கர்மப்பையிற் சேர்த்து மற்றைப்புண்ணியபாப கர்மங்களுக்குப் பலமான சுவர்க்க நரகங்களிற் சுகதுக்கங்களை அநுபவிக்கும்படி செய்கிறார். [எ - தி] வியவசாயக்காரன் பயிர்களிலுண்டான ஒரு காயிலிருக்கிற விரையை மட்டும் வித்தாகவைத்து மற்றைய வெல்லாம் சாப்பிடுவது போலவறிக. ஐயா, ஒரு ஜன்மத்திற் செய்யப்பட்ட அநந்தகோடி கர்மங்களில் ஒரு கர்மத்தைமட்டும் சஞ்சிதத்தில் சேர்ப்பானேன்? மற்றவைகளைச் சஞ்சிதத்திற் சேர்க்காமற் போவானேனென்றால், இப்படி ஒரு ஜன்மத்தில் ஒரு கர்மத்தை யெடுத்துச் சஞ்சித மென்கிற பையில் போட்டுவந்ததே, அநேக கர்மங்கள் சேர்ந்து ஒரு சஞ்சியாயும், அப்படி அநேகங்கோடி சஞ்சிகள் எண்ணத் தொலையாததாய், மலைமலையாய்க் குவிந்திருக்கும் போது, நீ சொன்னபடி ஒரு க்ஷணத்திற்குள் அநந்தகோடி நினைப்பு ரூபமான கர்மங்களுண்டானால் ஒரு நாளைக்குள் எத்தனைகோடி கர்மங்களுண்டாகும், இப்படியே ஒரு மாசத்திற்குள் எவ்வளவு உண்டாகும், ஒரு வருஷத்திற்குள் எவ்வளவு உண்டாகும், ஒரு ஜன்மத்தில் எவ்வளவு உண்டாகும், இப்படி எத்தனைகோடி ஜன்மங்கள் வந்துபோயிருக்கிறது? ஆகையால் ஒரு ஜன்மத்திற் செய்யப்படுகிற அநந்தகோடி கர்மங்களில் அழுத்தமாயும் வாசனையோடு கூடினதாயுமிருக்கிற ஒன்றிரண்டு கர்மங்களைச் சஞ்சித கர்மமென்கிற பையிற் சேர்த்துக் கட்டிவைத்துப் போட்டு, மீதமுள்ள அந்தந்த ஜன்மங்களிற் செய்யப்பட்ட புண்ணியபாபகர்மங்களுக்குப் பலமான சுவர்க்க நரகங்களை அநுபவித்துப் போட்டபின், சஞ்சிதத்தில் புண்ணியகர்ம மிருந்தால் தேவ ஜன்மத்தை அடைவான். அதிலும் உத்கிருஷ்டமான புண்ணியஞ் செய்திருந்தால் இந்திராதி அஷ்டதிக் பாலகர்களாயும், சூரியாதி நவக்கிரக தேவதைகளாயும் பிறப்பார்கள். புண்ணியத்தின் மத்தியம மாயிருந்தால் ஆஜாநஜ தேவதைகள் பிதுர்தேவதைகள் கந்தர்வர்களாயும் பிறப்பார்கள், புண்ணியத்தில் அதமமாயிருந்தால் யக்ஷ ராக்ஷசாதி ஜன்மங்களை அடைவார்கள். இப்படியே புண்ணிய பாப மிச்சிரமான கர்மத்தில் உத்தமமான கர்மத்தால் தத்துவஞானத்தை அடையயோக்கியமான மாநுடப்பிறப்பையும்; மத்தியமமானகர்மம் செய்திருந்தால் கர்மாநுஷ்டானபரர்களாயும்; அதமமான கர்மத்தாற் பாமரர்களாயும் பிறப்பார்கள். பாப கர்மத்திற் கொஞ்சம் செய்திருந்தால் மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் உபயோகமான பால் முதலானவைகளைக் கொடுக்கும் படியான பசு முதலான ஜன்மங்க

ளேயும்; மத்தியமமான பாபங்களைச் செய்திருந்தால் பன்றி கழுதை முதலான ஜந்மங்களேயும்; மிகுந்தபாபம் செய்திருந்தால் புலி கரடி பாம்பு முதலான விஷ விருக்ஷங்கள் வரை ஜந்மத்தை அடைவார்களென்றறிக. ஐயா, இந்தகர்மங்கள் எதனுலே செய்யப்படுகிறது? எந்த ஜந்மத்தில் செய்கிற கர்மங்களுக்குப் பலனுண்டாகும்? அந்தக்கர்மங்களின் பேதம் எப்படி யென்ருல், மனோ வாக்குக் காயங்களான திரிவிதகரணங்களாலேயே செய்யப்படுகிறது. இவைகளில் முக்கியமாய் மநுஷஜன்மத்திலேயே உண்டாகிறதுகள். இதில் காயத்தினுற் செய்கிற குரு சிசுருஷைமுதலானவைகள் புண்ணியகர்மம். சிலபோது குருசிசுருஷையும் சில போது குடும்ப ரக்ஷணையும் செய்துவருவது மிச்சிர கர்மம். பிறரைச் சதாஹிம்சித்துக் குடும்ப ரக்ஷணைசெய்வது பாபகர்மம். வாக்கினுல் குருஸ்துதி முதலானது செய்வது புண்ணியம்; குருஸ்துதியும் உலகப் பேச்சும் பேசுவது மிச்சிரம்; சதாஉலகப் பேச்சு பேசுவது பாபம். மனசில் ஆத்மசிந்தனையை இடைவிடாமற் செய்வது புண்ணியம்; ஆத்மசிந்தனையும் விஷயசிந்தனையும் செய்வது மத்தியமம்; விஷயசிந்தனை மட்டும் சதாச்செய்வது அதமம். இப்படித் திரிவித கரணத்தாற் செய்யப்படுகிற இக்கர்மங்களை அறியாமையால் நான் செய்கிறேனென்று ஒப்புக்கொள்ளுவதால் பந்தமென்றறிக. ஆனுலிப்படிச் சங்கிலிப்பின்னலைப் போலத்தொடர்ந்து வருகிற இந்தச் சஞ்சிதகர்மம் நிஸ்சேஷமாய் நிவர்த்தியாய் இதனுல் உண்டு பண்ணப்படுகிற ஜநநமரண துக்கப்பிரவாகம் எப்போது ஒயுமென்று கேட்பாயாகில், எப்போது நானே பிரஹ்மமென்ற ஞாநம் பிரதிபந்த மன்றியிற் சாக்ஷாத்காரமாக ஆகிறதோ அப்பொழுதே சொப்பனத்திலிருந்து விழித்தவனுக்கு அந்த நிமிஷத்திலேயே நித்திராமோகமும், சஞ்சிதகர்மமும், அதனுல் வரப்பட்ட சொர்க்க நரகங்களுமில்லாமற் போவதுபோல, நான் பிரஹ்மமென்றறியாத அறியாமையும் சஞ்சிதகர்மமும் சம்சாரதுக்கமும் நிவர்த்தியாய்,ஞாநரக்ஷை தபசித்தி சர்வசமத்துவம் முதலான ஜீவன்முக்தி சுகாவிர்பாவத்தையடைந்து, கிருதகிருத்தியனுய் நித்திய திருப்தியை அடைந்து, தன்னைப்போலச் சகலரையும் கடத்தேற்றிவைத்துக் கொண்டிருப்பானென்றறிக.

## 37 - வது தரங்கம்.

காலத்தின்வலி:—

ஜடமான காலம் சேஷ்டைபண்ணுமா வென்ருல்,ஒரேகாலத்தில் யுத்தமுதலானதால் அநேகங்கோடி பேர்கள் மடிகிறதைப் பார்த்துக் கொள்.

ஆகாதகாலத்துக்கு அந்நத்துவேஷமும், போதாதகாலத்துக்குப் பிரஹ்மத் துவேஷமும் வருமென்ற பழமொழியின் கருத்து:—துவம்பத லக்ஷியமான கூடஸ்தாந்நத்தை விசாரிப்பதில் துவேஷம் வந்துவிட்டதால், ஜீவன் முக்தியான பிழைப்புக்கு இடமில்லே. போதாதகாலத்துக்கு தன் பிராணதாதாவான மகா

ராஜன் போலிருக்கிற, தத்பதலக்ஷியமான பிரஹ்மாப்பியாசத்தில் துவேஷம் வந்து விட்டதால் விதேஹமுக்திச் சுகமும் கிட்டாதென்றறிக.

காலமென்பது எது? காலத்திற்கு என்ன சாமர்த்தியமிருக்கிறது? இந்தக் காலத்தை இவ்வளவு பெரிதாய்ச் சொல்லவேண்டிய காரணமென்ன? அந்தக் காலத்தை என்னமாய் ஜயிக்கிறது? அதை ஜயிக்க உபாய மெப்படி யென்ற ஐந்து சங்கைக்கும் உத்தரம் சொல்லுகிறோம் கேள்:—காலமென்பது மூலப்பிரகிருதியினுடைய அநந்த சக்திகளில் முக்கியமான ஒருசக்தி யென்றறிக. காலத்தின் சாமர்த்தியத்தினாலேயே சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியங்களும் நடக்கிறது. ஜீவர்கள் சிருஷ்டிகாலத்தில் உண்டாகிறதும், ஸ்திதி காலத்தில் லாபநஷ்டங்களையும், மாநாவமாநங்களையும், உயர்ச்சிதாழ்ச்சிகளையும், இஷ்டாநிஷ்டங்களையும், ராகத்துவேஷங்களையும், ஜயாபஜயங்களையும், ஜநநமரணங்களையும், சுகதுக்கங்களையும் மாறிமாறி அடைந்துகொண்டு தாபப்பட்டுக் கொண்டிருப்பதும்; பிரளயகாலத்தில் நாம ரூபங்களும், மனசு முதலான கருவி கரணங்களும், ஜீவேஸ்வரர்களும் லயத்தையடைகிறதும்; திரும்ப இப்படியே மாறிமாறிச் சுத்திக்கொண்டிருப்பது எப்படிப்போலவென்றால், இப்போது நடக்கிற ஜாக்கிராவஸ்தையையே சிருஷ்டி காலமென்றும், சொப்பனாவஸ்தையையே ஸ்திதிகாலமென்றும், சுஷுப்தி அவஸ்தையையே பிரளயகாலமென்றும், அவஸ்தாத்திரயங்கள் மாறிமாறி வந்து கொண்டிருப்பதும், அவைகளில் ஜீவன் சுகதுக்கங்களை அடைந்து கொண்டிருப்பதை உன் னநுபவத்தால் அறிந்துகொள். இனி இந்தக்காலத்தை இவ்வளவு பெரிதாய்ச் சொல்லவேண்டியதற்கு காரணத்தைச் சொல்லுகிறேன் கேள்:—நீசனை மகானாய்ச் செய்வதும், சூரனைக்கையாலாகாதவனால் கொல்லச் செய்வதும், வித்வானை அவித்வானால் அவமானப்படச் செய்வதும், வாசாலகனை ஊமையாகச் செய்வதும், ஊமையை வாசாலகனாய்ச் செய்வதும், நொண்டியை மலையைத்தாண்டச் செய்வதும், வேகமுள்ளவனை நொண்டியாகச் செய்வதும், கருடனைப்பாம்புகளுக்கு புழுக்கையாகச் செய்வதும், பின் ஒரு காலத்தில் கருடன் பாம்புகளைக் கொத்திக் கொல்லவும், கிழட்டாடு சிம்மத்தை பயந்தோடும்படி செய்யவும், திரிமூர்த்திகளும் அநுசூயை யென்கிற ஒருமநுஷப்பெண்ணினிடத்திற் சிசுக்களாய் தொட்டிலில் கட்டுப்படவும், இன்னுமநேக சித்திர விசித்திரங்களைச் செய்வதால் காலத்துக்கு மேல் வலியுள்ள தொன்று மில்லை யென்றறிக. இனிக்காலத்தை ஜயிப்பதற்குக் காரணத்தைச் சொல்லுகிறேன் கேள்:—காலமானது சத்தா, அசத்தா, சித்தா ஜடமா வென்று சத்குரு சந்நிதாநத்திலிருந்து விசாரித்தால், சச்சிதாநந்தமாகிய நம்மிடத்தில் காலமென்பது காலத்திரயத்திலும் இல்லவே யில்லை. இந்தக்காலம் ஜகத்தைக் குறித்து வந்திருப்பதால் ஜகத்தே இல்லாத போது காலமெங்கே இருக்கும்? [எ - தி] பழுதையிற் பாம்பே இல்லாத போது, பழுதைப் பாம்பு கடிக்கும் படியான கஷ்டகாலமெங்கே யிருந்து வந்தது? இந்தக்காலத்தை ஜயிப்பதற்கு முக்கிய

உபாயமொன்றிருக்கிறது. அதாவது, குருகிருபையேயாம். அதாவது,அநாத்ம திருஷ்டியையுடைய அவிவேகனென்ற ராஜா அஞ்ஞானமென்ற துஷ்டனுடைய துர்ப்போதனையால் மோஹமென்கிற சாராயத்தை நிரம்பப்பானம் பண்ணித் தன்னுடைய நிஜமான பிரக்ஞை கெட்டுப்போய்த் தேகம் நான், பிர பஞ்சம் சத்தியமென்ற படுகுழியில் விழுந்து, விபரீதபாவனையாகிற நித்திரை யையடைந்து, யானெனது என்கிற சொப்பனவஸ்தையை யடைந்து, தன்னு டைய பாஹ்யாந்தக் கரணங்களாகிற படைகளுடன் சம்சாரமாகிற யுத்தபூமியில் வந்திருக்கிற சப்தாதிகளாகிற எதிரிகளோடு யுத்தத்திற்குப் போய்ச் சண்டை நடக்கும் போது, இவனுடைய சுரோத்திரமாகிற சேநாதிபதியைச் சப்தமென் கிற எதிரியான சேநாதிபதி விழுங்கியும், இதுபோலவே துவக்காதி சேநாதிபதி களை ஸ்பரிசாதி சேநாதிபதிகள் விழுங்கிப் போட்டதை இவன் கண்டு, மனசாகிற தளகர்த்தனை யேவினபின், எதிரிகளில் முக்கியமான ஸ்திரீ யென்ற தளகர்த்தா வை அவர்கள் ஏவிவிட்டதும், அவள் எதிரே வந்த மாத்திரத்தில் இவன் தைரிய முதலான அஸ்திர சஸ்திரங்களை நழுவவிட்டு, ஸ்தம்பித்து மோஹித்துப் பிர மித்துப்போன சமயத்தில் அந்த ராஜா தபித்து இது என்ன கஷ்டகாலமென்று அழும்போது, விழித்திருக்கிற தன் பிதாவாகிய குரு, நீயாரென்று தட்டி யெழு ப்பினவுடன் இவனும் விழித்தமாத்திரத்தில் மேலேகண்ட அநர்த்தங்களெல் லாம் போய்ச்சுகித்த கதையை அறிக.

## 38 - வது, தரங்கம்.

கிரமசிருஷ்டி யுகபத்சிருஷ்டியின் தன்மை:—

கிரம சிருஷ்டிக்கும், யுகபத் சிருஷ்டிக்கும் பேதமுண்டு. [எ - தி] பிரா மணர்கள் ஏழுவயதுப்பெண்ணைக்கலியாணம் செய்து கிரமமாகப் பக்குவமாய் நாட் பார்த்து ருதுசாந்திசெய்வதுபோலும்,சீநத்தாருக்கு யௌவநமான ஸ்திரீ புருஷர்கள் ஐக்கியமான பார்வையுண்டான பொழுதே ருதுசாந்தியும் உண்டா வது போலுமறிக. [இ - து] ஆர் என்ன சொன்னாலும் சொல்லட்டும், நாம் அவர்கள் சொல்லுகிறபடி கர்த்தாவாக ஆகமாட்டோமென்று சொல்லுகிற விடம் கிரம சிருஷ்டி; அப்படி சொல்லுகிறவனைத்தும் நமகற்பிதமென்று சொல் லுகிறது யுகபத்சிருஷ்டி. [எ - தி] ஸ்திரீ வேஷம் போட்டவனைக்கண்டு பிர சவவேதனை முதலானவையடைகிறதாக ஜநங்கள் சொன்னாலும், அவனுக்கு யாதொருவேதனையும் இல்லாதது போலும்; விழித்தவனுக்கு சுவப்நத்திற் கண் ட தூஷணை பூஷணை முதலானவையெல்லாம் தன் கற்பனையென்று தோற்றுவது போலுமறிக.

[இ-து] கிரம சிருஷ்டிக்கும்,யுகபத்சிருஷ்டிக்கும் யுக்திகள்:--எறும்பு மாம் பழரசத்தைச் சாப்பிட மரத்திலேறுவது போலும், பக்ஷிகள் பறந்து மரத்தின் மேலேறிப் பழரசத்தைச் சாப்பிடுவது போலும்; மநுஷர்கள் முதல் மிருகம்

வரையில் கிரமமாய்ப் பத்துமாதம்சென்று கர்ப்பத்திலிருந்து பிள்ளை வெளியில் வருவதுபோலும், ரிஷீசுவரருடைய சுக்கிலம் உடனே பிள்ளையாய் வெளியில் வருவதுபோலும்; கையால் எழுதுகிற புஸ்தகங்கள் கிரமமாக வருஷாந்தரம் வரை எழுதி முடியவேண்டுவதுபோலும், அச்சிற்போடுகிற புஸ்தகங்கள் ஆயிர மிரண்டாயிரம் ஒரேகாலத்தில் முடிவதுபோலும்; காசிக்கு நாட்டுவண்டியிற் போகிறவன் சங்கடப்பட்டுக்கொண்டு ஆறுமாசத்திற்போய்ச் சேருகிறதுபோலும், அந்தக் காசிக்கே ரயில்வண்டியில் ஆறுநாளிற் சங்கடமன்றியில் போய்ச் சேருவதுபோலும்; ஆள்வசம் ஒரு ஊருக்குச் சேதி எழுதி அநுப்பிக்கிறது போலும், அந்தச்சேதியைத் தந்தியிற் பேசுவதுபோலும்; சக்கிமுக்கிக் கல்லுகளைத் தட்டித் தீபமுண்டாக்குவதுபோலும், நெருப்புக்குச்சியை உறைத்துத்தீபமுண்டாக்குவதுபோலும்; சாமான்களைத் தலைச்சுமையாய் ஒரு இடங்களுக்குத் தூக்கிப்போவதுபோலும், கப்பலில் அநேக சாமான்களையேத்தி அதிசீக்கிரத்திற் கொண்டுபோவதுபோலும்; நதியில் போய் ஜலமெடுத்துக்கொண்டு வருவதுபோலும், தண்ணீர்க்குழாயைத் திருகிவிட்டு ஜலமெடுப்பதுபோலும்; மநுஷ்யர்கள் நூற்கிற நூற்போலும், பொம்மை நூற்கிற நூற்போலும்; மநுஷ்யர்கள் நெய்கிற வஸ்திரம்போலும், பொம்மை நெய்கிற வஸ்திரம்போலும்; மனுஷ்யர்கள் நெல்லைக்குத்தி அரிசி ஆக்குவதைப்போலும், பொம்மை நெல்லைக்குத்தி அரிசி ஆக்குவதுபோலும், சரீர இந்திரியாதிகளோடு ஒரு இடங்களுக்குப் போவதுபோலும், மனது ஒருக்ஷணத்தில் மூன்று உலகமும் போவதுபோலும்; காட்டை அரிவாள் கோடரியால் வெட்டி அழிப்பதுபோலும், தீயை வைத்துக் காட்டை அழிப்பதுபோலும்; விஷயேந்திரியாதிகளைக் கிரமமாய் நிக்கிரகித்து மனதை நிக்கிரகிப்பதுபோலும், விவேகத்தால் அதிசீக்கிரத்தில் மநதைச் சுவாதீனம் பண்ணுவதுபோலும்; திண்டுக்கல் முதலான இடங்களில் பத்து கிணறுக்குப்போய் ஸ்நாநபாநாதிகளை பதினைந்துநாழிகைவரை அலைந்து திரிந்து முடித்துக்கொள்வதுபோலும், பூர்ணதடாகத்திற் சகல கிரியைகளையும் முடிப்பதுபோலும்; கணபதி முதலான தேவதைகளை வெகுகாலம் வெகுவிதமாயுபாசித்து வைராக்கியாதி சத்குணசம்பத்துக்களைக் காலாந்தரத்திற் பெறுவதுபோலும், சத்குருநாதனிடத்தில் சாதந சதுஷ்டயமுதற் சமாதி சாக்ஷாத்காரம் வரை ஒரே இடத்தில் அதிசீக்கிரத்தில் பெறுவதுபோலும்; கையால் ஒவ்வொரு பதார்த்தமாய்த் தொடுவதுபோலும், கண்ணால் ஒரேகாலத்தில் எல்லாவற்றையும் பார்ப்பதுபோலும்; ராத்திரியில் ஒவ்வொருவீடாய் விளக்கேற்றுவதுபோலும், பகலில் சூரியன் ஒரேகாலத்தில் தன் கிரணத்தால் உலகெங்கும் விளக்கிவைப்பதுபோலும்; அஷ்டாவதாநம் செய்கிற சபையில் ஒருவன் சதுரங்கக்காய்களையும், மற்றொருவன் சுலோக அக்ஷரங்களையும், கல் நெல் கணக்குகளையும், ஒவ்வொருத்தன் அதை அதை யாதுவைத்துக் கொள்ளுவதுபோலும், அந்த அஷ்டாவதாநி அந்த எட்டுச்சங்கதிகளையும் ஒருமித்து அவதாநம் பண்ணிக்கொள்வதுபோலும்; இவ்விடத்தில் கௌதம மகரிஷியினுடைய புத்திரர்

கள் இரண்டுபேர்களுக்குள் சுகிருதி யென்கிற ஜேஷ்டபுத்திரன் தன்பிதாவாகிய கௌதமரிடத்தில் ஜீவன்முக்தியை யடைய விரும்பிக்கேட்டதில், அவர் முப்பத்திரண்டுவருஷம் வேதாத்தியயநம் பண்ணச்சொல்லி, அதன்பின் அறுபத்து நாலு வருஷம்வரை ஸ்திரீயோடிருந்து வேதோக்த கர்மங்களை நிஷ்காம்மியமாய்ச் செய்யச்சொல்லி அதனால் சித்தமலங்களைப் போக்கியபின், சித்தவிக்ஷேபங்கள் நிவர்த்தியாகும்பொருட்டு, முன்னூறுவருஷம் சகுண உபாசனையைச் செய்வித்து, அதன்பின் அஞ்ஞாநம் போவதற்காகச் சாதந சதுஷ்டயங்களை அப்பியாசித்துவைத்துச் சிரவணாதிகளையும் வெகுகாலம் அப்பியாசம் பண்ணிவைத்துக் கிருதார்த்தனாகச் செய்வித்தார். இரண்டாவதான தன்னியனென்பவன் மோக்ஷ இச்சையுடன் புறப்பட்டுத் தலையில் தீப்பற்றினவன்போலப் பதறிக்கொண்டு நிஜாநந்தயோகியினிடம் போய்த் தன் எண்ணத்தை விண்ணப்பம் பண்ணினதில் அவர் நீயே பிரஹ்மம் உனக்கு வந்ததுபோலத் தோன்றுகிற ஜந்மாதிகள் சொப்பநம்போலப் பொய் என்று உபதேசித்தவுடன், அவன் நான் பிரஹ்மமென்று கிருதகிருத்தியனான கதையை யறிக.

## 39 - வது, தரங்கம்.

அஞ்ஞாநமே சர்வாநர்த்தமூலம் :—

[இ - து] ஞாநம் வருவதற்குச் சிரமப்படவேண்டுமேதவிர அஞ்ஞாநம் வருவதற்குச் சிரமப்படத்தேவையில்லை. [எ - தி] செம்பிற் களிம்புவருவதற்கும், அரிசி உமிதவுட்டோடு சேர்ந்திருப்பதற்கும் பிரயாசைப்படத் தேவையில்லாததுபோலு மறிக.

[இ - து] அஞ்ஞாநத்திலிருந்தே ஜகத்தும் அதிலுள்ள பதார்த்த ஞாநமும், ராகத்துவேஷ முதலான சகல அநர்த்தமும் உண்டாகிறது. [எ - தி] ஒரு ஊருக்குப் புதிதாய்ப் போனவனுக்கு அந்த ஊர் அறியாமையாயிருந்து பிற்பாடு மெள்ளமெள்ள அதிலுள்ள ஜனங்களின் தாரதம்மியமும், ராகத்துவேஷ முதலானது முண்டாவதுபோல வறிக.

[இ - து] மாயையைக் கைவசம்பண்ணிக்கொண்டிருக்கிற ஈஸ்வரனைக்கூட அது ஒருக்கால் மோசப்படுத்துமானால் மற்றவர்களை மோசப்படுத்துவதில் கேட்கவேண்டியதில்லை. [எ - தி] யானையைக் கைவசம்பண்ணி நடாத்துகிற மாவுத்தனைக்கூட ஒருக்கால் மோசப்படுத்துமானால் மற்றவர்களைக்குறித்து கேட்கவேண்டியதில்லாததுபோல வறிக.

இன்னும் அஞ்ஞாநம் செய்கிற அநர்த்தங்களைத் திருஷ்டாந்தமூலமாய் அறிவிக்கிறோம். அநாதிகாலமாய்த் தன்னை மறக்கடித்த அஞ்ஞாநத்தினாலேயே சகல ஜீவர்களும் பிரளயத்தில் அஞ்ஞாநத்தில் லயித்து அசத்துப்போலக்

கிடந்து, மறுபடியும் சிருஷ்டிகாலத்தில் சரீரங்களை எடுத்து அஞ்ஞான வாசனையினாலேயே நான் கர்த்தாவென்று கர்மங்களைச்செய்து, அந்தக்கர்மங்களால் தேவ மனுஷ்ய திரியக்காதி ஜந்மங்களை எடுத்துத் தாபத்திரய துன்பங்களால் தபிக்கப்பட்டு, மரணகாலத்திலும் பிராணவேதனையால் சங்கடப்பட்டுக்கொண்டு சரீரத்தைவிட்டு வெளியேறி, புண்ணியபாப கர்மவசத்தால் சுவர்க்க நரகங்களில் சுகதுக்கங்களை யநுபவித்து, மறுபடியும் கர்ப்பவாசத்துக்கு வந்து வயிற்றுக்குள்ளிருக்கிற உதராக்கினியால் வெதுப்பப்பட்டு, அவ்விடத்திலுள்ள மலத்தில் கிடந்து புரளும்போது அந்த மலத்திலுள்ள நாக்குப்பூச்சி முதலான புழுக்களால் கடிக்கப்பட்டு, பிரசவகாலத்திலும் யோநித்துவாரத்தில் நெறுக்கடிபட்டு, இப்படியே எண்ணத்தொலையாத ஜநந மரணங்களை யடைந்து ஓயாமல் தாபப்படுவதற்கெல்லாம் அஞ்ஞானமே காரணமாதலால், அஞ்ஞானத்துக்கு மேல் அநர்த்தகாரி ஒன்றுமில்லை. [எ - தி] பனிரண்டுவருஷம் வேதாத்தியயநம் குருமுகமாய்ச் சந்தைச் சொல்லிக்கொண்டு சஹபாடிகளோடு தொண்டை புண்ணாகும்படியாய்க் கத்தித் திருவை சொல்லித் திரும்ப ஆவர்த்தியால் நெட்டுருப் பண்ணியிருக்கிற வேதமானது கொஞ்சவேளை சொல்லாமல் மறந்துவிட்டால், வேதாத்தியயநம் பண்ணாத விராத்தியனுக்குச் சமானமாய்ப் போவதும் தவிர, உலகத்திலுள்ள பாபங்களெல்லாம் அத்யயநம்பண்ணி மறந்து போனவனிடத்திற்போய் சேருகிறதென்று சொல்லுகிற வசனமும் தவிர, இவனுக்கும் இப்பொழுதே மறந்துவிட்டோமே யென்கிற தாபம் வருவதுபோலும்; இப்படியே சகலவித்தைகளையும் அப்பியாசித்தவன் அந்த வித்தைகளை மறந்தும் போனதால் அந்த வித்தைகளால் கிடைக்கிற பிரயோஜனங்களும் இழந்ததும் தவிர, சபையில் அவமானப்பட்டு அதனால் துக்கத்தை யடைவதுபோலும்; பணங் காசுகளைக் கொடுக்கல் வாங்கல் செய்கிறவன் செட்டியைப்போல உடனுக்குடனே கணக்கிற் பதிந்துக்கொள்ளாததனால் நஷ்டம் வருகிறதும் தவிர, அந்தப் பத்திரங்களுக்கு வருஷத்தில் ஒருதடவை வட்டிக்கணக்குத் தீர்த்து வாங்காததனால் வட்டிக்குவட்டி யில்லாமற் போவதும், அஜாக்கிறதையால் வியாச்சியம் செய்யாததால், காலநிர்ணய சட்டத் தடைக்குட்பட்டுப் பிராது செல்லாமற்போவதும், அப்படிக் காலத்திற்குள் பிராதுசெய்தாலும், எதிரி தனக்கிருக்கிற ஸ்தாவரசொத்துக்களை மலரணையாய்த் தனக்கு வேண்டியபேர்கள் பேருக்கெழுதிவைப்பதும் தவிர, ஜங்கமசொத்துக்களையும் அப்புறப்படுத்தி, இன்சால்மெண்டுக்குத் தயாராயிருப்பதைக் கண்டு, இவன் முதலும்போய், வட்டியும்போய், வியாச்சியச்செலவுக்கும் வாரண்டு ஜப்தி படிச் செலவுகளுக்கும் கடன்வாங்கியிருப்பதால், அந்தக் கடன்காரர்களுடைய இம்சையைப்பற்றிக் கஷ்டநிஷ்டூர கவலைகளை யடைவதும், அஞ்ஞானத்தினாலே உண்டான அஜாக்கிரதையால் வருவதுபோல, இவ்விடத்திலும் நாமாரென்று விசாரித்துத் தன்னை பிரஹ்மமென்றறியாத அறியாமையால் அவிவேகம் அபிமானம் ராகத்துவேஷம் கர்மம் ஜந்மம் துக்கம் முதலான அநர்த்தங்கள் வருகின்றனவென்று தெரிந்து,

புத்திமானான புருஷன் அறியாமைக்கு அரைநிமிஷங்கூட இடங்கொடாமற் சாவதானமாய் இருக்கவேண்டிய தென்றறிக.

## 40 - வது, தரங்கம்.

மாயை அவித்தையின் தன்மை :—

அவித்தை தன் சாக்ஷித்துவத்தை மறைக்கிறது,—கண்ணை காசபடலம் மறைக்கிறதுபோலும் ; தன் பூர்ணத்துவத்தை மறைக்கிறதெதுவோ அதுமாயை,— இருட்டு கண்ணினுடைய வியாபகத் தன்மையை மறைப்பதுபோலு மறிக.

[இ - து] அவித்தையானது தன்சாக்ஷித்துவத்தை மறைத்துத் தேகாதிகளை நானென்று எண்ணும்படி செய்து, அவைகளில் ஸ்தூலசரீரத்தை நானென்னும்போது, அதற்குச் சுவபாவமான ஷட்பாவ விகாரங்களையும் நானென்று எண்ணும்போது, நான் பிறந்தேன், நான் குழந்தை, நான் யௌவநன், நான் விருத்தன், நான் சாகப்போகிறேனென்று எண்ணுவதும், நான் பிராஹ்மணன், நான் சூத்திரன், நான் பிரஹ்மச்சாரி, நான் கிருஹஸ்தன், நான் சந்நியாசி, நான் ஆண், நான் பெண், அலியென்றும், நான் இன்னகுலம், இன்ன கோத்திரம், இன்னபேருடையவன், நான் கட்டையன், நான் நெட்டையன், நான் குட்டையன், நான் கருப்புநிறமுள்ளவன், நான் சிகப்புநிறமுள்ளவன், என்று எண்ணுவதும் ; இப்படியே பிராணமயகோசத்தில் நானென்றிருக்கும்போது, நான் தமிழ்ப்பேசினேன், நான் தெலுங்கு பேசினேன், நான் அவனோடு பேசுகிறதில்லை யென்றும், நான் இன்னஇன்னவேலை செய்தேன், நான் இன்னாருக்கு இதைக் கொடுத்தேன், இன்னாரிடத்தில் இதை வாங்கினேனென்றும், நான் இன்னஇன்ன இடங்களுக்குப் போனேன், நான் இன்னஇன்ன இடங்களுக்குப் போகவில்லையென்றும், நான் இன்றைக்குப் பதினைந்துதடவை கொல்லைக்குப் போனேன், இன்றைக்குச் சுத்தமாய்க் கொல்லைக்குப் போகவில்லையென்றும், நான் இன்னஸ்திரீகளோடு சம்போகித்தேன், நான் பரஸ்திரீகமநம் பண்ணாதவனென்றும், நான் பசிதாகத்தோடிருக்கிறேன், நான் பசியில்லாமலிருக்கிறேன், நான் இன்னஇன்னதை புஜித்தேன், நான் இன்னஇன்னதைப் புஜிக்கவில்லை, நான் பலவான், நான் பலஹீனனென்றும்; நான் இன்னஇன்ன சங்கதியை நினைத்தேன், நான் இன்னஇன்னவைகளை நினைக்கவில்லை யென்றும், நான் இதைக் கேட்டேன், நான் இதைக் கேட்கவில்லையென்றும், நான் இதைத்தொட்டேன், நான் இதைத்தொடவில்லை, நான் இதைப் பார்த்தேன், நானிதைப் பார்க்கவில்லை, நான் இந்த ருசி அறிந்தேன், நான் இந்த ருசி அறியவில்லை, நான் இந்தக்கந்தத்தைக் கிரகித்தேன், நான் இந்தக்கந்தத்தைக் கிரகிக்கவில்லை யென்றும், நான் இன்னஇன்ன சாஸ்திரங்களைப் படித்திருக்கிறேன், இவைகளைப் படிக்கவில்லை; நான் இன்னஇன்ன யாகாதிகர்மங்களைச் செய்தேன், இன்ன இன்ன யாகங்களைச் செய்யவில்லையென்றும், நான் புண்ணியசாலி, நான் பாபி

யென்றும் ; நான் இன்னேரம் ஒன்றும்தெரியாமல் தூங்கினேன், நான் மூடன், நான் என்னை அறியவில்லையென்றும் இப்படிக்குருடன் தூணில் முட்டிக்கொள்ளுவதும், சுவரில் இடித்துக்கொள்ளுகிறதும், பள்ளம் மேட்டில் விழுந்து ஏறுவதும், நல்லது பொல்லாதது ஒன்றுமறியாமலிருப்பதுபோல யிருப்பதால், குருசந்நிதியிற்போய்த் துவம்பத விசாரத்தால் இருபத்தியெட்டுத் தத்துவங்களையும் தானல்லவென்று சேதித்து அவித்தையை நாசம்செய்ததால் தானே சாக்ஷியென்று விளங்கினபின், மாயையாற் செய்யப்பட்ட நாமரூபங்களையும், அதில் சத்தியபுத்தியால் வந்திருக்கிற ராகத்துவேஷாதிவாசனைகளையும், ஈஸ்வரன் ஒருவர் நமக்குவேறாய் நம்மை தண்டிக்கக் காத்திருக்கிறாரென்று தோன்றியிருந்த மயக்கத்தை, தத்பதவிசாரத்தால் நாமரூபங்களையும், சச்சிதாநந்தத்தையும் பிறித்து, நாமரூபங்களைத் தள்ளி நாமே சச்சிதாநந்தப் பிரஹ்மமென்று அறிந்து, மாயையும் ஜகத்தையும் மித்தையென்று பார்த்து, நாமே பரிபூர்ண பிரஹ்மமென்றறியத்தக்கது.

## 41 - வது, தரங்கம்.

விபரீதபாவனையின் வலி :—

விபரீதபாவனை இவன் அநுமதியின்றி இழுத்துப்போகிறது. [எ - தி] நதிப்பிரவாஹத்தில் விழுந்தவனைப் பலவந்தமாய்த் தண்ணீர் இழுத்துப்போகிறதுபோலும், காமவிகாரம் புருஷனை பலாத்காரமா யிழுத்துப்போவதுபோலும் அறிக.

[இ - து] எவ்வளவுகாலம் குரு சந்நிதியிற் சிரவணாதிகளைச் செய்தாலும் முன் பழகியிருக்கிற தேகாத்ம வாசனைகளும் ஜகத் சத்யத்வவாசனையும் தானே யுதிக்கும். [எ - தி] கடைஞ்சன் கவலனென்கிற ராஜாவாய் எட்டுவருஷம் ராச்சியபரிபாலனம் செய்துகொண்டுவந்து, பழைய பந்துக்களான பறையர்கள் வந்து சந்தித்த காலத்தில் பழைய கடைஞ்சனென்ற பறையவாசனை வந்ததுபோலுமறிக. விபரீதபாவனைக்குச் சரியான கெடுதிசெய்கிற தடைகள் ஒன்றுமில்லை என்றறிக.

ஐயா, விபரீதபாவனை என்பது எது? அது என்னகெடுதியைச் செய்கிறது? அதை என்ன உபாயத்தால் ஜெயிக்கக்கூடுமென்று கேட்பாயாகில், விபரீதபாவனை என்பது நானென்கிற ஆத்மா தேகாதி பஞ்சகோசங்களுக்கு வேறாயிருந்தும், இந்த ஜகத்துச் சுத்தப்பொய்யாயிருந்தும், இந்தத் தேகாதி பஞ்சகோசத்தை நானென்கிற புத்தியும் ; ஜகத்தைச் சத்தியமென்கிற புத்தியும் விபரீதபாவனை என்றறிக. இந்த விபரீதபாவனையால் வரப்பட்ட கெடுதியைத் திருஷ்டாந்தமூலமா யறிவிக்கிறோம் கேள் :—தகப்பன் பிள்ளையைப்பெற்று அந்நவஸ்திரங்களைக்கொடுத்து ரக்ஷித்துப் படிப்பதற்காக அநேகபுஸ்தகங்களை விலைகொடுத்து வாங்கிப் பள்ளிக்கூடம் வாத்தியாருக்குச் சம்பளமும்கொடுத்

துப் படிக்கச்சொன்னால், இந்தப்பிள்ளை படிக்கப்போகாமல் வீட்டிற்குள்ளேயே விளையாடிக்கொண்டிருக்கிற பிள்ளையைப்பார்த்து, அப்படி விளையாடாதே படிக்கப்போவென்று பிதா கண்டிக்கும்போது, அந்தபிள்ளைக்குப் பிதா சத்துருவைப்போலத் தோற்றுவதும், அடுத்த ஆத்துச் சேஷனுக்கு அய்யா இல்லாததனால் தோன்றினபடி தடை இல்லாமல் விளையாடப்போகிறான். நம்முடைய அய்யா இறந்தபோனால் நாமும் தோன்றினபடி விளையாடலாமென்று பிதாவிடத்திற் சத்ரு புத்தியைப் பண்ணுவதுபோலும்; இப்படியே ஒருபெண்ணுக்கு நாலாயிரம் ஐயாயிரம் ரூபாய்வரையும் சோபநத்திரவியம் கொடுத்துத் தாலிமுதற் சேலைவரையில் ஆடையாபரணங்கள் யதேஷ்டமாய்க் கொடுத்தும், அந்நபாநாதிகளுக்கும் வேண்டியவரைச் சகல பதார்த்தங்களையும் சம்பாதித்துக்கொடுத்திருந்தும், அவளுக்கு இவன்பேரில் எள்ளளவேனும் பிரீதி யில்லாமல் வீட்டிலிருக்கிற பதார்த்தங்களையு மெடுத்துக்கொண்டு, ரஹசியமாய்ச் சோரபுருஷனிடத்தில் போக்குவரத்தாயிருக்கிறதைச் சொந்தபுருஷன் கண்டு கண்டிக்கும்போது, அவள் இந்த பர்த்தா இஹத்தி லபகீர்த்தி யில்லாத சுகத்தையும், பரத்தில் நரகத்துக்கிடமில்லாத புண்ணிய கிருத்தியத்தையும் செய்யும்படிசொல்லவும், அதை இவள் விபரீதபாவனையால் இவன் சாகானு அல்லது தேசாந்தரத்திற்குத் தொலைந்து போகானுவென்று நினைப்பதுபோல, இந்த விபரீத பாவனையும், இதற்குமுன்னும் அநாதிகாலமாய் அநந்தகோடி ஜநநமரண துக்கங்களையும் கொடுத்து, இப்பவும், இனிமேலும், துக்கத்தையேகொடுத்து வருவதால் இதற்குமேல் கெடுதிசெய்கிறது ஒன்றுமில்லை என்றறிக. இது தத்துவ பாவனையாலேயே நிவர்த்திக்கப்படும். தத்துவ பாவனையாவது:—தேகாதிகளுக்கு வேறான சாக்ஷியே நான், இந்த தேகாதி ஜகத்துச் சுத்தப்பொய், சொப்பனம்போலும், இந்திரஜாலம்போலும், முன்னும் பின்னும் இல்லாமல் நடுவில்மட்டும் பொய்யாய்த் தோற்றுகிறதென்று, சதாபழகுவதாலே இந்த விபரீதபாவனை போய்ச் சுகித்திருக்கலாம். முன்னிருந்த பெரியோர்களான சுகப்பிரஹ்மரிஷி முதலான சகல பிரஹ்மநிஷ்டர்களும் இந்த விபரீதபாவனையை அடியோடு அடித்துச் சுகித்திருக்கிறார்கள். அதற்கு சாக்ஷியாரென்றால்; தகப்பனார் தலையில் கல்லைப்போட்டு கொன்றுபோடவேணுமென்று நினைத்து, அவர் படுத்திருக்கிறதற்கு மேலிருக்கிற சேந்தியின் பேரிலேறியிருந்தவன், பின் தாயினிடத்தில் தகப்பனார் உண்மை வசநத்தைச் சொன்னதைக்கேட்டு அவன் இரக்கத்துடன் இறங்கிவந்து பிதாவினிடத்தில் உண்மையைத் தெரிவித்து, விபரீதபாவனையைத் தீர்த்துக்கொண்ட கதைபோல வறிக.

## 42-வது, தரங்கம்.

அஞ்ஞாநம், ஆவரணம், விக்ஷேபங்களுக்குள் ஆவரணமே இரண்டுக்குமாதாரம்:—

அஞ்ஞாநம் ஆவரணம் விக்ஷேபங்களுக்குள் ஆவரணமே மற்றிரண்டுக்கும் ஆதாரம். [எ - தி] தேவடியாக் குட்டிக்கும் தாய்க்கிழவிக்கும் யௌவந

முள்ளவளே ஆதாரமாயிருப்பதுபோலும், ராஜாவுக்கும் ஜநங்களுக்கும் மந்திரி யாதாரமாயிருப்பதுபோலும், பிரஹ்மாவுக்கும் ருத்திரனுக்கும் விஷ்ணு ஆதாரமாயிருப்பதுபோலும், நாயகனுக்கும் குழந்தைக்கும் ஸ்திரீ ஆதாரமா யிருப்பதுபோலும் அறிக.

[இ - து] அநர்த்தங்கொடுக்கிற தத்துவங்களுக்குள் ஆவரணசக்திக்கு மேல் அநர்த்தங்கொடுப்பது ஒன்றுமில்லை என்றறிக. ஐயா! ஆவரணசக்தி என்பது எது? அது என்ன அநர்த்தத்தைக் கொடுக்கிறது? அந்த ஆவரண சக்தியை என்ன உபாயத்தினுற் கெடுக்கக்கூடும்? அந்த ஆவரணசக்தி போன தால் நமக்கு கிடைக்கிற பிரயோஜனமென்னவென்று கேட்ட நாலுசங்கைக்கு உத்தரம் சொல்லுகிறுர்:— அடே குழந்தாய்! ஆவரணசக்தியானது ஈஸ்வரன் பிரஹ்மக்ஞானி இருவரையும் தவிர, மற்றஜீவர்களுக்கெல்லாம் தொம்பதத்தில் வாச்சியங்களான பஞ்சகோசங்களுக்கும், தொம்பதத்தில் லக்ஷியமான சாக்ஷி க்குமுள்ள பேதத்தையும், தத்பத வாச்சியங்களான பஞ்சபூத பௌதிகங்க ளான நாமரூப விகாரங்களுக்கும், தத்பத லக்ஷியமான சச்சிதாநந்த பரிபூர்ண பிரஹ்மத்துக்குமுள்ள சித்ஜட, சத்தசத்து, ஆநந்ததுக்கங்களான அந்நியோந் நிய விருத்தங்களாயிருக்கிற பேதங்களை, மழைக்காலத்தில் அமாவாசை ராத்திரி இருட்டிற் கூடியிருக்கிற மேகாந்தகாரம்போல, ஆத்மாநாத்மாக்களுடைய பேதங்களைக் கொஞ்சமும் தெரியவொட்டாமல் மறைக்கிற யாதொரு சக்தி யுண்டோ அந்தச் சக்தியே ஆவரண மென்றறிக. அந்த ஆவரண சக்தியும், அசத்தாவரணமென்றும், அபாந ஆவரணமென்றும் இருவிதமாயிருக்கும். இதில் அசத்தாவரணமானது பிரஹ்மமே இல்லை என்று தோன்றச்செய்கிறது தான், அபாந ஆவரணமானது சபையிற் பிரசங்கம் வந்த விடத்திலே பிரஹ் மத்தை நீ அறியவில்லையாவென்று ஒருபெரியவர்கள் கேட்டகாலத்தில், அப் போது இவன் பிரஹ்மமாவது எங்கே இருக்கிறது? அப்படி இருந்தால் இந்த உலகம் விளங்குவதுபோல விளங்காதா? அப்படிப் பிரஹ்மம் விளங்கவில்லை என்றுரைப்பதுதான் அபாந ஆவரணமென்றறிக. இந்த ஆவரணசக்தியால் மூடப்பட்ட புருஷன் சதா இந்தத்தேகமே நானென்றும், இந்தஜகத்துச் சத் தியமென்றும் நினைத்து, இந்தப்பெண்டாட்டி பிள்ளைகளே ஆநந்தம், இவர்க ளுக்குச் சம்பாதித்துப்போட்டு இவர்களை ரக்ஷிப்பதே கிருதகிருத்தியத்துவ மென்றும், இவர்களோடு சேர்ந்து போகபோக்கியங்களை அநுபவிப்பதே மோக்ஷமென்றும் நிச்சயித்து, அநாதிகாலமாய் ஜந்மந்தோறும் இந்த ஆவரண சக்தியை விட்டுப் பிரியாமல் ஞாநநேத்திரத்தையும் பறிகொடுத்து, இன்னம் அநந்தகோடி கற்பமானுலும் சம்சார சமுத்திரத்தைவிட்டு கரையேராமல் இருக்கும்படிச் செய்வதால், இந்த ஆவரணசக்தியே சம்சார வியாதிக்குக் கார ணமாயிருப்பதால் இதற்குமேல் ஜீவர்களுக்கு அநர்த்தகாரியான வஸ்துக்கள் ஒன்றுமில்லை யென்றறிக,

இதன் நிவர்த்திக்குக் காரணம்:—பஞ்சகோசங்களையும், பஞ்சகோச சாக்ஷியான ஆத்மாவையும்; வெளியில் நாமரூபத்தையும், சச்சிதாநந்தத்தையும், குருமுகமாய் விசாரித்து, அசத்து ஜட துக்கமான அநாத்மாக்களை நேதிபண்ணித் தள்ளிச் சச்சிதாநந்தப் பிரஹ்மமே நானென்ற ஞானம் வரும்வரை இடைவிடாமல் விசாரணை பண்ணுவதேயாம். இது சாதந சதுஷ்டயத்தாலும், சத்குரு கிருபையினாலும், சாதுக்கள் சஹவாசத்தாலும், விஷய வைராக்கியத்தினாலும் விசாரணை யுண்டாகுமென்றறிக. இந்த விசாரமுண்டான மாத்திரத்தில் ஸ்தூல சரீரம் ஸ்தூலபஞ்சபூத விகாரமென்றும், இது ஜடமென்றும், நாமல்லவென்றும்; இப்படியே சூக்ஷ்மசரீரம் சூக்ஷ்மபூதத்தின் சாத்விக ராஜசகுண விகாரமென்றும், ஜடமென்றும், நாமல்லவென்றும்; இப்படியே காரணசரீரம் மூலப்பிரகிருதியின் ரஜோகுண விகாரமென்றும், அதில் பிரதிபிம்பித்த ஜீவன் சித்துப் போலி என்றும், ஜடமென்றும், நாமல்லவென்றும்; இப்படியே தத்பத வாச்சியங்களான மாயை, மாயாப் பிரதிபிம்பரான ஈஸ்வரன், மாயாகாரியமான ஜகத்தும் மூலப்பிரகிருதியின் சாத்வீக தாமசகுண விகாரங்களென்றும், ஜடங்களென்றும், நாமல்லவென்றும்; இவைகளுடைய உற்பத்தி விநாசங்களுக்கு முந்தியும் பிந்தியுமிருக்கிற சச்சிதாநந்தப் பிரம்மமே நானென்று அறிந்து, அநாதி காலமாய்ச் சம்சாராநர்த்த மூலமான ஹிருதயக்கிரந்தி நிச்சேஷமாய் நசித்துத் துக்கநிவர்த்தி தடையற்ற ஆநந்த ரூபமான கிருதகிருத்தியத்துவமே பிரயோஜந மென்றறிக.

## 43 - வது, தரங்கம்.

*இவ்விடத்திலேயே தன்னை விசாரணையால் அறியாதவன் முட்டாள்:—*

நித்தியமாயும், தான் மாத்திரமாயுமிருக்கிற ஆத்மசுகத்தை விசாரணை பண்ணி, இங்கேயே தன்னுக்குள் தானாக அநுபவியாமல், கற்பனையாயும், அந்நியமாயும், அநித்தியமாயும், கிரியாசாத்தியமாயும், பராதீநமாயும், ராகத்துவேஷ முள்ளதாயும், மேல் கீழ் முதலான பேதத்தோடு கூடினதாயு மிருக்கிற இகசுக முதல் கைலாசாதி பதங்கள்வரை இச்சித்து, அதற்கேற்ற தொழில்களில் வருந்துவது முட்டாள்த்தனம். [எ - தி] தாஹத்தோடு கூடினவன் தன் கைக்குள் ளிருக்கிற கங்கா தீர்த்தத்தை சாப்பிடாமல் கானல்ஜலத்துக்குக் கற்பகோடி காலம் ஓடித்திரிகிறவன்போலும்; பசியுள்ளவன் கையிலிருக்கிற பால் திரளையைச் சாப்பிடாமல் தச்சன் வீடுகளிற்போய் மரத்தாற்செய்யப்பட்ட மாம்பழம் வாழைப்பழங்களைக் காசுங் கொடுத்துக் காத்திருந்து அவைகளை வாங்கிச் சப்புகிறவன் போலு மறிக.

வைராக்கியாதிகளை அஞ்ஞாநிகள் ஞாநமென்று தெரியாமற் சொல்லுகிறார்கள். [எ - தி] ரத்திநப்பரிக்ஷை தெரியாதவன் பளபளப்பான பளிங்குக் கல்லை ரத்நமென்று சொல்வதுபோலும், தூற்றுமல் போர் குவித்திருக்கிறதை

மூடன் நாற்றிக் கலநெல் விளைந்ததென்று சொல்வதுபோலும், குருடன் எருமைமாட்டினுடைய வயிற்றைத் தொட்டுப்பார்த்து நீங்கள் உட்கட்டில் சாப்பிட்டவர்களா வென்று சொல்வது போலு மறிக.

கோபத்தால் பரவசனாய்ச் சந்நியாசம் பண்ணிக்கொண்டு பின்னால் துக்கப்படுகிறான். [எ - தி] காமவிகாரத்தால் கலங்கின மூடன் கற்புடைய தன் தாயினிடத்தில் பலாத்காரமாய்ப் போகம்பண்ணிச் சுக்கில மோசநமானபின் துக்கப்படுகிறதுபோல வறிக.

ஈஸ்வரன் பெரியவர்களுடைய சங்கத்தைச் சேர்த்துவைத்ததை ஜீவன் நான் பெரியவர்களைத் தேடிச் சம்பாதித்தேனென்று சொல்லுகிறான். [எ - தி] பந்துக்களுக்கெல்லாம் வீட்டிற்கு கர்த்தாவான ஸ்திரீ விருந்து பண்ணி வைக்கும்போது, அந்தவீட்டு ஜாடுமாரி சம்பந்தி விருந்து நான் சேய்தேனென்று சொல்லுகிறதுபோல வறிக.

தன் தன் சொயபாஷையில் ஆத்மவிசாரம்பண்ணிச் சுலபமாய் ஞானத்தையடைந்துகொள்ளாமல் சமஸ்கிருதம் படித்து வித்துவானாய், பின் ஞானத்தையடையவேண்டுமென்று நினைத்து யத்தநம் பண்ணுகிறவனுக்கு மேல் சும்பன் ஒருவனுமில்லை. [எ - தி] தனக்குச் சுவாதீநமாயும், நிர்ப்பயமாயும், யாதொரு சாதநாபேக்ஷைகளு மில்லாமலு மிருக்கிற தன் ஸ்திரீயோடு ரமித்துச் சுகித்துப் புத்திரவானாகாமல், இவளை விட்டுவிட்டு ராஜஸ்திரீயினுடைய உபஸ்தத்தில் பிரவேசித்தால் வெகு விசேஷமென்று நினைத்து, அதற்காக அநேகர்களுடைய இஷ்டத்தை எதிர்பார்த்து அவர்களோடு திரிந்து, பயந்து, சுழன்று, அலைந்தும் கிட்டாமல் பரிதபித்துப் பழைய பெண்டாட்டியினிடத்தில் வந்து பரிதாபத்தைத் தீர்த்துக் கொள்ளவேண்டியது தானென்று; இப்போதாகிலும் நம்பிச் சுகிக்கவேண்டு மென்றறிக.

மூடர்கள் ஞானிகளிடத்தில் ஆயிரம் சுகுணமிருந்தாலும் ஏதேனும் ஒரு துர்க்குணமிருந்தால் அதையே கிரகித்துத் தூஷிப்பார்கள். [எ - தி] தென்னம் பன்னாடை கரும்புச்சாறைக் கீழேவிட்டு அதிலிருக்கிற சக்கை செத்தை குப்பைகளை பிடித்துக்கொள்வது போலும், பன்றி சவ்வாது முதலான மணத்தை விட்டுத் துர்க்கந்த மலத்தைக் கிரகிப்பது போலும், அட்டையானது பாலுள்ள ஸ்தநியத்திலும் ரத்தத்தையே கிரகிப்பதுபோலு மறிக.

பிரஹ்மாப்பியாசம்பண்ணிக்கொண்டு வருவதிற் சுகங் கண்டிருந்தும், சில சாஸ்திரிகள் யதிகள் ஞானம் இக்காலத்தில் வராதென்று சொல்லுகிறவர்களும் அதைக்கேட்டு நம்புகிறவர்களும் முட்டாள். [எ - தி] போஜநம் பண்ணப் பண்ணப் பசிதீர்வது பிரத்தியக்ஷமாயிருக்கும்போது, மற்றவர்கள் சாப்பிட்டாலும் இக்காலத்திற் பசிதீர்ந்து திருப்திவராதென்று சொன்னாலதை எந்தப்புத்திசாலி கேட்டு நம்புவான் சொல்க.

ஞானியினிடத்தில் அஞ்ஞானிபோனாலும் அவரிடத்திலிருக்கிற ஞானரத்தினத்தைக் கிரகிக்காமல் பிரபஞ்சவிஷயத்தையே இச்சிப்பான். [எ - தி] ரத்தின தாதாவிடத்தில் ஒரு விறகு தூக்குகிறவன் போய் சேர்ந்தான். அவன் உனக்கு என்னவேண்டு மென்று கேட்க, அதற்கவன் உங்கள் தோட்டத்தில் ஒருகட்டு விறகு கட்டிக்கொள்ள உத்தரவு கொடுக்கவேண்டுமென்று கேட்டகதைபோலும்; மகாமகத்தில் மகாராஜா கோடி பிராஹ்மண்யத்தின் மத்தியிலிருக்கிற ஏழைப்பிராஹ்மணனை வரவழைத்து உனக்கென்னவேண்டும்? அந்த அபீஷ்டதானம் கேட்டுக்கொள்ளென்று சொன்னதற்கு, ஒறத்த நாடுச் சத்திரத்தில் நிதம் ஒருசுயம்பாகம் கொடுத்துவரும்படி கேட்ட அந்தப் பிராஹ்மணன் கதை போலு மறிக.

சுகரைப்போல நிர்விகற்பசமாதியிலேயே உண்டாகிற சுகத்தை யடைய வேண்டுமென்று ஆசையிருக்கிறது. அதற்கேற்ற விவேக வைராக்கியாதி சாதந அப்பியாசமில்லை. [எ - தி] சுகத்தால் புஜிக்கப்பட்டிருக்கிற மரத்தினுடைய நுனியிலே இருக்கிற மாம்பழத்தை இச்சிக்கிற மூடவன்போலும், விருத்தன் யௌவநஸ்திரீ போகத்தை இச்சிப்பதுபோலும், அந்நத்துவேஷமுள்ளவன் அரைப்படி அரிசி அந்நத்தை அறுசுவையுடன் சாப்பிட ஆசைப்படுவதுபோலும், நித்திய தரித்திரன் ராஜபோகத்துக் கிச்சிப்பதுபோலும், கொக்கு கருடனைப்போல ஆகாசத்திற் பறக்க இச்சிப்பதுபோலு மறிக.

ராஜா வேட்டைக்குப் போனவிடத்தில் ஒருவேடன் வீட்டிற்போய் அவன் உபசாரத்தாற் சந்தோஷத்தை யடைந்து, உனக்கு வேண்டியது கேட்டுக்கொள்ளென்று சொன்னவேளையில் தனக்கு வேண்டியதைக் கேளாமல் பின்னாலே கேட்டுக்கொள்வோமென்று நினைத்திருந்த மூட வேடன்போல, இப்போது நம் குருநாதனை மகாராஜன் சம்சாரமாகிற காட்டிலிருக்கிற அகங்காராதி துஷ்ட மிருகங்களைச் சம்மறிக்கிறதற்காக, அவதாரமாகிற வேட்டைக்குவந்து வேட்டையாடி, மநுஷ ஜன்மமாகிற வேடத்துவத்தை யடைந்திருக்கிற நம்முடைய கண்ணுகிற வீட்டில்வந்து எதிர்ப்பட்டு அழியாத ஆநந்தமாகிற ஞானசம்பத்தை வேண்டியமட்டும் கேட்டுக்கொள்ளென்று சொல்லும்போது, பெண்டாட்டி பிள்ளைகளாகிற வெறி நாய்களை இரக்ஷிக்கவேண்டும், இப்போது உம்முடைய பிரஹ்மாநந்த சம்பத்தை வாங்குகிறதற்கு எனக்கு ஒழியமாட்டாது, நீர் போய்விட்டுவாரும், பின்னாலே பார்த்துக்கொள்ளலாமென்று சொன்னால், அந்த வேடனுக்கு மறுபடி ராஜன் அந்தப்புரத்திற்குள் போய்விட்டானேயானால் இவனுக்கெப்படி ஒருகாலும் ராஜபேட்டி கிடைத்து வாழ்வு பெறப்போகிறதில்லையோ, அப்படி இச்சமயத்தில் ஞானசம்பத்தை யடையாவிட்டால், குருநாதன் விதேகமுக்தியாகிற அந்தப்புரத்துக்குப் போய்விட்டாரேயானால் மறுபடி குருதரிசநம் கிடைத்து ஞாநவாழ்வை இவன் ஒருகாலும் பெறப்போகிறதில்லை, என்பதுபோல வறிக.

ஜீவன் முட்டாள் :—குழந்தைகள் கையிலே பலகாரத்தை வைத்து மூடிக் கொண்டு மோசம்பண்ணுவதுபோல, ஈஸ்வரனுக்குத் தெரியாமல் சகலமும் பண்ணிப்போட்டேனென்பது. [இ - து] மநுஷஜந்மத்தில் ஆத்மஞானத்தை யடையாமலிருக்கிறவனுக்குமேல் சும்பன் ஒருவனுமில்லை. [எ - தி] ருதுசாந்தி கல்யாணத்திற்குப் படுக்கையுள்ளே போய்ப் படுத்துத் தூங்குகிறவன்போலும், காசிக்குப்போய்க் கங்காஸ்நாநம் பண்ணுமல் திரும்பிவருகிறவன் போலும், அரும்பசியோடுகூடிச் சமாராதனைக்குப் போய்ப் போஜநம்பண்ணுமல் சீட்டாடுகிறவன்போலு மறிக. [இ - து] பஞ்சகோசங்கள் செய்கிற தொழில்களை ஜீவன் நான் செய்கிறேனென்று சொல்லுகிறான். [எ - தி] கிருக்கன் தன் வீட்டிலுள்ள தகப்பன் முதலானபேர்கள் செய்கிற தொழில்களை நான் செய்கிறேனென்று சொல்லுவதுபோல வறிக. [இ - து] எவன் பிரஹ்மவிசாரத்தையும் மற்றப் பாமர கர்மம் பக்தி யோகங்களையும் சேர்த்துப் பழகிக்கொண்டு வருகிறானே அவனுக்கு ஞாநம் சித்தியாகாது. [எ - தி] தென்தேசத்திலிருக்கிற ஜநங்கள் எல்லாவித்தையும் கற்க ஆரம்பித்து ஒருவித்தையும் பூர்ணமா யடையாததுபோலும், அபத்தியங்களைச் சேர்த்துக்கொண்டு ஒளஷதம் சாப்பிடுகிறவனுக்கு ஆரோக்கியம் சித்தியாததுபோலு மறிக. [இ - து] அஞ்ஞாநி பஞ்சகோச வியாபாரத்தைத் தானே தன்பேரிற் போட்டுக்கொள்ளுகிறான். [எ - தி] யானை பூமியிலிருக்கிற புழுதிகளைத் தானே தன்தலையில் போட்டுக் கொள்ளுகிறதுபோல வறிக.

சந்நியாசம் சிரேஷ்டமானாலும் ஞாநதிருஷ்டி யில்லாததினால் நான் சந்நியாசியென்று அபிமாநத்துடன்கூடி யிருப்பவர்களுக்குத் துக்கம் போகாது. [எ - தி] குருடன் கூத்துப்பார்க்கப் போயிருக்கும்போது இவன் தோழில் பின்னையொருவன் ஏறிக்கொண்டிருந்ததை, இவன் இப்படி வழக்கம்போல வென்று எண்ணி வகித்துவந்த இவனை, இன்னமொருவன் நீ எங்கேபோய்விட்டு வருகிறாய் என்று கேட்டதற்கு, இவன் கூத்துப்பார்க்க நான் போயிருந்தேன் கூத்துச் சிலாக்கியந்தான் சுமை சுமைப்பதே வருத்தமென்று சொன்னதுபோலவறிக.

விஷய வியாபாரத்தை மொத்தமாயும், அலக்ஷியமாயும் பார்க்கவேண்டியதாயும், தத்துவ விசாரத்தில் லக்ஷியமாயும், வகைவகையாய்ப் பிறித்துப் பார்க்கவேண்டியதாயு மிருக்க, இப்போதிருக்கிற முமூட்சுக்கள் விஷயவியாபாரத்தை வகைவகையாய்த் தூண்டித்தூண்டி விசாரிப்பதும், தத்துவ விசாரத்தை மொத்தமாய் எல்லாம் பிரஹ்மமென்று பார்ப்பதற்கும் காரணமேதென்றால், விஷயாநந்தத்தில் ஆசக்தி மிகுந்திருப்பதுபோல, பிரஹ்மாநந்தத்தில் ஆசக்தியில்லை. [எ - தி] ஆசக்தியுள்ள ஸ்திரீயினுடைய ரூபலாவண்ணிய குணாதிசயங்களை அடிக்கடி விஸ்தாரமாய் வர்ணிப்பதும், ஆசக்தியில்லாத அய்யாவினுடைய ஆகாராதி ஆராதனையில் அஜாக்கிரதையா யிருப்பதுபோலு மிருக்கிறது. ஆகை

யால் நீயும் அப்படிப் போகாமல், அதற்கு எதிர்மறையாக இருக்கவேண்டுமெ ன்று நாமும் அநுக்கிரகிப்பதுபோல, நீயும் சாவதாநமா யிருக்கவேண்டிய தென்றறிக.

ஈஸ்வர கருத்துருத்துவத்தை விலக்கி ஜீவன் நான் கர்த்தாவென்று வகிப் பதே சகல துக்கத்துக்குங் காரணம். [எ - தி] சமாராதனையில் ஒரு ஆசாரியர் சுயம்பாக நியமம்பண்ணி அடுப்பூதி அவதிப்படும்போது, போஜநம் பண்ணுகிற பிராஹ்மணர்கள் சுயம்பாக நியமம்பண்ணி எத்தனை மாசமாயிற்றென்று கேட்டதற்கு, வாயில் மண்ணைப்போட்டுக்கொண்டு ஆறுமாச மாயிற்றென்று சொன்ன கதைபோல வறிக. [இ - து] வேதாந்தங்களைப் படித்தவர்களும் கோவிற் குளம் முதலான நாமரூபங்களில் மயங்குவார்களானால் அவர்களையும் மற்ற அஞ்ஞாநிகளைப்போலப் பிராந்தர்களென்று சொல்லலாம். [எ - தி] சர் வாலங்காரம் பண்ணப்பட்டிருக்கிற ராஜகுமாரனுக்குக் கிறுக்குப் பிடித்திருந் தால் மற்றைக் கிறுக்கர்களோடு சமாநமாய்ச் சொல்லலாமா சொல்லக்கூடாதா சொல்? ராஜஸ்திரீ வியபிசாரம் செய்தால் மற்றை வியபிசாரிகளோடு சரியாய்ச் சொல்லலாமா சொல்லக்கூடாதா சொல்? ராஜா பொய்சொன்னால் மற்றைப் பொய்யர்களோடு சரியாய்ச் சொல்லுவதுபோலும்; குருடாயிருக்கிற ராஜனை யும், மற்றைக் குருடர்கள்போலச் சொல்லப்படுவதுபோலு மறிக.

தேகேந்திரியாதிகள் ஜீவிப்பதற்கு அவைகளை யுண்டுபண்ணின ஈஸ்வரன் கர்மப்படி புவநபோகங்களை ஊட்டிவைக்கக் காத்திருக்கும்போது, ஜீவன் சங்கற் பிப்பது மூடத்தனம். [எ - தி] பிள்ளை பிறக்குமுன்னமே ஸ்தந்நியத்தில் பாலை யுண்டுபண்ணுவதையும், ராஜனுண்டாகுமுன்னமே ராஜ்ஜியத்தை யுண்டு பண்ணி யிருப்பதையும் பார்த்துச் சங்கற்பிக்காமல் இருப்பவனே புத்திசாலி என்றறிக. [இ - து.] தீர்த்தயாத்திரை பண்ணிக்கொண்டு வேதாந்த விசாரம் பண்ண முடியாதோ வென்றால், முடியாது. ஏனென்றால், மூட்டைகட்டி நடக்கவும், மூட்டையை இறக்கி சிரமப்பரிகாரம் பண்ணிக்கொள்ளவும், இறங்க இடமும், கலமும் தேடிச் சமயற்பண்ணவும், பற்றுத் துலக்கவும் பொழுது சரியாய்ப்போகுமே தவிர, வேதாந்தவிசாரம்பண்ண நேரம் இராது. [எ - தி] ராஜகன்னிகையோடு போகத்துக்குப் போனவனுக்கு அவள் நீட்டி நெளித்துக் கொண்டுவரவும், நகைகளை ஒன்றொன்றாய்க் கழற்றிச் சாவதாநம் பண்ணவும், மறுபடி ஒன்றொன்றாய்ப் போட்டுக்கொள்ளவும் பொழுது சரியாய்ப் போவ தால் சரச விலாசத்துடன் போகிக்கப் பொழுது இல்லாததுபோல வறிக.

உலகத்திலுள்ள வித்துவான்களிடத்தில் எந்தச்சங்கதியைப்பற்றி சமாதா நம் கேட்டாலும் அதற்கெல்லாம் பதிற்சொல்ல அங்கீகாரமாவார்கள், ஞானத் தைப்பற்றிக் கேட்டால் அதற்கு வேதாந்திகளிடத்தில் போவென்று சொல்லு வார்கள். [எ - தி] சந்நியாசிகள் சாப்பிடும்போது தயிர் விடலாமாவென்று

கேட்டால் நாராயணுவென்று அங்கீகரிப்பார்கள். மோர் விடலாமாவென்று கேட்டால் மற்றையோர்களுக்கு விடச்சொல்வதுபோல, வித்துவான்களுக்கு ஞானம் அரசமாய்த் தோற்றுகிறதென்றறிக.

ஜீவன் ஆத்மஞானத்தை யடையாமல் கர்மங்களைச்செய்து அடிக்கடி ஜநந மரண துக்கத்தை யடைகிறுன். [எ - தி] கட்டிலில் சாஸ்திரிகளை யுட்கார வைத்து அவள் வெற்றிலை வாங்கப்போயிருக்கும்போது மேற்கட்டியில் அவர் ஏறிக்கிழேவிழுந்து கால்முறிந்து அவர்மகன் அவரைத் தூக்கிப்போகும்போது, ஜநங்கள் என்னவென்றுகேட்க, அவன், அய்யா தாசிகமநம் ஆருள்பாரத்தோடு போகிறதென்று சொன்ன கதைபோல வறிக. [இ - து] வெகுகாலம் செய்த தவத்தால்வந்த குருவினிடத்தில் சிரத்தையோடும் பணிவிடைசெய்து, விசாரணை பண்ணி ஆத்மஞானத்தை யன்புடனடையவேண்டும். அப்படியன்றி யிருக்கிற வனுக்குமேல் துர்ப்பாக்கியசாலி யாருமில்லை. [எ - தி] வெகுகாலமாய்க் காசிக்குப்போயிருந்த கணவன் வந்தபோது, அவருடன் அன்பாய்ச் சேர்ந்து புத்திரனை யடையவேண்டும். அப்படி அன்பாய்ச் சேராதவள் சுகமடையாதது போல வறிக.

ஜீவன் முட்டாள். [எ - தி] புகழ்ச்சி, இகழ்ச்சியான சொல்லுக்காகச் சொத்தை யிழக்கிறதும்; ஊருக்குழைத்து ஊதாரியாய்ப் போவதுபோலும்; தீப்பட்ட வீட்டிலிருக்கிறவன் தன்னைக் காப்பாற்ருமல் வீட்டைக் காக்கிறவன் போலத் தேஹாதிகளைக் காக்கிறதும்; ஒரு பிரயோஜநமுமில்லாமல் சித்திரம் போலப் பொய்யாயிருக்கிற ஸ்திரீ முதலான ரூபத்தைப்பார்த்து மயங்குகிற தும்; தன்சரீரத்தில் கக்ஷமுதலான இரண்டுதோலின் சம்ஸ்பரிசத்தால் நாற்ற முண்டாவதைக் கண்டிருந்தும், அசுத்தமான ஸ்திரீகளை ஸ்பரிசிக்க இச்சிக்கிற தும்; நாலுபேர்கூடி ஒருவனைக் கேலிபண்ணுகிறதும்; குழந்தைபோல விஷ யத்தில் ஓடிப்போய் விழுந்து அடிக்கடி துக்கப்படுகிறதும்; தலையிலிடித்தபின் பும் தாழக் குனியாதவன்போலத் திரும்ப அதில் நுழைகிறதும் முட்டாள்த் தனமென்றறிக.

தேகம் நானென்று சொல்லுவது மூடத்தனம். [எ - தி] தாசியைச் சொந்தநாயகி என்பதுபோலும், நிழலை நான் என்பதுபோலும், வீட்டை நானென்பதுபோலும்; உடுப்பை நானென்பதுபோலும், பொம்மையை நானெ ன்பதுபோலு மறிக. [இ - து] ஜீவன் முட்டாள், காசைக்கொடுத்து மேள தாளாதி சப்தங்களை அடிக்கச்சொல்லுகிறதும்; பிள்ளை இல்லையென்று வேருெரு பிள்ளையைத் தத்து எடுத்துக்கொண்டு, அவனிடத்தில் தன் சொத்துக்களையெல் லாம் ஒப்பிவித்து, பிற்பாடு அவனுடைய துர்நடத்தைகளைப்பற்றித் துக்கத்தை யடைகிறதும்; பிறித்தால் ஒருகாசுக்குக்கூட விலைபோகாததாயும், தன்பிரா ணனை நிமிஷந்தோறும் வாங்குகிறதாயு மிருக்கிற ஸ்திரீ பிண்டத்தில் மயங்கிக்

கெட்டுப்போயும், பின்னு மவளை நினைத்து நினைத்து அவளிடத்தில் கூடிக் கெட்டுப்போகிறதும் முட்டாள்த்தனமென்றறிக.

ஜீவன் முட்டாள், குழந்தையானது நிழலில் சுகமாயிராமல் வெய்யிலில் விளையாட ஓடுவதுபோல, சுகமாயும் நித்தியமாயுமிருக்கிற பிரஹ்மவிசாரம் பண்ணுமல் துக்கமாயும், அநித்தியமாயுமிருக்கிற விஷய வியாபாரமே சதா பண்ணிக்கொண்டே யிருக்கிறதும்; நியோகிப்பிரபுவைப்போல, உள்ளே சுகமில்லாமல் வெளியில் சுகமநுபவித்ததுபோலக் காட்டுகிறதும்; குலத்திலிருந்து நடைபேதமான வியபிசாரியைப்போல அநித்தியமான விஷய சுகத்தையே நித்திய சம்பத்தாய்க்கொண்டாடுகிறதும்; தன்னுடைய தோஷத்தை மறைத்துக் கொள்ளுகிறதும்; அதை யெடுத்துக் காண்பித்தவன்பேரிலும் துவேஷம்வைக்கிறது முதலானதுதானென்றறிக.

விஷயத்திலிருக்கிற தோஷாதிகளை விசாரித்துச் சித்தத்திலிருக்கிற விஷய வாசனையைக் கெடுத்த பிற்பாடும், விஷயத்தைக் கண்டவுடன் முன்போல இச்சையுண்டானல் மூடத்தனம். [எ - தி] தாசி போகத்தால் வந்த அறையாப்பு முதலான வியாதிகளினுலும், உப்பில்லாப் பத்தியத்தையும், சத்திரம்வைக்கிறது முதலான துக்கத்தையும் அனுபவித்து வந்திருந்தும், மறுபடி அவளைக்கண்டு போகிக்கவேண்டுமென்று இச்சைப்படுகிற மூடப்பயல் போலவறிக. [இ - து] ஒருஸ்திரீயைப்பற்றி நாலுபேர் எனக்கெனக்கென்று அடித்துக் கொள்ளுகிறது அறியாமை. [எ - தி] சோற்றுக்குக் கஷ்டப்படுகிற முண்டச்சியானவள் வெறும் இலையை சுற்றிக்கொண்டு வந்துபோட, அதற்குள்ளே ஒருபருக்கைகூட இல்லாமலிருக்க, அதைப் பிறித்துப்பாராமல் நாலுநாய்கள் ஒன்றுக்கொன்று கடித்துக்கொள்ளுவதுபோலு மறிக.

ஜீவன் முட்டாள். தனித்துத்தன் சும்பத்தனத்தைத் தானே நிந்தித்துக் கொள்ளுகிறதும், பிறரதைச்சொன்னுல் அவர்கள்பேரில் கோபிக்கிறதும்; தன்னைத்தானே புகழ்கிறதும்; பிறர் புகழக்கேட்டுச் சொத்தை இழக்கிறதும்; விசாரிக்காமல் கேட்பார் சொல்லை நம்பித் துர்மார்க்கத்தில் பிரவர்த்திக்கிறதும்; பிரயோஜநமன்றிக் கோர்ட்டுக்கும், ரயிலுக்கும், சண்டை முதலானவைகளுக்கும் வேடிக்கைப் பார்க்கப்போகிறதும்; உத்தியோகத்திலிருக்கிற துக்கங்களை யோஜியாமல் மேல்பார்வைக்கு அழகுபோலிருக்கிற உத்தியோகத்தையே அழியாத சுகமென்று நினைத்து அதற்கு யத்தநிக்கிறதும், அது கிடைக்கவில்லையே என்று சதாக் கவலைப்படுகிறதும்; பெரிய மூடன் என்னசெய்கிருனே அதுதான் சின்ன மூடர்களுக்கு விதி, பெத்தாயன கோமுட்டிகதைபோலும்; அவனவன் கர்மப்படிக்கு அவனவனுக்கு விஷயமுண்டாயிருக்கும்போது, அவனுக்குச் சமாநம் நாமாகவேண்டும், நமக்குச் சமாநமாயிருக்கிறவன் கீழாகவேண்டுமென்று நினைத்துக் கவலைப்படுகிறதும்; நாடகம் பொய்யென்று தெரிந்தும் அதற்காகத் திரவி

யத்தையுங் கொடுத்துக் கரும்புபோலிருக்கிற தூக்கத்தைவிட்டு, குரங்குபோல் விழிக்கிறதும்; சேதநனான ஞானியைப் பூஜித்து அழிவற்ற ஞானத்தை உடனே அடையாமல், ஜடங்களான சிலாதி மூர்த்திகளுக்கு அபிஷேகாதிகளைப்பண்ணி உபாசித்து இறந்தபின் அநித்திய முக்தியை அடைய இச்சிக்கிறதும்; குழந்தைகள்போல நேற்றைக்குச் செய்ததையே இன்றைக்கும் செய்கிறதும்; விசாரமன்றியிருப்பதுகொண்டு தனக்கு க்ஷேமத்தைச் சொன்னால் துக்கப்படுகிறதும், கெடுதலைச்சொன்னால் மிகவும் சந்தோஷிக்கிறதும் முட்டாள்த்தனமென்றறிக.

எவனே ஒருஞானிக்கு சாபாநுக்கிரகமிருந்தால் எல்லா ஞானிகளுக்கும் அப்படியே சாபாநுக்கிரக மிருக்கவேண்டுமென்று நினைக்கிறது தப்பு. [எ - தி] ஒரு புருஷன் கையில் நாயைப் பிடித்துக்கொண்டு வந்ததைப்பார்த்து, நாய் கொண்டுவந்தவர்கள்தான் புருஷர்கள் என்று சொல்வதுபோல வறிக. [இ - து] ஜகத்தில் சகல சரீரிகளும் சாவது நிச்சயமாயிருக்கும்போது, முந்திச் செத்தவனுக்குப் பிந்திச் சாகப்போகிறவன் தான் நித்தியனென்றும், நம்மைப்போல அவன் நித்தியனாயிராமல் அநியாயமாய் இறந்துபோனானென்றும் அழுகிறதற்கு யுக்தி:—ஜயில்கொட்டடியில் அடைத்த ஜநங்களெல்லாரையும் தூக்கில் போடுகிறதென்று தீர்ப்பாயிருக்கும்போது, முந்தித் தூக்கில் போட்டவனைக் குறித்துப் பிந்தித் தூக்கப்படுகிறவன் விசநத்தை அடைகிறது போலவறிக. [இ - து] துக்கியான ஜீவன் ஸ்திரீவிஷயத்தில் சுகத்தை அடைய இச்சிப்பது மூடத்தனம் [எ - தி] நாற்றமுள்ளவன் சாக்கடை ஜலத்தில் ஸ்நாநம்பண்ணி நாற்றத்தைப் போக்கடிக்க யத்தநிக்கிறதுபோலும், அறையாப்புவந்தவன் தேவடியாளிடத்தில் போய் அந்தவியாதியைத் தீர்க்க யத்தனிக்கிறதுபோலும், வாயு உபாதியுள்ளவன் பரங்கிக்காயைச் சாப்பிட்டு வியாதியைத் தீர்த்துக்கொள்ளுவதுபோலு மறிக.

ஆத்மதர்மமான சாக்ஷித்துவத்தை அந்தக்கரணத்திலும், அதன் கருத்ருத்துவாதி தர்மங்களைத் தன்னிடத்திலும், அந்நியோந்நியாத்தியாசம் பண்ணிச் சகலரும் சதா துக்கப்படுகிறார்கள். [எ - தி] குருட்டுத் தம்பதிகள் புடவை சோமன்களைத் தெரியாமல் மாற்றிக் கட்டிக்கொள்வதுபோலும்; தட்டாமாலை சுத்துகிறவள்போலு மறிக. [இ - து] ஜீவர்கள் தனக்குச் சகல துக்கத்தையும் நிவர்த்தித்துச் சுகத்தைக் கொடுக்கிறதா யிருக்கிற தன்னுடைய ஆத்மாநந்தத்தைப் புஜியாமல் குழந்தைகள் சோற்றைத் தின்னமல் அழுவதுபோலக் கவலைப்பட்டுச் சாகிறார்களென்றறிக. [இ - து] அதிஸ்தூலமான ஸ்திரீ பிண்டத்திலிருக்கிற தோஷம் தெரியாதவன் அதிசூட்சுமமான பிரஹ்மத்தை அறிய மாட்டான். [எ - தி] பட்டப்பகலிற் சுவரில் முட்டிக்கொள்ளுகிற மாப்பிள்ளை ராத்திரியில் விளக்கிலே சீதாளபுஸ்தகம் என்னமாய் வாசிக்கப்போகிறானென்றறிக. [இ - து] ஜீவர்களுக்குத் தங்களுக்கந்நியமான சிலாதி ஜடத்திலும், பரோக்ஷமாய் அரூபமான விரதாதிகளிலும் நம்பிக்கை வருகிறதேதவிர, அறி

வாயும், அநுக்கிரகம் முதலானதைச் செய்கிறவரான பிரஹ்மஞாநியினிடத்தி லும், உற்பத்தி நாசமற்ற பிரஹ்மத்தினிடத்திலும் நம்பிக்கை வருகிறதில்லை. [எ - தி] ஜடமாயும் உற்பத்திநாசத்தோடுகூடிய தூல சூட்சுமதேகத்திலும், ஆரோபமாயும் அரூபமாயுமிருக்கிற காரணசரீரத்திலும் நம்பிக்கைவருமே தவிர, அவஸ்தா த்திரயத்திலும் அழிவற்ற அறிவான தன்னிடத்திலும், தன்னை அறிவிக்கிறதான ஞாநத்தினிடத்திலும் நம்பிக்கை வராததுபோல வறிக.

விஷயாசையைவிடப் பயந்து ஜீவன்முக்திச்சுகம் வேண்டாமென்று நினைப் பது முட்டாள்த்தனம். [எ - தி] பத்தியம் காக்கப் பயந்து ஆரோக்கியம் வேண்டாமென்பவன்போலும், தொண்டை வலிக்குமென்று பயந்து வித்தை வேண்டாமென்பவன் போலும், பர்த்தாவினுடைய சிசுருஷைக்குப் பயந்து புருஷசுகத்தை இழந்தவள்போலும், சாவடி தீப்பட்டகாலத்தில் எழுந்திருந்து போகச்சோம்பலால் அங்கேயேகிடந்து வெந்துபோனவர்கள்போலு மறிக. [இ - து] சூத்திரபாஷ்யம் படித்தவனிடத்தில் ஓர் விவேகி நீர் தத்துவஞாநத் தை அடைந்தீராவென்று கேட்க, அவர் இவரைப்பார்த்துக் குழந்தைகள் வாச கம்படிப்பதுபோல, அந்தச் சூத்திரபாஷ்ய வாக்கியங்களை வாய்ஓயாமற் சொல் லிக்கொண்டு, இந்தக்காலத்தில் ஞாநம் ஒருவருக்கும் கிடையாது, அப்படியிருக் குமானால் நாம் நினைத்தசங்கதிகளைச் சொல்லவேண்டும், மேலுமவர்கள் காட்டி லேபோய் ஆஹார நித்திரையன்றிக் கல்லுப்போலிருக்கவேண்டும், அப்படி ஒன் றுமிக்காலத்தில் ஒருவரிடத்திலும் காணாமையால் காசிக்குப்போய் பகவத்நா மம் பண்ணிக்கொண்டு, பாகவதம், தசமஸ்கந்தம், பாராயணம் பண்ணிக்கொ ண்டு மறித்தால், முக்திவருமென்று வாயோயாமல் உளறுகிற குற்றம் அவர்கள் பேரிலில்லை, இந்தவிவேகியின் பேரிலேயே. [எ - தி] கிறுக்கனிடத்தில் வாய் கொடுத்தால் அவன் வாயோயாமல் உளறுவதுபோலும், நகராவின்கிட்டவிருக் கிற குழந்தையைகயிற் கோலைக்கொடுத்தால் கையோயாமல் அடிப்பதுபோலும், நாயின்வாயில் கோலைக்கொடுத்தால் ஓயாமல் குலைப்பது போலுமிருக்கிறதென் றறிக.

முமுக்ஷுவானவன் பால்யம் யௌவனம் முதலியவற்றைப் பாராமல் குரு அகப்பட்டவேளையில் ஞாநத்தைக் கிரஹிக்கவேண்டுமென்பதற்கு யுக்தி :— ராஜன், கிராமம் முதலியவற்றைத் தாநமாய்க் கொடுக்கிறவேளையில் திதி வார நக்ஷத்திரங்களைப் பாராமல் அதை வாங்குகிறதுபோலும், காசிக்குப்போன கணவன் வந்தவேளையில், காலதேசம் பாராமல் கணவன்சுகத்தைக் கலக்கிற கற்புடையவள்போலு மறிக [இ - து] அவிவேகமான ஜீவன் தேகாதிக ளுக்கு வருகிற உபாதிகளைத் தனக்கு வந்ததாக நினைக்கிறான். [எ - தி] பெண் டாட்டி பிள்ளைகளுக்கு வந்திருக்கிற பீடைகளைத் தனக்கு வந்ததாக நினைக்கிற மூடன்போலவும், ஸ்திரீவேஷத்தைத் தனக்கு நிஜவடிவமென்று நினைத்தவன் அந்தவேஷத்தைப்பற்றிச் செய்கிற ஸ்துதி நிந்தைகளைக் கேட்டு சுகதுக்கப்படு

கிறதுபோலு மறிக. [இ - து] அஹம்பாவியானவன் ஆசானிடத்திற்போய் ஆத்மஞாநத்தை அதி சுலபமாய்க் கேட்காமல் தானே ஆத்மவிசாரத்துக்கலேந் தும் அடையாமல் திரிகிறுன். [எ - தி] புது நாட்டுப்பெண் மாமியாரைக் கேளாமல் பிளுக்காக முன்னூறுபானையில் கை வைத்தும் அகப்படாமல் முழிக்கிற மூடைபோலும்; ரசவாதத்துக்குச் சித்தனைக்கேட்டுத் தெரிந்துக்கொ ள்ளாமல் தானே அகப்பட்ட ஏட்டையும், பச்சிலேகளேயும் பார்த்து, அந்த ரசவாதங்களைச் செய்ததிலும் ஒருசித்தியும் கிட்டாமல் கெட்டுப்போகிறவன் போலு மறிக.

அப்போதப்போது தோன்றுகிற ஜகத்வியாபாரத்தைச் சொப்பனம் போ லப் பொய்யென்று விவேகி பார்க்கவேண்டுமேதவிர, 'கர்மம் காலம் ஈஸ்வரன் முதலானவர்கள் நடத்துகிறுர்களென்று சத்தியபுத்தியால் ஒப்புக்கொண்டால் பந்தப்படுவன். [எ - தி] குசவன் இத்தனை நீளச்சீட்டு நான் எழுதிக் கொடுக் கவில்லேயென்று சொன்னதால் கடனுக்குட்பட்டது போலும், தீக்ஷிதர் குசப் பயலேயென்று சொன்னதற்கு, அந்தக்குசவன் அந்தக் கம்மாளப்பயலா கண் ணைக்காட்டினுனென்று சொன்னதால், பிராஹ்மணர்களிடத்தில் இருவர்களும் சாப்பிடுவதற்குப் பதிலாக உதைகளுடன் ஊம்பறுைய் வெளியிலோடிப் போன கதைபோலுமறிக. [இ - து] விவேக மில்லாதவன் வீண்வார்த்தையாலே காலத்தைப் போக்குகிறுன். [எ - தி] ஸ்திரீ இல்லாதவன் இரவில் வெளியில் திரிகிறதுபோலும், வீட்டில் சோற்றுக்கில்லாதவன் வெளியிற் பிக்ஷைக்குத் திண்டாடுவது போலுமறிக.

தன் சித்தத்திலிருக்கிற விஷயவாசனைகளைக் குருவினிடத்தில் சொல்லாம லிருந்தால் ஜந்மகாரணமான அஞ்ஞாநம் போகாது. [எ - தி] மலத்தைப் பெட்டியில் வைத்துப் பூட்டிவைப்பதுபோலும், குஹ்யத்திலுள்ள ரணத்தை மாமனுகிற வைத்தியனிடத்தில் காண்பியாமல் மூடிவைத்திருக்கிற மூடைபோலு மறிக. [இ - து] பிரஹ்மஞாநமன்றிச் சந்நியாசமாத்திரத்தில் மோக்ஷம் வரு மென்று சொன்ன அர்த்தவாத சுருதியை உண்மையென்று நம்புவதற்கு யுக்தி:- அருணுஜலமென்ற ஸ்மரணத்தால் முக்தியென்ற வசநம்போல வறிக.

குருவினிடத்திலேயே அங்கே அப்படி சொல்லியிருக்கிறது, இங்கே இப் படி சொல்லியிருக்கிறதேயென்று சொல்லுகிறவனுடைய புத்திக்கு யுக்தி:-மது ரையிலுள்ள ஒருவன் தன்னை மதுரைக்குக் கூட்டிக்கொண்டுபோய் விட்டிருக்க, அவனிடத்திலேயே கோவிலுக்குள்ளே பொற்றுமரை யிருக்கிறது, அதன்க ரையிலிருக்கிற மண்டபத்திற் கிளி கட்டிருக்கிறதென்று சொல்வதுபோல வறிக. [இ - து] குடும்பத்தைவிட்டுச் சந்யாசம் பண்ணிக்கொள்வதிலே என்ன சுக மென்று கேட்கிற மூடர்களுக்கு உத்தரமாவது:—வயிற்றுக்கடுப்பு உபாதியால் பீக்கொல்லேயில் உட்கார்ந்திருக்கிறவன் பங்களாவிலிருக்கிறவனைப் பார்த்து, நீ

பிக்கொல்லையைவிட்டு ஏன் இங்கேவந்தாயென்று கேட்பதுபோலும் ; தீப்பற்றி யெரிகிறவிடத்தைவிட்டு நிலாவில் உட்கார்ந்திருக்கிறவனைக் கஷ்டப்படுகிறதாய் நினைக்கிற மூடத்தனம்போல வறிக.

ஆபிசு இருக்கும்போதே ஆத்மவிசாரம் பண்ணின மட்டுக்கும் லாபமென்று நினையாமல் வேதசாஸ்திரங்களைக் கற்றபின்பு ஆத்மவிசாரம் பண்ண நினைப்பது மூடத்தனம். [எ - தி] தூங்குகிறவன் விழிக்கு முன்னே ஊம்பினது லாப மென்று நினையாமல், உப்புப் புளித் தேடப்போகிறவனுடைய மூடத்தனம் போல வறிக. [இ - து] ஞானிக்கு விதிசொல்லுகிறவன் எப்படிப்போன்ற வனென்றால், சந்நியாசியைப் பார்த்து உங்கள் அய்யாவுக்குச் சிராத்தம் பண்ண வில்லையா வென்று கேட்கிற மூடன்போல வறிக.

முமுக்ஷு தனக்கிருக்கிற சகல கருத்துருத்துவங்களையும் குருவுக்கு ஒப்பி வித்துக் குருசந்நிதியில் பிரஹ்மவிசாரம் பண்ணிப் பிரஹ்மத்துவம் அவர் கிரு பையால் அதிசீக்கிரத்தில் தானே சித்தியாகுமென்று சும்மாயிராமல், நமக்குப் பந்தம்போய் மோக்ஷம் வரவேண்டுமென்று கருத்துருத்துவத்தை ஒப்புக்கொள் வது மூடத்தனம். [எ - தி] வக்கீல் மூலமாய்க் கோர்ட்டில் கோடிரூபாயிக்கு வியாச்சியம் செய்து ருஜுவாய்த் தீர்ப்பு யெழுதிச் சொல்லு முன்னே, வக்கீ லுக்குத் தெரியாமல் எதிரியோடு நூறு ரூபாய்க்கு ராஜிநாமா யெழுதிக் கையெ ழுத்துப்போட்டுக் கோர்ட்டிற் கொடுக்கிற மூடத்தனம்போல வறிக.

இந்திரியங்களுடைய செய்கையெல்லாம் ஜீவன் தன்பேரிற் போட்டுக்கொ ண்டு சம்சாரதுக்கத்தை யடையக் காரணமென்னவெனில், புதுக்கோட்டை ராஜா ஊரிலுள்ள ஸ்திரீகளையெல்லாம் தன்ஸ்திரீயென்று அபிமானித்து அவர் களிடத்திலுள்ள வியாதிகளெல்லாமடைந்து துக்கப்பட்டது போலவறிக. [இ - து] குடும்பத்திலிருக்கிறவனை, விவேகத்தை அடைவதற்காக அதை விட்டு வெளியிற் புறப்படச்சொன்னால் துக்கப்படுகிறவனுக்கு யுக்தி:-மலத்திலிரு க்கிற புழுவை அதிலிருந்து சுத்தமான வெளியிற்போட்டால் துடிப்பதுபோல வறிக.

ஜீவர்கள் கணக்குத்தெரியாத கிஞ்சிக்ஞர்கள்:—ஒரு பெரியமநுஷனென்ற ஜீவனுக்குப் போஜநம் பண்ணிவைப்பதற்கு ரூபாய் இருபது செலவுசெய்கிறார் கள். அதைச் சாமாந்ய ஜநங்களுக்குப் போட்டால் நூறுபேர்வரையிற் சாப்பிடு வார்கள், அதை மாட்டுக்குச் செலவு செய்தால் ஐநூறும், ஆட்டுக்குச் செலவு செய்தால் ஆயிரமும், எறும்புக்குச் செலவுசெய்தால் லக்ஷம் ஜீவர்கள் வரையும் புஜிப்பார்கள் என்பதை அறியாமலிருக்கிறார்கள். [எ - தி] ஒருபுருஷன் ஒரு கன்னிகையைக் கலியாணஞ்செய்வதற்காக ஒரு பெரியமநுஷனுடைய பெண்ணை கொடுக்கவேண்டுமென்று கேட்டதற்கு, அவன் கோடிரூபாய் கொடுத்தால்தான் இந்தப்பெண்ணைக் கலியாணம் செய்துகொடுப்பேன் என்று சொன்னதைக்

கேட்டு, இந்த வித்தியார்த்தியும் ஊரூருக்குப்போய்,வீடுவீடாய்ச்சந்தநப்பொட்டுப்போட்டு, ஆளாளாயாசித்து இரண்டாயிரம் ரூபாய்வரைச் சம்பாதித்து அந்தப்பெண் வைத்திருக்கிறவனிடத்தில் கொண்டுபோய்க் கொடுத்ததில், அவன் அந்தரூபாயைவாங்கி வைத்துக்கொண்டு சொச்சமும் ஆதியில் சொன்னபிரகாரம் சம்பாதித்துக்கொண்டுவரச் சொன்னபடி, அவனும் திரும்ப முன்போலவே இரண்டாயிரம்ரூபாய் சம்பாத்தியம் பண்ணிக்கொடுத்ததிலும், அதையும் வாங்கிவைத்துக்கொண்டு, சொச்சரூபாயையும் சம்பாதித்துக்கொண்டு வாவென்று சொன்னபடி, இருபதுதடவை அப்படி சம்பாதித்துக்கொடுத்ததிலும், அவன் சொன்னதொகைக்கு ஆயிரத்திலொருபங்குகூட ஆகாமல், அவதிப்பட்டு ஒரு பாம்புப்புற்றின்கீழில் விசநப்பட்டுக் கொண்டிருக்கும்போது, வழியிற்போகிற பிராஹ்மணன் இவனைக்கண்டு, நீ ஏன்விசநமாய் இந்தப்பாம்புப்புற்றின் கீழே படுத்திருக்கிறுயென்று கேட்டவுடன், இவனவனைப்பார்த்து, ஓய். சிநேகிதரே! இப்படி ஒருபெண்ணை கல்யாணம் செய்யவேண்டுமென்று கேட்டதற்கு, பெண்காரன் சொன்னதொகையையும், அதற்காக இருபதுதடவை நாற்பதினாயிரம்ரூபாய் வரையிலும் கொடுத்தும், இன்னும் போதவில்லை. அதற்காக இந்தப்புற்றிற்குள்ளிருக்கிற பாம்பு என்னைக்கடித்தாலும்சரி அல்லது அதனிடத்திலிருக்கிற நாகரத்தினத்தைக் கொடுத்தாலும்சரி யென்று நினைத்து இங்கே படுத்துக்கிடக்கிறேனென்று சொன்னதைக்கேட்ட சிநேகிதனும், அடேமூடா! நீ சம்பாதித்த ரூபாய்க்கு எத்தனையோ பெண்களைக் கலியாணம் செய்து, நீயும் சுகித்து எத்தனையோகோடி ஜீவர்களை எத்தனையோகோடிகாலம்வரை புஜிக்கும்படி செய்யலாமென்பதையும், ராகத்துவேஷங்களின் பாவாபாவத்தையும், விருந்திட்டு பொல்லாப்படைந்த வசிஷ்டரையும் பார்த்து, இதன் லாப நஷ்டத்தையும் பாராமலிருப்பதே சாக்ஷியென்றறிந்து, நீ அப்பணத்தை வாங்கி வேறேபெண்ணை மணம்செய்து சுகியென்று சொன்னபடி, அவனுமப்படிச்செய்த கதையை அறியக்கடவாய். ஆனால் மாநுடஜீவர்கள் சிலாக்கியமென்று சொன்ன விடம் அறிவைப்பற்றிச்சொன்னதென்றறிக.

தேவலோகத்தில் முன்னேபோயிருக்கிற தேவதைகள் பின்னே கர்மம் செய்து அவ்விடத்திற்கு வருகிறவர்களுக்கு இடம் கொடாமறறடுப்பார்கள். [எ - தி] ரயில்வண்டியில் முன்னேபோய் ஏறியிருக்கிறவர்கள் பின்னால் டிக்கட்டுவாங்கி ஏறவருகிறவர்களை ஏறத்தடுப்பதுபோல வறிக. [இ - து] பணமிருக்கிறவனுக்கு அகம்பாவம்வருமென்று சொல்வது ஒருபக்ஷம். ஏனென்றால், பணம் ஜடம். அதனல் நன்மை தீமை செய்கிற புருஷன்பேரிற் குற்றம் குணம் சொல்லவேண்டியது. [எ - தி] சொப்பனத்திற் காணப்பட்ட பதார்த்தத்தின் பேரில் குற்றம்சொல்லாமல் அப்படி உறங்குகிறவன்பேரில் குற்றம் சொல்லவேண்டியிருப்பதுபோல வறிக. [இ - து] ரயில்வண்டியில் ஏறிப்போகிற ஜநங்கள் சும்மாயிராமற் சீக்கிரம் விடென்று கூச்சல்போடுகிறதைத் துரைகேட்டு

டிக்கட்டையும் பிடுங்கி ஐயிலிலும் போடுவதுபோல, இந்த ஜீவனும் இப்படியாக வேண்டும் அப்படியாகக் கூடாதென்று நினைக்கிறதை ஈசன்கேட்டு, இவனைச் சரீரத்தைவிட்டு வெளியேற்றி நரகதுன்பத்தை யநுபவிக்கும்படி செய்கிறானென்றறிக.

சொற்பவிஷய லாபத்தை இச்சித்து மஹத்தான சுகத்தை இழக்கிற படியால் அவிவேகிகள் மூட்டாள் [எ - தி] ஒரு அம்மாள் பதினாயிரம் ரூபாய் நகையைக் கூலிக்காரனிடத்திற் கட்டிக்கொடுத்து அரைரூபாய் கூலிபேசிக் கூட்டிப்போகும்போது, அவன் அம்மாளுக்கு முன்னும்பின்னுமாக நடந்துவரவும், அம்மாள் ஐம்பதுபெண்களுடன் பாடிக்கொண்டு போகும்போது, கூட வருகிறவர்கள் உன்மூட்டைக்காரன் வரக்காணோமே என்று சொன்னதற்கு, அவள் அடிமாண்டுப்போவான் கூலி அடிமடியிலிருக்கிறது, அவனெப்படிப் போவானென்று சொன்ன கதைபோல வறிக. [இ - து] பிராரப்த கர்மப் படி சுகமும் துக்கமும் வந்துகொண்டிருக்கும்போது, இவன் வீணாய் இப்படி வரவேண்டும், அப்படி வரவேண்டாமென்று நினைப்பதுவே சம்சாரமூலம். [எ - தி] ஜநங்கள் சுபாவமாய் வீதியிற் போகும்போது நாய்வந்து குலைப்பதுவே தடியடிபடக் காரணமாவதுபோலும்; பாம்பைக் கருடா விட்டுவிடுமென்றும், விடாதே யென்றும் சொன்ன இருவர்களும் மறித்துப்போனதும், சும்மா இருந்தவன் சுகத்தை யடைந்ததுபோலு மறிக.

ஜீவர்கள் ராகத்துவேஷமுதலான துக்கத்தைக்கொடுக்கிற தங்கள் சுற்றத்தார் சாகும்போது அழுவது மூடத்தனம். [எ - தி] சகதியில் விழுந்து இருப்பதைக் கழுவும்போதும், கையிற் கத்திபோலிருக்கிற பீங்காணோடுகளைப் பிடுங்கும்போதும் குழந்தை அழுகிறதுபோல வறிக. [இ - து] பூமிக்குப் பருவதங்களைத் தாங்குவதைப்பார்க்கிலும், மூடஜீவர்களைத் தாக்குகிறதுதான் பாரம் [எ - தி] ஜீவர்கள் பிரஞ்ஞையோடே யிருந்து தன்னை யறியாதபடியாலும், அநந்தகோடி ஜநநமெடுக்கிறபடியாலும், மலமூத்திர முதலானதால் உபத்திரவம் செய்வதாலும், இவர்களால் தனக்குப் பாபபூமியென்று இழிவு வருவதாலும் ஒருஸ்திரீக்குப் பத்துபிள்ளையாற் பாரமில்லாமல் நாத்தனாராற் பாரமாயிருப்பதுபோல வறிக. [இ - து] முமுக்ஷுவானவன் பஹிர்முகமாய் போகப் போக விஷயத்திற்போய் விழுவானேதவிர, முக்தி யடையப்போகிறதில்லை. [எ - தி] காசிக்குப்போகிறவன் தெற்கேநோக்கிப் போகப்போகச் சமுத்திரத்தில் விழுவனேதவிர, காசிக்குப்போய் சேரப்போகிறதில்லாததுபோல வறிக.

குருவைச் சிநேகம்பண்ணிச் சுகமடையாமல் தேகாதி குடும்பத்தைச் சிநேகம்பண்ணித் துக்கப்படுவது அறியாமை. [எ - தி] உயிரோடு கூடினவனையும், தாதாவாயுமிருக்கிற ராஜனைச் சிநேகம்பண்ணாமல் வழியிற் செத்து நாறிக்கிடக்கிற பிணங்களைச் சிநேகம்பண்ணுவதுபோலும், குபேரனைச் சிநேகம்பண்ணாமற்

கூழுக்குக் கூத்தாடுகிறவனைக் கும்பிட்டு விழுகிறதுபோலு மறிக. [இ - து] நாமரூப வடிவத்தை யுபாசிக்கிறவன் முக்திசுகத்தை யடையான். [எ - தி] சேற்றிற்கிடக்கிறவன் சுண்ணியை ஊம்புகிறவனுக்குப் பசிதீராததுபோல வறிக. [இ - து] ஈஸ்வரன் கர்மப்படி சகலவியவகாரத்தையும் தவறாமல் நடத்திவரும்போது, ஜீவன் ஒருவித சக்தியும் இவனிடத்திலில்லாமலிருந்தும், அவர் முடிப்பித்தகாரியங்களைத் தான் முடித்தேனென்கிற கருத்துருத்துவத்தைப் பண்ணுவதற்கு யுக்தி :—தெய்வநதியாய் வருகிற ஆற்றுத்தண்ணியை எங்களாறு எங்கள்தண்ணீர் என்று சொல்லுவதுபோலும், பத்துமாசம் சுமந்து பிள்ளைபெற்றவளிருக்க, நானிந்தபிள்ளைப் பெற்றேனென்று வெட்கமில்லாமல் யோநிமுதலானவை யில்லாமலிருந்தும் சொல்லுகிற மூடன்போலு மறிக.

ஞாநாப்பியாசம் செய்வதைவிட்டு மற்றை மார்க்கங்களில் மோக்ஷத்துக் காகத் திண்டாடித் திரிவதற்கு யுக்தி :—தன் கையிலிருக்கிற கரும்புத் துண்டத்தைக் கடித்துச் சாப்பிடுவதை விட்டுவிட்டுக் கண்ட விடங்களி லிருக்கிற சிலாமயர்களான கணேச சும்பனாதிகளைச் செய்வதுபோல வறிக. [இ - து] ஜீவர்கள் சங்கற்பத்தைவிட்டு பிரஹ்மசுகத்தை அநுபவியென்றுசொன்ன குரு வாக்கியத்தைவிட்டுச் சங்கற்பம்பண்ணி அதனால் கற்பிக்கப்பட்ட தெய்வங்களுடைய கிருபையைத் தேடுவதற்கு யுக்தி :—தகப்பன் பிள்ளையைப்பார்த்து வீட்டிற்குள்ளிருக்கிற உன் ஸ்திரீயினிடத்தில் சுகமாய் அநுபவித்திரு என்று சொன்னதைவிட்டுச் சித்திரத்திலெழுதியிருக்கிற ஸ்திரீயை வரவேண்டுமென்று மயங்கிக் கிடக்கிற மடையன்போலறிக. [இ - து] ஜகத்திற்கு அர்த்தம் விசாரித்தால் அநர்த்தமாய்ப்போவதால் மித்தையாம். அப்போது அது எப்படித்துக்கத்தை கொடுக்குமென்றால், சதுரங்கம் ஆடுகிறவர்களுக்கு ஆனை குதிரைகளில்லையென்று தெரிந்திருந்தும் யானைபோயிற்று, குதிரைபோயிற்று என்று துக்கப்படுவதுபோல வறிக.

ரிசியசிருங்கர் தாசிகளைக்கண்டு ரிஷிகளென்று மயங்கிச் சிநேகம்செய்ததுபோல, ஆத்மா தன் ஆநந்தத்தை அநாத்மாவான தேகாதிகளுக்குக் கொடுத்து அந்தத்துக்கங்களைத் தான் மேற்ப்போட்டுக்கொள்ளுகிறார். [எ - தி] விடன் தாசியினிடத்தில் தன்சுக்கிலத்தையும்விட்டுச் சொத்தையுமிழந்து, அவளிடத்திலிருக்கிற அரையாப்புமுதலான வியாதிகளை மாற்றிக்கொள்ளுவதுபோல வறிக. [இ - து] ஸ்திரீகள் கர்ப்பதாரணையைச் சுகமென்று நினைக்கிறார்கள். [எ - தி] மலமூட்டையைத் தூக்குவதில் துவேஷமன்றியில் வாச்சுதுவாச்சுது என்று சந்தோஷப்படுகிற ஒட்டன்போல வறிக. [இ - து] அஞ்ஞாநிக்குக் குடும்பத்திலிருக்கிற தாபத்திரயதுக்கம் சுகமாகத் தோற்றுவானேனென்றால், மேகவியாதிவந்தவனுக்கு வெய்யிலும், சொறிகிறதும் சுகமாய்த்தோற்றுவானேன் சொல் ?

ஈசன் ஜீவனைக் கர்மமாகிற கயிற்றினாற்கட்டி இழுப்பதால் சுகதுக்கங்களில் விழுந்து விழுந்து எழுந்திருக்கும்போது, ஏன் விழுகிறாயென்று யாருந்

கேட்டால் அவன் நான் சுகி துக்கியென்று தன்பேரிற் கருத்துருத்துவத்தை யேற்றிக்கொள்ளுகிருன். [எ - தி] தாய் குழந்தையைக் கயிற்றைக்கட்டி இழுத்துவிழுகிறதை, நான் அப்படித்தான் விழுவேனென்று சொல்லுவதுபோலறிக.

ஜீவனுடையமுட்டாள்த்தனங்களை நிரூபிக்கிறேம்:—மாறுபாடு செய்கிறதிலேயே பிரியம், விகட கவிகைப்போலும்; ஆத்மாவாகிய தன் பிராண சிநேகிதனை விட்டுத் தேகாதி விஷயத்தை ருசுவான சினேகிதனென்று நம்புகிறது; ஆத்மாவாகிய சேதந புருஷனேடு சேராமல் பிணமாகிய தேஹத்தோடு சேருகிறது; ஆநந்தமான ஆத்மாவைக் கொண்டாடாமல் துக்ககரமான ராகாதிகளைக் கொண்டாடுகிறது; தர்மபத்தினியை விட்டு அந்நிய ஸ்திரீயை இச்சிக்கிறது; வேதாந்தி என்று வேஷம் போட்டுக்கொண்டு, ஸ்திரீகளுக்கு அதைச்சொல்லி அவர்களிடத்தில் கூடுகிறது; மூடத்தனத்தால் தனக்கும் அந்நியர்களுக்கும் துக்கத்தை உண்டுபண்ணுகிறது; ஈஸ்வரனுக்கும் ஜீவர்களுக்கும் சம்மதமில்லாத சார சோரங்களைச் செய்கிறது; தனக்குச் சுகத்தைச் சொன்னாலும் துக்க ரூபமான பிடிவாதத்தை விடாமலிருக்கிறது; பிரத்தியக்ஷமான ஞாந சுகத்தை விட்டுப் பரோக்ஷ சுகத்தை நம்புகிறது; சுருதி முதலான பிரமாணமில்லாமல் வீண்காரியத்தைச் செய்கிறது; இதுமுதலானதென்றறிக.

ஜீவர்களைப் பைத்தியங் கொண்டவனென்றும், குழந்தைகளென்றும் மொத்தமாய்ச் சொன்னால் ஜீவர்கள் ஒரேபிரகாரமாயல்லோ இருக்கவேண்டும், அப்படிக்கில்லாமல் பலவிதமா யிருக்கிறார்களே யெனில், பைத்தியங் கொண்டவர்களிலும், குழந்தைகளிலும், சிலர் சிலர் தானேபுலம்புகிறதும், வலுவிற்போயடிக்கிறதும், கண்ட விடமெல்லாம் திரிகிறதும், சும்மாயிருக்கிறதும், அகாலத்திற் சோறு சோறு என்று கத்துகிறதும், இப்படி நானாப்பிரகாரமா யிருப்பதைப் பார்த்துக்கொள்க.

ஜீவர்கள் முட்டாள், கையில் சொத்திருக்கும்போதே மேல்மேலும் இன்னம் வேண்டுமென்று இச்சிக்கிறதும்; ஸ்திரீயினிடத்தில் இவனைப் போகத்திற்குப்போய் க்ஷணத்தில் சுக்கிலமோசநமாய்ப் போய்த் தன்னால் முடியாமல் அவமாநப்பட்டும், பின்னுங் காசையுங்கொடுத்து அவளையும் போகத்திற்குக் கூப்பிடுவது, வாலியினிடத்தில் சுக்ரீவன் போய்ச் சண்டைக்குக் கூப்பிட்டு அவனேடு சண்டைக்கு நிற்கமுடியாமல் ரத்தத்தையும் கக்கிக்கொண்டு அடித்துப் பிரண்டு விழுந்து எழுந்து ஓடிப்போய், மறுபடி அந்த வாலியை இவன் சண்டைக்குக் கூப்பிடுவதுபோலும்; பெண் வியபிசாரியென்று தெரிந்தும் அவளிடத்திலிருக்கிற அபிமாநத்தால் சொன்னபேர்களிடத்தில் சண்டைக்குப் போகிறதும் தவிர, அவளைத் தள்ளாமல் அவளோடு சேர்ந்து சிநேகமாயிருப்பது போல ஜீவேஸ்வர ஜகத்து ஓரவஸ்தையிற் றேன்றி ஓரவஸ்தையிற் காணு

மற் பொய்யாய்ப்போவதும், ஓரவஸ்தையிலேயே நிமிஷந்தோறும் ஒன்றுக்கொன்று ஒவ்வாமல் தோன்றித்தோன்றி அழிவதும் தெரிந்திருந்தும், அதிலுள்ள ஆசையால் அதைப்பொய்யென்று சொல்லுகிற சுருதி குரு வாக்கியங்களில் துவேஷமும், அவநம்பிக்கையும், அப்ரமாண புத்தியும் செய்வதுந் தவிர, தானுமந்த சம்பந்தத்தை விட்டுவிட முடியாமல் சதா ஜநநமரண மடைந்து துக்கிக்கிறான். அப்படிக் கொஞ்சம் கூடப் பொய்யென்று அறியாமல் நிஜமென்றே ஜீவேஸ்வர ஜகத்தை நம்பியிருக்கிறவன் துக்கப்படுவதற்குக் கேட்கவேண்டிய தென்னவிருக்கிறதென்றறிக.

துக்கத்திற்குக் காரணம் சங்கற்பம், இச்சை, மோஹம், அஞ்ஞாநம் முதலானவை பரம்பரையாய்க் காரணமென்பதை மூடர்கள் அறியார்கள். [எ - தி] விளக்கில் விட்டிற் பூச்சி அறியாமல் விழுந்து மடிவதுபோல வறிக. [இ - து] பூனை கண்ணைமூடிக்கொண்டு பாலைக் குடிப்பதுபோல, மூடன் ஒருவருக்கும் தெரியாமல் விஷயாநுபவம் செய்கிறதாக நினைக்கிறான். [எ - தி] சுவாமிகள் ஒரு ஸ்திரீயைப் 'போகத்துக்கு ஒருவருக்குந் தெரியாமல்'வரச்சொன்னபோது வந்து, அவள் "சுவாமி! அந்த இந்தச் சரீரங்களுக்குள் நூற்றித்தொண்ணூற்றிரண்டு தத்துவங்க ளிருக்கும்போது, ஒருவருக்கும் தெரியக்கூடாதெனச் சொன்னபடி எப்படி நடக்கும்" என்று கேட்ட மாத்திரத்தில்,சுவாமிகள் விவேக வைராக்கியங்களை யடைந்த கதைபோலும், இன்னும் வெட்டுப்பட்டுச் சாகும்போது சந்திரனைச் சாக்ஷி வைத்துப் போனவன் கதைபோலு மறிக.

சுவரூபநிஷ்டனிடத்தில் லோக சங்கதியைக் கேட்டுப் பதில் தெரிந்துக்கொள்ள விச்சிக்கிற மூடர்களுக்கு யுக்தி:—பிணத்தைக் கட்டி அழுதுகொண்டு ஒரு சொற்சொல்லென்று கேட்பதுபோல வறிக. [இ - து] ராத்திரி வேளையில் போஜநம் பண்ணிவிட்டுச் சிரவணத்துக்குச் சாவதாநமாய் உட்காருவது, மாப்பிள்ளை ஒன்றரைப்படி விளக்கெண்ணை சாப்பிட்டுக் கௌபீநத்தை இழுத்துக் கட்டிக் கொண்டு மணையில்வந்து உட்கார்ந்த கதைபோலவறிக. [இ - து] ஒரு கோழியை நெல்லைக்குமித்து அதன்மேலே விட்டாலும் அதன் சுபாவம் காலினாலே கிண்டுகிறதுபோல, மனதைப் பூரணமான சிதாகாயத்திற் கொண்டேவிட்டாலும் அங்கேயும் பேதத்தையே கற்பிக்கிற தென்றறிக.

குருசந்நிதாநத்தில் விசாரணைசெய்யும் போது வேறேபிரவர்த்தியான சங்கற்பம் வந்து அதை விட்டு எவனைவெளியில் தூக்கிவிடுகிறதோ அவனுக்குமேல் துர்ப்பாக்கியன் ஒருவனுமில்லை [எ - தி] வெகுகாவையாற் கிடைத்த ராஜசம்பாஷணை காலத்தில் கொல்லைக்குத்தடபுலாய் வருவது போலும்; பசியாற் போஜநம் பண்ணும்போது தொண்டையில் முள்தடுப்பதுபோலும்; ராஜ ஸ்திரீ போகம் கிடைத்தகாலத்தில் நித்திரையும், சுக்கிலமோசநம் வருவதும், லேபன மற்றுப் போவதும் போலவறிக.

மோக்ஷம் வேண்டுமென்று தபித்துக்கொண்டிருக்கும்போது, சத்குருநாதன் வந்து உன்னைக் காப்பாற்றுகிறேனென்று சொல்லிக் கூப்பிடும்போது, இவர் நம்மை என்னமோசம்பண்ணக் கூப்பிடுகிறாரோவென்று நம்பாமல் பயந்து ஓடுகிறான். [எ - தி] ரத்நம் தேடப்போனவனுக்குச் சித்தர்கிருபையால் அதிசுலபமாய் அகப்பட்ட ரத்நத்தை அவமதிப்புப் பண்ணிவிட்டு, மறுபடி ரத்நத்தைத்தேடிவெறுங்கல்லை ரத்நமென்று எடுத்துக் கெட்டுப்போனவன் கதைபோலும்; ஒருபுண்முதலானது வந்து வேதனைசகிக்கமுடியாமல் எப்படித் தீரப்போகிற தென்று தபிக்கும்போது, ஒரு வைத்தியன்வந்து புண்ணைக்கீறி ஆற்றுகிறதற்கும், உள்ளுக்கு எண்ணைகொடுத்து தார்மலங்களை கழிக்கிறதற்கும் யத்நம்பண்ணுகிறவனை விரோதியாயெண்ணி, வெளியில் விலகிப்போகிறவன்போலும்; பசியோடுகூடிய பிள்ளைக்கு மிட்டாய்கொடுக்கக் கூப்பிட அது ஓடுவதுபோலுமென்றறிக.

ஞாநம் வராமல் வந்ததுபோல அபிநயம் பண்ணுகிறவனுக்குமேல் சும்பனில்லை. [எ - தி] சாம்பன் கர்ப்பமாயிருக்கிறதுபோல அபிநயம்பண்ணித் துர்வாசர் சாபத்தால் குலத்தோடு கெட்டுப்போனகதைபோலும்; உபஸ்தத்தில் ரணம்கண்டிருப்பவள், எனக்குப் புண்ணெல்லாம் ஆறிப்போயிற்றென்று மூடிவைத்தமூடைபோலும்; பிரபுவாயிருக்கிற சம்பந்திவந்து இவனைக் குடும்பயோகக்ஷேமம் எப்படியென்று கேட்க, வெண்கலப்பானையை வெளியில் அடவுபோட்டுச்சம்பந்திவிருந்து நடத்தியிருந்தும், எனக்கு யாதொருவர் அபேக்ஷையுமில்லை, நீங்களும் சபரிவாரத்துடன் ஒருமாசம் வரை வசித்துப்போகலாமென்று சொல்லுகிற தரித்திரன்போலும்; உபசாந்தயோகியென்று பேர்வைத்துக்கொண்டுவந்தவன் கதைபோலும்; ராவணார்ச்சுநசந்நியாசம் போலுமறிக.

புருஷனானவன் தன்னுடைய சத்தியை முழுவதும் குடும்பத்தில் கழித்துவிட்டுக் குருவினிடத்தில் ஆத்மவிசாரம் பண்ணவந்தும், அந்த விசாரம் புத்தியிலேறாமற் போவதற்கு யுக்தி:—யௌவநம் முழுமையும் தாசியினிடத்திற் கழித்துவிட்டுச் சொந்தஸ்திரீயினிடத்தில் புத்திரோற்பத்திக்கு யத்நம் பண்ணும்போது சக்தியில்லாமல் விழிக்கிற மூடன் போலும்; கண்மாயில் ஜலம் வரும்போது அணைபோடாமல் தண்ணீரெல்லாம் ஓடிப்போன பிறகு அணைபோடுகிறவன்போலும்; ஆடுகிறகாலமெல்லாம் அவிசாரி ஆடி, சாகிறகாலத்திற் சங்கரா சங்கராவென்று சொல்லுவாளென்கிற பழமொழியைப்போலும்; கோவிற்குளங்களெல்லாம் கூத்தாடிவிட்டுக் குருசந்நிதானத்தில் அப்பா அய்யாவென்றுபெருமூச்சுடன் பரிதபிக்கிற பாலஸ்வாமி முதலானவர்கள் போலுமறிக.

கானலை ஜலமென்று கண்டு ஓடுகிற மான்போல, இந்த ஜீவர்களாகிய மானும் பஞ்ச விஷயமாகிய கானலைக்கண்டு, ராகத்துவேஷத்தினால் மயங்கிச் சாகிறார்களென்றறிக. [இ - து] சாகக்கிடக்கிறவன்வாயில் சித்தகுளிகையைச்

சித்தன்கொண்டுவந்து போட்டால் அவன் அதைவிழுங்காமல் உமிழ்ந்துவிட்டுக் கிட்டாத போளி ஆமைவடை சாப்பிடவேண்டுமென்று சொல்லுகிற மூடன் போல, துக்கியாயிருக்கிற இந்த ஜீவனுக்குக் குருநாதன் வந்து பிரஹ்மக்ஞாநத்தை அநுக்கிரகித்தால் அதையநுபவியாமல் பழையபடி துக்ககாரணமான விஷயாநுபவத்தையே பண்ணுவதற்கு, யாகாதிகர்மங்களையே செய்யவிச்சிக்கிறான். அதுவும் இவனாற்சரியாய்ச் செய்யமுடியாமல் வருத்தப்படுகிறானென்றறிக.

தனக்குச் சுவாதீநமாயிருக்கிற பிரஹ்மாநுபவஞ்செய்யாமல் தனக்கு அசுவாதீநமாயும், ஜடமாயும், அந்நியமாயும், கிரியாசாத்தியமாயுமிருக்கிற இகபரலோகங்களைக் குறித்துக் கர்மம், பக்தி, யோகங்களில் வீணாய் ஜீவர்கள் அலைந்து கெடுகிறார்கள். [எ - தி] ராஜகன்னிகை தன் பர்த்தாவையும், ராஜசுகத்தையும் விட்டுச் சோரபுருஷனை நம்பிப்போகும்போது, அவன் இவளை ஆற்றில் அம்மணத்தோடு நிறுத்தி அரைவஸ்திரத்தோடு ஆபரணத்தையு மெடுத்துக்கொண்டு ஓடிப்போனபின், அவள் அவதிப்பட்டகதைபோலும்; தன்வீட்டில் மிருஷ்டாந்நபோஜநஞ் செய்வதைவிட்டு எச்சிக்கலையிலிருந்த சோற்றுப் பருக்கைக்கு சும்பிக்கப்போகிறவன் போலுமறிக. [இ - து] தன்னிடத்திற் கற்பிதமான விருத்திகளின் சோதனையைப்பண்ணாமற் சோம்பலாய்ச் சும்மாயிருந்தவனுக்குப் பிரஹ்மாநந்தங் கிட்டாது. [எ - தி] ஊத்து இறைப்பதற்குச் சோம்பற்பட்டுச் சும்மாயிருந்தவனுக்குச் சுத்தஜலம் அகப்படாதது போலவென்றறிக.

மூடர்களிடத்தில், விவேகியையும், இந்தவிவேகத்தையும் சொல்லுகிறவர்களே நிந்திக்கப்பண்ணுகிறதாக ஆகும். [எ - தி] நல்ல தீக்ஷிதரைத் துலுக்கர்களிடத்திற் கூட்டிப்போய் இவர்கள் பெரியவர்கள் என்று காண்பித்ததும், அவர்கள் அவருக்குப் பூஜைக்காப்புப் போட்டகதைபோலும், நாகரத்நத்தைக் குரங்கின்கையிற் கொடுத்ததும் அது அதைப்பல்லாற் கடித்துக் கல்லில்வைத்துத்தட்டினகதை போலுமறிக.

ஜீவன் முட்டாள் என்பதை நிரூபிக்கிறோம்:—சவலைப்பிள்ளையானது அந்நத்தை வெண்கலப்பானையோடு போடென்று சொல்லுகிறதுபோல, எவ்வளவு சம்பாதித்தாலும் திருப்திவராமல் அலைகிறான். ஏனென்றால், இவன் புஜித்தால் அல்லவா திருப்திவரும், புஜியாமல் வேண்டுமென்று துக்கப்படுகிறான். தானும் நல்லவார்த்தை சொல்லுகிறதில்லை, சாதுக்கள் சொன்னாலும் ஆதரவோடு கேட்கிறதில்லை. நமக்கு ஒருபிள்ளை தானே யிருக்கிறது, இன்னம் பத்துப்பிள்ளையிருந்தால் பிள்ளையில்லாத எல்லாரும் பெண்ணைக்கொடுப்பார்கள், தத்தெடுப்பார்கள், அவர்கள் சொத்தெல்லாம் நமக்கு வருமென்று நினைக்கிறான். அவர்களுக்கும் இந்தப்பெண்கள் பிள்ளையாய்ப் பிறக்கவில்லையேயென்று தோன்ற

மாட்டாதா? தான் அநேகதுக்கங்களை அநுபவித்தும் நியோகிப்பிரபுவைப்போலும், ஸ்திரீகளைப்போலும், எப்படியாவது பிறர்நம்மை நல்லசுகியென்று சொல்லக்கேட்க ஆசைப்படுகிறதும் முட்டாள்தனம். ஜீவனுக்கு எவ்வளவு ஆயிசு ஐஸ்வரிய மிருந்தாலும் அழிந்து போமென்பதற்கு உதாரணம்:—சூரபத்மாசுரனைவன் தன் சரீரத்தை அறுத்து அறுத்து ஹோமம் பண்ணிப் பிராணனையும் விட்டபிற்பாடு ஈஸ்வரன்வந்து இவனை எழுப்பிவிட்டு, வேண்டியவரத்தைக் கேட்டுக்கொள்ளென்று சொன்னதற்கு, இவன் ஆயிரத்தெட்டு அண்டமும், நூற்றெட்டுச் சதுர்யுகம்வரை ஆயிசும் வாங்கினன். இப்போது எங்கேபோனன் சொல்க.

தர்க்காதி சாஸ்திரங்களைப் படித்துப்பிறரோடு அதைவாதம் பண்ணுகிறவர்கள் மூடர்கள். [எ- தி] மலக்கூபத்திலிறங்கி மலத்தை அள்ளி மற்றவர்கள் பேரிலும் வாரிஎறிகிறவன்போலவறிக. [இ - து] எலியானது துவாரமில்லாத பொந்தில் தலையை முட்டிமுட்டித் துக்கப்படுவதுபோல, இந்த ஜீவர்களும் தனக்குலபியாத விஷயத்திற் பிரயத்தநஞ்செய்து முற்றுப்பெறுமல் வருத்தப்படுகிறார்கள். [இ - து] மாயை மயக்குகிறதினல் துக்கம் வருகிறதே அதன்பேரில் குற்றமா? நம்மபேரில் குற்றமாவென்று விசாரித்தால், அதன்பேரிற் குற்றமில்லை, நம்மபேரில்தான் குற்றமென்று வேதமும் பெரியவர்களும் சொல்லுகிறார்கள். [எ - தி] ஒருவன் சிரவணகாலத்தில் தூங்கிவிழுந்தானேயானல், முட்டாளே தூங்காதேயென்று இவனைப்பார்த்து சொல்லுகிறார்களேதவிர, தூக்கத்தைப்பார்த்து ஒருவரும் சொல்லாதது போலவறிக.

ஜீவர்கள் நானின்னருக்கு இன்னகாரியம் சாதித்துக்கொடுப்பேன் கொடுக்கமாட்டேனென்று சொல்வதைக் கேட்டு, ஈஸ்வரன் சிரிக்கிறார். [எ - தி] ஒருகுடும்பத்திலுள்ள குழந்தைகள், நான் அவனுக்கு சாதம் போடுவேன் போடமாட்டேனென்று சொல்லுவதைக்கேட்டு யஜமானன் சிரிப்பதுபோலுமறிக. [இ - து] பிரஹ்மவிசாரத்திற்கு இப்போது அவசரமென்ன? பிராணன் போகிறபோது நான் பிரஹ்மமென்று அறிந்தாற் போதாதோவென்று சங்கை வந்தால், அப்படிவரக்கூடாது:—காசிக்குப்போகிறவன் கிளப்பவுசில் ஒருபவுனைக்கொடுத்து ஒருவேளை போஜநஞ்செய்து வந்து ரயிலில் ஏறும்போது மிச்சரூபாயை வாங்கிப்போவோமென்றுநினைத்து முதலை யிழந்தவன்போலத் தன் ஆயிசு ஆரோக்கியமுதலான சுகத்தை ஸ்திரீபுத்திரர்களிடத்தில் வைத்துப் பிராணன் போகும்போது, தன்னுடைய மோக்ஷசுகத்தைப் பார்த்துக்கொள்ளுவோமென்றிருந்தால், பவுனைப்பறிகொடுத்தவன் போலவாகுமென்றறிக.

ஈஸ்வரன் மனமுதலாகிய கரணங்களுக்குக்கருமப்படி சுகதுக்கங்களைத் தப்பாமற்கொடுத்து வரும்போது ஜீவன், எனக்கு அதைபுசிக்கக்கொடு இதைப் பொருந்தக்கொடுவென்று, அடிக்கடி கேட்கிறபோது அவர் இந்தக்கரணுதி

களுக்கு நியமமாய்க்கொடுப்பதையும் நிறுத்திப்போடுவதால், இவன் அதிக துக்கத்தை யடைகிருன். [எ - தி] ராஜாவானவன் பிராஹ்மணர்களுக்குக் கிரமமாய்த் தாநங்கொடுத்துவரும்போது, பரிசாரகன் தன்னைச்சார்ந்தவர்களாயிருக்கிறவர்களுக்குச் சிபார்சுபண்ணவேண்டு மென்கிற அபிமானத்தால் அவ்வரசனைப்பார்த்து இந்தச்சாஸ்திரிகளுக்கு இதைக்கொடுமென்றும், அவருக்கதைக்கொடுமென்றும் அடிக்கடி சொன்னல், அவர்களுக்கு அகப்படுகிற தக்ஷிணையும் போய்விடுவது போலவறிக.

ஜீவர்கள் தனக்கு ஒருதுக்கம்வந்தால் அதை எல்லாரையுமநுபவிக்கும்படி செய்கிருர்கள். இஃதொருமுட்டாள்த்தனம், இதற்கு உதாரணம்:—ஒரு கோமுட்டி, பிள்ளையார் தொப்புளில் கைவைத்துத்தேள்கொட்ட, பாகா இருந்ததென்று சொன்ன சொல்லைக்கேட்டுக் கூடவிருந்த ஆயிரம்பேரும் கைவைத்துக்கஷ்டப்பட்டகதை போலும்; ஒருமூக்கறையன் எல்லாரையும் மூக்கறையனய்ச்செய்தகதைபோலுமறிக. [இ - து] விஷயத்தில் நித்தியசுகமில்லையாவென்று விசாரிக்கில், அதிலில்லை. அப்படியானல் ஜீவர்கள் அச்சுகத்தை வேண்டுகிருர்களேயென்ருல், அதற்குயுத்தி சொல்லுகிருேம்:—ஜலதாரைவழியாய் வருகிற ஜலத்திற்காணப்படுகிற குமிழியைப்பார்த்து ஒருகுழந்தையானது தாயைப்பார்த்துமுத்துவருகிறதென்று சொல்லி அதையெடுத்துக்கொடு வென்றுகேட்பது போல, ஜீவன் இந்த விஷயசுகத்தை ஈஸ்வரனிடத்தில் கேட்கிறது அதற்குச் சமாநமென்றறிக.

ஐயா, இகத்தில் சுகமில்லாவிட்டாலு மிருக்கட்டும், பரலோகத்தில் சுகமில்லையா? [எ - தி] சமுத்திரத்தில் முன்னுலிருக்கிற ஜலம் உப்பாயிருக்கிறதென்று நினைத்துக் கப்பலேறி வெகுதூரம் போய் அங்கேயிருக்கிற ஜலமும் உப்பாயிருப்பது போல, இந்தமாயாமயமான சமுத்திரத்தில் முன்னுலான இகத்தில் எப்படிதுக்கமாகிற உப்பாகயிருக்கிறதோ அப்படியே புண்ணியமாகிற கப்பலேறிப் பரலோகமாகிற தீபாந்தரம் போய்ப்பார்த்தாலும், அங்கேயும் அப்படியே யிருக்கும், அங்கேபோனதற்கு விசேஷமென்ன வென்ருற் பிரயாசமாத்திரம் மிச்சமென்றறிக. [இ - து] விஷயத்திற் சுகமிருக்கிறதாக முட்டாள் நினைப்பதற்கு யுக்தி:—சுமையெடுத்து போகிறவன் சற்றுச் சுமைதாங்கியின் மேல் வைத்ததை சுகமென்று நினைப்பதுபோலும்; அழுகிற குழந்தைக்காரி சற்றே அது அழாமலிருந்ததைச் சுகமெனக் கருதுவதுபோலும்; தொடையை நிமுட்டுகிற வாத்தியாயர் பொடிபோட்டுக்கொள்ளக் கையை எடுத்தவேளையிற் சுகமெனக்கருதுகிற பிள்ளையைப்போலுமறிக.

ஜீவர்களுடைய முட்டாள்தன்மை நிரூபிக்கப்படுகிறது:—ஒரு விவேகவைராக்கியத்தைப் பத்துத் தடவை சொல்லியும் கேளாதவனிடத்தில் திரும்பச் சொல்லுகிறதும்; ஒருகாசு கையில்வைத்துக்கொண்டு ஒன்பது காசு சாமான்

வாங்கவிச்சிக்கிறதும்; மிருஷ்டாந்த போஜியைப்போல நாளைக்கு வருகிற சங்கதியை யோசியாமல் தோன்றினபடி நடக்கிறதும்; ரயிலில் கால்ரூபாய் டிக்கட்டுக்குக் கண்டமட்டும் போயகப்பட்டுக்கொண்டு தண்டனையும் துக்கத்தையுமடைகிறதும்; தரித்திரத்தோடுகூடினவன் ஒருவிஷயமுமில்லாமல் ஆசையால் கண்டபடி நினைக்கிறதும்; கர்மப்படி வரும்போது கூடிவரவேறு மென்று இவனாய் நினைத்துத் துக்கத்தை யடைகிறதும்; பரீக்ஷைக்குப் படித்துப் பாசுபண்ணிச் சிரமப்பட்டதும் தவிர, பெண்டாட்டியையும் கூட்டிக்கொடுத்து உத்தியோகம் வாங்குகிறதும்; எத்தன்கதைபோல ஒருஜீவனை ஒருஜீவன் வஞ்சிக்கிறதும்; சிதாகாசமான தன்னை மறக்கிறதும், மறதியாய்க் கொஞ்சகாலமிருக்கிறதும், அதின்பிற்பாடு நானென்கிற அகங்காரமுளைக்கிறதும், பிறகு தேகமேநான் இச்செகம் சத்தியமென்றிருக்கிறதும், இதில் அதிக திடமானவன்தான் மகாசும்பசிரோமணி. அஞ்ஞானமாத்திரத் தினலுண்டான இவ்வளவும் பாவனைமாத்திர மென்று விவேகி துணியவேண்டியதென்றறிக.

மந்தவைராக்கிய முள்ளவனுக்கு ஒருவித சந்நியாசங்களும் பலியாது. [எ - தி] குழந்தைகள் கோபத்தாற் பக்ஷணத்தை வெறுப்பதுபோலும், கோபம்வந்தவேளையிற் பெண்சாதிபிள்ளைகளை வெறுக்கிற மூடன்போலும், தீக்ஷதர் அக்கிரதாம்பூலங்கொடுக்கவில்லை யென்பதற்காகத் தக்ஷிணைதாம்பூலம் வேண்டாமென்று வெறுக்கிறவர் போலவறிக. [இ - து] உலகத்தில் குருவாக்கியமானது சுருதி யுக்தி அநுபவங்களுடன் கூடியிருந்தாலும், அபக்குவசித்தனுக்கு மூர்த்தி ஸ்தலம் தீர்த்தங்களைச் சொல்லுகிறவாக்கியங்களில் நம்பிக்கைவருகிறது. [எ - தி] சோரஸ்திரீ, புருஷார்த்தம் நாலையும் கொடுக்கிற தன்புருஷன்பேரில் ஆசைவராமற் சோரபுருஷனிடத்தில் ஆசைவருவது போலும்; ஆயிரம் ரூபாய் சம்பளம் வாங்குகிற அதிகாரி அஞ்சு ரூபாய்லஞ்சம் கொடுக்கிறவனிடத்தி லகப்பட்டுக் கொள்ளுவது போலுமறிக. இன்னும் வியாதிக்காரன் சித்தனுடைய குளிகையை நம்பாமல், தெற்கே தலைவைத்துப் படுத்தவனுக்கு ஆயிசு விருத்தியாகும், வடக்கே தலைவைத்தவனுக்கு ஆயிசு க்ஷயித்துப்போமென்ற வசனத்தை நம்புவதுபோலுமறிக.

இக்காலத்திலிருக்கிற முமுக்ஷுவைப்பார்த்து நீ பிரஹ்மஞானி யென்று சொன்னல் சந்தோஷமும், தேகாதிகளில் அகம்புத்தியும் விஷயத்தில் சத்தியபுத்தியால் வருகின்ற ஆசையும் விடென்று சொன்னல் துக்கிக்கிறனென்பதற்குயுக்தி:—தாசியானவள் போகத்திற்குக் கூப்பிடும்போது சந்தோஷப்படுவதும், ரூபாய்கேட்கும்போது துக்கப்படுவது போலுமறிக. [இ - து] ஜீவர்கள் விஷயத்தில் சத்தியபுத்தி பண்ணி ராகத்துவேஷத்திற் கட்டுப்பட்டுக் கர்மத்தால் வெகுசீக்கிரமாய்ச் சொர்க்க நரகத்துக்கு இழுபடுகிறார்கள். [எ - தி] திருடனை விலங்குபோட்டுச் சேவகன் நாலுபக்கத்திலும் இழுத்து போகிறதுபோலவென்றறிக. [இ - து] இந்தத் தேகத்துக்குப் பிதாமுதல் எறும்புவரை

யிலுள்ள ஜீவர்கள் நானவிதமாய் ஹிம்சித்துச் சதாதுக்கத்தைக் கொடுக்கிற தற்கு இருக்கும்போது, நாம் இதற்கு அந்நவஸ்திராதி தேடிக்கொடுத்து இதில் அபிமானிக்கிறது முட்டாள்தனம். [எ - தி] பிருகத்பீஜக் கோமுட்டிகள் ஒரு தாசியை வைப்பென்று சொல்லி அவளுக்கு மாசம் ஐம்பதுரூபாய் கொடுத்துத்தனக்கு ஒரு உபயோகமுமில்லாமல் ஊரிலிருக்கிறவர்களனுபவிக்கிறது போலவென்றறிக.

குடும்பத்திலிருந்து தானே எவ்வளவு வேதாந்த விசாரம் பண்ணினலும் விவேகமும் நிலையாமல் நழுவிப்போம், விஷய ஆசையும் போகாது. [எ - தி] பச்சைப் பானையிலே விட்டஜலம் போலவறிக. [இ - து] மோக்ஷத்திற்கு இப்போதென்ன அவசரம், இன்னம் கொஞ்சவேளை கழித்து யத்தநம் பண்ணுவோமென்று நினைத்திருக்கிறவன் மந்தனென்று சொல்லியிருப்பதே சுருதி. சமுத்திரத்தில் அலைஒழிந்த பிற்பாடு ஸ்நாநம்செய்ய நினைத்திருக்கிற மூடன்போலும், கல்யாணிஅம்மாள் கைக்காரியம் செய்த பிறகு கைலாசத்துக்கு வருகிறேனென்று சொன்னகதைபோலும், யுக்தி. இப்போதிருக்கிற முமுக்ஷுக்களே அநுபவம். [இ - து] ஜகத்தைக்குறித்து நாமிப்படியாகவேண்டும் அப்படியாகவேண்டாமென்று எண்ணுவதிற் பிரயோஜநமில்லை. [எ - தி] நாடகம் பார்க்கப் போனவன் இந்தவேஷம் வரவேண்டாம் அந்தவேஷம் வரவேண்டுமென்று புலம்புவதால் பிரயோஜந மில்லாததுபோலவறிக. [இ - து] அஞ்ஞாநி வாலிபமுதல் எந்தவெந்த அவஸ்தையிலிருந்தாலும், ஒருபிரயோஜநமுமில்லை, [எ - தி] குருடனைக் கூத்தாடுகிற இடத்திற்குள் எங்கேவைத்தாலும் விசேஷமில்லாதது போலும், கிழுக்கனை எந்தப்பதவியில் கொண்டுவந்து வைத்தாலும் பிரயோஜநமில்லாதது போலுமறிக.

எவ்வளவு கர்மங்களைச் செய்தாலும் தேகாத்மபுத்தி போகாது, மேற்கொண்டு அதுவிருத்தியாகும். [எ - தி] சகதியோடு கூடினவன் சுவர்வைக்க வைக்கச் சகதி யேறுவதுபோலுமறிக. [இ - து] பிரயோஜநமில்லாமற் போனலும் இந்திரியங்கள் விஷயங்களில் ஓடும். [எ - தி] மேளதாளசப்தங்களைக் கேட்டமாத்திரத்தில் குழந்தைகள் ஓடுவது போலவறிக. [இ - து] பிரஹ்மவிசாரத்தால் தன்னை அறிவதைவிட்டுத் தனக்கந்நியமாயும், மாயாம்சத்தோடு கூடியுமிருக்கிற சிவா சங்கராவென்ற நாமங்களைச் சொல்லிப் புண்ணியத்தை அடைவது- ராஜகுமாரன் பட்டாபிஷேகம் செய்துகொள்வதால் ராஜாவாகிறதை விட்டுஅந்நியராஜ்ஜியத்திற் போய்ப் பரீக்ஷைகொடுத்துக்காத்து மாசம் பத்துரூபாய் சம்பளத்துக்கு வேலைக்குப் போவதுபோல வறிக. [இ - து] ஜீவனுக்கு உன்னைப்போல இல்லையென்று ஸ்தோத்திரம் செய்து விட்டால், ஓயாமல் சாகிறவரைக்கும் அலைந்துக்கொண்டே யிருப்பன். [எ - தி] கன்றுக்குட்டி வாலில் பனைஓலையைக் கட்டிவிட்டால் ஓயாமல் ஓடித்தவித்து விழுவதுபோல வறிக. [இ - து] மனதுக்குத் தேகாபிமானம் செய்து கருத்துருத்துவத்தை

வகிப்பது சுகமாயும், சொரூபத்திலசைவற்றுச் சுகமாயிருப்பது துக்கம்போலத் தோன்றும். [எ - தி] விறகுகட்டுத் தூக்கிபோகிறவனை அரசன் பார்த்து விறகுக்கட்டைப் போட்டுவிட்டுச் சிம்மாசநத்திற் சுகமாய்த் தொழிலின்றி இருவென்று சொன்னால், அவன் வருத்தப்படுவது போலவறிக.

சந்நியாசிகள் வியாச பூஜை செய்யவேண்டுமென்று சம்பாதித்துத் தங்களுக்கு ஒரு பிரயோஜநமுமில்லாமல் கிருகஸ்தர்களுக்குப் போஜநம் பண்ணிவைத்து அவர்கள் ஸ்தோத்திரம் பண்ணுவதைக்கேட்டு மகிழ்கிறார்கள். [எ - தி] திருக்கோஷ்டியூர் சாமண்ணையங்கார் எஜமானனென்று பேர்கேட்பதற்காக லக்ஷம் ரூபாய் வரை ஏழைகளுக்கு கடன் கொடுத்து அவர்கள் எழுதிக்கொடுத்த எஜமான்சாமண்ணையங்கார் என்ற பத்திரங்களைக் கோர்ட்டில் பிராது மூலமாய் ஸ்தாபித்துத் திருப்தியடைந்தது போலுமறிக. [இ - து] ஞாநியானவன் சாக்ஷியே நானென்ற நிச்சயத்தை விடாதிருந்தாலும் அவனுடைய திரிகரணங்களுடைய சேஷ்டையை மூடர்கள் கண்டு, அவன் பேரில் அந்தக்கருத்துருத்துவங்களைச்சொல்லுகிறார்கள். [எ - தி] ஒரு அரசன் மகாஉபசாந்தனாயிருந்தாலும், அவனுடைய அரண்மனையிலிருக்கிற சேவகன் டபேதார் ஜமீதார் முதலானவர்களுடைய அடாபிடியைக்கண்டு, பட்டிக்காட்டு ஜநங்கள் ராஜா அடாபிடி செய்கிறாரென்று சொல்லுவது போலும், நித்திரைபண்ணுகிறவனுடைய கால்கைகள் மேலே விழுந்ததை அவனதை அறியாமலிருந்தும், இவர்களவன்பேரில் அதைச்சொல்லுவது போலுமறிக.

தேகாதி ஜகத்துப்பொய், பிரஹ்மமே நீ யென்று ஒருவார்த்தையில் முடிக்காமல் வசிஷ்டாதிகள் பைத்தியக்காரர்போலச் சொன்னதையே நூறுதடவைசொல்லியிருப்பதால் பைத்தியக்காரர்கள். [எ - தி] சிசுநத்தையும், உபஸ்தத்தையும், எறும்பு மொய்க்காமலிருப்பதற்காக ஒற்றைக்கௌபீநம் போதுமானதாயிருக்கும்போது நூறைம்பது ரூபாய் செலவுசெய்து சேலை வேஷ்டி வாங்கிக்கட்டிக்கொண்டு மறைப்பது போலவறிக. ஆனால் அவர்களை அப்படிச்சொன்னது விநோதார்த்தமே தவிர வாஸ்தவமில்லை. அவர் அநந்தந்தடவை அப்படிச் சொல்லியும் அதை நம்பி யாரும் முக்தியடையாமலிருப்பதைப் பற்றி அப்படிச் சொல்லப்பட்டார்கள்.

ஐயா, இப்போது ஜீவர்கள் முட்டாளென்று பொதுவாய்ச் சொல்லிவந்தீர்களே அதைக் கதைமூலமாய் அறிவிக்கவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரம் சொல்லுகிறேன் கேள்:—ஒருபிள்ளையார் கோவிலில் எட்டுப் பேர்கள் உட்கார்ந்திருக்கும்போது, வீதியிற் போகிற ஒரு தாசி கும்பிட்டுவிட்டுப்போனதைக்கண்ட அந்த எட்டுப்பேர்களும் தங்கள் தங்களைக் கும்பிட்டதாகக் கலகம் பண்ணிக்கொண்டு, மரியாதைராமனிடத்திற் போய்த் தெரிவித்ததில்,அவர் அந்த தாசியைக் கூப்பிட்டு நீ யாரைக்கும்பிட்டாயென்று கேட்கும்போது, அவள்

மூடனைக் கும்பிட்டேனென்று சொல்லவும், இவர்கள் ஒவ்வொருவரும் நான்தான் மூடப்பட்டம் பெற்றவனென்று சொன்னதும், எப்போ எங்கே இதைப் பெற்றீர்களென்று கேட்டவுடன், அதிலொருவன் நான் மாமியார் வீட்டுக்குப் போயிருந்த காலத்தில் சாப்பிடும்போது, அவள் தோசை கொண்டுவந்து போட வந்ததில், எனக்கதுபிடியாதென்று சொன்னதும் அவள் கொஞ்சம் போட்டு விட்டுப்போனதை, நான் அதைத்தின்றதில் ரிம்பவும் ருசியாயிருந்ததால் திரும்ப நிரையச் சாப்பிடவேண்டுமென்று இச்சையும், வெட்கமும் வைத்துக் கொண்டு யிருக்கும்போது, ஒருநாள் மாமியார் தோசைமா அறைத்துக் கொண்டிருக்கிறமத்தியில், ஒன்றுக்குப்போனசமயத்தில் நான் அந்த மாவிற் கொஞ்சம் கைநிரைய எடுத்து வாயிற்போடும்போது, அவள் வந்ததைக்கண்டு, வாயைமூடிக்கொண்டிருந்ததை அவள் கண்டு "ஓ மாப்பிள்ளை! கன்னங்கள் வீங்கியிருக்கிறதே" யென்று கேட்டதற்கும், நான் சும்மாயிருந்ததைக் கண்டு, ஓகோ! கோ! மாப்பிள்ளைக்கு என்னமோ வாயடைத்துப் போயிற்றே யென்று கூக்குரற் போட்டதை, ஊரிலுள்ள அனைவரும் ஓடிவந்து பார்த்து வியசனித்து இருக்கும்போது, அதில் ஒருவைத்தியன் தாது பரீக்ஷை பார்த்ததில் கையில் வாதபித்த சிலேஷ்மங்களான தாதுக்கள் ஒன்றோடொன்று சேராமற் சரியாய் நடக்கிறதேயென்று ஆலோசித்து, வேகமாயிந்தக்கன்னத்திலொரு அறை அந்தக்கன்னத்திலொரு அறை ஜோடியாய்க்கொடுத்ததும், என் வாயிலிருந்த மாமுழுவதும் கக்கினபின், சகலரும் என்னைப்பார்த்து என்ன காரணமென்று கேட்டதும், நான் தோசைதின்னவேண்டுமென்ற ஆசையால் இப்படி மாவை எடுத்துத் தின்னேனென்று நடந்ததையெல்லாம் சொன்னதைக்கேட்ட அவர்களெல்லாருஞ் சேர்ந்து, அடே முட்டாளே! நீ தோசை வேண்டுமென்று ஒரு வார்த்தை சொல்ல வெட்கப்பட்டு ஊரிலுள்ளவர்க ளெல்லோரையு மிப்படி அழவைத்தயே, அதனால் நீ முட்டாளென்று எனக்கு பேர்வைத்தார்கள். ஆகையாலிந்தக்கும்பிடு எனக்குத்தானென்று சொன்னான். அதைக்கேட்ட மற்றொருவன், நான் மாமனார் வீட்டுக்குப்போயிருந்த காலத்தில் என்னுடைய மனைவியும் நானும் படுக்கையறையிற் போயிருக்கும்போது, மாமியார் ஐந்து அப்பம் வார்த்துக் கொண்டுவந்து வைத்திருந்ததை நாங்களிருவரும் ஒருவருக்கொருவர் எனக்கு மூன்று எனக்கு மூன்று என்று வெகுநாழிகை கலகம் பண்ணிக்கொண்டிருந்ததில், கடைசியாக இருவரும் மூச்சைப்பிடித்துக்கொண்டு இருக்கிறது. யார் முந்தி மூச்சை விட்டார்களோ அவர்களுக்கு அப்பம் இரண்டென்றும், பிந்தி மூச்சு விட்டவர்களுக்கு மூன்றென்றும் உறுதி பண்ணிக்கொண்டு, அப்படியே விடிந்து ஜாமம் வரை மூச்சுப் பிடித்துக்கொண்டு கட்டை போலே கிடக்கும்போது, மற்றவர்களெல்லோரும் வந்து பார்த்து, இருவரும் இறந்துபோனார்களென்று வியசனித்து அழுதுக்கொண்டு, இருவரையும் பாடை கட்டி மசானத்திற்குக் கொண்டுபோய், சிதையில் என்மனைவியைக் கீழேவைத்து, என்னை மேலே வைத்துத் தீயைக்கொழுத்தினதும், அந்தச்சூடு சகிக்க

முடியாமல் உடனே நான் எனக்கு இரண்டு அப்பம் போதுமென்று எழுந்திருந்தவுடன், என்மனைவி உடனே எழுந்திருந்து நான் பிந்தி எழுந்திருந்ததால் எனக்கு மூன்று அப்பமென்று சொன்னதைக் கேட்ட அனைவரும் அதிசயப்பட்டு, சுடுகாடுபோன பிணம் சுயமாய் எழுந்திருக்குமா வென்று, என்னைப் பார்த்து அனைவரும் சங்கதியென்னவென்று விசாரிக்கும்போது, நான் நடந்த சங்கதியைத் தெரிவித்ததில், அடேமுட்டாளே! ஆளுக்கு இரண்டரையாய்ப் பிரித்து எடுத்துக்கொள்ளாமல் ஏனிப்படி மூச்சைப்பிடித்துக்கொண்டு பிணமாய்ச் சுடுகாட்டில் சிதையில் வைக்கும்வரைச் செய்ததால் நீ முட்டாளென்று எல்லாரும் சேர்ந்து பேர்கொடுத்தார்களாகையால் எனக்குத்தானந்தகும்பிடு என்று சொன்னதைக் கேட்ட மற்றொருவன், நான் மாமனார் வீட்டுக்குப் போகும்போது தாயினுத்தரவுப்படி மலிந்தபதார்த்தம் வைக்கோல்தானென்று வாங்கித்தலையில் வைத்துக்கொண்டு போகும்போது, அங்கே ஒரு வாய்க்காலிலதைப்போட்டு இழுத்துப்பார்த்ததில் முடியாமலதை விட்டுவிட்டு நான்மட்டும் வாய்க்காலைத் தாண்டும்போது, வீசியிருந்தவலையில் விழுந்ததும் அந்தவலைக்காரன் முரட்டு மீனகப்பட்டதென்று கரையிலிழுத்தவுடன் என்னைப்பார்த்து அடித்து ஏன் வலையில் வந்துவிழுந்தா யென்று கேட்கும்போது, தெரியாமல்விழுந்தேனென்று நலம்சொன்னபின், அவன் அகப்படவேண்டும் பிடிக்கவேண்டுமென்று சொல்லிக்கொண்டு போகச்சொன்னபடி போகும்போது, திருடர்கள் பின்னால்வந்து உதைத்து இப்படிச் சொல்லிக்கொண்டு போகாதே இந்தநடை கொண்டுபோய் வைத்துவிட்டுத்திரும்ப இன்னமொரு நடை கொண்டுபோக வேண்டுமென்று சொல்லச்சொன்னபடி சொல்லிப்போகும்போது, அங்கே ஒருவீட்டில் இரண்டுபிள்ளைகளுக்கு பேதி எடுத்ததில் ஒன்று செத்துப் பாடைகட்டிக்கொண்டும், மற்றொருபிள்ளை சாகக்கிடக்குஞ் சமயத்தில் நான் இந்தநடை கொண்டுபோய் வைத்துப்போட்டு இன்னமொருநடை கட்டிக்கொண்டு போகவேண்டுமென்று சொன்னதைக்கேட்ட அவர்கள் அடித்து அருமந்தபிள்ளைக்கு இப்படி வரலாகாதென்று சொல்லச்சொன்னபடி, அங்கேயொரு கலியாணவீட்டிற்குப்போய் அழுதுகொண்டு அருமந்தபிள்ளைக்கு இப்படிவரக்கூடாதென்று சொன்னதைக்கேட்ட அவர்களும், அடித்துக் கலியாணம் வெகு சம்பிரமம் என்று சொல்லச் சொன்னபடி சொல்லிப்போகும்போது, அங்கே ஒருஊரில் தீப்பட்டு எரிகிறவிடத்தில் கல்யாணம் வெகுசம்பிரமம் என்று கூத்தாடுவதைக்கண்டு, அவர்களும் பூஜைகொடுத்து மழைபெயவேண்டும் அணையவேண்டுமென்று சொல்லச் சொன்னபடி, நானும் சொல்லிப்போகும்போது, அங்கே ஒருகுயவன் தீயைச்சூளையில் மூட்டி வானத்தைப் பார்த்திருக்கும்போது, மழைபெயவேண்டும் அணையவேண்டுமென்று சொன்னதைக் கேட்ட அவனும் அடித்து, வந்தமழைபோகவேணும் போட்டிருக்கிறதெல்லாம் காய்ந்து வெந்து போகவேணுமென்று சொல்லிப் போகச்சொன்னபடி போகும்போது, அங்கே ஒருபிரபு மழையில்லாமற் பயிரெல்லாம் தீஞ்சுபோகிற

தென்று பிராமணர்களையெல்லாம் வரவழைத்து, வருணஜெபம் ஓர்மண்டலம் செய்யச்சொல்லி நடந்துவரும்போது, கொஞ்சம் மேகாவரணமாயிருக்குஞ் சமயத்தில், நான் வந்தமழையும் போகவேண்டும், போட்டதெல்லாமெரிந்துப் போகவேண்டுமென்று சொன்னதைக்கேட்ட அவர்களடித்து மிதித்து, நீ இப்படியேன் சொல்லுகிறாயென்று கேட்டதற்கு, நான் ஆதிமுதல் உதைபட்டு வந்ததையெல்லாம் சொல்ல, அவர்கள் கேட்டு நீ சமயோசிதமாயிடம்பார்த்துச் சொல்லத்தெரியாமற் சொன்னதால் முட்டாளென்று பெயர்கொடுத்தார்களென்றறிக.

அஞ்ஞாந காலத்தில் யாதொரு நீதியுமில்லை [எ - தி] :—அநியாயராஜன் செட்டிக்கும் வண்ணனுக்கும் வழக்குதீர்த்துவிட்ட கதைபோலும், கழுவிற்கேற்ற கோமுட்டியைத் தூக்கிற்போட்ட கதைபோலுமறிக. இக்கதையைத் தாஷ்டாந்தத்தில் நிரையே அறியும்விதம் என்னவென்றால், மனசாகிற வண்ணனுடைய இந்திரியங்களாகிற கழுதைகள், ஜீவனாகிற செட்டியினுடைய புண்ணியமாகிற கறிகாய்த்தோட்டத்தில் மேய்வதை ஜீவனாகிறசெட்டி கண்டு, இந்திரியங்களாகிற கழுதைகளுடைய, விஷயநாட்டமாகிற கால்களை, நிரோதமாகிற தடியாலடித்து தடுத்ததைப்பற்றி, மனசாகிற வண்ணன் மனோராஜ்ஜியமாகிற கையால்,ஜீவனுடைய சத்துவகுணமாகிற ஸ்திரீயின்,ஞாநகர்ப்பத்தை யடித்துக் கரைத்துப் போட்டதைப்பற்றி, இருவரும் கலகம் பண்ணிக்கொண்டு, அஞ்ஞாநனென்கிற அநியாய ராஜாவிடத்தில் பிராது செய்ததன் பேரில், அவ்வரசன் இவ்விருவர்களுக்கும் வந்திருக்கிற சமமான ஆபத்தைப் பார்த்துத் தீர்ப்புச் செய்த விவரமாவது:—ஓ ஜீவனாகிற செட்டியாரே! இந்திரியங்களாகிற கழுதைகளுடைய பிரவர்த்திகளாகிற கால்களை, நீர் நிரோதமாகிற தடியாலடித்துக் கெடுத்ததால், பிரவர்த்திகளாகிற கால்கள் ஸ்வஸ்திதியை யடையும்வரை, அவைகள் தூக்குகிற கருத்துருத்துவங்களாகிற வேஷ்டிப்பொதிகளை நீர் சுமக்கக்கடவீர் என்றும், அடே மனசாகிற வண்ணனே! நீ ஜீவனுடைய சத்துவகுணமாகிற பெண்சாதியின் ஞாநகர்ப்பத்தைக் கெடுத்ததால், திரும்ப அவள் அந்தக்கர்ப்பத்தைத் தரிக்கும்வரை அவளோடு ரமிக்கக்கடவாயென்று தீர்ப்புச் செய்தபிரகாரம், இந்த ராஜ்யத்தில் இதுவரை இப்படியே நடந்துவருகிறதென்றறிக.

மேற்படி ராஜாவின் காலத்தில் மேற்படி ராஜ்யத்திலிருக்கிற ஒரு அந்நமயமாகிய வீட்டிலிருக்கிற விவேகாதி சொத்துக்களை அபகரிக்கும் நிமித்தம் பிரவேசிப்பதற்காகக் காமாதி கள்ளர்கள், இச்சை முதலான வியாதியாகிற கன்னம் வைத்துக் காமனென்கிற தலைமைக் கள்ளன் நுழைந்த மாத்திரத்தில், நடுவில் துக்கமாகிற சுவர் விழுந்து அவன் மரித்ததைப் பற்றிக் குரோதாதிகளான மற்றைக்கள்ளர்கள் மேற்படி ராஜாவினிடத்திலிந்தக் கொலைக்கேசைப் பற்றிப் பிராதுசெய்ததில், மேற்படி அரசனும் மேற்படி வீட்டுக்காரனை அந்நமயனைக் கூப்பிட்டு, இப்படிக்கொலை நடக்கும்படியாக ஏன் துர்ப்பலமான சுவர்வைத்தா

யென்று கண்டிக்கும்போது, அவன் எனக்கொன்றும் தெரியாது, பிராணமய ஞன கொத்தனிப்படிச்சுவர் துர்பலமாய் வைத்ததைப்பற்றி அவனைக் கேட்க வேண்டுமென்று சொன்னபடி, அரசன் அவனை வரவழைத்துக் கேட்டதற்கு, அவன் சொன்னதாவது:—மனோமயனென குசவன் அளவுக்கு மிகுந்த சங்கற்ப மான பானையை யுண்டுபண்ணிக் கொடுத்ததால் இப்படி இந்த சுவர் கொளகொளவென வைக்கும் படியாய் நேரிட்டது என்று சொன்னபின், அந்த ராஜா அவனையும் கூப்பிட்டு, நீ யேனிப்படிப் பெரியபானை செய்தா யென்று கேட்கும்போது, அவன் நானென்னசெய்வேன் புத்தியாகிற தாசி எனக்குமுன் போக்குவரத்தாயிருந்ததால், அவளைப்பார்த்து மயங்கிப்போயிப் படிப் பெரியபானையாய்க் கற்பித்தேனென்று சொன்னபின், அவ்வரசன் அவ ளையும் வரவழைத்து, நீ யேன் அவனுக்குமுன் இப்படித் திரிந்துகொண்டிருந் தாய் என்று கேட்க, அவள் ஆநந்தமயன் என்கிற தட்டானிடத்தில் பிரிய மோதப் பிரமோதங்களாகிற நகைகளைப் பண்ணப் புண்ணியபலமான சுக மென்கிற தங்கத்தைக் கொடுத்திருப்பதால், அவனப்படிச்சரியாய் அந்த நகை களைப் பண்ணிக்கொடாதபடியால், அவன் வீடாகிற சுழுப்திக்குப் போக்கு வரத்தாக இருந்தேனென்று சொன்னபின், அவ்வரசன் அவனையும் கூப்பிட்டுக் கேட்டதற்கு, அவன் பதிலொன்றும் சொல்லாமலிருந்ததால், அவனை அறியா மையாகிறகழுவிற் போடும்படி தீர்மானித்த பிரகாரம் யத்தனிக்கும் சமயத்தில், அவ்விடத்தில் ஜீவனாகிற கோமுட்டி வேடிக்கைப் பார்க்க வந்திருந்தான் அவ னைப்பார்த்து ஆநந்தமயன் அவ்வரசனிடத்தில் இந்த அறியாமையாகிற கழு வுக்கும் அவிவேகனாகிற பொத்தக்கோமுட்டிக்கும் சரியாயிருக்கிறதென்று தெரிவித்தபடி, ராஜாவும் அவனை அறியாமையாகிற கழுவிற் போடும்படி உத்த ரவு கொடுத்தாரென்றறிக.

## 44 - வது, தரங்கம்.

அபக்குவிக்குப் போதிப்பதிற் சற்குருவாலும் முடியாது:—

குரு எப்பேர்பட்ட மந்தனுக்கும் போதிக்கிறதில் எவ்வளவு சதுரனா னாலும், அபக்குவியாயும், அரசிகனாயும், அகங்காரியாயும், பிடிவாதமுள்ளவ னாயும், ஜீவகற்பிதத்தில் மயங்கினவனாயும், நித்ராலஸ்யமுடையவனாயு மிருக்கிற புருஷனுக்குப் போதித்து அஞ்ஞாநத்தைப் பேதிக்கமுடியாது. [எ - தி] எப்பேர்பட்ட போகசதுரனானாலும் கன்னிகையின் யோனியைப் பேதித்து உள்ளே சிசுநம் நுழையப்பண்ணமுடியாதது போலும், அதி சூரனானாலும் அதி கூர்மையான கத்தியைக்கொண்டு கல்லைப்பிளக்க முடியாதது போலுமறிக. [இ - து] இந்த பிரஹ்மஞானத்தை அபக்குவிகளுக்குச்சொன்னால் அநர் த்தம்வரும். [எ - தி] ஒரு வித்தியார்த்தி பிக்ஷைக்குப் போனவிடத்தில் தக்கைபோட்ட பெண்குழந்தையின் காதில் சிசுநத்தை விட்டகதைபோலும், ஜாடையில் வாராதவளை இழுத்தவன் உதைபட்ட கதைபோலுமறிக.

எவ்வளவு புத்திசாலியாயிருந்தாலும் துவித மதங்களுக்குள் ஒருமதத்தில் முக்கியமாய் விழுந்திருக்கிறவனுடைய மனதைக் குருநாதன் அத்வைத போதனையால் திருப்பமுடியாது, அப்படி விழாதிருக்கிறமனது எவ்வளவு முரடாயிருந்தாலும் திருப்பமுடியும். [எ - தி] சண்டைக்காரியாயிருந்த தாய்க்கு ஒரு பெண்பிறந்தது. அது அவளைக் காட்டிலும் பத்துப்பங்கு அதிகச்சண்டைக்காரியாயிருந்ததால், பக்குவமாயும் பர்த்தாகிட்டாமலிருக்கும்போது, வடதேசத்துப் பிரஹ்மசாரி ஒருவன் வந்ததும், இந்தப்பெண்ணைத் தகப்பன் கலியாணஞ்செய்து கொடுத்தபின், இந்தப் பெண்ணை அவனோடுகூட அநுப்பிவிக்கும்போது, மாப்பிள்ளை கேட்டபடி ஒருகத்தியும், கோழி ஆடு காக்காய்களையும் கொடுத்து அநுப்பியபின், மாப்பிள்ளை வழியிற்போகும்போது விடிய ஜாமத்துக்குக் கோழி கூப்பிடவும், பேசாதே வெட்டிப்போடுவேனென்று இவன் சொல்லியும், அது திரும்பக்கத்தினதும், உடனே கத்தியாற்கண்டம் கண்டமாய் வெட்டினன், அப்படியே காக்காய்கத்தினதையும், ஆடுகனைத்ததையும் கண்டு, உடனே அவைகளையும் வெட்டிப்போட்டான். அதன்பின் தன்வீட்டுக்குக் கூட்டிபோய் தினம் இரண்டு நாழிகை கத்தியைத்தீட்டிப் பெட்டியில் வைக்கிறதையுங் கண்ட, அந்தப்பெண் பயந்து நடுங்கிக்கொண்டு வீட்டைவிட்டு வெளியில் ஒன்றுக்கும் போகாமல் வேண்டியசாமான்களுக்கு எழுதிக்காண்பித்துக்கொண்டு சிலநாள் வருங்காலையில் தகப்பன் பெண்ணைப் பார்க்கவரவும், அவனுடன் கூடப்பேசாமல் அறைக்குள் ஒளிந்து பின் மாப்பிள்ளை வந்ததன் பேரிற் சங்கதியைக்கேட்டு ஒரு பேச்சுக்கு உத்தரவுகொடுத்ததின் பேரில், அவள் வாருமென்று சொல்லிவிட்டு மௌநமாய்ப் போனபின் அந்தமாமனும் ஊருக்குள்ளே பெண்ணைப்பற்றி விசாரித்ததில் அவர்கள் இவளுக்குச் சமாநம் அருந்ததியைக்கூடச் சொல்லக்கூடாதென்பதையும் கேட்டுச் சந்தோஷித்து ஊருக்குப்போகும்போது, வழிஅநுப்பிவிக்கவந்த மாப்பிள்ளையினிடத்தில், பெண்ணுக்குக் கொடுத்த மருந்தை உன்மாமிக்கும் கொடுமென்று கேட்க, முத்தினமரம் வளையாததுபோல, அவளிடத்தில் என்மருந்து பலியாதென்று சொல்லி அநுப்பிவித்த கதைபோலறிக.

அபக்குவ சித்தமுள்ளவன் குருவின் சமீபத்திலிருந்தாலும், அவருக்கும் சுகம் கொடாமலும், அவரநுக்கிரக சுகத்தைத் தானும் பெற்றுச்சுகிக்காமலும், தத்துவஞானத்தைப் பெறாமலுமிருந்து, பக்குவசித்தனை பிறகு அந்த மூன்றையுமடைவன். [எ - தி] பக்குவமாகாத கன்னி பர்த்தாசமீபத்திலிருந்தாலும், அவனுக்கும் சுகம் கொடாமல், அவன் சுகத்தைத் தானும் பெறாமலும், புத்திரனையடையாமலுமிருந்து, பக்குவமான பிறகு அந்த மூன்றையும் பெறுவதற்கு யோக்கியமாவது போலவறிக. [இ - து] அபக்குவிகளுக்கு அநாத்மாவில் அபிமானமாகாது என்றுசொன்னால், ஆரையோ சொல்லுகிறார்களென்று நினைப்பார்கள். [எ - தி] சும்மா சாப்பிடப்போனவனைப்பார்த்து

கூப்பிடாதபேர்கள் வெளியில் போகலாமென்று சொன்னால் சாப்பாட்டிறுசை யால் அவன் அதைக் கவனியாமல் முன்போல இருப்பதுபோலும், தாசிமயக்க முள்ளவனைப்பார்த்து பரஸ்திரீகமநம் தோஷமென்று சொன்னால் அவனதைக் கவனியாதது போலுமறிக. [இ - து] விவேகியானவன் மூடர்களிடத்தில் விவேகத்தைச் சொன்னால் அவர்களுக்கு உள்ளில் இறங்காதகுற்றம் விவேகிக்கே. [எ - தி] ராஜன் வேட்டைக்குப் போனவிடத்தில் வேடர்களிடத்தில் ரத்நங்களை விலைமதிக்கச் சொன்னது போலும், கண்டாமணிசாஸ்திரி அம்மய நாயக்கருடைய அரண்மனையிலிருக்கிற பஞ்சாங்க அய்யருடன் பிரசங்கம் பண்ணின கதைபோலுமறிக.

மந்தபுத்திக்குக் குருசன்னதியில் நான் பிரஹ்ம மென்று தோன்றும், வெளியிற்போனால் அந்தப்புத்தி மறந்துபோம். [எ - தி] அழுக்கு வஸ்திரத்தைக் குசும்பாச்சாயத்தில் நனைத்த காலத்தில் அந்தவர்ணமாய்த்தோன்றித் தண்ணீரில் அலசும்போது அந்தவர்ணம் போய்ப் பழையகரித்துணியாய்ப் போவதுபோலவறிக [இ - து] தமோகுணமுடையவனுக்கு ஞாநம் உண்டாவது பிரயாசம். [எ - தி] தூங்குமூஞ்சிக்குத் தூரத்திற்போய் விவசாயம் பண்ணுவது பிரயாசம்போலவறிக. [இ - து] முமுக்ஷுக்களுக்கு இஷ்டம் போலச் சங்கற்பம் வருகிறது, பின்னால் அநந்த துக்கமுண்டாகிறது. [எ - தி] மித்திரன்போலக் கூட்டிக்கொண்டுபோய்க் கழுத்தறுக்கிறவன் போல்வாம், அதற்குக்குருசொன்ன உளவால் அந்தச்சங்கற்பம் வரும்போது நான் சாக்ஷியென்ற விருத்தியான கத்தியால் வெட்டவேண்டுமென்றறிக. [இ - து] மதம்பிடித்த யானையை இலேசான தாமரைநூலாற் கட்டினாலும் கட்டிடலாம்; வஜ்ஜிரக்கட்டியை வாகைப்பூவால் துளைத்தாலும் துளைக்கலாம்; ஒரு தேன்சொட்டால் உப்புசமுத்திர முழுதையும் தித்திப்பாகப் பண்ணினாலும் பண்ணலாம்; தேகமே நாம், ஜகத்துச் சத்தியமென்று நம்பியிருக்கிற மூடனுக்கு இந்தப் பிரஹ்மாநந்தாமிர்த வருஷத்தைக் கற்பகோடிகாலம் வருஷித்தாலும் ஞாநம் வராது.

அபக்குவியானவன் அருமையான ஆசானண்டையிலிருந்தாலும் அவர் மகிமை அறியான். [எ - தி] பிறவிக்குருடன் புத்திர களத்திர ரத்திநாதிகளின் சௌந்தரியத்தைப் பாராதிருப்பதுபோலும், சர்ப்பம் தன் சிரசிலிருக்கிற ரத்தினத்தைத் தெரிந்துகொள்ளாதது போலும், மகரமச்சமானது தன் கடைவாயிலிருக்கிற வைரமணியை அறியாததுபோலும், ஹம்சமானது தன் இறகிலிருக்கிற தங்கத்தை அறியாததுபோலும், அட்டை தப்பளை முதலானவை தன் கிட்டவிருக்கிற தாமரைப்பூவின் வாசனையை அறியாததுபோலுமறிக. [இ - து] சற்குருவானவர் சீடனுடைய பக்குவம் பாராமல் எல்லாம் பிரஹ்மமென்று உபதேசித்தால் அது அவனைக்கெடுக்கும் என்பதற்கு சுருதி புத்தி அநுபவங்களாவது:—அதில் சுருதி, வாசிஷ்டத்தில் அபக்குவிக்கு இந்த

ஞானத்தைக் குரு உபதேசஞ்செய்தால் அந்த சிஷ்யனைக் கொடியநரகத்தில் அந்தக்குருவே தள்ளின தாகுமென்று சொல்லுகிறதுதான். யுக்தி:—மந்திரோபதேசம் பண்ணிக்கொண்டு வேங்கைப் புலியை எழுப்பிவிட்டு மரணமடைந்தவன் கதைபோலும். அநுபவம்:—குருவுக்குக்கூடச் சீடன் அந்நம் போடாமல் பாலும் அந்நமும் அவன் சாப்பிடும்போது குருவந்து அடித்துப் பிடுங்கிச்சாப்பிட்ட கதைபோலுமறிக.

குருநாதன் அபக்குவிக்கு அதிக ரகசியமான ஆத்மஞானத்தை எவ்வளவு பிரயாசைப்பட்டு போதித்தாலும் அஃது அவன் புத்தியில் நுழையாது. [ஏ-தி] சமுத்திரத்திலிருக்கிற மகரமச்சத்தினுடைய கடவாயிலிருக்கிற வைர ரத்தினத்தை அதன்வாயைக் கிழித்து எடுத்துக்கொண்டு வந்தாலும் வரலாம், அதிகோரமாய் விரட்டிக்கொண்டு வருகிற புலியை வாயைக்கட்டி அதன்பேரில் ஏறிக்கொண்டு போனாலும் போகலாம், கோபமாய் வருகிற பாம்பைச் சிரசில் புஷ்பம்போலத் தரித்தாலும் தரிக்கலாம், அபாரமான சமுத்திரத்தைத் தாண்டினாலும் தாண்டலாம், மணலை ஆட்டி எண்ணை எடுத்தாலும் எடுக்கலாம், தாகமுள்ளவன் கானல் ஜலத்தை சாப்பிட்டுத் திருப்தியடையலாம், வெள்ளிக்கும்பா வேண்டுமென்றவன் கிளிஞ்சல் வெள்ளியாற் கும்பா செய்து வைத்துக்கொண்டு சாப்பிடலாம், நகை போட்டுக்கொள்ளுவதி லாசையுள்ளவள் காக்காப்பொன்னால் கண்டமட்டும் ஆபரணம் செய்து அணிந்துகொள்ளலாம், ஈட்டி ஆயுதம் வேண்டினவன் முயற்கொம்பைத் தேடிச்சம்பாதித்து அதனால் ஆயுதங்களைச் செய்து சண்டைசெய்யலாம், யுத்தத்திற்குச் சதுரங்கசேனை வேண்டிய அரசன் குசவனால் மண்ணால் செய்யப்பட்ட யானை குதிரை ஆள் தேர் முதலானவைகளைக் கொண்டு யுத்தம் செய்து ஜயிக்கலாம், மாலை சூட்டிக்கொள்ள வேண்டியவன் அலைகளைக் கோர்த்துக் கட்டி மாலையாகத்தரித்துக்கொள்ளலாம், காலில்லாமற் பூப்பிரதக்ஷணம் செய்தாலும் செய்யலாம், ஊமை சபையிலிருந்து பிரசங்கம் செய்தாலும் செய்யலாம், காளை கன்று போட்டாலும் போடலாம், பிறவிக்குருடன் ரத்தினபரீக்ஷை செய்யலாம், மாணியில்லாதவன் அழகுள்ள ஸ்திரீயோடு மைதுநம் செய்யலாம், கையினால் இருட்டைப் போக்கலாம்; வாய்வழியாய்ப் புஜியாமல் மற்றை எட்டுத்துவாரத்தாலும் ருசிபார்த்து வயிறுநிரையச் சாப்பிடலாம், தலையில்லாத புருஷன் சிம்மாசநத்திலிருந்து அரசாக்ஷி செய்யலாம், நாயினாற் சிம்மம் ஜயிக்கப்பட்டாலும்படலாம், மலடிக்கு பிரசவவேதனை தெரிந்தாலும் தெரியலாம், வியுத்பத்திக்ஞானமில்லாதவன் சகல சாஸ்திரங்களுக்கும் அர்த்தம் சொன்னாலும் சொல்லலாம், குளிருக்காக ஆகாசத்தைக் கம்பிளியாகச் செய்து போர்த்திக்கொள்ளலாம், வாயுவைப்பிடித்து விக்னேஸ்வரனைப் பண்ணிப் பூஜித்து வேண்டிய வரங்களைப்பெறலாம், லோபியினிடத்திற் சோடசமகாதானம் பெற்றாலும் பெறலாம், நீசனைப் பிராஹ்மணனை வைத்துச் சிராத்தம் பண்ணிப் பிதுர்க்களுக்

குத் திருப்திபண்ணி வைக்கலாம், சந்திரனை தபிக்கப்பண்ணலாம், சூரியனையும் அக்கினியையும் குளிரப்பண்ணலாம், கெங்கா ஜலத்தில் வீடுகட்டலாம், தாய் தகப்பனன்றிப் பிள்ளையுண்டாகலாம், பாறையில் கத்தரிமுதலான செடிகளை வைத்துப் பலம் பெறலாம், அஞ்ஞானமின்றி ஜநநமரணாதி சம்சாரதுக்கம் வரலாம், ஞானமின்றி அஞ்ஞாநமும் அதின் காரியமான பந்தமும் போகலாம், இவைகள்போல மேலேசொன்ன அபக்குவிக்குக் குரு தத்துவஞாநத்தை உபதேசித்து அவனைத்தன்னைப்போலக் கிருதகிருத்தியனாய் ஞாநியாய்ச் செய்வது அசாத்திய மென்றறிக.

## 45-வது தரங்கம்

*தேகாதிகளை தானே அபிமானித்துத் துக்கிக்கிறார்கள்.*

தானே தேகாதிகளை நானென்று அபிமானித்து அவைகளிடத்திலிருக்கிற வியாதியாதிகளால் துக்கிக்கிறான். [எ - தி] பணம் கொடுத்துப் பெண் சாதியைக் கலியாணஞ்செய்து துக்கப்படுகிறவன் போலும்; தானே தாசிக்கு ரூபாயைக்கொடுத்து அவளிடத்திற் போய் வியாதியை வாங்கித் துக்கப்படுகிறவன் போலும்; முத்திராதாரணமும், பச்சிலைப்பொட்டும், காசுகொடுத்துக் குத்திக்கொண்டு துக்கப்படுகிறவர்கள் போலுமறிக. இன்னமொருவிதமாகச் சொல்லுகிறார், ஜீவன் அசங்கனாயிருந்தும் தேகாதிகளை நானென்று அபிமானித்துத் துக்கிக்கிறான். [எ - தி] மலடி தத்துப்பிள்ளையால் துக்கமடைவதுபோலும்; வேலியிற் போகிற பாம்பைக் கூடியில் விட்டுத்துக்கப்படுபவள் போலுமறிக. இன்னொருவிதமாகச் சொல்லுகிறார்:—தேகம் நான், பிரபஞ்சம் சத்தியமென்ற நிச்சயத்துடன் பிரஹ்மாப்பியாசம் பண்ணுகிறவனுக்கு ஞானம் பலியாது. [எ - தி] புருஷன் இறந்த பின் தகப்பனிடத்தில் ஜீவித்திருக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் கூடியிருக்கிறவளுக்குப் புருஷனோடு உடன் கட்டையேறுவது பலியாததுபோலும், வீட்டிலிருக்கிற சொத்தைக் களவாளி கொண்டுபோவனென்ற பயத்தோடு வீட்டைக் காத்திருக்கிறவனுக்குக் கங்காஸ்நானபலன் கிடையாதது போலும், கண்டஸ்திரீகளிடத்திலெல்லாம் கௌபீநத்தை அவிழ்க்கிறவனுக்குக் கௌபீநசுத்தத்தன்மை கிடையாதது போலுமறிக. [இ - ர்] தேகாபிமானமானது :—அதைவைத்த ஜீவனையும், தூல சூட்சும சரீரங்களையும், அதைச்சார்ந்த ஜநங்களையும் துக்கப்படுத்தும் [எ - தி] ஐயத்ரதன் துரௌபதையைத் தூக்க வந்தபோது அவள் கழுதையைத்தொட்டு இவனைப் பிடித்துக்கொண்டு போகும்படி சொன்ன சாபத்தால், அந்தக் கழுதையை விலக்க வந்தவர்களையும் பிடித்துக்கொண்ட கதை போலவறிக.

முந்தியஜந்மத்தில் தேகத்தை நானென்று சொன்னதற்காக இந்தப் பீமூட்டையைத் தூக்கவேண்டி வந்திருக்கிறது. [எ - தி] முந்தித்திருடினவன் இப்

போது விலங்குடன் பீக்கூடை தூக்குவது போலவறிக. [இ - து] தேகேந்திரியாதிகளின் செய்கையைத் தன்பேரில் அவிவேகியானவன் போட்டுக்கொண்டு துக்கப்படுகிறுன். [எ - தி] கிராமசாந்திக்கு க்ஷவரம் செய்துகொண்டு பேய் பிடித்த புருஷன் கதை போலும்; ரயில்வண்டியில் காசிக்குப் போய்வந்த நொண்டி நான் காசிக்குப் போய் வந்தேனென்று சொல்லுவது போலுமறிக. [இ - து] தேகாதி வியாபாரத்தை ஜீவன் அத்தியாசத்தால் தன்பேரிற் போட்டுக்கொண்டு துக்கப்படுகிறுன். [எ - தி] தாசிவிடன் அவளுக்கு வந்த வியாதியைத் தன்னதாக ஒப்புக்கொண்டு துக்கப்படுகிறது போலவென்றறிக. [இ - து] தேகாபிமானத்தை விவேகத்தால் விட்டால் ஜாதிவர்ணுச்ரமாதிகளெல்லாம் போய்விடும். [எ - தி] சித்திரபடம் தீப்பட்டால் அதிலெழுதியிருக்கிற சித்திரங்களெல்லாம் தண்டாபூபநியாயம்போலப் போகிறதுபோலவறிக. [இ - து] தேகாத்மபுத்தியையும் வைத்துக்கொண்டு பிரஹ்மாத்ம புத்தியையும் பழகி வருகிறவனுக்குப் பிரஹ்மஞ்ஞாநம் சித்தியாது. [எ - தி] சோரபுருஷனையும் வைத்துக்கொண்டு பர்த்துரு சிசுரூஷை பண்ணிவருகிறவளுக்குப் பாதிவிர்த்தியம் சித்தியாததுபோலும்; பறையர்களோடு சேர்ந்து கோமாம்சம்வரைப் புஜித்துக்கொண்டு பிராஹ்மணர்களுக்கு யோக்கியமான ஸ்நாந சந்தியாவந்தன ஔபாசந வைஸ்வதேவ அக்கிஹோத்திராதி கர்மங்களைச் செய்துவந்தாலும், பிராஹ்மண்ணியம் சித்திக்காததுபோலும்; கோவிலிலிருக்கிற பால் தயிர் எண்ணெய் நெய்முதலான சாமான்களைத் திருடிக்கொண்டு, சதா விபூதி ருத்திராக்ஷங்களுடன் சிவா மகாதேவாவென்ற சப்தங்களை உச்சரித்துக்கொண்டு கோவிலிலேயே ஆறுகாலம் தரிசனமும் செய்துகொண்டுவந்தாலும், பரமசிவன் கிருபையைப்பெறுமற் போவதுபோலும்; மனதில் விஷயாசையால் விஷயசங்கற்பங்களை செய்துகொண்டு வெளியில் பத்மாசனம் கட்டிக்கொண்டு, சின்முத்திரை தரித்துக்கொண்டு, காய்ந்தகட்டைபோல, அசைவற்றுக் கண்ணை மூடிக்கொண்டிருந்தாலும் தபசு சித்தியாதது போலும்; கெங்காஸ்நானத்தில் ஆசைவைத்துக்கொண்டுத் தெற்குத்திக்கை நோக்கிநடந்து போகிறவனுக்குக் கங்கா ஸ்நாநம் சித்தியாததுபோலும்; ஞாநிகளை அவமாநம் பண்ணிவிட்டு எவ்வளவு தாநதர்மம் செய்தாலும் புண்ணியம் சித்தியாது. அது எதுபோலவென்றுல், நகுஷமகாராஜன் சோடசமகாதாநத்துடன் நூறு அஸ்வமேதயாகம் ராஜாக்களுடைய விக்கிநமின்றியும், இந்திராதி தேவதைகளுடைய விக்கிநமின்றியும், சூரியாதி நவக்கிரகங்களுடைய விக்கினமின்றியும், திரவ்விய லோப, கிரியாலோப, மந்திரலோப, அந்நலோப, ஆஜ்யலோபங்கள் ஒன்றும் குறைவின்றிப் பூர்ணமாய் நிறைவேற்றி, இந்திரவிமாநத்திலேறிக்கொண்டு தேவலோகத்திற்குப்போய்ச் சிம்மாசனத்திலிருந்து செங்கோல் செலுத்தும் போது, மகாபதிவிரதையான இந்திராணியினிடத்திற் சம்போகம் செய்வதற்கு சொல்லிவிட்டதில் அவள் சப்தரிஷிகள் பல்லக்குத் தூக்கிவரும்படியாய்ச் செய்துகொண்டு, அப்படிமரியாதையாய்ப் புல்லாக்கேறிவந்தால் என்னுடைய

சம்போகம் சித்திக்குமென்று சொல்லிவிட்டதை அவன்கேட்டு, சப்தரிஷிகளை யும் கூப்பிட்டுப் பல்லக்குத் தூக்கச்சொல்லி அதிலேறிப்போகும்போது, அவ சரம் பொறுக்கமாட்டாமல் அகஸ்தியமகரிஷியைப்பார்த்து வேகமாய்ப்போ வென்று, சர்ப்பசர்ப்பவென்ற சொல்லைச் சொன்னமாத்திரத்தில், அகஸ்திய ருக்குக் கோபம்வந்து, உன்னுடைய சகலபுண்ணியங்களும் க்ஷயித்துப்போய் நீ சர்ப்பமாய் பூமியில்போய் கிடக்கக்கடவாயென்று சொன்னமாத்திரத்தில், அப்படியே இவன்செய்த அநந்தகோடி புண்ணியங்களும் அந்தக்ஷணத்திலே நசித்துப்போய்த் தலைகீழாய்விழும்போது, அந்த அகஸ்தியமகாரிஷியையே இவன் பிரார்த்திக்கும்போது, அவர் கிருபையினலே கிரேதாயுகம் திரேதாயுக மானபின், துவாபரயுகத்தில் தர்மபுத்திராதிகள் வனவாசம் வரும்போது, அவர்களுடைய சம்பாஷணையால் இந்தச் சர்ப்பஜந்மத்திலிருந்து விடுபடுவாய் என்று அநுக்கிரஹித்தபிரகாரம், அவனுமப்படியே அவர்களுடைய சம்பா ஷணையால் அச்சாபத்திலிருந்து நிவர்த்தியான கதை போலுமறிக.

தேகாதிகள் தானல்லாமலிருக்கும்போது தானே அவைகளைத்தானென்று அபிமானித்துத் துக்கப்படுவது சுவயம்கிருதாநர்த்தம். [எ - தி] ஆட்டுக் கிடாச்சண்டையில் நரி அந்த ஆடுகளுடைய ரத்தத்தைச் சுயமாய்ச் சாப்பிடப் போய்ச் செத்துப்போனதுபோலும்; சுவாமிகள், பணம்வைத்திருந்த தண் டத்தை ஆஷாடபூதியென்ற சீடன்கையிற் கொடுத்து மோசம் போன கதை போலும்; அம்பட்டச்சி மூக்கறுபட்ட கதைபோலுமறிக.

குருசந்நதியில் ஒருவனேடொருவன் பேசுவதும், தனக்குத் தெரிந்ததைச் சொல்லுவதும் அறியாமை:—குருசந்நதியில் விசாரணை பண்ணும்போது அந்த இடத்திலேயே ஒருவனேடொருவன் பேசுவது அறியாமை. [எ - தி] பத்துப்பேர் போஜநம் பண்ணும்போது அந்தப்பந்தியிலேயே ஒருவன் ஜல பாதைக்குப் போவதுபோலும், குருநாதன் சந்நதியில் தனக்குத் தெரிந்த வாக்கியங்களைச் சொல்வது மிருஷ்டாந்நம் போடுகிற ராஜகிருஹத்திலே தன் வீட்டுக் கூழைக்கொண்டுபோய் அவனுடைய முன்பாகக்காண்பித்து எல்லோ ருக்கும் கொடுத்துத்தானும் குடித்து சந்தோஷப்படுவது போலுமறிக. [இ - து] குருவினிடத்தில் தனக்குத் தெரிந்த கவிகளைச் சொல்வது அறியாமை. [எ - தி] சூரியனிடத்தில் தீபமேற்றிக் கொண்டுபோவது போலும், சந்திரனிடத்தில் சந்தநம் பன்னீர் முதலான குளிர்ச்சியைக் கொண்டுபோவது போலும், பிரகஸ் பதிக்குப் புத்திசொல்லுகிறவன் போலும், சுக்கிரபகவானுக்கு காவ்யம் முத லான வித்தைகளைச் சொல்லுகிறவன்போலும், குபேரனிடத்தில் ரத்னங்கள் விலைக்கு விற்கக்கொண்டுபோகிறவன்போலும், வாயுவுக்கு ஓட்டம் பழக்கி வைக்கப்போகிறவன் போலும், இந்திரனுக்கு இளம் கொடுக்கப்போகிறவன் போலும், கணபதிக்கு விக்னம் நிவர்த்திபண்ணிவிக்கப் போகிறவன்போலும், சுப்பிரமண்யருக்கு சர்வசம்மாரம் பண்ணுகிற சக்தியுள்ள வேலைக் கொடுக்கப்

போகிறவன்போலும், பரமசிவனுக்கு முக்கண்ணையும் அஷ்டைஸ்வரியத்தை யும் கொடுக்கப்போகிறவன்போலும், விஷ்ணுவை ரக்ஷிக்கச் சம்பத்து கொண்டு போய்க் கொடுக்கிறவன்போலும், பிரஹ்மாவுக்கு வேதங்களை அத்தியயநம் பண்ணிவைக்கப் போகிறவன் போலும், வசிஷ்டருக்குக் கர்மவிதியையும், புரோஹிதவிதியையும், ஞாநோபதேசத்தையுஞ் செய்யப் போகிறவன்போலும், வேதவியாசருக்கு வேதார்த்தத்தை உபதேசிக்கப் போகிறவன்போலும், சுகப்பிரஹ்மரிஷிக்கு வைராக்கியத்தைப்பழக்குவிக்கப் போகிறவன் போலும், மன்மதனுக்கு ஸ்திரீபுருஷர்களை மயக்குகிற சக்தியைக் காண்பிக்கப்போகிறவன் போலும், ராமனுக்கு சத்தியம் முதலான சத்குணங்களைப் பழக்குவிக்கப்போ கிறவன்போலும், கிருஷ்ணனுக்குக் கபடநாடகசூத்ர ஞாநத்தையும், பரஸ்திரீ கமனத்தையும் பழக்குவிக்கப் போகிறவன்போலும், துரியோதனனுக்கு லோபகுணம் பழக்குவிக்கப்போகிறவன்போலும், கர்ணனுக்குத் தாதருத்வத் தை உபதேசிக்கப் போகிறவன்போலும், மீன்குஞ்சுகளுக்கு நீச்சுச்சொல்லிக் கொடுக்கிறவன்போலும், குரங்குகளுக்கு மரம் ஏறச்சொல்லப் போவதுபோ லும், நட்டுவனுக்கு ஆட்டிவைக்கிற நட்டுவாங்கத்தையும், மைதுநத்தையும் பழக்குவிக்கப் போகிறவன் போலும், அர்ச்சுநனுக்கு வில்வித்தையையும், சிவபத்தியையும் சொல்லப் போகிறவன்போலும், அகஸ்தியருக்குத் திராவிட சூத்திரத்தைச் சொல்லிவிக்கப் போகிறவன்போலும், விஸ்வாமித்திரருக்குத் தபசுபண்ணுகிற விதியைச் சொல்லப்போகிறவன்போலும், அருந்ததிக்குப் பதி விரதாதர்மத்தைச் சொல்லப்போகிறவன்போலும், கருடனுக்கு ஆகாசகமநம் பண்ணுவதைச் சொல்வதுபோலும், சௌபரிரிஷிக்குப் புத்திரசந்தாநங்கள் உண்டாகிற மந்திரத்தை உபதேசிக்கிறவன்போலு மென்றறிந்து, குருசந்நதி யிலடங்கியிருக்கக்கடவது.

## 46-வது தரங்கம்.

அநாசாரியக்குருவை நம்புகிறவனுக்குக் கெடுதி:—

அநாசாரியக்குருவைச் சீடன் சத்குருவென்று நினைத்து நம்புவதாற் பிர யோஜநமடையான். [எ - தி] கழுதைவாலைப்பிடித்துக்கொண்டு காவேரிப் பிரவாகத்திற்போகும்போது விண்விண் என்ற உதையை மூஞ்சியிற்கொடுத்த மாத்திரத்தில் கையைவிட்டுக் கடலேகதியாய்ப்போனவன் கதைபோலும், பூனை யைநம்பின மாடப்புறு குலத்தோடு கெட்டுப்போன கதைபோலும், கழுதை மூத்திரத்தை நம்பி கட்டுச்சாதத்தை அவிழ்த்தவன் கதைபோலுமறிக. [இ - து] பஞ்சகோசங்களையும் ஆத்மாவையும் பிறித்து அவைகளில் அத்தியா சம் நிவர்த்தியாவதற்கு, யுக்தி முதலான சாதநத்தால் உபதேசிப்பதே சத்குரு வின் உபதேசமே தவிர, மற்றைப்படி மகாவாக்கியத்தைப் பஞ்சாக்ஷரம் முத லான மந்திரங்களைப்போல காதில் ரகசியமாய்ச்சொல்வது உபதேசமல்ல. அப் படி செய்யப்படுகிற உபதேசத்தால் முமுக்ஷு முக்தனைகப் போகிறதில்லை.

[எ - தி] வைத்தியன் வாத பித்த சிலேஷ்ம தாதுக்களையும், வியாதிகளையும் பிறித்து, வியாதி தீரும்படியானமருந்து கொடுப்பதே வைத்தியனுக்கடையாள மேதவிர,வைத்திய சாஸ்திரப்பாட்டுகளை இவன் காதில் உபதேசித்ததால் வியாதிதீர்ந்து சுகமுண்டாகாததுபோலும்; பசியுள்ளவனுக்குப் பசிதீரும்வரை அந்நம்போடுவது அந்நதாநமேதவிர, அந்நமந்நமென்று காதில் உபதேசிப்பதாற் பசிதீராததுபோலுமறிக. [இ - து] திரவியத்திலே ஆசையிருக்கிற குருவானவர் சிஷ்யனைக்கண்டித்தால் அவனின்னமொரு குருவினிடத்தில் போனாலும் தனக்கு துக்கம் வரும். அல்லது தன்னிச்சைப்படி அவன் பணம்கொடாமற்போனாலும் துக்கம்வரும். அவன் புத்திக்குத் திருப்தியுண்டாகும்படி போதிக்கச் சக்தியில்லாததனால் அவனுடைய அசிரத்தையைப் பார்த்தும் துக்கம் வரும். [எ - தி] கிழவன், விஷைசயால் ஒருஸ்திரியைக் கலியாணஞ் செய்ததால் அவள் பக்கத்தில் பரபுருஷனிடத்திற் போவதாலும் துக்கம், அவள் தன்னிஷ்டப்படி நடவாதிருப்பதைப்பற்றியும் துக்கம், அவளுக்கு யோகியின் நினைவுதீரும்வரைப் போகம்பண்ணச் சக்தியில்லாததால் அவள் பராமுகமாயிருப்பதைப் பற்றியும், எப்போது நம்மை இவள் கைவிட்டு ஓடிப் போவாளோவென்ற இவைமுதலான துக்கங்களுண்டாவது போல, இந்தக் குருவுக்கும் இந்தச்சிஷ்யனுக்கும் சதாத்துக்கமே யுண்டாகுமென்றறிக. [இ - து] சாமாந்நிய குருவினிடத்தில் மகாவாக்கிய உபதேசம் பண்ணிக் கொள்வது:—கிழவனைக் கலியாணஞ்செய்துகொள்வது போலவறிக.

அநாசாரியன் தானும் அநாத்மாவைத் தானென்று எண்ணிச் சிஷ்யர்களுக்குமதையே காண்பிப்பன். [எ - தி] எருமைமாடு தானும் குளத்திலிருக்கிற சகதியில் விழுந்து கலக்கிக் குட்டிக்கும் அந்த வாடிக்கை பண்ணிவிப்பது போலும், ஆடு தானும் கரும்பின் கொளுத்தாடையைத் தின்று குட்டிக்கும் அப்படி காண்பிப்பதுபோலும், மாடப்புறு தானும் கல்லைச் சாப்பிட்டுக் குஞ்சுக்கும் அதைக்காட்டுவது போலுமறிக. [இ - து] வஞ்சகக் குருவுக்கு யுக்தி:— பிரயாசத்தால் தவஞ் செய்து ஈசன் கிருபையைப்பெற்று எல்லாரையும் ஜலத்தில் முழுகடித்தவன் கதைபோலுமறிக, [இ - து] வியாகரண பாஷிய முதலான பிரபலசாஸ்திரத்தை அந்த அநாசாரிய குருவினிடத்திற் படித்தவனுக்குப் பிரயாசமதிகமாயும், ஞாநம் வருவது அருமையாயும், அப்படிக்கிடைத்த ஞாநமும் பரோக்ஷமாயும், வாசநாசமூகங்களால் நழுவிப் போயும் துக்கமுண்டாமென்பதற்கு யுக்தி:—சேஷகிரிராயர் வீட்டில் கல்யாணத்திற்கு வைதீகப் பிராம்மணன் போய்க்காலைமுதல் மாலைவரைக் காத்துச் சேவகர்களால் உதைகள்பட்டுப் பூரிதக்ஷிணை கொடுக்கும்போது கால்தட்டு கையிற்போட அதுவுங்கூடக் கூட்டங்களினால் தட்டிக் கீழே விழுந்துபோகத் துக்கப்பட்டுக் கொண்டு போகிறதுபோலவறிக. [இ - து] சுவாநுபவமில்லாத குருவினிடத்தில் அபக்குவிகளுக்குமட்டும் பிரியம்வரும். [எ - தி] (சுக்கிலமுண்டாகாத)

குழந்தையின் சிசுநத்திற் பக்குவமாகாத பெண்ணுக்குமட்டும் பிரியம் வருவது போலவறிக. [இ - து] குருவும் சீடனும் அநாசாரியனுயும், அபக்குவனுயுங் கூடியிருந்தால் இருவரும் கெட்டுப்போவார்கள். [எ - தி] கரடியைக் கம்பளி மூட்டையென்று நினைத்துத் தண்ணீரில் நீஞ்சிப்போன இடையனை அது தெப்பக்கட்டை யென்று நினைத்து இவனை வந்து கட்டிப்பிடிக்க, இரண்டு பேரும் ஆற்ருேடு போனகதை போலுமறிக.

பிரஹ்மாப்பியாசம் பண்ணும்போதே நாம் பிரஹ்மமென்று எப்படிச் சொல்லலாமெனச் சிலர் சங்கிக்கிருர்களேயென்ருல், ராஜகுமாரன் பட்டாபிஷேகமாகு முன்னமே நான் ராஜாவென்று சொல்லலாமேயாணுல், ஸ்திரீயின் சின்னங்களான ஸ்தநங்கள், தூரம், பிள்ளை, ஒன்றும் உண்டாகாமலிருக்கிற அஞ்சுவயதில் நான் ஸ்திரீயென்று சொல்லலாமாணுல், எப்போதும் தான் ப்ரஹ்மமாயிருக்கும்போது, நான் பிரஹ்மமென்று சொல்லக்கூடாதெனச் சொல்லுகிற வார்த்தையைக் கவனிப்பது, ஒரு புருஷனைப்பார்த்து நீ ஆணில்லையென்று சொன்னதைபற்றி, ஜோதிஷம் கேட்கப்போன கதை போலிருக்கிற தென்றறிக. [இ - து] அநாசாரிய னிடத்திற் போய் ஞாநத்தை அடைய இச்சித்த சிஷ்யனுக்கு ஞாநமும்வராமல், மேற்கொண்டு அஞ்ஞாந விருத்தியும், ஆவரணத்தின் விருத்தியும், கருத்துருத்துவாதி ராகத்துவேஷாதிகளுடைய விருத்தியும், வாசனைகளுடைய விருத்தியும், இந்திரிய வியாபாரவிருத்தியும், குலகோத்திர ஜாதிவர்ணுச்சிரம அபிமாநங்களுடைய விருத்தியும், கோபதாபங்களால் ஒருவருக் கொருவர் மனஸ்தாப விருத்தியும், உண்டாகும். [எ - தி] ஒருபுருஷன் அயோக்கியனுயுள்ள அரசனிடத்தில் உத்தியோகத்துக்குப் போனுனேயானுல், அவனுடைய விபசாரங்களுக்கும் உள்பட்டுத் தன்ஸ்திரீ முதலானவர்களைக் கூட்டிக்கொடுக்க வேண்டி வருவதும், அவன் செய்கிற கொலைமுதலான ஜீவஹிம்சைகளுக்கும் சாதகமாயிருக்கவேண்டியிருப்பதும், அவன் சாப்பிடுகிற மதுமாம்ஸாதிகளை வாங்கிக் கொண்டு வரவேண்டியதாயிருப்பதும் தவிர, இவனுக்கு முன்னிருந்த ஒழுக்கமான நல்ல நடத்தைகளும் போவதுந்தவிர, அவன்மனசுப்படி ஒருவேளை நடக்காதபக்ஷத்தில் இவனுக்கு வேலையும்போய், உதையும்பெற்று அவமானப்பட்டுக்கொண்டு, தலைபிழைத்தது தம்பிரான் புண்ணியமென்று சொல்லுகிற பழமொழிபோலச் சங்கடப்பட்டுக்கொண்டு வெளியேறுவதுபோலும்; மிகுந்த வியாதியுள்ள தாசியினுடைய முகவிலாசத்தைக் கண்டுமயங்கி, அவளுடைய யோநியிற் பிரவேசித்தமாத்திரத்தில், எரிகிற செங்கற் காளவாயில் கைவைத்தவனுக்குக் கை பொசுங்கிப் போவதுபோலச் சிசுநத்திலும் ரணம்கண்டு, அந்த வழியாய்த் தேகமெல்லாம் வியாதியுண்டாய் ஆஸ்பத்திரிக்குப்போய்ச் சிசுநத்தை அடியோடு அறுக்கவேண்டியதாய் வருவதுபோலும்; பேய்க்கு வாழ்க்கைப்பட்ட பெண்ணுக்குப் புளியமரத்தின்பேரில் ஏறவேண்டியதாயும், அது

அலைத்து ஆட்டிவைக்கிறதுக்கெல்லாம் உள்படவேண்டியதாயு மிருப்பதுபோ லும்; புலியினிடத்தில் மந்திரோபதேசத்திற்குப் போய்க் கெட்டுப்போனகதை போலவென்றறிந்து, அசத்குருவைத்தள்ளிச் சத்குருவை அடைந்து சுகிக்கக் கடவன்.

## 47-வது தரங்கம்.

அஞ்ஞானிகள் தன்குற்றத்தை அறியாமற் பிறரிடத்திலேயே அதைப்பார்க் கிறார்கள்:—

அஞ்ஞானிகள் தன்னை அறியாததனால் உண்டான தன்சித்ததோஷமான ராகத்வேஷாதிகளைத் தன்குற்றமென்று பாராமற் பிறரிடத்திலேயே அக்குற் றங்களைப் பார்க்கிறார்கள். [எ - தி] தீர்க்கவியாதியாலுண்டான நாவின் கசப் பை அறியாமல் சமயல் கசக்கிறதென்று குற்றம் சொல்லுகிறவன்போலும்; அவசமங்காள், மருமகன் வந்த அவசரத்தில் ஈரமான ஆடையை அவிழ்த்துக் காய்ந்த சேலையைக் கட்டிக்கொள்ள மறந்துபோய், அம்மணத்தோடே அசல் வீட்டுகளுக்கெல்லாம் போய்ச் சாமான்வாங்கிவந்து, சமயல்பண்ணி, மருமக னுக்குப் போட்டுச் சுண்ணும்பை விரலால் எடுத்து வெற்றிலையில் வைத்துச் சேலையில் துடைக்கக் கை வைத்தகாலத்தில் அரையிற் சேலையில்லாததைக் கண்டு அரைக்குள் ஓடிப்போய்த் தன்குற்றத்தை நினையாமல், அடுத்தவீட்டு முண்டைகள் அம்மணமாயிருக்கிறுயென்று சொல்லவில்லை யென அவர்கள் பேரில் கோபித்தது போலவறிக. [இ - து] ஜீவன் தன்குற்றத்தை ஈஸ்வரன் பேரிற் சுமத்துகிறான். [எ - தி] எருக்கம்பழம்போல ஒட்டிஉணந்து போயி ருக்கிற ஸ்தநியத்தை யுடையவள் ரவிக்கையின் பேரிற் குற்றம்சொல்லுவது போலும், திக்குவாயன் மற்றவர்களை வாயாடியென்று சொல்லுவதுபோலும், செவிடன் தனக்குக்காதுகேளாமற் போனதைக் குருநாதன் பேரில், நமக்குக் காதுகேட்கும்படி சொல்லத்தயவில்லை யென்று சொல்லுவது போலுமறிக. [இ - து] சகல விஷயமு மிருக்கும்போது அதையிச்சியாதவனும், பிரபுத்துவ மிருக்கும்போது சமதிருஷ்டியோடு கூடியிருந்து அந்நியர்களைத் தூஷிக்காதவ னும் உலகத்தில் அரிதேதவிர, சக்தியற்றபோது சாதுவாயும், காசில்லாத போது பிரஹ்மசாரியாயும், வியாதிவந்தபோது தெய்வபக்தியுடையவனுயும்; தாரம்போனபின் கர்ப்பைக் காப்பாற்றுவதும் அரிதில்லாதது போல வறிக. [இ - து] தன் குற்றத்தைத் தெய்வத்தின் பேரில் அறியாமையாற் சுமத்துகிறான். [எ - தி] கண்வலிவந்தவனுக்கு இரண்டு சந்திரனுதயமானுற் போலவும், காமாலைவந்தவனுக்குச் சங்குகூட மஞ்சளாய்த் தோற்றுவது போல வுமறிக. [இ - து] தன்மனசு தனக்குச் செய்கிறகெடுதிகளை அறியாமல், அநாதிகாலமாய் இந்தமனதோடு சேர்ந்ததனலேயே அசங்கனுய்ச் சாக்ஷியா யிருக்கிறதனக்கு அநந்தகோடி ஜநநமரண சம்சாரதுக்கங்கள் வந்திருப்பதை யும், இப்பொழுதும் ஜாக்கிர சொப்பன மனோராஜ்ஜியங்களில் மனதிலேயே

துக்கம்வருவதும், மனதில்லாத சுஷுப்தியில் சகலவிதமான துக்கங்களும் காணப்படாமல் சுகமாய்த் தூங்கியெழுந்திருப்பது அநுபவசித்தமாயிருந்தும், ஜீவர்கள் இதையறியாமல் நமக்கு இன்னார் இன்னார் விரோதிகள், அவர்களி னாலேயே நமக்கு அடிக்கடி துக்கம்வருகிறதென்று மாறுபாடாய் நினைக்கிறார் கள். [எ - தி] தன் மனதினுடைய துர்வாசனையாலுண்டாகிற சொப்பனா வஸ்தையிற் காணப்பட்ட சங்கடங்களைக்கண்டு விழித்தபின், இந்த இடத்தில் படுத்திருந்ததனாலேயே இப்படியெல்லாம் சங்கடமுண்டாயிற்றென்று நினைக் கிறான், தன்மனோதோஷமென்று நினைக்கவில்லை. அப்படி ஸ்தலவிசேஷத் தால் துர்ச்சொப்பனங்கள் உண்டாகிறது உறுதியானால், அவ்விடத்திற் படுத் திருக்கிற நூறு ஜனங்களுக்கும் அப்படியே துர்ச்சொப்பனமுண்டாக வேண்டும். அப்படி உண்டாகாமையால், இவனுடைய மனோதோஷமே யப்படிப் பரிண மித்துத் தோற்றுவதுபோலும்; தட்டாமாலை சுற்றுகிறவனுக்குப் பூமியெல்லாம் சுற்றுகிறதுபோலும்; ஜன்னிபிறந்தவனுக்கு ஆகாசத்திற் போகிறது போலவும், அநேகம் எமதூதர்கள்வந்து அதட்டுகிறது போலத்தோற்றுவது போலவும்; ஸ்திரீகள் தன் சரீரத்திலிருக்கிற வியர்வை அழுக்கு சிக்குநாற்றம், கத்தாளை நாற்றம், மலமூத்திரநாற்றம், சீ ரத்தங்களுடைய நாற்றங்களெல்லாம் தன் சரீர நாற்றமென்றறியாமல் சேலைநாறுகிறதென்று சொல்லுகிறார்கள். அப்படிச் சேலையினிடத்தில் நாற்றம் சுபாவமானால் கடையிலிருக்கிற சேலையெல்லாம் நாறவேண்டும். அப்படியில்லாமையால் தன்தோஷமென்று அறியவேண்டுவது போலும்; பூமியே நாறுதிருக்கும்போது; இந்தத்தேகி மல மூத்திரவிசர்ச்சனம் பண்ணிவிட்டு இந்தப்பூமி நாறுகிறதென்று சொல்வதுபோலும்; இவன் வாயி லிருக்கிற எச்சல் கைவழியாய் அந்நத்திலும், போஜனபாத்திரத்திலும் சம்பந் தப்பட்டிருக்கும்போது, இந்தப்பிரதேசம் உச்சிஷ்டமாயிருக்கிறது, இதை மிதித்தவர்களெல்லாம் காலைக்கழுவவேண்டுமென்று சொல்லுவதுபோலும்; இவனுடைய மரித்ததேகத்தைச் சுடுவதற்கு இடம்கொடுத்த பூமியை மசான மென்றும், அதிற் போனால் ஸ்நானம் பண்ணவேண்டுமென்றும் சொல்லுவது போலும்; இவனுக்கு வந்திருக்கிற வியர்வை அழுக்குத் தூசிமுதலானவைக ளைப் போக்கின ஜலத்திற்குச் சாக்கடைத் தண்ணீரென்று சொல்லுவது போ லும்; சகலரும் தன் குற்றத்தைப் பிறரிடத்தில் ஆரோபிக்கிறார்களென்றறிக.

## 48-வது தரங்கம்.

அதிஷ்டானத்தோடு கூடிய ஜீவனே பந்தமுத்திகளுக்குக் கர்த்தா:—

அதிஷ்டானத்தோடு கூடிய ஜீவனே பந்தமோக்ஷத்திற்கதிகாரி. [எ - தி] நாயகனோடு கூடியஸ்திரீயே கண்டனைக்கும், புத்திரோற்பத்தி வரைப் போகத்திற்கும் அதிகாரியாவதுபோலும்; ராஜகிரகத்திலுள்ள அதிகாரிக்கே ஆக்ஞை செல்வதும், அபராதம் விழுவதுபோலுமறிக. [இ - து] தேகேந்தி

ரியாதி சமஸ்தமுமிருந்தாலும் ஜீவனுக்குத்தான் பந்தமோக்ஷமென்று சுருதி சொல்லுகிறது. [எ - தி] ஆயிரம் புத்திராதிபந்துக்களிருந்தாலும் தாலிகட்டிக்கொண்டவளே வாழ்வதும் அறுப்பதும் போலவறிக. *[ஜகத்திலே கோடிபெரியவர்களிருந்தாலும், நம்போலிகளுடைய மனதை அறிந்து சிக்ஷைபண்ணுவது:—கருணாநிதியானமத்குரு பிரஹ்மாநந்தஸ்வாமியே பிரத்தியக்ஷமாயிருப்பதே சாக்ஷியாமென்றறிக] இன்னும் கண்முதலான இந்திரியங்களுக்கு வலிவந்தாற் கண் முதலானவைகளுக்கு மருந்துபோடவேண்டுமே தவிர, கண் முதலானவைகளுக்கதிஷ்டாந தேவதையான சூரியன் முதலானவர்களுக்கு வலியும் அதன் நிவர்த்தியுமில்லாதது போலுமறிக. [இ - து] இருபத்தெட்டுத் தத்துவங்களுக்குள்ளே லாபநஷ்டம் புண்ணிய பாவம் சுகதுக்கம் முதலானவைகளை ஜீவனே அடைகிறான். [எ - தி] மடத்தில் ஆயிரம்பேர் வந்து சாப்பிட்டுவிட்டுப் போனாலும் லாபநஷ்டம், மாநாபிமாநம், சுகதுக்கம் முதலானவைகள் ஹேட்டுச் சுவாமிகளுக்கு வருவது போலவறிக. [இ - து] ஜீவனுக்கே பந்தமோக்ஷம். மற்றைச் சரீரேந்திரியாதிகளுக்குப் பந்தமோக்ஷமில்லை. எதனாலென்றால், சரீரேந்திரியாதிகள் சுத்தஜடமாயிருப்பதாலும், ஜீவனன்றி அவைகளுக்குச் சுவதந்திரமாய் ஒருவிதமான புண்ணியபாவங்களைச் செய்ய அறிவில்லாமையாலும், அவைகளை வேறுவேறாய்ப் பிறித்தால் நானென்கிறது கொஞ்சமுமில்லாமலும், அவைகளுக்குக் கையென்றும், காலென்றும், காதென்றும், கண்ணென்றும், மூக்கென்றும், வாயென்றும், வேறுவேறு நாமங்களாய்ப் போவதாலும், அவைகளுக்குச் சுகத்தையாவது, துக்கத்தையாவது அறிந்து அநுபவிக்க யோக்கியதையில்லாமற் போவதாலும், பந்தமோக்ஷங்கள் அவைகளுக்கில்லை. பின்னையாருக்கென்றால், அதிஷ்டாநாம்சத்தோடு கூடிய அந்தக்கரணப் பிரதிபிம்பனான சிதாபாசனுக்கே பந்தமோக்ஷம் வந்திருக்கிறது. அஃதெப்படியென்றால், இந்தச் சிதாபாசன் அதிஷ்டாநாம்சமான சொயம்பிரகாச சித்ரூபத்தை மறந்து ஆரோபமான அந்தக்கரணாம்சத்தினுடைய கருத்துருத்துவ, போக்த்துருத்துவ, பிரமாதுருத்துவங்களைத் தன் தொழிலாக நினைத்து நானின்ன காரியங்களைச் செய்தேன், இன்ன போகங்களை அநுபவித்தேன் இன்னின்ன சங்கதிகளையறிந்திருக்கிறேனென்று இப்படிச் சதாமயங்கிக் கொண்டிருப்பதே பந்தமென்றும், அதன் பின் இவனுக்கே இந்தச் சம்சாரசங்கடம் சகிக்காமற் புறப்பற்று உட்பற்றுக்களைத்துறந்து, சாதந சதுஷ்டயங்களை அவதிபரியந்தம் அப்பியாசித்துத் தலையில் தீப்பற்றினவன் தண்ணீரைத் தேடுவதுபோல, தீவிர முமுக்ஷுத்துவத்தாற் சத்குருவைத் தேடிக்கண்டு, அவரைச் சரணாகதியாயடைந்து அவருக்குச் சதுர்விதமான பணிவிடைகளைச் செய்து, அவரைப்பார்த்து நானார்? எனக்கிந்த சம்சாரபந்தமெதனால் வந்தது? இந்தச்சம்சார பந்தமெத

* பாலானந்த சுவாமிகளுடைய ஸ்வதந்திர உபமானமாம்.

னாற் போமென்று அவரிடத்தில் வினவினதின்பேரில், அவரும் கிருபையால் நீ அகண்டபரிபூர்ண சச்சிதாநந்த ஸ்வரூபமான பிரஹ்மமென்றும், நீ அஞ்ஞானத்தால் உன்னை மறந்ததால் சொப்பனம்போல இச்சம்சாரபந்தம் வந்திருக்கிறதென்றும், வாஸ்தவத்தில் உனக்கு ஒருவிதமான பந்தமுமில்லை, நீ எப்போதும் பிரஹ்மமென்றறிந்து நிச்சயித்துச் சுகிக்கக்கடவாயென்று அநுக்கிரகித்த பிரகாரம், அவனுமப்படியே மநநம் பண்ணி நிச்சயித்த பிரகாரம் தியாநசமாதிகளை அப்பியாசம் பண்ணித் தேகவாசனை, லோகவாசனை, சாஸ்திரவாசனை முதலான வாசநாக்ஷயங்களைப்பண்ணி, ஆரோபாம்ஸமான கருத்துருத்துவாதி சம்சாரங்கள் மித்தையான சிதாபாசனுடையதென்றும், இந்தச் சம்சாரமும் சம்சாரியும் அதிஷ்டாநமான தன்னிடத்தில் காலத்திரயத்திலும் வரவுமில்லை போகவுமில்லை யென்றும் அறிந்திருக்கிறான். ஆனால் லோகத்தார் பந்தமோக்ஷங்கள் ஆத்மாவுக்கு உண்டென்று சொல்லுகிற வார்த்தையைக் கேட்டுச் சிதாகாசனான தன்னைத் தவளைபோலிருக்கிற அஞ்ஞாநம் விழுங்கினதாகச் சொல்லுகிற பந்தமும், பிற்பாடு சுருதி குரு சுவாநுபவமாகிற பாம்புவந்து இந்த அஞ்ஞாநமாகிற தவளையைக்கொன்று, அதனால் விழுங்கப்பட்டிருந்த சிதாகாசமான தன்னை, உமிழ்ந்ததென்ற ரூபமான மோக்ஷமுண்டாயிற்றென்றும் சொல்லுகிற சொல்லைக் கேட்பவன்போ லிவன் ஆச்சரியப் பட்டுக்கொண்டிருப்பனென்றறிக.

## 4௯-வது தரங்கம்.

குருவினிடமிருந்து அநவரதம் திடசிரவணம் பண்ணாதவனுக்குச் சாக்ஷாத்காரம்வரை நிலையாது:—

குருசந்நதியில் ஆறுலிங்கத்தாலும், திடமாய்ச் சிரவணம் பண்ணாதவனுக்கு மனனம் முதல் சாக்ஷாத்காரம் வரை நிலையாது. [எ - தி] அஸ்திவாரம் பலமாய்ப் போட்டுக்கட்டாமல் மேல்வீடுஸ்திரமாய் நிலையாததுபோலும், வேதாத்தியயநம்பண்ணுகிறவனுக்குச் சம்ஹிதை பலமாய் உருவேத்தி நெட்டுரு இல்லாதகாலத்து, பதம் கிரமம் ஜடை கநம் வரைநிலையாததுபோலுமறிக. [இ - து] குருநாதன் சந்நதியிலிராமற் பிறிந்துபோய்த் தானே வேதாந்தத்தைப் படித்து பழகிவருகிறவனுக்கு வாசனாக்ஷயம், சந்தேகநிவர்த்தி, அகங்கார நாசம், அந்நியோந்நியாத்தியாசம், அஞ்ஞாநம் முதலான தடைகளொன்றும்போகமாட்டாதாகையாற் கொஞ்சமுண்டான தத்துவக்ஞானமும் பிரகாசியாது, ஜீவன்முத்தி ஆநந்தமும் கிட்டாது. [எ - தி] மழைக் காலத்தில் ராத்திரிவேளையில் மேகங்களால் மூடப்பட்டிருக்கிற ஆகாசத்தில் உதயமான சந்திரன் விளங்காததுபோலும், குருவை விட்டுச் சமாதி செய்யப்போகிறேனென்றுசொல்லிப் போனவன் சகவாச தோஷத்தாற் கெட்டுப்போய்க் கடைத்தெருவில் குரங்கையும் நாயையும் பிடித்து ஆட்டிவைத்துப் பிக்ஷைவாங்கினவன் கதைபோலுமறிக. [இ - து] இடைவிடாமற் சிரவணாதிகள் பண்ணுகிறவர்களுக்குச் சீக்

கிரத்தில் ஞானம்வரும், விட்டுவிட்டுச் சிரவணம் பண்ணுகிறவர்களுக்கு இந்த ஜந்மம் முடியும்வரைச் சிரவணம் பண்ணினாலும் ஞானம் வராது. [எ - தி] சேகரமாய்ப் பத்துமரக்கால் அரிசியும், பத்து பூசணிக்காயும் சமைத்து நூறு பேருக்கும் சாப்பாடுபோட்டு மிஞ்சிப்போவதுபோலும்; ஒரு மரக்கால் அரிசியும் ஒருபூசணிக்காயும் சமைத்து நூறு பேருக்குப்போடுவதும், மறுபடிஅப்படியே ஒவ்வொன்று விதம் நூறு மரக்கால் அரிசியும் நூறு பூசணிக்காயும் சமைத்துப் போட்டுக்கொண்டு வந்தும் நூறு பேருக்கும் வயிறு நிறையாமல் போனது போலும்; ஒரே தடவையில் ஒரு கட்டு விறகு பறித்து வந்தவள் சமையல் பண்ணி மிச்ச விறகு வைத்துக்கொண்டதுபோலும், கொஞ்சம் கொஞ்சமாய் ஐம்பது தடவை காட்டுக்குப்போய் விறகு கொண்டுவந்தவளுக்குச் சாயரக்ஷை வரையிற் சமயற் பண்ணியும் உலைகூட நன்றாய்க் காய்வதற்கு மார்க்கமில்லாமற் போனதுபோலு மறிக.

சித்தமாகிற பூமியிற் சாதந சதுஷ்டயமாகிற உரம் வைக்காமலும் சிரவணமாகிற உழுதலைச் செய்யாமலும், குரு உபதேசமாகிற வித்தை வாங்கி விதைத்துப் பயிர்செய்து அதில் நடாமலும், குருகடாக்ஷமாகிற தண்ணீர் பாய்ச்சாமலும், அந்தத் தண்ணீர் ஓட்டை வழியாய்ப் போகாமலிருப்பதற்காக மனனமாகிற வரப்புக் கட்டாமலும், இடைவிடாமல் நிதித்தியாசநமாகிற காவல் காக்காமலும், வாசனைகளாகிற களைகளைப் பிடுங்காமலும், மனசாகிற மாடுகள் சங்கற்பமாகிற வாயால் விவேகமாகிற பயிரைத் தின்னாமலிருக்கிறதற்காக வைராக்கியமாகிற வேலி கட்டாமலும், சமாதியாகிற பருவத்தில் சமதமாதி குணங்களாகிற பறைச்சிகளை விட்டு உபசாந்தியாகிற கதிரை அறுக்கச் சொல்லாமலும், யேகாந்த ஸ்தலமாகிற களத்திற் கொண்டுபோய் வைக்காமலும், சாதுக்களாகிற மாடுகளைவிட்டு ராகத் துவேஷங்களாகிற வைக்கோல் கருக்காய்களைப் பிறிக்காமலும், குருகிருபையாகிற காற்றில் தூற்றாமலும், அபரோக்ஷ ஞானமாகிற களஞ்சியத்திற் போட்டு அந்த நெல்லைப் பந்தோபஸ்துப் பண்ணாமலும், சாக்ஷாத்காரமாகிற குத்துதலால் அரிசியாக்காமலும், சகஜாநுபவமாகிற அந்நத்தைப் புஜியாமலிருக்கிறவனுக்கு ஜீவன்முக்தியாகிற திருப்தியும் வாராது, ஜநநமரணமாகிற பசியும் நீங்காது. ஆகையால் மேலே சொல்லிய அப்பியாசங்களை ஒழுங்காகக் கடைசிவரைச் செய்தவனுக்கே துக்க நிவர்த்தியும் தடையற்ற ஆநந்தமும் வருமென்றறிக. குருவைவிட்டுப் பிறிந்து தனியாய்ப் போய்ச் சீக்கிரத்தில் ஞானத்தை அடைந்து கிருதார்த்தனாகப் போகவேண்டுமென்று போகிறவனுக்குக் கெடுதி பலவிதமாய் வரும். [எ - தி] நாயகனை விட்டுப் பிறிந்த ஸ்திரீக்குக் கெடுதி வருவதுபோலும், ராஜமார்க்கத்தை விட்டுக் காட்டில் தனிவழி போகிறவனுக்குக் கெடுதி வருகிறது போலும், தாயைவிட்டுப் பிறிந்த குழந்தைக்குக் கெடுதி வருகிறதுபோலுமறிக. குடும்ப வியவகாரத்தி லிருந்துகொண்டு ஒழிந்த வேளையில் விட்டு விட்டுச்

சிரவணம் செய்கிறவனுக்கு ஞானம் சீக்கிரத்தில் பலியாது. [எ - தி] கணக்குத் தொகையை விட்டு விட்டுச் சேர்க்கிறவனுக்கு கணக்கு முடியாததுபோலும், வியாதிக்காரன் அபத்தியமும் பண்ணிக்கொண்டு மருந்தையும் கிரமமன்றியில் விட்டு விட்டுப் புஜிப்பதால் அவனுக்கு வியாதி சீக்கிரத்தில் தீராததுபோலும், பஞ்சாக்ஷராதி மந்திரங்களை ஒரோர் அக்ஷரமாய்ப் பிறித்து ஜபம் பண்ணுகிறவனுக்கு அந்த மந்திரப் பிரயோஜனமான சித்தி கிட்டாததுபோலும், அரணியைக் கடைந்து அக்கி எடுக்கவேண்டிய புருஷன் சேகரமாய்க் கடைந்து அக்கியை யெடாமல் விட்டுவிட்டுக் கடைகிறவனுக்கு வருஷாந்தம் வரைக் கடைந்தாலும் அக்கி வெளிப்படாதது போலும், யாதொரு முமுக்ஷுவான புருஷன் குரு சந்நதியில் இடைவிடாமற் சிரவணாதிகள் செய்யாமல் விட்டு விட்டுச் சிரவணாதிகள் செய்து வருகிறவனுக்கு ஜீவன்முக்தி சித்திப்பது பிரயாசமென்றறிக.

## 50 - வது தரங்கம்.

ஜீவனின்றி மனோபுத்திக்கு யோக்கியதை யில்லை:—

மனோபுத்தி ஜீவனின்றி ஜடமாகையால் சேஷ்டிக்க யோக்கியதையில்லை. [எ - தி] விருஷணத்துவயங்கள் சிசுனமின்றிச் சேஷ்டிக்க மாட்டாதது போலும், கைகள் புருஷனின்றிச் சேஷ்டிக்கமாட்டாததுபோலுமறிக. [இ - து] மனது ஜீவனோடு சேர்ந்தால்தான் விஷயாகாரப்படும். [எ - தி] செம்பைத் தீயில் உருக்கினால்தான் அச்சினாகாரத்தை யடைவதுபோல வறிக. [இ - து] மனோபுத்தி சித்தம் அகங்காரங்களில் நிர்மலமான புத்தியிலேயே ஆத்மாவின் விசேஷப் பிரகாசம் காணப்படும். [எ - தி] சூரியனுடைய பிரதிபிம்பமானது ஓடுகிற ஜலத்திலும், சகதியாயிருக்கிற ஜலத்திலும், மரம் முளைத்திருக்கிற ஜலத்திலும் நன்றாய் விளங்காமல், தெளிவாயும், மரம் முளையாததாயும், அசைவற்றதாயு மிருக்கிற ஜலத்தில் பிரகாசிப்பதுபோல வறிக. [இ - து] அந்தக்கரணத்தின் விருத்திகள் ஜீவனில்லாமல் விளங்கா. [எ - தி] ஜட்ஜி ஒருவனில்லாமல் கச்சேரி நடக்காததுபோலும், பிராணனின்றிச் சரீரேந்திரியாதிகள் ஜீவிக்காததுபோலும், அரிசியின்றி யிருக்கிறபதர் நெல்லாக முளைக்காதது போலும், மாவிதையின்றி யிருக்கிற மாங்கொட்டைமட்டும் முளையாததுபோலும், சுக்கிலமின்றி யிருக்கிற சுரோணிதம் கர்ப்பம் தரிக்காததுபோலும், வாழைப்பழமில்லாத தோல் விலையாகாததுபோலும், அரசனில்லாத அரசு விளங்காததுபோலும், அந்நம் தண்ணீர் இல்லாத ஜீவன் ஜீவிக்காதது போலும், அமிர்தம் சாப்பிடாத தேவர்கள் அழியாமலிருக்க முடியாததுபோலும், காயசித்தியில்லாத சித்தன் வியாதியின்றி அரோக திடகாத்திரனாய்த் தீர்க்க காலம் ஜீவிக்க முடியாததுபோலும், அச்சின்றித் தேர் ஓடாததுபோலும், தீயின்றிச் சமயற் பண்ண முடியாததுபோலும், கண்ணின்றி ரூபஞானம் உண்டாகாததுபோலும், மனசின்றிச் சப்தாதி விஷய

ஞாநம் உண்டாகாததுபோலும், சிறகின்றிப் பக்ஷி பறக்க முடியாததுபோலும், மாணியில்லாத மாப்பிள்ளைக்கு மரியாதை யில்லாததுபோலும், கர்மமின்றிச் சுகதுக்காநுபவம் பண்ணும்படியான விஷய சம்பந்தம் கிட்டாததுபோலும், வாசனையின்றிச் சொப்பன மனோராச்சிய முண்டாகாதது போலும், குருவின்றிப் பிரஹ்மஞாந முண்டாகாததுபோலும், கர்மம் பக்தி யோகம் உபாசனைகளைச் செய்யாமலும், ஈஸ்வர கிருபையைப் பெறாமலும் அஷ்டமாசித்தி முதலான பிரயோஜநங்களை அடைய முடியாததுபோலும், கணபதி முதலான சுவாமி யில்லாமல் கோவில் விளங்காததுபோலும், காற்றில்லாத மரம் அசையாததுபோலும்; அரும்பு கட்டாமற் புஷ்பம் மலர்ந்து வாசியாததுபோலும், அக்ஷர ஞானமில்லாத புருஷன் ஏடு வாசிக்க முடியாததுபோலும், வியுத்பத்தி ஞானமில்லாதவன் வித்வான்களுடைய சபையில் சாஸ்திரங்களுக்கு அர்த்தம் பண்ண முடியாததுபோலும், அவலக்ஷணமுள்ள தாசி சபையில் வந்து ஜநங்களை மயக்க முடியாததுபோலும், தாசியில்லாத நட்டுவர்கள் சபையில் வந்து சதுர்ப்போட்டுச் சபையிலுள்ளவர்களுக்குத் திருப்தி பண்ண முடியாதது போலு மறிக.

ஆத்மா எங்குமிருந்தாலும் நிர்மலமான புத்தியிலேயே விளங்குவர். [எ-தி] தாம்பிரபரணி தீர்த்தத்தில் விழுந்த ரூபாய் நகைகள் ரத்தினங்கள் பிரகாசமாய்த் தெரிந்து எடுக்கவருவதுபோலும், கூர்மையாயிருக்கிற ஈட்டியில் மரம் இளநீர் காகிதம் வரைப் பதிவது போலும், சுத்தக் கண்ணாடியில் முகம் நன்றாய் விளங்குவதுபோலும், சுத்தமான பூமியில் பயிர் பிடிப்பதுபோலும், பக்குவமாயும் சுத்தமாயு மிருக்கிற யோநியில் கர்ப்பம் தரிப்பதுபோலும், பக்குவமாயும், காய்ந்ததாயு மிருக்கிற விறகில் தீப்பற்றி எரிவதுபோலும், சுத்தமான எண்ணெயும், சுத்தமான திரியும், காற்றில்லாத ஸ்தலமும், ஓட்டையில்லாத பாத்திரமும் சேர்ந்திருந்தால், அதிற்பற்றிய தீபஜுவாலை அசைவின்றியிலும், கரண்டுபோகாமலும், மங்கலில்லாமலும், வெகுநாளிகை நின்றும் எரிவது போலும்; சத்துவாந்தக்கரணமான பாத்திரமும், விஷய வைராக்கியமாகிற எண்ணெயும், குருபக்தியாகிற திரியும், மூடசங்கதியாகிற காற்று அடியாமலுமிருந்தால் ஞானதீபம் நிர்விக்கிநமாய்ப் பிரகாசிக்குமென்றறிக.

## 51 - வது தரங்கம்.

அநுபவமில்லாத வாசா ஞானியின் தன்மை:—

குடும்பாசையோடு கூடின வேதாந்தி சபையில் வந்தவேளையில் நான்பிரஹ்மம் ஜகத்துப் பொய்யென்று வாசாஞானம் பேசுவன் [எ-தி] தாதன் வேஷம் போட்டவேளையில் நான் ஹரிச்சந்திரன் என்று சொல்லுவது போலும், விபசாரத்தாற் பிறந்த புத்திரனை மாணியில்லாத சொந்த பர்த்தா கூட்டத்தில் மடியில் வைத்துச் சீராட்டுவதுபோலு மறிக. [இ-து] சொப்பனத்திற்கூட நான் சொரூபானுசந்தானத்தோடு இருப்பேனென்பவன் ஜாக்கிரத்திற் பகிர்முகனாய்

இருந்துகொண்டு அப்படிச் சொல்லுகிறவன் மித்தியாவாதி. [எ-தி] பர்த்தா இருக்கும்போது அவனுக்கு ஒருவிதமான பணிவிடையும் செய்யாதவள் அவனோடு உடன்கட்டை யேறப்போகிறே னென்று சொல்லுகிறவள் கதைபோல வறிக. [இ-து] தேகாதி வாசனையுள்ள விவேகிக்கு அடையாளமேதென்றால், ஒருவன் வந்து உன் தேகத்திற்கு என்ன உபாதி என்றுகேட்டால், அப்போது தன் வியாதியெல்லாம் சொல்லித் துக்கப்படுகிறான். [எ-தி] வெள்ளை வேஷ்டியைக் கட்டிக்கொண்டும், சந்தனப்பொட்டை போட்டுக்கொண்டும், மீசையை முறுக்கிக் கொண்டும் வந்த மனுஷனை உன் குடும்ப யோகக்ஷேம மென்னவென்று கேட்டதும் அவன் தன்னுடைய கஷ்ட நிஷ்டூரங்களை யெல்லாம் சொல்லி யழுகிறதுபோலும்; மாணியில்லாத ஸ்ரீமந்தனை சுகியென்று நினைத்துப்போன ஈஸ்வரபக்தன் அவனை யேகாந்தத்தில், உமக்குமேற் சுகியில்லையென்று கேட்டுவந்தேன் அப்படித்தானவென்று கேட்க, அவன் வேஷ்டியை அவிழ்த்து மாணியில்லாததையுங் காண்பித்து அழுதகதைபோலுமறிக. [இ-து] அனுபவ ஞானமில்லாமல் மிகுந்த சாஸ்திரங்களைப் பார்க்கிறவர்களுடைய சித்தம் மிகவும் அசிங்கியமாயும், கலக்கமாயும், விரிவாயுமிருக்கும். [எ-தி] அநேகம் பேர்களிடத்தில் போகிற தாசியின் உபஸ்தம்போலும், அநேகம்பேர்கள் குளிக்கிற குளம்போலும், அநேகம் பிள்ளைகளைப் பெற்றவளுடைய யோனியும், ஸ்தன்னியங்களும் போலு மறிக. [இ-து] அனுபவமில்லாமல் வாயினால் வேதாந்தம் படிக்கிறவர்களுக்கு முக்தி வாராது. [எ-தி] பசிக்கு அந்நம் சாப்பிடாமல் அந்நம் அந்நமென்று சொல்வதாற் பசி தீராததுபோலும், இருட்டிலிருக்கிறவன் விளக்கு விளக்கென்று சொல்வதால் இருட்டுப் போகாதது போலும், வியாதியுள்ளவன் மருந்து டாப்பைப் படிப்பதால் அவனுக்கு வியாதி நீராதது போலும், ஏழையாயுள்ளவன் பணம் பணமென்று சொல்வதால் அவனுக்கு மிடி தீராததுபோலு மறிக.

வேதாந்த சாஸ்திரங்களெல்லாம் தெரிந்தவன் ஆத்மாவைச் சிரவணாதி அப்பியாசத்தால் அறியாமல், இதற்கு விபரீதமான துவித விவகாரம் பண்ணப்போனால் அவனை ஆத்துமஹத்தி பண்ணினதாக விசேஷமா யவனுக்கு கெடுதல் சொல்லப்படுகிறது. [எ-தி] பெரிய பரீக்ஷை கொடுத்த உத்தியோகஸ்தன் ஒரு குற்றம் பண்ணினால் அவனுக்கு வருகிற கடின தண்டனைபோல வறிக. [இ-ர்] ஞாநம் வந்தவனைப்போலச் சாஸ்திரங்களைச் சிலர் செய்தாலும், அப்படி அநுபவமிருக்குமென்பது நிச்சயமில்லை. [எ-தி] ராமாயண சாஸ்திரி பரநாரீ சகோதரனாயிருப்பனென்பது நிச்சயமில்லாததுபோலும், நாயக்கன் சிவலிங்காதி சித்திரம் எழுதினாலும் அவனுக்கு சிவபக்தியில்லாதது போலும், விருத்தன் ஸ்திரீயின் கேளீவிலாசத்தை விசித்திரமாய்ப் பேசினாலும் லேபந சங்கதி சந்தேகமாயிருப்பதுபோலு மறிக. [இ-ர்] வேதாந்தியென்று பேர் வைத்துக்கொண்டு விஷயாசையை வைத்திருந்தால் ஜந்மம் தீராது. [எ-தி] டம்

பத்திக்காகச் சந்தனப் பொட்டைச் சாப்பிடாமல் போட்டுக்கொண்டிருக்கிறவனுக்கு உள்ளேயிருக்கிற பசி தீராததுபோலும், மலடியென்று சொல்லுவார்களென்ற சொல்லுக்காக, வயிற்றில் துணியை வைத்துக் கட்டிக்கொண்டு கெர்ப்பமாயிருப்பவள்போல வெளிக்குக் காண்பித்தாலும், மலட்டுத்தன்மை போகாததுபோலுமறிக. [இ-ர்] விசாரணை பண்ணாமல் நான் பிரஹ்மமென்று வாயில் மட்டும் சொன்னதால் அஞ்ஞானம் போகாது. [எ-தி] நதியில் உள்ளே வண்டல் உறைந்து வெளியில்மட்டும் தெளிவான ஜலம் தோற்றுவதால் ஸ்நாநாதிகளுக்குப் பிரயோஜநப் படாததுபோலும், புண் உள்ளே புரையோடும்போது வெளியில் பிளாஸ்திரி போடுவதாற் சுகமில்லாததுபோலு மறிக. [இ-ர்] அமுமுக்ஷுக்கள் விவேக வைராக்கியத்தை வாயால் மட்டும் சொல்லி உள்ளே அவைகளை அநுபவியார்கள். [எ-தி] புராணம் படிக்கும்போது சுரைக்காய் ஆகாதென்று படித்து, வீட்டில்வந்து ஏனதைக் கறி பண்ணவில்லையென்று சண்டைபிடித்தவன் கதைபோலவறிக.

முமுக்ஷுவுக்கு விஷய சங்கற்பம் வருகிறது சுகமா துக்கமாவென்றால், விசாரணையோடு கூடியிருக்கிறவனுக்குச் சுகம். விசாரணையில்லாதவனுக்கு சங்கற்பமில்லாத சமாதியே சுகம். [எ-தி] அசக்தனுக்கு யுத்தம் பண்ணாமல் சும்மா வீட்டுக்குள்ளிருக்கிறது சுகம்போலும், சூரனுக்கு யுத்தம் நேரநேரச் சுகமுண்டாவது போலுமறிக. [இ-ர்] ஆகாசத்தில் எவ்வளவு மேடு பள்ளம் கறுப்பு வெளுப்பு முதலானவை தோற்றினாலும், எப்படிப் பொய்யோ, அப்படிச் சிதாகாசமான தன்னிடத்தில் ஜீவபேத ஈஸ்வரபேத ஜகத்பேதங்களாய் எவ்வளவு தோற்றினாலும் அவ்வளவும் தோற்றுவது மாத்திரமேயல்லாமல் வாஸ்தவமாயில்லை யென்றறிக. [இ-ர்] வேதாந்த சாஸ்திரத்திலுள்ள சகல சங்கதிகளும் மநநமாய்த் தெரிந்தாலும், அநுபவம் வந்தாலொழிய அஞ்ஞாநம் போகாது. [எ-தி] விளக்கினுடைய லக்ஷணமும், ரத்னப்பரீக்ஷையும், அந்நத்தினுடைய மகிமையும், மருந்து முதலானவைகளுடைய லக்ஷணமும் தெரிந்தாலும், அந்தந்த பதார்த்தத்தினுடைய அநுபவமில்லாதவர்களுக்கு இருட்டும், தரித்திரமும், பசியும், வியாதி முதலானவையும் தீராததுபோலவறிக. [இ-ர்] வேதாந்தத்தைத் தனக்கென்று படியாதவனுக்கு முக்தி சித்தியாது. [எ-தி] துலுக்கன் சந்தியாவந்தன புஸ்தகங்களைக் கடையில் நூறு இருநூறு வைத்திருந்தாலும் அவனுக்கு பிராஹ்மண்ணியம் சித்தியாததுபோலும், நாயக்கன் ருத்திராக்ஷ வியாபாரம் செய்தாலும் சிவபக்தி அவனுக்கில்லாததுபோலு மறிக. [இ-ர்] பிரஹ்மஞானியென்பவன் விஷயத்தில் ஆசை வைப்பானானால் அவன் பிரஹ்மத்தை அறிந்தவனில்லை. [எ-தி] சித்தனென்பவன் சோற்றைக் கலந்தானானால் சித்த குளிகை சாப்பிட்டவனல்லாததுபோலு மறிக. [இ-ர்] ஒரு ஞானியை எல்லாரும் நல்லவனென்று சொன்னதும், அதை ஒப்புக்கொண்டு சந்தோஷித்தால், அப்போது, தூஷிக்கும்போது துக்கம்வரும். ஆகையினால் ஜந்மம் வரும்.

[எ-தி] நஞ்சு வியாபாரம் செய்கிறவன் பிறர் ஸ்துதிப்பதைக் கேட்டு அந்த நஞ்சை அவன் சாப்பிட்டானே யானல் இறந்துபோவதுபோல வறிக.

நாலு வேதங்களையும் வேதாந்தங்களையும் படித்தும், அதிசூக்ஷ்மமான பிரஹ்மத்தை யெதுவரை யறியவில்லையோ அதுவரை யவனுக்கு முக்தியில்லை, அந்த வேதமாகிற சுமைகளைச் சுமப்பதா லவன் பிராஹ்மணக் கழுதையென்று பாரதத்தில் சொல்லுவதாலும்; இப்படியே வேத சாஸ்திரங்களெல்லாம் படித்தும் அதிற் சொன்னபடி சாந்தியாதி சத்குணங்களோடு ஆத்மக் ஞானத்தை அடையாமல், நான் வித்துவான் நான் சகல கலைவல்லவனென்று கர்வத்தால் அகம்பாவத்தை அடைந்திருக்கிறவன், விலையுயர்ந்த கழுதை யென்று சொல்லப்படுவனென்று வாசிஷ்டத்திலும்; இப்படியே வெகு புண்ணியத்தால் அடையக்கூடிய மநுஷ்ய ஜந்மத்தை யடைந்தும், அதிலும் விசேஷமான புருஷ ஜந்மத்தை யடைந்தும், அதிலும் வேதத்தினுடைய முடிவை இன்னதென்று தெரிந்தும், தனக்கு வந்திருக்கிற பந்தத்தை நிவர்த்திபண்ணி மோக்ஷத்தை யடைய யத்தநம் பண்ணுமல் அசத்துக்களான தேகாதிகளையும், விஷயாதிகளையும், ஆநந்தமென்று கருதித் தன்னை யறியாத ரூபமான ஹத்தி செய்தவனெவனே அவனைப் பிரஹ்ம ஹத்தி பண்ணினவனென்று விவேக சூடாமணியிற் சொல்லியிருப்பதாலும்; இப்படியே எந்தப் புருஷர்கள் இந்திரியப் பிரீதி பண்ணிவைக்கிறதிலேயே ஆசக்தர்களா யிருந்துகொண்டு அஞ்ஞானத்தோடு கூடிய ஆவரணந்தகாரத்தால் மூடப்பட்டிருக்கிற பதினுலு புவநங்களிலுள்ள போகங்களையெல்லாம் போய்ப் புஜிப்பதும், கர்ம க்ஷயமானவுடன் தலைகீழாய்ப் பூமியில் வந்து விழுவதும், திரும்ப அடியைப் பிடித்துக் கிரமமாய்க் கர்மங்களைச் செய்து அவ்வுலகங்களுக்குப் போய், அந்தப் போகங்களைப் புஜித்து, வண்டிச் சக்கரம்போல சுற்றித் திரிந்துகொண்டிருக்கிறவர்கள் ஆத்ம ஹத்தி பண்ணினவர்களென்று ஈசோபநிஷத்திற் சொல்லி யிருப்பதாலும்; இப்படியே இந்த மநுஷ ஜந்மத்திலேயே பிரஹ்மத்தை யறிந்தவன் பிரஹ்மமாகிருன், அப்படி இந்த மநுஷ ஜந்மத்தில் பிரஹ்மத்தை அறியாமற் போனனேயானல், அவனுக்கு மகத்தான நஷ்டமுண்டாகிறதென்று கேனேபநிஷத்திற் சொல்லியிருப்பதாலும்; இப்படியே இந்த மனுஷ ஜந்மமெடுத்து ஜீவித்திருக்கிறவன் சரீரம் மரிக்குமுன்னமே பிரஹ்ம சாக்ஷாத்காரத்தை யறியாமற்போனனேயானல், பிற்பாடு இந்த ஈஸ்வர சிருஷ்டியான பல்லாயிரங்கோடி அண்டங்களிலுள்ள உலகங்களிலுண்டாகப்பட்ட எழுவகைப் பிறவிகளும், அதிலுள்ள துக்கங்களும், அநுபவிக்கக் கடமைப்பட்டவனென்று கடவல்லி உபநிஷத்தில் சொல்லியிருப்பதாலும்; இப்படியே இந்த உலகத்திற் பிராஹ்மண ஜந்மத்தையும், ஊமை செவிடனகப் போகாமற் சத்குருநாதனிடத்திற்போய், நானர்? இந்தச் சமசார பந்தமெப்படி வந்ததென்று கேட்க, வாக்கையும், அதற்குக் குருநாதன் அநுக்கிரகிக்கிற சப்தங்களைக் கேட்கக் காதையும் கொடுத்

திருக்கும்போது, எவன் இந்த சம்சாரத்திலிருந்தும் கரைபேறவில்லையோ, அவனே பிரஹ்மஹத்தி பண்ணினவனென்று சூதசம்ஹிதையில் ஞாந யோக கண்டத்திற் பரமசிவன் பிரகஸ்பதிக்குச் சொல்லியிருப்பதாலும்; இன்னும் முக்தி கண்டத்தில், பரமசிவன் உத்தமோத்தம அதிகாரியான விஷ்ணுவுக்கு, துர்லபமான மநுஷ ஜந்மமும், அதிலும் புருஷ ஜந்மமும், அதிலும் பிராஹ்மண ஜந்மமும் அடைந்து வேதாந்த சிரவண மநநாதிகளால் வர்ணாச்சிரமங்களுக்கப்புறப்பட்டதாயும், சச்சிதாநந்த லக்ஷணமாயு மிருக்கிற பிரஹ்மத்தையறியாத மூடன், இனி எப்போது முக்தனைப் பவிக்கப் போகிறானென்று சொல்லியிருப்பதாலும்; இன்னும் சகல உபநிஷத்துக்களிலும், சுருதி ஸ்மிருதி புராணங்களிலும் பிரஹ்ம ஞாநத்தினாலேயே சகல சம்சார துன்பங்களும் நிவர்த்தியாய் அழிவற்ற ஆநந்தத்தை யடைவனென்று சொல்லப்பட்டிருக்கிறதென்றறிக. இப்படிச் சுருதிகள் சொல்லுகிறபிரகாரமே யுக்திகளுங் காணப்படுகிறது. அஃதெப்படியென்றால், தான் விழித்துக்கொள்ளாமல், தன்னிடத்திற் கற்பிதமான சொப்பனாவஸ்தையும், அதிற் கற்பிதங்களான ஜீவேஸ்வர ஜகத் பேதங்களும், அதினாற் காணப்பட்ட சுகதுக்கம் முதலான சம்சாரங்களும் தீராததுபோலும்; கிறுக்குப் பிடித்தவன் மந்திரவாதி வந்திருக்கும்போது, அவனிடத்திலிருக்கிற மந்திர யந்திரங்களால், தன் பைத்தியத்தைத் தீர்த்துக்கொள்ளாமற் பின்னால், எந்தக் காலத்திற் பைத்தியம் தீர்ந்து சுகமடையப் போகிறானென்பது போலும்; தீர்க்க வியாதியுள்ளவன் சித்தன் வந்திருக்கிற வேளையில் அவனிடத்திலிருக்கிற சித்த குளிகையை வாங்கிச் சாப்பிட்டுத் தன் வியாதியைத் தீர்த்துக்கொள்ளாமற் பின் எந்தக் காலத்தில் வியாதி தீர்ந்து சுகமடையப்போகிறானென்பதுபோலும்; இப்போது நம் குருநாதனை அடைந்து பவரோகத்தை நிவர்த்தித்துக்கொள்ளாதவனுக்கு ஒருகாலும் முக்தியில்லாமலிருக்கிற அநுபவத்தையும் அறியத்தக்கது.

## 52-வது தரங்கம்.

ஜீவனைப்பற்றியே சேதநாசேதன மென்ற பேதம்:—

சேதநம் அசேதந மென்றபேதம் ஜீவனைக்குறித்து வந்திருக்கிறதேயல்லாமற் சாக்ஷியைக் குறித்து வரவில்லை. [எ-தி] சமாராதனையைக் குறித்துப் பந்திபேதம் வராமல் சுரோத்திரியனையும், விராத்திரியனையும் பற்றிப் பந்திபேதம் யேற்பாடாவது போலும், அநுபவத்தில் ஜீவனில்லாத சுழுப்தியில் சேதநாசேதந விபாகம் காணப்படாமல், அந்தக்கரணப் பிரதிபிம்பமுள்ள ஜாக்கிர சொப்பனத்தில் அஃது காணப்படுவது போலுமாம். சேதநா சேதநபேதம்:— அந்தக்கரணத்தோடு கூடியிருக்கிற ஜீவனைக் குறித்துச் சேதநமென்றும், அந்தக்கரணப் பிரதிபிம்பனான ஜீவனில்லாததைப்பற்றி அசேதனமென்றும் சொல்லப்படுகிறது. [எ-தி] ஜீவன் அநாதிகாலமாய்ச் சம்சாரத்திலாசக்தியுடைய சித்தத்தையுடையவனாய், ஒருகாலும் சொயம்பிரகாசமான கூடஸ்தாத்மா

வேதனக்கு நிஜவடிவமென்றறியாமல் மயங்கி இருப்பதே அஞ்ஞானம். அப்படித் திரிந்துகொண்டிருக்குங் காலையில், ஒரு ஞானி தட்டுப்பட்டு இவனைக் கூப்பிட்டு, நீ கூடஸ்தாத்மாவான நிஜவடிவத்தை யறிந்திருக்கிறாயா அறியவில்லையா வென்று கேட்கும்போது, அவன் “கூடஸ்தாத்மாவை எனக்குத் தெரியாது. இதைக்கேட்கிறதற்காகவா மகாகாரியம் முழுகிப்போகிறது போல நினைத்துக் கூப்பிட்டீர்! இனிமேலிப்படி அவசரமாய்ப் போகும்போது நீர் கூப்பிட்டீரேயானால் நிரம்ப அவமானப்பட்டுப்போவீர்” என்று சொல்லி உதாசினம் பண்ணிவிட்டுப் போகும்படி செய்ததே அஞ்ஞானத்தால் வந்த அநர்த்தம். அதன்பின், ஆவரணம் ஆத்மாநாத்மாக்களின் பேதந் தெரியவொட்டாமற் பண்ணும். வேதாந்தத்துக்கு விரோதமான தர்க்காதிமதங்களிலுள்ள சாஸ்திரங்களைப் படித்து, அந்தந்தச் சாஸ்திரஞ்ஞர்களான பெரியோர்களிடத்தில் அவைகளுடைய அர்த்தங்களை விசாரித்து, ஆத்மா இல்லவே இல்லை யென்று உறுதிப்படுத்திக்கொண்டதன் பிற்பாடு ஆத்ம விசாரம் பண்ணப்போகிறேனென்று சொன்ன பேர்களையும் பார்த்து, அடே மூடா! ஆத்மாவாவதார்? அவரெங்கேயிருக்கிறார்? அப்படி யிருந்தால் விளங்காரா? ஆகையா லாத்மாவென்பதே இல்லையென்று சொல்லும்படியாய்ச் செய்கிறது ஆவரண சக்தி செய்கிற அநர்த்தம். அதன்பின், யானெனதென்று விருத்திரூபமாய் முளைத்துக்கொண்டிருப்பதே விக்ஷேபசக்தி. நான் கர்த்தா, நான் போக்தா, இந்த புண்ணிய பாபம் நம்மை விடாதென்று நடுங்கச் செய்வதே விக்ஷேபத்தினால் வந்த அநர்த்தம். அதன் பின், நிஷ்காமமாய்க் கர்மம் பக்திகளைச் செய்து ஈஸ்வர கிருபையாற் சித்தசுத்தி வந்து, அதனால் சாதந சதுஷ்டயமுண்டாய்ச் சத்குரு சந்நிதானத்திற் ஷட்வித லிங்கத்தால் சிரவணம் பண்ணிப் பிரஹ்மமே சத்தியம் ஜகத்துப் பொய்யென்று பரோக்ஷ ஞானமுண்டாய், அதன் பின் விசாரணையால் அபரோக்ஷ ஞானமுண்டாய், அதனால் கருத்துருத்துவாதி சகல சம்சார துக்கங்களும் நிவர்த்தியாய்த் தடையற்ற ஆநந்தத்தை யடைகிறானென்று தசம திருஷ்டாந்தத்தால் அறிவிக்கப்படுகிற இந்த ஏழவஸ்தைகளும் ஜீவனுக்கே தவிர ஜடமான ஜகத்துக்கும் பந்த மோக்ஷமில்லை, நிர்விகாரமான ஆத்மாவுக்கும் பந்தமோக்ஷமில்லை. [எ - தி] சுத்த ஜடமான பூமிக்கும் அசைவில்லை, சுத்த அரூபமான ஆகாசத்திற்கும் அசைவில்லை, பின்னை எதற்கு அசைவு என்றால், ஜலம் அக்நி வாயுகளுக்கே பிரவாக ரூபமாய் ஜநங்களை இழுத்து போவதும், எரித்து விடுவதும், அசைத்து உருட்டித் தள்ளுவது போலும்; கேவலம் செத்த பிணத்துக்கும், அதிலிருக்கிற சுத்தான ஆத்மாவுக்கும் சுகதுக்காநுபவமில்லாமல் சூக்ஷ்ம தேகத்திலேயே அவை காணப்படுவதுபோலும்; இந்த வேதாந்த சாஸ்திரத்தில் தேகமே நான், பிரபஞ்சம் சத்தியமென்றிருக்கிற மூடனும்; அத்தியந்தம் அஞ்ஞாந ஆவரணங்கள் நிவர்த்தியானவனும், வாசநாக்ஷய மநோநாசம் பண்ணினவனும், நானே பிரஹ்மமென்று திடாபரோக்ஷ ஞாநமுள்ளவனுமிருக்கிற ஞானியு மதிகாரியில்லாமல், இப்போது நான் கருத்

துருத்துவ போக்த்துருத்துவ பிரமாதுருத்துவ முதலான அகங்காரங்களாற் செய்யப்பட்டிருக்கிற புண்ணிய பாப கர்மங்களுக்குப் பலன்களான ஜநநமரண சம்சார பந்தங்களையுடையவனு யிருக்கிறேன், எப்போது இந்தச் சம்சாரங்களும், அதற்குக் காரணங்களான கர்மங்களும், அதற்குக் காரணங்களான கர்த்துருத்துவாதிகளும், அவைகளுக்கெல்லாம் மூல காரணமான அஞ்ஞாநமும் நிவர்த்தியாய் ஜீவன்முக்தனாகி வெப்போது பவிப்பேனென்று தாபத்தையடைந்திருக்கிறவனே இந்த வேதாந்த சாஸ்திரத்தில் அதிகாரி யென்று வாசிஷ்டத்தில் சொல்லியிருப்பதாலும், பந்தமோக்ஷங்களுக்கு ஜீவனே அதிகாரியென் றறியத்தக்கது.

## 53 - வது தரங்கம்.

ஜீவன் பொய்யன்:—

புத்தியின் கருத்துருத்துவத்தையும், ஆத்மாவின் அறிவையும் ஒன்று சேர்த்து ஜீவன் நான் கர்த்தாவென்பதால் பொய்யனென்பதற்கு யுக்தி:— மலடன் அடுத்த வீட்டுப் பிள்ளையையும், எதிர்த்த வீட்டுப் பெண்ணையும் ஒன்று சேர்த்துத் தன் வீட்டில் கலியாணம் செய்தது கொண்டு, அவனுக்கு மலடனென்ற பேர்போகாததுபோல வறிக. [இ - ா] துஷ்டனாயிருக்கிறவனுக்கு உத்தியோகத்தைப் பிடுங்கினால் எப்படி ஒடுங்கிப்போவனோ அப்படி, ஜீவனுக்கு விஷயம் பொய்யென்ற ஞாநத்தாற் சத்திய புத்தியைக் கெடுத்தால், அகம்பாவமான ஜீவத்துவம் போமென்றறிக. [இ - ா] கிரகத்திலிருக்கிற பலகாரத்தைக் குழந்தைகள் வெளியே கொண்டுபோய்ச் சமைத்துச் சாப்பிட்டேனென்று எண்ணுகிறதுபோல, ஆத்மாவினுடைய சத்தையை வைத்துக் கொண்டு ஜீவன் தான் புதிதாய்ச் சுகத்தை யுண்டுபண்ணினது போலப் பிரமிக்கிறானென்றறிக. [இ - ா] ஜீவர்கள் விஷயத்திலே சத்தியபுத்தி பண்ணி, ராகத்தினாற் கட்டுப்பட்டு ஸ்வகர்ம தூதனால் வெகு சீக்கிரமாய்ச் சொர்க்க நரகத்துக்கு அடிக்கடி விரட்டப்படுகிறார்கள். [எ - தி] திருடனுக்கு விலங்கு போட்டுச் சேவகன் நாலு பக்கமும் வேலைசெய்ய இழுக்கிறதுபோலவறிக. [இ - ா] ஜீவனையும் மனதையும் பிறித்தால் பந்தமும், துக்கமும் போவானேனெனில், கெடியாரத்தைப் பிறித்தால் ஓட்டமும், ஓசையும் போவானேன்? நெல்லிலிருக்கிற உமியையும், அரிசியையும் பிறித்தால் பின் முளைக்காமற் போவானேன் சொல்? [இ - ா] அஞ்ஞானமுள்ளவரையில்தான் ஜீவத்துவம் விளங்கும். [எ - தி] ராத்திரி இருட்டுள்ள வரையில் மின்மினிப் பூச்சி விளங்குவதுபோல வறிக. [இ - ா] ஆத்மாவும், அந்தக் கரணமும் சிநேகம் செய்து, ஆத்மா தன் சுகத்தை அந்தக் கரணத்திற்குக் கொடுத்து, அந்தக்கரணத்தின் சுகமின்மையாகிய அசத்துவத்தைக் கண்டு, ஆத்மா துக்கிக்கிறார். [எ - தி] ஒரு பிரபுவும், வெங்கனும் சிநேகம் செய்து, பிரபுவின் சொத்தை யெல்லாம் வெங்கனை வெகுநாள்வரையில் அநுபவிக்கும்படி செய்ததன்பேரில், அந்த வெங்கனுடைய சொத்தை அப்பிரபு அநுபவிக்க என்ன இருக்கிறதென்று

விசாரிக்கும்போது, அவன் ஒன்றுமில்லாதவனென்று வெளியானதின்பேரில், அந்தப் பிரபு துக்கிக்கிறதுபோலும்; இருவர் சேர்ந்து போகும்போது ஒருவன் கட்டுச்சாதத்தை இருவரும் முந்திச் சாப்பிட்டபின் மற்றொருவன் கட்டுச்சாதக்கட்டி மண்ணுங்கட்டியாய்ப் போனதைக் கண்டு அவன் துக்கித்த கதைபோலு மறிக. [இ - ர்] ஜீவன் தன்னுடைய கருத்துருத்துவத்தைச் சாக்ஷியினிடத்தி லாரோபிக்கிறன். [எ - தி] சேவகன் திருடி ராஜன்பேரிற் சொல்வதுபோலும், சமர்த்தன் தயிரைக் குடித்து ஏழை தலையில் தடவினதுபோலு மறிக.

மரணகாலத்திற் பிராணன் போகும்போது ஜீவனும் கூடப்போகிறன். [எ - தி] கடத்தில் ஜலம் மொண்டுகொண்டு ஓடும்போது, பிரதிபிம்பமும்கூடப் போவதுபோல வறிக. [இ-து] ஜீவன் மனதின் கருத்துருத்துவத்தையும், ஆத்மாவின் அறிவையும், ஒன்றுசேர்த்து நானறிந்தேனென்று சொல்லுவதாற்பொய்யன். [எ - தி] ஒருவன் வண்டியையும் மற்றொருவன் மாட்டையும் திருடிக் கட்டிப்போகிறவன் விசாரணையாற் பொய்யனாய்ப் போவதுபோலவறிக. [இ-ர்] ஜீவன் தன் அஞ்ஞானத்தால் அந்தக்கரணத்தோடு தாதாத்மியாத்தியாசத்தை அடைந்ததனாலுண்டான கருத்துருத்துவாதி சம்சார பந்தங்களை அதிஷ்டானமாய் நிர்விகாரமாய் அசங்கமாயிருக்கிற சாக்ஷியினிடத்தி லாரோபிக்கிறன். [எ - தி] உலகத்தில் தன் கர்மத்தால் வந்த கெடுதியை ஈஸ்வரன் நம்மை சோதித்துக் கெடுக்கிறனென்று சொல்லுவது போலும்; பரஸ்திரீயானவள் தன்போகத்திற்காகப் பரபுருஷனை வரவழைத்து வியபிசாரம் நடந்து வரும்போது, ஒருகால் சொந்த புருஷன் கண்டுவிட்டால் அப்போது அய்யோ அப்பா என்னை இப்படி இவன் பலவந்தப்புணர்ச்சி செய்கிறனென்று கூக்குறல் போடுவதுபோலும்; சூர்ப்பநகை, சீதையை ராவணா உனக்காகத் தூக்கப்போய் இக்கோலமானேனென்று சொன்னதுபோலும்; ராஜஸ்திரீ, தன் புழுக்கச்சி மகன் தன்பேரில் மோகத்தையடைந்திருக்கிற சங்கதியைக்கேட்டு அவள் அந்தப் புழுக்கச்சியைப் பார்த்து ராத்திரி உன் வீட்டுக்கு நான் வருகிறேன் உன்மகனை வீட்டில் தயாராயிருக்கச் சொல்லென்று சொல்லி அநுப்பிவித்து, அப்படியே ராஜஸ்திரீ ராத்திரி அவள் வீட்டுக்குவந்ததில், அவள் மகன் கடைக்குப்போய்ப் பூரிதக்ஷணை கொடுக்கிற கூட்டத்தி லடைபட்டுப்போனதால், இந்த ராஜஸ்திரீ காமவிகாரத்தால் யாரையாவது ஒரு புருஷனைக் கூட்டிவா வென்று சொன்னதும், அப்புழுக்கச்சி வெளியில் வந்ததன்மேல் நகர்சோதனைக்காக ஆண்டி வேஷங்கொண்டுவந்த ராஜனை வீட்டுக்குள் கூட்டிபோன மாத்திரத்தில் ராஜஸ்திரீ கிட்டவந்து நிற்கிற ஆண்டிவேஷங் கொண்ட புருஷன் தன் புருஷனென்று தெரிந்துகொண்டு விட்டதால், அந்த ராஜா நீ இங்கே யென்னத்திற்கு வந்தா யென்று கேட்கவும், அவள் அரிவாள்மணையைக்கொண்டு கழுத்தை அறுத்துக் கொள்ளுவேனென்று சொன்னதைக் கேட்ட ராஜன், என்னத்திற்காக வென்று

கேட்க, அவள் நீ நகர் சோதனேயென்ற வியாஜத்தாற் பரஸ்திரீ கமநம் பண்ணுகிருயென்று கேட்டபடி, இப்போது அநுபவத்திலும் சரியாயிருக்குதென்று சொன்ன கதைபோல் இருக்கிறதென் றறிக.

## 54-வது தரங்கம்.

அக்ஞானியின் தன்மை:—

தேகாத்ம புத்தியுடன் கூடிய அஞ்ஞானியும் கடபடாதியும் அறியாமையிற் சரியானுலும், அஞ்ஞானியால் துக்கம் வருவதால் அவனைத் தள்ளவேண்டியது. கடபடாதிகள் தாகம் குளிர் முதலான துக்கங்களைப் போக்கிச் சுகம் தருவதால் அவைகளைக் கிரகிக்கவேண்டியது. [எ-தி] பசுவும் புலியும் மிருகமென்பதிற் சரியானுலும் பால்கொடுப்பதாற் பசுவைக் கிரகிக்கவேண்டியதாயும், பிராணனைவாங்குவதாற் புலியை கொல்லவேண்டியது போலும்; புனுகு பூனையும் பூனையும், பூனையென்பதிற் சரியானுலும், புனுகு பூனை புனுகுசட்டங் கொடுப்பதாலும், வீட்டிலிருக்கிற வெண்ணெய் முதலானவைகளைத் திருட்டுத்தனமாய்ப் பூனை தின்பதாலும், அதைவாங்கி வளர்ப்பதும், இதை அடித்து விரட்டுவது போலுமறிக. [இ-ர்] சதா துவித விவகாரஞ் செய்கிறவன் ஏகதேசத்தில் அத்வைத விசாரம் பண்ணினுலும், துவித வாசனையே பெலக்கும். [எ-தி] லக்ஷம் ரூபாய் கடனுள்ளவனுக்குப் பத்து ரூபாய்வந்தாலும், கடன்காரனுகவே யிருப்பதுபோலும், சமுத்திரத்தில் விழுந்த கங்கையும் உப்பாய்ப் போவதுபோலுமறிக. [இ-ர்] அவிவேகியான ஜீவனுக்குப் பாஷ்யாதி சாஸ்திரம்படிப்பதால் மேன்மேலும் அகங்காரம் விருத்தியாகும். [எ - தி] தலை மொட்டையாயிருக்கும்போதே பிசாசு பிடித்து ஆடினல், தலைமயிர் வளர்ந்தபின் ஆடுவதிற் கேட்கத் தேவையில்லாததுபோலும்; சும்மாயிருக்கும் போதே அதிகாரம் பண்ணுகிறவனுக்கு உத்தியோகம் வந்தபின் அதிகாரம் பண்ணுவதில் அதிசயமில்லாததுபோலுமறிக. [இ-ர்] ஜீவத்துவ மிருக்கிறதற்கு முக்கிய லக்ஷணம் சொல்லுகிருேம். அதாவது:—தன்பேரிற் குற்றம் எவ்வளவிருந்தாலும் ஒப்புக்கொள்ளுகிறதில்லை. [எ- தி] ஸ்திரீயானவள் எவ்வளவு ருசுவாக ஒப்பிவித்தாலும் தன் வியபிசாரத்தை ஒப்புக்கொள்ளாததுபோலும், குறவனை எவ்வளவு அடித்தாலும் தான் திருட்டு பண்ணினதை ஒப்புக்கொள்ளுகிறதில்லாததுபோலுமறிக. [இ-ர்] சர்வ வியாபகனுன தான் அஞ்ஞானமோகத்தால் அற்பமான தேகத்தில் நானென்று கிடக்கிருன். [எ-தி] அகண்ட சக்கிரவர்த்தியான ராஜன் அவிசாரியின் மயக்கத்தால் அவளுடைய பீற்றற் குச்சைத் தன்னதாயபிமானித்து அதில் வந்து படுப்பதுபோல வறிக. [இ-ர்] எல்லாரிடத்திலும் ஆத்மாவிருந்தாலும் அபக்குவனுக்குத் தெரியாது. [எ-தி] பத்துப்பேர்களும் ராஜகுமாரர்களாயிருந்தாலும் அதில் நினைவு தெரியாத குழந்தை அதையறியாததுபோலும், ரத்நவீட்டிலுள்ளவர்களில் குருடனுக்கு அந்தரத்நம் பிரகாசியாததுபோலு மறிக.

[இ-ர்] மூடர்களுக்குப் பஞ்சகோசங்களே ஆத்மாவாகத் தோற்றும். [எ-தி] பட்டிக்காட்டு ஜநங்களுக்கு அரண்மனை வாசற்கட்டுகளிலிருக்கிற டபேதார் முதலானவர்கள் ராஜாவாய்த் தோற்றுவது போல வறிக. [இ-ர்] உபநிஷத்துக்களை ஞானமில்லாதவன் நெட்டுருவாய்த் தரித்ததால் அவனுக்குப் பிரயோஜநமில்லை. [எ-தி] இரண்டு வயதுக்குழந்தைக்கு லக்ஷம் ரூபாய் நகையைப்போட்டாலும் பிரயோஜனமில்லாததுபோலும், கழுதையின் பேரில் களப கஸ்தூரி மூட்டையை யேற்றினாலும் அதற்குப் பிரயோஜநமில்லாதது போலு மறிக.

ஐயா, வேதசாஸ்திரங்களை அப்பியாசித்தவனுக்கு ஆத்மஞாநமில்லாமற் போனால் யாதொருப் பிரயோஜநமுமில்லை யென்று சொன்னீர்களே, அப்படிச் சொல்லலாமா, ஒரு வேதத்தில் வேதங்களுக்கு அர்த்தம் தெரியாமற்போனாலும், அவைகளில் சொல்லப்பட்டிருக்கிற யக்ஞாதிகர்மங்களைப் பண்ணச் சக்தியில்லாதேபோனாலும், அந்தந்த வேதங்களை வாக்கினால் பாராயணம் பண்ணினால் அந்தந்தப் பலன்களை யடைகிறானென்று சொல்லியிருக்கிறதே, அதற்குத் தாற்பரிய மென்னவென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள். சிராத்த திநத்தில் சிராத்தம் பண்ணச் சக்தியில்லாதவன் காரமுள்ளுச் செடியைக் கட்டிக்கொண்டு அழவேண்டுமென்று சொன்ன சொல்லின் தாற்பரிய மென்னவென்றால், அந்தச் சிராத்ததிநத்தி லவன் அஜாக்கிரதையாய்ச் சும்மா யிருக்கக்கூடா தென்ற கருத்தைப் போல, இந்த மநுஷ ஜன்ம மெடுத்தவன் இந்தப் புருஷார்த்தமான பரமோக்ஷத்தை அடைவதற்காக ஏதேனும் சமாதியாவது, நிதித்தியாசனமாவது, மநநமாவது, சிரவணமாவது, சதுர்வித குருசேவையாவது, சற்குருவைத் தேடுவதாவது, தீவிரமோக்ஷ இச்சையை அடைகிறதாவது, சமதமாதி வைராக்கிய விவேகாதிகளை சம்பாதிப்பதாவது, நிஷ்காமபக்தி கர்மங்களையாவது, ஏதேனு மிவைகளுக்குள்ளே மேன்மேலான நல்ல முயற்சியைச் சிரத்தா பக்தியுடன் அப்பியாசித்து இந்த ஜன்மத்தைச் சபலமாகப் பண்ணவேண்டியதே சுருதிக்கு அந்தரங்க தாத்பரிய மென்றறிக.

அஞ்ஞாநியின் தன்மை:—

பிரஹ்மஞாநமில்லாதவனுக்கு எவ்வளவு ஐஸ்வரியமிருந்தாலும் துக்கம் தான். [எ - தி] தூக்கிலே போட உத்திரவானவனுக்கு விஸ்தாரமான போஜநாதிகளும் விஷத்திற்குச் சமானமாய்த் தோற்றுவதுபோலும், சிசுநத்தில் ரணமாயிருக்கிறவனுக்குச் சிறிக்கிக் கூட்டங்கள் சீருட்டினாலும் சுகமில்லாதது போலுமறிக. [இ - ர்] ஞாநமில்லாத சுஷ்க வைராக்கியமுள்ளவனுக்கு லோக பூஜிதைமட்டுமே தவிர, தனக்கு உள்ளே சுகமில்லை. [எ - தி] ரோகதாசிக்கு அலங்காரத்தால் தனக்கு உள்ளே சுகமில்லாமல் பார்க்கிறவர்களைமட்டும் மயக்குவதுபோலும், உத்தியோகஸ்தர்கள் போலும், வியாதியாயிருந்த புதுக்கோட்டை ராஜா பட்டணப் பிரவேசம் வருவதுபோலுமறிக. [இ - ர்] மூடர்

களுக்கு ஞானாமிர்தத்தைச் சொன்னால் விரோதம். [எ - தி] பாம்புக்குப் பாலைக் கொடுப்பதுபோலவறிக. [இ - ர்] அஞ்ஞானிக்குக் கூடஸ்தர் முதல் தேகம்வரை ஒன்றாய்த் தோற்றும். [எ - தி] குருடனுக்குத் தங்கம் முதல் இரும்பு வரையிலும், சூரியன் முதல் இருட்டு வரையிலும், மூலை முதல் மலை வரையிலும், ஒன்றாய்த் தோற்றுவதுபோலு மறிக. [இ - ர்] குருவாக்கியத்தை நம்பாதேபோனாலும் போகட்டும், குதர்க்கம் பண்ணாமலும், சித்தத்தில் துவேஷ வாசனையை வைத்துக்கொண்டு தூஷியாமலுமிருந்தால் போதும். [எ - தி] பிச்சை போடாதே போனாலும் போகட்டும், நாயையும் குரங்கையும் விட்டு கடிக்கச் சொல்லாதே யிருந்தால் போதுமென்பதுபோலு மறிக. [இ-ர்] குருசந்நதியிலிருக்கும்போதே நான் பிரஹ்மமென்று துணியாதவன் தனித்திருந்தால் என்னமாய்த் துணியப்போகிறான். [எ - தி] பகலிற் பத்துபேரோடு போகும்போதே இரடி விழுகிறவன் இருட்டோடுகூடிய இரவில் தனித்துப் போனால் இடறி விழாமல் எப்படி சஞ்சரிப்பனென்பதுபோல வறிக. [இ - ர்] அஞ்ஞானத்தாலுண்டான விபரீதத்தால் ஆத்மா தான் அறிவென்பதை மறந்து, நான் தேவன் நான் மநுஷன் என்றிப்படி உளருகிறான். [எ - தி] பேய்பிடித்த பெண் தன்னை மறந்து நான் மொட்டைக் கறுப்பன், சங்கிலிவீரன், மாடனென்றிப்படிச் சொல்வதுபோலும்; சுகமான படுக்கையில் படுத்திருப்பதை மறந்து, சொப்பனத்தில் ஐயோ! அப்பா! யென்று அலறுகிறதுபோலுமறிக. [இ-ர்] பிரஹ்மசுகத்தைக் கண்டுதானே கர்மாதிகளையும் சிற்றின்பத்தையும் விடுவான். [எ - தி] ரத்ன அரண்மனையை அடைந்தபிறகே பீற்றற் குச்சை விடுகிறதுபோலும், அமிர்தத்தைக் கண்ட பிறகே கூழை விடுகிறதுபோலுமறிக. [இ - ர்] ஜீவர்களுக்கு எவ்வளவு ஞானத்தைச் சொன்னாலும் கர்மத்திலேயே அழுந்துவார்கள். [எ - தி] மாயம்மா பேட்டேதி பெட்டவலா யென்ற கதை போலும், கூலிக்காரன் வேலையில்லையென்று ஒரு ஞானியினிடத்தில் வந்து சொன்னதற்குக் கால்ரூபாயைக் கையிற் கொடுத்து, ஆத்ம விசாரம் பண்ணவிருக்கச் சொன்னதில் ஒரு நாழிகை யிருந்து, எழுந்திருந்து ரூபாயைக் கொடுத்துவிட்டு ஓடின கதைபோலுமறிக. [இ - ர்] அஞ்ஞானிகள் அஞ்ஞான பூமிகள் ஏழிலேயே சுற்றிக்கொண்டிருப்பார்கள். [எ - தி] மலத்திலேயே புழுக்கள் சுற்றிக்கொண்டிருப்பது போலும், சகதிக் குட்டையிலேயே தவளை ரமித்திருப்பதுபோலு மறிக. [இ - ர்] பிரயோஜநத்தை ஒட்டி வருகிற சிநேகம் ஆரம்பத்திற் போலே எப்போதும் பரபரப்போடே யிருக்கமாட்டாது. [எ-தி] சிசுநத்தை அநுபவத்தில் பார்த்துக்கொள்ளத்தக்கது. [இ - ர்] தத்துவஞானம் வராதவரை யாரானாலும் ஜநந மரணத்தைவிட்டு நீங்கார்கள். [எ - தி] வாரண்டுக்குப் பணம் கட்டாதவரை யாரானாலும் ஜயிற் கொட்டடிக்குப் போகவேண்டியது சரியாயிருப்பதுபோல வறிக. [இ - ர்] அஞ்ஞானிகள் பஞ்சகோசத்தையும் நானென்று சொல்லுவதில் பயமும் துக்கமும் பண்ணாமல், பிரஹ்மம் நாமென்றதில்தான் பயத்தையும் துக்கத்தையு மடைகிறார்கள். [எ - தி]

ரெட்டியார்தன் ஸ்திரீயை "மாலவாடு முதல்கொனி தெங்கினபடிகினி மனகு விசனமுனு தக்குவனுலேது, மனவாடு மட்டுகு தெங்க கூடது" வென்று சொல்லுவது போல வறிக.

குடும்பத்திற்குச் சம்பாதித்துப் போடும் வரையிற் சந்தோஷிப்பார்கள். எப்போ தஃதில்லையோ, அப்போது வக்கரிப்பார்கள். [எ-தி] உப்புமண் வீடு சாணித்தண்ணீர்போட்டு மெழுகிக் கொண்டு வரும் வரைப் பளபளப்புக் காட்டுவதும், பத்து நாள் சாணியும் தண்ணீரும் போடாவிட்டால் உப்புப் பொறிவதுபோலும்; இந்தத்தேகமும் அந்நமுதலானதால் உள்ளுக்குத் திருப்தியும், அப்பியங்க முதலானதால் வெளிக்குத் திருப்தியும் கொடுக்கும் வரைச் சுகமாயும், அழகாயு மிருந்து இவைகளுக்குக் கொஞ்சம் தட்டுப்பாடு வந்ததானால், அழகும், சுகமும் போய்த் துக்கமும், துர்விகாரமும் உண்டாவது போலு மறிக. [இ-ர்] ஜீவன் அநாத்மாவான பொறிகளுக்கும் மநதுக்கும் இஷ்டமான விஷய சங்கற்ப விகற்பங்களைப் பண்ணுவதற்கு இடங்கொடுக்கும் வரை, அந்தமநசு சீவனோடு இஷ்டம்போலே யிருந்து பிரியமாயிருக்கும். எப்போது அந்த மநசை விஷயசங்கற்பம் பண்ணாதே, ஆத்ம சங்கற்பம் சதாகாலமும் பண்ணக்கடவாயென்று தடுக்க ஆரம்பித்தால், அப்போது இந்த மனதானது வியசநத்தை அடைந்து தனக்கு விரோதியைப் போலக் கோபத்தையடையும்; இப்படியே காதுக்கு வீண் வார்த்தைகளைக் கேட்க இடங்கொடுக்கும் வரைச் சந்தோஷமாயிருக்கும், அவைகளைக் கேட்கவேண்டாம் சத் வசநத்தைக் கேளென்றால் வியசனிக்கும்; துவக்கிந்திரியமும் ஸ்திரீ முதலான பரிசத்தை யநுபவிக்கவிட்டால் சுகிக்கும், அதைத் தடுத்தால் துக்கிக்கும்; நேத்திரமும் ஸ்திரீ முதலான ரூபத்தைப் பார்க்கவிட்டால் சந்தோஷமாய்ப் பார்க்கும், வேதாந்த சாஸ்திரத்தைப் பாரென்று கொடுத்தால் சற்றே பார்க்கு முன்னமே கண்ணெரிகிறதென்று கண்ணில் ஜலம் விட்டழுகும்; ரசனேந்திரியமும் தனக்கு இஷ்டமான வடை போளி முதலான ரசங்களை இன்னம் வேண்டும் வேண்டுமென்று சாப்பிடும், சரீரத்துக்கு ஆரோக்கியமான எண்ணெய் முதலான ஔஷதத்தைக் கொடுத்தால் மிகுந்த சங்கடத்துடன் அவைகளை வெளியில் வாந்திபண்ணிப் போடும்; கிராணேந்திரியமும் பெண்டாட்டிபிள்ளைகளுடைய கந்தத்தையே கட்டி முத்தமிட்டுக்கொண்டு சுகிக்கும், சாதுக்கள் முதலானவர்களுடைய கந்தத்தைக்கண்டு அசிங்கப்படும்; வாக்கும் வீண்வார்த்தையை விடியவிடியப் பேசும், சத் வசநத்தைச் சொல்லென்றால், சொல்லப்பட்டால் சொல்லேனென்று விசநமாய்ச் சொல்லும்; பாணியும் பெண்டாட்டி முதலானவர்களுக்காக ஊழியம்வரைச் செய்யும், பெரியவர்கள் பணிவிடையைச் செய்யென்றால், கைவலிக்கிறதென்று சொல்லும். காலும் சம்பாத்தியம் வருகிறதானால் ஓடும், பெரியவர்களிடத்திற் போகிறதற்கு வலிக்கிறதென்று சொல்லும். [எ-தி] பிள்ளைகள், உபாத்தியாயர் படிக்கச்சொன்னால் வயிறு வலிக்

கிறதென்று சொல்லும், விளையாடப் போகச் சொன்னால் உத்ஸாகமாக ஓடும்; ஸ்திரீயை அக்கிஹோத்திராதி கர்மங்களுக்கு ஒத்தாசையாய்க் கூட விருந்து பணிவிடை செய்யச் சொன்னால், தலைவலி பிராணன்போகிறதென்று சொல்லு வாள், பிறந்த வீட்டுக்குப் போகச் சொன்னால், தலைவலி இவள் புறப்படு முன் னமே ஓடிப்போம்; ஒரு அதிதிவந்திருக்கிறானென்று சொன்னால் சமையற் பண்ண முணங்குவள், தனக்கு இஷ்டமானவர்களானால் சுகமாய்ச் சமைத்துப் போடுவதுபோல; இந்த மனதும் ஆத்மாவைச் சிரவணம்பண்ண உட்காரச் சொன்னால் பராக்குப் பார்த்துக்கொண்டாவது, வீண்வார்த்தை பேசிக்கொண டாவது, அல்லது சுழுப்தியையாவது அடையும். மநநம் பண்ணச் சொன்னால் மநோராச்சியம் பண்ணும். நிதித்தியாசந சமாதிகளைப் பண்ணச் சொன்னால் பாற்கடலிலிருக்கிற மகாவிஷ்ணுவின் அம்சத்தைத் தரிக்கும். ஆகையால் இந்த மனதைச் சத்குரு கிருபையாற் ஜயிக்கவேண்டுமே யல்லாமல் மற்ற எவ்விதத்தி லும் இதை ஜயிக்க முடியாதென் றறிக.

## 55 - வது தரங்கம்.

ஜீவர்கள் விவகரிக்கிற சகல சப்தங்களுக்கும் விசாரித்தால் அர்த்தமில்லை :—

ஜீவர்கள் விவகரிக்கிற பாமர வியாபார முதல் பக்தி வரையிற் செய்கிற அபிமானங்களுக்கு அர்த்தமென்னவென்று விசாரித்தால், அர்த்தமின்றி அநர்த்தமாய்ப் போகும். [எ - தி] சித்திரத்தையும், சொப்பனத்தையும், இந்திர ஜாலத்தையும் விசாரிக்கும்போது அர்த்தமின்றி அநர்த்தமாய்ப் போவதுபோல வறிக [இ - து] சகலரும், செத்தால் நன்மையென்று சொல்லு கிறபடி சாவு வந்ததானால், அப்போது சரீரத்தைவிட பயப்படுவார்கள். [எ-தி] குளத்தில் விழுந்து சாகிறேனென்று புருஷனுக்குப் பயம் காட்டிக்கொண்டு வந்தவளைச் சிநேகிதனுடைய வார்த்தையால் தைரியம் வந்தபின், பழையபடி சொன்ன அவளைப் புருஷன் மயிரைப் பிடித்து இழுத்துக்கொண்டு குளத்துக் குப் போய்த் தள்ள யத்தனிக்கும்போது இனிமேலிப்படிச் சொல்லவில்லை யென்று கெஞ்சின கதைபோல வறிக. [இ - ர்] ஜீவர்கள் வியவகரிக்கிற ஜாதி குலம் கோத்திரம் வர்ணம் ஆஸ்சிரமம் நாமம் முதலான சகலத்துக்கும் விசாரித் தால் அர்த்தமில்லை, அநர்த்தமாகவே யிருக்குமென்றறிக. ஐயா, சகலத்திரா ளும் சத்தியமாய்ச் சுருதிப்பிரமாணமூலமாய்ச் சகல பெரியவர்களும் அநுஷ் டித்து வருகிற நித்திய நைமித்திய கருமங்களை யெல்லாம் தாங்கள் பொய் யென்று எப்படிச் சொல்லக்கூடுமெனில், அதற்குத்தரம் சொல்லுகிறேன் கேள், முதலில் ஒருவனைப்பார்த்து நீ யாரென்று கேட்டால், நான் ராமனென்று சொல்லுகிறான் இந்த சரீரத்தில் சிரசு முதற் பாதம் வரையில் ஒரு ஒரு அவ யவமாய்ப் பார்க்கும்போது அததற்குத் தலை கால் கை கண் மூக்கென்று வேறு வேறே நாமங்களிருக்கும்போது ராமனிருக்கிறதற்கு எங்கே இடமிருக்கிறது?

அல்லது இந்த ராமனென்கிற சொல் வர்ணத்தைப்பற்றி யிருக்கிறதென்றால், எந்த வர்ணத்தைப்பற்றி யிருக்கிறது? பிராஹ்மணனிலும், க்ஷத்திரியனிலும், வைசியனிலும், சூத்திரனிலும், மற்றை ஜாதிகளிலும், இந்தப் பேரிருக்கிறது. அதுவுமன்றி ஒரு பிராஹ்மண ஜாதிக்கெல்லாம் இந்தப் பேர் வைக்கப்பட்டிருக்கிறதா? அப்படியுங் காணோமே! இப்படியே மற்றைக் குல கோத்திர ஆஸ்ரமங்களுக்கும் அர்த்தம் விசாரித்தால் அநர்த்தமாகவே போகிறது. இன்னும் தலை முதலான நாமங்களையும் விசாரிக்கும்போது, மயிர், தோல், ரத்தம், மாமிசம், நரம்பு, எலும்பு முதலானதாய்ப் போவதால் அவயவங்களுக்கும் அர்த்தமில்லை. இப்படியே ஆண், பெண், அலியென்ற ஜாதிகளும், ஆறு தத்துவமாயிருப்பதால் அர்த்தமில்லை. நான் பார்த்தேன் கேட்டேன் என்னும்போது, அந்தத் தொழில்கள் இந்திரிய தர்மமாதலால் அதற்கும் அர்த்தமில்லை. என் பெண், என் பிள்ளை யென்னும்போது, அவைகளும் பஞ்ச பூத விகாரமாய் ஆறு தத்துவமாயிருப்பதால் அந்தச் சொல்லுக்கும் அர்த்தமில்லை. என் வீடு என் பண்டங்கள் என்று சொல்லுகிற சொல்லுக்கும் அர்த்தம் விசாரித்தால், பூத விகாரமே தவிர அர்த்தமில்லை. மதுரை முதலான ஊர்களுக்கும் மண்ணைத் தவிர அர்த்தமில்லை. கெங்கை கோதாவரி காவேரி என்ற சொற்களுக்கும் தண்ணீரைத் தவிர அர்த்தமில்லை. பிரஹ்மா விஷ்ணு சிவன் முதலான தேவதைகளும் மாயாப் பிரதிபிம்பர்களானதால் மாயை என்ற சொல்லுக்கு இல்லாமையே அர்த்தமானதால், அதில் பிரதிபிம்பித்த பிரஹ்மாதிகளும் அசத்தாய்ப் போவதாலும், இப்படியே வேதங்கள் வேதாங்கங்களான சாஸ்திரங்கள், பிரணவாதி மந்திரங்கள் முதலானவெல்லாம் சப்த மாத்திரமாயிருப்பதால் அவைகளுக்கும் அர்த்தமில்லை. இப்படியே கைலாசாதி உலகங்களும், அதிலுள்ள சாலோகாதிபதங்களும், அவ்விடத்திலுள்ள போக போக்கியங்களும் அசத்தாயிருப்பதாலும், ஜீவன் வியவகரிப்பதெல்லாம் அசத்தென்று சொல்லலாமென்றறிக.

## 56-வது தரங்கம்.

ஜீவன் ஒரு கருவி கரணமுமில்லாதவனானதால் நான் செய்தேனென்று சொல்லக்கூடாது:—

அநேக தத்துவங்களுடன் சேர்ந்திருக்கிற தேகாதிகளை ஜீவன் நானென்று சொல்லக்கூடாது. [எ - தி] அநேக சாதநங்களுடன் ஓடுகிற ரயில் வண்டியை நான் ஓட்டினேனென்று சொல்லக்கூடாதது போலும், அநேகம் பேர்கள் பட்டயம் பெற்றிருக்கிற கிராமத்தை வெங்கன் என்னதென்று சொல்லக் கூடாதது போலு மறிக. [இ - ர்] ஜீவன் தோற்றரவு மாத்திரமாய்ச் சுத்தப் பொய்யனா யிருப்பதாலிவன் இன்ன இன்ன காரியங்களைச் செய்தேன், இன்ன இன்ன காரியங்களைச் செய்யப்போகிறேனென்று சொல்வது மிகவும் அசத்தா யிருக்கிறதென்றறிக. ஐயா, இப்படி ஜீவனே இல்லாதவனானால் இவன் செய்த

புண்ணியத்தால் தேவஜந்ம மெடுக்கிறனென்றும்; இவன்செய்த பாபகர்மத்தால் ரௌரவாதிநரகங்களை யநுபவித்தபின், சேஷமான பாபகர்மத்துக்கு ஈடாக மரமுதல் மாடுவரையிலுள்ள ஐவகையான திரியக்காதிஜந்மங்களை யடைகிறனென்றும்; புண்ணியபாபகர்மங்களுடைய மிஸ்ரத்தால் மநுஷ ஜந்மத்தை யடைகிறனென்றும்; அதிலும் புண்ணியகர்மத்தால் விராட்புருஷனுடைய முகத்திலிருந்து உண்டான பிராஹ்மணஜந்மத்தை யடைகிறனென்றும்; புண்ணியாதிக்கமும், பாபலேசமுமான கர்மத்தால் விராட்புருஷனுடைய கைகளிலிருந்துண்டான க்ஷத்திரியஜந்மத்தை யடைகிறனென்றும்; பாபாதிக்யமாயும், புண்ணியலேசமாயுமிருக்கிற கர்மத்தால் அந்த விராட்புருஷனுடைய தொடையிலிருந்து வைசியஜந்மத்தை யடைகிறனென்றும்; பாபகர்மத்தால் விராட்புருஷனுடைய பாதத்திலிருந்துண்டான சூத்திரன் முதலான ஜந்மத்தை யடைகிறனென்றும்; இந்த ஜந்மங்களில் பிராஹ்மணர்கள் செய்ய வேண்டியதாயிருக்கிற நித்திய நைமித்தியங்களாயும், ஸ்ரௌத ஸ்மார்த்தங்களாயுமிருக்கிற ஔபாஸநாக்நிஹோத்திர முதலான பிரகஸ்பதிசவந மென்கிற யாகம்வரையிலுள்ள கர்மங்களைப் பண்ணவேண்டுமென்றும்; க்ஷத்திரியர்கள் அஸ்வமேதம் ராஜசூயயாக முதலியவற்றைச் செய்யவேண்டுமென்றும், ஜநங்களை நீதியாய் விசாரணைபண்ணி நிக்ரகாநுக்கிரகம் பண்ணவேண்டுமென்றும்; வைசியனுக்கு ஸ்தோமம் வரையிலுள்ள கர்மங்கள் செய்யவேண்டுமென்றும், பொய் புரட்டுத் துரோகங்களின்றி வியாபாரம் பண்ணவேண்டுமென்றும்; சூத்திரர்களுக்கு வியவசாயம் பசுரக்ஷணைமுதலான தொழில்களைச்செய்து பிராஹ்மணதிவர்ணங்களுக்கு பணிவிடை பண்ணிவரவேண்டுமென்றும்; இப்படிச்சொன்னபிரகாரம் நடவாமல் இதற்கு விபரீதமாய் நடக்கிறபேர்களை ஈஸ்வரன் ஹீனபிறப்புகளிற்போட்டுத் தண்டிக்கிறரென்றும், அவருடைய ஆஞ்ஞாரூபமானசுருதி ஸ்மிருதிகளிற் சொல்லியபடி ஒழுங்காய் நடந்தவனுக்குத் திவ்வியசரீரத்தைக் கொடுத்துச் சுவர்க்காதி சுகத்தை அநுபவிக்கும்படி செய்கிறரென்றும், இன்னும் ஈஸ்வரனைத் திரிகரண சுத்தமாய்ப் பக்திபண்ணுகிறவனுக்குச் சாலோகாதிபதங்களைக் கொடுத்துச் சுகிக்கச்செய்கிறரென்றும், ஜீவன் போனஜந்மத்தில் செய்த புண்ணியபாப கர்மங்களால் இப்போது சுகதுக்கங்களை அநுபவிக்கிறனென்றும், இப்போது செய்த புண்ணியபாபத்தால் வரப்போகிற ஜந்மத்திலும், இதற்குப்பலமான சுகதுக்கங்களை அநுபவிப்பனென்றும் சொல்லுகிற சாஸ்திரப்பிரகாரம், இப்போது அநுபோகத்திலும் ஜீவர்களுக்குச் சுகதுக்கங்கள் வேறுவேறய் வருவதாலும்; தாங்கள் ஜீவனைப் பொய்யன், அவனல் ஒரு கர்மங்களும் செய்ய முடியாதென்று சொல்லுவது விரோதமாயிருக்கிறதே யென்றல், அதற்குச் சமாதானஞ் சொல்லுகிறேன் கேள்:—நீ சொன்ன விதிநிஷேத சாஸ்திரங்களும் ஜீவர்களும் நடக்கவேண்டியதற்காகச் சுருதிகள் சொல்லியது அவிசாரதசையிலேயா? அல்லது ஆத்மாநாத்மாக்களுடைய உண்மையை விசாரணைபண்ணு

கிற தசையிலேயா? வென்று யோசித்துப் பார்த்தால், இஃதெல்லாம் அவிசார தசையிலேயே தவிர, விசாரதசையில் ஜீவனும், கர்மமும், சுகதுக்கங்களும் ஒன்றுமில்லை. ஆகையால் ஆத்மா தன்னை விசாரியாமல் எதுவரையில் இருக்கிறானோ அதுவரையில் அஞ்ஞானமும், ஆவரணமும், ஜீவத்துவமும், கருத்துருத்துவாதியும், ராகத்வேஷாதிகளும், புண்ணியபாபமிச்சிரங்களும், தேவமநுஷ்ய திரியக்காதி ஜந்மங்களும், சுவர்க்கநரகாதி சுகதுக்க போகாநுபவங்களும், சொப்பனம்போல நிஜமாய்க் கண்டுவந்து, சத்குருமுகமாய் நாமாரென்று விசாரித்துத் தன்னை பிரஹ்மமாக அறிந்தமாத்திரத்தில், சொப்பனத்திலிருந்து விழித்தவன்போலத் தனக்கு முன்தோன்றிய ஜீவத்துவமுதலான சகல சம்சாரங்களும் காலத்திரயத்திலும் இல்லவேயில்லை யென்று சொரூபஜாக்கிரத்தில் சதா விழிப்பாகவே யிருப்பனென்றறிக.

## 57 - வது தரங்கம்.

மநுஷன் ஞானத்தை விரும்பாவிடில், ஸ்தாவராதிகளுக்கும் கீழாகும்படி ஈஸ்வராபராதி யாகிறான்.

மிருகமுதல் ஸ்தாவரம்வரையிலுள்ள ஜீவர்களைக் காட்டிலும், அஞ்ஞானியாயிருக்கிற மநுஷனே ஈஸ்வராபராதியுமாகி நிகிருஷ்டமான நரகப்பிராப்தியையுமடைவன். [எ - தி] தோட்டிமுதல் ஜட்ஜிவரையிலிருக்கிற வேலைக்காரர்களுக்குள் ஜட்ஜி சிரேஷ்டனானாலும், ஜட்ஜி ராணியினுடைய சட்டத்தைத் தவறிநடந்தாலவனுக்கு தோட்டிவேலைக்கும் நிகிருஷ்டமாயிருக்கிற விலங்கு போடுவதுபோலும்; கௌதமரிஷியின் பத்தினியான அகலி மற்றைய ஸ்திரீகளுக்கு மேலாயிருந்தாலும் வியபிசாரதோஷத்தால் சர்வநிகிருஷ்டமான கல்லாய்ப்போன கதைபோலுமறிக. அது எதனாலென்றால், அந்தத் திரியக்காதிகள் ஈஸ்வரனுடைய நியமத்தைத்தவறாமல் நடப்பதாலும்; மநுஷன், ஈஸ்வரன் இவனுக்கு விதித்தபடி விவேக வைராக்கியத்துடன்கூடி ஞானாப்பியாசம்செய்யாமல் விஷயசிந்தனையைப்பண்ணிக் கெட்டுப்போவதால் இவனே ஈஸ்வராபராதியாய்ப் போகிறான். [எ - தி] தோட்டிமுதல் சிரஸ்த்தாவரையிலுள்ள உத்தியோகஸ்தர்கள் சட்டப்படி நடப்பதால் அந்த வேலையும் மேல் பிரமோஷனும் கிடைப்பதுபோல, அவனுக்குக் கிடையாமற் போயிற்று என்றறிக. [இ - து] காசிக்குப் போகிறவன் மத்தியில் வழிதப்பிப்போனால் எப்படி இரண்டுங்கெட்டவனாய்ப் போவானோ, அப்படி மநுஷஜந்ம மெடுத்தவன் கர்மத்தைவிட்டு வேதாந்தமார்க்கத்தில் நடக்கும்போது அவிசாரத்தால் அந்த வேதாந்தமார்க்கத்தைத் தப்பினால் உபயப்பிரஷ்டனாய்ப் போய்விடுவான். [இ - து] ஞானத்தினால் மநதில் சந்தோஷமில்லாதவனுடைய தேகம் பெருத்தாலும், இளைத்தாலும், முமுக்ஷுக்களுக்கும் தனக்கும் பிரயோஜநமில்லை. [எ - தி] (லேபனமற்றுப்போனவனுடைய சிசு நம்விரல் நீள

மாய்ப் போனாலென்ன, முழநீளம் நீண்டிருந்தாலென்ன, காமினி களுக்கும் தனக்கும் என்னபிரயோஜநம் சொல்? [இ - து] வேதாந்த சாஸ்திரங்களெல்லாம் படித்தவன் ஆத்மாவை யறியாதேபோனால் அவனை விசேஷமாய் ஆத்மஹத்தி பண்ணினவனுய்ச்சொல்லுகிற வாக்கியத் துக்கு யுக்தி:—பெரிய பரீக்ஷைகொடுத்துவந்த உத்தியோகஸ்தன் குற்றம் பண்ணினால் அவனுக்கு ஜாஸ்தியான தண்டனை கொடுப்பதுபோலுமறிக. பின்னும் இச்சரீரத்தைத் தவத்தால் பெற்றுக்கொண்டுவந்து ஞானத்தை யடை யாமல் தேகமே நானென்று விஷயங்களில் அலைகிறவன், பெண்டாட்டியின் பிரசவ உபத்திரவ காலத்தில், கஸ்தூரி வாங்கக் கடைக்குப்போய்க் கஸ்தூரி வாங்கிவந்து கொடுத்து இவளுடைய உபாதியைநீக்க மறந்து கூத்துப்பார்த்துக் கொண்டிருந்ததுபோலாகும். [இ - து] மநுஷஜந்மமெடுத்தும் ஆத்மவிசா ரம் பண்ணாமல், கர்மமுதல் யோகபரியந்தம் செய்தும் மோக்ஷத்தை யடையா மற் போகிறான். [எ - தி] கன்றுக்குட்டிக்குப் புல்லுப்பிடுங்கத் தென்னமர முதலானவைகளிலேறிப் புல்கப்படாமல் அவதிப்படுகிறவன் போலும், கங் கையைவிட்டுக் கானல்ஜலத்தில் ஸ்நானம்செய்யப்போகிறவன் போலுமறிக. [இ - து] ஐயா, பிரஹ்மத்தை யறியாதவர்கள் பைத்தியக்காரர்கள் என்றும், இகபரங்களில் அவர்களுக்குச் சுகமில்லையென்றும், சொன்னதற்கு யுக்தியென்ன வெனில், கும்பகர்ணன் ஜீவித்திருந்தாலும் மரித்தாலும் எப்படிப் பிரயோஜன மில்லையோ அப்படிப்போல வென்றறிக.

மநுஷஜந்மத்தையடைந்து ஆத்மஞானத்தையடையாதவன் நித்திய தரித்திரனென்றும், தீர்க்கவியாதியுள்ளவனென்றும், பெரியகிறுக்கனென் றும், சுத்தஜடனென்றும், எல்லாவற்றிற்கும் நிகிருஷ்டனென்றும், இரண பாதகனென்றும், குற்றவாளி யென்றும், பலபேருக்குப்பிறந்தவனென்றும், இப்படிச் சுருதிகளில் சொல்லக் காரணமென்னவென்றால், சொல்லுகிறேன் கேள்:—நித்தியானந்தமான ஞானசம்பத்தையடையாமல் தநுகரண புவந போகங்களைக்குறித்துப் பரனை வேண்டி அடிக்கடி பல்லைக்கெஞ்சிக்கொண் டிருக்கிறபடியால் நித்தியதரித்திரனென்றும், பவவியாதி ஒருக்காலும் ஞான மின்றி நிவர்த்தியாகாமையால் தீர்க்கவியாதிக்காரனென்றும், தன்சொரூபம் தனக்குத் தெரியாமையால் பெரியகிறுக்கனென்றும், ஸ்தூல சரீராகாரமா யிருப்பதால் சுத்தஜடனென்றும், சர்வநிகிருஷ்டமாய் மலமூத்திரமான ஸ்திரீபிண்டத்திற் சதாமயங்கிக் கட்டிப் புரண்டுகொண்டிருப்பதால் சர்வ நிகிருஷ்டனென்றும், சஞ்சிதாதிகர்மவிரணம் தீராமையால் இரணபாதக னென்றும், சம்சாரபந்தத்திற் கட்டுப்பட்டிருப்பதால் குற்றவாளியென்றும், அநேக கர்ப்பவாசம் பண்ணுவதால் பலபேருக்குப்பிறந்தவனென்றும், சொன்னது சரியானபடியால், நீயுமப்படி அஞ்ஞானியாய்ப் போகாமல் சதா மூடசங்கதிகளைவிட்டுச் சத்சங்கதியைச்செய்து, அநாத்மாவான தேகாதிக

ளில் நானென்கிறபுத்தியைவிட்டுச் சாக்ஷியே நானென்று சுகித்திருக்கக் கடவாயென்று சொன்ன குருநாதனைப் பார்த்து சிஷ்யன் கேட்கிறான்:— ஐயா, நான் நன்மையையே அடைய, விவேகத்தைச்சம்பாதிக்க ஆரம்பிக்கு முன்னமே, என்னுடைய மனமுதலியகரணங்களும், சுரோத்திராதிகளான இந்திரியங்களும், சப்தாதிவிஷயங்களிற் சென்று அவைகளிற் சத்தியபுத்தியைப்பண்ணி ராகத்துவேஷங்களையடைந்து தீராதகவலையுடன் சுற்றிக் கொண்டிருக்கிறதே அதற்கு நான் என்னசெய்வேனென்று கேட்பாயாகில், அந்த மனமுதலியகரணங்கள் எந்தவிஷயங்களை நாடுகிறதுகளோ அந்த நிமிஷத்திலேயே அந்தவிஷயங்கள் சத்தா அசத்தா? சித்தா ஜடமா? ஆநந்தமா துக்கமா? வென்று விசாரித்து, சத்தானால் தன்னைப்போல் சதாயிருக்க வேண்டும், அசத்தானால் பொய்யாயிற்றே. சித்தானால் தன்னைப்போல அறிவாயிருக்கவேண்டும். ஜடமானால் நிழல்போல அசத்தாம். ஆநந்தமானால் தன்னைப்போலச் சதா கைவிடப்படாமலிருக்கவேண்டும். துக்கமானால் விரும்பத்தக்கதன்று, என்றிப்படி விசாரித்தால் மனதே போனவிடந்தெரியாமல் போமென்றறிக.

## 58-வது தரங்கம்.

ஜீவனுக்கு எல்லாத் தத்துவங்களைக்காட்டிலும் அந்தக்கரணத்திலேயே அதிகப் பிரியம்.

சூக்ஷுமசரீரத்தில் பதினாறு தத்துவமிருந்தாலும், ஜீவனுக்கு அந்தக்கரணத்தில்தான் அதிகமாய் மோகம் இருக்கிறது. [எ - தி] சந்திரனுக்கு இருபத்தேழு நக்ஷத்திரங்களும் பாரியாயிருந்தாலும் ரோகணியிடத்தில் அதிகமான ரமிப்பு யிருப்பதுபோல வறிக. [இ - து] ஜீவன் அந்தக்கரணத்திலேயே விளங்கிக்கொண்டு சகலவிதமான உலகவிவகாரத்திலேயும் வருகிற சுகதுக்கங்களை அடைகிறான். [எ - தி] சூரியன் தன்சக்திமுழுவதையும் தன்னுடைய மண்டலத்திலேயே வைத்துக்கொண்டு உலகமெங்கும் தன்கிரணங்களைப் பரப்பி விளக்கிவைத்துக்கொண்டிருப்பதுபோலும், சந்திரனும் தன்மண்டலத்திலேயே விருத்திக்ஷயமான விகாரங்களை யடைந்துகொண்டு தன்சீதகிரணத்தால் உலகத்தை எல்லாம் ஆக்லாதப்படுத்திக்கொண்டிருப்பதுபோலும், விளக்கானது தன்னுடையகுணங்களான லோகி தோஷ்ணப் பிரகாசங்களைத் திரியில்மட்டும் வைத்துக்கொண்டு, பிரகாசத்தைமட்டும் வீடுமுதலானவைகளில் காண்பித்துக்கொண்டிருப்பது போலும்; இந்திரன் தேவலோகத்தில் தேவசபையிலிருக்கிற சிம்மாசநத்திலிருந்துகொண்டு, தன் ஆஞ்ஞையினாலேவப்படுகிற மேகங்களால் மழை பேயும்படிசெய்து மூன்று உலகத்தையும் ரக்ஷித்துக்கொண்டிருப்பதுபோலும்; பிரஹ்மதேவர் சத்தியலோகத்தில் சரஸ்வதியோடு சேர்ந்திருந்துகொண்டு சகல பிராணிகளுக்கும் அவரவர் கர்மாநுசாரமாக எழுவகைப் பிறவிகளாகிற சரீரங்களை யுண்டுபண்ணிக் கொடுத்

துக்கொண்டிருப்பது போலும்; விஷ்ணுவானவர் வைகுண்டத்தில் லக்ஷுமியோடு சேர்ந்து வசித்துக்கொண்டு மூன்றுலகங்களையும் ரக்ஷித்துக்கொண்டு, துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலன நிமித்தமாய் தசாவதாரங்களைச்செய்து ராவணுதிதுஷ்டர்களைச் சம்மாரம்பண்ணி, அதர்மங்களைப் போக்கி, விபீஷணுதிசாதுக்களைச் சிரஞ்சீவியாகப்பண்ணித் தர்மத்தை நிலைநிறுத்திக்கொண்டு வருவதுபோலும்; யமனுனவன் பரமசிவனுடைய ஆக்கினைப்பிரகாரம் யமலோகத்திலிருந்துகொண்டு, பிராணிகள் செய்கிற புண்ணியபாபகர்மங்களெல்லாம் சித்திரகுப்தனென்கிற கணக்கனுல் எழுதிவைக்கப்பட்டிருக்கிற கணக்குப்பிரகாரம், இந்த உலகத்திலுள்ள சகல பிராணிகளுடைய பிராணன்களையும் தன்னுடைய தூதர்களைவிட்டு இழுத்துவரச்சொல்லித் தர்மசாஸ்திரப்பிரகாரம் அவரவர்களுடைய கர்மாநுசாரப்படி சுவர்க்கநரகங்களில் சுகதுக்கங்களை அநுபவிக்கும்படி செய்துகொண்டு வருவதுபோலும்; பரமசிவன் கைலாசத்தில் பார்வதி, கணபதி, சுப்பிரமணியர், நந்திகேஸ்வரர் முதலானவர்களோடு சேர்ந்திருந்துகொண்டு சகல உலகத்தையும் ரக்ஷித்துக்கொண்டு, மகாப்பிரளயத்தில் உலகத்தையெல்லாம் ஒரு க்ஷணத்தில் நெற்றிக்கண்ணுல் பஸ்பமாய்ப்பண்ணுவதுபோலும்; இப்போது ராணி இங்கிலாந்தென்கிற சீமையிலிருந்துகொண்டு இந்தப்பூமியிலுள்ள சகல ஜநங்களையும் சிக்ஷைரக்ஷைசெய்துகொண்டு வருவதுபோலும்; இந்த ஜீவனும் அந்தக்கரணமாகிற ஸ்திரீயோடு ஸ்தூலசரீரமாகிற கோட்டைக்குள்ளிருக்கிற சூக்ஷுமசரீரமாகிற அரண்மனையில் வசித்துக்கொண்டு, ராஜகுமாரன்போல இந்திரியங்களோடு ஜாக்கிரத்தில் வெளிப்பிரபஞ்சமாகிற கோட்டைக்குவெளியில் வந்து சகல விவகாரத்தையும் செய்துவருகிறுனென்றறிக.

ஒரு தாஷ்டாந்தத்துக்கு அநேகம் திருஷ்டாந்தம் சொல்லக் காரணமேதென்றுல், ஒரு அங்கத்துக்கு அநேக கற்பதார்த்தங்களுண்டுபண்ணி வைப்பதுபோலும், ஒரு பெண்ணுக்கு அநேக நகைகள் பண்ணிப் போடுவதுபோலும், ஒரு ராஜாவுக்கு அநேக பணிவிடைக்காரர்கள் பணிவிடைபண்ண வேண்டியிருப்பதுபோலும், ஒரு மீனுக்ஷி சுந்தரேஸ்வரர்களுக்கு அநேக உத்ஸவாதிகள் மண்டபப்படி பண்ணிவிப்பதுபோலும், ஒரு பூமி விளைவதற்கு அநேக உரங்கள்போடுவதுபோலும், ஒரு ஆத்மஞாந முண்டாவதற்குச் சாதநமாக அநேக திருஷ்டாந்தங்கள் சொல்லப்பட்டிருக்கிறதென்றறிக.

## 59-வது தரங்கம்.

ஆநந்தமயனும் விஞ்ஞாநமயனும் அவஸ்தாபேதத்தால் பேதம்:—

ஆநந்தமயனும் விஞ்ஞாநமயனும் ஒன்று. [ஏ - தி] ஒருவஸ்திரந்தானே வெள்ளாவியில் வைத்ததாலுல் வெளுப்பாயும், விளையாடுவதால் வெறும்கருப்பாயும் போவதுபோலும்; ஒரு ரத்திநந்தானே சகதியில் விழுந்தால் கறுப்பா

யும்; சாணையில் வைத்தால் பிரகாசமாயும் ஆவதுபோலு மறிக. [இ-து] ஆநந்த மயனும் விஞ்ஞாநமயனும் ஒருவனென்பது எப்படியென்றால், ஒரு நானென்ற ஜீவனே அந்தக்கரணவிருத்திரூபமான மனதோடுசேர்ந்து ஜாக்கிரத்தில் சரீரேந்திரியாதிகளை நானென்று அபிமானித்து, இதம்விருத்திக்கு விஷயமான சப்தாதி ஐந்துவிஷயங்களையும் அனுபவித்து, அதனால் ராகத்துவேஷ சுகதுக்கங்களை யடைந்து; அதிலும் சில நாமரூபங்களில்மட்டும் என்னதென்றபிமானித்து, அதனால் அநந்தவிதமான துக்கங்களையும் அநுபவித்து; இப்படியே ஜாக்கிரத்வாசனாமயமான சொப்பனத்திலும், அந்த வாசனையுடன்கூடின மனதோடுசேர்ந்து, அந்த மநதினால் கற்பிக்கப்படுகிற ஜீவேசுவர ஜகத்துக்களுக்குள் தான் ஒரு சரீரியாயும் மற்றவைகளெல்லாம் தனக்கு அந்நியம் போலேயும் பாவித்து, அவ்விடத்தில் தோன்றுகிற ஞாதிரு ஞாந ஞேயங்களான திரிபுடிகளால் அநந்தவிதமான சுகதுக்கங்களையடைந்து, அந்த மனதோடு சேர்க்கைவிட்டுச் சுஷுப்தியாகிற வீட்டுக்குப்போய், ஆத்மாவின் அபிமுகப்படும்போது ஆத்மாவினுடைய ஆநந்தம் இவனை வந்துமூடினமாத்திரத்தில், ஜலத்தில் போட்ட உப்பைப்போல, அந்த ஆநந்தத்தில் ஒன்றாய்க் கரைந்துபோய், விஞ்ஞாநமயனென்கிற பெயர்போய் ஆநந்தமயனென்கிற பெயரை யடைகிறான். அப்படி ஆநந்தமாயிருக்கும்போது முன்னே செய்த கர்மங்கள் இவனை அந்த ஆநந்தத்திலிருந்து வெளியிலிழுக்கும்போது, இவன் அந்தச் சுஷுப்தியாகிற வீட்டிலிருந்து வெளியில்வர மநமில்லாதவனாய் உட்கார்ந்திருந்துகொண்டு, கொஞ்சக்காலம்வரை அந்த ஆநந்தத்தையே முன் அநுபவித்தவாசனையால் நாடிக்கொண்டிருக்கும்போது, கர்மங்களால் ஏவப்பட்டுத் திரும்ப அந்த மநதோடு சேர்ந்து அந்த மனோவியாபாரங்களான நாநாவித துக்கங்களையெல்லாம் பாவித்து, ஆநந்தமயனென்கிற பெயரையும், அந்த ஆநந்தத்தையும் விட்டு, விஞ்ஞாநமயனென்கிற பேரையடைந்து துக்கித்துக்கொண்டிருப்பதால், இந்த இரண்டு நாமங்களையும் உடையபுருஷன் ஒருவன்தான். [எ - தி] விழுதாய், வெண்ணிறமாய்க் கெட்டியாயிருந்த நெய், அக்நி சம்பந்தத்தால் அந்தக் கடினமும், வெண்ணிறமும் போய், யமுநாநதி ஜலம்போலத் திரவமாயும், கறுப்பாயும் ஆவதுபோலும், அந்தத்தீயைவிட்டு நெய்யை எடுத்துக் காற்றில் வைத்த மாத்திரத்தில் பழையபடி கெட்டியாய்ப் போவதுபோலும்; பனித்துளிகள் காற்றினால் கெட்டியாய் வெய்யிலால் உருகுவதுபோலும், அரக்கும் அக்நியால் உருகிக் காற்றினால் கெட்டியாவதுபோலும்; ஒரு புருஷனே வீட்டிலிருக்கும்போது கர்த்தாவாய்ச் சகலதொழில்களிலேயும் அலைந்து திரிந்து துக்கப்பட்டு, மாமனார்வீட்டில் போய்ப்போக்தாவாயிருந்து சுகிப்பது போலும்; ஒரு அரசனே எதிரிகளோடு சண்டைக்குப் போகும்போது தன்னுடைய படைகளையும் கூட்டிக்கொண்டுபோய்ச் சத்துருக்களையும், சத்துருக்களுடைய படைகளையும் கொன்று, ஜயத்துடன் தன் அரண்மனைக்கு வந்து, சுகமாய்ப் போஜநம்செய்து, ஸ்திரீயோடு ரமித்திருப்பது போலும்; ஒருபுருஷனே வீட்டைவிட்டு வெளி

யேறி விடர்களோடுசேர்ந்து தாசிகளிடத்திற்போய் அவளிடத்திலிருக்கிற அறையாப்பு, புண் வெட்டைமுதலான வியாதிகளையடைந்து தாபப்பட்டுத் தன்வீட்டுக்குவந்து, ஔஷதம் முதலானதால் அந்த வியாதிகளைத் தீர்த்துக் கொண்டு ஆரோக்கியமாய்ச் சுகமாயிருப்பது போலும்; ஜாக்கிரத்தில் சப்தாதி விஷயங்களோடுசேர்ந்து அந்தந்த விஷயவாசனைகளை அந்தந்தக் கரணங்களுக்கு ஏற்றிவைத்து, அந்த வாசனைகளால் தானுந் துக்கப்பட்டு விஞ்ஞானமயனென்ற பேரையுமடைந்து, இந்த வருத்தம் பொறுக்கப்படாமல் இந்தக்கரணங்களுடைய சம்பந்தத்தைவிட்டுச் சுஷுப்திக்குப்போய் ஆநந்தமயனைச் சுகிப்பவன் ஒருவனே என்றறிக.

## 60-வது தரங்கம்.

அநுபவம்வரும்வரைக் குருவாக்கியத்தை நம்பாமற் சந்தேகப்படுகிறவன் கெடுவன். அதை நம்பவேண்டும். எதுவரையிலென்றால், அந்தக் குருவாக்கியமானது தனக்குப் பூர்ணாநுபவம் கொடுக்கும்வரையில்தான், பின்பு அது சுயமாய் விளங்கும். அப்படி அதை நம்பாமல் சந்தேகப்பட்டவன் முக்தியையடையான். [எ - தி] முட்டையானது தானே குஞ்சாக ஆகிறதற்கு முன் உடைத்துப்பார்த்த விநுதையென்கிற பக்ஷிக்குக் காலில்லாத அருணனுண்டானதுபோலும், காந்தாரிக்குக் கர்ப்பமாயிருக்கும்போது சிரஞ்சீவியான பிள்ளை பிறக்குமென்று வியாசர் சொல்லியிருக்கவும், அவள் ஓர்ப்படியான குந்தி பிள்ளைப்பெற்றதைக்கேட்டு உலக்கையை வயிற்றில் இடித்துக் கர்ப்பத்தைக் கெடுத்தது போலுமறிக. [இ - து] ஞாநம்வரும்வரைக் குருவாக்கியத்தை நம்பவேண்டும். [எ - தி] வியாதிக்காரன் வியாதிதீரும்வரை வைத்தியனை நம்பி நடக்கவேண்டுவது போலும், காசிக்குப்போகும்வரை ரயில்காரனை நம்பவேண்டுவது போலும், நீச்சுத் தெரியாதவன் ஆற்றில் நீச்சுக்காரனை நம்பிக் கரையேறுவதுபோலு மறிக. [இ - து] சத்குருநாதனுடைய வாக்கியத்தைச் சிரத்தையோடு நம்பிக்கையாய்த் தட்டாமல் நடக்கவேண்டும். அப்படிக் குருநாதன்வாக்கியத்தை நம்பாமல் தட்டிப்போட்டுப் போகிறவன் இகபரங்களிரண்டிலும் பூர்ணமானபலத்தைப் பெற்றுச் சுகிக்கப்போகிறதில்லை. [எ - தி] தக்ஷப்பிரஜாபதி யாகஞ்செய்ய ஆரம்பித்துப் பரமசிவனையும், பரதேவதையையும், தள்ளிவிட்டு மற்றை விஷ்ணுமுதலான தேவதைகளை வரவழைத்து வைத்துக்கொண்டு, யாகம் நடத்தும்போது, பரதேவதையானவள் பரமசிவனைப்பார்த்து என்பிதா செய்கிற யாகத்திற்கு நான்போய் வரவேண்டுமென்றுசொன்னதற்குப்பரமசிவன், நீ போகக்கூடாது. நம்முடைய பேரிலிருக்கிற த்வேஷத்துக்காகவே இந்தயாகஞ் செய்ய ஆரம்பித்து, நம்மையும் நம்மைச் சார்ந்திருக்கிற அந்தரங்கபக்தாளான அகஸ்தியாதி மகாரிஷிகளையும் தள்ளிவைத்து யாகம் செய்வதால், அந்தயாகத்திற்கு நீ போனால் அவமானப்படுவாயென்று சொன்னவார்த்தையைத் தட்டிவிட்டுப்போன பரதேவதையைத்

தக்ஷன் உதாசீனமாய் வைது யாகத்திற் சேர்க்காமல் தள்ளிவிட்டதால், அவள் அந்த இடத்திலேயே அக்கினியை வளர்த்து, அதில் தன் சரீரத்தையும் விட்டுவிட வேண்டியதாய் வந்த கதைபோலும்; தேவேந்திரன் சபையில் சிம்மாசநத்திற் கொலுவிருந்து முப்பத்துமுக்கோடி தேவதைகளுடன் கூடியிருந்துகொண்டு, ஊர்வசியென்ற தேவதாசியினுடைய அபிநயத்தோடுகூடிய ஆட்டத்தில் மயங்கி இருக்கும் சமயத்தில், தன்குருவான பிரகஸ்பதிபகவான் வந்ததைப் பார்த்திருந்தும் அவருக்கு நமஸ்காராதி பூஜிதைசெய்யாமல் அவமதிப்பா யிருந்துவிட்டதால், அவர் அதைக்கண்டு அந்தர்த்தாநமாய்ப் போய்விட்டார். தேவேந்திரனும் ஆட்டப்பாட்டுகளெல்லாம் ஒய்ந்தபின் கொஞ்சம் பிரக்ஞை வந்து, நம்முடைய குரு இவ்விடத்தில் வந்தாரே, அவரெங்கே? என்று கேட்க, அவர்வந்து இரண்டுநாளிகை நின்று பார்த்துவிட்டுப் போய்விட்டாரென்று சொன்னதைக்கேட்டு, அவர்வீட்டிற்போய்ப் பார்த்ததிலும், அவர் தட்டுப் படாமல் போனதன்பின், அசுரர்களாற் ஜயிக்கப்பட்டு பிரஹ்மாவினிடத்திற் போய்த் தெரிவித்ததில், உங்களுக்குக் குருவில்லாததால் அபஜெயமும், அசுரர் களுக்குக் குரு இருப்பதால் ஜயமும் வந்ததென்றுசொல்லி, விஸ்வரூபரைக் குருவாய் வைத்து வருடபோது, அவரும் வஞ்சகமாயிருந்ததால் அவரையுங் கொன்று பிரஹ்மஹத்தியையும் அடைந்தது போலவறிக.

## 61 - வது தரங்கம்.

பிரஹ்மவித்தைத் துவேஷிக்கிறவன் நித்தியமாய் நரகத்திலேயே கிடப் பன்:—

பிரஹ்மவித்துக்களை துவேஷிக்கிறவனை இரெளரவாதி நரகங்கள், எவ்வளவு காலம் வசித்தாலும் அவனை வெளியில்விடாமல் அங்கேயே வைத்துக்கொள் ளும். [எ - தி] ராஜாவினிடத்தில் அதிக இஷ்டம் பண்ணினவனை ஜநங்கள் எவ்வளவு காலம் வசித்தாலும் சாப்பாடுபோடுவதிற் சலியாமல் சட்டை பண்ணி வைத்துக்கொள்ளுவதுபோலு மறிக. [இ - து] பிரஹ்மாநந்தத்தில் துவேஷம்வந்தவனுக்கு, அதைச் சேர்ந்த ஞாநிகளிடத்திலும், ஞாநசாஸ்திரத் தினிடத்திலும், அதை அப்பியாசம் பண்ணுகிற சாதுக்களிடங்களிலும் துவே ஷம் வரும். [எ - தி] அந்நத்தில் துவேஷம்வந்தவனுக்கு அதைப் போடுகிற வன், சாப்பிடுகிறவன் முதலானவர்களிடத்திலும் துவேஷம் வருவதுபோலும்; நாயகனிடத்தில் துவேஷம் வந்தவளுக்கு அவனைச் சார்ந்தவர்களிடத்திலும் துவேஷம் வருவதுபோலு மறிக. [இ - து] ஐயா, அநேக பிராணிகளுக்குள்ளே பிரஹ்மஞாநியும் ஒரு ஜீவனாகயிருப்பதால், மற்றையவர்களை விரோதித்ததனாற் குற்றமில்லை, பிரஹ்மஞானியைத் துவேஷித்தவனுக்கு ஒருநாளும் கதியில்லை யென்று சொன்னதற்குக் காரணமேதோவெனில், அடே மூடா! கல்லெல்லாம் மாணிக்க ரத்நமாகுமா, மரங்களெல்லாம் கேட்டதையெல்லாம் கொடுக்கிற கற்

பக விருக்ஷமாகுமா, பசுக்களெல்லாம் ஷட்ரஸத்தோடுகூடிய போஜநத்தைக் கொடுக்கிற காமதேனுவாகுமா, ஆனைகளெல்லாம் நாலுகொம்புகளோடு கூடியதாயும், வெளுமையானநிறத்தை யுடையதாயுமிருக்கிற ஐராவதமாகுமா, குதிரைகளெல்லாம் தேவேந்திரன் ஏறுகிற உச்சைச் சிரவசமாகுமா, தோட்டங்களெல்லாம் தேவலோகத்திலிருக்கிற நந்தவனமாகுமா, புருஷர்களெல்லாம் புருஷோத்தமனான மகாவிஷ்ணுவாவார்களா, வேதம்படித்தவனெல்லாம் பிரஹ்மதேவராவனா, அஷ்டமகாசித்தியுள்ள சித்தர்களெல்லாம் பரமசிவனுவார்களா, பிராஹ்மீ முதலான தேவிகளெல்லாம் பரதேவதைக்குச் சமானமாவார்களா, சக்தி ஆயுதத்தைத் தரித்தவர்களெல்லாம் குமரனுக்குச் சரியாவர்களா, மந்திரவாதிகளெல்லாம் மகாகணபதிக்குச் சமானமாவர்களா, பறவைகளெல்லாம் கருடன் அந்நப்பக்ஷிகளுக்குச் சமானமாகுமா, பணக்காரர்களெல்லாம் குபேரனுக்குச் சமானமாவர்களா, புத்திசாலிகளெல்லாம் பிரகஸ்பதிக்குச் சமானமாவர்களா, பதிவிரதைகளெல்லாம் அருந்ததி அநுசூயைகளுக்குச் சமானமாவர்களா, புரோஹிதர்களெல்லாம் வசிஷ்டருக்குச் சமானமாவர்களா, நதிகளெல்லாம் கங்கைக்குச் சமானமாகுமா, சமுத்திரங்களெல்லாம் தநுஷ்கோடியான சேதுஸ்தலத்திற்குச் சமானமாகுமா, பிரகாசவஸ்துக்களெல்லாம் சூரியனுக்குச் சமானமாகுமா, சகல இந்திரியங்களும் நேத்திரத்திற்குச் சமானமாகுமா, அப்படியிருக்க இந்த உலகத்திலுள்ள சகல ஜீவர்களிலும் அநர்த ஜட துக்கரூபமான புத்திராதிகளை ஆத்மாவென்பவர்களும், இந்த ஸ்தூலதேகத்தையே ஆத்மாவென்பவர்களும், இந்திரியங்களை நானென்பவர்களும், பிராணன்களைத் தெய்வமென்பவர்களும், மநதையும், புத்தியையும், அஞ்ஞாநத்தையும் நானென்பவர்களும், ஜீவனை கர்த்தாவை நானென்பவர்களும், சூந்யத்தையே ஆத்மாவென்பவர்களும், இன்னும் அநேகம்பேர்கள் நாமரூபவடிவமான திரிமூர்த்திமுதலான தேவர்களைத் தெய்வமென்று கொண்டாடுகிற பேர்களாயிருக்கிறுர்களே தவிர, அகண்ட சச்சிதாநந்த சுத்தப்பிரஹ்மத்தையே நானென்றும், மற்ற ஜீவேஸ்வர ஜகத்துக்களெல்லாம் சுத்தப்பொய்யென்றும், நிச்சயித்திருக்கிற ஞாநி இவ்வுலகத்தில் மிகவும் அரிதாயிருப்பதால், அவனை மற்றவர்களோடு எப்படிச் சரியாய்ச் சொல்லக்கூடும்? அவனுடைய மகிமையை ஈஸ்வராதிகளும், வேதங்களும் அறியுமே தவிர மற்றவர்களுக்குத் தெரியாது. ஆகையால் யாருடைய துவேஷம் வந்தாலும் வரலாம், அந்தப் பிரஹ்மவித்தினுடைய துவேஷத்தைமட்டும் ஒருகாலும் பண்ணக்கூடாதென்றறிக.

## 62 - வது தரங்கம்.

ஜீவனுக்கு மற்றைத் தத்துவங்களைக் குறித்து மேன்மையும், ஆத்மாவைக் குறித்துத் தாழ்மையும்:—

ஜீவனுக்கு ஆத்மாவைக் குறித்து ஜடத்தன்மையும், ஜகத்தைக் குறித்துச் சித்துத் தன்மையுமிருக்கிறது. [எ - தி] கவணருக்கு ராணியைக் குறித்துத் தாழ்மையும், மற்றையோர்களைக் குறித்து மேன்மையும்போலும்; கண்ணுக்கு மநதைக் குறித்துத் தாழ்மையும், ரூபத்தைக் குறித்து மேன்மையும் போலு மறிக. [இ - து] விஷயங்களையெல்லாமறிகிற இந்திரியங்கள் விஷயங்களுக்கு மேலாகும், இந்திரியங்களையெல்லாமறிகிற மநசு இந்திரியங்களுக்கு மேலாம். மநதையறிகிற புத்தி மநதுக்குமேலாம். புத்தியையறிகிற ஜீவன் புத்திக்கு மேலாம். ஜீவனுடைய கருத்துருத்துவ போக்த்துருத்துவ பிரமாதுருத்துவங் களையும்; கற்பகோடிகாலமாய் ஜீவனால் ஆர்ஜிக்கப்பட்டிருக்கிற சஞ்சித ஆகாமிய பிராரப்தங்களானகர்மங்களையும்; ஜீவனுடைய குலகோத்திர நாமரூப வர்ணாசிரம வயசு அவஸ்தை முதலான தேகவாசனைகளையும்; ஜீவர்களெல்லாரும் நம்மை நல்லவனென்று சொல்லவேண்டுமென்று எண்ணுகிற லோக வாசனைகளையும்; இது ஆசாரம் இது அநாசாரம், இது புண்ணியம் இது பாபம், இது சுத்தம் இது அசுத்தம், இதுமேல் இதுகீழ் என்பனமுதலான சாஸ்திர வாசனைகளும்; நான் வித்வான் நான் சமர்த்தனென்றெண்ணுகிற அகந்தா வாசனைகளையும்; என்வீடென்மாடென்பெண்டாட்டி என் பிள்ளை யென்கிற இதந்தா வாசனைகளையும்; அஷ்டாதச பாஷைகளிலிருக்கிற சப்தவாசனைகளையும்; சீதோஷ்ண மிருதுகடிநரூபமான ஸ்பரிசவாசனைகளையும்; நீலபீதாதி ரூபவாசனைகளையும்; மதுராதி ரஸவாசனைகளையும்; நற்கந்த துர்கந்த வாசனைகளையும்; ராகத்துவேஷ காமக்குரோத லோபமோகாதி விருத்திகளுடைய வாசனைகளையும்; சரீரத்திரய அபிமாநவாசனைகளையும்; ஜாக்கிரதாதி அவஸ்தாத்திரயவாசனைகளையும்; சத்துவாதி குணத்திரயவாசனைகளையும்; விஷய வைராக்கியாதி வாசனைகளையும்; மைத்திரி, கருணை, முதிதை, உபேக்ஷை முதலான சுத்தவாசனைகளையும்; சம, தம, உபரதி, திதிக்ஷை, சிரத்தை, சமாதாந முதலான அந்தர்முகவாசனைகளையும்; அமாநித்துவாதி குணங்களான தெய்வ சம்பத்திலுண்டாயிருக்கிற சத்வாசனைகளையும்; சகலகலாவல்லவனாகவேண்டுமென்கிற வித்யாவாசனைகளையும்; பணக்காரர்களுக்கெல்லாம் மேலாயிருக்க வேண்டுமென்கிற தனவாசனைகளையும்; காயசித்தி, பிராணசித்தி, ரசவாதசித்தி, அஷ்டமகாசித்தி முதலானவற்றைப் பெறவேண்டுமென்கிற சித்திவாசனைகளையும்; வைத்தியவாசனைகளையும்; மாந்திரீகவாசனைகளையும்; ஜோதிஷ வாசனைகளையும்; எல்லாருக்குமேலாயிருந்து ஆக்ஞைபண்ணச் சக்தியுள்ளவனாயிருக்க வேண்டுமென்று எண்ணுகிற பிரபுத்வவாசனைகளையும்; தேவதைகளைக்குறித்து யாகஞ்செய்து அந்த புண்ணியத்தாற் பரலோகத்திற்போய் அவ்விடத்திலுள்ள ஊர்வசிமுதலான அப்சரஸ்திரீகளுடைய சம்போகத்தையும், அமிர்தாதிபாநங் களையும் செய்யவேண்டுமென்று எண்ணுகிற போகவாசனைகளையும்; நம்மை விட ஈஸ்வரன் வேறாய்ப் பிரபுத்வவலியோடு கூடியிருக்கிறார், அவரை நாம் திரிகரணங்களால் பூஜாஸ்தோத்திரம் தியாநமுதலானவற்றால் அவரை வழிப்

பட்டு, அந்த லோகங்களில் சாலோகாதிபதங்களை யடையவேண்டுமென்று எண்ணுகிற பதமுக்திரூபமான பரலோகவாசனைகளையும்; அறிந்துகொண் டிருக்கிறவராயும், இவ்வளவு வாசனைகளிலும் சம்பந்தப்படாதவராயும், அசங்க ராயுமிருக்கிற அறிவேதானென்றறிந்து, இவ்வளவு வாசநாதோஷங்களோடு கூடியிருக்கிற ஜீவத்துவத்தைக் கெடுப்பாயென்று சொன்ன மாத்திரத்தில், சிஷ்யன் கேட்கிறான் ; ஐயா, தாங்கள் ஜீவத்துவத்தைக் கெடுப்பாயென்று அதி சுலபமாய் ஒருவார்த்தையிற் சொல்லிவிட்டீர்கள்! அஃதெப்படிப்போலிருக் கிறதென்றால், காசி யென்றசொல் இரண்டெழுத்தாயிருந்தாலும், அதற்கு நாலுமாசம்வரை வெகு சிரமப்பட்டு நடந்துபோக வேண்டி யிருப்பது போலும்; வீடென்றசொல் இரண்டெழுத்தாயிருந்தாலும், அது கட்டும்போ தல்லவா அதனுடைய பிரயாசந்தெரிவதுபோலும்; பிள்ளை யென்றசொல் இரண்டெழுத்தாயிருந்தாலும், பத்துமாசஞ்சுமந்து பிரசவிக்குங்காலத்திலல் லவா அதன் வருத்தம் தெரிவதுபோலு மிருக்கிறதே, அந்த ஜீவத்துவத்தை எப்படி நான் கடக்கிறதென்று கேட்பாயாகில், அதற்கு நான் உத்தரஞ்சொல் லுகிறேன் கேள் ; பிச்சிப்பூவைக் கசக்குவதிலும், இமை கொட்டுவதிலும், வெண்ணையை விழுங்குவதிலும் ஜீவத்துவநாசம் அதிசுலபம். அது ஆருக் கென்றால், குருகிருபையைப்பெற்ற முமுக்ஷுவுக்கு ஜீவத்துவமாகிற நெல்லைக் குருசந்நதியாகிற உரலில் அவர்கொடுத்த யுக்தியாகிற உலக்கையாற் குத்தி னால், சித்ஜடங்களுடைய தாதாத்மியமாகிற ஜீவத்துவம்கெட்டு அநாத்மா வாகிற துஷாதிகள் வேறுபட்டு ஆத்மாவாகிற தண்டுலமாத்திரம் மிச்சமாய் விளங்குமென்றறிக.

## 63-வது தரங்கம்.

*ஒரு ஞாநியிடத்தில் தள்ளுபட்டவனை மற்றொருவரும் கிரகிக்க மாட்டார்.*

ஒரு ஞானியினிடத்தில் குற்றம் செய்ததால் தள்ளப்பட்டவனை மற்றைப் பெரியவர்கள் சேர்க்கார்கள். [எ - தி] ஒரு கலக்டரிடத்திலிருந்து குற்றம் செய்து வேலையினின்றுந் தள்ளப்பட்டவனை எந்த ஜில்லாக்கலக்டர்களும் அவனுக்கு வேலைகொடாதிருப்பது போலும், ஒருசெட்டி இது தங்கமல்ல கிலிட்டுநகையென்று தள்ளிவிட்டால் எல்லா செட்டிகளுமப்படியே சொல்வது போலுமறிக. [இ - து] ஒரு புருஷன் ஒரு ஞாநியினிடத்திற்போய் அவருக்கு அபசாரம்செய்து அவரால் தள்ளப்பட்டிருக்கிற அவனுக்கு எந்த உலகங்களி லும் எந்த தெய்வங்களிடங்களிலும் போனாலும் அவனுக்கு நல்லகதியையும் கொடுத்து அவனையாரும்ரக்ஷிக்கவுமாட்டார்கள். ஐயா, அப்படிச் சொல்ல லாமா, குற்றத்தால் ஒருவனை ஒருபிரபு அந்நவஸ்திராதிகள்கொடுக்கமாட்டே னென்று தள்ளிவிட்டாலும், மற்றைப்பிரபுக்கள் அவனை ரக்ஷிப்பதுபோல ஒரு ஞானி ஒருவனைத் தள்ளிவிட்டாலும் அவனை மற்றை ஈஸ்வராதிகளும், மற்றைத்

தேவதைகளும், ரிஷிகளும், மற்றை ஞாநிகளும் ஏன் காப்பாற்ற மாட்டார்கள்? அப்படி காப்பாற்ற மாட்டார்களென்பதற்குச் சுருதி யுக்தி அநுபவங்களோடு சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில்; வசிஷ்டர் கைலாசத்திற்போய்ச் சிஷ்யாளோடுகூடத் தபசுபண்ணிக்கொண்டிருக்குங்காலையில், பரமசிவன் கருணைகூர்ந்து பரதேவதையுடனும் நந்திமுதலான கணங்களுடனும் வந்து உமக்குச் சகலதுக்கங்களும், சகல சம்சயங்களும், சகல அஞ்ஞாநங்களும், சகல விபரீதங்களும், சகல ஆபத்துக்களும் போய்ச் சுகமாய் இருக்கிறாயாவென்று, கேட்ட பரமசிவனைப் பார்த்து வசிஷ்டர் சொன்னதாவது:—ஹே பிரபோ! தங்களுடைய பரிபூரண கடாக்ஷ வீக்ஷண்யத்தையுடைய எனக்கு யாதொரு குறைவுமில்லை. ஆனாலும், தேவபூஜைபண்ணுகிற கிரமத்தை அநுக்கிரகிக்க வேண்டுமென்று கேட்டதற்கு பரமசிவன் கிருபையோடு சொல்லுகிறதாவது:—முதலில்தெய்வத்தின் சொரூபத்தைத்தெரிந்தல்லவோ பின்பூஜாக்கிரமம் தெரியவேண்டும். தெய்வமென்பது ஹரிஹராதி தேவர்களுமல்ல, சித்தத்தினால் பாவிக்கப்படுகிற மூர்த்திகளுமல்ல, உற்பத்தி நாசமற்றதாயும், அறிவாயுமிருக்கிற பிரஹ்மமே தெய்வம். அந்தத் தெய்வத்தைப் பூஜிப்பதற்கு மலர்களேதென்றால், தத்வக்ஞாநம், சமபாவனை, சந்தோஷமுதலானவைகளேயாம். அந்தப் பூஜைக்குப் போனதை நினையாமையும், வரப்போகிறதை நினையாமையும், கிடைத்த போகத்தையும் அறிவு சொரூபமாய்ப் பார்ப்பதே பூஜாக்கிரமமென்று வெகுவிதமாய்ச் சொல்லிக் கடைசியில், பெரியோர்கள் இந்தப் பூஜையை விவேகிக்குச்சொல்வார்களே தவிர, மற்றைக் குழந்தைப்புத்தியாயும், சித்தம் நாலு பக்கத்திலும் மயங்கியும், இத்தேகமே தானென்றும், ஒரு ஞாநியினிடத்தில் அபசாரம்பண்ணி அவரால் தள்ளப்பட்டுமிருக்கிற புருஷர்களுக்கு உபதேசியார்கள். அப்படி உபதேசித்தாலும் அவர்களுக்கு ஞாநமுண்டாகுமானால், சொப்பனத்தில்கண்ட மாப்பிள்ளைக்கு ஜாக்கிரத்திலிருக்கிற பெண்ணைக் கொடுத்தால் அது எப்படி அவனோடு வாழமாட்டாதோ, அப்படி ஞாநமாகிற பெண்ணை அஞ்ஞாநியாகிற சொப்பனபுருஷனுக்குக் கொடுத்தா லது எப்படி வாழுமென்று பரமசிவன் திருவாய் மலர்ந்தருளிச் செய்ததே சுருதி, ஒருபுருஷன் தன்னுடைய ஸ்திரீயின் வியபிசாரத்தைக்கண்டு, அவளை அவன் தள்ளினபின், அவளுடைய தகப்பன் முதலானவர்களும் அவளைச்சேர்க்காமல் தள்ளிவிடுவதே யுக்தி. இப்போது நம் குருநாதனிடத்தில் வந்து அவருக்கு அபசாரம் செய்ததால் தள்ளப்பட்ட புருஷன் கதியின்றிப்போவதே அநுபவமென்றறியத்தக்கது.

## 64-வது தரங்கம்.

யௌவநத்தில் துறந்து ஞாநமடையாதவன் மரணகாலத்தி லடையான்:—

நல்ல யௌவநத்திலேயே சந்யாசம் பண்ணிக்கொண்டு பிரஹ்மஞாநத்தை யடையாமலிருப்பவன் ஆபத்சந்யாசம் பண்ணிக்கொண்டு பிரஹ்ம

சுகத்தை அநுபவிக்கமாட்டான். [எ - தி] பூபதிரத்நம் வைத்துக்கொண்டிருந்த ராஜனுடைய வம்சத்தில் சாகிறசமயத்திலதைப்பார்க்கிற வழக்கமான அந்தக்கதைபோல வறிக. ஆபத்சந்யாசமே நன்மையானால் யௌவநத்திற் செய்துகொண்ட சந்யாசம் பலத்தைக் கொடுக்குமென்பதில் அதிசயமில்லை. [எ-தி] சாகக்கிடக்கிற பசுவைத் தாநம் பண்ணினவனுக்கே பலம் வருமானால், தலைக்கன்றுபோட்ட பசுத் தாநத்துக்கு கேட்கத் தேவையில்லாதது போல வறிக. [இ - து] பிராணன் விடும்போதாவது சந்யாசஞ் செய்துகொண்டவனுக்கே சகல பாபங்களும் நசித்து ஈஸ்வரகிருபை யுண்டாகுமென்றால், தேகாதிகள் திடமாயிருக்கும்போது சந்யாசம் செய்துகொண்டவனுக்குக் கேட்க வேண்டியதென்ன? [எ - தி] சர்க்காரில் உத்தியோகத்திற் குற்றம்வந்து தண்டிக்கப்போகிற சமயத்தில் வேலையை ராஜிநாமா கொடுத்ததனாலே குற்றமும் நிவர்த்தியாய்த் துரைக்குமவன்பேரிற் சந்தோஷ முண்டாகும்போது, குற்றமின்றியிருக்கும்போதே வேலையை ராஜிநாமா கொடுத்தவனுக்குக் கேட்கவேண்டியதில்லாதது போல வறிக. [இ - து] இப்போது பிரஹ்மாப்பியாசம்பண்ணாமல் மரணகாலத்திற் பண்ணி ஞாநத்தையடைவோமென்று நினைப்பதற்கு யுக்தி:—கொஞ்சம் தண்ணீரில் நீச்சுப்பழகி நீச்சுக்காரனாயாகாமற் பூரணமான வேகவதிப் பிரவாகத்திலிறங்கி நீச்சுப்பழகிக் கரையேறுவது கூடாததுபோல, இப்போது சுவாசமாகிற ஜலம் அதிகவோட்டமில்லாமலிருப்பதால் பிரஹ்மாப்பியாசமாகிற நீச்சுப்பழகித் தேறுவதைவிட்டு, மரணவேகமாகிற ஊர்த்துவச் சுவாசப் பிரவாகத்தில் பிரஹ்மாப்பியாசமாகிற நீச்சைப்பழகிக் கடைத்தேறப் போகிறதில்லை யென்றறிக. [இ - து] யாதொரு புருஷன் பால்யத்திலேயே வைராக்கியத்தினால் ஈஷணாத்திரயத் தியாகபூர்வகமாகச் சந்யாசம்பண்ணிக் கொண்டு, சத்குருவைத் தேடி அவரைச் சரணாகதம்பண்ணிச் சர்வித சேவா ரூபமான பணிவிடையால், அவரைச் சந்தோஷப்படுத்திவைத்து, அவர்சந்நதியிநின்று சிரவண மநந நிதித்தியாசந சமாதிகளை ஒழுங்காக அப்பியாசம் பண்ணிச் சாக்ஷாத்கார ஞாநத்தை யடையாமல், யௌவநத்திலெல்லாம் குடும்பத்துக்கு உழைத்துவிட்டுச் சாகிறசமயத்திற் சகலசங்கப் பரித்தியாகம் செய்ய நினைத்திருக்கிறானே அவனுக்கு அது கிட்டாது. [எ-தி] ஓலைப்புரையான வீட்டிலிருக்கிறவன், தீப்பட்டு எரியும்போது கிணர்வெட்டி அந்தத்தண்ணீரால் அந்த வீட்டை அணைக்க; முடியாததுபோலும் பக்குவமாயிருக்கும்போதே பர்த்தாவோடு பரிவுடன்சேர்ந்து போகசுகத்தையும், புத்திரனையும் பெறாமல், பல்லு விழுந்து, முலைவிழுந்து, யோநிதள்ளி, தூரம்போய், காய்ந்த கட்டைபோல நீரஸமாய்ப் போயிருக்கிற உபஸ்தத்தை யுடையவளாயிருக்கும்போது, என்னமாய்ப் பர்த்துரு சுகத்தையும், புத்திரனையும் அடைந்து வாழப்போகிறாளென்பதுபோலும்; சுயம்பாக நியமனம் பண்ணினவன் ஒருகால் பசியால் பிராண வேதனை யடைந்துகொண்டிருக்கும்போது, விறகு உப்புப்புளி அரிசி அடுப்பு முதலானவையெல்லாம் தேடிச் சம்பாதித்துச் சமைத்துச் சாப்பிடுவது அசாத்

தியமாவதுபோலும் ; சாயரக்ஷவரைச் சூதாடிப் பொழுதைப் போக்கிவிட்டுக் கள்ளர்பயமுள்ள காட்டுமார்க்கமாய்த் தன் ஊருக்குப்போய்ச் சேரமுடியாதது போலும்; ஆடுகிறகாலமெல்லாம் அவிசாரியாடிவிட்டுச் சாகிறகாலத்தில் சங்கரா சங்கராவென்று சொல்லுகிற பழமொழிபோலும்; சரீரத்திலிருக்கிற சுக்கிலமெல்லாம் கழிந்தபின், ஒரு ஸ்திரீயை விவாகம்பண்ணி அவளிடத்தில் போகித்துப் புத்திரனை அடைய முடியாததுபோலும்; ராஜன் தானங்கொடுக்கும்போது வேண்டியதைக்கேட்டு வாங்கிக்கொள்ளாமல் அந்தப்புரத்திற்குப் போனபின், யாதொன்றையும் பெறுமற்போவது போலு மறிக. ஐயா, முமுக்ஷுவாயிருக்கிற புருஷன் சத்குருநாதனிருக்கும்போது அவரிடத்தில் சிரத்தாபக்தியுடன் நான்குவிதமான சுஸ்ரூஷைகளைச்செய்து, ஆறுலிங்கத்தினலும் அவருடைய சந்நதியில் அவர்முகமாய்ச் சிரவணஞ்செய்து, சிரவணநுசாரமாகச் சொப்பன முதலான திருஷ்டாந்த யுக்திகளால், பிரமாணப்பிரமேய பிரத்தியகாத்மகத் சம்சயாதிகளை நிவர்த்திபண்ணுகிறதான மநநத்தை அப்பியாசம்பண்ணித் தேக வாசனைமுதலான விபரீதபாவனைகளை நிதித்தியாசநத்தாற் போக்கடித்துச் சங்கற்பவிகற்பரூபமான விக்ஷேபத்தை சமாதியால் லயம்பண்ணி, அப்பிரதிபந்த சாக்ஷாத்காரமான ஆத்மஞானத்தை யடையாமல், அந்தக் குருநாதன் விதேகமுக்தியான பிற்பாடு பரிதாபத்தை யடையக் காரணமேதென்று கேட்பாயாகில், இவனுடைய சித்தபரிபாகமில்லாத தோஷமேதவிர வேறில்லை. பிற்பாடு சித்தபரிபாகம் வந்து, அந்தக் குருநாதனை நினைத்து நினைத்துத் தியானிப்பதால் அவர்கிருபையால் இவனும் கிருதார்த்தனுக ஆகிறனென் றறிக.

## 65 - வது தரங்கம்.

சிரவணம்பண்ணி மநநம்பண்ணுதவனுக்குப் பந்தம் நிவர்த்தியாகாது:—

சிரவணம்பண்ணிமநநம் பண்ணுதவனுக்கு அஞ்ஞானியைப் போலத் துக்கம் போகாது. [எ - தி] பூமியில் விதையை விதைத்துத் தண்ணீர் பாச்சாதவனுக்கு விதை போடாதவனுடைய பலம் உண்டாவது போலவறிக. [இ - து] சிரவணம்பண்ணியும் மநநம்பண்ணுமல் மறந்து போனவனும், சிரவணம் பண்ணுதவனும் சரியாவர். [எ - தி] அத்தியயநம்பண்ணி மறந்தவனும் பண்ணுதவனும் சரியாவதுபோலும்; சேதுவில் பவுன் சம்புடத்தை மணற்குள் புதைத்துவைத்து அடையாளம் தெரிவதற்காக மேலே ஒருபிடிமணலைப் பிடித்துவைத்து, யாருமெடாமலிருக்கிறதற்காக அதன்மேலே அக்ஷதையும் வைத்துவிட்டு நாலுநாழிகை கழித்து வந்துபார்த்தபோது பதினயிரம்லிங்கம் அதுபோல் உண்டாய்விட்டதால் அவன் பணம்கொண்டுவராத வெங்கன்போலானதுபோலுமறிக. [இ - து] சுருதி யுக்தி அநுபவத்துடன்கூடிய சிரவணத்திலேயே ஞானம் வரும். அது திடமாகிறநிமித்தம் மநந சமாதிகள் பண்ண வேண்டும். [எ - தி] தீக்குச்சியை உறைத்தால் உடனே தீபம் உண்டாகும்.

எண்ணெ திரியுடன்சேர்ந்த விளக்கில் அதை யேற்றித் தூண்டுதல்போலும். காற்றினாற் கெடாமல் அதை ஒரு ஆவரணத்துக்குள் வைப்பதுபோலுமாம். [இ - து] இந்த வேதாந்தசாஸ்திரத்தைக் குருமுகமாய்ச் சிரவணம் பண்ணி அதை அநுபவத்திற்குக் கொண்டுவரும்படியான மநநத்தைப்பண்ணுதவ னுக்கு அஞ்ஞாநிகளைப்போல ஜநநமரண சம்சாரதுக்கம் போகாது. சுருதியி லும் வேத வேதாந்தங்களை ஷடங்கங்களோடு பூர்ணமாய்ச் சிரவணம்பண்ணி னவனானாலும், அந்த அர்த்தத்தை மநநம்பண்ணாமல் விட்டிருக்கிறவனுக்குச் சம்சாரபயம் போகாது என்று சொல்லியிருப்பதாலும் ; சூடாலையும் சிகித்து வஜனும் இருவர்களும் சேர்ந்து குருசந்நிதியில் வெகு காலம் சிரவணம்பண்ணி யிருந்தும் அவர்களிற் சூடாலை மநநாதிகளைச்செய்து அநாத்மாவான தேகாதி 35 தத்துவங்களையும் நேதிபண்ணிவிட்டு முப்பத்து ஆறும் தத்துவமாகிய சர்வ சாக்ஷியேதானென்று அறிந்திருக்கவும், சிகித்துவஜன் அப்படி மநநாதிகளைச் செய்யாமல் சிரவணார்த்தத்தை மறந்துவிட்டதால் அஞ்ஞாநம் போகாமல் துக் கப்பட்டுக்கொண்டிருந்து அத்துக்கம் போகிறநிமித்தமாகக் கங்காதி தீர்த்த யாத்திரைகளைச் செய்து வந்தும், அநேகமான தாநதர்மங்களைச் செய்ததாலும் துக்கம்போகாமற் சகலத்தையும்விட்டுக் காட்டுக்குப்போய் அவ்விடத்திலும் ஆத்மக்ஞாந ரகிதமான சுஷ்கக்கிரியாஜாலங்களில் முழுகிப் பதினெட்டுவரு ஷம்வரையில் அவதிப்பட்டுக்கொண்டிருந்த பிற்பாடு, சூடாலையே கும்பமுனி என்ற குருவடிவத்தை எடுத்துவந்து அவனைக் கரையேற்றிவிட்ட கதை போலும் ; மகாபலிச்சக்கரவர்த்தியும் வாலிபத்தில் தன்பிதாவான விரோசந சக்கரவர்த்தியினிடத்தில், எந்தத் தேசத்தில் சகல துக்கங்களுமில்லாமல் தடை யற்றஆநந்தமிருக்குமோ அந்தத் தேசத்தை எனக்குக் காண்பிக்கவேண்டு மென்று கேட்டதற்கு, அவர்பிதா ஆத்மக்ஞாநத்தை உபதேசித்திருந்தும் இந்த மகாபலி அதை மறந்துவிட்டுப் பத்துக்கோடிவருஷம்வரை ராஜ்ஜியபரி பாலநம் பண்ணிவந்து சகல போகங்களையும் புஜித்ததால், அவனுக்கே ஒரு காலத்தில் போகங்களில் நிராசைபிறந்து மாணிக்கரத்நமயமான மேடையி லேறித் தனித்திருந்து ஆலோசித்துப் பார்க்கும்போது, முன் தன்பிதா உப தேசம்பண்ணின ஞாநத்தை மநநம்பண்ணித் தன்குலகுருவான சுக்ராச்சாரி யரை வரவழைத்து, நானார்? இவ்விடத்திலுள்ளனவெல்லாம் எந்த வடிவத்தை யுடையனவென்று கேட்ட அவனுக்கு, அவர் இவடத்திலுள்ளனவெல்லாம் சித்து, நீயும் சித்து, நானும் சித்தென்று உபதேசித்தபடி அவனும் சமாதியை யடைந்து கிருதார்த்தனான கதையை யறிந்துகொள்ளத்தக்கது.

## 66 - வது தரங்கம்.

ஜீவன் பாவித்தபடியாவன் :—

ஜீவனுக்குச் சொரூபமென்னவென்றால், எப்படி எப்படி பாவிக்கிறானோ அப்படி அப்படி யாகிறான். [எ - தி] அச்சுமிட்டாய்க்கடையில் மிட்டாய்

எந்த அச்சில் போடுகிறானோ அந்த ஆகாரப்படுவதுபோல வறிக. [இ - து] அவனவன் சித்தத்தில் தேகமுதல் ஆத்மாவரை எந்தத் தத்துவத்தைத் தானாகப் பாவிக்கிறானோ, அது அது ஆத்மாவாகவே தோன்றும். [எ - தி] ஒரு கோவிலிலிருக்கிற லிங்கமே பூனைமுதல் பூஜகன்வரை அவரவர்கள் பாவனைப் படி தோற்றிப் பலன்கொடுப்பதுபோலவறிக. [இ - து] ஜீவன் மநதை இக விஷயத்திலோ, பரலோகவிஷயத்திலோ, ஆத்மாவிலோ எதில் விடுகிறானோ அதுவாக அது ஆவதால் மநதின்பேரிற் குற்றமில்லை. ஜீவன் பேரில்தான் குற்றம். [எ - தி] நதிஜலத்தை எப்படித் திருப்பினாலும் அப்படிப் போவது போலும், வைதீகர்கள் முந்தி ராவணசொஸ்தி யென்று சொல்லிப் பிந்தி ராகவாசொஸ்தி என்று சொன்ன கதைபோலும், முந்தித் தேவடியாள்யோநியில்விட்ட சிசுனத்தைப் பின் பத்தினியோநியில் விடுகிறதுபோலுமறிக. [இ-து] இவனுடைய பாவனையே ஜீவேஸ்வர ஜகத்தாய்த் தோன்றுகிறது. [எ - தி] ஸ்நாநக்கட்டத்திலிருக்கிற அரசமரத்திற் பேயுண்டென்று பாவித்த கதைபோல வறிக. ஐயா, அரசமரத்திற் பேய்பிடித்த கதையை எனக்கு விஸ்தாரமாகச் சொல்லவேண்டுமென்று கேட்ட சிஷ்யனுக்குக் குரு சொல்லுகிறார்:—ஒரு ஊரில் நதிதீரத்தில் படித்துறையோரத்திலிருக்கிற அரசமரத்தின் கீழே ஒரு ராத்திரியில் அந்த ஊரிலிருக்கிற ஒரு பிராஹ்மணன் போய் உட்கார்ந்திருக்கும் போது, காற்றினால் அசைக்கப்பட்ட அந்தக் கொம்புகளின் சப்தத்தைக் கேட்ட அப்பிராஹ்மணன், பிசாசினுடைய சப்தமென்று நினைத்துப் பயந்து ஓடிப்போய்க் கிராமத்திலுள்ளவர்களிடத்திலெல்லாம் இந்த மரத்திற் பேய் இருக்கிறது,என்னை விரட்டிக்கொண்டுவந்தது, நான் தப்பித்து ஓடிவந்துவிட்டேனென்று சொன்னவார்த்தையை அந்த ஜநங்களெல்லாம் நம்பி, அத்துறைக்கு ஸ்நாநத்திற்குப் போகாமலிருந்துவருங்காலத்தில், ஒரு மந்திரவாதி வந்து அவ்வூரிலுள்ளவர்களிடத்தில் நீங்களேன் இந்தப் படித்துறையில் ஸ்நானத்திற்குப் போகாமல் அவதிப்படக் காரணமென்னவென்று கேட்க, அவர்கள் இந்த அரசமரத்தில் பேய் இருப்பதால் அங்கே ஸ்நாநத்திற்குப் போகவில்லை என்று சொன்னதைக் கேட்ட மந்திரவாதி, நான் அதை விரட்டிவிடுகிறேன் எனக்கு ரூபாய் நூறு கொடுக்கவேண்டுமென்று கேட்டபடி, அவர்களும் சம்மதித்து ஒருமுழத்தில் ஒரு இரும்பாணி வாங்கிவரச்சொல்லி அதில் மந்திரங்களை உருவேத்தினபின், ஒருநாள் ராத்திரியில் கிராமஜநங்களோடு அவன் கூடப்புறப்பட்டுப்போய் அந்த அரசமரத்தின்வேரில் இந்த ஆணியை அடிக்கும்போது இவன் கட்டிக்கொண்டிருந்த வஸ்திரத்தின்முந்தானையையும் சேர்த்து ஆணியை அடித்துவிட்டு எழுந்திருக்கும்போது, இவன் ஓகோ ! கோ ! என்னையும் சேர்த்துப் பிசாசு இழுக்கிறதென்று கூக்குரற்போட்ட சப்தத்தை அக்கிராமஜநங்கள் கேட்டு ஆளுக்கொருகல்லாய்ப் பிசாசின்பேரில் எறிகிறோமென்று நினைத்து, அப்பிராஹ்மணனைக் கொன்றுவிட்டதால் அவனே பிர்மராக்ஷசாய்ப் போய் அம்மரத்திலிருந்த கதைபோலும் ; ஜீவன் காலத்திரயத்திலுமில்லாத ஸ்தூல

சூட்சும காரணரூபமான சமஷ்டி வியஷ்டியாத்மகப் பிரபஞ்சத்தையும், உத்தம மத்திம அதமர்களான ஜீவர்களையும், பிர்ம விஷ்ணு ருத்ராதிபேதங்களான ஈஸ்வரர்களையும் பாவனை பண்ணி, அவைகளுக்குள் இந்த ஸ்தலம் மேலென்றும், இந்த ஸ்தலம் கீழென்றும், இவர் மகா ஞாதாவென்றும், இவர் அஞ்ஞாதாவென்றும், இந்த ஈஸ்வரன் மேலென்றும், அந்த ஈஸ்வரன் கீழென்றும், இப்படியெல்லாம் பாவனை பண்ணிக்கொண்டு, அவனவன் பாவனைக்கேற்ற சுருதி யுக்திகளைக் கற்பனைபண்ணிக்கொண்டு, அஞ்ஞாநதசையில் மயங்கியிருந்த ஜீவனே, பின்னால் சற்குருகடாக்ஷத்தைப்பெற்று, அவர் அநுக்கிரகத்தால் இந்த ஜீவேஸ்வர ஜகத்தெல்லாம் நம்முடைய அஞ்ஞாநத்தின் திரிகுணங்களாற் கற்பிக்கப்பட்டதென்று தெரிந்துகொண்டு, இப்போது நம்முடைய யதார்த்தமான ஆத்மசொரூபத்தை நானென்றறிந்து ஜீவத்துவம் போய் பிரஹ்மமாக ஆகிறானென்றறிக.

## 67 - வது தரங்கம்.

லோபிக்கு விஷயசுகமே இல்லை:—

லோபிக்கு விஷயசுகமே இல்லை என்னும்போது மோக்ஷசுகம் எங்கே கிடைக்கப்போகிறது. [எ - தி] கூழ்குடிக்கவே ஐவேசு இல்லாதவனுக்கு ராஜபோஜநம் எங்கே கிட்டப்போகிறது. ஐயா, லோபிக்குச் சுகமே இல்லையென்று எப்படிச் சொன்னீரெனில், அதற்குத்தரம் சொல்லுகிறேன் கேள்:—ஈயாபத்தனென்ற பிராஹ்மணன் மகா லோபியாயிருந்து கிரகத்தில் ஸ்திரீயோடு வசித்துக்கொண்டு, எல்லார் வீட்டிலும் போஜநங்களுக்குப் போய்த் தக்ஷிணைகளை வாங்கிக்கொண்டு வருகிறதே தவிர தன்வீட்டில் ஒருகாலும் ஒருவருக்கும் சாதமும் போடுகிறதில்லை தக்ஷிணையும் கொடுக்கிறதில்லை. இப்படியிருந்துவருங் காலத்தில், இவனுக்குக் கங்காஸ்நாநம் பண்ணவேண்டுமென்ற ஆசையுண்டாய்ப் பெண்ஜாதியை வீட்டில் வைத்துவிட்டு ஒரு காசுகூடக் கையிற்கொண்டுபோகாமல் தான்மாத்திரமாய்ச் சத்திரம் சாலைகளிற் சாப்பிட்டுக்கொண்டு நடந்து காசிபோய்ச் சேர்ந்தபின், கங்கையில் ஸ்நானம்பண்ண இறங்கும்போது கங்காபுத்திரர்கள் வந்து எங்களுக்குத் தக்ஷிணைகொடாமலும், எங்களநுமதியைப் பெறாமலும், கங்கையில் ஸ்நானம் செய்யக்கூடாதென்று தடுத்தபின், கிணறுகளில் ஸ்நாநம் செய்துகொண்டு கங்கைக்கரையில் தக்ஷிணைகளையும் வாங்கிக்கொண்டு, சத்திரங்களில் போஜநமுஞ் செய்துகொண்டு, மூன்று வருஷம்வரைக் காத்திருந்தபின், தன்னூருக்குப் போகவேண்டுமென்கிற எண்ணம் வந்துவிட்டதில், ராத்திரிப் பதினைந்து நாழிகைக்குமேல் புறப்பட்டுக் கங்கைக்கரைக்குப் போய் ஸ்நாநம் செய்வதற்காகப் படித்துறையி லிறங்கும்போது, நாலு கங்காபுத்திரர்கள் ஓடிவந்து தக்ஷிணை எங்கேயென்று கேட்கும்போது, நான் ஸ்நாநம் பண்ணுவதற்காக இறங்கவில்லை யென்று சொன்னதைக்கேட்டு, அவர்கள்

இவனை வெளியில் விறட்டிவிட, இப்படியே பத்து நாள்வரையில் சரிப்படாமற் போய், ஒரு நாள் நடுநிசியில் கங்கையின் சமீபம்வரை இறங்கும்போது, ஒரு கங்காபுத்திரன் ஓடிவந்து இவன்கையைப் பிடித்துத் தக்ஷிணை எங்கே யெங்கே யென்று கேட்க, இவன் என்கையில் ஒருகாசுகூட இல்லை யென்று அழும்போது, அவன் ஒரு பைசாவாவது கொடுவென்று கேட்க, அதுவுமிப்போது கைவச மில்லை எங்கூருக்கு நீ வந்தால் கொடுக்கிறேனென்று சொன்னபின், இரக்கமாய் அவன் ஊரையும் பேரையும் கேட்டு எழுதிவைத்துக்கொண்டு, இவனுக்கு மந் திரங்களெல்லாம் சொல்லிவித்துக் கெங்காஸ்நாநமும் பண்ணி வித்து இவனை ஊருக்கு அநுப்பிவித்தபின், இவனும் தன்வீடு வந்துசேர்ந்து இரண்டுவருஷம் வரையிற் சுகமாயிருக்கும்போது, ஒரு நாள் இராத்திரி அந்தக் கங்காபுத்திரன் வந்து இவன் வீட்டுத் தலைவாசற்கதவை தட்டும்போது, அவன்குரலைக்கேட்ட இவன், பெண்ஜாதியைக் கூப்பிட்டு காசிக்குப்போயிருக்கும்போது இவனுக்கு நான் ஒரு பைசாக்கொடுக்கிறதாகசொல்லிவந்தேன், அதற்காக வந்திருக்கிறான். நீபதிவிரதையானதால் பர்த்தாவாகிய என்னுடைய கையால் ஒரு காசுகூட ஒருவருக்கும் கொடுக்கிறதில்லை யென்கிற விரதத்தை நிறைவேற்றி வைக்கவேண்டியது உன்னுடைய கடமையானதால், நான் பிராணன்போனவன்போல மூச்சை யடக்கிக்கொண்டு கிடக்கிறேன். நீ அந்தப் பிராஹ்மணனிடத்தில் என்பர்த்தா இப்போதுதான் இறந்து கிடக்கிறாரென்று சொல்லி மெள்ள அவரை அநுப்பிவித்துவிட்டுவா வென்று சொன்னபடி, அவளும் அவரிடத்தி லிதைச்சொன்னதில் அவரும் வந்து பார்த்து வியசகித்திருந்து விடிந்தபின்னும் போகாமல் மசாநம்வரைக் கூடப்போவேனென்று சொன்னதால், பாடைகட்டித் தூக்கிபோய் மயாநத்தில் சிதையில்வைத்துத் தீயையும் வைத்துப் பின்னும் இவரிருப்பதைக் கண்டு, அவள் மங்கிலியபிக்ஷை கேட்டு அவரிடத்திலதை வாங்கினபிற்பாடு, இவனிடத்தில் வந்து நீங்கள் பைசாகொடுக்கவேண்டியதில்லை. நான் அந்தக் காசிவாசிப் பிராஹ்மணனிடத்தில் தாங்கள் கொடுக்கவேண்டிய பைசாவை வந்தநம்பண்ணி மாங்கிலியப்பிக்ஷைகேட்டு இனும் வாங்கிவிட்டதால், தாங்கள் சிதையிலிருந்து எழுந்திருந்து வீட்டிற்கு வரலாமென்று சொன்னமாத்திரத்தில், உடனே எழுந்திருந்து வந்த கதைபோலும்; துரியோதநன் தன் பங்காளிகளான பாண்டவர்களுக்குப் பாதிராஜ்ஜியம் கொடுக்கவேண்டியிருக்க, அப்படிக் கொடாதுபோனதுந் தவிரக் கடைசியில் அவர்கள் குடியிருக்க ஐந்து வீடுகளாவது கொடுக்கவேண்டுமென்று கேட்டதற்கு, ஊசிகுத்துகிற அவ்வளவு இடங்கூட கொடுக்கமாட்டோமென்று சொல்லிக் கடைசியில், அவன் மகப் பூர்வமாய் இவர்களுக்கு ஒன்றும் கொடாமலும் தானுமநுபவியாமலும் தானும் மறித்துத் தங்களைச் சேர்ந்தவர்களையும் மறிக்கும்படி செய்த கதைபோலும், தாஷ்டாந்தத்தில் ஜீவனுகிற துரியோதநன் பஞ்சகிருத்தியபரர்களான பஞ்ச மூர்த்தியாகிற பாண்டவர்களுக்குப் பஞ்சகோசமாகிற ஐந்து வீடுகள்கூட கொடுக்கமாட்டோமென்று அபிமானமாகிற லோபத்தால் தானும் சுகிக்கா

மல் தன்னைச்சார்ந்த மனமுதலிய கரணங்களையும் சுகிக்கவொட்டாமல்; கெட்டுக் குட்டிச்சுவராய்ப் போகிறதைக்கண்டு, விவேகி தேகாதிகளில் அபிமானத்தை விடக்கடவது.

## 68-வது தரங்கம்·

ஜீவனாலே கூடஸ்தர் விளங்கவில்லை:—

கர்த்தாவான ஜீவனாலே அகர்த்தாவான தன்சொரூபம் விளங்காது. [எ - தி] கிலிட்டுத் தங்கத்தால் சுயமான தங்கம் விளங்காததுபோலும், அயோக்கியனிடத்தில் யோக்கியன் விளங்காத ஆலஸ்யம்கிம் என்ற பஞ்சாங்கக்காரன் சொல்லால் வித்வான் அவமானப்பட்ட கதைபோலு மறிக. [இ - து] ஜீவன் எப்போது கருத்தருத்துவாதி சங்கற்பத்தோடு கூடி விளங்குகிறானோ அப்போது அகர்த்தாவாகிய கூடஸ்தர் விளங்கமாட்டார். [எ - தி] மேகங்கள் மூடியிருக்கும்போது மகாகாசம் விளங்காததுபோலும், கடஜலமும் அதில் மேக நக்ஷத்திரங்களுடன் பிரதிபிம்பித்திருக்கிற பிரதிபிம்பத்தால் கடாகாசமும் விளங்காததுபோலும், ராகுகேதுக்களால் மறைக்கப்பட்டிருக்கிற சூரியசந்திரர்கள் விளங்காததுபோலும், வியபிசாரிகள்மத்தியில் பதிவிரதை விளங்காததுபோலும், மரம் செடி கொடிகளால் பூமி விளங்காததுபோலும், துவிதமதவாதிகளால் அத்வைதசுருதிகளால்பிரதிபாதிக்கப்படுகிற பிரஹ்மம் விளங்காததுபோலும், பகிர்முகமாய் விஷயாசையோடு கூடிக்கொண்டிருக்கிற புருஷனுடைய சித்தத்தில் விவேக வைராக்கியங்களோடு கூடியிருக்கிற குருஉபதேசம் விளங்காததுபோலும், நகராச்சப்தத்தால் மிருதுவான பிடில் சப்தமும் கானமும் கேட்காதது போலும், ஆற்றுமணலில் இறைக்கப்பட்டிருக்கிற சர்க்கரை அம்மணலால் விளங்காததுபோலும், துருவினால் மூடப்பட்ட ரத்திநம் விளங்காததுபோலும், சேற்றில் அமிழ்த்தி வைக்கப்பட்டிருக்கிற தங்கம் விளங்காதது போலும், மன்மதன்போலிருக்கிற புருஷன் கரியாற் பூசப்பட்டிருக்கும்போது விளங்காததுபோலும், அசோகவனத்தில் சிம்சுபாவிருக்ஷத்தின் கீழே வைத்திருக்கப்பட்டிருக்கிற சீதை ராக்ஷஸிகளுடைய கூட்டத்தால் விளங்காமற்போனதுபோலும், ராஜகுமாரன் வேடர்களோடு சேர்ந்திருக்கும்போது தன் ராஜத்தன்மை விளங்காதது போலும், ராத்திரியில் உண்டாகிற அந்தகாரத்தால் நேத்திரப்பிரகாசம் விளங்காததுபோலும், சூரபத்மா முதலான அசுரர்கள் பிரபலமாயிருக்கும்போது இந்திரன் முதலான அஷ்டதிக்பாலர்களும், ஆதித்தியாதி நவக்கிரகங்களும், மற்றைத் தேவதைகளும் விளங்காமற் போனதுபோலும், ராவணனால் ரிஷிகள் விளங்காமற் போனதுபோலும், துரியோதனாதிகளால் பாண்டவர்கள் வனவாசம் போனதுபோலும், நீசராஜாங்கத்தால் பிராஹ்மணனுடைய வேதோக்தமான ஔபாசந அக்கிஹோத்திர சோமயாக வாஜபேய பவுண்டரீக யாகம்வரையிலுள்ள யக்ஞாதி சத்கர்மங்கள் விளங்காதது போலும், இங்கி

மிலேச்சபாஷையால் தேவபாஷையான சம்ஸ்கிருதம் விளங்காதது போலும், அழுக்கு எண்ணெய்ச்சிக்கு முதலியவற்றால் வஸ்திரத்தின் சுவபாவமானவெண்மை விளங்காதது போலும், நாற்றமான சேற்றிற் கிடக்கிற அகிற்கட்டையின் சுவாசனையானது அச்சேற்றினால் விளங்காதது போலும், ஆரோபமான கானல் நீரால் பூமி விளங்காததுபோலும், ஆரோபமான சர்ப்பத்தினால் பழுதை விளங்காதது போலும், ஆரோபமான கட்டையால் கள்ளன் விளங்காதது போலும், ஆரோபமான வெள்ளியால் கிளிஞ்சல் விளங்காதது போலும், சுகமாய் மிருதுவான மெத்தையில் மகாலெட்சுமிபோலிருக்கிற தன் நாயகியோடு ஆலிங்கநம் பண்ணிப் படுத்திருக்கிற ஒரு புருஷனுக்கு நித்திராசக்தியால் உண்டுபண்ணப் பட்டிருக்கிற மோகமான சொப்பநாவஸ்தையால் மறைக்கப்பட்டதால் தன் சுகம் தோற்றாததுபோலவறிக.

## 69 - வது தரங்கம்.

அஞ்ஞானிகள் ஞானிமகிமையை யறியார்கள் :—

ஞானியினுடைய மகிமையை மூடர்கள் அறியார்கள். [எ - தி] பிறவிக் குருடன் ரத்நப் பிரகாசத்தையும், நபுஞ்சகன் ஸ்திரீசுகத்தையும், கன்னிகை புருஷ சுகத்தையும், மலடி பிரசவவேதனையையும், காக்கை அம்ச கதியையும், கழுதை குதிரையின் கதியையும், நாய் சிங்கத்தின் பராக்கிரமத்தையும் அறியாததுபோலுமறிக. [இ - து] அஞ்ஞானிகள் ஞானிகளுடைய மகிமையை யறியார்கள். அஞ்ஞானிகளென்பவர்கள் யார்? அவர்களுடைய அகம்விருத்தியானது எதிலே யிருக்கிறது? அவர்களுக்குச் சுபாவமென்ன? அவர்கள் எதனாலே ஞானிகள்மகிமையை யறியார்களென்று சொன்னீர்கள்? ஞானிகளென்பவர்கள் யார்? அவர்கள் அகம்விருத்தி எதிலேயிருக்கும்? அவர்கள் சுபாவமென்ன? இவ்விருவர்களும் அடையப்போகிற கதிகளென்ன? இவைகளையெல்லாம் விஸ்தாரமாய்ச் சொல்லவேண்டுமென்று கேட்ட சிஷ்யனுக்குக் குரு சொல்லுகிறார்:—வாராய் குழந்தாய்! அஞ்ஞானிகளென்பவர்கள் யாரென்று கேட்டால், பிரஹ்மத்தைச் சொப்பனத்திற்கூட நினையாமலும், கேளாமலும், அறியாமலும், அநாதிகாலமாய் ஆத்மாவை மறந்து அந்தக்கரணத்திலுண்டாகிற சங்கற்பரூபமான சஞ்சலவிருத்தி யுண்டாகும்போது இப்போது நான் சஞ்சலப்பட்டுக்கொண் டிருக்கிறேன். அந்த விருத்தி ஒருவிதமாய் நிச்சயித்தால் நான் நிச்சயித்திருக்கிறேன். அந்த விருத்தி அநாத்மாக்களை அபிமானித்தால் நான் அபிமானித்திருக்கிறேன். அந்த விருத்தி நடந்தவைகளைச் சிந்தித்துக்கொண்டிருந்தால் நான் இன்னேரம் சிந்தித்துக்கொண்டிருக்கிறேன். பிராணன் மூக்குவழியாய் வெளியிலோடினால் நான் மூச்சுவிட்டேன். அபாநன் கீழே நோக்கினால் நான் குசுவிட்டேன். வியாநன் தேகத்திற்குள் நாலு பக்கத்திலும் வியாபித்தால் நான் கைகால்களெல்லாம் சொடக்கினேன். உதாநன் கண்டத்திலிருந்து சப்தித்தால் நான் கொறட்டைவிட்டேன். சமாநன் உண்ட

அந்நத்தைச் சமரசப்படுத்திஞல் நான் புஜித்ததை சமரசப்படுத்தினேன். சுரோத்திரன் கேட்டதை நான் கேட்டேன். துவக்கிந்திரியம் ஸ்பரிசித்ததை நான் ஸ்பரிசித்தேன். நேத்திரம் பார்த்ததை நான் பார்த்தேன். சிகுவை ரசத்தையறிய நான் ருசியறிந்தேன். கிராணம் கந்தத்தையறிய நான் கந்தத்தை யறிந்தேன். வாக்கு வசனிக்க நான் வசனித்தேன். பாணி வேலை செய்ய நான் இன்ன இன்ன தொழில்களைச் செய்தேன். பாதம் நடக்க நான் நடந்தேன். பாயு மலஜல விசர்ஜநம்பண்ண நான் மலஜல விசர்ஜநம்பண்ணினேன். சிசுநம் சுகிக்க நான் சுகித்தேன். தேகம் பிறந்ததை நான் பிறந்தேன். அது பெருத்தால் நான் பெருத்தேன். அது இளைத்தால் நான் இளைத்தேன். அது கிழண்டுபோஞல் நான் கிழவஞய்ப் போனேன். அது சாகும்போது நான் சாகப்போகிறேனென்றும் எண்ணுவதுதான் அவர்களின் நிலைமை. அவர்களுடைய அகம்விருத்தி அநாத்மாவான இருபத்தேழு தத்துவங்களிலேயே சுற்றிக்கொண்டிருக்கும். அவர்கள் சுபாவம் எப்போதும் பகிர்முகமாகவேயிருக்கும். அவர்களுக்குக் கதி ஓயாமல் ஜநநமரணத்தை யடைந்து துக்கித்துக்கொண்டிருக்கிறதேயாம். இனி ஞானிகள் தன்னை யுள்ளபடியாய் அறிந்திருப்பார்கள். அவர்களினது அகம்விருத்தி சாக்ஷியினிடத்திலேயே இருக்கும். அவர்களுக்குச் சுபாவம் அந்தர்முகநாட்டத்திலிருந்து நாமாரென்ற விசாரத்தை யுடையதேயாம். அவர்கள் இப்பொழுதும் ஜீவன்முக்தாளாய்ப் பின் விதேகமுக்தியையும் அடைவார்கள். ஆகையால் அவர்கள் இவர்களை ஒருகாலும் அறியார்களென்று அறியத்தக்கது. ஐயா, அஞ்ஞானிகள் ஞானிகளின் மகிமையை யறியார்களென்று சொன்னீர்களே, ஞானிகளைப்போல அஞ்ஞானிகளுக்கும் ஸ்தூலசரீரமுதல் ஆத்மாவரையிலுள்ள தத்துவங்களெல்லாம் சரியாயிருக்கும்போது அஞ்ஞானிகள் ஞானிகளை யறியார்களென்று சொன்ன காரணமேதோவென்ருல், குருடனுக்கும் கண் தெரிந்தவனைப்போல சகல அவயவங்களுமிருந்தாலும், குருடன் தன்னையுமறிந்துகொள்ளாமல் மற்றையோர்களையு மறிந்துகொள்ளாம லிருப்பதுபோலும்; ஊமைக்கு மற்றவர்களைப்போலச் சகல அவயவமுமிருந்தாலும், தானும் பேச யோக்கியமில்லாமல் மற்றவர்களுடைய வார்த்தைகளைக் கேட்கவும் யோக்கியமில்லாம லிருப்பது போலும்; புத்தி சுவாதீநமுள்ளவன்போலக் கிறுக்கனுக்கும் சகல தத்துவங்களும் சரியாயிருந்தாலும், தன்னை அறிந்துகொள்ளவும், அன்னியர்களை அறிந்துகொள்ளவும் யோக்கியதை இல்லாததுபோலவும்; அஞ்ஞானியாகிற குருடனுக்கு ஞான நேத்திரமில்லாததால் மற்றைத் தத்தவங்களாகிற அவயவங்களெல்லாம் சரியாயிருந்தாலும் ஞாநநேத்திரமுள்ளவர்களை அறிய முடியாதது போலும், அஞ்ஞானியாகிற ஊமைக்கு மற்றைய அவயவங்களெல்லா மிருந்தாலும் ஞாநவாயில்லாததஞல் ஞாநவாயையுடையவர்களுடைய வார்த்தையை யறியமுடியாததுபோலும், அஞ்ஞானியாகிற கிறுக்கனுக்கு ஞானியாகிற சொஸ்த புருஷனுடைய ஸ்திதியை யறியமுடியாதென்றறிக.

## 70-வது தரங்கம்.

பகலில் பிரஹ்மவிசாரம் பண்ணாமல் ராத்திரியில் அதைச் செய்வது துக்கம்:—

புருஷார்த்தம் நாலையும் சம்பாதிப்பதற்கு பகற்காலம் சுகங்கொடுக்குமே தவிர ராக்காலம் துக்கத்தை யுண்டுபண்ணிப் புருஷார்த்தம் நாலையும் கெடுக்கும் என்பதற்குச் சுருதி யுக்தி அநுபவம்:—ஊற்றமாம் பகற்காலம் போனுபகார நிசியிலுண்டோ வென்பதே சுருதி. ராஜ கிரகத்தில் மிருஷ்டாந்ந போஜநம் போடும்போது தூங்கிவிட்டுக் குறவனைக் கெஞ்சி எச்சிற்சோறு வாங்கிச் சாப்பிட்டுத் திருப்தியாகாமல் தபிக்கிறவன் போலும்; யௌவந புருஷன் வந்தபோது அவனிடத்தில் போகத்தைப் பண்ணாமல், நித்திரைபோய், விழித்து விருத்தன் வந்தகாலத்தில் அவனோடு போகிக்கப் பீஜத்தைத் தாங்க அகப்பை பிடிக்க ஒருகையும், சிசுநத்தைத் தூக்கிவிட ஒருகையும், உபஸ்தத்தை நீக்கிவிட்டுக்கொள்ள அதிகமான ஒருகையும், இன்னமநேக சாதநங்கள் வேண்டியிருக்கிற விருத்தபோகத்தைப்போலும் என்பதே யுக்தி. இப்போது கோவிற் கட்டுகிறது, குளம் வெட்டுகிறது முதலிய தர்மமும், உத்தியோக முதலான தொழிலால் அர்த்த சம்பாதநமும், கண்காக்ஷியாய் அதிசயமான இந்திரஜால முதலான போகமும், நிரபேக்ஷையாய் மோக்ஷசாதநமான கிரந்தாப்பியாசமும், சகலரும் பகலிற் செய்வதுபோலவின்றி இக்காலத்திலுள்ள விவேகி அப்படி முக்திக்கு அந்தரங்க சாதநமான ஆத்ம விசாரத்தைப் பகலிற் செய்யாமல் ஸ்ரீரங்கமகாத்மியபாராயணம் செய்கிறதும், கர்த்தாக்களாயிருக்கிற ஜீவர்களோடு துவித விவகாரத்தைச் செய்கிறதுமாகப் பொழுதைக் கழித்துவிட்டு ராத்திரியில் ஆத்மவிசாரத்துக்கு உட்கார்ந்தால் தூங்குகிறவர்களும், தூண்மறைவில் ஒளிகிறவர்களுமாய் விளக்கு எண்ணை திரி தூண்டுகோல் முதலிய சாதநாபேட்சையையும், பிரதியோகியான காற்று விளக்குவெட்டுப்பூச்சிகளுடைய தடைகளையும் தடுக்கத் திரைமுதலன வேண்டுவதால் மோக்ஷத்துக்குச் சாதநமான ஞாநத்தைப் பெறவில்லை ஆகையால் சகலத்துக்கும் இராவிக்கினகாரியான அநுபவத்தையும் பார்த்து அறிந்துகொள்ளத் தக்கது. [இ - து] பகலில் முதல்நாள் சுழுப்தியில் அநுபவித்த பிரஹ்மாநந்த வனுவையெல்லாம் பகற்காலத்தில் துவைதிகளோடு சகவாசத்தால் துவைதப் பேச்சுக்களையும் பேசிக்கொண்டும், துவிதமான நாமரூபங்களுடைய குணதோஷங்களைப் பார்த்துக்கொண்டும், துவிதசப்தங்களைக் கேட்டுக்கொண்டும், துவித விவகாரத்துக்கு நடந்துபோய் அவைகளைச் செய்துகொண்டும், அதைக் குறித்து மநதினால் ஆலோசனைபண்ணிக் கவலைப்பட்டுக்கொண்டும், சாயங்காலம்வரை இப்படியே காலத்தை வீணாய்க்கழித்துவிட்டு, ராத்திரியிலும் கோவில் குளங்களைச் சுற்றுவதால் மீதமிருந்த கொஞ்சச் சுழுத்திசுகத்தையும் தொலைத்துவிட்டுப் பிற்பாடு வேதாந்தசிரவணத்துக்கு உட்கார்ந்த மாத்திரத்தில் பிராணன்

மநசுமுதலான கருவிகளெல்லாம் நிர்ஜீவனைப் போவதும் தவிர, இந்த ஜாக்கிராவஸ்தையைவிட்டுப் பேய்பிடித்த பெண் தெய்வசந்நதியிற்போனவுடன் தலைவிரித்துக்கொண்டு தன் பெண் வடிவத்தை மறந்து பேயாடுவதுபோல், சுழுப்திக்குப் போய்த் தலையாட்டம் கொடுத்து நித்திரை போவதால், அஞ்ஞாநாவரணங்களை நிவர்த்திபண்ணுகிறதான வேதாந்த சிரவணம் அஞ்ஞாநாவரணங்களை விருத்திபண்ணிவிக்கும். என்பதற்கு யுக்திகள்:— கட்டுச்சாதம் கொண்டுபோனவன் மீன் ; குஞ்சுகளுக்கெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகச் சாதம் முழுமையும் போட்டுவிட்டுத் தன்வயிறு நிரைவதற்காகச் சாதமில்லாமல், சோறுகட்டின துணியை நக்குவதுபோலும்; தேவடியாளிடத்தில் போகத்துக்குப் போய்ப் பிராணனுடைய வலுவையும், சுநத்தினுடைய லேபநரூபமான வலுவையும், சுக்கிலத்தையும் கழித்துவிட்டுப் புத்திரசந்ததியுண்டாவதற்காகச் சொந்த ஸ்திரீயினிடத்தில் வந்து போகிக்க யத்தநிக்கும்போது வாழைப்பழத்துத் தோல்போல சிசுநம் லேபநமற்றுப் போவதுபோலவறிக.

## 71 - வது தரங்கம்.

மந்தமுமுட்சுவுக்குக் குரு தேசாந்தரம் போனபின்புதான் தாபமுண்டாகும் :—

முமுட்சுவுக்குக் குரு சமீபத்திலிருக்கும்போது அருமை தெரியாது, பின்னால் ஆத்திரமுண்டாகும். [எ - தி] குழந்தைக்குத் தாய் சமீபத்திலிருக்கும்போது அருமை தோன்றாமல் அவள் வெளியேறிப் போனபின் தபிப்பதுபோலும், மழை பெயும்போது தண்ணீரை ஆதரவாய்க் கட்டிக்கொள்ளாமல் பின்னால் தண்ணீரில்லை என்று தபிப்பதுபோலும், யௌவநத்தில் பிரஹ்மாப்பியாசம் பண்ணாமல் விர்த்தாப்பியத்தில் விசாரணை புத்தியிலேறாமல் தபிப்பதுபோலுமறிக. [இ - து] அபக்குவியான முமுட்சு குருநாதனிருக்கும்போது அவரிடத்திலேயே நிழல்போலப் பிரியாமலிருந்து அவருக்கு அன்புடன் பணிவிடைசெய்து, அவர் சந்தோஷத்தால் அநுக்கிரகிக்கிற உபதேசத்தையும் ஆதரியாமல், தேக போகத்துக்குச் சாதநமான பெண்டாட்டி பிள்ளைகள், வீடு வாசல், நிலங்கரை, கோடு நாடு, கல்யாணங் கார்த்திகை, சுபாசுபங்கள், ராகத்துவேஷங்கள், மாநாபிமாநங்கள் முதலான வியவகாரங்களில் ஆசக்தனாய், மேலே சொல்லிய சங்கதிகளுக்காகச் சதா அலைந்துகொண்டு காலங்களையெல்லாம் விருதாகாலமாய்ப் போக்கி வாழ்நாளை வீண்நாளாய்ப் பண்ணிவிட்டுக் குருநாதன் விதேகமுக்தியடைந்தபின் அவருக்குச் சமாநமாக ஒருவரைப் பார்க்கவேண்டுமென்று தேசதேசமாய் ஊர்ஊராய் ஆளாளாய்த் தேடிப் பார்த்ததிலும், அப்படிப்பட்ட மகிமையுள்ள மகாபுருஷனைக் காணாமல், ஐயோ ! நாம் குருநாதனிருக்கும்போது அறியாமையால், அவர் நம்மை பலாத்காரம் பண்ணுகிறாரே, அவரிடத்திற் போகவேண்டியிருக்கிறதே என்று அசி

ரத்தைப் பண்ணிவிட்டோமே, இனிமேல் என்ன செய்யப்போகிறோமென்று தாபப்படுகிறான். [எ - தி] மிருஷ்டாந்ந போஜநத்திற்குச் சாப்பிடக் கூப்பிடும் போது எனக்குப் பசியில்லை என்று சொல்லிவிட்டு விளையாடிக்கொண்டிருந்த வன், அப்புறம் பசியெடுத்ததன்பேரில் அந்தத் தாதா கதவைச் சாத்திப் படுத்ததன்பேரில் பரிதாபப்படுகிறதுபோலும்; கோவிலுக்குச் சுவாமி தரிச நத்துக்குப் போய்க் கூட்டமா யிருக்கிறதென்று ஓரிடத்தில் தூங்கிவிட்டுக் கோவில் திருக்காப்பிட்டபின் விழித்துப் பார்த்து வெறுங் காப்பாய்ப் போய் விட்டதென்று பரிதபிக்கிற பக்தன்போலவும்; தேவியை உபாசித்துவருகிறவ னுக்குச் சொப்பனத்தில் தேவி அநுக்கிரகிக்க வந்தகாலத்தில் சாக்ஷாத் தேவி யென்று நினையாமல் சாமானிய ஸ்திரீயென்று நினைத்து மயங்கி விகாரியாய்ப் போனபின், அதைப் பின்னால் நினைத்துத் தபிக்கிறவன்போலே யாகுமென்று அறிந்து, குருநாதன் ஜீவன்முக்திதசையிலிருக்கும்போதே அவரிடத்திற் பெற வேண்டியவையெல்லாம் பெற்றுக் கிருதார்த்தனாய் வாழக்கடவது.

ஞாநிகள் புத்திசாலிகளென்றும் அஞ்ஞாநிகள் மூடர்களென்றும் சொன்ன சொல்லின் கருத்து:—

ஞாநியானவன் ஆகாசகுணமான ஒரு சப்தத்தையே அழிவற்ற பொரு ளாயும், அத்தியந்தம் சத்தாயும் பண்ணுகிறான். அதெப்படி யென்றால், சுருதி குரு சுவாநுபவ யுக்திரூபமான லக்ஷியார்த்தரூபமாயிருக்கிற சப்தத்தை அழி வற்ற தத்துவ ஞாநமாகச் செய்வதாலும், மற்றமாயாம்சமாய் வாச்சியார்த்தமா யிருக்கிற நாமரூபங்களைப்பற்றி வருகிற சப்தங்களை அத்தியந்தாசத்தாய்ப் பண்ணுகிறதாலும் புத்திசாலியென்று சொல்லப்பட்டன. இனி அஞ்ஞாநிகள் உள்ளதை உள்ளபடியாய் விளக்கிவிப்பதாயும், அநாத்மாத்தியாசங்களை நேதிப்பதாயும், உடனே துக்கநிவர்த்தி தடையற்றஆநந்த ரூபமான ஜீவன் முக்திச் சுகத்தைக் கொடுப்பதாயுமிருக்கிற சுருதி குரு சுவாநுபவ யுக்திக ளோடு கூடிய சப்தங்களைத் தாங்கள் மறந்ததுமின்றி அவைகளைப் பரிசீலநம் பண்ணி வருகிற சத்துக்களையும் நிந்தித்துக் கொண்டு, ஒரு துரும்பளவேனும் வடிவமில்லாமலும், அர்த்தமில்லாமலும், அநுபவமில்லாமலுமிருக்கிற நாம ரூபவடிவங்களைப்பற்றி வருகிற சப்தங்களைப் பிரமாணமாக எண்ணியும், அவை களைப்பற்றி அநேகவிதமான ராகத்துவேஷங்களைச் சிந்திப்பதும், அந்தப்படி இந்திரியங்களை அலைத்துவிப்பதும், சரீரத்துக்கும், மற்றவர்களுக்கும், திரவ் வியங்களுக்கும், சதா காலக்ஷேபத்துக்குங் கெடுதிகளான பிரவர்த்திகளைச் செய் வதுந் தவிர, சித்தத்திலேயும் அந்தவாசனையைப் பசுமரத்திலாணிபோல அதி திடப்படுத்தி வைத்துக்கொண்டு, இப்போதும் துக்கப்பட்டுக்கொண்டு இனி மேலும் அநந்தகோடி ஜநநமரண சம்சாரங்களுக்கு, வியாபாரி அச்சாரம் போட்டுவிப்பதுபோல, வைத்துக்கொண்டிருப்பதாலும், அவர்களை மூடர்க ளென்று சொன்னது யுக்தமென்று அறியத்தக்கது. [இ - தி] ரத்நப்பரீக்ஷை

யின் ஞாநம் தெரிந்தவன் ரத்நங்களைப் பந்தோபஸ்து செய்வதும், மற்றை வெறுங்கல்லுகளை வெளியில் தள்ளுவதுபோலும்; அப்பரீக்ஷையின் ஞாநம் தெரியாதவன் ரத்நங்களை அலக்ஷியமாய்த்தள்ளி வெறுங்கல்லுகளை லக்ஷியமாய் வீட்டிற்குள் பந்தோபஸ்துப் பண்ணி வைத்துக்கொண்டு அந்தக் கல்லுகளையே வைத்து வியாபாரம் பண்ணிக்கொண்டு, அதனால் லாபமில்லாமல் நஷ்டத்தையே அடைந்துகொண்டு, சுவரோடேயானாலும் சொல்லி அழவேண்டுமென்று சொல்லிய பழமொழிப் பிரகாரம், இந்த வீண் சப்தங்களான கல்லுகளைக் கேட்பார்களில்லையென்று சதா துக்கசமுத்திரத்தில் முழுகித் தபித்துக்கொண்டிருக்கிறவன்போலும்; கரும்பு இரண்டு வாங்கிவந்ததில் தகப்பன் ஒரு கரும்பைத்தட்டித் தோடு சக்கைகளைத்தள்ளி ரசத்தைக் கிரகிப்பதுபோலும்; மகன் அந்த முழுக்கரும்பைச் சாயரக்ஷைவரைக் கடித்துப் பார்த்ததிலும் கடுகத்தனைரசங்கூட வராமலிருந்ததுந்தவிரச் சிலாமய கணேச சும்பனம்போலப் பல்லுவலி சகிக்கமுடியாமற் போனபின் இதில் யாதொரு ரசமுமில்லையென்று தள்ளுவதுபோலுமறிக.

## 72 - வது தரங்கம்.

வாசனுக்ஷயமான மனது தோன்றினும் பந்தஹேதுவாகாது :—

சித்தத்திலிருக்கிற அறியாமை வாசனை கருத்துருத்துவங்கள் தத்துவக் ஞானத்தாற்போனபின் அந்தச்சித்தம் சங்கல்பரூபமாய்த் தோன்றினாலும் அதனால் பவபயமில்லை. [எ - தி] வருஷாகாலத்தில் மழைபெய்ந்து ஒய்ந்து சரத்காலத்தில் மேகங்கள் ஆகாசத்தில் தோன்றினாலும், அதனால் இடி மழை முதலான துக்கங்களில்லாததுபோலும்; விருத்தனுடையசிசுனம் லேபனம் சுக்ல முதலானதுகள் அத்துப்போய் பொடலம்பழம்போலத் தொங்கிக்கொண்டிருந்தாலும், அதனால் யாருக்கும் கற்புக் குலையக் காரணமில்லாததுபோலுமறிக. [இ - து] சொரூபத்தை யறிந்தபிறகு மனதென்று சொல்லுவது உபசாரம். [எ - தி] லேபனமத்துப்போனபின் சுண்ணியென்று சொல்லுமாத்திரமாய்ச் சொல்லுவதுபோலும், வேலைபோனபின் தாசில்தார் என்று சொல்லுவதுபோலும், புருஷன் செத்தபின் பழையசுமங்கலி என்று சொல்லுவதுபோலும், சன்னியாசம் பண்ணிக்கொண்டபின் அவனுக்குக் குருவாலிடப்பட்ட நாமத்தை யறியாமல் லோகத்தார் பழையபேரைச் சொல்லுவதுபோலுமறிக. விறகில்லாதஅக்கி தன் காரணாக்கினியில் அடங்குவதுபோல விஷயவாசனையில்லாத மனதும் சொரூபத்திலடங்குமென்றறிக. [இ - து] ஜகத்தைப்பொய்யென்று அறிந்திருக்கிறஞானிக்கு வியவகாரகாலத்தில் சுகதுக்கந்தோன்றினாலும் பிற்பாடு சித்தத்தில் வாசனையாயிராது. [எ - தி] நாடகம் பார்க்கிறவனுக்குப் பின்னால் சுகதுக்காதிகளுடைய வாசனையிராததுபோலும், பிறர்வீட்டுச் சமாராதனையில் பரிமாறுகிறவன்போலும், தட்டுக்காக ஸ்திரீகளைக் கூட்டிவிடுகிற

வன்போலுமறிக. ஞானிக்கு ஒருகால் வாசனையால் கர்த்தாவென்றுவந்தாலுங் குற்றமில்லை. ஞானிக்கு ஒருகாலும் தேகம்நானென்றபுத்தி வராதென்று ஓரிடத்தில் சொல்லியிருக்கிறது. மற்றோரிடத்தில் ஒருகால் போககாலத்தில் நான்மனிதனென்று தோன்றுமென்று சொல்லுகிறது. இந்த இரண்டுக்கும் விரோதமில்லாமலிருப்பதற்கு யுக்தி:—அபத்தமாய்ப் பாடம் பண்ணினபிறகு வித்பத்தியால் அபத்தம் திருத்தினபிற்பாடும் அவசமாய்ப் பழையபாடம் ஒருகால் வந்தாலும், அவன் வித்பத்திக்கு மோசமில்லாததுபோலும்; சன்னியாசம் செய்தபிற்பாடு பூர்வாசிரம நாமத்தைச் சொல்லிக் கூப்பிடும்போது அவசமாய்த் தன்னைக் கூப்பிடுவதுபோல் தோன்றினாலும், அதனால் அந்தச் சன்னியாசாசிரமத்துக்கு மோசமில்லாததுபோலுமறிக. [இ - து] சித்தத்திலே வாசனைஏறாமல் எவ்வளவு வியவகாரம்பண்ணினாலும் விரோதமில்லை. [எ - தி] எவ்வளவு சண்டைக்கு நின்றாலும் கச்சேரியில் பிராதுகொடாமலிருப்பது போலவறிக. [இ - து] மனது சுவாதீனமானவனுக்குச் சகலமும் லபிக்கும். [எ - தி] சரளிதெரிந்தவனுக்கு எந்த இராகமும் தடையன்றியில் பாடவருவதுபோலும், இந்திரஜாலம் தெரிந்தவனுக்கு ஜனங்களுடைய பிரார்த்தனைப்படிக்கு விநோதத்தைக்கொடுக்கிற எந்தவித்தையும் செய்யவருவதுபோலுமறிக.

ஞானம்வந்தும் மனதுமுதலான த்விதம் தோன்றிக்கொண்டிருக்கும்போது இவனுக்கு அதில் எப்படி ஆசைவராமலிருக்கும்? [எ - தி] சின்னப்பயல்கள் விளையாட்டுக்காக அசிங்கியத்தை பொடிப்பட்டையில் வைத்துக்கட்டி வீதியில் போட்டிருப்பதைத் தெரியாதவன் மயங்கி ஆசைப்படுவானேதவிர, தெரிந்தவன் சோதனைபண்ணியிருப்பதால் மயங்கானென்பதுபோலவென்றறிக. பின்னும் பொம்மைப்பெண்ணையும் பாலச்சுவாமியையுங் கண்டு உள்குட்டுத்தெரியாதவர்கள் மயங்குவார்களேதவிர தெரிந்தவர்கள் காரிஉமியக்கூடக் கால்காசு கொடுக்கவேண்டுமென்று விரக்தி யடைவதுபோலுமறிக. [இ - து] வாசனாரூபமான மனது வியவகாரம் பண்ணிக்கொண்டிருந்தாலும் அதனால் யாதொரு ஜனனமரணம் பயம்துக்கம் யாதொன்றும் வரமாட்டாது. [எ - தி] பல்லைப்பிடுங்கின பாம்பு படமெடுத்தாடினாலும், உயிரோடே சஞ்சரித்துக்கொண்டிருந்தாலும், அதனிடத்தில் யாருக்கும் பயமில்லாதது போலும்; ரச கெந்த வீரம் பூரம் முதலானபாஷாணங்கள் சித்தகுளிகையால் சுத்தமானபின் சாப்பிடுவதில் ஒருவருக்கும் மரணபயமில்லாமல் வியாதியும் நிவர்த்தியாவதுபோலுமறிக.

## 73-வது தரங்கம்.

சூக்ஷ்மபுத்திக்கே ஞானம்வரும் ஸ்தூலபுத்திக்கு வாராது:—

சூக்ஷ்மபுத்தியுள்ளவர்களுக்கே ஞானம்வரும், ஸ்தூலபுத்தியுள்ளவர்களுக்கு ஞானம்வாராது. [எ - தி] இந்திரப்பிரஸ்தமென்ற சபையில் பாண்டவர்

களையும் துரியோதனாதிகளையும் பார்த்து 'விடுதிறைய வைத்திருக்கவேண்டும். நாங்கள் வந்துபார்த்துச் சுகிக்கவேண்டு' மென்றுசொல்லிப் பீஷ்மாசாரியர் முதலானவர்கள் துரியோதனாதிகளுக்கும் பாண்டவர்களுக்கும் இரண்டாயிரம் ரூபாய்கொடுத்து அனுப்பிவைத்ததில், துரியோதனாதிகள் வைக்கோலைவாங்கி அரண்மனைமுழுக்க அடைத்து எறும்புபோகக்கூட இடமில்லாமற் செய்தது மன்றியில், மீதமுள்ளவைக்கோலையும் வீதியில் போட்டுவைத்துக்கொண்டிருந் ததையும்; பாண்டவர்கள் பகல்வத்திமுதலான தீபத்தையும் நிரம்பப்போட் டுச் சோடசோபசாரமும் அறுசுவையுடன் போஜனமும் செய்துவைத்துக் கொண்டிருந்ததுபோலுமறிக. [இ - து] அந்தக்கரணம் மூன்றுகுணங்களுடன் கூடியுண்டாயிருந்தாலும், அக்குணங்களில் இரண்டுகுணங்களால் பிரயோஜன மில்லாமல் சத்வகுணமட்டும் சொரூபானுபவம்பண்ண யோக்கியமுள்ளதா யிருக்கிறது. [எ - தி] மூன்றுசரீரங்களில் சூக்ஷுமசரீரம்மட்டும் பிரஹ்மத்தில் லயிப்பதுபோலும், மூன்று அவஸ்தைகளில் ஜாக்கிரம்மட்டும் தத்துவக்ஞானம் பெற யோக்யமாயிருப்பதுபோலும், ஜீவேசுவரஜகத்தில் ஜீவன்மட்டும் பந்த மோக்ஷ அதிகாரியாயிருப்பதுபோலும், தேவமனுஷ்யதிரியக்குகளில் மனுஷ ஜன்மம்மட்டும் ஜீவன்முக்திபெறச் சாதகமாவதுபோலும், முடிச்சோடேமூன் றுந் தொங்கினாலும் சிசுனம்மட்டும் யோனியில் பிரவேசித்து சுகமடைவது போலுமறிக. [இ - து] ஆத்மா எங்கும்நிறைந்திருந்தாலும், ஆத்மாபிமுக மான சூக்ஷுமபுத்தியுள்ளவனுக்கே விளங்கும். [எ - தி] தந்திஎங்கும்போடப் பட்டிருந்தாலும், தந்திக்காரனுக்கே அந்தப்பேச்சு தெரிவதுபோலவறிக.[இ-து] சூக்ஷுமபுத்திக்கே ஞானம்வரும் ஸ்தூலபுத்திக்கு ஆத்மஞானம் வாராது. [எ-தி] சூக்ஷுமபுத்தியோடேகூடியிருக்கிற சுரோத்திரேந்திரியத்துக்கே பாட் டினுடைய இராகக்கியானமும், சப்தசுவரமும், ஆரோஹணவரோஹணக் கிரம மும், சரளிஅலங்காரம், பல்லவிகள் முதலானவற்றிலுள்ள தாரதம்மியக்ஞான மும் உண்டாவதுபோலும்; சூக்ஷுமபுத்தியோடேகூடியிருக்கிற நேத்திரேந் திரியத்துக்கே வஜ்ரமுதலான நவரத்நங்களுடைய குணதோஷங்களும், விலை களின்தாரதம்மியக்ஞானமு முண்டாவதுபோலும்; வித்பத்திக்ஞானத்தோடே கூடிய புத்திக்கே சுலோகங்களிலுள்ள அபத்தம், சுபத்தம், அர்த்தம், அனர்த் தமுதலான ஞானம் வருவதுபோலும்; விவேகபுத்தியுள்ளவனுக்கே ஸ்திரீ பிண்டங்களிலிருக்கிற முலை, யோனி, கண், மூக்குமுதலான அவயவங்களைவெவ் வேறாய் இதுதோல், இதுரத்தம், இதுமாம்சம், இதுவசை, இதுநரம்பு, இது எலும்பு, இதுமயிர், இதுசீ, இதுகோழை, இதுசழி, இதுமலம், இதுமூத்திரம், இதுவாதநீர், இதுபித்தநீர், இதுமேகநீர்முதலான அசிங்கியஞானமுண்டாவது போலும், உண்டாகுமென்றறிக. [இ-து] அந்தக்கரணத்திலுண்டாகிற சாத்வீக, இராஜத, தாமசமான மூன்றுவிர்த்திகளில் தாமசவிர்த்தியானது அதிஸ்தூலமா யிருப்பதால், தேர்வடம் ஊசித்துவாரத்தில் நுளையாததுபோலும், கெஜத்தின் சிசுனம் மார்ஜாலத்தின்யோனியில் நுழையாததுபோலும், அதிசூக்ஷுமமான

பிரஹ்மத்தில் இந்தவிருத்தி நுழையாது. இராஜசவிருத்தியோவென்றால், காமக்குரோதங்களால் சலித்துக்கொண்டிருப்பதால் மின்னலில் ரத்தினப்பரீக்ஷை பண்ணுவது போலும், காற்றினலைசைந்துகொண்டு ஓடுகிற நதிப்பிரவாஹத்தில் தன்முகத்தைப் பார்ப்பதுபோலும், அத்தியந்தம் சொப்பிரகாசமாயிருக்கிற ஆத்மாவை இந்தவிருத்தியாலும் அறியக்கூடாது. சாத்வீகவிருத்தியானது சூக்ஷ்மமாயும் நிர்மலமாயும் நிச்சலமாயு மிருப்பதால் பொடிச்சரடு ஊசித்துவாரத்தில் நுழைவதுபோலும், நிர்மலமான கண்ணாடியில் முகந்தெரிவது போலும், இந்தசாத்வீகவிருத்தியே ஆத்மாவில் பிரவேசிக்குமென்பதற்கு இந்த விருத்தியிலேயே ஆத்மா நிர்மலமாயும், சுவச்சமாயும், சச்சிதாநந்தச் சொரூபமான ஸ்வலக்ஷணத்தோடே கூடினதாயும் பிரகாசிப்பாரென்றறிக.

## 74 - வது தரங்கம்.

மனதே சர்வகர்த்தாவேதவிர ஆத்மா சாக்ஷிமாத்திரம்:—

சகலவியாபாரமும் மனதேசெய்கிறது. ஆத்மா சாக்ஷியாய் விளக்கிவைத்துக்கொண்டிருக்கிறார். [எ - தி] நாடகசாலையில் கூத்தாடிச்சியே யாடுகிறாளே தவிர விளக்கு விளக்கிவைத்துக்கொண்டிருக்கிறதுபோலவறிக. [இ - து] மனதுக்கு விவேகத்தைச் சொல்லி சங்கல்பியாமல் சும்மாவிருவென்று சொன்னாலும் அப்படிஇராமல் விஷயத்தைக்குறித்தே புலம்பிக்கொண்டிருக்கும். [எ-தி] சமாராதனையில் ஒருகிழவன் எழுந்திருந்து தள்ளாடிபுள்ளாடிப் புலம்புகிறவனை சிறுபிள்ளைகள் பார்த்து, நீ சும்மா ஒருஇடத்தில் கிடந்துகழியென்று சொன்னாலும் அப்படிஇராமல் யதாப்பிரகாரமாய்ப் புலம்புவதுபோலவறிக. [இ - து] மனதுபோனவழியாகவே சகலஇந்திரியங்களும் போகும். [எ - தி] இஞ்சின் வண்டி எந்தப்பக்கம்எப்படி மெதுவாகவோ வேகமாகவோ போகிறதோ பின் வண்டிகள் முழுமையும் அப்படியேபோவதுபோலும், இராஜாவின்நடை எப்படியோ அப்படியே மற்றஜனங்களும் நடப்பதுபோலும், காற்று எந்தப்பக்கம் அடிக்கிறதோ அந்தப்பக்கம் தீயின்சுவாலையும் புகையும், நற்கந்ததுர்க்கந்தங்களும் போவதுபோலுமறிக. [இ - து] இந்திரியங்களில்லாமல் மனது இருக்குமென்பதற்கு அனுபவம் சொப்பனமனோராச்சியமே சாக்ஷியென்றறிக. மனதில்லாமல் இந்திரியங்களிராவென்பதற்கு அனுபவம் சுஷுப்தி மூர்ச்சை சமாதிபோலவென்றறிக. இதற்குயுக்தி-மரமில்லாமல் இலையிராது, இலையில்லாமல் மரமிருப்பதுபோலும்; காலில்லாமல் தலைஜீவித்திருக்கும், தலையில்லாமல் கால்ஜீவித்திராததுபோலும்; வாலில்லாமல் குரங்கிருப்பதும், குரங்கில்லாமல் வாலிராததுபோலுமறிக. [இ - து] மனது சங்கற்பத்தினால் பிரவர்த்தி விருத்தியாய் அதனால் வாசனை விருத்தியாய்த் துக்கப்படுத்தும். [எ - தி] பூமியிலடங்கியிருந்த வச்சநாவிஎட்டிவிதை மழையினால் மரமாய்வளர்ந்து அதனால்வேரோடித் துக்கப்படுத்துவதுபோலவறிக. [இ - து] ஆத்மாவினிடத்திலுண்டான

மனது அஞ்ஞானத்தாற் கட்டுப்பட்டிருப்பதால் ஆத்மாவில் லயிப்பதற்குப் பிரயாசமுண்டு. [எ - தி] ரசத்தில் கொஞ்சமெடுத்து சித்தியால் கட்டினரசம் மறுபடியும் அகண்டரசத்தில் ஒன்றுசேருவது பிரயாசமாயிருப்பதுபோல வறிக. [இ - து] ஆத்மா மூன்றுகாலத்திலும் நிர்விகாரியாயிருக்கும்போது பந்தமோக்ஷாதி சகலகற்பனைகளையும் மனதுபண்ணுகிறது. [எ - தி] நிர்விகாரியாய் சுகமாய்ப் படுத்திருக்கும்போது, நித்திராசக்தியே சொப்பனதிவிகாரங்களையும் தெளிவையும் கற்பிக்கிறது போலும்; சுவர் மூன்றுகாலத்திலேயும் ஒருபடித்தாயிருக்கும்போது, சித்திரிகன் சித்திரம்எழுதி அழிப்பதுபோலும்; பழுதை மூன்றுகாலங்களிலும் ஒருபடித்தாயிருக்கும்போது, பார்க்கிறவனே பாம்பு வந்ததாகவும் போனதாகவும் பார்ப்பதுபோலுமறிக [இ - து] மனது சகல வியாபாரமும் செய்யும்போது, எல்லாம் தான்செய்வதுபோலத்தோன்றினாலும் அந்தமனதுக்கேதவிர நமக்கு ஒருகருத்தருத்துவமுமில்லை. [எ - தி] குழந்தைகள் ஓடும்போது சந்திரன் ஓடுகிறதுபோலும், ரயில் ஓடும்போது மரம் ஓடுகிறதுபோலும், மேகம் ஓடும்போது கோபுரம் ஓடுகிறதுபோலும், படுக்கையில் படுத்திருக்கிறவன் நித்திரையாலடிபட்டுத் திரிகிறதுபோலத் தோன்றினாலும், தட்டாமாலை சுற்றினவனுக்குப் பூமிசுற்றுகிறதுபோலத் தோன்றினாலும், எப்படி வாஸ்தவமல்லவோ அப்படிமனதின்கருத்தருத்துவம் ஆத்மாவில் தோன்றினாலும் வாஸ்தவமல்லவென்றறிக. [இ - து] மனது தன்னுடையசெய்கையை சாக்ஷியினிடத்தில் ஆரோபிக்கிறது [எ - தி] துஷ்டன் தான்திருடித்தயிரைக்குடித்து ஏழைதலையில் கையைத்துடைப்பது போலவறிக. [இ - து] மனதுகற்பித்த பஞ்சவிஷயமும் துக்ககரமாயும், சஞ்சலமாயும், அநித்தியமாயுமிருக்கும். [எ - தி] ஆண்டிபெற்றது அஞ்சுங் குரங்கென்றபழமொழிபோலவறிக. [இ - து] மனதே சகலதொழிலுக்கும் கர்த்தாவாயிருக்கிறதே தவிர ஆத்மா சாக்ஷிமாத்திரமாயிருக்கிறாரென்பதற்கு சுருதி யுக்தியனுபவமென்னவென்றால், மனசைத்தவிர அவித்தை என்பது வேறில்லை, சகல பந்தத்துக்கும் காரணமாயிருக்கிற அவித்தை மனதுதான். அந்தமனது எப்போதுவிருத்திரூபமாய்க் கிளம்புகிறதோ அப்போது சகலஜகத்தும் கூடவே தோன்றுகிறது. மனது எப்போது நசிக்கிறதோ அப்போது சகலஜகத்தும் நசிக்கிறதென்பதே சுருதி. சொற்பன அவஸ்தையில் யாதொரு சிர்க்குச்சந்தன வனிதாதி விஷயங்களுமில்லாமலிருந்தும், இந்தமனது தன்னுடைய சக்தியினாலே போக்தாவையும் போகத்தையும் போக்கியத்தையும் இந்தத்திரிபுடியினாலுண்டு பண்ணப்படுகிற இராகத்துவேஷங்களையும் சுகதுக்கங்களையும் கல்பிக்கிறதே யுக்தி. அப்படியே ஜாக்கிரத்திலும் மனதே தன்னுடையசக்தியினாலே போக்த்ருபோக போக்கிய முதலான திரிபுடிகளைக் கல்பிக்கிறதே யனுபவமென்றறிக.

ஐயா, தாங்கள் சொன்னபடி அனுபவத்திலில்லையே; அதெப்படிஎன்றால், இந்த ஜாக்கிரத்தில் ஒவ்வொருமனுஷர்களும்குபேரனுக்குச் சமானமான பணக்

காரர்களாய் நாமாகவேண்டுமென்றும், பிரகஸ்பதிக்குச் சமானமான புத்தி சாலியாகவேண்டுமென்றும், சுக்கிரனுக்குச்சமானமாகக் கவியுடையவனாக ஆக வேண்டுமென்றும், மார்கண்டேயமகாரிஷிக்குச் சமானமாக சிரஞ்சீவியாயிருக்க வேண்டுமென்றும், மன்மதனுக்குச் சமானமாக ரூபவானாகவேண்டுமென்றும், சௌபரிரிஷிக்குச் சமானமாகப் புத்திரர்கள் பிறக்கவேண்டுமென்றும், அனுமாருக்குச்சமானமாக அரோகதிடகாத்திரமும் நவவியாகரணஞானமு முண்டாகவேண்டுமென்றும், ஹரிச்சந்திரனுக்குச்சமானமாய் சத்தியவானாகவிருக்க வேண்டுமென்றும், இப்படியெல்லாம் நினைத்திருப்பவர்களுக்குள்ளே ஒருவருக்கும் யெண்ணினபடி முடியாமலிருக்கும்போது, ஜாக்கிரத்திலே தோன்றப்பட்ட சகல விஷயங்களும் தன் மனதின்கற்பிதமென்று எப்படிச் சொன்னீரென்றால்; நீ, மூடத்தனத்தாலிப்படிச்சங்கித்தாய்! அதற்கு நான் உத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:—மனதென்பது இருவிதம், அதிலொன்று வாசனாரூபமாயிருந்து சகலவிஷயங்களையும் சகலதிரிபுடிகளையும் கற்பிக்கும்படியான வல்லமையுள்ளதாயிருக்கும், மற்றொன்று முந்திச்சொல்லியமனதினால் கற்பிக்கப்பட்ட அநேக கோடிமனதுக்குள் ஒன்றாயிருக்கும். ஆகையால் வாசனாரூபமான மனதினால் சகலஜகத்தும் கற்பிக்கப்பட்டிருக்கிறதென்று சொன்னதை அறியாமல் நீ சங்கித்தாய், அதைத்திருஷ்டாந்தங்கள் மூலமாய் அறிவிக்கிறோம் கேள்:—சொப்பனத்தில் தோன்றின ஜீவேசுவரஜகத்துக்களையெல்லாம் கற்பிக்கிறது வாசனாரூபமானமனது, அதில் ஏகதேசமாய்க் கற்பனையாயிருக்கிற ஒரு மனது அதில் வருகிற சுகதுக்கங்களை அனுபவிக்கிறது. இன்னும் ஒருஆலமரத்தை யுண்டு பண்ணுகிற ஒருவிதையே அந்தமரத்தையும், பணைகளையும், கொப்புகளையும், அநேககோடிஇலை, பூ, காய்களையும் பழங்களையுமுண்டுபண்ணுகிறது. அதில் காய்த்த ஒருவிதை அந்தமரத்திலொருவிதமான இலை காய் முதலானதுகளைக் கற்பனைபண்ணமுடியாததுபோலும், ஒருபாணத்திலிருக்கிற தீயானது அனந்த கோடி தீப்பொரிகளை யுண்டுபண்ணும், அந்தப்பொரி மற்றைப்பொரிகளையும் கற்பிக்கமாட்டாததுபோலும்; இந்திரஜாலக்காரனிடத்திலிருக்கிற மாயாசக்தி அனந்தவிதமான உலகங்களையும் அநேகமாயாவிகளையும் கற்பிக்கும், அப்படிக் கற்பனைக்குட்பட்ட ஒருமாயாவி ஒன்றையும் கற்பிக்கமாட்டாததுபோலுமறிக. மனதுபோனவழியே சகலஇந்திரியங்களும் போகும். [எ - தி] நதியில் பிரவாஹம் எந்தவழியாய்ப்போகிறதோ அந்தவழியாய் அதில்கிடக்கிற செத்தை குப்பைகளும் போவதுபோலும், ஊர்தெரிந்தவன் முந்தி எந்தவழியாய்ப் போகிறானோ அந்தவழியாய் ஊர்தெரியாதமற்றவர்களும் போவதுபோலும், உபாத்தியாயர் எப்படிவேதத்தைச் சந்தைசொல்லிவைக்கிறாரோ அந்தப்படி பிள்ளைகளும் சொல்லுவதுபோலுமறிக. இந்திரியங்களில்லாமல் மனது இருக்கக்கூடும், மனதில்லாமல் இந்திரியங்களிருக்கக்கூடா. [எ - தி] தாயில்லாமல் பிள்ளையுண்டாகாது, பிள்ளைபிறக்காமற்போனாலும் தாயிருக்கிறாப்போல வறிக. மனது தன்கருத்துருத்துவத்தை ஆத்மாவின்பேரிலாரோபிக்கிறது.

[எ - தி] ஜலத்தினுடைய அசைவுமுதலானவைகளைப் பிரதிபிம்பத்தில் காண்பதுபோலவறிக.

## 75 - வது தரங்கம்.

மனது ஆத்மாவில் லயிப்பது உத்தமம். ஆத்மசிந்தனை பண்ணுவது மத்யமம். விஷயசிந்தனை பண்ணுவது மந்தம் :—

மனது ஆத்மானாத்மாக்களிரண்டையும் நினையாமல் ஆத்மமாத்திரமாய் லயித்திருப்பது உத்தமம், அதற்குமுடியாமற்போனால் அனாத்மசிந்தனையை மறந்து ஆத்மசிந்தனைமட்டுமாவது சிந்திக்கவேண்டுமென்பது மத்யமம, விஷய சிந்தனையைச்செய்கிற மனது பந்தப்படும், ஆகையால், அதமம். [எ - தி] காமவிகாரமன்றியில் கௌபீனசுத்தத்தையுடையவன் உத்தமன் : அதற்கு முடியாமற்போனால் கல்யாணம்செய்த பெண்ணினிடத்தில்மட்டுங் கூடென்றும், மறுமாதரை மாதாவைப்போல் நினைத்திருக்கவேண்டுமென்ற விதிப்படியிருப்பவன் மத்யமன் ; பரஸ்திரீகளைச்சேருகிறவன் இஹபரங்களிரண்டிலும் வியாதி நரகாதி துன்பமுறுபவன் அதமனென்றறிக. [இ - து] நிர்விகல்பசமாதியில் லயப்படாதமனது விசாரணையில் லயப்படலாம், அதிலும் லயப்படாதமனது பிரணவோச்சாரணையால் லயப்படும். [எ - தி] குழந்தை தொட்டிலில் சுயமாய் தூங்காதபக்ஷத்தில் பக்ஷணத்தைக்கொடுத்துத் தூங்கப்பண்ணுவதுபோலும், அதிலும் தூங்காத குழந்தையைப் பாடுவதால் தூங்கப்பண்ணுவதுபோலுமறிக. [இ - து] ஒருபுருஷன் தன்ஸ்திரீயை தன்னுடைய ஆக்ஞைக்குள்ளடக்கி ஆளுகிறது உத்தமம், அல்லது சகல குடும்பவியாபாரத்தையும் லாபநஷ்டத்தையும் பெண்சாதிகிட்ட ஒப்பித்துப்போட்டு தனக்கதில் சம்பந்தமன்றியிலிருக்கிறது குற்றமில்லை, அவளுமிவனும் ஒத்துமையில்லாமல் அடித்துக்கொண்டு சர்க்காரிற்போய் இரண்டுபேரும் தண்டனைப்படுகிறதுதான் கெடுதலாயிருக்கிறதுபோல, சாக்ஷியாகியதான் அந்தக்கரணவிருத்திகளையடக்கிநிர்விகற்பசமாதிசெய்கிறது உத்தமம். நாம் சாக்ஷி, சகலகருத்தருத்துவமும் அந்தக்கரணத்திற்கே, நமக்கு சம்பந்தமில்லை என்று நிச்சயக்ஞானத்தோடே யிருக்கிறதுங் குற்றமில்லை. அந்தக்கரணமும் தானும் அன்னியோன்னிய அத்தியாசத்தையடைந்து, அந்தஅத்தியாசத்தாற் புண்ணியபாபகர்மங்களை ஒப்புக்கொண்டு, ஈசுவரனால் ஜனனமரண சம்சாரத்திற் கட்டுப்பட்டுத் துக்கப்படுகிறதுதான் கெடுதலென்றறிக. [இ - து] மனோவிருத்தி எதில்விட்டாலும் அந்த ஆகாரப்படும். [எ - தி] தம்பூர்சப்தம் எந்த இராகத்திற் சேர்ந்தாலும் ததாகாரமாவதுபோலும், தண்ணீரைக் கருவேல்முதல் கரும்புவரை எதில்விட்டாலும் அந்தாகாரமாவதுபோலுமறிக. [இ - து] மனது எந்தெந்த விஷயத்திற்சேர்ந்தாலும் அந்தந்த ஆகாரமாய்ப்போகும். [எ - தி] உருக்கிய தராநீர், சேர்ந்த மூசைகளினாகாரமாவதுபோலும்; அக்நி எந்தெந்த வஸ்துக்களில் சேர்ந்தாலும் அந்தந்தச் சாமபிராணிவாசனையாகவோ, கருவாடு நாற்றமாகவோ, கள்ளிப்புகையாகவோ

ஆகுவதுபோலும்; மண்ணானது எந்தெந்த உருவாரம் செய்தாலும் அந்தந்த உருவாரமாய்த் தோற்றுவதுபோலும்; மையானது இராவணுதிஇராக்ஷசர்களாதியாகவாவது இராமலட்சுமணர்களாதியாகவாவது எப்படிச் சித்திரிகன் எழுதுகிருனே அப்படித்தோற்றுவதுபோலும்; ஒரு ஈசுவரனே பாபிகளுக்கு எமனுகவும், கர்மிகளுக்கு இந்திராதிதேவதைகளாகவும், பக்தர்களுக்கு அவர்களவர்கள் பாவனைப்படி கணபதியாகவும், சுப்பிரமணியராகவும், பிர்மாவாகவும், விஷ்ணுவாகவும், சிவனுகவும், காளிகருப்பன்முதலான தெய்வங்களாகவும் தோற்றுவதுபோலும்; யோகிகளுக்கு அந்தஈசுவரனே பிராணவாயுவாய்த் தோற்றுவதுபோலும்; ஒரு சுக்லசோணிதமே மனுஷர்களாகவும், ஆண் பெண் அலியாகவும், பிரஹ்ம க்ஷத்திரிய வைசிய சூத்திர சண்டாளஜாதிவரையாய்த் தோற்றுவதுபோலும், இன்னும் பிரஹ்மசரிய கிருகஸ்த வானப்பிரஸ்த சன்னியாசிகளாய்த் தோற்றுவதுபோலும்; ஒரு மழைஜலமே கங்காதி நதிகளாகவும், வாய்க்காலாகவும், அநேகவிதமான குளம்குட்டைகளாகவும் தோற்றுவது போலும்; ஒரு மண்ணே காசி முதலான தேசங்களாகவும், வேறுவேறு ஊர்களாகவும், அநேககோடி மேடை கூட பிராசாதங்களாகவும், கோபுரங்களாகவும் குட்டிச்சுவர்களாகவும் தோற்றுவதுபோலும்; ஒரு அன்னமே சம்பா, புளியோதரை, சக்கரைப்பொங்கல், தத்தியோதனமுதலானதாய்த் தோற்றுவது போலும்; ஒருநூலே சவுக்கமாகவும், உருமாலாகவும், வேஷ்டியாகவும், சேலையாகவும், துப்பட்டியாகவும், லங்கோடு கௌபீனம் கயிறுமுதலானதாகத் தோற்றுவதுபோலும்; ஒரு பசுத்தானே வெள்ளைநிறமாயும், மயிலைநிறமாயும், சிவப்பு கறுப்பு முதலான நிறமாயும் தோற்றுவதுபோலும்; ஒரு தங்கம்தானே கடக மகுடகுண்டலம் கடுக்கன் மோதிரம் அரைஞாண் முதலியனவாகத் தோற்றுவதுபோலுமறிக.

## 76 - வது தரங்கம்.

*திரிகுணங்களி லொருகுண மதிகமானல் மற்றிரண்டுமடங்கும்:—*

திரிகுணங்களி லொருகுணமதிகமானல் மற்றிரண்டுமடங்கும். [எ - தி] அவஸ்தாத்திரயங்களில் ஒரு அவஸ்தைபலமாய் உண்டாய்விட்டதேயானல் மற்றிரண்டவஸ்தைகளும் காணுமற்போவதுபோலும், ஜாரஸ்திரீ எந்தஜாதியில் அளவுசரியான ஜாரபுருஷன் சித்தித்தால் மற்றஜாதிகளும் அதிலுள்ள புருஷர்களும் அலக்ஷியமாய்ப்போவதுபோலும், மனதுக்குப் பஞ்சவிஷயத்தில் எதில் ரமிப்புண்டாச்சுதோமற்றவிஷயங்கள் தோற்றுமற்போவதுபோலுமறிக. [இ-து] சத்துவகுணத்துக்குச்சாந்தி சுகமுதலான குணங்களும், ரஜோகுணத்துக்கு ராகத்துவேஷாதிகுணங்களும், தமோகுணத்துக்குச் சோம்பல் கொட்டாவி முதலானகுணங்களும் சுயமாய்வரும். [எ-தி] சர்க்கரை உள்ளவிடத்தில் எறும்புகளும், எச்சிற்கலையுள்ளவிடத்தில் நாய்களும், வேப்பிலையுள்ளவிடத்தில் ஒட்

டைகைகளும் தானேவருவதுபோலுமறிக. [இ-து] மனதுக்கு மூன்றுகுணஞ்சுபாவமாயிருந்தாலும் அதில் ஒருகுணம் வியாபகமாய்க் கிளம்பிவிட்டதேயானல் மற்றிரண்டு குணங்களுமடங்கிப்போம். [எ - தி] தகப்பன் பிள்ளை பெண்ஜாதி மூன்றுபேர்களும் ஒருவீட்டிலிருந்தாலும் அவர்களுக்குள்ளே எவன்தலைவனாய் வியாபகனாகிறானே அவனுக்குள் மற்றிருவர்களுமடக்கமாய்ப்போவதுபோலும், புண்ணிய பாப மிசிர கர்மங்களிலெந்தக்கர்மம் பிரபலமாகிறதோ மற்ற இரண்டு கர்மங்களும் அடங்கிப்போவதுபோலுமறிக. ஐயா, மனதுக்கு மூன்றுகுணங்களும் சுபாவமென்று ஓரிடத்திலும் மற்றோரிடத்தில் மனதுக்குச் சத்துவகுணமே சுபாவமென்றும் மற்றராஜச தாமசகுணங்கள் வெள்ளைநூலுக்குச் சிவப்புச்சாயம் கறுப்புச்சாயம் ஏற்றுவதுபோல ஆரோபமாய் ஏறியிருக்கிறதென்றுஞ் சொல்லியிருக்கிறது. மற்றோரிடத்தில் ராஜச தாமசகுணங்கள் போனல் மனதென்கிற பேரேபோய்ச் சத்தியமென்கிற பேர்வருகிறதென்றும், இப்படியே ஞானிகளிடத்தில் மனசே யிறந்துபோய்விட்டதென்றும், விதேககைவல்யம்வரை மனதிருக்குமென்றும், இப்படிக் கிருக்கன்போலே பலவிதமாய்ச் சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கும்போது நான் எதை நம்புகிறதென்று கேட்டசிஷ்யனுக்கு, குரு சொல்லுகிறார். வாராய் குழந்தாய் ! நீ கேட்டசங்கையானது நன்றாயிருக்கிறது. சகலமான முமுட்சுக்களுக்கு உபகாரமாயிருப்பதால் நான் சொல்லப்போகிற உத்தரத்தைச் சாவதானமாய்க் கேள் ! மனதுக்கு மூன்றுகுணஞ் சுபாவமென்று சொன்னவிடத்தில் இந்த முக்குணங்களை விட்டயிடத்தில் மனதென்கிற பேரில்லாமற் சித்ரூபமாகவே யிருக்கிறது. [எ - தி] ஒருபூமியானது சூரியகிரணத்தோடே கூடும்போது வெண்ணிறமாகவும், தீபப்பிரகாசத்தோடே கூடும்போது செம்மைநிறமாகவும், இருட்டோடே கூடும்போது கருநிறமாகவுந் தோற்றுவதுபோலவறிக. மனது சத்துவமென்றும் மற்றிருகுணங்களும் வந்துகலந்தனவென்றுஞ் சொல்லுவதற்குயுக்தி :—ஜலம் சுபாவமாய்க் குளிர்ச்சியாயும், தீயின் சம்பந்தத்தால் உஷ்ணமாயும், மண்ணின் சம்பந்தத்தாற் சேறுவதுபோலும்; ரஜோகுணத்தாற் காமக்குரோதவிகாரமாயும், தமோகுணத்தால் மயக்கமாயும் போகுமென்றறிக.

## 77 - வது தரங்கம்.

*தன்மனதே தனக்குச் சத்துருவானதால் அதைக்கொல்லவேண்டும் :—*

உள்ளிலிருக்கிற சத்ருவாயும், அநாதிகாலமாய்த் தனக்குத் தன்சொரூபத்தைத் தெரியவொட்டாமல் மோசம்பண்ணி, ஜனனமரணாதி அனந்ததுக்கங்களைக் கொடுத்துவருகிறவனான மனதை விசாரத்தாலுஞ் சமாதியினாலுங் கொல்லவேண்டும். [எ - தி] நம்முடைய வீட்டிற்குள்ளே யிருப்பவனாயும், நம்முடைய சொத்தைத் திருடி மறைத்துவைத்துக்கொண்டு நம்மை அந்தச் சொத்தை

அனுபவிக்கவொட்டாமல் பிக்ஷையெடுக்கும்படி வெகுநாளாய் துக்கப்படுத்தி வைத்தவனுமிருக்கிற திருடனை உடனே வெட்டியும் பீஜமர்த்தனஞ் செய்துங் கொல்லவேண்டியதுபோலவறிக. [இ - து] விவேகி தான்சாக்ஷி என்று அறிந்து, மனதுக்கும் தனக்குஞ் சம்பந்தமில்லையென்று தள்ளினால், மனது தானே இறந்துவிடும். [எ - தி] கெட்டபிள்ளையைத் தகப்பனே திருடனென்று தள்ளிவிட்டால் எல்லோரும் உதைப்பதால் மரிப்பதுபோலும், தன் ஸ்திரீயை வியபிசாரியென்று நிந்தித்தால் சகலரும் நிந்திப்பதால் மானத்தால் மரிப்பது போலுமறிக. [இ - து] அசுத்தமனது விஷயபோகத்துக்குத்தான் அனுகூலம். [எ - தி] விடபுருஷன்போலவறிக. [இ - து] முமுட்சுவின்மனது குலஸ்திரீ வியபிசாரம்போல விஷயத்தில் ஒருவருக்குந் தெரியாமற்போகும். அந்த மனதை விஷயச்சேற்றில் முழுகிப்போகவொட்டாமல் தடுக்காதவன் மானிட அரக்கனென்று சொல்லப்படுகிறான். [இ - து] சமாதிக்குப் போகுங்காலையில் வாசனைகளெல்லாம் இவனைத் தடுத்துத்தடுத்துச் சுகமடையவொட்டாமல் கெடுக்கிறது. [எ - தி] ராஜன் வெளிவியாபாரத்தில் மிகுந்த வருத்தப்பட்டு அந்தப் புரத்திற்போய்ப்படுக்கப்போகும்போது அவ்விடத்திலுள்ள நாயகிகள் ஒருத்தியொருத்தியாய்வந்து தன்தன் வருத்தங்களைச்சொல்லி இவனை சுஷுப்திச்சுகமடையவொட்டாமல் செய்வதுபோலவறிக. [இ-து] சாக்ஷிக்கும் ஸ்தூலதேகத்துக்கும் பந்தமோக்ஷமில்லை. சூக்ஷுமதேகத்திற்குத்தான் பந்தமோக்ஷம். [எ - தி] புளியந்தோட்டையும் விரையையுங்கரைத்துக் குழம்புபண்ணாமல் நடுவிலிருக்கிற புளியைமட்டுங் கரைத்துக் குழம்புபண்ணுவதுபோலுமறிக. [இ - து] மனது விவேகத்திற்குத் தானாய்வராமல் சும்மாயிருந்தாலும் நாமே நாமாரென்று விசாரத்திற்குத் தூண்டியிழுக்கவேண்டும். [எ - தி] துலைக்குப்போன கூட்டாளி அவனாய்க் கணக்கு ஒப்பியாவிட்டாலும் முதலாளியாய் அவனைத் தூண்டிக் கணக்குகேட்பதுபோலவறிக. [இ - து] மனதானது தான்தானே ஒருஒரு விஷயசங்கற்பங்களைப் பண்ணிக்கொண்டு, அது நினைத்தபடிமுடியுமுன்னமே நாம் நினைத்தகாரியங்களெல்லாம் முடியுமென்று அநேகவிதமான சங்கற்பங்களை அரைநிமிஷத்தில் சங்கற்பம்பண்ணி, அந்தப்படி பிரவர்த்திப்பதில் சிலதுமுடிந்தும் சிலதுமுடியாமலும், முந்தி முடிந்ததையுங் கெடுக்கும்படியானகர்மத்தால் விக்கினங்கள் வரும்போதெல்லாந் துக்கப்பட்டு மயங்கிப்போம். அல்லது ஒருகாரியத்தைச் சங்கற்பத்தால் ஆரம்பித்து அந்தக்காரியம் முடியாமற்போவதால் துக்கத்தையடைந்திருப்பதால், பின்னொருகாரியத்துக்குச் சங்கற்பிக்கும்போதே இது நமக்குச் சித்திக்குமோ சித்திக்காதோவென்ற துக்கமும், சித்திக்காமற்போனால் அந்தத்துக்கம் விருத்தியாவதும், கெடுத்தவன்பேரில் கோபதாபங்களும் துவேஷங்களுமுண்டாய் அவனுக்குக் கெடுதியைச்செய்ய எத்தனிப்பதாலுந் துக்கம், அந்தயத்தனத்தால் எதிரிக்கு இவன் செய்கிறகெடுதி பலியாமற்போனால் அழுகையாலும் வருத்தத்தையடையுமென்றறிக.

## 78-வது தரங்கம்.

*ஆசை பேராசை நிராசையின் தன்மை:—*

தனக்கு லபித்திருக்கிறபோகத்தைப்புசிப்பது ஆசை, லபியாதபோகத்தை யிச்சிப்பது பேராசை, தனக்கு லபித்திருக்கிற போகத்தையுந் தள்ளுவது நிராசையாம். [எ - தி] யோக்கியன் அயோக்கியன் சந்நியாசிபோலும், யெவ்வனன் கிழவன் கோபிபோலும் அறிக. [இ - து] ஆசை யென்பதெது? பேராசையென்பதெது? நிராசையென்பதெது? யோக்கியன் அயோக்கியன் சந்நியாசி இவர்களை அனுபவத்திலுங்காண்பித்து, அதற்கு திருஷ்டாந்தமாக யெவ்வனபுருஷன் கிழவன் கோபிகளைச் சொன்னதும் இவைகளையெல்லாம் விபரமாகச்சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில்; ஒருபுருஷன் ராஜாவின் அரண்மனைக்குப்போய் ராஜபேட்டி செய்துகொண்டதில் அந்தராஜா இவனுக்குக் கேட்டதையெல்லாங் கொடுக்க, அப்போது இவன் அந்தவஸ்துக்களையெல்லாம் பெற்றுக்கொண்டு வீட்டுக்குவந்து அவைகளைச்சாவதானம் பண்ணிவைத்துக்கொண்டு, ஒருகாசுகூட ஒருவருக்குங் கொடாமலுந் தானுமதை விசேஷமாய்ப்புசியாமலும் அதைப்பார்த்துப்பார்த்து மகிழ்ந்துகொண்டிருக்கிறதே ஆசையென்றும்; அப்படியிருப்பவனையே யோக்கியனென்றும் உலகத்திற்சொல்லப்படும். பின்னை யொருபுருஷன் ராஜாவின் பேட்டிக்குப்போய்க்காத்திருக்கும்போதே அந்தராஜாவின் ஐசுவரியமெல்லாம் நமக்கு வந்துவிடவேண்டும், அதிரூபலாவண்யமுள்ள அந்தராஜாவின் பட்டஸ்திரீ நமக்குப் பாரியாகவேண்டுமென்றும் இப்படியெல்லாம் எண்ணியெண்ணிப் புலம்புவதால், தாற்காலிகத்தில் கிடைக்கிறபிரயோஜனத்தையு மடையாமற்போவதுந்தவிர இவன் புலப்பத்தைக்கேட்ட ராஜகிரகத்துமனுஷர்கள் இராஜாவினிடத்திற் போய்ச்சொல்ல, அந்தராஜாவும் அதைக்கேட்டு மிகுந்தகோபத்துடன் அவனுக்குக்கையில் விலங்கைப்போட்டுக் காராக்கிருகத்திலும் அடைக்கச்சொல்லித் தீர்ப்புச்செய்ததால் மிகுந்ததுக்கத்தை யடையும்படி நேரிட்டதே பேராசையின் பலமென்றறிக. மற்றொருவன் ஒருவரோடேயும் பேசாமலும், ஒருவியாபாரத்திற்கும் போகாமலும் ஏகாந்தஸ்தானத்திற் போயிருந்துகொண்டு, சகலசங்கபரித்தியாகஞ் செய்துகொண்டு தபசியாயிருப்பதை அந்தராஜா கேள்விப்பட்டு அவரிருக்கிற இடத்திற்கு அந்தராஜாவே சுயமாகவே சகலவஸ்துக்களையு மெடுத்துக்கொண்டு வந்து, அவரைச்சாஷ்டாங்கமாய் நமஸ்காரஞ்செய்து, இந்தரத்ன கனகாதிகளைப் பெற்றுக்கொண்டு என்னை ரக்ஷிக்கவேண்டுமென்று பிரார்த்திக்கும்போது, அவர் அந்தராஜாவையும் அவராற்கொண்டுவரப்பட்டிருக்கிற ரத்னகனகாதிகளையும் துரும்புக்குங் கீழாகநினைத்துச் சொல்லுகிறார். "அடேமூடா! நீ, சதானந்தமாயிருக்கிற என்னிடத்தில் இந்தவஸ்துக்களை என்னத்திற்காகக்கொண்டுவந்தாய், இந்தரத்ன கனகாதிகள் ஆட்கொல்லியல்லவா?" வென்றுசொன்னதற்கு, அவ்வரசன் ஆட்களை இந்தத்திரவியங் காப்பாற்றுகிறதாயிருக்கும்போது இவைகளை

ஆட்கொல்லியென்றுயெப்படிச்சொல்லக்கூடும்? அப்படிச்சொல்வதற்குச் சுருதி யுக்தி அநுபவமென்னவென்றால், பணத்தைத் தேடும்போதுந்துக்கம். அப்படியே அதைக்கள்ளன் காப்பான் கொண்டுபோகாமற் பரிபாலிக்கும்போதுந் துக்கம். அதைக்கள்ளன்வந்து அடித்துப்பிடுங்கிக்கொண்டு போகும்போதுந் துக்கம். கல்யாணங் கார்த்திகைமுதலானதைச் செய்யும்போதும் பணஞ் செலவாய்ப்போவதாலுந்துக்கம். இப்படித்துக்கத்தைக்கொடுக்கிற இந்தப்பணத்தை நிந்திக்கக்கடவதென்று சொல்லுகிறதே சுருதி; தேன்வைத்திருக்கிற இடத்திலே ஈயெறும்பு வருகிறதே யுக்தி; இப்படி யென்னையொத்தவர்கள் சகல ஆசைகளையும்விட்டு நிராசையாயிருந்து சுகித்துக்கொண்டுவருகிற அநுபவத்தைப்பாரென்று சொன்னதைக்கேட்ட அவ்வரசனும் விரக்தியடைந்து, அவரனுக்கிரகத்தால் ஞானமும்பெற்று அவரைத் துதித்துக்கொண்டிருந்ததே நிராசையின் பலமென்று அறிந்து, சகலரும் இந்தநிராசையையே சம்பாதிக்கக் கடவர்கள்.

79 - வது தரங்கம்.

மனது சித்ஜட வடிவு:—

சித்தம் சித்ஜடவடிவாயிருக்கும். [எ - தி] ஜீவித்திருக்கிற சரீரம்போலும், விளக்குப்போலுமறிக. [இ - து] மனதே பந்தமோக்ஷத்துக்குக் காரணம். [எ - தி] யோனியே சிசுனம் உள்ளேபோவதற்கும் பிள்ளை வெளியில்வருகிறதற்குங் காரணம்போலவறிக. [இ - து] ஆத்மா பரமகிருபாகரர். எதனாலென்றால், எறும்புமுதல் பிரபுவரையிலுள்ள ஜீவர்களுக்குச் சுழுப்திச் சுகம் சமமாய்க் கொடுப்பதாலும், அந்தச்சுகத்தைச் சாக்கிரசொப்பனத்தில் அழித்துவந்தவனுக்கு தினந்தோறும் வருத்தமன்றியில் சுகங்கொடுப்பதாலும், வெகுநாள்வரை மறந்து கர்த்தாவென்று சொன்னவன் குருஅநுக்கிரகத்தால் தான்அகர்த்தாவென்று நினைத்தமாத்திரத்தில் சான்னித்தியமாவதாலும், சிசுப்போலச் சம்சாரகூபத்தில் கிடந்துதபிக்கிறவர்களைத் தாய்போல குருரூபமாய்வந்து கரையேற்றிவைப்பதாலும் பரமகிருபாகரரென்று சொல்லப்பட்டது. [எ - தி] ஒரு பிரபுவின்பிள்ளை வீட்டுக்குவந்தபோது அவனுக்கு வேண்டியமட்டுஞ் சுகத்தையுந் திரவியத்தையும் அவர்கொடுப்பதும், அவன் அதைவாங்கிப் பட்டணத்திற்குப்போய்த் தாசிச்செலவு செய்துவிட்டு ஆரோக்கியத்தையும் ஐசுவரியத்தையுமிழந்து ரோக கடன்களுடன் அலறிவந்தவனுக்கு அவைகளை நிவர்த்தித்து முன்போல அவைகளைக்கொடுப்பதாலும், வெகுநாள் தன்பிதாவைமறந்து விடனாய்ப் பின் நாம்இராஜாவென்று நினைத்தமாத்திரத்தில் உடனே தன்பட்டத்தைக் கட்டுவதுபோலும், அப்படிவிடனாய்த் திரிகிறவனைச் சிநேகிதரூபமாய் அவ்வரசனேவந்து ஹிதோபதேசஞ்செய்து காப்பாற்றுவதுபோலுமறிக. [இ - து] மனது சித்தாயும் ஜடமாயும் இரண்டுவிதத்தையுமுடையதென்று சொல்வது எப்படியென்றால்; ஸ்ரோத்திராதி இந்திரியங்களால் வருகிற சப்தாதி விஷயங்

களையெல்லாம் அறிவதால் சித்தென்றுசொல்லலாம் ; நினைப்புருபமாயும், ஊஞ்சல்போலே அலைந்துகொண்டிருப்பதாயும், விகாரியாயும், ஆத்மாவினாலே அறியப்பட்டதாயும், மூடமாயும், இராகத்துவேஷாதி விருத்திரூபமாய்ப் பரிணமிப்பதாலும், க்ஷணேக்ஷணே உற்பத்திநாசங்களோடே கூடியிருப்பதாயும், நதிப்பிரவாகம்போலே தான்போனவழியே போவதாயும், விஷயங்களிலெவ்வளவுகாலமாய் எவ்வளவுவிதமாய் துக்கம்வந்துகொண்டிருந்தாலும், இந்தவிஷயங்களாலேயே இவ்வளவுதுக்கங்கள் வருகின்றனவென்று அறியாமல் மேல்மேலும் அவ்விஷயங்களைக் குழந்தைபோலே இச்சிப்பதாலும், நினைப்புமறப்போடே கூடிக்கொண்டிருப்பதாயும், மூட சகவாசத்திலேயே பிரியமுள்ளதாயும், குருசாதுக்களுடைய சகவாசத்தில் அப்பிரியமாயும், நல்லது பொல்லாததாயும், பொல்லாதது நல்லதாயும், சதாபகிர்முகமாயும், காசைக்கொடுத்துத் தேளைக் கொட்டிக்கொள்வதுபோலே தானே சங்கற்பத்தையுண்டுபண்ணித் துக்கப்படுவதாயுமிருக்கிற இந்த மனதை ஜடமென்றுமறியத்தக்கது. [இ - து] மனதே பந்தத்திற்கும் மோக்ஷத்திற்குங் காரணமென்று சொன்னீரே ! அந்தமனசோ ஜடமாச்சுதே, அது எப்படிப்பந்த மோக்ஷங்களுக்குக்காரணமாகுமென்றால், காரணமாகுமென்பதற்கு யுக்தி,—மனுஷனைக் கொல்வதற்கும் நஞ்சேகாரணமாயாவதும், அந்தநஞ்சை நிவர்த்திப்பதற்கும் நஞ்சே காரணமாயாவது போலும் ; ஒருபணமே தாசி விட நட காயகாளுக்குக் கொடுப்பதால் அனர்த்தத்தையும் பாபத்தையுங் கொடுப்பதாக ஆகிறதும், அந்தப்பணமே சற்குருசாதுக்களுக்குக் கொடுப்பதால் மகத்தான கீர்த்தியையும் புண்ணியத்தையும் சித்தசுத்தியையும் சத்காலக்ஷேபத்தையும் தத்துவக்ஞானம்வரை கொடுப்பதற்குக்காரணமாயுமாவதுபோலும் ; ஒருபகலே கள்ளப்பத்திரமெழுதுகிறவனுக்கும் சத்சாஸ்திரங்கள் படிக்கிறவனுக்கும் சாதகமாயாவதுபோலும் ; ஒருமழையே வெள்ளாண்மைக்காரனுக்குச் சுகத்தையும், சுவர்வைக்கிறவனுக்குத் துக்கத்தையுங் கொடுப்பதுபோலும் ; மனதே பந்தத்தையும் மோக்ஷத்தையுங் கொடுப்பதற்குக் காரணமாயிருக்கிறதென்றறிக.

## 80 - வது தரங்கம்.

சுபாவமான சித்ததோஷத்தைச் சத்சங்கத்தால் மாற்றக்கூடும் கூடாது:—

துஷ்டசித்தனாயிருந்தாலும் சத்சங்கதியினால் நல்லசித்தனாயாகிவிடுவனென்றும், அவனவன் சுபாவமான துர்க்குணம் போகாதென்றும், இப்படி ஒன்றுக்கொன்று விரோதமாய்ச் சொல்லியிருக்கிறதேயென்றால், சுபாவமான அளர்பூமியை எவ்வளவு உரம்வைத்தாலும் பலவத்தாய்ப் பண்ணமுடியாதது போலும், சம்பந்தமாத்திரத்தால் ஊஷரமானபூமியை உரத்தால் நல்ல பூமியாக்குவதுபோலும் ; அகங்காரத்தோடேகூடிய அஞ்ஞானிக்குச் சத்சங்கதியினால் சித்ததோஷம்போகாமலும், சாதுக்களையுந் தூஷித்துத் தானுங் கெட்டுப்

போவன். அஞ்ஞானமாத்திரமுள்ளவனுக்குச் சத்சங்கதியினால் அஞ்ஞானம் போய்க் கடந்தேறுவனென்றறிக. அதாவது மனதினுடைய அஞ்ஞானாதி தோஷத்தை மாற்றக்கூடுமா கூடாதாவென்றால்; சத்குருநாதன் கைவசப் படாதமனதின் அஞ்ஞானாதிதோஷத்தை மாற்றக்கூடாதென்பதற்கும், குருநாதனுக்குக் கைவசப்பட்டமனதைக் காப்பாற்றக்கூடுமென்று சொல்லுவதற்குஞ் சுருதி யுக்தி அனுபவமென்னவென்றால், வாசிஷ்டத்தில் சித்தோபாக்கியானத்தில் இந்தமனுஷலோகமாகிற கருவேலங்காட்டில் மனசாகிற அநேக புருஷர்கள் அநேகவிதமான சங்கற்பங்களாகிறகைகளில் அநேக ராகத்துவேஷாதி விருத்திகளாகிற இருப்புலக்கைகளாலடித்துக்கொண்டு துக்கங்களாகிற ரணவேதனையால் திரிந்துகொண்டிருக்கிறவர்களை சற்குருவாகிற வசிஷ்டரிஷீசுவரர் கண்டு, அவர்களைக்கூப்பிட்டு நீயாரென்றுகேட்க ஆரம்பிக்கும்போது, அநேக கோடிபேர்கள் அவரை நிந்தித்துவிட்டு ஓடிப்போய் நரகமாகிற அந்த கூபத்தில்விழுந்து வெகுகாலம்வரை அதைவிட்டு வெளியேறிவராமல் கிடக்கிற பேர்களும், பின்னுஞ்சிலபேர் மனுஷலோகமாகிற கருவேலங்காட்டிலேயே பெண்டாட்டிபிள்ளைகள் பணங்காசுமுதலான விஷயசுகமாகிற அந்தக்கருவேல நிழலுக்கு ஆசைப்பட்டுப்போய், அவ்விடத்திலிருக்கிற துக்கங்களாகிற முள்ளுகள்தைக்கப்பட்டுக் கிடக்கிறார்கள், பின்னுஞ்சிலபேர்கள் சொர்க்கங்களாகிற கதலிவனத்தையடைந்து க்ஷணகாலஞ் சுகிப்பவர்கள்போலேயிருந்து அந்தக் கதலிவனக்காவற்காரர்களாகிய தேவர்களால் தள்ளுபட்டு, இப்படியே அடிக்கடி கருவேலங்காட்டில் திரிந்துகொண்டிருக்கிறதும் கதலிவனத்துக்குப் போய் வருகிறதும் பாழுங்கிணற்றில் வெகுகாலம் விழுந்துகிடக்கிறதுமாகயிருக்கிற பேர்களுக்குள்ளே எவனோஒருவனைக் குருநாதனாகிற வசிஷ்டமகரிஷி பலவந்தமாகக் கையைப்பிடித்துக்கொண்டு, நீ யார்? எங்கேபோகிறாய்? என்னகாரியம் செய்யப்போகிறாய்? இப்படி ஆயுதங்களைக்கொண்டு தானே அடித்துக்கொண்டு ஏன் துக்கப்படுகிறாய்? இதுவரையில் இப்படியலைந்து அடித்துக்கொண்டதில் என்னபிரயோஜனத்தைக் கண்டாயென்று கேட்கும்போது; அவன், நானொன்றொருவனைக் காணேனே! இவ்விடத்திலெனக்கென்று ஒருகாரியமுமில்லையே! ஓய் கெட்டபிராஹ்மணா! உன்னாலேயல்லவா நான் நினைத்திருந்ததெல்லாமொன்றுமில்லாமற்போய்விட்டது! என்றுசொல்லிக்கொஞ்சநேரம் அழுதபின், தன் நிஜவடிவமான சொரூபத்தைப்பார்த்து வயறுவெடிக்கும்படியாகச் சிரிப்பாகிற ஆனந்தத்தையடைந்து சகலதுக்கங்களையும் போக்கி சுகியானானென்று சொல்லியிருப்பதே சுருதி. சித்தனை இரண்டுபேர்கள் கண்டதில், ஒருவன் அவரை நம்பாததால் கெடுதியையும், நம்பினவன் அவரனுக்கிரஹத்தால் நன்மையையும் அடைந்தவிருவரையும் கண்டுகொள்ளத்தக்கது. இப்போது நாம் நம்முடையமனதை நம்குருநாதனுக்கு ஒப்பித்ததால் நாம் சதா ஆனந்தத்தை அனுபவித்துக்கொண்டுவருகிற அனுபவத்தையும், மற்றவர்கள் தங்கள்தங்கள் மனதை நம்குருநாதனுக்கு ஒப்பியாமல் தாங்கள்தாங்களே கர்த்தா போக்தா

வென்று துக்கித்துக்கொண்டிருக்கிற அனுபவத்தையுங்கண்டு, எவ்வளவு கெட்டசித்தமானாலுங் குருவுக்கு ஒப்பித்தால் நல்லசித்தமாகிவிடுமென்றும் அப்படி ஒப்பியாதசித்தம் நல்லதானாலும் கெட்டதாய்ப்போய்விடுமென்றறி யத்தக்கது.

## 81 - வது தரங்கம்.

இந்திரியங்கள் போனவழியே மனதுங் கூடப்போகும் :—

இந்திரியங்கள் போனவழியே மனதுங் கூடப்போகும். [எ - தி] காற்றடித்தபக்கம் தீப்போவதுபோலும், பள்ளமுள்ளவிடத்தில் தண்ணீர்போவது போலுமறிக. [இ - து] மனதிலுள்ளதே வாக்கில்வரும். [எ - தி] குசப்பயலே என்றுவைததற்கு அந்தக்கம்மாளப்பயலா சொன்னானென்றதுபோலும், கெண்டியாய நமஹ வென்றகதைபோலுமறிக. [இ - து] இந்திரியங்கள் பிரபல சத்துருவென்பதற்குச் சுருதி:—இந்திரியங்களாகிற சத்துருக்கள் ரௌரவாதி நரகங்களுக்கு ராஜாக்களாயும், கருவத்தால் மதித்துச்செய்கிற பாபங்களாகிற யானைமுதலான சேனையுடையவர்களென்றும், ஆசைகளாகிற பாணங்கள்நிறைந்தவர்களென்றும், ஜயிக்கக்கூடாதவர்களென்றும் வாசிஸ்டத்திற் சொல்லியிருக்கிறதேயாம். யுக்தியாவது: —அர்ச்சுனனுடைய பாணங்கள் எடுக்கவெடுக்கக் குறைவின்றியிருக்கின்றனபோலவேயாம். விஷயம்போயும் ஆசைபோகாமலிருக்கிற நம்முடையஅனுபவமே பிரமாணமாம். [இ-து] சுரோத்திராதிதசேந்திரியங்களே தனக்குப் பிரபலசத்துருக்களாகவும் அவைகளைஜயிப்பது மிகுந்த பிரயாசையென்றுஞ் சொன்னதற்குக் காரணமேதென்றால், சுரோத்திரேந்திரியத்துக்குப் பிரியமானகானத்தைத் தேவேந்திரன் கேட்டுக்கொண்டு மயங்கியிருக்கும்போது, தன்குருவான பிரஹஸ்பதிபகவான் வந்துநின்றதைப்பார்த்திருந்தும் அவரை அலக்ஷியம்பண்ணிப்போட்டிருந்ததால், அவன் அநேககாலம் அநேகவிதமான பிரம்மஹத்திமுதலான துன்பங்களை அடைந்தகதையையும்; மஹாவிஷ்ணு பிருந்தையினுடைய ஆலிங்கனரூபமான ஸ்பரிச சுகத்துக்கு ஆசைப்பட்டு ஜலந்தராசுரனுடைய தேகத்தில்பிரவேசித்து அந்தச்சுகத்தையனுபவித்தபின், அவள் அதைத்தெரிந்து அக்கினிப்பிரவேசம்பண்ணினபின் அந்தச்சாம்பலிலேயே தேவவருஷம் பதினாயிரம்வரை கிடந்து பிறண்டு அழுதுக்கொண்டிருந்த கதையையும் ; சுந்தோபசுந்தர்கள் திலோத்தமையைக்கண்டு அவளுடையரூபத்தில் ஆசையால் "என்பாரியை என்பாரியை" என்றுசொல்லி அடித்துக்கொண்டிருவரும் மறித்துப்போனகதையையும் ; ஓர்அசுரன் அமிர்தஞ்சாப்பிடவேண்டுமென்கிற ஆசையால் தேவதைகளுடைய நடுவிற்போயுட்கார்ந்து அமிர்தம்வாங்கிச்சாப்பிட்டதைச் சூரியசந்திரர்களால் மஹாவிஷ்ணு அவனை அசுரனென்றுதெரிந்துகொண்டு தலைவேறே உடல்வேறே யாகும்படி வெட்டினதால் ராகுகேதுக்களாக ஆனகதையையும்; விசுவநாதடாக்கர் பிள்ளை

முதலானவிடர்கள் அத்தர் பன்னீர் முதலானவாசனைக்காக அருந்ததிபோலே யிருக்கிற கற்புடைய மனைவியைவிட்டுத் தாசியினிடத்திற் போய், சொத்தையும் புண்ணியத்தையுமிழந்து, வியாதியையும் பாபத்தையும் அபகீர்த்தியையுமடைதலையும்; இப்படி வாக்கிந்திரியத்தால் பெரியோர்களை நிந்திப்பதாலும், ஒருவரைவைவதாலும், பாபத்தையும் உதையையும் பெறுவதையும்; பாணீந்திரியத்தால் ஒருவரை யடிப்பதாலுந் திருடுவதாலுந்தண்டனைப்படுவதையும்; பாதேந்திரியத்தால் பெரியோர்கள் ராஜாக்கள் முதலானவர்களைப்பார்த்து அலக்ஷியமாய் நீட்டினகாலை மடக்காததாலும், ஏழைகளை உதைக்கப்போவதாலும் வருந்துன்பத்தையும்; பாயுரிந்திரியத்தால் தேவாலயம் பட்டணங்களிற் கண்டவிடங்களில் மலஜல விசர்ச்சனஞ்செய்வதால் சேவகர்கள் கையிலகப்பட்டுக்கொண்டிழுக்கப்பட்டு அபராதங்கொடுப்பதையும், பாபத்தையடைவதையும்; சிசுனத்தாற் கொலைவரையில் வருகிறஅனர்த்தத்தையுங்கண்டு இந்திரியநிக்ரகஞ் செய்யக்கடவது.

## 82 - வது தரங்கம்.

அகங்காரத்தின்வலி:—

விவேகத்தை அகங்காரங் கெடுக்கும். [எ - தி] காற்று தீபத்தையணைப்பதுபோலும், அபத்தியம் ஔஷதத்தைக் கெடுப்பதுபோலுமறிக. [இ - து] அகங்காரத்தையே ராகாதிகள் ஆசரித்துக்கொண்டிருக்கின்றன. [எ-தி] இராஜஸ்திரீயைச் சகிகள் ஆசரித்துக்கொண்டிருப்பதுபோலும், தாதாவை யாசகஸ்தர்கள் சூழ்ந்துகொண்டிருப்பதுபோலுமறிக [இ - து] விக்ஞானமயன் ஹிருதயத்திலிருந்துகொண்டு சரீரமுழுவதும்வியாபித்துக்கொண்டிருக்கிறான். [எ-தி] இராணி சீமையிலிருந்துகொண்டு இந்தியாமுழுமையும் கட்டி ஆளுவதுபோலவறிக. [இ - து] ஆத்மாவின் ஆனந்தத்தை அகங்காரிகள்ளத்தனமாயனுபவிக்கிறான். [எ - தி] இராஜாவின் குதிரையை அவருக்குத்தெரியாமல் குதிரைக்காரன் அதிலேறிச்சவாரிபண்ணுவதுபோலவறிக. [இ - து] அகங்காரமானது இகலோகப்பிரயோஜனத்தையும் பரலோகப்பிரயோஜனத்தையுங் கெடுக்கும். அது எதனாலென்றால், இகலோகப்பிரயோஜனமானது இராஜாக்கள் பிரபுக்கள் முதலானவர்களிடத்தில் அகம்பாவமன்றியிற்போய் வணங்கிக்காத்திருந்து கோபதாபமன்றியில் நிரகங்காரனாயிருப்பவனுக்கே இகலோகப் பிரயோஜனஞ் சித்திக்கும். மற்றவனுக்குச் சித்தியாது. [எ - தி] சோளராஜா, பாண்டியராஜா, மலையாளராஜா மூன்றுபேர்களும் சுந்தரேசுவரருடைய அனுக்கிரகத்தால் சேர்ந்து தேவலோகத்திலிருக்கிற இந்திரனுடைய சபைக்குப்போய், இந்திரனைக்கண்டு சேரன்சோளனிருவர்களும் நன்றாய்வணங்கிப் பூஜித்துத்துதித்ததின்பேரில், இந்திரன் மகிழ்ச்சியுடன் நீங்கள் என்னகாரியமாய்வந்தீர்கள், அதைக்கேட்டுக்கொள்ளுங்களென்று சொன்னதைக்கேட்ட அவ்விருவர்களும்,

"எங்கள் தேசத்திலுள்ள பிரஜைகள் சுகமாய் ஜீவித்திருப்பதற்காகத் தங்களுடைய சுவாதீனமாயிருக்கிற மேகங்களைக்கொண்டு வருஷிக்கும்படி ஆக்ஞாபிக்கக்கோருகிறோம்" என்று கேட்டுக்கொண்டபடி இந்திரனும் அப்படியே ஆக்ஞாபிக்கிறோமென்று உத்தரவுகொடுத்தான். பாண்டியன் தேவேந்திரனை வணங்காமல் அவனுடைய சிம்மாசனத்திலேறி அவனோடேகூட உட்கார்ந்ததுமன்றியில் இன்னதுவேண்டுமென்று நிரகம்பாவமாய்க் கேட்டுக்கொள்ளாததினால் நாளதுவரை சோளதேசத்திலும் மலையாளதேசத்திலும் குறைவன்றியில் காலாகாலத்தில் மழைபெய்து சுபிக்ஷமாயிருப்பதும் பாண்டியதேசத்தில் அப்படி மழைபெய்யாமல் க்ஷாமமாய்ப்போவதையுங் கண்டுகொள்க. பரலோகப் பிரயோஜனத்திலும் யயாதி நகுஷன்முதலான இராஜாக்களும் இந்திராதிபதவியைத் தீர்க்ககாலமனுபவிக்கும்படியான அசுவமேதாதி புண்ணியங்களைச் செய்து அவ்வுலகத்திற்குப்போயிருந்தும் அகம்பாவத்தால்தள்ளுபட்ட கதையையுங்கண்டுகொள்க. மோக்ஷப்பிரயோஜனத்தையும் குருசந்நிதியில் அகம்பாவமில்லாமல் நன்றாய்ப்பணிவிடைசெய்தவனே குருகிருபையால் ஞானத்தையடைந்து பவத்தைக்கடப்பன். மற்றவன்கடவான். [எ - தி] நம்குருசந்நிதானத்தில் நிரகங்காரர்களான நம்போலிகள் முக்தாளாயிருப்பதும் மற்றவர்கள் துக்கியாயிருப்பதையுங் கண்டுகொள்க.

## 83 - வது தரங்கம்.

*சத்துவமனதே மற்ற இருகுணசம்பந்தத்தாற் கெடும் :—*

சாத்வீகமானமனதே ராஜச தாமசகுணசங்கத்தாற் கெட்டுப்போகிறது. [எ - தி] முந்திப்பதிவிரதையாயிருந்த சந்திரகாந்தையே வித்யாவதியினுடைய சகவாசத்தால் விபசாரியாய்ப்போன கதைபோலும், சுத்தமானபூமியே மனுஷர்களுடைய சம்பந்தத்தால் மலமூத்திரமாய்ப்போவதுபோலுமறிக. [இ - து] மனதுக்குச் சத்துவகுணம் சுபாவம். மற்றரஜோகுண தமோகுணங்கள் ஆரோபமாய் வந்தவைகள். அது விவேகத்தாற்போம். [எ - தி] வஸ்திரத்திற்கு வெளுப்பு சுபாவம். கரியும், காவியும் நடுவில்வந்ததால் அவைகளை வண்ணான் மாற்றுகிறதுபோல மாற்றலாமென்றறிக. [இ - து] மனது பஞ்சபூதங்களுடைய சாத்வீகாம்சத்தில் பிறந்ததாயிருந்தும் பிராணமயகோச சம்பந்தத்தால் ரஜோகுணத்தையடையும். அன்னமயகோச சம்பந்தத்தால் தமோகுணத்தை அடைந்திருக்கிறது. [எ - தி] நஞ்சினுடைய சம்பந்தத்தால் பால் ஆளைக்கொல்லுகிற விஷமாய்ப்போவதுபோலும், சுத்தஜலம் அளர்பூமியின்சம்பந்தத்தால் சேறுவதுபோலும், அந்தஜலமே இந்தஸ்தூலசரீர சம்பந்தத்தால் மூத்திரமாவதுபோலும், காற்றானது மலமூத்திரசம்பந்தத்தால் துர்க்கந்தமாவதுபோலும், நல்லவஸ்திரம் பட்டுபட்டாவளிகள் இச்சரீரசம்பந்தத்தால் அழுக்குத்துணியாய்ப் போவதுபோலும், நல்ல அன்னம் நெய் பால் தயிர் வடை

போளிமுதலான நல்லவஸ்துக்களெல்லாம் இந்தத்தேகசம்பந்தத்தால் அததற்கு முன்னிருந்த சுநாமங்களும், சுரூபங்களும் சுஸ்பரிசங்களும் சுரசங்களும் சுகந் தங்களுங் கெட்டுப்போய்க் குநாமமாயும், குரூபமாயும், துஸ்பரிசமாயும், விர சமாயும், துர்க்கந்தமாயும்போவதுபோலும்; நிர்விகாரமான பிரஹ்மம் மாயை யுடனேசேர்ந்து அந்தரியாமியாய்ப்போவதுபோலும்; அந்த அந்தரியாமியும் சமஷ்டி சூட்சுமபிரபஞ்சத்தோடு சேர்ந்ததால் ஹிரண்யகர்ப்பனாவதுபோலும்; அவரும் ஸ்தூலப்பிரபஞ்சசம்பந்தத்தால் விராட்புருஷனாவதுபோலும்; அவ ரும் சாத்வீகாதிகுணபேதத்தால் பிரம்மா விஷ்ணு ருத்ரர்களாயாவதுபோலும்; அவர்களும் குணசம்பந்தத்தால் பரத்துவாசர், தத்தாத்திரேயர், துருவாசர் முதலானவடிவத்தை அடைந்ததுபோலும், இன்னம் அநேக அவதாரங்களை யெடுத்து அநேகவிதமான மானாவமானங்களையும் ஸ்துதிநிந்தைகளையும் சுக துக்கங்களையும் அடைந்ததுபோலும்; அந்தப்பிரஹ்மமே அவித்தையோடே சம்பந்தத்தால் பிராக்ஞனாவதுபோலும்; அந்தப்பிராக்ஞனே சூட்சுமசரீரசம் பந்தத்தால் தைஜசனாவதுபோலும்; அவனே தூலசரீரசம்பந்தத்தால் விசுவ னாவதுபோலும், அதிலும் புண்ணிய பாப மிசிரகர்மங்களால் இந்திராதி தேவர் களாயும், பிராஹ்மணாதி மனுஷர்களாயும், பசுபக்ஷிகளான திரியக்காதிகளாயு மாவதுபோலுமறிக. இப்படி ரஜோகுண தமோகுணசம்பந்தத்தாற் கெட்டுப் போன மனது திரும்பச்சுத்தமாகுமா வென்றாற் சுத்தமாகும். [எ - தி] ஒரு புருஷன் ரஜோகுணசம்பந்தத்தாற் சொப்பனத்தையும் தமோகுணசம்பந்தத் தாற் சுழுப்தியையும் அடைந்திருக்கிறான், அவனை எழுப்பினால் ஜாக்கிரத்தை அடைவது போலுமறிக.

## 84 - வது தரங்கம்.

இந்திரிய நிக்கிரகம்:—

இந்திரியநிக்கிரகமுள்ளவனுக்கே மனது பிரஹ்மத்தில்ரமிக்கும். [எ-தி] கத வுகளைத் தாள்ப்பாள்போட்டு ஏகாந்தத்தில் இருப்பவனுக்கே நித்திரைச்சுகமும் ஸ்திரீசுகமுங் கிட்டுவதுபோலுமறிக. [இ - து] மனதோடேசேர்த்து இந்திரிய நிக்கிரகஞ் செய்யவேண்டும். [எ - தி] ராஜனோடேசேர்த்துப் படைகளைக்கொல் வதுபோலும், வேரோடேமரத்தை வெட்டுவதுபோலுமறிக. [இ - து] ஒரு வரையும்பாராமல் தலையைக்குனிந்துகொண்டு போவதே பரோபகாரம். [எ-தி] எண்ணெய்க்காரன் கல்யாணத்தில் எண்ணெய்விடாவிட்டாலும் எதிரேவராம லிருந்ததே கல்யாணம்முடித்துவைத்த உபகாரமென்று தீக்ஷிதர்சொன்ன கதை போலவறிக. [இ-து] இந்திரியநிக்கிரகம் பண்ணித்தான் மனோநிக்ரகம் பண்ண வேண்டும். [எ - தி] சேனைகளை ஜயித்தபின் ராஜனை ஜயிப்பதுபோலும், கொம்பு களைவெட்டி வேரைவெட்டுவதுபோலும், தாமரைப்பூவிலிருக்கிற மேலிதள்க ளைத்தள்ளி உள்ளேயிருக்கிறகாயை யெடுப்பதுபோலுமறிக. [இ-து] முமுட்சு இந்திரியங்களை அந்தந்தக்கோளகைகளிற் சாவதானமாய் அடக்கம்பண்ண

வேண்டும். [எ - தி] ரத்னவியாபாரியானவன் அந்தந்த வஜ்ஜிராதிரத்னங்களை அந்தந்தச்சம்புடத்துக்குள் வைத்து மூடிக்காப்பாற்றுவதுபோலவென்றறிக. [இ - து] சுரோத்திராதி தசேந்திரியங்களை நிக்கிரகம்பண்ணுவதே தபசென்றும், அதுவே ஜீவன்முக்தியென்றும் அவைகளை நிக்கிரகம்பண்ணுவது மஹாபிரயாசமென்றும் இப்படியெல்லாம் சுருதி ஸ்மிருதி இதிகாச புராணங்களிலெல்லாம் கோஷிக்கிறதே அப்படி கோஷிப்பதற்குக்காரணம் என்னவென்றால், அடே மூடா! நீ தெரியாமற் சங்கிக்கிறாய், ஒவ்வொரு இந்திரியங்களாலேயே அனந்தகோடி ஜீவர்கள் முன்னுங் கெட்டுப்போயிருக்கிறார்களென்று சொல்லியிருக்கிறதையும், இப்பவும் ஒவ்வொரு இந்திரியசேஷ்டைகளால் அனந்தம்பேர்கள் கெடுகிறதையுங் கண்டிருந்தும் நீ அதை அறியாமல் இப்படிச்சங்கித்தாய், அதற்கு உத்தரம் சொல்லுகிறேன் கேள்:—பிரஹ்மாவானவர் காசியில் வந்து விசுவேசுவரருடைய சன்னிதியில் காயத்திரி சாவித்திரி சரஸ்வதி என்ற மூன்றுஸ்திரீகளோடும் சகலமானதேவர்கள், ரிஷிகள், பிராஹ்மணர்கள் முதலானவர்களோடும் யாகஞ்செய்துமுடித்துப்போட்டு அவபிருதஸ்நானத்துக்காகச் சகலமானபேர்களோடே சேர்ந்துபோகும்போது மத்தியில் பாடகர்கள் பாடிக்கொண்டிருந்ததை சரஸ்வதி கானலோலையாக அதைக் கேட்டுக்கொண்டிருந்துவிட்டாள். பிரஹ்மாவும் மற்றவர்களும் ஸ்நானஞ்செய்து திரும்ப யாகசாலையில் வந்துஉட்கார்ந்திருக்கும்போது அந்தப்பாட்டை நிறுத்தினபின் சரஸ்வதிக்குப் பிரக்ஞைவந்து கங்கைக்கரையில் ஓடிப்போய்ப்பார்த்ததில் ஒருவரையுங் காணாமல்போனபின் யாகசாலைக்கு ஓடிவந்து பார்த்ததில் பிரஹ்மா காயத்திரீ சாவித்ரிகளுடன் இருப்பதைக்கண்டு வெகுகோபமாய் "ஓ பிரஹ்மாவே! உமக்கு இந்த இரண்டு ஸ்திரீகளிருக்கிற கொழுப்பினாலன்றோ என்னை விட்டு ஸ்நானஞ்செய்துவந்தீர்" என்றுசொல்லவும் பிரஹ்மா நீ சஅ ஜன்மமெடுக்கக்கடவாயென்று சபித்தபின், அவள் கெஞ்சினவுடன் பிரஹ்மாவும், உனக்கு சஅ ஜன்மம் நற்கீரர்முதலான வித்வான்களாய் ஒரேகாலத்திலுண்டாய்ச் சுந்தரேசுவரர் கிருபையால் ஞானம்வருமென்றும் சங்கவித்வான்களென்ற கீர்த்தியுமுண்டாகட்டுமென்றும் அனுக்கிரகித்த கதைபோலுமறிக.

## 85 - வது தரங்கம்.

குருமுகமாய் பிரஹ்மத்தில்விட்ட மனதே பூரணமாம்:—

மனதை ஈசுவராதிகளிடத்தில் விட்டதினால் பூரணமாகாது. குருமுகமாய்ப் பிரஹ்மத்தினிடத்தில் விட்டால்தான் பூரணமாகும். [எ - தி] காற்படி ஜலத்தை ஆயிரம்படிஜலத்தில் விட்டாலும் பூரணமாகாமல் சமுத்திரத்தில்விட்டால் பூரணமாவதுபோலவறிக. [இ - து] மனதைக் குருவின்கட்டில் விட்டவனுக்குச் சுகமும் அப்படிவிடாமல் தன்போக்கில்போகிற மனதையுடையவனுக்குத் துக்கமுங் காணப்படும். [எ - தி] ராஜாவின்கட்டிலிருக்கிறயானைக்குச் சுகமும், ஊரில்

திரிகிற நாய்க்குத் துக்கமுமிருப்பதுபோலவறிக. [இ - து] குருவானவர் நீ சாக்ஷி யென்று தன்பேரில் ஆணைவைத்ததை நம்பாதவன் கெட்டுப்போவன். [எ - தி] அப்பயதீக்ஷிதரை அரசன் இடதுகையால் ஏன் ஆசீர்வாதம் பண்ணு கிறீரென்று கேட்டதற்கு அவர் பிராஹ்மணர்களுடைய வலதுகையில் அக்கினி யிருக்கிறது அது எரித்துப்போடுமென்று சொன்னதற்கு அவன் நம்பாமல் அதைக்காட்டுமென்று கேட்டதற்கு அவர் அவனைப்போல ஒருபொம்மை செய் துவைத்துச் சூத்திரத்தால் சேவிப்பதுபோலச் செய்யச்சொல்லி, அப்படியே செய்துவைத்தபின், அதுவுஞ் சூத்திரத்தால் இவரைச்சேவித்ததும், இவர் வலக் கையால் ஆசீர்வாதஞ்செய்யத் தீயுண்டாய் அதையும் சிங்கர்சனமுதலானதை யும் எரித்ததைபோலும்; காளிகருப்பன்கோவிலிற் செய்தபிரமாணமே பலிக் குமானால், பூரண பிரஹ்மசன்னிதானத்தில் செய்தபிரமாணம் ஏன்சித்தியாது சொல்? [இ - து] குருவினிடத்தில் அடங்கினமனதுக்கும் அடங்காதமனதுக் கும் பேதமுண்டு. [எ - தி] ஆசாரிகையால் அடிபட்டகல்லு கணபதிமுதலான தெய்வமாய்ப் பூஜிதைபெற்றுச் சகலருக்கும் அனுக்கிரகஞ் செய்வதும், மற்ற கல் பிரயோஜனமன்றியில் வீணாய்க்கிடப்பதுபோலும்; சித்தன்கையில் அகப் பட்டரசம் தங்கமாவதும், மற்றரசம் வீணாய்ப் புகைந்துபோவதுபோலும்; சிட்க்ஷைப்பட்டகுதிரை விலையுயர்ந்ததான கதையும், சிட்க்ஷையில்லாத அதன் தாய்க்குதிரை முட்டிக்கால்தட்டி உப்புச்சுமந்ததுபோலுமறிக. [இ-து] முமுட்சு வானவன் தன்மனதை முக்தியடையும்வரையில் ஞானசற்குருவினிடத்தில் மாறா மல் ஒப்புவித்தால்தான் கரையேறுவனேதவிர மற்றப்படி மற்றச்சாஸ்திரங்களி லும் மற்றகுருவினிடங்களிலு மாறிமாறி ஒப்புவித்தவனுக்கு ஒருநாளும் சுகங் கிடையாது. [எ-தி] தகப்பன் தன்பிள்ளையை நல்லவித்வானாயும், தயாளுவாயும், நிஷ்பக்ஷபாதியாயும், வஞ்சகமில்லாதவனாயும், தமோகுண ரஜோகுணமில்லா தவனாயும், கல்லைக்கூடக் கரைப்பதுபோலச் சொல்லிவைப்பதில் அதிசதுரனாயும், வேறேதொழிலற்றுச் சொல்லிவைப்பதே தொழிலாயிருப்பவனாயும், அநேகம் பிள்ளைகளை வித்வானாய்ப்பண்ணினவனாயும், பரம்பரையாய் வருகிறவனாயுமிருக் கிற வாத்தியாரிடத்திற் பூர்ணவித்தை வரும்வரை ஒப்புவித்தால்தான் கரை யேறலாம், மற்றப்படி இதற்கு எதிர்மறையாக இருக்கிற வாத்தியார்களிடத்தில் மாறிமாறி ஒப்புவித்தால் பிரயோஜனமில்லாமல் போவதுபோலும்; ஒருவன் தன்கையிலிருக்கிற கன்னிகையையோக்கியனாயும், ஸ்ரீமானாயும், சகலசற்குணம் பொருந்தினவனாயும், திரிகரணசுத்தனாயும், புத்திரோற்பத்திவரை போகஞ்செய் வதிற் சதுரனாயுமிருக்கிற கணவனிடத்தில் ஒப்புவித்தால் கரையேறுவளே தவிர, நித்தியம் ஒருவனிடத்தில் கூட்டிவைத்தால் எப்படிக்கெட்டுப்போவளோ, அப்படிப்போலவும்; காசிக்குத் தன்பிள்ளையை அனுப்பிவைக்கிறவன் காசி வாசியாயும், காசிக்குப்போகும்வரை இவனை ரக்ஷிப்பவனாயும், காசியிலுள்ள மகிமாவிசேஷ ரகசியங்களையெல்லாம் அறிந்தவனாயும், யாத்திரைசெய்விப்பதே ஜீவனமுள்ளவனாயுமிருக்கிறவனிடத்தில் ஒப்புவித்தால்தான் கெங்காஸ்நான

மும் காசிவாசமும் தாரகப்பிரஹ்மப்பிராப்தியும் கிடைக்குமேதவிர மற்றப் படி அம்மாபட்டிக்குப்போகிற குசவனிடத்திலும் மற்ற வேறேஊர்களுக்குப் போகிறவர்களிடத்திலும் ஒப்புவித்தால் நடுவழியிற்கையைவிட்டு உபயபிரஷ்டனைய் அலைவதுபோலுமறிக. [இ - து] குருவினிடத்திலிருக்கிறவனுக்குச் சுகமும் அபயமுமிருப்பதும், தானைய்ச் சாஸ்திரத்தைப்பார்க்கிறவனுக்குத் துக்கமும் பயமுமிருக்கும். [எ-தி] கட்டுப்பட்ட நாய்க்குச் சுகமும் அபயமுமிருப்பதும் ஊர்நாய்க்கு அவ்விரண்டுமில்லாமையும்போலும்; மேகத்தில் கட்டுப்பட்ட ஜலம் ருசியும் சுகமுங் கொடுப்பதும், சமுத்திரஜலத்தில் அவ்விரண்டுமில்லாமையும்போலுமறிக. [இ -து] குருவாக்கிலிருந்து வருகிற அனுக்கிரகத்தைப்பெற்ற மனதுக்கே சுகமும் நிர்ப்பயமும் மேன்மையுமுண்டு. [எ - தி] ராஜமுத்திரை ஆசாரியஸ்வாமிகளுடைய முத்திரையுடைய காகிதத்துக்கே பூஜிதைமுதலானது கிடைப்பதுபோலவறிக. [இ - து] கெட்டமனதாயிருந்தாலும் அதைக்குருவின் கையில் ஒப்புவித்தாற் சமம்முதலான சற்குணங்களோடேகூடி பிரஹ்மஞான மாகிற கல்பகக்கனியையுடையதாக ஆக்குகிறரென்பதற்கு யுக்தி:—கெட்டபூமி யானாலும் உழவாளிவசத்தில் அதை ஒப்புவித்தால் அவன் மேடுபள்ளங்களை வெட்டிச்சமம்பண்ணி விவசாயத்தால் சபலமாக்குவதுபோலவாம். நல்லமன தாயிருந்தாலும் குருவசம் ஒப்புவியாதேபோனல் பிரயோஜனமன்றியிற் கெட்டுப்போம். [எ- தி] நல்லபூமியானாலும் மேற்படி உழவாளிவசம் ஒப்புவியாதே போனல் உவர்பத்தி எல்லோருக்குங் குளத்துக்குப்போக யோக்கியமாயும் நெரிஞ்சிமுள்ளு முதலானதால் துக்கப்படுத்துவதற்கு ஹேதுவாயும் யாதொரு பிரயோஜனமுமற்று வீணைய்ப்போவதுபோலுமறிக. [இ - து]குருவினிடத்தில் ஒப்புவித்தமனதுக்கே அஞ்ஞானம் ஆவரணம் வாசனைகள் ஆசைகள் கர்மங்கள் ஜன்மங்கள் பயங்கள் துக்கங்கள் முதலானதுகளெல்லாம்போய், பிரஹ்மஞானம் தத்துவவிவேகம் வாசனக்ஷயம் நிராசை நைஷ்கர்மியசித்தி, ஜென்மநிவர்த்தி பயநிவர்த்தி துக்கநிவர்த்தி தடையற்றஆனந்தமுதலானவைகள் உண்டாகு மென்றுசொல்வது எப்படியென்றல், நாரதமகாரிஷி ருக்வேதம், எஜுர்வேதம், சாமவேதம், அதர்வணவேதம், பாரதம், பதினெண்புராணம், நானவிதமா யிருக்கிறசாஸ்திரங்கள், 64 கலைக்கியானங்கள்முதலானவற்றைக் கற்றிருந்தும், சகலமான பிரஹ்மலோகமுதல் பாதாளலோகபரியந்தம் ஒருமூகூர்த்தத்திற் சஞ் சரிக்கும்படியானவல்லமையும் பெற்றிருந்தும், சகலத்திராளாலும் பூஜிக்கப் பட்டிருந்தும் மந்திரவித்தென்ற அனத்மவித்தேயாயிருந்துகொண்டு மேலே சொன்ன அஞ்ஞானதிதுக்கம்வரையிலுள்ள கஷ்டம்போகாமல் வெகுகாலம் தாபத்திரயதுன்பங்களால் தபிக்கப்பட்டு இந்தத்தாபம் பொறுக்கமாட்டாமல் சனற்குமாரமகரிஷியான குருவை வந்துசரணமாயடைந்தபின், அவர் இவரைப் பார்த்து நீ யேன் விசனித்திருக்கிறயென்று கேட்டபின் "ஐயா நான் இந்த வித்தைகளெல்லாம் படிக்குமுன் தாபத்திரயதுன்பமட்டுமிருந்தது. பிற்பாடு இவைகளை அப்பியாசம்பண்ணுவதாலும், பண்ணினது மறந்துபோவதாலும்,

சபையில் அவமானப்படுவதாலும், ஐயித்தவிடத்தில் அசம்பாவத்தினுலுண்டான கருவத்தாலும் துக்கசமுத்திரத்தில் முழுகிப்போயிருக்கிறஎன்னைக் கரையேற்றிவையுமய்யா வென்றுகேட்டவருக்குச் சனற்குமாரர் பூரணமானபிரஹ்மமே ஆனந்தம், மற்றஅற்பங்களாயும் ஞாதுரு ஞான ஞேயபேதங்களாயுமிருக்கிற திரிபுடியிற் சுகமில்லை. ஆகையால் இவைகளைவிட்டுப் பிரஹ்மத்தை அறியென்று அனுக்கிரகித்தபடி நாரதரும் அப்படியே முத்தரானகதையையும் அறியத்தக்கது.

86 - வது தரங்கம்.

சாத்விகாதி குணத்திரயங்களின் தன்மை:—

ஜீவர்களுக்குச் சத்துவகுணம் ஞானசாதனமாயிருந்தாலும் சத்துவத்திற் சத்துவம் சமாதி, சத்துவத்தில்ரஜசு ஆத்மவிசாரணை, சத்துவத்தில்தமசு சதுர்விதகுருசேவையும் பிரஹ்மத்தியானமும். [எ - தி] ஓர்விடன் ஆசைநாயகியினிடத்தில் ஐக்கியபோகஞ்செய்வது சத்துவகுணமாம், அவளோடே லீலாவிநோதமாய் விளையாடுவது ரஜோகுணமாம், அவளுக்கு வேண்டியவஸ்துக்களை இடைவிடாமல் சம்பாதித்துக்கொடுப்பதும் அவளைக்கண்கொட்டாமற்பார்ப்பதும் தமோகுணமாம். இனிரஜோகுணத்திற்சத்துவம் சகுணத்தியானம், ரஜசில்ரஜசு சகுணசாஸ்திரவிசாரம், ரஜசில்தமசு பூஜை எக்ஞாதிகர்மம். [எ - தி] மந்திரி ராயசம் சேவகன் மூன்றையுங்கிரமமாயறிக. தமசில்சத்துவம் சும்மாயிருப்பது, தமசில்ரஜசு தான்பிடித்த துரபிமானத்தை ஆயிரம்பேர்சொன்னுலும் விடுகிறதில்லை, தமசில்தமசு பயம் துக்கம் சோம்பல் நித்திரை. [எ - தி குழந்தை அழாமற்சும்மாயிருப்பதும், சண்டைப்பிடித்துக்கொள்ளுகிறதும், தான்பிடித்த காரியத்தை என்னசமாதானஞ்சொன்னுலும் விடாமலிருக்கிறதும், ஓயாமல் அழுகிறதுந்தான். மனசில் சத்துவமுண்டாகும்போது தத்துவத்தைக்குறித்து ஆலோசனை; ரஜசு-சந்தேகமாய் விஷயத்தைக்குறித்துவருகிற நினைப்பு, தமசு—எப்படிவருமோ வென்றுநினைத்துப் பயத்தால்துக்கிக்கிறது. புத்தியில்சத்துவம் உள்ளத்தையுள்ளபடி நிச்சயிப்பது, ரஜசு ராகத்துவேஷ நிச்சயம்; தமசு தானே ஒருவிதமாய் நிச்சயம்செய்து துக்கித்திருக்கிறது. அகங்காரத்தில்சத்துவம் தன்னைத்தானென்கிறது; ரஜசு இன்னது நான் செய்தேன், இன்னது செய்யப்போகிறேனென்று சொல்லுகிறது; தமசு நினைத்தகாரியம் முடியவில்லையென்று துக்கப்படுகிறது. சித்தத்திற்சத்துவம் தான் பிரஹ்மமென்று நினைத்தாலும் நினையாமற்போனுலும் பிரஹ்மத்துவம் சகஜமாயிருக்கிறது. இந்தநிச்சயம் தேவாதிகளுக்குக்கூட வருகிறது பிரயாசம். இதற்குயுக்தி, ஒருபிராஹ்மணன் துலுக்கன்வரையிலுள்ள வேஷம் போட்டு ஆடினுலும் நான்பிராஹ்மணனென்கிறது சகஜமாயிருந்துவருவது போலவாம்; ரஜசு விஷயத்தைக்குறித்து அப்படிச்செய்யாமற்போனேமே இப்படிச்சொல்லாமற்போனேமே என்றுவருகிறது; தமசு முன்நடந்த புத்

திராதி நஷ்டங்களைக்குறித்து விசனிக்கிறது. ஆகையால் சகலமுமுட்சுக்களும் சத்துவகுணத்தையே சம்பாதிக்கத்தக்கதென்றறிக. [இ - து] அந்தக்கரணத்தில் மூலப்பிரகிருதியின் ரஜோகுணமான அவித்தையில் பிரதிபிம்பித்த ஜீவர்கள் மூவிதமாய்க்காணப்படுவார்கள். அதில் சத்துவத்தில் பிறந்தவர்கள் தத்துவக்ஞானத்தை யடைந்திருப்பார்கள். அவர்களும் மூவிதமாயிருப்பார்கள். சத்துவத்தில் சத்துவகுணமாயுண்டானவர்கள் சதா சமாதிநிஷ்டர்களாயிருப்பார்கள். அதற்குச்சாக்ஷி சுகப்பிரம்மரிஷி உண்டாகும்போதே விஷயவைராக்கியத்துடனும் நிராசையுடனுங் கூடிப்பிறந்து தானே சகலவேதாந்தங்களின் பொருள்களை அறிந்திருந்தும் சமுசயநிவர்த்தியான நிச்சயமுண்டாகாமல் தன் பிதாவான வியாசமகாரிஷியைப்பார்த்து' இந்தச்சம்சாரஆடம்பரம் எப்போது உண்டாயிற்று? எப்படி இது நசிக்கு" மென்றுகேட்டதற்கு வியாசர் "இது உண்டாகவுமில்லை. நசிக்கப்போகிறதுமில்லை. சிதாகாசத்தில் ஆகாசத்தில் நீலாதிநிரம்போலச் சுத்தப்பொய்யாய்த் தோன்றுகிறது" என்று சொன்னதைக் கேட்டபின், இவர் இந்த அர்த்தம் சுயமாய்த்தோன்றினதாயும், சாஸ்திரங்களில் சொல்லுவதாயுமுள்ள அர்த்தத்தைத் தானே நீரும் சொன்னீரேதவிர வேறே விசேஷமாய் ஒன்றுஞ்சொல்லவில்லையே யென்று சொன்னதைக்கேட்ட வேத வியாசரும் ஜனகரிடத்திற்போகும்படி சொன்னபின், ஜனகரிடத்திற்போய் 21-நாள் காத்தபின் அவர்பேட்டியாய் அவரையும் முன்போலே கேட்ட உடன் வியாசர்போலேயே அவருஞ்சொல்ல அதைக்கேட்ட இவரும் "இது எனக்குச் சுயமாயும் தோன்றினது. சாஸ்திரங்களிலும் இப்படியே சொல்லுகிறது. இப்படியே என்பிதாவும் சொன்னார்: நீரும் இப்படியே சொன்னீர். இதனுடைய ரகசியத்தை உண்மையாய் எனக்குச் சொல்லுமையா" வென்று கேட்டபின், அவரும் அப்படியே அனுக்கிரஹித்தபின் இவர் அதைநம்பிநிச்சயஞானத்தைப் பெற்று நிர்விகற்பசமாதியை அடைந்து சுகித்தார். ஆகையால் அவர் சத்துவத்தில் சத்துவமென்றறிக. சத்துவத்தில் ரஜோகுணத்திலுண்டானவர்கள் சதா விசாரணைசெய்துகொண்டு ஞானநிச்சயத்தோடே யிருப்பார்கள். என்பதற்குச் சாக்ஷி ஜனகர் சுரகுமுதலானவர்கள். சித்தர்களுடைய வர்க்கியத்தினாலும், மாண்டவ்வியமகாரிஷியினுடைய வாக்கியத்தினாலும் விசாரணையால் ஆத்மஞானத்தையடைந்து அந்தநிச்சயத்தோடே ஜீவன்முக்தர்களாய் இராச்சிய பரிபாலனஞ் செய்துவந்ததால் அவர்கள் சாத்வீகத்தில் ராஜசரென்று அறியத்தக்கது. சாத்வீகத்தில் தாமசகுணத்தில்பிறந்தவர்கள் குருவாக்கியத்தை நம்பிக்கையாய் வைத்து மற்றவர்களையும் சாஸ்திரவிசாரத்தையும்விட்டுத் தனித்திருந்து சதா பிரஹ்மமேநான் நானேபிரஹ்மமென்று வெகுகாலம்வரை தியானஞ்செய்தபின் ஆத்மஞானத்தைப்பெற்று ஜீவன்முக்தர்களாயாவார்களென்பதற்குச் சாக்ஷி காதிமகாரிஷி பரஞர்முதலானவர்களுக்கு வெகுகாலம் பிரஹ்மத்தியானம் பண்ணி ஞானம் வந்திருக்கிறதேயாம். இனி மனதுக்குச் சத்துவகுணமுண்டாகும்போது விஷயத்தினுடைய சொரூபம் சத்தா அசத்தா? சித்தா ஜடமா?

சுகமா துக்கமா? வென்று ஆலோசிப்பதேயாம். அது ரஜோகுணமானல், இதைச்செய்வோமா அதைச்செய்வோமா? இப்படிச்சொல்லலாமா அப்படிச் சொல்லலாமா? வென்றுவருகிறவிருத்தியேயாம். அது தமோகுணமானல், இங்கேபடுத்துத்தூங்கலாமா அங்கேபடுத்துத்தூங்கலாமா ? இப்படிச்செய்தா லென்ன ஆபத்துவருமோ? வென்றும், அப்படிச்செய்தாலென்ன ஆபத்து வருமோவென்றும் பயப்படுவதேயாம். புத்தி சத்துவகுணமானல் தேகாதி விஷயங்களெல்லாந் துக்கம், பிரஹ்மமே ஆனந்தமென்கிறநிச்சயமேயாம்; புத்தி ரஜோகுணமானல் பிரஹ்மமில்லை, தேகாதி ஜகத்தே ஆனந்த மென்று நிச்சயிப் பதேயாம்; புத்தி தமோகுணமானல் இந்தத் தேகாதிகளால் எந்த வேளையுந் நஷ்டப்படுவோமென்று பயந்து நிச்சயம்பண்ணுவதேயாம். அகங்காரம் சத் துவகுணமானல் நாம் அகர்த்தாசாக்ஷி யென்றபிமானிப்பதேயாம்; அதுரஜோ குணமானல் நான் கர்த்தா, இத்தேகமே நான்,இந்தப்பெண்டாட்டி பிள்ளைகள் இந்தவீடுவாசல்கள் நிலங்கரைகளெல்லாம் நம்ம தென்றும் அபிமானிப்பதே யாம்; அதுதமோகுணமானல் நான்துக்கி, நம்முடைய பெண்டாட்டி முதலான வர்கள் நம்மை இப்படிப்படுத்திவைக்கிறார்களென்று எண்ணுகிற அபிமானமே யாம். சித்தம் சத்துவமானல் நான் பிரஹ்மமென்று சகஜமாயிருப்பதேயாம்; அது ராஜஸமானல் தான்செய்த செய்கைகள் இன்னஇன்னவென்று சகஜமா யிருப்பதேயாம்; அதுதமசானல் விசனித்திருக்குமென் றறியத்தக்கது.

## 87 - வது தரங்கம்.

விஷயவிருத்தி மேல்மேலும் உண்டாகாமல் இருப்பதற்குயுக்திகள்:—

எல்லாம் பிரமமாத்திரமென்றுவது ; தோன்றுகிற தேகாதிஜகத்து சித் திரம்போலப் பொய்யென்றுவது ; விருத்திக்கு நான் சாக்ஷியென்றுவது ; நான் அகர்த்தா, ஜீவனே கர்த்தா, நான்பிரஹ்மம், எல்லாம்பஞ்சவிஷயம், எல்லாம் ஈசுவரவடிவு, எல்லாம் கர்மம், எல்லாம் காலமென்றுவது பார்த்தாலுஞ்சரி, அல்லது அந்தவிருத்தியைத்தானே இதுவரையில் நினைத்துநினைத்து என்ன காரியங்கண்டாயென்று கேட்டாலுஞ்சரி, இவைகளுக்குள் ஒருவிவேகமாவது உதித்தால் கரையேறலாமென்று அறிக. ஐயா, தாங்கள் சொல்லுகிறபடியெல் லாம் எவ்வளவு விவேகம்பண்ணினலும் மனது திரும்பத்திரும்ப விஷயத்தைக் குறித்துச்சங்கற்பிக்கிறதே தவிர விஷயங்கள் பொய்யென்றுவது, துக்கமென்று வது, தேகாதிகள் நானல்லவென்றுவது, இப்படிப்பட்ட விவேகவிருத்தி யானது சகஜமாயுண்டாகவில்லையே, இதற்கு நான் என்னசெய்வேனென்று கேட்பாயாகில், அதற்கு நான் உத்தரஞ்சொல்லுகிறேன் கேள்:—உன்னுடைய மனதில் பூதப்பிரதிபந்தத்தினலேயா இப்படி விருத்தியுண்டாகிறது ? வர்த்த மானப்பிரதிபந்தத்தினலேயா இப்படி விருத்தியுண்டாகிறது ? அல்லது பௌ ஷியப்பிரதிபந்தத்தினலேயா இப்படி விருத்தியுண்டாகிறது ? அதை ஆலோ

சித்துச்சொல்லென்று கேட்டதற்குச்சிஷ்யன் சொல்லுகிறதாவது:—ஐயா, இத்தப்பிரதிபந்தங்களுடைய தன்மை இன்னவிதமென்று தெரிந்தாலல்லவோ இன்னபிரதிபந்தம் வருகிறதென்று சொல்லுவேன். அவைகளின் தன்மையைத் தாங்கள் தெரிவித்தால் அதன்பின் இன்னவழியாய்வருகிறதென்று சொல்லலாமென்று சொன்னவுடன் குரு சொல்லுகிறார், பூதப்பிரதிபந்தமாவதேதென்றால்-ஒருபுருஷன் கிரஹத்திலிருந்து தன்ஸ்திரீயானவள் பின்னையொருவனைக்கூட்டிக்கொண்டு வெளியேறிப்போனபின் அவளைத் தேடிப்பார்த்ததிலும் அகப்படாமற்போனதால் உடனே சந்யாசம்பண்ணிக்கொண்டு மகாத்மாவான சற்குருவினிடத்திற்போய் அவரைச்சரணாகதம்பண்ணினபின் அவரும் கருணையால் இரண்டாவதுமகாவாக்கியத்தை யுபதேசித்து இதை யேகாந்தத்திலிருந்து தியானம்பண்ணிக்கொண்டிருவென்று சொன்னபடி அவனுமப்படியே தியானம் பண்ணிவரும்போது இவனுடையமனைவி வருகிறதுபோலும் அவளோடே கேளிவிலாசமாய் ஆலிங்கனமுதலானவற்றைச் செய்வதுபோலுங் கண்டுவருங்காலையில், ஒருநாள் குருநாதன் இவனைப்பார்த்து நீ தியானம்பண்ணிவருகிறாயே அதில் உனக்குச் சுகந்தட்டுப்பட்டதாவென்று கேட்கும்போது, அவன் சொன்னதாவது எனக்குக் கண்மூடித்தியானம்பண்ணஉட்கார்ந்தவுடன் என்மனைவி சர்வாலங்காரத்துடன்வந்து அவள்செய்கிற சரசவிலாசத்தால் நிரதிசயமானசுகங் காணப்படுகிறதென்று சொன்னவுடன், குருநாதன் அடேமூடா! உனக்கு முந்திப்பழகியிருக்கிற வாசனையாலல்லவோ இப்படித்தோன்றுகிறது. இனி அவள்வருவதுபோலே தோன்றும்போதே அவள்தேகத்தில் மயிர்முதல் மலம்வரையிலுள்ள தத்துவங்களைப் பிரித்துப்பார்க்கச்சொன்னபடி, இவனும் அப்படிப்பிரித்துப்பார்த்து யதார்த்தத்தை அறிந்தானென்றுசொல்லுகிறதே பூதப்பிரதிபந்தமும் அதன்நிவர்த்தியுமாம். இனி வர்த்தமானத்தில்வருகிற பிரதிபந்தமாவது:—எதிரிட்டவிஷயத்தில் தோஷந்தெரிந்தும் அதிலாசையுண்டாகிறது. 1; கேட்டஅர்த்தம் மறக்கிறது. 2; குதர்க்கமாய்த்தோன்றுகிறது. 3; விபரீதத்தால் தூரபிமானப்படுகிறது. 4; இந்தநாலும் சாதனசதுஷ்டய சிரவண மனன நிதித்தியாசனத்தாற்போகும். ஆகாமியப்பிரதிபந்தமாவது வரப்போகிறகாலத்தைக்குறித்துச் சிந்திக்கிறதாம். அது அகர்த்தருத்துவ அனுசந்தானத்தாற் போமென்றுசொன்னபடி அவனும் பழகிக்கரையேறினனென்றறிக.

## 88 - வது தரங்கம்.

மனதுக்கு ஆத்மா நிஜபுருஷனுமாம் சோரபுருஷனுமாம்:—

விவேகியின்மனதுக்கு ஆத்மா நிஜபுருஷனும் சோரபுருஷனுமாம். [எ-தி] ஒருஸ்திரீ தன்நிஜபுருஷனிடத்தில் ரமிப்பதைப்பற்றி வேதமும் லோகமும் கொண்டாடுவதுபோல மனது விசாரணையால் பிரஹ்மத்தில்ரமித்தால் அப்

படிக்கொண்டாடுவதாலும், ஒருஸ்திரீ பர்த்தாமுதலான குடும்பஸ்தர்களைக்கை விட்டு சோரபுருஷனுடேயேரமிப்பதுபோல மனதும் நிர்விகற்பசமாதியில் ஜீவனையும் தேகேந்திரியாதிகளையுமறந்து ஆத்மாவில்ரமிப்பதாலும் இரண்டுவித மாயும் சொல்லலாமென்று அறிக. ஆனல் விஷயத்தை மனதுக்குச்சோரபுருஷ னென்று சொல்லியிருக்கிறதேயென்றால் அது அசுத்தமனதுக்கென்றறிக. [இ - து] சூடாலை ஞானம்வந்தபிறகு சித்தியை யேன்அப்பியசித்தாள்? [எ-தி] தாய் வியாதியில்லாதிருந்தாலும் வியாதியுள்ளகுழந்தைக்குப்பால்கொடுப்பதற் காக உப்பில்லாப்பத்தியம் காப்பதுபோலச் சிகித்துவஜனை குழந்தைக்கு ஞானப்பாலை ஊட்டிவைக்க அஷ்டமாசித்தியாகிற பத்தியத்தைக்காத்தது பரஇச்சாப்பிராரப்தமென்றறிக. ஐயா, மனதுக்குப் பிரஹ்மத்தைச் சோரநாயக னகவும் விஷயத்தை நிஜநாயகனகவும், மனதுக்குப் பிரஹ்மத்தை நிஜநாயக னகவும் விஷயத்தைச்சோரநாயகனகவும் சொன்னீரே அதற்குக்காரணத்தை யும் அதன்அனுபவத்தையும் விபரமாய்க்காண்பிக்கவேணுமென்று கேட்டசிஷ் யனுக்குக் குரு சொல்லுகிறார்:—முதலாவது மனதுக்குப் பிரஹ்மம் நிஜநாயக னென்பதைக்காண்பிக்கிறோம். எப்படி ஒருஸ்திரீயை ஒருபுருஷன் சோபனத் திரவியம் வேண்டும்வரைகொடுத்து கலியாணம்செய்து அன்னம் ஆடை ஆபர ணம்முதலான சுகத்தையெல்லாம் கொடுத்துப் புத்திரனையும் தன்னுடையசம் போகத்தாற்கொடுத்து, இந்த லோகத்திலுள்ளவர்களெல்லாம் இவள் மகாபதி விரதை நல்லபுத்திரவதியென்ற கீர்த்தியையுங்கொடுத்துப் பரலோகத்திலும் அழியாத வாழ்வையுங்கொடுத்துக்கொண்டு இருக்கிற தன்நிஜநாயகனைவிட்டுச் சோரபுருஷன் ஏகதேசத்தில்வருபவனும், இவளிடத்தில் நிஜவான்போல காண் பித்து நடுவில் நட்டாத்தில்விட்டுக்காணமல் ஓடிப்போகிறவனும், அநேகம் பேர்களிடத்தில் போனதால் வியாதிக்கிரஸ்தனுமிருக்கிற அந்தப்புருஷனை அனுபவித்தால் இகபரங்களில் பாபத்தையும் துக்கத்தையும் உண்டுபண்ணு கிறவனுமிருக்கிற அவனுடையசம்போகம் ருசியாய்த்தோன்றுகிற சோரஸ்திரீ போல இந்தமனசுக்கும் ஆத்மா தன்னுடையசத்தையாகிற சோபனத்திரவியத் தைக் கொடுத்துத் தன்னுடையஅறிவாகிற ஆடைஆபரணங்களையும் போட்டுத் தன்னுடையஆனந்தமாகிற அன்னம் சம்போகங்களையுங்கொடுத்து தத்வக்ஞான மாகிற புத்திரனையுங்கொடுத்து ஜீவன்முக்தியாகிற கீர்த்தியையும் விதேகமுக்தி யாகிற புண்ணியத்தையுங் கொடுக்கக்காத்திருக்கிறஅந்தப்பிரஹ்மநாயகனை இந்த மனசாகிற பெண்விட்டுத் தேகாதிவிஷயமாகிற சோரபுருஷன் அனர்த்த ஜட துக்கமாகிற பொய்யனும் மூடனும் அழுகும்படி கைவிட்டுப்போகிறவனுயு மிருக்கிறன். இந்தத்தேகாதிவிஷய விடபுருஷனை மனதுசேர்ந்து இதுவரை கெட்டுப்போனதால் இப்படிச் சொல்லப்பட்டது. மனதுக்கு விஷயத்தை நிஜ புருஷனகவும் பிரஹ்மத்தைச் சோரபுருஷனகவும் சொல்வது எப்படியென்றால், இந்தமனது அவித்தையிற்பிறந்து தன்ஜாதியான விஷயபுருஷனை விவாகம் செய்து அதனல் அனந்ததுக்கத்தையும் ஜெனனமரணவியாதியையும் அடைந்து

இந்தமனசை சுகிப்பிக்க அவனுக்கு அறிவாகிற லேபனமற்றுப்போயிருப்ப
தால், இவனிடத்தில் குருவாகிற சகியின்போதனையால் வெறுப்புவந்து பிரஹ்ம
மாகிற விடசிரோமணியோடேசேர்ந்து சுகித்துச் சகல கர்மகருத்துருத்துவங்
களையும் விட்டுவாழுகிருள். ஆகையால் பிரஹ்மம் சோரபுருஷனுமாமென்றறியத்
தக்கது.

## 89 - வது தரங்கம்.

நிஷ்காமபுண்ணியத்தின் பலம்:—

நிஷ்காமபுண்ணியம் எவ்வளவுக்கு இருக்கிறதோ அவ்வளவுக்கு விசாரந்
தோன்றும். [எ - தி] கண்மாய் எவ்வளவுஆழமாயிருக்கிறதோ அவ்வளவுக்
குத் தண்ணீர்கொள்ளுவதுபோலும்,விரலுக்குத்தகுந்தவீக்கம் என்பதுபோலும்,
தங்கத்தில் மாற்றேறுவதற்குத்தகுந்தவிலை உயர்வதுபோலஅறிக. [இ - து]
நிஷ்காமபுண்ணியத்தின்முடிவு விஷயத்தில் அத்தியந்தம் உபேக்ஷை. [எ - தி]
மேகவியாதி அவுஷதத்தால் தீர்ந்ததற்கு மறுபடி தினவு உண்டாகாததுபோல
வறிக. ·ஐயா, காமியபுண்ணியமென்பது எது? அதற்குப்பலமென்ன? நிஷ்
காமபுண்ணியமென்பதெது? அதற்குப்பலமென்ன? இவைகளை எனக்குத்
தெரியும்படியாய் அனுக்கிரகிக்கவேண்டுமென்று கேட்டசிஷ்யனுக்குக் குரு
சொல்லுகிருர்:—வாராய் குழந்தாய்! காமியபுண்ணியமென்பதெதுவென்றால்,
மாயாகாரியமானஜகத்தில் இகலோகத்திலுள்ள யாதேனும் பெண்டாட்டி
பிள்ளை வீடுவாசல் பணங்காசுவேண்டுமென்றுவது, வியாதிவெக்கை கஷ்டநிஷ்
டூரங்கள் தீரவேண்டுமென்றுவது, இப்படியே பரலோகத்தைக்குறித்து நான்
இன்னஇன்ன பாபங்களைச் செய்து போட்டேனே இதற்குச்சாஸ்திரங்களில்
இன்னஇன்ன பாபங்களுக்கு இன்னஇன்ன கொடியநரகங்கள் வருமென்பதைக்
கேட்டு, அதற்குத்தகுந்தபடி சொல்லுகிற பிராயச்சித்தகர்மங்களையுங் கேட்டு
அந்தப்படி அவைகளைச்செய்துகொள்ளுகிறதும், பரலோகத்திலுள்ள அப்ஸர
ஸ்திரீஅமிர்தபானமுதலான விஷயசுகத்தைக்குறித்து எக்ஞாதிகர்மங்களைச்செய்
கிறதும், இப்படியே சாலோகாதிபதங்களைக்குறித்துச் சிவன்முதலான தெய்
வங்களைப்பூஜிக்கிறதும் காமியகர்மமென்றறிக. இனி நிஷ்காமியகர்மமாவது,
தேகேந்திரியாதிகளாற் செய்யப்படுகிற நித்திய நைமித்தியகர்மங்களைப் பலஉத்
தேசமன்றியில் பிரஹ்மார்ப்பணமாகச்செய்கிறதே நிஷ்காமபுண்ணியமாம்.
இதற்கனுபவமென்னவென்றால், பம்பாயில் அநேககோடிதிரவியமுள்ள ஒரு
பிரபுவினிடத்தில் சோளதேசத்திலிருந்து ராமய்யன் கிருஷ்ணய்யன் என்று
இரண்டுபேர்கள் போய்ச்சேர்ந்தார்கள். அதில் ராமய்யன் என்பவன் மாசம்
ஒன்றுக்குப் பத்துரூபாய்வீதம் சம்பளம்பேசிக்கொண்டு,உதயம்முதல் படுக்கும்
வரையில் அவர்கள்வீட்டிலுள்ள சகலவிதமான வேலைகளையும் ஒன்றுந்தவராமற்
செய்துகொண்டு, தப்பிதம்வந்தகாலத்தில் அபராதத்தையும்உதையையும் பெற்
றுக்கொண்டுவருகிறுன். கிருஷ்ணய்யன் என்பவன் அந்தப்பிரபுவினிடத்தில்

யாதொரு விதமான பிரயோஜனங்களையும் அபேக்ஷியாமல் அவர்தயவுமட்டும் நமக்கிருந்தாற்போதுமென்று நினைத்துஅவருடைய காரியங்களையெல்லாம் தன் காரியம்போலே உண்மையாய்நினைத்துப் பார்த்துவருங்காலத்தில் நாலுசங்கதி களில் தரகாளிகள்வந்து கப்பலில் இன்னஇன்ன சரக்குகள் இன்னஇன்ன விலைக்கு வந்திருக்கிறதென்று அந்தப்பிரபுவினிடத்திற் சொல்லும்போது, இவன் அப்பிரபுவினிடத்தில் ரகசியமாய் நேற்றையதினம் நான் துறைமுகத்துக் குப்போயிருந்ததில் அப்போது அவைகளைக் கொண்டுவந்திருக்கிற வியாபாரி மூட்டைஒன்றுக்கு அஞ்சுரூபாய்வீதம் மொத்தமாய் எடுத்துக்கொண்டால் கொடுத்துவிடுகிறேனென்று சொல்லியிருக்கவும் இவர்கள் மூட்டைஒன்றுக்கு ஆறுரூபாய்வீதம் என்றுசொல்லுவதால் அதை விசாரித்துச்செய்யவேண்டு மென்று சொன்னபடி அவரும் விசாரித்து இவன்சொன்னது நிஜமாயிருந்த தால் அவர் மிகுந்தசந்தோஷத்துடன் தன்னுடைய சகலசொத்துக்களையும் இவன்வசம் ஒப்புவித்துப்போட்டதால், இவனே அப்பிரபுவாய்விட்டதால் இவன்தயவுக்கு அவர்ஸ்திரீமுதலானவர்கள்கூட எதிர்பார்க்கவேண்டிவந்துவிட் டதால் நிஷ்காமகர்மத்தின்வலியை அறிக.

## 90 - வது தரங்கம்.

மனதினாலேயே தனக்குச் சாக்ஷித்துவம்:—

தேகேந்திரிய மனோவியாபாரத்தால் இதற்குச்சாக்ஷியாயும் காரணமாயு மிருக்கிற ஆத்துமாவை அனுமானம்பண்ணவேண்டும் [எ-தி] மிட்டாய் பக்ஷ ணத்தால் சர்க்கரை தித்திக்குமென்றறிவதுபோலும், ஜலத்தில் பிரதிபிம்ப மாய்த்தோற்றுகிற தோற்றத்தால் தோட்டத்தில் தென்னமரமிருக்கிறதென்று அறிவதுபோலுமறிக. [இ-து] அஹம்விருத்தியைக்கண்டு நான் சாக்ஷியென் றறியவேண்டும். [எ-தி] ரத்னப்பிரபையைக்கண்டு ரத்னத்தையறிவதுபோலு மறிக. [இ-து] தானாகிய ஆத்மா விருத்திகளுடைய உதயாஸ்தமனங்கட்குச் சாக்ஷி. [எ-தி] சூரியனுடைய உதயாஸ்தமனங்கட்குக் கண் சாக்ஷியாயிருப் பதுபோலவறிக. [இ-து] ஆத்மாவுக்குச் சாக்ஷித்துவமும்.மனதினாலேயேவரும் [எ-தி] நதிக்கரையிலிருக்கிறமடத்தில் மவுனமாயிருக்கிற ஒரு ஸ்வாமிகளுக்குச் சாக்ஷித்துவமானதுசண்டைக்காரர்களினாலேயே வந்தது போலவென்றறிக. ஐயா, ஆத்மாவுக்குச் சாக்ஷித்துவமானது மனதினாலேயே வந்திருக்கிறதென்று சொன்னீர்களே, அந்தமனதின் ஸ்வரூபமென்ன ? ஆத்மாவுக்கு இதுபோலச் சத்தாதி அநேகநாமங்கள் சுருதிகளிற் சொல்லப்படுகிறதே அந்தநாமங்களெல் லாம் இதுபோலவே வந்திருக்கிறதா ? வேறேவிதமாவென்று கேட்பாயாகில் அதற்குத்தரம் சொல்லுகிறேன் கேள், மனதென்பதை எதுவென்று விசாரிக் கும்போது, கடம் படமென்று நினைப்பதேயாம். அந்த நினைப்பை விசாரிக்கும் போது, அசைவும் அறிவும்சேர்ந்து நினைப்பென்று தோன்றுகிறது. அசைவு

பிராணவாயுவின்தர்மம், அறிவு ஆத்மாவின்தர்மம். [எ - தி] பானகமென்று சொல்வதை விசாரித்தால் அதிலிருக்கிற கிகழ்ச்சி ஜலத்தின் தர்மமாயும், அதிலிருக்கிற தித்திப்பு வெல்லத்தின் தர்மமாயும், பானகமென்பது சொல்மாத்திரமாய்ப்போவதுபோலும்; தம்பதி என்பதில் ஸ்திரீ புருஷர்கள் சேர்க்கையாயிருக்கிறது, ஸ்திரீயையும் புருஷனையும் பிரித்தால் தம்பதி காணமற்போவதுபோலும், பிள்ளையென்று சொல்லுவதில் சுக்கிலசோணிதம் சேர்ந்ததாகயிருக்கிறது, அதில் சுக்கிலசோணிதத்தைப்பிரித்தால் பிள்ளை பொய்யாய்ப்போவதுபோலும்; தேர் என்பது மரமும் இரும்பாணியும் சேர்ந்ததாயிருக்கிறது, மரத்தையும் இரும்பாணியையும் பிரித்தால் தேர்பொய்யாய்ப் போவதுபோலும்; கோவிலென்பது கல்லும் மண்ணும் சாந்துஞ் சேர்ந்திருக்கிறது, கல்லையும் மண்ணையும் சாந்தையும் பிரித்தால் கோவில் பொய்யாய்ப் போவதுபோலும்; பிராஹ்மணனென்பதுசிகை எக்ஞோபவீதத்தோடே சேர்ந்திருக்கிறது, அந்தச்சிகை எக்ஞோபவீதத்தைப் பிரித்தால் பிராஹ்மணனென்பது காணமற்போவதுபோலும்; கல்யாணமென்பது வாழைமரம், தேங்காய், பழம், மாவிலை, கொட்டு மேளம் முதலானதோடே சேர்ந்திருக்கிறது. அவைகளை வேறுவேறாகப்பிரித்தால் கல்யாணம் காணமற்போவதுபோலும்; யானை, குதிரை, தேரு, ஆள்கள் முதலானவைகளெல்லாம் சேர்ந்து சேனையென்று சொல்லப்படுகிறது. அந்த யானைமுதலானவைகளை வேறுவேறாய்ப்பிரித்தாற் சேனையைக்காணமற்போவதுபோலும்; ஆத்மாவின் அறிவையும் பிராணனுடைய அசைவையும் பிரித்தால் மனது அசத்தாய்ப்போவதுபோலவன்றி ஆத்மா மூன்றுகாலத்திலுமிருப்பதால் சத்தென்றும் மனதுபோலே ஜடமாயிராமற் சித்தாயிருப்பதால் அறிவென்றும், இதுபோலே துக்கமாயிராமல் சுகமாயிருப்பதால் ஆனந்தமென்றும், மனதுபோலே ஆத்மா விகாரியாயிராததால் நிர்விகாரியென்றும், மனசுபோலே ஆத்மாசஞ்சலமாயிராததால் அசலமென்றும், மனதுபோலே ஆத்மா அறியப்படாததால் அப்பிரமேயமென்றும், மனது நாலு அபாவத்துடனிருப்பதுபோலேயல்லாமல் ஆத்மா நாலுஅபாவமுமற்றிருப்பதால் நித்தியமென்றும், இப்படி ஆத்மாவுக்குச் சகலநாமங்களும் மனதைக்குறித்தே வந்திருக்கிறதென்றறிக.

## 91 - வது தரங்கம்.

மனோராச்சியத்தின் தன்மை:—

மனோராச்சியமானது இன்னும் அநேகஜனனாதிகளை அழைக்கிறதாக இருக்கும். [எ - தி] சமாராதனையில் ஒருவன்வந்து பத்துவஸ்திரங்களைவிரித்துக் கொண்டு தன்பந்துக்களுக்கு இடங்கொடுக்கிறதுபோலவறிக. [இ - து] மனோராச்சியத்தை அவிவேகிகளால் திருப்பமுடியாது. [எ - தி] ஓடுகிற பாம்பை மந்திரந்தெரியாதவனால் நிறுத்தமுடியாதது போலவறிக. வெளியில் இந்திரியங்களுடன் சேர்ந்து விவகரிப்பதிலும் மனோராச்சியம்பண்ணுவதே கெடுதல்.

[எ - தி] வயற்றாலே போவதைக்காட்டிலும் வயிற்றுக்கடுப்பு அதிக தொந்தர வாயிருப்பதுபோலவறிக. [இ - து] இந்திரியங்களைத்தவிர மனது வேறேயா யிருக்கிறது.[எ-தி]கச்சேரியில் சேவகர்களைத்தவிரச் சிரஸ்தார் வேறேயிருப்பது போலவறிக. ஐயா, மனோராச்சியத்தை அவிவேகிகளால் திருப்பமுடியாது விவேகிகளாலேயே திருப்பமுடியுமென்று சொன்னீர்களே, அதௌதனாலென்று கேட்பாயாகில், அதற்குத்தரம் சொல்லுகிறேன் கேள்:—அவிவேகியென்பவன் ஆத்மானாத்மாக்களைப் பிரிக்கும்படியான அறிவில்லாதவன், வாசனாவசத்தனா யிருக்கிறவன், பகிர்முகனாயிருக்கிறவன், பிறந்தகோலமாயிருக்கிறவன் ஆத லால் அவன் மனோராச்சியத்தைக் கடக்கமாட்டான். [எ - தி] நீச்சுத்தெரியாத வன் தண்ணீரில் தவறிவிழுந்தால் கரையேறமுடியாமற் கடலேகதியாய்த் தண் ணீர்ப்பிரவாகம் இழுத்துப்போகிறவழியே போவதுபோலும், மந்திரம் தெரி யாதவன் பிடித்தபேய்வசமாய்ப் போவதுபோலும், ஸ்திரீயின்சரீரத்தைப் பிரித்தறியாதவன் யோனியாகிறகேணியில் விழுந்து அழுந்திப்போகிறது போலும், அக்ஷரக்ஞானமில்லாத சேவகன் தனக்குக்கெடுதலாக எழுதியிருக் கிற கடிதத்தை ஓட்டமாய் ஓடிப்போய்த் துரையினிடத்திற்கொண்டுபோய்க் கொடுத்துக் கெடுதியையடைந்தவன் கதைபோலும், விற்பத்தியில்லாத ஒரு வன் பைரவமந்திரத்தை உபாசித்ததற்காகப் புஸ்தகத்தில் பாரியாம்பக்ஷது, என்று எழுதியிருந்தபடி ஜபம்பண்ணிக்கொண்டுவந்ததாற் கல்யாணஞ்செய்கிற பெண்களெல்லாரையும் சாகும்படி செய்தகதைபோலும், மாதர்ச்சோத் என்ற துலுக்குபாஷையில் இந்த ஒருபேச்சைக்கற்றுக்கொண்டு கண்டபேர்களையெல் லாம் கூப்பிட்டு இந்தச்சொல்லைச் சொல்லிக்கொண்டுவருகிறபிரகாரமாய், ஒரு பட்டாணித்துலுக்கன்வரும்போது அவனையும்கூப்பிட்டு இந்த மாதர்ச்சோத் என்றசொல்லைச்சொன்னவுடன் அதற்குத் தாயோழி என்ற அர்த்தமானதால் அவன், நான் சும்மாபோகும்போது நம்மைக்கூப்பிட்டு இப்படி வைதான் பாரென்று மிகுந்தகோபத்தால் தன்கையிலிருந்த கத்தியாலவனை வெட்டிப் போட்டகதைபோலும், வாழைக்காய்வாங்கப்போன திக்குவாயன் அதை வைத்து வித்துக்கொண்டிருக்கிற பெண்பிள்ளையிடத்தில் முக்கால்துட்டைக் கையிலெடுத்து அவளுக்குக்காண்பித்து இதற்குவா வென்றுசொல்லும்போது அவள் நம்மைப்பார்த்து இவன் முக்கால்துட்டுக்கு வரச்சொல்லுகிறான் என்று கோபமாய் விளக்குமாறாலடிக்க அடிபட்டுக்கொண்டு வந்தவன்கதைபோலும் அவிவேகிகளால் மனோராச்சியத்தைத் தடுக்கமுடியாதென்றறிக. இனி விவே கியோவென்றால், ஒருகால் மனோராச்சியம்வந்தாலும் உடனே அந்தவிருத்தி களை மேன்மேலும் ஓடவொட்டாமல்தடுத்து நிறுத்திக்கொண்டு இந்தவிருத்தி அகம்பதத்தைப்பற்றி வருகிறதா? இதம்பதத்தைக்குறித்து வருகிறதாவென்று விசாரித்து, அகம்பதத்தைக்குறித்து வருவதானால் சச்சிதானந்தமாயல்லவோ வரவேண்டும், இதம்பதத்தைக்குறித்து வந்தால் அது தனக்கன்னியமாயிருப்ப தால் வரக்கூடாதென்று தடுத்து சுகமாயிருப்பனென்றறிக.

## 92-வது தரங்கம்.

*சித்தத்திலடங்கின வாசனைகள் நினைப்பினாலேயே அறிக:—*

சித்தத்திலேயிருக்கிற வாசனைகள் விருத்திரூபமாய் வந்தபிற்பாடுதான் அவைகள் இன்னஇன்னதென்று தெரியும். [எ - தி] இருட்டுக்குகையில் அடைத்துவைத்திருக்கிற பஞ்சவர்ணவஸ்திரங்களைத்தொரட்டியால் வெளியில் இழுத்தபிற்பாடுதான் இது இன்னவர்ணம் இதுஇன்னவர்ணமென்று வெளியாவது போலவறிக. ஐயா, வாசனையின்சொரூபமென்ன? அது எந்தச்சமயத்தில் வெளியில்வரும்? அப்படிவருகிறவாசனையை என்னஉபாயத்தினால் நிவர்த்தி செய்யக்கூடும்? என்றுகேட்பாயாகில் அதற்குத்தரஞ்சொல்லுகிறோம் கேள். வாசனையின் சொரூபமாவது - முந்திப்பார்த்ததாயும் கேட்டதாயுமிருக்கிற பழக்கரூபமாயும், காமக்குரோதாதிவிருத்திக்கேதுவாயும், சித்தகத சமஸ்கார ரூபமாயும் அநேககோடி ஜன்மயேதுவாயுமிருக்கிற பாவமேவாசனையென்றறிக. அது எந்தச்சமயத்தில் வெளியில் வருமென்றால் திடபாவனையோடே கூடியிருக்கிற அந்த வாசனை அதற்குத்ததுந்த விவகாரம் நேரிடுங்காலத்தில் முந்திப் பிந்தியதனால்வருகிற கெடுதியறியாமல் குபீலென்று முன்நடந்தசங்கதிகளையெல்லாம் சொல்லும்படியாகக் கிளம்பும். [எ-தி] ஒரு ஊரில் நிரம்பயோக்கியனையும், சீமானையும், வைதீகத்தில் சிரத்தையுள்ளவனையுமிருக்கிற ஒரு கிரகஸ்தன் தன் பிதாவுக்குச் சிரார்த்தம் பண்ணுவதற்காக பிராஹ்மணார்த்தம் சொல்லுவதற்குத் தன்னூரிலிருக்கிற பிராஹ்மணாள் ஆசாரநேமநிஷ்டைகள் சரியாய்ச்செய்கிறார்களில்லையென்று அயலூரிலிருந்து வருகிற பிராஹ்மணர்களை பிராஹ்மணார்த்தத்துக்கு வருஷாவருஷம் சொல்லி வஸ்திரம்முதலான நூறுரூபாய்வரையிற் பிரயோஜனஞ்செய்து நடத்திவரும்போது, ஒருஅயோக்கியன் விபூதிருத்திராக்ஷங்களைத் தரித்துக்கொண்டு பிராதஸ்நானஞ்செய்துகண்மூடிச்சபம்பண்ணுகிறவன்போலக் காண்பிக்கிற அபிநயத்தை இந்தக்கிரகஸ்தன் கண்டு அவனைப் பிராஹ்மணார்த்தஞ்சொல்லி அப்பிரயோஜனங்களையெல்லாங் கொடுத்துப் போஜனமுமானபின் வெற்றிலைபாக்கு ஏலங்கிராம்பு சாதிக்காய் சாதிப்பத்திரி தக்ஷிணைமுதலானவைகளைக் கொடுத்ததைக்கண்டு அவன் அவரைப்பார்த்து இவ்வளவெல்லாங்கொடுத்த உங்களுக்குக் கால்துட்டுக்கு ஒருபுகைச்சுருட்டு வாங்கிக்கொடுக்கப் பஞ்சமாய்ப்போய்விட்டதா வென்றுகேட்க, அவர் அது குடிக்கிற வாடிக்கையுண்டா வென்று கேட்க, மாமிசம்சாப்பிடுகிறவனுக்கு இது குடிக்காமற்போனால் அது ஜீர்ணஸ்திவரமாட்டாதென்று சொல்லவும், அதுவும் சாப்பிடுகிறதுண்டா வென்று கேட்டவுடன், அவன் சாராயங்குடிக்கிறவனுக்கு மாமிசம்சாப்பிடாமற்போனால் மணியக்காரன்வீட்டில் தீப்பிடித்தெரிவதுபோல இந்த உதராக்கினியுமெரித்துப்போடும், ஆகையால் மாமிசம் அவசியம்சாப்பிடவேண்டுமென்று சொன்னதும், சாராயங்குடிக்கிறதுண்டா வென்று கேட்கும்போது, தாசிவீட்டுக்குப்போகிறவனுக்குச் சாராயம் குடியாமற்போ

ளுற் போகம்பண்ண வலுவு எப்படியிருக்கும் சொல்லுமென்று சொன்னவுடன், தாசிவீட்டுக்குப் போகிறதுண்டா வென்றுகேட்கும்போது பெண்சாதியில் லாதேபோனல் தேவடியாளை வைத்துக்கொள்ளாமல் என்னசெய்கிறதென்று சொல்லும்போது உமக்கு ஏன் கல்யாணம்பண்ணவில்லை, அதற்குக் காரணத் தைச்சொல்லுமென்றுகேட்க, என்தகப்பன் இறந்துபோய் 8 வருஷத்துக்குப் பிற்பாடு என்தாயார் என்னைப்பெற்றதால் எனக்கு யார் பெண்ணைக்கொடுப்பார் களென்று சொன்னதைக்கேட்ட கிருகஸ்தன்கதைபோலவறிக. அந்தவாசனு க்ஷயம் செய்வதற்கு உபாயமாவது மைத்திரியாதி சுத்தவாசனைகளைக் குரு சன்னிதானத்தில் சாதுக்களுடனிருந்து விசாரபுரஸ்ஸரமாய்ப்பழகினல் அசுத்த வாசனைகள் நீங்குமென்றறிக.

### 93-வது தரங்கம்.

பிராணனே சகலஇந்திரியங்களுக்கும் ஆதாரம்:—

பிராணன் சரீரத்தைவிட்டு வெளியேறினமாத்திரத்தில் சகலஇந்திரியங் களும் கூடவேவெளியேறும். [எ - தீ] கோர்ட்டைவிட்டு ஜட்ஜி வெளியேறின மாத்திரத்தில் சகல வக்கீல்களுங் கூடவே வெளியேறுவதுபோலும், மண்டகப் படியைவிட்டு சுவாமி வெளியேறினமாத்திரத்தில் சகல பரிவாரங்களும் கூடவே வெளியேறுவதுபோலவறிக. ஐயா, பிராணனே சகல இந்திரியங்களுக்கும் ஆதாரமென்றும், அது வெளியேறினல் சகல இந்திரியங்களுங் கூட வேவெளியேறுமென்றுஞ் சொன்னீர்களே, அதற்குச் சுருதி யுக்தி அனுபவ மென்னவென்றால் அதற்குத்தரம் சொல்லுகிறேன் கேள். ஒரு உபநிஷத்திற் சொல்லியிருக்கிறதாவது, கண்முதலான இந்திரியங்களும் பிராணனும் ஒருகால் "நான் பெரியவன் நான் பெரியவன்" என்று ஒருவருக்கொருவர் சம்வேதப்பட் டுக்கொண்டு தங்களுக்குள் அந்தவிவகாரம் தீராமலெல்லோரும்சேர்ந்து பிரஹ்ம தேவரிடத்திற்போய் எங்களுடைய கூட்டத்தில் யாருக்குச் சிரேஷ்டத்வமிருக் கிறது அதைப்பக்ஷபாதமன்றியில் எங்களுக்கு இந்த வழக்குத்தீரும்படியாக உண்மையைச்சொல்லவேண்டுமென்று கேட்கும்போது பிரஹ்மதேவர் அதற்குச் சமாதானம் சொல்லுகிறதாவது என்னிடத்தில் முன்னொருகால் மனதும்வாக் கும்வந்து 'நான் பெரியவன் நான் பெரியவன்' என்று சொல்லும்போது நான் அதற்குக்காரணத்தைக்கேட்கும்போது, வாக்கு நானே சகலதேவதைகளுக் கும் அவிர்ப்பாகம் கொடுப்பதற்கு அந்தந்தத்தேவதைகளை பிரதிபாதிக்கிற வேதமந்திரங்களை உச்சரித்துக் கூப்பிடுவதாலேயே அந்தந்தத்தேவதைகள் அந் தந்த அவிர்ப்பாகத்தை அவரவர்கள் பெற்றுக்கொண்டு அந்தந்த யாகம்செய்த கர்த்தாக்களுக்கு அந்தந்தப்பலன்களைக் கொடுப்பதற்கு நானே காரணமென்று சொல்லவும், உடனே மனசு முந்தி நான் நினைத்தபின்பே நீ உச்சாரணைபண்ண வேண்டியிருப்பதால் எனக்கே அதிகமான மகிமையிருக்கிறதென்று உங்களைப் போலே சண்டைப்பிடித்துக்கொண்டு அவைகளும் என்னை வந்துகேட்கும்

போது நான் சொன்னதாவது "ஓய் வாக்கே! நீ மனதென்கிற ராஜஸ்திரீக்குப் புழுக்கச்சியெப்படி எஜமானி இன்னஇன்ன இடத்துக்குப்போய் இன்ன இன்ன சமாச்சாரங்களை இன்னார் இன்னாரிடங்களிற் போய்ச்சொல்லிவிட்டு வாவென்று ஏவினபிரகாரம் அந்தப்புழுக்கச்சியும் அப்படி நடந்துவருவது போல நீயும் மனது யாரோடேபேசும்படி ஏவுகிறதோ அந்தப்படி நடக்க வேண்டியிருப்பதால், மனதுக்கு நீ வேலைக்காரி" யென்று உண்மையைச்சொன்னதற்கு அந்தவாக்கு என்பேரில் கோபித்துக்கொண்டு என்னுடையநாமமான பிரஜாபதி என்றசொல்லை எந்தயாகத்திலும் வாக்கால் உச்சரிக்கிறதில்லையென்று சொன்னபடி, இப்பவும் எந்தயாகங்களிலும் என்நாமத்தை மனதினாலேயே நினைத்துப் பாணியினால் ஓமஞ்செய்துவருவதால், உண்மையைச்சொல்லிக் கெட்டுப்போன பாவியென்ற பழமொழிப்படி ஆய்விட்டதால், நான் உங்களுடைய தாரதம்மியத்தைச் சொல்லமாட்டேன். ஆனால் ஒரு உபாயம் சொல்லுகிறேன். அதாவது, "நேத்திரமுதலான ஒவ்வொரு இந்திரியங்கள் இச்சரீரத்திலிருந்து ஒவ்வொருவருஷம்வெளியேறிப்போங்கள் அதில்எதுவெளியேறினமாத்திரத்தில் இத்தேகம் கீழே பிணமாய்விழுகிறதோ அதைச் சிரேஷ்டமென்று அறிந்து கொள்ளுங்கள் என்று சொன்னபடி, நேத்திரமுதலான ஒவ்வொரு இந்திரியம் ஒவ்வொருவருஷம் வெளியில் போயிருந்தும் தேகம் ஜீவித்திருந்து பிராணன் வெளியிற்போனமாத்திரத்தில் இத்தேகம் பிணமாய்ப்போனதாற் பிராணனே சிரேஷ்டமென்று அறிந்துகொண்டனவென்று சொல்லிய சுருதியை அறிந்து கொள்க.

## 94 - வது தரங்கம்.

*பிராணன் மனதுகளின் தன்மை:—*

பிராணன் மனசு இரண்டும் வாயையும் காதையும் வாயிலாக உடையனவாயிருக்கின்றன. அதில் வாய்வழியாகப் பிராணனுக்கு அதிகஆகாரங் கொடுத்தால் அவதிப்படும். மனதுக்குக் காதுவழியாக விவேகமான ஆகாரத்தை எவ்வளவு கொடுத்தாலும் அவதியின்றியில் வாங்கிக்கொள்ளும். [எ - தி] கண்மாயில் அதிகஜலம் வந்தால் உடைவதுபோலும், சமுத்திரத்தில் எவ்வளவுஜலம் வந்தாலும் இடங்கொடுப்பதுபோலுமறிக. ஐயா, தாங்கள் மனசு சமுத்திரம் போலும் பிராணனைக் கண்மாய்போலும் திருஷ்டாந்தம்வைத்து மனசை சிரேஷ்டமாகவும் பிராணனை நிகிருஷ்டமாகவும் சொன்னீர்களே, வாசிஷ்டத்திற் சம்சாரமாகிற விஷக்கொடிக்கு இத்தேகமே காரணமாயும் இத்தேகத்துக்கு மனதே காரணமாயும், அந்தமனதுக்கு வாசனையும் பிராணனுடைய அசைவும் காரணமென்று சொல்லி, பிராணாயாமத்தினாற் பிராணனுடைய அசைவை நிறுத்தினாலும், விவேகத்தால் வாசனையினுடையஅசைவை நிறுத்தி

ணும் மனது நசிக்குமென்றும், அம்மனதினுடைய நாசத்தால் தேகோற்பத்திக்கு விநாசம்வருமென்றும், அவ்விநாசத்தால் சம்சாரதுக்கம் நாசமாகுமென்றும், இப்படிப்பிராணனை மனதுக்கு அதிகமாய்ச் சொல்லியிருக்கும்போது, தாங்கள் அதற்கு விரோதமாய் இவ்விடத்தில் இவ்விதமாய்ச்சொன்ன காரணமென்னவென்று கேட்பாயாகில், அதற்கு நான் சொல்லுகிற சமாதானத்தைக்கேள், ராஜாவானவர் மந்திரிமுதல் சேவகன்வரையில் சம்பளக்காரரென்று சரியாய்ச்சொன்னாலும் விவேகித்துப் பார்க்கும்போது, மந்திரி ஆலோசனை பண்ணுகிறவனும், சகலமானபேர்களையும் வைத்து வேலைவாங்குகிறவனும், சகலருடையகுணதோஷங்களையுமறிந்து ரட்சைஷிட்சை பண்ணுகிறவனும், ராஜ்ஜியதந்திரத்திலுள்ள சகல ரகசியங்களையுமறிந்தவனும், ராஜாவோடே ஒன்றாய்க்கலந்து ராஜாவுக்குச் சகலவிதமான ஜகத்விவகாரங்களையெல்லாம் போதிப்பவனுமிருப்பதுபோலவன்றிச் சேவகன் சொற்பசம்பளமுடையவனும், காகித முதலான மூட்டையைக் காற்று செத்தைகுப்பைகளைத் தூக்கிக்கொண்டுபோவதுபோல ஓடுகிறவனும், யாதொரு ஞானமில்லாதவனுமிருக்கிற சேவகன்போலுமிருக்கிற திருஷ்டாந்தப்படி; இந்தமனதும் அப்படி மந்திரிபோல அறிவோடே கூடிக்கொண்டிருப்பதாயும், சுரோத்திராதி பஞ்சேந்திரியத்தின்வழியாய் வருகிற சப்தாதிபஞ்சவிஷயங்களுடைய குணதோஷங்களையும், லாபநஷ்டங்களையும், மானவமானங்களையும்,நன்மைதீமைகளையும், சுகதுக்கங்களையும் அறிந்து அவைகளுக்கு நிக்கிரானுக்கிரகம் பண்ணுகிறவனும், பிராணனை அடக்கிவிடுகிறவனும், சரீராதி சகலஜகத்விவகாரங்களையுங்குறித்து முன்நடந்ததையும் இப்போது நடப்பதையும் இனிமேல்வரப்போகிறதையும் ஆலோசித்துப்பார்ப்பவனும், மூன்றுலகமாயிருக்கிற ஜகத்தினுடைய சங்கதிகளைச் சாக்ஷியாகிய ஆத்மாவுக்குத் தெரிவிப்பவனும், ஆத்மாவோடே ஐக்கியமாய்க் கலந்து ஆத்மானந்தத்தை முழுக்க அனுபவிப்பவனும், ஆத்மாஒருவரைத்தவிர மற்றவர்களுக்கெல்லாம் பவ்யமாகாமல், அவர்களையெல்லாம் உண்டுபண்ணவும் அழிக்கவும் வல்லமையுள்ளவனுமிருக்கிற மனதையும், இதற்கு எதிர்மறையாக இருக்கிற பிராணனையும் எப்படிச் சமானமாய்ச்சொல்லலாம்? ஆகையால் மனதே சிரேஷ்டமென்றறிக.

## 95 - வது தரங்கம்.

மனதுக்குண்டாகிற நாலுதன்மையறிக.

மனதாகிற நாயின்பேரில் விஷயலாபமாகிற ஒருகல்லையெறிந்தால் சங்கற்பமாகிற குலைச்சலைப்போடும், 1; சும்மாஇருக்கிறவனைப் பார்த்து நமக்கு இவன் சொத்தையெல்லாம் தானம்பண்ணப்போகிறானென்று நினைப்பதும், சும்மா இருக்கிறஞானிகளை நிந்திப்பதும்,சூரியனைப்பார்த்துநாய்குலைப்பதுபோலும், 2; ஒருநாய்க்கு ஒருநாய் குலைத்துக் கடித்துக்கொள்வதுபோல ஒருமனதுக்கு ஒரு

மனது சண்டைக்கு நிற்கிறது, 3; தானே குலைக்கிறதுபோலச் சொப்பனம் மனோராச்சியங்களாம், 4. மனசாகிற நாயை இந்த நான்குவிதமான நினைப்பாகிற குலைச்சலைக் குலையாமலிருக்கும்படி செய்யவேண்டியதுதான் விவேகியின் கடமையென்றறிக. ஐயா, முந்தி மனது மந்திரிபோலச் சர்வசிரேஷ்டமாயும் சொல்லி இப்போ அந்தமனதையே சர்வநிகிருஷ்டமான நாயாகவும், இப்படி ஒன்றுக்கொன்று ஈசனையும் நீசனையும் ஒருவனையே எப்படி சொல்லக்கூடாதோ அப்படி விரோதமாக நீர்சொன்னது இருக்கிறதே, அதைக்கேட்டஎன்னுடைய மனது சந்தேகசமுத்திரத்தில் முழுகினதாய்த் தபித்துக்கொண்டிருக்கிறதே, அந்தத்தாபத்தைத் தீர்த்து என்னை இந்த சந்தேகசமுத்திரத்திலிருந்து கரையேற்றிவையும் அய்யா வென்றுகேட்ட சிஷ்யனுக்கு, குருநாதன் உத்தரம் சொல்லுகிறார். அதாவது, குழந்தாய்! நீ கேட்டது நல்லசங்கைதான். அதற்கு நான் உத்தரம் சொல்வதைக்கேள். மனதென்பது மூன்று குணங்களையுடையதாயிருக்கும். இதற்குள் தமோகுண ரஜோகுணங்களையுடைய மனது நாய்போலே நிகிருஷ்டமாய்ச் சொல்லப்படும். சத்துவகுணமான மனது மந்திரிபோலே சிரேஷ்டமாயிருக்கும். ஆனால் பஞ்சபூதங்களுடைய சத்துவகுணசமஷ்டியிலிருந்துண்டாயிருக்கிற ஒருமனசே இப்படி சிரேஷ்டமாயும் நிகிருஷ்டமாயும் ஆகக்கூடுமாவென்றால், ஒருமனுஷனே நல்லநடத்தையால் யோக்கியனென்று பேர்வாங்குவதும் கெட்டநடத்தையால் அயோக்கியனென்று பேர் வாங்குகிறான். [எ - தி] ஒரு தாய்வயிற்றில் ராவணன், கும்பகர்ணன், விபீஷணன் மூன்றுபேர்களும் பிறந்தது சமானமானாலும் அவர்களில் ராவணன் ரஜோகுணத்தைப் பிடித்துக்கொண்டு நமக்குமேலாவது நமக்குச்சமானமாவது இவ்வுலகத்தில் ஒருவருங் கிடையாதென்று எண்ணிக்கொண்டு இந்திராதிதேவதைகளையும் அகஸ்தியாதிரிஷிகளையும் அருந்ததிபோலிருக்கிற கற்புடைய மங்கையர்களையும் சதாகாலமும் ஹிம்சித்துக்கொண்டு உலகங்களையெல்லாம் பயப்படும்படி செய்கிற வாக்கையுடையவனாயிருந்ததால் ராவணனென்று பெயரைப் பெற்றுக் கடைசியில் சீதாதேவியையும் சிறைபிடித்துக்கொண்டுபோய் வைத்ததால் ஸ்ரீராமனாலே அவன் சம்மரிக்கப்பட்டதையும்; அவன் தம்பியான கும்பகர்ணன் தமோகுணத்தைப்பெற்றதால் பிணத்துக்குச்சமானமாக ஆறுமாதம் வரை தூங்கி ஒருநாள்விழித்து ஆறுமாசத்துச்சாப்பாட்டையும் ஒருநாளில் சாப்பிட்டுவிட்டு இப்படித்தூங்குகிறதும் விழிக்கிறதுமாயிருக்கிற தமோகுணத்திலிருந்ததால் அவனும் அந்த ஸ்ரீராமனாலேயே சம்மரிக்கப்பட்டதையும்; விபீஷணன் சாதுவாய் அண்ணனான ராவணனுக்குப் புத்திசொன்னதில் அவன் கேளாததால் ஸ்ரீராமனைச் சரணமாக அடைந்து சத்துவகுணத்தால் அவர் கிருபையைப் பெற்றுச் சிரஞ்சீவியாய் வாழ்வதையும்; இன்னும் அசுர குலத்திற்பிறந்த ஹிரணியன் துஷ்கிருத்தியத்தால் விஷ்ணுவால் மரிக்கவும், அவன்மகனான பிரகலாதர் பக்தசிரோன்மணியாக வாழ்வதையும்; குந்திபிள்ளை

யான கர்ணனும் பஞ்சபாண்டவர்களும் குந்திவயிற்றிற் பிறந்தது சரியானாலும் கர்ணன் துரியோதனனோடே சேர்ந்து மரித்துப்போனதையும், தர்மபுத்திராதி ஐவரும் ஸ்ரீகிருஷ்ணபகவானோடே சேர்ந்து க்ஷேமத்தை அடைந்ததையும் கண்டு கொண்டு, நீயும் உன்னுடைய மனதை ரஜோகுண தமோகுணங்களான துஷ்டர்களுடைய சகவாசத்தைவிட்டு நரசிங்க ராம கிருஷ்ணாள்போலிருக்கிற சற்குருவையும் சாதுக்களையும் சரணமாயடைந்து பிழைக்கக்கடவாய்.

## 96- வது தரங்கம்.

மனதுக்கு விஷயங்கிட்டினாலுங் கிட்டாவிட்டாலுந் துக்கம்.

மனதுக்கு எண்ணின விஷயம் லபித்தால் அஹம்பாவதுக்கமும், லபியாவிட்டால் ஆசையாகிறதுக்கமும் வரும். [எ - தி] குழந்தைக்குக் கண்டபக்ஷணத்தை வாங்கிக்கொடுத்தால் வயிற்றுவலித்துக்கமும் வாங்கிக்கொடாவிட்டால் அழுகைத்துக்கமும் வருவதுபோலஅறிக. [இ - து] அஞ்ஞானிகளுடைய மனதுக்கு விஷயலாபத்தையடைந்தாலும் அகம்பாவமாகிறதுக்கமும் விஷயத்தில் நஷ்டம்வந்தால் அழுகையாகிறதுக்கமும் வருமென்று சொன்னீர்களே! ஐயா, பின்னை இந்த இரண்டுக்குள்ளே ஒன்றுதானே வரவேண்டியதாயிருக்கிறது. அப்படியிருக்கும்போது இந்தமனதுக்குச் சுகம் எப்போதுதான் வரும். அப்படி விஷயத்தில் சுகமில்லாவிட்டால் சகலபிராணிகளும் விஷயத்துக்காகவே உத்தியோகமுதல் உழவுவரையிலுள்ள அநேகவிதமான தொழில்களை அநேகவிதமான பிரயாசைப்பட்டுச் சம்பாதிப்பானேனென்று கேட்பாயாகில், அதற்குத் தரம் சொல்லுகிறேன். கேள்:—விஷயத்தில் சுகலேசமுமில்லை. ஆனால் அதை வேண்டுமென்று ஆசைப்படுங்காலத்திலுண்டாகிற சுகத்துக்கு இவனுடைய ஆசையே காரணமேதவிர வேறில்லை. அப்படி இவனுடைய ஆசாரூபமான சுகமும் கடைசியில் துக்கத்திலேயே போய்நிற்கும். [எ - தி] ஒருபுருஷன் ஒரு ஸ்திரீயைப் பார்த்தமாத்திரத்தில் ஆசாரூபமான சுகமுண்டாகிறது, அதன்பின் மேன்மேலும் அவளைப்பார்க்கவேண்டுமென்ற ஆசையும், அதன்பின் அவளோடே பேசவேணுமென்ற ஆசையும், அதன்பின் அவளோடே ஆலிங்கனம் பண்ணிக்கொள்ளவேணுமென்ற ஆசையும், அதன்பின் ஏகாந்தமான ரகசிய ஸ்தலம் வேண்டுமென்கிற ஆசையும், அதன்பின் அவளோடே சம்போகம் செய்யவேண்டுமென்ற ஆசையும், அந்தச்சம்போகத்துக்கு லேபனமுதலான தேகபலம் விருத்தியாகவேண்டுமென்ற ஆசையும், சுகம்போலே தோன்றிக் கொண்டிருந்து பாசிபடர்ந்திருக்கிற குளத்துப்படியிற் கால்வைத்து இறங்கினவன் வழுக்கிக்குளத்தில் விழுவதுபோல யோனியாகிற பாசிபடர்ந்தபடியில் சிசுனமாகிற காலைவைத்தமாத்திரத்தில் குளமாகிறயோனிக்குள் சிசுனமாகிற கால் விழுந்ததால்காயமும்பட்டு ரத்தமுமுண்டாய், அந்த யோனிச்சேற்றிலும்

விழுந்ததால் தேகமுழுமையும் வியாதியாகிற சேற்றுப்பூச்சுடன் பிரயாசைப் பட்டு வெளியேறி, தன்தேகத்தைப் பார்த்துப்பார்த்து இந்தத்தேகத்திலிருந்த சத்தெல்லாம் நிர்ச்சத்தாய்ப் போய்விட்டதுந்தவிர இப்போது அதனால் வந்திருக்கிற வியாதியை என்னமாய் நிவர்த்தித்துக்கொள்ளப்போகிறோமென்ற கவலைரூபமான தீராததுக்கமாய் முடிவதையும் பார்த்துக்கொள்க. இப்படியே நாவுக்குப்பிரீதியான மாங்கனி, லட்டு, ஜிலேபி, பூந்தி, வடைமுதலானவைகளைத் தின்னவேண்டுமென்ற இச்சையுண்டானகாலத்திற் காணப்படுகிற சுகமானது அந்தப்பதார்த்தங்களைச் சம்பாதிக்கவேண்டுமென்கிற இச்சையும், சம்பாதித்த பின் கோளாறன்றியில் அவைகள் பக்குவமாகவேண்டுமென்ற இச்சையும், அப்படிப் பக்குவமானபின் அவைகளை ஒருவருக்குங் கொடாமலும் தெரியாமலும் தின்னவேண்டுமென்கிற இச்சையும், அதன்பின் அநியாயமாய் வயிற்றில் இடமில்லாமல் வயறுநிறைந்துபோய்விட்டதே மிச்சப்பதார்த்தங்களை ராத்திரிகாப் பாற்றிவைத்து இரண்டுகால் நாலுகால்முதலானவைகளையுடைய பிராணிகள் தின்றுபோடுவார்களே என்கிற பயமுண்டாவதுந் தவிர முந்திச்சாப்பிட்டபக்ஷியாதிகள் வயிற்றுக்குள்ளேபோய் பூனை பானைசட்டிகளைஉருட்டுவதுபோல பிராணனைஉருட்டி வயிற்றுவலியையுமுண்டுபண்ணுவதால் அந்த விஷயசுகமானது துக்கமாகவே முடியும். ஆகையாலிப்படிச் சகல விஷயமும் துக்கரூபமானதால் விஷயத்தில் சுகமேயில்லை யென்றறிக.

## 97 - வது தரங்கம்.

மனது அடங்கினால் சகலகருவிகளும் தானே அடங்கும்:—

மனதை ஜயித்தால் இந்திரியங்கள் தானேஜயிக்கப்படும். [எ - தி] ராஜாவைக்கொன்றால் மற்ற ரதகஜதுரகபதாதிகளான சதுரங்கசேனைகளும் ஜயிக்கப்பட்டதாக ஆகுவதுபோலும், ஒருமரத்தினுடையவேரை வெட்டிப்போட்டாற் கொப்பு கிளை யிலைமுதலானவற்றையெல்லாம்வெட்டினதாக ஆகுவதுபோலும், ஒருபுருஷனைக் கழுத்தைவெட்டிப்போட்டால் கைகால் உடல்களை வெட்டினதாகஆகுவதுபோலும், ஏழுமேடை கட்டியிருக்கிற அரண்மனையினுடைய அஸ்திவாரத்தை வெட்டிப்போட்டால் அந்த ஏழுமேடையும் தானே மடமடவென்று சாய்வதுபோலும், ஒருநதிப்பிரவாகம் வருகிறதற்குமூலமான மலைஅருவியை அடைத்து மற்றொருபக்கத்தில் திருப்பிவிட்டால் ஆற்றுப்பிரவாகம் அடங்கிப் போவதுபோலும், ஒருஊரில் எப்பொழுதும் கலகம் நடந்துவருவதில் அதற்குக்காரணனையும் ஒருவருக்கொருவர் குடுமிமுடித்துவிடுகிறவனையும் துஷ்டனையும் கலகக்குருவியாயுமிருக்கிற ஒருதுஷ்டனைச் சம்மரித்தால் அக்கலகங்களெல்லாம் அவ்வூரைவிட்டுக்காணாமல் ஓடிப்போவதுபோலும், ஜடையைப்பற்றியிழுத்தால் தம்பிரான்தேகமுழுமையுங் கிட்டவருவதுபோலும், கோவிலிலிருக்கிற மூலலிங்கத்தை வேரோடேபிடுங்கியெறிந்தால் அக்கோவிலிலுள்ள மற்றப்பரி

வாரதேவதைகளுக்கும் அபிஷேக அலங்கார அர்ச்சனை நைவேத்தியமுதலான பூஜையும் நின்றுபோவதுபோலும், ஒருசூரியன் அஸ்தமனமானால் உலகத்தி லுள்ள சகலஜனங்களுடைய தொழில்களும் ஒய்ந்துபோவதுபோலும், பத்துப் பிள்ளைகளைப் பெற்றுப் பரிபாலனம்பண்ணிவருகிற தாய் இறந்துபோனால் அந் தப்பிள்ளைகளுடைய கொட்டம் ஒடுங்கிப்போவதுபோலும், தேளினுடைய கொடுக்கையை நறுக்கினால் அது உயிரோடேஜீவித்திருந்தாலும் ஒருவரையும் கொட்டமுடியாமல் பிள்ளைப்பூச்சிபோலே போவதுபோலும், பாம்பினுடைய பல்லைப்பிடுங்கினபின் அதுஜீவித்திருந்தாலும் அதுஒருவரையுங் கடியாமலிருப் பதுபோலும், புலியை மந்திரத்தால் வாயைகட்டிப்போட்டால் ஒருவரையும் அது ஹிம்சியாததுபோலும், மேகத்தைக்காற்றுவந்து கெடுத்ததானால் மழை ஒய்ந்துபோவதுபோலும், பிரஹ்மா இல்லாமற்போனால் எழுவகைப்பிறவிக ளான வடிவங்களில்லாமற் போவதுபோலும், மகாவிஷ்ணு இல்லாமற்போனால் உலகசம்ரக்ஷணை யில்லாமற்போவதுபோலும், எமனில்லாவிட்டாற் பிராணி களுக்குச் சாவுவராததுபோலுமறிக. ஒருஜீவனை மற்றொருஜீவன் கொல்லுவது உலகத்தில் பிரத்தியக்ஷமாய்க்கண்டிருக்கும்போது எமன் இல்லாவிட்டால் உல கத்தில் ஒருவருக்குஞ்சாவில்லையென்று சொல்வது எப்படிக்கூடுமென்றால், புரா ணத்தில் எமதூதர் வந்து ஒருமரத்தில் மாட்டிவைத்திருந்த அம்பைத்தள்ளி, அதன்கீழே படுத்திருந்த கர்ப்பிணிஸ்திரீயைக் கொன்றுவிட்டதால் அவள்நாய கன் வழியில்வந்த வேடனைப்பிடித்துப் பாண்டியராஜாவிடத்தில் இழுத்துப் போனதில், அவ்வரசனும் நிஜம்தெரிவதற்காகச் சுவாமியிடத்தில் தெரிவித்த தில் சுவாமியும் அவ்வரசனும் அப்பிராஹ்மணனுஞ்சேர்ந்து இரவில் ஓரிடத்தி லிருக்கும்போது, அந்தஎமதூதர்கள் நேற்றையதினம் மரத்திலிருந்த வில்லைத் தள்ளி ஸ்திரீயைக்கொன்றதுபோல இப்போதுநடக்கிற கல்யாணமாப்பிள்ளை யையும் மாட்டுக்கொம்பில் நாமிருந்து கொல்லப்போகிறோமென்று சொன்ன படி, அவர்கள் ஒருநாளிகைகழித்து மாட்டுக்கொம்பிலேறியிருந்துகொண்டு அந்தக்கல்யாணமாப்பிள்ளையைக்குத்தி நெஞ்சைக்கிழித்துப் பிராணனைக்கொண் டுபோனவுடன் அச்சபையிலிருந்தவர்களெல்லாம் இந்தமாடுவந்து மாப்பிள்ளை யைக் கொன்றுவிட்டதென்று மாட்டையடிக்கிறதைக்கண்ட இப்பிராஹ்மண னுக்குச் சந்தேகநிவர்த்தியாய், அவ்வரசனால் மறுதாரம் மணஞ்செய்துவைக்கப் பட்டாரென்ற கதையைப்பார்த்து இச்சந்தேகத்தை நிவர்த்திக்கக்கடவாய். இதுபோல மனதே சர்வகாரணமாயிருப்பதால் அந்தமனதை யடக்கினாற் சகல மானகருத்தாருத்துவங்களும், கர்மங்களும், ராகத்துவேஷாதிகளும், இந்திரியப் பிரவர்த்திகளும், தாபத்திரயதுக்கங்களும், ஜனனமரணதுக்கங்களும் அடங்கிப் போம். [எ - தி] சுழுப்தி மூர்ச்சை சமாதிகளில் மனது அடங்கிப்போய்விட்ட தால் யாருக்கும் எவ்விததுன்பங்களுமில்லாமல் சுகமாயிருப்பது அனுபவமாய்ப் பார்த்துக்கொள்க.

## 98 வது தரங்கம்.

98 - வது தரங்கம்.

*மனது ஆத்மாவிலே யுண்டாய் ஆத்மாவிலேயே லயிக்கிறது:—*

அஞ்ஞானத்தாலேஆத்மாவே மனதாகத்தோற்றுகிறது என்பதற்கும் மறுபடி ஞானத்தால் அந்தமனது பிரஷ்டமாகிவிடுகிறது. [எ-தி] சமுத்திரஜலமே உப்பானதுபோலும், அந்தஉப்பை காரணமான ஜலத்திற்போட்டபின் ஜலமாவதுபோலவறிக. ஐயா, மனது ஆத்மாவிலுண்டாய் ஆத்மாவிலேயே லயிக்குமென்று சொன்னீர்களே! அப்போது சகலஜீவர்களுடைய மனதும் தண்ணீரிலுண்டான உப்பு தண்ணீரிற்கறைவது எப்படிப்பிரயாசமில்லாமலிருக்கிறதோ அப்படி அப்பிரயத்தினமாய் மனது ஆத்மாவில்லயிக்குமானால், அனாதிகாலம் பிடித்துச் சகலஜீவர்களும் இந்தமனது ஆத்மாவில்லயிக்காததினாலேயே அனந்தகோடி ஜனனமரண துன்பங்களையும், ஆதியாத்மீகமான நாலாயிரத்துநானூற்றுநாற்பத்தெட்டுவிதமான வியாதிகள் ரூபமான தாபத்தையும், இந்திரியங்களுடைய விஷயானுபவம் மேன்மேலும் செய்யவேண்டுமென்று வருகிற ஆசாரூபமான தாபத்தினாலும், ஆதிபௌதீகமான ஈ, எறும்பு, ஓலுங்கு, மூட்டை, தேள், பாம்பு, நட்டுவாக்காலி, புலி, கரடிமுதலான துஷ்டமிருகங்களாலும், ஜலத்திலிருக்கிற முதலை மகரம் திமிங்கிலாதி ஜந்துக்களுடைய பீடைகளாலும், காக்கை கழுகுமுதலான பறவைகளுடைய பீடையினாலும், கள்ளன்முதல் ராஜாவரையிலுள்ள மனுஷர்களாலும் வருகிற ஆதிபௌதீகதாபத்தினாலும், தெய்வீகமான மழை இடி காத்து அக்கினி தண்ணீர்களாலும், மரம் கொப்புகள் முறிந்து விழுவதாலும், கல்லிடறுவதாலும், கோபுரம் மண்டபம் வீடுகள் இடிந்து தலையில்விழுவதாலுமுண்டாகிற ஆதிதெய்வீகதாபத்தினாலும் தபிக்கப்பட்டு வருத்தத்தையடையக் காரணமென்னவென்றால், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:—ஆத்மாவிலுண்டான மனதுக்கு ஆத்மாவில்லயிப்பது பிரயாசமில்லாதிருந்தாலும் மனதினிடத்திலிருக்கிற ஞானதிருஷ்டியை அஞ்ஞானமாகிற காசபடலம் மறைத்துப்போட்டதாலும், ஆவரணமாகிற அந்தகாரத்தால் மூடப்பட்டிருப்பதாலும், ஆத்மாவிடத்திற்கொண்டேவிடுகிற அந்தர்முகமாகிற ராஜமார்க்கத்தைவிட்டு விபரீதபாவனையாற் கற்பிக்கப்படுகிற பகிர்முகமாகிற காட்டுமார்க்கத்திற்போய்ச் சகலஜீவர்களும் ஆத்மாவையறியாமல் அந்தபரம்பரையாய் விஷயத்திற்போய் விழுகிறார்கள். அந்தபரம்பரையாவதேதென்றால், அனாதிகாலத்தில் அனாத்மக்ஞர்களுண்டாய்ப் பகிர்முகர்களாயிருந்துகொண்டு தங்கள் குருட்டுத்தனத்தையறியாமலும் ஞானதிருஷ்டியுள்ளவர்களைச் சரணமாயடைந்து அவர்களிடத்திற்போய் வணங்கமுடியாத அகம்பாவத்தினால் தாங்கள் தாங்களே சர்வக்ஞர்களென்றும் பண்டிதர்களென்றும் கர்வத்தையடைந்து, சுருதி குரு முதலான சன்மார்க்கத்தைச் சுத்தமாய் விட்டுவிட்டுத் தங்கள் மனதுக்கு எதுஒழுங்குபோல் தோன்றுகிறதோ அதுவே தீர்மானமான நல்லமார்க்க

மென்று நிச்சயித்துத் தங்கள் தங்கள் சிஷ்யர்களுக்கும் அந்தமார்க்கத்தையுபதே சித்ததுந்தவிர, பின்னால் உண்டாகப்போகிற ஜீவர்களுங் கெட்டுப்போவதற்குக் காரணமாய் அவரவர்கள் மதானுசாரப்படி சாஸ்திரங்களும் உண்டுபண்ணி வைத்திருப்பதால், சகலரும் சம்சாரமாகிற அந்தகூபத்தில் விழுந்து அதிலிருக் கிற ராகத்துவேஷங்களால் வருத்தப்பட்டுக்கிடக்கிறார்கள். [எ-தி] ஒருமூதேவி யென்பவள் முதலில் ஒருகுருட்டுப்பிள்ளையைப்பெற்று வெளியில் நீ போய் இனிமேல்பிறக்கிற பிள்ளைகளுக்கெல்லாம் ஆதாரமாயிருந்து வழிகாட்டவேண்டு மென்று சொன்னபின், மறுபடி பிறக்கிறபிள்ளைகளெல்லாம் அப்படியே குரு டர்களாய்ப்பிறந்ததாற் பெரியகுருடனுடைய கொடுக்கையை அடுத்தகுருடன் பிடித்துக்கொண்டு அவனுக்குப்பின்னால்வருகிற குருடர்களும் ஒருவர்கொடுக் கையை ஒருவர் பிடித்துக்கொண்டு முன்னேபோகிற குருடனுக்குக் கண்தெரி யாததைப் பின்னேவருகிற குருடர்கள் தெரியாததனால் எல்லோரும் பாழ்ங் கிணற்றில் விழுந்து அவடத்திலிருக்கிற மலைப்பாம்புமுதலானதாற் கடிக்கப் பட்டு எல்லோரும் தபித்துக்கொண்டிருக்கிறார்கள் என்ற கதையாகிறயுக்தியும்; இப்போது சுருதியாகிற தாய் அவித்தையென்ற மூதேவியைப்பெற்று அவள் 'பிராக்ஞன்' என்கிற குருட்டுப்பிள்ளையைப்பெற்று, அவனிடத்திலிருந்து விசு வாதிகளான குருடர்கள்பிறந்து, அவர்களிடத்தில் தைஜசர்களான குருடர்கள் பிறந்தார்களென்பதற்குச் சாக்ஷியென்னவென்றால், தைஜசர்களுடைய அனு பவமானது விசுவர்களுடைய வாசனையும் அபிமானமும் எப்படியிருக்கிறதோ அப்படியே காண்கிறபடியாலும் விசுவர்களும் சுழுப்தி மரணமூர்ச்சைகளில் எந்தவாசனையோடே அடங்கியிருந்தார்களோ அந்தப்படி ஜாக்கிரத்தில் விசுவர் களாய் விவகரித்துக்கொண்டுவருகிற அனுபவபரம்பரையைப்பார்த்து நீயுமந்த அந்தபரம்பரையைவிட்டு அவஸ்தாத்திரயசாக்ஷியான ஆத்மாவை அறியக் கடவாய்.

## 99 - வது தரங்கம்.

துவிதப்பழக்கம் கனவிக்ஷேபமானதால் பிரஹ்மாப்பியாசத்திற்கு விரோ தம். போஜனாதிகள் அப்படியில்லாததனால் இவைகள் பிரஹ்மாப்பியாசத்திற்கு விரோதிகளாகா:—

துவிதசாஸ்திரங்களெல்லாம்பிரஹ்மாப்பியாசத்திற்குவிரோதம். போஜனா திகள் விரோதமில்லை. [எ - தி] குளத்தில் எருமை விழுந்து உழப்புவதாற் சேறாய்ப்போவதும், காற்றினால் அந்தஜலம் கலங்காது, கொஞ்சங்கலங்கினாலும் உடனே தெளிந்துவிடுகிறதுபோலுமறிக. ஐயா, துவிதவிவகாரம் பெரிய விக்ஷேபமென்றும், அதை வைத்துக்கொண்டிருக்கிற புருஷனுடைய சித்தமா னது எருமைமாடு விழுந்த குளம்போலே கலக்கமாயிருக்குமென்றுஞ் சொன் னீர்களே, அப்படித்துவிதவிவகாரம் பண்ணாமற்போனால் சரீரம் ஜீவிப்பதெப்

படியென்று கேட்டசிஷ்பனுக்குக் குரு சொல்லுகிறார். அடே மூடா! துவிதவிவ காரத்தைவிட்டால் எப்படி ஜீவிக்கிறதென்று கேட்டாயே! இவ்வுலகத்தில் கர்ப்பவாசஞ்செய்கிற ஜீவர்கள் என்ன துவிதவிவகாரம்பண்ணி ஜீவிக்கிறார்கள்? பிறந்தபின்னும் என்ன துவிதவிவகாரம்பண்ணிக் குழந்தைகள் ஜீவிக்கின்றன? பயித்தியம் பிடித்தவன் என்ன துவிதவிவகாரம்பண்ணி ஜீவிக்கிறான்? இன்னும் பசுமுதல் எறும்புவரையிலுள்ள ஜந்துக்களெல்லாம் என்ன துவித விவகாரம் பண்ணி ஜீவிக்கின்றன? பிரஹ்மசாரி சன்னியாசிமுதலானவர்கள் என்ன துவித விவகாரம்பண்ணி ஜீவிக்கிறார்கள்? ஆகையால் சரீரத்தை ஜீவிக்கப்பண்ணுகிறதற்கும் மரிக்கப்பண்ணுகிறதற்கும் பிராரப்தகர்மமே காரணமாயிருப்பதால், அப்பிராரப்தகர்மம் இச்சரீரத்தைக் காப்பாற்றுமென்று நிச்சயமாய் நம்பி, தனக்கு வந்திருக்கிற அத்தியாசத்தை நிவர்த்திக்கக்கடவாய். ஐயா, அப்படிப் பிராரப்தகர்மமே காப்பாற்றுமென்று சொன்னதற்குச் சாக்ஷியேதென்றால், ஒருபட்டணத்திலிருக்கிற பெரியபிரபுக்களெல்லாரும் ஒருபிரஹ்மக்ஞானியான யதீசுவரரையும் அவர்சிஷ்யர்களான 50-வித்தியார்த்திகளையும் வைத்து அன்ன வஸ்திரமுதலானவற்றையுங் கொடுத்துச் சிலகாலம் காப்பாற்றிக்கொண்டுவரும்போது, அந்தப்பிரபுக்களுக்கு நாம் அன்னவஸ்திரங்கொடுத்து இவர்களை ரக்ஷித்துவருவதால் இவர்கள் நிர்ச்சிந்தையாய்ப் பிரஹ்மவிசாரம்பண்ணிவருகிறார்கள். அப்படி நாம் கொஞ்சம் பின்வாங்கினால் இவர்கள் ஆலாய்ப்பறப்பது தெரியுமென்று இப்படிப்பேசிக்கொண்ட சங்கதியை அப்பெரியவர் அதையறிந்து சிஷ்யர்களோடேகூட யாத்திரையாய் ஒருகாட்டிற்போகும்போது, மத்தியிலொருதடாகமும் அதைச்சுற்றி ஆலமரமுதலான நிழல்களோடேயுங்கூடியேகாந்தமாயிருக்கிற ஸ்தலத்தைக்கண்டமாத்திரத்தில் குருநாதன் சிஷ்யர்களோடே அந்தத்தடாகத்தில் ஸ்நானஞ்செய்துவிட்டு அந்தநிழலிலேயே உட்கார்ந்து சிஷ்யர்களுக்குச் சிரவணம்பண்ணிவைத்துக்கொண்டு நிர்ச்சிந்தையாயிருக்கும்போது, அதற்குச் சமீபத்திலிருக்கிற ஒரு கிராமத்தில் நடக்கிறசமாராதனைக்கு மற்றொரு கிராமத்துப் பிராஹ்மணன் போகும்போது, இவர்களைப் பார்த்து யாதொருஆதாரமுமில்லாமலிருக்கிறார்களென்று அதிசயப்பட்டுக்கிராமத்துக்குப்போனவுடன் அவ்வூரில் மற்றொருபிராமணன் இறந்துவிட்டதால் சமாராதனைக்கு யத்தனம்பண்ணி சமையலாயிருந்த அன்னாதிபதார்த்தங்களை என்னசெய்வோமென்று தபிக்கும்போது, இப்பிராமணன் இன்னவிடத்தில் இப்படிப்படித்துக்கொண்டிருப்பதைச் சொன்னதும் வண்டியில் அவைகளை வைத்துக்கொண்டுவந்து இவர்களுக்குப் போஜனஞ் செய்வித்ததை மற்றவர்களுந் தெரிந்து தினம் ஒவ்வொருவராய் நடத்திவரும்போது, இச்சிஷ்யர்களுக்கும் நம்மாலேயே குருவுக்கு மகிமையென்று நினைப்புவந்ததையறிந்து அவர்களைவிட்டு யேகாங்கியாய் மலையிலிருக்கிற குகைக்குப்போயிருக்கும்போது, கட்டுச்சாதத்துடன் ஒருவன் வந்து இவருக்கு அன்னங்கொடுத்தபின் அந்தச் சேஷத்தைச் சாப்பிட்டதால் அவனுக்கு வயிற்றுவலி தீர்ந்து அதுமூலமாய்

அநேகர்கள் கடைத்தேறின கதைபோல, நீயும் இப்போது சரீராதிகளை ரக்ஷிக்கும் நிமித்தமான கவலையைப் பிராரப்தகர்மத்தின் வசமாய் ஒப்புவித்து,நீ நிர்ச்சிந்தனாய் நாம் யார்? இந்தப்பஞ்சகோசங்களின் சொரூபமெப்படிப்பட்டதென்று விசாரணைபண்ணி, அவைகள் ஓர் அவஸ்தையில் தோன்றி மற்றோர் அவஸ்தையில் இல்லாமற்போவதால் அவைகள் நாமல்லவென்றும், அறிவாகிய நாம் எப்போதுமிருப்பதால் நாமே சச்சிதானந்தப் பிரஹ்மமென்றுமறிந்து மற்றவைகளில் நானென்ற புத்தியை விடக்கடவாய்.

## 100 - வது தரங்கம்.

விஷயத்தைத் தானாய்விட்டால் சுகம், அதுவாய்ப்போனால் துக்கம்:—

விஷயத்தைத் தானாய்விட்டால் சுகமும், மகிமையும், நிர்ப்பயமும், முக்தியும், நிராசையும், லோக வேத பூஜிதையும், பிரேதத்துவநிவர்த்தியும் உண்டாகும் அந்தவிஷயம் தானே இவனைவிட்டுப்போனால் மேலேசொல்லியவற்றிற்கு எதிர்மறையான லக்ஷணங்கள் உண்டாகும். [எ - தி] தானே ஈஷணத்திரயங்களைவிட்டுச் சன்னியாசம்பண்ணிக்கொள்ளுகிறவர்களுக்கு மேலேசொல்லிய விசேஷங்களுண்டாவதும், அறுத்துப்போனவளுக்கு அவ்விஷயத்தியாகமிருந்தாலும் அவளை ஒருவரும் மதியாமல் நிகிருஷ்டஞ்செய்வதுபோலுமறிக. [இ-து] பிராணன் போகுமுந்தி, நாமே தேகேந்திரியாதிகளிலிருக்கிற அபிமானத்தை விட்டுவிட்டால் பிரஹ்மானந்தமுண்டாகும். [எ - தி] சர்க்கார்வாரண்டுவந்து வீட்டை ஏலம்போடுவதற்குமுந்தியே தான்வாங்கியிருந்த கடன் ரூபாயை மரியாதையாய்க்கொடுத்துவிட்டால் சுகமும் லாபமும் நாணயமுமுண்டாகிறது போலவறிக. [இ - து] மரணகாலத்தில் ஈசுவரன்கொடுக்கிற சன்னியாசத்துக்கும் தானேசெய்துகொள்ளுகிற சன்னியாசத்துக்கும் பேதமுண்டு. [எ - தி] கடன்காரன் வாரண்டுபோட்டு பணம்வாங்குவதுபோலும், மரியாதையாய் இவனாகவே பணங்கொடுப்பதுபோலும்; தானே பேதிபோவதுபோலும், இவனாகவே பேதிக்குச் சாப்பிடுவதுபோலுமறிக. ஐயா, விஷயத்தை இவனாகவிட்டால் நிரதிசயசுகமென்றும், அதுவாய்ப்போனால் சகிக்கக்கூடாத துக்கம்வருமென்றுஞ்சொன்னீர்களே, எப்படியாவது விஷயத்தைவிட்டுப்பிரிவது சரியாயிருக்கும்போது இப்படித்தாரதம்மியஞ்சொல்லுவதற்குக் காரணமென்னவென்றால், அதற்குத்தாஞ்சொல்லுகிறேன் கேள்:—மனதோடேயே யதேஷ்டமாய்ப் பணங்களைச்செலவுபண்ணுகிறவனுக்கு முக்கால்தட்டு தானே தவறிவிழுந்தால் துக்கமுண்டாவதுபோலும்; அநேக வஸ்திரதானஞ்செய்து சுகித்திருக்கிறவனுக்கு ஒருவஸ்திரம் களவுபோனால் துக்கம்வருவதுபோலும்; யாகம்முடிந்தவுடன் அந்தயாகசாலைமுழுமையும் தீயைவைத்துக்கொளுத்திச் சந்தோஷப்படுவதையும், சொக்கப்பான்கொளுத்திச் சந்தோஷமாய்த் தெரிசனம்பண்ணுவதையும், ஊரிலிருக்கிற வீடுகள் தானே தீப்பிடித்துக்கொண்டால் ஊரிலிருக்கிற சகல ஜனங்களும் வாயில் வயிற்றிலடித்துக்கொண்டு அழுவது

போலும்; பகீரதன் முதலான அரசர்கள் தாமே சகல ராச்சியமுதலான சம்பத்துக்களை எல்லோருக்கும் கொடுத்துவிட்டுச் சந்தோஷமாய் ஞான சுகத்தைப் பெற்றிருந்ததும், ஒருகோமுட்டி தன்பெண்ணான மங்காள் இறந்துபோய்கிடக்கும்போது அவன்பெண்சாதி அந்தப்பெண்ணைச் சுட விடமாட்டேனென்று அழுகும்போது, அக்கோமுட்டி தன்மனைவிக்குச் சமா தான நிமித்தமாய் வல்லக்காட்டில் வைத்தியனிருக்கிறான், அவனிடத்தில் இந் தப்பெண்ணைக்கொண்டுபோய்விட்டால் இந்தவிபாதியைத் தீர்ப்பானென்று சொன்னதைக்கேட்ட அவளும் அப்படியேகொண்டுபோய் சொஸ்தம்பண்ணி வைத்துக் கூட்டிவாருங்களென்று அப்பிணத்தை விட்டபின் அதைத்தூக்கி போய் மயானத்தில் எரித்துவிட்டு வீட்டுக்குவந்து மனைவிக்கும் சமாதானமாவ தற்கு“வைத்தியனிடத்தில் விட்டுவந்திருக்கிறேன் ஒருமண்டலத்தில் சௌக்கியப் படுத்தி அனுப்பிவைக்கிறதாகச் சொல்லியிருக்கிறான்” என்றசொல்லை அவள் நம்பியிருக்கும்போது, ஒருவித்தியார்த்தி இந்தஉளவைத்தெரிந்து அவ்வீட்டிற் குப்போய் மங்காள்தாய் ஆரென்றுகேட்க, அவள் ஓடிவந்து நான்தான் என்று சொன்னதும், அவளுக்குத் தேகஞ்சௌக்கியமாய்விட்டதால் நகைகளைப்பெட்டி யோடே வாங்கிவரச்சொன்னாளென்று சொன்னதும், அவள் பெட்டியோடே நகையுஞ்சேர்த்துக்கொடுத்தவுடன் வாங்கிப்போனபின், கோமுட்டிவந்ததும் இவள் நகையைஅனுப்பிவைத்திருக்கிறேனென்று சொன்னதும் குதிரையின்மே லேறி வேகமாய்ப்போனதும் அவன் ஆலமரத்திலேற இவனுமிறங்கி அம்மரத்தி லேறும்போது, விழுதுவழியாயிறங்கிக் குதிரையிலேறிப்போகிறதைக்கண்டு இவன் “மங்காளிடத்திற்போய் ஒய்வித்தியார்த்தியே! அம்மா பெட்டியோடே நகைகளைக்கொடுத்துவைத்தாளென்றும், அய்யா ஆயிரம்ரூபாய்க்குதிரையைக் கூடக் கொடுத்தனுப்பிவித்தாரென்று சொல் என்று பரிதாபத்துடன்சொல்லி அனுப்பிவித்த கதைபோலுமென்றறிந்து தானே தனக்கன்னியமான விஷயங் களைத் தியாகம்பண்ணினவனுக்கே சுகம்வருமென்றும் அப்படிச் சகலசங்க பரித்தியாகம்பண்ணாமலிருக்கும்போது அந்தவிஷயங்கள் தாமாகவே இவனை விட்டுக்கழியுமானால் அப்போதுண்டாகிற துக்கத்துக்கு ஒருகாலும் நிவர்த்தி யில்லையென்பதற்குயுக்தி. உலகத்தில் திருடுவதும் தாசிகமனம்பண்ணுவதும் மகத்தானபாபமென்றும், அப்படி அவைகளைச்செய்தவர்கள் ஈசுவராபராதிக ளென்றும், கொடியநரகத்தில் விழுவார்களென்றுஞ்சொல்லியிருந்தாலும், ஈசு வரனே சுந்தரமூர்த்திக்கும் பத்திருக்கும் சாரசோரங்களைச்செய்துகொடுத் திருப்பதால் அவர்கள் பத்தசிரோமணிகளாக ஆனகதையைக்கண்டுகொள்க. இதன்கருத்து,—அவர்கள் தங்களுடையஜீவத்துவத்தை சிவத்துக்கு விட்டுவிட் டதே இவ்வளவு மகிமைகளுண்டாவதற்குக் காரணமென்றறிக.

## 101 - வது தரங்கம்.

**விஷயம் வாசனைபாய்விட்டதால் தன்சுவாதீனமில்லை:—**

ஜாக்கிரமும் சொப்பனமும் மனோராஜ்ஜியமும் தன்னுடைய கற்பனையா யிருந்தாலும் இந்தப்புருஷன் நெடுங்காலமாய்ப் பழகிவந்திருக்கிற வாசனபர வசனாய்ப்போய்விட்டதால் இந்தஅவஸ்தைகளை தனக்கு வேண்டியபடி கற்பித் துக்கொள்ளவும் தனக்கு வேண்டாதபடி வருகிறவைகளைத் தள்ளவும் முடியாது. [எ-தி] கள்ளு கஞ்சா புகையிலை முதலானவற்றைச் சாப்பிடுகிறதற்குத் தானே சுயமாய் ஆரம்பித்ததாயிருந்தாலும் அந்தவாசனை பழக்கத்தால் சித்தத்திலேறி விட்டால் அதன்பின் அவனாலேயே அவைகளை விடமுடியாதது போலவறிக. [இ - து] விஷயவாசனையோடேகூடி விசேஷப்பிரவர்த்திபண்ணுகிற மனது குரு உபதேசத்தால் நில்லாது. [எ - தி] மிகுந்தபிரவாகமானது ஒருபெட்டிமண்ணைப் போட்டால் கட்டுப்படாததுபோலும், பெண்ணானையானது பூனைசிசுனத்தை லக்ஷியம்பண்ணாததுபோலும், சர்வகந்தலைத் தைத்துமுடியாததுபோலும், எண் ணத்தொலையாதகடன்காரனுக்குச்சீமான்கூட ருணவிமோசனஞ் செய்யமுடியா ததுபோலும், அடாத்காரமாய் அவிசாரி ஆடுகிறவளை அடக்கமுடியாதது போலும், கொம்பானைக்குக்கோவணம் கட்டமுடியாததுபோலுமறிக. [இ - து] ஒருவிஷயசங்கற்பத்துக்கு இடங்கொடுத்தால் அதுகோடிவாசனையாகி இவனைத் துக்கப்படுத்தும். [எ-தி] ஒருநரிவர இடங்கொடுத்தால் கோடிநரிகளை அது வர வழைத்து இவனைக்கடித்துக் கொன்றுபோடுவதுபோலுமறிக. [இ-து] அனாத்ம வாசனை குரு சாஸ்திரங்களுடைய ஆக்ஞையைத்தள்ளிப்போடும். ஒரு அல்ப மான பொடிவாசனை குருசன்னிதியில் விட்டேனென்று சொன்னவனையும் ரகசி யமாய் வாங்கிப்போடும்படிசெய்ததானால் அனாத்மவித்தியாவாசனை இவனை இழுப்பதில் கேட்கவேண்டியதில்லை. [எ - தி] ஐந்து வயதுள்ள பெண்ணி னுடைய யோனியே ஆளைமயக்குமானால் இருபதுவயதுடையபெண்ணினுடைய யோனிமுதலான அவயவங்கள் ஆள்களை அதில்தள்ளிமயக்குவதில் கேட்கத் தேவையில்லாதது போலவறிக. [இ - து] விஷயம் சித்தத்தில் வாசனையாக ஏறும். வெளியிலிருக்கிற நாமரூபமே சித்தத்தில் வாசனரூபமாக ஏறுகிறது [எ - தி] தீபஜுவாலையே சட்டியில் கரியாயேறி மையாகுவதுபோலும், வெளியி லிருக்கிற அழுக்கே வஸ்திரத்திலேறுவதுபோலுமறிக. [இ - து] விஷயசன்னி தியில் இந்திரியம் மனசுகளை நிக்ரகம்பண்ணுவது பிரயாசம். [எ-தி] யானைக்கு மதங்கொண்டவேளையில் மாவுத்தனாலும் துறட்டி சங்கிலிகளாலும் அந்த யானை யைக் கட்டுவது பிரயாசமாவதுபோலும். பிறந்தவீட்டிலிருக்கிற செல்வப் பெண்ணை புருஷனால் கட்டுப்பாடு செய்வது முடியாததுபோலுமறிக. [இ - து] ஞானத்திற்குக் குருவாக்கிலிருந்து வருகிற உபதேசமே முக்கியசாதனம். [எ - தி] ராஜாவின்கிருபையைப்பெறுவதற்கு மந்திரியினுடைய சிநேகமே முக் கியமாயிருப்பதுபோலும்; மற்றகர்மாதிகள் செய்வது சேவகர்முதலானவர்கள் இஷ்டம்போலுமறிக. [இ - து] விஷயாசை யதிகப்பட்டால் வரம்பு கீழ்மேல் மானபிமானம் ஒன்றுந் தோற்றாது, [எ - தி] நதியில் பிரவாகமதிகப்பட்டால் பள்ளம் மேடு யானை பூனை மலங்கந்தம் ஒன்றும் லக்ஷியமன்றியில் தள்ளிக்

கொண்டு போவதுபோலும், லாகிரிபதார்த்தம் அதிகமாய்க் கொண்டவனுக்கு யாதொருதாரதம்மியமுந்தெரியாமல்மூக்குக்குநேரேவழியென்பதுபோலேதான் போனதே வழியாகப்போவதுபோலுமறிக.[இ - து]சித்தத்தில் அஞ்ஞானதிவாசனைகளுடன்கூடினபுருஷன்விஷயத்தில் சம்பந்தப்பட்டால் உடனே அந்தவிஷயவாசனை சித்தத்தில் பற்றிப்போம். [எ - தி] அதிககாமியாயுள்ளவளுக்குப்புருஷ போகம் சம்பவித்தால் அதில் அவள்சித்தம் பற்றிப்போவதுபோலும், பரவசமுள்ள பக்தனுக்கு உபாசனாமூர்த்தி பிரசன்னமான காலத்தில் அதில்பற்றுவது போலுமறிக. [இ - து] சித்தத்தில் விஷயவாசனையும் விஷயநினைப்புமுள்ளவனுக்கு வாக்மௌனம் நிலைத்துச்சுகங்கொடாது [எ - தி] ஒருபடிவிளக்கெண்ணெயும் ஒன்றரைப்படி சாதமும் சாப்பிட்டவன் கௌபீனத்தையிறுக்கிக்கட்டினதினால் மலபாதையில்லாமல் சும்மாயிருந்து சுகப்படாதவன் போலவறிக. [இ - து] வாசனாபரவசனாயிருக்கிறவன் எவ்வளவு பிரஹ்மவிசாரம் செய்தாலும் தேகாத்மபுத்திபோய் தன்னிலையில் நிற்கான். [எ - தி] ரயில்விசையைத் திருகிவிட்டிருக்கும்போது பின்னாலே எவ்வளவு பலமாயிழுத்தாலும் இவனையுஞ் சேர்த்து அது இழுத்துப்போவதுபோலவறிக. [இ - து] விஷயம் மிகுந்த பழக்கத்தால் வாசனையாகிவிட்டால் அந்தமனசை நிக்ரகம்பண்ணுவது அசாத்தியமென்று சொன்னீர்களே! அப்படியானால் இவ்வுலகத்திலுள்ள சகலமானஜீவர்களும் அநாத்யவித்யாவாசனையால் கட்டுப்பட்டுக்கொண்டிருக்கிற சமுசாரபந்தத்தைவிட்டு எப்படிக்கரையேறப்போகிறார்கள்? ஜீவன்முக்திதானெப்படிவரப்போகிறது? என்று என்மனதில் மகாபயமுண்டாயிருக்கிறதே, இதற்கு நானென்ன செய்வேனென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள். ஆகையினாலேயே திரிவித உலகத்தில் அரிதொரு ஞானியென்ற வசனத்தினாலும், இப்போது இந்த ஜகத்திலுள்ள சகலமான ஜீவர்களும் கங்கா நதியினுடைய பிரவாகத்தில் சுழிவழியே சுத்திக்கொண்டு பரதவித்து அந்தச்சுழியைவிட்டு மற்றொரு சுழியைப்போயடைந்து இப்படி ஓயாமல் சுற்றிக்கொண்டிருக்கிற அநேககோடி புழுக்களில் அபூர்வமாய் ஓர்புழு புண்ணியகர்மமாகிற காற்றினால் படித்துறையோரத்தில் தள்ளப்பட்டு, அச்சமயத்தில் ஜீவகாருண்யமுள்ள கருணாநிதியான ஒருபுருஷன் ஸ்நானத்துக்குவந்து இறங்கினகாலத்தில் இந்தப்புழு அவன்காலில்போய் விழுந்தமாத்திரத்தில், அந்தப்புழுவை அதிலிருந்து கரையேற்றி அந்தக்கரையிலிருக்கிற மரத்தின் நிழலில் கொண்டுபோய்விட்ட மாத்திரத்தில், அந்தப்புழுவானது சிரமமெல்லாந் தீர்த்துக்கொண்டு சுகமடைந்தது போல இந்தச்சம்சாரமாகிறநதியில் ஜனனமரணமாகிய அலைகளோடே கூடிக்கொண்டிருக்கிற அநாத்மவாசனைகளுடைய வேகமாகிற பிரவாகத்திலிழுக்கப்பட்டுப் பரவசர்களான ஜீவர்களாகிற புழுக்கள் ஜன்மமாகிற சுழியில் சுற்றிக்கொண்டிருக்கிறதும் கர்மமாகிறகாற்றினால் அந்தச்சுழியைவிட்டு மற்றொரு ஜன்மமாகிற சுழியில் போய்ச்சேர்ந்து அதிலேயே வெகுகாலஞ் சுற்றிக்கொண்டிருந்து, இப்படியே அனந்தகோடிஜீவர்களாகிறபுழுக்கள்அனந்தகோடி

ஜன்மங்களாகிற சுழிகளில் அனந்தகோடிகாலமாய்த் தபித்துக்கொண்டிருப்ப தில், எவனே ஒருபுருஷன் சத்கர்மபரிபாகமாகிற நல்லகாற்றிஞற் சம்சாரநதி யின் சாதனசதுஷ்டயமாகிற படித்துறையில்வந்து சேரவும், அங்கே குருநாதனு கிற தயாளுவின் காலில் அதில் ஒருஜீவனுகிறபுழு வந்து விழுந்தமாத்திரத்தில் அவர் ஜீவனுகிற புழுவுக்கு கைகொடுத்து அச்சமுசாரநதியைவிட்டுக் கரை யேற்றிச் சாதுசங்கமாகிற மரத்தின் நிழலில் இவனைச்சேர்த்துவைத்து, பஞ்ச கோசவிவேகமாகிறகுளிகையால் இவனுடைய தாபங்களையெல்லாந்தீர்த்து, இவ னுடைய ஆத்மாவை சாக்ஷாத்காரமாயறியும்படி செய்வதால் வாசனக்ஷயஞ் செய்யவேண்டியது அவசியமென்றறிந்து சற்குருவைப் பிரியாமலிருக்கக் கடவாய்.

## 102 - வது தரங்கம்.

விஷயத்தில் துக்கமே மிகுதி:—

விஷயசுகம் ஆயிரந்துக்கத்துக்குள்ளிருக்கும். [எ-தி] பெண்விசாரிப்பது முதல் அவள்சாகும்வரையில் வரப்பட்ட அனந்தகோடிதுக்கங்களுக்குள் தன் பிராணுபகாரமான சுக்கிலமோசனகாலத்திலுண்டாகிற சுகம்போலேதோற்று கிறதே விஷயசுகமாம். [இ - து] சன்னியாசிக்கு பிக்ஷைக்குப்போனவிடத்தில் ஸ்திரீயைக்கண்டமாத்திரத்தில் போகயிச்சையுண்டாஞல், அவளோடேஎப்ப வும் கட்டிப்புறளுகிறவனுக்கு மயக்கமுண்டாவதற்குக் கேட்கத்தேவையில்லை. [எ - தி] ஒருபொட்டுச்சாராயம் நாவில்விழுந்தவனுக்கே மயக்கம்வருமாஞல் குடத்தோடேசாப்பிட்டவனுக்குக் கேட்கவேண்டியதில்லாததுபோலும், வெளி யில்வயிற்றில் விளக்கெண்ணெய்தடவினதினுல் பேதியாகுமாஞல், ஒருபடிவிளக் கெண்ணெய் உள்ளேசாப்பிட்டவனுக்குப்பேதியாவதில் கேட்கத்தேவையில்லா ததுபோலுமறிக. [இ - து] மலக்குழியிலேயிறங்கினஜனங்கள் ஒருவனுக்கொரு வன் தாரதம்மியமாயிருக்கிறதுபோல ஜீவர்களுக்கு விஷயசுகதுக்கம் தாரதம் மியமாயிருக்குமென்றறிக. [இ - து] பிரஹ்மவிசாரமும் விஷயாசையுடனுசெய் கிற லோகவிவகாரமும் ஒருமுமுக்ஷு வைத்துக்கொண்டுவந்தால் கடைசியில் அஞ்ஞானந்தான் மிஞ்சும். [எ - தி] அவுஷதஞ்சாப்பிடுகிறதற்கும் அபத்தியஞ் செய்வதற்கும் சரியாய்ப்போய் பழையவியாதி மிஞ்சுகிறதுப்போலும், இரண்டு ரூபாய்சாமான்வாங்கிக் கணக்கில் கையெழுத்து அப்படியேபோட்டுவந்தவன் திருட்டுத்தனமாய்ப்போய் அந்தக்கணக்கிலிருக்கிற இரண்டை மேலேஇழுத் துக் கால்ரூபாயாகச்செய்துவந்தபின், கடைக்காரன் அந்தக்கணக்கைப்பார்த்து இவன் மோசஞ்செய்திருக்கிருனென்று தெரிந்து கீழேயுமிழுத்துவிட்டதால் எட்டுரூபாயாய்ச்செய்தபின், இருவருங்கணக்கைப்பார்க்கும்போது இவன் கீழேயார்இழுத்தாரென்றுகேட்க அவன் மேலேஇழுத்ததுங்கீழேயிழுத்ததுந் தெரியாது எட்டுரூபாயைக் கணக்கில்கண்டபடி வையென்றுகேட்டவுடன், இவ னுகவே நான் மேலேஇழுத்ததற்கும் நீ கீழேயிழுத்ததற்குஞ்சரியாய்ப்போய்

விட்டது பழயஇரண்டுரூபாயே மிச்சமென்று தீர்த்துக்கொண்டகதைபோலும், அப்புயிச்சின்திகின்னு அதரபானம்சேசின்திகின்னுசரி மொட்டகுடிசின்திலாப மென்று சொன்ன கோமுட்டிகதைபோலுமறிக. [இ - து] அவிவேகி பஞ்ச விஷயத்தை எவ்வளவுகாலம் இராப்பகல்பாராமல் அனுபவித்தாலும் ரசமில்லை. [எ - தி] கரும்புச்சக்கையை எவ்வளவுகடித்தாலும் அதில் கொஞ்சமும் ரசம் வராததுபோலவும், கன்னிகைக்கு எவ்வளவுஅலங்காரம்பண்ணி அம்சதூளிகா மெத்தையின்மேல் கொண்டுபோய்ப்படுக்கப்போட்டு மேலுங்கீழுமாய்க்கட்டிப் புறண்டாலும் சுகம்வராததுபோலும், நாடகத்தில் குருடனைக்கொண்டுபோய்ச் சிம்மாசனத்திலுட்காரவைத்தாலும் அவனுக்கு அக்கூத்தின் ஆட்டம் ரூபம் அபினயமுதலானவை தெரியாததால் சந்தோஷம்வராததுபோலுமறிக. விஷயம் நடுவில்மட்டும் சுகம்போலத்தோற்றும். விஷயானந்தம் முன்னும்பின்னும் துக்கமாயும் நடுவில்மட்டும் சுகப்பிராந்தி. [எ – தி] குழந்தை முன்னும்பின்னும் அழுதுகொண்டிருந்து மத்தியில் தூங்குங்காலையில் சும்மாயிருப்பதைச்சுகமென்று எண்ணுவதுபோலும், மலம் வந்தபொழுதும் மழைபெய்ந்தபொழுதும் நாறிக்கொண்டிருந்தும் மத்தியில் உலர்ந்திருக்கும்போது நாறுமலிருப்பது போலும், சுக்கிலமோசனத்துக்கு முந்தியும்பிந்தியும் துக்கங்கொடுத்து மோசன காலத்தில்மட்டும் சுகம்போலக்காணப்படுவதுபோலுமறிக. [இ - து] ஆனால் குழந்தைகளுக்கு ராஜாவைப்போலே சுகமிருக்கிறதாகச் சொல்லப்பட்டிருக்கிறதேயென்றால்,—அது அன்னபானாதியைக்குறித்துச் சம்பாதிக்கிறகவலையில்லாததைப்பற்றிச் சொல்லியிருக்கிறது. [எ - தி] சாகக்கிடக்கிறவன் அவதியை விட்டுத் தூங்குகிறவன்போல் சற்றேயிருந்தால் ராஜாவைப்போல இப்போது சுகமாயிருக்கிறானென்பதுபோலவறிக. [இ - து]யாராவது நஞ்சைச் சாப்பிட்டு உயிரோடேயிருந்தால் நாமுமதைச்சாப்பிடலாம். அப்படிப்போல ஸ்திரீ முதலான விஷயசுகத்தையனுபவித்து யாராகிலும் நித்தியசுகமடைந்திருந்தால் அதற்கு நாமும் எத்தனம்பண்ணுவோம் சொல்? [இ - து] பணத்தினாலே மோக்ஷம் வாராது. [எ - தி] மயக்கவஸ்துவால் புத்திமயக்கம் போகாதது போலவென்றறிக. [இ - து] விஷயத்தில் எவ்வளவு காலஞ்சிரமப்பட்டாலும் சுகம் வராது. [எ - தி] பாடிப்பாடிக்குத்தினாலும் பதர் அரிசியாகாததுபோல வறிக. [இ - து] ஐயா, விஷயத்தில் எவ்வளவுகாலஞ்சிரமப்பட்டு அலைந்தாலும் துக்கமேகடைசியில் மிச்சமாகுமேதவிர சுகலேசமும் வாராதென்று சொன்னீர்களே! அப்படியிருக்கும்பக்ஷத்தில் சகலஜீவர்களும் விஷயசுகத்துக்காகவே பாமரவியாபாரம் எக்ஞாதிகர்மவிவகாரம் பூஜைமுதலான பக்திவிவகாரமும் சிரமப்பட்டுச்செய்யக் காரணமென்னவென்றால், அதற்குச் சமாதானஞ்சொல்லுகிறேன்கேள்:—அப்படிச்செய்கிறவர்களெல்லாம் அஞ்ஞானமயக்கத்தில் கிடக்கிறவர்களா? அதிலிருந்து ஞானஜாக்கிரத்தில் விழித்தவர்களா சொல்? என்று கேட்டதற்குச்சிஷ்யன் சொல்லுகிறான். அஞ்ஞானமயக்கமென்பது இன்னதென்று தெரியவில்லையே, அதிலிருந்துவிழித்துக்கொள்ளுகிற ஞானஜாக்

கிரமானது இன்னவிதமென்று தெரியவில்லையே, அவைகளைத் தாங்களே விரித்துச்சொல்லவேண்டுமென்று கேட்கிற சிஷ்யனுக்குக் குரு சொல்லுகிறதாவது, சக்கிரவர்த்தியாய் இந்தமனுஷலோகத்திலிருக்கிற சகலவிதமான ஆனந்தத்தையுமனுபவிக்கிற மகாராஜனானாலும், பிரகஸ்பதிக்குச்சமானமான புத்திசாலியாய்ச் சர்வசாஸ்திரசம்பன்னனாயிருக்கிற வித்துவானானாலும், ஹனுமாருக்குச்சமானமான பலசாலியானாலும், படுத்து நித்திரைபண்ணுங்காலத்திலுண்டாகிற சொப்பனாவஸ்தையில் அந்தராஜன் பசியால் பிக்ஷைக்குப்போனவிடத்தில் பிக்ஷைகூடக்கிடையாமல் திண்டாடித்திரிவானேன்? அந்தவித்துவான் அக்காலத்தில் மூடனுக்குக்கூடப் பதிற்சொல்லமுடியாமல் முட்டாள்போலப் போவானேன் சொல்? அந்தப்பலசாலியானவன் கையாலாகாத கிழவனாலடிபட்டுக் கீழேவிழுகிறதுபோலக்காணுவானேன் சொல்? அவர்கள் மூன்றுபேர்களும் விழித்தபிற்பாடல்லவா மகத்தானராஜசுகத்தையும், மகத்தானவித்தையையும், மகத்தானபலத்தையுமடைவது. அதுபோலச்சகலரும் பிரஹ்மமாயும் சதா ஆனந்தசொரூபமாயுமிருந்தாலும், தான்பிரஹ்மமென்பதை மறந்திருக்கிற அஞ்ஞானநித்திரை செய்யுங்காலத்தில் ஜீவேசுவர ஜகத்துக்களைக் கற்பித்துக்கொண்டு, அதில் தான் ஒரு சரீரத்தையுடைய ஜீவனாயும், தன்னைப்போல அநேகஜீவர்களும் அநேகவிதமான ஜகத்துக்களையும் வாஸ்தவமாய் நிஜமென்று நம்பி அவ்விடத்திலுள்ள பதார்த்தங்களைச் சம்பாதிக்க எத்தனிப்பதும், அதற்குச்சாதனமான சரிதை கிரியை யோக ஞானங்களைச் சிரமப்பட்டு அப்பியாசிப்பதாகவுந் தோற்றும்; ஆத்மாவே நானென்கிற ஞானஜாக்கிரத்தில் விழித்தானேயானால் அதற்குப் பிற்பாடு இந்தத்தேகத்தையும் நானென்றெண்ணாமல் மற்றஈசுவர ஜீவஜகத்துக்களைச் சுத்தப்பொய்யென்றறிந்திருப்பதால் இந்த ஜகத்தில் மனுஷானந்தமுதல் ஈசுவரானந்தம் வரையிலுள்ள விஷயானந்தங்களை அனுர்தஜடதுக்கமாய்க் கண்டிருப்பவனெவனோ அவனே ஞானஜாக்கிரத்தில் விழித்தவனென்றறிந்து நீயும் விஷயத்திலொருகாலும் எள்ளளவுஞ்சுகமில்லை யென்றறிக.

## 103 - வது. தரங்கம்.

விஷயத்தில் மயங்குவதற்கு மூன்றுகாரணம்:—

விவேகி விஷயத்தில் மயங்குவதற்கு மூன்றுகாரணம், வெகுநாள் பழகினவாசனை, 1, அதிலுள்ள தோஷதிருஷ்டியாலருசிதோன்றினாலும் பிரயாசைப்பட்டுச் சம்பாதித்தோமே யென்ற பரிதாபம், 2, லோகத்தாரொப்பந்தமிருக்கவேணுமென்ற கட்டுப்பாட்டைநம்பி மானத்துக்காகக்கட்டுப்பட்டிருக்கிறது. 3. [எ-தி] விபசாரியானஸ்திரீயோடே தெரிந்தபின்னுஞ்சேர்ந்திருப்பதற்கு மூன்றுகாரணம், அவளோடே வெகுநாள் நல்லவளென்று பழகினவாசனை, 1, அவளுடைய நடத்தைப்பிசகு தெரிந்து மிரண்டாயிரம்மூவாயிரம்ரூபாய்வரை செலவு செய்து

கல்யாணஞ்செய்தோமே இவளைத்தள்ளினாற் சோற்றுக்குத்திண்டாடவேண்டுமே யென்றபரிதாபம். 2, லோகத்தார் கேலிபண்ணுவார்களே யென்றமானத்துக்காக அவளைத்தள்ளாமல் வைத்திருப்பது (3) போலவறிக. ஐயா, சகலஜீவர்களும் விஷயத்தில் துக்கம்வருவதுதெரிந்திருந்துமதை விடமுடியாமல் அதிலேயே மயங்கிக்கிடக்கிறார்களென்றும், அப்படி மயங்குகிறதற்கு மூன்றுகாரணமிருக்கிறதாகவுஞ் சொன்னீர்களே, உலகத்தில் எந்தப்பிராணியாவது தனக்கு விரோதமாயிருக்கிற சத்தங்களைப்பிரியமாய்க் கேட்பானா? சகிக்கக்கூடாத உஷ்ணத்தோடேகூடியிருக்கிற எண்ணெய்ப்பாத்திரத்தைக் கையில் தூக்கிக்கொண்டிருப்பானா? தன்னைக்கொல்லுகிறதாயிருக்கிற புலி கரடி பாம்புகளைக் கண்டோடாமலெதிரேயிருந்துகொண்டுவேடிக்கைபார்ப்பானா? தன்னைக்கொல்லுகிறதான நஞ்சைப் பிரார்த்தித்துக்கொடுத்தாலுமதை வாங்கிச் சாப்பிடுவானா? அசிங்கியமாயுந் துர்க்கந்தமாயுமிருக்கிற மலமூத்திரங்களை மோந்துபார்ப்பானா? தனக்குக்கெடுதிவரும்படியான சொல்லைச் சொல்லுவானா? தனக்குக்கெடுதியான வேலைகளைச்செய்வானா? தன்னையடிக்கிற இடத்துக்கு நடந்துபோவானா? மிகுந்த ஆபாசமுள்ள சக்குசுமுதலான இடங்களிற்பிரியமாய் மலமூத்திரவிசர்ச்சனம்பண்ணப்போவானா? இப்படி மூடர்கள்கூடத் தமக்கு விரோதமான சங்கதிகளிற் பிரவர்த்திக்காமலவைகளைவிட்டு விலகி யோடிப்போகும்போது, விவேகியானவன் விஷயத்திலுள்ள தோஷமுதலானவற்றைத் தெரிந்திருந்துமெப்படி விஷயத்தில் மயங்குவனென்று கேட்பாயாகிலதற்குச் சமாதானஞ்சொல்லுகிறேன் கேள் :—ஒருநாய்குலைக்கிறசப்தம் பயங்கரமாயும் அர்த்தமில்லாததாயுமிருக்கிற குலைச்சலையுடையதென்று தெரிந்திருந்தும் நாயைக் கஞ்சிகருவாடுமுதலானதைப்போட்டு ஏன் வளர்க்கிறார்கள்? ஸ்திரீகளுடையசரீரம் எப்பொழுதுஞ்சமயல்பிறையில் தீக்குச்சமீபத்திலிருந்து சமைப்பதால் நெருப்புக்குச்சமானமாகச் சுடுவதுதெரிந்திருந்தாலும் அவளைப்பிரியத்துடன் ஆலிங்கனம்பண்ணிக்கொள்ளுவானேன்? அவளுடைய ரூபமானது மயிர்முதல் மலம்வரையில் அசிங்கியமானரூபத்தையுடையதென்றும், நம்முடைய பிராணாதாரமானசுக்கிலமுங் கண்ணாற்பார்த்தமாத்திரத்தில் கழன்றுபோகுமென்று தெரிந்திருந்தும், அவளுடையயோனிமுதலான அவயவத்தில் மூத்திரம் ரத்தமுதலானஅசிங்கியம் வருவதுதெரிந்திருந்தும், அந்தஸ்தானங்களை ஸ்நானகட்டத்திலொளிந்துகொண்டிருந்து பயந்து பார்ப்பானேன்? வடைமுதலானவைகளைத்தின்றால் வயிறுவலிப்பது அனுபவமாயிருந்தாலுமதை யேன் திங்கிறார்கள்? அப்படியே சாராயங்குடிக்கிறதும், புகைச்சுருட்டு உக்காபொடிமுதலானவைகளைச் சாப்பிடுவதாலுங் குடிப்பதாலும் போடுவதாலுமுண்டாகிற நாற்றங்கள் தனக்கும் அன்னியர்களுக்குந் துர்கந்தத்தைக் கொடுப்பதுதெரிந்திருந்துமவைகளை யேன் அனுஷ்டிக்கிறார்கள்? ஆகையால் விஷயத்தில் தோஷந்தெரிந்திருந்தாலும், வெகுநாள்பழகின வாசனை பலமாயிருப்பதாலும், வர்த்தமானத்தில் தாற்காலிகமாக சுகம்போலே தோற்றுவதாலும்,

லோகவாசனையாலும் விஷயத்தைவிடுவது வெகுபிரயாசமென் றறியத் தக்கது.

104 - வது தரங்கம்.

இந்தஜகத்து முன்னும்பின்னுமில்லாததாற் பொய் :—

இந்த ஜகத்து முன்னும்பின்னுமில்லை, மத்தியிலும் விசாரித்தாற் காணமற் போவதாற் சுத்தப்பொய். [எ - தி] கானல்ஜலம் சூரியோதயத்துக்கு முன் னும் சூரியாஸ்தமனத்துக்குப்பின்னுமில்லாமல் மத்தியிற் பொய்யாய்த்தோற்று வதுபோலும், சிலாமயஸ்வாமிகள்போலுமறிக. [இ - து] மாயைக்குச் சொரூப மாகிய பஞ்சவிஷயங்களைப் பொய்யென்றறிவதே மாயையைக்கொல்லுகிறவுபா யம், மற்றெவ்விதத்தாலுமதுசாகாது. [எ - தி] படிகமண்டபத்திற் பிரதி பலித்திருக்கிற தோற்றத்தைப்பொய்யென்று பார்ப்பதே கெடுப்பதல்லாமற் மற்றப்படி கெடுக்கமுடியாதென்றறிக. [இ - து] இந்தஜகத்து முயற்கொம்புக் குச் சமானமென்பதற்குச் சுருதியாவது,—சகலஜகத்தும் குருவும் சிஷ்யன் முதலானதுமில்லவேயில்லை யென்பதுதான். யுக்தியாவது,— விழித்தவனுக் குச் சொப்பனம் பொய்யாய்ப்போவதுதான். அனுபவமாவது,— ஓரவஸ்தை யில் மற்றோரவஸ்தை யில்லாமற்போவதுபோலல்லாமல் தானெப்போதுமிருப்ப தால் தன்னைவிடக்காலத்திரயத்திலும் பிரபஞ்சமில்லவேயில்லை யென்றதுணிவு தானென்றறிக. [இ - து] கர்த்தாவும் விஷயமும் பொய். கர்த்தாவுக்கு விஷ யத்திலிச்சையுண்டாவதற்கு ஹேது சத்தியபுத்தி, அதற்குஹேது அவிசாரம், அதற்குஹேது வாசனை, அதற்குஹேது அஞ்ஞானம், ஆகையால் இதம்விருத்தி யில் சத்தியபுத்தியையும், அகம்விருத்தியில் அஞ்ஞானத்தையுங் கெடுத்தால் கர்த்தாவும் விஷயமும் போம். [எ - தி] சித்திரத்தைச் சித்திரமென்று பார்ப் பதுபோலும், தைஜசன் விசுவனாய் விழிப்பதுபோலுமறிக. [இ - து] ஜகத் தைக் கொண்டாடக்கொண்டாடத் துக்கமும், உபேக்ஷை பண்ணப்பண்ணச் சுகமும்வரும். [எ - தி] சிசுனத்தை உபசரிக்கவுபசரிக்கத் துக்கமும், உபேக்ஷை பண்ணப்பண்ணச் சுகமும் வருவதுபோலும் ; ஸ்திரீயை உபசரிக்கவுபசரிக்கத் துக்கமும், உபேக்ஷை பண்ணப்பண்ணச் சுகமும்வருவதுபோலுமறிக. [இ - து] ராகத்துவேஷத்துக்குச் சத்தியபுத்திஹேது. ஜகத்தில் ராகத்துவேஷமுண்டாவ தற்குச் சத்தியபுத்தியே காரணம். [எ - தி] தம்பதிகள் சேதுவுக்கு நடந்து போகும்போது, இப்பியைக்கண்டு வெள்ளியென்றுநினைத்து, நிலம் வாங்க வேண்டுமென்றும் நகைதான் செய்யவேண்டுமென்றுங் கலகமானகதைபோல வறிக. [இ - து] மூடன் ஜகத்தை நிஜமென்று நினைப்பதுமாத்திரமேயன்றி அது நிஜமாகாது. [எ - தி] தரித்திரன் நான் குபேரனென்று மனோராச்சியஞ் செய்வதாலுமவன் அவனாகாததுபோலவறிக. [இ - து] இனிச் சூட்சும விசா ரணையாவது,— விஷயத்திற் சுகமேயில்லை. எதனாலென்றால், விஷயமிருந்தா லல்லவோ அதில் சுகமிருக்கும். [எ - தி] மரத்திற் சாயங்காச்சினமாத்திரத்

தில் மாம்பழத்தன்மை யிருந்தாலல்லவோ ரசமிருக்கும், சிலாமயகணேசருக் குச் சிசுனமிருந்தாலல்லவோ சுக்கிலமோசனமாகும், அத்தன்மைபோலவறிக. ஐயா, விஷயமில்லாதிருக்கும்போது விஷயத்திலிருந்து துக்கந்தானெப்படி புண்டாகுமென்று கேட்பாயாகில், அதற்கு உத்தரஞ்சொல்லுகிறேன் கேள்:— விஷயமிருக்கும்பக்ஷத்தில், அதையேதேனுமதற்குச் சத்துருவாயிருக்கிற வஸ்து வைக்கொண்டு நிவர்த்திக்கலாம். அப்படி விஷயமேயில்லாமலிருக்கும்போது அது இருக்கிறதாகவும் அது துக்கத்தைக்கொடுக்குமென்றும் விஷயத்தைச் சத்தியமாகவெண்ணி அதைநிவர்த்திக்க யத்தனிப்பதே துக்கத்தைக்கொடுக்கி றது. [எ - தி] ஒரு புருஷன் ஐந்துஸ்திரீவரையில் கல்யாணஞ்செய்து, அவர்க ளெல்லாம் விபசாரியாயோடிப்போனபின், ஆறுவதுபெண்ணைக் கலியாணஞ் செய்து, அவள் வீட்டிற்கு வந்தபின் அந்தஊரிலுள்ள புருஷர்களிடத்திலெல் லாம் அவளுடைய யோனியில் பாம்பிருக்கிறதென்று சொல்லிவைத்ததால், எல் லோரும் அவளைக்கண்டமாத்திரத்திற் பயந்து ஓடிப்போய்க்கொண்டிருக்குங் காலத்தில், ஒருபிரபு சத்திரத்தில் வந்திறங்கிருந்த அவன் அவள் வீதியிற் போவதைக்கண்டு அவள் யாரென்று விசாரிக்கும்போது, அவ்வூரிலிருக்கிறவர்க ளால் இந்தப்பாம்பிருக்கிற ரகசியத்தைக்கேட்டுக்கொண்டும், அவளிடத்திற் போகிக்கவேண்டுமென்ற ஆசையால், ராத்திரிவருகிறேமென்று அவளுக்குச் சொல்லிவிட்டு, அவளும் சம்மதித்தபின் விஷவைத்தியர்களைக்கூட்டிக்கொண்டு ராத்திரி அவளிடத்திற்போனசமயத்தில் அவள் ஆசையோடே இவனைக் கட்டிக்கொள்ள அவள்கைமோதிரம் குத்தினமாத்திரத்திற் கடித்ததென்று கூப்பிட்டவுடன் அவ்வைத்தியர்கள் உரைத்துவைத்திருந்த விஷமாத்திரையை வாயில்விட்டவுடன் இறந்துபோன கதைபோலவறிக.

## 105 - வது தரங்கம்.

விஷயம் கனவிக்ஷேபம்:—

புருஷப்பிரயத்தினமன்றியில்வருகிற சுழுப்திச்சுகம் அனுபவிக்கிறமனது கூட வெளியில் சப்தத்தால்வருமானால், சமாதியிலிருக்கிறமனது சப்தத்தினாலே வெளியில்வருமென்பதிற் கேட்கவேண்டியதில்லை. [எ - தி] சொஸ்திரீபோகமே மத்தியில் யாரும்வந்துவிட்டாற் கலைந்துபோமென்றால், பரஸ்திரீபோகத்துக்குக் கேட்கவேண்டியதில்லாததுபோலவறிக. [இ - து] இந்தப்பிரஹ்மானுசந்தா னம் பண்ணுகிறவனுக்குச் சப்தாதி விஷயசங்கமிருக்கக்கூடாதென்றும், அப் படி அந்தச்சப்தாதிவிஷயசங்கத்தாற் பிரஹ்மானுசந்தானம் விக்கினமாய்ப் போமென்றும், அதற்காக யேகாந்தஸ்தலம் வேண்டுமென்றும், அப்படியே வாசிட்டத்தில் உத்தாலகமகரிஷி கந்தமாதனபர்வதத்தினுடைய தாழ்வரையி லிருந்துகொண்டு, சுரோத்திராதி இந்திரியங்களைப்பார்த்து ஓ இந்திரியங்களே! சப்தத்தால் மான் கெட்டுப்போனதையும், பரிசவிஷய ஆசையால் யானை கெட் டுப்போனதையும், ரூபவிஷயஆசையால் விளக்குவிட்டில்பூச்சி கெட்டுப்போவ

தையும், ரசவிஷயஆசையால் மீன்கள் தூண்டிலில் வைத்திருக்கிற மாம்சத்துக் காக தூண்டிலில் வந்துவிழுந்துகெட்டுப்போவதையும், கந்தவிஷய ஆசையால் வண்டு தாமரைப்புஷ்பத்தில் விழுந்து மடிந்துபோவதையுங்கண்டு, நீங்களும் இந்தப்பஞ்சவிஷயங்களிற் போய் விழுந்தீர்களேயானால் ஒவ்வொருவிஷயாசை யால் ஒவ்வொருபிராணி கெட்டுப்போயிருப்பதையும் பார்த்துக்கொண்டு ஐந்து விஷயமுஞ்சேர்ந்திருக்கிற அருந்தல் பொருந்தல்முதலான பதார்த்தத்திற் சேரு வீர்களேயானால் நீங்களும் கெட்டுப்போவீர்களென்று அநேகமாய்ச் சமாதா னஞ்சொன்னதிலும் நில்லாமல், அந்தஇடத்திற் பஞ்சவிஷயங்களுஞ்சேர்ந்து அடிக்கடிவருவதால் அவருடைய மனதுமுதலான இந்திரியங்கள் ஏகாக்கிரமாய் நில்லாமற் குரங்குபோலச் சலித்துக்கொண்டிருப்பதையுங்கண்டு, அந்தரிஷியா னவர் அந்தமலையினுச்சியிலிருக்கிற குகையில் நிர்ஜனமாயுள்ள இடத்தைக் கண்டு, அதிலிருந்து சமாதிபண்ணிக் கரையேறினாரென்று சொல்லியிருப்பதா லும்; அப்படியே தாரூரமகரிஷியும் பூமியெல்லாம் பிணங்களைவைத்திருக்கிற மயானமாயிருப்பதால் இந்த அசுத்தமான பூமியிலிருந்து தவஞ்செய்தால் ஞானஞ்சித்தியாதென்று அக்கினியைவளர்த்து தன் சரீரத்திலிருக்கிற மாமி சங்களை அறுத்தறுத்து ஹோமஞ்செய்தபின், அக்கினியும் புருஷாகிருதியாய் ரூபீகரித்துவந்து என்னவேண்டுமென்று கேட்கும்போது, எனக்கு இப்பூமி யெல்லாம் அசுத்தமாய்த்தோன்றுவதால் மரத்துநுனியிலிருக்கிற இலைஅசை வற்று ஸ்திரமாய் விஸ்தாரமாயிருக்கும்படி அனுக்கிரகிக்கவேண்டுமென்று கேட்டவுடன் அக்கினிபகவானும் அப்படியே ஆகட்டுமென்று அனுக்கிரகித்து அந்தர்த்தானமானபின், அந்தரிஷியும் அந்த மரத்திலிருக்கிற இலையிலிருந்து மனசினாலேயே தவத்தைச்செய்து ஞானத்தையடைந்தாரென்றும்; இப்படியே சுகப்பிரஹ்மரிஷிமுதலான பேர்கள்கூட ஏகாந்தஸ்தலத்தைத் தேடியடைந் திருக்கிறார்களென்றுஞ் சொல்லியிருப்பதாற் சமாதிக்கு ஏகாந்தஸ்தலமே வேண்டியதென்றுசொன்னதும், தன்னுடைய சொரூபத்தைத் தான்பார்த்துக் கொள்ளுவதற்கு ஏகாந்தஸ்தலமென்னத்திற்கென்று கேட்பாயாகில், அதற்கு உத்தரஞ்சொல்லுகிறேன் கேள் :—தன்யோனிமயிரைத் தனித்துப்பார்த்துப் பிடுங்கவேண்டியதுபோலும், தன்முகத்தைப்பார்த்துக்கொள்ளக் கண்ணாடி தண்ணீர்முதலானதுகள் அழுக்காயும் அலைந்துகொண்டுமிருந்ததானால் தன் முகம் தனக்குள்ளபடியாய்த் தோற்றாமற் போகும்போது அதிசூக்ஷமமாய் அவாங்மனோகோசரமாயிருக்கிற ஆத்மாவை அறிந்துகொள்வதற்கு ஏகாந்த மன்றியில் எப்படிச்சாக்ஷாத்காரமாய் அறியக்கூடும் சொல்?

## 106 - வது தரங்கம்.

விஷயசுகஞ் சேர்க்கையாலுண்டாகிறது.

இந்திரியங்களும் விஷயங்களும் சம்பந்தித்தகாலத்திற் சுகதுக்கமுண்டாகி றது. எதிலேயிருந்து வந்ததென்றாற் சேர்க்கையினாலேயேதவிரத் தனியாக

ஒன்றுக்குஞ்சொல்லக்கூடாது. [எ - தி] ஸ்திரீபுருஷர்கள் சேர்ந்து புத்திரோற்
பத்தியுண்டாவதுபோலும், தம்பூருங் கையுஞ்சேர்ந்து சப்தமுண்டாவது
போலும், மஞ்சளுஞ் சுண்ணாம்புஞ்சேர்ந்து சிவப்பாவதுபோலுமறிக.
[இ - து] விஷயஇந்திரியசம்யோகமானால் மனது கோடிசங்கற்பஞ்செய்யும்.
இந்திரியங்களும் விஷயங்களுஞ்சேர்ந்தவிடத்தில் மனது கோடிசங்கற்பத்துடன்
கிளம்பும். [எ - தி] உற்சவத்திற் கூட்டங்கூடினவுடன் முடிச்சவுக்கிகள் ஆயுத
சகிதர்களாய்க் கிளம்புவதுபோலும், மழைபெய்ந்தவுடன் பூமியிலடங்கி
யிருக்கிற வித்துக்கள் வெளியிற்கிளம்புவதுபோலுமறிக. ஐயா, விஷயங்
களும் இந்திரியங்களும் சம்பந்தப்பட்டகாலத்திலுண்டாகிற சுகதுக்கங்கள்
விஷயத்திலிருந்துவருகிறதென்றாவது இந்திரியத்திலிருந்துவருகிறதென்றாவது
சொல்லக்கூடாதென்றாற் பின்னை யெவ்விதத்தாலுண்டாகிறது? ஆனால் இந்த
இரண்டினுடைய சம்பந்தத்தினாலேயே உண்டாகிறதென்றால் குழந்தைகளுக்கு
இந்திரியங்களும் விஷயங்களுஞ்சம்பந்தப்பட்டிருந்தும் சுகதுக்கமுண்டாக
வில்லையென்று கேட்பாயாகில், அதற்கு உத்தரஞ்சொல்லுகிறேன் கேள் :—
குழந்தைகளுக்கும் தாலாட்டுமுதலான பாட்டுகளைப்பாடும்போது சுகத்தை
யடைவதும், அதட்டினால் அழுதுகொண்டு துக்கத்தையடைவதும்; மிருது
வான மெத்தையிற்போட்டாற் சுகிப்பதும், மூட்டை ஈ எறும்பு ஒலுங்குமுத
லானதுகள் கடித்தால் துக்கிப்பதும்; அழகாயிருக்கிற கிளிமுதலான பொம்
மைகளைக்கண்டாற் சுகிப்பதும், பேய் பிசாசுமுதலான பயங்கரமான ரூபத்
தைக்கண்டால் துக்கிப்பதும்; வேப்பெண்ணெய் விளக்கெண்ணெய்முதலான
தைப் போடும்போது துக்கிப்பதும், ஸ்தன்னியபானம் கொடுக்கும்போது
சுகிப்பதும் பிரத்தியக்ஷமாய்க்கண்டிருக்கும்போது, குழந்தைகளுக்கு விஷய
இந்திரியசம்பந்தத்தாற் சுகதுக்கமில்லையென்று தெரியாமற்சொன்னாய். ஆனால்
மற்றஸ்திரீபோகமுதலான விஷயசம்பந்தத்தாற் சுகதுக்கம் வரவில்லையேயென்
றால், விரையிலிருந்து மரம் இலை பூ காய் பழமுண்டாகிறதாயிருந்தாலும் அந்
தந்தப்பரிபாககாலத்தை அபேக்ஷித்து முந்தி முளை யிலை மரமுண்டாய்ப் பிந்தி
பூ பிஞ்சு காய் பழங்களுண்டாவதுபோலும்; ஒருஸ்திரீபிண்டத்திலிருந்து ருது
வாகிறதுமுதல் புத்திரோற்பத்திவரையிலுண்டாகிறதாயிருந்தாலும், அவை
கிரமமாய் அந்தந்தப்பரிபாககாலம் வரும்போதல்லவா முந்தி முலை புறப்பட்டு,
நாளாகிருதியிற் கிரமமாய்ப்பெருத்துப் பக்குவமாகுங்காலத்தில் தூரம் என்கிற
ரத்தம் வெளியில்வருவதும், புருஷபோகத்தைப் பெறுவதும், அதனாற் கெர்ப்
பத்தைத்தரிப்பதும், பத்துமாதங்கழித்துப் பிள்ளைப்பெறுவதையும், முலையிற்
பால்பெருகுவதையும் அந்தந்தக் காலானுகுணமாயடைவதையும் பார்த்துக்
கொண்டு, இந்திரியங்களை விஷயசம்பந்தப்படாமலடக்கி, மனதை விஷய இந்தி
ரியங்களுடைய சம்மந்தப்படாமலடக்கி, மனதை ஆத்மாவிலடக்கக்கட
வாய்.

107 - வது தரங்கம்.

விஷயத்தில் முந்திச்சுகம் பிந்தி துக்கம், வைராக்கியம் எதிர்மறை:—

விஷயானுபவத்தில் முந்திச்சுகமும் பிந்தித்துக்கமும்வரும். வைராக்கியத்தில் முந்தித்துக்கமும் பிந்திநித்தியசுகமும்வரும். [எ - தி] பக்ஷணமும் மருந்தும்போலும், கிருஷ்ணபக்ஷம் சுக்கிலபக்ஷங்களுடைய ஆரம்பம் முடிவைப்போலும், சூதில் முந்திக்கெலிப்பும் பிந்தித்தோற்பும்போலும் மூந்தித்தோற்று பிந்திக்கெலிப்பதுபோலுமறிக. [இ - து] இனி யோனிமுதலான விஷயங்களில் முதலில் சுகம்போலே தோற்றிப் பின்னால் அளவிறந்த துக்கங்கொடுக்கும். [எ - தி] ராஜனுக்குப்பகையானவனைக் கூட்டிவரச்சொல்லி அவனுக்குத் தனக்குச்சமானமான சிங்காசனத்தில் உட்காரவைத்துப்பூசித்து எதிரேதாசிகளைப் பாட்டுகளுடன் கூத்தையாடச்சொல்லி அதையவன் பார்த்து மகிழ்ந்துகொண்டிருக்குஞ்சமயத்திற் பின்னாலே ஆள்வைத்துத் தலையைக்கொய்யச்சொல்லுவது போலவறிக. [இ - து] விஷயத்தில் முதலில்ஆசையும் பின்னால்வெறுப்பும் வரும். [எ - தி] வாத்தியார் வரகரைத்தகதைபோலும், அட்டுகுசாலு என்று சொன்ன ரெட்டிகதைபோலுமறிக. ஐயா, வாத்தியார் வரகரைத்தகதையைத் திருஷ்டாந்தமாக விஷயத்தில் முந்திச்சுகம்வரும் பிந்தித்துக்கம்வருமென்று அறிவதற்காகச்சொன்னீர்களே, அந்தக் கதையை விபரமாய்ச்சொல்லவேண்டுமென்று கேட்டசிஷ்யனுக்குக் குரு சொல்லுகிறார்:—ஒரு பள்ளிக்கூடவாத்தியார் அநேகம் பிள்ளைகளுக்குப் படிப்புச்சொல்லிவைப்பதில் அதிலொரு கணக்குப்பிள்ளைமகனும் படித்துவரும்போது, அந்தவாத்தியார் அக்குழந்தையின் தாயினுடைய ரூபலாவண்யத்தைக்கண்டு அவளிடத்திற் போகஇச்சையால் அப்பிள்ளையிடத்தில் உன்தாயினிடத்தில் வாத்தியார், தயவிருக்கிறதாவென்று கேட்டுக்கொண்டுவரச்சொன்னாரென்று தினம்சொல்லி அனுப்பித்தபிரகாரம் சொன்னதில், அவள் கற்புடையவளானதால் பதிற்சொல்லாமல் வெகுநாள் வரையிலிருந்துவரும்போது, இவர் ஒருநாள் அப்பிள்ளையை நிரம்ப அடித்து இன்றைக்கு அவசியம் பதில்கேட்டுவரவேண்டுமென்று சொல்லிவிட்டதில் அக்குழந்தையும் அழுதுகொண்டு தாயினிடத்திற்போய் இதைச்சொன்னதும் அவள், தயவிருக்கிறது இன்றையதினம் அய்யா ஊருக்குச் சாயங்காலம் போவதால் இராத்திரி ஏழுமணிக்குவரச்சொன்னாளென்று சொன்னபடி வாத்தியாரிடத்திற் பிள்ளை போய்ச்சொல்லியபின், இவள் தன் கணவனிடத்தில் இச்சங்கதியைச்சொல்லி சாயரக்ஷையே சாதம்போட்டு அடுத்தவீட்டுத் திண்ணையிலிருக்கச்சொன்னபடி அவனுமப்படியே யிருந்தான். வாத்தியாரும் ஏழுமணிக்கு இவள்வீட்டுக்கு வந்தமாத்திரத்தில் அவளும் உபசாரஞ்செய்து கதவையும் தாப்பாள்போட்டவுடன் அவள்புருஷன்வந்து கதவைத்தட்டிக் கூப்பிட்டமாத்திரத்தில் வாத்தியார் நடுங்கிப்போய் நீ உன் புருஷன் ஊரிலில்லையென்று சொல்லியனுப்பிவைத்தாயே இப்போது என்னசெய்கிறதென்று தபிக்கும்

போது அவள் 'நீர் இந்தச்சேலையைக் கட்டிக்கொண்டு இந்தஅறைக்குள் வரகு திரித்துக்கொண்டிரும். அவர் வந்து கணக்கை யெடுத்துப்போனபின் இஷ்டப்படியிருக்கலாம்' என்று சொன்னபடி இவனும் அப்படியிருந்தபின் புருஷன் வீட்டிற்குள்வந்து இதுயார் வரகுதிரிக்கிறதென்று கேட்கவும், அவள் அறுத்துப்போன அடுத்தவீட்டுப்பெண்வந்து வரகுதிரிக்கிறுளென்று சொன்னதும், அவன் அந்தஅறையின்வாசலிற் கணக்குகளை யெடுத்துப்போட்டுக்கொண்டு விடியவிடிய விளக்கில் கணக்குபார்க்கும்போது வாத்தியாரும் விடியும்வரை ஒன்றுக்கு இரண்டுக்குக்கூடப்போக இடமில்லாமல் வரகுதிரித்துக்கொண்டிருந்து அப்புருஷன் வெளியிற்போனபின் வாத்தியாரும் பெற்ரேம் பிழைத்தோமென்று மெள்ளவெளியேறிப் பள்ளிக்கூடத்தில் வந்து மேல்வலியோடே யிருக்கும்போது, இப்பிள்ளைவந்து அம்மா தயவிருக்கிறதாம் ராத்திரி அவசியம்வரச்சொன்னுளென்று சொன்னதைக்கேட்ட அவரும் 'குதிரில் மிச்சவரகையும் அறைக்கவா தயவிருக்கிறதென்று சொல்லிவிட்டாள். அவள் தயவு போதும்போதும்' என்று சொல்லிவிட்டகதைபோலுமறிக.

## 108 - வது தரங்கம்.

நாவுக்குத் தீனியைக்கொடுப்பதால் வருங்கெடுதி :—

நாவுக்கு ருசியான தீனியைக்கொடுத்தால் சரீரத்துக்கு வியாதியையும், மேல்மேல் வாசனையையும், காமவிகாரத்தையும், சிசுனத்தைக் கிளப்பிவிடுகிறதுமுண்டாகும். [எ - தி] பாம்புக்குப் பாலைக்கொடுத்தால் அது விஷத்தைக்கொடுப்பதுபோலும், தீயில் நெய்யைவிட்டால் சுவாலை மேல்மேல் விருத்தியாவதுபோலும், மாட்டுக்குப் பச்சைப்பில்லு பருத்திக்கொட்டைமுதலானதைக் கொடுத்தால் சுவரேறிவிழுவதுபோலும், திராசுத்தட்டுகளில் ஒன்றில் படிக்கல்லைப்போட்டால் மற்றென்று தூக்குவதுபோலுமறிக. ஐயா, நாவுக்குத் தீனியைக்கொடுப்பதால் அநேகவிதமான அனர்த்தங்களும் வருமென்று சொன்னீர்களே, இந்தநாவினுல் யார் என்னகெடுதியை யடைந்திருக்கிறுர்கள்? அதைச்சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அந்தநாவினுல் கெடுதியடைந்த பேர்களைக் கணக்குப்பண்ணமுடியாது. அப்படியிருந்தாலும் கொஞ்சஞ் சொல்லுகிறேன். அதாவது,— சுசீலையென்கிற மனைவியோடே பிர்மசர்மாவென்கிற பிராஹ்மணன் கிரஹத்திலிருக்கும்போது தினம் எவ்விடத்தில் நாவுக்கு ருசியான சாப்பாடுகிடைக்குமோ அந்தஇடத்திற்போய்ச் சாப்பிட்டுக்கொண்டுவரும்போது இவன் செய்கிற துர்ப்போஜனத்தால் மிகுதியான பாபத்தையடைந்து அதனுல் அபமிருத்துவானமரணம் நேரிட்டு எமன் இவனைக்கொண்டுவரும்படி தூதர்களை யனுப்பிவைத்ததில், அவனுடையஸ்திரீயின் கற்பாகிறதீயாற் கொளுத்தப்பட்டு எமதூதர்கள் எமனிடத்திற்போய் இந்தச் செய்தியைச் சொன்னவுடன் சித்திரகுப்தனை யனுப்பிவைக்கவும், அவனும்

இவனுடையகிரகத்தில் அரூபமாய்வந்திருக்கும்போது இவன் பரிமாறுகிற சுசீலையான மனைவியைப்பார்த்து 'இந்தக்கறிபதார்த்தங்கள் மிரம்ப ருசியாயிருப்பதால் எனக்கு ராத்திரிசாப்பிடுவதற்கு இந்தவெஞ்சனங்களை வைத்துவை' யென்று சொன்னதைக்கேட்ட சித்திரகுப்தன் சிரித்ததும், அதைக் கேட்ட சுசீலை 'நான் பதிவிரதையானால் இந்தச்சிரிப்பைச்செய்த புருஷன் என் கண்ணுக்குமுன்பாக வரக்கடவது' என்று பிரதிக்ஞை செய்தமாத்திரத்திற் சித்திரகுப்தன் எதிரேவந்ததும், அவனை இவள் நமஸ்காரஞ்செய்ததால், அவன் நீ தீர்க்கசுமங்கிலியாக ஆகக்கடவாயென்று சொல்லித் தான்வந்தவிபரத்தையும் அவளுக்குச்சொல்லி நாலுநாழிகை இவன்தேகம் இவ்விடத்திற்கிடக்கட்டும் இவனை யெமனிடத்திற் கொண்டுபோய்விட்டுத்திரும்ப இவடத்திற்குக் கொண்டு வந்துவிடுகிறேனென்று சொல்லி இவனைக்கூட்டிபோகும்போது, எமஸ்தோத்திரத்தையுஞ் சொல்லிவைத்து எமனிடத்தில் விட்டமாத்திரத்தில், இவன் அந்தஸ்தோத்திரத்தைச்சொல்லி நமஸ்காரம்பண்ணினவுடன் எமன் சந்தோஷித்து இவனாரென்று கேட்கும்போது, சித்திரகுப்தனும் நடந்தசங்கதியைத்தெரிவித்தான். எமனும் இனிமேல் இப்படி நாவுக்கு ருசியைத்தேடாதே துர்ப்போஜனங்களைச் செய்யாதேயென்று சொல்லி இவனையும் தேகமாகிற கூட்டில் விட்டுவிடென்று சொன்னபடி, சித்திரகுப்தனும் கொண்டுவந்துவிட்ட தின்பேரில் கொஞ்சக்காலம் தீனியாசையைவிட்டு மனைவியோடே கிரகஸ்தாசிரமத்தில் ஒழுங்காய் நடந்துவரும்போது, சுசீலையிறந்துபோனபின் பழையபடி துர்ப்போஜனங்களை நாவுக்குருசியாக வேண்டியபடி தின்றுகொண்டுவந்ததால், இவனை எமன் தூதர்களைவிட்டுக்கூட்டிவரச்சொல்லி துன்பமானநரகத்தை யனுபவிக்கும்படிசெய்த கதையையும்; இப்பவும் பிரத்தியக்ஷமாய்ச் சகலஇந்திரியங்களைக்காட்டிலும் இந்தரசனேந்திரியமே ஆண் பெண் அலி குழந்தைமுதல் விருத்தன்வரையிலும் பாமரன்முதற் பண்டிதன்வரையிலும் எறும்புமுதல் தேவன்வரையிலுமுள்ள சகலரையும் துன்பப்படுத்துவதைக்கண்டு இதை வெறுக்கக்கடவாய்.

## 109 - வது தரங்கம்.

பிரஹ்மத்தினிடத்தில் ரூபமுண்டாய்ப் பின்நாமமுண்டாகும் :—

பிரஹ்மத்தினிடத்திலிருந்து முந்திரூபமுண்டாய்ப் பிந்திநாமமுண்டாகிறது. [எ - தி] குழந்தைபிறந்தபிறகு ராமன் சுப்பனென்று பேர்வைக்கிறதுபோலும், வீடுகட்டினபிறகு இது இன்னஅறையென்று பேர்வைப்பதுபோலுமறிக. [இ - து] ஆத்மாவே ஆகாசாதி ஜகத்தானார். [எ - தி] சர்க்கரையே ஆனை குதிரைமுதலான மிட்டாயாய்த் தோற்றுவதுபோலும், மண்ணே பானை சட்டியாய்த் தோற்றுவதுபோலும், இரும்பே மண்வெட்டி கத்தி கேடயமாய்த் தோற்றுவதுபோலும், தங்கமே கிரீடகுண்டலமாய்த் தோற்றுவதுபோலும்,

னாலே சோமன் புடவைமுதலானதாய்த் தோற்றுவதுபோலும், ஆட்டுமயிரே மடியஞ்சி தாவளியாய்த் தோற்றுவதுபோலும், சுக்கில சோணிதமே தேவ நரதிரியக்காதி சரீரமாய்த்தோற்றுவதுபோலும், கல்லே கணபதி சுப்பிரமணியர்முதலான தெய்வமாய்த்தோற்றுவதுபோலும், பித்தளையே செம்பு தவலையாதியாய்த் தோற்றுவதுபோலும், சமுத்திரஜலமே அலை நுரை குமிழியாய்த் தோற்றுவதுபோலும், ஒருஅக்கினியே விளக்கு தீவர்த்தி மத்தாப்புமுதலனவாய்த் தோற்றுவதுபோலும், ஒருஜலமே கங்கை கோதாவரிமுதலான புண்ணியதீர்த்தமாய்த் தோற்றுவதுபோலும், ஒருவிதையே மரம் இலை பூ காய் பழமுதலானதாய்த் தோற்றுவதுபோலும், ஒருசப்தமே பதினெட்டுவித பாஷையாயும், வேதசாஸ்திர இதிகாசபுராண ஸ்மிருதிகளாயும், பிரணவம் காயத்திரி பஞ்சாக்ஷரம் அஷ்டாக்ஷரமுதலான மந்திரங்களாயுந் தோற்றுவது போலும், ஒருபரிசம் சீதோஷ்ண மிருதுகடினமுதலானதாய்த் தோற்றுவது போலும், ஒருரூபமே வெள்ளை சிவப்பு மஞ்சள் பச்சை நீலமுதலானதாய்த் தோற்றுவதுபோலும், ஒருரசமே தித்திப்புமுதலான அறுசுவையாய்த் தோற்றுவதுபோலும், ஒருகந்தமே நாற்றமாயும் மணமாயுந்தோற்றுவதுபோலும், ஒருசூரியனே சகலவுலகத்துக்கும் கண்ணாய்த் தோற்றுவதுபோலும், ஒருசந்திரனே சகல உலகத்துக்கும் ஆனந்தத்தைக்கொடுக்கிறவராகத் தோற்றுவது போலும், ஒருசரீரமே காதுமுதலான நவத்துவாரமாய்த் தோற்றுவது போலும், ஒருஅந்தக்கரணமே மனம் புத்தி சித்தம் அகங்காரமாய்த் தோற்றுவதுபோலும், ஒருசங்கல்பமே ராகமுதல் சிரத்தைவரையிலுள்ள பதினாறுகுணமாய்த் தோற்றுவதுபோலும், ஒருபிராணவாயுவே பிராண அபான வியான உதான சமானங்களாய்த் தோற்றுவதுபோலும், ஒருபிராஹ்மணனே பிரஹ்மசாரி கிருகஸ்தன் வானப்பிரஸ்தன் சன்னியாசிகளாயும், வாத்தியார் கனபாடி சாஸ்திரிகள் அய்யரவர்கள் முதலானவர்களாயுந் தோற்றுவதுபோலும்; ஒரு புருஷன் தகப்பன்தாய்களுக்குப் பிள்ளையாயும், அண்ணனுக்குத் தம்பியாயும், தம்பிக்கு அண்ணனும், மனைவிக்குக் கணவனும், பிள்ளைக்குத் தகப்பனும், மாமனுக்கு மாப்பிள்ளையாயும், குருவுக்குச் சிஷ்யனும், சிஷ்யனுக்குக் குருவாயும், இஷ்டனுக்கு மித்திரனும், விரோதிக்குச் சத்துருவாயுமிருப்பது போலும்; ஒருமாம்சக்கட்டியே குழந்தைக்குப் பால்குடிக்கிறபையாயும், யௌவனமுள்ளபுருஷனுக்கு மோகத்தைக்கொடுக்கிற ஸ்தன்னியமாயும், நாய் நரி கழுகுமுதலானவைகளுக்கு ருசியான சாப்பாடாயுமாவதுபோலும்; ஒரு யோனியே மூத்திரம்பெய்வதற்கும் தூரம்போவதற்கும் தூம்பாயும், போகிக்கிறபுருஷனுடைய சிசுனத்துக்குப் போகபாத்திரமாயும், பிள்ளைபிறக்கிறதற்குத் தலைவாசலாயுமிருப்பதுபோலும்; ஒருவிசுவனே சொப்பனவஸ்தையில் அநேகவிதமான ஜீவேசுவரஜகத்தாயும் அதிலநேகவிதமான ஜீவர்களாகவுமுண்டாய் அநேகந்தொழில்களைச் செய்வதுபோலும் எப்படித்தோன்றுகிறதோ அப்படித் தானேசகலமுமாய்த் தோற்றுகிறேனென்றறிக.

110 - வது தரங்கம்.

இந்தஜகத்து நாமல்ல நம்மைவிட வேறுமல்ல :—

இந்தஜகத்து நாமுமல்ல நம்மைத்தவிர வேறுமல்ல. [எ - தி] புருஷனுடைய சாயைபோலும், ரத்னப்பிரபைபோலுமறிக. [இ - து] தானும் மனதும் வேறு அல்லது ஒன்றுவென்றால், புருஷனும் அவன்நிழலும் போலவென்றால், அப்போது நிழலைக்கண்டொருவரும் பயப்படவில்லையே அப்படிப்போல மனதைக்கண்டு ஒருவரும் பயப்படாமலல்லவோ இருக்கவேண்டும். அப்படிக்கன்றியிற் பயப்படக்காரணமேதோவெனிற் குழந்தைகள் தன்னிழலைக்கண்டு பயப்படுவதுபோல அக்ஞானியும் தன்மனதைக்கண்டு பயப்படுகிறானேதவிரத் தெரிந்தவனானஞானி நிழலைப்போலிருக்கிற மனது தானுமல்ல தன்னைவிட வேறுமல்லவென்று நிர்ப்பயனாயிருக்கிறானென்றறிக. ஐயா, இப்படி நாமரூப வடிவாய்த்தோற்றுகிற இந்த ஜகத்து நாமுமல்ல நம்மைத்தவிர வேறுமல்ல வென்று சொன்னீர்களே, அப்படிக்கூடுமா? நாமல்லாதபதார்த்தம் அன்னியமாயல்லவோ யிருக்கவேண்டும். அப்படி இந்தஜகத்து நமக்கு வேறாயல்லவோ யிருக்கிறதாகும். அப்படிச்சொன்னால் அத்வைதத்தைப்பிரதிபாதிக்கிற சுருதி ஸ்மிருதி இதிகாச புராணங்களுக்கெல்லாம் விரோதம்வருமே, அப்படி வந்தாலும்வரட்டுமென்றால், அத்விதீயப்பிரஹ்மமே தானென்று அனுபவிக்கிற மகான்களாயுள்ள பிரஹ்மநிஷ்டர்களுடைய நிச்சயம் பொய்யாய்ப்போய் விடுமே, ஆகையால் அப்படிச்சொல்லவுங்கூடவில்லை. நம்மைத்தவிர வேறுமல்லவென்று சொன்னாலப்போது தானாச்சுதே, தான் மூன்று காலத்திலுமழியாமலிருப்பதுபோல இந்தஜகத்தும் அப்படிமூன்றுகாலத்திலும் நம்மைப் போல அழியாமலல்லவோ இருக்கவேண்டும். அப்படி இந்தஜகத்து மூன்று காலத்திலுமழியாமலிருக்குமென்று சொன்னால், 'இந்தஜகத்து சிருஷ்டிக்கு முன்னுமில்லை பிரளயத்துக்குப்பின்னுமில்லை' யென்று சொல்லுகிற சுருதிவாக்கியங்களுக்கெல்லாம் விரோதம்வருமே, அப்படி வந்தாலும்வரட்டுமென்றால், நேற்றையத்தினஞ் சுழுப்தியில் இந்தஜகத்து இருக்கவேண்டுமே. இன்றையத் தினம் வரப்போகிற சுழுப்தியிலும் இந்தஜகத்திருக்கவேண்டுமே, அப்படி நம்முடையஅனுபவத்தில் சுழுத்தியில் ஜகத்தைக் காணாமற்போகையால் அனுபவ விரோதமாயுமிருக்கிறதேயென்று கேட்பாயாகில், அதற்கு உத்தரஞ்சொல்லுகிறேன் கேள் :—ஆகையினாலேயே இந்தஜகத்து நாமுமல்ல, நம்மைத்தவிர வேறுமல்லவென்று சொன்னது நியாயந்தான். [எ - தி] தினந்தோறும் நம்மிடத்திலுண்டாகிற சொப்பனாவஸ்தையும், அதிற்கற்பனையாகிற ஜீவேசுவர ஜகத்துக்களும், அதில் நானென்றபுமுளைத்து அநேகவிதமான சித்திரவிசித்திரங்களான விவகாரத்தாற் சுகதுக்கங்களை யனுபவிக்கிற தைஜசனும் நாமுமல்லாமல், நம்மைத்தவிர வேறுமில்லாமலிருப்பது எப்படியென்றால், அந்தத்தைஜசன் நாமாயிருந்தால் அவனாலனுபவிக்கப்படுகிற ராஜ்ஜியலாபமுதலான சுகமும், அடி

மிதி வெட்டுக்குத்துமுதலான துக்கங்களும் விசுவனைதன்னிடத்திற் காணப் படாமையால் நாமுமல்ல. நம்மைத்தவிர வேறுயிருந்தால் நாம் ஜாக்கிரத்தில் விழித்தபின் அவன் வேறுயிருக்கவேண்டும். அப்படிக்காணாமையால் நம்மைத் தவிர வேறுமல்லவென்று சொன்னது சரி.

## 111 - வது தரங்கம்.

விஷயத்தைத்தேடுவது பிரயாசம், அழிவது சீக்கிரம். ஆத்மா எதிர் மறை:—

விஷயத்தைத்தேடுவது பிரயாசம், அழிவது சீக்கிரம். பிரஹ்மவிசாரம் பண்ணுவது சுலபம், அது அதிசீக்கிரத்தில் விடாது. [எ - தி] சூரியக்கிர கணம் சந்திரக்கிரகணம்போலும், செக்கான்துணியிலும் ரவைசல்லாவிலுங் குசும்பாச்சாயத்தினுடைய அனுபவம்போலுமறிக. ஐயா, உலகத்திலுள்ள நாமரூபாத்மகமான சகலசம்பத்துக்களும் சகலவித்தைகளும் சகலவிதமான ஆனந்தங்களும் அளவுக்குமிகுதியாய் அனுபவிக்குங்காலத்தில், மூடர்கூடப் பிரஹ்மானந்தமாயிருக்கிறதென்றும், இந்தவித்தை கற்றிருக்கிறது பிரஹ்ம வித்தையோ இது என்னஅதிசயமென்று இப்படிப்பிரஹ்மானந்தமே சகல மான ஆனந்தங்களுக்கும் மேலான ஆனந்தமென்பதையும், சகலவித்தை களைக்காட்டிலும் அதிசயமான பிரயாசமுள்ளவித்தை பிரஹ்மவித்தையென் றும், இப்படிச்சகலராலுஞ் சொல்லப்படுவதால் தாங்கள் அதற்கு விரோதமாக உலகத்திலுள்ள சகலவித்தைகளும் அப்பியாசிப்பது பிரயாசமென்றும், சகல விதமான ஆனந்தங்களையுந் தேடுவதே பிரயாசமென்றும், பிரஹ்மவித்தை அப்பியாசிப்பது சுலபமென்றும், பிரஹ்மானந்தமுண்டாவது அதிசுலபமென் றும், அது அழியாமலிருக்குமென்றுஞ் சொன்னகாரணமேதோவெனில், அதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறோம் கேள்:—அடே மூடா! நாம் சொன்ன ரகசியம் உனக்குத்தெரியாமல் நீ இப்படிச்சங்கிக்கிறாய். அதாவது, உலகத்தி லுள்ள சகலமானஜீவர்களும் *தம்மையறியாத அக்ஞானிகளாயும், அனாத்மா வான பஞ்சகோசங்களைத் தாமென்றெண்ணியிருக்கிற விபரீதபாவனையுள்ளவர் களாயும், வாசனாபரவசர்களாயும், மனதுபோனவழியே போகிறவர்களாயும், இந்திரியங்களுக்குப் பிரீதிபண்ணிவைக்கிறவர்களாயும், ராகத்துவேஷபரர்களா யும், விஷயாசக்தர்களாயுமிருக்கிற மூடசிரோமணிகள்கூட இது பிரஹ்மவித் தையோ! இது என்னஅதிசயமென்றும், இந்தச்சுகம் பிரஹ்மானந்தமாயிருந்த தென்றுஞ் சொல்லுகிறவசனத்தால் அவர்கள் அதனுடைய வாஸ்தவத்தைத் தெரிந்துசொல்லவில்லை. அது எப்படிப்போலவென்றால், அஞ்ஞானிகள் என் னுடைய உடம்பு செவ்வையில்லையென்றும், என்காது கேட்கவில்லையென்றும், என்கண் பார்க்கவில்லையென்றும், என்நாவு ருசியறியவில்லையென்றும், என்வாக் குப் பேசவில்லையென்றும், என்கை வேலைசெய்ய முடியவில்லையென்றும், என்

கால் வலிக்கிறது நடக்கக்கூடவில்லையென்றும், என்னுடைய பிராணன் துடிக்கிறதென்றும், என்மனது ஸ்திரப்படாமற் சலித்துக்கொண்டிருக்கிறதென்றும், என்புத்தி இப்படி நிச்சயித்திருக்கிறதென்றும், இப்படியெல்லாஞ் சொன்னாலும், அவர்களுடைய அநுபவத்தில் தான்வேறே அவைகள்வேறே என்று விவேகமில்லாமற்சொல்லுவது எப்படியோ அப்படி இது பிரஹ்மவித்தையோ வென்று சொல்லுகிறதும் பிரஹ்மானந்தமாயிருந்ததென்று சொல்லுகிறதும் அதுபோலவேதவிர வேறில்லை. ஆனால் இந்தப்பிரஹ்மானந்தமும் பிரஹ்மவித்தையும் தீவிரதரபக்குவிகளுக்கு அதிசுலபமென்பதும், விஷயசுகம் பிரயாசமென்பதும், தனக்கு இது சுவாதீனமாயும் அது பராதீனமாயுமிருப்பதைப் பற்றி விஷயசுகம் தேடுவது பிரயாசமென்றும், பிரஹ்மானந்தம் பெறுவது அதிசுலபமென்றுஞ் சொல்லப்பட்டது.

## 112 - வது தரங்கம்.

விவேகியானாலும் ஸ்திரீசகவாசத்தாற் கெடுதியடைவன்:—

எவ்வளவு விவேகவைராக்கியமுள்ள புருஷனாயிருந்தாலும் ஸ்திரீசகவாசமிருந்தால் அவனது சற்குணங்கள் கெட்டுப்போம். [எ - தி] எருமைநெய் எவ்வளவு கெட்டியாயிருந்தாலும் தீயின் சம்பந்தத்திலிருக்கும்பக்ஷத்தில் உருகிப்போவதுபோலும், சூக்ஷ்மமான நேத்திரமுடையவனாயிருந்தாலும்மழைக் காலராத்திரியில் தடுமாறிப்பள்ளத்தில்விழுவதுபோலும், எவ்வளவு சாவதானமான புத்தியோடேகூடினவனாயிருந்தாலும் கஞ்சாமுதலான லாகிரிபதார்த்தங்களைக்கொண்டவன் தட்டுக்கெட்டு உளறுவதுபோலுமறிக. [இ - து] ஸ்திரீகளை மட்டும் தனித்துவைத்து ஞானோபதேசம் எவ்வளவு செய்தாலும் அவளுக்கும் ஞானம்வாராது இவனுங்கெட்டுக் குட்டிச்சுவராய்ப்போவன். [எ - தி] காலநேமி என்கிறஅசுரன் ஹனுமாரிடத்தில் ரிஷிவேடம்போட்டுக்கொண்டு குருதக்ஷிணைவாங்கி உபதேசஞ்செய்கிறேனென்று சொன்னதற்கு அந்த ஹனுமாராகிற சிஷ்யனாலேயே அவன் அடிபட்டுப்போனகதைபோலும், எருமைமாடுகள் இரண்டுசேர்ந்து குளத்தில் தண்ணீர்சாப்பிட இறங்கிக் கலக்கிச்சேறுப்பண்ணி அவைகளுக்கும் மற்றவர்களுக்கும் தண்ணீர்சாப்பிட உபயோகமில்லாமற் போவதுபோலுமறிக. [இ - து] அவிவேகிக்கு ஸ்திரீமுதலான விஷயமிருந்தாலும் ஜனங்களுடையநிந்தை வராது. விவேகிக்கு அது கொஞ்சமிருந்தாலும் சகலருந்நிந்திப்பார்கள். [எ - தி] வாணியன்துணியில் எவ்வளவு எண்ணெபட்டாலுந் தோன்றாது, வெள்ளைவஸ்திரத்தில் கொஞ்சம் எண்ணெபட்டாலுந் தோற்றுவதுபோலும்; தாசி இராப்பகல்பாராமல் விபசாரம்பண்ணினாலும் அதை ஒருவரும் நிந்தியாமற் குலஸ்திரீ ஏகதேசத்திற்செய்கிற விபசாரத்தைமட்டும் சகலரும் நிந்திப்பதுபோலுமறிக. [இ - து] முமுக்ஷுவுக்கு ஸ்திரீவாசனைபோலக் கெட்டது ஒன்றுமில்லை. [எ - தி] நூறுபேர்கூட்டத்தில் ஒரு

பாம்புவந்ததுபோல ஒருஸ்திரீ வந்தாளேயானால் அனைவருஞ் சிரவணத்தை விட்டு அவளையே பார்ப்பதால் அந்தவாசனையைக் குரு சாதுசங்க வைராக்கிய விசாரங்களால் ஜயிக்கவேண்டுமென்றறிக. [இ - து] எவ்வளவு விசாரணையுள்ளவனானாலும் விபரீதபாவனை மயக்கும் பயப்படுத்தும். [எ - தி] இந்திரஜாலம் மெய்யென்று வேடிக்கைபார்க்கிறவனை அதிலுள்ள ஸ்திரீகளும் புலிகளும் மயக்கத்தையும் பயத்தையுங் கொடுப்பதுபோலவறிக. [இ - து] எவ்வளவு விவேகமானது பிரகாசமாயிருந்தாலுஞ் சித்தத்தில் ஸ்திரீமுதலான ஆசை வியாபித்ததானால் அது மறைபடும். [எ - தி] சுவரில்வைக்கப்பட்ட வெண்சாந்து கரியால் மறைபடுவதுபோல மறைபடும். ஆகையால் காவலன் ஆக்கினையால் அந்தச்சுவரில் யாரும் கரியைப்பூசாதிருக்கும்படி செய்வதுபோல குருநாதருடைய கிருபையினால் இந்தவாசனை சித்தத்திலேறாமலிருக்கவேண்டுமென்றறிக. [இ-து] ஸ்திரீகளைக் கண்ணைக்காட்டினவுடன் அவள் இவனோடேபோகித்துச் சுக்கிலத்தைக் கழற்றிவிடுகிறாள். [எ - தி] அட்டையுள்ளகுளத்திற் காலைவைத்தவனை அது பிடித்து ரத்தமுழுமையும் உறிஞ்சுவதுபோலவறிக. [இ - து] பரமமூடனாகிய புருஷனோடே பேசினாலும் பேசலாம். மகாபுத்திசாலியாயும் விசாரணையுள்ளவளாயுமிருக்கிற ஸ்திரீகளோடேமட்டும் பேசக்கூடாது. [எ - தி] கூழைக் குடித்தாலுங் குற்றமில்லை, விஷங்கலந்த பாலைப்புஜிக்கக்கூடாததுபோலவறிக. [இ - து] திடவைராக்கியமுள்ளவனாயிருந்தாலும் ஸ்திரீகளுடைய சகவாசம் நெருங்கநெருங்க அது கரையும் [எ - தி] கெட்டியான மண்ணாங்கட்டியும் மழையிற் கிடக்கக்கிடக்க கரைந்துபோவதுபோலவறிக. [இ - து] ஸ்திரீகளைமட்டும் நம்பக்கூடாது. [எ - தி] கடிவாயிடத்திற் கையை கொடுக்கக்கூடாததுபோலவறிக. [இ - து] புருஷன் மன்மதன்சொற்கேட்பவனாயும் மன்மதன் ஸ்திரீகளுடையகடைக்கண் பார்வைக்குப் பயந்து நடப்பவனாயுமிருக்கிறான். [எ - தி] ராஜா எந்தப்புருஷனைக்குறித்துக் கண்ஜாடையாகிற ஆக்ஞைபண்ணுகிறானோ சேவகன் அந்தஜநத்தை யிழுத்துவந்து உதைப்பதுபோலவறிக. [இ - து] பிராணுபத்துவந்தாலும் ஸ்திரீகளின் சகவாசங்கூடாது. [எ - தி] பசித்தாலும் விஷத்தைப் புஜியாததுபோலும், தாழைமடலால் நாக்கை வழிக்கக்கூடாதது போலுமறிக. [இ - து] ஸ்திரீயின் பரிதாபத்தைப்பார்த்துக் கிட்டப்போய் ஞானோபதேசஞ்செய்வது எதுபோலவென்றால், காசிக்குப்போகிற பிராஹ்மணன் கூட்டிற்கட்டுப்பட்டு வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிற முதலையைத் தண்ணீரிற்கொண்டுபோய்ப் போட்டமாத்திரத்தில் இவன்காலைப் பிடித்துக்கொண்டதைபோலவறிக. [இ - து] முமுக்ஷுக்களுக்கு ஸ்திரீவிஷயமிருந்தால் மோக்ஷசுகம் வராது. [எ-தி] பாம்புமேலே படுத்து நித்திரைசெய்வதுபோலும், அருவிவிழுகிற இடத்திற் படுத்துத்தூங்குவதுபோலும், தேன்தடவியிருக்கிற ரம்பத்தை நக்குகிற நாய்போலுமறிக. [இ - து] ஸ்திரீயும் புருஷனும் யவ்வனத்தோடேகூடியபோது ஏகாந்தம் லபித்தால் இரண்டுமனசுங் கரைந்துபோம். [எ-தி] இவன்மனசாகிற வெண்ணெய்க்கு அவள் தீப்போலும், அவள்மனசாகிற

வெண்ணெய்க்கு இவன் தீப்போலுமறிக. [இ - து] ஸ்திரீவிஷயத்தைப் பிரித்துப்பாராமல் அதிலாசைப்பட்டவன் கெட்டுப்போவன். [எ - தி] திரௌபதை வேஷம் போட்டுக்கொண்டுவந்த பீமசேனனைக் கீசகன் ஸ்திரீயென்று நினைத்து நாசத்தையடைந்ததுபோலவறிக. [இ - து] ஸ்திரீயின்தோலைப்பார்த்தா இச்சிக்கும்போது சக்கிலியனுகவும், அதைக்கடிக்கும்போது நாயாகவுமாகிறுனென்றறிக. [இ - து] ஸ்திரீகளுக்குப் புருஷனைத்தன்கீழேயிழுப்பதற்கு யாதொரு விதமான பலமில்லாதிருந்தாலுங் கண்சாடைமுதலான விலாசத்தால் அவன் சுயமாகவே யோனிவாயில் வந்துவிழுந்து சுக்கிலமுதற் பிராணன்வரையிற் போய் விகாரமான ரூபத்தையுமடைந்து கெடுகிறுன். [எ - தி] செந்நாயானது மரமேறச்சக்தியில்லாதிருந்தும் மரத்தின்மேலிருக்கிற தேவாங்கைப்பார்த்துச் செய்கிற ஜாலத்தால் அந்தத்தேவாங்கு தானேசிரசிற் கையைக்கூப்பிக்கொண்டு அந்த நாயின்வாயில் வந்துவிழுந்து கடிபட்டுச்சிரசும் கையுந்தவிர மற்றஅவயவங்களும் பிராணன்வரையிற்போய்க் கெட்டுப்போவதுபோலவறிக. மேற்படி விகாரத்தோடேகூடிய இருவர்களுடைய விழியும் ஒருவிழிப்பட்டால், இருவர்களுடைய சித்தத்திலும் வாசனரூபமான மனோராச்சியமாய் வளர்ந்துவிளங்கும். [எ-தி] நல்லதிராவகம் கண்ணுடியிற் பொட்டகிராப்பாய் விளங்குவதுபோலவறிக. ஐயா, சகலவிஷயங்களைக்காட்டிலும் ஸ்திரிவிஷயமே கெட்டதென்று உத்தரவாச்சுதே அதனுலென்ன புருஷார்த்தஹானி யாருக்கு வந்திருக்கிறது? அதைச்சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்கு உத்தரஞ்சொல்லுகிறேன் கேள்:—இந்த ஸ்திரீவிஷயமானது ஈசுவரன்முதல் எறும்புவரையில் எல்லோருக்குந் தர்மார்த்த காமமோக்ஷங்களான நாலுவித புருஷார்த்தங்களையுங் கெடுப்பது பிரத்தியக்ஷமாயிருக்கும்போது இதென்ன கேள்வியென்று கேட்டாய்! அதில் ஒருகற்புடைய பெண்ணெறும்பினிடத்தில் அதன்கணவன் வெளியிற்போயிருக்கும்போது மற்றொரு ஆணெறும்புவந்து பலாத்காரத்துக்கு யத்தனிக்கும்போது, அது உங்காரத்தாற் பஸ்பமாய்ப் பண்ணினதைக் கேகயராஜன் ஸ்திரீயோடேயிருந்து பார்த்துச்சிரித்தவுடன், அவன்மனைவி நீ சிரித்தகாரணத்தைச் சொல்லென்று கேட்டதற்கு அவன் அதைச்சொன்னல் என்தலை வெடித்துப்போமென்று சொன்னதற்குப் போனுற்போகட்டும் எனக்குச் சொல்லத்தான்வேண்டுமென்று கட்டாயம்பண்ணும் போது, அவடத்தில் ஒருஆண்மானைப்பார்த்துப் பெண்மான் அதோ இருக்கிற வளர்ந்தபுல்லை யெனக்குப்பிடுங்கிக்கொடுவென்று சொன்னதற்கு, அந்த ஆண்மான் கிணற்றுவாயிலிலுண்டாயிருப்பதால் அதைப்பிடுங்கப்போனல் தவறிவிழுந்துவிடுவேனென்று சொன்னதற்கு, அது நீ போனுலுஞ்சரி யெனக்கு அந்தப்புல்லைப் பறித்துக்கொடுக்கத்தான்வேண்டுமென்று சொன்னதைக் கேட்ட ஆண்மான் கொம்பாலே குத்திக்கொன்றதைப்பார்த்த இவர், இந்த மானுக்குள்ள தைரியம் நமக்கில்லையாவென்று மனைவியை வெட்டிப்போட்ட கதையையும்; இப்படியே விசுவாமித்திரர்முதலான ரிஷிகள் வெகுகாலம் ஆகார

மன்றியில் தவஞ்செய்துகொண்டுவந்தவர்களும் ஸ்திரீயைக்கண்டு மயங்கித் தங்களுடைய தபசுமுழுமையும் இழந்துபோனர்களென்று சொல்லப்பட்டிருக்கிற கதைகளை அறிந்துகொள்ளக்கடவாய்.

## 113 - வது தரங்கம்.

யமனைக்காட்டிலும் காமனே அதிகக்கெடுதிக்காரன் :—

காமனை யமன்போலே சொல்லியிருக்கிறது பூர்வபக்ஷமேயல்லாமல் விசாரிக்கும்போது எமன் மிகுந்தநல்லவனுயும் காமன் மிகுந்தகெட்டவனுயுங் காணப்படுகிருன். எப்படியென்றால், எமன் பாவிகளைமட்டுங் கோரரூபமாயிருந்து அவர்களுடைய பாவங்களைப்போக்கடிக்கிற நிமித்தம் தண்டித்துச் சுத்தம்பண்ணுகிருன். [எ - தி] தாயானவள் வியாதிவந்த குழந்தைக்குமட்டும் கைகால்களைப்பிடித்தமுக்கி வெண்ணெயைப்புகட்டிக் காப்பாத்துகிறவள் போலவறிக. காமனேவென்றால் சாதுக்களைக்கூட மூத்திரம் சீ வடிகிற யோனி ஸ்தன்னியங்களில் மயங்கிக்கெட்டுப்போகும்படி செய்யும்போது அவிவேகிகளைக் கெடுப்பதில் கேட்கவேண்டியதென்ன. [எ - தி] திருடன் பெரியோரிடத்திலேயே வந்து சொத்தைப்பறிக்கும்போது குழந்தைகளிடத்திலிருக்கிற சொத்தைப்பறிப்பதில் கேட்கவேண்டியதில்லாததுபோலும், பெரிய காற்றுப் பெரியமரத்தை முறிக்கும்போது முருங்கைக்கொம்பை முறிப்பதில் கேட்கவேண்டியதில்லாததுபோலுமறிக. [இ - து] மன்மதன் சாதுக்களையே வாட்டும்போது துஷ்டனைவாட்டுவதிற் கேட்கவேண்டியதென்ன. [எ - தி] சும்மாயிருக்கிறவனையே சண்டைக்கிழுத்துக்கொல்லுகிறவன் சுலும்புபண்ணுகிறவனைக் கெடுப்பதில் கேட்கவேண்டியதில்லாததுபோலும், பாம்பு புலி சும்மாயிருக்கிறவனையே வந்துகடிக்கும்போது அவைகளின்வாயிற் கையைவைத்தவனை கடிப்பதிற் சந்தேகமில்லாததுபோலுமறிக. [இ - து] மேற்படியான் காமிகளான ஸ்திரீபுருஷர்களைச் சேர்த்துவிட்டு வேடிக்கைபார்க்கிருன். [எ-தி] குருவானவர் சிஷ்யர்களை ஒருவருக்கொருவர் வாதம்பண்ணச்சொல்வதுபோலும், ஜமீன்தார் ஆடு கோழிகளைச் சண்டைக்குவிட்டு வேடிக்கை பார்ப்பதுபோலுமறிக. [இ - து] மேற்படியானை ஜெயிப்பதற்கு உபாயம், விஷயத்தில் அருவருப்புவருகிறது. [எ - தி] ராஜகுமாரனுக்கு வந்திருந்த தாசியின்மயக்கம் தீவர்த்தியைக் கையிற்பிடித்துக் குகியஸ்தானத்தைப்பார்த்ததில் அந்தமயக்கம்போய் அருவருப்புவந்தகதைபோலும், மணலுக்குட் கையைவிட்டு விளையாடும்போது கையில் நொளநொளவென்று மலம்பட்டபோது வெறுப்புவந்தகதைபோலுமறிக. [இ - து] மன்மதனுக்குச் சொபாவமென்னவென்றால், ஸ்திரீயினிடத்தில் இன்பமிருக்கிறதாகப் புருஷனுக்கு மயக்கத்தையும், புருஷனிடத்தில் இன்பமிருக்கிறதாக ஸ்திரீக்கு மயக்கத்தையும் மாறுபாடாகச்சகலத்தையுங் கல்பிக்கிறதுதான் சொபாவம். இவனே இப்படியிருக்கும்

போது இவன்தாயான மாயைக்குக் கேட்கவேண்டியதென்னவென்றறிக. ஐயா, இந்தமன்மதன் இப்படி ஸ்திரீபுருஷர்களிருவர்களிடத்திலும் உள்ளேயிருந்து இப்படி ஒருவர்பேரிலொருவருக்குப் பிரியமும் மயக்கமுமுண்டாகும்படி செய்வதினால் அந்தமன்மதனுக்கென்ன பிரயோஜனமென்றால், அதைச் சொல்லுகிறேன்கேள் :— ஜகத்தைக்கல்பிக்கிற மாயாசக்திக்கு இந்தமன்மதனென்கிற பிள்ளையில்லாவிட்டால் இந்தஜகத்சிருஷ்டியே யில்லாமலேபோய்விடும். ஆகையாலும் பிரஹ்மா திலோத்தமையென்கிற பெண்ணை யுண்டு பண்ணினமாத்திரத்தில் அந்தப்பிரஹ்மாவே அவளைக்கண்டு மயங்கும்படியாக மன்மதன் செய்ததால், அவர் அந்தப்பெண்ணினிடத்திற் சேருவதற்காக ஓடும்போது அதை மன்மதன்கண்டு சிரித்தகதையையுமறிந்துகொள்க. மன்மதனென்ற சொல்லுக்கேயர்த்தமென்னவென்றால்,— கரும்பை ஆலையில் வைத்து ஆட்டுவதுபோலும், எள்ளைச் செக்கில்போட்டாட்டுவதுபோலும், புருஷர்களாகிய நம்மை யோனியாகிற யந்திரத்திற்போட்டாட்டுவதால் மன்மதனென்கிறபேர் வந்திருக்கிறது. ஆகையால் குருகிருபையால் இந்தமன்மதனை ஜயித்துக் கரையேறக்கடவாய்.

## 114 - வது தரங்கம்.

கோசங்களே முன்னும் ஞானம்வந்த பின்னும் தொழிலைச்செய்கின்றன :—

ஆத்மாவும் பஞ்சகோசமுஞ்சேர்ந்து தொழில் நடக்கிறதாயிருந்தாலும், இப்போது விசாரிக்கும்போது பஞ்சகோசமே சகலவியாபாரமுஞ்செய்கிறதும் அவைகளுக்குக் கொஞ்சங்குறைவுவந்தால் அந்தந்தத்தொழில் நடவாமற்போவதும் அனுபவமாய்க்காணப்படுகிறபடியாலும், எப்பொழுதும் பஞ்சகோசமே சகலவியாபாரத்தையுஞ் செய்கிறதேதவிர சாக்ஷியாகிய நாம் எப்பொழுதும் ஒன்றுஞ்செய்யவில்லையென்றறிக. ஞானம் வந்தபின்னும் சரீராதிகள்தோற்றுவது நமக்கனுகூலமேதவிர 'பிரதிகூலமில்லை. ஏனென்றால், நமக்கு வாஸ்தவமாய்க் கருத்தருத்துவாதியில்லாமைக்குச் சாக்ஷியாக அந்தந்தக் கரணங்கள் அந்தந்தத்தொழில்களைச் செய்வதால் நம்முடைய நிச்சயம் பலப்படுகிறது. [எ - தி] யோக்கியன்வீட்டில் அயோக்கியர்கள் திருட்டுச்சொத்துகளைத் திருடிவைத்திருந்ததைப்பற்றி உலகத்தார் யோக்கியனையுஞ்சேர்த்து திருடனென்று சொல்லிவருங்காலத்தில் யோக்கியன் அவர்களை ஒருவரொருவராய்ப்பிரித்து வெளியில் தள்ளினபின்னும் அவர்கள்வேறேயாயிருந்து பழய திருட்டுத்தொழிலைச் செய்துவருவதால், இவனுடைய யோக்கியதையைப்பற்றி ஜனங்கள் மூன்றுகாலத்திலுமிவன் யோக்கியனென்று நிச்சயமாய்ச்சொல்லுவதற்கு ஆதாரமேதவிர விரோதமில்லாததுபோலும்; வேப்பங்காயும் வெல்லமுஞ்சேர்ந்திருந்தகாலத்தில் கண்டகசப்பை வெல்லத்தினிடத்தில் அவிவேகத்

தாற்சொன்னாலும் இப்போது அவைகளை வேறுவேறாய்ப்பிரித்தபின் வேம்புக்கே கசப்பும் வெல்லத்துக்கே தித்திப்பும் பிரத்தியக்ஷமாய்ச் சகலருக்கு முறுதியாவதுபோலுமறிக. ஐயா, அன்னமயாதி பஞ்சகோசங்களை ஆத்மாவை விட்டுப்பிரிக்கும்போது அவைகள் ஜடமாய்ப்போய்விடுமே, அப்போது ஜடமான அந்தப்பஞ்சகோசங்களுக்கும் புண்ணியபாபமுதலான கருமங்களைச் செய்ய யோக்கியதை எப்படிக்கூடும்? அதுவுமன்றியில் அந்தக்கர்மங்களுக்குப் பலமான சுகதுக்கங்களை எப்படியடையக்கூடுமென்று கேட்பாயாகிலதற்கு உத்தரஞ்சொல்லுகிறேன். கேள்:— ஜடங்களுக்குச் சிலவிடங்களில் தொழில்களைச் செய்யும்படியான யோக்கியதையும் அதன்பலமான சுகதுக்கங்களையுமனுபவிக்கும்படியான யோக்கியதையுமுண்டு, சிலஜடங்கள் அவ்விரண்டுக்கும் யோக்கியதை யில்லாமலிருக்கவுங்கூடும். அது எங்ஙனமெனில், காற்றுருபமான பூதப்பிரேத பிசாசுமுதலானவைகள் ஜடமாயிருந்தாலும் பெண்முதலானவர்களைப் பிடித்துத் தலைசுற்றியாடும்படியான தொந்தரவு செய்யவுங்கூடும். மந்திரவாதிமுதலானவர்களாற் கண்டிக்கப்பட்டு அழுதுகொண்டு 'என்னை எரிக்க வேண்டாம். நான் போகிறேன்' என்று விசனப்படவும், 'நான் இந்தப் பெண்ணைச் சுகமாயனுபவிப்பதை விடமாட்டேன்' என்று சந்தோஷமாய்ச் சொல்லவுங்கண்டிருக்கிறபடியால், ஜடங்களுக்கு அப்படிப்பட்ட யோக்கியதை யிருக்கிறதென்றறிக. ஐயா, அப்படிச்சொல்லும்பக்ஷத்தில் பிரஹ்மஞானிகளுடைய பஞ்சகோசங்களும் இந்தச்சரீரம்போனாலும் பின்னும் இதுபோலவே அனந்தகோடி ஜன்மங்களை எடுக்கும்படியான கர்மங்களைச்செய்யவும் அந்தந்தக் கர்மங்களுக்கு ஈடான ஜன்மங்களெடுக்கவும் அதனால்வருகிற சுகதுக்கங்களை யனுபவிக்கும்படியும்வரும். ஆகையால்ஞானி கிருதகிருத்தியன், சகலதுக்கங்களிலிருந்தும் விடுபட்டவன், தடையற்ற ஆனந்தமுடையவன், அவனுக்கு ஒருநாளும் ஜனனமரண பயமில்லையென்று இப்படிச்சொல்லுகிற சுருதிவாக்கியங்களுக்கெல்லாம் விரோதம்வருமேயென்றால், அப்படி விரோதம்வராமற் சொல்லுகிறேன் கேள்:— இப்போது சொன்னவெல்லாம் அஞ்ஞானமயக்கத்தோடுங்கூடிய உனக்காகப் பொய்யாகச்சொன்னதேயல்லாமல் வாஸ்தவமாய்ச் சொரூபத்தில் மாயையும், ஜகத்துற்பத்தியும், பத்தனும், சற்கருமங்களைச்செய்கிற சாதகனும், முமுக்ஷுவும், ஜீவன்முத்தனும் பரமார்த்தத்திலொன்றுமில்லையென்று சுருதிசொல்லுகிறதே நம்முடைய சித்தாந்தமான அனுபவமென்றறிந்துகொள்ளத்தக்கது.

## 115 - வது தரங்கம்.

ஜகத்துக்குள்ளே சரீரத்தைமட்டும் மிகுந்த அசுத்தமாய்ச்செய்திருப்பதற்குக் காரணம்:—

அனந்தகோடி நாமரூபத்துக்குள்ளே இந்த மனுஷசரீரத்தைமட்டுக்கும் மிகுந்தஅசுசியாய் உண்டுபண்ணினதற்குயுக்தி :—வீட்டிற்குள்ளே படுக்கை

போது இவன்தாயான மாயைக்குக் கேட்கவேண்டியதென்னவென்றறிக. ஐயா, இந்தமன்மதன் இப்படி ஸ்திரீபுருஷர்களிருவர்களிடத்திலும் உள்ளே யிருந்து இப்படி ஒருவர்பேரிலொருவருக்குப் பிரியமும் மயக்கமுமுண்டாகும் படி செய்வதினால் அந்தமன்மதனுக்கென்ன பிரயோஜனமென்றால், அதைச் சொல்லுகிறோம்கேள் :— ஜகத்தைக்கல்பிக்கிற மாயாசக்திக்கு இந்தமன்மத னென்கிற பிள்ளையில்லாவிட்டால் இந்தஜகத்சிருஷ்டியே யில்லாமலோய்ந்து போம். ஆகையாலும் பிரஹ்மா திலோத்தமையென்கிற பெண்ணை யுண்டு பண்ணினமாத்திரத்தில் அந்தப்பிரஹ்மாவே அவளைக்கண்டு மயங்கும்படியாக மன்மதன் செய்ததால், அவர் அந்தப்பெண்ணினிடத்திற் சேருவதற்காக ஓடும் போது அதை மன்மதன்கண்டு சிரித்தகதையையுமறிந்துகொள்க. மன்மத னென்ற சொல்லுக்கேயர்த்தமென்னவென்றால்,— கரும்பை ஆலையில் வைத்து ஆட்டுவதுபோலும், எள்ளைச் செக்கில்போட்டாட்டுவதுபோலும், புருஷர்க ளாகிய நம்மை யோனியாகிற யந்திரத்திற்போட்டாட்டுவதால் மன்மதனென் கிறபேர் வந்திருக்கிறது. ஆகையால் குருகிருபையால் இந்தமன்மதனை ஜயித் துக் கரையேறக்கடவாய்.

## 114 - வது தரங்கம்.

கோசங்களே முன்னும் ஞானம்வந்த பின்னும் தொழிலைச்செய்கின் றன :—

ஆத்மாவும் பஞ்சகோசமுஞ்சேர்ந்து தொழில் நடக்கிறதாயிருந்தா லும், இப்போது விசாரிக்கும்போது பஞ்சகோசமே சகலவியாபாரமுஞ்செய் கிறதும் அவைகளுக்குக் கொஞ்சங்குறைவுவந்தால் அந்தந்தத்தொழில் நடவா மற்போவதும் அனுபவமாய்க்காணப்படுகிறபடியாலும், எப்பொழுதும் பஞ்ச கோசமே சகலவியாபாரத்தையுஞ் செய்கிறதேதவிர சாக்ஷியாகிய நாம் எப் பொழுதும் ஒன்றுஞ்செய்யவில்லையென்றறிக. ஞானம் வந்தபின்னும் சரீராதி கள்தோற்றுவது நமக்கனுகூலமேதவிர பிரதிகூலமில்லை. ஏனென்றால், நமக்கு வாஸ்தவமாய்க் கருத்துருத்துவாதியில்லாமைக்குச் சாக்ஷியாக அந்தந்தக் கரணங்கள் அந்தந்தத்தொழில்களைச் செய்வதால் நம்முடைய நிச்சயம் பலப் படுகிறது. [எ - தி] யோக்கியன்வீட்டில் அயோக்கியர்கள் திருட்டுச்சொத்து களைத் திருடிவைத்திருந்ததைப்பற்றி உலகத்தார் யோக்கியனையுஞ்சேர்த்து திருடனென்று சொல்லிவருங்காலத்தில் யோக்கியன் அவர்களை ஒருவரொருவ ராய்ப்பிரித்து வெளியில் தள்ளினபின்னும் அவர்கள்வேறேயாயிருந்து பழய திருட்டுத்தொழிலைச் செய்துவருவதால், இவனுடைய யோக்கியதையைப்பற்றி ஜனங்கள் மூன்றுகாலத்திலுமிவன் யோக்கியனென்று நிச்சயமாய்ச்சொல்லுவ தற்கு ஆதாரமேதவிர விரோதமில்லாததுபோலும் ; வேப்பங்காயும் வெல்ல முஞ்சேர்ந்திருந்தகாலத்தில் கண்டகசப்பை வெல்லத்தினிடத்தில் அவிவேகத்

தாற்சொன்னாலும் இப்போது அவைகளை வேறுவேறாய்ப்பிரித்தபின் வேம்புக்கே கசப்பும் வெல்லத்துக்கே தித்திப்பும் பிரத்தியக்ஷமாய்ச் சகலருக்கு முறுதியாவதுபோலுமறிக. ஐயா, அன்னமயாதி பஞ்சகோசங்களை ஆத்மாவை விட்டுப்பிரிக்கும்போது அவைகள் ஜடமாய்ப்போய்விடுமே, அப்போது ஜடமான அந்தப்பஞ்சகோசங்களுக்கும் புண்ணியபாபமுதலான கருமங்களைச் செய்ய யோக்கியதை எப்படிக்கூடும்? அதுவுமன்றியில் அந்தக்கர்மங்களுக்குப் பலமான சுகதுக்கங்களை எப்படியடையக்கூடுமென்று கேட்பாயாகிலதற்கு உத்தரஞ்சொல்லுகிறேன். கேள்:— ஜடங்களுக்குச் சிலவிடங்களில் தொழில்களைச் செய்யும்படியான யோக்கியதையும் அதன்பலமான சுகதுக்கங்களையுமனுபவிக்கும்படியான யோக்கியதையுமுண்டு, சிலஜடங்கள் அவ்விரண்டுக்கும் யோக்கியதை யில்லாமலிருக்கவுங்கூடும். அது எங்ஙனமெனில், காற்றுரூபமான பூதப்பிரேத பிசாசுமுதலானவைகள் ஜடமாயிருந்தாலும் பெண்முதலானவர்களைப் பிடித்துத் தலைசுற்றியாடும்படியான தொந்தரவு செய்யவுங்கூடும். மந்திரவாதிமுதலானவர்களாற் கண்டிக்கப்பட்டு அழுதுகொண்டு 'என்னை எரிக்க வேண்டாம். நான் போகிறேன்' என்று விசனப்படவும், 'நான் இந்தப் பெண்ணைச் சுகமாயனுபவிப்பதை விடமாட்டேன்' என்று சந்தோஷமாய்ச் சொல்லவுங்கண்டிருக்கிறபடியால், ஜடங்களுக்கு அப்படிப்பட்ட யோக்கியதை யிருக்கிறதென்றறிக. ஐயா, அப்படிச்சொல்லும்பக்ஷத்தில் பிரஹ்மஞானிகளுடைய பஞ்சகோசங்களும் இந்தச்சரீரம்போனாலும் பின்னும் இதுபோலவே அனந்தகோடி ஜன்மங்களை எடுக்கும்படியான கர்மங்களைச்செய்யவும் அந்தந்தக் கர்மங்களுக்கு ஈடான ஜன்மங்களெடுக்கவும் அதனால்வருகிற சுகதுக்கங்களை யனுபவிக்கும்படியும்வரும். ஆகையால்ஞானி கிருதகிருத்தியன், சகலதுக்கங்களிலிருந்தும் விடுபட்டவன், தடையற்ற ஆனந்தமுடையவன், அவனுக்கு ஒருநாளும் ஜனனமரண பயமில்லையென்று இப்படிச்சொல்லுகிற சுருதிவாக்கியங்களுக்கெல்லாம் விரோதம்வருமேயென்றால், அப்படி விரோதம்வராமற் சொல்லுகிறேன் கேள்:— இப்போது சொன்னவெல்லாம் அஞ்ஞானமயக்கத்தோடுங் கூடிய உனக்காகப் பொய்யாகச்சொன்னதேயல்லாமல் வாஸ்தவமாய்ச் சொரூபத்தில் மாயையும், ஜகத்துற்பத்தியும், பத்தனும், சற்கருமங்களைச்செய்கிற சாதகனும், முமுக்ஷுவும், ஜீவன்முத்தனும் பரமார்த்தத்திலொன்றுமில்லையென்று சுருதிசொல்லுகிறதே நம்முடைய சித்தாந்தமான அனுபவமென்றறிந்துகொள்ளத்தக்கது.

## 115 - வது தரங்கம்.

ஜகத்துக்குள்ளே சரீரத்தைமட்டும் மிகுந்த அசுத்தமாய்ச்செய்திருப்பதற்குக் காரணம்:—

அனந்தகோடி நாமரூபத்துக்குள்ளே இந்த மனுஷசரீரத்தைமட்டுக்கும் மிகுந்தஅசுசியாய் உண்டுபண்ணினதற்குயுக்தி :—வீட்டிற்குள்ளே படுக்கை

வீட்டைமட்டுக்கும் வாசனத்திரவியங்களெல்லாஞ்சேர்த்துச் சிங்காரிப்பது போலும், சரீரத்துக்குள்ளே எல்லாஅவயவத்தைக்காட்டிலும் யோனித்துவாரத்தில்மட்டும் மலமூத்திராதி ஆபாசங்களை வைத்திருப்பதுபோலத் தேகத்தை மட்டும் நானென்றிருப்பதாலென்றறிக. [இ - து] தேகமுண்டானபோதும் மரித்தபோதும் தீண்டல்வைத்திருக்கிறதற்கு யுக்தி:—மாப்பிள்ளை வந்தகாலத்திலும் ஊருக்குப்போகையிலும் விருந்துசெய்வது போலவறிக. ஐயா, இந்தத் தேகம் சகலமானபிராணிகளுக்கும் சுகத்தைக்கொடுக்கிறதாயும், சுத்தமாயும், மற்றப் பணங்காசுமுதலானவைகளைவிட்டாவது இத்தேகத்தைக் காப்பாற்றிக் கொள்வதால், இதை எப்படித்துக்கமென்றும் அசுத்தமென்றுஞ்சொல்லலாம்? இது எப்போது அசுத்தமென்று புத்தியில்படுமென்று கேட்பாயாகில், அதற்கு உத்தரஞ்சொல்லுகிறோம் கேள். முன்னொருகால் நம்மிடத்தில் ஒருமகாராஜன் வந்து நம்மைச்சரணாகதிபண்ணினதின்பேரில், நாம் உனக்கு என்னவேண்டுமென்று கேட்கும்போது 'எனக்குத் திரும்பிப்பிறவாமலிருக்கிற மோக்ஷமே வேண்டும்' என்று சொல்லும்போது, நான் அவனைப்பார்த்துச்சொன்னதாவது 'மோக்ஷமென்பது பிரஹ்மமே. அந்தப்பிரஹ்மம் மகாபரிசுத்தமானதால், நீயும் அசுத்தமான பதார்த்தத்தில் ஆசையை விட்டாயேயானால், அந்தச்சுத்தமான பிரஹ்மம் உனக்குச் சாக்ஷாத்காரமாகஆகும்' என்று சொன்னதற்கு அவன் 'அசுத்தமான பதார்த்தமின்னதென்று சொன்னால் நானதிலாசையை விட்டுவிடுகிறேன்' என்று சொன்னதும் நான் 'நீயே அசுத்தமான பதார்த்தமின்னதென்று நன்றாய் விசாரித்து அறிந்துகொண்டுவா' என்று சொன்னதின்பேரில் அவ்வரசனும் அரண்மனைக்குப்போய்த் தன்னுடைய சேவகர்களை விட்டுப் புல்லுமுதல் அமிர்தசஞ்சீவிவரையிலுள்ள சகலமூலிகைகளையும் வரவழைத்து வைத்தியர்களிடத்தில் காண்பித்ததில், அவைகளெல்லாம் ஒவ்வொரு ஔஷதத்துக்காகுமென்றும் மகாசுத்தமென்றும் சொன்னதின்பேரில், தன் சரீரத்திலிருந்துவந்த மலமூத்திரங்களைப் பாத்திரத்திலெடுத்து அவ்வைத்தியர்களுக்குக் காண்பித்ததில், அவர்கள் இவைகள் மகாஅசுத்தமென்று சொன்னதால், அதை எடுத்துக்கொண்டு நம்முடையசன்னிதானத்தில் வைத்தமாத்திரத்தில், நாம் அதுஎன்னவென்று கேட்கும்போது, ஐயா, தாங்கள் அசுத்த பதார்த்தத்தைக்கண்டுபிடித்து அதில் ஆசையைவிட்டுவிடச்சொல்லி உத்தரவாச்சுதே, ஆகையால் நான் பார்த்தபதார்த்தங்களுக்குள்ளே இதுவே அசுத்த பதார்த்தமாயிருப்பதால் இதில் ஆசையை எள்ளளவேனும் வைக்காமல்விட்டுவிட்டேனென்று சொல்லும்போது, நம்முடைய கடாக்ஷத்தால் அந்த மலமூத்திரங்களிலிருந்து ஒருஜீவன் உண்டாய் "ஐயா, நாங்கள் நெல்லாயும் அரிசியாயும் அன்னமாயும் தீர்த்தமாயுமிருக்கும்போது, எங்களிடத்தில் நாத்தமான அசுத்தம் யேதேனுமிருந்ததா? இந்தஅசுத்தமான இவனுடைய உடலிற் சம்பந்தப்பட்டதால் எங்களுக்கு முன்னிருந்த சுத்தமும்போய் அசுத்தமாகப் போகும்படி செய்திருக்க, எங்களை அசுத்தமென்று இவன்சொன்னது நியா

யமா? இப்படியே இத்தேகசம்பந்தத்தாற் சந்தனம் மாலை பட்டுவஸ்திரங்கள் முதலான நல்லவஸ்துக்களெல்லாங் கெட்டுப்போகிற அனுபவம் பிரத்தியக்ஷமாயிருக்கும்போது, இவன்தேகமே அசுத்தம்" என்று சொன்னதைக்கேட்ட அவ்வரசன், ஐயா, நீங்கள் இத்தேகம் அசுத்தமென்று சொல்லக்கூடாதா? இந்த மலமா புத்திசொல்லவேண்டுமென்று சொல்லவும், அப்பா! நீ தேகமாயிருக்கும்போது உன்ஜாதியான மலம் புத்திசொல்லிற்று. நீ இப்போது அதற்கு வேருய்விட்டதால் நாம் நீ அறிவென்றுபதேசிக்கிறோம்.

## 116 - வது தரங்கம்.

தேகத்தில் நானென்றிருப்பதாலேயே பந்தம் வருகிறது:—

மலத்திலேயும் பிரஹ்மமிருக்கும்போது ஏன் பந்தம்வரவில்லையென்றால், மலத்திலே நானென்கிற புத்திபண்ணினதா? பண்ணவில்லை. இந்தத்தேகமாகிற மலத்திலே நானென்று புத்திவந்தபடியாற் பந்தம்வந்திருக்கிறது. [எ - தி] உபஸ்தங்களிலெல்லாம் துவாரமிருந்தாலும் சிசுனம்பிரவேசித்த யோனிகளில் மட்டும் பிரசவமுண்டாவதுபோலவறிக. ஐயா, இந்தத்தேகாத்மபுத்தி மகா கெட்டதென்றும் இதனாலேயே அனந்தகோடிபாபங்கள்விளைகின்றனவென்றுஞ் சொன்னீர்களே, இந்தத்தேகாத்மபுத்தியினால் யாருக்கு என்னகெடுதிவந்திருக்கிறது? அதைக்கொஞ்சஞ் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அடே மூடா! முதலில் உன்னுடைய அனுபவத்தை நீயே பார்த்துக்கொள். ஜாக்கிரசொப்பனத்தில் தேகாத்மபுத்தியிருப்பதால் துக்கம்வருவதையும், சுழுப்தியவஸ்தையில் அப்புத்திபோவதால் சுகம்வருவதும் கண்டிருந்தும், இப்படியே சகலஜீவர்களும் சிருஷ்டியில் தேகாத்மபுத்தியுண்டானதுமுதல் பிரளயம்வரையில் அப்புத்தியிருந்துகொண்டு அநேகவிதமான துன்பங்களைக் கொடுத்துவருவதாலும், இன்னும் தக்ஷப்பிரஜாபதி மிகுந்ததபசினால் ஈசுவரனுக்குச்சமானமான சிருஷ்டியாதிதொழில்களைச் செய்யும்படியான மகாவல்லமைகளைப் பெற்றிருந்தும், இப்படிப்பட்ட வல்லமைகளைக்கொடுத்த ஜகதீசுவரனிடத்திலேயே தேகாத்மபுத்தியினால் மகாதுவேஷத்தை வைத்துக்கொண்டு, எக்ஞத்துக்கு ராஜாவாயிருக்கிற பரமசிவனிடத்திலும் தன்பெண்ணான பரதேவதையினிடத்திலும் அவரைச்சேர்ந்த பக்தர்களிடத்திலும் விரோதம்வந்துவிட்டதால், அவர்களைக்கூப்பிடாமல் தள்ளிவைத்துவிட்டதுமன்றி அப்பரமசிவனையும் நிந்தித்துக்கொண்டு யாகஞ்செய்ததால் அவன் கெட்டுப்போனகதையையும்; இப்படியே சூரபத்மாசுரன் சிம்மவக்திராசுரன் தாரகாசுரன் மூன்றுபேர்களும் உக்கிரமான தபசுசெய்து ஆயிரத்தெட்டுஅண்டங்களையும் கட்டிஆளும்படியான வல்லமைகளையும் வாங்கியிருந்தும் இத்தேகாத்மபுத்தியினாலேயே அவர்கள் குலத்தோடே நசித்துப்போனகதையும்; இப்படியே ராவணன், ஹிரண்யன், நரகாசுரன், பகாசுரன்முதலான அநேகஅசுரர்களும் இப்புத்தியினாலேயே கெட்

டிருப்பதும், இன்னமிந்திராதிதேவர்களும் மிகுந்ததபசுசெய்து அந்தந்தப் பதவிகளையடைந்து வெகுபிரயாசத்தினுற் பாற்கடலைக்கடைந்து அமிர்தம் சாப்பிட்டதினுல், கற்பம்வரையில் மரணமில்லாமல் ஜீவித்திருக்கும்படியான வல்லமையைப்பெற்றிருந்ததால், சூரபத்மாமுதலான அசுரர்களுடைய ஹிம்சையைப்பொறுக்கமாட்டாமற் சமுத்திரத்திற்போய் விழுந்தாலும் சாவுவராமல் தபித்ததும் தேகாத்மபுத்தியினுலேயே; இன்னும் மனுஷஜன்மங்களை யெடுக்கும்போது கெர்ப்பவாசத்தாலும், யோனித்துவாரத்தில் நெருக்கடிப்பட்டு அவதிப்படுவதாலும், பிறந்தபின்னும் பசிதாகத்தாலும், தேகவாசனை லோகவாசனை சாஸ்திரவாசனைமுதலானவற்ருலும், காமக்குரோதமுதலானவற்ருலும், தாபத்திரயதுன்பத்திஞலும், பஞ்சமகாபாதகம்வரை செய்து நரகதுன்பங்களை அடைவதும், எக்ஞாதி புண்ணியகர்மங்களைச்செய்து சொர்க்கத்துக்குப் போய், புண்ணியமானவுடன் கீழேவிழுவதும் தேகாத்மபுத்தியினுலேயே; இன்னம் பாபசேஷத்துக்காக நாலுகால்மிருகங்களாய்ப் பிறந்து ஹிம்சைப்படுவதும், பக்ஷிகளாய்ப்பிறந்து அடிபட்டுச்சாவதும், ஜலத்தில் மீன்முதலாய்ப் பிறந்து வலையிலகப்பட்டுச்சாவதும், ஈ எறும்புகளாய்ப்பிறந்து சாவதும், மரம் செடிகொடிகளாய்ப்பிறந்து வெட்டப்படுவதும் தீயாலெரிக்கப்படுவதும் தேகாத்மபுத்தியினுலேயே யென்றறிந்து நீயும் இனிமேலாவது இந்தத்தேகாத்மபுத்தியைவிட்டுப் பிரஹ்மாத்மபுத்தியாற் சுகிக்கக்கடவாய்.

## 117 - வது தரங்கம்.

தேகத்திற்கும் ஆசைக்கும் மூன்று அவஸ்தை காண்க :—

சரீரத்துக்கு வார்த்திகத்தில் ஆசைக்கு யவ்வனம். சரீரத்துக்கு யவ்வனத்தில் ஆசைக்கு வாலிபம். சரீரத்துக்கு வாலிபத்தில் ஆசைக்கு விருத்தாப்பியமாயிருப்பதாற் சத்துருவானவன் யவ்வனமாகிறதற்கு முன்பு வாலிபமாயிருக்கும்போதே அவனைக்கொல்லவேண்டியது அவசியமாயிருப்பதுபோல ஆசைக்கு யவ்வனமாகிற விருத்தாப்பியம் வருமுன்னமே ஆசைக்கு வாலிபமான யவ்வனத்திலேயே அதைக்கொல்லல்வேண்டும். அப்படிக்கொல்லாவிட்டால் தன்னைக்கொன்றுவிடும். [எ - தி] கம்சன் எவ்வனனுயிருக்கும்போது தனக்குச் சத்துருவாய்ப்பிறந்த கிருஷ்ணனைக் கொல்லாததினுல் அவன் யவ்வனனுய் இவனைக்கொன்றகதைபோலுமறிக. ஐயா, சகல ஆசைகளையும் விட்டிருக்கிற ஞானிகளுக்குத் தேகாதிஜகத்விவகாரமிருப்பதால் இவர்களுடைய பிரஹ்மக்ஞானத்தை அவைகள் கெடுக்கமாட்டாவோவென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ்சொல்லுகிறேன் கேள்:— ஒரு அகண்டசக்கிரவர்த்தியாயிருக்கிற ராஜனை மகாமாயாவியின் குமாரனை ராக்ஷஸன்வந்து தன்னுடைய மாயாசக்தியால்மறைத்து இருட்டறைக்குள்ளடைத்துப் பூட்டிப்போட்டுத் தங்கள் குலத்தோடும் தங்கள் சைன்னியத்தோடும் தங்கள் தர்மந்திரிமுதலானவர்க

ளோடும் கூடிக்கொண்டு அந்தராக்ஷஸன் அநீதியான அரசாக்ஷி கற்பகோடி காலஞ்செய்துகொண்டு வருங்காலத்தில், அந்தஅரசனுடைய மனைவி கர்ப்பமாயிருந்ததால் மகாசூரனை பிள்ளையைப்பெற்று, அது அஞ்சுவயதானபின்பு தாயைப்பார்த்து, நான் யார்? என் தகப்பனார் யார்? என்னுடைய சம்பத்துக்கள் எவைகளென்று கேட்கும்போது, தபசுசெய்துகொண்டிருக்கிற புராதன மந்திரியினிடத்திற் பிள்ளையைக் கூட்டிக்கொண்டுவந்து இவன்கேட்ட சங்கதிகளையுந்தெரிவித்து 'இவரை நிழல்போல நீ விட்டுப்பிரியாமலிருந்தாயேயானால் உனக்குச் சகலநன்மைகளுமுண்டாகும்' என்று ஒப்புவித்தபின் அந்தமந்திரியும் இந்தப்பிள்ளையைப்பார்த்து 'உன்தகப்பன் ஏகசக்கிராதிபதியாயிருந்தும் அவரை அறையிலடைத்துவிட்டு இந்தராக்ஷசர்கள் அநியாயமாயிப்படி அரசாக்ஷிசெய்கிறார்கள்' என்று சொன்னதைக்கேட்டவுடன் மிகுந்த கோபத்துடன் அந்தமந்திரியினுடைய அனுக்கிரகத்தைப் பெற்றுக்கொண்டு அந்தக் குமாரன் ஒருவனாகவே யுத்தத்துக்குப்புறப்பட்டு எதிரிகளுடைய படைகளையும் சேனாதிபதிகளையும் மந்திரிகளையுங்கொன்று, அவர்களுக்குத்தலைவனான ராக்ஷசனையுங்கொன்று, தன்பிதாவான அரசனையும் அறையிலிருந்து வெளியேற்றி, அவரனுமதிப்படி தானே ஏகசக்ராதிபதியாய் ராஜ்ஜியபரிபாலனம் பண்ணிக்கொண்டு மகாபலசாலியாய் நல்ல யவ்வனத்தோடே தீரனாய்ச் சகலவிதமான சைன்னியங்களோடேகூடிக்கொண்டு அரசாக்ஷிசெய்துவருகிற அந்தராஜனை முன்னிறந்துபோன ராக்ஷசர்கள் திரும்ப எழுந்திருந்துவந்து இந்தராஜனையெப்படிக்கொல்லமாட்டார்களோ, அப்படிப் பிரஹ்மத்தை அஞ்ஞானம் மறைத்து, ஆவரணத்தால் ஞானதிருஷ்டியைமூடி விக்ஷேபமென்கிற அகங்காரிக்குக் கருத்துருத்துவமாகிற பட்டத்தைக்கட்டி, வாசனைகளாகிற மந்திரிகளையுங்கற்பித்து, ராகத்துவேஷங்களாகிற சேனாதிபதிகளையும் இந்திரியங்களாகிற சேனைகளையும் தேகமாகிற கோட்டையையுங் கற்பித்துச் சம்சாரமாகிற அரசாக்ஷி வெகுகாலமாய்ச் செய்துவந்ததில், சுமதியென்பவளுக்கு விவேகனென்கிற புத்திரன் பிறந்து, குருவாகிற மந்திரியின் அனுக்கிரகத்தைப்பெற்று மேலேசொல்லிய சகலர்களையும் இவனொருவனாகவேயிருந்துகொண்டு குருகிருபையொன்றோடேசெய்கிற பிரஹ்மாப்பியாசத்தால் மூலதோஷானியாய்ப்போகும்படி அகண்டாஸ்திரத்தாற் சம்மாரம்பண்ணி, ஆவரணத்தையும் ஞானதீபத்தால் நிவர்த்தித்து, அஞ்ஞானனையும் நிருவிகல்பசமாதியாற் கொன்று, நாமே பிரஹ்மம் பிரஹ்மமே நாமென்ற ஐக்கியமாகிற அரசாக்ஷி செய்துகொண்டுவந்து, திடஞானமாகிற யவ்வனத்தோடேகூடியிருக்கிற இவனை யிறந்துபோன அஞ்ஞானாதிகள் திரும்பவுண்டாய் ஒன்றுஞ்செய்யமுடியாதென்றறிக.

## 118 - வது தரங்கம்.

**தேகமுள்ளவிடத்தில் துக்கமுண்டு :—**

சரீரமுள்ளவிடங்களில் துக்கமுண்டு. [எ - தி] மலமூத்திரமுள்ளவிடத்தில் நாற்றமிருப்பதுபோலும், புலியிருக்கிறவிடத்தில் பீதியிருப்பதுபோலும், பெண்ணிருக்கிறவிடத்திற் பிழையிருப்பதுபோலுமறிக. ஐயா, தேகமுள்ளவிடங்களிலெல்லாம் துக்கமுண்டென்று சொன்னீர்களே, அப்போது பிரஹ்மக்ஞானிகளுக்கும் தேகமிருப்பதால் அவர்களுக்கும் துக்கமுண்டென்று சொல்ல வேண்டிவருமே, அப்படிச்சொன்னால் துக்கநிவர்த்தியென்கிற ஆறும் அவஸ்தையவர்களுக்கு எப்படிக்கூடும்? அவர்களுக்குத் துக்கநிவர்த்தியில்லாதபோது தடையற்றஆனந்தமென்கிற ஏழாமவஸ்தை யெப்படியிருக்கக்கூடும்? அப்படித் தடையற்ற ஆனந்தமில்லாதபோது பண்ணவேண்டியதெல்லாம் பண்ணிமுடிந்தது, அடையவேண்டியதெல்லாம் அடையப்பட்டதென்கிற சர்வகாமாப்தியெப்படியிருக்கக்கூடும்? இப்படியெல்லாஞ்சொல்லுகிற சுருதிவாக்கியங்களுக்கும் மகான்களுடைய அனுபவத்திற்கும் விரோதமாகிறதே, அல்லது ஜீவன் முக்தர்களுக்குத் தேகாதிகள் தோற்றுமென்று சொன்னாற் குருசிஷ்யபரம்பரையும் தத்துவக்ஞானமுமில்லாமற் போகும். அதுவுமன்றியில் ஒருவருக்கும் குருவன்றியில் ஞானம் வாராது. சுருதியும் குருவையுடைத்தாயிருக்கிற புருஷனுக்கே பிரஹ்மக்ஞானமுண்டாகுமென்று சொல்லுவதால் தாங்கள் எப்படிச் சொன்னீர்களென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறோம். கேள்:— வாராய் குழந்தாய்! நீ நம்முடைய அபிப்பிராயந்தெரியாமல் இப்படிச் சங்கிக்கிறாய். அதாவது, பாம்பு புலி சிங்கமுதலானவையிருந்தால் அவைகள் ஆட்களைக்கடித்துக் கொன்றுபோடுமென்று சொன்னால் துஷ்டமிருகங்கள் போலே செய்துவைத்திருக்கிற உருவாரங்களும் ஆட்களைக்கொல்லுமா? அதனுடைய யதார்த்தமான தன்மைதெரிந்தவன் அதைக்கண்டு பயப்படுவானா? அப்படிப்போல தத்துவக்ஞானத்தினாலே தேகாதிஜகத்துச்சத்தியமென்கிற புத்தியைக்கெடுத்திருக்கிற ஞானிகளுக்கு அவைகள் தோற்றுவதாற் கொஞ்சமும் பயம்வாராது. அதுவுமன்றியில் இத்தனை ஜீவேசுவரஜகத்துக்களையும் ஒரு ஞானம்வந்து கொன்றுவிட்டதேயென்கிற கீர்த்தியும்வரும். [எ - தி] ஒரு பலசாலியான ராஜாவானவன் தனக்கு எதிரியான ராஜாவையும் அவனுடைய சதுரங்கசேனைகளையும் தன்னுடைய அஸ்திரசஸ்திரங்களாற் கொன்றுபோட்டு அரண்மனைக்குவந்து ராத்திரி சுகமாய்ப்படுத்திருந்து காலமே தன்னைச்சார்ந்த ஜனங்களோடேகூடிக்கொண்டு படுகளம்போய் இறந்துபோயிருக்கிற எதிரியையும் அவனைச்சார்ந்த சைன்னியங்களையும் வேடிக்கைபார்க்கும்போது அந்தப் பிணக்கூட்டங்களைக்கண்டு பயப்படவுமாட்டான். அதுவுமன்றியில் ஜனங்களெல்லோரும் இந்த ஒருமகாசூரன் இத்தனைகோடி ஜனங்களையும் ஒருவனாயிருந்து கொன்றான்பாரென்று சகலஜனங்களாலும் கொண்டாடப்படுகிற கீர்த்தியையும் அடைவதுபோலும்; உயிரோடேயிருக்கிற இப்பாம்பே கருடனைக் கொல்லமாட்டாதபோது இறந்துபோன பாம்பு கருடனைக்கொல்லுமாவென்று கேட்கலாமா? உயிரோடேயிருக்கிற யானையே சிம்மம்போல சொப்பனங்

கண்டாலிறந்துபோமானுல் செத்துப்போயிருக்கிற யானை சிங்கத்தைக்கொல்லு மென்று சொல்லலாமா? உயிரோடேயிருக்கிற கானைமாடே சொப்பனத்திற் புலியைக்கண்டு இறந்துபோகுமானுல் இறந்துபோயிருக்கிற மாடு புலியைக் கொல்லுமாவென்று கேட்பதுபோல நீ கேட்டதென்றறிக.

## 119 - வது தரங்கம்.

ஆத்மானுத்மாக்களின் தன்மை:—

அசத்தாயும் அசுவதந்திரமாயுமிருக்கிற சில விஷயங்கூட நினைத்தபடி முடியுமானுல் சத்தாயும் தானுயும் சுவாதீனமாயுமிருக்கிற ஆத்மாவை நினைத்தவனுக்கு ஆத்மா சித்திக்குமாவென்று சங்கிக்கக்கூடாது. [எ - தி] அசுசியாயும் அசுவாதீனமாயுமிருக்கிற அன்னியஸ்திரீயின் போகமே நினைத்தபடி கிடைக்குமானுல் சுத்தமாயும் சுவாதீனமாயுமிருக்கிற சொஸ்திரீபோகங்கிட்டுமாவென்று கேட்கத்தேவையில்லாததுபோலும், கானல்ஜலம் கண்டபடிகுடிக்கலாமென்று பிராந்தியினுலே எண்ணினவனுக்கு அது உதவுமானுல் கையிலிருக்கிற கங்கா தீர்த்தம் குடிக்கஉதவுவதிற் சந்தேகமில்லாததுபோலும், நாட்டுவண்டியே நினைத்தவிடத்திற்கு வேகமாய்ப்போனுல் ரயில்வண்டி வேகமாய்ப் போவதற்கு கேட்கவேண்டாததுபோலவறிக. ஐயா, அனுத்மாவான தேகாதிஜகத்து அசுவதந்திரமென்றும், அசத்தென்றும், ஜடமென்றும், துக்கமென்றும், கண்டமென்றும், சஞ்சலமென்றும் விகாரமென்றும், உற்பத்திநாசமுள்ளதென்றும்; ஆத்மா இந்த லக்ஷணங்களுக்கு எதிர்மறையான லக்ஷணமுடையதென்றுஞ் சொன்னீர்களே, அப்படிச்சகலஜீவர்களுக்கும் இந்தப்பரமாத்மா சுவாதீனமாயிருக்கும்பக்ஷத்தில் சகலஜீவர்களும் இந்தஆத்மாவைச் சாக்ஷாத்காரமாக அறிந்து பிரஹ்மானந்தத்தை யெல்லோரும் எப்போதும் அடைந்திருக்கலாமே? அப்படிக்கில்லாமல் ஜனனமரணதுக்கரூபமான சம்சாரசமுத்திரத்தில் மூழ்கித் தாபப்படக்காரணமென்னவென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரம் சொல்லுகிருேம். கேள்; தன்னையறியாததினுலென்றறிக. நானென்று சகலரும்விவகரிப்பதால் ஆத்மாவாச்சுதே அப்போது சகலரும்ஆனந்தத்தை அடையாமலிருப்பானேனென்றுல், கல்யானையிற் குழந்தைகள் ஏறிவிளையாடலாமே தவிர ராஜாவுக்கு அதிலேறிக்கொண்டு யுத்தத்துக்குப்போகமுடியுமா? பட்டணப்பிரவேசம் பண்ணமுடியுமா? பொம்மையினுற்செய்திருக்கிற ஆண்பெண்களைவைத்து குழந்தைகள்மட்டும் விளையாடக்கூடுமேதவிர நிஜமானபுருஷனுக்காவது ஸ்திரீக்காவது போகசுகத்தையும் புத்திரோற்பத்தியையுங் கொடுக்குமா? வேஷம்போட்டிருக்கிற ராஜாவும் வேடிக்கைபார்க்கிற ஜனங்களுக்குமட்டும் சந்தோஷத்தை யுண்டுபண்ணுவனேதவிர மகாதரித்திரனுயிருக்கிறவனுக்கு அவனுடையதரித்திரம் தீரும்படியாக யதேஷ்டமாகச் சம்பத்துக்களைக்கொடுத்து அவனுடையதரித்திரத்தைத் தீர்த்துவைக்கமுடியுமா? அப்படிப்போல இந்த

தேகாதிஜகத்தைக்குறித்து நானெனதென்று விவகரிப்பது பொய்யாம். அவைகளால் யாதொருஜீவர்களுக்கும் துக்கநிவர்த்தி தடையற்றஆனந்தங் கொடுக்கமுடியாதென்றறிக. அப்படியானால் எல்லோரும் இந்தப்பிரஹ்மானந்தத்தை அதிசுலபமாயடைந்து நித்தியசுகிகளாய் வாழாமல் நித்தியதுக்கிகளாயிருப்பானேனென்றால், அவர்களுக்குத் தத்துவக்ஞானமாகிறசெவிஅடைபட்டுப்போனதால் தங்கள்தங்களுக்கு எதெது தோன்றுகிறதோ அததுவே பிரமாணமாய்த் தோற்றுகிறதேயல்லாமல் சுருதி யுக்தி அநுபவத்திற்கு ஒத்ததாயிருக்கிற சற்குருநாதனுடைய உபதேசவாக்கும் சாதுக்களுடைய வசனமும் ஏறஇடமில்லாமற்போனதால் இந்தச்சுலபமாயும் சுகமாயுமிருக்கிற ஞானத்தையடைய இடமில்லாமற்போய்விட்டது. (எ - தி) நாரதருக்குச்சமானமான கானம் சப்தஸ்வரங்களோடே தம்பூர் வீணை பிடில்முதலான வாத்தியங்களோடே சங்கீதவித்வான் வந்துபாடினாலும் சண்டிகேசுவரருக்குச்சமானமான செவிடனுக்கு அந்தப்பாட்டுக் காதில் கேளாததுபோலும், ஊர்வசி ரம்பை திலோத்தமைபோல ரூபலாவண்யங்களோடே சர்வாலங்காரமான பெண்வந்து சர்வவிதமானஅபிநயத்தோடே ஆடினாலும் பிறவிக்குருடனுக்கு அது பார்க்கமுடியாததுபோலும், லக்ஷுமிக்குச்சமானமான பெண் சுயமாய் போகத்துக்குவந்து படுக்கையிற் படுத்தாலும் நபுஞ்சகனுக்கு அவளுடையசம்போகம் பண்ணமுடியாததுபோலும், தேவாமிர்தத்துக்குச்சமானமான சாப்பாடு கிடைத்தாலும் ஜன்னிபிறந்து நாவுகறுத்துக்கசந்துபோயிருக்கிறவனுக்கு அந்தப்போஜனத்தைச் செய்யமுடியாததுபோலும், மூக்கறையனுக்குச் சுகந்தத்தை யறியமுடியாததுபோலுமறிக.

## 120 - வது தரங்கம்.

வாச்சியத்திற் பேதமேயல்லாமல் லக்ஷியத்தில் பேதமில்லை:—

தத்வம்பதத்தில் வாச்சியங்களிற் பேதமேயல்லாமல் லக்ஷியத்திற் பேதமில்லை. [எ - தி] ஓடுகால்களில் சிறிதுபெரிது வருணாசிரம பேதங்களிருக்கிறதேயல்லாமல் வேகவதிநதியில் பேதமில்லாததுபோலும், ஊரிலிருக்கிற ஜனங்களுக்குள் பேதமேயல்லாமல் ஊர் பேதமில்லாமலிருப்பதுபோலும், கணபதிமுதலான வடிவத்திற் பேதமேயல்லாமற் கல்லிற் பேதமில்லாததுபோலுமறிக. ஐயா, வாச்சியத்தில் பேதமிருக்கிறதேயல்லாமல் லக்ஷியத்திற் பேதமில்லையென்று சொன்னீர்களே, என்னகாரணத்தினாற் சொன்னீர்களென்று கேட்பாயாகில், அதற்குத்தரம் சொல்லுகிறேன் கேள்:— லக்ஷியமென்பது வாஸ்தவமாயிருக்கிறதெதுவோ அதுவேயாம். அந்த வாஸ்தவத்தில் அஞ்ஞானத்தினாலும் வாசனையினாலும் கர்மத்தினாலும் ஆசையினாலுங் கற்பிக்கப்பட்டிருக்கிற நாமரூபங்கள் யாவையுண்டோ அவையே வாச்சியமென்று சொல்லப்படும். [எ - தி] வாஸ்தவமானமண் லக்ஷியமாம், அதிற்கற்பிதமா

யிருக்கிற சக்தியினுலும் தண்ட சக்ர குலாலாதிகளினுலுங் கற்பிக்கப்பட்டிருக்கிற கடசராவாதிநாமரூபங்களே வாச்சியமாம். வாஸ்தவமானசுவரே லக்ஷியமாம், அதில் மையினுலும் சித்திரிகனுலும் அவன்லேகினியினுலும் அவன்வாசனையினுலும் எழுதப்படுகிற சித்திரமான நாமரூபமே வாச்சியமாம். வாஸ்தவமானஇரும்பு லக்ஷியமாம், அதிற்கற்பிதமான சக்தியினுலும் கொல்லனுலும் அவன் ஆயுதத்தாலும் உண்டுபண்ணப்பட்டிருக்கிற கத்தி கேடய முதலான நாமரூபமே வாச்சியமாம். வாஸ்தவமானதங்கம் லக்ஷியமாம், அதிலிருக்கிற சக்தியினுலும் தட்டானுலும் அவன் ஆயுதத்தாலும் ஆபரணத்தை அணிந்துகொள்ளுகிறவர்களுடைய ஆசையினுலுஞ்செய்யப்படுகிற கிரீடகுண்டலாதி நாமரூபமே வாச்சியமாம். வாஸ்தவமானமரமே லக்ஷியமாம், அதிலிருக்கிற சக்தியினுலும் தச்சனுலும் அவன்ஆயுதத்தாலும் உண்டுபண்ணப்படுகிற பெட்டி நாற்காலி தேர்முதலான நாமரூபங்களே வாச்சியமாம். வாஸ்தவமான நூலே லக்ஷியமாம், நெசவுக்காரனுலும் அவன் ஆயுதத்தாலுங் கற்பிக்கப்படுகிற சோமன் புடவைமுதலான நாமரூபமே வாச்சியமாம். வாஸ்தவமானஜலமே லக்ஷியமாம், அதிற்காற்றினுற் கற்பிக்கப்படுகிற அலை நுரை குமிழிமுதலான நாமரூபமே வாச்சியமாம். வாஸ்தவமான அந்தக்கரணத்திற் பிரதிபிம்பித்து கர்த்தாவாயிருக்கிற புருஷனே லக்ஷியமாம், அவனிடத்திற் கற்பிதமான ஸ்திரீமுதலான அபிமானமே வாச்சியமாம். வாஸ்தவமான சுக்கிலசோணிதமே லக்ஷியமாம், அதிலுண்டாகிற ஸ்திரீபுருஷ நபுஞ்சகாதி நாமரூபங்களே வாச்சியமாம். இப்படிப்போலத் தத்பத தொம்பதங்களுடைய ஐக்யமான சச்சிதானந்தப்பிரஹ்மமே லக்ஷியமாம், அந்தப்பிரஹ்மத்திற் கற்பிதமான மூலப்பிரகிருதியினுடைய சத்துவகுணத்தாலும் தமோகுணத்தாலும் கற்பிக்கப்படுகிற பஞ்சபூதபௌதிகமாய்ச் சராசராத்மகமாய் உண்டுபண்ணப்பட்டிருக்கிற ஜகத்தும் ஈசனும் தற்பதவாச்சியமாம். பஞ்சகோசமும் ஜீவனும் தொம்பதவாச்சியமாமென் றறிந்துகொள்ளத்தக்கது.

## 121 - வது தரங்கம்.

*ஆத்மா ஒருபடித்தாயிருப்பர் அனுத்மா மாறிமாறிவரும்:—*

ஆத்மா ஒருபடித்தாய் மூன்றுகாலங்களிலுமிருக்கிருர். ஜாக்ரதாதி அவஸ்தைகளும் அவற்றிலுண்டாகிற சுகதுக்காதிவிகாரங்களும் மாறிமாறிப்போகும். [எ - தி] கச்சேரி ஒருபடித்தாயிருப்பதும் அதில்வருகிற ஜட்ஜிமுதல் சேவகன் வரையிலுள்ள உத்தியோகஸ்தர்களும் கக்ஷிக்காரர்களும் மாறிமாறி வருவது போலும்; ஆகாசம் ஒருபடித்தாயிருப்பதும், இருட்டுவெளிச்சம் மேகமுதலானவை ஒருகாலத்திலிருந்தபடியே யிராமல் மாறிப்போவதுபோலும்; சுவர் ஒருபடித்தாயிருப்பதும், சித்திரம் மாறிமாறிப்போவதுபோலும்; கோவிலிலிருக்கிற விக்கிரகம் ஒருபடித்தாயிருப்பதும், பட்டரும் அலங்காரம்பண்ணுவ

தும் மாறிமாறிப்போவதுபோலுமறிக. [இ - து] எழுகோட்டைவாசலுக்கு வெளியிலேயிருக்கிற சுவரில் ராஜாவைப்போல எழுதிய சித்திரத்தைப் பின்னை யொருவன்வந்து அவனைக்கட்டிவைத்து அடிக்கிறதுபோல எழுதியிருந்தாலும், பூஜிதைபண்ணுவதுபோல எழுதியிருந்தாலும் அந்தயேழுகட்டுக்கும் அப்புறப் பட்டிருக்கிற நிஜராஜாவுக்கு இந்தக்கட்டும் அடிமுதலானவையும் பூஜிதை முதலானவையும் எப்படிச்சம்பந்தமில்லையோ, அப்படிப்பஞ்சகோசமென்ன பஞ்சகோசத்துக்குச் சாக்ஷிவிருத்தியென்ன அகண்டாகாரவிருத்தியென்ன, இந்த யேழுக்குமப்புறப்பட்டிருக்கிற சிதாகாசமான நம்மிடத்தில் முதற் கட்டான அன்னமயகோசத்திற் கற்பிதமாயிருக்கிற ஜாதிவர்ணாசிரம குல கோத்திராதிகள் சம்பந்தப்படக் காரணமேயில்லையென்றறிக. [இ - து] விஷ யத்தில்வருகிறபிரீதி ஒன்றைவிட்டு மற்றொன்றில் மாறிப்போகும், ஆத்மா விடத்திலிருக்கிற பிரீதி மாறாது. [எ - தி] வாழையிலைமுதல் தங்கக்கிண்ணிவரை யிலுள்ள பாத்திரங்கள்மாறினாலும் அன்னத்திலிருக்கிற பிரீதி மாறாததுபோ லும்; சரீரத்திற் போடுகிற உடுப்பு போர்வை விசிறிமுதலானது காலானுகுண மாய்மாறினாலும் சரீரத்திற் பிரீதிமாறாதிருப்பதுபோலுமறிக. [இ - து] ஜீவன் விஷயத்திற் கரைந்துபோவன், கூடஸ்தர் ஒருபடித்தாயிருப்பர். [எ - தி] நதியி லிருக்கிறமணல் பிரவாகத்திற் கரைந்துபோவதுபோலும், பாறை ஒருபடித்தா யிருப்பதுபோலும்; சாமான்யசரீரங்கள் வியாதி நரை திரைமுதலனவால் விகாரி களாவதுபோலும், சித்தனுடையசரீரம் ஒருபடித்தாயிருப்பதுபோலும்; ஸ்தன் னியங்கள் வீங்கிவெடித்துத் தோலும் துருத்தியாயும் போவதுபோலும், யோனி ஒருபடித்தாயிருப்பதுபோலுமறிக. [இ - து] ஆத்மா இடைவிடாம லிருக்கிறார், அவஸ்தாத்திரயங்களும் அவற்றிலுள்ள தத்துவங்களும் ஒன்றி லொன்றில்லை. [எ - தி] ராஜஸ்திரீயின்சரீரம் ஒன்றாயும், தினம் உடுத்துகிற வஸ்திரங்களும் அணிந்துகொள்ளுகிற ஆபரணங்களும் வேறுவேறாயிருப்பது போலவறிக. [இ - து] ஆத்மா அகண்டன், மற்றத் தத்துவங்கள் மாயைக்குட் சேர்ந்ததால் ஒன்றுக்கொன்று தாரதம்மியமாயிருக்கும். [எ - தி] ராணி அகண்டமாயிருப்பதும் மற்றக்கவுனர்முதல் தோட்டிவரையில் தாரதம்மியமா யிருப்பதுபோலவறிக. [இ - து] அவஸ்தைகளும் அவைக்குள்ளிருக்கிற வஸ் துக்களும் நாசத்தையடைந்தாலும், அவைக்குள்சாக்ஷியாயிருக்கிற ஆத்மா அசங்கரானதால் நசியார். [எ - தி] சமுத்திரத்திற்போகிற கப்பலும் அதி லுள்ளவஸ்துக்களும் ஜனங்களும் காற்றினாற்கவிழ்ந்து நசித்தாலும் அதிலிருக் கிற அசங்கமானஆகாசம் நசியாதிருப்பதுபோலவறிக. [இ - து] ஜீவனுடைய ஞானாஞ்ஞானமான இரண்டுகாலத்திலும் சாக்ஷியே விளங்கிக்கொண்டிருக் கிறார். [எ - தி] மாப்பிள்ளை பெண்ணுடன் மணையிலிருக்கும்போதும் படுக்கை வீட்டுக்குப் பெண்ணுடன்போனபின்னும் தீபமே இரண்டுகாலத்திலும் விளக்கி வைத்துக்கொண்டிருக்கின்றதுபோலும், மடத்துவாசலில் உட்கார்ந்திருக்கிற சுவாமிகள் அழுதுகொண்டு பிணத்தைத் தூக்கிக்கொண்டுபோகிறவர்களையும்

பாடிக்கொண்டு கல்யாணப்பல்லக்குடன் போகிறவர்களையும்பார்த்து நிருவிகாரமாயிருப்பதுபோலவறிக. [இ - து] விவேகிக்குப் பிராரப்தகர்மத்தாலுண்டாகிற சரீராதி சுகதுக்காவஸ்தைகள் மாறிமாறித்தோன்றி அழிந்தாலும் சச்சிதானந்தமாகிய தன்சுபாவம் ஒருபடித்தாயிருக்கும். [எ - தி] நாடகத்தில் வேஷங்கள் மாறிமாறிப்போடப்பட்டாலும் தன்தேகம் ஒருபடித்தாயிருப்பதுபோலவறிக. [இ - து] அறிவாகிய தன்னிடத்தில் எவ்வளவுமாயாவிகாரங்கள் கர்மவசத்தால் தோன்றியழிந்தாலும் தனக்கு ஹானி விருத்தியில்லை. [எ - தி] சுவரில் எவ்வளவு சித்திரமெழுதி அழித்தாலும் சுவர் ஒருபடித்தாயிருப்பது போலவறிக. [இ - து] நாம் நிஜமா தேகாதி ஜகத்து நிஜமாவென்றால், மூன்றவஸ்தைகளிலும் மூன்றுகாலங்களிலும் நாம் அழியாதிருப்பதால் நாமேநிஜம். மற்ற இவைகள் அப்படியிராததினாற் பொய். [எ - தி] சொப்பனமும் சொப்பனசாக்ஷியும்போலவென்றறிக. [இ-து] ஆத்மசுபாவமான சச்சிதானந்தத்தை அனாத்மாவான தேகாதிகளடைய எத்தனித்தாலும் அவைகளுக்குக்கிட்டாது. [எ - தி] ஒருவன் பரம்பரையாயனுபவித்துவருகிற சொத்தைப் பின்னொருவன் யாதொருஆதாரவுமன்றியில் அதையடைய வியாச்சியஞ்செய்தாலும் தீர்ப்பாகாததுபோலும், காக்கை பொன்னிறமாய்ப்போகவேண்டுமென்று நினைத்தாலும் ஆகாததுபோலும், ஸ்திரீ புருஷன்போலவே வேஷம்போட்டாலும் சிசுனமுடையவளாக ஆகாததுபோலுமறிக. [இ - து] சகலஜகத்துமழிந்தாலும் ஆத்மாவுக்கு அழிவில்லை. [எ - தி] மண்ணினுண்டான கடபடாதிகளும் செடிகொடிகளுமழிந்தாலும் மண் அழியாதிருப்பதுபோலும், சொப்பனமழிந்தாலும் தான் அழியாமலிருப்பதுபோலும், அலை யழிந்தாலும் சமுத்திரம் ஒருபடித்தாயிருப்பதுபோலுமறிக. [இ - து] ஒரிடத்தில் ஜாக்ராவஸ்தையை சத்துவகுணமென்றும் சொப்பனத்தை ரஜோகுணமென்றுஞ்சொன்னது ஸ்திராஸ்திரத்தையும், ஒழுங்கும் ஒழுங்கீனத்தையும், குழந்தைகள்போகம்போலும், பெரியவர்கள்போகம்போலும், பந்தமோக்ஷங்கள் புண்ணியபாவங்கள்முதலனவற்றின் பாவாபாவங்களுடைய சிந்தனையையும் அசிந்தனையையும்பற்றியும் சத்துவகுணம்ஜாக்கிரமென்றும், கனாரஜசென்றும்; இன்னும் சத்துவகுணத்தில் ஆலோசித்துப்பேசுவதுபோலும் ரஜோகுணத்திற் காமக்குரோதத்தால் இன்னது சொல்லலாம் இன்னது சொல்லக்கூடாதென்று ஆலோசியாமற்சொல்லி பிறகு தனக்கே இன்னது சொன்னோமென்று விளங்காமற்போவதுபோலும், பெரியவர்கள் ஒருகாரியத்தைத் தானேசெய்வதுபோலும், பெரியவர்கள் செய்ததைப்பார்த்து ஞானமன்றியில் வாசனைபரவசனாய்ச்செய்கிற குழந்தைபோலுமிருப்பதால் நனவு சத்துவமென்றும், கனா ரஜோகுணமென்றும் இப்படிச் சொல்லப்பட்டதென்றறிக. மற்றோரிடத்திற் சொப்பனத்தைச்சத்துவகுணமாயும் ஜாக்கிரத்தை ரஜோகுணமாயும் சொல்லுவதின்கருத்து; ரஜோகுணமுள்ளவன் தேகேந்திரியாதிகளோடே கூடச்சேர்ந்து வலுவிற்பிரவர்த்திப்பதுபோலும், சத்துவகுணமுள்ளவன் வலுவிற் சண்டைக்குப்போகாமற் பிறரடித்து

வைதாலும் திரும்பப்பதில்செய்யாமல் மனதினாலேமட்டும்சங்கற்பிப்பதுபோலு மிருப்பதால் அப்படிச்சொல்லப்பட்டது. வீதியில்வந்த பதார்த்தத்தைக் குழந்தையானது தாயினிடத்திற் போய்ச்சொல்லி அவள் வந்து அதைப்பார்த்துக் குணதோஷங்களை நிச்சயிப்பதுபோல ராஜசமானமனது கண்ணிலும், சத்துவமானபுத்தி கண்டத்திலுஞ் சொல்லப்பட்டது. இன்னும் ஒருசப்தத்தைக்கேட்டமாத்திரத்தில் யாரோவென்று சந்தேகப்பட்டுப் பின்னர் கண்ணாலேபார்த்து நிச்சயிக்கிறபடியாற் கண்டத்தில்மனதும் கண்ணிற்புத்தியுமென்று சொல்வதுபோல ஜாக்கிரசொப்பனங்களைச் சத்துவமாயும் ரஜோகுணமாயும்மாறிமாறிச் சொல்லப்பட்டது. [இ — து] ஜீவனும் ஆத்மாவும்விவகாரத்தில அறிவாய் விளங்குகை சமானமாய்த்தோன்றினாலும் ஆத்மாவுக்குச் சமாதி சுழுப்திகளில் அதிகவியாப்தியுண்டு. [எ - தி] பௌர்ணமிகளிற் சூரியன் சந்திரன் இருவரும் பூரணப்பிரகாசத்திற் சமானமாய்த்தோன்றினாலும் சூரியன் எப்போதும் பூரணமாயிருப்பது விசேஷம்போலும், விராத்திரியன் சுரோத்திரியன் இருவரும் ஆகாராதிகளிற் சமானமாயிருந்தாலும் வேதபாடத்திற் சுரோத்திரியனுக்கு விசேஷமிருப்பதுபோலுமறிக. [இ - து] ஆத்மா சதா ஒருபடித்தாயிருக்கிறார், ஜீவன் விருத்திக்ஷயமான விகாரத்தையடைந்துகொண்டிருக்கிறான். [எ - தி] சூரியனையும் சந்திரனையும்போலும், புருஷனையும் நிழலையும்போலுமறிக. [இ-து] சிதாகாசமான நம்மிடத்திற் கற்பிதமான காலமொன்றுதானே நிமிஷம், காஷ்டை, கலை, க்ஷணம், முகூர்த்தம், தினம், பக்ஷம், மாசம், ருது, அயனம், வருஷம், யுகம், கற்பமுதலான பேதங்களாய்ச் சுற்றிக்கொண்டிருந்தாலும் தனக்கு யாதொருசலனமும் உதயாஸ்தமனமுமில்லை. [எ - தி] மகாமேருவைச் சூரியாதிகள் நக்ஷத்திரங்கள் சுற்றிக்கொண்டிருந்தாலும் அது அசைவற்று உதயாஸ்தமனமன்றியில் ஒருபடித்தாயிருப்பதுபோலவறிக. [இ - து] ஒருசுவரில் ஒருமூலையிற் சித்திரம் எழுதினாலும் எழுதாமற்போனாலும் அது ஒருபடித்தாயிருப்பதுபோல அறிவாகிய சுவரில் ஏகதேசத்தில் ஜகத்தாகிற சித்திரம் தோற்றினாலும் தோற்றாமற்போனாலும் நமக்கொரு பேதமுமில்லையென்றறிக. [இ-து] ஆகாசத்தில் எவ்வளவுகாற்றடித்தாலும் ஆகாசம் அசைவற்றிருப்பதுபோலத் தன்னிடத்தில் எவ்வளவுசங்கல்பம் வந்தாலும் நமக்கு ஹானியில்லையென்றறிக. [இ-து] ஆத்மா பிராரப்ததுக்கத்தாற் கெடார். [எ - தி] வஜ்ஜிரவீடு சப்தமேக வருஷங்களாற் கெடாதிருக்க இரண்டுதூத்தலால் எப்படிக்கெடும்? அப்படி அவிவேககாலத்தில் ஏழுவகைப்பிறப்புக்களால் விகாரப்படாத ஆத்மா இப்போதுபிராரப்ததுக்கத்தால் எப்படி விகாரப்படுவர்? [இ - து] பிரஹ்மம் நித்தியம் ஜகம் பொய்யென்றறிவதற்குயுக்தி :—மண்ணையும் பானையும் போலவும், தங்கத்தையும் நகையையும் போலவும், இரும்பையும் ஆயுதத்தையும் போலவுமறிக. [இ - து] மனதுக்கே உதயாஸ்தமனமேதவிர ஆத்மாவுக்கில்லை. [எ - தி] அலைக்கே உதயாஸ்தமனமேதவிர சமுத்திரத்திற்கில்லாததுபோலவறிக. ஐயா, ஆத்மா ஒருபடித்தாயிருக்கிறரென்றும் அனாத்மாவான தேகாதிப்பிரபஞ்சம்

உற்பத்திநாசமுள்ளதாயும், மாறிமாறிவருகிறதாயும், ராகத்துவேஷமுதலான விகாரங்களோடேகூடினதாயும், அனுர்த ஜட துக்கரூபமாயுமிருக்கிறதென்று சொன்னீர்களே அதை விபரமாக அனுபவத்திற் காண்பிக்கவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:—நீயே அகம்பத லக்ஷியமான ஆத்மா, உன்னிடத்திற் கற்பிதமாயுண்டாயிருக்கிற அந்தக்கரணத்தினுடைய சாத்விககுணமுண்டான காலத்தில் வைராக்கியம் பொறுமைமுதலானவைகள் உண்டாவதும், ரஜோகுணம் கிளம்பினபோது ராகத்துவேஷமுதலான குணங்கள் உண்டாவதும், தமோகுணமுண்டானபோது சோம்பல் நித்திரை மயக்கம் கலக்கமுதலான குணங்களுண்டாவதும், இப்படியே ஒரு இந்திரியத்தில் ஒரு இந்திரியங்காணுமையாலும், பசிதாகமுண்டாய் நிவர்த்தியாவதும், பால்யம் கௌமாரம் யவ்வனம் வார்த்திகமுதலிய அவஸ்தைகள் ஒன்றிலொன்றில்லாமற் போவதுபோலுமில்லாமல், நீ ஒருபடித்தாயிருந்துகொண்டு இந்த அவஸ்தைகள் வரும்போதும் போகும்போதும் நீ சாக்ஷிமாத்திரமாயிருக்கிற உன்அனுபவத்தைப்பார்த்துச் சகலசந்தேகத்தையும் நிவர்த்திக்கக்கடவாய்.

## 122 - வது தரங்கம்.

சம்வாதி விசம்வாதிப்பிரமைகளின் தன்மை :—

சம்வாதிப்பிரமை முக்தியாகிற பலத்தைக்கொடுக்கும், விசம்வாதிப்பிரமை கொடாது. [எ - தி] நிஜமான கெர்ப்பம் புத்திரனைக்கொடுப்பதும், மகோதரங் கொடாததுபோலும்; கங்கையும் கானற்சலமும்போலுமறிக. [இ - து] பிரஹ்மக்ஞானத்திற்கும் பிரஹ்மத்தியானத்திற்கும் மூர்த்தித்தியானத்திற்கும் பேதம்தெரிவதற்கு யுக்தி:—மரத்திலேயிருக்கிற மாம்பழத்தைப் பறித்துத் தோல் சக்கை கொட்டை மூன்றையுந்தள்ளி ரசத்தைமட்டுஞ் சாப்பிடுவதுபோலும், குரங்குபோலச் சக்கைசாறை ஒருமித்துக் கடித்துச்சாப்பிடுவதுபோலும், முடவன் தண்ணீருக்குள்தோன்றுகிற மாம்பழத்தைச் சாப்பிடுகிறதுபோலுமென்றறிக. ஐயா, பஞ்சதசியிற் சம்வாதிப்பிரமைபோலப் பிரஹ்மத்தியானத்தினாலும் மோக்ஷத்தை யடையக்கூடுமென்றும், ரத்னப்பிரபையைக்கண்டு ரத்னமென்று நினைத்து ஓடும்போது பிரபையில் ரத்னமென்றெண்ணுவது மயக்கமானாலும் கடைசியில் அந்தப்பிரபையானது ரத்னத்தைக் காண்பிப்பதுபோல சம்வாதிப்பிரமையான அகம்பதவாச்சியமான அகம் விருத்தியை அகம்பதலக்ஷியமான பிரஹ்மமென்று நிச்சயித்து நான் பிரஹ்மமென்று தியானிப்பவனுக்கு இந்தப்பிரஹ்மாகாரவிருத்தியே முடிவில் பிரஹ்மத்தைச் சாக்ஷாத்காரம்பண்ணிவைப்பதால் நாடினபலத்தைக்கொடுப்பதால் சம்வாதிப்பிரமையென்றும்; தீபப்பிரபையைக்கண்டு ரத்னமென்றுநினைத்து ஓடுகிறவனுக்கு அந்தமயக்கமானது தீபத்தினிடத்தில் கொண்டுபோய்விடுவது

போல விசம்வாதிப்பிரமை நாடினபலத்தைக் கொடாததுபோல அகங்கார விருத்திமுதலான நாமரூபங்களை யதார்த்தமான பிரஹ்மமென்று உபாசிப்பவர்களுக்குப் பிரஹ்மப்பிராப்திகிட்டாததால் விசம்வாதிப்பிரமையென்றும் சொல்லி, சம்வாதிப்பிரமையில் ரத்னப்பிரபையை ரத்னமென்று நாடுவது பிரத்தியக்ஷசம்வாதிப்பிரமையென்றும்; செம்பாவைப் புகையென்றுநினைத்து அக்கினியுண்டென்று அந்த இடத்திற் போனவனுக்குத் தெய்வகதியால் அக்கினி அகப்பட்டதுபோல அனாசாரியனுடைய வெளிவேஷத்தைக்கண்டு ஆசாரியரென்று எண்ணிப்போனவனுக்கு அந்தஇடத்தில் எதிரிச்சையாய் ஒருஆசாரியர் கிடைத்து அவர்மூலமாய்த் தனக்குவேண்டியது பெறுவது அனுமானசம்வாதிப்பிரமையென்றும், செம்பாவைத் தீயின்புகையென்று போனவனுக்குத் தீ கிட்டாததுபோல அனாசாரியரின் வேஷத்தைக்கண்டு ஆசாரியரென்று நம்பிப்போனவனுக்குத் தான் எண்ணிப்போன ஜீவன்முக்திப்பலன் கிட்டாமையால் அது அனுமானவிசம்வாதிப்பிரமையென்றும்; தான்செய்த பாபம் போய்ச் சுத்தனாவதற்குக் கங்காதீர்த்தத்தைப் புரோக்ஷித்துக்கொள்ளவேண்டுமென்று நினைத்தவனுக்குக் கோதாவரிதீர்த்தத்தைக் கங்காதீர்த்தமென்று நினைத்து புரோக்ஷித்துக்கொண்டதால் தான்நினைத்த சுத்தியுண்டானது போலப் பிரஹ்மத்தை யறிந்தவனுக்கு முக்திவருமென்ற சுருதியைக்கேட்டு பிரஹ்மக்ஞானியையே பிரஹ்மமென்று ஆசரித்தவனுக்குப் பிரஹ்மப்பிராப்தியானமுக்தி சித்திப்பது ஆகமசம்வாதிப்பிரமையென்றும்; சாமான்யஜலத்தைக் கங்கையென்று நினைத்தவனுக்குச் சுத்திவராததுபோல அசாஸ்திரத்தை நம்பியிருக்கிறவனை நம்பினவனுக்கு முக்திவராதென்று சொல்லியிருப்பதின் கருத்தென்னவென்றால்; ஞானம் நிர்க்குணத்தியானம் சகுணத்தியானம் மூன்றுகளைக்குறித்து மாம்பழரசத்தைப் புசிப்பதும், சக்கையோடேசேர்த்துப் புஜிப்பதும், பிரதிபிம்பபழத்தைப் புஜிப்பதாயும்முந்தி நாம்சொன்னதே சுருதி யுக்தி அனுபவத்தைக் கொடுத்ததென்றறிக.

## 123 - வது தரங்கம்.

தான் ஜடமாயும் தேகாதி சித்தாயுமாகாது :—

தேகம் அறிவாகவும், அறிவு ஜடமாகவும் ஆகவேண்டுமென்று நினைத்துத் தவஞ்செய்தாலும் பலியாது. [எ - தி] கட்டுத்துறை மாடாகவும், மாடு கட்டுத்துறையாகவும் ஆகவேண்டுமென்று நினைத்தாலும் அப்படியாகாததுபோலும்; இரா பகலாகவும், பகல் ராவாகவும் ஆகவேண்டுமென்றெண்ணினாலும் அப்படியாகாததுபோலும்; புருஷன் கர்ப்பந்தரிக்கவேண்டும், ஸ்திரீக்கு சிசுனம் முளைக்கவேண்டுமென்று நினைத்தாலுமப்படி ஆகாததுபோலுமறிக. [இ-து] அஞ்ஞானி நான்கர்த்தாவென்று சொன்னாலுமப்படி ஆகான். [எ - தி] பிராஹ்மணனுக்கும் ராஜாவுக்கும் கிறுக்குப்பிடித்தகாலத்தில் நான்பறையன் பிச்

சைக்காரனென்று சொன்னலும் அவர்களப்படி ஆகாததுபோலுமறிக. [இ-து] அனாத்மாவானதேகாதிபஞ்சகோசங்களும் ஜகத்தும் சித்தான ஆத்மாவாக வேண்டுமென்றும், சித்தான ஆத்மா ஜடமான பஞ்சகோசாதிகளாக ஆக வேண்டுமென்று நினைத்தாலும் அப்படியாகாது. [ஏ - தி] வேம்பு கரும்பாகவும், கரும்பு வேம்பாகவும் ஆகாததுபோலும்; புலி பசுவாயும், பசு புலியாயும் ஆகாததுபோலும்; விஷம் அமிர்தமாயும், அமிர்தம் விஷமாயுமாகாதது போலும்; அக்கினி குளிர்ச்சியான ஜலமாயும், ஜலம் அக்கினியாயுமாகாதது போலும்; அரூபமான ஆகாசம் ரூபமானமண்ணாயும், மண் ஆகாசமாயுமாகாதது போலும்; உபஸ்தம் வாயாயும், வாய் உபஸ்தமாயுமாகாததுபோலும்; கால் கண்ணாயும், கண் காலாயுமாகாததுபோலும்; மனுஷன் மாடாயும், மாடு மனுஷனாயு மாகாததுபோலும்; காது அபானத்துவாரமாயும், அபானத்துவாரம் சப்தத்தையறிகிற சுரோத்திரமாயுமாகாததுபோலும்; மண்வெட்டி ஆளாயும், ஆள் மண்வெட்டியாயுமாகாததுபோலும்; தேவன் மனுஷனாயும், மனுஷன் தேவனாயுமாகாததுபோலும்; ஈசன் நீசனாயும், நீசன் ஈசனாயுமாகாதது போலும்; அன்னமயகோசம் பிராணமயகோசமாகவும், பிராணமயகோசம் அன்னமயகோசமாகவுமாகாததுபோலும்; பிராணமயன் மனோமயனாகவும், மனோமயன் பிராணமயனாகவும் ஆகாததுபோலவும்; மனோமயன் விக்ஞானமயனாகவும், விக்ஞானமயன் மனோமயனாகவுமாகாததுபோலும்; அஞ்ஞானம் ஞானமாகவும், ஞானம் அஞ்ஞானமாகவுமாகாததுபோலும்; சாக்கிரம் சொப்பனமாகவும், சொப்பனம் ஜாக்கிரமாகவுமாகாததுபோலும்; ஜாக்கிரசொப்பனம் சுஷுப்தியாகவும், சுழுப்தி ஜாக்கிரசொப்பனமாகவுமாகாததுபோலும்; காமக்குரோதமுதலான துர்க்குணங்கள் சமதமாதிகளான சுகுணங்களாக ஆகாததுபோலும், இந்தச்சுகுணங்கள் அந்தத்துர்க்குணங்களாக ஆகாதது போலும்; சுரோத்திரம் சப்தமாயும், சப்தம் சுரோத்திரமாயும்; தொக்கு ஸ்பரிசமாயும், ஸ்பரிசம் தொக்காயும்; நேத்திரம் ரூபமாயும், ரூபம் நேத்திரமாயும்; சிங்நுவை ரசமாயும், ரசம் சிங்நுவையாயும்; கிராணேந்திரியம் கந்தமாயும், கந்தம் கிராணேந்திரியமாயுமாகாததுபோலும்; சரீரத்திரயம் ஜீவனாயும், ஜீவன் சரீரத்திரயமாயும் ஆகாததுபோலும்; பத்தன் முக்தனாயும், முக்தன் பத்தனாயுமாகாததுபோலுமறிக.

## 124 - வது. தரங்கம்.

பிராரப்தகர்மத்தின் வலி:—

வர்த்தமானத்திலிருக்கிற பிராரப்தவினை யனுபவித்துத்தீரவேண்டும். [ஏ - தி] கோர்ட்டில் ஒருபத்திரத்துக்குக் கடன்காரன் வியாச்சியம்பண்ணித் தீர்ப்பானகடனைமட்டும் கடத்தமுடியாமற் கொடுத்துத்தீர்க்கவேண்டுவது போலவறிக. [இ-து] ஞானிக்குப் பிராரப்தகர்மம் பிரபலமாயிருந்தால் ஆயிரம்

தியானஞ்செய்ய எத்தனித்தாலும் அதில் மனது நில்லாது. [எ - தி] அநேகர்க ளிடத்திற் கடன்வாங்கினவன் எங்கே ஒழிந்துகொண்டிருந்தாலும் வாரண்டுச் சேவகன் வந்து வெளியிலிழுத்துப் பிடித்துக்கொண்டுபோவதுபோலும், ஏழரைநாட்டுச் சனிபிடித்தவன் எந்த ஊருக்குப்போனாலும் அங்கேயும் ஆபத்து அடிக்கடிவந்து அகப்பட்டுக்கொள்ளுவதுபோலும், மேகப்பத்துள்ள வள் தன்தேகத்தை எவ்வளவுமுழுச்சேலை சுற்றி மறைத்துக்கொண்டாலும் அந் தத்தினவினால் அதற்குள்ளேயும் கையைவிட்டுச் சொரிந்துகொள்ளுவதுபோலு மறிக. [இ - து] பிரஹ்மத்தியானம் பண்ணும்போது பிராரப்தகர்மம் வெளி யில் விரட்டினாலும் மனது திரும்பத்தியானத்திலேயே ஓடிவரும். [எ - தி] வெண்ணெய்தின்கிற பூனையை வீட்டுக்காரி வெளியில் விரட்டினாலும் திரும்ப வெண்ணெய்தின்ன ஓடிவருவதுபோலும், சோரபுருஷனைச் சொந்தப்புருஷன் வெளியில் விரட்டினாலும் திரும்பத்திரும்ப அவன் ஓடிவருவதுபோலுமறிக. [இ - து] ஞானி அஞ்ஞானாதிசாலத்தையும் மித்தையென்கிற ஞானத்தால் தள் ளினபிற்பாடு பிராரப்தகர்மத்தைமட்டும் தயையால் அங்கீகரிக்கிறான். [எ - தி] ஒருவன் பெண்டாட்டிபிள்ளைகளெல்லாரையும்விட்டுச் சன்னியாசியானபின் அந்தக்குடும்பங்களெல்லாம் நசித்துப்போயும் அதில் ஒருபிள்ளை மட்டும் சாகவு மாட்டாமற் பிழைக்கவுமாட்டாமல் இவன்காலில் வந்துவிழுந்த புத்திரனைத் தயவால் ரக்ஷிப்பதுபோலவறிக. [இ - து] பின்னை ஞானிக்கு விதிதானென்ன வென்றால்,— ரயில் தண்டவாளத்தில் போவதுபோலப் பிராரப்தப்படி நடப் பதே விதி. பிரஹ்மவித்துப்போல வரன் வரியான் வரிஷ்டனுக்கும் முக்தி சரி யானாலும் பிரஹ்மவித்துக்குமட்டும் பிராரத்தகர்மபலமான திருஷ்ட துக்கத்தை வேதம் சொல்லுவானேனெனில்,—மலடிக்குப் பிரஸவதுக்கத்தைச்சொல்லா மல், பிரஸவித்தவளுக்கு அதைச்சொல்லுவதுபோல விவகாரமிவனுக்கிருப் பதைப்பற்றிச் சொல்லிற்று. சுயதிருஷ்டியில் அவன் கர்மத்தையாவது துக் கத்தையாவது நினையான். மூடர்கள்கூடச் சரீரமுள்ளவரையில் சுகமாயிருக்க எத்தனம்பண்ணுவதால் ஞானிக்குப் பிராரப்ததுக்கமனுபவிக்கவேண்டுமென்று சொப்பனத்திற்கூட எண்ணம் வராதானதால் அஞ்ஞானிகளைச் சமாதானம் பண்ணுவதற்காக வேதஞ்சொன்னதேயல்லாமல் வாஸ்தவமாகயில்லையென் றறிக. [இ - து] துர்ப்பலகர்மத்தைத் தடுக்கலாம், பிரபலகர்மத்தைத் தடுக்கக் கூடாது. [எ - தி] கொஞ்சம்ஜலத்தை அணையால் தடுக்கலாம், மிகுந்தபிர வாகத்தைத் தடுக்கக்கூடாததுபோலும்; சொற்பச்சண்டையை விலக்கலாம் மிகுந்தசண்டையை விலக்கக்கூடாததுபோலுமறிக. [இ-து] அஞ்ஞானம்போ யும் அதன்காரியமான தேகாதிகள் பிராரப்தம்வரை யிருக்கும். [எ-தி] மழை பெய்ந்து ஓய்ந்தும் அதின்காரியமான ஜலம் கிரமத்தில் வற்றுகிறதுபோலும், போகம்போயும் அதின்காரியமான பிள்ளை பத்துமாதங்கழித்து விழுகிறது போலுமறிக. [இ-து] ஞானம்வந்து அஞ்ஞானாதிகள் போனபிற்பாடும் பிரா ரப்ததுக்கமனுபவிப்பானேன்? [எ - தி] போலீஸ்சிப்பாய்வேலைக்குப் போன

வன் வேலையை இராஜிநாமாக்கொடுத்தும் ஒருவருஷம் சம்பளமில்லாமல் வேலைபார்ப்பானேன் சொல்? [இ - து] சுகதுக்கம்வருவது முந்திச்செய்த கர்ம காரியம். [எ - தி] கள்ளியுங் கற்பகச்செடியும் முந்தி விழுந்திருக்கிற விதைகளின் காரியமென்றறிவதுபோலும், வாரண்டுவருவதும் ரூபாய்வருவதும் முந்திவாங்கியும் கொடுத்துமிருக்கிற பலமென்பது போலுமறிக. ஐயா, ஞானிகளுக்கு விதிநிஷேதங்களொன்றுமில்லை. அவர்களவர்களுடைய பிராரப்தகர்மப்படியே அவர்களவர்கள் நடப்பர்களென்றால், அப்போது குருசிஷ்யர்களுடைய பிராரப்தகர்மம் ஒருவிதமாயிருக்குமா வேறுவேறாயிருக்குமாவென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரம் சொல்லுகிறோம். கேள் :—ஸ்ரீசங்கரானந்தரென்கிற குருவுக்கு வித்தியாரண்ணியரென்கிற சிஷ்யருண்டாயிருக்கும்போது அந்த வித்தியாரண்ணியருக்கு ராச்சியபரிபாலனம்பண்ணும்படியான பிராரப்தகர்மமிருந்ததால் அவரப்படி ராச்சியபரிபாலனம்பண்ணிக்கொண்டிருக்கும்போது, மற்றச்சன்னியாசிகளெல்லாம் இவரைத்தூஷிக்கும்போது சங்கரானந்தரைக்கேட்டு வித்தியாரண்ணியரிடத்தில் வந்து கொஞ்சவேளை பழகிப்பார்க்கும்போது, இவருடைய அசங்கத்தன்மையான ஞானநிச்சயத்தைக்கண்டு சந்தோஷித்திருக்குங்காலையில் ஒருநாள் அர்த்தராத்திரியில் அந்தக்குருவானவர் இவரைப்பார்த்து ‘உன் ஞானநிச்சயம் திடமாயிருந்தாலும் லோகநிந்தை பொறுக்கப்படாமலிருப்பதால் நீயும் என்னோடே இந்தராச்சியத்தை விட்டுவிட்டு யாத்திரைக்குக்கூடவே புறப்படுவாய்’ என்று கேட்கும்போது, இவரும் அப்படியே ஆகட்டுமென்று சொல்லி அந்தநிமிஷத்திலேயே இரண்டுபேர்களும் அந்தராச்சியத்தைவிட்டு வெளியேறி விடியுமுன் முக்காதவழி நடந்துபோய், அங்கொருதடாகத்தில் ஸ்நானஞ்செய்து அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு இரவில் நித்திரையில்லாததால் மரத்துநிழலில் இருவரும் படுத்துநித்திரைபண்ணும்போது, அந்தராச்சியத்துக்குடைய மந்திரி விடியஜாமத்துக்கு ராஜாவுடன் ஆலோசனைபண்ணவந்தகாலத்தில் ராஜாவையும் அவர்குருவையுங்காணாததாற் பல்லக்குமுதலான சவாரிகளைக்கூட்டிக்கொண்டு வேகமாய்வரும்போது இவர்களிருவரும் படுத்திருப்பதைக்கண்டு அவைகளையெல்லாம் மறைத்துவைத்துவிட்டு இவன்மட்டும் மெத்தை தலையணைகளையெடுத்துக்கொண்டுவந்து இவர்களிருவர்களுடைய நடுவிற் போட்டுவிட்டு மறைந்திருக்கும்போது, சங்கரானந்தருக்கு அவைகள் மேலேபட்டமாத்திரத்திற்புரண்டு தூரத்திற்கிடந்து நித்திரைபண்ணினார். வித்தியாரண்ணியருக்கு அதுமேலேபட்டமாத்திரத்தில் அதின்பேரிற் புரண்டுவிழுந்து நித்திரைபண்ணுவதை முந்திவிழித்த சங்கரானந்தர் இவர் மெத்தை தலையணைவைத்துக்கொண்டு அதிற்படுத்திருப்பதைப்பார்த்ததும் கோபமாய்ப் புறப்பட்டுப்போகும்போது மந்திரி ஓடிப்போய் அக்குருவின்பாதத்தைப் பிடித்துக்கொண்டதில் அவர் உங்கள்சங்கதி தெரியுமடாவென்னும்போது, இந்தமந்திரி நடந்தஉண்மைகளைத் தெரிவித்தமாத்திரத்தில் அந்தக்குருவானவர் இவனைப்பழையபடி மறைந்திருக்

கச்சொல்லி வித்தியாரண்ணியரைவந்து எழுப்பும்போது உடனே எழுந்திருந்து குருவை நமஸ்காரம்பண்ணும்போது, அவர் நீ படுத்திருந்த மெத்தை தலையணை எப்படிவந்தது? அதன்மேலே நீ எப்போது எழுந்திருந்துபடுத்தாயென்று கேட்கவும், வித்தியாரண்ணியர் கீழே படுத்துக்கொண்டதுமட்டும் தெரியுமே தவிர மற்றொன்றுந் தெரியாதென்று சொன்னதைக்கேட்ட சங்கரானந்தகுருவும் 'உன்னுடைய பிராரப்தகர்மம் ராஜபோகத்தை யனுபவிக்கும்படியிருப்பதால் நீ அப்படியே ராஜ்யத்துக்குப்போ' என்று சொல்லிவிட்டு, அவர் தன் கர்மப்படி வைராக்கியமாய் யாத்திரைபோன கதைபோலவறிக.

## 125 - வது தரங்கம்.

கர்மம் அஞ்ஞானத்தைக் கெடுக்காது விருத்திசெய்யும் :—

கர்மமெல்லாம் அஞ்ஞானத்தைக் கெடுக்காது விருத்திபண்ணிவைக்கும். [எ - தி] பேதியாகிறவன் நேர்வாளமாத்திரையைச் சாப்பிடுவதுபோலும், காலில் முள்ளுத்தைத்தவன் அரிவாளைக்கொண்டு அதை வெட்டியெடுக்கிறதுபோலும், கஞ்சாச்சாப்பிட்டு மயங்கினவன் அதைத்தீர்க்கச் சாராயங்குடிப்பதுபோலுமறிக. ஐயா, அஞ்ஞானத்தைக் கர்மம் கெடுக்கமாட்டாதென்றும், மேற்கொண்டு விருத்திபண்ணிவைக்குமென்றும், அஞ்ஞானத்தை ஞானமே கெடுக்குமென்றும், அந்தஞானமும் ஆத்மானாத்ம விசாரத்தால் வருமென்றும், அந்தவிசாரமும் குருகிருபையால் வருமென்றுஞ் சொன்னீர்களே, அவைகளை யெனக்கு விபரமாய் அனுக்கிரகிக்கவேண்டுமென்று கேட்டசிஷ்யனுக்குச் சற்குருவானவர் அனுக்கிரகம் செய்கிறதாவது :—அஞ்ஞானமென்பது அந்தகாரத்துக்குச்சமானம். அந்தஅஞ்ஞானமாகிற இருட்டைப் போக்கடிக்கிறதற்காக மேகங்களைக்குறித்துத் தவம்பண்ணி மேகங்களையெல்லாம் வரவழைத்தால் அவ்விருட்டுப்போகாமல் முந்தியிருட்டாயிருக்குங்காலத்தில் கொஞ்சஞ் சாமான்யமாய் மனுஷன் வருகிறதும் மாடு போகிறதும் தெரிந்ததும்போய் ஒன்றுந்தெரியாமற்போவதுபோல, அஞ்ஞானமாத்திரமாயிருக்கிற ஜீவனுக்குக் கொஞ்சம் சாமான்யமாய் ஒருசைதன்யமுண்டென்று தோன்றிக்கொண்டிருந்ததும், அநேகமான வேதசாஸ்திரங்களை அப்பியாசித்து அநேகவிதமான யாகாதி கர்மங்களைச் செய்தபின், நானே கனபாடி சாஸ்திரிகள் தீக்ஷிதர் சோமயாஜி வாஜபேயயாஜி பௌண்டரீகயாஜியென்று அகம்பாவத்துக்குமேல் அகம்பாவம் கோபுரம்போல வளர்ந்துபோவதால் இந்தக்கர்மங்களைச் செய்கிறவர்களுக்கு அதனால் அஞ்ஞானம் போகாமல் மேன்மேலும் விருத்தியாய்வருவதை அனுபவமாய்க் கண்டிருப்பதுந்தவிர, அஞ்ஞானம் ஒருவஸ்துவாயிராமல் ஆத்மாவை மறைப்பதுமாத்திரமாய் இருட்டானது கடபடாதிகள்போல ஒருவஸ்துவாயிராமலிருப்பதால், அந்தஇருட்டை யெப்படியாதொரு ஆயுதத்தாலும் நிவர்த்திக்கக்கூடாமல் நெருப்புப்பெட்டி வைத்திருக்கிறவனிடத்திற்போய் நெருப்புக்குச்சிகளை வாங்கி நன்றாய் உரைத்ததின்பேரிலுண்டாகிற பிரகாசத்தை

அகல்சட்டியில் விடப்பட்டிருக்கிற எண்ணெய்யில் நனைக்கப்பட்டிருக்கிற திரியில் அதை ஏற்றியபின், அந்தத் தீபப்பிரகாசமானது அந்த இருட்டைப்போக்கடித்து உள்ளதைஉள்ளபடியாக விளக்கிவைப்பதுபோல, இந்த அஞ்ஞான இருட்டில் அகப்பட்டவனும் ஞானமாகிற தீப்பெட்டியோடேகூடிக்கொண்டிருக்கிற சற்குருவாகிற புருஷனை ஆசரித்து, சத்துவகுணமாகிற அகல்சட்டியையும், விஷயவைராக்கியமாகிற எண்ணெய்யையுமதில்விட்டுச் சமாதிசட்கமாகிற திரியையும் சம்பாதித்து, அந்த எண்ணெய்யோடேசேர்த்து முமுட்சுத்துவமாகிற பரபரப்போடேகூடிக்கொண்டு, குருவாற் கொடுக்கப்பட்டிருக்கிற விவேகமாகிற தீக்குச்சியை விசாரமாகிற கையால் உறைத்து, ஞானமாகிற அக்கினிப்பிரகாசத்தை ஏகாக்கிரசித்தமாகிற திரியில் அதை ஏற்றினுல் அஞ்ஞானமாகிற இருட்டுப்போய் ஞானதிருஷ்டியாகிற கண்ணினுல் அப்பிரதிபந்தமான சாக்ஷாத்காரமாய்த் தன்னை உள்ளபடியாக அறியக்கூடுமென்றறிக.

## 126 - வது தரங்கம்.

மூன்றுகர்மங்களில் பிராரப்தம்மட்டும் நசியாது:—

வேதங்களில் சிலவிடங்களில் பிராரப்தகர்மமனுபவித்தே தீரவேணுமென்று சொல்லுகிறதற்கு யுக்திகள் :—சகோதரர்கள் ஒருவருக்கொருவர் மோசம் செய்வதற்காக அநேக மாறுபாட்டுப்பத்திரம் செய்திருப்பதில் ஒன்றை மட்டும் சர்க்காரிற் பிராதுகொடுத்துத் தண்டிக்கப்பட்டபொழுது இருவரும் ராஜியாய் உள்ளதுள்ளபடி தீர்த்துக்கொண்டாலும் இவர்களாற்கொடுக்கப்பட்ட பிராதின்பேரில் விதிக்கப்பட்ட சர்க்கார் தண்டனையை எப்படி மாற்றிக்கொள்ள முடியாதோ அப்படிப்போலும், ஒருவனுக்கு மூன்று ஸ்திரீயிருப்பதில் அவன் செத்தமாத்திரத்தில் இரண்டுபேர்களுக்குத் தாலியையும் தலைமயிரையுமெடுத்துக் கர்ப்பிணியான ஒருத்திக்குமட்டும் தாலியெடுத்து மயிர்மாத்திரம் வைத்திருப்பதுபோலும், அல்லது ஒருத்தி கன்னிகையாயிருந்தாற், பக்குவமாகும் வரை அவளுக்கு அப்படிச்செய்வதுபோலும், ஒருவன்பூமியை மற்றொருவன் அக்கிரமமாய் அனுபவித்துவரும்போது உடையவன்வந்து மறித்துப் பஞ்சாயத்தில் வைத்ததில், அவர்கள் முந்தினவருஷங்களிற் கொண்டுபோயிருக்கிற தான்யங்களைக் கொடுக்கும்படிக்கும் இனிமேல் அதில் எள்ளளவேனும் இவன் பிரவேசியாமலிருக்கும்படிக்கும் வர்த்தமானத்தில் அவன்கைவசமிருக்கிற தான்யத்தைமட்டும் வைத்து ஜீவித்துப்போட்டு பிறகு போனவிடந்தெரியாமற் போகக்கடவதென்றும் பைசல்செய்வதுபோலுமென்றறிக. ஐயா, ஞானிகளுக்குத் தத்துவஞானத்தால் அக்ஞானமும் சஞ்சிதகர்மமும் போகுமென்றும், அகர்த்துருத்வபுத்தியால் தாமரையிலையில் தண்ணீர் ஒட்டாததுபோல ஆகாமியகர்மம் ஒட்டாமல் நசித்துப்போகிறதென்றும், பிராரப்த கர்மம் புஜிப்பதாலேயே நசிக்குமென்றும் சொன்னீர்களே, மற்றோரிடத்தில் ஞானமுதயமான மாத்திரத்தில் அஞ்ஞானத்தோடே சஞ்சித ஆகாமிய பிராரப்தகர்மங்கள் மூன்றும்

நசித்துப்போமென்றும் சொன்னீர்களே, பிராரப்தகர்மம் ஞானிக்குண்டென்று சொன்னால், கர்மபலமான ஜன்மங்களும் வருமென்று சொல்லவேண்டிவருமே, அப்படி அங்கீகரித்தால் ஞானிகளுக்கு ஜனனமரணாதிகளில்லையென்று சொல்லுகிற சுருதிவாக்கியங்களுக்கெல்லாம் விரோதம்வருமே அல்லது அவர்களுக்குப் பிராரப்தகர்மமுமில்லையென்று சொன்னால் ஜீவன் முக்தர்களென்றும், பிரமநிஷ்டர்களென்றும், தத்துவஞானிகளென்றும், அதிவர்ணாசிரமிகளென்றும், பரமஹம்சர்களென்றும், ஸ்திரப்பிரக்ஞர்களென்றும், குணாதீதர்களென்றும், பிராஹ்மணர்களென்றும், பகவத்பக்தர்களென்றும், மகாயோகிகளென்றும், சன்னியாசிகளென்றும், இப்படியெல்லாம் சொல்லுகிற சுருதிவாக்கியங்களுக்கு விரோதம் வருவதும்தவிர, பரமசிவனிடத்தில் பிரஹ்மஞானத்தை மகாவிஷ்ணு அடைந்தாரென்றும், விஷ்ணுவினிடத்தில் பிரஹ்மா அடைந்தாரென்றும், பிரஹ்மாவினிடத்தில் வசிஷ்டரும் வசிஷ்டரிடத்திற் சக்திமகரிஷியும் அவரிடத்திற் பராசரரும், அவரிடத்தில் வேதவியாசரும், வியாசரிடத்திற் சுகரும் ஞானத்தை அடைந்தாரென்றும் இப்படிச் சொல்லுகிற குருசிஷ்யபரம்பரைகளும் உலகத்தில்லாமற் போகுமேயென்று சங்கித்தசிஷ்யனுக்குக் குரு சொல்லுகிறதாவது:— பிரஹ்மஞானிகளிடத்தில் விவகாரம் பரமார்த்தம் இரண்டிருக்கிறதென்பதை நீ அறியாமல் இப்படிச் சங்கித்தாய்! விவகாரத்தில் ஞானிகளுக்குச் சரீரேந்திரிய மனமுதலியகரணங்கள் பிரதீதிமாத்திரமாய்த் தோற்றுவதால் அந்தத்தோற்றத்துக்குப் பிராரப்தகர்மமும், ஜீவன்முக்திதசையும், குருசிஷ்ய சம்பிரதாயங்களுக்கு விரோதமின்மையுங்கூடும். பரமார்த்தத்தில் தன்னைவிட இரண்டாவதின்மையால் பிராரப்தகர்மமுமில்லை யென்பது நியாயமென்றறியத்தக்கது.

## 127 - வது தரங்கம்.

*சாமான்ய விசேஷ கர்மங்களின் தன்மை:—*

ஜாக்ரசொப்பனங்கள் கர்மஜன்னியங்களென்றும், சுழுப்தி கர்மஜன்னியமன்றென்றும் ஓரிடத்திற் சொல்லியும், அவஸ்தாத்திரயங்களும் கர்மஜன்னியமென்று ஓரிடத்திற்சொல்லியுமிருப்பதற்கு யுக்தி:—கொப்பரைஜலம் கர்மஜன்னியமாயும், கிணற்றுஜலம் சுபாவமாயுமிருப்பதுபோலும்; கிணறும் வெட்டுகிற கர்மத்தாலுண்டாவதால் அதையும் கர்மஜன்னியமென்று சொல்லப்படுவதுபோல சுழுப்தி கிணறுவெட்டுகிறதுபோலச் சாமான்னியகர்மஜன்னியமாயும், அதிற்காண்கிறசுகம் ஊற்றுப்போலச் சுபாவமாயிருப்பதைப்பற்றிக் கர்மஜன்னியமில்லையென்றும், மற்றக்காலத்திற்செய்கிற விவகாரம் தண்ணீரையெடுத்துச் சௌசமுதல் அபிஷேகம்வரையில் உபயோகப்படுத்துவதுபோல, ஜீவர்களுக்கு ஜாக்ரசொப்பனத்தில் விவகாரம் வேறுவேறாய் மேல்கீழாய் இருப்பதைப்பற்றி இவைகளை விசேஷகர்மஜன்னியமென்றறிக. ஐயா, சாமான்ய கர்மத்தாலுண்டாகிற பதார்த்தங்களையும் விசேஷகர்மத்தாலுண்டாகிற பதார்த்தங்களையும் எனக்குத் தெரியும்படி பிரகாசமாய்ச் சொல்லவேண்டுமென்று

கேட்பாயாகில், அதற்குச் சமாதானம் சொல்லுகிறோம் கேள்:—சிருஷ்டியிலுண்டான ஆகாசாதிபஞ்சபூதங்கள் சாமான்யமான சகலஜீவர்களுடைய பொதுவான கர்மத்தாலுண்டுபண்ணப்பட்டிருக்கின்றன. பிராணிகளுடைய விசேஷ கர்மத்தால் தேவ மனுஷ திரியக்காதி ஸ்தாவரமீறாயிருக்கிற சரீரங்களும் அந்தந்தச் சரீரங்களுக்குப் புஜிக்கயோக்கியமான அருந்தல் பொருந்தல்முதலான போக்கியவஸ்துக்களும் உண்டுபண்ணப்பட்டிருக்கின்றனவென்றறிக. [இ - து] சரீரம் சாமான்யகர்மம், அதில் தசா புத்தி சித்ரங்களாலுண்டுபண்ணப்படுகிற சம்பத்து ஆபத்துக்கள் விசேஷகர்மம். [எ - தி] ஒருமனுஷனுக்கு முப்பது வயதுவரை விபத்தானகர்மத்தாற் பிச்சையெடுத்துச் சாப்பிடும்படியாக ஒரு விசேஷபாபகர்மம் நடக்கும்போது, ஒருவிசேஷபுண்ணியகர்மம் வருங்காலையில் இவனுடைய சொப்பனத்திற் சுக்கிரன்வந்து என்னுடையதசை இருபதுவருஷம் ராஜாங்கத்தை அநுபவிக்கும்படி வருமென்று சொன்னதைக்கேட்ட இவனும், எழுந்திருந்து அவ்விரவில் ராஜாவின் அந்தப்புரத்துக்குப்போய் நித்திரைசெய்கிற ராஜாவைத்தூக்கி வீதியிற் போட்டமாத்திரத்தில் இடி அரண்மனையில் விழுந்து அதிலுள்ள ஜனங்கள் நசித்துப்போனதைப்பார்த்த அவ்வரசன் மந்திரியைக்கூப்பிட்டு இவராலேயே நான் பிழைத்ததால் இவரைத்தெய்வமாய் நம்பியிருப்பதால் எனக்கெப்படி உபசாரம் நடக்குமோ அப்படி இவருக்கு முந்திச்செய்துவரவேண்டுமென்று உத்தரவு செய்தபிரகாரம் நடந்துவரும்போது, ஒருநாள் இருவரும் சாப்பிட உட்கார்ந்து இலையில் அன்னம்போட்டவுடன் அவைகளை இவன் காலாலே உதைத்துத்தள்ளினவுடன், ராஜா அந்தச்சோற்றைக் காக்கைக்குப் போடச்சொன்னதில் அவைகள் அதைத்தின்று இறந்தவுடன், ராஜாவுக்கு இவனிடத்தில் விசேஷநம்பிக்கையுண்டாய்ச் சிங்காசனத்தில் ஒருநாளிருக்கும்போது கிரீடத்தைத் தூரத்தட்டிவிட்டதில் அது கீழே விழும்போது அதில் ஒருபாம்பு விழுந்தது. இப்படி இருபதுவருஷமானவுடன் சுக்கிரன் சொப்பனத்தில்வந்து இனிச்சூரியன்தசை வருவதால் ஆபத்துவருமென்று சொன்னதைக்கேட்ட இவன் பயந்திருக்கும்போது, ராஜா வேட்டைக்கு இவனையுங்கூட்டிப்போய் ஒருஇடத்தில் இருக்கச்சொல்லி வேட்டையாடிவிட்டு வந்து படுத்து நித்திரைசெய்யும்போது, இவன் ஒருமாம்பழத்தைக் கையிலெடுத்துக் கத்தியாலறுக்கும்போது, பழம் நழுவிப்போய்க் கத்தி ராஜாவின்கழுத்தில் விழுந்தமாத்திரத்தில் விழித்து இவனை அந்தக்கத்தியைப்பிடுங்கி வெட்டவரும்போது, இவன் காட்டுக்குள் ஓடிப்போனான். அவ்வரசன் பட்டணத்துக்குவந்து என்னை அவன் வெட்டயத்தனித்தானென்று சொன்ன கதையைக்கண்டுகொண்டு விசேஷகர்மத்தாலிப்படிச் சுகதுக்கம் வருமென்றறிக.

## 128 - வது தரங்கம்.

மற்ற துவிதசாஸ்திரங்களில் சொல்லுகிற பேதங்கள் பந்தங்கொடுக்கும்:—

அத்துவித சாஸ்திரம்தவிர மற்றசாஸ்திரங்களிற் சொன்ன கட்டுப்பாடெல்லாம் பெரியவர்கள் செய்கிற கலியாணம் ருதுசாந்தி பிள்ளையைப்பெறுகிறது

முதலான வியாபாரங்களால் துக்கமும் கருத்துருத்துவமும் கர்மமும் வளரு கிறதுபோலும், தேவர்கள் அசுரர்கள்சண்டை அனர்த்தங்கொடுப்பதுபோலு மறிக. ஐயா, வேதாந்த சாஸ்திரம் தவிர மற்ற துவிதசுருதி ஸ்மிருதி இதிகாச புராணமுதலான சாஸ்திரங்களைப்பார்த்து அவைகளிற் சொன்னபிரகாரமாக அநேகவிதமான கர்மம் பக்தி யோக உபாசனைகளைச்செய்கிற ஜீவர்களுக்கு அழிவற்ற பிரஹ்மானந்தம் சித்திக்கமாட்டாதென்றும், அவர்களுக்கு அஞ்ஞானமும், ஆவரணமும், வாசனைகளும், சஞ்சிதகர்மங்களும், கருத்துருத்துவ போக்த்துருத்துவ பிரமாத்துருத்துவங்களும், அதிலுண்டாகிற ராகத்துவேஷ காமக்குரோதமுதலான விருத்திகளும், ஞானேந்திரிய கர்மேந்திரியங்களுடைய பிரவர்த்திகளும், ஜனனமரணப்பிரவாகங்களும் ஒருகாலும் நிவர்த்தியாகாவென்றுஞ் சொன்னீர்களே, அப்படியிருக்கும்பக்ஷத்தில் அந்தந்தக்கர்மாதிகளைச் செய்யும்படி சாஸ்திரங்களில் ஜகதீசுவரன் விதியாக உண்டுபண்ணுவானேன்? இந்த ஜீவர்கள் மனோவாக்குக்காயங்களால் அந்தந்தக்கர்மங்களைச் செய்வானேனென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:—வாராய் குழந்தாய்! ஒருதகப்பனே விளையாடுகிற பிள்ளைகளுக்காக மரத்தினால் யானை குதிரைகளை யுண்டுபண்ணிக்கொடுப்பதும், பள்ளிக்கூடத்தில் வைத்தபிள்ளைக்குப் படிப்பதற்காகப் புஸ்தகங்களையும் வாத்தியாரையும் உண்டுபண்ணிக்கொடுப்பதுபோலும், யவ்வனம் வந்தஉடன் ஒருபெண்ணைக் கலியாணஞ்செய்து அவளோடேபோகித்துப் புத்திரர்களை உண்டுபண்ணும்படிக்கும், சகலவிதமான சம்பத்துக்களையும் ரகசியமாய்ப் புதைத்துவைத்திருந்த புதையலையும் எடுத்துக்கொடுத்து அந்தப்புத்திரனோடே அபேதமாய்த் தானும் அவனும் கலந்துகொண்டு சகலகாரியங்களையும் முடிப்பதுபோல ஈசுவரனாகிய பிதாவும் அஞ்ஞானிகளாயிருக்கிற பாமரன் கர்மி பக்தன் முதலான குழந்தைகளுக்கு விளையாடுகிறபருவம்போல அறியாமையோடேகூடியிருப்பதால் சிவ விஷ்ணுவாதி மூர்த்திகளாகிற பொம்மைகளை உண்டுபண்ணிக்கொடுப்பதுபோலும், முமுக்ஷுவாகிற குமாரபருவத்திற் குருவாகிற வாத்தியாரிடத்திற் படிக்கவைத்துச் சாதனசதுஷ்டயம் முதலான குணங்களையும் சம்மியக்ஞானத்தையும் சொல்லுகிற சத்சாஸ்திரங்களாகிற புஸ்தகங்களையும் வாங்கிக்கொடுப்பதுபோலும், பிரஹ்மாப்பியாசமாகிற யவ்வனம்வந்தஉடன் விவேகமாகிற பெண்ணைக் கலியாணம்பண்ணி விசாரமாகிற போகத்தால் ஞானமாகிற புத்திரனை பெறும்படிசெய்து ஜீவன்முக்தியாகிற சம்பத்துக்களையும் ஒப்புவித்துப் பிரஹ்மத்தோடே அபேதமாய்வாழும்படி செய்கிறாரென்றறிக. இன்னம் புண்ணியசாலிகளான தேவர்களுக்கு அமிர்தத்தை உண்டுபண்ணிச் சாப்பிடச்செய்வதும், மிசிரகர்மங்களுடைய மனுஷர்களுக்கு அன்னங் கரிகாய்பதார்த்தங்களைச் சாப்பிடும்படிச்செய்வதும், பாபகர்மங்களையுடைய பசுமுதலான ஜந்துக்களுக்குள், பசு யானை குதிரைகளுக்குப் புல்லும் பருத்திக்கொட்டையும் கொள்ளுகளும் ஆகாரமாய்க்கற்பிப்பதும், ஒட்டகைக்கு வேப்பிலையை ஆகாரமாக உண்டு

பண்ணியிருப்பதும், பன்றிகளுக்கு மலபாதையை ஆகாரமாக உண்டுபண்ணி யிருப்பதுபோலும், ஈசுவரனும் அப்படி அதிகாரிகளுக்குத்தக்கபடி த்விதசாஸ்திரங்களையும் விவேகிகளுக்கு அத்விதசாஸ்திரங்களையும் உண்டுபண்ணியிருப்பது நியாயமென்றறிக.

## 129 - வது தரங்கம்.

கர்மபலம் பரோக்ஷம்:—

கர்மோபாசனைகளைச் செய்கிறவனுக்குத் திருஷ்டபலனன்றியில் அதிருஷ்டபலம். [எ - தி] அயோக்கியனிடத்தில் வேலைசெய்கிறவனுக்கு வருஷாந்தரத்திற் குற்றங்களன்றியிலிருந்தால் பின்னுற் கூலிகிடைப்பதுபோலும், நாட்டு வைத்தியனிடத்தில் தீர்க்கவியாதியுள்ளவன் மருந்துவாங்கிப்புஜித்து மறுபத்தியத்தில் அதின்குணம் தெரிவதுபோலுமறிக. கேவலம் பணத்தினுலே செய்யப்பட்ட கர்மத்தினுல் மோக்ஷம் வாராது. [எ - தி] ரத்னப்பரீக்ஷை அறிவதற்கு ஸ்நானுதிகிரியைகளால் முடியாததுபோலவறிக. ஐயா, கர்மத்தினுல் முக்தியில்லை, ஞானத்தினுலேயே முக்திவரவேண்டுமென்றும், அந்தஞானம் குரு அனுக்கிரகத்தால் உண்டாகிற ஆத்மானுத்ம விசாரத்தால் வரவேண்டுமென்றும் சொன்னீர்களே அப்படிக்கர்மங்களை வெகுகாலஞ்செய்து முக்திவராமற்போனபின் ஞானத்தினுல் முக்திபெற்றவர்களை எனக்குச் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரம் சொல்லுகிறேன் கேள்:—காவஷேயரென்ற ரிஷிகுமாரர்கள் முப்பத்திரெண்டுவருஷம் பிரஹ்மசர்யாசிரமத்திலிருந்து சமீதாதானம் குருகுலவாசம் பிக்ஷாசரணை நேமாத்தியயனம் ரிஷிதர்ப்பணமுதலானவைகளைச் செய்துவந்ததிலும் சம்சாரதாபம் போகாமல், அஜாதசத்ருவென்கிற ராஜாவிடத்தில்வந்து அவர்பெண்களையும் விவாகஞ்செய்து, கிரகஸ்தாசிரமத்துக்குள்ள ஔபாசன அக்னிஹோத்திராதி கர்மங்களை விதிவத்தாய்ச் செய்துவந்து தேவருணங்களைத் தீர்த்துப் புத்திராதிகளால் பிதிர்ருணங்களைத்தீர்த்து வந்ததிலும் சித்தசாந்தியில்லாமலும் மேல்மேலும் சித்தவிக்ஷேபமே வந்துகொண்டிருந்ததால், தாரேஷணை வித்தேஷணை புத்ரேஷணைகளைத் தியாகஞ்செய்து சன்னியாசம் செய்துகொண்டு, அந்த ஆசிரமத்துக்குள்ள அனுஷ்டானங்களைச் செய்துகொண்டுவந்ததிலும் சித்தவிக்ஷேபம் தீராமலிருந்ததைப்பற்றி, அக்கியாதபூர்வரென்ற ரிஷியை ஆரண்யத்தில் கண்டமாத்திரத்தில் அவரைச்சரணமாக அடைந்து நாங்கள் இதுவரையில் கர்மம் செய்துகொண்டு வந்ததில் துக்கமே விருத்தியாயிருக்கிறதே தவிர எங்களுக்கு ஜனனமரணுதி சகலதுன்பங்களும் போய் ஆனந்தத்தை யடையும்படியான வழி தெரியாதிருப்பதால் அப்படிப்பட்டதான உபாயத்தைச் சொல்லவேண்டுமென்று கேட்ட சிஷ்யர்களுக்கு அந்தக் குரு சொன்னதாவது:—ஓ குமாரர்களே! உங்களுக்குத் துக்கம் வந்திருப்பதற்குக்காரணம் நீங்கள் உங்களுடைய ஆத்மசொரூபத்தை அறியாமலிருப்பதால் துக்கம் வந்திருக்கிறது. சுகமாய் இரண்டாவது ஜனங்கள்

இல்லாதஇடத்திற் படுத்து நித்திரைபண்ணுகிறவனுக்குத் தன்னை மறந்ததால் துக்கம்வந்ததற்கு அந்த அவஸ்தையிலேயே அநேகவிதமான கர்மங்களைச் செய்ததிலும் அத்துக்கம் போகாமல் விழித்தபிற்பாடே அத்துக்கங்களெல்லாம் போவதுபோல நீங்களும் உங்களுடைய ஆத்மசொரூபத்தில் விழித்தீர்களேயானால் உங்களுக்கு வந்திருக்கிற சகலசம்சாரதுன்பங்களும் நிவர்த்தியாய் அழிவற்ற ஆனந்தத்தை அடைவீர்களென்று அனுக்கிரகித்தபிரகாரம் அந்தச்சிஷ்யர்களும் நாம் யாரென்று விசாரித்ததால் நாமே பிரஹ்மமென்றறிந்து ஜீவன்முக்தர்களாய்விட்டார்களென்கிற கதையையுமறிந்து சகலகர்மங்களையும் விட்டுத் தத்துவக்ஞானத்தையடைந்து கறையேறக்கடவாய்.

## 130 - வது தரங்கம்.

ஆத்மாவும் மனதும் சேர்ந்தே பந்தகாரணமாகிறது.—

பூமியும் விரையும் ஒன்றுசேர்ந்து ஜலத்தால் மரமாவதுபோல ஆத்மாவும் அந்தக்கரணமும் ஒன்றுசேர்ந்து கர்மத்தால் அனந்தகோடி சம்சார ஆரண்யமாகிறதென்றறிக. ஐயா, ஆத்மாவும் மனதும் ஒன்றுசேர்ந்து பந்தஹேதுவான சம்சார ஆரண்யமாகிறதென்று சொன்னீர்களே, ஆத்மாவும்மனதும் எப்படி ஒன்றுசேர்ந்தது? ஆத்மாவோ சித்தாச்சுதே மனசோ ஜடமாச்சுதே, சித்தும் ஜடமும் ஒன்றுசேருமா? அப்படிச்சேருவதற்குக் காரணமென்ன? இவைகளையெல்லாம் விஸ்தாரமாகச் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரம் சொல்லுகிறேன் கேள்:—ஆத்மாவினிடத்தில் அக்ஞானசக்தி ஒன்றிருக்கிறது. அந்த அக்ஞானசக்தியால் மறைக்கப்பட்டிருக்கிற ஆத்மாவினிடத்தில் மனதுமுதலான அனந்தகோடி சக்திகளுண்டாகின்றன. அந்தச் சக்திகளில் முதலில் சூனியசக்தி ஆகாசத்தைக் கற்பித்து, அவகாசமென்கிற வடிவத்தையும் கற்பித்தது. இப்படியே சலனசக்தி வாயுவென்கிற நாமத்தையும், பரிசமென்கிற குணத்தையும் கற்பித்தது. தாகசக்தியானது அக்கினியென்ற நாமத்தையும், ரூபமென்கிற குணத்தையும் கற்பித்தது. திரவசக்தியானது ஜலமென்கிற நாமத்தையும், ரசமென்கிற குணத்தையும் கற்பித்தது. கடினசக்தியானது கல் மண் என்கிற நாமத்தையும், கந்தமென்கிற குணத்தையும் கற்பித்தது. இப்படியே தித்திப்பு என்கிற சக்தியானது வெல்லமுதலான நாமத்தையும், மதுரமென்கிற குணத்தையும் கற்பித்தது. கசப்பென்கிற சக்தியானது வேம்பென்கிற நாமத்தையும், கசக்கிற குணத்தையும் கற்பித்தது. இப்படியே புளிப்பென்கிற சக்தியானது புளி நாமத்தையும், புளிப்பென்கிற குணத்தையும் கற்பித்தது. அசரமென்கிற சக்தியானது விதைக்குள்ளேயிருந்து இலை பூ காய்களுடைய மரமென்ற நாமத்தையும், நிழல் முதலானவற்றைக் கொடுக்கின்ற குணத்தையுங் கற்பித்தது. வேர்வையென்கிற சக்தியானது புழு கொசுமுதலான, வஸ்துக்களைக் கற்பித்தது. சைத்தியமென்கிற சக்தியானது

ஜலத்தில் மீன்முதலான வஸ்துக்களைக் கற்பிக்கிறது. ஆகாசகமனசக்தியானது பறவைமுதலானவற்றைக் கற்பிக்கிறது. சஞ்சாரசக்தியானது சிங்கம்முதல் பசுவரையிலுள்ள மிருகங்களைக் கற்பிக்கிறது. ஞானமென்கிற சக்தியானது மனுஷசரீர இந்திரியாதிகளைக் கற்பிக்கிறது. புண்ணியமென்கிற சக்தியானது தேவ கந்தர்வ கின்னர கிம்புருஷ உரக சித்த சாத்தியர்கள் முதலானவர்களைக் கற்பித்துச் சொர்க்கபோகத்தை யனுபவிக்கும்படி செய்கிறது. பாபமென்கிற சக்தியானது இகலோகத்தில் தாபத்திரய துன்பத்தையும் பரலோகத்திலும் நரகதுன்பத்தையும் அனுபவிக்கும்படி செய்கிறது. இன்னம் அனந்தகோடி சக்திகள் அனந்தகோடி வஸ்துக்களைக் கற்பிக்கின்றன. எதுபோலவென்றால், புருஷனிடத்திலிருக்கிற நித்திராசக்தியானது புருஷனைமறைத்து அனந்தகோடி ஜீவேசுவரஜகத்துக்களையும் அதில் அநேகவிதமான ராகத்துவேஷங்களையும் சுகதுக்கங்களையும் கற்பிப்பதுபோல இந்த அக்ஞானசக்தியும் மனதென்கிற சக்தியைக்கற்பித்து ஆத்மாவோடே சேர்த்துவைத்து ஹிருதயக்கிரந்தியென்கிற நாமத்தையும் கற்பித்து அனந்தகோடி ஜன்மஹேதுவான பந்தத்தைக்கற்பிக்கிறது. விசாரத்தாலுண்டான ஞானசக்தியாலிந்த ஹிருதயக்கிரந்தியும் அறியாமையும் நசிக்குமென்றறியத்தக்கது.

## 131 - வது தரங்கம்.

மனது சகலத்தையும் அனுபவித்தாலுங்குற்றமில்லை நான் கர்த்தாவென்று வருவதே பந்தம்:—

மனது எல்லாவிஷயத்தையும் தாராளமாய் அனுபவிக்கலாம், நான் கர்த்தாவென்றுமட்டும் வந்தால் பந்தம்வரும். [எ - தி] ராஜகிரஹத்தில் பரிசாரகன் சமையற்பண்ணித்தானும் சாப்பிட்டு எல்லோருக்கும் வேண்டியமட்டும் தாராளமாய்ப்போடலாம், வெளியில்மட்டும் ஒருபதார்த்தத்தை எடுத்துப்போனால் உடனே விலங்குகிடைப்பதுபோலுமறிக. ஐயா, மனதுமுதலான கருவிகரணங்களெல்லாம் அதனதன் தொழில்களை ஓயாமற்செய்தாலும் பந்தமில்லையென்றும், நான் கர்த்தாவென்று வந்தவிடத்தில் கர்மபந்தம் வருமென்றும் சொன்னீர்களே, அது எப்படிச்சொல்லலாம்? மனதுமுதலான திரிகரணங்களாற் செய்யப்படுகிற தொழிலல்லவா புண்ணிய பாப மிச்ரகர்மங்களால் தேவ மனுஷ திரியக்காதிஜன்மங்களைக் கொடுக்கிறதென்றும் சாஸ்திரங்கள் சொல்வதும், சாராய முதலானவைகளைச் சாப்பிட்டவனுக்கு மயக்கம் வருகிறதேதவிர சும்மாயிருக்கிறவனுக்கு மயக்கம் வரவில்லையே, நஞ்சைச் சாப்பிட்டவனுக்குச் சாவு வருகிறதேதவிர அதைச்சாப்பிடாதவனுக்கு சாவுவரவில்லையே, அமிர்தம் சாப்பிட்டவனுக்குச் சாகாமலிருக்கும்படி வருகிறதேதவிர மற்றவனுக்கு வரவில்லையே; மூடர்களுடைய வார்த்தையைக் கேட்கிறவனுக்குப் பாபமும், பெரியவர்களுடைய வார்த்தையைக் கேட்டாற் புண்ணியமும்; ஸ்திரீ

முதலானவர்களைப் பரிசித்தால் பாபமும், சாதுக்களைப் பரிசித்தாற் புண்ணியமும் வருவதாலும்; மூடர்களான ஸ்திரீமுதலான துஷ்டர்களைப்பார்த்தாற் பாபமும், குரு பெரியவர்கள் ஸ்வாமிகளைப் பார்த்தபேர்களுக்குப் புண்ணியம் வருவதாலும்; துர்ப்போஜனம் செய்ததால் பாபமும் குருப்பிரசாதம் சாப்பிடுவதால் புண்ணியமும்; மூடர்களுடைய வாசனையைக் கிரஹிப்பதாற் பாபமும், சாதுக்களுடைய வாசனையைக் கிரஹிப்பதாற் புண்ணியமும் வருவதாலும்; வீண்பேச்சுப்பேசுவதால் பாபமும், நல்லபேச்சுப்பேசினாற் புண்ணியமும் வருவதாலும்; கையாற் குடும்பத்துக்குழைத்ததாலும் சண்டைப்பிடிப்பதாலும் அடிப்பதாலும் பாபமும், பெரியவர்களுடைய பணிவிடையையும் பூசைமுதலான சற்கிரியைகளையும் செய்வதாற் புண்ணியம் வருவதாலும்; தேவடியாளுடைய வீட்டிற்குப் போவதாற் பாபமும், சுவாமியைப் பிரதக்ஷணம்பண்ணுவதாற் புண்யமும்; மனதினால் விஷயத்தை நினைத்தாற் பாபமும், ஆத்மாவைநினைத்தாற் புண்யமும் வருகிறது அனுபவசித்தமாயிருக்கும்போது தாங்கள் நேரேவிரோதமாய் மனதுமுதலான சகலகருவிகரணங்களால் என்னென்ன தொழில்களைச்செய்தாலும் பந்தமில்லையென்றும், நான் கர்த்தாவென்று சொல்லுவதினாலேயே பந்தம்வருமென்றும் சொன்னீர்களே, அதற்குச் சமாதானம் சொல்லவேண்டுமென்று கேட்ட சிஷ்யனுக்குக் குரு சொல்லுகிறார் :—அடேமூடா ! நீ சொன்ன சகலவிதமான இந்திரியங்களாலும் மனசினாலும் சகலவிதமான புண்யகர்மங்களைச் செய்யும்போதெல்லாம் சகலஜீவர்களும் நான் பார்த்தேன், நான் கேட்டேன், நான் தின்றேன், நான் பேசினேன், நான் இன்னகாரியங்களைச் செய்தேன், நான் போனேன், நான் வந்தேன், நான் நினைத்தேன், நான் நிச்சயித்தேன், நான் சுகித்தேன், நான் துக்கித்தேன் என்று இப்படி விவகரிக்கிறார்களா? அல்லது மனது நினைத்தது, இந்திரியங்கள் தொழில்செய்கின்றனவென்று சொல்லுகிறார்களா? ஆகையால் மனமுதலிய கரணங்களிலும் அவைகளின் தொழிலிலும் நானைச் சேர்ப்பதே பந்தமென்றறிக.

## 132 - வது தரங்கம்.

விவேகிக்கும் அவிவேகிக்கும் லோகவாசனை துக்கமேதரும்:—

விவேகி அவிவேகி இருவர்களும் தங்களை இவ்வுலகத்தில் நல்லவனென்று எல்லோரும் சொல்லவேண்டுமென்று நினைத்தாற் சதா துக்கமேவரும். [எ - தி] குலஸ்திரீயும் தாசியும் எல்லோருக்கும் இஷ்டமாய் நடக்கவேண்டுமென்று நினைத்தாற் கற்பும் பிழைப்பும் கெட்டுக் கவலையோடு துக்கத்தையடைகிறது போலவறிக. ஐயா, உலகவாசனையானது விவேகிகளுக்கும் அவிவேகிகளுக்கும் துன்பமேதருமென்று சொன்னீர்களே, அப்படிச்சொல்லலாமா? உலகத்தில் எல்லோரும் நல்லவனென்று சொல்வதினால் கீர்த்திவருமென்றும், அந்தக்

கீர்த்திக்காகவே சகலரும் வெகுவிதமான பணங்களைச்செலவு பண்ணுகிறதும் தேகப்பிரயாசைப்படுகிறதும்தவிர இராஜாக்களும் கட்டியக்காரன்முதலானவர்களுக்கும் சம்பளம்கொடுத்து ஸ்தோத்திரம்பண்ணும்படி செய்விக்கிறதும், ஸ்ரீ இராமனும் சகல சற்குணங்களுடன்கூடியிருந்தும் இரவில் நகர்சோதனைக்குப் போயிருக்கும்போது ஒருவண்ணான் தன்பெண்சாதியைப்பார்த்து என்னைக்கேளாமல் நீ பிறந்தவீட்டிற்குப்போனதால் உன்னை நான் சேர்க்கமாட்டேனென்று சொன்னதற்கு, அவள் "ராஜாவானராமர் தன்பெண்ஜாதியான சீதையை ராவணன் காமாதுரத்தால் ஒருவருஷம்வரைக் கொண்டுபோய்வைத்திருந்தான். மறுபடி அவர் அவளைச் சேர்த்துக்கொள்ளவில்லையா? நான் இன்றைக்குப் பிறந்தவீட்டுக்குப்போனதிலா பெரியகுற்றம் வந்துவிட்டது" என்று சொன்னதைக்கேட்ட அந்தவண்ணான் மிகுந்த கோபத்துடன் "அடியே என்னசொன்னாய்! வெட்கம், மானம், ரோசம், சூடு, சுணை ஒன்றுமில்லாத காமாதுரனை இராமனோடேகூட என்னையும் சரியாகச்சொல்லவருகிறாயா?" என்று அவளை அடித்துத்தள்ளினதைப் பார்த்திருந்த ஸ்ரீராமரும் அரண்மனைக்கு வந்து கர்ப்பிணியாயிருக்கிற சீதையைக்கூப்பிட்டுக் காட்டிலே கொண்டுபோய் விட்டுவரச்சொன்னகதையும் லோகவாசனைக்காகவே; இப்படியே ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்கும் செமந்தகமணியைத் திருடினானென்ற அபகீர்த்தி வந்ததற்காக அவரும் வெகுபிரயாசைப்பட்டு அதைத் தீர்த்துக்கொண்டகதையும்; இப்படியெல்லாமிருக்கும்போது, இந்தலோகவாசனை எல்லோருக்கும் துக்கங்கொடுக்குமென்று எப்படிச்சொல்லலாமென்றால், அடே மூடா! நீ சொன்னபடி ஜகதீசுவரர்களாயிருக்கிற அவர்களுக்கே நல்லபெயர் கிடைக்காமற்போகுமேயானால், இவ்வுலகத்தில் யாருக்குத்தான் எல்லாரும் நல்லவனென்று சொல்லும்படிகிடைக்கும்? இந்த லோகவாசனையானது தூல சரீரத்திற்குச் சுகங்கொடுக்குமென்றால்,— ஒரு சுவாமிகள் மார்கழிமாசத்தில் கௌபீனமாத்திரத்தோடே ஜலக்கரையில் ஈரமணலில் படுத்துக்கொண்டிருப்பதை தனுர்மாசபூஜைக்காக ஸ்நானத்திற்குவருகிற பிராம்மணர் இவரைப் பார்த்து "அடடா என்ன அதிசயம்! நமக்கு மச்சுவீட்டிற்குள் ஏழுபோர்வை போத்திஇருந்தும் குளிர்நடுக்குகிறதே, இவர் இப்படிக்குளிரிலிருக்கிறாரே" என்று சொன்னசொல் தூலதேகத்திற்கு வியாதியும், சூக்ஷ்மசரீரத்திற்குத் துக்கமும், காரணசரீரத்திற்கு அகம்பாவமும் விருத்தியாவதும்தவிர இப்படி எப்பவும் செய்யமுடியாததாலும்; இந்தச்சங்கதியைவிட்டு உலகத்தார் இன்னமொரு இந்திரியங்களுடைய வியாபாரங்களான தீனியோனி முதலான விவகாரங்களைக்கண்டு தூஷிப்பார்களேயென்று பயந்து இந்தப்பூனையும் இந்தப்பாலைக் குடிக்குமா என்பதுபோல அவர்களுக்குத்தெரியாமல் மறைத்துவைக்கவேண்டிவரும். ஆகையால் நல்லவனென்று சொல்லும்படியாய் நடப்பது ஈசுவரனாலும் முடியாதாகையால் லோகவாசனை யாவருக்கும் துக்கமே தருமென்றறிக.

## 133 - வது தரங்கம்.

*சகஜாதி தாதாத்மியத்திரயங்களையும் அதன் நிவர்த்திகளையுங்காண்க:—*

*சகஜதாதாத்மியம் - அந்தக்கரணத்திற்கும் அதில் பிரதிபிம்பனான ஜீவனுக்கும் ஐக்கியந்தோன்றுவதுதான், ஜலப்பிரதிபிம்பம்போல. அது இருக்கும்வரை ஜீவனும் தோன்றிக்கொண்டிருப்பன். கர்மஜதாதாத்மியம் அகங்காரத்திற்கும் சரீரத்திற்கும் ஐக்கியம். வண்டிக்கும் மாட்டுக்கும் சம்பந்தம் கட்டினால் வந்திருப்பதுபோல, கயிற்றுக்கட்டை அவிழ்த்துவிட்டால் எருதுக்கு வண்டியின்சம்பந்தம் விலகிப்போவதுபோல, சுழுப்தியவஸ்தை முதலானவற்றில் கர்மக்ஷயத்தால் அகங்காரத்திற்குச் சரீரசம்பந்தம் விலகிப்போகும். பிராந்திஜதாதாத்மியமாவது— அந்தக்கரணாதிகளுடைய கருத்ருத்வாதிகள் சாக்ஷியினிடத்தில் தோற்றுவதேயாம். எப்படியெனிற் படிகத்தில் நீலாதி வஸ்திரத்தின் வர்ணங்கள் தோற்றுவதுபோல இருப்பதால், முமுக்ஷுவானவன் அப்படிகத்தில் அவ்வர்ணங்கள் திரிகாலத்திலுமில்லாததுபோல, ஆத்மாவின்சுபாவம் அசங்கத்வமென்றும், அந்தக்கரணத்தின்சுபாவம் கருத்ருத்வாதிகளென்றும் பிரித்தறிந்து அந்தக் கருத்ருத்வாதிகளுக்கு விலக்ஷணனான நான் ஆத்மாவானதால் அசங்கனான சாக்ஷியென்றறிவதே பவகாரணமான பிராந்திஜதாதாத்மியத்தின் நிவர்த்தியென்றறிக. ஐயா, இந்தத்தாதாத்மியத்திரயங்கள் எப்படி உண்டாச்சுதுகள்? இவைகளால்வரும் துன்பங்கள் என்ன விதமாய் இருக்கும்? எந்தத்தாதாத்மியம் எதைப்பற்றி ஜீவித்துக்கொண்டிருக்கிறது? இந்தத்தாதாத்மியங்களில் எது எதனால் நிவர்த்தியாகும்? இவைகளையெல்லாம் திருஷ்டாந்தமூலமாய் அறிவிக்கவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குச் சமாதானம் சொல்லுகிறேன் கேள்:—வாராய் குழந்தாய்! நீ சங்கித்த சங்கை நன்றாயிருக்கிறது. உனக்கும் மற்றமுமுக்ஷுக்களுக்கும் முக்திக்குச் சாதநமானது விசாரணையானதால், இது கேட்கவேண்டியது அவசியந்தான். முதலில் அகண்ட பரிபூரணமான பிரஹ்மமாகிய தன்னை மறந்ததால், நான் என்னை அறியேன், என்திருஷ்டியில் பிரஹ்மமில்லையென்று இப்படி அக்ஞானத்தால் உண்டுபண்ணப்பட்டதெதுவோ அதுவே பிராந்திஜதாதாத்மியமாம். அதன்பின் அகம்விருத்திரூபமான அந்தக்கரணமுண்டாய் அதில் ஆத்மாவினுடைய பிரதிபிம்பந்தோற்றுவதெதுவோ அதுவே சகஜதாதாத்மியமாம், அதன்பின் அந்தக்கரணமும் பிரதிபிம்பனானஜீவனும் சேர்ந்து செய்கிற புண்ணியபாபங்களுக்குப்பலமான சுகதுக்கங்களை யனுபவிக்கிறதற்கு ஈடாகத் தூலசரீரத்திற்கும் அகங்காரத்திற்கும் சம்பந்தமெதுவோ அதுவே கர்மஜதாதாத்மியமாம். இனிப்பிராந்திஜதாதாத்மியத்தாலேயே சிருஷ்டி பிரளயம் வந்து வந்துபோனாலும் ஜனனமரணதுக்கங்கள் நிவர்த்தியாகாமல் வந்துகொண்டேயிருக்கிறது. அப்படிச்செய்வதுவே பிராந்திஜதாதாத்மியத்தால் வருந்துக்கமாம். இனி அந்தக்கரணம் வாசனையினாலும் கர்மத்தாலும் சலிக்கும்போது*

நான் துக்கியென்று தோன்றச்செய்வது சகஜதாதாத்மியத்தால் வருந்துக்கமாம். அகங்காரத்திற்குக் கர்மசம்பந்தமிருக்கும்வரை தூலசரீராதிகளோடே சம்பந்தப்பட்டு அவைகளுடைய வியாதிமுதலான விவகாரத்தால் வருந்துக்கமே கர்மஜதாதாத்மியத்தின்பலமாம். அவைகள் தேகத்திரயத்தைப்பற்றியே ஜீவித்துக்கொண்டிருக்கும். இவைகள் நிவர்த்தியாவதற்குத் திருஷ்டாந்தத்துடன் சொல்லுகிறோம்:— சித்தசுத்தியோடே சாதநசதுஷ்டய சம்பன்னனாய்ச் சற்குருவைத் தேடிவந்து சிரவணாதி நான்குவிதமாய் விசாரணைசெய்ததாலுண்டான நான் பிரஹ்மமென்கிற திடமான அபரோக்ஷஞானத்தால் தசமன் நான்தசமனென்றறிந்தாற்போலத் தன்னையறிவதே பிராந்திஜதாதாத்மியத்திற்கு நிவர்த்தியென்றறியத்தக்கது. ஜலத்தினுடைய நாசத்தால் பிரதிபிம்பம் நசிப்பதுபோல, விதேகமுக்தியில் ஆத்தியந்திகமான அந்தக்கரணநாசத்தால் அகம்விருத்தி நசிப்பதுவே சகஜதாதாத்மியத்தின் நிவர்த்தியாம். சுழுப்தியில் கர்மக்ஷயமாகும்போது சுக்கிலமோசனமான சிசுனம்போல அகங்காரலயமே கர்மஜதாதாத்மிய நிவர்த்தியென்றறிக.

## 134 - வது தரங்கம்.

திரிபுடியிற் சுகமில்லை :—

திரிபுடியில் வருகிற சுகம் வெகுசாதனங்களை அபேக்ஷிக்கிறதாயும் தடைகளுடன்கூடியிருப்பதால் துக்கமேயன்றிச் சுகலேசமுமில்லை. எப்படியென்றால், தரித்திரனுக்கு ஞாதாவும் ஞானமுமிருந்தும் விஷயமில்லாததினாற் சுகமில்லை. சுழுப்தியில் ஞாதாவும் ஞேயமுமிருந்தும் ஞானமில்லாததினால் விஷயசுகமில்லை. பைத்தியங்கொண்டவனுக்கு ஞானமும் ஞேயமுமிருந்தும் ஞாதாவில்லாததினாற் சுகமில்லை. [௭ - தி] வித்தியார்த்தியினிடத்தில் ஸ்திரீபோகம் செய்ய ஞாதாவும் லேபனமான ஞானமுமிருந்தும் ஸ்திரீயில்லாததினாற் போகமில்லை. கிழவனிடத்தில் ஞாதாவும் யௌவனஸ்திரீயுமிருந்தும் லேபனமில்லாதனாற் போகமில்லை. விரக்திவந்தவனுக்கு லேபனமும் ஸ்திரீயுமிருந்தும் போகிக்க ஆசையுள்ள ஞாதாவில்லாததினாற் போகமில்லையென்றறிக. ஐயா, திரிபுடியிற் சுகமில்லையென்று சொன்னீர்களே, அப்படித்திரிபுடியிற் சுகமில்லாவிட்டால் பாமரர்கள் இகலோகத்திலுள்ள திரிபுடிச்சுகங்களை அனுபவிப்பதற்காக உழவுமுதலான அனேகவிதமான தொழில்களை அதிகப்பிரயாசைப்பட்டுச் சம்பாதித்து அருந்தல்பொருந்தல்முதலான சுகங்களை இராகத்வேஷத்துடனும் அனுபவிக்க யத்தனிப்பானேன்? இப்படியே நான் கர்த்தாவென்கிற கருமிகளும் பரலோகத்திலுள்ள அருந்தல் பொருந்தல்முதலான திரிபுடிச்சுகத்தை அனுபவிப்பதற்காக வெகுவிதமான திரவியங்களைச் சம்பாதிப்பதும், யாகசாலைமுதலான இடங்களைச் சம்பாதிப்பதும், வெகுவிதமான மந்திரங்களை நெட்டுருப்பண்ணவும், அப்படி நெட்டுருப்பண்ணின பிராஹ்மணர்களுக்குத் தக்ஷிணை

கொடுத்து ரித்துவிக்குகளாக நேமித்துப் பட்டினிகிடந்து மந்திரலோப தந்திர லோப திரவியலோப கிரியாலோபங்களன்றியில் யாகம்செய்வானேன்? இப்படியே பக்தர்களும் சாலோகாதிபதங்களிலுள்ள திரிபுடிசுகத்துக்காகவே இகத்தில் காயத்தால் வெகுதிரவியங்களைச்செலவுசெய்து கோவில்முதலானவைகளைக் கட்டிக் கும்பாபிஷேகங்களைச் செய்து உச்சவாதிகளை நடப்பிப்பதுந்தவிர பிரதக்ஷண நமஸ்காரங்களையும் வில்வமுதலான பத்திரபுஷ்பங்களை சிரமப்பட்டெடுத்து அர்ச்சனைமுதலானவைகளைச் செய்வானேன்? வாக்கினுல் சிவா சங்கராவென்று துதிப்பானேன்? மனசினுல் சிவவிஷ்ணுவாதி மூர்த்திகளைத் தியானம்பண்ணுவானேன்? இன்னும் யோகிகள் அணிமாதி திரிபுடிசுகத்துக்காகப் பிராணுயாமரூபமான ரேசக பூரக கும்பகமுதலான அப்பியாசங்களைச் செய்வானேன்? என்று கேட்பாயாகில், அதற்குத்தரம் சொல்லுகிறேன் கேள்:—உன்னுடைய வாக்குமூலத்தினுலேயே திரிபுடிசுகம் பெறுவதற்கு அனந்தவிதமான பிரயாசைப்படவேண்டியிருக்கிறதாகவும், அதனுல் வரப்பட்டசுகம் அற்பமாயிருக்கிறது எப்படிப்போலவென்றுல், எட்டுச்சுவர் ஏறி விழுந்தோடுகிற சுவானம் எச்சக்கலையிலிருக்கிற ஈரப்பசையை நக்கப்போவதுபோலிருக்கிற இகலோகசுகமும், அனேகம்பேர்கள் கொல்லைக்குப்போகிற கக்கூசில் கட்டுச்சாதம் கொண்டுபோய்வைத்துச் சாப்பிடப்போவதுபோலிருக்கிற பரலோகசுகத்தையும், டம்பக்கூத்தாடிபோலிருக்கிற அஷ்டமாசித்தியையும் அடைவது மூடத்தனமேதவிர இந்தத்திரிபுடியில் சுகலேசமில்லையென்றறிக.

## 135 - வது தரங்கம்.

அந்தத்திரிபுடியை ஜயிக்கிறதற்கு உபாயங்கள்:—

இப்போது முமுக்ஷுவானவன் இவ்வளவு அனர்த்தத்தைக்கொடுக்கிற திரிபுடியை குருகடாக்ஷத்தால் பெறத்தக்கதான நிருவிகற்பசமாதியிற் கொல்லவேண்டும், அல்லது நான் சாக்ஷியென்கிற நிச்சயத்தால் ஞாதாவைமட்டுமாவது கொல்லவேண்டும். [எ - தி] படைகளோடே எதிர்த்துவந்த சத்துருவை சூரன் அந்தப்படைகளோடே அந்தச்சத்துருவைக் கொல்லவேண்டும், அல்லது பான்சோத் என்று சொன்ன டில்லிஅரசனைப் பட்டாணி வெட்டிப்போட்டதால் அவன்படைகளெல்லாமும் அவன்சீமையும் இவனுக்கொருபிரயாசமன்றியில் சுவாதீனமான கதைபோல, கர்மபந்தரூபமான கருத்துருத்வநாசம் வந்தால் மற்ற ஞானஞேயங்கள் பொய்யாய்த்தோற்றுவதால் இவனுக்கு யாதொரு துக்கமுமில்லையென்றறிக. ஐயா, திரிபுடியை ஜயிக்கிறதற்கு விசாரணையோடே கூடிய நிருவிகற்பசமாதியால் கூடுமென்று சொன்னீர்களே, அச்சமாதி கூடுவதற்குச்சாதனமான சவிகற்பசமாதியிருந்தாலல்லவா அது சித்திக்கும். அந்த சவிகற்பசமாதி புண்டாவதற்கு இயமாதி அஷ்டாங்கங்கள் அப்பியாசித்திருக்கவேண்டும். அப்படி ஒன்றும் அப்பியாசித்திராதவனுக்கு விசாரத்தால் ஞாதா

வைமட்டும் கொன்றுலும்போதுமென்றும் சொன்னீர்களே, அதற்குத் திருஷ்டாந்தமாக கதையைத்தெரிவித்தால் அந்தப்படி ஞாதாவைக்கொன்று கரையேறலாமென்று கேட்டசீடனுக்கு குரு சொல்லுகிறதாவது:—ஒரு பிராஹ்மணன் 'பான்சோத்' என்ற வார்த்தையைக்கேட்டுப் பாடம்பண்ணிவைத்துக்கொண்டு வீதியிற் போகிறவர்களையெல்லாம் பார்த்து இந்தச்சொல்லைச் சொல்லி வரும்போது, ஒருநாள் ஒரு பட்டாணித்துலுக்கனைப்பார்த்து இதைச்சொன்னவுடன் அதற்கர்த்தம் அக்காளையோழியென்று சொன்னன்பாரென்று துலுக்கன் இந்தப்பிராஹ்மணனைக் கத்தியால் வெட்டிப்போட்டவுடன், இராஜகிரகத்துச் சேவகர்கள் இந்தத்துலுக்கனைப்பிடித்து இராஜாவிடத்திற் கொண்டுபோய் விட்டவுடன், நீ ஏன் கொன்றாய்? என்று கேட்கும்போது, என்னைப்பார்த்து பான்சோத் என்று வலுவில்சொன்னதால் வெட்டிப்போட்டேன் என்று சொன்னதைக்கேட்டு அவ்வரசனும் இவனை வெட்டிப்போடும்படி உத்தரவு செய்யுங்காலத்தில், மந்திரி இவனை வெட்டக்கூடாது, இவனை மாசம் ஒன்றுக்கு ஐம்பதுரூபாய் சம்பளம்போட்டு வைத்துக்கொள்ளவேணுமென்று சொன்னபடி. இராஜாவும் உத்தரவுகொடுத்துச் சிலகாலம் அப்படி வைத்துக்கொண்டிருக்கும்போது டில்லிபாட்சா அனேககோடி சேனைகளைச் சேகரித்துவைத்துக்கொண்டு இவனுக்குச் சொல்லிவிட்டதாவது "நீ உன் சீமையை மரியாதையாய் நமக்கு விட்டுவிடுகிறாயா அல்லது நாம் யுத்தத்திற்கு வருகிறதா" என்று தூதனை அனுப்பிவைத்ததில் அரசன் மந்திரியினிடத்தில் ஆலோசித்ததில் மந்திரி ஒரு கடிதத்திற்குள் மலத்தைவைத்து மேலே அனேககாயிதங்களைமூடி ஒரு நவரத்தினப்பெட்டிக்குள் வைத்துப்பூட்டி மொகர்வைத்து "இராஜாவின் கையெழுத்து சகிதமாய் இந்தப்பெட்டியைக் கொண்டுவருகிற இந்தசாய்பும் தாங்களும் தனித்து வைத்துப்பார்வையிட்டதின்பேரில் தங்கள் இஷ்டம்போல நடப்பதற்கு மந்திரிமுதலானவர்களையும் அனுப்பிவைத்திருக்கிறேன்" என்று கடிதத்தையும் இவர்களையும் அனுப்பினபடி இவர்களும் பாக்ஷாவிடத்தில் கடிதத்தைக்காண்பித்ததில் பாக்ஷாதனித்து ஒருகொட்டடிக்குள் இவனை பெட்டிசகிதமாய்க் கூட்டிப்போய் பெட்டியைத்திறந்து கடிதப்பொட்டணத்தைப் பிரித்துக் கைவைத்து மோந்துபார்த்ததில் நாறும்போது, "பான்சோத் என்னகொண்டு வந்தாய்" என்று சொன்னதும் இவன் அவனை வெட்டிப்போட்டதால், உடனே மந்திரி மற்றவர்களைச் சமாதானம்பண்ணி அந்தச்சீமையையும் பட்டங்கட்டின கதைபோலவறிக.

## 136 - வது தரங்கம்.

வாசனையால் சங்கற்பமும், சங்கற்பத்தால் வாசனையும் விருத்தியாகும்:—

விவேகிக்கு வாசனுவசத்தாலுண்டாகிற விபரீதமான மனதின் விஷயசங்கற்பத்தை நிரோதிப்பதினுலாவது, விஷயம் பொய்யென்று பார்ப்பதினுலாவது சங்கற்பமும் சத்தியபுத்தியும் கெடும். [எ - தி] இருதலைநாகத்தின் ஒரு

தலையைக்கொய்தாலும் அது சாவதுபோலவறிக. ஐயா, வாசனையால் சங்கற்பம் விருத்தியாகிறதென்றும், சங்கற்பத்தால் வாசனை விருத்தியாகிறதென்றும், இந்தஇரண்டுகளால் விஷயத்தில் சத்தியபுத்தி விருத்தியாகிறதென்றும், சத்திய புத்தியால் ராகத்வேஷங்கள் விருத்தியாகிறதென்றும், ராகத்வேஷங்களால் புண்ணிய பாப மிச்ரங்களான கர்மங்கள் விருத்தியாகிறதென்றும், அந்தக் கர்மங்களால் தேவ மனுஷ திரியக்காதி ஜன்மங்கள் விருத்தியாகிறதென்றும், அந்தஜன்மங்களால் தாபத்திரய துன்பங்கள் விருத்தியாகிறதென்றும் இப்படி பரம்பரையாய்ச் சம்சார ஆரண்யமானது அனந்தகோடி துர்வாசனைகளாகிற துஷ்டமிருகங்களோடேகூடி விருத்தியாய்வருகிறதென்றும் சாஸ்திரங்களில் இப்படிச் சொல்லப்பட்டிருக்கும்போது, தாங்கள் லகுவாய் சங்கற்பத்தையாவது சத்தியபுத்தியான வாசனையையாவது கொன்றால், இருதலைநாகத்தினுடைய தலைகளில் ஒருதலையைக்கொன்றால் அந்தநாகம் இறந்துபோவதுபோலச் சம்சாரம் நசித்துப்போமென்று சொன்னீர்களே, அப்படிச்சுலபமாய்ச் சம்சாரம் நசித்துப்போகிறதாயிருக்கும்பக்ஷத்தில் சகலமான ஜீவகோடிகளும் அனதி காலமாய்த் தொன்றுதொட்டு இந்தச்சம்சாரசமுத்திரத்தில் முழுகித்தபித்துக் கொண்டு எண்ணத்தொலையாத சிருஷ்டிகளும் எண்ணத்தொலையாத பிரளயங்களும் வண்டியில் சக்கரம் சுற்றுவதுபோலச் சுற்றி வந்துகொண்டிருந்தும், இதுவரையில் இந்தச்சம்சாரசமுத்திரத்திலிருந்து கரையேராமல் தபித்துக்கொண்டிருப்பானேன்? தாங்கள் மகாதயாளுவாய்ப் பிறர்களுடைய துக்கத்தைக் கண்டு சகியாதபேர்களாய், சரணுகதிபண்ணினபேர்களுக்கு கைம்மாறன்றியில் காப்பாற்றுகிறவராய்த் தன்னுயிர்போல மன்னுயிர்களையும் பார்க்கிறவர்களாய், ஈசன்முதல் கீசன்வரையிலுள்ள சகலஜீவர்களையும் சமானமாய்ப் பார்க்கிறவர்களாய், எப்போதும் இராப்பகல் பாராமல் பிரஹ்மானந்த அமிர்தவருஷத்தை மழையானது பிராஹ்மணுள்முதல் பறையன்வரையில் தாரதம்மியமன்றியிற் பெய்வதுபோல வருஷிப்பவர்களாயும், சூரியன் சகலமானபேர்களுடைய கண்ணை மறைத்திருந்த அந்தகாரத்தைப்போக்கி பிரகாசம்பண்ணிவைப்பதுபோல அஞ்ஞான அந்தகாரத்தைப்போக்கி ஞானப்பிரகாசத்தைப் பண்ணிவைக்கிறவர்களாயும், சந்திரனைப்போல சகலருக்கும் ஆஹ்லாதம்பண்ணிவைக்கிறவராயுமிருக்கும்போது ஏன் எல்லோரையும் கடைத்தேற்றிவைக்கக்கூடாதென்று கேட்பாயாகில், அதற்குத்தரம் சொல்லுகிறேன். கேள்:—மழை பேயும்போது கர்ப்பகிரஹத்திற்குள் போயிருக்கிறவனையும், சூரியன் குருடனையும், சந்திரன் பிணத்தையும், எப்படி நனைத்துக் குளிரப்பண்ணவும், சகலத்தையும் பார்க்கும்படி பிரகாசம்பண்ணவும், சந்தோஷப்படுத்தவும் செய்யமுடியாததுபோல, குடும்பமான கர்ப்பகிரஹத்துக்குள் நுழைந்திருக்கிறவர்களாயும், விவேகமாகிற நேத்திரமில்லாதவர்களாயும், தேகாத்மபுத்தியாகிற பிணத்தன்மையுடையவர்களாயுமிருக்கிற ஜீவர்களை நாம் என்னமாய்க் கரையேற்ற முடியும்?

137 - வது தரங்கம்.

அவிசாரமே பந்தம் :—

அவிசாரந்தான் பந்தஹேது. [எ - தி] எஜமானன் கணக்குப்பாராம லிருப்பதே நஷ்டத்திற்கு ஹேதுவானதுபோலவறிக. [இ - து] ஜகத்து அவி சாரத்திலிருந்து விசாரத்திற் காணாமற்போகும். [எ - தி] சுயம்பாகங்கொடுக் கிற சத்திரத்தில் ஒருவன்போய் நாங்கள் பத்துப்பேர்களென்று சொல்லிச் சதாவர்த்தி வாங்கி வெகுகாலமாய் வரும்போது ஒருக்கால் நீங்கள் பத்துப் பேர்களும் எங்கேயென்று கேட்கும்போது ஒப்பிக்கமுடியாமல் ஓடிப்போவது போலவறிக. [இ - து] தேகமே தன்னைவிட்டுப் பிரிகிறதாயிருக்கும்போது அதைச்சேர்ந்த புத்திர மித்ராதிகளுக்கும் இவனுக்கும் சம்பந்தமில்லை. [எ-தி] தோட்டமே பாத்தியமில்லையென்று தீர்ப்பானபின் அதைச்சார்ந்த தென்னம் பிள்ளைமுதலானவையும் இவனுக்குச் சம்பந்தமில்லையென்பதுபோலவறிக. [இ — து] தத்வங்களைப் பிரித்துப்பார்த்தவனுக்குச் சுகமும் அப்படிப்பாராத வனுக்குத் துக்கமும் வரும். [எ - தி] ரத்னம் கல்லுகளைப் பிரித்தறிந்தவனுக் குச் சுகமும் அப்படியறியாதவனுக்குத் துக்கமும் வருவதுபோலும், கல்லு செத்தைகளைத்தள்ளி அன்னத்தைப் புஜித்தவனுக்குச் சுகமும் அறைத்த அன்னத்தைப் புஜித்தவனுக்குத் துக்கமும் வருவதுபோலும், குருவினிடத் தில் சுதர்க்கஞ்செய்தவனுக்குச் சுகமும் குதர்க்கஞ்செய்தவனுக்குத் துக்கமும் வருவதுபோலுமறிக. [இ - து] சுருதிக்குத் துவிதார்த்தம் செய்கிறவனிடத் தில் துக்கமும் அத்விதார்த்தம் செய்கிறவனிடத்தில் சுகமுமுண்டாகும். [எ-தி] தாய்க்குக் குடும்பத்தைப் பேதமாய் நினைக்கிறவனிடத்தில் துக்கமும் அபேத மாய் நினைக்கிறவனிடத்திற் சுகமும் வருவதுபோலவறிக. ஐயா, அவிசாரத்தின லேயே சகலவிதமான அனர்த்தமும் வருகிறதென்றும் விசாரத்தினலேயே சகலவிதமான சுகமும் கிடைக்குமென்றும் சொன்னீர்களே அதைத்திருஷ் டாந்தமூலமாய் அறிவிக்கவேண்டுமென்று கேட்பாயாகில், ஒரு அரசனுடைய படுக்கைக்குப் புஷ்பம்விரிக்கிற பண்டாரம் அந்தப்படுக்கையில் ஒருநாள் சற்றே படுத்துப்பார்க்கவேண்டுமென்று வெகுநாளாய் நினைத்துவரும்போது ஒருராத் திரி அவ்வரசன் பட்டணப்பிரவேசம் போவதைக்கண்டு அந்தப்பண்டாரம் வழக்கப்படி காம்பாய்ந்தபுஷ்பங்களை மெத்தையில்விரித்து அதன்பேரில் ராஜா வினுடைய போர்வையையும் போத்திக்கொண்டு படுத்தமாத்திரத்தில் நித்திரை பண்ணிக்கொண்டிருக்கும்போது, ராஜஸ்திரீ வந்து வெற்றிலைமுதலானவற்றை மடித்துவைத்துக்கொண்டு ஜாடைபண்ணினதில் எழுந்திராததைப்பற்றி அவ னுங்கூடவே படுத்து நித்திரைபண்ணும்போது அவ்வரசன் மந்திரியுடன்வந்து படுத்திருக்கிற இருவர்களையும் வெட்டுவதற்காக எத்தனிக்கும்போது, மந்திரி ராஜாவின்கையைப்பிடித்து அறைக்குவெளியிற் கூட்டிவந்து விசாரித்து வெட்ட வேண்டுமென்று சொல்லி அவ்வரசனை மறைத்துவைத்து வேலைக்காரியைக்

கூப்பிட்டு ராஜஸ்திரீயைமட்டும் எழுப்பிக்கொண்டுபோகச்சொன்னபடி போன பின் ராஜாவும் மந்திரியும் வந்து பண்டாரத்தையெழுப்பி உள்ளதைச் சொல்ல வேண்டுமென்று கண்டிக்கும்போது, அவன் உள்ளதைச்சொன்னதும் அவனை மறைத்துவைத்து ராஜஸ்திரீயைக்கூப்பிட்டு ராஜா நீ இந்தப்படுக்கையில் படுக்க ஏன்வரவில்லையென்று கேட்டவுடன் அவளும் நடந்ததைத் தெரிவித்தமாத்திரத்தில் அவ்வரசனுக்கு யாதொரு கல்மிஷமுமில்லாமற்போன கதைபோல நீயும் உன்னையாரென்று விசாரியாமையால் உனக்கு அநாதிகாலமாய் வந்திருக்கிற பந்தத்தைவிசாரத்தால் நிவர்த்திக்கக்கடவாய்.

## 138 - வது தரங்கம்.

ஞான அஞ்ஞானத்தின் தன்மை:—

சரீரத்தில் நானென்றுவந்த தாதாத்மியத்திற்கு அத்தியாசமென்றும் அஞ்ஞானமென்றும், சொரூபத்தில் நானென்றுவந்த தாதாத்மியத்திற்கு அத்தியாசமில்லையென்றும் அது தத்வஞானமென்றும் சொல்லப்படும். [எ - தி] புருஷனிடத்திலும் பரபுருஷனிடத்திலும் சேருகிறதுசரியாளுலும் பதிவிரதையென்றும் அவிசாரியென்றும் சொல்லுவதுபோலும், மழைஜலம் நதியில் விழுந்தால் தீர்த்தமாயும் சாக்கடையில் விழுந்தால் அசிங்கத்தண்ணீராயும் போவதுபோல வறிக. [இ - து] பிரஹ்மத்தினிடத்திற் சகலசக்திகளுமிருக்கின்றனவென்றும் அந்தப்பிரஹ்மமே நாமென்றும் வேதமும் நீரும் சொல்லியிருப்பதாலும், அப்படியே நாம் பிரஹ்மமென்று நிச்சயமும் வந்திருப்பதால் இப்போது நமக்கு லட்சம்ரூபாய் வேண்டுமென்று நாம் நினைத்தால் அப்படி வரக்காணேமே யென்ருல், நீ அறியாமையாற் சங்கிக்கிருய். முன்னுனக்குச் சொப்பனதிருஷ்டாந்தத்தைக் காண்பித்தேனல்லவா? அது எப்படியென்ருல், சொப்பனவஸ்தையிலுள்ள சகலசக்திகளும் உன்சக்தியென்று சொன்னதற்கு, ஐயா, சொப்பனத்தில் நான் பணம்வேண்டுமென்று நினைத்ததில் பிச்சைகூட அகப்படாமல் திண்டாடினேனே அப்படியிருக்க எல்லாம் தன்சக்தியென்று எப்படிச்சொன்னீரென்று கேட்ட உனக்கு, அடே! நீ அப்போது விசுவனுகிய உன்னைமறந்து தைஜசனென்கிற ஜீவனுய்ப்போனதால் உனக்கு நினைத்தது கிட்டவில்லையென்றும், விழித்தபின் உன்னைத்தவிர வேருென்றுமில்லாமற்போனதால் உனக்கதில் ஆசையற்றதுபோல, இங்கேயும் நீ உன்னை விசுவனுயெண்ணியிருக்கிருயா? சித்தென்றெண்ணியிருக்கிருயா சொல்? நீ எப்போது பணத்தையிச்சித்தாயோ அப்போது விசுவனென்ற ஜீவனுய்ப்போய் நீ உன்னை மறந்துவிட்டதால் உனக்கிந்த இச்சைவந்திருக்கிறது. நீயும் பிரஹ்மத்தில் விழித்தால் இந்தஜகத்தெல்லாம் பொய்யாய்ப்போய்விட்டதால் உனக்கும் இரண்டற்ற பூரணபிரஹ்மமே தானென்று விளங்கும்போது இச்சை வராதென்றறிக. [இ - து] சரீராத்தியாசமுள்ளவரையிலும் சரீரத்திலுள்ள நாற்றம்தெரியாது, பிற்பாடுதான் அதி

னுள்ள அசுத்தம்தெரியும். [எ - தி] சுக்கிலமோசனம்வரை ஸ்திரீயினிடத்தி லுள்ள நாற்றம்தெரியாமல் பிற்பாடு உருவாகப்புண்டாவதுபோலும், அரும்பசி யில் அபக்குவமான அன்னாதிகளிலே தோஷம்தெரியாமல் பிற்பாடு தெரிவது போலும், மலம் சரீரத்திலிருந்து வேறானபிறகு நாற்றம் தோற்றுவதுபோலு மறிக. [இ - து] பிரஹ்மாப்பியாசம் பண்ணப்பண்ண தேகாதிகளிலே நானென் கிறபுத்தி மெள்ளக் கரைந்துபோமென்பதற்கும், பிரஹ்மாகமென்கிறபுத்தி எவ் விதத்தாலும் கரையாது. [எ - தி] மண்சுவர் மழையினால் மெள்ளமெள்ளக் கரைந்துபோகிறதுபோலும், கற்சுவர் அதிவிருஷ்டியாலுங் கரையாததுபோலு மறிக. [இ - து] புத்திக்கு அஞ்ஞானப்பிரமையால் துக்கமும் தன்னுடைய யதார்த்தஞானத்தாற் சுகமும் வரும். [எ - தி] சொப்பனத்தையும் ஜாக்கிரத் தையும்போலவறிக. [இ - து] சுழுப்திச்சுகத்திற்கும் சமாதிச்சுகத்திற்கும் அதிகபேதமில்லை. [எ - தி] அப்பைக்கும் தொப்பைக்குமிருக்கிற பேதம் போலும், இருபது விரலுக்கும் இருபத்தோராவது விரலுக்குமிருக்கிற பேதம் போலுமறிக. [இ - து] சகலமதங்களுடைய சித்தாந்தங்களும் அஞ்ஞானபூமி ஞானபூமி இரண்டுக்குள்தான் சேர்ந்திருக்கவேண்டும். [எ - தி] எந்த ஊரில் யார் பிள்ளைபெற்றாலும் ராப்பகல் இரண்டுக்குள்தான் பிறந்திருக்கிறதுபோலும், எந்தச்சரீரிகளும் தூக்கம் விழிப்பு இரண்டவஸ்தைகளில்தானிருக்கவேண்டுவது போலவறிக. [இ - து] ஜாக்ர சொப்பன சுழுப்தி துரியம் நாலவஸ்தைகளிலும் புருஷன் ஆத்மாவைத்தேடி அனுபவஞ்செய்கிற தாரதம்மியத்துக்கு யுக்தி:— கையிலிருக்கிற மோதிரத்தை மறந்து வெளியில் தேடுவதுபோலும், உள்ளே தேடுவதுபோலும், விளக்கணைத்து இருட்டில் ஒன்றுந்தெரியாமலிருப்பது போலும், வெளிச்சத்திற் கையிலிருக்கிற மோதிரத்தைக் கண்ணாற்கண்டு சந் தோஷிப்பவன்போலுமறிக. [இ - து] அஞ்ஞானம் கூனிபோல ஆத்மராம னுக்கும் பிரஹ்மபரதனுக்கும் மித்ரபேதம் செய்வதும், வசிஷ்டராகிய ஞான குரு ஆத்மராமனுக்கும் பிரஹ்மபரதனுக்கும் சக்கியம்பண்ணிவைத்ததுபோலு மறிக. [இ - து] அஞ்ஞானகாலத்தில் தத்வம்தெரியாமல் தட்டுக்கெடுவனென் பதற்கும் ஞானதசையில் தத்வம்தெரிந்து தட்டுக்கெடாமலிருப்பன். [எ - தி] இருட்டுவேளையில் நடப்பவனையும் பகலில் நடப்பவனையும்போலவறிக. [இ - து] தேகம் நானென்பது வடைமுதலானதைச் சாப்பிடுவதால் துக்கம்வருவது போலும், பிரஹ்மம் நானென்பது சித்தகுளிகை சாப்பிட்டுச் சுகிப்பது போலும்; ஜாக்ரத்திலும் சுழுப்தியிலும் துக்கம் சுகம் காணுவதுபோலுமறிக. [இ - து] ஞானத்தோடேகூடின யோகம் சாரம், ஞானமில்லாத யோகம் சார மில்லை. [எ - தி] திருமங்கிலியத்தோடேகூடின ஆபரணமும், லேபனத் தோடேகூடின சிசுனமும் சாரமாயிருப்பதுபோலும்; அவைகளில்லாதே போனால் சாரமில்லாததுபோலுமறிக. [இ - து] சித்தான தனக்கு அஞ்ஞான மும் அதிலிருந்து அவிவேகமும் அபிமானமும் ராகாதியும் கர்மமும் சரீரமும் விஷயமும் துக்கமும் இவைமுதலானவைகள் வருவதற்கும், ஞானத்தால் அஞ்

ஞானதிகள் அடைவாய்த்தீர்வதற்கும் யுக்தி:— சாஸ்திரிகள்புத்திரன் தன் குலத்தைமறந்து வருணசிரம விவேகமற்று விடசிரோமணியென்று அபிமானித்து, மற்றவிடர்களிடத்தில் ராகத்வேஷாதிகளையடைந்து, அடிதடிமுதலான கர்மத்தைப்பண்ணி, அதனால் விலங்கிற்கட்டுப்பட்டு அனந்த துக்கத்தையடைவதும், பிராஹ்மணனென்ற ஞானத்தால் அவைகள் தீர்வதுபோலும்; இன்னமொருவிதமாவது,—அஞ்ஞானத்திலிருந்து ஆவரணமும், அதிலிருந்து தாதாத்மியமும், அதிலிருந்து கர்மபரிணமமான விக்ஷேபமுமுண்டாச்சுதென்றும், கர்மோபாசனைகளால் இந்தச்சம்சாரமூலமான அஞ்ஞானதிகள்நசியாமல் விசாரஜன்னிய ஞானத்தால் மூலமும் தத்காரியங்களான ஆவரணத்தியாசங்களும் நசிக்குமென்றும், விக்ஷேபம் பிராரப்தாந்தத்தில் நசிக்குமென்றும் சொல்லியிருக்கிறதற்கு யுக்தி:—ஒரு விரையிலிருந்து மரமுண்டாய் வெகுகாலமாய் விருத்தியாயிருக்கும்போது அந்தமரத்தை வேரோடேவெட்டிக் கீழேதள்ளினபின் அடிவேரையும் நுனிக்கொப்புகளையும் வெட்டியெறிந்து நடுக்கட்டையைமட்டும் பலகைமுதலானதாய்ச் செய்து போகத்துக்கு உபயோகமென்று தெரிந்து எரிக்காமல் வைத்துக்கொள்வதுபோலும்; இன்னும் சுதிருஷ்டியென்கிற புருஷன் அஞ்ஞானஇரவில் தன்ஞாநரத்னமோதிரத்தை நழுவவிட்டமாத்திரத்தில் அஞ்ஞானஇருட்டானது ஆவரணரூபமாய் இவன்கண்ணை மறைத்து பிராந்திசித்தாபேதமான பஞ்சகோசங்களை நானென்றிருக்கிற தாதாத்மியத்துக்குத் திருஷ்டாந்தத்தில் புருஷனும் இருட்டும் அதிலுள்ளபதார்த்தமும் மற்றுமுள்ளதெல்லாம் ஒன்றாகத்தோற்றினபிற்பாடு விக்ஷேபதுக்கமாகிற தூணில் முட்டிக்கொள்வதாலுண்டாகிய புண்வேதனையால் துக்கப்பட்டுக்கொண்டிருக்கும்போது, இவன்பிராணதாதாவானகுருநாதன் வத்சகோவின்னியாயம்போல இவனைத் தேடிக்கொண்டுவந்து நழுவவிட்ட ஞானரத்னமோதிரத்தை யெடுத்து வந்து இவனுக்குக் கைக்குமெய்யாய்க் காண்பித்தபின் இருட்டுப்போய் மறைப்புப்போய் அத்தியாசத்தால் பிராந்திசித்தாபேதத்தை யடைந்திருந்ததும்போய் அதிலுண்டான பிராரப்தமாகிற புண்மட்டும் போகமாகிற ஔஷதத்தினல் கிரமத்தில் தீர்த்துக்கொள்ளுவதுபோலவே ஜீவன்முக்திதசை கர்மக்ஷயம்வரை யிருக்குமென்றறிக. [இ - து] வாக்கால் பிரஹ்மத்தைச் சொல்லுகிறவனுக்கும் நாம் யாரென்று விசாரணைபண்ணுகிறவனுக்கும் மனோராச்சியம் கூடும் கூடாமைக்குமயுக்தி:—வாடிக்கையாய் ரோட்டில் வண்டியைக்கட்டிவிட்டு வண்டிக்காரன் வண்டியில் தூங்கும்போது மாடு தானகவே முன்வண்டியைப் பார்த்துப் போவதுபோலும், நடக்கிறவனுக்குத் தூக்கம் கூடாததுபோலும்; சேவகனுக்கும் ஜட்ஜிக்கும் ஆலோசனை வேண்டாமை வேண்டுவதுபோலுமறிக. [இ - து] அஞ்ஞானமார்க்கத்திற்கும் ஞானமார்க்கத்திற்கும் இவ்வளவே பேதம்; அதாவது, அது ஆரம்பமுதல் முடிவுவரை கொல்லன் உலைக்குப் போவதுமுதல் முடிவுவரை துக்கமே காணப்படுவதுபோலத் துக்கமே காணப்படுகிறது, இது ஆரம்பமுதல் முடிவுவரை யுவதிக்கு நாயகனைப்பார்ப்பதுமுதல்

போகாந்தம்வரை சுகமாயிருப்பதுபோலக் குருவைத் தரிசித்ததுமுதல் ஆத்ம சாக்ஷாத்கார அனுபவம் வரும்வரை சுகமே மேன்மேலும் காணப்படுகிறது போலுமறிக. [இ - து] நாமரூபாத்மகமான திரிபதார்த்தத்தில் ராகத்வேஷம் வருமேயல்லாமல், நாமரூபரகிதமான அறிவே தானென்பதில் யாருக்கும் ராகத்வேஷம் வருவதற்கு இடமில்லை. [எ - தி] வீடுமுதலானவற்றை என்னதென்று சொல்வதால் ராகத்வேஷம் வருகிறதேயல்லாமல் என்சூரியனென்று சொல்வதால் யாருக்கும் ராகத்வேஷம் வாராததுபோலவென்றறிக; இன்னும் பிராஹ்மணாதி வருணங்களுடைய ஒருவீட்டுக்கொருவீடு பேதமாயும் ராகத்வேஷத்தைக் கொடுப்பதுபோலும், பிராஹ்மணன்முதற் சண்டாளன்வரையில் என்னூர் என்றுசொல்வதில் யாருக்கும் ராகத்வேஷமின்மைபோலவறிக. [இ - து] ஆத்மாவாகிய தான் நிர்த்தோஷனாயிருந்தும் தனக்குப் பந்தம்முதலான துக்கம்வருவதற்குக் காரணமேதோவெனில், ஒருவன் யோக்கியனாயிருந்தும் அயோக்கியர்களுடன் அறியாமையாற் சகவாசம்வைத்துக்கொண்டதால் அவர்கள் பொய்ப்பத்திரமெழுதி இவன்கையெழுத்துப்போலப் போட்டுக்கொண்டு இவனை நிர்ப்பந்தப்படுத்திக்கொண்டுவரும்போது அதைரியத்தால் நியாயஸ்தலத்திற்குப் போகாமல் அவர்களுடைய ஹிம்சையை ஒப்புக்கொண்டு வந்தான். அதன்பின் இவனுக்குத் தைரியமுண்டாய் எப்போது நியாயாதிபதியான ஜட்ஜியினிடத்தில் இவனுடைய நியாயத்தை விசாரணைமூலமாய் நிரூபிக்கிறானோ அப்போதே அவர்களே புரட்டுக்காரர்களென்றும் இவன் யோக்கியனென்றும் தீர்மானமாவதுபோல, இந்த ஆத்மாவும் அஞ்ஞானாதிகளுடன் அறியாமையாற் சகவாசஞ்செய்ததால் அவர்கள் இவரைக் கர்த்தாவென்று வைத்துக் கர்மங்களையுண்டுபண்ணியிருப்பதால் எப்போது குருநாதனுடைய சன்னதியில் விசாரணை இவன் செய்கிறானோ அப்போதே அந்தஅஞ்ஞானாதிகளே கர்த்தாக்கள், இவன் அகர்த்தாவென்று உறுதிபண்ணப்படுகிறானென்றறிக. [இ - து] தன்னைத் தெரியாதகாலத்தில்தான் தனக்குக் கருத்துருத்துவமுதலான சகலதுக்கங்களுந்தோன்றும், தன்னையறிந்தபிற்பாடு கருத்துருத்துவாதிதுக்கம் ஒன்றும் வாராது. [எ - தி] இருட்டுவேளையிற் பிள்ளையைக் கள்ளனென்று நினைத்து அடிதடிமுதலானதுக்கங்களுண்டாய் வெளிச்சமான பிற்பாடு பிள்ளையென்று தெரிந்தமாத்திரத்தில் மேலேசொன்ன சகலமும் விட்டுப்போனதுந்தவிர முந்தித்தோன்றின பிராந்தியும் அதில்தோன்றின செய்கையுங்கண்டு அதிசயப்படுகிறவன்போலவறிக. [இ - து] ஆத்மாவுக்குத் தன்அஞ்ஞானத்தால் பந்தமும் தன்ஞானத்தால் வீடும். [எ - தி] ராஜகுமாரன் தசமன்முதலானவர்களுடைய அனுபவமே சாக்ஷியென்றறிக. [இ - து] சமாதியிற் சித்தமிருப்பதற்கும் விஷயத்திலிருப்பதற்கும் யுக்தி:—ராஜாவோடே சிம்மாசனத்திலிருக்கிற ஸ்திரீயையும் கிருமிகளோடேகூடின முடவனைத் தூக்கித்திரிகிறவளையும்போலவறிக. [இ - து] சொரூபப்பிரக்ஞையை மறக்கமறக்க அகங்காரம் விருத்தியாகும். சொரூபப்பிரக்ஞை வளரவளர

அகங்காரம் நசிக்குமென்பதற்கு யுக்தி:—கிருஷ்ணபக்ஷம் சுக்குலபக்ஷம்போல வறிக. [இ - து] நான் பிரஹ்மமென்று விளங்குவது முன்னமேயிருந்தால் ஞானத்தை வருத்தப்பட்டுக் குருமுகமாய் பெறத்தேவையில்லை, அல்லது பிரஹ்மத்தில் அறியாமையானது அனாதியாய்க்கூடவே உண்டாயிருக்குமானல் அது ஞானத்தால் எப்படிக்கெடும்? அப்படிக்கெட்டாலும் மறுபடி அஞ்ஞானம் வந்து பிரஹ்மத்தை விளங்கவொட்டாமல் மறைக்குமேயென்றால், அப்படி அஞ்ஞானம் திரும்பவராது, அதற்கு யுக்தி:— ரத்னமுண்டாகும்போது துருவோடேகூடி உண்டாயிருப்பதால் கன்னனுடைய சாணையினால் துருப்போய் மெருகினால் பிரகாசமாய் விளங்குகிற ரத்னத்தில் மறுபடி துருவாராமல் விளங்கிக்கொண்டிருப்பதுபோலவறிக. ஐயா, அஞ்ஞானம் அவிசாரத்தை உபஜீவித்துக்கொண்டிருக்கிறதென்றும் அந்தஅஞ்ஞானம் ஞானத்தாற் கெடுமென்றும் அந்தஞானம் விசாரணையால் வருமென்றும் சொன்னீர்களே, இந்த அஞ்ஞானம் அநிர்வசனீயமென்பதற்கும் அது ஞானத்தாற் கெட்டுப்போனாலும் திரும்ப அஞ்ஞானமுண்டாகமாட்டாதென்பதற்கும் சுருதி யுக்தி அனுபவமென்னவென்று கேட்பாயாகில். அதற்குத்தரம் சொல்லுகிறேன் கேள்:—அஞ்ஞானமானது சத்தென்றுஞ்சொல்லக்கூடாது பிரஹ்மக்ஞானத்தாற் கெட்டுப்போவதால்; அதை அசத்தென்றுஞ்சொல்லக்கூடாது— மலடிமகன் முயற்கொம்பு ஆகாசபுஷ்பமுதலானவைகள்போலத் தோற்றுமலிராமல் நான் என்னை யறியேன், நான் அஞ்ஞானியென்று சகலமான பேர்களாலும் அனுபவிக்கப்படுகிறபடியால்; சதசத்தென்றுஞ்சொல்லக்கூடாது ஏனென்றால், இருட்டும் வெளிச்சமும் சேர்ந்திராததுபோலும், மலடிபிள்ளையும் நிஜப்பிள்ளையும் சேர்ந்திராததுபோலும், ஆகாசபுஷ்பமும் பூமியில் செடியிலுண்டாகிறபுஷ்பமும் சேர்ந்து மாலையாக ஆகாததுபோலும், நபுஞ்சகனும் ஸ்திரீயும் சேர்ந்து பிள்ளையுண்டாகாததுபோலும், சத்தும் அசத்தும் விரோதியானதால் சேர்ந்திராது. இந்த ஸ்தூலஆகாசத்திற்கே வடிவமில்லாதபோது சூட்சும ஆகாசத்திற்கும் காரணமான அஞ்ஞானத்திற்கு வடிவமில்லாமையால் சாவயவமென்று சொல்லக்கூடாது. நாமரூபாத்மகமான பிரபஞ்சவடிவாய்த் தோற்றுகையால் இதை நிரவயவமென்றுஞ் சொல்லக்கூடாது. இரண்டுக்கும் விரோதமாகையால் சாவயவநிரவயவ மென்றுஞ் சொல்லக்கூடாது. இந்திரஜாலம்செய்கிற புருஷனை விட்டு இந்திரஜாலசக்தி வேறாயிராததுபோலும், நித்திராசக்தி புருஷனைவிட்டு வேறாயிராததுபோலும், இந்த அஞ்ஞானசக்தியும் ஆத்மாவைவிட்டு வேறாயிராததால் பின்னமென்றுஞ்சொல்லக்கூடாது. இந்தச்சக்தி ஒன்றில்லாவிட்டால் ஆத்மாவுக்கு சிருஷ்டியாதி தொழில்கள் உண்டாகாவாகையாலும், இது பொய்யாய் விசாரத்தாற்போவதுபோல ஆத்மாவும் பொய்யாகுமென்று சொல்லும்படிவருவதால் அபின்னமென்றும் சொல்லக்கூடாது. ஆகாசமும் கடபடமும் ஒன்றாய்ப்போகாததுபோலப் பின்னாபின்னமென்றும் சொல்லக்கூடாது. இப்படி ஒன்பதுவிதத்தாலும் நிச்சயம்பண்ணக்கூடாத சக்தி எதுவோ

அதுவே அஞ்ஞானமென்று சுருதி சொல்லுகிறது. யுக்தியாவது:—புருஷனிடத்திலிருக்கிற நித்திராசக்தியானது சொப்பனப்பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பதால் அசத்தென்றும் சொல்லக்கூடாதோ, விழித்தமாத்திரத்தில் அச்சக்தி காணுமற்போகையால் சத்தென்றுமெப்படிச் சொல்லக்கூடாதோ, இரண்டுக்கும் விரோதமாகையால் சதசத்தென்று மெப்படிச் சொல்லக்கூடாதோ அப்படிப்போலவறிக. இப்போது நம்மிடத்தில் தோன்றுகிற சங்கற்பசக்தியானது ராகத்துவேஷ சுகதுக்காதி விகாரமாய்த் தோற்றுவதால் அசத்தென்றுஞ் சொல்லக்கூடவில்லையோ, உண்டாகிற நினைப்பு உத்தரக்ஷணத்தில் போனவிடந் தெரியாமற் போகையால் சத்தென்றும் சொல்லக்கூடவில்லையோ, உபயவிருத்தமாகையால் சதசத்தென்றும் சொல்லக்கூடாமலிருப்பதே அனுபவமாம். இந்த அஞ்ஞானம் ஞானத்தாற் கெட்டுப்போனபின் ஒருக்காலுமுண்டாகமாட்டாது. [எ - தி] வறுத்தவிரை முளையாததுபோலும், குத்தின அரிசி திரும்ப நெல்லாக முளையாததுபோலும், பகிஷ்டையோய்ப் பத்துவருஷமானபின் திரும்பத்தூரம் வாராததுபோலும், செத்துப்போன பிணம் திரும்ப எழுந்திராததுபோலும், தத்வஞானத்தால் எரிக்கப்பட்ட அஞ்ஞானம் திரும்ப வாராதென்றறிக.

## 139 - வது. தரங்கம்.

ஞானத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் விரோதமேதவிர ஆத்மாவிற்கும் அஞ்ஞானத்திற்கும் விரோதமில்லை:—

ஆத்மாவிற்கும் அஞ்ஞானத்திற்கும் விரோதமில்லை. ஞானத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் விரோதம. [எ - தி] தேகத்திற்கும் வியாதிக்கும் விரோதமில்லை, மருந்துக்கும் வியாதிக்கும் விரோதம்போலும்; கட்டைக்கும் கரையானுக்கும் விரோதமில்லை, அதைக்கடைந்தெடுத்த தீக்கும் கரையானுக்கும் விரோதம்போலும்; கண்ணுக்குமிருட்டுக்கும் விரோதமில்லை, வெளிச்சத்திற்குமிருட்டுக்கும் விரோதம்போலும், ஆகாசத்திற்கும் மேகத்திற்கும் விரோதமில்லை, சண்டமாருதத்திற்கும் மேகத்திற்கும் விரோதம்போலுமறிக. ஐயா, அஞ்ஞானத்திற்கும் ஆத்மாவிற்கும் விரோதமில்லையென்றும் ஆத்மஞானத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் விரோதமென்றும் சொன்னீர்களே, அது எப்படிச் சொல்லலாம்? பரமாத்மாவோவென்றால் சுயம்பிரகாசவஸ்துவாயிற்றே அஞ்ஞானமோவென்றால் மகத்தான இருட்டாயிற்றே அப்படியிருக்கும்போது, இந்த ஆத்மாவில் அஞ்ஞானம் எப்படிச் சேர்ந்திருக்கக்கூடும்? அப்படிச் சேரக்கூடாதிருக்கும்போது அஞ்ஞானகாரியமான ஆவரணமெப்படிவரக்கூடும்? அப்படி வராதிருக்கும்பக்ஷத்தில் விக்ஷேபசக்தியுண்டாய், அதிலிருந்து சூக்ஷ்ம பூதங்களும், அதிலிருந்து பதினேழு அவயவங்களான சூக்ஷ்மசரீர முதலான பிரஹ்மாண்ட முதலாயுள்ள ஸ்தூலப்பிரபஞ்சத்தையும், பௌதிகமான சரீராதிகளையும் தாபத்திரய முதலான சம்சாரதுன்பங்களையுமெப்படி உண்டு

பண்ணக்கூடும்? இப்படிச் சர்வகாரணமான அஞ்ஞானத்தை ஆத்மா நிவர்த்தி பண்ணமுடியாதிருக்கும்போது ஆத்மாவினிடத்திலுண்டான தத்வஞானம் இந்த அஞ்ஞானத்தை எவ்விதமாய் நிவர்த்திக்கலாமென்று கேட்பாயாகில், அதற்குத்தரம் சொல்லுகிறேன், கேள்:—நீ விவகாரத்தையும் பரமார்த்தத்தையும் தெரிந்துகொள்ளாமல் இப்படிச் சங்கித்தாய்! பரமார்த்தத்தில் சுயம்பிரகாசமான ஆத்மாவினிடத்தில் அஞ்ஞானமாவது அதன்காரியமான ஆவரண விக்ஷேபாதி சம்சாரபந்தமாவது, அவைகளை நிவர்த்திக்கிற தத்வஞானமாவது யாதொன்றுமில்லவேயில்லை. விவகாரத்திலேயோவென்றால், அஞ்ஞானமுதலான சகலமும் அனுபவத்தில் ஆத்மாவினிடத்திற் காணப்படுவதால் ஆத்மாவுக்கும் அஞ்ஞானாதிகளுக்கும் விரோதமில்லை. ஆத்மானாத்ம விசாரத்தாலுண்டாகிற தத்வஞானத்தால் அஞ்ஞானமும் அதன்காரியமான ஆவரணங்களும் தாதாத்மிய அத்தியாசங்களும் அனாத்மவாசனைகளும் கருத்துருத்துவத்தாலுண்டுபண்ணப்பட்டிருக்கிற அனந்தகோடிவிதமான சஞ்சிதகர்மபந்தங்களும் நிவர்த்தியாகுமென்று சுருதி ஸ்மிருதி இதிகாச புராணங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு யுக்தியென்னவென்றால், சூரியனால் எரிக்கக்கூடாத இவ்வுலகத்திலுள்ள வஸ்துக்களை சூரியகாந்தச்சிலையில் சம்பந்தப்பட்டிருக்கிற அந்தச்சூரியகிரணமே அக்கினியாகிச் சகலத்தையுமெரிப்பதுபோலும், அக்கினியை ஆசிரயித்துண்டான புகையானது ஊதுகுழலால் ஜ்வலிதம்பண்ணப்பட்டு அப்புகை நிவர்த்தியாவதுபோலும், சூரியனை ஆசிரயித்துண்டான மேகங்கள் அச்சூரியனால் நிவர்த்திபண்ணமுடியாமற் காற்றினால் நிவர்த்திபண்ணப்படுவதுபோலும், காலில் தைத்தமுள்ளை முள்ளுவாங்கியால் எடுத்தெறிவதுபோலும், தன் சரீரத்தில் முளைத்திருக்கிற ரோமங்களைக் கத்தியால் சிரைக்கவேண்டியிருப்பதுபோலும், தன்வஸ்திரத்திலேறியிருக்கிற அழுக்கை வெள்ளாவியால் மாற்றவேண்டியிருப்பதுபோலும், செம்பிலுண்டான களிம்பைப் புளியால் தேய்த்துப்போக்கடிக்க வேண்டியிருப்பதுபோலும், தன்முகத்திலிருக்கிற கரியைக் கண்ணாடியால் பார்த்துத் தொடைக்கவேண்டியிருப்பதுபோலும், தன் கண்டத்திலிருக்கிற ஆபரணத்தை மறந்தவன் பிறர் சொல்லித்தெரிந்துகொள்ளுவதுபோலும், இந்த ஆத்மாவினிடத்திற் கற்பிதமாய் வந்திருக்கிற அஞ்ஞானாதிகளைச் சற்குருகிருபையாற் பெறப்பட்ட ஞானத்தினாலேயேகெடுத்து நித்தியானந்தமாய் வாழக்கடவாய்.

## 140 - வது தரங்கம்.

பஞ்சகோச அத்தியாசங்களும் அது நிவர்த்தியாகுந்தன்மையும்:—

அன்னமயகோசத்தை நானென்பது,— பொம்மையை நானென்பது போல மித்தியாத்தியாசமாம், அது மலம்போலவென்று விவேகத்தால் தள்ளத்தக்கது. கர்மேந்திரியத்துடன்கூடிய பிராணமயனை நானென்பது,— பிணம்

தூக்குகிறதுமுதலான தொழில்களைச்செய்கிற பறையன் சக்கிலியன்போலும், தத்துப்பிள்ளையை யெடுத்துத் துக்கப்படுகிறவள்போலும், இதராத்தியாச மென்றறிந்து சர்வவிதத்திலும் நிகிருஷ்டர்களான நீசர்களைப்போலப் பிராண மயகோச அத்தியாசத்தைத் தள்ளத்தக்கது. மனோமயகோசத்தை நானென் பது,— ஓடுகிற ஜலப்பிரதிபிம்பம்போல இதரேதராத்தியாசமென்று அறிந்து குடிகாரன்போலவென்று தள்ளத்தக்கது. விஞ்ஞானமயகோசத்தை நானென் பது,— வந்தபேர்களுடைய வஸ்திரத்தையெல்லாம் குறிபார்த்தெடுத்துக் கொடுக்கிற வண்ணான்போலும், தப்தாயப்பிண்டம்போலும் அன்னியோன்னி யாத்தியாசமென்று அறிந்து நான் கர்த்தாவென்கிற புத்தியை நான் சாக்ஷி யென்கிற ஞானத்தால் தள்ளத்தக்கது. ஆனந்தமயகோசத்தை நானென் பது,—திருடனை நானென்பதுபோலும், கண்ணை மறைக்கிற இருட்டுப்போலும் சத்தியாத்தியாசமென்று அறிந்து சொரூபத்தில் விழிப்பாகிற தீபத்தால் தள் ளத்தக்கது. ஆகையால் தத்வஞானியாகிற பிராஹ்மணன் எப்போது எப் போது இந்த அத்தியாசங்கள் சம்பந்தித்தனவோ அப்போதெல்லாம் இதுஇது இன்னஇன்ன அத்தியாசமென்று சொன்ன திருஷ்டாந்தப்பிரகாரம் அறிந்து தள்ளினால்தான் பார்ப்பானாகுவன், இல்லாவிடிற் கீழ்ஜாதியான பறையனாய்ப் போய்விடுவன். இதின்கருத்து,— நானென்கிற ஆத்மா எதுவரை பஞ்சகோ சாத்தியாசத்தை விடவில்லையோ அதுவரை தேவ மனுஷ்ய திரியக்காதி ஜென் மப்பிராப்தியும் போகாது, பிரஹ்மசாக்ஷாத்காரரூபமான முக்தியும் வராது சித்தம். ஆனதினால் எதுவரை அவஸ்தாத்திரயங்களை நானென்றும் சத்திய மென்றும் பாவித்திருக்கிறானோ அதுவரை மேலேசொன்ன பஞ்சகோசாத்தி யாசமும் காணப்படும். சாங்கியயோகங்களாகிற துரியாவஸ்தையிலிருந்து கொண்டு கோசாத்தியாசங்களைத்தள்ளி அவஸ்தாத்திரய சாக்ஷியாக எப் போது தன்னையறிகிறானோ அப்போது ஆனந்தமயனும் விஞ்ஞானமயனும் திரி யைப்பற்றி விளங்குகிற தீபம்போல விளங்கிக்கொண்டிருந்ததால் நானென்ற அகம் விருத்தியாகிற திரியில்லாமற்போனதால் அத்தியந்தம் அசத்தாய்ப் போய்விடுகிறார்கள். மனோமயன் கானல்ஜலம்போலச் சத்தசத்தென்று நிர்ணய மில்லாமற் பொய்யாய்த்தோற்றுவதால் அநிர்வசனீய அசத்தாய்ப்போகிறான். பிராணமயன் காற்றாடிபோல கர்மத்தால் அசைந்துகொண்டிருப்பதால் வில க்ஷணசத்தாய்த் தோன்றுகிறான். அன்னமயன் கடசராவாதிகள்போல ஜட மாய்த் தொழிலுக்குவருவதால் வியாவகாரிகாசத்துமாத்திரமாய்த் தோற்று கிறானென்றறிவார்கள். ஐயா, மூலப்பிரகிருதியால் உண்டுபண்ணப்பட்டிருக்கிற ஜீவேசுவர பூதபௌதிகங்களான ஜகத்துக்களுக்குள்ளே இந்தப் பஞ்சகோசங்கள் மிகவும் சொல்பமாயும், க்ஷணத்துக்குள் உண்டாய்உண்டாய் க்ஷணத்துக்குள் நசித்துநசித்துப் போவதாயுமிருப்பதாலும், மற்ற ஜீவேசுவரஜகத்துக்கள் விஸ் தாரமாயும் வெகுகாலமிருப்பதாயும், வெகுவிதமான சித்திர விசித்திர சாமர்த் தியங்களோடேகூடியிருக்கிறவைகளை நேதிக்கும்படி விசேஷமாய்ச்சொல்லாமல்

இப்பஞ்சகோசங்களைமட்டும் நேதிக்கும்படி சொன்னகாரணத்தை அறிவிக்க வேண்டுமென்று கேட்பாயாகில், அதற்கு நான் சமாதானம்சொல்லுகிறேன், கேள் :— சுருதியானது முதலில் பிரஹ்மத்தை யறிந்தவன் மோக்ஷத்தை யடைவனென்றும், அந்தப்பிரஹ்மத்துக்குச் சச்சிதானந்தலக்ஷணம் சுபாவ மென்றும், அந்தப்பிரஹ்மத்தை யாதொரு புருஷன் பஞ்சகோசமாகிற குகை யில் புத்திக்குச்சாக்ஷியாக அறிகிறுனே அவனே சகலகாமாப்தியுமடைந்து சகலதுக்கங்களிலிருந்தும் விடுபட்டவனுயும் கிருதகிருத்தியனுயும் அடைய வேண்டியதெல்லாம் அடைந்தவனுயுமிருக்கிற ஜீவன்முக்தனுக ஆகிறுனென்று சொல்லியிருப்பதாலும், ஒருவனுக்குத் தன்தகப்பன் தன்வீட்டிற்குள் ஒரிடத் தில் அஷ்டஐஸ்வர்யத்தையுங் கொடுக்கும்படியான நவரத்னங்களையும் ஒரு பாத்திரத்தில் வைத்து மூடிப்புதைத்துவைத்திருந்ததை அறியாமல் அந்தப் புத்திரனுனவன் இந்தப்பதினுலு உலகங்களுடைய பிரதேசங்களிலும் போய்ப் போய்த் தோண்டித்தோண்டித் தேடிப்பார்த்தாலுங்கிட்டாமல் அந்த உளவு தெரிந்தவனைப் போய்ச்சரணுகதம்பண்ணி அவன்மூலமாய் அந்தச்சொல்ப மான பிரதேசத்தை காண்பிக்கப்பட்டபிரகாரம் இவனும் மண்வெட்டியால் அந்த இடத்தைவெட்டி அதிலிருக்கிற சரளைகளையும் வெட்டித்தள்ளி அதற்குக் கீழிருக்கிற பெரிய பாராங்கல்லையும் குந்தாலத்தால் பிளந்தெறிந்து அதற்குக் கீழிருக்கிற பாத்திரத்தையெடுத்து மேலேமூடியிருக்கிற மூடியையும் திறந்து அதற்குள்ளிருக்கிற நவரத்னங்களையும் எடுத்துவைத்துக்கொண்டு அதனுலுண் டாகிற சகலசம்பத்துக்களையும் அனுபவித்து, முன் தரித்திரத்தால் கஷ்டப் பட்ட துன்பங்களெல்லாம் போக்கடித்துக்கொள்வதுந்தவிர, அந்த அக்ஷய நிதியால் தரித்திரர்களாய்வருகிற மற்ற ஏழைஜனங்களுடைய மிடிகளையுந் தீர்த்துவைத்துக்கொண்டு மகாப்பிரபுவாய் நித்தியவாழ்வைப் பெற்றிருப்பதே யுக்தி. இப்போது முமுக்ஷுவானவனும் இந்த மோக்ஷசம்பத்தை அடைய வேண்டி அநேகவிதமான கர்மம் பக்தி யோகங்களை வெகுபிரயாசைப்பட்டுச் செய்து அவைகளுக்குப்பலமான சந்திரலோகம் சூரியலோகம் கைலாசம் வைகுண்டம் பிரஹ்மலோக முதலான இடங்களிற்போய், அந்தஅந்த உலகங்க ளுக்கு அதிபதியான தேவர்களுடைய சாலோக சாமீப்பிய சாரூப்பியமுதலான பதவிகளை யடைந்ததிலும் மோக்ஷசம்பத்துக் கிட்டாமற்போனதால், அவை களிலெல்லாம் மலமூத்திரங்கள் நாய்க்கின பாயாசம்போல அருவருப்புண் டாய், பிரஹ்மத்தை யறிகிறநிமித்தமாக சற்குருவைத்தேடிச் சரணுகதம்பண்ணி அவருடைய கிருபையால் உபதேசிக்கப்படுகிற பஞ்சகோச விவேகமார்க்கமாய் உபதேசித்தபிரகாரம், இவனும் அன்னமயகோசமானது பொம்மைபோல ஸ்தூலபஞ்சபூதவிகாரமானதால் அதை நானன்றென்றுதள்ளி, பிராணமய கோசத்தைத் துருத்திக்காற்றுப்போல ரஜோகுணத்திலுண்டானதால் தானல்ல வென்றுதள்ளி, மனேமயகோசத்தை பைத்தியகாரன்சொல் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் உளறுவதுபோல சங்கற்பிப்பதால் அதையும் நானல்ல

வென்று தள்ளி, அதன்பின் விஞ்ஞானமயனையும் மூர்க்கனானவன் தன்மூக்குக்குநேரே வழியென்று நிச்சயிப்பதுபோல யிருக்கிற அதையும் நானல்லவென்று தள்ளி, ஆனந்தமயனையும் ஜயில்கொட்டடியில் அடைபட்டவனைப்போல அஞ்ஞானாந்தகாரத்தால் மறைபட்டிருப்பதால் அவனையும் நானல்லவென்று தள்ளி, சச்சிதானந்த பிரஹ்மமே நானென்றறிந்து ஜீவன்முக்தனாய் விளங்குகிற அனுபவத்தையுங்கண்டு நீயுமப்படியே அறிந்து கரையேறக் கடவதென்றறிக.

## 141 - வது தரங்கம்.

கேவலாவஸ்தையில் அகமென்பதனுடைய சாமான்ய விசேஷங்கள் தோன்றாமலும், சகலாவஸ்தையில் சாமான்யந்தோன்றி விசேஷம் விபரீதமாய்த்தோற்றும், ஞானாவஸ்தையில் சாமான்ய விசேஷங்கள் நன்றாய் விளங்கும் :—

ஜாக்ரசொப்பனங்களில் மந்தாந்தகாரத்தில் இதுவென்ற பழுதை பாம்பாய்த்தோற்றுவதுபோல அறியாமையோடேகூடிய, ஜாக்ராதி சகலாவஸ்தைகளில் நானென்ற பிரஹ்மம் கர்த்தாவாகிய ஜீவனாய்த்தோன்றும். கேவலாவஸ்தையான சுழுப்தியில் நல்லஇருட்டில் இதுவென்ற பழுதையும் பாம்பும் தோற்றாததுபோல நானென்ற பிரஹ்மமும் கர்த்தாவாகிய ஜீவனும் தோற்றாது. ஞானாவஸ்தையில் பகலில் இதுவென்றும் பழுதையென்றும் சொல்லப்படுகிற சாமான்ய விசேஷம் ஒன்றாய்ச்சேர்ந்து பிரகாசிப்பதுபோல நானென்ற சாமான்யமும் பிரஹ்மமென்ற விசேஷமும் ஒன்றாய்ப்பிரகாசிக்குமேதவிர கருத்திருத்துவாதியோடேகூடிக்கொண்டிருக்கிற ஜீவன் பிரகாசியானென்றறிக. ஐயா, அகமென்பது சாமான்ய விசேஷங்களான இரண்டு ஹம்சங்களோடேகூடியிருக்கிறதென்றும், அதில் ஜாக்கிரசொப்பனங்களில் சாமான்யந்தோன்றுமென்றும் விசேஷம் விபரீதமாய்த்தோன்றுமென்றும், சுழுப்தியில் சாமான்ய விசேஷங்கள் இரண்டும் தோற்றாவென்றும், ஞானாவஸ்தையில் சாமான்ய விசேஷங்கள் இரண்டும் அபேதமாய் உள்ளதுஉள்ளபடி தோற்றுமென்றும் சொன்னீர்களே, ஆத்மாவை அஞ்ஞானம் மறைத்தால் அவர் தோற்றக்கூடாதே மறைக்கவில்லையென்றால் யாருக்கும் பவம் வரக்கூடாதே, ஆகையால் அவைகளுடைய சுபாவத்தையும் அனுபவத்தையுந்தெரியும்படி சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குச் சமாதானம் சொல்லுகிறேன் கேள்:— அகமென்பது சிருஷ்டிமுதல் பிரளயம்வரையில் மாயை அவித்தையால் கற்பிக்கப்பட்ட ஈசுவரனிடத்திலும் எறும்புமுதல் இந்திரன்வரையிலுள்ள தேவர்களிடத்திலும் 'நான் நான்' என்று தோன்றுவதால் அகம்பதார்த்தத்தினுடைய சாமான்ய அம்சத்தின் பிரதீதியானது யாதொரு புருஷப்பிரயத்தனமுமன்றியில் காணப்படுவதால், இந்த அஞ்ஞானமானது ஆத்மாவை மறைக்கவில்லையென்று சொன்னதற்கு அர்த்தமென்றறிக. இனி ஆத்மாவை அஞ்ஞானம் மறைத்ததென்று சொல்லுவதற்கு அர்த்தமேதென்றால்,— அகம்பதத்தினுடைய எதார்த்தமான

சச்சிதானந்தாதி விசேஷலக்ஷணம் மறைபட்டு நான் தேவன், நான் மனுஷன், நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் ஸ்திரீ, நான் புருஷன், நான் பசு, நான் பக்ஷி, நான் மிருகம், நான் பூச்சி புழுவென்றும், நான் பிறந்தேன், நான் பருத்தேன், இளைத்தேன், நான் சாகப்போகிறேன்; நான் கேட்டேன், நான் தொட்டேன், நான் பார்த்தேன், தின்றேன், இந்த சுகந்ததுர்க்கந்தத்தைக் கிரகித்தேன், பேசினேன், செய்தேன், போனேன், மலமூத்திரவிசர்ச்சனம்பண்ணினேன், போகித்தேன், பசித்தேன், தாகித்தேன்; ஆலோசனைபண்ணுகிறேன், நிச்சயம்பண்ணியிருக்கிறேன், நானொன்றுமறியாத மூடனென்று இதுமுதலாய் அனுர்தஜடதுக்காதி ரூபங்களான கற்பித விசேஷப்பிரதீதி தோற்றுவதாலும், ஆத்மாவை அஞ்ஞானம் மறைத்திருக்கிறது. சுழுப்தி, தூஷ்ணீம்பூதாவஸ்தை, மூர்ச்சை, மரணம், பிரளயமுதலான அவஸ்தைகளில் அகமென்கிற சாமான்ய விசேஷப்பிரதீதி இரண்டுகளுந்தோற்றாமலிருந்து அவ்வவ்வவஸ்தைகளிலிருந்து எழுந்திருந்த பிற்பாடு இதுவரையில் நான் ஒன்றுமறியாமலும் ஒன்றையும் நினையாமலும் இருந்தேனென்ற அனுபவத்தால் அகமென்ற சாமான்ய விசேஷாம்சங்கள் இரண்டுந்தோற்றாமலிருக்கிற அனுபவத்தையும், அதன்பின் தத்துவவிசாரத்தாலுண்டான ஞானத்தால் விசேஷாம்சத்தை மறைத்திருந்த அஞ்ஞானம் போய், நானே சரீரத்திரய விலக்ஷணன் அவஸ்தாத்திரயசாக்ஷி நானே சச்சிதானந்தப் பிரஹ்மமென்று அனுபவமும் சுபாவமும் அபேதமாய் விளங்கும். [எ - தி] தசமனுக்கும், வேடர்களோடேசேர்ந்த ராஜகுமாரனுக்கும், பறையனோடே சேர்ந்த பிராஹ்மணனுக்கும் அஞ்ஞானத்தால் நானென்கிற சாமான்யம் மறைபடாமல் விசேஷாம்சமான தசமன், ராஜகுமாரன், பிராமணனென்பது மறைபட்டுத் தசமன் செத்தான், நான் வேடன், நான் பறையனென்று விபரீதந் தோன்றி பின்பு ஞானத்தால் நானே தசமன், நான் ராஜா, நான் பிராமணனென்று தோன்றினதுபோல, நீயும் நானே சச்சிதானந்த பிரஹ்மமென்று திடமாயறிந்து ஜீவன்முக்தனாய் சகலபந்தங்களையும் சகலவாசனைகளையும் சகல கர்மங்களையும் சகலஅத்தியாசங்களையும் சகலபேதபுத்திகளையும் சகலவிபரீதங்களையும் சகலதுக்கங்களையும் நிவர்த்தித்து தடையற்றஆனந்தத்தை யடைந்து விதேகமுக்தனாய் வாழக்கடவாய்.

## 142 - வது தரங்கம்.

ஞானிக்கு அபயம், அஞ்ஞானிக்குப் பயம், இவர்களின் தன்மை :—

பிரஹ்மமே நானென்றிருப்பவருக்கு நிர்ப்பயமும் நிச்சலமுமுண்டாகும், தேகாதிகளை நானென்றெண்ணுகிறவனுக்குப் பயமும் சஞ்சலமும் கெடுதியும் இன்னும் ஜனனமரணாதி அனந்ததுன்பமும் வரும். [எ - தி] பூமியில் படுக்கையில் படுத்திருக்கிறவனுக்கு நிர்ப்பயமும் நிச்சலமுதலானதோடேகூடிச் சுக

மும் வருவதும், அரசமரத்து நுனிக்கொப்பில் படுத்திருக்கிறவனுக்குப் பயம் சஞ்சலமுதலான அனந்ததுக்கம் வருவதுபோலவறிக. [இ - து] ஞானி அஞ்ஞானி இருவரும் பிரபஞ்சபோகம் புஜித்தாலும் ஞானிக்குத் துக்கமில்லை, அஞ்ஞானிக்குத் துக்கமுண்டு. [எ - தி] ஒருகிருகத்தில் சமாராதனைபுஜிக்கிற பிராமணர் சுகமாய்ப்புஜிப்பதுபோலும், அந்த வீட்டுக்கர்த்தாவுக்கும் மற்றவர்கள் போல புஜிப்புச்சரியாயிருந்தாலும் அபிமானமுதல் துக்கம்வரை யுண்டாவது போலும்; சித்தனும் வழியிலேபோகிறவனும் பாஷாணத்தைப் புஜிக்கிறது போலும், தீப்பட்டவிடத்திலிருக்கிற கற்சுவரும் திரைச்சீலையும் போலவறிக. [இ - து] ஞானம்வந்தவன் அஞ்ஞானியைப்போல பழையபடி குடும்பத்தில் விவகரித்துக்கொண்டிருந்தாலும் அசங்கனென்ற நிச்சயம் உள்ளேயிருப்பதால் மயங்காமலிருப்பன், அஞ்ஞானி மயங்குவன். [எ - தி] ஹனுமார் பிரஹ்மாஸ்திரத்தாற் கட்டுப்பட்டிருக்கும்போது ராக்ஷஸர்கள்வந்து கொடிகளாற் கட்டுவதற்குத் தொட்டமாத்திரத்தில் அஸ்திரக்கட்டு விலகிப்போயும் ராவணனைக் கண்டு பேசுவதற்காகக் கட்டுப்பட்டவர்போல விருந்ததுபோலும், கிருக்குத் தெளிந்தவனும் கிறுக்கன்போல வேஷமாத்திரமாய்ப் பேசினாலும் உள்ளே தெளிவாயிருப்பதுபோலும், சுகசாரணர் வானரரால் நிஜமாய்க்கட்டுப்பட்டது போலும், நிஜக்கிருக்கன் உள்ளிலும் வெளியிலும் ஒருபடித்தாய் உளருவது போலுமறிக. [இ - து] அஞ்ஞானிக்கு ராகத்துவேஷத்துடன்கூடி அகங்காரம் வரலாம், ஞானிக்கு வரக்கூடாது. [எ - தி] பக்குவமாகாதபெண் பலபேரிடத்திலும் மானமன்றியில் தன்அவயவங்களைக் காண்பிக்கலாம், பக்குவமானபின் காண்பிக்கக்கூடாததுபோலும்; வெங்கனுயிருக்கும்போது வீட்டைத் திறந்துபோட்டுத் தூங்கலாம், புதையலகப்பட்டபின் பந்தோபஸ்தாயிருக்க வேண்டுவதுபோலும்; பட்டங்கட்டுமுன் பரதேசியாய்த்திரியலாம், பட்டங்கட்டியபின் பரமானந்தனைப் பிறர்களுடன் பேசாமலிருப்பவன்போலுமறிக. [இ - து] ஜனகர் ராஜ்யபாரம் பண்ணினாற்போல நானும் தர்க்கபாடமுதலானதைப் படித்தால் என்னவென்று கேட்டவினாவிற்கு உத்தரம்:— அவரைப்போல நான் பிரஹ்மமென்கிற திடஞானமிருந்தாற் செய்யலாம், இல்லாவிட்டாற் செய்யக்கூடாது. [எ - தி] ராஜாவின்பெண்ணும் குயவன்பெண்ணும் வீதியில் விளையாடும்போது அல்லாப்பண்டிகை வேடிக்கைபார்க்க ராஜகன்னிகை மேல்மேடையிலேறி நின்றதைக்கண்ட குசப்பெண் தன்கூரைமேலேறிக் குப்புறக்கவிழ்ந்து கால்முறிந்த கதைபோலவறிக. [இ - து] ஞானிமனது பிரபஞ்ச வியாபாரத்திற் சேராது. அஞ்ஞானிமனது சேரும். [எ - தி] தாமரையிலைத்தண்ணீர்போலும், சாம்பற்கட்டியில் ஜலம்படுவதுபோலுமறிக. [இ - து] ஞானிக்குப் பிரபஞ்சவியாபாரத்தில் சுகமென்பதற்கும் அஞ்ஞானிக்குப் பிரபஞ்சத்தைப்பார்த்தாலும் துக்கமேதவிர சுகமில்லை. [எ - தி] ஸ்திரீயினுடைய ஸ்தன்னியத்தைத்தொட்டுப் பாலைச்சும்பனம்பண்ணுகிற பாலனும், அதைப்பார்த்து மயங்குகிற யுவாவும் போலவும்; சந்திரமதிவேஷம்போட்

டாடுகிற நாடகவேஷக்காரனைத் தொட்டுக்கொண்டு இருக்கிறவர்களுக்கு மயக்கமில்லாமலிருப்பதுபோலும், அதைத்தூரத்திலிருந்து பார்க்கிறவன் மயங்குவதுபோலும்; ஞானி விஷயத்தை யனுபவித்தாலும் மயங்கான். அஞ்ஞானி விஷயத்தைப்பார்த்தாலும் அல்லது நினைத்தாலுங்கூட மயங்கிப்போவனென்றறிக. [இ - து] துவிதவார்த்தை சொல்லுகிறவனுக்குச் சதாபயமும் துக்கமும் அத்வைதவார்த்தை சொல்லுகிறவனுக்குச் சதா அபயமும் சுகமும் வரும். [எ - தி] திருட்டுப்பொரட்டுசெய்கிறவனுக்கு சதாபயமும் துக்கமும், நிஜஸ்தனுக்கு சதா அபயமும் சுகமும் வருவது போலும்; கள்ளர்கள்பயமுள்ள காட்டுமார்க்கத்தில் போகிறவனுக்கு பயமும் துக்கமும், ராஜமார்க்கத்தில் போகிறவனுக்கு அபயமும் சுகமும் வருவதுபோலுமறிக. [இ - து] வர்ணாசிரம விதிகளெல்லாம் அஞ்ஞானிகளுக்கேயொழிய ஞானிக்கில்லை. [எ - தி] சர்க்கார்வேலை ஒப்புக்கொண்டவனுக்கே அந்தச்சட்டத்தில் சொன்னபடி பத்து மணிக்குக் கச்சேரிக்குப் போகவேண்டுமேதவிர மற்றபேருக்கில்லாததுபோலும், பதிவிரதைக்கே பர்த்தாவைத்தவிர வேறொருவரையும் நினைக்கக்கூடாதென்று வேதஞ்சொல்லுகிறதேதவிர மற்றஸ்திரீகளுக்குச் சொல்லாததுபோலுமறிக. [இ - து] ஞானியும் அஞ்ஞானியும் விஷயத்தில் கர்மத்தால் விழுந்தாலும் அதில் ஞானி சம்பந்தப்படான், அஞ்ஞானி சம்பந்தப்படுவன். [எ - தி] சேற்றில் பிள்ளைப்பூச்சியும் எருமைமாடும் விழுந்திருந்தாலும் வெளியில் வரும்போது பிள்ளைப்பூச்சி அதில் சம்பந்தப்படாமலும் எருமைசம்பந்தப்பட்டு வருவதையும், தண்ணீரில்கிடந்த தாமரையிலையும் வைக்கல்கட்டும் அதிலிருந்து வெளியிலெடுக்கும்போது தண்ணீரில் தாமரையிலை சம்பந்தப்படாமலும் வைக்கக்கட்டு அதில் சம்பந்தப்பட்டு எட்டாள் சுமையாவதையுங் கண்டுகொள்க. [இ - து] அஞ்ஞானிகளும் ஞானிகளும் பூசைமுதலான கிரியைகளைச்செய்கிறது லோகதிருஷ்டிக்குச் சமானம்போல விருந்தாலும் பிரயோஜனத்தில் இரண்டாயுமொன்றாயுமிருப்பதால் சமானமாகாது. [எ - தி] மரத்தினால் யானை குதிரைகளைச்செய்த பொம்மைகளை வைத்து விளையாடுகிற குழந்தைகளுக்கு விளையாட்டுமாத்திரமேதவிர பசிதீராததுபோலன்றிச் சர்க்கரைமிட்டாயினால் செய்த யானைகுதிரைகளை வைத்து விளையாடுகிற குழந்தைகள் உடனே அந்த நாமரூபங்களை அழித்துச் சாப்பிட்டுப் பசியையுந்தீர்த்துக்கொண்டு திருப்தியையுமடைந்து அத்துவிதமாத்திரமாய் மிஞ்சுவதுபோலவறிக. [இ - து] ஞானி அஞ்ஞானிகளின் சகவாசத்தின் தன்மை:— மகா காமியாயிருந்தாலும் குருவின் சமீபத்திலிருந்தால் விரக்தனாவன். மகா விரக்தனாயிருந்தாலும் காமிகள்கூட்டத்தில் சேர்ந்தால் காமியாகிவிடுவன். [எ - தி] வாணியனுடைய எண்ணைச்சிக்குப்பிடித்த வஸ்திரத்தை வண்ணானிடத்திற் கொடுத்தால் அதுவும் வெள்ளையாய்ப்போவதுபோலும், வெள்ளைவஸ்திரத்தைச் சுயம்பாகியினிடத்தில்கொடுத்தால் கரித்துணியாகப் போவதுபோலும்; மிகுந்த ஈரவிரகானாலும் வெய்யிற்போட்டால் காய்ந்து போவதுபோலும், காய்ந்தவிரகானாலும் கடலிற்போட்

டால் ஈரமாய்ப்போவதுபோலுமறிக. [இ - து] ஞானி அஞ்ஞானி இருவரும் பிரஹ்மமாயிருந்தாலும் அதில் சுருதியினுடைய தாத்பரியத்தை யறியாத அவிவேகி எப்போதும் தீயில்விழுந்தவன்போலத் துக்கிப்பன், விவேகி அதைத் தெரிந்து பிரஹ்மானந்த சமுத்திரத்தில் முழுகிக்கொண்டிருப்பன். [எ - தி] இரண்டு மாப்பிள்ளைகளும் ஒரு படுக்கையில் படுத்திருந்தாலும் தூங்குகிறவன் உதைபடுகிறாப்போல காண்கிறதும், விழித்தவன் சுகமாய்ப்படுக்கையில் படுத்திருக்கிறவன்போலுமறிக. [இ - து] அஞ்ஞானிக்கு விஷயமகப்பட்டால் மாப்பிள்ளைக்கு மாமியார்வீட்டுக்கு மருமுழித்துக்கூட்டிப்போகிற உற்சாகம்போலும், பிராஹ்மணார்த்தமகப்பட்ட வைதீகப்பிராஹ்மணன்போலும், பச்சைப் புல்லகப்பட்ட பசுப்போலும் உற்சாகமாயிருக்கும், விவேகிக்கு விஷயங்கிட்டினால் விலங்குபோட்டு ஜயிலுக்குக்கொண்டுபோகிறவன்போலும், காட்டில் போகும்போது திருடன்கையிலகப்பட்டவன்போலும், நடக்கும்போது மழை வந்ததுபோலும் சங்கடப்படுவனென்றறிக. [இ - து] பிரஹ்மசுகத்தைப் புஜிக்கிற ஞானிக்கு உள்ளிலும் வெளியிலும் ஆனந்தமுண்டாகும், விஷயசுகத்தைப் புஜிக்கிற அஞ்ஞானிக்கு உள்ளிலும்வெளியிலும் துக்கமுண்டாகும். [எ - தி] பாற்கடலில் முழுகினவனுக்கும் உப்புக்கடலில் முழுகினவனுக்கும் உள்ளிலும் வெளியிலும் சுகமும் துக்கமும் காணப்படுவதுபோலும், அமிர்தத்தையும் விஷத்தையும் சாப்பிட்டவர்களுக்கு இரண்டிலும் சுகமும் துக்கமும் காணப்படுவதுபோலுமறிக. [இ - து] ஈசுவரனுடைய எதார்த்தமான பிரஹ்மசொரூபமும் மாயையினால் சிருஷ்டியாதி தொழிலால் வருகிற பிரஹ்மதேவாதி நாமங்களையும் ஞானி ஒருவனே தன்னுடைய சொரூபமென்றும் தன்னுடைய சக்தியாலிவைகள் கற்பனையாயிருக்கின்றனவென்றுமறிவன், மற்றவர்கள் அந்தக்கற்பனைகளை நிஜமென்று மயங்குவார்களேதவிர அவருடைய எதார்த்தமறியார்கள். [எ-தி] ஒருபுருஷனுக்கு ஸ்திரீவேஷம் போட்டாடவைத்தவன்மட்டும் அவனைப் புருஷனென்றறிவனே தவிர மற்றவர்கள் அவனை ஸ்திரீயென்று நினைத்து மயங்குவதுபோலவறிக. [இ-து] நம்மிடத்தில் அத்தியாசத்தாலுண்டாயிருக்கிற மனது விஷயத்தில் சேரும், அசங்கனாகிய நமக்கு ஒன்றிலும் சம்பந்தமில்லை. [எ - தி] தானும் தன்னிழல்போலும், மண்ணும் ஆகாசமும்போலவறிக. [இ - து] சச்சிதானந்தமாகிய தன்னைவிட நாமரூபமில்லையென்றறிவதே தபந்தநிவர்த்தியான ஜீவத்துவலயமேதவிர ஈசுவரப்பிரளயம் லயமில்லையென்பதற்குச் சுருதி, "சிருஷ்டிக்குமுன் ஜீவர்கள் தங்கள்தங்கள் வாசனைகளோடேகூடப் பிரகிருதியில் மெழுக்குருண்டையில் தங்கரேணுக்கள்போல லயித்திருந்தார்கள். சிருஷ்டி காலத்தில் தங்கள்தங்கள் கர்மபரிபாகத்தால் ஜீவர்கள் வாசனைகளோடே வெளியில் வருகிறார்கள்" என்று சொல்லியிருப்பதே சுருதி; கையில் விலங்கு போடப்பட்டிருக்கிற கைதிகளைக் கொட்டடிக்குள் சாப்பாட்டுக்கு விடும்போது அந்தவிலங்கை அவிழ்த்துவிட்டுக் கத்திசகிதமான சேவகர்களையும் காவல் வைத்துச் சாப்பிட்டபின் வெளியில்விடும்போது அந்தந்த விலங்குகளை அவர்க

ளவர்களுக்குப்போட்டு வேலைக்குப் போகச்சொல்லுவதே யுக்தி; தினம் சகலரும் தங்கள்தங்கள் வாசனை கர்மங்களோடே சுழுப்தியில் லயித்திருந்து திரும்பக்கர்மப்பிரேரணையால் வெளியில் முன்போல வாசனை கர்மங்களோடே ஜாக்ரசொப்பனங்களுக்கு வருவதே அனுபவமென்றறிக. [இ - து] விஷயத்தில் கர்மி உபாசகர்களுக்கு ஆரம்பத்தில் துக்கம், முடிவில் அநித்தியசுகமும்,— கூத்துப்பார்க்கிறவனுக்கு ஆரம்பத்தில் சுகமும் முடிவில் துக்கமும், சுராபானம் பண்ணுகிறவனுக்கும் பக்ஷணம்செய்து சாப்பிடுகிறவனுக்கும் ஆதியந்தத்தில் துக்கமும் நடுவில் அநித்தியசுகமும், பரஸ்திரீபோகிக்கும் திருடுகிறவனுக்கும் மூன்றுகாலத்திலும் துக்கம்வருவதுபோலவன்றி விவேகிக்குச் சாதனமுதல் சாத்தியம்வரையில் சுகமேயிருக்கிறதேதவிர துக்கமில்லையென்றறிக. [இ - து] விஷயத்தை யனுபவிக்கிறவனுக்கும் பிரஹ்மானந்தத்தை யனுபவிக்கிறவனுக்கும் பயம் அபயம் வரும். [எ - தி] சோரஸ்திரீக்கும் கற்புடையவளுக்கும் போலும், தீயுந் தண்ணீரும்போலும், விஷமும் அமிர்தமும்போலும், வெய்யிலும் சந்திரிகையும்போலுமறிக. [இ - து] சாக்ஷியை மறந்து திரிவிதகரணமே தானென்று கர்மம்செய்கிற அஞ்ஞானிக்கும் திரிவிதகரணங்களைத் தானல்லவென்று மித்தையாதிருஷ்டியால் தள்ளிச் சாக்ஷியே நானென்றிருக்கிற ஞானிக்கும் விரோதமில்லை. [எ - தி] அன்னத்தை மறந்து மலத்தைப்புஜிக்கிற பன்றிக்கும் அசுத்தமான மலத்தைத்தள்ளி அன்னம்புஜிக்கிற மனுஷனுக்கும் விரோதமில்லாததுபோலும், கல்லைப்புஜிக்கிற மாடப்புராவுக்கும் சந்திரகிரணத்தைப்புஜிக்கிற சகோரபக்ஷிக்கும் விரோதமில்லாததுபோலும், கூழ்குடிக்கிற குடியானவனுக்கும் அமிர்தம் சாப்பிடுகிற தேவர்களுக்கும் விரோதமில்லாததுபோலவறிக. [இ - து] அஞ்ஞானியின் மனது விஷயத்தில் சேர்ந்தால் கெட்டுப்போம். ஞானியின் மனது விஷயத்தில் சேர்ந்தாலும் கெடாது. [எ - தி] கட்டாதரசமும் சித்தகுளிகையால் கட்டினரசமும் தீயில் சம்பந்தித்தால் கெடுவதும் கெடாமலிருப்பதுபோலும், பச்சைப்பானை சுட்டப்பானை யிரண்டும் தண்ணீரில் சேர்ந்தால் கரைவதும் கரையாமற்போவதுபோலுமறிக. [இ - து] ஞானி அஞ்ஞானி இருவரும் ஒரு பிரஹ்மானந்தத்தை யனுபவித்தாலும் அதை ஞானி பிரஹ்மானந்தமாயும் அஞ்ஞானி விஷயமாயும் பார்ப்பன். [எ - தி] தகப்பன் பிள்ளை இரண்டுபேரும் சர்க்கரைமிட்டாயைச் சாப்பிட்டாலும் தகப்பன் அதைச் சர்க்கரையாயும் பிள்ளை மிட்டாயாயும் பார்ப்பதுபோலவறிக. [இ - து] பிரஹ்மவித்துக்கும் அஞ்ஞானிக்கும் பிராரப்ததுக்கம் சரியாயிருக்கும். அஞ்ஞானி ஊர்தெரியாதவன்போல அதைரியத்தால் துக்கப்படுவன், ஞானி பிராரப்ததுக்கம் தோன்றினும் நிஜத்தையறிந்திருப்பதால் கிலேசப்படான். [எ - தி] ஒருவன் திருடனைக் கண்டுபிடித்தவனும், ஸ்திரீவேஷத்தைத் தெரிந்தவனும் அவர்களிடத்தில் மயங்காமலும் சேராமலுமிருப்பதுபோலும், அவையறியாதவன் சேர்ந்து மயங்குவதுபோலுமென்றறிக. [இ - து] மூடர்களுடைய சிநேகமானது ஆரம்பத்தில் பெரிதாயும் வரவரக் குறைந்துபோமென்ப

தற்கும், சாதுக்களுடைய சிநேகம் ஆரம்பத்தில் அற்பமாயும் வரவர விருத்தியாயுமிருப்பதற்கு யுக்தி:— காலைநிழல் மாலைநிழல்போலுமறிக. [இ - து] ஞானிக்காக ஈசுவரனால் உண்டுபண்ணினபஞ்சவிஷயங்களை அஞ்ஞானத்தோடேகூடிய ஜீவன் மனதுமுதலானவை புஜிக்கின்றனவேதவிர ஞானி எவ்வளவேனும் புஜிக்கிறதில்லை. [எ - தி] ஸ்வாமிக்காக விடப்பட்டிருக்கிற கிராம பூமிகளையும் அபிஷேக நைவேத்தியாதிகளையும் பட்டர்முதலான பரிஜனங்கள் சாப்பிடுகிறார்களேதவிர ஸ்வாமி ஒருபருக்கைகூடப் புஜியாததுபோலவறிக. [இ-து] விஷயபோகம் சேர்ந்தகாலத்தில் சித்தத்தில் முமுக்ஷுவுக்கு அஞ்ஞானதிவாசனைகளிருக்கிறதற்கும் இல்லையென்றறிகிறதற்கும் யுக்தி:— பூமியில் மழைபெய்த காலத்தில்தான் விரை உள்ளேயிருந்தால் முளைக்கும் இல்லாவிட்டால் முளையாததுபோலும், எவ்வனஸ்திரீ யேகாந்தத்தில் லபித்தவேளையில்தான் இவனுக்கு ஸ்திரீவாசனையிருந்தால் லேபனமுண்டாகும் இல்லாவிடில் உண்டாகாததுபோலுமறிக. [இ - து] விவேகிக்கு மனது அந்தர்முகமாவது அனுகூலம், அது அவிவேகிக்கு விரோதம். [எ - தி] படுத்திருக்கிறவனுக்கு நித்திரைவருவது அனுகூலம் வழிநடப்பவனுக்கு நித்திரை விரோதமாவதுபோலும், படிக்கிறவனுக்கு வெளிச்சம் அனுகூலம் சாரசோரர்களுக்கு அது விரோதமாவதுபோலும், விரக்தனுக்குப் பிராணாயாமம் அனுகூலம் விஷயிக்கு அது விரோதமாவதுபோலுமறிக. [இ - து] பிரஹ்மத்துக்கும் ஜகத்துக்கும் ஜீவனுக்கும் கூடஸ்தனுக்குமிருக்கிற சம்பந்தத்தைப் பிறித்தறிவது அஞ்ஞானிகளுக்கரிதாயிருந்தாலும் ஞானிகளுக்குப் பிரயாசமில்லை. [எ - தி] ஜலத்தையும் பாலையும் பிரிப்பது மற்றபக்ஷிகளுக்கரிதாயிருந்தாலும் ஹம்சபக்ஷிக்கு அதைப்பிரிப்பது எப்படிச்சகஜமோ அப்படி பரமஹம்சர்களான ஞானிகளுக்குச் சகஜமென்றறிக. [இ - து] ஈசுவரன் விவேகமுள்ள மனசுக்கு மூன்றவஸ்தையிலும் சுகத்தைக்கொடுக்கிறார். விவேகமில்லாத மனசுக்கு ஜாக்ர சொப்பனத்தில் ஓயாத துக்கத்தையும் சுழுப்தியில்மட்டும் க்ஷணகாலம் சுகத்தையுங்கொடுக்கிறார். [எ - தி) அரசனானவன் தன் குருமுதலான சாதுக்களுக்கு அன்னபானமுதலான சகலவஸ்துக்களையும் சதாகுறைவில்லாமல் கொடுப்பதும், கைதிகளுக்கு விலங்குபோட்டு வேலைவாங்கி பசிக்குமட்டும் கேப்பைக்கூழ் கொடுப்பதுபோலுமறிக. [இ - து] ஞானிகளாலனுபவிக்கப்படுகிற பிரஹ்மானந்தாம்சத்தின் திவலையை விஷயிகள் தாரதம்மியமாய் விஷயானந்தமாயனுபவிக்கிறார்கள். [எ - தி] சமாராதனையில் பிராஹ்மணாள் சாப்பிட்ட எச்சிக்கலையில்கிடக்கிற எச்சல்களைத் தடிக்குறவன்முதலானவர்கள் தாரதம்மியமாய்ப் புஜிப்பதுபோலுமறிக. [இ - து] ஞானிக்கு எவ்வுலகத்திலும் போவது தடையில்லை, மற்றக்கர்மிகளுக்குக் கர்மஞ்செய்தமட்டுக்கும் புண்ணியலோகத்துக்குப் போய்ப் பின் அவ்வுலகத்திலிருந்து அந்தக்கர்மிகள் தள்ளப்படுவார்கள். [எ-தி] ராணிமகன் எவ்விடத்திற்கும் காசன்றியில் ரயிலேறி நினைத்தவிடத்திற்கெல்லாம் தடையன்றியில் போவதுபோலும், மற்றவர்கள் காசைக்கொடுத்து டிக்

கட்டு வாங்கியிருக்கிற இடம்வரை ரயிலேறிப்போய் டிக்கட்டானவுடன் கீழே இறங்குவதுபோலவறிக. [இ - து] அஞ்ஞானிசங்கல்பம் முடியாது ஞானி சங்கற்பம் முடியும். [எ - தி] ஏழை நினைத்தது முடியாமற்போகிறதும் ராஜா நினைத்தது முடிகிறதுபோலும், பறைச்சிக்கு நினைத்தபோகங்கிட்டாமல் ராஜஸ்திரீக்குக் கிட்டுவதுபோலுமறிக. [இ - து] ஞானி விஷயத்தில் விழுந்தாலும் உடனே ஒட்டாமல் கிளம்பிவிடுவன், அஞ்ஞானி அதிலழுந்திப்போவன். [எ - தி] பந்து மண்ணில் விழுந்தாலும் ஒட்டாமல் கிளம்புவதுபோலும், மண் மொத்தை மண்ணில்விழுந்து ஒட்டி மண்ணாய்ப்போவதுபோலுமறிக. [இ-து] மரணகாலத்திலெதை நினைத்தானோ அதுவாக ஆவனென்ற சுருதிக்கும் சஞ்சிதகர்மப்படிக்கு ஜன்மம்வருமென்று சொன்னசுருதிக்கும் யுக்தி:— ஒருவன் ஒரு மூட்டை தூக்கிப்போகும்போது அநேகர்களிடத்தில் அச்சாரம் வாங்கியிருந்தும்மூட்டையைக் கீழேபோடும்போது அச்சாரங்கொடுத்தவர்களுக்குள் ஒருவன் முன்னிலையாய்வந்து பலத்தினுலிழுப்பதால் அவன்மூட்டையைத் தூக்க வேண்டிவருவதுபோல ஜீவனுக்கு அநேக நினைப்புகளிருந்தாலும் அதற்குள் அழுத்தமாய்க் கடைசிநினைப்பு பலமாயிருக்கும்பக்ஷத்தில் அந்த ஜன்மம் வரும். அல்லது மூட்டையைக் கீழேபோடும்போது அச்சாரங்கொடுத்த அநேகர்கள் இவனையிழுக்கும்போது அரசனிடத்தில் அவர்கள் தெரிவித்ததில், அவ்வரசன் வரிசையாய்க்கணக்குப்படி தீர்மானிக்கிறதுபோல மரணகாலத்தில் ஸ்திரீமுதலான அநேகநினைப்புகள் வரும்பக்ஷத்தில் ஈசுவரன் சஞ்சிதகர்மப்படிக் கிரமமாய் ஜன்மத்தைக்கொடுக்கிறார். இவ்விரண்டுபக்ஷங்களுக்குள் அஞ்ஞானிகளுக்கு ஒன்றுவருவது சரி. இனி ஞானிக்கோவென்றால், ஒருவன் மூட்டை தூக்கிப்போகும்போது மத்தியில் அந்த மூட்டைக்காரனை நயந்துகொண்டு சர்க்காரில் பாபரென்று மனுக்கொடுத்து அவனையுஞ் சாக்ஷிசொல்லும்படி செய்து ஜட்ஜியும் பாபரென்று தீர்மானித்தபிறகு மற்றமூட்டைக்காரர்கள் அச்சாரத்தை இழந்ததுபோல இவனும் தூர மார்க்கமில்லாதிருந்தாலும் தூக்குகிறவன் சாக்ஷிசொன்ன விசுவாசத்தால் தூக்கினுலுந்தூக்குவன், நீக்கும்பெப்பப்பாயென்ற கோமுட்டிகதைபோலச் சொன்னுலும்சொல்லுவன், கட்டாயமில்லாததுபோல, முமுக்ஷுவானவன் ஞானப்பியாசம்பண்ணும்போது ஈசுவரனை நயந்துகொண்டு நான் கேவலன் சஞ்சிதகர்மக்காரர்களுக்குச் சரீரங்களைத்தூக்கக் கருத்துருத்துவம் யாதொன்றுமில்லையென்று ஈசுவரவாக்கியமான சுருதியினுடைய சாக்ஷிபலத்தால் அகர்த்தாவென்று தெரிவித்தபிரகாரம் குருநாதனும் அப்படியே அகர்த்தாவென்று தீர்மானித்தபிற்பாடு, இவன் தத்துவஞானியாய்விட்டதால் பிராரத்தசரீரத்தை ஈசுவரனுடைய தாக்ஷயண்யத்துக்காகத் தூக்கினுலும் தூக்குவன், உடனே தியாகம்பண்ணினுலும் பண்ணுவன், அது கட்டாயமில்லை. ஆகையால் பிராரப்தமே இவனுக்குச் சம்பந்தமில்லாமற் போகும்போது மறுஜன்மத்துக்கு எங்கே இடமிருக்கப்போகிறதென்றறிக. [இ - து] அஞ்ஞானிக்குத் தன்ஸ்திதியும் உலகத்துஸ்திதியும் தெரியாது.

ஞானிக்கு இரண்டுஸ்திதியும் தெரியும். [எ - தி] கிருக்கனுக்கு இரண்டுந் தெரியாததும், கிருக்கில்லாதவனுக்கு இரண்டுந்தெரிவதுபோலும்; தூங்குகிறவனுக்குத் தன்ஸ்திதியும் மற்றவர்களுடைய ஸ்திதியுந்தெரியாது, விழித்திருக்கிறவனுக்கு இரண்டுந்தெரிவதுபோலுமறிக. [இ - து] ஜீவத்வமுள்ளவரை இகத்திற் பெண்டாட்டிமுதல் ராஜாவரைக்கும் பயப்படவும், பரத்தில் இந்திரன் முதல் ஈசுவரன்வரைக்கும் பயப்படவும் வேண்டும். அதைவிட்டால் இந்தப் பயங்களில்லை. [எ - தி] காவல்வேலையை ஒப்புக்கொண்டவனுக்குக் குடிகளிடத்திலும் சர்க்காரிலும் பயப்படவேண்டுவதுபோலும், அதைவிட்டவனுக்கு இரண்டிடத்திலும் பயமில்லாததுபோலவறிக. [இ - து] அஞ்ஞானிகள் நாமரூபத்தைப் பிரதானமாய்ப் பார்ப்பார்களேதவிர ஞானிகளைப்போலே சச்சிதானந்தத்தைப் பிரதானமாய்ப் பாரார்கள். [எ - தி] குழந்தைகள் நகையின் நாமரூபத்தின்கோளாறைப் பார்ப்பார்களேதவிரச் செட்டியைப்போலத் தங்கம்முதலான கோளாறைப் பாரார்கள்போலவறிக. [இ-து] குருசன்னிதானத்திலிருக்கிற ஜீவர்கள்மட்டும் பிரஹ்மானுசந்தானம் பண்ணுவானேன்? மற்றஜீவர்கள் தொய்தத்தைக்குறித்துக் கா. கூ. வென்று கத்துவானேன்? என்றால், புசுண்டருடைய சன்னதியிலிருக்கிற காக்கைமுதலியவைகள்மட்டும் சாமகானமுதலான வேதாந்தபாடம் படித்துக்கொண்டிருப்பானேன், மற்றைக்காக்கைகளெல்லாம் கா. கா. வென்று கத்தித்திரிவானேன் சொல்? [இ - து] ஞானிக்கு குணதோஷங்கள் விஷயத்தில் தெரியுமென்பதற்கும் அஞ்ஞானிக்குத் தோற்றாது என்பதற்கும் யுக்தி:— கழுதைக்குச் சந்தனக்கட்டையின் வாசனையும் உவட்டுமண்ணு நாற்றமும் தெரியாமல் மனுஷனுக்குமட்டும் அந்தப்பேதந் தெரிவது போலவறிக. [இ—து] ஞானிமனதுக்கும் அஞ்ஞானிமனதுக்கும் பேதமுண்டு. [எ - தி] ரத்னத்துக்கும் தீபத்துக்கும், சர்க்கரைமிட்டாய் எட்டிமிட்டாய், சித்தன்கட்டின ரசமும் கட்டாதரசமும், சிட்சையான குதிரையும் முட்டிதட்டி உப்புச்சுமக்கிற கழுதையும்போலுமறிக. (இ - து] ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் விஷயானுபவம்பண்ணுவதில் ஒன்றிரண்டு பலன்கள் காணப்படுகின்றன. [எ - தி] தகப்பனும் பிள்ளையும் ரயிலேறுகிற சுகம் சமமாயிருந்தாலும் தகப்பனுக்குத் துட்டுநஷ்டமான கவலையுண்டாவதுபோலும், ஒரு வீட்டுச்சமாராதனையில் எஜமானுக்கும் சாப்பிடுகிறவர்களுக்கும் போஜனசுகம் சரியாயிருந்தாலும் சமாராதனையில் செலவானதைப்பற்றிக் கவலைகாணப்படுவதுபோலும், ஸ்திரீ புருஷர்கள் இருவருக்கும் மைதுனசுகம் சரியாயிருந்தாலும் கர்ப்பமுதலான அதிகதுக்கம் ஸ்திரீக்கு இருப்பதுபோலுமறிக. [இ - து] அஞ்ஞானிக்கு விஷயபோகத்தில் இரண்டுபலம், ஞானிக்கு ஒருபலம். அதாவது, தாற்காலிக சுகதுக்கமாத்திரம் ஞானிக்கு, அஞ்ஞானிக்குத் தாற்காலிக சுகதுக்கமும் கருத்தருத்துவத்தால் ஜன்மஹேதுவுமாம். [எ - தி] தகப்பனும் பிள்ளையும் போஜனம்பண்ணுவதில் சுகதுக்கம் சமானமாயிருந்தாலும் தகப்பனுக்கு அதில் புண்ணியபாபசிந்தனையும் கூடயிருப்பதுபோலும், பேரீச்சு

கொளுமிச்சு முதலானதைப் புஜிப்பது இருவருக்கும் சரியாயும் தகப்பன் அதை மூளைக்கப்போடுகிறபலம் அதிகமாயடைவதுபோலுமறிக. [இ - து] பிராரப்த போகானுபவத்தில் ஞானிக்கிரண்டுபலம் அஞ்ஞானிக்கொருபல மிருக்கும். [எ - தி] விற்பத்தியுள்ளவன் இல்லாதவன் இரண்டுபேரும் பாரத முதலானதைப் பாராயணம் செய்வதால் படனபலமிருப்பது இருவருக்கும் சரியானாலும் விற்பத்தியுள்ளவனுக்குத் தாத்பர்யந்தெரிந்து கொள்ளுகிற சுகம் விசேஷமாயிருப்பதுபோல ஞானிக்கு விஷயசுகம் அனுப விக்கும்போதே இது தன்சொரூபானந்தமென்று தோற்றுதல் இரண்டுபலம். அஞ்ஞானிக் கப்படித்தோற்றாமையால் ஒருபலமென்றறிக [இ - து] ஞானி புத்ராதிமுதலான யாவும் மாயாமயமென்று முன்னமே அறிந்துகொண்டபடி யால் அவைகள் போகுங்காலையில் துக்கப்படவில்லை. அஞ்ஞானிகள் அவைகள் என்றைக்குமிப்படியே நித்தியமாயிருக்குமென்று நினைத்திருக்கிறபடியால் அவைகள் போகும்போது துக்கமடைகிறார்கள். [எ -தி] இந்திரஜாலம் பார்க் கப்போன தகப்பன் பிள்ளை இரண்டுபேர்களையும்போலவறிக. [இ - து] விவேகி ஞானபுத்திரனைப்பெற்றுச் சந்தோஷிக்கிறான், அவிவேகி தேகாத்மபுத்தியாகிற பிள்ளையைப்பெற்றுத் துக்கிக்கிறான். [எ - தி] கிருஷ்ணன் சாம்பனைப்பெற்றுச் சந்தோஷித்ததும் சாம்பன் கோடாலிக்காம்பைப்பெற்றுக் குலத்தோடே கெட் டதுபோலுமறிக. [இ - து] ஞானிக்கு உலகவிவகாரம் செய்யும்போதே மறக் கும், அஞ்ஞானிக்கு ஒருதரம்செய்த விவகாரவாசனை கல்பகோடியானாலும் மறக்காது. [எ - தி] ஜலத்திலே எழுதுகிற எழுத்துப்போலும், கல்லின்மேல் எழுதின எழுத்துப்போலுமறிக. [இ - து] சாதுசங்கத்துக்கும் மூடசங்கத்துக் கும் பேதமுண்டு. [எ- தி] ஜீவித்திருப்பதும் மரித்திருப்பதுபோலும், சொர்க் கத்திலும் நரகத்திலுமிருப்பதுபோலுமறிக. [இ - து] கருத்துருத்துவத் தோடேகூடியிருந்து பிரமபட்டத்தை ஆள்வதிலும் அகர்த்துருத்துவத்தோடே கூடி நீசத்தொழில் செய்வது சிலாக்கியம். [எ - தி] சக்கரவர்த்திப்பட்டங் கட்டிப்பயித்தியம் பிடித்திருப்பதிலும் பயித்தியமன்றியில் பலமள்ளுகிற தொழி லிருப்பவனுக்கு உண்டாகிறசுகம் அவனுக்கில்லாததுபோலுமறிக. ஆகையால் துக்ககரமான கருத்துருத்துவத்தைவிட்டுச் சுககரமான அகர்த்துருத்துவத்தை யடைந்து சுகமாய் வாழுதி. பிராரப்தகர்மம் எந்தெந்த சுகதுக்கத்தைக் கொடுத்தாலும் உனக்கொன்றுங் குறைவில்லையென்றறிக. [இ - து] ஜகத்துப் பொய்யென்று தெரிந்தபின் ஞானி ஜகத்விவகாரம் செய்யலாமாயெனில், கல் யாணம்போலே பிரசித்தமாய்ச் செய்யலாம். [எ - தி] நாடகமாடுவதில் தேர்ந் தவனே ஊருக்கூர் வீதிக்குவீதி வந்து நிர்லஜ்ஜையாயும் நிர்ப்பயமாயும் ஸ்திரீ வேஷம்போட்டாடுவதுபோலும், பர்த்தாவைப் பிரியாமலிருக்கிற ஸ்திரீ எந்த விடத்திலுமிருந்து எக்காலத்திலும் போகம்செய்து புத்திரோற்பத்திமுதலான தை யடைந்தாலுங் குற்றமில்லாததுபோலும், அஞ்ஞானியாகிற முண்டச்சிக்கு யாதொருபுருஷனோடே பேசினாலும் பார்த்தாலும் தொட்டாலும் அனுபவித்தா

லும் லோகநிந்தைக்கும் சர்ப்போற்பத்திக்கும் ஜாதிப்பிரஷ்டத்துக்கும் நடுங்கிக்கொண்டே போகஞ்செய்வதுபோலவன்றி ஞானியாகிற சுமங்கிலிக்கு இகபரங்களைக்குறித்து யாதொரு கவலையுமில்லாததுபோலுமறிக. இன்னுமொரு யுக்தி:—குழந்தைகள் கண்ணாடியைப்பார்த்துத் தன் பிரதிபிம்பமென்றறியாமல் வேறே பூச்சியிருக்கிறதென்று பயப்படுவதுபோலவன்றித் தெரிந்தவன் தன் ஷோக்குக்காக கண்ணாடியைக் கீழேவையாமல் கையிலேயேவைத்துச் சதாபார்த்துக்கொண்டிருந்தாலும் அந்தத்தோற்றத்தில் அன்னியபுத்தியும் பேதபுத்தியும் பிரமாணபுத்தியும் பயபுத்தியும் மோகபுத்தியும் விகாரபுத்தியும் யாதொன்றும் அற்பமும் கற்பனையில்லாததால் அவனுக்கு மனமே யில்லையென்றறிக. இப்படியானால் ஞானியைப் பூஜித்தவர்கள் சகல புருஷார்த்தத்தையுமடைவர்களென்றும், அவரைப்பூஜித்தால் ஈசுவராதி சகலதேவதைகளையும் பூஜிக்கப்பட்டதாக ஆகிவிடுமென்றும், அவர்மனதைக் குளிரப்பண்ணுகிறதே சர்வகாமாப்தியென்றும் இப்படி வேதங்கள் கோஷிக்கும்போது, மலடிமகன்போல அவருக்கு மனமேயில்லையென்று எப்படிச் சொன்னீரெனில், அப்படிச்சொல்லுகிற ஸ்துதிகளைக்கேட்ட ஞானி ஒருவாறு சந்தோஷிப்பன். சங்கை, முந்தி அவன் மனது மலடிமகன் போலென்றும், உலகத்தார் செய்யும் ஸ்துதி நிந்தைகளில் பாத்தியப்படானென்றும் சொன்னதற்கு விரோதமாகிறதேயெனில், அதற்குப் பரிகாரம் சொல்லுகிறோம். மலடியால் வளர்க்கப்பட்டபிள்ளையும் உலகத்தாரும் இவள்பிள்ளையென்று சொல்லுகிற சொல்லைக்கேட்ட அவள் உள்ளே தனக்குப் பிள்ளையில்லையென்று தெரிந்திருந்தும் இவர்கள் இந்த ரகசியத்தைத் தெரிந்துகொள்ளாமல் சொல்லுகிறார்களென்று பரிகாசத்தால் சந்தோஷப்படுவதற்கும் உலகத்தார் சந்தோஷப்படுவதற்கும் பேதந்தெரியாமல் விரோதமாயிருக்கிறதாய் நீ நினைக்கிறாய் ! அது எப்படியெனில் ; அஞ்ஞானிகளுக்கு வருகிற சுகம் கருத்தாருத்துவத்தினாலும் பிரமாணபுத்தியினாலும் புருஷப்பிரயத்தினத்தினாலும் மோகபயங்களை உற்பத்திசெய்வதாலும் வாசனைகர்மங்களை விருத்திபண்ணுவதாலும் அநேககோடி ஜனனமரணத்துக்கத்திற்கு மூலமாயுமிருப்பதுபோலன்றி ஞானியின் சந்தோஷம் மேலேசொன்ன லக்ஷணவிலக்ஷணமாயிருப்பதால் இதற்குமதற்கும் பேதம் நிரம்பஇல்லை. சொப்பனஜாக்ரங்களிலுள்ள சம்பந்துக்களுக்கு எவ்வளவுபேதமோ அவ்வளவு பேதமட்டும் உள்ளதென்றறிக. [இ - து] அஞ்ஞானிக்கு மகிமை மரணம், ஞானிக்கு மகிமை ஜீவித்திருக்கிறது. [எ - தி] வியாதிக்காரனும் அழுகுழந்தையும் தூங்குவது சிலாக்கியம், காரியக்காரனும் கணவனோடேகூடிய கற்புள்ளவளும் விழித்திருப்பது சிலாக்கியம் போலவறிக. [இ - து] தேகாதிஜகத்தனைத்தும் சொப்பனம்போலப் பொய்யென்பதில் சந்தேகமில்லையென்றால், பிரஹ்மமே நான் நானே பிரஹ்மமென்று மறவாமல் அனுசந்தானம் பண்ணிக்கொண்டிருக்கவேண்டுமென்று சொன்னது எதற்கோவென்றால் ; இந்த மாயாமயமானது மனது நாம் நம்மை மறந்தால் நம்மையுறுக்கும், நாம் நம்மை யாரென்று பார்த்தால் அந்தமனது

போனவிடந்தெரியாமல் ஓடிப்போம். [எ-தி] தன்னிழல் தீபாதிகளில்தோற்றும் போது தன்னை மறந்து அதைப்பார்த்தால் பயமும் தன்னைப்பார்த்தால் அபயமும் உண்டாவதுபோலவறிக. [இ-து] அஞ்ஞானிகளுக்கொப்பாக ஞானிகளும் உலகநடத்தையை அனுசரித்தாலும் அதில் கொஞ்சங்கூட அஞ்ஞானிகளைப் போலப் பற்றார்கள். [எ - தி] பகாசுரன்தோலை பீமசேனன் மேலேபோர்த்திக்கொண்டு விரட்டுகிறபோது சகலத்திராளும் பயந்து ஓடும்போது தர்மபுத்திராதிகளும் உள்ளே பயமில்லாமல் ஊருக்கொப்பாக ஓடினகதைபோலுமறிக. [இ - து] ஆமையானது தனக்கு விலக்ஷணனான மனிதனைக்கண்டால் தன்குஞ்சுகளுக்காக விரித்திருந்த தன் அவயவங்களை மூடிக்கொள்வதுபோல ஞானியாகிற ஆமையும் முமுக்ஷுக்களாகிற தன் குஞ்சுகளிருக்கும்போது தத்வவிசாரமாகிற தன் அவயவங்களை விரித்துக்காண்பித்துக்கொண்டு தனக்கு விலக்ஷணனான அஞ்ஞானிகளாகிற மனுஷர்களைக் கண்டமாத்திரத்தில் அவயவங்களை மூடிக்கொண்ட ஆமைபோல ஒன்றுமறியாத மூடன்போல தன்விசாரமாகிற அவயவங்களை அடக்கிப்போடுவன். [இ - து] மூடனை ஆமையாகவைத்துக் கூறுகிறார், ஞானியில்லாதவிடத்தில் தன்அகம்பாவாதியான சாஸ்திரங்களை விரிப்பன், ஞானியைக் கண்டமாத்திரத்தில் தன்கடையைக் கட்டிப்போடுவனென்றறிக. ஐயா, பிரஹ்மவிசாரம் பண்ணினால் பாவமென்று சிலர் சொல்லுகிறார்களேயென்றால், அப்பா! அது பிராஹ்மணனைக்கொன்று அந்த மாமிசத்தைச் சாப்பிடுகிறவன் கத்தரிக்காய் சாப்பிடுகிறவனைப்பார்த்து இப்படி நீ அனியாயம் செய்யலாமா? பிரஹ்மஹத்திதோஷம் உன்னைவிடாதேயென்று சொல்லுவதுபோல யதார்த்தமான பிரஹ்மம் தானாயிருப்பதை மறந்ததுமன்றியில் தேகாத்மபுத்தியுடன்கூடினவன் ஞானிக்கும் ஞானாப்பியாசத்துக்கும் குற்றஞ்சொல்வது அத்தன்மைபோலவிருக்கிறது. ஆனால் அஞ்ஞானியைப்பார்த்து பிரஹ்மஹத்திபண்ணினவனென்று வேதங்கள் சொன்னகாரணம் ஏதோவென்றால், உலகத்தில் மண்ணை வெட்டுவதிலும் மரத்தை வெட்டுவது பாபம், அதிலும் மிருகங்கள்முதலான எறும்புவரையிலுள்ள சேதனஉயிர்களைக் கொல்லுவது அதிகபாபமென்றும், அதிலும் மனுஷனையும் புருஷனையும் பிராமணனையுமிருக்கிறவனைக் கொன்றால் இகத்தில் தூக்கும் பரத்தில் பிரமஹத்தியாதிபாபமும் வருவதுபோலத் தேகத்தை மறப்பதிலும் இந்திரியத்தை மறப்பது பாபம், அதிலும் அந்தக்கரணாதிகளை மறப்பது மிகுந்தபாபம், அதிலும் சச்சிதானந்த நித்திய பூரணமாயிருக்கிற பிரஹ்மத்தை யில்லையென்று சொல்லுவதான பிரஹ்மஹத்திக்குமேல் என்னஹத்தியிருக்கிறது? [இ - து] ஞானி நித்தியசுகியென்றும் அஞ்ஞானி நித்தியதுக்கியென்றும் முன்னே சொன்னீரே அனுபவத்தில் அஞ்ஞானிக்கு ஒருக்கால் சுகம்வருகிறதும் ஞானிக்கு ஒருக்கால் துக்கம்வருகிறதும் கர்மானுசாரமாய்க் காணப்படுகிறதேயென்றால், சகோதரர்கள் இருவர்களில் ஒருவன் பிரபுவான விவேகியாயும் மற்றொருவன் பயித்தியகாரனாயும் இருப்பதில் விவேகிக்கு ஒருக்கால் கலியாணமுதலான செலவுநேரிட்டாலும் அந்தச்

செலவுக்குக் குடிகள் தங்கள்தங்களிடத்திலிருக்கிற வஸ்துக்களை அந்தந்தக் காலங்களிற் கொடுப்பது பூரணமாய் மிச்சங்கூடமுதலாவதாலும், கிருக்கனுக்கு ஒருக்கால் லாபங்கிடைத்தாலும் அதை மூர்க்கர்கள் கொள்ளையடித்து இவனுக்குத்தெரிவிக்காததால், அதைக்கொண்டுஆனத்தெரியாமலிருப்பதுபோலத் தாஷ்டாந்தத்தில் ஞானிக்கு ஒருக்கால் பிராரப்தகர்மத்தால் துக்கம்வந்தாலும் அதை அந்தக்கரணாதிகளாகிற குடிகள் ஏற்றுக்கொண்டு வகிப்பதால இவனுக்கு அந்தப்பிராரப்ததுக்கம் சம்பந்திக்காததால் ஞானி நித்தியசுகியென்றும், அஞ்ஞானிகளுக்கு ஒருக்கால் சுகம்வந்தாலும் இந்திரியங்களாகிற துஷ்டர்கள் அதை அபகரித்துக்கொண்டு அதனால்வருகிற கர்மங்களைமட்டும் ஜீவன்பேரில் ஏற்றினபடி இவனும் ஏற்றுக்கொள்ளுவதால் அஞ்ஞானி நித்தியதுக்கியென்றும் சொன்னதற்கர்த்தமென்றறிக. [இ - து] இந்தச்சரீரத்துக்கு நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு வியாதிகள் அபிமானிக்கக் காத்திருக்கும்போது நான் இதை அபிமானிக்கத்தேவையில்லை, அப்படி அபிமானித்தவனுக்கு அடிக்கடி ஜன்மம் தீராதென்றும், அந்தத்தேகாபிமானத்தை நிஸ்ஸேஷமாய் விட்டிருக்கிற ஞானிக்கு ஜன்மம் வராது. [எ - தி] ஒருகடத்திலிருக்கிற ஜலத்தை மற்றொருகடத்தில் விட்டுக்கொண்டு வருகிறதுபோலும், கடமிருக்கும்போதே அதிலுள்ள ஜலத்தை சாப்பிடுகிறதுபோலுமறிக. [இ - து] சுழுப்தியில் பிராஞ்ஞனை ஜீவனும் சாக்ஷியே நானென்றிருக்கிற ஞானியும் நிருவிகாரனாயிருந்தாலும் விழித்தவுடன் பிராஞ்ஞன் சாக்ஷியான ஞானியைப்போல நிர்விகாரனையில்லாமல் கர்த்துருத்வாதி வாசனையோடே கூடியிருக்கிறான். [எ - தி] ஜயில் கொட்டடியிலிருக்கிற கைதி ஜயிலரைப்போல விலங்கன்றியில் நிர்ச்சம்பந்தனாயிருந்தாலும் வெளியில் வரும்போது விலங்குடனே வருவதுபோலும், வறுக்கப்படாதவிரை திரும்பி முளைப்பதுபோலு மறிக. [இ - து] அழிந்துபோகிற ஆயுளை அழியாத பிரஹ்மஞானமாகச்செய்கிற விவேகிக்கும், விலை மதிக்கக்கூடாத ஆயுளை பெண்டாட்டிபிள்ளைகளுக் குழைத்துக்கெட்டுப்போகிற அவிவேகிக்கும் பேதமிருக்கிறது. [எ-தி] சித்தர்கள் இரும்பைத் தங்கமாக்குவதுபோலும், அசித்தர்கள் ரசவாத ஆசையால் கையிலிருக்கிற தங்கத்தையும் கரியாக்குவதுபோலுமறிக. [இ - து] ஞானி கேட்டவர்களுக்கெல்லாம் தன் வடிவமான ஞானரத்நத்தை வேண்டியமட்டுங் கொடுக்கிறார், அஞ்ஞானி ஒருவருக்கும் கடுகளவுகூட உபயோகமில்லாத தேகாபிமானமுதலான சொத்துக்களைக் கொடான். [எ - தி] கர்ணன் தன்னுடன்பிறந்த கவசகுண்டலத்தையும் அறுத்துக்கொடுத்ததுபோலும், துரியோதனன் தன் பங்காளிகளான பாண்டவர்களுக்கு ஈ இருக்கக்கூட இடங்கொடுக்கமாட்டேனென்று சொன்னதுபோலும்; தகப்பன் தான் சம்பாதிக்கிற சொத்துக்களை குடும்பத்தில் செலவுசெய்வதும், குழந்தைகள் தங்கள் கையிலிருக்கிற பீங்கான் ஓட்டைக் கெஞ்சினாலுங் கொடுக்காததுபோலு மறிக. [இ - து] ஞானிக்கெல்லாரும் முக்தர்களாகவே தோன்றும், அஞ்ஞானிக்கு ஞானியும்

பத்தனாகவே தோன்றும். [எ - தி] ஒருபடுக்கையில் படுத்திருக்கிற இரண்டு பேர்களில் ஒருவன் விழித்திருப்பதால் தூக்கத்தால் சொப்பனத்தில் அலைந்துக்கொண்டிருக்கிற ஜீவனையும் தன்னைப்போல் சுகமாய்ப் படுத்திருக்கிறவனாய்த் தோற்றுவதும், நித்திரைபோகிறவன் தன்னோடே அவனையும் காடுகரையில் அலைகிறவனாகக் காண்பதுபோலு மறிக. [இ - து] ஐயா, ஜீவர்கள் மரணகாலத்தில் அனாயாசமாய் மரிப்பது சிலாக்கியமென்றும் அதற்கெதிர் மறையாயிருந்து சாவது குறைச்சலென்றும் சொல்லுகிறார்களே அது சரிதானாவென்றால், குரு சொல்லுகிறார். அடேமூடா! நீ கேட்டது ஞானியைக்குறித்தா? அஞ்ஞானியைக்குறித்தா? ஞானியைக்குறித்தென்றால், அப்படிச் சொல்லக் கூடாது. ஞானி ஞானோதயகாலத்திலேயே முக்தனாகிவிட்டதாலும், இன்னும் ஞானி மரணகாலத்தில் வியாதிமுதல் மூர்ச்சைவரை என்னமாயிருந்து மரித்தாலும் அவனுக்கு மோக்ஷத்துக்கு மோசமில்லையென்ற சுருதிவாக்கியமும், நாள்தோறும் சுற்றபோதம் சொப்பனசுழுப்தியில் மறந்திருந்தாலும் ஜாக்கிரத்தில் தன்னிலே முன்னிலே ஆகிறதுபோலவென்றயுக்தியும், ஞானிக்கு அறிவேவடிவமானதால் மரணாதிகளால் அவன் வடிவம் அவனுக்கு மாறாது அது எதுபோலவென்றால், அஞ்ஞானிகளுக்கு அவர்களவர்கள்சரீரம் சொப்பனாதிகளிலே மறக்கப்பட்டிருந்தாலும் அதில் நானென்கிறபுத்தி மாறாமலிருக்கிறதே அனுபவமுமிருப்பதால் ஞானியைக்குறித்து இக்கேள்வி கேட்கத்தக்கதன்று. அஞ்ஞானிக்கோவென்றால், அவனுக்கு எப்படி மரித்தாலும் பிரயோஜனமில்லை என்பதற்கு—பிரஹ்மஞானம் வரும்வரை ஜனனமரணம் நீங்காதென்ற சுருதியும், ஆனால் கிடந்துபோகிறதிலும் கஷ்டமன்றியில் போகிறது சிலாக்கியமில்லையாவெனில், சிலாக்கியமில்லை. [எ - தி] கலக்டர் குற்றவாளியைத் தானே கொரடாபூஜைமுதலான தண்டனை செய்வதிலும் கோர்ட்டுக்குக் கமிட்பண்ணினது சிலாக்கியமாகுமா? கலக்டர் அதிகாரத்துக்கும் அடங்காத பாரிக்குற்றமென்றல்லவோ கமிட்செய்யப்பட்டது. ஆகையால் ஞானிக்கெப்படிச்செத்தாலுங் குற்றமில்லை. அஞ்ஞானிக்கெப்படிச்செத்தாலுங் குணமில்லை. ஆகிலும் சிலவாக்கியங்கள் அனாயாசமரணத்தைச் சிலாக்கியமாய்ச் சொல்லுகிறதேயென்றால், அந்த அனாயாசமென்ற சொல் துக்கநிவர்த்தி தடையற்றஆனந்தரூபமான முக்தியைச் சொல்லுகிறதென்றறிக. அப்படி ஒருவாறு அங்கீகரித்தாலும் குற்றமில்லை. சொப்பனத்தில் பிட்சையெடுக்கிறவனிலும் ராஜ்யமாளுகிறவன் சிலாக்கியமாவதுபோல இங்கும் இகபரங்களிலும் சாவுகாலங்களிலும் பிறப்புக்காலத்திலும் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறவர்களிலும் சுகமாயிருப்பவர்கள் சிலாக்கியமென்று சொல்லுவது ஜாக்கிரத்தை நிஜமென்று நம்பினவர்களுக்கு அது யுக்தம்தானென்றறிக. [இ - து] அஞ்ஞானிகள் நிச்சத்துவமான மூர்த்தி ஸ்தலம் தீர்த்தம் உத்சவமுதலானதிற் செலவுமுதலானதைச் செய்துவந்தது பரமலாபமென்றெண்ணி வீட்டிற்கு வந்தும் அதைச் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். ஞானி பரமசுகமான பிரஹ்மாப்பியாசத்தை இடைவிடாமற் பழகிச் சுகித்துக்

கொண்டிருந்தும் ஒருகர்த்தருத்வத்தையும் சொல்லாமல் நிர்விகற்பமாயிருக்கிறான். [எ - தி] ஒருவீட்டில் தாயுந்தகப்பனும் பகலிரவுமையும் சம்பாதிப்பதும் சமையல் சாப்பாட்டுவேலையைப் இரவுமுழுதும் பண்ணுகிற விவசாயத்தால் வருஷத்தில் இரண்டு பூ விளையும்படி பண்ணிக்கொண்டிருந்தும் நான் சமைத்தேன் நான் போகித்தேன் என்று சொல்லாமல் மௌனமாயிருக்கும் போது சின்னக்குழந்தைகள் வீட்டிலிருக்கிற இரண்டு மூன்று முருக்கை வாங்கிக்கொண்டு மரப்பாவையை எடுத்துக்கொண்டு வெளித்திண்ணையிற்போய் அந்தமுருக்குகளைக் கிள்ளிக்கிள்ளி வைத்துச் சமயல்பண்ணிப் போஜனம்பண்ணினதாகவும் அந்தப்பாவைகளையே கட்டிப்புருஷுவதை ஸ்திரீபுருஷ போகத்தைப் போகித்ததாகவும் சொல்லிக்கொண்டு வருகிறதுபோலு மறிக. [இ - து] ஞானிக்கும் அஞ்ஞானியைப்போலத் தேகாதி துவைதம் தோற்றுவதால் காமாதிகள்ளர்கள் உள்ளே நுழையார்கள். [எ - தி] பாலஸ்வாமிக்கும் ஸ்திரீகளைப்போல ஸ்தன்னியத்வயம் தோற்றுவதால் இன்னமொரு சிசுவும் நுழைவதற்கு இவருக்குச்சிசுனமிருப்பதால் இடங்கொடாததுபோலும், வீடுகளிற்போலக் கஜனாவில் அதிகப்பணமிருந்தாலும் துப்பாக்கிசகிதமான சிப்பாய் இருப்பதால் கள்ளர்கள் நுழைய இடமில்லாததுபோலு மறிக. ஐயா, இதுவரையில் ஆத்மாவையறியாத அஞ்ஞானிகளுக்கு ஒழியாத துக்கமே வருமென்றும், ஆத்மாவையறிந்த ஞானிக்குச் சுகம் வருமென்றும் சொன்னீர்களே, அதற்குச் சாக்ஷியாரென்று கேட்பாயாகில்,— சூடாலையும் சிகித்வசனும் இரண்டுபேர்களும் ஸ்திரீபுருஷர்களாயிருந்து வேதாந்தவிசாரம் குருமுகமாய்ப் பண்ணியும், அவர்களிற் சூடாலை ஏகாந்தத்திலிருந்து அனாத்மாவான தேகாதி பஞ்சகோசங்களையும் பஞ்சபூதபௌதிகங்களையும் நானல்லவென்று நேதித்துத்தள்ளிச் சர்வாதிஷ்டானமான சச்சிதாநந்தப் பிரஹ்மமே நானென்று சாக்ஷாத்காரமா யறிந்து ஜீவன்முக்திச்சுகத்திலிருந்து வாழ்ந்துகொண்டிருக்கும்போது, சிகித்துவசன் சிரவணம்பண்ணின அர்த்தத்தை மனனம்பண்ணாமல் மறந்து தேகாத்மபுத்தியோடே கூடிக்கொண்டிருந்து வரும்போது, ஒரு தினத்தில் அந்தப்புரத்திலிருக்கிற சூடாலையின் முகத்தைப்பார்த்து அதிசயமான சோபை காணப்பட்டதில், "ஓ பெண்ணே! யௌவனகாலத்திற்கூட உன்னுடைய முகத்தில் இவ்வளவு சோபை காணப்படவில்லையே, இப்போது இப்படிப்பட்ட சோபை காணப்படுவதற்குக் காரணமென்ன" என்று கேட்டதில், அவள் "அற்பமாயிருக்கிற தேகாதி நாமரூபாகாரத்தில் அகமென்கிற புத்தியைவிட்டு, அகண்டாகாரமாயிருக்கிற பிரஹ்மத்தில் அகமென்கிற புத்தி ஸ்திரப்பட்டிருப்பதாலும், கண்முதலான இந்திரியங்களால் அனுபவிக்கப்படுகிற விஷயசுகத்தைப் பாராமல் சகல பிராணிகளாலும் அனுபவிக்க யோக்கியமாயிருக்கிற அகண்டானந்தத்தைப் பிரமாதி சகலாத்மஸ்வரூபமாயிருந்து சர்வானந்தத்தை நான் அனுபவிப்பதாலும் என்னுடைய முகத்தில் இவ்வளவு சோபை காணப்படுகிறது" என்று சொன்னதைக்கேட்ட சிகித்துவசன், இவளிடத்தில் மகத்துவ

மான குருபுத்தி யில்லாததினால் இவளைத் தன்னுடைய ஸ்திரீயென்றும் சிறியவ ளென்றும் மூடையென்றும் நினைத்து இவள் சொன்ன பரமமான விவேகத்தை அபரமானயுக்தியால் நிந்தித்து வயிறுவெடித்துப்போகும்படி சிரித்துப்போட்டு ஸ்நானத்திற்குப்போனபின், இவள் இனிமேல் இந்த ஞானத்தைச் சூத்திர னுக்கு வேதோக்தமான யாகாதி கர்மங்களை பிராம்மணாள் எப்படி காண்பிக்க மாட்டார்களோ அப்படி இவனுக்குக் காண்பிக்கக்கூடாதென்று நிச்சயித்து இவனுக்குத்தெரியாமலே அஷ்டமாசித்தியையும் அப்பியாசித்திருக்கும்போது, காலாந்தரத்தில் இவனுக்கு ஜனனமரணதுக்கத்திலிருந்து கரையேறவேண்டு மென்று நினைப்புவந்து மூர்த்தி, தலம், தீர்த்தம், ஜப, தப, தான, தர்மம், யாகாதிகளைச்செய்து வந்ததிலும் துன்பந்தீராததைப்பற்றி ஒருநாள் பகலில் மடியில் வந்து உட்கார்ந்த சூடாலையைப்பார்த்து, ஆரண்யத்தில் வசிக்கிற பெரி யவர்களுக்கு யாதொரு சம்சாரதுன்பமுமில்லாமல் சுகமாயிருப்பதால் நானும் அப்படி ஆரண்யத்திற்குப் போகப்போகிறேன். நீ ராஜஸ்திரீயானதால் சிம் மம்முதலான துஷ்டமிருகங்களைக்கண்டு பயப்படுவாயானதால் நீ இவடத்தி லேயே இருந்து நான் செய்கிற ராஜ்யபரிபாலனத்தைச் செய்துகொண்டு வரு வாய். இதுவே பதிவிரதைகளுக்கு விதியென்று சொன்னதைக்கேட்ட சூடா லையும் விருத்தாப்பியத்திலல்லவா வனவாசம் போகவேண்டும். இப்போது யௌவனமாயிருப்பதால் போகத்தைவிட்டு மோக்ஷத்துக்கெத்தனிப்பது நியாய மில்லையென்று இப்படி ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு அவ்விரவில் இவள் நித்திரைசெய்யும்போது, ராஜா மெள்ள எழுந்திருந்து வனத்திற்குப்போன பின், இவள் விழித்து ராஜாவைக் காணாததால் ஆகாசமார்க்கமாய்ப்போய்ப் பார்த்ததில் இவன் அவ்விடத்திலொரு ஆசிரமம் உண்டுபண்ணி அதிலிருந்து சுஷ்கக்கிரியைகளைச் செய்துகொண்டு வருவதைக்கண்டு இவனிடத்திற்போய் ஞானோபதேசம்பண்ண இது சமயமில்லையென்று அந்தப்புரத்துக்கு வந்து ராஜ்யபரிபாலனத்தைப் பதினெட்டுவருஷம்வரை செய்தபின் முன்போல ஆகாசமார்க்கமாய்ப்போய் இவனைக்கண்டு விசனித்து இவனுடைய அறியா மையை இன்று கெடுப்போமென்று நிச்சயித்துக் கும்பமுனிவேஷத்தைத் தரித்து இவனுக்குமுன் அந்தரத்திலிருப்பதைக்கண்ட அவனும் பிரார்த்தித்து ஆசனங்கொடுத்து இருக்கச்சொன்னபடி இருந்து ஒருவருக்கொருவர் விருத் தாந்தங்களை விசாரிக்கும்போது இவள் தன்னுடைய பிதா நாரதர், அவர் ஒரு கால் கங்கைக்கரையில் ஜலக்கிரீடைசெய்கிற பெண்களுடைய ரூபத்தைக்கண்டு காமவிகாரத்தையடைந்து சுக்கிலஸ்கலிதமானதைக் கடத்திலிருக்கிற பாலில் விட்டு அதிலிருந்து நான் உண்டானதால் கும்பமுனி யென்றெனக்குப் பேர் வைக்கப் பிரஹ்மாவினிடத்திற்போய் பிரஹ்மஞானத்தை யடைந்து சுகமாய்ச் சஞ்சரிக்கிறேன். நீயாரென்று கேட்க, நான் சிகித்துவசராஜனென்றும், பிற வித்துன்பத்துக்காக அஞ்சி சூடாலைமுதலிய சகல சம்பத்துக்களையும்விட்டு வந்து தவம்பண்ணியும் துன்பந்தீரவில்லையென்னும்போது, கும்பமுனி "நீ

சாதுசங்கம்பண்ணுமல் கிரியையைப்பண்ணி வருவது மூடத்தனமல்லவா" என்று சொன்னதைக்கேட்ட இவனும் அது சரிதானென்று ஒப்பி நீங்களே என்னைக் கரையேற்றவேண்டுமென்று காலில் விழும்போது, அவள் நான் சொன்னதை நீ நம்பினுலல்லவா கரையேறலாமென்று சொன்னதைக்கேட்ட அவனும் வேதவிதிபோல நம்புகிறேனென்று சொன்னபின், இவள் ஒருவன் ரத்னம்தேடிப்போனதில் அகப்பட்ட நாகரத்தினத்தை அவமதிப்புப்பண்ணி வெகுகாலம் தேடியபின் துர்ப்பாக்கியத்தைக்கொடுக்கிற கல்லை ரத்தினமென்றெடுத்து வந்து கெட்டுப்போனதுபோலும், சங்கிலியிற்கட்டுப்பட்ட யானை தன்கொம்புகளால் சங்கிலிகளையறுத்துக் காட்டுக்குப் போகும்போது காலில் தவறிவிழுந்த மாவுத்தனைக் கொல்லாமல் காட்டுக்கு ஓடிப்போனபின், அந்த மாவுத்தன் காட்டில்வந்து கொப்பம்வெட்டி மூடியிருந்ததில் அந்தயானை வந்து விழுந்து தாபப்பட்ட கதைபோலுமென்று சொன்னதைக்கேட்ட அவ்வரசனும் இந்தக்கதைகள் யாருக்காகச்சொன்னதென்று கேட்டவுடன், நீ தான் என்று அனுபவமாய் ஒப்புவித்தபின், இவன் அழுது இனி நீர்தான் காப்பாற்றவேண்டுமென்று சொன்னதைக்கேட்ட அக்குருவும், சர்வத்தியாகம் செய்தால்தான் சுகம் வருமென்று சொன்னவுடன் இவன் தண்டுமுதலானவற்றைத் தீயிற்போட்டுச் சர்வத்தியாகம் செய்தேனென்று கூத்தாடும்போது நீ ஒன்றையும் தியாகம் செய்யவில்லை என்று சொன்னதும், மலையேறித் தேகத்தைவிட யத்தனிக்கும்போது கூப்பிட்டு 'இதைவிட்டதால் சர்வத்தியாகமாகாது' என்று சொன்னதைக்கேட்ட இவனும் 'இனித்தியாகம்செய்ய ஒன்றுமில்லையே' என்று சொன்னவுடன், யாதொன்றினுல் இத்தேகாதி சலிக்கிறதோ, யாதொன்று கர்ம ஜன்மங்களுக்குப்பீஜமோ அதுவே சர்வமென்றும், அதைத் தியாகம்செய்வதே சர்வத்தியாகமென்றும், அதற்குப்பேர் சித்தவிருக்ஷமென்றும், அதற்கு அகங்காரம் வேர், சங்கற்பம் சாகைகள். சங்கற்பத்தியாகம் கவுணம். அகங்காரத்தியாகம் முக்கியம். இதைத்தகிக்கக் கோகம் என்ற ஆத்மவிசாரமே தீயென்று சொன்னபடி இவனும் அப்படியே விசாரத்தால் அந்தச் சித்ததுருமத்தை யெரித்து நிருவிகற்பசமாதியையும் அடைந்தபின் அக்குருவால் எழுப்பப்பட்டுத் தன் அனுபவாநந்தத்தையும் தெரிவித்தபின் இவனுக்கு ராகத்வேஷவாசனையில்லையென்பதைச் சோதனையால் தெரிந்தபின் தன் நிஜவடிவத்தைக் காண்பித்து இருவரும் ஜீவன்முக்தர்களாய்ச் சுகித்திருந்த கதையை நீயுமறிந்து ஆத்மஞானத்தை அடைந்து திருப்தனுய் வாழக்கடவாய்.

## 143 - வது தரங்கம்.

கருத்துருத்துவ புத்தியுள்ளவரை ஜீவகிருத்தியம். பின் ஈசுவர கிருத்தியம்:—

எதுவரையில் தேகம் நான் பிரபஞ்சம் சத்தியமென்கிற புத்தியிருக்கிறதோ அதுவரையில்தான் ஜீவகிருத்தியம். பிற்பாடு ஈசுவரகிருத்தியம். [எ - தி]

சரீரம் ஜீவித்திருக்கும்வரை பிதாவின் கிருத்தியமாயும் செத்தபிற்பாடு பிள்ளையினுடைய கிருத்தியமாயுமிருப்பதுபோலவறிக. [இ - து] கருத்துருத்துவம் போனால் இந்திரியங்கள் சோர்ந்துபோம். [எ - தி] தகப்பனுக்கு உத்தியோகம் போனபிறகு குழந்தைகள் இளைத்துப்போவதுபோலும், சுக்கிலம் விழுந்தவுடன் சிசுனம் சோம்பிப்போவதுபோலுமறிக. [இ - து] ஜீவ உபாதி துக்கம், ஆத்ம உபாதி சுகம். [எ - தி] உத்தியோகமும் ராஜிநாமாவும்போலும், ஸ்நானம் பண்ணினகாலத்தில் ஜடைத்தம்பிரானுக்கும் மொட்டைத்தலையனுக்கும் துக்கமும் சுகமும் வருவதுபோலவறிக. [இ - து] நான் பிரஹ்மமென்று உறுதியாயிருந்தவனுடைய தேகரக்ஷணைமட்டும் ஈசுவரனே வகிப்பன். [எ - தி] ராஜாவின் க்ஷேமத்துக்காகத் தெய்வாராதனைபண்ணுகிறவனுடைய கிருககிருத்தியமெல்லாம் ராஜாவே பார்த்துக்கொள்ளுவதுபோலவறிக. ஐயா, ஜீவசிருஷ்டியின் சொரூபத்தையும் ஈசுவரசிருஷ்டியின் சொரூபத்தையும், ஜீவசிருஷ்டியால் துக்கம் வருமென்பதையும் ஈசுவரசிருஷ்டியால் பந்தரூபமான துன்பமில்லையென்றும், அது முக்திசாதனமென்பதையும் நன்றாய்த்தெரியும்படி அனுக்கிரகிக்கவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன். கேள்:—பஞ்சபூதங்களும், அதிலுண்டான தேவ மனுஷ்ய திரியக்காதிகளான சரீரங்களும், சப்தாதி பஞ்சவிஷயங்களும், எது எது ரூபமாய்த்தோற்றுகிறதோ அவையெல்லாம் ஈசுவரசிருஷ்டியாம். ஜாதி வர்ண ஆஸ்ரமமுதலானவைகளும் யான் எனதென்கிற அபிமானங்களும் ஜீவசிருஷ்டியாம். ஜீவசிருஷ்டிக்கு ரூபமில்லாமல் நாமமாத்திரமாயிருப்பதேயாம். ஈசுவரசிருஷ்டியான கல்லு மண்ணு மாமுதலானவைகளை ஜீவர்கள் புத்தியினாலேயும் கர்மத்தினாலேயும் வீடு கோவில் தேர்முதலான விவகாரங்களுக்கு யோக்கியமாய்ச் செய்துகொள்ளுவதுந்தவிர 'இது என்னது இது அவனது' என்று அபிமானித்து ராகத்துவேஷத்தைப் பண்ணிக்கொண்டு அதனால் சுகதுக்கத்தையும் அனுபவிக்கவேண்டியதாய் வரும். ஈசுவரசிருஷ்டியில்லாத சொப்பனம் மனோராச்சியங்களில் ஜீவசிருஷ்டி உண்டானதுகொண்டு சகலஜீவர்களுக்கும் சகலவிதமான சுகதுக்கங்களும் காணப்படுகின்றன. சுழுப்தியில் சரீராதி ஈசுவரசிருஷ்டியிருந்தும் ஜீவசிருஷ்டியான அந்தக்கரணகற்பனை பிரவர்த்தியாதது கொண்டு ஒருவருக்கும் சுகதுக்காதி சம்சாரமில்லை. [எ - தி] ஒருராஜா தன் படைகளை மற்றொருதேசத்திற்கு யுத்தத்திற்கு அனுப்பிவைத்திருந்ததில் அந்த ஈசுவரசிருஷ்டியான படைகள் எதிரியாற் கொல்லப்பட்டிருந்தும் அந்தச் செய்தியை அவர் கேளாதிருக்கும்வரை யாதொருவிதமான துக்கங்களுமில்லாதிருந்தும் அந்தச்சேதி கேட்டபின் நம்முடைய படைகளென்ற ஜீவசிருஷ்டி மாறினவுடன் அவனுக்குத் துக்கம் வந்ததையும், இருட்டில் கள்ளனென்று நினைத்து தன்பிள்ளையை வெட்டினவன் விடிந்தபின் தன்பிள்ளையென்று தெரிந்தவுடன் துக்கப்பட்டகதைபோலும்; ஜீவசிருஷ்டியினாலேயே சகலருக்கும் துக்கம் வருகிறது, ஈசுவரசிருஷ்டியினால் பந்தமில்லை, அதுபோனாலும் முக்தி

யில்லை. அதெப்படியென்றால், பிரளயத்தில் சகலஜகத்தும் லயித்துபோ யிருந்தும் குருசாஸ்திர விசாரத்தாலுண்டாகிற ஜீவத்துவநிவர்த்தியான ஞான மில்லாமையால் ஒருவருக்கும் முக்திவரவில்லை. ஞானிகளுக்குத் தேகாதிஜகத் துத் தோன்றிக்கொண்டிருந்தும் ஜீவத்துவநிவர்த்தியான ஞானமிருப்பதால் துக்கரூபமான பந்தமில்லாமல் ஜீவன்முக்திச்சுகத்தை யடைந்து வாழ்வதால் ஜீவசிருஷ்டியினாலேயே துக்கம் வருகிறதென்றறியத்தக்கது.

## 144 - வது தரங்கம்.

பக்குவி அபக்குவிகளின் தன்மை:—

ஆத்மசொரூபமான குருவைக்கண்டு அபக்குவிகளான அஞ்ஞானிகள் பய ப்படுவானேன்? பக்குவிகளான முமுக்ஷுக்கள் பிரியப்படுவானேனென்றால், நாயகனுடைய சிசுனத்தை அபக்குவிகளான பெண்கள் கண்டு பயந்தோடுவா னேன் பக்குவிகளான பெண்கள் பக்ஷத்துடன் பரிந்துபார்த்துப் பக்ஷணமுத லான வஸ்துக்களைக்கொடுத்து அவனுடன் சேர்ந்து பரமானந்தத்தைப் பெறு வானேன் சொல்? [இ - து] பிரஹ்மஞானம் லகுவென்றுசொன்ன சுருதிக்கும் பிரயாசமென்றுசொன்ன சுருதிக்கும் தாத்பர்யமெப்படியெனில், குருவாக் கியத்தை விசுவாசத்துடன் நம்புகிறவனுக்கும், விஷயாசை விட்டவனுக்கும், இந்திரியநிக்கிரகமுள்ளவனுக்கும், நாம் யாரென்று சதா விசாரிப்பவனுக்கும், அந்தர்முகமாய்த் தன்னையே நாடுகிறவனுக்கும், சாதுசங்கதியை விட்டுப்பிரி யாதவனுக்கும், ஜனனமரணதுக்கம் தோன்றினவனுக்கும், இத்தேகம் க்ஷண த்தில் போய்விடுமென்று பார்க்கிறவனுக்கும், தாபத்திரயதுன்பம் சகிக்காதவ னுக்கும் ஞானம் லகுவென்பதும், பின்னாலே பார்த்துக்கொள்ளுவோமென்று நினைக்கிறவன் தன் தேகத்தைப்பின்னால் பார்க்கமுடியாததுபோலும், கண்ணுக் குப்பின்னாலேயிருக்கிற தன் பிடரி தெரியாதென்ற பழமொழிபோலும் மேலே சொன்ன குருபக்திமுதலான ஒன்பதுமில்லாதமற்றவனுக்குப் பிரயாசமென் றறிக. [இ - து] பிரஹ்மவிசாரம் பண்ணுகிற விவேகிக்கு மரணகாலத்தில் விஷயத்தில் ஆசையுண்டானால் அவனுக்கொருக்காலுங் கதியில்லையென்றும், பிரஹ்மாப்பியாசிக்கு ஞானம்வருமுன்னம் சரீரம் மரித்தால் துர்க்கதி அடை யாமல் புண்ணியபோகத்தைப் புஜிக்கிறானென்றும் சொல்லியிருக்கிறதற்கு யுக்தி:—ராஜாவின் ஆக்ஞைப்படி திரவியங்களை வாங்கிக்கொண்டு குதிரைகள் வாங்கத் தெற்கு வடக்காகப்போகிற இருவர்களில், ராஜாவினிடத்தில் குதிரை வாங்க வாங்கிப்போன பணத்தை மாணிக்கவாசகர்போல மோசம்பண்ணினவ னுக்குத் தண்டனையும், கள்ளன்கையில் பறிகொடுத்தவனுக்குப் பிரமோஷனும் கொடுக்கிறதுபோலவறிக. ஐயா, மகாசாந்தர்களாயும் மகாதயாளுவாயும் மகாதாதாவாயும் மகானந்தபுருஷர்களாயுமிருக்கிற சற்குருக்களையும், சம்சார சமுத்திரத்திற்குக் கப்பலாகவும் அஞ்ஞானாந்தகாரத்திற்கு ரத்னதீபமாயும் ஜனனமரணமாகிற பசிக்கு தேவாமிர்தமாயுமிருக்கிற வேதாந்தசாஸ்திரத்தை

யுங்கண்டு அபக்குவிகள் பயப்படுவார்கள், பக்குவிகளானவர்கள் மேலே சொன்ன லக்ஷணங்களோடேகூடியிருக்கிற சற்குருக்களையும் சற்சாஸ்திரத்தையும் வெகுபிரயாசைப்பட்டுத்தேடி அடைவார்கள் என்பதற்கு யுக்திகள்:— செவிடர்கள் அதிரகசியமாயும் அழியாத நித்யத்வத்தைக்கொடுக்கிற அமிர்தமாயும் பரமமூடர்களுக்குக்கூட பரமோக்ஷத்தைக் கொடுக்கிறதாயுமிருக்கிற வசனாமிர்தத்தை அலக்ஷியம்பண்ணுவதுபோலும், செவியுள்ளவர்கள் அந்த வசனாமிர்தத்தை விரும்பிக்கேட்பதுபோலும்; குருடர்கள் அதிரூபலாவண்ணியமான அப்சரஸ்திரீகள்போலிருக்கிற ரூபங்களை விரும்பாமல் கண்ணுள்ளவர்கள் அதை விரும்பிப்போய்ப்பார்ப்பதுபோலும்; மிகுந்த வியாதியால் நாவு கசந்துபோயிருக்கிற புருஷன் தேவாமிர்தம்போலிருக்கிற போஜனத்தை நாவில் கொண்டுவந்துபோட்டாலும் துப்பிப்போடுவதும் பசித்தவன் அதை விரும்பிப் புஜிப்பதுபோலவென்றறிக.

## 145 - வது தரங்கம்.

அஞ்ஞானிக்கும் ஞானிக்கும் சுகம், நடுநாடனுக்கில்லை :—

நன்றாய் பந்தப்பட்டவனுக்கும் விடுபட்டவனுக்கும் துக்கமில்லை, நடுநாடனுக்குத்தான் துக்கம். [எ - தி] தாசிக்கும் பதிவிரதைக்கும் பயமில்லாமல் குலத்திலிருந்து விபசாரம்பண்ணுகிறவளுக்குப் பயமுண்டாவதுபோல வறிக. [இ - து] நன்றாய் பந்தப்பட்டவனுக்கும் நன்றாய் பந்தத்திலிருந்து விடுபட்டவனுக்கும் சுகமுண்டு, நடுநாடனுக்குச் சுகமில்லை. [எ - தி] பிரசவியாத மலடிக்கும் பிரசவித்தபின்பிள்ளையைச் சீராட்டுகிறவளுக்கும் சுகமுண்டாவதுபோலும், பிரசவவேதனையெடுத்துப் பிள்ளை கீழேவிழாமல் சங்கடப்படுகிறவளுக்குத் துக்கமுண்டாகிறதுபோலும்; இறந்துபோனவனுக்கும் காயசித்தியானவனுக்கும் துக்கமில்லாமல் தீர்க்கவியாதியால் சங்கடப்படுகிறவனுக்குத் துக்கமுண்டாவதுபோலும், நித்தியதரித்திரனுக்கும் ரசவாதம்சித்தித்திருக்கிறவனுக்கும் கள்ளர்களிடத்தில் பயமில்லாமலிருப்பதும், சொற்பதிரவியங்களை வைத்துக்கொண்டிருக்கிறவனுக்கு கள்ளர்களிடத்தில் பயமுண்டாவதுபோலும்; ஸ்தன்னியமுண்டாகாத குழந்தைகளுக்கும் தூரம்போன கிழவிகளுக்கும் புருஷர்களிடத்தில் பயமில்லாததுபோலும், ஸ்தன்னியம் வீங்கியுடைந்து யோனிவழியாய் ரத்தம் பெருகுகிறவளுக்கு புருஷர்களிடத்தில் லச்சையும் கர்ப்பபயமும் ஈஎறும்புகளுடைய பயமுண்டாவதுபோலும்; விளைந்த நெல்முதலான தான்யங்களை அறுத்துக்கண்டுமுதல்செய்து வீட்டில் களஞ்சியத்திற்போட்டு பூட்டுமுதலானதால் பந்தோபஸ்து செய்திருக்கிறவனுக்கும், பூமியில் விவசாயமே பண்ணாதவனுக்கும் அதிவிருஷ்டியாலும் அனாவிருஷ்டியாலும் கள்ளர்களாலும் விட்டில் சிறகிமுதலான பக்ஷிகளாலும் பயமில்லாமலிருப்பதுபோலும், விவசாயம்பண்ணியிருக்கிறவனுக்கு மேலேசொன்னவைகளால் பயமுண்டாவதுபோ

லும்; ஜலத்தில் நன்றாய்ப் பிராதஸ்னானம் பண்ணினவனுக்கும், அறைக்குள் ஜாக்கட்டுகளைப் போட்டுக்கொண்டு போர்வைகளைப் போர்த்திக்கொண்டிருக்கிறவனுக்கும் குளிருடைய பயமில்லாமலிருப்பதும், தீர்த்தக்கரையில் காலமேபோய் ஸ்நானம் பண்ணுகிருக்கிறவனுக்கு குளிரினுடைய பயமுண்டாவதுபோலும்; சர்க்கார்வேலையை ராஜிநாமா கொடுத்திருக்கிறவனுக்கும் சர்க்கார்வேலைக்கே போகாதவனுக்கும் ராஜாவுக்கும், அவன் விதித்திருக்கிற சட்டங்களுக்கும் பயமில்லாதிருப்பதும், சர்க்கார்வேலையை ஒப்புக்கொண்டு வேலைபார்த்துவருகிறவனுக்கு ராஜபயமும் சட்டவிதியின் பயமுண்டாவதுபோலும்; வீட்டைவிட்டு வெளியேறுதவனுக்கும் தன் வீடுபோய் சேர்ந்தவனுக்கும் வண்டி ஆட்களினுடைய சகாயத்தின் அபேக்ஷையில்லாததுபோலும், வழிநடப்பவனுக்கு அச்சாதனங்களுடைய அபேக்ஷையிருப்பதுபோலும்; சின்னப்பிள்ளைகளுக்கும் அதிவயதுள்ள விருத்தனுக்கும் மன்மதனுடைய விகாரபயமில்லாமலிருப்பதும், யௌவனபுருஷர்களுக்கு மன்மதனுடைய பாணத்தால் அடிக்கப்பட்டு காமவிகாரத்தால் தாபத்தையுடையவனாய் அபலைகளான ஸ்திரீகளைக் கெஞ்சவேண்டியிருப்பதுபோலும்; அனுமார் சுகப்பிரஹ்மரிஷி முதலானபேர்களை ஸ்திரீகள் சுயமாய் வந்து பலாத்காரம் பண்ணிப்பார்த்ததிலும் அவர்கள் அந்தக்காமவிகாரத்தை அடையாமல் துரும்பாய் நினைத்துத்தள்ளினகதையையும், வசிஷ்டர் ஸ்திரீயோடே சதா இருந்தும் சுகியாயிருந்ததும், ராவணன் அநேகமான தேவ கந்தர்வ கின்னர கிம்புருட நாககன்னிகைகளுடைய போகத்தைச்செய்துகொண்டு வந்தும் மனுஷஸ்திரீயான சீதையை சரணாகதம்பண்ணி கெஞ்சினகதைபோலும்; பிரகஸ்பதிக்குச் சமானமான வாக்குமிக்கும் ஊமையனுக்கும் சபையில் அவமானம்வராதிருப்பதும், சொல்பம் படித்தவனுக்குச் சபையில் அவமானம்வருவதுபோலும்; சுத்தமாய்க் கையாலாகாதவனுக்கும் அர்ஜுனன்போலேயிருக்கிற அதிசூரனுக்கும் அபஜயம்வராமல், கொஞ்சம் வில்வித்தை கற்றவனுக்கே அபஜெயம்வருவதுபோலும்; தாஷ்டாந்தத்திலும் தேகம் நான், பிரபஞ்சம் சத்தியம், பெண்டாட்டி பிள்ளை பணம்முதலானதுகளே ஆனந்தம், அவர்களோடே சேர்ந்து இகலோக விஷயசுகத்தை யனுபவிப்பதே மோக்ஷமென்றெண்ணி இருப்பவனுக்கும், திடமான பிரம்மக்ஞானிக்கும் புண்ணியபாபத்தைக்குறித்து பரலோகசிந்தையில்லை, இந்ததேகத்துக்கு வேறாயிருக்கிற கர்த்தாவே நானென்றிருக்கிற நடுநாடனுக்கே பரலோக துக்கசிந்தனை சதா வருமென்றறிக.

## 146 - வது தரங்கம்.

மூடசங்கத்திற்கும் சாதுசங்கத்திற்குமுள்ள நன்மை தீமை:—

அணை கொஞ்சமாயிருந்தால் பிரவாகமானது பயிரை விளைவிக்கிறதாயும் நீண்டகாலம் ஜன உபயோகமாயுமிருக்கிற அணையைக்கரைத்துப்போடும், ஜலப் பிரவாகம் கொஞ்சமாயிருந்தால் அதைப் பெரிய அணையானது அடைத்துப்

போடும். அப்படிப்போல சாதுசங்கம் கொஞ்சமாயிருந்தால் சம்சாரதுக்கங் கொடுக்கிற மூடசங்கம் அதைக்கரைத்துப்போடும், மூடசங்கம் கொஞ்சமாயிருக்கும்பக்ஷத்தில் தடையற்றஆனந்தத்தைக் கொடுக்கிறதாயிருக்கிற சாதுசங்கம் அதை யடித்துப்போடும். ஐயா, மூடர்களிடத்தில் சகவாசம்பண்ணினவன் கெட்டுப்போவனென்றும் சாதுக்களிடத்தில் சகவாசம்பண்ணினவன் மேன்மையைப்பெறுவனென்றும் சொன்னீர்களே, அதற்கு சுருதி யுக்தி அனுபவமென்னவென்று கேட்பாயாகில், அதற்குச் சமாதானம் சொல்லுகிறேன். கேள்:—ஒரு பிராம்மணன் ஒருவனத்தில் போகும்போது இரண்டு பாதை பிரிவதில் அதில் ஒருபாதைவழியாய்க் கொஞ்சதூரம் போகும்போது, அவிடத்தில் ஒரு குடிசை வாசலில் கூட்டிலிருக்கிற ஒருகிளியானது 'ஆள் வருகிறது கத்தி எடுத்துக்கொண்டுவந்து வெட்டுங்கள் குத்துங்கள்' என்று கூப்பிடுகிற சப்தங்களைக்கேட்ட அந்தப்பிராம்மணன் வந்தவழியாய் ஓடிப்போய் மற்றொரு பாதை வழியாய் ஓடிப்போகும்போது, அதுபோலவே குடிசைவாசலில் கட்டியிருக்கிற கூட்டிற்குள்ளிருந்த கிளியானது, "ஒருபிராம்மணர் வருகிறார். பத்திரம் புஷ்பம் பலம் அர்க்கியபாத்தியமுதலானதை யெடுத்துக்கொண்டு வந்து பூஜியுங்கள்" என்று சொன்னபிரகாரம் ரிஷிகுமாரர்கள் அப்படியே அதுகளை எடுத்துக்கொண்டு வந்து அவரைப் பூஜித்துவிட்டுப்போனபின், அந்தப்பிராம்மணன் அந்தக் கிளியைப்பார்த்து, அந்தமார்க்கத்தில் உன்னைப்போலேயிருக்கிற ஒரு கிளியானது வெட்டு குத்து என்று சொன்னதற்கும், நீ இப்படி பத்திர புஷ்பங்களைக்கொண்டு பூஜியுங்களென்று சொன்னதற்கும் காரணமென்ன? அந்தப் பக்ஷிக்கும் உனக்கும் சம்பந்தமுண்டா? என்று கேட்டதற்கு அந்தக்கிளியானது சொன்னதென்னவென்றால்; எனக்கும் அந்தக் கிளிக்கும் தாயுந்தகப்பனும் ஒன்றே, நாங்களிருவரும் உண்டானதும் ஒரே காலத்திலேயே, என்னை இந்தச்சாதுக்களான ரிஷிகள் கொண்டுவந்து வளர்த்தார்கள். அதைக் கோமாம்சம் சாப்பிடுகிற சண்டாளர்கள் கொண்டு போய் வளர்த்தார்கள். எனக்கிந்தரிஷிகளுடைய சகவாசத்தால் இந்தச் சன்மார்க்கம்பிடிபட்டது. அதற்கு அந்ததுஷ்டர்களுடைய சகவாசத்தால் அந்தத் துன்மார்க்கம் பிடிபட்டிருக்கிறதை தங்களுடைய அனுபவத்தில் பிரத்தியக்ஷமாய்க் கண்டதால் நல்லநடை யுண்டாவதற்கு சத்சங்கமும் கெட்ட நடத்தை யுண்டாவதற்குக் கெட்டசங்கமும் காரணமாயிருக்கிறதென்று சொன்ன பாரதக்கதையே சுருதியென்றறிக. ஒரு ஜலமே காயவைத்த இரும்புச்சட்டியில் விழுந்தமாத்திரத்தில் அந்தஜலம் போனவிடந் தெரியாமல் நசித்துப்போவதையும், அந்த ஜலமே தாமரையிலையில் விழுந்த மாத்திரத்தில் முத்துப்போலே காணப்படுவதையும், அந்தஜலமே சமுத்திர மத்தியிலிருக்கிற கிளிஞ்சிவயிற்றில் விழுந்த மாத்திரத்தில் தேவார்கமாயும் வெகு விலைபெறக்கூடியதாயுமிருக்கிற முத்தாகவே ஆகுவதைப்பார்த்து, அதமனையும் மத்திமனையும் உத்தமர்களாயுள்ள பெரியோர்களையும் அடைந்தவர்

கள் முறையே கெட்டுப்போவதையும், பூர்வஸ்திதிக்கு மேற்படாமல் பார் வைக்குமட்டும் மேன்மையை யடைந்ததுபோலே தோற்றுவதையும், ஜீவத் தன்மை போய் மேலான பிரம்மத்தன்மை யடைகிற அனுபவத்தையும் பார்த் துக்கொண்டு, நீயும் பெரியவர்களான சற்குருவையும் சாதுக்களையும் சரணமாக அடைந்து அவர்களிடத்தில் சதா வசிக்கவேண்டும். அப்படி வசிக்குங்காலத் தில், அவர்களிடத்தில் ராகத்துவேஷங்களையும் குணதோஷங்களையும் மானபி மானங்களையும்விட்டு எப்போதும் அவர்களுடைய சிஸ்ருஷைகளையும் சம்ரக்ஷ ணைகளையும் செய்துகொண்டு பிரமாப்பியாசம் இடைவிடாமற்பண்ணி அஞ்ஞா னாதிகளை நிவர்த்தித்துத் தத்வக்ஞானியாய் ஜீவன்முக்தனாய் கிருதகிர்த்தியனாய் வாழ்ந்துகொண்டிருக்கக்கடவாய்.

## 147 - வது தரங்கம்.

சமத்துக்கு வைராக்கியமும் தமாதியும் முன்னும் பின்னும் சாதனம்:—

மனோநிக்ரகமான சமத்துக்கு முன்னால் வைராக்கியமும் பின்னால் தமம் முதலானதுகளுஞ் சாதனமாயிருக்கிறது. [எ - தி] புஸ்தகத்தை ரக்ஷிப்பதற்கு முன்னட்டை பின்னட்டை சாதகமாயிருப்பதுபோலும், தேரோடுவதற்கு முன் வடத்தை யிழுக்கிறதும் பின்னால் செம்புதடி போடுகிறதும் சாதகமா யிருப்பதுபோலும், பிள்ளை படிக்கிறதற்கு வாத்தியார் ஆள்விட்டழைக்கிற தும் வீட்டிலிருக்கிற தாய் பக்ஷணங்கொடுத்தனுப்பிவைக்கிறதும் சாதனமா யிருப்பதுபோலவறிக. பக்ஷிக்கு இரண்டுசிறகு வேண்டுவதுபோல முமுக்ஷு வுக்கு விவேகம் வைராக்கியமிரண்டும் வேண்டுமென்று என்னத்துக்கு சொல்லி யிருக்கிறதென்றால், விவேகமில்லாமற்போனால் சொரூபநிச்சயம் வாரா தாகையாலும், வைராக்கியமில்லாதிருந்தால் விஷயாசை போகாததாலும் இரண் டும் வேண்டுமென்றறிக. அதற்கு யுக்தி:— நடக்கிறவனுக்குக் கண்ணுங்காலும் வேண்டுவதுபோலவறிக. ஆனால் ஞானம் ஒன்றினாலேயே முக்திவருமென்று சொல்லியிருக்கிறதே இங்கே யிரண்டும் வேண்டுமென்று சொன்னது விரோத மல்லவாவென்றால்,— விரோதமன்றியில் சமாதானம் சொல்லுகிறோம். நடக் கிறவனுக்குக் கால்முக்கியமாயும் கண் அமுக்கியமாயும், புஸ்தகம் பார்க்கிறவ னுக்குக் கண் முக்கியமாயும் கால் அமுக்கியமாயுமிருப்பதுபோல சமாதிபண் ணுகிறவனுக்கு வைராக்கியம் முக்கியமாயும் விவேகம் அமுக்கியமாயும், சொரூ பநிச்சயம்பண்ணுகிறவனுக்கு விவேகம் முக்கியமாயும் வைராக்கியம் அமுக்கிய மாயுமிருக்கும். ஆகையால் பாகியேந்திரிய நிக்ரகமான வைராக்கியம் வேண் டாமென்றில்லையென்று கருத்து. [இ - து] சாதனங்களின் நடுவிலே சமதமாதி களை வைத்திருப்பதற்கு யுக்தி:—நாகரத்னத்தை நடுஅறையில் நடுப்பெட்டியில் வைத்திருப்பதுபோலவறிக. ஐயா, பஞ்சதசப்பிரகரணத்தில் வைராக்கியம் ஞானம் உபரதி இந்த மூன்றுக்குள் வைராக்கியத்துக்கு ஹேது விஷய தோஷ

திருஷ்டியென்றும், அவ்விஷயத்தைக் கண்டமாத்திரத்தில் அருவருப்புண்டாய் அதைத்தள்ள இச்சையுண்டாவது சொரூபமென்றும், அப்படித்தள்ளின விஷயத்தைக்குறித்து திரும்ப அதைரியமுண்டாகாமல் தீரதையாயிருந்து விஷயத்தைத்தள்ளுவது காரியமென்றும், பிரஹ்மலோகம்வரையிலுள்ள விஷயபோகங்கள் சுயமாய்வந்தாலும் அதுகளைத்துரும்பாக எண்ணித்தள்ளுதல் அவதியென்றும், பலம் பிரஹ்மலோகமென்றும்; ஞானத்துக்கு சிரவண மனன நிதித்தியாசனங்களே ஹேதுவென்றும், நிஜமான சச்சிதானந்தத்தையும் பொய்யாயிருக்கிற நாமரூபத்தையும் பிரித்து தேகாதிநாமரூபங்கள் நாமல்ல, சச்சிதானந்த பிரஹ்மமே நாமென்றறிவதே சொரூபமென்றும், திரும்ப ஹிருதயகிரந்தியுண்டாகாமல் சாக்ஷித்வஞானத்தைப் பாதுகாத்துக்கொண்டிருப்பதே காரியமென்றும், முந்தி தேகாத்மக்ஞானம் திடமாயிருந்ததுபோல இப்போது பரமாத்மாவே நானென்ற திடக்ஞானமே ஞானத்துக்கு அவதியென்றும், ஜனனமரண ரகிதமான மோக்ஷமே பலமென்றும்; உபரதிக்கு இயம நியம அஷ்டாங்கயோகம் ஹேதுவென்றும், சங்கற்பத்தைத்தடைசெய்வதே சொரூபமென்றும், உள்ளிலும் வெளியிலும் யாதொருவிதமான விவகாரங்களுமில்லாமற் பண்ணுவதே காரியமென்றும், சுழுப்திபோலே ஜகத்தை மறப்பதே அவதியென்றும், பிரஹ்மசாமீப்யமே பலமென்றும்; இப்படி இந்த மூன்றையும் வேறுவேறாகப்பிரித்து வைராக்கிய உபரதிகள் பூர்ணமாயிருந்து ஞானம் தடைபட்டவனுக்கு மோக்ஷமில்லை, தபோபலத்தால் புண்ணியலோகமென்றும்; ஞானம் பூர்ணமாய் மற்றிரண்டும் தடைபட்டிருந்தாலும் மோக்ஷம்வருவது நிச்சயமென்றும், திருஷ்டதுக்கம் நசியாதென்றும் சொல்லியிருக்கத் தாங்கள் ஞான வைராக்கியங்களைசமமாய்ச்சொன்ன காரணமென்னவென்றால்,— அவ்விடத்தில் சாத்தியத்தைப் பிரதானமாய்ச்சொன்னவிடமென்றும், இவ்விடத்தில் அப்யாசிக்குச் சொன்னதென்றுமறியத்தக்கது.

## 148 - வது தரங்கம்.

*விவேகியாகிய நீ விஷயசங்கற்பத்தை விடவேண்டியது :—*

சிதாகாசமே தானென்றறிந்ததாலும் மற்றது பொய்யாய்ப் போய்விட்டதாலும் ஜகத்தைக்குறித்து நினைக்கத்தேவையில்லை, எல்லாம் பிரஹ்மமென்றறிந்தாலும் நினைக்கத்தேவையில்லை, ஜகத்து தனக்கு வேறென்றாலும் ஊரார் வீட்டுக்காரியத்தை நினைக்கத்தேவையில்லை, மேலும் தீ சுடுகிறதென்றாலும் தண்ணீர் குளிர்ச்சியாயிருக்கிறதென்றாலும் கல்லு கெட்டியாயிருக்கிறதென்றாலும் அதது சுபாவமாயிருக்குமேதவிர இவன்சொல்லுவதால் ஒரு பிரயோஜனமுமில்லாததுபோல நீ நினைப்பதால் யாதொரு பிரயோஜனமுமில்லை. ஆகையால் நடந்ததை நினைத்தால் சஞ்சிதகர்மமும் வாசனையும் சித்தமும் அஞ்ஞானமும் துக்கமும் காலம்வீணாய்ப்போவதும் வரும், வரப்போகிறதை நினைத்தால் ஜங

மஹேதுவான ஆகாம்யகர்மமும் ஆசையும் விபரீதபாவனைகளும் விருத்தியாகும், வர்த்தமானத்தைக்குறித்து நினைத்தால் பிராரப்தகர்மமும் ராகத்வேஷமும் விஷயாசக்தியும் விருத்தியாகும். ஆகையால் சங்கற்பத்தை விட்டிருக்கிறவனே சுகியென்றறியவேண்டியது. [இ - து] விவேகி ஒரு சங்கல்பத்துக்கிடங்கொடுத்தால் அதைப்பற்றி ஓயாமல் சங்கற்பங்கள் பெருகிக்கொண்டேயிருக்கும். [எ - தி] தண்ணீர் குழாயைக்கொஞ்சம் திருகிவிட்டால் தண்ணீர் ஓயாமல் வந்துகொண்டிருப்பதுபோலும், கொஞ்சம் நித்திரைமயக்கத்துக் கிடங்கொடுத்தால் ஓயாமல் சொப்பனம் வந்துகொண்டேயிருப்பதுபோலவறிக. [இ - து] விஷயத்துக்கும் மனதுக்கும் சம்பந்தமில்லை. எப்படியென்றால், அந்தப்புரத்திலிருக்கிற ராஜஸ்திரீக்கும் வெளியில் குப்பையிற்கிடக்கிற துணிக்கும் சம்பந்தமில்லாததுபோலவறிக. [இ - து] விவகாரதிருஷ்டியில் பார்த்தாலும் கர்மப்படி முடிவதாயிருப்பதால் அப்படிப் பார்த்தாலும் இவன் இது வரவேண்டும் இது வரவேண்டாமென்று நினைக்கத் தேவையில்லை. [எ - தி] வெய்யிலெரிக்கும்போது இதுவேண்டாம் மழை வேண்டுமென்று இவன் நினைப்பதில் பிரயோஜனமில்லாததுபோலவறிக. [இ - து] ஒரு முமுக்ஷுவானவன் அத்வைதவாசனை பழகிக்கொண்டுவரும்போது மத்தியில் துவிதரூபமான ஒருவாசனை உதித்தால் அதன்மேல் கோடிவாசனை உண்டாகும். [எ - தி] கோபுரம்போலே செங்கல் பத்திபத்தியாயடுக்கியிருப்பதில் அடியில் ஒருசெங்கலை உருவினால் எல்லாம் மடமடவென்று சாய்வதுபோலவறிக. ஆகையால் துவிதவாசனைக்கு இடங்கொடுக்கக்கூடாது; கொடுத்தால் விடனை வீட்டுக்குள் வைப்பதுபோலும், விரைக்கோட்டைக்குள் எலியை வைப்பதுபோலுமறிக. வாசனையாலுண்டாகிற துவிதநினைப்புக்கிடங்கொடுத்தால் இந்திரியங்களுக்கும் பிராணன்களுக்கும் தேகத்துக்கும் மற்றஜனங்களுக்கும் சங்கடப்படக்காரணமாகும், அந்தநினைப்பை உடனே உள்ளேயே அடக்கிவிட்டால் ஒன்றுக்கும் சங்கடமில்லை.] [எ - தி] காமவிகாரத்தால் சிசுனம் கொஞ்சம் கிளம்பினால் மற்றஇந்திரியங்களுக்கும் தேகத்துக்கும் மற்றவர்களுக்கும் சங்கடமுண்டாகுவதும் அதை நிக்ரகம்பண்ணினால் எல்லாத்திற்கும் க்ஷேமமுண்டாவதுபோலும், ராஜன் யுத்தத்தைக்குறித்து நினைத்தால் சகலருக்கும் சங்கடமுண்டாவதும் அவன் அந்தநினைப்பை விட்டுவிட்டால் சகலருக்கும் சுகமுண்டாவதுபோலுமறிக. [இ - து] முமுக்ஷுக்களுக்கு இஷ்டம்போலே சங்கற்பம் வருகிறது, பின்னால் அதனால் அனந்ததுக்கம் உண்டாகிறது. [எ - தி] மித்ரன்போலே கூட்டிக்கொண்டுபோய்க் கழுத்தை யறுக்கிறவன் போலவாம். அதற்குக் குருசொன்னவுளவால் அந்தச் சங்கற்பம் வரும்போதே நான் சாக்ஷியென்ற விருத்தியான கத்தியால் வெட்டவேண்டுமென்றறிக. ஐயா, மனதுக்கு விஷயத்தைக்குறித்து கொஞ்சம் சங்கற்பிக்க இடங்கொடுத்தால் அந்தவழியாய் அனந்தகோடி சங்கற்பமும் அனந்தகோடி ஜன்மங்களும் வருமென்றும் சொன்னீர்களே, அப்படி வருகிறது அவிவேகிகளுக்கா அல்லது

விவேகிகளுக்காவென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரம் சொல்லுகிறோம். கேள்:—ஒரு சன்னியாசி விவேகியாயிருந்தும் கொஞ்சம் கண்ணைமூடிக் கொண்டு சமாதியைவிட்டு மனோராச்சியத்துக்கு இடங்கொடுத்தமாத்திரத்தில் அவருக்குச் சொரூபப்பிரக்ஞையும் விவகாரப்பிரக்ஞையும் மறந்துபோய் தன்னை ஜீவடனென்கிற ஒரு சுராபானம்பண்ணுகிற வேடனைக்கண்டு சஞ்சரித்துக் கொண்டு வந்ததில், அதிலும் மயக்கத்தால் தன்னைப் பிராம்மணனைக்கண்டு, அதிலும் மயக்கத்தால் தன்னை ராஜாவாய்க்கண்டு, அதிலும் மயக்கத்தால் தன்னை யானையாய்க்கண்டு, அதிலும்மயக்கத்தால் தன்னை மானைக்கண்டு கொடியிலிருக்கிற தளிர்களைச் சாப்பிட்டுக்கொண்டிருப்பதுபோலக்கண்டு, அதிலும் மயக்கத்தால் தன்னைக் கொடி ஜன்மமடைந்ததாகக்கண்டு, வாசனைரூபமான பரிசத்தால் தன்னை வண்டாகக்கண்டு தாமரசபுஷ்பத்திலிருக்கிற தேனைச் சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போது ஒருயானை வந்து அந்தத்தடாகத்திலிறங்கி அந்தத்தாமரைப்பூக்களை துதிக்கையால் கசக்குவதால் தான் இறந்துபோவதாய்க்கண்டு, அதிலும் மயக்கத்தால் தன்னை யானையாகக்கண்டு யுத்தத்தில் மரணமாய்ப்போவதுபோலக்கண்டு, பின்னும் அநேக ஜன்மங்களை அடைந்ததாகக்கண்டு கடைசியில் பிரஹ்மதேவர் ஏறுகிற ஹம்சபக்ஷியாய்த் தன்னைக்கண்டு பிரஹ்மா ஒருகாலத்தில் தன்பேரிலேறிக்கொண்டு கைலாசத்துக்குப் போனதாயும், அவிடத்திலிருக்கிற ருத்திரரைக்கண்டு தான் ஹம்சபக்ஷியென்பதை மறந்து தன்னை ருத்திரராகக் கண்டதின்பின், அந்த லோகத்துக்குப்போன விசேஷத்தினாலும் ருத்திரஜன்மத்தையடைந்த விசேஷத்தினாலும் பூர்வஞானத்தையும் சத்திய சங்கற்பத்தையுமடைந்து அவ்விடத்திலிருந்து பூமியில் வந்து சந்யாசியாய் மயங்கிக்கிடக்கிற மயக்கத்தைத் தெளிவித்து பிரக்ஞையோடே சந்யாசியாய் எழுந்திருந்து, அதன்பின் கண்ட நூறு ஜன்மங்களையடைந்த நூறு ஜீவர்களையும் அந்தப்பிரக்ஞையோடே சதருத்ரர்களாய் கைலாசத்துக்குப் போய் வசித்தார்களென்று வாசிட்டத்தில் சொல்லியிருக்கிற சதருத்திரன்கதையையும் கண்டு, விவேகிக்கே மனோராச்சியத்தில் நூறு ஜென்மம் வருமானால் அவிவேகிகளுக்கு மனோராச்சியத்தால் துன்பம்வருமென்பதில் கேட்கவேண்டியதென்ன? தரித்திரனுயுள்ள ஒருஇடையன் சுமைதூக்கி முக்கால்துட்டு வாங்கி கடைத்தெருவில் பிழைத்துக்கொண்டுவருங்காலத்தில், ஒருநாள் ஒருவன் கடையில்வந்து ஒருகுடம்நெய் வாங்கி இவனுக்குக்கால்ரூபாய் கொடுத்து தன் ஊர்வரை குடத்தைத்தூக்கிவரும்படி சொல்லிக் கூட்டிப்போகும்போது, இவன் மனோராச்சியத்தால் அந்தக்கால்ரூபாய்க்குக் கோழிவாங்கி அது விருத்தியாய் ஆடுவாங்கி அதுவிருத்தியாய் சம்பத்து விருத்தியானபின் கல்யாணம் செய்த பெண்ணிடத்தில் பிள்ளைபிறந்து அவன் இங்கிலீஷ்படித்து ஹேட் சிரஸ்தாவேலையாய் இவன் திண்ணையிலுட்கார்ந்திருக்கிறவனை அவன் சாப்பிடக் கூப்பிட இவன் நீ கச்சேரிக்குப் போவென்று தலையை ஆட்டினவுடன் நெய்க்குடம் கீழேவிழ உடையவன் உதைக்க அழுத கதைபோல வறிக.

## 149 - வது தரங்கம்.

மனதுக்கு வந்திருக்கிற அசுத்தத்தை நீக்கிச் சுத்தமாக்குவதே தனுமானசி:—

தேகாதிவாசனையுடன்கூடின மனது பிரஹ்மாப்பியாசத்தால் ரஜோகுண தமோகுணங்கள் போய்த் தன்ஸ்வபாவமான சத்துவகுணமாவதே தனுமானசி. [எ - தி] மகோதரவியாதி வந்தவனுக்கு மருந்துசாப்பிட்டு வடபத்ரோதரியாவதுபோலும், சேற்றில்கிடந்தரத்னம் மண்ணுங்கட்டிபோல அப்பிரகாசமாயும் பெருமனுமிருந்ததை சாணையில் நன்றாய்ப்பிடித்தபின் சூக்ஷ்மமாயும் பிரகாசமாயும் விளங்குவதுபோலும், தேங்காய் கூடுகொட்டாங்கச்சி முதலானதால் மறைபட்டு தூலமாயும் அப்பிரகாசமாயுமிருந்ததை உடைத்துத் துருவியபின் சூக்ஷ்மமாயும் வெளுப்பாயும் தித்திப்பாயும் ரம்மியமாயும் விளங்குவதுபோலும், எண்ணைவஸ்திரம் வெள்ளாவியால் பிரகாசமாவதுபோலுமறிக. [இ - து] மனதுக்குத் துவிதநினைப்பில் பிரியமிருந்தாலும் அத்வைதநினைப்பில் அப்பிரியமிருந்தாலும் இரண்டுவிதநினைப்பையும் நினைக்கக்கூடாதென்று புருஷப்பிரயத்தனத்தாலடக்கும்போது அத்வைதநினைப்புக்குத் தானேவரும். [எ - தி] சாரஸ்திரீக்கு சாரபுருஷர்களிடத்தில் பிரியமும் தன்நாயகனிடத்தில் அப்பிரியமுமிருந்தாலும் அவளை அறையிலடைத்துப் பூட்டுப்போட்டால் சொந்தநாயகனிடத்திலேயே ரமிக்கிறேன், மற்றவர்களைக்கனவில்கூட நினையேனென்று கெஞ்சி அப்படியே நடப்பதுபோலும்; வியாதிக்காக மருந்துசாப்பிடுகிறபிள்ளைக்கு பக்ஷணத்தில் பிரியமும் உப்பில்லாக்கஞ்சியில் அப்பிரியமுமிருந்தாலும் சுத்தப்பட்டினிபோட்டால் கஞ்சிகுடிக்கத் தானேவருவதுபோலுமறிக. [இ - து] போனஜன்மத்தில் குருமுகமாய் ஆத்மவிசாரமெல்லாஞ் செய்து கிஞ்சித்கர்மசேஷத்தால் வாமதேவர்முதலானவர்கள்போல ஜன்மமெடுத்தபுருஷனுக்குக் குருவில்லாமலே ஞானமுண்டாகும். [எ - தி] முதல்நாளே டிக்கட்டு வாங்கினபுருஷன் மறுநாள் டிக்கட்டுக்கொடுக்கிற அதிகாரியினிடத்தில் போகாமலே ரயிலேறிப்போவதுபோலும், பிதாவின்சம்பாத்தியமான ஐஸ்வர்யம் பூரணமாயிருக்கிறவனுக்கு புதிதாய் ஒருதொழில்செய்து சம்பாத்தியம்பண்ணிச் சாப்பிடத்தேவையில்லாததுபோலுமறிக. ஐயா, அஞ்ஞானிகளுடைய மனது எவ்வளவு விஷயபோகங்கிட்டினாலும் மேல்மேலும் ஆசைப்பட்டுக்கொண்டு திருப்தியையடையாமலிருப்பதற்கும் விவேகிகளுடைய மனது சொற்பபோகங்கிடைத்தாலும் அதைப்பெரிதாக நினைத்துத் திருப்தியடைவதற்கும் காரணமென்னவென்றால்,— அஞ்ஞானிகளுடைய மனது அவிவேகத்தால் அபிமானத்தையடைந்து ராகத்துவேஷங்களுடனேகூடிக்கொண்டு தேகாதிகளே நாம், இப்பிரபஞ்சம் சத்தியமென்றும், சிர்க்குச்சந்தனவனிதாதி விஷயங்களே ஆனந்தமென்றும், அந்தப்போகங்களை அனுபவிப்பதற்குமேல் நிரதிசயமான வாழ்வு ஒன்றுமில்லையென்றும், நமக்குச் சமானமாவது மேலாவது ஒருவரு

மில்லை யென்றும் நினைத்திருப்பதால் எவ்வளவுவிஷயலாபம் கிடைத்தாலும் பெரிதாய்த் தோன்றாது. [எ - தி] ஒரு சக்ரவர்த்தியானவன் எதிரிகள்முதலானவர்களினாலே ஜயிக்கப்படாதஹேதுவால் அவனிடத்தில் பின்னை ஒரு ராஜன் தன்ராஜ்யத்தை முழுமையுங்கொடுத்தாலும் அதை ஒருபொருளாக வகிக்காமல் அலக்ஷியமாய் இன்னமும் இவ்வுலகத்திலுள்ள சீமைகளெல்லாங் கட்டி ஆளுவோமென்று ஆசைப்படுவதுபோலவறிக. விவேகியினுடைய மனது நிஷ்காம்யகர்மத்தினாலும், சித்தசுத்தியாலும், விஷயவைராக்கியத்தாலும், இந்திரியம் மனசுகளுடைய நிக்ரகத்தாலும், சிரவண மனன நிதித்தியாசனத்தினாலும் சகலவிதமான ஆசைகளையும்விட்டு பிராரப்தபோகத்தை அனுபவிக்கக்கூட இடங்கொடாம லிருப்பதால் அந்தமனது சொற்பபோகங்கிட்டினாலும் அதை மகத்தாய்நினைக்கும். (எ - தி) ஒருஅரசன் தன்எதிரியால் தன் சீமையும் பறிகொடுத்து தானுங்கட்டுப்பட்டு சோற்றுக்குக்கூட மார்க்கமில்லாமலிருக்குஞ்சமயத்தில் அந்தஎதிரிராஜா இரக்கத்தால் இவனுக்குத்தினம் இவ்வளவுசோறு போடும்படி உத்தரவுகொடுத்தால் அதனாலவன் அதைக்கண்டு சந்தோஷப்படுவதுபோல நீயும் அகாலம்வரை மனதுக்குச் சோறுபோடாமலிருந்தால் மனது பசியால் ருசிபாராமல் போட்டதைச்சாப்பிட்டு சதா சொரூப சிந்தனம்பண்ணிக்கொண்டு, நல்ல நித்திரைவரும்வரை உட்கார்ந்து தியானம் பண்ணிக்கொண்டிருந்தால் அப்போது அந்தமனது மெத்தை தலையணைமுதலான சாதனங்களையபேக்ஷியாமல் சுழுப்திக்குப்போய் லயித்துச்சுகித்திருக்கும். ஆகையால் சொரூபானுசந்தானம்பண்ணுகிற தீவிரமுமுக்ஷுவானவன் இந்த ஜாக்ரத்தவஸ்தையானது நினைப்புரூபமாயும் மறைப்புரூபமாயுமிருப்பதால் நினைப்புவரும்போதெல்லாம் சொப்பனம்போலும் கானல்ஜலம்போலும் பொய் யென்று நிச்சயித்து மறைப்புவந்தால் இருட்டுப்போலும் சுழுப்திபோலும் சூன்யமென்று நிச்சயித்து இந்த நினைப்புமறைப்புக்கு நான் சாக்ஷியென்றறிய வேண்டியது.

## 150 - வது தரங்கம்.

### விவேகத்துக்கு அனுகூலமான வைராக்கியம் செய்யவேண்டியது:—

விவேகத்துக்கனுகூலமான வைராக்கியம் பண்ணவேண்டியது. அதாவது, புத்திரமித்திராதிகளிடத்திலிருக்கிற அபிமானம் விடுகிறது, புஜிக்கிறவிஷயத்திலிருக்கிற தோஷதிருஷ்டிபூர்வகமாய் அந்தவிஷயாபிமானத்தை விடுகிறது, சரீரத்துக்கு நல்லவஸ்திராபரணத்தையும் தரிக்கிறஅபிமானத்தை விடுகிறது தான் விவேகத்துக்கனுகூலமான வைராக்கியம். இப்படிப்பண்ணாமல் இதற்கு விபரீதமாய்க் காட்டுக்குப்போகிறதும், குகையில்வசிக்கிறதும், தலையை வளர்க்கிறதும், கையில் நகம்வளர்க்கிறதும், வாய்பேசாமலிருக்கிறதும் இதுமுதலானதுகள் விவேகத்துக்கு விரோதமான வைராக்கியம். [எ - தி] அன்னத்துக்கு

அதிகமானசாகங்களும், படிக்கல்லுக்குமேலே சாமான்கள் போடுகிறதும், புருஷனுக்கடங்காத ஸ்திரீயும்போலாகும். ஐயா, ஒருசாஸ்திரத்தில் "ஒருபுளியமரத்தினுடைய பொந்தில் தீப்பிடித்தெரியும்போது அதைச்சுற்றி பச்சைப்புல்லானது எப்படி முளைத்திருக்கமாட்டாதோ அந்தப்புல்லைச்சாப்பிடுகிற மான் முதலான மிருகங்கள் எப்படி அங்கேவரமாட்டாதோ அப்படிப்போல யாதொருத்தனுடைய சித்தமாகிற புளியமரத்தினுடைய பொந்தில் விஷயாசையாகிற தீப்பற்றி எரிந்துகொண்டிருக்கிறதோ அந்த இடத்தில் விவேகமாகிற புல்களும் முளைத்திராது, குருகடாட்சத்தால் உண்டாகக்கூடிய ஞானமாகிற மானும் வரமாட்டாது" என்று சொல்லியிருக்கிறது. மற்றொரு சாஸ்திரத்தில் ஞானிகளுக்கு கோடிஆசைவந்தாலும் அவனை அவைகள் அசைக்கமாட்டாதென்றும், ஒரு சிம்மத்தை அனந்தகோடி கொசுக்களெல்லாம் சேர்ந்துவந்து யுத்தம்செய்தாலும் அந்தசிங்கத்துக்கு எப்படி யாதொரு குறைவுமில்லையோ அப்படி ஞானியாகிற சிங்கத்துக்கு ஆசைகளாகிற மசகங்கள் எவ்வளவுகோடி வந்தாலும் பயமில்லையென்றும், இந்திரனும் "சன்யாசம்பண்ணிக்கொண்டு ஆத்மஞானத்தை யடையாமலிருக்கிற எதிகளை சாலாவிருகமென்கிற நாய்களாற் கடிக்கும்படி எத்தனையோதடவை நான் யேவிவிட்டிருந்தும் அந்தஎதீஸ்வரர்களை ஹிம்சித்தபாபங்கள் என்னுடைய தேகத்திலிருக்கிற ஒருமயிர்களில்கூட ஒட்டவில்லை" என்று சொல்லியிருப்பதாலும், இப்படி இரண்டுவிதமாய் சொல்லுகிற விரோதவசனங்களுக்கு சமாதானம் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரம் சொல்லுகிறேன். கேள்:— தேகம் நான் பிரபஞ்சம் சத்தியமென்கிற வாசனையோடேகூடியிருக்கிற விஷயாசையானது அக்கினிக்குச்சமானமென்றும் அந்தச்சித்தத்தில் விவேகமாகிற புல்முளையாதென்றும் சொன்னது அப்பியாசிக்கு அப்பியாசகாலத்தில் சாவதானமாய்ச் சகலவிஷயாசைகளையும் வைராக்கியத்தால் விட்டால்தான் ஞானமுண்டாகுமென்ற கருத்தால் சொல்லப்பட்டிருக்கிறது. ஞானம்வந்தபின் தீரனாயிருக்கிற ஞானிக்கு தேகாதிகளே நானென்றபிமானிக்கிற கர்த்தாவும் விஷயம் சத்தியமென்கிற புத்தியும் இறந்துபோனபின் பிராரப்தகர்மத்தால் வருகிற விஷயாசைகளைக்கண்டு பயமுண்டாகாதென்கிற தீரத்வத்தைப்பிரதிபாதிக்கிறது. [எ - தி] ஓரிடத்தில் ரசமானது அக்கினியைச்சமீபித்தமாத்திரத்தில் புகைந்துபோமென்றும் மற்றோரிடத்தில் ரசத்தை எவ்வளவு அக்கினியிற் போட்டெரித்தாலும் நாசமாகாமல் முன்போலவே விளங்கிக்கொண்டிருக்குமென்றும் சொன்னசொல்லின் கருத்தாவது:—சித்தகுளிகையால் கட்டப்படாததாயிருக்கிற சாமான்னியரசமானது தீயில் நசித்துப்போமென்றும் சித்தகுளிகையால் கட்டினரசமானது தீயில் கிடந்தாலும் நசியாதென்றறிவது போலும், ராவணனுக்கு ஒருஜீவர்களாலும் சாவில்லையென்றும் ராமனால்மட்டும் சாவுவந்ததுபோலும், இரண்ணியனுக்கு தேவ மனுஷிய மிருகாதிகளாலும் இராப்பகல் இரண்டிலும் சாவில்லையென்றும் வரம்பெற்றிருந்தாலும், சந்தியா

காலத்தில் தூணிலிருந்தவதரித்த நரசிம்மத்தால் அவனுக்கு மரணம்வந்தது போலும், அந்தபிரம்மாவினுடைய லலாடலிகிதத்தை திரிமூர்த்திகளாலும் மற்றயாராலும் அழிக்கக்கூடாதென்று சொல்லியிருந்தும் மார்க்கண்டேயரிஷிக்குப் பதினாறுவயதென்று பிரம்மலிகிதமிருந்தும் அந்தப்பரமசிவன்கிருபையால் எமனையும் வென்று என்றும்பதினாறுவயதான சிரஞ்சீவித்தன்மையையடைந்ததுபோலும், திரிமூர்த்திமுதலான தேவதைகளுக்கு ஆவிர்ப்பாகம் அக்கினிமுகமாகவே ஆகுதிசெய்து அந்தவழியாய் அந்தத்தேவதைகளுக்கு அந்த அவிசுபோய்ச்சேருகிறதென்று சுருதி சொல்லியிருந்தும், மாரசோமயாசிவிஷயத்தில் சுந்தரமூர்த்திசுவாமிகளுடைய கிருபையால் பரமசிவன்முதலான சகலதேவதைகளும் பிரத்யக்ஷமாய் வந்து கையில்வாங்கி வாயில்போட்டுக் கொண்ட கதைபோலும், அப்பியாசிக்கும் ஞானிக்குமுள்ள தாரதன்மியத்தையறிந்துகொள்ளத்தக்கது.

## 151 - வது தரங்கம்.

உள்ளில் ஆசையும் வெளியில் பிரவர்த்தியும் விடவேண்டியது :—

மனதிலிருக்கிற விஷயவாசனையையும் வெளியில் விஷயப்பிரவர்த்தியையும் விட்டால்தான் முக்திவரும். [எ - தி] மகாரோகத்தால் ரணங்கண்டவன் உள்ளேயிருக்கிற ரோகம்போவதற்கு அவுஷதமும் வெளியில் புண்ணாறுவதற்கு பிளாஸ்திரியும்போட்டு ஆரோக்கியத்தை யடைவதுபோலறிக. ஐயா, மனதிலிருக்கிற விஷயாசையையும் வெளியில்நடக்கிற பிரவர்த்திகளையும் விட்டால்தான் கரையேறலாமென்று சொன்னீர்களே, அப்படிச்சொன்னதற்கு சுருதியுக்தி அனுபவமென்னவென்றால், அதற்குத்தரம் சொல்லுகிறேன் கேள் :— அக்கினிஹோத்திராதி கர்மத்தினாலும் அநேகம்பிள்ளைகளைப் பெறுவதினாலும் அநேகந்திரவியங்களைச் சம்பாதித்து தானதர்மங்களைச்செய்வதாலும் மோக்ஷத்தை யடையமாட்டார்கள், அகப்பற்று புறப்பற்றுரூபமான இருவிதபற்றுக்களையும் விடுவதினாலேயே மோக்ஷம்வருமென்றும் கைவல்லியஉபநிஷத்தில் சொல்லியிருப்பதாலும், பஹீரதமகாராஜா மோக்ஷஇச்சையால் திரிதுலமுனியாகிற குருவினிடத்திற் போய்ச் சரணாகதம்பண்ணி ஜனனமரணமாகிற அலைகளோடேகூடிக்கொண்டிருக்கிற சம்சாரசமுத்திரத்தின்நடுவே முழுகித்தபித்துக் கொண்டிருக்கிற என்னைக் கரையேற்றிவைக்கவேண்டுமென்று பிரார்த்திக்கும்போது அந்தக்குருநாதன் அந்த அரசனுக் கனுக்கிரகித்ததாவது, "ஓ ராஜாவே! நீ வெளியிலிருக்கிற சகலசம்பத்துக்களையும் மனசோடே முதலில் பரித்தியாகம்பண்ணி, லோகவாசனைகளுக்குப்பயப்படாமல் ஈஷணாத்திரயங்களையும் தியாகம்செய்து, உள்ளே தேகாதிகளே நாமென்றும் நாம் ராஜாவென்றும் வந்திருக்கிற அகங்காரத்தை வேரோடேபிடுங்கியெறிந்து பரிபூர்ணமான பிரம்மமே நானென்றறிந்து, உனக்குப் பரமவிரோதியாயிருக்கிற அரசனுடைய கா

சில்போய் விழுந்து அவனைக்கூட்டிவந்து உன்னுடையசிம்மாசனத்தில் வைத்து உன்பிள்ளைக்குப் பட்டாபிஷேகம்பண்ணுவதுபோல அவனுக்குப் பட்டாபிஷேகம்செய்துவைத்து, இந்தக்காரியங்களை நாம் செட்தோமென்கிற அகம்பாவமன்றியில் அந்தராஜ்யத்திலேயே வீடுதோறும் லச்சையன்றியில் பிக்ஷையெடுத்துப்புசித்தபின் குருவாகிய என்னையுங்கூடவிட்டு, நீ உன்னுடைய சொரூபஸ்திதியில் ஸ்திரமாயிருந்தையானால் சகலஜீவர்களுக்கும்மேலான ஜகதீஸ்வரனுக்கும்மேலான பிரம்மமாக ஆகிவிடுவாயென்று சொன்னபிரகாரம், அந்தப் பகீரத மஹாராஜாவும் அந்தக்குருசொன்ன உபதேசத்தைக்கேட்டு அரண்மனைக்கு வந்து சோமயாகம் செய்கிறோமென்ற வியாசத்தைவைத்து, மூன்றுநாளைக்குள் சகலசம்பத்துக்களையும் பிராம்மணாள்முதலானவர்களுக்குக்கொடுத்து, கட்டிக்கொண்டிருக்கிற வஸ்திரமாத்திரம் மிஞ்சும்படியாகச்செய்து, தன்சத்துருவைக் கூட்டிக்கொண்டுவந்து தன் சிங்காசனத்தில்வைத்து பட்டாபிஷேகம் செய்துவைத்து, பரிபூர்ண பிரம்மஞானத்தையும் சாக்ஷாத்காரமாய்ப்பெற்றபின், அந்த ராஜ்யத்திலேயே வந்து வீடுதோறும் வன்னிஇலை அவ்வளவுமாத்திரம் பிக்ஷைவாங்கிச் சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போது, அவ்வரசன் மந்திரிமுதலானவர்கள் பகீரதமஹாராஜனென்று தெரிந்துகொண்டு அநேகவிதமான வஸ்திராபரணங்கள்முதலான வஸ்துக்களைக்கொண்டுவந்து கொடுத்ததிலும் ஒருதுரும்பேனும் அதில் கிரகியாமல் பசிக்கு பிக்ஷைமட்டுங்கிரகித்துப்பின் தன்இஷ்டப்படி குருவோடேகூடச்சேர்ந்து, குருவும் தானும் திடஞானத்தில் சமானமாய் ஜீவன்முக்தர்களாயிருந்த கதையே யுக்தியென்றறிக. இப்போது நம்முடைய குருநாதன் அகப்பற்று புறப்பற்றிரண்டையும் நிச்சேஷமாய்த்தவிர்ந்து ஜீவன்முக்தனாய்ச் சுகித்துக்கொண்டிருந்த அனுபவத்தையுங்கண்டு, வெளியில் புத்திர மித்திர களத்திர கிரகாராம க்ஷேத்ர தனதான்யங்கள்முதலான விஷயங்களோடே நம்மதென்றபிமானிக்கிறதான சங்கம் பகிர்ச்சங்கமென்றும், தேகத்துக்குள்ளே பஞ்சகோசங்களைநானென்று அபிமானித்து அவைகளில் அன்னமயகோசத்துக்கு வருகிற ஷட்பாவவிகாரங்களிலும் வர்ணாஸ்ரமாதிகளிலும் நானென்றபிமானிப்பதும் இப்படியே சூக்ஷமசரீரத்திலிருக்கிற பத்தொன்பதுதத்வங்களிலும் கேட்கிறதுமுதலான அவைகளின் தொழில்களிலும் நானென்றபிமானிப்பதும் அந்தர்சங்கமானதால் இந்த இரண்டுசங்கத்தையும்விட்டு நானே அறிவென்றிருப்பவனே ஜீவன்முக்தனென்றறியத்தக்கது.

## 152 - வது தரங்கம்.

பிரஹ்மமெங்குமிருக்கும்போது சாதனமுதலான ஒழுங்கென்னத்துக்கு?

பிரஹ்மம் தானேயெங்குமிருக்கும்போது இந்தபிரஹ்மஞானத்துக்குச் சாதனசதுஷ்டயம் சற்குருலாபம் சிரவணமனனாதிகள் கிரமமாய் என்னத்திற்காக பண்ணவேண்டும்? [எ - தி] வெகுதூரத்திலிருந்து பார்க்கும்போது மூக்குக்

குநேரே அதிசமீபத்திலிருக்கிறதாக கோபுரம் மலைமுதலானவைகள் தோற்றினும் வழியோடே நடந்துபோனவனே அவைகளை அடைவனேதவிர வழியைப்பாராமல் மலையைப்பார்த்துப்போகிறவன் மலக்குழியில் விழுகிறதுபோல இங்குமப்படி வழியோடேபோகாமல் நான் பிரஹ்மமென்று வாயினாலேமட்டும் சொல்லிக்கொண்டு அத்தியாசநிவர்த்திசெய்துகொள்ளாதவன் ஜன்மமாகிற மலக்குழியில் விழுவனென்றறிக. [இ - து] ஆத்மா எங்கும்நிறைந்திருந்தாலும் அத்தியாசநிவர்த்தியானவர்களிடத்தில்மட்டும் தோன்றும் மற்றவர்களிடத்தில் தோன்றாது. [எ - தி] ஜலம் பூமிக்குள் எங்கும்நிறைந்திருந்தாலும் கிணறுதோண்டினவனுக்குமட்டும் தோன்றி மற்றவர்களுக்கு ஜலம் காணப்படாதது போலவறிக. [இ - து] இப்போதே மோக்ஷத்தை அடையவேண்டியவனுக்கு அதை அடையவேண்டியகிரமத்துக்காக சுருதி யுக்தி அனுபவங்கள் காண்பிக்கப்படுகின்றது :— அநித்தியமான விஷயங்களில் வைராக்கியம் முதல்காரணம், அதன்பின் கிரமமாக சமதம உபரதி பொறுமை சிரத்தை சமாதானம் முமுக்ஷுத்வம் சிரவண மனன தியான சமாதிவரையுள்ளவன் இவிடத்தில் தானே கைவல்யத்தை யடைகிறான் என்பதேசுருதி. விவேகத்துடன்கூடிய வைராக்கியம் அஸ்திவாரம், சமாதிசட்கம் சுவர்வைக்கிறது, முமுக்ஷுத்துவம் சன்னம்வைக்கிறது, சிரவணம் வீடுகட்டுகிறது, மனனம் செத்தைகுப்பைகளை சுத்தம்பண்ணுகிறது, சொரூபத்தியானம் கதவு தாப்பாள்கள், சமாதி வீட்டில் குடிபோகிறது, இந்தவீட்டில் சுகமாய் வசிப்பதே ஜீவன்முக்தியென்பதேயுக்தி. நம்போலொத்தவர்கள் இப்படிக்கிரமமாய் மோக்ஷத்தையடைகிறதே அனுபவம். ஐயா, பிரஹ்மம் எப்போதும் எங்கும்நிறைந்திருந்தும் எல்லோருக்கும் அந்த ஞானமேன் உண்டாகவில்லையென்று கேட்பாயாகில், அதற்குத்தரம் சொல்லுகிறேன் கேள் :—வால்மீகமகரிஷி ஆதியில் பிராம்மணனாய்ப்பிறந்திருந்து காட்டில் தர்ப்பைக்குப்போனவிடத்தில் வழிதப்பிப்போய்க் காட்டிலிருக்கிற வேடர்களுடைய கூட்டத்திற் போய்ச்சேர்ந்து தன்னுடைய பிராம்மணயத்வத்தை மறந்து, வேடஸ்திரீயைக் கல்யாணஞ்செய்து அவளிடத்திற் பதினறு பிள்ளையும்பெற்று அந்தக்குடும்பத்தை ரக்ஷிப்பதற்காக நாள்தோறும் வழியிற் போகிறவர்களையெல்லாம் வில்லைவைத்தடித்து அவர்களிடத்திலிருக்கிற சொத்துக்களையெல்லாம் பறித்து அந்தக்குடும்பங்களை ரக்ஷித்துக்கொண்டு வருங்காலத்தில், ஒருதினம் சப்தரிஷிகளும் சேர்ந்து புஸ்தகங்களை மூட்டையாய்க்கட்டிக்கொண்டு அந்தஆரண்யத்திற் போகும்போது, இவன் அவர்களைக்கண்டு "அங்கே யாரடாபோகிறது? நிற்கிறீர்களா அல்லது உங்களைக் கொன்றுபோடட்டுமா?" என்று கூப்பிட்ட சப்தங்களைக்கேட்டு இவர்கள் நம்மை ஈஸ்வரன்முதலான தேவதைகள்கூட நம்முடைய கமனத்தை நில்லென்று தடுக்கமாட்டார்களே அப்படியிருக்கும்போது இப்படிச்சொன்னவனாரென்று திரும்பிப்பார்த்தவுடன் இவன் சமீபத்தில்வந்ததும், நீ யார்? எங்களைஎன்னத்துக்காக தடுத்தாயென்று கேட்கும்போது, நான் வேடன் வெகுகுடும்பி உங்களி

டத்திலிருக்கிற சொத்துக்களைப் பறிக்கிறதற்காகத்தடுத்தேனென்று சொன்னவுடன், இப்படிப் பிறர்களுடைய சொத்துக்களை அபகரித்து அவர்களை ரக்ஷிப்பதால் அவர்கள் உனக்குப் பிரத்திபுபகாரம் என்னசெய்கிறார்களென்று கேட்டவுடன், இவன் எனக்கு ஆபத்துவந்தவேளையில் அவர்கள் பிராணனைக்கொடுத்தாகிலும் காப்பாற்றுவார்களென்று சொன்னவுடன், இவர்கள் ஒருஉளவைச்சொல்லி யனுப்பிவைத்தபடி வீட்டிற்குப்போய் பிள்ளைகளைப்பார்த்து "முதலைவாயிலகப்பட்டு அதற்கு வேறொரு ஆளைக்கூட்டிவருகிறதாக உறுதி சொல்லிவந்தேன். நீங்கள் ஒருவர்வந்து காப்பாற்றக்கடவீர்கள்" என்று சொன்னதைக்கேட்டதும், அவர்கள் அலக்ஷியமாய் நீயே போவென்று சொன்னதும், இவன் ரிஷிகளிடத்தில் வந்து அதைத்தெரிவித்ததில் அவர்கள் ராமமந்திரத்தை யனுக்கிரகித்தவிசேஷத்தால் வால்மீகரென்ற ரிஷியான கதையைக் கண்டு விசாரத்தால் தன்னை யறிந்துகொள்ளத்தக்கது.

## 153 - வது தரங்கம்.

*நான்கு சாதனங்களில் ஒன்று குறைந்தாலும் ஞானம் வராது:—*

சாதனசதுஷ்டயங்களுக்குள் ஒன்றுகிலும் குறைவாயிருந்தால் ஞானம் வராது. [எ - தி] தேரோடுவதற்கு நாலுசக்கரங்களில் ஒன்றுகுறைவாயிருந்தாலும் அது ஓடாததுபோலும், சப்பரம் தூக்குவதற்கு நாலுஆள்களில் ஒரு ஆள் குறைந்தாலும் அதைத்தூக்கமுடியாததுபோலும், கிழவியினிடத்திற் பணம் கொண்டுவந்துவைத்திருந்த நால்வர்களில் ஒருவன் குறைந்தபடியால் பணம்கொடுக்கக்கூடாதென்று மரியாதைராமன் தீர்ப்புச்செய்த கதைபோலுமறிக. [இ - து] சித்தத்திலிருக்கிற காமாதி துர்வாசனைகளைப் போக்கியபின், சாதனம்வந்து பிரமாப்பியாசம் பண்ணுகிறவனுடைய சித்தத்தில் ஞானம் எளிதாய் ஏறும். [எ - தி] முதலில் பேதிக்குச்சாப்பிட்டு வயிற்றிலிருக்கிற துர்மலங்களை போக்கியபிறகு மருந்துசாப்பிட்டால் சரீரத்திலிருக்கிற வியாதி சீக்கிரத்தில் தீர்ந்து சுகங்கொடுப்பதுபோலும், உரம்வைத்தநிலம் நன்றாய்ப் பயிர்பிடிப்பதுபோலுமறிக. குருசன்னிதானத்திலிருக்கிறவனுக்குச் சாதன சதுஷ்டயம் இருக்கவேண்டும். [எ - தி] ராஜசன்னிதானத்திலிருக்கிற உத்தியோகஸ்தர்களுக்கு அங்கி தலைப்பாகை காகிதம் பேனா மைமுதலானது இருப்பதுபோலவறிக. [இ - து] சகலசாஸ்திரம் படித்தவனாயிருந்தாலும் சாதன சதுஷ்டயம் இல்லாமற்போனால் பிரம்மானந்தம் கிடையாது. [எ - தி] அநேகம் ஸ்திரீகளைக்கல்யாணம்செய்த ராஜனாயிருந்தாலும் மாணியில்லாமற்போனால் விஷயானந்தம் கிடையாததுபோலவறிக. [இ - து] சாதனசதுஷ்டயம் எனக்கு வேண்டாம் ஞானம்மாத்திரம் எனக்குப்போதும். [எ - தி] திருமங்கிலியம் வேண்டாம் சுமங்கிலியாய்மட்டும் இருந்தாற்போதும், பசுமாடுவேண்டாம் பால் கறக்கிற மூலைமாத்திரம் அறுத்தெடுத்துவந்தாற் போதுமென்பதுபோலுமறிக.

ஐயா, சாதனசதுஷ்டயங்களுக்குள்ளே ஒருசாதனமாவது குறைவா யிருக்கும்பக்ஷத்தில் ஞானம் சித்திக்கமாட்டாதென்று சொன்னீர்களே, வாசிஷ்டத்தில் மோக்ஷத்தையடைவதற்கு வைராக்கியமும், இயமநியமாதி அஷ்டாங்கங்களும், சற்குருவும், சாஸ்திரார்த்தவிசாரமும், பிரமாப்பியாசமும், நிருவிகற்பமாய் சின்மாத்திரமாயிருக்கிற பிரஞ்ஞையும் கூடியிருக்கிற புருஷனுக்கே அழிவற்ற மோக்ஷபதம் கிடைக்குமென்றும், அப்படிச்சொல்லப்பட்ட சகலமான சாதனங்களுமில்லாமற்போனாலும் அதிசூக்ஷமமாயும் ஆத்மாவே நானென்கிற ஞானத்தோடேகூடினதாயும் அஞ்ஞான ஆவரணங்களான களங்கமற்றதாயுமிருக்கிற பிரஞ்ஞாரூபமான புத்தி ஒன்றிருந்தால் அதினாலேயே அழிவற்ற மோக்ஷசுகத்தையடைவனென்று சொல்லியிருக்கிறதேயென்று கேட்பாயாகில், அதற்குத்தரம் சொல்லுகிறேன். கேள்:—ஒருபத்திரங் கோர்ட்டில் ஸ்தாபித்துத்தீர்ப்புபெறுவதற்கு நாலுசாக்ஷி முக்கியமாய் வேண்டுமென்று ஒருசட்டத்தில் சொல்லியிருக்கிறது, மற்றொருசட்டத்தில் சகலவிதமான யோக்கியதைகளோடேகூடியிருக்கிற கண்ணியமுள்ள ஒருசாக்ஷியை விசாரணைபண்ணி அவருடைய வாக்குமூலத்தினாலேயே அந்தப்பத்திரத்தை ருஜூவென்று தீர்ப்புசெய்யலாமென்று சொல்வதுபோலும்; போஜனத்துக்குக் கறிபதார்த்தங்களில் ஷட்ரசங்களும் சேர்ந்திருக்கவேண்டுமென்றும் அப்படி இல்லாவிட்டாலும் ஒருபதார்த்தமாவது நல்ல ருசியாயிருந்தால் போஜனத்துக்குப்போதுமென்று சொல்வதுபோலும்; சர்வலக்ஷணவதியாயும் சர்வாலங்கார பூஷிதையாயும் கர்ப்புமுதலான சகலசற்குணங்களோடேயும் கூடினவளாயிருக்கவேண்டுமென்றும் அப்படி இருந்தால்தான் கிரகஸ்தாசிரமம் சுகத்தைக் கொடுக்குமென்று சொல்லிப்பின்பு, ஓரிடத்தில் மற்றலக்ஷணங்கள் ஒன்றுமில்லாவிட்டாலும் பாதிவிருத்தியமென்கிற ஒரு குணமிருந்தாற் போதுமென்று சொல்லியிருப்பதுபோல முமுக்ஷுக்களுக்குக்குறைவில்லாமல் சகல சாதனங்களும் வேண்டுமென்பதே சுருதிக்கு முக்கியதாத்பரியமாயிருந்தாலும், அந்த தத்வஞானத்தினுடைய மகிமாவிசேஷத்தைத் தெரிவிப்பதற்காக சுத்த புத்தி ஒன்றுபோதுமென்று சொல்லியதின் கருத்து.

## 154 - வது தரங்கம்.

ஞான கர்மங்களின் பேதம் :—

அனாத்மசாஸ்திரம் படித்து ஒருவருக்கொருவர் வாதித்துக்கொள்ளுவது-அடித்துக்கொண்டு போலீசுக்குப் போவதுபோலும், ஆத்மசாஸ்திரம் படிப்பது—எதிரி தன்சொத்தை யபகரித்திருக்கிறதை வாங்கிக்கொடுக்கிற சீவில் விசாரணைபோலுமறிக. [இ - து] மறைப்புநினைப்புடன்கூடிய இந்த மனதானது இருட்டுப்போலும், தன்னிழல்போலுமிருப்பதால் அந்த மனோநிக்கிரகம் பிரயாசமென்பதற்கும் லகுவென்பதற்கும் யுக்தி:— இருட்டையும் நிழலையும்

தடியாலடித்து விரட்டுவது முடியாததுபோலக் கர்மத்தாற் கெடுப்பது முடியாது, விளக்காலும் பொய்யென்ற ஞானத்தாலும் நிவர்த்திப்பதுபோல விசாரத்தாலும் ஞானத்தாலும் நிவர்த்திப்பது அதிசுலபமென்றறிக. [இ - து] ஒரு வேதந்தானே காமிக்குக் கர்மங்களைச்செய்யும்படிக்கும் நிஷ்காமிக்குச் சிரவணாதிகளைச்செய்யும்படிக்கும் விதிப்பானேனெனில்,— ஒருபோகந்தானே காமமாகிற யோனியையும் நிஷ்காமமாகிற சிசுனத்தையுமுடையவர்களாயிருக்கிற ஸ்திரீ புருஷர்களுக்குள்ளே, ஸ்திரீக்குக் கெர்ப்பம் பிரசவம் சிசுக்கள் ரக்ஷணை முதலான அனந்ததுக்கங்களைக் கொடுப்பானேன் ? அந்தபோகந்தானே புருஷனுக்குச் சுகத்தைமாத்திரங் கொடுப்பானேன் சொல்? சங்கை:—தாங்கள் புருஷனைச்சிலாக்கியமாயும் சுகியாயும் ஸ்திரீகளைக் குறைச்சலாயும் துக்கியாயுஞ் சொன்ன திருஷ்டாந்தம் ஸ்திரீக்குப் போகம்பண்ணப்பண்ண வாலியைப்போல எதிராளிபலத்தை வாங்கும்படியான வல்லமையிருக்கும்போது, புருஷன் சுக்ரீவனைப்போல பலக்ஷீணத்தையடைவது கண்டிருக்கும்போது மேலேசொன்னது விரோதமாகிறதேயெனில், யாதொரு விரோதமில்லாமற் பரிகாரஞ்சொல்லுகிறோம்:— அப்படிச்செய்யும் போகத்தில் புருஷனாகிய முமுக்ஷுவுக்குக் குருவாகிய லேபனம் ஒன்றுமாத்திரம் அபேக்ஷையேதவிர மற்ற சாதனபேக்ஷையில்லாமலும் அப்படிச்சிரவணாதி போகஞ்செய்யச்செய்ய அகங்காராதி பலக்ஷீணம்வருவதோடும் சுகாவாப்தியாகிற சுக்கிலமோசனமுண்டாகுவதாலும், அப்படி அந்தப்போகமே கர்மபலத்தை யிச்சித்திருக்கிற கர்மியாகிற ஸ்திரீக்கு எக்ஞபாத்திரங்களாகிற ஸ்தன்னியம்முதலான சாதனங்களையும் கர்ப்பமாகிற அக்கினியைத்தரிக்கிறதும், யோனியாகிற பாண்டவாயிலிருந்து கர்ப்பாக்கினியை வெளியில் யாகாக்கினியாகப்பிரசவித்து, தாய்முதலான ருத்விக்குகளால் வளர்த்தும், தன்னுடைய ஜீவனமாகிற சொத்துக்களை இழக்கிறதும், இப்படியே கர்மியாகிற ஸ்திரீ அநேகயாகங்களாகிற பிள்ளைகளைப்பெற்றுக் கஷ்டப்படுகிற அவமானத்தைக் கவனியாமல் நான் பத்துப்பதினைந்துபிள்ளை பெற்றேன், எனக்குச்சமானம் யாரென்று சொல்வதுபோல நான் இன்னஇன்ன யாகஞ்செய்தேன் எனக்குச்சமானம் யாரென்று சொல்லுகிற அகங்காரவிருத்தியையுமடைந்து சதா இப்படியே கர்மியென்றும் ஸ்திரீயென்றுஞ் சொல்லப்படுகிற இவர்கள் இருவரும் காலத்திரயத்திலும் சுகலேசமில்லாமல் துக்கசமுத்திரத்தில் அழுந்திக்கிடக்கிறதும் ; இனி நிஷ்காமியமான முமுக்ஷுவாகிற புருஷன் மேன்மையடைகிறவிதம், மூன்றாபூமியாகிற பிரஹ்மச்சரியத்திலிருந்து பிரஹ்மாப்பியாசமாகிற வேதாப்பியாசத்தை குருசன்னிதியில் செய்தபின் நாலாம்பூமியாகிற கிரகஸ்தாசிரமத்தை யடைந்து அதில் முமுக்ஷுக்களாகிற அதிதிகளுக்கும் பிரஹ்மவிசாரமாகிற அன்னத்தை யதேஷ்டமாய்ப்போட்டுக்கொண்டிருந்து, அஞ்சாம்பூமியாகிற வானப்பிரஸ்தாசிரமத்தை யடைந்து சத்துவவிருத்தியாகிற சிகா எக்ஞோபவீதத்தோடேயிருந்து, அதையும்விட்டு ஆறாம்பூமியாகிற சன்னியாசத்தையடைந்து திரிபுடியற்ற ஆனந்தானுபவமாகிற

ஐயா, சாதனசதுஷ்டயங்களுக்குள்ளே ஒருசாதனமாவது குறைவா யிருக்கும்பக்ஷத்தில் ஞானம் சித்திக்கமாட்டாதென்று சொன்னீர்களே, வாசிஷ்டத்தில் மோக்ஷத்தையடைவதற்கு வைராக்கியமும், இயமநியமாதி அஷ்டாங்கங்களும், சற்குருவும், சாஸ்திரார்த்தவிசாரமும், பிரமாப்பியாசமும், நிருவிகற்பமாய் சின்மாத்திரமாயிருக்கிற பிரஞ்ஞையும் கூடியிருக்கிற புருஷனுக்கே அழிவற்ற மோக்ஷபதம் கிடைக்குமென்றும், அப்படிச்சொல்லப்பட்ட சகலமான சாதனங்களுமில்லாமற்போனாலும் அதிசூக்ஷமமாயும் ஆத்மாவே நானென்கிற ஞானத்தோடேகூடினதாயும் அஞ்ஞான ஆவரணங்களான களங்கமற்றதாயுமிருக்கிற பிரஞ்ஞாரூபமான புத்தி ஒன்றிருந்தால் அதினாலேயே அழிவற்ற மோக்ஷசுகத்தையடைவனென்று சொல்லியிருக்கிறதேயென்று கேட்பாயாகில், அதற்குத்தரம் சொல்லுகிறேன். கேள்:—ஒருபத்திரங் கோர்ட்டில் ஸ்தாபித்துத்தீர்ப்புபெறுவதற்கு நாலுசாக்ஷி முக்கியமாய் வேண்டுமென்று ஒருசட்டத்தில் சொல்லியிருக்கிறது, மற்றொருசட்டத்தில் சகலவிதமான யோக்கியதைகளோடேகூடியிருக்கிற கண்ணியமுள்ள ஒருசாக்ஷியை விசாரணை பண்ணி அவருடைய வாக்குமூலத்தினாலேயே அந்தப்பத்திரத்தை ருஜூவென்று தீர்ப்புசெய்யலாமென்று சொல்வதுபோலும்; போஜனத்துக்குக் கறிபதார்த்தங்களில் ஷட்ரசங்களும் சேர்ந்திருக்கவேண்டுமென்றும் அப்படி இல்லாவிட்டாலும் ஒருபதார்த்தமாவது நல்ல ருசியாயிருந்தால் போஜனத்துக்குப்போதுமென்று சொல்வதுபோலும்; சர்வலக்ஷணவதியாயும் சர்வாலங்கார பூஷிதையாயும் கற்புமுதலான சகலசற்குணங்களோடேயும் கூடினவளாயிருக்கவேண்டுமென்றும் அப்படி இருந்தால்தான் கிரகஸ்தாசிரமம் சுகத்தைக் கொடுக்குமென்று சொல்லிப்பின்பு, ஓரிடத்தில் மற்றலக்ஷணங்கள் ஒன்றுமில்லாவிட்டாலும் பாதிவிருத்தியமென்கிற ஒரு குணமிருந்தாற் போதுமென்று சொல்லியிருப்பதுபோல முமுக்ஷுக்களுக்குக்குறைவில்லாமல் சகல சாதனங்களும் வேண்டுமென்பதே சுருதிக்கு முக்கியதாத்பரியமாயிருந்தாலும், அந்த தத்வஞானத்தினுடைய மகிமாவிசேஷத்தைத் தெரிவிப்பதற்காக சுத்த புத்தி ஒன்றுபோதுமென்று சொல்லியதின் கருத்து.

## 154 - வது தரங்கம்.

ஞான கர்மங்களின் பேதம் :—

அனாத்மசாஸ்திரம் படித்து ஒருவருக்கொருவர் வாதித்துக்கொள்ளுவது- அடித்துக்கொண்டு போலீசுக்குப் போவதுபோலும், ஆத்மசாஸ்திரம் படிப்பது—எதிரி தன்சொத்தை யபகரித்திருக்கிறதை வாங்கிக்கொடுக்கிற சீவில் விசாரணைபோலுமறிக. [இ - து] மறைப்புநினைப்புடன்கூடிய இந்த மனதானது இருட்டுப்போலும், தன்னிழல்போலுமிருப்பதால் அந்த மனோநிக்கிரகம் பிரயாசமென்பதற்கும் லகுவென்பதற்கும் யுக்தி:— இருட்டையும் நிழலையும்

தடியாலடித்து விரட்டுவதுமுடியாததுபோலக் கர்மத்தாற் கெடுப்பது முடியாது, விளக்காலும் பொய்யென்ற ஞானத்தாலும் நிவர்த்திப்பதுபோல விசாரத்தாலும் ஞானத்தாலும் நிவர்த்திப்பது அதிசுலபமென்றறிக. [இ-து] ஒரு வேதந்தானே காமிக்குக் கர்மங்களைச்செய்யும்படிக்கும் நிஷ்காமிக்குச் சிரவணாதிகளைச்செய்யும்படிக்கும் விதிப்பானேனெனில்,— ஒருபோகந்தானே காமமாகிற யோனியையும் நிஷ்காமமாகிற சிசுனத்தையுமுடையவர்களாயிருக்கிற ஸ்திரீ புருஷர்களுக்குள்ளே, ஸ்திரீக்குக் கெர்ப்பம் பிரசவம் சிசுக்கள் ரக்ஷணை முதலான அனந்ததுக்கங்களைக் கொடுப்பானேன் ? அந்தபோகந்தானே புருஷனுக்குச் சுகத்தைமாத்திரங் கொடுப்பானேன் சொல்? சங்கை:—தாங்கள் புருஷனைச்சிலாக்கியமாயும் சுகியாயும் ஸ்திரீகளைக் குறைச்சலாயும் துக்கியாயுஞ் சொன்ன திருஷ்டாந்தம் ஸ்திரீக்குப் போகம்பண்ணப்பண்ண வாலியைப்போல எதிராளிபலத்தை வாங்கும்படியான வல்லமையிருக்கும்போது, புருஷன் சுக்ரீவனைப்போல பலக்ஷீணத்தையடைவது கண்டிருக்கும்போது மேலேசொன்னது விரோதமாகிறதேயெனில், யாதொரு விரோதமில்லாமற் பரிகாரஞ்சொல்லுகிறோம்:— அப்படிச்செய்யும் போகத்தில் புருஷனாகிய முமுக்ஷுவுக்குக் குருவாகிய லேபனம் ஒன்றுமாத்திரம் அபேக்ஷையேதவிர மற்ற சாதனாபேக்ஷையில்லாமலும் அப்படிச்சிரவணாதி போகஞ்செய்யச்செய்ய அகங்காராதி பலக்ஷீணம்வருவதோடும் சுகாவாப்தியாகிற சுக்கிலமோசனமுண்டாகுவதாலும், அப்படி அந்தப்போகமே கர்மபலத்தை யிச்சித்திருக்கிற கர்மியாகிற ஸ்திரீக்கு எக்ஞபாத்திரங்களாகிற ஸ்தன்னியம்முதலான சாதனங்களையும் கர்ப்பமாகிற அக்கினியைத்தரிக்கிறதும், யோனியாகிற பாண்டவாயிலிருந்து கர்ப்பாக்கினியை வெளியில் யாகாக்கினியாகப்பிரசவித்து, தாய்முதலான ருத்விக்குகளால் வளர்த்தும், தன்னுடைய ஜீவனமாகிற சொத்துக்களை இழக்கிறதும், இப்படியே கர்மியாகிற ஸ்திரீ அநேகயாகங்களாகிற பிள்ளைகளைப்பெற்றுக் கஷ்டப்படுகிற அவமானத்தைக் கவனியாமல் நான் பத்துப்பதினைந்துபிள்ளை பெற்றேன், எனக்குச்சமானம் யாரென்று சொல்வதுபோல நான் இன்னஇன்ன யாகஞ்செய்தேன் எனக்குச்சமானம் யாரென்று சொல்லுகிற அகங்காரவிருத்தியையுமடைந்து சதா இப்படியே கர்மியென்றும் ஸ்திரீயென்றுஞ் சொல்லப்படுகிற இவர்கள் இருவரும் காலத்திரயத்திலும் சுகலேசமில்லாமல் துக்கசமுத்திரத்தில் அழுந்திக்கிடக்கிறதும்; இனி நிஷ்காமியமான முமுக்ஷுவாகிற புருஷன் மேன்மையடைகிறவிதம், மூன்றாம்பூமியாகிற பிரஹ்மச்சரியத்திலிருந்து பிரஹ்மாப்பியாசமாகிற வேதாப்பியாசத்தை குருசன்னிதியில் செய்தபின் நாலாம்பூமியாகிற கிரகஸ்தாசிர்மத்தை யடைந்து அதில் முமுக்ஷுக்களாகிற அதிதிகளுக்கும் பிரஹ்மவிசாரமாகிற அன்னத்தை யெதேஷ்டமாய்ப்போட்டுக்கொண்டிருந்து, அஞ்சாம்பூமியாகிற வானப்பிரஸ்தாசிர்மத்தை யடைந்து சத்துவவிருத்தியாகிற சிகா எக்ஞோபவீதத்தோடேயிருந்து, அதையும்விட்டு ஆறும்பூமியாகிற சன்னியாசத்தையடைந்து திரிபுடியற்ற ஆனந்தானுபவமாகிற

அனுஷ்டானஞ்செய்துகொண்டு வந்தபின் ஏழாம்பூமியாகிற அதிவர்ணாச்சிரமத்தை யடைந்து ஒரு கற்பனையுமற்ற முக்தியாகிற சுகத்தை யடைவதைக்கண்டுகொள்க. சங்கை. ஞானம் மேன்மையைக் கொடுக்குமென்றும் கர்மந்தாழ்மையைக் கொடுக்குமென்றுஞ்சொன்னது எதைப்பற்றியோவெனில், இதென்னசங்கையென்று கேட்கிறாய்! போகத்துக்கு ஆரம்பிக்கும் போதே ஸ்திரீ கீழேவிழுகிறதும் புருஷன் மேலேயேறுகிறதும் அனுபவமாயிருப்பது போல கர்மி வரவரக்கர்த்துருத்துவங்களாகிற லோகாந்தர கமனாகமனத்தை யடைந்து தாழ்மையாய்ப்போகிறதும், முமுக்ஷுவானவன் அகர்த்துருத்துவமாகிற மேன்மையையடைகிறதும் பிரத்தியக்ஷமாக யிருப்பதைக்கண்டு சங்கையைவிட்டுவிடு. தான் செய்தகர்மம் அனுபவியாமல் தன்னை விடாதென்ற வசனமும், தபசால் பாபக்ஷயம் வருமென்கிற வசனமும், அனுபவியாமலே சகலகர்மக்ஷயமும் ஞானத்தால் ஆகுமென்றவசனமும் விரோதமாயிருக்கிறதேயெனில், அதற்குப்பரிகாரமான யுக்தி:—திருடர்கள் தாங்கள் செய்ததிருட்டை யோக்கியனாயுள்ள புருஷனைக் கஞ்சா மருந்தினால் மயக்கி ஒப்புக்கொள்ளும்படி செய்விக்கிறதுபோலுமென்பதே முதலாவது சங்கைக்குத்தரம், கனிஸ்டேபிள்களுக்குக் காசைக்கொடுத்து தொந்தரவு செய்யாமலிருக்கும்படிக்கும் சிலகுற்றங்களை மாப்பு செய்துகொள்வதுபோலுமென்பதே இரண்டாவது சங்கைக்குத்தரம், அப்போது இவனுடைய தகப்பனாகிய விவேகி வந்து குருவாகிற வக்கீலுக்கு வக்காலத்துக்கொடுக்கச்சொல்லி அவரும்விசாரணைசெய்யும் போது பாகியாந்தக்கரணங்களே திரிகாலங்களிலும் சகலகுற்றங்களையுஞ் செய்கிறதாகவும் இவன் சாக்ஷிமாத்திரமாயிருக்கிறானேதவிர ஒரு குற்றமுஞ் செய்யவில்லையென்றும் நிரூபித்ததால், பிறகு ஞானகாண்டமாகிற ஜட்ஜி இவனுக்கோர்கர்மமாகிற குற்றமுமில்லையென்று சொல்லுகிறதே மூன்றாவது சங்கைக்குத்தரம்.

ஞான கர்மங்களின் பேதம் :—

ஆத்மானாத்மவிசாரத்தால் பிறந்த தத்வஞானசுகம் சாணையிற்பிடித்த ரத்னம்போலும், கர்மத்தாலுண்டான விஷயசுகம் மேகத்தின் நடுவே தோற்றுகிற மின்னல்போலுமறிக. [இ - து] ஞானமில்லாத சன்னியாசிக்கு வேதங்கள் அனந்த கர்மங்களைச் செய்யச்சொல்லி விதிப்பானேனென்றால், 'வேண்டாத பெண்டாட்டி கால் பட்டால் குற்றம் கைபட்டால் குற்றம்' என்று சொல்லுவதுபோலும், படியாதபிள்ளைக்குத் தகப்பன் பலவிதமான தொழிலை யேவுவதுபோலும் சொல்லியிருக்கிறதென்றறிக. [இ - து] பிரஹ்மம் ஒன்றுதான் நினைத்தமாத்திரத்தில் துக்க நிவர்த்தியையும் தடையற்ற ஆனந்தத்தையுங் கொடுக்கும், மற்ற மாயாகாரியமான சகலமும் திரிகரணங்களாற் செய்தே தாற்காலிக மாத்திரமான இருவகைப்பிரயோஜனத்தையும் அடையச்செய்யும். [எ - தி] சொப்பனத்தில் ஸ்திரீபோகமொன்றுமட்டுமே நினைத்தமாத்திரத்

தில் சுக்கிலமோசனம் சித்திப்பதும் மற்ற என்னஎன்ன களுக்கண்டாலும் விழித்தவுடன் பிரயோசனமற்றுப் போவதுபோலவறிக. [இ - து] பிரஹ்மாப்பியாசத்தைத்தவிர இதராப்பியாசங்களெல்லாம் வாக்குக்கு வலியும் மனதுக்குத் துக்கமும்வருமேதவிர சுகலேசமும் கிடையாது. [எ - தி] காளைமாடு எத்தனை வாங்கிக்கட்டி இரைபோட்டாலும் சாணியும் மூத்திரமும் கிடைக்குமேதவிர சொட்டுப்பால்கூட கிடையாததுபோலவறிக. [இ - து] சித்தகுளிகையானது. ஏககாலத்தில் எல்லாவியாதியையும் கேட்கிறதுபோலும், ராஜனுடைய இஷ்டம்போலும் பிரஹ்மக்ஞானமென்றறிக. காட்டுமருந்தானது எந்த வியாதிக்கு மருந்துகொடுக்கிறோ அந்த வியாதிமட்டுக்கும் நிவர்த்தியாவதுபோலும், பரிவாரஜனங்களுடைய இஷ்டம்போலும் கர்மம் பக்திமுதலானவைகளாம்; இன்னும் கற்பகவிருக்ஷம்போலும் கொள்ளுமுதலான தான்யத்தைப்போலுமறிக. [இ - து] தன்னுடைய சொரூபஞானத்திலேயே ஜன்ம நிவர்த்தியாகவேண்டுமென்று எத்தனம் பண்ணுகிறது தான் முமுக்ஷுத்வமேயல்லாமல் ஈஸ்வரன் இருக்கிறார் காப்பாற்றுகிறார் என்று மலை காடுகளிலே போயிருக்கிறதல்ல. [எ - தி] பசி நீங்குகிறதற்குப் போஜனம் பண்ணவேண்டுமேயல்லாமல் ஸ்திரீயின்முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாலும் மற்ற என்னஎன்ன தொழில்செய்தாலும் பசிதீராதது போலவறிக. [இ - து] கர்மகாண்டம் ஆத்மாவுக்குக் கர்த்துருத்துவாதிதுக்கத்தையும், ஞானகாண்டம் அகர்த்துருத்வாதி அத்விதானந்தத்தையும் சாதிக்கும். [எ - தி] போக்கிலி பொய்யைக் கட்டுப்பாடுபண்ணி விலங்குபோடும்படி சொல்வதும், யோக்கியன் அந்தப்பிரட்டைப் பிரட்டென்று ரூபித்து அதை விலக்குவதுபோலுமறிக. [இ - து] கர்மமும் ஞானமும் சேர்ந்திராது. [எ - தி] இருட்டும் வெளிச்சமும், சொப்பனமும் ஜாக்ரமும், பால்யமும் விருத்தாப்பியமும் சேர்ந்து இராததுபோலுமறிக. ஞானத்துக்கும் மற்ற நான்குக்கும்பேதம், சம்சாரதுக்கநிவர்த்திக்கு விசாரணையால் தத்வஞானமடைவது பசிநிவர்த்திக்குத் தன்வீட்டில் மிருஷ்டான்ன போஜனம் செய்வதுபோலும், நிர்க்குணத்தியானம் பிக்ஷையெடுத்துப் போஜனம் செய்வதுபோலும், சகுணோபாசனை பச்சைத்தண்ணீரைக் குடிப்பதுபோலும், கர்மம் வெய்யிலிற் கிடப்பதுபோலும், பாமரவியாபாரம் நெருப்பில் கிடப்பது போலுமென்று தெரிந்து விசாரணையால் தத்வஞானத்தையே சம்பாதிக்கத்தக்கதென்றறிக. [இ - து] ஞானபலமானது ஊற்று ஜலம்போலவும், பகற்காலத்திலிருக்கிற சூர்யப்பிரகாசம்போலவும்; கர்மபலமானது அண்டாவில்விட்ட ஜலம்போலும், எண்ணை திரிபோட்ட தீபம்போலுமறிக. பிரஹ்மானந்தத்தைவிட்டுக் கர்மம் செய்வது அமிர்தம் புஜிப்பதைவிட்டுத் தீயில் விழுகிறதுபோலும், மேடையிலிருக்கிறதைவிட்டு பாம்புள்ள பாழுங்கிணற்றில் விழுவதுபோலுமறிக. [இ-து] ஞானத்துக்கும் பிராரப்தத்துக்குமுள்ள தன்மை வேறானதால் ஒன்றுக்கொன்று விரோதமில்லை. [எ - தி] ரயிலில்போகிறவன் தன்பணமுடிச்சையும்

டிக்கட்டையும் சாவதானம்பண்ணுவது அவன்கடமை, வண்டியை ஓட்டவேண்டியது துரையின்கடமைபோல ஞானத்தின்கடமை தேகாதிதோற்றம் பொய் நான் பிரஹ்மமென்பதிலும், கர்மத்தின்கடமை மனதுக்குச் சுகதுக்கங்கொடுப்பதிலும் ஜாக்ரதையென்றறிக. [இ - து] பிரஹ்மாப்பியாசம் பண்ணுகிறவனுக்கு ஞானம்வருமுன்னே நடுவில் சரீரம் மரித்துப்போனால் துர்க்கதியையடையாமல் பரலோகத்தில் திவ்யசுகமனுபவித்து மறுபடி சீமான்வயிற்றில் இச்சையோடே முந்திவிசாரித்தவன் வந்துபிறக்கிறான். இச்சையன்றியில் விசாரம்செய்தவன் ஞானியின் கிரஹத்தில் வந்துபிறக்கிறான், பிற்பாடு முந்திப் பழகியிருக்கிற ஞானபூமிகளை சுலபமாயடைந்து மேல்பூமியைக்குறித்துப் பழகிக் கரையேறுவான். மற்றப்புண்ணியகர்மம் செய்தவர்களுக்கு பரலோக போகமாத்திரமேதவிர பின்னால் பிரயோஜனமில்லை. [எ - தி] சகோதரர்கள் இருவர்களில் ஒருவன் கல்வரிவைத்து வீடுகட்ட ஆரம்பித்தவனும் மண்வீடு கட்ட ஆரம்பித்தவனும் மத்தியில் கலாபத்தால் தேசாந்தரத்துக்கு ஓடிப்போய் மறுபடி இரண்டுபேர்களும் தன்னூருக்கு வந்ததில், கல்வீடுகட்டினவன் மேல் வரிவைத்து ஸ்திரமான வீடுகட்டி வாழ்வதும், மண்வீடு கட்டினவனுக்கு மழையில் சுவர் கரைந்துபோய் பிரயோஜனமில்லாமற் போனதுபோலும்; ஸ்திரீ போகம் பண்ணுகிறவனுக்கும் ஹஸ்தப்பிரயத்தனம் பண்ணுகிறவனுக்கும் சுக்கிலமோசனமான சுகம் சரியாயிருந்தாலும் சந்ததியுண்டாகிறதும் அஃதில்லாமல் நிஷ்பிரயோஜனமாய்ப்போவதுபோலுமறிக. [இ - து] மனதினாலேயே தன்னை யறிவதால் அந்தஞானமும் கர்மமாகாதாவென்றால் ஆகாது. [எ - தி] சித்திரமெழுதுவது கர்மமேயல்லாமல் ரத்னப்பரீக்ஷைசெய்வது கர்மமாகாதது போலவறிக. [இ - து] பிரஹ்மவிசாரம் செய்கிறது கோர்ட்டில் நியாயான்னியாயங்களை ஈரங்கிபேசி உள்ளது உள்ளபடியாய்த் தீர்மானித்து சகலருக்கும் வெளிபண்ணுவதுபோலும், மற்றக்கர்மங்களைச் செய்வது கல்தச்சன்முதலானவர்கள் பிரதிமைகள் முதலானவைகளை இச்சைப்படி உண்டுபண்ண வேலை செய்வதுபோலுமறிக. ஐயா, திரிவிதகரணங்களாற் செய்யப்பட்டதெல்லாம் கர்மமென்று சொன்னீர்களே, அந்தக்கர்மங்களானது அஞ்ஞானத்தைக் கெடுக்கமாட்டாது விருத்திபண்ணுமென்றும், ஞானமே அஞ்ஞானத்தைக் கெடுக்குமென்றும், அந்தஞானமும் சொரூபக்ஞானம் விருத்திக்ஞானமென்று இரண்டுவிதமாயிருக்குமென்றும், அதில் சொரூபக்ஞானம் அஞ்ஞானத்துக்கு விரோதமில்லையென்றும், விருத்திக்ஞானமே அஞ்ஞானத்துக்கு விரோதியென்றுஞ் சொன்னீர்களே, அந்த விருத்திக்ஞானம் கர்மமல்லவென்பதையும், கர்மத்துக்கும் ஞானத்துக்குமுள்ள பேதங்களையும், சொரூபக்ஞானம் அஞ்ஞானவிரோதியில்லையென்பதையும் தெரிவிக்கவேண்டுமென்று கேட்பாயாகில், கர்மமானது தனக்கு வேண்டியபடிசெய்யவும் விடவும் மற்றொருவிதமாகச் செய்யவுங்கூடும். [எ - தி] கர்த்துருதந்திரமான வீடு, பங்களா, அரண்மனைமுதலானவைகளை வேண்டியபடி மாறிமாறி இடித்துக்கட்டுவது

போலும், தினம் வீட்டில் தன் இஷ்டப்படி மாறிமாறிச் சமையல்பண்ணுவது போலுமறிக. வேதசாஸ்திரங்களுடைய வாக்கியங்களுக்கு அவற்றினது கருத்தின்படி அர்த்தம்பண்ணவேண்டுவதுபோலும், தங்கமுதல் மண்வரையிலுள்ள வஸ்துக்களை அதனதன் சுபாவமாய்ப் பார்ப்பதுபோலும், பிரஹ்மத்தையுள்ளபடியாய் அகண்டாகாரவிருத்தியால் பார்ப்பது வஸ்துதந்திரமாம். சேதனமானகண் இருளை நிவர்த்தியாமல் ஜடமானஇருட்டை ஜடமான தீபம் போக்குவதுபோல சித்தை மறைத்திருக்கிற ஜடமான அஞ்ஞானத்தை ஜடமான அகண்டாகாரவிருத்திஞானமே போக்கடிக்குமென்றறிந்து, சதா நானே அறிவு, நானே அகண்டன், நானே பரிபூரணன், நானே சச்சிதானந்தனென்று இப்படி அநுசந்தித்துவந்தால் இப்பவே அஞ்ஞானமும், அதன் காரியமான ஆவரணமும், அநாத்மவாசனைகளும், புண்ணியபாபரூபமான சஞ்சிதகர்மங்களும், ராகத்துவேஷாதிவிருத்திகளும் நசித்துப்போய் அப்பிரதிபந்த அபரோக்ஷசாக்ஷாத்காரமான ஆத்மஞானம் கரதலாமலகம்போல விளங்குவதால் ஜீவன்முக்தனுய்ச் சுகித்திருப்பனென்றறிக.

## 155 - வது தரங்கம்.

ஞானதபசுக்கும் கர்மதபசுக்கும் பேதமுண்டு:—

ஞானகாரணமான விசாரணையையும் தபசென்றும் சாபானுக்கிரககாரணமான கர்மங்களையும் தபசென்றும் சுருதி சொன்னாலும் இரண்டுக்கும் பேதமுண்டு. [எ - தி] கவுணரையும் சேவகரையும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களென்று சொன்னாலும் பலத்தில் தாரதம்மியமிருப்பதுபோலும், கருடனையும் கோழியையும் அண்டஜமானபக்ஷியென்று சொல்லப்பட்டாலும் பலத்திலும் பெலத்திலும் தாரதம்மியமிருப்பதுபோலும், சரீரத்திலிருக்கிற கண்ணுங் கூதியும் நவத்துவாரக்கணக்குக்குள் அகப்பட்டதாயிருந்தாலும் கண்ணைத்திறப்பதால் சகலவிதமான ஞானமுண்டாவதும், கூதியைத் திறக்குமுன்னே உதைவிழுவதுபோலுமறிக. ஐயா, சாபானுக்கிரக சாமர்த்தியத்துக்குக் காரணமான தபசு கர்மமென்றும், அஞ்ஞானத்தை நிவர்த்திப்பதற்குக்காரணமான ஆத்மாநாத்மவிசாரரூபமான தபசை ஞானமென்றும் சொன்னீர்களே, அப்படிக்கர்மரூபமான தபசினால் முக்திவாராமல் ஞானரூபமான தபசினாலேயே முக்திவருமென்றும் சொன்னதற்குக் காரணமென்னவென்றால், அதைச் சொல்லுகிறேன் கேள்:—சுருதியில் அஞ்ஞானிகளாயுள்ள கர்மிகளுக்குத் தினந்தோறும் சந்தியாவந்தனம், காயத்திரிஜெபம், ஔபாசனம், அக்னிஹோத்ரமுதலான கர்மங்களை யாவத்ஜீவம்வரை செய்யென்றும், பொய்சொல்லாதே, சாராயங்குடியாதே, கஞ்சாமாமிசங்களைச் சாப்பிடாதே, பரஸ்திரீகளைத் தன் தாய்போலும் சகோதரிகள்போலுமெண்ணி அவர்களிடத்தில் சம்போகம் பண்ணாதே, பிறருடைய திரவியங்களை ஓட்டுக்கும் அமேத்தியத்துக்கும் சமான

மாகப்பார், சகலபிராணிகளையும் தன்னுடைய ஆத்மாபோலே பார்த்து அவர்களை ஹிம்சைபண்ணாதே; அதிதி, அப்பியாகதர், பிரஹ்மச்சாரிகள், எதிகள், அகாமஹத சுரோத்திரியரென்ற ஞானிகள்முதலானவர்களுக்கு நிரபேக்ஷயாயிருந்து அன்னபானாதிகளைக்கொடுத்து உபசரியென்ற இதுமுதலான வாக்கியங்களெல்லாம் விதிவாக்கியங்களென்றும், அதன்பின் இகலோக பரலோக முதலான லோகங்களும் அவைகளிலுள்ள போகபோக்கியங்களிலுள்ள அசுத்தம், அனித்தியம், கண்டம், மித்தை, உற்பத்திநாசம், விருத்திக்ஷயமான விகாரம் மேல்கீழான விஷயங்களில் ராகமும் துவேஷமுமுதலான தோஷங்களை நன்றாய்த்தெரிந்து மலமூத்திரங்கள்போல அவைகளிலாசையற்ற முமுக்ஷுக்களுக்கு அந்தஜனனமரண சம்சாரதுன்பங்களிலிருந்து கரையேறவேண்டுவதற்காக "அடே குழந்தாய்! உன்னுடைய நிஜமான ஆத்மசொரூபத்தைப் பார்க்கக்கடவாய். எப்படிப்பார்க்கிறதென்றால், சற்குருவைச் சரணமாகஅடைந்து அவர் சன்னிதியில் ஷட்விதலிங்கதாற்பரியத்தோடு சிரவணம்பண்ணப்பாவென்றும், அதன்பின் சிரவணார்த்தத்தை மனனம்பண்ணப்பாவென்றும், சந்தேகந்தீரும்வரை மனனம்பண்ணினபின் சித்தத்திலனாதிகாலமாய்ப்பிடித்து வந்திருக்கிற விபரீதபாவனை போகுவதற்காக நிதித்தியாசனம்பண்ணப்பாவென்றும், அதன்பின் நிருவிகற்பசமாதியால் உன்சொரூபானந்தத்தை மறைத்திருந்த அஞ்ஞானாவரணங்களைப்போக்கி உன்னை நீ அறியக்கடவாய்" என்று சொல்லுகிற சித்தார்த்தபோதகரூபமான வாக்கியங்களையும் சுருதிகள் சொல்லியிருப்பது அந்தந்த அதிகாரிக்குத்தக்கதாகச் சொல்லியிருக்கிறதென்பதற்கு யுக்திகள் :—குழந்தைகளுக்குப் பிதாவானவர் பாலப்பருவத்தில் நீ தண்ணீரில் போய்விழாதே, தீபாதிகளைத் தொடாதே, பாம்புகளைப்பிடியாதே, துஷ்டப்பிள்ளைகளோடே விளையாடப்போகாதே, காலாகாலத்திற் சாப்பிட்டுப் போட்டுப் பள்ளிக்கூடத்திற்குப்போய் இன்னஇன்ன ஏடுகளைப் படித்துவரவேண்டும். இல்லாமற்போனால் கண்ணைப்பிடுங்கி மூக்கை யறுத்துப்போடுவேனென்று இப்படியெல்லாம் விதித்த அந்தத்தகப்பனே பக்குவமான பிள்ளைக்குத் தன்னுடைய யதார்த்தமான ஸ்திதியையும் அதனாற்பெறப்பட்ட பேரானந்தத்தையும் வஞ்சகமில்லாமல் உள்ளபடியாய்ச் சகலரகசிய சம்பத்துக்களையும் காண்பிப்பதுபோலவறிக.

## 156 - வது தரங்கம்.

பிரஹ்மலோகத்துக்குப் போனவன் திரும்புவனென்றும் திரும்பானென்றும் சொல்லிய இரண்டுசுருதிகளின் தாற்பரியம்:—

பிரஹ்மலோகத்துக்குப் போனவன் திரும்புவனென்று ஓரிடத்தில் சொல்லியிருப்பதும் அங்கே போனவன் திரும்பானென்றும் ஓரிடத்தில் சொன்னதின் கருத்து,— இங்கே புண்ணியகருமம்செய்து அங்கேபோய் அவிடத்திலுள்ள

போகங்களைப்புஜித்துக் கர்மக்ஷயமானவுடன் திரும்பி இங்கே வருகிறவனையும், இங்கே வேதாந்தவிசாரம்செய்து பிரஹ்மலோகத்தில் பிரஹ்மாவிடத்தில் இதைக்கேட்கவேண்டுமென்று அங்கேபோனவன் அவரிடத்திற் கேட்டு ஞானியாய்த் திரும்பாதமோக்ஷத்தை அடைகிறவனையுங்குறித்து இரண்டுவிதமாய்ச் சொல்லியிருக்கிறது. [எ - தி] இங்கே தான்சம்பாதித்த ரூபாய்களை யெடுத்துக்கொண்டு சென்னபட்டணத்துக்குப்போய் அவிடத்திலுள்ள போகங்களைப் புஜித்து காசு ஆய்ப்போனவுடன் தன்ஊருக்கு ஓடிவருகிறவன்போலும், இங்கே ஒருவன் வாசித்துப் பெரியபரிக்ஷைகொடுத்து சென்னபட்டணத்துக்குப்போய் அங்கே ஹைக்கோர்ட்டு ஜட்ஜிவேலை பார்த்துக்கொண்டிருப்பவன் இங்கே திரும்பிவாராதிருப்பதுபோலும்; இன்னும் ராஜகுமாரன் நாமென்று ஜோஸ்யர்மூலமாய்த் தெரிந்தபின் தன்பிதாவாகிய ராஜனிடத்தில் வந்துசேர்ந்தவன் திரும்ப வெளியேறாததுபோலும், ராஜாவிடத்தில் வந்த வித்வான் வெகுமானம் பெற்றபின் வெளியேறிப்போவதுபோலும்; படுக்கையறையில் பக்குவமான பெண்ணுடன் அபக்குவமான பெண்களும் கூடப்போயிருந்தாலும் கதவையடைக்கும்போது அபக்குவப்பெண்களை வெளியில்தள்ளி பக்குவப்பெண்ணைமட்டும் தன்னுடன் சேர்த்துக்கொள்ளுகிறவன்போலுமறிக. [இ - து] பஞ்சதசியில் தியானதீபிகையில் பிரஹ்மவிசாரம்பண்ண சக்தியில்லாமையாகிய புத்திமந்தத்தினாலாவது கருவிகரண தனு புவனபோகங்களினுடைய குறைச்சலினாலாவது எந்தப்புருஷனுக்குப் பிரஹ்மவிசாரம் லபிக்கவில்லையோ அந்தப்புருஷன் சதா பிரஹ்மத்தியானம்பண்ணவேண்டுமென்று சொல்லி, அந்தத்தியானம்பண்ணுவதற்குச் சுத்தமூடனாயிருந்தால் பிரஹ்மலக்ஷணமே தெரியாதானதால் அவனுக்கும் பிரஹ்மத்தியானம் கூடாதாகையாலும், ஞானிக்கும் உள்ளபடியாய்த் தன்சொரூபமான பிரஹ்மம் சதா விளங்கிக்கொண்டிருப்பதால் தன்சினத்தை பிரத்தியக்ஷமாய்ப் பார்த்திருக்கிறவன் கண்ணாடி தேடிஎடுத்து அதுமூலமாய்ப் பார்க்கவேண்டாததுபோலும், பிஷ்டபேஷணநியாயம்போலுமிருப்பதால் ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் பிரஹ்மத்தியானம்வேண்டுவதில்லை. பின்னை யாருக்குச்சொல்லியிருக்கிறதென்றால், அகண்டைகரசமான பிரஹ்மத்தை சுருதி குருவாக்கியங்களால் பரோக்ஷமாயறிந்திருக்கிற புருஷனே பிரஹ்மத்தியானத்துக்கு அதிகாரியென்றும், அந்தப் பிரஹ்மத்தியானத்திற்குச் சச்சிதானந்தாதி விதிகுணங்களாலும் அனணு அஸ்தூலாதி விலக்குகுணங்களாலும் பிரதிபாதிக்கப்படுகிற பிரஹ்மமே நாமென்று தியானிப்பதே லக்ஷணமாவென்றால், நிர்க்குணமான பிரஹ்மத்துக்கு இப்படி விதிநிஷேதங்களான குணங்கள் சொல்லக்கூடுமோவென்றால்,— சூரியாதி மூர்த்திகளுக்கு தங்கமீசைமுதலான நாமரூபகுணங்கள்போல இராமல் இந்த விதிநிஷேதகுணங்கள் பிரஹ்மத்தின் சொரூபமாயிருப்பதுபோலும், அப்படிச்சொல்லாவிடில் ஆத்மாவை யாருமறியக்கூடாதாகையாலும் நிர்க்குணத்துவத்திற்கு விரோதமில்லை. அந்தத் தியானமெப்படியெனில், பிரஹ்மமே

நாமென்று தியானம்பண்ணச்சொன்னால் பிரஹ்மக்ஞானத்திற்கும் பிரஹ்மத் தியானத்திற்கும் பேதமென்னவென்றால்,— ஞானம் வஸ்துதந்திரமென்றும், அதற்கு விசாரமே ஹேது, அந்தஞானம் வேண்டாமென்றாலும் போகாதிருப்பதே சொரூபம், அந்த ஞானமுண்டானமாத்திரத்தில் சகலசம்சார சத்தியபுத்தியை நிவர்த்திப்பதே காரியம், கிருதகிருத்தியத்வமே அவதி, ஜீவன்முக்தியே பலமென்றும்; தியானத்திற்குக் குருவாக்கியத்தை நம்புவதே ஹேது, பிறரிடத்தில் அதை விசாரியாதிருப்பதே சொரூபம், விஜாதீயமான துவிதவிருத்திகளின் திரஸ்காரபூர்வகமான சஜாதீயவிருத்தியைப் பழகுவதே காரியம், அந்தத்தியானம் நாள்தோறும் சொப்பனத்தில் செய்கிறதாகக் காண்பதே அவதி, மோக்ஷமே பலமென்று சொல்லியிருப்பதால் விசாரஞானம் ஏதுக்கென்றால், அந்தத்தியானத்தின் முடிவில் விசாரம்தோன்றி ஞானமுண்டாகியே முக்திவருவதால் விரோதமில்லையென்றறிக.

## 157 - வது தரங்கம்.

விவகாரத்துக்கும் ஞானத்துக்கும் விரோதமில்லை:—

விவகாரத்துக்கும் நான் பிரஹ்மம் ஜகத்துப்பொய்யென்கிற ஞானத்துக்கும் விரோதமில்லை. விவகாரத்துக்குத்தான் திரிவிதகரணங்கள் வேண்டியது. [எ - தி] பொய்யானையில் போட்டிருக்கிற நகராவை அடிப்பதற்கும் யானை பொய்யென்றறிவதற்கும் விரோதமில்லை. நகராவை அடிப்பதற்குமட்டும் ஆளும் கையும் கோலும் வேண்டியிருப்பதுபோலுமறிக. ஐயா, மனதினாலேயே பிரஹ்மநிச்சயம் பண்ணவேண்டியதாயிருப்பதாலும் அந்தமனதினாலேயே சகலவிதமான விவகாரங்களும்செய்யவேண்டியிருப்பதாலும் பிரஹ்மக்ஞானத்திற்கும் விவகாரத்துக்கும் விரோதமில்லையென்று எப்படிச்சொன்னீரென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரம் சொல்லுகிறோம் கேள்:— வாராய் குழந்தாய்! அஞ்ஞானிகளிடத்திலிருக்கிற அந்தக்கரணமானது திரிகுணங்களும் ஒன்றாய்ப்பிரிபடாமல் சேர்ந்திருக்கும். [எ - தி] குத்தாத நெல்லுப்போலும், திரிக்காத கடலைபோலும், சாறுவேறே சக்கைவேறே பிரியாத முழுக்கரும்புபோலும், உடைத்துத்துருவாத தேங்காய்போலும், தேற்றாம்பொடி போடாத கலங்கின ஜலம்போலும், செக்கிலாட்டாத எள்ளுப்போலும், கடையாத தயிர்போலும், ஊற்றுத்தோண்டாத ஆற்றுமணல்போலும், சரீரத்தைவிட்டுப் பிரியாத வியாதிபோலும், ஜலத்தைவிட்டுப் பிரியாத மேகம்போலும், புருஷனைவிட்டுப் பிரியாத சுக்கிலம்போலும், துருவோடேகூடியிருக்கிற ரத்னம்போலும், தீக்குச்சிக்குள்ளிருக்கிற தீப்போலும், ஆத்மானாத்மாக்களுடைய பேதந்தெரியாமலும் விசாரியாமலும் இருதயக்கிரந்தியோடே கூடிக்கொண்டிருப்பதாலும் அஞ்ஞானிகளுடைய மனசுக்கு இரண்டுதன்மையான விவகாரங்களும் ஆத்மஞானமும் சேர்ந்திருக்கமாட்டாது. ஞானிகளுடைய மனசுக்கோவென்றால், நெல்லுகுத்

தினபின் அரிசியை உலையிற்போட்டுச் சமையல்பண்ணுவதுபோல சாத்விகமன தைச் சொரூபானுசந்தானமாகிற பக்குவஞ்செய்யவும், தவிட்டை மாட்டுக்குப் போடுவதுபோல பிராரப்தகர்மமாகிற மாட்டுக்கு ரஜோகுணமாகிற தவிட் டைப்போடலாம், தமோகுணமாகிற உமியைச் சுழுப்தியாதியாகிற தீயெரிக்கப் போடலாம். இன்னும் கடலையை யுடைத்துத்தருவி மாவாக்கி அந்தமாப் போலிருக்கிற சத்துவமனதை சர்க்கரைபோலிருக்கிற ஆத்மாவில் ஐக்கியம் பண்ணலாம், அதிலிருக்கிற பொட்டுகளாகிற ரஜோகுணத்தைப் பிராரப்த கர் மங்களாகிற ஏழைஜனங்களுக்குப் புஜிக்கவுங்கொடுக்கலாம், அதிலிருக்கிற மேல் தோடுகளாகிற தமோகுணமான தூலசரீரத்தை சொசுகு மூட்டைகளாகிற மாடு களுக்குச் சாப்பிடவும் உதவுவதுபோலும். கரும்புரசம்போலிருக்கிற சத்துவ குணத்தைக் குருகிருபையாகிற தீயில்பாகாக்கி தத்வஞானமாகிற வெல்லக்கட் டியாயும் செய்யலாம், ரஜோகுணமாகிற சக்கைகளைப் பிராரப்தகர்மமாகிற கழுதைகள் தின்கலாம், தமோகுணமாகிற மேல்தோட்டை தமோகுணத்தி லுண்டான மண்ணோடே மண்ணாய் மாய்ந்துபோகவுஞ்செய்யலாம். இன்னம் ஸ்தூலசரீரம்போலிருக்கிற தேங்காய்மட்டையையும் சூக்ஷமசரீரம்போலிருக் கிற கொட்டாங்கச்சியையும் காரணசரீரம்போலிருக்கிற சக்கையையும் பிரித்த பின் சுத்தசத்துவமாகிற தேங்காய்ப்பாலை பிரஹ்மானந்தமாகிற கற்கண்டில் சேர்த்து தத்வஞானமாகிற பாயசம்பண்ணி அனுபவமாகிற சாப்பாட்டை யும் செய்யலாம், சுழுப்தியாகிற கறிபதார்த்தத்தில் மிசிரசத்துவமாகிற சக்கை யைச் சேர்க்கலாம், கொட்டாங்கச்சிபோலிருக்கிற சூக்ஷமசரீரத்தில் மைத்திரி யாதிசத்குணங்களாகிற சாமான்களைப்போட்டுவைக்கலாம், தூலசரீரமாகிற மட்டைகளை முமுக்ஷக்களாகிற பெண்கள் சித்தசுத்தி சாதனசதுஷ்டயமுதலா னதாகிற தண்ணீர்முதலானதைத் தூக்குவதற்கு உபயோகமான கயிறுமுத லானதாகச் செய்துகொள்ளுவதாலும் தத்வஞானத்துக்கும் பிராரப்தவிவ காரத்துக்கும் ஞானிக்கு யாதொரு விரோதமில்லையென்றறியத்தக்கது.

## 158 - வது தரங்கம்.

பிரஹ்மக்ஞானத்துக்கும் பிரஹ்மத்தியானத்துக்குமுள்ள பேதம்:—

ஞானிக்குத் தியானமுமிருக்கவேண்டுமென்பது அவசியமில்லை, தியானிக்கு ஞானமில்லாவிட்டால் மோக்ஷமில்லை. [எ - தி] சுமங்கிலிக்குத் திருமங்கலிய மாத்திரம் போதும் ஆபரணமும் கூடயிருந்தால் அழகுதான், போஜனத்துக் குப் பசியைப்போக்க அன்னாதிகள்மட்டும் போதும் பக்ஷணாதிகள் கூடயிருந் தால் விசேஷம், போகத்துக்கு யோனிமாத்திரம் போதும் மற்றஅவயவங்களும் அழகாயிருந்தால் அழகுதான் என்பதுபோலும்; மாங்கல்யமில்லாதவள் போலும், அன்னமில்லாததுபோலும், யோனியில்லாத பாலசுவாமிபோலும் தியானிக்கு ஞானமில்லாமல் மோக்ஷம்வராதென்றறிக. [இ-து] நாம்யாரென்ற

விசாரணையால் அஞ்ஞானம்போய் ஞானம்வருவது வேரில் நெருப்புவைப்பது போலும், பிரஹ்மத்தியானத்தால் அஞ்ஞானம்போய் ஞானம்வருவது கொப்புகளில் நெருப்புவைப்பதுபோலுமறிக. [இ - து] தியானம் பிரயாசமென்றும் ஞானம் லகுவென்றும் சொல்லியிருக்கிறதேயென்றால், பூட்டியிருக்கிற இரும்புக்கதவை உடைத்து உள்ளேபோவதுபோலும், திறவுகோல்போட்டுத் திறந்து உள்ளேபோவதுபோலும், விசாரமன்றியில் பிரஹ்மத்தியானத்தால் மோக்ஷ வீட்டுக்குள் நுழைவது பிரயாசம். விசாரத்தால் அனாத்மாக்களை நேதித்து ஆத்மாவே தானென்று நுழைவது லகுவென்றறிக. [இ - து] ஆத்மா பஞ்சகோசவிலக்ஷணர். [எ - தி] அஞ்சிசேலைகட்டின ஸ்திரீ அந்தச்சேலைக்கு அவள் வேறாயிருப்பதுபோலவறிக. [இ - து] யோகாநந்தத்தில் யோகத்தை முக்கியமாய்ச்சொன்னது சுகத்தைக்குறித்து, தியானதீபத்தில் விசாரத்தை முக்கியமாய்ச்சொன்னது ஞானநிச்சயத்தைக்குறித்து. [எ - தி] ஒரு அவசரத்தில் பணம்முதலானதை அலக்ஷியம்பண்ணிப்போட்டு ஸ்திரீசுகத்தை முக்கியமாய் எண்ணுவதுபோலும், மற்றோர் அவசரத்தில் ஸ்திரீமுதலானதைவிட்டுத் தீவாந்தரம்போய் திரவ்யம் சம்பாதிப்பதுபோலுமறிக. [இ - து] ஞானியும் தியானியும் விஷயத்தைக் கண்டமாத்திரத்தில் அபயத்தையும் பயத்தையுமடைவார்கள் [எ - தி] பெரியவனும் குழந்தையும் பூதக்கண்ணாடியைப் பார்த்தமாத்திரத்தில் அபயத்தையும் பயத்தையுமடைவதுபோலவறிக. [இ-து] சமாதியால்வருகிற ஞானத்துக்கும் விசாரணையால்வருகிற ஞானத்துக்கும் பேதமில்லை. [எ - தி] கோவிலுக்குக் குறுக்குவழியாய்ப் போகிறவனுக்கும் பிரதக்ஷணமாய்ப் போகிறவனுக்கும் சுவாமிதரிசனம் சரியாய்க்கிடைப்பதுபோலும், ஆறுரசத்தோடே அன்னம்புஜிப்பவனுக்கும் அன்னமாத்திரம் புஜிப்பவனுக்கும் பசி தீருவதில் பேதமில்லாததுபோலவறிக. [இ - து] குருமுகமாய்ச்செய்கிற விசாரக்ஞானம் கற்கண்டுசாப்பிடுவதுபோல ரசமாகும், குருவாக்கியத்தில் நம்பிக்கையோடே தியானம்பண்ணுவது குளவியை நினைத்தபுழு குளவி ஆவது போலும், ஐந்தவர்கள் பிரஹ்மாவானதுபோலுமறிக. [இ - து] கர்த்துருதந்திரத் தியானத்துக்கும் வஸ்துதந்திர ஞானத்துக்கும் யுக்தி:—ஒருகுருடன் தன்னூர்வரை கட்டியிருக்கிற கயிற்றைப்பிடித்துக்கொண்டு நடந்துபோகிறவன் சாவதானமாய்ப் போகவேண்டியதுபோலும், கண்தெரிந்தவன் தன்னூருக்கு நிர்ப்பயமாய்ப்போவதுபோலும்; தந்தி அறுந்துபோயிற்றென்று சொன்ன ராஜாவின்கதைபோலும், கயிறறுந்துபோய் மாமியாரிடத்திற்போன மாப்பிள்ளைகதைபோலும், இருட்டுக்குள்ளிருக்கிற எலிக்கண் பூனைக்கண் போலும் பேதமறியத்தக்கது. ஞானத்தோடே புஸ்தகம்எழுதுகிற பால ஸ்வாமிகள்போலும், ஞானமில்லாமல் ஈயை அடித்துக்காகிதத்தில் கோந்துப்பசையால் ஒட்டவைத்த ஈயடித்தான்ரைட்டர்போல புஸ்தகம் எழுதுகிற சுந்தரப் பரதேசிபோலும்; பெண்ணே! உன்னுடைய முகமாகிற தாமரைபுஷ்பத்தில் கண்களாகிற கருநெய்தல்புஷ்பங்கள் முளைத்திருக்கிறதென்று சொன்ன காளி

தாசன்வசனத்தைக்கேட்ட அந்தத்தாசி போஜராஜாவினிடத்திற் போய் அவன் சொன்னதுபோல இவளும் பெண்ணேயென்று இராஜாவைப்பார்த்துச் சொன்னகதைபோலும் இரண்டுக்கும் பேதமறியத்தக்கதென்று அறியவும்.

## 159 - வது தரங்கம்.

பரமுக்தி அபரமுக்திகளின் பேதம்:—

சாலோகாதி அபரமுக்திக்கும் சாக்ஷாத்காரஞானமாகிற பரமுக்திக்கும் பேதமுண்டு. [எ - தி] தன் சொந்தவீட்டில் குடிபோவதுபோல பரமுக்தி, வாடகைக்கு பரர்ள்வீட்டில் குடிபோவதுபோல அபரமுக்தியென்றறிக. [இ - து] பிரம்மசாயுஜ்ஜத்துக்கும் ஈசுவரசாயுஜ்ஜத்துக்கும் பேதமேதென்றால், முதலாவதுக்கு யுக்திகள்:— பாலில் பாலைவிடுவதுபோலும், சேற்றில்கிடந்த தங்கத்தை புடம்போட்டு சுத்ததங்கத்தோடே ஒன்றுசேர்ப்பதுபோலுமறிக. இரண்டாவதற்கு யுக்தி:— இரும்பை ரசவாதத்தால் தங்கமாக்குவதுபோலும், கல்லை விஷ்ணுவாதி மூர்த்திகளாய் ஆசாரிசெய்வதுபோலுமறிக [இ - து] சகுணமூர்த்திகளை திரிகரணங்களால் சேவிக்கவேண்டுமானால் தேசகாலம் பிரகாசமுதலானதுகளை அபேக்ஷிக்கவேண்டும், நாம்யாரென்று தன்னைப்பார்க்கிறவனுக்கு யாதொரு சாதனபேக்ஷையும் வேண்டுவதில்லை. [எ - தி] ஸ்திரீபோகம் செய்யவேண்டியவனுக்குத் தேசகாலம் திதிவாரம் நக்ஷத்திரமுதலானதை அபேக்ஷிக்கவேண்டும், தன்சொரூபத்தைத் தான் பார்த்துக்கொள்ள யாதொன்றும் அபேக்ஷையில்லாததுபோலறிக. ஐயா, பரமுக்தி பிரம்மசாக்ஷாத்காரமென்றும் அபரமுக்தி சாலோகாதிபதங்களென்றுஞ் சொன்னீர்களே, பரமுக்தியால் ஜனனமரண துன்பங்கள் நிஸ்ஸேஷமாய் நிவர்த்தியாகுமென்றும், அபரமுக்தியால் வருகிற மோக்ஷம் ரசவாதத்தால் இரும்புக்கு வந்திருக்கிற சுவர்ணவர்ணம் அந்தரசத்தினுடைய வீரியமெவ்வளவுகாலமிருக்கிறதோ அவ்வளவு காலம் சுவர்ணம்போலே தோற்றிக்கொண்டிருந்து அந்த ரசகுளிகையினுடைய வீரியமானது காலாந்தரத்தில் அழியும்போது அந்தத்தங்கவர்ணமும் போய் பழைய இரும்பினுடைய கிருஷ்ணவர்ணமே மிஞ்சுகிறதுபோல கருத்துருத்துவமாகிற இரும்புக்குசம்சாரதுக்கமாகிற கிருஷ்ணவர்ணமானது உத்கிருஷ்டமான கர்மோபாசனைகளாகிற சித்தகுளிகையால் ஆநந்தமாகிற சுவர்ணவர்ணம் போலத் தோற்றினும் அந்தக்கர்மோபாசனைகளாகிற குளிகை வீரியமிருக்கும்வரை அகர்த்துருத்துவரூப ஆனந்தமாகிற தங்கவர்ணம் தோற்றிக்கொண்டிருந்து, அந்தக் கர்மோபாசனைகளாகிற ரசவீரியத்துக்கு க்ஷயம் வருங்காலத்தில் அந்த ஆனந்தமாகிற தங்கவர்ணம்போய்ப் பழைய கர்த்துருத்துவரூப துக்கமாகிற கருநிறமான இரும்புரூபமே மிச்சமாகுமென்று சொன்னீர்களே, அப்படியழிந்துபோகிற பதவிகளுக்கு முக்தியென்கிற சொல்லானது, செவ்வாய்க்கிழமைக்கு மங்களவாரமென்பதுபோலும், ஜெகத்தை சத்தியமென்கிற மத்துவர்களைத் தத்துவவாதியென்று சொல்லுவதுபோல இருக்கிறதே

யென்று கேட்பாயாகில், நீ சொன்னது ஞாயந்தான். ஆனாலும் பசியாய்வந்தவனுக்கு உடனே பசிதீரும்படியாக பக்குவான்னத்தைக் கொடுப்பதுதான் அன்னதானமென்ற சொல்லுக்கர்த்தமானாலும் அரிசி கொடுப்பதும், நெல்லைக் கொடுப்பதும், காசைக்கொடுப்பதும், பயிராயிருக்கிற வயலை விளைந்ததின் பேரில் கதிரறுத்து நெல்லை எடுத்துக்கொள்ளச்சொல்லுவதும், தரிசுநிலத்தைக் காண்பிப்பதுபோலுமென்றறிந்து அபரமுக்திகளுடைய தாரதம்மியத்தைத்தெரிந்து அதுகள் கௌணமென்றும் அன்னம்கொடுப்பது உடனே பசியைத்தீர்ப்பதுபோல ஞானம் துக்கமாகிற பசியைத்தீர்ப்பதால் முக்கியமென்றறிக. ஆனால் இந்தஞானம் ஏன் எல்லாருக்கும் வரக்கூடாதென்றால், இவ்வுலகத்தில் ஏன் எல்லாரும் சக்கிரவர்த்தியாகக்கூடாதென்று கேட்கக்கூடாததுபோலும், சங்கெல்லாம் வலம்புரிசங்கமாக ஏன் உண்டாகக்கூடாதென்று கேட்கக்கூடாததுபோல இந்த ஜீவர்கள் உண்டாய்க்கொண்டுவருகிற ஜென்மங்களுக்குள் இனிப்பிறவாத முடிந்தபிறப்பில் இந்த பிரம்மக்ஞானம் அதிசுலபமாய்த் தோன்றுமேதவிர மற்றவர்களுக்குத்தோன்றாது. [எ - தி] ஒரு ஜயில்கொட்டடிக்குள் அனேகர்கள் விலங்குடன் அகப்பட்டிருக்கிற பேர்களுக்குள் எவனுக்கு எந்தநாளில் விடுதலைச்சீட்டேற்பட்டிருக்கிறதோ அவனே அந்தநாளில் அந்த விலங்கிலிருந்து அதிசுலபமாய் விடுபட்டு வெளியில் வருவதுபோலவறிக.

## 160 - வது தரங்கம்.

உத்தம மத்திம அதம அதிகாரிகளின் தன்மை:—

குருசன்னிதியில் வந்திருக்கிற உத்தம மத்திம அதமர்களாயுள்ள அதிகாரிகளுடைய பக்குவமாவது,—குரு கோபித்தமாத்திரத்தில் தூர ஓடிப்போகிறவன் அதமன், கோபித்தவுடன் கொஞ்சம்விலகி மறைந்திருந்து பின்னால் வந்து சேருகிறவன் மத்திமன், கோபித்தகாலத்தில் இப்படி நமக்கு யார் புத்தி சொல்லப்போகிறாரென்று மகிழ்ச்சியுடன் இடைவிடாமல் பணிவிடைகளையும் சிரவணாதிகளையும் செய்கிறவன் உத்தமன். [எ - தி] களத்தில் குமித்திருக்கும்போது மணிநெல்லும் அரைக்காய்நெல்லும் பதரும் சேர்ந்திருந்தாலும் காற்றடித்துத் தூற்றினமாத்திரத்தில் பதரு தூரத்தில் ஓடிப்போவதும், காய்நெல்லு மண்ணுக்குள் மறைந்திருந்து பின்னால் புடைத்ததின்பேரில் காணப்படுவதும், பழுத்தநெல் எந்தகாற்றுக்கும் அசையாமல் பிரகாசமாய் விளங்குவதுபோலும்; யுத்தத்தில் அர்த்தரதன் ஓரடிபட்டமாத்திரத்தில் ஓடிப்போவன்போலிருக்கிற அதமன் மோக்ஷவெற்றியை ஒருக்காலுமடையான், சமரதன் அடிபட்டகாலத்தில் சமாளித்து மறைந்துகொள்ளுகிறவன்போல மத்திமன் சிலகாலத்தில் மோக்ஷவெற்றியடைவன், மகாரதன் எவ்வளவு சத்துருக்களுடைய பாணம் வந்துவிழுந்தாலும் லக்ஷியமன்றியில் தன்னையும் தன்னைச்சார்ந்த சேனைகளையும் காப்பாற்றி எதிரிகளையும் அவர்களைச்சார்ந்த படைகளையும் நிமிஷத்தில் அதம்பண்ணுவதுபோல உத்தமஅதிகாரி அஞ்ஞானனையும்

அவனைச்சார்ந்த காமக்குரோதாதிகளையும் பொய்யென்று அதம்பண்ணி தன்னையும் தன்னைச்சார்ந்த மைத்திரி கருணை முதிதை சமதமாதி குணங்களையும் காப்பாற்றிக்கொண்டு க்ஷணத்தில் மோக்ஷமாகிற வெற்றியை யடைவனென்றறிக. [இ - து] முமுக்ஷுவானவன் குருசன்னிதிக்கு வரும்போதே சாதனசதுஷ்டய முதலான சகல சத்குணங்களுடனே கூடிவருகிறவன் உத்தமன், சாதனசதுஷ்டயத்தினுடைய ஹேது சொரூபம்வரையிலுள்ள குணங்களையுடையவனாய் வந்து பின் குருசன்னிதான விசேஷத்தால் பூரணகுணங்களைப் பெறுகிறவன் மத்திமன், நித்தியாநித்தியவஸ்து விவேகமாத்திரமுடையவனாய் வருகிறவன் அதமன், அதற்குக் கீழ்ப்பட்டவனை அதிகாரியில் சேர்க்கக்கூடாது. [எ - தி] சர்க்காரில் உத்தியோகத்திற்கு வருமுன்னமே சகல சட்டபரீக்ஷையுங்கொடுத்து உத்தியோகத்திற்கு வருகிறவன் உத்தமனாயிருப்பதுபோலும், சிலபரீக்ஷைகளைக் கொடுத்து வேலைக்கு வந்தபின் சொச்சபரீக்ஷையுங் கொடுப்பவன் மத்திமனாயிருப்பதுபோலும், கையெழுத்துமட்டும் எழுதத்தெரிந்து சிபார்சையினால் உத்தியோகத்துக்கு வந்து விருத்தனுடைய ஸ்திரீயைக் கிட்டஇருக்கிறபேர்கள் கூடுமானமட்டும் காரியம்பார்ப்பதுபோல மற்றஉத்தியோகஸ்தர்கள் இவன் வேலையெல்லாம் ஒப்பேற்றியபின் புண்ணியாகவசனத்துக்குமட்டும் விருத்தன் வந்து உட்காருவதுபோல கையெழுத்துப் போடுவதற்குமட்டும் வருகிற அதமன்போலும், அதற்கும் சக்தியில்லாதவனை ஒரு உத்தியோகத்திலும் சேர்க்கக்கூடாததுபோலவறிக. சாதனசதுஷ்டயத்துடன் குருசன்னிதிக்கு வருகிறவன் உத்தமோத்தமன், சாதனங்களிருந்தும் பிரதிபந்தத்தால் தோற்றாமல் மறைபட்டிருந்து குருநாதனைக் கண்டமாத்திரத்தில் அந்தப்பிரதிபந்தகம் நீங்கி சாதனங்களுடன் ஞானத்தையடைபவன் உத்தமன், சன்னிதியில் வந்தபிறகே தீவிரமாகச் சாதனங்களைப்பழகி ஞானத்தையடைகிறவன் மத்திமன், சன்னிதியில் வந்தும் சாதனம்பழகாமல் சும்மா சிரவணம்கேட்டு நம்பாமல் குருவினுடைய குருவந்து சொல்லி நம்புகிறவன் அதமன், அப்பவும் நம்பாமல் சராசரமான ஜகத்தை ஈசவடிவமாகப்பார்ப்பவன் அதமாதமன். [எ - தி] ராமருக்குச் சுயமாகவே சாதனசதுஷ்டயம்வந்து சிரவணம்செய்ததால் ஞானத்தை யடைந்தார், ஆகையால் அவர் உத்தமோத்தமர். ஹனுமார் சகலவித்தைகளும் சாதனங்களுமிருந்தும் சூரியனுடைய சாபத்தால் தோற்றாமலிருந்து ராமனைக் கண்டமாத்திரத்தில் சாபவிமோசனமாய்ச் சாதனத்துடன் சிரவணம் பண்ணி ஞானத்தை யடைந்ததால் உத்தமன், நிதாகரிஷிக்கு ரிபுமுனி மூன்று தடவை வந்து யதார்த்தத்தைச்சொல்லியும் அறியாமல் பிற்பாடு குருவாகிய ரிபுமுனியின் கிருபையால் சாதனத்துடன் ஞானத்தை யடைந்ததால் மத்திமர். பிரம்மா தேவதைகளுக்கு நாலுவேதமுடிவின் அர்த்தத்தைப் பிரமாண மூலமாய்ச் சொல்லியும் நம்பிக்கை வராமல் பரமசிவனைத் தியானத்தால் வரவழைத்து தேவியுடன் அவர் ஆவிர்ப்பவித்து அனுக்கிரகித்தபின் அவர்களுக்கு ஞானநிச்சயம் வந்ததால் அவர்கள் அதமர்கள். உத்தவருக்கு கிருஷ்ணபக

வான் ஞானத்தை யுபதேசித்தும் உள்ளேயிறங்காமற் போனபின் நாரதர் உபதேசத்திலும் ஞானம்வராமற் போனபின் சராசரமான ஜகத்தை பகவத் சொரூபமாகப்பாவித்து வந்தனம்பண்ணச்சொன்னதால் அவர் அதமாதம னென்றறியத்தக்கது. முக்கியவதிகாரி சாதனசதுஷ்டய சம்பத்துடன்கூடி குருசன்னிதிக்கு வருவனென்பதற்கும் கௌண அதிகாரி குருசன்னிதிக்கு வந்தபிற்பாடு சாதனங்களைச் சேகரிப்பன். [எ - தி] பெரியவீட்டுப்பெண் புருஷனிடம் வரும்போதே சகல சம்பத்துக்களுடன் வருவதுபோலும், ஏழை வீட்டுப் பெண்போலுமறிக. [இ - து] சுகதுக்கம் வருவது முந்திச்செய்த கர்ம காரியம். [எ - தி] கள்ளியும் கற்பகச்செடியும் முந்தி விழுந்திருக்கிற விதை களின் காரியமென்றறிவதுபோலும், வாரண்டுவருவதும் ரூபாய்வருவதும் முந்தி வாங்கியும் கொடுத்துமிருக்கிற பலமென்பதுபோலவறிக. [இ - து] பின்னை ஞானிக்கு விதிதானேதென்றால், ரயில் தண்டவாளத்தில் போவது போலப் பிராரப்தப்படி நடப்பதே விதியென்றறிக. [இ - து] விஷயாசை யோடே பிரம்மவிசாரம்பண்ணுகிறது கடன் வாங்குகிறபோதே மோசக்கருத் துடன் வாங்குகிறவன்போலும், வைராக்கியத்துடன் பிரம்மவிசாரம்பண்ணி பின்னால் சகவாசத்தால் விஷயத்தில் விழுகிறவன் கடன் வாங்கும்போது நல்லமனதாய் இருந்து பிறகு துர்ப்போதனையால் மோசம்பண்ணுகிறவன் போலும், ஆதிமுதல் முடிவுவரையில் விரக்தனாயிருந்து பிரம்மவிசாரம்பண்ணி பந்தநிவர்த்தி செய்துகொள்ளுகிறவன் கடன் வாங்கினதுமுதல் வட்டியும் முதலுமாய்க் கடைசிவரைகொடுத்து இரணவிமோசனஞ் செய்துகொள்ளுகிற வன்போலுமறிக. [இ - து] மந்தஅதிகாரிக்கும் மத்திமஅதிகாரிக்கும் உத்தம அதிகாரிக்கும் ஞானம் வருவதில் காலவித்தியாசமுண்டு. [எ - தி] சூடனில் தீப்பற்றுவதுபோலும், விறகில் தீப்பிடிப்பதுபோலும், வாழைமரத்தில் தீப் பற்றுவதுபோலும், பக்குவமுள்ளகாயும் அபக்குவமுள்ளகாயும் பிஞ்சும் பழ மாவதில் காலவித்தியாசமிருப்பது போலுமறிக. [இ - து] உத்தமஅதிகாரிக் கு பிரம்மவிசாரமும், மத்திமஅதிகாரிக்கு பிரமத்தியானமும், அதமஅதிகாரி க்கு புருவத்தின் நடுமுதலான லக்ஷியத்தில் தியானமும் சொல்லப்பட்டிருப் பதற்கு யுக்தி:—யோக்கியதையுள்ள பிராம்மணனுக்கு மிருஷ்டான்னபோஜன மும், குடியானவனுக்குக் கஞ்சியும், நீசனுக்குக் கம்பு கேப்பைக்கூழும் விடுவது போலுமறிக. அதிகாரிகளின் பேதம்:— சிரவணமாத்திரத்தில் ஞானம்வரு மென்று ஓரிடத்திலும், மனனமன்றியில் ஞானம் வராதென்றோரிடத்திலும், நிதித்தியாசனங்கூடச் செய்யவேண்டுமென்றோரிடத்திலும், மனோலயமான சமாதியும் செய்யவேண்டுமென்றோரிடத்திலும், இப்படிப் பேதமாய்ச்சொல்லி யிருப்பது அதிகாரிகளின் சித்தபரிபாக தாரதம்மியமென்பதற்கு யுக்திசொல் லுகிறார்:— காலில் புழுதி ஒட்டினவனுக்கு ஜலத்தைவிட்டதினாலேயே சுத்தமா வதுபோலும், சகதியை மிதித்துவந்தவனுக்கு ஜலத்தைவிட்டு கையால் தேய்த் துக் கழுவவேண்டுவதுபோலும், வண்டிமையை மிதித்துவந்தவனுக்கு தைலதா

ரையையும்விட்டு வெகுநாழிகை தேய்த்துக் கழுவவேண்டுவதுபோலும், துஷ்டநடத்தையால் வந்த சிசுஹக்கிராணத்துக்கு அதையறுத்து ரணத்தை யாற்றுவதுபோலவறிக. முமுக்ஷுவானவர்களுக்குள்ளே தாரதம்மியம் சிரவணகாலத்திலேயே நாலுவிதமாய்க்காணப்படும். அதாவது, சிரவணங்கேட்க ஆரம்பிக்கும்போதே தூங்குகிறவன் அறுப்புகாலத்திலேயே கடன்வாங்குகிறவன் போலவும், இரண்டுநாழிகை சிரவணஞ்செய்து நித்திரைபோகிறவன் இரண்டுமாதத்துக்கு நெல்வைத்து சாட்பிடுகிறவன்போலும், நாலுநாழிகை சிரவணஞ்செய்து நித்திரைபோகிறவன் எட்டுமாதத்துக்கு நெல்வைத்து போஜனஞ்செய்கிறவன்போலும், சிரவணம் முடியும்வரை நித்திரையன்றியில் கேட்கிறவன் வருஷாந்தம்வரை நெல்வைத்து போஜனஞ்செய்கிறவன்போலவும், சிரவணம் முடிந்தபின்பேரிலும் மறுநாள் சிரவணம்பண்ணும்வரை அதையே சிந்தித்துவருகிறவன் மறுவருஷம் அறுப்புக்காலம்வரை பழையநெல்வைத்து போஜனம் பண்ணுகிறவன்போலுமிருப்பதால் முதலிற்சொன்னவனை மட்டும் அதிகாரியில் சேர்க்கக்கூடாதென்றறிக. [இ - து] ஜென்மாந்திரத்திலே யெல்லாஞ் செய்துமுடிந்தவனுக்கு பிறக்கும்போதே சுயஞானசுகங்கிடைக்கும்-முதனாளே டிக்கட்டுவாங்கினவன் மறுநாள் சிரமமன்றியில் ரயிலில் முன்னே போயேறுவதுபோலும்; சித்தசுத்தியுடன் பிறந்தவன் பாலியத்திலேயே ஞானப்பியாசஞ்செய்து சுகத்தை யடைகிறவன்-இராத்திரி விழித்திருந்தவன் முதல்முதல் போய் டிக்கட்டுவாங்கி ரயிலேறுகிறவன்போலும்; எவ்வனத்தில் ஞானப்பியாசம்செய்து சுகமடைவது-டிக்கட்டுக்கொடுக்கிற மத்தியிற் போய் டிக்கட்டு வாங்கி ரயிலேறுகிறவன்போலும்; வார்த்தீகத்தில் ஞானப்பியாசம்பண்ணுவது கடைசியில் டிக்கட்டுவாங்கி யேறுகிறவன்போலும்; மரணகாலத்திலாவது பிரஹ்மஞானத்தைச்சம்பாதிப்பது ரயில்விடும்போதாவது வருத்தப்பட்டு ரயிலேறிப் போகிறவன்போலும்; அஞ்சுபேருக்கும் மோக்ஷம் சமானமாயிருந்தாலும் சுகதாரதம்மியமுண்டென்றறிக. ஐயா, இப்படி உத்தம மத்திம அதம அதமாதம அதிகாரிகளுடைய மனதில் பற்றியிருக்கிற விஷயாசைகள் நிவர்த்தியாகிற தாரதம்மியங்களை எனக்குத் தெரியும்படி அறிவிக்கவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:—உத்தமஅதிகாரிக்குச் சற்குருவைக் கண்டமாத்திரத்தில் தாபத்திரயதுன்பமான ஈஷணாத்திரயங்களை தீயால் கொதித்துக்கொண்டிருக்கிற பாத்திரத்தைத் தெரியாமல் தூக்கினவன் நாள் நக்ஷத்திரம் பாராமல் எறிந்துபோடுவதுபோல உடனே தியாகம் பண்ணுகிறவன் உத்தமஅதிகாரி, ஊஞ்சலிலிருக்கிறவன்போல சற்சங்கதி பண்ணும்போது விஷயத்தியாகம் பண்ணவேண்டுமென்று தோன்றி, பெண்டாட்டி பிள்ளைகளைக் கண்டபோது அவர்களிடத்தில் இரக்கமுந்தோன்றுவது மத்திமன், காலாந்தரத்தில் விஷயத்தை விடுவோமென்று நினைப்பவன் அதமன், தானே மோக்ஷம் வரட்டுமென்று புதையலகப்படுவதுபோலவென்று நினைப்பவன் அதமாதமனென்றறிக. இப்பவே ஜீவன்முக்தியும், ஜென்மாந்தரத்தில்

முத்தியும், யுகாந்தரத்தில் முக்தியும், இந்த மூவர்களுக்கும் கிரமமாய்வரும். நாலாமவனுக்கு முக்தி ஒருக்காலுமில்லையென்றறிக.

161 வது - தரங்கம்.

அஞ்ஞானி முமுக்ஷு ஞானிகளின் தன்மை:—

அஞ்ஞானதிசையில் அகங்காரம் சதாகிளம்பி எங்கேபாய்வோமென்று பரபரப்போடேகூடியிருக்கும். [எ . தி] எவ்வனபுருஷனுடைய சிசுனம் சதா எழும்பி எங்கேவிடுகிறதென்று பரவசமாயிருப்பதுபோலும்; முமுக்ஷுவினுடைய அகங்காரம் குருசன்னிதியில் அடங்கியிருந்து மற்றவர்களோடே யிருக்கும்பொழுது அவர்கள் உனக்கென்ன தெரியுமென்று தூண்டிக்கொடுத்தால் உடனே அகங்காரம் கிளம்பி ஒருகைபார்க்கும். [எ - தி] முக்கால் வயதுள்ள புருஷனுடைய சிசுனம் கூட்டத்திலிருக்கும்போது எழும்பாமல் ஏகாந்தத்தில் பவ்வியமுள்ள ஸ்திரீ அதைக்கொஞ்சம் தொட்டுத்தடவிக்கொடுத்தால் மேலே ஏறி மேல்காரியம் பார்ப்பதுபோலும்; ஞானிக்ககங்காரம் தானுயாவது பிறருடைய தூண்டுதலினுலேயாவது உண்டாகாது. [எ-தி] மிகுந்த விருத்தனுடைய சிசுனம் தானுயாவது பிறர்பிரயத்தினத்தினுலாவது எழும்பாததுபோலவறிக. [இ - து] துக்ககரமாயும் அரசமாயுமிருக்கிற பிரவர்த்தியைவிட்டு சுககரமாயும் சரசமாயு மிருக்கிற நிவர்த்தியை முமுக்ஷுவானவன் பிடிக்கவேண்டுமேதவிர ஞானிக்கு இரண்டும் சரி [எ - தி] எவ்வன புருஷனுக்கு வியாதியுள்ளவளாயும் பைஷ்டைபோனவளாயுமிருக்கிற மூத்தவளிடத்தில் சேரக்கூடாது, வியாதியில்லாதவளாயும் எவ்வனமுள்ளவளாயுமிருக்கிற இளையவளிடத்தில் சேரவேண்டும். கிழவனுக்கு இரண்டுபேர்களிலும் பிரயோஜனமில்லாததினுல் இருவரும் சரியாயிருப்பதுபோலவறிக. [இ - து] அஞ்ஞானி வியாதிவந்தவன் மேல்கொண்டு அபத்தியம்செய்வதுபோல் சொரூபத்தை மறந்துவிட்டு விஷயத்தில் விழுகிறவன், மந்தமுமுக்ஷு மருந்தும் பக்ஷணமும் சாப்பிடுவதுபோல வேதாந்தசிரவணமும் விஷயவியாபாரமும் செய்வன், தீவிரமுமுக்ஷு அபத்தியத்தைத்தள்ளி பத்தியத்துடன் மருந்து சாப்பிடுவதுபோல மூடசங்கத்தைத் தள்ளி சதா சத்சங்கத்துடன் சிரவணுதிசெய்வனென்றறிக. [இ - து] அஞ்ஞானி அத்திப்பழம்போலும், குடும்பக்ஞானி பலாப்பழம்போலும், துறவிக்ஞானி கற்கண்டுபோலுமறிக. [இ - து] அஞ்ஞானிகள்மனது சேறுபோலே சதா தெளியாமலிருக்கிறது, முமுக்ஷுக்கள்மனது பாசிமூடினஜலம் கையால் கலக்கினுல் தெளிவதுபோல விசாரத்தால் தெளியும், ஞானிமனது பாறையிலிருக்கிற ஜலம்போல எப்போதும் தெளிந்திருக்குமென்றறிக. [இ - து] அஞ்ஞானியின் புத்தி பதிவிரதைபோல கர்த்தாவைப் பிடித்திருக்கும், முமுக்ஷுவின் புத்தி குலஸ்திரீ ரகசியமாய்ச் சோரபுருஷனுக்கும் பிரகாசமாய்ச் சொந்த புருஷனுக்கும் திருப்திபண்ணிவைப்பதுபோல இரண்டிலும் சேர்ந்திருக்கும்

ஞானியின் மனது பிரஹ்மத்திலே ரமித்துக்கொண்டிருக்கும், குடும்பத்தை விட்டு வெளிபேறினவள் இராப்பகல் பாராமல் ஆசைநாயகனோடே நிர்ப்பயமாய் ரமித்துக்கொண்டிருப்பவள்போலவறிக. [இ - து] அஞ்ஞானிகள்மனது எப்போதும் ஒருபடித்தாய்க் கரையாமலிருப்பதற்கும் முமுக்ஷுவின்மனது விவேகத்தால் கரைந்துபோம். [எ - தி] சிலகளிலிருக்கிற ஸ்தன்னியம்போலும், ஸ்திரீயினிடத்திலிருக்கிற ஸ்தன்னியம்போலுமறிக. [இ - து] அஞ்ஞானி துக்கியென்று சொன்னபேரோடே சண்டைக்குப்போகிறான். [எ - தி] அவிசாரி என்று சொன்னதைக்கேட்ட அவிசாரி சண்டைக்குப் போவதுபோலும்; முமுக்ஷு துக்கியென்று சொன்னால் ஒத்துக்கொள்ளுகிறான். [எ - தி] விரதோத்தியாபனம் பண்ணினவள் முந்திச்செய்த விபசாரத்தைப்பற்றித் தூஷித்தால் அவள் ஒப்புக்கொள்வதுபோலும்; ஞானிக்குத் துக்கமுமில்லை, துக்கியென்று சொன்னாலும் அதிலும் துக்கமுமில்லை. [எ - தி] பதிவிரதைக்கு விபசாரமுமில்லை, விபசாரியென்று ஒருவர் தூஷித்தாலும் பயமுமில்லையென்றறிக. ஐயா, அஞ்ஞானியானவன் உள்ளே சதா துக்கப்பட்டுக்கொண்டிருந்தும் யாராவது இவனைப்பார்த்து நீ நிரம்ப கஷ்டப்படுகிறாயென்று சொன்னவுடன் கோபித்துக்கொள்ளுகிறதற்குக் காரணமென்னவென்றால், தாசிக்குத் தன் யோனியினாலேயே பிழைப்பு நடக்கவேண்டியிருப்பதால் அந்தயோனியில் புண்ணு புத்து ரணமுதலானதுகள் கண்டிருப்பதால் அதனால் அவள் மனதுக்குச் சதா வேதனையும் துன்பமும் வந்துகொண்டிருந்தாலும் மற்ற தாசிகள் இவளைப்பார்த்து இப்படிப்பட்ட வியாதியுள்ளவளென்று சொன்னமாத்திரத்தில் இவள் அவர்களோடே சண்டைக்கு நிற்கவேண்டியது என்னத்துக்காகவென்றால், முதலாவது இதைக்கேட்ட புருஷர்கள் தன்னிடத்தில் போகத்திற்கு வரமாட்டார்களாகையாலும், அப்படி வராதிருக்கும்பக்ஷத்தில் இவளுக்குப் பிழைப்பு நடக்காமற்போகையாலும், மானம் கண்ணியம் மரியாதை முதலானவைகளெல்லாம் இல்லாமற் போகையாலும் அந்தத்தாசி அப்படி சண்டைக்குப்போகிறது ஞாயமாயிருப்பதுபோல அஞ்ஞானத்தோடேகூடிய ஜீவனாகிய தாசிக்கு அந்தக்கரணமாகிற யோனியில் கர்த்துருத்வ போக்த்துருத்வ பிரமாதுருத்துவ ராகத்வேஷ காமக்குரோத லோபமோக மதமாச்சர்யங்களாகிற புண் யோனிப்புத்து ரணம் வெட்டை அரையாப்புக்கிரந்தி சூலக்கட்டுமுதலான வியாதிகளாகிற துக்கங்களை அன்னியஜீவர்களாகிற தாசிகள் இந்த அஞ்ஞானியாகிற தாசியை இப்படிப்பட்ட கருத்துருத்துவாதி துக்கங்களாகிற வியாதிகள் வந்திருக்கிறதென்று சொல்லும்போது தன்மனதுக்குள்ளே இதெல்லாம் வந்திருந்துகொண்டு துக்கப்படுத்துவது தனக்குத் தெரிந்திருந்தாலும் அந்தத் தாசிபோலிருக்கிற இந்த ஜீவன் மானமே பிழைப்பாகயிருப்பதால் அவனுக்கு உலகக்கட்டுப்பாடான வசனமாவதேதெனில், பிராணனைவிட்டாகிலும் மானத்தையே முக்கியமாய் ரக்ஷிக்கவேண்டியது. இந்தப்பிராணனானது அனித்தியமாயும் அசுகமாயுமுள்ளது, மானமானது சூரியசந்திராதிகள் உள்ள

வரையில் அழிவற்றதாயும் கீர்த்தி அபகீர்த்தியுமுள்ளதாயுமிருக்குமென்று சொல்லியிருப்பதால் அவர்கள் அப்படித்துக்கியென்று சொன்னவர்களிடத்தில் சண்டைக்குப்போவது நியாயந்தானென்றறிக. இனி முமுக்ஷுவானவன் தன் மனதுக்கு வந்திருக்கிற கருத்தருத்துவாதி துன்பங்களை யெடுத்துச்சொன்னால் அதைக்கேட்டுச் சந்தோஷப்படுவன். [எ - தி] ஒருபுருஷன் மேலேசொன்ன வியாதிகளோடேகூடிக்கொண்டிருக்கிற தாசியினிடத்தில் சம்போகத்துக்குப் போனதால் பொட்டகிருப்பு கண்ணாடியில் இறங்குவதுபோல அவளுடைய வியாதியெல்லாம் இவனிடத்தில் இறங்கிவிட்டதால் அகோராத்திரம் இடைவிடாமல் அந்த வியாதிகளால் துன்பப்பட்டுக்கொண்டிருக்கும்போது, பிறர்களிதைக்கண்டு இவனை அகஸ்தியருக்கும் தன்வந்தரிக்கும் அசுவினிதேவதைகளுக்கும் சமானமாயிருக்கிற வைத்தியரிடத்திற் கொண்டுபோய்விட்டு, இவர்களும் இவனுக்கு இன்னஇன்ன வியாதிகள் வந்திருக்கிறதென்றும் அவைகளைத் தாங்களே நிவர்த்திபண்ணிவைக்கவேண்டுமென்றும் சொன்னவுடன் இவனும் அவைகளை ஒத்துக்கொண்டு அப்படியே நிவர்த்திக்கவேண்டுமென்று பிரார்த்திப்பதுபோல முமுக்ஷுவும் சாதுக்களுடையவும் சற்குருவினுடையவும் வசனங்களைக்கேட்டுத் தன்னுடைய சித்தத்தில் வந்திருக்கிற துக்கங்களாகிற வியாதிகளை ஒழியாமல் தெரிவித்து, அதற்குக் குருநாதன் சொல்லுகிற விவேகமாகிற அவுஷதங்களைச்சாப்பிட்டுச் சுகியாவதும் ஞாயந்தானென்றறிக. இனி ஞானி பிறருடைய சொல்லால் சுகதுக்கங்களிரண்டையுமடையானென்று சொன்னதற்கு யுக்தி:—பார்க்கிறபேர்களுடைய திருஷ்டியில் பார்த்திவசரீரத்தையுடையவன்போலத் தோற்றினாலும் ஆகாசம்போலக் கத்தி நடுஊடாடும்படியான காயசித்தியையுடையவனைப் பார்த்து ஜனங்கள் இவன் இன்னஇடத்தில் உதைபட்டானென்றும் இன்னஇடத்தில் பூசிக்கப்பட்டானென்றும் சொல்லுகிற சொல்லால் அவன் சுகதுக்கத்தை யடையாமலிருப்பதுபோலவறிக.

## 162 - வது தரங்கம்.

உதாசீனவேளையில் வருகிற சுகம்:—

சுகதுக்கங்களின் நடுவில் ஓர்கர்மமன்றியிலுண்டாகிற உதாசீனவேளையில் காணப்பட்ட சுகத்துக்கு திருஷ்டாந்தம், வெய்யிலுமிருட்டுமில்லாத சந்திரிகை போலுமறிக. [இ - து] ஜீவனுக்குச் சுகதுக்கம் கர்மகாரியம், உதாசீனசுகம் சுபாவம். [எ - தி] ராஜாவுக்கு நிக்கிரகானுக்கிரகம் கர்மத்தாலும் மற்றச்சமயம் சுபாவமாயிருப்பதுபோலும், பூமிக்கு உஷ்ணமும் ஈரமும் கர்மத்தாலும் மற்றச்சமயம் சுபாவமாயிருப்பதுபோலும், பெண்ணுக்குப் பட்டுச்சேலை கட்டிக்கொள்ளுவதும் பழயதுணி கட்டிக்கொள்ளுவதும் கர்மத்தாலும் இரண்டுங் கட்டாதசமயம் சுபாவமாயிருப்பதுபோலுமறிக. [இ - து] உதாசீனவேளையில் வருகிற சுகம் தெரியாமலிருக்கிறதற்குக்காரணம்,—கர்மகாரியமான சுக

துக்கங்களின் மத்தியிலிருப்பதால். அதெப்படியென்னில், நூறுவராகனிடை செம்புமுதலானதுகளில் சேர்த்த ஒருவராகனிடைதங்கந் தெரியாததுபோல வறிக. [இ - து] சுகதுக்கங்களின்நடுவில் வருகிற சுகம் தன்நிஜானந்தம். [எ - தி] வாதிபிரதிவாதிகளைவிட்டு ஊரில் பொதுவாய் பக்ஷபாதமன்றியில் சொல்லுகிறசொல் நிஜமென்றறிவதுபோலும், அரிதாரத்தையும் கரியையும் பூசிக்கொள்ளாதசமயத்திலிருக்கிற ரூபத்தை நிஜரூபமென்றறிவதுபோலும், வேம்பிலேயும் வெல்லமும் சேராதசமயத்தில் ஜலத்தின்சுபாவரசம் காணப்படுவதுபோலவறிக. [இ - து] உதாசீனவேளையிலிருக்கிற சாமான்னிய அகங்காரத்துக்கும் விவகாரவேளையிலிருக்கிற விசேஷஅகங்காரத்துக்கும் யுக்தி:— லேபனமில்லாத சிசுனமும் அது உள்ளதுபோலும், கன்னிகையும் பக்குவமானவளும்போலும், விதையும் மரமும்போலவறிக. [இ - து] சுகதுக்கங்கள் வருமுன்னே ஜீவன் சுபாவானந்தமாத்திரமாயிருக்கிறான். [எ - தி] பூமியில் ஹோமஞ்செய்த உஷ்ணத்தைமாற்ற தண்ணீர்விட்டுக் குளிரப்பண்ணுகிறதற்கு முன் அந்தப்பூமி தன்சுபாவக்குளிர்ச்சியோடேகூடி யிருப்பதுபோலவறிக. [இ - து] சுகதுக்கங்கள் கர்மகாரியங்கள், உதாசீனம் சுபாவம். [எ-தி] சித்திரமெழுதுவதும் கரியைத்தீற்றுவதும் கர்மகாரியம், சுவர் சுபாவமாயிருப்பதுபோலும்; கக்ஷிக்காரரையும் சாக்ஷியையும்போலவறிக. ஐயா, உதாசீனவேளையில் காணப்படுகிற சுகத்துக்கும் விவகாரத்தில்வருகிற சுகத்துக்கும் ஆத்மக்ஞானத்தால்வருகிற சுகத்துக்கும் ஆனந்தமென்கிறபேர் சரியாயிருந்தாலும் இந்த மூன்றானந்தங்களுடைய தாரதம்மியத்தைத் திருஷ்டாந்தமூலமாயறிவிக்க வேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:—ஒரு ராஜனிடத்தில் சந்தோஷமான சமயமொன்று, கோபமான சமயமொன்று, மத்தியஸ்த மாயிருக்கிற சமயமொன்று. அப்படி மூன்றுசமயங்களிருப்பதில், ஒருவன் குற்றஞ்செய்துபோட்டானென்று கிராமத்திலிருக்கிற அதிகாரி இவன் கையில் விலங்குபோட்டு இவனைச்சேவகன் வசம் குற்றப்பத்திரிகையுமெழுதிக்கொடுத்து ராஜாவிடத்துக்கு அனுப்பிவைத்தபின் சேவகனு மிவனைக் கூட்டிப்போகிறமத்தியில் இவன் தன்னிடுப்பிலிருந்த ஒருபவுனைச் சேவகனுக்குக் கொடுத்ததில், அவன் என்னாலே உமக்கு என்ன ஒத்தாசை செய்ய முடியப்போகிறதென்று நினைத்து இப்பவுனைக்கொடுத் தீரென்று சொல்லவும், இவன் அச்சேவகனைப்பார்த்து ராஜா சந்தோஷமா யிருக்குஞ்சமயத்தில் என்னைக்கொண்டுபோய் விடுகிறதுதான் நீ செய்கிற ஒத்தாசையென்று சொன்னபடி அவனும் ராஜன் தனித்துச்சந்தோஷமாயிருக்குஞ் சமயத்தில் இவனைக் கொண்டுபோய்விட்டதில், அந்தராஜா இவன்குற்றத்தையும் நிவர்த்தித்ததுந்தவிர ஒருகிராமமும் விட்டுக்கொடுத்ததும்; பின்னை ஒருவன் அவ்வரசனுக்கு இஷ்டத்தைச்செய்வதற்காக அந்தப்புரத்துக்குள் அர்த்தராத்திரியில் போனதில் ராஜன் தன்ஸ்திரீயோடே மனஸ்தாபத்தால் வெளியில் வரும்போது இவனைப்பார்த்து வெட்டிப்போடும்படி சொன்னதும்; சிம்மா

சனத்தில் சும்மாவிருக்கும்போது குணதோஷங்களுக்குப் பலம் உள்ளபடியாய்த் தீர்மானமாவதுபோலும்; இந்த நானென்கிற ஆத்மா ஞானசந்தோஷத் தோடேகூடியகாலத்தில் குற்றஞ்செய்த அந்தக்கரணத்துக்கு அதை நிவர்த்தித் துச் சுகங்கொடுக்கிறார். விஷயசுகத்துக்குக் காரணமான விஷயங்கொண்டுவரும் போது அறியாமையாகிற கோபத்துடன்கூடியிருப்பதால் அது துக்கபலமா கும். உதாசீனவேளையில் உள்ளதுள்ளபடியாய் இருப்பதுபோல லாபநஷ்ட மொன்றுமில்லாமலிருக்குமென்றறிக.

## 163 - வது தரங்கம்.

சுழுப்திசுகத்தை விசுவன் ஸ்மிருதியால் அறியக்கூடியது:—

சுழுப்தி அவஸ்தையிலிருந்த அனுபவத்தை விக்ஞானமயன் ஸ்மிருதிரூப மாய்த் தெரிந்துகொள்ளவேண்டும். [எ-தி] அந்தப்புரத்திலிருக்கிற ராஜஸ்திரீயின் சரீரானுபவத்தைத் தெரிந்துகொள்ளவேண்டிய வைத்தியன் அவள்மூத்திரத் தை யேந்திக்கொண்டுவரச்சொல்லிப் பார்த்து வியாதியை நிதானிப்பதுபோலு மறிக. [இ - து] சுழுப்தியில் சுகமிருக்கிறது. [எ - தி] பெண்டாட்டியில்லாத வன் புஷ்பமுதலானதை என்னத்துக்கு விலைக்கு வாங்கிப்போகப்போகிறான்? கூழ்குடிக்கி யேன் தலைவாழையிலை போட்டுக்கொள்ளுவன்? வெல்லமில்லாமற் போனால் எறும்பு யேன் வரப்போகிறது? என்பதுபோல சுழுப்தியில் சுகமில் லாவிட்டால் மிருதுவானபடுக்கை தலையணைமுதலானதை யேன் சம்பாதிக்கிறார் கள் சொல்? [இ - து] சுழுப்திசுகமனுபவித்தவனைத் துக்கரூபமான சாக்கிரத் தை யனுபவிக்கக் கர்மம் வெளியிலிழுத்தபிற்பாடு இவன் வெளியில் வந்துதான் அந்தச்சுகத்தைச் சொல்லவேண்டும். [எ - தி] அக்கினியில்விழுந்து தபித் திருக்கிறவனுக்கு தலையில் அமிர்தம் வருஷித்தால் அந்தச் சுகத்திலழுந்திப் போனவனைத் திரும்ப அக்கினியிற்போட வெளியிலிழுத்தபின் இதுவரை சுகமா யிருந்தேனென்றும் இப்போ அந்தச்சுகத்தைவிட்டு இந்தத்தீயில் வரவேண்டி யிருக்கிறதென்றும் வருத்தத்தையடைவதுபோலும், நிழலருமை வெய்யிலில் வந்தால்தான் தெரியுமென்ற பழமொழிப்போலுமறிக. [இ - து] ஆனந்தமய கோசத்தின் விளக்கம் ஜாக்கிரசொப்பனத்தில் கொஞ்சமாயும் சுழுப்தியிலதிக மாயுங் காணப்படும். [எ - தி] மிட்டாய்க்கடைக்குப் போனவனுக்குத் தன் துட்டுமுடிச்சை அவிழ்க்குமுன்னே கொஞ்சங் கொடுத்துக்காட்டி முடிச் சவிழ்த்து ரூபாய்கொடுத்தபிறகு வேண்டியமட்டும் மிட்டாயைக் கொடுப்பது போலவறிக. [இ - து] சுழுப்தியிலனுபவித்த சுகம் இப்போது நினைக்கப்படுவ தால் அப்போது சுகமனுபவித்ததாகவே நிச்சயம்பண்ணவேண்டியது. [எ-தி] பிள்ளைப்பெற்றதைக்கண்டு புருஷனோடே சேர்ந்திருப்பளென்றறிவதுபோலும், நதியில்வருகிற வெள்ளத்தைக்கண்டு மலையில் மழைபேய்ந்திருக்குமென்றறிவது போலும், பிள்ளைகுண்டியைக்கண்டு வீட்டின் யோக்கியதையை யறிவதுபோலு மறிக. [இ - து] ஜீவன் அனுபவித்த சுழுப்திசுகம் ஜாக்கிரத்தில் அனுமான

மாய் அந்தக்கரணத்தில் அகங்காரத்தால் மறைபட்டுக்காணும். [எ - தி] போகம்பண்ணி வெளியில் வந்தவளுடைய அடையாளங்கள் வஸ்திரத்தால் மறைக்கப்பட்டு அனுமானமாத்திரமாய்க் காணப்படுவதுபோலவறிக. [இ-து] சுழுப்தியிலனுபவித்த சுகமே ஜாக்கிர சொப்பனத்தில் பிரியமோதப்பிரமோதாதிரூபமாய்த் தோற்றுகிறது. [எ - தி] வேரில்விட்டஜலமே பத்திர புஷ்பாதிகளாயாவதுபோலும்; மிருஷ்டான்னபோஜனமே ஸ்திரீபோகாதிகளுக்குக் காரணமாவதுபோலவறிக. [இ - து] சுழுப்தியில் ஜீவனுக்குத்தெரியாமல் அஞ்ஞானவிருத்தி சுகத்தைக்கொடுக்கிறது. [எ - தி] சிஷ்யனும் சோரஸ்திரீயும் அருமைப்பிள்ளைப்பெற்றவர்களும் அவர்களுக்குத்தெரியாமல் போஷணைகளைக் கொடுப்பதுபோலவறிக. ஐயா, சுழுப்தியில் அவித்தியாவிருத்தியானது ஜீவனுக்குத்தெரியாமல் ஜீவனுக்குச் சுகத்தைக்கொடுக்கிறதென்று சொன்னீர்களே, அந்தச்சுகமானது நிருபாதிகமா சோபாதிகமா? சாதிசயமா நிரதிசயமா? நித்தியமா அனித்தியமாவென்று கேட்பாயாகில், அதற்குத்தாஞ் சொல்லுகிறேன் கேள்:—சுழுப்தியிலிருக்கிற ஆனந்தமானது சோபாதிகமன்று, நிருபாதிகமே; சோபாதிகமென்றால்—அந்தக்கரணமும், அதன்விருத்திகளும், சுரோத்திராதி தசேந்திரியங்களும், ஸ்தூலாதி பஞ்சபூதபௌதிகங்களும், சப்தாதி பஞ்சவிஷயங்களும் உபாதிகளென்று சொல்லப்படும். இந்தச் சுழுப்திஅவஸ்தையில் மேலேசொன்ன அந்தக்கரணாதி யுபாதிகளுக்குள் ஒன்றுவது இல்லாமையால் அந்தஆனந்தமானது சோபாதிகமன்று, நிருபாதிகமே. அதெப்படியென்றால், நீயே யாதொரு இந்திரியங்களும் திருஷ்டாந்தங்களுமில்லாமலிருந்தும் நான் சுகமாய்த்தூங்கினேனென்று சொல்வதால் அந்த ஆனந்தம் நிருபாதிகமென்றறிக. அந்தஆனந்தம் சாதிசயமன்று. எதினாலென்றால், கிராமத்திலுள்ளவர்களுடைய சுகங்களுக்குக் கிராமணியான நாட்டாமைக்காரனுக்குச் சுகமதிகமாம். அவனுடைய சுகத்தைக்காட்டிலும் பத்துக்கிராமங்களுக்கு எஜமானனான இஜாருதாருக்குச் சுகமதிகமாம். அவனுடைய சுகத்தைக்காட்டிலும் நூறுகிராமங்களுக்கதிபதியான ஜமீன்தாருக்கு ஆனந்தமதிகமாம். அவனுடைய ஆனந்தத்தைக்காட்டிலும் ஆயிரங்கிராமங்களுக்கதிபதியாயிருக்கிற சாமந்தனுடைய ஆனந்தமதிகமாம். அவனுடைய ஆனந்தத்தைக்காட்டிலும் பதினாயிரங்கிராமங்களுக்கதிபதியான ராஜாவுக்கதிக ஆனந்தமிருக்கும். அவனுடைய ஆனந்தத்தைக்காட்டிலும் ஆயிரங்கோடி ராஜ்ஜியங்களுக்கதிபதியான மகாராஜாவுக்கதிக ஆனந்தமாம். அவனுடைய ஆனந்தத்தைக்காட்டிலும் எவ்வனத்தோடேகூடினவனாயும், அறுபத்துநாலு கலைக்ஞானங்களும் வந்தவனாயும், அரோகதிடகாத்திரனாயும், எப்பேர்பட்ட ஆபத்துகள் வந்தாலும் காற்றுக்கு மகாமேரு அசங்காததுபோல அசைவற்றிருக்கிற திடசித்தத்தை யுடையவனாயும், ரதகஜதுரகபதாதிகளான சதுரங்கசைன்னியங்களில் ஒன்றுங்குறைவில்லாதவனாயும், இந்தச் சப்தசமுத்திரங்களுக்குள்பட்ட பூமிகளையெல்லாம் ஒருகுடையில் கட்டியாளுகிறவனாயும், சகல அரசர்

களிடத்திலும் தான் கப்பம் வாங்குகிறவனும், தான் ஒருவருக்கும் கப்பங் கட்டாதவனுமிருக்கிற சக்கிரவர்த்தியினுடைய ஆனந்தமதிகமாம். அவனானந் தத்தைக்காட்டிலும் இந்தக்கற்பத்தில் மனுஷ்யனாய்ப்பிறந்து புண்ணியபரிபாக விசேஷத்தினால் கந்தர்வபதவியை யடைந்திருக்கிற மனுஷ்யகந்தர்வனுடைய ஆனந்தமதிகமாம். அவனானந்தத்தைக்காட்டிலும் பூர்வகற்பத்தில் செய்த புண்ணியபரிபாக விசேஷத்தால் கற்பாதியிலேயே கந்தர்வபதத்தை யடைந் திருக்கிற தேவகந்தர்வனுடைய ஆனந்தமதிகமாம். அவனானந்தத்தைக்காட்டி லும் பிதிர்லோகத்தில் வெகுகாலமாய் வசித்துக்கொண்டிருக்கிற பிதிர்தேவதை களுடைய ஆனந்தமதிகமாம். அவனானந்தத்தைக்காட்டிலும் கற்பாதியிலே பிறக்கும்பொழுதே தேவர்களாகவே பிறந்திருக்கிற ஆஜாநஜதேவர்களுடைய ஆனந்தமதிகமாம். அதைக்காட்டிலும் இந்தக்கற்பத்தில் அஸ்வமேதமுத லான புண்ணியகர்மங்களைச் செய்து அதற்குப்பலமான புண்ணியலோகங் களுக்குப்போய் அந்த ஆஜாநஜதேவதைகளாலும் பூஜிக்கப்படுகிற கர்ம தேவதைகளுடைய ஆனந்தமதிகமாம். அதைக்காட்டிலும் அக்கினி யமன் முதலான முக்கியதேவர்களுடைய ஆனந்தமதிகமாம். அதைக்காட்டிலும் தேவேந்திரனுடைய ஆநந்தமதிகமாம். அதைக்காட்டிலும் பிரகஸ்பதியி னுடைய ஆனந்தமதிகமாம். அதைக்காட்டிலும் பிரஹ்மாவின் ஆனந்தமதிக மாம். அதைக்காட்டிலும் விஷ்ணுவின் ஆனந்தமதிகமாம். அந்தவிஷ்ணுவும் தன்னுடைய வைஷீகானந்தத்தையும் மறந்து ஒருவருமெழுப்பக்கூடாதிருக்கிற இடமான ஏழாவதுசமுத்திரமான பால்க்கடலில் இந்தச் சுழுப்தியானந்தத்தை யனுபவிக்க ஓடிப்போவதால் மனதுள்ளவிடத்திலுண்டாகிற ஆனந்தங்களெல் லாம் ஒன்றுக்கொன்று அதிசயமாகவே யிருக்கும். மனதில்லாதவிடத்திலுண் டாகிற சுழுப்தியானந்தம் நிரதிசயமான ஆனந்தமென்பதில் கொஞ்சமும் சந் தேகமில்லை. இனிச் சுழுப்தியானந்தம் நித்தியமென்பது எதினாலென்றால், இந்த ஜாக்கிர சொப்பனங்களில் கர்மஜன்னியமான ஆனந்தங்களெல்லாம் அந் தப் புண்ணியகர்மக்ஷயமாகும்போது விஷ்ணுபட்டம்வரையிலுள்ள ஆனந்தங்க ளெல்லாம் இளிச்சவாய்ப்பட்டமாய் மாறிமாறிப்போவதுபோலவன்றி அழியா மல் சுழுப்திசுகம் நித்தியமழிவற்றிருப்பதால் நித்தியமென்றறிக. ஐயா, சுழுப்திசுகம் நித்தியமாயிருக்கும்பக்ஷத்தில் ஜாக்கிர சொப்பனத்தில் அச்சுகங் காணாமற் போவானேனென்றால், பகல்முழுமையும் சூரியன் அழிவற்று நித் தியமாய் விளங்கிக்கொண்டிருந்தாலும் மேகத்தால் மறைக்கப்பட்டுத் தோற்றா ததுபோல அகங்காரத்தால் மறைக்கப்பட்டுத் தோற்றவில்லையேதவிர எறும்பு முதல் ஈஸ்வரன்வரையிலுள்ள சகலருக்கும் அகங்காரசூனியமான சுழுப்தியில் சுகம் சமமாயிருப்பதால் அந்தச்சுகம் நித்தியமென்றறிக.

## 164 - வது தரங்கம்.

சுழுப்தியில் வாசனைகளொன்றும் இதராவஸ்தைகளில் பேதமாய் விரிந்து தோற்றும் :—

சுழுப்தியில் சகலவாசனைகளும் ஒன்றாயிருக்கும். ஜாக்கிரத்தில் அது வேறு வேறாக விவகரிக்கப்படும். [எ - தி] குடத்துக்குள்ளிருக்கிற ரசமொன்றாயிருந்து கீழே கொட்டினமாத்திரத்தில் அனந்தமாயாவதுபோலும், சமுத்திரத்தில் ஒரே ஜலமாயிருப்பதும் அதை மேகங்குடித்து வருஷித்தால் அநேகம் நதிமுதலான வேறுவேறு நாமரூபங்களை அடைவதுபோலும், சோளக்கதிர் செடியிலொன்றாயிருந்து பிடுங்கித் தேய்க்கும்போது வேறுவேறாய் முத்துக்களாவதுபோலுமறிக. [இ - து] சுழுப்தியிலிருக்கிற திரிபுடியின்சுகம் சொந்த ஸ்திரீபோகம்போல நித்தியமாயும், காசு செலவில்லாமலும், புருஷப்பிரயத்தினமில்லாமலும், சுவாதீனமாயும், நிர்ப்பயமாயுமிருப்பதுபோலும், மற்றது இதற்கெதிர்மறையாயிருப்பதுபோலுமறிக. [இ - து] சுழுப்தி சுகங்கொடுப்பது எதுபோலவென்றால், மரம்வெட்டுவதற்குக் கத்தி தீட்டுவதுபோல ஜாக்கிர சொப்பனத்தில் தொழில் செய்கிறதற்காகவேயென்றறிக. [இ - து] சுழுப்தி சாமான்னியகர்மம், ஜாக்கிர சொப்பனம் விசேஷகர்மம். [எ - தி] பஞ்சபூதமும் அதிலுண்டான சரீராதிகளும்போலும், சமுத்திரம் சாமான்னியகர்மம் அதிலுண்டான அலைகள் விசேஷகர்மமாயிருப்பதுபோலுமறிக. [இ - து] சுழுப்தியிலேயே அனாத்மவாசனை யிருக்குமானால் அந்தக்கரணமிருக்கிற ஜாக்கிர சொப்பனத்தில் அந்த அனாத்மவாசனைகளிருக்கிறதாவென்று கேட்கவேண்டியதில்லை. [எ - தி] அந்தப்புரத்திலடைத்துவைத்திருக்கும்போதே அவிசாரி வாசனை விடாதிருந்தவளுக்கு வெளியில் சுதந்தரமாய் விட்டதின்பின் அவள் நடத்தையைப்பற்றிச் சொல்லவேண்டியதில்லாததுபோலுமறிக. [இ - து] சுழுப்தியில் சகலநினைப்புகளும் லயித்து ஜாக்கிரத்தில் புதுசாய் நினைப்புகளுண்டாகிறது. [எ - தி] மரங்களிலிருக்கிற இலைகள் மாசிமாதத்திலுதிர்ந்து மறுபடி பங்குனியில் துளிர்ப்பதுபோலவறிக. ஐயா, சுழுப்திசுகம் சகலருக்கும் பொதுவாய்ச் சாமான்னியகர்மஜன்னியமென்றும், ஜாக்கிர சொப்பனத்தில் அந்தக்கரணவிருத்தியாலனுபவிக்கப்படுகிற சுகம் தாரதம்மியமாயும் விசேஷகர்மஜன்னியமாயுமிருக்குமென்றும், நாள்தோறும் சுழுப்தியிலிருந்து வெளியில் வரும்போது சுகமாய்வந்து சுழுப்திக்குப் போகும்போது முன் தான் கொண்டுவந்த சுகமெல்லாம் போய் துக்கரூபனாய்ச் சுழுப்திக்குப்போகிறானென்று சொன்னீர்களே, அதற்கு சுருதி யுக்தி அனுபவமென்னவென்று கேட்பாயாகில்,— வல்லூர்பக்ஷியானது கயிற்றினாற் கட்டப்பட்டு திக்குவிதிக்குகளெல்லாமலைந்து சிரமபரிகாரம்பண்ண இடமில்லாமல் கையினிலாவது கட்டையினிலாவது வந்திருந்து சிரமபரிகாரம் பண்ணுவதுபோல கர்த்துருத்துவரூபமான உபாதியோடேகூடியிருக்கிற மனது ஜாக்கிர சொப்பனத்தையடைந்து புண்ணியபாப பலன்களை அனுபவிக்கும்பொருட்டு அலைந்து அந்தக் கர்மக்ஷயமானவுடன் சுழுப்தியில் லயிக்குமென்று சொல்லுகிற சுருதியையும், பருந்தானது கூட்டில் வந்துவிழும்போது அதிவேகமாய் விழுகிறதுபோல ஜீவனும் சகலதுன்பங்களும் நிவர்த்தியாகுவதற்காக பிரஹ்மானந்தத்தை யனுப

விக்க ஆசையோடே ஓடிப்போகிறானென்ற சுருதியையும்; நித்திரைக்கு முன்னும்பின்னும் பக்ஷபாதமிருக்கிறதும், மழை வருமுன்னும் பின்னும் காண்கிற குளிர்ச்சியாயிருக்கிறதான யுக்தியையும்; நம்முடைய சுழுப்தியில் நமக்குண்டாகிற துக்கநிவர்த்தியான சுகானுபவத்தையுங்கண்டு சுழுப்தியில் பிரஹ்மானந்தமே யிருக்கிறதென்றறிக. ஆனால் இந்த சுழுப்திஆனந்தமே பிரஹ்மானந்தமானால் சகலருக்கும் யாதொருவிதமான புருஷப்பிரயத்தினமொன்றுமில்லாமலே அழியாத மோக்ஷமுண்டாகலாமேயென்று கேட்டால், நீ அறியாமையோடேகூடியிருப்பதால் அறியாமையோடேகூடிய சுழுப்தியானந்தத்துக்கும் அறிவோடேகூடியிருக்கிற பிரஹ்மானந்தத்துக்கும் பேதந்தெரியாமல் சங்கித்தாய். [எ - தி] மாதாவைப்போல ரூபலாவண்ணியமான குணங்கள் பெண்டாட்டிக்கிருக்கவேண்டுமென்று சொன்னதற்கு அவன் தாயையே கல்யாணம் பண்ணிக்கொண்டால் சோபனதிரவியமுதலான ஒருபுருஷப்பிரயத்தினமும் தேவையில்லையென்று சொன்னதுபோலவறிக.

## 165 - வது தரங்கம்.

சுழுப்திசுகம் ஜாக்கிர சொப்பனத்தில் தோற்றாததற்கேது :—

சுழுப்தியிலிருந்து வாசனானந்தத்துக்கு வந்தவன் அதிலேயும் நில்லாமல் துக்கரூபமான ஜெகத்விவகாரஞ்செய்ய வெளியில்வருவது முந்திச்செய்த கர்மத்தாலேவப்பட்டு நனவில் தோன்றுகிற துவிதப்பழக்கத்தால் சுழுப்திசுகத்தை மறக்கிறான். [எ - தி] மாருக்குள்ளேயிருந்த மாமிசம் முலையாய்ப்புறப்பட்டு துஷ்டாள் சகவாசத்தால் தலைகீழே விழுகிறதுபோலும், தகப்பனை ஸ்ரீமான் புதைத்துவைத்திருந்த பொருளை வெளியிலெடுத்து விடர்களுடைய சகவாசத்தால் சிலவாய்ப்போய் வெங்கனாகிறதுபோலும், குருவினிடத்திலிருந்து வித்தை கற்றவன் மூடசகவாசத்தால் மூடனாவதுபோலும், குழந்தைகள் வெளுப்பு வஸ்திரத்தைத் துஷ்டகுழந்தைகளோடே விளையாடப்போய்க் கரித்துணியாய்ப் பண்ணுவதுபோலும், பரிசுத்தமான கண்ணாடி யெண்ணெயின்சம்பந்தத்தால் பிரதிபலிக்க யோக்கியமன்றிமங்கிப்போவதுபோலும், சுத்தமான நேத்திரம் மேகவியாதியால் காசம்படர்ந்தும் மறைக்கப்படுவதுபோலுமறிக. சுழுப்தி சுகமானது ஜாக்கிர சொப்பனாவஸ்தைகளிலிருந்தாலும் தோற்றாமலிருப்பதற்கு யுக்தி :— பகலில் சூரியனிருந்தாலும் மேகாவரணத்தால் தோற்றாமலிருப்பது போல அகங்காரத்தாலது தோற்றவில்லையென்றறிக. [இ - து] துவிதாத்வித விவகாரங்களிரண்டுகளும் சுழுப்திசுகமிருக்கும்வரையில்தான் நடக்கும். [எ - தி] ராத்திரியில் சீட்டாடுகிறவனுக்கும் புஸ்தகம்படிக்கிறவனுக்கும் தீபத்தில் எண்ணெயுள்ளவரையில்தான் அவைகள் நடப்பதுபோலவறிக. [இ - து] ஆத்மா சுழுப்தியிலிருந்தாலும் கரணங்களில்லாததினால் தெரியாமலிருக்கிறார். [எ - தி] ஒருராஜா கேட்டவர்களுக்கெல்லாம் தானம் கொடுக்கிறவராயிருந்தா

லும் சுருப்புமுதலானவர்கள் வந்தே சொடுக்கவேண்டியதாயிருப்பதுபோல வறிக. ஐயா, சுழுப்திசாயிருக்கும்வரையில்தான் ஜாக்கிர சொப்பனங்களில் அவிதாத்விதவிவகாரங்கள் நடக்குமென்றும் அந்தச்சுசமாய்விட்டால் இரண்டு விவகாரமும் நடக்காதென்றும், வேபனமுள்ளவரையில்தான் சொஸ்திரீபோக மும் பரஸ்திரீபோகமும் நடக்குமென்றும் அதுபோனபின் இரண்டும் நடக்கா தென்றும், செவியுள்ளவரையில்தான் நிந்தையும் துதியுங் கேட்குமென்றும் செவிபோனபின் இரண்டுங்கேளாததுபோலும், கண்ணுள்ளவரையில்தான் சொஸ்திரீயையும் பரஸ்திரீயையும் பார்க்கலாம் கண்போனபின் இரண்டு பார்வையுமில்லாததுபோலும், வாக்குள்ளவரையில்தான் லோகவிவகாரமான பேச்சும் அத்விதாத்மவிசாரமான பேச்சும் நடப்பதும் வாயடைத்துப்போன பின் இரண்டுவிதமான பேச்சும் நடவாதிருப்பதுபோலும், பாணீந்திரியமிருக் கும்வரையில் பெரியவர்களுடைய சிசுருஷையும் பூஜைமுதலான சத்கிரியைக ளும் அடிதடிமுதலான துஷ்டகிரியைகளும் நடப்பதும் அந்த இந்திரியம்போய் விட்டால் இரண்டுவிதமான கிரியைகளும் நடப்பதற்கேதுவில்லாமற்போவது போலும், பாதேந்திரியமிருக்கும்வரையில்தான் பெரியவர்களிடத்திற்போவதற் கும் லோகவிவகாரத்திலலேவதற்கும் காரணமாயிருப்பதும் அவ்விந்திரியம் போய்விட்டால் இரண்டு நடைகளுக்குமிடமில்லாமற் போகுமென்றும் சொன் னீர்களே, சகலரும் சுழுப்திசுகத்தைப் பிரஹ்மானந்தமென்றும் அதுவே நன வாதி விவகாரங்களுக்குக் காரணமென்றும் ஏன் அறியவில்லை? அதற்குக் காரணமென்னவென்றால்,—சகலமான பிராணிகளும் தினந்தோறும் சுழுப்தி யில் பிரஹ்மானந்தத்தை யடைந்துவந்தாலும் புதையல்மேலே படுத்திருக்கிற வன் அதை யறியாததுபோல நாம் பிரஹ்மானந்தத்தை யனுபவித்துவந்தோ மென்றறியவில்லை. அதற்கு அறியாமையே காரணமென்றறிக.

## 165 - வது தரங்கம்.

நித்திரை யதிகமாய்வருவதற்கு ஹேதுசதுஷ்டயமும் அதற்கு நிவர்த்தி யும் அறிக:—

சொப்பனவஸ்தை யதிகமாய்வருவதற்கு நாலுகாரணம். அதாவது,— அதிகபோஜனம், அதிகபோகம், அதிகசங்கற்பத்தினுலுண்டான பித்தம், சோம்பல். இந்தநாலுக்கும் நிவர்த்தியாவது, முதலாவதுக்கு அர்த்தாகார மும், இரண்டாவதுக்கு ஸ்திரீயினிடத்தில் தோஷதிருஷ்டியான வைராக்கிய மும், மூன்றாவதுக்கு விசாரணையும், நாலாவதுக்கு சற்குருசிசுருஷையாகிற ரஜோ குணமும் சிரவணமாகிற சத்துவகுணமும் என்றறிக. ஐயா, வீண்பேச்சு விடி யவிடியப்பேசினாலும், கூத்துப் பார்த்துக்கொண்டிருந்தாலும், மற்றப்பரஸ்திரீ போகம் கேளிவிலாசம் செய்துக்கொண்டிருந்தாலும், மூன்றுநாள்வரை யெழுந் திருக்காமல் சீட்டாடிக்கொண்டிருந்தாலும் நித்திரை கொஞ்சங்கூட வரவில்

லையே! குருநாதன்சன்னிதியில் சிரவணத்துக்கு உட்கார்ந்தமாத்திரத்தில் சங்கர நாராயணஸ்வாமிகோவிலில் அம்மன்சன்னிதிக்குப்போன பக்குவமான பெண் தலைசுத்தி யாடுவதுபோல நித்திரைவந்து மயக்கித் தலைசுத்தியாடுவதால் அதற்குக்காரணமென்ன? அது நிவர்த்தியாவதற்குக் காரணமென்னவென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:— இந்த மனது வெகு ஜன்மப்பழக்கத்தினுல் துவிதக்கேள்வியிலும் துவிதப்பார்வையிலும், துவிதப்பேச்சிலும், துவிதானுபவத்திலும் ருசி கண்டிருப்பதாலும், தூலமாயிருப்பதாலும், பயித்தியகாரன்போலவும் குழந்தைப்பிள்ளைபோலவும் சொன்னதையே சொல்லுகிறதும் விளையாடினவிளையாட்டையேவிளையாடுகிறதும் சுபாவமாயிருப்பதுபோல யிருப்பதாலும், நாமரூப விசேஷங்களோடேகூடியிருப்பதாலும், அதில் மனது ரமிப்பதால் அதில் நித்திரைவரமாட்டாது. வேதாந்தசிரவண மொருக்காலுங் கேளாததாயும், சூக்ஷுமமாயும், ரகசியமாயும், தனக்கனுபவ மில்லாததாயுமிருப்பதால் இதில்நித்திரைவரும். [எ - தி] ஒரு ராஜாவினிடத்தில் ராத்திரி ஒருஜாமத்துக்குமேல் வேதாந்தசிரவணம்பண்ணுகிற பெரியோர்களுடைய ஏற்பாட்டுப்பிரகாரம் ஒருசாஸ்திரியார் படித்துக்கொண்டு வருங் காலத்தில், அவ்வரசனுடைய பட்டத்துக்குதிரைக்குச் சீக்குக்கண்டு நித்திரையில்லாமலிருப்பதை குதிரைக்காரன் அவ்வரசனிடத்தில் வந்து தெரிவித்ததில், அவன் உடனே வேதாந்தம் படிக்கிற சாஸ்திரிகளை புஸ்தகசகிதமாய்க் கூட்டிவரச்சொன்னபடி அவரும் ராஜாவின்சமீபத்தில் வந்திருந்து புஸ்தகத்தை அவிழ்க்கும்போது, அவ்வரசன் பட்டத்துக்குதிரையினிடத்திற் போய்படியுமென்றுசொன்னதைக்கேட்ட அவர் முழிக்க, அவன் அக்குதிரை நித்திரையில்லாதிருப்பதால் நீர் படித்தால் நித்திரை வந்து பிழைக்குமென்று என் அனுபவத்தால் சொல்லுகிறேனென்று சொன்ன கதைபோலுமறிக. இனி அது நிவர்த்தியாவதற்கு உபாயம்,—ஜெனனமரண துக்கநிவர்த்தியான முமுக்ஷுத்துவமும், குருவினிடத்தில் பயபக்தி விசுவாசமும், சாதுக்களுடைய பரிகாசத்தில் லச்சையும், ஜலமுதலானதால் கண்ணைத்துடைக்கிறதுமுதலான மெய்வருத்தமும் உபாயமென்றறிக.

## 167 - வது தரங்கம்.

சுழுப்தியில் அறியாமையோடே மனது லயிப்பதற்கும் ஞானத்தோடே பிரஹ்மத்தில் லயிப்பதற்கும் பேதம்:—

அஞ்ஞானுவஸ்தையில் சுழுப்தியில் பிரஹ்மத்தில் அத்தியாசஐக்கியமாகும்போதே பிரஹ்மசுகமுண்டாகுமானுல் நிர்விகற்பசமாதியில் அத்தியாசம் நிவர்த்தியாயும் ஞானத்தோடும் பிரஹ்மத்தில் ஐக்கியமுண்டானுல் சுகங் கிடைக்குமாவென்று கேட்கவேண்டியதில்லை. [எ - தி] தீயிலும் ஜலத்திலும் திரவியமறியாமற் போட்டவனுக்கே புண்ணியமுண்டானுல் மனதோடே மகாத்மாவுக்குத் திரவியங்கொடுத்தாற் புண்ணியமுண்டாவென்று கேட்கவேண்டிய

தில்லாததுபோலவறிக. [இ-து] விஷயானந்தத்துக்கும் பிரஹ்மானந்தத்துக்கும் வேற்றுமையுண்டு. [எ-தி] மின்னலில் தோற்றுகிற பிரகாசம்போலும், ரத்ன தீபப் பிரகாசம்போலுமறிக. ஐயா, சுழுப்தியிலும் மனது பிரஹ்மத்தில் லயிப்பதால் சுழுப்தியானந்தத்தைப் பிரஹ்மானந்தமென்று சுருதி சொல்லுவது போல ஆத்மானாத்மவிசாரத்தால் அஞ்ஞானாவரணங்களைத்தள்ளி ஆத்மா தானென்றறிந்து ஆத்மாவில் மனது லயிப்பதற்கும் பிரஹ்மானந்தமென்று சுருதியில் சொல்லப்படுவதாலும் அப்படி இரண்டானந்தமும் சமானமாயிருக்கும் பக்ஷத்தில் எல்லோருக்கும் சாதனசாத்தியங்களான பிரயாசைகளொன்றுமில்லாமல் முக்திவரவேண்டுமே, அப்படி அப்பிரயத்தனமாய் முக்திவரும் பக்ஷத்தில் மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த்தொடங்கினோர்க்கு வார்த்தை சொல்லச் சற்குருவும் வாய்க்குமென்றார், அப்படி வாய்த்த சற்குருசன்னிதியில் பயபக்தி விசுவாசத்துடன் நான்குவிதமான பணிவிடைகளையும் திரிகரண சுத்தமாய் வஞ்சகம் கபடமொன்றுமில்லாமல் செய்துகொண்டு சிரவண மனன நிதித்தியாசன சமாதிவரை நெடுங்காலமிடைவிடாமல் ஆதரவோடே பண்ணி வந்து, ஆத்மசாக்ஷாத்கார ஞானத்தால் பிரஹ்மானந்தத்தைப்பெற்று சகல துன்பங்களிலிருந்தும் விடுபடுவனென்றாய், இவ்வளவு பிரயாசத்தைப்பட வேண்டுமென்று சொல்லியிருப்பானேனென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:—அடே மூடா! ஒவ்வொரு மனுஷர்களுக்கும் மனதோடே லக்ஷம்லக்ஷமாய்ச் செலவழித்தாலும் தாவந்தமில்லை, அரைக்கால் ரூபாய் தன்னையறியாமல் விழுந்துவிட்டதானால் தாவந்தம்வருவதுபோலும், ஒரு யாகஞ்செய்வதற்குக் குடங்குடமாய் நெய்யை அக்கினியில் ஓமம்பண்ணுவதால் சந்தோஷமும் ஒருமுட்டை நெய் கீழே சிந்திவிட்டால் துக்கமும்வருவது போலும், தினம் நித்தியான்னதானஞ்செய்கிறவன் ஓலைகளையும் மரங்களையும் வண்டிவண்டியாய் வாங்கிப்போட்டு சமையலுக்காக எரித்துச்சாம்பலாக்குவதில் சந்தோஷமும் நாலுசம்பு பத்தோலையாற் கட்டிய குடிசை தீப்பட்டெரிந்தால் துக்கம்வருவதுபோலும், ஆயிரம் இரண்டாயிரம் வராகன் கொடுத்து ஒரு பெண்ணைக் கல்யாணஞ்செய்து ஆடை ஆபரணங்கள் அன்னமுதலானவைகளையுங்கொடுத்து அவளோடே திரிகரணங்களாலும் சிரமப்பட்டுப் போகித்து நாள்தோறும் சுக்கிலம்போனாலும் சுகமாயிருப்பதும் யாதொரு மேலே சொன்ன பிரயாசங்களொன்றுமில்லாமல் சொற்பனத்தில் சுக்கிலம் ஏகதேசத்திற்போனால் துக்கம்வருவானேன் சொல்? அப்படி ஞானமன்றியில் வருகிற சுழுத்திசுகம் முக்தியைத்தாராது. இன்னும் செத்தவனைப் பல்லாக்கில் தூக்கிப்போனாலும் அவன் நரவாகனப்பிரபு ஆகாததுபோலும், மங்காளுடைய தாயுந் தகப்பனும் நகைகளையும் குதிரைகளையுங்கொடுத்தாலும் பின்னால் துக்கப்பட்ட கதைபோலும், கர்ணன் கவசகுண்டலத்தை யறுத்துக்கொடுத்ததால் தாதாவென்றும் துரியோதனன் செத்தபின் சகலத்தையும் விட்டுப்போயிருந்தும் ஐந்தாவது குணமுள்ளவனென்று பெயர் வாங்கியிருப்பதுபோலுமறிக.

## 168-வது தரங்கம்.

குடீசக சன்னியாசியின் தன்மை:—

குடீசகசன்னியாசம் அந்த ஜென்மத்திற்பட்ட துக்கநிவர்த்திமாத்திரமே தவிர ஜென்மநிவர்த்தியில்லை. [எ-தி] வாரண்டு வந்தகாலத்தில் பெரியமனுஷன்சிபார்சையால் ஒருவருஷம் வாய்தாவாங்கிப் பயமன்றியிருப்பது போலும், வெய்யிலில் சுமைதூக்கிவந்தவன் சுமையைச் சுமைதாங்கியில் வைத்து சாவடியில் சுகமாயிருப்பதுபோலும், சம்சாரிவீட்டிலிருக்கிற மருமகள் பிறந்த வீட்டுக்குப்போய் ஒருமாதம் வேலைசெய்யாமலிருப்பதுபோலுமறிக ஐயா, தாங்கள் பிராம்மணன்முதல் நீசன்வரையில் எல்லோருக்கும் ஞானம் பொதுவாய் வருமென்று சொன்னீர்களே, சாஸ்திரத்திலும் சிலபெரியவர்களும் பிராம்மணர்களாய்ப்பிறந்து கிரகஸ்தாசிரமத்தில்நின்று சன்னியாசத்துக்குப்போய் ஆத்மஞானத்தை யடையவேண்டுமேதவிர மற்றஆசிரமங்களிலும் மற்றவர்ணங்களிலுமுள்ளவர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் ஞானம் வராதென்று சிலபேர் சொல்லுகிறார்களே, அந்த மயக்கத்தைத் தீர்க்கச் சுருதி யுக்தி யனுபவமூலமாயறிவிக்கவேண்டுமென்று கேட்டசிஷ்யனுக்குக் குரு சொல்லுகிறதாவது:— வாராய் குழந்தாய்! முதலில் வர்ணாச்சிரமங்கள் எந்தத்தேகத்தைப்பற்றியிருக்கிறது? அஞ்ஞானாவரண விக்ஷேபங்கள், ராகத்துவேஷாதிகள், வைராக்கிய விவேகங்கள், சமதமாதிகள், பக்தி சிரத்தைகள், முமுக்ஷுத்துவம், சிரவண மனன நிதித்தியாசன சமாதி சாக்ஷாத்காரஞானம்வரையிலுள்ளவைகளெல்லாம் எந்தச்சரீரத்தைப்பற்றி யிருக்கிறதென்பதை முதலில் விசாரித்தாயா? அல்லது உனக்கு இப்படிச்சொன்ன சாஸ்திரக்ஞர்களாவது இது இது இன்ன இன்னதின் தர்மங்களென்பதை விசாரித்துச்சொன்னார்களா? அப்படி அவர்கள் விசாரித்திருப்பார்களேயானால், இந்தப் பிராம்மணவர்ணமும் சன்னியாசிஆசிரமமும் தூலசரீரத்தைச் சேர்ந்ததாயிருக்கிறது. அஞ்ஞானமுதல் ஞானம் வரையிலுள்ள சகலமும் சூக்ஷுமசரீரத்தைச் சேர்ந்ததாயிருக்கிறது. தூல சரீரமோவென்றால், உண்டாய் உண்டாய் நசிக்கிறதாயிருக்கிறது. சூக்ஷுமசரீரம் விதேகமுக்திவரை ஒன்றாயிருக்கிறது. ஒருசூக்ஷுமசரீரத்தில் அபிமானித்திருக்கிற ஜீவன் அஞ்ஞானத்தோடேகூடியிருந்து துர்வாசனைகளைப் பழகிவந்திருக்கிறவனுக்குச் சஞ்சிதகர்மத்திலிருக்கிற ஒருபுண்ணியகர்மத்தால் பிராம்மணஜன்மமும் சன்னியாசாசிரமமுமுண்டாகலாம். அவனுடைய நடையானது சாராபானாதி கெட்டதான வியாபாரங்களைப் பூர்வஜென்மவாசனைப்பிரகாரம் செய்துகொண்டுவருகிறதையும், பூர்வஜென்மத்தில் சுத்தவாசனையோடே விவேகவைராக்கியங்களையும் பழகியிருந்தவனுக்குச் சஞ்சிதகர்மத்திலிருக்கிற ஒருபாபகர்மத்தால் சூத்திராதி ஜென்மங்களை யெடுத்தவர்களாயிருந்தாலும் அவர்கள் ஜென்மாந்திரத்தில் செய்த சுத்தவாசனைப்பிரகாரம் நல்லநடை உடைத்தானவர்களாயிருப்பதையும் இப்போது அனுபவமாய்க் காணப்படுகிற

படியாலும் நீ சொன்ன சாஸ்திரக்ஞர்கள் அவிசாரர்களென்றறியத்தக்கது. சுருதியும் இந்த ஆத்மஞானத்துக்குச் சாதனசதுஷ்டயசம்பன்னனே அதிகாரி யென்று சொல்லியிருப்பதாலும், யுக்தியும் போகம்பண்ணவேண்டுமென்று எத்தனிக்கிற எவ்வனமான புருஷனுக்குக் குழந்தையாயிருக்கிற பிராம்மணப் பெண் உபயோகப்படுமா அல்லது பக்குவமாயிருக்கிற நீசப்பெண் உபயோகப் படுமா சொல்? பிராம்மணன் உரம்வையாமல் உழுது விபசாயம்பண்ணினான், நீசன் உரம்வைத்து உழுது விபசாயம்பண்ணினான், இவர்களிருவருக்குள் யாருக்கு நெல் நன்றாய் விளைந்துவரும் சொல்? சாவடியில் படுத்திருக்கிற பிராம் மணன் சூத்திரனிருவருக்குள்ளே அச்சாவடி தீப்பட்டெரியும்போது விழித்த சூத்திரன் தலைதப்புவனா? தூங்குகிற பிராம்மணன் தலைதப்புவனா சொல்? அனு பவத்திலும் பிராம்மணர்கள் நீசசேவையும் நீசகிருத்தியமும் செய்வதும், சூத் திரர்கள் தத்துவவிசாரணை செய்வதையுங்காண்க.

## 169 - வது தரங்கம்.

சன்னியாசமே முத்தியைத் தராது. அது ஒரு சாதனமாத்திரம்:—

சன்னியாசத்தினாலேயே மோக்ஷம் வராது, மோக்ஷத்துக்கு அநேகஞ் சாதனங்களில் இதுவுமொரு சாதனந்தான். [எ - தி] ராஜாவின் தயவு பெறு வதற்கு அநேகஞ்சாதனங்களில் வாயலில் காத்திருக்கிற சேவகனுமொரு சாத னமேயல்லாமல் அவன்தயவினாலேயே ராஜகிருபை வராததுபோலவறிக. [இ-து] குடும்பத்தை வெறுத்துச் சன்னியாசம்செய்து ஞானமில்லாமல் சும்மா சோற்றைத் தின்றுகொண்டிருக்கிறவனுக்கு முக்தியில்லை. [எ - தி] கைதியை ஜாமீன்பேரில் விட்டிருப்பதுபோலும், தீர்க்கவியாதி வந்தவனுக்குக் கஞ்சா லேகியத்தால் அந்தவியாதி தோற்றுமலிருப்பதுபோலுமறிக. [இ-து] சன்னி யாசமானது வந்தஞானத்துக்குச் சாதனமேயல்லாமல் அதுவே முக்தியைக் கொடாது. [எ - தி] திரையானது ஏற்றினதீபத்தைக் காப்பாற்றுமேயல்லா மல் திரையே தீபத்தை யுண்டுபண்ணாததுபோலவறிக. [இ-து] சன்னியாசம் சிலாக்கியமானாலும் விரக்தியில்லாதவனுக்கு கெடுதலாகுமென்பதற்கு யுக்தி:— யாகஞ்செய்வது சிலாக்கியமானாலும் சூத்திரனுக்குக் கூடாததுபோலும், திரு மங்கலியம் சிலாக்கியமானாலும் முண்டைக்கு ஆகாததுபோலுமறிக. [இ - து] சன்னியாசம் நான்குவிதமாய்க் காணப்படுகிறது. அதாவது, பாபம்செய்த வன் பச்சாத்தாபத்தால் பெரியவர்களிடத்தில் கெஞ்சி வாங்கிக்கொள்வது ஒன்று, சம்சாரதுன்பம் சகிக்கமாட்டாமல் ஓடிப்போய்ச் சன்னியாசம்பண்ணிக் கொள்வது இரண்டு, சாதனசதுஷ்டயத்துடன் குருசன்னிதியிற் போய்ப் பண் ணிக்கொள்ளுகிறது மூன்று, ஞானம் வந்தபின் ஜீவன்முக்திசுகத்துக்காகப் பண்ணிக்கொள்வது நாலு, இதைத்தவிர வேறே மூன்றுண்டு. அதாவது, துர் மரணம் சம்பவித்தசமயத்தில் சன்னியாசம் செய்துகொள்ளுவதும், மயங்கிக்

கிடக்குஞ்சமயத்தில் பந்துக்கள் பார்த்து தீண்டல்வந்து நம்முடைய சுபகாரியங்களைக் கெடுக்குமென்று நினைத்துக்கொடுக்கிற சன்னியாசமும், கோபதாபத்தாலும் கொடியதுன்பத்தாலும் பண்ணிக்கொள்ளுகிற சன்னியாசமும் பிரயோஜனமில்லை. நான் அசங்கனென்ற ஞானமாகிற சன்னியாசம் வெளியில் தெரியாததால் அதைப்பற்றிஇங்கே சொல்லவில்லை. ஐயா, சாஸ்திரங்களில் குடீசக, வெகூதக, அம்ச பரமஅம்ச சன்னியாசங்கள் நாலுவிதமென்று சொல்லி, சன்னியாசத்துக்கு வைராக்கியமே காரணமென்றும், அதில் கொடிய துன்பம் வரும்பொழுது குடும்பத்தை வெறுத்து வருகிற வைராக்கியம் மந்தவைராக்கியமென்றும், அதில் மேலேசொல்லிய நான்குவித சன்னியாசங்களொன்றும் பலிக்காதென்றும், தீவிரத்தில் குடீசக வெகூதகங்கள் இரண்டும் பலிக்குமென்றும், தீவிரதரத்தில் அம்ச பரமஅம்சங்களிரண்டும் பலிக்குமென்றும் அதில் பிரணவ உபாசனை செய்கிற அம்சனுக்கு பிரஹ்மலோகத்தில் பிரஹ்மாவினிடத்திற் போய் முக்தியடைவனென்றும், பரமஅம்சன், சிக்ஞாசு, ஞானவானென்று இருவகையால் இவிடத்திலேயே ஞானத்தை யடைந்து முக்தியடைவார்களென்று இப்படிச் சொல்லியிருக்கும்போது நீங்கள் அதற்குவேருக நான்குவித சன்னியாசமுண்டென்று சொன்னீர்களேயென்று கேட்பாயாகில், அது சட்டமென்றும் நாம் சொன்னது திட்டமென்றும் இரண்டுக்கும் முடிவில் கருத்தொன்றுதானென்பதையுமறிந்து சகலவிதமான சன்னியாசங்களுக்கும் ஈஷணத்திரயத்தியாகமும் ராகத்துவேஷநிவர்த்தியும் முக்கியமென்றறியத்தக்கது.

## 170 - வது தரங்கம்.

ஒருவன் துறவியாய் முக்தியடைந்தால் குடும்பத்தார் முழுமையும் துக்கிப்பார்கள்:—

ஒரு விவேகி சன்னியாசம்பண்ணிக்கொண்டால் குடும்பத்தார் துக்கப்படுவார்கள். [எ-தி] ஒரு கக்ஷிக்காரன் ராஜியாய்ப் பிராதை நிறுத்தினல் கோர்ட்டிலிருக்கிற வைக்கீல்முதலானவர்கள் துக்கப்படுவதுபோலவறிக. ஐயா, ஒரு ஜீவன் விதேகமுக்தி யடையவேண்டுமென்று வைராக்கியத்துடன் சன்னியாசம்பண்ணிக்கொண்டு ஆத்மஞானத்தைப்பெற்று ஜீவன்முக்தனுனல் ஈஸ்வராதி சகலதேவதைகளும், மற்றமனுஷர்களும், இஷ்ட மித்திர பந்துஜனங்களும், பசு பக்ஷி மிருகங்களும், ஈ மூட்டை கொசுமுதலான சகலஜீவர்களும் துக்கப்படுகிருர்களென்று சொன்னீரே, இவன்பாட்டுக்கு முக்திசுகத்தைப் பெறுவதில் அவர்களுக்கு என்னநஷ்டம் வந்தது. அவர்கள் எதற்காக விசனப்படுகிருர்கள்? இதை எனக்கு விபரமாக அறிவிக்கவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேம் கேள்:— ஒருஊரில் ஒருபெரியமனுஷன் வைதீகத்தில் மிகுந்த சிரத்தையோடே நாள்தவராமல் க்ஷண்ணவதி சிரார்த்தங்களும் மகாளயங்களும் அஷ்டகை அன்வஷ்டகைமுதலான கிரியைகளேயும் மற்றத்

தேவகாரியம் பிதுர்காரியமுதலான கிரியைகளை செய்துவந்த அப்பிரபு இறந்து போனவுடன் அவர்வீட்டுப் புரோகிதப்பிராமணனை பின்னையொரு பிராமணன் பார்த்து, "ஓய் வாத்தியாரே! இன்றையதினம் உமக்கு ஒரு பிராம்மணார்த்தம் வருஷாவருஷங் கிடைக்கும்படியாக பலித்ததே" என்று சந்தோஷமாய்க் கேட்கும்போது, அந்த வாத்தியார் அழுதுகொண்டு நூறுபிராம்மணார்த்தம் நஷ்டமாயல்லவோ ஒருபிராம்மணார்த்தம் பலித்திருக்கிறதென்று விசனமாய்ச்சொன்ன கதைபோல, ஒருவன் ஞானத்தை யடைந்து முக்தியைப் பெற்றானேயானால், பிரஹ்மாவுக்கு இவன் பிறக்கும்படியான எழுவகைப்பிறவிகளிலுள்ள சரீரங்களுடைய சிருஷ்டிசெய்கிற தொழிலும், விஷ்ணுவுக்குப் பரிபாலனத்தொழிலும், சிவன் யமன்களுக்குச் சம்மாரத்தொழிலும், நவக்கிரகங்களுக்குக் கர்மப்படி தெசா புக்தி சித்திரங்களில் ஆட்டிவைக்கிற ஆக்ஞைகளுக்கும் பங்கமாவதால், ஒருசக்ரவர்த்தியான அரசனுக்கு ஒருராஜ்ஜியமுழுமையும் சத்துருராஜா வந்து கட்டிக்கொண்டுபோனால் அந்த ராஜாவுக்கு எவ்வளவு விசனம்வருமோ அப்படிப்போல ஈஸ்வராதிகள் விசனப்படுவார்கள். அதுபோலவே மனுஷ திரியக்குகளுமிவனைப்பற்றியே ஜீவித்துவந்ததால் அவர்களுந் துக்கப்படுவது ஞாயந்தான். மகாப்பிரபுவாயும் நம்மைச் சம்சாரசமுத்திரத்திலிருந்து கரையேற்றிவைப்பதற்காக அறிவே திருமேனியாய் எழுந்தருளிய நம் குருநாதனே முக்தி யடைகிறவர்களுக்கு ஒத்தாசைசெய்து சந்தோஷிப்பாரென்றறிக.

## 171 - வது தரங்கம்.

*சீடன் நன் முயற்சி:—*

குருகிருபையால் தத்துவஞானத்தை யெவனோ ஒருவன் பெற்றாலும், அதை அஞ்ஞானிகளிடத்திற் பறிகொடாமல் சாக்ஷாத்காரம்வரை கெட்டிப்படுத்துவதுதான் சீடனுடைய நன்முயற்சியென்பதற்கு யுக்தி:—தெய்வகெதியாய் மழைபெய்ந்து பிரவாகம் வந்தாலும் அதை வீணாய்விட்டுவிடாமல் அணைபோட்டு கம்மாயில் கொண்டுவந்து கட்டிக்கொள்வதுபோலும், ஸ்ரீமந்தன் கொடுத்தசொத்தைக்கள்ளர்கையில் பறிகொடாமல் வீடுகொண்டுவந்து சேர்த்து ரக்ஷிக்கிறவன்போலுமறிக. [இ - ர்] ஒரு முமுக்ஷுவானவனுக்கு சாக்ஷாத்காரமாக பிரமம் நானென்ற ஞானமுதயமாகாமற்போனாலும் குருசாதுக்களுடைய வாக்கியங்களை நம்பி நான் பிரமமென்றும், தேகாதிஜெகத்துப் பொய்யென்றுந் திடமாய் அனுசந்தித்துவருகிறவனுக்கு இப்பொழுதே ஜீவன்முக்தி வரும். [எ - தி] மருந்தினுடைய மகிமை நோயாளிக்குத் தெரியாமற்போனாலும் வைத்தியனுடைய வார்த்தையை விசுவசித்துச்சாப்பிட்டவனுக்கு நோய் தீர்ந்து சுகமுண்டாவதுபோலும், காசிக்கு வழிதெரியாதிருந்தாலும் ரயில் காரனை நம்பி ரயிலேறிப்போகிறவனுக்குக் கெங்காஸ்நானம் சித்திப்பதுபோலு

மறிக. [இ - ர்] இந்த ஜென்மத்திலேயே பிரஹ்மஞானத்தை யடையப்போகிற புருஷன் எப்படியிருப்பனென்றால், இந்தஉலகத்தில் நமக்கொருவனுடைய சிநேகமும் வேண்டாமென்பவன் அவர்களுக்குக் கொடுக்கவேண்டிய கடன்ரூபாய்களை பெண்டாட்டிதாலிவரையிலும் வித்துக் கடனைத்தீர்த்துப்போடுகிறவன் போல ஜீவேசுவர ஜகத்துக்களிலிருக்கிற ஆசையாகிற கடனை அடியோடே தீர்த்துக்கொள்வதே அடையாளமென்றறிக. [இ - ர்] பிரம்மவிசாரம் பண்ணும்போது அதற்குத்தடையாக மிருந்த நித்திரைவந்ததானால் அங்கேயே அதைச் சமாளியாமல் சிரவணத்துக்கு வருமுன்னமே குறைத்தூக்கத்தையுந் தூங்கி தொலைத்துவிட்டுத் தூக்கமன்றியில் விசாரஞ்செய்யவேண்டும். [எ - தி] சோரபுருஷனோடே சேர்ந்து கலவிசெய்யும்போது குழந்தை வாழ்வாழென்றழுததானால் உடனே அதற்கு ஸ்தன்னியபானங்கொடுத்துச் சமாதானஞ்செய்து தூங்கப்பண்ணிவிட்டு அந்த விடபுருஷனுடன் விடியவிடிய வேடிக்கையாய் விளையாடித்தன்னிஷ்டத்தை நிறைவேற்றிக் கொள்பவள் போலவறிக.

தேகாதிகளிருக்கும்போதே குருகிருபையால் ஜீவன்முக்தி பெறவேண்டும்:—

தேகேந்திரியங்களெல்லாம் ஜீவித்துக்கொண்டிருக்கும்போதே குருகிருபையினால் ஜீவத்துவம்போய்த் தனக்கு ஜீவன்முக்திபதம் வரலாம். [எ - தி] அநேகசேவகர்கள் ஒருபுருஷனைப் பிடிக்க வீட்டைச்சுற்றிக் காத்திருக்கும்போது அந்தப்புருஷன் சித்தன்கிருபையால் அதிலிருந்து வெளியேறுவதுபோலும், அநேகபந்துக்கள் நடுவிலிருக்கிற ஸ்திரீயை ஒருவருக்குந்தெரியாமல் சொக்குப்பொடிபோட்டுக் கூட்டிக்கொண்டுபோகிறதுபோலும், தேகவாசனை முதலான கட்டுக்குள் அகப்பட்டிருக்கிற மனதை குருகடாக்ஷத்தால் பெறப்பட்டிருக்கிற விவேகத்தால் ஆத்மாவில் ரமிக்கச்செய்வனென்றறிக. [இ - ர்] இடைவிடாமல் நிதித்தியாசனஞ் செய்துவந்தால் ஞானோதயந் தானேயாகும். [எ - தி] அரணிக்கட்டையைக் கடைந்துவருகிறவனுக்கு தீ தானேயுண்டாவதுபோலும், போகம்பண்ணுகிறவனுக்குச் சுக்கிலம் தானே வெளியாகிறதுபோலும், தயிரைக் கடையக்கடைய வெண்ணெய்வெளியாவதுபோலும், எள்ளை ஆட்டஆட்ட எண்ணெய் வெளிப்படுவதுபோலுமறிக. [இ - ர்] ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் தேகம் சீக்கிரம்போவது சுகம், முமுக்ஷுவுக்குமட்டுஞ் சரீரம் சீக்கிரம்போனால் துக்கமும், இருந்தால் சுகமும் வரும். [எ - தி] ரயில்வண்டியில் டிக்கட்டுவாங்கி உட்கார்ந்திருக்கிறவனுக்கும், வேடிக்கைபார்க்கப் போயிருக்கிறவனுக்கும் அந்தவண்டி சீக்கிரத்தில் ஸ்டேசனைவிட்டுப்போவதால் சுகமும், அப்போது வந்து டிக்கட்டுக்குத்திண்டாடுகிறவனுக்கு வண்டி தாமதமாயிருப்பது சுகமாக ஆவதுபோலும்; பந்தியில் சீக்கிரஞ்சாப்பிட்டு வயிறு நிறைந்தவனுக்கும் வெளியில் இரண்டாம்பந்திக்குக் காத்திருக்கிறவனுக்கும் சீக்கிரமாகப் பந்தியை எழுப்பிவிடுவதில் சுகமும், மத்தியில் பந்தியில் உட்கார்ந்து

சாப்பிடுகிறவனுக்கு அந்தப்பந்தி தாமசமாயிருப்பதில் சுகமாயிருப்பதுபோலு மறிக. [இ - ர்] சம்சாரதாபத்தில் அடிபட்டு குருசன்னிதிக்கு வந்து சிரவணம் ஆரம்பிக்குங்காலத்தில் ஆத்மவிசாரம் உள்ளே யிறங்காமலிருந்தாலும் கொஞ்ச வேளை அவர்சன்னிதியில் வசித்தால் பிரகாசமாகும். [எ - தி] வெய்யிலிலே யிருந்து வீட்டுக்குள் வந்தவனுக்கு உடனே ஒன்றுந்தெரியாமலிருந்தும் கொஞ்சநாழிகை ஆகஆக அங்குள்ள பதார்த்தமெல்லாம் பிரகாசமாவதுபோலவறிக. [இ - ர்] பொய்யாயிருக்கிற ஜீவேஸ்வரவாதத்தை முமுக்ஷுவானவன் விசாரிக்கப்போனானால் பவவியாதிதீர்ந்து சுகமடையான். [எ - தி] வியாதிவந்த குழந்தைக்கு மருந்தெண்ணை கொடுத்திருக்கும்போது திவசவீட்டில் உபாதியை விர்த்திபண்ணுவதான அப்பம் வடைவாங்கிச்சாப்பிட்டால் அது சுகத்தை யடையாததுபோலும், ஒருவனைத் தோளிலேற்றிக்கொண்டு கெங்கையில் நீந்துகிறவன் கரையேறுமற் போவதுபோலுமறிக. [இ - ர்] குருசன்னிதானத்தில் சிரவணம் ஷட்விதலிங்கதாற்பரியத்தோடே ஏகாக்கிரமாய்ப் பண்ணவேண்டும். [எ - தி] ரத்னப்பரீட்சை ஏகாக்கிரமாயிருந்து பார்ப்பதுபோலும், கப்பலோட்டுகிறவன் கண்கொட்டாமல் கண்ணாடியைவைத்துப் பார்ப்பவன் போலும், தூண்டிக்காரன் தூண்டியில் மீன் அகப்படுவதைப்பார்க்க மிதப்புக் குச்சியில் லக்ஷியம்வைப்பதுபோலுமறிக. [இ - ர்] முமுக்ஷுக்களுக்கு வாசனைபரவசத்தால் ஏதேனும் ஓர் நினைப்புவந்தால் அந்தவழியாய்க் கோடிநினைப்பு ஒருகணத்திலுண்டாய் இவனுடைய சொரூபப்பிரக்ஞையைப் பறித்துக்கொண்டு போகும். [எ - தி] திருநாள்கூட்டத்தில் ஒருதிருடன் அஜாக்கிரதையாயுள்ள ஒருவனுடைய நகையைத் திருடினவுடன் கைமாத்தாய் அநேகம் திருடர்கள் மூலமாய் அந்தநகையைக் கடத்திவிடுவதுபோலுமறிக. [இ - து) தேகாத்மபுத்தி நிசேஷமாய் நிவர்த்தியாகும்வரை பிரமாப்பியாசம் செய்யவேண்டும். (எ - தி) குறவன் தான் திருடின நகைகளை வாய்க்குள்ளிருந்தும், மடியிலிருந்தும் நிசேஷமாய்ப்போடும்வரை உதைப்பதுபோலும், வயிற்றிலுள்ள துர்மலங்கள் நிசேஷமாய் வெளியேறும்வரை பேதிக்குச் சாப்பிடுவதுபோலுமறிக. (இ - ர்) துவைதவிவகாரங்களை நிசேஷமாய்விட்டு பிரம்மவிசாரமே இடைவிடாமல் செய்கிறவனுக்கு சீக்கிரத்தில் ஞானம் சித்திக்கும். (எ - தி) வடதிக்கிலிருப்பவர்கள் ஒரேவித்தையைப் பழகுவதால் அந்தவித்தை பூர்ணமாய்ச் சித்திப்பதுபோலும், பத்தியத்துடன் மருந்து சாப்பிடுகிறவனுக்கு ஆரோக்கியஞ் சீக்கிரஞ்சித்திப்பதுபோலவறிக. (இ - ர்) எவ்வளவுகாலம் முமுக்ஷுவானவன், குருசன்னிதியிற்போன இவனைப்பார்த்து நீ தேகாதிகளில்லை, ஜெகத்துச் சத்தியமில்லை, நீயே பிரமமென்று அவர் சொன்னாலும், இவனதை சிரவணம்பண்ணினாலும், பிரமாப்பியாசத்தால் வாசனாக்ஷயங்களை இவன் செய்தே முக்தனாகவேண்டும். (எ - தி) காசிக்கு நடந்துபோகிறவன் காசிவாசியான துணைப்பிராம்மணனைப் பிடித்துக்கொண்டு அவனுமிவனுக்கு மார்க்கங்களைக்காண்பித்து இவனுமந்த மார்க்கங்களை இன்னபடியென்று தெரிந்

துகொண்டாலும், இவன்காலாலே நடந்தே காசிபோய்ச் சேரவேண்டியது போலுமறிக. குருவை அநேக ஸ்தோத்திரம்பண்ணினபிற்பாடு வாசிப்பு ஆரம்பிக்கவேண்டும். இதிலேயே பொழுதுபோகிறதென்றெண்ணுகிறவனுக்கு ஞானமுண்டாகாது. [எ - தி] ரயிலானது ஸ்டேசனில் ஜலம் கட்டை கரிமுதலானது போடுவதற்காக இரண்டுநாழிகை நிறுத்தினல் ஜனங்கள் ரயில்விடவில்லையே யென்றெண்ணுகிருர்கள். அப்படி தண்ணீர் கட்டைமுத லானது கட்டாமற்போனல் ரயில் வேகமாய் ஓடாது, வண்டியிலும் தீப்பற் றிக்கொள்வதுபோலும், வயலுக்கு உரம்வைப்பதால் செலவாகுமென்று நினைப் பவனுக்கு நெல் விளைவது குறைந்துபோவதுபோலும், பசுவுக்குத் தீனிவைப் பதில் செலவாகுமென்று நினைப்பவனுக்கு பால் பூச்சியமாவதுபோலுமறிக. [இ - ர்] விஷயங்களில் விழுந்துகிடக்கிற மனதை விசாரித்துப்பார்த்து அதிலி ருந்து மெள்ளமெள்ள எடுக்கவேண்டும், பலவந்தமாயிழுத்தாலது துக்காகார மாகும். [எ - தி] முள்ளில்விழுந்த சேலையையும், மணலில்விழுந்த சர்க்கரை யையும், சகதியில்விழுந்த முத்துக்களையும், மெள்ளமெள்ள எடுக்கவேண்டும் அப்படியன்றியில் தடபுடலாய் எடுக்கிறவனுக்கு கந்தலும், மணலுஞ் சகதியுமா யனுபவிக்கப்படுவதுபோலவறிக. [இ - ர்] இப்போது உலகத்தில் நன்மை வேண்டுமென்ற ஜீவர்கள் குருசாதுக்களைப் பூஜிக்கிறதா? ஆலயங்களிலிருக்கிற தெய்வங்களைப் பூசிக்கிறதா விசேஷமென்று சங்கைவந்தால், குருசாதுக்களைப் பூசிக்கிறவனுக்கே சிலாக்கியம், மற்றவர்களுக்கப்படி சகல புருஷார்த்தமுங் கிடையாது. [எ - தி] ஒருவன் ரம்பாசம்போகத்தினுடைய சுகத்தை இச்சித் தவன் ஒரு சிலையில் ரம்பைபோல அடித்திருக்கிற பெண்ணோடே சம்போகம் செய்வதால் சுகம்வருமா? உயிரோடேயிருக்கிற ரம்பையென்ற பெண்ணை ரம்பை யென்று நினைத்துச் சம்போகிக்கிறவனுக்குச் சுகமுண்டாகுமா சொல்? கற்பகக் கனியைச் சாப்பிடஇச்சையுள்ளவனுக்கு சித்திரத்திலெழுதியிருக்கிற கற்பகக் கனியைச் சாப்பிட்டால் பசிதீருமா? மரத்தில் காய்த்திருக்கிற மாங்கனியைச் சாப்பிட்டவனுக்கு பசிதீருமா சொல்? [இ - ர்] குருசிஷ்யர்களிரண்டுபேர்களும் க்ஷேமமாயிருக்கவேண்டுமென்று சிஷ்யனே சதா பிரார்த்தித்துக் குருவைக்காக் கவேண்டும். [எ - தி] அநேகம்ஸ்திரீகளைக் கல்யாணஞ்செய்து அநேகம்புத்திரர் களைப் பெற்றிருக்கிற பிரபுவை ஒருபெண் கல்யாணஞ்செய்து புருஷன்வீட்டுக்கு வந்திருக்கிற அவளே நாயகனும்நாமும் சேர்ந்து வாழ்ந்து சுகித்து சேயைப் பெற்று விளங்கவேண்டுமென்று நாயகனைப் பரிவுடன்பார்த்து பாதுகார்க்க வேண்டுமென்று சொல்வதுபோலவறிக. [இ - ர்] முமுக்ஷுவானவன் ஆனந் தத்தையும், பிரம்மஐக்கியத்தையும், இந்திரியநிக்கிரகத்தையும், தன் சித்தத்தி லிருக்கிற வாசனையையும் விவேகத்தால் துடைத்துக்கொண்டிருக்கவேண்டுமே தவிர, பிராரப்தத்தொழிலைக்குறித்துக் கவலைப்பட்டெத்தனிக்கத் தேவையி ல்லை. [எ - தி] ராஜாவின்மகளைக் கல்யாணஞ்செய்த மாப்பிள்ளை அந்தஸ்திரீக் குப் போகத்தைமாத்திரம் இடைவிடாமற் கொடுக்கவேண்டுமேதவிர மற்ற

ஆபரணம் ஆடை அன்னமுதலானவைகளைக் கொடுப்பதற்குக் கவலைப்படத் தேவையில்லாதது போலும்; வெள்ளைக்காரன் தான்தினிதின்பதையும், துரைச்சானிபோடே ரமிப்பதையும், பங்களாவுக்குள் பற்றுகிற நூலாம்படை தூசி முதலானதைச் சுத்தம்பண்ணும்படிக்கும், குதிரைமுதலானதை ரக்ஷிக்கும்படிக்கும் ஏவுதலைமட்டும் செய்வனேதவிர, மற்றக்கச்சேரிவேலை பார்ப்பதில் கவலையன்றியில் ஒழுங்குப்படி சகலவேலையும் ஒழியாமல் நடத்துவதுபோல வறிக. [இ - ர்] புருஷன் சம்பாத்தியம்பண்ணினதை ஸ்திரீயானவள் பாகம் பண்ணிப் பந்துக்களுக்கெல்லாம் போடுகிறதுபோல ஈசுவரனுண்டுபண்ணின பஞ்சபூதபௌதிகத்தை ஜீவர்கள் சாதுக்கள்முதலான பேர்களுக்கு உபயோகப் படுத்தவேண்டியதென்றறிக. [இ - ர்] முமுக்ஷுவானவன் நிராசையோடேயும், பிரம்மவிசாரத்தோடேயும், சாந்தியோடேயுங்கூடியிருக்கிற சாதுக்களுக்கு அன்னபானாதிகள் விசாரிக்கவேண்டுமேதவிர ஆசையோடேகூடின மூடர்களை விசாரிக்கவேண்டியதில்லை. [எ - தி] லௌகீகர்களானபேர்கள் பசியுள்ளவனுக்கு அன்னம்போடவேண்டுமேயல்லாமல் அஃதில்லாதவனுக்குப் போடவேண்டியதில்லையென்ற நீதிவசனப்படி அன்னம்போடவேண்டியதும்போடாமலிருப்பதும் அனுபவமாயிருப்பது பிரசித்தமாயிருப்பதுபோலும், வித்தை படிக்கிற பிள்ளைக்கே சம்பளத்துக்கு ரூபாய் தகப்பன் கொடுப்பனேதவிர தாசிவீட்டுக்குப் போகிற பிள்ளைக்குச் செலவுக்குரூபாய் கொடாததுபோலு மறிக. (இ - ர்) விவேகிக்கு சன்னியாசம் எப்போது செய்துகொள்ள வேண்டுமென்றால், பிரம்மவிசாரத்துக்குப் பெண்டாட்டிபிள்ளைகள் எப்போது விரோதஞ் செய்கிறார்களோ அப்போதே சன்னியாசஞ் செய்துக்கொள்ள வேண்டியது. (எ - தி)தன்வீட்டிலிருக்கிற சிநேகிதன் எப்போது தன் தனத்தையும் ஸ்திரீயையுமபகரிக்க எத்தனிக்கிறானோ அப்போதே அவன்சிநேகத்தைத் தள்ளவேண்டியது போலும், திண்ணையில் படுத்திருக்கிறவனுடைய படுக்கையைச்சுற்றி சாணித்தண்ணீரை வீட்டுக்காரி எப்போது விடுகிறாளோ அப்போதே படுக்கையைச் சுற்றிக்கொண்டு வெளியேறுவதுபோலுமறிக. (இ - ர்) கிரந்தபாஷையிலானாலும், தமிழ்பாஷையிலானாலும், இன்னும் எந்தப்பாஷையிலானாலும் ஆத்மாவை விசாரித்துத் தன்னைத்தானென்று அயிக்கியம்பண்ணி சுகிக்கவேண்டியது. (எ - தி) தம்பதிகள் பிறந்தவீட்டிலானாலும் புருஷன்வீட்டிலானாலும் மற்ற வெந்தவிடத்திலானாலும் ஸ்திரீபுருஷர்களொன்றுசேர்ந்து யோனிலிங்கங்களுடைய அயிக்கியத்தினாலேயே சுகம் வரவேண்டியதுபோலும், வீட்டிலானாலுங் காட்டிலானாலும் மற்றெந்தவிடத்திலானாலும் [வயிற்றுக்காகாரம்பண்ணியே பசிதீர்ந்து திருப்தியுண்டாகவேண்டியதுபோலு மறிக. (இ - ர்) இப்போதே பிரம்மவிசாரஞ் செய்யவேண்டியதேதவிர பின்னாலே பிரம்மவிசாரஞ் செய்வோமென்று நினைக்கிறவனுக்கு ஒருநாளும் இருவகைப்பிரயோசனமுங் கிட்டாது. (எ - தி) தீப்பட்டெரிகிற வீட்டில் தபித்துக்கொண்டிருக்கிறவனுக்கு ராஜன் வந்து நிலையாயுள்ள வீடு கொடுக்

கிறேனென்றால், அப்போதே இதைவிட்டு அந்தவீட்டைப் பெற்றுக்கொள்ளாதவன் தாபந்தீர்ந்து சுகமடையாததுபோல இப்போது குருநாதன் கருணையால் கொடுக்கிற மோக்ஷவீட்டைப் பெற்றுக்கொண்டு தபித்துக்கொண்டிருக்கிற இந்தத்தேகவீட்டின் அபிமானத்தை விட்டவனே கரையேறுவனென்றறிக. (இ - ர்) குருநாதன் சொல்லுகிற விவேகத்தில் துர்வாசனையாலும், அசிரத்தையாலும், மறதியாலுஞ் சந்தோஷப்படாதவனுக்கு ஜன்மந்தீராது. (எ - தி) பிரபு அன்னம்போடுகிறவிடத்தில் திருப்தியாய்ப் புஜியாமல்வயிற்றுவலியால் வாயாலெடுக்கிறவனுக்கும் சீட்டாடுகிறவனுக்கும் அச்சமயத்தை மறந்திருக்கிறவனுக்கும் பசிதீராததுபோலுமறிக. [இ - து] அனந்தகோடி ஜெனன மரண துக்கத்திற்குக் காரணமான இத்தேகாபிமானத்தைக் குருவாக்கியப்படி எவ்வருத்தப்பட்டாகிலும் விடவேண்டும். (எ - தி) அனந்தகோடி கடன்பட்டுத் தீர்ப்பாயிருக்கிற புருஷன், ஒருமாதம் ஜெயிலிலிருந்தால் அந்தக்கடன்களை நீக்கிவிடுகிறேனென்று சொன்ன ஜட்ஜியின் வார்த்தைப்படி எவ்வருத்தப்பட்டாவது ஒருமாதம் ஜெயிலிலிருந்து அக்கடன்களையெல்லாம் தீர்த்துக்கொள்ளுகிறவன்போலும், தீர்க்ககாலமாய் வந்திருக்கிற வயிற்றுவலியை சித்தபுருஷன் வந்து ஒருவாரம் உப்பில்லாக்கஞ்சியுடன் குளிகையைச்சாப்பிட்டால் அந்த வயிற்றுவலி தீர்ந்துவிடும், இனிமேலுமொருக்காலுமொருவியாதியுமன்றி காயசித்தனாயிருக்கலாமென்று சொன்னபிரகாரம் அவனுமப்படியே பத்தியத்துடன் மருந்துசாப்பிட்டுக் காயசித்தனாவதுபோலவறிக. (இ.- து) முமுக்ஷுவானவன் சற்குருசாதுக்களுடன் சிரவண மனனங்களைச்செய்து ஏகாந்தத்திற்போய்ச் சமாதிசுகத்தை யனுபவிக்கிறான். (எ - தி) கல்யாணப்பந்தலிலிருந்து தாய்தகப்பன்முதலான பந்துக்களுடன் சேர்ந்து மங்கல்லியதாரணம்வரை செய்து, ருதுசாந்திக்குப் படுக்கை வீட்டுக்குப் போகும்போது சகலரையும்விட்டுத் தம்பதிகள்மட்டும் போவதுபோலும்; கடையில் வியாபாரஞ்செய்கிற செட்டி சகல ஜனங்களுடன் சேர்ந்து பேசிக்கொண்டு வியாபாரஞ்செய்தபின், சாப்பாட்டுக்குச் சமையல் வீட்டுக்குள் போகும்போது தான்மாத்திரமாய்ப் போவதுபோலும்; பக்தன் தன் உபாசனாமூர்த்தியை வெளியில்வைத்து அபிஷேகாதி பூஜையைச் செய்து, நைவேத்தியத்துக்குமட்டும் சரீரத்துக்குள் பிராண அபானாதிகளுடன் வைஸ்வாநரரூபமாக அந்த மூர்த்தியைப்பாவித்து அன்னம்புசிப்பதுபோலுமறிக. (இ - ர்) தன்புருஷனுடன் உடன்கட்டையேறுகிற ஸ்திரீக்குத் தாய் முதலானவர்கள் எவ்வளவுபிரியமான ஆபரணங்களைப் போடவந்தாலும் அவைகளை விரசமாகத்தள்ளிக் கட்டையிலேறுவதுபோல முமுக்ஷுவுக்கு ஐக்கியஞானத்தையடைய விருப்பமிருப்பதால் அச்சமயத்தில் சகலராலும் விரும்பத்தக்கதான ஈசுவரானந்தம்வரை பிராரப்தகர்மமானது கொடுக்கவந்தாலும் விரும்பானென்றறிக. [இ - ர்] தேகாதி அனாத்மாக்களில் நானெனதென்கிற வாசனை நிசேஷமாய் நிவர்த்தியாகும்வரை சுருதி யுக்தி அனுபவங்களுடன்

குருசன்னிதியில் சிரவண மனனாதிகளைச் சாவதானமாய்ச் செய்யவேண்டும், (எ - தி) திராவியாதி திரும்வரை பத்தியத்துடன் வைத்தியனிடத்தில் மருந்து சாப்பிடுவதுபோலும், அலுப்புத்திரும்வரை நித்திரைசெய்வதுபோலும், தன்னூருக்குப் போகும்வரை நடந்துபோகவேண்டியதுபோலும், குப்பைபோகுமட்டுங் கூட்டுவதுபோலும், சக்கிலமோசனமாகும்வரை போகிப்பதுபோலும், பசிதீரும்வரை சாப்பிடுவதுபோலும், விற்பத்தியாகும்வரை காவியம் படிப்பதுபோலுமறிக. [இ - ர்] ஒருவனுக்குக் கடன் கொடுக்கவேண்டியவன் கோர்ட்டில் வந்து கொடுக்கவேண்டியதுதானென்று ஒப்புக்கொண்டு ராஜிநாமா கொடுத்தபிற்பாடு சாக்ஷிக்காரர்கள் தேவையில்லாததுபோல குருநாதன்சொல்படி ஜாக்கிரத்தை பொய்யென்று ஒப்புக்கொண்ட முமுக்ஷுவுக்குக் குருநாதன் வேறே வசிட்டாதிகளைச் சாட்சியாக எடுத்துக்காட்டத் தேவையில்லை யென்றறிக. [இ - ர்] முமுக்ஷுக்கள் ஒருவர்க்கொருவர் விசாரணை செய்யுங்காலத்தில் லச்சையுந் துவேஷமுமன்றி பேசிக்கொள்வார்கள். [எ - தி] வக்கீல்கள் ஈரங்கிசெய்யும்போது லச்சையும் துவேஷமுமன்றி பார்வைக்குமட்டும் அடித்துக்கொள்வதுபோல பிறருக்குத் தோற்றும்படி பேசிக்கொள்வதுபோல வறிக. [இ - து] விவேகமுங் குருவும் கிடைத்தபிற்பாடு அவைகளெப்படித் தனக்குக் கிடைத்ததென்று விசாரிக்கத்தேவையில்லை, பரிபாலனம்பண்ணவேண்டும். [எ - தி] கற்பகச்செடியுஞ் சிந்தாமணிரத்னமும் தன்வீட்டில் வந்து முளைத்ததையும் கிடைத்ததையும் பறிகொடாமற் பரிபாலனஞ்செய்யவேண்டுமேதவிர யார் கொண்டுவந்துபோட்டார்? எப்படி முளைத்ததென்று விசாரிக்கத் தேவையில்லாததுபோலவறிக. [இ - ர்] தாசிவிடனானவன் தாசியினிடத்தில் மயங்கி நிஜஸ்திரீயை மறந்து வெகுகாலமா யவள்போகமே சுகமென்று நம்பியிருக்கிறான், அப்போது இவனுக்காகவே வருத்தந்தோன்றி நிஜஸ்திரீயினிடத்திற் போக நினைக்குமுன்னமே இவன்கருத்தைக் கண்டு தாசியும் அவளைச் சார்ந்த பேர்களும் இவனை வெளியில்விடாமல் துக்கப்படுத்துவதால், இவன் தன் கருத்தை வெளியில் காண்பியாமல் தப்பித்து வரவேண்டியதுபோல ஜீவனானவன் தேகத்தில் நானென்று மயங்கித் தன்னுடைய நிஜசொரூபத்தை மறந்து தேகாத்மபுத்தியே சுகமென்று நம்பியிருந்தான். அப்போது இந்த அனாத்மசம்பந்தத்தைவிட்டு எப்போது நம்முடைய சொரூபத்தையும் நம்மள் ஜாதியாரையும் அடையப்போகிறோமென்று நினைக்கும்போது, சரீரசம்பந்தமான ஜனங்கள் இவன் நம்மைவிட்டுப்போனால் நமக்கு ஜீவனமில்லையென்று இவனை இஷ்டப்படிப்போகவிடாமல் மறிப்பார்களாகையால், காக்கைக்கூட்டிலிருந்த குயில்குஞ்சுபோலச் சொல்லாமல் வெளியேறிப் போகவேண்டியதுபோல வறிக. [இ - ர்] குரு சமீபத்துக்குப் போகிற முமுக்ஷு அவிடத்திலுள்ள சாதுக்களையெல்லாம் நயந்துகொள்ளுவன். [எ - தி] ராஜசமீபத்துக்குப் போய்த் தகுந்தசம்மானம் பெறப்போகிற வித்துவான், அவிடத்திலிருக்கிற வேலைக்காரர்களை நயந்துகொள்ளவேண்டும். அப்படியன்றிப்போனால் மலை

யாளராஜாவினிடத்திலிஷ்டமாயிருந்த வித்துவான் ஜனவிரோதத்தால் அலங்காரதான மவனுக்குக் கொடுக்கச்சொல்லி விரட்டினகதைபோலவறிக. [இ - ர்] தாசிபோகத்தை இச்சித்தவன் தாய்க்கிழவிமுதலானவர்களை எப்படித் தழுவிக்கொள்வனோ அப்படிச் சமாதிக்குப்போகிறவன் சகல இந்திரியங்களையும் சமாதானம்பண்ணிக்கொண்டு போகவேண்டுமென்றறிக. [இ - ர்] அஞ்ஞானம் முதல் புத்திரன்வரையிலுள்ள சகலத்திராளும் இவனுடைய சிதானந்தங்களை அபகரிக்கிறார்கள். [எ - தி] திருடர்கள்முதல் ராஜன்வரையிலுள்ளவர்கள் இவன்சொத்தை அபகரிப்பதுபோலவறிக. ஆகையால் திருடர்கள் முதலான துஷ்டர்களுடைய சகவாசத்தை விடவேண்டியதுபோல முமுக்ஷுவும் அஞ்ஞானாதிகளுடைய சகவாசத்தை விடவேண்டியதென்றறிக. [இ - ர்] மேகரணம்வந்த புருஷனுக்கு மேலுக்குப் பிளாஸ்திரிபோடுவதுபோல வைராக்கியம்பண்ணுவது. உள்ளுக்கு மருந்து சாப்பிடுவதுபோல விவேகமென்றறிந்து சம்சாரரணத்தை இவ்விரண்டினாலும் தீர்ப்பவனே முமுக்ஷுவென்றறிக. முமுக்ஷுவுக்குக் குருசாதுக்கள் சாஸ்திரம்முதலான சாதனங்கள் வேண்டும். [எ - தி] பாடுகிறவனுக்கு வீணைமுதலான சாதனங்கள் வேண்டுவதுபோலும், க்ஷவரம்பண்ணுகிறவனுக்கு அதற்கேற்ற கத்தி, கல்லுமுதலான சாதனங்கள் வேண்டுவதுபோலும், புஸ்தகமெழுதுகிறவனுக்குப் பேனா, மைமுதலான சாதனங்கள் வேண்டுவதுபோலுமறிக. [இ - ர்] குருசன்னிதானத்தில் சிஷ்யன் ஏகாக்கிரமாய்ச் சிரவணம்பண்ணவேண்டும். [எ - தி] கண்குத்திப்பாம்புபோலும், மழைக்கு வாயைப் பிளந்துகொண்டிருக்கிற சாதகப்பக்ஷிபோலும், கரகமாடுகிறவன்போலும், கணக்கப்பிள்ளை கணக்கில் திருஷ்டிவைப்பதுபோலும், கல்யாணக்கூட்டத்தில் கள்ளப்புருஷனிடத்திலேயே கண்ணைவைப்பவள் போலும், தக்ஷிணைக்குப்போன பிராமணன்கண் தக்ஷிணைகொடுக்கிற எஜமானிடத்திலேயே யிருப்பதுபோலுமறிக. [இ - ர்] இந்திரியங்களை விஷயத்தில் விடாமல் முமுக்ஷுக்கள் அந்தந்தக் கோளகைகளிலே வைக்கவேண்டும். [எ - தி] ரத்னவியாபாரியானவன் வைடூரியாதி ரத்னங்களை வேறே வேறே பெட்டியிலே ஜாக்கிரதைபண்ணி வைக்கிறதுபோலவறிக. [இ - ர்] குருநாதன் எல்லாருடைய இருதயத்திலும் சச்சிதாநந்தப் பிரம்மசொரூபமாயிருக்கிறார். நம்மிடத்திலுமிவ்விதமிருப்பதால் அவரை மறக்காமலுஞ் சமீபத்திலிருக்கிறதாகவுமெண்ணி, அசுத்தவாசனையைத் தள்ளிச் சுத்தவாசனையுடன் சகசானுபவமடையும் விவேகிக்கு தனித்திருந்தால் சுகம், மூடசங்கத்தில் துக்கம். எதுபோலவென்றால், நாயகனுடன்கூடிய நாயகியைப்போலவறிக. நாயகனில்லாத ஸ்திரீக்கு எப்படித்தனித்திருந்தால் சுகமில்லையோ, சங்கத்தில் சுகமோ, அப்படி அஞ்ஞானியாகிறஸ்திரீக்கு விவேகமாகிற நாயகனில்லாததினால் தனித்திருந்தால் சுகமில்லாமல் சங்கத்திலேயே சுகமிருக்கிறதென்று அறிந்துகொண்டு விவேகி சதா தனித்திருப்பதையே இச்சிக்கவேண்டுமென்றறிக. [இ - ர்] முமுக்ஷுக்கள் அகந்தை, மமதைகளுக்கு இடமானவிஷயங்களை விடுவதில் லாபநஷ்டம்காலதேச

மொன்றையுங் கருதாமல், அவைகளைவிட்டோடிப்போவான். [எ - தி] திருட்டு நகையைக் கையில்வைத்திருக்கிறவன் போனவிலைக்குப் போகட்டுமென்று வித்துவிட்டு ஓடிப்போவனேயல்லாமல் நிறையுரை விலைமுதலானதில் அழுத்தம்பண்ணுததுபோலவறிக. [இ-து] சுழுப்தியில் விளைந்த சுகத்தை பிரம்மவிசாரத்துக்கு உபயோகப்படுத்தினால் தனக்கும் சுகம், மனமுதலிய கரணங்களுக்குத் தத்துவ ஞானமும் சுகமும், பிறருக்கும் பிரயோஜனமாகும். விஷயத்தில்விட்டால் தனக்கும் சுகமில்லாமல் பிறருக்கும் பிரயோசனமாகாது. [எ - தி] தன் தேகத்திலிருக்கிற சுக்கிலத்தை தன்மனைவியின் யோனியில்விட்டால் தனக்கும் சுகமும் அவளுக்கும் சுகமும், புத்திரனைப்பெற்றுச் சந்ததிவிர்த்தியாகிற பிரயோசனமும் ஆவதும்; சொப்பனத்தில் அந்தச்சுக்கிலங் கழிந்தால் தனக்கும் துக்கமும், அவளுக்கும் சுகமும் பிரயோசனமுமில்லாமற் போவதுபோலும்; விரைக் கோட்டையிலிருக்கிற விரைநெல்லை வெளியிலிருக்கிற வயலில் விதைத்தால் தனக்கும் தன்குடும்பத்துக்கும் சுகமுண்டாவதுபோலும், எலிக்குவிட்டால் யாதொரு பிரயோசனமுமில்லாததுபோலுமறிக. [இ - ர்] தேகாதி ஜகத்துப் பொய்யென்றும் பிரமம் நானென்றும் ஏககாலத்தில் அனுசந்தானம்பண்ணினால்தான் ஞானந் திடப்படும். (எ - தி) ஸ்திரீபுருஷர்கள் இருவருஞ்சேர்ந்து போகித்தால்தான் பிள்ளை பிறக்கிறதுபோலும், அரணியை இருவரும் இருபக்கத்தில் இழுப்பதால் தீயுண்டாவதுபோலுமறிக. (இ - ர்) நாம் பத்துவருஷமாய்ப் பிரம்மவிசாரம்பண்ணியும் நமக்கின்னமும் ஞானம் வரவில்லையேயென்று பயந்து விடக்கூடாது. (எ - தி) வெகுநாள் வியாதிக்கு மூன்றுவேளை சித்தனுடைய மருந்து சாப்பிட்டும் போகவில்லையேயென்று வருத்தப்படாமல் ஒரு மண்டலம்வரை ஆதரவோடே சாப்பிட்டால் வியாதிதீருவதுபோலும், மிகுந்த எண்ணைத்துணியை ஒருதடவை வெள்ளாவியில் வைத்ததில் வெளுக்கவில்லையே யென்று தள்ளாமல் கூடஇரண்டுதடவை வெள்ளாவியில் வைத்தால் வஸ்திரம் வெளுப்பதுபோலவறிக. (இ-து) அநேககாலமாய்க் கர்மத்தாலெடுக்கிற தேகங்களை நானென்றெண்ணியெண்ணி வீணாய்க்காலங்கழித்தவன் இந்த ஜன்மத்தில் மிச்சமிருக்கிற ஆயுசிலாவது பிரமம் நானென்றெண்ணி கரையேறவேண்டும். (எ - தி) வெகுகாலமாய்ச் சூதாடிச் சொத்தையெல்லாமிழந்தவன் இப்போதாவது மிச்சமிருக்கிற கொஞ்சசொத்தைச் சத்துக்களுக்குக்கொடுத்துச் சபலமாக்கிறதுபோலும், ஊஷரபூமியில் வெகுகாலம் நெல்லைவிரைத்துக் கெட்டுப் போனவன் ஒருபடிவிரையாவது உத்தமபூமியில் விரைத்து பலத்தை யடைவது போலும், மலடிகளிடத்தில் சுக்கிலங்களைவிட்டுச் சும்பனாய்ப்போனவன் அவந்தியினிடத்தில் அரைச்சொட்டுச் சுக்கிலத்தைவிட்டு புத்திரவானாயாவதுபோலுமறிக. (இ - ர்) முமுக்ஷுவானவன் முதலில் குருவாக்கியத்தால் மாயையேயில்லையென்று நிச்சயித்தபிற்பாடு பிராரப்தகர்மத்தினாலும் வாசனையினாலும் வருகிற சுகதுக்கங்களைச் சாஸ்திரத்தாலும் சாதுக்களாலும் பொய்யென்று சாதிக்கவேண்டும். (எ - தி) அநியாயமாய்த் தன்பேரில் வியாச்சியஞ் செய்ததற்கு

வக்கீல்மூலமாய் நாளொருகாசுகூட வாங்கவில்லையென்று ஆன்சர்கொடுத்து, பிறகு எதிரிகளால் செய்யப்படுகிற தூர்விவகாரங்களையெல்லாம் தஸ்தவேசு சாக்ஷிகளால் சுத்தப்பொய்யென்று தள்ளி தன்விவகாரத்தை நிஜமென்று ஸ்தாபித்து ஜயமடைவதுபோலுமறிக. (இ - ள்) வாதிகள் இந்த ஜகத்துத்தோற்று மற்போனபிறகே ஆத்மஞானமுண்டாகவேண்டுமென்றும், அதற்காகச் சன்னியாசம்பண்ணிக்கொண்டு பிராணபந்தன யோகத்தால் மனோலயம்பண்ண வேண்டுமென்று சொல்கிறார்களேயென்றால், ஒருவன் தன்நிழலை எதிரியாக நினைத்து ஓடிப்போய் ஒருமடத்திலொழிந்துகொண்டு கொஞ்சநேரங்கழித்து அந்த ஆளைக் காணோமென்று நினைத்து, திரும்ப வெளியில் புறப்பட்டுப் போகும்போது மறுபடி அந்தஆள் கூடவருவதைக்கண்டு அவனை மண்வெட்டியால் மண்ணை வெட்டிப்போட்டுப் புதைத்து நிமிர்ந்தபிற்பாடும் அந்த மேட்டின்பேரில் ஆள் தோற்றுவதைக் கண்டழும்போது ஒருஇஷ்டன் வந்து இதைப் பொய்யென்று பாரென்றும், உன்னுடைய நிழலென்றும், அது சூரியாஸ்தமனம்வரை தோற்றுமற் போகாதென்றும், அதினாலுனக்கொரு கெடுதியுமில்லையென்றும் சொன்னதைக்கேட்டு சுகியாயிருந்ததுபோல நீயும் இதுவரை கர்மத்தால் ஜகத்தோற்றத்தை மாற்றமுடியாததால் இனிமேலாவது குருவாக்கியத்தை நம்பி ஜகத்தோற்றத்தைப் பொய்யென்றும், அது தன்னுடைய பிரதிபாசமென்றும், அப்படித்தோற்றுவதால் சித்ரூபனான தனக்குக் கெடுதியில்லையென்றும், அதைப் பிராரப்தாந்தம்வரை துடைக்கமுடியாதென்றும் நிச்சயித்து, அதைப் பொருளாய்ப்பாராமல் இருவென்று சொன்னபடி அவனும் சுகியாயிருந்தானென்றறிக. (இ - ள்) பிரமாப்பியாசஞ்செய்கிறவனுக்கு அர்த்தாகாரம் பத்தியபோஜனமுதலான ஆகாரநேமம் சொல்வானேனெனில், தீப்பற்றவைக்கிறவன் காஞ்சதாயும் கொஞ்சமாயுமிருக்கிற செத்தைகளைப்போட்டுப் பற்றவைக்கவேண்டுமேதவிர, படிச்ச மூட்டாளென்று காண்பித்த கதைபோலும்; ஈரமாயும் பாரமாயுமிருக்கிற கட்டையைப்போட்டால் தீப்பற்றுவது எப்படிச்சிரமப்படுமோ அப்படி அசீர்ணகரமாயும், அதிகமாயும் ஆகாரம் போட்டால் வியாதிக்கும் தூக்கத்துக்கும் பொழுதுசரியாய்ப் போகுமேதவிர பிரம்மாப்பியாசம்பண்ண பொழுதிராமற் போவதால் ஆகாரநேமஞ் சொல்லப்பட்டதென்றறிக. (இ - ள்) ஜீவாள் குடும்பாபிமானமாகிற கட்டிலகப்பட்டிருக்கும்போது சாதுக்களைக்கண்டமாத்திரத்தில் நாமுமிவர்களைப்போலத் துறப்போமென்று நினைத்து புறப்படும்போது, அந்த அபிமானமாகிற கட்டு இவர்களைவிடாமல், இப்படி வெகுகாலம் வருத்தப்பட்டு அந்தஅபிமானம் நன்றாய் நழுவிப்போயே சன்னியாசஞ் செய்துகொண்டால்தான் மோக்ஷம் சித்திக்கும். (எ - தி) கட்டிலகப்பட்டிருக்கிற ஒருபக்ஷியானது ஆகாசத்தில் போகிற பக்ஷிகளைப்பார்த்து நாமுமப்படி பறந்துபோவோமென்று கிளம்பும் போது, கயிறு கீழே இழுக்க, இப்படியே அநேகந்தடவை எத்தனித்ததால் கயிறு நைந்து ஒருகாலத்திலறுந்து ஓடிப்போவதுபோலவறிக. (இ - ள்) பிரம்ம

விசாரம்பண்ணுகிறவனை தூரத்திலிருந்து உலகத்தார் நிந்தித்தாலும் அவனதைக் கவனியாமலிதையே செய்யவேண்டும். [எ - தி] ஒரு வீட்டுநாய்க்கு அவர்கள் சோறுபோட்டு அதைத்தின்கும்போது ஊர்நாய்கள் தூரவிருந்து குலைத்தாலும் இது பதில்குலையாமல் தன்னுகாரத்தையே செய்வதுபோலுமறிக. (இ - ர்) பிரத்தியக்ஷபலமான வேதாந்தவிசாரம் பண்ணவேண்டுமே தவிர அதிகப்பிரயாசமாயும் பரோக்ஷமாயும், அநித்தியமாயுமிருக்கிற கர்மாதிகளை முமுக்ஷுக்கள் செய்யக்கூடாது. (எ - தி) அரைவட்டி கிடைத்தாலும், யோக்கியனிடத்தில் பணங்கொடுக்கவேண்டுமேதவிர அஞ்சுவட்டி கொடுக்கிறேனென்ற அயோக்கியனுக்குப் பணங்கொடுக்கக்கூடாததுபோலும்; அவலக்ஷணமுள்ளவளானாலும் ஆரோக்கியமுள்ள தன் மனைவியினிடத்திற் போகிக்கவேண்டுமேதவிர ரோகமுள்ள தாசி லக்ஷணமாயிருந்தாலும் அவளிடத்தில் சேரக்கூடாதது போலுமறிக. [இ - ர்] குருவானவர் எவ்வளவு கிருபையால் உபதேசாமிர்தம் வருஷித்தாலும் இவன் வாசனுக்ஷயத்துடன் பிரமாப்பியாசம் பண்ணவேண்டும். [எ - தி] மேகமெவ்வளவு வருஷித்தாலும் இவன் உரம் வைத்து பயிருக்குத் தண்ணீர் கம்மாயில் கட்டிவைத்துப் பாய்ச்சவேண்டுவது போலுமறிக. (இ - ர்) குழந்தைகள் எவ்வளவு விளையாடப்போனாலும் சாப்பிடுவதை விடாமலிருப்பதுபோல விவேகியும் எவ்வளவு விவகாரம்பண்ணினாலும் சொரூபவிசாரத்தைக் கொஞ்சநாழிகையாவது செய்துவரவேண்டுமென்றறிக. (இ - ர்) பிரமாப்பியாசம் பண்ணும்போதே பிராரப்தகர்மத்தால் விபரீதபாவனையாகிற தடைவந்தால் உடனே அந்தத்தடையைத் தீர்க்கவேண்டும். (எ - தி) ரயில்ரோட்டில் மழையாலோரிடத்தில் ரோட்டுக் கொஞ்சம் பங்கமானால் உடனே அதைக் கெட்டிப்படுத்துவதுபோலவறிக. (இ - ர்) பிரம்மவிசாரம்பண்ணுகிற முமுக்ஷு விவகாரத்திற் போனாலும் அனுசந்தானத்தில் திருஷ்டியாயிருப்பன். (எ - தி) ரூபாய்கொண்டு நடந்துபோகிறவன் இடுப்பிலிருக்கிற முடிச்சைச் சாவதானம் பண்ணுவதுபோலும், வெட்டக் கொண்டு போகிறவனுக்குத் தலையில் வைத்திருக்கிற தாம்பாள ஜலத்தில் திருஷ்டி யிருக்கிறதுபோலுமறிக. (இ - ர்) குடும்பத்திலிருக்கிற முமுக்ஷுவின் மனது இகலோக விவகாரமுதல் மோக்ஷம்வரையில் யாருக்குத்தான் திருப்திபண்ணி வைக்கப்போகிறது. (எ - தி) ஊருக்கொரு தாசி யாருக்கு ரமிக்க ஆவளென்பதுபோலவறிக. (இ - ர்) குருவினிடத்தில் ஞானம்பெறுகிற முமுக்ஷுவுக்கு சகல தேவதைகளுடைய சொரூபர்களான சாதுக்களுடைய தயவும் வேண்டும். (எ - தி) ராஜாவினிடத்தில் தானம் பெறுகிறவனுக்கு மந்திரிமுதலானவர்களுடைய தயவு வேண்டியதுபோலவறிக. (இ - ர்) முமுக்ஷுவுக்குத் தேகம் நானென்கிற விருத்தி ஒன்று வருமுன்னமே, தேகம் நானல்லவென்ற விருத்தி கோடிவரவேண்டும். (எ - தி) கற்புடையவள்பேரில் கள்ளப்புருஷன் கைநீட்டுமுன்னே கலகம்பண்ணி வைவதுபோலவறிக. (இ - ர்) முமுக்ஷுக்கள் சாஸ்திரங்களில் சாரமான பிரஹ்மத்தைமட்டும் கிரகித்து மற்றதைத் தள்ளவேண்

டும். [எ - தி] எறும்பானது ஆற்றுமணலிற் கிடக்கிற சர்க்கரையை மட்டுங் கிரகிப்பதுபோலவறிக. [இ - ர்] மனதை முமுக்ஷு ‘முன்னடி விவேக வைராக்கியத்தால் சுத்திபண்ணியபின் ஆத்மஞானத்தை யடையவேண்டும். [எ - தி] சித்தன் செம்பிலிருக்கிற களிம்பை ஜெயநீராலும் திராவகநீராலும் சுத்திபண்ணியபின் தாம்பிரபஸ்பம் செய்வதுபோலவறிக. [இ - ர்] முமுக்ஷு வானவன் சாதனங்கள் சுருதி யுக்தி அனுபவங்கள் முதலானவையெல்லாம் தேடிக்கொள்ளவேண்டும். [எ-தி] தச்சன்முதல் க்ஷவரகன்வரையிலுள்ள தொழிலாளிகள் அவரவருக்கு வேலைக்குவேண்டிய ஆயுதங்களைச் சம்பாதித்து வைத்துக்கொள்வதுபோலவறிக. (இ - ர்) முமுக்ஷு ஞானாப்பியாசம் பண்ணப்போகுங்காலையில் சிலசாஸ்திரம் தெரிந்த பேர்கள் இவனைப்பார்த்து நாங்கள் முப்பதுவருஷம் சாஸ்திரங்கள் படித்தும் பிரமத்தைக் காணோமென்று சொல்லுகிறதைக்கேட்டு மயங்காமல் குருவாக்கியத்தை நம்பி நடக்கவேண்டும். [எ - தி] ஒருவன் ரத்தினம் முத்தெடுக்கிறதற்கு சமுத்திரத்தை நோக்கிப் போகும்போது, சிலவலையர் இவனைப்பார்த்து நாங்கள் எத்தனையோ கம்மாய்களில் வலையைப்போட்டு முப்பதுவருஷமாய் அரித்துப்பார்த்ததில் ஒருமுத்து ரத்னம் ஒன்றும் அகப்படவில்லையென்று சொன்னதைக்கேட்டு மயங்காமல் ரத்னவியாபாரியின் வார்த்தையைக்கேட்டுத் தைரியமாய்ச் சமுத்திரம் போய் ரத்னத்தை யெடுக்கப்போவதுபோலவறிக. [இ - ர்] அந்தக்கரணத்திலுண்டாகிற அநேக விருத்திகளுக்குள்ளே குருவாக்கியத்தைச் சத்தியமாய் நம்பியிருக்கிற ஒருவிருத்தியைப் பிடித்து விசாரம்பண்ணி மற்ற விருத்திகளையெல்லாங் கொல்லவேண்டும். [எ - தி] கொலைசெய்தவர்களுக்குள்ளே ஒருவனை அப்புரூவராகவைத்து விசாரித்து மற்றவர்களைத் தூக்கில்போடுவதுபோலும், விபீஷணனைப் பிடித்து மற்ற ராவணாதிகளைக் கொன்றதுபோலுமறிக. [இ-ர்] சதா அவஸ்தாத்திரய சாக்ஷியான தான் பிரஹ்மமாயிருக்கும்போது பிரஹ்மம் நானென்றடிக்கடி நினைப்பானேனென்றால், கழுத்தில் முகமிருந்தாலும் மற்ற கை, கால், வயிறுபோல முகங் கண்ணுக்குத் தெரியாததால் கண்ணாடியைப் பார்த்தாலொழிய சாக்ஷியாகிற முகத்தின் சுகங் கிட்டாததுபோலறிக. [இ-ர்] ஒருஜீவன் பிரஹ்மஞானத்தை யடையும்பக்ஷத்தில் ஈஸ்வரன்முதல் எறும்பு வரையிலுள்ள சகலருந் துக்கப்பட்டு விக்னஞ்செய்வார்கள். [எ - தி] ஒரு குடும்பத்தையெல்லாங் காப்பாற்றிக்கொண்டுவருகிற பசு களவுபோனால் அந்தக் குடும்பம்முழுவதும் துக்கப்படுவதுபோல அவர்களிருப்பதால், குருநாதன் ஒருவனே ஞானத்தைக்கொடுத்து இவனைக் காப்பாற்றிவைப்பதால் என்ன விக்னம்வந்தாலும் அவைகளையெல்லாம் லக்ஷியஞ்செய்யாமல் குருபக்தியுடன் ஞானத்தை யடையவேண்டியதென்றறிக. [இ-ர்] முமுக்ஷுவுக்கு மோக்ஷத்தை யடைவது சுலபமென்பது எப்படியெனில், அழிந்துபோவதாயிருக்கிற உடல் பொருளாவிகளைக் குருவுக்குக் கொடுக்கிறதும், தானல்லாத சரீரத்திரயங்களைத் தானல்லவென்று பார்ப்பதும், பொய்யாயிருக்கிற தேகாதி ஜெகத்தைப் பொய்

யென்று பார்க்கிறதும், தானாயிருக்கிற தன்னைத் தானென்று பார்க்கிறதும், தன்னுடைய ஆனந்தத்தைத் தானே அநுபவிக்கிறதுமாக விருப்பதால் சுலபம். [எ - தி] சாகக்கிடக்கிற சங்கடப்பசுவை ஐடிதியில் தானம்பண்ணுகிறவனுக்கு சங்கடந்தீர்ந்து புண்ணியம்வருவதுபோலும், ஸ்திரீவேஷம் தானல்லவென்று தள்ளுவது பிரயாசமல்லாததுபோலும், பொய்யாயிருக்கிற சித்திரத்தைப் பொய்யென்று பார்ப்பதில் எத்தனமில்லாததுபோலும், தன்கண்ணாடியால் தன் முகத்தைப்பார்ப்பதில் பராபேக்ஷையில்லாததுபோலும், தன்கையிலிருக்கிற அமிர்தத்தைத் தான் குடிப்பதில் பயகம்பனாதிகளில்லாமல் தடையன்றியிருப்பதுபோலுமறிக. [இ - ர்] குருசாஸ்திரங்களெல்லாம் பிரஹ்மத்தை உபதேசஞ் செய்யுமேதவிர இவன் அப்பியாசத்தால் ஆத்மாவை யடையவேண்டுமென்பதற்கு யுக்தி:—படுக்கையுள்வரை மாமியார் மாமனார் பெண்களைக் கொண்டுவந்து விடுவார்களேதவிர பின் இவன் போகம்பண்ணியே புத்திரனை யடையவேண்டியது போலும், தாய் சோற்றைப் பிசைந்தூட்டுவாளேதவிர குழந்தையே அதை விழுங்கிப் பசியைத் தீர்த்துக்கொள்வதுபோலுமறிக. [இ - ர்] இன்னம் மாயை இந்திரஜாலம்போலே பொய்யாயிருப்பதால் பொய்யைப் பொய்யென்று பார்த்தால் அது போம். அப்படிப்பாராமலிருக்கிற குற்றம் இவன் பேரிலல்லாமல் அதின் பேரிலில்லை. ஆகையால் நான் சிதாகாசனென்று நன்றாய் விழித்தால் மாயை மலடிமகன்போலே காணாமற்போம். [இ - ர்] முமுக்ஷுவாகிய உனக்கு தேகேந்திரியாதிகளிடத்தில் எப்போதும் அருவருப்பே உண்டாகக்கடவது. எதுபோலவென்றால், மலத்தினிடத்திலுஞ் செத்தபாம்பினிடத்திலும் அருவருப்புண்டாவதுபோலவறிக. [இ-ர்] தொழில் செய்யும்போது அந்தந்த இந்திரியங்களுடன் அத்தியாசப்படாமல் சாக்ஷி நானென்று சாவதானமாயிருக்கவேண்டுமென்பதற்கு சுருதி யுக்தி அநுபவமேதென்றால்:—துஷ்டமாந்தைகள் மூன்றுந் தொடராமற் சொரூபஞான நிஷ்டனாயிருப்பாயாகில் என்பதே சுருதி; ராத்திரி திருடர்பயமுள்ள அட்டாசட்டியில் படுத்தவன் தூங்காமல் விழிப்பாயிருப்பதே யுக்தி; நமக்கு அடிக்கடி அத்தியாசம்வருவதைக் குருகிருபையால் நிவர்த்திப்பதே அநுபவம். [இ - ர்] சாஸ்திரங்களுக்கு அர்த்தஞ் சொல்லத்தெரிந்தாலும் அநுபவமில்லாமற்போனால் பிரயோசனமில்லை. விவேகிக்குச் சாஸ்திரார்த்தம் தெரியாமற்போனாலும் யுக்தியினா லநுபவங்கிடைக்கும். [எ . தி] ஜலந்தூக்கப் பெலமுள்ளவனாயிருந்தாலும் யுக்தியாய்ச் சமையல்செய்யத் தெரியாதவனைப் போலும், பலயீனனாயிருந்தாலும் யுக்தியோடே சமையல்பண்ணத் தெரிந்தவனைப்போலும்; மாணியன்றியில் காமசாஸ்திரந் தெரிந்தவனும், அச்சாஸ்திரந் தெரியாமற்போனாலும் மாணியுள்ளவனுக்குப் போகமுஞ் சுகமும் புத்திரனுமுண்டாவதுபோலும், மற்றவன் ஒருபிரயோசனமுமில்லாமற் போவதுபோலுமறிக. [இ - ர்] எவ்வளவு விஷயாசை யிருந்தாலும் குடும்பத்தைவிட்டுக் குருவே கெதியென்றிருந்தால், அவனுக்கு ஆசையெல்லாம் போய் ஞானம் வரும்.

[எ - தி] வாழைமரத்தைக் கிழித்து உலர்த்தி அடுப்பிலேவைத்து வெந்நீர் காய்ச்சுகிறதுபோலவறிக. [இ - ர்] சாகக்கிடக்கிற பசுவையாகிலும் பார்ப்பானுக்குத் தானங்குடுத்தால் புண்ணியங் கிடைப்பதுபோல அழிந்துபோகிற உடல்பொருளாவியை ஆசானுக்குத் தத்தஞ்செய்தால் அழியாத பேரானந்தம் இப்போதே கிட்டுமென்றறிக. [இ - ர்] உலகத்தில் குழந்தை, மகாராஜா, ஞானி மூன்றுபேர்கள்தான் சுகிகளென்றும், மற்றவர்கள் யாவருந் துக்கிகளென்றும் சுருதி சொல்வதால் முமுக்ஷுவாகிய நாம் யாராகலாமென்றால், குருமுகமாய் ஞானம்பெற்று ஞானியாக ஆகவேண்டுமேயல்லாமல் மற்றவர்களாயாவது அசாத்தியமாயும் சம்சாரகாரணமான அஞ்ஞானம் நிவர்த்தியாவதற்கு இடமில்லாமலுமிருப்பதால் அவைகளை இச்சிக்கக்கூடாது. [எ - தி] பாம்புக்குட்டிக்கு வெளிச்சம்வேண்டுமானால் தன் தாயினிடத்திலிருக்கிற நாகரத்னத்தைப் பெறவேண்டுமேயல்லாமல் தீபம் மின்னல்களை அபேக்ஷிப்பது அசாத்தியமாயும் அப்பிரயோஜனமாயும் இருப்பதுபோலவறிக. [இ - ர்] பிரம்மானுபவம் தனக்குவராதிருந்தாலும் நான் பிரம்மமென்று துணிவாய்ச்சொல்வதால் அகங்காரிக்குப் பயமுண்டாகும். [எ - தி] ராவணன் அங்கதனைப்பார்த்து அனுமாரெங்கேயென்று கேட்டதற்கு உன்பிள்ளையினுடைய அஸ்த்திரத்தாற் கட்டிவிடப்பட்டானென்ற சேதியை வானரர்கள் கேட்டு அடித்து அவனை விரட்டிவிட்டார்களென்று சொன்னதால் அவனுக்குப் பயமுண்டானதுபோலவறிக. [இ - ர்] முமுக்ஷுவானவன் குருவினிடத்திலும் பிரஹ்மத்தினிடத்திலும் வைத்திருக்கிற பக்தி மாறாமல் மேல்மேலும் விருத்தியாகவேண்டுமென்று பரமகுருநாதனைப் பிரார்த்திக்கவேண்டியது. இப்போது நமக்கு உண்மையாயும், அழிவற்றதாயும், ஆனந்தமாயும், சதா பிரகாசமாயும் விளங்குகிறது இந்த தத்துவ ஞானமா? அல்லது மற்ற மாயையைச்சேர்ந்ததாயிருக்கிற துவித விஷயவிவகாரங்களாவென்பதைத் தனித்திருந்து யோசித்துப்பார்த்து எதில் சுகவிசேஷமிருக்கிறதோ அதைக் கிரகிக்கவேண்டியது. [எ - தி] மிட்டாய்க்கடைகளில் போனவன் எந்தக்கடையிலிருக்கிற மிட்டாய் வாய்க்கு ருசியாயும், மனதுக்கு இரம்மியமாயுமிருக்கிறதோ அதைக்கிரகிப்பதும் மற்றதைத் தள்ளுவதுமனுபவமாயிருப்பதால், புத்திசாலியாயும் விவேகியாயுமிருக்கிற உனக்குச் சொல்லவேண்டியதென்ன விருக்கிறது. ஆகையால் நாமார்? இந்த ஜகத் தெப்படியுண்டாச்சுது? இதை உண்டுபண்ணுகிறவன் யார்? இதற்கெல்லாம் அதிஷ்டானமாயிருக்கிற வஸ்துவெது? என்று விசாரித்து நானென்பது பஞ்சகோசமல்ல. அவைகள் என் வீடென்பதுபோல என்னுடைய தேகம், என்னுடைய மனது, என்னுடைய அறியாமையென்று தனக்கு வேறாய்ப்போவதாலும், அறிவாகிய தான் அவைகள்போல் என்னுடையதென்று போகாமல் எப்போதும் நானென்பதாகவே யிருப்பதால் அறிவே நானென்றறியத்தக்கது. இந்த ஜகமெப்படியுண்டாச்சுதென்றால்,— தன்னை யறியாததால், சொற்பனம்போலத் தோற்றி ஞானமாகிற விழிப்பில் பொய்யாய்ப்போவதால் இதைச் சத்தியமென்றறியா

மற் பொய்யாய்த் தோற்றுகிறதென்றறியத்தக்கது. இஜ்ஜகத்தை யுண்டுபண்ணின கர்த்தா மனதுதானென்பதற்கு யுக்தி:—சொப்பனத்திற்கண்ட ஜகத்தை மனதே கற்பிக்கிறதுபோல அறியத்தக்கது. இஜ்ஜகத்துக்காதாரம் தான்தானென்பதற்கு யுக்தி :— அலையுண்டாவதற்கு சமுத்திரஜலமே காரணமாயிருக்கிறதுபோலவறிக. ஐயா, சிஷ்யனுடைய நன்முயற்சியினுலேயே ஞானம் வரவேண்டுமென்று சொன்னீர்களே, அப்படி அத்தியந்தம் மந்தாதிகாரியாயிருந்து தன்னுடைய நன்முயற்சியால் யார் ஞானத்தை யடைந்தார்களென்று கேட்பாயாகில்,— வாசிட்டத்தில் காதிமுனி யென்பவர் பிரம்மசரிய ஆசிரமத்திலிருந்து சம்சாரத்தில் விரக்தியடைந்தவனுய் ஏகாங்கியாய் அரண்ணியத்துக்குப் புறப்பட்டுப்போய் ஒரு ஆசிரமத்தை யுண்டுபண்ணிக்கொண்டு கொஞ்சவேளை பிரம்மசரிய ஆசிரமத்துக்கு விதிக்கப்பட்ட அநுஷ்டானங்களைச் செய்துகொண்டு வரும்போது, அவருக்கு இந்தச் சகலபிரபஞ்சத்தையும் உண்டுபண்ணுகிற மாயையினுடைய சொரூபத்தைப் பார்க்கவேண்டுமென்கிற இச்சையுண்டாய் ஒரு தடாகஜலத்தில் கழுத்துவரை யிறங்கி மாயைக்கு அதிபதியான மகாவிஷ்ணுவை உத்தேசித்துப் பத்துமாதம்வரை ஆசமனம்பண்ணுகிற தீர்த்தத்தைத்தவிர வேறே அன்னுகார நித்திரையில்லாமல் தபசுபண்ணிக்கொண்டு வரும்போது, மகாவிஷ்ணு சங்குசக்ர கதாபாணியாய் அவருக்குமுன் ஆவிர்ப்பவித்து, ஒ காதிமகாரிஷியே! உம்முடைய தபசினுல் நான் நிரம்ப சந்தோஷத்தை யடைந்தேன். உமக்கு வேண்டியதைக் கேட்டுக்கொள்ளுமென்று சொன்னவுடன், அவர் எனக்கு உம்முடைய மாயையின் சித்திரவிசித்திர சாமர்த்தியத்தைப் பார்க்கவேண்டுமென்று கேட்டவுடன், அந்தப்பகவானுன மகாவிஷ்ணுவுமப்படியே காண்பிக்கிறோம். நீரதைக் கண்டு மயங்காமற் பார்க்கக்கடவீரென்று சொல்லிவிட்டு அந்தர்த்தானமாய்ப்போனபின், இந்தக் காதி மகாரிஷி தண்ணீரிலிருந்து எழுந்திருந்து ஆசிரமத்துக்குவந்து கொஞ்சக்காலம் தபசுபண்ணிக்கொண்டிருக்கும்போது, ஒரு தினத்தில் தடாகத்தில் ஸ்நானத்துக்குத் தண்ணீரில் முழுகினமாத்திரத்தில், இந்தத்தேகப்பிரக்ஞை மறந்து கிரகத்தில் கிரகஸ்தாசிரமத்தில் தாய் மனைவிமுதலானவர்களோடே வசித்துக்கொண்டிருக்கும்போது தனக்குப் பேதியெடுத்துச் சாவுற்றதுபோலும், அவர்களெல்லாம் அழுகிறதுபோலும், தன்னை யவர்கள் மசானத்திற்கொண்டுபோய் வைத்துத் தகனம் பண்ணினபின், ஹூணதேசத்தில் பறைச்சேரியில் பறையன் வயிற்றில் தான் ஜனித்ததாகவும், அப்போது தனக்குக் கடைஞ்சனென்கிற பேர் வைக்கப்பட்டதாகவும், அந்தக்குலத்தில் விருத்தியாய் ஒரு பறைச்சியை விவாஹஞ்செய்து அவளோடே வனாந்தரங்களிலெல்லாம் எதேச்சையாய்ச் சம்போகம்பண்ணிக்கொண்டு எதேஷ்டமாய்ப் பிள்ளைகளையும் பெற்று கொஞ்சவேளை வசித்துக்கொண்டிருக்கும்போது, க்ஷாமகாலமுண்டாய்ச் சோற்றுக்கில்லாமல் பெண்சாதிபிள்ளைகளெல்லாம் இறந்துபோனதுபோலும், தானும் சிலபறையர்களும் அந்தத் தேசத்திலிருந்து வெளியேறிக் கீரதேசத்துக்குப்

பிழைக்கப்போனதுபோலும், அச்சமயத்தில் அந்தத் தேசத்திலரசன் பிள்ளையில்லாமல் இறந்துபோய்விட்டதால் பட்டத்துயானைகையில் மாலையைக் கொடுத்து வாத்தியகோஷங்களுடனே மந்திரிமுதலானவர்கள் பின்னோடே போகும்போது, அந்தயானை அந்தமாலையை இந்தக் கடைஞ்சனுடைய கழுத்திற் போட்டமாத்திரத்தில் சகலருமிவனை மகாராஜாவென்று அலங்காரஞ்செய்து யானையின்பேரில் வைத்துப் பட்டணப்பிரவேசஞ்செய்து சிம்மாசனத்திற் கொண்டுபோய் வைத்துப் பட்டாபிஷேகஞ் செய்து கவல மகாராஜனென்று பேருங்கொடுத்து எட்டுவருஷம்வரையில் ராச்சியபரிபாலனம் பண்ணிக்கொண்டு, அந்த ராஜஸ்திரீகளுடைய போகங்களைப் புசித்துக்கொண்டு வருங்காலத்தில் ஒருநாள் ராத்திரியிலவனுக்குப் பழய பறைய கடைஞ்சவாசனை யுண்டாய் ராஜவேஷத்தைவிட்டுக் கரித்துணிமுதலான பறைய வேஷத்தை யெடுத்துக்கொண்டு அரண்மனைக்கு வெளியில்வந்து கின்னரி வாத்தியத்தோடே பறையர்பாட்டைப் பாடிக்கொண்டு சஞ்சரிக்கும்போது தெய்வகெதியாய் இவனுடைய சிநேகிதர்களான பழயபறையர்கள் வந்து சேர்ந்து இவனைக் கட்டிக்கொண்டு, அடே கடைஞ்சா! இத்தனைநாள் எங்களை விட்டுவிட்டு நீ யெங்கே போயிருந்தாயென்று இப்படியெல்லாம் பேசிக்கொண்டிருக்கும்போது, அந்தப்புரத்திலிருக்கிற ராஜஸ்திரீகள் மேடையின்பேரிலிருந்து பார்த்துக்கொண்டிருக்கும்போது, இவன் அப்பறையர்களுக்கெல்லாம், நான் தேசாந்தரம் போயிருந்தேன், இப்போதுதான் இவிடத்துக்கு வந்து சேர்ந்தேன். நீங்களிருக்கிற இடத்துக்கு நாளையதினம் வருகிறேனென்று சொல்லிச் சமாதானம்பண்ணி யவர்களை யனுப்பிவைத்துவிட்டு அரண்மனைக்குள் வருகிறதற்குமுன்னமே ராஜஸ்திரீகள் இவன் பறையனென்று சந்தேகமன்றியில் நன்றாய்த் தெரிந்துவிட்டதால் மந்திரிமுதலான பிராம்மணர்களை வரவழைத்து இந்தச் சங்கதியைத் தெரிவித்து சகலரும் பறையனென்று தெரிந்தபின் இவன் சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கும்போது, வழியிற் கிடக்கிற புருஷனுக்கு வித்தையும் பணமும் பந்துக்களுமில்லாமல் சாகக்கிடக்கிறவனோடே ஒருவரும் பேசாமல் எப்படிப்போவார்களோ அப்படி இவனோடேயும் ஒருவரும் பேசாமல் எல்லாருங்கூடி எட்டு வருஷமாய் இந்தநீசனோடே சகவாசம் அறியாமற் பண்ணிப்போட்டோமே! க்ஷணகாலம் நீசனுடைய சகவாசஞ் செய்தவர்களுக்கு அந்தப்பாபம் போகிறதற்காகத் தர்மசாஸ்திரத்தில் வெகுவிதமான பிராயச்சித்தம் பண்ணிக்கொள்ளச் சொல்லியிருக்கிறதே! இப்போது நமக்கு வந்திருக்கிற பாபங்களுக்கு எல்லோரும் மரணமாய்ப்போகிறதே சர்வப்பிராயச்சித்தமென்று நிச்சயித்து அங்கங்கே அக்கினியை வளர்த்து அதிலெல்லோரும் விழுந்து மடிவதைக் கண்ட அந்த அரசனும், அடா! இது என்னகஷ்டம் வந்துவிட்டது. நாமொருவன் இப்படி ராஜாவாயிருக்கப்போயல்லவோ, இத்தனைகோடி ஜனங்களுக்கும் மரணம்வந்துவிட்டது. இவ்வளவுக்கும் நிமித்தகாரணம் நாமல்லவாவென்று

நினைத்து விசனித்து, இனி இந்தத்தேகத்தை வைத்திருப்பதில் என்ன சுக
மிருக்கிறதென்று சரீரத்தை வெறுத்து, தானும் அத்தியில் குபீரென்று விழு
கிறதுபோலக் கண்டமாத்திரத்தில், ஜலத்தில் முழுகிக்கொண்டிருக்கிற காதி
மகாரிஷியென்கிற பிரக்ஞையானது யுண்டாகி அந்தத் தீர்த்தத்தைவிட்டுக்
கரையேறி, ஆசிரமத்துக்கு வந்து, இரண்டுமுகூர்த்தத்துக்குள் அநேக வருஷங்
களுடைய சங்கதிகளைக் கண்டோமல்லவா! இது மிகுந்த அதிசயமாயிருக்கிற
தென்றும், மகாவிஷ்ணுவானவர் தன் மாயையைக் காண்பிக்கிறேனென்று
சொன்னபிரகாரம் சொப்பனம்போலக் காண்பித்திருக்கிறாரென்று நிச்சயித்து
சிலகாலமானபின், ஒருநாள் ஒரு அதிதியான பிராம்மணன் இவருடைய ஆசிர
மத்துக்கு வந்ததில் இவர் அவருக்குக் காய் கனிகளைக் கொடுத்துப் போசனஞ்
செய்துவைத்து சாயங்காலத்திலிருவருஞ் சந்தியாவந்தன ஜபங்களை செய்து
விட்டு இருவரும் பேசிக்கொண்டுவரும்போது, இவர் அவரைப்பார்த்து உம்மு
டைய சரீரம் நிரம்ப இளைத்துப்போயிருக்கிறதே அதற்கென்னகாரணமென்று
கேட்கும்போது, நான் அநேக தேசங்களெல்லாம் யாத்திரைசெய்துகொண்டு
வரும்போது கீரதேசத்துக்கு வந்தவுடன் அவிடத்திலுள்ள பிராம்மணர்க
ளெல்லாம் என்னை அதிதியென்று விசுவாசமாய் இரண்டு மாசம்வரை அன்ன
பானாதிகளைக் கொடுத்துப் பூசித்துவரும்போது, அங்கங்கே மலைமலையாய்ச் சாம்
பல் குமித்திருக்கிறதைக்கண்டு நான் அவர்களைப்பார்த்து இதுவென்ன காரண
மென்று கேட்டவுடன், அவர்கள் இந்த ராச்சியத்துக்கு ராஜாவாக ஒருபறை
யன் எட்டுவருஷம்வரை ராச்சியபரிபாலனம் பண்ணிவந்தபின் அவன் பறைய
னென்றறிந்து அந்தப்பாபத்துக்காக சகலர்களும் அக்கினியில் விழுந்து இப்ப
டிப் பஸ்பமாய்ப் போனார்களென்று சொன்னதைக்கேட்ட நானும், அடா!
நீசன் ராச்சியபாரம்பண்ணின ராச்சியத்தில் இரண்டுமாசம் வசித்தபாபம்
நம்மை வந்து பிடித்துக்கொண்டதேயென்று பயந்து அந்தத்தேசத்தைவிட்டுப்
புறப்பட்டுப் பிரயாகைக்கு வந்துசேர்ந்து கெங்கா யமுனா சங்கமத்தில் ஸ்நானஞ்
செய்து சாந்தராயணவிரதத்தை யனுஷ்டித்ததால் என்தேகமிப்படி யிளைத்துப்
போய்விட்டதென்று அதிதி சொன்ன வார்த்தையைக்கேட்ட காதிமகாரிஷிக்கு
மிகுந்த ஆச்சரியமுண்டாய் அந்த அதிதியை அனுப்பித்துவிட்டு, இவர் சொன்ன
தெல்லாம் நம்முடைய அனுபவத்தில் கண்டதாகவே யிருக்கிறது. இவைகளைப்
பிரத்தியக்ஷமாய்ப் பார்க்கவேண்டுமென்று புறப்பட்டு ஹூணதேசத்துக்குப்
போய், தான் கடைஞ்சனாய்ப்பிறந்த பறைச்சேரிமுதலானவைகளைக் கண்டு
கீரதேசத்திலும் போய் அவிடத்தில் தான் நடந்தபடியெல்லாம் இருப்பதைக்
கண்டபின், விஷ்ணுவைத் தியானித்து அவர் ஆவிர்ப்பவித்தவுடன் நான் ஜலத்
தில் நாலுநாழிகைக்குள் கண்டதெல்லாம் நிஜமாயிருக்கக் காரணமென்னவென்
றால், சகல ஜகத்தும் தன் சொப்பனம்போலக் கற்பனையென்று சொன்னதிலும்
நம்பாமல், திரும்ப இரண்டுதடவை முன்போலவே யலைந்து அவைகளைப் பார்த்
துவந்து மறுபடி விஷ்ணுவைப் பார்த்து எனக்குச் சொப்பனம்போலப் பொய்

யாய்க்காணமல்ப் போகவில்லையே அங்கங்கே அதது சத்தியமாயிருக்கிற தென்று கேட்டதற்கு, விஷ்ணு ஒரு குழந்தை விளையாடுகிற விளையாட்டையே விளையாடுவது அநேக இடங்களிலிருக்கிற அநேககுழந்தைகளும் அந்தப்படி விளையாடுவதுபோல, நீ கண்டசொப்பனம்போல அந்த ஜீவர்களும் அப்படிக் கண்டிருக்கிறார்களென்று சொன்னதிலும் சந்தேகந் தீராமலிருப்பதைப் பார்த்து, விஷ்ணுவானவர் நான் பிரஹ்மமென்று இடைவிடாமல் தியானித்துவந்தால் பிரஹ்மஞானம் வருமென்றனுக்கிரகித்துவிட்டுப் போனபின், காதியும் பத்துவருஷம்வரை நான் பிரஹ்மமென்று தியானித்துவந்தபின் சாக்ஷாத்கார ஞானமுண்டாய் ஜீவன்முக்தராயாரென்று சொல்லியிருக்கிற கதையையறிந்து, நீயு மெவ்வளவு மந்தபுத்தியோடே கூடியிருந்தாலும் சிரத்தையோடே பிரஹ்மாப்பியாசம் செய்துவந்தனேயேயானல் ஜீவன்முக்தனைகப் பவிப்பாய். இதில் சந்தேகமில்லை. சத்தியம்.

## 172 - வது தரங்கம்.

கர்மகுருவுக்கும் ஞானகுருவுக்கும் கைம்மாறு கொடுக்கிறதின் தன்மையறிக :—

கர்மகாண்டத்தை உபதேசிக்கிற குருவுக்கும் தத்துவஞானத்தை உபதேசிக்கிற சற்குருவுக்கும் உடல் பொருள் ஆவிகளைக் கொடுக்கும்படி வேதம் விதித்திருந்தாலும், அப்படிக்கொடுக்கிற இருவர்களுடைய மனதுக்கு அப்பிரியமும் பிரியமுமுண்டாகும். [எ - தி] காட்டில் கள்ளன்கையி லகப்பட்டுக் கொண்டபோது தன்கையிலிருக்கிற சொத்துக்களை அவனுக்குக் கொடுத்துத் தன்பிராணனைத் தப்புவித்துவருகிறவன்போலும், நாகரத்தினத்தைக் கொடுக்கிறவனிடத்தில் தன்கையிலிருக்கிற செல்லாக்காசையும், பீதாம்பரங் கொடுக்கிறவனிடத்தில் பீத்தத்துணியைக் கொடுக்கிறவன்போலும், மீனுக்ஷிசன்னிதியில் தெரிசனத்துக்கு நுழைகிறவளை அங்கே நிற்கிற ஜனங்கள் மேலே இடிப்பதாலுண்டான துக்கம்போலும், படுக்கைஅறைக்குள் போனவளைப் பர்த்தா உள்ளே இடிப்பதாலுண்டாகிற சுகம்போலுமிருக்குமென்றறிக. ஐயா, கர்மங்களையும் மந்திரதந்திரங்களையும் மற்றத்துவித வித்தைகளையும் உபதேசிக்கிற குருக்கள் அநேகர்களாயிருப்பார்களென்றும், கடைசியில் அந்தந்தக் குருசிஷ்யர்களிருவரும் மனஸ்தாபப்பட்டுக்கொண்டு சுவானமைதுனத்தினுடைய முடிவில் ஆண்பெண்களான இரண்டு சுவானங்களும் கிழக்குமேற்காயிழுத்துக் கொண்டு அவதிப்படுவதுபோலச் சங்கடப்படுவார்களென்றும், அந்தந்தக் குருக்களுக்கு உடல்பொருளாவிகளைக் கொடுக்கும்போதும் கள்ளர்களுடைய கையில் சொத்தைப் பறிகொடுக்கிறவன்போலக் கொடுப்பார்களென்றும், முமுக்ஷுவான சீடன் இதற்கெதிர்மறையான ஞானசற்குருவை யடைந்து அவர் கிருபையால் தத்துவஞானத்தைப் பெற்று அவருக்கு உடல்பொருளாவிகளைக்

கைம்மாருய்க் கொடுக்கும்போது சந்தோஷமாய்க் கொடுப்பனென்றுஞ் சொன்னீர்களே, அதற்குச் சுருதி யுக்தி அனுபவங்களென்னவென்றால், சொல்லுகிறேன் கேள்:—கர்மகாண்டசுருதியிலேயே ஒருபுருஷன் ஒரு சோமயாகமுதலான எக்ஞத்துக்கு ஆரம்பிக்கும்போதே ஒருவியாபாரத்துக்குப் போகிறவன் துப்பனுன தரகனைப் பிடித்துக்கொண்டு அவனுக்குத் துப்புக்கூலி இன்னது கொடுக்கிறதென்று பேசியபின் அந்தத்தரகன் அந்தந்த வியாபாரிகளிடத்திற் போய் விலைதீர்த்து வாங்கிக்கொடுப்பதுபோல, முதலில் சோமப்பிரவாகனென்ற தரகனை நேமித்து அவனும் தனக்கு தக்ஷிணை இன்னது கொடுக்கிறதென்று பேசிக்கொண்டு, அதன்பின் அத்துவரியு முதலான ரித்துக்களைத் தீர்மானிக்கும்போது அவர்களும் எங்களுக் கென்னதெக்ஷிணை கொடுப்பார்களென்று கேட்டவுடன் அந்தச்சோமப்பிரவாகனு மிவ்வளவு தெக்ஷிணை வாங்கிக் கொடுக்கிறேனென்று சொன்னபின் அந்தயாகத்தை அவர்களெல்லாருஞ் சேர்ந்து நடப்பித்து அந்ததக்ஷிணைகளை வாங்கிக்கொண்டு போவதும், மற்றொரு யாகஞ்செய்ய ஆரம்பித்தால் அதற்கு வேறே ரித்தியுக்களும் நேமிக்கவேண்டியதாயும் அவர்களுக்கும் வேறேவேறே தெக்ஷிணை கொடுக்கவேண்டியதாயுமிருப்பது எதுபோலவென்றால், ஒருபத்திரத்துக்குப் பணம் வரவேண்டியதற்காக மவுண்டுத்தலைகளும் வக்கீலுக்குப் பத்திரந்தோறும் பீசுரூபாய் வேறுவேருய்க் கொடுப்பதும் சாக்ஷிப்படிகளும் வேறுவேருய்க் கட்டுவதும் வாரண்டுப்படிமுதலானதும் வேறுவேருய்க் கட்டவேண்டியிருப்பதுபோல விருப்பதால் கர்மகுருக்களிடத்தில் சகவாசம்பண்ணும்போதும், குருதெக்ஷிணை கொடுக்கும்போதும், இவன் நிரம்பக்கொடுத்துவிட்டதாக நினைத்து விசனப்படுவதும், அவர் தெக்ஷிணை போதாதென்றும் விசனப்படுகிறதும் அனுபவமாயிருக்கிறது. சற்குருவினிடத்தில் சற்சிஷ்யன் போய்ச்சேர்ந்ததுமுதல் நாளுக்கு நாள் சுக்கிலபக்ஷத்துச் சந்திரன் தினந்தோறும் விருத்தியாவதுபோல இவர்களுடைய பிரீதியும் விருத்தியாய் அழியாத மோக்ஷபலத்தை அப்போதே கொடுப்பதால் சிஷ்யன் கொடுக்கிற உடல்பொருளாவிகள் அனுருதஜடதுக்கமாயிருப்பதால் இருவர்களுக்கும் கொடுத்தோமென்கிற அகம்பாவமும் பெற்றது போதாதென்கிற பேராசையுமில்லாததால் ஞானகுருவுக்கும் சற்சிஷ்யனுக்கும் சதா ஆனந்தமே விருத்திக்குமென்றறியத்தக்கது.

## 173 - வது தரங்கம்.

*பிரம்மநிச்சயம் திடப்படாததற்கு இரண்டு தோஷமும், அதன் நிவர்த்தியுமறிக :—*

குருசன்னிதியில் சிரவணம்பண்ணி தேகாதிகள் நாமல்ல, ஜெகத்து சத்தியமல்ல, நான் பிரஹ்மமென்று தெரிந்தாலும் அந்த நிச்சயம் திடப்படாமலிருப்பதற்கு இரண்டு தோஷமுண்டு. அதாவது, சம்சயமென்றும் அநேகாக்கிரமென்றும் இருவகையிருக்கிறது. இதில் சமுசயமாவது :—சகுணந்தான் சத்

தியமோ, நிர்க்குணந்தான் சத்தியமோ, விபூதி ருத்திராக்ஷதாரணமோ, நித்தியம் சுவாமிதெரிசனமோ, தோத்திரையபாராயணமோ, பிரம்மலோகத்துக்குப் போய் பிரம்மாவினிடத்திற் கேட்கிறதோ, நாம் பிரம்மமாவோமோ, ஆகமாட்டோமோவென்ற இதுமுதலானவைகள்தான் சம்சயம். இந்தச்சம்சயம் நிவர்த்தியாவதற்கு மேலான சுருதிகளுடைய தாற்பரியத்தை ஆலோசிப்பதும், அதற்கனுகூலமான சொப்பனதிருஷ்டாந்த யுக்திகளை ஆலோசிப்பதுமான மனனமே செய்யத்தக்கது. இனி அநேகாக்கிரமாவது :— இன்னஞ் சாஸ்திரவிற்பத்திகளைச் சாதிக்கவேண்டுமென்றும், வந்த ஜனங்களுடைய குடும்பயோகக்ஷேமங்களை விசாரித்து அவைகளுக்கு ஒரு சாதகங்கள் செய்யவேண்டுமென்றும், தன்னுடைய தேகரக்ஷணைக்குச் சாதகஞ்செய்யவேண்டுமென்றும், தான் முந்தி பழகிவந்த பாராயணங்களைவிட்டால் நேமந்தப்பிப் போமென்றும், அவைகள் மறவாமலிருக்கவேண்டுமென்றும், எழுகின்ற இவை முதலான விருத்திகளே அநேகாக்கிரமாம். இதற்கு நிவர்த்தியாவது,—ஏகாக்கிர சித்தத்துடன் விஜாதீயவிருத்தி திரஸ்காரபூர்வமாய்ச் சுவஜாதியவிருத்திப் பிரவாக ரூபமான தியானமே செய்யத்தக்கது. [எ - தி] ஒருவிடத்திலிருக்கிற எஜமானுக்கு அங்கே நடத்துகிற சிலவுகள் சரியானதென்று தெரிந்தாலும் யாருமிதில் சௌரியம் செய்கிறார்களோவென்ற சம்சயமும், அநேகவிதமாய் வீண்சிலவுகள் ஆய்விடுகிறதோவென்ற அநேகாக்கிரமும் வந்தால், அதற்கு நிவர்த்தி யென்னவென்றால்,—மனுஷியர்களிடத்தில் கொடுத்த ரூபாயையும் சாமான்களையும் ஒத்துப்பார்த்துக் கணக்குச்சரிபண்ணுகிறதும், ஒருமுகமாய் அவசியம் செய்யவேண்டிய காரியங்கள் இவ்வளவுதானென்று நிச்சயித்து பலவிதமாய்ச் செய்யவேண்டுமென்று வருகிற விருத்திகளைத் தடுக்கிறதும் உபாயமாயிருக்கிறதுபோலும்; தன்ஸ்திரீ பதிவிரதையென்று நம்பிக்கையிருந்தாலும் அவள் நம்மை அறியாமல் வியபிசாரம்பண்ணுவாளோவென்ற சமுசயமும், பிறந்தவீட்டுக் கலியாணம் முதலானவைகளுக்குப் போகும்போது வீட்டிலிருந்த சாமான்களை சிறுவாடுவிற்று ரூபாய்கொண்டுபோனதையே பிறந்த வீட்டில் நகைசெய்து கொடுத்தார்களென்று வந்து சொல்லும்போது வருகிற அநேகாக்கிரமும் நிவர்த்தியாகவேண்டியதற்கு அவளையும் வீட்டிலுள்ள சாமான்களையும் பந்தோபஸ்துசெய்து அவைகளை நிவர்த்திபண்ணிக்கொள்வது போலவறிக. [இ - ர்] ஞானத்தில் கொஞ்சம் சந்தேகாதிகளிருந்தாலும் அவைகள் அதைக் கெடுத்துவிடும். [எ - தி] கண்ணுடியிலுங் குளத்து ஜலத்திலும் விட்ட எண்ணை படர்ந்து அவைகளைக் கெடுப்பதுபோலும், கடன் வாங்கினவன் கொஞ்சம் மிச்சமிருந்தாலும் வட்டியேறுவதுபோலும், தீயணைத்த பிறகு கொஞ்சம் மிச்சமிருந்தாலும் மறுபடி பிடித்துக்கொள்வதுபோலும், சத்துருக்களில் ஒருவன் மிச்சமாய்விட்டாலும் அவன் விருத்தியாய் இவனைக் கெடுப்பதுபோலுமறிக. ஐயா, பிரம்ம நிச்சயம் அப்பியாசிக்குத் திடப்படாமலிருக்கிறதற்கு அநேகவிதமான தோஷங்களிருக்கும்போது சமுசயத்

தையும் அநேகாக்கிரத்தையும் காரணமாகச்சொன்ன காரணமென்னவென்று கேட்பாயாகில், அதற்குத்தாஞ் சொல்லுகிறேன் கேள்:— நீ சொன்னபடி பிரம்மநிச்சயம் பண்ணுவதற்குத் தடையாக விஷயாசக்திகளும், தேகவாசனை லோகவாசனை சாஸ்திரவாசனைகளும், மூடசங்கதிகளும், பகிர்முகதிருஷ்டியும் இதுமுதலானவைகளிருந்தாலும் அவைகளையெல்லாந்தாண்டி அந்தர்முகானுசந்தானம்பண்ணுகிற மேலான அதிகாரிக்கு சொரூபநிச்சயம் திடப்படாமலிருப்பதால் அதற்காகச் சுருதி யுக்தி அனுபவப்பிரமாணங்களைக்கொண்டு தனக்கு வந்திருக்கிற பிரமாணகதசமுசயங்களையும் பிரமேயகதசமுசயங்களையும் பிரத்தியகாத்மகத சம்சயங்களையும் மனனத்தால் நிவர்த்திக்கவேண்டும். அநேகாக்கிரமாவது, சாவதானக்குறைவினாலும் மனோநிக்கிரகம் இந்திரியநிக்கிரகங்களுடைய அபாவத்தினாலும் உண்டாவதால், அதற்காக ஏகாந்தத்திலிருந்து சாவதானமாகப் பிரமத்தியானம் பண்ணவேண்டியதென்றறிக.

## 174 - வது தரங்கம்.

*தன்குற்றத்தைத் தானே பார்த்து நிவர்த்திக்கத்தக்கது:—*

தன் குற்றத்தை தான் பார்த்து நிவர்த்தித்துக்கொண்டால்தான் சுகம், பிறர் பார்த்துச்சொல்வதால் துக்கமும் அவமானமும் வரும். [எ - தி] தன் யோனியிலிருக்கிற ரோமங்களைத் தான்பார்த்துப் பிடுங்கிக்கொண்டால் சுகமாயும் நிர்ப்பயமாயுமிருப்பதும், பிறர்பார்த்துப் பிடுங்கவந்தால் வலியும் பயமும் வெட்கமும் வருவதுபோலவறிக. முமுக்ஷு முன் பிறரிடத்திலிருக்கிற தோஷத்தை கூர்மையாய் எப்படிப்பார்த்தானோ அப்படி இப்போது தன்னிடத்திலிருக்கிற சித்த தோஷத்தைப் பார்த்தானேயானால் முக்தனாவன். [எ - தி] அனுமந்தாச்சாரி முன் கண்ணாடிகளை உடைத்துக்கொண்டுவந்தவன் பின் தன் முகத்தின் தோஷமென்றறிந்ததால் ராகத்துவேஷம் போய்ச் சுகியானதுபோலும், ஸ்தன்னியம் ஒட்டியிருப்பவள் புருஷன் கொண்டுவந்த ரவிக்கைகளைக் கிழித்துக்கொண்டு வந்திருந்தும் தன் ஸ்தன்னியத்தைப் பார்த்தபின் கோபம் போனதுபோலுமறிக. ஐயா, தன்குற்றம் பெண்டாட்டி நாற்றம் தெரியாதென்ற பழமொழிப்பிரகாரம் சொன்னீர்களே, அப்படித் தன்குற்றந் தனக்குத் தெரியாததற்குக் காரணமும், தன்குற்றந் தனக்குத் தெரிவதற்குக் காரணமும், அப்படி தெரியாததினால் வரப்பட்ட கெடுதியும், அப்படித் தெரிவதனால் வரப்பட்ட நன்மையும் இன்னதென்று அறிவிக்கவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தாஞ் சொல்லுகிறேன் கேள். தன்குற்றந் தனக்குத் தெரியாததற்குக் காரணமாவது:— தன்மனதுந் தானும் பேதமன்றியில் தாதாத்மிய அத்தியாசத்தை யடைந்திருப்பதால் சகல குற்றங்களுக்குக் காரணமான மனதின்குற்றந் தோற்றவில்லை. மனதுவேறே, தான் வேறே யென்று பிரித்தால் மனதினுடைய குற்றங்களெல்லாந் தெரியவரும். அந்த அத்தியாசத்தால் தன்குற்றந்

தனக்குத் தெரியாமலிருப்பதால் சகல ஜீவர்களுக்கும் சகலவிதமான தேவ மனுஷ்ய பசு பக்ஷியாதி ஸ்தாவராந்தம்வரையிலுள்ள ஜன்மதுக்கங்களும் தாபத்திரயதுக்கங்களும் மரணதுக்கங்களும் வந்துகொண்டே யிருக்கிறது. அபூர்வமாய் எவனோ ஒரு விவேகியானவன் மனதுக்குந் தனக்குமிருக்கிற பேதங்களை விசாரிக்கிறான். எப்படி விசாரிக்கிறானென்றால்:— நானென்பவன் சாக்கிர சொப்பன சுழுப்திகளிலும், பூத பௌதிய வர்த்தமானகாலங்களிலுமிருப்பதால் சத்ரூபன், நினைப்பு உண்டாயுண்டாயழிவதால் அசத்தென்றும்; நாம் காலத்திரயத்தையும் அறிந்துகொண்டிருப்பதால் சித்ரூபன், என்மனது அங்கே போனது இப்போது இங்கே வந்ததென்றறியப்படுவதால் அது ஜடம்; நாம் காலத்திரயத்திலும் கைவிடப்படாதவனானதால் ஆனந்தரூபன், நினைப்பானது மறதியோடே கூடியிருப்பதால் துக்கமென்றும்; நாம் நினைப்புக்கு முன்னும், நினைப்புக்குப்பின்னும், சகல நினைப்புகளிலு மழியாமல் நிர்விகாரியாயிருப்பதால் கூடஸ்தன். நினைப்பு முன்னில்லாததால் பிராகபாவமாயும், அழிந்துபோவதால் பிரத்துவம்சாபாவமாயும், ஒரு நினைப்பில் ஒரு நினைப்பில்லாததால் அன்னியோன்னியாபாவமாயும், ஒரு நினைப்பை விசாரிக்கும்போது அது அசத்தாய்ப்போய்விடும். அது எப்படியென்றால், ஒரு பிராம்மணனென்று வருகிற நினைப்பை விசாரித்தால் சரீரத்திரயங்களிலுங் காணப்படாமையால் அத்தியந்தாபாவமென்றும்; நாமெங்கு மிருப்பதால் அகண்டமென்றும், ஒருநினைப்பில் ஒருநினைப்பில்லாததால் கண்டமென்றும்; இப்படிப் பிறித்தறிந்தவனுக்கு சகலவிதமான கர்த்துருத்துவங்களும், கர்மங்களும், வாசனைகளும், அஞ்ஞானங்களும், அதனால் தன்னைவிட வேறாக உண்டுபண்ணப்பட்ட ஜீவேசுவர ஜகத்துக்களு மில்லாமற் போவதால், அந்த விவேகி என்னமாய்க் குற்றம் பிறரிடத்தில் கற்பிப்பான் சொல்?

## 175 - வது தரங்கம்.

ஞானம் வருவதற்கே எத்தனஞ்செய்யவேண்டும்:—

ஞானத்துக்குப் பிரயாசப்பட வேண்டுமேயல்லாமல் அஞ்ஞானத்துக்குப் பிரயாசப்படவேண்டாம், அது தானேவரும். [எ - தி] விளக்கேற்றுகிறதற்குப் பிரயாசமே யல்லாமல் இருட்டுவருவதற்குப் பிரயாசமில்லாததுபோலும், வேதசாஸ்திரங்கள் பாடம்பண்ணுவது பிரயாசமேதவிர மறக்கிறதற்குப் பிரயத்தனம் வேண்டாததுபோலும், ஒட்டுமூத்திரம் பெய்கிறவனுடைய கோமணத்திலிருக்கிற நாற்றமும் அழுக்கும் போவதற்குப் பிரயாசப்படவேண்டுமே தவிர அஃது வருவதற்குப் பிரயத்தனம் வேண்டாததுபோலும், நித்திரை வருவதற்கு எத்தனம்வேண்டாம், விழிக்க எத்தனம் வேண்டுவதுபோலுமறிக. [ஓ - ர்] அஞ்ஞானம் போனால்தான், ஜெனனமரணதுன்பந் தீரும். [எ - தி] குசவனைக் கொன்றால்தான் குடம்முதலானவை உற்பத்தியாகாததுபோலும்,

வேரை வெட்டினால்தான் மரந்தழைப்பது தீருவதுபோலும், முதலைத் தீர்த்தால்தான் வட்டி தீருவதுபோலுமறிக. [இ - ர்] ஜெனனமரணத்தைத் தீர்ப்பது பிரஹ்மஞானமேதவிர மற்ற சகுணோபாஸ்தைகள் தீர்க்காது. [எ - தி] பசிதீருவதற்கு அன்னம் புசிக்கவேண்டுமேதவிர சாயங்காச்சின மாம்பழம் வாழைப்பழங்களை வாயில்வைத்துச் சப்பிக்கொண்டிருந்தாலும் பசி தீராதது போலும், புத்திரோற்பத்தி புருஷசிசுனத்தா லுண்டாகுமேதவிர தருடுதத்தத்தால் உண்டாகாததுபோலுமறிக. [இ - ர்] தாபத்திரயத்தால் தபிக்கப்படுகிறவன் தத்துவஞானத்தையே முக்கியமாயடையவேண்டும். [எ-தி] வீடு தீப்பட்டெரியும்போது முக்கியமான தஸ்தவேசுகளைமட்டும் எடுக்கவேண்டுமே தவிர வரிக்கல்லைப் பிரட்டவேண்டுவது அனாவசியம்போல, ஞானாப்பியாசம் பண்ணுவதைத்தவிர மற்ற தொழில்செய்வதெல்லாம் அனாவசியமென்றறிக. [இ - ர்] ஞானம் வருவதற்குத்தான் பிரயத்தனம் செய்யவேண்டுமேதவிர அஞ்ஞானம் வருவதற்குப் பிரயத்தனம்வேண்டாம். அது தானேவரும். [எ - தி] வயலிற் களைமுளைக்கிறதற்கும், வீட்டில் குப்பைசேருகிறதற்கும், ஜலம் பள்ளத்திற் போவதற்கும், வஸ்திரத்தில் அழுக்கேறுவதற்கும், ஸ்திரீகளைக் கண்டு மயங்குவதற்கும் பிரயத்தனம்பண்ணாமல் அவைகள் நிவர்த்தியாவதற்குமட்டும் பிரயத்தனஞ் செய்யவேண்டுவதுபோலவறிக. ஐயா, ஞானம் வருவதற்குப் பிரயத்தனம் செய்யவேண்டும், அஞ்ஞானம் வருவதற்குப் பிரயத்தனஞ் செய்ய வேண்டாமென்று சொன்னீர்களே, எதைக்குறித்துண்டாகிற ஞானத்துக்குப் பிரயத்தனஞ் செய்யவேண்டும், எந்த ஞானத்துக்குப்பிரயத்தனஞ் செய்ய வேண்டாமென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:— நீ கேட்பது பாமரனைக்குறித்தா, அல்லது கர்மியைக்குறித்தா, அல்லது பக்தனைக்குறித்தா, அல்லது யோகியைக்குறித்தா, அல்லது முமுக்ஷுவைக் குறித்தா, அல்லது முக்தனைக்குறித்தா? சொல்லென்று சொல்லும்போது; சீடன், எல்லோருக்கும் இன்னஇன்ன ஞானம் வரவேண்டுமென்பதையும் அந்தந்த ஞானங்களை மறப்பதால் அவரவர்களுக்கு வருகிற கெடுதியையும், தாங்களே சொல்லவேண்டுமென்று சொல்வாயாகில்,— பாமரனுக்கு உழவாதி தொழில்களுடைய ஞானத்துக்குச் சாதனமான வித்தைகளை அப்பியாசிப்பதிலும், புத்திரமித்திரகளத்திராதிகளைக் காப்பாற்றுவதிலும் ஞானமுள்ளவனாயிருக்கவேண்டும், அதில் மறதியை யடைந்தவன் சும்பனாயும் இகசுகத்தை யிழந்தவனாயுமாகுவன்; கர்மி உசிதமான வேதோக்தகர்மங்களை ஞானத்தோடே செய்யாவிடில் புண்ணியத்தையு மிழந்து பாபியாய்ப்போவன்; பக்தன் திரிகரணங்களாலும் நிஷ்கபடமாய்ப் பக்திசெய்யாவிடில் ஈசுவர அபராதியாய் ஆய்விடுவன்; யோகி யோகசாஸ்திரத்தில் அனுபவியான குருவினிடத்தில் அப்பியாசியாமல் தானே ஏட்டைப்பார்த்து பிராணபந்தனம் பண்ணுகிறவன் தன் பிராணனையே யிழந்துவிடுவான்; முமுக்ஷு சற்குருவையும் சாதுக்களையும் பிடித்து நாமாரென்ற விசாரத்தால் ஆத்மாவை யறியவேண்டும், ஆத்மஞா

னத்தில் அசிரத்தையுள்ளவன் முக்தியடையான். முக்தன் சதா பிரஹ்மமா யிருப்பதால் அவனுக்கு ஒரு விதியுமில்லையென்றறிக.

### 176 - வது தரங்கம்.

*பிரஹ்மாப்பியாசிக்கு ஒருகருமமுஞ் செய்யத்தேவையில்லை:—*

பிரஹ்மாப்பியாசம் பண்ணுகிறவனுக்கு ஒருகருமமுஞ் செய்யத்தேவை யில்லை. [எ - தி] ராஜகுமாரன் ராஜாவாகிறதற்கு ஒருபரீக்ஷையுங் கொடுக்க வேண்டாததுபோலும், சுழுப்திசுக மனுபவிப்பதற்கு யாதொரு கர்மங்களுஞ் செய்யத்தேவையில்லாததுபோலுமறிக. [இ - ர்] பிரம்மாப்பியாசம் பண்ணப் பண்ண அநாத்மவாசனை மெள்ளமெள்ளக் கரைந்துபோம். [எ - தி] மண்சுவரில் மழை பெய்யப்பெய்ய அது கரைந்து போவதுபோலும், அவுஷதஞ் சாப்பிடச்சாப்பிட வியாதி நீங்குவதுபோலும், பிரகாசம் வரவர இருள் நீங்குவது போலும், செம்பு நடமாடக் குசவன் தானே குடிப்போவனென்ற பழமொழி போலுமறிக. [இ - ர்] பிரம்மவிசாரம் பண்ணுகிறவனுக்கு உற்சவம், தீர்த்த யாத்திரை கோவில்முதலானவைகளுக்குப் போவதுகூட விரோதம். [எ - தி] தூங்குகிறவனுக்குந் திருடுகிறவனுக்கும் ஜாரஸ்திரீக்கும் தீபமுங் கூத்தும் பாட்டும் விரோதமாகிறதுபோலவறிக. [இ - ர்] பிரம்மவிசாரம் பண்ணுகிறவனுக்கு வீண்பேச்சு வெகுபாரமாய்த் தோற்றும். [எ - தி] சாகக்கிடக்கிறவனுக்குக் கடுகளவு கல்லு மேலேவிழுந்தாலும் மலைபோலே தோற்றுவதுபோலும், தம்பதிகள் சேர்ந்து போகிக்கும்போது குழந்தைக்குரலும் கோடையிடி போல தோற்றுவதுபோலுமறிக. [இ - ர்] மந்திரி சேவுகவேலைக்கு வாராதது போல, முமுக்ஷுவும் சரியையாதிக்கு வாரானென்றறிக. ஐயா, முமுக்ஷுவுக்குப் பிரம்மானுசந்தானத்தைத்தவிர வேறொன்றையும் நினைக்கக்கூடாதென்றால், சிவன்முதலான தெய்வங்களுடைய கோபங்கள் வாராதாவென்றால், வாராது. ஒருபெரிய பாறையில் அநேகம் மூர்த்திகள் கற்பிக்கப்பட்டிருப்பதில், அந்த மூர்த்திகளில் ஒன்றையுபாசித்தால் மற்றொரு மூர்த்திக்கு மனஸ்தாபம் வருமே யல்லாமல், இவைகளுக்கெல்லாம் காரணமாயிருக்கிற கல்லை உபாசித்தவன் பேரில் ஒரு மூர்த்திகளுக்கும் மனஸ்தாபம் வாராததுபோல, சிவன்முதலான மூர்த்திகளில் ஒன்றை யுபாசித்தால் மற்றொன்றுக்கு மனஸ்தாபம் வருமேதவிர கல்போல சர்வாதிஷ்டானமாயிருக்கிற பிரம்மானுசந்தானம் செய்வதால் ஒவ்வொருவருக்கும் தன்னைத்தன்னை உபாசித்த திருப்தியுண்டாகுமென்றும்; இன்னும் துட்டுக்களை ரூபாயாய்ப்பண்ணி, ரூபாயைப் பவுனாய்ப்பண்ணி, பவுனை நோட்டாய்ப்பண்ணி வைத்துக்கொண்டிருக்கிறவனுக்கு துட்டுமுதலானதெல்லாம் கைவசமாய் அடங்கி யிருப்பதுபோலவறிக. ஐயா, பிரம்மாப்பியாசம் பண்ணுகிறவனுக்கு யாதொரு கர்மங்களும் செய்யத்தேவையில்லையென்று சொன்னீர்களே, அவனுக்கிருக்கிற கர்மம் மற்ற யாருக்குமில்லையே, எப்படி

யென்றால், பாமரனுப் உத்தியோகாதிகளைச் செய்கிறவனுக்குக் கச்சேரிக்குப் போகிறவேளைதவிர மற்றவேளை சும்மா இருப்பதும், ஞாயிற்றுக்கிழமைதோறும் லீவுவிடுவதும், கிஸ்மிஸ்பண்டிகைக்கு லீவுவிடுவதும், கோடைசாத்தும்போது லீவுவிடுவதும்; இப்படியே கர்மிக்கும் கர்மானுஷ்டானஞ் செய்தபின் சும்மா இருப்பதும்; பக்தனுக்கு சுவாமி தரிசனம் பூஜைமுதலானதைச் செய்தபின் ஜோலியில்லாமல் சும்மா இருப்பதுபோலவன்றி பிரம்மாப்பியாசம் பண்ணுகிறவனுக்கு குருவை நிழல்போலே விட்டுப்பிரியாமலிருக்கவேண்டுமென்றும், அவருக்கும் ஆப்தம், அங்கம், ஸ்தானம், சத்பாவமுதலான பணிவிடைகள் பண்ணவேண்டுமென்றும், குருசன்னிதியில் ஆறுலிக்கத்தால் இடைவிடாமல் சகல வேதாந்தங்களுடைய தாற்பரியத்தை சிரவணம் பண்ணவேண்டுமென்றும், சிரவணார்த்தத்தை மனனம்பண்ணவேண்டுமென்றும், அதன்பின் நித்திரையிலிருந்து எழுந்திருந்ததுமுதல் நித்திரை வரும்வரை நிதித்தியாசனம்பண்ணவேண்டுமென்றும், இப்படிக் கொஞ்சமும் லீவுவிடாமல் நடக்கவேண்டுமென்று சொல்லியிருக்கும்போது அவனுக்கு ஒருகருமமும் செய்யத்தேவையில்லையென்று எப்படிச் சொல்லலாமென்றால், நீ கர்மத்தின் சொரூபத்தை அறியாமல் சங்கித்தாய். அதன் சொரூபமாவது,—ஆத்மாவையும், அந்தக்கரணத்தையும், அபிமானியையும், இந்திரிய பிராண தேகங்களையும் ஒன்றுசேர்த்து நான் கர்த்தாவென்பதே கர்மமாம். பிரஹ்மாப்பியாசி எப்படி யிருக்கிறானென்றால், நான் சாக்ஷியென்று சதா நிச்சயரூபமான சிந்தனையிலிருப்பதாலும், மற்றக் கருவிகரணங்கள் தன்தன் தொழில்களைச் செய்கிறதென்றிருப்பதாலும் அது கருமமாகாதென்றறிக.

## 177 - வது தரங்கம்.

நாமரூபத்தைக் கண்டு பிரஹ்மத்தை யறியவேண்டும்:—

பானைசட்டியைக் கண்டு மண் உண்டென்று அறிகிறதுபோல நாமரூபத்தைப் பார்த்துச் சச்சிதாநந்தப் பிரஹ்மத்தை அறியவேண்டியதென்றறிக. [இ-ர்] முந்தி ஜீவலக்ஷணத்தையும், அந்தக்கரணலக்ஷணத்தையும் சொல்லியபிற்பாடு கூடஸ்தலக்ஷணம் சொன்னதற்கு யுக்தி:— சாமான்ய ஜனங்கள்போலில்லாத ராஜபேட்டி வேண்டியவன் முன்னே பரிவாரங்களைத் தள்ளியபின் ராஜபேட்டி செய்துகொள்ளுகிறதுபோலும், தாமரைப்பூவில் மேலிதழ்களைப் பிரித்துத் தள்ளி உள்ளே யிருக்கிற காயைப் பின் கண்டுபிடித்து எடுக்கவேண்டியது போலும், புதையலெடுக்கவேண்டியவன் மேலே மூடியிருக்கிற மண் கல்லை எடுத்துத்தள்ளிப் பின் புதையலை எடுப்பதுபோலுமறிக. ஐயா, நாமரூபங்களை முந்திப் பிரித்து நேதிபண்ணித்தள்ளி பிந்திச் சச்சிதானந்தப் பிரஹ்மமே தானென்றறியவேண்டுமென்று சொன்னீர்களே, அப்படி நாமரூபங்களை என்னத்துக்காகப் பிரித்துத்தள்ளவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தாஞ்

சொல்லுகிறேன் கேள்:— கிணற்றுத்தண்ணீரைத்தாகபாகத்துக்கு உபயோகப் படுத்திக்கொள்ளவேண்டுமென்பவன் மண்ணை முந்தி மண்வெட்டியால் வெட்டி எறிவானேன்? அரிசி வேண்டுமென்பவன் உமி தவிடுகளை உலக்கையாற் குத்தி முந்தித்தள்ளுவானேன்? தேங்காய்ப்பால் வேண்டுமென்பவன் மட்டை கொட்டாங்கச்சி சக்கைமுதலானதைப் பிரித்துத்தள்ளுவானேன்? கரும்பு ரசம் வேண்டினவன் சக்கையையும் தோட்டையும் பிரித்துத்தள்ளுவானேன்? வாழைப்பழம் சாப்பிடவேண்டியவன் மேலேயிருக்கிறதோலைத் தள்ளுவானேன்? மூலலிங்கத்தைத் தரிசிக்கப்போகிறவன் ஆஸ்தானமண்டபம், ரங்கவல்லிமண்டபம், ஆறுகால்மண்டபம், சபாமண்டபம், மகாமண்டபம், அர்த்தமண்டபம் தாண்டிக் கெற்பகிரகத்துக்குள் போவானேன்? இலவம் பஞ்சு வேண்டினவன் அந்தக் காயையுடைத்துப் பஞ்சை யெடுப்பானேன்? முத்துவேண்டினவன் சமுத்திரஜலத்துக்குள் முழுகி முத்துச்சிப்பியை எடுத்து அதையுடைத்து அதற்குள்ளிருக்கிற முத்துக்களை எடுப்பானேன்? அப்படிப்போல ஆரோபமான நாமரூபத்தைத் தள்ளினபின்பே அதிஷ்டானமான சச்சிதானந்தத்தைப் பார்க்கவேண்டுமென்றறிக. ஐயா, எப்போதும் தான் சச்சிதாநந்தப் பிரஹ்மமாயிருந்தும் அதற்கெதிரிடையான அநுருத ஜட துக்கமான ஜகத்துத் தோன்றுகிறதற்குக் காரணமென்ன? உலகத்தில் ஒரு வஸ்துவில் மற்றொரு வஸ்து பிராந்தியினால் தோற்றவேண்டுமேயானால் அதிஷ்டான ஆரோபங்களுக்கு சாதிருசியாதி அபேக்ஷைகள் வேண்டியிருக்கிறதல்லவா? அது எங்கே கண்டோமென்றால்,— பழுதையினிடத்தில் பாம்பு ஆரோபிக்கப்பட்டிருப்பதில் பாம்பினுடைய வளைவுமுதலானவை காணப்படுவதாலும், கிளிஞ்சியில் வெள்ளி ஆரோபிக்கப்படுவதற்கு வெள்ளியினுடைய வெளுப்புநிறமான சாதுருசியம் காணப்படுவதாலும், கட்டையினிடத்தில் கள்ளன் ஆரோபிக்கப்படும்போது கள்ளனுடைய தடிப்பு நீளங்களான சாதுருசியம் காணப்படுவது நியாயமாயிருப்பதுபோல ஆத்மாவினிடத்தில் அனாத்மா தோற்றுவது நியாயமில்லையென்பாயாகில், நீ சொன்னது உபாதியோடே கூடியிருக்கிறவிடத்தில் சாதுருசியாதிகள் அபேக்ஷிக்கப்படும், நிரூபாதிகமான இடங்களில் சாதுருசியாதிகளுடைய அபேக்ஷையில்லை. எப்படியென்றால்,— ஆகாசத்தில் நீலாதிவர்ணந் தோற்றுவதற்கும், மஞ்சள்காமாலை வந்தவனுக்கு சங்கும் மஞ்சள்நிறமாய்த் தோற்றுவதற்கும், பித்தவியாதி வந்தவனுக்கு சர்க்கரை கசப்பாய்த் தோற்றுவதற்கும், எப்படிச் சாதுருசியாதிகளில்லையோ அப்படிப்போல ஆத்மாவில் அனாத்மா தோற்றுவதற்கு சாதுருசியம் வேண்டியதில்லையென்றறியத்தக்கது.

## 178 - வது தரங்கம்.

முமுக்ஷு ஜீவசிருஷ்டியை மாற்றவேண்டுமேதவிர ஈசுவரசிருஷ்டியை மாற்ற எத்தனிக்கத்தேவையில்லை:—

ஈசுவரசிருஷ்டியும் ஜீவசிருஷ்டியுங் கூடியிருக்கும்போது ஜீவசிருஷ்டியை மட்டும் விவேகத்தால் அத்தியந்தம் அசத்தென்று தள்ளி, ஈசுவரசிருஷ்டியை வாதிக்க எத்தனம்பண்ணுமல் ஜீவன்முக்திசுகத்தை யடையலாம். [எ - தி] ஒரு வீட்டில் பாம்பு தேள்முதலான துஷ்டஜெந்துக்களிருக்கும்பக்ஷத்தில் அவைகளைமட்டும் சம்மரித்துச் சுகமாய்க் குடியிருக்கவேண்டுமேதவிர அதற்காக வீட்டோடே தீவைக்கக்கூடாததுபோலும்; வஸ்திரத்தில் மூட்டைமுதலானது ஒட்டியிருந்தால் அதைமட்டும் எடுத்தெறியவேண்டுமேதவிர வேஷ்டியைத் தீயில் போடக்கூடாததுபோலும்; காலில்பட்ட மலத்தைக் கழுவ வேண்டுமேதவிர காலை வெட்டக்கூடாததுபோலும்; அநுபவத்திலுஞ் சுழுப்தி பிரளயங்களில் ஈசுவரசிருஷ்டியான ஜகத்துத் தோற்றமற்போயும் ஒருவருக்கும் முக்தி வாராமலிருப்பதையும் கண்டுகொள்க. (இ - ர்) ஞானி சர்வக்ஞனயிருந்தும் வெளியில் மூடன்போலே யிருப்பதும் அஞ்ஞானி, ஒன்றுந் தெரியாமலிருந்தும் தெரிந்ததுபோலே அபினயம்பண்ணுவதற்கு யுக்தி.—ராணிமகன் ஒரு ஆபரணமுமன்றியில் ஏழைபோலே காண்பிப்பதும், டம்பாச்சாரி இரவல் நகைகளையும் இரவல்வஸ்திரங்களையும் அலங்காரம்பண்ணிக்கொண்டு சம்பன்னனென்று சொல்வதுபோலவாம். (இ - ர்) ஈஸ்வரசிருஷ்டி பொதுவானதால் ஜீவசிருஷ்டியே சுகதுக்ககாரணம். ஈஸ்வரகிருபை சகலருக்கும் பொதுவானலும், அவனவன் சங்கற்பத்தின்படியே சுகதுக்கங்கள் வேறுவேறாய் வருகிறது. (எ - தி) பூமியும் ஜலமும் பொதுவாயிருந்தாலும் அவரவர்கள் போடுகிற வித்துக்குத்தகுந்த பலாபலங்கள் வேறுவேறாயுண்டாவதுபோலும், சுவரும் மையும் ஒன்றாயிருந்தாலும் அவரவர்கள் நினைப்புப்படி சித்திரங்கள் வேறுவேறாய் எழுதப்படுவதுபோலுமறிக. (இ - ர்) ஈசுவரசிருஷ்டி நாமரூபம், ஜீவசிருஷ்டி அபிமானம். ஈசுவரசிருஷ்டியால் ஒருவருக்கும் பந்தம் வராது, மோக்ஷசாதனமுமாம். ஜீவசிருஷ்டியினலேயே சகலருக்கும் பந்தமும் துக்கமும் வரும். (எ - தி) நதிஜலம் ஈஸ்வரசிருஷ்டி, என்னதென் றபிமானிப்பது ஜீவசிருஷ்டி. ஜலத்தால் தாகபாகாதி கிரிகையைச் சகலருஞ் செய்து பசிதாகத்தைத் தீர்த்துக்கொள்ளுகிறார்கள். அதில் அபிமானத்தால் ராகத்துவேஷங்களும் அதனலனந்த துக்கங்களுமுண்டாகிறதுபோலும்; மண் ஈசுவரசிருஷ்டி, பானைசட்டி ஜீவசிருஷ்டி. அதுபோல சகலத்தையும் அறிந்துகொள்ளத்தக்கதென்றறிக. ஐயா, ஈசுவரசிருஷ்டி நாமரூபமென்றும், ஜீவசிருஷ்டி அபிமானமென்றும், ஈஸ்வரசிருஷ்டியால் பந்தமில்லை முக்திக்குச் சாதனமென்றும், ஜீவசிருஷ்டியாலேயே துக்கம் வருமென்றும் சொன்னீர்களே, அதற்குச் சாக்ஷியென்னவென்றால்:— ஒருதிருடன் விடியசாமத்துக்கு ஒருவன் கட்டியிருந்த மாட்டைத் திருட்டுத்தனமாய் அவிழ்த்துக்கொண்டு போகும்போது, பின்னை யொருவன் வீட்டுக்குள்ளிருந்து அந்நேரத்தில் ஜலஸ்பரிசத்துக்காக வெளியில் வரும்போது, திருடன் மாட்டைப் பிடித்துக்கொண்டு போகிறதைக் கண்டவுடன் மாட்டுச்சாலையிலிருந்த நம்முடைய மாட்டைத்தான் பிடித்துக்

கொண்டு போகிறனென்று நிச்சயித்து வெருட்டிப்போகும்போது, அவன் இவன்பேரில் கல்லு மண்ணுகளை வாரிவாரி எறிந்ததிலும் இவன் நிற்காமல் ஓடிக்கொண்டே விடியும்வரை போகும்போது, வெளிச்சம் வந்தபின் மாடு தன்னதில்லையென்றும், அடுத்தவீட்டுக்காரனுடையதென்றும் தெரிந்தபின் ஓரடிகூட எடுத்துவைக்காமல் சுகமாய் உட்கார்ந்திருந்த கதைபோலும்; ஒரு சத்திரத்தி லொருபிராம்மணன் தன் ஸ்திரீயோடேகூடப் படுத்திருந்ததில் அவள் மலஜலவிசர்ச்சனத்துக்காக வெளியில் போயிருக்கும்போது, இவன் தூக்கத்திலிருந்து விழித்துப்பார்த்தமாத்திரத்தில் தன்ஸ்திரீயைக் காணமலிருக்குஞ்சமயத்தில், அந்தஇடத்தில் வேறொரு ஸ்திரீபுருஷர்களிருவரும் கீழும் மேலுமாயிருப்பதைக் கண்டு தன்ஸ்திரீயென்று நினைத்து கோபமாய் இவர்களிருவரையுங் கொல்வதற்காகக் கல்லைத் தூக்கும்போது, தன்னுடைய ஸ்திரீ வெளியிலிருந்து வந்ததால் கோபந்தீர்ந்த கதைபோல அறியக்கடவாய்.

## 179 - வது தரங்கம்

அத்தியாசத்தை அங்கீகரியாமற்போனல் ஆத்மாவுக்கு முக்தியில்லை:—

வாதிகள் நானென்கிற ஆத்மாவுக்குச் சீவத்துவம் சுபாவம், உத்கிருஷ்ட கர்மோபாசனையால் பிரம்மத்துவம் இரும்புக்கு ரசவாதத்தால் சொர்ணத்துவஞ் சித்திப்பதுபோல சித்திக்குமென்று சொல்லுகிறார்கள். அதுகூடாது. (எ - தி) இரும்புக்கும் ரசவீரிய மிருக்கும்வரையில்தான் தங்கமிறந் தோற்றும், அது போனபின் பழய இரும்பாகவே போவதுபோலும்; பட்டியானவன் விக்கிரமாதித்தனுக்குப் பிரசவவேதனை எடுத்த பெண்போல அபினயம்பண்ணி வைத்தும், பிரசவத்துக்காக ரெட்டியாருடைய பெண்சாதியுடன் திரைக்குள்ளே போனபின் பழய ஆண்பிள்ளையாய் ஆனதுபோலுமறிக. ஐயா, ஜீவன் எப்போதும் பிரஹ்மமாயிருந்தால் பிரஹ்மத்தையடைய எத்தனிக்கவேண்டுமென்றும், புழுவானது குளவியை நினைத்துநினைத்து தியானம்பண்ணும்போது அந்தப்புழு குளவியாகவே ஆவதுபோல ஜீவனுகிய புழுவும் பிரம்மமாகிய குளவியை நினைத்துநினைத்து தியானம்பண்ணிக்கொண்டு வந்தால் இந்த ஜீவனுகிய புழு பிரம்மமாகிய குளவியாகவே ஆகுவனென்றும் உங்களுடைய அத்விதசாஸ்திரத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது. இதில் என்ன விரோதமிருக்கிறதென்று கேட்பீராகில், சுபாவமாகப் புழு குளவி யாகாததுபோல ஜீவன் சுபாவமாகப் பிரம்மமில்லையென்று வருவதாலும்; புழுவேறே குளவிவேறேயா யிருப்பதுபோல ஜீவன்வேறே பிரம்மம்வேறேயாகத் தொய்தமாய்ப்போவதாலும்; மற்ற புழுக்கள் குளவியாகாமல் புழுக்களாகவே கிடப்பதுபோல மற்ற ஜீவர்களும் பிரம்மமாகாமல் ஜீவர்களாகவே கிடப்பார்களென்று தோற்றுவதாலும்; எந்தப்புழு குளவியை நினைத்துத் தியானம்பண்ணிற்றே அந்தப்புழு அந்தக் குளவியாகாமல் தான் புதுசாய் வேறொரு குளவியானதுபோல இந்த ஜீவனும்

அந்த பிரம்மத்தியானப்பண்ணுவதால் அந்தப் பிரம்மமாகாமல் இவன் வேறொரு பிரம்மமாய் இருப்பனென்று தோற்றுவதாலும்; இப்படி அநேகங் குளவியிருப்பதுபோல அநேக பிரஹ்மங்களிருக்குமென்றுந்தோற்றுவதாலும்; சுருதியில் ஏகமேவாத்விதீயமென்றுஞ் சொல்லியிருக்கிறபடியால் பிரஹ்மத்துக்கு சொகதபேதமில்லை, அது நிரவயவமாயிருப்பதால்; நாமரூபங்களை அதற்கு வடிவமாகச் சொல்வோமென்றால் நாமரூபங்கள் சிருஷ்டிக்குமுன்னே யில்லை, இருக்குமென்றால் சிருஷ்டியென்பது நாமரூபங்களுடைய உற்பத்திக்கே சொல்லப்படுவதால்; சிருஷ்டிக்குமுன்னே யிருக்கிற சத்துக்கு நாமரூபங்களை வடிவமென்று சொல்லக்கூடாததால் சத்துக்கு, மரத்துக்கு பத்திரபுஷ்பாதி சொகதபேதமிருப்பதுபோல சொகதபேதஞ் சொல்லக்கூடாது. சத்துக்குவேறாக மறு சத் தில்லாமையால் சஜாதீயபேதமும் சொல்லக்கூடாது சத்துக்கு எதிரியான ஜகத்து அசத்தானபடியால் விஜாதீயபேதமுமில்லையென்று சொல்லியிருக்கும்போது பிரமரகீட திருஷ்டாந்த மெப்படிச்சொல்லக்கூடுமென்றால், நீயறியாமல் சங்கிக்கிறாய்! பிரஹ்மோபதேசத்துக்குச் சாதனமாய்ச் சொல்லப்படுகிற திருஷ்டாந்தங்களெல்லாம் ஏகதேசமாய்ச் சொல்லப்படுமென்று முன்னமே சொல்லியிருக்கிறது. [எ-தி] தட்டான் தாலிகொடி பண்ணும்போது அங்கே வந்திருந்த பெண்கழுத்தில் அளவுக்காகக் கட்டிபார்த்ததற்காக அவள் அவனை ஜீவனும்சம் கேட்பதுபோலுமறிக. மேலும் இந்தப்பிரமரகீட திருஷ்டாந்தம் கர்த்துருதந்திரமான பிரஹ்மத்தியானத்துக்கேதவிர வஸ்துதந்திரமான விசார ஞானத்துக்குச் சொல்லவில்லை. தசமதிருஷ்டாந்தம் முதலானது வஸ்துதந்திர ஞானத்துக்குத் திருஷ்டாந்தமாகச் சொல்லியிருக்கிறதென்றறிக.

## 180 - வது தரங்கம்.

உத்தமசீடன் மகிமை:—

பிராரப்தாதீனமாய்க் குருவினிடத்தில் எவ்வளவு கெட்டநடத்தை யிருந்தாலும் உத்தமசீடனுக்குத் தோஷந் தோற்றாது. (எ - தி) யோனியினிடத்திலிருக்கிற போகசுகத்துக்காக அவளிடத்திலிருக்கிற நாற்றங்களைப் பார்க்காத விடன்போலும், மணலிற்போட்ட சர்க்கரையை எடுக்கிற எறும்புபோலும், ஜலத்தில் விடப்பட்ட பாலைமட்டும் பிரித்துக்கிரகிக்கிற அம்சம்போலுமறிக. (இ - ர்] தான் வெகுகாலமாய்ச் ஜெனனமரண சம்சாரதுக்கசமுத்திரத்தில் கரைகாணாமல் தபித்துக்கொண்டிருந்தவனை குருநாதன் சாதுக்களுடன் சாஸ்திரத்தை அனுக்கிரகித்தபின் இவன் அந்த சற்குருவையும் சாதுக்களையும் சற்சாஸ்திரத்தையும் சதா சிந்தித்து மகிழ்ந்துகொண்டிருப்பன். (எ - தி) சமுத்திரத்தில் விழுந்து முழுகிக் கரைகாணாமல் தபித்துக்கொண்டிருக்கிறவனுக்கு கப்பல்காரன் தன் ஆள்களோடே கப்பலைக் கொண்டுவந்து கரையேத்தினபின் அவன் சந்தோஷிப்பதுபோலும், வெகுநாள் பிள்ளையில்லாதிருந்த தசரதருக்கு

ரிஷியசிங்கரிஷி வந்து புத்திரகாமேஷ்டி செய்துவைத்து ராமர் முதலான பிள்ளைகள் பிறக்கும்படி செய்தபின் அவரை இவர் துதித்துக்கொண்டிருப்பது போலும், 60 வயதுவரை கஞ்சிகுடிக்கக்கூட வீட்டில் வகையில்லாமலிருந்தவனுக்கு ஈசுவரன் இவன்வீட்டிலேயே அன்னக்களஞ்சியம் அக்ஷயமாய் அளித்தபின் இவன் அவரை ஸ்துதிப்பதுபோலுமறிக. (இ - து) குருவினிடத்திலிருக்கிற நல்ல நடத்தைகளைமட்டும் சிஷ்யன் கிரகிக்கவேண்டுமேதவிர பிராரப்தகர்மத்தால் அவரிடத்தில் கெட்டநடத்தையிருந்தால் அதை இவன் பார்க்கவும் செய்யவுங் கூடாது. (எ-தி) ராஜனிடத்திலிருக்கிற நல்லநடத்தைகளைமட்டும் ஜனங்கள் செய்யவேண்டுமேதவிர அவனிடத்திலிருக்கிற கெட்ட நடத்தைகளைச் செய்தால் உத்தியோகமும்போய் தெண்டனையும் படுவதுபோலும், பர்த்தாவினிடத்திலிருக்கிற நல்லநடத்தையைமட்டும் ஸ்திரீ அனுசரிக்கவேண்டுமேதவிர அவரிடத்திலிருக்கிற தாசிகமனமுதலான கெட்டநடத்தையைப் பார்த்து விபசாரத்தைச் செய்தவள் கெட்டுப்போவதுபோலுமறிக. (இ - து) ஜீவன் அஞ்ஞானத்தால் தன்னைப் பறிகொடுத்து வெகுகாலமாய்க் கஷ்டப்பட்டுக் குருகடாக்ஷத்தால் தன்னைப் பெற்றபின் அந்தக்குருவை விதேகமுக்திவரை மறக்கக்கூடாது. (எ - தி) வாலிபத்தில் தன் சொத்தையெல்லாம் ஞாதிகள் கட்டிக்கொண்டு இவனைக் கஷ்டப்படுத்திக்கொண்டிருக்குங்காலையில் சீமைலாயர் வந்து வியாச்சியம்பண்ணி இவன் சொத்துக்களையெல்லாம் வாங்கிக் கொடுத்தபின், அந்த லாயரை எப்படி ஒருநாளும் மறவானே அப்படிப்போலவறிக. (இ — து) முமுக்ஷுவானவன் தயாநிதியான குருவைச் சரணமாக அடைந்து பறிகொடுத்த ஞானத்தையும் பெற்று மேற்கொண்டு அழியாத மோக்ஷத்தை யடைந்து சுகிக்கவேண்டுமென்பதற்கு யுக்தி:—சொத்தைப் பறிகொடுத்தவன் தயாளுவாகிய ராஜாவைச் சரணமாக அடைந்து, போனபொருளையும் பெற்று மேற்கொண்டு வாழ்வையுமடைந்து சுகிப்பதுபோலவறிக. (இ - து) முக்கியமாயுள்ள சிஷ்யன் குருவாலே எவ்வளவு கண்டிக்கப்பட்டாலும் அவ்வளவு கண்டிப்பும் நயமென்று அறிந்துகொள்ளுவன், அவரையும் விட்டுவிலகான். (எ - தி) வஸ்திரத்தை தொவைக்கத் தொவைக்க அழுக்குப்போய் வெளுப்பதுபோலும், தங்கத்தைப் புடம்போட்டு தட்டான் அடிக்க அடிக்க பிரகாசமும் கிரீடமுதலான ஆபரணங்கள் ஆவதுபோலும், நோவுள்ளமாட்டுக்குச் சூடுபோடுவதுபோலுமறிக. (இ - து) சற்குருவைப் பார்த்தமாத்திரத்தில் உண்டாகும் பேரானந்தத்தைச் சொல்லப்படுகிறது. தாபத்திரயதுக்கத்தால் தபித்துக்கொண்டிருக்கிற முமுக்ஷுக்களுக்குச் சற்குருதெரிசனம் கிடைத்தால் என்னமாய்த் தோற்றுமெனில்,—முடவனுக்குக் கொம்புத்தேன் அகப்பட்டதுபோலும், பிறவிக் குருடனுக்குக் கண் தெரிந்ததுபோலவும், ஏழைக்கு நிதி சுயம்பப்பட்டதுபோலும், சமுத்திரத்தில் முழுகினவனுக்குக் கப்பல் அகப்பட்டதுபோலும், தலையில் தீப்பிடித்தவனுக்குத் தண்ணீர் அகப்பட்டதுபோலும், பதிவிரதைக்குத் தேசாந்தரத்திலிருந்து தன்புருஷன் வந்ததுபோலும், காட்டில் கள்

ளர்கையி லகப்பட்டவனுக்கு மகாராஜா வந்துசேர்ந்ததுபோலும், கூழுக்குத் தாளம்போடுகிறவனுக்குத் தேவாமிர்தம் அகப்பட்டதுபோலும், வெய்யலில் அலைகிறவனுக்கு அரண்மனை அகப்பட்டதுபோலும், நடக்கமாட்டாதவனுக்கு ரயில்வண்டி அகப்பட்டதுபோலும், சந்தோஷிப்பனென்றறியத்தக்கது. (இ-து) அஞ்ஞானத்தில் முழுகிக்கிடந்தவனை குருநாதன் ஞானமாகிற கப்பலைக் கொடுத்து முக்தியாகிற கரையேற்றினபின் நான் தன்யனென்று கூத்தாடுவன். (எ - தி) கடலில் முழுகிக்கிடக்கிறவனைக் கருணையுள்ளவன் கப்பலைக் கொடுத்துக் கரையேற்றிவைத்துக் காப்பாற்றினபின் சந்தோஷத்தால் வெள்ளைவீசுவது போலவறிக. (இ - து) தீவிரமுமுக்ஷுவானவன் பிரம்மவிசாரத்தை குருமுகமாய் எவ்வளவு கேட்டாலும் திரும்பத்திரும்பக் கேட்கவேண்டுமென்றே ஆசைப்படுவன். (எ - தி) மேகப்பற்றுள்ளவன் எவ்வளவு சொறிந்தாலும் திரும்பச் சொறியவேண்டுமென்றே ஆசைப்படுவதுபோலும், குண்டோதரன் எவ்வளவு சாப்பிட்டும் திரும்பச்சாப்பிட ஆசைப்பட்டதுபோலுமறிக. (இ - து) ஞானத்தைக் கொடுத்த குருவுக்குச் சிஷ்யன் கைம்மாறு அந்தஞானத்தைக் கைவிடாமற் காப்பாற்றுவதேயாம். (எ - தி) பிராம்மணார்த்தஞ் சாப்பிட்டவன் அங்கேயே வாயிலெடாமல் வகித்துக்கொள்ளுகிறதே எஜமானுக்குச் செய்கிற உபகாரம்போலும், தகப்பன் சம்பாதித்துக்கொடுத்த பணத்தை தாசிமுதலானவர்களுக்குக் கொடுத்து அழிக்காமற் காப்பாற்றிவைத்துக்கொள்ளுகிறதே தகப்பனுக் குபகாரமாவது போலுமறிக. [இ - து] முமுக்ஷுவுக்குப் பிரம்மவிசாரத்துக்கும் விஷயவிவகாரத்துக்கும் சுரோத்திராதி இந்திரியங்கள் வேண்டியிருந்தாலும் விவேகியின் மனது இரண்டிலும் செல்லும்போது விருப்பு வெறுப்புகளான பேதமுண்டு. [எ - தி] நாயகிக்குப் புருஷபோகத்துக்கும் மூத்திரம்பேய்வதற்கும் ஒருயோனியே வேண்டியிருந்தாலும் போகத்திலிருக்கிற ரமிப்பும் கொல்லைக்குப்போவதில் வெறுப்பும்வருவதுபோலவிருக்குமென்றறிக. [இ - து] நீசன்முதல் எந்தச் சாதியானாலும் ஞானமுள்ளவனையே குருவாக முமுக்ஷு நம்பிச் சுகிக்கவேண்டியது. [எ - தி] போகசுகத்துக்கு ஆசைப்பட்டவள் தன் யோனிக்களவான சிசுனமும், தாங்கிப் போடுகிறவனும் தாயுந்தகப்பனுமென்று சொல்லுகிற பழமொழிபோலும், எந்தச்சாதியானாலும் அவள் அவனைப்பிடித்துச் சுகிப்பதுபோலும்; வியாச்சியம் ஜெயம்செய்து கொடுக்கிற வக்கீல் எந்தச்சாதியானாலும் அவனை நம்பிப் பிடித்துக்கொள்வதுபோலும்; எந்தச்சாதிக்காரனானாலும் கொண்டுவந்த கயிறு கிணற்றுக்குள் தண்ணீர் எட்டும்வரை அளவுபார்த்துச் சரியான கயிறு வாங்குவதுபோலுமறிக. [இ - து] குருவினிடத்திலிருக்கிற குணதோஷம் சிஷ்யர்களுக்குத் தெரியுமேதவிர மற்றவர்களுக்குத் தெரியாது. [எ - தி] புருஷனுடைய போகசக்தியும் அசக்தியும் பெண்டாட்டிக்குத் தெரியுமேதவிர மற்றவர்களுக்குத் தெரியாததுபோலும், குளத்திலிருக்கிற மேடுபள்ளங்கள் உள்ளூரானுக்குத் தெரியுமேதவிர அயலூரானுக்குத் தெரியாததுபோலுமறிக. [இ-து]

குரு அனுக்கிரகித்த தத்துவஞானத்தை அநுபவம்பண்ணி பவதுக்கத்தைத் தீர்த்துக்கொள்வதே அவருக்குத் திருப்தி. [எ-தி] தர்மவைத்தியன் கொடுத்த மருந்தை வியாதிக்காரன் சாப்பிட்டு வியாதிதீர்ந்து சுகமாயிருப்பதே அவருக்குத் திருப்தியாவதுபோலவறிக. [இ - து] பிராரத்தத் தோற்றம் போகும் வரையில் குருமகாராஜா கொடுத்திருக்கிற ஜகத்துப் பொய்யென்ற தீர்ப்பைப் பார்த்துச் சந்தோஷித்திருக்கவேண்டும். [எ - தி] சிவராத்திரி விடியும்வரை கூத்துப் பூஜைமுதலானதைச் செய்து விழித்திருக்க வேண்டுவதுபோலவறிக. [இ-து] குரு அனுக்கிரகித்த ஞானத்தை அஞ்ஞானிகளிடத்திற் பறிகொடாமற் காப்பாற்றிக்கொள்வதே குருவுக்குப் பிரதியுபகாரம். [எ - தி] ராஜன் தன்பிள்ளைக்குப் பட்டாபிஷேகம் செய்து அகண்டராச்சியத்தையுங் கொடுத்ததை அந்தக்குமாரன் சத்துருக்கள்கையில் தன் ராச்சியத்தை விடாமல் காப்பாற்றிக்கொள்வதே பிதாவுக்குப் பிரத்தியுபகாரமாவதுபோலுமறிக. [இ-து] ஞானியின் மகிமை முமுக்ஷுக்களுக்குத்தான் தெரியும். [எ - தி] புருஷசுகம் எவ்வனஸ்திரீக்குத் தெரிவதுபோலுமறிக. [இ - து] உலகத்தை வகைவகையாய்ப் பாராமல் மாயாமயமென்று தொகையாய்ப் பார்க்கவேண்டும். [எ - தி] இந்திரஜாலத்தை வகைவகையாய்ப் பாராமல் தொகையாய்ப் பார்ப்பது போலும், சித்திரத்தை வகையாய்ப் பாராமல் சித்திரமென்று பார்ப்பது போலுமறிக. இனி ஆத்மாவை வகையாய்ப் பார்க்கவேண்டும். [எ - தி] தன் சொந்தக்காரியத்தை வகையாய்ப் பார்ப்பதும், அன்னியர்களுடைய காரியத்தைத் தொகையாய்ப் பார்ப்பதுபோலுமறிக. [இ - து] ஜகத்து இந்திரஜாலம்போல இல்லையென்று சொன்னால் யாருக்கும் மனஸ்தாபம் வராதோவென்றால், ஞானிக்கு வராது. அஞ்ஞானி பொருளுமல்ல. ஆதலால் துணிவாய்ச் சொல்லலாமென்றறிக. [இ - து] குருவினிடத்தில் சீடர்கள் எப்படியிருக்கவேண்டுமென்றால்,— பட்டாளத்திலிருக்கிற எட்டான துரை ஜாடை பண்ணினபடி சிப்பாய்கள் கபாத்து செய்வதுபோலவறிக. குருவினிடத்திலிருக்கிற மகிமை சீடனுக்கு எப்போது தெரியுமென்றால், சாக்ஷாத்காரஞானம் வந்தால்தான் தெரியும். [எ - தி] ஸ்திரீக்குப் புருஷசுகம் போகானுபவம் பூரணமாக ஆகத்தெரிவதுபோலவறிக. [இ - து] தன் குரு சொன்ன சுருதி யுக்தி அனுபவப்படியே சீடன் நடக்கிறான். [எ - தி] குரங்கு காண்பித்தபடியே குட்டியுந் தாவுகிறதுபோலும், தாய் பழக்கினபடியே பெண் நடக்கிறது போலுமறிக. [இ - து] குருசன்னிதியில் கேட்ட சுருதி யுக்தி அனுபவங்கள் சித்தத்தில் தனக்குத் தெரியாமல் அடங்கியிருந்து தனக்கடங்கின சிஷ்யர்கள் வந்தகப்பட்டகாலையில் அந்த அனுபவத்தை அவர்களுக்கு வாங்குவாங்கென்று வாங்குவான். [எ - தி] தான் போஜனம்பண்ணின அன்னம் நெய் பால்முதலான பதார்த்தங்கள் சரீரத்தில் மஸ்தாயிருந்து தனக்குப் பவ்வியமான ஸ்திரீ நிர்விசாரமாய் அகப்பட்டபோது வாங்குவாங்கென்று வாங்குவதுபோலும், ராஜன் வாலிபத்தில் வில்வித்தை கற்றதெல்லாம் அடங்கியிருந்து சத்துரு யுத்

சத்துக்கு வந்தெதிர்ப்பட்டகாலையில் வாங்குவாங்கென்று வாங்குகிறதுபோலும், கற்றவித்தை யடக்கியிருந்தாலும் வாதிகள் எதிர்ப்பட்டகாலையில் நொறுக்குநொறுக்கென்று நொறுக்குவதுபோலுமறிக. [இ - து] குருகிருபையால் அகங்கார நிவர்த்தியாய் சாக்ஷாத்காரமாக ஆத்மாவைக் கண்ட ஞானிக்குண்டாகிற சந்தோஷத்துக்கு யுக்திகள்:— பசிக்கிறவனுக்கு மிருஷ்டான்ன போஜனம் அகப்பட்டாற்போலவும், நித்தியதரித்திரனுக்கு நிதி யகப்பட்டாற்போலும், பிறவிக்குருடனுக்குக் கண் கிடைத்ததுபோலவும், இருட்டில் பிசாசினால் பயந்தவனுக்கு மந்திராதிதீபங் கொண்டுவந்ததுபோலவும், க்ஷாமகாலத்தில் மழை பெய்கிறதுபோலவும், காசிக்குப்போன கணவன் வந்ததைக்கண்டு சந்தோஷிப்பதுபோலும், சித்தகுளிகையால் வியாதி தீர்ந்தவன்போலுமறிக. [இ - து] சிஷ்யன் பிராம்மணனும் குரு துலுக்கனுமாயிருந்தால் அவரிடத்திலிவனுக்குப் பிரியம் வரலாமாவென்றால், வரலாம். [எ - தி] பிராம்மணஸ்திரிக்குச் சக்கிலியனிடத்திற் போகம்பண்ணி சுகத்தை அனுபவித்தால் அவளுக்கு நாளுக்குநாள் எப்படிப் பிரியமுண்டாகுமோ அப்படியே யாகும், இதற்குச் சுருதி யுக்தி பஞ்சாங்கம் விதிநிஷேதமொன்றுந் தேவையில்லாததுபோலவறிக. [இ - து] குருமுகமாய் விசாரித்துத் தன்னை யறிந்தவன் வேறே காதைக் கடிக்கிற உபதேசம் வேண்டான். [எ - தி] பர்த்தாவோடே சேர்ந்து பத்துப் பிள்ளையும் பெற்று சதா ரமித்துக்கொண்டிருக்கிறவள் ருதுசாந்தி முகூர்த்தத்துக்கு நாள்பார்க்க ஜோசியரைத் தேடாதவள்போலும், கெங்கையில் முழுகிக்கொண்டிருக்கிறவன் உத்தரணி உப்புஜலத்துக்கு ஆசைப்படாததுபோலுமறிக. [இ - து] முமுக்ஷுக்களுக்குக் குருவுக்குமேல் தெய்வமில்லை. (எ - தி) சேவக ஜனங்களுக்கு ராஜாவைப்போலும், கர்மிகளுக்கு இந்திராதி தேவதைகள் போலும், பக்தர்களுக்கு ஈஸ்வரன்போலும், யோகிகளுக்குப் பிராணன்போலும், ஞானிகளுக்குப் பிரம்மம்போலுமறிக. ஐயா, உத்தமமான சிஷ்யனுக்கு குருவே தாயுந் தகப்பனும், இஷ்டர்களும், பந்துக்களும், தெய்வமும், சகலசம்பத்துமாக விருக்கிறாரென்று சொன்னீர்களே, அப்படிக் குருவைநம்பி கரையேறினவர்களை எனக்குக் குருபக்தி யுண்டாகும்படி யனுக்கிரகிக்கவேண்டுமென்று கேட்பாயாகில், ஒரு மகாத்துமாவான குருவினிடத்தில் உத்தம மத்திம அதமர்களான அநேக சிஷ்யர்கள் அவரைச் சரணமாக வடைந்து சிரவணம்பண்ணிக்கொண்டு வரும்போது, அவர்களுக்குள் ஒருவன் உத்தமசிஷ்யனாய், அநேகஞ் சங்குகள் உண்டாவதற்குள் வலம்புரிச்சங்கம் அபூர்வமாய் ஒன்றுண்டாவதுபோல உண்டானான். அவனுடைய பக்தியின் பரிபாகவிசேஷத்தால் குருநாதனும் அவனிடத்தில் மிகுந்த பிரீதி வைத்திருப்பதை மற்ற சிஷ்யர்கள் பார்த்து குருநாதனைக்கூட பக்ஷபாதமுள்ளவரென்று நினைத்ததைக் குருநாதன் கண்டுகொண்டு, மற்றச்சிஷ்யர்களைப் பார்த்து தனக்கு நித்தியம் சாதுக்களுக்கு அன்னம் கொடுக்கவேண்டுமென்று வெகுநாளாய் நினைத்திருந்ததால் காட்டுக்குள்ளிருக்கிற காளிகோவிலில் புதையலிருக்கிறதாகவும் நரபலி

குரு அனுக்கிரகித்த தத்துவஞானத்தை அநுபவம்பண்ணி பவதுக்கத்தைத் தீர்த்துக்கொள்வதே அவருக்குத் திருப்தி. [எ-தி] தர்மவைத்தியன் கொடுத்த மருந்தை வியாதிக்காரன் சாப்பிட்டு வியாதிதீர்ந்து சுகமாயிருப்பதே அவருக்குத் திருப்தியாவதுபோலவறிக. [இ - து] பிராரத்தத் தோற்றம் போகும் வரையில் குருமகாராஜா கொடுத்திருக்கிற ஜகத்துப் பொய்யென்ற தீர்ப்பைப் பார்த்துச் சந்தோஷித்திருக்கவேண்டும். [எ - தி] சிவராத்திரி விடியும்வரை கூத்துப் பூஜைமுதலானதைச் செய்து விழித்திருக்க வேண்டுவதுபோலவறிக. [இ-து] குரு அனுக்கிரகித்த ஞானத்தை அஞ்ஞானிகளிடத்திற் பறிகொடாமற் காப்பாற்றிக்கொள்வதே குருவுக்குப் பிரதியுபகாரம். [எ - தி] ராஜன் தன்பிள்ளைக்குப் பட்டாபிஷேகம் செய்து அகண்டராச்சியத்தையுங் கொடுத்ததை அந்தக்குமாரன் சத்துருக்கள்கையில் தன் ராச்சியத்தை விடாமல் காப்பாற்றிக்கொள்வதே பிதாவுக்குப் பிரத்தியுபகாரமாவதுபோலுமறிக. [இ-து] ஞானியின் மகிமை முமுக்ஷுக்களுக்குத்தான் தெரியும். [எ - தி] புருஷசுகம் எவ்வனஸ்திரீக்குத் தெரிவதுபோலுமறிக. [இ - து] உலகத்தை வகைவகையாய்ப் பாராமல் மாயாமயமென்று தொகையாய்ப் பார்க்கவேண்டும். [எ - தி] இந்திரஜாலத்தை வகைவகையாய்ப் பாராமல் தொகையாய்ப் பார்ப்பது போலும், சித்திரத்தை வகையாய்ப் பாராமல் சித்திரமென்று பார்ப்பது போலுமறிக. இனி ஆத்மாவை வகையாய்ப் பார்க்கவேண்டும். [எ - தி] தன் சொந்தக்காரியத்தை வகையாய்ப் பார்ப்பதும், அன்னியர்களுடைய காரியத்தைத் தொகையாய்ப் பார்ப்பதுபோலுமறிக. [இ - து] ஜகத்து இந்திரஜாலம்போல இல்லையென்று சொன்னால் யாருக்கும் மனஸ்தாபம் வராதோ வென்றால், ஞானிக்கு வராது. அஞ்ஞானி பொருளுமல்ல. ஆதலால் துணிவாய்ச் சொல்லலாமென்றறிக. [இ - து] குருவினிடத்தில் சீடர்கள் எப்படியிருக்கவேண்டுமென்றால்,— பட்டாளத்திலிருக்கிற ஏட்டான துரை ஜாடை பண்ணினபடி சிப்பாய்கள் கபாத்து செய்வதுபோலவறிக. குருவினிடத்திலிருக்கிற மகிமை சீடனுக்கு எப்போது தெரியுமென்றால், சாக்ஷாத்காரஞானம் வந்தால்தான் தெரியும். [எ - தி] ஸ்திரீக்குப் புருஷசுகம் போகானுபவம் பூரணமாக ஆகத்தெரிவதுபோலவறிக. [இ - து] தன் குரு சொன்ன சுருதி யுக்தி அனுபவப்படியே சீடன் நடக்கிறான். [எ - தி] குரங்கு காண்பித்தபடியே குட்டியுந் தாவுகிறதுபோலும், தாய் பழக்கினபடியே பெண் நடக்கிறது போலுமறிக. [இ - து] குருசன்னிதியில் கேட்ட சுருதி யுக்தி அனுபவங்கள் சித்தத்தில் தனக்குத் தெரியாமல் அடங்கியிருந்து தனக்கடங்கின சிஷ்யர்கள் வந்தகப்பட்டகாலையில் அந்த அனுபவத்தை அவர்களுக்கு வாங்குவாங்கென்று வாங்குவான். [எ - தி] தான் போஜனம்பண்ணின அன்னம் நெய் பால்முதலான பதார்த்தங்கள் சரீரத்தில் மஸ்தாயிருந்து தனக்குப் பக்ஷியமான ஸ்திரீ நிர்விசாரமாய் அகப்பட்டபோது வாங்குவாங்கென்று வாங்குவதுபோலும், ராஜன் வாலிபத்தில் வில்வித்தை கற்றதெல்லாம் அடங்கியிருந்து சத்துரு யுத்

தத்துக்கு வந்தெதிர்ப்பட்டகாலையில் வாங்குவாங்கென்று வாங்குகிறதுபோலும், கற்றவித்தை யடங்கியிருந்தாலும் வாதிகள் எதிர்ப்பட்டகாலையில் நொருக்குநொருக்கென்று நொருக்குவதுபோலுமறிக. [இ - து] குருகிருபையால் அகங்கார நிவர்த்தியாய் சாக்ஷாத்காரமாக ஆத்மாவைக் கண்ட ஞானிக்குண்டாகிற சந்தோஷத்துக்கு யுக்திகள்:— பசிக்கிறவனுக்கு மிருஷ்டான்ன போஜனம் அகப்பட்டாற்போலவும், நித்தியதரித்திரனுக்கு நிதி யகப்பட்டாற்போலும், பிறவிக்குருடனுக்குக் கண் கிடைத்ததுபோலவும், இருட்டில் பிசாசினால் பயந்தவனுக்கு மந்திரவாதிதீபங் கொண்டுவந்ததுபோலவும், க்ஷாமகாலத்தில் மழை பெய்கிறதுபோலவும், காசிக்குப்போன கணவன் வந்ததைக்கண்டு சந்தோஷிப்பதுபோலும், சித்தகுளிகையால் வியாதி தீர்ந்தவன்போலுமறிக. [இ - து] சிஷ்யன் பிராம்மணனும் குரு தனுக்கனுயுமிருந்தால் அவரிடத்திலிவனுக்குப் பிரியம் வரலாமாவென்றால், வரலாம். [எ - தி] பிராம்மணஸ்திரீக்குச் சக்கிலியனிடத்திற் போகம்பண்ணி சுகத்தை அனுபவித்தால் அவளுக்கு நாளுக்குநாள் எப்படிப் பிரியமுண்டாகுமோ அப்படியே யாகும், இதற்குச் சுருதி யுக்தி பஞ்சாங்கம் விதிநிஷேதமொன்றுந் தேவையில்லாததுபோலவறிக. [இ - து] குருமுகமாய் விசாரித்துத் தன்னை யறிந்தவன் வேறே காதைக் கடிக்கிற உபதேசம் வேண்டான். [எ - தி] பர்த்தாவோடே சேர்ந்து பத்துப் பிள்ளையும் பெற்று சதா ரமித்துக்கொண்டிருக்கிறவள் ருதுசாந்தி முகூர்த்தத்துக்கு நாள்பார்க்க ஜோசியரைத் தேடாதவள்போலும், கெங்கையில் முழுகிக்கொண்டிருக்கிறவன் உத்தரணிஉப்புஜலத்துக்கு ஆசைப்படாததுபோலுமறிக. [இ - து] முமுக்ஷுக்களுக்குக் குருவுக்குமேல் தெய்வமில்லை. (எ - தி) சேவக ஜனங்களுக்கு ராஜாவைப்போலும், கர்மிகளுக்கு இந்திராதி தேவதைகள் போலும், பக்தர்களுக்கு ஈஸ்வரன்போலும், யோகிகளுக்குப் பிராணன்போலும், ஞானிகளுக்குப் பிரம்மம்போலுமறிக. ஐயா, உத்தமமான சிஷ்யனுக்கு குருவே தாயுந் தகப்பனும், இஷ்டர்களும், பந்துக்களும், தெய்வமும், சகலசம்பத்துமாக விருக்கிறரென்று சொன்னீர்களே, அப்படிக் குருவைநம்பி கரையேறினவர்களை எனக்குக் குருபக்தி யுண்டாகும்படி யனுக்கிரகிக்கவேண்டுமென்று கேட்பாயாகில், ஒரு மகாத்துமாவான குருவினிடத்தில் உத்தம மத்திம அதமர்களான அநேக சிஷ்யர்கள் அவரைச் சரணமாக வடைந்து சிரவணம்பண்ணிக்கொண்டு வரும்போது, அவர்களுக்குள் ஒருவன் உத்தமசிஷ்யனாய், அநேகஞ் சங்குகள் உண்டாவதற்குள் வலம்புரிச்சங்கம் அபூர்வமாய் ஒன்றுண்டாவதுபோல உண்டானன். அவனுடைய பக்தியின் பரிபாகவிசேஷத்தால் குருநாதனும் அவனிடத்தில் மிகுந்த பிரீதி வைத்திருப்பதை மற்ற சிஷ்யர்கள் பார்த்து குருநாதனைக்கூட பக்ஷபாதமுள்ளவரென்று நினைத்ததைக் குருநாதன் கண்டுகொண்டு, மற்றச்சிஷ்யர்களைப் பார்த்து தனக்கு நித்தியம் சாதுக்களுக்கு அன்னம் கொடுக்கவேண்டுமென்று வெகுநாளாய் நினைத்திருந்ததால் காட்டுக்குள்ளிருக்கிற காளிகோவிலில் புதையலிருக்கிறதாகவும் நரபலி

கேட்பதாகவும் குறிகாரன் வந்து சொன்னதினுல், நீங்கள் யாராவது ஒருவர் அதற்கு ஒப்புக்கொள்ளமுடியுமாவென்று கேட்டவுடன், அவர்கள் ஜகத்துப் பொய்யென்றிருக்கிற தங்களுக்கு இதென்னத்துக்கென்று சொல்லவும், கொஞ்சம் விசனித்தவர்போலக் காண்பிக்கும்போது, முக்கிய சிஷ்யனுன அவன் வந்து, இவரைப் பார்த்து விசனிக்கக் காரணமென்னவென்று கேட்கும்போது, அவர்சங்கதியைச் சொன்னவுடன், நானுச்சுதென்று ஒப்புக்கொண்டபின் கூட்டிக்கொண்டுபோய் வெட்ட ஆரம்பிக்கும்வரை தைரியமாயிருந்ததைக் கண்டு சகலரும் குருவினிடத்திற் பிரியம் வைத்த கதைபோலவறிக.

## 181 - வது தரங்கம்.

அஞ்ஞானிக்கு ஞானம் வந்தபின் பிரமத்துவம் இப்போது புதிசுபோலத் தோற்றும்:—

எப்போதும் தான் பிரமமாயிருந்தும் அஞ்ஞானத்தால் தன்னை மறந்திருந்தவனுக்கு குருநாதன்கிருபையால் அஞ்ஞானம் போய், ஞானம் வந்தவுடன் இப்போதுதான் தான் பிரமமானதுபோலத் தோற்றும். [எ - தி] எப்போதுந் தன்வீட்டிற்குள் புதையலிருந்தும் அறியாமையாற் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தவனுக்குக் குறிகாரன் வந்து அந்தப்புதையலை எடுத்துக்கொடுத்தபின் புதிதாய்ப் புதையலுண்டானதுபோலத் தோற்றுவதுபோலும், கட்டைக்குள் தீ முன்னமேயிருந்தாலும் கடைந்து தீயை எடுத்தபின் தீ புதிதாய்ப் பிறந்தது போலத் தோற்றுவதுபோலும், ரயில் ஓடும்போது தூங்கினவனுக்கு விழித்த பின் ரயில் ஓடுவது புதிதாயிருப்பதுபோலுமறிக. (இ - து) அஞ்ஞானுவஸ்தையில் தான் பிரமமென்று அறியாதவனே ஞானுவஸ்தையில் நாம் பிரமமென்று அறிந்து சந்தோஷிக்கிறுனென்பதற்கு யுக்தி:— சுழுப்தியில் சுகமாயிருந்ததை அறியாதிருந்தவனே விழித்தபின் நான் சுகமாய்த் தூங்கினேனென்பதுபோலுமறிக. ஞானம் வருமுன்னமும் நாம் பிரம்மமா யிருந்தோமென்றே அறியலாம். (எ - தி) ரயிலில் போகிறவன் வண்டியில் வெகுநாழிகை தூங்கிபயந்து மலையிலிருந்து விழுகிறதுபோலக் கண்டு விழித்தவன், நாம் படுத்ததுமுதல் விழித்த காலமான இதுவரையில் வண்டியில் சுகமாயிருப்பதுபோலவே தூங்குகிற போது மிப்படியே யிருந்தோமென்று அறிந்துகொள்ளுவதுபோலுமறிக. ஐயா ஆத்மஞானம் வந்தபின், முன் அஞ்ஞானகாலத்தில்கூட நான் பிரம்மமாகவே யிருந்தோமென்று தோற்றுமென்று சொன்னீர்களே, அதெப்படித் தோற்றும்? தரித்திரனுக்குப் பணம் வந்தபின் முன்னமே நான் பணக்காரனென்று தோற்றுமா? பிறவிக்குருடனுக்குக் கண்தெரிந்தபின் முன்னமே நாம் சுலோசனனென்று தோற்றுமா? கன்னிகைக்குப் பக்குவமாகுமுன்னமே தூரம் முலையெல்லாஞ் சுபாவமாக இருந்ததாகத் தோற்றுமா? படித்தபின் வித்துவானவனுக்கு முன்னமே நாம் வித்துவானுக விருந்தோமென்று தோற்றுமா?

சித்தபுருஷனுக்குக் காயசித்தியானபின் முன்னமே காயசித்தியாயிருந்த தென்று தோற்றுமா? காசிமுதலான க்ஷேத்திரங்களைப் புதிதாய்ப் போய்த் தெரிசித்தவனுக்கும், கெங்கைமுதலான தீர்த்தங்களில் புதிதாய் ஸ்நானம் பண்ணினவனுக்கும் முன்னமே இந்தத்தெரிசனத்தையும் ஸ்நானத்தையும் பண்ணியிருந்ததாகத் தோற்றுமா? தேவதைகள் பாற்கடலைக் கடைந்து அமிர்தமெடுத்துச் சாப்பிட்டபின் முன்னமே நாம் அமிர்தஞ் சாப்பிட்டோமென்று தோற்றுமா? ஒரு யாகாதிகர்மங்களைச் செய்து சொர்க்கத்துக்குப் போய்ச் சுகமனுபவிக்கிறவனுக்கு முன்னமே சொர்க்கவாசியென்று தோற்றுமா? ஒரு சிலையிலாசாரியாலடிக்கப்பட்ட கணபதிமுதலான மூர்த்திகள் முன்னமே சிலையிலிருந்ததாகத் தோற்றுமா? பசியோடேயிருந்து பிக்ஷைவாங்கிச் சாப்பிட்டவனுக்கு முன்னமே சாப்பிட்டதாகத் தோற்றுமா? நாரதருடைய கானத்துக்குச்சமானமான கானத்தோடேகூடிய கானத்தைக் கேட்டவனுக்கு முந்தியே இந்தக்கானத்தைக் கேட்டிருக்கிறதாகத் தோற்றுமா? அப்படியிருக்க இந்த பிரஹ்மஞானம் வந்தபின் முன்னமே நாம் பிரஹ்மமாயிருந்தோமென்று எப்படித் தோற்றக்கூடுமென்று நீ கேட்பாயாகில், நீ அறியாமல் இப்படிச் சங்கித்தாய்! கர்மத்தினு லுண்டுபண்ணப்பட்டதெல்லாம் முன்னில்லாமல் மத்தியில் தோற்றிப் பின்னுல் சித்திரம்போல அழிந்துபோகும், சித்தார்த்தபோதகமான ஆத்மஞானமானது போதித்தமாத்திரத்தில் நாம் முன்னமே பிரம்மமாயிருந்தோமென்று தோற்றுவதிற் சந்தேகமில்லை. [எ - தி] தன்னுடைய இரு ஸ்தன்னியத்தினடுவே படுத்திருக்கிற குழந்தையை அறியாத தாயானவள் குழந்தையைக் காணுமென்று அழுதபின், தன் மார்பிலேயே குழந்தை படுத்திருக்கிறதைக்கண்ட அவளுக்கு முன்னமே நம்முடைய குழந்தை நம்முடைய மார்பிலேயே யிருந்ததாக ஞானம்வருமா அல்லது இப்போது தான் புதிதாய்க் குழந்தை வந்ததாகத் தோற்றுமா, நீயே சொல்? இப்படியே தசமன், ராஜகுமாரன், கண்டாபரணமுதலான திருஷ்டாந்தங்களில் ஞானம் வந்தவுடன் தனக்கு முன்னமே அந்தந்த நிலை சுபாவமாகவே சித்தித்திருந்ததாக விளங்குவதுபோலவறிக.

## 182 - வது தரங்கம்.

அநேகங் குருக்களிடத்திற் போகிற சிஷ்யர்களுக்கு ஞானம் வராது:—

இதரமதங்களில் விழாதவனுயிருந்தாலும், ஞானசற்குருவான ஒருவரை நம்பாமல் அநேக குருக்களிடத்தில் போகிறவனுக்கு ஞானம் வாராது. [எ-தி] அநேகர்களிடத்திற் போகிற தாசிக்குப் புத்திரன் உற்பத்தியாகாததுபோலும், அநேக வாத்தியாரிடங்களில் படிக்கிற பிள்ளைக்கு வித்தை வாராததுபோலும், அநேகர்கள் சாகுபடிபண்ணுகிற நிலம் விளையாததுபோலும், அநேகர்களிடத்தில் மருந்துசாப்பிட்டவனுக்கு வியாதி தீராததுபோலுமறிக. ஐயா, அநேகங்

ளுக்குள்ளே யார் எந்தப் பெரியவர்களை வைத்துப் பூஜிக்கிறார்கள் சொல்? இப்படியே வித்தைவந்தவனும் நம் குருநாதனிடத்தில் வந்து வணங்கி ஞானத்தை யடையவில்லையே, அகம்பாவத்தோடேயே கூடியிருக்கிறார்கள். குடும்பத்தைவிட்டு யார் குருநாதனிடத்தில் வந்து கரையேறினார்கள். நினைத்தகாரியம் முடிக்கிறவர்களுக்குள்ளேயும் ஒருவரும் வரக்காணுமையால் இந்த நாலுமில்லாத கபோதிகளே வந்து கடைத்தேறி யிருப்பதைக் கண்டுகொள்க.

184 - வது தரங்கம்.

நம்மைப்போலவே முன்னிருந்த ஞானிகளும் குருமுகமாய் அப்பியாசித்தே ஞானமடைந்தார்கள்:—

நம்மைப்போலவே முன்னேயிருந்த ஞானிகளும் குருகடாக்ஷத்தையும் ஞானுப்பியாசத்தையும் பெற்றே ஞானிகளானார்கள். (எ - தி) நம்முடைய பாட்டன் முதலானவர்களும் நம்மைப்போலவே ஸ்திரீபுருஷாள் சம்போகம் பண்ணியே பிள்ளை பெற்றிருப்பார்களென்று நிச்சயம் வருவதுபோலும், இப்போது கல்தச்சாசாரிமூலமாய்க் கோவில் கட்டுவதுபோலவே பழயகோவில்களும் அந்தக்காலத்திலுள்ள கல்தச்சாசாரியினாலேயே அடித்துவைக்கப்பட்டிருக்கிறதென்று அறிவதுபோலுமறிக. ஐயா, நம்மைப்போலவே முன்னேயிருந்த ஞானிகளும் குருமுகமாகவே ஞானுப்பியாசம்பண்ணி ஞானத்தை யடைந்தார்களென்று சொன்னீர்களே, அப்படி யார் எந்தக்குருவை யடைந்து ஞானத்தைப் பெற்று முக்தியடைந்திருக்கிறார்கள்? அவர்களை எனக்குச் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில் அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:— குந்ததேவரென்கிற ரிஷியானவர் கிரகஸ்தாசிரமத்திலிருந்து சம்சாரந் துக்கமென்று தோன்றி அரண்ணியத்திலிருக்கிற விபண்டகமகரிஷியினுடைய சமீபத்துக்குச் சன்னியாசம்பண்ணிக்கொண்டு போய், பன்னிரண்டுவருஷம் அவருக்குச் சிசுருஷை பண்ணிக்கொண்டிருந்துவரும்போது, ஒருநாள் சமாதியிலிருந்து கண்ணைத்திறந்து இவரை ப்பார்த்து, கொஞ்சம் ஆகாரத்துக்காக கந்தமூலபலங்கள் கொண்டுவரச்சொன்னபடி, இவருங் காட்டுக்குள் சென்று கொண்டுவருகிறதற்காக ஓடிப்போயிருக்கும்போது திரும்ப அவர் கண்ணைமூடிச் சமாதிக்குப் போனபின், இவர் கந்தமூலபலங்களைக் கொண்டுவந்து பார்க்கும்போது, அவர் சமாதியிலிருப்பதைக்கண்டு ஒன்பதுவருஷம்வரை தினந்தோறும் கந்தமூலபலங்களைக்கொண்டுவந்துவைத்துக் காத்திருக்கும்போது, ஒருநாள் சமாதியைவிட்டுக் கண்ணைத்திறந்தவுடன் அந்தக் கந்தமூலபலங்களை இவர் கொடுக்க அவர் அதை வாங்கிச்சாப்பிட்டபின், தாகத்துக்குத் தீர்த்தம் வேண்டுமென்று கேட்டவுடன், இவர் தீர்த்தங் கொண்டுவரப் போயிருக்கும்போது, மறுபடி சமாதிக்குப் போய்விட்டதால் இவர் தீர்த்தங் கொண்டுவந்து வைத்துக்கொண்டு பதினைந்துவருஷமானவுடன் கண்ணைவிழித்து இவர் வைத்திருந்த

தீர்த்தத்தை வாங்கிச்சாப்பிட்டுவிட்டு, இவரைப் பார்த்து உமக் கென்னவேண்டு மென்று கேட்டவுடன், இவரெனக்கு இவ்வுலகத்தில் ஈசுவரானந்தம்வரை ஒன் றும் வேண்டுவதில்லை. பிரஹ்மஞானத்தினாலேயே முக்திவருமென்று சுருதி ஸ்மிருதிகளெல்லாம் கோஷிக்கிறபடியால் எனக்கு ஜனனமரண துன்பங்களை நிவர்த்திக்கிற ஆத்மஞானத்தை அனுக்கிரகிக்கவேண்டுமென்று கேட்டவுடன், அவர் இவரைப் பார்த்துச் சகலமும் சச்சிதாநந்தமான பிரஹ்மமென்று சொன்னதும், இவர் அதென்னத்தினால் சச்சிதாநந்தமாக விருக்கிறதென்று சந்தேகப்பட்டுக் கேட்குமுன் அவர் திரும்பச் சமாதிக்குப் போய்விட்டதால் இவர் சந்தேகத்துடன் சந்தாபப்பட்டுக்கொண்டிருக்கும்போது, நாரதமகரிஷி வந்திவரைப் பார்த்து என் விசனித்திருக்கிறீரென்று கேட்டவுடன், அவர் இவரைப் பார்த்து நடந்த சங்கதிகளைத் தெரிவித்தவுடன், அவர் இவரைப் பார்த்து "நீர் பெரியமனுஷன்பெண்ணை பெண்டாகக்கொண்டவனுக்கு அவள் சமயத்திற்குக் காக்கவேண்டுவதுபோல இந்த அசம்சத்தியிலிருக்கிற இவரை யடைந்த நீர் இவரைவிட்டு உம்முடைய பத்தரமூலமென்கிற கிராமத்திலிருக் கிற உபசாந்தயோகி சத்துவாபத்தியிலிருப்பதால் அவரிடத்திற்குப் போ" என்று சொன்னபடி இவரும் அவரிடத்தில் வந்து, நானார்? இந்த ஜெகத் தெப் படியுண்டாச்சுதென்று கேட்டவுடன், நீ பிரம்மம், இந்த ஜகத்துச் சொப்பனம் போலப் பிராந்திமாத்திரமென்று உபதேசித்தபடி அவருந் தன்னையறிந்து முக்த ரான கதையையறிக.

## 185 - வது தரங்கம்.

*அபக்குவச்சித்தனுக்குச் சமாதியும், பக்குவச்சித்தனுக்கு விசாரமும்:—*

கபடம், ஆசை, அகம்பாவமுதலான அபக்குவச்சித்தனுக்கு அஞ்ஞானத் தை நிவர்த்திசெய்ய நிர்விகற்பசமாதியினாலேயே கூடும், விசாரணைமாத்திரத்தில் கூடாது. பக்குவச்சித்தனுக்கு அஞ்ஞானத்தை நிவர்த்திசெய்ய விசாரணைமாத் திரம் போதும். [எ - தி] மிகுந்த அழுக்கேறின வஸ்திரத்தை வண்ணானிடத் திற் போடுவதுபோலும், தூசியுடன்கூடிய வஸ்திரத்தைத் துவைப்பதுபோலும்; உவர்ப்பூமிக்கு உரம்வைப்பதுபோலும், காஸ்மீரகண்டத்திற்குக் கலப்பையினை லுழுவதுமாத்திரம் போதும்போலும்; ஈரவிறகைக் கீறிக் காயப்போட்டெரிப் பதுபோலும், காய்ந்த சுள்ளிவிறகை தீயிலெரிப்பதுபோலுமறிக. (இ - து) சாதுக்களோடே பிரம்மவிசாரம்பண்ணுவது பத்துப்பேர்களோடே மிருஷ் டான்னபோஜனஞ் செய்வதுபோலும், தனித்துச் சமாதி செய்வது கதவை யடைத்துத் தான்மாத்திரம் க்ஷீரான்னத்தைச் சாப்பிடுவதுபோலுமறிக. ஐயா, அபக்குவச்சித்தனுக்குச் சமாதிபண்ணவேண்டுமென்றும் பக்குவச்சித்த னுக்கு விசாரமாத்திரத்தாலேயே ஆத்மஞான முண்டாகுமென்றுஞ் சொன்னீர் களே, பஞ்சதசியில் முக்கியாதிகாரியாயுள்ளவனுக்குச் சமாதியினால் அகங்காரத்

தை நிசேஷமாய் நாசம்பண்ணினபின், சத்துவாந்தக்கரண விருத்தியானது பரம ஸூக்ஷ்மமான பிரம்மாகாரத்தை யடைகிறது. அச்சமயத்தில் விருத்திக்கு அத்தியந்தம் லயமில்லாததால் அந்த அவஸ்தையை சுழுப்தியென்றுஞ் சொல்லக்கூடாது, சங்கற்பங்களுடைய பாவமில்லாததால் ஜாக்கிராவஸ்தையென்றுவது சொப்பனவஸ்தையென்றுவது சொல்லக்கூடாது. அப்போது தேகமுங் கீழே விழாமல் அசைவற்றிருக்கும், அப்படித் துவிதமுந் தோற்றுமல் நித்திரையுமில்லாமலிருக்கிற காலத்திற் காணப்படுகிற ஆனந்தம் யாதொன்றுண்டோ அந்தச் சுகமே பிரம்மானந்தமென்றுஞ் சொல்லிய யோகானந்தத்திற்குப்பின் ஆரம்பித்த ஆத்மானந்தத்தில் விஷயானந்தம் வாசனுனந்தம் சுழுப்தியானந்தங்களுக்கு விலக்ஷணமான முக்கியானந்தத்தை முக்கியாதிகாரி யடையட்டும், இனி மூடனுயிருக்கிறவனுக் கென்னகெதியென்று கேட்ட சிஷ்யனுக்குக் குருசொல்லுகிறதாவது, மூடர்கள் அவர்களுடைய புண்ணியபாப கர்மவசத்தால் அநேக கோடி ஜனனமரணத்தை யடையட்டும், நமக்கென்ன ஆகவேண்டியதென்று சொன்னதற்குச் சிஷ்யன் நீங்கள் தயாளுவானதால் மூடர்களையும் காப்பாற்ற வேண்டுமென்று பிரார்த்தித்தபின், அந்தர்முகமூடனுக்கு ஆத்மானுத்ம விசார மார்க்கத்தால் கௌண மித்தையா கர்த்தாத்மாக்களை நேதிபண்ணித்தள்ளி முக்கியாத்மாவான சாக்ஷியே அதிப்பிரிய வஸ்துவென்று காண்பிக்கப்பட்டிருக்கிறபடியால், தாங்கள் இப்போது அதற்கெதிரிடையாய்ச் சொன்ன காரணமென்னவென்றால்,—அங்கே சொன்னது விசாரத்தோடேகூடிய ஸூக்ஷ்மபுத்தியான முக்கியாதிகாரிக்கு ஆனந்தவனுபவத்தைக்குறித்துச் சொன்னதாகையால், தியானதீபிகையில் வெகு வியாகூல சித்தர்களுக்கு விசாரத்தால் தத்துவ ஞான முண்டாகாது, பிரஹ்மத்தியானமாகிற யோகமே அவர்களுக்கு முக்கியம். அதனுல் புத்தியிலிருக்கிற கெர்வம் நசிக்குமென்றும், முக்கியாதிகாரிக்கு அஞ்ஞானமாத்திரத்தை நிவர்த்திப்பதற்கு சாங்கியமென்ற விசாரத்தினுலேயே அதிசீக்கிரத்தில் ஆத்மசாக்ஷாத்கார ஞானமுண்டாகுமென்றும், அதை மறந்தாலும் அவனுக்குக் குறைவில்லையென்றும், யோகிக்கு மறந்தால் குறைவென்றும் சொல்லியதை திருஷ்டாந்த மூலமாய் அறிவிக்கிறோம். அதாவது, மங்கிலியத்தோடேகூடி அலங்காரஞ் செய்துகொள்ளுவதும், மங்கிலியமில்லாமல் அலங்காரஞ் செய்துகொள்ளுகிறவளினும் மங்கிலியமாத்திரத்தோடே கூடியவளுக்கு சுமங்கிலியென்பது சித்திப்பதுபோலவறிக.

## 186 - வது தரங்கம்.

முமுக்ஷுவுக்குமட்டும் சற்குருவின் அபேக்ஷை, மற்றவர்களுக் கில்லை:—

ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் குருவின் உபதேசத்தின் அபேக்ஷை தேவையில்லை, முமுக்ஷுவுக்குமட்டுந் தேவை. [எ - தி] சேறுக்கும் சுத்தஜலத்துக்கும் தேற்றும்பொடி வேண்டாமல் கலங்கின ஜலத்துக்குமட்டும் வேண்டுவது

போலும், செத்தவனுக்கும் காயசித்தியானவனுக்கும் மருந்து வேண்டாமல் வியாதிக்காரனுக்குமட்டும் அது வேண்டுவதுபோலும், தூரமாகாதவளுக்கும் பிள்ளைகளெல்லாம் பெற்று தூரம் போனவளுக்கும் புருஷபோகம் வேண்டா மல் அது உள்ளவளுக்குமட்டும் மேற்சொல்லியது வேண்டுவதுபோலும், நல்ல இருட்டிற் போகிறவனுக்கும் வெளிச்சத்திற் போகிறவனுக்கும் பழுதைப்பாம் பின் பயமில்லாமல் மசண்டவேளையிற் போகிறவனுக்குமட்டும் அந்தப்பயம் வந்திருப்பதை நிவர்த்திக்க வேண்டுவதுபோலவறிக. [இ - து] 'ஆலமர் கடவு ளானை அவைக்கெலாம் சாக்ஷி நீயே' என்றிப்படிச் செய்யப்படுகிற சத்தியம் சுத்த ஞானிக்கும் அஞ்ஞானிக்குமில்லை, கொஞ்சம் அறிந்தும் அறியாதவனுக் காகவே. [எ - தி] தட்டியெழுப்புகிறது விழித்திருக்கிறவனுக்குமில்லை, செத் தவனுக்குமில்லை, தூங்குகிறவனைக்குறித்தென் றறிவதுபோலவறிக. [இ-து] சம்பளம் வாங்குகிறவனும், கற்புடைய மங்கையும், பிரபு பர்த்தாக்களுடைய சொற்படி நடக்கவேண்டுமானால் முமுக்ஷுக்களுக்குக் குருநாதன் ஆக்கினையைக் கடக்கக்கூடாதென்பதில் கேட்கவேண்டியதென்ன? ஆகையால் அப்படிக் கடக் கிறவனைக்காட்டிலும் முட்டாள் யாருமில்லையென்றறிக. [இ - து] வேதாந்த சாஸ்திரம் ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் வேண்டுவதில்லை,—குழந்தைக்கும் கிழவனுக்கும் ஸ்திரீபோகம் வேண்டாததுபோலும், குருடனுக்கும் வெள் ளெழுத்தில்லாதவனுக்கும் மூக்குக்கண்ணாடி வேண்டாததுபோலுமறிக. ஐயா, அஞ்ஞானிக்கும் ஆத்மஞானிக்கும் குருவும், சிரவண, மனன, நிதித்தியாசன, சமாதிரூபமான விசாரமும் வேண்டியதில்லை, முமுக்ஷுவுக்கே குருவுஞ் சாஸ் திரவிசாரமும் வேண்டுமென்று சொன்னீர்களே, அப்படிச் சொன்னதற்குக் காரணமென்னவென்றால்; இதென்ன சங்கையென்று சங்கிக்கிறாய்! தீப்பட் டெரியாத வீட்டுக்கும் தண்ணீர்விட்டணைக்கத்தேவையில்லை, எரிந்து சாம்ப லாய்ப்போன வீட்டுக்கும் தண்ணீர்விட்டணைக்கத்தேவையில்லை, தீப்பிடித்தெரி கிற வீட்டுக்கே தண்ணீர்விட்டணைக்கப் பிரயத்தினம் பண்ணவேண்டுவதுபோ லும்; அரண்மனையிலிருக்கிற அரசனுக்கும் அரண்ணியத்தில் குழைகளைக்கட்டிக் கொண்டிருக்கிற வேடர்களுக்கும் திருடர்பயமில்லாமற் சொற்பதிரவ்விய மெடுத்துக்கொண்டு வழியில் நடக்கிறவனுக்குக் கள்ளர்பயமுண்டாவது போலும்; ஆனைக்கும் பூனைக்கும் வஸ்திரம் வேண்டாமல் மனுஷியர்களுக்கு மட்டும் வஸ்திராபேக்ஷையிருப்பதுபோலும்; மலடிக்கும் பிள்ளைபெற்றுச் சீராட்டுகிறவளுக்கும் மருத்துவச்சியின் அபேக்ஷையில்லாமல் பிரசவவேதனை யெடுத்தவளுக்குமட்டும் மருத்துவச்சி வேண்டுவதுபோலும்; இவிடத்திலும் அஞ்ஞானிகள் தேகமே நான், ஜகத்து சத்தியமென்றுமிருப்பதால், அவர்களுக் கும் சற்குருவும் சாஸ்திரவிசாரமும் தேவையில்லை. ஆத்மஞானம் வந்தவ னுக்குக் கிருதகிருத்தியத்துவமும், துக்கநிவர்த்தியும், சர்வகாமாப்தியும் வந் திருப்பதால் அவனுக்கும் யாதொரு அபேக்ஷை இல்லையென்று அறிந்து கொள்க.

187 - வது தரங்கம்.

ஆதிகாரிகளின் தன்மை:—

கிருதகிருத்தியர்களான விஸ்வாமித்திரர், வசிஷ்டர், நாரதர், துருவாசர் முதலானவர்களை ஈஸ்வரன் நலஞ்சொல்லி உலகத்துக்குபகாரமாக ஆதிகாரிகளாய் நேமித்து வைத்திருக்கிறார். [எ - தி] முந்திச் சர்க்கார்உத்தியோகத்திலிருந்து யோக்கியர்களாய் ராஜிநாமாக்கொடுத்துப் பென்சன் வாங்கிக்கொண்டு சொஸ்தர்களாயிருக்கிற பெரியமனுஷர்களை கெவுனர், லோக்கல்பண்டு முனிசிபலாபீஸ்முதலான ஜனோபகாரங்களாயிருக்கிற காரியங்களை ஆலோசனைசெய்து முடிப்பதற்கு சம்பளமன்றியில் மெம்பரென்றும், கம்ஷனர்களென்றும் நேமித்து வைத்திருப்பது போலவறிக. ஐயா, ஆதிகாரிகளான நாரதாதிரிஷிகளால் இந்த ஜகத்துக் குபகாரம் பண்ணப்படுகிறதென்று சொன்னீர்களே, அப்படி யென்ன உபகாரம் பண்ணப்பட்டிருக்கிறது. அவைகளில் கொஞ்சம் தெரிவிக்கவேண்டுமென்று கேட்பாயாகில், இவ்வுலகத்தில் அவர்கள் செய்திருக்கிற உபகாரங்களை யாரால் அளவிடக்கூடும்? ஒரு விசுவாமித்திரமகரிஷியானவர், இவ்வுலகத்தில் ஈசுவரனால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிற பதார்த்தங்களுக்கெல்லாம் பிரதியாக உண்டுபண்ணப்பட்டிருக்கிற பதார்த்தங்கள் அனந்தம். அவைகளுக்குள்ளே பசுக்களுக்குப் பிரதியாக எருமைகளையும், குதிரைக்குப் பிரதியாகக் கோவேறுகழுதைகளையும், சிங்கத்துக்குப் பதிலாகச் சுவானங்களையும், அரசமரங்களுக்குப் பதிலாகப் பூவரசமரங்களையும், புரசமரத்துக்குப் பதிலாக முள்ளுமுருங்கைமரம் முதலானவைகளையும் உண்டுபண்ணி யிருப்பதுபோல சகல ஜகத்தையு முண்டுபண்ணியிருப்பதாலேயே சகல ஜீவர்களும் பிழைத்துக் கொண்டிருப்பதாலும்; இப்படியே அகஸ்தியமகரிஷியால் சிவனுடைய கல்யாண காலத்தில் சகலரும் வடக்குத்திக்கிலிருக்கிற கைலாசபருவதத்திற்குப் போன காலத்தில் பூமி தலைகீழாய்ப் போனதைக்கண்ட சிவன், அகஸ்தியரைத் தெற்குத்திக்குக்கோடிக்குப் போகச்சொன்னபடி, அவரும் போய்ப்பூமியைச் சமம் பண்ணிவைத்ததுந்தவிர விந்தையன் பருவதருபமாக வளர்ந்து சூரியசந்திராதிகளைத் தெற்கே வரவொட்டாமல் மறைத் திருந்தனன். இந்த அகஸ்தியர் அந்த விந்தையனுடைய கெருவத்தைப் பங்கம்பண்ணிக் கல்லாகப்போகும்படி செய்ததுந்தவிர, துர்வாசமகாரிஷியினிடத்தில் அஜாமுகியென்பவள் போய் சம்போகஞ்செய்து பிறந்த இல்வலி, வாதாபிகள், இருவரும் ரிஷிவேஷங்கொண்டு தினந்தோறும் இரண்டிரண்டு ரிஷிகளைப் பிராமணார்த்தத்திற்குக் கூட்டிக்கொண்டு போய், வாதாபியை ஆடாகச்செய்து அந்த ஆட்டுமாமிசத்தை இந்தரிஷிகளுக்குச் சாப்பிடும்படி போட்டு எழுந்திருந்தபின், இல்வலி, ஓ! வாதாபி என்று கூப்பிட்டவுடன் அவன் இருவர்களுடைய வயிற்றைக்கிழித்துக்கொண்டு வெளியில் வந்து அவ்விரண்டு ரிஷிகளையும் இவ்விரண்டுபேர்களும் வெகுநாளாய்ச் சாப்பிட்டுக்கொண்டு வரும்போது, ஒருநாள் ஒருவரும் அகப்படாமல் அகஸ்தியர் தட்

டுப்பட்டதில் அவரையும் இவர்கள், எங்கள் தாயாருக்கு திவசமானதால் பிராம் மணார்த்தத்துக்கு நீங்கள் வரவேண்டுமென்று கூட்டிக்கொண்டுபோய் வழக்கப் படி இவருக்குச்சாப்பாடு பண்ணிவைத்ததில், இவர் வயிற்றுக்குள் கடபட வென்று சேஷ்டிப்பதைக்கண்டு ஒரு மந்திரத்தால் வயிற்றுக்குள்ளிருக்கிறதெல் லாம் சாம்பலாய்ப் போகட்டுமென்று தடவினபடி போய்விட்டதால், இல்வலி, 'ஏ ! வாதாபி' என்று கூப்பிட்டவுடன், இவர் முன்னிருக்கிற இரண்டெழுத்தும் போய் மூன்றுவது எழுத்தாக ஆய்விட்டானென்று சொன்னதும், அவன் இவ ரைக் கொல்லவந்ததில் அவனையும் பஸ்பமாய்ப்பண்ணின கதையை யறிக.

## 188 - வது தரங்கம்.

குருகிருபையுள்ள சுத்த மனதில் ஆத்மா காணப்படும்:—

பிரம்மம் அதிர்சியமாயிருந்தாலும் குருகிருபையோடேகூடிய சத்துவ விருத்தியில் திருசியமாகும். [எ-தி] ராகு அதிர்சியனானாலும் நிர்மலாகாசத்தோ டேகூடிய பருவசந்திரனிடத்திற் பிரகாசிப்பதுபோலும், மரணகாலத்தில் எமன் திருசியமாவதுபோலுமறிக. (இ - நு) சம்சாரதுக்கத்தைச் சற்குருகிருபை யால் தாண்டவேண்டுமே தவிர கர்மத்தால் தாண்டக்கூடாது. (எ - தி) கடலைக் கடக்கக் கப்பலிலேறவேண்டுமே தவிர கல்லைக் கட்டிக்கொண்டு கரையேற முடியாததுபோலவறிக. ஐயா, சமுசார சமுத்திரத்தைக் குருகிருபையாலே யே தாண்டவேண்டும், மற்றக் கர்மங்களால் தாண்டக்கூடாதென்றும், கடலைத் தாண்டுவதற்குப் புகைக்கப்பலை வைத்திருக்கிற துரையினுடைய தயவால் அந் தத்திடமான கப்பலிலேறி சமுத்திரத்தைத் தாண்டலாமே ஒழிய கல்லைக் கட்டிக்கொண்டு சமுத்திரத்தி லிறங்கினவன் எப்படிக் கரையேறமாட்டானே அப்படிக் கர்மத்தால் கரையேறமாட்டானென்று சொன்னீர்களே, வாசிட்டத் தில் கற்கடியென்ற இராக்ஷசி முதலில் ஆசையோடே ஆயிரம்வருஷம் தபசு பண்ணி பிரம்மாவினிடத்தில் வரங் கேட்டதாவது,—ஊசிவடிவத்தை எடுத்துக் கொண்டு சகலமான பிராணிகளுடைய சரீரத்திற்குள் பிரவேசித்து ரத்தமாம் சங்களைச் சாப்பிடவேண்டுமென்று வரங்கேட்டபடி அப்படியே கொடுத்துவிட் டுப் போனபின், அவளும் அப்படி வெகுகாலம்வரையில் ஊசி வடிவத்தை எடுத்துக்கொண்டு சகல பிராணிகளுடைய இரத்த மாம்சங்களைச் சாப்பி ட்டுக்கொண்டு வந்ததிலும் திருப்தியாகாமல் அவளுக்குத் தன்னுக்குள் ளேயே தன்னடத்தை கெட்டதென்றும், 'ஊன் இறைச்சிகளைச் சாப்பிட வேண்டுமென்கிற இச்சையினாலல்லவா நமக்கிவ்வளவு அற்பமான ஊசிவடிவத் தை எடுக்கவேண்டியதாய் வந்தது' எனத் தன்புத்தியை இகழ்ந்து, இனி நமக்கு விஷயபோகம் வேண்டாமென்று வைராக்கியத்தை யடைந்து முன்போலத் திரும்ப ஆயிரம்வருஷம் நிராசையோடே உக்கிரமான தபசைச் செய்தபின் பிரம் மா திரும்ப இவளிடம் வந்து இவளைத் தபசிலிருந்தெழுப்பி, நீ ஆத்மஞானத்

தை யடைந்ததால் ஜீவன்முக்தி திசையிலிருந்து முன்போலவே ஆகாரங்களைச் செய்துகொண்டு வா, அதில் யோக்கியர்களைத் தெரிந்துகொண்டு அவர்களை இம்சியாமல் அயோக்கியர்களைமட்டும் இம்சித்துக்கொண்டு வரும்படி உத்தரவு கொடுத்தபடி அவளுமப்படியே நடந்து வரும்பொழுது, ஒருநாள் ராத்திரியில் நகர்சோதனைக்கு வந்த ராஜமந்திரிகளைக் கண்டு, அவர்களை இவள் அநேக சங்கைகளைச் செய்தபின் அவைகளுக்கெல்லாம் அவர்கள் சமாதானம் சொன்ன பின், இவர்கள் ஞானிகளென்று அவளறிந்து சிநேகிதமாயிருந்தார்களென்று சொல்லியிருக்கும்போது, தாங்கள் குருவன்றியில் ஞானம் வராதென்று எப்படிச் சொன்னீர்களென்றால்,—அந்தக் கற்கடிக்கும் விஷயத்தில் வைராக்கியம் திடமாயுண்டாய் சித்த ஏகாக்கிரத்துடன் நிஷ்காமமாய் ஆயிரம்வருஷமான பின்னும் பிரம்மாவாகிய குரு வந்து ஜீவன்முக்தியாக ஆய்விட்டாயென்று சொன்னதுந்தவிர சித்தத்திலுண்டான சம்சயங்களையும் அந்த ராஜமந்திரிகளாகிற குரு மூலமாய்த் தெளிந்து அவர்களுக்கு கைம்மாறுகூடக் கொடுத்திருப்பதால், குருவன்றியிலொருவருக்குஞ் சுலபமாய் ஞானம் வாராதென்றறிக.

## 189 - வது தரங்கம்.

ஞானியினுடைய இஷ்டமே மேல்:—

ஜெந்துக்களுக்குள்ளே நரஜன்மம் துர்லபம். [எ - தி] ஜனங்களுக்குள்ளே ராஜாவாவது துர்லபம்போலவறிக. [இ - து] தேவஜன்மம் சிரேஷ்டமாயிருக்கும்போது, மனுஷஜென்மத்தைத் துர்லபமென்று சொன்ன கருத்தேதென்றால், பிரஹ்மஞானத்தை இதில் சுலபமாயடையலாம். [எ - தி] இராஜஸ்திரீயைக் காட்டிலும் ஏழைவீட்டிலிருக்கிற பெண்ணுக்குப் புருஷனோடே போக சுகம் எதேஷ்டமாய்க் கிடைப்பதுபோலும், வண்ணானுக்குக் குதிரையைக்காட்டிலும் கழுதையே அவனுடைய பொதியை ஏத்துவதற்கும், விலை லெகுவாயும், தீனிச்செலவு ஒன்றுமில்லாமலிருப்பதால் அவனுக்கது சிலாக்கியமாயிருப்பது போலுமறிக. [இ - து] இதிலும் புருஷஜென்மம் மேல். [எ - தி] நிசிவேளையில் பறையன் எந்தக்காட்டிலும் போகலாம், ஸ்திரீ பகலில் தனியாய் ஊருக்குள் சஞ்சரித்தாலும் பயம் வருவதுபோலவென்றறிக. ஐயா, சகலமான எழு வகைப் பிறவிக்குள் தேவப்பிறவி சிலாக்கியமாயிருக்கும்போது ஜந்துக்களுக்குள்ளே மனுஷஜன்மஞ் சிலாக்கியமென்றும், அதிலும் புருஷஜன்மஞ் சிலாக்கியமென்றும், அதிலும் பிராம்மணஜன்மஞ் சிலாக்கியமென்றும், அதிலும் வேதோக்த தர்மத்தில் சிரத்தையுண்டாவது துர்லபமென்றும், அதிலும் சாஸ்திர விற்பத்திஞான முண்டாவது துர்லபமென்றும், அதிலும் ஆத்மானாத்ம விவேகமுண்டாவது துர்லபமென்றும், அதிலும் அனாத்மாக்களில் நானென்கிற புத்தி நிசேஷமாய்ப் போய் ஆத்மாவே நானென்கிற சுவானுபவமுண்டாவது துர்லபமென்றும், அதிலும் பிரஹ்மமே தானாயிருக்கிற ஸ்திதியே முக்தியான

தால், அந்த முக்தியானது நூறுகோடி ஜன்மங்களில்செய்த புண்ணியங்களன்றி யில் லபிக்கமாட்டாதென்றும் ஆசாரியசுவாமிகள் விவேகசூடாமணியில் சொல்லியிருக்கிறார்களே இந்தச்சந்தேகத்தை நிவர்த்திக்கவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரம் சொல்லுகிறோம் கேள்.—தேவலோகத்தில் ஸ்திரமாயிருக்கிற இந்திரன்முதலிய தேவதைகள் உலகபாலாளானதால் அவர்களுக்கு அந்த ஜோலியே பார்க்கமுடியாமல் ஊரூருக்கும் அசிஸ்டண்டுகளாக பிரம்மதேவர் நவப்பிரஜாபதிகளை சிருஷ்டிக்குச் சாதனமாக வைத்துக்கொண்டாரென்றும், மகாவிஷ்ணுவானவர் ரக்ஷிக்கிறதற்குச் சாதனமாக இந்திராதி தேவதைகளையும், விஷ்வக் சேனாதிகணங்களையும், நியூசுபேப்பர் விசாரிப்பதற்காக நாரதாதி ரிஷிகளையும் கற்பித்துக்கொண்டாரென்றும், சிவனானவர் சம்ஹாரகிருத்தியத்துக்காக எமன், மிர்த்தியு, காலன், தூதன், சித்திரகுப்தன் முதலானவர்களைக் கற்பித்துக்கொண்டாரென்றும், இப்படியெல்லாஞ் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருப்பதால், அந்தத் தேவலோகங்களிலிருக்கிற தேவர்களுக்கு பிரம்மவிசாரம்பண்ண எங்கே சாவகாசமிருக்கிறது? ஆனால் கொஞ்சம் இடைவெளியாயிருக்குஞ் சமயத்தில் பிரம்மவிசாரம் பண்ணலாமேயென்றால் அசுராதிகளுடைய பீடைகள் அறுபதுநாழிகையுமிருப்பதால், அதற்குப் பயந்துகொண்டு இமைகொட்டக்கூட சாவகாசமில்லாததால் அனிமிஷர்களென்று பெயரையும் பெற்றிருக்கிறார்கள். மேலும் ஜெகத்துப் பொய்யென்றறிகிறதற்காகவே சுருதியானது சொப்பனாவஸ்தையைக் கற்பித்து சொப்பனம்போல இந்த ஜெகத்தைப் பாரென்று சொல்லியிருப்பதால், அப்பேர்ப்பட்ட சொப்பனாவஸ்தையே அவர்களுக்கில்லாதிருக்கும்போது ஜெகத்துப் பொய்யென்ற ஞானம் எப்படி வரப்போகிறது? அப்படியே ஆத்மாவானவர் சாக்ஷி அழிவற்றவரென்றும் போதிப்பதற்காகவே சுழுப்தியை யுண்டுபண்ணியிருப்பதால், அந்தச் சுழுப்தியில்லாத அவர்களுக்கு சாக்ஷித்துவஞானந்தான் எப்படி வரப்போகிறது? அப்படி யிருக்கும்போது இங்கேயிருந்து புண்ணியம்பண்ணிப் போயிருக்கிற ஜீவர்களுக்குப் போகானுபவஞ் செய்யக் காலஞ் சரியாய்ப்போவதால், இவர்களுக்கும் ஞானம் வரமார்க்கமில்லை. ஆகையால் நரஜன்மத்திலேயே ஞானம் வருமென்றறியத்தக்கது.

## 190 - வது தரங்கம்.

குருகிருபையில்லாத மனது ஆத்மாவில் லயிப்பது பிரயாசம், அஃதுள்ள மனதுக்கு அஃது சுலபம்:—

ஆத்மாவிலுண்டான மனது ஆத்மாவிலேயே லயிப்பது பிரயாசமா? சுலபமா வென்றால், இரண்டுவிதமாயுஞ் சொல்லக்கூடியதாயிருக்கிறது. மலையிலிருக்கிற மரத்திலுண்டான சருகுகள் காற்றினால் அருவியில் விழுந்து நதியிற்போய்ச் சமுத்திரம்வரை கீழே போயிருக்கிற அந்தச் சருகு மலை

யினுச்சியிலிருக்கிற மரத்தின் கொப்பில் எதாப்பிரகாரமாய்ப் போயொன்றுதல் எப்படி அசாத்தியமோ, அப்படிப் பிரம்மமாகிற மலையிலிருக்கிற அறிவாகிற மரத்திலுண்டான மனசாகிற சருகு கர்மமாகிற காற்றினால் சூக்ஷம சரீரத்திலிருக்கிற இந்திரியங்களாகிற அருவியில் விழுந்து, ஸ்தூலசரீரமாகிற நதியிலும் வந்து விழுந்து, அந்தமூலமாய் விஷயமாகிற சமுத்திரத்திற் கிடக்கிற மனசாகிற சருகு சர்வோன்னதமான அறிவாகிற மரத்திற் சேருவது பிரயாசமென்றறியத்தக்கது. ஆனால் லகுவென்பது எப்படியென்றால், நம்முடைய குருநாதனாகிற கெருடன் நம்முடைய மனசாகிற சருகை விஷய சமுத்திரத்திலிருந்து அனுக்கிரகமாகிற மூக்காலெடுத்துக்கொண்டு தான் வசிக்கிற சித்ரூபமரத்தில் ஐக்கியக்ஞானமாகிற பசையை வைத்து மனசாகிற சருகை அதோடே ஒன்றுசேர்த்து வைப்பதால், இனி எவ்வளவு கர்மக்காற்றடித்தாலும் மனசாகிற இலை அம்மரத்தைவிட்டு நழுவாதிருப்பதால், அப்படிச்செய்துகொண்டிருக்கிற நம் குருநாதனை வந்து சரணாகதிபண்ணின பேர்களுக்குமட்டும் சுலபமென்றறியத்தக்கது. சங்கை:—ஜன்மதுக்கம் போய் அழியாத ஆனந்தமடைவதற்கு நம்முடைய குருநாதனிடத்திலேயே போகவேண்டுமென்று நீர் சொன்னது பக்ஷபாதமாயிருக்கிறது. ஏனென்றால், ஈசுவராதிகளென்ன, மற்றத் தேவர்களென்ன, இவ்வுலகத்தின்கணுள்ள மற்ற குருக்களென்ன, இப்படி அநேகர்கள் கரையேற்றிவைக்கக் காத்திருக்கும்போது நீர் சொன்னது கூடாதென்றால்,—பவவியாதிவந்தவன் ஈசுவரனாகிய ஷாப்புக்கடைக்குப் போனாலும் நாம் கேட்ட விஷயசரக்கை நாம் கர்மமாகிற காசைக்கொடுத்தமட்டுக்கும் விஷயமாகிற சரக்கைக் கொடுப்பரேதவிர நம்முடைய பவவியாதியைக் கண்டிக்கிற ஞானவுஷதத்தைக் கொடுத்து காப்பாற்றார். அங்கேயே அப்படியிருக்கும்போது அந்தக்கடையில் சரக்குகளை வாங்கிவைத்திருக்கிற தேவர்களாகிற சில்லறைக் கடைகளிலும், மேற்படிபோல கீழ்ப்படியுமென்றறியத்தக்கது. மற்ற இவ்வுலகத்திலுள்ள தொய்தக்குருக்கள் கஞ்சாவைச் சாப்பிட்டு மயங்கிக்கிடக்கிறவனுக்கு மயக்கந்தெளிய ஒருகுடஞ்சாராயத்தைக் கொடுப்பதுபோல துவைதமாகிற கஞ்சாவைச் சாப்பிட்டு மயங்கிக்கிடக்கிறவர்களுக்கும் பசுபதிபாசமென்ற சாராயங்களைக் கொடுப்பதால் அவர்களாலும் பிரயோஜனமில்லை. வேதாந்தவிசாரம் பண்ணுகிற மற்றக் குருக்களிடத்திற் போனாலும் அவர்களும் மருந்தைச் சொல்லுகிற வாகடசாஸ்திரங்கள் நிறையாய் அடுக்கிவைத்திருக்கிறவர்கள்போல இந்தச் சாஸ்திரங்களையும் அடுக்கிவைத்திருக்கிறார்களேதவிர தாங்களும் இந்த வேதாந்த அவுஷதத்தைச் சாப்பிடாமலும், மற்றவர்களுக்கும் இதைக் கொடாமலும், கர்மம் பக்திகளாகிற தொய்த அபத்தியங்களைப் பண்ணிக்கொண்டிருப்பதால் அவர்களிடத்திற் போவதிலும் பிரயோஜனமில்லை. ஆகையால் நம்முடைய குருநாதனாகிற சித்தன் இவ்வுலகத்திலிருக்கிற பவவியாதியால் தபிக்கப்பட்டு சரணாகதமாய் வந்தடைந்த பேர்களை கைம்மாறன்றியில் கரையேற்றிவைக்கிறேமென்ற துவஜங்

கட்டிக்கொண்டு, ஒருகாசு செலவன்றியிலும் ஒருகரணங்களுக்கும் வருத்தமன்றியிலும் பிரஹ்மஞான குளிகையை இராப்பகல் பாராமல் அனுக்கிரகித்து வருவதைப் பிரத்தியக்ஷமாய்ப் பார்க்கலாமே கண்தெரியாதவர்களாயிருந்தாலும், காதினாலாவது கேட்டுத் திருப்தியடையலாம். ஆனதால் நாம் சொன்னது சரியோ சரியில்லையோவென்பதை நீயே யோசித்துப்பார். [இ-து] இப்போது சுருதி யுக்தி அனுபவங்களோடே அனுக்கிரகிக்கிற நம் குருநாதனுடைய சன்னிதியில் நான் பிரஹ்மமென்று துணியாதவனுக்கு ஒருக்காலுந் துணிவு வாராது. [எ - தி] அஸ்வினிதேவதைகள் வந்து வியாதிக்காரனுக்கு திவ்வியகுளிகையும், அமிர்தான்னமும், திவ்வியதைலமும், சேர்த்துக் கொடுக்கும்போதே அவைகள் உள்ளே இறங்காமற் போய்விட்டதானல் மறுபடி யெங்கே போய்ப் பிழைக்கப்போகிறானென்பதுபோலவறிக.

## 191 - வது தரங்கம்.

வெளியில் ஒரு உருவத்தை வைத்து மூர்த்தித்தியானம் பண்ணுகிற ஒருவனுக்கு ஈசுவரனே அவனுடைய தியானகாலத்தில் வந்து நீயே பிரஹ்மமென்று சொல்லவும், அந்தப்படி அதிலிருந்து விழித்தபிற்பாடும் அது தோற்றிக் கொண்டிருந்தாலும் ; நம் குருநாதனுடைய சன்னிதியிலிருந்து ஆத்மானாத்மவிசாரணைசெய்து இதுவென்று வருகிற முப்பத்தைந்து தத்துவங்களையும் அனாத்மாவென்று சேதித்து, எப்போதும் நானென்று ஒருபடித்தாயிருக்கிற சாக்ஷியே நானென்றுபதேசித்த சுருதி யுக்தி அனுபவப்பிரகாரம் இவனுமப்படி அனுபவித்தபின்னும், இந்தக் குருநாதனோடேயே சதா சரசசல்லாபஞ்செய்கிற சுகம், முன் ஈசனுடைய உபதேசத்தால் தன்னைத் தெரிந்துகொண்டிருக்கிற அவனுக்குச் சந்தேகாதிகள் நிவர்த்திக்க இடமில்லாததால் துக்கமே தோற்றும். [எ-தி] ஒரு யுவாவான புருஷனுக்கு ஜாக்கிரத்தில் தனக்குச் சமானமான ஒரு யுவதியான ஸ்திரீயுடன் சதா அஷ்டவிதமைதுனங்களையும் இடைவிடாமற் செய்து வருகிறவனுக்கு உண்டாகிற சுகம்போல, ஒரு சிலையில் அடித்துவைத்திருக்கிற பெண்ணைப்பார்த்து அந்தத்தியானத்தால் சொப்பனத்தில் அவளே வந்து இவனுடன் கட்டிக்கொண்டு கலந்ததினால் சுக்கிலமோசனமுமுண்டாய் விழித்தபின்னும் மழைபேய்ந்து ஒய்ந்த மண்ணில் ஈரமான சகதி காணப்படுவதுபோல கௌபீனத்தில் சுக்கிலமுங் கண்டபோதிலும் எப்படி சுகம் திருப்தி ஒன்றும் வராமல் துக்கமே வருவதுபோலவறிக. [இ-து] அனந்த ஜன்மங்கள்தோறும் நான் கெட்டமார்க்கத்திற் போகாமல் என்னைக் காப்பாற்றி, இப்போது குருரூபமாய் வந்து ஞானோபதேசம் செய்து காப்பாற்றுகிறார். [எ - தி] குழந்தையாயிருக்கும்போது தீ முதலானவைகளில் விழுந்து கெடாமல் தடுத்து, அன்னபானாதிகளையுங் கொடுத்து, பெரியவனாகும்போது அந்தத் தகப்பனே சகல வித்தியாசம்பத்துக்களையுங் கொடுத்து ரக்ஷிப்பதுபோலும்; அதிபால்யமாயிருக்கிற கன்னியைக் கல்யாணஞ்செய்த நாயகன் தேசாந்தரத்தில் இவளுக்குத்

தெரியாமலிருந்துகொண்டு அன்னம் ஆடை ஆபரணமுதலானவற்றைக் கொடுத்து ரக்ஷித்துவந்து, அந்தக்கன்னி பக்குவமானதைத் தெரிந்து நேரே நாயகனுருவத்தோடே வந்து போகத்தையுஞ் சந்ததியையுங் கொடுத்துக் காப்பாற்றுவதுபோலவறிக. [இ - து] அஞ்ஞானிகள் இந்த ஆத்மஞானத்தை விரும்பாதிருந்தாலும், ஞானியாகிற நம் குருநாதன் பலவந்தமாய் ஞானத்தை யுபதேசிப்பார். [எ - தி] பிள்ளை படிப்புவேண்டாமென்றிருந்தாலும் தகப்பன் பலவந்தமாய் படிப்புச் சொல்லிவைப்பதுபோலும், படுக்கைவீட்டுக்குப்போன பெண் போகத்தை விரும்பாதிருந்தாலும் பர்த்தாவே பலவந்தமாய்ப் போகிப்பதுபோலுமறிக. [இ-து] அனந்தகோடி கற்பகாலமாய்ச் சத்தியமாய் நினைத்த தேகாதிஜெகத்தை கருணாசாகரமான குருவானவர் சொப்பனம் போலப் பொய்யென்று ஒருசொல்லிலே சொல்லி ஜனனமரண துக்கத்தைக் கெடுத்தார். [எ - தி] அநேகநாளில் வளர்ந்த பனைமரத்தை இடிவந்து விழுந்து க்ஷணத்தில் எரித்துவிடுவதுபோலும், சன்னம்சன்னமாய் விருத்தியடைந்த தேகத்தை ஒரு பேதியில் எமன் கொண்டுபோவதுபோலும், அநேக நாளிலுண்டான பாண்டத்தையெல்லாம் ஒருநாழிகையில் தடிகாரனுடைக்கிறதுபோலும், அநேகநாளாய்த் திருட்டுக்கொலைகள் செய்தவனை ஜட்ஜியானவன் தூக்கிலே போட்டு ஒரு நிமிஷத்தில் பிராணனைப் பிரிப்பதுபோலவறிக. [இ-து] குருசன்னிதானத்திலிருந்து பிரஹ்மாப்பியாசம் பண்ணுகிறவனுக்கே ஞானம் வரும். தானே தனித்து பிரஹ்மாப்பியாசம் பண்ணுகிறவனுக்கு ஞானம் வாராது [எ-தி] சூரியன் சன்னிதானத்தில் வைத்த சூரியகாந்தக்கல்லில் அக்கினியுண்டாவதும், பெட்டிக்குள் வைத்திருக்கிற சூரியகாந்தக்கல்லில் அக்கினியுண்டாகாததுபோலும்; புருஷனோடே சேர்ந்து போகிக்கிறவளுக்கே புத்திரனுண்டாவதும், கொடிக்கத்திரிக்காயை யோனியில் விட்டுக்கொள்ளுகிறவளுக்குப் புத்திரனுண்டாகாதது போலுமறிக. [இ - து] குருவானவர் சிஷ்யர்களுடைய பக்குவத்துக்குத் தகுந்த உபதேசம் பண்ணுவர். [எ - தி] பள்ளிக்கூடம்வாத்தியார் பிள்ளைக்குத்தகுந்த பாடந் துவக்குவதுபோலும், வைத்தியன் வியாதிக்காரனுக்குத் தகுந்த மருந்து கொடுப்பதுபோலும், ராஜன் வித்துவானுக்குத்தகுந்த சன்மானங் கொடுப்பதுபோலும், ஈசன் பக்தனுக்குத்தகுந்ததான பலன் கொடுப்பதுபோலுமறிக. [இ - து] முமுக்ஷுவானவன் குருசன்னிதிக்குப் போனதும் அவர் இவனை ஹே வித்வானே! என்று ஞானம்வருமுன்னே அழைத்தாரென்று சொல்லுவதே சுருதி, விபீஷணன் ராமரை வந்து சரணமாகவடைந்தபோதே லங்காபதியென்று பட்டங்கட்டினதே யுக்தி, இப்போது பரமமூடனாயிருந்த நம்மை பரமதயாளுவான குருநாதன் கிரகித்தமாத்திரத்தில் உனக்கு ஜென்மமில்லை நீ ஜீவன்முக்தனென்று சொல்லுவதே யனுபவமென்றறிக. [இ - து] ஒருமுமுக்ஷு ஈசுவரபக்தி விசேஷமாய்ச் செய்யாததைப்பற்றி ஈசுவரன் கோபித்தாலும் அவனைக் குரு காப்பாற்றுவர் குரு கோபித்தால் அவனை ஈசுவரனாலுங் காப்பாற்றமுடியாதென்பதற்கு யுக்தி:—ஒரு பெண்ணைத் தகப்பன்

கோபித்தால் பர்த்தா காப்பாற்றுவர், பர்த்தா கோபித்தால் அவளைத் தகப்பனு லுங் காப்பாற்றமுடியாது, அப்படிக்காப்பாற்ற எத்தனித்தாலும் உலகமும் வேதமும் ஒப்பாததுபோலும்; மந்திரி விரோதமாயிருந்தாலும் ராஜா காப் பாற்றுவர், ராஜவிரோதமுள்ளவனை மந்திரியாலுங் காப்பாற்ற முடியாதது போலவறிக. [இ - து] குருநாதன் முதல்முதல் வந்த சிஷ்யனுக்கு லாளனை யும், கொஞ்சம் பக்குவமானபின் குருசிஷ்ய கிரமப்படி உபதேசமுங் கண்டனை யும், அனுபவம் வந்தபின் அபேதமான சல்லாபத்தையும் அனுபூதிரச உல்லா சத்தையும் செய்வர். [எ - தி] கன்னியாய் வந்தபெண்ணைக் கணவன் முதலில் லாளனைசெய்வதும், அவள் பக்குவமானபின் வெளியில் கண்டனையும், உள் ளோட்டையில் உலக்கைபோலிருக்கிற சிசுனத்தால் உதையுங் கொடுத்துக் கொண்டுவந்து பிள்ளையைப் பெற்றபின் அவளோடே குலாவிக்கொண்டு சகல கிரககிருத்தியங்களையும்பற்றிச் சமானமாய் ஆலோசித்துச் சுகிப்பதுபோலும்; பள்ளிக்கூடம்வாத்தியார் முதலில்வந்த பிள்ளைக்கு லாளனையும், நடுத்தரப் பிள்ளைக்கு உதையும், தேர்ந்தபிள்ளைக்குத் தன்னோடே அபேதமான சுகமுங் கொடுப்பதுபோலவறிக. [இ - து] கிருதயுகாதிகளில் கோடிபேர் தபசு கோடி காலஞ்செய்தும் சற்குருகிருபையைப் பெறவில்லை, இந்தக் கலியுகத்தில் கொஞ்ச ஜனங்கள் கொஞ்சக்காலம் பரிதாபத்துடன் ஜனனமரண சம்சாரந் துக்க மென்று தாபத்துடன் நினைக்குமுன் குருநாதனுடைய தெரிசனத்தையும் கிரு பையையும் பெற்று ஞானத்தை யடைவார்கள். [எ - தி] உத்சவாதிகளில் அநேகர்கள் அதிகவாடகை கொடுக்கிறோமென்று கெஞ்சினாலும் வண்டி யகப் படாததுபோலும், வெறுநாளில் வண்டிக்காரனே பலவந்தமாய் வந்து நீங்கள் கொடுத்தவாடகை போதுமென்று கூப்பிடுவதுபோலும்; ஒரு பிரபுவுக்கு ஆயிரம்பேர் இஷ்டமாயிருக்கும்போது அதை அருமையாய் நினைத்து ஒருவருக் கும் ஒரு உபகாரமும் செய்யாமலிருப்பதும், அவனே மற்றொருகாலத்தில் அநேகர்கள் விரோதிகளாயிருக்கும்போது ஒருவன் சிநேகிதமானால் அதை அருமையாய் நினைத்து அவனுக்கு வேண்டிய உபகாரங்களைச் செய்வது போலும்; அனுபவத்தில் சனகாதிகள் மூன்றரைக்கோடி வருஷம் குருகிரு பைக்காகத் தவஞ்செய்தார்களென்றும், சவ்வீரமகாராஜா ஆசானுக்காக அஞ்சு லக்ஷம் யோசனை தூரம் அலைந்தானென்றும், மகாவாக்கியத்தின் கதையில் திரியம்பகனென்ற முமுக்ஷு குருவுக்குப் பன்னிரண்டு வருஷம் இடைவிடாமற் பணிவிடை செய்துவரும் போது, ஒருநாள் அவர் ஆக்ஞைப்படி தீர்த்தங் கொண்டுவரப் போயிருக்கும்போது, அவருக்கு கிரியாணதிசை நேரிட்டு அப் போது மணலில் இரண்டாவது மகாவாக்கியத்தை எழுதிவிட்டு அவரடங்கிப் போனதைப் பார்த்திருந்த கூத்தாடிச்சி அதை ஓலையிலெழுதிக் காதில் போட் டுக்கொண்டு அந்த எழுத்தை அழித்துவிட்டபின், இந்தத்திரியம்பகன் வந்து பார்த்து அவரையும் அடக்கஞ்செய்துவிட்டு அழும்போது ஒரு ஆடுமேய்க்கிற பையன் அதைச்சொன்னதும், அவளை வந்து சரணாகதிபண்ணி அவளுக்குப்

பன்னிரண்டுவருஷம் பணிவிடைசெய்து அந்த வாக்கியத்தைப் பெற்றனென்று சொல்லியிருப்பதையும், இப்போது நம் குருநாதன் நம்போலிகளான அநேகர்களுக்கு அதிசுலபமாய் அனுக்கிரகஞ் செய்வதையுங் கண்டுகொள்ளத்தக்கது. [இ - து] குருகிருபையால் தேகத்திரய அத்தியாசமாகிற பிரதிபந்தத்திரயம் நீங்கினல், உடனே தத்துவஞானமுண்டாகும். [எ - தி] மந்திரிதயவால் மூன்று பாராக்காரர்களையுந்தாண்டி உள்ளே போனல் ராஜபேட்டி கிடைப்பதுபோலுமறிக. [இ - து] குருநாதன் ஞானேபதேசம்பண்ண எந்தச்சாதியானலும் சாதனசதுஷ்டயமுள்ளவனையே பார்த்து உபதேசிப்பரேதவிர மற்றப் பிராம்மணதிவர்ணங்களையும், சந்நியாசாதி ஆசிரமங்களையும் பாரார். [எ - தி] போக இச்சையுள்ள யௌவனபுருஷன் தன்போகத்துக்கு யோக்கியமான யௌவனம், ஆரோக்கியம், அழகுமுதலானவைகளைப் பார்ப்பனே தவிர மற்றச் சாதிமுதலானதைப் பாராததுபோலும், ராஜன் மந்திரிவேலை கொடுப்பதற்கு யோக்கியத்தையும், யுக்தியும், புத்தியும், சற்குணமுதலானதையும் பார்ப்பனேதவிர மற்ற சாதிமுதலானதைப் பாராததுபோலுமறிக. [இ - து] ஞானி அத்தியாரோப அபவாதமற்றிருக்கிற சுத்த சைதன்னியனயிருந்தாலும், சிஷ்யர்களுக்கு அனுக்கிரகிப்பதற்காக அடிக்கடி அத்தியாரோப அபவாத நியாயங்களைத் தழுவிப்பேசுவன். [எ - தி] பள்ளிக்கூடம் வாத்தியார் சகலவிதமான படிப்பையும் கரைகண்டிருந்தாலும் படிக்கிற பிள்ளைகளுக்காக அரிவரிமுதல் அமரம்வரையில் எடுதுவக்கிப் படிப்பித்து முடிப்பதுபோலும், சித்தன் தனக்குக் காயசித்தி யுண்டாயிருந்தும் நோயாளிகளுக்காக சகலவிதமான அவுஷதங்களையும் செய்து கொடுத்துக்கொண்டிருப்பது போலுமறிக. [இ - து] குருசன்னிதானத்திற்கு வருமுன்னமே சித்தஏகாக்கிரத்துக்குக் காரணமான சகுணேபாசனை இருக்கவேண்டும். அப்படியில்லாதவனுஞ் சன்னிதானத்துக்கு வந்துவிட்டானேயானல், அவனுக்குக் குருகடாக்ஷத்தினலேயே சாதனசாத்தியம் சித்தித்துப்போம். [எ - தி] மரத்திலிருந்து வெட்டும்போதே பட்டவிறகாயிருக்கவேண்டும், அப்படியன்றி கொஞ்சம் ஈரத்துடனேயிருந்த விறகை வெட்டிவந்தால், இங்கேயே கீறிக் காயவைத்தெரிப்பதேதவிர திரும்ப மரத்தில் ஒட்டக்கூடாததுபோலும்; சமையலுக்கு முந்தியநாள்களில் பொடிசாமான்களைச் செய்துவைத்திருக்கவேண்டும், அப்படியில்லாமற் சமயலுக்கெத்தனித்தபின் மிளகுமுதலானதை அரைத்துச் சேர்ப்பதுபோலுமறிக. [இ - து] ஈஷணைசதுஷ்டயந்தீர்ந்த புருஷனுக்கே இந்த ஜீவன்முக்தியைக் குருநாதன் கொடுப்பார், மற்றவர்களுக்குக் கொடார். [எ - தி] வியாதியும், சர்க்கார்தெண்டனையும், பரஸ்திரீசங்கமும், தரித்திரமுமில்லாத எவ்வனபுருஷனுக்குத் தகப்பன் தன்பெண்ணைக் கொடுப்பதுபோலும்; கண்டபேரிடத்திலெல்லாம் கையை நீட்டாதவனையும், அபத்தியம்பண்ணதவனையும், அகாலத்தில் முழித்திராதவனையும், அவுஷதத்தை நியமமாய்ச் சாப்பிடுகிறவனையுமிருக்கிறவனுக்கே வைத்தியன் மருந்துகொடு

ப்பதுபோலவறிக. [இ - து] முன்செய்த புண்ணியமெல்லாமொருமித்துக் குருரூபமாய் வந்து நம்மை காப்பாற்றுகிறது. [எ - தி] தென்னம்பிள்ளை யாயிருக்கும்போது நாம் விட்ட ஜலமெல்லாம் மரமாகி இளநீரைக் கொடுத்துக் காப்பாற்றுவதுபோலும், பத்துமாதம் போகிற தூரமெல்லாம் ஒன்று சேர்ந்து பிள்ளையாய்ப் பிறந்து வம்சத்தைக் காப்பாற்றுவதுபோலுமறிக. [இ - து] குருவால் கொடுக்கப்பட்ட பிரம்மஞானத்தால் சிஷ்யனுக்கு அதி சுலபமாய் யாதொரு பிரயாசையன்றியில் துக்கநிவர்த்தி ஆனந்தவாப்தி வரும். [எ - தி] கண்ணுக்குள் விழுந்த மணலை முதுகில் வெண்ணெயைத் தடவி அந்தமணலை எடுக்கிறவன்போலும், ஒருவீட்டுக்குள்ளிருந்த புதையலை எடுத்துக்கொடுத்த குறிகாரன்போலுமறிக. [இ - து] முமுக்ஷுவானவன் தன்மனதைத் தானே அடக்கி விசாரணைசெய்து சொரூபஞானமாகப் பண்ணமுடியாமல், குருவினிடத்திற் போய்த்தான் அதைத் துன்மார்க்கத்திற் போகவொட்டாமல் அடக்கி ஞானத்தை யடையும்படிசெய்யவேண்டும். [எ - தி] தகப்பன் தன்பிள்ளையை அடக்கி வித்தைவரும்படி செய்யமுடியாமல், பள்ளிக்கூடத்திற்போட்டு வாத்தியாராலேயே விஷமநிவர்த்தியும் வித்வத்தன்மையும் உண்டாக்க வேண்டுவதுபோலுமறிக. [இ - து] மார்ச்சால நியாயம்போல மகா அபக்குவனாயுள்ள சிஷ்யனை குருவே தேடிவந்து சாதன சாத்தியங்களைக் கொடுப்பார். [எ - தி] அஞ்சிவயதுபிள்ளைக்குத் தகப்பனே ஆடை ஆபரணங்களைக் கொடுத்துக் காப்பாற்றுவதுபோலும், மிகுந்த ஏழைக்கு ராஜன் இரங்குவதுபோலும், ஜாதகப்பக்ஷி யிருக்கிறவிடத்தில் மேகம்வந்து மழைபெய்வதுபோலுமறிக. [இ - து] அனந்தகோடி கற்பகாலமாய்ச் சத்தியமாய் நினைத்திருந்த தேகாபிமானத்தையும் சத்தியபாவனையோடேகூடியிருக்கிற ஜகத்தையும் குருநாதன் ஒருசொல்லினால் சொப்பனத்திற்கண்ட தேகமும் ஜகத்தும் பொய்யாய்ப்போகும்படி தகப்பனர் தட்டி எழுப்பிக் கூப்பிடுகிற ஒருசொல்லாற் கெடுப்பதுபோலக் கெடுத்தார். [எ - தி] அநேக வருஷங்களில் வளர்ந்த தேகத்தை சூரன் ஒருவெட்டால் வெட்டித் தள்ளுவதுபோலும், அநேகநாளில் உண்டுபண்ணின பாண்டத்தையெல்லாம் தடிக்காரன் ஒருஅடியில் உடைக்கிறதுபோலும், வெய்ஞெப்பு ஒகரங்குதோ போயிந்தியென்ற சொல்போலும் என்றறிக. [இ - து] இவ்வளவு சுகத்தை இவ்வளவு சுருதிகளாலும், அளவிறந்த யுக்திகளாலும், அனுபவத்தாலும் பிரத்தியக்ஷமாய்க் காண்பித்துவருகிற நம் குருநாதனுடைய மகிமையானது இவருடைய கிருபையைப்பெற்றிருக்கிற நம்போலிகளான முமுக்ஷுக்களுக்கு மட்டும் கொஞ்சந் தெரிந்திருக்கிறதேதவிர மற்றவர்களான வேதாந்திகளுக்கும், பக்தர்களுக்கும், கர்மிகளுக்கும், பாமரர்களுக்கும் நம் குருநாதனுடைய மகிமை தெரிவதற்கு இடமில்லை. ஏனென்றால், மேலேசொன்ன நால்வர்களில் ஒருஸ்தலங்களிற் செய்கிற கும்பாபிஷேகம் உற்சவங்கள்முதலான விசேஷங்களுக்குப் போவதும், அதில் வேதாந்திகள் பக்தியாய் சுவாமிதெரிசனத்திற்குப்

போவதும், பக்தர்கள் அடிமிதிகளைப்பட்டுக்கொண்டு அங்கேயே கிடப்பதும், கர்மிகள் வேதபாராயணங்களைச்செய்து திட்டுவாங்கி முடிவதும், பாமரர்கள் வாணக்காக்ஷிமுதலான வேடிக்கைகளைப் பார்ப்பதுமாக விருப்பதால் நம் குரு நாதன் இந்த நாலுவகைகளிலும் சேராமலும், அவைகளை ஒருபொருளாகக் கொண்டாடாமல், சொப்பனபதார்த்தம்போல அவைகளைப் பொய்யென்று சதாகாலமும் சொல்லிக்கொண்டு, அப்படிப்போகிறவர்களையும் பார்த்து ஏண்டா! வெறுங்கல்லிற் போய் மயங்குகிறீர்களென்று இதுமுதலான விவேகங் களைச்சொல்லி யவர்களையும் தடுப்பதால், இவர் எப்படி ஒன்றிலுஞ்சேராமல் அசங்கராயிருக்கிறரோ அப்படி அவர்களும் இவரை ஒன்றிலும் சேர்க்காமலும் இவர்மகிமையை அறியாமலுமிருப்பது நியாயந்தானென்றறிக. அப்படி இவரை ஒருவிசேஷங்களுக்கும் கூப்பிடாமலும், மதியாமலும், உபசரிக்கா மலும், இவர்மகிமையைக்குறித்துக் கொண்டாடாமலுமிருப்பதைப்பற்றி கொஞ்சமும் இவர் விசனமன்றியில் விசேஷ சந்தோஷத்தையடைவார். எதினுலென்றல், சகல சைவ,வைஷ்ணவ, சாக்த, கர்மிமுதலான வர்களெல்லாம் இவரை அலக்ஷியம்பண்ணித் தள்ளிவிடுவதால் இவருக்கு க்ஷேமம். வேதாள முதலான பிசாசுகள் எல்லாரையுங்கடித்து ரத்தமாமிசங்களைச் சாப்பிடும் போது குழந்தையைமட்டும் பிரயோசனமில்லையென்று தள்ளிவிடுவதால் அக் குழந்தைக்குச் க்ஷேமமென்று சொல்லுகிற சுருதி யுக்திகளாலும், அப்படி ஒரு வர்கூப்பிட்டு ஒருவிசேஷங்களுக்குப் போவதிலும் தங்களுடைய திரிகரணங்களு க்குச் சிரமமுண்டாவதுந்தவிர, தங்களுடைய இடைவிடாத ஆத்மவிசாரத்துக்கு தடையாயும், சுஜாதிவிருத்திக்கும் தடையான விஜாதியமான சப்தாதி விஷயங் களாலும், மறந்துபோயிருக்கிற நாமரூப வாசனைகளைத் தூண்டிக்கொடுப்ப தாலும், ராகத்துவேஷாதிவிருத்திகள் உண்டாவதற்கு ஏதுவாயுமிருப்பதால், அனுபவத்திலும் அப்படி அவர்கள் உபேக்ஷையாயிருப்பதால் மிகுந்த சந் தோஷத்தை யடைந்துகொண்டிருப்பது பிரத்தியக்ஷ சித்தமாயிருக்கிறதையும் பார்த்துக்கொள்க. [இ - து] எப்போதும் தான் பிரஹ்மமாயிருந்தாலும் குரு கிருபையினுல்தான் தன்னை யறியவேண்டும். [எ - தி] வீட்டிலே புதையலிருந் தாலும் கோணங்கிசொல்லினுல் புதையல் எடுக்கிறதுபோலுமறிக. [இ - து] குருவுக்கு, அகங்காரம் எந்த ஜீவர்களிடத்திலிருக்கிறதோ, அந்த அங்காரத் தைக் கிரகிப்பதில் அதிகசந்தோஷம். [எ - தி] ஈஸ்வரனுக்கு அமிர்தம் சுவா தீனமாயிருக்கும்போது காலகூடவிஷத்தைக் கிரகித்துக் கண்டத்தில் தரித்திருப் பதுபோலுமறிக. [இ - து] தேவர்கள் ரிஷிகள்முதலானவர்கள் இன்னும் ஞானம்வாராமல் அலையும்போது, இப்போது குருகிருபையுள்ள இவர்களுக்கு ஞானம் எப்படி உண்டாகும். [எ - தி] அடுத்தவீட்டில் பேசுவது நமக்குக் கேளாதிருக்கும்போது ஆயிரங்காதவழிக்கப்புறமிருக்கிற சீமைச்சங்கதி தந்தி மூலமாய் எப்படித் தெரியுமென்று கேட்கக்கூடாததுபோலுமறிக. [இ - து] முமுக்ஷுக்களுக்குக் குருகிருபையால் தினந்தோறும் லோபமோகாதிகள்

குறைந்துபோய்விடும். [எ - தி] கோடைகாலத்தில் குளத்துஜலம் கொஞ சங்கொஞ்சமாய் வற்றிப்போவதுபோலும், சாதம் சாப்பிடாதிருக்கிறவனு டைய தேகம் இளைத்துப்போய்விடுகிறதுபோலுமறிக. [இ - து] சற்குருசன் னிதியில் சச்சிதாநந்தப் பிரஹ்மத்துக்கு அர்த்தவிசாரம்பண்ணுவது யௌவன னிடத்தில் ருதுசாந்திபண்ணுவதுபோலுமறிக. [இ - து] சிஷ்யனுக்கு எவ்வ ளவு கெட்டகுணங்களிருந்தாலும் அவற்றைப்பாராமல் குரு அவனைக் காப்பாற் றுகிறார். [எ - தி] குழந்தைக்கு சிரங்கு சிக்கு எவ்வளவிருந்தாலும் தாய் அவற்றைப்பாராமல் காப்பாற்றுவதுபோலவறிக. [இ - து] சற்குருநாதன் சதா நாமரூபத்தைத்தள்ளி தானும் பிரம்மானந்தத்தைப் புசித்து சிஷ்யர்க ளுக்கும் அதையே காண்பிப்பார். [எ - தி] அம்ஸம் தானும் ஜலத்திற் கலந்த பாலைப்பிரித்துப் பாலைமட்டும் சாப்பிட்டுக் குஞ்சுக்கு மதைக்காட்டுவதுபோ லும், யானை கரும்பின் கொழுத்தாடையைத்தள்ளி கரும்பைச் சாப்பிட்டுக் குட்டிக்குமப்படியே காட்டுவதுபோலும், சகோரபக்ஷி சூரியகிரணமுதலான தைத் தள்ளி தானும் சந்திரனுடைய அமிர்தம் சாப்பிட்டுக் குஞ்சுக்கு மதைக் காட்டுவதுபோலுமறிக. [இ - து] பஞ்சகோசக்குகையில் மயங்கியிருக்கிறவ னைக் குரு அதிலிருந்து வெளியேற்றி ரக்ஷிக்கிறார். [எ - தி] தூக்கத்தில் உளறு கிறவனை இஷ்டன் தட்டி எழுப்புகிறதுபோலும், விலங்கிற்கிடக்கிறவனை லாயர் வெட்டிவிடும்படி செய்வதுபோலும், கூட்டிலகப்பட்ட சிங்கத்தை கூட்டை விட்டு வெளியேற்றுவதுபோலுமறிக. [இ - து] மனதிலிருக்கிற ஆசையைக் குருநாதன்விரட்டுகிறார். [எ - தி] பெண்ணைப்பிடித்த பேயை மந்திரவாதி விரட் டுவதுபோலும், ஜனங்களிடத்திலிருக்கிற சொத்தைத் திருடுகிற கள்ளனைக் காவலன் கண்டிப்பதுபோலுமறிக. [இ - து] சுருதி தத்துவமசியென்று மாத்திரம் சொல்லும், குருநாதன் யுக்தி அனுபவத்துடன் வாச்சிய லக்ஷி யங்களைப் பிரித்து, வாச்சியங்களைத் தள்ளி லக்ஷியங்களுக்கு ஐக்கியம் பண்ணிப் பவதுக்கத்தை நிவர்த்திக்கிறார். [எ - தி] சமுத்திராதிகளில் தானேயுண்டான நவரத்தினங்களிலிருக்கிற துருவைமாற்றி வியாபாரி நவ ரத்ன கண்டியாகச் செய்துகொடுப்பதுபோலும்; ஈஸ்வரசிருஷ்டியாலுண் டான தேங்காய் பழமுதலானதை குருக்கள் அரசங்களான கொட்டாங் கச்சி தோல் விதை முதலானவைகளைத் தள்ளி, ரசங்களான பூ பழம் சுளைகளை ஒன்றுசேர்த்து பஞ்சாமிர்தம் சேர்த்துக் கொடுப்பதுபோலும்; கடையிலிருக்கிற கடுக்காய் ஏலம் முதலான சரக்குகளை வைத்தியன் வாங்கி அவைகளிலிருக்கிற விதை ஓடு முதலானவைகளைத்தள்ளி சாரங்களை மருந்துசெய்து கொடுப்பதுபோலுமறிக. [இ - து] குரு எவனெவனுக்கு எதெதிலே பிரியமோ அதைச் சொல்லவேண்டுமேயன்றி பிரஹ்மஞானத்தை மேலென்று நினைத்து எல்லோருக்கும் சொல்லக்கூடாது. [எ - தி] ஈசுவரன் நவதானியமுதலானதை உண்டுபண்ணியிருப்பதே சாக்ஷியென்றறிக. [இ - து] விஷயசம்பந்தத்தால் தாபத்திரய துன்பத்தோடேகூடிய மூடர்களைக்

குருநாதன் ஆனந்தப்படுத்திவைக்கிறார். [எ - தி] அவிசாரிகிட்டப்போய் அரையாப்பு வாங்கிவந்தவனுக்கு ஆஸ்பத்திரியில் அவுஷதங் கொடுப்பதுபோலும், சூரியனால் தபித்தபூமியைச் சந்திரன் குளிரப்பண்ணுவதுபோலுமறிக. [இ - து] குருநாதன் பவதுக்கத்தை நிவர்த்தித்து சுகங்கொடுப்பார். [எ - தி] அரசன் ஏழைகளினது பசியைப்போக்கி அன்னத்தால் திருப்தியைக்கொடுப்பதுபோலவறிக. [இ - து] குருவின் உபதேசமானது சிஷ்யனுடைய இருதயத்தில் பதிந்து சாஸ்திரவிசாரத்தால் விருத்தியாய்ப் பலிக்கும். [எ - தி] புருஷனுடைய சிசுனத்திலிருக்கிற சுக்கிலமானது யோனியில் விழுந்து போஷணையால் பூரணகர்ப்பமாவதுபோலும், விரையானது பூமியில் விழுந்து தண்ணீர் பாய்ச்சலால் பலன் விருத்தியாவதுபோலுமறிக. [இ - து] குருநாதன் அத்தியாரோபமுதல் அபவாதம்வரையிலுள்ள சகலத்தையும் அனுக்கிரகிக்கிறார். [எ - தி] ராஜன் தன்பெண்ணுக்குப் பேரன் பேத்திவரை வேண்டியவஸ்துக்களை உடனே கொடுத்துவிடுகிறதுபோலவறிக. [இ - து] இக்காலத்தில் அதமமுமுக்ஷுக்கள்கூடக் கிடைப்பது அருமையாயிருப்பதால், அப்படியுள்ள முமுக்ஷுக்களைக் கண்டு குரு சந்தோஷிக்கிறார். [எ- தி] ஆயிரம்வருஷம் பிள்ளையில்லாத அரசனுக்கு அருமையாய் அவலக்ஷணமான சேய் பிறந்ததை அந்தஅரசன் கண்டு சந்தோஷிக்கிறதுபோலவறிக. [இ - து] பாவக்ஷயஞ் செய்வதில் கெங்கையைக்காட்டிலும்குருவே அதிகம். அது எதினாலென்றால், கெங்கை தன் பாபம்போகிறதற்காகத் துலாமாதத்தில் காவேரியில் வந்து போக்கடித்துக் கொள்வதுபோலவன்றி சிதாகாசமான ஞானியை ஒருபாபமும் ஒட்டாதிருப்பதால் இவனே அதிகம். [எ - தி] பணம்வைத்திருக்கிறவனுஞ் செலவாய்ப்போகும்போது தலைக்குக் கொண்டுவிற்கப்போவதுபோலும், ரசவாதசித்தன் ஒருவரையும் யாசியாதிருப்பதுபோலும்; தூளிக்காற்றால் ஜலங் கலங்குவதுபோலும், ஆகாசம் அசங்கமாயிருப்பதுபோலுமறிக. [இ - து] பஞ்சதசப்பிரகரணமுதலான பிரகரணங்களைச் சற்குருமுகமாய் விசாரித்து ஆத்மாநாத்மாக்களின் பேதந்தெரிந்து, அநாத்மாக்களைப் பொய்யென்று தெரிந்து, ஆத்மாவே நானென்கிற அபரோக்ஷஞான முண்டாய் ஜீவன்முக்திசுகத்தையுமடைந்து சுகப்படுவன். [எ - தி] கிருஷ்ணசாஸ்திரியார்வீட்டுக் கல்யாணத்துக்குப்போன பிராம்மணன் அவரையுங்கண்டு கல்யாண சமாசாரத்தையும் விசாரித்து, இவர்கள் பிராம்மணர்கள் இவர்கள் சூத்திரர்களென்பதையுந் தெரிந்துகொண்டபின், சூத்திரர்களை வெளியிலே தள்ளி பிராம்மணர்களோடே சேர்ந்துகொண்டு அடிக்கடி அவரால் கொடுக்கப்படுகிற தெக்ஷணைகளை முழுரூபாயாய் மாற்றி, இப்படி ஒரு முழுரூபாயை நான் ஒருநாளும் பார்த்ததேயில்லையென்று எண்ணியெண்ணி அந்தரூபாயைப் பார்த்துப்பார்த்துச் சந்தோஷப்படுகிறதுந்தவிர, கிரகத்துக்குள்ளே போய் அறுசுவையோடே திருப்தியாய் வேண்டியமட்டும் புசித்து, வெளியில்வந்து அந்தப் போஜனமகிமையையும் அவரிடத்தில் தெரியப்படுத்தினபின், அதைக்கேட்டு அவரும் சந்தோஷித்து,

புஷ்ப சந்தன தாம்பூலங்களால் மேலும் திருப்திபண்ணிவைத்து அனுப்பி வைக்கிறதுபோல, குருவாகிய மேற்படியார்வீட்டைக்குறித்து முமுக்ஷுவாகிய வைதீகர் போகும்போதே யோசிக்கிறார். அதாவது, இதுவரை அனுசாரியர்களான லௌகீகர்கள்வீட்டுக் கலியாணத்துக்குப்போய் அலைந்ததில் கார்வை முதலான கஷ்டத்தை யடைந்ததுமாத்திரமேதவிர, தாயும் மகளும் அவிசாரியாடி ராவும் பகலும் பட்டினியென்ற பழமொழிபோல பிராணன் மனதுகளுக்குத் திருப்தியான சமாதி போஜனமும், மனதுக்குத் திருப்தியான தத்துவ ஞான தக்ஷிணையும் கிடையாமல் நாள்கள் வீணாய்ப்போனதுபோல, இவிடத்திலும் அப்படியிருக்குமோ மற்றெப்படியோவென்று யோசித்து வந்தார். இந்தக்குரு வைதீகரானதால் அகங்காரமாகிற அதிகார மின்மையால் ராகத்துவேஷங்களாகிற சேவுகர்களின் தடையன்றியிலும், கார்வையன்றியிலும், காயக்கிலேசமாகிற சேவுகர்கள் அடியன்றியிலும் சுலபமாய்ச் சீவப்பிரம்ம ஐக்கியமாகிற கல்யாணஸ்தலத்துக்குப் போய்ச்சேர்ந்ததும், அவரும் இவரை ஏழையான முமுக்ஷுவாகிற பிராம்மணனென்று தெரிந்து அபயப்பிரதானமாகிற கையால் சந்நிதியிலிருக்கும்படி ஆக்ஞாபித்தார். அப்பொழுது அவரும் இவரும் பிரம்மவிசாரமாகிற கல்யாணமந்திரத்தைக் கிரமமாய்ப் பண்ணிவரும்போது, ஆத்மானுத்மாக்களாகிற பிராம்மணர்கள் சூத்திரர்களை விசாரித்து நன்றாய்த் தெரிந்தபின், அனுத்மாவாகிற சூத்திரர்களை மித்தையென்று வெளியிலே தள்ளி, அடிக்கடி பிரஹ்மத்தைப் பிரகாசஞ்செய்வதான யுக்திரத்ன தக்ஷிணைகளைக் கொடுத்துவரும்போது, தத்துவஞானமாகிற பூரணதக்ஷிணையைக் கண்டு சந்தோஷித்தபின், அவர் இவரை அந்தர்முகமாகிற உள்வீட்டுக்குள் போகச்சொல்லி ஷட்விதசமாதிகளாகிற அறுசுவைகளுடன்கூடிய பிரம்மானந்த போஜனத்தை யதேஷ்டமாய்ச் சாப்பிட்டு வெளிவீட்டில் வந்து போஜன மகிமையெல்லாம் பிரபுவினிடத்திற்சொல்லி, அவரும் அதைக்கேட்டு மிகுந்த சந்தோஷத்துடன் சகசசமாதியாகிற சுவாசனையுடன்கூடிய சந்தனத்தையும் பூசி, சாக்ஷாத்காரமாகிற புஷ்பத்தையுஞ்சூட்டி, ஜீவன்முக்தியாகிற தாம்பூலத்தையுங் கொடுத்தால், பலாப்பழத்தின் ஈப்போல அவன்தான் அதைவிட்டு வெளியில் எப்படிப்போவன். இச்சங்கதியைக் கேள்விப்பட்ட எந்த முமுக்ஷுவாகிற பிராம்மணன்தான் அங்கே போய்ச்சேராமலிருப்பன். ஆகையால் பசிக்குச்சாப்பிட பஞ்சாங்கம் பாராரனென்ற பழமொழிபோல தாமசியாமல் விரைவில் குருநாதனிடம் போய்ச்சேர்ந்து முக்திபெறக்கடவன். [இ - து] குருகிருபை பூரணமாயிருக்கிறவனுக்குப் பிராரத்ததுக்கம் லேசாய்விடும். [எ - தி] மந்திரிதயவுள்ளவனுக்கு ராஜாக்கினையான தெண்டனை கண்ணிலே போடுவதற்கு இமைபிலே கள்ளிப்பாலை யடிப்பதுபோல உபாயமாய்க் கிடைப்பதுபோலும், ஒத்திருக்கிற தம்பதிகள் விருந்தாடி வந்தபோது நோவாமலடித்து ஓயாமல் அழுதகதைபோலும், தோட்டக்காரனுடைய தயவுள்ள கள்ளன் தப்பித்துப் போவதுபோலும், கோபியினுடைய தயவுள்ள தகப்பனும்

மகனும் கோபன் வந்தசமயத்தில் இருவரும் தப்பித்துக்கொண்ட கதைபோலு மறிக. (இ - து) முமுக்ஷுவின் சித்தத்துக்கு வேண்டியவரை குருநாதன் சுருதி யுக்தி அனுபவங்களைக் கொட்டுகிறார். [எ - தி] பசியுள்ள பிராம்மணர் களுக்கு ஸ்ரீமந்தன் வேண்டியவரை லட்டுமுதலானவைகளைக் கொட்டுவதுபோ லும், ரயில்கம்பெனியார் ரோட்டுக் கெட்டிப்படும்வரை கெட்டிப்பதுபோலு மறிக. [இ - து] வைராக்கியமில்லாத விவேகஞ் சிலாக்கியம், விவேகமில்லாத வைராக்கியம் பிரயோஜனமில்லை. [எ - தி] ஸ்தன்னியமில்லாத போகணி யையும், யோனியில்லாத பாலஸ்வாமியையும் போல அறிந்துகொள்ளத் தக்கது. ஆகையால் விவேகமில்லாத வைராக்கியனிடத்தில் உலகத்தார் யோனி யில்லாத பாலஸ்வாமியைக்கண்டு மயங்குவதுபோல மயங்குவார்கள். குட்டுத் தெரிந்த நீங்கள் மயங்கத் தேவையில்லையென்றறிக. [இ-து] சகல முமுக்ஷுச் களுடைய அஞ்ஞானமுதல் துக்கம்வரை போக்கி ஞானசுகத்தையும் கொடுப் பதில் குருநாதன் ஒருவனே சுருதி யுக்தி அனுபவத்தால் அனுக்கிரகிப்பரே தவிர மற்றப்பேருக்கப்படி அனுக்கிரகிக்கிற சக்தியில்லை. [எ - தி] சகலரு டைய நடையின் சிரமத்தை நிவர்த்தித்துச் சுகமாய் நினைத்தவிடத்துக்குப் போய்வரும்படி செய்கிறது ரயில்காரனுக்குமட்டுமே அந்தச்சக்தி யிருக்கிறதே தவிர மற்றவர்களுக்கு இல்லாததுபோலவறிக. [இ - து] நம்குருநாதன் கரும் புச்சாறே வெல்லக்கட்டியானதுபோல அகண்டைகரசமே இந்தக் குருவடிவத் தைத் தரித்துவந்து என்போலிகளான அவிவேகிகளைச் சீர்திருத்தி, நான் பிரம்ம மென்கிற திடநிச்சயத்தைக் கொடுத்துக்கொண்டு வருகிறார். அப்படிப்பட்ட அவரை மாயையானது சுத்த மூடர்களுடைய திருஷ்டிக்குமட்டும் பிறந்தவரா யும், செய்பவராயும், புசிப்பவராயும் காண்பிக்கிறது. அவரிடத்தில் இந்தக் கற்பனை ஒன்றுங்கிடையாதென்றறிக. [இ - து] தாய்தகப்பன் பேர்வைக்கிற நாமங்கள் எல்லாருக்குந் துக்கத்தைக் கொடுக்கும், நம்குருநாதன் கொடுக்கிற நாமம் அழிவற்றசுகத்தை அனைவருக்கும் அளிக்கும். [எ - தி] ராமகிருஷ்ண னென்று தாயுந்தகப்பனும் சண்டைக்கு நின்று பேர்வைக்கப்பட்ட அந்தப் பிள்ளை விடியுமுன்னே தூரமாய்ப்போன கதைபோலும், குருநாதன் தாண் டவாவென்று நாமம் வைத்தபடி ஆத்மானந்தத்தாண்டவம் ஆடினுரென்று சொல்லப்பட்டிருக்கிறதுபோலவறிக. [இ - து] சப்தபூமிக்கும், சப்தஅவஸ் தைக்கும், சப்தவித பிறவிக்கும் மேலாகக் குருநாதன் நம்மை வைத்தார். [எ - தி] விஷ்ணு துருவனை எல்லாத்திற்கும் மேலான பதவியில் வைத்தது போலவறிக. [இ - து] குருபாததீர்த்தத்தில் சகலதீர்த்தமும் அடங்கி யிருக் கிறது. [எ - தி] நாகரத்னத்திற்குள் அளவிறந்த ஐசுவரிய மிருப்பதுபோல வறிக. [இ - து] குருநாதனுடைய கிருபையைப்பெற்ற விவேகியே மாயை மன்மதன்முதலானவர்களைக் கடப்பனேதவிர மற்றவர்களால் கடக்கக் கற்ப கோடிகாலத்திலும் முடியாது. [எ - தி] கப்பல்காரன் தயவன்றியில் கடலைக் கடக்கக்கூடாததுபோலவென்றறிக. [இ-து] தன்னிடத்திலுண்டான மனது தன்

ளிடத்தில் லயிப்பதில் பிரயாசமென்னவென்றால், கடலிலுண்டான உப்புகளுக்குள்ளே மண்ணுப்புக் கரைவது லகுபோலும், கல்லுப்பு கடலிற் கரைவது கடினமாவதுபோல அகங்காரமில்லாத மனதுக்கு லகு, அஃதிருக்கிற மனதுக்கு பிரயாசமென்றறிக. [இ - து] குருகருணை ரகசியமாயும் பிரகாசமாயுமிருக்கும், சுமங்கிலிபின் யோனியுந் தாலியும்போலவறிக. [இ - து] நம் குருநாதன் லோகாதீதனென்பது எதினுலென்றால், உலகத்திலொருவரும் தனக்குப் பிரயோஜனமன்றியில் ஒருவருக்கொன்றைச் சொல்லவும், ஒன்றைக் கொடுக்கவும், ஓரிடத்திற்குச் செல்லவுமாட்டார்கள். ஆனால் தீக்ஷைக்குத் தலைவளர்த்திருக்கிறவனை நாவிதன் க்ஷவரத்திற்குக்கூப்பிடுவதுபோலும், ஜெபஞ்செய்யப் பவித்திரங் கையிற் போட்டுக்கொண்டவனைக் கண்டு பல்லைக்காட்டுகிற பிராம்மணன் போலவும், நம் குருநாதன் உற்சவாதிகளுக்கு வந்திருக்கிற ஜனங்களையும், ஜபதக்ஷிணைக்காக வந்திருக்கிற ஜனங்களையும் கண்டு சம்சார க்ஷவரம் பண்ணிக்கொள்ள வந்தபேர்களென்று நினைத்து அனுசந்தான புஸ்தகமாகிற தீட்டுக்கல்லில் யுக்தியாகிற கத்தியைத் தீட்டிக்கொண்டு உபதேசவாக்கால் கூப்பிடும்போது, அவர்கள் ஜென்மமாகிற புத்திரன் பிறப்பதற்காக தீக்ஷை வளர்ப்பதால் சம்சாரநாசமாகிற க்ஷவரஞ் செய்துகொள்ள மாட்டேனென்று சொல்லுவதாலும், இன்னும் ஜெபதக்ஷிணையாகிற விஷய சுகத்துக்காக ஸ்தலவாசமாகிற பவித்திரத்தைப் போட்டுக்கொண்டிருக்கிறவர்களைப் பரதேசியாகிற குருநாதப்பிராம்மணன் மேற்படியார்களைப் பார்த்துப் பல்லைக்கெஞ்சுவதுபோலிருக்கிற முகமலர்ச்சியாயிருந்து ஆதரவுடன் சர்வத்தியாகம்பண்ணுவதாலுண்டாகிற புண்ணியமாகிற பிரஹ்மானந்தத்தை யடையென்று கிருபையோடே சொல்லுவதைப் பார்த்து, அவர்கள் நாங்கள் சர்வத்தியாகம்பண்ண வரவில்லை, தக்ஷிணைக்கு வந்தோமென்று சொல்லி ஓடிப்போகிறார்கள். ஆகையால் குருநாதன் லோகாதீதனை கருணாநிதியென்றறிக. [இ - து] ஞானியினுடைய சிநேகமிருக்கிற முமுக்ஷுவுக்கு ஒரு குறைச்சலுமில்லை. [எ - தி] ராஜாவினுடைய சிநேக மிருக்கிறவனுக்கு ஒரு குறைச்சலுமில்லாததுபோலவென்றறிக. [இ - து] முமுக்ஷுவானவன் ஏ பிரபோ! சம்சாரதுக்கத்தால் மிகவும் தபிக்கப்பட்டிருக்கிறேன், காப்பாற்றவேண்டுமென்று குருவைப் பார்த்துக்கேட்க, அவர் முந்தி பயப்படாதேயென்று சொல்லிப் பிந்தி ஞானத்தைக் கொடுக்கிறார். [எ - தி] எட்டுநாள் பசியுள்ளவன் தாதாவை அன்னங்கேட்க, பயப்படாதேயென்று சொல்லி அன்னங் கொடுப்பதுபோலவறிக. [இ - து] எப்போதும் தான் பிரஹ்மமாயிருந்தாலும் குருநாதனின் கடாக்ஷ ஸ்பரிச உபதேச விசார அனுக்கிரகரூபமான கிருபையினாலேயே தன்னைப் பிரஹ்மமென்றறிந்து சுகப்படவேண்டியதற்கு யுக்தி:—தன் சரீரத்திலடங்கியிருக்கிற சுக்கிலத்தை ஸ்திரீயின் கடாக்ஷ ஸ்பரிச சம்பாஷண சம்யோகாதிகளால் வெளிப்படுத்துவதுபோலவென்றறிக. [இ-து] குருவினிடத்தில் ஞானம் வேண்டுமென்று கேட்டால், அவர் சகல சற்குணங்க

ளோடேகூட ஞானம் அனுக்கிரகம்பண்ணுகிறார். [எ - தி] தாதாவிடத்தில் அன்னம்வேண்டுமென்று கேட்டவனுக்கு பக்ஷியபோச்சியத்தோடு அவர் அன்னங் கொடுக்கிறதுபோலும், கல்யாணம்பண்ணிக்கொண்ட ஸ்திரீக்கு அவன் வஸ்திராபரணங்கள் அன்னம் முதலானவற்றையும்கொடுத்து கெர்ப்போற்பத்திவரை போகத்தையுங் கொடுக்கிறதுபோலவறிக. [இ - து] குருவை சந்நியாசியாகவும், குடும்பியாகவும், இரண்டிலும் சேராதவராகவும் சொல்லலாம். முமுக்ஷுக்களுக்குப் பிரமோபதேசம் செய்வதால் சன்னியாசியாகவும், அவர்களைத் தானாக எண்ணி சமாதிகுணங்களையும் ஆதரவுடன் கொடுத்து அன்னபானாதிகளால் ரக்ஷிப்பதால் குடும்பியாயும், அசங்கரென்ற நிச்சயத்தால் இரண்டிலுஞ் சேராதவராயுமிருக்கிறார். [எ - தி] ஈசன் சனகாதிகளுக்கு ஞானோபதேசம் செய்வதாலும், நந்திமுதலான பக்தர்களுக்குச் சாலோகாதி பதவிகளைக் கொடுப்பதாலும், நிச்சயத்தில் அசங்கனாயிருப்பதாலும் இவனுக்கு மவனுக்கும் சமானத்துவம் சொல்லப்பட்டதென்றறிக. [இ-து] சிஷ்யன் தேகாபிமானத்தைக் குருவுக்குக் கொடுத்து அவரிடத்திலிருந்து பிரம்மானந்தத்தை வாங்கிவிட்டதினால் அவருக்குக் குறைச்சலில்லை. [எ-தி] குழந்தை தன்கையிலிருக்கிற மண்ணை தகப்பனுக்குக் கொடுத்து தகப்பனிடத்திலிருக்கிற மிட்டாயை வாங்கிச் சாப்பிட்டதால் அவனுக்குக் குறைவில்லாததுபோலும், ஸ்நானம் பண்ணினவர்களுடைய பாபத்தைப் போக்குகிற கங்கைக்கும், பார்த்தவர்களுடைய பரிதாபத்தை நிவர்த்திக்கிற சந்திரனுக்கும் குறைவில்லாததுபோலவென்றறிக. ஜீவன் யாராலே இந்தத்தேகாதி பிரபஞ்சமெல்லாம், சொப்பனம்போலே பொய்யென்றறிந்தானோ அவர்தான் குரு. [எ - தி] ராமர் கொடுத்த முத்தாரத்தை வாங்கி கையில்வைத்து முழித்துக்கொண்டிருக்கிற சீதைக்கு ராமர் சொன்னதாவது, நீ பிராண ஆபத்தான துன்பத்தை யடையும்போது யாரால் அந்தத் துன்பம் நீங்கி இன்பமடைந்தையோ அவனுக்குக் கொடுவென்று சொன்னதின்பேரில் சீதை அனுமாருக்குக் கொடுத்ததுபோலவென்றறிக. [இ - து] குருகிருபை ஒன்றுள்ளவனுக்கு என்ன துக்கம் வந்தாலும் பயமில்லை. [எ - தி] ரசவாதந் தெரிந்தவனுக்கும் புதையல் எடுத்துவைத்துக்கொண்டிருக்கிறவனுக்கும் என்னக்ஷாமம் வந்தாலும் பயமில்லாததுபோலவறிக. [இ - து] குருவினிடத்திற் போகிறவனுக்கு தர்மார்த்த காமமோக்ஷங்களான நாலும் கிடைக்கும், மற்றவர்களிடத்திற் போகிறவனுக்கு இந்தநாலும் ஒருமித்து ஓரிடத்திற் கிடையாது. [எ - தி] பூரணதடாகத்திற்போனவனுக்கு சௌசம் முதல் தாகம்வரையிலுள்ள சகலவிதமான வேண்டுதலையும் ஒருமித்து அடைவதுபோலும், திண்டுக்கல்முதலான இடங்களில் பதினாறுகிணற்றுக்குப் போய்ப் பதினாறுவிதமான செய்கைகளையும் பிரயாசைப்பட்டுக் காத்து ராகத்துவேஷாதிகளுடன் அடிதடிபட்டு அடையவேண்டுவதுபோலவறிக. ஐயா, குருவின் வல்லபத்தினாலேயே ஞானம் உண்டாகலாமென்று சொன்னீர்களே, அப்படிக் குருவின் வல்லபத்தால் யார் ஞானத்தை யடைந்திருக்கிறாரென்று கேட்பா

யாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:— வாசிஷ்டத்தில் பத்மராஜா வென்கிறவனுக்கு லீலையென்றொரு மனைவியுண்டாய், அவ்விருவர்களும் உமா மகேஸ்வராள்போல அன்னியோன்னியம் அபிரக்தர்களாயிருந்து வருங்காலை யில், அந்த லீலைக்குத் தனக்குமுன்னதாக பர்த்தா போய்விடுவனென்று நிச்சய மாய்த் தோன்றினதால் பிராம்மணர்களை வரவழைத்து என் பர்த்தாவுக்கு மரணம் வராமலிருப்பதற்கு உபாயஞ்சொல்லவேண்டுமென்று கேட்டவுடன், அவர்கள் அது முடியாதென்று சொல்லிப்போனபின், இவள் பர்த்தாவுக்குக் கூட சொல்லாமல் சரஸ்வதியை உத்தேசித்து மூன்றுநாள் உபவாசமாய்ப் பூஜித்து நாலாவதுநாள் பாரணைசெய்து, பத்துமாதம்வரையிலிப்படி ஆரா தித்துவந்ததில், சரஸ்வதிதேவி பிரத்தியக்ஷமாய் வந்து உனக்கென்னவேண்டு மென்று கேட்டவுடன், "என் பர்த்தா இந்தச்சரீரத்திலேயே வெகுகாலம் மரியாமலிருக்கவேண்டும். நீயும் எப்போது எப்போது நான் நினைப்பேனோ அப்போது அப்போது சான்னித்தியமாய் வரவேண்டும்" என்று கேட்டபடி உத்தரவுகொடுத்து அந்தர்த்தானமாய்ப்போனபின், அந்தப் பத்மராஜன் மரித்தவுடன் இவள் சரஸ்வதியை நினைத்ததும், தேவி வந்து, பயப்படாதே உன் பர்த்தாவின் சரீரத்தைப் புஷ்பங்களாலே மூடிவை, சீக்கிரத்தில் எழுந் திருக்கும்படி செய்கிறேனென்று சொன்னபடி செய்து விட்டு, தேவியைப் பார்த்து 'இப்போது என்பர்த்தா எங்கே யிருக்கிறார்? அவரை யெனக்குக் காண்பி' என்று சொன்னதும், தேவி இந்தச் சரீரத்தோடே போய் அவரைப் பார்க்கமுடியாதென்றுசொல்லி அவளுக்குப் பிரஹ்மாப்பியாசத்தையும் உபதே சித்து நிருவிகற்பசமாதியையும் தானுங்கூடவிருந்து பழக்கிக் காண்பித்து, பிற் பாடு தேவியும் இவளும் அந்தப் பத்மராசன் விரோதனென்று பேரோடே அர சாக்ஷிசெய்வதைக் காண்பித்தபின், "ஓ தேவி! இவ்வரசன் இப்போதுதான் இறந்தான். அங்கே வெகுகாலமாய் அரசாக்ஷி யெப்படிச் செய்யக்கூடும்" என்றுகேட்டதற்கு, தேவி "ஒருஜன்மத்திலிருந்து மறுஜன்மங் காணுவது சொப்பனம்போலவே தவிர வாஸ்தவமில்லை. நீங்களிருவரும் முந்திய ஜன் மத்தில் வசிஷ்டர் அருந்ததியென்ற பேரோடேயிருந்து மரித்து எட்டு நாள் தான் ஆச்சுது. இப்போது உங்களுக்கு இவிடத்தில் பிறந்து இத்தனையிரம் வரு ஷம் ஆனதும் சொப்பனமே, சொப்பனத்தில் ஒருமுகூர்த்தத்துக்குள் அநேக வருஷங்கள் ஆய்ப்போனதுபோலும் தோற்றுவதுபோலவே" என்று சொன்ன தும், லீலை "ஓ தேவி! நீ சொல்வது மகாமேருவை ஒருமான்குட்டி விழுங்கவந்த தில் அந்த மகாமேரு தாமரைக்காய்க்குள் வந்து ஒளிந்துகொண்டதென்று சொல்வதுபோலும், ஐராவதத்தைத் தாமரைத்தண்டினுடைய நூலால் கட்டி விட்டானென்றுஞ் சொல்வதுபோல அதிசயமாயிருக்கிறது. எனக்கு அதை யெல்லாம் பிரத்தியக்ஷமாய்க் காண்பித்தால்தான் நம்புவேன்" என்று சொன் னதும், தேவி, இவளைச் சூக்ஷமசரீரமாத்திரமாய்க் கூட்டிக்கொண்டு கிரிக் கிராமத்திலிருக்கிற இவளுடைய வீட்டுக்குள் கூட்டிப்போய், இருவரும் அவி

டத்திலுள்ளவர்கள் விசனிப்பதைக்கண்டு லீலையானவள், இவர்களுக்கு நம்முடைய சொரூபந் தெரியட்டுமென்று நினைத்தமாத்திரத்தில், அப்படியே அவர்களுக்குத் தெரிந்து இவர்களைப் பூஜித்தவுடன், லீலை அவர்களைப்பார்த்து நீங்கள் ஏதுக்கு விசனித்திருக்கிறீர்களென்று கேட்டவுடன், எங்கள் தாயுந் தகப்பனும் மரித்துப்போய் எட்டுநாளாச்சுது அதற்காக விசனித்திருக்கிறோமென்று சொன்னதைக்கேட்ட லீலையும் அவர்களைச் சமாதானம்பண்ணிவிட்டு, தேவியும் லீலையும் அவிடத்திலேயே வெகுநாழிகை சமாதியிலிருக்கும்போது, லீலையினுடைய தேகத்தை இறந்தாளென்று மந்திரிமுதலானவர்கள் தகனஞ் செய்துவிட்டார்கள். அந்தலீலையும் சமாதியிலிருந்தெழுந்தவுடன் தேவியைப் பார்த்து "எனக்கு எண்ணூறு ஜன்மங்களாச்சுது. இதற்குமுன் இன்ன இன்ன இடங்களில் இன்னஇன்ன ஜன்மங்களை யெடுத்தேன். இப்போது என்னுடைய நிஜவடிவமான பிரம்மத்தை யறிந்ததால் எனக்கினி ஜன்மமில்லை" என்று சொல்லிச் சந்தோஷித்துக்கொண்டு பதுமனின் சவத்தை வந்துபார்த்துவிட்டு அவ்விருவரும் விடூரதனை அரசாக்ஷிசெய்கிற அண்டத்துக்குப்போய், ஆகாசத்திலிருக்கும்போது அவனும் அவன் சத்துருவும் படைகளோடே அஸ்தமனம்வரை யுத்தஞ்செய்துவிட்டு சொச்சயுத்தமும் நாளையத்தினம் செய்கிறதென்று தீர்மானித்து மேல்மேடையில் படுக்கையிற்படுத்து நித்திரைசெய்யும்போது, இவர்கள் இருவரும் ஜன்னல்வழியாக அங்கே போய் உட்கார்ந்து, கருணாகடாக்ஷத்தால் அவனுடைய தாபங்களெல்லாந் தீரும்படி செய்தமாத்திரத்தில், அவனும் அமிர்தசமுத்திரத்தில் முழுகினவன்போலக் குளிர்ச்சியுடன் எழுந்திருந்து இவர்களைத் தெரிசித்து நமஸ்கரித்து பூஜித்து 'சம்சாரமாகிற தாபத்திற்குச் சந்திரிகைபோல யிருக்கிறீர்களே, எனக்கு இந்தச் சம்சாரதுன்பம் என்னமாய் நிவர்த்தியாகும்? தடையற்றஆனந்தத்தை நான் எப்படி அடைவேன்' என்று கேட்டவுடன், தேவி "நீ எப்போதும் அழிவற்ற ஆனந்தரூபமான பிரஹ்மமாயிருந்தும் நீ யதை யறியாமல், இந்தத் தேகாதிகளே நாம், இந்தப்பிரபஞ்சம் சத்தியமென்று மயங்கினதால் உனக்குச் சம்சாரதுன்பம் வந்ததுபோலத் தோற்றுவதுமாத்திரமே யல்லாமல் வாஸ்தவமாய் உனக்குச் சம்சாரதுன்பம் யாதொன்றுமில்லை" என்றுபதேசித்தபடி அவனும் அந்தப்படி நான் பிரஹ்மமென்றும் ஜகத்துப் பொய்யென்று மறிந்து சந்தோஷித்திருக்கும்போது, எதிரிகள் அவ்விரவில் பட்டணத்துக்குள் புகுந்து வீடுகளையெல்லாந் தீயைவைத்துக் கொளுத்திப் பட்டணத்தில் ஆஹாகாரமுண்டாய், எதிரிகள் அந்தப்புரத்துக்குள் புகுந்து ராஜஸ்திரீகளையும் பலாத்காரம்பண்ணும்போது, இவனுடைய பட்டஸ்திரீயைமட்டும் மேடையின்பேரில் இவனிடத்தில் சிலபெண்கள் ஒப்புவித்து சங்கதிகளையுந் தெரிவித்தவுடன், இவன் இவளை அந்த இரண்டுதேவிகள்வசம் ஒப்புவித்துவிட்டு யுத்தத்திற்குப் போனபின், லீலை தேவியைப்பார்த்து 'இவள் என் வடிவமாயும் நடையுடையெல்லாம் என்னைப்போலவே யிருக்கிறாளே இவள் யார்' என்று கேட்டவுடன், தேவி

'உன்பர்த்தா உன்னையே மனதினால் பாவித்துக்கொண்டு இச்சரீரத்தில் வந்ததால், உன்னைப்போல புதுலீலையாக வந்தாள்' என்று சொன்னதும், புதுலீலையும் 'ஓ தேவி! நான் பூஜித்துவருகிற சரஸ்வதிபோலே தோற்றுகிறாயே நீ யார்? என்று கேட்கவும், 'நான் சரஸ்வதிதான், உனக்கென்ன வரம் வேண்டுமோ அதைக்கேட்டுக்கொள்' என்று சொன்னதும், அவள் 'இந்தச்சரீரத்தோடேயே இந்த அரசனோடேகூட விருக்கவேண்டும்' என்று கேட்டபடி உத்தரவுகொடுத்தவுடன், ராஜா யுத்தத்தில் மரித்தவுடன் புதுலீலையும், பழயலீலையும், சரஸ்வதியுங்கூடவே அந்தராஜாவின் ஜீவகலையோடே வந்து இந்தஜீவனை அந்தச் சரீரத்தில் பிரவேசிக்கும்படி செய்தவுடன், அவன் எழுந்திருந்து அவ்விரண்டு ஸ்திரீகளுடன் எதிரேயிருக்கிற சரஸ்வதிதேவியைப் பூஜித்து, அவள் அனுக்கிரகத்தால் அம்மூவர்களும் ஜீவன்முக்தர்களாய் வாழ்ந்திருந்த கதையைக் கண்டுகொள்ளத்தக்கது.

## 192 - வது தரங்கம்.

குருசிஷ்யர்கள் சம்யோகத்தால் ஞானமுண்டாகும் :—

காந்தக்கல்லும் சூரியனுஞ்சேர்ந்து அக்கினியாய்ச் செத்தைமுதலானதுகளை யெரிக்கிறதுபோல, குருவும் சாத்வீகாந்தக்கரணமாகிற சிஷ்யனுஞ் சேர்ந்தகாலத்திலுண்டாகிற ஞானக்கினியால் அஞ்ஞானமுதலான ஜெகத்தெல்லாமெரிந்துபோகிறது. தம்பதிகள் சேர்ந்ததால் எப்படி ஆனந்தமுண்டாகிறதோ அப்படி மேற்படியார்கள் சம்யோகத்தால் நான் பிரஹ்மமென்று ஐக்கிய ஞானமுண்டாவதால் ஆனந்தமுண்டாகுமென்றறிக. [இ - து] குருவுஞ் சீடனுஞ் சேர்ந்து ஞானம் பெறவேண்டும். [எ - தி] ஸ்திரீபுருஷர்களிருவருஞ் சேர்ந்து பிள்ளைபெறுவதுபோலும், ஈஸ்வரனும் மாயையுஞ்சேர்ந்து ஜெகத்தை யுண்டுபண்ணுகிறதுபோலுமென்றறிக. (இ - து) குருசீடர் சேர்ந்து ஞானமுண்டாவதானாலும் குருவின் ஆக்ஞைப்படி சீடன் நடக்கத்தக்கது. (எ-தி) ஒரு அந்தக்கரணத்திலுண்டான மனம் புத்தி இரண்டுக்குள் புத்தி சொன்னபடி மனது கேட்கிறதுபோலும்,ஒரு மூலப்பிரகிருதியில் பிறந்த ஜீவேஸ்வரருக்குள் ஈசுவரன் சொன்னபடி ஜீவன் நடக்கிறதுபோலும், குருவுஞ் சிஷ்யனும் ஒரு பிரம்மாம்சமானாலும் குருவின் சொற்படி சிஷ்யன் நடப்பதுதான் விதியென்றறிக. (இ-து) கிருதகிருத்தியனான குருநாதனும் சிஷ்யனுக்காக சிரவண மனனாதிகளைச் செய்கிறார். (எ-தி) மூன்றாவது தாரங் கல்யாணஞ்செய்த கிழவன் அந்தப்பெண்ணுக்காக நலுங்கு ஊஞ்சல் முதலானவற்றிற்கு அவளுடன்கூட இருப்பதுபோலும், வாத்தியார் புதுப்பிள்ளைக்காக அரிவரி அவனுடன் சேர்ந்து கத்துவது போலும், வியாதியுள்ள கைப்பிள்ளைக்காகத் தாயும் உப்பில்லாப்பத்தியங்காப்பதுபோலுமறிக. (இ-து) முதலில் குருவே சிஷ்யனைப் பலவந்தமாயிழுப்பதும், பிற்பாடு குரு அடித்துத் தள்ளினாலும் அவரைவிட்டுப் போகான். [எ - தி]

அவளைப் பலவந்தமாயிழுப்பதும், பிற்பாடு
முதல் ருதுசாந்தியில் பார்த்தாலே அவளைப் பலவந்தமாயிழுப்பதும், பிற்பாடு அவனை விட்டுப்
அவன் தள்ளினாலும் அவன்சுகத்தை அநுபவித்திருப்பதால் அவனைவிட்டுப் புத்தியிராது.
போகாதவள்போலவறிக. (இ-து) குருவுக்கு என்சிஷ்யனென்கிற புத்தியிராது.
சிஷ்யனுக்குமட்டும் என் குருவென்கிற புத்தியிருக்கும். (எ-தி) குழந்தையைத்
தாய் தூக்கிப்போகும்போது தூங்குகிற அதுக்கு தாய் நம்மைத் தூக்கிப்
போகிறாளென்ற புத்தியில்லாததுபோலும், தாய்க்குக் குழந்தையைத்தூக்கி
பாதுகாக்கிறோமென்கிற புத்தியிருப்பதுபோலுமறிக. (இ - து) குருவும்
பக்குவசித்தமுஞ் சேர்ந்தே ஞானமுண்டாகவேண்டும். (எ - தி) ஸ்திரீபுரு
ஷர்கள் சேர்ந்தே பிள்ளையுண்டாவதுபோலும், உரம்வைத்தபூமியில் சுத்த
விதை விழுந்து பலத்தைக்கொடுப்பதுபோலுமறிக. (இ - து) குருசன்னி
திக்கு வந்து பிரம்மவிசாரம் பண்ணுகிறவனுக்குச் சித்தஏகாக்கிரம்வர சகுணோ
பாசனை செய்யவேண்டியதில்லை. (எ - தி) ராஜாவினிடத்தில் நேரே தானம்
வாங்குகிறவனுக்கு மந்திரிமுதலானவர்களை அநுசரிக்கத்தேவையில்லாதது
போலும், பெண்ணும் மாப்பிள்ளையும் சேர்ந்து ரமித்தபிறகு மாமியார்முதலா
னவர்களை அநுசரிக்கத்தேவையில்லாததுபோலும், உபஸ்தமும் சிசுனமும்
சேர்ந்தபிறகு வஸ்திரத்தை அவிழ்க்கிறஜோலியில்லாததுபோலுமறிக. (இ-து)
சிஷ்யனுக்கு மோக்ஷவிச்சையும் குருவுக்கிவனைக் கரையேற்றக் கருணையுமிருந்
தால்தான் முக்திவரும். (எ - தி) பசியுள்ளவனுக்குச் சாப்பிடுவதிலாசையும்
எஜமானுக்குச் சிரார்த்தப்பிராம்மணாள் இரவில் பசியாமலிருக்கவேண்டுமென்ற
சிரத்தையுமிருந்தால் அவர்களுக்குத் திருப்திவருவதுபோலும், ஸ்திரீக்கு
யோனியின்தினவும் புருஷனுக்குச் சிசுனத்தில் லேபனமுமிருக்கும் பக்ஷத்தில்
கெர்ப்பம்வரை போகதிருப்தியை அவளடைவதுபோலவறிக. (இ - து) சீடர்
களுக்காகக் குருவுங்கூடச் சிரவணாதியைச் செய்கிறார். (எ-தி) பெண்ணுக்காக
அவள்தாயான மாமியாருங்கூட தூக்கம்முழிப்பதுபோலவறிக. (இ-து) சற்குரு
வுஞ் சற்சிஷ்யனுமொன்றுக்கொன்று ரொம்பப்பிரியமாயிருப்பார்கள். (எ-தி)
இருத்திரிமேந்திரனும் அகலிகையும்போல இருப்பார்களேதவிர எலியும் பூனை
யும்போல இரார்களென்றறிக. (இ-து) விவேகியானவன் குருவினிடத்தில் சந்
தேகங்கேட்பதிலும் பணிவிடைசெய்வதிலும் லச்சைப்படான். (எ - தி) கற்
புடையமங்கை கணவனிடத்திற் கலப்பதில் கைப்பில்லாமலும் அவனுக்குப்
பணிவிடைசெய்வதிலும் பயமில்லாமலிருப்பதுபோலவறிக. ஐயா, சற்குருவும்
சற்சிஷ்யனும் சற்சாஸ்திரவிசாரமும் வெகுகாலம்வரை செய்யவேண்டுமென்று
சொன்னீர்களே, அது என்னத்துக்காக அப்படிச்சேர்ந்து பழகவேண்டுமென்
றால், ஒரு தென்னமரம்வைத்துப் பலனையடையவேண்டுமென்றவன் நல்லபூமி
யில் நல்லவித்தைவாங்கி முளைக்கப்போட்டு எட்டுவருஷம்வரையில் தண்ணீர்
விட்டுப் பரிபாலனம்பண்ணினபின்னல்லவா தேங்காயாகிற பலத்தைப்பெறு
வதுபோலும், உத்தியோகம்பண்ணவேண்டுமென்றவன் சிறுவயதிலேயே இங்கி
லீஷ் வாத்தியாரிடத்திலே சம்பளங்கொடுத்து 12 வருஷம்வரையில் புஸ்தகங்க

ளெல்லாம் படித்து பரீக்ஷகளுக்குப்போய், அந்தப்பரீக்ஷகளும் வெகுபேர்களுக்கு வெகுதடவை தப்பிப்போய் கடைசியில் பெரியபரீக்ஷவரை தேர்ந்தபின் உத்தியோகத்துக்கு வெகுகாலங்காத்தபின், அதிலுங் குற்றங்கள்வாராமல் சாவதானமாய் வேலைபார்த்து வந்தவனுக்குப் பென்ஷன்வரை கிடைப்பது போலும், ஒருவன் கனபாடியாகவேண்டுமென்றெண்ணினவன் ஒரு குருவினிடத்திற்போய் பன்னிரண்டுவருஷம்வரையில் சம்கிதை பதம் கிரமம் சடை கனம்வரையில் குருசிஷ்யர்கள் சகபாடிகள்சேர்ந்து அப்பியாசம்பண்ணிவந்தபின் கனபாடியாய் ஆவதுபோலும், தர்க்க வியாகரணாதி சாஸ்திரங்களையும் குருமுகமாய் இருபதுமுப்பது வருஷம்வரையில் அப்பியாசம்பண்ணினவனுக்கல்லவா சபையில் வித்துவாம்சனென்று பரீக்ஷகொடுத்து சம்மானம்வாங்குவதுபோலும், பூமண்டலம்முழுக்க இருக்கிற சகல ராஜாக்களையும் ஜெயித்துக் கப்பம்வாங்குகிறவனுக்கல்லவா சக்கரவர்த்தியென்ற பேர்வருவதுபோலும், நிர்விக்னமாக நூறுஅஸ்வமேதயாகஞ் செய்தவனுக்கல்லவா தேவேந்திரப் பட்டம் வருவதுபோலும், தாஷ்டாந்தத்தில் சித்தமாகிற பூமியில் குருஉபதேசமாகிற விதையைப்போட்டுச் சாதுசங்கமாகிற வேலியைக்கட்டி, நாமாரென்கிற விசாரமாகிற தண்ணீரை வெகுகாலம்வரை இடைவிடாமற் பாய்ச்சிக்கொண்டு வந்தால், ஞானமாகிற பலனைக்கொடுக்கும்; இப்படியே ஜீவன்முக்தியாகிற உத்தியோகத்தை வேண்டினவன் சற்குருவாகிற இங்கிலீஷ்வாத்தியாரிடத்தில் சற்சாஸ்திரமாகிற புஸ்தகங்களைப்படித்து வாசனைக்ஷயங்களாகிற பரீக்ஷகளைக் கொடுத்துத்தேறி சமாதியாகிற உத்தியோகத்தை ஒழுங்காய்ப்பார்த்து சாக்ஷாத்காரமாகிற சம்பளத்தைப்பெற்று கிருதகிருத்தியமாகிற பென்ஷனைப்பெறலாம்; இப்படியே வேதசாஸ்திரங்களாகிற தத்துவஞானத்தைப் பெறவேண்டியவன் சாதுசங்கத்துடன் குருகுலவாசம் வெகுநாள் செய்யவேண்டும்; பிரஹ்மானந்த சக்கரவர்த்தியாகவேண்டுமென்றெண்ணினவன் அஞ்ஞானாதி சத்துருக்களை நிசேஷமாய் ஜெயிக்கும்வரை பிரம்மவிசாரமாகிற யுத்தஞ்செய்யவேண்டும்; முக்தியாகிற தேவேந்திரப்பட்டம்பெற இச்சித்தவன் நிர்விக்கினமாகத் தொண்ணூற்றாறுதத்துவங்களையும் நேதிசெய்கிற அசுவமேதத்தால் அந்தப்பதவியைப் பெறுவனென்றறியத்தக்கது.

## 193 - வது தரங்கம்.

குருவன்றியில் ஞானம்மட்டும் வராது:—

ஞானம் வருவதற்குமட்டுங் குருவந்து இவனை சிஷ்யனாகக்கிரகித்தாலொழிய வேறேவழியில்லை. மற்றமாயாகாரியங்களான சாரூபமுக்திவரை வருவதற்குக் கணபதிமுதல் சிவன் வரையிலுள்ள பேர்களுடைய வடிவங்களைச் சாஸ்திரத்திற்சொன்னபடி தியானிப்பதால் குருவன்றியில் அவைகள் பெறக்கூடும். (எ - தி) பெண்ணுக்குப் போகத்திற்கும் புத்திரனைப்பெறுவதற்கும்

கற்புக்கும் கணவனாலேயே ஆகவேண்டுமேதவிற மற்ற தாய்தந்தைமுதலான வர்களால் அன்னம் ஆடை ஆபரணம்முதலான வஸ்துக்களைக் கொடுக்கக்கூடு மேயல்லாமல் மேலேசொல்லியவைகளைக் கணவனாலேயே பெறவேண்டுவது போல விசாரபோகத்திற்கும், ஞானபுத்திரனுக்கும், முக்திகற்புக்கும் அப்படி யென்றறிக. (இ - து) முமுக்ஷுவுக்குப் புத்தி யுக்தி வித்தையெல்லாமிருந் தாலும் குருவினுடைய அனுக்கிரகமன்றியில் ஞானமும் ஜீவன்முக்திசுகமும் உண்டாகாது. (எ - தி) ராஜகன்னிகைக்கு எவ்வளவுநகைகள் படுக்கைகள் முதலானவைகளெல்லாமிருந்தாலும் நாயகனில்லாவிட்டால் புத்திரனையுஞ் சுகத்தையும் அடையாமற்போவதுபோலவறிக. [இ - து] குருபரம்பரையில் லாதவனுக்கு ஞானனுபவம் வாராது. வந்ததுபோல நாலுபேருக்குச் சொல்ல லாம். [எ - தி] சித்தபரம்பரையில்லாத ரசவாதிக்கு செட்டிவைக்கிற ஆணிக் குச்சரியான தங்கமாகாமல் வாதத்தில் மயங்குகிறபேர்களுக்கு ரசத்தைப் புகைக்கும்படியான வழிமட்டுக்குஞ் சொல்லமுடிவதுபோலும், காசியினு டைய பிளானைப்பார்த்தவனுக்கு கெங்காஸ்நான அனுபவமும் புண்ணியமு மில்லாமல் பிறருக்குக் காசியிலுள்ள சிலவிசேஷங்களைமட்டுஞ் சொல்ல முடிவதுபோலவறிக. (இ - து) முமுக்ஷுவுக்கு ஞானத்தோடேகூடியிருக்கிற குருவினிடத்திற் பயம் பக்தி சிரத்தைவருமேதவிர ஞானமில்லாத குருக்க ளிடத்திற் பயமுதலானது வாராது. (எ - தி) உத்தியோகஸ்தர்களுக்கு நிஜமான துரையினிடத்திற் பயமேதவிர வேஷத்துரையினிடத்திற் பய மில்லாததுபோலும், கடிவாளத்தைக் கையிற் பலமாய்ப் பிடித்துக்கொண்டு சவாரிபண்ணுகிறவனுக்குக் குதிரை பயப்படுமே யல்லாமல் கடிவாளத்தை நழுவவிட்டுச் சவாரிபண்ணுகிறவனுக்கு பயப்படாமற் கீழே தள்ளி மிதித்துவிட்டு ஓடிப்போவதுபோலுமறிக. (இ - து) பெரியவாளுக்கு அடங்கினமனதுக்கே ஞானமுண்டாகும், அடங்காதமனதுக்கு ஞான முண் டாகாது. (எ - தி) வாத்தியாருக்கடங்கின பிள்ளைக்கே படிப்புவருவதும், அடங்காதபிள்ளைக்குப் படிப்புண்டாகாததுபோலவும்; புருஷனுக்கடங்கின வளுக்கே கற்புண்டாகிறதும், அடங்காதவளுக்கு கற்புண்டாகாததுபோலு மறிக. (இ - து) பிரஹ்மத்தோடே ஐக்கியமாகவேண்டுமென்றெண்ணினவ னுக்குக் குருவையும் சாதுக்களையுஞ் சம்பாதிக்கவேண்டுமென்று சொல்லுவா னேனென்றால், யோனியில் சேரவேண்டுமென்பவன் அவளையும் அவளைச்சார் ந்தவர்களையும் என்னத்துக்காக நல்லவார்த்தை சொல்லவேண்டுஞ் சொல்? [இ - து] குருவின் தயவுமட்டுமிருந்தாலும், மற்ற ஈசுவராதிகளின் தயவில்லா மற்போனால் ஞானமெப்படியேறுமென்றால், சாப்பிடுகிறவனுக்கு அன்னதாதா தயவிருக்கும்போது கூடப்பத்துப்பேர்களிருந்தால்தான் சோறேறுமென்று சொல்லுவதுபோலவறிக. (இ — து) குருவன்றியில் தானாய் வேதாந்தசாஸ் திரம் பார்க்கிறவனுக்கு ஞானமும் வாராது, கெடுதலுமுண்டு. (எ - தி) சித்தனன்றியில் தானாய் சாஸ்திரத்தைப்பார்த்து ரசவாதஞ்செய்கிறவனுக்கு

சித்தியுமாகாமற் கெடுதலும் வருவதுபோலவறிக. (இ - து) எவ்வளவு சாதனசம்பத்தோடே கூடியிருந்தாலும் குருகிருபையில்லாமல் ஞானம் வாராது. (எ - தி) எத்தனைபேர்கள் வந்திருந்தாலும் மாப்பிள்ளைவாராமல் ருதுசாந்தி பண்ணமுடியாததுபோலும்; பூனை, நாய், நரி, எத்தனைவளர்த்தாலும் குதிரையன்றியில் சவாரிபண்ணமுடியாததுபோலுமறிக. (இ - து) குருமுகமாய்ப் பிரம்மாப்பியாசம்பண்ணப்பண்ண அஞ்ஞானதிகள் நிவர்த்தியாய் சுகமடையலாம். (எ - தி) யோக்கியர்கள் விருத்தியானால் அயோக்கியர்கள் அடியோடே காணமற்போவதுபோலும், மழையாலுண்டான பிரவாகத்தால் நதியிலிருக்கிற மணலும் மலமும் அடியோடேபோவது போலும், வெள்ளாவியில்வைத்த வஸ்திரம் அழுக்குப்போய் வெளுப்பது போலும், சாணையில்வைத்த ரத்நம் துருப்போய்ப் பிரகாசிப்பதுபோலுமறிக. (இ - து) சகல ஜீவர்களுக்கும் சர்வப்பிரகாசரூபமான சாக்ஷி தன்னுக்குள்ளே விளங்கிக்கொண்டிருந்தும், ஆவரணத்தால் மறைக்கப்பட்டு வெளியில் ஈஸ்வராதி சைதன்னியங்களை உபாசித்து அதனால் தாங்கள் சுகித்து விளங்க வேண்டுமென்று நினைத்து எவ்வளவு உத்கிருஷ்டகர்மம், பக்தி, யுபாசனை செய்தாலும், அப்படிச்சுகித்து விளங்கப்போகிறதில்லை, அவைகளைச் செய்வதும் பிரயாசம், அப்படிச்செய்தாலும் அது கிடைப்பதும்பிரயாசம், அப்படிக்கிடைத்தாலும் தடையன்றி நிர்விக்கினமாய் நிற்பதுவும் பிரயாசமென்றறியாமல் அலைவதுபோல அலையாமல் விவேகி மேலேசொல்லிய அன்னியமாயும், சோபாதிகமாயும், அனித்தியமாயுமிருக்கிற அவைகளை உபேக்ஷித்து, சற்குருநாதன் கிருபையினால் அவரைச் சரணுகதப்பண்ணி, அவர் சொன்ன உளவினால் தன்னுக்குள்ளே தானயும், சொயம்பிரகாசமாயும், நித்தியமாயும், தனக்குச் சுவாதீனமாயும், சகலவேதங்களாலும் தெய்வங்களாலும் கொண்டாடத்தக்கதாயும், யாவராலுமிவ்வளவென்று மதிக்கக்கூடாததாயும், ஒருக்காலுமொன்றினாலும் வாதிக்கக்கூடாததாயுமிருக்கிற சுவாத்மசைதன்னியத்தை மறைத்திருக்கிற ஆவரணத்தை விவேகவாயால் தள்ளி, தன்னை வெளிப்படுத்தி எப்போதும் சொப்பிரகாசமாத்திரமாய் சுகித்து வாழவேண்டுவதற்கு யுக்தி:— சகல சர்ப்பங்களிடத்திலும் சர்வப்பிரகாசசொரூபமான நாகரத்தினமிருந்தும், அதை வாய்க்குள்போட்டுக்கொண்டு வெளியில் பிரகாசம்வேண்டுமென்று தீபாதிப்பிரகாசங்களை ஆசிரயித்து அதனால் தான் விளங்கவேண்டுமென்றெண்ணி அலைந்து திரிந்தாலும், அந்தச்சாதனங்களைத் தேடுவதும் பிரயாசம், அப்படித்தேடினலும் அது கிடைப்பதும் பிரயாசம், அப்படிக்கிடைத்தாலும் தடையன்றி நிர்விக்னமாய் நிற்பதுவும் பிரயாசமென்றறியாமல் அலைவதுபோல அலையாமல், ஓர் புத்தியுள்ள சர்ப்பம் மேற்சொல்லிய தீபாதிப்பிரகாசம் தனக்கன்னியமாயும், தன்னை யெரிப்பதாயும், வெகுசாதன சாபேக்ஷிதமாயும், சோபாதிகமாயும், வாயுமுதலானதால் அணைக்கப்பட்டு அழிந்துபோவதாயுமிருக்கிறதென்று அறிந்து அதை உபேக்ஷித்து, தன் சுவஜாதியான ஓர் சர்ப்பசிரேஷ்டத்தைச்

சரணாகதம்பண்ணி, அது கிருபையினால் சொன்ன உளவினால் தன்னுக்குள்ளே யிருக்கிறதாயும், சொயம்பிரகாசமாயும், நித்தியமாயும், தனக்குச்சுவாதீனமா யும், சகலராலும் தேடிச்சிரசிற்கொள்ளத்தக்கதாயும், தெரிந்தபேர்களால் கொண்டாடத்தக்கதாயும், விலைமதிக்கக்கூடாததாயும், தக்ஷர்களால் மதிக்கக் கூடியதாயும், ஒருக்காலும் ஒன்றினாலும் வாதிக்கக்கூடாததாயும், தன் வாய்க் குள்ளிருந்தும் தனக்கு விளங்காமலுமிருக்கிற நாகரத்னத்தைத் தன் வாயா லேயே வெளிப்படுத்தும்படி செய்தபின், அது அதைச் சிரசில்தரித்து எப் போதும் ஸ்வயம்பிரகாசமாத்திரமாய் குகைக்குள்ளே சுகமாய் வாழ்ந்து கொண்டிருப்பதுபோலவென்றறிக. (இ - து) மூடர்கள் ஏகதேசத்தில் சாஸ் திராவலோகனத்தாலுண்டான விவேகத்தைப்பார்த்துச் சந்தோஷப்படுவது மின்னலில் பணத்தைப்பார்த்துச் சந்தோஷிப்பதுபோலும்; விவேகி குருமுக மாய் ஞானம்பெற்றுச் சந்தோஷிப்பது ஒருபுத்திமானனவன் ஒருசித்தன் மூலமாய் ரத்னத்தைப்பெற்று, அதனால் தன்வீட்டிலிருக்கிற இருட்டைப்போக் கடித்து தன் ஐசுவரியத்தைக்கண்டு மகிழ்வதுபோலவென்றறிக. (இ - து) தன்சொரூபத்தைத் தானே விசாரித்து குருகிருபையால் ஞானம்பெற்று ஜன்மதுக்கத்தை நிவர்த்திக்கவேண்டுமேயல்லாமல், ஈசுவரன் மோக்ஷத்தைத் தானேகொடுப்பாரென்று கருமங்களில் அலைகிறவனுக்கு மோக்ஷம் ஒருக் காலும்வராது, ஜனனமரணதுக்கமும் போகாது. (எ-தி) பசித்தவன் போஜன மெங்கேகிடைக்குமென்று விசாரித்து அன்னதாதாவீட்டுக்குப் போய் வேண் டியமட்டுஞ்சாப்பிட்டு பசியைப் போக்கவேண்டுமேயல்லாமல், தேர்திரு நாளைச்சேவித்தாலும் பசி போகாததுபோலவென்றறிக. (இ - து) பிரஹ்ம ஞானத்தைக் குருவாக்கியத்தாலடைய வேண்டுமேயொழிய மற்றக்கர்மாதி களால் அது வராது. (எ - தி) ஊருக்குப்போகிறவன் வழிதெரிந்த மனு ஷனைக்கேட்டுப் போகவேண்டுமேயொழிய சுவர்வைக்கிறது, மரத்தைச் சுற்றுவது, மலையின்பேரிலேறுவதுமுதலான தொழிலால் ஊர்போய்ச் சேராதவன்போலவறிக. (இ - து) குருகிருபையுள்ளவனாயிருந்தால் சுத்த மூடனுக்கும் ஞானம்வரும், அஃதில்லாமற்போனால் எவ்வளவு மகிமைபெற் றவனானாலும் ஞானம்வராது. (எ - தி) சக்கரவர்த்திமகளாயிருந்தாலும் புரு ஷனில்லாதிருந்தால் பிள்ளை பிறக்காததுபோலும், பள்ளியானாலும் பர்த் தாயிருந்தால் அஃதுண்டாவதுபோலுமறிக. (இ - து) ஐயா, குருவில்லா மல் வெகுகாலந் தபசுபண்ணியும் ஞானம்பெறாமலிருந்து பிற்பாடு குருகிருபை யால் ஞானம்பெற்றவர் யார்? சுத்தமூடனாயிருந்து குருகிருபையால் ஞானம் பெற்றவன் யார்? இவ்விரண்டையும் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்.—சாம்பூகமகரிஷியானவர் பதின யிரம்வருஷம்வரை நிராகாரராய்க் காயக்கிலேசம்பண்ணி, இந்திரியநிக்கிரகத் தைச் செய்துகொண்டு தபசுபண்ணி வந்ததின்பேரில், ஈசுவரன் சானித்திய மாய்வந்து அஷ்டமாசித்திகளையும், அனுக்கிரகம்பண்ணிவிட்டுப் போனபின்

இவரும் அந்த சித்திகளைவைத்து விளையாடிக்கொண்டு வரும்போது, சித்திர வீரியனென்கிற சித்தனுக்கும் இவருக்கும் வாதம்நேர்ந்தபோது, அவன் இவரை ஜெயித்துவிட்டதால் மிகுந்தவிசனத்தை யடைந்தவராய்த் தபித்துக் கொண்டிருக்கும்போது, நாரதர் இதைக்கேட்டு இவரை வசிஷ்டமகரிஷியினிடத் திற் கொண்டுபோய்விட்டு அவரும் இவரைப்பார்த்து, நீ யார்? இந்த விசன மென்னநிமித்தியமாய் வந்திருக்கிறதென்று கேட்டவுடன், அவர் இவரைப்பார்த் துத் தன்னுடைய விருத்தாந்தங்களையெல்லாம் சொன்னபின், வசிஷ்டர் 'பாம்பு கடித்தவனுக்கு விஷமேறுவதுபோல உனக்கும் அஞ்ஞானமாகிற பாம்புகடி த்து அகம்பாவமாகிற விஷமேறி சித்தியாகிற மயக்கத்தோடேகூடியிருந்தவனு க்கு சித்தவீரியனென்ற சித்தனாகிற கெருடன் வாதமாகிற வாயால் கடித்ததி னால், உன் அகம்பாவமாகிற விஷமிறங்கிவிட்டதை நீ யறியாமல் இப்படி நமக்கு அவமானம்வந்துவிட்டதேயென்று தேகவாசனையால் துக்கிக்கிறாய்' என்று சொ ன்னதைக்கேட்ட சாம்பூகரும், ஐயா, தாங்களெனக்கு விஷமிறங்கிவிட்டதாகச் சொன்னீர்களே, விஷமிறங்கினவனுக்குச் சந்தோஷம்வருமேயல்லாமல் விசன மெனக்கு வரக்காரணமென்னவென்றால், அடே மூடா! நீ இதுவரையில் அகம்பாவமாகிற விஷத்தோடேகூடியிருந்ததினாலல்லவா உனக்கு உன்னுடைய சொரூபமின்னதென்றும், இந்த ஜீவேசுவரஜெகத்தின் சொரூபமின்னதென் றும் விசாரிக்கப் புத்தியுண்டாகாமலும், அப்படி இந்தவிவேகங்களை அறிவிக் கிற சற்குருவின் சகவாசமும், சற்குருவேண்டுமென்கிற தேட்டமுமில்லாம லிருந்து, இப்போது அந்தவிஷம் கொஞ்சம் இறங்கினதாலல்லவா இங்கேவந்து சேர்ந்தாயென்று சொன்னவுடன் இவரும் அதைச்சரியென்று ஒப்புக்கொண்டு, நான் யார்? இச்சரீர இந்திரியாதிகளின் சொரூபமென்ன? இந்த ஜகத்து என்னகாரணத்தினாலுண்டானது? இந்தச் சம்சாரபந்தமெப்படிவந்தது? அதெப்படி நிவர்த்தியாகுமென்று கேட்டவுடன், வசிஷ்டர் சொல்லுகிறதா வது, நீ அவஸ்தாத்திரயத்திற்கும் சாக்ஷியான பிரஹ்மமே. இந்தத்தேகேந் திரியாதிகள் சுத்த ஜடங்கள், உன்னை நீ யறியாததினால் தேகாதி ஜெகத்துண் டாச்சுது. இந்தத்தேகேந்திரியாதிகளை நானென்றபிமானிப்பதால் பந்தம் வந்திருக்கிறது, அந்த அபிமானத்தைவிட்டு நான் பிரஹ்மமென்றறிவதே பந்தநிவர்த்தி யென்றனுக்கிரகித்தபடி சாம்பூகமகரிஷியும், அப்படியே தத்து வஞானத்தை யடைந்து ஜீவன்முக்தரானதை அறிந்துகொள்ளக்கடவாய். அதி கோரன், சசிவர்ணன்முதலான மூடர்கள் குருகிருபையால் ஞானம்பெற்று ஜீவன்முக்தர்களாய்க் கரையேறின கதைகளையறிக.

## 194 - வது தரங்கம்.

ஈசன்குருக்களுடைய கிருபையால் அஞ்ஞானம் நிவர்த்தியாகுந்தன்மை:—

ஈசுவரவுபாசனையால் முமுக்ஷுவுக்கு அஞ்ஞானம்போவதற்கும், குருகிருபை யால் அது போவதற்கும் யுக்தி:—வஸ்திரங் கிரமமாய்க்கிழிவதுபோலும், தீயில்

எரிந்துபோவதுபோலும்; பானைசட்டிகள் தானே யுடைவதுபோலும், தடிகா
ரன் அடித்து உடைப்பதுபோலுமறிக. (இ - து) ஈஸ்வரசிருஷ்டியிலகப்பட்ட
ஞானிக்கு ஈசுவரனுஞ் சமானமில்லை. (எ - தி) பூமியிலுண்டான ரத்னத்திற்கு
இந்தப்பூமிவிலையில் சமானமாகாததுபோலவென்றறிக (இ - து) ஞானி தன்
னைச் சரணமென்றடைந்து கொஞ்சம் உபசரித்தால் மேலான ஞானத்தைக்
கொடுப்பதற்கும், ஈசுவரன் அவரவர்கள்செய்த கர்மத்துச்குச்சரியான அவர்க
ளிச்சித்த பலத்தைக்கொடுப்பதற்கும் யுக்தியெதுபோலவென்றால்,—குழந்தைக்
குக்கொஞ்சம் பலகாரம் பக்ஷணங்கொடுத்துக் கொண்டாடினால் விலைமதிக்கக்
கூடாத ரத்னமோதிரத்தை அவர்களுக்குக் கொடுப்பதுபோலும், தாசி காசு
கொடுத்தவர்களிடத்திற்போய் ஆடுவதுபோலுமறிக. (இ - து) குருவுக்கும்
மற்ற ஈசுவராதிகளுக்கும் ஞானானுக்கிரகஞ்செய்வதிலிருக்கிற தாரதம்மியமெப்
படியென்றால், பிதாவானவர் பிள்ளைக்குப் பலவந்தமாய் வித்தை தனமுதலான
சொத்துக்களைக் கொடுப்பதுபோலும், கடைக்காரர்கள் காசைக்கொடுத்துக்
கேட்ட சாமானை நிறுத்துக்கொடுப்பதுபோலுமறிக. இதற்குக் காரணமென்
னவெனில், பிதாவானவன் பிள்ளைநிமித்தமாகவே சொத்துமுதலானவைகளைத்
தேடிவைத்திருப்பதினாலும், செட்டி தன்லாபத்துக்காகவே கடைவைத்துக்கொ
ண்டிருப்பதாலும், இவர்களிருவரும் இப்படியிருப்பது ஞாயந்தானென்றறிக.
(இ - து) ஈசுவரனிடத்தில் காத்தவனுக்கு பாபக்ஷயமாகிற ஒருபலமும், குருவி
னிடத்தில் ஞானத்தோடு இரண்டுபலமுங்கிட்டும். (எ - தி) விற்பத்தியில்லாத
வாத்தியாயரிடத்தில் படிக்கிறவனுக்கு படிப்புமாத்திரமும், விற்பத்தியுள்ளவ
ரிடத்திற் போனவனுக்கு படிப்பும் அர்த்தமுந் தெரிவதுபோலும்; குழந்தைக
௬ டைய மைதுனம் விளையாடல் மாத்திரம், பெரியவர்களுடைய மைதுனம்
விளையாட்டோடே பிள்ளையும் பெறுவதுபோலும்; பரோக்ஷமான பர்த்தா
திரவ்யாதிகளை அனுப்பிவிப்பதுபோலும், பிரத்தியக்ஷமாயிருக்கிற பர்த்தா
திரவ்யாதிகளைக் கொடுப்பதும் தவிர, போக சந்ததிகளையும் கூடக்கொடுப்பது
போலுமறிக. (இ - து) ஈஸ்வரனுக்கும் குருவுக்கும் தாரதம்மிய முண்டு.
(எ - தி) கடைச்செட்டியாருக்கும் தர்மவைத்தியனுக்கும் பேதமெவ்வள
வோ அவ்வளவு பேதமென்றறிக. (இ - து) ஈசுவராதிகளும் ஞானியும்
பிரம்மமானாலும், முமுக்ஷு ஞானியினிடத்திலேயே போகவேண்டும். (எ - தி)
பசியுள்ளவன் தென்னம்பிள்ளை பயிர்பண்ணுகிறவனிடத்திற்போகாமல் தேங்
காய்ப்பால் கையில்வைத்திருக்கிறவனிடத்திற் போய் அந்தப்பாலை வாங்கிச்
சாப்பிடுவதுபோலும், தாகமுள்ளவன் தண்ணீர் வைத்திருக்கிறவனிடத்திற்
போகாமல் மலையைப்பிளந்து கிணறுவெட்டுகிறவனிடத்திற் போகிறவன் சீக்
கிரத்தில் பிரயோஜனத்தை யடையாமற் போவதுபோலுமறிக. (இ - து)
ஞானி விதிநிஷேதமன்றியில் நிர்ப்பயனாய் ஞானோபதேசம் செய்வார், ஈசுவரன்
வெகுகாலம் உபாசித்தபேர்களுக்குள்ளே ஒருவனிரண்டுபேர்களுக்கு உபதே
சிக்க வரும்போதும் ஒருவருக்குந்தெரியாமற் பயந்துகொண்டு ரகசியமாய்த்

தடபிடலாய் வந்து ஞானோபதேசஞ்செய்து உடனே மறைவார். (எ - தி) தாசி நிற்பயமாய் விதிநிஷேதமன்றியில் மேல்கீழ் காலதேசம் ஒன்றும்பாராமல் வந்தவர்களுக்கெல்லாம் போக சுகத்தைக் கொடுப்பதுபோலும், குலஸ்திரீயானவள் வெகுகாலாந்தரத்தில் சமயம்பார்த்துக்கொண்டிருக்கிற பேர்களுக்குள்ளே பயந்து மூலைமுடுக்கில் ஏகதேசமாய் ஒருத்தர் இரண்டுபேர்களுக்கு வெறுஞ்சாதத்தைப் போடுவதுபோல போகசுகத்தைத்திரும்ப இன்னவிதமென்று நினைக்கக்கூட இடமில்லாமற் கொடுப்பதுபோலுமறிக. (இ - து) ஈசுவரனிடத்தில் கர்மம் பக்தி யோகங்களாகிற காசுகளைக்கொடுத்து அஷ்டமாசித்தி முதலானதைப் பெறுகிறார்கள். ஞானியினிடத்தில் அஞ்ஞானத்தைக் கொடுத்து ஞானத்தைப்பெறுகிறான். (எ - தி) செம்பை அடவுக்குவைத்து பாதாளகரண்டி வாங்குவதுபோலும், வாடகைக்குக் குடியிருப்பதுபோலும், இரவல் நகையை வாங்கிப் போட்டுக்கொள்வதுபோலும், பணங்கொடுத்துக் கிளப்பில் சாப்பிடுவதுபோலுமன்றி இருட்டை வாங்கிக்கொண்டு தீபங்கொடுப்பதுபோல துக்கநிவர்த்தி தடையற்ற ஆனந்தங் கொடுப்பதால் ஞானியினிடத்தில் இதற்கெதிர்மறையாக அறியத்தக்கது. ஐயா, சிவன் முதலான பேர்களும் சுகத்தைத் தனக்குக் கொடுக்கிறதாகவும், குருநாதனும் தனக்குச் சுகத்தைக் கொடுக்கிறதாகவும் சொல்லப்படுகிறதே இவ்விரண்டும் சரியா? அல்லது தாரதம்மியமுண்டாவென்றால், உண்டு. அதாவது,—ஒரு பிறவிக்குருடனைப் பிரபுக்கள் தடியைக்கொடுத்துக் காசிமுதலான யாத்திரை செய்வித்து சுகிப்பிப்பதுபோல ஈஸ்வராதிகளும் அஞ்ஞானமாகிற குருடாயிருக்குகையை அடைந்திருக்கிற ஜீவர்களுக்கு சாலோகாதிபதங்களாகிற தடியைக்கொடுத்துச் சுகிப்பிக்கிறார்கள். அவனுக்கே சித்தன் வந்து அஞ்சனத்தால் கண்ணைக்கொடுத்துக் காப்பாற்றுவதுபோல குருநாதன் இவனுக்கு ஞானமாகிற அஞ்சனத்தால் அஞ்ஞானமாகிற திமிரத்தைப்போக்கடித்து அழியாத சொப்பிரகாசமான ஞான நேத்திரத்தைக் கொடுக்கிறார். இதுவுமன்றியில் அப்படி ஞானநேத்திரம் பெற்றவன் தன்னோடேபோகாமல், மற்ற அஞ்ஞானக்குருடர்களுக்கு ஞானக்கண்ணைக்கொடுத்து பரம்பரையாய் இப்படி நடந்து விளங்கிக்கொண்டே வரும்படியாய் செய்வதால் குருநாதனுக்குச் சாதுர்சியம் குருநாதனேதவிர மற்ற ஒருவரையும் சாதுர்சியமென்று சொல்லக்கூடாது. (இ - து) ஈசுவரகிருபையாலும் குருகிருபையாலும் ஞானம்வரவேண்டுமென்று சொல்லிய சுருதிக்கு யுக்திகள்:—ஒருராஜன் படுத்து நித்திரைபண்ணுஞ் சமயம்போல ஈசுவரன், அந்தராஜன் விழித்துக் கொலுவில்வந்திருக்குஞ் சமயம்போல குரு இருப்பதால், படுத்தராஜகிருபையாலும் முழித்தராஜன்கிருபையாலும் இந்த ஏழை பேறுபெற்றானென்பது உபசாரமேதவிர இரண்டுபேரில்லை. படுத்தராஜனே ஏழைக்குக் கிருபைசெய்தானென்பது பூர்வஸ்திதியைப்பற்றிச் சொன்னது, விழித்தராஜன் கிருபைசெய்வது பிரத்தியக்ஷமாயிருப்பது போலும்; பச்சைப்பில்லே பால்கொடுத்தது என்பதுபோலும், பசு பால்கொடுத்தது

என்பதுபோலும்; பாலே நெய்யென்பதுபோலும், கடைந்து மோரைத் தள்ளி வெண்ணையை நெய்யென்பதுபோலுமறிக. (இ - து) ராஜாவைச் சிநேகம்பண்ணினவனுக்கு எப்படிச் சகலசுகமுமுண்டாகுமோ அப்படி குருவை இஷ்டம்பண்ணினவனுக்கு சகலசுகமுமுண்டாகும், பிச்சைக் காரர்களை இஷ்டம்பண்ணுவதுபோல மற்றவர்களுடையஇஷ்டமென்றறிக. (இ - து) ஈசுவராதிகள் இவன் கர்மஞ்செய்தமட்டுக்கும் பதமுக்தியைக் கொடுப்பார்களேதவிர ஞானியைப்போல இப்போதே ஜீவன்முக்தியைக் கொடார்கள். (எ - தி) சன்னாளையுஞ் சித்தளையும்போலப் பார்த்துக்கொள் ளத்தக்கது. (இ - து) ஈசன்கிருபையைப் பெற்று ஞானமடைவது பாறையை வெட்டித் தண்ணீர் சாப்பிடுவதுபோலும், குருவின் கிருபையைப்பெற்று ஞானமடைவது கெங்கையில் தண்ணீர் சாப்பிடுவதுபோலுமறிக. ஐயா, ஈஸ்வரகிருபையால் ஞானம்பெறுவது வெகுபிரயாசையென்றும், குருகிருபை யால் ஞானம்பெறுவது அதிசுலபமென்றும் சொன்னீர்களே, அவ்விருவர்களை யும் எனக்கு அனுபவமாய்க் காட்டவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ் சொல்லுகிறோம் கேள்:—ஏமசடர்களென்கிற வேடர்களுக்கு ராஜாவாக சுரகு என்றொருவர் ராச்சியபரிபாலனம் செய்துகொண்டு வரும் போது, பாரசீகமென்கிற தேசத்துக்கு பரிகனென்று ஒரு ராஜா வுண்டாய், இவரும் அவரும் வெகு சிநேகமாயிருந்து வரும்போது, பரிகராஜாவின் தேசத் தில் பன்னிரண்டு வருஷம் மழையில்லாமல் க்ஷாமமுண்டாய், அதினால் படுகிற ஜனங்களுடைய துக்கத்தைத் தீர்க்கவுஞ் சகிக்கவும் முடியாமல், இவர் ஒருவ ரிடத்திலும் சொல்லாமல் இரவில் புறப்பட்டு வெகுதூரத்திலிருக்கிற வனத்திற் குப்போய் ரிஷிவேஷங்கொண்டு கீழே உதிர்ந்த சருகுகளைச் சாப்பிட்டுக் கொண்டுவந்ததால் பரகாதரென்ற பேரையுந் தரித்துக்கொண்டு மகா வைராக் கிய சிரோமணியாய் நிராசையோடே ஈசுவரனை மனதினால் ஆயிரம்வருஷம் வரை இடைவிடாமல் தியானம் பண்ணிக்கொண்டுவந்து, பிற்பாடு ஈஸ்வர கிருபையால் ஆத்மஞானத்தைப் பெற்று அநேக சிஷ்யர்களுக்கும் ஞானோப தேசத்தைச் செய்துகொண்டு, மூன்றுலகங்களாகிற மடங்களிலெல்லாம் சஞ் சரித்துக்கொண்டு வருகிறார். சுரகுவென்ற ராஜாவானவர் நீதியாய் ராச்சிய பரிபாலனம் பண்ணிவரும்போது துட்டர்களான கொலைகளவு முதலான வைகளைச் செய்கிற பாவிகளைச் செக்கிற்போட்டு ஆட்டும்படியான தெண்டனைக ளைச் செய்துவருங் காலத்தில், அப்படி இம்சிக்கும்போது அந்தத் துஷ்டர்கள் அழுவதைக்கண்ட அவ்வரசனுக்கு இரக்கமுண்டாய், மனதில் இந்தத் துஷ்டர் களை இப்படி இம்சை பண்ணாவிட்டால் சாதுக்களுக்கும் தர்ம சாஸ்திரத்திற் கும் கெடுதலாயிருக்கிறது. அல்லது இம்சை பண்ணினால் அவர்கள் படுகிற துக்கத்தைக்கண்டு மனசு சகிக்கவில்லை. இதற்கு நாமென்ன செய்வோம்? சூரியனுடைய கிரணமானது கெங்கையிலும், சாக்கடையிலும், கல்யாணவீட்டி லும் இழவுவீட்டிலும், தங்கத்திலும், மலத்திலும், உத்தமனிடத்திலும், நீச

னிடத்திலும் எப்படி தாரதம்மியமன்றியில் சமமாய்ப் பரவியிருப்பதுபோல, நம்முடைய மனதிலும் அப்படி பரிபூரணக்ஞானமுண்டாய் சுகதுக்கங்களிற் சம்மந்தப்படாமல் எப்போதிருப்போமோ? அப்படிப்பட்ட ஞானத்தை அனுக்கிரகிக்கவல்லமையுள்ள சத்குரு எங்கேயிருக்கிறாரோ? அவர் தெரிசனம் நமக்கு எப்போது கிடைக்குமோவென்று இப்படிக் கொஞ்சகாலஞ் சிந்தித்துக் கொண்டிருக்கும்போது, மாண்டவ்யமகரிஷியானவர் சிஷ்யர்களோடேகூட யெதிர்ச்சையாய் அச்சூரகுராஜாவின் அரண்மனைக்கு வந்துசேர்ந்தவுடன், அந்தராஜனும் இவர்களுக்கு வேண்டியமட்டும் பூஜித்து தன்னுடைய சிம்மாசனத்திலுட்காரவைத்து பிரதக்ஷண நமஸ்கார ஸ்துதிகளால் அவர்மனதைத் திருப்திபண்ணிவைத்தபின், அவர் சந்தோஷமாய், ஓ ராஜாவே! உமக்கு என்னவேண்டியதென்று கேட்டவுடன், அந்தராஜாவும் எனக்குச் சகல துன்பங்களையும் போக்கடிக்கிறதான பரிபூரணஞானத்தை யனுக்கிரகிக்க வேண்டுமென்று கேட்டதைக் கேட்ட அந்தச்சற்குருவும், ஓ ராஜாவே! நீ பிரகஸ்பதிக்கும் புத்தியில் சிறந்தவனாயிருக்கிறாய், உனக்கதிசீக்கிரத்தில் ஞானமுண்டாகும்படி நாம் அனுக்கிரகிக்கிறோம். அதாவது, பரிபூரணமான தன்னை மறந்ததால் இரண்டுபிள்ளை பிறந்தது. அதில் அகந்தையென்கிற பிள்ளை மூத்தது. இதந்தையென்கிற பிள்ளை இளையது. இவர்களில் இதந்தையென்கிற பிள்ளையை முந்திக்கொன்று, பிந்தி அகந்தையென்கிற பிள்ளையைக்கொன்று, நானென்கிறதற்கு லக்ஷியமான சாக்ஷியே நானென்றறிவதே ஞானமென்று சொன்னபடி, சூரகுவும் தனித்திருந்து இதம்விருத்திக்கு விஷயமான சகல ஜெகத்தையும் பொய்யென்று தள்ளி, அகம்விருத்திக்கு விஷயமான பஞ்சகோசத்தையும் நானல்லவென்று தள்ளி, நானே பிரம்மமென்று ஒருக்ஷணத்துக்குள் நிச்சயஞானத்தை யடைந்து சுகமாய் வாழ்ந்துகொண்டிருப்பதைக் கேட்ட பரனுதர், இவரிடத்தில்வந்து இருவருஞ் சிநேகமாய்க் குலாவிக்கொண்டிருக்கும்போது, அவர் இவரைப்பார்த்துச் சமாதியைத் தினஞ்செய்துவருகிறீராவென்று கேட்டதைக் கேட்டதும், "வாசனையாகிற துரும்புகளை யெரிக்கிற ஞானமே சமாதியல்லாமல் சும்மாயிருப்பதல்ல, அறிஞன் சமாதியைவிட்டு என்றுதானெப்படி அகன்றிருப்பன்" என்று சொன்னதைக்கேட்ட அவரும் சந்தோஷித்திருந்த கதையையறிக.

## 195 - வது தரங்கம்.

குருபக்தியைக்காட்டிலும் பரமகுருபக்தி மேல்:—

குருபக்தியைக்காட்டிலும் மேல் ஒன்றுமில்லையென்று சுருதிகள் கோஷித்திருந்தாலும், அந்தச்சுருதிகளை நாம் பூர்வபக்ஷம்பண்ணுகிறோம். அதாவது, குருவுக்குத் தன்னிடத்தில் பக்திபண்ணுவதிலும் தன்குருவினிடத்தில் பக்திபண்ணுகிறவனிடத்திலேயே அதிகசந்தோஷம்வருவதால், குருபக்தியிலும்

பரமகுருபக்தியே அதிகமெனப்படும். குருகீதையில் குருவுக்குச் சந்தோஷமுண்டுபண்ணுவதே முக்திக்கு முக்கியசாதனமென்று சொல்லியிருந்தாலும், குருபக்தியைக்காட்டிலும் பரமகுருபக்தி சிலாக்கியம். [எ - தி] ஒரு இஷ்டனுக்குபசாரம்பண்ணுவதிலும் அவனுடைய அருமைப்பிள்ளைக்குபசாரம் பண்ணுவதில் அவனுக்கதிகசந்தோஷமுண்டாவதுபோலும், பெண்ணுக்குப் பிறந்தவீட்டில் தனக்குபசாரம்பண்ணுவதிலும் தன்நாயகனுக்குபசாரஞ்செய்வதில் அதிகசந்தோஷம் வருவதுபோலும், மரத்தில் ஜலம்விடுவதிலும் வேரில் ஜலம்விடுவதால் அதிக பலமுண்டாவதுபோலும், சரீரத்துக்குச் சந்தனமுதலான உபசாரஞ்செய்வதிலும் பசிக்குப் பிராணனுக்கன்னம் கொடுப்பதால் மனமுதல் சரீரம்வரையிலும் எல்லாஞ்சுகிப்பதுபோலுமறிக. ஐயா, சகல சாஸ்திரங்களும் குருபக்தியையே மேலாகச் சொல்லியிருக்கும் போது, தாங்கள் இப்போது இந்தவிடத்தில் குருபக்தியைக்காட்டிலும் பரமகுருபக்தியே சிலாக்கியமென்று சொன்னீர்களே, அதற்குச் சுருதியுக்தி அனுபவங்களென்னவென்றுகேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறோம் கேள்:—சகலமானதேவதைகளும் முந்தியொருக்கால் வேதங்களுடைய பொருளானபிரஹ்மஞானத்தை யடையவேண்டுமென்றுலோசித்து, பிரம்மதேவரைக் குருவாக அடைந்து, அவரும் ருக்வேதத்திலிருக்கிற ஐதரேய உபநிஷத்திற் சொல்லப்பட்டிருக்கிற அறிவே பிரஹ்மமென்ற ஞானத்தையும் உபதேசித்து, அப்படியே தைத்திரியத்தில் குகைக்குள்ளிருக்கிற பிரஹ்மத்தை யறிந்தவனே ஜீவன்முக்தனென்றும், பஞ்சகோசங்களையும் நேதித்து அதற்குச்சாக்ஷியே நீயென்றுபதேசித்து, அதன்பின் கேனோபநிஷத்தில் அறியப்பட்டதற்கும் அறியப்படாததற்கும் அப்புறப்பட்டதே பிரம்மமென்றுபதேசித்து, சாந்தோக்கியத்தில் முக்கியாதிகாரிக்கு விசாரணையினால் பிரம்மத்தையறிவதற்கு மண்ணையும், பொன்னையும், இரும்பையும் திருஷ்டாந்தமாகவைத்து உத்தாலகமகரிஷி சுவேதகேதுவுக்கு ஒன்பதுதடவை நீயே பிரஹ்மமென்றுபதேசித்ததாகச் சொல்லியிருப்பதையும் சொல்லி, அந்த உபநிஷத்திலேயே மந்தாதிகாரிக்கு தகராகாசத்தில் பிரஹ்மத்தைத் தியானம்பண்ணச்சொல்லி உபதேசித்து, அதன்பின் முண்டகோபநிஷத்தில் எங்கும் பிரஹ்மமே நிறைந்திருக்கிறது, அந்தப்பிரஹ்மத்தை முமுக்ஷுவானவன் சகலகர்மங்களையுந் துறந்து பிரம்மநிஷ்டரான சற்குருவைச் சரணமாகவடைந்து கரையேறவேண்டுமென்று சொல்லி, அதன்பின் கைவல்லியஉபநிஷத்தில் ஆசுவலாயனரிஷி பகவானாயிருக்கிற பரமேஷ்டியைப் பார்த்து 'சத்துக்களால் சேவிக்கத்தக்கதாயும், அதிரகசியமாயும், சிரேஷ்டமாயும், அதிசீக்கிரத்தில் சகல பாபங்களையும் போக்கடித்துப் பரப்பிரஹ்மத்தைக் கொடுக்கிறதாகவிருக்கிற பிரஹ்மவித்தையை அனுக்கிரகிக்கவேண்டும்' என்று கேட்டதற்கு, அவர் சிரவண மனன நிதித்தியாசன சமாதியால் அறியச்சொன்னதாகச்சொல்லி, பிரகதாரணியத்தில் யாக்கியவல்கர் மைத்திரேயிக்குச் சகலத்திலும் ஆத்மாவே

பிரியவஸ்துவென்று சொல்லி, அதிலேயே அந்தக்குரு ஜனகரைப்பார்த்து, சூரியப்பிரகாசத்திலும் நேத்திராதி இந்திரியப்பிரகாசம் அதிகம், அதிலும் அந்தக் கரணப்பிரகாசமதிகம், அதிலும் ஆத்மப்பிரகாசமதிகம், அந்த ஜோதியான ஆத்வாவே தானென்று அறியும்படி சொல்லி, கடவல்லியிலும் அப்படியே யுபதேசித்து, இந்தப் பிரம்மஞானத்தை நானுபதேசித்தபடி உங்களுக்கு நம்பிக் கைவருகிறதற்காக என்குருவான பரமசிவனைத் தியானத்தால் வரவழைத்து, தேவியுடன் அவர் வந்தபின், தேவதைகளைப்பார்த்து, உங்களுக்கிந்த பிரம்மா உபதேசித்த ஞானமே சுருதிசம்மதம் என்னுடைய சம்மதமுமிதுவேயென்று தேவியுடன் அனுக்கிரகித்துப்போனபின், தேவதைகளுக்கு நம்பிக்கைவந்ததால், குருவாக்கியத்தை ஸ்திரப்படுத்துவது பரமகுருவின் வாக்கியமானதால் பரம குரு அதிகமென்பதே சுருதி ; யுக்தி முதலில் சொல்லியாய்விட்டது. நம்முடைய குருநாதனிடத்தில் பக்திசெய்கிறபேர்களிடத்தில் நமக்கதிக சந்தோஷமுண்டாய் அனுக்கிரகஞ்செய்துவருவதே அனுபவமென்றறிக.

## 196 - வது தரங்கம்.

சாதுசங்கத்தால் மந்தமுமுக்ஷுவும் கரையேறுவன்:—

மந்தமுமுக்ஷுவானாலும் குருசன்னிதியில் பத்துசாதுக்களோடே மத்தியிலிருந்தால் அவனும் பக்குவமாய்விடுவன். [எ - தி] ஈரவிறகானாலும் பத்துக் காய்ந்த விறகோடேசேர்ந்து தீயிற்போட்டெரித்தால் அதுவும் எரிந்துபோவது போலும், நடுக்கிடந்தவனுக்குப் பாய்தலையணை வேண்டாமென்ற பழமொழி போலும், பத்துப்பேர் யாத்திரைக்காரரோடே யொருவன் சொயம்பாகஞ்செய்யத்தெரியாத பிச்சைக்காரனானாலும் அவர்கள் சமையல்பண்ணின அன்னங்களில்கொஞ்சங்கொஞ்சம் பிக்ஷைபோட்டால் இவன் பூராவாய்த் திருப்தியாவது போலும், பெரியமனுஷர்களுடைய மத்தியில் சாப்பிடஉட்கார்ந்தவனுக்கு வீசுகிற காற்றுமுதலான உபசாரம் தானேவருவதுபோலுமறிக. [இ - து] சாதுக் கூட்டங்களில் ஒரு கெட்டவன் சேர்ந்திருந்தாலும் அவனுஞ் சாதுவாய் விடுவன். [எ - தி] பாலில்சேர்ந்த ஜலம்போலும், பூவில்சேர்ந்த நார்போலும், அன்னத்தில்சேர்ந்த பதார்த்தம்போலும், தீயில்சேர்ந்த விறகுபோலும், அஷ்டமாசித்தனை யடைந்தவன்போலுமறிக. [இ - து] சாதுசங்கத்தை மந்தனானாலும் விடாதிருந்தால் வாசனாக்ஷயம்வந்து கரையேறுவன். [எ - தி] நீச்சுத்தெரியாதவனாயிருந்தாலும் தெரிந்தவனுடைய கையைப்பிடித்துக்கொண்டு போகிறவன் கரையேறுவதுபோலும், ஏழையானாலும் பிரபுக்கள் நடுவிலிருந்தால் அன்னம் வாங்கிச்சாப்பிட்டு பசியைத் தீர்த்துக்கொள்வது போலுமறிக. [இ - து] சாதுசங்கதியானது முக்தியைக் கொடுக்குமென்பதற்கு சுருதி யுக்தி அனுபவமென்னவென்றால், சாதுசங்கமாகிற கெங்கைச்சீதநீராடினவர்க்கு வேறேயொன்றுந் தேவையில்லையென்று சொல்லியிருப்பதே சுருதி, அமிர்தஞ்சாப்பிட்டவனுக்கு

அறுசுவைவேண்டாதென்பதே யுக்தி, நம் குருநாதனிடத்தில் வந்துசேர்ந்திருக்கிற நம்போலிகளுக்கு வேறொன்றும் வேண்டாமலிருப்பதே அனுபவம். மூடசங்கமானது அதற்கெதிர்மறையாக மூன்றுமிருக்குமென்றறியத்தக்கது. [இ - து] சுவாசனையுள்ள கொட்டடியில் ஒருபுருஷனைவிட்டால் அவன்மூக்கில் அந்தச்சுவாசனை யெப்படியேறுமோ, அப்படிச் சாதுக்களிருக்கிற கோஷ்டியில் ஒருவனைக் கொண்டுபோய்விட்டால் தேகாதிவிலக்ஷணமான சுத்தவாசனை தானேயுண்டாகும். [இ - து] புதிதாய்வந்த ஒரு முமுக்ஷுவை சாதுக்கள் கூட்டத்திலிருந்து குரு படிக்கச்சொன்னல் அவனுக்கு உற்சாகமுண்டாகும். [எ - தி] தள்ளிவைத்திருந்த அவிசாரியை யோக்கியர்கள் சாப்பிடுகிற பந்தியில்விட்டு நெய்முதலானதைப் பரிமாறச்சொன்னல் அவளுக்குச் சந்தோஷமுண்டாவதுபோலவறிக. [இ - து] சாதுசங்கத்துடன் குருசன்னிதியிலிருந்து சிரவணஞ்செய்கிறவனுக்கு வேறே சாஸ்திராப்பியாசம் துண்டாய்ச் செய்யவேண்டியதில்லை. [எ - தி] ஆசாரியஸ்வாமிகள்கூடவிருக்கிறவனுக்கு துண்டுசமையல் வேண்டுவதில்லாததுபோலவறிக. அப்படித் துண்டாய்ப் படிக்கிறவன் சுயம்பாகநேமம்பண்ணின ஆசாரியார்கதைபோலவறிக. [இ-து] மந்த மத்திமாதிகாரியாயிருந்தாலும் சற்குருகடாக்ஷத்தினுலுஞ் சாதுசங்கத்தாலும் கரையேறுவன். [எ - தி] ஈரவிறகாயிருந்தாலும் சமைக்கிறவள்சக்தியாலும், காய்ந்தவிறகுகளுடைய சங்கத்தாலும் எரித்துவிடுவதுபோலும்; நீச்சுத் தெரியாதவனுனலும் தெப்பக்கட்டையாலும், நீச்சுத்தெரிந்தவர்களுடைய சேர்க்கையாலும் பிரவாகத்திலிருந்து கரையேறுகிறதுபோலவறிக. ஐயா, சாதுசங்கத்தினுலேயே பரமமூடனுயிருந்தாலும் பரமபதத்தையடைவனென்று சொன்னீர்களே, அப்படி யெந்தமூடன் சாதுக்களுடைய சகவாசத்தால் மோக்ஷத்தை யடைந்திருக்கிறுன். அதை யெனக்குச் சாதுசங்கதியில் பிரியமுண்டாவதற்கு சொல்லவேண்டுமென்று கேட்ட சிஷ்யனுக்குக் குரு சொல்லுகிருர்:—குச்சரியதேசத்திற்கு அதிபதியாகிய துலுக்கராஜனுடைய அரண்மனை சமையலுக்காகத் தினந்தோறும் 500 பசுவதை செய்துவந்த ஓர் சக்கிலியனுனவன் அவ்வரசன் ஒருகாலத்தில் வேட்டைக்குப்போனபோது கூடப்போகச்சே, ஓர் நதிக்கரையில் ஓர் மகாத்துமா கோகத்திப்புராணம் வாசித்து, அதில் பசுக்களை இம்சைசெய்யக்கூடாதென்றும், பசுவானது பயிரைத்தின்றன்முதலிய தீங்குசெய்தால் அப்போதும் நெட்டியைத் தோல்சீவி அதைக்கொண்டு தெண்டித்து விலக்கவேண்டுமென்றும், அப்படியன்றி வேறுவிதமாய்த் தண்டித்து ஒருரோமமாவது உதிர்ந்தால் ரௌரவாதி நரகப்பிராப்தியுண்டாமென்றுஞ் சொன்னதை அந்தச்சக்கிலியன் பூர்வஜென்மத்துப் புண்ணியபரிபாகத்தாற் கேட்டு தினமொன்றுக்கு 500 பசுவாக அனந்தப்பசுக்களைக்கொன்றிருப்பதால் தான்செய்த பாபத்துக்களவில்லை யென்றும், எந்தவிதத்தில் நம்முடையபாபந் தீரப்போகிறதென்றும் பயமடைந்து அந்த மகாத்மாவின்பாதத்தில் வணங்கி தான் இதுவரையில் செய்த பாபகிர்த்தியங்களையெல்லாம் அவரிடத்தில்தெரி

வித்து 'ஓ சற்குருவே! என்னுடைய இந்தப்பாபங்களையெல்லாம் நிவர்த்திசெய்து எனக்கினிமேல் ஜனன மரணதுன்பங்கள் ஒருக்காலும் வாராமலிருக்கும்படி செய்யவேண்டும்' என்று விண்ணப்பஞ்செய்தவுடன், அதைக்கேட்ட அந்த மகாத்மாவானவர் இப்படித்தினம் ஒன்றுக்கு 500 பசுக்களை ஹத்திபண்ணிக் கொண்டு வந்திருக்கிற இந்த அதிபாதகனைக் கண்ணாலேகூடப்பார்க்கக்கூடா தென்று மனதில் நிச்சயித்து தம்முடைய மாணாக்கர்களோடேகூட தெருத் திண்ணையிலிருந்து எழுந்திருந்து வீட்டுக்குள்போகும்போது தலைவாசல்கத வையுமடைத்துவிட்டு பின்வாசல்வழியாகவே சஞ்சரித்துக்கொண்டிருக்க, அவ ரெழுந்துபோகும்போது பின்னாலே கூடச்சென்ற அந்தச்சக்கிலியனானவன் அவர்கிரகத்துக்கு முன்வாசலில் நின்றுகொண்டு அவரருளை நாடிக்கொண்டு அன்னாகாரமில்லாமல் நிற்க, இவ்விதம் ஓர்மண்டலஞ்சென்றபோது அம்மகாத் மாவின் பத்தினியார் அச்சக்கிலியன் நிற்கின்றதைநோக்கி அவனுக்கனுக்கிரகஞ் செய்யும்படி அவரிடத்தில் விண்ணப்பஞ்செய்ய, அவர் இவன் அளவற்ற கோகத்திக்காரனானதால் கூடாதென்று கூறினதற்கு, அவ்வன்னையார் "பர மாத்மாவாகிய தேவரீரையடைந்தும் இவனுக்கு அப்பாபம் நீங்காமலிருக்க லாமா? இன்னஞ்சிலநாழிகையில் அவனிறந்துபோகின்றதாக இருப்பதாலும், பசுக்களைக் கொன்றதும் தின்றதும் பாபமும் மற்றெல்லாமும் சுவாமியாயிருப் பதாலும் அனுக்கிரகிக்கவேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்ய அதின்பேரில் சம்மதித்து அந்தமகாத்மா அவனுக்கு முதல்வாக்கியத்தை அனுக்கிரகம் பண்ண, அதைக்கேட்டு அந்தச்சக்கிலியனானவன் கோகத்திபாபமும் நீங்கித் தத்துவஞானமும் பெற்று விதேகமுக்தியடைந்ததே முதல்வாக்கிய கதை யென்று அறிந்துகொள்க. இன்னுஞ் சாதுசங்கத்தினால் அனேடமுகனென்ப வன் தனக்காகவும் இவ்வுலகத்திலுண்டான நன்மைகளிலொன்றுஞ் செய்யத் தோற்றாமலும், பிறர் ஒருநன்மையைச் சொன்னாலும் அதுவுங் கேட்டுச்செய்யப் புத்தியில்லாமலும் துர்மார்க்கங்களையே செய்துகொண்டு வந்ததினால் நிருபக னென்கிற அரசனிடத்தில் இவன் செய்த அநியாயங்களெல்லாம் ஜனங்கள் தெரியப்படுத்தினவுடன், அவ்வரசன் இவன் பிராம்மணனானதாலிவனைக் கொல் லக்கூடாதென்று நினைத்து, காலில் விலங்குபோட்டு அந்தரமான காட்டில்வரு கிற நதிப்பிரவாகத்தில் தள்ளிவிட்டு வரச்சொன்னபடி செய்தபின், தெய்வ கெதியால் காற்றடித்துக்கரையோரத்தில் தள்ளவும் தயாநிதியான ஞானி சிஷ் யர்களைவிட்டு இவனைக் கரையேற்றச்சொல்லி விலங்குகளையும்வெட்டி கொஞ்ச வேளை சாதுசங்கதிபண்ணிவந்ததால் இவன்பாபங்களும் அஞ்ஞானங்களும் போய் சுகித்த கதையையறிக.

## 197 - வது தரங்கம்.

குருமுகமாய் ஞானம்வருவது பொது. அவாந்தரமாய் ஞானம்வருவது ஏகதேசம்:—

குருசன்னிதியிலிருந்து சாக்ஷாத்காரம்வரும்வரை பெறுவதுதான் கிரமம். ஏகதேசத்திற்கேட்டு ஆகாசபலம்போலக் கிடைப்பது கிரமமென்று சொல்லக் கூடாது. [எ - தி] கிரமமாய்ப் பர்த்தாவிடத்திலிருந்து பிள்ளைபெறுவதும், பர்த்தாவன்றியில் ஆகஸ்மீகமாய் பிள்ளைப்பெறுவதுபோலும்; பூமியில் விரை போட்டு முளைப்பதும், தானே படுமுதலாயிருந்து முளைப்பதுபோலுமறிக. ஐயா, சகலருக்குங் குருமுகமாய் ஞானம்வருவது சாதாரணமாயிருக்க, ஆகாச பலம்போலே அவாந்தரமாய் குரு நேரே அனுக்கிரகிக்காமல் ஞானம்வரு மென்று சொன்னீர்களே, அப்படியாருக்கு ஞானம் வந்திருக்கிறது. அதைச் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:—ஜனகமகாராஜாவானவர் ஒருக்கால் காலமே எழுந்திருந்து நித்தியகர் மங்களை முடித்துக்கொண்டு சைன்னியங்களோடே தன்னுடைய உத்தியான வனத்துவாசலில் சைன்னியங்களை வைத்துவிட்டு தானொருவனாகவே உள்ளே போய் உலாத்திக்கொண்டிருக்கும்போது, சித்தர்களுடைய கூட்டங்கள் ஒரு வர்க்கொருவர் சொரூபானுசந்தானம்பண்ணுகிற விதத்தை வினவிக்கொண்ட தில் அதிலொருவர் சொல்லுகிறதாவது,—திருஷ்டா தரிசனம் திருசியங்களான திரிபுடிகளை வாசனையோடே மித்தயாதிருஷ்டியால்தள்ளி, நினைப்புக்குமுன்னே விளங்குகிறவராயும் அசங்கராயுமிருக்கிற ஆத்மாவே நானென்று பஜிக்கிறே னென்றும்; மற்றொருவர் சொன்னதாவது, இந்தத்திரிபுடியில் காணப்பட்ட சுக மானது தன்னுடைய சுபாவானந்தத்தினுடைய பிரதிபலனமானபடியால் அந்த அதிஷ்டானபூத ஆனந்தமான ஆத்மாவே நானென்று பஜிக்கிறேன். இருதய குகையிலிருக்கிற நானென்று விளங்குகிற ஆத்மதெய்வத்தைப் பஜியாமல் வெளியில் இதரதெய்வத்தைப் பஜிக்கப்போகிறவன் கைக்குள்ளிருக்கிற கௌஸ் துவரத்னத்தை எறிந்துவிட்டு கச்சுக்கல்லைக் காசுகொடுத்துக் கொள்ளுகிறவன் போலுமென்றும், அவஸ்தாத்திரயங்களுக்கும் அவைகளில் கற்பனையாகிற திரிபுடிகளுக்கும் சாக்ஷியாயும் அவைகளைப் பிரகாசம்பண்ணிவைக்கிறதாயு மிருக்கிற யாதொரு சைதன்னியமுண்டோ அந்த அறிவே நானென்று பஜிக் கிறேனென்றும்; மற்றொருவர் விஷயத்திலிருக்கிற தோஷம்தெரிந்தும் திரும்ப அதிலாசைப்படுகிறவன் கழுதையென்றும், தன்நினைப்பை வாக்கிந்திரியம்வரை வெளியில்விடாமல் இந்திரன் பருவதங்களை வச்சிராயுதத்தால் பேதித்தது போலப் பேதிக்கிறவனே தீரனென்றும்; இப்படிப்பலவிதமாய்ச் சொல்லிக் கொண்டவைகளைக் கேட்டஜனகர் உடனே தோப்பிலிருந்து வெளியேறி, அரண்மனைக்குள்ளிருக்கிற மேல்மேடையிலேறித் தனித்திருந்துகொண்டு சிந் திக்கிறார். "ஓ மூடமனதே! நீ இப்போது சித்தர்கள்சொன்ன அர்த்தத்தை ஏன்சிந்திக்கவில்லை? இந்தச்சரீரமும் இந்தச்சம்பத்தும் இவ்வுலகத்துக்குள் எவ் வளவு? இவ்வுலகமே நசிக்கும்போது நம்மதென்ற விஷயங்கள் எப்படி ஸ்திரமா யிருக்கும்? என் ஆத்மாவை அபகரித்த திருடனாகிய உன்னைக் கண்டேன். இனி உன்னை வைத்துவைத்தால் என்னை மோசம்செய்வாயானதால், இப்

போதே உன்னைக் கொன்றுவிடுகிறேன்'' என்றிப்படிப் பலவிதமாய் விசாரணை செய்து அனாத்மபுத்தியை சேதித்து ஆத்மாவே தானென்றறிந்து, திடஞானத்தால் சகலவிதமான ராஜ்ஜியவிவகாரங்களையும் செய்துகொண்டு, போனதையும் நினையாமல், வரப்போகிறதையும் நினையாமல், வர்த்தமானத்தில் வருகிற போகத்தை நிராசையால் புசித்துக்கொண்டு ஜீவன்முக்தராயிருந்ததே ஆகாச பலமென்றறிக.

## 198 - வது தரங்கம்.

குருவுக்குப் பக்குவியினிடத்திலேயே பிரியம்வரும்:—

குருவுக்குப் பக்ஷபாதமின்மையாயினும் சற்குணமுள்ள பக்குவியான முமுக்ஷுவினிடத்தில்தான் அதிகப்பிரியம். [எ - தி] புருஷனுக்கு அழகுள்ள பக்குவமான ஸ்திரீயினிடத்தில் ஆசைவருவதுபோலவறிக. ஐயா, குருவுக்குச் சகலரிடத்திலும் சமதிருஷ்டியிருக்கும்பக்ஷத்தில் பக்குவியினிடத்தில்மட்டும் விசேஷ அனுக்கிரகஞ்செய்வதற்குக் காரணமென்னவென்று கேட்பாயாகில், அதற்குத் திருஷ்டாந்தங்கள் சொல்லுகிறோம். கேள்:—சூரியனுடைய கிரணங்களுக்குப் பக்ஷபாதமில்லாதிருந்தாலும் அக்கிரணம் சூரியகாந்தக்கல்லிற்பட்ட மாத்திரத்தில் அக்கினியை உண்டுபண்ணுவதுபோலும், சுத்தமான கண்ணுடியில் சூரியனைப்போலே பிரதிபிம்பம் காணப்படுவதுபோலும், மற்ற சுவர் முதலானவைகளில், கிரணமிருந்து விளங்குகிறதுமாத்திரம்போலும், நீலாதிவர்ணங்களிற்பட்ட அக்கிரணங்கள் அந்தந்த ஆகாரமாய்த்தோற்றுவதுபோலும்; குருவாகிய சூரியனுடைய கிருபையாகிய கிரணம் சத்துவவிருத்தியாகிற கண்ணுடியில் உள்ளபடியாய்த் தோற்றுவதும், ராஜசவிருத்தியாகிற சூரியகாந்தத்தில் அக்கிருபையாகிற கிரணம்பட்டமாத்திரத்தில் அகங்காரமாகிற தீயாகி யெரிக்கிறது, தாமசவிருத்தியாகிறசுவரில் அக்கிரணமாகிற கிருபை சத்துமாத்திரமாய் விளக்கிவைக்கிறதும், பாபிகள்முதலான நீலாதிவர்ணங்களில் அக்கிருபையாகிறகிரணம் பட்டால் அந்தந்த ஆகாரமாய் விளங்கினாலும் அந்தக்கிருபையாகிற கிரணத்துக்குப்பக்ஷபாதமுண்டென்று சொல்லக்கூடாததுபோலும்; அக்கினியினுடைய லோகித உஷ்ணப்பிரகாசங்கள் பக்ஷபாதமன்றியில் எங்கும் சமமாயிருந்தாலும் பகல்வத்தியிற்பட்டால் பிரகாசம் அதிகமாய்த்தோற்றுவதுபோலும், தீவட்டியில் சேர்ந்தால் சுடர்முதலான தோஷத்தோடே பிரகாசிப்பதுபோலும், கசண்டான எண்ணெயுடன்கூடிய அழுக்கானதிரியில் சேர்ந்தால் மங்கலாய்ப் பிரகாசிப்பதுபோலக் குருகிருபையாகிற அக்கினி சத்துவகுணமாகிற பகல்வத்தியில் பட்டமாத்திரத்தில் விசேஷமானபிரகாசமாய் விளங்குகிறதும், ரஜோகுணமாகிற தீவட்டியில் அக்கிருபைபட்டால் காமாதிவிருத்திகளான சுடர்முதலானதோஷேகூடிப் பிரகாசிக்கிறதும், தமோகுணமாகிற அழுக்குத் திரியில் கிருபையாகிற தீப்பட்டால் மங்கலாய்ப்பிரகாசிக்கிறதும், இன்னும்

ஜீவர்களுடைய விருத்திபேதங்களாகிற மாமுதலான வஸ்துக்களில் கிருபையாகிற அக்கினியினுடைய சச்சிதானந்தமாகிற லோகிதோஷ்ணப்பிரகாசங்கள் பதார்த்தத்திற்குத்தக்கன தாரதம்மியமாய்த்தோற்றுவதுபோலும்; ஒருஜலமே முத்துச்சிப்பியில் விழுந்தால் முத்தாகவும், அந்தஜலமே அக்கினிசம்மந்தத்தால் வெந்நீராகவும், மண்சம்மந்தத்தால் சகதியாகவும், இன்னும் சரீராதிகளான எந்தெந்தப்பதார்த்தங்களில் சம்மந்தித்தாலும் அந்தந்த ஆகாரமாய்ப் போவதுபோல, குருகிருபையாகிற ஜலமும் சாத்வீகவிருத்தியாகிற முத்துச்சிப்பியில் விழுந்தமாத்திரத்தில் அழிவற்ற ஆனந்தரூபமான தத்துவஞானமாகிற முத்தாகிப்பிரகாசிக்கிறதும், அக்கிருபையாகிற ஜலமே ரஜோகுணமாகிற தீயில் சம்மந்தப்பட்டால் கோபமாகிற வெந்நீராகிறதும், கிருபையாகிற ஜலமே தமோகுணமாகிற மண்ணில் சம்மந்தித்தால் துக்கமாகிற சகதியாய்ப் போவதும், இன்னும் மற்ற மதவாதிகளுடைய விருத்தியாகிற சமுத்திரமுதலானதுகளில் விழுந்தால் உப்புமுதலான அநேகவிதமான விகாரங்களை அடைவதுபோலும்; ஒருபணமே சாதுவினிடத்தில் சேர்ந்தால் தானதர்மம் முதலான சத்விஷயத்திற்கு உபயோகப்படுவதுபோலும், காமாதிவிகாரத்தோடேகூடிய துஷ்டனிடத்தில் சேர்ந்தால் அந்தப்பணம் விபசாரிகளுக்கும் வக்கீல்களுக்கும் உபயோகப்படுவதுபோலும், அந்தப்பணமே லோபியினிடத்தில் சேர்ந்தால், சோரர்களுக்கும் பூதங்காக்கவும் உபயோகமாவதுபோல, குருகிருபையாகிற பணமும் சத்வாந்தக்கரணமாகிற சாதுவிடத்தில் சேர்ந்தால் விவேகவைராக்கியமாகிற தர்மத்துக்கு உபயோகமாகிறதும், ரஜோகுணமாகிற துஷ்டனிடத்தில் அக்கிருபையாகிற பணம் சேர்ந்தால் துர்மார்க்கத்துக்கு உபயோகமாகிறதும், அதுவே தமோகுணமாகிற லோபியினிடத்தில் சேர்ந்தால் தனக்கும் பிறருக்கும் உபயோகமில்லாமற்போவதாயும் மற்றத்தாரதம்மியமுள்ளவர்களுக்குத்தக்கதாயாவதும் கண்டு, குருவினுடைய கிருபையானது பக்ஷபாதமன்றியிலிருந்தாலும் பக்குவிகளுக்குத்தக்கபடி பிரகாசிக்குமென்றறியவேண்டியது.

## 199 - வது தரங்கம்.

விசாரணையினாலேயே ஞானம்வரும்:—

சின்முத்திரையைச்செய்வதற்காகத் தன் கட்டைவிரலையும் ஆள்காட்டிவிரலையும் சேர்ப்பதைத்தவிர விறகுவெட்டுவதுமுதலான தொழிலால் எப்படி சின்முத்திரையாகாதோ அப்படிப்போலக் கர்மம், பக்தி, யோகமுதலானதினால் ஜீவப்பிரம்ம ஐக்கியஞானம் வாராது, நாமாரென்ற விசாரணையாலேயே வரும். [எ - தி] முகத்தைப்பார்ப்பதற்குக் கண்ணாடியைத்தவிர வேறே தொழிலாலாகாததுபோலவறிக. [இ - து] சத்தும் அசத்துங்கூடி ஒன்றுபோலேயிருந்தாலும் எப்போது விசாரிக்கிறானோ அப்போதே அசத்து பொய்யாய்விடும்.

[எ - தி] நெல்லும் பதரும் ஒன்றுபோலத்தோன்றினும் தூற்றினல் பதர் ஓடிப்போவது போலவறிக. [இ - து] விசாரணையினுலேயே ஆத்மஞான முண்டாகும், அது எப்படியென்றால், நாற்சந்தியில் பாதைதெரியவேண்டிய வன் சேதனனைப்பார்த்து விசாரிப்பதுபோல இங்கும் குருமுகமாய் ஆத் மாவைத்தானாக மனதால் விசாரிக்கிறவனுக்கே முக்திவருமேதவிர, மற்ற அன் னியமாயும் ஜடமாயுமிருக்கிற மூர்த்திகளை உபாசிப்பதால் முக்திவாராது. [எ - தி] தன் கழுத்திலிருக்கிற ஆபரணத்தைத் தான்பாராமல் அன்னியவிடங் களில் பார்ப்பதால் கிட்டாததுபோலும், நாயகனைவிட்டுச் சித்திரத்திலிருக்கிற புருஷர்களைப்பார்ப்பதால் போகங்கிட்டாததுபோலவறிக. [இ - து] குரு நாதன் பஞ்சகோசாதியை நேதித்து வகைவகையாய்ப்பிரித்து அனாத்மாக் களைத்தள்ளி ஆத்மாவை அறிவதே முக்தியென்றும், மற்றக் கிரிகைகளைச் செய் யவேண்டாமென்றும் உபதேசிப்பார். [எ - தி] ஐட்ஜியானவர் பொய் நியாயங் களை விசாரித்துத் தீர்ப்புச்செய்வதுபோலும், குடியானவன் நெல்லையும் பத ரையும் தூற்றுவதுபோலும், ரத்னவியாபாரி கல்லையும் ரத்னத்தையும் பரீக்ஷிப் பதுபோலுமேதவிர வேறொரு கர்மங்களும் செய்யத்தேவையில்லாததுபோலு மறிக. [இ - து] கையில் ஒட்டியிருக்கிற மலத்தைத் தேய்த்துத்தண்ணீரால் கழுவுவதுபோல, விசாரணையால் அஞ்ஞானம் நிவர்த்தியாகும். மற்ற யோக உபாசனைகளால் நிவர்த்திக்க எத்தனிக்கிறது கையில் ஒட்டினமலத்தை வஸ்திரத்தால் மூடிக்கொள்வதும், வெய்யிலில் காயவைக்கிறதுபோலு மறிக. [இ - து] நாமாரென்று பார்க்கிற விசாரமில்லாமல் நாம் பிரம்ம மென்று மொத்தமாயிருந்தால் சாக்ஷாத்காரஞான முண்டாகாதாவெனில், பிராணனில்லாமல் உயிரோடேயிருக்கக்கூடாதென்பதே சமாதானம். [இ-து] நிஷ்காமகர்மமும் ஞானத்துக்குச் சாதனமென்று சுருதி சொன்னாலும், முக்கியசாதனமல்ல. சித்தசுத்திக்குமட்டும் ஹேது. [எ - தி] புசிக்கிற வனுக்குத் தீயுஞ்சாதனமானாலும், அரிசியைப் பக்குவம்பண்ணுவதற்குமட்டும் சாதனமேயொழிய பசியைப்போக்குவதற்கு அன்னமே முக்கியமாயிருப்பது போல விசாரமே முக்கியமென்றறிக. [இ - து] விசாரத்தால் தன்னைப் பிரம்ம மென்றறிந்தவனுக்குச் சகலமும் அறியப்படும். [எ- தி] நல்ல விற்பத்திவந்த வனுக்கு எந்தச்சுலோகார்த்தமும் தெரிவதுபோலவறிக. ஐயா, விசாரத்தினு லேயே ஆத்மஞானம் வரவேண்டுமென்று சொன்னீர்களே, அப்படி என்னத் துக்குச்சொல்லல்வேண்டும்? இவன் ஜென்மாந்தரத்தில் நன்மையான புண்ணிய கர்மங்களைச் செய்வதினுலேயே ஆத்மஞானம் வரக்கூடுமே. விசாரணை என் னத்திற்குச் செய்யவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்கு நான் உத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:—அடே மூடா! இவ்வுலகத்தில் எந்தச்சங்கதிதான் விசாரணைபண்ணுமல் உண்மைவெளியாகும்? முதலில் இன்றையதினம் என்ன திதி, வாரம், நக்ஷத்திரம், லக்னம், யோகம் முதலானதுகள் தெரியவேண்டுமே யானல், பஞ்சாங்கத்தைப்பார்த்து விசாரணையால் தெரியவேண்டுமேயல்லாமல்

அசுவத்தப்பிரதட்சணம், ஆதித்தநமஸ்காரமுதலான கர்மங்களை எவ்வளவு செய்தாலும் வெளியாகாததுபோலும்; ஒரு குற்றவாளியானவன் வேஷம்மாறு டிக்கொண்டு தேசாந்தரத்துக்குப் போயிருந்தால் அவனைத் தெரிந்துகொள்ள வேண்டினவன் ரகசியமாய்ப் போயிருந்துகொண்டு அவனுடைய நடத்தைகளை யும், பேச்சுக்களையும், குணங்களையும், குறிகளையும், மற்றச்சுபாவங்களையும் விசாரித்தறியாமல் கோபுரத்திலேறிக் குதித்தும், ஓடியும், பெரியகம்பத்தின் பேரிலேறி ஆடியும், தண்ணீரில் நீந்தினாலும், பாறுங்கல்லைப் பிளந்து தூக்கினா லும், ஆகாசத்தில் பறக்கிற பட்சிகளையெல்லாம் வேட்டுவிட்டுச் சுட்டாலும், காட்டிலிருக்கிற மிருகங்களை வேட்டையாடிக்கொன்றாலும் தெரியாததுபோ லும்; வேதங்களுக்கும் வேதமாதாவாகிய காயத்திரிக்கும், காயத்திரிக்கும் தாயான வியாகிருதிக்கும், அதற்கும்பிதாவாகிய பிரணவத்துக்கும் மற்ற வேதாந்தாங்கங்களான வியாகரணம், சிக்ஷை, கல்பம், நிருக்தம், ஜோசி யம், சந்தசுமுதலான மந்திரங்களுக்கு அர்த்தம்தெரியவேண்டியபுருஷன் மகாத்மாக்களிடத்திற் போய் விசாரித்தால் அர்த்தம் தெரியுமேயல்லாமல் யாகங்கள், ஜெபங்கள், தபங்கள்முதலானவைகளைச் செய்தால் அவைகளுடைய அர்த்தம் வெளியாகாததுபோலும்; ராஜாக்கள் ஒருவிஷயத்தில் தங்களுக்கு எதார்த்தந்தெரியாமல் சந்தேகம்வந்தால், அதை ரகசியமாய் விசாரணைபண் ணித் தெரிந்துகொள்ளாமல் பூசைமுதலானவைகளைச் செய்தால் தெரியாதது போலும்; ஓர் மந்திரி நகர்சோதனைக்குப்போகும்போது காளிகோவிலில் அழு கைசத்தத்தைக் கேட்டு, இவன் அங்கே போனதும் அந்தராஜாவுக்கு ஒருநாழி கைக்குள் மரணம் வரப்போகிறதென்று சொன்னசப்தத்தைக்கேட்டு, இவன் அதிவேகமாய் ராஜாவின் அரண்மனைக்குள்ளிருக்கிற படுக்கைவீட்டுக்குள் போனதும், அப்போது ராஜாவும் அவர்மனைவியும் நித்திரைபண்ணுவதையும், ஒருபாம்பு உயரவிருந்து அதிவேகமாயிறங்குகிறதைக்கண்டு கத்தியாலந்தப் பாம்பை இரண்டாகவெட்டித்தள்ளும்போது, அந்தப்பாம்பின் வாயிலிருந்து விஷமயமான ரத்தம் திறந்திருக்கிற ராஜஸ்திரீயின் ஸ்தன்னியத்தில் விழுந்த தை இவன் கண்டு, தன்னுடைய சுண்டுவிரல்நகத்தால் அந்தவிஷத்தை யெடுத்து அந்தச் சுண்டுவிரல்நுனியையுமறுத்து, அந்தப் பாம்புத்துண்டத்தையும் விரல் துண்டத்தையும் கட்டிலுடைய மேல்கட்டியிலெறிந்துவிட்டு, இவன் வெளியே றுஞ்சமயத்தில் ராஜஸ்திரீயானவள் இவன் போவதைக்கண்டு தன்நாயகனான ராஜாவை யெழுப்பி, "ஓ ராஜாவே! உம்முடைய மந்திரி இப்போது இவிடத்தில் வந்து என்னுடைய ஸ்தன்னியத்தையும் நகத்தால்சொரண்டி ஜாடைபண்ணி விட்டுப் போகிறான்" என்று சொன்னதைக்கேட்டதும் அவ்வரசன் மிகுந்த கோபத்துடன்கூடியிருக்கும்போது, இரண்டாவதுமந்திரி வந்தவுடன் அவனைப் பார்த்து நடந்தசங்கதிகளைச் சொல்லி இப்படித் துரோகம்நினைத்த அந்தமந்திரி யை இப்போதே வெட்டிப்போடவேண்டுமென்று நிச்சயித்திருக்கிறேனென்று சொன்னதைக்கேட்ட மந்திரியும், உங்களுக்கு மகத்தான க்ஷேமத்தையே செய்

கிறவரேதவிர இப்படிப்பட்ட கெட்ட எண்ணங் கனவில்கூட நினையார், தீர விசாரியுமென்று சொல்லி ஒருசேவகனைவிட்டு அந்தமந்திரியை வரவழைத்துத் தூங்குகிறவர்போல ராஜாவையும் மனைவியையுமிருக்கச்சொல்லி, மந்திரியைப் பார்த்து மந்திரி சங்கதியைவினவ, நடந்தசங்கதிகளைச் சொல்லி பாம்புத்துண்டத்தையும் விரல்துண்டத்தையுமெடுத்துக் காண்பித்தபின், ராஜாவும் விழித்து அதைப்பார்த்து சங்கதிதெரிந்து சந்தோஷித்த கதைபோலவறிக.

## 200 - வது தரங்கம்.

விசாரக்கிரமத்தின் வகுப்பு மூவிதம்:—

ஜீவ ஜகத்துப் பரமாத்மாக்களை விசாரிக்கவேண்டுமென்றோரிடத்திலும், ஜீவ ஜெகத்துக்களைமட்டும் விசாரித்து வாதித்தால் ஆத்மா தானே விளங்குவ ரென்றோரிடத்திலும், ஆத்மாவைமட்டும் விசாரித்ததினாலேயே ஜீவஜகத்து தானே வாதிக்கப்படுமென்றோரிடத்திலும், இப்படிப்பேதமாய்ச் சொல்லியிருக்கிற சுருதிகளுக்கு யுக்தி:—தங்கம், பித்தளை, இரும்பு, இவைகளையுரைத்துப் பார்த்து இரும்பு பித்தளைகளைத்தள்ளித் தங்கத்தைமட்டுங் கிரகிப்பதுபோலும், பூமியில் முளைத்திருக்கிற செடிகொடிகளை வெட்டித்தள்ளிவிட்டால் பூமி தானே விளங்குவதுபோலும், தீபம் ஏற்றினால் தானே இருட்டும் அதில் தோற்றின பிசாசும் போவதுபோலுமறிக. ஐயா, விசாரணைபண்ணுகிற கிரமமானது மூன்றுவிதமாயிருக்குமென்று சொன்னீர்களே, அந்த மூன்றுக்குள் முதலாவதான ஜீவ ஜகத்துப் பரமாத்மாக்களை விசாரிக்கிறதெப்படி? எந்த அதிகாரிக்குசப்படி விசாரிக்கவேண்டியது? இரண்டாவதான ஜீவ ஜகத்துகளைமட்டும் விசாரித்தால் போதுமென்பதெப்படி? அந்த விசாரத்துக்கதிகாரியார்? மூன்றாவது, பரமாத்மாவைமட்டும் விசாரிக்கவேண்டுமென்று சொன்னீர்களே, அந்தவிசாரம் செய்வதெப்படி? அதற்கதிகாரியார்? இவைகளையெல்லாம் சவிஸ்தாரமாய் எனக்குத் தெரிவிக்கவேண்டுமென்று கேட்ட சிஷ்யனுக்கு குரு சொல்லுகிறார். வாராய் குழந்தாய்! நீ கேட்ட சங்கையானது சகல முமுக்ஷுக்களுக்கும் உபகாரமாகவே யிருக்கிறது. ஆகையால் அதிரகசியமாயிருக்கிற அந்த அர்த்தத்தை நான் சொல்லுகிறேன். நீ சாவதானமாய்க் கேள்:— முதலாவது நான் கர்த்தா, நான் போக்தா, நான் அறிந்தேன், நான் அறியவில்லை, நான் சுகி, நான் துக்கி, நான் இன்ன இன்ன வித்தைகளைக் கற்றிருக்கிறேன், நான் சுத்த முட்டாள், நான் பிறந்தேன், நான் சாகப்போகிறேன், நான் கேட்டேன், என்னுடைய காது கேட்டது, நான் தொட்டேன், என்னுடைய தொகேந்திரியம் தொட்டது, நான் பார்த்தேன், என்னுடைய கண் பார்த்தது, நான் ருசியறிந்தேன், என்னுடைய நாவு ருசியறிந்தது, நான் முகந்துபார்த்தேன், என்னுடைய மூக்கு முகந்துபார்த்தது, நான் பேசினேன், என்னுடைய வாய் பேசிற்று, நான் செய்தேன், என்னுடைய கை செய்தது, நான் நடந்துபோனேன், என்னுடைய கால் நடந்தது, நான் பலவான், என்னு

டைய பிராணன் பலமுள்ளது, நான் நினைத்தேன், என்னுடைய மனது நினைத்த தென்று இப்படித் தன்னை ஜீவனாயும் பிரஹ்மமாயும் விவகரிப்பதுந்தவிர என்னுடைய பெண்டாட்டி அழகாயிருக்கிறாள், என்னுடைய பிள்ளை முட்டாளாயிருக்கிறான், என்னுடைய மனை அழகாபுரிபோல அழகாயிருக்கிறது, என்னுடைய நிலங்கள் காஸ்மீரகாண்டம்போல விருக்கிறதென்றிப்படி ஜகத்தைச் சத்தியமென்று விவகரித்துவருவதால், இதில் இந்தஜகத்து என்னதென்றுஞ் சத்தியமென்றுஞ்சொல்வதற்கு யாதொரு ஆதரவுமில்லை. யாதொரு அடையாளமுமில்லை. இந்தஜன்மத்திற்கு முந்தியும் பிந்தியுமில்லை. இப்பவும் ஒருவனிடத்தில் இவைகள் ஸ்திரமாகவிருக்கவுமில்லை. இப்படியே ஜீவனும் சொப்பனாதி அவஸ்தைகளில் வேறேவிதமான விவகாரத்தைச்செய்வதாலும் சுழுப்தியில் காணாமற்போவதாலும் சாக்ஷியாகிய நாம் அவஸ்தாத்திரயத்திலுமொரு படித்தாயிருப்பதால், ஜீவ ஜகத்துக்கள் பொய், சாக்ஷியே நானென்றறிபவனே மத்தியம அதிகாரி. வெள்ளெழுத்துள்ளவன் வெளிச்சத்தில் மூக்குக்கண்ணாடி வைத்து ரத்னாதிகளைப் பரீக்ஷைபண்ணி அசுத்தமாயும் தோஷமாயுமுள்ள கல்லுக்களையெல்லாந் தள்ளி நல்ல ரத்னத்தைமட்டுமெடுப்பவன்போலவறிக. தன்னிடத்தில் கற்பிதமான அகம்விருத்தி இதம்விருத்திகளைத் தள்ளினதால் தான்மாத்திரமாய் விளங்குவது ரத்னத்திலிருந்த அழுக்கையும், தங்கத்திலிருந்த சேறையும் மாற்றுவதுபோலவறிக. இவன் உத்தமன். சொப்பனத்திலிருந்து விழித்தவன்போல் நாம் யாரென்று விசாரணையால் தான்மாத்திரமாய் விளங்குகிறவன் உத்தமோத்தம அதிகாரியென்றறியத்தக்கது.

## 201 - வது தரங்கம்.

*தற்பதநேதிசெய்வது பிரயாசமில்லை, தொம்பதநேதியே பிரயாசம்:—*

பிரஹ்மத்தையும் ஈசனையும் வெளியில் பிரித்தறிவது லகு, சரீரத்திற்குள்ளிருக்கிற கூடஸ்தரையும் ஜீவனையும் பிரித்தறிவது பிரயாசம். [எ - தி] ஒன்றிரண்டுமுதலானவைகளைக் கூட்டித்தொகைசேர்ப்பது லகுவாயும், முந்திரி அரைக்காணி முதலானவைகளைத் தொகைசேர்ப்பது பிரயாசமாயிருப்பது போலும்; வெளியிலிருக்கிற பண்டங்களைக் கண்டுபிடிப்பது லகுவாயும், இருட்டறைக்குள்ளிருக்கிற பண்டங்களைப் பார்த்தெடுப்பது பிரயாசமாயிருப்பதுபோலும்; தலைமயிரைக்கண்டு க்ஷவரம்பண்ணுவது லகுவாயும், புடுக்குமயிரைக் கண்டுபிடித்து க்ஷவரம்பண்ணுவது பிரயாசமாயிருப்பதுபோலுமறிக. [இ - து] சமுத்திரம்போல ஈசுவரன், கடஜலம்போல ஜீவன்; சர்வக்ஞத்துவாதி குணங்கள் ரத்னாதிகள்போல கிஞ்சிக்ஞத்துவாதி குணங்கள் புழுப்போல; இரண்டிடத்திலும் ஜலம் சரியாயிருப்பதுபோல சச்சிதானந்தம் சரியென்றறிக. ஐயா, தற்பத விசாரம்பண்ணி தத்பதவாச்சியங்களை நேதிபண்ணுவது பிரயாசமில்லையென்றும், தொம்பதவிசாரம்பண்ணித் தொம்பதவாச்சியங்களை நேதிபண்ணுவதே பிரயாசமென்றுஞ் சொன்னீர்களே, அதெப்படிச் சொல்லலாம்? தற்பத

வாச்சியமானது சர்வவியாபகமாயும், தொம்பதவாச்சியத்திற்கும் காரண மாயிருக்கும்போது, அதைச் சுலபமென்றும் இதைப் பிரயாசமென்றும் சொன்ன காரணத்தை எனக்கனுபவமாய் அறிவிக்கவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:—முதலில் பந்தத்தின் சொரூபம் இன்னது, முக்தியின் சொரூபமின்னதென்று அறிந்தனையா? ஐயா, நான் அதை அறியவில்லையென்றால், அதிகப்பிரசங்கம்பண்ணாமல் சும்மா கேட்டுக்கொண்டிரு. அனாத்மாவான தேகாதி பஞ்சகோசங்களில் நானென்றபிமானிக்கிறதே பந்தம். அவைகளில் நானென்கிற அபிமானத்தை விடுகிறதேமுக்தியென்று சுருதியாதிகளால்சொல்லியிருப்பதால் தொம்பதவாச்சியமானதேகாதி பஞ்சகோசங்களில் நானென்று மாட்டிக்கொண்டிருக்கிறதேதவிர விஸ்தாரமாயும், காரணமாயும், வியவகாரிகநித்தியமாயும், பஞ்சபூதபௌதிக, மாயா, ஈசுவரவடிவமாயிருக்கிற தத்பதவாச்சியத்தில் நானென்று அபிமானம் வராததால் அதை நேதிபண்ணுவது பிரயாசமில்லை, தொம்பதநேதிபண்ணுவதே பிரயாசம். [எ - தி] ஒரு புருஷனுடைய தேகமானது விஸ்தாரமாயும் சகலகருவிகளுக்கும் காரணமாயுமிருந்தாலும், சிசுனமானது ஏகதேசஅவயவமாயும், சிறிதாயும், விகாரமுள்ளதாயு மிருந்தாலும் யோனியில் அதுமட்டும் பிரவேசித்திருப்பதும், அதை நிக்கிரகம்பண்ணுவதும் பிரயாசமாயிருப்பதும், அது பிரவேசிப்பதினாலேயே சகல அனர்த்தமும் வருவதாலும், அந்த யோனிசம்மந்தத்தால் வந்திருக்கிற புண்முதலான ரணத்திற்காக மற்ற அவயவங்களைச் சேதிக்காமல் அதையே சேதிக்கிறதுபோலும்; பஞ்சகோசஅத்தியாசத்தை நிவர்த்தி செய்வதே பிரயாசமென்றும் அதுவே மூக்தியென்றுமறிக.

## 202 - வது தரங்கம்.

அஞ்ஞானத்தால் வந்த துக்கத்தை ஞானமே நிவர்த்திக்கும்:—

பூரணசொரூபமான தன்னை மறந்தஹேதுவால் வந்திருந்த அனந்தகோடி ஜெனனமரண துன்பங்களெல்லாம் தன்னைத்தானாக அறியும்வரையில்தான். [எ - தி] தன்னை மறந்ததாலுண்டான சொப்பனதுக்கமெல்லாம் தான் விழித்த மாத்திரத்திற் போவதுபோலும், ஜன்னிபிறந்தவனுக்கு வந்த மயக்கங்கள் அந்த ஜன்னிபோனமாத்திரத்தில் தீருவதுபோலும்; இப்போது இன்னும் பரம கிருபாளுவான நம் குருநாதன் நம்மை அஞ்ஞானநித்திரையிலிருந்து எழுப்பி நம்சொரூபத்தில் நம்மை அசைவற்றிருக்கும்படி செய்வித்ததையும் பார்த்துக் கொள்ளத்தக்கது. [இ - து] சகலஜீவர்களும் தாங்கள் பிரஹ்மமாயிருக்கும் போது அஞ்ஞானிகள்மட்டுந் துக்கப்படுவானேன்? ஞானி சுகியாயிருப்பானேன்? என்றால், தன்னையறியாமையால். [எ - தி] ஒருதாய் படுக்கையை விஸ்தாரமாய்விரித்து பத்துப்பிள்ளைகளையும் அதில் படுக்கப்போட்டிருக்கும் போது, அதில் விழித்துக்கொண்டபிள்ளைமட்டும் சுகமாயிருப்பானேன்? மற்றத்தூங்குகிற பிள்ளைகளெல்லாம் ஐயோ அப்பாவென்று அலறுவானேன்

சொல்? மீனாக்ஷிசன்னிதியிற் போயிருக்கிற பெண்களில் சில பேய்கொண்ட பெண்கள்மட்டும் என்னை இந்தமீனாக்ஷி எரிக்கிறாளென்று கத்தி அழுவானேன் சொல்? இந்திரப்பிரஸ்தத்தில் துரியோதனன்மட்டும் மேடுபள்ளம் தெரியாமல் விழுவானேன் சொல்? [இ - து] மாயை பண்ணுகிற காரியமென்னவென்றால், தன்னை மறைத்து நாமரூபத்தைக் காட்டி, அதில் சத்தியபுத்தியையும் பேதத்தையும் காட்டிப்பின் ராகத்துவேஷத்தை யுண்டுபண்ணி, பின் பிரவர்த்தியை யுண்டுபண்ணி, பின் சுகதுக்கத்தைக் கொடுக்கிறது. ஆனதால் நம்குருகிருபையால் பிரவர்த்தியை நிறுத்தினால் ராகத்துவேஷமும் சுகதுக்கமும் போய்விடும் பின் குருநாதன் கொடுத்த ஆத்மவிசாரஞானத்தால் பிரபஞ்சம் சொப்பனம் போலப் பொய்யென்றுபோனால், நானே பிரம்மம் என்ற சொரூபஞானமுண்டாகுமென்றறிக. [இ - ர்] பிரஹ்மத்தையறியாத அஞ்ஞானத்தில் அகப்பட்ட பெத்தன் பிரஹ்மஞானத்தினாலேயே முக்தனாகவேண்டும். [எ - தி] இருட்டறைக்குள் அகப்பட்டவன் தேடித்தடவிக் கதவைத்திறந்து வெளியில் வந்து நிர்ப்பயனாய்ச் சுகித்திருப்பதுபோலவறிக. துவிதப்பழக்கமும், துவித நினைப்பும், இந்திரியங்களும், சரீரமும், விஷயமுஞ்சேர்ந்து அனாதிகாலமாய் அதிதிடமாய்ப் பழகிவந்திருக்கும்போது, அத்வைதப்பழக்கம் நினைப்புமாத்திரமாயும், சரீரேந்திரிய விஷயசம்மந்தமன்றியினும், சொற்பகாலப்பழக்கமாயும், அப்படிப் பழகும்போதும் தேகமிருப்பதால் தேகரக்ஷணையைக்குறித்து துவிதவிவகாரம் சதாசெய்யவேண்டியிருப்பதால் இந்த அத்வைதாப்பியாசம் என்னமாய் புத்தியில் திடப்படும்? துவிதவாசனைகள் நிசேஷமாய் என்னமாய் மறக்கப்படும்? அத்விதமாத்திரமாயிருக்கிற முக்தி என்னமாய் சித்திக்கும் ஐயாவென்றால், நீ அறியாமையால் இப்படிச் சங்கித்தாயென்று சொல்லுகிறார்:—விற்பத்தியில்லாமல் பள்ளிக்கூடத்திற் பாடம்படிக்கும்போது பிழையாய்ப் பாடம்பண்ணின பாட்டுக்கள் வெகுவாயுருவேறியிருந்தாலும், விற்பத்தியானபின் பதபதார்த்தங்களுடன் அர்த்தம்பார்த்துப் பாடம்பண்ணினது கொஞ்சக்காலமாயிருந்தாலும், அர்த்தமன்றியில் வந்திருந்த பிழைப்பாடம் உடனே பொய்யாய்ப்போவதுபோல துவிதவாசனைகளும் அர்த்தமன்றியில் பழகிவந்திருந்ததால், இப்போது அர்த்தத்தோடேசெய்கிற அத்விதப்பழக்கம் கொஞ்சக்காலமானாலும், அதை இது உடனே பொய்யாய்ப்பண்ணி அத்விதமான முக்தியைக்கொடுக்கும். இன்னும் இதிலும் குருவேதாந்தசாஸ்திரங்களாகிற விஷயம், இருட்டாகிற விஷயத்தை சூரியப்பிரகாசமான விஷயம் உடனே போக்குவதுபோல இவைகளும் அஞ்ஞானத்தையும் அதின்காரியங்களையும் போக்குவதால் இதில் விஷயமும் இருக்கிறது. மனதும் சுரோத்திராதி இந்திரியங்களும் இதிலிருப்பதால் விஷயநினைப்புக்கு எதிரியான ஆத்துமநினைப்பும், விஷயசத்தாதிகளுக் கெதிரிகளான ஆத்மசப்த சிரவணாதிகளும், இதிலிருப்பதால் நீ மனமுதலிய கரணங்கள் ஒன்றுமில்லையென்று சொன்னது பிசகு. பின்னும் விஷயங்கள் பரிச்சின்னமாய் அநித்தியமாய் அப்பிரகா

சமாய் துக்கமாய்ச் சாதனுபேட்சையாயிருப்பதுபோலவன்றி ஆத்துமா உள்ளிலும்வெளியிலும் பூரணமாய் சாதனுந்தர அபேக்ஷைகளன்றியில் நித்தியமாயும் ஆனந்தமாயும் விளங்கிக்கொண்டிருப்பதால் சதா தடையன்றியில் அநுசந்தானம்பண்ணி முக்தி அடையலாமென்றறிக. [இ - து] துவிதமும் நினைப்புமாத்திரமாய் வருவதாலும், அத்துவிதமும் நினைப்புமாத்திரமாய் வருவதாலும், இது அதை எப்படிப்போக்கடிக்கும்? இன்னும் அந்த அத்துவிதநினைப்பும் ஒருவிதமானதால் அனேகவித நினைப்புகளோடே கூடியிருக்கிற துவிதத்தைக் கொல்லுகிறதான அத்வைதாத்மசித்தியை எப்படியுண்டாக்கும்? [எ - தி] அனேகவிதமான செடிகொடிகளோடே கூடியிருக்கிற காடும் தீயும் பூதத்தில் சேர்ந்திருந்தாலும், தீ அந்தக்காட்டைத் தகிப்பதும், பின் அந்தத்தீயும் காட்டையெல்லாம் எரித்தபின் தானும் லயித்துப்போய் பூமிமாத்திரம் மிஞ்சுவதுபோலவறிக. [இ - து] இந்த ஆத்மா அவிசார காலத்தில் தான்ஒருவனுயிருந்தும் அனேகர்போல விவகரித்துக்கொண்டு அதற்கேற்ற ஜனனமரண துன்பங்களையும் அனுபவித்துவரும்போது, குருநாதன் நீ யாரென்று விசாரித்தமாத்திரத்தில் தன்னையொருவனைத்தவிர இரண்டாவதுவஸ்துக்களை நிரூபிக்கமாட்டாமையால் யாதொரு விவகாரத்துக்கும் இவன் கர்த்தாவல்லவென்றும், இவனுக்கு யாதொரு ஜனனுதியுமில்லையென்றும் தீர்மானிக்கப்பட்டான். [எ - தி] ஒருவன் ஒருசத்திரத்தில் இருட்டிற்போய் நாங்கள் முப்பத்தாறுஜனங்களென்று எழுதிவைத்து இப்படி வெகுநாளாய்ச் சுயம்பாகம் எல்லோருக்கும் சேர்த்துவாங்கி மோசஞ்செய்து வருங்காலத்தில், ஒருநாள் எஜமானன் விளக்கேற்றி உன் கூட்டத்தாராகிய முப்பத்தாறுஜனங்களையும் ஒப்புவி என்றுகேட்டவுடன், இவன் ஒருவனைத்தவிர இரண்டாவதுமனுஷர்களை ஒப்பிவிக்கமுடியாமற்போனதால் இவனுக்கு யாதொரு சுயம்பாகமும் கொடுக்கக்கூடாதென்று தீர்மானித்ததுபோலவறிக. ஐயா, அஞ்ஞானத்தினுலேயும் மகத்துகள்சாபத்தினுலேயும் சகலருக்குஞ் சகலவிதமான துன்பங்களும் வந்திருக்கிறதென்றும், ஞானத்தினுலேயே அந்தத்துக்கங்களெல்லாம் போய் சுகமடையவேண்டுமென்றுஞ் சொன்னீர்களே, அப்படிச்சொன்னதற்கு திருஷ்டாந்தமாக ஒருகதை சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:—குபேரனுடைய புத்திரன் நளகூபரனென்பவன் தேவலோகத்தில் இந்திரனுடைய சபைக்குப்போய் தேவதாசிகளுடைய நாட்டியத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும்போது, துருவாசமகரிஷி அவ்விடத்திற்கு வந்து இவன்முன்னே நிற்கும்போது, இவன் அவரைப்பார்த்து, நீருண்டமேகஞ் சந்திரமண்டலத்தை மறைப்பதுபோல நீரும் இந்தத் திலோர்த்தமையினுடைய முகமண்டலத்தைக் கரித்துணியைக்கட்டிக்கொண்டு மறைக்கிறீரே என்று சொன்னதைக்கேட்ட அந்தத் துருவாசமகரிஷியும் கோபமாய் "அடே மூடா! என்னுடைய தெரிசனத்தைக்காட்டிலும் பலபேர்போயிருக்கிற மூத்திரக்குழியையுடைய இந்தத்திலோர்த்தமையே உனக்குப் பெரிசாய்தோன்றினதால்,

எட்டுச்சதுர்யுகம்வரை உன்னுடைய பிரக்ஞை உனக்கில்லாமற்போகக்கடவது'' என்றுசபித்தவுடன், இவன் மிகுந்தபயத்துடன் எழுந்திருந்து அவரைச்சரண மாக அடைந்து "ஏ மகாப்பிரபோ! எனக்கு எப்போது என்பிரக்ஞை எனக் குண்டாகும், ஆர்மூலமாய் இந்தச்சாபம் விமோசனமாகும்'' என்று பிரார்த் தித்துக் கேட்டவுடன், மகாதயாளுவானதால் இரக்கமுண்டாய், "நீ என்னு டைய சாபப்படி எட்டுச்சதுர்யுகம்வரையிலும் புத்திசுவாதீனமில்லாமல் அலைந்து திரிந்துகொண்டிருந்தாலும் புண்ணியஸ்தலங்களுடைய வாசங்கள் கிடைத்துகொண்டுவந்து, கடைசியாய் காசியில்வந்து கெங்காஸ்நானம்செய்து சத்தியகீர்த்தியென்கிற காசிராஜாவால் சாபவிமோசனமாய், சுயக்ஞானம் பெறக்கடவாய்'' என்று பிரதிசாபம் கொடுத்துவிட்டு அந்தத் துருவாச மக ரிஷி அந்தர்த்தானமானபின், இந்த நளகூபரன் நல்லபாம்புகடித்த புருஷனுக்கு பிரக்ஞைதவறிப்போவதுபோல இவனுக்கும் தன்னுடைய சுயக்ஞானம் தவ றிப்போய், ஸ்தாவரமுதல் மனுஷன்வரையிலுள்ள பிராணிகளுடைய புத்தியின் தர்மங்களையெல்லாம் அனுசரித்துப் பேய்போலே திரிந்து, கடைசியாய்க் கெங் கையில் ஸ்நானம்செய்ய இறங்கினதில் தவறிவிழுந்த இவனைச் சத்தியகீர்த்தி என்ற ராஜா தூக்கிவிட்டவுடன், இவனுக்குச் சாபவிமோசனமானதும் சுயக்ஞா னம் வந்து சுகித்த கதைபோலவறிக.

## 203 - வது தரங்கம்.

ஞானத்தின்மகிமை பொதுவாயிருக்கும்:—

ஸமஸ்கிருதமுதல் தமிழ்ஈறாக எந்தவார்த்தையில் ஞானப்பியாசம் பண் ணினாலும் பிரம்மஞானம் பொதுவாய்வரும். [எ - தி] சூத்திரன் சோறுசாப் பிட்டேனென்றும், பிராமணன் அன்னம் புஜித்தேனென்றும், தெலுங்கன் வண் டம்போஞ்சேஸ்தினி என்றும்; இப்படியே ஒழித்தேன், மைதுனம்பண்ணினே னென்றும், தெங்கினேனென்றும் அநேகபாஷையில் அநேகவிதமாகச்சொன்ன லும் எல்லாருக்கும் பசிநீங்குவதும் போகசுகம்வருவதும் ஒருபடித்தாயிருப் பதுபோலவறிக. [இ - து] நான் பிரம்மமென்கிற ஞானத்தால் சஞ்சிதகர்ம மெல்லாம் நசித்துப்போம். [எ - தி] அனந்தகோடி பத்திரம் எழுதிக்கொடுத் திருந்தவன் அந்தப்பத்திரங்களை வாங்கிவைத்திருக்கிறவனுடைய வீட்டில் தீயைவைத்ததால் பத்திரங்களெல்லாம் சாம்பலாய்ப் போனதுபோலவறிக. [இ - து] ஆகாம்மியகர்மங்களும் நான் அகர்த்தாவென்றிருப்பதால், இவனை ஒட் டாது. [எ - தி] இப்போது சாப்பாட்டுக்கு வாங்குகிற ரூபாய்க்கு கடன்பத் திரத்தில் கையெழுத்துப்போடாமற் கடத்திவிட்டது போலவறிக. [இ - து] ஞானப்பியாசத்துக்கு வாசனக்ஷயம் திருஷ்டபலம். [எ - தி] யோக்கியனிடத் தில் வேலைசெய்கிறவனுக்கு கூலி கைமேல்கிடைப்பதுபோலும், அமிர்தஞ் சாப் பிடுகிறவனுக்கு ஆரோக்கியமுண்டாவது பிரத்தியக்ஷமாயிருப்பதுபோலுமறிக,

[இ - து] மோக்ஷத்திற்கு ஞானமே முக்கிய சாதனம், மற்ற வைராக்கிய உபாதி கர்மமாதிகள் பரம்பராசாதனம். [எ - தி] ஐஸ்வரியத்தை யடைவதற்கு ராஜன்தயவு முக்கியம், மற்ற சேவகன் முதலானவர்கள் தயவு பரம்பரா சாதனமா யிருப்பதுபோலும்; போகத்திற்கு யோனிமுக்கியம், மற்ற ஸ்தன்னியமுதலான அவயவங்கள் பரம்பராசாதனமா யிருப்பதுபோலுமறிக. [இ - து] விசாரணையினுலே உண்டாகிற பிரம்மஞானம் இவனுக்கு வேண்டாமென்றிருந்தாலும் அந்த பிரம்மஞானம் இவனைவிட்டுப் போகாது. [எ - தி] அமிர்தஞ் சாப்பிடுகிறவன் வயிறுநிறைந்து திருப்தியாகவேண்டாமென்றிருந்தாலும் அந்தத்திருப்தி இவனைவிட்டு நீங்காததுபோலும், சுவாசனைகள் நிறைந்திருக்கிற ஷாப்பில் வேலையாயிருக்கிறவனுடைய மூக்கில் அந்த சுவாசனைகள் பலாத்காரமாய் ஏறுவதுபோலும், பிரயாகையில் மகரஸ்நானம் செய்கிறவனுக்கு குளிரும் புண்ணியமும் கூப்பிடாமல் வருவதுபோலும், சர்க்கரை சாப்பிட்டவனுக்கு தித்திப்பு வேண்டாமென்றிருந்தாலும் நாவில் அது காணப்படுவதுபோலும், முண்டச்சி போகம்செய்துவரும்போது கெர்ப்பமாகவேண்டாமென்றிருந்தாலும் கெர்ப்பம் தானேயுண்டாவது போலுமறிக. (சங்கை)திரிபுடிக்குச் சாக்ஷியே நானென்றறிவதெப்படியெனில், ஞாதுரு ஞானஞேயங்களை வாசனைகளோடேதள்ளி திரிபுடிக்கு முன்னே விளங்கிக்கொண்டிருந்த ஆத்மாவே நானென்று பஜிக்கிறேனென்றதே சுருதி, பூமியிலுண்டான மரம் செடி கொடிகளை வெட்டித்தள்ளி அவைகளுண்டாகிறதற்கு முன்னேயிருந்த பூமிமாத்திரமாயிருப்பதே யுக்தி, ஜாக்கிர சொப்பனத்திலுண்டாகிற திரிபுடிகள் மறுபடி சுழுப்தியில் லயிக்கிறதே அனுபவமென்றறிக. [இ - து] ஆத்மஞானமே தனம், ஜடமாயும் அன்னியமாயும் துக்கரூபமாயும் பயங்கரமாயுமிருக்கிற ரூபாய் தனமன்று. ஏனென்றால், அதையும் இதையும் கொண்டுபோகிற இருவருக்குள் ஒருவனுக்கு அபயமும், மற்றொருவனுக்கு பயமும்; அபகரிக்கவந்த திருடன்கையில் அகப்படாததாயும், அவர்கள் பறித்துப்போக விஷயமாயும்; கவலையன்றியிலும், சதா கவலையைக்கொடுப்பதாயும்; கேட்டவர்களுக்கு இராப்பகல் பாராமற்கொடுத்தாலும் மேல்மேலும் விருத்தியாவதாயும், அப்படிக் கொடுத்தால் குறைந்துபோவதாயும்; காலாந்தரத்தில் அழிவற்றதாயும், அழிந்துபோவதாயும்; கொடுப்பவர்களுக்கும் பெற்றவர்களுக்கும் இராகத்துவேஷங்களையும் அஞ்ஞானத்தையும் ஜென்மாதி துக்கபரம்பரைகளையும் போக்கி அழிவற்றமுக்தியைக்கொடுப்பதாயும், மற்றொன்று இதற்கு எதிர்மறையாயிருப்பதையும் யோசித்துப்பார்த்து புத்திசாலி ஞானதனத்தையே சம்பாதிக்கவேண்டுமேதவிர மற்றதனத்தை வெறுக்கவேண்டுமென்றறிக. [இ-து] ஞானம்வந்த சந்தோஷத்தால் பிராரப்ததுக்கம் எவ்வளவுவந்தாலும்தோற்றாது. [எ - தி] தசமனுக்குத் தன்னை சாகாமற்கண்டசந்தோஷம் முன் இடித்துக்கொண்ட புண்வேதனையைத் தோற்றவொட்டாததுபோலும், பட்டஸ்திரீக்கு பிள்ளைபிறந்த சந்தோஷம் பிரசவவேதனையினுலுண்டான துக்கத்தைத் தோற்ற

ஒட்டாததுபோலவும், ஜெயங்கொண்டஅரசனுக்கு எதிரியினால் அடிக்கப்பட்டிருக்கிற அஸ்திரவேதனை தோன்றாததுபோலும், வடைதின்கிற ஸ்திரீக்கு வடைசுடும்போது எண்ணைப்புகையால் உண்டான துக்கம் தோற்றாததுபோலுமறிக. [இ - து] நான் பிரம்மமென்றறிந்தால் ஜீவேஸ்வர ஜகத்தெல்லாம் அறியப்பட்டதாக ஆகும். [எ - தி] கோடி என்றால், பத்து நூறு ஆயிரம் முதலான தொகைகளெல்லாம் அடங்கியிருப்பதுபோலும்; ராஜனால் சகல ஜனங்களும் சகல வஸ்துக்களும் சுவாதீனமாவதுபோலவறிக. [இ - து] ஆனால் அப்போது அது திரிபுடி ஆச்சுதேயென்றால், இதென்று அறிகிறது திரிபுடிஆகுமேதவிர நானென்றறிகிறது திரிபுடியாகாது. [எ - தி] அஞ்ஞானிகளுக்குக்கூட தேகம் நானென்பது திரிபுடியாகாமல் இதுவென்று வருகிறதே திரிபுடியாகிறதுபோலவறிக. [இ - து] பிரஹ்மத்திலிருக்கிற சம்சாரகாரணமான அஞ்ஞானசக்தி ஞானத்தீயால் சுடப்பட்டபின் சம்சாரத்தை யுண்டுபண்ணமாட்டாது. [எ - தி] சுட்டபானை மறுபடி இன்னமொருபானையை உண்டுபண்ணமாட்டாதது போலவறிக. [இ - து] தத்துவஞானத்தால் ஜெகத்பயம் தீருமேயன்றி சுழுத்தி மூர்ச்சை யோகங்களால் அது தீராது. [எ - தி] வாரண்டுகைதியை ஜாமீன்மேல் விட்டாலும், ஒளிந்துகொள்ளுவதாலும், சேவகனை நயந்துகொள்வதாலும் தற்காலதுக்கநிவர்த்தியேதவிர தொகைகொடாமல் அது தீராததுபோலும், தீர்க்கவியாதிவந்தவன் கஞ்சாவாலும் தூங்குவதாலும் சீட்டாடுவதாலும் தற்காலத்தில் அதை மறந்திருந்தாலும் சித்தகுளிகை சாப்பிட்டாலொழிய அது பூராவாய்த்தீராததுபோலவறிக.

ஞானத்தினுடைய மகிமையும் அதைப்போதிக்கிற குருவினுடைய மகிமையும் தனக்குத் துக்கம் வந்தகாலத்தில்தான் தெரியும். [எ - தி] குடையினுடைய அருமை மழையில் அகப்பட்டுக்கொண்டகாலத்திலும், நிழலருமை வெய்யிலிலும், பணத்தினருமை தரித்திரத்திலும், தீபத்தினருமை இருட்டிலும், மிதியடி மகிமை முள்ளுக்களிலும், தாவளிமகிமை குளிரிலும் தெரிவதுபோலுமறிக. [இ - து] பிராமணன்முதல் பறையன்வரையில் பிரம்மஞானம் ஒருபடித்தாயிருப்பதற்கும், சமஸ்கிருதமுதலான பாஷைகள்மட்டும் பேதமாயிருப்பதற்கும் யுக்தி:—ராஜாமுதல் நீசன்வரையில் சாப்பிடுகிற பாலிலும் அனுபவிக்கிற யோனியிலும் பேதமில்லாமல் தங்கமுதலான பாத்திரத்திலும் மெத்தைமுதலான படுக்கையிலும் பேதமிருப்பதுபோலவறிக. [இ - ர்] தன்னை அறிகிறவரையில்தான் ஜனனமரணமான சம்சாரதுக்கமுண்டு. [எ - தி] சொப்பனவஸ்தையிற் காணப்பட்டதுக்கம் விழிப்பதுவரையிலிருப்பதுபோலவறிக. [இ - ர்] முன்னும்பின்னும் குரு சொல்லுகிற அர்த்தமானது சித்தத்தினாலே அனுபவித்தாலும் வாக்கினாலே சேர்த்துச்சொல்லுவதுதான் பிரயாசம். [எ - தி] கடலைப்பருப்பு முன்னும்பின்னும் லகுவாயிருந்தாலும் பருப்புத்தேங்காய்ப் பிடிப்பது பிரயாசமாவது போலவறிக. [இ - ர்] ஜீவனிடத்தில் ராகத்

துவேஷவாசனைகள் எவ்வளவு கடினமாயிருந்தாலும் பிரஹ்மஞானம் பஸ்பமாக்கிவிடும். [எ - தி] இண்டங்காடு எவ்வளவு முள்ளாயிருந்தாலும் அக்கினியானது எரித்துப்போடுவதுபோலவறிக. [இ - ர்] சாக்ஷாத்காரஞானம் வந்தபிறகே ஆனந்தவாப்தி உண்டாகும். [எ - தி] வெளிச்சம்வந்தபிறகே சுகமுண்டாவதுபோலும், விழித்தபிறகே சொப்பனத்திற்கண்ட துக்கம்போய் சுகம்வருவதுபோலும், தன் ஸ்வயஞானம் உண்டானபிறகே கிருக்குப்பிடித்த கஷ்டம் தீர்ந்து சுகமடைவதுபோலும், புத்தியறிந்தபின்பே போகசுகத்தையடைவதுபோலவறிக. [இ - ர்] ஆனந்தானுபவம் வந்தபின்பே தத்வஞானம் உண்டாகும். [எ - தி] ஸ்திரீமோகத்தாலுண்டாகிய வருத்தம் ஆனந்தவாப்தியான சுக்கிலமோசனமானபின்பே தன் ஸ்வயக்ஞானம் வருவதுபோலும்; சமாதிஆனந்தம் உண்டாகியே தத்வஞானம்வருமென்று சுருதி சொல்வதாலும், கற்கண்டுமுதலான வஸ்துக்களுடைய ஆனந்தானுபவம்வந்தே அதினதின் ஞானமுண்டாவதுபோலும், கஞ்சிகுடித்தபின்பே நாய் வீடுகாப்பதுபோலும், உருசிகண்ட பூனை உறியைத்தாவுவதுபோலும்; உண்டு ருசிகண்டவனும் பெண்டு ருசிகண்டவனும் விடானென்ற சொல்லின்தாற்பரியமாவது, உண்டு ஆனந்தானுபவம்பண்ணி ருசிஅறிந்துகொள்வனென்று அர்த்தம். பெண்டு என்ற முக்திசுகம் அனுபவித்தபின் ருசியென்ற ஞானம் வருமென்று அர்த்தம். இந்த இரண்டும் சேர்ந்தே ஒரேகாலத்திலுண்டாகுமென்பதற்கு யுக்தி:—சந்திரனும் சந்திரிகையும்போலும், பூவும் மணமும்போலும், தண்ணீரும் குளிர்ச்சியும்போலும், பூஜைப்பெட்டி வைத்த இடமும் ஒண்ணுக்குப்போன இடமும் ஞாபகத்திற்கு வரவேண்டுவதுபோலவறிக. [இ - ர்] தான் விசாரித்தாலும் விசாரமில்லாதிருந்தாலும் எப்போதும் தான் பிரஹ்மமாயிருக்கிறோம், என்றறிவதற்கு யுக்தி:—தசமன் கர்ணன் முதலானவர்கள் விசாரித்தாலும் தன்னை விசாரியாதிருந்தாலும் தசமனும் குந்திபுத்திரனுமிருப்பதுபோலவறிக. [இ - ர்] குருவினால் உபதேசிக்கப்படுகிற சப்தபிரம்மமும் அதைக்கேட்டு விசாரம்பண்ணின விருத்திகளும் நிமிஷந்தோறும்அழிந்துபோய்விடுகிறது. இதினாலுண்டான ஆத்மஞானமட்டும் எப்படி அழியாமலிருக்குமென்றால், மரஞ்செடிமுதலானதுகளுக்கு விட்டதண்ணீர் அழிந்தும் மரஞ்செடிகள் அழியாமலிருந்து சபலமாய் விருத்தியாவதுபோலும், தினம்புசிக்கிற அன்னாதிகள் அழிந்தும் சரீரம் புத்திரோற்பத்திவரை சகல சம்சாரவிவகாரத்திற்கும் சாதனமாயிருப்பதுபோலும், மாரீசன் செத்தும் அவன்சொல் சீதைக்கு அனந்த துக்கத்தைக் கொடுத்ததுபோலும், தின்ற வடை அழிந்தும் வயிற்றுவலி அழியாததுபோலவறிக. (இ - ர்) ஸ்திரீயாய்ப்பிறந்தவளுக்கு இந்தயோனி தனக்கு வேண்டாமென்றெண்ணி விளக்குமாறால் அடித்து விரட்டினாலும், அதை மூடிக்கொண்டாலும் சகசமாய் எப்படியிருக்குமோ அப்படி நாம் அறிவோடேகூடியே யுண்டாய்விட்டதால் இப்போது தனக்கு அறிவுவேண்டாமென்றிருந்தாலும் மறந்திருந்தாலும் அது நம்

மைவிட்டு பிரியாமலும் வேறாய்ப்போகாமலும் தானாய் சகசமாயிருப்பதால் நாம் அறிவாகவே யிருக்கவேண்டியதாயிருக்கிறது. இதற்கு நாம் என்னசெய் யலாம் சொல்? (இ - ர்) மாயையும் அனாதியானதால் மாயாகாரியமான சம் சாரமும் அனாதியானதால், இப்போது குருநாதன் அனுக்கிரகித்த சொற்பஞா னம் அதை எப்படிப்போக்குமென்றால், வெகுநாளாய்க்கட்டிக் குடியிருந்துவரு கிற கூரைவீட்டில் சொற்பஅக்கினியை வைத்தால் அது அதை என்னமாய் க்ஷணத்தில் பஸ்பம்பண்ணிப்போடுமோ அப்படிப்போலவென்றறிக. ஆனதி னால் பிரம்மஞானமொன்றுமே சுகம். அதுவே அழியாமல் நிலைத்திருக் கும். மற்றவையெல்லாம் சொப்பனம்போலப் பொய்யாய்ப்போம். குருவாகிய தெய்வத்தினிடத்தில் அப்படிப்பட்ட ஞானத்தைக் கேட்காமல் மாயிகவரத் தைக்கேட்பது அபீஷ்டதானம் கேட்கச்சொன்ன அரசனிடத்தில் அரைப்படி அரிசி சுயம்பாகம்கேட்ட அந்தணன்கதைபோலவாம். (இ - ர்) எல்லாத்தா னத்திலும் அன்னதானம்மேலென்று சொல்வது எதினாலென்றால், பசியைப் போக்கித் திருப்தியையும் உடனேகொடுப்பதால். அப்படிப்போல மாயிக பலன்களெல்லாம் பிறருடைய புகழ்ச்சிமாத்திரமேதவிர தனக்கு தாபத்தையும் கவலையையும் ராகத்துவேஷங்களையும் அனர்த்தங்களையும் கொடுக்கும். ஞான தானமொன்றுமாத்திரமே உடனே அத்தியந்த துக்கநிவிர்த்தியையும் திருப்தி யையும் செய்கிறதால் ஞானதானத்திற்குச் சாதிர்சியமொன்றுமில்லை. (இ - ர்) அஞ்ஞானத்தைக் கெடுத்தபின் சித்தித்திருக்கிற பிரம்மஞானத்தைக் கெடுக்க ஒருவராலும் முடியாது. (எ - தி) நித்திரையிலிருந்து விழித்தவனை சொப்ப னம் மயக்கமுடியாததுபோலுமறிக. (இ - ர்) சூரியோதயமானமாத்திரத்தில் இருட்டும் அதினுண்டான அனர்த்தங்களும் போவதுபோலத் தான் பிரம்ம மென்ற ஞானேதயமானால் அஞ்ஞானமும் அதின்காரியங்களான ஆவரண விக்ஷேபாதி அனர்த்தங்களும் போமென்றறிக. (இ - ர்) ஜாக்கிரத்திலேயுண் டாகிற விவேகஅவஸ்தையே துரியாவஸ்தை. (எ - தி) தயிரில்கடைந்து வெண்ணெய் எடுப்பதுபோலவறிக. (இ - ர்) அஞ்ஞானகாலத்திற் செய்த சஞ்சிதகர்மம் முழுமையும் ஞானத்தாலேயே போகுமேயொழிய அனுபவித் துத்தீராது. (எ — தி) மருள்கொண்டவன் கையெழுத்துப்போட்டிருக்கிற கடன்பத்திரங்களைச் செல்லாதென்று சட்டத்தாலடிக்கவேண்டுமேயல்லாமற் கொடுத்துத்தீர்க்க முடியாததுபோலவறிக. (இ - ர்) ஆத்மஞானம் வந்தபிற் பாடு இந்தச் சாஸ்திரவிசாரம்பண்ணுகிற மனதும் வேண்டியதில்லை யென்கிற சுருதிக்கு யுக்தியாவது:—கரையேறினவனுக்குக் கப்பல்வேண்டாததுபோலும், வீட்டுக்குள் வந்தவனுக்குக் குடை மிதியடி வேண்டாததுபோலும், காயசித்தி யால் பசியில்லாதவனுக்குச் சமையல்வேண்டாததுபோலும், தூற்றினநெல்லைக் கொண்டுவந்தபிறகு பதருக்குக் காவல்போடாததுபோலும், இருட்டில்விழுந்த ரத்தினத்தை எடுத்தபிறகு கொள்ளிக்கட்டையை எறிவதுபோலுமறிக. (இ - ர்) பிரஹ்மம் சித்தத்தில் அஞ்ஞானகாலத்திலுமிருந்தாலும் விசார

ஜன்னிய ஞானத்தினால் பக்குவமான சித்தத்திலேயே பிரகாசிக்கும். (எ - தி) தீக்குச்சியில் பிரகாசவடிவமான மருந்து எப்போதும் இருந்தாலும் உறைச் சலால் காய்ஞ்ச குச்சியிலேயே பிரகாசிப்பதுபோலவறிக. ஐயா, ஞானத்தின் மகிமை திரிமூர்த்திகளுக்கும் தேவ கந்தர்வ கின்னர கிம்புருஷ உரக சித்த ராக்ஷச பூதபிரேதபிசாச பிரம்மராக்ஷசஅசுரர்முதலானவர்களுக்கும் தேவ ரிஷிகளுக்கும் மனுஷரிஷிகளுக்கும் பிராம்மணர்கள் க்ஷத்திரியர்கள் வைசியர் கள் சதுர்த்தர்கள் பஞ்சமர்கள்வரையிலுள்ள சகலருக்கும் தத்துவஞானம் பொதுவென்றும், அந்தஞானத்தால் உண்டாகிற ஜீவன்முக்தியும் விதேகமுக்தி யும் சரியாய்வருமென்றுஞ் சொன்னீர்களே, அதற்குச் சுருதி யுக்தி அனுபவம் என்னவென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரம் சொல்லுகிறோம் கேள்:— இந்த ஞானபூமிகளைத் தேவர்களாகட்டும், பிராமணர்களாகட்டும், ஸ்திரீகளாகட்டும், நபும்சகர்களாகட்டும், சண்டாளர்களாகட்டும், மிலேச்சாதி களாகட்டும், பசு பக்ஷி மிருகங்களாகட்டும் யார் அடைந்தபோதிலும் அவர்க ளெல்லாம் ஜீவன்முக்தர்களாக ஆய்விடுவார்களென்று சொல்லுகிற சுருதிகளை யும்; மேலேசொல்லிய தேவமனுஷ்யதிரியக்காதிகளான சரீரங்களை எடுத்திருக் கிற சகலஜீவர்களுக்கும் அஞ்ஞானமும், அதின்காரியமான ஆத்மானாத்மாக் களின் பேதந்தெரியாமற்பண்ணுகிற ஆவரணசக்தியும், விக்ஷேபசக்தியினு டைய சத்துவகுணவியஷ்டியிலுண்டான சுரோத்திரம் துவக்கு சக்ஷு ஜிஹ்வை ஆக்கிராணங்களாகிற ஞானேந்திரியங்களும், சப்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களா கிற விஷயங்களை அவைகள் கிரகிப்பதும்; சத்துவகுணசமஷ்டியிலுண்டான அந்தக்கரணம் சஞ்சலத்தால் மனமென்றும், நிச்சயத்தால் புத்தியென்றும், அபிமானத்தால் அகங்காரமென்றும், சிந்தனைபண்ணுவதால் சித்தமென்றும், ஸ்திரீவிஷய விகாரவிருத்தியால் ராகமென்றும், அபகாரஞ்செய்கிறவனுக்கு பிரத்தியபகாரஞ்செய்யவேண்டுமென்று வருகிற விருத்திக்குத் துவேஷமென் றும், வீடுவாசல் நிலங்கரை பணங்காசுமுதலான சொத்துக்களைத் தேடவேண்டு மென்று வருகிற விருத்திக்குக் காமமென்றும், தன்புஜிப்புக்கு விரோதம்செய் தவனிடத்தில் வருகிற கோபத்திற்குக் குரோதமென்றும், சத்விஷயத்தில் ஒருகாசுகூட கொடுக்கக்கூடாதென்று வருகிற விருத்திக்கு லோபமென்றும், தன்னுடைய இஷ்டவஸ்துக்களில் மயங்குவது மோகமென்றும், நமக்குப் பண மிருக்கிறது நம்மை யாரால் என்னசெய்யக்கூடுமென்று வருகிற விருத்திக்கு மதமென்றும், தன்னுடைய எதிரிக்குவந்த சுகத்தைக்கண்டு பொறாமையால் வருகிற விருத்திக்கு மச்சரமென்றும், தனக்கு ஒருதுக்கம் வந்தபோது இந்தத் துக்கம் எதிரிக்கன்றோ வரவேண்டுமென்று வருகிற விருத்திக்கு ஈரிஷையென் றும், தனக்குச்சமானமாக பெரியவரென்கிற பேரை இன்னொருத்தன் வகிப் பானென்று வருகிற விருத்திக்கு அசூயையென்றும், நாம்செய்கிற தான தர்மங்களைக்கண்டு பிறர் புகழவேண்டுமென்று வருகிற விருத்திக்கு டம்ப மென்றும், இவ்வுலகத்தில் நமக்குச்சமானம் யாருமில்லையென்று வருகிற விருத்

திக்கு தர்ப்பமென்றும், தான்பிடித்ததையே சாதிக்கிற விருத்திக்கு அகங்கார மென்றும், பசிதாகமுண்டானவேளையில் அன்னத்தையும் தண்ணீரையுஞ் சாப்பிடவேண்டுமென்றும், மலபாதை ஜலபாதை வந்தவேளையில் ஒண்ணுக்கு இரண்டுக்குப் போகவேண்டுமென்று வருகிற விருத்திக்கு இச்சையென்றும், பரகுரு ஈஸ்வரனிடத்தில் உருக்கத்துடன் வருகிற பிரீதிக்கு பக்தியென்றும், பரலோகம் ஒன்றுண்டு, புண்ணியபாபங்களும், அதற்குப் பலன்களும், அதற்குப் பலதாதாவான ஈசுவரனொருவனுண்டென்று நம்பிக்கையாய் வருகிற விருத்திக்கும், குருவாக்கியமே சத்தியம் என்றுவருகிற விருத்திக்கும் சிரத்தையென்றும்; ரஜோகுணவியஷ்டியிலுண்டான கர்மேந்திரியங்களுக்குள் பேசுவதால் வாக்கென்றும், தொழில்செய்வதால் பாணியென்றும், நடப்பதால் பாதமென்றும், மலமூத்திரம்விடுவதால் பாயுருவென்றும், ரமிப்பதால் உபஸ்தமென்றும்; அக்குணசமஷ்டியிலுண்டான வாயு மேல்நோக்குவதால் பிராணனென்றும், கீழ்நோக்குவதால் அபானனென்றும், தேகம்முழுக்க வியாபிப்பதால் வியானனென்றும், உத்கிரமணம்செய்வதால் உதானனென்றும், அன்னத்தைச் சமரசப்படுத்துவதால் சமானனென்றும், இப்படிச் சகலருக்கும் இப்போது சொன்ன சங்கதிகளெல்லாம் பொதுவாயிருப்பதுபோல இந்த ஜீவகோடிகளுக்குள் எவன் முமுட்சுவாய் சற்குருவை யடைந்து நானாரென்று விசாரித்து தன்னைச் சர்வசாக்ஷியாக அறிகிறானோ அவன் முக்தனாவதிற் கொஞ்சமும் சந்தேகமில்லையென்றறிக.

## 204 - வது தரங்கம்.

ஞானத்திற்கு வைராக்கியோபரதி சாதனம்:—

ஞானம்பெறுவதற்கு வைராக்கியமும் உபரதியும் சாதகமாகும். (எ - தி) ராஜாவிடத்தில் தானம்பெறுவதற்கு மந்திரியும் தானாதிகாரியும் சாதகமாயிருக்கவேண்டுவதுபோலும், வழிநடப்பவனுக்கு மிதியடியும் குடையும் சாதகமாயிருப்பதுபோலுமறிக. (இ - து) மோக்ஷத்தையடைகிற புருஷனுக்கு வைராக்கியம் உபரதி ஞானம் மூன்றும் வேண்டியதாயிருந்தாலும் ஞானம் பிரதானமாயும் வைராக்கியம் உபரதி அப்பிரதானமாயுமிருக்கிறது. (எ - தி) கூத்துப்பார்க்கிறவனுக்கு கால் காது கண் மூன்றும் வேண்டியதாயிருந்தாலும் அவைகளுக்குள் கண் பிரதானமாயும் கால் காது அப்பிரதானமாயுமிருப்பது போலும்; இனி ஞானம் பிரதானம் வைராக்கியம் அப்பிரதானம். (எ - தி) புருஷனுக்கு ஸ்திரீ இறந்துபோனாலும் அதற்கடையாளமாக சிகா எக்ஞோபவீதங்களை எடாததினால் அவலக்ஷணமில்லாமல் மறுதாரம் கல்யாணஞ்செய்து சுகிப்பதுபோலும், ஸ்திரீகளுக்குப் புருஷன் இறந்துபோனால் மறுபுருஷனைக் கல்யாணஞ்செய்யக்கூடாததாலும், அப்படி மறுபுருஷனைச் சேர்ந்தாலும் பயமுண்டாவதுந்தவிர தாலி தலைமயிரை எடுக்கிற அவலக்ஷணமான அடையாளந்

தோற்றுவதுபோலும்; வைராக்கியமில்லாத ஞானிக்கு அஞ்ஞானநிதி சம்சார துக்கமில்லாமையும், ஞானமன்றியில் வைராக்கியமுள்ளவனுக்குச் சம்சாரதுக்க மிருப்பதையுங் கண்டுகொள்க. [இ-ர்] விவேகமும் வைராக்கியமும் இருந்தால் ஜீவன்முக்திசுகம் சீக்கிரத்தில் சித்திக்கும். [எ-தி] வியாதிவந்தவனுக்குத் திவ்ய ஔஷதசேவையாலும் பத்தியபோஜனத்தாலும் சீக்கிரமாக ஆரோக்கியம் சித்தியாவதுபோலவறிக. [இ-ர்] யோகத்திற்கு ஞானமில்லாமற்போனல் அழகில்லை. ஞானத்திற்கு யோகமில்லாமற்போனலும் அழகுண்டு. [எ-தி] ஸ்திரீக்கு புருஷனில்லாமற்போனல் அழகில்லை, புருஷனுக்கு ஸ்திரீயில்லாமற்போனலும் அழகுண்டு என்பதுபோலவறிக. [இ-ர்] வைராக்கியத்துடன் ஞானமிருப்பதற்கும் விஷயத்துடன் ஞானமிருப்பதற்கும் யுக்தி:— ராஜகிரகத்தில் மிருஷ்டான்னபோஜனம்போலும், மலமூத்திரமுள்ளவிடத்தில் வெறும் அன்னத்தைப் புஜிப்பதுபோலுமறிக. [இ-ர்] ஞானம் பிரதானமென்பதற்கும் மற்றதெல்லாம் அதற்குச்சாதனம். [எ-தி] புருஷன் போகிக்க ஸ்திரீயின்சரீராதி அவயவங்கள்போலத் தத்வஞானம், வஸ்திரம்போல வைராக்கியம், சிரவணம் திருமங்கலியம்போல, உபரதி சர்வாலங்காரம்போல, இவ்வளவுஞ்சேர்ந்திருப்பது பணக்காரன்வீட்டுப் பெண்போலத் தபோபலமல்லாமல் மோக்ஷமாத்திரமாகிற புத்திரனுண்டாவதற்கு ஞானமாகிற ஸ்திரீமட்டும் போதுமென்றறிக. [இ-ர்] ஞானம்வரும்வரை வைராக்கியோபரதிகளுடன் ஞானப்பியாசம் பண்ணவேண்டும். பின்னவைகளிருந்தால் விசேஷசுகம், இல்லாமற்போனல் ஞானத்துக்கு மோசமில்லை. [எ-தி] கல்யாணமாகும்வரை தாய்தகப்பனுடைய தயவுவேண்டியிருப்பதும் பின் அவர்கள்கூடவிருந்தால் விசேஷம், இல்லாவிட்டாலும் தம்பதிகளுடைய சுகத்துக்கு மோசமில்லாதது போலவறிக. [இ-ர்] வைராக்கியமில்லாத விவேகம் சிலாக்கியம், விவேகமில்லாத வைராக்கியம் பிரயோசனமில்லை. [எ-தி] யோனியில்லாத பாலஸ்வாமியையும் ஸ்தன்னியமில்லாத ரோகிணியையும்போல அறிந்துக்கொள்ளத்தக்கது. ஆகையால் விவேகமில்லாத வைராக்கியனிடத்தில் உலகத்தார் யோனியில்லாத பாலஸ்வாமியைக்கண்டு மயங்குவதுபோல மயங்குவார்கள். குட்டுத்தெரிந்த நீங்கள் மயங்கத்தேவையில்லையென்றறிக. ஐயா, ஞானம் வைராக்கியம் இரண்டுக்குள் ஞானமே மோக்ஷத்துக்கு முக்கியசாதனமென்றும் வைராக்கியாதி சற்குணங்கள் கௌணமென்றுஞ் சொன்னீர்களே அப்படி வைராக்கியமன்றியில் ஞானமாத்திரத்தால் முக்தியடைந்தவர்கள் யாரென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:—இக்ஷ்வாகுவென்கிற ராஜாவானவர் அயோத்தியாதிபதியாக ராஜ்ஜியபரிபாலனம் பண்ணிவருப்போது, ஒருக்கால் தனித்திருந்து ஆலோசிக்கிறர். ஜரைமரணம் ஜென்மமுதலானதோடேகூடியிருக்கிற ஜகத்துக்குக் காரணம் எதுவென்று சிந்தித்ததிலுந் தெரியவில்லை. அப்படியிருக்கும்சமயத்தில் பிரம்மலோகத்திலிருந்து மனுவானவர் வந்துசேர்ந்தார். அவரைப்பார்த்து இவர் "இந்த ஜகத்துக்குக் காரணமென்ன? இதின்

சொரூபமென்ன? இது எவ்வளவு அளவுக்குள்பட்டது? யாருடையது? எதினுலே யுண்டாச்சு? இப்பேர்ப்பட்ட சம்சாரசங்கடத்திலிருந்து வலையிலகப்பட்ட பக்ஷி போலிருக்கிற நான் என்னமாய் விடுபடுவேன்?" என்று கேட்டதும் மனுவான வர், "ஓ இக்ஷ்வாகு! உனக்கு இந்தவிவேகமுண்டானது ரொம்ப ஆச்சர்யம். நீ கேட்ட இந்த ஜகத்து இல்லவேஇல்லை. எப்படி ஆகாசத்தில் கந்தர்வபட்டண மில்லையோ, கானலில் ஜலமில்லையோ அப்படிப்போலவறிக. ஆறுவது இந்திரி யமான மனதுக்கும் அப்புறப்பட்டபிரம்மமே யிருக்கிறது. அந்தப் பிரம்ம மாகிற கண்ணுடியில் இந்த ஜகத்து பொய்யாய்த்தோற்றுகிறது. ஆகையால் பந்தமுமில்லை, முக்தியுமில்லை. அறிவுமாத்திரம்விளங்குகிறது. ஆகையால் ஒருஜலமே அலைநுரை குமிழியாகத் தோற்றுவதுபோல நீயே ஜீவேஸ்வர ஜகத் தாகத் தோற்றுவதால், உனக்குப் பந்தமோக்ஷகற்பனைகளற்று நீ நிர்ப்பயமாய் நிற்கக்கடவாய். அறிவாகிய நீ சங்கற்பத்தோடேகூடினுல் ஜீவனுகஆகி ராகத்து வேஷங்களோடேகூடிய சம்சாரிபோலே தோற்றுகிருய். இந்தச்சம்சாரம் மன சுக்கேதவிர உனக்கில்லை. அதிர்சியனுயிருக்கிற ராகு சந்திரமண்டலத்தில் திரி சியனுவதுபோல நீயும் அகண்டாகாரவிருத்திக்ஞானத்தில் காணப்படுவாய். வழிப்போகிறவர்கள் மரஞ்செடிகளை யுபேக்ஷையாய்ப் பார்த்துக்கொண்டு போவதுபோல நீயும் இந்த ஜகத்தையும் அதைப்பார்க்கிற மனதுமுதலான இந்திரியங்களையும் ஆதாரவன்றியிற்பார்த்து குளிர்ச்சியான மனசுடனேகூடின வனுய் ஆத்மஸ்வரூபனுக இருக்கக்கடவாய். தேகம் நானென்கிற புத்தியே பந்தம். முமுட்சு இந்தப்புத்தியை கிரகிக்கக்கூடாது. பூர்ணமான பிரம்மமே நானென்ற புத்தியே முக்தியைக்கொடுக்கும். பிரளயமாகிற சமுத்திரம் ஜகத் துக்கூட்டங்களாகிற நதிகள் சரீரங்களாகிற அலைகளோடேகூடி இதில் வந்து விழுகிறதாயும், நாசமாகிறவடவாக்கினியால் ஆக்கிரமிக்கப்பட்டதாயுமிருக் கிற இந்தச்சமுத்திரத்தை எந்த ஆத்மாவாகிற அகஸ்தியர் பானம்பண்ணு கிருரோ அவரே நானென்றறிக. தன் ஸ்தன்னியத்தின் நடுவிலிருக்கிற பிள்ளையை மறந்து அழுவதுபோல தன்னுக்குள்ளிருக்கிற தன்னை மறந்து ஜீவன் துக்கிக்கிருன். இது அழகு இது அழகில்லையென்று பார்க்கிறபார்வையே சம் சாரவிஷவிருக்ஷத்துக்கு விதையானதால், அது சித்திரத்திலெழுதப்பட்ட ஸ்திரீயும் சிங்கமும் சமம்போலப்பார்க்கிற சமத்துவஞானுக்கினியால் எரிக்கப் பட்டபின் துக்கம்வருவதற்கு வழியேது? எந்தப்புருஷன் சுகதுக்கபாவனை யில் ஒட்டாத பூர்ணக்ஞானத்தை உடையவனுயிருக்கிருனே அவன் முக்த னென்று சொல்லப்படுகிருன். அவன் விவகாரியானுலும், உபசாந்தனுனுலும், கிரகஸ்தனுனுலும், சந்நியாசியானுலும், சரீரத்தோடேகூடினவனுனுலும், சரீர மில்லாதவனுனுலும், அவன் முக்தனே. சந்தேகமில்லை. நான் பிறக்கவுமில்லை, சாகவுமில்லை, இருக்கிறவனுமில்லை, இல்லாதவனுமில்லை, நான்கொஞ்சமுமில்லை, என்று எண்ணியிருக்கிறவன் ஒருக்காலும் துக்கியாகான். விஷயத்தில் சுகதுக்கங் கள்சேர்ந்தேயிருப்பதால் அவ்விரண்டுகளையும் பாராமலிருப்பவனே சுகி, இந்தத்

துக்கசமுத்திரத்தைத் தாண்டுவதற்குத் தானம், தர்மம், எக்ஞமுதலான கர்மங்கள், உபாயமாக ஆகாது. ஆகையால் ஞானிகளாலேயே கரையேறவேண்டியிருப்பதால் அவர்களையே தேடித்தெரிசித்து, நமஸ்கரித்துப் பூஜித்து, அவர்கள் மூலமாயே ஆத்மஞானத்தை யடையவேண்டும்'' என்று மனுப்பிரஹ்மா இக்ஷ்வாகுவுக்கு உபதேசித்துவிட்டு பிரஹ்மலோகத்திற்குப் போனபின், இக்ஷ்வாகுமகாராஜாவும் அந்த ஞானதிருஷ்டியைப் பிடித்துக்கொண்டு ஜீவன் முக்தனாய் ராஜ்ஜியபரிபாலனம்செய்த கதையைப்பார்த்து நீயும் ஞானத்தையே முக்கியமாய் சம்பாதிக்கக்கடவாய்.

## 205 - வது தரங்கம்.

*தேகாத்மபுத்திபோகாமல் ஞானம் சித்திக்கமாட்டாது:—*

தேகம் நானென்ற புத்திபோகாமல் திடமாயிருக்கும்போது பிரஹ்ம ஞானத்தைப் பிரயாசைப்பட்டு அப்பியாசித்தாலும் அதுசித்தியாது. [எ - தி] டிக்கட்டுவாங்காதவன் ரயிலேறி எவ்வளவு தூரம்போனாலும் கடைசியிலகப் பட்டுக்கொண்டு தெண்டனைப்படுவதுபோலும், ஸ்திரீபோகத்தைவிடாத யோகி எவ்வளவு கல்ப்பசாதனை செய்தாலும் காயசித்தி கிட்டாததுபோலுமறிக. [இ-ர்] சரீரத்தை போஷித்துக்கொண்டு ஆத்மாவை அறிய இச்சிக்கிறவன் முதலையைத் தெப்பமாய்வைத்து கெங்கையைக் கடக்கிறவன்போலும், சொப்பன சரீரத்தை அபிமானித்து அதில் அக்கரையுள்ளவனுக்கு தன் நிஜசரீரதிருஷ்டி வராததுபோலும், ராஜா அம்பட்டனை என்னவேண்டுமென்று கேட்க பாப்பானாகவேண்டுமென்று கேட்டுக்கொண்டபடி ராஜாவுமப்படிச்செய்யும்படி பாப்பாருக்குத்தரவுகொடுத்ததைக்கேட்ட திருவாயத்தன் கழுதையைக் குதிரையாக்க ஒமம்செய்து அதை முடியாதென்று செய்தகதைபோலும், இப்போது அநுபவத்திலும் தேகாத்மபுத்தியோடேகூடினவர்களுக்குள்ளே யார் ஆத்ம ஞானத்தை அடைந்திருக்கிறார்கள் சொல்? [இ - ர்] தேகம் நான் பிரபஞ்சம் சத்தியமென்று அழுத்தமாயிருக்கிற மனதுக்கு எவ்வளவு பிரஹ்மவிசாரம் பண்ணினாலும் ஞானம்வராது. [எ - தி] மதுமாம்சம் சாப்பிடுகிற பழக்கமுள்ளவனுக்கு எவ்வளவு பிராம்மணசகவாசம்பண்ணினாலும் அசுத்தவாசனை போகாததுபோலும், சாரஸ்திரீ எவ்வளவு கற்புடையவர்களோடே கலந்திருந்தாலும் சாரவாசனை போகாததுபோலும், திருட்டுப்பழக்கமுள்ளவன் யோக்கியர்களோடே எவ்வளவு சகவாசம்பண்ணினாலும் திருட்டுவாசனை போகாததுபோலவறிக. [இ - ர்] விவேகிகள் தேகாதி ஜகத்துப் பொய்யானதால் அதைக்குறித்து மானவமானாதிகளை அடையவேண்டியதில்லை. [எ-தி] கானல் ஜலத்தைக்குறித்துக் கலகம்பண்ணார்கள் என்பதுபோலும், சொப்பனத்திலிருந்து விழித்தவன் அங்கேகண்ட மானவமானங்களை எண்ணுதிருப்பது போலுமறிக. [இ - ர்] ஆத்மசாக்ஷாத்காரம்வரை அநாத்மவாசனை போகாது.

[எ - தி] பிணத்தைச்சுட்டுச் சாம்பலைக் கரைத்துவிட்டபிறகு தனஞ்செயவாய்வு போவதுபோலவறிக. [இ - ர்] தேகம் நானென்கிற புத்தியைப்பிடுங்கி எறிந்து விட்டால் சகலவாசனைகளும் போம். [எ - தி] சுவரையிடித்தால் சித்திரமெல் லாம் போவதுபோலும், மந்திரியினிடத்திலிருக்கிற முத்திரைமோதிரத்தைப் பிடுங்கினல் மற்றப்படைகளெல்லாம் தானே இவனை விட்டுவிடுவதுபோலு மறிக. [இ - ர்] சரீரத்திரயத்திலும் நானென்கிற புத்தியை மாற்றிவிட்டால் நான் அசங்கனை சாக்ஷியாகலாம். மலத்திற்கிடக்கிற புருஷனைத் தூக்கித் தேய்த்துக்கழுவிவிட்டால் சுத்த புருஷனவதுபோலும், நீசரோடேசேர்ந்த பிராம்மணனுக்குப் பிராயச்சித்தம்செய்தபிறகு பிராம்மணனவதுபோலுமறிக. [இ - ர்] மனது ஆத்மாவில் ரமித்தால் சுகம். தேகாதிகளை நானென்று நாடி னல் துக்கம்வரும். [எ - தி] ஸ்திரீ தன் நாயகனைவிட்டு ஊரிலுள்ள புரு ஷர்களைப்பிடித்ததால் அவர்கள் ஒருவரொருவனுய்க் கைவிட்டு ஓடிப்போகும் போது துக்கப்படுபவள்போலவறிக. [இ - ர்] ஐயா, தேகாத்மபுத்தியும் வைத் துக்கொண்டு பிரஹ்மம் நானென்கிற புத்தியையும் பழகிக்கொண்டுவந்தால் அந்தப்பிரஹ்மாத்மபுத்தி ஏன் திடப்படாது? ஒருபாஷை கற்றிருக்கிறவன் அதை மறவாமலே மற்றொருபாஷையும் கற்கவில்லையா? அப்படிப்போல இதையும் ஏன் சொல்லக்கூடாதென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல் லுகிறேன் கேள்:—ஒருவனே சொப்பனவஸ்தையை யடைந்து அதில் தானொரு தேகத்தை யெடுத்துக்கொண்டு காடுகரைமுதலான இடங்களில் ஓடிப்போகிற வனும், அநேகம் திருடர்கையால் உதைபடுகிறவனும் புலிகரடிமுதலான துஷ்டஜந்துக்களால் கடிக்கப்படுகிறவனும், மலையினுச்சியிலிருந்து காற்றினல் தலைகீழாய்த்தள்ளப்படுகிறவனும், இன்னும் பலவிதமான அவதிகளைப்படுகிற வனும் கண்டுகொண்டே ஜாக்கிரத்தில் திவ்வியமான ஹம்சதூளிகாமெத்தை யில் சுகமாயும் இரண்டாம்பேரில்லாமல் தானொருவனுமிருக்கிற இந்த எதார்த் தப்பிரக்ஞையும் ஒரேகாலத்தில் ஒருவனுக்கு உண்டாகுமா சொல்? இன்னும் கிறுக்குப்பிடித்து வேஷ்டியைக்கிழித்துக்கொண்டு எச்சல்கலையை மேலே போட்டுக்கொண்டு குப்பையிலேகிடந்து புரண்டு அலைந்து திரிந்து சுழன்று புலம்பிக்கொண்டு மயங்கிக்கிடக்குங் காலத்திலேயே சகலவிதமான சட்டங் களையும் படித்து அவைகளுடைய தாத்பரியங்களையெல்லாம் நன்றுய்த்தெரிந்து கொண்டு சகல ஜனங்களுடைய பொய்புரட்டுகளையும் நியாயான்னியாயங்களை யுங் கண்டுபிடித்து ஜர்ஜியாயிருந்து தீர்ப்புச்செய்யவும் ஒரேகாலத்தில் அவ னுக்குக்கூடுமா? இன்னும் ஒரு ராஜனனவன் இவிடத்தில் சகலவிதமான ராஜ போகங்களையும் அனுபவித்துக்கொண்டு சகல ஜனங்களுக்கும் சகலவிதமான சுகத்தையும் கொடுத்துக்கொண்டு பிரக்ஞையோடே ராஜ்ஜியபரிபாலனம் பண்ணிக்கொண்டும், இந்தச்சரீரம் மரித்து மற்றொருசரீரத்தை யெடுத்து சொர்க்கநரகங்களிற்போய் சுகதுக்கங்களை அனுபவித்து, மற்றொரு சரீரத்தையு மெடுத்து அந்தச் சரீரத்துக்குபயோகமான விவகாரங்களையுஞ் செய்துகொண்டு

ஒருவனே ஒரேகாலத்தில் செய்யமுடியுமா சொல்? அப்படி முடியாதென் பதற்கு சாக்ஷியென்னவென்றால், பூர்ணஞானத்தை யடைந்திருந்த பிருகுமுனி நிருவிகற்பசமாதியிலிருக்கும்போது அவருடைய புத்திரனை சுக்கிரன் அரைவரிசை ஆத்மஞானத்தை யடைந்தவனாய் அவர்சமீபத்தில் வசித்துக்கொண்டிருக்கும்போது, விசுவாசியென்ற தேவதாசி ஒருகாரணார்த்தமாய் பூமியின் கண்ணே வந்து திரும்ப ஆகாசமார்க்கமாய்த் தேவலோகத்திற்குப்போகிறவளை சுக்கிரன் கண்டு மனசினாலேயே தானும் அவளோடேகூடப்போகிறதாயும், இந்திரசபையில் இந்திரனோடேகூட சிம்மாசனத்திலுட்கார்ந்து அவளுடைய ஆட்டம்பாட்டு அபிநயங்களைக்கண்டு மன்மதாவேசம்கொண்டு இருட்டுவரவேண்டுமென்று சங்கற்பித்து அவளோடே கற்பகமரத்துநிழலில் எட்டுச் சதுர்யுகம் இடைவிடாமற் போகம்செய்து புண்ணியக்ஷயமாய் தேவலோகத்திலிருந்து கீழேவிழுகிறவனாய்க் காணும்போது, சுக்கிரனுடைய சரீரத்தில் புதைக்கப்பட்டிருந்த சூட்சுமசரீரம் இதைவிட்டுப் பிடுங்கிக்கொண்டு பிராம்மணஜன்ம முதல் கொசுகுஜென்மம்வரை வாசனையால் கண்டுகொண்டு கடைசியாய்க் கெங்கைக்கரையில் வாசுதேவனென்கிற பிராம்மணனாகி தபசுசெய்து வருங் காலத்தில், பிருகுமுனி சமாதியிலிருந்து விழித்துத் தன்புத்திரன் பிரேதமாய்க் கிடப்பதைக்கண்டு எமன்பேரில் கோபித்துச் சாபம்கொடுக்க சங்கற்பிக்கும் போது, எமன் வந்து, என்பேரில் என்ன குற்றமிருக்கிறது? அவன் வாசனையால் அனந்தஜன்மம் எடுத்தவிபரத்தை நீர் ஞானதிருஷ்டியாலறிந்துபாருமென்று சொன்னபிரகாரம் அவரும் பார்த்து எதார்த்தம் தெரிந்தபின் எமனுக்கு நலம்சொல்லி, எமனும் இவரும் சேர்ந்து கெங்காதீரத்தில் சமாதியிலிருக்கிற வாசுதேவனுக்கு நம்மைத்தெரியக்கடவதென்று எமன் எண்ணினபடி அவன் இவர்களைக்கண்டு சல்லாபம்பண்ணித் திரும்ப சுக்கிரனென்ற சரீரத்திற் பிரவேசிக்கும்படி எமன் உத்தரவுகொடுத்தபிரகாரம் பிரவேசித்து அசுரர்களுக்குக் குருவாயிருக்கிற சுக்கிராச்சாரியருடைய கதையைக்கண்டு சந்தேகந்தெளியக்கடவாய்.

## 206 - வது தரங்கம்.

பிரம்மத்தியானத்தின் முடிவு பிரம்மஞானம்:—

பிரம்மத்தியானத்திற்கு முடிவு பிரஹ்மஞான முண்டாகிறதே பிரயோஜனம். [எ - தி] மரத்திற்காய்த்த மாங்காய் பழுப்பதுபோலும், கர்ப்பமான ஸ்திரீ கிரமத்திற் பிரசவிப்பதுபோலும், குருவினாற் கண்டிக்கப்பட்ட சிஷ்யன் கிரமமாய்ப் பக்குவசித்தனாவதுபோலும், நதிப்பிரவாகம் சமுத்திரத்திற் போய்ச் சேருவதுபோலுமறிக. [இ - ர்] பிரம்மத்தியானம் பண்ணினாலும் ஞானம்வந்தே மோக்ஷம் வரவேண்டும். [எ - தி] மந்திரியைக் காத்தாலும், ராஜாவின் பேட்டி மூலமாகவே தானங்கிடைப்பதுபோலும், மாமியார்

தயவு எவ்வளவிருந்தாலும் பெண் பக்குவமாகியே போகிக்கவேண்டியது போலுமறிக. [இ-ர்] பிரம்மாப்பியாசத்தால் அகங்காரத்தை மறக்கமறக்க நிஜானந்தமே முக்கியானந்தமாகும். [எ-தி] சரீரத்திலிருக்கிற சுக்கிலமே போகம்பண்ணப்பண்ண பிந்துவாய்த்திரண்டு வெளியில்வருவதுபோலும், கட்டையைக் கடையக்கடைய தீ பிரகாசிப்பதுபோலுமறிக. [இ-ர்] எவ்வளவு மந்தனுயிருந்தாலும் நிர்க்குணத்தியானம்பண்ணப்பண்ண அபரோக்ஷஞானம் உண்டாகும். [எ-தி] யோகியானாலும் மைதுனம்பண்ணப்பண்ண சுக்கில மோசனம் தானேயுண்டாவதுபோலும், படுக்கையிற்படுத்துக் கண்ணைமூடிக் கொண்டு இருக்கஇருக்க தூக்கந் தானேவருவதுபோலுமறிக. ஐயா, பிரம் மத்தியானம் பண்ணப்பண்ண பிரம்மஞானமாகுமென்று சொன்னீர்களே, பிரஹ்மத்தியானம் கர்த்துருதந்திரமல்லவா? பிரம்மஞானம் வஸ்துதந்திர மல்லவா? இவ்விரண்டுகளுக்கும் ஹேது சொரூபம் காரியம் அவதி பலங்கள் வேறென்று முன்னமே தாங்கள் சொன்னீர்களே, இப்போது நேரே அதற்கு விரோதமாக இப்படிச்சொன்னகாரணம் ஏதோவென்று கேட்பாயாகில் அதற்கு நாம் உத்தரம் சொல்லுகிறோம் கேள்:— நீ நாம் சொன்ன அபிப்பிராயம் தெரியாமல் மூடத்தனமாய் சங்கிக்கிறாய்! விசாரத்தாலுண்டாகிற வஸ்துதந்திரஞானம் உடனே அஞ்ஞானத்தைப்போக்கி ஜீவன்முக்திசுகத்தைக் கொடுப்பதால் ஞானம் வஸ்துதந்திரமென்றும், பிரம்மத்தியானம் அர்த்தமன்றியில் இவனுடைய பாவனுமாத்திரத்தால் சித்திப்பதால் கர்த்துருதந்திரமென்றும் சொல்லப்பட்டது. இப்போது அந்தந்த ஜீவர்களுடைய மனோபாவனையே தேவமனுஷதிரியக்காதி ஜன்மங்களையடைவதற்குக் காரணமாயிருக்குமானால், ஜீவனுக்குத் தனக்கு நிஜவடிவமில்லாததாயும் பொய்யாயும் கற்பிதமாயுமிருக்கிற நாமரூபங்களுடைய வடிவமே இவனுடைய தியானப்படி உண்டாகுமானால், பிரம்மசொரூபமானது எப்போதும் ஜீவனாலடையப்பட்டதாயும் சுபாவமாயும் நித்தியமாயும் தானுயுமிருக்கிற பிரம்மத்தை நான் பிரம்மமென்று தியானிப்பதால் பிரஹ்மம் ஆகுவனே ஆகமாட்டானோவென்று கேட்கவேண்டியதில்லை. [எ-தி] செத்தபிணமே இவன்பாவனையால் எழுந்திருந்து வந்து பேசுமானால் உயிரோடிருப்பவனை தட்டியெழுப்பினால் எழுந்திருக்கமாட்டானோ? மரத்தாற்செய்யப்பட்ட சாயங்காய்ச்சின கரும்புத்துண்டமே கடிக்கக்கடிக்க ரசம்வருமானால் நிஜக்கரும்பைக்கடித்தால் ரசம்வருவதிற் சந்தேகமில்லாதது போலும், மலையைவெட்டியே தண்ணீர் உண்டுபண்ணுவனானால் வைகையாற்றில் ஊற்றுவெட்டினவனுக்குத் தண்ணீர்கிடைப்பதிற் கேட்கவேண்டியதில்லாதது போலும், சிலையில் அடித்துவைத்திருக்கிற பெண்ணே போகத்துக்குபயோகப் படுவாளேயானால் உயிரோடேயிருக்கிற பெண் போகத்துக்குபயோகப்படுவளாவென்று கேட்கவேண்டாததுபோலும், கண்தெரியாதவனே நினைத்தஊர்களுக்குப் போய் வருவானேயானால் கண்டெரிந்தவனுக்குக் கேட்கவேண்டியதில்லாததுபோலும், அப்படிப் பிரஹ்மத்தியானம்பண்ணுகிறவன் பிரம்மமாகுவனு

வென்பதிற் சந்தேகமில்லை. [இ - ர்] ஆத்மசிந்தனை அகங்காரியைக் கொல்லும். ஆத்மசிந்தனை அழிவற்ற முக்திசுகத்தைக்கொடுப்பதானாலும் அகங்காரியைக் கொல்லும். [எ - தி] அமிர்தம் சாகாமையைக் கொடுப்பதானாலும் அசுரருடைய நாசத்திற்குக் காரணமானதுபோலும், சந்திரிகை ஆனந்தத்தைக் கொடுப்பதானாலும் திருடன் விபசாரி இவர்களைக் காண்பித்துக்கொடுத்து கஷ்டப்படுத்துவதுபோலுமறிக. [இ - ர்] அகங்காரம் நசித்தால் சகலகர்மங்களும் நசித்துப்போம். [எ - தி] அனாதியாய் ஏழையான கடன்காரன் இறந்தால் அவனுக்குக்கொடுத்திருந்த கடன்களெல்லாம் இழந்துபோகிறதுபோலும், விபசாரம்பண்ணினதைச் சொல்லிக்கொண்டுவந்த இஷ்டன் முழித்துக்கொண்டேனென்று சொன்னதும் சொந்தபுருஷனுக்கு அவன்பேரிலும் தன்ஸ்திரீ பேரிலுமிருந்த துவேஷம் நீங்கினதுபோலுமறிக. [இ - ர்] தேகாதிகளில் நானென்கிற அகங்காரத்தைமட்டும் நாசம்பண்ணினாற்போதும். [எ - தி] கல்யாணத்தில் மாப்பிள்ளையைமட்டும் கொல்வதுபோலவறிக.

## 207 - வது தரங்கம்.

ஜீவன் ஞானத்தால் கெடும்போது ஜகத்தும் ஈசனும் தானேகெடும்:—

ஜீவன் தத்வஞானத்தால் சாகும்போது ஜகத்தும் ஈஸ்வரனும் தானே சாகிறார்கள். [எ - தி] பக்ஷி சாகும்போது சிறகுகள்கூடச்சாகிறதுபோலும், வேரில் தீயைவைத்தால் மரமும் கொப்பும் பட்டுப்போகிறதுபோலும், ராஜனைக் கொன்றால் மந்திரி முதலான ஜனங்களும் யானைமுதலான படைகளும் சுவாதீனமாகிறதுபோலுமறிக. [இ-ர்] ஜீவத்துவநாசம்பண்ணினவனைக் கண்டு ஈஸ்வராதிகளிவனிடத்தில் நம்முடைய அதிகாரம் செல்லாமற்போய்விட்டதேயென்று பறக்கப்பறக்க முழித்து பறந்து காணாமற்போகிறார்கள். [எ - தி] ஒரு அரசனைக் கட்டிப்போட்டிருக்கிற சக்கிரவர்த்தியான இன்னொருஅரசன் இவனை இன்னநாளில் சித்திரவிசித்திரமான தண்டனைகள் செய்யப்போகிறோமென்று விளம்பரமூலமாய் ஐம்பத்தாறு தேசத்தரசர்களையும் வரவழைத்து வைத்திருக்கிறதை இவன் தெரிந்து தன் உபாசனாமூர்த்தியான நாகராஜாவைத் தியானித்தமாத்திரத்தில், அவர் அந்தக்கொட்டடிக்குள் அவ்விரவே வந்து கடித்து அவன்பிராணனைத் தன்னுக்குள் லயம்பண்ணிக்கொண்டுபோனபின் காலமே மேற்படியார்கள் அனைவரும் வந்து இவன் பிணமாய்க்கிடப்பதைக்கண்டு அவமானப்பட்டு ஓடிப்போன கதைபோலவறிக. [இ - ர்] சகலமான தெய்வங்களை வருந்தி உபாசித்தாலும் ஜீவனாசம் வராது, நாமாரென்ற விசாரத்தாலேயே அது வரும். [எ - தி] சகலருடைய பீஜங்களை மர்த்தனம் பண்ணினாலும் தனக்கு சாவுவராமல் தன்கையாலேயே தன் பீஜமர்த்தனம் பண்ணித்தான் சாவதுபோலவறிக. ஐயா, கருத்துருத்துவரூபமான ஜீவனாசம் கர்மங்களால் வராதென்றும் நாமாரென்ற விசாரத்தினால் வருமென்றும்

சொன்னீர்களே, அப்படி யாருக்குக் கர்மங்களால் ஜீவனுசம் வராமல் விசாரத்தால் ஜீவனுசம் வந்திருக்கிறது? அதைச் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரம் சொல்லுகிறேன் கேள்:— மச்சதேசத்துக்கதிபதியாயிருந்த நிரூபகனென்கிற ராஜாவானவன் ஞானமணியென்ற ஸ்திரீயோடே ராஜ்யபரிபாலனம்பண்ணிக்கொண்டு சூரியனைப்போலே சகலபிராணிகளுக்கும் அநீதியாகிற இருட்டைப் போக்கடித்துக்கொண்டும், சந்திரனைப்போலச் சகலருடைய தாபத்தைத்தீர்த்து ஆனந்தத்தைக் கொடுத்துக்கொண்டும், மேகம்போலே ஏழைஜனங்களுக்குக் கைம்மாறன்றியில் கனகவருஷம் வருஷித்துக்கொண்டும், குடும்பியானவன் குடும்பத்தை ரக்ஷிப்பதுபோல சகலப்பிரஜைகளுக்கும் படிபோட்டபின் தான் புஜிக்கிறவனுய்க்கொண்டும், பொய், ஆசை, கோபம், பக்ஷபாதம், பரஸ்திரீகமனம், லோபமுதலான துர்க்குணங்கள் ஒன்றுமில்லாதவனுய்க்கொண்டும், இருந்துவரும்போது, இந்த ராஜாவும் ராஜஸ்திரீயும் அன்னியோன்னியமாய் ரமிப்பதில் சந்திரனும் ரோகிணியும் போலும், வசிஷ்டரும் அருந்ததியும்போலும், அத்திரியும் அநசூயையும் போலும், ராமனும் சீதையும்போலும், இந்திரனும் இந்திராணியும்போலும், பார்வதியும் பரமேஸ்வரனும்போலும், லக்ஷ்மியும் நாராயணனும்போலும், சரஸ்வதியும் பிரஹ்மாவும்போலும், சாந்தையும் ரிஷிசிங்கரும்போலும், தமயந்தியும் நளனும்போலும் அத்தியந்தம் பிரீதியோடேகூடிக்கொண்டிருக்குங் காலையில் இருவருக்கும் முமுக்ஷுத்துவமானது தலையில் தீப்பற்றினவன் ஜலத்தைத் தேடுவதுபோலும், எட்டுநாள் பட்டினிக்காரன் சாப்பாட்டைத் தேடுவதுபோலும், இந்தச்சம்சாரதாபத்திரய தீயிலிருந்து எப்படிக் கரையேறப் போகிறோமென்று தபித்துக்கொண்டு சாந்தபனரென்ற சற்குருவைச் சரணமாக அடைந்து தங்களுடைய துக்கத்தைத் தெரிவித்து, எங்களை சம்சார சமுத்திரத்திலிருந்து கரையேற்றிவைக்கவேண்டுமென்று கேட்டவுடன், அந்தக் குருநாதனும் உங்களுக்கு இந்தச்சம்சாரதுக்கம் வந்ததற்குக் காரணமென்னவென்றால், அனுதிகாலமாய் நீங்கள் உங்களுடைய ஆத்மாவை மறந்து அனுத்மாவான தேகாதிகளை நானென்று எண்ணி, ஆத்மானுத்மாக்களை ஒன்றாய்ப் பார்க்கிற தாதாத்மியஅத்தியாசத்தை யடைந்து, அதனால் கர்மபந்தத்திற் கட்டுப்பட்டு, ஜனனமரண சம்சாரதுக்கப்பிரவாகத்தில் தபித்துக்கொண்டிருப்பதால், இப்போதாவது உங்களுடைய ஆத்மசொரூபத்தை அறிந்தீர்களேயானால் உங்களுடைய அஞ்ஞானமும் அதன்காரியமான சம்சாரபந்தமும் அதன்காரியமான ஜனனமரணதுன்பமும் நிவர்த்தியாகுமென்று அனுக்கிரகித்தபிரகாரம் இவ்விருவருங் கேட்டுக்கொண்டுவந்ததில், அந்த இருவர்களில் அவ்வரசன் ராச்சியத்திற்கு வந்ததும், இவனுக்கு எதிரியான அரசன் படையெடுத்து யுத்தத்திற்கு வந்துவிட்டதால், அதற்காக மந்திரியோடே ஆலோசனைபண்ணிப் படையெடுத்து யுத்தம்பண்ணி எதிரியைஜெயித்து அவனுடைய ராச்சியத்தையுங்கட்டினபின், இப்படியே மேல்மேலும் சகலசீமைகளையும்

கட்டி ஆளவேண்டுமென்கிற இச்சையால் குருவினிடத்திற்கேட்ட ஞானத்தை சுத்தமாய் மறந்துவிட்டான். அவன்மனைவியானவள் சிரவணம்பண்ணின அர்த்தத்தை யேகாந்தத்திலிருந்து நாமாரென்று விசாரித்து மாயைமுதல் பஞ்சபூதம்வரை இதம்விருத்திக்கு விஷயமாயும், தனக்கு அன்னியமாயும், ஜடமாயுமிருப்பதால், இது நாமல்ல. இப்படியே பஞ்சகோசங்களுமிருப்ப தால் நாமல்ல. இவ்வளவையும் அறிந்துகொண்டிருக்கிற அறிவே நாமென்று திடமான நிச்சயக்ஞானத்தை யடைந்திருந்தும்; அவன் இவள்மகிமையை யறியாமல் துக்கநிவர்த்திக்காக அநேகவிதமான யாகாதிகர்மங்களைச் செய்த திலும் நிவர்த்தியாகாமல் தபித்துக்கொண்டிருக்கும்போது, ஒரு ஒட்டகை பணத்தைச் சுமந்துவந்து ராஜாவுக்குமுன் விழுந்து இறந்ததைக்கண்ட அவ் வரசன் இந்த ஞானமணியைப் பார்த்து இந்த தேகத்திலிருந்த ஜீவன் க்ஷணத் திற்காணுமல் இந்த தேகத்தைப் போட்டுவிட்டுப்போனதுபோல நாமும் இந் தத்தேகத்தை எந்தவேளையிற் போட்டுவிட்டுப்போகப்போகிறோமோவென்று சொன்னதைக்கேட்டு அவள் இத்தேகமிருக்கும்போதே இந்த ஜீவனை நாசம் பண்ணி பிரம்மசுகத்தை யடையவேண்டுமென்று சொன்னபடி அவனும் தான் பிரம்மமென்று அறிந்து ஜீவன்முக்தனுன கதையையறிக.

## 208 - வது தரங்கம்.

சத்துவவிருத்தியும் ஆத்மாவும் சேர்ந்து அஞ்ஞானத்தைக் கொல் லும்:—

கேவலவிருத்தியும் கேவலஆத்மாவும் தனித்தனியாயிருந்தால் அஞ்ஞா னத்தை நிவர்த்திசெய்யாது, விருத்தியும் ஆத்மாவும் சேர்ந்து விருத்திக்ஞான மாய் அஞ்ஞானத்தைப்போக்கும். [எ - தி] தனிமையான கம்பும் இரும்பும் மரத்தைவெட்டாமல் கம்பும் இரும்பும் சேர்ந்து கோடாலியாய் மரங்களை யெல்லாம் வெட்டுவதுபோலும், விபீஷணனும் ராமனும் சேர்ந்து ராவ ணுதிகளைக்கொன்றதுபோலும், புருஷனும் ஸ்திரீயும் சேர்ந்து பிள்ளைப் பெற்று புந்நாமமென்ற நரகத்தை நிவர்த்திப்பதுபோலும், தீக்குச்சியும் மருந்துமிருந்தும் இருட்டைப்போக்காமல் அதை உரைச்சதினுல் தீயுண் டாய் இருட்டைப்போக்குவதுபோலும், காந்தக்கல்லும் சூரியகிரணமும் சம் பந்தித்ததால் தீயுண்டாய் எல்லாத்தையுமெரிப்பதுபோலுமறிக. [இ - து] துவிதங்கள் அநேகமாயிருக்குமென்பதற்கும் அத்துவிதஞானம் அந்தத்துவி தத்தில் சேர்ந்த அகண்டாகாரவிருத்தியைப் பற்றிக்கொண்டு அஞ்ஞானத் தைப் போக்கடித்து, சரீரத்திலிருக்கிற விஷயவாசனைகளை ரவைரவையாய்ச் சாப்பிட்டு நிசேஷமாய் வாசனுக்ஷயமானபின், அந்தவிருத்தியுடன்கூடின ஞானம் சொரூபஞானமாத்திரமாக மிஞ்சிப்போம். [எ - தி] பாத்திரம் எண்ணை திரிமுதலான அநேகபதார்த்தங்களிருந்தாலும் இருளைப்போக்காம

விருப்பதால் விளக்கேற்றியபின் தீபமானது இருட்டையும் போக்கடித்து ரவைரவையாய் எண்ணெயையும் குடித்து திரியையும் சாப்பிட்டு நிசேஷமாய்த் தீர்ந்தபின் தானும் அரூபாக்கினியில் அடங்குவதுபோலுமறிக. ஐயா, அனாத்மாவான துவிதம் காரியமானதால் அநேகமாயிருக்குமென்றும் அத்விதமான ஆத்மா சர்வகாரணமாயிருப்பதால் ஏகமென்றுஞ்சொன்னீர்களே, அதற்குச் சுருதி யுக்தி அனுபவமென்னவென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறோம் கேள்:— சிருஷ்டிக்கு முன்னே சுவகதபேத சஜாதியபேத விஜாதியபேதத்திரயங்களும் அற்ற சத்து அத்விதமாத்திரமாய் ஏகமாயிருந்ததென்று சுருதி சொல்லுகிறது. யுக்தியாவது அஞ்ஞானம் ஒன்றாயும் அதன்காரியமான ஜீவேஸ்வர ஜகத்து அநேகமாயும், ஈஸ்வரனொன்றாயும் அவர்காரியமான பஞ்சகிருத்தியம் பலவாயும், மாயை ஒன்றாயும் அதன்காரியமான நாமரூபங்கள் பலவாயும், விக்ஷேபசக்தி ஒன்றாயும் அதன்காரியமான முக்குணபூதங்கள் பலவாயும், சூக்ஷமசரீரம் ஒன்றாயும் அதின்காரியமான தொழில் பதினேழுவிதமாயும், தூலசரீரம் ஒன்றாயும் அதின்காரியமான பால்யாதி அவஸ்தைகளும் அவயவாதிகளும் அநேகமாயிருப்பதுபோலும், மண் ஒன்றாயும் அதின்காரியமான வீடுவாசல் நிலங்கரை பானைசட்டி குடம் குதிர்முதலான காரியங்கள் அநேகவிதமாயுமிருப்பதுபோலும், இரும்பு ஒன்றாயும் கத்திமுதலான ஆயுதங்கள் அநேகமாயிருப்பதுபோலும், செம்பொன்றாயும் பாத்திரங்கள் பலவாயுமிருப்பதுபோலும், ஜலம் ஒன்றாயும் நதி குளம் பலவாயும், அக்கினி ஒன்றாயும் யாகாதிகள் பலவாயுமிருப்பதுபோலும், அந்தக்கரணம் ஒன்றாயும் ராகாதிவிருத்திகள் பலவாயுமுண்டாவதுபோலும், ஜீவன் ஒன்றாயும் அவஸ்தாத்திரயங்களும் மாறிமாறி அநேகமாய் சுற்றிக்கொண்டுவருவதுபோலும், மனசு ஒன்றாயும் சுகதுக்கதிசைகள் மாறிமாறி அநேகமாய் வருவதுபோலும், வாக்கொன்றாயும் அதிலிருந்துண்டாகிற சத்தங்கள் நல்லதுபொல்லாததாய் அநேகமாய் உண்டாவதுபோலும், கர்த்தா ஒன்றாயும் கர்மங்கள் புண்ணியபாபமிச்சிரங்களான பலவிதரூபங்களாயுண்டாவதுபோலும், ராஜா ஒருவனாயும் ஜனங்கள் அநேகமாயுமுண்டாயிருப்பதுபோலுமென்பதே யுக்தி. நம்மிடத்தில் நிமிஷந்தோறும் உண்டாய் அழிகிற நினைப்பு அநேகமாயும் நாம் ஒன்றாயிருக்கிற அநுபவத்தையறிக.

## 209 - வது தரங்கம்.

ஞானபூமிகளில் முதல்பூமி வந்தால் மற்றப்பூமிகளும் கைவரும்:—

சர்வாரம்பமாயிருக்கிற சுபேச்சை வந்துவிட்டால் ஏழாவது பூமிவரையில் கிரமமாய்வரும். [எ - தி] நல்லபூமியில் போட்ட கற்பகவிரையானது கிரமமாகப் பழம்வரையிலுண்டாய் சுகத்தைக் கொடுப்பதுபோலும், (பெண்ணாய்ப் பிறந்தவள் கிரமத்தில் பக்குவமாகிறதுபோலும்,) சுக்கிலபக்ஷத்துச் சந்திரன்

கிரமமாய்ப் பூர்ணமாவதுபோலும், கெர்ப்பபிண்டமானது கிரமத்தில் பிள்ளையாய்ப் பிறப்பதுபோலும், காசிக்கு ஒரே டிக்கட்டாய்வாங்கினவன் காசிபோய்ச் சேருவதுபோலும், பரீக்ஷைகொடுத்தவன் உத்தியோகத்தில் தாக்கலானால் கிரமத்தில் ஜட்ஜிவேலைவரை ஆவதுபோலுமறிக. [இ - து] ஒன்றுமுதல் மூன்றும் பூமிக்குள்ளிருக்கும்போது சரீரம் போனவனுக்கு மோக்ஷம்கிடையாமல் சொர்க்காதிசுகங்களை யடைந்தாலும் அதில் திருப்தியில்லாமல் மறுபடி மேல்பூமிகளில் வந்தே திருப்தியடைவன். [எ - தி] ஹைக்கோர்ட்டு ஜட்ஜிவேலைக்குப் பரீக்ஷைகொடுத்தவனுக்கு அந்தச்சமயத்தில் வேலையாகாமல் சின்ன உத்தியோகத்தைக் கொடுத்தாலும் அதில் திருப்தியடையாமல் மேலான ஹைக்கோர்ட்டு ஜட்ஜிவேலையை யடைந்து திருப்தியை அடைவதுபோலும், நாகரத்தினத்தை வேண்டி சித்தாதிகளைக் காத்தவனுக்கு வஜ்ஜிர வைடூரியாதிகளைக் கொடுத்தாலும் திருப்திவாராததுபோலுமறிக. [இ - து] இப்போது ஒருபுருஷனுக்கு ஞானங்கூட உண்டாகவேண்டாம், மூடசங்கதியைமட்டும் விட்டாற்போதும். [எ - தி] பாம்பு புலிகளுடைய நெருக்கமில்லாமலும், விஷங்கலந்த போஜனமும், ஸ்திரீபோகமும், தேள்கொடுக்கில் கைவைப்பதுமில்லாமலிருந்தால் சுகமாயிருப்பதுபோலவறிக. [இ - து] முதல்பூமிவந்தவன் மெள்ளமெள்ள வீடுசேர்வனேதவிர பவத்தில் வீழான். [எ - தி] ராஜகிரகத்தில் வேத பரீக்ஷை கொடுத்தவனுக்குக் கிரமத்தில் தானங் கிடைப்பதுபோலும், மலையிற்பெய்ந்த மழை நதியில் வருவதுபோலும், கன்னியாய்ப்பிறந்தவள் கிரமத்திற் பக்குவமாகுவதுபோலுமறிக. ஐயா, அஞ்ஞானபூமிகளைக்காட்டிலும் ஞானபூமி சிரேஷ்டமென்றும், அந்தஞானபூமிகளில் முதல்பூமி கிடைப்பதுவே வருத்தமென்றும் சொன்னீர்களே, அந்த முதல்பூமிக்கு வருகிறவனுக்கு லக்ஷணமென்னவென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன். கேள்:— போகத்தையும் மோக்ஷத்தையும் இச்சித்திருக்கிற இருவருக்குள் போகத்தை இச்சித்தவனுக்குப் பிரவர்த்தனென்றும், மோக்ஷத்தை இச்சித்தவனுக்கு நிவர்த்தனென்றுஞ் சொல்லப்படும். மோக்ஷமென்பதைக் கண்டவனார்? அது எங்கே யிருக்கிறது? ஆகையால் நமக்கு சம்சாரமே உள்ளதாயிருக்கிறதென்று நிச்சயித்த கர்த்தா எவனோ அவன் பிரவர்த்தனென்று சொல்லப்படுவன். சஞ்சலமாயிருக்கிற சமுத்திரத்தில் அசைந்துகொண்டிருக்கிற நுகக்கண்ணுக்குள் ஆமையினுடைய தலை நுழைவது அசாத்தியம்போல அநேக ஜன்மங்களுடைய முடிவில் ஒரு ஜன்மத்தில் விவேகியாய்ப் பிறந்தவனுக்கு இந்தச்சம்சாரம் அவ்வியவஸ்தையாகவும் அசாரமாயுமிருக்கிறது. இதனாற் செய்யப்படுகிற கர்மங்களும் பழயதுகளாகவே யிருக்கிறதினால் நமக்கென்ன பிரயோஜனம்? இந்தக் கர்மங்களைவிட்டு எப்போது சுகமாயிருக்கப் போகிறேனென்று உள்ளே நிச்சயித்தவன் நிவர்த்தனெனப்படுவன். இந்த விஷயங்களிலிருக்கிற ஆசைகள் நிராசையாய்ப்போய் இந்த சம்சாரசாகரத்தை எப்படித்தாண்டுவேனென்றும், இப்படிப்பட்ட விவேகத்தை யுடையவனைய்க்

கொண்டு தினந்தோறும் வயலில் வந்து விழுந்துகிடக்கிற மண்மேட்டை மண் வெட்டியால் தினந்தோறும் வெட்டிவெட்டிக் கரைப்பதுபோல அனாத்மவாசனை களை விவேகத்தாற் கரைத்துக்கொண்டும், உதாரமான சற்கிரிகைகளில் சந் தோஷித்துக்கொண்டும், நிகிருஷ்டமான சிர்க்சந்தன வனிதாதி விஷயங்களில் அருசிப்பட்டுக்கொண்டும், பிறருடைய குற்றமான தோஷங்களை பயிரங்கப் படுத்தாமலும், அன்னியர்களுக்கு மனஸ்தாபம்வரும்படியான வார்த்தைகளைச் சொல்லாமல் மிருதுவான வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு, பாபபீருவாய் போகாபேக்ஷையன்றியில் சாதுக்களிடத்திற் சிநேகத்தோடேயும், மிகுந்த விஸ் வாசத்தோடேயும், மனைக்கியமாயும் தேசகாலங்களுக்கு உசிதமாயுமிருக்கிற வசனத்தோடேயும், மனோ வாக்கு காயங்களால் சாதுக்களை சேவித்துக்கொண் டும், வேதாந்தசாஸ்திரம் எங்கேயிருக்கிறதென்று விசாரித்து வாங்கிவைத்துக் கொண்டும், சற்குரு எங்கேயிருக்கிறாரென்று தேடிக்கொண்டும், மூடசகவாசத் தைப் பாம்புக்கூட்டம்போலும் தீப்போலுமெண்ணித் தள்ளிப்போட்டு, சதா மோக்ஷஇச்சையோடே கூடிக்கொண்டிருப்பவன் முதல்பூமி யடைந்தவன். மற்றக்குணமுள்ளவன் ஆரியனென்று சொல்லப்படுவன். ஆகையால் நீ இதை அறியத்தக்கது.

## 210 - வது தரங்கம்.

ஏகாந்தஸ்தலமே ஞானமுண்டாவதற்கு முக்கியகாரணம்:—

பிரஹ்மானந்தத்தை அனுபவிப்பதற்கு ஏகாந்தஸ்தலம் வேண்டுமென்று சொல்லியிருக்கிற சுருதிகளுக்கு யுக்திகள்:—ஸ்திரீசுகம், சுழுப்திசுகம், வெகு போஜனம், மந்திராலோசனைமுதலானவைகளுக்கு யேகாந்தம் வேண்டுவது போலவறிக. [இ - து] முமுக்ஷுவுக்கு ஏகாந்தம் நிச்சப்தமுதலானது சாதகம். [எ - தி] சுழுப்திசுகத்தை யடைவதற்கு படுக்கைமுதலான தும் கொஞ்சஞ் சாதகமாயிருப்பதுபோலும், போஜனஞ் செய்வதற்கு இடங் கலங் கை சுத்தமாயிருந்தால் சோறு ஏறுவதற்குச் சாதனமாவது போலும், ஸ்திரீபுருஷர்கள் சேருவதற்கு ஏகாந்தமுதலானது சாதக மாவதுபோலுமறிக. [இ - து] பிரம்மவிசாரணைசெய்யவும் சமாதிபண்ணவும் சுகஞ்செனிக்கவும் ஏகாந்தஸ்தலமே காரணம். [எ - தி] தம்பதிகளுக்கு அந்தரங்கமாய்ப் பேசிக்கொள்ளவும் சம்போகஞ்செய்யவும் சிற்றின்பஞ் செனிக்கவும் ஏகாந்தமே காரணமாக விருப்பதுபோலவறிக. ஐயா, ஏகாந் தஸ்தலமே முக்கியமென்றும் ஞானத்திற்குச் சாதனமென்றுஞ் சொன் னீர்களே, அப்படி யேகாந்தஸ்தலம் லபித்தபேர்களுக்கெல்லாம் முக்திவரு மென்றால், பெருச்சாளி மண்ணுக்குள்ளும், பாம்பு புத்துக்குள்ளும், சிங் கம் குகைக்குள்ளும், புலி புதருக்குள்ளும், வேடர்கள் காட்டுக்குள்ளும்,

முளையில்அறுத்துப்போனவள் மூலவீட்டுக்குள்ளுமிருப்பதால் அவர்களுக்கெல்லாம் மோக்ஷம் வரவேண்டுமேயென்று கேட்பாயாகில், அதற்குத் தரஞ் சொல்லுகிறேன் கேள்:—அடே மூடா! நீ கிறுக்கனுக்குச் சமானமாய் என்ன உளறினாய்? நாம் யேகாந்தஸ்தலம்வேண்டுமென்று சொன்னது குரு சன்னிதியிலிருந்து சாதனசதுஷ்டயத்துடனும், சாதுக்களுடனும் ஷட்வித லிங்கத்தால் சிரவணம்பண்ணினபின் சந்தேக விபரீதங்கள் நிவர்த்தியாகிறதற்காக யேகாந்தஸ்தலத்திலிருந்து மனன நிதித்தியாசனங்களைச் செய்து அதனால் பிரதிபந்தங்களை நிவர்த்திசெய்து ஆத்மசாக்ஷாத்காரத்தை யடைய யேகாந்தஸ்தலம் சாதகமாயிருக்குமென்று சொன்னதை யறியாமல் நீ சங்கித்தது எப்படியிருக்கிறதென்றால், பக்குவமான பெண்ணுக்கும் எவ்வனமான புருஷனுக்கும் யேகாந்தஸ்தலஞ் சுகத்தைக்கொடுக்குமென்று சொன்னதற்கு, அஞ்சுவயதுப் பெண்ணையும் பிள்ளையையுஞ் சேர்த்து ஒருஅறையில் அடைத்துவைத்து சுகமாயிருக்கட்டுமென்று நினைத்ததில், அக்குழந்தைகளிரண்டும் அலறி முட்டி மோதி அழுதுகொண்டு வெளியில்வந்தது என்னகாரணமென்று கேட்பதுபோலும்; மிருஷ்டான்னபோஜனம் மிகுந்த பசியுள்ளவனுக்கு யேகாந்தஸ்தலத்திற் பண்ணிவைத்தால் மிகுந்த திருப்தியை யடைவனென்று சொன்னதற்கு, தீர்க்கவியாதியால் அன்னத்துவேஷம் வந்திருக்கிறவனுக்கு ஏகாந்தத்தில் மிருஷ்டான்னத்தைக் கொண்டுபோய்க்கொடுத்தேன் அவன் ஒருபருக்கைகூடத் தின்கவில்லையேயென்று சொல்லுவதுபோலும்; வேலைசெய்து அலுத்துவந்தவனுக்கு நித்திரைபண்ணுவதற்குச் சாதனமாக மெத்தை திண்டு தலையணைகளைப்போட்டால் நன்றாய்ச் சுழுப்தியானந்தத்தை யடைவனென்று சொன்னதற்கு, ஜ்வரம் முதலானதால் தபித்துக்கொண்டிருக்கிறவனுக்கு அஞ்சாறு திண்டு தலையணைகளைக் கொண்டுபோய்ப்போட்டும் சுழுப்தியானந்தத்தை யடையவில்லையேயென்று கேட்பதுபோலும்; நல்ல புஸ்தகங்களிருந்தால் விற்பத்தியுள்ளவன் வாசித்து அர்த்தஞ்சொல்லுவனென்று சொன்னால், அக்ஷரஞானமில்லாத அம்மாபட்டிக் குசப்பையனிடத்திலிந்தக் கிரந்தத்தைக் கொடுத்தேன், வாசிக்கவில்லையேயென்று சொல்லுவதுபோலும்; இந்த ரோட்டில் இந்த சோட்டைப் போட்டுக்கொண்டு அதிவேகமாய் நடப்பனென்று சொன்னதைக்கேட்டு, அருணனுக்குச் சமானனாயிருக்கிற பங்குவினிடத்தில் இந்தசோட்டைக் கொடுத்தேன், நடக்கவில்லையேயென்று சொல்லுவதுபோலும்; சித்தகுளிகையைச் சாப்பிட்டவன் சாகானென்று சொன்ன சொல்லைக்கேட்டுச் செத்தவன்வாயில் சித்தகுளிகையைப் போட்டேன், அவன் சாகாமல் எழுந்திருக்கவில்லையேயென்று கேட்பதுபோலும்; நாகரத்னத்தை மன்னவர்கள் மிகுந்தபிரியத்தோடே மதிப்பார்களென்று சொன்னதைக்கேட்டு, மடையனிடத்தில் மகத்தான ரத்னத்தைக்கொடுத்தேன், அவன் அதை மதிக்கவில்லையேயென்று சொல்லுவதுபோல, நீயும் விவேகிக்கே யேகாந்தம் முக்கியமென்று சொன்னதை அறியாமற்போனாய்.

211 - வது தரங்கம்.

பிரம்மாகாரவிருத்தியின் மகிமை:—

பிராரத்தகர்மத்தைக்கூட பிரம்மாகாரவிருத்தியால் தடுக்கலாம். [எ - தி] வாரண்டு வந்ததையும், கள்ளருடைய பயத்தையும், ராஜகிருபையால் நிவர்த்தித்துக்கொள்வதுபோலும்; தசரதர் விவாஹ கங்கணத்தால் பரசுராமருடைய பயத்தைப் பரிகரித்துக்கொண்டதுபோலும், சித்தகுளிகையால் பாம்பின் விஷத்தை நிவர்த்தித்துக்கொள்வதுபோலுமறிக. பிரம்மாகாரவிருத்தி மனதைக் கொல்லும். நாம் மனதை ஜெயிக்க எத்தனஞ்செய்யவேண்டியதில்லை. பிரம்மம் நாமென்று மறவாமலிருந்தால் மனது தானே காணுமற்போய்விடும். [எ - தி] வீட்டில்வந்த துஷ்டனிடத்திற் பேசாமல் தன்வேலையைப் பார்த்துக் கொண்டிருந்தால் அவன் தானே ஓடிப்போகிறதுபோலும், வெளியிற்போகாமல் வீட்டிற்குள்ளிருந்தால் நிழல் காணுமற்போவதுபோலுமறிக. [இ - து] முதலில் விருத்திகளுக்குத் தான் சாக்ஷியென்றறிந்து பிறகு அதையும் லயம் பண்ணவேண்டும். [எ - தி] தேங்காய்முடியைத் துருவியெடுத்தபின் கொட்டாங்கச்சியைத் தீயிற்போடுவதுபோலும், துப்பனைக்கொண்டு பரராச்சியத்தைக் காட்டினபின் அவனையும் வெட்டிப்போடுவதுபோலுமறிக. ஐயா, பிரம்மாகாரவிருத்தியால் பிராரத்தகர்மத்தைக்கூட ஜெயிக்கலாமென்று சொன்னீர்களே, பஞ்சதசியில் திருப்திதீபிகையில் பிராரத்தகர்மம் நாசமாகாவிடில், ஆயிரம் பிரஹ்மத்தியானம்பண்ணினும் பிராரத்துவவிவகாரம் நசியாமல் வெளியிலிழுத்துவிடும். அப்படிப் பிராரத்தகர்மத்தைத் தன் புருஷப் பிரயத்தனமாகிற சாமர்த்தியத்தால் வெல்லக்கூடுமானல், கிருதயுகத்தில் நளமகாராஜாவும், திரேதாயுகத்தில் ராமச்சந்திரமூர்த்திமுதலானவர்களும், துவாபரயுகத்தில் தர்மபுத்திரர்முதலான பஞ்சபாண்டவர்களும் துக்கப் படுவதற்குக் காரணமில்லையென்றும், இந்தப் பிராரத்தகர்மத்தை ஜெகதீஸ்வரனுமறிக்கக்கூடாதென்றும், ஞானமுண்டாவதற்குமுன்னமே ஈஸ்வரனல் நிர்மிக்கப்பட்டிருக்கிறதென்றும், இப்படியெல்லாம் சொல்லியிருக்கும்போது, தாங்களிவிடத்தில் பிரம்மாகாரவிருத்தியால் பிராரத்தகர்மத்தைக்கூட மறிக்கலாமென்று எப்படிச்சொன்னீர்களென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:—பிராரத்தகர்மமானது பிரபலமென்றும் துர்பலமென்றும் இரண்டுவிதமாயிருக்கும். அது எப்படிப்போலவென்றால், ஓரிடத்தில் நதியினுடைய ஜலத்தை அணைபோட்டுக் கட்டிப்போடலாமென்றும், மற்றோரிடத்தில் நதியின் ஜலப்பிரவாகமானது அணைகளையெல்லாம் அடித்து உடைத்துப்போடுமென்று சொல்லியிருப்பதுபோலும், பிராரத்தகர்மம் சுலபமாயிருந்தால் பிரஹ்மத்தியானமாகிற அணை அதைத் தடுத்துப்போடுமென்றும், பிரஹ்மத்தியானமாகிற அணை சொற்பமாயிருக்கும் பக்ஷத்தில் பிராரத்தகர்மமாகிற பிரவாகம் பிரபலமாயிருக்குமானல், அந்தப்பிரஹ

மத்தியானத்தைத் தள்ளி, பிராரத்தகர்மவிவகாரம் வாசனைவசமாய் இழுத்துப்போய்விடும். மருந்து பிரபலமானால் வியாதிகளையெல்லாம் நிவர்த்திக்குமென்றும், வியாதி பிரபலமாயிருக்கும்பக்ஷத்தில் எப்படிப்பட்ட மருந்தையும் லக்ஷியம்பண்ணாமலிருப்பதுபோலும்; புருஷன் தீரனாயிருந்தால் பெண்டாட்டியை அடக்குவதுபோலும், அதீரனானால் அதிகப்பிரசங்கியாயுள்ள அவளை அடக்கமுடியாததுபோலும்; புருஷன் சூரனாயிருந்தால் எப்பேர்ப்பட்ட குதிரையையும் அடக்கி யேறி சவாரிபண்ணுவதுபோலும், இவன் அசூரனாயிருந்தால் இவனைக் கீழேதள்ளிவிட்டு அது ஓடிப்போவதுபோலவென்று அறிந்து நீ சங்கித்த சங்கையை நிவர்த்திபண்ணிக்கொள்ளக்கடவாய்.

## 212 - வது தரங்கம்.

பிரஹ்மாப்பியாசம் வீணாய்ப்போகாது:—

பிரம்மவிசாரஞ்செய்தவனுக்கு இப்போது ஞானம் வாராதபோனாலும் புண்ணியத்திற்கும் சத்வாசனைக்கும் குறைவில்லை. [எ - தி] மகாமேருவுக்குப் போனவனுக்கு ரத்னக்கொடுமுடி அகப்படாதபோனாலும் தங்கங் கிடைப்பதற்கும் தரித்திரந் தீருவதற்கும் குறைவில்லாததுபோலும், ரசவாதஞ்செய்கிறவனுக்குத் தங்கஞ் சித்தியாதபோனாலும் வைத்தியத்தில் சிறந்தவனாவதுபோலும், தரிசுநிலம் பயிர்செய்தவனுக்கு அவ்வருஷத்தில் நெல் விளையாவிட்டாலும் உரமாவதினும் மோசமில்லாததுபோலவறிக. [இ - து] வேதாந்தசாஸ்திரம் படித்தவனுக்கு ஞானம்வாராதபோனாலும் புண்ணியலோகமுண்டு. [எ-தி] இங்கிலீஷ்படித்தவனுக்குப் பரீக்ஷைதேறி உத்தியோகமாகாத போனாலும் பிள்ளைகளுக்குப் படிப்பிக்கிற பிரயோஜனமாவதுபோலும்; மற்றக் கர்மம் பக்தி யோகங்களிற் குற்றம்வந்தால் குடிகேடாய்ப் போய்விடும். [எ - தி] புலியோடே சண்டைக்குப் போனவனுக்குக் கொஞ்சம் தவறினால் ஆளுக்கே மோசம்வருவதுபோலுமறிக. [இ - து] எப்போதுங் குருகடாக்ஷத்துடனும் ஒழுங்காயும் பிரம்மாப்பியாசம் பண்ணிக்கொண்டுவருகிறவனுக்கு முக்தி சித்தமாய்வரும். [எ - தி] ரோட்டோடே காசிக்கு நிற்காமலும் வழிதப்பாமலும் நடக்கிறவனுக்குக் கெங்காஸ்நானஞ் சித்திப்பதுபோலவறிக. ஐயா, பிரஹ்மாப்பியாசம் வீணாய்ப்போகாதென்று சொன்னீர்களே, அந்தப் பிரஹ்மாப்பியாசத்தை எதுவரையிற்செய்துகொண்டு வரவேண்டுமென்றால், சோறுசாப்பிடுகிறவன் எவ்வளவு சாதஞ்சாப்பிடுகிறதென்றால் வயிறுநிறையும்வரையிற் சாப்பிடவேண்டியதுபோலும், மருந்து சாப்பிடுகிறவன் எத்தனைநாள் சாப்பிடவேண்டுமென்றால் வியாதி நிசேஷமாய்த் தீரும்வரை மருந்து சாப்பிடவேண்டியதுபோலும், வழியில் நடந்துபோகிறவன் எவ்வளவு தூரம் நடக்கிறதென்றால் தன்வீடு போய்ச் சேரும்வரையில் நடந்துபோகவேண்டியதுபோலும், சூரன் எதுவரையில் யுத்தஞ்செய்யவேண்டுமென்றால் சத்துருக்களெல்லாஞ் சாகும்வரையில்

யுத்தஞ்செய்யவேண்டுவதுபோலும், அமிர்தமுண்டாகும்வரை தேவ அசுரர்கள் பாற்கடலைக் கடைந்ததுபோலும், தண்ணீர்காணும்வரை கிணறு வெட்டுவதுபோலும், நாம் கொடுத்தபணத்தைக் கடன்காரன் கொடுக்கும்வரையில் அவனைக் கேட்டுக்கொண்டுவருவதுபோலும், சுக்கிலமோசனமாகும்வரை போகஞ்செய்வதுபோலும், உபாசகன் தான் உபாசிக்கிற மூர்த்தி பிரசன்னமாகும்வரை உபாசித்துவருவதுபோலும், உத்தியோகம் வேண்டினவன் கச்சேரியிற்போய் கலெக்டரிடத்தில் வேலையாகும்வரை காத்திருப்பதுபோலும், அபரோக்ஷஞானம் வரும்வரை பிரம்மாப்பியாசத்தை அடிக்கடி செய்துவரவேண்டியதென்றறிக. ஐயா, அப்படி மரணபரியந்தம் பிரம்மாப்பியாசம்பண்ணிவந்ததிலும் அபரோக்ஷஞானமுண்டாகாமற்போனல் என்ன செய்கிறதென்று கேட்பாயாகில், இந்தப்பிரஹ்மாப்பியாசம் வீணாய்ப்போகாமல் ஜென்மாந்திரத்தில் பிரயாசப்பட்டு அப்பியாசம்பண்ணாமலே ஞானமுண்டாகும். அதற்குச் சாக்ஷியாரென்று கேட்பாயாகில், உபநிஷத்தில் வாமதேவரென்ற ரிஷியானவர் கெர்ப்பத்திலிருந்தே ஆத்மஞானத்தை யடைந்து சகலமான ரிஷிகளுக்கும் ஞானோபதேசஞ் செய்தாரென்று சொல்லியிருப்பதாலும், இப்போது நம்முடைய அநுபவத்திலும் அநேககோடி ஜீவர்களுக்குள்ளே நமக்குமட்டும் சற்குருவும் சற்சாஸ்திர சிரவணமும் சாதுசங்கமும் அத்துவித வாசனையுமுண்டாயிருப்பதே சாக்ஷி.

## 213 - வது தரங்கம்.

*வாசனக்ஷயாதி மூன்றுக்குள் முக்கியாமுக்கியத்தைச் சொல்லுகிறார்:—*

வாசனக்ஷயம் மனோநாசம் வந்தாலும் அஞ்ஞானம் போகாமற்போனல் திரும்ப ஜன்மம்வரும். [எ - தி] மரம் அடிவரையில் வெட்டினாலும் வேர் மாத்திரமிருந்தால் திரும்பத் தழைப்பதுபோலவறிக. [இ - து] வாசனக்ஷயம் மனோநாசம் தத்துவஞானம் மூன்றையுஞ்சேர்த்து ஒன்றாய் ஒரேகாலத்திற் பழகினால்தான் அஞ்ஞானமெடுபடும். [எ - தி] கிணத்திற்குள் கிடக்கிற பெரிய கல்லை மூன்று கயிற்றைக்கட்டி மூன்று ஆட்களும் ஒருமித்து இழுத்துக் கரையேற்றுவதுபோலும், திருவனந்தபுரத்தில் மூன்றுகதவையும் ஒரேகாலத்தில் திறந்தால்தான் பத்மநாபன் தெரிசனம் பூர்ணமாய்க் கிடைப்பதுபோலுமறிக. ஐயா, வாசனக்ஷயம் மனோநாசம் தத்துவஞானம் மூன்றையுஞ்சேர்த்துப் பழகினால்தான் ஜீவன்முக்தி வருமென்று சொன்னீர்களே, அவைகளின் சொரூபம் இன்னவிதமென்றும், அவைகளை நிவர்த்திக்கிற அப்பியாசம் இன்னவிதமாய்ச் செய்கிறதென்பதையும் சொல்லவேண்டுமென்றுகேட்ட சீடனுக்குக் குரு சொல்லுகிறார்:— வாராய் குழந்தாய்! திடபாவனையினாலே பூர்வாபரவிசாரமன்றியில் எதிர்ப்பட்ட வஸ்துக்களிற் காமக்குரோதாதி விருத்திகளுண்டாவதற்குக் காரணமாயும் சூக்ஷுமமாயுமிருக்கிற சித்தகதசம்ஸ்காரமே வாசனையென்று

சொல்லப்படும். இந்த அசுத்தவாசனை நிவர்த்தியாவதற்கு, மைத்திரி கருணை முதிதை உபேகைக்ஷயென்கிற சுத்தவாசனையுடைய பழக்கத்தால் நிவர்த்தியாக வேண்டும். மைத்திரியாவது:—தனக்கு அன்னியர்களாய்த் தோற்றுகிற ஜீவர்கள் அனுபவிக்கிற விஷயசுகத்தைக் கண்டு நமக்கு அனுபவிக்கவல்லவோ இந்த சுகம் கிட்டவேண்டுமென்று வருகிற ராகத்தை நான்தானே அங்கங்கே அந்தந்த சுகத்தை அனுபவிக்கிறேன். நமக்குக் கண்டமான ஒரு விஷயத்தைமட்டும் அனுபவிக்க இச்சித்தோமேயானல் மற்றொரு சுகம் அனுபவித்ததாக ஆகமாட்டாது. ஆகையால் அகண்டமாய் நாமிருப்பதால் சகலர்கள் அனுபவிக்கிற சுகமும் தன்சுகமென்று பார்ப்பது மைத்திரியெனப்படும். கருணையாவது:—நமக்கு துக்கத்தையுண்டுபண்ணுகிற பிராணிகளை இம்சிக்கவேண்டுமென்று வருகிற துவேஷத்தை நாம் பூரணமானதால் அவர்கள் படுகிற துக்கமும் நமக்கேயென்று அறிவது கருணையெனப்படும். முதிதையாவது:—இந்த ஜகத்து இந்திரஜாலம்போல மாயாமயமாயும் இராப்பகல்போல அதனதன் சுபாவமாயும் தோற்றுகிறதென்ற சந்தோஷப்பார்வையே முதிதையெனப்படும். உபேக்ஷயாவது:— உலகத்திலுள்ள குணதோஷங்களை சித்திரம்போல அழுத்தமாய்ப் பாராமலிருப்பதே உபேக்ஷயாம். இனி மனதாவது:—ராகத்துவேஷவிருத்திரூபமாய் இந்திரியங்களோடே சேர்ந்து விஷயத்திற் பாய்கிறது எதுவோ அதுவே மனதெனப்படும். விஷயத்திலிருக்கிற தோஷதிருஷ்டியால் இந்திரியநிக்ரக பூர்வமாகப் பிரம்மாகாரவிருத்திப் பிரவாகத்தினுடைய பழக்கமே மனோநாசத்துக்குக் காரணமாம். அஞ்ஞானமாவது:—நான் பிரம்மமென்கிறதை மறந்து தேகத்திரயத்தையும் நானென்று எண்ணி நான் கர்த்தா இந்த ஜகத்துச் சத்தியமென்று நிச்சயம் பண்ணுவதற்கு மூலமெதுவோ அதுவே அஞ்ஞானமெனப்படும். இதை நாமார் இந்தஜகத்து எப்படியுண்டாச்சுதென்று விசாரித்து, நான் பிரம்மம் ஜெகத்துப் பொய்யென்று பழகுவதே தத்துவஞானமுண்டாவதற்கு ஹேது.

## 214 - வது தரங்கம்.

அஞ்ஞானத்தை ஞானமே கெடுக்கும்:—

ஆத்மாவை மறைத்த அஞ்ஞானத்தை ஞானத்தாற் கொன்று ஆத்மாவைச் சுத்தம்பண்ணவேண்டுமேதவிர மற்றொன்றினலும் கூடாது. (எ - தி) தங்கத்தை மூடியிருக்கிற சேற்றை தீயிற் புடம்போடுவதுபோலும், ரத்தினத்தை மறைத்த அழுக்கை சாணையிற்பிடித்துப் போக்குவதுபோலுமறிக. [இ-து] அஞ்ஞானத்தை ஞானத்தால் தீர்க்காமல் மற்றக்கர்மம் யோகமுதலானதைச் செய்து தீர்க்க எத்தனிக்கிறவன் எதுபோலவென்றால்,— சிற்றெறும்பு கடித்தால் கையால் தேய்த்துவிட்டுப்போகாமல் கட்டெறும்பு, தேள், நட்டுவாக்காலி, பாம்புமுதலானதை மேல்மேலும் கடிக்கவிட்டதனல் துக்கம் மேல்

மேலும் விருத்தியாவதுபோலவறிக. [இ - து] அஞ்ஞானத்தைக் கண்ட மாத்திரத்தில் ஞானங் கொன்றுபோடும். (எ - தி) பாம்பைக் கண்டமாத் திரத்தில் கெருடன் கொல்லுவதுபோலும், சிங்கத்தைக் கண்டமாத்திரத்தில் யானை சாவதுபோலுமறிக. [இ-து] எப்போதும் எல்லாரிடத்திலும் ஞானமிருந் தாலும் ஆத்மாபிமுகமாய் அந்தக்கரணத்தைத் திருப்பினல்தான் விளங்குவ னேயல்லாமல் மற்றப்படி அஞ்ஞானந்தகாரத்திலிருந்து அவதிப்பட்டுக்கொண் டிருப்பன். [எ - தி] சிப்பாயின்கையில் எப்போதுங் கண்ணுடிதீபமிருந் தாலும் அதைத் திருப்பிவைத்தால்தான், தானும் விளங்கிக்கொண்டு மற்ற இருட்டுமுதலானதைப் போக்கடித்துத் திருடரையுங் காண்பித்துச் சுகங் கொடுக்குமேயல்லாமல் மற்றப்படி சுகமுண்டாகாததுபோலவறிக. ஐயா, அஞ்ஞானத்தைக் கர்மங்களாலும் ஈஸ்வர உபாசனைகளாலும் அஷ்டாங்க யோகங்களினுலும் போக்கடிக்கக்கூடாதென்றும், ஞானத்தினலேயே போக் கடிக்கவேண்டுமென்றுஞ் சொன்னீர்களே, அதற்குச் சுருதி யுக்தி யனுபவ மென்னவென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ் சொல்லுகிறேங் கேள். சுருதியாவது—அஞ்ஞானமாகிற நல்ல பாம்பினுடைய கடியினுலுண் டான சம்சாரமாகிற விஷம் பிரம்மஞானமாகிற அவுஷதத்தாலேயே நிவர்த்தி யாகுமேதவிர மற்றசாஸ்திரபாடத்தாலும், எக்ஞாதி கர்மத்தாலும், ஈஸ்வராதி உபாசனையினுலும் யோகத்தினுலும் சாங்கியத்தினுலும் அஞ்ஞானம் நிவர்த்தி யாகாதென்று சொல்லுவதேயாம். யுக்தியாவது—அபத்தியத்தினல் வந்திருக் கிற வியாதியை அவுஷதத்தாற் போக்கவேண்டுமேதவிர அபத்தியத்தினலேயே அதுபோகாததுபோலும்; இருட்டினல் வந்தபயத்தை வெளிச்சத்தினற் போக்கவேண்டுமேயல்லாமல் ஆனைத்தோல், எருமைமாட்டுத்தோல், சமயல் காரன்வஸ்திரங்களால் அதைப் போக்கமுடியாததுபோலும்; கஞ்சாவைச் சாப்பிட்டு உளறுகிறவனுக்கு எலுமிச்சம்பழம், மோர்முதலானதால் நிவர்த்திக் கவேண்டுமேயல்லாமல் கள்ளும் சாராயத்தைச் சாப்பிட்டதால் அதிக மயக்க மாவதுபோலும்; சிசுனத்திற் கண்டிருக்கிற ரணத்தை ஆஸ்பத்திரிக்குப் போய் ஆற்றிக்கொள்ளவேண்டுமேயல்லாமல் அவிசாரிகிட்டப்போய் ஆற்றிக்கொள் ளக்கூடாததுபோலும், என்பதே யுக்தியாம். இப்போது நாம் படுத்து நம்மை மறந்து நித்திரைபண்ணுகிற சொப்பனவஸ்தையானது நாம் விழித்தால் போகுமேயல்லாமல் வேறே யெவ்விதத்தாலும் போகாமலிருக்கிற அனுபவத் தை அறிந்துகொள்க.

## 215 - வது தரங்கம்.

*பிரஹ்மஞானம் சுயபாஷையில் அடைவது சுலபம்:—*

அவனவன்பாஷையில் பிரஹ்மஞானமடைவது சுலபம். (எ - தி) அவன வன்ஸ்திரீயினிடத்தில் அவனவன் சுலபமாய் சுகிப்பதுபோலும், அவனவன்

கையால் அரிக்கிற இடம்பார்த்துச் சொறிந்துகொள்வது சுலபமாவதுபோலு மறிக. ஐயா, பிரஹ்மஞானம் அவரவர்கள் சுயபாஷையிலடைவது சுலபமென் றும், மற்ற அன்னியபாஷையில் அப்பியாசித்து ஞானத்தைப்பெறுவது பிர யாசமென்றுஞ் சொன்னீர்களே, அப்படி யாருக்கு சுயபாஷையில் ஞானம் சுலபமாய் வந்திருக்கிறது? அன்னியபாஷையிற் போய் ஞானம்வாராமல் பிர யாசமாத்திரம் அடைந்திருப்பதையும் எனக்கு அறிவிக்கவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:— தர்மவியாதனென் கிற வேடனுக்கு துங்கனென்றும் வீரியனென்றும் இரண்டு புத்திரர்களுண் டானதில் அவர்களிருவரும் யவ்வனத்தை யடைந்தகாலத்தில் பூர்வபுண்ணிய வசத்தால் சம்சாரத்தில் விரக்தியுண்டாய் தீவிரமுமுக்ஷுத்துவத்தோடே கூடிக்கொண்டு, அவர்களிருவரும் தங்கள் பிதாவாயும் மகாஞ்ஞானியாயு மிருக்கிற தர்மவியாதரிடத்தில் வந்து நமஸ்காரம்பண்ணி எங்களுக்கு இந்த சம்சாரதுக்கத்தைப் போக்கடித்து அழிவற்ற ஆனந்தத்தை யடையும்படி அனுக்கிரகிக்கவேண்டுமென்று கேட்டவுடன், அவரும் அந்தவேடபாஷை யிலேயே உபதேசிக்க ஆரம்பிக்கும்போது, வீரியனென்பவன் "இந் தப் பாஷையானது ஒருவிதமான சூத்திரப்பிரமாணங்களில் ஒன்றிலாவது சேர்ந்ததாயிருக்கவில்லையே, இந்தப்பாஷையில் சிரவணம்பண்ணினால் என்ன மாய் ஞானம்வரும்" என்று கேட்டவுடன், அவர் புத்திரனுடைய அபிப் பிராயமானது இந்தப்பாஷையில் நம்பிக்கையில்லையென்று தெரிந்துகொண்டு, அடே குழந்தாய்! எனக்கு இந்தப்பாஷைதவிர வேறொருபாஷையுந்தெரி யாததால் நீ புறப்பட்டுப் பெரியவர்களிடத்திற் போய் அவர்களுடைய பாஷைமூலமாய் ஞானத்தை யடையக்கடவாயென்று சொன்னதை உண்மை யென்று நினைத்து அந்த வீரியனும் வெளியேறிப்போனபின், அவர் துங்க னைப்பார்த்து நீயும் உன் தம்பியோடேகூட நல்லபாஷையிற் படித்து ஞானத் தை யடையப் போகவில்லையாவென்று கேட்டதற்கு அவன் "ஐயா, என்னைப் பைத்தியக்காரனென்று நினைத்தா இப்படிச் சொல்லுகிறீர்கள், எந்தப்பாஷை யிலாவது பஞ்சவிஷயங்களைச் சொல்லி அனுபவிப்பதால், சுகபேதமில்லாம லிருப்பது அனுபவமாய்க் கண்டிருக்கும்போது, ஞானமுமப்படி நம்முடைய சுயபாஷையிலேயே பெறக்கூடும்" என்று சொன்னதைக்கேட்ட அவரும் தன் சுயபாஷையிலேயே அஞ்ஞானத்தினுடைய சாத்வீக ராஜச தாமசங்களான மூன்றுகுணங்களாலேயே ஈஸ்வரனும் ஜீவர்களும் ஜகத்தும் கற்பனையாயிருக் கிறதென்றும், நீ இந்தக் கற்பனைகளல்ல. இந்த மூன்றுகுணங்களும் இந்தக் குணங்களால் கற்பிக்கப்பட்டிருக்கிற மூன்றுபதார்த்தங்களும் சுத்தப்பொய். இவைகளுக்கெல்லாம் நீயே சாக்ஷியென்றும், உன்னை நீ மறந்ததால் இவைக ளெல்லாஞ் சொப்பனம்போலே கற்பிதமென்றும் சொன்னதைக்கேட்ட துங் கனும், கைநெல்லிக்கனிபோல அபரோக்ஷஞானத்தை யடைந்து ஜீவன்முக்தனா யிருந்தான். வீரியன் தேசதேசமாய்ப் போய் அநேக பாஷைகளைக் கற்றறி

லும் ஆத்மஞானம் வாராமல் அலைந்துதிரிந்து மறுபடி தன்பிதாவினிடத்தில் வந்து தன் சுயபாஷையிலேயே ஞானத்தை யடைந்ததைக் கண்டுகொண்டு, நீயும் சுயபாஷையிலேயே ஞானத்தையடைந்து தீரமாயிருக்கக்கடவாய்.

## 216 - வது தரங்கம்.

ஞானம் பிராம்மணாதி இன்ன ஜாதிக்குத்தான் வருமென்ற நியமமில்லை:—

பிராம்மணாய்ப் பிறந்து சன்னியாசம்பண்ணினவனுக்குத்தான் ஞானம் வரும் மற்றவர்களுக்கு வாராதென்பது நியமமில்லை. அஃதெப்படியென்றால், ஒரு சத்திரத்தில் சன்னியாசிமுதல் சண்டாளன்வரை படுத்து நித்திரைசெய்யும் போது, அது தீப்பட்டெரியும்போது ஆருக்கு மேலில்சுட்டு விழிப்புவந்ததோ அவனே வெளியிற் போவனேயல்லாமல் நியமமில்லாததுபோலவறிக. [இ - து] துலுக்கன்முதல் சகலருக்கும் ஞானபூமி ஞானங்கொடுப்பதில் தடையில்லை. [எ - தி] வயலில் எவன் உரம்வைக்கிறானோ அவனுக்கே நெல்விளைவது போலும், சுருதியாவது அப்புருடர் மிலேச்சராகிலும் முத்தரென்ற வசனமும், அனுபவமாவது வசிஷ்டர்முதல் திருவள்ளுவர்வரை முக்தியை யடைந்திருப்பதுதான் சாக்ஷியாயிருப்பதினாலே பிராம்மணன்தவிர மற்றச் சூத்திராதிகளுக்கு ஞானம் வாராதென்கிற மூடர்சங்கை தள்ளப்பட்டது. ஐயா, பிராம்மணர்களுக்குத்தான் ஞானம் வருமென்று சிலர் சொல்லுகிறார்களேயென்றால், அது சுருதியுக்தி அனுபவங்களுக்கு விரோதமான வார்த்தையென்று தள்ளத்தக்கது. சுருதியானது பரமசிவசொரூபமான குருநாதனுடைய கிருபையானது எந்த ஜீவர்களிடத்திற் பூரணமாயும் ஆனந்தமாயும் நிறைந்திருக்கிறதோ அவன் தேவனானாலும், மனுஷனானாலும், மிருகமானாலும், பக்ஷியானாலும், நீர்வாழ்வனவானாலும், விட்டிலானாலும், புழுவானாலும், மோக்ஷத்தை யடைவனென்று சொல்லியிருக்கிறதே சுருதியாம். பிராம்மணன்முதல் நீசன்வரையில் யார் சாப்பிட்டார்களோ அவர்களுக்குப் பசிதீரும், சாப்பிடாதவனுக்குப் பசிதீராததுபோலும்; பிராம்மணப்பெண்முதல் நீசப்பெண்வரையிலுள்ள எந்தப் பெண்ணுக்குப் பக்குவம் வந்திருக்கிறதோ அந்த பெண்ணினுடைய யோனியிலேமட்டும் சிசுனம் நுழையுமேதவிர, பக்குவமாகாத பெண்ணினுடைய யோனியிலே சிசுனம் நுழையாததுபோலும்; பிராம்மணன்முதல் பறையன்வரையிலுள்ளவர்களுக்குள்ளே எவனுக்குக் கண் திறந்திருக்கிறதோ அவனுக்கே ரூபக்ஞானமுண்டாகுமேதவிர மற்றவனுக்கு உண்டாகாததுபோலும்; பிராம்மணன்முதல் பறையன்வரையிலுள்ளவர்களுக்குள்ளே படித்தவனுக்கு அக்ஷரக்ஞானமுண்டாகுமேதவிர, படியாதவனுக்குண்டாகாததுபோலும்; காசிக்கு நடந்துபோகிறவனுக்குக் கெங்காஸ்நானங் கிட்டுமேயல்லாமல் நடக்காதவனுக்கு ஸ்நானங் கிட்டாததுபோலும்; பிராம்மணன்முதல் பறையன்

வரையிலுள்ளவர்களுக்குள்ளே யாருக்கு தீர்க்காயுசு இருக்கிறதோ அவன் ஜீவித்திருக்கிறதும் மற்றவன் ஜீவியாமற்போவதுபோலும்; யாருக்குக் காது கேட்கிறதோ அவர்களுக்குச் சப்தக்கிரகணம் உண்டாகுமேதவிர மற்றவர் களுக்கு உண்டாகாததுபோலுமிருக்கிற யுக்தியை அறிந்துகொள்ளத்தக்கது. இனி அனுபவமாவது முந்தியகாலத்திலும் பிரகஸ்பதி தேவேந்திரன்முதலான தேவர்களுக்கும், பிரக்லாதன், மகாபெலி, நமுசி, சம்பரன்முதலான அசுரர் களுக்கும், வசிஷ்டர்முதலான பிராம்மணர்களுக்கும், ஜெனகர்முதலான ராஜாக்களுக்கும், துலாதரன்முதலான கோமுட்டிகளுக்கும், விதுரன்முதலான சூத்திரர்களுக்கும், தர்மவியாதன்முதலான கிராதகர்களுக்கும், அனுமார் முதலான குரங்குகளுக்கும், கெருடன் காகபுசுண்டர்முதலான பக்ஷிகளுக்கும், ஆதிசேஷன்முதலான பாம்புகளுக்கும் ஞானம் வந்திருக்கிறதாகத் தெரியவரு வதாலும், இப்பவும் அந்தப்படியே காணப்படுவதாலும், இனிமேலும் வரப் போகிறகாலத்திலும் அப்படியே யிருக்குமென்று தோற்றுவதாலும், இந்த விஷயத்தைப்பற்றி முந்தியும் ஒருதடவை சங்கித்து நாமும் சமாதானமுஞ் சொல்லியிருக்கத் திரும்ப இரண்டாவது தடவையும் நீ சங்கித்ததால், இதற்குச் சமாதானம் சொல்லிவிட்டதால், இனிமேலிப்படிச் சங்கிக்காமல் சித்தபரிபாக முள்ளவனே கரையேறுவனென்றறிக.

## 217 - வது தரங்கம்.

ஞானம்வந்தே அஞ்ஞானம் போம்:—

ஞானோதயமாகியே அஞ்ஞானம் போம். [எ - தி] சூரியோதயமாகியே இருட்டுப்போவதுபோலவறிக. [இ - து] அஞ்ஞானம்போயே ஞானம் விளங் கும். அஞ்ஞானம்போயே ஞானோதயமாகவேண்டும். [எ - தி] செடிகொடி யை வெட்டியே பூமியைக் காண்பதுபோலும், புடம்போட்டு அழுக்குப்போ னால் தங்கம் பிரகாசிப்பதுபோலுமறிக. [இ - து] ஞானம் கொஞ்சங்கொஞ் சம் வளரவளர அஞ்ஞானம் அவ்வளவுக்கவ்வளவு நசிக்கும். ஞானோதயம் கொஞ்சங்கொஞ்சம் விருத்தியாக விருத்தியாக அஞ்ஞானம் அவ்வளவுக்கவ் வளவு குறைந்துகொண்டுவரும். [எ - தி] அமாவாசை கழித்ததுமுதல் பௌர்ணிமைவரை பார்த்துக்கொள்ளவேண்டியதுபோலும், திருப்பத்தூருக்கு நடந்து போகப்போக குன்றக்குடி மறைவதுபோலுமறிக. ஐயா, ஞானம் வந்து அஞ்ஞானம் போகுமென்பதை விரித்துச் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தாஞ் சொல்லுகிறேன் கேள்:—படுத்துக்கொண்டு தன்னைமறந்து நித்திராசக்தியால் கற்பிக்கப்பட்ட சொப்பன ஜகத்துக்குள்ளே தன்னையொரு அற்பமான சரீரத்தையுடையவனும், அதற்கு அநேகம் பேர்கள் சுகதுக்கங்களைக் கொடுக்கிறவர்களாயும், தான் அந்தந்த சுகதுக்கங்களை அனுப

விக்கிறவனையும், பின்னும் பலவிதமான சம்சாரத்திலடிபட்டுத் துக்கிக்கிறவனையுமிருக்கிற புருஷனுக்கு, ஜாக்கிரத்தில் தன்னுடைய எதார்த்தஞானம் வந்தபின்பே அந்த அஞ்ஞானமும் அதின்காரியங்களான சகல சுகதுக்கங்களும் போய், எப்போதும் நாம் சுகமாகவே படுக்கையிலே படுத்திருந்தோமேதவிர வாஸ்தவமாய் ஒருவிதமான சுகதுக்கங்களும் நமக்கு வரவுமில்லை போகவுமில்லையென்று அறிவதுபோலும்; தசமன் ராஜகுமாரன் பிராம்மணன்முதலானவர்களுக்கு வந்திருந்த சாவும், வேடத்தனமும், சண்டாளத்தனமும், நான் தசமனென்றும், ராஜாவென்றும், நான் பிராம்மணனென்றும் ஞானம்வந்தபின் அவைகள் போவதுபோல பிரஹ்மம் நானென்கிற ஞானம் வந்தபின்பே அஞ்ஞானமும் அதன் காரியமும் நிவர்த்தியாகுமென்றறிக. இனி அஞ்ஞானம் போயே ஞானம்வரும். [எ - தி] கண்ணாடியில் பற்றியிருக்கிற அழுக்குப் போயே கண்ணாடி நிர்மலமாய்ப் பிரகாசிப்பதுபோலும், வஸ்திரத்திலேறியிருக்கிற அழுக்குப்போனபின்பே வஸ்திரம் தன் சுபாவமான வெளுப்புநிறமாய்ப் பிரகாசிப்பதுபோலும், சேற்றில்விழுந்து சகதியாற் பூசப்பட்டவன் சகதியைப் போக்கடித்தபின்பே தன்னுடைய சுபாவமான தேகம் பிரகாசிப்பதுபோல, அஞ்ஞானம்போயே ஆத்மா பிரகாசிப்பரென்றறிக. இனி ஞானம் வளரவளர அஞ்ஞானம் அவ்வளவுக்கவ்வளவு நசிக்கும். [எ - தி] மருந்து சாப்பிட்டுக்கொண்டுவரவா அவ்வளவுக்கவ்வளவு வியாதி நிவர்த்தியாய்க் கொண்டுவருவதுபோலும், கடன்பட்டவன் பணஞ் செலுத்திக்கொண்டு வரவர அவ்வளவுக்கவ்வளவு கடன் தீர்ந்துகொண்டுவருவதுபோலும், கண்ணில் காசபடலம் படர்ந்தவனுக்கு அஞ்சனம்போட்டு வரவர கொஞ்சங்கொஞ்சமாய்க் கண் தெரிவதுபோலும், பைத்தியந் தெளியத்தெளிய தன்சுவயஞானமுண்டாவதுபோலுமறிக.

## 218 - வது தரங்கம்.

எந்தச் சாஸ்திரத்தில் எந்தத் தெய்வத்தை மேலாகச் சொன்னாலும், அதின்கருத்து காரணப்பிரஹ்மத்தை வைத்துச்சொல்லுகிறது:—

பிரம்மாவையும் விஷ்ணுவையும் சிவனையும் மற்றக் கணபதிமுதலான தெய்வங்களையும் ஓரோரிடத்தில் மேலென்று சொல்லிய சாஸ்திரத்தின் கருத்து என்னவென்றால் தன் சொப்பனத்தில் ஒவ்வொருநாள் ஒவ்வொருவிதமாய் ஒருவனே அநேகரைச் சும்பிப்பதுபோலும், இவன் அநேகர்வாயில் பிரஜாபதியை வைப்பதுபோலும் கண்டாலுஞ் சிதாகாசமான தன்னிடத்தில் இவையெல்லாங் கற்பிதமென்று அறிகிறதுபோலவறிக. இன்னமொருயுக்தி, எந்தப் பெண்ணை மணையில் வைக்கப்பட்டிருக்கிறதோ அந்தப்பெண்ணுக்கே சகல ஆபரணங்களையும் பூட்டி சகலரும் அவளை உபசரிப்பதுபோல, எந்தவிடத்தில் எந்தத்தெய்வத்தை மேன்மையாகச் சொல்லப்பட்டிருக்கிறதோ அப்போது

அதைக் காரணப்பிரம்மமாக வைத்து மற்றதை அதின் காரியமாக வைத்துச் சொன்னதென்றறிக. ஐயா, சிவபுராணத்தில் சிவனே சகலமான தேவர்களுக்கும் மகாதேவரென்றும், பிரம்மாவுக்கும் விஷ்ணுவுக்கும் சம்வாதம் வந்த காலத்தில் பரமசிவனுடைய சிரசைப் பிரஹ்மா பார்த்துவந்தால் அவர் பெரியவரென்றும், விஷ்ணு அவருடைய பாதத்தைப் பார்த்துவந்தால் அவர் பெரியவரென்றும், இருவரும் பேசிக்கொண்டு பிரம்மா அம்சபக்ஷிரூபமாய் ஆகாசத்தில் சிரசைக்காணப் போகும்போது, வெகுதூரம் போய் சிரமமுண்டாய் தயங்கி நிற்கும்போது தாழம்பூவானது உயரயிருந்து வருவதைப் பார்த்து, நீ எங்கேயிருந்து வருகிறாயென்று கேட்டவுடன் அது பரமசிவனுடைய சிரசிலேயிருந்து வருகிறேனென்று சொன்னதைக்கேட்ட இவர், இன்னமெவ்வளவு தூரமிருக்கிறதென்று சொன்னதைக்கேட்டதற்கு அது நான் சிரசைவிட்டு நழுவி எத்தனையோ கோடி சதுர்யுகங்களாய் விட்டதால் எனக்கு இவ்வளவுதூரம் அந்தச்சிரசு இருக்குமென்பது தெரியாதென்று சொன்னதைக்கேட்ட இவர், அதை நலம்சொல்லி நான் சிரசைக்கண்டேனென்று சொல்லுகிறேன். நீயும் கண்டாரென்று ஒருவார்த்தை சொல்ல வேண்டுமென்று பேசிவைத்துக்கொண்டு வருமுன், விஷ்ணுவானவர் வராக ரூபத்தை யெடுத்துப் பூமியைத் துளைத்து எண்ணத்தொலையாத தூரம்போயும், அப்பரமசிவனுடைய பாதாரவிந்தத்தைக் காணமுடியாமற் போனவழியாகவே திரும்பிப் பூமிக்குவந்து இருவருஞ்சந்தித்ததில் விஷ்ணு என்னாலே சிவபாதம் பார்க்கமுடியவில்லையென்று சொன்னதும்; பிரம்மா நான் அவர்சிரசைப் பார்த்துவந்தேன், அதற்கு இந்தத் தாழம்பூ சாக்ஷியென்று சொன்னபடி அதுவும் தப்புச்சாக்ஷியாக அப்படிக்கண்டாரென்று சொன்னமாத்திரத்தில், பரமசிவன் ஆவிர்ப்பவித்து விஷ்ணுவுக்கு அனுக்கிரகத்தையும், பிரம்மாவுக்கும் அப்பூவுக்கும் நிக்கிரகம் செய்தாரென்றும் சொல்லியிருக்கிறது. மற்றொரு புராணத்தில் விஷ்ணுவும் சிவனும் ஒருவருக்கொருவர் நான் பெரியவனென்று வாதம்வந்தபோது, தேவதைகள் இரண்டுவில்லை யுண்டுபண்ணி இருவர்கையிலும் கொடுத்துச் சண்டைக்குவிட்டதில் விஷ்ணுவினுடைய உங்காரசப்தத்தினாலே சிவன்வில்லு விரிந்துபோனதைக் கண்டு, தேவதைகள் விஷ்ணுவே பெரியவரென்று எண்ணினார்களென்றும் ஓரிடத்திலும்; இப்படியே கணபதியை பூஜியாததினால் திரிபுரசம்மாரகாலத்தில் முந்தி தேரினுடைய அச்சுமுறிந்து பின் கணபதிபூசையால் அவர்களை ஜெயித்தாரென்றும் கணபதி புராணத்திலும்; பிரணவத்துக்கர்த்தம் பரமசிவத்துக்குக்கூட தெரியாமல் சுப்பிரமண்யரிடத்திற் கேட்டுக்கொண்டு தெரிந்துகொண்டதால் சுப்பிரமணியருக்குச் சிவசுவாமியென்றும், தகப்பன்சுவாமியென்றுஞ் சொல்லுகிறதேயென்று கேட்பாயாகில், இப்படிச் சொல்லுவதெல்லாம் பிரம்மமாகிய நம்முடைய சக்தியினால் எந்தஎந்த அவசரங்களில் எந்தஎந்த சக்தி காணப்பட்டாலும் அவைகள் நம்முடைய கற்பிதமென்றறிக.

219 - வது தரங்கம்.

சிரவணுதிகள் நாலுஞ்சேர்ந்து ஞானமெனப்படும்:—

சிரவண மனன நிதித்தியாசன சமாதி நாலுஞ்சேர்ந்து ஞானமெனப் படும். [எ - தி] கால் இடுப்பு கழுத்து தலை நாலுஞ்சேர்ந்து புருஷனுவது போலும், நாலுகாலும் சேர்ந்து கட்டிலாவதுபோலும், நாலுகாலுஞ்சேர்ந்து தம்பதிகளாவதுபோலுமறிக. [இ - து] பிரம்மவிசாரம் எவ்வளவுசெய்தா லும் தெவிட்டாது. [எ - தி] அமிர்தம் சாப்பிடுவது தெவிட்டாததுபோலும், ஆசானைப்பார்ப்பதில் தெவிட்டாததுபோலும், ஆசையுள்ளவனுக்கு ஆபரணத் தில் தெவிட்டாததுபோலுமறிக. ஐயா, சிரவண மனன நிதித்தியாசன சமா திகள் நாலுஞ்சேர்ந்து ஞானம் உண்டாகுமென்று சொன்னீர்களே, ஒருசுருதி யில் அஞ்ஞான சந்தேக விபரீதங்களைப் போக்கச் சிரவண மனன நிதித்தியா சனங்கள் மூன்றும் போதுமென்றும், மற்றொரு சுருதியில் தத்துவம்விளங்கு வதற்கும் சந்தேகந்தெளிவதற்கும் சிரவண மனனமிரண்டும் போதுமென்றும், இருட்டைவிலக்க வெளிச்சம்வேண்டுவதுபோல அஞ்ஞானத்தை நிவர்த்தி பண்ணுகிறதற்கு சிரவணஜன்னிய ஞானமே போதுமென்றும் சொல்லியிருக் கிறதே, இப்போது நீங்களிவிடத்தில் சிரவணுதி நாலுஞ்சேர்ந்தே ஞானம் வர வேண்டுமென்று சொன்னீர்களே, அதன் கருத்து என்னவென்று கேட்பாயா கில், அதற்கு நாம் உத்தரஞ் சொல்லுகிறோம். கேள்:—மோக்ஷத்தை யடைய வேண்டுமென்று இச்சித்த முமுட்சுக்கள் நாலுவிதமாய் இருப்பார்கள். அவர் களின் நாமமாவது:—சாமான்னியனென்றும், மத்தியமனென்றும், தீவிர னென்றும், தீவிரதரனென்றும் நாலுவிதமாய் அதிகாரிகள் இருப்பார்கள். அதில் தீவிரதரனென்பவன் அனேக ஜன்மங்களில் நிஷ்காமிய கர்மானுஷ்டா னம்செய்து சித்தசுத்தியை அடைந்து, ஈஸ்வரனை உபாசனைபண்ணி, அதனல் சித்தஏகாக்கிரத்தை யடைந்து சாதனசதுஷ்டய சம்பன்னனுய் சற்குருவை யடைந்து சிரவண மனன நிதித்தியாசனங்களைச் செய்து, அபரோக்ஷஞானத் துக்குப் பிரதிபந்தகமான அஞ்ஞானசேஷமும் வாசனசேஷமும் கர்மசேஷ மும் கொஞ்சம் மிச்சமாயிருந்து அதற்காக ஜன்மமெடுத்து வந்திருக்கிற புருஷ னுக்கு யாதொருவிதமான சிரமமன்றியில் சகல சற்குணங்களும் சுயமாய் உண் டாவதுந்தவிர விஷயத்தில் வைராக்கியமுண்டாய் சிர்க்சந்தன வனிதாதி விஷய போகங்களில் அருவருப்புண்டாய்த் தீவிரமுமுட்சுத்துவத்துடன் சற்குருவைத் தேடி யடைந்து, அவரிடத்தில் சிரவணஞ்செய்தமாத்திரத்தில், வேதசாஸ்திரங் களைப் பூராவாய்ப்படித்தவனுக்கு கொஞ்சம் மறதிவந்திருந்தால் அவனுக்கு அதை ஒருதரம் சொன்னமாத்திரத்தில் அந்த ஞாபகமுண்டாவதுபோல, இவ னுக்குமுடனே நான் பிரம்மம் என்கிற ஞானம் சிரவணமாத்திரத்திலுண்டா கும். இவனே தீவிரதர அதிகாரியென்று சொல்லப்படுவன். மற்றொருவன் ஜன்மாந்தரத்தில் நிஷ்காமபுண்ணியத்தால் சித்தசுத்தியடைந்து சாதனசதுஷ்

டய சம்பன்னனும் சற்குருவை யடைந்து சிரவண மனனாதிகளையுமடைந்து பரோக்ஷஞானம் பூராவாய்ப்பெற்று மரித்து ஜன்மமெடுத்தவன், இப்போது சுயமாகவே சாதனசதுஷ்டய சம்பத்துக்களையடைந்தவனும் சத்குருவிடத்திற் போய்ச்சேர்ந்து சிரவணம்பண்ணி மனனமுஞ்செய்து அபரோக்ஷஞானத்தைப் பெறுகிறவன், வேதசாஸ்திரங்களைப் பூராவாய்க்கற்றவன் வெகுநாளாய்ச் சொல்லாமலிருந்ததால் இப்போது பெரியவர்களிடத்திற் கேட்டுத் தானுந்தனித்திருந்து உருவேற்றிக்கொள்ளுகிறவன்போல தீவிரனென்று சொல்லப்படுவன். மற்றொருவன் ஜன்மாந்தரத்தில் சிரவணமாத்திரஞ்செய்து மரித்தவன், இப்போது சத்சங்கதியில் சாதனத்தைத்தேடி சிரவண மனன நிதித்தியாசனத்தால் ஞானத்தைப் பெறுகிறவன், கொஞ்சம் வேதாத்தியயனம் பண்ணிவிட்டவன் சந்தைதிருவை சொல்லி நெட்டுருவாகிறவன்போல மத்திமனெனப்படுவன். மற்றொருவன் ஜன்மாந்தரத்தில் சித்தசுத்தியைப்பெற்றுப் பிறந்தவன் கிரமமாய்ச் சாதனப்பியாசஞ்செய்து சற்குருவைத் தேடியடைந்து அவரிடத்தில் சிரவணம் பண்ணி மனன நிதித்தியாசன சமாதிவரை செய்து ஞானத்தைப் பெறுகிறவன், நூதனமாய் அத்தியயனம் பண்ணுகிறவன்போல சாமான்யனெனப்படுவனெனவறிக.

## 220 - வது தரங்கம்.

அசாஸ்திரீயத்தை முந்திதவிர்க்கிறது ஞானத்துக்கும், பிந்திச் சுகத்துக்கும்:—

முந்தி ஞானம்வருவதற்காக அசாஸ்திரீய பிரபஞ்சத்தைத் தவிர்க்கிறதும், ஞானம்வந்தபின் அதைத் தவிர்க்கிறது ஜீவன்முக்திச் சுகத்திற்கு. [எ-தி] கற்புள்ளஸ்திரீ முந்திப் புருஷனைவேண்டுவது போகத்துக்காகவும் பிந்தி வேண்டுவது அன்னபானாதி கொடுத்து ரக்ஷிப்பதற்காகவும் போலவறிக. ஐயா, ஈஸ்வரசிருஷ்டியால் பந்தமில்லை ஜீவசிருஷ்டியாலேயே பந்தம்வருமென்றும் சொன்னீர்களே, அந்த ஜீவசிருஷ்டியான மானசப்பிரபஞ்சத்தை ரேசக பூரக கும்பகரூபமான பிராணபந்தன யோகத்தால் நிக்கிரகம்பண்ணலாமே பிரஹ்மஞானம் என்னத்திற்கு அப்பியாசம்பண்ணவேண்டும்? அதனால் கிடைக்கும் பிரயோசனம் என்னவென்றால்,— யோகாப்பியாசத்தால் மனதை லயம்பண்ணினாலும் தார்க்காலிகமாக வருகிற துவிததுக்கத்தை நிவர்த்திபண்ணிவைக்குமேதவிர மூலாஞ்ஞானத்தை நிவர்த்திபண்ணித் திரும்ப ஒருக்காலும் ஜனனமரணமில்லாமற் பண்ணுவதற்குப் பிரஹ்மஞானத்தைத்தவிர வேறு வழியில்லையென்று சுருதிகளெல்லாம் முரசடிக்கிறது. [எ - தி] தான் சொப்பனத்திற் கள்ளர்களுடைய கையிலகப்பட்டுக்கொண்டு மெள்ள அவர்களை விட்டுத் தப்பித்துக்கொண்டு ஒரு குகையில் வெகுநாள்வரை ஒளிந்துகொண்டிருப்பதுபோலக் கண்டவன், மறுபடி அந்தக்குகையிலிருந்து வெளியில் வந்த மாத்திரத்தில் பழைய கள்ளர்களெல்லாம் ஓடிவந்து இவனைப் பிடித்துக்கட்டி

உதைத்து இவனிடத்திலிருந்த சொத்துக்களையெல்லாம் பறித்துக்கொண்டு போனபின், திரும்பக் குகைக்குள்போவதும் வெளியில்வந்து உதைபடுவது மாகக் கண்டுகொண்டிருப்பதினால், நிசேஷமாக அனர்த்தநிவர்த்தியை இவன் எதார்த்தமான ஜாக்கிரத்தில் விழித்தாலல்லாமல் அடையாமலும் சுபாவசுகத் தைப் பெறாமலிருப்பதுபோலுமறிக. ஐயா, இந்த ஜீவத் துவிதமானது எத் தனைவிதம்? அதை என்னமாய்த்தள்ளி பிரஹ்மஞானத்தை யடைகிறதென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள். ஜீவத் துவிதமானது சாஸ்திரீயமென்றும் அசாஸ்திரீயமென்றும் இருவிதமாயிருக்கும். அதில் அகம்பதார்த்தமான ஆத்மாவையும் பிரஹ்மத்தையும் விசாரிப்பது சாஸ்திரீ யப்பிரபஞ்சமென்றும், பிரஹ்மஞானம் வந்தபின் அதையுந் தள்ளலாமென்றும், நெல்லை எடுத்தபின் வைக்கோலைத் தள்ளுவதுபோலும், மோதிரத்தை எடுத்த பின் கொள்ளிக்கட்டையைத் தூரத்திலெறிவதுபோலுமென்று சொல்லப்படும். இனி அசாஸ்திரீயப்பிரபஞ்சம் தீவிரமென்றும் மந்தமென்றும் இருவிதம். இதில் காமக்குரோதம் முதல் அடிதடிவரையிலுள்ள விவகாரஞ்செய்வதெல்லாம் தீவி ரப்பிரபஞ்சமென்றும், மனோராச்சியமே மந்தப்பிரபஞ்சமென்றும் சொல்லி, இந்த இருவகைப்பிரபஞ்சத்தையும் சாதனசதுஷ்டயத்தினுடைய நடுவில் சமத மாதிகளை முக்கியமாய்ச் சொல்லியிருப்பதால் குருசன்னிதிக்குப் போகுமுன்ன மே இந்த இரண்டையுந் தவிரவேண்டும். அப்படித் தவிராவிட்டால் ஞானம் வரமாட்டாது. ஆனால் ஞானம்வந்தபிற்பாடு இந்த அசாஸ்திரீயப்பிரபஞ்சத் தைச் சேர்க்கலாமாவென்றால், சேர்க்கக்கூடாது. அப்படிச் சேர்த்தால் ஜீவன் முக்திசுகம் கிட்டமாட்டாது. ஆகையால் இரண்டுகாலத்திலும் இவ்விரண்டை யுந் தவிரவேண்டும். காரியத்திற்கு வாராத மந்தப்பிரபஞ்சத்தை வைத்துக் கொள்ளலாமாவென்றால், சகல தோஷத்திற்கும் மனோராஜ்ஜியமே பீஜமான தால் அதைத்தான் முந்தித் தவிரவேண்டும். ஆகையால் இருவகைப்பிரபஞ் சத்தையுந் தள்ளி தானேதானாயிருப்பதே முக்தியென்றறியக்கடவாய்.

## 221 - வது தரங்கம்.

ஞானத்திலேயே விவகாரமும் பரமார்த்தமும் இரண்டுமுண்டு:—

பிராரப்தமுண்டு இல்லையென்று இரண்டுவிதமாய்ச் சொல்லுகிற வேதங் களின் கருத்து. இந்த வேதாந்தமார்க்கம்மட்டும் துவிதமாயும் மற்ற மார்க் கங்களெல்லாம் அத்துவிதமாயுமிருக்கிறது. அதாவது, விவகாரம் பரமார்த்த மென்ற பேதம் மற்ற மார்க்கங்களிலில்லாமல் ஒரேவிதமாயும், இதில்மட்டும் அவ்விரண்டுவிதங்களையுஞ் சொல்லுகிறது. அதாவது ஜடமான கோசங்களுக் கும் சித்தான தனக்கும் பிறித்திருக்கிற துவிதமுந்தவிர, முதலாவது குரு செய்கிற பேதமாவது ஊரூராய் ஆளாளாய் மித்திரபேதம்பண்ணி, ஒருகுடும் பத்தை இரண்டு குடும்பமாய்ப்பண்ணி, பரம்பரையாய் இந்தப்பேதத்தை யழி

யாமலிருக்கும்படி செய்கிற மித்திரபேதிபோலும், விடன் குலஸ்திரீயை மித்திர பேதம்செய்து அவளைத் தான் கைப்பற்றிக்கொள்வதுபோலுமிருக்கிற குரு சிஷ்யனுக்கு உபதேசம்பண்ணிக் கெடுத்துக்கொண்டு வருகிற பேதமும், நாடக வேஷம் போட்டவனுக்கு வேஷவிவகாரமும் சரீரவிவகாரமும் நடப்பதுபோலும், குலஸ்திரீ விபசாரம்போலும், இன்னும் நெல்மாத்திரமிருக்கிற வீட்டில் அத்விதமாயும் நெல் குத்தினவீட்டில் உமி தவிடு அரிசி வேறுவேறாகித் துவைதமாய்த் தோற்றுவதுபோலுமறிக. இதின் கருத்து—பரமார்த்தமாய் சமதிருஷ்டியில் தன்னைவிடசரீரத்திரயமாவது, கர்மத்திரயமாவது, குணத்திரயமாவது, சுகதுக்கங்களாவது யாதொன்றுமில்லையென்று நிச்சயித்திருப்பதைப்பற்றி பிராரப்தமில்லையென்றும், விவகாரத்தில் பரதிருஷ்டியால் சரீராதித்தோற்றத்தைப் பற்றி பிராரப்தம் உண்டென்றும் சொன்னாலும் ஆனையுண்ட விளாம்பழம் வெளியில்வந்தபின் உள்ளே ஒன்றுமில்லாமற் பார்வைக்குமட்டும் பழம்போலத்தோற்றுவதுபோலும், தேரைவிழுந்த தேங்காய்போலும், அகம்விருத்தி போய் இதம்விருத்திமட்டும் தோற்றுவதால், ஞானிக்குத் தன்னைவிட பரமார்த்தத்தில் ஒரு கர்மமும் இல்லையென்றும், விவகாரத்தில் தேகாதி ஜெகத்துப் பொய்யாய்த் தோற்றுவதால் பிராரப்தகர்மமுண்டென்றுஞ் சொல்லியிருக்கிற கருத்தையறிந்து மயங்காமலிரு. ஐயா, அத்விதஞானமார்க்கத்திலேயே துவிதமிருக்கிறதென்றும், மற்றத் துவிதமார்க்கங்களிலெல்லாம் அத்விதமிருக்கிறதென்றுஞ் சொன்னீர்களே, அது எதுபோலயிருக்கிறதென்றால்,— பிராம்மணனிடத்தில் நீசத்தன்மை யிருக்கிறதென்றும், நீசனிடத்தில் பிராம்மணத்தன்மை யிருக்கிறதென்றும்; பௌர்ணமாவாசைராத்திரியில் இருட்டிருக்கிறதென்றும், அமாவாசைராத்திரியில் வெளிச்சமிருக்கிறதென்றுஞ் சொல்லுவதுபோலும்; குபேரனிடத்தில் தரித்திரமிருக்கிறதென்றும், தரித்திரனிடத்தில் நித்திய சம்பத்து இருக்கிறதென்றும் சொல்லுவதுபோலுமிருக்கிறதேயென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ் சொல்லுகிறோம் கேள்:— அடே மூடா நாம் சொன்ன அபிப்பிராயந்தெரியாமல் நீ இப்படிச் சங்கிக்கிறாய். அதாவது, பரமார்த்தத்தில் பரப்பிரம்மமே அத்வைதம், மற்ற மாயாகாரியமான ஜீவேஸ்வர ஜகத்தெல்லாம் இல்லையென்றறிக. விவகாரத்தில் ஆத்மாநாத்மாக்களுடைய பேதக்ஞானமும் சித்ஜடங்களுடைய பேதக்ஞானமும் பந்தமோக்ஷங்களுடைய பேதக்ஞானமும் ஆனந்ததுக்கங்களுடைய பேதக்ஞானமும் தத்துவஞானிக்கே உண்டாகுமேதவிர அஞ்ஞானிகளுக்குப் பஞ்சகோசங்களும் அதற்குச் சாக்ஷியான ஆத்மாவும் ஒன்றாய்த்தோன்றி நான் பிறந்தேன், நான் சுகி துக்கி, நான் மூடனென்று, அகம்விருத்தியில் பிராந்திசித்தாபேதத்தை அடைந்து, இதம் விருத்தியில் சச்சிதானந்தத்தையும் அநாத்மாவான நாமரூபத்தையுமொன்றாய் அபேதப்படுத்தி 'கடமிருக்கிறது, படமிருக்கிறது' என்றிப்படி அபேதமாய்ப் பார்ப்பனென்று சொன்னதற்கு யுக்தியென்னவென்றால், விற்பத்தியில்லாதவன் புஸ்தகத்தைப் படிக்கும்போது இது அபத்தம், இது சுபத்தம், இது அர்த்தம்,

இது அனர்த்தமென்று ஒன்றுந்தெரியாமல் ஒரேபிரகாரமாயிருப்பதும், விற்பத்தியுள்ளவனுக்கு அந்தப்பேதக்ஞானம் தெரிவதும்; சங்கீதக்ஞானமில்லாதவனுக்கு சகலராகமும் சராகமாய் ஒன்றாய்த்தோற்றுவதும், அந்தக்ஞானமுள்ளவனுக்கு இது இந்த இராகம், இது அந்த ராகமென்று பேதந்தெரிவதுபோலும்; ரத்னப்பரிக்ஷை தெரியாதவனுக்கு படிகக்கல்லும் மாணிக்கமும் ஒன்றாய்த்தோற்றுவதும், அந்தக்ஞானமுள்ளவனுக்கு அதன் பேதந்தெரிவதுபோலும்; குருடனுக்கு அபேதமும் திருஷ்டியுள்ளவனுக்குப் பேதமும் தோற்றுவதுபோலும் அறியக்கடவாய்.

## 222 - வது தரங்கம்.

ஞானத்திற்கு விவேகமும் வைராக்கியமும் சாதனம்:—

தத்துவஞானத்திற்கு விவேக வைராக்கிய மிரண்டும் வேண்டும். [எ - தி] போகத்திற்கு யோனியும் ஸ்தன்னியமும் இரண்டும் வேண்டுவதுபோலுமறிக. ஐயா, ஞானத்திற்கு விவேகம் வைராக்கிய மிரண்டும் வேண்டுமென்று சொன்னீர்களே, அவ்விரண்டும் என்னத்திற்காகவேண்டும்? அவ்விரண்டையும் எப்படி அப்பியாசம்பண்ணுகிறது? அவைகளில்லாததினால் ஞானத்திற்கு என்ன குறைச்சல்? அவைகளிருந்ததினால் ஞானத்திற்கு என்னமகிமை யிருக்கிறதென்று வினவின, சிஷ்யனுக்கு குரு சொல்லுகிறதாவது—வாராய் குழந்தாய்! விவேகம் வைராக்கிய மிரண்டும் ஞானம் விருத்தியாவதற்குக் காரணமாம். தேரோடுவதற்கு முன்வடத்தை இழுப்பதுபோல விவேகம், பின்னால் நென்புதடி போடுவதுபோல வைராக்கியம். ஆகையால் விவேகமாகிற வடத்தை முன்னே இழாமற்போனாலும் தேரோடாது. வைராக்கியமாகிற நென்புதடி பின்னால் போடாமற்போனாலும் விஷயமாகிற பள்ளத்திலிருந்து ஞானமாகிற தேர் கிளம்பாது. இப்படியே ஒருநிலத்தை விளையவைக்கவேண்டுமானால் அந்தப்பூமிக்குக் குழைமுதலான உரங்களும் முந்திவைக்கவேண்டும், பிந்தி உழவு நாத்து நடுகைமுதலான விவசாயங்களைச்செய்து நெல் முதலான பலத்தைப்பெறுவதுபோல சித்தமாகிற பூமியில் தத்துவஞானமாகிற பலத்தைப்பெறவேண்டிய முமுட்சுவாகிற குடியானவன் சித்தமாகிற பூமியில் வைராக்கியமாகிற குழைமுதலானவைகளை முந்தி உரம்வைத்து, விவேகமாகிற பயிர் செய்ததால் தத்துவஞானமாகிற தான்னியமுதலான பலத்தைப் பெறுவது போலும்; ஒரு ராஜா புறப்பட்டுப்போகும்போது முந்தி சேவகர்கள் மூடர்களாயும் முரட்டாபாயிகளாயுமிருக்கிற ஜனங்களைத் தள்ளி விலக்கிக்கொண்டு போகிறதும், பிந்தி மந்திரிமுதலான உத்தியோகஸ்தர்கள் ராஜகாரியங்களைப் பேசிக்கொண்டு ராஜாவைச் சவரக்ஷித்துக்கொண்டு போவதுபோல, தத்துவஞானமாகிற ராஜாவுக்கு முன்னே வைராக்கியமாகிற சேவகர்கள் காமக்குரோத லோபமோக மதமாச்சர்யங்களாகிற துஷ்டர்களாயிருக்கிற முரட்டாபாய்

களைத்தள்ளி சன்மார்க்கத்தை வெளிபண்ணுவதற்கும், விவேகமாகிற மந்திரிகள் விசாரமாகிற ராஜகாரியத்தைப் பேசிக்கொண்டு போவதற்கும் முன்னும் பின்னும் வைராக்கிய விவேகங்கள் வேண்டியிருக்கின்றன. இன்னும் ஞானமாகிற ஒரு ஸ்தம்பம் அசையாமல் நாட்டுவதற்கு வைராக்கியமாகிற மண்வெட்டியால் சித்தமாகிற பூமியை வெட்டி அதில் நாட்டப்பட்ட தத்வஞானமாகிற ஸ்தம்பம் அசைவற்றிருக்கும் நிமித்தியம் சுருதி யுக்தி அனுபவங்களோடே கூடியிருக்கிற விவேகமாகிற ஈட்டியால் குத்திக்குத்தி உறைப்பித்து திடம் பண்ணுவதுபோலும், இரண்டும்வேண்டுமென்றறிக. இனி அவைகளை எப்படி அப்பியாசம்பண்ணுகிறதென்று கேட்ட இரண்டாம் வினவிற்குத்தரஞ் சொல்லுகிறோம். வைராக்கியம் எப்படிவருமென்றால், முதலில் விஷயத்திலுள்ள தோஷங்களைப் பார்ப்பதும், அந்த விஷயங்களில் இந்திரியங்களைச் செல்லவிடாமல் நிக்கிரகம்பண்ணுவதும், மனதில் அந்த நினைப்பு வரும்போது சிரார்த்த வேளையிலோடிவந்த நாயை வெருட்டுவதுபோல அதை வெருட்டுவதும், ஸ்திரீகளுடைய சகவாசத்தை விடுவதும், இந்த நாலும் வைராக்கியமுண்டாவதற்குக் காரணம். இனி விவேகத்திற்கு ஆத்மானாத்மவிசாரமும், குருகிருபையும், சாது சங்கமும், முமுட்சுத்துவமும் நாலும் விவேகத்திற்குக்காரணமென்றறிக. இனி அவ்விரண்டுமில்லாமற்போனால் ஞானமானது எண்ணை திரி இல்லாமல் தீக்குச்சியில் விளங்குகிற தீபப்பிரகாசமானது நிலையாய் நில்லாமல் அணைந்து போவதுபோல ஞானம் அணைந்துபோம். விவேக வைராக்கியத்தோடே கூடியிருக்கிற ஞானமானது சுத்தமான திரியோடுங் களங்கமில்லாத எண்ணையோடுங்கூடிய தீபமானது எப்படிப்பிரகாசிக்குமோ அப்படி இந்தத் தத்துவ ஞானமும் பிரகாசிக்கும். அப்படிப் பிரகாசியாததற்கு ஆவரணமே மூலமென்றறிக.

## 223 - வது தரங்கம்.

அந்த ஆவரணசக்தி நிவர்த்திக்கு உபாயம் :—

சர்வானர்த்தமூலமான ஆவரணத்தை முமுக்ஷுவானவன் நாமாரென்கிற விசாரத்தாலும், தேகம்முதல் ஆத்மாவரையிலுள்ள ஓர் ஓர் தத்துவங்களையும் அதனதன் சுபாவத்தைப் பிரித்தறிகிற ஞானத்தாலும், இருதயக்கிரந்தியாகிற முடிச்சவிழ்க்கிற தொழிலாலும், சதுர்வித குருசேவையாலுண்டாகிற குருகடாக்ஷத்தாலும், சாதுசங்கத்தாலும், ரஜோகுண தமோகுணரகிதமான அத்வைதாகாரமாயிருக்கிற சத்துவவிருத்தியாலும், இடைவிடாச் சிரவண மனன தியான சமாதிகளாலும் அதை அடியோடே கொன்று, நித்தியசுகமான வாழ்வைப் பெறவேண்டுமேதவிர மற்ற எவ்விதங்களான கர்மம் பக்தி யோகோபாசனைகளாலும் தீராது. [எ - தி] கடப்பாறையை விழுங்கினவனுக்கு சுக்குகஷாய முதலான மருந்தால் நிவர்த்தியாகாமல் சித்தகுளிகையாலேயே அந்தக்கடப்பாறை ஜீரணிக்கவேண்டுவதுபோலுமறிக. ஐயா, ஆவரணசக்தியே சர்வா

னர்த்தமூலமென்றும், அதில் அசத்துவாவரணமானது பிரஹ்மத்தை இல்லையென்று மறக்கப்பண்ணுகிறதென்றும், அபானவரணமானது பிரஹ்மமில்லையென்கிற அசத்தாவரணத்தை உறுதிபண்ணி, பிரஹ்மமிருந்தால் விளங்காதா, பிரஹ்மம் விளங்கவில்லையென்று பண்ணுமென்றும் சொன்னீர்களே, இப்படிப்பட்ட இரண்டுவிதமான ஆவரணங்களையும் என்ன உபாயத்தினால் ஜெயிக்கக்கூடுமென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ் சொல்லுகிறோம் கேள்:—ஒரு ராஜகுமாரனை ஒரு தாசியானவள் தன்னுடைய ரூபலாவண்ணியத்தினாலும், பேச்சுவார்த்தையினாலும், பாட்டுக்கூத்தினாலும், பலவிதமான மருந்தினாலும் அவனைத் தன்னிடத்தில் மோகிக்கும்படியாகச்செய்து, நாள்தோறும் இவளிடத்தில் தவறாமல் வரும்படிசெய்துகொண்டும், குருதெரிசனத்திற்கும் ராஜதெரிசனத்திற்கும் சுவாமிதெரிசனத்திற்கும் வெறுங்கையோடே போகக்கூடாது. பத்திர புஷ்ப பலாதிகளைக் கொண்டுபோய் வைத்து கும்பிட்டு விழவேண்டியவிதிபோல, தேவடியாளிடத்திலும் போகிறவன் ரத்னம் கனகமுதலான விலையுயர்ந்த வஸ்துக்களை கையிற்கொண்டுபோய் காணிக்கைவைத்து சுக்கிலம் விழுகிறவரையிலும் பலக்ஷீணமாகும்வரையிலும் கும்பிட்டுவிழவேண்டுமென்று அவள் உத்தரவு கொடுத்தபிரகாரம், இவனும் தன் தாயினிடத்தில் தேவடியாள்வீட்டிற்குப் போகும்போதெல்லாம் ரத்னங்களையும் பவுன்களையும் ரூபாய்களையும் பட்டுப்பட்டாவளிகளையும் சால்வை போர்வைமுதலானதுகளையும் தினந்தோறும் கொண்டுபோய்க் கொடுத்துக்கொண்டு வந்ததில் சகல சொத்தும் ஆய்ப்போய்விட்டதால், அன்றையத்தினம் தாயினிடத்தில் வந்து வழக்கம்போலே கேட்டவுடன், அவள் யாதொரு வஸ்துக்களும் இல்லையென்று சொல்லி, இத்தனைநாள் எத்தனையோ கோடிதிரவியம் கொடுத்திருக்கிறாயே, இன்றைக்குத்தான் சும்மா போய்விட்டுவாவென்று சொன்னபடி, இவனும் போய்க் கதவைத்தட்டினதில், அவள் என்ன கொண்டுவந்திருக்கிறாயென்று கேட்டதற்கு, இவன் ஒன்றுங் கொண்டுவரவில்லையென்று சொன்னதைக்கேட்ட அவள் கதவைத் திறக்கமாட்டேனென்று சொன்னதும், இவன் தாயினிடத்தில் ஓடிப்போய் பிராணத்தியாகஞ் செய்கிறேனென்றதைக்கேட்ட அவள், விலைமதிக்கக்கூடாத முத்திரைமோதிரத்தை எடுத்துக்கொடுத்து 'அவள்குகியத்தை தீவட்டியால் பார்த்தபின் கொடு' என்று சொன்னபடி அவனும் வாங்கிப் போய் இந்த மோதிரத்தை அவளிடத்திற் காண்பித்தவுடன் அவள் இதைக் கொடுவென்று கேட்டதற்கு இவன் "நீ சேலையை உரிஞ்சுப்போட்டு, என் கையில் தீவட்டியைக் கொளுத்திக்கொடுத்து ஆடுமாடு நடப்பதுபோல நட" என்று சொன்னபடி அவள் நடக்கும்போது தீவட்டியால் அந்தஸ்தானத்திலிருக்கிற புண்களையும் பூச்சிகளையும் மலமூத்திரம் பெருகுவதையுங்கண்டு அருசியுண்டாய் முன்கொடுத்திருந்த சொத்துக்களையும் அவளிடத்திலிருந்து பறித்து விரட்டின கதைபோல நீயும் விசாரதிருஷ்டியால் நிவர்த்திக்கக்கடவாய்.

224 - வது தரங்கம்.

*வேதாந்தத்திற் சொல்லுகிற குருசீடர்முதலான துவிதம் பயன்படாது:—*

வேதாந்தத்திற் சொல்லப்பட்ட குருசிஷ்யாதிகளும், ஆக்ஷேபசமாதானங்களும், பந்தமோக்ஷங்களும், மற்ற சகலவிதமாய் சொல்லப்பட்டிருக்கிற பேதங்களெல்லாம் அத்விதத்திற்கு விரோதமில்லாமல் விளையாட்டாகவே போகும். [எ - தி] குழந்தைகள் ஆம்பிடையான் பெண்டாட்டியாயும், பிள்ளை குட்டி பெத்ததாயும், சமைத்துச் சாப்பிடுகிறதாயும் விளையாடுகிற விளையாட்டெல்லாம் எப்படிப் பயன்படாதோ அப்படிப்போலவும்; நாடகத்தில் யுத்தம் முதல் பிரசவம்வரை காண்பித்தாலும் காரியமாகாததுபோலுமறிக. ஐயா, இந்த வேதாந்தசாஸ்திரத்திற் சொல்லப்படுகிற பந்தங்களும், அதை நிவர்த்திக்கவேண்டுமென்று நினைக்கிற முமுட்சுவும், அவனாற் சிரமப்பட்டு சம்பாதிக்கப்படுகிற நித்தியாநித்திய விவேகங்களும், இகாமுத்திரார்த்தபலபோகவிராகங்களும் சமம் தமம் விடல் சகித்தல் சமாதானம் சிரத்தைகளும், முமுட்சுத்துவமும், சற்குருவைப் போய்ச்சரணமாகவடைந்து, அந்த சற்குருவுக்கு இஷ்டமான காரியங்களை அவர் சொல்லாமலிருக்கும்போது இவனைப் பார்த்து அறிந்துசெய்கிற ஆப்தத்தையும், அக்குருநாதனுக்கு அப்பியங்கமுதல் சாப்பாடுவரை செய்விக்கிற அங்கத்தையும், அந்தக்குருவின் பதியிலுள்ள மாடு கன்றுகளையும் நிலங்கரைகளையும் தனதான்யங்களையும் முன் குடும்பத்திலிருக்கும்போது அவிடத்திலுள்ள மனைதனங்களையும் பண்டபதார்த்தங்களையும் பாதுகாத்ததுபோல பாதுகாக்கிற தானப்பணிவிடையும், அந்தக் குருநாதனை அகண்டபரிபூரண சச்சிதானந்தப் பிரம்மமே திருவுருவாய் எழுந்தருளிவந்திருக்கிற வஸ்துவென்று பார்க்கிற சத்பாவப்பணிவிடையும் செய்துவருவதும், அவர்சன்னிதியில் சாதுக்களோடே கூடியிருந்து ஷட்விதலிங்கத்தாலிடைவிடாமல் சிரவணம்பண்ணுவதும், அந்தச்சிரவணகாலத்தில் குருசிஷ்யர்கள் ஒருவருக்கொருவர் ஆக்ஷேப சமாதானங்களைச் செய்து வஸ்துநிர்ணயம் பண்ணுவதும், அப்படிச் சிரவணம்பண்ணின அர்த்தத்தைச் சாதுக்கள் சேர்ந்திருந்துகொண்டு சங்கை சமாதானத்துடன் மனனம் பண்ணிக்கொள்வதும், தனித்திருந்து சொப்பனதிருஷ்டாந்தமுதலான அநேக யுக்திகளால் சிந்திப்பதும், அந்தச்சிரவண மனனங்களாலே நிராக்ஷேபமாய் நிச்சயப்பட்டிருக்கிற ஆத்மசொரூபத்தில் மனதை ஸ்தாபித்து தைலதாரைபோலப் பிரம்மாகாரவிருத்திப்பிரவாகத்தைப் பழகுவதான நிதித்தியாசனமும், அதன்பின் இந்தப் பிரம்மத்தியானம் பண்ணுகிற ஞாதாவையும் பிரம்மாகாரவிருத்தியாகிற ஞானத்தையுமிழந்து காற்றில்லாதவிடத்தில் வைக்கப்பட்டிருக்கிற தீபம்போல அசைவற்றிருக்கிற பிரம்மமாத்திரமாயிருந்து விளங்குகிற சித்தமே சமாதியென்றும், இந்தச் சமாதியால் அனுதியாய் இந்தச்சம்சாரத்திற் கட்டுப்பட்டிருக்கிற சஞ்சிதகர்மங்களுக்கு நாசமும், தேகவாசனைமுதலான அனந்தகோடிகாலமாய்ப் பழகப்

பட்ட வாசனைகளுடைய க்ஷயமும், தன்னை நிர்மலம்பண்ணுகிற தர்மமும், அப்பிரதிபந்தமான அபரோக்ஷஞானமும் வருமென்பதும், அதனால் ஜீவன்முக்தி சுகமுண்டாகுமென்பதும்! எப்படிப் பொய்யென்று சொல்லலாமென்று கேட்பாயாகில், நாடகக்காரன் வேஷம்போட்டு நாடகம் கூத்தாட ஆரம்பித்ததுமுதல் நாடகம் முடிந்து வேஷங்கலைகிறவரை செய்ததெல்லாம் சுத்தப் பொய்யென்று சொல்வதுபோல, நீயும் இப்போது சொன்னதெல்லாம் பொய்யென்றறிக. அப்படிப் பொய்யென்று பார்ப்பதற்கு விபரீதபாவனையே தடையென்றறிக.

## 225 - வது தரங்கம்.

*விபரீதபாவனையைத் தத்துவ பாவனையால் நிவர்த்திக்கவேண்டும்:—*

விபரீதபாவனைக்கிடங்கொடாமற் சாக்ஷாத்காரஞானம் வரும்வரை சாவதானமாயிருக்கவேண்டும். [எ - தி] இந்திரஜாலம் எவ்வளவு நிஜம்போலே தோன்றினாலும் பொய்யென்ற திருஷ்டியை விடாமற் பார்த்துவருகிறவன் போலுமென்றறிக. [இ - து] விபரீதபாவனையைப் போக்கடிப்பதுதான் பிரயாசம். [எ - தி] வழிதப்பி நாற்காதம் போனபிற்பாடு அஞ்ஞானசந்தேகம் போய் நிஜவழி இன்னதென்று தெரிந்தாலும் விபரீதமாய் நடந்துபோன வழியைத் திரும்பக்கடந்து நிஜவழியில் வந்து சேருவது பிரயாசமானதால் வருத்தப்பட்டு அதைத் தத்துவபாவனையாற் கெடுக்கவேண்டுமென்றறிக. ஐயா, விபரீதபாவனை யென்பது எது? அது செய்கிறகெடுதி என்ன? அதை எதனால் நிவர்த்திக்கிறது? என்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:—விபரீதபாவனை யென்பது தேகாதிகளுக்குத் தான் விலக்ஷணமாயும் வேறாயுமிருந்தும், ஜகத்து எப்போதும் பொய்யாயிருந்தும், தேகாதிகளே நாம், இந்த ஜகத்து சத்தியமென்று பாவிப்பதே விபரீதபாவனையாம். இது செய்கிறகெடுதி என்னவென்றால், அனந்தகோடி ஜனனமரண துன்பங்களைக் கொடுக்கும். [எ - தி] ஒருவன் ஒரு நாயை வளர்த்துவந்ததில் அவனுக்கு ஒரு அவசரநிமித்தியமாய் இந்த நாயை நூறுரூபாய்க்கு ஒரு செட்டியிடத்தில் அடகாகவைத்துச் சீட்டெழுதிக்கொடுத்து நாயையும் செட்டிவசம் ஒப்புவித்து ஊருக்குப்போனபின், செட்டியுங் கொஞ்சக்காலங்கழித்து துலைக்கு வியாபாரத்துக்குப் போகும்போது இந்தநாயை பெண்டாட்டி விபசாரம்பண்ணாமலிருப்பதற்குக் காவலாக வைத்துவிட்டுப் போனபின், இவள் இனிமேல் சனியன் துலைந்தது, சங்கடந்தீர்ந்தது, என்று சந்தோஷப்பட்டுக்கொண்டு ஒரு வேலைக்காரியினிடத்தில் தன்னுடைய ஆசைநாயகனை சோரபுருஷனை இரவில் வரும்படிசொல்லி அனுப்பிவித்துவிட்டு, இவள் அவனுக்காக மாமிசமும் பலகாரமும் சாப்பாட்டுக்கும் சமையற்பண்ணி வைத்துக்கொண்டு காத்திருக்கும்போது, அவ்விரவில் வந்து அவைகளையெல்லாம் சாப்பிட்டு

விட்டுக் கொல்லையில்வந்து கைகழுவிவிட்டு ஒண்ணுக்கு உட்கார்ந்தசமயத்தில், அந்த நாய் குலையாமல்வந்து புடிக்கைக்கடித்து உதறிவிட்டதால் அவன் மரித்துப்போனதை அவள் கண்டு ரொம்பவிசனித்து, உடனே கொல்லையிலேயே குழியைத்தோண்டிப் புதைத்துவிட்டு அதுமுதல் இந்த நாய்க்கும் கஞ்சிவிடாமலிருந்துவிட்டாள். அது ஊரில் பொறுக்கித்தின்றுவிட்டு இந்தவீட்டைக் காத்துக்கொண்டுவருஞ் சமயத்தில் செட்டியார் தொலையிலிருந்து வீட்டுக்கு வந்ததும், நாய் இளைத்துப்போயிருக்கிறதைக் கண்டு மனைவியைக் கேட்டதில், அதற்குத் தினம் ஒருபடிசோறு வைத்தாலும் தின்று இப்படி இளைத்துப் போகிறதென்று சொன்னதைக்கேட்ட அந்த நாய், செட்டியாரை சாடை பண்ணி கொல்லையிற் கூட்டிப்போய் அவனைப் புதைத்திருக்கிற இடத்தைக் காலாலே பறண்டுவதைக்கண்டு, செட்டியார் தோண்டிப்பார்த்ததில் அந்தச் சோரபுருஷன் கடிபட்டுச் செத்திருப்பதைக்கண்டு மிகவும் சந்தோஷத்துடன் அந்த நாய்க்குடையவன் எழுதிக்கொடுத்த சீட்டையுங்கொடுத்து, நீ உன் ஊருக்குப் போவென்று சொன்னபடி, அதுவும் ஓலையை வாயில் கௌவிக் கொண்டு போகிறவழியில் பணசகிதமா யுடையவன்வந்து அந்த ஓலையை நாய் திருடிவந்ததாக நினைத்து நாயை வெட்டிப்போட்டுச் செட்டியாரிடம் பணங் கொண்டுவந்ததில், செட்டி நாய்செய்த உதவிக்காக கடனைத்தள்ளி சீட்டை அனுப்பிவித்தேனென்று சொன்னதைக்கேட்டு இருவரும் விசனித்ததுபோல வறிக.

## 226 - வது தரங்கம்.

ஞானிகளின் மகிமை :—

ஞானிகள் தாங்களும் சம்சார சமுத்திரத்திலிருந்து கரையேறியும், நிரேதுகமாக அதில்தபிக்கிற ஜீவர்களையும் கரையேற்றி வைக்கிறார்களென்பதற்கு யுக்தி:— சமுத்திரத்திலிருந்து கரையேறினவன் மற்றவர்களையும் தயையினால் தன் கப்பலைக் கொடுத்துக் கரையேற்றிவைப்பதுபோலும், இப்போது நம்முடைய குருநாதன் கிருதகிருத்தியனாயிருந்துங்கூட சம்சாரசமுத்திரத்தில் விழுந்து தபித்துக்கொண்டிருக்கிற நம் போலிகளுக்கு அனுக்கிரக கப்பலைக் கொடுத்துக் கரையேற்றிவைப்பதையும் பார்த்துக்கொள்ளத்தக்கது. [இ - து] ஈஸ்வரனும் ஞானியும் ஞானத்தால் சரியானாலும் ஈஸ்வரனுக்கு பஞ்சகிருத்தியமுதலான தொழிலினால் சிந்தனையும் கவலையும் தார்க்காலிக ராகத்துவேஷவாசனைகளுமிருப்பதால், அஃதில்லாத ஞானி அவரைக்காட்டிலும் சுகியாயும் அபகீர்த்தியில்லாதவனாயுமிருக்கிறான். [எ - தி] சகோதரர்களிருவரும் பூரணமான ஸ்ரீமானாயிருந்தாலும் அதிலொருவன் ராணிக்குள்ளகப்பட்ட உத்தியோகத்தை ஒப்புக்கொண்டதால் வேலைக்காரன் என்றபெயரும், அவள் ஆக்ஞைப்படி நடக்கவேண்டியதும், அதற்குத்தகுந்த கவலை ஆலோசனை ராகத்துவே

ஷாதிகளைச் செலுத்தவேண்டியதா யிருப்பதுபோலவன்றி, மற்றொருவன் ஒரு வேலையையும் ஒப்புக்கொள்ளாமல் சாவுகாரராயும் ராணியாலும் பூஜிக்கப்பட்டு நிர்ச்சிந்தனாய் நிர்ப்பயனாயிருப்பதுபோலவறிக. [இ - து] ஞானியினாலேயே சகலஜீவர்களுக்கும் உபகாரமுண்டேதவிர அஞ்ஞானிகளாலே ஞானிக்குப் பிரயோஜனமில்லை. [எ - தி] சித்தனாலே ஜனங்களுக்குப் பிரயோஜனமே தவிர இவர்களாலே அவர்களுக்குப் பிரயோஜனமில்லாததுபோலும், பெரியவனாலே குழந்தைகளுக்குப் பிரயோஜனமேதவிர குழந்தையினாலே அவனுக்குப் பிரயோஜனமில்லாததுபோலும், கண்ணுள்ளவனாலே குருடனுக்குப் பிரயோஜனமே தவிர இவனாலே அவனுக்காகவேண்டியதில்லாததுபோலுமறிக. [இ - து] நானென்கிற புருஷன் கருத்தாருத்துவாதிகளான அகங்கார அத்தியாசத்தைவிட்டு, தான் சாக்ஷிமாத்திரமாயிருந்தால் ஈஸ்வரன் நம்மைப் பவத்திற்கிழார். [எ - தி] ஒருவன் திருடர்களோடேகூடித் திருடுவதைவிட்டுச் சும்மாயிருந்தால் அவனைக் கச்சேரிக்குத் துரை வாரண்டுபோட்டு இழாததுபோலுமறிக. [இ - து] ஞானிகளுக்கு ஜீவகாருண்யமிருக்கும். அதாவது, அமுமுக்ஷுக்களுக்கு எல்லாம் பிரம்மமென்கிற ஞானத்தைச் சொல்லாமலிருப்பதே முக்கியமான கருணை. [எ - தி] வியாதிவந்து பிராணசங்கடத்தை யடைந்து கொண்டிருக்கிற குழந்தைக்குத் தாய் பக்ஷணத்தைக் கொடாதிருப்பதே பரம கருணையாவதுபோலவறிக. [இ - து] ஞானி சுத்தமூடர்களுடன் பேசும் போது அவர்களுக்காக வந்தேன் போனேனென்று சொன்னாலும், உள்ளே நான் சாக்ஷி, இது அகங்காரதர்மமென்று கண்டு சொல்வன். [எ - தி] இலக்கணவித்துவானானாலும் குழந்தைகளிடத்தில் பாச்சி சோச்சி உம்மாச்சியென்று சொல்லுவதுபோலும், சமஸ்கிருதம்பேசுகிற சாஸ்திரி குடியானவன் வந்த வேளையில் சோறுதிங்கிறயா, கஞ்சிகுடிக்கிறயா, பெண்சாதிபிள்ளை சுகமாவென்று கேட்பதுபோலுமறிக. [இ - து] ஆரூடஞானியானவன் நான் பிரஹ்மமென்பதை ஒரு நிமிஷங்கூட மறவான். [எ - தி] சூரியன் பிரகாசத்தையும், நீர் குளிர்ச்சியையும், தீ சூட்டையும்விட்டுப் பிரியாதிருப்பதுபோலுமறிக. [இ - து] அனுபவியானவன் அனுசந்தானத்தை மறவான். [எ - தி] தரித்திரனாயிருந்தவனுக்கு நாகரத்தினங் கையிற்கிடைத்தகாலத்தில் கள்ளர்பயமுள்ள காட்டுச் சத்திரத்தில் கண்மூடாமல் அதைக் காப்பாற்றிக்கொள்ளுகிறவன் போலுமறிக. [இ - து] வசிஷ்டாதி மகரிஷிகள் மஹாபுத்திசாலிகள். எதினாலென்றால், தாங்களும் சம்சாரசமுத்திரத்தைக் கடந்து, பிரஹ்மானந்தக்கடலிலிருக்கிற சுகத்தைக்கண்டு அனுபவித்து, அன்னியர்களுக்கும் அப்பியாசகாலத்தில் வருகிற துர்வாசனைகளைப் போக்கடிக்க மைத்திரியாதி சற்குணங்களையும் அநேக சுருதி யுக்தி அனுபவங்களையும் சாதகமாகப் பண்ணிக்கொடுத்துக் கரையேற்றிவைப்பதால், மஹா தயாளுக்களென்றும் மஹா புத்திசாலிகளென்றுஞ் சொல்லப்படுகிறார்கள். [எ - தி] ஒருதீரன் தானும் உப்புக்கடல் முதலானவைகளைக் கடந்து பாற்கடலைக்கண்டு பாலை எதேஷ்டமாய்ப் புசித்து

அன்னியர்களையுங் கப்பல்மூலமாய் யாதொரு சங்கடமன்றியில் கடத்தி, பாற்கடலில் முழுகிச் சுகிக்கும்படி செய்கிறவன்போலும், சுச வகை மிட்டாய் செய்து தானும்புசித்து வந்தவர்களுக்கும் எதேஷ்டமாய்ப் போடுகிறவன்போலு மறிக. [இ - து] உலகத்திலுள்ள அஞ்ஞானிகள் முழுமையும் சத்தியமென்று நம்பியிருக்கிற ஜீவேஸ்வர ஜகத்தைப் பொய்யென்று ஞானி ஒருவனே அறிந்து துணிந்திருக்கிறனென்பதற்குச் சுருதி யுக்தி அனுபவம்.

आबाल्पण्डितैः सर्वैः सत्यवद्दृश्यते जगत् ।
नास्तीत्येवं मयात्यक्तं पश्यध्वं ममाद्भुतम् ॥

என்ற சுருதியும்; எத்தனையோகோடி சுறுத்தமனுஷர்களுள்ள இந்த இந்தியாவில் வெள்ளைக்காரன் வந்து வெற்றிபெற்று அதிகாரஞ் செய்வதுபோலும், நதிப்பிரவாகத்தில் எதிர்த்து நீஞ்சிப்போகிற தண்ணீர்ப்பாம்புபோலுமென்ற யுக்தியும்; இப்போது நாம் இந்த ஜகத்தை சொப்பனம்போலே நிச்சயித்திருக்கிற அனுபவத்தையும் பார்த்துக்கொள்க. [இ - து] ஞானியானவன் ராஜ்ஜிய பாரமுதலான காரியங்களைச் செய்தால் சித்தத்தில் காமாதிகள் வாராதா வென்றால், வந்தாலும் வாசனையாய் சித்தத்திலிராது. [எ - தி] தாய் குழந்தையைக் குழியை வெட்டிப் புதைக்கிறேனென்று சொன்னாலும் உள்ளே அப்படிச் செய்ய எண்ணமிராததுபோலும், குருவானவர் சிஷ்யனுடைய மூர்க்ககுணத்திற்காக என்முகத்தில் முழியாதே ஓடிப்போவென்று சொன்னாலும் உள்ளே நிர்தயையாயிராமல், அவனுடைய துர்க்குணத்தை ஆகாசத்தில் தோற்றுகிற மேகத்தைக் காற்று காணுமற்பண்ணுவதுபோல போக்கடிக்கும் நிமித்தமென்றறிக. [இ - து] கணபதிமுதலான ஈஸ்வராதிகளைப் பூஜித்தவனுக்கு விக்கின நிவர்த்திமுதலான ஒவ்வொரு பிரயோஜனங்கள் கிடைக்குமென்றும், பிரஹ்ம ஞானியான குருநாதனைப் பூஜித்தவனுக்கு சகல புருஷார்த்தமுங் கிடைக்கும். [எ-தி]நெல்லு, எள்ளு, கொள்ளுமுதலான ஒவ்வொரு தானியங்களை விதைத்தவனுக்கு அந்தந்ததானியங்கள்மட்டும் விளைவதுபோலும், கற்பகவிருக்ஷங் காமதேனு சிந்தாமணிமுதலான ஒருவஸ்து அகப்பட்டவனுக்கு சகலவிதமான ஆடை ஆபரணங்களும், அறுசுவையுடன் ஆயிரம்விதமான போஜனமும், ரத்னுதிகளும் கிடைப்பதுபோலவறிக. [இ - து] ஞானி சத்துவமனதினுல் அஞ்ஞானுதிகளை அதம்பண்ணினபின் அந்தமனதையும் தன்னிடத்தில் லயம்பண்ணி, தான்மாத்திரமாயிருக்கிறுன். [எ - தி] ராஜன் அந்தப்புரத்துக்குப் போகும்போது கட்டியக்காரனுல் சகல ஜனங்களையுந்தள்ளிப் படுக்கைவீட்டில் நுழையும்போது கட்டியக்காரனையுந்தள்ளிக் கதவடைத்து தான்மாத்திரஞ் சுகித்திருப்பதுபோலவறிக. [இ - து] தத்வஞானத்தோடேகூடிய புருஷனுக்கு பிரவர்த்தியினுலும் நிவர்த்தியினுலும் ஆனிவிருத்தி ஒன்றுமில்லை. [எ - தி] அதிசூரனேடேகூடிய ஆளுக்கு காட்டிற்போனுலும் வீட்டிலிருந்தாலும் ஆனிவிருத்தியில்லாததுபோலும், அபேத்தியகவசத்துடன்கூடிய புருஷனுக்கு ஆயி

ரங்கோடி ஆயுதத்தால் அடிபட்டாலும் அரண்மனையிலிருந்தாலும் ஆனி விருத்தியில்லாததுபோலுமறிக. [இ - து] ஞானியினிடத்தில் கர்த்தா இல்லா ததினல் அவனுடைய தேகேந்திரியாதிகள் ஈஸ்வரப்பிரேரணையினுலும், வாசன வசத்தாலும், கர்மத்தாலும் நடக்கிறது. [எ - தி] ஒரு வண்டிக்காரன் தூங்கி விழுந்திறந்துபோனலும் முன்னலேபோகிற வண்டிபோல ஈஸ்வரப்பிரேரணை, பின்வண்டிபோல வாசனை, ரோட்டுப்போலக் கர்மம். இந்த மூன்றினல் ஞானி யின் சரீரமாகிற வண்டி நடக்கிறதென்றறிக. [இ - து] வாசனக்ஷயமான ஞானி கர்மத்தைச் செய்தாலும் விட்டாலும் பிரயோஜனமில்லை. [எ - தி] செத்தபிற்பாடு கயிற்றைப்போட்டுக் கட்டினலும் கனகதண்டிகையின்மேல் வைத்துப் பட்டணப்பிரவேசம் பண்ணிவைத்தாலும் அந்தப்பிணத்துக்குப் பிரயோஜனமொன்றுமில்லாததுபோலுமறிக. [இ - து] அனேகஜென்மங்களில் அனேகங்கோடி உபாயத்தால் எவனேஒருவன் தத்துவஞானத்தால் மோக்ஷ சம்பத்தையடைவன். [எ - தி] விளக்கெண்ணை பூசியிருக்கிற பளிங்குத்தூணி னுச்சியிலிருக்கிற பணத்தை எவனேஒருவன் அதிப்பிரயாசத்தாலேறி எடுப் பதுபோலும், மஹாமேருவினுடைய உச்சியிலிருக்கிற ரத்னக்கொடுமுடியை அபூர்வமாயொருவன் பிரயாசப்பட்டு ஏறியெடுப்பதுபோலும், பாம்புகள் சுற்றிக்கொண்டு அகாதத்திலிருக்கிற புதையலை அருமையாயொருவன் அந்தப் பாம்புகளை வெட்டி அந்தப்புதையலை எடுக்கிறவன்போலுமறிக. [இ - து] ஞானி விஷயானந்தத்தை இச்சியான். [எ - தி] தான்கக்கின பாயசத்தை நாய்சாப்பிட்டுக் கக்கினபின் அதை இச்சியாதவன்போலும், தன் சரீரத்தி லிருந்து விடப்பட்ட மலமூத்திரத்தைத் தான் புஜிக்க இச்சியாதவன்போலும், தரித்திரன் நிதியகப்பட்டபின் பழயதரித்திரத்தை இச்சியாதவன்போலுமறிக. [இ - து] எல்லா ஞானிகளிடத்திலும் சாபானுக்கிரகசக்தியு மிருக்குமென்னக் கூடாது. [எ - தி] நெல் உள்ளவனிடத்தில் கொள்ளுமுதலான தானியங்களு மிருக்கவேண்டுமென்ற நியமமில்லாததுபோலும், ஸ்திரீகளிடத்தில் எல்லா ஆபரணங்களுமிருக்குமென்ற நியமமில்லாததுபோலும், வேதம் படித்தவர்க ளிடத்திலெல்லாம் விற்பத்திக்ஞானமிருக்குமென்ற நியமமில்லாததுபோலு மறிக. [இ - து] ஞானி கிருதகிருத்தியனய் திருப்தனயிருப்பனென்பதற்கு சுருதி யுக்தி அனுபவமிருக்கிறதென்று சொல்லுகிருர். ஞானி 'நானே தன்னி யன் நானே தன்னியன்' என்று சொல்லுகிறனென்பதே சுருதி. கெடுகப்பல் கரையேறினதும் அதையுடைய செட்டி வெள்ளைவீசுவதே யுக்தி. நாம் கிரு தார்த்தனுனேமென்று சந்தோஷித்திருப்பதே அனுபவமென்றறிக. [இ - து] ஞானிக்கு சாதனபேக்ஷிதமான விஷயசுகந் தேவையில்லை. [எ - தி] ரத்ன தீபம் கையில் வைத்திருக்கிறவனுக்கு சாதனபேக்ஷைகளுடன் கூடிய விளக்கு தேவையில்லாததுபோலும், சித்தகுளிகையால் பசியும் வியாதியுந் தீர்ந்தவ னுக்கு சமயலும் மருந்தும் வருந்திச் செய்யவேண்டியதில்லாததுபோலுமறிக. [இ - து] ஞானியானவன் தன் சுயதிருஷ்டியில் சகலஜீவர்களையும் பிரஹ்மா

னந்தத்திலேயே முழுகியிருக்கிறார்களென்று பார்ப்பதால் அஞ்ஞானிகள் என்னமாய் ஜனனமரணத்தில் தபிக்கக்கூடுமெனில், ஓர்படுக்கையில் அனேகம் ஜனங்கள் படுத்து நித்திரைபண்ணும்போது, அதில் எவனோ ஒருபுருஷன் விழித்துக்கொண்டிருக்கிறவன் தான் எப்படிப் படுக்கையில் சுகமாயிருக்கிறானோ அப்படிச்சகலரும் சுகமாய் படுக்கையில் படுத்திருக்கிறார்களென்று இவன் பார்க்கவுங்கூடும். அவர்கள் சொப்பனத்தில் செருப்படி முதலானதைப்படுகிறதாகத் துக்கப்படவுங்கூடும். அப்படிப்போல இங்கும் விரோதமில்லையென்றறிக. [இ - து] விவேகியானவன் எந்தவிஷயத்தை அனுபவித்தாலும் அந்த விஷயமெல்லாம் பிரம்மானந்தமாகவே காணப்படும். [எ - தி] சர்க்கரைப் பிள்ளையாரை ஆசனம்முதல் சிரசுவரையில் எங்கேநக்கினாலும் தித்திப்பாய்க் காணப்படுவதுபோலவறிக. [இ - து] ஞானி பிரஹ்மத்தை யறிந்தேனென்றாவது அறியவில்லையென்றாவது சொல்லாமல் பிரஹ்மமாய் இருப்பன். [எ - தி] ஒருபுருஷன் புருஷனாக இருக்கிறதன்னை அறிந்தேனென்றாவது அறியவில்லையென்றாவது சொல்லாமற் புருஷனாயிருப்பதுபோலும், அமிர்தமானது அமிர்தத்தை அறிந்தேனென்றாவது அறியவில்லையென்றாவது சொல்லாமல் அமிர்தமாயிருப்பதுபோலுமறிக. [இ - து] ஞானிக்கு இருதயக்கிரந்தி அவிழ்ந்துபோய்விட்டதால் அவனுடைய கரணங்கள் வெளியில் வேடிக்கையாய் வந்தேன் போனேனென்று சொன்னதால் அவனுக்கு யாதொரு பந்தமுமில்லை. [எ - தி] பைஷ்டைபோனவள் வேடிக்கையாய் விபசாரவார்த்தையை வெறுமனேபேசினாலும் அவளுக்கு அத்தோஷம் வாராததுபோலும், விகடகவி சாராயங்குடித்தவன் உளறிக்கொண்டு மயங்கிவிழுவதுபோல அபிநயஞ்செய்தாலும் அவனுக்கு புத்தியில் மயக்கமும், சித்தத்தில் சுராபானதோஷமும், லோகதூஷணையும், வாயில் நாற்றமுமில்லாததுபோலுமறிக. [இ - து] திரிமூர்த்திகளும் ஞானியால் மூடர்களென்று சொல்லப்படுகிறார்கள். [எ - தி] பிரபஞ்சமாகிற கானல்ஜலத்தை நாமாகக்கண்டு சிருஷ்டி திதி சம்மாரங்களை செய்கிறோமென்று கெர்வத்தை யடைந்திருப்பதைப்பற்றியே அவர்களை முட்டாளென்று நினைக்கிறானென்றறிக. [இ - து] தான் சர்வவியாபகனாயிருந்தாலும் எல்லாரிடத்திலும் போய் ஏன் புஜிக்கவில்லையென்றால், அப்படித்தேவையில்லை. (எ - தி) ராணி சீமையெல்லாம் கட்டிஆண்டாலும் தான் கால்படி அன்னந்தானே சாப்பிடுவதும், ஓரரண்மனையில் ஓர்சிங்காதனத்தில் மட்டுமிருப்பதுபோல நாமும் சர்வவியாபகனானாலும் இந்தபஞ்சகோச அரண்மனையில் விஞ்ஞானமயமென்கிற சிங்காதனத்திலிருந்து நினைப்பாகிற கால்படி அன்னத்தைமட்டும் புஜிக்கலாமென்றறிக. [இ - து] ஜீவன் தேகேந்திரியாதிகளிடத்திலிருக்கிற அத்தியாசத்தை விட்டுவிட்டால் ஈஸ்வரனே அவனுடைய தேகாதி சவரக்ஷணையை நடத்திவைப்பார். [எ - தி] ஏழையாயிருக்கிறவனுக்கு ஒருநிலத்தை பிரபு சாகுபடிபண்ணிக் கிஸ்திகட்டிக்கொண்டு வரும்படி உத்தரவு செய்திருந்ததில் அவன் சாகுபடிபண்ணுவது கிஸ்திக்கே தன்னக்கட்டாமல் நஷ்டப்பட்டுவருங்

காலையில் அவன் இந்தநிலம் தனக்குவேண்டாமென்று ராஜிநாமா கொடுத்த பின், அந்தப்பிரபு அந்த நிலத்தைத் தன் பண்ணைநிலங்களோடு சேர்த்துப் பந்தோபஸ்துப்பண்ணிக்கொண்டு இவனையும் பாக்கிதாரென்கிற நிர்பந்தத்தி லிருந்து விடுதலைசெய்வதுபோலுமறிக. (இ - து) எல்லோருக்கும் ஞானம் வந் திருந்தாலும் தண்டுகமண்டலத்தோடேகூடியிருக்கிற சன்னியாசிகளிடத்திலே யே ஜனங்களுக்குப் பயபக்தி வரும். (எ - தி) வில்லையோடேகூடியிருக்கிற சேவகனுக்கே ஜனங்கள் பயப்படுவதுபோலும், அலங்காரத்தோடேகூடிய ஸ்திரீயினிடத்திலேயே ஜனங்கள் மோகிப்பதுபோலுமறிக. (இ - து) அக்கினி யில் செத்தையைப் போட்டமாத்திரத்தில் அக்கினியானது அதையெப்படித் தகித்துப்போடுமோ, அப்படி ஞானியினிடத்தில் ஒரு விஷயசங்கற்பமுண்டா னல் அதற்கு நான் சாக்ஷியென்ற ஞானக்கினி அதை எரித்துப்போடுமென் றறிக. (இ - து) ஞானம்வந்தபின் ஐந்தாவதுபூமிமுதலான சமாதிக்குப் போகாமலிருந்தால் அவனுடைய மனமுதலிய கரணங்கள் பிராரப்தகர்மவசத் தால் ஒரு பிரயோஜனத்தையும் உத்தேசியாமல், பழக்கப்படி யேதேனுமொன் றைச் செய்துகொண்டிருக்கும். (எ - தி) புருஷனேடே உடன்கட்டையேருத ஸ்திரீ உயிரோடேயிருந்தால் ஏதேனுமொருதொழிலைப் பிரயோஜனமன்றியில் செய்துவருவதுபோலவும், முதல்போன கோமுட்டி கடையில் சரக்கில்லாமற் போனலும் தராசில் படிக்கல்லை ஒருதட்டிற்போட்டு இன்னெருதட்டில் சரக் குப்போடுவதற்குப் பதிலாக தன் பிரகத்பீஜத்தை அதில்வைத்து லாபமன்றி யில் நிறுத்துக்கொண்டிருப்பதுபோலுமறிக. [இ - து] ஞானிகள் பாஷிய முதலான சகலகலாவல்லவராய் வந்த வித்துவானிடத்திலும் தத்துவஞான மிருக்கிறதா இல்லையாவென்று பரீக்ஷித்துத் தனக்குச்சரியான ஞானமிருந்தால் தான் அவரோடே சேருவார்கள். (எ - தி) யுவதியானவள் மன்மதன்போலே முகத்தையுடையவனய் வந்தாலும் மாணி இருக்கிறதா இல்லையாவென்று பரீ க்ஷித்துத் தனக்குச்சரியான மாணியுள்ளவனிடத்தில் சேருவதுபோலவறிக. [இ - து] விவேகியானவன் பஞ்சகோசத்தைத் தானல்லவென்று நேதித்து ஆத் மாவே தானென்றறிவன். (எ-தி) சமுத்திரத்தில் பாசிமுதலான வஸ்துக்களைத் தள்ளி ரத்னத்தைக் கிரகிப்பவன்போலும், பர்த்தாவல்லாதவர்களைத் தள்ளி பர்த்தாவைமட்டும் கிரகித்தகதைபோலுமறிக. [இ-து] ஞானிக்கு சுரோத்திரிய னென்று சொன்னதோடேகூட அகாமஹதனென்றும் வேதம் சொல்லுவானே னென்ருல், பிராம்மணனென்பதற்கு அடையாளம் குடுமி பூணூலோடே வேதபாடத்தையும் விதித்திருப்பதுபோலவறிக. [இ-து] ஞானி பிராரப்தபோகம் புஜிக்கிருனேயென்ருல், பரதிருஷ்டியிலேயேதவிர சொயதிருஷ்டியிலில்லை. [எ - தி] நாடகத்தில் தபிக்கிறதுபோல காண்பிக்கிற ஜாலமானதாபம் பார்க் கிறவர்களுக்கே யல்லாமல் அவனுக்கில்லாததுபோலவறிக. [இ - து] விவேகி எந்த நாமரூபத்தைக் கண்டாலும் சச்சிதானந்தமான குருசொரூபமாகவே பார்ப்பன். [எ - தி] செட்டி எந்தநகையையும் தங்கமாய்ப் பார்ப்பதுபோலும்

எந்தவஸ்திரத்தையும் நூலாய்ப் பார்ப்பதுபோலுமறிக. [இ - து] ஜீவன் முக்திசுகம் வைராக்கியத்துடன்கூடிய விவேகிக்கே அதிகமாய்வரும். [எ-தி] வெஞ்சனங்களுடன்கூடிய அன்னம் சுகங்கொடுப்பதுபோலும், யுக்திகளுடன் கூடின சிரவணம் சுகங்கொடுப்பதுபோலும், ஆபரணங்களுடன்கூடின பெண் அதிகசுகத்தைக் கொடுப்பதுபோலும், மெத்தை தலையணைகளுடன்கூடிப் படுப்பவனுக்கு விசேஷநித்திரை வருவதுபோலுமறிக. (இ - து) ஞானிக்கு விஷயத்தில் செய்யப்பட்ட எவ்விதவியாபாரத்தாலும் அதனாலுண்டாகிற சுக துக்கத்தாலும் தன் சுபாவானந்தம் மாறாது. [எ - தி] சர்க்கரையைக் கத்தியால் வெட்டினாலும், தண்ணீரிற்கரைத்தாலும், தீயில் காயவைத்தாலும், காற்றினால் உலர்த்தினாலும் தன்சுபாவமான தித்திப்பு மாறாதிருப்பதுபோலவறிக. [இ - து] பிராரப்தகர்மமானது ஞானியை எவ்விததுன்பத்தில் தள்ளினாலும் அவன் அதில் அழுந்தான். [எ - தி] நீஞ்சத்தெரிந்தவனைக் காற்றானது எவ்வளவு ஆழமுள்ள தண்ணீரில் தள்ளினாலும் அவனதிலழுந்தாமற் கரையேறுவதுபோலுமறிக. [இ - து] அகங்காரக்கிரந்தி அறுபட்டிருக்கிற ஞானிக்கு பின்பு அகங்காரத்தினிடமாய்க் கோடிஆசைவந்தாலும் அதினாலவனுக்குக் கெடுதியில்லை. [எ - தி] கடசிறுர்த்தம்செய்த தன் ஸ்திரீயைத்தள்ளினபின் அவள் செய்கிற விபசாரதோஷமும் விரதோத்தியாபனபுண்ணியமும் இவனுக்குச் சம்மந்தமில்லாததுபோலும், கயிறின்முடிச்சை அவிழ்த்தபிற்பாடு மற்றொரு கயிறை எவ்வளவு முறுக்கினாலும் அந்தமுறுக்கு இதிலேறாததுபோலும், நந்தவனத்தை விற்றபிற்பாடு கழுதைமேய்ந்தாலும் குதிரைமேய்ந்தாலும் விசனமில்லாதவன்போலுமறிக. (இ - து) சத்தையும் நாமரூபத்தையும் பிரித்து சத்து மெய் நாமரூபம் பொய்யென்று அறிந்தபின் நாமரூபந் தோற்றிக்கொண்டிருக்கும்போது ஞானியினிடத்தில் மாயை கெட்டுப்போச்சுதென்று எப்படிச் சொல்லலாமெனில்,—கல்லானை பொய்யென்று அறிகிறதேதவிர தோற்றாமற் போகிறதல்லாததுபோலும், கண்ணாடிக்குள் தன்முகமில்லையென்று அறிந்தாலுந் தோற்றிக்கொண்டிருப்பதால் ஆனி இல்லாததுபோலுமறிக. [இ - து] நல்ல நீச்சுத்தெரிந்தவன் சுரக்குடுக்கையைக் கட்டிக்கொண்டு நதியிற்போகும்போது மேற்கொண்டு எவ்வளவு பிரவாகம்வந்தாலும் தெரிந்துகொண்டே நீந்திக்கரையேறுகிறதுபோல, நாம் பிர்மம், தேகாதிபிரபஞ்சம் பொய்யென்று துணிந்தபிற்பாடும் பிராரப்தகர்மத்தால் எவ்வளவு விவகாரம் தோற்றினாலும் ஞானி அதில் அமிழ்ந்தி மயங்கானென்றறிக. [இ - து] அகண்டபிரஹ்மானந்தத்தை அனுபவிக்கிற ஞானிக்கு சர்வகாமாப்தி உண்டு. [எ - தி] பாற்கடலில் முழுகிக்கொண்டிருக்கிறவனுக்கு அதிலிருந்து கொஞ்சங்கொஞ்சம் பாத்திரத்திலெடுத்துவைத்திருக்கிற அமிர்தமெல்லாம் புஜித்ததாகவே ஆகிறதுபோலேயேதவிர அந்தந்தப் பாத்திரத்திலுள்ள பாலைப்போய் நக்கவேண்டியதில்லாததுபோல, பிரம்மாதிபதங்களில் போயிருந்து அந்தந்த லோகங்களிலுள்ள காமங்களை அனுபவிக்கவேண்டியதில்லை. அப்படிவேண்டுமென்றால்,

அப்போது ஞானி கர்த்தாவாயும் இவன்ஆனந்தம் கண்டமாயுமாகிவிடுமென்றறிக. [இ - து] ஞானியினுடைய சித்தமானது எவ்வளவு விவகாரம் செய்தாலும் தானும் தாபப்படாது பிறரையும் தாபப்படுத்தாது. (எ - தி) பிறர்வீட்டுக்கல்யாணத்தில் வாத்தியார்முதலானவர்கள் எவ்வளவு வேலைசெய்தாலும் கவலையில்லாமல் சீதளமாயிருப்பதுபோலவறிக. (இ - து) ஞானியைக்கண்டு ஒருத்தரும் பயப்படத்தேவையில்லை. (எ - தி) பல்லைப்பிடுங்கின பாம்பு படமெடுத்தாடினாலும் அதனிடத்திலும், கொடுக்கைநறுக்கின தேளினிடத்திலும், செத்துப்போன துஷ்டனிடத்திலும் தெரிந்தவரொருவருக்கும் பயமில்லாதது போலும், வில்லைபோன சேவகனையும், மழைபெய்ந்தபின்னிருக்கிற மேகத்தையும், பணம்போன சொக்கனையும், லேபனம்போன சிசுனத்தையும் கண்டு பயப்படார்கள்போலவறிக. (இ - து) ஞானி எவ்வளவு போகத்தைப்புஜித்தாலும் அவனுடைய சித்தத்தில் துக்கலேசமுமொட்டாது. [எ - தி] மலடி எத்தனைபேர்களுடன் போகித்தாலும் பிரசவதுக்கம் வாராததுபோலும், ஊஷரபூமியில் எவ்வளவு உரம்வைத்தாலும் ஒருபுல்லுகூட முளையாதது போலும், ஈபாபக்தன்போலிருக்கிற லோபியினிடத்தில் எவ்வளவுகாலங் காத்தாலும் ஒருகாசுகூட கிடையாததுபோலும், குருடன்முன்பாக எவ்வளவு கூத்துப்போட்டு ஆடினாலும் அவன் ரமிக்காததுபோலும், மூடனாயிருக்கிறவனுக்கு குரு எவ்வளவு விவேகத்தைச்சொன்னாலும் அவனுள்ளத்தில் இறங்காதது போலுமறிக. (இ - து) ஞானிக்குப் புண்ணியபாப சம்மந்தம் வாராது. (எ - தி) சொப்பனத்திலிருந்து விழித்தவனை அவிடத்திலுள்ள புண்ணியபாபம் சம்மந்தப்படாததுபோலவறிக. (இ - து) சதா பிரம்மவிசாரத்தால் சுகிக்கிறவனுக்கு ஏகதேசத்தில் விவகாரம் செய்கிறதாலுண்டாகிற துக்கம் பாதிக்காது. (எ - தி) லெட்சம்ரூபாய் ஆஸ்தியுள்ளவனை பத்துரூபாய்கடன் பாதிக்காததுபோலும், கெங்கையில் மூத்திரம் விழுந்தாலும் கெங்கையாய்ப்போவதுபோலுமறிக. (இ - து) ஒருதடவை சமாதிசுகத்தை யடைந்த மனது எவ்வளவு விவகாரம் பண்ணினாலும் அந்தச்சுகத்தை மறவாது. (எ - தி) அமிர்தம் ஒருதடவை சாப்பிட்டவன்போலும், புதிதாய் புருஷசுகத்தை யனுபவித்தவள்போலும், கெங்காஸ்நானம் பண்ணினவன்போலும், நாகரத்தினத்தைக் கண்டவன் போலும், நாரதர்கானத்தைக் கேட்டவன்போலும், கற்பகப்பூவை ஆக்கிராணித்தவன்போலும் மறவானென்றறிக. (இ - து) தேகத்திரயாத்தியாசத்தை விட்டிருக்கிற ஞானிக்கு பிராரப்ததுக்கம் எவ்வளவுவந்தாலும் அவைகளிலிவன் அகப்படான். (எ - தி) சித்தனை ஜனங்கள் எவ்வளவு ஹிம்சித்தாலும் வேதனை யடையாதிருப்பதுபோலும், பாம்பு சட்டைகழற்றின பிற்பாடு ஜனங்களந்தச் சட்டையை எவ்வளவு அடித்தாலும் அந்தப்பாம்பு வேதனையை யடையாதது போலும், உடுப்பைக் கழற்றினபின் அதை எவ்வளவு அடித்தாலும் அப்புருஷனுக்கு வேதனையில்லாதது போலுமறிக. (இ - து) தன்னிடத்திலிருக்கிற மாயா சக்தியினால் தானே ஜீவேஸ்வர ஜகத்தாய்த் தோற்றுகிறார் என்பதற்கு சுருதி:—

विश्वं पश्यति कार्यकारणतया स्वस्वामिसंबन्धतः
शिष्याचार्यतया तथैव पितृपुत्राद्यात्मना भेदतः ।
स्वप्ने जाग्रति वा य एष पुरुषो मायापरिभ्रामितः
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥

யுக்தி:—நித்திராசக்திபோலும், நாடகம்போலும் சமுத்திரம்போலும் அனுப
வம்:—தன்னிடத்திலிருக்கிற சங்கற்பத்தினுலே தானே திரிபுடியாய்த் தோற்
றுவதேயாம். ஆனுல் ஆத்மஞானியும் திரிபுடிவிவகாரஞ் செய்வதால் விகாரியா
ய்ப் போவரேயென்றுல், அப்படிப்போகார். (எ - தி) வேடிக்கைக்குத் திருடின
திருட்டு விநோதமாகுமேதவிர தெண்டனைக்காகாததுபோலும், குழந்தைகள்
போகமானது சந்ததிவிருத்திக்காவது, ஜாதிபிரஷ்டத்துக்காவது ஏதுவாகா
ததுபோலவறிக. (இ - து) தன்னையறிந்த ஞானி மரண மூர்ச்சைமுதலான
அவதியில் தாபப்படான். (எ - தி) சூரனுயிருக்கிற ராஜன் சிங்காதனத்தி
லிருக்கும்போது தன் சூரத்தனத்தைக் காண்பியாமல், சத்துருவந்து எதிர்த்த
காலத்தில் தீரனுய் அந்தச்சத்துருவை ஜெயிப்பதுபோல, ஞானியும் தன்
சொரூபஸ்திதியிலிருக்கும்போது ஞானதீரத்தைக் காண்பியாமல், தேகாதி
களுக்கு நாசம்வருங்காலையில் சந்திரன்போலத் தாபமில்லாமலும், மேருவைப்
போல அசைவில்லாமலும், சமுத்திரத்தைப்போல் குறைவில்லாமலும், ஆகாசத்
தைப்போல சங்கமில்லாமலிருந்து, வந்திருக்கிற அந்தமரணமாகிற எதிரிகளை
வென்று அழியாத நித்தியவாழ்வை அடைந்திருப்பனென்றறிக. (இ - து)
கிருதகிருத்தியனுயிருக்கிற ஞானிக்கு சரீரத்தாலொரு பிரயோஜனமுமில்லாம
லிருப்பதுந்தவிர, இவன் அதற்கே கடனுக்குச் சௌசாதிகிரியைகளைச் செய்து
அதனுல் துக்கப்பட்டுக்கொண்டிருக்கும்போது, அத்தேகத்துக்கு மரணம்வந்
தால் அப்போது சந்தோஷமாயிருக்குமேதவிர துக்கம்வராது. (எ - தி)
ஒருபுருஷனுக்கு வியாதிமுதலானதோடேகூடியிருக்கிற ஒருஸ்திரீயினுலே
யாதொரு சுகமில்லாமலுமிருப்பதுந்தவிர, அவளுக்குச் சௌசம்முதலான
சகலவேலையையும் இவனேபார்த்து சங்கடப்பட்டுவருங்காலையில், அவள் செத்
தால் அவன் சந்தோஷப்படுகிறதுபோலும்; அசமஞ்சனென்கிற புத்திரனை
திலீபனென்பவன் அரண்யத்தில் தள்ளிவிட்டு சுகமாயிருந்ததுபோலவறிக.
(இ - து) வர்ணுச்சிரமாதி விதிகளெல்லாம் அஞ்ஞானிக்கேயொழிய ஞானிக்
கில்லை. (எ - தி) சர்க்கார்வேலையை ஒப்புக்கொண்டவனுக்கே அந்தச்சட்டத்
தில் சொன்னபடி 10-மணிக்கு கச்சேரிக்குப்போய் வேலைபார்க்கவேண்டுமே
யொழிய வேலையை ராஜிநாமாகொடுத்தவனுக்கு அந்த விதியில்லாததுபோல,
கருத்துருத்துவாதி அபிமானத்தை அங்கீகரித்தவனுக்கே அதிலுள்ள விதி
நிஷேதங்கள் சொல்லப்பட்டிருக்கிறதேதவிர, அகர்த்தாவாகிய ஞானிக்குச்
சொல்லப்படவில்லையென்றறிக. (இ - து) அனுபவக்ஞானியினுடைய சித்தம்
பரிசுத்தமாயும், பிரகாசமாயும், கலக்கமன்றியிலும், ஏகாக்கிரமாயும், அசங்க

மாயும், சதா ஆனந்தமாயும், நிர்ப்பயமாயும், நிர்வாசனையாயுமிருக்கும். (எ - தி) கற்புடையமங்கை சுத்தமாயும், பிரகாசமாயும், நிச்சலமாயும், ஏகாக்கிரமாயும், மற்றுமுன்னே தாஷ்டாந்தத்திற் சொன்ன குணங்களையுடையவளாயுமிருப்பதுபோலவறிக. (இ-து) சகலவியாபாரமும் மனதுதான் செய்கிறது. அந்தமனதுக்குத் தான்சாக்ஷி. (எ - தி) நாடகவேஷம்போட்டு ஆடுகிறவனைப் பார்த்துக்கொண்டிருக்கிறவனுக்கு ஒருவிதமான சேஷ்டையுமில்லாமலும் விகாரமுமில்லாமலுமிருப்பதுபோலுமறிக. (இ - து) ஞானிக்கு பிரவர்த்தி நிவர்த்தி யிரண்டினுலும் பிரயோஜனமில்லை. [எ - தி] ரத்னதீபமிருக்கிறவனுக்கு இருட்டினுலும் தீபத்தினுலும் பிரயோஜனமில்லாததுபோலவும், சித்தகுளிகை புஜித்தவனுக்கு அன்னமிருந்தாலும் இல்லாவிட்டாலும் குறைச்சலில்லாதது போலவுமென்றறிக. (இ - து) ஞானியினுடைய ஆசிரிதமிருக்கிறவனுக்கு முக்திவரையாதொரு குறைச்சலுமில்லை. (எ - தி) ராஜாவினுடைய் சிநேகமிருக்கிறவனுக்கு விஷயசுகத்திற்குத் தடையில்லாதது போலுமறிக. (இ - து) சகலஜீவர்களுக்குள்ளே ஞானிக்குமட்டும் ஈஸ்வரன் தன்னுடைய மகிமையைக் கொடுக்கிறுர். [எ - தி] சகல மனுஷர்களுக்குள்ளே மந்திரிக்குமட்டும் ராஜா தன் ஆக்ஞையான கணையாழிமோதிரத்தைக் கொடுப்பதுபோலும், சகல தபசிகளுக்குள்ளே சூதருக்கு மட்டும் வியாசர் சகலருக்கும் குருவாயிருக்குகை கொடுத்ததுபோலும், சகல அவயவங்களுக்குள்ளே சிரசுக்குமட்டும் கிரீடம் வைப்பதுபோலுமறிக. (இ - து) ஞானிகள் பிராரப்துவத்தால் என்னென்னசெய்தாலும் அவர்களுக்கு நான் பிரம்மமென்கிற நிச்சயம் மாறுது. (எ - தி) விடசிரோன்மணிகளான வஞ்சவிந்திரன் அகலிகை இருவரையும் இந்திரத்துய்மனன் எவ்வளவு இம்சைசெய்ததினும் அவர்களுடைய பிரியம் மாறுதிருந்ததுபோலும், சுருதி யுக்தி அனுபவங்களுடன் நிஜத்தை யார் எவ்வளவுபோதித்தாலும் மதவாதிகளுடைய நிச்சயம் மாறுதிருப்பதுபோலும், பறையன்முதலான வேஷத்தை பிராம்மணன் போட்டாலும் தன்னிச்சயம் மாறுதிருப்பதுபோலுமறிக. (இ - து) திடஞானமுள்ளவனை பிராரப்தத்தால் சுகதுக்கமான எவ்வளவு விஷயங்கள் வந்தாலும், அவைகள் அவனை அசைக்காது. (எ - தி) நதியில் வேரூன்றியிருக்கிற பாறையை எவ்வளவு வெள்ளம்வந்தாலும் அசைக்கமாட்டாததுபோலவறிக. (இ - து) ஞானி ஒருவனைத்தவிர பாமரன்முதல் யோகிவரை ஒன்றுக்கொன்று மகிமை மகத்தாயிருந்தாலும், கர்த்துருத்துவரூபமான ஜீவத்தன்மைக்கு மோசமில்லை. (எ - தி) ராணி ஒருவளைத்தவிர தோட்டிமுதல் கவுனர்வரை சம்பள அதிகாரவிசேஷமிருந்தாலும் வேலைக்காரரென்பதில் மோசமில்லாததுபோலவறிக. (இ - து) ஞானிக்கு கர்மாதீனமாய் எந்தெந்தவிஷயம் வந்து சேர்ந்தாலும் அதெல்லாம் பிரம்மமாய்விடும். (எ - தி) சமுத்திரத்தில் எந்தெந்த நதி சேர்ந்தாலும் சமுத்திரமாவதுபோலும், ஜீவன் கர்மத்தாலெந்தெந்த சரீரத்தைச் சேர்ந்தாலும் ததாகாரமாய்ப் போவது

போலும், பூமி எந்தெந்த வித்தோடே சேர்ந்தாலும் பூமி ததாகாரமாய்ப் போவதுபோலுமறிக. [இ - து] ஞானி என்னென்ன தொழில்செய்தாலும் தான் சாக்ஷியென்பதை மறவான். [எ - தி] ரஜாவாங்கின உத்தியோகஸ்தன் எந்தவிடத்திற் போனாலும் அந்த ரஜாவாய்தாவை மறவாமலிருப்பது போலும், தண்ணீர்கொண்டுபோகிற தாதி கைவீசி தோழிகளுடன் என்னென்ன பேசிக்கொண்டுபோனாலும் தலையிலிருக்கிற நீர்க்குடத்தில் வைத்திருக்கிற திருஷ்டி மாறாதிருப்பதுபோலுமறிக. [இ - து] ஞானிக்கு சர்வகாமாப்தி ஒரேகாலத்திலுண்டாகும். [எ-தி] சூரியன்போலும், சமுத்திரஸ்நானம்போலுமறிக. [இ - து] தேகாபிமானம் நிசேஷமாய்ப் போய் பிரஹ்மமே தானென்று நன்றாய் அறிந்தவனுடைய மனது எந்தெந்த விஷயத்திற் போனாலும் அதனை தன்வடிவாய்ப் பண்ணுவதற்கும், அப்படித்தடையன்றியில் சொரூபாகாரமாய் விருத்தி ஓடிக்கொண்டிருப்பதற்கும் கூடும். [எ - தி] சித்தன்தேகம் இரும்பு முதலான எந்தலோகத்தில் சேர்ந்தாலும் அவைகள் தங்கமாவதுபோலும், ஆவரணமான கட்டடத்தை இடித்துவிட்டால் காற்றுத் தடையன்றியில் ஓடுவதுபோலுமறிக. [இ - து] சாக்ஷாத்காரஞானம் வந்தவனுக்கு பிரம்மானுபவம் எப்படியிருக்குமோவென்று சந்தேகம்வராது. [எ - தி] பிள்ளைபெற்றவளுக்குப் புருஷபோகமெப்படியிருக்குமோவென்று சந்தேகம் வராதது போலும், அமிர்தஞ்சாப்பிட்டு அமிர்தனாயிருக்கிறவனுக்கு அமிர்தம் எப்படியிருக்குமோவென்று சந்தேகம் வாராததுபோலும், இந்திரனுக்கு அப்சரஸ்திரீகளுடைய ஆட்டம் பாட்டம் ஸ்பரிசமுதலானதில் சந்தேகம் வாராதது போலுமறிக. [இ - து] ஞானிக்கு அகங்காரம் நசித்துப்போனதால் அதைப் பற்றியிருந்த புண்ணியபாபமும் நசித்துப்போம். [எ - தி] பக்ஷி இறந்த பிறகு அதன்பக்ஷங்கள் ஜீவித்திராததுபோலும், நாவைப்பிடுங்கிக்கொண்டு இறந்தவனுடைய குற்றங்களுக்குத் தண்டனையில்லாததுபோலுமறிக. (இ-து) ஞானிக்கு விதேகமுக்தி யுண்டென்று சொல்லுகிற சுருதி உபசாரமேயன்றி பரமார்த்தமில்லை. அவன் முன்னமே தத்துவஞானத்தினாலேயே சரீராதிகள் ஜீவித்திருக்கும்போதே முக்தனாய்விட்டதால். [எ - தி] துரோணாசாரியார் தன்பிராணாயாமத்தால் சரீரத்தைவிட்டு வெளியேறிப்போனபிற்பாடு திருஷ்டத்யும்னன் அவர்சரீரத்தை வெட்டிக் கொன்றானென்பதுபோலும், நாவிதச்சி இராவில் மூக்கறுபட்டதை, நாவிதன் காலமே கத்தியை எறிந்து மூக்கை அறுத்துவிட்டானென்று கலகம்பண்ணின கதைபோலுமறிக. [இ - து] ஞானியின் சித்தத்தில் எவ்வளவுவிவகாரம் கர்மத்தால் தோற்றினாலும் தங்காது. [எ - தி] ஆகாசத்தில் இந்திரஜாலமுதலானது எவ்வளவுதோற்றினாலும் ஒட்டாததுபோலவறிக. [இ-து] ஞானியை நிந்தித்தால் அவனுக்கு சந்தோஷம்வரும். [எ - தி] கணபதியைத் தொந்திவயிற்றனே, ஒற்றைக்கொம்பனே, சொளகுகாதனே, என்பவர்களுக்கு அவர் பிரசாதம்பண்ணுவதுபோலவறிக. (இ - து) ஞானியானவன் அஞ்ஞானிகள் பண்ணவேண்டிய கிருத்தியங்களை முந்தியே

செய்துகொள்ளாமல் தபித்துக்கொண்டிருக்கிற அவர்கள்குறைவைக்கண்டு, அவன் சந்தோஷப்படுவன். [எ - தி] ஒருவன் தான் செய்யவேண்டியதைச் செய்துமுடித்து மற்றப்பந்துக்கள் சமாராதனை செய்வதற்கு நெய் மோர் முதலான பதார்த்தங்களுக்கு அலைவதைக்கண்டு சந்தோஷப்படுவதுபோலும், வெள்ளம் வருமுன்னமே ஆற்றில்நின்று கரையேறினவன் வெள்ளத்திலகப்பட்டுத் தபித்துக்கொண்டிருக்கிறவர்களைக் கண்டு சிரிப்பதுபோலவறிக. (இ - து) மூடர்களுக்கு நான் பிரம்மமென்று தெரியாதபோனாலும் ஞானியினுடைய திருஷ்டியில் அவர்களையும் தன்னைப்போல பிரம்மமென்று பார்ப்பன். [எ - தி] தூங்குகிற குழந்தைக்குத் தன்னைத்தெரியாதபோனாலும் விழித்துக்கொண்டிருக்கிறவனுக்கு இந்தக்குழந்தை உயிரோடே படுக்கையிலிருக்கிறது தெரிவதுபோலும், பைத்தியம் பிடித்தவனுக்குத் தன்னுடைய பிரஹ்மகுலம் தனக்குத் தெரியாதபோனாலும் பைத்தியமில்லாதவன் அவனைப் பிராம்மணனென்றறிவதுபோலுமறிக. (இ - து) வைராக்கியமில்லாத ஞானிக்கு தனக்குச் சுகமும் லோகதூஷணமும் வரும். (எ - தி) கல்லுளிமங்கனுக்கு தனக்கு அரோகமும், உலகத்திற்கு அசிங்கமும் தோற்றுவதுபோலுமறிக. (இ - து) ஞானவைராக்கியங்களோடே கூடியிருப்பவருக்கு தனக்கும் உலகத்திற்கும் சந்தோஷம். (எ - தி) அலங்காரத்தோடேயும் அரோகத்தோடேயும் கூடியவனுக்கு தனக்கும் உலகத்திற்கும் சுகங்காணப்படுவதுபோலும், ரோகமில்லாத ராஜாவின் அலங்காரம் தனக்கும் உலகத்திற்கும் மகிழ்ச்சியைக் கொடுப்பதுபோலுமறிக. (இ - து) பிராம்மணன்முதல் நீசன்வரை யாருக்கு ஞானம் வந்தாலும் அவனை ஜீவன்முக்தனென்று சுருதிசொல்லும். (எ - தி) பரீக்ஷை கொடுத்தவர்களுக்குள்ளே தேறினவன் எந்த ஜாதியாயிருந்தாலும் அவனைக் கெஜட்டில் போடுகிறதுபோலும், ராஜஸ்திரீமுதல் நீசஸ்திரீவரையில் எவள் பிள்ளைபெற்றாலும் அவளை உலகம் புத்திரவதியென்று சொல்லுவதுபோலுமறிக. (இ - து) ஆத்மஞானி சகலர்களிடத்திலும் சமபுத்தியாயிருப்பன். (எ - தி) ராணி சகல ஜனங்களிடத்திலும் சமபுத்தியாயிருப்பதுபோலுமறிக. (இ - து) வைராக்கியமுள்ள ஞானிக்கும் அஃதில்லாத ஞானிக்கும் முக்திசரி. ஞானம் வைராக்கியம் இரண்டுமுள்ளஞானிக்கும், ஞானமாத்திரமுள்ளவனுக்கும் முக்திசரி. [எ - தி] ஒழுங்காய்ப்போகிற நதியும், ஆயிரம் கோணலாய்ப்போகிற நதியும் சமுத்திரம்போய் லயிக்கிறது சமானமாயிருப்பதுபோலவறிக. (இ - து) ஞானி வந்தேன் போனேனென்று சொன்னாலும், அவனுக்கு அத்தியாசமில்லை. [எ -தி] நாடகமாடுகிறவன் பிரசவமுதலான அவதிப்படுவதுபோலக் காண்பித்தாலுமவனுக்கு உள்ளே வேதனையில்லாதது போலும், விற்றமாடு மறுபடி பழக்கத்தால் தன்வீட்டுக்கு வந்தாலும், அதை உடனே வெருட்டுவனேதவிர தன்னதென்றபிமானியான் என்பதுபோலவறிக. (இ - து) ஞானத்தால் அஞ்ஞானம்போயும் பிராரப்தாந்தம்வரை தேகாதிஜகத்துத் தோற்றிக்கொண்டிருக்கும், [எ - தி] விருக்ஷமானது வேரோடே

வெட்டப்பட்டபிற்பாடும் அதின்காரியமான கட்டைமுதலானது சிலகால மிருப்பதுபோலவறிக. (இ - து) பிரம்மத்தில் ரமிக்கச்சொல்லிய சுருதிவாக்கியம் ஞானிக்குச் சுகமேதரும். நான் பிரஹ்மம் தேகாதிஜகத்துப் பொய்யென்ற ஞானம் உறுதியாயிருந்தாலும், வேதமும் அப்படிச்சொல்வதால் நமக்குச் சந்தோஷமேதவிர விசனமில்லை. (எ - தி) மாப்பிள்ளைக்குப் பெண்டாட்டியினிடத்தில் போகிக்கப் பிரியமிருந்தாலும், மாமியாரும் பெண்ணினிடத்திற் போகிக்கப் படுக்கைவீட்டுக்குப் போகச் சொல்வதினால் விரோதமில்லாதது போலவறிக. (இ - து) ஞானி புண்ணியத்தையே செய்ய இச்சியாதபோது பாபத்தைச்செய்ய இச்சியான். [எ - தி] பசியில்லாத சித்தன் பஞ்சாமிர்தத்தையே திங்க இச்சியாதபோது பன்றிமலத்தை பக்ஷிக்க இச்சியானென்பதுபோலும், அப்சரஸ்திரீகளின் பாட்டையே இச்சியாதவன் அழுகைக்குரலைக் கேட்க என்னமாய் இச்சிப்பன் சொல்? (இ - து) ஞானி விதேகமுக்திபரியந்தம் பிரம்மவிசாரத்தை வைத்திருப்பன். (எ - தி) ஓடக்காரன் ஜனங்கள் வரும்வரை ஓடத்தை விட்டுக்கொண்டிருப்பதுபோலும், தூரம்போனவளும் சாகும்வரை சேலை கட்டிக்கொண்டிருப்பதுபோலுமறிக. (இ - து) ஞானி சமாதியும் விவகாரமும் வைத்துக்கொண்டிருப்பவன். (எ - தி) குழந்தைகள் படிப்பும் விளையாட்டும் செய்வதுபோலும், பிரபு வந்தவர்களுக்குப் போஜனமும்போட்டுத் தானுந்தனித்துப் புஜிப்பதுபோலுமறிக. (இ - து) ஞானி ஜகத்தைப் பொய்யென்றும் பிரம்மமே தானென்றுமிருப்பதினாலே தோஷமில்லையோவெனில், பாமரனைக்காட்டிலும் கர்மம் பக்தி செய்கிறவனையே சுருதி சிலாக்கியமென்று சொல்லும்போது, உள்ளதை உள்ளபடியாயறிந்த ஞானிக்கு யாதொரு தோஷமுமில்லை. (எ - தி) அடித்துக்கொண்டு புண்பண்ணிக்கொள்ளுகிற குழந்தைகளிலும் பொம்மையைவைத்து நிழலில் விளையாடுகிற பிள்ளைகளே சிலாக்கியமென்றால், யோக்கியனைச் சம்பாதிக்கிற பிள்ளைக்கு கேட்கவேண்டியது என்னவிருக்கிறதென்று சொல்வது போலவறிக. (இ - து) ஜகத்து ஞானிக்குப் பொய்யென்றறிந்தபின்பு தோற்றினாலும் பயமும் ஆசையுமில்லை. (எ - தி) கல்லானையென்று தெரிந்தபிறகும் அது தோற்றுவதாலும், கண்ணாடிக்குள் பட்டணமில்லையென்று தெரிந்தவனுக்கும் அது தோற்றுவதாலும் பயமும் ஆசையுமில்லாததுபோலவறிக. (இ-து) ஞானியின் சரீரத்தைக் கர்மம் எந்தஊரில் கொண்டுபோய் சேர்க்கிறதோ அது அவ்விடத்திலுள்ள ஜனங்களின் அதிர்ஷ்டம். (எ - தி) காற்றானது மேகத்தை எவ்விடத்தில் தள்ளுகிறதோ அது அவ்விடத்திலுள்ள ஜனங்களுடைய அதிர்ஷ்டமாயிருப்பதுபோலவறிக. (இ - து) தன்னை ஆனந்தமாய்க் கண்டவனுக்கே விஷயாசைபோகும். (எ - தி) தன்வீட்டிலிருக்கிற புதையலைக் கண்டெடுத்தவனுக்கே பிக்ஷையெடுக்கிறது போவதுபோலும், தன்னுயகனுடைய சுகத்தைக் கண்டவளுக்கே கோவில் குளத்தாசை போவதுபோலவறிக. (இ - து) பிரம்மதிருஷ்டியுள்ளவன் விஷயத்தில் விழான். (எ - தி) கண்

தெரிந்தவன் பகலில் சுவரில் முட்டிக்கொள்ளாததுபோலும், தங்கத்தைக் கண்டவன் காக்காப்பொன்னில் கலங்காததுபோலுமறிக. (இ - து) ஞானிக்கும் மூடசங்கதிமுதலான பிரபல பிராரப்துவத்தால் விக்ஷேபந்தோன்றினும் தாற்காலிகமேதவிர நீடித்துத் துக்கப்படுத்தாது. (எ - தி) தீர்க்க வியாதி வந்தவனுக்கு சித்தகுளிகையால் அந்தவியாதி தீர்ந்திருந்தும் அபத்தியத்தால் மறுபடி ஒருக்கால் அந்தவியாதி உண்டானாலும் பழயகுளிகையினால் நிவர்த்திபண்ணிக்கொள்வதுபோல, பழயஞானத்தைப் பரிசீலித்து அந்த துக்கத்தை நிவர்த்திபண்ணிக்கொள்வன்; பாறையின்மேல் பேய்ந்த மழைபோலத் தங்காதென்றறிக. (இ - து) கோடிவிவகாரம் பண்ணினும் ஞானிக்குக் கருத்துருத்துவம்வாராது. (எ - தி) அருந்ததி ஆயிரம் ருதுசாந்திவீட்டுக்குப் போனாலும் கர்ப்பைவிடாததுபோலும், ஆயிரம் பேருக்கு மத்தியஸ்தம்பண்ணினாலும் கடன்பத்திரத்தில் தன் கையெழுத்துப் போடாத தந்திரிபோலுமறிக. (இ - து) ஞானிக்கு எவ்வளவு சங்கற்பங்கள் பேதமாயுதித்தாலும், சாக்ஷி நானென்கிற நிறையைத் தவிரான். (எ - தி) மிட்டாய்க்கடையில் ஈசன்முதல் நீசன்வரையில் செய்திருக்கிற அச்சுமிட்டாயை வாங்கவந்தாலும், அவன் தராசுநிறையைத் தவறுமலிருப்பதுபோலும், எவன் பெண்டாட்டி எவனோடேபோனாலும் லப்பை அஞ்சுபணத்தில் திருஷ்டியாயிருப்பதுபோலுமறிக. (இ - து) அஞ்ஞானகாலத்திலேயே அஞ்ஞானதிகள் அசங்கத்தன்மையைப் பொருந்தியிருக்கிற ஆத்மாவை ஒருபந்தத்திலுங் கட்டுப்படுத்தமுடியாதிருக்கும்போது ஞானவஸ்தையில் கேட்கவேண்டியதென்ன. (எ - தி) ஜனங்கள் தூங்குகிற ராத்திரிவேளையில்கூட ராஜாக்கினையால் திருடர்கள் ஒருசொத்தையும் திருடாமலிருக்கும்போது பகலிற் கேட்கவேண்டியதில்லாததுபோலுமறிக. (இ - து) ஞானிக்கு சன்னியாசம்முதல் எந்த ஆசிரமமும் சரியாயும், பார்க்கிற ஜனங்களுக்கு சன்னியாசம் பூஜிதையாயும் தோற்றும். (எ - தி) ராஜா பீதாம்பரமுதல் பீத்தத்துணிவரைக்கும் கட்டிக்கொண்டாலும் தன் ராஜத்தன்மை சரியாயிருப்பதும், பார்க்கிற ஜனங்களுக்கு கிரீடமுதலான ராஜஅலங்காரத்துடன்கூடியிருப்பது விசேஷமாய்த் தோற்றுவதுபோலவறிக. (இ-து) ஞானி என்னென்ன விவகாரம்பண்ணினாலும் அவன்புத்தியில் அது சத்தியமாய்த் தோற்றாது. [எ-தி] ஒருவன் ஒருசத்திரத்திற் போய் இறங்கினவேளையில் அங்கேயிருக்கிற ஜனங்களைத் தன்காரியத்துக்காக அண்ணா, அம்மா, பாட்டியென்று கூப்பிடுகிறதுபோலவறிக. (இ - து) ஜீவனில்லாத விருத்தி ஜன்மஹேதுவாகாது. (எ - தி) சுக்கிலம்போய் லேபனமற்ற சிசுனமானது பிரஜாவிருத்திக்குக் காரணமாக ஆகாததுபோலவறிக. (இ - து) ஞானியினுடைய கரணாதிகள் என்னதொழில்செய்தாலும் கருத்துருத்துவமின்மையால் பந்தம் வாராது. (எ - தி) வாத்தியாரில்லாத பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் எவ்வளவு விளையாடினாலும் தெண்டனையில்லாததுபோலுமறிக. (இ - து) ஞானி கர்மிகளுடைய கூட்டத்திலிருக்கும்போது கர்மிபோல இருப்பன், முமுக்ஷுகளு

டைய கூட்டத்திலிருக்கும்போது கர்மக்கட்டுகளைத் துறந்து ஞானோபதேசத்தை இஷ்டப்படிசெய்வன். (எ - தி) விடபுருஷன் கர்ப்புடையவர்களுடைய கூட்டத்தில் கர்ப்பைக்கொண்டாடி, காமினிகளைக் கண்டவேளையில் கர்ப்பைக் குலைத்துத் தன்னிஷ்டப்படி போகத்தைத் தீட்டுவதுபோலுமறிக. (இ - து) ஞானிக்கு அவர்மகிமை தெரிந்திருக்கிற ஈஸ்வராதிகள் பயப்படுவார்களேதவிர மற்றஜனங்கள் பயப்படார்கள். (எ - தி) ராஜாவுக்கு அவர் மகிமைதெரிந்த மந்திரிமுதலான உத்தியோகஸ்தர்கள் பயப்படுவார்களேதவிர குழந்தைகள் பயப்படாதிருப்பதுபோலும், ரத்னப்பரீக்ஷை தெரிந்தவன் அதை அவமதிப்புப்பண்ணப் பயப்படுவனேதவிர பரீக்ஷைதெரியாதவன் அவமதித்த கதைபோலுமறிக. (இ - து) அஞ்ஞானிகள்போலே ஞானி எவ்வளவு சுகதுக்க விவகாரம் வந்தாலும் அதில் அழுந்தாமலிருப்பானேனென்றால்; நதியில் ஜலப்பிரவாகம் மேல்மேல்வந்தாலும் கல்போலே அதிலழுந்தாமல் சுரைக்குடுக்கை மிதப்பானேன் சொல்? (இ - து) ஆத்மாவைத்தரிசித்தால் மற்றச்சகலர்களுடைய சினேகங்களும், சகல கர்மங்களுடைய பீதியும், சகல தெய்வபீதியும் போம். [எ - தி] ஸ்திரீயின்மேல் அதிகமோகம் வைத்தவனுக்கு மற்றத் தாய்முதலானவர்களுடைய சிநேகம் விட்டுப்போவதுபோலும், ராஜாவின் இஷ்டமுள்ளவனுக்கு மற்றக்கள்ளன்முதலான சத்துருக்களுடைய பயம் போவதுபோலுமறிக. (இ - து) வைராக்யாதி குணங்களுடன்கூடிய ஞானிக்கும் ஞானமாத்திரமுடையவனுக்கும் யுக்தி:— ஒரு குடும்பத்திலிருக்கிற யாவற்றுப்பேர்களும் ஒரேமனதாயிருந்து எஜமான் அன்னம்போடுவதுபோலும், எஜமான்மட்டும் யோக்கியனாயிருப்பதுபோலுமறிக. (இ - து) எப்போதும் தான் சாக்ஷியாயிருந்ததை மறந்துவிட்டதால் துக்கியாயிருந்து, இப்போது குருகிருபையால் தான் சாக்ஷியென்றறிந்து சந்தோஷிக்கிறான். (எ - தி) தன்னிலையிலிருந்து இழுத்துவிட்ட தேர் பள்ளத்தில் விழுந்திருந்ததை புத்திசாலியுடைய யுக்தியால் தன்னிலையில் வந்ததும் ஜனங்கள் கையைத்தட்டி சந்தோஷிப்பதுபோலும், கள்ளன் பறித்துப்போன பணம் ராஜாவின் கிருபையால் கைக்கு வந்ததைக்கண்டு சந்தோஷிப்பதுபோலும், (தன்போகத்தால் வந்தகெர்ப்பத்தை மருத்துவிச்சியால் பிள்ளைபெற்றபிறகு அவள் சந்தோஷிப்பதுபோலுமறிக.) (இ - து) ஈஸ்வரனுடைய ரோமக்கூபங்களில் அநேக அண்டங்கள் தொங்குகிறதென்று பக்தாள் அதிசயப்படுவதை ஞானிகள் சிதாகாசமான நம்மிடத்தில் இந்தக்கதைதானேதென்று சிரிக்கிறார்கள். (எ - தி) இந்திரஜாலமென்று தெரிந்தவன் சிரிப்பதுபோலவறிக. (இ - து) ஞானியினுடைய மகிமை உபநிஷத்தைப் பார்த்தால் தெரியும். (எ - தி) ராணியின் மகிமை சட்டத்தைப்பார்த்தால் தெரியுமென்பதுபோலும், ரத்தினத்தின் மகிமை பரீக்ஷையைச்சொல்லுகிற சாஸ்திரத்தால் தெரிவதுபோலுமறிக. (இ - து) ஞானியின் நிச்சயத்தை வேதம் பிரசித்திபண்ணுகிறது. (எ - தி) ராணியின்தீர்ப்பைக் கஜட்டு பிரசித்திபண்ணி வைப்பதுபோலுமறிக. (இ-து)

ஜீவத்துவம் நஷ்டமாய் பிரம்மமாயிருக்கிறவனை உலகத்தாருக்காக சுருதி ஞானியென்று சொல்லும். (எ - தி) செத்துப்போனவனைப் பார்த்து செத்துக்கிடக்கிறனென்று சொல்வதுபோலும், தூங்குகிறவனுக்கு நான் தூங்குகிறவனென்று எண்ணமில்லாதிருந்தாலும் மற்றவர்கள் தூங்குகிறனென்று சொல்லுவதுபோலுமறிக. (இ - து) ஞானிக்கு வருகிற காமக்குரோதாதி விருத்திகள் அன்னியர்களுடைய கர்மத்தால். (எ - தி) இடிமுதலானது விழுகிறது அவனவன் கர்மம்போலவறிக. (இ - து) ஞானிக்கு ஆத்மாவை நினைக்கவேண்டுமா வேண்டாமாவென்றால், எந்தப்புருஷனாகிலும் நான் புருஷனல்லவாவென்று அடிக்கடி கௌபீனபரீக்ஷை பண்ணிக்கொள்ளவேண்டுமா வேண்டாமா சொல்? இப்படி அஞ்ஞானிகளுக்குமிருக்கக்கூடுமாவென்றால், அஞ்ஞானியென்று கேட்ட உன்கேள்வியே அப்படி நினையாமலிருக்கக்கூடாதென்று உன்பல்லை உடைக்கிறதா அல்லவா சொல்? ஆகையால், அவனுக்கு மறவாமல் நினைக்கவேண்டுமென்றறிக. (இ - து) ஞானியானவன் அன்னியரையும் தன்னைப்போலக் கரையேற்றிவைப்பான். [எ - தி] சமுத்திரத்திலிருந்து கரையேறினவன் மற்றவர்களையுங் கரையேற்றுவதுபோலவறிக. [இ - து] சிதாகாசமாகிய நாமே சர்வமென்ற திடத்தினாலும், தேகாதி ஜகத்துக்கு விலக்ஷணன் நானென்று அறிந்து அதைப்பொய்யென்று பார்த்துக் கொண்டிருப்பதாலும், ஜகத்தைக்குறித்து நினைக்கத்தேவையில்லை. [எ - தி] சொப்பனத்திலிருந்து விழித்தவன் அவிடத்தில் கண்டதெல்லாம் தன்வடிவமென்றிருப்பதாலும், அதைப் பொய்யென்று கண்டிருப்பதாலும், அதைக் குறித்து நினைக்காமலிருப்பதுபோலவறிக. [இ - து] தாய்தகப்பனில்லாத குழந்தைகள் ஊரிலுள்ள ஜனங்கள்சொற்படி நடப்பதுபோல, அவித்தையாகிற தாயும் கர்த்தாவாகிற தகப்பனுமில்லாத ஞானியின்கரணங்கள் காலங் கர்மம் ஈஸ்வராக்ஞைகளாகிற ஜனங்கள் சொற்படி நடக்குமென்றறிக. (இ - து) ஞானி யோகிகளுக்குள்ளே மகாயோகி. எதனாலென்றால், உலகத்திலுள்ள யோகிகள் பிரஹ்மத்தில் ஏகதேசாம்சத்திலிருக்கிறதான மாயையினுடைய ஏகதேசாம்சமான வாயுவினுடைய ஏகதேசாம்சமான தேகத்திலிருக்கிற பிராணனைச் சாப்பிடுகிறான். ஞானியோவென்றால், சர்வகாரணமான மூலப்பிரகிருதியை மூலத்தோடே இல்லையென்று விழுங்கி, அந்தப் பூர்ணப் பிரம்மமாகவே இவனிருப்பதால் மகாயோகியென்று சொல்லப்படுகிறான். (எ - தி) கொஞ்சம் நஞ்சைத்தின்று செரித்துக்கொள்ளுகிறவனை சித்தனென்றால், காளகூடவிஷத்தை விழுங்கி நித்தியரான சிவனை மகாசித்தனென்று சொல்லுவதில் ஆக்ஷேபம் என்னஇருக்கிறதென்பதுபோலவறிக. (இ - து) அஞ்ஞானிக்குக்கூட தேகமானது அன்னியவிஷயமாய்த் தோற்றுதபோது, ஞானிக்குப் பிரஹ்மம் அன்னியமானவிஷயமாய் எப்படித்தோற்றும். (எ - தி) வைப்புவைத்திருக்கிற தாசியே பேதமாய்த்தோற்றுதபோது, சொந்தஸ்திரீ ஸ்திரீமோகிக்கு எப்படிப்பேதமாய்த் தோற்றுவள் என்பதுபோலவறிக.

(இ - து) அஞ்ஞானிகளுக்குள்ளே உத்தமாதமங்களிருந்தாலும் ஞானிக்குச் சகலரும் சமம். (எ - தி) குடிகளுக்குள் மேல்கீழிருந்தாலும் ராணிக்குச் சகலரும் சமானமாயிருப்பதுபோலும், அரண்மனைமுதல் அகல்சட்டிவரையில் மேல்கீழாயிருந்தாலும் மண் எல்லாத்திலுஞ் சமமாயிருப்பதுபோலவறிக. (இ - து) சாக்ஷாத்கார ஞானம் வந்தவனுக்கு தன்சொரூபம் ஒருக்காலும் மறக்காது. (எ - தி) பத்துப்பிள்ளை பெற்றவளுக்குத் தன்வீடு இது என்பதில் சந்தேகம்வாராததுபோலவறிக. (இ - து) ஞானியைப் பூஜித்தவனுக்குச் சகலமுங்கிடைக்கும். அதற்குச் சுருதி யுக்தி அனுபவமென்னவென்றால்,— ஞானியின் தரிசனம் சர்வதீர்த்தஸ்நானபலமென்றும், அவனைப் பூஜிக்கிறவன் ஜீவன் முக்தனுவனென்றும், அவனுக்குச் சாப்பாடுந் தனமுங் கொடுத்தவனுக்கு உடனே முக்தியென்றும், ஒருக்கால் அவனுடைய பாததீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தவன் ஞானியாகிறானென்றும் சொல்லுகிற சுருதிகளே பிரமாணம். அருச்சுனனுடைய ஒருபாணமே அனேககோடியாவதுபோல யுக்தி. நம் குருநாதனிடத்தில் நமக்கு ஜீவன்முக்திவரை இப்போது கிடைத்திருப்பதே அனுபவம். (இ - து) பூரணமான தனக்குவேறாக எள்ளளவேனுமொன்று இருக்கிறதென்றால் ஞானி சகியான். (எ - தி) சக்கரவர்த்தி தனக்கு எதிரியாக ஒருவனையும் வைத்துவைக்காததுபோலவறிக. (இ - து) ஒருசாஸ்திரத்தில் ஞானம்வந்தவனிடத்தில் வைராக்யாதி சகல சற்குணங்களுமிருக்குமென்றும், மற்றோரிடத்தில் ஞானிகளிடத்தில் வைராக்கியோபரதிகளில்லாதிருந்தாலும் குற்றமில்லையென்றும் சொல்லுவதற்கும் யுக்தி:— யௌவனஸ்திரீக்கு மலைபோலே ஸ்தன்னியங்கள் கெட்டியாயும் பெரிசாயுமிருப்பது சாஸ்திரத்திற் சொன்னபடி சரியாயிருப்பதும், மற்றொரு யௌவனஸ்திரீக்கு ஸ்தன்னியம் காய்ந்த எருக்கங்காய்போலவும், பையில் முக்கால்திட்டம் எடுத்த சத்துமா சஞ்சிபோலிருந்தாலும், போகத்துக்கும் பிள்ளைபிறப்பதற்கும் தடையில்லாததுபோலவறிக. (இ - து) நான் பிரம்மமென்கிற விருத்திஞானத்தோடே இடைவிடாமலிருந்தால் அஞ்ஞானுதி சத்துருக்களால் ஒன்றும் அவனை இம்சைபண்ணக்கூடாது. (எ - தி) கையில் சர்வசம்மார அஸ்திரம் வைத்திருக்கிறவனை ஒருவரும் ஜெயிக்கமுடியாததுபோலவறிக. (இ - து) விகாரியான மனதின் விவகாரத்திற்கும் சமாதிக்கும் சாக்ஷிநானென்று ஞானியின் நிச்சயமிருக்கும். (எ - தி) சமுத்திரத்தில் அலையுண்டாய் ஒய்வதற்கு சூரியன் சாக்ஷியாயிருப்பதுபோலவறிக. (இ - து) வைராக்கியத்தோடேகூடிய ஞானியின்மனது கர்மத்தால்வந்த சொற்பபோகத்தையும் பெரிதாய் நினைக்கும். (எ - தி) பசியாய்க்கிடக்கிறவனுக்கு பழயது கிடைத்தால் பெரிதாய்த்தோற்றுவதுபோலும், குழையைக் கட்டிக்கொண்டிருக்கிற வேடச்சிக்கு ஒருமுழத்துணியகப்பட்டால் பீதாம்பரம்போலத் தோற்றுவதுபோலுமறிக. (இ - து) ஞானிகள் அகர்த்தாவென்ற தேரிலேறி சகலலோகத்திலுஞ் சஞ்சரிக்கிறார்கள். (எ - தி) சூரியன் ஒருசக்கரம்போட்ட தேரிலேறி உலகமெல்லாஞ் சஞ்சரிப்பது

போலுமறிக. (இ - து) ஞானி ஞானதிருஷ்டியால் ஜகம்முழுமையும் மித்தையென்று எரிக்கிறார். (எ - தி) நெற்றிக்கண்ணால் சிவன் உலகத்தை எரிப்பதுபோலுமறிக. (இ - து) சர்வசாரமாயும் சர்வசத்தியுடையதாயுமிருக்கிற தத்துவஞானாயுதத்தால் குருகிருபையைப் பெற்றிருக்கிற ஞானி அகங்காரனைச் சம்மரிக்கிறான். (எ - தி) ததீசிமகரிஷியினுடைய எலும்பை இந்திரன் வச்சிராயுதமாய்ச் செய்து விருத்திராசுரனை சம்மரித்ததுபோலுமறிக. (இ - து) ஞானிக்குச் சுயதிருஷ்டியில் தேகாதிப் பிரபஞ்சமில்லை, பார்க்கிறவர்களுடைய திருஷ்டியிலே அவர் விவகரிப்பதுபோலத் தோற்றும். (எ - தி) ஸ்படிகத்திலாரோபமான நீலாதிவர்ணங்கள் அதற்குத்தோற்றாமற் பார்க்கிறவர்களுக்குத் தோற்றுவதுபோலும், கானல்ஜலம் அப்பூமிக்குத்தோற்றாமல் மயங்குகிறவர்களுக்குமட்டும் தோற்றுவதுபோலுமறிக. (இ - து) முந்தி சம்சாரதுக்கமனுபவித்திருக்கிற ஞானிக்கே பிறருக்குப் பிரம்மோபதேசம்பண்ணத் தோற்றும், மற்ற சுயக்ஞானிக்குத் தோற்றாது. (எ - தி) வசிஷ்டர் ஆதியில் சுயக்ஞானியாயிருந்து ஒருவருக்கும் உபதேசியாமலிருந்ததைப் பார்த்து, பிரம்மா சாபங்கொடுத்து துக்கத்தை யடைந்தபிறகு ஞானம்பெற்றுச் சகலருக்கும் உபதேசித்து வருவதுபோலும், கஷ்டப்பட்டுப் பிரசவித்தவளுக்கே மற்றவர்களுடைய பிரசவவேதனை தெரியுமேதவிர தத்துப்பிள்ளையையுடையவளுக்குத் தெரியாதது போலுமறிக. (இ - து) சன்னியாசத்தில் ஞானமும் வைராக்யமுமிருந்தால் அது விளங்குகிறதற்கு யுக்தி:— போஜனஞ்செய்து சந்தனாக்ஷதையும் வைத்துக்கொள்ளுவதுபோலும், மற்ற ஆசிரமத்தில் வைராக்யமன்றியிலுண்டாயிருக்கிற ஞானம் போஜனஞ்செய்து விபூதி பூசிக்கொள்வதுபோலும்; பசிநீங்கினது எப்படி இருவருக்குஞ்சரியோ அப்படிப்போல முமுக்ஷுக்களுக்கு முக்தி சரியென்றறியவேண்டியது. (இ - து) ஞானி தன்சுகத்தைப் பார்த்துக்கொள்ள தன்சித்தத்தைச் சதா சோதனைபண்ணுவன். (எ - தி) முகத்தைப் பார்த்துக்கொள்ளவேண்டியவன் கண்ணாடியை அடிக்கடி துடைத்துத் தன்முகத்தைப் பார்த்துக்கொள்ளுவதுபோல, தன் ஆனந்தத்தைப் பார்த்துக்கொள்ளுவனென்றறிக. (இ - து) ஞானி தான் தள்ளின விஷயானந்தத்தை அனுபவியாமல் பிரம்மானந்தத்தையே அனுபவிப்பன். (எ - தி) கூழ்குடித்து வாயிலெடுத்துவிட்டு ராஜகிரகத்தில் மிருஷ்டான்னபோஜனஞ் செய்கிறவன், அதை இச்சியாததுபோலும்; குஷ்டம்பிடித்தவளைக்கூடி குஹ்யவியாதிகளை அனுபவித்தவன் நல்லஸ்திரீயை அனுபவித்தபிறகு அவளை இச்சியாததுபோலுமறிக. (இ - து) ஞானியானவன் பிறரால் நிந்திக்க வந்திக்கப்பட்டாலும் அதனால் சுகதுக்கத்தை யடையான். (எ - தி) ஊரிலுள்ளோர் யாவரும் மலடிபிள்ளைகளில் சிலபேரை சிலர் துதித்தாலும், சிலபேரைச் சிலர் தூஷித்தாலும் இந்தச் சப்தங்களைக்கேட்ட அந்தமலடி சந்தோஷ விசனத்தை அடையாததுபோல, ஞானி தனக்கு மனதென்று ஒருபிள்ளையைப் பெறாதவனாயிருப்பதால், இவனுக்கு மனதென்கிற சிலபிள்ளைகள் பிறந்ததுபோலும்,

அவைகளில் சிறிதுகள் நல்லது பொல்லாததுகளாயிருப்பதுபோலும் சொல்லு கிற உலகத்தார்சொல்லை, இந்த மலடியாகிய ஞானி எவனவுங் கவனிக்கான். இன்னும் சிம்மத்துக்கு நரிமுதலான மிருகங்கள் தன்னைக்கொல்லுமென்கிற கவனம் வாராததுபோலுமறிக. (இ - து) ஞானி ஜீவேஸ்வரஜகத்தை ஒரே காலத்தில் அகண்டஞானஸ்திரத்தால் கொன்றதால் அதிக்ரூரனென்றும், சகலத் தையும் ஞானகுளிகையால் பிரம்மமாகிற தங்கமாய்ப் பண்ணுவதால் மகாசித்த னென்றும், சகல ஜீவர்களுக்கும் தன் பிரஹ்மானந்தான்னத்தைக் கொடுப்ப தால் மகா அன்னதாதாவென்றும், அதிவேகமான சம்சாரநதியில் எதிர்த்துச் சாக்ஷியென்று அந்தர்முகமாய் நீஞ்சுவதால் மகாதீரனென்றும், சகலத்தையு மறிந்திருப்பதால் சகலகலாவல்லபனென்றும் சொல்லப்படுகிறனென்றறிக. (இ - து) முமுக்ஷு ஞானியின்குலத்தில் பிறப்பது உத்தமம், சீமான்குலத்தில் பிறப்பது மத்திமம். (எ - தி) சகல பாஷையுங்கற்ற இருவர்களும் மரித்ததில், ஒருவன் ராஜன்வயிற்றிலும், ஒருவன் வேடன்வயிற்றிலும் வந்து பிறப்பது போலுமறிக. (இ - து) அறிவே தானயிருக்கும்போது தக்ஷிணாமூர்த்தி தானென்பதில் அதிசயமில்லை. (எ - தி) மகாமேருவே தானயிருப்பவனுக்கு அதிலிருக்கிற ரத்னக்கொடுமுடி தானென்பது அதிசயமில்லாததுபோலும், ராஜாவேதானென்னும்போது சிம்மாசனம் தன்னதென்பதில் சந்தேகமில்லா ததுபோலுமறிக. (இ - து) ஞானி ஜெகத்விவகாரஞ் செய்தாலும் அதிலவ னுக்கு ராகத்துவேஷம் வாராது. (எ - தி) ஒருபெண் தானே பள்ளாங்குழி வைத்து எதிரியாட்டத்தையுந் தானே ஆடுவதால் ராகத்துவேஷமில்லாதது போலும்; சித்திரீகன் ஸ்திரீ, புலி, பூனை, சிங்கம், யானைமுதலானவைகளை எழு தினாலும் ராகத்துவேஷமில்லாததுபோலும்; சொப்பனத்தில் கனகாபிஷேகஞ் செய்தவனிடத்திலும், ஆண்குறியை வாயில் வைத்தவனிடத்திலும் விழித்த பின் ராகத்துவேஷமில்லாததுபோலுமறிக. (இ - து) நானும் பிரஹ்மமும் ஒன்றென்பதற்கு தத்துவமசியென்ற சுருதியும், ராஜவேஷம் சேவகவேஷம் போட்ட புருஷன் ஒருவன்போலும், பிரபுவாயிருந்தவனே பரிசாரகஞ் செய் கிற தேவதத்தனொருவன்போலுமென்ற யுக்திபோலும், நானே சச்சிதானந்த மாயிருக்கிற நிச்சயமான அனுபவத்தாலுமறிக. (இ - து) துஷ்டர்களாயிருக் கிற கக்ஷிக்காரர்களுக்கு பொய்சொல்லுவது எப்படிச் சுபாவமோ அப்படி மனதுக்குப் பொய்யைக் கற்பிக்கிறதே சுபாவம், ஜட்ஜிபோலிருக்கிற நமக்கு இவையெல்லாம் பொய்யென்றறிந்துகொண்டிருக்கிறதே சுபாவமென்றறிக. (இ - து) ஞானம் வந்தவனும் அடிக்கடி சொரூபானுசந்தானம் பண்ணிக் கொண்டிருந்தால் அது கருத்தருத்துவமாகாதோவெனில், ஆகாது. (எ - தி) அருந்ததி அறுநூறுபிள்ளைபெற்றும் அவரோடே அடிக்கடி ஐக்யபோகம் பண்ணுவதால் அவளுக்கு விபசாரதோஷம் வருமென்று சொல்லுவதுபோல இருக்கிறதென்றறிக. (இ - து) சொப்பனத்திற்கண்ட ஜகத்வாசனையானது விழித்திருக்கிற நமக்கு எப்படி ஜன்மஹேதுவாகவில்லையோ அப்படி இந்த

ஜாக்கிரத்வாசனையும் சொரூபத்தில் விழித்திருக்கிற சிதாகாசமான என்னைச் சம்மந்திக்கமாட்டாதென்றறிக. (இ - து) ஆகாசத்தில் காற்றினால் எவ்வளவு தூளிபறந்தாலும் எப்படி அதில் சம்மந்தப்படவில்லையோ அப்படிச் சிதாகாசமான தன்னிடத்தில் சங்கற்பத்தால் தோற்றுகிற துவந்துவங்களெல்லாம் சம்மந்தப்படாதென்றறிக. [இ - து] வாசனையில்லாத ஞானி விஷயத்தில் சேர்ந்தாலும் அதில் ராகத்துவேஷ வியசனமுதலானதால் மயங்கான். (எ - தி) தாசி பணத்துக்காகப் புருஷனோடே சேர்ந்தாலும் மயங்காததுபோலும், வக்கீல்போலும், தகப்பன் பிள்ளையைக் கோபிப்பதுபோலும், நாடகவேஷகாலத்தில் விசனப்படுகிறதுபோலுமறிக. (இ - து) ஞானிக்குமேல் போக்கிலியும், விடனும், பேராசைபிடித்தவனும், கர்மியும், பக்தனும், யோகியும், முமுக்ஷுவுங் கிடையாது. [எ - தி] அவனை அடுத்தவனுடைய அஞ்ஞானமுதலான குடியை அடியோடே கெடுப்பதால் போக்கிலி; ராப்பகல் திதி வாரம் நக்ஷத்திரம் மானம் லச்சை ஒன்றும்பாராமல் நான் பிரம்மமென்ற மைதுனம் இடைவிடாமற்பண்ணுவதால் விடன்; ஈஸ்வரானந்தம்வரை வந்தாலும் அற்பமாய்த் தள்ளிப் பிரஹ்மானந்தத்தை எவ்வளவு அடைந்தாலும் திருப்தி வராமலிருப்பதால் பேராசையுள்ளவன்; விதேகமுக்தியாகிற சொர்க்கசுகத்தை இச்சித்து ஓயாத பிரஹ்மானுசந்தான கர்மத்தைப் பண்ணுவதால் கர்மி; பகவானாயிருக்கிற பிரஹ்மத்தை அனன்னியபுத்தியாய் இடைவிடாமற் பஜிப்பதால் பக்தன்; ஜீவாதாரமான கரியாகிற காலைப்பிடித்து இடைவிடாமற் பழகுவதால் யோகி; பிரம்மமாகிற குருவை இடைவிடாமற் சேவிப்பதால் முமுக்ஷு; அவர்களுக்கு அந்தத்தன்மைகள் மத்தியிலுண்டானதாயும், மத்தியில் விட்டுப்போவதாயும், க்ஷணத்தில் அழிந்துபோவதாயும், அடிநடுமுடிவுகளிலும் துக்ககரங்களாயும், ராகத்துவேஷாதி துவிதங்களோடேகூடியிருப்பதாயும், கொஞ்சந்தவறினால் முன்னுள்ளதற்கும் மோசம்வருவதாயும், இத்தியாதி அனர்த்தங்கள் வருவதுபோலன்றி, அதற்கிது விலக்ஷணமாயும் உவமையற்றதாயுமிருக்கிற ஞானியின் மகிமையை விநோதார்த்தமாய்க் கொஞ்சமெடுத்துக் காண்பித்ததேதவிர முற்றிலும் மும்மூர்த்தியாலுஞ் சொல்லமுடியாதென்றறிக. [இ - து] ஞானி தான் பிரம்மமென்றிருக்கவேண்டும், சுருதியும் பெரியவர்களும் பிரம்மவித்தென்று சொல்லவேண்டும். [எ - தி] மௌனியானவன் தான் வாக்கு மௌனமாயிருக்கவேண்டும், உலகத்தார் மௌனசுவாமியென்று சொல்லவேண்டுமேயல்லாமல் நான் மௌனசுவாமியென்று சொல்லக்கூடாததுபோல, இவனும் நான் பிரஹ்மவித்தென்று சொல்லக்கூடாது. அப்படிச்சொன்னால் பிரம்மவித்தாக ஆகமாட்டானென்றறிக. [இ - து] ஞானியானவன் அஞ்ஞானிகளுடைய நடத்தைகளைப் பார்த்துச் சிரிப்பன். [எ - தி] அதாவது அஞ்ஞானிகள் விஷயத்தைச் சத்தியமென்று கருதி ஓடும்போது, பத்துப்பேர் வழிநடந்து போகும்போது ஒன்பதுபேர் கானலைக்கண்டு ஜலமென்று ஓடுகிறபோது, தெரிந்தவன் அவர்களைப்பார்த்து சிரிப்பதுபோலும்; ஒரு தத்வங்களு

டைய பேதங்களும் அஞ்ஞானத்தால் தெரியாமல் முழிக்கும்போது, கண்ணுள்ளவன் குருடனைப் பார்த்துச் சிரிப்பதுபோலும்; ஞானசம்பத்தில்லாமல் ஜனனமரணதுன்பங்களை யடையும்போது, சம்பத்துள்ளவன் தரித்திரத்தால் வீடுதோறும் நுழைந்து வெளியில் தள்ளுபட்டு துன்பமடைந்திருக்கிறவனைப் பார்த்துச் சிரிப்பதுபோலும்; ஞானசித்தியை யடையாமல் பவரோகத்தால் துக்கப்படும்போது, காயசித்தன் ரோகியைக்கண்டு சிரிப்பதுபோலும்; போதகுமாரன் இல்லாதவர்கள் ஈசனுகிய புருஷன்வீட்டில் தனு கரண புவண போகங்களாகிற படிவாங்கிச் சாப்பிடுகிறவர்களை போதகுமாரனேடேகூடியிருக்கிற ஞானியாகிற பெண் பார்த்துச் சிரிக்கிறுளென்றும்; சிங்கம்போலிருக்கிற ஞானி நரிபோலிருக்கிற அஞ்ஞானியைக்கண்டு சிரிப்பானென்றறிக. [இ - து] ஞானிக்குச் சரீரங் கெங்கையில் மரித்தாலும் பறைத்தெருவில் மரித்தாலும் கூடுதல் குறைச்சலில்லை. [எ - தி] பானை யெங்கேயுடைந்தாலும் ஆகாசத்துக்குப் பேதமில்லாததுபோலும், சரீர மெங்கேபடுத்தாலும் சுழுப்திசுகம் சரியாய்வருவதுபோலும், முக்திசுகம் சரியாய்வருமென்றறிக. [இ - து] ஞானியினிடத்தில் சகல சற்குணங்களுஞ் சுயமாய்வரும். [எ - தி] உத்தமமான மூங்கிலிலும் முத்துச்சிப்பியிலும் முத்து சுயமாய்வருவதுபோலும், தமயந்தியினிடத்தில் நளன் சுயமாய்வந்ததுபோலும், ராஜனுடைய இஷ்டனிடத்தில் மந்திரிமுதலானவர்கள் சுயமாய்வருவதுபோலுமறிக. [இ-து] ஞானியின் மனசு சொப்பனத்தில் மூடன்போல சுகதுக்கத்தை அனுபவிக்கும், [எ - தி] வாத்தியார் இல்லாதவேளையில் சட்டாம்பிள்ளையும் மற்றப் பிள்ளைகள்போல விளையாடுவதுபோலும், கற்புடையவளும் புருஷனில்லாத வேளையில் விபசாரியைப்போலக் கண்டவர்களிடத்தில் சிரித்து விளையாடுவதுபோலுமறிக. [இ - து] ஞானிக்குக் கர்மத்தால் எவ்வளவு சுகதுக்கம் வந்தாலும் தன் சாக்ஷிஞானத்தை மறவான். [எ - தி] கனபாடி எவ்வளவு விவகாரஞ் செய்தாலும் வேதத்தை மறவாதிருக்கிறதுபோலவறிக. [இ - து] விவேகியானவன் குருகிருபையால் தானடைந்த ஞானனந்தத்தையும், மற்றவர்கள் அஞ்ஞானத்தால் துன்பப்படுவதையுங் கண்டு சந்தோஷிப்பன். [எ - தி] மழைகாலத்தில் முன்னமே விறகு அரிசிமுதலானதை சேகரித்துவைத்திருந்தவன், குதபகாலத்தில் சிரார்த்தஞ்செய்து தானும்புஜித்து, அப்படி முன்னமே அவைகளைச் சேகரித்துவைத்துக்கொள்ளாமல் திவசம்பண்ணத் திண்டாடுகிறவர்களைக் கண்டு சிரிப்பதுபோலவறிக. [இ - து] ஞானியானவன் கிருதகிருத்தியனுயிருந்துகொண்டு பிராரப்தத்தின் முடிவான சரீரநாசத்தை எப்போது வரப்போகிறதென்று பிரார்த்தித்துக்கொண்டிருப்பன். [எ - தி] காசிக்குப்போன கணவன் எப்போது வரப்போகிறுனென்று கற்புடைய மங்கை பிரார்த்தித்துக்கொண்டிருப்பதுபோலும், (ருதுசாந்திக்குச் சாக்கிரதையாயிருக்கிற வித்தியார்த்திக்கு பெண்டாட்டி எப்போது ருதுவாகப்போகிறுளென்று பிரார்த்தித்துக்கொண்டிருப்பதுபோலும்,) டிக்கட்டு வாங்கி ரயிலேறித் தன்

வீட்டையுத்தேசித்துப் போகிறவன் ஸ்டேஷன் எப்போது வரப்போகிறது எப்போது வீட்டுக்கு இறங்கிப்போவோமென்று இருப்பவன்போலவறிக. (இ - து) பிரம்மவிசாரத்தைவிட்டு விவேகி சொப்பனத்திற்கூட ஸ்திரீமுதலான விஷயங்களை இச்சியான். [எ - தி] ஹைக்கோர்ட்டு ஜட்ஜிவேலைக்குப் பரீக்ஷை கொடுத்திருக்கிறவன் அறைக்கீரைமணியத்தை ஆசைப்படாததுபோலவறிக. (இ - து) ராஜாவைப்போல இருக்கிற ஞானியின் சன்னிதானத்தில் என்னென்ன நடந்தாலும் அதனுல் அவனுக்கு சுகதுக்கலேசமுமில்லையென்றறிக. (இ - து) கல்லில் ஈஸ்வரத்துவம் வரலாமாவென்ருல், வரலாம். ஒரு மூடனைப் பார்த்து ராஜாவானவன் தயவினுல் மேலானவேலையைக் கொடுக்கிறதுபோல, ஞானிசிலையைப்பார்த்து ஈஸ்வரனென்று சொன்னுல் ஈஸ்வரனுக்குள்ள மகிமை அதிலுண்டாகிறதென்றறிக. [இ - து] ஐயா, விஷயத்தில் சுகமில்லாவிட்டால் ஞானிகள்கூட விவகாரம் பண்ணுவானேன்? [எ - தி] புருஷனுனவன் தன் காரியத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும்போது, தண்ணீரில் அவனுடைய நிழலுங்கூட வேலைசெய்கிறதுபோலத் தோற்றுவதுபோல, ஞானி நான் பிரம்மமென்றும், நம்மைத்தவிர வேறென்றுமில்லையென்றுமிருக்கும்போது, அந்தக் காணத்தினுடைய பூர்வவாசனையால் முன்போல விவகாரமானது குலாலசக்ரம்போல தன்படியாய் நடக்கிறதென்றறிக. [இ - து] நான் பிரம்மமென்றறிந்து அனுசந்தானம் பண்ணினுல், மற்ற இரண்டாவதான அஞ்ஞானமுதல் சுகதுக்கம்வரை ஒன்றுமில்லையென்றும், எல்லாம் அறியப்பட்டதாயிற்றென்றும் சொல்லுவதற்கு யுக்தி:— சொப்பனத்திலிருந்து விழித்தவனைப்போல அறியத்தக்கது. (இ - து) ஞானிக்கு எவ்வளவு சங்கற்பம் வந்தாலும் துக்கமில்லை. [எ - தி] மாயையாகிற பூமியில் வாசனையாகிற கறையானிருக்கும்போது, கர்மமாகிற மழையினுலே சங்கற்பங்களாகிற ஈசல்கள் எதேஷ்டமாய் உண்டாகிறதுகள், அதனுல் ஞானியாகிற ஆகாசபுருஷனுக்கு ஹானி விருத்தி ஒன்றுமில்லையென்றறிக. (இ - து) ஞானிக்கு விஷயத்திலிச்சை வாராது. [எ - தி] கானல்ஜலமென்று தெரிந்தவனுக்கு அதிலிச்சை வாராததுபோலவறிக. (இ - து) பிராரத்தபலத்தால் கோடி இச்சைவந்தாலும் ஞானிக்கு ஆளில்லாததினுல் ஹானியில்லை. [எ - தி] ஆறினசாம்பலில் நெய்யைக் குடங்குடமாய் ஓமஞ்செய்தாலும் பிரயோஜனமில்லாததுபோலவறிக. கருத்து,— வாசனுவிறகோடேகூடிய ஜீவத்தீயற்றதால் சங்கற்பநெய் எவ்வளவுவிட்டாலும் ஜன்மச்சுவாலை யுண்டாகாதென்றறிக. (இ - து) ஞானி தானுங்கரையேறி, அன்னியர்களையும் நிஷ்காரணமாகக் கரையேற்றிவைக்கிறுன். (எ - தி) கடலைக்கடந்தவன் அன்னியர்களையும் இரக்கத்தால் கரையேற்றிவைப்பதுபோலுமறிக. (இ - து) தன்னைத் தானுக அறிகிறவரையில்தான் துக்கம். (எ - தி) விழிக்கும்வரையுள்ள சொப்பனம்போலவறிக. [இ - து] ஞானிகளெப்படியிருப்பார்களென்ருல், அறுபத்துநாலுகலையிலுள்ள 64 விதமாயிருப்பார்கள். அவர்கள் எப்படிஎப்படி இருக்கிருர்களோ, அதுதுவே விதி.

(எ - தி) சக்ரவர்த்தியானவன் எப்படி எப்படி நடக்கிறானோ அததுவே விதியாயிருப்பதுபோலவறிக.

ஐயா, இதுவரை ஞானிகளுடைய மகிமையை விஸ்தாரமாயும் அநேக திருஷ்டாந்தங்களுடனும் தாங்கள் வர்ணித்ததையெல்லாங்கேட்டு மகாசந்தோஷத்தை யடைந்தேன். இப்படி இதற்குமுன்னுண்டான சாஸ்திரங்களிலும், இனிமேலுண்டாகப்போகிற சாஸ்திரங்களிலும் சொல்லப்படாததாயும், கேட்கப்படாததாயும், அதிகரகசியமாயும், ஒன்றுந்தெரியாத சுத்தமூடனுக்குக்கூட இதைக் கேட்டமாத்திரத்தில் வெய்யலில்வைத்த வெண்ணெய்போல மனசு உருகி அவனும் இதைச்சரியென்று ஒப்புக்கொண்டு அந்தப்படி அப்பியாசம் பண்ணிக் கரையேறும்படியாய் அனுக்கிரகிக்கப்பட்டதாயுமிருக்கிறது. இன்னமும் தங்களுடைய வசனாமிர்தத்தைக்கேட்டு போதுமென்று திருப்திவாராததினால், இன்னமும் அந்த ஞானிகளுடைய மகிமையும் அவர்களுக்குச் சிசுருஷை பண்ணுகிறவன் பெறுகிற பிரயோஜனத்தையும் எனக்குக் கொஞ்சம்சொல்ல வேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:— வாராய் குழந்தாய்! மகாத்மாக்களான ஞானிகளுடைய மகிமையை இன்னவிதமென்று சொல்லக்கூடாதென்று பிரம்மகீதையில் பிரம்மா தேவதைகளுக்குச் சொன்னதாவது "ஓ தேவதைகளே! ஞானியினுடைய நிஷ்டையைச் சொல்லுவதற்கு என்னாலும் முடியாது. நாராயணனாலும் முடியாது. மகாப்பிரபுவாயிருக்கிற சிவனாலும், தேவியினாலும், முனீஸ்வரராலும், புராதனமான வேதத்தினாலும், மற்ற எவர்களாலுஞ் சொல்லமுடியாமல் அந்தவிஷயத்தில் ஊமையாயிருக்குந்தன்மையை அடைகிறார்கள், பின்னை எப்படியிருக்கிறதென்றால், அவர்களுடைய நிஷ்டையானது அவர்களுடைய நிஷ்டைபோலவே யிருக்கிறது" என்று பிரம்மா சொல்லியிருப்பதாலும், அவர்கள்மகிமையை நான் எப்படிச் சொல்லப்போகிறேன். அவர்களுக்கு சிசுருஷைபண்ணுகிறவனுடைய மகிமையைப்பற்றி முக்திகாண்டத்தில் மகாவிஷ்ணுவானவர் பரமசிவனிடத்தில் கேட்டதற்கு, பரமசிவன் சொன்னதாவது மகாபாபியாயிருந்த சசிவர்ணனென்பவன் மகானந்தபாராயணரிடத்திற் போய்ச் சரணாகதம்பண்ணி அவருடைய சிசுருஷாபலத்தால் சகலபாபமும் போய் முக்தனானானென்றும், மகாபாபியான சுபகை என்ற தாசியானவள் சக்கரதரனென்ற ஞானியைச் சரணமாகவடைந்து அவருடைய சிசுருஷையால் சகலபாபங்களும் போய் முக்தியையடைந்தாளென்றுஞ் சொல்லியிருக்கிறதும்தவிர, சனற்குமாரசம்கிதையில் சுப்பிரமணியர் சனற்குமாரருக்கு ஞானோபதேசம் பண்ணிக்கொண்டு வரும்போது, சனற்குமாரர் குருவான குமரரைப் பார்த்து ஞானிகளுடைய சிசுருஷை பண்ணினவனுடைய மகிமையைக் கொஞ்சம் சொல்லவேண்டுமென்று கேட்டவுடன், சுப்பிரமணியர் சொல்லுகிறார். "ஓய் சனற்குமாரரிஷியே! திருவாரூர் க்ஷேத்திரத்தில் நம்பியென்ற வேளாளன் சிவபக்தசிரோன்மணியாயிருந்து பிள்ளையில்லாமல் அவனும் அவன் பெண்சாதியும் இருவருஞ்சேர்ந்து கடி

லாலயத்தில் பிராதக்காலத்தில் ஸ்நானஞ்செய்து தியாகராஜனைப் பக்தி புரஸ்சரமாக பிரதக்ஷண நமஸ்கார தோத்திரங்கள்முதலான கைங்கிரியங்களை மூன்றுவருஷம்வரை நேமந்தவறாமல் தபசுசெய்து வந்தபின், அந்தத் தியாகராஜன்கிருபையால் கெர்ப்பமுண்டாய் ஒருபிள்ளையும் பிறந்தது. ராவணன் பிறந்ததும் அவன்சப்தத்தால் உலகமெல்லாம் பயந்ததால் அவனுக்கு ராவணனென்று பேர்வைக்கப்பட்டதுபோல, இந்தக்குழந்தை பிறந்தமாத்திரத்தில் சப்தித்த சப்தத்தால் 'கள கள' என்று சப்தங்கேட்கப்பட்டதால் கோலாகலனென்று ஜனங்கள் அந்தக்குழந்தைக்குப் பேர்வைத்தார்கள். அந்தக்குழந்தையும் களிமண்ணுள்ள கண்மாய்க்குள் கருவேலஞ்செடி வளருவதுபோல விருத்தியானான். அப்படி மகாகண்டகனாய் யௌவனத்தையடைந்து அநேக திருடர்களோடேசேர்ந்து கத்திமுதலான ஆயுதங்களை எடுத்துக்கொண்டு அநேகம்பேர்களை வெட்டி அவர்கள்சொத்துக்களையெல்லாம் அபகரித்து, கண்ட ஸ்திரீகளையெல்லாம் பலாத்காரம்பண்ணி அவர்களுடைய கற்புகளையெல்லாம் அழித்து, இன்னும் அநேக சிசுக்களைக்கொன்று, அவைகளுக்குப் போட்டிருந்த ஆபரணங்களையெல்லாம் அபகரித்துக்கொண்டும், அநேக ஊர்களுக்கு ராத்திரிவேளையிற் போய் ஒருபக்கத்தில் ஒருவீட்டில் தீயைக்கொழுத்திப் போட்டுவிட்டமாத்திரத்தில் அந்தக் கிராமஜனங்களெல்லாம் அந்தத் தீயை அணைக்கத் தங்கள்வீட்டைவிட்டு வெளியேறிப்போனமாத்திரத்தில், இவன் சில துஷ்டர்களோடேகூட அந்தச் சொத்துக்களையெல்லாம் அபகரித்துக்கொண்டும், இன்னுஞ் சில பிரபுக்களுக்கு விஷம்வைத்துக்கொன்று அவர்களுடைய தனதானியங்களையும் ஆடுமாடுகளையும் அபகரித்து, அநேக கோஹத்தி முதலானவைகளைச் செய்து அந்த மாமிசங்களைப் புசித்துக்கொண்டும், குடங்குடமாய்க் கள்ளுச்சாராயங்களைக் குடித்துக்கொண்டும், இன்னும் அநேகவிதமான பாபங்களைச் செய்துவருங்காலத்தில், எமதர்மராஜாவும் சித்திரகுப்தனும் இவன் செய்யப்பட்ட பாபங்களுக்கு நம்முடைய உலகத்திலுள்ள இருபத்தெட்டுகோடி நரகங்களும் போதாததுபோல யிருக்கிறது, மேலும் நம்முடைய பட்டம்முடிந்தாலும் இவனுடைய பாபம் முடியாததுபோல இருக்கிறதென்று சதாகாலமும் இவனுடைய சிந்தனையாகவே யிருக்கும்போது, இவன் தன்னுடைய தாயைப் பலாத்காரமாய்ப் போகம்பண்ணிக்கொண்டு சிலநாள் வரும்போது, ஒருநாள் இவன் போகித்துக்கொண்டிருக்கும்போது இவன்பிதாவான நம்பி வந்து பார்த்ததை இவன் கண்டு, உடனே இடுப்பிலிருந்தகத்தியால் பிதாவாகிய நம்பியை வெட்டப்போகும்போது, இவன்தாயானவள் வந்து மறித்துக்கொண்டவுடன், இவன் அவளையும் அவனையும் வெட்டிப்போட்டமாத்திரத்தில் உத்கடமான பாபத்தால் அதிகோரமான அக்கினிஜ்ஜுவாலாரூபமாய் ஒருபிரஹ்மஹத்தி ஒருபெரிய உலக்கையைத்தூக்கிக்கொண்டுவந்து இவனை விரட்டினவுடன் இவன் ஓட அது விரட்ட இப்படி இந்த பூமண்டலமுழுமையும் ஓடினதிலும் அது விடாமல்விரட்டிக்கொண்டு வரும்போது, தெய்வகெதி

யாய் வேதாரண்ணியமென்கிற மகா க்ஷேத்திரத்தில் வந்து நுழைந்தமாத்திரத்தில் அந்தப்பிரஹ்மஹத்தி அந்த அரண்ணியத்திற்குள் நுழையமாட்டாமல் வெளியில் நின்றுபோனமாத்திரத்தில், இவன் இந்தவிடத்தில் இந்த உலகத்திலுள்ள திவ்வியக்ஷேத்திரத்திற்குள் விசேஷமகிமை இருக்கிறதென்று நம்பிக்கையுண்டாய், அந்தச் சுவாமிசன்னிதியிலிருக்கிற வேதநதியில் ஸ்நானஞ்செய்து வன்னிமரரூபமாயிருக்கிற வேதாரண்ணிய ஈஸ்வரரையும் தெரிசித்து, மகாலிங்கத்தையும் தெரிசனம்பண்ணி, வீணாவாதவிதூஷணியென்ற தேவியையும் தெரிசித்து, அவிடத்திலுள்ள சுவேதகேதுரிஷியையும் விஸ்வாமித்திரர்முதலான ரிஷிகளையும் பிராசீனயோக்கியரென்ற மகரிஷியைக் கண்டு சரணாகதம்பண்ணினபின், அவர்கள்கிருபையால் நீயாரென்று கேட்டவுடன், இவன் நான் கோலாகலன், நான் பால்யமுதல் இதுவரையில் எத்தனையோ கோஹத்தி, ஸ்திரீஹத்தி, சிசுஹத்தி, பிரம்மஹத்திமுதலான அனேகபாபங்களைச் செய்ததுந்தவிர, கடைசியாய் மாதுருஜாரத்தையும், மாதுருஹத்தியையும், பிதுர்ஹத்தியையுஞ் செய்தபின் என்னை பிரம்மஹத்தி விரட்டிக்கொண்டுவரும்போது, எல்லாஸ்தலங்களிலும் ஓடியும் அந்தஹத்தி என்னைவிடாமல் தயர்ந்து இந்தஸ்தலத்தில் வந்தபின் பேரில்தான் அது விலகினதென்று சொல்லி, ஓ ரிஷிகளே! நீங்கள்தான் இந்த மகாபாபியான என்னை ரக்ஷிக்கவேண்டும், என்று பிரார்த்திக்கும்போது, அவர்கள் அவிடத்தில் வசித்துக்கொண்டிருக்கிற சிவானந்தயோகியினிடத்தில் இவனைச் சரணாகதம்பண்ணிவைத்து இவனுடைய சகலசங்கதிகளையுந்தெரிவித்தவுடன், அந்தச் சிவானந்தயோகியானவர் பிரம்மநிஷ்டர்களுக்குள் அக்கிரகண்ணியரானதால், பயப்படாதேயென்று அபயப்பிரதானமுஞ்செய்து, தன்னுடைய பிரம்மஞானபலத்தால் அவனைச் சிஷ்யனாகக் கிரகித்தமாத்திரத்தில், இவனுடைய பாபகிருத்தியக்கணக்கெல்லாம் தீப்பட்டு எரிந்துபோய்விட்டது. அவருடைய சிசுருஷாபலத்தால் சஞ்சித ஆகாமியகர்மங்களும் தகிக்கப்பட்டுப்போயிற்று. அவருடைய விசாரரூபமான உபதேசத்தால் இவனுக்கு அபரோக்ஷஞானமுண்டாய் மூலாஞ்ஞானமும் நசித்துப்போய், சனகாதிகளான உங்களுக்குச்சமானமான ஜீவன்முத்தனாகி ஆய்விட்டதால், ஓ சனற்குமாரரே! ஞானியின் பணிவிடையின்மகிமை யாரால் சொல்லமுடியுமென்று கந்தன் சொன்னார் என்றறிக.

## 227 - வது தரங்கம்.

பெரியோர்கள் தங்கள் குருப்பிரீதிக்காகச்செய்த சாஸ்திரத்தை இப்போதுள்ளவர்கள் அனுபவிக்கிறார்கள்:—

வித்தியாரண்ணியஸ்வாமிகள்முதலான பெரியோர்கள் தங்கள்தங்கள் குருவுக்குப் பிரீதியாகச்செய்யப்பட்டிருக்கிற பஞ்சதசி முதலான பிரகரணங்களை இப்போதிருக்கிற முமுக்ஷுக்கள் அனுபவித்துச் சுகிக்கிறார்கள். (எ - தி)

லாலயத்தில் பிராதக்காலத்தில் ஸ்நானஞ்செய்து தியாகராஜனைப் பக்தி புரஸ்சரமாக பிரதக்ஷண நமஸ்கார தோத்திரங்கள்முதலான கைங்கிரியங்களை மூன்றுவருஷம்வரை நேமந்தவறாமல் தபசுசெய்து வந்தபின், அந்தத் தியாகராஜன்கிருபையால் கெர்ப்பமுண்டாய் ஒருபிள்ளையும் பிறந்தது. ராவணன் பிறந்ததும் அவன்சப்தத்தால் உலகமெல்லாம் பயந்ததால் அவனுக்கு ராவணனென்று பேர்வைக்கப்பட்டதுபோல, இந்தக்குழந்தை பிறந்தமாத்திரத்தில் சப்தித்த சப்தத்தால் 'கள கள' என்று சப்தங்கேட்கப்பட்டதால் கோலாகலனென்று ஜனங்கள் அந்தக்குழந்தைக்குப் பேர்வைத்தார்கள். அந்தக்குழந்தையும் களிமண்ணுள்ள கண்மாய்க்குள் கருவேலஞ்செடி வளருவதுபோல விருத்தியானான். அப்படி மகாகண்டகனாய் யௌவனத்தையடைந்து அநேக திருடர்களோடேசேர்ந்து கத்திமுதலான ஆயுதங்களை எடுத்துக்கொண்டு அநேகம்பேர்களை வெட்டி அவர்கள்சொத்துக்களையெல்லாம் அபகரித்து, கண்ட ஸ்திரீகளையெல்லாம் பலாத்காரம்பண்ணி அவர்களுடைய கற்புகளையெல்லாம் அழித்து, இன்னும் அநேக சிசுக்களைக்கொன்று, அவைகளுக்குப் போட்டிருந்த ஆபரணங்களையெல்லாம் அபகரித்துக்கொண்டும், அநேக ஊர்களுக்கு ராத்திரிவேளையிற் போய் ஒருபக்கத்தில் ஒருவீட்டில் தீயைக்கொளுத்திப் போட்டுவிட்டமாத்திரத்தில் அந்தக் கிராமஜனங்களெல்லாம் அந்தத் தீயை அணைக்கத் தங்கள்வீட்டைவிட்டு வெளியேறிப்போனமாத்திரத்தில், இவன் சில துஷ்டர்களோடேகூட அந்தச் சொத்துக்களையெல்லாம் அபகரித்துக்கொண்டும், இன்னுஞ் சில பிரபுக்களுக்கு விஷம்வைத்துக்கொன்று அவர்களுடைய தனதானியங்களையும் ஆடுமாடுகளையும் அபகரித்து, அநேக கோஹத்தி முதலானவைகளைச் செய்து அந்த மாமிசங்களைப் புசித்துக்கொண்டும், குடங்குடமாய்க் கள்ளுச்சாராயங்களைக் குடித்துக்கொண்டும், இன்னும் அநேகவிதமான பாபங்களைச் செய்துவருங்காலத்தில், எமதர்மராஜாவும் சித்திரகுப்தனும் இவன் செய்யப்பட்ட பாபங்களுக்கு நம்முடைய உலகத்திலுள்ள இருபத்தெட்டுகோடி நரகங்களும் போதாததுபோல யிருக்கிறது, மேலும் நம்முடைய பட்டம்முடிந்தாலும் இவனுடைய பாபம் முடியாததுபோல இருக்கிறதென்று சதாகாலமும் இவனுடைய சிந்தனையாகவே யிருக்கும்போது, இவன் தன்னுடைய தாயைப் பலாத்காரமாய்ப் போகம்பண்ணிக்கொண்டு சிலநாள் வரும்போது, ஒருநாள் இவன் போகித்துக்கொண்டிருக்கும்போது இவன்பிதாவான நம்பி வந்து பார்த்ததை இவன் கண்டு, உடனே இடுப்பிலிருந்தகத்தியால் பிதாவாகிய நம்பியை வெட்டப்போகும்போது, இவன்தாயானவள் வந்து மறித்துக்கொண்டவுடன், இவன் அவளையும் அவனையும் வெட்டிப்போட்டமாத்திரத்தில் உத்கடமான பாபத்தால் அதிகோரமான அக்கினிஜ்ஜுவாலாரூபமாய் ஒருபிரஹ்மஹத்தி ஒருபெரிய உலக்கையைத்தூக்கிக்கொண்டுவந்து இவனை விரட்டினவுடன் இவன் ஓட அது விரட்ட இப்படி இந்த பூமண்டலமுழுமையும் ஓடினதிலும் அது விடாமல்விரட்டிக்கொண்டு வரும்போது, தெய்வகெதி

யாய் வேதாரண்ணியமென்கிற மகா க்ஷேத்திரத்தில் வந்து நுழைந்தமாத்திரத்தில் அந்தப்பிரஹ்மஹத்தி அந்த அரண்ணியத்திற்குள் நுழையமாட்டாமல்வெளியில் நின்றுபோனமாத்திரத்தில், இவன் இந்தவிடத்தில் இந்த உலகத்திலுள்ள திவ்வியக்ஷேத்திரத்திற்குள் விசேஷமகிமை இருக்கிறதென்று நம்பிக்கையுண்டாய், அந்தச் சுவாமிசன்னிதியிலிருக்கிற வேதநதியில் ஸ்நானஞ்செய்து வன்னிமரரூபமாயிருக்கிற வேதாரண்ணிய ஈஸ்வரரையும் தெரிசித்து, மகாலிங்கத்தையும் தெரிசனம்பண்ணி, வீணைவாதவிதூஷணியென்ற தேவியையும் தெரிசித்து, அவிடத்திலுள்ள சுவேதகேதுரிஷியையும் விஸ்வாமித்திரர்முதலான ரிஷிகளையும் பிராசீனயோக்கியரென்ற மகரிஷியைக் கண்டு சரணுகதம்பண்ணினபின், அவர்கள்கிருபையால் நீயாரென்று கேட்டவுடன், இவன் நான் கோலாகலன், நான் பால்யமுதல் இதுவரையில் எத்தனையோ கோஹத்தி, ஸ்திரீஹத்தி, சிசுஹத்தி, பிரம்மஹத்திமுதலான அனேகபாபங்களைச் செய்ததுந்தவிர, கடைசியாய் மாதுருஜாரத்தையும், மாதுருஹத்தியையும், பிதுர்ஹத்தியையுஞ் செய்தபின் என்னை பிரம்மஹத்தி விரட்டிக்கொண்டுவரும்போது, எல்லாஸ்தலங்களிலும் ஓடியும் அந்தஹத்தி என்னைவிடாமல் தயர்ந்து இந்தஸ்தலத்தில் வந்ததின் பேரில்தான் அது விலகினதென்று சொல்லி, ஓ ரிஷிகளே ! நீங்கள்தான் இந்த மகாபாபியான என்னை ரக்ஷிக்கவேண்டும், என்று பிரார்த்திக்கும்போது, அவர்கள் அவிடத்தில் வசித்துக்கொண்டிருக்கிற சிவானந்தயோகியினிடத்தில் இவனைச் சரணுகதம்பண்ணிவைத்து இவனுடைய சகலசங்கதிகளையுந்தெரிவித்தவுடன், அந்தச் சிவானந்தயோகியானவர் பிரம்மநிஷ்டர்களுக்குள் அக்கிரகண்ணியரானதால், பயப்படாதேயென்று அபயப்பிரதானமுஞ்செய்து, தன்னுடைய பிரம்மஞானபலத்தால் அவனைச் சிஷ்யனைக் கிரகித்தமாத்திரத்தில், இவனுடைய பாபகிருத்தியக்கணக்கெல்லாம் தீப்பட்டு எரிந்துபோய்விட்டது. அவருடைய சிசுருஷாபலத்தால் சஞ்சித ஆகாமியகர்மங்களும் தகிக்கப்பட்டுப் போயிற்று. அவருடைய விசாரரூபமான உபதேசத்தால் இவனுக்கு அபரோக்ஷ ஞானமுண்டாய் மூலாஞ்ஞானமும் நசித்துப்போய், சனகாதிகளான உங்களுக்குச்சமானமான ஜீவன்முத்தனாக ஆய்விட்டதால், ஓ சனற்குமாரரே! ஞானியின் பணிவிடையின்மகிமை யாரால் சொல்லமுடியுமென்று கந்தன் சொன்னார் என்றறிக.

## 227 - வது தரங்கம்.

*பெரியோர்கள் தங்கள் குருப்பிரீதிக்காகச்செய்த சாஸ்திரத்தை இப்போதுள்ளவர்கள் அனுபவிக்கிறார்கள்:—*

**வித்தியாரண்ணியஸ்வாமிகள்முதலான** பெரியோர்கள் தங்கள்தங்கள் குருவுக்குப் பிரீதியாகச்செய்யப்பட்டிருக்கிற பஞ்சதசி முதலான பிரகரணங்களை இப்போதிருக்கிற முமுக்ஷுக்கள் அனுபவித்துச் சுகிக்கிறார்கள். (எ - தி)

ஆலயங்களுக்கு முன்னிருந்த அரசர்கள்விட்ட கிராமபூமிகளை இப்போதிருக்கிற பரிஜனங்கள் அனுபவித்துச் சுகிப்பதுபோலுமறிக. ஐயா, ஒரு சாஸ்திரத்தில் முந்தி இவன்செய்த கர்மப்படி எதுவருமோ அது சித்தமாய் வருமென்றும், அதைக்குறித்து எத்தனஞ்செய்யவேண்டியதில்லையென்றுஞ் சொல்லியிருக்கிறது. மற்றோரிடத்தில் புருஷனுடைய முயற்சியினாலேயே சகலகாரியமும் முடியுமென்றும், தெய்வகிருபைப்படி நடக்குமென்றெண்ணுகிறவன் பிரயோஜனமற்றவனென்றும் சொல்லுகிறது. இந்த இரண்டில் நான் எது உண்மையென்று நம்புகிறதென்று கேட்பாயாகில், அதற்கு நான் உத்தரஞ்சொல்லுகிறேன் கேள்:—நீ கேட்பது அஞ்ஞானகாரியமான சரீராதி உலகவியாபாரத்தைப்பற்றிக் கேட்கிறாயா? அல்லது தத்துவஞானத்தை அடையவேண்டியதைக்குறித்துக் கேட்கிறாயா? சரீராதி விவகாரத்தைக்குறித்துக் கேட்பாயேயானால், அதற்குப் பிராரப்தகர்மமானது ஈஸ்வராக்ஞைப்பிரகாரம் எந்தத் தேசத்தில் எந்தக்காலத்தில் எந்தவிதமாயாவது இவன் யாதொரு பிரயத்தினமுமில்லாதிருந்தாலும் அந்தந்தத்தேசத்தில் அந்தந்தக்காலத்தில் அந்தந்த வஸ்துக்கள்மூலமாய் சுகத்தையோ அல்லது துக்கத்தையோ கூட்டிவைப்பதால் அதைக்குறித்து நாம் திரிகரணங்களினாலும் பிரயத்தினம் செய்யவேண்டியதில்லை. (எ - தி) ரயில்வண்டியில் டிக்கட்டுவாங்கி யேறினவன் அந்தவண்டியை விடுவதற்காவது, நிற்பதற்காவது, மெதுவாய்ப்போவதற்காவது, வேகமாய்ப்போவதற்காவது, கட்டையைப்போட்டு தீயை எரிப்பதற்காவது, தண்ணீர்கட்டுவதற்காவது, மற்ற எந்தச்சங்கதிகளுக்காவது இவன் யாதொரு கவலையும் சிந்தனையுமில்லாமலிருந்தாலும் அவைகள் அந்தந்தக் கம்பேனியார் ஏற்பாட்டுப்பிரகாரம் நடந்துவருவதுபோலும்; ஒரு ராஜகிரகத்தில் நடக்கிற சமாராதனைக்குச் சாப்பிடப்போயிருக்கிற பிராம்மணன் தன்பாட்டுக்குச் சாப்பிடாமல் எத்தனைகலம் அரிசி சமயல்பண்ணியிருக்கிறது? எவ்வளவு பக்ஷணம்பண்ணியிருக்கிறது? நெய் எவ்வளவு வாங்கியிருக்கிறது? எத்தனைபேருக்குக் காணும்படியாய்க் கரிகாய்பதார்த்தம் சமயலாயிருக்கிறது? எத்தனை சமயல்காரர்கள் சமயலுக்கு நேமிக்கப்பட்டிருக்கிறது? என்று இவன் யாதொரு விதமான கவலையையும் அடையத்தேவையில்லையே. அந்தச்சங்கதிகளெல்லாம் ராஜாவின் ஆக்ஞைப்படி அந்தந்த வேலைக்காரன் அந்தந்தத்தொழில்களைத் தவறாமல் நடத்திவருவதுபோலும்; இந்தத் தேகத்திற்குள்ளிருக்கிற அந்தர்யாமியாகிற ஈஸ்வரன் சுரோத்திராதிஞானேந்திரியங்களையும், திக்காதி அதிஷ்டானதேவதைகளையும், சப்தாதிவிஷயங்களையும், வாக்காதி கர்மேந்திரியங்களையும், அக்னிமுதலான தெய்வங்களையும், வசனாதி தொழில்களையும்; பிராணாதிவாயுக்களையும், விசிஷ்டாதிஅதிதெய்வங்களையும், சுவாசாதி தொழில்களையும், மனாதிகரணங்களையும், சந்திராதி தெய்வங்களையும், சங்கற்பாதி தொழில்களையும் நிமிஷங்கூடமறவாமல் அசைப்பிவித்துக்கொண்டிருப்பதால் அதைக்குறித்து நீ பிரயத்தனப்படத்தேவையில்லை. உன்னுடைய எதார்த்த

மான ஆத்மசொரூபத்தை அறிவதற்கே பிரயத்தனஞ்செய்யவேண்டுமென்று உறுதியாய் அந்தப்பிரயத்தனத்திலேயே இரு. ஆகையால், தேகாதிவிஷயத்தைக்குறித்து கவலையன்றியில் கர்மப்படி நடக்குமென்ற வசனத்தை உபயோகித்து, தன் சொரூபத்தைத் தானுகவே பார்ப்பதில் முயற்சிசெய்வதே முயற்சிசெய்யவேண்டுமென்று சொன்னவசனத்தின் கருத்து என்றறிக.

## 228 - வது தரங்கம்.

*நாலு அஞ்சு ஆறு ஏழு பூமிகளிலிருக்கிறவர்களின் தன்மை:—*

அஞ்சு, ஆறு, ஏழு பூமிகளிலிருந்து சுகமடைகிற தாரதம்மியத்திற்கும், நாலாவதுபூமியிலிருக்கிறவனுடைய ஸ்திதிக்கும் பேதமுண்டு. இதில் அஞ்சாவதுபூமிக்குத் திருஷ்டாந்தம்:—சுழுப்தியிலிருந்து தானே வெளியில் வருகிறவன்போலும், மேளமடித்த வீட்டுக்குக் கூப்பிடாமல் தக்ஷிணைக்குப்போகிற வைதீகன்போலும். ஆறுவதுபூமிக்குத் திருஷ்டாந்தம்:— நல்ல நித்திரைசெய்கிறவன் பிறருடைய பலவந்தத்தால் விழிக்கிறவன்போலும், பிரதிக்கிரகம்வாங்காத பரிசுத்தப்பிராம்மணன் நிரம்பப்பிரார்த்தித்தவர்கள் வீட்டுக்குமட்டும் போவதுபோலும். ஏழாவதுபூமிக்குத் திருஷ்டாந்தம்:— பாலிலேவிட்ட ஜலத்தை எடுக்கப்படாததுபோலும், தானுயாவது பிறர்பிரயத்தனத்தினுலாவது வெளியேறாத வைதீகர்போலுமறிக. இனிப் பிரஹ்மவித்து:— விழித்தவன் சொப்பனத்தை நினைக்கிறதுபோலும், தாசியைப்போலும், கோர்ட்டு வக்கீலைப்போலும், பகல்வேஷம்போட்டு ஆடுகிறவன்போலும், ஜகத் விவகாரத்தை ஜாலமாய்ச் செய்துவருவனென்றறியத்தக்கது. [இ - து] நாலாவது பூமியிலிருக்கிற பிரம்மவித்துக்கு ஜகத்துப் பொய்யென்று அறிந்தும் விவகாரம் நடக்கும். [எ - தி] பானைசட்டிகள் மண்ணென்று தெரிந்தாலும் விவகாரம் நடப்பதுபோலும், வரனுக்கு ஜகத்து ஏகதேசமாய்த்தோற்றினுலும் கானல் ஜலம்போல விவகாரமன்றியிற்போம் வரியானுக்குப் பிரயாசத்தால் ஒருக்கால் ஜகத்துத்தோற்றுவதால் பழுதைப்பாம்புபோல உடனே நிவர்த்தியாகும், வரிஷ்டனுக்கு ஜகத்து ஒருக்காலும் தோற்றுமையால் மலடிமகனுக்கு நிகராமென்று அறிந்து சாஸ்திரங்களிற் சொன்ன திருஷ்டாந்தங்களை அந்தந்தப் பூமியிலிருக்கிற முக்தர்களுக்காகச் சொல்லியிருக்கிறதென்று அறிந்துகொள்க. (இ - து) கைவல்லியத்திற் சொல்லியபடி பிரம்மவித்து முதலான நால்வருக்கும் முக்திசரியானுலும் பிரம்மவித்துக்கு திருஷ்டதுக்கமும் மற்றவர்களுக்கு சுகதாரதம்மியமும் காணப்படும். [எ - தி] கூழ்குடிக்கிறவனுக்கும் மிருஷ்டான்னம்புஜிக்கிறவனுக்கும் பசிதீருவது சரியானுலும், கூழ்குடிக்கும்போது கொஞ்சம் துக்கம் தோற்றுவதும், மற்றவனுக்கு அது தோற்றுமற் சுகமாய்ப் புஜிப்பதுபோலும்; இன்னம் ரயில் வண்டியில் பஸ்ட்டு, சக்கிண், தேட்கிளாசுகளென்கிற பேதமிருப்பதுபோல, வரன் வரியான் வரிஷ்டன்முதலான மூவர்களுக்கும் சுகதாரதம்மியமிருப்

பதையும், நாட்டுவண்டியிற் போகிறவனுக்கும் காசிபோய்ச்சேருவது ஒன்றா யிருந்தாலும் கட்டைவண்டியிற் போகிறவனுக்கு காலதாமசமும் கஷ்டமும் கவலையுமிருப்பதும், மற்றவனுக்கு அது இல்லாததுபோலுமறிக. ஐயா, ஐந்தாவது ஆறாவது ஏழாவதுபூமிகளை யடைந்திருக்கிற ஞானிகளுக்கு ஆனந்தம் விசேஷமாயிருக்குமென்றும், நாலாவதுபூமியிலிருக்கிற பிரஹ்மவித்துக்கு திருஷ்டதுக்கம் அனுபவிக்கவேண்டுமென்றுஞ் சொன்னீர்களே, அப்படியிருக்கும்பக்ஷத்தில் அந்தக் கைவல்யநவநீதத்திலேயே சொன்னநடுப் பூமி வந்தவனே தூயமுத்தனென்றும், பிரம்மவித்தே சிலாக்கியமென்றும் சொல்லியிருக்கிறதே, இவ்விரண்டில் எதைப்பிரமாணமாக நம்புகிறதென்று கேட்பாயாகில், அதற்கு நாமுத்தரஞ் சொல்லுகிறோம்கேள்:— ஒருசமயத்தில் மலடிகளே சிலாக்கியமென்றும் சொல்லி, மற்றோர்சமயத்தில் பிள்ளைப்பெற்றவளே சிலாக்கியமென்றுஞ் சொல்லுவதுபோலும்; சிலர் தனித்திருந்து பாலோடன்னம் புஜித்து சுகிக்கிறார்களென்றும், இன்னுஞ்சிலபேர்கள் கூழோ காடியோ எது இருக்கிறதோ அதைப் பத்துப்பேரைக் கூடவைத்துப்புஜிக்கிறார்களென்றும், இவர்கள் சிலாக்கியம் அவர்கள் சிலாக்கியமென்று சொல்லுவதுபோல, மேல்பூமியிலுள்ளவர்கள் மலடியைப்போல யாதொரு விக்ஷேபதுக்கமில்லாமலும் தனித்துப் பாலோடன்னம் புஜிப்பதுபோலச் சமாதிசுகத்தை யனுபவிப்பதாலும் அவர்களைச் சிலாக்கியமென்று சொல்லப்பட்டிருக்கிறது. நாலாம்பூமியிலிருக்கிறவன் பிரசவித்தவளுக்குத் துக்கமிருந்தாலும் சந்ததிவிருத்தியாயிருப்பதுபோல சிஷ்யவிருத்தியிருப்பதாலும், பத்துப்பேரோடே புஜிப்பவனுக்கு போஜனசுகங்கொஞ்சமானாலும் லோகோபகாரமும் கீர்த்தியுமிருப்பதைப்பற்றி இவனைச் சிலாக்கியமென்று சொல்லியிருக்கிறதென்றறிக.

## 229 - வது தரங்கம்.

ஞானியின் புண்ணியபாபத்தை தூஷணைபூஷணைசெய்கிறவர்கள் கைக்கொள்ளுகிறார்கள்:—

ஞானியின் கரணங்களாற் செய்யப்படுகிற புண்ணியபாபங்களை விவேகி அவிவேகிகள் இருவருக்குள்ளே, விவேகி பூஜித்து அவர்புண்ணியத்தையும், அவிவேகி தூஷித்து அவருடைய பாபத்தையும் அனுபவிக்கிறான். (எ - தி) பூமியில்விளைகிற நெல்லை மனுஷர்களும், வைக்கோல்களை மாடுகளும் அனுபவிப்பதுபோலும்; ஸ்தன்னியத்திலிருக்கிற பாலைக் குழந்தைகளும், அதிலுள்ள ரத்தத்தை அட்டைகளும் அனுபவிப்பதுபோலும்; நீரிலுண்டாகிற புஷ்பகெந்தத்தை வண்டும், அதிலுள்ள அழுக்குகளை மீன்களும் அனுபவிப்பதுபோலுமறிக. [இ - து] ஞானியைக்குறித்து உலகத்தார்செய்கிற துதிநிந்தைகளை அவன் பாரான். (எ - தி) விழிகண்குருடனுக்குத் தன் பெண்டாட்டியினுடைய விபசாரமும் கற்பும் அவனுக்குத் தெரியாததுபோலும், நித்திரை பண்ணுகிறவனுக்கு ஜாக்கிரத்தில் நடக்கிற நன்மைதீமை தெரியாததுபோலு

மறிக. (இ - து) கர்த்துருத்துவமிறந்துபோயிருக்கிற ஞானியின் புண்ணியங் களை அடுத்திருக்கிற அப்பியாசிகள் கொள்ளையடிக்கிறார்கள். [எ - தி] அரண் மனையில் அர்த்தராத்திரியில் அரசன்பிராணன் அடங்கிப்போனவுடன் அவிடத் திலுள்ள ஊழியஜனங்கள் அவரவர்களுக்கு வேண்டியமட்டும் கொள்ளையடிப் பதுபோலவறிக. (இ-து) ஞானம்வந்தவனுடைய புண்ணியபாபங்களை தூஷணை பூஷணை செய்கிறவர்கள் கொண்டுபோகிறார்கள். (எ - தி) தாசிக்குப்பிறந்த பெண்ணென்ன ஆணென்ன, இவர்களில் நட்டுவன் பிள்ளையையும், தாசி பெண்ணையும் கொண்டுபோவதுபோலவறிக. ஐயா, ஞானிகளுடைய புண்ணி யத்தை பூஜிக்கிறவர்கள் கொண்டுபோகிறார்களென்றும், அவர்களைத் தூஷிக் கிறவர்கள் பாபத்தைக் கொண்டுபோகிறார்களென்றுஞ் சொன்னீர்களே, அப்படிச் சொல்லும்பக்ஷத்தில் அந்தப் புண்ணியபாபகர்மங்களைச் செய்வதற்கு ஒரு கர்த்தா வேண்டுமே, அப்படி ஞானியினிடத்தில் ஒருகர்த்தா இருக்கும் பக்ஷத்தில் அந்தக்கர்த்தாவுக்கு அஞ்ஞானம் வாசனைகள் கர்மங்கள் ஜென் மங்கள்முதலான சகலவிதமான ஜனனமரண சம்சாரதுக்கங்களுண்டாகுமே, அப்படி அங்கீகரிக்கும்பக்ஷத்தில் பிரஹ்மத்தையறிந்த ஞானி பிரஹ்மமாகவே யிருக்கிறானென்றும், கர்த்துருத்துவாதி ஜனனமரண சம்சாரதுக்கங்கள் ஒன்று மவனுக்கில்லை. அஞ்ஞானவரணாதிகளும் நஷ்டமாய்ப் போய்விட்டதால், ஆரோபமான ஜீவத்துவம் நிவர்த்தியாய் ஜீவன்முக்தனாய் தடையற்றஆனந் தத்தை யனுபவிக்கிறானென்றும், ஆத்மவித்து சகலதுக்கத்தையும் தாண்டி யிருக்கிறானென்றும், பிரஹ்மரசத்தைப் புஜித்தவன் சதா நிர்ப்பயமான ஆனந் தத்தை அனுபவிக்கிறானென்றும், இப்படியெல்லாம் சுருதிகள் கோஷித்துக் கொண்டிருக்கும்போது தாங்களிவிடத்தில் அவனுடைய புண்ணியபாபகர் மத்தை தூஷணைபூஷணைசெய்கிறவர்கள் கொண்டுபோகிறார்களென்று எப்படிச் சொன்னீர்களென்றால், அடே மூடா! ஞானிக்குச் சுயதிருஷ்டியில் யாதொரு புண்ணியபாபகர்மங்களுமில்லையென்று எத்தனையோதடவை சொல்லியிருக்கவும் அதையெல்லாம் மறந்துவிட்டு இப்படி அடிக்கடி கேட்கிறது சரிஅல்ல. ஆன படியால், விவகாரத்தில் பரதிருஷ்டியில் அவனே இவ்வுலகத்தில் சாக்ஷாத்பரப் பிரம்மமாயும், பிரம்ம விஷ்ணு ருத்திரர்களான ஈஸ்வரர்களுக்கும் ஈஸ்வரனா யும், சகல தேவதாவடிவமாயும், பிரத்தியக்ஷமாய் பேசுகிறதெய்வமாயுமிருக் கிறதை அறிந்திருக்கிற புத்திசாலிகளானவர்கள், அவர்களைச் சகலவிதத்தினா லும் பூஜித்து, சகலவிதமான நன்மைகளையும் அடைகிறார்களென்றும், பாபி களுக்கு அவர்களைக்கண்டால் சாமான்னியஜனங்களுக்கும் கீழாய்த்தோற்று வதுந்தவிர அவர்கள்நடையையும்பற்றி நிந்தித்துப் பாபத்தைக்கிரகித்துப் பாவிகளாவார்களென்றறிக.

## 230 - வது தரங்கம்.

பிறர்தூஷணையால் விவேகி சந்தோஷிக்கவேண்டும்:—

ஒருவன் நம்மைத் தூஷித்தால் தூலசரீரத்திலிருக்கிற தூர்நடையும், சூக்ஷுமசரீரத்திலிருக்கிற துர்வாசனையும், காரணசரீரத்திலிருக்கிற அறியாமையும் நிவர்த்தியாவதால், அதைப்பற்றிச் சந்தோஷிக்கவேண்டுமேதவிர துக்கப்படத்தேவையில்லை. [எ - தி] பசிக்கன்னங் கொடுத்தவனையும், வியாதிக்கு அவுஷதங்கொடுத்தவனையும், பொட்டைக்கண்ணனுக்கு மையாற் கண்ணைக் கொடுத்தவனையும் கண்டு சந்தோஷப்படுவதுபோலவறிக. [இ - து] சுழுப்தியிலிருந்து சுகத்தையடைந்து வெளியில் வந்தவனையும், ராஜகிரகத்தில் மிருஷ்டான்னபோஜனம் பண்ணிவந்தவனையும், ஆகாரநித்திரைகளைப் பண்ணுதிருக்கிற வியாதிக்காரன் கண்டு இவர்களை நித்திரை ஆகாரம்பண்ணுத துக்கியென்று சொன்னதைக்கேட்டு, அவர்கள் எப்படிச் சிரிப்பார்களோ அப்படிப்போல, நிர்விகற்பசமாதியையுந் தத்துவஞானத்தையும் அடைந்திருக்கிறவனை மூடர்கள் இவனுக்குச் சுகமும் ஞானமுமில்லையென்று சொன்னதைக்கேட்டு இவனுஞ் சிரிப்பனென்றறிக. ஐயா, பிறர் நம்மைத் தூஷிப்பதால் நமக்கு மிகுந்த லாபம்வருகிறதாகச் சொன்னீர்களே, அப்படி அவர்கள் தூஷிப்பதால்வருகிற லாபத்தை எனக்குத் தெரியும்படி சொன்னீர்களேயானல், நானும் அப்படி யாருந் தூஷிப்பதைப்பற்றி விசனியாமல் சந்தோஷமாயிருப்பேனென்று கேட்ட சிஷ்யனுக்குக் குரு சொல்லுகிருர்:—வாராய் குழந்தாய்! முதலில் நம்மைத் தூஷிக்கிறவர்கள் தூலதேகத்தைப் பார்த்துத் தூஷிக்கிருர்களா? அல்லது சூக்ஷுமசரீரத்தைப் பார்த்தா தூஷிக்கிருர்கள்? அல்லது காரணசரீரத்தைப் பார்த்தா தூஷிக்கிருர்கள்? அல்லது ஜீவனைப்பார்த்தா தூஷிக்கிருர்கள்? அல்லது ஆத்மாவைப் பார்த்தா தூஷிக்கிருர்கள் சொல்? தூலதேகத்தைப் பார்த்துத் தூஷிக்கிருர்களென்று சொல்லுவாயாகில், தூலசரீரம் சுத்தஜடமாயும், அநித்தியமாயும், விகாரமாயும், துக்ககரமாயுமிருப்பதால் அதைப்பற்றித் தூஷிப்பதால் நமக்குச் சகாயமாகவே ஆச்சுது. எப்படியென்றால், நாமும் இத்தேகங் கெட்டது கெட்டதென்று தூஷித்துக்கொண்டிருப்பதால் நமக்கு அனுகூலமே. சூக்ஷுமதேகத்தைப் பற்றி நிந்தித்தால் அந்தச் சூக்ஷுமதேகத்திலிருக்கிற காமக்குரோதங்களாகிற அரிஷட்வர்க்கங்களை நாம் தேடிப்பிடித்துக் கொல்லவேண்டுமென்று எத்தனித்திருக்கிற நமக்கு, கள்ளனைக் காட்டிக்கொடுப்பதுபோல அனுகூலமாச்சுது. காரணசரீரத்தைப்பற்றி நிந்திப்பார்களேயானல், இருட்டாயிருக்கிற நம்ம வீட்டுக்கு விளக்கேற்றிவைப்பதுபோல அறியாமையாகிற இருட்டைப்போக்குவதற்கு தூஷணையாகிற தீபம் அனுகூலமே, ஜீவனைப்பற்றித் தூஷிப்பார்களேயானல், விசாரித்தமாத்திரத்தில் நெல்லு, தயிர், கானல்ஜலம்போலக் காணமற்போவதால் அதைப்பற்றியும் நமக்குக் கவலையில்லை. ஆத்மாவைப்பற்றித் தூஷிப்பார்களேயானல், ஆத்மா சர்வபரிபூரணரானதாலும், அசங்கரானதாலும், அரூபரானதாலும், அவரைப்பற்றித் தூஷிக்கும்போது தூஷிக்கிறவனிடத்திலும் அவர் தானயிருப்பதாலும், அவன் தன்னையே தூஷித்துக்

கொண்டதாக ஆகும். அதுவுமன்றியில் இந்தப் பூதாகாசத்திலேயே யாதொரு சப்தங்களும் பாயமாட்டாமலிருக்கும்போது, சிதாகாசமாயிருக்கிற ஆத்மாவி னிடத்தில் இந்தத்தூஷணையாகிற சப்தம் எப்படிப்பாயும், சொல்? இதுவு மன்றியில் தூஷிப்பவர்கள் நம்முடைய பாபங்களை நாம் சேதுஸ்நானமுதலான தபங்களைப் பிரயாசைப்பட்டுச்செய்து நிவர்த்தித்துக்கொள்ளவேண்டியிருப்ப தை அவர்கள் அதிசுலபமாய் அப்பாவத்தையெல்லாம் வாங்கிக்கொள்ளுவ தால் அவர்களே நமக்கு இஷ்டரென்றறியத்தக்கது.

## 231 - வது தரங்கம்.

ஜீவேசுவரர்களுக்குமிருக்கிற கர்மம் ஞானிக்குமட்டுமில்லை:—

ஜீவேஸ்வரர்களை ;யுண்டுபண்ணின கர்மவலையைக் கடந்தேனென்று சொன்ன பெரியோர்களுடைய வாக்குக்கர்த்தம்; ஜீவர்களுக்குப் பந்தரூப மான கர்மம் ஏதுவாகவும், ஈஸ்வரனுக்கு அவதாராதிகளைச்செய்து ரக்ஷிக்கிற கர்மம் ஏதுவாம். (எ - தி) குற்றவாளிகளுக்கு விலங்கிலகப்பட்டுக்கொள்ளுகிற கர்மமும், ராஜாவுக்குத் தெண்டிக்கிற கர்மமுமிருப்பதுபோலவறிக. ஐயா, ஜீவர்களுக்குச் சுகதுக்கத்தை அனுபவிக்கும்படிசெய்கிற பந்தரூபமான கர்மங் களிருக்கிறதென்றும், ஈஸ்வரனுக்கு துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனம்பண்ணி தர்மத்தை நிலைநிறுத்தவேண்டியதற்காக அவதாராதிகளைச் செய்யவேண்டிய தான கர்மங்களிருக்கிறதென்றும், ஞானிக்கு இருவிதமான கர்மங்களுமில்லை யென்றும் சொன்னீர்களே, எப்படிச்சொல்லலாம்? ஞானிகளுக்கும் பிராரத்த கர்மமிருப்பதாலும், அந்தக்கர்மத்தால் தாபத்திரயதுன்பங்களை அடைவதா லும், அவர்களும் சிஷ்யர்களுக்குச் சிக்ஷாரக்ஷைசெய்துகொண்டு வருவதாலும், சிரவண மனன நிதித்தியாசன சமாதிமுதலானவைகளைச் செய்துவருவதாலும், இப்படி அநேக கர்மங்களிருக்கும் போது அவர்களுக்கு யாதொரு கர்மவலை களுமில்லையென்று எப்படிச் சொல்லலாமென்று கேட்பாயாகில், அதற்கு நான் உத்தரஞ்சொல்லுகிறேன் கேள்:— முதலில் கர்மவலையைக் கடந்தேனென்று சொல்லும்போது நான் பிரம்மமென்று சாக்ஷாத்காரமாய் அறிந்திருக்கிற சொரூபதிருஷ்டியிலிருந்துகொண்டு சொல்லியிருக்கிறதை நீ அறியாமல் அவர் களுக்குச் சஞ்சித ஆகாமியகர்மங்களும் அஞ்ஞானமும் சகலவாசனைகளும் நிசேஷமாய் நிவர்த்தியாய், விவகாரத்தில்மட்டும் மித்தையாய்த்தோற்றுகிற பிராரத்தகர்மானுபவத்தை நீ அவர்கள் அனுபவிக்கிறதாகச் சொல்லுவது அறியாமை. [எ - தி] குடும்பத்திலிருக்கிறவர்களுக்கு கலியாணமும் இழவும், அதனால் சுபாசுபங்கள் சுகதுக்கங்கள், இரண்டுவிதமான கர்மங்களும் வந்து கொண்டிருக்கிறது, கோவில்களில் இழவுமுதலான அசுபகர்மங்களில்லாவிட்டா லும் தேர்திருவிழாமுதலான சுபகர்மங்களிருப்பதுபோல, ஞானிகளிருக்கிற மடத்தில் அவ்விரண்டுகர்மங்களுமில்லாதிருப்பதை அறியத்தக்கது. ஐயா, ஈஸ்வரனுக்கும் சுயதிருஷ்டியில் நான் பிரஹ்மமென்றும் மற்றச் சகலவிவகாரங்க

ளும் பொய்யென்றும் நிச்சயக்ஞானமிருக்குமல்லவா? ஆவரணசக்தியானது ஈஸ்வரனையும் ஞானியையும் மறைக்கவில்லையென்று சுருதிகளெல்லாம் சொல்லியிருக்கிறதே, அப்படியிருக்க ஜீவனையும் ஈசனையும் உண்டுபண்ணின கர்மவலையைக் கடந்தேனென்று எப்படிச் சொல்லக்கூடுமென்றால், நன்றாய்க் கலியாணம் போலே பிரசித்தமாய்ச் சொல்லலாம். அதெப்படியென்றால், நான் பிரஹ்மமென்கிற திருஷ்டியில் அவரிருக்கும்போது அவருக்கு ஈஸ்வரனென்கிற பேரில்லையென்பதற்குச் சாக்ஷி; ஈஸ்வரனே தேவபூஜைகதையில் வசிஷ்டர் தெய்வபூஜாவிதியைச் சொல்லவேண்டுமென்று கேட்டபோது, தெய்வமென்பது தாமரை இதழ்போலிருக்கிற கண்ணையுடைய விஷ்ணுவுமல்ல, மூன்றுகண்ணையுடைய சிவனுமல்ல, அறிவாகிய பிரம்மமே தெய்வமென்று சொல்லியிருப்பதாலும்; மூலப் பிரகிருதியினுடைய முக்குணங்களால் கற்பிக்கப்பட்டிருக்கிற ஈஸ்வராதிகளை, மூன்றுகுணங்களுக்கும் அப்புறப் பட்டவனும், ஈஸ்வராதிநாமங்களுக்கும் அப்புறப்பட்டவனும், பிரம்மஸ்வரூபனுமிருக்கிற ஞானி ஜீவேஸ்வரர்களை யுண்டுபண்ணின கர்மவலையைக் கடந்தேனென்று சொல்லலாமென்றறிக.

## 232 - வது தரங்கம்.

இச்சை, அநிச்சை, பரஇச்சை ஞானிக்குண்டா இல்லையாவென்பதற்குச் சமாதானஞ் சொல்லுகிறார்:—

முதலாவது பிராரத்தகர்மமென்று சுருதி சொல்லுவது முமுக்ஷு அப்பியாசிகளைக்குறித்துச் சொல்லவில்லை, அதற்குத் தோணிக்காரன் அநுசந்தானத்தை நன்றாய்ப்பார்த்தால் ஞானியைக்குறித்தே சொல்லியிருக்கிறதாக வெளியாகும். ஆனால் ஞானிக்குத்தான் சொல்லுவானேனென்றால், மூடர்கள் சங்கிக்கிறதற்காகவே. அதாவது, ஞானிக்கு ஞானத்தால் அஞ்ஞானதற் காரியம் மூலத்தோடே நசித்தபின் அவர்தேகம் எப்படியிருக்கக்கூடுமென்று சங்கிக்கிறவர்களுக்குச் சமாதானமாக பிராரப்துவமென்று சுருதி சொன்னதேதவிர, ஞானிக்குத் தேகாதிகள் சத்தியமென்றும் பிராரப்துவ போகம் உண்மையாகத் தோற்றுமென்றும் சொல்லவில்லை. இன்னும் பிராரப்துவகர்மம் தேகத்திற்கா சாக்ஷிக்காவென்று விசாரித்தால், கர்மத்தாலுண்டானது தேகமேதவிர சாக்ஷி கர்மத்தாலுண்டாகவில்லை. அப்படி ஞானியென்பவன் தேகமா சாக்ஷியாவென்றால், சாக்ஷிதான். அப்படிப்பார்த்தாலும் பிராரப்தகர்மமில்லை. தேகத்திற்குத்தான் உண்டா இல்லையாவென்று விசாரித்தால், தேகத்திற்குமில்லை. எதினாலென்றால், தேகமானது ஆரோபமா வாஸ்தவமாவென்றால், ஆரோபம். அப்படி ஆரோபமான கானல்நீர்முதலான தோற்றங்களுக்கு உற்பத்திநாசமேயில்லை. அப்படியிருக்கும்போது அதற்குத்தான் எப்படிப் பிராரப்தகர்மமுண்டென்று சொல்லக்கூடும்? இன்னும் வாசிஷ்டத்

தில் தேவபூஜைகதையில் பரமசிவன் வசிஷ்டருக்கு உபதேசித்துவரும்போது, நிஷித்தபோகத்தைத் தள்ளுகிறரூபமாயும், ஞாயமானபோகத்தைக் கிரகிக்கிற ரூபமாயும், அந்தத்தெய்வத்தைப் பார்த்துப் பூஜிக்கவேண்டுமென்று சொல்லியிருக்கும்போது, ஞானி என்னமாய்க் கூடாதபோகத்தை இச்சிப்பன். மூடர்கள்கூட முருங்கக்காய்சக்கையையும், மாங்கொட்டையையும் தேங்காய்கொட்டாங்கச்சியையும், நெல்லிலிருக்கிற உமியையும் தள்ளிவிட்டு அதனதன் சாரத்தையே கிரகிக்கும் போது, ஞானி சாரக்கிராகியானதால் இவன் எப்படி அசாரத்தைக்கிரகிப்பன். ஆகையால் பிராரப்தகர்மம் பரதிருஷ்டியிலேயேதவிர சுயதிருஷ்டியிலில்லை. அப்படியே விவகாரத்தில் இச்சை அநிச்சை பரஇச்சைகளான கர்மம் நேரிட்டாலும் இன்னுமிந்தக் கர்மம் தொலையவில்லையேயென்று விசனந் தோற்றுமேதவிர, வாச்சுது வாச்சுதென்று சந்தோஷமாய்த்தோன்ருது. அநிச்சையாவது, நமக்கிது காலத்திரயத்திலுமாகாதென்று நிச்சயித்த அர்ச்சுனனுக்கு அவனைக்கொண்டே சகல சத்துருக்களையும் கொல்லும்படி செய்வித்த கர்மமேயாம். பரஇச்சையாவது, இதுவேண்டும் அது வேண்டாமென்று இச்சைஇல்லாமலிருந்தாலும் சேர்ந்தபேரையிட்டு ஜடபரதர்போலிருக்கிறவர்களுக்கு வருகிற சுகதுக்கங்களே அதுவாம். அநுபவத்தில் கோவிலூர் ஆண்டவர் இச்சாப்பிராரப்துவத்திற்கும், அநிச்சைக்கு அரசப்பஸ்வாமியும், பரஇச்சைக்குப் பிரம்மானந்தஸ்வாமியையும் அறிந்துகொள்ளத்தக்கது. இச்சாப்பிராரப்துவம் அநுபவிக்கும்போது எப்படியிருக்குமென்ருல், நாடகம் போட்டு ஆடச்சொன்னவனே விஸ்வாமித்திரனும் காளகண்டனும் சந்திரமதியை ஹிம்சிக்கும்போது அதைப் பார்த்துக்கொண்டிருக்கிற அவனுக்கு தாற்காலிகதுக்கந்தோற்றி நிவர்த்தியாவதுபோலும்; அநிச்சாபோகத்தையனுபவிக்கிற மனசுக்குத் திருஷ்டாந்தமேதென்ருல், ஒருவன் சொப்பனத்தில் ஸ்திரீபோகத்தைக் கண்டால் சுக்கிலமோசனமாகும், அப்படிக் காணக்கூடாதென்று எண்ணியிருந்தாலும் அவனே அப்படிக் காண்கிறதுபோலும்; பரஇச்சாபோகத்தை அநுபவிக்கிறவன் எப்படியிருப்பனென்ருல், இந்திரஜாலக்காரன் ஒருவனைக் கூப்பிட்டுவைத்துக்கொண்டு சுகதுக்காகாரமான வேடிக்கையைச் செய்யும்போது, அதைப் பார்த்துக்கொண்டிருக்கிற மற்றவன் அவ்வவசரத்தில் சுகதுக்கவிகாரிபோலக் காண்பித்து, பொய்யென்று சிரித்துவிட்டுப்போகிறவன்போலும் இருப்பனென்றறியத்தக்கது. இன்னும் அநுசந்தானத்துக்கு விரோதியாய்வருகிற விஷயசுகம், தீயில் தள்ளப்பட்டவன்மனது எப்படித்தபிக்குமோ அப்படி இவன்மனதைத் தபிக்கச்செய்யும். அநுசந்தான விரோதமன்றியில் வருகிற போஜனாதி விஷயசுகத்தையும் தன்னனந்தத்தையும் காக்கைக்கண்போல அவன்புத்தி இரண்டையும் அநுபவித்து, இரண்டுக்கும் தான் சாக்ஷியென்று நிச்சயித்திருக்கும். லோகவிவகாரம் பேசும்படி கர்மத்தால் நேரிடும்போது, தன்பாஷையையும் அன்னியபாஷையையும் தெரிந்தவன்போலத் தன் நிச்சயத்தை மறவாமல் விவ

கரிக்கும். தேகத்துக்கு வியாதிமுதலான துக்கம்நேரிட்டால், வெய்யலில் இடுப்பளவு கெங்கையில் இருப்பவனுக்கு மேலே உஷ்ணமும் இடுப்புக்குக்கீழே கெங்கையின் குளிர்ச்சியும் தோற்றுவதுபோல, பிராரப்துவத்தால்வந்த துக்கமும் சொரூபானுபவத்தால் வந்திருக்கிற சுகமும் புத்தியில் ஒரேகாலத்தில் தோற்றும். ஆகையால் தன்னுடைய மனஸ்சாக்ஷிக்கு விரோதமன்றியிலும் குரு வாக்கியத்தையும் நம்பிப்பிழைக்கிறவன் கரையேறுவனேதவிர, சிலவாதிகள் இப்படிச் சொல்லுகிறார்கள், சிலர் அப்படிச் சொல்லுகிறார்களென்று அவைகளைக்கவனிப்பதே அமுமுக்ஷுத்துவமென்று ஹம்சோபநிஷத்தில் சொல்லியிருப்பதால், நீங்கள் யாதொன்றுக்கும் பயப்பட்டுச் சந்தேகப்படத்தேவையில்லையென்று சொன்ன குருவைப்பார்த்து சிஷ்யன் கேட்கிறான். ஐயா, பிராரப்துவ கர்மமானது அஞ்ஞானத்துக்குட்பட்டிருக்கும்போது, இந்த அஞ்ஞானமும் அதன்காரியமான ஆவரணசக்தியும், அதன்காரியமான தாதாத்மிய அத்தியாசமும், அதன்காரியமான கர்த்துருத்துவாதிகளும், அதன்காரியமான சஞ்சிதா காம்மியகர்மங்களும், அதன்காரியமான ஜனனமரணாதி சம்சாரங்களும் நிவர்த்தியாகுமென்று சுருதி யுக்தி அனுபவங்களால் சொல்லப்பட்டிருக்கும்போது பிராரப்தகர்மமட்டும் நசியாமலிருப்பதற்குக் காரணமென்னவென்று கேட்பாயாகிலதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறோம் கேள்:—பிராரப்தகர்மமானது ஞானமுண்டாவதற்கு முன்னமே ஈஸ்வரனால் விதிக்கப்பட்டபடியால், அந்தப் பிராரப்தகர்மமானது ஞானத்தினால் நசிக்காது. [எ-தி] ஒரு கிராமத்தில் தேவசர்மாவென்று ஒரு பிராமணன் மகாவித்வானாயும், வேதசாஸ்திர சம்பன்னராயும், மகாதபசியாயும், சிவபக்தசிரோமணியாயும், மகாபிரம்மநிஷ்டராயும், அவ்வூரிலிருக்கிற சகலமான பிராம்மணாள்முதலானவர்களுக்கு வேத சாஸ்திரங்களையும், பஞ்சாட்சரமுதலான மந்திரங்களையும், சிவபூஜை வைசுவ தேவமுதலானவைகளை உபதேசிக்கிறவராயும், அஜாதசத்துருவாயும் வசித்துக் கொண்டு வரும்போது; அந்தக்கிராமத்தில் மானதன் என்று ஒரு பிராம்மணன் கொஞ்சம் வேதசாஸ்திரங்களைப் படித்துக்கொண்டவனாயும், மிகுந்த அகம்பாவத்தோடேகூடினவனாயும். மகாவஞ்சகனாயும், வெகு பொறாமையோடே கூடினவனாயும் வசித்துக்கொண்டு வரும்போது; அந்தக்கிராமத்தில் யாருடைய வீடுகளில் என்னசுபசோபனங்கள் கல்யாணங்கார்த்திகைகள் வந்தாலும் சகலரும் அந்த தேவசர்மாவென்ற பிராம்மணரையே மரியாதையாய்க்கூப்பிட்டு எதேஷ்டமாய் வஸ்திரங்கள் ஆபரணங்கள் ரூபாய்கள்முதலானவற்றைக் கொடுத்துவருவதாலும், இந்த மானதனென்ற பிராம்மணனுக்கு உபாயமாய் தக்ஷிணைக்கொடுப்பதாலும், இவனை ஒருவரும் வருந்திக்கூப்பிடாததாலும், இவனுக்கு அவர்பேரில் துவேஷமுண்டாய், அவர் இந்த ஊரைவிட்டுத் தொலைந்துபோனால் தான் நமக்கு க்ஷேமமுண்டாகும், மரியாதையும் பிரயோஜனமுங் கிடைக்குமென்று மனத்திற்குள் சிலகாலமாய் யோசித்து, அவர்பேரில் குற்றங்களை கிராமஜனங்களிடத்திற் சொல்லிவந்ததிலும், அவர்கள் இவன்வார்த்தையை

ஒருவருங் கெண்ணியமாக எடுத்துக்கொள்ளாமலும், சபைகளில் அவரிடத்தில் தூராக்ஷேபமாய் சங்கித்தபோதிலும், அவர் கோபமன்றியில் அதற்கெல்லாம் சமாதானம் சொல்லிவந்ததை ஜனங்கள் பார்த்து, அவர்கள்பேரிலேயே அதிகவிசுவாசம் விருத்தியாயிருப்பதை இவன் பார்த்து, ஓ கோ கோ ! இவரை இப்படி விரோதியாயிருந்து விரட்டமுடியாது. இவரை அடுத்துக்கெடுக்க வேண்டுமென்று ஆலோசித்து, இவரிடத்தில் வந்து சாஷ்டாங்கமாய் நமஸ்காரம்பண்ணி எழுந்திருக்கமாட்டேனென்று சொல்லும்போது, இவர் உனக்கு என்னவேண்டும், அதைச்சொல்லென்று சொன்னவுடன் இவன் "நான் இது வரை தாங்கள் இந்த ஊரிலிருந்தும் தங்களுடைய மகிமையை யறியாமல் வீண்காலம் போக்கிவிட்டேன். இனிமேல்தான் தங்களைக் குருவாகவடைந்து, தங்கள்மூலமாய்ச் சகலவித்தைகளையும் கற்று, பிரஹ்மஞானம்வரை பெற வேண்டுமென்று வந்திருக்கிறேன். என்னை சிஷ்யனுகைக் கிரஹித்துக் காப்பாற்றுகிறேனென்று திருவாய்மலர்ந்து உத்தரவானுல்தான் எழுந்திருப்பேன்" என்று சொன்னதைக்கேட்ட அவரும் தயாசமுத்திரமானதால், அப்படியே உன் மனதுபோலே நீ சகலமான சுகத்தையும் பெறும்படி அனுக்கிரகிக்கிறேனென்று சொன்னபின், அவனும் அப்படியே அவர்களுக்குச் சகலவிதமான பணிவிடைகளையுஞ் செய்துகொண்டு, சாஸ்திரங்களையும் படித்துக்கொண்டு, ராவும்பகலும் அவரிடத்திலேயே காத்துக்கொண்டு, மனதில்மட்டும் இவரை ஊரைவிட்டுத் துலைப்பதற்கு என்னவழியென்று யோசித்துவருங்காலையில், ஒரு நாள் ராத்திரியில் இவரிடத்தில் இன்றையதினம் தீவட்டிக்கொள்ளைக்காரன் வருவதாய்க் கேள்வியாவதால், நாம் இருவரும் இவ்விரவில் முழிப்பாயிருக்க வேண்டுமென்று சொல்லி, அவரை வாசற்பக்கம் காவலாயிருக்கச்சொல்லி, இவன் அவருடைய ஸ்திரீபடுத்திருந்த அறையில் மகளையும் மருமகளையும் படுக்கச்சொல்லி, நாங்கள் கூப்பிட்டாலும் கதவைத் திறவாதேயுங்களென்று சொல்லிவைத்து, கோவில்பசுவை ஒரு புலித்தோலைக்கொண்டு போத்தி ஒரு தெருத்திண்ணைத்தூணில் கட்டிவைத்து, இவரிடத்தில் இதோ புலிவந்திருக்கிறது ! இந்த பாணத்தால் இதைக் கொல்லுமென்று வில்லையும் பாணத்தையுங் கொடுத்தவுடன், இவர் வாங்கிப் பாணத்தைவிட்டவுடன், இந்த சப்தத்தைக்கேட்ட அந்தப் பசு அம்மாவென்று கத்தினதும், இவர் பசுவென்று அறிந்தபோதிலும் விட்டபாணம் நிற்காமல் அதன்மேல் விழுந்து கொன்றுவிட்டது. இவன் அவரிடத்தில் உங்கள் ஸ்திரீயினிடத்தில் ஒருபுருஷன் வந்து படுத்திருக்கிறுனென்று சொல்லி, அவரைக் கூட்டிவந்து அறைக்கதவைத் தட்டும்போது திறவாமலிருந்ததால், ஏணிவழியாய் இறங்கச்சொல்லி, கத்தியைக் கொடுத்து வெட்டச்சொல்லி, அவரும் வெட்டினபின், இவன் வெளியேறி ஊரிலிருக்கிற ஜனங்களிடத்திலெல்லாம் போய், நம்முடைய குரு பசுவேஷமாயும் புலிகடத்தையாயுமிருக்கிறுர். கோவில்பசு தலைவாசலில் வந்து நின்றதற்குப் பாணத்தால் கோகத்திசெய்தார். கோபத்தால் மகளையும் மரு

மகளையும் வெட்டிப்போட்டாரென்று சொல்லி, எல்லோரையுங் காலமே இவர் வீட்டுக்குக் கூட்டிவந்து காண்பித்தவுடன், அவர்கள் இவரைப்பார்த்து இப்படிக் கோஹத்தி ஸ்திரீஹத்தி பிரம்மஹத்தி செய்யக்காரணத்தையும், அப்பாவம் போக பிராயச்சித்தத்தையும் சொல்லவேண்டுமென்று கேட்டதற்கு, இவன் செய்ததை ஒன்றுஞ்சொல்லாமலே நானே செய்தேன், அதற்குப் பிராயச்சித்தமுஞ் செய்துவிட்டேனென்று சொன்னதற்கு, இந்தப்புல்லை இந்தப்பசுவுக்கு நீர் கொடுத்து அது தின்றதானால் நாங்கள் பாபமில்லையென்று நம்புவோமென்று சொன்னதற்கு, இவர் இந்த உயிரோடேயிருக்கிற பசுக்கள் தின்கிறது ஆதிசயமில்லை. கோவிலில் கல்லாலும், செங்கல் சுண்ணும்பாலும், மையாலும் செய்திருக்கிற விருஷபங்களை புல்லுத்தின்கும்படி செய்கிறேன், நீங்கள் புல்லுகளை நிரம்பக்கொண்டுவந்து போடச்சொன்னபடி போட்டவுடன், இவர் போய் அவைகளை உயிரோடே புல்லுகளைத் திங்கும்படிசெய்து முன்போல ஏதாஸ்தானத்திற்போயிருந்ததும், இவர்கள் பிரார்த்தனைப்படி முன் இறந்துபோயிருக்கிற பசுவையும் மகனையும் மருமகளையும் பிழைப்பித்தபின், இதைச் சகலரும் கண்டு அதிசயப்படவும், அவன் சொல்லாமற்பறியவும், இதுவரையிலுமவன் நரகத்திலேயே துன்பப்படுவதால், ஞானத்துக்கு முன் ஆரம்பித்த கர்மத்தைத் தடுக்கக்கூடாதென்றறியத்தக்கது.

## 233 - வது தரங்கம்.

சொப்பனத்திலிருந்து ஜாக்கிரத்தில் விழித்தவனுக்குத் திரும்ப சொப்பனம் வருவதுபோல ஞானிக்குத் திரும்ப அஞ்ஞானநித்திரை வாராது:—

சொப்பனத்திலேயிருந்து விழித்தால் அது எப்படிப் பொய்யாய்ப் போச்சோ அப்படி இந்த ஜாக்கிரமும் சொரூபத்தில் விழித்தால் பொய்யாய்ப் போமென்று குரு சொல்லும்போது, மறுபடி சொப்பனமானது விழித்தவனுக்குத் தினந்தோறும் வருவதுபோல, பிரஹ்மம் நான், பிரபஞ்சமில்லையென்று விழித்தவனுக்கு இந்த ஜாக்கிரமாகிற சொப்பனம்வருமென்று தோற்றுகிறது. அதை அங்கீகரித்தாலிவனுக்கு ஜனனமரண துன்பம் போய் நித்தியசுகியாக எப்படி யாவனென்றலிதற்கு யுக்தி:— ரத்தினத்தினால் வீடு கட்டினவனுக்கு மண்வீடு கட்டினவனுக்குப்போலத் தினம் இருட்டுவந்து அதை நிவிர்த்திக்கிறதற்கு விளக்கு அடிக்கடி யேற்றவேண்டுவதுபோலவன்றி, அந்த ரத்தினவீடு எப்போதும் பிரகாசமாயிருப்பதும்தவிர அந்த ரத்தினம் உள்ளவரை அந்தஒளி பிரியாமலிருப்பதுபோல, பிரஹ்மஞானிக்குப் பிரஹ்மமுள்ளவரை அந்தஞானமும் அழியாமலிருப்பதால் திரும்ப அஞ்ஞானமாகிற நித்திரையால் ஜென்மபரம்பராரூபமான ஜாக்கிரத்தாகிற சொப்பனம் வருமென்று நினைப்பது உன் புத்திக்குறைவேதவிர வேறில்லை. ஐயா, சொப்பனத்திலிருந்து ஜாக்கிரத்துக்கு வந்தவன் மறுபடியும் சொப்பனவஸ்தையை

யடைவதுபோல பிரஹ்மஞானமாகிற ஞானஜாக்கிரத்தை யடைந்தவனுக்கும் அஞ்ஞானமாகிற நித்திரையால் ஜெகத்தாகிற சொப்பனத்தில் ஜனனமரண சம்சாரமாகிற கனுக்காணவருமேயென்று கேட்டதற்கு, மண்வீடுகட்டின தையும் ரத்னவீடுகட்டினதையும் திருஷ்டாந்தமாகச் சொன்னீர்களே, அது எனக்குத் திருப்தியான சமாதானமாக ஆகவில்லையேயென்று கேட்பாயாகில், அதற்கு நான் வேறுவிதமாக உத்தரஞ்சொல்லுகிறேன் கேள்:— ஜாக்கிரத்தில் விழித்தபுருஷனுக்கு திரும்பத்திரும்பச் சொப்பனமுண்டாவதற்கு மூலாஞ்ஞானமானது காரணமாயிருந்ததுபோல, பிரஹ்மஞானமாகிற ஞானஜாக்கிரத்தில் விழித்தவனுக்குத் திரும்ப ஜகத்தாகிற சொப்பனமுண்டாவதற்கு யாதொரு காரணமான அஞ்ஞானமில்லாததினால் திரும்ப ஜனனமரணமாகிற சம்சாரசொப்பனம் வாராது. [எ - தி] ஒரு மரத்திலுண்டாகிற கொப்புகள், கிளைகள், இலைகள், பூ, காய், பழங்கள் வெட்டப்பட்டாலும், உதிரப்பட்டாலும், பறிக்கப்பட்டாலும் வேர்மட்டும் பெலமாயிருக்கும்பக்ஷத்தில் மேலே சொல்லிய இலைமுதலானவைகள் திரும்ப உண்டாவதற்கு யாதொரு சந்தேகமுமில்லாததையும், அந்தமரத்தினுடைய வேரைத் தீயாலெரித்தபின் முன்போல இலைமுதலானவைகளொன்று முண்டாகாததுபோல, அஞ்ஞானமாகிற மரத்தில் ஜாக்கிர சொப்பன சுழுப்தி மூர்ச்சை மரணமாகிற கொப்பு கிளை இலை முதலானவைகள் அடிக்கடி யுண்டாயுண்டாய் நாசத்தையடைந்து திரும்ப உண்டாவதுபோல, மூலாஞ்ஞானமாகிற வேர் ஞானக்கினியால் எரிக்கப்பட்டபின் திரும்பச் சம்சாரவிருக்ஷம் ஒருக்காலுமுண்டாகமாட்டாதென்றறிக. ஒரு அரசன் அநேகம் படைகளையேவிச் சண்டைக்கு வரச்சொன்னவர்களையெல்லாம் நாம் கொன்றாலும், திரும்ப அவ்வரசன் அப்படைகளை யுண்டுபண்ணி அனுப்பித்துக்கொண்டிருப்பதைக் கண்டு, அவ்வரசனையே வெட்டிக் கொன்று போட்டபின், சண்டை ஒய்ந்துபோவதுபோல, ஞானத்தால் அஞ்ஞானம் போனபின் யாதொரு சம்சாரமுமுண்டாகாதென்றறிக. அகங்கார ராவணனுடைய மூலாஞ்ஞானமாகிற அமிர்தகலசம் பிரஹ்மஞானாஸ்திரத்தால் எரிக்கப்பட்டபின் சம்சாரமாகிற தலை முன்போல முளையாதென்றறிக.

## 234 - வது தரங்கம்.

ஞானிக்குக்கூட சித்தி துக்கத்தைக்கொடுக்கும்:—

ஞானம்வந்தவனுக்குச் சித்திகூடவிருந்தால் விசேஷந்தானேயென்றால், திருவையாற்றில் ஒரு ஞானி வயிற்றுவலிக்காரனை தாசில்தாருக்கு ஒருகுளிகையைக் கொடுத்து மறுநாள்வரை மரணாவஸ்தையுண்டாகுமென்று சொல்லியிருக்கும்போது, கலெக்ட்டர் வந்து அந்த அவஸ்தையைப்பார்த்து, அந்த ஞானியை வம்பிலேகட்டியடிக்கும்போது, நாளையத்தினம் சொஸ்தமாகுமென்று நலஞ்சொன்னதின்பேரில் அந்தப்படி சொஸ்தமாயெழுந்து வந்து

இவருக்குக் கைமாறு என்னவேண்டுமென்று கேட்க முக்கால்துட்டுஎருக் கொண்டுவரச்சொல்லித் தன்கையிலிருந்த மருந்துப்பையை வைத்து எரித்துச் சுகமாயிருந்ததைபோலவறிக. [இ - து] ஞானிக்குச் சித்தியுங்கூட இருந்த தானல் கெடுதல். [எ - தி] சேதுவில் மகோதயபுண்ணியகாலத்தில் யோக சித்தியைப் பூரணமாய்ப்பெற்ற ஒரு தீக்ஷதர் ஒருவனுக்கு ஒருமயிரைப் பிடுங் கிக்கொடுத்ததில், அவனுக்கு வயிற்றுவலி தீர்ந்ததைக்கண்ட மற்றவர்கள், அவருடைய ரோமங்களை பற்றுக்குறடைக்கொண்டே பலரும் பிடுங்கிக் கொன்றதைபோலும்; தேகத்திலிருக்கிற அழுக்கினுல் செம்பைத் தங்கமாக்கி னவனுடைய தேகத்தை புடம்போட்டுக் கொன்றதைபோலுமறிக. [இ - து] நாரதாதிகள் முந்திச் சித்திமார்க்கத்தில் அலேந்து துக்கப்பட்டு, பிந்தி ஞான மார்க்கத்தில் வந்து சுகித்தார்கள். (எ - தி) வழிதெரியாமல் முள்ளுமார்க்கத் திற் கஷ்டப்பட்டு பிந்தி ராஜமார்க்கத்தை யடைந்து சுகிப்பதுபோலுமறிக. ஐயா, பிரஹ்மஞானி ஜெகத்தைப் பொய்யென்று அறிந்திருப்பதால் அவனுக் குக்கூடச் சித்தியிருக்கும்பக்ஷத்தில் துக்கமுண்டாகுமென்று சொன்னீர்களே, அவனுக்குத் துக்கநிவர்த்தி தடையற்ற ஆனந்தமென்கிற ஆருவது ஏழாவது அவஸ்தைகள் உண்டென்று சொல்லியிருக்கிற சுருதிகளுக்கு விரோதமாச்சுதே யென்று கேட்பாயாகில், அதற்கு உத்தரஞ்சொல்லுகிறேன் கேள்:— அடே மூடா! ஞானிக்கு விவகாரதிருஷ்டி பரமார்த்ததிருஷ்டி இரண்டுண்டென்று நெடுகச்சொல்லிக்கொண்டு வந்திருந்தும், இப்போது நாம் அதில் விவகார திருஷ்டியில் சித்தியும் சாபானுக்கிரக சாமர்த்தியமுமிருந்தால் துக்கங் கொடுக்குமென்று சொன்னதற்குச் சாக்ஷியாக— வசிஷ்டர் விசுவாமித்திரர் இவர்களுக்குச் சாபானுக்கிரக சாமர்த்தியமிருந்ததினுலல்லவா பிரஹ்மஞானம் வந்தும், இவர்புத்திரர்களை அவர் சபிக்கவும், அவர்புத்திரர்களை இவர் சபிக்க வும், அப்படிப் பிள்ளைகள் செத்தகாலத்தில் வசிஷ்டர் அழுதாரென்று வேதத் திற்கூட சொல்லவும், திரிசங்குமகாராஜாவானவன் வசிஷ்டரைப் பார்த்து இந்த ஸ்தூலதேகத்தோடே சொர்க்கத்துக்குப் போகவேண்டுமென்று கேட்ட தற்கு, அவர் அது முடியாதென்று சொன்னபின்னும் ஆக்ஷேபித்ததால், அவர் இவனை நீசனுகப்போகக்கடவாயென்று சபித்தபின், அவன் விசுவாமித்திரரிடம் வந்து இந்தச்சேதியைச் சொன்னதைக் கேட்டு, அவரும் வசிஷ்டரிடத்திலிருக் கிற விரோதத்தால் அவனைப்பார்த்து, உன்னை இந்தத் தூலதேகத்தோடே யாகம்பண்ணிவைத்துத் தேவவிமானத்தை வரவழைத்துச் சொர்க்கத்துக் கனுப்பிவைக்கிறேனென்று சொல்லி, அப்படியே யாகஞ்செய்துவைத்ததில் தேவேந்திரன் பார்த்து, குருசாபத்தால் பறையனுய்ப்போயிருக்கிற இந்த ராஜசரீரத்தோடே வருவதற்கு விமானம் அனுப்பிவைக்கிறதில்லையென்று சும்மாவிருந்தபின், விசுவாமித்திரர் மந்திரத்தினுலேயே தெர்ப்பையைக்கொண்டு தேவவிமானத்தை யுண்டுபண்ணி அதில்வைத்து இவனை அனுப்பிவைத்தமாத் திரத்தில், இவனந்த விமானத்திலேறிக்கொண்டு தேவலோகத்துக்குப் போன

மாத்திரத்தில், தேவேந்திரன் இவனை விமானத்தோடே கீழேதள்ளினவுடன் தலைகீழாக விழுவதைக்கண்டு, விசுவாமித்திரர் மத்தியிலிருக்கும்படி செய்த கதையைக் கண்டுகொள்ளத்தக்கது.

235 - வது தரங்கம்.

*பிரம்மவித்தே கீழ்மேல் பூமிக்காரர்களுக்கு உபகாரி:—*

பிரம்மவித்தினாலேயே முமுட்சுக்களுக்கு ஞானோபதேசமும், மேல் பூமிக்காரர்களைப் பெரியோர்களென்று தெரிந்து உபசரிப்பதுமிருப்பதால், இவனாலேயே சகலருக்கும் பிரயோஜனம். [எ - தி] சந்ததிவிருத்திக்கும் சகல பணிவிடைக்கும் யௌவனஸ்திரீயாலேயே பிரயோஜனமாவதுபோலும், வியாதிநிவர்த்திக்கு வைத்தியனால் பிரயோஜனமாவதுபோலும், பசிநிவர்த்திக்குத் தாதாவான பிரபுவால் பிரயோஜனமாவதுபோலவறிக. (இ - து) பிரம்மவித்தினாலேதான் ஜெகத்துக்குப் பிரயோஜனம். (எ - தி) குடும்பத்தை ரக்ஷிப்பதற்குக் குழந்தையினாலும் கிழவனாலும் முடியாமல், யௌவன புருஷன் ரக்ஷிப்பதுபோலும்; நீஞ்சத்தெரியாதவனும் கரையேறிப்போன வனும் பிரயோஜனமில்லாமல், தானும் கரையேறி தன்னைச் சரணாகதியாய் அடுத்துவந்த சாதுக்களையும் அக்கரைக்குத் தைரியமாய்க் கொண்டு போகிற நீச்சுக்காரனைப்போலவும்; கன்னிகையும் கிழவியும் போகத்துக்குப் பிரயோஜனமில்லாமல் யௌவனஸ்திரீமாத்திரம் போகத்துக்கு உபயோகப்படுவதுபோலவுமென்றறிக. [இ - து] பிரம்மவித்து என்பவன், தான் மாத்திரம் தெரிந்துகொள்ள சக்தியுள்ளவன். பிரம்மவித்தமன், தன்னையும் அன்னியர்களையுங் கரையேற்ற வல்லமையுடையவன். [எ - தி] ஏழையும் தாதாவும்போலவென்றறிக. [இ - து] தான்மாத்திரம் தனித்துச் சமாதிசுகமனுபவிப்பது—பூனை எலியைப்பிடித்து ஏகாந்தத்தில் சாப்பிடுவதுபோலும்; சாதுக்களுடன் சொரூபவிசாரம்செய்து சுகிப்பது—வெளிச்சத்தில் இஷ்டமித்திராளுடன் போஜனம்பண்ணுகிற சுகம்போலவறிக. (இ-து) முதல் பூமியிலிருக்கிறவன்முதல் ஏழாம்பூமியிலிருக்கிறவன்வரையிலுள்ளவர்களுக்குள்ளே முமுட்சுக்களுக்கு நாலாம்பூமியிலிருக்கிறவனாலேயே ஞானமும் சுகமும் கிடைக்கும். [எ - தி] பிறந்தபிள்ளைமுதல் கிழவன்வரையிலுள்ளவர்களுக்கு ஆண்குறி சரியாயிருந்தாலும் சமைந்தபெண்ணுக்கு யௌவனபுருஷனாலேயே சுகமும் பிள்ளையும் பெறவேண்டியிருப்பதுபோலவறிக. ஐயா, நாலாம்பூமியிலிருக்கிற பிரம்மவித்தே மற்றக் கீழ்பூமியிலும் மேல்பூமியிலுமிருக்கிறவர்களுக்கெல்லாம் உபகாரம் செய்கிறவனென்று சொன்னீர்களே, அதற்குச் சுருதி யுக்தி அனுபவமென்னவென்றால், விவேகசூடாமணியில் சாந்தர்களாயும் மகாத்மாக்களாயுமிருக்கிற பிரம்மவித்துக்கள், வசந்தருதுவானது சகலமான பூ கனிகளை லோகோபகாரமாகக் கொடுப்பதுபோல ஞானவைராக்கியங்களை முமுட்சுக்களுக்குக் கொடுத்துக்கொண்டு, பயங்கரமான சம்சாரசமுத்திரத்திலி

ருந்து தாங்களும் கரையேறி அன்னியர்களேயும் பிரத்தியுபகாரத்தை எதிர்பாராமல் கரையேற்றிவைத்துக்கொண்டு இருக்கிருர்களென்கிறதே சுருதி. தாயானவள் தானும் திருப்தியாய் போஜனம்பண்ணி பர்த்தா சம்மந்திமுதலான பேர்களுக்கும் அன்னம்போடுவதும், சாதம்ஊட்டுகிற பிள்ளேகளுக்குச் சாதம் ஊட்டுவதும், முலேகுடிக்கிறபிள்ளேக்கு முலேப்பால் கொடுப்பதும், பிச்சை முஷ்டிகேட்பவர்களுக்குப் போடுகிறவளாயும், வீட்டிலிருந்து சகல சாமான்களேயும் காப்பாற்றுகிறவளாயும், பக்ஷபாதமற்றவளாயும், குழந்தைகள் வைதாலும் அடித்தாலும் கோபமன்றியில் அவைகளேச் சீராட்டுவதுபோலும், மகா உபசாந்தமாயுமிருப்பதே யுக்தி. இனி அனுபவமாவது,— நம்முடைய சற்குருநாதன் இப்போது தானும் கிருதார்த்தனுய், மந்த மத்திம தீவிர அதிதீவிரபக்குவிகளான நம்போலிகளாயிருக்கிற சகலமான முமுட்சுக்களுக்கும் சகலமான அஞ்ஞான சந்தேக விபரீதங்களேயெல்லாம் போக்கிக்கொண்டிருப்பதுந்தவிர, மற்றப் பாமரர்களாய் லௌகிகர்களாயிருக்கிற பேர்களுக்கு கோர்ட்டு என்றும், சேவகர்களென்றும், வக்கீல்களென்றும், சிரஸ்தாமுதலான உத்தியோகஸ்தர்களென்றும், ஜட்ஜியென்றும், வியாஜ்ஜியம் பண்ணுகிறதென்றும், பொய்புரட்டுகளேக் கண்டுபிடித்து பொய்யைத்தள்ளி நிஜத்தை நிலேநிறுத்தும்படியான தீர்ப்பைச் செய்கிருரென்ற திருஷ்டாந்தமூலமாய்த் தேகேந்திரிய பிராண மனசு ஆத்மாக்களேக் காண்பித்துப் பொய்யான அனுத்மாக்களேத் தள்ளி ஆத்மாவைக் காண்பிப்பதேயாம்.

## 236 - வது தரங்கம்.

ஞானியும் ஈசனும், பிரம்மம் என்றுசொன்னுல் பிரியமும், நாமரூபத்தைக் குறித்துச் சொன்னுல் விசனிப்பார்கள்:—

ஈஸ்வரனேயும் ஞானியையும் ஒருவன் கண்டு நீர் பஞ்சகிருத்தியபரன் நீ இன்னுன்மகன் இன்னபேருடையவனென்று சொன்னுல் இவர்கள் விசனிப்பார்கள். பிரஹ்மமென்று சொன்னுல் சந்தோஷிப்பார்கள். [எ - தி] சந்திரமதி வேஷம்போட்டு ஆடுகிற சிவஸ்வாமியென்பவனே சந்திரமதி என்று சொன்னுல் சந்தோஷப்படாமல் சிவஸ்வாமியின் நாடகம் நன்ருயிருக்கிறதென்று சொன்னுல் சந்தோஷப்படுகிறதுபோலவறிக. ஐயா, ஈஸ்வரனும் ஞானியும் சச்சிதானந்த பிரம்மமென்று சொல்லுகிறவர்களிடத்தில் சந்தோஷமும்; ஈஸ்வரனென்றும், பஞ்சகிருத்தியஞ் செய்கிறவனென்றும், தசாவதாரஞ் செய்கிறவரென்றும், திரிபுரசம்மாரஞ் செய்கிறவரென்றும், காளகூடவிஷத்தைப் பானம்பண்ணினவரென்றும், எமனேக் காலாலுதைத்தவரென்றும், காமனேக் கண்ணுல் எரித்தவரென்றும், பாலுக்கழுத பாலகனுக்கு பால்கடலீந்த பிரானென்றும், மங்கைபாகனென்றும், இப்படியெல்லாஞ் சொல்லித் துதிக்கிறவர்களுக்குச் சகலமான மனுேபீஷ்டத்தையுங்கொடுக்கிறது சுருதி யுக்தி அனுபவத்தினுலே காணப்பட்டிருக்கும்போது, அவருக்கு நாமரூபத்

தைக்குறித்துத் துதிப்பதில் சந்தோஷமில்லை, சச்சிதானந்த சொரூபத்தைக் குறித்து துதிப்பதிலேயே சந்தோஷமென்று எப்படிச் சொல்லலாமென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறோம் கேள்:—வாராய் குழந்தாய்! நாடகம்போட்டு ஆடுங்காலையில் அந்த வேஷத்தைப்பற்றித் துதிக்கிற மூடர்களுடைய சொல்லானது அவனுக்குச் சந்தோஷத்தைக் கொடுப்பது போலப் பார்க்கிறவர்களுக்குத் தோற்றினாலும், வேஷத்தைக் கலைத்தபின் அவன் எதார்த்தமான பேரைச் சொல்லுவதினாலேயே சந்தோஷம்வருவது போல, ஈஸ்வரனும் ஜெகத்தாகிற நாடகத்தைப்போட்டு ஆடும்போது நீல கண்டன், திரிநேத்திரன், பஞ்சமுகன், பத்துக்கையன், வழுக்கத்தலையன், சடைத்தலையன், தண்ணீரைத் தலையில் தூக்குகிறவனென்று இப்படிச்சொல்லுகிற சொல்லைக் கேட்டுச் சந்தோஷிப்பவன்போலும், அவர்களுக்கு மாயிகப் பலத்தைக் கொடுப்பவர்போல தோற்றினாலும், அவருக்கு அந்தரங்கத்தில் பிரியமில்லை. சாக்ஷி என்னவென்றால்,— பிருங்கிச மகரிஷியானவர் பரமேஸ்வரனை வெகுகாலம் பூஜித்து வந்ததிலும், அவருக்குச் சம்சாரதுக்கம்போகாமல் தபித்துக்கொண்டு திரும்ப பரமசிவனை வந்து சரணாகதம்பண்ணி, எனக்கிந்த சம்சாரதுன்பம் என்னமாய் நிவர்த்தியாகுமென்று கேட்டதற்கு, பரமசிவன் அந்தரங்கமாய் அருளிச்செய்ததாவது, ஏ பிருங்கிசா! நீ இதுவரையில் மாயீகத்தையே யுபாசித்து வந்ததால் உனக்கு சம்சாரதுக்கம் நிவர்த்தியாகவில்லை. அது நிவர்த்தியாவதற்கு மூன்று விரதமிருக்கின்றது. அதாவது, மகாகர்த்துருத்துவமென்றும், மகாபோக்த்துருத்துவமென்றும், மகாதியாகித்துவமென்று மூன்று விரதங்களிருக்கின்றன. அவைகளில் மகாகர்த்துருத்துவமாவது எவ்விதமென்றால்,— பஞ்சகோசத்துக்குள்ளும் பஞ்சபூத பௌதீகங்களுக்குள்ளும் தான் நிறைந்திருந்தும் ஒருவிதமான செய்கைகளையுஞ் செய்யாதவனாயும் அவைகளைச் செய்யும்படியாய் ஏவுதல்செய்யாதவனாயும், சாக்ஷி மாத்திரமாயுமிருக்கிற என்னுடைய சன்னிதானத்தில் மனசு இந்திரியமுதலிய கரணங்கள் அந்தந்தத் தொழில்களைச் செய்துகொண்டு, அவைகளுக்கு அவ்விஷயங்களில் தோஷதிருஷ்டிபூர்வகமாக விரக்திவரும்போது சமாதிசெய்வதும், சூரியன்முன்பாக உலகங்கள் சேஷ்டைசெய்வதும் சும்மாவிருப்பது போலுமென்று நாம் சாக்ஷியென்றிருப்பதே மகாகர்த்துருத்துவம். அறுசுவையில் குணம் குற்றங்களைப் பாராமல் காட்டுத்தீப்போலக் கிட்டினதைப் புஜிப்பவனே மகாபோகியென்றும்; நன்மைதீமைகளை யறிந்தாலும் ஸ்படிகம்போல உள்ளே பற்றுதலற்று இருப்பவனே மகாத்தியாகியென்றும் இப்படி யுபதேசித்ததைக் கண்டு நீயும் அறிந்துகொள்ளக்கடவாய்.

## 237 - வது தரங்கம்.

ஞானி புண்ணியவானுக்குப் பிரம்மமாயும் பாபிக்கு மனுஷனாயுந் தோற்றுவன்:—

குருவானவர் புண்ணியசாலிக்குப் பிரம்மமாயும் சுகத்தைக் கொடுக்கிறவராயும், பாபிக்கு மனுடனாயும் எமனாயுந்தோற்றுவர். [எ-தி] ஸ்திரீயின் ஸ்தன்னியமானது குழந்தைக்குப் பால்கொடுக்கிற பாத்திரமாயும், மோகிக்கு மயக்கத்தைக் கொடுக்கிறதாயும்; அமிர்தம் ஒன்றே தேவர்களுக்குச் சுகத்தையும், அசுரர்களுக்குப் பயத்தையுங் கொடுத்ததுபோலுமறிக. ஐயா, ஞானி பக்குவிக்குப் பிரம்மமாயும், அபக்குவிகளுக்கு மனுஷனாயும், அதிலும் நிரம்ப நிகிருஷ்டனாயும் தோற்றுமென்று சொன்னீர்களே, அப்படி ஒருவனே இருவருக்கும் இருவிதமாய்த் தோற்றுமென்பதற்கு சாக்ஷி என்னவென்றால், பரதமகாராஜா வேதாந்தசிரவணம் பண்ணி, மனன நிதித்தியாசன சமாதிகளைப்பண்ணுவதற்காக ராஜ்ஜியத்தை யெல்லாம்விட்டு ஏகாங்கியாய்க் காட்டுக்குப்போய், அப்படி மனனாதிகளைச்செய்து வருங்காலையில், ஒருதினத்தில் குளத்துக்கு ஸ்நானம்பண்ணப் போனகாலத்தில் ஒரு மான்குட்டியின் தாய் தண்ணீரில்விழுந்து சாகவும், பிரசவித்த அந்த மான்குட்டி இவர்கையில் விழுந்ததால், அதைஎடுத்துக்கொண்டு வந்து வளர்த்து, அதன்பேரில் ஒரு ஆசையை வைத்திருந்ததால், அது காணாமற்போனகாலத்தில் விசனத்தாலிவர் இறந்துபோய், அந்த வாசனையால் மானாய்ப்பிறந்து பச்சைப்புல்கூடத் தின்காமற் பெரியோர்கள் சமுகத்தில் நடந்து வருகிற வேதாந்தசிரவண ஸ்தலத்திலேயே படுத்துக்கிடந்து, அந்த ஜன்மம் போய் மூன்றாவது ஜன்மம் பிராம்மணனாய்ப் பிறக்கும்போதே ஞானியாய்ப் பிறந்ததால், உலகத்திலுள்ள சகலத்திரர்களும் இவரை சர்வநிகிருஷ்டமாய் நினைத்து ஜடனென்றுபேர்வைத்து, அவரவர்களுக்கு வேண்டியகாரியங்களுக்கு இவரைக்கூட்டிப்போய் அந்தந்தவேலைகளையுஞ் செய்யச்சொல்லி, இப்படி வெகுகாலம் நடந்து வரும்போது, அந்த ராஜ்ஜியத்துக்கு அரசனிடத்தில் ஒரு குறிகாரன் போய் இன்ன காளிகோவிலுக்குமுன்பாக அனந்தகோடி திரவியங்கள் புதைக்கப்பட்டிருக்கிறது, அதற்கு ஒரு நரபலி சம்மதத்துடன்கொடுத்தால் அந்தப் புதையலை அது கொடுக்கிறதென்று சொல்லுகிறதென்று சொன்னதைக் கேட்ட அவ்வரசனும், அந்த மந்திரியைக் கூப்பிட்டு ஒருமனுஷனுக்கு சம்மதத்துடன் வேண்டியரூபாய்களைக் கொடுத்து தீர்மானித்து வரச்சொல்லியபடி, இந்த ஜடனைத் தீர்மானித்து வெட்டக்கொண்டுபோகும்போது, இவனுஞ் சந்தோஷமாய்ப்போய்க் குனிந்தவுடன், கத்தியை வெட்டுவதற்கு ஓங்கினவுடன், காளி வந்து கத்தியைப்பிடுங்கி மந்திரிமுதலானவர்களையெல்லாம் வெட்டிப்போட்டு, இவரைப் பூஜித்து சிரசில் தூக்கிவைத்துக்கொண்டு கொண்டாடி அனுப்பிவைத்தபின், இவர் சுயவிச்சையாய்ச் சஞ்சரித்துக்கொண்டு வருங்காலையில், சவ்வீரமகாராஜன் அதிதீவிர முமுக்ஷுவாய், சற்குருவை அஞ்சுலட்சம் யோசனை தூரம் போய்த் தேடியுங் காணாமல் தபித்துக்கொண்டு, ஒரு சத்திரத்தில் ராத்திரி நித்திரையன்றியிலிருந்து காலமே முன்போலவே தேடப் புறப்படும்போது, பல்லாக்குபோகிகளில் ஒருவனுக்கு கால் சுவாதீனமில்லாததைப்பற்றி இந்த ஜடனைப் பல்லாக்குத்தூக்கும்படி செய்ததில், இவர் ஜீவ

காருண்யத்தால் காலைத்தூக்கி ஜந்துக்களில்லாத இடம்பார்த்து வைத்துக் கொண்டு போகும்போது, அவ்வரசன் பல்லாக்கை இவன் உடையும்படியாக வும் குடை கிழியும்படியாகவுஞ் செய்வதைக்கண்டு வையும்போது, இவர் "ராஜாவுமில்லை. பல்லாக்குமில்லை. குடையுமில்லை. எல்லாம் பிறித்தால் பொய்" என்று சொன்னதைக்கேட்ட அவன் அவருடைய அனுக்கிரகத்தால் ஞானமடைந்ததால், குரு பக்குவிக்குத் தெய்வமாயும் அபக்குவிக்கு ஜடனாயுந் தோற்றுமென்று முன்சொன்னது சரியென்று அறியத்தக்கது.

## 238 - வது தரங்கம்.

அஞ்ஞானி ஞானியாகலாம், ஞானி அஞ்ஞானியாகான்:—

அஞ்ஞானி ஞானியாவன், ஞானி அஞ்ஞானியாகான். [எ - தி] பால் வெண்ணையாவதும், வெண்ணை பாலாகாததுபோலும்; பச்சபானை சுட்டபானை யாகுவதும், சுட்டபானை பச்சப்பானையாகாததுபோலும்; கெங்கையில்விட்ட மூத்திரங் கெங்கையாவதும், கெங்கை மூத்திரமாகாததுபோலுமறிக. ஐயா, இன்னம் அஞ்ஞானி ஞானியாகலாம், ஞானி அஞ்ஞானியாகக்கூடாதென்று சொன்னதை திருஷ்டாந்தமூலமாய் விஸ்தாரமாய்ச் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறோங் கேள்:— கன்னிகை யான பெண் பக்குவமான பெண்ணாகலாம், பக்குவமான பெண் கன்னியாக வாகாததுபோலும்; அரும்பு மலர்ந்தபுஷ்பமாகலாம், அது இதுவாக ஆகாதது போலும்; காய் பழமாகலாம், பழங் காயாகாததுபோலும்; படியாதமூடர்கள் பின்படித்து வித்துவானாகலாம், வித்துவானானவன் முட்டாளாக ஆகாததுபோ லும்; சிசுனத்திலிருந்து சுக்கிலம் வெளியில் வரலாம், வெளியில் வந்த சுக்கிலம் உள்ளே ஏறாததுபோலும்; கெர்ப்பத்திலிருந்து பிள்ளை வெளியில்வரலாம், வெளி யில் வந்தபிள்ளை திரும்ப யோனிவழியாய் உள்ளே நுழையமுடியாததுபோலும்; மரத்திலிருந்து இலை பூ காய்கள் கீழே பூமியில் விழலாம், இவைகள் திரும்ப மரத் தில் ஒட்டமுடியாததுபோலும்; குடும்பத்தைவிட்டுக் கிரகஸ்தன் சன்னியாசி யாகலாம், சன்னியாசி திரும்பக் குடும்பத்தில் வந்துசேரக்கூடாததுபோலும்; மேகத்திலிருந்து மழை பூமியில்வந்து ஜலமாய் விழலாம், பூமியில்வந்த ஜலம் திரும்ப மேகத்திற் போய்ச் சேரமுடியாததுபோலும்; அஞ்ஞானி ஞானியாக லாம், ஞானி அஞ்ஞானியாக ஒருக்காலும் ஆகமாட்டானென்றறிக. ஐயா, வாம தேவர் முதலானவர்கள் தத்துவஞானியாயிருந்தும் அஞ்ஞானியாய்த் திரும்ப ஜென்மம் எடுத்தாரென்றும், இப்படியே வெகுபேர்கள் சிரவணமனனாதிகளை வெகுகாலஞ் செய்துவந்தும், அதனால் ஞானமுண்டாயிருந்தும் திரும்ப அநேக ஜன்மங்களெடுத்து அநேக குருக்களிடத்திற் போய் ஞானத்தை யடைந்து ஜென்மநிவிர்த்தியானார்களென்றும், வாலகில்யர்களென்ற ரிஷிகள் பிரம்சரியத்திலேயே வெகுகாலம் வைராக்கியத்தோடேகூடி யிருந்தும், கிரகஸ்

தாசிரமத்தைக்கூட அடையாமல் சன்னியாசாசிரமம் பெற்றுக்கொண்டு, தபோதனரென்ற ரிஷியினிடத்தில் வெகுகாலம் வேதாந்தசிரவணம் பண்ணி பரோக்ஷஞானத்தைப் பெற்று, சதானந்தயோகியினிடத்திற் போய் இயம நியமங்களையுஞ் செய்துகொண்டு பத்மாசனமுதலான எண்பத்துநான்கு ஆசனங்களையும் சுவாதீனம்பண்ணிக்கொண்டு, ரேசக பூரக கும்பகமுதலான பிராணாயாமங்களையும் பழகி, ஆகாசகமனாதிசித்திகளையும் பெற்று, சுரோத்திராதி ஞானேந்திரியங்களைப் பகிர்முகமாய்ப் போகவொட்டாமல் அந்தர்முகமாய்ச் செய்கிற பிரத்தியாகாரத்தையும் பண்ணி, விஷயப்பிரக்ஞையை மறக்கடித்து சொரூபப்பிரக்ஞையை வளர்ப்பிக்கிற தாரணையுஞ்செய்து, விஜாதிய விருத்திகளைத் திரஸ்காரம்பண்ணி சுஜாதியவிருத்திப் பிரவாகமுண்டாகிற தியானத்தையுஞ்செய்து, அப்படி ஸ்திரமான சமாதியைச்செய்தும், இவர்களுக்கெல்லாம் ஜென்மநிவர்த்தி வராததற்குக் காரணமென்னவென்றால், நீ சொன்னவர்களுக்கெல்லாம் அப்பிரதிபந்தமான அபரோக்ஷஞானமுண்டாகாமையால் அவர்களுக்குத் திரும்ப ஜென்மம் வந்திருக்கிறதேதவிர, அப்பிரதிபந்த அபரோக்ஷஞானமடைந்தவர்களுக்குள்ளே யாருக்குத் திரும்ப ஜென்மம் வந்திருக்கிறது சொல் ?

## 239 - வது தரங்கம்.

*சவிகற்ப நிருவிகற்ப சமாதிகளின் தன்மை:—*

சவிகற்பசமாதியினால் சித்ததோஷங்கள் போய், நிருவிகற்பசமாதியினால் சொரூபசுகமனுபவிக்கவேண்டும். [எ - தி] நதிப்பிரவாகத்தால் அதிலுள்ள மலங்களெல்லாம் போய்த் தெளிந்தபின் சுத்தஜலத்தைச் சாப்பிட்டு சுகத்தையடைவதுபோலவறிக. [இ - து] நிருவிகற்பசமாதிக்குத் திருஷ்டாந்தம்— சுழுப்திபோலும், சவிகற்பசமாதிக்கு யுக்தி— கெங்காப்பிரவாகம்போலுமறிக. [இ - து] முமுக்ஷுவானவன் சிரவண மனன தியானங்களை எவ்வளவுகாலஞ் செய்தாலும், சமாதியில் ஆத்மசாக்ஷாத்காரம் வந்தால்தான் மூலாஞ்ஞானத்துடன் அகங்காரம் நசிக்கும். [எ - தி] தொயோபஸ்தத்தைத் தேடிக்கொண்டிருந்த வித்தியார்த்திக்கு எவ்வளவுகாலம் ஸ்திரீகளுடைய கதைகளைக்கேட்டும், பார்த்தும், பேசியும், அவன்விகாரந் தீராமல் ஐக்கியபோகத்தை இடைவிடாமல் ஆறுமாதம் அனுபவித்தபிறகே, அவன்கொழுப்புக் குலைந்து, நிராசையையடைந்து, அனுபவத்திலிருக்கிற உபஸ்தத்தையும் விற்கச்சொன்ன கதைபோலும்; சித்தனாற்கட்டின ரசமே தீயை ஜெயிக்கிறதேதவிர, ரசவாதசாஸ்திரத்தைக் கேட்பதாலும் பார்ப்பதாலும் இவன்செய்கையாலும் ரசங் கட்டுப்படாதது போலுமறிக. [இ-து] திருசியானுவித்தசமாதிக்கு சாக்ஷியே நானென்று கேட்டு அதைத்தியானிக்க ஆரம்பிக்கிறது ஆதி; காமாதிவிருத்திகளுக்கு நான் சாக்ஷியென்று தியானிப்பது நடு; அது நிலைப்பது முடிவு. இந்த ஆதிநடுமுடிவுக்கு

யுக்தி:—குளவியால் கொட்டிக்கொண்டு வைத்திருக்கிற புழு குளவியை நினைக்கிறதும், பிறகு அது கொட்டுமென்கிற தியானமும், பிறகு குளவியே தானாகிறதுபோலுமறிக. சத்தானுவித்தசமாதிக்கு நான் அசங்கனென்று தெரிந்து, அதைப்பழக ஆரம்பிப்பது ஆதி; அப்படிச் சின்மாத்திரனென்ற சப்தங்களை சதாபழகுவது நடு; அந்த நிச்சயம் உறுதியாவது முடிவு. இந்த ஆதிநடுமுடிவுக்கு யுக்தி:—வித்தையைப்படிக்க ஆரம்பிக்கிறதும், பிறகு சகபாடிகளோடே அந்தச் சப்தங்களையே சொல்லிக்கொண்டிருக்கிறதும், பிறகு அந்தச் சப்தார்த்தம் நெஞ்சில் உறைக்கிறதுபோலுமறிக. நிருவிகற்பசமாதிக்குச் சத்துவவிருத்தியும் பிரக்ஞையும் ஒருமிப்பது ஆதி, சுவானுபூதிரசத்தின் மேலீடு நடு, அதில் லயிப்பது முடிவு. இந்த ஆதிநடுமுடிவுக்கு யுக்தி:—தண்ணீரில் உப்பைப்போடுவதும், அது தண்ணீரில் கரைந்துகொண்டுவருவதும், பிறகு தண்ணீரில் கரைந்து ஒன்றாய்ப்போவதுபோலும்; விருத்தி சொரூபத்தில் லயிப்பதே முடிவென்றறிக. சவிகற்பசமாதியில் சுத்தத்திரிபுடியும் நிருவிகற்பசமாதியில் அதுவும் லயித்துப்போம். [எ - தி] தண்ணீரிற்போட்ட உப்பு கரைவதற்கு கையால் தேய்ப்பதும், பிறகு சும்மாயிருப்பதுபோலுமறிக. ஸ்வரூபசமாதிக்கு ஆதி திருசியானுவித்தம், நடு சத்தானுவித்தம், முடிவு நிருவிகற்பம். [எ - தி] தம்பதிகளுடைய போகாரம்பகாலத்தில் சுகமான பார்வை ஸ்பரிசமுதலானதால் வருகிற சுகம் ஆதி, போககாலத்தில் அன்னியோன்னிய பரவசத்தாலுமுண்டாகிற சுகம் நடு, போகாந்தத்தில் அவ்விருவர்களுடைய விருத்திகளும் லயித்து அச்சுகவடிவாயிருப்பது முடிவாவதுபோலவறிக. [இ - து] குருசாதுக்களோடே விசாரம்பண்ணி சொரூபந் தானென்று நிச்சயித்ததை ஏகாந்தமான சமாதியிலிருந்து அனுபவிக்கிறான். [எ - தி] குரங்கு சமாராதனையில் வாய் கைகளில் நிறைய சோற்றையடைத்துக்கொண்டு, குகையிற் கொண்டுபோய், அதை சாப்பிடுவதுபோலும்; புருஷன் ருதுசாந்திக்குமுன் மனையிலிருந்து பந்துக்களுடன் கலியாணம்செய்த பெண்ணை ஏகாந்தத்திற் கூட்டிப்போய் அனுபவிப்பதுபோலுமறிக. [இ - து] சமாதி பண்ணுகிறவனுக்குப் பிராரப்தத்தால் ஒருக்கால் மனது வெளியில்வந்தாலும் உடனே அது திரும்ப உள்ளேயே போய்விடும். [எ - தி] ராஜஸ்திரீ ஒருக்கால் தீராதகாரியத்திற்கு வெளியே வந்தாலும் உடனே உள்ளே ஓடிப்போவதுபோலும், யோகிக்கு ஒருக்கால் சிசுனம் லேபனமுண்டாய் விகாரப்பட்டாலும் ஆகுஞ்சனத்தாலதை உள்ளே யிழுப்பதுபோலுமறிக. [இ - து] நிருவிகற்பசமாதி வந்தால்தான் தனக்குச் சர்வாத்மபாவஞ் சித்திக்கும். [எ - தி] எவ்வளவுகாலம் ஸ்திரீபுருஷர்கள் ஜாடையாய்ப் பார்க்கிறது பேசுகிறதுமுதலான காரியங்களைச் செய்தாலும், இரண்டுபேர்களுடைய யோனி லிங்கங்கள் ஒன்றுசேர்ந்து ஐக்கியமானதின்பேரில்தான் பயநிவர்த்தியாவது போலவறிக. [இ - து] சமாதியில் பிரஹ்மத்தில் ரமித்திருந்த பிரம்மாகார விருத்தி எழுந்தபிற்பாடுதான் தெரியும். [எ - தி] ஸ்திரீ புருஷனோடே

போகித்தது வெளியில் வந்தபிறகுதான் அடையாளங்களால் தெரிந்துகொள்வதுபோலவறிக. [இ - து] சதா சமாதிநிஷ்டனயிருப்பவன் ஆகாரநிமித்தியமாய் வெளியில்வந்து உலகவியாபாரம் செய்தாலும் உடனே மறந்துபோவன். [எ - தி] கும்பகர்ணன் விழித்து ஆகாரம் முதலானதைச் செய்தாலும் அதை உடனே மறந்து சுழுப்தியை யடைவதுபோலுமறிக. [இ - து] சாக்ஷாத்காரமான சமாதி க்ஷணகாலம்பண்ணினாலுங் கோடிவருஷம்பண்ணினாலும் முத்திசரி. [எ - தி] கெங்கையில் ஒருநாள் ஸ்நானம்பண்ணினாலும் அநேகநாள் ஸ்நானம்பண்ணினாலும் கெங்கையாடியாக ஆவது சரியாயிருப்பதுபோலும், கற்புடையவள் ஒருநாள் அவிசாரியாடினாலும் அநேகநாள் அவிசாரியாடினாலும் அவிசாரியாவதில் தடையில்லாததுபோலுமறிக. ஐயா, அப்படி நிருவிகற்பசமாதியை சதா பழகுகிறவனுக்குச் சரீரநிர்வாகம் எப்படி நடக்குமென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரம் சொல்லுகிறோங் கேள்:—ஒரு பட்டணத்தில் ஒரு பிராம்மணன் மகாவிவேகியாயிருந்து வந்து அவருக்கு மரணகாலம் சம்பவிக்கும்போது, அவருடைய குமாரன் அவரைப் பார்த்து, ஐயா எனக்கு ஜீவனத்துக்கு மார்க்கமென்னவென்று கேட்டதும், அவர் "எத்பாவி தத்பவதி" என்று ஒருசீட்டில் எழுதிக்கொடுத்தபின் மரணமானர். அவர்உத்தரகிரியையை அந்தப்புத்திரன் முடித்துவிட்டு சாப்பாட்டுக்கு மார்க்கமில்லாததைப்பற்றி, தன் தாயானவள் அச்சேயைப்பார்த்து சம்பாதித்து வாவென்று சொன்னதைக்கேட்டு, இந்தச்சீட்டை எடுத்துக்கொண்டு வீடுதோறும் போய் இதைக்காட்டி ரூபாய் கேட்கும்போது, ஒருவரும் ஒரு காசுகூடக் கொடாமற்போனபின், ராஜாவிடத்திற் போய் இந்தச்சீட்டைக் கொடுத்ததும், இது யார் கொடுத்தாரென்று கேட்டவுடன், இவன் என்பிதா மரணகாலத்தில் இதைவைத்து ஜீவித்துக்கொள்ளென்று கொடுத்தாரென்று சொன்னதைக்கேட்ட அவ்வரசன், சந்தோஷத்துடன் அந்தப்பிள்ளைக்கு வேண்டிய திரவியங்களைக் கொடுத்தனுப்பிவிட்டு, மந்திரிவசத்தில் ராஜ்ஜியத்தை ஒப்பித்து பரராஜ்ஜியத்துக்கு பரதேசிவேஷம் போட்டுக்கொண்டு போய், எத்பாவி தத்பவதி என்ற சொல்லைத்தவிர வேறொருசொல்லைச் சொல்லாமலிருந்து வரும்போது, அந்த அரசனுடைய நாலுகன்னிகைகளும் பக்குவமானபின் குருவுக்கு தக்ஷிணைகொடுத்து, குருபுத்திரனுக்கும் என்னதக்ஷிணை வேண்டுமென்று கேட்டவுடன், அவன், உங்களுடைய சம்போகம் எனக்கு ஒருதடவை கொடுக்கவேண்டுமென்று கேட்டவுடன், அவர்கள் நால்வரும் இவ்விரவில் நாலுகோட்டைவாசலிலும் கிரமமாக நாலுஜாமத்துக்கு ஒவ்வொரு வராக வரச்சொல்லியபிரகாரம், இவன் ராத்திரிப்புறப்படும்போது, இவன் பிதா ஒருசந்தேகந் தெளிவதற்காக ஒருபுஸ்தகத்தை இவனை எடுத்துப் படிக்கச்சொல்லியபடி படித்துக்கொண்டிருக்கும்போது, கிழக்குக்கோட்டைவாசலில் முதலாவதுகன்னிகை வந்து இங்கே படுத்திருக்கிறவன் யாரென்று கேட்டவுடன் "எத்பாவி தத்பவதி" என்று வழக்கம்போலே சொன்னதைக்கேட்டு,

அவள் குருபுத்திரனென்று நினைத்து கலவிசெய்து போகும்போது, அவள் "எத்தனமயத்தனதோபி" என்று சொல்லிப்போனபின், அவன் ஓடிவந்து இவனை இங்கே இராதேயென்று விரட்டினபின், தெற்குவாசலில் வந்ததும், இரண்டாங்கன்னிகை வந்ததில், இவன் முன்போலவே சொன்னதைக்கேட்டு அவளுங் கலவிசெய்து, "எத்தனேனசாபி மகதாநபவத்தியபாவி" என்று சொல்லிப்போனபின், அவன் தெற்குவாசலுக்கு ஓடிவந்து இவனை இங்கே இராதே போவென்றவுடன், மேல்வாசலுக்கு இவன் வந்ததும், மூன்றாங் கன்னிகை வந்து யாரென்று கேட்டதற்கு முன்போலவே சொல்லவும், அவள் கலவிசெய்து "ஏவம் விதா துருவசவர்த்தினி ஜீவலோகே" என்று சொல்லிப் போனபின், அவன் மேல்வாசலுக்கு வந்து இவனை இங்கே இராதே போ வென்றவுடன், வடக்குவாசலுக்கு இவன் போனபின், நாலாங்கன்னிகை வந்து கலவிசெய்து, "கிம்சோக மஸ்யபுருஷஸ்ய விசக்ஷணஸ்ய" என்று சொல்லிப்போனபின், நாலு கன்னிகைகளும் கெர்ப்பமானதை ராஜா தெரிந்து விசனித்திருக்கும்போது, ஆகாசவாணி நடந்ததைச் சொன்னதைக்கேட்டு, இந்த அரசனுக்கே நாலுகன்னிகைகளையுங் கல்யாணம்பண்ணிக் கொடுத்து, அந்த ராஜ்ஜியத்துக்கும் பட்டாபிஷேகம் செய்துவைத்தபின், பழய ராஜ்ஜியத்தையும் இந்த ராஜ்ஜியத்தையுஞ் சேர்த்து அரசாட்சிசெய்துகொண்டு வந்த கதையை நீ யறிந்துக்கொண்டு நிர்ச்சிந்தையாய்ச் சுகித்திருக்கக்கடவாய்.

## 240 - வது தரங்கம்.

இக்காலத்தில் தீர்க்கசமாதி துர்லபம்:—

இப்போதிருக்கிற முமுட்சுக்களுக்கு விசாரத்தால் நான் பிரம்மமென்கிற நிச்சயமாத்திரம் வருமேதவிர, நிருவிகற்பசமாதி நிலைக்கிறதற்குத்தகுந்த புண்ணியபலமில்லை. அப்படி ஆரம்பித்தாலும் நீடித்து நிற்கமாட்டாது. [எ - தி] முந்தியிருந்த யோகசித்தர்கள்போல இப்போது இருக்கிற யோகிகள் ஆகாசகமனாதி அஷ்டமாசித்திகளை யடையார்கள், அப்படி எத்தனித்தாலும் பொத்தென்று கீழேவிழுகிறதுபோலும்; தேக்குமரத்தாற் செய்த தேர் ஸ்திரமாயிருந்து ஓடுவதுபோல, வாழமட்டையாற் செய்த தேர் ஸ்திரமாயிருந்து ஓடாததுபோலுமறிக. [இ - து] இந்தக்காலத்தில் க்ஷணகாலசமாதிதான் கூடும். [எ - தி] ஒருவன் மூச்சைப்பிடித்துக்கொண்டு ஆகாசத்தில் கிளம்பினாலும் உடனே கீழே விழுந்துவிடுகிறவன்போலவறிக. ஐயா, ஞானிகளுக்குச் சித்தி கூடவிருந்தால் உலகத்திலுள்ள சகல ஜனங்களும் பெரியோர்களென்று நம்பிக் கடைத்தேறுவதற்குக் காரணமாகுமே, ஆகையால் பெரியோர்கள் சித்தியைக் கூடப் பழகவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறோம் கேள்:— வாமனரிஷியானவர் பிரதிபந்தத்தோடேகூடிய தத்துவ ஞானம் வந்தபின், இச்சாப்பிராரப்துவத்தால் அகஸ்தியமகாரிஷியினிடத்திற் போய் வெகுகாலங் காத்திருந்து ஆகாசகமனாதி சித்திகளையும் காயசித்தி

களையும் பிராணபந்தனசித்திகளையும் பெற்று, இந்தச்சித்திகளால் உலகமெங்கும் சஞ்சரித்துக்கொண்டு வரும்போது, அஜாதயோகியென்பவர் பிரம்மநிஷ்டர்களுக்குள் சிறந்தவராயும், மகா உபசாந்தராயும், கருணசமுத்திரமாயும், சரணகதிபண்ணினவர்களுக்கெல்லாம் கைம்மாறன்றியில் சம்சாரசமுத்திரத்திலிருந்து கரையேற்றி வைக்கிறவராயுமிருந்துகொண்டு, அநேகஞ் சிஷ்யர்களுக்குக் குருக்ஷேத்திரத்திலிருந்துகொண்டு தத்துவவிசாரத்தை உபதேசித்துக்கொண்டிருக்குஞ் சமயத்தில், வாமனரிஷியானவர் அதைப்பார்த்து நம்முடைய சித்தஜாலங்களால் இவரை அவமானம்பண்ணி ஜெயித்து, இந்த சிஷ்யர்களையெல்லாம் நம்முடைய சிஷ்யர்களாகச் செய்துகொள்ளவேண்டுமென்று நிச்சயித்து, அவருக்குமுன்பாக போயிருந்துகொண்டு இந்தச் சித்திகளையெல்லாம் பாருமென்று ஒன்றொன்ருய்க் காண்பித்தவுடன், ஆகாசகமனசித்திக்குப்பதிலாக ஆடிக்காற்றில் இலவம்பஞ்சை வீசியெறிந்தமாத்திரத்தில் அந்தப்பஞ்சு ஆகாசத்தில் வெகுதூரம் பறந்துபோகும்போது, இந்தச்சித்தரை எல்லோரும் வணங்கவேண்டுமென்று கேலிபண்ணினவுடன், வாமனரிஷியானவர், ஓய் அஜாதயோகி! நான் எவ்வளவோ காலமாய்ப் பிரயாசைப்பட்டு சம்பாதித்த இந்த ஆகாசகமனத்தை அத்தியந்தம் அற்பமான இலவம்பஞ்சுக்குச் சமானமாமென்று எப்படிச்சொன்னீரென்று கேட்டவுடன், அவர், நீர் கோபித்துக்கொள்ளவேண்டாம். அசேதனத்துக்குச் சமானமாகச்சொன்னது என்பேரில் தப்பிதம்தான் என்றுசொல்லி, ஒருகையில் ஈயையும் ஒருகையில் ஒருகொசுவையும் பிடித்து நீங்களிரண்டுபேரும் ஆகாசகமனம் பண்ணுங்களென்று கையை விரித்தமாத்திரத்தில் அவைகள் ஆகாசத்திற் பறந்துபோனதை அவர் பார்த்துத் தன் காயசித்தியைக் காண்பித்ததற்கு, இவர் கல்லையும் இரும்பையும் காட்டிலும் உன் காயசித்தி பெரிதல்லவென்று சொன்னபின், ரேசக பூரக கும்பகமுதலானதால் பிராணவாயுவை ஸ்தம்பனம்பண்ணிப் பூமியைப்பிளந்து உள்ளே நுழைவதைக் காண்பித்ததைப்பார்த்து மண்ணுளிப்பூச்சி பிராணபந்தனம்பண்ணி பூமியைப் பிளந்துகொண்டு வருவதைக்காட்டிலும் உன் பிராணசித்தி விசேஷமில்லையென்று சொன்னதைக் கேட்டவுடன், அவமானப்பட்டு விசனித்திருப்பதை அஜாதயோகி கண்டு "அடே மூடா! இந்தச்சித்திகளாலே யெல்லாம் ஒரு உப்புக்கல்லுக்குக்கூடப் பிரயோஜனமில்லை, சிந்தையையடக்கித் தூஷ்ணீம்பாவமாயிருக்கின்ற சித்தியே பெரிதல்லாமல் மற்றதொன்றும் பெரிதல்ல" என்று சொன்னதைக் கேட்டபின் வாமனரிஷியானவர் அவரிடத்திலேயே பூரணஞானத்தைப் பெற்று ஜீவன்முக்தராயான கதையையறிந்து, நீயும் இந்தச் சித்திகளில் மயக்கத்தைவிட்டு, தத்துவஞானத்தை யடையக்கடவாய்.

## 241 - வது தரங்கம்.

லக்ஷியாதிகளைப்பற்றிக்கொண்டு தீர்க்ககாலசமாதி யிருப்பது பயனில்லை:—

இக்காலத்திலும் நாலைந்துநாள் சமாதிபண்ணுகிறார்களேயென்றால், அது ஏதேனும் ஒரு லக்ஷியாதிகளைப்பற்றி யிருக்கும். [எ - தி] வித்தையாடி இரும்பை இடுப்பிற் கட்டிக்கொண்டு மேலே பந்தலில் ஊசிக்காந்தத்தை வைத்து ஆகாசத்தில் நின்றாடுகிறவன்போலவறிக. ஐயா, லக்ஷியாதிகளைப் பற்றிக்கொண்டாவது அல்லது பிராணபந்தனயோகத்தாலாவது மனது தீர்க்க காலம் லயிப்பதினால் பிரயோஜனமில்லையாவென்று கேட்ட சிஷ்யனுக்குக் குரு சொல்லுகிறதாவது:-வாராய் குழந்தாய்! ஒரு பிராம்மணர் சம்சாரத்தோடேகூட சிதம்பரக்ஷேத்திரத்தில் வந்து கொஞ்சக்காலம் ஸ்தலவாசம்பண்ணிக்கொண்டு வரும்போது, ஒருதினத்தில் பிரதோஷ உபவாசமிருந்து சாயரக்ஷை பூஜை பண்ணிக்கொண்டிருந்து பூஜையெல்லாமானபின், தன் பெண்சாதியைப் பார்த்து, ஓசே நைவேத்தியம் கொஞ்சுகினிரா என்று சொன்னதும்; அவள் இங்ககால்கெடி செல்லுனு என்று சொன்னதைக் கேட்டதும், இவர் உடனே பிராணயாமத்தால் பிராணனைக் கேவலகும்பக அவஸ்தையாயிருக்கும்படி பண்ணி, ஆகுஞ்சனத்தால் கோழிமுட்டைக்குச் சமானமான ஆகாரத்தை யுடைய மாமிசக்கட்டியானது குண்டலிசத்தியென்ற பேரையுடைத்தாய் சரீரத்தைமுழுமையும் தூக்குவதற்கும் ஜீவிக்கச்செய்வதற்கும் காரணமாயிருப்பதாயும், சுழிமுனைநாடியினுடைய வாசலை மூடிக்கொண்டிருப்பதை பேதித்து, அந்தவழியாய்ப் பிராணனையும் மனதையும் உச்சியிலிருக்கிற பிரம்மரந்திரத்தில் ஒன்றுசேர்த்து லயம்பண்ணி அசையாமல் கல்தூண்போலிருந்துகொண்டிருக்கும்போது, அவருடைய பாரியானவள் சமயல்பண்ணிவைத்துவிட்டு இவரிடத்தில் வந்து கூப்பிட்டுப்பார்த்ததிலும் இவர் எழுந்திருக்காததைப்பற்றி, ஓகோகோ! இதுவென்ன ஆச்சரியமென்று கூக்குரல் போட்டவுடன், ஊரிலுள்ளவர்களெல்லாம் ஓடிவந்து அசைத்துப்பார்த்ததிலும் அசையாமலிருப்பதைக் கண்டு, கொஞ்சந்தெரிந்தவர்களாயுள்ள சிலபேர்கள் இவர் சமாதியிலிருப்பதால் இவரை யெழுப்பினால் நமக்குப் பாபம்வருமென்று சொன்னதைக்கேட்டதும், சகலரும் பயந்து அவரவர்கள்பாட்டுக்குப் போனபிற்பாடு, அவருடைய பாரியும் சிலகாலங் காத்திருந்து பார்த்துவிட்டு, இவர் எழுந்திருக்கிற வழியில்லையென்று நினைத்து அவள் தன்னூருக்குப் போனபின், இவர் இருபத்திரண்டுவருஷம்வரையில் சமாதியிலிருந்து மனது வெளியில்வந்தவுடன் "ஓசே நைவேத்தியம் ஆய்ப்போயிந்தா, சீக்கிரம் கொஞ்சுகிரா" என்று சொன்னதை அப்போது அவிடத்திலுள்ளவர்களுக்கு முன்விருத்தாந்தங்களொன்றுந் தெரியாததினால் இவரிடத்தில் என்னசொல்லுகிறீரென்று கேட்கும்போது, அவர் நடந்த சங்கதியைச் சொல்லிவிட்டு பெண்சாதியைத் தேடிக்கொண்டு வீடுபோய்ச்சேர்ந்த கதையைப் பார்த்துக்கொள்க. இன்னும் இப்படியே ஒரு டம்பக்கூத்தாடி எட்டுக்கழையேறிக் கூத்தாடிக்கொண்டுவரும்போது, ஒரு ராஜாவினிடத்திற் போய்க் கழையேறிக் கூத்தாடும்போது, அந்த ராஜாவானவன் இவனைப்பார்த்து நுனிக்கிளையிலிருந்து பூமியில் குதியென்று

சொன்னமாத்திரத்தில் இவன் அதைக்கேட்டு, ராஜாவினிடத்தில் கிராமம் பூமியெல்லாம் இனும்வாங்கலாமென்கிற ஆசையினால், மூச்சைப்பிடித்துக்கொண்டு ஆகாசத்தில் கிளம்பினமாத்திரத்தில், இவனுக்குப் பிரக்ஞை தப்பிப்போய்விட்டதால் ஆகாசத்திலடிக்கிற வாயுவேகத்தால் ஐங்காதவழிக்கப்புரம் ஒரு காட்டுக்குள்ளிருக்கிற ஒடைகம்மாய்க்குள் தள்ளிவிட்டதால், இவன் அங்கே கிடக்கும்போது மழைபெய்ந்து கரைந்து மண்மூடிப்போய் வெகுகாலங்கழித்தபின், ஒருவன் அந்தக்கண்மாயை கவுல்வாங்கி மறுமத்துக்கு ஆரம்பித்து கண்மாயை வெட்டிக்கொண்டுவரும்போது, இவன்பேரில் மண்வெட்டி கொஞ்சம் பட்ட மாத்திரத்தில் விழித்துக்கொண்டு, ஆல்ரேபாயென்று எழுந்திருந்து, முண்டாசி தட்டிக்கொண்டுபோன கதையையும் பார்த்துக்கொண்டு ஞானமில்லாமல் கற்பகோடிகாலம் மனோலயம் வந்திருந்தாலும் எள்ளளவேனும் பிரயோஜனமில்லையென்றறிக.

## 242 - வது தரங்கம்.

*சமாதியிலிருந்த மனது மெள்ளமெள்ள வெளியில் வரும், பிராணாயாமத்தால் லயித்த மனது வேகமாய் வரும்:—*

சமாதியிலிருந்த மனது மெள்ளமெள்ள வெளியில்வரும். [எ - தி] மண்குடத்தில் விட்டதண்ணீர் மெள்ளமெள்ள வெளியில் கசிவதுபோலும், பகவண்டிஜடாவல்லவர் மூக்குவரை சாப்பிட்டுப் படுத்தவர் மெள்ளமெள்ளக் கைகாலை அசைப்பதுபோலும், மாப்பிள்ளை மாமனார்வீட்டிலிருக்கும்போது வந்த வாரண்டுச்சேவகனுடன் மெள்ளமெள்ள வெளியில் வருவதுபோலுமறிக. பிராணாயாமத்தால் லயித்த மனது வேகமாய் வெளியில்வரும். [எ - தி] கண்மாய் உடைந்தால் ஜலம் வேகமாய்ப்போவதுபோலும், நதியில் ஒருரத்னத்தை வைத்து மறந்தவன் திரும்ப நினைப்புவந்தமாத்திரத்தில் ஓடுவதுபோலுமறிக. [இ - து] சமாதியிலிருந்த மனது வெளியில் வந்தும் பிரம்மமாகவே பிரகாசிக்கும். [எ - தி] சித்தாதிகள் ரசவாதம்பண்ணின இரும்பு தங்கமாய்ப் பிரகாசிப்பதுபோலுமறிக. [இ-து] சமாதியில் சொரூபசுகத்தையனுபவித்த மனதே வெளியில் விஷயசுகத்தையும் அனுபவிக்கிறது நிகிர்ஷ்டம். [எ - தி] பாலுஞ் சாதமுஞ் சாப்பிட்ட நாயே பீ தின்கிறதுபோலும், அந்தப்புரஸ்திரீயோடே ரமித்த புருஷனே அவிசாரியோடேவந்து ரமித்ததால், அவள் அந்தப்பழத்தை வீதியில் விற்கவந்த கதைபோலுமறிக. (இ - து) சமாதிக்குஞ் சுழுப்திக்கும் போகிறதற்குமுந்தி நிர்விஷயானந்தமும், எழுந்திருந்தபின் அந்த வாசனானந்தமும் காணப்படும். [எ - தி] கலியாணமும், ராஜாவும், மழையும், பிள்ளையும் வருகிறதற்கு முன்னும்பின்னும் மேளதாளாதிகளும், படைகளும், குளிர்ச்சியும், கெர்ப்பமும் புண்ணியாகவாசனமுங் காணப்படுவதுபோலவறிக. [இ - து] ஐயா, ஞானசமாதியிலிருந்து வெளியில்வருகிற மனது மெள்ள

மெள்ள வருமென்றும், ஞானமில்லாமல் பிராணபந்தனயோகத்தால் கட்டுப்பட்டிருக்கிற மனது குபீரென்று வேகமாய்வருமென்றுஞ் சொன்னீர்களே, அதற்குக் காரணத்தைத் திருஷ்டாந்தமூலமாய் அறிவிக்கவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறோம் கேள்:— வாராய் குழந்தாய்! ஞானசமாதியிலிருந்து வருகிற மனது ராஜகிரகத்தில் எதேஷ்டமாய் பரீக்ஷைகொடுத்து, ராஜா சந்தோஷப்பட்டு ஷோடசமகாதானம்வரையினும்கொடுத்ததைப் பெற்றுக்கொண்டு சந்தோஷமாய்ச் சகலருடனும் பேசிக்கொண்டு மெள்ளமெள்ள வெளியில்வருவதுபோலும், யோகத்திலிருந்து மனது வெளியில்வரும்போது, திருடப்போனவன் கன்னவாசலிலிருந்து வெளியில் வருகிறவன்போலும்; இப்படியே ஒருஸ்திரீ பிரியப்பட்டு ஒருபுருஷனோடே கேளிவிலாசமாக சம்போகஞ்செய்து மெள்ளமெள்ள வெளியில்வருவது போலும், ஒருபுருஷன் வந்து கற்புடைய ஒருஸ்திரீயை வாயில் துணியை அடைத்து பலாத்காரபோகஞ்செய்யப்பட்டவள் வெளியில் அலறிக்கொண்டு ஓடிவருவதுபோலும்; நன்றாகச் சுழுப்திசுகத்தை அனுபவிக்கும்போது முன் செய்த கர்மமானது வெளியில் இழுத்தாலும் மெள்ளமெள்ள வெளியில் வருவதுபோலும், ஆலிலையை மரத்திலேறிப் பறிக்கும்போது கொப்பு முறிந்து கீழேவிழும்போது அலறிக்கொண்டு விழுகிறதுபோலும்; வைராக்கிய சாலி பெண்டாட்டிபிள்ளைகளை மனசோடேவிட்டு வைராக்கியசகிதனாய் சன்னியாசம் கிரமமாய்ப் பண்ணிக்கொள்ளுகிறவன்போலும், வாரண்டுசேவகன் வந்தபோது மிகுந்த கடன்காரனாய்ப்போயிருப்பதால் கடன்தீர்க்க அய்வேசில்லாததினால் ஒளிந்துகொண்டிருந்து ராத்திரியே ஓடிப்போய் சன்னியாசம் பண்ணிக்கொள்ளுகிறவன்போலும்; ஒரு பெரியவரை மனோவாக்குக்காயங்களால் பூஜித்துத்துதித்து வந்தித்துப்பிரார்த்தித்து அவரிடத்திற் சந்தோஷமாய் வேண்டிய வரத்தைப் பெற்றுக்கொள்ளுவதுபோலும், அவரைத் தனித்து அறைக்குள் கூட்டிப்போய்க் கதவையடைத்துக்கொண்டு காயவைத்த சூட்டுக்கோலைக் கையிலெடுத்துக்கொண்டு அனுக்கிரகம் பண்ணுகிறீரா அல்லது சூடுபோடட்டுமாவென்று கேட்பதுபோலவென்றறிக.

## 243 - வது தரங்கம்.

பிரஹ்மத்தியானிக்கு சப்தாதிவிஷயந் தோன்றுது:—

பிரஹ்மத்தியானம்பண்ணுகிறவனுக்கு உலகவிவகாரம் காதிலே ஏறாது. [எ - தி] மகத்தான சிந்தாபரவசனாயிருக்கிறவன் காதிலே ஒருவன் தன் கஷ்டநிஷ்டூரங்களைச் சொன்னாலும் ஏறாததுபோலும், உருவாரத்தினிடத்தில் பிராம்மணன் தன் கஷ்டத்தைத் தெரியப்படுத்தின கதைபோலுமறிக. [இ - து] பிரஹ்மத்தியானம் விசாரமன்றியில் செய்கிறவனுக்கு அதை விட்டகாலத்தில் கர்த்தாவாய்த் தோற்றும். [எ - தி] ஆவேசம்வந்து வேண்டியசங்கதிகளை

எல்லோருக்கும் அனுக்கிரகிக்கிறவனுக்கு அந்த ஆவேசம்போனவுடன் பழைய ஆளாய்ப்போவதுபோலவறிக. ஐயா, பிரஹ்மத்தியானம்பண்ணுகிறவனுக்கு அந்தத்தியானத்தைக் கொஞ்சம்விட்டால் கர்த்தாவாகிய ஜீவனாக ஆய்விடுவ னென்று சொன்னீர்களே, அதுபோலப் பிரஹ்மஞானிக்கும் நான் பிரம்ம மென்கிற ஞானம் நினையாவிட்டால் பிரஹ்மத்துவம் போகமாட்டாதாவென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:— பிரம்மத்தியானமே பிரம்மமாயிருக்குகைக்கு உபாதானகாரணமாகத் தியானிக்கு இருப்பதால், அந்தத்தியானம் விட்டகாலத்தில் அந்தப்பிரஹ்மத்துவம் போய்விடும். அப்படிப் பிரஹ்மஞானிக்குப் பிரஹ்மத்துவமானது ஞாபகமில்லாமற்போனாலும் வாஸ்தவ மாயிருப்பதால், அது போகமாட்டாது. அப்படி வாஸ்தவமாயிருக்கும்பக்ஷத் தில் பிரம்மவிசாரம்பண்ணிப் பிரஹ்மஞானத்தை என்னத்துக்காக அடைய வேண்டுமென்றால், தன் கழுத்தில் தரிக்கப்பட்டிருக்கிற ஆபரணத்தை மறந்து அலைகிறவனுக்கு உன் கழுத்திலேயே ஆபரணமிருக்கிறதென்று ஞாபகம்பண்ணி வைக்கிறது மாத்திரமேயல்லாமல், அந்த ஆபரணத்தை அந்தச் சொல்லுண்டு பண்ணாததுபோல, வாஸ்தவமாயிருந்த பிரஹ்மத்துவத்தை மறந்து அலைந்து திரிந்து தபித்துக்கொண்டு வந்தவனுக்குக் குருநாதன் நீயே பிரஹ்மமென்று உபதேசித்தமாத்திரத்தில், அவன் விசாரத்தால் சுபாவசித்தமான பிரஹ்மமே நானென்று அறிகிறதேயல்லாமல், ஞானம் பிரஹ்மத்தை யுண்டுபண்ணவில்லை. அப்படித்தியானம்பண்ணுகிறவனுக்கும் பிரஹ்மத்துவம்வாஸ்தவமாக இருக்க வில்லையாவென்று கேட்பாயாகில், அவனுக்குமட்டுமா பிரஹ்மத்துவம் வாஸ்தவ மாயிருக்கிறது? மற்றப் பாமரர்களுக்கும் பசுபக்ஷிமிருகமுதலான சகலருக்கும் பிரஹ்மத்துவம் வாஸ்தவந்தானென்று சொன்னீரானால், அவைகளுக்குத் தன்னை யறியாமையால் மோக்ஷமில்லையேயென்று சொல்லுவாயேயாகில், அது இவ னுக்குஞ் சரியென்றறிக. ஆனால் இதிலென்ன விசேஷமிருக்கிறதென்றால், சம்வாதிப்பிரமைபோலப் பிரஹ்மத்தியானம் மோக்ஷத்தையே கொடுப்பதால் சகல சாதனங்களிலும் மோக்ஷத்துக்கு முக்கியசாதனமென்று தாபநீயஉப நிஷத்திற் சொல்லியிருப்பதால், அந்தப்படி சகலரும் இந்தவழியாகவே கரை யேறக்கடவர்கள்.

## 244 - வது தரங்கம்.

ஜீவேஸ்வர ஜகத்துப் பொய்யென்பதற்குத் திருஷ்டாந்தம்:—

சகல திருஷ்டாந்தங்களிலும் அதிஷ்டானத்திலில்லாததான கற்பனைக்குச் சத்தியத்துவமில்லையென்று அறிவிக்கும்நிமித்தியமே கருத்தாயிருப்பதால், அவசரபேதத்தால் ஒன்றொன்றை ஒவ்வொருவர் சமயம்போலச் சொல்லியிருக் கிறார்கள். அதில் கைவல்லியத்திற் சொல்லியிருக்கிற கானல்நீர்முதலான

ஒன்பது திருஷ்டாந்தத்திற்கும் தாஷ்டாந்தமென்னவென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேம் கேள்:—கானல்ஜலமானது சூரியனுடைய உதயத்திஞல் தோற்றஆரம்பித்து விவேகி அவிவேகிகளுக்கு பொய் நிஜமாய் சூரியாஸ்தமனம்வரை தோற்றிக்கொண்டிருந்து பிற்பாடு தோற்ருமற்போவது போல, அன்னமயகோசமாகிற கானல்ஜலம் ஜாக்கிரதவஸ்தையாகிற சூரியோதயத்தால் தோற்றஆரம்பித்து, ஜாக்கிரதவஸ்தையின் அந்தமாகிற சூரியாஸ்தமனம்வரை விசாரமில்லாத அஞ்ஞானிக்குச் சத்தியமாய் பருத்தேன் இளைத்தேன் என்பதாதியாயும், விவேகிக்குச் சுத்தப்பொய்யென்றுந் தோற்றிக்கொண்டிருந்து, பிற்பாடு தோற்ருமற்போவதால் அன்னமயகோசத்தைக் கானல்நீருக்குச் சமானமாக அறிவிக்கப்பட்டது. கிளிஞ்சில்வெள்ளியானது அவிசாரகாலம்வரையில் வெள்ளியாகவே தோற்றிக்கொண்டிருந்து விசாரித்த பிற்பாடு வெள்ளி பொய், கிளிஞ்சிலே உண்மையென்று தெரிந்தபிற்பாடும், வெள்ளியினுடைய வெளுமைநிறமானது தோற்றுவதுபோல, பிராணமயகோசமும் அவிசாரதிசையில் ஆத்மாவாகவே நான் பேசினேன், செய்தேன், நடந்தேன், மலமூத்திரங்களைக் கழித்தேன், ரமித்தேன், நான் பெலமுள்ளவன், நான் பலஹீனன், நான் பசியுள்ளவன், நான் பசியில்லாதவன், நான் தாகமுள்ளவன், நான் தாகந்தீர்ந்தவனென்று இவைமுதலான தருமங்கள் தன் பேரில் ஆரோபித்துக்கொண்டிருந்து, விவேகதிசையில் இந்த தர்மங்கள் தன்னிடத்தில் காலத்திரயங்களிலுமில்லையென்று தெரிந்திருந்தும் முன்போலவே அந்தத்தர்மங்கள் பொய்யாய்த் தோற்றுவதால் பிராணமயகோசத்தைக் கிளிஞ்சில்வெள்ளிபோலவென்றறியத்தக்கது. ஆகாசத்தில் மேகங்கள் ஓடும்போது யானை குதிரைமுதலான பட்டணமிருப்பதுபோலத் தோற்றிக்கொண்டிருந்து, மின்னல் தோற்றினமாத்திரத்தில் அத்தோற்றங்களொன்றும் தோற்ருமற்போவதுபோல, சிதாகாசமான தன்னிடத்தில் வாசனையாகிற மேகமுண்டான மாத்திரத்தில் மனோராச்சியமான கந்தர்வபட்டணம் நான் சங்கற்பித்தேன் விகற்பித்தேனென்று தோற்றிக்கொண்டிருந்து, நான் பிரம்மமென்கிற ஞானமாகிற மின்னல் உதயமானமாத்திரத்தில் அந்த மனோராச்சியமாகிற கந்தர்வபுரம் மறைந்துபோவதால் மனோமயகோசத்தைக் கந்தர்வநகரமென்று அறிவிக்கப்பட்டது. சொப்பனப்பிரபஞ்சமானது விசுவனுகிய தன்னை மறந்தகாலத்தில் ஈஸ்வரஜெகத்பேதமான ஒருகற்பனை தோன்றி, அவைகளில் தன்னை அற்பமான ஒருசரீரியாகக்கண்டு, அச்சரீரத்திலிருந்து வெகுவிதமான சுகதுக்கானுபவங்களை அடைந்தவன்போலக் கண்டுகொண்டிருந்து, விழித்தமாத்திரத்தில் அப்படிக் கண்டவைகளெல்லாம் சுத்தப்பொய், நான் இரண்டற்ற ஆனந்தவடிவமாய்ப் படுக்கையிற் படுத்திருந்தோமேதவிர வேறொரு கற்பனைகளும் இல்லவேயில்லையென்று நிச்சயம்வருவதுபோல, அத்வைதானந்தமாத்திரமாயிருக்கிற தன்னை மறந்த மறதியினலே ஜீவேஸ்வர ஜகத்தாகிற சொப்பனத்தைக் கற்பனை பண்ணிக்கொண்டு, அவைகளில் தன்னை அற்பமாயிருக்கிற ஒருசரீரியாய்ப்

பார்த்து, நான் கேட்டேன், தொட்டேன், பார்த்தேன், தின்றேன், ஆக்கிராணித்தேன், நான் கர்த்தா, போக்தா, சுகிதுக்கியென்று இவைமுதலான அனுபவங்களைக் கண்டுகொண்டுவந்து, அருளே திருமேனியாக எழுந்தருளும்நிமித்தமாக வந்திருக்கிற குருநாதனுடைய உபதேசமாகிற கூப்பாட்டைக் கேட்டமாத்திரத்தில், அஞ்ஞானநித்திரை தெளிந்து அத்வைதானந்தரூபமான நாம்மாத்திரம் இருக்கிறோமென்று சாக்ஷாத்காரானுபவம் பண்ணுவதால் விஞ்ஞானமயகோசத்தைக் கனவூரென்று அறிவிக்கப்பட்டது. வடிவமில்லாதிருக்கிற ஆகாசத்தில் கறுப்புமுதலான நிறங்கள் தோற்றுவது பொய்யாயிருந்தும் நிஜம்போலத் தோற்றிப்பின் பொய்யாய்ப்போவதுபோல, நானென்கிற பிரம்சமான சிதாகாசத்தில் அறியாமையாகிற கறுப்புத்தோன்றி அதை அறியாமையுடையகாலத்தில் அறியாமையை யுடையவர்கள் நான் என்னை அறியேனென்ற அறிவாயிருந்தும் நான் அறிவுவடிவமென்றும் நம்முடைய ஆதாரத்திலேயே இந்த அறியாமை தோற்றுவதென்றும் அறியாமலிருந்துக்கொண்டு, விவேகதிசையில் நான் அறிவென்று அறிவுவந்திருந்தும், ஒவ்வொருக்கால் பொய்யாக ஆனந்தமயகோசானுபவம் பண்ணி, விழித்தபிற்பாடு இந்நேரம் மனசுக்கு ஒன்றுந்தெரியாமலிருந்ததென்ற அனுபவம் இப்போது விருத்தியிற் காணப்படுவதால் ஆனந்தமயகோசத்தை வானமையென்று சொல்லப்பட்டது. மந்தாந்தகாரத்தில் பழுதையிற் பாம்புதோன்றி பயகம்பனதிகளை அடைந்தவன் தீபத்தால் இது பழுதையென்று அறிந்தமாத்திரத்தில் பாம்பென்ற புத்தி போவதுபோல, நான் பிரம்மமென்று அறியாதகாலத்தில், நான் ஜீவனென்று தோற்றி ஜனனமரண பயம் துக்கம் முதலான சம்சாரங்களைக்கண்டு, சற்குருநாதனுடைய கிருபாகடாக்ஷத்தினலுண்டான ஞானதீபத்தால் நானே பிரம்மமென்று அறிந்தமாத்திரத்தில், நான் ஜீவனென்ற மயக்கம் போனவிடந்தெரியாமற் போவதால் ஜீவனை கயிற்றிற்பாம்பென்று அறிவிக்கப்பட்டது. மலடிமகனென்று உலகத்திற் சொல்லுவதுமாத்திரமே யல்லாமல் ஒருவருங் கண்டபேரில்லாததுபோல, ஈஸ்வரனென்று சகலரும் சொல்லுவதுமாத்திரமே யல்லாமல் ஈஸ்வரனை ஒருவருங் கண்டவர்களில்லை. சங்கை:— ஐயா, இப்படிச் சொல்லலாமா, இது நிரம்ப அநியாயமாயிருக்கிறதே, சகல வேதசாஸ்திர புராணமுதலானவைகளில் ஜீவர்களுக்குவேறாக ஈஸ்வரனொருவரிருக்கிறாரென்றும், அவர் சர்வசக்திமானென்றும், சர்வக்ஞரென்றும், பஞ்சகிருத்தியபரரென்றும், சர்வஜீவர்களையும் அடக்கி ஆண்டு சிக்ஷாரக்ஷை பண்ணுகிறாரென்றும், அவனசையாமல் அணுவசையாதென்றும், இன்னும் அனந்த கலியாணகுணங்களோடேகூடினவரென்றும், அறுபத்துமூவர்முதலான அநேக பக்தர்களுக்கு அநேகவிதமான அனுக்கிரகங்கள் செய்தாரென்றும், அநேக திருவிளையாடல்கள் செய்தாரென்றும், இப்படியெல்லாஞ் சொல்லியிருக்கும்போது, அதற்குநேரே விரோதமாக அவரை மலடிமகனுக்கு நிகராக எப்படிச் சொல்லக்கூடுமென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறோம் கேள்:—நீ சொன்ன

தெல்லாம் அவிசாரதிசையிலேயா? விசாரதிசையிலேயா சொல்? என்று கேட்ட வுடன், ஐயா, அவிசாரதிசையென்பது இத்தன்மையுள்ளது விசாரதிசையென் பது இத்தன்மையுடையதென்று தெரியாமையால் அதையும் நீரே சொல்ல வேண்டுமென்று கேட்பாயாகில், ஆத்மா அனாத்மா சித்து ஜடம் இன்ன தென்று தெரியாமல், முந்தி மரத்திற் பேயிருக்குதென்று ஒருவரும் விசாரித் துப்பாராமல் பரம்பரையாய்ச் சொல்லிக்கொண்டுவருவதை நம்புகிறதான ஐதீ கப்பிரமாணமே அவிசாரதிசையென்று சொல்லப்படும். அதற்கு எதிர்மறை யாக ஆத்மானாத்மாக்களையும் சித்ஜடங்களையும் விசாரிப்பதே விசாரதிசையெ னப்படும். ஐதீகப்பிரமாணம்போல இப்போது நீ சொன்னதெல்லாம் அவிசார தசை. விசாரதசையில் ஈஸ்வரனென்பது ஆத்மாவா? அனாத்மாவா? ஆத்மா வென்றால் எப்போதுந் தானாச்சுதே, அனாத்மாவென்றால் பொய்யாச்சுதே, காணப்படுவதென்றால் ஜடமாச்சுதே, காணப்படாதவரென்றால் சூனியமாச் சுதே, இப்படி விசாரிக்கும்போது ஈஸ்வரனில்லாமற் போவதால் ஈஸ்வரனை மல டிசேய் என்று சொல்லப்பட்டது. முசல்கொம்பானது எப்படி அசத்தோ அப்படி மாயையென்ற சொல்லுக்கு இல்லாமையே அர்த்தமானதால் மாயையை முசல்கொம்புக்குச் சமானமென்று சொல்லப்பட்டது. கட்டை யில் இருட்டுவேளையில் கள்ளனென்று பிராந்திவருவதுபோல, அஞ்ஞானராத் திரியில் பிரஹ்மமாகிற கட்டையில் ஜகத்தாகிற கள்ளன் தோன்றி, ஞானசூரி யன் உதயமானமாத்திரத்தில் இப்படி நாமரூபாத்மகமாகத் தோற்றிக்கொண் டிருந்த பிரபஞ்சமெல்லாம் சச்சிதானந்தமான பிரம்மமென்று கரதலாமலகம் போல நிச்சந்தேகமாயறிந்து ஜீவன்முக்தர்களானவர்கள் சகலதுக்கங்களிலிருந் தும் விடுபட்டுத் தடையற்றஆனந்தத்தை தடையற அனுபவிப்பதால் "ஞாத மெய் மகனே யுன்னை நம்மாணை மறந்திடாதே" என்று சொன்னசத்தியம் சத்தியமென்று சகல பக்குவிகளும் நம்பிக் கடைத்தேறக்கடவார்கள். ஆகை யால் பிரபஞ்சமெல்லாம் கட்டைக்கள்ளன் போலென்று அறியத்தக்கது.

ஐயா, பிரஹ்மத்தில் சகலமான ஜீவேஸ்வர ஜகத்விவகாரமெல்லாம் கற்பிதமென்று சொன்னீர்களே, சுருதி ஸ்மிருதி இதிகாசபுராணங்களெல் லாம் சர்வக்ஞனாய் சர்வசக்திமானாயிருக்கிற ஈஸ்வரனொருவரிருக்கிறாரென் றும், கிஞ்சிக்ஞனாய் அற்பசக்திமானாயிருக்கிற ஜீவனொருவனிருக்கிறானென் றும், அவன் அவித்தையோடே சேர்ந்திருக்கிறானென்றும், அவர் மாயை யோடே சேர்ந்திருக்கிறாரென்றும், சிருஷ்டிமுதல் பிரளயம்வரை அவர் உபாசி யராயிருக்கிறாரென்றும், இவன் உபாசகனாயிருக்கிறானென்றும், இவர்களுடை யசம்வாதமே லோகப்பிரசித்தமாயிருக்கிறதென்றும், கர்மக்ஷயமாகும்போது இருவரும் மூலப்பிரகிருதியில் வாசனையோடே பிரளயத்தில் சுழுப்தியில்போல அரூபமாய் லயித்திருக்கிறார்களென்றும், திரும்பக் கர்மபரிபாகம் வரும்போது ஜீவர்களுக்குத் தர்மார்த்த காமமோக்ஷங்களைக் கொடுப்பதற்காகப் பஞ்சகிருத்

தியத்தையும் நடத்த வல்லமையுள்ள தன்னுடைய மாயாசக்தியை விரியும்படியாய்ப் பார்த்தாரென்றும், இப்படியே அநாதிகாலமாய் ஜீவேஸ்வர ஜகத்து சத்தியமாய் நாசமில்லாமலிருந்துக்கொண்டு வருகிறதென்று கோஷித்துக் கொண்டிருக்கும்போது, தாங்கள் இந்த ஜீவேஸ்வர ஜகத்தைச் சுத்தப்பொய்யென்று எப்படிச் சொன்னீர்களென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ் சொல்லுகிறோம் கேள்:—முதலில் ஈஸ்வரனுடைய சொரூபத்தை விசாரிக்கிறோம். அதாவது, மூலப்பிரகிருதியினுடைய சத்துவகுணமாயையில் பிறந்தவன் ஈசனென்று சொல்லப்படுகிறான். அந்த மாயையென்பதற்கர்த்தம் இல்லையெனப்படும். அப்படி இல்லாதமாயையில் பிறந்த ஈசனை ஒருவருங் கண்டபேரில்லாமையால் ஈஸ்வரனை மலடிமைந்தனென்றும், மூலப்பிரகிருதியின் ரஜோகுணமான அவித்தையில் பிறந்தவன் ஜீவனென்று சொல்லப்படுகிறான். அந்த அவித்தைக்கும் இல்லையென்றே அர்த்தம் சொல்லப்படும். அதில் பிறந்த ஜீவன் அவிசாரராத்திரியில் அறிவாகிற கட்டையில்நானென்று ஜீவனாகிற ஆளாய்த்தோற்றுவதால் ஸ்தாணுவிற்புருஷனென்றும், இப்படிப் பேர்விளங்கிற ஜீவேஸ்வரர்களிருவரும் ஆகாசபுஷ்பம்போல விருக்கிற கிஞ்சிக்ஞத்துவ சர்வஞ்ஞத்துவ குணங்களைத் தங்கள் சிரசில் தரித்துக்கொண்டு, சிதாகாசத்தில் கற்பிதமான ஜகத்தாகிற இந்திரஜாலபுரத்தில் சுக்திகாரஜிதம்போன்ற சமஷ்டிவியஷ்டி அபிமானமாகிற சொத்தை விலைபேசி, அதனால் ராகத்துவேஷாதி சம்சாரங்களை நிஜம்போல விவகரித்துக்கொண்டிருக்கும்போது, மத்தியில் பழுதைப்பாம்புபோலிருக்கிற பிரளயகாலம் வந்து இவ்விருவர்களையுங் கடித்துக் கொன்றுவிட்டதால் இவர்கள் அஞ்ஞானமான துர்மரணமாய் இறந்ததால், அரூபமாய்த் தங்கள்தங்கள் வாசனைகளோடே மூலப்பிரகிருதியில் லயித்ததே பிசாசானார்களென்று சொல்லப்பட்டது. பிசாசென்று இவர்களை என்னத்துக்காகச் சொல்லப்பட்டதென்றால், தத்துவஞானத்தினால் இவர்களுடைய சம்சாரங்களும் இவர்களும் நசித்தார்களானால், இவர்கள் திரும்பப்பிறவாமலும் இன்னொரு தேகத்தைப்பிடித்து அபிமானியாமலும் பிரஹ்மப்பிராப்தியை யடைந்தார்களென்றும் சொல்லப்படும். அப்படி இல்லாமல் ஞானம் வராமல் காலத்தாற் கொல்லப்பட்டதால் இன்னம் தேகங்களெடுக்கும்படியான கர்மவாசனைகளாகிற பரவசத்தோடேகூடிக்கொண்டிருப்பதால், இவர்களைப் பிசாசுகளானார்களென்று சொன்னது யுக்தமே. இப்பேர்ப்பட்ட ஜீவேஸ்வர ஜகத்துக்களுடையசொபாவங்களை அறியாதவன் மயங்குவனேதவிர, அறிந்தவன் ஒருக்காலும் மயங்கானென்று அறிந்து கைவல்யத்தில் மலடிமைந்தனுமென்ற செய்யுளுக்கு அர்த்தம் அறிந்துகொள்ளத்தக்கது.

## 245 - வது தரங்கம்.

ஜீவனுக்கே சம்சாரமென்றும் மனதுக்கே சம்சாரமென்றும் சொல்லிய இரண்டு சுருதிகளுக்கும் விரோதமில்லை:—

சுருதியில் சிலவிடத்தில் ஜீவோபாதியான மனதுக்கே சுகதுக்காதி சம்சாரமென்றும், இன்னுஞ்சிலவிடத்தில் மனோபாதியான ஜீவனுக்கே சம்சாரமென்றும் சொல்லியிருப்பது விரோதமில்லை. [எ - தி] புருஷனோடேசேர்ந்து பிள்ளை பிறக்கவேண்டுமென்றும், ஸ்திரீயோடேசேர்ந்த புருஷனே புத்திரவானாயிருக்கிறானென்றுஞ் சொல்வதுபோலவறிக. [இ - து] மனதுக்கே பந்த மோக்ஷமென்று சொல்வதற்கு திருஷ்டாந்தம்:—நாம் இருந்தபடியிருக்க நித்திராசக்தியை யடைந்த மனது சுகதுக்காதி பந்தப்படுகிறதும், ஜாக்கிரசக்தியால் அந்த மயக்கந்தெளிந்து ஸ்வபாவசுகமடைவதுபோலவாம். ' ஐயா, ஆத்மா நிர்விகாரியாய் சும்மாஇருக்கும்போது மனதே சகலத்தையுங் கற்பனை பண்ணிவிட்டு ஆத்மாவின்பேரில் ஆரோபிக்கிறதென்று சொன்னீர்களே, அதற்குத் திருஷ்டாந்தமாக ஒருகதை சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:—ஒரு பிராம்மணன் ஐந்துஸ்திரீவரையில் கலியாணஞ்செய்து, அவர்கள் தன்வீட்டுக்குவந்து சிலகாலம் இருக்குமுன்னமே விபசாரஞ் செய்துவந்ததால், அவைகளைத் தெரிந்துகொண்டு அவர்களையெல்லாங் கடசிரார்த்தஞ்செய்து தள்ளிவிட்டு, அதன்பிற்பாடு பிறந்து ஆறுமாதமான ஒரு பெண்ணைப் பணத்தைக்கொடுத்துவாங்கி, அந்தப்பெண்ணைக் கலியாணஞ்செய்துகொண்டு, அந்தரமான அரண்ணியத்தில் ஒரு வீடு கட்டி அந்தப்பெண்ணை அதில் கொண்டுவைத்து, அந்தப்பெண் பக்குவமாகும்வரை அன்னபானாதிகளால் விருத்திபண்ணிவைத்து, பக்குவமானபின் ருதுசாந்திபண்ண ஆரம்பிக்கும்போது, அந்தப்பெண்ணுக்குப் படுக்கையறையில் படுக்கையில் புருஷன் உட்கார்ந்தவுடன் இவள் வீட்டுக்குள்ளே போய் இவள் வஸ்திரத்தைக் களைந்துவிட்டு அம்மணமாய்த் தேகமுழுமையும் கரியை அரைத்து முகம்வரையிற் பூசிக்கொண்டு, தலைமயிரைப் பேயாடுகிறவள்போல விரித்துவிட்டுக்கொண்டு ஒருகையில் உலக்கையும் ஒருகையில் வேப்பிலைக்கொத்தும் எடுத்துக்கொண்டு "விடுவேனாபயலே விடுவேனா" என்று சொல்லிக்கொண்டு புருஷனைப் பன்னிரண்டு பிரதக்ஷணம்பண்ணிவிட்டு, வேறே அறைக்குள்ளே போய் அந்தக்கரியெல்லாம் கழுவி குளித்துவிட்டு, வஸ்திரத்தைக் கட்டிக்கொண்டு சர்வாலங்காரபூஷிதையாய் வந்து, விருத்தனாயும் தருடுதத்தத்தோடே கூடினவனாயுமிருக்கிற அந்தப்புருஷனோடே கேளிவிலாசமாய்ப் போகஞ்செய்வதுதான் உலகவழக்கமென்று ஒன்றுந்தெரியாத இந்தப் பெண்ணுக்கு இப்படி வழக்கஞ்செய்துவைத்து, சிலநாள் அப்படி நடந்துவரும்போது, ஒருதினத்தில் இவன் சாதங் கட்டிக்கொடுக்கச்சொல்லி அயலூருக்குப் போகிறவன்போலே போய்ப் பரண்பேரிலேறிப் படுத்துக்கொண்டிருக்கும்போது, ஒரு வளைச்செட்டி வளையல்களைத் தோளில் போட்டுக் கொண்டுவந்தவனை இவள் கண்டு தனக்கு வளையல் அடுக்கச்சொல்லி, அப்படி அவனும் வளையலெல்லாம் வேண்டியமட்டும் அடுக்கினபின், இவள் இதற்கு விலையென்னவென்று கேட்டதற்கு, அவன் உங்கள் தயவிருந்தால் போதுமென்று

சொன்னதைக்கேட்டதும், இவள் அவன்அபிப்பிராயத்தை அறிந்தவளாகி ராத்திரி சாப்பாடுபோட்டு அறைக்குள் படுக்கையிலிருக்கச்சொல்லிவிட்டு, வழக்கப்படி சமயலறைக்குள் போய்க் கரியைப்பூசிக்கொண்டு அம்மணமாய் உலக்கையையும் வேப்பங்கொத்தையும் எடுத்துக்கொண்டு விடுவேனு பயலேவிடுவேனுவென்று சுற்றும்போது, இவன் பிசாசென்று பயந்து ஓடிப்போனபின், இவள் ஸ்நானம்பண்ணி அலங்காரம்பண்ணிக்கொண்டு வெளியில்வந்து கூப்பிடும்போது, இவன் அதிவேகமாய் ஓடிப்போனபின், இவள் புருஷன் காலமே ஊருக்குப்போய் வருகிறவன்போல வந்து ராத்திரி இவள் வழக்கம்போலே நடத்தியபின், இவன் அவள் உபஸ்தத்துக்குக்கிட்டே காதை வைத்து வளைச்செட்டி வந்தானு, வளையலடுக்கினு, படுக்கையில் வந்திருந்து இவளைக்கண்டு பயந்தோடினுவென்று சொன்னதைக்கேட்ட இவள், கொல்லைக்குப்போய் அதை விளக்குமாறால் அடித்ததை இவன் ஒளிந்திருந்து பார்த்து, மறுபடி அடித்தாளா, வலிக்கிறதாவென்று சொல்வதுபோல இருக்கிறதை, அவள் அது சொல்லிற்றென்று நினைத்த கதைபோல, மனது தன் கற்பிதசுகத்தால் நிஜசுகத்தை ஜீவன் அடையாதிருக்கும்படி செய்ததுந்தவிர நிர்விகார பிரம்மத்தினிடத்தும் துவேஷமுண்டாகும்படி செய்விக்கிறதென்றறிக.

## 246 - வது தரங்கம்

சுருதிக்கு பாமராதி நாலு பிள்ளைகளின் தன்மை:—

சுருதியாகிற தாய்க்கு நாலு பிள்ளைகளுண்டு. அதில் பாபஞ்செய்கிற பாமரர்கள் சண்டைபிடித்துக்கொண்டு காயப்பட்டுவருகிற பிள்ளைகள்போலவாம். அவர்களுக்கு நரகமாகிற நல்லெண்ணை உப்புக்களைக் காய்ச்சி ஒத்தணம் கொடுப்பதுபோலும்; புண்ணியமான கர்மம் பக்திகளைச் செய்கிற பிள்ளைகளுக்கு விளையாட்டுக்காக திரிவிதகரணங்களுக்குச் சுகத்தைக்கொடுக்க சாலோகாதி பதங்களாகிற பொம்மைகளைக் கொடுப்பதும்; முமுக்ஷுவாகிற படிக்கிற குழந்தைக்கு வேதாந்தசாஸ்திரங்களாகிற புஸ்தகங்களையும், குருவாகிய வாத்தியாரையும், சாதுக்களாகிற படிக்கிற பிள்ளைகளையும் சேகரித்துக்கொடுப்பதும்; ஞானிகளாகிற பிள்ளைகள் கிருதகிருத்தியமாகிற ஜட்ஜிவேலையிலிருந்து நித்தியானந்தமாகிற ரூபாய்களை எதேஷ்டமாய்ச் சம்பாதித்துக்கொண்டிருப்பதால் அவர்களைக்குறித்து அவளுக்கு யாதொரு கவலையுமில்லாமல் அதிப்பிரீதியும், மற்றமூவர்களில் முமுக்ஷுவிடத்தில் பிரீதியும், கர்மி பக்தனிடத்தில் உபேக்ஷையும், பாமரனிடத்தில் பரிதாபமுமுண்டாவதால், இப்போது அந்தத் தாய்க்குப் பிரியத்தையாவது புத்திசாலி தேடத்தக்கதென்றறிக. இதை இன்னொருவிதமாய்ச் சொல்லுகிறார். மாயாசம்சாரத்தில் தேகம் நானென்

யிருக்கிறவன் செத்தவனுக்குச்சமானம், அதிலேயே சுகமிருக்கிறதாக மயங்கு கிறவன் சமுத்திரத்திலிருக்கிற முதலையின்வாயிலகப்பட்டவன். அதிலிருந்து கரையேறவேண்டுமென்று தபிக்கிறவன் முமுக்ஷு. குருகடாக்ஷக்கப்ப லேறிக் கரையேறினவன் முக்தனென்றறிக. [இ - ர்] இகலோகசுகத்துக்கு முடிவு சக்ரவர்த்தியாகிறது. பரலோகசுகத்துக்கு முடிவு நூறு அஸ்வமேதஞ் செய்து இந்திரப்பட்டத்தை யடைகிறது. பக்திசுகத்தின் முடிவு சாரூபமுக்தி யடைகிறது. ஞானசுகத்தின் முடிவு அகங்காரநிவர்த்தியாய் கிருதகிருத்தியனு யிருக்கிறது. [எ - தி] நாடகத்தில் ராஜாவேஷம்போலும், இந்திரஜாலத்தில் தோற்றுகிற சித்தன்போலவும், சிவாலயத்தில் மகாலிங்கம் சிரேஷ்டமாயிருப் பதுபோலும், குருடர்களுக்குள் கண்தெரிந்தவன் சிரேஷ்டமாயிருப்பது போலுமறிக. [இ - து] சகல சாஸ்திரங்களும் அதிகாரிகளுக்காகவே செய் யப்பட்டிருக்கிறதென்பதற்கு யுக்தி:— சகல பரீக்ஷைகளும் பிள்ளைகளுக்குப் படிப்பு ஏறுகிறதற்காகவே வைத்திருக்கிறதுபோலவறிக. [இ - து] ஞானி யின் மனதும், முமுக்ஷு, பக்தன், யோகி, கர்மி, பாமரன், இவர்களுடைய மன தும் விஷயத்தில் சம்மந்தப்பட்டதானால் போகிறமாதிரிக்கு யுக்தி:— தங்கத் தையும், வெங்கலத்தையும், இரும்புச்சட்டியையும், மண்சட்டியையும், விறகை யும், பஞ்சையும் தீயிற்போட்டால் எப்படியாகுமோ அப்படியென்றறிக. [இ-து] கர்மம் பக்தி யோகங்கள் சேவகன் பிரதானி மந்திரிபோலும், ஞானம் ராஜாவைப்போலும்; கறிபதார்த்தங்கள்போலும், அன்னம்போலும்; கால் முதலானவைபோலும், தலையைப்போலுமறிக. [இ - து] பாமரனுக்குத் தெய் வம் தேகம். கர்மிக்குத் தெய்வம் ஜீவன். பக்தனுக்குத் தெய்வம் ஈஸ்வரன். முமுக்ஷுவுக்குத் தெய்வம் குரு. ஞானிக்குத் தெய்வம் பிரம்மமென்றறிந்து, நாம் எந்த அதிகாரத்திலிருக்கிறோமென்றறிந்து நடக்கத்தக்கது. [இ - து] சமயலுக்கும் பிணஞ்சுடுவதற்கும் சூளைபோடுவதற்கும் தங்கம் புடம்போடுவ தற்கும் விறகுந் தீயும் ஒன்றாயிருந்தாலும் பிரயோசனத்திற் பேதமிருப்பது போல, கர்மத்துக்கும், பக்திக்கும், யோகத்துக்கும், ஞானத்துக்கும் இந்திரிய நிக்ரகமும் சித்தஏகாக்கிரமும் சரியாயிருந்தாலும் பலத்தில் சொர்க்கமும், பத முக்தியும், அஷ்டமாசித்தியும், ஜீவன்முக்தியும் பேதமாயிருக்குமென்றறிக. [இ - து] கர்மகாண்டத்திற் சொல்லியபடி அவனவன் செய்த கர்மத்தை அனுப விக்கவேண்டுமென்பது சித்தாந்தமானாலும், அது பூர்வபக்ஷம். தபசினால் கர்மக்ஷயமாகுமென்பது சித்தாந்தம், அது பூர்வபக்ஷம். பக்திகாண்டத்தில் ஒரு மலர் அருச்சித்தவனுக்கும், ஒருதரம் சிவாவென்று சொன்னவனுக்கும் பாப மில்லையென்பது சித்தாந்தம், அது பூர்வபக்ஷம். மனதினால் சகுணமூர்த்தியை க்ஷணநேரம் பாவிப்பதால் பாபம் நசிக்குமென்பது சித்தாந்தம், அது பூர்வ பக்ஷம். குருசன்னிதியில் சிரவணம்பண்ணி பிரம்மமுண்டென்ற பரோக்ஷ ஞானத்தால் புத்திபோடே செய்த சகல பாபங்களும் நசிக்குமென்பது சித்தாந் தம், அது பூர்வபக்ஷம். குருகிருபையால் பெற்ற அபரோக்ஷஞானம் அஞ்ஞா னத்தோடே சகல புண்ணியபாப கர்மங்களை எரிக்குமென்பதே சித்தாந்தம்.

[எ-தி] வீடுமுதலான பண்டம்பதார்த்தம் பெரிசென்பதும், பின் துட்டே பெரிசென்பதும், பிறகு ரூபாயே பெரிசென்பதும், பிறகு பவுனே பெரிசென்பதும், பின்ரசவாதஞ் சித்திக்கும்படியான சித்தகுளிகையும், அதன்பின் நாகரத்னம் பெரிசென்பதுபோலவுமறிக. [இ - து] அந்தக்கரணத்திற்கு பாமரவியாபாரம் முதலாவது. கர்மம் பக்தி யோகம் இரண்டாவது. சாதனத்துடன் குருவினிடத்தில் ஞானப்பியாசஞ்செய்வது மூன்றாவது. விஷயத்தில் சத்தியபுத்தியும் கர்த்துருத்துவமும் போய் ஜீவன்முக்தனாயிருப்பது நாலாவது. விதேகமுக்தியே ஐந்தாவது. [எ - தி] ஒரு புருஷனுக்கு லோகபோகவிவகாரம் தெரியாத வாலிபம்போலும், மேற்படிவிவகாரம் பாராமல் வித்தியாப்பியாசம்பண்ணுகிற கௌமாரம்போலும், லோகபோக விவகாரஞ்செய்கிற யௌவனம்போலும், சத்தியபுத்தியோடே இதம்விருத்தியால் விவகாரம்பண்ண கைகால்களில் வல்லமையில்லாமலும், அகம்விருத்தியால் போகிக்கிறதற்குக் கர்த்துருத்துவமாகிற லேபனமில்லாமலுமிருக்கிற விருத்தாப்பியம்போலவும், சரீராதிதோற்றம் அழிகிற மரணம்போலுமறிக. [இ - து] சொபாவமான ஆத்மஞானமடைவது அழிவற்ற மோக்ஷகிருத்தியம், மித்தியாஞானமான பரலோகத்தைக்குறித்துச் செய்வது புண்ணியகிருத்தியம், இகலோககிருத்தியம் பிராந்திஞானம், வீண்வார்த்தையும் சூதும் சோம்பலும் விருதாகிருத்தியம். [எ - தி] புருஷனோடே சுகிப்பவளும், கூத்துப் பார்க்கப்போகிறவளும், சித்திரத்தைப் பார்க்கிறவளும், சுவானம்போலத் தானே புலம்புகிறவள்போலுமறிக. [இ - து] சமுத்திரத்திலிருந்து கரையேறினவன்போல ஞானி, ஸ்டீமரில் போகிறவன் நிர்ப்பயமாய்ப் போவதுபோல குருசன்னிதிவிடாதிருக்கிற முமுக்ஷு, தோணியில் பயந்துகொண்டு ஏறிப்போகிறவன்போல பக்தன், கவலையுடன் கைநீச்சாய்க் கட்டையைப்பிடித்துப் போகிறவன்போல கர்மி, யாதொரு ஆதரவுமில்லாமல் கைநீச்சாய்க் கடலிலிறங்கினவன்போல பாமரனென்று தாரதம்மியங்களைப் பகுத்துப் பார்த்துக்கொள்க. ஐயா, சுருதிக்குப் பாமரன் ஒருபிள்ளையென்றும், கர்மி ஒருபிள்ளை யென்றும், பக்தனொருபிள்ளையென்றும், முமுக்ஷு ஒருபிள்ளையென்றும், ஞானி ஒருபிள்ளையென்றும் ஐந்துபிள்ளை இருக்கிறதாக மற்றோரிடத்திற் சொல்லி, இவிடத்தில் கர்மியையும் பக்தனையும் ஒன்றுசேர்த்து நாலுபிள்ளையென்று சொல்லப்பட்டதே, அதில் ஞானி ஒருவன்தவிர மற்றவர்களெல்லாம் பொய்யாயிருக்கிற தேகாதிகளையே நானென்றும், ஜெகத்தையே சத்தியமென்றும், சப்தாதிவிஷயங்களையே ஆனந்தமென்றும், இதை அனுபவிப்பதே கிருதகிருத்தியத்துவமென்றும், இப்படி நினைத்திருக்கிறவர்கள் எப்படிச் சுருதிக்குப் பிள்ளையாக ஆகுவார்களென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன்கேள்:— நாலுபிள்ளை ஐந்துபிள்ளையென்று சொன்ன கணக்கைப்பற்றிக் கேட்கவேண்டியதில்லை, பின்னை எத்தனை பிள்ளையென்று சொன்னாலும் சொல்லலாம். ஜீவர்கள் தெரியாதவர்களாயிருந்தாலும் பைத்தியம்பிடித்த பிள்ளையையும் தாய் பிள்ளைக்கணக்கிற் சேர்ப்பதுபோல சுருதி கருணையால் பிள்ளையென்று சொல்லிற்றென்றறிக.

247 - வது தரங்கம்.

பஞ்சதசிமுதலான பிரகரணுதிகளில் அர்த்தரசமும் அனுபவரசமும் விசேஷமாயிருக்கும். பாகவதாதிகளில்சப்தரசமே அதிகமாயிருக்கும், மற்றவைகள் கொஞ்சமாயிருக்கும் :—

பஞ்சதசப்பிரகரணமுதலானவைகள் சப்தரசமில்லாமல் அர்த்தரசமும் முக்திரசமும் விசேஷமாயிருக்கும், பாகவத ராமாயணுதிகள் சப்தரசமாயும் அர்த்தரசம் கொஞ்சமாயுமிருக்கும். [எ - தி] தன் சொந்தஸ்திரீபோகம் வெளியிலுள்ள சிங்காரரசங்கள் ஒன்றுமில்லாதிருந்தாலும் ஆரோக்கியமும் அரசமுண்டாவதுபோலும், தாசிபோகத்தில் வெளிக்குச்சிங்காரரசத்துடன் வாசனுதிரவியங்கள் முதலானவைகளிருந்தாலும் உள்ளுக்கு ரோகம், திரவியநஷ்டம், பாபமுதலானவை யுண்டாவனபோலவறிக. [இ - து] பிரகரணங்களெல்லாம் பசிதீர்க்கிற அன்னம்போல அஞ்ஞானப்பசியை நீக்குகின்றன. சூத்திரபாஷியாதி கிரந்தங்கள் வஸ்திராபரணங்கள்போலப் பார்க்கிறவர்களுக்கு மட்டும் பெருமையைக் கொடுக்குமேதவிர மற்றத் தத்துவஞானம், துக்கநிவர்த்தி, தடையற்றஆனந்தமுதலானவற்றைக் கொடாதென்றறிக. [இ - து] பாஷியாதிகள் பார்த்து ஞானம்வருவது பிரயாசமென்பதற்கும், பிரகரணமுதலானவை படிக்கிறவர்களுக்கு ஞானம் சுலபம். [எ - தி] ராஜஸ்திரீ நீசஸ்திரீ குகியங்களைப் பார்க்கிறவர்களுடைய தாரதம்மியம்போலும், பாணதீர்த்தம் வாசலிலிருக்கிற நதிதீர்த்தங்களின் ஸ்நானத்தின் தாரதம்மியம்போலும், தீக்ஷதர் சமயல்பிறையில் போஜனத்துக்கு உட்கார்ந்து புகையில் கண்ணை அவித்துக் கொள்ளுகிறதுபோலும், பட்டகசாலையில் சுகமாய்ப் போஜனஞ்செய்கிறவர்கள் போலுமறிக. [இ - து] பாஷியார்த்தம் பிரகரணுர்த்தம் பார்த்து அனுபவம் வருவதின் தாரதம்மியங்களைத் தெரிந்துகொள்வதற்கு யுக்தி:— முழுத்தேங்காய்போலவும், தேங்காய்ப்பால்போலவும்; முழுக்கரும்பைக் கடிக்கிறதுபோலவும், கரும்பின் ரசத்தைச் சாப்பிடுவதுபோலவுமறிக.

ஐயா, பாஷிய பாகவதாதிகளில் அர்த்தரசம் விசேஷமாயில்லாமல் சப்தரசமாத்திரம் விசேஷமாயிருக்குமென்றும், பஞ்சதசி ஆத்மபோதம் விவேகசூடாமணிமுதலான கிரந்தங்களில் சப்தரசம் விசேஷமாயில்லாமல் அர்த்தரசம் விசேஷமாயிருக்குமென்பதற்கும் திருஷ்டாந்தமாக தன் சொந்தஸ்திரீயும் தாசியும்போலவென்று சொன்னீர்களே அதை விரித்துச்சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறேம் கேள்:—ஒரு வைதீகப்பிராமணன் தன் சொந்தஸ்திரீயினிடத்திலிருக்கிற ருசிக்கும் அளவுக்கும், தாசியினிடத்திலிருக்கிற அதரபானமுதலான சுகவிசேஷமும் யோனியில் அளவு ஜாஸ்தியாயுமிருக்கும், அப்படியில்லாமற்போனல் லௌகீகர்களெல்லோரும் பதினுயிரம் இருபதினுயிரம்வரை ரூபாய்களையும் மற்றச்சொத்துக்களையுங் கொண்டுபோய்க் கொடுப்பார்களா? ஆகையால் அவளிடத்தில் ஏதோ ஒரு விசே

ஷமிருக்கிறது. அந்த விசேஷத்தை நாமும் அளவிட்டுப்பார்த்து விடவேண்டு மென்று நிச்சயித்து, முதலில் சொந்தஸ்திரீயினிடத்தில் அதரபானம்பண்ணி, அதிலிருக்கிற ஊத்தைநாற்றமாயிருக்கிற ரசத்தை அறிந்துகொண்டு, ஒரு தெற்பையைக் கையிலெடுத்துப் படுத்திருக்கிற தன்னுடைய ஸ்திரீயின் யோனி யில்விட்டு அளவுபார்த்து அந்தத்தெற்பையை வெளியிலெடுக்கும்போது ரம்பம்போல அது அந்தயோனியை அறுத்ததையும் கர்ப்புள்ளவளானதால் கணவனைக் கோபிக்கக்கூடாதென்று சகித்திருந்தபின்; இவன் தாசிவீட்டுக் குப்போய், ஓ தாசிபுத்திரி! இப்படி ஒரு பரீக்ஷை நிமித்தமாய் உன்னிடத்திற்கு வந்தேன், அதற்கு நீ சோதனைகொடுக்கவேண்டுமென்று கேட்டவுடன், அவள் இவர் யோக்கியராச்சுதேயென்று சம்மதித்தபின் அறைக்குள் கூட்டிப்போய் மெத்தையிற் படுத்துக்கொண்டு உம்முடைய பரீக்ஷை யைப் பார்த்துக்கொண்டுபோமென்று சொன்னவுடன், இவர் அதரபானம் பண்ணுகிறேமென்று உதட்டைக்கெட்டியாய்க் கடித்தவுடன், அவள் கன்னத் திலடிக்கவும், யோனியில் தெற்பையைவிட்டு எடுக்கும்போது, அது அறுத்து விட்டதால் காலால் ஒருஉதை கொடுத்ததும், இவர் உபயத்திரரசமும் தீர்க்கமும் சமானம், அஸ்ததாடனம் பாததாடனம் அத்தரவிசேஷமென்று சொன்ன கதைபோலவறிக.

## 248 - வது தரங்கம்.

*வேதாந்தசாஸ்திரமே தீமைக்கும் நன்மைக்குங் காரணம்:—*

இந்த வேதாந்தசாஸ்திரம்போல எந்தச்சாஸ்திரமும் கெடுதியும் நன்மை யுஞ் செய்யாது. அதாவது, விஷயாசையால் அதைரியமுள்ளவனைக் கெடுக்கும், நிராசையால் தீரதையுள்ளவனைக் காப்பாற்றும். [எ - தி] தகப்பன் கொடுத்த கத்தியைக் கொண்டுபோன இருவர்களில் ஒருவன் அதைரியத்தால் பயந்தவனை எதிரிவந்து இவன்கத்தியைக்கொண்டே இவன்கழுத்தைக் கொய்ததுபோலும், மற்றொருவன் தீரனாயிருந்து தன்கத்தியால் சத்துருக்களைக் கொய்ததுபோலு மறிக. [இ - து] விஷயாசையோடே பிரம்மவிசாரம் பண்ணுகிறவனுக்குத் தத்துவஞானம்வருவது பிரயாசம். [எ - தி] தாசிமோகம் வைத்திருக்கிறவன் சொந்தஸ்திரீயோடே சேர்ந்திருந்தாலும் பிள்ளையைப்பெறுவது பிரயாசம் போலவறிக. ஐயா, இந்த வேதாந்தசாஸ்திரம்போல மற்ற எந்தச்சாஸ்திரமும் நன்மையைக் கொடுப்பதற்கும் தீமையைக் கொடுப்பதற்கும் காரணம் ஒன்று மில்லையென்று சொன்னீர்களே, அதைத் திருஷ்டாந்தமூலமாக அறிவிக்க வேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேங் கேள்:— பிரம்மாவினிடத்தில் தேவேந்திரனும் விரோசனனும் இரண்டுபேர்களும் ஆத்மாவைத் தெரிந்துகொள்ளக் காத்திருந்ததில், அப்போது பிரம்மா வானவர் இந்தச்சரீரத்தில் நேத்திரத்திலிருக்கிற திருக்கே ஆத்மாவென்று உபதேசித்ததைக்கேட்டுக்கொண்டு இருவரும் வந்தபிற்பாடு, அதில் விரோசன

சக்ரவர்த்தியென்பவன் தேகமே ஆத்மாவென்று தானும் நிச்சயித்து, அந்த நிச்சயத்தைச் சகலரும் நம்பும்படியாக ஒரு சாஸ்திரத்தை யுண்டுபண்ணி வைத்தபிரகாரம், லோகாயுதர்களும் பாமரர்களும் அந்த நிச்சயத்தை நம்பிக்கொண்டு சரீரம் மரணமாய்ப்போவதே மோக்ஷமென்று நம்பி செத்தபிணத்துக்கு மாலை சந்தனம் வஸ்திரமுதலானவைகளைப் போட்டு அலங்காரம்பண்ணி, புஷ்பப்பல்லாக்குகள் புஷ்பவிமானங்கள்முதலானவைகளை நூறு இருநூறு செலவழித்து உண்டுபண்ணி, அந்த வாகனத்தின்மேரில் இந்தப் பிணத்தைத் தூக்கிவைத்துக்கட்டி, மேளதாளங்களுடனும் தீவட்டி மத்தாப்பு வானக்காக்ஷியுடனும் பட்டணப்பிரவேசஞ்செய்து, சுடுகாட்டுக்குக் கொண்டுபோய் அந்தப்பிணத்தைச் சுட்டுப்பொசுக்கிப்போடுகிற அனுபவத்தை அறிந்துகொண்டு, இந்த வேதாந்தசாஸ்திரம் தீர்க்கவிசாரமில்லாத புருஷனைக் கெடுத்துவிடுமென்றுசொன்னதை அறிந்துகொள்க. இனி இந்திரனானவன் தனித்திருந்து இத்தேகம் நாமா? இத்தேகத்துக்கு நாம் வேறாயிருக்கிறவனா? இந்தத்தேகமே நாமானால் இந்தத்தேகமெடுக்குமுன்னே நாமிருந்தோமா இல்லையா? இல்லையென்றால், இந்தத்தேகமானது கரசரணாதி அவயவங்களோடேகூடி மரமுதலானவைகள்போல விருத்திக்ஷயத்தையும், ஆத்தியாத்மீகாதி துக்கத்திரயங்களையும் அனுபவித்துக்கொண்டு வருவதால், இந்தச் சரீரமெடுப்பதற்கும் மரமுண்டாவதற்கு ஒருவிதைவேண்டியிருப்பதுபோல கர்மமாகிற ஒருவிதை வேண்டியிருக்கிறதே. இந்தச்சரீர ஆரம்பகமான கர்மம் இதற்குமுந்தியஜென்மத்தில் செய்ததாயல்லவோ இருக்கவேண்டும். அப்படிச்சொல்லாமல் இந்தச்சென்மத்தில் செய்தகர்மத்தினாலேயே இந்தச் சரீரம் வந்திருக்கிறதென்று சொன்னால், இப்போது எதிரேயிருக்கிற இந்த மரத்தினுடைய விதையே இந்த மரத்துக்குக்காரணமென்று சொல்லவேண்டி வருமே, அப்படிச் சொல்லக்கூடாது, முந்தியுண்டான மரத்தினுடைய விதையிலிருந்தே இந்த மரமுண்டாயிருப்பதுபோல, முந்தியஜென்மத்தில் செய்த கர்மமே இந்தச்சரீரத்துக்குக் காரணமென்று நிச்சயிக்கலாச்சுது. முந்தியஜென்மத்தில் அந்தக்கர்மஞ் செய்யும்போது நாமிருந்திருப்போமா அல்லவா? இல்லையென்றால், ஒருவன் சமாராதனையில் மூக்கைபிடிக்க வடையும் போளியுங் கறியுங்காயும் தின்றுவிட்டுவந்து, பீச்சாங்குழல் பீச்சுவதுபோல வயிற்றாலே போய்க்கொண்டிருக்கிறவன், நான் அந்தச் சமாராதனைக்குப் போய்ச் சாப்பிடவில்லையென்று சொன்னால், அப்படிச் சாப்பிடாதவனுக்கு இப்படி உளுந்தம்பருப்பும் துவரம்பருப்புமாக வயிற்றாலே கொட்டுமா? இப்படிச்சங்கடமான துக்கத்தை அனுபவிக்கும்படிவருமா? அப்படி வருவதானால் மற்றோர்களுக்கும் வரவேண்டுமே. போகம்பண்ணிக் கெர்ப்பத்தை அடைந்தவளே பிரசவவேதனைப் படுவளேதவிர சும்மாஇருக்கிறவள் எங்கேயாவது பிரசவவேதனைப்படுகிறாளா? ஆகையால் ஜென்மாந்திரத்தில் நாமிருந்தே கர்மஞ்செய்திருக்கிறோம். அப்போது நாம் சரீரத்தோடேகூடியிருந்து கர்மம்

செய்தோமா சரீரமன்றியில் கர்மம் செய்தோமா? சரீரமன்றியில் கர்மம் செய்தோமென்றால், இப்போது சுழுப்தியவஸ்தையில் சரீரமில்லாதிருக்கும் போது, அந்தச்சமயத்தில் ஏதேனுமொருகர்மம் செய்யப்படுகிறதா ? அப்படிச் செய்யப்படவில்லையே. இப்போது இந்த ஜாக்கிரதவஸ்தையிலே சரீரத்தோடு கூடியிருந்தே கர்மம் செய்வதால், முந்தியஜென்மத்தில் சரீரத்தோடேகூடி யிருந்தே கர்மம் செய்தோம். அப்படியே அந்தச்சரீரமும் அதற்கு முந்திய ஜென்மத்தில் செய்த கர்மத்தாலுண்டாயிருப்பதால் அப்பவும் நாமிருந்தே வருகிறோம். இப்படியே இனிவரப்போகிற காலத்திலும் உண்டாகப்போகிற சரீரங் களிலும் நாமிருந்துகொண்டே யிருப்போமென்று தோற்றுகிறபடியால், பிரம்மாவானவர் எப்படி இந்த ஸ்தூலசரீரத்தை ஆத்மாவென்று சொல்லுவர் ? அவரையே இரண்டாந்தடவை வந்து கேட்டவுடன் அவர் சூக்ஷ்மசரீரத்தில் நானென்று விளங்குகிற ஜீவனே ஆத்மாவென்று உபதேசித்ததைக் கேட்டுக் கொண்டுவந்து தனித்திருந்து ஆலோசிக்கும்போது, இந்தக்கர்த்தாவாகிற ஜீவன் ஜாக்கிர சொப்பனத்தில் அகம்விருத்தியுண்டாகும்போது இவனுங் கூடவுண் டாகிறவனும், சுழுப்தி மூர்ச்சைமுதலான அவஸ்தைகளில் அகம்விருத்தி லயத் தையடையும்போது இவனுங் கூடவே லயிப்பதினாலும், விகாரியாயிருப்பதினாலும், பரிச்சின்னனாயிருப்பதினாலும், ஓர் அவஸ்தையில் கண்டதை ஓர் அவஸ் தையில் காணாத மாயாமயத்துக்கு உள்பட்டவனாயுமிருப்பதினாலும், லோகாந் திர கமனாகமனத்தை யுடையவனாயுமிருப்பதினாலும், கர்த்தாவாயும் போக்தா வாயும் சுகியாயும் துக்கியாயுமிருக்கிற இந்த ஜீவன் இதற்கெதிர்மறையான ஆத்மாவாக எப்படி ஆவனென்று சந்தேகப்பட்டு, திரும்ப மூன்றாவதுதடவை பிரம்மாவினிடத்தில் வந்து "ஏ குரோ! இந்தமாயாமயனாயிருக்கிற ஜீவனை ஆத்மா வென்று எப்படிச்சொன்னீர்? இவனுடைய லக்ஷணமானது இப்படி அலக்ஷ ணமாயிருக்கும்போது, இவனெப்படி ஆத்மாவாக ஆகுவன்" என்று சொல்லும் போது, அதைக்கேட்ட பிரம்மா சகலத்துக்குள்ளிருந்தும் ஒருவருக்குந்தெரி யாமல் பிரேரணைசெய்கிற அந்தரியாமியே ஆத்மாவென்று சொன்னதைக் கேட்ட இந்திரனும் தனித்து வந்திருந்து ஆலோசித்ததில், அந்தப் பிரேரணை சக்தியானது மாயையைச் சேர்ந்ததல்லவா? அகண்ட பரிபூரணப் பிரஹ்மம் அச ங்கமானதால், மாயையோடே எப்படிச்சேர்ந்து இந்தப்பஞ்சகிருத்தியத்தைச் செய்யுமென்று சந்தேகப்பட்டுப் பிரம்மாவினிடத்தில் நாலாவதுதடவை வந்து, ஓ பிரம்மாவே ! அசங்கமான ஆத்மா எப்படி அந்தரியாமியாகுமென்று கேட்ட பின், பிரம்மாவும், அசங்கமான பிரம்மமே நீ, மற்றவைகளெல்லாம் பொய்யென் றுபதேசித்தபடி, அவனும் அபரோக்ஷஞானத்தை அடைந்ததே சாக்ஷியென் றறிக.

## 249 - வது தரங்கம்.

சுருதிக்குக் கர்மிகளிடத்தில் தன்மையில்லை. முமுக்ஷுக்களிடத்திலேயே தன்மை:—

வேதமானது கர்மிக்கு இந்தக்கர்மத்தைப் பண்ணு, அதற்குப்பலன் இன்னதென்று சொல்லி, அப்படி அதிற்கொஞ்சம் பிசகுவந்தால் பிரமாத தோஷத்தைச் சொல்லுகிறது. முமுக்ஷுவுக்கு பிரஹ்மத்தை சிரவணம்பண் ணப்பா, மனனம் பண்ணப்பா உனக்கு நன்மையுண்டென்று சொல்லுகிறது. [எ-தி] ராஜாவானவன் கூலிக்காரனுக்கு வேலையைவிட்டு கூலிபேசிக் கொஞ்சம் பிசகினால் தண்டிப்பதுபோலவும், தன்பிள்ளைக்குப் பாலுஞ்சாதத்தை தங்கக் கிண்ணியிற்போட்டு சாப்பிடுகிறதற்குக் கெஞ்சுதல்போலவறிக. [இ-து] வேதம் கர்மகாண்டத்திற் கர்மத்தை விதித்து இகபரவிஷயசுகத்தை அனுபவிக்கும்படி சொன்னது அந்தரங்க தாற்பரியமாய்ச் சொல்லவில்லையென்பதற்குச் சுருதி யுக்தி அனுபவமென்னவென்றால், "ந கர்மணா, ந ப்பிரஜயா" என்றவாக்கியத் தால் கர்மத்தினாலும் பிரஜையினாலும் தனத்தினாலும் முக்தியில்லை. இவைகளைப் பரித்தியாகஞ்செய்தவனுக்கே முக்தியென்று சொல்லுகிறதே சுருதி. தேவடி யாள்மயக்கத்தையுடைய புத்திரனுக்குப் பிதாவானவர் தேவடியாள்போகத் தைப் பண்ணென்று சொல்லாரென்பதுபோலும், அபத்தியத்தால் வியா தியை யடைந்து துக்கப்படுகிற பிள்ளைக்குத் தாயானவள் வடையைத்தின் னென்று சொல்லாளென்பதே யுக்தி. சர்வத்தையும்விட்ட சந்நியாசியை சகலரும் பூஜிப்பதே அனுபவம். ஐயா, வேதத்திற்குக் கர்மகாண்டத் தைச் சொல்வதில் தாற்பரியமில்லை, ஞானகாண்டத்தைச் சொல்வதிலேயே தாற்பரியமென்றும், கர்மகாண்டத்தை விநோதார்த்தமாய்ச் சொல்லுகிற தென்றும் சொன்னீர்களே, விநோதார்த்தமாய்ச் சொல்லுகிற வார்த்தை களுக்கு புண்ணியபாபங்களாவது விதிநிஷேதங்களாவது சொர்க்க நரகங்க ளாவது சுகதுக்கங்களாவது யாதொன்றும் உலகத்திலாவது வேதத்திலா வது காணப்படவில்லை. எப்படிப்போலவென்றால், நிஜமாய் ஒருஸ்திரீயும் ஒருபுருஷனும் சேர்ந்து மைதுனம்பண்ணினால் பாபதோஷங்களும் மானாவ மானங்களும் சுகதுக்கங்களும் கெர்ப்பமுதலானவைகளும் வருமேயல்லா மல் விநோதார்த்தமாய் மாமன் மைத்துனன்கள் மச்சினி முதலானவர்களை மைதுனத்துக்கு வருகிறாயாவென்று பேசுவதால் யாதொரு பாபதோஷங்களு மில்லையே; அப்படிக்கர்மகாண்டத்திலல்லவா பாபதோஷங்களில்லாதிருக்க வேண்டும்? அப்படிக்கில்லாமல் யக்ஞமானது யெக்ஞபதியைக் கறந்துவிடும், யெக்ஞபதியானவன் யக்ஞத்தைக் கறந்துவிடுவன்; ஸ்தோத்திரங்கள் சஸ்திரங் களுடைய அர்த்தங்களை யறியாதவனாயிருக்கிற மூடன் யெக்ஞஞ்செய்தால் அவனை அந்த யெக்ஞமே அவனுடைய புண்ணியத்தையெல்லாங் கறந்துவிடுவ தால் அவன் பாபியாகப்போய் நரகத்தை அனுபவிக்கிறானென்றும், யாதா மொருவன் அந்த ஸ்தோத்திரசஸ்திரங்களுடைய அர்த்தங்களைத்தெரிந்த வித்து வானாய் யாகஞ்செய்கிறானோ அவன் யெக்ஞத்தைக் கறந்துவிடுவதால் புண்ணிய சாலியாய் சொர்க்கத்தை அடைகிறானென்றும், மந்திரஹீனத்தாலாவது ஸ்வர ஹீனத்தாலாவது வர்ணஹீனத்தாலாவது பொய்யாகப்போன அந்த

யாகமானது நிஜமான அர்த்தத்தைக் கொடாது, அந்த வாக்காகிற வச்சிராயுத மானது எஜமானனைக் கொன்றுவிடும். அதெப்படிப்போலவென்றால், துவஷ்டாவானவர் யாகத்தில் இந்திரசத்துரு விருத்தியாகவேண்டுமென்று ஓமஞ் செய்யும்போது, ஸ்வரபேதத்தால் விருத்திராசுரனை இந்திரன் ஜெயிக்கும்படி வந்திருக்கிற அனுபவமிருக்கும்போது, கர்மகாண்டத்தை வேதமானது விஞ்ஞதார்த்தமாய்ச் சொல்லுகிறதென்று எப்படிச் சொல்லக்கூடுமென்றால், அதற்குக் குருநாதன் உத்தரஞ்சொல்லுகிறதாவது. அடே மூடா! கர்மகாண்டத்தைக் கர்மிக்குச் சொல்லும்போதே கூலிக்காரனுக்கு ராஜா கண்டிப்பாய் விதிப்பது போலுமென்றும், முமுக்ஷுவுக்கு ஞானகாண்டத்தில் ராஜா தன்பிள்ளைக்குத் தங்கக்கிண்ணியில் பாலுஞ்சாதத்தைச் சாப்பிடச்சொல்வதுபோல சிரவண மனனாதிகளைச் செய்யப்பாவென்று சொல்லியிருக்கிறதென்று முன்னமே சொல்லியிருந்தும், விஞ்ஞதமென்பது மனதில்லாமல் வெளிக்குமட்டும் வேண்டாத பெண்டாட்டி கால்பட்டால் குற்றம் கைபட்டால் குற்றமென்ற பழமொழி போலவறிக.

## 250 - வது தரங்கம்.

சுருதி பிரம்மத்தை போதிப்பதற்கே ஜீவேஸ்வர ஜகத்தைச் சொல்லுகிறது:—

சாக்ஷியைத்தவிர இரண்டாவதில்லாதிருக்கும்போது வேதத்திலே ஜீவேஸ்வர ஜகத்துக்களையும் சொல்லுவானேனென்றால், ஆகாசத்தைக் காட்டி, அதில் பெரியநக்ஷத்திரங்களைக் காட்டி, அதின்நடுவில் சின்னதான அருந்ததி நக்ஷத்திரத்தைக் காண்பிக்கிறதுபோலும்; தாயானவள் ஒளிந்துகொண்டிருக்கிற தன்பிள்ளையை வெளியில் வரவழைக்கிறதற்காக அசலாத்துப்பிள்ளைகளுக்குப் பக்ஷணங்கொடுக்கக் கூப்பிடுகிறதுபோல, வேதமானது ஜகத்து ஜீவன் ஈஸ்வரன்முதலானவைகளைக் காண்பித்தது எதார்த்தமான பிரஹ்மத்தை வெளியாக்குகிறதற்காகவென்றறிக. [இ - து] ஜீவர்களுடைய புத்தி எந்தெந்தச்சமயத்தில் பெண்டாட்டி பிள்ளை பணம் தேகம் பிராணன் மனது ஜீவன் சாக்ஷி வரையில் எதில் நானென்றுவருகிறதோ அந்தந்தப்படி வேதமானது அதனையே ஆத்மாவென்று சொல்லுகிறது. [எ - தி] தாயானவள் கைப்பிள்ளைமுதல் பெரியவன்வரையிலும் துஷ்டன்முதல் யோக்கியன்வரையிலும் அந்தந்தப் பிள்ளைக்குத் தகுந்தவார்த்தையைச் சொன்னாலும், பெரியவனையும் யோக்கியனுமிருக்கிறவனுக்கு நிஜத்தைச்சொல்லுகிறதும், விசனத்தோடே மற்றவர்களுக்குத்தகுந்தபடி சொல்லுவதுபோல, முக்கியாதிகாரிக்கு நீயே பிரம்மமென்று சொல்லுகிறது, மற்றவர்களுக்குத் தகுந்தபடி சொல்லுகிறதென்றறிக. ஆனால் எல்லாம் வேதஞ்சொல்லுகிறபடியால் ஞானத்தைமட்டும் உண்மையென்று எப்படிக்கிரகிக்கிறதென்றால், மிட்டாய்க்கடையில் சகலசரக்குகளும் வைத்திருந்தாலும் வாயில் போட்டுப்பார்த்து அருசியாயிருக்கிறதைத்தள்ளி

ருசியாயிருக்கிறன்த வாங்கிச்சாப்பிடுகிறதுபோல ஜனனமரணமாகிற பசியைப் போக்கி மோக்ஷதிருப்தியை எது கொடுக்கிறதோ அதைக் கிரகிக்கத்தக்க தென்றறிக. [இ - து] ஜெகத்தில் ஒரு ஸ்திரீயை விவாகம்பண்ணி பரதாரத் தைப்பாராதே என்று சொன்ன சுருதிக்குத்தாற்பரியம், கொல்லைக்குக் கண்ட விடமெல்லாம் வீட்டுக்குள் போகாமல் கொல்லையில் துண்டாய் ஒரு இடங் கட்டிக்கொள்ளுகிறதுபோலிவன் கண்டஸ்திரீகளையெல்லாம் கட்டி அழுது கெட் டுப்போகாமலிருக்கிறதற்கேதவிர வேறில்லை. அதற்கு என்னசாக்ஷியென்றால், வேதத்தில்தானே எப்போது எந்தத்தினத்திலுனக்கு விரக்திவருகிறதோ அந்தத்தினத்திலேயே சம்சாரத்தை விட்டுவிடு என்று சொல்லி இருக்கிறதை அறிந்துகொள்க. வேதத்திற்கு ஜீவேஸ்வர ஜகத்தைக்கூட பொய்யென்று சொல்வதற்காவது பொய்யாகக்கற்பிக்கிறதற்காவது இஷ்டமில்லை. [எ - தி] கானலில் ஜலமிருக்கிறதாக மயங்கி ஓடுகிறவனுக்காக ஜலம் பொய்யென்று சொல்லுவதுபோலும், நிஜயானைமுதலான துஷ்டஜெந்துக்களிடத்தில் விளை யாடப்போகிற குழந்தை கெடாமலிருக்கிறதற்காக பொய்யானைமுதலானவை களை உண்டுபண்ணிக்கொடுக்கிறதுபோல, ஜீவன் துஷ்டமாயிருக்கிற விஷய வாசனையில் விருத்தியைவிட்டுக் கெட்டுப்போகப்போகிறானென்றெண்ணி பொய் யாயிருக்கிற புண்ணியகர்மமாகிற திரிபுடியைக் கற்பித்ததென்றறிக. [இ - து] சுருதியானது எல்லாம் பிரம்மமென்று சொல்வது,— துவைதத்தைச் சாதிப் பதற்காகவல்ல, ஜகத்தைச் சத்தியமென்றெண்ணியிருக்கிற பேர்களைக்குறித்தே சொல்லுகிறது. [எ - தி] மாப்பிள்ளையைப்பார்த்து ஜனங்கள் இவன் கட னுள்ளவனென்று சொன்னதற்காகவே எனக்கொருகாசுகூடக் கடனில்லை யென்று அவர்களுக்காக அவன் சொன்னதுபோலும், மாணியில்லையென்று சொன்ன மாமியாருக்கு மாப்பிள்ளை மாணியைக் கௌபீனத்தை அவிழ்த்துக்காட்டினதுபோலுமறிக. [இ - து] சுருதி கிரமசிருஷ்டி யுகபத் சிருஷ்டிகளை அதிகாரிகளுடைய பக்குவாபக்குவத்தைப்பார்த்துச் சொல்லு கிறது. உத்தமாதிகாரிக்கு உன்னிடத்திலேயே சொப்பனம்போல ஜகத்துண் டாச்சுதென்றும், மந்தாதிகாரிக்கு கிரமசிருஷ்டியை சுருதி சொல்லுகிறது. [எ - தி] தாய் யௌவனம்வந்த பெண்ணுக்கு நிஜபுருஷனையும், குழந்தைக்கு மரப்பாச்சியுங் கொடுப்பதுபோலும்; கடைக்காரன் பணம் கொண்டுவந்த வனுக்கு பட்டுவஸ்திரமும், பரதேசிக்குப் பழயவஸ்திரமும் கொடுப்பதுபோல வறிக. [இ-து] வேதம் புஜிக்கிறவனே கிடையாதென்று கோபமாயும் துணிவா யும்சொல்லிற்றென்பதற்கு யுக்தி:-பதிவிரதையினிடத்தில் போகத்திற்கு வருகிற வர்களுண்டாவென்று கேட்டால், அவள் தைரியமாய் என்னசொன்னாயென்று கோபிக்கிறதுபோலவறிக. [இ - து] பிரஹ்மத்தில் ஜகத்துண்டாச்சுது, லயிக் கிறது, பந்தமோக்ஷம் வந்திருக்கிறது, பந்தத்தால் துக்கம், மோக்ஷத்தால் சுகமென்பதுமுதலான யாவற்றையும் சுருதி வேடிக்கையாய் மூடனுக்குச் சொன்னதேயல்லாமல் நிஜமாய்ச்சொல்லவில்லை, [எ - தி] தாயானவள் குழந்

தைக்குக் குருவிக்கதைமுதலானவற்றை நிஜம்போலச் சொல்வதுபோலவறிக. ஐயா, தாயானவள் குழந்தைக்கு விநோதார்த்தமாய்ச் சொன்னகதை எப்படியென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள். வாசிஷ்டத்தில் பாலகாக்கியாயிகதையை வசிஷ்டர் இராமனுக்கு விஸ்தாரமாய்ச் சொல்லியிருக்கிறார். அதை நாம் சங்கிரகமாகச் சொல்லுகிறோம். அதாவது, ஸ்தன்னியபானங்கொடுக்கிற மூலைத்தாதிபோலிருக்கிற சுருதியானது அஞ்ஞானிகளாகிற ஸ்தனம்தயர்களுக்கு விநோதார்த்தமாய் ஒருகதை சொல்லுகிறதாவது, ஒரு மாயாமண்டபத்தில் விசுவ தைஜச பிராக்ஞர்களென்ற மூன்று ராஜகுமாரர்கள் தர்மிஷ்டர்களாய் வசிக்கிறார்கள். அவர்களில் இரண்டுபேர்கள் பிறக்கவேயில்லை, ஒருவன் கெர்ப்பத்திற்கூட இல்லை. இம்மூவர்களும் சம்சாரமாகிற வேட்டையாடுகைக்குக் காட்டைத்தேடும்போது, வேதமாகிற ஊமையனானவன் நிரம்சமாயிருக்கிற சிதாகாசத்தில் ஜகத்தாகிற ஒரு வனமிருக்கிறதென்று சொன்ன சொல்லைக்கேட்டு, இந்த மூன்று ராஜகுமாரர்களும் வெகுகாலம்வரை அநர்தஜ துக்கங்களாகிற வேட்டைகளாடி மருமரீசிகையாகிற பலரசத்தை எதேஷ்டமாய்ப்புஜித்து திருப்தர்களாய்க் கெர்வமாகிற முயல்கொம்பை சங்கமாகப்பண்ணிக்கொண்டு, நான் இதை இதைச் செய்தேன் இன்னஇன்ன காரியத்தைச் செய்யப்போகிறேனென்று எண்ணுகிறதான கர்த்துருத்துவமாகிற சங்கத்துவானம் பண்ணிக்கொண்டு உச்சாகமாய் வரும்போது, அவிடத்தில் மூன்று நதியைக் கண்டார்கள். அதில் ஒருநதியில் மணல்மாத்திரம் மிச்சமாய்க் கொஞ்சம் ஈரங்காணப்படுவதுபோல, சுழுப்தியவஸ்தையாகிற நதியில் அஞ்ஞானமாகிற மணலும் ஆனந்தமயமாகிற ஈரமுங் காணப்பட்டதால், கெர்ப்பத்தில்கூட இல்லாமலிருக்கிற பிராக்ஞனென்கிற ராஜகுமாரன் அந்த நதியில் வெகுகாலம்வரை ஜலக்கிரீடை செய்துகொண்டு ஸ்நானம்பண்ணி சுகித்துக்கொண்டிருக்கிறன். தைஜஸனென்கிற ராஜகுமாரன் சொப்பனமென்கிற பாறையைக்கண்டு நல்ல நதியென்று நினைத்து, அதில் ஜலக்கிரீடை செய்யவேண்டுமென்ற ஆசையால் கல்லில் முட்டிக்கொள்ளுகிறவன்போல சொப்பனகாலத்திலுண்டாகிற துக்கங்களை அநுபவிக்கிறான். விசுவனென்கிற ராஜகுமாரன் சுவரிலெழுதியிருக்கிற சித்திரம்போலிருக்கிற ஜாக்கிரதவஸ்தையைக்கண்டு சப்த ஸ்பரிச ரூப ரசகந்தங்களாகிற தீர்த்தம் எதேஷ்டமாயிருக்கிறதென்று நிச்சயித்து அந்தப்பொய்யான விஷயத்தை நிஜமென்று நினைத்து துக்கிக்கிறான். இப்படியே இனிமேலுண்டாகப்போகிற அசத்தாகிற ஆகாம்மியபட்டணங்களில் இன்றைக்கே பிரவேசித்து, முன்போலவே வேட்டையாடுகிறதும், நதியில் ஜலக்கிரீடை பண்ணுகிறதும், ஆகாம்மிய பட்டணத்தில் பிரவேசிக்கிறதுமுதலான கதைகளை விசாரமற்ற குழந்தைபோலிருக்கிற மூடர்கள் இந்தச் சங்கதிகளையெல்லாம் நிச்சயமென்று மயங்குவார்களென்றறிக.

## 251 - வது தரங்கம்.

*குரு சுருதியின் அர்த்தத்தை முமுக்ஷுவுக்கே சொல்லுகிறரேதவிர தார்க்கிகனுக்கில்லை:—*

சுருதியையும் அனுபவத்தையும் முக்கியமாய்ச் சொல்லுகிறீரேதவிர யுக்தி வாதத்திற்கு ஒத்துக்கொடுமென்று கேட்டால், அதற்கு நாம் பிரவிர்த்திக்கவில்லை. முமுக்ஷுக்களுக்காகவே சொல்லுகிறேம். [எ - தி] தாகத்தோடே வந்தவனுக்கும் தலையில் தீப்பட்டு வந்தவனுக்கும் ஸ்நானபானுதிகளுக்காக குளம் வெட்டிவைத்திருக்கிறதேதவிர இந்தக்குளம் வெட்டினது பள்ளமுமேறை யனுவென்று கேட்கிற வாயாடிக்காக வெட்டவில்லையென்பதுபோலவறிக. ஐயா, சுருதியானது முமுக்ஷுக்களுக்கு மோக்ஷசுகத்தை அடைவதற்காகவே பிரவர்த்திக்கிறதேயல்லாமல் வாயாடியான தார்க்கிகர்களுக்குச் சொல்லவில்லையென்று சொன்னீர்களே, அதை எனக்கு திருஷ்டாந்தமூலமாய்ச் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறேங் கேள்:—சிவவாக்கியரென்கிற பிராம்மணர் காசிக்குப் போகும்போது மழையோடேகூடிய இராவிருட்டில் வழிதெரியாமல் தட்டுக்கெட்டுப்போய் திருவள்ளுவர்சத்திரத்திற் போய்ச்சேர்ந்து, சத்துமாமோர் வாங்கிச்சாப்பிட்டுப் படுத்திருந்து, காலமே அதிலிருக்கிற பிராமணனை இது யாருடையதென்று கேட்டவுடன், அவர் திருவள்ளுவருடையதென்று சொன்னதைக்கேட்டு அழும்போது, வள்ளுவர் வந்து இந்த வளையையும் வஸ்திரத்தையும் கெங்கையினிடத்திற் கொண்டுபோய்க் கொடுத்துவிட்டால் இங்கே வசித்ததோஷம் போகுமென்று சொன்னதைக்கேட்டவுடன், அவர் அதை வாங்கிக்கொண்டு காசிக்குப்போய் கெங்கையில் ஸ்நானஞ்செய்து இதைக் கையிலெடுத்துக்கொண்டு கெங்கையைக் கூப்பிட்டவுடன், கெங்கை ஒரு பெண்வடிவமாக வந்து அந்த வளையைக் கையிற்போட்டுக்கொண்டு வஸ்திரத்தை அரையில் கட்டிக்கொண்டு, தான் போட்டிருந்த ரத்னவளையையும் கட்டியிருந்த பீதாம்பரத்தையும் அவிழ்த்துக்கொடுத்துத் திருவள்ளுவருக்கு அனந்தகோடி வந்தனஞ்செய்தேனென்று சொல்லச்சொல்லியபின், இவரும் அதை வாங்கிவரும்போது சில துஷ்டர்களுடைய பேச்சைக்கேட்டு அங்கே ஒரு அரசனிடத்திற் போய் விலைபேசினதில், அவன் தன் ஸ்திரீயினிடத்திலிருக்கிற மோகத்தால் கேட்டவிலையைக் கொடுக்கிறேனென்று சொல்லி வாங்கிமனைவியினிடத்திற் கொடுத்ததும், அவளும் சீலையையும் வளையையுந் தரித்துக்கொண்டு அந்தப்புரத்திலிருக்குஞ்சமயத்தில், சகிகள் வந்து ஒற்றக்கையில் ரத்னவளையைப் போட்டுக்கொண்டு மற்றொரு கை சும்மா இருப்பது நன்றுயிருக்கவில்லை, சேலைக்கும் மற்றொரு ஜோடிச்சேலை வேண்டுமென்று சொன்னதைக்கேட்ட அவளும், ராஜாவிடத்திற் சொல்லி இவைகளுக்கு ஜோடியும் வாங்கிக்கொடாமற்போனல் நாண்டுகொள்வேனென்று சொன்னதும், அவன் அப்

பிராமணனை இவைகளுடைய ஜோடிகளெங்கேயென்று கேட்டவுடன், இல்லை யென்று சொன்னதற்கு ராஜன் சேவுகர்களைவிட்டு ஜோடியிருக்கிறவிடம் சொல் லும்வரை தலைகீழாய்க்கட்டி யுரிக்கும்படி உத்தரவு கொடுத்தபடி, அந்தச்சேவு கர்களும் அப்படியே கட்டிவைத்து உதைக்கும்போது, இந்தப் பிராமணன் அடிபொறுக்கமாட்டாமல் மனசினாலேயே "அடாடா! நாம் அந்தத் திருவள்ளு வரிடத்தில் முதலில் வசித்ததற்காக பாபம் வந்ததாக நினைத்ததும் தப்பிதம், அவருக்காகக் கெங்காதேவி கொடுத்த ரத்னசூடாமணியையும் பீதாம்பரத்தை யும் அவரிடத்திற் கொண்டுபோய்க் கொடாமல் இந்த ராஜாவினிடத்தில் துஷ் டர்களுடைய போதனையால் விலைக்குக்கொண்டுவந்து கொடுத்ததும் பெரிய தப்பிதம்; ஆகையால் அந்தத் திருவள்ளுவரையே சரணமாய்ப் போயடைந் தால்தான் நம்முடைய உயிர் தப்பும், அப்படி இல்லாமற்போனால் பிழைப்ப தற்கு வேறே மார்க்கமில்லை" என்று நிச்சயித்து, அந்தச்சேவுகர்களைப் பார்த்து நீங்கள் அடியாதேயுங்கள் நான் அவைகளிருக்கிற இடத்தைச் சொல்லுகிறே னென்று சொன்னதும், அவர்கள் அந்த ராஜாவினிடத்திற் கொண்டுபோய் இவனைவிட்டு இவனிதற்கு ஜோடியான ரத்னவளையும் பீதாம்பரமுமிருக்கிற விடத்தைக் காண்பிக்கிறேனென்று சொன்னதைக்கேட்ட அவ்வரசனும், இவனுக்குக் கால் கைகளில் விலங்குபோடச்சொல்லி, தன் மந்திரியையும் இன்னுஞ் சிலசேவுகர்களையும் அனுப்பிவைத்து வாங்கிவரச்சொன்னவுடன், இந்தப்பிராமணன் இவர்களைக் கூட்டிக்கொண்டு திருவள்ளுவருடைய வீட் டுக்குக் கூட்டிப்போய், அவர்காலில் சாஷ்டாங்கமாய் நமஸ்காரம்பண்ணி அழுதுகொண்டு எழுந்திருக்கமாட்டேனென்று சொல்லுகிற பிராம்மணனைப் பார்த்து, திருவள்ளுவர் கருணாசமுத்திரமானதால் எழுந்திருந்து இவரைத் தூக்கிவிட்டு பயப்படாதேயும் உம்மைக் காப்பாற்றுகிறேனென்று அபயப் பிரதானஞ்செய்து நடந்த சங்கதியைக் கேட்டவுடன், இப்பிராமணன் நீர் கொடுத்த வளையையும் வஸ்திரத்தையுங் கெங்கையைக்கூப்பிட்டுக் கொடுத் தேன். அவள் பெண்வடிவமாக வந்து வளையை வாங்கிக் கையிற்போட்டுக் கொண்டு ரத்னவளையையுங் கொடுத்து, வஸ்திரத்தையுங் கட்டிக்கொண்டு பீதாம்பரத்தையுங் கொடுத்து, இவ்விரண்டையுந் திருவள்ளுவரிடத்தில் தான் பெற்றுக்கொண்டதற்கு அடையாளமாகக் கொடுக்கச்சொன்னதை நான் துர்புத்தியால் ராஜாவினிடத்தில் விலைக்குக்கொண்டுபோய்க் கொடுத்ததில், இதற்கு ஜோடி கொண்டுவரவேண்டுமென்று இம்சித்ததைப் பொறுக்கமுடி யாமல் உம்மைச் சரணமாக வந்தடைந்தேனென்று சொன்னதைக்கேட்ட திருவள்ளுவரும், உடனே ஒரு பானையில் தன்மனைவியை ஜலங்கொண்டுவரச் சொல்லி கையில் வளையையும் சேலையையும் வைத்துக்கொண்டு, ஹே! கெங்கா தேவி! நீ எழுந்திருந்து வந்து இந்த வளையையுஞ் சேலையையும் பெற்றுக் கொள்ளென்று சொன்னவுடன், கெங்காதேவி வந்து வாங்கி அந்த வளையை வாங்கிக் கையிற் போட்டுக்கொண்டு சேலையையும் கட்டிக்கொண்டு, ரத்னவளை

யையும் பீதாம்பரத்தையும் கழற்றியும் அவிழ்த்துக்கொடுத்ததை வாங்கி, அந்த மந்திரிகையிற் கொடுத்து இவரை விலங்கைவிட்டுவிலக்கி தத்துவஞானத்தை உபதேசஞ்செய்து, இவரும் ஞானமடைந்தபின், இனி நான எந்த அறத்திலிருக்கிறதென்று கேட்டதற்கு, தன் மனைவியைப்போலப் பழயது சுடுகிறது வீசென்று சொன்னபடி அவள் வீசி ஆவிவந்ததைக் காண்பித்து, இப்படி மனைவி கிடைத்தால் இல்லறமே நல்லறமென்று சொல்லி, மணலைக் கட்டிக் கொடுத்து, இதை எவள் ஆக்ஷேபிக்காமல் வாங்கிச் சமைக்கிறுளோ அவளே உன்மனைவியென்று சொல்லி அனுப்பித்தபடி, இவரும் அநேக ஜாதிகளில் தேடியும் இவரிஷ்டப்படி பெண்ணகப்படாமல் பளிங்கஜாதியில் பக்குவமான ஒரு பெண்ணைப்பார்த்து இதை நீ பக்குவம்பண்ணென்று சொன்னபடி, அவளும் அந்த மணலை ஆக்ஷேபியாமல் வாங்கி அன்னமாகப் பக்குவம்பண்ணிய பின், அவளை மணஞ்செய்து அவளுடனிருந்து வரும்போது, ஒருநாள் மூங்கில் வெட்ட மலைக்குப்போய் வெட்டினதில், மோஹருவைக் கண்டு ஆட்கொல்லி யென்று ஓடிவரும்போது, மற்றவர்கள் அந்த மோஹருக்களை யெடுத்து பத்துப் பாகஞ்செய்து மிஞ்சின ஒரு மோஹருவை மாற்றி சமயல்பண்ணும்போது, ஒருவன் நஞ்சைப்போட்டு ஒன்பது பேரையுங் கொன்று பணங்களைக் கட்டும் போது, கள்ளர்கள் வந்து அவனையும் வெட்டி பணத்தையும் பறித்துக்கொண்டு போன கதையை அறியத்தக்கது.

## 252 - வது தரங்கம்.

*பிரம்மம் ஈசன் ஜீவர்கள் ஜெகத்துக்களின் தன்மை:—*

*பிரம்மமட்டும் தானுயிருப்பதால் நான் பிரம்மமென்று நினைத்தமாத்திரத்திலுடனே விளங்கும். [எ - தி] ஸ்திரீயை நினைத்தமாத்திரத்தில் லேபன முண்டாவதுபோலவறிக. அந்தப்புரத்திலிருக்கிற ராஜபேட்டிபோல ஈஸ்வரன் பரோக்ஷமானதால் வெகுகாலம் பிரார்த்தித்துக் கூப்பிட்டால் வருவரென்றறிக. ஜீவர்கள் பலரூபர்களானதால் தாசியைப்போல அவர்களுக்குப் பிரயோஜனமிருந்தால் கூப்பிடாமல் தானே வருவார்கள், அதில்லாவிட்டால் கெஞ்சினுலும் வாரார்களென்றறிக. ஜகத்து ஜடமானதால் எவ்வளவு பிரயாசைப்பட்டாலும் செத்தவன்சுண்ணி எழும்பாததுபோல அறிவோடேகூடி வாராதென்றறிக. வேதஞ்சொன்னபடி ஜீவர்கள் நடக்கிறுர்கள். [எ - தி] ராஜநீதிசாஸ்திரத்தைப் பார்த்து ஜனங்கள் நடப்பதுபோலவறிக. ஐயா, பிரம்மம்மட்டும் நினைத்தமாத்திரத்தில் வருமென்றும், மற்ற ஈஸ்வரன் வருந்திக்கூப்பிட்டால் வந்து மாயிகபலன்களுக்குள்ளே இவன்எதைக் கேட்கிறுனே அதைக் கொடுப்பரென்றும், ஜீவர்கள் தங்களுக்குப் பிரயோஜனமிருந்தால்தான் வருவார்களென்பதையும், ஜகத்து ஜடமானதால் அதனிடத்தில் ஒருவிதமான அறிவுமில்லையென்பதையும் சுருதி*

யுக்தி அனுபவமூலமாய் அறிவிக்கவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ் சொல்லுகிறோங் கேள். முதலாவது பிரம்மத்தைக்குறித்துச் சொல்லுகிறோம். அதற்குச் சுருதியாவது:—பிரம்மத்தைக்குறித்து மனதினாலே நாமார்? நமக்கென்னலக்ஷணம்? பிரம்மமென்பது எது? அதற்கென்ன லக்ஷணமென்று ஆலோசித்து, பிரம்மமென்ற சப்தத்திற்குப் பூர்ணம் அர்த்தம். சத்துச்சித்தானந்தமே லக்ஷணம். நாமென்பது சரீரத்திரயவிலக்ஷண அவஸ்தாத்திரய சாக்ஷியேயாம். நமக்கென்ன லக்ஷணமென்றால், காலத்திரயத்திலும் அழியாமலிருப்பதால் சத்தாயும், பாகியாந்தரப்பிரபஞ்சத்தை யறிவதால் சித்தாயும், சகல வஸ்துக்களிலும் தானே அதிப்பிரியமானதால் ஆனந்தமென்றும், பிரம்மத்திற்கும் நமக்கும் லக்ஷணமொன்றாயிருப்பதால், நாம் பிரம்மமென்று நினைத்தமாத்திரத்தில் சகல துன்பங்களும் போய் அழிவற்ற ஆனந்தமுண்டாவதால் பிரம்மமே மங்களமென்றும், இப்படிச் சகல ஆபத்துக்களுமில்லாததாயும் புத்திப்பார்வைக்கு எட்டக்கூடியதாயுமிருக்கிற பிரம்மத்தை நினைப்பதில் எவன் மோகத்தாலெத்தனிக்கவில்லையோ, அவன் மனுஷர்களுக்குள் எறிந்துபோடப்பட்டவன். சீசீ யென்று சொல்லப்படுவன் என்பதே சுருதி. தன் கையிலிருக்கிற மோதிரத்தைத் தான் பார்த்துக்கொள்ளுகிறதற்கு யாதொரு எத்தனமில்லாததே யுக்தி. ஞானிகள் சதாகாலமும் யாதொரு சூரியாதி பிரகாசங்களையும் யாதொரு தேசகாலவஸ்துக்களுடையவும் அபேக்ஷையில்லாமல் சதா பிரம்மானந்த பரிதர்களாயிருக்கிறதே அனுபவமாம். இனி கற்பகமரம் தீ நீர் மூன்றும் அடைந்தவர்களுடைய வறுமையையும் குளிரையும் தாகத்தையும் போக்கும், அடையாதவர்களுக்கு அவைகளைப் போக்காததுபோல, ஈஸ்வரனும் பிரார்த்தித்தவருக்கு அருளுவார், பிரார்த்தியாதவருக்கு அருளாரென்று சொல்லியதே சுருதி. கஜேந்திரன் முதலைவாயிலகப்பட்டுக்கொண்டபோது ஆதிமூலமென்று கூப்பிட்டபின் வந்து ரக்ஷித்ததே யுக்தி. இப்பவும் சாமிக்குப் பூசைபோட்டுக்கூப்பிட்டபின் வந்து ஆடி வரங்கொடுப்பதே அனுபவமாம். இனி ஜீவர்களை ஏத்து தண்ணீரை மொள்ளும்போது வணங்குவதும், தண்ணீர் எடுத்தபின் உயரே கிளம்புவதும் சரியாயிருப்பதால், ஜீவர்களுக்கு ஏத்துமரம் சகோதரமென்று சொல்லுவதே சுருதி யுக்தி அனுபவமாம். ஜகத்தை ஜடமென்று சொல்லுவதில் கேட்கத்தேவையில்லை.

### 253 - வது தரங்கம்.

*சகல வேதங்களிலும் மகாவாக்கியமே சாரம்:—*

சகல வேதவாக்கியங்களுக்குள்ளே மகாவாக்கியமே சாரம். [எ - தி] அநேக சங்குகளுக்குள்ளே வலம்புரிச்சங்கு சாரமாயிருப்பதுபோலும், அநேக மிருகங்களுக்குள்ளே சிங்கம் சிரேஷ்டமாயிருப்பதுபோலும், மனுஷர்களுக்குள்ளே இராமர் சிரேஷ்டமாயிருப்பதுபோலவறிக. (இ - து) ஐயா, சகல

வாக்கியங்களுக்குள்ளே மகாவாக்கியம் சிரேஷ்டமென்பது எதனாலே? அந்த வாக்கியங்களெதைச் சொல்லுகின்றன? அந்த அர்த்தத்தை விசாரியாதவனுக்கு என்னகெடுதி? விசாரித்தவனுக்கு என்ன நன்மையுண்டாகும்? அதெப்படி விசாரிக்கிறது? இந்த ஐந்து சங்கைக்கும் சமாதானஞ் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகிலதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறோம் கேள்:— மகாவாக்கியத்திற்கு மகிமை எதனாலென்றால்— மகத்தான பிரம்மத்தைப் பிரதிபாதிப்பதாலும், மகத்தான ஆனந்தத்தைக் கொடுப்பதாலும், அதை விசாரித்தவர்களுக்கு மகத்தான பதவியைக் கொடுப்பதாலும், வேதமுடிவில் சொல்லப்பட்டிருப்பதினாலும், மகான்களான ஞானிகளுடைய அனுபவத்தைக் காண்பிப்பதாலும், ஒரு வாக்கியங்களாலும் கண்டிக்கப்படாத அகண்டமானதாலும், ரகசியத்துக்கெல்லாம் அதிரகசியமாயிருப்பதாலும், அதற்கு இவ்வளவு மகிமை சொல்லப்படுகிறது. இரண்டாவது அந்த வாக்கியங்கள் எதைச் சொல்லுகிறதென்றால்— முதலாவது வாக்கியம் பிரக்ஞானம் பிரம்மமென்று இரண்டுபதமாம். அதில், எந்த அறிவினால் புருஷன் சப்தாதி பஞ்சவிஷயங்களையுமறிகிறானோ, வசனாதி ஐந்துதொழில்களையும் தெரிந்து செய்கிறானோ, அந்த அறிவே பிரக்ஞானமெனப்படும். பிரம்மா, இந்திராதிதேவதைகள், மனுஷர்கள், மாடு, குதிரைமுதலான சகல ஜீவர்களிடத்திலுமிருக்கிற அறிவே அத்வைதப்பிரம்மம். ஆகையால் நம்மிடத்திலுமிருக்கிற அறிவு பிரம்மமென்று பிரம்மமென்ற பதஞ் சொல்லும். இரண்டாவது வாக்கியமானது — நான் பிரம்மம் அஸ்மியென்று மூன்று பதமாம். அதில் நானென்பது பரிபூரணப் பரமாத்மா. ஞானாதிகாரமான இந்த மனுஷதேகத்தில் புத்திக்குச் சாக்ஷியாயிருந்துகொண்டு யாதொருத்தர் விளங்குகிறாரோ அவரே நானென்று சொல்லப்படுகிறார். சொபாவத்தினாலேயே பரிபூரணமான வஸ்து எதுவோ அதுவே இவிடத்தில் பிரம்மமென்று சொல்லப்படும். இந்த நானுக்கும் பிரஹ்மத்துக்கும் அஸ்மியென்றது ஐக்கியம்பண்ணிவைப்பதால், நானே பிரம்மமென்று அறிக. இனி மூன்றாவது வாக்கியமானது தத்துவம் அசி என மூன்றுபதமாம். ஏகமென்பதனால் ஸ்வகதபேதமில்லை, ஏவ என்றதனால் சஜாதிபேதமில்லை, அத்வயமானதால் விஜாதீயமான பேதமில்லை. நாமரூபமற்றதாய் சிருஷ்டிக்குமுன்னும் இப்பவும் இனிமேலும் அப்படிப்பட்ட தன்மையுடையது யாதோ அது தத் எனப்படும். கேட்கிறவனுடைய தேகேந்திரியாதிகளுக்கு அதீதமான யாதொரு அறிவு இருக்கிறதோ அதுவே நீயென்று இந்த இடத்தில் சொல்லப்படும். அசியென்றது இரண்டுக்கும் ஐக்கியத்தைக் காண்பிப்பதால் அந்தப் பிரம்மமே நாமென்று அனுபவிக்கத்தக்கது. நாலாம் வாக்கியம்—அயம் ஆத்மா பிரம்மமென மூன்றும். சொப்பிரகாசமாய் அபரோக்ஷமாயிருப்பதே அயமெனப்படும், அகங்காராதி தேகாந்தத்திற்கும் வேறானதே ஆத்மாவெனப்படும். ஜகத்திற்கு அதிஷ்டானமே பிரம்மமெனப்படும். இப்படி விசாரியாதவர்கள்

துக்கிப்பார்கள், விசாரித்தவர்கள் சுகிப்பார்கள். இதைக் குருமுகமாக ஷட்விதலிங்கதாற்பரியத்தால் விசாரிப்பதே விசாரணையென்று அறியத்தக்கது.

254 - வது தரங்கம்.

சுருதி ஞானிக்கு மூன்று கர்மங்களுமில்லையென்று சொல்லுகிறது:—

ஞானிக்குப் பிராரப்தகர்மமுமில்லையென்று சொல்லியிருப்பதற்கு யுக்தி:— வஸ்திரத்தில் சித்திரங்கள் எழுதியிருந்ததை பின் அதைத் தீயிலெரித்தபிற்பாடு சில சித்திரங்கள்மட்டுமிருக்குமென்கிறது ஞாயமில்லாததுபோல, ஜீவத்துவமாகிய சித்திரவஸ்திரத்தில் திரிவிதகரணங்களாகிற மையால் திரிவிதகர்மங்களாகிற சித்திரங்கள் எழுதியிருப்பதைப்பார்த்து சித்தனாகிய பாலன் அதில் மயங்கிக்கிடக்கும்போது, குருவாகிய வாத்தியாரை பிரம்மவிசாரமாகிற பள்ளிக்கூடத்தைக் கொண்டுகொண்டுவரும்படி ஈஸ்வரனாகிற பிதா அழைப்பிக்க, அவனும் பள்ளிக்கூடசகிதமாய் வந்து, அந்தப் பள்ளிக்கூடத்திலிவனை வைத்து என்ன உபதேசித்தாலும் உள்ளிலேறாமலிருப்பதற்குக் காரணமான அந்த ஜீவத்துவ சித்திரவஸ்திரத்தைப்பிடுங்கி ஞானாக்கினியிலெரித்தபிறகு, ஜீவத்துவமான வஸ்திரம் போனபிறகு தண்டாயூபரியாயம்போல பிராரப்தகர்மமாகிற சித்திரம் மிச்சமிராதென்றறிக. ஐயா, முந்திச்சொல்லும்போது ஞானிக்கு ஞானாக்கினியால் சஞ்சிதகர்ம மெரிந்துபோமென்றும், அகர்த்துருத்துவபுத்தியால் ஆகாமியகர்மமொட்டாதென்றும், பிராரப்தகர்மமானது ஞானம் வருகிறதற்குமுந்தியே ஆரம்பிக்கப்பட்டதால் அது புஜித்தே தொலைக்கவேண்டுமென்று முந்திச்சொல்லி, இப்போது ஞானிக்குப் பிராரப்தகர்மமில்லையென்று சொல்லுவது முன்னுக்குப்பின் விரோதமாயிருக்கிறதே யென்று கேட்பாயாகில், அதற்கு விரோதமன்னியில் நான் சமாதானஞ்சொல்லுகிறேன் கேள்:— வாராய் குழந்தாய்! ஞானிக்குச் சுயதிருஷ்டியென்றும் பரதிருஷ்டியென்றும் பரமார்த்தமென்றும் விவகாரமென்றுமிப்படி பலதரம் உனக்கு நாம் சொல்லியிருக்கவும் நீ யதை அறியாமல் திரும்ப இப்படிச் சங்கித்தாய். ஆனால் இவிடத்தில் ஞானிக்குப் பிராரப்தமில்லையென்று சொன்னதற்கு அர்த்தமென்னவென்றால்,— பரமார்த்தத்தில் ஞானி பிரம்மமாயிருப்பதால் பிரம்மத்துக்கு ஏதேனுமொரு கர்மமுண்டாயிருக்கும்பக்ஷத்தில் ஞானிக்குமொரு கர்மமுண்டென்று சொல்லலாம், பிரம்மத்துக்கு யாதொரு கர்மமுமில்லாமையால் ஞானிக்குமொருகர்மமுமில்லை. விவகாரதிருஷ்டியிலேயோவென்றால் பிரம்மவித்தென்றும், வரனென்றும், வரியானென்றும், வரிஷ்டனென்றும், ஞானிகள் நாலுவிதமாயிருப்பார்கள். இவர்களில் வரிஷ்டனென்பவன் நிருவிகற்பசமாதியினுடைய திடத்தினால் அவனுடைய சித்தமானது ஜலத்திற்போட்ட உப்பானது வெகுநாழிகை கழித்தபின் ஜலத்திற் கரைந்துபோவதுபோலும், பாலில்விட்ட ஜலமானது தீயில் காயவைக்கக் காயவைக்க

பாவில் லயிப்பதுபோலும், பிரஹ்மத்தில் லயித்துப்போனதால் வரிஷ்டனுக்குப் பிராரப்தமென்ற பேச்சேயில்லை. வரியானென்பவன் நிருவிகற்பசமாதியில் சுத்தத்திரிபுடியுமிழந்தவனாய் யாதொரு நினைப்புமறைப்புமற்றவனாய் அன்னியர்கள் வந்து வெகுநாழிகை பிரயத்தனஞ்செய்வதால் விழித்துக்கொண்டு க்ஷண காலத்திற்குள் திரும்பச் சமாதிக்குப்போய்ச் சுகிக்கிற மனசுக்கு எழுந்திருந்து போகம் புஜித்த பிரக்ஞையேயிராது. [எ - தி] மத்தியானமுழுதும் அலைந்துதிரிந்து ராத்திரி வீட்டில்வந்து காடநித்திரை செய்கிற பிள்ளையைதாயானவள் சோற்றைப் பிசைந்து பிள்ளையை யடித்து வாயில் ஒரு பிடியைப் போடுமுன் தூங்கிப்போவதைக்கண்ட தாய் பிடிக்குப்பிடி உதைத்துச் சோறை ஊட்டினாலும், அந்தப்பிள்ளைக்குச் சாப்பிட்டோமென்ற ஞானமில்லாததுபோல, வரியானுக்கும் போகஞானமில்லாததால் பிராரப்தமில்லை. வரனுக்கும் சமாதியிலேயே அழுத்தமாய் காமியமான சோரஸ்திரீக்குக் குடும்பவிவகாரத்தில் அழுத்தமில்லாததுபோலிருப்பதால் வரனுக்கும் பிராரப்தமில்லை. பிரம்மவித்துவுக்கும் அடிக்கடி நாடகம்போலப் பொய்யென்று தோற்றுவதாலிவனுக்குமில்லை.

## 255 - வது தரங்கம்.

சுருதி சகலத்தையுந் தள்ளச்சொல்லி குருவைமட்டும் விதேகமுத்தி வரைக்கும் கிரகிக்கச்சொல்லியதின் கருத்து:—

ஆத்மாவைத்தவிர மற்றதெல்லாம் பொய்யென்று தள்ளச்சொன்ன வேதம் சற்குருவைமட்டுக்கும் விதேகமுத்திவரை விடக்கூடாதென்று சொன்னது பக்ஷபாதமாயிருக்கிறதேயெனில், மண்ணிலுண்டான கடகுட்டியாதிகள் முழுமையும் சுத்தஜடமானாலும் அதில் தெளிவான கண்ணாடிமட்டும் தன் முகத்தின் எதார்த்தமாயுள்ள லக்ஷணத்தை உள்ளபடி காண்பிக்கிறதுந்தவிர அப்படி ஒருதரம் பார்த்தவனுக்கும் மறுபடி மறுபடி கண்ணாடியைப்பார்க்க ஆசை தெவிட்டாமல் வருவதுபோல, அப்படிக் குருநாதனாகிற கண்ணாடியும் கற்பிதமாயிருந்தாலும் தன் எதார்த்தவடிவமான சச்சிதானந்த சுபாவத்தைத் தெரியாத பேர்களுக்கு உள்ளபடி உணர்த்திவைப்பதுந்தவிர, இப்படிக் கண்டபேர்களுக்கும் மேல்மேலும் தன் ஆனந்தத்தை விருத்திபண்ணி ஜீவன் முக்திசுகத்தைக் கொடுப்பதால், முமுக்ஷுவாகிய தன் முகம் பாராதவனும் முக்தனாகிய தன் முகம் பார்த்தவனும் ஞானத்திற்காகவும் சுகோதயத்திற்காகவும் விதேகமுக்திவரை குருவைப் பாராமல் எப்படி விட்டுப்பிரிந்திருப்பன்? ஆகையால் வேதம் உள்ளபடியே சொன்னதேதவிர பக்ஷபாதமாய்ச் சொல்லவில்லை யென்றறிக. ஆனால் முமுக்ஷுக்களுக்குத்தான் தன் ஸ்வரூபஞானமுண்டாவதற்காக அவசியம் குரு வேண்டுமென்று சொன்னது சரி. முக்தனுக்குக் குரு வேண்டுமென்று சொன்னதற்கு பிரயோசனமென்ன வென்றால், ஏழைவீட்டுப் பெண்ணுக்கு அன்னபானாதி ஆடை ஆபரணங்கள் வரை கொடுப்பதற்கும் போகத்திற்கும் நாயகன் வேண்டுவதுபோலும், சகல சம்பத்துக்களுடன் கூடிய ராஜகன்னிகைக்கும் போகசுகத்திற்காக நாயகன்

வேண்டுவதுபோனும்; பக்குவமான கன்னிகைக்கு போகம் புத்திரோற்பத்திகளுக்காக நாயகனுடன் சேருவதும், புத்திரவதியும் தன் யோனியாகிற சித்தம் சுகித்துக்கொண்டேயிருக்கிறதற்கும் நாயகனுடன் சேர்ந்து வாழுவது போனுமறிக. (இ - து) ஐயா, ஜீவேஸ்வர ஜகத்துக்களென்ற நாமரூபாத்மகமான சகலமும் பொய்யென்று தள்ளும்படி வேதஞ்சொல்லி குருவைமட்டும் விதேகமுக்திவரை மறவாமலிருக்கவேண்டுமென்று சுருதி சொல்வதால், குருநாதன் அநர்த்தஜடதுக்கமான திரிபதார்த்தங்களுக்குள் சேர்ந்தவரா அல்லது அதற்கு அப்புறப்பட்ட சச்சிதானந்தப் பிரஹ்மமா? அவரைப் பிரஹ்மமென்று சொன்னல், அந்தக் குருநாதனென்பது பிரஹ்மம் நானென்று சாக்ஷாத்காரமாக அறிந்திருக்கிற மனதே ஞானியென்றும் குருநாதனென்றுஞ் சொல்லவேண்டியதாயிருக்கிறது. அப்படிப்பட்ட மனதை அழிவற்ற பிரஹ்மமென்று சொல்வதற்கு ஞாயமில்லையே. ஆனல் மற்ற மனசுகளுக்குள்ளே ஞானியின் மனசும் சேர்ந்ததென்று சொல்லுவோமென்றால், தாங்களே மற்றவைகளைப் போல ஞானியின்மனதைப் பொய்யென்று தள்ளக்கூடாதென்று சொல்லுகிறீர்களே. இதற்கு நான் என்ன செய்வேன், தாங்களே சமாதானஞ் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:— வாராய் குழந்தாய்! நீ சங்கித்தபிரகாரம் பிரஹ்மம் ஜகத்து இரண்டுக்குள் ஞானியினுடைய மனசானது பிரஹ்மலக்ஷணமாயும் ஜகத்லக்ஷணமாயுஞ் சொல்லக்கூடாது. அது எப்படியிருக்கிறதோ அப்படியே அதற்கு லக்ஷணமென்று சுருதி யுக்தி அனுபவத்தினல் சொல்லப்படுகிறது. இதில் யுக்தியாவது—சந்திர சந்திரிகைபோலவாம். ஞானியினுடைய மனசு அழிந்துபோவதால் சத்தென்றுசொல்லக்கூடாது. சன்மாத்திரத்தை விடாதிருப்பதால் அசத்தென்றுஞ் சொல்லக்கூடாது. ஆத்மாவைப்போல நித்திய நிருபாதிக நிரதிசயமில்லாததால் அதை ஆனந்தமென்று சொல்லக்கூடாது. ஆநந்தாகாரமாகவே யிருப்பதால் நிராநந்தமென்றுஞ் சொல்லக்கூடாது. ஆத்மாவினலேயே அறியப்படுவதால் அறிவென்று சொல்லக்கூடாது. அறிவைவிட்டுப்பிரியாமல் அறிவுமாத்திரமான பிரக்ஞையோடே கூடியிருப்பதால் ஜடமென்று சொல்லக்கூடாதென்று சொல்லியிருக்கிற சுருதியே அனுபவமென்றறிக.

## 256 - வது தரங்கம்.

வேதாந்தவிசாரம் நாலுபேருக்கும் உதவிः—

வேதாந்தசிரவணம் பண்ணப்போவது ஞானத்திற்கும், தூக்கத்திற்கும், மனோராச்சியத்திற்கும், சோம்பலுக்கும் சாதனமாம். (எ - தி) கஞ்சாலேகியம் சித்தேகாக்கிரமான சமாதிக்கும் ஸ்திரீபோகத்திற்கும் பிரவிர்த்திக்கும் வீண்பேச்சுக்கும் சாதனமாவது போலவறிக. ஐயா, வேதாந்தவிசாரம் பண்ணுவது தத்துவஞானத்திற்கும் நித்திரைக்கும் மனோராச்சியத்திற்கும் சோம்பலுக்கும் சாதகமென்று சொன்னீர்களே, அதெப்படிச் சொல்லலாம்? வேதாந்தவிசாரத்தினலேயே அநாதிகாலமாய் வந்திருக்கிற அஞ்ஞானத்தை

யும், அதின்காரியமான ஆத்மானாத்மாக்களை பேதந்தெரியாமற் பண்ணுகிற ஆவரணசக்தியையும், கர்த்துருத்துவரூபமான ஜீவத்துவத்தையும், சஞ்சித காமியமான கர்மங்களையும், தாரேஷணை வித்தேஷணை புத்திரேஷணைமுதலான ஆசைகளையும், தேகவாசனை லோகவாசனை சாஸ்திரவாசனைமுதலான வாசனைகளையும் போக்கி; பிரஹ்மஞானத்தையும், தத்துவதெரிசனத்தையும், அகர்த்துருத்துவபுத்தியையும், நைஷ்கர்மசித்தியையும், நிராசையையும், தேகாதி ஜகத்துப் பொய்யென்ற சுத்தவாசனையையும் உண்டுபண்ணுவதால், இப்படிப்பட்ட வேதாந்தவிசாரத்தை தூக்கத்திற்கும் மனோராச்சியத்திற்கும் சோம்பலுக்கும் சாதனமென்று எப்படிச்சொல்லலாமென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறோங் கேள்:—வாராய் குழந்தாய்! நீ சொன்னபடி வேதாந்தவிசாரம் சர்வசிலாக்கியமென்பதில் யாதொரு ஆக்ஷேபணையுமில்லை. அது அதிதீவிரதரபக்குவியான முமுக்ஷுவுக்கு உடனே தத்துவஞானத்தைக் கொடுக்கும். அப்படிப் பக்குவமில்லாமல் அபக்குவிகளுக்கு இந்தவிசாரமானது மேலேசொல்லிய அனந்த தோஷத்தை யுண்டுபண்ணும். (எ - தி) பால் சர்வசிலாக்கியமாயிருந்தாலும் அதைப் பிரம்மநிஷ்டர்களுக்கும் யோகிகளுக்கும் கொடுத்தால் பிரம்மநிஷ்டையையும் யோகத்தையும் விருத்திபண்ணும். ஸ்திரீகாமிக்குக் கொடுத்தால் காமவிகாரத்தையும் லேபனத்தையும் விருத்திபண்ணி யோனியாகிற அளர்க்கேணியில் தள்ளும். அந்தப்பாலையே பாம்புக்குக் கொடுத்தால் விஷத்தைக் கொடுக்கும். இப்படியே அன்னமும் சத்துக்களுக்குக் கொடுத்தால் ஞானத்தை விருத்திபண்ணிவைக்கும், அசத்துக்களுக்குக் கொடுத்தால் காமக்குரோதாதிகளையும் அடிதடிமுதலான அனர்த்தங்களையுங் கொடுக்கும். இப்படியே ஜலத்தைத் தென்னமரமுதலான புண்ணியவிருக்ஷங்களுக்கு விட்டால் தேங்காய்முதலான சத்பலத்தைக் கொடுக்கும், காஞ்சிரை சப்பாத்துக்கள்ளிமுதலானவைகளுக்கு அந்த ஜலத்தைவிட்டால் விஷத்தையும் முள்ளுக்களையும் கொடுத்து ஜனங்களைத் தாபப்படுத்தும். திரவியமானது சத்துக்களிடத்திற் போய்ச்சேர்ந்தால் தர்மார்த்த காம மோக்ஷங்கள் நாலையும் எல்லோருக்கும் கொடுக்கும், அசத்துக்களுக்கு அந்தத்திரவியம் வந்ததானால் பரஸ்திரீகமனத்திற்கும், தப்புப்பத்திரங்கள் செய்வதற்கும், கொலைமுதலான இம்சைகளை ஜனங்களுக்குக் கொடுப்பதற்கும், இன்னும் அநேக பாபங்களுண்டாவதற்குங் காரணமாவதுபோலும். ஈஸ்வரனாற் கொடுக்கப்பட்ட தனுகரண புவனபோகங்கள் விவேகியான ஜீவர்களிடத்திற் சேர்ந்ததானால் சற்கிரியைகளையும், சத்சாஸ்திரங்களையும், சத்வசனங்களையும், சத்விஷயமான நினைப்புகளையும் கொடுப்பதும், மற்றவர்களுக்கு அவைகள் எதிர்மறையைக் கொடுப்பதையும் அறிந்துகொள்ளத்தக்கது.

## 257 - வது தரங்கம்.

அஷ்டவித அத்தியாச நிரூபணம்:—

1. தேகம் நானென்ற மித்தியாத்தியாச துக்கம்—தீயின் சம்மந்தத்தால் ஜலத்துக்கு வந்த உஷ்ணம்போலும். 2. இந்திரியங்களை நானென்ற இதராத்தியாசதுக்கம்—சத்திரத்திலுள்ள ஜனங்களைத் தன் ஜனங்களென்று நினைத்துத் துக்கப்படுவதுபோலும். 3. அந்தக்கரணத்தையும் அதன் தர்மங்களையும் தன்பேரிலும், தன்னுடைய சச்சிதானந்தத்தை அதின் பேரில் பண்ணுகிறது அன்னியோன்னியாத்தியாசம்—ரயிலும் மரமும் மாறித் தோற்றுவதுபோலும். 4. சுழுப்தியில் அஞ்ஞானமும் ஆனந்தமும் ஒன்றாய்த் தோற்றுகிற சத்தியாத்தியாசம்—இருட்டில் வஸ்திரத்தோடே சேர்த்து ஸ்திரீயை ஆலிங்கனம்பண்ணுவதுபோலும். 5. தூஷ்ணீம்பூதாவஸ்தையில் சாமான்னியமாய்த் தோற்றுகிற நிருபாதிகாத்தியாசம்—ஆகாசத்தில் நீலாதி நிறம் தோற்றுவதுபோலும். 6. அந்தக்கரணதர்மமான கர்த்துருத்துவாதிகள் தன்பேரில் தோற்றுவதான சோபாதிகாத்தியாசம்—ஸ்படிகத்தில் சிகப்புமுதலான நிறங்கள் தோற்றுவதுபோலும். 7. ஜீவனிடத்தில் மனதின் ராகாதி விருத்திகளுடைய ஓட்டந் தோற்றுகிறது தத்தர்மாத்தியாசம்—ஜலப்பிரவாகத்தில் சூரியப்பிரதிவிம்பம் ஓடுகிறதுபோலத் தோற்றுவதுபோலும். 8. புத்திர களத்திராதிகளுக்கு வந்த துக்கத்தை தனக்கு வந்ததாக நினைக்கிறது சம்மந்தமாத்திராத்தியாசம்—ரயில்வண்டியில் ஒரு அறைக்குள்ளிருக்கிற ஜனங்கள் நம்ம கூட்டமென்று நினைப்பதுபோலுமிருக்கிற இந்த எட்டு அத்தியாசத்தினலேயே அசங்கனுனதனக்கு ஜென்மாதி சம்சாரதுக்கம் தோற்றுவதால், வாசனையாலிந்த அத்தியாசங்களுக்குள் எதுவருகிறதோ அதைச் சாவதானமாய் திருஷ்டாந்தத்துடன் இதுஇது இன்னஇன்ன அத்தியாசமென்று கண்டு, தான் இந்த எட்டிலும் சம்மந்தமில்லாத அசங்கனென்றே முமுக்ஷுக்கள் பழகவேண்டியதென்றறிக. ஐயா, எட்டுவித அத்தியாசத்தினலேயே பந்தம்வந்திருக்கிறதாகவும்,ஜீவர்களுக்கு இந்த எட்டுவித அத்தியாசங்களும் நிவர்த்தியானல்தான் முக்தி வருமென்றுஞ் சொன்னீர்களே, இந்த அத்தியாசமென்ற சொல்லுக்கு அர்த்தந்தானேது? இந்த அத்தியாசமெப்படி உண்டாச்சுது? இதனல் வருகிறகெடுதியென்ன? இதை யெப்படி நிவர்த்திசெய்கிறதென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறேன் கேள்:— அத்தியாசமென்பது எதுவென்றால், அதுவல்லாத அனத்மாவில் அதுவென்று பார்ப்பதே அத்தியாசமென்று பூஜ்யசங்கர பகவத்பாதாசாரியரவர்கள் பாஷியத்தில் அருளிச்செய்திருப்பதே அதனுடைய சொரூபமென்றறிக. இந்த அத்தியாசமெப்படி யுண்டாச்சுதென்றால், சச்சிதானந்த சொரூபியான தன்னை மறந்த அஞ்ஞானத்தினலுண்டாச்சுது. இது என்னகெடுதியைச் செய்யுமென்று கேட்டதற்குச் சமாதானமாவது, ஒருவன் இருட்டிற்போகும்போது படுத்து நித்திரைசெய்கிற பாம்பை நல்ல கயிறென்று எடுத்து மேலேபோட்டுக்கொண்டவன் அந்தப்பாம்பால் கடிபட்டுச்சாவதுபோல, இந்தத் தேகாதிகளை நானென்றபிமானித்த புருஷர்கள் ஓயாத ஜனனமரண சம்சாரதுக்கங்களை யடைந்து தபித்துக்கொண்டு வருகிற

தேயாம். இதென்ன உபாயத்தால் நிவர்த்திசெய்யலாமென்றால், சற்குருகடா க்ஷத்தால் நாமார், சித்தெது, ஜடமெது, பந்தமெது, மோக்ஷமெது, இந்த ஜக த்து எப்படி யுண்டாச்சுது, இந்த ஜகத்து எப்படி நிவர்த்தியாகுமென்று சதா விசாரிப்பதால், இது நிவர்த்தியாகுமென்றறிக.

## 258 - வது தரங்கம்.

*யான் எனதென்ற அத்தியாசத்தை விடத்தக்கது:—*

அகம்விருத்தி இதம்விருத்திகளிலிருக்கிற நான் எனதென்கிற அத்தியா சத்தைத் தவிர்ந்தவனுக்கே பிரம்மசுகங் கிட்டும். [எ - தி] இரவில் வாசற்கதவை யும் கொல்லைக்கதவையும் தாட்பாள் போட்டவனுக்கே சுழுப்திசுகங் கிடைப் பதுபோலவறிக. ஐயா, யான் எனதென்கிற அகம்விருத்தி இதம்விருத்தி இரண்டினாலேயே சகலத்திரர்களுக்கும் பந்தம்வந்திருக்கிறது, அந்த இரண்டு விருத்திகளும் நிவர்த்தியானால்தான் முக்திசுகம் வருமென்று சொன்னீர்களே, அதைச் சுருதி யுக்தி அனுபவமூலமாய்க் காண்பிக்கவேண்டுமென்று கேட்பா யாகில், அதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறோம் கேள்:—வாராய் குழந்தாய்! வசிஷ்டமஹரிஷியினுடைய புத்திரனான சதானந்தரிஷியென்பவர் பாலியத்தில் காட்டுக்கு தெர்ப்பை சமித்துமுதலானவற்றைக் கொண்டுவருகிறதற்காகப் போனவிடத்தில், அசூரியென்ற பச்சிலையை பசியினால் பிடுங்கிச் சாப்பிட்ட மாத்திரத்தில் இவருக்கு ஒரு மயக்கமுண்டாய்ப் பதினெட்டுவருஷம்வரை அப் படி மயங்கிக்கிடக்கும்போது, இவர் சரீரத்தின்பேரில் மண் மலையிலிருந்து மழையினாற் கரைந்து விழுந்து பக்ஷிகள் சாப்பிட்ட நாவல்முதலான விதைகள் அந்த மண்ணில் விழுந்து, அதிலிருந்து மரம் செடிகொடிமுதலானவை முளைத் திருக்கும்போது, அந்தக்காட்டில் ஒருவேடனும் வேடச்சியும் விறகுவெட்டி ஜீவனம் பண்ணிக்கொண்டுவரும்போது, ஒரு தினத்தில் இந்தச்செடிகளை வேரோடே வெட்டும்போது, அந்த மண்வெட்டியானது இவருடைய முதுகிற் பட்டு ரத்தம் குபீரென்று கிளம்பினதும், அந்தவேடனும் வேடச்சியும் அதைப் பார்த்துமிகுந்த பயத்துடன் மெள்ளமெள்ள அந்த மண்ணைக்கெல்லியபின், அந்த ரிஷியினுடைய சரீரத்தைக்கண்டு மெள்ளத்தூக்கி ஜலத்திற்கொண்டு போய்ப் போட்டமாத்திரத்தில், இவருக்கு மயங்கியிருந்த பிரக்ஞையானது வெளியில் வந்தமாத்திரத்தில், பூர்வஸ்திதியெல்லாம் மறந்துபோய் அந்த வேடத்தம்பதிகளை பார்த்து "நான் யார்? இந்த உலகம் யாரையுடையது? நான் செய்யவேண்டிய காரியமென்ன?" என்று கேட்கும்போது, அவர்கள் "நீ வேடன், இப்போது இவ்விடத்திற் காணப்பட்ட இந்த வனங்களெல்லாம் நம்முடையது. நாம் செய்யவேண்டியது வழியில் வருகிறவர்களை அடித்துப் பிடுங்கவேண்டியது. கண்டபக்ஷிகளை இந்த வில்லால் அடித்துக் கொல்லவேண் டியது. மான்முதலானவைகளை வலைவீசிப்பிடித்துக் கட்டிப்போடவேண்டியது. ஒன்றும் அகப்படாவிட்டால் விறகுவெட்டி ஜீவனம் பண்ணவேண்டியது"

என்று சொன்னபடி அவன் நடந்துவரும்போது, அந்த வேடர்கள்குலத்தி லேயே ஒரு பெண்ணை மணஞ்செய்து அவளிடத்தில் 18 பிள்ளையும் பெற்று வாழ்ந்துவரும்போது, திலீபமகாராஜன் வேட்டைக்கு வந்தபோது, இவனு டைய திருட்டுத்தனத்தைக் கண்டுபிடித்துக் கட்டி உதைக்கும்போது, இவ னழுவதைப் பார்த்து, நீ யார்? உன்னுடையது எதுவென்று கேட்டவுடன், இவன் நான் வேடன், இந்தக்குடும்பம் என்னதென்று சொன்னதும், ராஜன் இவனைக் கட்டோடே அயோத்திக்குக் கொண்டுவந்து, தன் குருவான வஸிஷ் டரிடத்தில் இவனைக் காண்பித்தமாத்திரத்தில் வஸிஷ்டர் இவனைப் பார்த்த மாத்திரத்தில் இவன்முகத்தில் விளங்குகிற பிரம்ம தேஜஸைக் கண்டு, நம் முடைய புத்திரனான சதானந்தன் போலிருக்கிறதென்று கட்டை அவிழ்த்து விடச்சொல்லி, அவர் இவனை, நீ யார்? உன்னுடைய சம்மந்தமானது எது வென்று கேட்டதற்கு, அவன் யான் எனதென்ற விபரீதத்தால், நான் வேடன், அந்த வேடர்கள் என்னுடைய பந்துக்களென்று நினைத்திருந்த யான் என தென்கிற அபிமானத்தை மாற்றி, பிரம்மரிஷியான நம்முடைய புத்திரன் நீ யென்று சொன்னபடி, நான் பிரம்மரிஷியென்று அவனறிந்த கதையையறிக.

259 - வது தரங்கம்.

சொப்பனத்திற்கும் மறுஜென்மத்திற்குமுள்ள பேதம்:—

ஜீவர்கள் மறுஜென்மத்தையடைவது சொப்பனம்போலவேயானால், சொப்பனத்திற்கும் மறுஜென்மத்திற்கும் பேதமானதேதென்றால், தன் வீட் டைவிட்டுக் கலியாணத்திற்குப் போகும்போது தன் ஆளைக் காவல்வைத்து விட்டு மறுவீட்டுக்குப்போய்த் திரும்பத் தன்வீட்டுக்கு வருகிறதுபோலவும், தன் வீட்டைவிட்டுக் குடியோடி தேசாந்தரம் போகிறவன் போலுமறிக. (இ-ர்) ஜனனமரணத்திற்கு யுக்தி:—நதியிலேபோகிற பிணம் கிளம்பிக்கிளம்பித் தாழு கிறதுபோலும், சினம் உத்தரணமாய் சுக்கிலம் விழுகிறதுபோலுமறிக. (இ-து) ஆவரணசக்தி யிருக்கிறபரியந்தம் விக்ஷேபசக்திக்கு விருத்தியுண்டு. [எ-தி] தாசி யினிடத்தில் மோகமிருக்கிறவரை தாய்க்கிழவிபேச்சைக் கேட்கிற விடன்போல வறிக. ஐயா, சொப்பனத்திற்கும் மறுஜென்மத்திற்குமுள்ள அனுபவம் சமான மென்று சொன்னீர்களே, அதெப்படிச் சொல்லலாம்? சொப்பனமானது இந் தப்படுக்கையில் படுத்திருக்கிற சரீரத்திற்குள் நானென்றபிமானித்திருக்கிற ஜீவனுடைய பிரக்ஞையானது இவ்விடத்திலேயே இருந்துகொண்டு, இவனு டைய சங்கற்பமட்டும் அநேகவிதமான ஜீவர்களையும் அநேகவிதமான ஜெகத் துக்களையும், அநேகவிதமான ஈஸ்வரர்களையும், அதற்குள் தான் கண்டமா யிருக்கிற ஒரு சரீரமாத்திரமாயும், அதற்கு வரப்பட்ட ஹானிவிருத்திகளையும் மானபிமானங்களையும் சுகதுக்கங்களையும் ராகத்துவேஷங்களையும் யாதொரு ஞாதருஞானஞேயங்களான திரிபுடிகளையுமட்டும் தனக்கென்று நினைத்து, மற்றவைகளெல்லாம் தனக்கன்னியமென்றும், அவைகள் கெட்டாலும் வாழ்ந்

தாலும் தனக்கொரு சுகதுக்கங்களில்லாமலும், ஒருக்ஷணத்திற்குள் அநேக வருஷம் ஆய்விட்டதுபோலும், அந்த வருஷங்களுக்குள்ளே அநேகவிவகாரங்கள் வந்துவந்து போனதுபோலும், இறந்துபோன தகப்பன் முதலானவர்களும் திரும்பி உயிரோடே வந்து நம்மைப்போலே ஜீவித்துக்கொண்டிருந்து சகல விவகாரங்களையும் பண்ணுவதுபோலும், அப்போதே இவர்கள் முன்னமே இறந்துபோனவர்களல்லவா? இப்போது என்னமாய் இவர்கள் உயிரோடே வந்து விவகாரம்பண்ணக்கூடுமென்று தன்னுக்குள்ளே தானே ஆலோசித்து, இப்போது என்னவிதத்தினாலேயோ பிரத்தியக்ஷமாய் வந்துவிட்டதால், இதையென்னமாயில்லையென்று சொல்லக்கூடுமென்று சமாதானம் பண்ணிக்கொண்டு; இப்படியே தான் ஆகாசத்தில் பறப்பதுபோலும் காண்கிறதும், மனுஷன் ஆகாசத்திற் பறப்பானாவென்று சந்தேகித்து, இப்போது நாம் பிரத்தியக்ஷமாய்ப் பறப்பதைப்பார்க்கும்போது இதிலென்ன சந்தேகமிருக்கிறதென்றும்; தான் இறந்துபோய்த் தன்னைப் பாடையில்வைத்து கட்டித்தூக்கிக்கொண்டு போகும்போது, நம்முடைய பெண்ஜாதி பிள்ளைகளெல்லாம் அடித்துப்புரண்டு அழுதுகொண்டு கூடவந்து சிதையில்வைத்து வாய்க்கரிசியும்போட்டு, தீ வைத்துக்கொளுத்திப் பஸ்பம்பண்ணி சாம்பல்கரைப்பதையுந் தான் காண்பதும்; இப்படியே இன்னும் அநேகவிதமான சித்திர விசித்திரங்களையும் ஒருக்ஷணத்திற்குள் பிராந்திமாத்திரமாய்க் கண்டு உடனே விழித்துப்பார்த்தவுடன் அவ்வளவு சொப்பனமும் ஒருநிமிஷத்தில் காணாமற்போவதற்கு மறுஜென்மத்தைச் சமானமாக எப்படிச் சொல்லலாமென்றால், நன்றாய்ச் சொல்லலாம். அதெப்படியென்றால், திரும்ப இந்தச்சரீரத்தில் விழிப்பதும், இந்தச்சரீரத்தில் விழியாமல் அப்படி அப்படிப் போவதுமே பேதமேயல்லாமல் மற்றப்படி யாதொரு பேதமுமில்லை. ஐயா, சொப்பனங்காணுவதற்குக் காரணமானது சாக்கிரத்திற் பழகின வாசனையல்லவோ காரணமாயிருக்கிறது. இப்போது இந்த ஜகத்விவகாரம் நடப்பதற்குக் காரணமென்னவென்றால், பூர்வஜென்மத்திற் பழகின வாசனையே இந்த ஜெகச்சொப்பனதிற்குக் காரணமான ஜாக்கிரமாம். அதற்கு அப்படியே அதற்கு முந்திய ஜன்மத்திற்பழகினதே காரணமாம். இப்படியே பரம்பரையாய் அனாதியாய்ச் சொப்பனத்திற் சொப்பனங் கற்பனையாய் வருகிறது. ஐயா, முந்தியஜன்மத்திற் பழகியபழக்கமே இப்போது வருமென்றால், இனிமேலும் இப்படியே வந்துகொண்டிருக்குமே. இது எப்போது தீருமென்றால், குருகடாக்ஷத்தாலுண்டாகிறதான தத்வஞானம் வந்தவுடன் இது தீருமென்றறிக.

## 260 - வது தரங்கம்.

திருஷ்டாந்த தாஷ்டாந்தங்களை மாறிமாறிச் சொல்லப்படுகிறது:—

திருஷ்டாந்தஞ்சொல்லி தாஷ்டாந்தஞ் சொல்லுவது—கறிபதார்த்தம் பரிமாறி அன்னம் பரிமாறுவது போலும், தாஷ்டாந்தஞ்சொல்லி திருஷ்டாந்தஞ் சொல்லுவது—சிரார்த்தத்தில் அன்னம் பரிமாறி மற்றது பரிமாறுவதுபோலுமறிக. இவைகளுடைய குணதோஷங்கள் எப்படியென்றால், முதலில் திருஷ்

டாந்தஞ் சொல்லியிருந்தால் தாஷ்டாந்தமான ஆத்மாவாகிற அன்னம் இந்தப் பதார்த்தத்தோடே உள்ளேயேறும். அப்படித் திருஷ்டாந்தஞ்சொல்லாமல் தாஷ்டாந்தமான பிரம்மானந்தத்தைமட்டும் முமுக்ஷுத்துவமாகிற பசியால் புசிப்பன். அப்படிப் புசிப்பதால் பதார்த்தஞ்சேராத போஜனம் சீக்கிரத்தில் சமித்துப்போவதுபோல, திருஷ்டாந்தமில்லாத பிரம்மானுபவம் ஸ்திரமாயிராது. இனி தாஷ்டாந்தஞ்சொல்லித் திருஷ்டாந்தஞ் சொல்வதிலிருக்கிற குணத்தையும் மாறிச்சொல்வதிலிருக்கிற தோஷத்தையுங் காண்பிக்கிறார். திருஷ்டாந்தத்தை முன்னே சொன்னால் அதிலேயே ரமித்துத் தாஷ்டாந்தத்தில் செல்லான். குழந்தைகளுக்கு அன்னம்போடாமல் வடைமுதலானவைகளை முன்னே கொடுத்தால் அன்னத்தைத் தொடாமலவைகளையே தின்று ஓடிப்போவதுபோலும், தாஷ்டாந்தமாகிற அன்னத்தை முன்னே கொடுத்தால் திருஷ்டாந்தமான பதார்த்தங்களை யபேக்ஷித்துக் காத்திருந்து பெற்றுக்கொள்ளுகிறது. ஆனதால் திருஷ்டாந்த தாஷ்டாந்தங்களிரண்டும் சேர்த்து விபரீதபாவனையாகிற பசியைப்போக்கும். ஆனபடியால் இரண்டுவிதமும் மந்த தீவிர அதிகாரிக்குத்தகுந்தபடி சொல்லலாமென்றறிக. ஐயா, திருஷ்டாந்த தாஷ்டாந்தங்களை மாறிமாறி முந்திப்பிந்தி சொன்னதற்குக்காரணத்தை சவிஸ்தாரமாகச் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தாஞ் சொல்லுகிறோங்கேள்:— ஒருபுருஷனுக்கு முந்தி ஞானத்தை யுபதேசித்ததில் அவன் அதைநம்பாமல் கர்மம் பக்தி யோகங்களே சிலாக்கியமென்றும், அவைகளினாலே லோகபூஜிதையும் புண்ணியமும் விருத்தியாகிறதென்றும், மற்றப்படி சுத்த வேதாந்தவிசாரத்தினால் விசேஷமொன்றுமில்லையென்றும், இதினால் பாபம் தான் வருமென்றும், இப்படி விபரீதபுத்தி யடைந்திருக்கிறவனுக்குச் சற்குருநாதன் முதலில் திருஷ்டாந்தங்களைச் சொல்லிப் பிற்பாடு தாஷ்டாந்தத்தைச் சொல்லவேண்டும். [எ - தி] சூடாலையானவள் சிகித்துவஜனுக்குத் தான் சொன்ன அபரோக்ஷஞானானுபவத்தை அவன் குருவாகிய அவளிடத்தில் மகத்துவபுத்தி இல்லாததினால் மதியாமற்போய், காட்டிற் போயிருந்து 18 வருஷம் சுஷ்ககிரிகைகளைச்செய்து வருத்தப்பட்டுக்கொண்டிருக்குஞ் சமயத்தில், சூடாலையே கும்பமுனிரூபத்தை யெடுத்துக்கொண்டு குருரூபமாய்ப் போய், அவனுக்கு உபதேசம்பண்ண ஆரம்பிப்பதற்கு முன்னாடி, ரத்னந்தேடின பிராம்மணன் அகப்பட்ட ரத்னத்தை எறிந்துவிட்டு வெகுகாலந்தேடிய பின் வெட்டிக்கல்லை விலைபெற்ற ரத்னமென்று நம்பிக் கெட்டவன்கதையையும், யானை முதலில் தன்னைக் கட்டியிருந்த சங்கிலியைத் தன் கொம்புகளாலறுத்து மாவுத்தனையும் கீழே தள்ளியும் அவனைக் கொல்லாமற் காட்டுக்குப்போனதால், அவன் இதின்பின்னாலேயே தொடர்ந்துவந்து கொப்பத்தில் விழும்படிசெய்த கதையையும் சொல்லி, பிந்தி தாஷ்டாந்தத்தை யுபதேசிக்கவேண்டிற்றென்றறிக. உத்தாலகமகரிஷி சுவேதகேதுவுக்கு உபதேசிக்க ஆரம்பிக்கும்போது உபக்கிரம உபசங்காரத்தையும், அப்பியாசத்தையும், அபூர்வதையையும், பலத்

தையும், அர்த்தவாதத்தையும், இந்த ஐந்துலிங்கத்தையும் உபதேசித்து வந்ததிலும் அவருக்குச் சந்தேகந் தீராததைப்பற்றி, திருஷ்டாந்தத்தைச் சொல்லுகிற ஆறுவதுலிங்கமான உபபத்தியைச் சொல்லியபின் அவர் ஞானத்தை அடைந்த கதையையுமறியத்தக்கது.

## 261 - வது தரங்கம்.

வாசனுக்ஷயம்பண்ண ஸ்தூல ஸூக்ஷ்ம காரணமான உபாயங்கள்:—

வாசனுக்ஷயத்திற்கு ஸ்தூலமாயும் ஸூக்ஷ்மமாயும் காரணமாயுமிருக்கிற மூன்று உபாயங்களாவன:—பிராணுயாமம் பண்ணுவது ஸ்தூலம், மனது முதலானதை விசாரணையால் ஜகத்துப்பொய்யென்று நன்றாய் நிரூபித்து தண்டிக்கிறது ஸூக்ஷ்மம், நாமார் என்ற விசாரத்தால் நாம் பூர்ணனென்று நிச்சயித்துக் காரணசரீரத்தை வேரோடே களைவது காரணமான உபாயம். [எ - தி] முன்னிருந்த ராஜாக்கள் யாருமொரு குற்றஞ்செய்தானென்று சொன்னமாத்திரத்தில் விசாரணையன்றியில் தண்டிப்பதுபோலும், இப்போது ராணியினுடைய சட்டம் நன்றாய் விசாரணைபண்ணி குற்றஞ்சாட்டி தண்டிப்பது போலும், பிராஞ்சுக்காரன் விசாரணைபண்ணி எந்த அங்கத்தாற் குற்றஞ் செய்ததாக வெளியாகிறதோ அந்த அங்கத்தைச் சேதிப்பதுபோலுமறிக. [இ - து] வாசனுக்ஷயம் வருத்தப்பட்டாகிலும் செய்யவேண்டும். வாசனுக்ஷயம்பண்ணுவது பிரயாசமானுலும் சிரமப்பட்டு பழகினுல்தான் ஞானம் வரும். [எ - தி] மலையேறி சிரமப்பட்டுப் போகிறவனுக்கே பாணதீர்த்த ஸ்நானமும், வெங்கடாசலபதி சுப்பிரமணியர் இவர்களுடைய தரிசனமும் கிடைப்பதுபோலுமறிக. ஐயா, மனோநாசம் வாசனுக்ஷயம் தத்வஞானம் இந்த மூன்றுக்குள் வாசனுக்ஷயமே முக்கியமாய்ச் செய்யவேண்டுமென்றும், அதுவே மஹா பிரயாசமென்றும் சொன்னீர்களே, அது எதினுலென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:—இப்போது சகல பிராணிகளாலும் அனுபவிக்கப்படுகிற ஜாக்கிர சொப்பன சுழுப்திகளான மூன்று அவஸ்தைகளுக்குள்ளே ஜாக்கிரமானது சகலமான பாகியேந்திரியங்களோடே மனசுசேர்ந்து சத்தாதி விஷயங்களைக்குறித்து பிரவர்த்தித்து சுகதுக்கங்களையடைகிறது யாதோ அது மனசென்று சொல்லப்படும். இந்த ஜாக்கிராவஸ்தையிலிருந்து சிரமத்தால் படுக்கையிற்படுத்து நித்திரைபண்ணும்போது, ஜாக்கிரத்திற்பழகின வாசனையே சித்தத்திலிருந்து யாதொரு கருவிகளும் தனுகரண புவனபோகங்களும் ஒன்றுமில்லாதிருந்தும் சகலவிதமான தனுகரண புவன போகங்களைக் கற்பித்து, அவைகளில் சுகதுக்கங்களையும் லாபநஷ்டங்களையும் மானுபிமானங்களையும் கற்பித்து, இந்த ஜாக்கிராவஸ்தையில் பிராணனுடைய ஓட்டத்தைக்காட்டிலும் பத்துப்பங்கு குரட்டைரூபமாய் ஓடிக்கொண்டும், அப்படி ஓடுவதால் தர்மார்த்த காமமோக்ஷங்களான புருஷார்த்தசதுஷ்டயங்

களுக்குள் ஒன்றையாவது அடைய மார்க்கமில்லாமற் போவதுந்தவிர, விழித்த பிற்பாடும் அடடா வீணாய் நித்திரைபண்ணி சொப்பனம் கண்டுகொண்டிருந்த தால் இந்தப்புண்ணியகாலத்தில் ஸ்நானம்பண்ணவும் தானதர்மங்களைச் செய்ய வுமில்லாமல் வீணாய்த் தூங்கிப்போனேமே, இனிமேலிப்படி அர்த்தோதயம் மகோதயம் கிரகணமுதலான புண்ணியகாலம் எப்போது சம்பவிக்கப்போகிற தென்றும்; ராஜகிரகத்தில் உதயகாலத்திற் சோடசமஹாதானம் பண்ணும் போது தூங்கிப்போனதால் அந்தத்தானம் நமக்கு லபிக்கவில்லை, இனிமேல் எப்போது ராஜா தானம் கொடுக்கப்போகிறான், நமக்கெங்கே லபிக்கப்போகிற தென்று துக்கமும்; இந்த மஹாரூபவதியான ஸ்திரீ பலவந்தமாய்ப் படுக்கை யில் வந்து படுத்திருந்தும் அவளோடே அனுபவிப்பதற்கு விக்கினமாக நித்தி ரைவந்து கெடுத்ததென்றும்; சற்குருநாதனுடைய வசனாமிர்தத்தைச் சிரவ ணம்பண்ணுங்காலையில் நித்திரை வந்து அதைக் கேட்கமார்க்கமில்லாமற் பண் ணிற்றென்றும் துக்கத்தை உண்டுபண்ணுவதால் சொப்பனமே வாசனையெனப் படும், சுழுப்தியே அஞ்ஞானமெனப்படும். ஆகையால் வாசனையே இந்த மூன்றுக்குள் முக்கியமான கெடுதியென்று அறிந்து அதைக் குருகிருபையால் தடுக்கத்தக்கது.

## 262 - வது தரங்கம்.

வாசனானந்தத்தின் தன்மை:—

சுழுப்தியைவிட்டு விழித்தவுடன் விஷயமுன்னிலையில்லாமல் வருகிற சுகம் தன் சொபாவானந்தவாசனை. [எ - தி] மழையன்றியில் மலையில்வருகிற ஜலம் சொபாவமான அருவிஜலமென்றறிவதுபோலும், தான் சிரமப்பட்டுச் சம்பாதியாமல் அகப்பட்டபுதையல் தன் அதிர்ஷ்டமென்றறிவதுபோலுமறிக. [இ - ர்] வாசனானந்தத்திற்கு யுக்தி:—போகித்தவுடன் சிசுனத்தை தொட்டுப் பார்த்துக்கொள்வதும், தக்ஷணைவாங்கினபின் கையை விரித்துப் பார்த்துக் கொள்வதுபோலுமறிக. [இ - ர்] வாசனானந்தத்திற்கு யுக்தி. சாராயங் குடித்து வெளியிலே வந்தவனுக்கு வாய்நாற்றமும் மயக்கமுங் காணப்படுவது போலவறிக. ஐயா, வாசனையை க்ஷயம்பண்ணுவது பிரயாசமென்றும், ஜாக்கி ரம் மனதென்றும், சொப்பனம் வாசனையென்றும், சுழுத்தியை அஞ்ஞான மென்றுஞ் சொன்னீர்களே; அப்படிச்சொல்லுவதற்குக் காரணத்தையும், அந்த வாசனையை க்ஷயம்பண்ணுவதற்கு உபாயத்தையும், வாசனையானது நிஷ்பிர யோஜனமுடையதென்றும் காலத்தை வீணாய்க் கழியச்செய்யுமென்றும் சொன் னீர்களே, இவைகளுக்கெல்லாம் என்னுடைய மனசு ஒத்துக்கொள்ளும்படி சமாதானஞ் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லு கிறேன்கேள்:—வாராய் குழந்தாய்! முமுக்ஷுவாயுள்ள புருஷனுக்கு மன சென்று சொல்லப்படுகிற சாக்கிராவஸ்தை ஞானத்திற்குச்சாதனமான சித்த

சுத்திக்குக் காரணமான நிஷ்காமியகர்மத்தைச் செய்வதற்கும், சித்தசுத்தியான வனுக்கு நித்தியாநித்திய விவேகத்தையும், விஷயவைராக்கியத்தையும், மனோ நிக்கிரகத்தையும், பாகியேந்திரியங்களுடைய நிக்கிரகத்தையும், பிரவர்த் தியை நிவர்த்திப்பதற்கும், சுகதுக்கங்களை பொறுப்பதற்கும், சற்குருவையும் சற்சாஸ்திரத்தையும் நம்புவதற்கும், குருவைத்தேடுவதற்கும், அவரிடத்திற் சிரவணஞ்செய்வதற்கும், அதை மனனம்பண்ணுவதற்கும், நிதித்தியாசன சமா திகளை அடைவதற்கும் காரணமாயிருப்பதாலும்; சுழுப்தியவஸ்தையானது ஒன்றுந்தெரியாத அஞ்ஞானரூபமாயிருந்தாலும், இந்த ஜாக்கிர சொப்பனங் களிற் பட்டிருக்கிற சிரமங்களையும் துக்கங்களையும் நிவர்த்திப்பதாயும், பிரம் மானந்தாம்ஸமான சுகத்தைக் கொடுப்பதாயும், மறுநாள் செய்யப்போகிற பாமரவியாபாரத்திற்கும், சற்கர்மானுஷ்டானத்திற்கும், நிரதிசயமான ஈஸ்வர பக்தி பண்ணுவதற்கும், குருசிசுருஷை பண்ணுவதுமுதல் சமாதிபரியந்தம் செய்வதற்கும் வலிமையைக்கொடுக்கக் காரணமாயிருப்பதால் அஞ்ஞான மென்று சொல்லப்பட்ட சுழுப்தியாலும் அவ்வளவு கெடுதலுண் டென்று சொல்லக்கூடாது. வாசனையென்று சொல்லப்படுகிற சொப்பனு வஸ்தை யானது விவேகி அவிவேகிமுதலான சகலருக்கும் கெடுதிசெய்கிறதாக இருக் கிறது. அதெப்படியென்றால், விவேகிக்கும் அவிவேகிக்கும் சொப்பனத்தில் ஸ்திரீயைக்கண்டு அவளோடே சம்போகஞ்செய்கிறதுபோலே கண்டு சுக்கி லமோசனமும் ஆகவேண்டுமென்று பிரார்த்தனையில்லாமலிருந்தும், அந்த ஸ்திரீ வாசனையானது இவர்களை யறியாமல் சித்தத்திலிருந்துகொண்டு, அச்சமயத்தில் விருத்திரூபமாய்க் கிளப்பிவிட்டு சுக்கிலமோசனம்வரை உண்டாகும்படி செய்த பின் தாபத்தையும் கொடுப்பதையறிந்து வாசனையை அவசியம் கெடுக்கக்கட வாய்.

## 263 - வது தரங்கம்.

சுபவாசனை, அசுபவாசனை, சுபாசுபவாசனைகளின் தன்மை:—

நிஷ்காமனாய்க் கர்மம் பக்தி சிரவணாதி செய்வது சுபவாசனை. காமியமாய் அவைகளைச்செய்வது அசுபவாசனை. காமநிஷ்காமனாய் அவைகளைச்செய்வது உபயவாசனை. [எ - தி] யாதொருஸ்திரீ பணத்திலும் போகத்திலும் ஆசை யன்றியில் புருஷனுக்குத் திரிகரணங்களாற் பணிவிடைபண்ணுகிறாளோ அவளே பதிவிரதையென்றும், பணத்துக்காக பணிவிடைசெய்கிறவள் விபசாரி யென்றும், பர்த்துருசிசுருஷை பரலோகசாதனமான புண்ணியமென்று நினைத் திருப்பதுடன்கூட போகாசையும் பணத்தாசையும் வைத்துக்கொண்டு புருஷ னுக்குப் பணிவிடைசெய்கிறவள் போகமோக்ஷஸ்திரீயென்றுஞ் சொல்லப்படு வதுபோலவறிக. ஐயா, வாசனையானது சுபமென்றும், அசுபமென்றும், சுபா சுபமென்றும் மூன்றுவிதமாயிருக்குமென்று சொன்னீர்களே, சுபவாசனையின் லக்ஷணத்தையும், அசுபவாசனையின் லக்ஷணத்தையும், சுபாசுபவாசனையின்

லக்ஷணத்தையுமெனக்குச் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ் சொல்லுகிறோங்கேள்:—வாராய் குழந்தாய்! அசுபவாசனையிற் பிறந்திருக்கிற ஜீவர்களுக்குத் தேகம் நானென்கிறபுத்தி பெலமாயும், அப்படியே விஷயத்தில் சத்தியபுத்தியும், பரஸ்திரீகமனம் பண்ணவேண்டுமென்ற இச்சையும், வீடுவாசல் நிலங்கரை பணம்காசு எவ்வளவிருந்தாலும் அது போதாதென்று மேல்மேலும் சம்பாதிக்கவேண்டுமென்கிற ஆசையும், அதற்கு ஆரும் விரோதம்பண்ணினால் அவர்கள்பேரில் கோபமாய்ப் புலிபாய்வது போலே பாய்வதும், சத்விஷயத்தில் செலவழிப்பதில் வருத்தமும், நாலுபேர் பார்த்துப் பளாவென்று சொல்லவேண்டுமென்று கிரியைகளைச் செய்வதும், தான் பிடித்ததை 1000 பேர் ஆகாதென்று சொன்னாலும் அதைக் கேளாமலிருக்கிறதும், பிராணிகளிடத்தில் இரக்கமில்லாமலிருக்கிறதும், அகாரணமாக வலுவுச்சண்டைக்குப் போகிறதும், பிறர் சவுக்கியமாயிருக்கிறதைப் பார்த்துப் பொறாமைப்படுவதும், சதா நாஸ்திகபுத்தியோடே கூடிக்கொண்டிருப்பதும், இவைமுதலான குணங்களே அடையாளமாம். இனி சுபவாசனையோடே பிறந்தவர்களுக்கு ஜனகாதிகள்போலும், சுகப்பிரம்மரிஷிபோலும், ராமச்சந்திரன்போலும் சொயமாகவே ஜனனமரணசம்சாரம் துக்கமென்று தோற்றுவதும், விஷயத்தில் அருசியுண்டாய் மலமூத்திரங்களையும் நாய்கக்கின பாயசத்தையும்போல தோஷதிருஷ்டியுண்டாயும், எப்போது நாம் முத்தியடையப் போகிறோமென்று தலையில் தீப்பற்றினவன்போலத் தாபமுண்டாவதும், மூடஜனங்களுடைய சகவாசத்தைப் பாம்புக்கூட்டத்தைக் கண்டு பயப்படுவதுபோலும், சாதுக்களையும் சற்குருவையுந் தேடுவதில் மயில் மேகத்தைத் தேடுவதுபோலும், சதா நாமாரென்கிற விசாரத்தோடுங் கூடியிருப்பதே சுபவாசனைக்கு அடையாளமாம். இனிச் சுபாசுபவாசனையின் தன்மையானது இந்த இருவித வாசனைகளையுடையவர்களோடே சேருங்காலையில் அந்தந்த ஆகாரப்படுகிறவனே அதில் பிறந்தவனுக்கடையாளமென்றறிக. இந்த அசுபவாசனை எள்ளளவேனுமிருந்தால் ஜன்மத்தைக் கொடுக்கும். ஆகையால் புருஷப்பிரயத்தினத்தால் அசுபவாசனையிலிருந்து மனசை சுபவாசனையில் திருப்பி விடவேண்டும். நானென்ன செய்வேன், என்னுடைய ஜென்மாந்திரியமான அசுபவாசனை என்னை விஷயத்திலிழுக்கிறதேயென்று சொல்வாயாகில், அதற்காகவே அத்தியந்தம் சாவதானமாயிருக்கவேண்டுமென்று சொன்னேன். உபயவாசனையுடையவன் மூடசங்கதியைவிட்டு சற்சங்கதி பண்ணினாற் போதும், சுபவாசனையுடையவன் அதையே விருத்திபண்ணவேண்டும். அது அதிகமானால் யாதொரு குற்றமுமில்லையென்றறிக.

## 264 - வது தரங்கம்.

ஜாக்கிரத்தைமட்டும் பொய்யென்றறிந்தால் சகலபந்தமும் போம் :—

இந்த ஜாக்கிரத்தைமட்டும் பொய்யென்று நிச்சயமாய் அறிந்துவிட்டானேயானால், அவனுக்கு வேறே ஜீவேசுர ஜகத்துப் பொய்யென்று பழகத் தேவையில்லை. [எ - தி] பீஜத்தைப் பலமாய் மர்த்தனம்பண்ணினபிற்பாடு கைகால்முதலான அவயவங்களைத் துண்டுதுண்டாய் வெட்டவேண்டாதது போலும், மரத்தின்வேரில் தீ வைத்துப் பட்டபின் கொப்புக்கிளைகளை வேறு வேறாய்த் தீயாலெரிக்கத் தேவையில்லாததுபோலும், ஒன்றுமேல் ஒன்றாய் அடுக்கியிருக்கிற மண்பாண்டங்களில் அடியிலிருக்கிற பாண்டத்தை அடித்து உடைத்தால் மற்றவைகள் மடமடவென்று விழுவதுபோலும், சித்திரப்புடவையில் தீ வைத்தபின் அதிலெழுதிய சித்திரங் காணமற்போவதுபோலுமறிக. [இ - து] ஐயா, ஜாக்கிர சொப்பன சுழுப்தி மூர்ச்சை மனோராச்சியமுதலான அவஸ்தைகளுக்குள் ஜாக்கிரமும் ஒரு அவஸ்தையாயிருக்கும்போது, இதை மட்டுக்கும் பொய்யென்று அறிந்துவிட்டதால் சகலவிதமான பந்தங்களும் போமென்று சொன்னீர்களே, அதைத் திருஷ்டாந்தமூலமா யறிவிக்கவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறோம் கேள்:—அடே மூடா! நீ அறியாமல் இப்படிச் சங்கித்தாய். உன்னுடைய அனுபவத்திலும் சகலமான பிராணிகளுடைய அனுபவத்திலும் எந்த அவஸ்தையானது பிரயோஜனத்தை யுடையதாயிருக்கிறது? அதெப்படியென்றால், உலகத்தில் முதலாவது இகலோகத்தைக்குறித்துச் செய்கிற பாமரவிவகாரமான உழவு, சில்ப்பம், வாணிபம், உத்தியோகம், வைதீகமுதலான தொழில்களைச் செய்வதும், அதனால் திரவியங்களைச் சம்பாதிப்பதும், அந்தத்திரவியத்தால் சிர்க்சந்தன வனிதாதிபோக்கியங்களைச் சம்பாதித்து, போகங்களை அனுபவித்து திருப்தியடைவதும் இந்த ஜாக்கிரத்திலேயே. இப்படியே பரலோகத்தைக் குறித்து தானதர்மங்களைச் செய்வதும், இன்னம் வேதோக்தமான அக்கினிஹோத்திரமுதல் அஸ்வமேதம்வரையிலுள்ள எக்ஞாதிகர்மங்களை மந்திரலோப தந்திரலோப, திரவியலோப, அன்னலோப, ஆஜ்யலோபமுதலான தோஷங்களன்றியில் செய்வதும் இந்த ஜாக்கிரத்திலேயேதவிர மற்ற அவஸ்தைகளிற் செய்யப்படவில்லை. இன்னம் பஞ்சமகாபாதகங்களை ஆசையால் பயப்படாமற் செய்து ரௌரவாதி நரகதுன்பங்களை அடையச்செய்வதுமிந்த ஜாக்கிரமே தவிர மற்ற அவஸ்தைகளில்லை. இன்னம் சாலோக, சாமீப்பிய, சாரூப்பியங்களான திரிமூர்த்திகளுடைய பதங்களைக்குறித்து பூஜை ஸ்தோத்திரம் சகுணத்தியானமுதலானவைகளைச் செய்வதும் எந்த அவஸ்தையில் செய்யப்படுகிறது சொல்? அஷ்டமகாசித்தியைக்குறித்து பிராணாயாமங்களைச் செய்கிற யோகாப்பியாசத்தை யோகிகள் எந்த அவஸ்தையிற் செய்கிறார்கள்? முமுக்ஷுக்கள் நிஷ்காமகர்மத்தால் சுத்தசித்தர்களாய் சாதனசதுஷ்டயங்களைச் சம்பாதித்து மூடசங்கதியை விலக்கி சத்சங்கதியை எந்தஅவஸ்தையில் தேடுகிறார்கள்? சற்குருவை யடைந்து சற்சாஸ்திரவிசாரத்தையும், மனனநிதித்தியாசன சமாதிகளையும் அப்பியாசிகள் எந்த அவஸ்தையிலிருந்து செய்கிறார்கள்? பிரஹ்ம

வித்து கிருதகிருத்தியராய் சொப்பனம்போல இந்த ஜகத்தை எண்ணி தீரராய் அன்னியர்களுக்குமப்படி எந்த அவஸ்தையிலிருந்து உபதேசிக்கிறாரோ; வரன், வரியான், வரிஷ்டன் எதிலிருந்து ஜீவன்முக்தி சுகத்தைப் பெற்று வாழ்கிறார்களோ, ஆகையால் சகலகாரணமான ஜாக்கிரத்தைப் பொய்யென்று அறிந்ததினாலேயே முக்திவருமென்று சொன்னது சரி.

265 - வது தரங்கம்.

ஜாக்கிரத்திற்கும் சொப்பனத்திற்குமுள்ள பேதம்:—

சொப்பனம் ஜாக்கிரம் இரண்டும் பொய்யில் சமானமானாலும் ஸ்திராஸ்திரமாத்திரமே பேதமென்ற சுருதியும்; கொர்னாட்டுச் சேலையிலும் பிள்ளையாபாளையஞ் சேலையிலும் சாயமேறியிருப்பது சமானமானாலும், அது அழிவதில் கொர்னாட்டுச் சேலைசாயம் நீடித்திருப்பதும் மற்றதப்படி இல்லாமலிருக்கிற பேதங்காணப்படுவதே யுக்தி; அனுபவத்தில் ஜாக்கிர சொப்பனங்கள் தீர்க்க இருஸ்வகால பேதமாய்க்காணப்பட்டு சுழுப்தியில் இரண்டும் லயமாய்ப்போவதேயாம். [இ-ர்] சொப்பனம்போலச் செகத்துப் பொய்யென்று சொன்னால், அது விழித்தமாத்திரத்திற் பொய்யாய்ப்போவதும் தோற்றாமற் போவதும்போல, ஞானஜாக்கிரத்தில் விழித்தாலும் ஜகத்துத் தோற்றாமற் போகாதகாரணமேதெனில்,— மணலிலெழுதின எழுத்தும் கல்லிலெழுதின எழுத்தும் இரண்டும் பொய்யிற்சரியானாலும் தோற்றுவதிலும் தோற்றாமற் போவதிலும் பேதமிருப்பதுபோலும், குழந்தை வீடுகட்டுவதிலும் பெரியவன் வீடுகட்டுவதிலும் பொய்யென்பது சரியானாலும் அழிவதில் தாரதம்மிய மிருப்பதுபோலும், மரமுமிலையும் விதையிலுண்டாவதிற் சரியானாலும் இலைகள் அடிக்கடி தழைத்து உதிர்கிறதும், மரம் கிரமத்தில் பட்டுப்போகிறதுபோலுமறிக. [இ - ர்] ஜாக்கிர சொப்பன மிரண்டும் பொய்யிற்சரியானாலும் ஜாக்கிரத்தில்தான் மயக்கம்போவது பிரயாசம். [எ - தி] சொந்தப்புருஷனுக்கும் சோரபுருஷனுக்கும் சிசுனம் சரியாயிருந்தாலும் தீர்க்ககாலம் போகிக்கிற சோரபுருஷனுடைய மயக்கம் போகாததுபோலவறிக. [இ - ர்] ஜடமானது சேர்ந்ததோடே சேரும், சித்து சேராது. [எ - தி] தேகமுங் கண்ணும் போலவறிக. [இ - ர்] இந்த ஜாக்கிரமானது சொப்பனத்திற்குச் சமானம். அது எதனாலென்றால், தன் கற்பிதமாயும், திரிபுடிரூபமாயும், அஸ்திரமாயும், துக்கமாயும், மற்றோர் அவஸ்தையிலில்லாமற் பொய்யாய்ப்போவதாலும் சொன்னோம். ஐயா, சொப்பனம் தன் கற்பிதமென்று சொன்னது யுக்தமே, அப்படி ஜாக்கிரங் கற்பனையாயில்லாமல் ஈஸ்வரகற்பனையாயல்லவோ சுருதி யுக்தி அனுபவத்தாற் காணப்படுகிறதென்றால், அது நியாயந்தான். சொப்பனமும் வாசனாபரவசத்தால் அது காணுங்காலையில் தன் கற்பனையாய்த் தோன்றாமல் விழித்த பிற்பாடல்லவோ தன் கற்பனையென்று தோன்றினது. இங்குமப்படி வாசனா

பரவசத்தால் தோன்றுகிற இந்த நனவிலிருந்து நீ உன் சொரூபத்தில் விழித்தா யேயானால் உன் கற்பனையென்று சுருதி யுக்தி அநுபவமாய்க் காணப்படும். [இ - ர்] ஜாக்கிர சொப்பன மிரண்டும் பொய்யிற் சமானம். [எ - தி] மணலா லே சேர்த்த லிங்கத்திலும் கல்லாலே செய்த லிங்கம் அதிககாலமிருந்தாலும் இரண்டுங் கற்பிதத்தில் எப்படிச் சமானமோ, அப்படிச் சச்சிதாநந்தமாகிய தன்னிடத்திற் கற்பிக்கப்பட்ட ஜாக்கிர சொப்பனங்களிரண்டும் சமானந் தான். கும்பகர்ணனையும் மற்றவர்களையும்போலவறிக. ஐயா, ஜாக்கிரத் தையும் சொப்பனத்தையும் கும்பகர்ணன்நித்திரைபோலும் பற்ற ஜனங்களு டைய நித்திரைபோலுமென்று சொன்னீர்களே, அது இன்னவிதமென்று எனக்குத் தெரியும்படி சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்குத் தரஞ் சொல்லுகிறேன் கேள். இந்த ஜாக்கிரத்தாகிற சொப்பனமானது அநாதி அவித்தியாவாசனையால் எத்தனையோ கற்பகோடிகாலமாய் யான் எனதென்கிற சொப்பனத்தைக் காண்கிறதும், அதிலொரு ஜன்மத்திலிருந்து மற்றொரு சொப் பனமாகிற ஜன்மத்தை ஓயாமற்கண்டு வருவதால், கும்பகர்ணன் நித்தியத்துவத் தைக்குறித்துத் தவம்பண்ணி வரங் கேட்கும்சமயத்தில், அஞ்ஞானத்தால் நித்தி ரத்துவத்தைக்கேட்டு தீர்க்ககாலம் நித்திரைபண்ணி சொப்பனங் கண்டுவருவது போலும். இப்போது சகலருங் காணப்பட்ட நித்திரையானது சொற்பகாலத் திற் பொய்யாய்ப்போவதுபோல, இந்த ஜாக்கிரமும் தீர்க்ககாலத்திற் பொய் யாய்ப்போவதான தீர்க்க இருஸ்வகால தாரதம்மியமாயிருந்தாலும், மனசி னுடைய கற்பனுமாத்திரமென்பதிற் சந்தேகமில்லாததால், நீயும் இந்த ஜெகத்தை சொப்பனத்திற்குச் சமானமென்றறிந்து ஜீவன்முக்தனாய் வாழக் கடவாய்.

## 266 - வது தரங்கம்.

ஈஸ்வரன் பிழைப்பின் தன்மை:—

ஈஸ்வரனுடைய பிழைப்பு சச்சிதானந்த சொரூபமாயிருக்கிற பிரம்ம ஞானிகளின் தயவினாலும், நாமரூபத்தை இச்சித்திருக்கிற அஞ்ஞானிகளின் ஆசையினாலும் நடக்கிறதென்பதற்கு யுக்தி:—யானை முதலான பொம்மைகளைப் பண்ணிவிற்கிற செட்டிகளின்பிழைப்பு இடம் பொருள் ஏவல்களுடைய பெரிய வன் தயவாலும் குழந்தைகளாசையாலும் நடப்பதுபோலும்,(ஸ்திரீயின்யோனி ஜன்மத்தை எடுக்கவேண்டியிருக்கிற குழந்தைகள்கர்மத்தினாலும் பெரியவ னுடைய போகாசையினாலும் ஜீவிப்பதுபோலவறிக.) [இ - து] ஈஸ்வரன் ஜீவ னுக்குச் சரீராதிதுக்கத்தை எதுவரையில் கொடுப்பாரென்றால், நான் கர்த்தா வென்று எதுவரையிலிருக்கிறானோ அதுவரையிற் கொடுப்பாரேதவிர பின் கொடார். [எ - தி] கடைக்காரன் ஜமீன்தார் எதுவரையில் கையெழுத்துப் போடுகிறானோ அதுவரையில்தான் அவன்ஊழியக்காரருக்கு அரிசிமுதலான

சாமான்களைக் கொடுப்பானே தவிர மற்றப்படி கையெழுத்தன்றியிலொன்றுங் கொடாதிருப்பதுபோலவறிக. [இ - து] ஈஸ்வரனுக்கு ஜீவர்களைக்குறித்து விவகாரம். [எ - தி] சண்டைக்காரரைக்குறித்தே ஜட்ஜிக்கு வேலை வந்திருப்பதுபோலுமறிக. [இ - து] ஈஸ்வரனுற் கஷ்டப்படுவதற்கும் சுகப்படுவதற்கும் ஜீவர்களுடைய பகிர்முக அந்தர்முக விருத்திகளே ஹேது. [எ - தி] வாத்தியாரால் உதைபடுவதற்கும் வித்துவானுவதற்கும் பிள்ளைகளுடைய விளையாட்டும் படிப்புங் காரணமாயிருப்பதுபோலுமறிக. [இ - து] ஈசன் அவஸ்தாத்திரயத்திலும் கொஞ்சம் விஷயசுகத்தைக் கொடுத்து சம்சாரதுன்பத்தில் வாட்டுகிறார். [எ - தி] வண்டிக்காரன் மாட்டுக்குக் கொட்டை புல்லுகொடுத்து வண்டியிற்கட்டி அடிக்கிறதுபோலவறிக. [இ - து] ஜீவர்கள் அனாதியாயிருப்பதால் அவர்களுடைய புத்தியை அனுசரித்து ஈசன் கர்மபலத்தைத் தாரதம்மியமாய்க் கொடுக்கிறார். [எ - தி] இப்போதிருக்கிற மனுஷர்களுடைய நடத்தையைப்பார்த்து முத்திரைக்காகிதம் ரிஜிஸ்டர்முதலானவைகளை ராணி ஏற்படுத்துவதுபோல ஈசன் ஜீவர்களுடைய கர்மத்துக்கீடாக வேதங்களைப் பிரகாசம் பண்ணுகிறாரென்றறிக. [இ - து] ஜீவர்களிருக்கிற பரியந்தம் ஈஸ்வரனுக்கு ஜகத்சிருஷ்டி யுண்டு. [எ - தி] கோவிலில் உற்சவத்திற்கு வந்த ஜனங்கள் போகும்வரை கடைக்காரர்கள் கடைவைத்துக்கொண்டிருக்கிறது போலவறிக. ஐயா, ஈஸ்வரனுடைய வியாபாரமானது ஞானிகளுடைய தயவாலும் ஜீவர்களுடைய ஆசையாலும் நடக்கிறதென்று சொன்னீர்களே, அதெப்படிச்சொல்லலாம்? ஜீவர்களுடைய கர்த்துருத்துவமாகிற கையெழுத்து உள்ளவரையில்தான் ஈஸ்வரனாகிய கடைக்காரன் ஜன்மமாகிற சரக்குகளைக் கொடுப்பாரென்றும் பிற்பாடு கொடுக்கமாட்டாரென்றுஞ் சொன்னது நியாயமே. முதலில் சொன்னது விரோதமாய்த் தோற்றுகிறதென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:—ஞானிகளுடைய தயவினால் ஈஸ்வரனுடைய பிழைப்பு நடக்கிறதென்று சொன்னதின் கருத்தென்னவென்றால், கள்ளன் கானிஸ்டேபிள்கள்தயவால் பிழைப்பதுபோலும், மாமியார்ஒத்தாசையால் மருமகள் விபசாரம்பண்ணுவதுபோலும், வாத்தியார் ஒத்தாசையால் சட்டாம்பிள்ளை மற்ற பிள்ளைகளை நிக்கிரகானுக்கிரகம் பண்ணுவதுபோலும், இந்திரஜாலவித்தைபண்ணுகிறவன் அந்த உளவுதெரிந்தவனுடைய அனுசரணையாற் பண்ணுவதுபோல, சிருஷ்டியாதி திருட்டுச்செய்கிற ஈசன் ஞானியாகிற கான்ஸ்டேபிளால் செய்கிறாரென்றும், ஞானியாகிற மாமியார்ஒத்தாசையால் ஈசனாகிற பெண் ஜகத்விவகாரமாகிற விபசாரஞ்செய்கிறாளென்றும், ஞானியாகிற வாத்தியார்தயவால் ஈசனாகிய சட்டாம்பிள்ளை அஞ்ஞானிகளாகிற குழந்தைகளை நிக்கிரகானுக்கிரகம் பண்ணுகிறாரென்றும், ஈஸ்வரனாகிய வித்தையாடி ஞானியாகிய உளவுதெரிந்தவனுடைய தயவால் ஜகத்தாகிற இந்திரஜாலத்தைச் செய்கிறாரென்றும் சொன்னதை நீ யறிந்துகொண்டு வாசிஷ்டத்தில் ஞானியின் தயவால் திரிமூர்த்திகளும் பிழைக்கிறார்களென்றும்

சொல்லியதையுமறிந்து சகல சமுசயத்தையும் நிவர்த்திக்கக்கடவாய்.

## 267 - வது தரங்கம்.

அஞ்ஞானி ஈஸ்வரனுக்கும், ஈஸ்வரன் ஞானிக்கும் பயப்படுகிறார்:—

அஞ்ஞானிகள் ஞானிகளுக்குப் பயப்படாமல் ஈஸ்வராதிகளுக்குப் பயப்படுவதற்கும், ஞானிகளுக்கு அந்த ஈஸ்வராதிகள் பயப்படுவதற்கும் யுக்தி:— குழந்தைகள் பூச்சாண்டிகாட்டுகிற சேவகனுக்குப் பயப்படுகிறதுபோலும், சேவகன் எஜமானனுக்குப் பயப்படுவதுபோலும்; மனுஷியர்கள் பாம்புக்கும் அது கெருடனுக்கும் பயப்படுவதுபோலுமறிக. ஐயா, அஞ்ஞானிகள் ஈஸ்வரனுக்குப் பயப்படுவார்களென்றும், அந்த ஈஸ்வரன் ஞானிகளுக்குப் பயப்படுகிறாரென்றுஞ் சொன்னீர்களே அது எதினாலென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:— திருவிளையாடல் புராணத்தில் பாண்டிய ராஜா ராஜ்ஜியபரிபாலனம் பண்ணிவருங்காலையில், சரஸ்வதி பிரம்மாவின் சாபத்தால் நற்கீரர்முதலான 48 சங்கவித்துவாம்சர்களாய்த் தாம்பிரபரணி தீரத்தில் அவதரித்து, சுந்தரேஸ்வரருடைய கிருபையைப்பெற்று மதுரையில் சங்கபீடத்திலிருந்து வருங்காலையில், இடைக்காட்டாரென்ற மகானுபாவர் கபிலரென்ற சங்கத்தாருடைய பிரார்த்தனையின்பேரில் தத்துவப்பிரகாசிகையென்கிற பிரபந்தத்தைச் செய்துகொண்டு, பாண்டியராஜாவினுடைய சபையில் வந்து அதைப் பிரசங்கம்பண்ணும்போது, நற்கீரர்முதலான வித்துவாம்சர்களெல்லோரும் மிகவும் உண்மைஞானத்திற் சிறந்ததாயிருக்கிறதென்று கொண்டாடினதையும், பாண்டியராஜன் கெர்வத்தால் இதில் சப்தரசம் அர்த்தரசம் அனுபவரச முதலானவைகளொன்று மில்லாததால் இப்பிரபந்தத்தைச் சபையில் அங்கீகாரம்பண்ண யோக்யதை யில்லையென்று அவமானம்பண்ணி இவரைப் போகச்சொன்னதும், இவர் மீனாக்ஷி சுந்தரேஸ்வரருடைய சன்னிதியில் வந்து "நான் செய்த பிரபந்தத்திலுள்ள சப்தங்கள் தேவியினுடைய சொரூபமானதாலும், அதிலுள்ள அர்த்தம் உம்முடைய சொரூபமானதாலும், அந்தப் பிரபந்தத்தை அவமானம்பண்ணினது உங்களை அவமானம்பண்ணினதேதவிர என்னை அவமானம்பண்ணவில்லை. அதனாலே எனக்கு யாதொரு குறைவுமில்லை" என்று சொன்னதும், சுந்தரேஸ்வரருக்கு முதுகில் அறைந்ததுபோலே யிருந்ததால் உடனே இவன்கையை வந்து சுவாமி பிடித்துக்கொண்டு நல்லவார்த்தை சொல்லி நானிப்போது செய்யவேண்டியதென்னவென்று கேட்டவுடன், இவர் சுவாமியைப் பார்த்து அம்பாளோடேயும் சங்கவித்துவாம்சர்களோடேயும் இந்தக் கோட்டையைவிட்டுத் தாங்கள் வெளியேறவேண்டுமென்று சொன்னவுடன், அப்படியே குபேரன்பிரதிஷ்டைபண்ணின லிங்கம் பாதாளத்தில் மறைந்திருந்ததை உத்தாரணம்பண்ணி அதில் சபரிவாரங்களுடன் வசித்துக்கொண்டிருக்கும்போது, மறுநாள்காலமே திருவனந்தனுக்குப் பட்டர் கோவிலைத்திறந்து பூஜிக்கப்போகும்போது மூலலிங்கத்தை

யும் மீனுக்ஷியையும் காணமற்போனதைப்பற்றி ராஜாவிடத்திற் போய் தெரியப்படுத்தினவுடன், ராஜாவும் ஓடிவந்து கோவிலைப் பார்க்கும்போது, சுவாமியைக் காணுததைப்பற்றி மிகுந்த விசனத்துடன் நம்முடைய முன்னேர்கள் சுவாமி பிரசன்னமாய் வந்து அனுக்கிரகம்பண்ணும்படியான அதிர்ஷ்டத்தை அடைந்திருக்கவும், நம்முடைய அதிர்ஷ்டமானது சுவாமியே காணமற்போகும்படியாக நேரிட்டதேயென்று அழுதுகொண்டு வீதியிலலையும்போது, நதியில் ஸ்நானம்பண்ணி வருகிற பிராம்மணர்கள் ராஜாவைப்பார்த்து, கோட்டைக்கு வெளியில் இந்திரவிமானமும் மீனுக்ஷி சுந்தரேஸ்வரர்களும் சங்கவித்துவாம்சர்களும் விளங்கிக்கொண்டிருக்கிருர்களென்று சொன்ன வார்த்தையைக்கேட்டு, ராஜா ஓடிப்போய் சுவாமியை வெகுவிதமாய் ஸ்தோத்திரம் பண்ணும்போது ஆகாசவாக்கு இடைக்காட்டாரை நீ அவமானித்ததால் நாம் அவர் அனுமதியன்றியில் வரமாட்டோமென்று சொன்னபின், அவன் அவரைச் சரணுகதம்பண்ணி பூஜித்து அவர்கிருபையால் எதாப்பிரகாரம் மீனுக்ஷி சுந்தரேஸ்வரர்கள் ஆலயத்திற்கு வந்துசேர்ந்ததால் ஞானிக்கு ஈசன் பயப்படுவனென்றறிக.

268 - வது தரங்கம்.

ஈஸ்வரன் ஞானியைக்கண்டு சந்தோஷிக்கிருர் :—

ஈஸ்வரன் ரகசியமாய் வைத்திருந்த ஞானத்தை ஞானி கண்டபேருக்கெல்லாம் கண்டபடி கொடுப்பதினல் அவருக்கு இவர்பேரில் ஆயாசமில்லையா வென்ருல்,— ஒரு மகாராஜனுக்கு அனந்தகோடி ஸ்திரீகளிடத்தில் அனந்தகோடி பெண்கள் பிறந்துகொண்டிருப்பதுபோல, ஈசனுக்கும் அவித்தைகளிடத்தில் அஞ்ஞானிகளாகிற பெண்களே பிறந்துகொண்டுவரும்போது, தெய்வகெதியால் அவித்தையாகிற ஸ்திரீயினிடத்தில் ஞானியாகிற பிள்ளை நான் பிரம்மமென்கிற மாணியோடே அருமையாய்ப் பிறந்திருப்பதால், இந்த ஞானியாகிற பிள்ளை அவர் அதிரகசியமாய் வைத்திருந்த அந்த ஞானமாகிற அக்ஷயநிதியை எவ்வளவு எண்ணினபடி ஏற்றபேர்களுக்கெல்லாம் எதேஷ்டமாய்க் கொடுத்தாலும் ஈசனுகிய ராஜனுக்குத் திருப்தியேதவிர விசனமில்லை. எதனுலென்ருல், நம்முடைய வம்சமானது பரம்பரையாய் இவனுலேயே விளங்கவேண்டியிருப்பதாலென்றெண்ணி இவனைக் கண்டு மகிழ்கிருரென்றறிக. ஞானியைக்கண்டு ஈஸ்வரன் சந்தோஷிக்கிருன். ஞானியினிடத்திலே ஈஸ்வரனுக்கு அதிகப்பிரியமென்பதற்கு யுக்தி:— பைத்தியக்காரப்பிள்ளையினிடத்திலும் கைப்பிள்ளையினிடத்திலும் தாய் அதிகப்பிரியமிருப்பதுபோலவறிக. [இ - ர்] ஈஸ்வரன் ஞானியினிடத்தில் பயம் பக்தி விசுவாசம் சந்தோஷம் அந்தரங்கசிநேகம் அதிசயமுதல் அனுசரணைவரையில் செய்துகொள்ளுகிருர். ஏனென்ருல், கண்கட்டிவித்தைசெய்கிறவன் உளவுதெரிந்தவனிடத்திற் பயப்படுவதுபோல, ஈஸ்வரனுகிற வித்தையாடி ஜகத்தாகிற கண்கட்டிவித்தை செய்வதால் அந்த உளவு

தெரிந்திருக்கிற ஞானிக்குப் பயப்படுகிறார். தான் உபாசிக்கிற பிரம்மமே காசரணாதி அவயவங்களுடனேகூடி ஞானிரூபமாய் வந்திருக்கிறதானதால் இவரிடத்தில் பக்திசெய்கிறார். ஜகத்தாகிற ஒருபட்டணத்திலிருக்கிற ஈஸ்வரனாகிற ராஜாவின் சரீரமாகிற வீடுகளின் கர்மமாகிற வாடகைக்கு அட்வான்சுகட்டிக் குடியிருந்து அநேகர்கள் வருகிறார்கள். அவர்களில் சிலர் வாடகையான பிற்பாடும் தன் வீடென்று சொல்லிக்கொண்டிருந்ததால் எமதூதர்களாகிற சிப்பாய்மூலமாய் வெளியேற்றி நரகமாகிற அசிங்கியமான இடத்திலிருக்கிற யாதனாசரீரமாகிற அசிங்கியவீட்டில் தள்ளிப்போடுகிறார். இன்னும் சிலபேர்கள் புண்ணியகர்மமாகிற அதிகவாடகை கொடுத்தவர்களுக்கு தேவசரீரமான மேலான வீடு கொடுக்கிறார். அதிலொருவன் ஒரு வீட்டிற்கு அட்வான்சுகட்டி குடியிருந்து வரும்போது இருபது முப்பது வருஷம்வரை குடியிருக்கவேண்டியதாய்ப் பாக்கிவாடகைரூபாயிருக்கும்போதே ராஜாவினிடத்திற் போய் என் சொந்த தேசத்திலிருக்கிற சொந்தமான மோக்ஷவீட்டுக்கு நான் போகிறதென்று நிச்சயித்துவிட்டதால் உன்னிடத்திலிருக்கிற பாக்கிவாடகையும் எனக்கு வேண்டாம். உன்வீட்டை நீயே உன்னுடைய திக்குப்பாலகர்களாகிற சேவகர்களை விட்டுக் காக்கச்சொல்லென்று சொன்னதின்பேரில், அந்த ராஜாவுக்கு அவன்பேரில் விஸ்வாசமுண்டாவதுபோல, தேகாபிமானம் விட்டிருக்கிற இந்த ஞானியினிடத்திலும் ஈஸ்வரனுக்கு விஸ்வாசமுண்டென்றறிக. ஒரு கிரகஸ்தன் தன் பிள்ளைகளுக்குப் படிப்புச்சொல்லுகிற வாத்தியாரிடத்திலும் அவன்வீட்டுவேலை செய்கிறவர்களுக்குச் சம்பளம்கொடுக்கிறவனிடத்திலும் சந்தோஷமடைவதும் வேண்டியதைக் கொடுப்பதும்போல, ஈஸ்வரபக்தர்களாகிற பிள்ளைகளுக்கு பிரம்மவித்தையை உபதேசஞ்செய்வதாலும், அவருக்குக் கைங்கரியம்செய்கிறவர்களுக்கு கடைசியிலிவரிடத்தில் வந்து ஞானபலத்தைப் பெற்றுக்கொள்வதாலும் அவர் சந்தோஷப்பட்டு வேண்டியதைக்கொடுக்கிறாரென்றறிக. ஈஸ்வரன் ஞானியைக்கண்டு சந்தோஷிக்கிறார். உலகத்தில் ராஜனுக்குக் கோடிஜனங்கள் வேண்டினவர்களாயிருந்தாலும் தன் மனோநிச்சயத்தை அறிந்தவன் அந்தரங்கசிநேகிதனாயிருப்பதுபோல, ஈஸ்வரனுக்குங் கோடிஜீவர்களிருந்தாலும் அவருடைய ஞானநிச்சயத்தை ஞானி அறிந்திருப்பதால் அந்தரங்கசிநேகனென்றறிக. இன்னம் ஜகத்தாகிற பறைச்சேரியிலிருக்கிற ஜீவர்களாகிற பறையர்களும் ஈசனாகிய பறைப்பிரபுவும் அனாதியாயிருந்துவருவதில் ஒருஜீவனாகிய பறையன் பிரம்மமாகிய பிராம்மணனாக ஆனதைக்கண்டு பூர்வ அவஸ்தைமாறாதிருக்கிற ஈசனாகிய பறைப்பிரபு இவனை வணங்கினாரென்றறிக. ஒரு ஏழையானவன் தன் வருத்தத்தால் சுவயஞ்சீமானுக்குச் சரியான சீமானாய்விட்டானேயானால் அவன் இவனைக்கண்டு அதிசயப்படுவதுபோல, ஞானியும் நிரம்ப அற்பமான சிதாபாசனாயிருந்தும் தன் வருத்தத்தால் பிரம்மஞானியாய் ஆனதை சுவயம்ஞானியான ஈஸ்வரன் இவனைக்கண்டு அதிசயப்படுகிறார். எதுபோலவென்றால், கருடன் தன்னைப்போலே பறக்கிற பாம்பைக்

கண்டு அதிசயப்படுவதுபோலவறிக. ஒருவன் தனக்குமேலான அதிகாரியினிடத்தில் அந்தரங்கனய்விட்டால் இவன் அவனை நயந்துகொள்வதுபோல, ஈஸ்வரனுந் தனக்குமேலான பிரம்மத்தினிடத்தில் ஞானி அந்தரங்கமாய் விட்டதால் அவர் இவனை நயந்துகொள்ளுகிருர். இன்னும்வெள்ளைக்காரன் இந்தியாவில் வந்தவிடத்தில் எங்கே பார்த்தாலுங் கறுத்தமனுஷர்களாய் தன் பேச்சுத் தெரியாதவர்களாயிருக்கும்போது, தன்பேச்சுத் தெரிந்தவனும், தன்னைப்போலே போதையான ஆகாரஞ்செய்கிறவனும், வெள்ளைநிறமுடையவனுமிருக்கிறவனிடத்தில் எப்படி அதிப்பிரியமுண்டாகுமோ, அப்படி ஈஸ்வரனுகிற துரை ஜெகத்தாகிற இந்தியாவில் அஞ்ஞானிகளாயுள்ள கறுத்தமனுஷர்களே நிறைந்திருக்கிறவிடத்தில், அபூர்வமாய் ஒரு ஞானி தன்னைப்போலே சத்துவகுணமாகிற வெளுப்புநிறமுடையவனும், தத்துவஞானமாகிற தன் சுயபாஷை பேசுகிறவனும், தன்னைப்போலே பிரம்மானந்தபோஜனம் செய்கிறவனுமிருப்பதால் மற்றவர்களுக்கு வேலைவாங்கிக்கொண்டு படிகொடுப்பதுபோலவன்றி, தத்துவஞானியின் சரீரநிர்வாகமெல்லாம் ஈஸ்வரனே நிர்வகிக்கிருர். அது எதினுலென்ருல், ஈசனுகிய பார்ப்பான் ஞானியாகிய பார்ப்பானைக்கண்டு வணங்குகிருர். அதற்குக் காரணமென்னவெனில்,—ஞானி வைதிகரானதால், ஞானியை ஈசன்வணங்குவது நியாயந்தான். அது எதினுலெனில், அவர் லௌகீகரானதால் வணங்குகிருர். ஈஸ்வரனுகிய ராஜாவின் சொந்தக்காரியமாகிய பிரம்மவிசாரமாகிற வேலையை இவர் இடைவிடாமற் பார்ப்பதால், ராஜகாரியம் பார்ப்பவனுடைய வீட்டுக்காரியமுழுமையும் குறைச்சல்வாராமல் ராஜகிரகத்து மனுஷர்களைக்கொண்டு பார்க்கச்சொல்லுவதுபோல, ஈஸ்வரனும் ஞானியினுடைய சரீரரக்ஷணையை அஷ்டதிக்பாலகர்கள் முதலானவர்களைக்கொண்டு பார்க்கச்சொல்லுகிருரென்றறிக. இன்னும் அருமையாய் ஒரு பெண்ணைப்பெற்ற அரசன் அந்த மாப்பிள்ளையைப் பெண்ணேடே நீ ரமித்துக்கொண்டிருந்தால் போதுமென்று சொல்லுவதுபோல ஈசனும் தன்னருமையான ஜீவன்முக்திப்பெண்ணை மணஞ்செய்ய முமுக்ஷுத்துவமாகிற ஆண்குறியில்லாதிருக்குஞ்சமயத்தில், ஒருவன் அக்குறியோடேகூடி அந்த முக்தியாகிற கன்னிகையோடே ரமித்திருப்பதைக்கண்டு சந்தோஷிக்கிருர். இன்னமும் ஒரு அரசனுடைய மூலதனத்தைக் காத்துக்கொண்டிருக்கிறவனை எப்படி நம்புகிருனே, அப்படி ஈசனுடைய மூலதனமான பிரம்மத்தை சதா ரக்ஷித்துக்கொண்டு வருவதால் ஞானியினிடத்தில் அதிகப்பிரியமென்றறிக. ஈஸ்வரன் ஞானியைக்கண்டு சந்தோஷிக்கிருர். ஈஸ்வரன் ஞானிக்கே அதிக உபசாரஞ்செய்வர். அருமையாய் வந்த மாப்பிள்ளைக்கு உபசாரஞ்செய்வதுபோலும், விலைமதிக்கக்கூடாத ரத்தினத்தை விசேஷமாய்ப் போற்றுவதுபோலுமறிக. ஐயா, தாங்களிப்போது சொன்னபடியே பிரம்மகீதையிலும் பிரம்மாவானவர் தேவதைகளுக்கு உபதேசித்துவரும்போது, பரமாத்துவித நிஷ்டனும் சர்வோத்தமனுமிருக்கிற பிரம்மஞானிக்கு எந்தப்புருஷன் சிசுருஷை

செய்துவருகிருனே அவனுடைய இரண்டு பாதகமலங்களை நான் சிரசில் தரிக்கிறேனென்று சொல்லியிருப்பதும்; ஞானயோககண்டத்தில் பரமசிவன் பிரகஸ்பதிக்கு ஞானோபதேசம் பண்ணிவரும்போது, நிரபேக்ஷனும் மனனசீலனும் உபசாந்தனும் ஒருவரிடத்திலும் வைரமில்லாதவனும் ஜீவேஸ்வர ஜகத்துக்களை சமமான பிரம்மஸ்வரூபமாய்ப் பார்ப்பவனுமிருக்கிற பிரம்மஞானியை நான் பின்னாலேயே தினந்தோறும் தொடர்ந்துபோகிறேன். அது எதற்காகவென்று கேட்டால், அவனுடைய பாததூள்களினாலேயே நான் பரிசுத்தமாகவேண்டுமென்று எண்ணியே, அப்படித் தொடருகிறேனென்று சொல்லியிருப்பதாலும்; ரிபுகீதையில் ஞானியினுடைய மகிமையின் லேசமாத்திரத்தையாவது விஷ்ணுவும் சிவனும் பிரம்மாவும் மற்றத்தேவதைகளும் கற்பகோடி காலம்வரையிலும் வர்ணித்தாலும் முடியாதென்று இப்படியெல்லாஞ் சொல்லியிருப்பதாலும், அதை நான் சரியென்று ஒப்புக்கொண்டேன். இனிமேல் அப்படி ஞானிக்கு ஈஸ்வரன் பயப்படுவதற்கும், பிரியப்படுவதற்கும், சுகப்படுவதற்கும், அருமைப்படுவதற்கும், அதிசயப்படுவதற்கும் காரணமென்னவென்று கேட்பாயாகிலதற்குத்தரஞ் சொல்லுகிறோம் கேள். பயப்படுவதற்குக் காரணமென்னவென்றால்,— ஒரு தாசியானவள் குகியஸ்தானத்தில் குஷ்டவியாதிபிடித்திருப்பதை மறைத்துவைத்துக்கொண்டு சபையிலுள்ள சகலமான ஜனங்களையும் தன்னுடைய அபினய விலாசமுதலானதால் மோகிக்கும்படி செய்துகொண்டுவரும்போது, அந்த நடனசபையில் அவளுடைய குட்டுத் தெரிந்தவன் வந்தமாத்திரத்தில் அவள் அவனுக்குப் பயப்படுவதுபோல, ஈஸ்வரனாகிய தாசியும் ஜெகத்தாகிற சபையிலுள்ள ஜீவர்களாகிற ஜனங்களுக்கு முன்பாக தன் மாயாசக்தியாகிற யோனியிலிருக்கிற பொய்யென்கிற குஷ்டவியாதியை மறைத்து, மயக்கி ஸ்தம்பித்து மோகித்துப்பிரமித்து தளதளத்துப்போகும்படி செய்துகொண்டுவருகிற மத்தியில் ஞானியாகிற புருஷன் ஈஸ்வரனுடைய யோனியாகிற மாயையில் குஷ்டமாகிற மித்தியாத்வநோயிருப்பதைத் தெரிந்திருப்பதால் சத்தியமாகிற நல்ல யோனியென்று நினைத்து மயங்கிக்கொண்டிருக்கிற மற்றவர்களுக்கு இவன் இந்த ரகஸியத்தைச் சொல்லிவிட்டால் தன் பிழைப்பும் போகுமென்று பயப்படுவதுபோலும்; இனி பிரியப்படுவதற்குக் காரணமென்னவென்றால்,— ஒரு தாய்க்கு அநந்த கோடிபிள்ளைகள் பிறந்திருந்தும் அந்தத்தாயானவள் அந்தபிள்ளைகளைப் பார்த்து நீங்கள் மஹாராஜனிடத்திற்போய் வேண்டியசம்பத்துக்களை வாங்கி வந்தால் எனக்கு நெல்லுக்குத்து வேலை செய்யவேண்டாமென்று அனுப்பி வைத்ததில், எல்லாப்பிள்ளைகளும் அரண்மனையிலிருக்கிற தோட்டங்களை சுற்றிப் பார்த்துவிட்டு ராஜாவைப் பாராமலும் அவனிடத்திலிருக்கிற சம்பத்துக்களை வாங்கிக்கொண்டு வாராமலும் சும்மாவருகிற பிள்ளைகள் சோற்றுக்குமட்டும் வருகிறதைக்கண்டு விசனித்துக்கொண்டிருக்கும்போது, அதில் அபூர்வமாய் ஒருபிள்ளை அவ்வரசனைக்கண்டு அபேதமான சிநேகம்செய்து, அவனுடைய

சகல சம்பத்துக்களையும் தன்னதாகப் பண்ணிக்கொண்டு, தாயையும் அவளை அனுசரித்துக்கொண்டிருக்கிற பிள்ளைகளையும் காப்பாற்றிவருகிற பிள்ளையினிடத்தில் தாய்க்குப் பிரியமுண்டாவதுபோல, ஞானியினிடத்தில் ஈஸ்வரனுக்குப் பிரியமுண்டாகுமென்றும், அவனால் சுகத்தையடைவதால் சுகிப்பனென்றும், மற்றபிள்ளைகளால் வருத்தத்தை அடைந்ததைப்பற்றி இவனைக் கண்டு அருமைப்படுவனென்றும், இதுவரையிலிப்படி ஒருபிள்ளைகளும் பிரம்மானந்தத்தை யடையாமற்போனதால் இவனைக்கண்டு அதிசயப்படுவனென்றறிக.

269 - வது தரங்கம்.

ஞானியைக்குறித்து ஈசன்முதலானவர்கள் சந்தோஷத்தையும் விசனத்தையும் அடையக் காரணமறிக:—

ஞானப்பியாசம் பண்ணும்போது விக்னஞ்செய்த தேவதைகள் ஞானம் வந்தபின் இவனை வந்து வணங்குகிறார்கள். [எ - தி] பெரியவேலைக்கு வருங் காலத்தில் விக்னஞ்செய்தவர்கள் அந்த வேலை அவனுக்கு ஸ்திரப்பட்டபின் அவனைக் கொண்டாடுவதுபோலும், முதல்முதலில் அய்யோவென்று கத்தினவள் பின் அழுந்தினபிறகு அவனிடத்திலாசைப்படுவதுபோலுமறிக. ஒரு ஜீவன் ஞானத்தால் முக்தியடைந்தால் எறும்புமுதல் ஈசன்வரையில் எல்லோருஞ் சந்தோஷிக்கிறார்களென்றறிக. ஐயா, முன்னே நீரே ஜீவன்முக்தி யடைந்தவனைக்குறித்து சகலரும் விசனிக்கிறார்களென்று சொல்லி இப்போது அதற்கு நேரே யெதிர்மறையாக அவர்கள் சந்தோஷிக்கிறார்களென்று சொன்ன காரணமேதோவெனில், அதற்குப் பரிகாரங்கேள்:— முன்னே விசனிப்பார்களென்று சொன்னது-கீழானவேலையிலிருந்தவன் எல்லோருக்குமேலான வேலைக்குப்போனால் மற்றோர்கள் பொறாமையால் விசனிப்பதுபோல, எல்லாவற்றிற்குங்கீழான ஜீவத்துவத்திலிருந்து எல்லாவற்றிற்குமேலான பிரம்மத்துவத்தை யடைந்ததைப்பற்றி பொறாமையால் விசனிக்கிறார்களென்று சொல்லப்பட்டது. இப்போது சகலரும் சந்தோஷிப்பார்களென்று சொன்னதாவது-இவன் ஜீவத்துவத்தோடு கூடியிருக்கும்போது இவ்வுலகத்திலுள்ள சகலரையுந் துன்பப்படுத்திக்கொண்டிருந்ததால் இவன் பிரம்மத்துவத்தை யடைந்ததால் சகலருக்கும் துக்கம் நீங்கிப்போம். [எ - தி] ஒருசபை ஒருகிராமம் ஒருரயில்வண்டி முதலான இடங்களில் நெருங்கியிருக்கிற ஜனக்கூட்டத்திலிருந்த துஷ்டனை ஒருவன் அதைவிட்டு வெளியேறிப்போனால் எல்லோருஞ் சந்தோஷிப்பது போலவறிக. ஐயா, ஞானிகளைக்குறித்து ஈஸ்வராதி சகலமான தேவர்களும் விரோதத்தையும் சந்தோஷத்தையும் அடைவார்களென்று சொன்னதற்குக் காரணமும், ஞானம்பழகுங்காலத்தில் துக்கமும் பின் சுகமுமாகுமென்பதும் என்னவென்று கேட்பாயாகில் அதற்குத்தரஞ் சொல்லுகிறோம் கேள். வாராய் குழந்தாய்! உலகத்தில் சகலருக்கும் இது அனுபோகசித்தமாயிருக்கும்போது

இதைப்பற்றிச் சங்கிக்கத்தேவையில்லை. அனுபோகசித்தமாவது எப்படியென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன் கேள். பிரசவிக்கும்போது விசனத்தையடைவதும் பிள்ளைபிறந்தபின் சீராட்டிச் சந்தோஷத்தையடைவதுபோலும்; மருந்துசாப்பிடும்போது சங்கடமாயும் ஆரோக்கியமுண்டானபின் சந்தோஷத்தையடைவதுபோலும்; பள்ளிக்கூடத்திற் படிக்கும்போது சங்கடமாயும் பிற்பாடு வித்துவானாய்ச் சபையில் சம்மானம் வாங்கும்போது சந்தோஷமாயிருப்பதுபோலும்; உழுது வெள்ளாமைபோடும்போது பிரயாசையாயும் அதைக்குத்திச் சாப்பிடும்போது சந்தோஷத்தையடைவதுபோலும்; அமிர்தங்கடையும்போது சங்கடமாயும் அமிர்தத்தைக் கடைந்தெடுத்துச் சாப்பிடும்போது சந்தோஷத்தையடைந்ததுபோலும்; வீடுகட்டும்போது பிரயாசமாயும் கிரஹப்பிரவேசமானபின் சுகமாயிருப்பதுபோலும்; யாகம் பண்ணும்போது பிரயாசமாயும் சொர்க்கபோகம் அனுபவிக்கும்போது சுகமாயிருப்பது போலும்; பக்திபண்ணும் போது பிரயாசமாயும் பதமுக்தி யடையும்போது சுகமாயுமிருப்பது போலும்; பிராணயாமம்பண்ணும்போது பிரயாசமாயும் அஷ்டமாசித்தி யடையும்போது அதிக சந்தோஷமாயிருப்பதுபோலுமிருக்குமென்று சொன்னீரானால், இது ஒரு புருஷனுக்கே ஞானப்பியாசம்பண்ணும்போது தாங்கள் சொன்ன திருஷ்டாந்தங்களுடைய அனுபவப்பிரகாரம் முந்தித் துக்கமாயும் ஞானம்வந்தபின் சுகமாயுமிருக்கக்கூடும். இப்போது இவிடத்தில் ஞானமடைகிற புருஷனைப்பார்த்து ஈஸ்வராதிகளன்றோ சுகத்தையுந் துக்கத்தையுமடைகிறார்களென்று முதலில் சொன்னதற்கு இந்தத்திருஷ்டாந்தங்களெப்படி ஒவ்வுதலாகுமென்று கேட்டால், அப்படி ஒவ்வுதலாகும். அதாவது, மேற்சொன்ன திருஷ்டாந்தங்களில் அதற்கு அபிமானிகளுக்கு அந்தந்த் துக்கசுகம்வருவதுபோல அதிஷ்டானதேவதைகள் துக்கசுகத்தையடைவது கிரமசிருஷ்டி. யுகபத்சிருஷ்டியாவது ஞானப்பியாசம்பண்ணுங்காலையில் இவன் சகலமான தெய்வங்களையும் வேறுயும் சகல ஜீவர்களும் ஜகத்தும் நம்மை யென்னசெய்துவிடுமோ வென்று இவன் பயப்படுவதே அவர்கள் துக்கப்படுவார்களென்று சொன்னதின் கருத்து. ஞானம்வந்தபின் ஜீவேஸ்வர ஜகத்துக்களை தானையறிந்துவிட்டதால் சகலதேவதைகளுந் தங்கள்தங்களிடத்தில் சந்தோஷமுண்டாகுவதுபோலுண்டாகுமென்று சொன்ன கருத்தென்றறிக. [எ - தி] சொப்பனகாலமும் விழிப்பும் போலவாம்.

## 270 - வது தரங்கம்.

ஈசன்பார்வையாலேயே பிரகிருதியின் முக்குணம் விரியும் :—

ஈஸ்வரனுடைய பார்வையால் மாயையின் முக்குணங்களும் விரிகிறது. [எ - தி] குஞ்சுகளைக்கண்ட தாய் சிறகை விரிப்பதுபோலும், ஸ்திரீயினுடைய

விகாரப்பார்வையைக் கண்ட புருஷனுக்கு சிசனம் விரிவதுபோலுமறிக. ஐயா ஈஸ்வரனுடைய பார்வையினால் பிரகிருதியினுடைய மூன்றுகுணங்களும் விரியுமென்று சொன்னீர்களே, ஈஸ்வரனென்பது அப்படி விரிந்திருக்கிற மூன்றுகுணங்களுக்குள் சத்துவகுணத்திற் பிரதிபலித்த பிரம்மசைதன்னியமல்லவோ ஈஸ்வரனென்று சொல்லப்படுகிறது. சுருதியும் மாயை அவித்தையென்ற இரண்டுசக்திகளும் ஜீவேஸ்வராளென்கிற ஆபாசர்களைத் தானாகவே கற்பிக்கிறதென்றல்லவோ சொல்லுகிறது. அப்படியிருக்கும்போது தாங்களிவடத்தில் முக்குணங்களும் விரியாமல் ஒன்றுசேர்ந்திருக்கிற மூலப்பிரகிருதியை ஈஸ்வரன் பார்த்தாரென்று சொல்லும்போது, சிருஷ்டிக்குமுன்னமே ஈஸ்வரனிருந்ததாகச் சொல்லவேண்டிவருமே. அப்படிச் சொல்லும்பக்ஷத்தில் சிருஷ்டிக்கு முன்னே ஸ்வகதபேத சஜாதீயபேத விஜாதீயபேதரகிதமான சத்துமாத்திரமேயிருந்ததென்று சொல்லுகிற சுருதிக்கு விரோதம்வருமென்று கேட்பாயாகில், அப்படி விரோதம்வராமலிருக்கும்படி நாம் சமாதானஞ் சொல்லுகிறோம் கேள்:— மண்போலப் பிரம்மம். அந்த மண்ணில் கடசராவாதிகளை யுண்டுபண்ணுகிற சக்தி ஏகதேசமாய் அந்த மண்ணிலிருப்பதுபோல ஜீவேஸ்வர ஜகத்துக்களைக் கற்பிக்கிறதான மூலப்பிரகிருதியென்ற ஓர்சக்தி பிரஹ்மத்தில் ஏகதேசமாயிருக்கிறது. அந்த மாயாசக்தியோடேகூடிய பிரம்மத்துக்கும் ஈஸ்வரனென்று சொல்லப்படும். அனாதியாயிருக்கிற ஜீவர்களெல்லாம் தங்கள் தங்களுடைய கர்மக்ஷயமானகாலத்தில் சகலருக்கும் பொதுவாயிருக்கிற சுழுப்திஅவஸ்தையில் லயித்திருப்பதுபோலும், மெழுகுருண்டையில் தங்க ரேணுக்களடங்கியிருப்பதுபோலும், அடங்கியிருந்த பிரளயாவஸ்தையிலிருந்து வெளிப்படுவதற்கு அந்தந்த ஜீவர்களுடைய கர்மபரிபாகவசத்தினாலும், தன்னிடத்திலிருக்கிற சுத்த சாத்விககுணத்தினாலும், சிருஷ்டிகாலதத்துவமென்று பேர்வைக்கப்பட்டிருக்கிற அந்த ஈஸ்வரனுடைய பார்வையினாலே மூன்றுகுணங்களும் பிரிந்தபின் அந்த ஈஸ்வரனே சத்துவகுணத்திற் பிரதிபிம்பித்து ஈஸ்வரனென்று சொல்லப்படுகிறார். ஐயா, அவருக்கும் ஈஸ்வரனென்றும் சிருஷ்டிக்குப்பின் பிறந்தவருக்கும் ஈஸ்வரனென்றும் எப்படிச் சொல்லக்கூடுமென்றால்,— நீ மூடத்தனமாய் அப்படிச் சங்கித்தாய்! ஒருபுருஷன் ஸ்திரீயோடேசேர்ந்து ஒருபிள்ளையைப் பெற்றால் அந்தப் புத்திரனுக்கும் புருஷனென்றெப்படி சொல்லக்கூடுமென்று கேட்பதுபோலும்; ஒருவிரையைப் பூமியில்போட்டு மரமாய்க் காய்த்து பழமானபின் அதிலுண்டாகிற விரையை விரையென்று சொல்லக்கூடாதென்பதுபோலும்; பிராம்மணனுடைய பிள்ளையைப் பிராம்மணனென்று சொல்லக்கூடாதென்பதுபோலும்; தீக்குச்சியானது தீக்குக்காரணமான மருந்தோடேகூடியிருக்கும்போதும், ஒளி தவனம் செம்மையான குணங்களோடே தீயாய்ப்பிரகாசிக்கும்போதும் அதற்குத் தீக்குச்சியென்ற நாமம் எப்படிச் சொல்லக்கூடுமென்பதுபோலும், நீ சொன்னது இருக்கிறபடியால் யாதொரு விரோதமுமில்லையென்றறிக. ஆனால் ஈஸ்வர

னுடைய பார்வையால் மூலப்பிரகிருதி யெப்படி விரிகிறதென்றால், புருஷ னுடைய பார்வையால் ஸ்திரீக்கு யோனி விரிவதுபோலும், சூரியகிரணத்தால் தாமரைப்பூ விரிவதுபோலும், சந்திரகிரணத்தால் ஆம்பல்பூ விகசிதமாவது போலும், ராஜாவின் பார்வையால் சேவுகர்கள் ஒடிவருவதுபோலும், பகிர்முக திருஷ்டியால் மனசு விரிவதுபோலும், ஈசன்பார்வையால் பிரகிருதி விரிகிற தென்றறிக.

## 271 - வது தரங்கம்.

ஜீவன் மாயையில் சங்கனாயும், ஈசன் அதில் சேராதவராயுமிருக்கிறார்:—

ஈசனும் ஜீவனும் பிரதிவிம்பத்தில் சரியானாலும், ஈஸ்வரன் மாயையுடன் சேராமல் ஜீவன்மட்டுஞ் சேருவன். [எ - தி] தகப்பனுந் தாயும் சமான மாய்ச்சேர்ந்ததால் பிள்ளையுண்டாகிறதானாலும், ஸ்திரீமட்டுங் கெர்ப்பத்தைத் தரிப்பதும், பிரசுவவேதனைப்படுவதும், பீமூத்திரம் அள்ளுவதுமுதலானதில் சம்மந்தப்படுவதும், தகப்பனப்படிச் சம்மந்தப்படாமலிருப்பதுபோலுமறிக. [இ - ர்] ஜீவனுக்கு ஒருவீடு கட்டுவதற்கு அநேக இடம் பொருள் ஏவல்முத லானவை வேண்டியிருப்பதுபோல ஈஸ்வரனுக்கும் உலகத்தை யுண்டுபண்ணு வதில் பிரயாசமுண்டோவென்றால், இந்திரஜாலக்காரன் இந்திரஜாலத்தை யுண்டுபண்ணுவதுபோலப் பொய்யாயுண்டுபண்ணுவதால் பிரயாசமில்லையென் றறிக. ஐயா, ஜீவனும் ஈஸ்வரனும் உபாதிகளில் பிரதிவிம்பித்திருக்கிறது சரியானாலும் ஈஸ்வரன் அந்த உபாதியிற் சம்மந்தப்படானென்று சொன்னீர் களே அப்படியிருப்பதற்குக் காரணமென்னவென்று கேட்பாயாகில், அதற்குத் தாஞ் சொல்லுகிறோங் கேள்:—ஈஸ்வரன் உபாதியிற் சம்மந்தப்படாதிருக்கிற தற்கும் ஜீவன் உபாதியிற் சம்மந்தப்பட்டுத் துக்கியாய் அழுந்திப்போவதற் கும் இரண்டுகாரணமிருக்கிறது அதேதென்றால், புருஷனுடைய சொபாவத் தைப்பற்றியும் உபாதியினுடைய சொபாவத்தைப்பற்றியும், அழுந்தாததற்கும் அழுந்துவதற்குங் காரணமென்றறிக. அதாவது, முதலில் உபாதியினுடைய சொபாவபேதத்தால் சம்மந்தத்தின் பாவாபாவமுண்டென்பதை நிரூபிக்கி றோம், சுத்த ஜலத்திற் போடப்பட்டிருக்கிற தோணி, கப்பல், ஸ்டீமர், தெப் பக்கட்டைமுதலான வஸ்துக்கள் தண்ணீரில் அழுந்தாமல் மிதப்பதும், சகதி யில் மேலேசொன்ன கப்பல்முதலானவைகளைப் போட்டால் மிதவாமல் அழுந் திப்போவதுபோலும்; நல்லராஜரோட்டிற்போகிற வண்டிமுதலானவைகள் பூமியிற் சம்மந்தப்படாமல் வேகமாய்ப்போவதும், மணல் சகதி முதலானவைக ளோடேகூடிய மார்க்கத்திற்போகிற வண்டிகள் குடங்கவிழ்கிறதும் பள்ளத்தில் விழுந்து அழுந்திப்போவதுபோலும்; நிர்மலமான கண்ணாடியில் தன்முகம் நன்றாய்த் தெரிவதுபோலும், அழுக்குக்கண்ணாடியில் அப்பிரகாசமாய்த் தோற் றுவதுபோலும்; ஒரு நஞ்சானது ஆளைக்கொல்வதுபோலும், ஒரு சஞ்சீவியா

னது சாகிறவனைப் பிழைப்புமூட்டுவதுபோலும்; ஒருபால்தானே சாப்பிட்டவனுடைய புத்தியைத் தெளிவிப்பதுபோலும், கள்ளானது சாப்பிட்டவனுடைய புத்தியை மயக்குவதுபோலும்; ஒருபுருஷனே சத்சங்கதியால் சகலவிதமான நன்மைகளையெல்லாமடைவதுபோலும், துஷ்டசங்கதியானது சகலவிதமான நன்மைகளையுங் கெடுத்து தீமைகளையுங் கொடுப்பதுபோலும்; மாயையானது சுத்த ஜலம்போலும், ராஜரோட்டுபோலும், நிர்மலமான கண்ணாடிபோலும், சஞ்சீவிபோலும், சத்சங்கதிபோலுமிருப்பதால் அதில் பிரதிவிம்பித்த ஈஸ்வரனுக்கு சகலவிதமான ஞானமுமுண்டாயிருக்கிறதென்றறிக. அவித்தையானது சகதிபோலும், மணல்போலும், அழுக்குக்கண்ணாடிபோலும், நஞ்சுபோலும், கள்ளுப்போலும், துஷ்டசங்கதிபோலுமிருப்பதால் அதில் பிரதிபிம்பித்த ஜீவன் சங்கத்துவம்முதல் துக்கம்வரை அடைகிறானென்றறிக. இனிப் புருஷனுடைய யோக்கியத்தைப்பற்றிச் சம்மந்தமும் அஃதின்மையுமுண்டாகிறது. [எ - தி] நீச்சுத்தெரிந்தவன் தண்ணீரில் விழுந்தாலும் மிதப்பதுபோலும், தெரியாதவன் விழுந்தமாத்திரத்தில் அமுங்கியிருந்துபோவதுபோலும்; கண்தெரிந்தவன் ஆயிரக்கால்மண்டபத்திற்கூட முட்டிக்கொள்ளாமற் போவதும், கண்தெரியாதவன் குட்டிச்சுவரில் முட்டிக்கொள்வதுபோல ஈஸ்வரனையும் ஜீவனையுமறிக.

## 272 - வது தரங்கம்.

ஈஸ்வரனுக்கு ஞானம் சகஜம், ஜீவர்களுக்கு அப்பியாசித்து வரும்:—

ஈஸ்வரனுக்குத் தத்துவஞானம் சொபாவம், ஜீவர்களுக்கு அப்பியாசம் பண்ணி வரவேண்டும். [எ - தி] குபேரனுக்குப் பணஞ் சொபாவமாயும், மற்றவர்களுக்குப் பணஞ் சிரமப்பட்டுச் சம்பாதிக்கவேண்டுவதுபோலவறிக. ஐயா, ஈஸ்வரனுக்குப் பிரஹ்மஞானம் சகஜமாயிருக்கிறதென்றும் ஜீவர்களுக்குப் பிரஹ்மஞானம் அப்பியாசித்தே வரவேண்டுமென்றும் சொன்னீர்களே, அதற்குச் சுருதி யுக்தி அனுபவங்களென்னவென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ் சொல்லுகிறோங் கேள்:—வாராய் குழந்தாய்! சூதசங்கீதையில் பரமசிவன் மகாவிஷ்ணுவுக்கு ஞானோபதேசஞ் செய்யும்போது "நான் சுயமாகக் குருவன்றியில் பிரஹ்மஞானத்தை யடைந்திருக்கிறேன். ஆகையால் எனக்குச் சமானமாவது அதிகமாவது இந்த ஜகத்தில் ஒருவருமில்லை" என்றும், அப்படியே எக்ஞவைபவகண்டத்தில் சூதமகாரிஷி சௌனகாதிரிஷிகளுக்கு ஞானோபதேசஞ் செய்துவரும்பொழுது "பரமசிவனுக்கு ஒருக்காலும் அஞ்ஞானமாவது, ஆவரணமாவது, அத்தியாசமாவது, விக்ஷேபமாவது, கர்மமாவது, ஜனனமரணசம்சாரமாவதுயாதொன்றுமில்லை" என்றும் சொல்லியிருப்பதாலும், பகவத்கீதையிலும் அர்ச்சுனனைப் பார்த்து—நானே ஆதியில் சுயக்ஞானியாயிருந்துகொண்டு இந்த உற்பத்திநாசமற்ற பிரஹ்மஞானத்தை விவசுவானுக்கு உபதேசித்தேன். அந்த விவசுவான் மனுவுக்கு இதை உபதேசித்தா

றென்றும், மனு இக்ஷுவாகுக்கு உபதேசித்தாரென்றும், அப்படியே பரம்பரையாய் இந்த ஞானத்தை ராஜரிஷிகளறிந்தார்களென்று இப்படியெல்லாம் சொல்வதே சுருதியாகும். இனி யுக்தியாவது ஈஸ்வரனுக்குப் பிரஹ்மஞானம் சொபாவம், மற்ற ஜீவர்களுக்கு அப்பியாசம்பண்ணியே வரவேண்டும். [எ - தி] பிரஹ்மாவுக்கு நாலுவேதங்களும் நாலுமுகத்தால் சொபாவமாய் வந்திருப்பதும், மற்றவர்களுக்கு அத்தியயனம்பண்ணி வரவேண்டியிருப்பதுபோலும்; சரஸ்வதிக்கு வித்தை சொபாவமாய்க் கூடவே யுண்டாயிருப்பதும், மற்றவர்களுக்கு அப்பியாசம்பண்ணி வித்தைகள் வரவேண்டியிருப்பதுபோலும்; சுப்பிரமண்ணியருக்கு விசித்திரசக்தியானது சொபாவமாயுண்டாயிருப்பதும், மற்றவர்களுக்குத் தபசினால் பெறவேண்டியதாயிருப்பதுபோலும்; விஷ்ணுவுக்கு உலகத்தை ரக்ஷிக்கிரதன்மை சொபாவமாயும், மற்றவர்களுக்கு அவர்கிருபையாலது உண்டாவதுபோலும்; பிரகஸ்பதிக்கு புத்தி சொபாவமாயும், மற்றவர்களுக்கு அப்படிப்பட்ட புத்தி புண்ணியத்தாலுண்டாவதுபோலும்; வாயுவுக்கு கமனசக்தி சொபாவமாயும், மற்றவர்களுக்குக் கர்மத்தால் பெறக்கூடியதாயும்; இந்திரனுக்குக் கற்பகவிருக்ஷம் காமதேனு சிந்தாமணி சப்தமேகங்கள்முதலானவைகள் சுவாதீனமாயுண்டாயிருப்பதுபோலும், மற்றவர்களுக்கு அவைகள் தபசினால் பெறக்கூடியதாயிருப்பதுபோலும்; சமுத்திரத்துக்கு ஜலம் சொபாவமாயிருப்பதும், மற்ற நதி தடாகங்களுக்கெல்லாம் மழைபெய்ந்து வரவேண்டியிருப்பதுபோலுமென்றறிக. இனி அனுபவமாவது ஸ்ரீராமனும் வசிஷ்டரிடத்தில் ஞானம்பெற்றிருப்பதும், வசிஷ்டரும் பிரம்மாவினிடத்தில் ஞானம் பெற்றதாயும், பிரம்மாவும் விஷ்ணுவினிடத்தில் ஞானம் பெற்றதாயும் சுருதிகளிற் சொல்லப்படுவதுபோல ஈஸ்வரன் ஒரு குருவைப் போயடைந்து ஞானம் பெற்றாரென்று ஓரிடத்திலுஞ் சொல்லப்படாமையாலும்; தன்னுடைய அனுபவத்திலும் விசுவ தைஜசர்களான ஜீவர்கள் ஆனந்தத்தைப்பெறுவதற்கு புருஷப்பிரயத்தினத்தோடேகூடி மனோவாக்குக்காயங்களால் கர்மங்களைச்செய்து பெறுவதுபோல பிராக்ஞனாகிய ஈஸ்வரன் சர்வேஸ்வரனும், சர்வக்ஞனும், சர்வாந்தரியாமியாயும், சர்வஜெகத்காரணனும், நித்திய நிருபாதிக நிரதிசயசுகத்தை யாதொரு பிரயத்தினமன்றியிலும் யாதொரு கருவிகரணங்களுடைய அபேக்ஷையன்றியிலும் தினமனுபவித்து வருகிற நித்தியானுபவத்தைக்கண்டு, ஈஸ்வரன் சொபாவஞானியென்றும் ஜீவர்கள் முயற்சியால் ஞானத்தைப் பெறக்கடவர்களென்றறிக.

## 273 - வது தரங்கம்.

மதவாதிகளுக்கு வாயாடித்தனமே ஜெயம், மதத்திற்கில்லை:—

மதவாதிகளுடைய மதம் ஜெயத்தையடையவில்லை, வாயாடித்தனந்தான் ஜெயத்தையடைகிறது—பன்றிகள் பீ தின்கப்போவதில் மலத்துக்கு ஜெயமில்

லாமல் வலுவுள்ளபன்றிக்கு ஜெயங் காணப்படுவதுபோலவறிக. சாங்கிய மதகண்டனை:— ஜீவேஸ்வரஜெகத்து மூன்றையும் சத்தியமாய்ப்பார்ப்பது பந்தமென்று சொல்வதற்குள், சாங்கியன் ஜீவனைமட்டும் அந்தப் பந்தத்திற் குள்ளிருந்து விலக்கவேண்டி அவனுக்கு அவிவேகத்தால் பிரகிருதிசங்கம் வந் திருப்பதால், விவேகத்தால் அது போய் முத்தி சித்திக்குமென்று அவன் சொல் வது நியாயமில்லை. ஏனென்றால், ஈஸ்வரனும் ஜகத்தும் சத்தியமென்றிருப்ப தால் அத்துவிதஞானமில்லாததால் முத்தி சித்தியாது. [எ - தி] ஒருவீட்டில் மூன்றுகள்ளர்கள் இவனைக் கட்டிப்போடக் காத்திருக்கும்போது, அதிலொரு வனை மட்டும் விரட்டினதால் எப்படிப் பயந்தீராதோ அப்படிப்போலவறிக. [இ - து] லோகாயுதன்முதல் சாங்கியன்வரையிலுள்ள ஜீவவாதிகளையும், திருணார்ச்சகன் முதல் யோகிவரையிலுள்ள ஈஸ்வரவாதிகளையும் பிராந்தர்க ளென்று சரியாய் எப்படிச் சொல்லக்கூடுமென்றால், நன்றாய்ச் சொல்ல லாம். [எ - தி] ஸமஸ்கிருதபாஷையில் புலம்புகிற கிருக்கனையும், நீச பாஷையில் புலம்புகிற கிருக்கனையும் சமானமாகக் கிருக்கர்களென்று சொல் வதுபோலும்; சிலாமய கணேசசும்பனம் பண்ணுகிறவனையும், அதில் சிரசில் முட்டிக்கொள்ளுகிறவனையும் சமானமாய்ச் சும்பனென்று சொல்வதுபோலும்; விபசாரஞ்செய்கிற ராஜஸ்திரீயையும் விபசாரஞ்செய்கிற ஏழைஸ்திரீயையும் விபசாரியென்று சரியாய்ச்சொல்லுவதுபோலும்; சித்திரத்திலெழுதிய ஈஸ்வ ராதிகளையே கண்கொட்டாமற் பார்க்கிறவனையும், அதிலெழுதிய ஸ்திரீமுதலான ரூபத்தை அப்படிப் பார்க்கிறவனையும் வீணனென்று சமானமாய்ச்சொல்வது போலவறிக. [இ - து] ஒருபுருஷனுக்கும் பிரம்மவிசாரம் பண்ணாமல் மற்ற எந்த மதங்களைப்பிடித்துத் துணிவாயிருந்தாலும் தேகாதிகளுக்கு நாசம்வருங் காலத்தில் மனமானது தபிக்கும். [எ - தி] கிளியானது சொல்லிக்கொடுத்த வார்த்தையை வைத்துக்கொண்டு வருகிறபேர்களையெல்லாம் நீ யார் நீ யாரென்று கேட்கும், தன்னைப் பூனை வந்துபிடிக்கும்போது கீச்சுகீச்சென்று கத்தி மரணத்தையடையும். அப்போது அந்தப்பூனையை நீ யாரென்று கேட் கத் தைரியமில்லாமலிருப்பதுபோலவறிக. [இ - து] வித்துவானானாலும் அகம் பாவத்தால் வாதம்பண்ணப் புறப்பட்டானேயானால் ஓரிடத்தில் அவமானப் படுவன். [எ - தி] சூரனுக்குப் பின்னையொரு சூரனால் மரணம் வருவது போலும், நீச்சுக்காரனுக்கும் ஒருக்கால் நீரில் மரணம் வருவதுபோலும், வேடனுக்கு வேட்டையில் வேங்கைப்புலியால் மரிப்பு நேரிடுவதுபோலும், போகசூரனுக்கும் ரோகசூரத்துவம் வருவதுபோலும், குணசாலியான ராம னுக்கும் லோகநிந்தை வந்ததுபோலுமறிக. [இ - து] சாங்கியன் சொல்லுகிற படி நான் அசங்கனென்றறிந்தாலும் ஜகத்தும் ஈஸ்வரனும் சத்தியமென்றிருப்ப தால் நிர்ச்சலமான முக்தி சித்தியாது. [எ - தி] தேரைக் கையால் அமர்த்தின லும் பின்னால் நெம்புதடியும், முன்னால் கட்டியிருக்கிற வடத்தை இழுக்கிறதும், இருக்கும்போது அது நில்லாததுபோலுமறிக. [இ - ர்] துவிதமதவாதிகளும்

வெட்கமில்லாமல் சுருதிப்பிரமாணஞ் சாதிப்பது 1008 பேரோடேபோன அவிசாரி ஆமக்கனுக்கு ஆண்டுதோறும் திவசம்பண்ணுவதுபோலுமறிக. ஐயா, துவிதமதவாதிகள் தங்கள் தங்கள் மதங்களைச் சுருதிசம்மதமென்று ஸ்தாபிப்பதற்காக சிலபேர்கள் சுருதியினுடைய பூர்வாபரங்களுடைய விசாரமன்றியில் வாக்கியாபாசங்களைத் தங்கள் தங்கள் பக்ஷத்தில் வெட்கமன்றியில் வாதிக்கிறார்களென்பதற்குத் திருஷ்டாந்தமாக விபசாரஸ்திரீ தன் பர்த்தாவுக்குத் திவசம் பண்ணுவதுபோலவென்று சொன்னீர்களே, அவர்களுக்குத் தாங்கள் சுருதி யுக்தி அநுபவத்தோடேகூடியிருக்கிற இந்த ஆத்மஞானத்தை உபதேசிக்கக் கூடாதாவென்றால், ஜன்மாந்திரத்தில் மகா பாபஞ்செய்திருக்கிற புருஷர்களுக்கு இந்த ஆத்மஞானத்தை நாம் உபதேசித்தாலும் அவர்களுக்குக்கொஞ்சங்கூட இந்தஆத்மஞானமானது இறங்காது. [எ - தி] நல்லபாம்பு கடித்து விஷம் தலைமண்டைக்கொண்டவனுக்கு நாம் அறுசுவையுடன் சாப்பாடு செய்வித்தாலும் அவனுக்கு அந்தச் சாப்பாடு ருசியாயும் பிரியமாயுமிராதது போலவறிக.

## 274 - வது தரங்கம்.

ஷட்விதலிங்க தாற்பரியம் சொல்லுகிறார்:—

ஐயா, குருசன்னிதியில் ஆறுலிங்கத்தால் சிரவணம்பண்ணவேண்டுமென்று அடிக்கடி சொல்லிவந்தீர்களே அதை நன்றாய்ச் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறோங் கேள். சாந்தோக்கிய உபநிஷத்தில் ஆறாவது அத்தியாயத்தில் உத்தாலகமகரிஷி சுவேதகேதுவென்கிற புத்திரனாகிய சிஷ்யனுக்கு ஞானோபதேசஞ்செய்ய ஆரம்பித்து ஆறு லிங்கத்தால் சிரவணம் பண்ணிவைத்தபின் அந்த சுவேதகேதுவும் ஞானத்தை அடைந்தாரென்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது உபக்கிரமம் உபசங்காரமிரண்டுஞ் சேர்ந்து ஒருலிங்கம். அப்பியாசம் இரண்டாவதுலிங்கம். அபூர்வதை மூன்றாவதுலிங்கம். பலம் நாலாவதுலிங்கம். அர்த்தவாதம் ஐந்தாவதுலிங்கம். உபபத்தி ஆறாவதுலிங்கம். இதில் சிருஷ்டிக்குமுன்னே சத்துமாத்திரமாயிருந்தது, பிரளயத்துக்குப்பின்னும் சத்துமாத்திரமாய் மிஞ்சுகிறதென்று சொல்லுகிறதே உபக்கிரம உபசங்காரமென்ற முதலாவதுலிங்கமென்றும், பிரம்மமே காலத்திரயத்திலுமுள்ளதென்று சொல்லுகிறதே சுருதியாம். ஸ்திரீவேஷம் போடுமுன்னும் புருஷனையும் அந்தஸ்திரீவேஷம் கலைத்தபின்னும் புருஷனையுமிருப்பதே யுக்தி. நேற்றையத்தினஞ்சுழுப்தியிலும் இன்றையத்தினம் வரப்போகிற சுழுப்தியிலும் இந்த ஜகத்துகாணுமற்போயும் நாமிருப்பதே அநுபவம்.

இரண்டாவது அடிக்கடி பிரம்மமே நீயென்று ஒன்பதுதடவை சுருதி சொல்வதாலும், நாடகமாடும்போதே ஜெனங்களடிக்கடி இன்னானுடைய நாடகம் பசந்தாயிருக்கிறதென்று சொல்லுகிற யுக்தியாலும், சகல விவகாரத்தி

லும் நான் நானென்று விளங்குகிற அனுபவத்தினாலும் காணப்படுகிற இவ்வநு பவமே அப்பியாசமென்ற இரண்டாவதுலிங்கமென்றறிக.

பிரத்தியக்ஷ அனுமான உபமானங்களுக்கு விஷயமாகாமல் சுருதிப் பிரமாணத்திற்குமட்டும் பிரம்மம் விஷயமாகுமென்று சொல்வதே சுருதி. மூன்றாவதுகட்டுக் கேட்டுவாசலிலிருக்கிற டபேதார்களால் ராஜாவின் கருத்துத் தெரியக்கூடாமையால் நாலாவதுகட்டிலிருக்கிற ராஜன்கருத்துத் தெரிந்திருக் கிற மந்திரியால் ராஜபேட்டியாவதே யுக்தி. இதுவரை நாம் பிரத்தியக்ஷாதிப் பிரமாண வாக்கியங்களால் பிரஹ்மத்தை யறியாமல் இப்போது சுருதி குரு வாக்கியங்களால் நாம் பிரஹ்மமென்றறிந்த அனுபவமே அபூர்வதையென்ற மூன்றாவது லிங்கமாம்.

பிராரப்தக்ஷயமானபின் இந்த ஜனனமரண துக்கங்களுக்கு ஏதுவான தேகாதிஜெகத் தோற்றமில்லாமல் அகண்டானந்தமாத்திரமாயிருக்கிற பிரம்ம மாகிறதே பலமென்று சொல்வதே சுருதி. தினம் சாப்பிடுகிறதும் மலஜல விசர்ஜனம் பண்ணுகிறதும், திரும்பப் பசியுண்டாகிறதுமில்லாமல், தேவாமிர் தம் புஜித்து நித்தியதிருப்தனாயிருப்பவன் போலவென்பதே யுக்தி. விதேக முக்தியில்போல இப்போதே ஞானி கிருதகிருத்தியனாயிருக்கிற அனுபவமே பலமாம்.

இனி சிருஷ்டி, ஸ்திதி, பிரளய, பிரவேச, சம்யமன, தத்துவம்பதார்த்த பரிசோதன, பலப்பிரதிபாதகங்களான ஏழுவித அர்த்தவாதமாவது—எந்த வஸ் துவிலிருந்து ஜெகத்துண்டாச்சுதோ, எந்தவஸ்துவினாலே இந்த ஜெகத்து ஜீவிக் கிறதோ, எந்தவஸ்துவிலே இந்த ஜெகத்து லயிக்கிறதோ, எந்தவஸ்து சரீராதி நாமரூபங்களை யுண்டுபண்ணி ஜீவாத்மரூபமாகப் பிரவேசிக்கிறதோ, எந்த வஸ்துவானது புத்திமுதலானவைகளுக்குள் சூக்ஷமமாயிருந்து கொண்டு நேமனம்பண்ணுகிறதோ, தத்பத துவம்பதவிசாரத்தால் பரிசோதிக்கும் போது எந்தவஸ்து ஏகமாக மிஞ்சுகிறதோ, எதையறிந்தால் சகலமும் அறிந்த தாக ஆகுமோ, எதை யறிந்தவன் அதுவாக ஆகிறானென்று சொல்லுகிறதோ அதுவே சுருதியாம். வால்மீகர் நாரதரைப் பார்த்து சகல சற்குணங்களும் பொருந்தியவன் யாரென்று கேட்டதற்கு ராமனைச் சொல்லாமற்சொன்னது போதுமென்பதே யுக்தியாம். ஞானிகள் எந்தவஸ்துவைத் தானாக அறிந்து ஜீவன்முக்தர்களாய் இருக்கிறார்களோ அந்த அவர்களுடைய அனுபவமே அர்த் தவாதமான ஐந்தாவதுலிங்கமாம்.

இனி ஆறாவதுலிங்கமான உபபத்தியாவது ஒரு பானையை மண்ணென்ற றிந்தால் எல்லாப்பானைகளும் மண்ணென்று அறியப்பட்டதாக ஆவதுபோல ஒரு நாமரூபத்தைச் சத்துமாத்திரமென்று அறிந்தால் எல்லாம் சத்தென்றறிந் ததாகுமென்றறிக.

## 275 - வது தரங்கம்.

*தார்க்கீகாதிகள் தேகத்துக்குவேருக ஆத்மாவைச் சொன்னலும் சுருதி சித்தமான ஆத்மாவாக அது ஆகாது:—*

தர்க்காதிசாஸ்திரங்களிலும் தேகத்துக்குவேருக ஆத்மா இருக்கிருரென்று சொல்லியிருந்தாலும் சுருதிசித்தமான ஆத்மாவாகமாட்டார். [எ - தி] சூத்திராதிகளுக்கு விலக்ஷணமான சிகை எக்ஞோபவீதங்களை செட்டிதட்டான்களும் போட்டிருந்தாலும் சுருதிசித்தமான பிராம்மணர்களாகாததுபோலும், கோவில்முறைக்காகத் தாசியும் மடிசார்வைத்துக் கட்டிக்கொண்டு வந்தாலும் நிஜமான பிராம்மணப்பெண்ணுகாததுபோலும், சூத்திரப்பரதேசிகளும் மொட்டை காவிவஸ்திரங்களைப்போட்டுக்கொண்டிருந்தாலும் சுவாமிகளென்று பேர்வைத்துக்கொண்டிருந்தாலும் பிராம்மணசன்னியாசிகளாகாததுபோலு மறிக. ஐயா, தார்க்கீகாதிகளுந் தேகத்துக்குவேருகவே நித்தியராய் ஆத்மா இருக்கிருரென்று சொன்னலும் சுருதிசித்தமான ஆத்மாவை அவர்கள் பிரதிபாதிக்கவில்லையென்று சொன்னீர்களே, சுருதிசித்தமான ஆத்மாவைத்தெரிந்துகொண்ட விவேகிக்கு அவர்களுடைய சகவாசத்தால் என்னகெடுதியென்று கேட்பாயாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிருேம் கேள்:— வச்சிரகோபனென்கிற ராஜனனவன் அஸ்வமேதயாகஞ் செய்யவேண்டுமென்று எக்ஞதத்தரென்ற ரிஷியைப்பார்த்து நான் செய்யப்போகிற அஸ்வமேதயாகத்திற்கு நல்லபசுக்கள் நாலு சாஸ்திரோக்த லக்ஷணமுடையதாய் வாங்கிவரவேண்டுமென்றுவேண்டிய ரூபாய்களைக்கொடுத்து அனுப்பிவைத்தபிரகாரம் அந்த ரிஷியும் அநேகதேசங்களுக்குப்போய்த்தேடி அலைந்து சுருதியிற்சொன்ன லக்ஷணத்துடன்கூடிய நாலு பசுக்களையும் வாங்கிக்கொண்டு வரும்போது, சுங்கச்சாவடிக்காரர் இவரைப் பார்த்து சுங்கங் கேட்கும்போது அரண்மனைக்கு இப்பசுக்கள் போகிறதென்று சொன்னதைக்கேட்ட அவர்கள் சும்மா போகச்சொன்னபின், அச்சாவடியிலுட் கார்ந்திருந்த நாலு வீணர்கள் இந்த நாலு பசுக்களையும் பிடுங்கி அடித்துச் சாப்பிட்டால் நாலுமாசம்வரையில் நிர்ச்சிந்தையாயிருக்கலாமென்று பேசிக்கொண்டு, நால்வருங் குறுக்குவழியாய் இவருக்குமுன்னேபோய் மைலுக்கு ஒருவராக இருக்குஞ்சமயத்தில், இவரைப்பார்த்து "ஓய் பிராம்மணு! ஒநாய்களைப் பிடித்துவருகிறீரே, இதில் ஒருநாயே அநேகரைக் கடித்துக்கொன்றுபோடுமே, நீர் 4 நாய்களைக் கையில் பிடித்துப்போகிறீரே, நீரென்னமாய்ப் பிழைக்கப்போகிறீர்" என்று சொன்னவுடன், இவர் "அடே மூடா! ஆட்டைப்பார்த்து நாயென்று அறியாமல் சொல்லுகிருய், போ போ" என்று சொல்லி ஒருமைல் தூரம் போனவுடன், அங்கேயொருவன் இதுபோலவே சொல்லி ஓடிப்போனபின் இவர் கொஞ்சம் சந்தேகப்பட்டுப்போகும்போது, அங்கேயொருவன் அதுபோலவே சொன்னதைக்கேட்ட இவரும் மகா பீதியுடன் போகும்போது, பின்னே ஒருவன் முன்போலவே சொன்னதைக்கேட்டதும் இவர் "இவைகளை நீ

என்னைவிட்டு விலக்கிவிட்டாயேயானால் உனக்கு நிரம்பச் சுகிர்தமுண்டு" என்று சொன்னதைக்கேட்ட அவனும், இந்த வேப்பு அவைகளுக்குச் சத்துருவான தால் இந்த மரத்தில் சுற்றிக்கட்டிப்போட்டுத் திரும்பிப்பாராமல் ஓடிப்போ மென்று சொன்னபடி அவரும் ஓடிப்போனதுபோல, நீயும் சிரவணாதி நான்கு பசுக்களையும் சுருதிசொன்ன லக்ஷணத்துடன் வாங்கிவந்தாலும் துவைதவாதிக ளாகிற சுங்கக்காரர்கள் உன்னை ஏமாற்றுவதற்காக மாயாவாதமாகிற ஓநாய்க ளென்று சொல்லி மோசப்படுத்துவார்கள். ஆகையால் விவேகியாயிருந்தாலும் தார்க்கிகர்கள்முதலான துவைதவாதிகளோடே சகவாசம்பண்ணினால் கெடுதி வரும். ஆகையால் சத்சங்கதியே செய்யக்கடவாயென்று அனுக்கிரகித்தார்.

## 276 - வது தரங்கம்.

கலியில் கர்மஞ்செய்வது கடினம், மற்றப் புருஷார்த்தம் நாலுந் தடை யில்லை :—

கலியுகத்தில் வேதோக்தமான நித்திய நைமித்திகமுதலான கர்மங்களும் ஆசாரமும் அரிதேயல்லாமல் மற்றப்புருஷார்த்தம் நாலுக்குந் தடையில்லை. [எ-தி] வித்தியாசாலையிற்படிக்கிற வாலிபக்குழந்தைகளுக்குப்போல யாதொரு விரோதிகளுமில்லையென்றறிக. ஐயா, கலியில் பிரஹ்மஞானத்தை யடைவது அதிசுலபமென்று உத்தரவாச்சுதே அப்படியிருக்கும்பக்ஷத்தில் சகலரும்பிரஹ்ம ஞானியாக ஆய்விடலாமே? உலகமெல்லாந் தேடினாலும் ஞானியான ஒருவரை யுங் காணோமே. தங்களுடைய வார்த்தையானது இப்படி அனுபவ விரோதமா யிருக்கக்கூடுமாவென்று கேட்பாயாகில், அதற்கு நாம் உத்தரஞ் சொல்லுகிறோம் கேள்:—இந்தக்கலியில் ஏன் ஒருவரும் ஞானத்தை விசேஷமாயடையவில்லை யென்று கேட்பாயாகில், கேவலம் சுஷ்கவைராக்கியத்துடன்கூடி விவேகசூன் யர்களாய்ப் பெரியோர்களிடத்தில் தோஷதிருஷ்டியே முக்கியமாய்த் தோன்றி நம்பிக்கைவராததால் சில முமுக்ஷுக்கள் ஞானத்தை யடையாமற் கெடுகிறார் கள். பின்னும் சிலமுமுக்ஷுக்கள் தேகாபிமானத்தினாலும் விஷயாசையாலும் குடும்பவிஷயத்தை வெறுக்கமுடியாமல் சத்குருசேவை சத்சாஸ்திர சிரவணமில் லாமற்கெடுகிறார்கள். ஆகையால் கலியில் கொஞ்சம் வினயத்தோடே வைராக் கியமுள்ளவனுக்கே ஞானமுண்டாகும், கேவலம் சுத்தமாயிருப்பவனுக்கு ஞானம் வாராது. [எ - தி] ஒரு பிராம்மணனுக்கு ஒரு சித்தருடைய கிருபை யினால் ஒரு நாகரத்நங் கிடைத்ததால், அந்த ரத்நமுள்ளவிடத்தில் தினம் நூருரூபாயுண்டாகிற விசேஷத்தால், அந்தப் பிராம்மணன் ரத்நம்வைத்திருந் ததால் தானும் எதேஷ்டமாய்ப் புசித்துக்கொண்டு அன்னியர்களுக்கும் அப்ப டியே கொடுத்து வந்திருந்தும், ௩௰௲ ரூபாய்வரையில் மிச்சமாயிருந்ததால் காசி யாத்திரைபோகும்போது, ஒரு கோமுட்டியினிடத்தில் இந்த ரத்நத்தை சாவ தானமாய் வைத்துக்கொண்டு இதிலுண்டாகிற லாபத்தைப்பெற்று நான் வந்த

தும் ரத்நத்தைமட்டும் கொடுத்தாற்போதுமென்று சொல்லிக்கொடுத்துப்போனபின், மூன்றுவருஷங் கழித்து வந்து இவனிடத்தில் ரத்நங்கேட்டதற்கு இவன் இந்த ரத்நமானது என்னதேதவிர உனக்கில்லையென்று சொன்னவுடன், பிராம்மணர் ராஜாவினிடத்திற் பிராதுசெய்ததில் ராஜா கோமுட்டியை வரவழைத்துக் கேட்டவுடன் ரத்நம் வாங்கவில்லையென்று சொன்னதின்பேரில் ராஜா பிராம்மணனைக் காளிகோவிலில் உன் பிள்ளையைப் படுக்கப்போட்டுத் தாண்டி ரத்நம் கொடுத்தேனென்று பிரமாணஞ்செய்தால் கோமுட்டி ரத்நம் கொடுக்கவேண்டியதென்று தீர்மானித்தபடி, பிராம்மணன் பிள்ளையைப் போட்டு காளிகோவிலில் தாண்டினவுடன், இவன்பிள்ளை இறந்துபோனதை கோமுட்டியும் மற்றவர்களுங் கண்டு ராஜாவினிடத்தில் தெரிவித்தபின், இந்தப் பிராம்மணன் அங்கேயே விசனித்திருக்கும்போது, முதல்ஜாமத்தில் அந்தக் காளியை கிருதயுகதேவதை பூஜித்துப்போகும்போது, இவன் தாவந்தத்தைத் தெரிவித்ததில் இது என்காலமில்லையென்று சொல்லிப்போனபின், அப்படியே திரேதாயுகதேவதையும் துவாபரயுகதேவதையும் சொல்லிப்போனபின், 4 வது ஜாமத்தில் பூஜிக்கவந்த கலியுகதேவதையினிடத்தில் தெரிவித்ததும் நீ என் காலத்தில் சுத்த நிஜத்தைச் சொல்லக்கூடாதென்று சொல்லிப்போனபின், பிராம்மணன் ராஜாவினிடத்தில் வந்து லெக்ஷம்ரூபாயும் ரத்நமும் கொடுத்தேனென்று சொல்லிப் பிள்ளையைத் தாண்டினபின் இறந்தபிள்ளையும் எழுந்திருந்ததைப் பார்த்து, ராஜா கோமுட்டியினிடத்திலிருந்து லெக்ஷம்ரூபாயும் ரத்நத்தையும் வாங்கிப் பிராம்மணனுக்குக் கொடுத்த கதை போலவறிக.

## 277 - வது தரங்கம்.

இக்காலத்திலுள்ள முமுக்ஷுக்களே சத்தியம் நீதி கெட்டவர்கள்:—

இக்காலத்தில் சத்தியம் தவறுகிறவன் முமுக்ஷுவேதவிர மற்றவர்களில்லை. அதாவது பாமரன் தனக்குத் தெய்வமான பெண்ஜாதிபிள்ளை பணம்காசுமுதலான ஐகிகசிந்தனையைவிட்டு ஆத்மசிந்தனையில் வாராமலிருப்பதாலும், சரிதைசெய்கிற லாடன்முதலானவர்களும் தனக்குத் தெய்வமான யாத்திரையைவிட்டு ஆத்மசிந்தனைக்கு வாராமலிருப்பதாலும், கர்மியும் தனக்குத் தெய்வமான எக்ஞாதிகர்மத்தைவிட்டு ஆத்மசிந்தனைக்கு வாராமலிருப்பதாலும், பக்தனும் தனக்குத் தெய்வமான ஈஸ்வரபக்தியைவிட்டு ஆத்மசிந்தனைக்கு வாராமலிருப்பதாலும், யோகியும் தனக்குத் தெய்வமான பிராணயாமத்தைவிட்டு இதற்கு வாராமலிருப்பதாலும், முமுக்ஷுமட்டும் தனக்குத் தெய்வமான சற்குருவினிடத்தில் ஆத்மவிசாரம் கொஞ்சம் செய்துகொண்டு கீழேசொன்ன மற்றவைகளில் நாய்போல அலைந்துகொண்டிருப்பதினாலே இவனே சத்தியங்கெட்டவனென்று சொன்னது—குல்ஸ்திரீ விபசாரத்திற்கு அலைவதுபோலிருக்கிறதென்

றறிக. ஐயா, இக்காலத்திலுள்ள முமுக்ஷுக்களே சத்தியங்கெட்டவர்களென்று சொன்னீர்களே அதென்ன காரணத்தினாலென்று கேட்டால், அதற்குத்தரஞ் சொல்லுகிறோங் கேள். சுருதியானது முமுக்ஷுக்களுக்கு பாகிய விஷயங்களிலிருந்து இந்திரியங்களைத்திருப்பி மனதிலடக்கும்படியாயும், சஞ்சலமான மனதை சாக்ஷிவிருத்தியிலடக்கும்படியாயும், சாக்ஷிவிருத்தியை அகண்டாகாரவிருத்தியிலடக்கும்படியாயும், அதை சாந்தமான தன் சொரூபத்திலடக்கும்படிக்கும், புருஷனானவன் இந்த ஆத்மாவே நானென்று அறிந்தால் ஆருக்கு போகநிமித்தியமாய் எந்தப்போகத்தை இச்சித்து சரீரதாபப் படப்போகிறானென்றும், தீரனான முமுக்ஷு பிரம்மமே நானென்றறிந்து அந்தப் பிரம்மப்பிரக்ஞையையே திடம்பண்ணவேண்டுமென்றும், வாக்குக்கு வலியான சத்தங்களைப் படிக்கவேண்டாமென்றும், மனசு நிர்விஷயமாக ஆகிறதே முத்தியென்றும் சுருதி சொல்வதால், முமுக்ஷுவானவன் மனதை நிர்விஷயமாகச் செய்யவேண்டுமென்றறிக. இன்னம் வெகுசுருதிகள் சொல்லுகிறதாவது:— வாசனாரூபமான சித்தமே சம்சாரமென்றும், அதைப் பிரயத்தினத்தினாற் கொல்லவேண்டுமென்றும், நாமரூபமான திருசியத்தைப் பொய்யென்று நேதித்து எல்லாத்தையும் பிரம்மாகாரமாக சிந்திக்கவேண்டுமென்றும், தேகத்தையும் அதில் கற்பிக்கப்பட்டிருக்கிற ஜாதிவர்ணாஸ்ரமகுலகோத்திராதி அபிமானங்களையும், அதைச்சொல்லுகிற வேதசாஸ்திர புராணங்களையும் காலிலொட்டின புழுதியைத் தள்ளுவது போலத் தள்ளவேண்டுமென்றும், பஞ்சேந்திரியங்களாற் கிரகிக்கப்படுகிற பஞ்சவிஷயங்களையும் ஆத்மாவாகவே பாவிக்கவேண்டியதென்றும், தன்திருஷ்டியை சச்சிதானந்தப் பிரம்மமாகிற ஞானதிருஷ்டியாய்ச் செய்து சகல ஜகத்தையும் பிரம்மஸ்வரூபமாகவே பார்க்கவேண்டியதென்றும், சகல அனர்த்தத்திற்கும் சித்தமே காரணமென்றும், அந்தச் சித்தமுள்ளவிடத்தில் மூன்றுலகுமிருக்குமென்றும், அது க்ஷயத்தையடைந்ததானால் ஜகத்தும் நாசமாகுமென்றும், முமுக்ஷுவானவன் புருஷப்பிரயத்தினத்தினால் சித்தநாசம் செய்வதற்கே எத்தனம்பண்ணவேண்டுமென்றும், விழித்ததுமுதல் நித்திரைவரும்வரையில் பிரம்மத்தையே நானென்று சிந்திக்கவேண்டுமென்றும், சதாகாலமும் சகல விவகாரம் பண்ணும்போதும் ஆத்மாராமனாயிருக்கவேண்டுமென்றும், ஞாதிருஞானஞேயங்கள் எந்த இடத்திலுண்டாய் எந்த இடத்தில் லயிக்கிறதோ அந்த இடத்தில் திருஷ்டியை வைக்கவேண்டுமேயல்லாமல் மூக்குநுனியைப் பார்க்கிறதுமுதலானவைகள் ஞானதிருஷ்டியாக ஆகமாட்டாதென்றும், இப்படியெல்லாம் முமுக்ஷுக்களுக்குச் சுருதிகள் விதித்திருக்கும்போது அந்த சுருதிவாக்கியங்களைப் படித்தும் சிரவணம்பண்ணியும் அதில் நம்பிக்கை வாராமல் நாமரூபங்களிலேயே மயங்கிக் கொண்டிருப்பதுந்தவிர அப்படிப் போதிக்கப்பட்ட பெரியோர்களிடத்திலும் நம்பிக்கைவாராததால் இக்காலத்திலுள்ள முமுக்ஷுக்களே சத்தியங்கெட்டவர்களென்று சொல்லப்பட்டது.

278 - வது தரங்கம்.

*பிரதிவிம்பபக்ஷம் அவச்சின்னபக்ஷங்களின் தன்மை:—*

பிரதிவிம்பபக்ஷத்தில் பந்தத்துக்கு யுக்தி:—ராஜாவைப்போல வேஷம் போட்டு மயக்குவதுபோல அஞ்ஞானம் சிதாபாசனைக் கற்பித்து மயக்குகிறது. அவச்சேதவாதத்திற்கு யுக்தி:— ஆத்மாவையே அஞ்ஞானமானது துஷ்டன் கஞ்சாமுதலான மருந்துகொடுத்து ராஜன்புத்தியை மயக்குவதுபோல மயக்கு கிறதென்றறிக. ஐயா, அவச்சேதவாதத்தையும் ஆபாசவாதத்தையும் எந் தெந்தப் பெரியோர்கள் முக்கியமாய் அனுசரித்திருக்கிறார்களென்று கேட்பா யாகில், அதற்குத்தரஞ் சொல்லுகிறேன்கேள். அதில் ஆசாரியசுவாமிகள், வாசுதேவயதீஸ்வரர்கள்முதலான பெரியோர்கள் சொல்லியதாவது— ஆத்மா வுக்குத் துக்கம் எப்படி வந்திருக்கிறதென்றால், சரீரத்தை எடுத்ததினால் துக்கம் வந்திருக்கிறது. சரீரமில்லாத சுஷுப்தியில் ஆத்மா துக்கமன்றியில் சுகமா யிருக்கிறார். ஆத்மாவுக்குச் சரீரம் எதினால் வந்ததென்றால், கர்மத்தினால் வந்திருக்கிறதென்றும்; கர்மமில்லாமற்போனால் ஜென்மமில்லையென்றும்; அந்தக்கர்மம் எதனாற் செய்யப்படுகிறதென்றால், திரிவிதகரணத்தாற் செய்யப் படுகிறதென்றும், ஆத்மா சாக்ஷிமாத்திரமாயிருக்கிறாரென்றும்; அந்தத் திரி விதகரணங்கள் எதனாலேவப்பட்டுக் கர்மங்களைச் செய்கிறதென்றால், ராகத்து வேஷமுதலானவற்றால் ஏவப்பட்டுச் செய்கிறதென்றும்; அந்த ராகத்துவே ஷாதிகள் எதினாலுண்டாகிறதென்றால், நான் பிராம்மணன் நான் ராஜாவென் பதுமுதலான அபிமானத்தாலுண்டாகிறதென்றும்; அந்த அபிமானம் எதினா லுண்டாகிறதென்றால், பிராம்மணனென்பது எங்கேயிருக்கிறது? ஸ்தூலசரீரத்தி லேயா? சூக்ஷுமசரீரத்திலேயா, காரணசரீரத்திலேயா, ஆத்மாவிலேயா, எதிலே யிருக்கிறது? ஸ்தூலசரீரத்திலிருக்கிறதென்றால், சகலருக்கும் ஸ்தூலசரீரம் ஆறு தத்துவம் சரியாயிருக்கிறது. அப்படியே சூக்ஷுமசரீரம் இருபதுதத்துவமும் சகலருக்கும் சரியாயிருப்பதாலும், அதிலும் பிராம்மணனைக் காணவில்லை. காரணசரீரமும் சகலருக்கும் சரியாயிருப்பதினாலும், ஆத்மா பூரணமானதினா லும் அவரிடத்திலும் சொல்லக்கூடாது. பின்னே எப்படி இந்தப் பிராம்மணத் தன்மை வந்திருக்கிறதென்றால், இப்படி விசாரணைபண்ணாத அவிவேகத்தால் வந்திருக்கிறதென்றும்; அந்த அவிவேகம் எதனால் வந்ததென்றால், அஞ்ஞானத் தால் வந்திருக்கிறதென்றும்; அந்த அஞ்ஞானத்திற்குக் காரணம் கேட்கக் கூடாது. அது அநாதி, அது அநிர்வசனீயம். அது பிரஹ்மஞானத்தினாற் போகுமென்றும் சொல்லியிருப்பதால், பிரஹ்மத்தைத்தவிர ஜீவனென்று ஒரு சைதன்யமிருப்பதாகச் சொல்லவில்லை. சங்கை— ஆசாரியரவர்களும் விவேக சூடாமணியில் கடத்தையும் அதற்குள்ளிருக்கிற ஜலத்தையும் அதில் தோற்று கிற பிரதிவிம்பத்தையும்விட்டு ஆகாசத்திலிருக்கிற சூரியனைப் பார்ப்பதுபோல சரீரத்தையும் அந்தக்கரணத்தையும் அதில் பிரதிவிம்பித்திருக்கிற ஜீவனையும்

தள்ளி இந்த மூன்றையும் விளக்கிவைக்கிற சாக்ஷியே நானென்று அறியச் சொல்லியிருக்கிறதேயென்றால், நாம் ஆபாசவாதத்தை அவர்கள் சுத்தமாய்ச் சொல்லவில்லையென்று சொல்லவில்லையே, ஏகதேசமாய்ச்சொல்லி அவச்சேதத்தையே விசேஷமாய்ச் சொல்லியிருக்கிறதென்று சொன்னோம். இனி கூடஸ்த தீபிகையில் ஆகாசத்திலிருக்கிற சூரியனும் கண்ணாடியில் பிரதிவிம்பித்த சூரியனும் சேர்ந்து சுவரை விளக்கிவைப்பதுபோல கூடஸ்தனாலும் புத்தியில் பிரதிவிம்பித்திருக்கிற ஜீவனாலும் இந்தத்தேகம் விளங்கப்படுகிறதென்று சொல்லியிருப்பதுபோல கைவல்லியத்திலும் ஜீவசாக்ஷிமாத்திரமாயென்று சொல்லியதையும் கண்டு இதில் ஒன்றைப்பிடித்து நாம் சாக்ஷியென்றறிவதே முக்கியமென்பதையும் அறிந்துகொண்டு சுகிக்கக்கடவாய்.

279 - வது தரங்கம்.

## நிறை நிறை.

ஜீவனாகிற ராஜாவுக்கு மூன்றவஸ்தைகள் சுபாவமாய் வருவதாயும், துரியாவஸ்தைமட்டும் எவனோஒருவனுக்கு அபூர்வமாய் வெகுபிரயாசத்தால் வரக்கூடியதாயுமிருக்கிறது. இதில் ஜாக்கிராவஸ்தையில் அஞ்ஞானமாகிற சாராயத்தைத் தானுஞ்சாப்பிட்டு, தன் படைகளான இந்திரியங்களுக்கும் நிரம்பக் கொடுத்து பாகியவிஷயங்களாகிற சத்துருக்களுடன் யுத்தஞ்செய்து ஜெயாபஜெயத்தை யடைந்து படைகளையெல்லாம் அவரவர்கள் வீட்டுக்குப் போகச் சொல்லிவிட்டு, சொப்பனமாகிற உள்வீட்டையடைந்து அவ்விடத்தில் தான் மாத்திரம் மனோவிகாரமான பிராந்தியைச் சாப்பிட்டு, முன்னைக்காட்டிலும் அதிகமாய் மயங்கித் தானே தன் படைகளையும் எதிரிகளையும் கற்பித்ததுந் தவிர அந்தக்கற்பனைகளை நிஜமாகவும் தன்னைவிடவேறாகவும் எண்ணி தபித்துக் கொண்டிருக்கும்போது, சுழுத்தியாகிற மூன்றாம்வீட்டில் வசித்துக்கொண்டிருக்கிற அவித்தையாகிற ஸ்திரீ இவனை அழைப்பித்து, இவனுக்கு எதேஷ்டமாய் ஆனந்தமயமாகிற போஜனத்தை ஊட்டிவைத்ததையும் அறியாமல், இப்படி நாடோறும் மூன்றவஸ்தையிலும் தபித்துக்கொண்டிருக்கும்போது, குருநாதனென்ற ஒரு இஷ்டன் வந்து அஞ்ஞானமாகிற சாராயங்களையும் அவித்தையாகிற ஸ்திரீயையும் தத்துவஞானோபதேசத்தால் தள்ளிவிட்டு, அவஸ்தாத்திரய சாக்ஷியாகிய தன் நிஜமான ராஜவடிவத்தைச் சாக்ஷாத்காரமாகக் காண்பித்ததை, அவனும் அப்படியே கண்டு, அந்தத் துரியத்திலேயே சுகித்திருப்பவன் அரிதென்று சொன்னது சரி.

ஜீவனாகிற குரங்கு மனசாகிற கையை விஷயமாகிற இளநீர்கூட்டுக்குள் விட்டு, அதிலிருக்கிற விஷயசுகமாகிற சோற்றை அபிமானங்களாகிற விரல்களால் நிரம்ப எடுத்துப் பிடித்துக்கொண்டு, அதிலிருந்து மனசாகிற கையி

யிருக்கிற சோற்றைக் கைவிட விவேகமின்மையால் கையை வெளியிலெடுக்க முடியாமல் தபித்துச் சாகிறதென்றறிக.

நான் பிரம்மமென்ற ஞானவிஷத்தால் ஜீவனென்கிற குற்றவாளி கருத்துருத்துவமாகிற பிராணனைவிட்டபின், முன் அஞ்ஞானத்தாற் செய்யப்பட்டவைகளான சஞ்சிதகர்மங்களாகிற கொலைக்குற்றங்களும் வாசனைகளாகிற திருட்டுக்குற்றங்களும் ஆகாம்மியகர்மங்களாகிற சிருஷ்டனைக்குற்றங்களும் காமக்குரோதங்களாகிற அடிதடிசெய்திருக்கிற குற்றங்களும் அடியோடே அடிபட்டுப் போனதால், மறுபடி யாரும் எந்தக்குற்றத்துக்கும் எந்தக்காலத்திலும் எவ்விதத்திலும் இவனைத் துடர்ந்து வாதிக்க மார்க்கமில்லையென்றறிக.

பாமரவியாபாரமுதல் யோகபரியந்தம் பொய்யென்று வேதம் விடச் சொன்னால், முமுக்ஷுவுக்குக் குருவும் சிரவணமனனாதிகளும் பொய்யல்லவா? இவைகளை மட்டும் வைத்துக்கொண்டு குருசேவையும் சிரவணாதி நாலையும் செய்யச்சொல்லலாமா? [எ - தி] விபீஷணனும் ராவணாதிராக்ஷஸர்களுடன் கூடப் பிறந்தராக்ஷதனாயிருந்தாலும் அவர்களைக்கொல்ல இவன் சாதகமாயிருந்தபடியால், இராமர் அவர்களையெல்லாம் கொன்றுரேதவிர இவனையும் இவன்மந்திரிகளையும் ஏன் கொல்லவில்லை சொல்? ஆகையால் அஞ்ஞானாதி ராவணர்களைக் கொல்வதற்கு குருவாகிய விபீஷணனும் சிரவணாதிகளாகிற அவனுடைய 4 மந்திரிகளும் சாதகமாயிருந்ததால், வேதமாகிற ராமன் ஜகத்தாகிற இலங்கையில் விபீஷணனை குருவையும் சிரவணமனனாதி 4 மந்திரிகளையும் சிரஞ்சீவியாயிருக்கும்படி ஸ்தாபித்தாரென்றறிக.

அஞ்ஞானமாகிற அக்கினியின் காரியமான அசத்துவாவரண அபானவரணரூபமான அகம்விருத்தி இதம்விருத்திகளாகிற இரண்டு குழாய்வழியாக பிரம்மமில்லை, இது அதுவென்று தோற்றுகிற ஜெகத்தைச் சத்தியமென்கிற ஜுவாலையும் புகையும் வந்துகொண்டும்; அகம்விருத்திரூபமான மற்றொரு குழாயில் நான் கர்த்தா போக்தா, நான் பருத்தேன் இளைத்தேனென்கிற ஜுவாலையும் புகையுமாக மண்டிப்போய், அதனால் நான் பிரம்ம மென்கிற தங்கம் பிரகாசியாமற் போயிருக்கிறது. முமுக்ஷு பிரம்மத்தங்கம்பிரகாசிக்கச்செய்யவேண்டியதாவது— இப்போது முதல்முதலில் பிரம்மமில்லை இதுவதுவென்று வருகிற அசத்துவாவரணரூபமான ஜுவாலையையும் அதின் காரியமான ஜகத்சத்தியமென்கிற புகையையும் பிரம்மமே சத்தியம், ஜகத்துப்பொய்யென்ற பரோக்ஷஞானமாகிற ஜலத்தினால் அந்த ஜுவாலையையும் புகையையும் அதற்குக் காரணமான அஞ்ஞானத்தீயையும் அணைத்தபின்; இதுபோல நாமாரென்ற விசாரத்தினாலுண்டான கைக்கனிபோன்ற நான் பிரம்மமென்கிற அபரோக்ஷஞானமாகிற ஜலத்தால் நான் கர்த்தா போக்தாவென்ற ஜுவாலையையும், நான் பருத்தேன் இளைத்தேனென்ற புகையையும் உண்டுபண்ணு

கிறதான மூலாஞ்ஞானத்தி அணைந்துபோனதால், நானே பிரம்மமென்கிற தங்கம் சதா பிரகாசித்துக்கொண்டிருக்கிறது.

இந்திரியங்கள் வேலைக்காரர்கள்போல, மனது கொத்தன்போல, தேகம் வீடுபோல, ஜீவன் அதில் கிரகப்பிரவேசம்பண்ணுகிற கிரகஸ்தன் போல, மரணம் கடனுக்கு தேகமாகிய வீட்டை ஏலம்போடுவதுபோலவாம். இப்படியே அடிக்கடி வீடுகட்டி ஏலத்தில்விட்டுத் திரிவதால் இவனுக்கு ஒருக் காலும் சுகமில்லையென்றறிக.

ஈஸ்வரனாகிய எக்ஷணிசக்தியுள்ள வித்தையாடி ஜெகத்தாகிற வித்தையைக் காண்பிக்கும்போது ஞானியாகிற எஜமானனும்அஞ்ஞானிகளாகிற குழந்தை களும் வேடிக்கை பார்க்கும்போது, அதிலுண்டாகிற சுகதுக்காகாரமான அருந்தல் பொருந்தல்களைக் கண்டு சிலது இஷ்டமென்று சுகிக்கிறதும், சிலது அனிஷ்டமென்று பயந்து துக்கப்படுகிறதும் அஞ்ஞானிகளாகிற குழந்தை களுக்கே அந்த ராகத்துவேஷம் சொபாவமேயல்லாமல் ஞானியாகிற எஜமா னுக்கு அதைக்கண்டு பொய்யென்று சிரிப்புமாத்திரம் வருமேயன்றி மயக்கம் வாராதென்றறிக. அப்போது பிரபஞ்சமாகிற மண்டபத்திற்கு அஞ்ஞானிக ளாகிற தூண்களே ஆதாரமென்று சொல்வானேனென்றால், குழந்தைகளில் லாதகாலத்தில் எஜமான்மட்டுமிருந்தாலும் எக்ஷணிவித்தைக்காரன் வந்து பார்த்து இங்கே நமக்குக் காரியமில்லையென்றுநினைத்து காணாமல் ஓடிப் போவதுபோல, ஈஸ்வரனும் அஞ்ஞானிகளுக்காகவே தேகாதிஜெகத்தை கற் பனைபண்ணுவதால் அவர்களே ஜகத்துக்காதாரமென்று சொன்னது சரியென் றறிக.

ஸ்தூலசரீரமாகிற வீட்டையும் சூக்ஷுமசரீர அபிமானத்தோடே ஜீவனா கிற அதில் குடிப்போனவனையும் புத்தியாகிற தீபத்தையும் ஆகாசமாகிற ஆத் மாவையும் சேர்த்து நானென்று மூடர்கள் பார்க்கிறார்கள்.

ஜாக்கிறமாகிற அயோத்தியாபட்டணத்தில் மனதாகிற தசரதருக்கு சக்ஷுஇந்திரியமென்கிற ராமனும், சுரோத்திரமென்கிற லெக்ஷுமணனும், துவக்கிந்திரியமென்கிற பரதனும், சிக்வேந்திரியமென்கிற சத்துருக்கனனும், இப்படி நாலுபிள்ளைகளுண்டாயிருப்பதால், இவர்களுக்குள் நேத்திரனென்கிற ராமன் வனவாசமாகிற இமைமூடிக்கொண்டமாத்திரத்தில் மனசாகிற தசரதர் மனோராச்சியமாகிற பிதிர்லோகத்திற்காவது, சொப்பனமாகிற தேவலோகத் திற்காவது, சுழுப்தியாகிற மனுஷலோகத்தில் மரிப்பதாவது ஒன்றை அடை வரேதவிர ஜாக்கிரமாகிற அயோத்தியில் முன்போல ஜீவித்திராரென்றறிக.

சரீரமாகிற பொம்மையை ஈஸ்வரனாகிற சூத்திரதாரி ஜீவசகிதமான சூக்ஷுமசரீரமான கயிற்றைப்பிடித்து ஆட்டிவைக்கிறார். பார்க்கிற ஜனங்

களைப்போல நாம் சாக்ஷிமாத்திரமாயிருக்கிறோம். இதை அஞ்ஞானிகள் அறியாமல் பொம்மையையும் சூத்திரத்தையும் ஆட்டிவைக்கிறவனையும் சாக்ஷியாகிய தன்னையும் பேதந்தெரியாமல் ஒருமைப்பாடாய்க்கண்டு மயங்குகிறார்கள். ஈஸ்வரன் அப்படி ஆட்டிவைத்தும் அதில் சம்மந்தமன்றியில் ஞானியைப்போல சாக்ஷிமாத்திரமாயிருக்கிறார்.

மனசாகிற சிரஸ்தாவுக்கு ஜாக்கிரம் கச்சேரிபோலும், மற்ற இந்திரியங்களெல்லாம் சேவகர்கள்போலும், சிசுனன் தைனத்துசேவகன்போலும், அதாவது சொப்பனமாகிற வீட்டுக்குப்போனாலும் கூடவே போவதாலென்றறிக.

ஈஸ்வரனாகிய ராஜன் முமுக்ஷுவாகிய நாய்க்குட்டிக்குச் சாதன சதுஷ்டயமாகிய ஆபரணத்தைப்போட்டு, மனுஷஜன்மமாகிற பல்லாக்கிலேற்றி, சாதுசங்கமாகிற வெள்ளிக்கிண்ணத்தில் குருகிருபையாகிற பசுவின்பாலில் விசாரணையாகிற அன்னத்தைச் சேர்த்துக்கொடுத்திருக்கும்போது, அந்த க்ஷீரான்னத்தைப்புசியாமல் விஷயமாகிற பீயைத் தின்கப்போன முமுக்ஷுவாகிய நாயை மற்றப்பீதின்கிற அஞ்ஞானிகளாகிற நாய்களோடே திரியக் ஜென்மங்களாகிற தெருவீதியிலலைந்து துக்கங்களாகிற அடிகளையும் அடையும்படி விரட்டிப்போடுகிறார். மறுபடி ஒருக்காலும் இந்தநாய்க்கு மேலேசொன்ன மகிமைகளை ஒருநாளுங் கொடாரென்றறிக.

விஷயவாசனாமலத்தோடே கூடியிருக்கிற சித்தமாகிற வஸ்திரத்தை ஈஸ்வரனாகிற வண்ணானிடத்தில் நிஷ்காம்மியபக்தியாகிற காசைக்கொடுத்து அவர் கிருபையாகிற வெள்ளாவியில்வைத்து சித்தமாகிற வஸ்திரம் சுத்தியாகிற வெளுத்தபிற்பாடுதான் குருவாகிற சாயக்காரன் தன் ஞானமாகிற குசும்பாச்சாயத்தை அதிலேற்றிவைப்பரேதவிர, வாணியன்வஸ்திரம்போல எண்ணைச்சிக்காகிற அசுத்த சித்த வஸ்திரங்களில் இந்த ஞானச்சாயத்தை ஏற்றார். அப்படி ஏற்றினாலும் ஸ்திரமாய்த் தோய்ப்புக்குத் தங்காதென்றறிக.

முமுக்ஷுக்களாகிற புருஷர்களுக்கெல்லாம் மோக்ஷமாகிற விஷயசுகம் அனுபவிக்க இச்சையிருந்தாலும் ஏன் அதை அனுபவிக்கவில்லையென்றால், சாதனசதுஷ்டயமாகிற சிசுனமும் குருகிருபையாலுண்டாகிற விசாரமாகிற லேபனமுமில்லாததால் முக்தியாகிற ரம்பையுடன் அனுபவிக்கமாட்டாமல் விருதாவில் இச்சிக்கிறார்களென்றறிக.

நாவாகிற திருடன் ருசியாகிற திருட்டுகளை சாப்பிடுகிறதான செய்கையைச்செய்தால் மிருத்தியுவானை ஏட்டு இவனை அஜீர்ணரூபமான கையைப்பிடித்துக்கொண்டு அபானவாயுக்களாகிற பிகிஹதி வியாதிகளாகிற கான்ஸ்டேபிள்களை வரவழைத்து துக்கமாகிற விலங்கைப்போடுகிறானென்றறிக.

இன்னும் தேகம் நான் பிரபஞ்சம் சத்தியமென்ற சாராயத்தின் வாசனையால் மயக்கமாய்ப் பிணம்போலக் கிடக்கிறவனை, ஒரு ஸ்திரீவிஷயமாகிற நரி பிடித்துக் கடித்துக்கொண்டு உறவுகொண்டாடுகிறதான தன் ஊளையிடுகிற சப்தத்தால் கடல்வரையிலுள்ள தன் உறவினர்களான நரிகளை வரவழைத்துக் கடித்து ஹிம்சிக்கிறதென்றறிக.

ஆகமசாஸ்திரசித்தாந்தம் பஞ்சாயத்துத்தீர்ப்புப்போலும், ஸ்மிருதிகள் கலெக்டர்தீர்ப்புப்போலும், கர்மகாண்டவேதம் முனிசீப்புமுதலான அசல் கோர்ட்டார் தீர்ப்புப்போலும், பக்தி காண்டவேதம் ஹைகோர்ட்டுத்தீர்ப்புப் லும், ஞானகாண்டவேதஞ் சொல்லுவது சீமைத்தீர்ப்புப்போலுமென்றறிந்து கொள்க.

ஆனந்தமயகோசத்திலேயே சுகம், மற்றகோசங்களில் சுகமில்லை. [எ-தி] ஒரு ஸ்திரீயை நினைப்பதுபோல அன்னமயகோசம், அவளைப்பார்த்துக்கண் சாடைசெய்வதுபோல மனோமயகோசம், அவளோடே பேசுவதுபோல பிராணமயகோசம், அவளோடே போகத்திற்கு இடம்முதலானவைகளை நிச்சயம்பண்ணுவதுபோல விஞ்ஞானமயகோசம், ஒருவருக்குந்தெரியாத இருட்டறையில் பரவசமாய் அவளோடேசுக்கிலமோசனமாகும்வரை திருப்தியாய்ப் போகம்பண்ணுவதுபோல ஆனந்தமயகோசமாம்.

முமுக்ஷுவாகிய பெண் சாதனசதுஷ்டயமாகிற புடத்தால் பக்குவசித்தமாகிற தங்கத்தை சற்குருவாகிற தட்டானிடத்திற் கொடுத்து, சிரவணமாகிற ஆயுதங்களால் பரோக்ஷஞானமாகிற நகையாக்கி, மனனமாகிற பழுப்புச்சுட்டு அபரோக்ஷஞானமாகிற அந்த நகையை வாங்கி, தியானமாகிற சூத்திரத்தில் கோர்த்து, அதைப் பூட்டிக்கொண்டு, சமாதியாகிற கண்ணாடியில் தன்னழகைப் பார்த்து சுகிக்கிறாளென்றறிக.

மலச்சித்தமாகிற செம்பை நிஷ்காம்மியகர்மமாகிற புளியால் தேய்த்து சித்தசுத்தியாகிற சுத்தியைச்செய்யக்கூடுமேதவிர, ஸ்படிகம்போலிருக்கிற ஆத்மாவில் நீலாதிவர்ணம்போல ஆரோபித்த அஞ்ஞானத்தைப் போக்குவதற்கு முக்கியகாரணமானஞானம் விசாரமன்னியில் ஒருக்காலும் கர்மத்தால் வாராது.

இத்தேகமாகிற மடத்தில் அசுத்தமான அஞத்மவாசனைகளாகிற குடும்பிகள் குடியிருந்துவரும்போது, சுத்தவாசனையாகிற சன்னியாசிகள் வந்து வசிக்க வசிக்க அவர்கள் ஒருவரொருவராய் வெளியேறிப் போனவிடந்தெரியாமற் போவதுபோலப் போவார்களென்றறிக.

ஆத்மாவாகிய் பிராம்மணன் அஞ்ஞானமாகிற கள்ளைக்குடித்து தன்னை மறந்துவிட்டதால், மனமுதலிய 17 தத்துவங்களாகிற பறையர்களுடன்

சேர்ந்து அனுத்மவாசனையாகிற மன்மதனென்கிற மகா அக்கினியாலெரிக்கப் பட்டு, தேகாபிமானமாகிற சிசுனத்தைப் பிடித்துக்கொண்டு விஷயங்களாகிற பறைச்சிகளுடன் சேர்ந்து யோனியாகிற நரகத்தில் விழுந்து மயங்கிக்கிடக் கிறபடியால் குருகிருபையால் அஞ்ஞானமயக்கந்தீர்ந்து அனுத்மபறையர்க ளுடைய அத்தியாசமாகிற சகவாசத்தை நீக்கி பழயபடி ஆத்மப்பிராம்மண னுகிறதே ஜீவன்முக்தியென்று பெரியோர்கள் சொல்வதால், அதற்காகவே உன்னையும் சாவதானமாய் இருவென்று சொல்லப்பட்டது.

அஞ்ஞானமாகிற சட்டியில் ஆத்மாவாகிற ஜலத்தைச்சேர்த்து அகங் காரமான தீயால் தபிக்கப்படுவதால், ஆத்மாவாகிற ஜலம் துக்கமாகிற சுடுகையோடேயிருப்பதால், விவேகமாகிற ஜலத்தைவிட்டு அகங்காரமாகிற நெருப்பை யணைத்து, ஞானமாகிற தடியால் அஞ்ஞானச்சட்டியையுமுடைத்த பிற்பாடு, ஜலத்திற்குத் தன் சொபாவமான குளிர்ச்சிவருவதுபோல ஆத்மா வின் சொபாவமான ஆனந்தம் விளங்குமென்றறிக.

விவேகமாகிற கற்பகமரத்தை மனதாகிற குரங்கு சங்கற்பமாகிற கையால் கெடுப்பதால், நான் அகர்த்தா நான் சாக்ஷியென்கிற கனிகளைக் கர்த்தா போக்தாவென்று கடித்துத்தின்பதால், இதில் ஞானக்கனி விருத்தியாவதற்குத் தடையாயிருப்பதால், விவேகியாகிற மரத்துக்குடையவன் இதில் மனதாகிற குரங்கு கிட்டமுட்ட வாராமலிருப்பதற்காக அசங்கற்பமாகிற அஸ்திரத்தால் அதை யடித்துத்துரத்திவிட்டால், மைத்திரியாதியாகிற புஷ்பங்களும் சமத மாதிகளாகிற பிஞ்சுகளும் சிரவண மனனங்களாகிற காய்களும் தியானசமாதி களாகிற பழங்களும் பிரம்மானந்தரசத்தோடேகூடி இவனுக்கு நித்தியதிருப் தியைக்கொடுத்து ஜனனமரண துக்கமாகிற பசிதாகங்களைப் போக்குமென்றறிக.

மனதாகிற புருஷனுக்கு இயற்கையாய்ச் சத்துவகுணமாகிற பெண்ஜாதி யிருந்ததில் ரஜோகுணமாகிற இளையாள் சேர்க்கையால் வந்தபின், அந்த மன தாகிய புருஷனும் அவளும் ஒன்றுசேர்ந்து இவளை வெளியில் ஜாடுமாலிபோல் தள்ளிவைத்திருக்கும்போது, ரஜோகுணமாகிற இளையாள் காமக்குரோத லோபங்களாகிற மூன்றுநாள் விருத்திகளாகிற இரத்தங்களை வெளியில்விட்டுக் கொண்டு வெளியேறிப்போயிருக்கும்போது, சத்துவகுணமாகிற மூத்தாள் இருதயமாகிற வீட்டிற்குள் நுழைந்து மனதாகிற புருஷனுக்கு ஆலோசனையா கிற சமயலைச்செய்து போட்டுக்கொண்டுவரும்போது, குருவாகிய பாம்பாட்டி வந்ததில், இவள் அவனைப்பார்த்து உன்கையில் வைத்திருக்கிற விவேக மாகிற பெட்டியைக் கொடுத்தால் அபிமானமாகிற அரிசியைக் கொடுக்கிறே னென்று சொல்லி, தேகமாகிற குதிரிலிருக்கிற அபிமானமாகிற அரிசியைக் கொடுத்து அதை வாங்கிக்கொண்டிருக்கும்போது, ரஜோகுணமாகிற இளை யாள் வந்து அவிடத்தில் அபிமான அரிசி சிதறியிருக்கிறதைக்கண்டு, அந் தக் குருவாகிய பாம்பாட்டியையும் வைது இவளையும் வையும்போது இவள்

பெட்டியைக் குதிருக்குள் கொண்டுபோய் வைத்ததும், அவள் இவளைப் புருஷனிடத்திற்சொல்லி மூத்தாளை உள்ளேவிட்டால் அபிமான அரிசி கொள்ளைபோய்விடுமென்று சொல்லி இவளை வெளியில் தள்ளும்படிசெய்து, இளையாளானவள் வீட்டிற்குள் புகுந்து தேகமாகிற குதிருக்குள் கைவைத்துப் பார்க்கும்போது விவேகமாகிற பெட்டி தட்டுப்பட்டதும், அதைத் திறந்ததும் அதிலிருந்த ஞானமாகிற கருநாகம் கடித்து ரஜோகுணமாகிற இளையாள் இறந்துபோனதின்பேரில், மனதாகிற புருஷனும் சத்துவகுணமாகிற மூத்தாளும் ஐக்கியமாய் சம்போகித்ததில் ஜீவன்முக்தியாகிற ராணியைப்பெற்று பிரம்மானந்தமாகிற வாழ்வுடன் சுகித்திருக்கிறாளென்றறிக.

குருநாதனாகிற மந்திரவாதி அஞ்ஞானப்பேய்பிடித்து வந்தவர்களுக்கெல்லாம் ஆத்மஞானமாகிற விபூதியைக்கொடுத்து ரக்ஷிக்கிறாரென்றறிக.

மனதாகிற தாய்க்கிழவிக்கு சுரோத்திராதி இந்திரியங்களாகிற தாசிப்பெண்களிருக்கிறார்கள். அவர்களுக்குச் சப்தாதி விஷயங்களாகிற விடர்கள் சுகமாகிற காசுக்களைக் கொண்டுவந்து கொடுத்துக்கொண்டேயிருந்தால், அவள் சந்தோஷிப்பள், இல்லாவிட்டால் சீறிவிழுவளென்றறிக.

தத்துவஞானமாகிய காலில்லாத ஜீவனாகிய ராவுத்தன் மனமாகிற குதிரையின்மேல் சரீரமாகிய சேணத்தைப்போட்டு இந்திரியமாகிற கடிவாளத்தையும் பிடித்துக்கொண்டேறி விஷயமாகிற வீதியில் குதிரைபோனவழியே போகிறான். குதிரை அஞ்ஞானபூமியில் படுத்ததேயானால் இவனும் படுக்கிறான். அது எழுந்திருந்தால் இவனும் எழுந்திருக்கிறான். அப்படியே வெகுகாலம் பரவசனாயிருக்கும்போது, குருவாகிய இஷ்டர் வந்து ஞானமாகிய காலைக்கொடுத்து அசைவற்ற சொரூபஸ்திதியாகிற சிம்மாசனத்தில் வைத்து அகண்டசாம்பிராச்சிய பட்டாபிஷேகஞ்செய்தபின், முன்போலவே மனக்குதிரையோடே சம்மந்தித்தால் ஞானக்காலும் போய் குதிரைவசத்தனாய் திரியவேண்டிவரும். [எ - தி] ஒருவன் குஷ்டம்பிடித்தவளோடே சம்போகம் செய்ததால் குஷ்டத்தையடைந்தவன் சித்தனுடைய அனுக்கிரகத்தால் குஷ்டம்தீர்ந்து சுகமாயானபின் அவளோடே திரும்பச்சேர்ந்தால் குஷ்டம்வந்து கெட்டுப்போகிறவன்போலவறிக. இன்னும் காசிமரணத்துக்காக காலைவெட்டிக்கொண்டு காத்திருந்த அரசன் ஒரு குதிரையின்பேரில் ஏறினதால் அது இவனை அந்தக் காசி தேசத்தைவிட்டு கழுதைப்பிறப்பைக் கொடுக்கப்பட்ட தேசத்திற் கொண்டுபோய்த் தள்ளி மரணமாய்ப்போன கதைபோலுமறிக.

முமுக்ஷுவாகிற சிட்டுக்குருவியால் வாசனாஜாலஜெந்துக்களோடேகூடிய மனதாகிற சமுத்திரத்தை பிரம்மாகாரவிருத்தியாகிற தெற்பைநுனியாலிறைக்கும்போது, குருகடாக்ஷமாகிற கெருடன்வல்லபத்தால் தன் நிஜவடிவான சச்சிதானந்தமென்கிற முட்டையை யடையலாமென்றறிக

மனுஷர்களுடைய மாம்சத்தை ராக்ஷதர்கள் புஜிக்கிறது போல ஜீவனுடைய பிரம்மானந்தமாம்சத்தை ராகத்துவேஷராக்ஷதர்கள் புஜித்துவரும் போது, குருவாகிய ராமர் அவதரித்து இந்த ராகத்துவேஷ ராக்ஷதர்களை நாசஞ்செய்ததால் முமுக்ஷுக்கள் தன் பிரஹ்மசுகத்தை யடைகிறார்களென்றறிக.

சரீரமாகிற தேரை மனதாகிற கொத்தன் பிராணன்களாகிற வடத்தைக் கட்டி இந்திரியங்களாகிற மூடஜனங்களை இழுக்கச்சொல்லும்போது, துர்மார்க்கமாகிற பள்ளங்களில் விழுங்காலையில் ஈசப்பிரேரணையாகிற அச்சுத்தடிகளைப் போட்டுத் தூக்கிச் சன்மார்க்கங்களாகிற ரோட்டில் விழுகிறதும் மறுபடி பள்ளத்தில் விழுகிறதுமே வேலையாயிருக்கிறதைப் பார்த்து, ஈசனே குருவாய் வந்து கருத்துருத்துவமாகிற கொத்துவேலையை நீக்கினால் ஞானமாகிற சுகத்தைப் பெறுவனென்றறிக. மனது தேகாபிமானத்தை விட்டால்தான் சுகமடையுமென்று கருத்து.

முமுக்ஷுக்களாகிற ஜீவர்களுக்கு அஞ்ஞானத்தினாலுண்டாயிருக்கிற பவவியாதிக்குக் குருவாகிய வைத்தியர் முதலில் சாதனசதுஷ்டயமாகிற பேதிமாத்திரையைக் கொடுத்துச் சித்ததேகத்திலிருக்கிற துர்குணதுர்மலங்களை வெளியில் தள்ளினபின், சிரவணதியாகிற குளிகையைக்கொடுத்து. அந்தப்பவவியாதியை நீக்கி மோக்ஷாரோக்கியத்தைக் கொடுக்கிறார். இந்தக் குருவுக்குச் சரியான உபகாரி எவ்விடத்திலுங் காணவில்லையென்றறிக.

பிரம்மமாகிய கல்லை ஈஸ்வரனாகிய கல்தச்சன் ஜகத்தாகிற யானையாய்த் தோற்றப்பண்ணியிருக்கிறான். அஞ்ஞானிகளாகிற குழந்தைகள் பிரம்மமாகிய கல்லை ஜகத்தாகிய யானையாகப்பார்ப்பார்கள். ஞானிகளாகிற நினைவுதெரிந்த பெரிய ஆள்கள் ஜகத்தாகிய யானை பொய், பிரம்மமாகிய கல்லைமாத்திரம் உண்மையென்று பார்ப்பார்கள். கருத்து—சத்தியபுத்தி போகிறதே ஞானமேதவிர சரீராதி தோன்றாமற் போகிறதல்லவென்றறிக.

ஜீவனாகிற புருஷன் அஞ்ஞானமாகிற கடனை வாங்கியிருப்பதால் ஜனனமரணமாகிற வாரண்டு அடிக்கடி வந்துகொண்டிருப்பதற்குப் பிராணபந்தனயோகமாகிற வீடுகளில் ஒழிந்திருந்தாலும், ஈஸ்வரஉபாசனையாகிற ஜாமீன்கொடுத்தாலும், மறுபடிமறுபடி வாரண்டு வந்துக்கொண்டேயிருக்கும். பிரஹ்மஞானமாகிற ரூபாயைக் கட்டினால்தான் அஞ்ஞானக்கடனும் ஜென்மவாரண்டும் தீருமென்றறிக.

ஈசனாகிய தச்சன் பிரபஞ்சமாகிற மரத்தை தன் சங்கற்பமாகிற ரம்பத்தால் கொஞ்சம் அறுத்துத் துக்கமாகிய இடைவெளியை யுண்டுபண்ணி விஷயசுகமாகிய முளையை அதிலடித்துவிட்டு யோகநித்திரையாகிற சாப்பாட்டுக்குப் போயிருக்கும்போது, ஜீவனாகிய குரங்கு விஷயசுகமாகிய முளையை தன் சங

கற்பமாகிற கையைக்கொண்டு பிடுங்கும்போது, அந்த இடைவெளியில் அபிமானமாகிற பீஜத்தை இயற்கையாய்ப் போட்டுக்கொண்டிருந்ததால் அந்த, மூளையைப் பிடுங்கினதும் இந்த இடைவெளி இரண்டும் ஒன்றுசேரும்போது அபிமானமாகிற பீஜம் அதிலகப்பட்டு வேதனையடைந்து கீச்சிப்பூச்சென்று கத்திச் சாவதுபோலவறிக.

5-6-வது பூமிகளிலிருக்கிற வரன் முதலான ராஜாக்களுக்கு மூன்றுபூமிக்குள்ளிருக்கிற முமுக்ஷுக்களாகிற லோகத்தாருடைய பாஷைதெரியாது. இவர்களுக்கு அந்த ஞானமாகிற ராஜபாஷை தெரியாது. நாலாம்பூமியிலிருக்கிற பிரம்மவித்தாகிற மந்திரிக்கு வியவகாரம் பரமார்த்தமென்ற இரண்டு பாஷைகளுந் தெரிந்திருப்பதால், இவரே சகல முமுக்ஷு ஜனங்களும் ஞானசம்பத்தையடையச் சாதகமாயும் அவர்களுடைய சரீரரக்ஷணைகளுக்கும் சாதகமாயும் அவர்களினது தன்மையையும் வெளிப்படுத்தக் காரணமாயுமிருக்கிறாரென்றறிக.

அந்தக்கரணமாகிய மாடு, மனோ புத்தி சித்தங்களென்கிற மூன்றுகாலுடன் அகமென்கிற ஆத்மாவின் காலையுஞ்சேர்த்து அகங்காரியாய் விஷயமாகிற பயிரில் விழுந்து ஜனனமரணமாகிய கொண்டித்தொழுவில் அடைபடுகிறதும் மறுபடி பயிரில்விழுகிறதும் மறுபடி அடைபடுகிறதுமே வேலையாய் வெகுகாலமாய் தபித்துக்கொண்டிருக்கும்போது, குருநாதனனுக்கிரகத்தால் அகமென்கிற காலை அந்தக்கரணத்திலிருந்து பிரித்து ஆத்மாவினுடன் ஐக்கியஞ்செய்த பிறகு திரும்ப இந்த மாடு முன்போல ஓடச்சக்தியில்லாததினால் கொஞ்சவேளை அப்படிக்கிடந்து சுதந்திரமாய் ஓடி ஆகாரஞ்செய்ய இடமில்லாததினால் இறந்து போகிறதென்றறிக.

அந்தக்கரணமாகிற கையில் மனோ புத்தி சித்த அகங்காரமென்கிற நாலுவிரலுடன் அறிவாகிய கட்டைவிரலைச்சேர்த்துச் சம்சாரமாகிற யுத்தத்தை நிகரில்லாமல் செய்துவருங்காலையில், நம் குருவாகிய துரோணர் அறிவாகிய கட்டைவிரலை குருதெக்ஷணைக்காக வாங்கிக்கொண்டுவிட்டதால் விவேகியாகிய ஏகலைவன் ஜீவச்சவமாய்ப் போனானென்றறிக.

மனமாகிய புருஷன் ஆத்மராஜாவுக்கு அஞ்ஞானமாகிற கள்ளைக்கொடுத்து மயக்கி, ஆவரணமாகிய அறையிற்போட்டு வாசனைகளாகிற பூட்டைப் பூட்டிக்கொண்டு காமக்குரோதங்களாகிற சிப்பாய்களை காவற்போட்டு, இவன் ஆத்மாவினுடைய நானென்கிற சித்ரூபக்குதிரையின்மேலேறிக்கொண்டு ஜெகமெங்குஞ் சுற்றிக்கொண்டிருக்கிறான். மத்தியில்மத்தியில் சுகதுக்கமாகிற மேடு பள்ளங்களில் வீழ்கிறதும் கர்மமாகிய புருஷன் மேடுபள்ளத்திலிருந்து நானென்கிற குதிரையின்பேரில் தூக்கிவைக்கிறதுமாய் அடிக்கடி இப்படியே அலைந்து கொண்டிருக்குங்காலையில், அகண்டபரிபூரணமான சுத்த சைதன்னியமே குரு

வாகி வந்து மைத்திரியாதிவாசனைகளாகிற மல்லகசெட்டிகளைக்கொண்டு காமக்குரோதங்களாகிற சிப்பாய்களை ஹதம்பண்ணி, சித்ஜெடவிவேகமாகிற திறவுகோலால் வாசனைகளாகிற பூட்டைத்திறந்து, தத்துவஞானமாகிற தீபப்பிரகாசத்தினால் ஆவரணாந்தகாரத்தைப்போக்கி அகண்டாகாரவிருத்திக்ஞானமாகிற அமிர்தத்தால் அஞ்ஞானமாகிற கள்மயக்கத்தை நிவர்த்தித்தபிறகு, இந்த ஆத்மராஜன் நானென்கிற குதிரையிலேறிக்கொண்டு நான் அசங்கன் நான் சின்மாத்திரனென்று சஞ்சரிக்குங்காலையில், திரும்ப மனதாகிற புருஷன் தலைநீட்டும்போதே ஞானமாகிற கத்தியாற் கொய்யப்பட்டு பிணம்போல விழுந்து கிடக்கிறான். ஆகையால் யாதொரு தடையன்றியில் ஆத்மராஜன் தன்னுடைய நிஜானந்தத்தில் சதா ரமித்திருக்கிறானென்றறிக.

அஞ்ஞானிக்கு ஞானக்கண்ணில்லாததினால் ஸ்திரீவிஷயங்களாகிற பள்ளங்களில் விழுகிறதும், பணங்களாகிற சுவரில் முட்டுகிறதும், ஆத்மானாத்மாக்களாகிற வெளிச்சமிருட்டுத்தெரியாமல் சதா துக்கமுண்டாகிறதுமாய், இப்படித் தபித்துக்கொண்டிருக்கிற அநேக பிராணிகளுக்குள் ஒருவன் குருகடாக்ஷத்தால் ஞானநேத்திரம் பெற்று, கண்ணுள்ளவனுக்கு எப்படி மேடுபள்ளம் வெளிச்சமிருட்டுத் தெரிந்து நிர்பயமாய் சுகமுண்டாவதுபோல, இவனுக்கும் ஞானத்தால் ஆத்மானாத்மலக்ஷணந் தெரிந்துவிட்டதால் ஜனனமரண துன்பந் தீர்ந்து நித்தியானந்தமுண்டாகுமென்றறிக.

நானென்கிற தேருக்கு கர்த்தாவாகிய கொத்தன் சங்கற்பமாகிற மஞ்சிகளை ஒன்றுசேர்த்து மனசாகிற கயிறுமுறுக்கி அந்த மனதாகிற கயிற்றை வாசனையாகிற வடமாக்கி அதனை அந்த நானென்கிற தேரில்கட்டி காமாதிகளாகிற தடிப்பசங்களையும் இந்திரியங்களாகிற சின்னப்பசங்களையும் இழுக்கும்படி செய்ததால் விஷயமாகிற பள்ளத்தில் தேருடன் சகலரும் விழுந்து தபிக்கும்போது, குருவாகிய பிரபு வந்து அவர்களெல்லாரையும் தன்னாக்ஞையால் விரட்டி, ஞானமாகிற குதிரையை அந்த நானென்கிற தேரில்கட்டி விஷயப் பள்ளத்திலிருந்து கரையேற்றி மோக்ஷமாகிற வீட்டுக்குக்கொண்டுபோய்ச் சேர்க்கிறாரென்றறிக.

ஜீவனாகிய இடையன் அகம்விருத்தியாகிய கன்றை அநாத்துக்கஜடவடிவமான தேகங்களாகிற கல்பசுக்களிடத்தில் எவ்வளவு ஜென்மங்கள்தோறும் நானென்று ஊட்டச்செய்து வந்தும் அகம்விருத்தியாகிற கன்று இதுவரையிலும் துக்கமே யனுபவித்துவருகிறதேதவிர சுகலேசமுமடையவில்லை. இப்போது எவனோ ஒரு ஜீவனாகிய இடையன் குருவாகிய பிரபுவினிடத்திலிருக்கிற சச்சிதானந்தப் பிரம்மமாகிற பசுவினிடத்தில் நானென்கிற கன்றை ஊட்டவிட்டதால் அது துக்கந்தீர்ந்து சுகமடைந்ததென்றறிக.

முமுக்ஷுவானவன் புத்தியாகிற ஊற்றுஜலம் வாசனையாகிற சேற்றோடே கூடி கலங்கியிருந்தால் விவேகவிருத்திக்ஞானமாகிற தேற்றாம்பொடியைப் போட்டு தெளியவைத்து தன் சொரூபமாகிற முகத்தைப் பார்த்தபிற்பாடும், இந்திரியங்களாகிற பிரவாகங்கள் உடைக்காமல் ஊற்றை அணைகட்டுவதுபோல வைராக்கியத்தைப்பண்ணிக்கொண்டு, தியானமாகிற ஊற்று மட்டையாலிறைத்து வாசனையாகிற சேற்றைப் போக்கடித்து, சமாதியாகிற ஸ்நானஞ் செய்து சகஜானுபவமாகிற பானத்தால் திருப்தியடைந்திருக்கலாமென்றறிக.

ஜீவனாகிய புருஷன் கர்மமாகிற காசைக்கொடுத்து தேகமாகிற கெட்டஸ்திரீயை வாங்கி அவள்பேரில் நானென்றேறி ஐக்கியபோகஞ் செய்து அதனால் துக்கங்களாகிற பிள்ளைகளை அடிக்கடி பெற்று அனந்தகோடிகாலமாய் வருந்தப்பட்டுக்கொண்டிருக்கிறான். அப்பொழுது குருவாகிற இஷ்டன் இவனுக்கு முன்விவாகஞ்செய்திருந்த அந்தத்தேகமாகிய கெட்டஸ்திரீயைத்தள்ளி, ஆனந்தமாகிற நிஜப்பெண்ணைக் கன்னிகாதானம் பண்ணிவைத்ததால் இவன் அவளிடத்தில் இடைவிடாமல் ஐக்கியபோகஞ்செய்து சுகமாகிற பிள்ளையையும் அவளிடத்திற் பெற்று நித்திய சுகமாக வாழுகிறான். இப்படி உபகாரஞ்செய்கிற குருவை ஒருக்காலும் மறக்காமலிருக்கவேண்டியதென்றறிக.

அசுத்தசித்தமாகிற ஊஷரபூமியில் அஞ்ஞானமாகிற விஷவிரை விழுந்து கர்மமாகிற ஜலத்தால் தேகாத்மபுத்தியாகிற முளையுண்டாய் ஜெகத்தாகிற எட்டிக்காடாய் விஷயதுக்கமாகிற பழங்களுண்டாச்சுது. ஜீவர்களாகிற பக்ஷிகள் இந்தப்பழத்தைச் சாப்பிட்டு மயங்கிக்கிடக்கிறார்கள் அப்போது குருவாகிய பிரபு அதைக்கண்டு விஷயவைராக்கியமாகிற தீயால் இந்தக்காட்டைஎரித்து, சமதமாதிகளாகிற எரு சாம்பல் குழைகளைப்போட்டு இந்தப்பூமியில் மலத்தை மாற்றியபின் சுத்தப்பூமியாய்விட்டதால், அந்த சத்துவகுணமாகிற பூமியில் சுபேச்சையாகிற கற்பகவிரையைப் போட்டு, தன் கிருபையாகிற ஜலத்தாலுண்டான விசாரமாகிற மரத்தை வளர்த்து, தனுமானசிகளாகிற பூ காய்களுண்டாகும்படி பயிற்றுவைத்து, அதன் பின்னுண்டான சத்துவாபத்தியாகிற பழத்தை அந்த பக்ஷிகளைச் சாப்பிடும்படியாகச்செய்தபிற்பாடு, அந்தப்பக்ஷிகள் அந்தப் பழரசத்தை புஜித்ததால் முன்வந்திருந்த மயக்கந்தீர்ந்து திருப்தியையடைந்து, மறுபடி அசம்சத்தியாகிற அந்தப்பழத்தின் ரசத்தை திரும்பத்திரும்ப புஜித்து, பதார்த்தாபாவனையாகிற பரவசத்தை யடைந்து, துரியமாகிற ரசத்தில் லயத்தை யடைந்துவிட்டனவென்றறிக.

ஜீவனாகிய ராஜன் தேகமாகிய சேற்றில்கிடக்கிற நானென்கிற ரத்தினத்தை விவேகமாகிற கையாலெடுத்து, விசாரணையாகிற ஜலத்தினால் கழுவி, சர்வசாக்ஷியாகிற தங்கத்தில் குருகிருபையாகிற பொடியைவைத்து பதித்து, ஞானமாகிற பதக்கமாகச்செய்து சொரூபதிருஷ்டியாகிற கண்ணால் பார்த்துச்

சுகிக்கவேண்டும். மறுபடி தேகமாகிற சகதியில் இந்த நானென்கிற ரத்நத்தை விழாமல் சாவதானமாய்ப் பாதுகாத்திருக்கவேண்டுமென்றறிக.

அவிவேகதிசையில் ஜீவனாகிய துஷ்டன் ரஜோகுணமனசாகிய ஜட்ஜியினிடத்தில் அனியாயமாய்ப் பிரஹ்மமில்லை, நான் கர்த்தா, தேகம் நான், ஜெகத்து சத்தியம், விஷயமே ஆனந்தமென்று பிராதுகொடுத்து, துவைதசாஸ்திரங்களாகிற தஸ்தவேசுகளை தாக்கல்செய்து, ஜெயமுனிரிஷிமுதலான கர்மிகளாகிற சாக்ஷிகளைவிட்டு தன்னிஷ்டப்படி தீர்ப்பு வாங்கினான். இப்போது விவேகதிசையில் விவேகியான புருஷன் பிரம்மமே நான், நான் அகர்த்தா, தேகாதி ஜகத்துப் பொய், விஷயம் துக்கமென்று குருவாகிய வக்கீல்மூலமாய் சத்துவமனசாகிய ஜட்ஜியினிடத்தில் அப்பீல்செய்து, அத்விதசாஸ்திரமாகிற தஸ்தவேசுக்களை தாக்கல்செய்து, வசிஷ்டர்முதலான ஞானிகளாகிற சாக்ஷிகளைக் கொண்டு பிராதுப்படி ருசுப்படுத்தினபடி, மனசாகிற ஜட்ஜியும் பிரம்மமே நான், தேகாதி ஜகத்து நானுமில்லை சத்தியமுமில்லை, சுத்தப்பொய்யென்றும், விஷயமெல்லாந் துக்கமென்றும், தானே ஆனந்தமென்றும் தீர்ப்புச் செய்த பிற்பாடு, எதிரிகள் தங்கள் தீர்ப்பு மாறிப்போனதும்தவிர பிற்பாடு தங்களுக்குத் தண்டனையுங் கிடைக்குமென்று பயந்துகொண்டு போனவிடந்தெரியாமல் போய்விட்டார்களென்றறிக.

ஈஸ்வரனாகிய செட்டி ஆவரணமாகிற காசைக்கொடுத்து ஜீவனாகிற காளைமாட்டை வாங்கி, அந்த ஜீவனாகிய காளைமாட்டின்பேரில் தேகாபிமானமாகிற மூட்டையை வைத்து, ராகத்துவேஷமாகிற தாறுக்குச்சியினாலே குத்தி, சம்சாரமாகிற பொட்டைக்காட்டில் ஜாக்கிர சொப்பனமாகிற மணலிலே ஓட்டிக்கொண்டுபோகும்போது, சுழுப்தியாகிற குளிர்ந்த தோப்பைக்கண்டு ஜீவனாகிய காளைமாடு அதிலோடிப்போய் அந்த சுகமாகிற புல்லையுந் தண்ணீரையுஞ் சாப்பிட்டு தான் முன்பட்ட வருத்தத்தைப் பரிகாரம்பண்ணிக்கொண்டிருக்கும் போது, அந்தச்செட்டி கர்மமாகிற வியாபாரஞ்செய்வதற்காக அபிமானமாகிற மூட்டையை யேற்றி வாசனையாகிற மூக்கணாங்கயிற்றை இழுத்துக்கொண்டு போய் பிரபஞ்சமாகிற சந்தையில் ஜனனமரணமாகிற சரக்குகளை விற்றுமுதல்செய்து, அடிக்கடி இப்படி நடத்திவருகிறான். [இன்னொருயுக்தி] ஜீவனாகிய புருஷன் ஈசனாகிய முதலாளியினிடத்தில் கர்த்துருத்துவமாகிற கடன்களை வாங்கிப்போட்டு சுழுப்தியாகிற மாமனார்வீட்டில் சுகமாயிருக்கும் போது, ஜாக்கிர சொப்பனமாகிற வாரண்டை கர்மமாகிற சேவகன் கொண்டுவந்து வெளியிலிழுக்கும்போது, வாசனானந்தமாகிற கீழ்த்திண்ணையில் சற்றேயிருந்தும் இவன் விடாமல் வெளியிலிழுத்து ஜனனமரணமாகிற ஜெயில்கொட்டடியில் அடிக்கடி அடைபடுகிறான். அப்போது நம் குருவாகிய கிரகஸ்தன் மாடுபோலேயும் கடன்காரன்போலேயுமிருக்கிற இந்த ஜீவனை விவேகமாகிற விலை கொடுத்தும், ஞானமாகிற பணத்தைக் கொடுத்தும் வாரண்டிலிருந்தும்

செட்டியினிடத்திலிருந்தும் திருப்பி, ஜீவன்முக்தியாகிற சூலத்தையும் கிருத கிருத்தியமாகிற ரணவிமோசனத்தையும் செய்ததால், நிர்ப்பயமாய் ஜீவன் முக்தனாய்ச் சஞ்சரிக்கிறனென்றறிக.

ஈஸ்வரனாகிய ராஜன் அநேகம் ஜீவர்களாகிற ஜனங்களுக்குள்ளே எவனோ ஒரு ஜீவனுக்கு மனுஷசரீரமாகிற உத்தியோகத்தைக் கொடுத்தால், இவன் கிரமமாய்ப் பிரஹ்மஞானப்பியாசமாகிற வேலைபார்த்து மோக்ஷமாகிற சம்பளத்தை யடையாமல், துவைதசங்கற்பங்களாகிற அக்கிரமங்களைச் செய்து கொண்டிருந்தால், இந்த உத்தியோகத்தையும் பிடுங்கி நரகமாகிற ஜயிலில் வெகுகாலம் போட்டு, மறுபடி மனுஷஜன்மமாகிற உத்தியோகமுங் கொடாமல் அசுவாதீனமான மிருகாதிஜன்மங்களாகிற வேலையில் நேமிக்கிறார். ஆகையால் இந்த மனுஷஜன்மம் போகிறதற்குமுன்னமே சாவதானமாய் பிரஹ்மஞானத்தால் மோக்ஷமடையவேண்டுமென்றறிக.

குருவாகிற வண்டு அநேக வேதாந்தசாஸ்திரங்களாகிற புஷ்பங்களிலே யிருக்கிற சாரமாகிய தேனைக்கிரகித்து வைத்துக்கொண்டு, பக்குவசித்தமாகிய நாக்கிலூட்டி அஞ்ஞானமாகிற பசியைப்போக்கி மோக்ஷமாகிற திருப்தியை யடையச்செய்கிறது. ஆகையால் குருவில்லாதவனுக்கு ஒருக்காலும் மோக்ஷங் கிடைக்காதென்றறிக.

நானென்கிற புஷ்பத்தையும் பிரம்மமென்கிற புஷ்பத்தையும் குருகிருபையால் பெற்ற பிரம்மாகாரவிருத்தியாகிற நாரால் ஞானமாகிற மாலையாய்க்கட்டி சுகிக்கவேண்டியதென்றறிக. மற்றப்படி ஒருவருஞ் சுகிக்கப்போகிறதே யில்லை.

பிணமாய்ப்போகிற சரீரத்திலும் பிரம்மமிருந்தாலும் அதனால் சம்சார விவகாரமில்லை. சூரியன்போல பிரம்மம், சூரியகாந்தக்கல்லுப்போல அந்தக்கரணம், குடம்போல சரீரம், அந்தக்குடத்தில் அக்கல்லு இருக்கும்வரை தீ யிருப்பதுபோல தேகத்தில் அந்தக்கரணமுள்ளவரையில்தான் விவகாரம். அப்புறமொன்றுமில்லையென்றறிக.

அந்தக்கரணமாகிற கான்ஸ்டேபிள் கர்த்திருத்துவமாகிற களவை தான் செய்து, சும்மாயிருக்கிற ஜீவனுக்கு ஆசையாகிற மருந்தைக்கொடுத்து மயக்கி, இந்திரியங்களாகிற பத்துக்கள்ளர்களுடன்கூட்டி நானே இந்தக் கர்த்திருத்துவமாகிற களவைச்செய்தேனென்று ஒத்துக்கொள்ளும்படி செய்து, ஜனனமரணமாகிற தண்டனையும் அடிக்கடி வெகுகாலமாயடைந்திருக்கும்போது, குருவாகிய பிதா சாதுக்களாகிற பந்துக்களுடன் வந்து, இவன் சுழுப்தியாகிற எங்கள் பட்டணத்திலிருந்து இப்பொழுதுதான் சும்மா வந்தான். இந்திரியங்களாகிற கள்ளப்பயல்களுடன் மனதாகிற கான்ஸ்டேபிள் கருத்திருத்துவமாகிற

திருட்டை தான் செய்து அநியாயமாய் இவனை ஒப்புக்கொள்ளும்படி மயக்கினானென்று சொல்லும்போது, அந்தக் குருநாதனுடையவும் சாதுக்களுடையவும் கிருபையைப்பெற்ற இந்த ஜீவனும் அப்போது ஆசையாகிற மருந்தினுடைய மயக்கந்தெளிந்து, "நானொன்றும் செய்யவில்லை, இவாள் சொல்லச்சொன்னபடி சொன்னேனேதவிர நான் அகர்த்தா" என்று துணிவாய்ச் சொன்னபிற்பாடு, மனதுக்கே கர்த்திருத்துவமென்று இவனை ஜனனமரணமாகிற தண்டனையிலிருந்து ஈசனால் விடுதலைசெய்யப்பட்டதென்றறிக.

முமுக்ஷுவுக்கு மூடசங்கதி காட்டுத்தீப்போல, சற்சங்கதி வெய்யிலிலே கிடக்கிற மீனுக்கு தடாகம்போலவென்றறிக.

ஒரு மனுஷனாகிய ஜீவன் சரீரமாகிற ராஜனை அபிமானித்து, அவனிடத்தில் அபேதமான சிநேகஞ்செய்து அவனால் நித்தியவாழ்வைப் பெறலாமென்று நினைப்பது சுத்த மூடத்தனம். அதெப்படியென்றால், இந்தராஜனுக்குப் பிரபலமான மரணமென்கிற சத்துருராஜன் ஆதிவியாதியென்கிற படைகளை முன்னே அனுப்பித்து தேகராஜனிடத்திலிருக்கிற சக்தி புத்தி முதலான படைகளைக் கொல்லும்படிக்கு அனுப்பிவைத்து, அவர்கள் வந்து இவனை அசக்தனாய்ச் செய்தபின் மரணமாகிற ராஜன் இவனை அதிசுலபமாய்க் கொன்றுவிடுகிறான். ஆகையால் ஆகாசத்திலெறிந்த கல் கீழே விழுமென்பது உறுதியாயிருப்பது போல எடுத்த சரீரமும் கீழே விழுந்து மரிக்குமென்று நிச்சயமாயறிந்து, இவன் சிநேகத்தைவிட்டு அழியாத ஆத்மராஜனே நானென்று அபேத சிநேகஞ் செய்து நித்தியவாழ்வைப் பெறக்கடவன்.

மண்குதிரைபோலச் சரீரம். மடுப்போல விஷயங்கள். அதின்மேலேறுவது போல தேகம் நானென்பது. அதனுடன் ஒன்றுசேர்ந்து அதிலிறங்கிறவன் ஜீவன். அதில் சாகிறதுபோல விஷயத்தில் மாய்கிறது. ஆனதால் விவேகியாயுள்ளவன் தேகாபிமானத்தையும் விஷயாசையையும்விட்டு, விவேகமாகிற குதிரையிலேறி ஞானமாகிற ரோட்டுவழியாய் மோக்ஷமாகிற வீட்டை யடையவேண்டுமென்றறிக.

ஜடமாகிய ஜகத்தைக்கண்டு சித்தாகிய நாம் பயப்படுகிறதற்குமேல் முட்டாள்தனமொன்றுமில்லை. [எ - தி] பிணமாகிய புருஷனைக் கண்டு ஜீவித்திருக்கிற ஸ்திரீ பயப்படுகிறதுபோலும், பொம்மையைக்கண்டு குழந்தைகள் பயப்படுகிறது போலுமறிக.

சித்தமாகிற ஊற்றில் துர்வாசனைகளாகிற சேரும் காமாதிவிருத்திகளாகிற கலக்கமுள்ளதண்ணீர் நிரம்பியும், அதை இறைப்பதற்குச் சாதனமும் பழக்கமுமில்லாதவனும் தன் சொந்தபுத்தியாகிற கையால் இறைப்பதினால் முன்னிருந்த வைராக்கியமாகிற கரையும் கரைந்து வெளியிலிருக்கிற விஷயவிருத்திகளாகிற ஜலங்களும் பெருகி புத்தினைவதாகிற கையும் வலியெடுத்து தபிக்கும்

போது, குருநாதனுகிற புருஷன் அதைப்பார்த்து இரக்கத்துடன் வந்து இவனை அதைவிட்டு வெளியேற்றி உபதேசமாகிற ஊற்றுப்பட்டையாலிறைத்து, சத்வாசனையாகிற மண்வெட்டியால் உள்ளேயிருக்கிற துர்வாசனைகளாகிற சேற்றை எடுத்தெரிந்துகொண்டிருக்கும்போது, இவன் இந்திரியசேஷ்டைகளாகிற விளையாட்டைச் செய்து அந்தக்கரையைக் கரையும்படி செய்யும்போது, இந்தக் குருநாதன் அதற்காக எவ்வளவு வைது அடித்தாலும் கோபமில்லாமலிருப்பன். [எ - தி] பலாப்பழத்தில் மொய்த்த ஈ விசிறுனும் அது அதைவிட்டுப் போகாததுபோலும், ஸ்தன்னியபானம் பண்ணுகிற குழந்தையை தாய் தள்ளினும் போகாததுபோலும், தாசிமோகமுள்ளவனை அவள் உதைத்துத் தள்ளினும் அவன் போகாததுபோலும், இவனும் அவர் தள்ளினும் போகானென்றறிக.

குருவாகிற ஆசாரி சம்சாரமாகிற மலையிலிருக்கிற பக்குவசித்தமாகிற கல்லைப்பார்த்து கிருபையாகிற உளியாலடித்து அந்த மலையைவிட்டுப் பிரித்துக்கொண்டு வந்து, விவேகவைராக்கியமாகிற நூலைப்போட்டு ராகத்துவேஷாதிகளாகிற மேடுபள்ளங்களை நிவர்த்தித்து, உபதேசமாகிற சித்துளியாலடித்து தத்துவஞானியாகிற விக்நேஸ்வரனாகச் செய்து, ஈஸ்வரன்முதலான சகல ஜனங்களும் பூஜிக்கும்படியான மகிமையை யுண்டுபண்ணுவதால் குருவை ஆசாரியாக வர்ணிக்கப்பட்டதென்றறிக.

பட்டிக்காட்டிலிருக்கிறவன் ரயிலேறிக் காசிப்பட்டணத்துக்குப் போய் சுகித்திருப்பதுபோல அதிகாரியை அறியத்தக்கது. அதாவது— முதலில் ரூபாய்தேடுவதுபோல சாதனசதுஷ்டயம். அதையுடைய புருஷனுக்கே குருவாகிய துரை அநுக்கிரகமாகிற டிக்கட்டைக்கொடுத்து, சிரவணமாகிற வண்டியிலேற்றி மனனமாகிற விசையைத் திருப்பி இவனையும் நிதித்தியாசனமாகிற சாவதானத்தால் அந்த அநுக்கிரகமாகிற டிக்கட்டை சாவதானம்பண்ணச் சொல்லி, சமாதியாகிற காசிஸ்டேஷனிலிருக்கிற கெங்கையில் முழுகும்படி செய்து, ஆத்மசாக்ஷாத்காரமாகிற விஸ்வேசுவரரையும் தரிசிப்பித்து, ஜீவன்முக்தியாகிற அந்தக்காசிப்பட்டணத்தில் சுகித்திருக்கும்படி செய்த குருநாதனை ஒருநாளும் மறக்கத்தக்கதன்றென்றறிக.

ஜீவாத்மதீக்ஷிதரின் யாகக்கிரமமும் அதன் நிவர்த்தியுஞ் சொல்லப்படுகிறது. இவர் முதலாவது ஆனந்தமயனுகிற அரணிக்கட்டையில் அடங்கியிருக்கிற துர்வாசனையாகிற அக்கினியானது கர்மமாகிற கடைச்சலால் கடையும்போது, விஞ்ஞானமயனென்கிற தீப்பொறியாய்க் கிளம்பினதும் மனோமயனென்கிற செத்தையைச்சேர்த்து பிராணமயனென்ற குழலால் ஊதும்போது தீப்பற்றிக்கொண்டதும், அன்னமயமாகிற கட்டைகளைப்போட்டு அதில் தீப்பற்றி எரியும்போது, இந்திரியங்களாகிற ரித்துக்கள் விஷயங்களா

னென்று நம்பித் தூக்கித்திரியும்போது, பின்னும் அநேக முடங்களைத் தூக்கும்படியான வாசனைகளைச் செய்துகொண்டும், இதனால் முடங்களைத் தூக்கி இவ்வளவென்று சொல்லப்படாத கஷ்டத்தையும் அவமானத்தையும் அனுபவித்து இப்படி ஓயாமல் திரியும்போது, அந்த ராஜாவுக்கே தயவுபிறந்து சிநேகிதிபோலக் குருரூபத்தை எடுத்துக்கொண்டு வந்து, இந்த மனசாகிற ஸ்திரீக்கு நிஜநாயகன் அனுபவத்தால் வருகிற சுகத்தையும், சோரநாயகன் அனுபவத்தால் வந்திருக்கிற கெடுதலையும் போதித்ததின்பிறகு, இந்த மனசாகிற ஸ்திரீ தேகாத்மபுத்தியைவிட்டு ஆத்மராஜனுடன்கூடி அகண்டநித்தியசுகத்தில் வாழுகிறாள். இனி ஒருக்காலும் தேகமாகிய செத்தமுடத்தை தூக்க வெளியே வரமாட்டாள்.

ஓரிடத்திலுள்ள முமுக்ஷுக்கள் குருசன்னதியிலிருக்கிற சாதுக்களுக்குக் கடிதமனுப்பித்த விபரமாவது:— குருநாதனைச் சீக்கிரம் எங்களிடம் கூட்டிவரவேண்டுமென்று எழுதிய எழுத்துக்குச் சாதுக்கள் பதிலெழுதின விபரமாவது— குருவாகிற வண்டி இவ்விடத்திலிருக்கிற முமுக்ஷுக்களாகிற பள்ளத்தில் விழுந்துகிடப்பதால் தாங்களாகிற மாடுகள் வந்து முன்னாலே யிழுத்தால் பின்னாலே தள்ளிக்கொண்டு வரலாமேதவிர மற்றப்படி எங்களுக்கு அந்தவண்டியை இழுத்துவரும்படியான பக்தியாகிற சக்தியில்லை. பின்னும் குருவாகிற கெங்கையானது முமுக்ஷுவாகிற ஈஸ்வரனுடைய பக்தியாகிற ஜடையில் கட்டுப்பட்டிருப்பதால் தாங்களாகிற பகீரதன் தபசினால் கெங்கையை அவன் பெற்றதுபோல நீங்களும் பரமகுரு கிருபையினால் குருவைத் திருப்பிக்கொண்டு வரலாம். குருவை வரவழைக்க அவருக்குக் குருவான பரமகுருகிருபை ஏதுக்கெனில்— பழமுதலான பிரயோஜனம்வேண்டினவன் விருக்ஷத்தினுடைய வேரில் ஜலம்விட்டால் மரம் பூத்துக் காய்ப்பதுபோலும், பசுமாட்டுக்கு வாயில் பருத்திக்கொட்டையை வைத்தால் முலையில் பால்கறப்பதுபோலும், ஊற்றை இறைத்தால் சுத்தஜலம் புறப்படுவதுபோலும், அரணியைக் கடைந்தால் அக்கினி கிளம்புகிறதுபோலும், நாயகனை உபசரித்தால் நாயகிக்கு சந்தோஷம் வருவதுபோலும், வஸ்திரத்தை வெள்ளாவியில் வைத்தால் வெளுப்பாவதுபோலும், நீங்கள் அஸ்வத்தநாதனிடத்தில் பக்திசெய்தால் குருநாதனாகிற நல்லபாம்பு உங்கள் சித்தங்களாகிற தப்பளைகளைப் புஜித்து சாதுக்களாகிற மந்திரவாதியிடத்தில் நடனமாடிக்கொண்டிருக்கும். இந்த ஆனந்த நடனத்தைப் பார்க்க உங்கள் இரண்டு கண்கள் போதாது, அனந்த நேத்திரங்கள் வேண்டுமென்றறிக.

அந்தக்கரணமாகிற புருஷன், அவனுக்கு நாலவஸ்தை. அதில் சங்கற்ப விகற்பரூபமான மனசே பாலியம். ஏகாக்கிரமான புத்தியே கௌமாரம். நான் கர்த்தாவென்ற அகங்காரமே எவ்வனம். நடந்ததை நினைத்துக்கொண்

டிருக்கிற சித்தமே வார்த்தீகம். இந்தப்புருஷனுக்கும் அவனவஸ்தைகளுக்கும் சாக்ஷியாக நாமிருக்கிறோம்.

கட்டுப்பொம்மையை காசுக்குத் தூக்குகிறவனைப்போல, ஜீவன் இந்தத் தேகத்தை கர்மமாகிற காசுக்குத் தூக்குகிறான். ஒரு பொம்மையைத் தூக்கிப்போகும்போதே அநேகம் பொம்மையைத் தூக்குகிறதற்கு காசு வாங்குகிறதுபோல, இச்சீவனும் ஒரு தேகத்தையெடுத்து ஜீவித்திருக்கும்போதே அநேகம் தேகத்தை எடுக்கும்படியான கர்மத்தைச் செய்வதால் ஜன்மங்களுக்கு ஓய்வில்லை. ஆதலால் பொம்மைகளுக்குள்ளிருக்கும்போதே பொம்மைக்கு வேறாகிய தன்னை யறிந்துகொண்டால் சுகியாகலாம்.

மனசாகிய கூத்தாடி ஜாக்கிர சொப்பனங்களாகிற கூத்தையாடிவிட்டு, சுழுப்தியாகிற போஜனம்செய்து திரும்ப முன்போலவே கூத்தாடுகிறான். அவன் தானே பின்னும் மனோராஜ்ஜியமுதலான அநேக சாரங்களாகிற நாடகத்தை சாக்ஷியாகிய நம்முடைய சன்னிதானபலத்தினால் நடனம்செய்வதினால், அந்தக் கூத்தில் நாம் உபேக்ஷைபண்ணினால்தான் இது ஓயும்.

மனது தனதுசன்மார்க்கமான பிரஹ்மாப்பியாசத்தை விடாதிருந்தால் ரஜோகுண தமோகுணங்கள் தானே போய்விடும். [எ - தி] சோரனும் சாரபுருஷனும் வீட்டுக்குச்சொந்தப்புருஷன் முழிப்பாயிருந்தால் அவர்களோடிப் போவதுபோலவறிக. மாயையான ராத்திரியில் விவேகன் விழித்திருந்தால் தேகம் நானென்கிற சோரனும், விஷயம் சத்தியமென்கிற சாரபுருஷனும் ஓடிப்போய்விடுவார்களென்றறிக.

அஞ்ஞானம் தாசி, ஆவரணம் அலங்காரம், விக்ஷேபம் தாய்க்கிழவி, ஜீவன் அதைக்கண்டு மோகிக்கிறவன், விவேகமாகிற சிநேகிதனால் அந்த ஆவரண ஆபரணத்தைப் பிடுங்கிவிட்டால், தாசி ஆபரணத்தைக் கழற்றிவிட்டு வெளியில் வந்ததைப்பார்த்து முந்தி மோகித்திருந்தபுருஷன் அவள் மூஞ்சியில் காறி உமிழ்ந்துபோட்டுப்போன கதைபோல, இவனும் அஞ்ஞானத்தைவிட்டு விலகிப்போவனென்றறிக.

பிரம்மானந்தம் சமுத்திரம்போலும், விஷயானந்தம் மழைத்துளி போலுமறிக.

சுருதியாகிற தாய் அவிவேகிகளாகிற குழந்தைகளுக்கு முதலில் பிரம்மமாகிய தன் நாயகனை அறியச்சக்தியில்லாததைப்பற்றி, அவரைப்போல சிவன் முதலான மூர்த்திகளாகிற சில உருவாரங்களைப் பண்ணிவைத்து இவைகள் தான் உங்கள் அய்யாவென்று சொல்லிக்கொண்டிருந்து, விவேகமாகிற பக்குவம்வந்தபின் நிஜமான பிரம்மமாகிய தன்னாயகனை இவரே உங்கள் பிதாவென்று காண்பித்து அதை யறிந்திருப்பதால், விவேகிகள் அந்த உருவாரங்களைக் கண்டு மயங்கக்கூடாதென்றறிக.

சம்சாரரணத்துக்கு மனோராச்சியம் முதல்வாங்குவதுபோலும், காமக்குரோதம் வட்டிபோலுமிருப்பதால், மனோராச்சியமான முதலைக்கொடுத்தால் காமக்குரோதங்களான வட்டியும் போய்விடுமென்றறிக.

முமுக்ஷுவாகிற குழந்தை விஷயங்களாகிற கிணற்றில் போய் விழுந்து விடாமலிருப்பதற்காக வைராக்கியமாகிற காரைக்கட்டைக்கட்டி, விவேகமாகிற சங்கிலியையும் போட்டு, சாதுசங்கமாகிற காவலையும் போட்டால் நித்தியானந்தத்தை யடையுமென்றறிக.

ஐயா, மனதைச் சொரூபத்தில் நிறுத்தினும் அதில் நில்லாமல் விஷயத்தில் ஓடிப்போகிறதேயெனில்,— நதிப்பிரவாகமானது பள்ளத்தில் போவது சொபாவமாயிருப்பதுபோல, மனது விஷயத்தில் போவதே சொபாவமாயிருந்தாலும் புருஷப்பிரயத்தினத்தினால் செய்கிற இந்திரிய நிக்கிரகமாகிற அணையைப்போட்டு, சாதுசங்கமாகிற வாய்க்காலையும் வெட்டி, மனதாகிற ஜலத்தை அந்த வழியாக அறிவாகிய பூமியில் பாய்ச்சினால், பிரம்மானந்தமாகிற பலனுண்டாகும். அதை புஜித்தால் அஞ்ஞானமாகிற வியாதியும் ஜனனமரணமாகிற பசியும் நீங்கி நித்தியசுகியாயிருக்கலாம்.

ஆசையாகிற அபத்தியத்தை உபஜீவித்திருக்கிற அஞ்ஞானமாகிற வியாதிக்கு சிரவணமாகிற மருந்தும் வைராக்கியமாகிற பத்தியமும் அனுஷ்டித்தால் ஜீவன் அஞ்ஞானவியாதி போய் ஜீவன்முக்திசுகத்தை யடைவானென்றறிக.

சர்வ பூமண்டலத்திற்கும் அரசனாகிற ஆத்மா அஞ்ஞானப்பேயால் மயக்கப்பட்டவனாய், மலமூத்திராதிகளால் நிறைக்கப்பட்டதாயுமிருக்கிற உள்ளங்கை யிடமாகிற தேகத்தை நானென்றெண்ணி அடிக்கடி அதிலிருந்து கர்மமாகிற ஒட்டனால் விரட்டப்பட்டு துக்கித்துத் திரியும்போது, மந்திரவாதியாகிற குருவின்கிருபையால் அந்த அஞ்ஞானப்பேய் போய், அகண்டசாம்பிராஜ்ஜியாதிபதியாகிற ஆத்மாவே நானென்றறிந்து சுகியாகிறனென்றறிக.

ஆத்மாவாகிற ஒருபுருஷனுக்கு ஐந்துபிள்ளைகள் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. அதில் அன்னமயன் தூண்போலத் தடியனானதால் அவனுக்கே நாம் ஓயாமல் பணிவிடை பண்ணவேண்டியிருப்பதாலும், பிராணமயன் கிறுக்கன் போலும், விட்டபாணம்போலும் அறிவில்லாமல் ஓடுகிறவனாயிருப்பதால் அவனைக் கட்டிக்காப்பது பிரயாசமாயிருப்பதாலும், மனோமயன் கண்டவிடமெல்லாம் திருடுகிறவன்போல சப்தாதிவிஷயக்கிரகணம் செய்கிறவனாயிருப்பதால் அந்த ராகாதிதிருட்டால் துக்கப்படவேண்டியிருப்பதாலும், விஞ்ஞானமயன் திருட்டை வாங்கிவைத்துக்கொள்ளுகிற தமயன்போல மனது கிரகித்ததை கெட்டிபண்ணுகிறவனானதால் அந்தக் கருத்தருத்துவத்தாலும், துக்கப்படவேண்டியிருப்பதாலும் ஆனந்த மயன் சாப்பாட்டுராமன்போல

சுழுப்தியாகிற சமையல்வீட்டைவிட்டு வெளியில் வராமல் ஏகதேசத்தில் நனவு கனவுகளாகிற வெளிவீடுகளில் விஷயசுகமாகிற சாப்பாட்டுக்கு வந்து உடனே உள்ளே ஓடிப்போகிறவனுயிருப்பதாலும், அவனையிட்டும் துக்கப்படவேண்டியிருப்பதாலும் ; இப்படி இருக்கிற ஐந்துபுத்திரர்களாகிற ஐந்துகோச அத்தியாசத்தினுல் ஆத்மா துக்கப்பட்டுக்கொண்டிருக்கும்போது, நம் குருகிருபையால் அந்த அத்தியாசம் போய் கண்போல சாக்ஷிமாத்திரமாய் அந்த ஆத்மா சுகமாயிருக்கிறுரென்றறிக.

இப்போது ஆத்மாவை ஒரு குடும்பியாய் வர்ணித்து அதன் நிவர்த்தியுங் காண்பிக்கிறுர். அதாவது,— சரீரமே வீடு. பிராணுதிகளே மாடுகள். கர்மேந்திரியங்களே மாட்டுக்காரர்கள். ஞானேந்திரியங்களே கணக்கப்பிள்ளைகள். மனது எட்டுக்கணக்கப்பிள்ளை. புத்தியே ஸ்திரீ. ஜீவனே புருஷன். இந்த வீட்டில் வசிக்கிற இவாளுடைய காரியத்தையெல்லாம் தன்னதாக அஞ்ஞானத்தால் ஒப்புக்கொண்டு அநேககாலம் ஜனனமரணத்தை யடைந்துவரும்போது, இப்போது பிரஹ்மானந்ததேசிகருடைய கிருபையினுல் பிரம்மமே நான், மற்றதெல்லாம் சொப்பனம்போலப் பொய்யென்றறிந்தேன். இதுவே அதிசயமென்றறிக.

சம்சாரநதியின் பிரவாகத்திலிழுபட்டு வருவதாயும், ராகத்துவேஷங்களாகிற கொம்புகளோடேகூடியதாயும், மகா அகம்பாவமான தடிப்பையுடையதாயுமிருக்கிற அகங்காரமாகிற யானையை குருசாஸ்திரங்களாகிற தெப்பக்காரனும் தெப்பமும் கரையேற்றமுடியாது. கொஞ்சஞ்சலமாகிற அசாரவாசனையும், ராகத்துவேஷக் கொம்பில்லாததாயும், மான்போல சொற்ப அகங்காரத்தையுடையதாயுமிருக்கிற முமுக்ஷுவை குருசாஸ்திரத்தால் கரையேற்றமுடியுமென்றறிக.

ஜீவனுகிற பாச்சையை இந்திரியங்களாகிற எறும்புகள் நாலுபக்கத்திலும் இழுத்துப்போகிறதென்றறிக.

குருவின் கிருபாமகிமையை யறிந்துசொல்லுகிறேன். அதாவது:— சம்சாரசமுத்திரத்தில் முழுகிக்கிடக்கிற ஜீவர்களுக்கு பாதாளகரண்டியாயும், விஷயவியாபாரமாகிற சண்டையினுல் சித்ததேகம் புண்ணுனவனுக்கு பிளாஸ்திரியாயும், பவவியாதியாகிற பசிக்கு கஞ்சித்தொட்டியாகவு மிருக்கிறதென்றறிக.

ஜலம்போல ஆத்மா. குளிர்ச்சிபோல சுகம். பாத்திரம்போல அந்தக்கரணம். அக்கினிபோல மாயை. விறகுபோல கருமம். அடுப்புப்போல மூடசங்கம். உஷ்ணம்போல துக்கம். அந்தத்துக்கமாகிற சூடு ஆத்மஜலத்தில் காணப்படுகிறது. இப்படி ஆத்மாவில் துக்கம் இடைவிடாமலிருக்கும்போது, தெய்வகெதியால் அந்த அந்தக்கரணமாகிற பாத்திரத்தை அடுப்பைவிட்டுக்கீழே

வைப்பதுபோல மூடசங்கத்தைவிட்டுக் குருவினிடம் போகிறது. காற்றினால் ஆறுகிறதுபோல சிரவணாதிகளால் துக்கம்நீங்குகிறது. பழயபடி ஜலம் குளிர்ந்துபோகிறதுபோல நிஜமான ஆத்மா தன் சொபாவமான ஆனந்த மாகிறதென்றறிக.

குருவாகிற ஜட்ஜியினிடம் ஜாக்கிரம் பொய்யென்று சொல்லுகிற சுருதி களை அசத்தியப்படுத்தும் நிமித்தியம் ஜாக்கிரம் சத்தியமென்று ஜீவனாகிற வாதி பிராதுசெய்து சொப்பனனையும் சுழுப்தனையும் சாக்ஷிகோரியதில், சொப்பனன் கிறுக்கன்போல முன்பின் சம்பந்தமன்றியில் உளறினதாலும், சுழுப்தன் காணாமல் ஒழிந்துவிட்டதாலும், குருவாகிய ஜட்ஜி ஜாக்கிரம் பொய்யென்று தீர்ப்புச்செய்துவிட்டதால் ஜீவன் அந்தர்தானமாய்ப் போய் விட்டான். ஆனதால் பின் எந்தக்காலத்திலும் ஆராலும் இந்தப்பிராது கொண்டுவருகிறதற்கு இடமில்லையென்றறிக.

ஓடுகிறஜலம்போல மனது. அசைவற்றஜலம்போல புத்தி மண்ணோடே சேர்ந்து கலங்கினஜலம்போல அகங்காரம். கெட்டிப்பட்ட சகதிபோலச் சித் தம். ஆகையால் முமுக்ஷுவானவன் விஷயவாசனாரூபமான விருத்தி சித்த மாகிற சகதிவரையில் போகாமல் விவேகவைராக்கியத்தால் தடுக்கவேண்டு மென்றறிக.

ஜீவனாகிய புருஷன் குருகிருபையாலும் ஆத்மவிசாரத்தாலும் நாம் பிரஹ்ம மென்றறிந்து பிறகு மனதாகிற ஸ்திரீயை மித்தையென்ற கடசிராத்தஞ் செய்து தள்ளிவிட்டதால், அந்த மனதாகிற ஸ்திரீ விவகாரமாகிற விபசாரஞ் செய்தாலும் சமாதியாகிற விரதோத்தியாபனம் செய்தாலும் நமக்கு யாதொரு சம்மந்தமுமில்லையென்றறிக.

எந்த விவேகியாகிறபுருஷன் விஷயாரண்ணியத்தில் சஞ்சரிக்கிற மனதா கிற யானையை, குருகிருபையால் பெற்றிருக்கிற தைரியமாகிற துறட்டியைப் போட்டு இழுத்துவந்து பஞ்சகோசமாகிற கோட்டைக்குள்ளிருக்கிற பிரஹ்ம மாகிற கட்டுத்தறியில் ஞானமாகிற சங்கிலியால் கட்டுகிறானோ அவனே சுகி யாவனென்றறிக.

வாசனையாகிற குதிரையில் ஏறிப்போகிற ஜீவனாகிற புருஷன் விவேகமாகிற கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டு நான் சாக்ஷியென்ற மத்தியகதமான ரோட் டில் போகும்போது, விவேகமாகிற கடிவாளத்தை விட்டால் எதிர்ப்பட்ட ஏதேனும் ஒரு விஷயமாகிற பள்ளத்தில் இவனைத் தள்ளிவிட்டு மனோராச்சிய மாகிற காட்டுக்கு ஓடிப்போகும். அல்லது அந்தப்பள்ளத்தில் தானும் அவ னோடேகூட விழுந்து கெட்டுப்போம். ஆகையால் ஜீவனாகிய புருஷன் விவேக மாகிற கடிவாளத்தை நழுவவிடாமல் சாவதானமாயிருக்கவேண்டுமென்றறிக.

அன்னமயன் தென்னமரம்போலும், பிராணமயன் மட்டைபோலும், மனோமயன் தேங்காய்மட்டைபோலும், விஞ்ஞானமயன் கொட்டாங்கச்சி போலும், ஆனந்தமயன் சக்கைபோலும், ஆத்மா பால்போலுமிருப்பதால் விவேகி இவைகளைப்பிரித்து ஆத்மாவாகிய பாலைப்புஜித்து சம்சாரபசியைப் போக்கத்தக்கது.

எந்த முமுக்ஷுவும் மனுஷதேகமாகிற வண்டியும், இந்திரியங்களாகிற குதிரைகளும், மனதாகிற கடிவாளமும், புத்தியாகிற வண்டிக்காரனும், சாதுக்களாகிற துணைவண்டிக்காரர்களும், குருவாகிற அதிசூரனும் உள்ளபோதே காமாதி கள்ளர்களுடனும் அகங்கார வியாக்கிராதிகளுடனும் கூடிய சம்சாராரண்ணியத்தை விவேகமார்க்கத்து வழியாகக் கடந்து மோக்ஷமாகிற தன் வீடு சேரவேண்டுமென்றறிக.

முமுக்ஷுத்துவம் பழுத்தநெல்போல. சதுர்விதகுருசேவை வெய்யிலில் காயப்போடுவதுபோல. சாதுசங்கம் உரலில் போடுவதுபோல. குருவினிடத்தில் உபதேசம்பெறுகிறது உலக்கையால் குத்துவதுபோல. சிரவணம் உமியையும் அரிசியையும் பிரிக்கிறதான புடைப்பதுபோல. மனனம் தவிடுசலிப்பது போல. நிதித்தியாசனம் அரிசியைத் தீட்டுவதுபோல. சமாதி அன்னஞ்சமைப்பதுபோல. சாக்ஷாத்காரம் அன்னம்புஜிப்பதுபோல. சகஜம் அந்த அன்னரசம் உடலில் ஒன்றுவதுபோலவறிக.

இன்னும் ஜீவனாகிய ராஜா மனதாகிற நாயை விஷயங்களாகிற புலிகளின் மேலே ஏவிவிட்டானேயானால், அந்த மனதாகிற நாய் கெட்டுப்போவதற்குக் கேட்கவேண்டியதென்ன? ஆகையால் மனதை முமுக்ஷுவானவன் விஷயத்திற் போகாமல் பாதுகாக்கத்தக்கது.

ஈசனாகிய ராஜா கருத்துருத்துவமாகிற திருட்டைச்செய்த ஜீவனாகிற ஆளுக்கு அபிமானமாகிற விலங்கைப்போட்டு, அதிஷ்டானதேவதைகளான சேவுகர்களையும்கூட ஏவி கர்மமாகிற வேலைகளைச் செய்யும்படிக்கும், சுழுத்தியாகிற சோற்றையும் போட்டுக் கெர்ப்பவாசங்களாகிற ஜெயிலிலடைத்து, மறுபடி இப்படியே துக்கப்படுத்திவைக்கிறார். ஆகையால் தத்துவஞானத்தால் கருத்துருத்துவத்தை விடத்தக்கது.

ஆத்மா ராஜா, அவித்தை சண்டாளஸ்திரீ, ஜீவன் பிள்ளை, புத்தி பெண், இவன் இந்தச்சகோதரியான புத்தியோடே சேர்ந்ததால் ஜனனமரண வியாதியை யடைகிறான்.

ஜீவனாகிற புருஷன் அஞ்ஞானமாகிற இருட்டில் ஆத்மாவாகிற மோதிரத்தை நழுவவிட்டு அலைந்துகொண்டிருக்கிறான். பின் சமபுத்தியாகிற இடைக்குடிசையிலிருக்கிற குருவாகிற இடையனிடத்திற் போய் ஆத்மவிசாரமாகிற

கொள்ளிக்கட்டையை வாங்கி ஆத்மாவாகிற ரத்னமோதிரத்தைக் கண்டுபிடித்துச் சித்தமாகிற கையில் தரித்துச் சுகிக்கிறுன்.

ஆகமமுதல் ஆசான்அனுக்கிரகம்வரையில் ஆனந்தானுபவம் தாரதம்மிய மாயிருக்கும். [எ - தி] ஆகமம் அழல்பூமிபோலும், கர்மகாண்டம் உழுதிருக்கிற பூமிபோலும், புராணம் நெல்லும் வைக்கோலும் கலந்திருக்கிற பயிர்போலும், வாசிட்டமுதலானவை நெல்லுப்போலும், பஞ்சதசப்பிரகரணம் அரிசிபோலும், வாசுதேவமனனம் களைந்த அரிசிபோலும், கைவல்லியம் பக்குவான்னம்போலும், நம்முடைய நாதனை குருஉபதேசம் அமிர்தத்தை வாயில் புகட்டுவதுபோலவறிக.

சுருதியாகிற தாய் அஞ்ஞானியாகிற குழந்தைக்கு ஞானமாகிற நிதியை ஒளித்து, முமுக்ஷுவாகிற பக்குவப்பிள்ளைக்கு அந்த நிதியைக் காண்பிக்கிறுளென்றறிக.

முமுக்ஷுவாகிற புண்ணாளி அகம்விருத்தி அத்தியாசமாகிற உள்வியாதிக்கு நாமாரென்ற விசாரமாகிற குளிகையும், இதம்விருத்திக்கிடமான விஷயாசையாகிற வெளிப்புண்ணுக்கு விஷயதோஷதிருஷ்டியாகிற பிளாஸ்திரியும் போடவேண்டுமென்றறிக.

மழையில்லாத க்ஷாமமாகிற மரணம்வந்தபோது ஸ்ரீமானுயிருக்கிற ஞானிக்கும், பிக்ஷைக்காரனுகிற அஞ்ஞானிக்கும் விசனமில்லை, முமுக்ஷுவாகிற வியசாயஸ்தனுக்குமாத்திரம் துக்கம்வருமென்றறிக.

பிரம்மஞானமாகிற காசிக்குச் சற்குருஉபதேசமாகிற ரயில்வண்டியில் லெகுவாய்ப்போகலாம். மற்றக் கர்மாதி மார்க்கங்களெல்லாம் சாகப்போகிற கிழவி நடந்து காசிக்குப்போகிறதுபோலவாம்.

பெண்டாட்டிமுதலான குடும்பமாகிற கட்டுத்துறையில் கட்டுப்பட்டிருக்கிற ஜீவர்களாகிற மாடுகள் நாய்கள் சாதுக்களாகிற ஜனங்களைக் கண்டதும் நிந்திக்கிறதாகிற கொம்பாட்டுதலையும் குலைத்தலையும் இருந்தஇடத்திலிருந்தே பண்ணுகிறுர்களென்றறிக.

ஞானமாகிற எலி அஞ்ஞானமாகிற நெட்டிக்கம்பிற் கோர்த்திருக்கிற கர்மமாகிற வடைகளோடே கம்பையே தின்றபிறகு வடையிருக்கிறதாவென்று கேட்கவேண்டியதில்லாததுபோலுமறிக.

ஆத்மாவாகிற பூமியிலுண்டான ஆனந்தமாகிற அன்னத்தைத் தேகமாகிற ஜீவன் புஜித்து துக்கமாகிற மலமாய்ப்போனதை, அந்த ஆத்மாவாகிற பூமி மறுபடி துக்கமாகிற மலத்தை உரமாக்கிக்கொண்டு ஆனந்தமாகிற அன்னத்தைக் கொடுப்பதைத் தினம் சுழுப்தியிற் கண்டு கொள்ளத்தக்கது.

ஜீவனுகிய இடையன் ஆத்மாவாகிய ஆடு தன்னிடத்திலேயே யிருக்கும்போது, அதை மறந்து ஆத்மாவாகிற ஆட்டைத் தேடித்திரிந்து கோவில் குளம் சாஸ்திரமாகிற கிணற்றில் போய்ப் பார்க்கும்போது, தன்நிழல் அதில் தோற்றினதை கிணற்றில் ஆடு இருக்கிறதாக மயங்கி ஜனனமரணமாகிற விழுதலை யடைகிறுன். அப்படிக் கிடக்கும்போது குருவாகிய ஒரு இஷ்டன் வந்து உன்னிடத்தில்தானே ஆத்மாவாகிய ஆடு இருக்கிறதென்று காண்பித்தபிறகு, அவனும் அதை விட்டுக்கரையேறி தன்னிடத்திலே தன்னைக்கண்டு சுகித்தானென்றறிக.

ஆத்மாவாகிய கிரகஸ்தனிடத்திலிருந்து சுகமாகிய பணத்தை வாங்கி மாயையாகிய திருடன் வஞ்சிக்கிறுனென்றறிக.

பிரபஞ்சமாகிற வீட்டில் தாபத்திரயமாகிற தீப்பற்றி எரியும்போது, அதில் அநேகம் ஜனங்கள் அகப்பட்டுத் தபிக்குஞ்சமயத்தில், எவனே ஒருஜீவன் வெளியேறி குருநாதனுகிற தண்ணீர்வார்க்கிறவனிடத்தில் வந்து பிரஹ்மானந்த கெங்கையால் அபிஷேகஞ்செய்யப்பட்டு சுகியாயிருக்கிறுன். வெகு ஜீவர்கள் அதிலிருந்து வெளியேறுமலே வெந்துபோகிறுர்கள். வெளியில் வந்த பேர்களிலும் சிலர் துவைதவாசனுதாபத்தை அத்வைதாமிர்தவருஷத்தால் அணைத்துக்கொள்ளாமல் திரும்ப அந்தப் பிரபஞ்சவீட்டில் புகுந்து கைலாசாதி பதங்களாகிற சாரமாயுள்ள சில வஸ்துக்களை எடுப்பதற்காக ஈஸ்வரனைக்குறித்துக் கர்மோபாசனைகளைச் செய்து கெடுகிறுர்கள். பின்னுஞ்சிலபேர் அப்படிக் குருவாக்கியமாகிற கெங்காஸ்நானஞ் செய்தும், அந்த ஸ்நானகாலத்தில் தெறித்த தண்ணீரை வாக்காகிற ஸ்தாலியில் எடுத்துக்கொண்டு இந்த ஸ்நான சுகத்தையும் விட்டுவிட்டுத் தீயில் வேகிறவர்களையெல்லாம் அந்தத் தண்ணீரால் தாபத்தைத்தீர்த்து தனக்குச் சீடர்களாகச் செய்யவேண்டுமென்கிற ஆசையால் மயங்கித் தடையற்றஆனந்தத்தை அவர்களுக்கு அனுக்கிரகம் பண்ணப்போய்த் தனக்குக் கொஞ்சங்கிடைத்திருந்த சுகத்தையுமிழந்து கெடுகிறுர்கள், இது ரொம்ப அதிசயம்.

ஸ்திரீபணங்களாகிற கடலைக்கடக்க குருசாஸ்திரங்களாகிற கப்பல்காரனையும் கப்பலையும்விட்டுப் பிரியாமலிருந்தால், இந்தக்கடலைக் கடக்கலாமென்றறிக.

ஸ்திரீயாகிற அரசமரத்தில் மன்மதனுகிற பிசாசு கண்ஜாடையாகிற சத்தத்தோடேகூடியிருப்பதால் புருஷர்களாகிற பெண்கள் பிடிபட்டு சங்கற்பங்களாகிற தலைமயிரை விரித்து காமக்குரோதங்களாகிற ஆட்டத்தோடேகூடித் திரிகிறவர்களுக்குள்ளே, அபூர்வமாய் ஒரு முமுக்ஷுபுருஷனுகிற பெண் குருவாகிற மந்திரவாதிகையிலகப்பட்டுப் பிழைத்துப்போனதால், மற்ற விவேகிகளாகிற பெண்கள் அந்த மரத்தின்கிட்டக்கூட போகக்கூடாதென்றறிக.

ஜீவனாகிற புருஷன் சங்கற்பமாகிற ஸ்திரீயோடே சேர்ந்து துக்கமாகிற பிள்ளைகளைப்பெற்று அவஸ்தைப்படுகிறானென்றறிக.

இருட்டுப்போல அஞ்ஞானம். அதில் மேகாவரணம்போல ஆவரணம். அதின்பேரில் மனுஷாதிகள் ஒன்றும் பேதந்தெரியாமற்போனதால் உண்டான பயமே விக்ஷேபம். விவேகமாகிற தீபம் ஏற்றிப்பார்த்தால் இது சித்து இது ஜடமென்று ஞானம்வரும். அந்த ஞானத்தால் மேலே சொன்ன துக்கமெல்லாம் போமென்றறிக.

உலகத்திலுள்ள மூடர்களாகிற புருஷர்கள் அனாதிவாசனையால் சித்தமாகிற அகல்சட்டியில் ஜெகத்சத்தியமென்கிற எண்ணெயைவிட்டுத் தேகம் நானென்கிற திரியையும் போட்டு கருத்துருத்துவமாகிற விளக்கேற்றி வைத்திருப்பதால், அந்த விளக்கில் ஜீவர்களாகிற விளக்குவிட்டில்பூச்சிகள் எரிந்துகொண்டிருக்கும்போது, குருகிருபையைப் பெற்றிருக்கிற விவேகியாகிற புருஷன் சத்தியபுத்தியாகிற எண்ணெயை மேல்மேலும் விடாமல் நிறுத்தி, தேகாபிமானமாகிற திரியையும் பிரம்மமே நானென்ற தூண்டுகோலால் எரித்துக்கொண்டுவரும்போது, பின் கருத்துருத்துவமாகிற தீபமும் சிதாகாசமாத்திரமாய் அழிவதால், ஜீவர்களாகிற விளக்குவிட்டில்பூச்சிகள் வந்து விழுந்து மடிய இடமில்லையென்றறிக.

குபேரனிடத்தில் மலமெடுக்கிற ஒரு ஒட்டன் போய் யாசித்ததற்கு அவன் நாகரத்நத்தைக் கொடுக்கப்பெற்றதால், இவன் தரித்திரமும் போய்ச் சகலராலும் எப்படிக் கொண்டாடப்படுகிறானோ, அப்படி முமுக்ஷுவாகிய நான் தேகாத்மபுத்தியாகிற மலம் அள்ளிக்கொண்டிருந்தேன். இப்போது குருநாதனாகிற குபேரனென்ற பிரபு ஞானமாகிற ரத்நத்தைக் கொடுக்கப்பெற்றதால் நித்தியசுகியாய் வாழ்வதுந்தவிர ஈஸ்வராதிகளாலும் கொண்டாடப்படுகிறேன். இது மெத்த அதிசயம்.

(முமுக்ஷுவாகிற பக்குவியானபெண் குருவாகிற நாயகனிடத்திற் போய்ச் சேர்ந்தமாத்திரத்தில், அவரும் இவனுடைய புத்தியாகிற யோனி முமுக்ஷுத்துவமாகிற பக்குவமடைந்திருக்கிறதைப் பரிசோதித்துப்பார்த்து உபதேசமாகிற (சிசுனத்தை) இவன்காதாகிற (யோனி)த்துவாரத்தில் பிரவேசிப்பித்து, நீயே பிரம்மமென்கிற விசாரமாகிற மைதுனத்தை சுருதி யுக்தி அனுபவங்களாகிற சிருங்காரரசத்துடன் பண்ணப்பண்ண சித்தமாகிற வயிற்றில் ஞானகெர்ப்பத்தைத் தரித்து சாக்ஷாத்காரமாகிற பிரசவம்வரை அந்தப்போகத்தைச் செய்துகொண்டுவந்ததால், ஜீவன்முத்தியாகிற புத்திரனைப்பெற்று அந்தப் புத்திரனோடே வாழ்ந்துகொண்டிருப்பதைக் கண்டு மற்ற பக்குவிப்பெண்களும் அப்படி அவரிடத்திற் போய் வாழக்கடவாள்.)

ஒரு ஸ்திரீ அநேகம் புருஷர்களிடத்திற் போய் போகம்செய்ததி லும் திருப்திவாராமல் முசலமான சிசுனத்தோடே ஒரு புருஷன் அகப்பட்ட மாத்திரத்தில் அவனோடேயே சுகிப்பளேதவிர மற்ற ஒருவரையும் விரும்பாத வள்போல, நானும் அநேக குருக்களை அடைந்ததிலும் என் அஞ்ஞானமாகிற தினவுதீர்ந்து தத்துவஞானமாகிற சுகங்கிட்டாமல் அலைந்துவந்த எனக்கு இப் போது இந்தப் பிரஹ்மானந்த குருநாதன் கிட்டினதால், என்னுடைய புத்தியா கிற யோனிக்கு அளவுசரியான தத்துவஞானமாகிற சிசுனம் ஒத்துப்போன தால், அஞ்ஞானத்தினவு தீர்ந்து மோக்ஷசுகங்கிட்டினதால் கனவிற்கூட இவரைவிட்டு இன்னம் ஒரு குருவைக் கிட்டேன்.

சஞ்சலமாயும் தவிப்பதாயுமிருக்கிற இந்தப் பாவிமனதாகிற கோழியை பாறைபோல அசைவற்றும் பொலிபோல் பூர்ணமாயுமிருக்கிற ஆத்மாவிலே கொண்டுவிட்டாலும் சுகமாயிராமலும் திருப்தியாய் அந்தப் பூர்ணானந்தமான நெல்லைப் புசியாமலும் தன் பேதபுத்தியாகிற காலினாலே கிண்டிக்கொண் டிருப்பதால், இந்த மனதை கோழிக்குபமானமாகச் சொல்லத்தக்கது.

சொப்பனமாகிற நல்லமாட்டோடே ஜாக்கிரமாகிற நொண்டிமாட்டைச் சமமாகக்கட்டிக் கொஞ்சக்காலம் பழக்கமானால் ஜகத்துச் சத்தியமென்கிற நொண்டித்தனத்தைவிட்டு பொய்யென்ற நல்லதனம் அதற்குச் சமானமாய் ஆகுமென்றறிக.

வேதாந்தசாஸ்திரத்தில் எந்த வஸ்து பிரதிபாதிக்கப்படுகிறதோ அதைத் தானே குருவும் சொல்வதால் சாஸ்திரத்தைத் தானேப் பார்த்துக்கொண்டால் முக்தி வாராதா? குருவாக்கியமும் குருஅனுக்கிரகமும் என்னத்துக்கெனில்; சமுத்திரத்திலுள்ள ஜலத்தைத்தானே மேகஞ்சாப்பிட்டு பூமியில் வருஷித்த லால் சகலருக்கும் சகலவிதமான பிரயோசனத்தையுங் கொடுப்பதால் நேரே சமுத்திரஜலத்தைத்தானே சகலத்திற்கும் உபயோகப்படுத்திக்கொள்ளாமல் மழையில்லாமற்போனாலும் வருணஜெபமுதலான தபசினால் மழையை என்னத் திற்குப் பிரார்த்திக்கவேண்டும்? ஆகையால் வேதாந்தமாகிற சமுத்திரஜலத்தை குருவாகிய மேகம் சாப்பிட்டு அதிலிருக்கிற துவைதபாகமாகிய உப்பைக் காணாமற்பண்ணி அத்வைதபாகமாகிய அமிர்தவருஷத்தை வருஷிப்பதால் மழையினாலேயே சகலரும் பிழைப்பதுபோல, குருஅனுக்கிரகத்தினாலேயே பிழைக்கவேண்டும். அப்படிக் குருபதேசமாகிற மேகவருஷம் பிரதிபந்தத்தால் கிட்டாதிருந்தாலும் குருபக்தியாகிற வருணஜெபம் அவசியம் செய்தே ஜீவன் முக்தியாகிற ஜீவனமுண்டாமேயன்றி வேறு வழியில்லை. இன்னும் பூமிக்கு மேல்வைத்த பதார்த்தத்தையும் ரோட்டையும் தெரிவதற்கு பழமொழியாவது "வைத்தவனெடுக்கவேண்டும், வழிதெரிந்தவன் நடக்கவேண்டும்" என்று சொன்னால், பூமிக்குள்ளிருக்கிற புதையலையும் தேவமார்க்கத்தையும் இவன்

சுயமாயடையமாட்டாததுபோல, கோசக்குகைக்குள் மறைபட்டிருக்கிற சாக்ஷியையும், நாமரூபரகிதமான பிரம்மமாகிற ஆகாசவழியையும் குருவன்றியில் அடையான். ஸ்தூலமாயிருக்கிற துவைதவித்தைகள்கூட குருவன்றியில் வாராதிருக்கும்போது, அதிசூக்ஷுமமான ஆத்துமவித்தைக்குக் குரு வேண்டுமென்பதில் கேட்கவேண்டியதென்ன?

தேகம் வண்டி. ஜீவன் மாடு. ஈசன் வண்டிக்காரன். ஆத்மா எஜமானன் போலவறிக.

மனுஷஜன்மத்தையுடைய ஜீவனாகிற புருஷன் முக்தியாகிற ஸ்திரீயோடே போகிக்க எங்குமலைந்ததில், அங்கங்கே தன்னைப்போல ஆண்மையுடைய ஆண்பிள்ளையைக் கண்டானேயொழிய முக்தியாகிற பெண்ணைக்காணாமல் அலைந்து திரியும்போது, சுருதிவாக்கியமாகிற கேள்வியால் அப்பெண் குருவினிடத்திலிருக்கிறது, அவர் சாதனசதுஷ்டயபணத்துக்கு அப்பெண்ணைக் கொடுக்கிறாரென்று தெரிந்து, சாதனசதுஷ்டயமாகிற சம்பத்தை சம்பாதித்து, குருவாகிற மாமனாரிடத்திற் கொண்டுவந்து கொடுத்து, சிரவணமாகிற முக்திப்பெண்ணை விவாகஞ்செய்து, மனனமாகிற அன்னபானாதிகளால் அந்த முக்திப்பெண்ணை வளர்த்துப் பக்குவம்பண்ணி, நிதித்தியாசனமாகிற அந்தப் பக்குவப்பெண்ணினிடத்திற் சம்போகஞ்செய்து, சமாதியாகிற சுக்கிலமோசனமாய், சகஜமாகிற கெர்ப்பத்தை உற்பத்திசெய்து, சாக்ஷாத்காரமாகிற பிள்ளையைப்பெற்று ஜீவன் முக்தனென்கிற அபேதகுடும்பத்துடன் சுகியாய் வாழுகிறான்.

ஆத்மா சூரியன்போலும், அவிவேகத்துடன்கூடிய மனது அநியாய ராஜாவைப்போலும், இந்திரியங்கள் துர்மந்திரிகள்போலும், பிராணன்கள் சேவுகர்கள் போலும், தேகம் அரண்மனைபோலும், ஜகத்து ராச்சியம்போலுமிருப்பதால், மனதாகிற ராஜா விவேகியாயிருந்தால் இந்திரியங்களாகிற மந்திரிகளும் சுமந்திரிகளாய்விடுவதால், எல்லோருக்கும் சுகமுண்டாவதுபோலும். [எ - தி] அநியாயராஜாவையும் ராமராஜாவையும் காண்க.

சித்தமாகிற பூமியில் துர்வாசனையாகிற விஷவிரை விழுந்து தேகம்நானென்கிற முளை உண்டாய், சங்கற்பங்களாகிற சாகைகளுடனும் கிரியைகளாகிற பணைகளுடனும், கூடியிருக்கப்பட்ட அனந்தகோடி பிரபஞ்ச விருக்ஷங்களுக்கு மூலமான அனந்தகோடி வாசனைகளாகிற வித்துக்கள் ஜீவனுடைய சித்தபூமியில் அடங்கியிருப்பதால், சம்சாரமாகிற காடு ஓயாமல் விருத்தியாய்க்கொண்டிருப்பதால் ஜீவனுக்கு ஒருக்காலும் சுகலேசமுமில்லாமல் சதா தபித்துக்கொண்டிருக்கிறான். தெய்வகிருபையால் எவனோ ஒருவன் குருவையடைந்து அந்தக் குருகிருபையால் விஷயத்திலிருக்கிற தோஷத்தை விவேகத்தினாலும், பொய்யென்கிற வைராக்கியத்தினாலும் கண்டு, சமாதிஷட்குணங்களினாலும், நான் அசங்கனென்கிற அனுசந்தானத்தினாலும் இந்தக்காட்டை எரிக்கவேண்டும். ஐயா வாசனைகள் அந்தர்த்தானமாயிருப்பதால் அவைகளைக் கண்டுபிடித்தல்லோ

எரிக்கவேண்டும். அப்படிக்கில்லாமல் சங்கற்பத்தை எரித்ததினால் மறுபடி வாசனைகள் முளைக்காமல் எப்படிப்போமென்றால், வெளியில்வருகிற சங்கற்பரூபமான ஒரு விருக்ஷத்தில் நான் பிரம்மமென்கிற தீயை வைத்தால் சித்தத்தில் முளைக்காமல் அடங்கிக்கிடக்கிற வாசனைகளாகிற விதைகளெல்லாம் எரிந்துபோம். (என்பதற்குச் சுருதி) நான் பிரம்மமென்றறிந்த ஞானத்தால் கற்பகோடிகாலமாய் ஆர்ச்சிக்கப்பட்ட சஞ்சிதமெல்லாம் எரிந்துபோமென்று சொல்வதாலும்; ஒருமரத்தில் தீயை வைத்தால் அந்த வெப்பத்தாலும் அந்த மரங்கள் காற்றினால் ஒன்றோடொன்று உரசுவதினாலும் அந்தத் தோட்டத்திலிருக்கிற மரங்களும், முளையாமல் அடங்கியிருக்கிற விதைகளும் எரிந்துபோவதுபோலவென்கிற யுக்தியினாலும்; நான் பிரம்மமென்கிற திடநிச்சயத்தால் இப்போது நமக்கு வாசனாக்ஷயமாயிருக்கிற அனுபவத்தாலுங்கண்டு, இந்தச்சாதுவான சித்தமாகிற பூமியில் நான் பிரம்மமென்கிற அமிர்தசஞ்சீவியான விதையை ஊன்றி, குருகிருபையாகிற தண்ணீரைப் பாய்ச்சி, சாதுசங்கமாகிற வேலியைக்கட்டி பரிபாலித்து வந்தால் இப்போதே ஜீவன்முக்தியாகிற பலத்தையடைந்து நித்தியதிருப்தியாயிருக்கலாம்.

முதல்பூமி நாயகனைத் தேடிவருவதுபோலும், இரண்டாம்பூமி அவனோடே போகிப்பதுபோலும், மூன்றாம்பூமி கெர்ப்பமாயிருப்பவள்போலும், நாலாம்பூமி புத்திரனைப் பெற்றுச் சீராட்டுவதுபோலும், மற்றப்பூமிகள் அவனோடே ரமிக்கிற சுகதாரதம்மியம்போலுமறிக.

ஒரு சட்டியில் ஜலம்விட்டுத் தீயினால் உஷ்ணிப்பித்தாலும் அதிலிருக்கிற ஆகாசத்தை அவ்வுஷ்ணம் ஸ்பரிசியாததுபோல, சரீரமாகிற சட்டியிலிருக்கிற அந்தக்கரணமாகிற ஜலம், இச்சையாகிற விறகில் பற்றி கருமமாகிற ஊதுகுழலால் ஜ்வலிதம்பண்ணப்பட்டிருக்கிற காமக்குரோதமாகிற தீயால் தபித்தாலும், சிதாகாசமான தனக்குக் கொஞ்சமும் சம்மந்தமில்லையென்றறிக.

சித்தாயிருக்கிற நம்மை அறியாதிருக்கிற அஞ்ஞானமே சுழுப்தி. மகதத்துவமென்பது சுழுப்தி கலைகிற அவசரம். அகங்காரமென்பது சுழுப்தியிலிருந்து நானென்று விழிக்கிறது. திரிகுணாத்மகமான ஜீவேஸ்வரஜகத்தாய் விரிகிறதென்பது விழித்தவன் சகல விவகாரமும் நான் கர்த்தாவென்று செய்கிறதுதான். [எ - தி] விதையானது தண்ணீரினால் பொதும்பி முளையாய் மரமாகிறதுபோலவறிக.

முமுக்ஷுக்களுடைய சுத்தசித்தமாகிய ஜலத்தில் சாந்தியாதி சற்குணங்களாகிற தாமரைப்புஷ்பங்களில், ஸ்திரீமுதலானவர்களிடத்திலிருக்கிற ஆசையாகிற மதயானை வந்து விழுந்ததேயானால், சுத்தசித்தஜலத்தையும் கலக்கி சற்குணபுஷ்பங்களையுங் கசக்கிக் கெடுத்துப்போடுமாகையால், விவேகியானவன் ஜாக்

கிரதையாய் விசாரமாகிற வெடியும் நிராசையாகிற கத்தியும் வைத்திருக்கும்படி நம் பிரஹ்மானந்தகுருநாதனுன ராஜன் ஆக்ஞாபித்திருக்கிறுர்.

ஒருவீட்டில் பத்து ஜனங்களடங்கும்படியான இடத்தில் தலைவாசல் பெரிதாயிருக்கிறதென்று வாயில்காரன் கைக்கூலிவாங்கிக்கொண்டு துஷ்டர்களான நூறு இருநூறுபேரை உள்ளேவிட்டால் கொல்லைவாசல் சின்னதாயிருப்பதாலும், வீட்டிற்குள் இடம் கொஞ்சமாயிருப்பதாலும், வீட்டுக்காரன் சங்கடப்பட்டுக் கொல்லைக்கதவை யிடித்து இவர்களை வெளியில் போகச்சொல்லலாமா? அல்லது வந்தவழியாய் வெளியில் விரட்டலாமா? அல்லது இவிடத்திலேயே தீயைவைத்துக் கொளுத்தலாமாவென்று பலவிதமான கவலையுடன் வெளியேற்றுவதுபோல, இந்தச்சரீரமாகிற வீட்டில் இந்திரியங்களாகிற பத்துப்பதினைந்து ஜனங்கள் வசிக்கமட்டும் இடமிருக்கும்போது வாயில்காரனுன நாவு தனக்கு ருசியான கைக்கூலி வாங்கிக்கொண்டு வேண்டியபடி வடைமுதலான கெட்டபதார்த்தங்களான துர்ஜனங்களை உள்ளே தள்ளிவிட்டதால், வீட்டுக்காரனுன ஜீவன் இடுப்புவலிமுதலான துக்கத்தையடைந்து, கொல்லைக்கடவான ஆசனத்துவாரம் சிறிதாயிருப்பதால் அதைப் பேதிக்கப் பேதிமருந்து சாப்பிடலாமா? அல்லது வாந்தியாக மருந்துசாப்பிடலாமா? அல்லது சுரைமுதலான புகைக்குடிக்கிற வரையிலுள்ள தீயாலெரிக்கலாமாவென்று இப்படியெல்லாம் ஆலோசிக்கும்படியான வெகு அனர்த்தம்வருவதால், புத்திசாலியானவன் நாவில் திருஷ்டியை வைத்து அவனுக்கு விரோதிகளாயும் தேகத்துக்கு ஆரோக்கியமாயுமிருக்கிற ரசங்களைமட்டும் விடும்படிக்கும், மற்றவைகளை விடாதிருக்கும்படிக்கும் கண்டிப்பாய் உத்தரவுசெய்து நாவை ஜெயிக்கவேண்டியது.

வஸ்துதந்திரஞானம் கண்போல தேகேந்திரியாதி வியாபாரங்களைத் தான் அறிகிறதேயாம். சாக்ஷியாகிய தனக்குச் சொபாவமாக ஒரு கருத்துருத்துவாதி சம்சாரமுமில்லை, அது சகலமும் அந்தக்கரணத்துக்கே. பிரதிபிம்பனுன ஜீவனுக்கும் அது ஆரோபமென்பதற்கு யுக்தி:—சூரியன்போலே தான், ஜலம்போல அந்தக்கரணம், அசைவுபோலே கருத்துருத்துவாதிகள், ஜலப்பிரதிபிம்பம்போல ஜீவன், ஜலத்தினுடைய அசைவு பிரதிபிம்பத்திற் காணப்படுவதுபோல அந்தக்கரணத்தின் கருத்துருத்துவாதி ஜீவனிடத்தில் ஆரோபமாய்க் காணப்படுகிறது. ஆகையால் அந்தக்கரணத்துக்கே கருத்துருத்துவமென்று முன்சொன்னது சரி. அப்படிப் பொய்யாய்த்தோற்றுகிற ஜீவனுல் பிரயோசனமில்லையாவென்றுல், ஜலத்தில் தோற்றுகிற சூரிய சந்திர தீபாதிகளுடைய பிரதிபிம்பத்தால் எல்லோரும் வெளிச்சத்தையும் சமையல் கூதல்நிவர்த்தி முதலான பிரயோசனத்தையுமடைகிறுர்களா சொல்?

விவேகசித்தமாகிற கோபுரத்தில் துவைதவாசனையாகிற அரசம்விரை விழாமலே பாதுகாத்துவரவேண்டும். அப்படியிருக்கும்போதே அவசமாய்

ஒரு வாசனையாகிற ஒருவிரை விழுந்து முளைத்தமாத்திரத்திலாவது உடனே அதைப் பிடுங்கி எறியாதபக்ஷத்தில், அது சம்சாரவிருக்ஷமாய் விவேகமாகிற கோபுரத்தையே அடியோடே இடித்துத் தள்ளிப்போடுமென்றறிக.

ஞானிக்கும் கர்மானுசாரமாக மேன்மேல்வருகிற சுகதுக்கங்களால் சித்தம் உடையாதோவென்றால்; சித்தமாகிய கண்மாய்க்கு சொப்பனம்போலும் இந்திரஜாலம்போலும் பொய்யென்று விவேகமாகிற மடை திறந்திருப்பதால் துக்கமாகிற எவ்வளவு ஜலம் வந்தாலும் சித்தமாகிற கண்மாய் உடையாதென்றறிக.

மனதாகிற மாம்பழம் சத்சங்கமாகிற கல்கண்டு தேன்முதலானதோடே சேர்ந்தால் ஞானமாகிற நவரசமென்ற பேரையும் பிரகாசமான ரூபத்தையும் அடையும், மூடசங்கமாகிற உப்பு மிளகாய்முதலானதோடே சேர்ந்தால் சம்சாரமென்கிற ஊறுகாயாய் தமோகுணமாகிற கறுப்புரூபத்தை யடைகிறதென்றறிக.

தேகாத்மபுத்தியாகிற திருட்டைச் செய்தால் எமனென்கிற ராஜா தூதர்களாகிற சேவகர்களைவிட்டு அவனை இழுத்துவரச்சொல்லி நரகமாகிற ஜெயிலில் போட்டு வருத்தப்படுத்துகிறான்.

சம்சாரமாகிற விஷவிருக்ஷம் நாசமாய் அதின்கீழிருக்கிற பிரம்மானந்தப் புதையலை யடைவதற்கு முதலில் ஏகாந்தஸ்திதியே மழையில்லாததுபோலும், இந்திரியநிக்கிரகம் இலை பூ காய் உதிருகிறதுபோலும், மனோநிக்கிரகம் மரத்தினுடைய கொப்புகள் காற்றினாலொடிந்து விழுகிறதுபோலும், அகங்காரத்தியாகமாவது வேரோடே மரத்தை வெட்டுகிறதுபோலும், எப்போதும் பிரம்மானந்தத்தைத் தானாய் அனுபவிக்கிறதாவது அந்த இடத்திலிருக்கிற புதையலையெடுத்து அனுபவிக்கிறதுபோலவாம்.

நெருப்பிலிருக்கிற சூடு சட்டியிலிருக்கிற ஜலத்தில் தோற்றுகிறதுபோல அந்தக்கரணத்தினுடைய கருத்துருத்துவம அஞ்ஞானத்தோடே கூடியிருக்கிற ஆத்மாவினிடத்தில் தோற்றுகிறது.

ஜீவன் இந்திரியங்களோடே தாதாத்மியத்தை யடைந்திருப்பதால் இந்திரியங்களாகிற மாடுகள் விஷயங்களாகிற பயிர்களைத்தின்றால், ஜீவனாகிய மாட்டுக்காரனுக்கே சம்சாரதுன்பமாகிற உதைவிழுமென்றறிக.

ஈசனாகிய வாய்வு ஞானியாகிற மேகத்தை முமுக்ஷுக்களாகிற பயிர்களில் உபதேசமாகிற மழையைப் பேயும்படிசெய்தால் முக்தியாகிற பலத்தை யுண்டுபண்ணும். அப்படியன்றியில் மூடர்களிருக்கிற இடமாகிற கடலில் பேயும்படிசெய்தால் நிஷ்பலமாய்ப் போய்விடுமென்றறிக.

ஆசாரியஸ்வாமிகளாகிற ஸ்திரீ வியாசசூத்திரமாகிற அசல்வீட்டில் ஸ்திரீ சூத்திரர்கள் முதலானவர்களுக்கு ஞானம்வாராதென்று சொல்லியிருக்கிற சூத்திரவாக்கியங்களாகிற கீரைத்தண்டு முதலானவைகளை அவர்மதப்படி பாஷியமாகிற சமயல்செய்தாரென்றறிக. அவர்களே ஆத்மபோதம் முதலான பிரகரணங்களில் சகலருக்கும் ஞானம் வருமென்று சொன்னது-சொந்தக்கிரகத்தில் தன்னிஷ்டப்படி அறுசுவையுஞ்சேர்த்துச் சமயல்பண்ணுதல்போல, ஸ்திரீ சூத்திரர்கள் முதலான யாவத்திரர்களுக்கும் சமரசமாய்ப் பிரஹ்மஞான மாகிற திவ்வியபோஜனத்தை உண்டுபண்ணியிருப்பது சொந்த அபிப்பிராய மென்றறிக.

துவம்பதமாகிய சிவபதத்திலிருக்கிற வாச்சியங்களாகிற இருபத்தெட்டுத் தத்துவங்களாகிற கணங்களையும், தற்பதமாகிய தேவியின் வாச்சியங்களாகிய சப்த தத்துவங்களாகிற ஏழுகன்னிகைகளையும் தள்ளி, சச்சிதானந்தமாத்திர மான கூடஸ்தப் பிரம்மமாகிற சிவசக்திஐக்கியம் அசிபதத்தால் செய்யவேண்டியது. இன்னும் துவம்பதமாகிய தேங்காயையும் தற்பதமாகிய கரும்பையும் ஐக்கியமாகிற பாயசஞ்செய்யவேண்டுவதில், விருத்தங்களான ஸ்தூல சூக்ஷும காரணங்களாகிற மட்டை சிரட்டை சக்கைகளையும் நாமரூபங்களாகிற தோடு சக்கைகளையும் தள்ளி அவிருத்தங்களான தேங்காய்ப்பாலையும் கரும்புச்சாறை யும்போலிருக்கிற கூடஸ்தப்பிரம்மங்களுக்கு ஐக்கியங்கூடும்.

குருவாகிய தட்டான் பக்குவசித்தமாகிற தங்கத்தை விவேகாக்கினியால் காயவைத்து உபதேசமாகிற சுத்தியாலடித்து ஞானமாகிற நகையாய்ச் செய் வரேதவிர, மற்ற அபக்குவசித்தங்களாகிற இரும்புமுதலான லோகங்களை ஒன் றுஞ் செய்யமாட்டாரென்றறிக.

ஐயா, ஞானிகளைப் பார்த்து மூடர்கள் விதிநிஷேதங்களைச் சொல்லும் போது, வேதம் அவர்களுக்கு அந்த விதிநிஷேதமில்லையென்றும், நீங்கள் அதைப் பார்க்கக்கூடாதென்றும், அப்படிப் பார்த்தால் உங்களுக்குப் பாபம் வருமென்றும் சொல்லுவானேனென்றால், ஞானியான மாப்பிள்ளை ஜீவன் முக்தியாகிற பெண்ணோடே அந்தர்முகமாகிற அறையில் ஐக்கியமாகிற போகத் தைச்செய்யும்போது, அபக்குவிகளாகிற வாதிப்பெண்கள் விதிநிஷேதமாகிற வெட்கத்தைவிட்டிருக்கிறதைப் பார்த்து பரிகாசஞ்செய்ய எட்டிப்பார்க்கும் போது, சுருதியாகிற தாய் அவர்களை நீங்கள் இவர்களிடத்தில் இதைப் பார்க் கக்கூடாது. முக்தியாகிற பெண்ணும் ஞானியாகிற மாப்பிள்ளையும் பேதமற் றுச் சொக்கிப்போயிருக்கிறார்கள். அப்படியிருக்கும்போது விதிநிஷேதமாகிற வெட்கத்தைப் பார்த்தால் உங்களுக்கே பாபமாகிற உதை விழுமென்று சொல்லுகிறதென்றறிக.

ஜீவர்களாகிய சும்பர்கள் அஞ்ஞானமாகிற மூடமயிர்ரூபமான வியாதிக்கு ஈஸ்வரனாகிற பெரியபுருஷனுடைய பஞ்சவிஷயசுகங்களாகிற சிசுனங்களைச் சும்பிப்பதற்காக கர்மம் பக்திகளாகிற காசுகளைக்கொடுத்துக் காத்திருந்து ஜனன மரண சுகதுக்கானுபவங்களாகிற சும்பனத்தைச் சும்பித்துக்கொண்டு கற்ப கோடிகாலமாய் வந்தும் அந்த வியாதியும் தீராமல் திருப்தியும் வாராமல் திரிந்துகொண்டிருக்கிற பேர்களுக்குள்ளே, அபூர்வமாயொருவன் இந்த அவமானத்தையும் அதிருப்தியையும் அலைச்சலையுங் கண்டு இதை வெறுத்துக் குருவாகிற வைத்தியரைத் தேடிப்போய்க் கண்டு, சரணாகதிபண்ணி, தனக்கு வந்திருக்கிற அஞ்ஞானமான மூடமயிர்வியாதியால் கண்டவிஷயங்களாகிற சிசுனசும்பனத்தால் தாற்காலிக துக்கநிவர்த்திபோலத் தோன்றித் திரும்பத் திரும்பச் சும்பிக்கவே ஆசையுண்டாய்த் தேடினாலும் சும்பிக்கச் சிசுனம் வேண்டியபடி அகப்படாததினாலும் துக்கமுண்டாவதைப்பற்றி அதில் நிராசை இப்போது பிறந்திருப்பதால் ரக்ஷிக்கவேண்டுமென்று பிரார்த்திக்கும்போது, அவரும் இரங்கி ஞானௌஷதத்தைக் கொடுத்து அஞ்ஞான மூடமயிர்வியாதியை அடியோடே ஹதம்பண்ணிவிட்டதால், இனிமேல் கனவில்கூட விஷயானுபவமாகிற சும்பிப்பதை நினையாமலிருப்பதைக் கண்டு, மற்ற இந்த வியாதியுள்ளவர்களெல்லாம் இப்படி இவரிடத்தில் வந்து அந்த வியாதியை அந்த ஔஷதத்தால் தீர்த்துக்கொள்ளக்கடவர்களென்றறிக.

பிரம்மமாகிற ஸ்திரீக்கு ஆனந்தமாகிற யோனி எப்போதும் எங்குமிருந்தாலும், ஜீவனாகிய புருஷனுக்கு அகம்விருத்தியாகிற சிசுனம் சதா இருந்தாலும், அறியாமையாகிற பொட்டயனைப்போனதால் பிரயோசனமொன்றுமில்லாத தேகமாகிற துளையில் அதை விட்டுக்கொண்டிருந்தும், கருத்துருத்துவமாகிற கையால் கிரியைகளாகிற ஆட்டுதலை ஆட்டிக்கொண்டிருந்தும் ஞானமாகிற சந்ததியும் ஜீவன்முக்தியாகிற போகசுகமுங் கிட்டாமல் தட்டுக்கெட்டு வெகுகாலமாய் அலைந்துகொண்டிருக்கும்போது, குருவாகிய சகி வந்து இவனுக்கு விவேகமாகிற கண்ணைக்கொடுத்து, பிரம்மமாகிய பெண்ணினிடத்திலிருக்கிற ஆனந்தமாகிற யோனியில் ஜீவனாகிற புருஷனுடைய அகம்விருத்தியாகிற சிசுனத்தை நுழையும்படி சேர்த்துவைத்ததால் ஞானமாகிற புத்திரனையும் பெற்று ஜீவன்முக்தியாகிற போகசுகத்தையும் செய்துகொண்டு திருப்தனயிருக்கிறானென்றறிக.

ஜீவனாகிய சர்ப்பம் அகம்பாவமாகிற சிரசினால் ராகத்துவேஷமாகிற படமெடுத்து ஆடிக்கொண்டிருக்கும்போது, குருதிருவடியாகிற கெருடனைக் கண்டமாத்திரத்தில் அஞ்ஞானத்தாலுண்டான அகம்பாவமான தலையைக் கீழேபோட்டு அடங்கிப்போம். மற்றப்படி எவ்வித உபாயத்தாலும் அடங்காது.

அஞ்ஞானிக்கு எங்கும் துக்கமாயிருக்கும், அதற்காக எப்போதும் அதை நிவர்த்திக்கவேண்டும். முமுக்ஷுவுக்கு ஏகதேசத்தில் துக்கம்வரும், அவன் அதை ஏகதேசத்தில் நிவர்த்திக்கவேண்டும். ஞானிக்குத் துக்கமேயில்லை, ஆகையால் அவன் துக்கநிவர்த்திக்கு எத்தனிக்கான். [எ - தி] அஞ்ஞானியாகிற கிரகஸ்தன் சர்வாங்க க்ஷவரம் பண்ணிக்கொள்ளவேண்டியதுபோலும், சர்வாங்கம் ரணமுள்ளவன் சர்வாங்கம் பிளாஸ்திரி போட்டுக்கொள்ளவேண்டியதுபோலும்; முமுக்ஷுவாகிற எதிக்கு ஏகதேசமாக உண்டாகிற துக்கமாகிற தலைமயிருக்குமட்டும் க்ஷவரம் செய்துகொள்ளவேண்டியதுபோலும், ஏகதேசமாய் வந்திருக்கிற ரணத்துக்கு அந்த விடத்தில்மட்டும் பிளாஸ்திரி போடுவதுபோலும், ஞானியாகிற அதிவர்ணாஸ்ரமிக்கு க்ஷவரம்செய்யவேண்டாதது போலும், புண்ணில்லாத காயசித்தனுக்குப் பிளாஸ்திரி போடவேண்டாதது போலுமறிக.

மந்தாதிகாரி நடக்கவேண்டிய விதியை யறிக:—நேத்திரங்கள் இரண்டும் இரண்டு திராசுத்தட்டுகள். மூக்குநுனிதிராசின் முள்ளு. ஜீவன் செட்டி. சுத்த மனசு அந்த முள்ளைப்பார்ப்பது. அதில் கொஞ்சம் தவறினால் ஜீவனாகிற செட்டிக்கு நஷ்டம் வந்துவிடுமென்றறிக.

ஈஸ்வரனாகிற மாமனாருக்கு சாத்வீகாதி குணத்திரயங்களான பெண்கள் இருப்பதால், ஜீவர்களாகிற மாப்பிள்ளைகளுடைய தன்மைகளைப்பார்த்து யோக்கியனாயிருந்தால் சத்துவகுணமான பெண்ணையும், துஷ்டனாயிருந்தால் ரஜோகுணமான பெண்ணையும், அப்பாவியாயிருந்தால் தமோகுணமான பெண்ணையும் கொடுக்கிறானென்றறிக.

"மடியிலே கனமுண்டானால் வழியிலே பயமுண்டு" என்ற சொல்லின் கருத்து—மடியென்பது அந்தக்கரணம், கனமென்பது விஷயவாசனை, அது உண்டானாலென்பது இருந்ததானால், வழியென்பது ஜெகத்வ்விவகாரம், பயமுண்டென்பது அதிலிருப்பவனுக்கு ஜனனமரணபயம் வருமென்றறிக.

இந்த சம்சாரமாகிற சமுத்திரம் எப்படியிருக்கிறதென்றால் :—மனசாகிற ஆமையினுடைய சங்கற்பவிகற்பமாகிற அசைவினாலே கலக்கப்பட்டிருப்பதாயும்; சித்தமாகிற திமிங்கிலாதி மச்சியத்தால் அசைக்கப்பட்டுக்கொண்டிருப்பதாயும் ; காமக்குரோதங்களாகிற முதலைக்கூட்டங்களினாலே நிறைக்கப்பட்டதாயும் ; தேகவாசனை, லோகவாசனை, சாஸ்திரவாசனை, அகந்தாவாசனை, மமதாவாசனை, ஸ்திரீபுருஷர்களென்கிற வாசனை, ஜாதி வர்ணாஸ்ரம குலகோத்திர முதலான வாசனைகளாகிற ஜந்துக்களினுடைய கூட்டங்களினால் நிறைந்திருக்கிறதாயும் ; ஒருவராலும் பரிசிக்கத்தகாத லோபகுணங்களாகிற கடல்நுரைகள் நிறைந்ததாயும் ; பணத்தாசை ஸ்திரீயாசை தீனியாசைமுதலான ஆசைகளாகிற பாசிக்கொத்துகளினால் சங்கடத்தையுடையதாயும் ; வியாதிகளாகிற குமி

ழிகளோடே நிறைந்திருப்பதாயும்; ஜனனமரணமாகிற அலைகளோடே கூடிக் கொண்டிருப்பதாயும்; ஆதிபௌதீகதுக்கங்களாகிற மலைப்பாம்புகளோடே கூடிக்கொண்டிருப்பதாயும்; ஆதிதெய்விகமாகிற வெய்யிலால் தபிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறதாயும்; மோகமாகிற உப்பு நிறைந்திருப்பதால் ஒரு பிராணிகளுக்கும் தாகபாகாதிகளைச் செய்யும்படியான பிரயோசனமற்றதாயும்; தீன பாவமாகிற சுழிகளால் பயங்கரமாயும், க... விஷயங்கள் வேண்டுமென்கிற ஆசைகளாகிற மணற்குன்றுகளிலே அத்திடச்சம் உக்கிரமாயும், பாபங்களாகிற நாற்றச் சேறுகளினாலே அளறுபிருப்பதாயும் பிரளயகாலமாகிற பாடவாக்கினியினால் பக்ஷிக்கப்பட்டதாயும் அளவிடக்கூடாத ஆழமாயும் துக்கங்களோடேகூடினதாயிருக்கிற மநோரதமாகிற நதிப்பிரவாகமூலங்களினாலே பூரிக்கப்பட்டிருக்கிறதாயும்; அதில் கிடந்து தபித்துக்கொண்டிருக்கிற ஜீவர்களுடைய ஆகாராரசப்தங்களாகிற பெரிய அலைச்சலகளோடே கூடிக்கொண்டிருக்கிறதாயும்; மாயையாகிற கரையானது அளப்பாகாதிற உன்னதத்தையுடையதாயுமிருக்கிற அந்தச் சம்சாரசமுத்திரத்தில் கர்மமார்க்கமாகிற ஓட்டைத் தோணியில் அநேகம்பேர்கள் ஏறி நடுச்சமுத்திரத்திற் போகும்போது கருமக்ஷயமாகிற காற்றினால் கவிழ்க்கப்பட்டு முழுகிப்போகிற ஜனங்கள் எண்ணத்தொலையாமற் கிடக்கிறார்கள். இப்பேர்ப்பட்ட சமுத்திரத்தில் விழுந்து தபித்துக்கொண்டிருந்த நான் சற்குருகடாக்ஷத்தால் கொடுக்கப்பட்டிருக்கிற பிரஹ்மஞானமாகிற கப்பலிலேறி இந்தச் சம்சாரசமுத்திரத்தையும் அதிலுள்ள சங்கடத்தையும் தாண்டி மோக்ஷமாகிற ஆனந்தக்கரைபோய்ச் சேர்ந்ததால், இப்போது சதா சுகித்துக்கொண்டிருக்கிறேன். ஆகையால் முமுக்ஷுக்களாகிற ஜனங்கள் இந்தக்கப்பலிலேறிக் கடைத்தேறக்கடவர்கள்.

## 280 - வது தரங்கம்.

பரோக்ஷஞான அபரோக்ஷஞானத்தின் தன்மை:—

பிரஹ்மத்தை யுண்டென்று பரோக்ஷமாயறிவதும், நான் பிரம்மமென்று அபரோக்ஷமாயறிவதும் எப்படிப்போலவென்றால், முழுக்கரும்பைக் கடித்துச் சாப்பிடுவதுபோலும், கரும்புச்சாறைச் சாப்பிடுவதுபோலும்; சேலைக்குமேலே போகம்பண்ணுவதுபோலும், அபானுவரணமாகிற சேலையை அவிழ்த்து நானென்கிற சிசுனத்தை பிரம்மமாகிற யோனிக்குள்விட்டு போகிப்பதுபோலுமறிக. (இ - ர்) அபரோக்ஷஞானம் வந்தாலொழிய சுவானுபூதி வாராது. (எ-தி) சர்க்கரை தித்திக்குமென்று கேட்டாலும் எறும்புமுதலானவை மொய்க்கிறதைக் கண்டு அநுமானம் பண்ணினாலும், நாவில் போட்டாலொழியத் தித்திப்பின் சுவானுபவம் வாராததுபோலுமறிக. (இ - ர்) குருவினுடைய உபதேசமானது முந்திப் பரோக்ஷமாயிருந்தாலும் அந்த உபதேசப்பிரபாவ மகிமாதிக்கத்தினால் சுவானுபவத்தில் தனக்குமட்டும் அந்தச்சுகம் அபரோக்ஷமாய் யதார்த்தமாய் ஆகிவிடும். [எ - தி] நேக்ஷுனுக்குத் தெற்பைக்குப் போ... இடத்தில்

மற்றப்பிள்ளைகள் தூணிலடித்திருந்த திலோத்தமையை மந்திரபூர்வமாகக் கலியாணஞ் செய்துவைத்தகாலத்தில் திலோத்தமை பரோக்ஷமாயிருந்தாலும் அந்த மந்திரப்பிரபாவத்தால் ராத்திரி இவனுக்கு அவள் பிரத்தியக்ஷமாய் வந்து பஞ்சவிஷயசுகத்தையும் பரிவுடனே பரமரகசியமாய்க் கொடுத்த கதைபோலு மறிக. ஐயா, குரு உபதேசத்தினால் வந்தஞானம் பரோக்ஷமாயிருந்தாலும் தன்னுடைய புருஷப்பிரயத்தினத்தினாற் செய்யப்படுகிற மனன நிதித்தியாசன சமாதிகளுடைய அப்பியாசத்தினாலேயே அபரோக்ஷஞானமுண்டாகவேண்டு மென்று சொன்னீர்களே, அதற்குச் சுருதி யுக்தி அனுபவங்களென்னவென்று கேட்பாயாகில், அதற்குத்தாஞ் சொல்லுகிறோங்கேள் :—பஞ்சதசியில் தியான தீபத்தில் குருஉபதேசமாத்திரத்தில் பிரம்மத்தியானஞ் சித்திப்பதுபோல பிரஹ்மஞானமும் சித்தியாதோவென்று கேட்ட சிஷ்யனுக்குக் குரு சொல்லு கிறதாவது—விசாரணையன்றியில் குருபதேசமாத்திரத்தில் பிரம்மசாக்ஷாத்கார ஞானமட்டும் ஒருக்காலும் ஓரிடத்திலும் சம்பவிக்கமாட்டாதென்று சொல்லி யிருப்பதாலும், இப்படியே வாசிஷ்டத்திலும் சிகித்துவஜன்கதையில் குரூப தேசமுதலான கிரமத்தினாலே பிரஹ்மஞானரோட்டு விவஸ்தைபண்ணப்படு கிறதுமாத்திரமேதவிர இவனுக்கு அபரோக்ஷஞானமுண்டாவதற்குச் சிஷ்ய னுடைய பிரக்ஞையே காரணமென்று சொல்லியிருக்கிறதே சுருதியாம். யுக்தி யாவது—ஒருபுருஷன் தான் பெற்றபெண்ணை ஒரு பிரம்மசாரிக்கு அலங்கார கன்னிகாதானம்பண்ணி ஆடை ஆபரணங்களோடேசேர்த்துப் பக்குவமான பின் அந்த மாப்பிள்ளையினிடத்திற் கொண்டுபோய் விடலாமேதவிர, பிற்பாடு அந்த மாப்பிள்ளையே அவளோடு போகம்பண்ணி புத்திரனைப் பெறவேண்டி யிருப்பதுபோலும், அன்னதாதா எதேஷ்டமாய் அறுசுவையுடன் போஜனங் கொடுத்தாலும் பசியுள்ளவன் அதைச் சாவதானமாய்ச் சாப்பிட்டுப் பசியைத் தீர்த்துக்கொண்டு திருப்தியடைவதுபோலும்; ஒரு பிரபுவானவன் யோக்கியனா யிருக்கிற ஒரு பிராம்மணனுக்கு கிராமம்விட்டுக்கொடுத்தாலும், இவனதைப் புருஷப்பிரயத்தினத்தினாலேயே விவசாயம்பண்ணியே பலத்தைப் பெற வேண்டியிருப்பதுபோலும் ; தகப்பன் தன் பிள்ளைக்குச் சகல ஆயுதங்களை யும் சகல அஸ்திரசஸ்திரங்களையும் ரதகஜதுரகபதாதிகளான படைகளையும் கொடுத்து யுத்தத்திற்கு அனுப்பிவித்திருந்தாலும், அந்தக்குமாரன் மனோதைரி யத்தோடே கூடியிருந்துகொண்டு எதிராளிகளை ஆயுதங்களினால் கொல்ல வேண்டியிருப்பதுபோலுமென்பதே யுக்தியாம். இப்போது அனுபவத்திலும் குருநாதன் பொதுவாய்ச் சகலருக்கும் தத்துவஞானத்தை உபதேசித்தாலும் பக்குவியாயுள்ளவனே மனனாதிகளால் அபரோக்ஷஞானத்தை யடைவதே அனுபவசித்தமென்றறியத்தக்கது.

## 281 - வது தரங்கம்

**இகமுத்தியின் தன்மை :—**

இகபரமோக்ஷமான மூன்று பிரயோசனங்களுக்கும் உள்ள தாரதம்மி யத்தை விவேகியானவன் தெரிந்துகொள்வதற்கு யுக்தி :— இகலோகப்பிரவிர்த் தியாலுண்டாகிற சுகம்—பேதிபோகிறவனுடைய மலத்தைச் சாப்பிடுகிறது போலும்; வெறுங்குண்டியை நக்குவதுபோலவும், கரும்பின் இலையைத் தின் கிறவன்போலவும்; பரலோகசுகமனுபவிப்பது—வெகுநாளைக்குமுன் போயிருக் கிற உலர்ந்தமலம் சாப்பிடுவதுபோலும், பீக்குண்டியை நக்குவதுபோலும், கரும்புச்சக்கையைச் சாப்பிடுவதுபோலும்; மோக்ஷசுகத்தை யடைவது— சித்தகுளிகையைச் சாப்பிட்டுக் காயசித்தனுவதுபோலும், அமிர்தஞ்சாப்பிட் டுத் தேவனுவதுபோலும், கரும்புரசத்தைச் சாப்பிட்டுத் திருப்தனுவதுபோலு மென்றறிந்து புத்திமான் மோக்ஷசுகத்தையே யடைய எத்தனம்பண்ணக் கடவன். [இ - து] துக்கமாயும் அசுத்தமாயுமிருக்கிற இகலோகபோகத்தை வெறுக்காதவன், பரலோகபோகத்தை வெறுக்கான். [எ - தி] கூழை வெறுக் காதவன் அமிர்தத்தை வெறுக்கமாட்டானென்பதுபோலும், பறக்கூத்தை வெறுக்காதவன் பரமசிவன்கூத்தை வெறுக்கானென்பதுபோலவறிக. [இ - ர்] ஐயா, சாலோகாதிபதங்களையும் முக்தியென்று சாஸ்திரங்களிற் சொல்லப்படு கிறதே, தாங்கள் சொல்லுகிற முக்தியானது அவைதானு? அல்லது அவைக ளுக்கு வேறு? என்பதைச் சொல்லவேண்டுமென்று கேட்பாயாகில், அதற் குத்தரஞ் சொல்லுகிறேன் கேள் :—நீ கேட்ட சாலோகாதிமுக்திகள் கர்மசாத் தியங்கள், பிரஹ்மஞானத்தினுலுண்டாகிற முக்தி விசாரசாத்தியமென்றறிக. கர்மசாத்தியத்துக்கும் விசாரசாத்தியத்துக்குமுள்ள பேதமெப்படியென்றால்— கர்மசாத்தியமான முக்தியானது முன்னில்லாமல் இப்போது புதிதாய் ஒரு பலத்தை யுண்டுபண்ணக்கூடியதாயும், அடைகிற புருஷனுக்கு வேறாகவிருக்கிற பலத்தை அந்தப்புருஷன் போய் அடையத்தக்கதாயும், ஒரு தோஷத்தோடே கூடியிருக்கிற புருஷனை அந்தத்தோஷத்திலிருந்து நிவர்த்திபண்ணி மகா பரி சுத்தனுகப் பண்ணிவைக்கக்கூடியதாயும், கொப்பரைஜலம்போல நாளுக்கு நாள் விகாரத்தையடைந்துகொண்டிருந்து கடைசியில் துப்பட்டி சோமனுய், சோமன் உறுமாலாய், உறுமால் ஒருமுழச்சவுக்கமாய், சவுக்கம் கௌபீனமாய், கௌபீனந் திரியாய், திரி தீபமாயிருந்து காணுமலெரிந்துபோவதுபோல கர் மங்களும் கடைசியாய்ப் பலத்தோடே நசிக்கிறதென்பதற்குச் சாக்ஷியென்ன வென்றால்,—இவிடத்தில் கர்மம் பக்திகளைச் செய்கிறவர்களுக்கு அந்தக்கர்ம மானது சரீராந்தத்தில் திவ்வியசரீரத்தையும், திவ்விய லோகங்களையும், திவ்விய சுகங்களை யுண்டுபண்ணுகிறதும், அவைகளைச்செய்த புருஷர்கள் அந்தப்படி அந்தச்சரீரத்தையும் அந்த லோகத்தையும் அவிடத்திலுள்ள போகத்தையு மடைகிறார்கள். பாபத்தால் துன்பமான மனுஷசரீரத்தை யடைந்திருந்தவர்க ளுக்கு அந்தப்பாபங்களும் அச்சரீரங்களும் போய் புண்ணியங்களும் புண்ணிய சரீரங்களுமுண்டாகும்படி செய்வதும், புண்ணியக்ஷயத்தில் எரிந்து கீழே விழும்படிசெய்கிறதும் பிரத்தியக்ஷமாக இருப்பதுபோலல்லாமல் விசாரசாத்திய

மான ஞானத்தினாலுண்டாகிற முக்திச்சுகமானது உற்பத்திபண்ணப்படாததாயும், அடையப்படாததாயும், சமஸ்காரம் பண்ணப்படாததாயும், நிருவிகாரமான நித்தியமாயுமிருக்கும். [எ - தி] கர்மத்தினாலுண்டாகிற பலம்-மாப்பிள்ளை நூறு ரூபாய் எடுத்துக்கொண்டு மாமனார்வீட்டுக்குப் போய் கையிலிருந்த ரூபாய்களைப் போட்டு அவர்களுடைய ரூபாயையுஞ் சேர்த்து உயர்ந்த சேலைகளைச் சொற்ப விலையென்று வாங்கிக்கொடுத்துவந்தபின், ரூபாய் ஆய்ப்போனபிற்பாடு "மாப்பிள்ளை சமத்து கைப்பணத்தோடே போச்சுது" என்ற கதைபோலும்; ராமனைக் கண்டவுடன் ஹனுமாருக்குத் தன்னுடைய சுபாவ பலம் வெளியானது போலுமறிக.

## 282 - வது தரங்கம்.

*வேதாந்தசாஸ்திரம் எங்குமகப்படும், இந்த யுக்திரத்தினங் கிடைப்பதரிது:—*

எவ்விடத்திலும் வேதாந்தசாஸ்திரங்கள் விஸ்தாரமாய் அகப்படும். இந்த யுக்திரத்னாகரம்மட்டும் கிடைப்பதரிது. [எ - தி] ரசகெந்தகபாஷாணம் சுக்குத் திப்பிலிமுதலான சரக்குகள் எந்த ஊரிலுமகப்படும், காயசித்தியைக் கொடுக்கிற சித்தகுளிகைமட்டும் அகப்படுவது அரிதாயிருப்பதுபோலும்; கல்லுகள் எந்த ஊரிலுமகப்படும், மாணிக்கமகப்படுவது அரிதாயிருப்பதுபோலும்; ஸ்திரீகளுக்கு ஸ்தன்னியங்களுண்டாவது அதிசயமில்லாதிருந்தாலும் புருஷனுக்கு ஸ்தன்னியம் உண்டாவது அதிசயம்போலுமறிக. ஐயா, உலகத்தில் வேதாந்த சாஸ்திரங்கள் உபநிஷத்துரூபங்களாயும், வேதவியாசர் செய்த சூத்திரரூபங்களாயும், அதற்கு ஸ்ரீசங்கரபூஜ்யபகவத்பாதாசாரியஸ்வாமியவர்கள் அதிகப்பிரியமாய் செய்திருக்கிற பாஷியரூபமாயும், இன்னும் பகவத்கீதை பகவான் அருச்சுனனுக்குச் சொல்லியிருக்கிறதாயும், பிரம்மா தேவதைகளுக்கு உபதேசித்த பிரம்மகீதைரூபமாயும், ஈஸ்வரனால் உபதேசிக்கப்பட்ட ஈஸ்வரகீதை ரூபமாயும், ராமருக்கு வசிஷ்டரால் சொல்லப்பட்ட வாசிஷ்டரூபமாயும், பின்னும் ஸ்ரீசங்கரபகவத்பாதாசாரியரவர்கள், வித்யாரண்யஸ்வாமிகள் முதலான பிரம்மநிஷ்டர்களால் சொல்லப்பட்டிருக்கிற சாஸ்திரங்கள் சுருதி யுக்தி அனுபவங்களுக்கு ஒத்ததாய் அனந்தகோடி சாஸ்திரங்களிருக்கும்போது அவைகளெல்லாம் கிடைப்பது அதிசயமில்லையென்றும், இந்த யுக்தி ரத்னாகரம் கிடைப்பதே மிகவும் அரிதென்றுஞ் சொன்னீர்களே அப்படிச் சொன்னதற்குக் காரணமென்னவென்று கேட்பாயாகில் அதற்கு நாம் உத்தரஞ்சொல்லுகிறோம் கேள்:— அவைகளெல்லாம் சமுத்திரம்போலும், பால்போலும், தங்கம்போலும், வெள்ளிபோலும், செம்புபோலும், இரும்புபோலும், மண்போலும், மரம்போலும், கல்லுப்போலும், பஞ்சுபோலும், மயிர்போலும், ஜலம்போலும், அக்கினிபோலும், கற்பக விரைபோலுமிருக்கின்றன. நாம் சொன்ன இந்த யுக்தி ரத்னாகரமானது சப்த சமுத்திரமும் தேடி அதிலுள்ள மகரமச்சியாதிகளைத் தள்ளி நவரத்னங்

களைக் கண்டாபரணமாகச் செய்துகொடுத்ததுபோல, வேதாந்த சமுத்திரத்தில் துவிதபாகங்களாகிற மகராதிகளைத் தள்ளி அத்வித பாசமாகிற ரத்தினங்களைச் சுருதி யுக்தி அனுபவங்களாலுண்டான அத்வித ஞானமாகிற கண்டாபரணமாகச் செய்திருப்பதாயும்; பாலில் ஜலாம்சமான பாகத்தைக் காயவைத்துக் கடைந்தெடுத்த வெண்ணெய்போல, வேதாந்தமாகிற பாலில் பூர்வபக்ஷமாகிற ஜலாம்சத்தைத் தள்ளி சித்தாந்தமாகிற வெண்ணெய்யைக் கடைந்தெடுத்துக் கொடுக்கப்பட்டதாயும்; தங்கத்தைப் புடம்போட்டுச் சிரசுமுதல் பாதம்வரையில் எந்தெந்த அவயவங்களுக்கு எந்தெந்த ஆபரணந் தரித்துக்கொள்ள யோக்கியமாகுமோ அப்படியப்படி அததற்கு யோக்கியமாய்த் தரித்துக்கொள்ளும்படியாய்ச் செய்த ஆபரணம்போல, அந்தச்சாஸ்திரங்களாகிற தங்கத்தை நாம் குருகிருபையாகிற தீயில் புடம்போட்டு குருபக்திகளாகிற கருவிகளால் இந்த யுக்திரத்னாகரமென்கிற ஆபரணங்களை நாம் செய்திருப்பதால், இதைப் பாமரர்களாகிற பாதம்முதல் ஞானிகளாகிற சிரசுவரையில் தரித்துக்கொள்ள யோக்கியமாயிருப்பதாயும்; வெள்ளியைக் கும்பாமுதலான பாத்திரங்களாகச் செய்து போகத்திற்கு உபயோகப்படுத்திக்கொள்வதுபோல, வேதாந்தமாகிற வெள்ளியை யுக்தியாகிற கும்பாவாகச்செய்து அனுபவமாகிற போஜனத்திற்கு உபயோகப்படுத்தி யிருப்பதாயும்; செம்புமுதலானதைப் பாத்திரங்களாகச் செய்து சமையல்முதலான கிரியைகளுக்கு உபயோகப்படுத்திக் கொள்வதுபோல, வேதாந்தமாகிற செம்பு, இரும்பு, மண், கல், ஜலமுதலானவைகளை ஜனனமரண பசியைப்போக்குவதற்குச் சாதனமான பாத்திரங்களாயும், ஆயுதங்களாயும், பானைசட்டிகளாயும், கணபதிமுதலான மூர்த்திகளாயும், வஸ்திரமாயும், தாவளியாயும், தாகபாகாதிகளுக்கு யோக்கியமாயுஞ் செய்யப்பட்டிருக்கிற இந்த யுக்திரத்னாகரத்தில் ஒரு எழுத்துக்கூட என் சுய புத்தியாற் சொல்லாமல் என் இருதயத்திலிருக்கிற குருநாதனே சகல முமுக்ஷுக்களையும் கரையேற்றும்பொருட்டு இந்த வாய்மூலமாய் வெளிபண்ணினார்.

## 283 - வது தரங்கம்.

அனாத்மாவைக்குறித்தே ஆத்மாவுக்குச் சத்தாதிநாமங்கள்:—

அநர்த்த ஜெடதுக்கமான அனாத்மாவைக்குறித்தே ஆத்மாவுக்குச் சத்துச் சித்து ஆனந்தமென்று வேதம் சொல்லுகிறது. [எ-தி] போக்கிலியைக்குறித்தே நிஜவானுக்குப் பொய்சொல்லாதவனென்றும், அறிவுள்ளவனென்றும், சுகசாலியென்றும் உலகம் சொல்வதுபோலவறிக. [இ - து] ஞானிகள் ஒரு ஆத்மாவையே சத்துச் சித்து ஆனந்தமென்று சொல்லுகிறார்கள். ஒரு பிரம்மத்துக்கே ஞானிகள் சத்துச் சித்து ஆனந்தாதி நாமங்களைச் சொல்லுகிறார்கள். [எ - தி] வெகுகாலங் கழித்துப் பிறந்த பிள்ளையைத் தாயானவள் கண்ணேமுத்தே பாற்குடமே யென்று அநேகவிதமாய்ச் சொல்லிச் சீராட்டுவதுபோல

வறிக. ஐயா, சச்சிதானந்தாதி நாமங்கள்கூட அநர்தஜட துக்கரூபமான நாமரூபங்களைக்குறித்து வந்திருக்கிறதென்று சொன்னீர்களே, அப்படியானால் ஆத்மா அகண்டராச்சுதே, அகண்டரென்பதை அனுபவமூலமாய்க் காட்ட வேண்டுமென்று கேட்பாயாகில், அதற்கு உத்தரஞ் சொல்லுகிறேன் கேள்:— ஆத்மா தேசகாலவஸ்துக்களால் பரிச்சேதமன்றியிலிருப்பதால் அகண்டரென்றறிக. என்னஹேதுவால் மூன்று பரிச்சேதமுமில்லையென்று சொல்லப்படுகிறாரென்றால், சர்வ வியாபகமாயிருப்பதால் தேசபரிச்சேதமில்லை. காலத்திரயத்திலும் அழிவற்று நித்தியமாயிருப்பதால் காலபரிச்சேதமுமில்லை. சர்வாத்ம சொரூபராயிருப்பதால் வஸ்துபரிச்சேதமுமில்லையென்றறிக. ஆத்மா அகண்டரென்பதற்கு மூன்று பரிச்சேதமுமில்லையென்று சொல்வானேன்? ஒன்று இரண்டு பரிச்சேதமுமில்லையென்று சொன்னாற் போதாதாவென்றால், போதாது. அதெப்படியென்றால், தேசபரிச்சேதரகிதரென்றுமட்டுஞ் சொன்னால் ஆகாசம் எல்லாத்தேசத்திலும் வியாபித்திருப்பதால் ஆகாசமே ஆத்மாவென்று சொல்ல வேண்டியதாய் வரும். அதைவிலக்குகிறதற்காக காலபரிச்சேதரகிதரென்று சொல்லவேண்டிற்று. அப்படிச் சொன்னதால் ஆகாசம் எப்படித் தள்ளப் பட்டதென்றால், ஆகாசமானது சிருஷ்டிக்குமுன்னும் பிரளயத்துக்குப்பின்னு மில்லாமையால் அநித்தியத்துவம் வந்துவிட்டதால் காலபரிச்சேதமுடையது. அதனால் ஆத்துமா காலபரிச்சேதரகிதரென்று சொல்லவேண்டிற்று. அவ்வளவுமாத்திரம் சொன்னால் போதாதாவென்றால், காலமானது எப்போதும் சிருஷ்டி பிரளயங்களிலும் சிருஷ்டிகாலம் பிரளயகாலம் என்று நித்தியமாயிருப்பதால் காலமே ஆத்மாவென்பதைத் தள்ளவேண்டியதற்காக வஸ்துபரிச்சேத ரகிதர் ஆத்மாவென்று சொல்லவேண்டியதாயிற்று. அப்படிச்சொன்னால் காலத்தில் அதிவியாப்தி வாராதாவென்றால், வாராது. வஸ்துவென்பது பஞ்ச பூதபௌதிகமான நாமரூபாத்மகமான வடிவங்கள். அவைகளில் கடமிருக்கிறது, படமிருக்கிறது, மண்ணிருக்கிறது, தண்ணீர் இருக்கிறதென்று இப்படிச் சகல வஸ்துக்களிலும் சத்தாகிய ஆத்மாவே காணப்படுகிறாரேதவிர கடகாலம், படகாலம், மண்காலம், தண்ணீர்காலம், என்று இப்படி அனுபவங் காணப்படாமையால் மூன்று பரிச்சேதரகிதமான ஆத்மா அகண்டரென்று சொன்னது சரியென்று நம்பக்கடவாய்.

ஐயா, இந்த யுக்திரத்னாகரத்திற் சொல்லப்பட்ட அதிசயமான சுருதிகளும் அதற்குப் பூரணமான உபமானங்களும் அதற்கொவ்வுதலான பாமரர்கள்முதல் பண்டிதர்கள் வரையிலுள்ள சகலத்திரர்களுடைய அனுபவத்திற்கும் ஒத்ததாயுமிருக்கிற இந்த அதிசயமான அனுபவானந்த நவநவ உல்லாச பிரம்மானந்த யுக்தி ரத்னாகரத்தில் ஒரு எழுத்துக்கூட நான் சொல்லவில்லையென்றும், குருநாதனே இருதயத்திலிருந்து சொன்னாரென்றும் சொன்னீர்களே, அந்தக் குருநாதனுடைய மகிமையைக் கொஞ்சம் தெரிவிக்கவேண்டுமென்றால், ராஜாதிராஜ

ராயும், சுகப்பிரம்மரிஷிபோல உண்டாகும்போதே மகா தீவிரவைராக்கிய ராயும், ஈஸ்வரன்போல நிராவரண ஞானியாயும், சூதரைப்போலக் குருபக்த சிரோன்மணியாயும், பிரக்லாதரைப்போல பக்தசிரோமணியாயும், இன்னும் அனந்தவிதமான அவர்களுடைய சற்குணங்களை ஆதிசேஷனாலும் வர்ணிக்க முடியாமலிருப்பதால், அவருக்குச்சமானம் அவரேதவிர மற்றயாருமில்லை யென்று சத்தியமாய்ச் சொன்னேன்.

## பிரஹ்மானந்த யுக்தி ரத்னகரம்

முற்றிற்று.

---

கரண பாஸ்கரன்போல் கருணையா லந்தக்
கரண மோகத்தைக் கடத்தி யுள்விளக்கும்
பிரணவப் பொருளாம் பிரமவானந்தன்
சரண பங்கயத்தைத் தலைக்கணிந் தொளிர்வாம்.



ஓம் தத்ஸத்

ஸ்ரீமத் குரு பிரஹ்மானந்த ஸ்வாமிநே நம:

# பிரஹ்மானந்த அநுசந்தான ரத்னாகரம்.

## அட்டவணை.


| தரங்கத் தொகை | விஷயம் | பக்கத் தொகை |
|---|---|---|
| | குருஸ்துதி ... ... .... | ௧ |
| 1 | இந்தக்கிரந்தம் விவேகிகளுக்காகவே சொல்லப்படுகிறது .... | ,, |
| 2 | ஜீவர்கள் ஈஸ்வரனுக்குப் பண்ணுகிற தப்பிதம் மூன்றும் .... | ,, |
| 3 | முதலில் தன்னிடத்தில் அத்தியாரோபமும் அபவாதமுஞ் சொல்லித் தன்னைக் காண்பிக்கப்படுகிறது. ... | ௨ |
| 4 | சிஷ்யனுக்கு வந்திருக்கிற துக்கத்தைக் குருவானவர் விசாரணைசெய்து போக்கடித்தது சொல்லப்படுகிறது. .... | ௪ |
| 5 | சிஷ்யன் தன்னிடத்திலுதிக்கிற வாசனை எப்படிப்போமென்று குருவைக் கேட்டதற்குத் திருஷ்டாந்தத்துடன் உபாயம் சொல்லப்படுகிறது. .... ... | ௫ |
| 6 | நானென்கிற ராஜா தன் ஆனந்தஸ்திரீயைவிட்டு குருகிருபையினால் மறுபடி அவளை யடைந்தது சொல்லப்படுகிறது ... | ,, |
| 7 | நானென்கிற அவிவேகமான அறிவாகிய ஜட்ஜியை மனதாகிற சிரஸ்த்தார் மோசம்பண்ணி, பிற்பாடு விவேகஜட்ஜியால் யோக்கியனானது சொல்லப்படுகிறது ... .... | ௬ |
| 8 | பாலாதிகளிடத்திலிருக்கிற சுகுண துர்க்குணங்களை ஞானி அஞ்ஞானிகளிடத்திற் காண்பிக்கப்படுகிறது .... | ௯ |
| 9 | கர்மத்திற்கும் ஞானத்திற்குமிருக்கிற சக்தியும், அந்த ஞானானுபவம் வர யுக்தியுஞ் சொல்லப்படுகிறது ... | ௧௪ |
| 10 | ஆத்மா இந்திரியப்பிரத்தியக்ஷமாகாவிட்டாலும் நிர்மலமாயிருக்கிற சாத்வீகபுத்திக்கு பிரத்தியக்ஷமாவர் ... | ௧௫ |
| 11 | திருசியவிஷேதத்தோடே திருக்காத்மானுபவத்தை அனுசரிக்கிறதற்கு அநேக யுக்திகள் சொல்லப்படுகின்றன ... | ௧௯ |

| தரங்கத் தொகை | விஷயம் | பக்கத் தொகை |
|---|---|---|
| 12 | சுயமான சுகத்தை மறந்ததால் வந்த துக்ககாரணங்களைச் சொல்லி, அவை நிவர்த்தியாவதற்கு உபாயம் சொல்லப் படுகிறது ... .... ... | ௧௭ |
| 13 | பிரபஞ்சம் பொய்யென்பதற்கு யுக்தியும், விதேகமுக்திவரையி லுண்டாகிற மானாபிமானம் பொறுத்துக்கொள்ள யுக்தி யுஞ் சொல்லப்படுகிறது ... ... | ௧௯ |
| 14 | சாந்தோக்கியத்தில் உத்தாலகர் சுவேதகேதுவுக்கு உபதே சித்த நவவிததிருஷ்டாந்த உபதேசம் சொல்லப்படுகிறது. | ,, |
| 15 | கூடார திருஷ்டாந்தம். நம்மால் தினந்தோறும் அனுப விக்கப்படுகிற ஜாக்கிரதாதி அவஸ்தைகளின் தாரதம்மியம் அறிவிக்கப்படுகிறது. ... .... .... | ௨௨ |
| 16 | நெல்லுமுதலான திருஷ்டாந்தத்தால் தன்னைச் சத்தியாதி லக்ஷணமுடையவனாக அறிந்து அனுபவிக்கும்படி சொல் லப்படுகிறது .... .... ... | ௨௩ |
| 17 | அதிஷ்டானமென்கிற பிரஹ்மப்பிராம்மணனுடைய அறியா மையான போகஸ்திரீயாலுண்டான அரூபியாதிகளினு டைய விபரம் சொல்லப்படுகிறது ... ... | ௨௫ |
| 18 | விஷயத்தை நினைப்பவனுக்கும் குருநாதனை நினைப்பவனுக் குங்கிடைக்கும் பலதாரதம்மியம் சொல்லப்படுகிறது ... | ௨௬ |
| 19 | கிருதயுகாதிகளிலே ஈஸ்வரனை உபாசிப்பதற்கும் இந்தக் கலி யுகத்தில் ஈஸ்வரனை உபாசிப்பதற்குமுள்ள தாரதம்மியம் சொல்லப்படுகிறது ... ... ... | ௨௭ |
| 20 | ஜீவனாகிய பெண்ணுக்குப் பிடித்த பேயை குருவாகிய மந்திர வாதி வந்து நிவர்த்தித்தது சொல்லப்படுகிறது .... | ,, |
| 21 | ஜீவனுக்கே பந்தமென்று சொல்லப்படுகிறது .... | ௨௮ |
| 22 | குருநாதன் விவேகத்தில் இஷ்டமுள்ள மனதைக் கண்டிக்கிற தற்கு யுக்தி சொல்லப்படுகிறது ... .... | ,, |
| 23 | சுழுப்திசுகம் அப்போது தெரியாது, ஜாக்கிரத்திற்கு வந்து தான் தெரியுமென்பதற்கு யுக்தி சொல்லப்படுகிறது .... | ௨௯ |
| 24 | தன்னிடத்தில் அன்னியமொன்றுமில்லாதிருக்க அஞ்ஞானம் வந்ததுபோல நினைத்து, அதைத் தீர்க்கப் புத்தியெண்ணு வது குறைவென்று சொல்லப்படுகிறது ... | ௩௧ |
| 25 | முக்கியமான தனம் தானேயென்பதற்கு யுக்தி சொல்லப் படுகிறது ... ... .... | ௩௨ |

